ராஜேந்திர பிரசாத்

# என் வரலாறு

தமிழாக்கம் :

கோ. வன்மீகநாதன்

சாகித்திய அக்காதெமிக்காக

அமுத நிலையம்

சென்னை-18



**En Varalaru** Tamil translation of Rajendra Prasad's autobiography in Hindi (*Atmakatha*) by G. Vanmikanathan. Published by Amudha Nilayam, Madras, on behalf of Sahitya Akademi, New Delhi (1962). Price Rs. 20



முதற் பதிப்பு 1962



வெளியிடுவோர் :
அமுத நிலையம்
தேனும்பேட்டை,
சென்னை–18

*Also available at*
Sahitya Akademi,
New Delhi-1




அச்சிட்டோர் :
கபீர் பிரிண்டிங் ஒர்க்ஸ்,
சென்னை–5

விலை ரூ. 20

தந்தைக்குச் சமானமானவரும்
என்றென்றும் நினைவிற்குரியவருமான
என் தமையனாரின்
புண்ணிய ஞாபகார்த்தமாக.

राजेन्द्र प्रसाद

ராஷ்டிரபதி பவன்
புது தில்லி

1942இலிருந்து 1945 வரையில் நான் செய்த சிறை வாச காலத்தில் பெரும்பாலும் எழுதப்பட்ட என் நினைவுகள் 'ஆத்மகதா' என்ற உருவில் 1947 ஜனவரியில் வெளியிடப்பட்டது. அக்காலம் வரையில் நிகழ்ந்த சம்பவங்கள் அந்நூலின் மூலத்திலோ அல்லது பிற்சேர்க்கையிலோ வந்துவிட்டன. 1956இல் இரண்டாம் பதிப்பு வெளியாயிற்று. ஹிந்தி மூலநூலின் குஜராத்தி, ஆங்கில மொழிபெயர்ப்புக்களும் வெளிவந்துவிட்டன. இவற்றில் 1947இலிருந்து 56 வரையில் நான் தொடர்பு கொண்டிருந்த சம்பவங்கள் வந்திருக்கலாம், வந்திருக்க வேண்டும். இச்சம்பவங்கள் அசாதாரணமானவை, எல்லையற்ற பெருமை வாய்ந்தவை. இவற்றேடு எனக்குத் தொடர்பு இருந்தது ஒரு புறமிருக்க, நம் நாட்டிற்கு இவற்றேடு மிகவும் நெருங்கிய தொடர்பு உண்டு. இவற்றைப் பற்றி நிறையவும் எழுதலாம். ஆனல் இப்போது இதற்கு ஓய்வு இல்லாததுமன்றி உகந்த சூழ்நிலையுமில்லை. ஆகையால் இவற்றைப் பற்றி நூலில் யாதும் வரவில்லை. ஆயினும் கடந்த காலத்தைப் பற்றி நூலில் என்ன வந்திருக்கிறதோ அது ஒரு விதத்தில் நிகழ்காலத்திற்கு ஒரு பின்னணியாக அமைந்திருக்கிறது. 1947இலிருந்து இன்று வரையில் நிகழ்ந்த மாறுதல்கள், அரசியல் கொண்ட புதிய அமைப்பு, ஆக்கவேலை முயற்சிகள் பூண்ட தோற்றம், இவையனைத்தும் நமது தேசிய வாழ்க்கையின் பழைய வீரர் படையோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

இந்திய மொழிகள் அனைத்திலும் மொழிபெயர்ப்பதற்காக சாகித்திய அக்காதெமி இந்நூலைத் தேர்ந்தெடுத்து என்னை கௌரவித்தற்கு நான் அக்காதெமிக்கு கடமைப் பட்டிருக்கிறேன்.

இந்தியாவின் பல்வேறு மொழிகள் மேன்மேலும் ஒன்றுக்கொன்று கொடுத்து வாங்கிக்கொள்ள வேண்டுமென்பதும், அவை மேன்மேலும் ஒன்றையொன்று நெருங்கி நட்புகொள்ள வேண்டுமென்பதும் என் அவா. இவ்வண்ணமாக நம் கலாசார ஒற்றுமையின் மெல்லிய இழை முறுக்கேறி வலிமையுறும். இந்தியாவின் மொழி ஏதாவதொன்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நூலை நம் நாட்டின் பல்வேறு பாஷைகளில் மொழிபெயர்த்து வெளியிட வேண்டுமென்று சாகித்திய அக்காதெமி அமைத்துள்ள திட்டத்தை இந்த நோக்கத்துடன் கருதினால், அது எல்லையற்ற பயனை அளிக்கும் செயலாக அமையும். இம்முயற்சியில் சாகித்திய அக்காதெமி வெற்றியடைய வேண்டுமென்று கோருகிறேன். சாகித்திய அக்காதெமி இவ்வாறு இதை மற்ற பாஷைகளில் மொழிபெயர்க்கச் செய்திருக்கும் முடிவை ஹிந்திக்குப் புறம்பான மொழிகளின் வாசகர்கள் மகிழ்ச்சியுடன் ஆதரிப்பார்கள் என்ற நம்பிக்கை கொண்டுள்ளேன்.

16—11—58 ராஜேந்திர பிரசாத்

# பொருளடக்கம்

# 1. என் முன்னேர்

ஐக்கிய மாகாணத்தில் அமோரு என்ற ஓர் இடமிருக்கிறது. அங்கே காயஸ்து சாதியாரின் சிறந்த குடி ஒன்று இருப்பதாகக் கேள்வி. பன்னுட்களுக்கு முன் ஒரு குடும்பம் அங்கிருந்து பெயர்ந்து கிழக்கே சென்று பலியாவில் குடியேறிற்று. நெடுங் காலம் பலியாவில் வாழ்ந்தபின் அக்குடும்பத்தின் கிளை ஒன்று வடக்கே சென்று பீகாரில் சாரன் என்று இப்பொழுது சொல்லப் படும் ஜில்லாவில் உள்ள ஜீராதேயீ என்ற கிராமத்தை அடைந்து, அங்கே வாழ்ந்து வந்தது. மற்றெரு கிளை கயாவிற்குச் சென்று அங்கே வாழ்ந்தது. ஜீராதேயீக் கிளையைச் சேர்ந்த சிலர் அங்கிருந்து சற்றுத் தொலைவிலுள்ள மற்றெரு கிராமத்திற்குப் போய் வாழ்ந்தார்கள். ஜீராதேயீ குடும்பம்தான் என்னுடைய மூதாதையரின் குடும்பம். ஜீராதேயீக்குச் சென்ற என் முன்னேர், எனக்கு ஏழெட்டுத் தலைமுறைக்கு முந்தியவர்களாய் இருக் கலாம். ஜீராதேயீக்குச் சென்றவர்கள் ஏழைகள்; அன்ருட வயிற் றுப் பிழைப்புக்காகவே அங்குச் சென்ருர்கள். அந்த ஊரில் படித் தவர்கள் இல்லை. அந்த நாளிலேயே காயஸ்து சாதியார் படித்த வர்களாய் இருந்தார்கள். இதனுல் அவ்வூரார் அவர்களை அங் கேயே இருத்திக் கொண்டார்கள். ஏறக்குறைய அதே சமயத்தில், அவர்களுக்கு ஹதுவா சமஸ்தானத்துடன் தொடர்பு உண்டா யிற்று. அவர்களில் சிலருக்கு அங்கேயே எழுத்துக் கணக்கு வேலைகளும் சில கிடைத்தன. அந்தக் காலத்தில் ஹதுவா பெரிய சமஸ்தானம் அன்று; அதற்கு அதிக வருவாயுமில்லை. பிற்காலத் தில்தான் அதன் சிற்றரசருக்கு ஹதுவா தலைநகராயிற்று. அக் காலத்தில் தலைநகர் வேறு எங்கேயோ இருந்தது.

பல தலைமுறைகள் வரையில் ஹதுவா சமஸ்தானத்துடன் என் முன்னேர்களுக்குத் தொடர்பு இருந்து வந்தது. அவர்கள் என்ன பதவி வகித்தார்கள் என்பது தெரியாது. எனினும், உயர்ந்த பதவி எதுவும் வகிக்கவில்லை என்பது மட்டும் தெரியும்.

கிராமத்தில் அவர்கள் வீடு வெறும் கூரை வேய்ந்ததுதான். ஜீரா தேயீயில் அதிக நிலபுலங்கள் உள்ள ஒரு காயஸ்து ஜமீந்தாரிடம் குடியானவர்களாக அவர்கள் இருந்து வந்தார்கள். எங்கள் மூதாதையர் பிற்காலத்தில் வேறு பல கிராமங்களுக்கு மிராசுதார்களாக ஆனார்களேனும், இன்றுவரை எங்கள் கிராமத்தில் சொந்த நிலமென்று எங்களுக்கு எதுவுமில்லை.

என் தாத்தா மிச்ரிலால்ஜீக்கு ஒரு தமையனார் இருந்தார். அவர் பெயர் சௌதுரிலால். மிச்ரிலால்ஜீ மிகவும் இளமையிலேயே காலமாகி விட்டார். அவருக்கு ஒரே மகன்தாம் இருந்தார். அவர் தாம் என் தந்தை மகாதேவ் சஹாய் என்பவர். சௌதுரிலால்ஜீக்கும் ஒரு மகன் இருந்தார். அவர் ஜகதேவ் சஹாய் என்பவர். மிச்ரிலால்ஜீ திடீரென்று இளமையிலே இறந்துவிட்டதனால், சௌதுரிலால்ஜீக்கு என் தந்தைமேல் வாஞ்சை அதிகம். ஜகதேவ் சஹாய், மகாதேவ் சஹாய் இருவரையும் தம் சொந்தப் பிள்ளைகளாகவே பாவித்துப் பேணி வளர்த்து ஆளாக்கினார். ஜகதேவ் சஹாய் மூத்தவர். அவருக்கு மகன் இல்லை. இப்போதிருக்கும் ஒரு மகள் தான் பிறந்தாள். மகாதேவ் சஹாய்ஜீக்கு மூன்று பெண்களும் இரண்டு பிள்ளைகளும் பிறந்தார்கள். ஒரு பெண் குழந்தைப் பருவத்திலேயே இறந்து விட்டாள். மற்ற இருவரும் வாழ்க்கைப் பட்டார்கள். இவர்களில் மூத்தவர் பகவதிதேவி சிறிது காலத்திற்குப் பின் கைம்பெண் ஆகிவிட்டார். அன்றிலிருந்து இன்று வரை அவர் என் வீட்டிலேயே வாழ்நாளைக் கழித்து வருகிறார். எனக்கும் என் தமையனாருக்கும் மூத்தவராகிய மற்றொரு சகோதரி மக்கட்பேறு இன்றியே இறந்து விட்டார். என்னுடைய தமையனாரின் பெயர் பாபூ மகேந்திர பிரசாத். எங்கள் வீட்டில் நான்தான் எல்லாருக்கும் இளையவன்.

ஹதுவா சமஸ்தானத்தில் சௌதுர்லால்ஜீ மிகவும் புகழ் பெற்றார். அங்கு அவர் திவான் பதவி வரை உயர்ந்து, இருபத்தைந்து முப்பது ஆண்டுகள் திவானாக இருந்தார். அப்பொழுது மகாராஜா சத்ரதாரி சாஹீ ஆட்சி செலுத்தி வந்தார். அவர் தம்முடைய மகனுக்கு ராஜ்யத்தை அளிக்காமல், தம் பேரன் ராஜேந்திர பிரதாபுக்கு அதைத் தம் உயிலில் எழுதி வைத்து விட்டார். அவருக்குச் சௌதுரிலால்ஜீயின் மேல் அதிக நம்பிக்கை இருந்தது. தாம் இறக்கும் தருவாயில் தம் சிறிய பேரனைக் காக்கும் பொறுப்பை அவர் மேலேயே சுமத்திச் சென்றார். மகாராஜா இறந்தபின் இளைய குமாருக்குப் பெரிய இன்னல்கள் விளைந்தன. ராஜ குடும்பத்தினர் ராஜாவின் மேல் வழக்குத்

தொடுத்துப் பிராது செய்தனர். இது பிரிவி கவுன்சில் வரையில் சென்றது. ஹதுவா ராஜ்யம் பிரிக்கவொண்ணுதது என்றும், அப்படிப்பட்ட பிரிக்கவொண்ணுத ராஜ்யத்தை உயில் மூலம் எழுதி வைக்க அரசருக்கு உரிமை உண்டென்றும், ஆகவே ராஜேந்திர பிரதாப் சாஹீ தாம் ராஜ்யத்திற்கு அதிபதி என்றும் பிரிவி கவுன்சிலில் தீர்ப்பு ஆயிற்று. இந்த வழக்கு நடந்து வந்த சமயத்தில் ராஜேந்திர பிரதாபின் உயிருக்கும் ஆபத்து எதிர்ப்பட்டது. அவரைக் காப்பதற்காகச் சௌதுரிலால்ஜீ அவருடைய கட்டிலுக்கு அருகிலேயே தாமும் தூங்குவார் என்றும், அவருக்கு உணவு எது அளிக்கப்பட்டாலும், விஷமிருக்குமோ என்ற ஐயத்தால் தாம் அதைத் முதலில் உண்டு பார்ப்பார் என்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

சௌதுரிலால்ஜீ ராஜாவுக்குக் காவல் மட்டும் புரியவில்லை; அவருடைய சமஸ்தானத்தையும் மிகவும் மேம்படச் செய்தார். தரிசு நிலத்தை நன்செய் நிலமாகத் திருத்தியும், மற்றும் பல விதத்திலும் நிலத்தைப் பெருக்கியும் ராஜ்யத்தின் வருவாயைச் சுமார் மூன்று மடங்காகச் செய்தார். இதனுல் மகாராஜா ராஜேந்திர பிரதாப் ஸாஹீ அவரை மிகவும் பாராட்டிச் சிறப்பாகக் கௌரவித்து வந்தார். அவர் முன்னிலையில் மகாராஜா புகை பிடிப்பதில்லை என்றும், அவர் வருகிருர் என்று கேட்டமாத்திரத்தில் ஹுக்காவை வெளியே அகற்றி விடுவார் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அந்தக் காலத்தில் வேலைக்காரர்களுக்குச் சம்பளம் மிகவும் குறைவு. சௌதுரிலால்ஜீ திவான் ஆனபோதுங்கூட ரூபாய் ஐம்பதோ நூருேதான் மாதந்தோறும் கிடைத்து வந்தது. அவர் வீட்டில் இருந்தவர் எல்லாருக்கும் அரண்மனையின் பண்டகசாலையிலிருந்து அரிசி, பருப்பு, நெய் முதலியன தினந்தோறும் வந்து விடும். ராஜா தம் ராஜ்யத்தின் வளமிக்க கிராமங்கள் பலவற்றை அவரிடம் குத்தகைக்கு விட்டிருந்தார். நன்செய் நிலத்தில் நெல் பயிர் செய்யப்பட்டு வந்தது. அதிலிருந்து நல்ல வருவாய் கிடைத்து வந்தது.

சௌதுரிலால்ஜீ சிறந்த நிர்வாகி. ராஜ்யத்தின் வருவாயை அவர் இரண்டு மூன்று மடங்கு பெருக்கினுர். அப்படிச் செய்தார் என்ருலும் அவ்வூர்க் குடிமக்கள் அவரிடம் மிக்க அன்பும் நன்றியும் கொண்டிருந்தார்கள். இதற்குச் சான்று என் சொந்த அனுபவத்திலேயே கண்டேன். ஒத்துழையாமை இயக்கத்தின்போது அந்த வட்டாரத்தில் நான் சுற்றிவந்த சமயங்களில் நான் எங்குச்

சென்றுலும், அவ்விடத்துப் பெரிய மனிதர்கள் என்னைச் செளதுரி லால்ஜீயின் பேரன் என்ற காரணத்தால் சிறப்பாக வரவேற்ருர் கள். அவர் ஆண்டிற்கு ஏழெட்டு ஆயிரம் ரூபாய் வரும்படியுள்ள ஜமீந்தாரி ஒன்றை வாங்கினுர். பெரும்பாலும் அரிசி விற்ற பணத்தைக் கொண்டே இந்த ஜமீந்தாரி வாங்கப்பட்டது. அநேக கிராமங்கள் என் பாட்டியார் இருவரின் பெயரில் வாங்கப் பட்டன. ஏனெனில் அவர்கள் தாம் நெல்லைக் குத்தி விற்றுப் பணம் கொடுத்தார்கள்.

மேலே கூறியதுபோல, செளதுரிலால்ஜீ தம் மகன் ஜகதேவ் சஹாயீயையும் தம் சகோதரரின் மகன் மகாதேவ் சஹாயீயையும் ஒன்ருகப் பாவித்து, இருவருக்கும் கல்வி புகட்டுவதற்கு ஏற்பாடு செய்தார். அப்பொழுது ஆங்கிலம் பரவவில்லை. இருவருக்கும் பாரசீக மொழியில்தான் பயிற்சி அளிக்கப்பட்டது. இவர்களைச் சப்ராவிற்கு அனுப்பி ஆங்கிலம் கற்றுக்கொடுக்கலாமென்று ஒரு சமயம் யோசனை செய்யப்பட்டது. என் பெரியப்பா இரண்டொரு புத்தகங்களைக் கூடப் படித்தார். ஆனுல், மகாராஜா இதற்கு ஊக்கம் அளிக்கவில்லை. இரு சகோதரர்களும் தாம் படித்த பார சீகப் படிப்பைக் கொண்டே எல்லாக் காரியங்களையும் நடத்த வேண்டியதாயிற்று. பிற்காலத்தில் மகாராஜா கிருஷ்ண பிரதாப் சாஹீ என்று விளங்கிய அரசகுமாருக்குப் பாடம் கற்பித்த அதே மெளல்வீ சாஹபிடம் சகோதரர்கள் இருவரும் பாரசீகம் கற் ருர்கள்.

மகாராஜா ராஜேந்திர பிரதாப் சாஹீ காலமான பின், ராஜ்ய பரிபாலனம் சிறிது காலத்திற்குக் கோர்ட் ஆவ் வார்டின் கையில் சென்றது. செளதுரிலால்ஜிக்கு ஆங்கிலம் தெரியாது. ஆகையால் திவானுக நீடித்து இருக்க முடியவில்லை. அப்பதவியில் இருபத் தைந்து முப்பது ஆண்டுகள் இருந்துவிட்டு அதைவிடத் தாழ்ந்த பதவி ஏதேனும் வகிப்பது தம் பெருமைக்குக் குறைவென்று அவர் கருதினுர். ஆகையால் ஹதுவா சமஸ்தானத்துடன் எங்க ளுக்குப் பல தலைமுறைகளாக இருந்து வந்த தொடர்பு அப் பொழுதிலிருந்து நீங்கி விட்டது. இவையெல்லாம் நான் பிறப் பதற்கு முன் நடந்த கதை ஆகும்.

ஹதுவாவை விட்டு வந்தபின் செளதுரிலால்ஜீ ஜீராதேயீயில் வசித்து வந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு அவர் கோரக்புரியில் தமுக்கி சமஸ்தானத்தின் திவானுகச் சிறிது காலம் அமர்ந்தார். அவ்வூரின் நீருங்காற்றும் அவருக்கு ஒத்துக்கொள்ளாததால் அவர் உடல்நிலை கெட்டு விட்டது. அதனுல் விரைவிலேயே அங்

கிருந்து விடைபெற்றுக் கொண்டு வந்துவிட்டார். அவருடைய இறுதி நாட்கள் ஜீராதேயீயிலேயே கழிந்தன. தமுக்கியின் விஷயங்கள் சிற்சில எனக்கு நினைவிருக்கின்றன. அப்பொழுது நான் மிகச் சிறியவனுயிருந்தேன்.

## 2. உடன் பிறந்தோர்

என் தந்தையின் ஐந்து மக்களுள் பகவதிதேவிதாம் எல்லோருக்கும் மூத்தவரென்று நான் மேலே கூறியுள்ளேன். நான் பிறப்பதற்கு முன்னரே அவர் மிகப் பணக்காரக் காயஸ்து குடும்பம் ஒன்றில் திருமணம் செய்து கொடுக்கப்பட்டார். சிறு பிராயத்தில், எனக்கு நான்கு அல்லது ஐந்து வயது இருக்கும் போது, நான் அங்கே சென்று அவர்களின் செல்வ வளத்தைப் பார்த்திருக்கிறேன். என் அத்தான் உட்பட அவர்கள் அண்ணன் தம்பி ஆறுபேர். ஒவ்வொருவருக்கும் தனித்தனியே வேலைக்கார னும் காவற்காரனும் இருந்தார்கள். அநேக யானை குதிரைகளும், விசாலமான பெரிய மாளிகைகளும் இருந்தன. ஆனுல் நான் கைந்து வருஷங்களுக்குள், ஆண்டுதோறும் எழுபது எழுபத் தைந்து ஆயிரம் ரூபாய் வரும்படியுள்ள ஜமீன்தாரி முழுதும், எப் படியோ எங்கள் கண்முன்னேயே விற்பனையாகிவிட்டது. என் அத்தானுடைய மரணமும் அந்தக் காலத்தில்தான் ஜீராதேயீயில் எங்கள் வீட்டில் நிகழ்ந்தது. நான் அப்போது சிறுவனுயிருந் தேன். ஆயினும், அன்று வீட்டில் எழுந்த அழுகுரலையும், மற்றும் என் தாத்தா, பெரியப்பா, தந்தை, இன்னும் வீட்டுப் பெண்கள் ஆகியவர்களுடைய பரிதாப நிலையின் காட்சியையும் நான் இன்றும் மறக்கவில்லை. என் வாழ்க்கையில், நான் அன்று தான் சாவின் காட்சியை முதலாகக் கண்டேன்.

அதற்குப்பின்தான் பகவதிதேவியின் தங்கைக்குக் கல்யா ணம் ஆயிற்று ; என் தமையனுருக்கும் திருமணமாயிற்று. இந்த இரண்டு கல்யாணங்களையும் நான் பார்த்தேன். என் தமையனு ரின் கல்யாணத்திற்கு, மாப்பிள்ளை வீட்டாருடன் நானும் போனேன். அப்போது எனக்குச் சுமார் நான்கு வயதிருக்கும். அங்கே போய்ச் சேர்ந்தவுடன் என் தாயாரை நினைத்துக் கொண்டு நான் அழுதேனும். அதுவரையில் என் தாயாரைப் பிரிந்து இரண்டொரு நாட்கள் தாம் நான் எங்கேனும் போன

துண்டு. என் தமையனார் என்னை விட எட்டு ஆண்டுகள் மூத்தவர். இதனால் எனக்கு அநேக விஷயங்களில் அனுகூலமாயிருந்தது. கல்விக்காக எந்த முறை அவருக்கு அமைந்ததோ அதுவே எனக்கும் இயல்பாக அமைந்தது. ஆகையால் நான் அவருடைய அடிச்சுவட்டில் யாதொரு விசேஷக் கஷ்டமுமின்றிப் பின் தொடர்ந்தேன்.

சௌதுரிலால்ஜீ ஊரோடு வீட்டிலேயே இருந்தார். நானும், எனக்கு ஐந்தாறு மாதம் சிறியவளான என் பெரியப்பாவின் மகளும் அவர் மேல் விழுந்து புரண்டு விளையாடுவோம் என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவரும் பேரன்புடன் எங்களுடன் விளையாடுவார். ஜமீன்தாரியை என் பெரியப்பாதாம் கவனித்து வந்தார்; அவர் அடிக்கடி சப்ரா போய் வருவார். அங்கு ஜமீன்தாரியைச் சார்ந்த வழக்குகள் ஒன்றில்லாவிட்டால் ஒன்று நடந்து கொண்டிருக்கும். என் தமையனார் ஆங்கிலம் கற்பதற்காகச் சப்ராவுக்கு அனுப்பப்பட்டார். இடையிடையே அவரைப் பார்ப்பதற்காகவும் பெரியப்பா போவார். அவர் சப்ராவிலிருந்து திரும்பி வருகிறாரென்ற செய்தி கிடைத்தபோதெல்லாம் நாங்கள் வீட்டிலிருந்து சிறிது தூரம் முன் சென்று அவரை வரவேற்போம். இப்படி வரவேற்பதின் நோக்கம் அவரிடமிருந்து மிட்டாய் பழம் முதலியவற்றைக் கேட்டு வாங்குவதற்காகத்தான். கிடைத்தவற்றைப் பெற்றுக்கொண்டு அவருக்கு முன்னால் ஓடிச் சென்று அவற்றைத் தாயாரிடம் காட்டுவோம்.

என் தகப்பனாரும் வீட்டிலேயே இருந்தார். ஜமீன்தாரியின் காரியத்தோடு அவருக்குத் தொடர்பு மிகக் குறைவு. தோட்டம் அமைப்பதில் அவருக்கு மிகப் பிரியம். தோட்டம் தோப்பு அமைப்பதிலேயே அவர் நெடுநேரம் கழிப்பார். அவர் நட்ட பெரும் மாந்தோப்புக்கள் இரண்டு இன்றுகூட எங்கள் வசமிருக்கின்றன. அவற்றில் நல்ல நல்ல மாம்பழங்கள் இன்றும் காய்க்கின்றன. அவர் பாரசீக மொழியில் சிறந்த வித்துவான். அவருக்குக் கொஞ்சம் கொஞ்சம் சமஸ்கிருதமும் தெரியும். ஆயுர்வேதத்திலும் யுனானியிலும் அவர் மனம் ஈடுபட்டது. இந்த விஷயங்களைப் பற்றிய புத்தகங்களை அவர் நிறையச் சேர்த்து வைத்திருந்தார். அவற்றை நன்றாகப் படித்தும் வந்தார். இப்படியாகவே அவர் முறையின்றிக் கற்றுத் தேர்ச்சி பெற்றுத் திறமையான வைத்தியராகிவிட்டார். அவரிடம் விதவிதமான நோயாளிகள் வருவார்கள். மருந்தை விலைக்கு வாங்கக் கூடியவர்களுக்கு அவர் சீட்டு எழுதிக் கொடுத்துவிடுவார். ஏழைகளுக்குத் தம்

செலவிலேயே மருந்து கொடுப்பார். மருந்து செய்வதற்கென்றே அவரிடம் ஒரு வேலையாள் எப்போதும் இருந்தான். ஆனால் அவர் எவருக்கும் நாடி பார்ப்பதுமில்லை; எந்த நோயாளியையும் வீட்டில் சென்று பார்ப்பதுமில்லை. உடல் நிலையை மட்டும் கேட்டு மருந்து கொடுப்பார். அதனால் எத்தனையோ பேர் நலமடைந் தார்கள். அவர் நல்ல கட்டுள்ள தேகம் பெற்றவர். இளமையி லிருந்து அவர் மற்பயிற்சிக் கூடத்தில் கசரத்துப் பழகி வந்தார். நான் பள்ளியிலோ கல்லூரியிலோ படிக்கும்போது, விடுமுறை யில் வீட்டிற்கு வந்த ஒரு சமயத்தில் அவரே எனக்குக் கர்லாக் கட்டை சுழற்றக் கற்றுக் கொடுத்துத் தாமும் என்னுடன் கர்லாக் கட்டை சுழற்றிப் பற்பல வித்தைகள் காட்டியது இன்னமும் என் நினைவிலிருக்கிறது. குதிரைச் சவாரி நன்றாய்ச் செய்வார். உயர்ந்த ஜாதிக் குதிரை ஒன்று அவரிடம் எப்போதும் இருக்கும். சிறு பிராயத்திலிருந்து எனக்கும் என் தமையனாருக்கும் குதிரை சவாரி செய்ய அவரே கற்றுக் கொடுத்தார். எங்கள் பால்ய நாட் களில் ஜீராதேயீக்கு விடுமுறையில் வந்த சில சமயங்களில் நாங்கள் குதிரைகளின் மேல் ஏறிக் கொண்டு ஊரைச் சுற்றி வருவதுண்டு.

பால்யத்தில் நாங்கள் கிராமத்து விளையாட்டுகளும் ஆடுவ துண்டு. அங்கே விசேஷமாய் வழங்கி வந்த "பலீங்குடுகுடு" வும் "சிக்கா" என்ற ஆட்டமும்தாம் அதிகமாய் விளையாடு வோம். அநேகமாக ஒரு நாளாவது விளையாடாமல் கழிந்த தில்லை. கல்லூரிப் படிப்பு முடியும் வரையில் இப்பழக்கம் இருந்து வந்தது. விடுமுறையில் ஜீராதேயீக்குச் சென்ற போதெல்லாம் நிச்சயமாய் இவ்விளையாட்டுகள் ஆடுவோம். அவற்றில் என் தமையனாரும் சேர்ந்து கொள்ளுவார். இன்னுமொரு விளையாட் டும் கிராமத்தில் வழக்கிலிருந்தது. அதற்குத் "தோல்ஹாபாதி" என்பது பெயர். அதில் மரங்கள் ஏறவேண்டும். எனக்கு மரம் ஏறுவதென்றால் பயம்; ஆகையால் நான் அந்த விளையாட்டில் சேர்ந்ததில்லை. எங்கள் ஊரில் ஆறு எதுவும் இல்லாத குறையால் நான் நீந்தக் கற்றுக் கொள்ளவில்லை.

என் தாயாருக்கும் பாட்டிக்கும் என்மேல் பாசம் அதிகம். சிறு பிராயத்திலிருந்தே நான் அந்திப் பொழுதில் அதிசீக்கிரம் தூங்கிவிடுவது வழக்கம். ஆனால், இதற்கு மாறாக இரவு கழிவ தற்கு முன்பே அதிகாலையில் எழுந்து விடுவேன். எங்கள் வீடு மச்சுவீடு; ஆனால் பழையமுறையில் கட்டப்பட்டது. நடுவில் முற்றமும், நான்கு புறங்களிலும் தாழ்வாரமும் அறைகளும்

இருந்தன. ஒவ்வோர் அறைக்கும் ஒரு கதவும், மோட்டுக்கு அருகில் வெளிச்சத்திற்காக ஓரிரண்டு சின்னஞ்சிறிய சாளரங் களும் இருந்தன. விசேஷமாகக் குளிர் காலத்தில் இராப்பொழுது நெடியதாதலால், இருள் கழியுமுன்பே எனக்குத் தூக்கம் கலைந்து விடும். அப்பொழுதிருந்து நான் என் தாயாரைத் தூங்க விடமாட்டேன். ரஜாயிக்கு உள்ளிருந்துகொண்டே அவரை எழுப்புவேன். அவர் விழித்துக்கொண்டு காலைத் தோத்திரங்கள் பாடுவார். சில சமயங்களில் ராமாயணம் முதலிய கதைகளும் சொல்லுவார். அப்பாடல்களும் கதைகளும் என் மனத்தில் நன்ருய்ப் பதியும். சாளரத்தின் வழியாக வெளிச்சம் தெரியும் வரையில் நான் படுத்துக்கொண்டே இப்படியாக என் தாயாரைத் தோத்திரங்கள் பாடச் சொல்லி அல்லது கதை கூறச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருப்பேன். வெளிச்சம் நிறைய வந்தபின்தான் அறையை விட்டு வெளியே வருவேன். மாலையில் நான் இத்தனை சீக்கிரம் தூங்கிவிடுவதால், எப்போதாவதுதான் இரவு உணவை விழிப்போடே உண்பேன். அந்தக் காலத்தில் இரவு உணவு வெகுநேரங் கழித்துதான் தயாராகும். குழந்தைகளைச் சொல் வானேன் ! பெரியவர்கள்கூட ஒரு தூக்கம் போட்டுவிட்டுத்தான் உண்பார்கள். என்ருவதுதான் இரவு பன்னிரண்டு அல்லது ஒரு மணிக்கு முன் சாப்பாடு முடியும். முதலில் வீட்டில் உள்ள புருஷர்கள் உண்பார்கள், பிறகு பெண்கள் உணவு கொள்வார்கள், அதற்குப்பின் வேலைக்காரர்கள் உண்பார்கள். கோடைக் காலத் தில் வேலைக்காரர்கள் உணவு உண்டு கொண்டிருக்கும்போது, சில சமயங்களில் பொழுது விடிந்துவிடும். ஆகையால் மாலை வேளை யில் நான் உண்ணுமலேயே தூங்கிவிடுவேனென்ருல் அதை என் குற்றமாக ஏற்க நான் தயாராயில்லை.

சமையலுக்கு வீட்டோடேயே ஒரு காயஸ்து இருந்தான். ஆகையால் என் பெரியம்மாவுக்கு அல்லது தாயாருக்குச் சமையல் பொறுப்பு இல்லை. ஆயினும் அவர்கள் கறி முதலியன சமைக்க வேண்டிவரும். பொழுது சாய்ந்ததோ இல்லையோ நான் என் தாயாரைப் பற்றிக் கொண்டு என்னுடன் தூங்க வேண்டுமென்று அழுவேன். அவர் ஏதாவது வேலையாயிருந்தால், அதை விட்டு விட்டு என்னுடன் படுத்துக் கொள்ள வேண்டிவரும். ஆனல், இந்தப் பணி அதிக நேரம் நடப்பதில்லை யென்பது எனக்குத் தெரியும், ஏனெனில் நான் விரைவில் தூங்கிவிடுவேன். அதற்குப் பின் அவர் எழுந்து போய் வேலை செய்வார். எப்பொழுதும் என்னை எழுப்பித்தான் உணவு கொடுக்கப்படுமென்பது எனக்கு

நினைவிருக்கிறது. கண் திறக்காது. என் தாயார் என் உடம்பைக் உலுக்கிக் குலுக்கி, மைனு கிளி என்று பேர்வைத்துக் கதையைச் சொல்லி வாயைத் திறந்து சோற்றை ஊட்டுவார். எங்கள் வீட்டில் செவிலித்தாய் ஒருத்தி இருந்தாள். அவளை நாங்கள் "சித்தி" என்று அழைப்போம். அவள் இப்படி உணவை ஊட்டுவதில் மிகவும் கெட்டிக்காரி. வேறு யாரும் ஆயிரம் வகையாய் முயன்றாலும் மூடின கண்ணும் வாயும் மூடியபடியே இருக்கும். ஆனால், அவள் ஒன்றில்லாவிட்டால் மற்றொரு தந்திரத்தால் கண்டிப்பாய் வாயைத் திறந்து சோற்றை ஊட்டிவிடுவாள். மாலைப் பொழுது வந்த உடனேயே தூங்கும் பழக்கமும், அதிகாலையில் எழுந்திருக்கும் பழக்கமும், எனக்கு நன்கு அமைந்துவிட்டன. படிப்பதற்காக நான் சப்ராவுக்கும் பட்னாவுக்கும் போகும் வரையில் கூட இரவு ஆனவுடன் அதிசீக்கிரம் தூங்கி விடுவேன்; மேலும் ஐந்தாவது வகுப்பிற்குப் போகும் வரையில் என்றோதான் நான் இரவில் என் கையால் உண்டிருப்பேன். எங்கள் வீட்டில் பிராமண சமையற்காரன் ஒருவன் இருந்தான். அவன் இரவில் என்னை மடிமேல் உட்கார வைத்துக் கொண்டு பழைய கதையைப் போலவே கண் மூடியிருந்தாலும், திறந்திருக்கும் வாயில் சோற்றை உருட்டி உருட்டி ஊட்டுவான்; நான் அப்படியே விழுங்கி விடுவேன்.

நான் வக்கீல் தொழில் நடத்திய காலம் வரையிலும் அந்திப் பொழுதிலேயே தூங்கிவிடும் பழக்கம் தொடர்ந்து நின்றது. அந்திப்பொழுதில் கட்சிக்காரரின் காகிதக் கட்டை எடுத்து வைத்துக்கொண்டு பார்க்க உட்காருவேன். ஏழரை எட்டு மணிக்கு அவரெதிரேயே எனக்குத் தலை ஆட ஆரம்பித்துவிடும். உடனே வேலையை மூடிவைத்து விடுவேன். 1914–15ல் நான் எம். எல். பரீக்ஷைக்குத் தயார் செய்து கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அச்சமயம் நான் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் தொழிலாற்றிக் கொண்டிருந்தேன். சட்டக் கல்லூரியிலும் பேராசிரியர் வேலை கிடைத்திருந்தது. சில வக்காலத்துக்களும் கையிலிருந்தன. ஆகையால் வக்காலத்துக்களை வாதாடுவதற்காகத் தயார் செய்வதிலும் சட்டக் கல்லூரியில் பாடங் கற்பிப்பதற்காகத் தயார் செய்வதிலும் காலை வேளை கழிந்துவிடும். பகலோ கச்சேரியில் கழிந்துவிடும். இரவில் தான் பரீக்ஷைக்குப் படிக்க ஒழியும். ஆகையால், சாயுங் காலத்தில் புத்தகங்களைப் படிப்பேன். ஆனால் புத்தகம் கையில் ஏறவேண்டியதுதான், தூக்கமும் கூடவே வந்துவிடும்! இப்

படிப் பரீக்ஷைக்குப் பயின்ருல் நற்பயன் கிட்டாதென்றும், எப்படி யாவது சாயுங்காலத்தில் தூங்குவதை நிறுத்த வேண்டுமென்றும், குறைந்தது இரவு ஒரு மணி வரையிலாவது படிக்க வேண்டு மென்றும் ஒருநாள் நினைத்தேன். தூக்கம் வரத் தொடங்கிய தும், புத்தகத்தைக் கையில் ஏந்தி எழுந்து நின்று கொண்டேன். அப்படியும் தூக்கத்தின் முற்றுகை அடங்காததால், அறையில் இங்கும் அங்கும் உலாவிக்கொண்டு படிக்க ஆரம்பித்தேன். எவ்வளவு நேரம் இப்படிக் கழிந்தது என்பது தெரியாது. திடீ ரென்று புத்தகம் கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்தது. நானும் கூடவே "தடாம்" என்று விழுந்து விட்டேன். என் மண்டை ஏன் உடையவில்லை யென்பது எனக்கே விளங்கவில்லை. ஆனல் கொஞ்சம் அடிமட்டும் பட்டது. அதிலிருந்து அத்தந் தந்திரம் அபாயமானதென்று கருதி அதை விட்டுவிட்டேன். பிறகு உட்கார்ந்தபடி எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவுக்குப் படித்துத் திருப்தி யடைந்தேன்.

## 3. வித்யா ஆரம்பம்

ஐந்தாறு வயதில் எனக்கு அக்ஷராரம்பம் செய்து வைக்கப் பட்டது. அப்போது என் தமையனுர் ஆங்கிலம் கற்பதற்காகச் சப்ராவுக்கு அனுப்பப்பட்டு விட்டார். அக்காலத்தில் வழக்கி லிருந்த முறைப்படி மௌல்வீ சாஹப் தாம் அக்ஷராப்பியாசம் செய்து வைத்தார். கல்வித் தொடக்க நாளன்று மௌல்வீ சாஹப் வந்து, பிஸ்மில்லா சொல்லி எழுத்துப் பழக்கம் தொடங்கி வைத்தார். முடிவில் மிட்டாய் வழங்கப்பட்டது; அவருக்குத் தக்ஷிணையும் கொடுக்கப்பட்டது. மூன்று மாணவர்கள் அவரிடம் ஒப்படைக்கப்பட்டனர்; அவர்களில் நானும் ஒருவன். மற்ற இருவரும் எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த ஒன்றுவிட்ட சகோ தரர்கள். அவர்களில் ஒருவர் யமுனு பிரசாத்ஜீ. அவர் எங்கள் எல்லோரிலும் மூத்தவர்; எனக்கு இரண்டு வயது பெரியவர். மற்ருெருவர் இப்போது இல்லை; அவரும் எனக்கு மூத்தவரே. யமுனு பாயீதாம் எங்களுக்கு "லீடர்". எல்லா விளையாட்டுகளி லும் சிறுபிள்ளைக் குறும்புகளிலும் அவர் தாம் "முதல் நம்பர்". அவருடைய சிற்றப்பா ஒருவர்–எனக்கும் சிற்றப்பா முறை உடை யவர்–பெரிய தமாஷ்க்காரப் பெயர்வழி. அவர் என் தந்தையாரி

னும் சிறியவர். ஆயினும், என் தந்தையாரின் குணவிசேஷங்கள் சிலவற்றை அவரும் கற்றிருந்தார். அவரும் குதிரைச் சவாரி நன்ருகச் செய்வார் ; மருந்து செய்வார் ; பலருக்கும் கொடுத்தும் வந்தார். துப்பாக்கிப் பிரயோகம், கவண் வில் பயிற்சி இவையும் அவருக்கு நன்ருகத் தெரியும். பாரசீகமும் கற்றிருந்தார். சதுரங்கம் நன்ருக ஆடுவார். ஆயினும் இவற்றில் எல்லாம் என் தகப்பனுரை வில்லாதி வில்லனுகக் கருதினுர். இவர் மிகவும் சிரித்த முகமும், கேலிக்கூத்தும் அமையப் பெற்றவர்.

எங்களுக்குப் பாடம் கற்பிக்க வந்த மௌல்வீ சாஹப் ஒரு விசித்திரப் பேர்வழி. அவர் எத்தனையோ விஷயங்கள் தமக்குத் தெரியுமென்று உரிமை கொண்டாடுவார். பல்தேவ் சாச்சாவின்[1] தமாஷுக்கு அவர் மிகவும் பயன்பட்டார். சாச்சா நானுவித விஷயங்களை அவரிடம் சொல்லி அவருக்கு உற்சாகத்தைக் கிளப்பிவிட்டு, எதுவானுலும் சரி, அது தமக்குத் தெரியும் என்றும், அதைத் தாம் செய்ய முடியும் என்றும் அவரைச் சொல்ல வைத்துவிடுவார். இப்படியாக, மௌல்வீ சாஹப் தமக்குச் சதுரங்கம் ஆடத் தெரியுமென்று சொல்வார். பல்தேவ் சாச்சா அவரைச் சதுரங்கம் ஆடவைப்பார். ஆனுல் வீராப்புப் பேசியதற்கு ஏற்ப மௌல்வீ சாஹப் ஒரு முறையாவது வென்றது இல்லை. நாங்கள் சின்னஞ் சிறுவர்கள் ; இந்த வேடிக்கைகளைப் பயத்துடன் உன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டு இருப்போம். சிரிப்பதற்குச் சந்தர்ப்பம் வந்தாலும், சிரிப்பது சங்கடமாய் இருக்கும். இந்த வேடிக்கைகளின் செய்தி சௌதுரிலால்ஜீ வரையில் எட்டிவிட்டது. அவரும் சில சமயங்களில் இவற்றில் கலந்து கொள்ளுவார்.

ஒரு நாள், பல்தேவ் சாச்சா, ஊரில் குரங்குகள் வந்துவிட்டன என்றும், அவற்றை எப்படியாவது விரட்டவேண்டும் என்றும், அவற்றைக் கவண் வில்லால் அடித்து விரட்டலாம் என்றும் மௌல்வீ சாஹபிடம் சொன்னுர். இதைச் சொல்லியது தான் தாமதம், உடனே மௌல்வீ சாஹப் தமக்குக் கவண் வில் நன்ருய் விடத் தெரியும் என்று பெருமை அடித்தார். ஆனுல், அவருக்கு ஒன்றும் தெரியாது என்று பல்தேவ் சாச்சா அறிந்து கொண்டார், இருந்தாலும் வேடிக்கை பார்க்க வேண்டும் என்று விரும்பினுர். ஆகையால் மௌல்வீ சாஹபை அழைத்துக்

---

1. "சசா" என்பதுதான் ஹிந்தியில் சொல்லானுலும், வடக்கேயும்கூட "சாச்சா" என்றே பேச்சில் வழங்குவதால் இங்கும் "சாச்சா" என்றே எழுதப் படும். "சாச்சா" என்பது சிற்றப்பன் என்ற பொருளையுடையது.

கொண்டு தோட்டத்திற்குப் போய்ச் சேர்ந்தார். கவண் வில்லும் "உண்டை"யும் அவரிடம் கொடுத்து, "நன்ருய் இழுத்து ஒரு குரங்கின் மேல் விடும்" என்ருர். மௌல்வீ சாஹப் பலம் கொண்டமட்டும் இழுத்து "உண்டை"யை விட்டார். அதை எறிந்துவிட்டு, குரங்கின்மேல் எப்படி அடிபடுகின்றது என் பதைப் பார்க்க ஆசைப்பட்டார். இதற்குள், அவரது இடக்கைப் பெருவிரலில் இருந்து இரத்தம் சொட்ட ஆரம்பித்தது. அவர் அக்காயத்தின் வலியால் ஒடுங்கிப் போய் உட்கார்ந்து விட்டார். "உண்டை" குரங்கின் மேல் படுவதற்குப் பதிலாக மௌல்வீ சாஹபின் பெருவிரலைப் பதம் பார்த்து விட்டது.

மற்ருெரு நாள் நடந்த காரியம் பின்வருவது. மாலை வேளை யில் எல்லோரும் உலாவச் சென்ருேம். எங்கள் தாத்தாவும் வந் தார். மௌல்வீ சாஹபும் பல்தேவ் சாச்சாவும் உடன் வந்தார் கள். பற்பல விஷயங்களைப் பற்றிப் பேச்சு வந்தது. அப் போது ஒரு காளை எதிரே தென்பட்டது. அது ஜனங்களை முட்டு கிறதென்று ஊரார் சொல்லுவார்கள். பல்தேவ் சாச்சாவின் பூச்சிக்கா மௌல்வீ சாஹப் பயப்படுவார்? அவர் பயமில்லாமல் சென்ருர். அவ்வளவுதான், காளை அவரை முட்டித் தள்ளி விட்டது. இப்படியான வேடிக்கைகள் வழக்கமாய் நடக்கும்.

ஒருநாள் பல்தேவ் சாச்சா மௌல்வீ சாஹபுக்குத் துப்பாக்கி சுடுவது எப்படி என்று எடுத்துக் கூறினுர். எந்த விஷயமும் தமக்குத் தெரியாது என்று சொல்லுவது தம் பெருமைக்குக் குறைவு என்று மௌல்வீ சாஹப் கருதினுர். ஆகையால், தமக்கு நன்ருய்க் குறிவைத்துச் சுடத் தெரியும் என்று அவர் அழுத்தம் திருத்தமாய்ச் சொல்லிவிட்டார். அவரைத் தம்முடன் அழைத் துக்கொண்டு பல்தேவ் சாச்சா துப்பாக்கி எடுத்துச் சென்ருர். மௌல்வீ சாஹபுக்கு இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவர் கள் எங்களுடன் படித்துக் கொண்டிருந்தார்கள். நாங்களும் அந்தப் பையன்களும் அவர்களுடன் சேர்ந்து கொண்டோம். சிறிது தூரத்தில் ஓர் உயர்ந்த மரத்தின் மேல் ஒரு கழுகு உட் கார்ந்திருப்பது கண்ணில் பட்டது. பல்தேவ் சாச்சா அதன் மேல் குறிவைக்கும்படி சொன்னுர். அது மிகவும் உயரத்தில் இருந்தது. ஆகையால் துப்பாக்கியை ஏறக்குறையச் செங்குத் தாய்ப் பிடித்துத்தான் குறிவைக்க முடிந்தது. மௌல்வீ சாஹ புக்குக் கொடுக்கப்பட்ட துப்பாக்கி பழைய தினுசு. அதில் மசாலையை மேலே இருந்து குழாய் வழியாகக் கிடிக்க வேண் டும். அது மிகவும் பளுவாயும் இருந்தது. மௌல்வீ சாஹப்

இதற்கு முன் ஒரு நாளும் துப்பாக்கிப் பிரயோகம் செய்தது இல்லை போல் இருந்தது. அவர் ஏறக்குறைய செங்குத்தாய்ப் பிடித்த துப்பாக்கியைத் தம் மார்பில் சார்த்திக் கொண்டு குறி வைத்தார். அங்கே துப்பாக்கியின் குதிரையைச் சுடக்கிய ஒலி கேட்டது, இங்கே கழுகுக்குப் பதிலாக மௌல்வீ சாஹப் தரையில் மல்லாக்க வீழ்ந்தார். பல்தேவ் சாச்சா "சடார்" என்று அவரைத் தூக்கிவிட்டு, அவருடைய மக்களைத் தண்ணீர் கொண்டு வர அனுப்பினர். எப்படியோ மௌல்வீ சாஹப் வீட்டில் கொண்டு போய்ச் சேர்க்கப் பட்டார்.

இப்படியாகக் கேலிக் கூத்துக்கு இடையில் நாங்கள் பாரசீகம் கற்று வந்தோம். ஏழெட்டு மாதங்களுக்குப் பின் மௌல்வீ சாஹப் போய்விட்டார். நாங்கள் எழுத்துக் கற்றுக்கொண்டு, "கரீமா" படிக்க ஆரம்பித்திருந்தோம். பிறகு வேறொரு மௌல்வீ வரவழைக்கப் பட்டார். அவர் மிகவும் பெருமை வாய்ந்தவர், நன்றாயும் பாடம் கற்றுக் கொடுத்தார். அவரே இரண்டு ஆண்டுகள் வரையில் இருந்தார். "கரீமா", "மாம்கீமா" "கால்கபாரீ", "குஷால்சீமியா", "தஸ்தூர்-உல்-சீமியா", "குலிஸ்தாம்", "போஸ்தாம்" ஆகிய வரையில் அவரால் எங்களுக்குக் கற்றுக் கொடுக்க முடிந்தது. அதே காலத்தில், நாங்கள் "கைதீ",[1] என்ற எழுத்தும், பெருக்கலும் கற்றுக் கொண்டோம். ஆனால் இவற்றை எப்போது, எப்படிக் கற்றுக் கொண்டோம் என்பது நினைவு இல்லை. வாரத்தில் ஐந்தரை நாட்கள் பாரசீகம் படிப்போம். வியாழக்கிழமை, பகல் வேளைக்குப் பின் வெள்ளிக்கிழமை பகல் வரையில் பாரசீகத்திலிருந்து விடுதலை; இவ்வேளையில் "கைதீ" அல்லது கணக்கு முதலியன கற்றோம். இது தவிர விளையாடவும் குதிக்கவும் அதிக நேரம் கிடைக்கும்.

நாங்கள் படிக்கும் முறையின் அமைப்பு எப்படி என்றால், அதிகாலையில் எழுந்திருந்து ஆரம்பப் பள்ளிக்கூடத்திற்குப் போவோம். எங்கள் மச்சு வீட்டில் இருந்து தனியாய் இருந்த மற்றொரு வீட்டின் தாழ்வாரத்தில் பள்ளிக்கூடம் இருந்தது. அங்கு ஓர் அறையில் மௌல்வி சாஹப் இருப்பார். அதற்கு எதிரே இருந்த தாழ்வாரத்தில் ஒரு விசுப்பலகையின்மேல் நாங்கள் உட்கார்ந்துகொண்டு படிப்போம். மௌல்வீ சாஹப் சில சமயங்களில் தமது கயிற்றுக் கட்டிலின்மேலும், சில சமயங்களில் விசிப்பலகை

1. இது பீகாரில் வழங்கும் ஒருவித நாகரீ எழுத்து. இதற்கு நாகரியில் உள்ள தலைக்கோடு கிடையாது. இது "மோதி" என்று சொல்லப்படும் ஹிந்தி எழுத்தை ஒக்கும்.

யின்மேலும் உட்கார்ந்து கொண்டு பாடம் கற்பிப்பார். காலையில் வந்ததும் முன் நாள் படித்த பாடத்தை ஒரு முறை மனத்தில் பதியும்படி படித்துக்கொள்ள வேண்டும். இதை யார் எத்தனை விரைவில் முடிக்கிறார்களோ அவர்களுக்கு அத்தனை விரைவில் புதுப்பாடம் கற்பிக்கப்படும். பெரும்பாலும் நான் என் இரு தோழர்களுக்கு முன்னமே பள்ளிக்கூடத்திற்கு வந்துவிடுவேன். வந்ததும், பழைய பாடத்தைப் பிழை அறக் கற்பதை முதலில் முடித்துவிட்டு மேலே புதுப்பாடம் படிப்பேன். இதற்குள் சூரி யன் உதயமாகி பகலும் சிறிது கழிந்துவிடும். அப்போது வேலைக்காரன் வந்து அழைத்துச் சென்று கைகால் கழுவி விட்டு, ஏதாவது உண்பதற்காக வீட்டிற்குள் அம்மாவிடம் அழைத்துச் செல்வான். இதற்காக ஏறக்குறைய அரை அல்லது முக்கால் மணி நேரம் விடுதலை கிடைக்கும். சிற்றுண்டியை உண்டு திரும்பி வந்து பாடத்தை மனப்பாடம் செய்ய வேண்டும். அப்படி மனப்பாடம் செய்து ஒப்பித்த பின் மௌல்வி சாஹப் "புத்தகத்தை மூடு" என்று கட்டளை இடுவார். புத்தகத்தை மூடிவிட்டுப் பலகையை எடுக்கவேண்டும். இவ்விரண்டு காரியங் களுக்கு இடையில் குதித்து விளையாடுவதற்குச் சிறிது நேரம் கிடைக்கும். அல்லது மறுபடியும் வீட்டிற்குப் போய் ஏதாவது உண்டுவிட்டு வருவதற்கு வாய்ப்புக் கிடைக்கும். பலகையில் எழுத வேண்டும். அது நிறைந்து விட்டபின் அதைக் கழுவ வேண்டும். இந்த வேலை செய்யும்போது எங்களுக்குச் சிரித்து விளையாடுவதற்குக் கொஞ்சம் நேரம் கிடைக்கும். பகலில் குளித் துச் சாப்பிடுவதற்கு ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரம் கிடைக்கும். உண்டுவிட்டுத் திரும்பி வந்து மீண்டும் பள்ளிக் கூடத்திலேயே அதே விசிப்பலகையில் தூங்க வேண்டும். மௌல்வீ சாஹப் கயிற்றுக் கட்டிலில் தூங்குவார், அநேகமாய் எங்களுக்குத் தூக்கம் வராது. விசிப்பலகையில் படுத்துக் கொண்டே சதுரங்கம் ஆடுவோம். மௌல்வீ சாஹப் விழிக்கும் நேரம் ஆவதற்கு முன்பே காய்களை எடுத்து வைத்து விடுவோம். அந்தக் காலத்திற்கு முன்னிருந்தே எனக்குச் சதுரங்கம் ஆடத் தெரிந்துவிட்டது; ஆனால், எப்பொழுது, எப்படி, யாரிடம் கற்றுக் கொண்டேன் என்பது தெரியாது. பகல் நேரத்திற்குப் பின் வேறொரு பாடம் கொடுக்கப்படும். அதைச் சிறிதளவு மனப் பாடம் செய்து ஒப்பித்தபின், பகற்பொழுது இன்னும் ஒன்று ஒன்றரை மணி காலம் இருக்கும்போதே, விளையாடுவதற்காக ஓய்வு கிடைக்கும். இவ்வேளையில் பந்து, சிக்கா முதலியன

விளையாடுவோம். சாயங்காலம் விளக்கு ஏற்றிய உடன் புத்தகத்தைத் திறந்து வைத்துக்கொண்டு படிக்க உட்காருவோம். பகலில் கொடுத்த இரண்டு பாடங்களையும் மனப்பாடம் செய்துவிட்டுப் பிறகு ஒப்பிக்க வேண்டும். அதற்குப் பிறகு "புத்தகத்தை மூடு" என்று கட்டளை கிடைக்கும். புத்தகத்தை மூடிவிட்டு, முறைப்படி மௌல்வீ சாஹபுக்கு வணக்கம் செய்துவிட்டு வீட்டிற்குச் சென்று தூங்குவோம்.

மாலை வேளையில் எனக்கு முன்நேரத்திலேயே தூக்கம் வந்துவிடும். இதனால் சாய்ந்தாடுவதை மௌல்வீ சாஹபு எங்காவது பார்த்துவிட்டு அடிப்பாரோ என்ற அச்சம் எப்போதும் உண்டு. விரைவில் விடுதலை பெறுவதற்கு இரண்டு உபாயங்கள் இருந்தன. ஓடிக் குதித்து விளையாடுவதில் யமுனாபாயீ "லீடர்". விரைவில் விடுதலை பெறுவதற்கு வழி தேடுவதிலும் அவர்தாம் "லீடர்". படிப்பதற்காக எண்ணெய் விளக்கு ஏற்றி வைத்திருக்கும். யமுனா பாயீ பகலிலேயே சாம்பல் அல்லது புழுதியைக் கொஞ்சம் எடுத்துத் துணியில் முடித்துச் சிறு பொட்டணம் செய்து ஒளித்து வைத்துக் கொள்வார். என்றாவது விளக்கில் எண்ணெய் அதிகமாய் இருப்பதாகத் தோன்றினால், விளக்கைத் தூண்டும் சாக்கில் தான் ஒளித்து வைத்திருந்த பொட்டணத்தை விளக்கில் வைத்துவிடுவார். அது எங்கள் கண் முன்னிலையிலேயே எண்ணெயை உறிஞ்சிவிடும்; விளக்கும் சடுதியில் அணைந்துவிடும். மௌல்வீ சாஹப் வேலைக்காரி எண்ணெயைக் குறைவாக விட்டாள் என்று அவள் மீது கோபம் கொள்வார். ஆனால், இந்த நிர்ப்பந்தத்தால் புத்தகத்தை மூடும்படி கட்டளையை விரைவில் இட்டுவிடுவார். சில நாட்களில் யமுனா பாயீ சிறுநீர் கழிப்பதற்காக அனுமதி பெற்றுக்கொண்டு வெளியே சென்று, போன காரியத்தை விட்டுவிட்டு சில சமயங்களில் என் தாயாரிடமும், சில சமயங்களில் தன் தாயாரிடமும், மற்றச் சமயங்களில் கங்காபாயீயின் தாயாரிடத்திலும் ஓடிச்சென்று, "எனக்குத் தூக்கம் வருகிறது. எங்களைக் கூப்பிட வேலைக்காரியை விரைவில் அனுப்புங்கள், இல்லாவிட்டால் அடிபடுவோம்" என்று கூறுவார். அவர் திரும்பி வந்தபின், சிறிது நேரத்திற்குள் வேலைக்காரி மௌல்வீ சாஹபிடம் வந்து, "இப்போது விட்டுவிடுங்கள்" என்று சொல்லுவாள். மௌல்வீ சாஹபும் செலவு கொடுத்துவிடுவரர். இப்படியாக ஒரு நாள் யமுனா பாயீ ஓடிக்கொண்டு இருந்தார். அப்போது எங்களுக்குச் சாச்சா முறை உள்ள எங்கள் ஊர் கனவான் ஒருவர் இதைப் பார்த்துவிட்டார்.

உடனே மௌல்வீ சாஹபிடம் வந்து, "யமுனா எங்கேயோ ஓடுகிறான்" என்று சொல்லிவிட்டார். விசாரணை நடந்தது. யமுனா பாயீ, தான் சிறுநீர் கழிக்கச் சென்றதாகவும், இருட்டில் பயந்து போய் ஓடிக் கொண்டிருந்ததாகவும் சமாதானம் கூறித் தப்பித்துக் கொண்டார்.

பாரசீக மொழியில் நான் அங்கே பெற்ற அறிவை எல்லாம் அந்த மௌல்வீ சாஹப் தாம் அளித்தார். நாங்கள் எல்லோரும் அவர் மேல் பிரியமாயிருந்தோம். ஊரைவிட்டுச் சப்ராவிற்கு ஆங்கிலம் கற்கப் போகவேண்டி வந்தபோது மௌல்வீ சாஹபும் நாங்களும் மிகவும் வருத்தப்பட்டோம்.

## 4. கிராம வாழ்க்கை

அந்தக் காலத்தில் கிராம வாழ்க்கை இப்போது இருப்பதை விட மிகவும் சாதாரணமாய் இருந்தது. ஜீராதேயீ என்றும் ஜாம்பூர் என்றும் இரண்டு கிராமங்கள் இருந்தாலும், அவை இரண்டின் தெருக்களும் வீடுகளும் அத்துணை ஒட்டிக் கலந்திருந்ததினால், எங்கு ஜீராதேயீ முடிந்தது, எங்கு ஜாம்பூர் ஆரம்பித்தது என்று சொல்லுவது கடினமாயிருந்தது. ஆகையால், ஜனத்தொகையைக் கருதும்போதும் இரண்டையும் ஒன்றாய் எடுத்துக் கொண்டால் குற்றம் ஆகாது. இரண்டு கிராமங்களிலும், அநேகமாய் எல்லாச் சாதியாரும் இருந்தார்கள். ஜனத்தொகை இரண்டு ஆயிரத்திற்கு மேலிருக்கும். அக்காலத்திலுங் கூட, கிராமங்களில் சாதாரணமாய் எதெது கிடைக்குமோ, அவை எல்லாம் அங்கே கிடைத்தன. வெற்றிலை, பீடி முதலியன விற்கப்படும் புது விதமான கடைகள் இப்போது வந்துவிட்டன. ஆனால், அக்காலத்தில் அப்படிப்பட்ட சாமான்கள் கிடைக்க மாட்டா. இருந்தாலும், கருப்புப் புகையிலை, "கைநீ"[1] ஆகியவையும் விற்கப்பட்டன. பெரிய துணிக் கடைகள் இருந்தன; மற்றக் கிராமத்து ஜனங்களும், வெளியூர்களில் இருந்து வியாபாரிகளும் வந்து அங்கிருந்து துணி வாங்கிச் செல்வார்கள். அரிசி, பருப்பு, கோதுமை மா (ஆட்டா), மசாலை, உப்பு, எண்ணெய் முதலிய எல்லாம் அங்கே விற்கப்பட்டன. சில சிறிய

1. ஒரு வகைத் தூள் புகையிலை.

மருந்துக் கடைகளும் இருந்தன. அவற்றில் கடுக்காய் வகைகளும், பிப்லி போன்ற சரக்குகளும் கிடைக்கும். மிட்டாய்க் கடை மட்டும் இல்லை என்று நினைவு இருக்கிறது. கிராமத்தில் கொடிக்கால் ஜாதியார் நிறைய இருந்தார்கள். ஆகையால் கீரை, காய்கறி முதலியன வேண்டிய மட்டும் கிடைக்கும். இடையர்கள் சிலரே இருந்தார்கள். ஆனால், பக்கத்துக் கிராமத்தில் அவர்கள் அதிகமாய் இருந்ததால், தயிர் பால் முதலியவையும் கிடைத்தன. சர்க்காக்கள் ஏராளமாய் ஓடிக்கொண்டிருந்தன. ஊரில் சேணியர்களும் இருந்தார்கள். அவர்கள் பாவு வாங்கித் துணி நெய்வார்கள். வளையற்காரர்கள் வளையல்கள் செய்து விற்பார்கள். பெட்டிக்காரகள்[1] ஜிகினுப் பொட்டு போன்ற சில்லறைச் சாமான்களை வெளியூர்களில் இருந்து வாங்கி வந்து விற்பார்கள். சில சாமான்களைத் தாங்களே செய்வதும் உண்டு. முசல்மானியர்களில் வளையற்காரன், பெட்டிக்காரன், கொத்தன், சேணியன் ஆகியவர்கள் தாம் இருந்தார்கள். ஷேக், சையத்துக்கள் (பணக்காரர்கள்) இல்லை. ஹிந்துக்களில், பிராமணன், ராஜ்புத், பூமிஹர்[2] காயஸ்து, கோய்ரீ (கொடிக்கால் சாதி), ஆட்டிடையன், கம்கர் (வீடுகளில் பாத்திரம் துலக்குவது போன்ற வேலைகள் செய்பவர்கள்), பழக்காரன், கோண்டு (ஒருவகை ஆதிவாசி) தொம்பன் (பன்றி வளர்ப்பவர்கள்) சக்கிலியன் ஆகிய சாதியார் இருந்தார்கள். ராஜ்புத் சாதியார்தாம் எல்லோரையும்விட அதிகமாய் இருந்தார்கள் என்பது எனக்கு நினைவு. அவர்களில் சிலர் ஜமீன்தார்களாக பழைய பரம்பரை என்று கருதப்பட்டவர்கள். சிலர் சாதாரணக் குடியானவர்கள். ஜீராதேயீயில் மட்டுமே காயஸ்து சாதியாரின் வீடுகள் ஐந்து இருந்தன. அவற்றில் மூன்று எங்கள் பங்காளி வீடுகள். மற்ற இரண்டும் சம்பந்தம் செய்து கொண்டு வெளியே இருந்து குடி வந்தவர்களின் வீடுகள்.

அநேகமாக, எல்லாச் சாமான்களும் கிராமத்திலேயே கிடைத்துவிடும். ஆகையால் கிராமத்திற்கு வெளியே போவதற்கு வாய்ப்பு ஜனங்களுக்கு அரிதாய்த்தான் கிடைக்கும். வாரத்தில் இருமுறை கிராமத்தில் சந்தையும் கூடும், அங்கே அக்கம் பக்கத்து ஊர்க்கடைக்காரர்கள் சிலரும் தத்தம் சரக்குகளைத் தலை

1. பெட்டிகளில் சாமான்களை வைத்துக்கொண்டு, அல்லது மூட்டைகட்டித் தலையில் சுமந்து கொண்டு கிராமந்தோறும் சுற்றி வந்து விற்பவர்கள். இன்றும் கூட இவர்களை வடநாட்டில் "பாக்ஸ் வாலா" என்பார்கள்.

2. ஒருவகை ராஜ்புத் ஜாதியார். இவர்களுக்கும் ராஜ்புத்துகளுக்கும் எப்போதும் போட்டியும் சச்சரவுமாய் இருக்குமாம்.

யில் சுமந்து அல்லது மாட்டின்மேல் போட்டுக் கொண்டு அல்லது மாட்டு வண்டியில் ஏற்றிக் கொண்டு வருவார்கள். சந்தைக்கு மிட்டாய்க் கடையும் வரும். தேவையானவர்களுக்கு மீனும் மாமிசமும் கூட விலைக்குக் கிடைக்கும். இப் பலவகையாலும் தமக்கு வேண்டிய பொருள்கள் கிடைக்காதவர்கள் சீவானுக்குப் போவார்கள். அங்கே போலீசாரும் மாஜிஸ்ட்ரேட்டும் இருந்தார்கள். கச்சேரியும் கடைகளும் இருந்தன. அந்தக் காலத்தில், கிராமத்து மக்களுக்கு அது ஒரு பெரிய ஊராக விளங்கியது. எங்கள் ஊருக்குப் பங்காளிகள் அல்லது உறவினர் தவிர மற்றப்படி வேறு யாரும் சாதாரணமாய் வருவதில்லை என்பது எனக்கு ஞாபகம். மௌல்வீ சாஹபிடம், இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ஓர் ஆள் பலவகைப் பாரசீகப் புத்தகங்களைக் கொண்ட ஒரு துணி மூட்டையும் இரண்டொரு புட்டி மசியும் (இன்று கிடைக்கும் கருநீல மசி அன்று) கொண்டு வருவார். அவர் வந்தால் எங்களுக்கெல்லாம் அவர் எதற்காக வந்திருக்கிறார் என்பதை அறிய உண்டான ஆவலுக்கு[1] அளவே இராது. குளிர்காலத்தில் எப்போதாவது ஆரஞ்சுப் பழக்கூடையைத் தூக்கிக்கொண்டு யாராவது விற்க வந்துவிட்டால், எங்களுக்கு ஏதோ அரிய பொருள் கிடைத்துவிட்டது போல் ஆனந்தம் உண்டாகும். ஒரு நாள் அப்படி ஓர் ஆள் வந்தான். நான் அம்மாவிடம் சொல்ல ஓடிச் சென்றேன். அப்படி வெளியே ஓடி வரும்போது, காலில் ஏதோ பலமாய்த் தட்டியது. அப்படியே விழுந்துவிட்டேன். உதட்டில் காயம்பட்டு இரத்தம் வர ஆரம்பித்தது. நெடு நாள் வரையில் அதன் 'வடு' இருந்தது. ஒரு முறை வேறு ஏதோ காரியமாய் ஓடிக்கொண்டிருந்தபோது விழுந்துவிட்டேன். அதன் அடையாளம் இன்று வரையில் வலக்கண்ணுக்குக் கீழே கன்னத்தில் இருக்கிறது. கிராமத்தில் பழங்கள்–மாம்பழ நாளில் மாம்பழமும், மற்றப்படி சாதாரணமாய் எப்போதாவது வாழைப் பழமும்–கிடைக்கும். சாச்சா சாஹப் (பெரியப்பா)—அவரை நாங்கள் நூநூ என்று அழைப்போம்—சப்ராவில் இருந்து எப்போதாவது திராட்சைப் பழம் கொண்டு வருவார். இப்போது போலத் திறந்து வைத்துக் குலை குலையாய் விற்பதில்லை. சிறு மரப்பெட்டியில் பஞ்சுக்கு இடையில் அடைத்து வைத்து விற்பார்

1. "குயூரியாஸிடி" (Curiosity) என்ற ஆங்கிலச் சொல்லைத் "தினவு" என்று மொழி பெயர்ப்பது பொருத்தமாகும். ஆங்கிலத்திலும் "to itch with curiosity" என்றும் ஒரு சொற்றொடர் இருப்பதை நினைவிற் கொள்ளவும். தினவு சொறிந்தால் அன்றித் தீராது; "குயூரியாஸிடி" அறிந்தால் அன்றித் தீராது.

கள். விலையும் அதிகம். கிராமத்தாருக்கு மாம்பழமும் வாழைப் பழமும் தாம் அந்தந்தப் பருவத்தில் கிடைக்கும்.

கிராமத்தில் சாதாரணமான மடங்கள் இரண்டு இருந்தன. அவற்றின் ஒவ்வொன்றிலும் ஒரு சாது இருந்தார். கிராமத்தார்கள் அவர்களுக்கு உணவு அளிப்பார்கள். அவர்கள் காலை மாலையில் மணி அடித்துப் பூஜை செய்வார்கள். பூஜை வேலையில் சில ஜனங் களும் அங்கே வந்து கூடுவார்கள். சில சமயங்களில் நாங்களும்[1] போவோம். பாபாஜீ (சாது) துளசிப் பத்திரம் பிரசாதம் கொடுப் பார். முக்கியமாய் ராமநவமியிலும், ஜன்மாஷ்டமியிலும், மடத் தில் மிக்க ஆடம்பரமாய் இருக்கும். நாங்கள் எல்லாரும் கூடிக் காகிதத்திலும் ஜிகினுவிலும் பூக்கள் வெட்டிக் கோயிலின் நிலை யிலும் மூர்த்தியின் சிம்மாசனத்திலும் ஒட்டி அழகு செய்வோம்; உத்சவத்திலும் கலந்து கொள்வோம்; விரதமும் இருப்போம். உறி அடி அன்று ஒருவர் மேல் ஒருவர் (தயிரையும் மஞ்சளையும் கலந்து) மஞ்சள் நீர் வீசி விளையாடுவோம். அநேகமாய் ஒவ் வொரு ஆண்டும் கார்த்திகை மாதத்தில் யாராவது ஒரு பண்டிதர் வருவார். அவர் ஒன்று அல்லது ஒன்றரை மாதம் தங்கி, இராமா யணம், பாகவதம் அல்லது வேறு ஏதாவது புராணக் கதை சொல்லுவார். பூர்ணாஹுதி தினத்தன்று கிராமத்து மக்கள் எல்லாரும் கூடி ஏதாவது பூஜை செய்வார்கள். எங்கள் வீட்டார் சிறப்பாகப் பூஜை நடத்துவார்கள்; ஏனெனில் நாங்கள் எல்லோரை யும் விடப் பெரிய மனிதர்கள் என்று கருதப்பட்டோம். எங்கள் வீட்டு வாசலுக்கு முன் கதை நடக்கும். அதற்கான செலவு முழு வதையும் நாங்கள் தாம் கொடுக்க வேண்டிவரும். ஊரில் பொதுக்காலக்ஷேபம் நடக்கும்போது, ஊரார் எல்லோரும் பண்டி தருக்கு உணவுக்காக முறைப்படி சாமான்கள் அனுப்புவார்கள். அதில் எங்கள் வீடும் ஒன்று. கதையை அதிகம் கேட்க எங் களுக்கு வாய்க்காது. ஏனெனில் நான் மாலைக் காலத்திற்கு மேல் தூங்கி விடுவேன். ஆனால் ஆரத்தி காட்டும்போது மட்டும் யாராவது என்னை எழுப்பி விட்டுப் பிரசாதத்தை ஊட்டி விடுவார் கள். மகிழ்ச்சிக்கும் அத்துடன் படிப்பினைக்கும் மற்றும் ஒரு துணையாய் ராம்லீலா இருந்தது. அது ஐப்பசி மாதத்தில் நடக் கும். ராம்லீலா நாடகக் காட்சியினர் எங்கிருந்தாவது வந்து பதி னைந்து அல்லது இருபது நாட்களுக்குக் கூத்தாடுவார்கள். லீலா

1. இங்குத் தம்மையும், தம் தோழர்களான யமுனாபாய், கங்காபாய் இருவரை யும் குறிக்கிறார். பல இடங்களில் இப்படி வரும். ஹிந்தியில் "சிறுவர்களாகிய நாங்கள்" என்று கூறுகிறார்.

சில சமயங்களில் ஜமாபூரிலும் சில சமயங்களில் ஜீராதேயீயிலும் நடக்கும். லீலா மிகவும் விசித்திரமாய் இருக்கும். அதில் ராம லக்ஷ்மணர் வேடம் போட்டுக் கொள்பவர்கள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் அல்லர். துளசீதாஸ் ராமாயணத்தை ஒர் ஆள் கையில் வைத்துக் கொண்டு, ''ராமர் கூறினர், ஹே! சீதா.......'' என்று சொல்லுவார். ''ராமர்'' அதைக் கூடவே சொல்லுவார். இப்படியாக அவரவர் கூறவேண்டியது அவரவருக்கு எடுத்துச் சொல்லப்படும்; அவர்கள் கூடவே அதைத் திருப்பிச் சொல்லு வார்கள். இப்படிப்பட்ட சம்பாஷணையால் ஜனங்களுக்கு அதிக ஆனந்தம் உண்டாவதில்லை. ஏனெனில் நெருக்கடி அதிகம்; மேலும் சபை நூறு இருநூறு கஜ தூரம் பரவி இருக்கும்; ஆகை யால் எதுவும் சரியாய்க் காதில் விழாது. நாடகப் பாத்திரங்கள் ஓடிக்குதிப்பதிலும் முக்கியமாய் அவர்கள் சண்டை போடுவது முதலியவற்றிலும்தாம் ஜனங்களுக்குக் களிப்பு அதிகம். தெரு வின் வடக்குக் கோடியில் ராமரின் முகாமும் தெற்குக் கோடியில் ராவணனின் முகாமும் போடப்பட்டிருக்கும். அல்லது அயோத்தி யும் ஜனகபுரியும் அமைந்திருக்கும். அன்றன்றைக்கு எந் தெந்தக் கதை படிக்கப்படுமோ, அதை ஒட்டி ஏதாவது நடிப் பும் இருக்கும். ராமர் கல்யாணம், இலங்கா யுத்தம், ராமர் பட்டாபிஷேகம் ஆகியவை நடக்கும். நாடகங்கள் மிகவும் விமரிசையாக இருக்கும். யானை குதிரைகளைத் தருவித்து மாப்பிள்ளை அழைப்புக்கு ஆன ஏற்பாடுகள் எல்லாம் செய்யப் படும். இலங்காதகனத்திற்காகச் சிறிய வீடுகூட அமைக்கப் படும். அதை உண்மையாகவே கொளுத்தி விடுவார்கள். ஹனு மானுக்கும் ராக்ஷஸர்களுக்கும் தனித்தனிப் பொய் முகங்கள் இருக்கும். வேண்டியபோது அவற்றை அவர்கள் போட்டுக் கொள்ளவேண்டும். அவை எங்களுக்கு உண்மையாகவே பயங் கரமாய் இருந்தன. வானரர்களின் உடை வழக்கமாய்ச் சிவப் பாய் இருக்கும். இராக்ஷஸர்களுடைய உடை கருப்பு. ராம லக்ஷ்மணர் சீதை ஆகியவர்களுக்கு சிறந்த உடைகள் உண்டு. அவர்களை அலங்கரிப்பதற்கு ஏறக்குறைய ஒன்றரை அல்லது இரண்டு மணி நேரம் பிடிக்கும். லீலா மாலை நான்கு மணியில் இருந்து ஆறு மணி வரையில் நடக்கும். ராமலக்ஷ்மணர் சாதா ரண மனிதர்களைப்போல நடக்க மாட்டார்கள். அவர்கள் காலை உயர்த்தி உயர்த்தி நடை போடுவார்கள். சண்டையில் பலவிதப் பாணியில் நடைபோடுவதற்கு அவர்களுக்கு அதிகப் பயிற்சி அளிக்கப்படும். பட்டாபிஷேகத் தினத்தன்று சுற்றுவட்டாரத்

தில் உள்ளவர்கள் காணிக்கை செலுத்தும் பாவனையில் "ராமர்" பாதத்திற்குப் பூஜை செய்வார்கள். லீலையில் நடிப்பவர்களுக்கு உணவைத் தவிர ரொக்கமாய் கொடுக்கப்படுவன எல்லாம் அன்று தான் கிடைக்கும். அடுத்த நாள், ராமலக்ஷ்மணர் ஜானகி மூவரையும் அலங்காரம் செய்து "பர்தா"வின் காரணமாகக் கும்பல் கூட்டத்தில் லீலா பார்க்க வராத பெண்மணிகள் இருக்கும் பெரிய மனிதர்கள் வீடுகளுக்கு அழைத்துச் செல்லுவார்கள். அங்கே அவர்களுக்குப் பூஜை நடக்கும்; பணமும் கொடுக்கப் படும். ஒரு விஷயம் பால்யத்திலிருந்து என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. அதுதான் ராமாயணப் பாராயணம். கிராமத்தில் எழுத்து வாசனை சில பேருக்குத்தான் இருந்தது. அந்தக் காலத்தில் ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடமோ வேறு பள்ளிக்கூடமோ அந்தக் கிராமத்திலாவது அல்லது சுற்றுப் பக்கத்திலாவது கிடை யாது. மௌல்வீ சாஹப் மாதம் மூன்று நான்கு ரூபாயும் உணவும் பெற்றுக்கொண்டு எங்களுக்குப் பாடம் கற்பித்து வந்தார். கிராமத்தில் மற்றெரு முசல்மான் இருந்தார். அவர் சாதியில் சேணியர். ஆயினும் அவருக்குக் "கைதீ" எழுத்து எழுதத் தெரியும். கெட்டி எண்சுவடிக் கணக்கும் தெரியும். அதில் பெரிய கெட்டிலக்கம், சிறிய கெட்டிலக்கம், மணங்கு, சேர் கணக்கு, சிறுகுழி, பெருகுழிக் கணக்குகள் எல்லாம் அடங்கி இருக்கும். அவர் ஒரு பாடசாலை வைத்திருந்தார். அதில் கிராமத்துப் பையன்கள் சிலர் படித்தார்கள். அக்ஷரமே ஏதோ சில பேருக்குத்தான் தெரியும். தினந்தோறும் மாலையில் மடத்தி லாவது அல்லது யாராவது ஒருவர் வீட்டின் வாசலிலாவது சிலர் கூடுவார்கள். ஓர் ஆள் ராமாயணப் புத்தகத்தில் இருந்து சுலோ கத்தைச் சொல்லுவார். மற்றவர்கள் அதைத் திருப்பிச் சொல்லு வார்கள். கூட ஜாலராவும் மத்தளமும் அடிப்பார்கள். ராமா யணம் படிக்க ஆரம்பிக்கும்போது சொல்லப்படும் தோத்திரத்தை எல்லோரும் கட்டாயமாகச் சொல்லுவார்கள். எழுத்து வாசனை இல்லாவிட்டாலும், இவ்விதமாக ராமாயணச் சுலோகங்கள் தெரிந்தவர்களும் மேலும் முறை வைக்கக்கூடியவர்களும் கிராமத் தில் அநேகம் பேர் இருந்தார்கள். முக்கியமாகத் தோத்திர சுலோகங்கள் சிலவற்றையாவது மனப்பாடம் செய்து வைத்திருந் தார்கள்.

திருவிழாக்களில் மிகவும் பேர்போனது ஹோலி. அதில் பணக்காரன் ஏழை எல்லோரும் கலந்து கொள்வார்கள். வசந்த பஞ்சமித் திதியில் இருந்தே ஹோலிப் பாட்டுக்கள் ஆரம்பித்து

விடும். கிராமத்துப் பேச்சில், அதை "லால் உட்ணு" (செம்மை எழுச்சி) என்பார்கள். அன்றிலிருந்து ஹோலித் திதி வரையில் ஆங்காங்குச் சில பேர் கூடி, ஜால்ரா மத்தளத்துடன் ஹோலி பாடுவார்கள். சில சமயங்களில் ஜீராதேயீ ஜமாபூர் ஜனங் களுக்குள் போட்டி வந்து விடும். ஒரு கிராமத்தார் ஒரு பாட்டைப் பாடி முடிக்க வேண்டியதுதான், மற்றொரு கிராமத்தார் அடுத்ததை ஆரம்பித்து விடுவார்கள். சில சமயங்களில் அக்கம் பக்கத்து ஊர்க்காரர்களும் திரளாக வந்து சேர்வார்கள். இப்படி யாக அதிக உற்சாகத்துடன் இனிய முறையில் போட்டி நிகழும். ஒரு முறை இரண்டு கிராமங்களுக்குள்ளே பந்தயம் வைத்து இரவு முழுவதும் பாடிச் சூரிய உதயத்திற்குப் பின்னும் பாடிக் கொண் டிருந்தது எனக்கு நினைவு இருக்கிறது. அப்போது எல்லோரும் சேர்ந்து அவர்களை வற்புறுத்தி நிறுத்தினார்கள். இப்படிப்பட்ட கச்சேரிகளில் மத்தளம் அடிப்பவருக்குத்தான் அதிக சிரமம். அவருக்கு வியர்த்துக் கொட்டி விடும். ஏதோ ஓர் ஊரில் மத்தளம் அடிப்பவர் ஒருவர்தாம் இருந்தார். அவர் இரவு முழுவதும் அடித்தார். அவர் கையில் கொப்பளங்கள் கிளம்பி விட்டன. ஆயினும், நிறுத்தினாரா! கிராமத்தின் பெருமை குலைந்து விடுமே! கொப்பளங்கள் கிளம்பின, உடைந்தன. இப்படியாக இரவு முழுதும் கொப்பளங்கள் கிளம்புவதும் உடைவதுமாய் இருந்தன. ஆனால் அவர் ஊரின் பெருமையைத் தாழவிடவில்லை. அடுத்த நாள் போட்டி முடிந்தபின் இந்த விஷயம் எல்லோருக்கும் தெரிய வந்தது. அவருடைய ஆற்றலை எல்லோரும் புகழ்ந் தார்கள்.

ஹோலி தினத்தன்று வசையும் அமளியும் மிகவும் இழிவாக வழங்கப்பெறும். அதில் கிழவர்கள், இளைஞர்கள், சிறுவர்கள் கூட ஒன்றாய்ச் சேர்ந்து கொள்வார்கள். கிராமத்தின் ஒரு மூலையில் இருந்து ஒரு கோஷ்டி புறப்பட்டு, ஒவ்வொரு வாச லிலும் நின்று பேரைச் சொல்லி வசைக்கவி பாடும். சகதி, புழுதி, சேறு இவற்றை ஒருவர் மேல் ஒருவர் எறிந்து கொண்டு கிராமத்தின் மற்றொரு கோடிவரையில் போவார்கள். பெரியோர் சிறியோர் என்ற மரியாதை முற்றிலும் போய்விடும். சக்கிலியன், பிராமணன், ராஜ்புத் என்ற வேற்றுமை இன்றி ஒருவரை ஒருவர் வைது கொள்வார்கள். ஒருவர் மேல் ஒருவர் சேற்றை எறிந்து கொள்வார்கள். யாராவது புது மனிதன் வெள்ளையும் சள்ளையு மாகச் சிக்கிக் கொண்டால் அவனையும் சகதியாய் அழுக்கடித்து விடுவார்கள். இந்த இழிவான விளையாட்டு நடுப்பகல் வரை

யில் நடக்கும். பிறகு எல்லோரும் குளிப்பார்கள். ஒவ்வொரு வீட்டிலும் பூஜை நடக்கும். அன்றைக்கு விசேஷ உணவு பூரியும் மால்பூராவும்தாம். ஏழைகளும் கூட எப்படியாவது ஏதாவது தயார் செய்துவிடுவார்கள். உண்டிக்குப் பின் பிற்பகலில் குலால் (செந்துள்) அபீர் இவைகளால் "கலர்" விளையாடுவார்கள். அப்போது ஜனங்கள் வெள்ளை ஆடை உடுத்துக் கொண்டிருப்பார்கள். அதன்மேல் சிவப்பு, மஞ்சள், முதலிய வண்ணங்களை வீசி, அபீர், அப்ரக் பொடிகளையும் தூவுவார்கள். பேரீச்சம்பழம், வெற்றிலை பாக்கு முதலியன வழங்கப்படும். எங்கும் ஹோலி பாடுவார்கள்.

மற்ற ஊர்களில் அன்றைக்கு ஜனங்கள் மது மாமிசம் உண்பதும் பெருவாரியாய் நடக்கும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இதை நான்'எங்கள் ஊரில் என்றுமே பார்த்ததில்லை. எங்கள் ஊரில் ராஜ்புத், பிராமணர், பூமிஹார்கள் ஆகியவர்கள் கள் குடிப்பது பாபம் என்று கருதினர்கள். இங்கே அங்கே காயஸ்துக்கள் குடிப்பார்கள். ஆனல் என் குடும்பத்தில் தொன்று தொட்டு ஒரு பண்பு இருந்து வந்தது. எங்கள் வம்சத்தில் எவரேனும் கள் குடித்தால் அவன் பெருவியாதிக்காரனுகி விடுவான் என்று ஜனங்களுக்கு ஒரு நம்பிக்கை இருந்தது. ஆகையால் எங்கள் ஊரில் காயஸ்துக்களின் வீடுகளுக்குள் ஒரு போதும் கள் வராது. உயர்ந்தவர்களைப் பார்த்துக் கீழானவர்களும் இதிலிருந்து விலகி விட்டார்கள். இன்று வரையிலும் இப்படியே நடந்து வருகின்றது.

ஜன்மாஷ்டமி, ராமநவமி இவற்றைப் பற்றிச் சொன்னேன். தீபாவளிக்குச் சில நாட்களுக்கு முன்பே ஜனங்கள் தத்தம் வீட்டைச் சுத்தம் செய்வார்கள். சுவருக்கு மண் பூசுவார்கள். மரக் கம்பங்களுக்கும் கதவுகளுக்கும் எண்ணெய் பூசுவார்கள். அக்காலத்தில் மண் எண்ணெய் எரிப்பதில்லை. கிடைப்பதுமில்லை. கடுகு, ஆளிவிதை அல்லது கொட்டை முத்து எண்ணெய்தான் எரிக்கப்படும். தீபாவளி அன்று சிறுசிறு மண் அகல்களை ஏற்றி வைத்து, பணக்காரன் ஏழை எல்லோரும் கட்டாயம் இயன்ற வரையில் தம் வீட்டைத் துலக்குவார்கள். பெரிய மனிதர் வீட்டில் அநேக விளக்குகள் எரியும்; வாழை மரம் நட்டிருக்கும்; மூங்கிலால் வளைவு கட்டி நிற நிறமான சித்திரங்களை விளக்குகளால் அமைப்பார்கள். இக்காட்சி பார்ப்பதற்கு வெகு அழகாயிருக்கும். பெரிய மனிதர்கள் இதற்கான வடிவம் அமைப்பார்கள்; நாங்கள் எளியோர் அவர்கள் குறிப்பிட்ட இடங்களில் அகல்களை வைப்

போம். எண்ணெய் விடுவோம்; விளக்கு ஏற்றுவோம். விளக்கு வைக்கும்முன் லக்ஷ்மி பூஜை நடக்கும். லக்ஷ்மிக்கும் அதேபோல் துளசிக்கும் விளக்கு ஏற்றிய பிறகு தான் மற்ற இடங்களில் விளக்கு ஏற்றப்படும். விளக்கு ஏற்றிய பின் சோழி ஆடுவது வழக்கம். நாங்கள் பேருக்குத் தான் ஆடுவோம். ஆனால் இதில் சிலர் பணம் தோற்பதும் ஜயிப்பதும் பார்த்திருக்கிறேன். தீபாவளி அன்று விளக்குகளின் மகிமைதான் முக்கியம். ஆயினும், சிலர் இதுபோலக் கார்த்திகைக்கும் துளசி மேடையிலும் வெளியிலும் காகிதக் கூண்டு தொங்கவிட்டு அதில் விளக்கு ஏற்றி வைப்பார்கள்.

தசரா முக்கியமாக ஜமீன்தார்களின் விழாவென்று கருதப்பட்டு வந்தது. ஆனால் நவராத்திரியின்போது கிராமத்தார் காளிக்கு எப்போதாவது பூஜை நடத்துவார்கள். அதற்காகச் சிலை வாங்கி வந்து மிக்க ஆரவாரத்துடன் பூஜை நடத்தப்படும். எங்கள் கிராமத்தில் நான் காளி பூஜை பார்த்ததில்லை. ஆனால் சுற்றுப் பக்கங்களில் காளி பூஜை நடக்கும். அதன் சிறப்பைக் கேள்விப்பட்டு, அதைப் பார்ப்பதற்காக எங்களை அனுப்புவார்கள். நாங்கள் அங்குச் சென்று காளியை—உண்மையிலேயே காளியைப் போலக் கையில் சிவப்பு மண்டை ஓடும் வாளும் ஏந்தியிருக்கும் காளியை—தரிசனம் செய்வோம். ராம் லீலாவில் பட்டாபிஷேகம் பெரும்பாலும் தசராத் திதியிலாவது அல்லது அதற்கு ஓரிரண்டு நாட்கள் முன்னே பின்னே நடக்கும். தசராத் திதியில் எங்கள் பாட்டனார் எங்களையெல்லாம் தம்முடன் கூட்டிக் கொண்டு ஒரு சிறு பரிவாரம் புடைசூழச் சென்று நீல கண்ட பக்ஷ (சாக்ஷ பக்ஷி) தரிசனம் செய்வார்.

இதைத் தவிர, எல்லோரும் கலந்து கொள்ளும் பண்டிகை வேறொன்று உண்டு. அது அனந்த சதுர்த்தசி விரதம். புரட்டாசி சுக்ல சதுர்த்தசியில் வரும். உச்சிப் பொழுது வரையில்தான் விரதம். பகலில் கதை கேட்டபின், பால்பூரி உண்பது வழக்கம். மாலையில் ஒன்றும் சாப்பிடுவதில்லை. சூரியன் மறைந்த பின் தண்ணீர் கூடக் குடிக்க மாட்டார்கள். இந்த விரதத்தில் சிறுவர்கள் எல்லோரும் சேர்ந்து கொள்வோம். கதை முடிந்தவுடன் ஒரு காரியம் நடக்கும். அது சிறுவர்களுக்கு மிகவும் வேடிக்கையாக இருக்கும். ஒரு பெரிய தட்டில் ஓரிரண்டு கீரா (வெள்ளரிப் பிஞ்சு) துண்டுகளைப் போட்டு, அதன்மேல் சிறிது தண்ணீரைப் பண்டிதர் ஊற்றுவார். கதை கேட்டவர்கள் ஒவ்வொருவரும் அத்தட்டில் கை வைப்பார்கள். அவர்களைப் பண்டிதர், "என்ன

தேடுகிருய்?'' என்று கேட்பார். "அனந்தின் பலன்'' என்று விடை கூறுவார்கள். "கிடைத்ததா?'' என்று பண்டிதர் மேலும் கேட்பார். "கிடைத்தது'', என்று மறுமொழி வரும். "தலையில் போட்டுக் கொள்'' என்று பண்டிதர் கூறுவார்; எல்லோரும் தண்ணீரைத் தலைமேல் தெளித்துக் கொள்வார்கள். இக்கிரியை முடிந்தவுடன் எல்லோருக்கும் "அனந்த்''-அதாவது பதினுன்கு முடிச்சுக்கள் போட்ட ஒரு நூல்க் கயிறு வழங்கப்படும். அதை அவர்கள் தங்கள் புயங்களில் கட்டிக் கொள்வார்கள். சிறுவர்களுக்காக அழகான நிறங்கள் உடைய "அனந்த்'' மணி கட்டுபவனிடம் இருந்து வாங்கி வரப்படும். சில சமயங்களில் பட்டிலும் கிடைக்கும். சிலர் ஆண்டு முழுவதும் "அனந்த்''தைக் கட்டிக் கொண்டிருப்பார்கள். தங்கள் புயங்களில் சௌகரியமாகக் கட்டிக் கொள்ளும்படி தங்கள் கையின் பருமனுக்குத் தகுந்ததாயும், மிக நீளமாயும் "அனந்த்''தை அவர்கள் செய்து கொள்வார்கள். இப்படியாக ஆண்டு முழுவதும் "அனந்த்''தைக் கட்டிக் கொண்டிருப்பவர்கள் மாமிசம் மீன் முதலியன உண்ண மாட்டார்கள். அதே போலத் துளசி மாலை அல்லது "கண்டி'' (கழுத்தை ஒட்ட அணியும் கருமணிக் கயிறு) அணிபவர்களும் மாமிசம் மீன் முதலியன உண்ண மாட்டார்கள்.

கதை, ராம்லீலா, ராமாயணப் பாராயணம், "அனந்த்'' விரதம் முதலிய பண்டிகைகளின் மூலமாய் அறவாழ்க்கை எப்பொழுதும் தழைத்து நின்றது. இதைத் தவிர, முஹரத்தில் தாஜியா வைப்பது வழக்கமாய் இருந்தது. ஹிந்துக்கள் முகமதியர்கள் இருபாலரும் இதில் ஈடுபடுவார்கள். ஜீராதேயீ, ஜாம்பூர் இவ்வூர்களில் ஹிந்துக்கள்தாம் சிலர் சிறிதளவு பணக்காரர்களாய் இருந்தார்கள். ஆகையால் இவர்களுடைய தாஜியா முசல்மானியருடைய தாஜியாவைவிட மிகவும் பெரிதும் பகட்டானதுமாய் இருக்கும். முஹரத்தின்போது, அநேகமாய் ஒவ்வொருநாளும் சிலம்பம், கழி, கத்தி முதலிய விளையாட்டுக்களை ஆடுவார்கள். "பஹ்லாம்'' (முதல்நாள்) அன்று பெரும் கும்பலாய் இருக்கும். ஒவ்வொரு கிராமத்துத் தாஜியாவையும் கர்பலா[1] வரையில் கொண்டுபோய்ச் சேர்ப்பார்கள். வழி நெடுக, "யா அலீ'', "யா இமாம்'' என்று கோஷம் செய்து கொண்டு போவார்கள்; சிலம்பு முதலிய விளையாட்டுக்களும் நடக்கும். எங்கும் ஒரே உற்சாகம். இந்த விழாவில் ஹிந்து முசல்மான் என்ற எந்த

1 தாஜியாக்களைப் புதைக்கும் இடம்.

வேற்றுமையும் இருக்காது. மிட்டாயும் "திசௌரி"யும் (வெல்லத் துடன் கலந்து ஊறவைத்த அரிசி) வழங்கப்படும். எல்லாரும் அதை ஏற்றுக் கொண்டு உண்பார்கள். ஆனால், ஹிந்துக்கள் முசல்மானியர் தொட்ட தண்ணீர் அல்லது ஷர்பத்தைக் குடிக்க மாட்டார்கள். முசல்மானியர் இதைக் குற்றமாகக் கருதுவ தில்லை. இது ஹிந்துக்களின் தர்மம் என்று உணர்ந்து கொள் வார்கள். ஆகையால் தாமே விலகிவிடுவார்கள்.

ஹிந்துக்கள் முஹரத்தில் எப்படிக் கலந்து கொள்வார்களோ, அதேபோல முசல்மானியரும் ஹோலியின் ஆர்பாட்டத்தில் கலந்து கொள்வார்கள். நாங்கள் தசரா, தீபாவளி, ஹோலிப் பண்டிகைகளில் மௌல்வீ சாஹப் இயற்றிய "ஈதி"யை (ஈது விழாவிற்காக எழுதிய பாடல்) எங்கள் வீட்டுப் பெரியோர்களுக் குப் படித்துக் காட்டி அளித்து, அவர்களிடமிருந்து பணம் பெற்று மௌல்வீ சாஹபுக்கு அளிப்போம். ஈதியைப் பல நாட் களுக்கு முன்பே நாங்கள் மனப்பாடம் செய்து கொள்வோம். மௌல்வீ சாஹபின் உதவியைக் கொண்டு காகிதத்தில் அழகாகப் பூக்கள் வரைந்து, அவற்றிற்குச் சிவப்பு, பச்சை, நீலம், கத்தரிப்பூ வர்ணங்கள் கொடுப்போம். அவற்றிற்குள் மௌல்வீ சாஹப் அழகான எழுத்தால் ஈதி எழுதிக் கொடுப்பார். அவற்றில் எழுதப்படுவது சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு விசேஷப் பொருத்த மாயிருக்கும். உதாரணமாக தீபாவளி ஈதியில் "தீபாவளியும் வந்தது; சூதாட்டமும் வலுத்தது" என்று எழுதியிருக்கும். தசரா ஈதியில் "ராமச்சந்திரர் தசரா பவனி வந்தார். யோகி வேடம் பூண்டு குரங்காட்டியாகச் சென்றார்" என்று எழுதி யிருக்கும். மாதாந்திர சம்பளத்தைத் தவிர மௌல்வீ சாஹபுக்கு ஒவ்வொரு வியாழக்கிழமையும் ஏதாவது சில்லறை "ஜும்ராத்"[1] துக்காகவும், பண்டிகை சமயங்களில் ஈதிக்காகவும் கிடைக்கும்.

அந்தக் காலத்தில் கிராமத்தில் கோர்ட்டு வழக்குகள் குறை வாயிருந்தன. ஏதேனும் வழக்கு எழுந்தால் அதைக் கிராமத்துப் பஞ்சாயத்தார் தீர்த்து வைப்பார்கள். அவர்கள் தீர்க்க முடியாத வழக்கை என் தந்தையார் அல்லது பெரியப்பாவிடம் கொண்டு வருவார்கள். அவர்களும் பஞ்சாயத்தில் கலந்து கொண்டு தீர்ப்புச் சொல்லுவார்கள். சில சமயங்களில் ஊரில் பொருள்கள் திருட்டுப் போகும். எங்கள் ஊரில் வணிகர்கள்தாம் சற்றுப் பணக்காரர்கள். அவர்கள் வீட்டில் இரவில் கன்னம் வைத்துத்

1 வியாழக்கிழமை இரவு பூஜை. இதனைப் "பாத்தியா ஓதுதல்" என்று தமிழ் நாட்டில் கூறுவார்கள்.

திருடன் ஏதாவது பணத்தைத் திருடிக் கொண்டு போய்விடு வான். ஒருநாள், அடுத்த ஊர்ச் சந்தையில் இருந்து யாரோ திரும்பி வரும் வழியில், பொழுது சாயும் நேரத்தில் வழிபறிக் கொள்ளைக்காரன் பணத்தையும் துணிமணிகளையும் கொள்ளை அடித்து விட்டது எனக்கு நினைவிருக்கிறது. அப்படி எப்பொழு தாவது நேர்ந்தால், போலீஸ் ஸ்டேஷனிலிருந்து சப்-இன்ஸ் பெக்டரும் கான்ஸ்டபிள்களும் வந்து இரண்டொரு நாள் ஊரில் தங்குவார்கள். அவர்கள் ஊருக்கு வந்தால் ஊர் முழுதும் ஒரே பரபரப்பு உண்டாகிவிடும். யார் மேல் சந்தேகம் இருக்கிறதோ, அவர்களுடைய வீடுகள் சோதனை போடப்படும். கிராமத்தில் இரண்டு மூன்று பேர் இருந்தார்கள், அவர்கள் திருடர்கள் என்று பெயர் பெற்றவர்கள். இன்ஸ்பெக்டர் வந்ததும் வராததுமாய் அவர்களைப் பிடித்துவந்து கைகளை மடக்கிப் பின்புறம் கட்டிக் கீழே தள்ளி, நன்றாய் அடிப்பார். அக்கம் பக்கத்து ஊர்களிலும் அப்படிப்பட்ட ஆசாமிகள் இருந்தார்கள். நியாயமாகவோ அநியாயமாகவோ அவர்கள் திருடர்கள் என்று கருதப்பட்டார்கள். இதுபோல ஆறேழு பேர்கள் ஒரே சமயத்தில் கட்டிக் கீழே தள்ளப்பட்டு மணிக் கணக்காக கிடத்தப்பட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன்.

எங்களுக்கு ஒரு சிறிய ஜமீன்தாரி இருந்தது. குடியானவர் களுடன் வழக்குகள் குறைவாகத்தான் இருந்தது. கச்சேரி ஏறு வதற்கு அவசியம் இருந்ததில்லை. எங்களுக்குப் பங்குள்ள அதே ஊரில் தமக்கும் பங்குள்ள ஒரு ஜமீன்தாருடன் நெடுநாளாக ஏதோ நிலத்திற்காக வழக்கு நடந்துவந்தது. தாத்தா காலத்தில் ஆரம்பித்து அப்பா காலம் முடிய இது நடந்து கொண்டிருந்தது. அவர் இறந்த பின், என் தமையனார் அந்த ஜமீன்தாருடன் ராஜி பேசி அதைத் தீர்த்து வைத்தார். நூநூ சப்ராவிற்கு அடிக்கடி சென்று வருவார். அங்கே படிப்பதற்காக அனுப்பப்பட்ட என் அண்ணனைப் பார்த்துவிட்டு, அப்படியே வழக்குகளையும் நடத்தி விட்டு வருவார்.

# 5. ஆங்கிலக் கல்வி ஆரம்பம்

என் தமையனுரை முன்னிட்டு எனக்கு எல்லா விஷயங்களிலும் வழி மிகவும் எளிதாகி விட்டதென்று நான் முன்னமே கூறி இருக்கிறேன். நான் சிறு பிள்ளையாய் இருந்தபோதே என் அண்ணன் முதலில் சிவானுக்குப் படிப்பதற்காக அனுப்பப் பட்டார். அங்கே சிறிது காலம் இருந்தார். ஆனல் அங்கே சௌகரியமாய் இல்லை. முதலாவதாக அந்தக் காலத்தில் சிவானில் உயர்நிலைப் பள்ளி கிடையாது. வேறு எந்தப் பள்ளிக் கூடமும் இருந்ததா, இல்லையா என்பது எனக்குத் தெரியாது. அவர் யாருடன் தங்கி இருந்தாரோ, அந்தக் கனவான் இவரை வைத்துக் கொண்டு சமாளிக்க முடியவில்லை என்பது சௌகரியம் இல்லாமைக்கு மற்றும் ஒரு காரணம். அகர்வால் என்று ஒரு கனவான் சிவானில் இருந்தார். தாத்தாவுக்கு அவருடன் நெருங்கிய நட்பு உண்டு. என் தமையனர் அவரிடம் அனுப்பப் பட்டார். அங்கே சிறிது காலம் அவருடன் இருந்தார். அவர் வீட்டிற்குப் பக்கலில் ஒரு கிணறு வெட்டிக் கொண்டிருந்தார்கள். அதில் தண்ணீர் வந்துவிட்டது, ஆனல் மேல் மட்டம் வரையில் இன்னும் சுவர் எழுப்பப்படவில்லை. ஒரு நாள் தண்ணீரைப் பார்க்கவோ, விளையாடவோ என் அண்ணன் அங்குச் சென்றிருக்கிருர். சென்றவர் கிணற்றில் விழுந்து விட்டார். அவர் மூழ்கி மூழ்கித் தத்தளித்துக் கொண்டிருந்தபோது மிகவும் சிரமப் பட்டு அவரைக் கரை ஏற்றினுர்கள். இப்படிப்பட்ட துஷ்டப் பையனைத் தம்மால் பராமரிக்க முடியாது என்று அக்கனவான் தாத்தாவுக்கு எழுதிவிட்டார். அதற்குப் பின் அண்ணன் சப்ராவுக்கு அனுப்பப்பட்டார். அங்கே ஜில்லா பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படித்து வந்தார். விடுமுறையில் அவர் வீட்டிற்கு வரும் போது, சப்ராவைப் பற்றியும் பள்ளிக்கூடத்தைப் பற்றியும் செய்திகள் கூறுவார். நாங்கள் மிகவும் உற்சாகத்துடன் கேட்போம். சுற்றுப் புறத்தில் உள்ள சிறு கிராமங்களைத் தவிர வேறு எங்கும் எனக்குத் தெரிந்து நான் போனதில்லை. அங்கே எப்போதாவது ராம்லீலா அல்லது வேறு ஏதாவது விழாப் பார்க்கப் போயிருப்பேன். கைப்பிள்ளையாக இருந்தபோது, எங்கள் கிராமத்திலிருந்து பதினைந்து இருபது கல் தொலைவில் பனியா ஜில்லாவில் உள்ள என் தாய்ப் பாட்டனுர் வீட்டிற்கு என் தாயா

ருடன் நான் போயிருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அதைப்பற்றி எனக்குச் சிறிது கூட நினைவில்லை.

சப்ராவில் நான் படிப்பதென்று முடிவு ஆனபின், என்னை அங்கே ஒருமுறை அழைத்துச் சென்று எல்லாவற்றையும் காட்டுவது நல்லது என்று நூநா நினைத்தார். அப்படியே அழைத்துச் சென்றார். சப்ராவில் என் தமயனுடன் சில நாட்கள் தங்கியிருந்தேன். பிறகு திரும்பி வந்து விட்டேன். என் நினைவுக்கு எட்டிய வரையில் இதுதான் நான் முதன் முதல் ரயில் வண்டி ஏறியது. ஆனால் இந்தப் பயணத்தில் என்னைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கவில்லை. ஜீராதேயீக்குத் திரும்பி வந்து மௌல்வீ சாஹபிடம் மீண்டும் படிக்க அமர்ந்தேன். இந்தச் சமயத்தில் ஒரு துன்பம் விளைந்தது. நூநா இறந்துவிட்டார். எங்கள் வம்சத்திற்கு நெருங்கிய உறவு கொண்ட ஒரு குடும்பம் இருந்தது. இப்போது இருக்கும் பாபூ பூலன் பிரசாத் வர்மா அதைச் சேர்ந்தவர். அவருடைய தந்தை தம் தாய்ப் பாட்டனர் வீட்டிற்கு வந்து தம்முடைய மாமனுடன் தங்கியிருந்தார். அவருடைய தாய்ப் பாட்டனுருடன் எங்களுக்குப் பழைய உறவும் உண்டு. அதைவிட இரண்டு குடும்பத்தாரும் பரம்பரையாய் ஹதுவா சமஸ்தானத்தில் வேலை செய்த காரணத்தால் மிக நெருங்கிய உறவு நெடுநாளாக இருந்து வந்தது. பூலன் பாயீயின் தந்தையார் கல்யாணத்திற்கு நூநா மாப்பிள்ளை வீட்டுக் கோஷ்டியுடன் போயிருந்தார். திரும்பி வரும்போது, வழியில் அவருக்கு வாந்திபேதி கண்டுவிட்டது. ஆயினும் நலமடைந்து வீட்டிற்கு வந்து விட்டார். ஆனால் கிராமத்திலும் வாந்திபேதி கடுமையாய்ப் பரவி இருந்தது. நலமாகி ஏறக்குறைய இரண்டு மூன்று வாரங்களுக்குப் பிறகு அவருக்கு மீண்டும் பேதி கண்டது. அந்த நாள் இன்றுகூட எனக்கு நினைவு இருக்கிறது. பகல் சுமார் 11 மணிக்கு நோய் ஆரம்பித்தது. அன்றிரவே அவர் இறந்து விட்டார். தாத்தா தம்மால் முடிந்த வரையில் ஏதோ வைத்தியம் செய்து பார்த்தார். ஆறு மைல் தூரத்திலுள்ள திரௌலியில் இருந்து டாக்டரும் வரவழைக்கப்பட்டார். முதல் முறை நோய் கண்டபோது அதே டாக்டர்தாம் அவரை நலமாக்கினர். அக்காலத்தில் விரைவான போக்கு வரவுக்கு வழியில்லை. யானையின் மேல் ஏறிக்கொண்டு இரவு பன்னிரண்டு மணிக்கு டாக்டர் வந்து சேர்ந்தார். ஆனால் அவர் வருவதற்கு முன்னமே உயிர் போய்விட்டது. நூநா இறந்ததும் வீட்டில் ஒரே கூக்குரல் கிளம்பியது. தாத்தாவுக்கு இவர் ஒரே

மகன். குடும்பத்தின் காரியங்களை எல்லாம் வீட்டிலும் வெளியிலும் இவரேதாம் பொறுப்பேற்றுக் கவனித்து வந்தார். தாத்தாவுக்கு வயது சுமார் எழுபது இருக்கும். நூநூவுக்கு அப்போது வயது 45க்குமேல் இருக்காது. வீட்டுக் காரியங்களில் பாட்டனுர் மிகக் குறைவாகத்தான் சிரத்தை எடுத்துக் கொள்வார். இது காரணமாக எல்லாம் ஒரே குழப்பமாகப் போய்விட்டது. இதன் விளைவாக என்னைச் சப்ராவுக்கு அனுப்புவது சிறிது காலத்திற்கு நிறுத்தப்பட்டது.

ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டிற்குப் பிறகு நான் சப்ராவுக்கு அனுப்பப்பட்டேன். சப்ராவில் மூன்று நான்கு ரூபாய்வாடகைக்கு ஒரு சிறு வீடு எடுக்கப்பட்டிருந்தது. அதில் என் தமையனுர் ஒரு வேலைக்காரனையும் சமையலுக்கு ஒரு காயஸ்தையும் வைத்துக் கொண்டு வசித்து வந்தார். பாடம் சொல்லிக்கொடுக்க வீட்டுடன் ஓர் உபாத்தியாயர் முதலில் சில நாட்கள் வரை இருந்தார். ஆனுல், நான் போய்ச் சேர்ந்தபோது அங்கு வேறு யாரும் இல்லை. நானும் என் அண்ணனுடன் இருந்து வந்தேன். சப்ராவிற்குப் போய்ச் சேர்ந்த சில நாட்களுக்குப்பின், ஜில்லாப் பள்ளிக்கூடத்தில் எட்டாவது வகுப்பில் என் பெயர் பதிவு செய்யப்பட்டது. அதுதான் அந்தக் காலத்தில் ஆரம்ப வகுப்பு. அங்கே நான், ஏ. பி. சீயும் நாகரி எழுத்தில் அ, ஆ, இ, ஈ., யும் ஒரே சமயத்தில் கற்கத் தொடங்கினேன். அந்தச் சமயத்தில் என் அண்ணன் இரண்டாவது வகுப்பில் இருந்து தேறி (என்ட்ரன்ஸ்) புகுமுக வகுப்புக்குப் போய்ச் சேர்ந்தார். எனக்காக வீட்டில் ஆசிரியர் யாரும் அமர்த்தப்படவில்லை. பள்ளிக்கூடத்தில் சொல்லிக்கொடுத்ததைத் தவிர வேறு ஏதேனும் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியிருந்தால் அண்ணனிடம் கேட்டுக்கொள்வேன். வீட்டில் பாடம் சொல்லிக் கொடுக்க உபாத்தியாயர் வைக்காதது மிகவும் நன்மையாயிற்று. பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுப்பதில் அதிக கவனம் செலுத்துவதற்குப் பழக்கம் உண்டாயிற்று. இதனுல் முதல் வகுப்பில் இருந்தே எனக்குத் தன்நம்பிக்கை வந்து விட்டது. ஆண்டு முடிவில் தமையனுர் புகுமுகப் பரீக்ஷைக்குத் தயார் செய்து கொண்டிருந்தார். நான் என் வகுப்பில் முதலாகத் தேறினேன். மார்க்கும் நிறையக் கிடைத்தது. இதனுல் எனக்கு “டபிள் பிரமோஷன்” கொடுக்கலாம் என்று தலைமை ஆசிரியர் நினைத்தார்.

அந்தக் காலத்தில் க்ஷீரோத் சந்திர ராய் எங்கள் பள்ளிக்கூடத்துக்குத் தலைமை ஆசிரியராக இருந்தார். அவர் மிக்க

புகழும் அறிவும் படைத்த தலைமை ஆசிரியர் என்று கருதப் பட்டார். அவரிடம் எல்லாருக்கும் அதிக பயபக்தி உண்டு. பிள்ளைகள் மட்டும் அன்றி ஆசிரியர்களும்கூட அவரிடம் பயத்தி னல் நடுங்குவார்கள். பரீக்ஷையின் முடிவு விவரம் சொல்லப் பட்டது. எனக்கு எட்டாவதில் இருந்து[1] ஏழாவதுக்குத் தேறுதல் கிடைத்தது. நானும் மற்றப் பையன்கள் எல்லோரும் வகுப்பில் கும்மாளம் அடித்துக் கொண்டிருந்தோம். பியூன் வந்து தலைமை ஆசிரியர் என்னைக் கூப்பிடுகிருர் என்று உபாத்தி யாயரிடம் சொன்னன். எந்தப் பையன்களின் மேல் குற்றம் சாட்டப்பட்டதோ அவர்களைத்தான் தலைமை ஆசிரியர் சாதாரண மாகப் கூப்பிடுவார். நான் நடுநடுங்கிக்கொண்டு அவரிடம் சென்றேன். அங்கே போய்ச் சேர்ந்தவுடன் பயம் அகன்று விட்டது. நீ "டபிள் பிரமோஷன்" பெற்று ஏழாவதுக்குப் பதிலாக ஆருவது வகுப்பிற்குப் போகிருயா?" என்று அவர் கேட்டார். எனக்கு கொஞ்சம் தலை கிறுகிறுப்பதுபோல் இருந் தது. ஒருபக்கம் மகிழ்ச்சி, மற்ருெரு பக்கம் வியப்பு. மேலும் ஒரு முழு ஆண்டின் பாடத்தை எப்படித் தாண்டுவது என்ற கவலையால் அச்சமும் உண்டாயிற்று. "என் அண்ணனைக் கேட்டுச் சொல்லுகிறேன்" என்று கூறினேன். "உன் அண்ணன் பெயர் என்ன?" என்று கேட்டார். நான் பெயரைச் சொன்னதும் அவர் சிரித்தார். என் தமையனுரை அவருக்குத் தெரியும். ஏனென்ருல், அவர் தாம் என் தமையனுக்குப் பாடம் கற்பித்துப் புகுமுகப் பரீக்ஷை கொடுப்பதற்கு அனுமதியும் அளித் தவர். இப்போது அதற்குத்தான் என் தமையனுர் வீட்டில் தயார் செய்து கொண்டிருந்தார். "உன் அண்ணன் என்னைவிட அதிக மாகத் தெரிந்தவனே? நீ அவனைப் போய்க் கேட்க வேண்டு மென்கிருய். இருந்தாலும் போய்க் கேட்டுக்கொண்டு வா" என்ருர். நான் அங்கிருந்து ஓட்டமாய் ஓடி அண்ணனிடம் போய்ச் சேர்ந்தேன். காலம் சென்ற பாபு பாங்கே பிகாரிலால், மௌல்வீ ஷபீ தாவூதீ, என் அண்ணன் ஆகிய மூவரும் சேர்ந்து பரீக்ஷக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். நான் அவர் களிடம் சென்றேன். மூவரும் இந்தச் செய்தியை மிக மகிழ்ச்சி யுடன் கேட்டார்கள். இதைப் பற்றி அவர்களுக்குள் ஆலோசனை நடந்தது. ஒரு வகுப்பைக் கடந்து செல்வதினல் நான் பிற்காலத் தில் படிப்பில் பலம் குன்றிவிடுவேன் என்றும், மேலே சரியாகப்

1. இவ்விதமாக வகுப்பு முறையைத் தலைகீழாகக் கணக்கிடும் வழக்கம் பீகாரில் இருந்து வந்தது.

படிக்க முடியாது என்றும் என் அண்ணன் கவலைப்பட்டார். அவர் என்னுடன் தலைமை ஆசிரியரிடம் வந்து தன் கருத்தைத் தெரிவித்தார். தலைமை ஆசிரியர் சிரித்துக் கொண்டு என்னிடம் கூறியதையே சொன்னார். "என்னைவிட உனக்கு விஷயங்கள் எல்லாம் அதிகமாகப் புரியுமோ?" என்றார். இதன் பலனாக, ஏழாவது வகுப்பைக் கடத்தி ஆறாவது வகுப்புக்கு என்னை அனுப்பி விட்டார்.

பரீக்ஷை கொடுப்பதற்காக அண்ணன் சில நாட்களுக்குள் பட்னா சென்று விட்டார். அங்கே பரீக்ஷை எழுதிவிட்டு ஜீரா தேயீக்குப் போய்விட்டார். அப்போதிலிருந்து நான் சப்ராவில் இருந்த வீட்டில் தனியே வேலைக்காரன் சமையற்காரன் ஆகிய இருவர்களுடன் இருந்தேன். என் ஆரம்பப்பள்ளித் தோழர்கள் யமுனாபாயீயும் கங்காபாயீயும் சப்ராவிற்கு வந்து பள்ளிக்கூடத்தில் சேர்ந்து விட்டார்கள். நாங்கள் மூவரும் அங்கே சேர்ந்தே படித்தோம். அப்போது எனக்கு வயது பத்துப் பதினொன்று இருக்கும்.

என் தமையனார் என்ட்ரன்ஸில் தேறி விட்டார். அவர் பட்னாவில் கல்லூரியில் சேர்ந்து படிப்பதைப் பற்றிப் பேச்சு நடந்தது. அவர் பட்னாவுக்குப் போகும்போது, நானும் அவருடன் பட்னா செல்வதென்று முடிவு ஆகியது. அப்படியே நடந்தது. ஒன்றாகப்படித்து வந்த நாங்கள் மூவரும் அண்ணனுடன் பட்னாவுக்குப் போனோம். தமையனார் பட்னா கல்லூரியில் சேர்ந்தார். நாங்கள் டி. கே. கோஷ் அகாடமியில் சேர்ந்தோம். அந்தக் காலத்தில் அது மிகவும் நல்ல பள்ளிக்கூடமென்று கருதப்பட்டது. அதில் அநேக பையன்கள் படித்தார்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தபின், "டபிள் பிரமோஷன்" விஷயத்தில் என் அண்ணனுடைய கருத்துத் தலைமை ஆசிரியரின் கருத்தை விடச் சரியானது என்பதை உணர்ந்தேன். எத்தனையோ விஷயங்களில், மற்றப் பையன்கள் என்னைவிட அதிகமாகத் தெரிந்து கொண்டிருந்தார்கள் என்று எனக்கு விளங்கியது. இக்குறையைப் பூர்த்தி செய்யும் முயற்சியில் ஈடுபட்டேன். அங்கேயும் வீட்டில் சொல்லிக் கொடுக்க உபாத்தியாயர் எவரும் இல்லை. ஏதாவது கேட்டுக்கொள்ள வேண்டுமானால் என் அண்ணனிடம் அல்லது அவருடைய தோழர்களிடம் கேட்டுக் கொள்வேன்.

சப்ராவில் இருக்கும்போதே, தினம் மாலையில் பள்ளிக்கூடம் விட்டபின் வீட்டிற்கு வந்து ஏதாவது உண்டு விட்டுக் கால்பந்து அல்லது வேறு விளையாட்டு ஆடத் திரும்பவும் பள்ளிக்குப்

போவது வழக்கமாகி விட்டது. முக்கியமாகக் கால்பந்து அல்லது கிரிக்கெட் விளையாடுவேன். மேல் வகுப்புப் பையன்கள் சிலரும் ஆசிரியர்களில் சிலரும், முக்கியமாகத் தலைமை ஆசிரியரும் டென்னிஸ் ஆடுவார்கள். பட்னுவில் பள்ளிக்கூடத்தில் விளையாடுவதற்கு எந்த ஏற்பாடும் கிடையாது. இந்தக் குறைபாடு நாங்கள் விளையாடுவதற்கு இடைஞ்சலாயிருந்தது. பள்ளிக்கூடத்திற்குப் பெரிய முன்றில் (காம்பௌன்ட்) கூடக்கிடையாது. எங்களுடைய பந்துகளை எடுத்துக் கொண்டுபோய் ஏதோ இருந்த இடத்தில் ஓடிக்குதித்து விளையாடித் திரும்புவோம். தமையனர் விளையாட்டுக்களில் மிகவும் சமர்த்தர். கால்பந்து, கிரிக்கெட், இன்னும் மற்ற விளையாட்டுக்களிலும் அவர் முன் நின்றார். பட்னு கல்லூரியிலும் அவருக்கு இதில் நல்ல பெயர் உண்டு. சில சமயங்களில் ஆட்டம் பார்ப்பதற்காகப் பட்னுவில் மைதானத்திற்கு நாங்கள் போவோம்.

பட்னுவில் சோமவார் மேலா (சந்தை) சிராவன் மாதத்தில் ஒவ்வொரு திங்கட்கிழமையும் ஆரவாரத்துடன் நடக்கும். அந்தச் சந்தைக்குப் போவதில் எங்களுக்குப் பெரு மகிழ்ச்சி. அங்கே ஏதேனும் சில்லறைச் சாமானை வாங்கவேண்டுமென்று அண்ணனிடம் அடம் பிடிப்போம். ஒரு சமயம் ஓர் அழகான பொம்மைக்காக நான் மிகவும் அடம் பிடித்ததும் என் அண்ணன் அதை வாங்கித்தான் தீரவேண்டி வந்ததும் எனக்கு நினைவிருக்கிறது. ஒருமுறை அதே சோமவார் மேலாவில் பாபூ பாங்கே பிகாரியின் பையிலிருந்து கொஞ்சம் பணத்தை ஒருவன் திருடி விட்டான். என் தமையனும் அவருடனிருந்தார். திருடன் பிடிபட்டு விட்டான். அவன்மேல் வழக்குத் தொடரப்பட்டது. அதில் பாங்கேஜீயும் அண்ணனும் சாக்ஷி சொல்ல வேண்டி வந்தது. அந்த வழக்கைப் பார்ப்பதற்காக நான்தான் முதன் முதலில் கச்சேரிக்குப் போய்ச் சேர்ந்தேன் என்பது நினைவிருக்கிறது.

அண்ணனின் நண்பரான எங்கள் ஊர்க்காரர் ஒருவர் பட்னுவில் வேலை தேடுவதற்காக வந்து எங்கள் வீட்டில் தங்கியிருந்தார். அங்கும் பாபூ பாங்கேஜீயும் நாங்களும் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு சேர்ந்து இருந்து வந்தோம். அந்தக் கனவான் ஒரு சாமான்யமான பயில்வான். கசரத் முதலியனவும் கொஞ்சம் தெரிந்தவர். எங்கள் வீட்டு முற்றத்தில் ஒரு சிறிய மற்கூடத்தை அமைத்து, அங்கே எங்கள் எல்லாரையும் கசரத் பழக வைத்தார். குஸ்தியும் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தார். ஒரு நாள் குஸ்தி

பழகும்போது பாபூ பாங்கேஜீக்கு அடிபட்டு விட்டது. பல நாட்கள் வரையில் அவர் கால் தொந்தரவு கொடுத்துக் கொண்டிருந்தது. அதற்குப் பின் குஸ்தியிலும் மற்கூடத்திலும் ஊக்கம் குறைந்து விட்டது.

நாங்கள் பட்னுவில் இருந்த சமயத்தில்தான் பிளேக் வியாதியின் பெயரை முதன்முதல் கேட்டோம். அப்போது பம்பாயிலிருந்து இந்தப் பயங்கரமான வியாதியின் செய்தி கிடைத்தது. சில நாட்களுக்குப் பின் சப்ரா ஜில்லாவிலும் அது தன்னுடைய முகாமைப் போட்டு விட்டது. மேலும் இன்று வரையில் கூடக் குறைந்த அளவில் ஏதோ கொஞ்சம் கொஞ்சம் இருந்து வருகிறது. அதே காலத்தில் ஒரு பெரிய பஞ்சமும் உண்டாயிற்று. விடுமுறையில் நாங்கள் ஊருக்குப் போனபோது, அரசாங்க அதிகாரி ஒருவர் ஜனங்களுக்கு உதவி புரிவதற்காக வந்து, எங்கள் வீட்டில் தங்கியிருப்பதைக் கண்டோம்.

பட்னுவில் ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் கழிந்தன. என் தமையனுர் எப். ஏ. பரீக்ஷை கொடுத்தார். நான் ஆருவதிலிருந்து ஐந்தாவது வகுப்புக்குப் போனேன். பரீக்ஷை கொடுத்து விட்டு தமையனுர் ஊருக்குப் போய் விட்டார். நானும் யமுனுபாயீயும் கங்காபாயீயும் பட்னுவில் வேலைக்காரனுடன் இரண்டு மூன்று மாதங்கள் தனியாய் இருந்தோம். கோடை விடுமுறை விட்டபோதுதான் வீட்டிற்குத் திரும்பி வந்தோம்.

## 6. திருமணம்

நான் ஐந்தாவது வகுப்பில் அல்லது நான்காவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேனு என்பது சரியாக நினைவு இல்லை. அப்போது என் திருமணம் நடந்தது. ஐந்தாவதில்தான் படித்துக் கொண்டிருந்தேன் போலிருக்கிறது. கோடை விடுமுறையில் விவாகம் நடந்தது. நாங்கள் சப்ராவில் படித்துக் கொண்டிருந்தபோதே தாத்தா பாட்டி இருவரும் இறந்து விட்டார்கள். அவர்களுடைய உடல் நிலையின் செய்தி கேட்டு நாங்கள் எல்லோரும் சப்ராவிலிருந்து ஜீராதேயீக்கு வந்து விட்டோம். அங்கே எங்கள் எல்லோரின் முன்னிலையில் அவர்கள்—ஒருவருக்கு ஒருவர் சொற்ப நாட்கள் இடைவிட்டு—இறந்து விட்டார்கள். இதனுல், இந்தச் சமயத்தில் என் அப்பாதான் வீட்டிற்கு அதிகாரி. என்

னுடைய கல்யாணத்திற்கு ஆன ஏற்பாடுகளை அவர்தாம் செய்ய வேண்டியிருந்தது.

என் மாமனர் ஆராவில் ஒரு வக்கீல்; அவருடைய தம்பி ஒருவர் பலியாவில் பிளீடராய் இருந்தார். இரண்டு சகோதரர்களும் ஜீராதேயீக்கு வந்தார்கள். தாயாருடன் உள்ளே இருந்த என்னை அப்பா கூப்பிட்டு அனுப்பினர். அவர்கள் என்னைப் பார்த்தார்கள், சில கேள்விகளும் கேட்டார்கள். பிறகு திருப்தி அடைந்து சென்றுர்கள். சில நாட்களுக்குப் பின் திலக் (பெண் வீட்டு வரிசை) வந்தது. அதில், வழக்கத்தை ஒட்டி, துணிமணிகள், பாத்திரங்கள் முதலியனவும், அவற்றைத் தவிரப் பணமும் வந்தது. என் நினைவிற்கு எட்டியவரையில், அப்பா பணத்தைப் பற்றி அதிகக் கண்டிப்பாய் இருக்கவில்லை. இருந்தாலும், ரொக்கமும் சாமான்களும் சேர்த்து ஏறக்குறைய ரூபாய் இரண்டாயிரத்துக்கு அவர்கள் அனுப்பினர்கள். அப்போது என் வயது பன்னிரண்டிற்குச் சற்று அதிகம். அந்தக் காலத்தில் இரண்டாயிர ரூபாய் வரிசை மிகவும் சிறந்த வரிசை என்று கருதப்பட்டது. இப்போதோ, ஐயாயிரம் ஏழாயிரம் கூடக் குறைவு என்று எங்களுக்குள் அந்தஸ்து உள்ளவர்கள் நினைக்கிருர்கள். சீர்வரிசை எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அத்தனை ஆடம்பரமாக "பாராத்" (மாப்பிள்ளை வீட்டுக் கோஷ்டி) இருக்க வேண்டும். அதற்குத் தகுந்தாற்போலப் பெண்ணுக்கு நகைகள் அதிகமாகப் போட வேண்டும். என் கல்யாண சமயத்தில் என் தகப்பனரின் செல்வ நிலை நன்ருக இல்லை. மூன்று நான்கு ஆண்டுகளுக்குள் ஒவ்வொன்ருக மூன்று சாவுகள் ஆகிவிட்டன. அவற்றின் சிரார்த்தங்கள் ஒவ்வொன்றிற்கும் நிறையச் செலவாகி விட்டது. இது ஒரு காரணம்; பஞ்சத்தினுல் ஜமீந்தாரியின் வரும்படி குறைந்து விட்டது மற்ருெரு காரணம். செலவோ அதிகமாகி விட்டது. நாங்கள் படிப்பதற்காகச் சப்ராவிற்குக்கும் பட்னுவுக்கும் ஒவ்வொரு மாதமும் ஏதாவது அனுப்பவேண்டி இருந்தது. நெடுங்காலமாக ஒரு வழக்கு வேறு நடந்துகொண்டு வந்தது. அதன் விசாரணை நெடுநாள் நீடித்தது. அதனுலும் ஏராளமான செலவு ஏற்பட்டது. இத்தனை பிடுங்கல்கள் இருந்தாலும் கூடக் கல்யாணத்தில் அதிகச் செலவு செய்யவேண்டித்தானிருந்தது. ஏனென்ருல் இதில்தான் குடும்பத்தின் கௌரவம் அடங்கியிருந்தது.

நகைகளைப் பொருத்த வரையில், அவற்றிற்காக என் தந்தையார் நிறையச் செலவு செய்தார். மற்ற ஏற்பாடுகளிலும் அவர் எதையும் குறைக்க விரும்பவில்லை. ஏனெனில் அவருடைய

ஆதிக்கத்தில் இதுதான் முதல் கல்யாணம். மேலும் பழைய காலத்துத் திட்டப்படி செலவு நடக்காவிட்டாலோ ஆடம்பரமும் சிறப்பும் இல்லாவிட்டாலோ, "பையாஜீ" (என் தாத்தாவை ஜனங்கள் இப் பெயரால்தான் அழைப்பார்கள்) இறந்த பின் வீட்டின் மகத்துவமே குறைந்து போய்விட்டது என்று ஜனங்கள் சொல்லி விடுவார்கள். ஆகையால், இக்கல்யாணம் பழைய சிறப்பிலிருந்து ஏதேனும் குறைந்து விடுமோ என்று என் தந்தையார் கவலைப்பட்டார்.

எங்கள் குடும்பத்தில் மாப்பிள்ளை பவனிக்காக யானை, குதிரை முதலியவை இரவல் வாங்கிக்கொண்டு வரப்படும். மற்றச் சாமான்களும் இரவலாகக் கொண்டு வரப்படும். என் கல்யாணத்தின் திதி மிகவும் சிறந்த லக்னமுள்ள நாளில் அமைந்தது. கிரகங்கள் நன்றாய் அமைந்திருப்பதால் அன்று முகூர்த்தங்கள் நன்றாய்க் கூடிவரும் என்றும், அன்று கல்யாணங்களை வைத்துக் கொள்வது மிகவும் சுபம் என்றும் எந்த நாளை அதிகப்பேர் கருதுவார்களோ அந்த நாளைக் கிராமத்தார் தம் பேச்சு வழக்கில் "சிறந்த லக்னம்" என்று சொல்லுவார்கள். இப்படியாக என்றைக்கு மிகச் சிறந்த லக்னம் அமையுமோ அன்று சாமான்கள் இரவலாகக் கிடைப்பது கடினம்; ஏனென்றால் பலர் இரவல் கேட்பார்கள். என் "பாராத்"திற்கு யானை குதிரை நிறைய இரவல் கேட்டிருந்தார்கள். ஆனால் மிகச் சிறந்த லக்னமானதால் அவை வரமுடியவில்லை. ஒரே ஒரு யானையும் இரண்டு மூன்று குதிரைகளும்தாம் வர முடிந்தன.

ஜீராதேயீயிலிருந்து 18–20 கல் தொலைவிலுள்ள பலியா ஜில்லாவைச் சார்ந்த தளன்–சப்ராவில் என் கல்யாணத்தை நடத்துவதாக ஏற்பாடாகி இருந்தது. அவ்வூருக்கு இரண்டு நாள் வழிச் செல்ல வேண்டும். இடையில் சரயூ (கோக்ரா) நதி கிடந்தது. அதைப் படகில் கடக்க வேண்டும். ஜீராதேயீயில் செய்ய வேண்டிய சடங்குகளை முடித்துக்கொண்டு "பாராத்" புறப்பட்டது. யானை குதிரைகள் குறைவாயிருந்ததால் பல்லக்குகளை அதிகமாய் வாடகைக்கு அமைக்க வேண்டியிருந்தது. மாட்டு வண்டிகளில் சாமான்கள் அனுப்பப்பட்டன. மாப்பிள்ளை ஏறிச் செல்லும் ஒரு தனிவிதமான பல்லக்கில் நான் சென்றேன். வீட்டில் ஒரு பெரிய குதிரை இருந்தது. தமையனார் அதன்மேல் ஏறிச் சென்றார். அவர் எல்லோரையும் புறப்பாடு செய்து அனுப்பி விட்டு எல்லாருக்கும் பின் புறப்பட்டார். ஆயினும், நாங்கள் பகல் சாப்பாட்டிற்காகத் தங்க நிச்சயித்திருந்த இடத்திற்கு எல்லாருக்கும் முன்

ஞல் போய்ச் சேர்ந்துவிட்டார். எல்லா ஏற்பாடுகளிலும் அவர் அதிகப்படி பொறுப்பு ஏற்றுக் கொண்டிருந்தார். பாபூஜி[1] பல் லக்கில் சென்ருர். குடும்பத்தாரும் மற்ற உறவினர்களும் பல்லக்கு களிலும் மற்றும் வேறு வண்டிகளிலும் வந்தார்கள்.

மாப்பிள்ளையின் பல்லக்கு மிகவும் முரட்டு வேலைப்பாடு உள்ளதாக இருக்கும். அதன் மேல் நிழலுக்காகக் கூண்டு ஏதும் இருக்காது. சீலைத்துணித்துண்டுகள் தாம் கட்டப்பட்டிருக்கும். ஆவணி மாதத்தில் கல்யாணம் ஆதலால் வெயில் கடுமையாக எரித்துக் கொண்டிருந்தது. அனல் காற்றும் பலமாக அடித்துக் கொண்டிருந்தது. நான் அந்தப் பல்லக்கில் தான் போக வேண் டும். காற்றில் துணித்துண்டுகள் கூடாரம்போல எழும்பிப் பரந்தன. பல்லக்கு வெள்ளியினுல் செய்யப்பட்டது. ஆகையால் பளு அதிகம். அதன் கனத்தைத் தாங்குவது வேலைக்காரர் களுக்குச் சிரமமாக இருந்தது. காற்றடித்துத் துணி கூடாரம் போல விரிந்ததும் சேர்ந்து கொள்ளவே, பாவம், அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டார்கள். நான் வெயில் காற்று இவை இரண்டிற்கும் இலக்கானேன்.

எப்படியோ பகல் பொழுது கழிந்தது. இரவு சரயூவின் கரையில் உள்ள ஒரு கிராமத்தில் முகாம் போட்டோம். சர்வ சாமான்யமான சமையல் செய்து எல்லாரும் சாப்பிட்டார்கள். காலையில் சரயூவைத் தாண்டிச் செல்லும்வேலை ஆரம்பித்தது. சாமான்கள், பல்லக்குகள், மாட்டு வண்டிகள், மாடுகள், குதிரை கள் இவையாவும் படகுகளில் ஏற்றப்பட்டன. யானையைத்தானே நீந்திக் கடக்கச் செய்வதற்காக முயற்சி செய்யப்பட்டது. அது ஒரு தினுசான யானை. அது ஆற்றைக் கடக்க விரும்பவில்லை. சிறிது தூரம் போகும், பிறகு திரும்பி வந்துவிடும். பிறகு அதைப் பல படகுகளால் சூழ்ந்து கொண்டு அக்கரை ஏற்ற முயற்சி செய்யப்பட்டது. அதுவும் பலிக்கவில்லை. கடைசியில், அதை அங்கேயே விட்டு விடுவது என்றும், யானை இல்லாமலே "பாராத்" செல்வதென்றும் முடிவு செய்யப்பட்டது. கல்யாணத் திற்கு ஒரு யானையாவது இல்லை என்பது பாபூஜீக்கு மிகவும் வருத்தமாயிருந்தது. என் கல்யாணம் நடக்கப் போகும் இடத் திற்குச் சிறிது தூரத்தில்தான் பாபூஜீக்குக் கல்யாணம் ஆயிற்று. தாத்தா அப்போது ஹதுவாவின் திவாஞக இருந்தார். அந்த மாப்பிள்ளை பவனியில் ஐம்பது யானைகள் சென்றன. தம்முடைய கல்யாணத்தில் ஐம்பது யானைகள் சென்ற இடத்தில் தம் மகன்

1 தந்தை.

கல்யாணத்திற்கு ஒரு யானை கூடக் கொண்டு போக முடிய வில்லையே என்பது என் தந்தையாரை மிகவும் உறுத்தியது. ஆனால் என்ன செய்வது? பாராத்தோ திரும்பிப் போக முடியாது. யானையின் அடத்தினால் ஏகப்பட்ட நாழிகை ஆகிவிட்டது. அதனால் அந்த (என் கல்யாணம் நடக்கும்)க் கிராமத்தில் போய்ச் சேர்வதற்குள் இருட்டாகி விடும் என்ற அச்சம் உதித்தது.

"பாராத்" கடுவேகமாகச் சென்றது. ஆயினும் எங்கே நடுப்பகலுக்குப் போய்ச் சேரவேண்டுமோ அங்கே நாங்கள் போய்ச் சேர்ந்தபோது மூன்று நான்கு மணியாகிவிட்டது. அங்கே சாப்பாடு முதலியன முடித்துக்கொண்டு "பாராத்" மேலே சென்றது. இருட்டிவிட்டது. இதனிடையில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. கிராமத்திலிருந்து ஓரிரண்டு மைல் இப்பால் "பாராத்" போய்க் கொண்டிருக்கும்போது, இரண்டு மூன்று யானைகள் எதிரே வருவது தென்பட்டது. அவை, வேறு ஏதோ "பாராத்"துடன் சென்று, அப்பணி முடிந்தபின் எங்கோ திரும் பிச் சென்று கொண்டிருந்தன. மாவுத்தர்களுடன் பேச்சு நடந் தது. அவர்களுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்கப்பட்டது. அவர்கள் எங்கள் "பாராத்"துடன் சேர ஒப்புக் கொண்டார்கள். இப்படியாக யானை இல்லாக்குறை ஒரு விதமாகத் தீர்ந்துவிட்டது. "பாராத்" போய்ச் சேர்வதற்குள் இரவு 10–11 மணி ஆகி விட்டது.

அங்கே ஜனங்கள் பயந்து அலட்டிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் "பாராத்" போய்ச் சேர்ந்தது. நான் அந்திப் பொழுதில் முன்னேரத்திலேயே தூங்கி விடுவது வழக்கம். கல்யாணத்திற்காக அந்தப் பழக்கம் விட்டுப் போவதாக இல்லை. "பாராத்" போய்ச் சேருவதற்கு முன்பே பல்லக்கில் நன்ருய்த் தூங்கிவிட்டேன். அங்கே போய்ச் சேரும்போது எப்படியோ விழித்துக் கொண்டேன். பிறகு "பரிச்சாவன்" (ஆரத்தி எடுத்து மாப்பிள்ளையை வரவேற்பது) சடங்கு செய்யப்பட்டது. மற்றக் கல்யாணச் சடங்குகளும் ஒவ்வொன்ருக முடிக்கப்பட்டன. வெயிலில் இரண்டு நாட்கள் பிரயாணம், அதுவும் பல்லக்கில் செய்த பயணம், மாலையில் தூங்கிவிடும் வழக்கம், அதன் மேல் இத்தனை அயர்ச்சி. இவையெல்லாம் கூடியதால் விழித்துக் கொண்டிருப்பது எனக்குக் கடினமாக இருந்தது. எல்லாச் சடங்குகளும் முடிந்தன. கல்யாணமும் அன்றிரவே நிகழ்ந்தது. இன்று எனக்கு அந்தச் சடங்குகள் முழுவதும் நினைவில்லை. மேலும், அவற்றில் நான் என்ன பங்கு எடுத்துக் கொண்டேன்

என்பதும் நினைவில்லை. சிறு பிராயத்தில் என் தமக்கையார் பொம்மைக் கல்யாண விளையாட்டு விளையாடுவார். அதில் நானும் சேர்ந்து கொள்வோன். எனக்கு இந்தக் கல்யாணமும் அதைப் போலத்தான் இருந்தது. நான் கல்யாணத்தின் மகிமையையும் உணரவில்லை, என்மேல் ஏதோ பொறுப்பு ஏறிவிட்டது என்பதையும் புரிந்துகொள்ளவில்லை. கல்யாணம் நிச்சயம் செய்வதில் எனக்கு ஒரு சம்பந்தமும் இல்லை; இந்தச் சடங்குகளிலும் இல்லை. சாஸ்திரி அல்லது நாவிதர் அல்லது எங்கள் வீட்டார் அல்லது மாமனூர் வீட்டுப் பெண்கள், யார் யார் என்னென்ன செய்யச் சொன்னூர்களோ அவற்றைச் செய்தேன். கடைசியில் ஜனங்கள் எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று மனத்தில் கொண்டார்கள். எனக்கோ என்ன நடந்தது என்று கூடத் தெரியவில்லை. ஆம், இத்தனை மட்டும் புரிந்து கொண்டேன்; அதாவது, என் அண்ணியார் எங்கள் வீட்டிற்கு எப்படி (ஒருநாள்) வந்தாரோ அதேபோல ஒரு நாள் என் மனைவி என்று ஒருத்தி வருவாள் என்பதுதான்.

வேறு இடங்களில் இருந்த வழக்கம் போலக் கல்யாணமான உடனேயே பெண்ணை அழைத்துக் கொண்டு வரும் வழக்கம் எங்களுக்குள் இல்லை. சிறிது காலத்திற்குப் பின் மற்றோர் சாமான்யமான "பாராத்" போகும். அப்போது பெண் அழைத்து வரப்படுவாள். இதைத் "துவிராகமன்" என்பார்கள். ஓர் ஆண்டிற்குப் பிறகு இப்படியாக மறுமுழிச்சி[1] (துவிராகமன்) "பாராத்" சென்றது. அப்போது அவள் அழைத்து வரப்பட்டாள். "பாராத்" இரண்டு நாட்கள் அங்கே தங்கி இருந்து திரும்பி வந்தது. முதல் "பாராத்" மிகவும் நாழிகைப்பட்டுப் போய்ச் சேர்ந்ததாலும், மேலும் அவர்கள் எதிர்பார்த்தபடி ஆடம்பரமும் சிறப்பும் இல்லாததாலும், மாமனூர் வீட்டாருக்குச் சிறிது மனத்தாங்கல் இருந்தது. ஆனால், பெண்ணிற்காகவும் மற்றவர்களுக்காகவும் மாப்பிள்ளை வீட்டார் கொண்டு வந்த நகை துணி மணி, மிட்டாய் ஆகியவைகளைப் பார்த்தபிறகு அவர்களுக்கு இருந்த குறை நீங்கியது. எல்லாரும் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். மாப்பிள்ளையையும் பார்த்து அவர்கள் வீட்டு பெண்களும் மற்றும் வந்திருந்தவர்களும் மகிழ்ச்சியடைந்தார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் யாரிடமிருந்தும் இதற்குச் சான்று கிடைக்கவில்லை.

---

1 கல்யாணத்திற்குப் பின் மாப்பிள்ளையை இரண்டாம் முறை அழைத்து விருந்து செய்வது.

ஓர் ஆண்டிற்குப் பின் மறுமுழிச்சி ஆயிற்று. அதன் பிறகு மனைவி வீட்டிற்கு வந்தாள். மறுமுழிச்சி பாராத் கல்யாண பாராத்தைவிடச் சிறியதாக இருக்கும். இந்த முறையும் ஒன்றிரண்டு யானைகள் கிடைத்தன. அவை பாராத்துடன் சென்றன. எங்களுக்குள் "பர்தா" அதிகமாகப் பழக்கத்தில் இருந்து வந்தது. என் அண்ணியார் வந்தபோது அவருடன் இரண்டு வேலைக்காரிகள் வந்தார்கள். அவர்கள் இருவருடன் மட்டும்தான் அவர் பேசுவார் என்பதை நான் கவனித்திருக்கிறேன். ஜீராதேயீயில் அவர் ஓர் அறையில் இருப்பார். தாழ்வாரத்திற்குப் போவதற்கு அனுமதி கிடையாது. அந்தக் காலத்தில் வயதில் மிகக் குறைந்தவர்களான வேலைக்காரர்களும் அல்லது என் தாயார், பெரியம்மா இவர்களுக்குத் தெரிந்து கிராமத்தில் பிறந்து, சிறு வயதிலிருந்தே தம் தாய்மாருடன் எங்கள் வீட்டு முற்றத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்தவர்களுமான வேலைக்காரர்களும் தாம் வீட்டிற்குள் போகமுடியும். வயது வந்த வேலைக்காரனாக இருந்தால் அவன் உள்ளே போவதில்லை. ஒரு சமையற்காரன் இருந்தான்; அவன் சமையல் செய்வதற்காக முற்றத்து வழிச் செல்லமுடியும். ஆனால் அங்கு நுழைவதற்கு முன் குரல் கொடுப்பான். உடனே என் தாயார், பெரியம்மா இருவரும் அறைக்குள் போய்விடுவார்கள். அதற்குப் பின் அவன் உள்ளே சென்று சமையல் உள்ளுக்குள் நுழைந்துவிடுவான். அப்படி ஏதாவது சாமான் அவசியப்பட்டால், அங்கிருந்தே யாராவது வேலைக்காரியைக் கூப்பிட்டு வாங்கிக் கொள்வான். வெளியே போகும்போது மறுபடியும் அதே போலக் குரல் கொடுத்து எல்லோரும் அகன்ற பின்தான் அவன் வெளியே வருவான்.

என் அண்ணியார் தம் அறையிலிருந்து வெளியே வருவதே இல்லை. காலைக்கடன் முடிப்பதற்கு மட்டும் வெளியே வருவார். அவர் வருவதற்கு முன் வெளியே இருப்பவர்கள் எல்லாரும் அகற்றப்படுவார்கள்; எல்லாரும் என்றால் வேறு யாரும் இல்லை,- ஜீராதேயீ வேலைக்காரிகள் தாம். ஆண் பிள்ளைகள் யாரும் முற்றத்தில் இருப்பதில்லை. யாராவது சிறு பயல் இருந்தாலும் கூட அவனையும் வெளியே அனுப்பி விடுவார்கள். இத்தனை செய்தும் "பர்தா" பூர்த்தி ஆகாது. அவருடைய தாய் வீட்டு வேலைக்காரிகள் அவரைச் சுற்றித் துணி மறைவு போட்டு அழைத்துச் செல்வார்கள். நான் மிகச் சிறியவனாக இருந்தேன். ஆகையால், ஓடிக்குதிக்கும் போது எப்போதாவது அவருடைய அறைக்குள் போய்விடுவேன். இரண்டொரு முறை அவர் முகத்

தைக்கூட நான் பார்த்து விட்டேன். என் தாயார், பெரியம்மா, தமக்கையார் ஆகிய இவர்கள் அவருடைய அறைக்குள் போனால், அவர் உடனே தம் முகத்திரையை இழுத்து மூடிக்கொண்டு உட்கார்ந்து கொள்வார். ஜீராதேயீயைச் சேர்ந்த வேலைக்காரி யாரும் அங்கே நுழைய முடியாது.

மறு முழிச்சிக்குப் பிறகு என் மனைவி வந்தபோது அவளுக்கும் இந்த சங்கடங்கள் எல்லாம் இருந்தன. நெடுநாள் வரையில் இப்படி நடந்தது. பிறகு மெல்ல மெல்லக் குறைந்தது. அவளுடைய தாய்வீட்டு வேலைக்காரிகள் போய்விட்டார்கள். ஜீராதேயீ வேலைக்காரி ஒருத்தி மட்டும் வரப்போக இருந்தாள். அவளோடு கொஞ்சம் கொஞ்சம் பேசுவதற்கு அனுமதி கிடைத்தது. என் தாயார் உயிருடன் இருந்த வரையில் என் அண்ணியோ என் மனைவியோ அறையை விட்டுத் தன் இச்சையாக முற்றத்தில் உலாவவோ உட்காரவோ முடியாது. என்னுடைய நிலைமை எப்படி இருந்ததென்றால், நான் விடுமுறையில் வருவேன்; வெளியே தான் படுத்துக் கொள்வேன்; இரவில் எல்லாரும் தூங்கிய பின் என் தாயார் வேலைக்காரியை அனுப்பி "அவனை எழுப்பி அழைத்து வா" என்பார். அவள் என்னை எழுப்பி அழைத்துச் சென்று என் மனைவி இருந்த அறைக்குள் விடுவாள். தூக்கத்தில் ஆழ்ந்திருந்த என்னை அத்தனை இரவு வேளையில் எழுப்புவது மிகவும் கடினமாகிவிடும். சில சமயங்களில் எத்தனை எழுப்பினாலும் நான் விழிக்கமாட்டேன். அடுத்த நாள், என் தாயார் அல்லது பெரியம்மா, "இரவில் எழுப்பினால் விழிப்பதுமில்லை, கூப்பிட்டால் வருவதுமில்லை" என்று என்னைக் கடிந்து கொள்வார்கள். விடியற்காலையில் எல்லாரும் தூங்கிக் கொண்டிருக்கும் போதே எழுந்திருந்து போய் விடவேண்டும். அப்படியே போய் வெளியே இருந்த கட்டிலில் படுத்துத் தூங்கிவிடுவேன். இதனால் நான் இரவில் வேறு இடத்திற்குச் சென்றேனென்று யாருக்கும் சிறிது கூடத் தெரியாது. என்னோடு இருந்த வேலைக்காரனுக்கும் இந்த விஷயம் நிச்சயமாகத் தெரியாது.

"பர்தா"வின் காரணத்தால் மனைவியும் கணவனும் இப்படியாகத் தான் சந்தித்து வந்தார்கள். நான் பால்யத்திலிருந்தே பெரும்பாலும் வெளி ஊரிலேயே இருந்தேன். எப்போதாவது தான் விடுமுறையில் வீட்டிற்கு வருவேன். அப்போது சந்திப்புக்கு வாய்ப்புக் கிடைக்கும். அதுவும் இவ்விதமாகத்தான் கிடைக்கும். இதனால், எங்களுக்கு கல்யாணமாகி 44–45 ஆண்டுகள் ஆனாலும்கூட, நாங்கள் சந்தித்த நாட்கள் எல்லாவற்றையும்

கூட்டினுலும் மொத்தம் அத்தனை மாதங்கள் கூடச் சேர்ந்து இருந்திருக்க மாட்டோம். படிக்கும் காலம், பட்ஞ, சப்ரா அல்லது கல்கத்தாவில் கழிந்தது. வக்கீல் வேலையின் போது கல்கத்தாவில் தனியாகவே காலம் முழுதும் கழித்தேன். பட்ஞவுக்குப் போன பின்னும் இரண்டொரு முறைதான் என் வீட்டார் என்னுடன் சில நாட்கள் இருந்தார்கள். ஒத்துழையாமை ஆரம்பித்த பின்னே வீட்டிற்குப் போவதற்கு வாய்ப்பு இன்னும் குறைவாகவே கிடைத்தது. வீட்டாரை என்னுடன் வைத்துக் கொள்வதற்கோ சௌகரியப்படவில்லை. மேலும் வேலையின் தொல்லையால் ஓய்வுமில்லை.

## 7. ஹதுவா, சப்ரா பள்ளிக்கூடங்கள்

தமையனார் எப். ஏ. பரீக்ஷையில் தேறிவிட்டார். கல்கத்தா சென்று மருத்துவக் கல்லூரியில் படிக்க வேண்டுமென்று அவருக்கு ஆசை இருந்தது. அந்தக் காலத்தில் பீகாரிகளில் யாரும் மருத்துவக் கல்லூரியில் படிக்கவில்லை. கல்கத்தாவுக்குப் போவதும், அங்கே செலவைச் சமாளிப்பதும் முதலாவதான கஷ்டம். இரண்டாவதாக, அங்கே பீகாரிகளுக்கு இடம் கிடைப்பது அரிது. அவர் கல்கத்தாவிற்குச் செல்வதென்பது முடிவானதும் நான் எங்கே படிப்பது என்ற கேள்வி கிளம்பியது. நான் கல்கத்தா போவது தகாது என்று கருதப்பட்டது. தமையனார் கல்கத்தாவுக்குச் சென்றார். என்னைப் பட்ஞ பள்ளிக்கூடத்திலிருந்து நிறுத்திவிட்டு ஹதுவா பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்காக அங்கே அனுப்பினார்கள். அங்கே நிலைமை சற்று விசித்திரமாக இருந்தது. படிப்பின் முறை சப்ரா ஜில்லாப் பள்ளிக்கூடத்திலிருந்தும் பட்ஞ டி. கே. கோஷ் அகாடமியிலிருந்தும் சற்று மாறுக இருந்தது. பெயர் பதிவு செய்வதிலேயே முதலில் இடையூறு ஏற்பட்டது. "பரீக்ஷை வைத்துப் பார்த்துத்தான் பெயர் எழுதுவேன்" என்று உபாத்தியாயர் கூறினர்.

எப்படியோ பெயர் பதிவு செய்யப்பட்டது. பாடம் படிக்கும் முறையோ, எந்தப் பாடம் கொடுக்கப்படுகின்றதோ அதை-விசேஷமாகச் சரித்திரப் பாடத்தை—அடுத்த நாள் மனப்பாடம் செய்து வரவேண்டும். உபாத்தியாயர் "பாடஞ் சொல்லு" என்பார். முதலில் இருந்து கடைசி வரையில், புத்தகத்தை மூடி

வைத்துவிட்டு, ஒப்பிக்க வேண்டும். இப்படி எதையும் புரிந்து கொள்ளாமல் நெட்டுருப் போட்டு ஒப்பிப்பது எனக்கு பழக்கமில்லை. ஒரு சொல்லைக்கூட நினைவு படுத்திக் கொள்ளும் ஆற்றல் எனக்கில்லை. ஏறக்குறைய ஆறு மாதம் அந்தப் பள்ளிக்கூடத்தில் இருந்தேன். ஒரு நாளாவது பாடத்தை முழுதும் நெட்டுருப் போட முடியவில்லை. முயற்சிக்குக் குறைவில்லை; ஆனால் முடியவே இல்லை. யாரோ ஒருவர் எதையும் 120 முறை உருப்போட்டால் அது கண்டிப்பாய் மனப்பாடம் ஆகிவிடுமென்று எனக்குச் சொன்னார். நான் அப்படியே மிகவும் பிரயாசைப்பட்டு 120 முறை திருப்பித் திருப்பிச் சொல்ல முயற்சி செய்தேன். அப்படியும் பக்கம் பக்கமாக நெட்டுருப் போட முடியவில்லை. பொழுது சாய்ந்ததுமே தூங்கிவிடுவதும் காலையில் சுமார் 4 மணிக்கு எழுந்திருப்பதும் எனக்குப் பழக்கம். ஆயினும் ஹதுவாவில் 120 முறை பாராயணம் செய்வதற்காக நான் சிற்சில சமயங்களில் இரவு 1–2 மணிக்கு எழுந்து விடுவேன். அப்படியும் பாடம் முழுவதும் முடிக்க இயலாது. பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் என் நிலைமையைப் பார்த்து, சில சமயங்களில் எரிச்சலுடன் "இவனுக்கு நான்காவது வகுப்பில் சேருவதற்குத் தகுதியே கிடையாது" என்பார். மேலும் "உன்னை ஐந்தாவது வகுப்பிற்குத் திருப்பி அனுப்பி விடுவோம்" என்றும் பயமுறுத்துவார். இவை எல்லாம் எனக்கு உள்ளுக்குள்ளே வேதனைக்குக் காரணமாக இருந்தன. இப்படியாக நான் அங்கே என் காலத்தைத் துக்கத்துடன் கழித்தது போல வேறு எங்குப் படித்தபோதும் கழித்ததில்லை. நான் ஒரு வகுப்புத் தாண்டாமல் இருந்திருந்தால் இப்படிப்பட்ட நிலைமை வந்திருக்காதென்று சில சமயங்களில் நினைத்தேன்.

கடைசியாக எனக்குக் கடுமையான நோய் கண்டு விட்டது. ஆண்டு இறுதிப் பரீக்ஷை வரையில் நோயாய்க் கிடந்தேன். இறுதிப் பரீக்ஷை கொடுத்திருந்தால் எப்படியோ மேல் வகுப்பிற்குப் போயிருப்பேன். விடுமுறையில் தமையனார் வீட்டிற்கு வந்தார்; நிலைமை எல்லாம் பார்த்தார்; கேட்டார். நான் ஆண்டு இறுதிப் பரீக்ஷை கொடுத்து மேல் வகுப்பிற்கு உயர்வு பெறுவது அவசியம் இல்லை என்றும், இந்தப் பள்ளிக்கூடத்தை விட்டு விட்டுச் சப்ரா ஜில்லாப் பள்ளிக்கூடத்திற்கு மீண்டும் செல்வதே நல்லது என்றும் கருதினார். அப்படியே முடிவும் செய்யப்பட்டது. நான் அங்கிருந்து சென்று மறுபடியும் சப்ரா பள்ளிக்கூடத்தில் நான்காவது வகுப்பில் சேர்ந்தேன்.

அண்ணன் நிலைமையும் விபரீதமாக இருந்தது. யாதோ காரணத்தால் அவருடைய பெயர் மருத்துவக் கல்லூரியில் பதிவு ஆகவில்லை. அவர் பட்னுவிற்கு மீண்டும் வந்து பி. ஏ. வகுப்பில் படிக்க ஆரம்பித்தார். என் பெயர் ஹதுவா பள்ளிக்கூடத்தில் பதிவு ஆகிவிட்டதால், அங்கிருந்து உடனே பட்னு அழைத்துச் செல்வது சரி அன்று எனக் கருதப்பட்டது. ஆகையால் ஆறு மாதம் வரையில் நான் ஹதுவாவிலேயே இருந்தேன்.

பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுப்பதைத்தான் நான் நம்பி இருந்தேன். வீட்டில் பாடம் சொல்லிக் கொடுக்க உபாத்தியாயர் யாரையும் என்றுமே வைத்ததில்லை. ஹதுவாவில், படிப்பில் உண்டான கஷ்டத்தால் நான் மிகவும் நொந்து போய், ஒரு வகையில் உறவினர் ஆன ஓர் ஆசிரியர் வீட்டிற்குப் போய் வந்து கொண்டிருந்தேன். அவரும் சொல்லிக் கொடுத்தார். ஆயினும் ஒருநாள் கூடப் பாடத்தை முழுவதும் முடிக்க இயலவில்லை. அந்தப் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு வந்துவிட வேண்டும் என்பது பெரும் கவலையாகி விட்டது. சப்ராவிற்கு வந்ததுமே எங்கேயோ தொலைந்து போயிருந்த அறிவு திரும்பி வந்துவிட்டது போலாயிற்று. சப்ரா பள்ளிக்கூடத்தில் நான்காவது வகுப்பில் நிறையப் பிள்ளைகள் இருந்தார்கள். இதனுல் அவ் வகுப்பை மூன்று பிரிவுகளாகப் பிரித்திருந்தார்கள். அங்கே ஸ்ரீ ரஸிக்லால் ராய் என்ற பெயருடைய ஒரு வங்காளி உபாத்தியாயர் இருந்தார். அவர் நான் இருந்த பிரிவுக்கு ஆசிரியர். மிகவும் நல்லவர். அவர் கற்பிக்கும் முறையும் மிகவும் நன்ருக இருந்தது. பிள்ளைகளிடம் மிகவும் பிரியமாக இருந்தார். பிள்ளைகளும் அவரிடம் அதிக மரியாதை வைத்திருந்தார்கள். அவர் என் பிரிவுக்கு ஆசிரியராஞலும் மற்றப் பிரிவுகளுக்கும் பாடம் கற்பிப்பார். அதனுல் அவருக்கு வகுப்பு மாணவர்கள் எல்லாரையும் அநேகமாகத் தெரியும். அவருக்கு என்மேல் அதிக இரக்கம் உண்டாயிற்று. நான்காவது வகுப்பில் பிள்ளைகள் அதிகமாக இருந்தது மட்டுமன்றி நல்ல நல்ல பிள்ளைகளும் அதிகமாக இருந்தார்கள். அவர்களில் பலர் மிடில் ஸ்கூலில் தேறி உபகாரச் சம்பளம் பெற்று இங்கே வந்தவர்கள். அவர்களுக்குக் கணக்கு, பூகோளம், சரித்திரம் ஆகியவற்றில் திறமையான பயிற்சி உண்டு. இவற்றை அவர்கள் முன்னமே ஹிந்தியில் படித்து விட்டார்கள். இங்கே முன்னமே படித்திருந்த விஷயங்களை ஆங்கிலம் மூலமாக உருப்போட வேண்டியதுதான் வேலை.

ஆயினும், சொற்ப நாட்களுக்குள் என்னைக் கெட்டிக்காரப் பையன் என்று உணர்ந்தார்கள்.

ரஸிக்பாபூ என்மேல் அதிக அன்பு வைக்கத் தொடங்கினர். இத்தனை பிள்ளைகளுக்கும் இடையில் நான் எந்தப் பரீக்ஷையிலும் உயர்ந்த இடம் பெற முடியவில்லை. ஆயினும், அந்தக் காலத்தி லேயே ரஸிக்பாபூ என்னைப் பார்த்து "இதோ பார், நீ நன்ருக உழை, கடைசியில் ராமானுக்கிரகத்துடன் நீ போட்டி போடு வாய்" என்ருர். மேலும், "மற்றத் தோழர்கள் கெட்டிக்காரர்களா யினும் உனக்குக் கீழேதான் இருப்பார்கள்" என்ருர். ஏன் அவர் அப்படிக் கூறினர் என்பது தெரியாது. ஆனால் அப்படியேதான் நடந்தது. ஆயினும், அவர் சொன்ன ஜோஸியம் பலிப்பதற்கு இரண்டு மூன்று ஆண்டுகள் ஆயின. ஆண்டின் இறுதிப் பரீக்ஷை யில் நான் நான்காவது இடம் பெற்றேன். ஏதோ பரிசும் கிடைத் தது. ஆனல் மற்றவர்களுக்கு அதிகம் கிடைத்தது. மூன்ருவது வகுப்பிலும் அவர்தாம் கற்பித்தார். மற்ருேர் ஆசிரியரும் இருந் தார். அவரது நினைவு இன்றும் அன்றே போல் நன்ருகப் பதிந்து நிற்கிறது. அவர் பெயர் ராஜேந்திர பிரசாத். அவர் சரித்திரம் கற்பித்தார். அவர் கற்பிக்கும் முறை அத்தனை அழகாக இருந்ததால் எல்லா விஷயங்களும் கதை போல மனத் தில் பதிந்துவிடும். ஹதுவாவின் முறைக்கு அவருடைய முறை நேர் விரோதமாக இருந்தது. எவனெருவன் தன் சொந்த மொழி யில் எல்லா விஷயங்களையும் எடுத்துச் சொல்லக் கூடுமோ, அவன்தான் கெட்டிக்காரன் என்று கருதப்பட்டது. நான் இதை மிகவும் எளிதில் செய்ய முடியும். ஹதுவாவில் நான் உழைப்பாய் உழைத்து நெட்டுருப் போட்ட பகுதிகளிலிருந்து கேட்பதற்கு இனிமையான வார்த்தைகளும் வாக்கியங்களும் என் மறுமொழி யில் இடை இடையே வந்து சேரும். விஷயங்களை நன்ருகப் புரிந்து கொண்டதும், மனப்பாடம் ஆக்குவதற்குச் செய்த முயற் சியும் கூடி அரிய சிறப்புடன் அமையும்; உபாத்தியாயர் அதை மிகவும் பாராட்டுவார்.

மூன்ருவதிலிருந்து இரண்டாவது வகுப்புக்கு ஏற்றம் ஆயிற்று. ஆண்டின் இறுதிப் பரீக்ஷையில் நான் மூன்ரும் இடம் பெற்றேன். இப்படியாகவே இரண்டிலிருந்து முதல் வகுப்புக்குப் போவதற்கு முன் நடந்த பரீக்ஷையில் முதல் இடம் பெற்றேன். ராமானுக்கிரகன் இரண்டாம் இடம் பெற்ருன். ரஸிக்பாபூவின் சொல் பலித்தது. என் கூடவே ரஸிக்பாபூவுக்கும் உயர்வு உண்டாகி வந்தது. அவர் நான்காவதிலிருந்து மூன்ருவது,

மூன்ருவதிலிருந்து இரண்டாவது, இரண்டாவதிலிருந்து முதல் வகுப்புக்குப் பாடங் கற்பிக்கலானர். இதற்கிடையில் பாபூ ராஜேந்திர பிரசாதுக்கு மாற்றலாகிவிட்டது. ரஸிக் பாபூவும் சிறிது காலத்திற்கு மற்ருெரு பள்ளிக்கூடத்திற்குப் போய்விட்டார். ராஜேந்திர பாபூ திரும்பி வரவில்லை, ஆனல் ரஸிக் பாபூ திரும்பி வந்துவிட்டார். எங்கள், முக்கியமாக, என் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

ரஸிக் பாபூ பாடம் கற்பிப்பதில் மட்டும் சமர்த்தர் அல்லர், பையன்களுடைய ஒழுக்கத்திலும் கவனம் செலுத்தி வந்தார். பள்ளிக்கூடத்து ஆசிரியர்கள் எல்லோரையும்விட அவருடைய கண்காணிப்புத்தான் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. பாபூ ராஜேந்திர பிரசாத், எனக்குப் பாடஞ் சொல்லிக் கொடுத்த மௌல்வீ சாஹப் ஆகியவர்களின் முத்திரை என் மனத்தில் ஆழப் பதிந்தது. ஆனல் ரஸிக்பாபூ சொந்த வீட்டு மனிதர் ஒருவர் போன்றிருந்தார். அவரிடம் அச்சமும் இருந்தது. அத்துடன் அன்பும் மதிப்பும் இருந்தன. அவர் பாடம் கற்பிப்பதுடன், சிறந்த விஷயங்களையும் எடுத்துக் கூறி அறிவையும் வளர்த்தார். ஆயினும், நான் பட்னவில் இரண்டு ஆண்டுகள் இருந்தும், என் வயது மிகக் குறைவாக இருந்ததால் எனக்கு அறிவு ஏதும் சிறப்பாக வளரவில்லை. நாட்டின் விஷயங்களைப் பற்றியும் ரஸிக்பாபூ பல சொல்லுவார். எப்படி ஒருவன் நன்ருகப் படித்து உயர்ந்த பதவியை அடைய முடியும் என்பதை விளக்கி எண்ணத்தைத் தூண்டுவார். நான் எண்ட்ரன்ஸ் வகுப்புக்குப் போய்ச் சேர்ந்ததும், அவர், " நீ நன்ருக உழைத்து வா, அதனல் பல்கலைக் கழகத்தில் உயர்ந்த இடம் பெறமுடியும் " என்று உறுதியாகக் கூறினர். இதன் அர்த்தத்தை என்னல் அப்போது புரிந்துகொள்ள முடியவில்லை. உபகாரச் சம்பளம் கிடைக்கலாமென்று மட்டும்தான் உணர்ந்து கொண்டேன்.

நான் இரண்டாவது வகுப்பின் ஆண்டு இறுதிப் பரீக்ஷை எழுதிக் கொண்டிருக்கும்பொழுது, சப்ராவில் மிகவும் கடுமையாகப் பிளேக் வியாதி கண்டது. இரண்டு நாட்கள் பரீக்ஷை எழுதிய பின் என் கழுத்தில் வீக்கம் கண்டது, காய்ச்சலும் அதிகமாக ஏறியது. மூன்றும் நாள் பரீக்ஷைக்கு உட்கார முடியவில்லை. வீட்டிற்குச் செய்தி சென்றது. பாபூஜீ கலவரப்பட்டுக் கொண்டு வந்து, என்னை ஜிராதேயீக்கு அழைத்துச் சென்ருர். அங்கே அவரே வைத்தியம் செய்தார். நான் நலமடைந்தேன். எனக்குப் பிளேக் தான் கண்டதா, அல்லது வெறும் கழுத்து

வீக்கம்தான் கண்டதா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. ஆனால் பிளேக் என்றுதான் சந்தேகிக்க வேண்டியிருந்தது. நாங்கள் மிகவும் மனக்கலக்கமடைந்து விட்டோம். இப்படிக் குழப்பப்பட்டிருந்ததால் குறித்த காலத்தில் பள்ளிக்கூடத்திற்குச் சம்பளம் கட்டப்படவில்லை. பெயர் அடிபட்டு விட்டது. பரீக்ஷையின் முடிவுகளைப் பார்த்தபோது, நான் இரண்டு பாடங்களிலும் முதல் இடம் பெற்றிருந்தேன். மார்க்கும் மிகவும் அதிகமாக வந்திருந்ததால் அதுவே, மற்ற இரண்டு பரீக்ஷைகள் எழுதாமலே, தேர்ச்சி பெறுவதற்குப் போதுமானதென்பது தெரிய வந்தது. உடம்பு நலமானதும், சில நாட்களுக்குப் பின் சப்ராவிற்குத் திரும்பிச் சென்று மீண்டும் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தேன்.

ரஸிக்பாபூ ஒருநாள் என்னைப் பார்த்து, "உன் பெயர் அடிபட்டுவிட்டது நல்லதன்று; எண்ட்ரன்ஸ் தேறியபின், எந்தப் பிள்ளைகள் குறைந்தது ஓர் ஆண்டு முழுதுமாவது ஒரே பள்ளிக்கூடத்தில் படித்தார்களோ, அவர்களுக்கு மட்டும்தான் உபகாரச் சம்பளம் அளிக்கப்படும். உனக்கு இவ்வளவு மார்க்குகள் கிடைத்தும், நீ உபகாரச் சம்பளம் பெறமுடியாது. ஆனால் ஒரு வழி இருக்கிறது. இந்த விதியிலிருந்து விலக்கு அளிக்கும்படி வேண்டி உன் தந்தையை டைரக்டருக்கு ஒரு மனு அனுப்பச் சொல்" என்றார்.

அப்படியே ஒரு மனு எழுதி அனுப்பினேன். பிளேக் கண்ட காரணத்தால் நான் ஊரில் தங்கிவிட்டேன் என்பதும், அதனால் சம்பளம் கட்டப்படவில்லை என்பதும், அக்காரணத்தால் என் பெயர் அடிபட்டு விட்டது என்பதும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தன. இவையே அன்றி, பரீக்ஷையில் முடிவு விவரம் முதலியவற்றையும் எடுத்துக் காட்டி, இதனால் உபகாரச் சம்பளம் கிடைக்கும் என்று நம்பிக்கை இருக்கிறது என்பதும், ஆனால் விதிகள் இடையூறாக நிற்கின்றன என்பதும் கண்டிருந்தன. தலைமை உபாத்தியாயர் மனுவைப் பார்த்துவிட்டு, அது வீண் என்றும், விதிகளை மீற டைரக்டருக்கு அதிகாரம் இல்லை என்றும் கூறினார். மேலும் "நான் இதை எப்படிச் சிபார்சு செய்ய முடியும்? உனக்குப் பிளேக் கண்டதா, இல்லையா என்பது எனக்கு எப்படித் தெரியும்?" என்றார். வைத்தியமோ டாக்டர் செய்யவில்லை. ஆகையால் டாக்டரின் சான்றை நான் காட்ட முடியவில்லை. ஆகையால், அவர் சிபார்சு யாதும் செய்யாமலே மனுவை மேலே அனுப்பிவிட்டார்.

தலைமை ஆசிரியர் சிபார்சு செய்யவில்லை என்பதைப் பற்றி ரஸிக்பாபூவுக்கு வருத்தம். இப்படிப்பட்ட நிலையில் டைரக்டர் அதை ஏற்றுக்கொள்ள மாட்டாரோ என்று அவர் ஐயப்பட்டார். "மனு கொடுத்ததினால் ஏதும் நஷ்டமில்லை" என்று அவர் எனக்கு ஆறுதல் அளித்தார். மனு இன்ஸ்பெக்டர் மூலம் டைரக்டருக்கு அனுப்பப்பட வேண்டும் என்ற முறைமை இருந்தது. ஆகையால் அது டைரக்டரின் பார்வைக்காக இருந்தாலும், முதலில் இன்ஸ்பெக்டரிடம் போயிற்று. இன்ஸ்பெக்டர் மனுவைப் பார்த்துவிட்டு, அதை டைரக்டரிடம் அனுப்ப அவசியம் இல்லை என்று கருதி, அவரே அதை ஏற்றுக்கொண்டு விடை எழுதி அனுப்பிவிட்டார். தலைமை ஆசிரியர் என் வகுப்பிற்கே வந்து, "உன் கோரிக்கைக்கு இன்ஸ்பெக்டரே இணங்கித் திருப்பி அனுப்பிவிட்டார்" என்று கூறினர். கூடவே "இன்ஸ்பெக்டருக்கு இதை ஏற்க அதிகாரம் உண்டா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் இதைப்பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை" என்றும் சொன்னர்.

ரஸிக்பாபூ இதைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியடைந்து, எனக்கு அதிக ஊக்கம் அளிக்க ஆரம்பித்தார். அவர் ஏதும் பெற்றுக் கொள்ளாமல், என்னைத் தம் வீட்டிற்கு வரச் சொல்லி எல்லாப் பாடங்களிலும் எங்கெங்கு ஐயம் ஏற்பட்டதோ அவற்றை எல்லாம் விளக்கிக் காட்டி உதவி புரிந்தார். மேலும், "இப்படிப் படி, இதைப்படி, அதைப்படி" என்று தினந்தோறும் வற்புறுத்தி வந்தார். நான் பல்கலைக் கழகத்தில் உயர்ந்த இடம் பெற முடியும் என்ற நம்பிக்கை அவர் மனத்தில் ஊன்றிப் பதிந்து விட்டது. என்னைப்போன்ற ஒருவன் பல்கலைக் கழகத்தில் உயர்ந்த இடம் பெற முடியுமென்பது எனக்குத் தெரியவே தெரியாது.

அந்தக் காலத்தில் மூன்று வகையான உபகாரச் சம்பளங்கள் கிடைத்து வந்தன. பத்து ரூபாய் பெறுமானம் உள்ளவை இரண்டு மூன்று. அவை ஜில்லாவில் முதலாக வந்த இரண்டு மூன்று பிள்ளைகளுக்கு அளிக்கப்பட்டு வந்தன. மாதத்திற்குப் பதினைந்து ரூபாய் பெறுமானம் உள்ளவை இரண்டு மூன்று. அவை டிவிஷனில் (அந்தக் காலத்தில் இருந்த டிவிஷன், இக்காலப் பட்னுடிவிஷனையும் திர்ஹூட் டிவிஷன்களின் ஏழு ஜில்லாக்களைச் சேர்த்து அமைக்கப்பட்டிருந்தது) முதலாவதாக வந்த இரண்டு மூன்று பையன்களுக்கு அளிக்கப்பட்டு வந்தன. மூன்ரும் வகை, மாதத்திற்கு இருபது ரூபாய்—இது பல்கலைக் கழகம் முழுவதி

லும் தலைமையாக நின்ற பத்துப் பிள்ளைகளுக்குக் கிடைக்கும். பீகார் மாகாணம் வங்காளத்தின் ஒரு பாகமாக இருந்தது. கல்கத்தா பல்கலைக் கழகத்தின் ஆட்சிக்குள் வங்காளம், பீகார், ஒரிசா, அஸ்ஸாம், பர்மா ஆகியவை அடங்கியிருந்தன. ஒரே பரிக்ஷைதான் எங்கும் நடக்கும். இந்த மாகாணங்களின் பிள்ளைகள் எல்லோரிலும் எவர் திறமை வரிசையில் முதல் பத்துக்குள் வருகிறார்களோ, அந்தப் பத்துப் பையன்களுக்கு இருபது ரூபாய் வீதம் உபகாரச் சம்பளம் கிடைக்கும். அதிகமாகப் போனால் நான் எதிர்பார்த்தது 10 அல்லது 15 ரூபாய் உபகாரச் சம்பளம்தான். இதற்கு மேல் என் நம்பிக்கை என்றும் எட்டவில்லை. இதற்கும் ஏராளமான உழைப்புத் தேவை என்று உணர்ந்தேன். ஆகையால் மிகவும் பாடுபட்டுப் படித்து வந்தேன்.

பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைக்கு முன் பள்ளிக்கூடத்துப் பரீக்ஷை ஒன்று நடக்கும். இதில் தேர்ந்தவர்களைத்தான் பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைக்குப் போக அனுமதிப்பார்கள். நான் இந்தப் பரீக்ஷையில் நிறைய மார்க்குப் பெற்று எல்லாருக்கும் தலைமையாய் வந்தேன். பல்கலைக்கழகப் பரீக்ஷை எழுதுதற்கு அனுமதி கிடைத்தது. ஆனால் ஒரு தடையையும் எதிர்ப்பட வேண்டி வந்தது. சித்திரம் வரைதல் ஒரு பாடம். அதை மாணவர் தாமாக விரும்பி எடுத்துக் கொள்ளலாம். ஆனால், பல்கலைக் கழகப் பரீக்ஷைக்கு உட்காருவதற்காகத் தேர்வு செய்யும் போது இதில் கிடைக்கும் மார்க்கும் கூட்டிக் கொள்ளப்படும். நான் மற்றப் பாடங்களில் நிறைய மார்க்கு வாங்கி இருந்தாலும், சித்திரப் பாட உபாத்தியாயர் மட்டும் பல்கலைக் கழகப் பரீக்ஷையில் சித்திரப் பரீக்ஷையில் கலந்துகொள்ள அனுமதி அளிக்க மறுத்துவிட்டார். சித்திரம் வரையும் பாடத்தில் 20 அல்லது 25 மார்க்குகள் கிடைக்கும். அப்பரீக்ஷையில் கலந்து கொள்ளாவிட்டால் 20–25 மார்க்குகள் கிடைக்கா. அதனால் உபகாரச் சம்பளம் கிடைப்பது கடினமாகிவிடும். அதனால் மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொண்ட பின் அந்த ஆசிரியர் ஒரு நிபந்தனை போட்டு அனுமதி கொடுத்தார். அதாவது, அன்றிலிருந்து பரீக்ஷை நாள் வரையில் நான் குறைந்தது ஒரு மணி நேரமாவது தினந்தோறும் சித்திரம் வரைய வேண்டும் என்பதுதான். நான் அந்த நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டேன். அப்படியே நிறைவேற்றினேன். இது நல்லதாயிற்று. ஏனெனில் நான் அப்படிச் செய்யாமல் போயிருந்தால் சித்திரத்தில் 25 மார்க்குகள் கிடைத்திருக்க

மாட்டா. அதனுல் எனக்குக் கிடைத்த உயர்ந்த இடம் கிடைத் திருக்காது. கடைசியாகப் பரீக்ஷை நாள் நெருங்கி வந்தது. பரீக்ஷை எழுதுவதற்காகப் பட்னுவுக்குச் சில நாட்கள் முன்கூட் டியே போய்ச் சேர்ந்தேன்.

பரீக்ஷை முடிந்ததும், பட்னுவிலிருந்து ஊருக்கு வந்தேன். தமையனுரும் ஊருக்கு வந்தார். அவர் கல்கத்தாவிலிருந்து வந்து பட்னு கல்லூரியில் சேர்ந்தார். ஆனுல் அங்கே கடுமை யாக நோய்வாய்ப்பட்டுவிட்டதால், வைத்தியர்களின் அபிப்பிரா யப்படி அவர் அலாகாபாதுக்குப் படிப்பதற்காகப் போய்விட்டார். அங்கே மியூர் சென்ட்ரல் கல்லூரியில் அதே ஆண்டில் அவர் பி. ஏ.யில் தேறினுர். எம். ஏ.யும் பி. எல்.லும் படிப்பதற்காக அவர் மீண்டும் கல்கத்தாவிற்குச் சென்றுர். அலாகாபாத் கல் கத்தா போன்ற ஊர்களில் இருந்ததால், அவர் விடுமுறையில் வரும்போது பல விஷயங்களைப் பற்றி எனக்குச் சொல்லுவார். நான் அவற்றை மிகவும் கவனத்துடன் கேட்பேன். முடிந்த வரையில் அவற்றைப் பற்றிச் சிந்திக்கவும் செய்வேன். 1899இல் அவர் அலாகாபாத்திலிருந்து வீட்டிற்கு வந்தபோது சுதேசி விஷ யத்தைப் பற்றிக் கூறினுர். சுதேசித் துணியும் அங்கிருந்து வாங்கி வந்தார். நான் அப்போதிலிருந்து சுதேசித் துணிதான் உபயோகிக்கலானேன். காந்திஜீயின் கதர்ப் பேச்சு எழும்பும் வரையில் நான் எப்போதும் சுதேசித்துணிதான் அணிந்து வந் தேன். ஒரே ஒரு முறை வெளிநாட்டுத் துணி ஏதோ வாங்கினேன். அதைப் பற்றிப் பின்னுல் கூறுவேன். இது நீங்கலாக, அந்தக் காலத்தில் இருந்து என் தமையனுரும் சுதேசிதான் உபயோகப் படுத்தி வந்தார். என்னையும் அப்படியே பழக்கி வைத்தார். அதன் பின் அவர் அயல்நாட்டுத் துணி என்றுமே வாங்கியது கிடையாது. கதர் வழங்க ஆரம்பித்தபின் கதர் தவிர வேறு சுதேசித் துணி என்றும் வாங்கினதில்லை.

சுதேசி மனப்பான்மை துணியோடு மட்டும் நின்று விட வில்லை. எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்கு மற்றச் சாமான் கள் வாங்குவதிலும் இதை நினைவில் கொண்டிருந்தோம். பல் கலைக் கழகத்தில் பரீக்ஷை எழுதுவதற்காக என்றே தனியாகச் சுதேசிப் பேனு, நிப்பு முதலியனகூட நான் வாங்கினேன். இப் படிப்பட்ட சாமான்களை எப்போதும் அலாகாபாத், கல்கத்தா இவ்விடங்களில் இருந்து தமையனுர் வாங்கி வந்து கொடுப்பார். எங்களுடைய அறியாமையால் சுதேசி என்று நினைத்துக் கொண்டு நாங்கள் வாங்கிய பல சாமான்கள் உண்மையிலேயே

சுதேசி அல்லவென்றும், கடைக்காரர்கள் எங்களை ஏமாற்றி வந்தார்கள் என்றும் எனக்கு இப்போது ஐயம் உண்டாகிறது. ஆனால் எங்கள் பற்றுக் குறையவில்லை. நாங்கள் அவற்றைச் சுதேசி என்றே நினைத்துக் கொண்டுதான் வாங்கினோம்.

கோடை விடுமுறையில் ஒருநாள் மாலையில் நாங்கள் உலாவச் சென்று கொண்டிருந்தபோது, யாரோ ஒருவர் வந்து பரீக்ஷையின் முடிவு கெஜட்டில் வெளிவந்து விட்டது என்று கூறினார். நாங்கள் உடனே சீவானுக்குச் சென்று பார்த்ததில், நான் முதல் அணியில் (டிவிஷனில்) தேறி இருப்பதாக மட்டும்தான் தெரிந்தது. உபகாரச் சம்பளத்தைப் பற்றி அறிக்கை வெளிவரவில்லை. சில நாட்களுக்குப் பிறகு அதேபோல ஒரு நாள் மாலை உலாவப் போய்க் கொண்டிருந்தபோது, ஓர் ஆள் வந்து ஒரு தந்தியைக் கொடுத்தார். அதில் நான் பல்கலைக் கழகத்தில் முதன்மையாக வந்திருப்பதாகக் கண்டிருந்தது. தமையனார் தந்தியைப் படித்து விட்டுப் பெருமகிழ்ச்சி யடைந்தார். நாங்கள் வீட்டிற்கு ஓடோடித் திரும்பிச் சென்று அப்பாவிடம் செய்தியைக் கூறினோம். பக்கலைக் கழகத்தில் முதலாக வருவது என்றால் என்ன அர்த்தம் என்று தமையனார் அப்பாவுக்கு விளக்கிக் கூறினார். அப்பாவும் அம்மாவும் மற்றும் எல்லாரும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. பரீக்ஷயில் தேறினால், தமையனார் யோசனை கூறியது போல, கல்கத்தாவில் பிரசிடன்ஸி கல்லூரியில் படிப்பதென்று முன்னமே முடிவு செய்திருந்தேன். எண்ட்ரன்ஸ் பரீக்ஷைக்குப் போட்ட மனுவிலும், உபகாரச் சம்பளம் கிடைத்தால் பிரசிடன்ஸி கல்லூரியில் படிப்பதற்கு அதைப் பயன்படுத்துவேன் என்று எழுதிக் கொடுத்திருந்தேன். அந்த முடிவின்படியே நான் கல்கத்தாவிற்கு விரைவில் செல்வது என்று நிச்சயிக்கப்பட்டது.

சப்ரா பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது நான் ஒரு பண்டிதருடன் தங்கியிருந்தேன். அவர் மிகவும் பெயர்போன ஜோசியர். அவருடைய பெயர் விக்ரமாதித்ய மிஸ்ரா என்பது. அங்கே அவர் எனக்கு கண்காணிப்பாளர் பதவியில் இருந்தார். அவரும் மாணுக்கர்களுக்குப் பாடம் கற்பித்து வந்தார். தினந்தோறும் சரயூவில் குளிப்பார். வேறு யாரும் தொட்ட தண்ணீரைக்கூட அவர் ஏற்றுக் கொள்ளமாட்டார். பூஜை புனஸ்காரம் நிறையச் செய்வார். அங்கேயே ஹதுவா சமஸ்தானத்திற்குச் சொந்தமான ஒரு சிறிய கோயிலும் இருந்தது. இவை எல்லாம் இளைஞர்களாகிய எங்கள் மனத்தில் எவ்விதமாகப் படியவேண்டியது முறையோ அப்படியே பதிந்தன. நாங்கள் எங்களை மிகவும்

வைராக்கிய சநாதனிகள் என்று கருதினேம். யாராவது ஆரிய சமாஜி அகப்பட்டுக் கொண்டால் அவருடன் விவாதத்துக்குக் கிளம்பி விடுவோம். பள்ளிக்கூடத்தில் மகாமகோபாத்தியாய ரகுநந்தன் திரிபாடி தலைமைப் பண்டிதராக இருந்தார். பள்ளிக் கூடத்தில் பாரசீகம் படித்தேன். ஆனல் அவர் மூலமாக வீட்டில் கொஞ்சம் சமஸ்கிருதம் படிக்க ஆரம்பித்தேன். லகு-கௌமுதியி லிருந்து சில சூத்திரங்களைக்கூட மனப்பாடம் செய்திருந்தேன். ஆனல் அதைத் தொடர்ந்து கற்றுவர முடியவில்லை. சப்ரா பள்ளிக்கூடத்தைப் பற்றி நல்ல நல்ல இனிய நினைவுகள் இன்றும் மனத்தில் பதிந்து நிற்கின்றன.

விடுமுறையில் தவிர நான் வீட்டிற்குப் போவதில்லை என்பது நினைவிருக்கிறது. விடுமுறையில் நான் வீட்டிற்குச் சென்றால் என் தாயார் என்னை இன்னும் சில நாட்கள் மேற்கொண்டு நிறுத்தி வைக்க விரும்புவார். ஆனல் நான் இதற்கு எளிதில் ஒப்புக் கொள்வதில்லை. ஜீராதேயீயில் விடுமுறையில் நிறைய விளையாடுவது ஒரு பெரிய வேலை. பெரும்பாலும் எல்லாப் பொழுதும் சிக்கா விளையாட்டிலேயே கழியும். அண்ணனும் வீட்டிற்கு வந்துவிடுவார். அவரும் எங்களுடன் விளையாட்டுக்களில் கலந்து கொள்வார்.

சப்ராவில் நாங்கள் சர்வ சாதாரணமாக வாழ்ந்தோம். கையில் பணம் என்றும் இருக்காது. அங்கே ஒரு மளிகைக் கடைக்காரன் இருந்தான். அவனிடம் எங்களுக்கு வேண்டிய சாமான்கள் எல்லாவற்றையும் கொடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இந்த வாடிக்கையானது என் தமையனர் சப்ராவில் படிக்கும் காலம்தொட்டே இருந்து வந்தது. தினம் பற்றுச் சீட்டு எழுதிக் கொடுத்துவிட்டு அந்தக் கடையிலிருந்து அரிசி, பருப்பு, நெய், விறகு இன்னும் சிற்றுண்டிக்கு வேண்டிய கச்சௌரி, மிட்டாய், ஆகியவைகள் தருவிப்போம். அவன் ஜாதியில் மிட்டாய்க்காரன்; ஆகையால் எல்லாச் சாமான்களையும் கொடுக்க முடியும். இது போலவே ஒரு காய்கறிக்காரி இருந்தாள். அவள் காய்கறி கொண்டு வந்து கொடுத்துவிடுவாள். மளிகைக்காரன் ஜீராதேயீக்குச் சென்று பற்றுச் சீட்டுகளைச் சமர்ப்பிப்பான். கணக்குப் பார்த்து அவனுக்கு அங்கேயே பணம் கிடைத்துவிடும். காய்கறிக்காரி ஜீராதேயீக்குப் போக வேண்டிய தில்லை. சப்ராவுக்குக் கோர்ட்டு வழக்குகளைக் கவனிப்பதற்காக வந்து போய்க் கொண்டிருந்த எங்கள் காரியஸ்தர் ஒருவர் அவள் கணக்கைப் பார்த்துத் தீர்த்துவிடுவார். பள்ளிக்கூடச் சம்பளத்

தையும் அவரே கட்டிவிடுவார். இப்படியாகச் சப்ராவில் என் கைக்குப் பணம் என்றுமே வந்ததில்லை.

குடும்பத்தின் நிலைமை சற்று நன்றாக இல்லை. தாத்தா காலத்திலும் நானாவின் காலத்திலும் ஜமீன்தாரி எவ்வளவு இருந்ததோ அதேதான் இப்போதும் இருந்தது. ஆனால் அவர்களுடைய மரணத்திற்குப் பிறகு பாபூஜி சில சங்கடங்களுக்கு ஆளானார். எங்கள் செலவுக்காக ரொக்கப் பணம் திரட்டுவது கடினமாயிருந்தது. மளிகைக் கடைக்காரனுக்குக்கூட ஜீராதேயீ யில் எப்போதும் ரொக்கம் கிடைக்காது. ஏதாவது கிராமத்தின் கர்ணம் பெயருக்குக் கடிதம் கிடைக்கும். அதைப் பெற்றுக் கொண்டு அவன் ஜீராதேயீயில் இருந்து அந்தக் கிராமத்திற்குச் சென்று அங்கே பணம் வாங்கிக் கொள்வான். சப்ராவில் செலவு குறைவு. அதனால் அது எப்படியாகவோ ஏதோ ஒரு விதமாக நடந்து வந்தது. எனக்குப் பணக் குறைவின் அனுபவம் என்றும் ஏற்பட்டதில்லை. மற்றொரு காரணம் என்னவென்றால், தமையனார் இந்த விஷயத்தில் எப்போதும் கவனம் செலுத்தி வந்ததே ஆகும். அவர் விடுமுறைக்கு ஊருக்கு வரும்போது ஏதாவது ஏற்பாடு செய்து விடுவார். ஆனால் தமையனாரின் செலவுக்காக மாதாமாதம் அலகாபாத்துக்குப் பணம் அனுப்ப வேண்டி யிருந்தது. இது பாபூஜீக்கு எப்போதும் கஷ்டமாகவே இருந்தது. ஆயினும், எது எப்படி ஆனாலும், சரி பையன்கள் படிப்பின் செலவை எப்படியாவது சமாளிப்பது என்று அவர் உறுதி செய்து விட்டார்.

ஜமீந்தாரியின் காரியங்களை எல்லாம் பார்த்து வரத் திவான் ஒருவர் இருந்தார். அவர் தாத்தாவின் காலத்திலேயே இருந்தவர்; ஜமீன்தாரியின் நிலைமை முழுதும் அவருக்குத் தெரியும். தாத்தா இருக்கும்போது பாபூஜீ ஜமின்தாரியைக் கவனித்தது கிடையாது. ஆகையால் அவர் திவானையே நம்பி இருக்க வேண்டி இருந்தது. ஒரு சமயம் தமையனார் பரீக்ஷைக்குப் கட்டப் பணம் வேண்டி இருந்தது. ஏதோ குறிப்பிட்ட நாளுக்குள் ஐம்பதோ அறுபதோ கட்ட வேண்டும் என்றும், இல்லாவிட்டால் ஆண்டுப் பரீக்ஷைக்கு போகவிடாமல் நிறுத்தி விடுவார்கள் என்றும் அவரிடம் இருந்து கடிதம் வந்தது. இந்தச் செய்தி இன்னும் என் நினைவில் இருக்கிறது. அப்பாவிடம் பணம் இல்லை. திவான் கிராமத்திலிருந்து பணம் கொடுக்க முடியவில்லை. ஆகவே பாபூஜி பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டார். என் தாயாரின் தங்க அட்டிகையை

யாரிடமோ அடகு வைத்துப் பணம் வாங்கி உரிய காலத்திற்குள் அனுப்பினுர். எல்லாம் இருந்தும்கூடச் சில சமயங்களில் சமையல் ஆவதற்குக் கூட நாழிகை ஆகிவிடுவது போன்ற நிலைமை வந்து விட்டது. இவை எல்லாம் திவானுடைய ஏற்பாடுகளின் ஒழுங்கீனத்தால்தான் விளைந்தன என்று தமையனுர் கருதினுர். திவானின்மேல் மிகவும் அதிருப்தி அடைந்தார். ஆனுல், அப்போது அவரால் ஒன்றும் செய்யமுடியவில்லை. விடுமுறையில் ஒரு முறை வந்து மேற்பார்வையைச் சற்று ஏற்க ஆரம்பித்தார். ஆனுல், அவர் அலகாபாத்தில் படித்துக் கொண்டிருந்த வரையில் அதிகமாக எதுவும் செய்ய முடியவில்லை.

ஜமீன்தாரியிலிருந்து ஆண்டிற்கு ஏறக்குறைய ஏழெட்டு ஆயிரம் வரும்படி வரும். அதில் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய தீர்வை போக ஐந்து அல்லது ஆறு ஆயிரம் வரையில் மிஞ்சும். நூற்றுக்கணக்கான பீகா[1] நன்செய் நிலமிருந்தது. அதில், நெல், கோதுமை, சோளம், துவரை, பார்லி முதலியன ஏராளமாக விளைந்தன. கரும்பிலிருந்து வெல்லம் காய்ச்சுவதால் ரொக்கப் பணம் வரும். எங்கள் சிறு பிராயத்தில் இதே நிலத்தின் விளைச்சலைக் கொண்டு எங்கள் வீடு எப்பொழுதும் நிறைந்திருந்தது. பசுக்களும் எருமைகளும் நிறையப் பால் கொடுத்து வந்தன. அனேக ஜோடி எருதுகளும் இருந்தன, ஆனுல் இப்போது என்ன ஆயிற்று என்பது தெரியவில்லை. வீட்டுச் செலவுக்கே நெல் போதுவதில்லை. ஆகையால் சாப்பாட்டிற்குத் தானிய வகைகள் விலைக்கு வாங்க வேண்டியிருந்தது. நஷ்டத்தின் மேல் நஷ்டம் வருவதைப் பார்த்துப் பாபூஜீ சிறிது காலத்திற்கு வயல் வேலையை நிறுத்தி விட்டார். அக்காலம் சற்றுத் துன்பமானதுதான், ஆனுல் பாபூஜீ அதைப் பொறுத்துக் கொண்டு இருந்து வந்தார். "என்னுடைய பிள்ளைகள் தாம் என் செல்வம்" என்று ஜனங்களிடம் சொல்லுவார்.

இதை ஒட்டி இங்கு மற்ருெரு நிகழ்ச்சியையும் கூறுவது பொருந்தும். நூநூ இறந்தபின் குடும்பத்தில் தாத்தாவும் அப்பாவும் சிறுவர்களாகிய நாங்களும்தாம் இருந்தோம். தாத்தா தாம் ஜமீன்தாரி முழுவதையும் வாங்கினுர் என்று முன்பே கூறி இருக்கிறேன். அனைத்தும் அவரே தேடித் திரட்டியவைதாம். நூநூவுக்கு ஒரு மகள் இருந்தாள். நூநூ இறந்த பிறகு யாரோ தாத்தாவிடம் வந்து, அவர் இறந்தபின் அந்தப் பெண்ணுக்கும்

---

1. எட்டுப் பீகாக்கள் கொண்டது ஐந்து ஏக்கர்.

பெரியம்மாளுக்கும் கஷ்டம் வரலாம் என்றும், ஆகையால் இப் போதே ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் யோசனை சொல்லிவிட்டார்கள். தாத்தா ஓர் உயில் எழுத நிச்சயம் செய்தார். அப்படியே அது சீவானில் தயார் செய்யப்பட்டு வந்தது. அதன்படி பெரியம்மாவுக்கு அவருடைய செலவிற்காக, ஆண்டிற்குச் சுமார் இரண்டு ஆயிரம் ரூபாய் வருமானம் உள்ள இரண்டு கிராமங்கள் அவர் வாழ்நாள் வரையில் அளிக்கப்பட்டன. அக்காளுக்கு ஜமீன்தாரியில் ரூபாயில் ஏழு அணு பங்கு கொடுக் கப்பட்டது, மீதம் ஒன்பது அணு பங்கு எங்களுக்கு அளிக்கப் பட்டது.

எங்கள் குடும்பம் பிரியாத பொதுக்குடும்பமாகத் தொன்று தொட்டு இருந்து வந்தது. ஆகையால் இப்படி உயில் எழுது வதற்குத் தாத்தாவுக்கு உரிமை உண்டா இல்லையா என்று நிச்சய மாகத் தெரியவில்லை. உயில் எழுதாமல் அவர் இறந்து விட்டால் எல்லாச் சொத்துக்கும் என் தந்தையே அதிகாரி ஆவார். பெரியம்மா பராமரிப்புக்கு மட்டும்தான் உரிமையுள்ளவர் ஆவார்; பெண்ணுக்கோ எதுவும் பங்கு கிடையாது. ஆகையால்தான் சிலர் தாத்தாவை எச்சரித்து உயில் எழுதும்படி யோசனை கூறினர்கள். பாபூஜிக்கு இதைப் பற்றிச் செய்தி தெரிவிக்கப்படவில்லை. எல்லா ஏற்பாடுகளும் ஆனபின் உயிலைப் பதிவு செய்வதற்காக ரிஜிஸ்திரார் ஒருநாள் ஜீராதேயீக்கு வந்தார். பாபூஜி உயிலில் கையெழுத்துப் போட்டுவிட்டால் பிறகு அவர் அதற்கு விரோத மாகப் பேச்சு மூச்சு விடமுடியாதென்றும், அதன் ஏற்பாடுகள் எல்லாம் உறுதியாகி விடுமென்றும் ஜனங்கள் தாத்தாவுக்கு யோசனை கூறியிருந்தார்கள். ரிஜிஸ்திரார் ஜிராதேயீக்கு வந்து சேர்ந்த பிறகுதான் அப்பாவுக்கு எல்லா விஷயமும் தெரிய வந் தது. அவரைக் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கும்படி தாத்தா சொன்னர். பாபூஜீ இதற்கு ஏதாவது ஆக்ஷேபனை செய்வார் என்று தாத்தா மனத்தில் ஐயத்தைப் பிறப்பித்து விட்டார்கள். ஆனல் பாபூஜீ தாத்தாவிடம் "நீங்கள்என்ன கட்டளை இடுகிறீர் களோ அதுவே எனக்குச் சம்மதம். நீங்கள் தாம் எங்களுக்கு ஆதரவு. நீங்களேதாம் எல்லாவற்றையும் சம்பாதித்தீர்கள். நீங்கள் இப்போது சந்திரமுகிக்கு ரூபாயில் 16 அணுவையும் கொடுத்து விட்டாலும் எனக்கு யாதொரு தடையும் இல்லை" என்று சந்தேகத்திற்கு இடமின்றிச் சொன்னர். "எனக்குச் செல்வமாக இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள், அவர்களுக்கு உங்கள் ஆசீர்வாதத்தைக் கொடுங்கள்" என்ருர். நாங்களும்

அங்கே அழைக்கப்பட்டோம். தாத்தா பொலபொலவென்று கண்ணீர் வடித்து, சூதுவாது பேசி அவர் மனத்தில் பலவிதமான சந்தேகங்களை எழுப்ப முயன்றவர்களைத் திட்ட ஆரம்பித்தார். பாபூஜீ கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார்; உயிலைப் பதிவு செய்து விட்டு ரிஜிஸ்திரார் போய் விட்டார்.

சப்ரா பள்ளிக்கூடத்தில் நான் படித்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் சந்திரமுகி சில நாட்களாக நோயாய்க் கிடந்து, எவ்வளவோ முயற்சி செய்தும், துர்ப்பாக்கிய வசத்தால் கன்னி கழியாமலேயே இறந்து விட்டாள்; பெரியம்மா நெடுநாள் உயிருடன் இருந்தார். தமக்குக் கிடைத்த வருவாயைத் தீர்த்த யாத்திரையில் செலவழித்து வந்தார். அவர் காலமானபின் ஜமீன்தாரி முழுவதும் எங்கள் இருவருக்கும் கிடைத்து விட்டது. என் பெரிய தாயார் எல்லா தலங்களுக்கும் போய் வந்தார். இதில் அவருக்குத் துணை புரிந்தவர் என் தமக்கை. அவர் தாம் விதவை யானபின் எங்கள் வீட்டிலேயே எப்பொழுதும் இருந்தவர்; இன்றும் இருக்கிறார். தீர்த்த யாத்திரை போவதில் அவர்களுக்குள் போட்டி என்று கூறலாம். அவர்கள் போடாத முழுக்குக் கிடையாது. நோற்காத நோன்பு கிடையாது என்றே சொல்லலாம். இருவரும் நான்கு தாமுக்களையும்[1] (அதாவது ஜகந்நாத் (பூரி), ராமேஸ்வரம், துவாரகை, பத்ரீநாத்) தரிசனம் செய்தார்கள். தமக்கையார் இரண்டு மூன்று முறை போயிருக்கிறார். என் தாயார் மட்டும் வீட்டிலேயே இருப்பார். எப்போதாவது தான் தீர்த்த யாத்திரை போவார். நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் போதுதான் ஒரு முறை போனார் என்று நினைக்கிறேன். இந்த யாத்திரைகளுக்குச் செலவு அதிகம் பிடிக்கும். கஷ்டமும் அதிகமாக ஏற்படும். அந்தக் காலத்தில் தலங்களில் உள்ள பண்டாக்கள் மிகவும் அரியதொண்டு புரிந்து வந்தார்கள் எனக் கண்டேன். அவர்களுடைய வீடுகளில்தாம் நாங்கள் தங்குவோம். அவ்வூர்களில் அவர்கள் எங்களுடன் எங்கும் சுற்றி வந்து எல்லா இடங்களிலும் தரிசனம் செய்து வைப்பார்கள். எவ்வித மான கஷ்டமும் வரவிடமாட்டார்கள். ஏதோ ஒரு சமயத்தில், (எப்போது என்பது எனக்கு நினைவில்லை) தாத்தா, அப்பா, நூநா முதலியவர்கள் இத்தலங்களுக்குச் சென்றார்கள். அங்கே அப்பண்டாக்களின் கணக்குப் புத்தகங்களில் தங்களுடைய பெயர் களை எழுதி வைத்தார்கள். பண்டாக்களுக்கு ஆண்டிற்கு இவ்வளவு என்று ஏதோ விதிக்கப்பட்டிருந்தது. ஜீராதேயீக்கு

1 "தாம்" என்பது புண்ணியத்தலம்.

வந்து அவர்கள் அதைப் பெற்றுச் செல்வார்கள். இக்காரணத்தால் இவர்கள் எங்களுக்குச் சிறப்பாக உபசாரம் செய்வார்கள். நாங்கள் யாத்திரை போகும்போது அவர்களுக்கு ஏதாவது தானம் கிடைக்கும். தான தருமம், பூஜை புனஸ்காரம், தீர்த்த யாத்திரை, முழுக்கு ஆகியவற்றில் எல்லாருக்கும் "லீடர்" என் தமைக்கையார் தாம்; இன்றும் அவர்தாம் வீட்டில் ஒன்றில்லாவிட்டால் மற்றொரு பூஜை நடத்திக் கொண்டே வருகிறார். இன்றைக்கும் அப்படியே நடந்து வருகிறது.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் காலம் இப்படியாகக் கழிந்தது. வீட்டோடு தொடர்பு எனக்குக் குறைவுதான். விடுமுறைகளில் மட்டும்தான் வருவேன். கல்யாணம் ஆகிவிட்டது. ஆனால் என் மனைவியை நான் பார்ப்பது குறைவாகத்தான் இருந்து வந்தது. விடுமுறையில் வந்தால் இரவில்தான் தரிசனம் கிடைக்கும். ஒரு முறை என் மனைவிக்கு வாந்தி பேதி கண்டு விட்டது. அப்போது நான் வீட்டில்தான் இருந்தேன். பாபூஜீ தாமே மருந்து கொடுத்து வைத்தியம் செய்ததில் அவள் நலமாகி விட்டாள். ஆனால் பாபூஜீ மிகவும் கவலைப்பட்டார். என்னுடைய உடல் நிலையும் அவ்வளவு நன்றாக இல்லை. யாரும் தம் மனைவியைப் பற்றிக் கவலைப் படுவது அந்தக் காலத்து வழக்கப்படி தகாத நடத்தை என்று கருதப்பட்டு வந்தது. நான் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். அவளைப் பற்றித் தெரிந்துகொள்ளவும், அவளைப் பார்க்கவும் விரும்பினேன். ஆனால், யாரையும் கேட்க முடியாது. பார்க்க வேண்டும் என்ற ஆசையைக் காட்டிக் கொள்ளவும் முடியாது. எனக்கும் அவள் வியாதியைப் பற்றிக் கவலை இருக்கும் என்று வீட்டார் நினைக்கவே இல்லை. அவளுக்கு நோய் குணமான பின் அதைப்பற்றிப் பேச்சே இல்லை. எனக்கும் அமைதி உண்டாயிற்று. அப்படி நிலைமை ஏதாவது மோசமாகப் போயிருந்தால் பண்பின்மை என்ற அச்சமானது என்னை எவ்வளவு தூரம் தடுத்திருக்கும் என்பது தெரியாது.

இப்படியாக வீட்டிலேயே எப்போதும் அடைபட்டுக் கிடந்ததால் என் அண்ணியார், மனைவி இருவரின் ஆரோக்கியமும் கெட்டு விடுவது இயல்பே. அப்படியே ஆயிற்று. இருவரும் சிறிது காலம் வரையில் ஒருவருக்குப் பின் ஒருவராக முடக்கு வாதத்தால் கஷ்டப்பட்டார்கள். அது நெடு நாளுக்குப்பின், அவர்கள் முற்றத்தில் நன்றாக உலாவிச் சுற்றி வந்தபின்தான் தீர்ந்தது.

# 8. கல்லூரி வாழ்க்கை

பரீக்ஷையின் முடிவு தெரிந்தபின் நான் சப்ராவிற்கு வந்தேன். பரீக்ஷயின் பலன் எனக்குச் சிறப்பாக இருந்தது மட்டும் அன்றி பள்ளிக்கூடம் முழுவதுக்குமே சிறப்பாக இருந்தது என்பது தெரிய வந்தது. என் தோழன் ராமானுக்கிரகனுக்கும் ரூபாய் 20 உபகாரச் சம்பளம் கிடைத்தது. இன்னும் இரண்டு மாணவர்களுக்கு ரூபாய் 15ம் வேறு இருவருக்கு ரூபாய் 10ம் கிடைத்தன. இதுவுமன்றி, பரீக்ஷயில் உயர்ந்த இடம் பெற்றவர்களுடைய எண்ணிக்கையும் அதிகமாக இருந்தது. பரீக்ஷயில் தவறியவர்கள் இரண்டொருவர்தாம். இதுபோன்ற பலனைச் சப்ரா பள்ளிக்கூடத்தில் என்றுமே கண்டதில்லை. பீகார் முழுவதிலுமேகூட எந்தப் பள்ளிக்கூடத்திற்கும் இவ்வளவு சிறந்த பலன் என்றுமே கிடைத்ததில்லை. ஆகையால் பள்ளிக்கூட அதிகாரிகள் அதிக மகிழ்ச்சி அடைந்தார்கள். சப்ரா வக்கீல்களுக்கு இடையிலும் பெருமகிழ்ச்சி நிலவியது. பாபூ பிரஜ்குஷோர் பிரசாத் சப்ராவில் வக்கீல் தொழில் ஆரம்பித்து விட்டார். அவர் தொழிலுக்குப் புதியவர் ; உற்சாகம் அதிகம். சொற்ப நாட்களுக்குள் மக்கள் இடையிலும், முக்கியமாக நீதி மன்றத்திலும் அவருக்குச் செல்வாக்கு உண்டாகி விட்டது. அவர் எங்கள் கிராமத்திலிருந்து மூன்று கல் தொலைவில் தான் இருந்தாராயினும் அவரை எனக்குத் தெரியாது. அவர் என் அண்ணனுடன் கலந்து பேசி, ஒரு சாதாரண விருந்துக்கு ஏற்பாடு செய்தார். அதற்கு நானும் அழைக்கப்பட்டிருந்தேன். ஆனால் நான் அந்த நாளைப் பார்த்து நோய்வாய்ப்பட்டுவிட்டேன். ஆதலால் அதற்குப் போக முடியவில்லை.

சப்ராவுக்குப் போய்ச் சேர்ந்ததும், முதல் முதல் ரஸிக் பாபூவைப் போய்ப் பார்த்தேன். என்னைக் கண்டதும் அவருக்குப் பூரிப்பு உண்டாயிற்று. உடனே மாம்பழமும் மிட்டாயும் வழங்கினார். நெடுநேரம் வரையில் எனக்குப் பல விஷயங்களை எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார். இப் பரீக்ஷயின் பலனால் என் பொறுப்பு அதிகமாகிவிட்டது என்றும், பல்கலைக் கழகத்தின் பீகாரில் எவரும் முதன்மை பெற்றது இதுதான் முதல் தடவை என்றும், வங்காளத்துப் பிள்ளைகள் இதைப் பொறுக்க மாட்டார்கள் என்றும், அவர்கள் மிகவும் பாடுபட்டு என்னை எப். ஏ. பரீக்ஷயில் தோற்கடிக்க முயற்சி செய்வார்கள் என்றும்,

மேலும் சில கெட்ட பிள்ளைகள் என்னை வேறுவிதமாக ஏதாவது வம்புக்கு இழுத்து வீழ்த்தப் பின்வாங்கமாட்டார்கள் என்றும், ஆகையால் நான் கல்கத்தாவில் மிகவும் விழிப்பாகவும் எச்சரிக்கை யாகவும் இருக்கவேண்டுமென்றும், நன்ருக உழைத்து, எனக்குக் கிடைத்துள்ள உயரிய இடத்தை விடாமல் நிலைநிறுத்த வேண்டும் என்றும் எனக்கு இவ்விதமாகப் பற்பல போதனைகளைச் செய் தார். எல்லா விஷயங்களையும் பற்றி அவருக்கு அவ்வப் போது செய்தி தெரிவித்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும், எவ்விதத்திலும் சோர்வு அல்லது தவறு உண்டாக விடக்கூடா தென்றும் வற்புறுத்திஞர். "கல்கத்தா மிகப் பெரிய நகரம், அங்கே விளையாட்டு வேடிக்கை நிறைய இருக்கும், அவை அனைத் திலிருந்தும் தப்பவேண்டும், கல்லூரியில் உன்ஞல் இயன்றவரை யில் பாடுபட்டு உன் இடத்தைக் காப்பாற்ற வேண்டும்" என்றும் கூறிஞர். நான் எப்படியாவது எப். ஏ. யிலும் முதன் முதலாக வரவேண்டியது மிகவும் அவசியம் என்ற எண்ணம் அவர் மனத் தில் வலிவாகக் குடிகொண்டு இருந்தது. அதில் தவறிவிட்டால் மிக்கக் கேடு விளையும் என்று அவர் கருதிஞர். ஆகையால் இந்த விஷயத்தைப் பல்வேறு விதமாக எடுத்துக் கூறி வற்புறுத் திஞர். இப்படியாகப் புத்திமதி கூறி விளங்க வைத்துக் கல்கத்தா போவதற்கு விடை அளித்தார். வீட்டிற்குத் திரும்பி வந்ததும் வராததுமாக எனக்குக் காய்ச்சல் கண்டு விட்டது. அதனுல் பயணம் நின்றுவிட்டது. சில நாட்களுக்குப் பின், உடம்பு குண மான பிறகு அண்ணனுடன் கல்கத்தாவுக்குப் போய்ச் சேர்ந் தேன்.

கல்கத்தாவில் தமையனூர் முதலிலிருந்தே ஈடன் ஹிந்து ஹாஸ்டலில் தங்கி இருந்தார். டப் (Duff) கல்லூரியில் எம். ஏ. யில் சரித்திரமும், ரிப்பன் கல்லூரியில் பி. எல். லுக்காகச் சட்டமும் படித்துவந்தார். நானும் அவருடன் அந்த ஹாஸ்டலுக்கே சென் றேன். இதுதான் நான் கல்கத்தாவுக்கு முதல் முதல் வந்த பயணம் ஆகும். அங்கே உள்ள வீடுகள், தெருக்கள், டிராம் வண்டிகள் இவைகளைப் பார்த்து நான் மலைத்துப் போனேன். ஹாஸ்டலுக்குப் போய்ச் சேர்ந்தபோது, சப்ரா வீட்டை எண்ணிப் பார்க்கும்போது இது ஒரு பெரிய மாளிகை போல எனக்குத் தோன்றியது. நான் மிகவும் நாள் கழிந்து வந்ததால், அதற்கு முன்னமே ஹாஸ்டலில் மாணவர்கள் கசகச வென்று நிறைந்து விட்டார்கள். ஓர் இடம் கூட இல்லை. இடம் கிடைக்கும் வரை என் அண்ணனுடன் அவருடைய அறையிலேயே இருந்தேன்.

பிரஸிடென்ஸி கல்லூரிக்குப் போனதும் அங்கேயும் பையன்கள் ஏராளமாக வந்து சேர்ந்து விட்டார்கள் என்பதும், புதுப் பையன் களைச் சேர்த்துக் கொள்வதில்லை என்பதும் தெரியவந்தன. டாக்டர், பி. கே. ராய் பிரின்ஸிபாலாக இருந்தார். என் தமைய னர் அவரைப் போய்ப் பார்த்தார். அவர் என்னைச் சேர்த்துக் கொள்ள உத்தரவு இட்டார். கல்லூரியில் சேர்ந்துவிட்டேன், ஆனால் ஹாஸ்டலில் இடம் இல்லை. அண்ணன் இருந்த அறையி லேயே நான்கு கட்டில்கள் போடப்பட்டன. இப்படியாக நானும் அங்கேயே இருந்து வந்தேன்.

நான் வகுப்பிற்குச் சென்றபோது, அங்கே நிலைமை சற்று வேறு தினுசாய் இருந்தது. வெறும் தலையுடன் விளங்கிய இத் தனை வங்காளப் பையன்களை ஒருமிக்க இதற்கு முன் நான் என்றும் பார்த்ததில்லை. அவர்களுள் கோட்டும் பாண்டும், ஹாட்டும் போட்டுக் கொண்டிருந்தவர்கள் சிலர் இருந்தார்கள். வெளிநாட்டுக்குச் சென்று திரும்பி வந்து, பாரிஸ்டர், டாக்டர் முதலிய தொழில்கள் நடத்திக் கொண்டிருந்த தந்தைமார்களின் பிள்ளைகள் இவர்கள். அன்று வரையில் ஹாட் கோட்டுப்போட்ட இந்துஸ்தானிப் பையனை நான் பார்த்ததில்லை. இவர்கள் ஆங்கிலோ-இந்தியர்களோ கிறிஸ்தவர்களோ என்ற ஐயம் எழுந்தது. ஆனால் பெயரைக் கூப்பிட்டபோது, இவர்கள் ஹிந்துக்கள் தாம் என்பது தெரியவந்தது. அந்தக் காலத்தில் முசல்மானியப் பையன்கள், பெயருக்கு மட்டும் மதர்ஸா மாணவர் கள் என்று கருதப்பட்டாலும், உண்மையில் பிரஸிடென்ஸி கல்லூரியில் எப். ஏ. வகுப்பில் படிப்பது வழக்கம். அவர்கள் ரூ. 12க்குப்பதிலாக ரூ. 4 தான் மாதந்தோறும் சம்பளம் கொடுக்க வேண்டும். அவர்களுடைய பெயர்கள் ஒரு தனி ரிஜிஸ்தரில் எழுதப்பட்டு இருக்கும். எந்த விஷயத்திலும் அவர்கள் பிரசி டென்ஸி கல்லூரியின் மற்றப் பையன்களில் இருந்து தனிப்பட்ட வர்கள் அல்லர். அவர்களுக்குத் தனியாக ஹாஸ்டல் இருந்தது. அவர்களும் இரண்டு மார்வாரிப் பையன்களும் தாம் தொப்பி போட்டவர்களாக அங்குக் காணப்பட்டார்கள். கல்லூரியிலும் கூட எல்லாப் பையன்களும் ஒரே வகுப்பில் அடங்க முடிய வில்லை. ஆகையால் மூன்று பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்தார் கள். பாடம் எல்லாம் ஒன்றுதான்.

அந்தக் காலத்தில் நான் சப்கன், பைஜாமா, தொப்பி அணிந்து கொண்டு கல்லூரிக்குப் போய்க் கொண்டிருந்தேன். எப். ஏ. யில் ஆங்கிலம், மற்றொரு மொழி, சரித்திரம், தர்க்க சாஸ்

திரம் (லாஜிக்) கணிதம் இவை மட்டுமன்றி எல்லாப் பையன் களும் பௌதிக சாஸ்திரமும் (பிஸிக்ஸ்) இரசாயன சாஸ்திரமும் (கெமிஸ்டிரி) படிக்க வேண்டும். எப். ஏ. யில் டாக்டர் ஜே. சி. போஸ் பௌதிகமும், டாக்டர் பி. சி. ராய் இரசாயனமும் கற்பித்து வந்தார்கள். நான் கல்லூரியில் சேர்ந்து முதல்நாள் போன போது முதல் மணியில் இரசாயனப் பாடம் இருந்தது. டாக்டர் பி. சி. ராய் வந்து, மாணவர்களின் பெயரைக் கூப்பிட ஆரம்பித் தார். நான் எல்லாருக்கும் பின்னல் ஒரு பலகையில் உட்கார்ந் திருந்தேன். பிரசிடன்ஸி கல்லூரியின் பையன்களுடைய பெயர் கள் அனைத்தும் கூப்பிடப்பட்டன. அவர்கள் குரல் கொடுத் தார்கள். என்னுடைய எண் எனக்குத் தெரியாது. கடைசிவரை யில் காத்துக் கொண்டிருந்தேன். கடைசிப் பையனும் பதில் கொடுத்து விட்டான். அவர் ரிஜிஸ்தரை மூடப் போகும்போது நான் எழுந்து நின்று, "என்னுடைய எண் எனக்குத் தெரி யாது" என்றேன். அவர் என் பக்கம் ஏறெடுத்துப் பார்த்து "பொறுத்துக் கொள். நான் இன்னும் மதர்ஸா பையன்களில் வருகையைக் குறிக்கவில்லை" என்றார். இதைக் கூறிவிட்டு மற்றொரு ரிஜிஸ்தரைச் சட்டென்று எடுத்தார். என் பைஜாமா தொப்பியைக் கொண்டு என்னை முசல்மான் என்று நினைத்துக் கொண்டார் என்பதைப் புரிந்து கொண்டேன். "நான் மதர்ஸா வில் படிக்கவில்லை, பிரசிடென்ஸி கல்லூரியில் இன்றுதான் சேர்ந் தேன். ஆகையால் என்னுடைய எண் தெரியாது" என்றேன். அவர் என் பெயரைக் கேட்டார். என் பெயரைச் சொன்னதும் எல்லாப் பையன்களும் வளைந்து என் பக்கம் திரும்பி என்னைப் பார்த்தார்கள். ஏனென்றால் என் பெயர் கொண்ட ஒரு பையன் அந்த ஆண்டில் பல்கலைக் கழகத்தில் முதலாக வந்தான் என்பது அவர்களுக்குத் தெரியும். "உன்னுடைய பெயர் இன்னும் எழுதப்படவில்லை. எழுதியானதும் இன்றைய வரவையும் குறித் துக் கொள்கிறேன்" என்று டாக்டர் ராய் கூறினர். பிறகு, இதுவரையில் என் பெயர் பதிவாகாததற்குக் காரணத்தைக் கேட் டார். இப்படியாக அவருடன் அறிமுகமாயிற்று. மற்றத் தோழர் களும் என்னை முதல் முதல் பார்த்தார்கள்.

என் வகுப்பில் ஹிந்தி தெரிந்த பையன்கள் மிகக் குறைவு. ஆகையால் மார்வாரி தேவீபிரசாத் கைத்தானுடன் இரண்டொரு நாட்களுக்குள்ளாக இயல்பாகப் பழக்கம் உண்டாயிற்று. அதற்கு வேறொரு தனிப்பட்ட காரணமும் உண்டு. அவனும் என்னைப் போலப் பீகாரில் இருந்து பரீக்ஷை தேறி வந்தவன்.

அங்கே அவனுடைய தந்தையார் ஜெயிலராக இருந்தார். வங்காளிப் பையன்களுடனும் அறிமுகம் ஏற்படத் தொடங்கியது. அவர்களில் சிலருடன் விரைவில் நெருங்கிய நட்பு வளர்ந்தது. இது இன்றுவரையிலும் நீடித்து வருகிறது. இரண்டொரு வருடைய பெயரை இங்குக் குறிப்பிடுகிறேன். இப்போது வங்காளத்தில் ஸ்டான்டிங் கவுன்சிலராக இருக்கும் யோகேந்திர நாராயண் மஜூம்தார், டிப்டி கலெக்டராக இருந்து இப்போது சர்க்காரில் செக்ரடிரியாக இருக்கும் கிரீஷ்சந்திர மஜூம்தார், அரசாங்கத்து மொழி பெயர்ப்பாளராக இருக்கும் கிரீஷ்சந்திர மஜூம்தார் ஆகியவர்களைக் குறிப்பிடலாம். மற்றொருவர் ஜே. எம். சென்குப்தா. இவர் நமது அதிர்ஷ்டக் குறைவால் இன்று இல்லை. இவரும் என்னுடன் படித்தார். நான் இருந்த ஹாஸ்டலிலேயே தங்கியிருந்தார்.

நான் ஒரு வாரத்திற்குக் குறைவாகத்தான் தொடர்ந்து கல்லூரிக்குப் போக முடிந்தது. பிறகு குளிர் காய்ச்சல் வந்து விட்டது. சப்ராவிலேயே என்னைப் பிடித்த மலேரியா இப்போது மிகவும் கடுமையாகக் கண்டது. மாதக்கணக்காக நோய்வாய்ப் பட்டுக் கிடந்தேன். ஹாஸ்டல் டாக்டர் எவ்வளவோ முயற்சி செய்தார். ஆனால் காய்ச்சல் நாள்தோறும் வந்தபடிதான் இருந்தது. எப்போதாவது ஓரிரண்டு நாட்களுக்கு நலமாகி விடும்; மறுபடியும் மூன்ருவது அல்லது நான்காவது நாள் கடுமை யாகக் குளிர் வந்துவிடும். எனது தமையனார் அதிகக் கவலைக்கு ஆளானார். ஒருநாள் டவுன் ஹாலில் ஒரு பெரிய கூட்டம் நடை பெற இருந்தது. லார்ட்டு கர்ஸனின் நடவடிக்கை ஒன்றைப் பற்றிப் பொது ஜன அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்காக வங்காளத்தின் பெரிய பெரிய தலைவர்களும், வாக்கு வன்மையாளர் களும் அன்று பேசுவதாக இருந்தது. சுரேந்திரநாத் பானர்ஜீ முதலியவர்கள் பேசுவதாக இருந்தது. இரண்டு மூன்று நாட் களாக எனக்குக் காய்ச்சல் விட்டிருந்தது. நான் சௌக்கியமாகி விட்டேன் என்று எல்லாரும் நினைத்தார்கள். தமையனாரும் ஹாஸ்டல் பையன்கள் எல்லாரோடும் கூட்டத்திற்குப் போய் விட்டார். என் அறையிலாவது அக்கம்பக்கத்து அறைகளி லாவது யாருமே இல்லை. நான் தனியாக இருந்தேன். திடீ ரென்று குளிர் கண்டது. அதன்பின் காய்ச்சல் ஏற ஆரம் பித்தது. நான் படுத்த படுக்கையாய்த் தெர்மாமீட்டரை வைத்து வைத்து பார்த்துக் கொண்டிருந்தேன். காய்ச்சல் ஏறி ஏறிச் சென்று 103 டிகிரிக்கு மேலும் போய்விட்டது. நான் பயந்து

போனேன். ஆனால் ஏதாவது செய்வது என்றால் என்ன செய்ய முடியும்? யாரும் பக்கத்தில் இல்லை. அண்ணன் முகத்தில் இனி விழிக்க மாட்டோம் என்றும்கூடச் சில சமயங்களில் தோன்றியது. மெல்ல மெல்லக் காய்ச்சல் இறங்கியது. அண்ணன் வருவதற்குள் சுரம் முற்றிலும் இறங்கிவிட்டது. அண்ணன் எப்படி விட்டுச் சென்றாரோ அதே நிலைமைக்கு வந்து விட்டேன். அவர் திரும்பி வந்தவுடன் எல்லாவற்றையும் சொன்னேன். இனி நான் நலமாக இருந்தால் கூட என்னை விட்டு விட்டு எங்கும் போவதில்லை என்று அவர் உறுதி செய்து கொண்டார். இப்படியாக அநேக நாட்கள் கழிந்தன. தசரா விடுமுறையும் வந்து விட்டது. இத்தனை நாட்களில் நான் நாலைந்து நாட்கள் தாம் கல்லூரிக்குப் போக முடிந்தது.

விடுமுறையில் எப்படியோ ஊருக்கு வந்து சேர்ந்தேன். அங்கே உடம்பு நலமடைந்தது. விடுமுறை ஏறக்குறைய ஒரு மாதம் இருந்தது. இதில் நலமடைந்து கல்கத்தாவுக்குப் போனேன். அங்கே போய்ச் சேர்ந்த உடனேயே காய்ச்சல் மறுபடியும் வந்து விட்டது. அண்ணன் மிகவும் கவலையில் ஆழ்ந்தார். அந்தக் காலத்தில் கல்லூரியில் எத்தனை பிரசங்கங்கள் உண்டோ அவற்றில் ஒரு குறிப்பிட்ட வீதத்திற்குக் குறையாமல் ஒவ்வொரு பையனும் கேட்டிருக்க வேண்டுமென்று ஒரு விதி இருந்தது. இல்லாவிட்டால் பரீக்ஷையில் கலந்துகொள்ளப் பல்கலைக்கழகம் அனுமதி அளிக்காது. இதைத் தவிர, படிப்பும் விடுபட்டு விட்டது. கல்கத்தாவை விட்டு விட்டு அலகாபாத்துக்குப் போவோம் என்று சில சமயங்களில் எண்ணம் வரும். அதிலும் இடைஞ்சல் இருந்தது. ஏனெனில், ஆண்டு நடுவில் ஒரு பல்கலைக் கழகத்திலிருந்து மற்றொன்றுக்குப் போவதற்கு அனுமதி கிடைக்குமோ கிடைக்காதோ என்ற ஐயம் இருந்தது. மேலும் அங்கே போயும் அங்கும் கல்லூரிக்குச் சென்ற நாள் எண்ணிக்கை பூர்த்தி ஆகாவிட்டாலோ ஓர் ஆண்டு இப்படியாக வீணாகப் போய்விடும். ரஸிக்பாபூ என்னுடைய உயரிய இடத்தைக் காப்பாற்றுவதற்கு என்னென்ன புத்திமதிகள் கூறினாரோ அவை எல்லாம் நினைவுக்கு வரும். என் மனம் துக்கத்தால் மிகவும் பீடிக்கப்பட்டது. ஆனால், ஒன்றும் செய்ய முடியவில்லை. ஒன்றுமே ஓடவில்லை. கடைசியில் தமையனார் என்னை நீல்ரத்தன் சர்க்காரிடம் அழைத்துச் சென்றார். அவர் மருந்து எழுதிக் கொடுத்தார். காய்ச்சல் வருவது நின்றது. நான் நலமாகி விட்டேன். அவருடைய மருந்தை ஏறத்தாழ ஓர் ஆண்டு வரை

யில் உட்கொண்டு வந்தேன். இந்த ஓர் ஆண்டில் எவ்வளவு கொயினா உண்டிருப்பேன் என்பது தெரியாது. இருபத்தைந்து இருபத்தாறு ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு ஹோமியோபதி டாக்டர் இப்போது எனக்கு இருக்கும் ஆஸ்தமா அந்தக் கொயினா வால்தான் விளைந்தது என்று சொன்னார். உண்மை எதுவென் பது தெரியாது.

உடம்பு நலமான பிறகு நான் மிகவும் பாடுபட்டுப் படிக்க லானேன். மூன்று நான்கு மாதத்துப் பாடங்களில் நான் பிற் பட்டு விட்டேன். அவற்றைப் படித்து முடிக்க வேண்டும். அத் துடன் பல்கலைக் கழகத்தில் என்னுடைய உயரிய இடத்தை இழக் கக்கூடாதென்ற கவலையும் இருந்தது. ஒவ்வொரு பாடத்தையும். அதில் முதலாக வரவேண்டுமென்ற கருத்துடன் படிக்கலானேன். ஒவ்வொரு பாடத்திற்கும் வகுப்பில் சொல்லிக் கொடுக்கப்பட்ட புத்தகத்தை மட்டும் அன்றி மூன்று நான்கு வேறு புத்தகங்களை யும் படித்தேன். கணக்கில் நான் பலவீனம் என்று நினைத்தேன். ஆகையால், அதில் அதிகக் கவனம் செலுத்தினேன். மேலும் அல்ஜீபிரா, டிரிக்னமெட்ரீ, கோனிக்ஸ் செக்ஷன் இவற்றிற்காக எத்தனை புத்தகங்கள் கிடைத்தனவோ, அவற்றில் கொடுக்கப் பட்டிருந்த உதாரணங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகச் செய்து முடித்தேன். பல்கலைக் கழகத்தில் அதுவரையில் எத்தனை கேள்விகள் கேட்கப்பட்டனவோ அவை ஒவ்வொன்றை யும் அதேபோலச் செய்து முடித்தேன்.

எப். ஏ. யில் தேறியபின் விஞ்ஞானம் படிக்க வேண்டுமென் பது என் ஆசை. டாக்டர் ஜே. சி. போஸ், டாக்டர் பி. சி. ராய் இவர்கள் கற்பித்த முறை மிக அழகாயிருந்ததால் அதில் ருசி ஏற் பட்டுவிட்டது. அந்த விஷயங்களை மேலும் தெரிந்து கொள் வதில் ஆர்வம் உண்டாயிற்று. சரித்திரம் சொல்லிக் கொடுத்த பேராசிரியர் வினயேந்திரநாத் சென் மிக நன்றாகக் கற்பிப்பவர் மட்டும் அன்றி மிகச் சிறந்த பண்பாடும் உடையவர். அவர் என்மேல் மிக்க அன்பு வைத்திருந்தார். நான் நோய்வாய்ப்பட் டுக் கிடந்தபோது ஹாஸ்டலுக்கு வந்து என்னைப் பார்த்துப் போவார். ஆயினும் எனக்கு விஞ்ஞானத்தில்தான் பற்றுதல் அதிகமாக இருந்தது. அந்தப் பாடங்களில் மனம் செல்ல ஆரம் பித்தது. எத்தனை புத்தகங்கள் கிடைத்தனவோ அத்தனையும் படித்து விட்டேன். அந்தக் காலத்தில் எப். ஏ. பையன்கள் லாபோரட்டரியில் செயல் முறையில் ஏதும் செய்ய வேண்டிய தில்லை. புத்தக ஞானமே போதுமென்று கருதப்பட்டது.

பி. எஸ். சி. வகுப்பு வரையில் உரிய நூல்களில் தேர்ச்சி பெற முயற்சி செய்தேன். ஒரே ஓர் இடைஞ்சல்தான் தென்பட்டது. மேலே போகப் போகக் கணிதம் அதிகமாகத் தேவையாயிருக்கும் ; ஆனால் எவ்வளவு உழைத்தும் என் மூளையில் கணக்கு ஏறவில்லை. ஆகையால் அதற்காக அதிகப் பாடுபட்டேன்.

இப்படியாக இரண்டு ஆண்டுகள் கழிந்தன. பரீக்ஷைக்கு நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. சில வங்காளித் தோழர்களுடன் நட்பு ஏற்பட்டிருந்தது. ரஸிக் பாபூ எதைப் பற்றி என்னைப் பயமுறுத்தினரோ, அதன் சாயலைக்கூட நான் காணவில்லை. தோழர்களுடன் மிகவும் இனிமையாகவும் நேசமாகவும் காலம் கழிந்தது. யாருடைய கண்ணும் படவில்லை. எவருடைய கெட்ட மனப்பான்மையைப் பற்றியும் நான் குறைகூற வேண்டிவரவில்லை. எல்லாரோடும் நட்பு வளர்ந்து வந்தது. சிலருடன் மிக்க அந்யோன்யமும் உண்டாயிற்று. இன்று கூட அவர்களைச் சந்திக்கும்போது அன்றைய விஷயங்கள் எல்லாம் ஏதோ நேற்றுத்தான் நிகழ்ந்தன போல நினைவுக்கு வருகின்றன.

பல்கலைக் கழகப் பரீக்ஷைக்கு முன் கல்லூரிப் பரீக்ஷை ஒன்று நடக்கும். அது நடந்தது ; அதில் அநேகமாக ஒவ்வொரு பாடத்திலும் எனக்கு எல்லாரையும் விட மார்க்கு அதிகமாகக் கிடைத்தது. ஒன்றிரண்டு பாட விஷயங்களில் நான் எத்தனை பிரசங்கங்களுக்குப் போயிருக்க வேண்டுமோ அத்தனைக்கு போகவில்லை. நான் பரீக்ஷை எழுதுவதற்குப் பல்கலைக் கழகத்தின் சட்டம் ஏதும் தீங்கு விளைவிக்காமல் இருக்கும் பொருட்டும், விகிதப்படி "ஆஜிரி"* தேறும் பொருட்டும் பேராசிரியர் மிகவும் அன்பு கூர்ந்து அதிகச் சொற்பொழிவுகள் ஆற்றினர். பரீக்ஷை எழுதுவதற்கு முன் ஒரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. அநேகமாக ஒவ்வொரு பாடத்திலும் நான் நிறைய மார்க்கு பெற்றிருந்தேன். ஆயினும் கல்லூரிப் பரீக்ஷையின் முடிவு அறிவிக்கப்பட்ட போது, பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைக்குப் போவதற்கு எனக்கு அனுமதி அளிக்கப்படவில்லை யென்று கூறப்பட்டது. அப்போது கல்லூரிக்கு ஓர் ஆங்கிலப் பிரின்சிபால் வந்து விட்டார். பரீக்ஷையின் முடிவைச் சொல்லுவதற்குத் தாமே வந்தார். எல்லாப் பையன்களும் அங்கே கூடி யிருந்தார்கள். அவர் ஒவ்வொரு பெயராகக் கூப்பிட்டு வந்தார். என்னுடைய பெயரை மட்டும் கூப்பிடவில்லை. பெயர்ப் பட்டியலில்

* உண்மை, உளமை, இருக்கை—என்ற சொற்களில் எதுவேனும் பொருந்தும். இவற்றில் ஒன்றை வழங்குவது நன்று.

என் பெயர் தவருக விடுபட்டுப் போய்விட்டது. அதில் எழுதப் படவே இல்லை. என் பெயர் சொல்லப்படாததைக் கண்டு எல்லா ருக்கும் வியப்பு உண்டாயிற்று. நான் மிகவும் பயந்து போனேன். "என் பெயரைப் படிக்கவில்லையே" என்று கேட் டேன். பிரின்சிபால் எப். ஏ.க்குப் பாடம் கற்பித்ததில்லை, ஆகை யால் எந்தப் பையனையும் அவருக்குத் தெரியாது. நான் கேட்ட வுடன், அவர், "நீ தேறவில்லை, ஆகையால்தான் உன் பெயர் வர வில்லை" என்று சட்டென்று விடை அளித்தார். "அப்படி இருக்க முடியாது, நான் தேறியிருப்பேன்" என்றேன். "அப் படி இருக்க முடியாது, நீ தேறியிருந்தால் உன் பெயர் கட்டாயம் இங்கு இருக்கும்" என்ற விடை அவரிடமிருந்து கிடைத்தது. நான் மேலும் ஏதோ கூற விரும்பினேன். அவர் கோபித்துக் கொண்டு, "வாயை மூடு, இல்லாவிட்டால் அபராதம் போடு வேன்" என்ருர். நான் மீண்டும் தைரியமாய் ஏதோ சொல்ல விரும்பினேன். "உனக்கு 5 ரூபாய் அபராதம் போட்டிருக் கிறேன்" என்று கூறினர். மறுபடியும் ஏதோ சொன்னேன். "ரூபாய் 10 அபராதம்" என்று கூறினர். இப்படியாக ஐந்து ஐந்து ரூபாயாகப் பெருகி, ஏலம் கூறுவது போல ரூ. 20 அல்லது 25-க்கு எட்டிவிட்டது. இப்படி வேடிக்கை நடந்தது. என்ன செய்வது என்று எனக்குத் தோன்றவில்லை. இதற்குள் என்னை நன்ருகத் தெரிந்த கல்லூரித் தலைமை குமாஸ்தா அவருக்குப் பின்னல் இருந்து கொண்டு "பேசாமல் இரு; எல்லாம் சரியாகி விடும்" என்று சைகை காட்டினர். நான் அடங்கிவிட்டேன்.

பரீக்ஷைக்கு எழுதிக் கொடுக்க வேண்டிய விண்ணப்பம் முதலியவற்றை அடுத்த நாள் எழுதிக் கொடுத்துவிட்டேன். பணமும் கட்டிவிட்டேன். யாரும் ஒன்றும் கேட்கவில்லை. அந்தக் குமாஸ்தா பிழையைத் திருத்தி விட்டார், ஆனல் பிரின்சி பாலிடம் தம் பிழையை ஒப்புக் கொண்டாரோ இல்லையோ, அதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அபராதத்தை யாரும் கேட்கவில்லை. நானும் கட்டுவதற்கு முன்வரவில்லை. இந்த நிகழ்ச்சியின் போது, முன்னே சப்ராவில் எண்டிரன்ஸ் பரீக்ஷை கொடுக்க அனுமதி அளிப்பதற்கு டிராயிங் மாஸ்டர் தடை செய்தது நினைவுக்கு வந்தது.

எப். ஏ. பரீக்ஷைக்காக நான் நன்ருகத் தயார் செய்தேன். பரீக்ஷையின் முடிவும் ஒரு விதமாக நன்ருய் அமைந்தது. "ஒரு விதமாக," என்று ஏன் கூறுகிறேன் என்ருல், நான் எல்லா ருக்கும் மேலாக வந்திருந்தேன் ஆயினும், விஞ்ஞானத்திலும்,

கணிதத்திலும் எல்லாருக்கும் மேலாக வர வேண்டுமென்ற ஆசை நிறைவேருததனுல் தான். இந்தப் பாடங்களுக்காக நான் மிகவும் பாடுபட்டு உழைத்தேன். ஆங்கிலம், பாரசீகம், லாஜிக் ஆகியவற்றிற்கு இதைவிடக் குறைவாகத்தான் உழைத்தேன். ஆயினும் பரீக்ஷையின் முடிவு வெளியானபோது, ஆங்கிலம், பாரசீகம், லாஜிக் ஆகியவற்றில் நான் எல்லாரையும்விட அதிக மார்க்குப் பெற்றிருக்கிறேன் என்பது தெரியவந்தது. ஆனுல் இதர பாடங்களில் மற்றவர்களேவிட மார்க்கில் கொஞ்சம் பிற்பட்டு விட்டேன். எப்படியும் எல்லாவற்றையும் கூட்டினுல், மற்றவர்களுக்கு மேலாகத்தான் இருந்தேன். எண்ட்ரன்ஸ் பரீக்ஷையில் எல்லாரையும் விட அதிகமாக மார்க்கு பெற்றதற்காக மாதந்தோறும் ரூ. 20 வீதம் கிடைத்த உபகாரச் சம்பளத்தைத் தவிர, ஆங்கிலத்தில் முதன்மை பெற்றதற்காக மாதம் ரூ. 10 உபகாரச் சம்பளம் ஒன்றும் ஓர் ஆண்டிற்குக் கிடைத்தது. இப்போது எப். ஏ.யில் எல்லாரையும் விட மேலாக வந்ததற்காக மாதம் ரூ. 25 இரண்டு ஆண்டுகள் வரையில் கிடைத்தது. இதைத் தவிர, ஆங்கிலத்தில் முதலாக வந்ததற்காக மாதம் 10 ரூபாய் உபகாரச் சம்பளமும், மொழிகளில் முதலாக வந்ததற்காக மாதம் ரூ. 25 உபகாரச் சம்பளமும் கிடைத்தன. இதற்கு ''டப் ஸ்காலர்ஷிப்'' என்பது பெயர். மேலும் தர்க்க சாஸ்திரத்தில் முதலாக வந்ததற்காகப் புத்தகங்கள் பரிசாகக் கிடைத்தன. இதனுல் நான் கணிதத்தில் திறமை பெற முடியாதென்பதையும், ஆகையால் விஞ்ஞானம் எனக்குக் கடினமாய் இருக்குமென்பதையும் புரிந்து கொண்டேன்.

பரீக்ஷை முடிவு தெரிந்தபிறகு நான் முன்னர் கொண்டிருந்த முடிவை மாற்றிக் கொண்டு, விஞ்ஞானத்தின் பக்கம் செல்லாமல், பி. ஏ. வகுப்பில் சேர்ந்து கொண்டேன். அந்தக் காலத்தில் எப். ஏ. வரையில்தான் படிப்பு எல்லாருக்கும் ஒன்ருய் இருந்தது. எல்லாப் பாடங்களேயும் படிக்கவேண்டும். அதற்குப் பின், சிலர் பி. எஸ்சி. யில் சேர்ந்து விஞ்ஞானம் படிப்பார்கள். வேறு சிலர் பி. ஏ.யில் சேர்ந்து ஆங்கிலம், தத்துவம் முதலியன படிப்பார்கள். பி. ஏ.யில் சேர்ந்த பிறகு டாக்டர் பி. சி. ராயைப் பார்த்தேன். ''நீ ஏன் விஞ்ஞானத்தில் சேரவில்லே?'' என்று கேட்டார். ''கணிதத்தில் பலவீனம்'' என்று விடை அளித்தேன். ''என்னே ஏன் கேட்கவில்லே? எனக்கும்தான் கணிதம் குறைவாகத் தெரியும். அதற்காக நான் விஞ்ஞானத்தைக் கண்டு ஓடவில்லேயே''

என்ருர். அவருக்கு வருத்தமாயிருந்தது. ஆனுல் காலம் கடந்து விட்டதால் மாற்றுவது கடினமாக இருந்தது.

இரண்டு ஆண்டுகள் முழுதும் ரஸிக் பாபூவின் வார்த்தையை நினைவில் கொண்டு, அதே கருத்தாய் நின்று, மீண்டும் முதலாக வருவதற்கு முயற்சி செய்தேன். அதில் வெற்றியும் கண்டேன். இதனிடையில் ரஸிக்பாபூ மாற்றலாகிக் கல்கத்தாவிற்கு வந்து விட்டார். நான் அவரைச் சந்தித்தபோது அவர் பேரானந்தப் பட்டார். அடிக்கடி அவரைப் போய்ப் பார்ப்பேன். சிறிது காலத்திற்குப் பின் அவர் இறந்துவிட்டார்.

## 9. பரீக்ஷையில் ஊக்கமின்மை

பி. ஏ.யில் சேர்ந்ததும் என்னுடைய தன்மை சற்று மாறி விட்டது. பரீக்ஷையின் மேலுள்ள ஆசை நீங்கி, மனம் வேறு விஷயங்களில் திரும்பிவிட்டது. வகுப்பில் என்ன கற்பிக்கப் படுகிறதோ அதை, என்னுல் இயன்ற அளவுக்கு கவனம் முழு வதையும் செலுத்திக் கேட்டு மனத்திற் கொள்வது எனக்குச் சிறு பிராயத்திலிருந்து பழக்கம். வகுப்பில் காலத்தை வேறு எவ் வழியிலும் சிதற விடமாட்டேன். இதற்குக் காரணம், வீட்டில் கேட்டுக் கொள்வதற்கோ, சொல்லிக் கொடுப்பதற்கோ ஆசிரியர் யாரும் இல்லாததால் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் எடுத்துச் சொல்வதைத்தான் முழுக்க முழுக்க நம்பி இருந்ததே ஆகும். பின்னுல் இதுவே பழக்கமாகிவிட்டது. கல்லூரியிலும் இப்படியே தான் நடந்தது. கல்லூரியில் சேர்ந்த உடனே, எந்தப் பாடத்தை ஹானர்ஸுக்கு எடுத்துக் கொள்வது என்ற கேள்வி எழுந்தது. அக்காலத்தில் பி. ஏ.யில் மூன்று பாடங்கள் படிக்க வேண்டும். அவற்றுள் ஆங்கிலமும் தத்துவமும் கட்டாயமாக எடுத்தாக வேண்டும். மூன்ருவது பாடத்தைத் தானே நயந்து எடுத்துக் கொள்வதற்கு மாணவனுக்கு உரிமை உண்டு. அப் படித் தேர்ந்து எடுத்துக் கொண்டபின், அதையும் மற்ற இரண்டு பாடங்களைப் போலவே படிக்கவேண்டும். பரீக்ஷையில் அதிலும் தேறவேண்டும். நான் சரித்திரமும் பொருளாதாரமும் (எக்கனு மிக்ஸ்) எடுத்துக்கொண்டேன். அந்தக் காலத்தில் "பாஸ்" பரீ க்ஷைக்கு விதிக்கப்பட்ட பாடக் கிரமத்தைத் தவிர ஹானர்ஸுக் காக வேறு சில புத்தகங்களையும் படிக்க வேண்டும். அவற்றில்

தனிப் பரீக்ஷையும் உண்டு. இப்படியாக, ஹானர்ஸ் பரீக்ஷை மிகவும் கடினமாக இருக்கும். வகுப்பில் பிரசங்கங்களும் அதிக மாக நடக்கும். மாணவன் விரும்பினால், ஒரு பாட விஷயத்தை மட்டும் அன்றி அதிகப் பாடங்களையும் ஹானர்ஸுக்கு எடுத்துக் கொள்ளலாம். நான் எந்தப் பாடத்தை ஹானர்ஸுக்கு எடுத்துக் கொள்வது, இரண்டு பாடங்களா அல்லது மூன்ரு என்ற கேள்வி கள் எழுந்தன. ஆரம்பத்தில் நான் ஒன்றும் முடிவு செய்ய வில்லை. மூன்று பாடங்களும் நடக்கும் ஹானர்ஸ் வகுப்புக்களுக் கும் போய் வந்தேன்.

என் நண்பன் ராமானுக்கிரகன், எப். ஏ. படிப்பதற்காகச் சப்ராவை விட்டு வேறு ஏதோ கல்லூரிக்குப் போயிருந்தான். அவன் இப்போது பி. ஏ.க்குப் பிரசிடென்சி கல்லூரிக்கு வந்து விட்டான். நாங்கள் இருவரும் ஹானர்ஸுக்கு மூன்று பாடங் களையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அவன் கருதினான். அப்படியே மூன்று பாடங்களை எடுத்துக் கொண்டான். பி. ஏ. பரீக்ஷையின் தேறுதலைக் கொண்டு, மாதத்திற்கு ரூ. 50 கொண்ட உபகாரச் சம்பளங்கள் இரண்டும், மாதத்திற்கு ரூ. 40 கொண்ட இரண்டும் அளிக்கப்பட்டு வந்தன. ஹானர்ஸ் மார்க்கை மட்டும் கூட்டிப் பார்த்தே இந்த உபகாரச் சம்பளங்கள் அளிக்கப்பட்டு வந்தன. ஆகையால் மூன்று பாடங்களையும் எடுத்துக் கொள்ள வேண்டுமென்று அவன் நினைத்தான். ஆனால் உண்மையில் நடந்து வந்தது என்னவென்றால், ஒன்று அல்லது இரண்டு ஹானர்ஸ் பாடங்களிலேயே அபரிமிதமாக மார்க்குக் கிடைத்து வந்தது. அது மூன்று பாடங்களில் கிடைப்பதைவிட அதிகமாக இருக்கும். இப்படி நடந்ததால், இரண்டு பாடங்கள் மட்டுமே எடுத்த மாணவர்களே அப்பரிசுகளைப் பெற்று வந்தார்கள். மூன்று பாடங்களை ஹானர்ஸுக்கு எடுத்துக் கொண்டால் மிகவும் உழைக்க வேண்டுமே என்று பயந்தேன். கடைசி வரையில் நான் ஒரு முடிவுக்கும் வராமல் திகைத்துக் கொண்டிருந்தேன். தற்செயலாக அப்போது தத்துவம் கற்பித்து வந்த பேராசிரியர் கொஞ்சம்கூட சுவாரசியம் இல்லாமல் கற்பித்து வந்தார். அதற்கு மாருக ஆங்கிலம், சரித்திரம், இவற்றைக் கற்பித்த பேராசிரியர் கள் மிஸ்டர் பர்சிவலும் வினய்பாபூவும் தம்தம் பாடங்களை மிக வும் அழகான முறையில் கற்பித்தார்கள். ஆகையால் அவர் களுடைய வகுப்புக்களுக்குச் செல்ல மனம் விழைந்தது.

நான் ஆங்கிலம், சரித்திரம், பொருளாதாரம் ஆகியவற்றில் மட்டும்தான் ஹானர்ஸ் படிப்பது என்று தீர்மானித்துவிட்டேன்.

ராமானுக்கிரகனும் மற்றெரு பையனும் ஆக இரண்டே பேர்தாம் மூன்று பாடங்களிலும் ஹானர்ஸ் படித்துக் கொண்டிருந்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு டாக்டர் பி. கே. ராய் தத்துவம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். அவர் கற்பித்த முறை மிக அழகாயும் மனத்தைக் கவருவதாயும் இருந்தது. அதனுல் தத்துவம் மற்ற எல்லாப் பாடங்களையும்விட மிக எளிதானது என்று கண்டேன். அவருடைய பிரசங்கங்கள் அவ்வளவு நன்ருக இருந்தன. அவற்றை மட்டும் கவனம் முழுவதும் செலுத்திக் கேட்டால் புத்தகத்தைப் படிப்பதற்கு அவசியம் மிகக் குறைவாகத் தானிருக்கும். பரீக்ஷையில் எல்லாப் பாடங்களிலும் தேறவேண்டியது அவசியம்தான். ஆனுல் நான் முன்னமே கூறியுள்ளபடி உபகாரச் சம்பளத்திற்கு ஹானர்ஸ் மார்க்கை மட்டுந்தான் கூட்டிப் பார்ப்பார்கள். ஆதலால் அந்தப் பாடங்களில் இயல்பாகவே அதிகக் கவனம் செலுத்தப்படும். ஆகையால் நான் தத்துவத்தில், டாக்டர் பி. கே. ராயின் பிரசங்கங்களைக் கேட்டது நீங்கலாக மற்றப்படி குறைவாகவே மனம் செலுத்தினேன். ஆனுல் அவர் மிகத் திறம்படக் கற்றுக் கொடுத்ததால் புத்தகம் படிக்காமலே அப்பாடத்தில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றுவிட்டேன். அதைக் கொண்டே நான் பரீக்ஷையில் தேறிவிட முடியும். இந்தப் பாடத்தை எடுத்திருந்தால் கஷ்டப்படாமல் மூன்ருவது பாடத்திலும் ஹானர்ஸ் கிடைத்திருக்குமே என்று பின்னுல் வருத்தப்பட்டேன்.

இப்படியாகச் சிறிது காலம் கல்லூரியில் அதிகக் கவனம் செலுத்திப் படித்து வந்தேன். பிறகு பரீக்ஷையின் மேல் வைத்திருந்த மனம் திரிந்து வேறு விஷயங்களில் சென்றுவிட்டது. அதே சமயத்தில் ஸ்ரீ சதீஸ் சந்திர முக்கர்ஜீ "டான் சொஸையிடி" (Dawn Society) என்ற பெயர் கொண்ட சங்கத்தை நிறுவினுர். மாணவர்கள்தாம் அதன் அங்கத்தினர்கள். அதற்குக் கட்டணம் ஏதும் செலுத்த வேண்டியதில்லை. படிப்பில் மாணவர்களுக்கு உதவி புரிவதும், அவர்களுடைய ஒழுக்கத்தைச் சீர்திருத்துவதும், அவர்களுக்குத் தேசிய விவகாரங்களைப்பற்றித் தெரிந்து கொள்வதற்கு உதவி புரிவதும் அச்சங்கத்தின் நோக்கம். மாணவர்களிடமிருந்து, பணி கொள்ளும் வகையில், சிறிது வேலையும் வாங்கப்பட்டது. அங்கே போதிக்கப்படுவதில் இது ஓர் அம்சமாகக் கருதப்பட்டது. வாரத்தில் ஒருநாள், சாயங்கால வேளையில், இரண்டு வகுப்புகள் நடத்தப்படும். அவற்றில் இரண்டு பிரசங்கங்கள் நிகழ்த்தப்படும். ஒன்று பற்பல விஷயங்

களைப் பற்றி இருக்கும். மற்ருென்று கீதையைப் பற்றியதாகும். கீதை வகுப்பை ஒரு பண்டிதர் நடத்துவார். அவர் மிகவும் எளிதான முறையில் கீதையைப் புரியவைப்பார். மற்ருெரு வகுப்பில் சதீஷ் சந்திரபாபூ தாமும் பிரசங்கம் செய்வார், பிறரையும் அழைத்துப் பிரசங்கம் செய்ய வைப்பார். எப்போதாவது பிரின்சிபால் என். என். கோஷ், அல்லது சிஸ்டர் நிவேதித்தா, மற்றும் சில சமயங்களில் வேறு யாராவது அந்த வகுப்பில் பிரசங்கம் செய்வார்கள். குறிப்பிட்ட நேரத்திற்குப் போய்ச் சேர வேண்டும்; பெயர் கூப்பிட்டு, வந்தவர்களைக் குறித்துக் கொள்ளுவார்கள். பிரசங்கங்களைப் பற்றிக் குறிப்பு எடுத்துக் கொள்வதற்காகப் பிரசங்கத்திற்கு முன்னமே பையன்களுக்குக் காகிதமும் பென்சிலும் கொடுக்கப்படும். தோலால் கட்டம் செய்யப்பட்ட நோட்டுப் புத்தகங்கள் இரண்டு கிடைக்கும். அவற்றில் இரண்டு பிரசங்கங்களின் கருத்தையும் சுருக்கமாக எழுதிக் கொடுக்க வேண்டும். சதீஷ்பாபூ இந்த நோட்டுப் புத்தகங்களைத் தம் வீட்டிற்கு எடுத்துச் சென்று படித்துப் பார்த்து விட்டுப்போனவை, பிழை முதலியவற்றைத் திருத்தி, ஒவ்வொரு பையனையும் தனியாக அழைத்துப் பிழைகளை எடுத்துக் காட்டுவார். பிரசங்கங்களின் பொருள்கள் மிகவும் சிறப்பாக இருக்கும். அவற்ருல் தேச விஷயங்களைப் பற்றியும் உலக விஷயங்களைப் பற்றியும் அறிவு வளர்ந்தது. ஒழுக்க நடையிலும் அவை பதிந்தன. இப்படிக் கேட்கப்பட்ட இருவகைப் பிரசங்கங்களின் உதவியால் சொந்த மொழியில் விஷயங்களை எடுத்துச் சொல்வதற்கு எங்களுக்குப் பழக்கமும் நன்ருக அமைந்தது. பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைக்கும் இது உதவியது. ஆண்டு முடிவில், சதீஷ்பாபூ யாராவது ஒரு பெரிய மனிதரிடம் எல்லா நோட்டுப் புத்தகங்களையும் அனுப்புவார். அவர் அவற்றைப் படித்துப் பார்த்து எவனுடைய வேலை எல்லாரையும்விட நன்ருக அமைந்ததோ அவனுக்கு உபகாரச் சம்பளமும் பரிசும் அளிப்பார். செயல் முறையில் தொண்டு ஆற்றுவதற்காகச் சுதேசித் துணியையும் மற்றும் வேறு சாமான்களையும் விற்கச் சிறிய கடை ஒன்று திறக்கப்பட்டது. அதைப் பார்த்துக் கொள்வது அங்கத்தினருடைய பொறுப்பு. அக்கடை சாயங்காலத்தில் இரண்டு மணி நேரம் திறந்து வைக்கப்படும். அதில் விற்பது, கணக்கு எழுதுவது எல்லாம் அங்கத்தினருடைய பொறுப்பு.

நான் எப்படியோ இந்தச் சங்கத்தின் பிரசங்கம் ஒன்றுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கு நிகழ்ந்த சொற்பொழிவுகள் மிக

நன்ருக இருந்தன. நானும் பேச்சில் கலந்து கொண்டேன். சதீஷ்பாபூவுக்கு என்மேல் பிரியம் ஏற்பட்டது. அவர் பல்கலைக் கழகத்தின் சிறந்த மாணவர்களில் ஒருவர். அஷுதோஷ் முக்கர்ஜி தேறிய அதே ஆண்டில் அவரும் பி. ஏ. பரீக்ஷையில் தேறினர். பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது சுவாமி விவேகானந்தரும் அவருடன் படித்தார். சதீஷ்பாபூ வக்கீல் தொழில் ஆரம்பித்துப் பிறகு சிறிது காலத்திற்குள் அதை விட்டுவிட்டார். பிறகு இப்படிப்பட்ட பொதுஜன சேவையில் ஈடுபட்டுவிட்டார். அவர் கல்யாணமே செய்து கொள்ளவில்லை. மாணவர்களுடைய வாழ்க்கையைச் சீர்திருத்த வேண்டுமென்பது அவருடைய விருப்பம். இதற்காகத்தான் அவர் ''டான் சொஸையிடி''யை நிறுவினர். இதற்கு ஸ்ரீ என். என். கோஷ், சிஸ்டர் நிவேதித்தா, சர் குருதாஸ் பானர்ஜீ முதலியவர்களுடைய உதவியும் ஆதரவும் கிடைத்தன. அந்தச் சங்கத்தில் சேர்ந்ததால் என் வகுப்புத் தோழர்களைத் தவிர பல்கலைக் கழகத்தின் சிறந்த மற்ற மாணவர்கள் பலருடன் எனக்கு நெருங்கிய நட்பு உண்டாயிற்று. உதாரணமாக, இன்று பிரபல வித்துவானுகவும் எழுத்தாளராகவும் இருக்கும் வினய்குமார் சர்க்கார், ரிப்பன் கல்லூரியின் பிரின்ஸிபாலாக இருந்து சில ஆண்டுகளுக்குமுன் காலஞ்சென்ற ரவீந்திர நாராயண் கோஷ் முதலானவர்களைச் சொல்லலாம்.

ஆண்டு முடிவில் ''டான் சொஸையிடி''யின் உபகாரச் சம்பளமும் பரிசும் எனக்குத்தான் கிடைத்தன என்பது நினைவு இருக்கிறது. அவற்றைச் சர் குருதாஸ் பானர்ஜீ உற்சாகம் அளிக்கும் அன்பு மொழிகள் சில கூறி எனக்குச் சபையில் அளித்தார். சொஸையிடியில் சேர்ந்ததில் என் கருத்துக்கள் நன்ருகக் கடைச்சல் பிடிக்கப்பட்டு உருப்பெற்றன. பரீக்ஷையில் இருந்த சிரத்தை கலைந்துவிட்டது. பொதுஜன விஷயங்களில் அதிகக் கவனம் செல்ல ஆரம்பித்தது. இவ்விதமான விஷயங்களில் நான் சிறு வயதில் இருந்தே எப்படியோ அதிகக் கவனம் செலுத்தி வந்தேன். பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது அங்கே ஒரு பட்டி மன்றம் இருந்தது. அதில் ஞாயிற்றுக்கிழமை தோறும் நாங்கள் எல்லோரும் கூடுவோம்; அவரவர் எழுதியதைப் படிப்போம்; அல்லது ஏதாவது பேசுவோம். சில சமயங்களில் பள்ளிக்கூடத்து ஆசிரியர்களுக்கு அழைப்பு அளித்துக் கூப்பிடுவோம். ஆனல் இந்தச் சங்கம் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்ததன்று; தனியாக அமைக்கப்பட்டது. அதேபோலக் கல்கத்தாவில் பீகாரிகளின் சங்கம் ஒன்றைப் ''பீகாரி கிளப்''

என்ற பெயரில் அமைத்தோம். அதில் நாங்கள் அனைவரும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் கூடி, அவரவர் எழுதிக் கொண்டு வந்ததைப் படிப்போம்; அல்லது பேசுவோம். இதைத் தவிர, கல்லூரியின் யூனியனிலும் நான் பங்கு எடுத்துக் கொண்டேன். ஓர் ஆண்டு அதன் அமைச்சனுகவும் தேர்ந் தெடுக்கப்பட்டேன். கல்லூரி யூனியன் ஆதரவில் ஒரு மாதாந் திரப் பத்திரிகை வெளிவந்து கொண்டிருந்தது. அதை நடத்து வதற்கு நானும் உதவி புரிந்தேன்.

இப்படிப்பட்ட காரியங்களில் ஈடுபட்டிருந்தாலும் "டான் சொஸைடி"யில் சேருவதற்கு முன் இவை எல்லாம் ஏதும் குறிக்கோள் இன்றி இருந்தன. இவற்றிற்குக் குறிப்பான நோக்கமோ வரையறுத்த செயல் திட்டமோ எதுவும் இல்லை. நான் செய்தித் தாள்களையும் படித்து வந்தேன். காங்கிரஸின் பெயரும் தெரியும். ஆண்டு தோறும் அதன் பேரவை நடக்கும் போது, அங்கே நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளை எல்லாம் முழுக் கவனத்துடன் படிப்பேன். எங்கே பொதுக் கூட்டம் நடத்தாலும், அல்லது சுரேந்திரநாத் பானர்ஜீ போன்ற பெரிய மனிதர்களுடைய சொற்பொழிகள் நடந்தாலும் நான் அங்கே சென்று அச் சொற்பொழிவுகளைக் கேட்பேன். ஆயினும் "டான் சொஸைடி"யின் நடவடிக்கைகளில் மனம் அதிகமாக ஈடுபட்டது. நான் பள்ளிக்கூடத்தில் படித்த நாட்களில் இருந்தே என் தமையனுர் எனக்குச் சுதேசியில் பற்றை உண்டாக்கி விட்டார். ஆனால் அதுவும் இது வரையில் முற்றிலும் முதிர வில்லை. இது "டான் சொஸைடி", சதிஷ்பாபூ ஆகியவர் களுடன் உண்டான நல்உறவின் பயனே ஆகும். முன்னுளில் இருந்தே முளைபோல இருந்து கொண்டு, குறிக்கோள் எதுவும் இன்றியும் விளக்கம் இன்றியும் இருட்டில் இயங்கிக் கொண் டிருந்த எண்ணங்களும் மனப்போக்குகளும் இப்போது துலக்கம் பெற்றன. நான் எதிர் காலத்தைப் பற்றியும் சிறிது சிந்தனை செய்யத் தொடங்கினேன்.

# 10. வங்காளப் பிரிவினைப் புரட்சி

1904இல் எப். ஏ. பரீக்ஷையில் தேறினேன். 1905இல் வங்காளப் பிரிவினைப் புரட்சி ஆரம்பித்தது. நான் முதலில் இருந்தே எல்லாப் பொதுக் கூட்டங்களுக்கும் போய் வந்து கொண்டிருந்தேன். வங்காளப் பிரிவினைப் புரட்சிக்கு எதிரிடை யான கூட்டங்களுக்கும் அடிக்கடி போவேன். அந்தக் காலத்தில் இப்படி அரசியல் கூட்டங்களுக்குப் போவதைப் பற்றி யாதொரு தட்டுத்தடையும் இல்லை. 1905 ஆகஸ்டு 7ஆம் தேதி நடந்த பெரிய கூட்டத்திற்கு நானும் போயிருந்தேன். அதில் வெளி நாட்டுச் சாமான்களைப் புறக்கணிப்பதும், சுதேசியைப் பிரசாரம் செய்வதும் நிச்சயிக்கப்பட்டன. அக்கூட்டத்தில் பேரார்வம் நிலவியது. சுதேசி சாமான்களைத்தாம் இனி உபயோகிப்போம் என்று மக்கள் நோன்பு பூண்டார்கள். எனக்கு இதில் ஒரு கஷ்டமும் இல்லை; ஏனெனில் நான் நெடுங்காலமாகவே சுதேசி சாமான்களைத்தாம் உபயோகித்து வந்தேன். புரட்சி மிகவும் தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. அநேகமாக ஒவ்வொரு நாளும் எங்காவது பொதுக்கூட்டம் நடக்கும். நாங்கள் எல்லோரும் அங்கே போவோம். ஓர் இடத்தில் சுரேந்திர பாபூ, மற்றோர் இடத்தில் விபின் சந்திர பாபூ, இன்னுமோர் இடத்தில் எ. சௌது, வேறோரிடத்தில் அரவிந்த கோஷ், இப்படியாக இவர்களுடைய சொற்பொழிவுகள் நடக்கும். ஹாஸ்டல் பையன்கள் இடையில் அதிகக் கொந்தளிப்பு நில வியது. ஒரு நாளும் சுதேசி சாமான்களை உபயோகப் படுத் தாதவர்கள் கூடச் சுதேசி ஆரம்பித்து விட்டார்கள். பெரியவர் களைப் பற்றி எனக்குத் தெரியாது, ஆனால் மாணவர்கள் இடையில் ஒரு புது ஆவேசமும் உற்சாகமும் பிறந்து விட்டன.

ஒரு சிறிய சம்பவத்தைப் பற்றி இங்குக் கூறுவது பொருந் தும். நான் சுதேசியே உபயோகித்து வந்தாலும், இதனால் வகுப் பில் ஓர் இடைஞ்சல் உண்டாயிற்று. வகுப்பில் நடத்தப்படும் பிர சங்கங்களை அன்றாடம் குறிப்பு எடுப்பேன். பென்சிலினால் எழுதி னால் அழிந்து போகும் என்ற பயம். ஆகையால் பேனா, மைக்கூடு எடுத்துச் செல்வேன். ஒரு நாள் "ஸ்டைலோ பென்" என்று ஒன்று கடையில் வந்திருக்கிறதாக அறிந்தேன். அதில் மை நிரப்பக்கூடும். ஆகையால் மைக்கூடு எடுத்துச் செல்லத் தேவை இல்லை. இது வெளிநாட்டுப் பொருள். அக்காலத்தில் "ஒயிட்வே

லேட்லா '' கடையில் பாதிவிலைக்கு விற்கப்பட்டு வந்தது. நான் ஒன்று வாங்கினேன். ஹாஸ்டல் தோழர்களுக்கு இது தெரியும். அவர்கள் என்னுடன் முரண்டு சண்டை போட்டார்கள். கடிதம் எழுதுவதற்காக வெளிநாட்டுக் காகிதம் ஒருவன் வைத்திருக்கிறான் என்பது எனக்குத் தெரியும். அவனும் அவர்களுள் ஒருவன். மற்றொருவன் சில நாட்களுக்கு முன்புதான் வெளி நாட்டுத் துணியில் புதிதாக விலையுயர்ந்த கோட்டு ஒன்றைத் தைத்திருந்தான். என்றைக்காவது ஒரு நாள் வெளிநாட்டுத் துணிகள் எல்லாவற்றையும் ஹோலி கொளுத்துவது என்று மாணவர்கள் நிச்சயித்திருந்தார்கள். அந்தச் சாமான்களை ஹாஸ்டலின் முற்றத்திலேயே கொளுத்துவதென்றும் தீர்மானித் தார்கள். ஏதோ சில துணிமணிகளைத்தாம் அன்று எரிக்கலாம் என்று எல்லாரும் நினைத்தார்கள். வெளிநாட்டுத் துணிகள் எல்லாவற்றையும் எரித்துவிடவேண்டும் என்ற எண்ணம் எவர் மனத்திலும் இல்லை. ஏனெனில் பெரும்பாலும் எல்லாரிடத்திலும் வெளிநாட்டுத் துணிகள்தாம் பெருவாரியாக இருந்தன.

எல்லாரும் என்னை மிகவும் தொந்தரவு செய்தபோது, நான் அவர்களைப் பார்த்து, ''எல்லாரும் அவரவர்களுடைய பெட்டி களைத் திறந்து காட்டுங்கள், யார் யாரிடம் எவ்வளவு வெளி நாட்டுத் துணிகள் இருக்கின்றனவோ, அத்தனையையும் இன்றே ஹோலி கொளுத்தி விடுங்கள், நானும் என் பெட்டியைத் திறந்து காட்டுகிறேன், என்னிடமிருந்து கிடைக்கும் வெளிநாட்டுத் துணி எதுவானாலும் சரி, அதை இதோ இங்கேயே எரித்து விடு கிறேன் '' என்றேன். உடனே எல்லாரும் விழித்துக் கொண்டார் கள். அந்தப் பேனாவைத் தவிர வேறு விதேசிப் பொருள் யாதும் என்னிடம் இல்லை என்பது அவர்களுக்குத் தெரியாது. நான் பெட்டியைத் திறந்து எல்லாச் சாமான்களையும் ஒவ்வொன்றாக அறையில் பரப்பினேன். உடனே கூட்டம் நழுவிவிட்டது. பிறகு யாரும் என்னிடம் இவ்விதமான வம்புக்கு வரவில்லை. அந்த நண்பன் தன்னுடைய விதேசி காகிதத்தைக் கொளுத்தி விட்டான். மற்றொரு நண்பன் தன் கோட்டை அவசரப்பட்டுக் கொண்டு எரிப்பது சரியன்று என நினைத்தான். ஆனால் அதை அன்றிலிருந்து என்றுமே அணிந்து கொள்வதற்காக வெளியே எடுக்கவில்லை என்பது எனக்கு நினைவிருக்கிறது. இப்படியே தான் மற்றவர்களும் செய்தார்கள்.

இவ்வண்ணமாக 1905ஆம் ஆண்டு ஒரு பெரிய புரட்சிகர மானதும் விழிப்பு ஊட்டுவதுமான ஆண்டாக அமைந்தது.

முக்கியமாக மாணவர்களிடம் ஒரு புத்துயிர் நிலவத் தொடங்கியது. பலர் படிப்பையும் விட்டு விட்டார்கள். அந்தச் சமயத்தில் கல்கத்தாவில் தேசியக் கல்விக்காக ஒரு பெரிய ஸ்தாபனம் திறக்கப்பட்டது. ஸ்ரீ சதீஷ்பாபூ அங்கே பணி செய்யப் போய் விட்டார். "டான் சொஸைடியி"யின் வேலை சில நாட்களுக்குப் பிறகு சோர்வடைந்து விட்டது. சொஸைடியின் அன்பர்களில் சிலரும் அந்த ஸ்தாபனத்தில் சேர்ந்து விட்டார்கள். நான் இந்தக் கூட்டங்கள் எல்லாவற்றிற்கும் தவருமல் போய்வந்து கொண்டிருந்தேன். பேச்சுக்களைக் கேட்டு வந்தேன். ஆனுல் கல்லூரியை விட்டுவிட்டுத் தேசீய ஸ்தாபனத்திற்குப் போகும் ஆசை என்றுமே எழவில்லை. எனக்கு அதனுடைய நோக்கம் தெளிவாகத் தெரியவில்லை. இப்படியாகக் கல்லூரியை விட்டு விட்டு எதிர் காலத்தை ஒரேயடியாக மாற்றிக் கொள்ள என் உள்ளம் இடம் கொடுக்கவில்லை. சிறு வயதிலிருந்தே நான் ஒரு பயந்த ஆசாமி. எந்தக் காரியத்திலும் அவசரப்பட்டு அடி எடுத்துவைப்பது எனக்கு எப்பொழுதுமே மிகவும் கடினமான விஷயம். அக்காலத்தில் இப்படி ஒரு வழியில் நுழைவதைப் பற்றிப் பேச்சு மும்மரமாகக் கிளம்பவில்லை. என் நினைவிற்கு எட்டியவரையில், சுதேசிப் புரட்சியிலும், வங்காளப் பிரிவினைப் புரட்சியிலும், 1920–22 புரட்சியில் நிகழ்ந்தது போல, மாணவர்கள் பள்ளிக்கூடத்தை விட்டு விடுவது என்ற அம்சம் அக்காலத்து நடைமுறைத் திட்டத்தில் சேர்க்கப்படவில்லை. இவ்வண்ணமாக அந்த விஷயங்களில் ஒரு விதமாக வெளியே நின்றபடியே மனம் ஒன்றி இருந்தேன். ஆனுல் உள்ளே நுழையவில்லை.

இப்படிப்பட்ட புரட்சிகளின் விளைவாகப் புத்தகங்களைப் படிக்கும் நேரம் குறைவு பட்டது. பரீக்ஷையின் பலனைப் பற்றி அசிரத்தையும் உண்டாயிற்று. பரீக்ஷை மார்ச்சு மாதத்தில் நடக்கும். செப்டம்பர் அக்டோபரில் துர்கா பூஜைக்காகவும் தசராவுக்காகவும் விடுமுறை வரும். அது சாதாரணமாக ஒரு மாதத்திற்கு மேற்கொண்டு இருக்கும். இந்த ஆண்டு விடுமுறையில் நான் கல்கத்தாவிலேயே தங்கிவிட்டேன். ஏனெனில் இப் போதாவது ஏதாவது படிக்கவேண்டும். இல்லாவிட்டால் பரீக்ஷையில் தேறுவது கடினமாகிவிடும் என்று உணர்ந்தேன்.

கல்லூரிப் பரீக்ஷை நடந்தேறியது. இதில் என்னுல் தேற முடியாது என்று எனக்குச் சிறிதுகூடப் பயம் இருக்கவில்லை. ஆனுல் மற்றவர்களைவிட மார்க்குக் குறைவாகப் பெறலாம் என்று நினைத்தேன். பரீக்ஷைக்கு முன் எங்காவது வெளி ஊருக்குச்

சென்று ஐந்தாறு வாரங்களைக் கழித்தால், அங்கே அமைதியுடன் படித்துப் பரீக்ஷைக்குத் தயார் செய்ய முடியும் என்று சில நண்பர்கள் கூடி ஆலோசனை செய்தார்கள். சந்தால் பர்காண ஜில்லாவில் உள்ள ஜாம்தாரா என்ற இடத்திற்குப் போவது என்று நாங்கள் முடிவு செய்தோம். அங்கே ஒரு நண்பர் சிறிய வீடு ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொடுத்தார். கல்லூரிப் பரீக்ஷையின் முடிவை அறிய ஏதும் ஏற்பாடு செய்யாமலேயே அங்கே சென்று விட்டோம்.

ஆங்கிலத்திலும் சரித்திரத்திலும் - அதில் பொருளாதாரமும் அரசியலும் அடங்கி யிருந்தன - ஹானர்ஸ் எடுத்துக் கொண்டேன் என்று சொல்லியிருக்கிறேன். சரித்திரப் பரீக்ஷைக்குச் சோதகர் மிஸ்டர் பர்சிவல். அவர் சீக்கிரமே பரீக்ஷை நடத்தி, எங்களுக்கு மார்க்கையும் தெரிவித்துவிட்டார். அதில் நான் எல்லாருக்கும் மேலாக முதலிடம் பெற்றேன். மார்க்கும் நன்ருகக் கிடைத்திருந்தது. மற்றப் பாடங்களைப் பற்றித் தகவல் இல்லை. அக்காலத்தில் பிரின்சிபால் விஞ்ஞானம் கற்பித்து வந்தார். ஆகையால் எங்கள் படிப்புடன் அவருக்குத் தொடர்பு இல்லை. எங்களை அவருக்குத் தெரியவே தெரியாது. எந்தப் பேராசிரியரும் பரீக்ஷையின் முடிவை எந்த மாணவனுக்கும் தெரிவிக்கக் கூடாதென்று அவர் அறிக்கை வெளியிட்டார். ஆனல் இதற்கு முன்னமே மிஸ்டர் பர்சிவல் எங்களுக்கு முடிவைத் தெரிவித்து விட்டார்.

நாங்கள் ஜாம்தாராவுக்குச் சென்ற பிறகு பரீக்ஷையின் முடிவு அறிவிக்கப்பட்டது. பிரின்சிபால் முடிவுகளை அறிவிக்கும் போது, என் பெயர் வந்ததும், நான் ஆங்கிலத்தில் ஹானர்ஸ் பரீக்ஷை கொடுக்கலாம் என்றும், ஆனல் சரித்திரத்தில் கூடாதென்றும் சொன்னர். அங்கே கூடியிருந்த என் தோழர்கள் திகைத்துப் போய்விட்டார்கள். ஒருவன் துணிவாக "அவன் கட்டாயம் தேறியிருப்பான்" என்ருன். "அப்படித் தேறியிருந்தால் பரீக்ஷை கொடுப்பதற்கு அனுமதி கட்டாயம் கிடைத்திருக்கும்" என்று விடைவந்தது. "அவன் எல்லாப் பரீக்ஷையிலும் முதல் இடம் பெற்று வந்திருக்கிருன், உபகாரச் சம்பளமும் கிடைத்திருக்கிறது. இதில் மட்டும் தேறவில்லை என்பது இருக்கவே இருக்காது" என்று மேற்கொண்டு கூறினன். அவன் கூறியதையே பிரின்சிபால் திருப்பிக்கூறி "எல்லாவற்றிலும் சிறப்பாகத் தேறினன், ஆகையால் முதலிடம் பெற்ருன், உபகாரச் சம்பளமும் கிடைத்தது; இதில் தேறவில்லை, ஆகையால் இம்

முறை பரீக்ஷை எழுதுவதற்கு அனுமதி கிடைக்கவில்லை'' என்ருர். என் நண்பன் மீண்டும் ஒரு முறை அழுத்தமாய், ''எங்களுக்கு எல்லாம் தெரிந்து விட்டது, மார்க்குக் கூடத்தெரியும். அவன் அப்பாடத்தில் நிறைய மார்க்கும் முதல் இடமும் பெற்றிருக்கிருன்'' என்று கூறினுன். இதன்மேல் பிரின்சிபால் எரிந்து விழுந்து, ''அதுபோல நடக்க முடியாது, யாருக்கும் மார்க்கைச் சொல்லக்கூடாதென்று நான் அறிக்கை விடுத்திருக்கிறேன்'' என்ருர். இப்படிக் கூறிவிட்டு, பரீக்ஷையில் உட்காருவதற்கு அனுமதி கிடைக்காது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். தானே மார்க்குகளை எல்லாம் மிகவும் கவனத்துடன் பார்த்திருப்பதாகவும், தவறு எதுவும் இல்லை என்றும் திரும்பத் திரும்பச் சொன்ருர்.

என் நண்பன் பயந்து போய்விட்டான். உடனே ஜாம்தாராவில் இருந்த எனக்குத் தந்தி கொடுத்தான். தந்தி கிடைத்ததும் நான் அவனைவிடக் கலங்கிப்போய்விட்டேன். எங்களுக்குள் கலந்து ஆலோசனை செய்ததில், நான் கல்கத்தா போவதுதான் சரி என்று பட்டது. கல்கத்தா போய்ச் சேர்ந்ததும், நேரே மிஸ்டர் பர்சிவல் வீட்டிற்குச் சென்றேன். அவர் சிறந்த அறிஞர் என்று கருதப்பட்டார். அவர் கற்பிக்கும் முறையும் நன்ருக இருந்தது. அவருடைய அறிவாலும், கற்பிக்கும் திறத்தாலும் பையன்கள் அவரிடம் வசியப்பட்டுக் கிடந்தார்கள். அவர் கல்யாணமாகாதவர். வீட்டில் தன்னந்தனியே இருந்தார். புத்தகங்கள் தாம் அவருடன் வாழ்ந்தன. மிகவும் கரகரப்பான தன்மை உடையவர். யாரோடும் கூடிக்குலாவமாட்டார். சரியான நேரத்திற்குக் கல்லூரிக்கு வருவார்; வகுப்பிற்குச் சென்று கற்பிப்பார்; பிறகு நேரே வீட்டிற்குப் போய்விடுவார். அவர் அங்கத்தினராக இருந்த பல்கலைக் கழகத்து ஆட்சிக்குழு (செனேட்) முதலியவற்றின் கூட்டங்களுக்கு மட்டும் போவார். மற்றப்படி வீட்டிலேயே படித்துக் கொண்டிருப்பார். தம் வேலையில் மிகத் திறமையாளர். பிரசிடென்சி கல்லூரியில் 25–30 வருஷம் இருந்தார். பிறகு சிறிது காலத்திற்குப் பிரின்சிபாலாகக்கூட இருந்தார். கருமமே கண்ணுக இருப்பவர். வகுப்பில் அல்லது வேறு எங்கும் ஒரு நிமிஷம் கூட வீணுக்கமாட்டார். சாதாரணமான உடைதான் அணிவார். தாட்-பூட்டாக இருப்பவர்களைக் கண்டால் அவருக்குப் பிடிக்காது. பாடம் கற்பிப்பதோடு மட்டும் தான் தொடர்பு வைத்திருந்தார் ஆயினும் அவருடைய எளிய தன்மை, கருமத்தில் கருத்து, வெளித் தோற்றத்திற்குக் கரகரப்

பான தன்மை, கண்டிப்பு இவற்றின் சாயை எங்கள் மேல் வலுவாகப் படிந்தது. நாங்கள் அவரிடம் மிகவும் பயப்படுவோம். யாரும் இதுவரையில் அவர் வீட்டிற்குப் போனதில்லை. அவரிடம் ஒரு பழக்கம் உண்டு. எத்தனை பரீக்ஷைகளுக்கு அவர் சோதக ராக இருக்கின்றாரோ (அது கல்லூரிப் பரீக்ஷை ஆயினும் சரி), பரீக்ஷை கொடுப்பவர்களுடைய பெயர் அட்டவணை ஒன்று எழுதி என்ன மார்க்குக் கொடுக்கிறாரோ அதைக் குறித்து வைத்துக் கொள்வார். எப்போதாவது யாரேனும் மாணவன் வேலை தேடு வதற்காக அவரிடம் சான்றுச் சீட்டுக் கேட்டால், அவன் பரீக்ஷை கொடுத்த ஆண்டைக் கேட்டுத் தெரிந்து கொண்டு பிறகு தம் முடைய ரிஜிஸ்தரைப் பார்த்து, அதில் கண்டுள்ள பரீக்ஷைப் பலனை ஆதாரமாகக் கொண்டு நற்சான்று எழுதி அடுத்த நாள் கொண்டுவந்து கொடுப்பார். அவருடைய சான்றுச் சீட்டு களுக்கு அதிகச் செல்வாக்கு உண்டு.

நான் துணிவுடன் அவர் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தேன். பயமாயிருந்தாலும் வேறு வழியில்லை. அவர் ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் எனக்குப் பாடம் கற்பித்திருந்தார். ஆகை யால் அவருக்கு என்னைத் தெரியும். பார்த்ததுமே, "எதற்காக வந்தாய்?" என்றார். நான் என் நோக்கத்தைத் தெரிவித்தேன். பரீக்ஷை முடிந்து சில நாட்கள் தாம் ஆயின. அதனால் அவருக் குப் பலன் நினைவிருந்தது. "எனக்கு நன்றாக ஞாபகம் இருக் கிறது, எல்லாருக்கும் தலைமையாக வந்தாய், மார்க்கும் நன்றாய்ப் பெற்றிருக்கிறாய், அப்படி இருந்தும் ஏன் இப்படி ஆயிற்று?" என்றார். நான் தந்தியைக் காட்டினேன். அவர் தம் ரிஜிஸ்தரை எடுத்துப் பார்த்து விட்டு, "உன்னுடைய ஞாபகம் சரிதான். உனக்கு மார்க்கு நிறையக் கிடைத்திருக்கிறது, முதலில் வந்திருக் கிறாய். என் கையாலேயே பரீக்ஷைப் பலனைப் பிரின்சிபாலிடம் கொடுத்தேன், அதில் ஏதும் பிழையில்லை. அங்கே ஆபீஸில் ஏதாவது பிழை ஏற்பட்டிருக்கும், கல்லூரிக்கு வந்து என்னைப் பார்" என்றார்.

எனக்குப் போன உயிர் வந்தது. சீக்கிரமே சென்று கல்லூரி வாசற்படியில் நின்று கொண்டிருந்தேன். அவர் சரியான நேரத்திற்கு இரண்டொரு நிமிஷங்கள் முன்னாடியே வந்து, நேரே பிரின்சிபாலின் அறைக்குள் போய்விட்டார். அங்கே என் மார்க்கு வேறொரு பையனின் பெயருக்கு எதிரில் எழுதியிருப் பதைக் கண்டார். இதனால்தான் எனக்கு ஆனர்ஸில் முழு மார்க்குக் கிடைக்கவில்லை. இதன் காரணமாகத் தவறியும்

விட்டேன். அந்தப் பையனுடைய மார்க்கு என் பெயருக்கு நேரே எழுதப்பட்டிருந்தது. பிரின்சிபால் தமது பிழையை ஒப்புக் கொண்டு தம் வருத்தத்தைத் தெரிவித்து, ''பிழை நேர்ந்து விட்டது, இனி அவன் பரீக்ஷை எழுதலாம் என்று அவனிடம் சொல்லுங்கள்'' என்றுர்.

நான் ஆவலாகக் காத்துக் கொண்டிருந்தேன். அவர் அங்கிருந்து வெளியே வந்ததும் எல்லா விஷயங்களேயும் என்னிடம் கூறினுர். கூறிவிட்டு வகுப்பிற்குப் போய்விட்டார். இந்தக் குழப்பத்தால் இரண்டு நாட்கள் வீணுகப் போயின. ஜாம்தாராவிலிருந்து கல்கத்தாபோய் வரச் சிறிது செலவும் ஆயிற்று. சிறிது காலத்திற்குக் கவலேயும் விளேந்தது. வேருெரு பயனும் உண்டாயிற்று. எவன் பெயருக்கு எதிரே என் மார்க்கு எழுதப் பட்டதோ, அந்த நண்பனுக்கு ஹானர்ஸ் பரீக்ஷை கொடுக்க வாய்ப்புக் கிடைத்தது. பிழையைத் திருத்துவதற்கு முன்னமே அவனுடைய மனு முறைப்படி எழுதப்பட்டு பிரின்சிபாலின் கையெழுத்துடன் பல்கலேக் கழகத்திற்கு அனுப்பப்பட்டுவிட்டது. அவன் மிகவும் பாடுபட்டுப் படித்துப் பல்கலேக் கழகப் பரீக்ஷையில் ஹானர்ஸுடன் தேறினுன். நான் முன்னமே கூறியுள்ளபடி, எண்ட்ரன்ஸ், எப். ஏ., பி. ஏ. ஆகிய மூன்று பரீக்ஷைகளுக்கும் எனக்கு அனுமதி கிடைப்பதில் இடையூறுகள் விளேந்தன. ஆயினும் நான் இவை மூன்றிலும்—முதல் ஆண்டுப் பரீக்ஷைகளிலும் சரி, பல்கலேக் கழகத்துப் பரீக்ஷைகளிலும் சரி - ஒன்று விடாமல் முதலாக நின்றேன்.

பரீக்ஷை நாள் நெருங்கி வந்ததும் நான் கொஞ்சம் பயம் கொண்டேன். இந்த முறையும் முதலாக வராவிட்டால் என்னேக் குறை கூறுவார்கள் என்ற கவலே உதித்தது. ஆனல் இம்முறை ஆசை தீவிரமாக இல்லே. மேலும் எப். ஏ. க்குத் தயார் செய்தது போல இதற்கும் செய்வோம் என்ருல், இனி அதற்குக் காலமும் இல்லே. பரீக்ஷையின் முடிவில் ஹானர்ஸ் மார்க்கைக் கொண்டு தான் ஸ்தானம் கிடைக்கும். ஆகையால் நான் ஹானர்ஸ் பாடங்களில்தாம் கவனம் செலுத்தினேன். வெறுமனே மட்டும் தேற வேண்டிய தத்துவப் பாடத்தை விட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். ஆரம்பத்திலும் கூட டாக்டர் பி. கே. ராயின் பிரசங்கங்களேத்தாம் கவனமாகக் கேட்டுவந்தேன். புத்தகங்களேக் குறைவாகத்தான் படித்தேன். இதை ஒட்டி, ஒருநாள் நடந்த சம்பவம் ஒன்று தெ[illegible]ர்க்கு மிக்க ஊக்கத்தை அளித்தது. ஒரு நாள் டாக்டர் ராய்க்[illegible]டல் நலமில்லே. அன்று அவர் பாடம் கற்பிக்கவில்லே.

சில கேள்விகளைக் கொடுத்து எல்லாரையும் அவற்றிற்கு விடை எழுதும்படி சொன்னார். எல்லாரும் எழுதினார்கள். நான் புத்தகங்களைப் படித்ததில்லை. பிரசங்கங்களில் அவர் என்ன சொன்னாரோ அதையே நான் கூடியவரையில் எழுதினேன். டாக்டர் விடைத்தாள்கள் எல்லாவற்றையும் வீட்டிற்கு எடுத்துச் சென்று படித்தார். அப்படித் திடீரென்று வைத்த பரீக்ஷையின் முடிவை அடுத்த நாள் அவர் சொல்லியபோது, நான்தான் எல்லாருக்கும் தலைமையாக நிற்பதாகவும், அந்தப் பாடத்தில் "ஹானர்ஸ்" எடுத்துக் கொண்டவர்களைவிட அதிக மார்க்கு எனக்குக் கிடைத்திருப்பதாகவும் கூறினார். இதற்குப் பிறகு, தத்துவத்திற்காக அதிகம் படிக்க வேண்டிய அவசியம் இல்லை என்ற நம்பிக்கை மேலும் அதிகமாயிற்று.

பல்கலைக் கழகப் பரீக்ஷைக்கு முந்திய கல்லூரிப் பரீக்ஷையிலும், எனக்கு அந்தப் பாடத்தில் ஹானர்ஸ் பையன்களைவிட அதிக மார்க்குக் கிடைத்தது. இதனால் ஜாம்தாராவிலும் அப்பாடத்தைப் பற்றி நான் கவலைப் படவில்லை. பரீக்ஷை தேதி நெருங்கிவிட்டது. ஆங்கிலத்தில் பரீக்ஷை ஆகிவிட்டது. அதற்குப் பிறகு தத்துவப் பரீக்ஷை இருந்தது. இரண்டு மாதகாலமாக நான் தத்துவப் புத்தகம் எதையும் படிக்கவில்லை. அன்று மாலை திடீரென்று ஒரு பயம் கண்டது. அடுத்த நாள் தத்துவத்தில் ஏதும் விடை எழுத முடியாதென்று பயந்தேன். இப்படி நினைக்க ஆரம்பித்தவுடன், ஒன்றுமே நினைவில்லை என்பது போலத் தோன்றிற்று. புத்தகம் படிப்பதற்கோ இனி நேரம் இல்லை. இரவு முழுதும் உட்கார்ந்து குறிப்பு முதலியவற்றை ஒருமுறை பாடம் செய்தால் ஒருவேளை தேறுவதற்குத் தகுதியாக எழுத முடியும் என்று நினைத்தேன். தத்துவத்தில் மனோதத்துவம், ஒழுக்கநெறி, தர்க்க சாஸ்திரம் என்று மூன்று பாடங்கள் படிக்க வேண்டும். மனோதத்துவத்தைப் படிக்கத் தொடங்கினேன். வழக்கம்போலச் சாயங்காலம் ஆனதுமே தூக்கம் வந்துவிட்டது. சிறிது நேரத்திற்குப் பின் திடுக்கிட்டு விழித்ததும், இப்பொழுது தூங்கிவிட்டு இரவு 2-3 மணிக்கு எழுந்திருந்து எல்லாவற்றையும் ஒரு முறை பாடம் செய்துவிடுவது நன்றென்று நினைத்தேன். எனக்கு வேலைக்காரக் கிழவன் ஒருவன் இருந்தான். "சரியாக இரண்டு மணிக்கு எழுப்பிவிடு" என்று அவனிடம் சொன்னேன். இரண்டு மூன்று நாட்கள் பரீக்ஷையினால் அலுப்பு அதிகம். மிகவும் களைத்துப் போய் விட்டேன். தூக்கம் பலமாக வந்தது. வேலைக்காரன், பாவம்,

இரவு முழுவதும் உட்கார்ந்தே இருந்தான். இரண்டு மணி அடித்ததோ இல்லையோ என்னை எழுப்ப ஆரம்பித்தான். ஆனால் அவன் எவ்வளவோ முயன்றும் என் தூக்கம் கலையவில்லை. சுமார் 4½ மணிக்குத் தூக்கம் கலைந்தது. கடியாரத்தைப் பார்த்தேன். மிகவும் நடுநடுங்கிப் போய்விட்டேன். வேலையாள் மேல் கோபம் வந்தது. அவன், "நான் எழுப்பி எழுப்பிப் பார்த்தேன், நீ எழுந்திருக்காவிட்டால் அதற்கு நான் என்ன செய்வது?" என்ருன். உடனே பரபரக்க நோட்டுப் புத்தகத்தைப் புரட்டினேன். மனோதத்துவத்தையும் ஒழுக்க நெறியையும் ஒரு புரட்டுப் புரட்டி விட்டேன். இப்பாடங்களை டாக்டர் ராயும் சொல்லிக்கொடுத் திருந்தார். ஆனால் தர்க்க சாஸ்திரத்தை பார்ப்பதற்கு நேரம் கிடைக்கவில்லை. பயம் பிடித்துப் போய், ஒரு நண்பனிடம் சென்று எல்லா விஷயத்தையும் கூறினேன். அவன் தர்க்க சாஸ்திரப் புத்தகத்தின் அதிகாரத் தலைப்புகள் ஒவ்வொன்றையும் சொல்லிக் கொண்டு போனான். ஒவ்வொரு தலைப்பைப் பற்றியும் ஏதோ இரண்டொரு வார்த்தைகளும் கூறினான். அப்போது ஏதோ புத்தம் புதியதொரு விஷயத்தை முதன் முதல் கேட்கிற தாகவே தோன்றிற்று. இதற்குள் பரீக்ஷைக்குப் போவதற்கு நேரமாகிவிட்டது. ஓட்டமாய் ஓடிப்போய் 10, 15 நிமிஷங்களில் பல்துலக்கிக் குளித்துவிட்டு ஏதோ கொஞ்சம் சோற்றை அள்ளி அடித்துப் போட்டுக் கொண்டு பல்கலைக் கழகத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். நான் போய்ச் சேர்வதற்குள் முதல் மணி அடித் தாகி விட்டது. ஓடிப்போய் இடத்தில் உட்கார்ந்தேன். கையில் கேள்வித்தாள் வந்து நின்றது. ஒரு கேள்விக்காவது விடை எழுத முடியுமோ இல்லையோ என்று கூடப் புரியாதபடி அத்தனை பயந்து போய்விட்டேன். இதில் தவறிவிட்டால் மற்றப் பாடங் களில் ஹானர்ஸ் கிடைத்தும் என்ன பயன் என்ற அச்சம் உண்டாயிற்று. அக்காலத்தில் ஒருவன் ஏதாவது ஒரு பாடத்தில் தவறினாலும் எல்லாப் பாடங்களிலும் தவறினதாகக் கொள்ளப் படும்.

கேள்வித்தாள் கையில் கிடைத்ததும் மனத்தை அமைதிப் படுத்திக் கொள்ள முயற்சி செய்தேன். கேள்விகளை மெல்ல மெல்லப் படித்தேன். முதல் கேள்விக்கு விடை எழுத முடியும் போலத் தோன்றிற்று. எழுத ஆரம்பித்தேன். முடிந்ததும், விடை அப்படி மோசமில்லை என்று பட்டது. இப்படியாக இரண் டாவது கேள்வி, அப்புறம் மூன்றாவது என்று எல்லாவற்றிற்கும் விடை எழுதி முடித்தேன். மணியும் ஆகிவிட்டது. பரீக்ஷை

யில் தவறமாட்டேன் என்ற நம்பிக்கை இப்போது மனத்தில் உதித்தது. பயம் முழுதும் போய்விட்டது. அரை மணிநேரம் இடைவிட்டு அடுத்த கேள்வித்தாள் கிடைத்தது. அதிலும் அப் படியே ஆயிற்று. அநேகமாக எல்லாக் கேள்விகளுக்கும் விடை எழுதிவிட்டேன். ஒன்றுதான் மீதம் இருந்தது. அதற்கும் ஏதாவது விடை எழுதமுடியும், ஆனால் முற்றிலும் அன்று. அது சம்பந்தமான அதிகாரத்தின் தலைப்பை நான் பார்த்திருந்தேன், என் நண்பனும் அதன் சுருக்கத்தைச் சொல்ல ஆரம்பித்தான், ஆனால் அவன் முடிக்க இயலவில்லை. நான் மணியைப் பார்த்து விட்டு ஹாஸ்டலை விட்டு விரைவில் வந்துவிட்டேன். அந்தக் கேள்விக்கு நான் விடை அளிக்கவில்லை; நேரத்திற்கு முன்னமே வெளியே வந்துவிட்டேன். தவறிவிடுவோம் என்ற பயம் இனி இல்லை என்ற நம்பிக்கை வந்துவிட்டது. முடிவு வெளிபட்ட போது, சரித்திரத்தில் எனக்கு முதலிடம் கிடைத்திருந்தது என்பதையும் தத்துவத்திலும் நன்றாக மார்க்குக் கிடைத்திருந்தது என்பதையும் கண்டேன். எல்லாப் பாடங்களில் கிடைத்த மார்க்கையும் கூட்டினால் நான் தான் எல்லாருக்கும் மேலே நின்றேன். மாதத்திற்கு ரூ. 50ம், மற்றொன்று ரூ. 40ம் கொண்ட உபகாரச் சம்பளங்கள் இரண்டும் எனக்குக் கிடைத்தன. இம் முறை பெற்ற பலன் முயற்சியின் திருவினை அன்று. ஏனெனில் நான் கொஞ்சம் கூட முயற்சி செய்யவில்லை.

## 11. கடல் பிரயாணத்தைப்பற்றி வாக்குவாதம்

நான் எப். ஏ. பரீட்சை எழுதிவிட்டு 1904இல் கோடை விடுமுறையில் ஜீராதேயீக்கு வந்தபோது, என் தமையனாரும் வீட்டில் இருந்தார். பரீக்ஷையின் முடிவை எதிர்பார்த்துக் கொண்டு இருந்தோம். டாக்டர் கணேஷ் பிரசாத் வெளிநாட்டில் பயிற்சி பெற்றுத் திரும்பி வருகிறார் என்பதைச் செய்தித்தாளில் பார்த்தோம். அவர் எங்கள் சப்ரா (சாரன்) ஜில்லாவில் உள்ள பலியாவைச் சேர்ந்தவர். அவருடைய தாய்ப் பாட்டன் வீடு சப்ராவில் இருந்தது. அவர் சாதியிலும் காயஸ்து. அலகாபாத் தில் பி. எஸ். ஸி. பட்டம் பெற்று, மேற் படிப்பிற்காக இங்கிலாந்

திற்கும், அங்கிருந்து ஜெர்மனிக்கும் சென்றிருந்தார். கணித சாத்திரத்தில் அவர் பெரும் பெயர் பெற்றவர். திரும்பி வந்த பின் அவரைச் சாதியில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று, அவர் இந்நாட்டிற்குத் திரும்பி வருவதற்கு முன்னிருந்தே ஒரு கிளர்ச்சி எழுந்தது. இதனுல் சப்ராவில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. அப்பொழுதுதான் தலை எடுத்து வந்த வக்கீல் பாபூ பிரஜ்கிஷோ பிரசாத் தாம் சீர்திருத்தக் கட்சிக்குத் தலைவர். எதிர்க் கட்சிக்கு, எல்லாராலும் மதிக்கப்பட்டவரும் பெரிய பேர் பெற்றவருமான கிழவர் ஒருவர் தலைவர். பிரஜ்கிஷோ பாபூ எங்கள் வீட்டிற்கு வந்து, என் தமையனுருடன் கலந்து பேசிய பிறகு அப்பாவிடம் சென்று, டாக்டர் கணேஷைச் சாதியில் ஏற்கவேண்டும் என்றும், அவருக்கு அளிக்கப் போகும் சாதி விருந்திற்கு அப்பாவும் வரவேண்டும் என்றும் கூறினுர்.

அதுவரையில் பீகார் முழுவதிலுமே, வெளி நாட்டிற்குச் சென்று திரும்பிவந்த காயஸ்து மிஸ்டர் சச்சிதானந்த சின்ஹா ஒருவர்தாம். அவர் திரும்பி வந்து பதினென்று பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவர் திரும்பி வந்தபோது ஏதோ விவாதம் நடந்தது. ஆனுல் அவர் பிராயச்சித்தம் செய்துகொள்ளவோ, முன்போலச் சாதிக் கட்டுப்பாடுகளுக்கு உட்படவோ ஒப்புக் கொள்ளவில்லை. ஆகையால் அவர் முறைப்படி சாதியில் சேர்த்துக்கொள்ளப் படவில்லை. டாக்டர் கணேஷ் பிரசாத் ஊருக்கு வருவதற்கு முன்னதாகவே அவருக்கு எழுதிக் கேட்டு, அவர் சாதிக் கட்டுப்பாடுகளுக்கு உட்படுவார் என்று உறுதிப் படுத்திக் கொள்ளப்பட்டது. வெளி நாட்டிலும் கூட அவர் எளிய வாழ்க்கைதான் வாழ்ந்து வந்தார். மாமிசம், மீன், மது முதலியவற்றை என்றுமே உண்டதில்லை. இவ்விதமாகத்தான் கடல் பிரயாணத்திற்கு அக்காலத்தில் வழி செய்ய முடியும் என்று அவரும் சீர்திருத்தக்காரர்களும் கருதினுர்கள். மிஸ்டர் சின்ஹா திரும்பி வந்ததற்குப் பின் பத்து ஆண்டுகள் வரையில் அக் கட்டுப்பாடுகளை மீறிக்கொண்டு வெளிநாட்டிற்குச் செல்ல யாருக்கும் துணிவு வரவில்லை. ஆகையால் இப்போது இந்த நிபந்தனையை ஏற்றுக் கொண்டுதான் வழி செய்ய வேண்டியதாயிற்று.

டாக்டர் கணேஷின் வீட்டிற்குச் சென்று அவருடன் சேர்ந்து உண்பது என்ற கருத்துடன் பாபூ பிரஜ்கிஷோர் சிலரைத் தயார் செய்தார். அப்பாவையும் வரவேண்டுமென்று மிகவும் வற்புறுத்தினுர். ஆனுல் அவர் இசையவில்லை. ஆயினும் “இவ்விரு சகோதரர்களையும் அனுப்புகிறேன்” என்று கூறினுர்.

டாக்டர் கணேஷ் திரும்பி வந்தார். பலியாவில் விருந்திற்கு நாள் நிச்சயிக்கப்பட்டது. பாபூ பிரஜ்கிஷோரின் தூண்டுதலினல் வெளியூரிலிருந்து (சப்ராவிலிருந்து) இருபது பேர் போலப் பலியாவிற்குச் சென்ருேம். அவர்களுள் நாங்கள் இரு சகோதரர்களும், எங்கள் தோழர்கள் யமுனு பிரசாதும் கங்கா பிரசாதும் இருந்தோம். கிராமத்துப் பட்டாமணியகாரரும் வந்திருந்தார். டாக்டர் கணேஷைச் சந்தித்தோம். பலியாவின் காயஸ்துக்கள் இடையில் ஒரே அமளி நிலவியது.

எங்கள் குடும்பம் முதலில் பலியாவில் இருந்தது என்று கூறி இருக்கிறேன். அங்கே எங்கள் பங்காளிகள் இருந்தார்கள். எங்கள் பிராமணப் புரோகிதரும் இன்று வரையில் பலியாவில் இருந்துதான் கல்யாணம் சிரார்த்தம் எல்லாவற்றிற்கும் வருகிருர். என் மாமனர் வீட்டு ஜனங்களும் அங்கேதான் இருந்தார்கள். அக்குடும்பத்தில் சிலர் அங்கே வக்கீல் தொழில் நடத்தி வந்தார்கள். வேறு சிலர் வேறு தொழில்கள் ஆற்றி வந்தார்கள். நாங்கள் போய்ச் சேருவதற்கு முன்னமே அங்கே செய்தி பரவி விட்டது. இதை மறைப்பதும் எங்கள் நோக்கம் அன்று. அங்கே எங்கள் பங்காளி ஒருவரும் வக்கீலாக இருந்தார். உறவு முறையில் அவர் தமையனுர் ஆக வேண்டும். அவர் வந்து எங்களேக் கண்டார். நாங்கள் அந்த விருந்தில் கலந்துகொள்வது அவருக்குப் பிடிக்கவில்லே. நாங்கள் அப்பாவின் உத்தரவு இன்றியே இரகசியமாக வந்திருப்பதாக அவர் நினேத்தார். அப்படி அன்று என்று நாங்கள் அவருக்கு உறுதி அளித்தபோது, அவருக்கு மேலும் அதிக வருத்தம் உண்டாயிற்று. "நாங்கள் இங்கே இருக்கும் போது, பெரியப்பா எங்களே ஒரு வார்த்தை கேட்டிருக்க வேண்டும்" என்று அவர் கூறினர்.

இதுபோலவே என் மாமனர் வீட்டாருக்கும் இவ்விஷயம் பிடிக்கவில்லே. ஆனல் அவர்கள் அழுத்தமாக ஒன்றும் சொல்லவில்லே. விருந்து இரவில் நடந்தது. உணவு உண்டுவிட்டு நாங்கள் எல்லோரும் அவரவர் வீட்டிற்குத் திரும்பி விட்டோம். டாக்டர் கணேஷ் முதலில் அலகாபாத்திலும், பிறகு ஹிந்து பல்கலேக் கழகத்திலும், அதற்குப் பின் கல்கத்தா பல்கலேக் கழகத்திலும் கணிதத் துறைக்குத் தலேமைப் பதவி வகித்து வாழ்ந்து அநேக ஆண்டுகளுக்குப் பின் இறந்துபோனர்.

பலியாவிலிருந்து திரும்பி வரும்போது, சப்ராவுக்குச் சிறிது தொலேவில் வாழ்க்கைப்பட்டிருந்த என் மற்ருெரு அக்காள் வீட்டிற்கு நான் அங்கிருந்தே போய்விட்டேன். அங்கே போகவேண்

டும் என்ற திடமான எண்ணம் எனக்கு முதலில் இல்லை. ஆனால் என் தமக்கையாருக்கு நான் அங்கு வந்து அவருடன் இரண்டு மூன்று நாட்கள் இருக்கவேண்டும் என்று முதலில் இருந்தே ஆசை இருந்தது. சப்ராவிலிருந்தே அங்குப் போவதுதான் சௌகரியம். ஆகையால் ஊருக்குத் திரும்பிப் போகாமலே அங்கே போய்விட்டேன்.

விருந்தில் கலந்து கொண்டவர்களின் பெயர்கள் செய்தித் தாளில் வந்தன. அவற்றைக் கண்டு சப்ராவில் ஒரே கொந்தளிப்பு உண்டாயிற்று. அவர்களைச் சாதியிலிருந்து ஒதுக்கிவைப்பதற்கு ஏற்பாடுகள் நடக்கத் தொடங்கின. காசியிலிருந்து மகா மகோபாத் தியாய சிவகுமார் சாஸ்திரியிடமிருந்து கடல் பிரயாணத்தைப் பற்றிப் பிரமாணம் தருவிக்கப்பட்டது. மேலும் அகில ஜில்லாக் காயஸ்து மகாநாடு ஒன்றும் கூட்டத் திட்டம் போடப்பட்டது. இவற்றைப்பற்றி எல்லாம் எனக்கு ஒன்றும் தெரியாது. நான் அக்காள் வீட்டில் இருந்தேன். இதற்குள் பரீக்ஷையின் முடிவும் வெளியாயிற்று. பாபூ பிரஜ்கிஷோர் கெஜட்டைப் பார்த்துவிட்டு ஜீராதேயீக்குச் செய்தி அனுப்பிவிட்டார். தமையனாருக்கும் இது தெரியும். அப்பாவுக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாயிற்று. அவர் உடனே சத்திய நாராயண பூஜை செய்தார். பிராமண போஜனத்திற்கும் சாதி விருந்திற்கும் ஏற்பாடு செய்தார். இவை எல்லாம் நான் இல்லாதபோது நடந்தன.

என் அத்தான் வீட்டிலிருந்து ஜீராதேயீக்குப் புறப்பட்டுச் சப்ராவுக்கு வந்து சேர்ந்தேன். அத்தானும் என்கூடச் சப்ராவுக்கு வந்தார். சப்ராவில் நடந்த விவாதத்தைப் பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது. சப்ராவிற்கு இரவில் வந்துசேர்ந்தோம். வந்ததும் படுத்துத் தூங்கிவிட்டோம். ஆகையால் அன்றிரவு செய்தி எதுவும் கிடைக்கவில்லை. என் பரீக்ஷையின் முடிவைப் பற்றியும் செய்தி தெரியவில்லை. ஜீராதேயீக்குப் போகும் வண்டி அதிகாலையில் புறப்படும். ஆகையால் நான் முன்நேரத்திலேயே ஸ்டேஷனுக்கு வந்து விட்டேன். பாபூ பிரஜ்கிஷோரின் வீடு ஸ்டேஷனுக்கு அருகில் இருந்தது. "பரீக்ஷையின் முடிவு வெளியாகி விட்டதா இல்லையா என்று கேட்டு வா" என்று வேலைக்காரனை அவரிடம் அனுப்பினேன். பரீக்ஷையின் முடிவு வெளியாகி விட்டது என்றும், தம்மைப் பார்க்காமல் நான் அந்த வண்டியில் போகக்கூடாது என்றும் அவர் சொல்லி அனுப்பினார். பரீக்ஷையின் முடிவைத் தெரிந்துகொள்ள நான் மிக்க ஆவலாயிருந்ததால் நான் அவர் வீட்டிற்குச் சென்றேன். அவர் என்னை

அங்கே நிறுத்திவிட்டார். அக்காலத்தில் கச்சேரி காலையில் ஏழு மணிக்குத் தொடங்கி வந்தது. நான் அவருடன் கச்சேரிக்குப் போய்விட்டேன். நான் சப்ராவில் தங்கிவிட்டேன் என்று என் அத்தானுக்குத் தெரியாது. பாபூ பிரஜ்கிஷோருடன் நான் வக்கீல்களின் நூல் நிலையத்திற்குச் சென்றபோது அங்கே அநேக வக்கீல்கள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். சிலர் பரீக்ஷையின் முடிவைப் பற்றி மகிழ்ச்சியுற்று என்னைப் பாராட்டினர்கள். இன்னும் சிலர் டாக்டர் கணேஷின் விருந்தைப்பற்றிக் கேட்டார்கள். விருந்திற்கு யார் யார் வந்திருந்தார்கள் என்றும், நான் எங்கிருந்து வந்தேன் என்றும் அறிய விரும்பினர்கள். நான் எல்லா விஷயங்களையும் கூறினேன். சில நாட்கள் பைகாவில் என் அத்தானுடன் தங்கி இருந்தேன் என்றும், அங்கிருந்துதான் வருகிறேன் என்றும் சொன்னேன். நான் இப்படி உண்மையைக் கூறியதால் எதுவேனும் கேடு விளையும் என்பது எனக்குத் தோன்றவில்லை.

விருந்தில் கலந்து கொண்ட சிலர், இதனல் எழுந்த விவாதத்தைக் கண்டு பயந்துபோய்த் தமது வீட்டார் வற்புறுத்தினதின் மேல், தாம் அவ்விருந்திக்குப் போனதை மறுத்து விட்டார்கள். பத்திரிகைகளில் வந்த செய்தி தவறு என்றும் கூறிவிட்டார்களாம். அத்தான் வக்கீல்களின் நூல் நிலயத்திற்கு வந்ததும் வராததுமாக அவரையும் கேட்டார்கள். நானும் டாக்டர் கணேஷின் விருந்திற்குப் போயிருந்தேன் என்பது அவருக்குத் தெரியாது. மேலும், நான் ஜீராதேயீக்குப் போகாமல் சப்ராவில் தங்கிவிட்டேன் என்பதும், அச்சமயத்தில் அதே நூல் நிலயத்தில் வேறு சிலரோடு பேசிக் கொண்டிருந்தேன் என்பதும் அவருக்குத் தெரியா. பெரிய வக்கீல்களின் பேச்சைக் கேட்டு அவரும் சற்று மனம் குலைந்து போனர். என்னைப் பற்றியவரையில் நான் விருந்திற்குப் போயிருந்தேன் என்பதை மறுத்துவிட்டார். அப்படி நான் போயிருந்தால் தமக்குக் கட்டாயமாகத் தெரிந்திருக்கும் என்று சொல்லிவிட்டார். அதன்மேல், அங்கிருந்தவர்கள், நானும் அங்கே இருப்பதாகவும், நான்தான் அந்த விருந்தைப்பற்றி அவர்களுக்கு விவரங்களைக் கூறியதாகவும் அவரிடம் சொன்னர்கள். அவர்முன் என்னைக் கொண்டுவந்து மூதலிப்பது என்றவரையில் பேச்சு வந்துவிட்டது. ஆனல் நான் அதற்குள் அங்கிருந்து பாபூ பிரஜ்கிஷோர் வீட்டிற்குச் சென்றுவிட்டேன். பிறகு ரயில் ஏறி ஜீராதேயீக்கு வந்துவிட்டேன். நான் ஊருக்கு வந்து சேர்ந்ததும், ஒரு நாள் முன்புதான் பூஜை முதலியன

செய்யப்பட்டு பிராமண போஜனமும் சாதி விருந்தும் நடந்தன என்பதைக் கேள்விப்பட்டேன். அந்த விருந்திற்குக் கிராமத்துக் காயஸ்துக்கள் மட்டும் அன்றி, வழக்கமாகச் சாதி விருந்துகளில் கலந்துகொள்ளும் அக்கம்பக்கத்து ஊர்க்காரர்களும் வந்திருந்தார் களாம். கிராமத்தில் இடைஞ்சல் எதுவும் ஏற்படவில்லை. ஏனெ னில் காயஸ்து வீடுகள் எங்கள் மூன்று வீடுகள்தாம். அம்மூன்று வீட்டுக்காரர்களும் பலியா விருந்திற்குச் சென்றிருந்தார்கள். சப்ராவில் நடந்ததை எல்லாம் அண்ணனிடம் கூறினேன். சப்ரா வில் நடக்கப்போகும் மகாநாட்டிற்கு நம்முடைய அபிப்பிராயம் கொண்டவர்களை அனுப்பவேண்டும் என்றும், அந்தச் சபையில் கடல் பிரயாணத்தை ஆதரித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும் என்றும் பாபூ பிரஜ்கிஷோர் சொல்லி அனுப்பிய செய்தியையும் தெரிவித்தேன்.

சப்ராவில் மகாநாட்டிற்காகப் பெரிய ஏற்பாடுகள் செய்யப் பட்டன. ஜில்லா முழுவதிலும் உள்ள காயஸ்துக்கள் அனைவரும் அழைக்கப்பட்டார்கள். காசியிலிருந்து மகாமகோபாத்தியாயர் சிவகுமார் சாஸ்திரி பிரமாணம் எடுத்துக் காட்ட வந்தார். இத் துடன், விருந்து உண்டவர்களைக் கொண்டு அதற்குத் தாம் செல்லவில்லை என்று மறுதளிப்பு கூறவைக்கவேண்டும் என்றும் அல்லது அவர்களைப் பிராயச்சித்தம் செய்து கொள்ள வைக்க வேண்டும் என்றும் முயற்சி நடந்து வந்தது. மகாநாடு கூடிய தினத்தன்று நாங்கள் சப்ராவிற்குப் போகவில்லை. ஆனல் காயஸ்துக்கள் நிறையக் கூடியிருந்தார்கள் என்று கேள்விப்பட் டோம். ஜில்லா இரண்டு பட்டுவிட்டது. எதிர்க்கட்சியைச் சேர்ந்த இரண்டு பெரிய வக்கீல்களைக் கிழக்குச் சப்ராகாரர் ஆதரித் தார்கள். நாங்கள் முன்காலத்தில் வாழ்ந்து வந்த மேற்குச் சப்ரா எங்கள் பக்கம் என்று பேசிக்கொண்டார்கள். ஆனல் சாதிக்காரர்களில் பெரும்பாலோர் எதிர்க்கட்சியில்தான் இருந் தார்கள் என்பதுதான் உண்மை. எங்கள் பக்கம் இருந்த சொற் பப்பேர் பெரும்பாலும் மேற்குச் சப்ராவைச் சேர்ந்தவர்கள்தாம். அவர்களிடையில் எங்கள் குடும்பத்திற்கு மிக்கச் செல்வாக்கு உண்டு. சப்ராவில் உள்ள கோவில்கள் எல்லாவற்றிலும் பெரி யதும், மிக்க அழகியதும், காயஸ்து ஒருவரால் கட்டப்பட்டதும் ஆன பஞ்சமந்திரில் (ஐந்து கோவில்) மகாநாடு நடந்தது. வயதில் முதியவரும் பெரிய பெயர் பெற்றவருமான வக்கீல் ஐயா ஒருவர் தலைமை வகிப்பதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சபையில் மக்கள் வந்து கூடியபின் எங்கள் கட்சியிலிருந்து

ஒருவர் எழுந்திருந்து நின்று, வக்கீல் பாபூ சரஸ்வதி பிரசாத் தலைவராக இருக்கவேண்டும் என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். அந்தக் கனவானும் விருந்திற்கு வந்திருந் தார். அவர் மேற்குச் சப்ராவைச் சேர்ந்தவர்தாம். ஆனால் கோரக்பூரில் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தார். சிலர் அத்தீர்மானத்தை ஆமோதிக்கவும் செய்தார்கள். மகாநாட்டைக் கூட்டியவர்கள் இதைக் கேட்டு மலைத்துப் போனார்கள். மகா நாட்டிற்குத் தலைவராக ஒரு பெரிய வக்கீலின் பெயரை அவர்கள் அறிக்கைகளில் அச்சடித்திருந்தார்கள். ஆனால் அங்கே வந் திருந்த சீர்திருத்தக் கட்சிக்காரர்கள் பாபூ சரஸ்வதி பிரசாத்தாம் தலைவராக நியமிக்கப்பட வேண்டும் என்று கூச்சல் போட்டார் கள். மற்றவர்கள் இப்படிப்பட்ட எதிர்ப்பு வரும் என்று நினைக் கவேயில்லை. எல்லாரும் தங்கள் பக்கத்தில்தாம் இருக்கிறார்கள் என்று நினைத்திருந்தார்கள். உண்மையாகவே அந்த மகாநாட் டில் பொதுஜன அபிப்பிராயம் பெரும்பாலும் அவர்கள் பக்கம் தான் வலுவாக இருந்தது. ஆயினும் அவர்கள் மிகவும் பயந்து போனார்கள். தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்காக வாக்கு எடுக்க வேண்டும் என்று எதிர்க்கட்சியிலிருந்து கூச்சல் கிளம்பியது. இதனால் அவர்கள் மேலும் பயந்து போனார்கள். அவர்கள் வாக்கு எடுக்க மறுத்துவிட்டு எவருடைய பெயர் முன்னமே விளம்பரம் செய்யப்பட்டதோ அவரேதாம் தலைவராவார் என்று கூறினார்கள். அப்படியே அவர் தலைவருக்கு இடப்பட்டிருந்த ஆசனத்தில் அமரச் சென்றார். எதிர்க்கட்சியிலிருந்து பாபூ சரஸ்வதி பிரசாதும் சென்று, அவரைப் பார்த்து "வக்கீல் ஐயா அவர்களே, இச்சபை என் பெயரைத்தான் தலைவர் பதவிக்குக் குறிப்பிட்டது, ஆகையால் நான்தான் தலைவன். நீங்கள் எப்படி அங்கே உட்காரமுடியும்?" என்று கேட்டார். இதனால் குழப்பம் மேலும் பெருகியது. இதைக் கேட்டு அந்த வக்கீல் "இவர்கள் மகாநாட்டை நடத்த விடமாட்டார்கள், ஆகையால் மகாநாடு கலைக்கப்பட்டு விட்டது" என்று கூறினார்.

சீர்திருத்தக்காரர்கள் உடனே எழுந்து நின்று எக்களித்து "நாங்கள் வென்று விட்டோம்" என்று ஆரவாரம் செய்து கொண்டு வெளியேறினார்கள். சீர்திருத்தக்காரர்கள் இதைத் தான் செய்ய முடியும். ஏனெனில் உண்மையாகவே வாக்கு எடுத் திருந்தால் தாம் நிச்சயமாகத் தோற்றுப்போவோம் என்று அவர் களுக்குத் தெரியும். அன்றைய மகாநாடு இப்படிக் கலைக்கப்பட் டது. அடுத்த நாள் மீண்டும் கூட்டப்பட்டது. அதில் "விருந்

தில் உண்டவர்கள் எவரெவரோ அவர்கள் அனைவரும் சாதியிலிருந்து விலக்கப்படப்பட்டார்கள்'' என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அவர்களுடன் சாப்பாடு கீப்பாடு, கல்யாணம் கில்யாணம் எல்லாம் தவிர்க்கப்பட்டன. அவர்கள் பெயர்களும் தீர்மானத்தில் கொடுக்கப்பட்டன. அத்தீர்மானத்தை அச்சிட்டு ஜில்லா முழுதும் வழங்குவதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. சீர்திருத்தக் கட்சியின் சார்பாக ''இந்த மகாநாடு சாதிக்காரர் எல்லாரையும் உட்கொண்டது அன்று. நாங்கள் வெளியேறிய பின், அடுத்த நாள் இது கூட்டப்பட்டது. ஆகையால் நாங்கள் இத்தீர்மானத்தை ஏற்கமாட்டோம். மறுபடியும் மகாநாடு கூட்டி ஜில்லா முழுவதிலும் இருந்து சாதிக்காரர்களை அழைக்கவேண்டும். அப்படிக் கூட்டிய சபையில் இத்தீர்மானத்தை நிறைவேற்றட்டும்'' என்று கூறப்பட்டது. இப்படியாக ஒரே குழப்பம் நிலவியது. செய்தித் தாள்களில் இரு கட்சியாரும் தத்தம் அறிக்கைகளை வெளியிட்டார்கள். பயன்—சாதிவிலக்கு வலுக்க முடியவில்லை.

எங்களைப் பொறுத்தவரையில் சாதிவிலக்கு என்ற கேள்வியே எழவில்லை. எங்கள் அக்கம்பக்கத்தார்கள் எப்போதும் போலவே எங்களுடன் உண்டு வந்தார்கள். பிராமண புரோகிதரும் எங்களுக்கு இடைஞ்சல் எதுவும் வர இடங்கொடுக்கவில்லை. ஒரு முறை மட்டும் அப்பாவுக்குச் சிறிது மனவருத்தம் விளைந்தது. என் அத்தான் சப்ராவிற்கு அருகில் வசிப்பவர் என்று கூறி இருக்கிறேன். அவருடைய ஊரில் இந்தச் சாதி விலக்குப் புரட்சி சற்று வலுவாக இருந்தது. சப்ராவில் உள்ளவர்கள் அவரை மிகவும் வற்புறுத்தி, ஒருசமயம் அவரைக் கொண்டு அப்பாவுக்கு மிகவும் கடுமையான கடிதம் ஒன்றை எழுத வைத்தார்கள். கடிதத்தை எடுத்துக்கொண்டு ஓர் ஆள் வந்து எங்களைப் பார்த்தார். அப்பாவிடம்தான் கடிதத்தைக் கொடுக்கும்படி உத்தரவு என்றும், எங்களிடம் கொடுப்பதற்கு இல்லை என்றும் கூறினர். கடிதத்தைப் படித்ததும் அப்பாவுக்கு பீதி பிடித்துவிட்டது. ஒரே ஓர் அத்திம்பேர்தாம் உயிருடன் இருந்தார். மற்றொரு தமக்கையார் பல நாட்களுக்கு முன்பே விதவையாகி விட்டார். இந்த அத்திம்பேருக்கும் குழந்தைகள் இல்லை. அவர் குடும்பத்தில் அவர் ஒருவர்தாம் இருந்தார். வேறு உடன்பிறந்தார், சுற்றத்தார் எவரும் இல்லை. உள்ள உறவெல்லாம் எங்களுடன்தான். தமக்கு வேறு யாரும் உறவு இல்லை என்றும், இப்போது எங்களுடன் இருந்த உறவும் அற்றுவிடும் என்றும், அந்த உறவு நிலைபெற்று நிற்க

வேண்டும் என்று நாங்கள் விரும்பினால், விருந்தில் நாங்கள் கலந்து கொள்ளவில்லை என்று எல்லாருக்கும் அறிவிக்க வேண்டும் அல்லது பிராயச்சித்தம் செய்து கொள்ளவேண்டும் என்றும் அவர் எழுதியிருந்தார்.

பாபூஜி கடிதத்தைப் படித்துவிட்டுப் பயந்து போனார். ஆனால் நாங்கள் தவறு எதுவும் செய்தோம் என்று அவர் நினைக்கவில்லை. ஆயினும் நாங்கள் மட்டும் அந்த விருந்திற்குச் சென்று அதில் கலந்து கொண்டு இந்தச் சண்டையில் பட்டுக் கொள்ளாதிருந்திருந்தால், தாம் மற்றவர்களைத் தம் செல்வாக்கைக் கொண்டு வயப்படுத்தி இந்தக் காரியத்திற்கு அதிக உதவி புரிந்திருக்க முடியும் என்று கருதினார். இப்படிக் கடிதம் வந்திருக்கிறது என்று என் தாயார் கேட்டதுமே, "மறுதளித்தல் என்ற பேச்சு ஆகாத காரியம், அது முற்றிலும் பொய்யாகும். அப்படிச் செய்வதால் நன்மை உண்டாகாது. ஆனால் பிராயச்சித்தத்தைப் பற்றிப் பேச்சு வந்தால், அப்போது பார்த்துக் கொள்வோம்" என்று தெள்ளத் தெளிவாகச் சொல்லிவிட்டார்.

இந்தக் கருத்தை ஒட்டி விடையும் அனுப்பப்பட்டது. அப்போது என் அக்காள் எங்கள் வீட்டிற்கு வருவது என்ற பேச்சு எதுவும் இல்லை. ஆகையால் இந்த விஷயம் வளரவில்லை. பாபூஜி, சப்ராவிற்கு ஒரு முறை போனார். அங்கே ஒரு வழக்கு நடந்து கொண்டிருந்தது. இந்த இயக்கத்திற்குத் தலைவராயிருந்த கிழவனார்தாம் அவ்வழக்குக்கு எங்கள் வக்கீல். அவர் அப்பாவிடம் பிராயச்சித்தத்தைப் பற்றி மிகவும் வற்புறுத்திப் பேசினார். "இப்பொழுது பிள்ளைகள் கல்கத்தாவில் இருக்கிறார்கள், அவர்கள் இங்கே வரும்போது இதைப்பற்றி ஆலோசிக்கிறேன்" என்று அப்பா சாக்குச் சொல்லித் தட்டிக் கழித்துவிட்டார். நாங்கள் இல்லாதபோது அவர்கள் இவ்வண்ணமாகத் தம்மால் இயன்ற வரையில் அப்பாவைக் கட்டாயப் படுத்தப் பார்த்தார்கள். பொதுஜனச் சபை ஒன்றைக் கூட்டவும் முயற்சி செய்தார்கள். எங்கள் ஊருக்குச் சமீபத்தில் உள்ள சீவானில் ஒரு சபையும் கூட்டப்பட்டது. அதில் சப்ராவில் செய்த முடிவை அறிவிப்பதாக இருந்தது. சீவானைச் சேர்ந்தவர்கள் எவரெவர் விருந்தில் உண்டார்களோ அவர்கள் அனைவரையும் சாதியிலிருந்து தள்ளிவைப்பது என்ற முடிவை முறைப்படி சபையில் அறிவிப்பதற்காகச் சப்ராவிலிருந்து ஒரு கனவான் அனுப்பப்பட்டிருந்தார். ஆனால் சீவானில் இருந்த எங்கள் சாதி ஜனங்களில் அநேகம் பேர் எங்கள் சார்பில் இருந்தார்கள். ஏனெனில்

பாபூ பிரஜ்கிஷோர், பாபூ சரஸ்வதி பிரசாத், நாங்கள் ஆகிய எல்லாரும் ஒரே (சீவான்) சப் டிவிஷனில் இருப்பவர்கள். ஆகவே, சப்ரா சபையை நாங்கள் அங்கீகரிக்கவில்லை என்றும், சீவான் சாதி ஜனங்கள் எங்கள் சார்பில்தான் இருக்கிறார்கள் என்றும் நாங்கள் அந்தச் சபையில் ஒரு தீர்மானத்தை நிறை வேற்றி விட்டோம்.

எங்களுடன் பலியாவில் விருந்து உண்ட யமுனா பிரசாத் கங்கா பிரசாத் ஆகிய இரு நண்பர்களும் சப்ராவில் படித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சில பையன்களுடன் சேர்ந்து அவர்கள் ஒரு வீட்டில் இருந்தார்கள். அவர்களுக்குச் சிறிது இடைஞ்சல் உண்டாயிற்று. அந்த விடுதியின் மற்றப் பையன் கள் அவர்கள் தொட்டதைத் தொடமாட்டார்கள். அவர்களுடன் உட்கார்ந்து உண்ணமாட்டார்கள். பிராமணன் சமையலைச் செய்து, அவர்களைத் தனியாக வைத்து உணவைப் படைப்பான். அவர்கள் இந்த அவமானத்தைப் பெருமகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்கள். சில மாதங்கள் வரையில் இப்படியாக நடந்தது. பிறகு மெல்ல மெல்லக் குறைந்துவிட்டது. மீண்டும் எல்லாரும் ஒன்றாகிவிட்டார்கள். சப்ராவில் எதிர்க்கட்சிக்காரர்களில் முக்கிய மானவர்களுக்கும் கடல் பிரயாணத்தின் சார்பாக இருந்த குடும் பங்களுடன் உறவு இருந்தது. தத்தம் வீட்டிலும் சிலர் அவர் களுக்கு விரோதமாகி விட்டார்கள். ஆகையால் அவர்கள் தம் வாழ்க்கையில் இந்தக் கொள்கையைக் கடைப்பிடித்து நின்றார்கள் ஆயினும், கட்டுப்பாடு முறிந்துவிட்டது. மீண்டும் கூட இயல வில்லை. கடல் யாத்திரைக்கு வழி காயஸ்துக்குக்களுக்குத் திறந் தாகிவிட்டது.

## 12. மாணவர் மகாநாடும் காங்கிரஸும்

பி. ஏ. தேறிவிட்டு நான் கல்கத்தாவில் எம். ஏ.க்கும் பி. எல்.லுக்கும் படிக்க ஆரம்பித்தேன். சுதேசி இயக்கம் அப் போது மிகவும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. கல்கத்தா வில் படித்துக் கொண்டிருந்த சில பீகாரி மாணவர்களான எங்கள் மேலும் அதன் சாயை படிந்தது. நாங்கள் வழக்கமாகப் பீகார் கிளப்புக்குச் சென்று கூடிக்குலாவிக் கருத்துக்களையும் அபிப்பிரா யங்களையும் பரிமாறிக் கொள்வோம். வங்காளத்து மாணவர்கள்

இவ்வண்ணமாகச் சுதேசிப் பிரசாரம் செய்து வருகிறார்களே, நம் பீகாரிலும் மாணவர்களுக்காக ஒரு தனிச் சங்கம் அமைந்தால் அதன் மூலமாகச் சுதேசிப் பிரசாரம் செய்யலாமே என்று எங்கள் மனத்தில் ஒரு துடிப்பு உண்டாயிற்று. நாங்கள் ஒரு பாடலையும் கட்டி அதனை அச்சடித்து ஆங்காங்கே வழங்கினோம். இதை வழங்குவதிலிருந்தும் தனி அமைப்பு ஒன்று இல்லாத குறை இன்னும் அதிகமாகப் புலப்பட்டது.

பீகார் மாணவர்களைக் கொண்டு ஒரு மகாநாடு கூட்டுவோம் என்று தீர்மானித்தோம். பீகார் கிளப்பிலும் இதுபோல ஒரு தீர்மானம் சமர்ப்பிக்கப்பட்டது. அதை மாணவர்கள் மட்டும் அன்றி முதியவர்களும் மிக்க உற்சாகத்துடன் ஏற்றார்கள். இந்த மகாநாட்டைக் கூட்டுவதற்காக நான் பட்னாவுக்கு அனுப்பப்பட்டேன். அங்கே முதலில் மாணவர்களையும், பிறகு பெரிய மனிதர்களையும் சந்தித்தேன். அவர்களில் முக்கியமானவர்கள் மிஸ்டர் சச்சிதானந்த சின்ஹாவும், அக்காலத்தில் "பீகார் டைம்ஸு"க்கு ஆசிரியராக இருந்த பாபூ மகேஷ்நாராயணனும் ஆவார்கள். அவர்கள் அனைவரும் இதற்கு ஆதரவு அளித்தார்கள். பட்னாவிலேயே முதல் மகாநாட்டை நடத்துவதென்றும், பேர்போன பாரிஸ்டர் மிஸ்டர் ஷர்புத்தினைத் தலைவராகக் கொள்வது என்றும் முடிவு செய்யப்பட்டது. பட்னா மாணவர்கள் ஒரு வரவேற்புக் குழுவை அமைத்து, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

முதல் மகாநாடு பட்னா கல்லூரியின் பெரிய மன்றத்தில் நடந்தது. பீகாரின் கல்லூரிகள், பள்ளிக்கூடங்கள் அனைத்திலும் உள்ள மாணவர்கள் அம்மகாநாட்டில் பேரார்வத்துடன் கலந்து கொண்டார்கள். மகாநாட்டின் நோக்கத்தை அறிவிக்கும் பொறுப்பு என்மேல் ஏற்றப்பட்டது. நான் ஆங்கிலத்தில் ஒரு நீண்ட உரையை எழுதிப் படித்தேன். மற்றவர்களுடைய பேச்சுக்களும் அநேகமாக ஆங்கிலத்தில்தான் இருந்தன. முதலில் எங்கெங்குக் கல்லூரிகள் இருந்தனவோ அங்கும், பிறகு எங்கெங்குப் பள்ளிக்கூடங்கள் இருந்தனவோ அங்கும் மாணவர் சங்கங்கள் நிறுவப்பட வேண்டும் என்றும், அவை மகாநாட்டுடன் தொடர்பு கொண்டு நிற்க வேண்டும் என்றும் அம்மகாநாட்டில் முடிவு செய்யப்பட்டது. விதிமுறை ஒன்று பெரிதாகப் புனையப்பட்டது. அதன்படி, பீகார் முழுவதிலும் உள்ள மாணவர்களின் பிரதிநிதியாக ஒரு நிரந்தரமான கழகம் பட்னாவில் நிறுவப்பட்டது. எல்லா இடங்களில் இருந்தும் மாணவர்களின் பிரதிநிதிகள் இதில் சேர்க்கப்பட்டார்கள். இக்கழகம்தான் மாணவர் சங்கங்கள்

எல்லாவற்றையும் கண்காணித்தும், ஆண்டு நெடுக மகாநாட்டின் வேலையைத் தொடர்ந்து நடத்தியும் வந்தது.

விதிகளை அமைக்கும்போது இரண்டு விஷயங்களைப் பற்றி எங்களுக்குள் அதிக வாக்குவாதம் எழுந்தது என்பது நினைவிருக்கிறது. இம்மகாநாடு அரசியல் விஷயங்களில் பங்கெடுத்துக் கொள்வதா இல்லையா என்பது ஒரு கேள்வி. இதைப் பற்றி மாணவர்களின் இடையில் அதிகக் கருத்து வேற்றுமை இருந்தது. முதியவர்கள் அனைவரும் இதற்கு விரோதமாகவே இருந்தார்கள். கடைசியில் இம்மகாநாடு எவ்விதத்திலும் அரசியல் புரட்சிகள் எவற்றிலும்—அவை தேசீயக் கட்சி ஆயினும் சரி, அல்லது ராஜ விசுவாசக் கட்சி ஆயினும் சரி, அல்லது வேறு எவையாய் இருப்பினும் சரி பங்கு எடுத்துக் கொள்ளாது என்று முடிவு செய்யப்பட்டது. இப்படி முடிவு செய்ததில் நாங்கள் மிகவும் புத்திசாலித்தனம் காட்டினோம் என்று இன்று விளங்குகிறது. பீகார் நெடுங்காலமாக வங்காளத்தின் ஒரு பகுதியாக இருந்து வந்தது. தனி மாகாணமாக இன்னும் ஆக்கப்படவில்லை. கல்வியில் பீகார் மிகவும் பின் நின்றது. பொதுஜன உணர்ச்சி இல்லை என்றே கூறலாம். முக்கியமாக மாணவர்களுக்கு வெளி உலகைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காங்கிரஸை ஆதரித்தவர்கள் சிலர் தாம் இருந்தார்கள். இது வரையில் பீகாருக்குத் தனியாக அரசியல் அமைப்புக்கள் எவையும் இல்லை. பீகாருக்காகத் தனியாகக் காங்கிரஸ் குழுவும் இல்லை. அரசியல் மகாநாடு அல்லது ஸ்தாபனம் என்று ஒன்றும் இல்லை. அகில பீகாரின் மக்கள்—அவர்கள் வாலிப மாணவர்களே ஆயினும்கூட—தனிப்பட்டுக் கூடித் தம் தேவைகளைப் பற்றி யோசனை செய்ய அமைந்த முதல் நிலையம் இந்த மாணவர் மகாநாடேதான். இந்த நிலையில் நாங்கள் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளாதிருந்திருந்தால் இக் கழகத்தை நிறுவ முடிந்திருக்காது.

அது வரையில் இந்தியாவில் வேறு எங்கும் மாணவர் மகாநாடு நடத்தப்படவில்லை. வேறொன்றைப் பார்த்துச் செய்வதற்கு மாதிரி எதுவும் இல்லாமல் நாங்களே ஒரு விதமாகப் புது அமைப்பை நிறுவவேண்டி வந்தது. மற்றொரு விஷயத்தைப் பற்றியும் அபிப்பிராய பேதம் இருந்தது. இந்த அமைப்பு பீகாரி மாணவர்களுக்கு மட்டும் அமைந்ததாக இருப்பதா அல்லது வங்காளி மாணவர்களையும் சேர்த்துக் கொள்வதா என்ற கேள்வி எழுந்தது. ஆனால் இது என்றுமே ஏற்றுக்கொள்ளப் படவில்லை. மகாநாட்டின் பெயர் ஆரம்பத்திலிருந்தே "பீகாரி

மாணவர் மகாநாடு'' என்றுதான் இருந்தது. சில ஆண்டு களுக்குப் பின் விதிமுறைத் திட்டத்தில் '''பீகாரி மாணவர்' என்றால் பீகாரில் படிப்பவர்கள் என்று பொருள் கொள்ளப்படும்'' என்று சேர்க்கப்பட்டது. கல்கத்தா மாணவர்களாகிய நாங்கள் முதலில் இருந்தே இதை ஆதரித்தோம். ஆனால் மற்றவர்கள் எதிர்த்து நின்றார்கள்.

மாணவர் அமைப்பு மிகவும் நன்றாக உருவாகிவிட்டது. எல்லா நகரங்களிலும் இதன் கிளைகள் ஏற்படுத்தப்பட்டன. கல்கத்தா வில் பீகாரி கிளப் இதன் கிளையாக மாறியது. ஹிந்து பல்கலைக் கழகம் நிறுவப்பட்டபின் அங்கிருந்த பீகாரி மாணவர்களும் ஒரு கிளை அமைத்துக் கொண்டார்கள். எல்லாக் கிளைகளிலும் அநேக மாய் வாரந்தோறும் சபை கூட்டப்படும். அதில் மாணவர்கள் பற்பல விஷயங்களைப்பற்றி எழுதிப் படிப்பார்கள். சொற்பொழிவு களும் ஆற்றுவார்கள். விளையாட்டுக்களிலும் ஈடுபடுவார்கள். ஆண்டு விழாவில் பேச்சுப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடக்கும். கட்டுரை, பேச்சு, விளையாட்டு இவற்றில் சிறந்தவற்றிற் குப் பரிசுகள் வழங்கப்படும். கல்லூரி மாணவர்களுக்குத் தனிப் போட்டியும்,பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கும் பெண் குழந்தை களுக்கும் தனித்தனிப் போட்டிகளும் இருந்தன. பெண்குழந்தை களுக்குப் பேச்சு, கட்டுரைப் போட்டிகளைத் தவிரத் தையல் முத லியவற்றில் போட்டிக்காகவும் தனிப் பரிசுகள் உண்டு. இவ் வண்ணமாக ஆண்டு நெடுக வேலை நடந்து வந்தது. தசரா விடு முறை ஒவ்வொன்றிலும் பீகார் நகரம் ஏதாவது ஒன்றில் மகாநாடு நடக்கும். ஆண்டு விழாக்களுக்குப் பீகாரிலிருந்தும் வெளியிலிருந்தும் பெரிய பெரிய மனிதர்கள் வந்து தலைமை வகித் துப் பெருமை அளிப்பார்கள். உதாரணமாகப் பீகாரைச் சேர்ந் தவர்களில் ஸ்ரீ ஷர்புத்தீன், ஸ்ரீ ஹஸன்இமாம், டாக்டர் சச்சிதா னந்த சின்ஹா, பாபூ பரமேஷ்வர்லால், பாபூ தீப் நாராயண் சின்ஹா, பாபூ பிரஜ்கிஷோர் பிரசாத் முதலியவர்களையும், வெளி யூராரில் ஸ்ரீமதி அன்னிபெசண்ட், ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, மகாத்மா காந்தி, ஸ்ரீ ஆண்டுரூஸ் முதலியவர்களையும் சொல்ல லாம்.

இந்த மகாநாடு 1906இல் நிறுவப்பட்டது. 1920இல் ஒத்து ழையாமை இயக்கம் ஆரம்பமாகும் வரையில், ஆண்டுதோறும், ஆண்டு விழா இடையறாது நடந்துவந்தது., அதற்குப்பின் இது கொஞ்சம்'படுத்துப்போய்விட்டது. ஏனெனில் இதில் மிக்க உற்சா கத்துடன் வேலை செய்து வந்தவர்கள் எல்லாரும் அந்த மகாநு

டைய இயக்கத்தில் சேர்ந்து விட்டார்கள். இருந்தாலும், இதற்குப் புத்துயிர் அளிப்பதற்காக முயற்சி செய்யப்பட்டது. ஆனால் முன்போன்ற உயிரும் உணர்ச்சி வேகமும் திரும்பி வரமுடியவில்லை. இப்போதிருக்கும் அமைப்பு ஒரு வகையில் புதிதான அமைப்புத்தான். அதன் செயலாளருக்குப் பழைய அமைப்பைப் பற்றிய விஷயம் ஒன்றும் தெரியாது என்றே கூறலாம். இம்மகாநாடு பணியாற்றி வந்தகாலம் வரையில் மாகாணத்து மாணவர்கள் எல்லாரும் மிக்க உற்சாகத்துடனும் விடாமுயற்சியுடனும் இதில் சேர்ந்து நின்றார்கள். இதன் மூலமாக மாணவர்கள் ஒரு நிலையத்தை எப்படிச் செயல் முறையில் நடத்துவது என்பதைக் கற்றார்கள். அநேகம் பேர் சொற்பொழிவு ஆற்றக் கற்றார்கள். அந்தப் பதினைந்து ஆண்டுகளில் பீகாரில் எத்தனைத் துடியான ஆர்வமுள்ள வாலிபர்கள் இருந்தார்களோ அவர்கள் அனைவரும் இதிலிருந்துதாம் ஊக்கம் பெற்றார்கள். அவர்கள் அனைவரும் தம்தம் சுயநலத்திற்கு உதவக்கூடியதை மட்டும் அன்றித் தம் நாட்டைப் பற்றியும் வெளி நாடுகளைப் பற்றியும் சிறிது கற்றார்கள். தம் நாட்டிற்காக ஏதோ சிறிதளவேனும் தியாகம் செய்யும் உள்ளக்கிளர்ச்சி அவர்களுக்கு உண்டாயிற்று. அவர்கள் கற்றதும் பெற்றதும் கொண்டு நாட்டிற்கும் நலம் விளைந்தது. மகாத்மா காந்தி பீகாருக்கு வந்தபோது இந்த மகாநாட்டின் பழைய செயலாளர்கள் தாம் அவருடன் சேர்ந்தார்கள். ஒத்துழையாமை இயக்கத்தில் எவரெவர்கள் முன்னணியில் நின்றார்களோ அவர்கள் இதில் விளைந்த கனிகள் தாம். மாணவர் மகாநாட்டில் பயிற்சி பெற்றவர்கள்தாம் அநேகமாக இன்று மாகாணத்தின் தலைமைப் பொறுப்பை சுமந்து நிற்கின்றார்கள்.

ஒத்துழையாமை இயக்கம் மாணவர்களிடமிருந்து பெரிய தியாகத்தை எதிர்பார்த்தது. ஆனால் மாணவர் மகாநாடு இதற்கு ஆயத்தமாயில்லை. தீர்மானம் என்னவோ நிறைவேற்றப்பட்டது. ஆனால் மிகச் சில மாணவர்களால் தாம் கடைசிவரையில் அந்த இயக்கத்தில் ஈடுபட்டு நிற்கமுடிந்தது. அப்படி நின்றவரில் பெரும்பாலோர் அம்மகாநாட்டின் தொண்டர்கள்தாம். வக்கீல் துறையிலிருந்து வந்த மற்றவர்கள் கூடப் பெரும்பாலோர் ஒரு காலத்தில் அம்மகாநாட்டின் தொண்டர்களாயிருந்தவர்கள் தாம். இப்படியாக 1920 வரையில் மகாநாடு தன் பணியை முற்றிலும் ஆற்றி வந்தது என்றே கூறவேண்டும். மாகாணம் முழுவதிலும் புதிய விழிப்பையும் புத்துயிரையும் பிறப்பித்து விட்டது. வருங் காலத்திற்கு நிலத்தைப் பண்படுத்தி விதையையும் தெளித்து

விட்டது. அதன் பலன் ஒத்துழையாமை இயக்கத்திற்குக் கிடைத்தது. இன்று வரையிலும் கூட மாகாணத்திற்குக் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

1906 டிசம்பரில் காங்கிரஸ் கல்கத்தாவில் நடைபெறுவதாக இருந்தது. நான் காங்கிரஸின் செய்திகளைச் சிறிது காலமாகப் படித்துக் கொண்டிருந்தேன். ஆனால் இதுவரையில் காங்கிரஸைப் பார்க்க எனக்குப் பாக்கியமும் நல்ல வேளையும் வரவில்லை. 1905 டிசம்பரில் காங்கிரஸ் பனாரசில் நடந்தது. ஆனால் நான் பி. ஏ. பரீக்ஷையின் பிடியில் சிக்கிக் கொண்டிருந்ததால், அருகிலிருந்தும் அங்கே போகமுடியவில்லை. 1906 காங்கிரஸில் தான் நான் முதன் முதலில் தொண்டனாகச் சேர்ந்தேன். காங்கிரஸ் பேரவை மிக்க ஆர்வத்துடன் நிகழ்ந்தது. தீவிர வாதக்கட்சி, மிதவாதக் கட்சி என்று கட்சிகள் தோன்றிவிட்டன. தீவிரவாதக் கட்சிக்கு லோகமான்ய திலகர், லாலா லஜபதிராய், விபின் சந்திரபால், அரவிந்தகோஷ் ஆகியவர்கள் தலைவர்களாகக் கருதப்பட்டார்கள். மிதவாதக் கட்சிக்குச் சர் பிரோஷ் ஷா மேத்தா, கோகலே முதலானவர்கள் தலைவர்களாக அமைந்தனர். எனக்குத் தெரிந்த வரையில் சுரேந்திரநாத் பானர்ஜீயும் பண்டித் மதன் மோகன் மாளவியாவும் நடுவுநிலை வகித்தார்கள். இரு கட்சிகளின் இடையில் உண்டான சண்டையைத் தீர்த்து வைக்கவோ குறைக்கவோ எண்ணித் தாதாபாய் நௌரோஜி இங்கிலாந்திலிருந்து வரவழைக்கப்பட்டுக் காங்கிரஸுக்குத் தலைவர் ஆக்கப்பட்டார். அதிர்ஷ்டவசத்தால் எனக்குக் காங்கிரஸ் பந்தலிலேயே வேலை இடப்பட்டது. ஆகையால் நான் விஷய ஆலோசனைக் குழுவில் நடந்த வாக்குவாதங்கள் எல்லாவற்றையும் கேட்க முடிந்தது. காங்கிரஸ் பேரவை கூடியபோது, முதல் நாள் என்னைப் பந்தலுக்குச் சற்றுத் தொலைவில் நிறுத்தி வைத்திருந்ததால், நான் தலைவரின் சொற்பொழிவைக் கேட்க முடியவில்லை. தொண்டர்களில் பெரும்பாலோர் தத்தம் இடத்தை விட்டு விட்டு பந்தலுக்கு உள்ளே வந்து விட்டதை நான் பார்த்தேன். அப்படிச் செய்வது சரியன்று என்று நினைத்து நான் எனக்கு விதித்த இடத்திலேயே நின்றேன். இந்தக் காங்கிரஸில்தான் சரோஜினி தேவி, மாளவியாஜீ, மிஸ்டர் ஜின்னா ஆகியவர்களின் சொற்பொழிவுகளை நான் முதன் முதல் கேட்டேன். காங்கிரஸோடு ஒரு கண்காட்சியும் மிகவும் விமரிசையாக நடத்தப்பட்டது. பேரவையைப் பார்த்த பின் எனக்குக் காங்கிரஸில் பற்றுதல் அதிகமாகப் பெருகிற்று. ஆயினும் பல ஆண்டுகள்

வரையில் நான் அதில் முறையாகச் சேர்ந்து கொள்ளக் காலம் வரவில்லை. இந்த வாய்ப்பு 1911இல் காங்கிரஸ் மீண்டும் கல்கத்தா வில் கூடியபோது தான் எனக்கு முதன் முதல் கிட்டியது. அன்றி லிருந்து இன்றுவரையில் அகில பாரத காங்கிரஸ் குழுவில் அங்கத் தினனாக இருந்து வருகிறேன். ஏதோ காங்கிரஸ் வேலையும் செய்து வந்திருக்கிறேன்.

அந்தக் காலத்தில் காங்கிரஸின் மிடுக்குச் சற்றுத் தளர்வுற்றி ருந்தது. பீகாரில் மிகச் சிலரேதாம் அத்துடன் தொடர்பு கொண் டிருந்தார்கள். அவர்களுள் பெரும்பாலோர் வக்கீல்கள்தாம். 1907 அல்லது 1908இல் வங்காளப் பிரதேசக் குழுவிலிருந்து பீகாரைப் பிரித்து அதற்கு ஒரு தனிப் பிரதேசக் குழு அமைக்கப் பட்டது. 1912இல்தான் மாகாணம் தனியாயிற்று. இந்தப் பிரதேசக் குழு கட்டுப்பாடான முறையில் அமைக்கப்படவில்லை. இதன் பிரதிநிதிகளாக அமைந்தவர்கள் விதிப்படி தேர்ந்தெடுக் கப்பட்டவர்கள் அல்லர். ஒரு சபையைக் கூட்டி அதில் வந்துள்ள வர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இவர்கள் காங்கிரஸ் பேரவைக்குப் போய்ச் சேர்ந்தால் சரி, அப்படிச் சேராவிட்டால், வேறு யார் வந்திருக்கிறார்களோ அவர்களையே காங்கிரஸ் அமைச் சர் பிரதிநிதிகளாக ஏற்றுக்கொண்டு அவர்கள் பெயரில் சான்றுப் பத்திரமும் அளித்து விடுவார். ஆகையால் பீகாரிலிருந்து காங் கிரஸில் ஆள் இல்லாமல் போய்விடாது. ஒவ்வோர் ஆண்டும் யாராவது பேரவையில் கட்டாயம் இருப்பார்கள். பிரதிநிதிகளாக எவர்கள் சென்றார்களோ அவர்களைத் தாம் அந்தக் காலத்து விதி முறைப்படி அகில பாரத காங்கிரஸ் குழுவுக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுப்பார்கள். நான் 1911இல் அகில பாரத காங்கிரஸ் குழுவுக்கு அங்கத்தினனாக இவ்விதமாகத்தான் தேர்ந்தெடுக்கப் பட்டேன். அப்போது நான் காங்கிரஸுக்கு ஒன்றும் அரிய தொண்டு புரிந்ததில்லை. அந்த ஆண்டில்தான் முதன் முதலாகப் பிரதிநிதி ஆனேன். ஆனால் மாணவர் மகாநாட்டின் அங்கத் தினன் என்ற காரணத்தாலும், மேலும் பல்கலைக் கழகத்தின் பரீக்ஷைகளில் சிறப்பாகத் தேறியிருந்த காரணத்தாலும் பீகாரில் எல்லாருக்கும் என்னைத் தெரியும். எல்லாரும் சேர்ந்து என்னை அகில பாரத காங்கிரஸ் குழுவுக்கு ஓர் எட்டில் கொண்டு போய்ச் சேர்ந்து விட்டார்கள். இவையெல்லாம் 1920க்கு மேல் மிகவும் மாறிவிட்டன. இதைப்பற்றிப் பின்னால் சொல்லப்படும்.

# 13. வெளிநாடு செல்ல வீண் முயற்சி

"டான் சொஸைட்டி", சுதேசி இயக்கம் ஆகியவை, நான் தேசத்திற்காக எப்படியாவது ஏதாவது செய்யவேண்டும் என்ற எண்ணத்தை எழுப்பின. அண்ணன் மனத்திலும் அதே கருத்து தோன்றியது. ஆனால், இந்த ஆசை எவ்விதத்தில் நிறைவேறும் என்பது தெளிவாகத் தெரியவில்லை. மேலும் எந்தப் பணியில் ஈடுபடுவது என்பதும் அதற்காக என்ன செய்ய வேண்டும் என்பதும் தெளிவாகத் தோன்றவில்லை. இடை யிடையே எழுந்து பிறகு அது இது என்ற தொல்லைகளால் மறைந்து போகும் ஓர் ஆசை என்ற அளவில் மட்டும்தான் அது இருந்தது. மாணவர் மகாநாடு இயக்கம் இதற்கு ஒரு வழியாக அமைந்தது. ஆனால் அதிலும் மனம் நிலைத்து நிற்குமா அல்லது மாறுதல் கொண்டு விடுமா என்று ஒன்றும் புரியவுமில்லை, சொல்லுவதற்கும் இல்லை. ஆகையால் பி. ஏ. தேறிய பின் நான் டிப்டி-மாஜிஸ்திரேட்டு வேலைக்கு மனு போடவில்லை. நான் மனுபோட வேண்டும் என்று அண்ணனும் விரும்பவில்லை. நான் வக்கீல் தொழில் ஆற்றவேண்டும் என்பது அப்பாவுக்கு ஆசை. துர்ப்பாக்கிய வசத்தால் அண்ணன் எம். ஏ. பரீக்ஷை எழுத முடிய வில்லை. வீட்டிலிருந்து செலவுக்காக அதிகப் பணம் எடுத்து வந்து கல்கத்தாவில் அல்லது வேறு எங்காவது இனி இருக்க விரும்பவில்லை. ஆகையலே அவர் டும்ராவ் சமஸ்தானப் பள்ளிக் கூடத்தில் ஓர் ஆசிரியர் வேலையை ஏற்றுக் கொண்டார். நான் டிப்டி-மாஜிஸ்திரேட்டு எண்ணத்தை விட்டு விட்டுக் கல்கத்தாவில் எம். ஏ. யும் பி. எல். லும் படிக்க ஆரம்பித்தேன்.

மாணவர் மகாநாடு முடிந்தபின் எனக்கு ஒரு பித்துப் பிடித்து விட்டது. எப்படியாவது இங்கிலாந்திற்குச் சென்று ஐ. சி. எஸ். பரீக்ஷையில் தேறவேண்டும் என்ற எண்ணம் வந்து விட்டது. இது எப்படிப் பிறந்தது, யாரால் தூண்டப்பட்டது என்று சொல்ல முடியாது. அரசாங்க வேலையில் ஆசையில்லை ஆயினும், இதைச் செய்வது தகும் என்று என் மனம் எப்படி ஒப்புக்கொண்டது என்பது தெரியாது. இதற்கு என் தமையனு ரும் ஆதரவு அளித்தார். இங்கிலாந்தில் செலவுக்குக் காணும்படி வீட்டிலிருந்து பணம் கிடைக்காது. ஆகையால் இதற்கு வேறு ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. எனக்கு இப்படி ஓர் ஆசை இருக்கிறது என்பதைக் கேட்டதும் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா

பெரு மகிழ்ச்சியடைந்தார். பாபூ பிரஜ்கிஷோர் இதற்கு எப்போதுமே தயாராக இருந்தார். டாக்டர் கணேஷின் விருந்திற்குப் பிறகு பாபூ அம்பிகாசரன் ஜப்பான் போவதற்கு அவர் மிகவும் ஊக்கம் அளித்தார். நான் இங்கிலாந்து போக வேண்டியது இன்றியமையாதது என்று அவர் கருதி இதற்காகப் பணம் திரட்டுவதில் பித்துப் பிடித்து இறங்கிவிட்டார். முன்ஷி ஈஸ்வரசரணும் இதில் சிரத்தை எடுத்துக்கொள்ள ஆரம்பித்தார். ஆராவைச் சேர்ந்த ராய் பகதூர் ஹரிஹர பிரசாதும் கொஞ்சம் பணம் கொடுத்தார். நான் புறப்பட்டுப் போன பிறகு என் தமையனர் இவர்கள் உதவியைக் கொண்டோ வீட்டிலிருந்தோ எப்படியாவது மேற்கொண்டு பணம் அனுப்பிக் கொண்டிருப்பார் என்று நினைத்தோம். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் இந்த விஷயம் பிடிக்காதென்றும், வீட்டில் ரகளை ஏற்படும் என்றும் பயந்தோம். இந்த விஷயமாய் நான் பட்னுவிற்கும் அலாகாபாத்துக்கும் சென்றேன். தமையனரும் கூட வந்தார். இவற்றையெல்லாம் அப்பாவுக்கு எட்டாமல் இரகசியமாக வைத்திருந்தோம். ஏனெனில், அவருடைய அனுமதி கிடைக்கும் என்ற நம்பிக்கையில்லை. நான் புறப்படுவதற்குக் கூட நாள் பார்த்தாகி விட்டது. கல்கத்தாவில் உடுப்புக்களையும் தைத்துவிட்டேன்.

அதுவரையில் நான் ஆங்கிலப் பாணி உடுப்பு அணிந்ததில்லை. ஆனல் இங்கிலாந்தில் வேறு உடுப்பு அணிய முடியாது என்று ஒரு கருத்து நிலவியது. ஆகையால் ஆங்கிலப் பாணி உடுப்பு ஒன்றை ஓர் ஆங்கிலேயர் கடையிலேயே தைத்துக் கொண்டேன். 1898க்குப் பின் இன்று வரையில் ஒரு முறைதான் நான் வெளி நாட்டுத்துணி வாங்கியது. பாஸ்போர்ட்டுக்கு மனுப் போட்டாகி விட்டது. மற்ற ஏற்பாடுகள் எல்லாம் நடந்து கொண்டிருந்தன. இந்த முயற்சி கைகூடி விடும் என்றும், குடும்பத்தாரால் தடை எதுவும் ஏற்படாதென்றும் நாங்கள் நினைத்தோம். இந்தச் சூழ்ச்சியில் என் கல்லூரித் தோழர்கள் மூன்று நான்கு பேரும் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் என் பீகாரி நண்பர் சுக்தேவ் பிரசாத் வர்மா, மற்றவர்கள் வங்காளிகள். எனக்கு மிக நெருங்கியவர்க்ளில் என் தமையனர், பாபூ பிரஜ்கிஷோர், ஸ்ரீ சின்ஹா, முன்ஷி ஈஸ்வரசரண், ராய் பகதூர் ஹரிஹர பிரசாத் ஆகியவர்கள் இருந்தார்கள். என் தமையனர், பாபூ பிரஜ்கிஷோர் ஆகிய இருவருடன் நான் அலாகாபாத்துக்குச் சென்றேன். அங்கே என் மைத்துனன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் எங்களுள் எவரையும் காணவில்லை.

ஆயினும், எப்படியோ அவனுக்குச் செய்தி கிடைத்து விட்டது. அவன் தேடி அலேந்து முன்ஷீ ஈஸ்வர சரண் வீட்டிற்கு வந்து விட்டான். அங்கே இருந்தவர்கள் நான் அங்கே இல்லேயென்று அவனிடம் கூறிவிட்டார்கள். நான் இரகசியமாக வெளி நாட்டுக்குப் போகப் போவதாகவும், அன்றைய தினம் பிரயாகில் இருப்பதாகவும் எங்கள் வீட்டிற்குத் தந்தி கொடுத்து விட்டான். தந்தி கிடைத்ததும் அப்பாவும் மற்றவர்களும் மிகவும் கலக்க மடைந்தார்கள். அப்பாவுக்கு உடம்பு சரியாக இல்லே. ஆகையால் அவரால் புறப்பட முடியவில்லே. என் தாயார் தமக்கையார் இருவரும் நேரே அலகாபாத்துக்குச் சென்ருர்கள். நான் அலாகாபாத்திலிருந்து வெளிநாட்டுக்குப் புறப்படப் போகிறேன் என்று அவர்கள் தவருக நினேத்துக் கொண்டார்கள். நாளுே ஆலோசனே கேட்பதற்காகவும் பணம் திரட்டுவதற்காகவும் தாம் அங்கே அச்சமயம் போயிருந்தேன். அங்கே ஒரு நாள் இருந்து விட்டுக் கல்கத்தாவிற்குத் திரும்பி வந்து விட்டேன்.

என் தாயார் அகலாபாத்துக்குப் போய்ச் சேர்ந்தபோது நான் அங்கே இல்லே. முன்ஷீ ஈஸ்வரசரண் வீட்டிற்குப் போய்த் தேடியபோது, நான் கல்கத்தாவிற்குப் போய்விட்டதாகச் செய்தி கிடைத்தது. இவற்றைப் பற்றி எல்லாம் கல்கத்தாவில் இருந்த எனக்குத் தெரியாது. அப்பா நோயாய்க் கிடக்கிருர் என்று அங்கே எனக்குத் தந்தி வந்தது. அவரைப் பார்ப்பதற் காக நான் ஊருக்கு வந்ததும் விஷயங்கள் எல்லாம் தெரிய வந்தன. அவர் உண்மையாகவே நோயாய் இருந்தார். ஆனுல் இப்போது நோய் அவ்வளவு கடுமையாக இல்லே. ஆயினும் அவர் மிகவும் துக்கமடைந்தது இருந்தார். வீட்டில் அழுது புழுது கொண்டிருந்தார்கள். தமையனுரும் வந்து சேர்ந் தார். நான் வெளிநாட்டுக்குச் செல்வதற்கு அவர் சூழ்ச்சி செய்தார் என்று அவர் மேல் அப்பாவுக்கு மிகவும் வருத்தம். நான் வந்து சேர்ந்ததும், எல்லாருக்கும் துக்கம் பொங்கி எழுந்தது. எல்லோரும் அடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தார் கள். அப்பா நான் போவதை சந்தேகத்திற்கு [illegible] மித் தடுத்து விட்டார். "நீ வெளிநாட்டிற்குப் போளுல், நான் [illegible] மாட்டேன்" என்று சொல்லி விட்டார். நடந்ததை எல்லாம் நன் ஒளிவுமறைவின்றி அவரிடம் கூறினேன். போகவில்லே என்றும் வாக்குக் கொடுத்தேன். என் வார்த்தைகளில் அப்பா வுக்கு நம்பிக்கை பிறந்ததும் நான் கல்கத்தாவிற்குச் செல்வதற்கு அனுமதி கொடுத்தார்.



கல்கத்தாவில் ஏற்பாடுகள் எல்லாம் ஒருவிதமாக முடிந்து விட்டபோது நிகழ்ந்த ஒரு சம்பவத்தை இங்கே குறிப்பிடுவது தகும். இங்கிலாந்திற்குப் போக வேண்டுமென்ற என் வெறியை அறிந்திருந்த என் தோழர்கள் அனைவரும் அதில் ஈடுபட்டிருந்தார்கள். தாமும் போக வேண்டுமென்று எல்லாருக்கும் ஆசை. ஆனால் அவர்களுக்கு நல்ல காலம் இன்னும் வரவில்லை. நான் போன பிறகு அவர்களும் சிறிது காலத்திற்குள் எப்படியாவது அங்கே வந்து சேருவதற்கு முயற்சி செய்வார்கள் என்று நாங்கள் எல்லாரும் நினைத்தோம். ஒரு நாள் சட்டக் கல்லூரியை விட்டு வெளியே வரும்போது ஒரு நண்பன் என்னைப் பார்த்து "நாம் ஒரு ஜோஸியரிடம் சென்று இதைப் பற்றிக் கேட்போம்" என்றார். அப்படியே நாங்கள் ஒருவரிடம் சென்றோம். அவர் ஒரு கிழப் பிராமணர். அவருக்கு 60 வயது இருக்கும். அவர் தம் அறையில் இருந்தார். நாங்கள் போய்ச் சேர்ந்ததும், சிறிது நேரத்திற்குள் எங்களைப் பார்த்து, "நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்களென்பது எனக்குத் தெரியும்" என்றார். அப்போது எங்களில் ஒருவன் கேள்வி கேட்க ஆரம்பித்தான். கேள்வி ஒன்றுதான், "வெளிநாட்டுப் பயணம் கை கூடுமா?" என்பது தான். கேள்வியை நாங்கள் சொல்லவில்லை, மனத்திலேயே அடக்கிக் கொண்டோம். "இப்போது இல்லை" என்று அவர் எனக்கு விடை அளித்தார். "நெடுநாளுக்குப் பிறகு உன் ஆசை நிறைவேறும்" என்றார். சுக்தேவைப் பார்த்து "உன் ஆசை அதி விரைவில் இப்போதே நிறைவேறும்" என்றார். மூன்றாவது தோழனைப் பார்த்து, "உன் விருப்பமும் சிறிது காலத்திற்குப் பின் கைகூடும்" என்றார். நான்காவது தோழனிடம் "உன்னுடைய விருப்பம் கைகூடாது" என்றார்.

நாங்கள் அவருக்கு ஒரு ரூபாய் கொடுத்து விட்டு நமஸ்காரம் செய்துவிட்டுத் திரும்பினோம். வழியில், "இந்தக் கிழத்திற்கு ஒன்றும் தெரியாது. எனக்கு எல்லா ஏற்பாடுகளும் ஆகிவிட்டன. அப்படியிருந்தும் நான் போக மாட்டேனாம்; சுக்தேவ், எவன் விஷயத்தில் இதைப்பற்றி இது வரையில் பேச்சு எதுவும் எழவில்லையோ, அவன் விரைவில் சில நாட்களுக்குள் போவானாம்! இது எப்படி நடக்கும்?" என்று பரிகாசமாகப் பேசிக் கொண்டு வந்தோம். அதற்குப் பிறகுதான் ஊரிலிருந்து தந்தி வந்தது. நான் வெளிநாட்டுக்குச் செல்வது திடீரென்று நிறுத்தப்பட்டு விட்டது. ஊரிலிருந்து திரும்பி வந்து, நான் போகமாட்டேன் என்று நிச்சயமான பிறகு சுக்தேவ் போகும் பேச்சு எழுந்தது.

என்னுடைய உடுப்புக்களையும் பணத்தையும் பெற்றுக் கொண்டு அவன் ஒரு நாள் போய்விட்டான். உடுப்புக்களையும் பணத்தையும் ஹாஸ்டலில் அதிக இரகசியமாக வைத்திருந்தோம். எங்களுடைய நண்பர்கள் எவருக்கும்கூடத் தெரியாது. சுக்தேவ் விஷயத்திலும் பயமாயிருந்தது. அவனுடைய தந்தையும் அவனை நிறுத்தி விடுவாரோ என்று அஞ்சினோம். ஆகையால் அவன் விஷயத்தையும் இரகசியமாக வைத்திருந்தோம். அவன் எங்கும் போகக் கூடாது, எவரையும் சந்திக்கக் கூடாது. இப்படியாக விஷயம் முற்றிலும் இரகசியமாக இருந்து வந்தது. புறப்படும் தினத்தன்று அவன் தன்னுடைய ஊருக்குப் போவதாகத் தோழர்களிடம் சொல்லி விட்டான். நாங்கள் இரண்டு மூன்று நண்பர்கள் மட்டும் ஸ்டேஷனுக்குப் போனோம். ரயில் வண்டியில் ஏற்றிப் பம்பாயிக்கு வழி அனுப்பிவிட்டு வந்தோம். பம்பாயிலிருந்து கப்பல் புறப்பட்டச் செய்தி வரும் வரையில் எங்காவது அவனும் பிடிக்கப்பட்டுத் திரும்பிவரச் சொல்லப்பட்டு விடுவானோ என்று எங்கள் மனத்தில் அச்சம் குடி கொண்டிருந்தது. ஆனால் கப்பல் புறப்பட்ட பிறகுதான் அவன் வீட்டாருக்குத் தகவல் கிடைத்தது. கல்கத்தாவிலேயே இருந்த நெருங்கிய உறவினர்களுக்குக் கூடப் புலன் கிடைக்கவில்லை.

## 14. மாணவ வாழ்க்கையின் முடிவு

சுக்தேவை வழி அனுப்பிவிட்டு நான் காங்கிரஸ் தொண்டர் படையில் சேர்ந்து விட்டேன். காங்கிரஸ் முடிந்தபின் படிப்பதில் ஈடுபட்டு விட்டேன். ஊரில் அப்பாவுக்கு நோய் வலுத்துக் கொண்டு வந்தது. கொஞ்ச நாட்களுள் அவர் நிலைமை மோசமாக மாறத் தொடங்கியது. அச்செய்தி கிடைத்ததும் நான் கல்கத்தாவிலிருந்தும் அண்ணன் டும்ராவிலிருந்தும் வந்து சேர்ந்தோம். சில நாட்களுக்குப்பின் அவர் இறந்து போனார். சாவதற்குமுன் எங்களை எல்லாரையும் பார்த்து விட்டார். அவர் இறக்கும்போது அண்ணனுக்கு இரண்டு பெண் குழந்தைகளும் ஒரு மகனும் - அவன்தான் ஜனார்தனன் - பிறந்திருந்தார்கள். எனக்கு மிருத்யுஞ்சயன் அந்த ஆண்டில்தான் பிறந்தான். பேரனைப் பார்த்து அவர் மிகவும் திருப்தி அடைந்தார். நோய் வலுத்தவுடன் அவர் எல்லாரையும் ஒருங்கு கூட்டி வாழ்த்தினார்.

அப்பா இறந்ததால் குடும்பத்தில் குழப்பம் விளைந்தது. நாங்கள் எல்லாரும் துயரத்தில் ஆழ்ந்தோம். ஆனாலும், ஒரு விஷயத்தில் எனக்கு மகிழ்ச்சியும் உண்டாயிற்று. அது, நான் இங்கிலாந்திற்குப் போகாதது நல்லதாயிற்று என்பதுதான். அப்படி நான் போயிருந்து அவருடைய சாவு நிகழ்ந்திருந்தால் நான் எவ்வளவு துக்கப்பட்டிருப்பேன் என்பது தெரியாது. சில நாட்களுக்குப் பிறகு நான் கல்கத்தாவிற்குத் திரும்பிச் சென்றேன். தமையனாரும் டும்ராவுக்குப் போய்விட்டார். வீட்டு விவகாரங்களைத் தமையனார் சிறிது காலத்திற்கு முன்னிருந்தே கவனித்து வந்து கொண்டிருந்தார். இப்போது எல்லாச் சுமையும் அவர் மேல் ஏறிவிட்டது. அவர் டும்ராவிலிருந்து அவ்வப்போது வந்து குடும்பத்தைக் கவனித்து வந்தார். எனக்குச் செலவுக்குப் பணம் முதலியவற்றிற்கும் அவர் தாம் ஏற்பாடு செய்து வந்தார். அவர் படிக்கும்போது செலவுக்காகச் சில சமயங்களில் கஷ்டப்பட வேண்டியிருந்தது. வீட்டிலிருந்து பணம் வருவதற்கு நாளாகி விடும். ஆனால் அப்பா இருக்கும்போதும், அவர் இறந்த பின்னும் அவர் என்னைப் பணத்திற்காக ஒருபோதும் கவலைப்பட விடவில்லை. நான் படிப்பதில் துடியாக இருப்பதாலும், பரீக்ஷைகளில் திறம்படத் தேறி வருவதாலும், எனக்குப் படிப்பில் முற்றிலும் மனம் செலுத்த வாய்ப்பு அளிக்க வேண்டுமென்றும், மற்றப்படி எனக்கு எவ்விதத்திலும் கவலைக்கு இடங்கொடுக்கக் கூடாதென்றும் அவர் விரும்பினார்.

எனக்கு உபகாரச் சம்பளம் இடையறாது கிடைத்துக் கொண்டிருந்தது. அப்பாவாவது அண்ணாவது என் செலவுக்குப் பணம் அனுப்பும்போது அதைக் கணக்கில் சேர்த்துக் கொள்வதில்லை. செலவுக்காகப் பணம் தனியாக முற்றிலும் அனுப்பி விடுவார்கள். உபகாரச் சம்பளத்திலிருந்து கல்லூரிச் சம்பளத்தைக் கட்டி விடுவேன். மீதம் இருந்தது புத்தகங்கள் வாங்குவதில் செலவாகும். பி. ஏ. யில் தேறியபின் இரண்டு உபகாரச் சம்பளங்கள் கிடைத்தன. ஒன்று மாதத்திற்கு 50 ரூபாய் கொண்டது. அது மாதந்தோறும் கிடைக்கும். அது செலவாகி விடும். மற்றொன்று மாதத்திற்கு 40 ரூபாய் கொண்டது. எம். ஏ. யில் தேறிய பிறகு தான் அது மொத்தமாகக் கூட்டிக் கொடுக்கப்படலாம் என்று ஒரு கட்டுப்பாடு இருந்தது. அப்படியே நான் எம். ஏ. யில் தேறிய பின்தான் ஒரே அடியாக 480 ரூபாய் கிடைத்தது. அதை நான் இங்கிலாந்திற்குப் போவது என்ற பைத்தியக்காரத்தனத்திற்காக வாங்கியிருந்த கடனுக்குச் செலுத்திவிட்டேன்.

எப். ஏ. யில் தேறிய பிறகு பரீக்ஷையில் பற்றுதல் இல்லாமல் போய்விட்டது என்று முன்னமே கூறியிருக்கிறேன். பி. ஏ. யில் எப்படி மறுபடியும் முதலாக வந்தேன் என்பது தெரியவில்லை. எம். ஏ.க்குப் படிக்கும்போது இந்த அசிரத்தை அதிகமாகி விட்டது. இந்த ஆண்டில், இங்கிலாந்து பிரயாணப்பித்தாலும் அப்பாவின் சாவாலும் காலம் வேறு வழிகளில் கழிந்து விட்டது. மனமும் நிலையற்று இருந்தது. அப்பாவின் சாவு 1907 பிப்ரவரி அல்லது மார்ச்சில் நிகழ்ந்தது. பரீக்ஷை அடுத்த நவம்பர் அல்லது டிசம்பரில் நடக்க இருந்தது. கோடை விடுமுறையில் நான் சில நண்பர்களுடன் கூடிக் கர்சியாங்கில் சில நாட்கள் இருந்து வரச் சென்றேன். அங்கே பரீக்ஷைக்குத் தயார் செய்து கொண்டிருந்தேன். எம். ஏ. பரீக்ஷையில் எனக்கு உயர்ந்த இடம் கிடைக்கவில்லை. எனக்கு மேல் அநேக தோழர்கள் வந்து விட்டார்கள். எனக்கு இதனால் யாதும் வருத்தம் இல்லை. ஏனெனில் நான் அப்படி நம்பிக்கை எதுவும் வைக்கவில்லை. விசேஷ முயற்சியும் செய்யவில்லை.

இதற்குப் பிறகு இனி என்ன செய்வதென்ற கேள்வி எழுந்தது. பரீக்ஷை எழுதிவிட்டு நான் டும்ராவுக்கு அண்ணனிடம் சென்று விட்டேன். அங்கே சிறிது காலம் இருந்தேன். வக்கீல் பரீக்ஷை எழுதலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அதில் மனம் விழையவில்லை. மேலும், வக்கீல் தொழில் ஆற்ற என்னால் ஆகாதென்றும் எனக்குத் தோன்றியது. என் ஆற்றலின் மேல் எனக்கு நம்பிக்கை குறைந்தது போலாகி விட்டது. அரசாங்க வேலை செய்வதில்லை என்று முன்னமே உறுதி செய்திருந்தேன்.

இதனிடையில் ஒரு நண்பர்-பாபூ வைத்தியநாத் நாராயண் சிங் என்பவர்-நான் முஜபர்பூர் கல்லூரியில் பேராசிரியனாக அமர்ந்தால் மிகவும் நன்றாகும் என்று கடிதம் எழுதினார். அவர் அந்தக் கல்லூரியில் ஒரு பேராசிரியராக இருந்தார். அவர் சொல்லியபடியே நான் மனு போட்டேன். நான் தேர்ந்தெடுக்கப் பட்டு விட்டேன். 1908 ஜுலையில் கல்லூரி திறந்ததும் நான் அங்கே சென்றேன். அந்த வேலையில் மனமும் ஈடுபட்டது. அங்குள்ளவர்களுடன் பழக்கமாயிற்று. ஆனால் அண்ணனுக்கு அதில் திருப்தி இல்லை. கல்லூரியின் பொருளாதார நிலை மெல்ல மெல்லக் கெட்டு வந்தது. கடைசியில் நான் கல்கத்தாவிற்குத் திரும்பிச் செல்லத் தயாராக வேண்டுமென்று நிச்சயமாயிற்று. சட்டக் கல்லூரியில் படிப்பை நான் முன்னமே முடித்து விட்டேன்.

ஆனால் பரீக்ஷை எழுதவில்லை. நான் மீண்டும் கல்கத்தா சென்று அங்கே பரீக்ஷை எழுதிவிட்டு வக்கீல் வேலை தொடங்க வேண்டு மென்பது அண்ணனுடைய நோக்கம்.

இப்படியாக மாணவ வாழ்வு முடிவடைந்தது. வாழ்க்கையில் நுழையும் காலம் வந்து விட்டது. அந்தக் காலத்து நினைவு வரும் போது அக்காலம் ஒரு சுகயுகம் என்பது புலப்படுகிறது. அதை எவ்வளவோ நன்றாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாமே என்றும், அப்படிச் செய்யவில்லையே என்றும் எப்போதாவது வருத்தம் உண்டாகிறது. என் அண்ணன் எனக்கு வழி காட்டி யாக அமையும் நற்பேறு எனக்கு வாய்த்தது. என் உள்ளத்தில் எழுந்த சிறந்த எண்ணங்களுக்கும் மன எழுச்சிகளுக்கும் அவர் தாம் விதை விதைத்தார். படிக்கும் நாட்களில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் வராமலிருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர் இடையறாது செய்து வந்தார். வீட்டில் பணக்கஷ்டமிருக்கிற தென்பதை என்னை உணரவிடவேயில்லை. கல்கத்தாவிலும் அதற்கு முன் சப்ராவிலும் அவர் என்னைத் தம் தோழர் களோடு சமமாகவே நேசித்து வந்தார். என் நினைவுக்கு எட்டிய வரையில் எவருடனும் எவ்விதமான வாக்குவாதம் கூட வந்தது கிடையாது. சண்டையைப் பற்றிப் பேச்சே இல்லை. இதற்கு மாறாக எல்லாரோடு மிகவும் நேசமுடன் பழகி வந்தேன். சில ருடன் மிக்க அந்யோன்ய நட்பும் உண்டாகி விட்டது. அது நீடித்து நிலைத்திருந்தது. படிப்பில் போட்டியும் போராட்டமும் இருந்தாலும், எவரும் என்னிடம் போக்கிரித்தனமாகவோ மோசடித்தனமாகவோ நடந்து கொண்டதில்லை. எவருனுடம் எனக்கு மனஸ்தாபம் உண்டானதும் இல்லை. எங்களுக்குள் எவராவது ஒருவருக்குத் துன்பமோ கஷ்டமோ வந்தபோது நாங்கள் எப்பொழுதும் ஒருவருக்கொருவர் துணைபுரிந்து வந்தோம். மேலும் எனக்குப் போட்டியாக நின்ற நண்பர்களோ டேயே கூடிப் பரீக்ஷைக்குத் தயார் செய்து வந்தேன். எப். ஏ. பரீக்ஷைக்குத் தயார் செய்து கொண்டிருந்தபோது, புகுமுகப் பரீக்ஷையில் என்னுடன் போட்டிபோட்டு இரண்டாவது இடம் பெற்றவன்தான் என் தோழன். நாங்கள் இருவரும் ஒன்றாகச் சேர்ந்துதான் பரீக்ஷைக்குத் தயார் செய்தோம். இப்படியாகவே மற்றப் பரீக்ஷைகளுக்கும் எல்லாரும் சேர்ந்து கூடியே படித்து வந்தோம்.

கல்கத்தா சென்றதும், ஈடன் ஹிந்து ஹாஸ்டல் வாழ்க்கை யும் எனக்கு மிகவும் நற்பயன் பயப்பனவாக அமைந்தது. கல்

கத்தாவுக்குப் போனதினுல்தான் என் கண் திறந்தது. அங்கே போகாமலிருந்திருந்தால் என்ன ஆகியிருக்கும் என்று எண்ணுவது வீண். ஆனுல் வேறு எங்கும் எனக்கு அத்தனை நன்மை கிட்டியிருக்காது என்பது என் நம்பிக்கை. ஈடன் இந்து ஹாஸ்டலில் தங்கியதால் வங்காளி, தோழர்களோடு நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைத்தது போல வேறு எங்காவது இருந்திருந்தால் கிடைத்திருக்காது. வங்காள நண்பர்களின் நினைவு எல்லையற்ற இன்பகரமானதாக இருக்கிறது. என்மீது எவருக்கும் பகைமை உண்டாகவில்லை. அவர்களில் எவருமே என்னுடன் கெடுதலாக எவ்விதத்திலும் நடந்து கொள்ளவில்லை. எவரும் ஒரு கடூரமான சொல்கூட என்னிடம் என்றுமே கூறியதில்லை. அவர்களுடன் கழிந்த காலம் மட்டற்ற இன்பகரமானதும் இலாபகரமானதுமாக அமைந்தது என்று கருதுகிறேன். அவர்களுடன் சேர்ந்து இருந்ததினுல் யாதும் பிரயாசை இன்றி நான் வங்காளி பேசக் கற்றுக் கொண்டேன். இன்றும்கூட வங்காளத்தில் எங்கும் எனக்கு ஏராளமான நண்பர்கள் இருக்கிருர்கள். நெடுநாளைக்குப் பின் ஒத்துழையாமை நாட்களின்போது நான் வங்காளத்தில் சுற்றி வரச் சென்றபோது, எங்கே சென்ருலும் அங்கே எனக்குப் பழைய நாட்களில் தெரிந்திருந்த நண்பர்கள் யாராவது நிச்சயமாய்க் கிடைத்தார்கள். உடனே பழைய ஞாபகங்கள் எல்லாம் நினைவுக்கு வந்துவிடும்.

நான் காங்கிரஸ் தலைவனுனபோது பீகாரில் 1938-39இல் மீண்டும் வங்காளி-பீகாரி என்ற பூசல் எழுந்தது. அதற்குப் பின் நான் வங்காளிகளில் சிலருக்குப் பிடிக்காத சில வேலைகளைக் காங்கிரஸில் செய்யவேண்டி வந்தது. அப்போது அவர்கள் என்னைக் கண்டபடி பேசினுர்கள். கடூரமான கடிதங்களும் எனக்கு எழுதினுர்கள். வசைமாரியும் அதிகப்படி வழங்கப் பட்டது. ஆனுல் அவர்களிடம் எனக்குப் பகைமை ஏதாவது இருந்த தென்ருே அல்லது அவர்கள்பால் வேற்றுமையான மனப்பான்மை எழுந்ததென்ருே இன்று வரையில் எனக்குப் புலப்படவில்லை. இது எப்படி ஆகக்கூடும்? இத்தனை காலமாக இவ்வளவு சிறப்பாகவும் இனிமையுடனும் பழகியதையும், அன்பின் கண்ணேட்டத்தையும், இன்பம் அளிக்கும் பழமையான நினைவுகளையும் மனிதனுல் மறக்க முடியுமா? கடமைக்கு உட்பட்டு எப்போதாவது அவர்களுக்குப் பிடிக்காத காரியத்தைச் செய்ய வேண்டி வந்திருந்தாலும் நான் எவருக்கும் தீமையைத் தீமை என்று முற்றிலும் உணர்ந்து செய்ததில்லை. எது எப்படி

யாயினும் சரி, இவையெல்லாம் மறந்து போகும், ஆனால் என் இளமையில் என் நெஞ்சத்தில் பொறித்த அந்தச் சித்திரம் என்றுமே அழியாது. அந்த நினைவுகள் எல்லாம் என்றுமே நலிய முடியாது. மேலும் வங்காளத்தில் கழிந்த பதினைந்து ஆண்டு வாழ்க்கை எனக்கு அளித்த பரிசையும் நான் மறக்கவே முடியாது.

கல்கத்தாவில் எனக்கு அநேக பீகாரிகளுடன் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. நான் கல்கத்தாவிற்குப் படிக்கப்போனபோது அங்கே பீகாரி மாணவர்கள் சிலர் தாம் இருந்தார்கள். மெல்ல மெல்ல அவர்களுடைய எண்ணிக்கை பெருகியது. பிற்காலத்தில் அவர்கள் பெருந்தொகையாக அங்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். நாங்கள் எங்களுக்கென்று பீகாரி கிளப் ஒன்றையும் அமைத்துக் கொண்டோம். அங்கே வாரந்தோறும் எல்லாரும் கூடுவோம். நாங்கள் சாதி குல வம்புகளை நிறையக் கூடவே கொண்டு வந்திருந்தோம். எங்களுக்காக ஹிந்து ஹாஸ்டலில் தனியாக ஆசாரமான அடுக்களை இருந்தது. அதில் சமையலுக்கு பீகாரி பிராமணன் தான் இருந்தான். நான் கணேஷ் பிரசாதின் விருந்தில் கலந்து கொண்டேனாயினும், சாதிக் கட்டுப்பாடுகளை மிகவும் கடைபிடித்து வந்தேன். அவர் எப்படியும் எங்கள் காயஸ்து சாதிக்காரர். ஆனால் நான் வேறு சாதிக்காரன் தொட்ட சோற்றையோ, எங்கள் ஊரில் (பீகாரில்) உண்ணப்படாத பண்டத்தையோ கல்கத்தாவில் உண்டதில்லை. இத்தனை காலம் வங்காளத்தில் இருந்தேனாயினும் ஒரு நாளாவது வங்காளி மெஸ்ஸில் சமைத்த கச்சி[1] உணவை உண்டதில்லை.

பீகாரி தோழர்கள் பலருடன் எனக்கு நெருங்கிய நட்பு உண்டாகிவிட்டது. அவர்கள் இன்று பீகாரில் எத்தனையோ ஜில்லாக்களில் பரவித் தத்தம் ஊரில் ஏதாவது பணி ஆற்றிவருகிறார்கள். இதனால் நான் எங்குச் சென்றாலும் கல்கத்தா நண்பர்கள் யாராவது கிடைத்து விடுகிறார்கள். நெருங்கிய நண்பர்களுள் சம்பாரன் ஜில்லாவிலுள்ள சிகார்பூரைச் சேர்ந்த ஸ்ரீ அவதேஷ் பிரசாத், ஜகந்நாத் பிரசாத், சாஹாபாத்தைச் சேர்ந்த சுக்தேவ் பிரசாத் வர்மா, பாகல்பூரைச் சேர்ந்த ஸ்ரீ கிருஷ்ண பிரசாத், ராஞ்சியைச் சேர்ந்த பத்ரீநாத் வர்மா, வல்லபத்ர பிரசாத் ஜோதிஷி, டாக்டர் சாதுசிங், டாக்டர் ராஜேஸ்வர்

1 "கச்சி ரஸோயீ" என்பது வடித்த சோறு, சமைத்த பருப்பு, கூட்டு முதலியன. இப்பதத்திற்கு எதிரிடை "பக்கீர ஸோயீ" என்பது. எண்ணெய் அல்லது நெய்யில் பொறித்த பூரி முதலியன இதனுள் அடங்கும்.

பிரசாத், பட்டு கடேவ் பிரசாத் வர்மா, விந்த்ய வாசினீ பிரசாத் வர்மா முதலியவர்கள் இருந்தார்கள். இவர்களில் பலர் இறந்து போய் விட்டார்கள். பலர் இன்றும் இருக்கிறார்கள். அவதேஷ் பாபூவின் நட்பு மிகவும் பலனளிப்பதாக அமைந்தது. அதனால் இலாபமும் கிடைத்தது. பிற்காலத்தில் அவருடன் கல்யாண உறவும் உண்டாயிற்று.

## 15. வக்கீல் வேலைக்கு ஆயத்தமாதல்

முஜபர்பூர் கல்லூரியில் 9-10 மாத காலம் வேலை பார்த்துவிட்டு நான் 1909 மார்ச்சில் கல்கத்தாவிற்குத் திரும்பிப் போய்விட்டேன். அந்தக் காலத்தில் பி. எல். லுக்கு இரண்டு பரீக்ஷைகள் நடப்பது உண்டு. ஒரு பரீக்ஷையில் உடனே தேறிவிட்டேன். மற்றொன்றிற்குத் தயார் செய்ய வேண்டியிருந்தது. ஹைகோர்ட்டில் வக்கீல் தொழில் ஆற்றுவதற்கு முன்பு எவராவது ஒரு வக்கீலிடம் இரண்டு ஆண்டுகளுக்கு வேலை பயில வேண்டும். ஒரு சிறிய பரீக்ஷையிலும் தேற வேண்டும். அதில் நீதிபதிகள் தாமே சில கேள்விகளைப் கேட்பார்கள். நான் விரும்பியிருந்தால் பி. ஏ. யில் தேறிய உடனேயே எவராவது ஒரு வக்கீலிடம் பெயரைப் பதிவு செய்து கொண்டு 1908லேயே இரண்டு ஆண்டுகளை முடித்துவிட்டிருக்கலாம். ஆனால் அந்தச் சமயத்தில் இதில் மனம் செல்லவில்லை. ஆகையால் நான் 1909இல் கல்கத்தாவிற்குச் சென்றபோது, அப்போதிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குத் தொழில் பயில்வோனாக உழைக்கவேண்டியிருந்தது. யாராவது நல்ல வக்கீலிடம் தொழில் கற்கவேண்டும் என்ற ஆசை உண்டாயிற்று. கான்பகதூர் சம்ஸுல் ஹுதாவிடம் ஒரு நண்பர் மூலமாகப் போய்ச் சேர்ந்தேன். அப்போது அவரிடம் இருவர் தொழில் பயின்று கொண்டிருந்தார்கள். விதிப்படி இரண்டுபேர் தாம் இருக்கலாம். "இடம் உண்டானதும் உன்னை எடுத்துக்கொள்ளுகிறேன், அதுவரையில் என் நண்பர் ஒருவருடன் உன்னைச் சேர்த்துவிடுகிறேன்" என்று அவர் கூறினார். அப்படியே அவர் என்னை ஜஹாதுர் ரஹீம் ஜாஹிது என்பவரிடம் அமர்த்திவிட்டார். இந்தக் கனவானும் ஒரு சிறந்த வக்கீல். சிறிது காலத்திற்குப் பின் இவர் இங்கிலாந்திற்குச் சென்று பாரிஸ்டராகித் திரும்பி வந்தார். பிறகு ஹைகோர்ட்டின் நீதிபதியாகவும்

ஆனூர். பிற்காலத்தில் தம் பெயருடன் "ஸாகோவர்தீ" என்ற பதத்தைச் சேர்த்துக் கொண்டார். இதனுல் இவர் ஜஸ்டிஸ் ஸாகோவர்தீ என்ற பெயருடனேயே விளங்கினுர்.

இரண்டு ஆண்டுகளுக்கு வேறு ஒருவேலேயும் இல்லே என்றுல், முதலில் கண்டு பயந்துபோன சட்டநூல்களே மிகவும் பாடுபட்டு நன்ருகப் படிப்போம் என்றும், வக்கீலிடமும் வேலேயை நன்ருக கற்போம் என்றும் எண்ணினேன். என் செலவுக்காக அண்ணனுக்குப் பாரமாக அமைய விரும்பவில்லே. ஆகையால் ஆரம்பத்தில் சிறிதுகாலத்திற்குச் சிட்டிக் கல்லூரியில் ஆசிரியராக வேலே பார்த்தேன். ஆனுல் அத்தொழில் சில நாட்களுக்குத்தான் நின்றது. பிறகு சில மாணவர்களுக்கு அவர்கள் வீடுகளுக்குச் சென்று பாடம் சொல்லிக் கொடுத்து வந்தேன். அதைக்கொண்டு கல்கத்தாவில் செலவுக்குப் பணம் தேடிக் கொண்டேன். நான் பாடம் சொல்லிக்கொடுத்து வந்த பையன்களில் ஒருவன் ஜஸ்டிஸ் திகம்பர் சட்டர்ஜியின் மகன். வக்கீல் தொழில் ஆரம்பிப்பதற்கு முன்னமே இவ்விதமாக ஒரு நீதிபதியுடன் அறிமுகமாகிவிட்டது.

சம்ஸுல் ஹுதா சாஹபின் அலுவலகத்தில் இடம் உண்டானதும் அவரிடம் வேலே செய்யத் தொடங்கினேன். அந்த வாய்ப்பை நன்ருகப் பயன்படுத்திக் கொண்டேன். வக்கீலிடம் இவ்விதமாகப் பெயரைப் பதிவு செய்து கொள்பவர்கள் சாதாரணமாக மிகக் குறைவாகத்தான் வேலே செய்வார்கள். இரண்டு ஆண்டுகளே எப்படியோ கழித்துவிட்டு பேருக்கு ஒரு பரீக்ஷையில் தேறிவிட்டு வக்கீல் ஆகிவிடுவார்கள். நான் அப்படிச் செய்யவில்லே. நான் நாள்தோறும் அதிகாலேயில் சம்ஸுல் ஹுதா சாஹப் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்து விடுவேன். அங்கே பத்து மணி வரையில் அவருடன் வழக்குகளேப் பற்றிய காகிதக் கட்டுகளேப் படிப்பேன். அவற்றைப்பற்றி, அவர்காட்டிய வகையில் குறிப்புகளே எழுதுவேன். சட்டப் பிரமாணங்கள் முதலியவற்றைப் படித்து, அவருக்கு வேண்டியவற்றை எல்லாம் சேகரித்துக் கொடுப்பேன். நான் அவருக்காகக் குறிப்புகளேத் திறம்பட எடுக்கிறேன் என்றும், அவற்ருல் அவருக்குத் தேவையான உதவி முற்றிலும் கிடைத்துவிடுகிறதென்றும், ஆகையால் துணேக்கு வேறு இளேய வக்கீல் தேவையில்லே என்றும் அவர் சில நாட்களுக்குள் கண்டு கொண்டார்.

அவர் வீட்டிலிருந்து அதிகத் தொலேவிலுள்ள ஒரு மெஸ்ஸில் நான் இருந்து வந்தேன். அவ்விடத்திற்குச் சிறிது தூரம் டிராமில் சென்று பிறகு டிராமைவிட்டு இறங்கிச் சுமார் ஒரு மைல்

நடக்கவேண்டும். அவர் அதிகாலையில் எழுந்திருந்து காகிதக் கட்டுகளைப் படிப்பார். நான் ஏழு மணிக்கு வந்து விடுவேன். பத்து மணிவரையில் அவருடன் வேலை செய்வேன். பிறகு மேலே கூறியபடி என் மெஸ்ஸிற்குப் போய் உணவு உண்டு விட்டு ஒரு மணிக்கு ஹைகோர்ட்டுக்குப் போவேன். அங்கே நடக்கும் வழக்குகளைக் கேட்பேன். முக்கியமாக, நான் அவருக் குக் குறிப்புகள் எழுதிக் கொடுத்த வழக்குகளை ஒட்டிய வாதங் களின் மேல் என் மனம் செல்லும். சாயங்காலம் ஹைகோர்ட்டி லிருந்து வெளியேறி என் மெஸ்ஸிலிருந்து நான்கு கல் தொலைவில் இருந்த பவானிப்பூருக்குச் சென்று ஒரு மாணவனுக் குப் பாடம் சொல்லிக் கொடுத்துவிட்டுப் பிறகு இரவு ஒன்பது பத்து மணி சுமாருக்குத் திரும்பி வந்து தூங்குவேன். இவ் வண்ணமாக மிகவும் பாடுபட்டு உழைத்து வந்தேன். வேலையை யும் நன்ருகக் கற்றுக்கொண்டேன். ஒரு நாள் சம்ஸுல் ஹுதா சாஹப் என்னைப் பார்த்து "உனக்கு மெஸ்ஸுக்குப் போய் வர அதிகக் கஷ்டமாயிருக்கிறது; நேரமும் வீணுகிறது; ஆகை யால் நீ என் வீட்டிற்கே வந்து விடு. உனக்கு என்ன வேண் டுமோ, சொல். அந்த வசதிகள் எல்லாவற்றையும் செய்து கொடுக்கிறேன்" என்ருர். அப்படியே நான் இருப்பதற்கு ஓர் அறையையும் சமையலுக்குத் தனியாக ஒன்றையும் எனக்கு ஒதுக்கிக் கொடுத்தார். நான் அங்கே இருக்கலானேன். அப் போது அவர் இரவிலும் காலையில், 4–5 மணிக்கு எழுந்திருக்கும் போதும்கூட, அவசியப்பட்டபோது என்னைக் கூப்பிடுவார். தம் மோடேயே என்னை நாள்தோறும் தம் வண்டியில் ஏற்றிக் கொண்டு கச்சேரிக்கு அழைத்துச் செல்வார். தம் வீட்டுப் பிள் ளையைப் போலவே அவர் என்னைக் கருதும் அளவுக்கு அவருடன் நெருங்கிய உறவு வளர்ந்து விட்டது.

ஹிந்து–முஸ்லிம் என்ற பூசல்கள் மிகவும் பலமாகத் தலை விரித்தாடும் இக் காலத்தில் அப்போது நடந்த ஒரு சிறிய சம்ப வத்தைக் குறிப்பிடுவது நலமாகும். சம்ஸுல் ஹுதா பெயர் பெற்ற வக்கீல். அவர் முசல்மானியர்களின் தலைவர்களில் ஒருவர் என்று கருதப்பட்டார். முஸ்லிம் லீகுக்கு தலைவரும் ஆனுர். பல்கலைக் கழகத்தின் செனேட், சட்டசபை ஆகியவற்றின் உறுப் பினராகவும் இருந்தார். பின்னர் "சர்" பட்டப் பெருமையும் கிடைத்தது. ஆனுல் அந்தச் சமயத்தில் அவர் வெறும் கான் பக தூராகத்தானிருந்தார். ஆயினும் ஹைகோர்ட்டில் கட்சிக்காரர் களும் நீதிபதிகளும் அவருக்கு அதிக மரியாதை காட்டி வந்தார்

கள். சில மாணவர்கள் உணவு வேளைக்கு அவர் வீட்டிற்கு வந்து உணவு உண்டு போவார்கள்.

நான் அவர் வீட்டில் வசித்து வந்தபோது பக்ரீத் பண்டிகை வந்தது. அவர் குடியிருந்த இடம் முசல்மானியர் வசிக்கும் பகுதி. அங்கே முசல்மானியர் ஏராளமாகக் குடியிருந்தார்கள். இந்தச் சமயத்தில் அவர் வீட்டிலாவது அக்கம் பக்கத்திலாவது பசு பலியிடப்படலாம் என்று நான் நினைத்தேன். நானோ சநாதன ஹிந்து. இந்தச் சமயத்தில் நான் மூன்று நான்கு நாட்களுக்கு வேறு எங்காவது போய் விடுவது நன்று என்று நினைத்தேன். அப்படியே சத்தம் போடாமல், அவரிடம் ஒன்றும் சொல்லாமல், அங்கிருந்து போய்விட்டேன். எனது பழைய மெஸ்ஸுக்குப் போய் நண்பர்களுடன் தங்கி இருந்தேன். மூன்று நான்கு நாட்கள் கழிந்து திரும்பி வந்தேன். அப்படி வந்ததுமே அவர் என்னைப் பார்த்து "எங்கே போய் விட்டாய்?" என்று கேட்டார். நான் எல்லா விஷயங்களையும் தெளிவாகச் சொல்லவில்லை. "இரண்டு மூன்று நாட்களுக்குச் சில நண்பர்களுடன் தங்கி இருக்கச் சென்றேன்" என்று மட்டும் கூறினேன்.

"எனக்குப் புரிந்து விட்டது. நீ பக்ரீதினால் போய்விட்டாய். இங்குப் பசுபலி கொடுக்கப்படலாம், ஆகையால் இங்கே இருக்கக் கூடாதென்று நினைத்திருப்பாய். இதனால் நீ எனக்கு அநீதி விளைவிக்கவில்லையா ? உன்னை விட்டு விடு, என் வீட்டில் எத்தனையோ ஹிந்து வேலைக்காரர்கள் இருக்கிறார்களே. பூந்தோட்ட மாலி (தோட்டக்காரன்) ஒரு ஹிந்து ; பசுக்களை மேய்ப்பவன் ஒரு ஹிந்து ; அவர்களுடைய மனப்பான்மை எனக்கு நினைவிருக்காதா ? அவர்களுடைய மனம் வருந்தாதா? நீ என்னை கேட்டிருக்க வேண்டும். என் குடும்பத்தில், என் ஹிந்து வேலைக்காரர்களை உத்தேசித்துப் பசுப்பலி இடுவதில்லை" என்று அவர் கூறினார்.

எனக்கு அதிக வெட்கமாயிருந்தது. நான் அவருக்கு அநீதி விளைத்தேன் என்று உணர்ந்தேன். அந்தச் சமயத்தில் வங்காளப் பிரிவினை எதிர்ப்புப் புரட்சி நடந்து கொண்டிருந்தது. வங்காள முசல்மானியர் இந்தப் புரட்சியை எதிர்த்து நின்றார்கள். சம்ஸுல் ஹுதாவின் சொந்தப் பிரதேசமான கிழக்கு வங்காளத்தில் ஹிந்து-முசல்மான் கலகங்கள் அதிகமாக நடந்து வந்தன. அவர் வங்காளப் பிரிவினையை ஆதரித்தார். இப்படி எல்லாம் இருந்தும் அவருடைய பண்பு இவ்வண்ணமாக இருந்ததால் அவர் எங்களுடன் இவ்வாறு நடந்து கொண்டார்.

இதற்கிடையில் பி. எல். பரீக்ஷையிலும் தேறிவிட்டேன். நான் அதில் கவனமே செலுத்தவில்லை. ஆகையால் எப்படியோ சாதாரணமாகத்தான் தேறினேன். நான் தொழில் பயின்று வந்த இரண்டு ஆண்டுகள் முடிவுக்கு வந்து கொண்டிருந்தன. அப்போது அவர் கவர்னரின் எக்ஸிகுயூடிவ் கவுன்ஸிலின் அங்கத்தினர் ஆகப் போவதாக வதந்தி நிலவத் தொடங்கியது. அவருக்கும் இது தெரிந்து விட்டது. தாம் இனி நெடுங்காலம் வரையில் வக்கீல் வேலை புரிய முடியாதென்றும், நான் வக்கீல் தொழில் ஆரம்பித்த பின் எனக்கு இப்போது போல உதவி செய்ய இயலாது என்றும் அவர் என்னிடம் சொன்னார். நானும், "நாம் இப்போது வேலையை நிறையக் கற்றுக் கொண்டோம், இனி நாமே எல்லா வேலைகளையும் பார்க்க முடியும்" என்று நினைத்தேன்.

1911 ஆகஸ்டு மாதம் நான் வக்கீல் தொழிலை ஆரம்பித்தேன். என் பெயர் ஹைகோர்ட்டில் பதிவான தினத்தன்று அவர் என் கையில் ஒரு வழக்கைக் கொடுத்தார். தாமும் கூட வந்து நீதிபதிகளின் முன்னிலையில் உட்கார்ந்து கொண்டு என்னை வாதிக்க விட்டார். இவ்வழக்குத் தொடங்கிய பின் ஹைக்கோர்ட்டு சில நாட்களுக்குத்தான் திறந்திருந்தது. மறுபடியும் ஹைக்கோர்ட்டுத் திறந்தபின் நான் கல்கத்தா சென்றபோது சம்ஸுல் ஹுதாவின் நியமனத்தைப் பற்றிய வதந்தி மிகவும் பலமாயிருந்தது. இனி அவர் வக்கீல் தொழில் ஆற்றமாட்டார் என்று கட்சிக்காரர்களும் தெரிந்து கொண்டார்கள். இரண்டரை மூன்று மாதங்கள் மூடியிருந்த ஹைக்கோர்ட்டு திறந்தபின் அந்த மூன்று மாதங்களில் வந்து நிறையக் குவிந்திருந்த புதிய வழக்குகள் கோர்ட்டில் தாக்கல் செய்யப்படும். சம்ஸுல் ஹுதா சாஹபு வெளியூர்களிலிருந்து தம்மிடம் வந்திருந்த வழக்குகளில் பலவற்றை எனக்கு அமர்த்திக் கொடுத்தார். "நான் இனி இங்கிருக்க மாட்டேன், பணம் குறைவாகக் கிடைத்தாலும் சரி. கிடைக்காமலே போய் விட்டாலும் சரி, இந்த வழக்குகள் உன் கையில்தான் இருக்கும். நீ நன்றாக வேலை பார்த்தால் கட்சிக்காரர்கள் உன்னிடமே தங்கள் வேலையைக் கொடுத்து வருவார்கள்" என்றார். இந்த விஷயத்தை இங்கு எடுத்துரைத்தது அவருடைய அன்பைச் சுட்டிக் காட்டுவதற்காக மட்டுமன்று. வேறு காரணத்திற்காகவும் இதைக் கூறுவது அவசியமாயிருக்கிறது.

சில நாட்களுக்குப் பிறகு அந்த வழக்குகளில் ஒன்று கோர்ட்டில் சமர்ப்பிக்கப்பட்டது. கட்சிக்காரர் முறைப்படி முன்பணம்

கொடுத்து என்னை அமர்த்தவில்லை. அப்படி இருந்தாலும் கூட, வக்காலத்தில் நான் தான் கையெழுத்துப் போட்டிருந்தேன். கோர்ட்டு அறிக்கையிலும் என் பெயர்தான் வந்திருந்தது. அந்தக் கட்சிக்காரர் பிறகு மற்றொரு வக்கீலையும் நியமித்து விட்டார். ஆனால் சம்ஸுல் ஹுதா சாஹப் என் பெயரில் பதிவு செய்து வைத்த வழக்குகளில் எதுவேனும் கோர்ட்டில் எடுத்துக் கொள்ளப்படும் போது அதன் காகிதக் கட்டை மிக நன்றாகப் படித்துச் சட்டங்கள் முதலியவற்றையும் பார்த்து வைத்துத் தயாராக இருப்பேன். அன்றும் அதே போலத் தயார் செய்து கொண்டு போனேன். சட்டத்தைப் பற்றிய கேள்விகள் அதில் நிறையக் கிளம்பின. என்னுடைய தலைமை வக்கீல் அவ்வளவு ஆழ்ந்து தயார் செய்யவில்லை. நீதிபதி ஆஷுதோஷின் கோர்ட்டில் இவ் வழக்கு நடந்தது. அங்கே நான் தலைமை வக்கீலுக்கு உதவி செய்து கொண்டிருந்தேன். பிரமாணத்தின் மேல் பிரமாணம் எடுத்துரைப்பதற்காக அவர் கையில் குறிப்புகளைக் கொடுத்துக் கொண்டே இருந்தேன். சர் ஆஷுதோஷ் இவை எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார். சிறிது நேரத்திற்குப் பின் அவர் என்னைப் பார்த்து, "இன்னும் எத்தனை பிரமாணங்கள் அங்கே உன்னிடம் இருக்கின்றன? அவற்றை எல்லாம் சொல்லி விட்டால், புத்தகங்களை உடனே வரவழைப்பேன்" என்று கூறினார். பிறகு அந்த வழக்கை ஒட்டி ஒரு சிறந்த தீர்ப்பை எழுதினார். அது ரிபோர்ட்டிலும் பிரசுரிக்கப்பட்டது.

இப்படியாக இது முடிந்துவிட்டது. நான் அவ்வழக்கை மறந்தும் போயிருந்திருப்பேன். ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் அடிக்கடி கூடச் சேர்ந்து வேலை பார்த்துக் கொண்டு வந்த வக்கீல் ஒருவர்—அவர் பல்கலைக் கழகத்தின் அங்கத்தினராகவும் இருந்தார்—என்னைப் பார்த்து, "உனக்குச் சட்டக் கல்லூரியில் பேராசிரியர் வேலை கிடைத்தால் ஒப்புக் கொள்வாயா?" என்று கேட்டார். எனக்கு வியப்பு உண்டாகியது. ஏனெனில், அதற்காக நான் எவரிடமும் சொல்லவில்லை. வைஸ்—சான்சலராயிருந்த சர் ஆஷுதோஷ் வீட்டில் வக்கீல்கள் ஒரு தர்பாரில் கூடியிருப்பது போலக் குழுமியிருப்பது வழக்கமாயினும் நான் மட்டும் அவரைப் பார்க்கவும் இல்லை; அவரிடம் எதுவும் சொல்லவுமில்லை. என்னைப் போன்ற இரண்டு ஆண்டுப் பயிற்சி மட்டுமே நிறைந்த ஒரு வக்கீலுக்கு இவ்வேலை கிடைக்கக் கூடுமென்று கூட எனக்குத் தெரியாது. ஆகையால் என் நண்பரைப் பார்த்து "இந்த வேலை எனக்கு எப்படிக் கிடைக்கக் கூடும்?

நான் எவரையும் பார்க்கவில்லையே, மனுவும் போடவில்லையே,'' என்று வியப்புடன் கேட்டேன். அதன் மேல் அவர், ''நீ ஏதோ ஒரு வழக்கில் சர் ஆஷுதோஷின் மன்றத்தில் வேலை செய்தாயாம். அவர் அதைக் கவனித்துப் பெரு மகிழ்ச்சி அடைந்தாராம். நீ போய் அவரைப் பார்'' என்றார். நான் அப்படியே சென்றேன். சில நாட்களுக்குப் பிறகு எனக்குச் சட்டக் கல்லூரியில் வேலை கிடைத்து விட்டது. வழக்குகளில் பணம் அதிகம் கிடைப்பதில்லை. ஆயினும் கல்லூரியில் பாடங் கற்பிப்பதற்காக நான் வீட்டில் சட்டங்களை நிறையப் படிக்க வேண்டி வந்தது. அதனால் பெரும்பயன் பெற்றேன். இப்படியாக ஊர் பேரில்லாததும் பணம் கிடைக்காததுமான ஒரு வழக்கு எனக்கு இந்தப் பெருமையை அளித்தது.

வக்கீல் வேலை தொடங்குவதற்கு முன் நிகழ்ந்த ஒரு விஷயத்தையும் இங்கே சொல்லிவிடுகிறேன். நீதிபதி திகம்பர் சட்டர்ஜீயின் வீட்டில் அவர் மகனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்தேன் என்பதை மேலே கூறியுள்ளேன். அதனால் அவருடன் பழக்கம் உண்டு; ஆனால் நெருங்கியது அன்று. நான் பல்கலைக் கழகப் பரீட்சைகளில் திறம்படத் தேறியிருக்கிறேன் என்பது அவருக்குத் தெரியும். இதனால்தான் அவர் என்னைத் தம் மகனுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க அமர்த்தியிருந்தார். இப்போது நான் வக்கீல் வேலை தொடங்கப்போகிறேன் என்று தெரிய வந்ததும் அவர் ஒரு நாள் என்னிடம் சில விஷயங்களை எடுத்துக் கூறினார். ''உன்னுடைய உறவினர் எவராவது வக்கீலாக இருக்கிறார்களா?'' என்று கேட்டார். ''எவரும் இல்லை'' என்று விடை அளித்தேன். உண்மையில் என் மாமனாரைச் சேர்ந்தவர்களுள் பல வக்கீல்கள் இருந்தார்கள். ஆனால் அவர்கள் ஐக்கிய மாகாணத்திலுள்ள பலியாவில் தொழில் ஆற்றிவந்தார்கள். பீகாரில் என் உறவினர்களில் எவரும் இத்தொழிலில் இல்லை. நான் கூறியதைக் கேட்டு அவர் ''இது மிகவும் நல்லது'' என்றார். எனக்கு இது வியப்பாகப் பட்டது. ஏனெனில் எவராவது உடன்பிறந்தார் சுற்றத்தார் வக்கீலாக இருந்தால், அவர்கள் எனக்கு ஆரம்பத்தில் உதவி புரிவார்கள் என்றும், அவர்களிடமிருந்து வழக்குகள் கிடைக்கும் என்றும், இவ்விதமாக வழக்குகள் என் கைக்கு நிறைய வரும் என்றும் நான் கருதினேன்.

இந்தக் கருத்தையே அவரிடமும் தெரிவித்தேன். அதன்மேல் அவர் பின்வருமாறு கூறினார். ''இப்படி உன் உறவினர்களில் எவரும் வக்கீலாக, அதுவும் பெயர் வாய்ந்த வக்கீலாக, இல்லை

என்பது உன்னுடைய அதிர்ஷ்டம் என்று நினைத்துக்கொள். அப்படி எவரும் இருந்திருந்தால், உறவின் காரணமாக அவரிடமிருந்து வழக்குகள் உன் கைக்கு வரும். ஆனால் கட்சிக்காரர்கள் உன்னை வக்கீலாக அமர்த்த மாட்டார்கள். பெரிய வக்கீல் சாஹபின் தயவுக்காக யாரோ உதவாக்கரை வக்கீலையும் வைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது என்று அவர்கள் நினைப்பார்கள். உன்மேல் அவர்களுக்கு நம்பிக்கை என்றுமே இருக்காது. அவர்கள் உள்ளத்தில் உன்பால் மரியாதையும் இருக்காது. ஆகையால் மற்றொரு வக்கீலையும் அமர்த்திக் கொள்வார்கள். நீயும் வேறு யாரோ வழக்கை வாதாடப்போகிறார் என்று நினைத்துக்கொண்டு விசேஷமாகத் தயார் செய்யமாட்டாய். இப்படியாக நீ வேலையில் சோம்பேறி ஆகிவிடுவாய். வழக்கில் வாதிப்பதற்கும் உனக்கு வாய்ப்புக் குறைவாகத்தான் கிடைக்கும். பிறகு நீ முன்னுக்கு வந்து உன் உழைப்பால் நல்ல வக்கீல் ஆனபோதும் கூட அந்தக் கட்சிக்காரர்கள் உன்னிடம் வந்தால், 'நாங்கள்தாம் நீர் தொழில் ஆரம்பிக்கும்போது உம்மை வக்கீலாக அமர்த்திக்கொண்டோம்' என்றுகூறி நினைவூட்டுவார்கள். இதனால் உனக்கும் தாக்ஷணியம் உண்டாகும். அதனால் அவர்களிடமிருந்து பணம் வாங்கவும் முடியாது. பணக்காரக் கட்சிக்காரர்கள் இப்படிப்பட்டவர்களாக இருப்பார்கள். ஏழை யாராவது உன்னிடம் வந்தாலோ, உன் வழக்கத்தால் நீ அவர்களை அதிகமாகக் கவனிக்கமாட்டாய். ஏனென்றால் உன்னிடம்தான் பணக்காரக் கட்சிக்காரர்கள் இருக்கிறார்களே! அவர்கள் பணம் கொடுத்தாலும் சரி, கொடுக்காமல் போனாலும் சரி, அவர்களுடைய வழக்குகளை நீயே முழுப் பொறுப்பும் ஏற்று நடத்திவர வாய்ப்புக் கிடைக்கிறதோ இல்லையோ, எப்படியாயினும் சரி, அவர்கள் உன்னிடம் வந்துகொண்டிருக்கிறார்கள் என்பதைப்பற்றி உனக்குக் கர்வம் உண்டாகும். ஆனால் உனக்கு உதவி செய்யக்கூடிய உறவு வக்கீல் இல்லாவிட்டால், இப்படிப்பட்டக் கட்சிக்காரர்கள் எவரும் உனக்குக் கிடைக்க மாட்டார்கள். நீ நன்றாகப் படித்திருப்பதைத் தெரிந்துகொண்டு ஏழைக் கட்சிக்காரர்கள்தாம் உன்னிடம் வருவார்கள். பணம் குறைவாகத்தான் கொடுப்பார்கள். ஆனால் நீயேதான் தமக்கு எல்லா வகையிலும் துணை என்று நினைப்பார்கள். அவர்களுக்கு வேறொரு வக்கீல் இருக்கமாட்டார். நீதான் அவர்களுடைய வழக்குகளுக்கு ஆகவேண்டியன எல்லாவற்றையும் செய்யவேண்டும். ஆகையால் நீ, உன்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்குத் திறம்படத் தயார் செய்வாய். இவ்வண்ணமாக வேலை செய்

வதற்கு நல்ல வாய்ப்புக் கிடைக்கும். அவர்களுடைய வழக்கில் நீ வெற்றி பெற்றுவிட்டால் அவர்கள் மற்ற ஏழைகளிடம் உன் புகழைப் பாடுவார்கள். அது விளம்பரம் போல உதவும். மற்ற ஏழைக் கட்சிக்காரர்களும் உன்னிடம் வர ஆரம்பிப்பார்கள். இப்படியாக உனக்கு நல்ல பெயர் வரும். இதில் எவருடைய உதவியும் இருக்காது. யாருக்கும் கடமைப்பட்டிருக்க மாட்டாய். இப்படியாக வக்கீல் தொழிலில் நீ மேன்மை அடைந்தபின் பெரிய கட்சிக்காரர்களும் தாமாகவே உன்னிடம் வந்து குழைவார்கள். ஆனல் அவர்கள் பழைய உதவியைச் சுட்டிக்காட்ட முடியாது. நீ அவர்களிடமிருந்து கௌரவமாகப் பணம் பெற்றுக்கொள்ளலாம். ஆகையால் நீ பாடுபட்டு வேலேயை நன்ருகச் செய்யக் கற்றுக்கொள். பிறகு வக்கீல் தொழில் நன்ருக வளரும்'' என்றெல்லாம் அவர் கூறினர்.

அவருடைய சொற்களால் என் மனத்தில் தைரியம் பெருகிற்று. அவர் சொல்லிய வார்த்தைகள் ஒவ்வொன்றும் உண்மையில் நிகழ்ந்தது. தொடக்கத்தில் ஏழைக் கட்சிக்காரர்கள்தாம் கிடைத்தார்கள். எனக்கு முதலில் இருந்தே வேறு வக்கீலின் உதவி இன்றியே வேலே செய்வதற்கு நல்ல வாய்ப்பு கிடைத்தது. இதனல் மிகவும் உழைக்க வேண்டியிருந்தது. அதனல் அறிவு வளர்ந்தது. பணக்காரர்கள் என்று சொல்லக்கூடிய கட்சிக்காரர்களும் சிலர் கிடைத்தார்கள். அவர்களுடன் பழைய தொடர்பு இருந்தது. ஆகையால்தான் அவர்கள் என்னிடம் வந்தார்கள். அவர்களேத் தவிர மற்ற எல்லாரும் ஏழைகள்தாம்.

நான் வக்கீல் தொழிலுக்குப் படித்துக் கொண்டிருந்தபோது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இங்கே அதைக் குறிப்பிட வேண்டும். அந்தக் காரியம் கூடிவந்திருந்தால் என் வாழ்க்கையின் போக்கு வேறு வழியில் சென்றிருக்கும். அந்தச் சமயத்தில் நான் அரை குறை கனவு கண்டதுபோன்ற மனநிலேயில் இருந்தது நல்லதாகி விட்டது. அந்தச் சம்பவம் போற்றற்குரிய ஸ்ரீ கோகலேயைச் சந்தித்ததுதான்.

## 16. மேன்மை பொருந்திய கோகலேயுடன் சந்திப்பு

1910இல் நான் வக்கீல் பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்தேன். கல்கத்தாவில் ஒரு மெஸ்ஸில் தங்கியிருந்தேன். அங்கே இன்னும் இரண்டு மூன்று பீகாரிகளும் இருந்தார்கள். என் தமையனாரும் அங்கு வந்திருந்தார். ஒரு நாள் ஹைகோர்ட்டில்—நான் பெரும்பாலும் ஒவ்வொரு நாளும் அங்கே போய் வந்து கொண்டிருந்தேன்.—பாரிஸ்டர் ஸ்ரீ பரமேஸ்வர்லால் என்னைப் பார்த்து "நீயும் ஸ்ரீ கிருஷ்ணனும் சென்று ஹானரபிள் கோகலேயைப் பாருங்கள். அவர் உங்கள் இருவரையும் வரச் சொன்னார்" என்று கூறினார். இதைக் கேட்டு எனக்கு அதிக வியப்பு உண்டாயிற்று. ஏனெனில் ஹானரபிள் கோகலேயைச் சந்திக்கும் நற்பேறு எனக்கு இதுவரையில் கிடைக்கவில்லை. அவருக்கும் என்னைத் தெரிந்திருக்க யாதொரு காரணமும் இல்லை. "அவர் முன்னுக்கு வரக்கூடிய இரண்டு மூன்று பீகாரி மாணவர்களைச் சந்திக்க விரும்பினார். நான் உங்கள் இருவரின் பெயரையும் கூறினேன்" என்று ஸ்ரீ பரமேஸ்வர்லால் விளக்கிக் கூறினார். ஸ்ரீ கிருஷ்ண பிரசாதும் (இவர் துர்ப்பாக்கிய வசத்தால் இப்போது சமீபத்தில்தான் இறந்துபோனார்). நானும் ஆகிய இருவரும்தாம் மாணவர் மகாநாட்டில் சிறப்பாக ஈடுபட்டிருந்தோம். அதனால் எங்களை அநேகம் பேருக்குத் தெரியும். ஸ்ரீ பரமேஸ்வர்லாலும் இந்தக் காரணத்தால் தான் எங்கள் இருவர் பெயரையும் குறிப்பிட்டிருந்திருப்பார்.

நாங்கள் மேன்மை பொருந்திய ஸ்ரீ கோகலேயை அவர் தங்கி இருந்த இடத்திற்குச் சென்று சந்தித்தோம். அவர் சிறிது காலத்திற்கு முன்புதான் "செர்வண்ட்ஸ் ஆப் இந்தியா சொசையிடி"யை ஆரம்பித்திருந்தார். பீகாரின் சிறந்த இளைஞர்களில் சிலர் அதில் சேரவேண்டுமென்று அவர் விரும்பினார். அவர் எங்களிடம் தேசத் தொண்டைப்பற்றி வலியுறுத்திப் பேசி, எங்களை அவருடைய சங்கத்தில் சேரும்படி கூறினார். நாங்கள் பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைகளில் திறம்படத் தேறியிருக்கின்றோம் என்பதும் இப்போது வக்கீல் வேலைக்கு ஆயத்தம் செய்துகொண்டிருக்கிறோம் என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தன. "உங்கள் வக்கீல் தொழில் பெரிதாக விருத்தியடையலாம்; நீங்கள் நிறையப் பணம் சம்பாதிக்கலாம்; மிகவும் உல்லாசமாகவும் சர்வ சம்பத்

துடனும் வாழலாம். பெரிய மாளிகை, குதிரை வண்டி, வேலை யாட்கள் போன்ற ஆடம்பரப் பொருள்கள், மற்றப் பணக்காரர் களுக்கு அமைவதுபோல உங்களுக்கும் இவை எல்லாம் வந்து சேரலாம். ஆனால் சில இளைஞரின்மேல் நாட்டிற்கும் உரிமை உண்டு. நீங்கள் படிப்பில் திறமைசாலிகளாக இருப்பதால், உங் கள்மேல் அதிக உரிமை உண்டு'' என்று அவர் கூறினர். தம் மைச் சுட்டிக் காட்டி ''என் முன்னும் இக்கேள்வி எழுந்தது. நான் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். நான் படிப்பை முடித்த பின் பணம் சம்பாதிப்பேன் என்றும், எல்லாரையும் இன்புறச் செய்வேன் என்றும் என் குடும்பத்தார் அதிக நம்பிக்கை கொண்டிருந்தார்கள். நான் அவர்கள் நம்பிக்கையில் மண்ணைப் போட்டுவிட்டு தேசத் தொண்டு செய்ய விரதம் பூண்டபோது என் தமையனர் சில நாட்களுக்கு என்னுடன் பேச்சுவார்த்தை இல்லாத அளவுக்கு வருத்தப்பட்டார். ஆனல் சில நாட்களுக்குப் பின் விஷயம் அவருக்குச் சரியாக விளங் கியது. பிறகு என்மேல் எல்லாரும் அன்பு பூண்டார்கள். இவை யெல்லாம் உங்களுக்கும் நடக்கலாம். ஆனல், இதை நம்புங்கள்— எல்லாரும் கடைசியில் உங்களைப் போற்றுவார்கள். உங்கள் ஜனங்கள் உங்களையே முற்றிலும் நம்பி இருக்கலாம். ஆனல் யார் கண்டார்கள்! நீங்கள் இறந்துபோனல், அவர்கள் அதைச் சகிக்காமலா போவார்கள்?'' என்றெல்லாம் எடுத்துரைத்தார்.

இவ்விதமாக அவர் எங்களுடன் ஒன்றரை இரண்டு மணி நேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தார். அவருடைய பேச்சு முறையும் எங்கள் மனத்தில் ஆழமாகப் பதியும்படியாக இருந்தது. ''இப்பொழுதே விடை கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் விஷயம் கடினமானது. யோசனை செய்து என்னிடம் மற்றொரு நாள் வந்து உங்கள் முடிவைச் சொல்லுங்கள்'' என்ருர். நாங்கள் மருட்சி உற்றவர்கள் போல அங்கிருந்து வெளியேறி எங்கள் மெஸ்ஸிற்குத் திரும்பி வந்தோம். அவருடைய சொற்கள் எங்கள் மனத்தில் மிக ஆழமாகப் 'பதிந்து போனதால் வேறு எண்ணம் எதுவும் எழ இடமில்லை.

நாங்கள் இருவரும் அவர் கூறியதைப் பற்றிச் சிந்திக்க லானோம். எனக்குப் பல நாட்கள் வரையில் தூக்கம் வரவில்லை. சாப்பாடு கீப்பாடு எல்லாம் பேருக்கு மட்டும்தான் என்ற அளவுக்கு ஒடுங்கி விட்டன. தேசத் தொண்டைப் பற்றிய எ்ண்ணங்கள் இதற்கு முன்னுல் எனக்கு அவ்வப்போது உதித்தது உண்டு. ஆனல் இப்போது போல இதற்குமுன் இக்கேள்வி

எதிர்ப்படவில்லை. இப்பேர்ப்பட்ட பெரிய மனிதரைப் பார்த்து இவ்விதமான உள்ளத்தைத் தீண்டும் சொற்களைக் கேட்கும் பாக்கியமும் இதுவரையில் கிடைக்கவில்லை. ஒரு புறத்தில் அவர் சுட்டிய நாட்டிற்கு எங்களைப் போன்றவர்களின் தொண்டின் தேவை! மற்றொரு புறத்தில் என் அண்ணன் மேல் குடும்ப பாரம் அனைத்தையும் சுமத்துதல்! எனக்கும் இரண்டு பிள்ளை கள் உண்டாகி விட்டார்கள். அவருக்கும் மூன்று பெண்களும் ஒரு பிள்ளையும் இருந்தார்கள். எங்கள் தாயார் இன்னும் உயிருடன் இருந்தார். அவர் என்ன சொல்லுவார், மற்றக் குடும்ப ஜனங்கள் எப்படி வருந்துவார்கள் என்றெல்லாம் எண்ணங்கள் என்னைத் துன்புறுத்தின. இதனால் மேற் கூறியுள்ளபடி எனக்குச் சாப்பாடு கீப்பாடு எல்லாம் நின்று விட்டன. எங்கள் இருவரைத் தவிர வேறுயாருக்கும் இந்த விஷயம் தெரியாது. என் தமையனார் எங்கள் கூடத்தான் இருந்தார். ஆனால் அவருக்கும் இதைச் சொல்லவில்லை. வேறு நண்பர்கள் எவரிடமும் கூறவும் இல்லை. ஹைகோர்ட்டுக்குப் போவது நின்று விட்டது. உலாவிச் சுற்றி வருவதும் போய்விட்டது. எங்காவது தனிமையான இடத்தை நாடி அங்கே உட்கார்ந்து இதைப் பற்றியே யோசிப் பதுவே ஒரே வேலையாகிவிட்டது. சுமார் பத்துப் பன்னிரண்டு நாட்கள் இப்படிக் கழிந்தன. எனக்கு உடம்பு சரியாக இல்லையோ என்று அண்ணனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவரிடம் ஏதோ சொல்லிச் சமாளித்துக் கொண்டேன். அவரிடம் இதைப் பற்றி என்ன சொல்வது என்று என் மனத்தில் தெளிவு பட வில்லை.

இப்படியாகப் பல நாட்கள் சிந்தித்தபின் மேன்மை பொருந்திய கோகலேயின் சொல்லை ஏற்று அவருடைய சொஸை யிடியில் சேர்ந்து விடுவது என்று ஒரு நாள் முடிவு செய்தேன். தமையனாரிடம் இந்த விஷயத்தை உடைத்துப் பேச எனக்குத் தைரியம் இல்லை. ஏனெனில் இதனால் அவருக்கு அதிக வருத்தம் உண்டாகும் என்று பயந்தேன். ஒரு நீண்ட கடிதத்தை எழுதி, அதில் விஷயத்தை ஒளிவு மறைவு இன்றி எடுத்துக் கூறி, நான் போவதற்கு அனுமதி வேண்டினேன். ஒரு நாள் மாலை அவர் எங்கோ உலாவச் சென்றிருந்தபோது அக்கடிதத்தை அவருடைய படுக்கையின் மேல் வைத்துவிட்டுப் பக்கத்தில் இருந்த காலேஜ் ஸ்கொயருக்குப் போய் உட்கார்ந்து கொண்டேன். அவர் கடிதத்தைப் படித்துவிட்டு என்னை தேட ஆரம்பித்தார். நான் அகப்படவில்லை. நான் திரும்பி வந்தபோது அவர் நிலைகுலைந்து

நின்றதைக் கண்டேன். அன்றிரவு அவரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. என்னை வருத்திய எண்ணங்கள் எல்லாம் அவரையும் வாட்டுகின்றன என்று உணர்ந்தேன். என்னைத் தடுக்கக் கூடாதென்று அவர் மனம் விழைந்தது. ஆனால் குடும்ப பாரம் அத்தனையும் சுமக்கத் தம்மைச் சக்தி அற்றவராகக் கருதினர். அவர் என்னைப் பார்த்ததும் கண்ணீர் சொரிந்து அழ ஆரம்பித்தார். என்னாலும் என்னை அடக்கிக் கொள்ளமுடியவில்லை. நானும் அழ ஆரம்பித்தேன்.

அவருடைய அழுகையிலிருந்தே அவருடைய மனப்போக்கை ஊகித்துக் கொண்டேன். மேலே எதுவும் சொல்ல எனக்குத் தைரியம் வரவில்லை. ஊருக்குச் சென்று தாயார், பெரிய தாயார், அக்காள் இவர்களோடு கலந்து ஆலோசனை செய்ய வேண்டுமென்று முடிவு செய்தோம். நான் மேன்மை வாய்ந்த கோகலேயிடம் சென்று என் நிலைமையைக் கூறினேன். என் தாயார் முதலியோர் எல்லாரும் என்மேல் வைத்திருக்கும் அன்பின் பிணிப்பை நான் தறிக்க முடியாதென்று உணர்ந்து கொண்டேன். அப்படியே அவரிடமும் கூறினேன். அவரும் நம்பிக்கையைத் துறந்தார். என் நண்பன் ஸ்ரீ கிருஷ்ணன் தான் உறுதியாக முடிவு செய்வதற்கு முன் ஒரு முறை புனவுக்குச் சென்று அங்கே சில நாட்கள் தங்கி இருந்து அங்குள்ள நடவடிக்கைகள் எல்லாவற்றையும் பார்த்து வரவிரும்பினன். இறுதியில் தன்னாலும் சொஸையிடியில் சேர இயலாது என்று முடிவு செய்துவிட்டான்.

நாங்கள் இரு சகோதரர்களும் ஜீராதேயீக்குச் சென்றோம். அங்கே குடும்பத்துப் பெண்கள் எல்லாரும் விஷயங்களை எல்லாம் கேட்டதுமே மிகவும் கலக்கமுற்றனர்கள். என் தாயார் என் மேல் இருந்த அன்பின் மேலீட்டால் எப்போதுமே ஒன்றும் சொல்வதில்லை. ஆனால் எப்போதுமே கொஞ்சம் கடுமையாகப் பேசுபவரான என் தமக்கையார் என்னைப் பார்த்து "நீ வெளிநாட்டிற்குப் போகிறேன் என்ற பேச்சைக் கிளப்பி அப்பாவை அலக்கழிக்கவைத்தாய், இப்போது சாதுவாக வேண்டுமென்று அண்ணனை அலக்கழிக்க வைக்கிறாய்" என்று கடிந்து கூறினர். இதைச் சொல்லிவிட்டு அவரும் அழ ஆரம்பித்தார். வீடு முழுவதும் கலவரம் நிலவியது. அந்தக் குழப்பத்தால் முன்னமே கல்கத்தாவிலேயே நலிய ஆரம்பித்த கொஞ்சம் நஞ்சம் துணிவும் இப்போது முற்றிலும் முறிந்து விட்டது.

வீட்டில் சில நாட்கள் இருந்து விட்டுப் பிறகு நான் மீண்டும் கல்கத்தாவிற்குச் சென்று விட்டேன். தம் விருப்பத்திற்கு மாருக

நான் இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யமாட்டேன் என்ற நம்பிக்கை குடும்பத்தாருக்குப் பிறந்து விட்டது. இப்படி ஒன்றுமே திகையாமல் அலேந்ததில் நான்கு ஐந்து வாரங்கள் கழிந்து விட்டன. நான் என் எண்ணத்தைத் துறந்து விட்டேன். ஆயினும் உள்ளத்தில் வருத்தம் இருந்து வந்தது. பல வாரங்கள் வரையில் மனம் நொந்து கொண்டிருந்தது. பிறகு மெல்ல மெல்லச் சஞ்சலம் அகன்றது. இதனுல் இதற்குச் சில நாட்களுக்குப் பின் இருந்த பி. எல். பரீக்ஷை எனக்கு கடினமானதாகி விட்டது. படிப்பில் மனம் செல்லவில்லே. பரீக்ஷை நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. கடைசியில் பரீக்ஷையில் தேறிவிட்டேன். உயர்ந்த இடம் பெறுவேன் என்ற பேச்சிற்கு இடமே இல்லே. ஏனெனில் நான் படிக்கவே இல்லேயே! தேறுவோமா என்று கூட அச்சம் உண்டாயிற்று. ஆனுல் எப்படியோ தேறி விட்டேன். அதற்கு ஓர் ஆண்டிற்குப் பின் தான் வக்கீல் தொழிலே ஆரம்பித்தேன். ஏனெனில் தொழில் பயிற்சி அது வரையில் முடியவில்லே. எனக்குக் கிடைத்த முதல் வக்காலத்தைப் பற்றி முன்னமே கூறியுள்ளேன்.

## 17. சீர் சீதனம் கொடுக்கும் வழக்கம்

மேலே கூறிய சம்பவத்திற்குச் சிறிது காலத்திற்குப் பிறகு என் தாயார் இறந்துவிட்டார். தசராவின் நெடிய விடுமுறையில் நான் ஊருக்குப் போயிருந்தேன். கார்த்திகை மாதத்தில் மாலே வேளேயில் குளித்துவிட்டுத் துளசி பூஜை செய்து விளக்கேற்றுவது அவருடைய வழக்கம். இப்படிச் செய்து வரும்போது ஒரு நாள் அவருக்குக் குளிர் பட்டுவிட்டது. காய்ச்சலும் இருமலும் வந்துவிட்டன. சகோதரர்கள் இருவரும் வீட்டில் தான் இருந்தோம். எவ்வளவோ வைத்தியம் செய்து பார்த்தோம். ஆனுல், அவர் தப்பிக்க முடியவில்லே. நான்கு ஐந்து நாட்கள் நோயாய்க் கிடந்து இறந்துவிட்டார். அந்தச் சமயத்திலேயே அண்ணன் காலில் ஏதோ வலி தோன்றியது. தகப்பனுக்கு மூத்தவனும் தாய்க்கு இளேயவனும்தான் கிரியைகள் செய்யவேண்டும் என்று மக்களிடையில் ஒரு கருத்தும் நிலவியது. ஆகையால் நான் தான் எல்லாக் கிரியைகளேயும் செய்தேன்.

அண்ணனின் மூத்தமகள் கல்யாணம் ஆகவேண்டிய அள

வுக்கு வளர்ந்துவிட்டாள். தாயார் உயிருடன் இருந்த காலத்தி லிருந்தே இதைப் பற்றிப் பேச்சு நடந்து வந்தது. எங்கள் சமூகத்தில் பெண்ணுக்குக் கல்யாணம் செய்வது ஒரு பெரிய திண் டாட்டம். முதலில் நமக்குப் பிடித்த பையன் கிடைப்பது அரிது. இதில் சாதி குலம் என்ற வம்புகளும் வரும். இவை மட்டுமன்றி, அவர்களுக்கு ஏதாவது சொத்து சம்பத்து இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். ஏனெனில் நம்முடைய பெண் அங்கே போய்த் துன்பப்படக் கூடாது. சிறு பிராயத்திலேயே கல்யாணம் ஆகி விடுவதால் பையன் தானே சம்பாதித்துப் போடும் நிலைமையில் இருக்கமாட்டான். ஆகையால் குடும்பத்தாரின் மீது தான் பெண்ணை வைத்துப் பராமரிக்க வேண்டிய பொறுப்பு விழும். ஆகையால் குடும்பத்தார் இதற்குத் தகுதியுள்ளவர்களா என்று பார்ப்பது அவசியம். என் கல்யாணம் என்னுடைய பதினேராம் வயதில் நடந்தது என்று நினைக்கிறேன். இப்போது எனக்கு இருபத்தைந்து இருபத்தாறு வயதாகிவிட்டது. இன்னும் படித் துக்கொண்டிருந்தேன். நான் முஜர்பூர் கல்லூரியில் பேராசிரியர் வேலை பார்த்த சில மாதங்களைத் தவிர இது வரையில் வேறு சம் பாத்தியம் இல்லை. அண்ணனுக்கும் சம்பாத்தியம் எதுவும் இல்லை. பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் வேலையில் கிடைத்த சிறு தொகை அங்கேயே செலவழிந்து வந்தது. ஆகையால் குடும்பத் தில் ஜமீன்தாரியிலிருந்துதான் எல்லாக் காரியங்களும் நடக்க வேண்டும். அண்ணன் காரியங்களைத் திறமையாகச் செய்து வந்த தால், அப்பா இறக்கும்போது உண்டான கஷ்டங்கள் இப்போது வரவில்லை. ஆயினும் பெண்ணின் கல்யாணத்திற்குச் செலவு அதிகமாகப் பிடிக்குமே!

பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுப்பதற்கு நல்ல குடும் பமும் நல்ல பையனும் கிடைத்துவிட்டாலும் பிள்ளை வீட்டுக்காரர் களை இணங்க வைப்பது எளிதான காரியம் அன்று. அந்தக் காலத்தில் பையன்களைச் சம்மதிக்க வைக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில் பையனுக்கு வயது குறைவாகவே இருக்கும், அவன் தாய் தந்தையர் சம்மதித்துவிட்டால் அவன் சம்மதித்தது போலக் கொள்ளப்படும். அன்றைக்கும் இன்றைக்கும் நிறைய வித்தியாசமாகிவிட்டது. இப்போது பையனுக்குச் சிறிது வயது வந்தபின்தான் கல்யாணமாகிறது. முக்கியமாகப் படித்தவர் களாக இருக்கும் காயஸ்துக்கள் இடையில் இப்படித்தான் நடக் கிறது. பையனுடைய தாய் தந்தையரின் சம்மதத்தைப் பெறு வதே எளிதில் முடிவதில்லை. அவர்களும் தம் நிலைமைக்கு ஏற்ற

படி பெண் வீட்டார் இருக்கிறார்களா இல்லையா என்று அவர்கள் குடும்பத்தைப் பற்றியும் சொத்து சுதந்திரத்தைப் பற்றியும் விசாரணை செய்து திருப்தி செய்து கொள்ளவேண்டியிருக்கிறது. இவையெல்லாம் பிடித்துப்போன பின் சீர் சீதனத்தைப் பற்றிப் பேச்சுக் கிளம்பும்.

நிச்சயதார்த்தத்தின் போது—எங்கள் சமூகத்தில் இதை "திலக்" என்பார்கள்—பெண் வீட்டார் பணம், பாத்திரம், துணி மணி முதலியன கொடுக்க வேண்டும். பிறகு, கல்யாண சமயத்தில் மாப்பிள்ளை கோஷ்டி வந்ததும் மீண்டும் எல்லாவிதச் சாமான்களும், ரொக்கப் பணமும் கொடுக்கவேண்டும். பெண்ணிற்குப் பணம் கொடுப்பது தந்தையின் கடமையாயிருக்கலாம். ஆனால் எங்கள் சமூகத்தில் தந்தை தன் பிரியத்திற்கு ஏற்பக் கொடுப்பது என்ற பேச்சு கிடையாது. கல்யாணத்திற்கு முன்னமே எல்லாம் பேசி நிச்சயதார்த்தத்தின்போது இவ்வளவு பரிசம் கொடுக்க வேண்டுமென்றும் மாப்பிள்ளை வந்து இறங்கிய பின் கல்யாணத்தின்போது இத்தனை சீதனம் கொடுக்க வேண்டுமென்றும் எல்லாம் முடிவுகட்டி விடப்படும். எவ்வளவோ முயற்சி செய்தும் இந்த வழக்கம் இன்று வரையில் இருந்தே வருகிறது. இதை ஒழிக்க வேண்டுமென்று சாதி குல மகாநாடுகள் ஒவ்வொன்றிலும் தீர்மானம் என்னவோ நிறைவேற்றத்தான் படுகிறது. ஆனால் குறைவதற்கு மாறாக இந்த வழக்கம் வளர்ந்து கொண்டே போகிறது. இந்த வழக்கம் இல்லாதிருந்த சாதிகளிலும்கூட இது புகுந்து கொண்டு வருகிறது. முன்னமே இருந்து வந்த இடங்களில் சீர் சீதனத்தின் தொகை பெருகிக் கொண்டே வருகிறது. இன்று எனக்குக் கல்யாணம் ஆவதாக இருந்தால், நான் இந்த வழக்கத்தின்படி சீர் சீதனம் பெற்றுக்கொண்டு கல்யாணம் செய்து கொள்ள விரும்பினால், என்னைப் போன்று பல்கலைக் கழகப் பரீக்ஷைகளில் திறம்படத் தேறியிருக்கும் மாணவனுக்கு, என் கல்யாணத்தின்போது ஒன்றரை இரண்டு ஆயிரம் கிடைத்த இடத்தில் இன்றையத் திட்டப்படி பத்துப் பதினைந்து ஆயிரம் ரொக்கம்கூட அதிகமாகக் கருதப்படாது. இப்போது இவ்விலைத் திட்டம் ஏறியிருப்பதையும் இன்னும் ஏறிக் கொண்டிருப்பதையும் பார்த்தால் இதற்கு எல்லையே இல்லை என்பது தெரிகிறது. குடும்பத்தில் சொத்து எதுவும் இல்லாத பையன்கள் கூடப் படிப்பில் துடியாயிருப்பவர்களானால் சாதாரணமாக மூன்று நான்கு ஆயிரம் கேட்கிறார்கள்.

ஆம், ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. என் கல்யாணத்

தின்போது பையனைத் திருப்தி செய்ய வேண்டும் என்ற பேச்சு கிடையாது. ஏனெனில் பத்துப் பன்னிரண்டு வயது பையனை விளையாட்டுச் சாமான்களைக் கொண்டும் சந்தோஷப்படுத்திவிட லாம். மேலும் பையனுடன் கல்யாணத்தைப் பற்றி பேசுவது அல்லது பையன் தன் கல்யாணத்தைப் பற்றித் தானே எதுவும் பேசுவது என்பது மிகவும் இழிவாகக் கருதப்பட்டது. ஆகை யால் தாய் தந்தையர் சம்மதித்துவிட்டால் அதுவே போது மானது. ஆனல் இக்காலத்துப் படித்தப் பையன்களைத் தனி யாகச் சம்மதிக்க வைக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் தங்க ளுடைய தேவையைத் துண்டாகக் கேட்கிருர்கள். இப்படியாகத் தண்டல் அல்லது விலே அதிகமாக ஏறிக்கொண்டே போகிறது.

அண்ணனுடைய பெண்ணைத் தெரிந்த இடத்தில்தான் கல் யாணம் செய்து கொடுப்பதாக இருந்தது என்றே கூறலாம். ஏனெனில் மாப்பிள்ளையின் அண்ணன்மார் எங்களுடன் கல்கத் தாவில் படித்தார்கள். பையனும் அங்கே படித்துக் கொண்டிருந் தான். ஆகையால் எல்லா விஷயங்களும் எளிதில் முடிவுக்கு வந்துவிடும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனல் பழைய வழக் கம் எளிதில் போய்விடுமா? நாங்களும் சங்கடப்பட வேண்டித் தானிருந்தது. கடவுளுடைய கிருபையால் சம்பந்தம் நன்ருக அமைந்தது. இரு பக்கத்தாரும் மிகவும் திருப்தி அடைந்தார் கள். எல்லாம் நன்ருகக் கூடிவந்த பின்னும் வீட்டில் பணம் இல்லையே! நெல் முதலிய தானியாதிகள் வயலில் விளைந்து வந்தன. ஆகையால் அவற்றைப் பற்றிக் கவலையில்லை. ஆனல் ரொக்கச் செலவுக்காக நாங்கள் இருவரும் கடன் வாங்கத்தான் வேண்டியிருந்தது.

## 18. வக்கீல் தொழில் ஆரம்பம்

என் அண்ணன் பெண்ணின் கல்யாணத்திற்குச் சிறிது காலத்திற்குப் பின் நான் கல்கத்தாவில் வக்கீல் தொழில் ஆரம் பித்துவிட்டேன். துவக்கத்தில் இருந்த நிலையைப் பற்றி முன் னமே சிறிது கூறியிருக்கிறேன். வேலை தொடங்கிய உட னேயே எனக்கு வழக்குகள் கிடைக்கலாயின. நான் வக்கீல் தொழில் ஆரம்பித்ததிலிருந்து என் செலவிற்காக வீட்டிலிருந்து பணம் கேட்டதில்லை. அப்படிக் கேட்டால், முன்னமே தம் மக ளின் கல்யாணத்தினல் என் தமையனருக்கு இருந்து வந்த

கஷ்டம் மேலும் அதிகமாகி விடுமென்று கவலைப்பட்டேன். எப்படியோ ஒவ்வொரு மாதமும் ஏதோ கூடக் குறைய வரும்படி வந்து கொண்டிருந்தது. அது என் செலவுக்கு போதுமானதாக இருந்தது. கல்கத்தாவில் மற்றச் சிறிய ஊர்களைவிடச் செலவு அதிகமானாலும், காரியம் எப்படியோ சரிகட்டி வந்தது. நீதிபதி சட்டர்ஜீ கூறியது போலவே பணக்காரக் கட்சிக்காரர்கள் என்னிடம் வரவில்லை. ஒரே ஒருவர்தாம்—ராய் பகதூர் ஹரிஹர சிங் என்பவர்—நான் வக்கீல் தொழில் தொடங்கிய நாளிலிருந்த தம் ஜமீன்தாரியின் சிறிய பெரிய வழக்குகள் எல்லாவற்றையும் என் கையில் ஒப்படைத்துவிட்டார். அவருக்கு என்னை முன்னமே தெரியும். வெளிநாட்டுக்குப் போவதென்றிருந்தபோது அவர் சிறிதளவு பணமும் கொடுத்து உதவினார். என் வக்கீல் வாழ்க்கையில் கடைசியான வழக்கும் எப்படியோ தற்செயலாக அவருடையதாகவே அமைந்தது. ஏனெனில் வக்கீல் தொழிலை விடும் போது அவருடைய மிகப் பெரிய வழக்கு ஒன்றிற்காகத்தான் வேலை புரிந்து கொண்டிருந்தேன்.

ஏழைக் கட்சிக்காரர்களுடைய வழக்குகளுக்கு இரண்டாவது வக்கீல் எவரும் இருப்பதில்லை. பெரும்பாலும் நான்தான் வழக்காட வேண்டி வரும். மிகவும் பாடுபட்டு உழைத்து வந்தேன். ஆகையால் நீதிபதிகளும் என்னை அதிவிரைவில் தெரிந்துகொண்டார்கள். வக்கீல்களில் அநேகம் பேர் நீதிபதிகளோடு அதிகமாகப் பழகி வருவது வழக்கம். நான் அப்படிச் செய்யவில்லை. அவர்களைக் கோர்ட்டில்தான் சந்திப்பேன். அவர்களில் பலர்—எவர்கள் முன்னிலையில் வேலை செய்ய எனக்கு வாய்ப்புக் கிடைத்ததோ அவர்கள்—என்மேல் அன்பு பூண்டார்கள். சர் ஜஸ்டில் ஜென்கின்ஸ் பிரதம நீதிபதியாக இருந்தார். நான் வக்காலத்து ஆரம்பித்து ஒன்று ஒன்றரை ஆண்டிற்குப் பின் அவர் அவ் வேலையை விட்டுச் சென்று விட்டார். ஆனால் இந்தக் குறுகிய காலத்திற்குள் நான் நிகழ்த்திய வக்கீல் தொழிலைக் கண்டு என்னிடம் பெருமகிழ்ச்சி அடைந்தார். அதனால் அவர் போகும் போது தம் கையொப்பமிட்ட நிழற்படம் ஒன்றை எனக்கு அளித்துச் சென்றார். சர் ஆஷுதோஷைப் பற்றி, அவர் எப்படி நான் ஒரு வழக்கில் இளைய வக்கீலாக அமர்ந்து செய்த வேலையைப் பார்த்து எனக்குச் சட்டக் கல்லூரியில் பேராசிரியர் வேலையை அளித்தார் என்பதை மேலே கூறி யிருக்கிறேன். இப்படியாகத் தொழிலில் பெற்ற வெற்றியைப் பற்றி நான் மகிழ்வு எய்தினேன்.

முஜபர்பூர் கல்லூரியைச் சேர்ந்த என் பழைய நண்பர் பாபூ

வைத்தியநாத் நாராயண் சிங்கும் கல்கத்தாவிற்கு வந்து ஹைகோர்ட்டில் என்னுடன் வக்கீல் தொழில் ஆரம்பித்தார். எங்கள் இருவருக்கும் நெருங்கிய நட்பு உண்டாகியது. இதனிடையில் பீகார் மாகாணத்தை வங்காளத்திலிருந்து பிரிப்பதென்று, 1911 டிசம்பரில் நடந்த சக்ரவர்த்தியின் தர்பாரின் போது அறிக்கை செய்யப்பட்டது. 1912 ஏப்ரலில் பீகார் ஒரு புதிய மாகாணமாயிற்று. ஆனால் இதுவரையில் அதற்குத் தனியாக ஹைகோர்ட்டும் பல்கலைக் கழகமும் நிறுவப்படவில்லை. பீகார் வழக்குகள் இன்னும் கல்கத்தாவில்தான் தீர்ப்பாகி வந்தன. பீகாரின் மாணவர்களும் கல்கத்தா பல்கலைக் கழகப் பரீக்ஷைக்குத் தான் சென்றார்கள். ஆனால் மாகாணம் தனியாகப் பிரிக்கப்பட்டதற்குச் சிறிது காலத்திற்குப் பின் ஹைகோர்ட்டையும் பிரிப்பதற்குப் பேச்சு நடக்க ஆரம்பித்தது. ஜெர்மனியுடன் சண்டை தொடங்கியதின் பேரில் சற்றுத் தவக்கம் ஏற்படும்போலத் தோன்றிற்று. ஆனால் அப்படி ஆகவில்லை. கட்டடம் முதலியன தயார் ஆன உடன் ஹைகோர்ட்டு பீகாரில் திறக்கப்படு மென்பது தெரிய வந்தது.

நாங்கள் இருவரும் எம். எல். பரீக்ஷையும் எழுத வேண்டுமென்று வைத்தியநாத் பாபூ ஒரு நாள் என்னிடம் கூறினார். அப்போது நான் வக்கீல் தொழிலில் மிகவும் உற்சாகத்துடன் ஈடுபட்டிருந்தேன். வேலையில் முன்னுக்கு வர ஆசைப்பட்டேன். அவர் கூறியபடியே நாங்கள் இருவரும் கூடி, எம். எல். பரீக்ஷைக்குத் தயார் செய்ய ஆரம்பித்தோம். கல்கத்தாப் பல்கலைக் கழகத்துப் பரீக்ஷைகளில் இதுதான் மிகவும் கடினமானது. எங்கள் இருவருக்கும் கச்சேரி வேலையும் அதிகமாயிருந்தது. ஆகையால் படிப்பதற்கு நேரம் குறைவாகத்தான் கிடைத்தது. சட்டக் கல்லூரியில் பேராசிரியர் கிடைத்ததற்குப் பிறகு எனக்கு மேலும் குறைவாகத்தான் நேரம் கிடைத்தது. சில சமயங்களில் இந்தப் பரீக்ஷையின் திண்டாட்டத்திலிருந்து விலகிக் கொள்ளலாமென்று கூட மனம் விழைந்தது. ஆனால் வைத்தியநாத் பாபூ விடுகிறவராக இல்லை. அவர் என்னை மீண்டும் மீண்டும் வற்புறுத்திப் படிக்கும்படி செய்து வந்தார். சில சமயங்களில் ஆசிரியர் பையனுக்குச் சொல்லிக் கொடுப்பது போல அவர் எனக்குச் சொல்லிக் கொடுப்பார். அவர் அடிக்கடி என்னைப் பார்த்து, "நீ எண்ட்ரன்ஸ், பி. ஏ. முதலிய பரீக்ஷைகளில் முதலிடம் பெற்றிருக்கிறாய். எம். ஏ.யில் ஏதோ சற்றுக் கீழே வந்துவிட்டாய், பி. எல்லில், எப்படியோ தேறிவிட்டாய், அந்தக் கடைசிப் பரீக்ஷையின் முடிவு

உன் மாணவ வாழ்க்கைக்கு ஒரு கறை போலாகும். அதைக் கழுவ வேண்டும். இந்தக் கறையை எம். எல்.லில் தேறினால் தான் கழுவ முடியும்'' என்பார். அவர் இப்படி வாதாடியதாலும் மேலும் உபாத்தியாயர் போலப் படிப்பித்ததாலும் நாங்கள் இருவரும் மிகவும் பாடுபட்டுப் படித்தோம். 1915 டிசம்பரில் நடக்கும் பரீக்ஷைக்கு நாங்கள் இருவரும் போவது என்று தீர்மானித்து அதற்குத் தயார் செய்து வந்தோம்.

நான் இந்தப் பரீக்ஷைக்குப் பாடுபட்டது போல வேறு எந்தப் பரீக்ஷைக்கும் பாடுபட்டதில்லை. எண்ட்ரன்ஸில் என்னை அறியாமலே தேறிவிட்டேன். எப். ஏ. பரீக்ஷையில் முதலாக வரவேண்டுமென்று மிகவும் பிரயாசைப்பட்டேன். ஆனால் அதற்கும் இத்தனை பாடுபடவில்லை. பி. ஏ.க்குச் சிறிது கூட உழைக்கவில்லை. எம். ஏ., பி. எல். இரண்டு பரீக்ஷை சமயங்களிலும் நான் வேறு விஷயங்களில் ஈடுபட்டுவிட்டேன். ஆனால் இந்த எம். எல். பரீக்ஷையின் போது கடைசி இரண்டு மூன்று மாதங்களில் நான் நாள்தோறும் 15—16 மணி நேரம் படித்து வந்தேன். கச்சேரி, சட்டக் கல்லூரி, பரீக்ஷைக்குப் படித்தல் ஆகிய எல்லாம் சேர்த்து நான் இத்தனை பாடுபட்டு உழைத்து வந்ததால் மிகவும் கடுமையான நோய் வாய்ப்பட்டு விட்டேன். காரியம் முழுதும் இப்போது மலையேறி விட்டது என்று பயந்து போனேன்.

1916 மார்ச்சில் பட்னாவில் ஹைகோர்ட்டைத் திறப்பதாக அறிவிக்கப்பட்டது. கல்கத்தாவில் இருந்து 'செய்டு கூட இந்தப் பரீக்ஷையில் தேற முடியவில்லை என்றார்களில் பூக்குப் போனபின் இது முடியவே முடியாது என்று நாய்ப்புச் எண்ணினோம். 1915 பரீக்ஷைதான் எங்களுக்கு முதல் பரீக்ஷையும் கடைசிப் பரீக்ஷையுமாக அமைந்தது. ஆகையால் இதில் கட்டாயம் தேற வேண்டும். பரீக்ஷை சமயத்தில் நீதிபதிகளிடம் கேட்டுக் கொண்டு சில நாட்களுக்கு ஓய்வு எடுத்துக் கொண்டோம். எங்கள் கையிலிருந்த வழக்குகள் பீகாரைச் சேர்ந்தவைதாம். ஆகையால் பட்னாவிற்குப் போகப் போகிறார்கள் என்று சில நாட்களாகவே ஊரில் சொல்லி வரப்பட்ட நீதிபதிகளின் முன்தான் அவை சமர்ப்பிக்கப்பட்டு வந்தன. நாங்கள் கேட்டுக் கொண்டதும், அவர்கள் அவ்வழக்குகளை ஒத்திப் போட மகிழ்ச்சியுடன் அனுமதி கொடுத்து விட்டார்கள்.

பரீக்ஷை எழுதிவிட்டு நாங்கள் ஹைகோர்ட்டுடன் பட்னா வந்து சேர்ந்தோம். பரீக்ஷையின் முடிவு பட்னா வந்தபின் தெரிய வந்தது. நாங்கள் இருவர்தாம் தேறினோம். நான் முதல் தரத்

தில் தேறினேன், வைத்தியநாத் இரண்டாம் தரத்தில் தேறினர். இந்தப் பரீக்ஷையில் முதன் முதலாகத் தேறிய பீகாரிகள் நாங்கள் இருவர்தாம். எனக்கு மிக அதிக மார்க்குகள் கிடைத்ததென்று பின்னால் தெரியவந்தது. பல்கலைக் கழகத்தின் திட்டப்படி எம். எல். பரீக்ஷையில் தேறிய பின் சொந்தச் சிந்தனைக் கட்டுரை எழுதிச் சமர்ப்பித்தால் டி. எல். பட்டம் கிடைக்கும். இவ்வித மாக ஒருவன் சட்டத்தில் டாக்டர் (சிரோமணி) ஆகிவிடலாம். எந்தச் சிறந்த விஷயத்தைப் பற்றி நாங்கள் இருவரும் எழுதுவ தென்று யோசிக்கலானோம். இதைப் பற்றிச் சர் குருதாஸ் பானர்ஜீயையும் கண்டு அவர் கருத்தையும் கேட்டோம்.

கல்கத்தாவில் வக்கீல் தொழிலில் நிகழ்ந்த சில சுவாரசியமான சம்பவங்கள் வேடிக்கையாயிருந்தன. வக்காலத்து ஆரம்பித்துச் சில நாட்களுக்குப் பிறகு ஒரு கட்சிக்காரரின் காரியஸ்தர் ஓர் அப்பீலைச் சமர்ப்பிப்பதற்காக என்னிடம் வந்தார். ஒரு பெரிய வக்கீலையும் அமர்த்திக் கொள்ள வேண்டுமென்று அவர் நினைத் தார். பிரபலமாக வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்தவரும், பீகார் வழக்குகள் பலவற்றை நடத்தி வந்தவருமான ஒரு வக்கீ லின் பெயரைக் கூறினர். ஒரு பெரிய வக்கீலுடன் வேலை செய்ய வாய்ப்புக் கிடைப்பதைப் பற்றி எனக்கு அதிக மகிழ்ச்சி உண்டாயிற்று. அந்த வக்கீலை எனக்குத் தெரியாது.

நாங்கள் இருவரும் அவர் வீட்டிற்குச் சென்றோம். நான் காகிதக் கட்டைப் படித்து என் அறிவுக்கு எட்டிய அளவுக்கு அப்பீலுக்கு வேண்டிய மனுவை எழுதி வைத்திருந்தேன். மாலை நேரத்தில் நாங்கள் இருவரும் போய்ச் சேர்ந்தோம். அவர் வேலை பார்த்துக் கொண்டிருந்தார். அவர் இரவில் வேலை செய்வ தில்லை. பொழுது சாய்ந்ததுமே வேலையை நிறுத்தி விட்டு அடுத்த நாள் காலையில்தான் மறுபடியும் தொடங்குவார். அவர் பத்திரம் முதலியவற்றை மடித்து வைத்துக் கொண்டிருந்த போது நாங்கள் போய்ச் சேர்ந்தோம். காரியஸ்தரை அவர் முன்னமே அறிவார். அவரை "என்ன சமாசாரம்?" என்று கேட்டார். "ஓர் இரண்டாம் அப்பீல் செய்ய வேண்டும்" என்று அவர் கூறினர். அந்தக் காரியஸ்தரை அடுத்த நாள் வரச் சொல்லி விட்டு, "யாராவது இளைய வக்கீலைக் கொண்டு மனு முதலிய வற்றை எழுதி வந்திருக்கிறீரா இல்லையா?" என்று கேட்டார். "எல்லாம் தயாராக இருக்கின்றன" என்று காரியஸ்தர் கூறினர். அதன் மேல் அவர் இளைய வக்கீலின் பெயரைக் கேட்டார். காரியஸ்தர் என் பெயரைச் சொன்னர். நான்

அங்கே பேசாமல் உட்கார்ந்திருந்தேன். அவர் என்னைப் பார்த் தாரோ இல்லையோ என்றுகூடச் சொல்ல முடியாது. அவர் உடனே கோபம் கொண்டு "எனக்குத் தெரியவே தெரியாத எவனோ அதிசயப் பேர்வழியை எப்படி அமர்த்தினீர் என்பது தெரியவில்லை, நான்தான் எல்லா வேலைகளையும் செய்ய வேண்டி வரும். அவனுக்கு ஒன்றும் தெரியவே தெரியாது, புரியவும் புரியாது" என்று எரிந்து விழுந்தார். "அவர் புதியவர், ஆனால் நல்ல கெட்டிக்காரர்" என்று கட்சிக்காரர் கூறினார். இதைக் கேட்டுவிட்டு அவர் மீண்டும் "அற்புத பிரகிருதி" என்றெல்லாம் கூறினார். நான் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். அப்போது கட்சிக்காரர் என் பக்கம் திரும்பி "அவர் இவர்தாம்" என்றார். இதைக் கேட்டதும் அவருக்கு அந்தக் குளிர்காலத்திலும் கூட உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டிவிட்டது, மிகவும் மனம் கலங் கிப் போய், என்னைப் பார்த்து "இங்கே வந்ததுமே உம்மை எனக்கு அறிமுகப் படுத்தி வைத்திருக்க வேண்டும். உம்மை எனக்குத் தெரியாது. உம்மைப் பற்றி எதுவும் இழிவாகக் கூற வேண்டும் என்பது என் கருத்தன்று. எனக்கு உம்மைத் தெரி யாது, ஆகையால் தான் யாரோ புது வக்கீல், வேலை சரியாகத் தெரியாமலிருக்கும் என்று கூறினேன்" என்றார். இப்படியாகப் பலவிதமாகக் கூறி என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

"நீங்கள் சொன்னது சரிதான். என்னை உங்களுக்குத் தெரியாது. நானும் இப்போதுதான் புத்தப் புதிதாக வேலை ஆரம்பித்தவன்" என்று கூறினேன். பிறகு யோகக்ஷேமம் விசாரிக்க ஆரம்பித்தார். அடுத்த நாள் கச்சேரியிலேயே காகிதக் கட்டைக் காட்டும்படி சொல்லிவிட்டு எங்கள் இருவருக் கும் விடை கொடுத்து அனுப்பி விட்டார். அடுத்த நாள் நான் எழுதி வைத்திருந்த மனுவை அவரிடம் கச்சேரியில் காட்டினேன். அதைப் பார்த்துவிட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்து, கட்சிக்காரரிட மும் மற்ற வக்கீல்களிடமும் என்னைத் தூக்கி வைத்துப் பாராட்டி னார். அதற்குப்பின் அவருடன் வேலை செய்ய நிறைய வாய்ப்புக் கிடைத்தது. அவர் என்னிடம் அதிக மரியாதை காட்டிவந்தார். என் மேல் அவருக்கு ஒரு விஷயத்தில்தான் குறை இருந்தது. உடை அணிவதில் நான் இளமையிலிருந்தே சற்று அசட்டுப் பிசட்டுத்தனமாயிருந்து வந்தேன். அவருக்கு இது பிடிக்க வில்லை. ஆடம்பரமாக ஆடை அணியும்படி அடிக்கடி சொல்லி வருவார்.

இதற்கு எதிரிடையாக மற்றொரு சம்பவம் நிகழ்ந்தது. நான்

சுபாவமாகக் கூச்சப்பேர்வழி. எவரிடமும் ஏதாவது வேலையில்லாமல் முந்தியடித்துக்கொண்டு போய் அறிமுகப்படுத்திக்கொள்ளும் பழக்கம் எனக்குக் கிடையாது. இன்றும் இல்லை. நான் ஒன்றரை இரண்டு ஆண்டுகளாக வக்கீல் வேலை பார்த்து வந்தாலுங்கூட சர் ராஷ் பிகாரி கோஷுடன் எனக்குப் பழக்கமாகவில்லை. அவருக்கு எதிராக வாதாடி நான் ஒரு பெரிய வழக்கில் வெற்றி பெற்றிருந்தேன். ஆனால் அவருடன் சேர்ந்து வேலை செய்ய வாய்ப்பு இதுவரையில் கிடைக்கவில்லை. இப்போது ஒரு வழக்கில் அவ்வித வாய்ப்புக் கிட்டியது. எதிர்க்கட்சியில் சர். என். பி. சின்ஹா இருந்தார். எங்கள் பக்கத்தில் சர் ராஷ் பிகாரி கோஷும், பிற்காலத்தில் பட்னு ஹைகோர்ட்டில் நீதிபதி ஆன பாபூ குல்வந்த் சஹாயும் இருந்தார்கள். இது கயாவைச் சேர்ந்த வழக்கு ஆகையால் கயாவிலிருந்தும் ஒரு வக்கீல் வந்திருந்தார்.

பெரிய வக்கீல்களும் பாரிஸ்டர்களும் ஒரு கோர்ட்டில் எதிர்க் கட்சியின் வழக்குரை நடந்து கொண்டிருக்கும்போது வேறு ஒரு கோர்ட்டில் வழக்குரையாடிக் கொண்டிருப்பார்கள். விடை அளிக்கவேண்டியபோதுதான் இந்தக் கோர்ட்டுக்கு வருவார்கள். இது அவர்களுடைய வழக்கம். நிறைய வழக்குகளை ஏற்றுக் கொள்வதின் பயன் இது. சில சமயங்களில் அவர்கள் வரவும் முடியாது. அப்படிப்பட்ட நிலையில் இளைய வக்கீல் தான் அவர்களுடைய வேலையைப்பார்க்கவேண்டிவரும். நான் சர் ராஷ் பிகாரி கோஷ் சார்பில் வாதாடிய வழக்கில் இப்படித்தான் ஆயிற்று. என் தலைவர் மற்றொரு கோர்ட்டில் அகப்பட்டுக் கொண்டார். நான்தான் வழக்காட வேண்டிவந்தது. எதிர்க்கட்சியின் வாதம் நடக்கும்போது தலைவர் இல்லாவிட்டால், இளைய வக்கீல் வழக்குரையைக் குறிப்பெடுத்துத் தலைவருக்குக் காட்டவேண்டும். அவர் அக்குறிப்புகளைப் படித்துவிட்டு எதிர்க்கட்சியின் வாதத்தைப் புரிந்து கொண்டு விடை அளிப்பார். இது ஒரு பெரிய வழக்கு. மூன்று நான்கு நாட்களாக வழக்குரை நடந்து கொண்டிருந்தது. சர் சின்ஹாவின் வழக்குரையைக் குறிப்பெடுக்கும் வேலை எனதாயிற்று. ஏனெனில் நான்தான் எல்லாரிலும் இளைய வக்கீல். சர் சின்ஹா நிறுத்தி நிறுத்தி மிகவும் நன்றாக வாதாடினார். ஆகையால் குறிப்பு எடுப்பதில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் உண்டாகவில்லை. நெடுநாளாகவே அதிவேகமாக எழுதும் பழக்கம் எனக்கு உண்டு. கல்லூரியில் மிஸ்டர் பர்சிவல் அதிவேகமாகப் பாடம் கற்பிப்பார். நான் ஏறக்குறைய எல்லாவற்றையும்

குறித்துக் கொண்டு விடுவேன். இப்படியாக இப்பழக்கம் மேலும் வளர்ந்தது. "டான் சொஸைடி"யின் வகுப்புக்களிலும் இதற்கு அதிக ஊக்கம் கிடைத்தது.

சர் சின்ஹாவின் வழக்குரையை நான் நன்ருகக் குறிப்பெடுத் திருந்தேன். அன்று முழுதும் அவர் வழக்குரை நடந்தது. மாலையில் நாங்கள் எல்லாரும் சர் ராஷ் பிகாரி கோஷ் வீட்டிற்குச் சென்ரேம். அவர் வழக்குரையின் குறிப்புகள் அனைத்தையும் மிகவும் கவனமாகப் படித்தார். எனக்குச் சற்றுப் பயமாக இருந்தது. என்ன சொல்லப்போகிருர் பார்ப்போம் என்ற ஆவலும் இருந்தது. அவர் கோபக்காரர்; இளைய வக்கீல்கள் தவறு செய்தால் அவர் மிகவும் எரிந்து விழுவார். நீதிபதிகளுக் கும் இது நன்ருய்த் தெரியும். சில சமயங்களில் கோர்ட்டில் காகிதக் கட்டையும் புத்தகங்களையும் படார் என்று அடிப்பார். அவரைக் கண்டு இளைய வக்கீல்கள் மிகவும் பயப்படுவார்கள். நான் அவரிடம் வேலை செய்வது இதுதான் முதல் முறை. குறிப்புகளைப் படித்து விட்டு நிமிர்ந்து பார்த்து "குறிப்புகளைத் எடுத்தவர் யார்?" என்று கேட்டார். இப்போது கோபித்துக் கொள்ளப்போகிருர் என்றும் அவர் கருத்துக்கு இசையக் குறிப்பு கள் எடுக்கப்படவில்லை போலும் என்றும் நினைத்தேன். பாபூ குல்வந்த் சஹாய் மனத்திலும் அப்படித்தான் பட்டது போலத் தோன்றிற்று. அவர் என்னைச் சுட்டிக்காட்டினர். இதன்மேல் சர் ராய் பிகாரி என்னைப் பார்த்து, "எத்தனை காலமாக நீ வேலை பார்க்கிருய், உன்னை நான் பார்த்ததில்லையே?" என்று கேட் டார். இப்படிப்பேச்சு நடக்க நடக்க, இப்போது ஏதாவது ஆகப் போகிறது என்று நான் உள்ளுக்குள்ளே நடுங்கிக் கொண்டிருந் தேன். ஆனல் அவர் கோபித்துக்கொள்வதற்கு மாருக என் முது கைத் தட்டிக்கொடுத்து, "குறிப்புகள் மிக நன்ருகத் தயார் செய் யப்பட்டிருக்கின்றன" என்ருர். பாபூ குல்வந்த் சஹாய்க்குத் தைரியம் வந்தது. அவர் என் பல்கலைக் கழகப் பரீக்ஷைகளின் விவரங்களை எடுத்துக் கூறினர். சர் ராஷ் பிகாரி பெருமகிழ்ச்சி யடைந்து என்னைப் பார்த்து "இப்படியே பாடுபட்டால் நீ மிகவும் சிறப்பை அடைவாய்" என்று கூறினர்.

எனக்கு அதிகத் திருப்தி உண்டாயிற்று. இதற்குப் பின் நான் அவருடன் வேலைசெய்ய வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் அவர் என் குறிப்புகளின்மேல் அதிக நம்பிக்கை வைத்து அவற்றை நன்ருகப் புரிந்துக் கொண்டு முற்றிலும் பயன்படுத்திக் கொள்வார். அதே வழக்கில் நான் மற்ருென்றையும் கவனித்

தேன். இந்த வழக்கில் விஷயத்தைப் பற்றி ஏதாவது சான்று இருக்கிறதா இல்லையா என்று அவர் அறியவிரும்பினர். நான் பேசாமலிருந்தேன். சாட்சி எதுவும் இல்லை என்று கயா வக்கீல் கூறினர். அதன்மேல் அவர், "சின்ஹா சாட்சி இருக்கிற தென்று கூறியிருப்பதால் கட்டாயம் ஏதாவது இருக்காமல் போகாது. இன்றிரவு காகிதக் கட்டுக்கள் எல்லாவற்றையும் கவனமாகப் பார்த்து நாளைக் காலை எனக்கு விடை சொல்லும்" என்று கூறினர். அடுத்த நாள் அவர் மறுபடியும் அதே கேள்வி யைக் கேட்டார். வக்கீல் அதே விடையைக் கொடுத்தார். சர் ராஷ் பிகாரி இரவில் எல்லாக் காகிதங்களையும் படித்துக் குறியும் இட்டு வைத்திருந்தார். வக்கீலின் விடையைக் கேட்ட தும் கோபம் மூண்டு காகிதக் கட்டையும் அந்த வக்கீல் எழுதிக் கொடுத்திருந்த குறிப்புகளையும் விட்டெறிந்த விட்டு "உம்மு டைய குறிப்புகளை நம்பி அவற்றை ஆதாரமாகக் கொண்டு நான் வழக்காடுகிறேன். இப்போது நான் அவற்றை எப்படி நம்பமுடியும்?" என்று சீறினர். பிறகு தாம் குறியிட்டு வைத் திருந்த இடங்களைக் காட்டி ஏகதேசமாகப் பேசினர். ஒரே வழக்கில் நான் இவ்விரண்டு நிகழ்ச்சிகளையும் கண்டேன். நல்ல வேளை, நாம் எதுவும் தவறு செய்யவில்லை என்று என் அதிர்ஷ் டத்தைப் பாராட்டினேன்.

எம். எல். பரீக்ஷையை எழுதிவிட்டேன். முடிவு இன்னும் தெரியவில்லை. பட்னு போவதற்கு இன்னும் சில நாட்கள்தாம் இருந்தன. சிறிதானுலும் சிக்கலான ஒரு வழக்கு என் கையில் இருந்தது. அதைப் பட்னுவிற்குச் செல்ல இருந்த இரண்டு நீதி பதிகளின் முன்னிலையில் வாதாட வேண்டியிருந்தது. அவர்களில் ஒருவர் அப்போது நீதிபதியாக நிலைபெறவில்லை. சிறிது காலத் திற்காகத்தான் கைஹகோர்ட்டுக்கு வந்திருந்தார். பிறகு சிறிது காலத்திற்குப் பட்னுவுக்கும் வந்தார். இந்த வழக்குரை இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து நடந்தது. நாங்கள்தாம் வென்ருேம். என் வழக்குரை அவர் மனத்தைக் கவர்ந்தது. நான் எம். எல். பரீக்ஷையும் எழுதி இருக்கிறேன் என்பதும் அவருக்குத் தெரிய வந்தது. அவர் பட்னுவிற்கு வந்தபின் ஹைகோர்ட்டுத் திறப் பதற்கு முன்னமே மற்றவர்களிடம் என்னைப் புகழ்ந்து பேசி, கல்கத்தாவிலிருந்து ஹைகோர்ட்டுடன் வரும் வக்கீல் திறமை சாலி என்றும் பட்னுவிலிருக்கும் பெரிய பெரிய வக்கீல்களுட னும் போட்டிபோடமுடியும் என்றும் கூறினராம். ஹைகோர்ட் டுத் திறந்தானபின் நான் இதை என் அனுபவத்திலும் கண்டேன்.

இரண்டாவது அப்பீல்களில் சட்டத்தை ஒட்டிய வாதம் தான் நடத்த முடியும். உண்மையாக என்ன நடந்தது என் பதைப் பற்றிக் கீழ்க் கோர்ட்டுச் சொல்லிய தீர்ப்பு அப்படியே ஏற்றுக் கொள்ளப்படும். இரண்டாம் அப்பீல்கள் சின்னஞ்சிறிய வழக்குகளில்தான் செய்யப்படும். என்னுடைய கட்சிக்காரர்கள் எப்போதுமே ஏழைகள். கல்கத்தாவில் இரண்டாம் அப்பீல்கள் தாம் என் கைக்கு வரும். ஆகையால் அவற்றின் வழக்குரை களில் சட்டத்தை ஒட்டி வாதம் செய்வதற்காக நான் சட்டங்களை நிறையப் படிக்க வேண்டி வந்தது. கீழ்க்கோர்ட்டின் தீர்ப்புச் சட்டப்படி தவருனது என்றும், அதைத் தாக்கி வழக்காடினுல் வெற்றி பெறக்கூடுமென்றும் தெளிவாக அறிந்து கொள்ளாத வரையில் இரண்டாம் அப்பீல் வழக்குகளை ஏற்பதில்லை என்று ஒரு கட்டுப்பாடு வைத்துக் கொண்டிருந்தேன். பட்ஞ வந்தும் நான் இதே கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்து வந்தேன்.

இரண்டாம் அப்பீலைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்வதற்காக ஒரு முறை வழக்காட வேண்டும். தீர்ப்பில் ஏதோ தவறு இருக் கிறது அல்லது குறைந்த பட்சம் வழக்காடுவதற்கு இடமிருக் கிறது என்று நீதிபதி உணர்ந்தபின்தான் அவர் அனுமதி கொடுப் பார். பிறகு எதிர்க்கட்சியை தம் முன்னிலையில் வந்து சேரும் படி கட்டளையிடுவார். பட்ஞ ரிஜிஸ்திராருக்குச் சட்டம் சிறிதளவு தான் தெரியும். அவர் இரண்டாம் அப்பீல்கள் எல்லாவற்றை யுமே ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிடுவார். ஆனுல், அப்படி ஏற்றுக்கொள்ளத்தகாதவை என்று தாம் கருதிய அப்பீல்களை நீதிபதிமுன் சமர்ப்பிப்பதற்குத்தான் அவருக்குச் சட்டப்படி அதிகாரம் உண்டு. இப்படியாக என்னுடைய அப்பீல்கள் பல வற்றை அவர் நீதிபதிக்கு அனுப்பினுர். அவை, பெரும்பாலும் எல்லாமே அங்கே ஏற்றுக்கொள்ளப்பட்டன. அந்த நீதிபதியைப் பற்றி முன்னமே சொல்லியிருக்கின்றேன். அவர் என் வழக்கு களைப் பற்றிய காகிதங்களைப் படிப்பதுகூடக் கிடையாது. நான் எழுந்து நின்றதுமே அப்பீலை ஏற்றுக்கொண்டு விடுவார். நான் பணத்திற்கு ஆசைப்பட்டுக்கொண்டு கண்டகண்ட வழக்கு களை எல்லாம் சமர்ப்பிப்பதில்லை என்று ரிஜிஸ்திராருக்கும் நம்பிக்கை பிறந்த பிறகு அவரும் அப்படியே செய்யத் தொடங் கினுர். நான் இவற்றில் எதுவும் சத்து இல்லை என்று எண்ணிச் சமர்ப்பிக்காத வழக்குகளைக் கட்சிக்காரர்கள் வேறு வக்கீல்கள் மூலம் சமர்ப்பிப்பதையும், கடைசியில் அவை தோற்றுப் போவதையும் பார்த்திருக்கிறேன்.

## 19. பட்ணு பல்கலைக்கழக மசோதா

1916 மார்ச்சில் பட்ணுவில் ஹைகோர்ட்டுத் திறக்கப்பட்டது. கல்கத்தா ஹைகோர்ட்டில் தொழில் ஆற்றிவந்த எல்லாப் பீகாரி வக்கீல்களும், மேலும், பீகார் வழக்குகளே கிடைத்து வந்த வங்காள வக்கீல்களும் பட்ணு வந்து சேர்ந்தார்கள். நானும் பட்ணுவுக்கு வந்து விட்டேன். அக்காலத்தில் பட்ணுவில் வீடு கிடைப்பது கடினமாகிவிட்டது. வாடகைக்கு ஒரு வீடு எடுத்துக் கொண்டு அதில் இருந்து வந்தேன். கல்கத்தாவிலேயே என் கையில் ஏராளமாக வழக்குகள் இருந்தன. பட்ணு வந்தபின் மேலும் நிறைய வழக்குகள் வந்து குவிந்தன. நானும் மிகவும் உற்சாகத்துடன் வேலைபார்க்க ஆரம்பித்தேன். ஆனால் இந்த உற்சாகம் சிறிது காலம்தான் நீடித்து நின்றது.

அதே சமயத்தில் பட்ணுவில் ஒரு பல்கலைக் கழகத்தைச் சில மாதங்களுக்குப் பிறகு அமைப்பதற்காக வேண்டி தில்லிக் கவுன்ஸிலில் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது. நாங்கள் அந்த மசோதா மிகவும் தீமையானது என்று நினைத்தோம். ஆகையால் அதற்கு விரோதமாகக் கிளர்ச்சியை எழுப்பினோம். இதற்குமுன் ஒரு குழு அமைக்கப்பட்டு அது ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்திருந்தது. அக்குழு செய்த முக்கிய சிபார்சுகளில் பல்கலைக் கழகத்தை ஊருக்கு வெளியே மூன்று நான்கு மைல் தொலைவில் உள்ள புல்வாரி ஷரீபுக்கு அருகில் அமைக்கவேண்டும் என்பது ஒன்று. அதன் கட்டடங்களுக்கு ஏறக்குறைய ஒரு கோடி ரூபாய் செலவு ஆகும் என்பதும் காட்டப்பட்டிருந்தது. நான் கல்கத்தாவிலிருந்தபோதே அதை எதிர்த்தேன். பீகார் மாணவர் மகாநாட்டிற்குத் தலைமை ஏற்றபோதும் அப்பதவி யிலிருந்து அதைப் பலமாக எதிர்த்தேன். இப்படி ஆகிவிட்டால் ஏழைப் பையன்களுக்குப் பல்கலைக்கழகப் படிப்பு கைகூடாமல் போய்விடும் அல்லது மிகவும் கடினமாகி விடுமென்று நாங்கள் கருதினோம். அங்கே செலவும் அதிகரிக்கும். ஊரைவிட்டு எட்டிப் போய்விடுவதால், அதிகச் செலவை உத்தேசித்துப் பையன்கள் எல்லாரும் ஹாஸ்டலில் இருக்க வேண்டிவரும். அங்கே அவர்களுக்குச் சுதந்திரம் எதுவும் இருக்காது என்று இவ்வாறெல்லாம் நினைத்தோம்.

அந்த எதிர்ப்புக்குப் பொதுமக்களிடமிருந்து நிறைய ஆதரவு கிடைத்தது. அந்தத் திட்டம் ஒருவாறாக ஒத்திப்போடப்பட்டது.

புது மசோதாவில் வேறுவித இடைஞ்சல் உண்டாயிற்று. செனேட்டும் சிண்டிகேட்டும் அதில் காட்டியுள்ள முறைப்படி அமைந்தால், அரசாங்கத்து ஆட்கள் எல்லாருமாகக் கூடிப் பல்கலைக் கழகத்தைத் தம் கைக்குள் போட்டுக் கொண்டு அரசாங் கத்து உத்தரவுப்படி மனம்போன போக்காக நடத்துவார்கள் என்று நாங்கள் கருதினோம்.

நாங்கள் கல்கத்தா பல்கலைக்கழகத்தை மனத்தின்கண் கொண்டிருந்தோம். அங்கே வைஸ்சான்சலர்கள் கல்வி நிர்வாகத் தில் மிகவும் துணிச்சலாகக் காரியங்கள் செய்து வந்தார்கள். சர் ஆஷுதோஷ் முகர்ஜீ எங்கள் கண்முன் சிறப்பாக நின்றார். அங்கே செனேட்டும் சிண்டிகேட்டும் சர் ஆஷுதோஷுக்குப் பக்கபலமாக இல்லாதிருந்தால் அவர் அநேக காரியங்களைச் செய்திருக்க முடியாது. இங்கே எங்களுக்கு அவரைப்போன்ற மனிதர் எளிதில் கிடைக்க மாட்டார் என்றும், அப்படிக் கிடைத் தாலும் செனேட்டும் சிண்டிகேட்டும் அவருக்கு எதிரியாக இருக் கும்போது அவர் ஒன்றும் செய்ய முடியாது என்றும் நாங்கள் நினைத்தோம். ஆகையால் செனேட்டிலும் சின்டிகேட்டிலும் ஆசிரியர்களுக்கு மட்டும் அன்றி மற்றவர்களுக்கும் பொது மக் களின் பிரதிநிதிகள் என்ற முறையில் அதிக இடங்கள் அளிக்கப் பட வேண்டுமென்று விரும்பினோம்.

பல்கலைக் கழக மசோதாவுக்கு விரோதமாக ஒரு பெரிய புரட்சியை நாங்கள் மூட்டிவிட்டோம். இதில் என் நண்பர் பாபூ வைத்திய நாத் சிங்கும் நானும் தாம் பெரும்பங்கு எடுத்துக் கொண்டோம். ஒரு விதத்தில் நாங்கள்தாம் இதற்குச் சிருஷ்டி புருஷர்கள். ஒவ்வொரு ஜில்லாவிலும் மகாநாடு கூட்டப்பட்டது. நாங்கள் இருவரும் பத்திரிகைகளில் பல கட்டுரைகளும் எழுதிவந் தோம். இந்த மசோதா தில்லிக் கவுன்ஸிலில் சமர்ப்பிக்கப்பட் டிருந்ததால் மற்ற மாகாணங்களின் அங்கத்தினர்களுக்கும் இதைப்பற்றிப் பீகார் பொது மக்கள் கொண்டிருந்த அபிப்பிராயம் என்னவென்று தெரிவிக்க வேண்டியது அவசியம் என்று நாங்கள் கருதினோம். தேசீய பத்திரிகைகள் எல்லாம் அம்மசோதாவை எதிர்த்தன. இதை ஒட்டி ஐந்தாறு சிறிய புத்தகங்களையும் அச் சிட்டு வழங்கினோம். கடைசியாகப் பீகார் மாகாணக் காங்கிரஸ் இதற்காக ஒரு தனிச்சபையைக் கூட்டி இதைப்பற்றி ஆலோசனை செய்து பலமாகத் தாக்கியது. இந்தப் பேரவைக்குப் பட்னாவின் பிரபல வக்கீல் ராவ் பகதூர் பூர்ணேந்து நாராயண் சிங் தலைமை வகித்தார். அவர் இம்மசோதாவை அலசி ஆராய்ந்து ஒரு

கடுமையான சொற்பொழிவை ஆற்றினுர். அதே கருத்துக் கொண்ட தீர்மானம் ஒன்றும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இதற்கிடையில் லக்னேவில் 1916 டிசம்பரில் காங்கிரஸ் கூடியது. அங்கே நாங்கள் பெருங்கூட்டமாகப் போய்ச்சேர்ந் தோம். இந்த மசோதா ஒரு பிரதேசத்தை மட்டும் ஒட்டியதாயி னும், மேலும் காங்கிரஸ் சாதாரணமாக நாடு முழுவதையும் சம்பந்தப்பட்ட விஷயங்களையே ஆலோசிப்பது வழக்கம் ஆயினும், ஸ்ரீ சுரேந்திரநாத் பானர்ஜி, ஸ்ரீ பராஞ்சபி முதலிய தலைவர்களுடன் நான் கலந்து பேசி இந்த மசோதாவுக்கு விரோத மாக ஒரு தீர்மானத்தைக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய் தேன். ஸ்ரீ பராஞ்சபி தம் தீர்மானத்தை சமர்ப்பித்தார். அது ஒருமுகமாக நிறைவேற்றப்பட்டது. இப்படியாக இம்மசோதா வுக்கு எதிர்ப்பு அகில தேசப் புரட்சியாக மாறிவிட்டது.

கவுன்ஸில் அங்கத்தினரான சர் சங்கரன் நாயர் மசோ தாவைக் கவுன்ஸில் முன் கொண்டு வருவதாக இருந்தது. அவர் பீகார் பிரதிநிதிகளுடன் ஆலோசனை செய்து மசோதாவில் நிறையத் திருத்தங்களைச் செய்திருந்தார். எந்தெந்த விஷயங் களைப் பற்றி எதிர்ப்பு அதிகமாக இருந்ததோ அவை மாற்றி அமைக்கப்பட்டன. மஜஹர்-உல்-ஹக் சாஹப் பீகாரின் பிரதிநிதி யாக இருந்தார். அவர் எங்கள் அபிப்பிராயங்களைத் தவருமல் கேட்டுக் கொண்டு போவார். கடைசியில் எங்கள் சம்மதத்தைப் பெற்றுக்கொண்டு பலவிதமாக மாற்றப்பட்டபின் அம்மசோதா அங்கீகரிக்கப்பட்டது.

நான் பீகாரில் அரசாங்கத்தை எதிர்த்து இவ்வளவு பெரிய இயக்கத்தை நிலைநாட்டியது இதுதான் முதல் முறை. இதில் வெற்றியும் கிடைத்தது. இக்காலத்திலிருந்து காங்கிரஸ் வேலையில் அதிகமாக ஈடுபட ஆரம்பித்தேன். நான் அகில பாரதீயக் காங் கிரஸ் குழுவில் 1911இல் இருந்து இடைவிடாது அங்கத்தினனுக இருந்து வந்தாலும் கல்கத்தாவில் இருந்த வரையில் சிறப்பாக எதுவும் வேலை செய்ய முடியவில்லை. பீகாருக்கு வந்தபின் மற்ற வர்களும் என்னைக் கவனிக்க ஆரம்பித்தார்கள். நானும் பொது மக்கள் தொண்டில் மேலும் அதிக ஊக்கம் செலுத்தவேண்டும் என்று உணர்ந்தேன். சில நாட்களுக்குள் நான் பீகார் மாகாணக் காங்கிரஸ் குழுவுக்குத் துணை அமைச்சனுக ஆக்கப் பட்டேன். இந்தப் பதவியில் நான் அநேக ஆண்டுகள் இருந் தேன். ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பித்த பின் பழைய காங்கிரஸ்காரர்கள் விலகிக் கொண்டபோது நான் அமைச்சன்

ஆனேன். பல்கலைக் கழகம் நிறுவப்பட்டதும் கவர்னர் என்னைச் செனேட்டின் அங்கத்தினனாக நியமித்தார்.

1916 காங்கிரஸில் பீகாரை ஒட்டி இன்னொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இது சம்பாரானைச் சேர்ந்த அவுரிச்சாய வெள்ளைக்காரர்களைத் தாக்கியது. இதைத் தனியாக, விவரமாகக் கூறுவேன்

## 20. ஹிந்தியும் தொண்டும்

கல்கத்தாவை விட்டுப் பட்னாவுக்கு வருவதற்கு முன்பு நிகழ்ந்த ஓரிரண்டு விஷயங்களை இங்கே குறிப்பிடுவது தகும் என்று நினைக்கிறேன். மாணவர் மகாநாட்டைப்பற்றி முன்னமே கூறியிருக்கிறேன். மாணவ வாழ்க்கை முடிந்து நான் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்த போதும்கூட மாணவர் மகாநாட்டுடன் எனக்குத் தொடர்பு இருந்து வந்தது. மாணவர்களும் என்மேல் அதிகப் பற்றுதல் கொண்டிருந்தார்கள். நானும் என்னை அவர்களில் ஒருவனாகவே கருதி வந்தேன்.

முங்கேரில் நடந்த மாணவர் மகாநாட்டின் பேரவைக்கு நான் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அந்த மகாநாட்டில் பல்கலைக் கழகத்தை ஒட்டி நேதன்-குழு விடுத்த அறிக்கையைத் தாக்கிப் பேசப்பட்டது. எங்கெங்குப் பேரவை நடந்தாலும் நான் அங்கே சென்று கலந்து கொள்வேன். இன்னும் மற்ற வகைகளிலும் மாணவர் நிலையத்திற்கு உதவி புரிந்து வந்தேன்.

அந்தக் காலத்தில் தான் ஹிந்தியிலும் பற்று உண்டாயிற்று. பள்ளிக்கூடத்தில் கீழ் வகுப்புக்களில் ஓரிரண்டு ஆண்டுகள் வரையில் நான் ஸம்ஸ்கிருதமும் படித்தேன். பிறகு பாரசீகம் படிக்கத் தொடங்கிவிட்டேன். ஸம்ஸ்கிருதத்தைக் கைவிடுவதற்கு முக்கிய காரணம் நான் வக்கீல் ஆகவேண்டுமென்று அப்பா விரும்பியதுதான். வழக்குகள் சம்பந்தமாக பத்திரங்கள் முதலியன பாரசீகத்தில் எழுதப்பட்டு வந்ததால் பாரசீகம் படித்தால் வக்கீல் வேலைக்கு உதவியாகும் என்று அவர் கருதினார். பிறகு வீட்டிலேயே சிறிதளவு ஸம்ஸ்கிருதம் படிப்பதற்கு முயன்றேன். ஆனால் அப்படி அதிக நாள் செய்ய முடியவில்லை. ஆகையால் நான் பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் பாரசீகமே தொடர்ந்து கற்று வந்தேன். பாரசீகத்தில் மார்க்கும் நிறையக்

கிடைத்தது. பாரசீகத்து மார்க்கு இல்லாதிருந்தால் நான் எண்ட்ரன்ஸில் முதலிடம் பெற்றிருக்க முடியாது. ஏனெனில் கணக்கில் எனக்கு மார்க்குக் குறைவாகக் கிடைத்திருந்தது. ஹிந்தி படிப்பதற்கு வாய்ப்பு என்றுமே கிடைக்கவில்லை. ஹிந்தி யில் எழுத்து மட்டும் தான் தெரியும். வீட்டில் தாயார் முதலா னோர் ராமாயணம் படிப்பார்கள். அதனால் ராமாயணம் படிப்ப தற்கு எனக்கும் ஆசை உண்டாகியது. நெடுநாள் வரையில் நான் காலையில் ராமாயணம் படித்துவிட்டுத்தான் எதுவும் உண்பேன். இந்தக் கட்டுப்பாடு எத்தனையோ நாட்கள் வரை யில் நின்று வந்தது. ஹிந்தியில் மற்ற நூல்களைப் பார்ப்பதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை.

பரீக்ஷைகளில் ஆங்கிலத்திலிருந்து சொந்த மொழியிலும், சொந்த மொழியிலிருந்து ஆங்கிலத்திலும் மொழி பெயர்ப்பதற்கு ஏதாவது கொடுக்கப்படும். எண்ட்ரன்ஸ், எப். ஏ, ஆகிய பரீக்ஷைகளில் நான் உருது மொழியைத்தான் சொந்த மொழி யாக எடுத்திருந்தேன். பி. ஏ.க்குச் சென்றதும் ஹிந்தி எடுத்துக் கொள்ளலாமென்ற ஆசை உண்டாயிற்று. பி. ஏ. பரீக்ஷையில் ஹிந்தியில் ஒரு கட்டுரையும் எழுத வேண்டும். நான் ஹிந்தி எடுத்துக்கொண்டு பரீக்ஷையில் தேறியும் விட்டேன். ஹிந்தியியுடன் தொடர்பு இவ்விதமாக ஆரம்பித்தது.

கல்கத்தாவில் ஹிந்தி எழுத்தாளர்களும், வித்துவான்களும், இலக்கியக்காரர்களும், நேயர்களும் அநேகம் பேர் இருந்தார்கள். அவர்களில் பண்டித் ஜகந்நாத் பிரசாத் சதுர்வேதி பீகாரைச் சேர்ந்தவர். பீகார்-கிளப்புக்கு அடிக்கடி வந்து போய்க் கொண் டிருப்பார். விஷுத்தானந்த் சரஸ்வதி வித்தியாலயாவின் தலைமைப் பண்டிதர் உமாபதி தத்தும் பீகார்க்காரர்தாம். அவ ருடனும் அதே கிளப்பில் பழக்கமாயிற்று. இவர்கள் இருவருடைய தொடர்பினால் மற்றவர்களுடனும் பழக்கமாயிற்று. கல்கத்தாவில் ஹிந்தி சாகித்திய பரிஷத் ஒன்று நிறுவப்பட்டது. அதில் நான் அதிக ஊக்கம் எடுத்துக் கொள்ளத் தொடங்கினேன். அது எந்த ஆண்டில் துவக்கப்பட்டது என்பது நினைவில்லை. ஆனால் அதன் பேரவையில் நான் எப்போதாவது ஏதாவது கட்டுரை களைப் படிப்பது உண்டு. அவற்றை வித்துவான்களும் பாராட்டு வார்கள். அகில பாரத ஹிந்தி சாகித்திய சம்மேளன் ஒன்றை நடத்த வேண்டுமென்று எங்களில் சிலருக்கு எண்ணம் எழுந்தது. இதைப் பற்றிப் பலருக்குக் கடிதங்கள் எழுதப்பட்டன. ஹிந்தி இயக்கத்தில் பற்றுள்ளவர்கள் இந்த எண்ணத்தை மகிழ்ச்சியுடன்

வரவேற்ருர்கள். அப்படியே காசியில் முதல் பேரவையும் கூடியது. நானும் அதற்குப் போயிருந்தேன். காலஞ்சென்ற மாளவீயஜீ அதற்குத் தலைவராக அமைந்தார். இப்படியாக அதன் தொடக்கத்திலிருந்தே சம்மேளனுடன் எனக்கு உறவு ஏற்பட்டது.

மூன்ருவது சம்மேளன் கல்கத்தாவில் நடக்க இருந்தபோது நான் வரவேற்புக் குழுவுக்குத் தலைமை அமைச்சனுக ஆக்கப்பட்டேன். நான் வக்கீல் தொழில் ஆரம்பித்து இன்னும் ஓர் ஆண்டு கூட ஆகவில்லை. ஆகையால் அதிகப் பேரை எனக்குத் தெரியாது. ஆயினும் ஜனங்கள் இப்படி விரும்பியதால் நான் இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டி வந்தது. இத்தொடர்பினுல் சம்மேளனின் முக்கியத் தலைவர்களுடன் பழக்கமாகி விட்டது. கல்கத்தாவின் படாபஜார் ஜனங்களுடனும் நன்ருகப் பழக்கம் உண்டாயிற்று. 1912 டிசம்பரில் கல்கத்தாவில் சம்மேளன் வெற்றிகரமாகப் பண்டித் பத்ரி நாராயண் சௌதுரீ – "பிரேம்கன்" – தலைமையின் கீழ் நடந்தேறியது. அகில பாரத நிலையம் ஒன்றின் பேரவையின் ஏற்பாட்டிற்கு நான் பொறுப்பை ஏற்க வேண்டி வந்தது இதுதான் முதல் தடவை. அரும்பாடு படவேண்டியிருந்தது. ஆனுல் இறைவனின் திருவருளால் எல்லா வேலைகளும் சரியாக நடந்தேறியன.

அதே சமயத்தில் காங்கிரஸ் பட்னுவில் நடப்பதாக இருந்தது. பீகாரி என்ற வகையில் நான் அதில் கலந்து கொள்வது அவசியம் என்பது தோன்றியது. நானும் சேர விரும்பினேன். எவராவது சம்மேளனில் வேலையை முடித்துக் கொண்டு பட்ன காங்கிரஸிலும் கலந்து கொள்ள விரும்பினுல் அப்படி அவர்கள் அதற்கும் போவதற்கு வசதி அளிக்கும் முறையில்'சம்மேளனின் தேதிகளும் அமைக்கப்பட்டிருந்தன. ஆனுல் நான் வரவேற்புக் குழுவின் தலைமை அமைச்சனுக இருந்ததால் எத்தனையோ விஷயங்களுக்கு உத்தரவாதியாயிருந்தேன். ஆகையால் நான் கல்கத்தாவை விட்டு நகரவில்லை. இதனுல் நான் பட்ன காங்கிரஸில் கலந்து கொள்ள முடியவில்லை.

பட்னுவிற்கு வந்ததும் நாங்கள் சில நண்பர்கள் கூடி ஏழை மாணவர்களுக்காக ஒரு நிதி திரட்டினேம். அதைக்கொண்டு மாணவர்களுக்கு உதவி புரிந்து வந்தோம். இந்தப் பணியை மாணவர் மகாநாடுதான் ஆரம்பித்தது. பிறகு நான் இதை ஏற்றுக் கொண்டேன்.

1914இல் வங்காளத்திலும் பீகாரிலும் கொடுமையான வெள்

ளங்கள் வந்தன. முதல் வெள்ளம் பர்துவான் ஜில்லாவில் வந்தது. வெள்ளத்தில் அடிபட்டவர்களுக்கு உதவி செய்யக் கல்கத்தாவில் பணம் திரட்டப்பட்டது. அநேக தொண்டர்கள் வெள்ளத்தால் சேதமுண்டான இடங்களுக்குச் சென்றுர்கள். இந்த வெள்ளத்தைப் பற்றிய செய்திகள் தினத்தாள்களிலும் வெளிவந்தன. சில நாட்களுக்குள்ளாக அதே போன்ற கொடிய வெள்ளம் புன்புன் நதியிலும் வந்து பட்ணுவிற்குள் நுழைந்து விட்டது. வெள்ளத்தில் அடிபட்டவர்களுக்கு ஏதாவது உதவி புரிய வேண்டுமென்று நாங்கள் எண்ணினேம். கல்கத்தாவி லேயே இதற்காகச் சிறிது பணமும் சேர்த்தோம். பிறகு என் தோழர்களுடன் நான் பட்ணு வந்து சேர்ந்தேன். மாணவர் மகா நாட்டின் அலுவலகம் பட்ணுவில்தான் இருந்தது. அங்கிருந்த ஆர்வம் நிறைந்த மாணவர்களின் உதவியைக் கொண்டு ஒரு தொண்டர் படையை அமைத்தோம். வெள்ளம் தாக்கிய இடங் களில் மக்களுக்கு உதவி புரிவதற்காகத் தானியத்தை எடுத்துக் கொண்டு போய்ச் சேர்ந்தோம். அங்கே நிலைமை மிகவும் பயங் கரமாக இருந்தது. அநேக கிராமங்களில் வெள்ளம் வீடுகளுக் குள்ளும் நுழைந்து விட்டது. நாங்கள் போய்ச் சேர்ந்தபோது அந்த வீடுகளில் இருந்த தானியம் எல்லாம் மடித்துப் போய்க் கொண்டிருந்தது. ஆகையால் நாங்கள் வறுத்த கொண்டைக் கடலை போன்ற உண்ணக்கூடிய பொருள்களை உடனே வழங்கி னேம். படகில் ஏறிக் கொண்டு அதிகத் தொலைவு வரையில் செல்வோம். பொழுது சாயும் வரையில் கிராமம் கிராமமாகச் சுற்றி வந்து பிறகு அருகில் உள்ள ரயில் நிலையத்தின் பிளாட் பாரத்தில் படுத்துக் கொள்வோம். எத்தனையோ இரவுகளை இப்படியாகப் பிளாட்பாரத்தில் தூங்கிக் கழித்தோம் என்பது நினைவிருக்கிறது. பீகாரில் இதுதான் முதன் முதலாக நிறுவப் பட்ட தொண்டர் குழாம் என்று நினைக்கிறேன். ஆனல் இது முறைப்படி அமைக்கப்பட்டது அன்று. இது மக்களுக்குத் தொண்டு புரிவதற்காக அன்பு நெறியால் தானே உருவான ஒரு சங்கம். ஆயினும் தொண்டர் குழாம் ஒன்று இவ்வண்ணமாகப் பிறந்துவிட்டது. நாங்கள் பட்ணுவிற்குத் திரும்பி வந்தபின் சோன்பூர் விழாவில் யாத்திரிகர்களுக்கு உதவி புரிவதற்காக ஒரு சங்கத்தை முறைப்படி அமைத்தோம். இச் சேவா சமிதியில் என் தமையனுர் அதிகமாக ஈடுபட்டு உழைத்து வந்தார். ஒவ் வோர் ஆண்டும் அவர் சோன்பூர் விழாவிற்குச் சென்று தாமே

தொண்டு புரிவார். அவர் இறக்கும் வரையில் எத்தனையோ ஆண்டுகளாக அச்சமிதியின் தலைவராக இருந்து வந்தார்.

வெள்ளத்தால் துன்புற்றவர்களுக்குத் தொண்டு ஆற்றிவரும் போது ஒரு நாள் ரயில் நிலையத்தின் மேடையில் நிகழ்ந்த ஒரு சம்பவம் மிகவும் இனிமையானது. நான் நாள் முழுதும் உழைத்த தால் அயர்ந்து தூங்கிவிட்டேன். சிறிது நேரத்திற்குப் பின் தூக்கம் கலைந்து விழித்தேன். யாரோ ஒருவர் என் கால்கைகளை யும் உடம்பையும் பேரன்புடன் பிடித்துவிட்டுக் கொண்டு என் அசதியைப் போக்க முயன்று கொண்டிருந்தார் என்பதை உணர்ந்தேன். இவர் என் நண்பர் சம்பூசரன் என்பதைக் கண் டேன். அவரும் என்னுடன் நாள் முழுதும் வேலை செய்து களைத்துப் போயிருந்தார். ஆயினும் அவர் தம் களைப்பைப் பொருட்படுத்தாமல் எனக்குக் களைப்பாற்றிக் கொண்டிருந்தார்.

## 21. காந்திஜீயின் தரிசனம்

1916இல் லக்னோ காங்கிரஸ் மிகவும் ஆடம்பரமாக நடந்தது. 1907இல் காங்கிரஸில் இரண்டுகட்சிகள் உண்டானதிலிருந்து, தீவி ரக் கட்சி காங்கிரஸிலிருந்து பிரிந்து போய்விட்டது. அப்போதி லிருந்து காங்கிரஸிடம் மக்களுக்குப் பற்றும் குறைந்து விட்டது. அதன் ஆண்டு விழாக்களுக்கும் ஜனங்கள் குறைவாகவே வரத் தொடங்கினார்கள். 1912இல் பட்னாவில் காங்கிரஸ் கூடும் வரையில் பிரதிநிதிகளின் எண்ணிக்கையும் குறைவாகவே இருந்து வந்தது. நாட்டின் நலத்தை நாடினவர்கள் இரண்டு கட்சிகளையும் இணைத்து வைத்து, அதனால் காங்கிரஸுக்கு மீண்டும் உயிரை ஊட்ட வேண்டுமென்று முயற்சி செய்தார்கள். இப்படி முயற்சி நடந்து வந்தாலும் 1916 காங்கிரஸில் தான் இது பயனளித்தது. இதில் எல்லாவிதக் கருத்துக்கள் உடையவர்களும் கூடியிருந்தார் கள். ஒரு புறம் லோகமான்ய திலகர் தம் கட்சி பலத்துடன் வந்து சேர்ந்தார். மற்றொரு புறத்தில் அநேகமாக எல்லாத் தலை வர்களும் இருந்தார்கள். மிஸ்ஸஸ் பெசண்ட்டும் வந்திருந்தார். அதே ஆண்டில் முஸ்லிம் லீகுடன் ஒப்பந்தமும் ஏற்பட்டது. முஸல்மானியரும் பெருந்திரளாக வந்திருந்தார்கள். மகாத்மா காந்தியும் இக் காங்கிரஸுக்கு வந்தார். அவர் 1915 இலேயே தென் ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்து நாடெங்கும் சுற்றிக்

கொண்டிருந்தார். ஆனால் அவர் இக் காங்கிரஸில் கொண்டுவரப் பட்ட தீர்மானம் எதைப் பற்றியும் பேசவில்லை.

பீகார் பிரதிநிதிகளும் பெருவாரியாக லக்னேவுக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்களில் சிலர் சம்பரானேச் சேர்ந்தவர்கள். அவர்களுடன் ராஜ்குமார் சுக்லா என்ற கிராம விவசாயி ஒரு வரும் வந்திருந்தார். அவருக்குச் சிறிதளவுதான் ஹிந்தி தெரியும். வேறு ஒரு மொழியும் தெரியாது. அவர் அவுரிச் சாயக் காரர்கள் (நீல வெள்ளைக்காரர்கள்) கையில் பெரும் துன்பப் பட்டவர்களில் ஒருவர். சம்பரான் ஜில்லாவில் துன்பத்திற்குள் ளாகி இருந்த குடிகளின் சார்பில் அவர் காங்கிரஸுக்கு வந்திருந் தார். அவருடன் முன்னிருந்தே எனக்குச் சிறிதளவு பழக்கம் உண்டு. ஏனெனில் எப்போதாவது ஏதேனும் வழக்கு ஹைக் கோர்ட்டு வரையில் வந்து சேர்ந்தால், அப்போது நான் என் பீஸைப் பற்றி (கட்டணத்தைப் பற்றி) எதுவும் எண்ணாமல் அவர் களுக்கு வக்கீலாக அமர்ந்து பணியாற்றி வந்தேன். ஆனால் இத்துன்பத்தில் பாபூ பிரஜ்கிஷோர் பிரசாத்தாம் அவர்களுக்குப் பேருதவி புரிந்து வந்தார். ஆகையால் அவருக்குத் தாம் அவர்களை நன்றாகத் தெரியும். சம்பரான் ஜில்லாவின் சூழ்நிலையைப் பற்றி அவர் அதிகமாக அறிந்திருந்தார்.

அக்காலத்தில் பீகார் பிரதிநிதிகள் இரண்டு விஷயங்களில் அதிகமாகக் கருத்துச் செலுத்தி வந்தார்கள். அவற்றைப் பற்றிக் காங்கிரஸிலும் தீர்மானம் நிறைவேற்ற விரும்பினார்கள். அவற்றில் ஒன்று பட்னாப் பல்கலைக் கழக மசோதா, மற்றொன்று, சம்பரான் நீலச் சாயக்காரர்களின் தொல்லை. ராஜ்குமார் சுக்லா, பாபூ பிரஜ்கிஷோர் முதலானவர்கள் காங்கிரஸ் இந்த விஷயத் தைப் பற்றியும் தீர்மானங்களை நிறைவேற்ற வேண்டுமென்று பெரிதும் ஆசைப்பட்டார்கள். பீகார் மாகாணக் காங்கிரஸின் தலைவர் என்ற முறையில் பாபூ பிரஜ்கிஷோர் இந்த விஷயத்தை மிகவும் கடுமையாகக் கண்டனம் செய்திருந்தார். அக்காங்கிரஸி லும் இதைப் பற்றி ஒரு தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. அவர் கவுன்ஸிலிலும் அங்கத்தினராக இருந்தார். அங்கும் அவர் இத்தொல்லையைப் பற்றிக் கேள்விகள் கேட்டார். ஒரு தீர்மான மும் கொண்டு வந்தார். கவுன்ஸிலிலும் வெளியிலும் இவ்விஷ யத்தைத் தமது ஒரே குறிக்கோளாகக் கொண்டு சட்ட எல்லைக் குள் எவ்வளவு இயலுமோ அவ்வளவும் செய்து வந்தார். தம்மால் இயன்ற வரையில் அப்பக்கத்துக் குடியானவர்களின் வழக்கு களிலும் உதவிபுரிந்து வந்தார்.

கர்ம வீரர் காந்தி தென் ஆப்பிரிக்காவில் அநேக காரியங்களைச் சாதித்து விட்டு இந்தியாவுக்கு வந்திருக்கிறார்; ஆதலால் இந்த வேலைக்கு அவருடைய உதவியைப் பெற வேண்டும் என்பதைப் பீகார் மக்கள் நன்கு உணர்ந்தார்கள். ராஜ்குமார் சுக்லா முதலானோர் அவரைக் கண்டு சம்பரானில் உள்ள நிலைமையை எடுத்துக் கூறி அவருக்குப் புலப்படுத்தினார்கள். அவர் இதில் சிறிது ஊக்கம் காட்டினார். இதைப் பற்றிக் காங்கிரஸில் அவர் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வரவேண்டுமென்று இவர்கள் வேண்டினார்கள். ஆனால் காந்திஜீ இதற்கு இணங்கவில்லை. அங்குள்ள நிலைமையைத் தாமே நேரில் கண்டு தீர விசாரித்துத் திருப்தியடையாத வரையில் தீர்மானம் எதையும் கொண்டுவர முடியாதென்று கூறிவிட்டார். மேலும் வற்புறுத்தினதின் பேரில் அங்குள்ள நிலைமையைக் கண்டறியத் தாம் தயார் என்றும், சில நாட்களுக்குள் அப்படியே அங்கு வருவதாகவும் கூறினார். காங்கிரஸில் பாபூ பிரஜ்கிஷோர் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். ராஜ்குமார் சுக்லாவும் அதைப் பற்றிச் சிறிது பேசினார். காங்கிரஸ் மேடையில் ஒரு சுத்தப் பட்டிக்காட்டு விவசாயி எந்த ஒரு தீர்மானத்தைப் பற்றியும் பேசியது இதுதான் முதல் முறை என்று நினைக்கிறேன். காங்கிரஸும் தீர்மானத்தை ஏற்றுக் கொண்டது.

பீகார் பிரதிநிதிகள் பாபூ பிரஜ்கிஷோருடன் காந்திஜீயிடம் சென்றபோது நான் அவர்களோடு போகவில்லை. அந்தக் கதையை நான் பிறகு கேள்விப்பட்டேன். காந்திஜீயைப் பற்றி நான் அதிகமாக விசாரித்துத் தெரிந்து கொண்டிருக்கவில்லை. அவர் தென் ஆப்பிரிக்காவில் ஆற்றிய பணிகளைப் பற்றிக் கூட நான் மிகக் குறைவாகத் தான் அறிந்திருந்தேன். அவர் தென் ஆப்பிரிக்காவில் ஏதோ அரிய பெரிய காரியத்தைச் சாதித்தார் என்பது மட்டும்தான் தெரியும். பேர் பெற்ற தலைவர்களைப் போல அவரும் ஒரு பெரிய தலைவர் என்பது எனக்குத் தெரியாது. ராஜ்குமார் சுக்லா அவர் மேல் இவ்வளவு நம்பிக்கை ஏன் கொண்டார் என்பதும், அவரிடம் சென்று அவரைச் சம்பரானுக்கு வரு வருவதற்கு ஏன் இணங்க வைத்தார் என்பதும் எனக்குப் புரியவில்லை.

லக்னோ காங்கிரஸுக்குச் சில நாட்களுக்குப் பிறகு காந்திஜீ கல்கத்தாவிற்கு வந்தார். "என்னைக் கல்கத்தாவில் வந்து பாரும், அங்கிருந்து நாம் இருவரும் சேர்ந்து சம்பரானுக்குப் போவோம்" என்று ராஜ்குமார் சுக்லாவுக்குக் கடிதம் எழுதியிருந்

தார். ஆனால் அக்கடிதம் காலம் தாழ்ந்து கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தது. ராஜ்குமார் சுக்லாவுக்குக் கடிதம் கிடைப்பதற்கு முன் காந்திஜீ கல்கத்தாவை விட்டுத் திரும்பிச் சென்றுவிட்டார். ராஜ்குமார் சுக்லா பின்னர் ஒரு கடிதம் எழுதினர். இதற்குக் காந்திஜீ, காங்கிரஸ் குழுவின் கூட்டம் கல்கத்தாவில் நடக்கும் என்றும், அதற்குத் தாம் வருவதாகவும், ராஜ்குமார் சுக்லா அங்கே வந்து தம்மைப் பார்க்க வேண்டும் என்றும் விடை எழுதினர். நானும் அந்தக் கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். தற்செயலாக நான் காந்திஜீக்குப் பக்கத்திலேயே ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். ஆனால் ராஜ்குமார் சுக்லாவுடன் அவர் கடிதப் போக்கு வரவு வைத்திருந்ததும், அவர் அங்கிருந்து பீகாருக்கு வரப்போகிருர் என்பதும் எனக்குத் தெரியாது. வலியச் சென்று முந்தியடித்துக் கொண்டு எவருடனும் பழக்கப் படுத்திக் கொள்வது எனக்கு எப்போதுமே பிடிக்காது. ஆகையால் நான் காந்திஜீயை எதுவும் கேட்கவுமில்லை; அவருடன் ஒரு வார்த்தை கூடப் பேசவுமில்லை. அந்தக் குழுவில் இருந்தவர்கள்—முக்கியமாக அதன் தலைவர், ஸ்ரீ அம்பிகாசரண் மஜூம்தார்—காந்திஜீ காங்கிரஸுக்கு அமைச்சராக அமைய வேண்டுமென்று மிகவும் வற்புறுத்தினர்கள். ஆனால் காந்திஜீ இதற்கு உடன்படவில்லை. நான் உட்கார்ந்திருந்தபடி எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தேன். ஜனங்கள் இவ்வளவு பிடிவாதமாக மன்ருடும்போது அவர் அதை மறுப்பது பண்பு அன்று என்பதாக நான் சில சமயங்களில் நினைத்தேன். ஆனால் நான் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

குழுவின் வேலை முடிந்தவுடன் காந்திஜீ வெளியே வந்தார். ராஜ்குமார் சுக்லா அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அன்றிரவே அவர் ராஜ்குமார் சுக்லாவுடன் பட்னவுக்கு நேரே சென்று விட்டார். நான் பீகாரில் இருப்பவன் என்பதும், ராஜ்குமார் சுக்லா அவரைப் பட்னவில் என் வீட்டிற்குத்தான் அழைத்துச் செல்லப் போகிருர் என்பதும் காந்திஜீக்குத் தெரியாது. ஆகையால் அவரும் என்னுடன் ஒன்றும் பேசவில்லை.

இந்தக் கூட்டம் ஈஸ்டர் விடுமுறையில் நடந்தது. அதன் பின் நான் கல்கத்தாவிலிருந்து ஜகந்நாத் பூரிக்குப் போய்விட்டேன். காந்திஜீ பட்னவிற்குச் சென்றுவிட்டார். ராஜ்குமார் சுக்லா அவரை என் வீட்டிற்கு அழைத்துச் சென்ருர். ஆனால் அங்கே ஒரு வேலைக்காரனைத் தவிர வேறு யாரும் இல்லை. வேலைக்காரன் யாரோ ஒரு கிராமத்து கட்சிக்காரர் வந்திருக்கிருர் என்று

இவரை நினைத்துக் கொண்டான். ஆகையால் அவன் அவரை வெளியேயுள்ள ஓர் அறையில் உட்கார வைத்துவிட்டான். மேலும் மரியாதையும் உபசாரமும் செய்வதற்கு மாருகச் சிறிதளவு அசட்டை செய்வது போலவும் நடந்து கொண்டான். காந்திஜீ அங்கே சிறிது நேரம் தங்கியிருந்தார். இதற்குள் மஜஹர்-உல்-ஹக்குக்குச் செய்தி எட்டியது. அவர் தாமே வந்து காந்திஜீயைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்ருர். அன்று மாலையில் காந்திஜீ முஜபர்பூருக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே ஆசார்யா கிருபாளானியுடன் தங்கினர். அங்கே சில பேரைக் கண்டுவிட்டுச் சம்பரானுக்குப் போகலாமென்று அவர் திட்டமிட்டிருந்தார். ஆகையால் தர்பங்காவில் வக்கீல் தொழில் நடத்திக் கொண்டிருந்த பாபூ பிரஜ்கிஷோர் தந்தி கொடுக்கப்பட்டு அழைக்கப்பட்டார்.

சம்பரானை அடைந்து அங்குள்ள குடியானவர்களைச் சந்திக்க வேண்டுமென்றும், அவர்களுடைய துன்பங்களை அவர்கள் வாயிலாகவே கேட்க வேண்டுமென்றும் காந்திஜீ விரும்பினர். ஆனல் அவ்விடத்தின் நாட்டுப்புறத்துப் பேச்சை அவரால் புரிந்துகொள்ள முடியாது. ஆகையால், துபாஷிப் பணி புரிவதற்காகத் தம்முடன் யாராவது செல்ல வேண்டுமென்று அவர் விரும்பினர். இரண்டு மூன்று நாட்களுக்குள் விஷயங்கள் எல்லாம் தெரிய வந்துவிடுமென்று அவர் கருதினர். ஆகையால் அவர் இரண்டு மூன்று நாட்களுக்காகத்தான் தயார் செய்து கொண்டு வந்திருந்தார். பாபூ பிரஜ்கிஷோருக்கு அதே சமயம் பார்த்து கல்கத்தாவில் ஏதோ வேலையிருந்தது. ஆகவே அவர் காந்திஜீயுடன் போக முடியவில்லை. ஆயினும் அவர் தமது வக்கீல் நண்பர்கள் இருவரைக் காந்திஜீயுடன் அனுப்பிவைத்தார். மேலும் கல்கத்தாவிலிருந்து திரும்பிய பின் தாமும் சம்பரானுக்குப் போவதென்றும், தேவையானல் என்னையும் அழைத்துச் செல்வது என்றும் எண்ணியிருந்தார்.

சம்பரான் ஜில்லாவுக்கு தலைநகர் மோதிஹாரி. காந்திஜீ அங்குச் சென்ருர். அங்கே போய்ச் சேர்ந்ததுமே கிராமப்புறத்திற்குச் செல்லத் திட்டமிட்டார். ஏதோ ஒரு கிராமத்திலிருந்து செல்வாக்குள்ள குடியானவர் ஒருவர் அவரை வந்து பார்த்தார். அவருடைய வீடு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்புதான் நீலச் சாயாக்காரர்களால் கொள்ளையடிக்கப்பட்டிருந்தது. அச்சூறையாட்டத்தின் அடையாளங்கள் இன்னும் அப்படியே இருந்தன. அவர் கதையை எல்லாம் கூறினர். காந்திஜீ அங்கே செல்ல

விரும்பினர். செல்லும் வழியிலேயே கலெக்டரிடமிருந்து "நீர் ஜில்லாவைவிட்டு வெளியேறும்" என்று உத்தரவு கிடைத்தது. காந்திஜீ ஜில்லாவைக் கடக்க மாட்டேன் என்று விட்டார். அந்த ஆணையை மீறியதற்காகத் தம்மேல் வழக்கை எதிர்ப்பார்த்திருந் தார். அவர் நினைத்தது போலவே கோர்ட்டில் நடவடிக்கை எடுத் துக் கொள்ளப்படும் என்று அன்றே தெரிய வந்தது. நானும் அன்றுதான் பூரியிலிருந்து பட்னுவிற்குத் திரும்பி வந்தேன். இச்செய்திகள் எல்லாவற்றையும் காந்திஜீ எனக்குக் கோர்ட்டில் தந்தி மூலம் தெரிவித்தார்.

காந்திஜீயுடன் எனக்கு ஏற்பட்ட முதல் தொடர்பு இதுவே யாகும். அன்றிரவு காந்திஜீயிடமிருந்து தந்தி கிடைத்து, அடுத்த நாள் காலை வண்டியில் மிஸ்டர் மஜஹர்-உல்-ஹக்கும், அந்தச் சமயத்தில் இந்தியாவில் இருந்த மிஸ்டர் போலக்கும் பட்னு வந்து சேர்ந்தார்கள். பாபூ பிரஜ்கிஷோர், அனுக்கிரக நாராயண், சம்புசரண் ஆகியவர்களுடன் நானும் மோதீஹாரிக்குப் புறப்பட்டேன். பகல் சுமார் மூன்று மணிக்கு அங்கே போய்ச் சேர்ந்தோம். அதற்குள் வழக்குக் கோர்ட்டில் சமர்ப்பிக்கப்பட்டு விட்டது. விசாரணை முடிந்தபின், தீர்ப்பு அளிப்பதற்காக மூன்று நான்கு நாட்களுக்குத் தள்ளிப் போடப்பட்டது.

பாபூ கோரக் பிரசாத் வீட்டில் காந்திஜீ தங்கியிருந்தார். நாங்கள் அங்கே சென்றபோது காந்திஜீ ஒரு குர்த்தாவை அணிந்து கொண்டு உட்கார்ந்திருந்தார். எங்களை அவருக்கு இதற்கு முன்னல் தெரியாது. அறிமுகப்படுத்தியதும் அவர் என்னைப் பார்த்து முறுவல் செய்து, "நீங்கள் வந்துவிட்டீர்களா? உங்கள் வீட்டிற்கு நான் போயிருந்தேன்" என்றார். நான் இதன் விவரத்தை அறிந்திருந்தேன்; ஆகையால் எனக்குச் சிறி தளவு வெட்கம் உண்டாயிற்று. கோர்ட்டில் நிகழ்ந்ததை எல்லாம் அவர் எடுத்துக் கூறினர்.

சம்பரான் கிளர்ச்சி வெற்றியுடன் முடிவடைந்த பின் சில நாட்களுக்குள்ளாகவே இயற்றப்பட்டு வெளியிடப்பட்ட "சம்பரா னில் மகாத்மா காந்தி" என்ற நூலில் சம்பரானைப் பற்றிய கதையை விரிவாகக் கூறியிருக்கிறேன். இங்கே என்னைப் பற் றிய வரையில் மட்டும்தான் கூற விரும்புகிறேன்.

காந்திஜீயை நான் முதன் முதலாகக் கண்டதும் என் மனத் தில் சிறப்பாக எதுவும் பதியவில்லை. சம்பரானின் நிலைமையைப் பற்றி நான் சிறிதளவு அறிந்திருந்தேன். ஆனல் முக்கியமாக பாபூ பிரஜ்கிஷோரின் கட்டளையை நிறைவேற்றுவதற்காகவே

அங்கு ஆரம்பத்தில் சென்றேன். ஏதாவது வேலையிருந்தால் அதைச் செய்வோம் என்று நினைத்தேன். அங்குப் போய்ச் சேர்ந்ததுமே ஜெயிலுக்குப் போவதென்ற சிக்கலான கேள்வி என் முன் வந்து நிற்கும் என்று கனவிலும்கூட என் மனத்தில் தோன்றவில்லை.

காந்திஜீ எல்லாவற்றையும் கூறி முடித்து, எங்களைப் பார்த்து, "எஞ்சிய விவரங்களை என் தோழர்கள் பாபூ தரணீதர், பாபூ ராம் நவமி ஆகிய இருவரிடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்றார். இதைக் கூறிவிட்டு அவர் போலக்குடன் பேச ஆரம் பித்துவிட்டார். நாங்கள் அந்த நண்பர்கள் இருவரிடமிருந்து எல்லாவற்றையும் விரிவுறக் கேட்டு அறிந்தோம். காந்திஜீ இரவு முழுதும் விழித்திருந்து வைசிராய்க்கும் மற்றத் தலைவர்களுக்கும் அனுப்புவதற்காகக் கடிதங்களை எழுதிக் கொண்டிருந்தார் என் பதையும், மேலும் கோர்ட்டில் அளிப்பதற்காகத் தம் வாக்குமூலத் தையும் இரவோடு இரவாக எழுதி முடித்துவிட்டார் என்பதையும் கேள்விப்பட்டோம். அவருக்குத் துபாஷிப் பணி செய்வதற் கென்று மட்டும் வந்திருந்த அவர்கள் இருவரையும் பார்த்து காந்திஜீ "நான் கைது செய்யப்பட்டபின் நீங்கள் என்ன செய் வீர்கள்?" என்று கேட்டாராம். அவர்களால் அக்கேள்வியின் மறைபொருளை முற்றிலும் புரிந்துகொள்ள முடியவில்லைபோலும். பாபூ தரணீதர் வேடிக்கையாக "நீங்கள் கைது செய்யப்பட்ட பின் துபாஷிப் பணி இருக்காது; ஆகையால் நாங்கள் எங்கள் ஊருக்குப் போய் விடுவோம்" என்று விடை அளித்தாராம். இதைக் கேட்டுக் காந்திஜீ "இந்த வேலையை இப்படியே விட்டு விடுவீர்களா?" என்று கேட்டாராம். இதைப் பற்றி அவர்கள் சிறிதளவு சிந்திக்கவேண்டி வந்தது. மூத்தவரான தரணீதர் "இவ்விஷயத்தைப் பற்றி விசாரணை செய்யும் வேலையைத் தொடர்ந்து செய்வோம்; அதற்கும் அரசாங்கத்தாரிடமிருந்து தடை உத்தரவு பிறந்தால், நான் ஜெயிலுக்குப் போகத் தயாராக இல்லாததால், நான் போய்விட்டு வேறொரு வக்கீலை அனுப்பு வேன்; அவர் விசாரணை வேலையை நடத்துவார். அவர் மீதும் உத்தரவு பிறந்தால், அவரும் போய்விடுவார்; அவர் இடத்திற்கு மூன்றாவது ஆள் வருவார்; இப்படியாக வேலை தொடர்ந்து நடந்து வரும்" என்று கூறினாராம்.

இதைக் கேட்டுக் காந்திஜீக்குச் சிறிதளவு திருப்தி உண்டா யிற்று. ஆனால் முற்றிலும் அன்று. அவர்களுக்கும் மனநிறைவு உண்டாகவில்லை. இரவெல்லாம் இதைப் பற்றிச் சிந்தித்துக்

கொண்டிருந்தார்கள். 'இந்த ஆள் எங்கிருந்தோ வந்து இங்கே உள்ள குடியானவர்களின் துன்பத்தைப் போக்குவதற்காக ஜெயிலுக்குப் போகிறார்; நாமோ, இங்கேயே இருப்பவர்களாக இருந்தும், மேலும் குடியானவர்களுக்கு உதவிபுரிவதாகப் பறைசாற்றிக் கொண்டிருந்தும்கூட இப்படியாக ஊருக்குத் திரும்பிப் போய் விட்டால் இது அழகாயிராது' என்று சிந்தித்தார்கள். ஆனால் சிறையைப் பற்றி இதுவரையில் நாங்கள் எவரும் சிந்திக்கவே யில்லை. சிறை ஒரு பயங்கரமான இடம் என்று கருதப்பட்டு வந்தது. அங்கே அடைக்கப்பட்ட பின்னும் அங்கிருந்து தப்புவதற்காக மக்கள் ஆயிரம் ஆயிரமாகச் செலவு செய்து பிணை கொடுத்து விடுதலை பெறுகிறார்கள். அப்படியே ஏதோ ஊழ்வலியால் சிறைக்குப் போனாலும், அங்கே பணம் செலவு செய்து தமக்கு வேண்டிய வசதிகளை அமைத்துக் கொள்வார்கள். ஆனாலோ, இங்கே, இந்த ஆள், தென்ஆப்பிரிக்காவில் இத்தனை காரியங்களைச் செய்து வந்தவர், இந்த முன்பின் அறியாத குடியானவர்களுக்காக எவ்விதத் துன்பத்தையும் சகிக்கத் தயாராயிருக்கிறார்! நிலைமை இப்படியாக இருக்கும்போது நாம் ஊருக்குப் போவதென்பது எப்படி முடியும்?—என்றெல்லாம் நினைத்து இரவைக் கழித்தார்கள். மற்றொரு புறத்தில் பிள்ளை குட்டிகளைப் பற்றியும் கவலையாயிருந்தது.

இரவு முழுதும் சிந்தனை செய்தபின், அடுத்த நாள் காலை, காந்திஜியுடன் இவர்கள் கோர்ட்டுக்குப் போய்க் கொண்டிருந்த போது இவர்களுடைய எண்ணங்கள் குமுறிக்கொண்டு வெளிப் பட்டன. "நீங்கள் சிறைக்குப்போன பின், அவசியம் ஏற்பட்டால் நாங்களும் சிறைக்குச் செல்வோம்" என்று ஐயம்திரிபறக் கூறினார்கள்.

இதைக் கேட்டதும் காந்திஜீயின் முகம் மலர்ந்தது. அவர் பெருமகிழ்ச்சியுற்று "இப்போது காரியம் வெற்றிபெறும்" என்று கூறினார்.

அங்கே போய்ச் சேர்ந்ததுமே எல்லா விஷயங்களையும் அவ்விரண்டு நண்பர்களிடமிருந்து நாங்கள் கேட்டு அறிந்தோம். அப்போது எங்கள் முன்னும் சிறைக்குப் போகும் கேள்வி எதிர்ப் பட்டது. அவசியம் ஏற்பட்டால் நாமும் போவோம் என்று முடிவு செய்துவிட்டோம். இந்த உறுதிப்பாட்டைக் காந்திஜீக்கும் சொல்லிவிட்டோம். அவர் பேனா காகிதம் எடுத்து எல்லாருடைய பெயரையும் எழுதிக் கொண்டார். எங்களைப் பல தொகுதிகளாக வகுத்து அமைத்தார். இத்தொகுதிகள் எந்த

வரிசையில் சிறைக்குப் போகவேண்டும் என்பதும் தீர்மானிக்கப் பட்டது. முதல் தொகுதிக்குத் தலைவராக மஜஹர்-உல்-ஹக் சாஹப் அமைந்தார்; இரண்டாவதுக்குப் பாபூ பிரஜ்கிஷோர்; நானும் ஒரு தொகுதிக்குத் தலைவனுக்கப்பட்டேன். இக்காரியங் கள் எல்லாம் அங்கே போய்ச் சேர்ந்தபின் மூன்று நான்கு மணி நேரத்திற்குள் முடிவு செய்யப்பட்டுவிட்டன.

மூன்று நான்கு நாட்களுக்குப் பின் வழக்கைப் பற்றித் தீர்ப்புக் கூறப்படுவதாக இருந்தது. அன்றே காந்திஜீ சிறைக் குப் போகத் தயாராக இருந்தார். மஜஹர்-உல்-ஹக் சாஹபின் கையில் கோரக்பூரில் ஏதோ ஒரு வழக்கு இருந்தது. தீர்ப்புக் கூறப்படும் நாளுக்கு முன்னமே அங்கே காரியத்தை முடித் துக் கொண்டு திரும்பி வந்து தலைமையை ஏற்கலாமென்று நினைத்து அவர் அங்கே போய்விட்டார்.

பாபூ பிரஜ்கிஷோரும் தம் குடும்பத்திற்கு ஏற்பாடு செய் வதற்காகத் தர்பங்காவுக்குப் போய்விட்டார். நாங்கள் மோதி ஹாரியிலேயே இருந்துகொண்டு குடியானவர்களின் வாக்கு மூலங்களைக் கேட்டு எழுதி வந்தோம். அந்த இரண்டு கனவான் களும் திரும்பி வந்தவுடன் நாங்களும் ஒவ்வொருவராகத் தத்தம் ஊருக்குச் சென்று வீட்டு ஜனங்களோடு கூடிக் குலாவிவிட்டுச் சிறையாத்திரைக்குத் தயார் செய்து கொண்டு திரும்பி வரலா மென்று எண்ணினோம்.

இதனால், தாம் மகிழ்ச்சி அடைந்ததாகவும், அன்றிலிருந்து பீகாரின் மீது தமக்கு அதிக அன்பு உண்டானதாகவும், நாங்கள் அவருடைய நம்பிக்கைக்கு உகந்தவர்களாகி விட்டதாகவும் காந்திஜீ தம்முடைய "ஆத்மகதா"வில் எழுதியிருக்கிறார்.

சம்பரான் விசாரணை தொடங்கிவிட்டது. ஆயிரக்கணக் காகக் குடியானவர்கள் வாக்கு மூலம் எழுதிக் கொடுத்தார்கள். ஏறக்குறைய 20–25 ஆயிரம் வாக்குமூலங்கள் எழுதியிருப்போம். தீர்ப்புக் கூறப்பட இருந்த தேதிக்கு முன்னதாகவே, அரசாங்கத் தின் கட்டளைப்படி காந்திஜீயின் மேல் தொடுக்கப்பட்ட வழக்கு மீட்டுக் கொள்ளப்பட்டதென்றும், ஜில்லாவில் விசாரணை செய் வதற்கு அவருக்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் மாஜிஸ்டிரேட்டு எழுதி அனுப்பிவிட்டார். நாங்கள் கேள்விப் பட்ட அட்டூழியங்களைவிட அங்கே நிலைமை மிகக்கேடாக இருந் தது என்பது விசாரணையிலிருந்து தெரிய வந்தது. அடுத்த அதிகாரத்தில் இந்த நிலைமையைப் பற்றிச் சுருக்கமாகக் கூறு வேன். இவ்விடத்தில் இது மட்டும் கூறினால் போதும். அதா

வது, முதல் சந்திப்பிலேயே நாங்களே தாமாக விரும்பி, காந்தியின் வலேயில் சிக்கிக் கொண்டோம். நாள் ஆக ஆக அவரிடம் அன்புமட்டும் பெருகி வளரவில்லே; அத்துடன் அவர் வேலே முறையிலும் நம்பிக்கை வளர்ந்து வந்தது. சம்பரான் காண்டத்தின் முடிவு நெருங்க நெருங்க நாங்கள் எல்லோருமே அவருடைய இணேபிரியாப் பக்தர்களாகி விட்டோம்; அவருடைய செயல் முறைக்கும் அடிமையாகிவிட்டோம்.

## 22. சம்பரான்

சம்பரான் ஜில்லாவில் ஆங்கிலேயர் சுமார் நூறு ஆண்டுகளாக அவுரியைப் பயிர் செய்தும் பயிரிடச் செய்தும் வந்தார்கள். பெரும்பாலும் ஜில்லா முழுவதிலுமே எங்கெங்கு அவுரி விளேயக்கூடுமோ அங்கெல்லாம் அவர்கள் தங்கள் நீலச் சாயத் தொழிற்சாலேகளே அமைத்தார்கள்; மேலும் ஏராளமான நிலத்தையும் தம்வசப் படுத்திக்கொண்டு உருட்டல் மிரட்டலால் குடியானவர்களே அவுரி பயிரிடச் செய்து வந்தார்கள். சம்பரான் ஜில்லாவின் மிகப் பெரும்பாகம் பேதியா ராஜாவின் ஜமீன்தாரியாக இருந்தது. அநேக கிராமங்களில் ஜமீன்தாருக்குச் சேரவேண்டிய தீர்வையைத் தண்டல் செய்யும் வேலேயை அவர்கள் ராஜாவிடமிருந்து குத்தகை எடுத்திருந்தார்கள். இதனுல் அந்தக் கிராமங்கள் அவர்கள் கையில் வந்தன. அந்தக் கிராமங்களில் வாழும் குடியானவர்களே அவரவர் நிலத்திலும் தமக்காக அவுரி விதைக்கும்படி நீலச்சாயக்காரர்கள் கட்டாயப்படுத்தினர். மெல்ல மெல்ல இதற்கு சட்டப் போர்வையும் போர்த்திவிட்டார்கள். குடியானவர்களே அவரவர் நிலத்தில் பீகா ஒன்றுக்கு ஐந்து அல்லது மூன்று கட்டா வீதம் அவுரியைக் கட்டாயமாக விதைக்க வேண்டுமென்று பலவந்தம் செய்யத் தமக்கு அதிகாரம் உண்டென்று உரிமை கொண்டாடலானுர்கள். இந்த வழக்கத்தை அவர்கள் "ஐந்து கட்டா" அல்லது "மூன்று கட்டா" என்று கூறுவார்கள். அவுரி விதைக்க மறுப்பதற்கு எந்தக் குடியானவனுக்கும் துணிச்சல் வருவதில்லே. அப்படியே எவனுவது துணிந்தால் அவன் ஆயிரம் வகையாகத் துன்புறுத்தப்பட்டு பலவந்தமாக இணங்க வைக்கப்படுவான். அவனுடைய வீடும் வயலும் சூரையாடப்படும். அவன் வயலில் கால் நடைகள்

மேயவிடப்படும். அவன்மீது பொய் வழக்குத் தொடுக்கப்படும். அபராதம் விதிக்கப்பட்டுத் தண்டல் செய்யப்படும். அடிக்கவும் படுவான். இவற்றிற்குப் பயந்துகொண்டு பெரும்பாலும் எல்லாக் குடியானவர்களும் "மூன்று கட்டா" முறைக்கு ஒப்புக்கொண்டு ஒவ்வொரு பீகாவிலும் மூன்று கட்டா வீதம் அவுரி விதைத்து வந்தார்கள். அவர்களுடைய வயல்களில் எவை எல்லாவற்றிலும் சிறந்தனவோ அவற்றைத் தேர்ந்தெடுத்து அவற்றில் அவுரி விதைக்கும்படி நீலச்சாயக்காரர்கள் சொல்லுவார்கள். அவுரி விதைக்கும் வேலையைக் குடியானவர்கள் தம் சொந்தப் பயிரிடுவதற்கு முன்பும் மற்ற வேலைகள் எல்லாவற்றிற்கும் முன்னும் செய்ய வேண்டும். அவுரி விளைந்து வந்தபின் அதை அறுவடை செய்து நீலக்காரர்களின் வீடுகளில் கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும். இதற்காக அவர்கள் குடியானவர்களுக்குப் பீகா ஒன்றுக்கு இவ்வளவு என்று ஏதோ பணம் கொடுத்து வந்தார்கள். ஆனால் அது செலவுக்குக் கூடக் கட்டுபடி ஆவதில்லை. அரசாங்க அதிகாரிகளும் நீலக்காரர்களுக்குத்தான் உதவி செய்து வந்தார்கள். அப்படி யாராவது ஓர் அதிகாரி துணிந்து நியாயம் வழங்க முற்பட்டால், மேலதிகாரிகளிடம் நீலக்காரர்களுக்குச் செல்வாக்கு மிகவும் அதிகமாக இருந்ததால், அந்தக் கீழ் அதிகாரிக்கு உடனே ஆபத்து வந்துவிடும். நேர்மையானவர்களான அதிகாரிகள் சிலர் நீலக்காரர்களின் அட்டூழியங்களையும், "மூன்று கட்டா" முறையையும் தாக்கி அரசாங்கத்திற்கு அறிக்கை அனுப்புவார்கள். ஆனால் இதனால் ஒன்றும் ஆவதில்லை. எப்போதாவது குடியானவர்கள் பொறுமையை இழந்து கலகம் செய்வதும் உண்டு. யாராவது நீலக்காரனை அடித்துப் போட்டுவிடுவார்கள். அல்லது பலர் கூடிப் பேசிக்கொண்டு வேறு வகையில் ஏதாவது சேதத்தை விளைவித்துவிடுவார்கள். ஆயினும் அவர்கள் நீலக்காரர்களை எதிர்த்து எப்படி நிற்க முடியும்? போலீஸ், கோர்ட்டு, அமீனா ஆகியவர்களின் உதவியைக் கொண்டு குடியானவர்கள் ஒவ்வொரு திசையிலும் தோற்கடிக்கப்பட்டார்கள்.

அரசாங்கத்தில் நீலக்காரர்களுக்கு இருந்த மிகுந்த செல்வாக்கால் அவர்கள் குடிவாரச் சட்டத்தில் ஒரு புதியப் பிரிவையே சேர்க்கச் செய்துவிட்டார்கள். அதன்படி ஜமீன்தார்கள் எங்கெங்குக் குடியானவனைத் தம் இஷ்டப்படி குறிப்பிட்ட பயிரை விதைக்கக் கட்டாயப்படுத்தக் கூடுமோ அவ்விடங்களில் உள்ள குடியானவன் எவனேனும் இப்பிரிவிலிருந்து விடுதலை நாடினால் அவ்

விடுதலையை அளித்ததற்கு ஈடாக ஜமீன்தார் மேல்வாரத்தை எவ்வளவு வேண்டுமானாலும் உயர்த்தலாம். தம் இச்சைப்படி வரியை உயர்த்துவதற்கு ஜமீன்தாருக்குச் சாதாரணமாக உரிமை கிடையாது. முறைப்படி எழுதிப் பதிவு செய்யப்பட்ட பட்டாவில் கண்டுள்ளதற்கு மேல் ரூபாய்க்கு இரண்டு அணுவுக்கு மேல் உயர்த்த முடியாது. மேலும், ஒருமுறை உயர்த்திவிட்டால் பிறகு ஒரு நீண்ட கெடு வரையில் வரியை ஏற்ற முடியாது. நீலக்காரர்களின் லாபத்திற்காக இந்தக் கெடு நீக்கப்பட்டது.

பேதியா அரசருக்குப் பணம் வேண்டியிருந்தது. அவர் ஒரு கடன் வாங்கினர். அக்கடனை நீலக்காரர்களின் உதவியால் இங்லாந்திலிருந்து பெற்றூர். வட்டியையும் முதலையும் தண்டுவதற்காகச் சில கிராமங்களின் மேல் நீலக்காரர்களுக்கு உரிமை அளிக்கப்பட்டது. இன்னும் பல கிராமங்களின் மேலும் அவர்களுக்கு நிரந்தரமான உரிமை கிடைத்துவிட்டது. நிரந்தரமான உரிமை என்றுல் ஒரு வகையில் அவர்கள் கிராமங்களுக்கு ஜமீன்தார்க்ள் ஆகிவிட்டார்கள் என்பதுதான். நிலத்திற்கு வாரமாக ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை மட்டும் அவர்கள் ராஜாவுக்குச் செலுத்த வேண்டும். அந்தக் கிராமங்களில் அவர்கள் எது வேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் விளைவிக்கலாம். ராஜாவுக்கு அதன்மேல் யாதோர் உரிமையும் இல்லை; அவருக்கு அந்தக் குறிப்பிட்ட பணம் மட்டும்தான் கிடைக்கும். இப்படியாக நிரந்தரமாக அளிக்கப்பட்ட கிராமங்களில் வரி எவ்வளவு உயர்த்தப்பட்டாலும் சரி, அல்லது வருவாய் ஒன்றுக்கு இரண்டாக வந்தாலும் சரி, அப்போது கிராமத்தை நிரந்தரமாகப் பெற்றவர்களின் செல்வம்தான் பெருகும். ராஜாவுக்கு முன்பு எவ்வளவு கிடைத்துக் கொண்டிருந்ததோ அவ்வளவுதான் கிடைக்கும். நீலக்காரர்களுக்கு நிரந்தர உரிமை இல்லாத கிராமங்கள் அவர்களுக்குக் குறிப்பிட காலம் வரைமட்டும்தான் குத்தகையாக கிடைத்தன. அக்கிராமங்களுக்காகவும் அவர்கள் ராஜாவுக்குக் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க வேண்டும். கெடு முடிவடைந்தபின் மீண்டும் குத்தகையைக் கொடுக்கவோ மறுக்கவோ ராஜாவுக்கு உரிமை உண்டு. அப்படிக் கொடுத்தால் புதிய நிபந்தனைகளின் பேரில் கொடுக்கலாம். மேலும் குத்தகைக்காரன் ராஜாவுக்குக் கொடுத்த அந்த குத்தகைப் பணத்தை ராஜா மனம் வைத்தால் அதிகப்படுத்தலாம். குத்தகைக்கு விடப்பட்ட எந்த கிராமமும் குத்தகைக் கெடு முடிந்தபின் எப்போதாவது மீட்கப்பட்டதென்றே அதன் வாரம்

எப்போதாவது ஏற்றப்பட்டதென்றே இல்லாவிட்டாலும் ராஜா வுக்கு அப்படிச் செய்ய உரிமை இருந்தது.

பேதியாவின் மகாராஜா இறந்துபோனர். மகாராணிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதென்று முடிவு கட்டப்பட்டு ராஜ்யம் முழுவதும் கோர்ட் ஆவ் வார்ட்ஸிடம் சென்றுவிட்டது. அக் கோர்ட்டுக்கு மானேஜர் அந்த நீலக்காரர்களிலிருந்தே நியமிக்கப் பட்டார். இப்படியாக இருபது ஆண்டுகள் வரையில் ராஜ்யம் நீலக்காரர்களின் கைவசம் இருந்தது. காந்திஜீ சம்பரானுக்கு வந்தபோது விவிலியன் என்பவர் மானேஜராக இருந்தார். அவருக்குப் பின் நீலக்காரர்கள் வேறு எவரும் மானேஜர் ஆக வில்லே. இப்படியாக நீலக்காரர்கள் தம் நிலத்திலும், மேலும் மூன்று கட்டா முறையைப் பின்பற்றிக் குடியானவர்கள் நிலத் திலும் அவுரியைப் பயிரிட்டு அவுரிச்சாயம் உண்டாக்கி வந்தார்கள். அவுரி விதைக்கும் பழக்கம் பீகாரின் மற்ற ஜில்லாக் களிலும் பரவியிருந்தது. ஆனல் இதற்குச் சம்பரானில் இருந்து வந்த கெடுபிடியைப் போல மற்ற இடங்களில் இல்லே. குடியானவர் களேஇவ்விதமாக வலுக்கட்டாயப் படுத்தி அவுரி விதைக்கச் செய் யாமல் நீலக்காரர்கள் தாமே அவுரி விவசாயத்தைச் செய்திருந்தால் இதில் அவர்களுக்கு லாபம் எதுவும் கிடைத்திருக்காது. ஆகை யால் இந்தப் பலாத்காரமான முறையை அவர்கள் விடாமல் கையா ளுவது இன்றியமையாததாயிற்று. ஆகவே அப்படியே நடந்து வந்தது.

இதனிடையில் ஜெர்மனியில் வேறுவிதமாகச் சாயம் செய்யும் முறை ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. அது அவுரிச் சாயத்தை விட மலிவாயிருந்தது. உடனே அவுரிச் சாயத்தின் விலே விழுந்துவிட்டது. அக்கிரமமாகவும் வலுக்கட்டாயப்படுத்தியும் அவுரியை விளேவித்தும்கூட அவுரியில் லாபமில்லாமல் போய் விட்டது. நீலக்காரர்கள் தங்கள் நஷ்டத்தை ஏழைக் குடியானவர் களின் தலேமேல் சுமத்தித் தங்கள் லாபத்தை நிலேயாக இருக்கச் செய்ய விரும்பினர்கள். குடியானவர்களுக்கு அவுரி விவசாயத் திலிருந்து விடுதலே கொடுத்த நிலத்தின் தீர்வையை மனம்போன படி உயர்த்தலாம் என்ற உரிமையை அளிக்கும் பிரிவைத் துணைக் கொண்டார்கள். வரியை ஏற்றுவதற்கு உடன்பட்டுப் பட்டா எழுதிக் கொடுத்தால் அவுரி விளேவிப்பதிலிருந்து விடுதலே அளிப்போம் என்று குடியானவர்களிடம் கூறினர்கள். இப்பட் டாக்கள் அடிதடி, பொய், பித்தலாட்டம், வலுக்கட்டாயம் ஆகிய முறைகளால் எழுதி வாங்கப்பட்டன. இப்படியாக நீலக்காரர்கள்

அந்த வருவாயை லக்ஷக்கணக்காகப் பெருக்கி விட்டார்கள். குத்தகைக்காரராக மட்டும் உரிமை இருந்த இடங்களில், குத்தகைக் கெடு முடிவடைந்தபின் வாரத்தை உயர்த்தினுல் அந்த லாபம் பேதியா ராஜாவைச் சேருமாதலால் ,அவ்விடங்களில் வாரத்தை உயர்த்தாமல் ரொக்கமாகப் பணம் தண்டல் செய்தார்கள். பணம் இல்லாத குடியானவர்களிடமிருந்து புரோநோட் எழுதி வாங்கியும் மேலும் வேறு வகைகளிலும் பணம் பறித்தார்கள். இப்படியாக ஏறக்குறைய இருபது இருபத்தைந்து லக்ஷம் தண்டல் செய்து விட்டார்கள்.

சம்பரானில் சில பாகங்களில் அவுரி விளையாது. அந்தக் கிராமங்களில் நீலக்காரர்கள் அவுரி பயிர் செய்யாது வேறு வழியில் பணம் தண்டி வந்தார்கள். அக்கிராமங்களில் சட்டம் அனுமதிக்காத வரிகளைப் பலவிதமாக விதித்துத் தண்டல் செய்து வந்தார்கள். அவுரிப் பகுதியில் அதிகரிக்கப்பட்ட வரியோ ரொக்கக் கப்பணமோ தண்டல் செய்யப்படும்போது அவுரி இல்லாத பகுதியிலும் ஏதாவது தண்டல் செய்ய விரும்பினுர்கள். அப்படியே அங்கும் ஒன்றில்லாவிட்டால் வேறு ஏதாவது ஒரு சாக்குப் போக்கைக் கொண்டு வாரத்தை அதிகரித்தார்கள். அல்லது ரொக்கமாகத் தண்டல் செய்தார்கள். குடியானவன் எவனுக்காவது பட்டா கொடுக்கப்படும்போது, அதில் உண்மையிலேயே இல்லாததும் பொய்யாக இட்டுக் கட்டப்பட்ட எல்லை விவரங்களை உடையதுமான நிலத்தைச் சேர்த்து மொத்தமாக வாரத்தை எவ்வளவு உயர்த்த விரும்பினுர்களோ அத்தனை அளவுக்கு அந்நிலத்திற்கு வரியைப் போட்டுக் கூட்டுவது, இவர்கள் வாரத்தை உயர்த்த கையாண்ட முறைகளில் ஒன்று. சட்டப்படி, வாரத்தை ரூபாய்க்கு இரண்டு அணுதான் ஏற்றலாம். ஆனுல் புதிய நிலத்திற்கு ஜமீன்தார் எத்தனை வேண்டுமானுலும் தீர்வை போடலாம். இதனுல்தான் நீலக்காரர்கள் ஊர் பேரில்லாப் புது நிலத்தைச் சேர்த்துக் காட்டி வாரத்தை ஏற்றுவதற்கு உள்ள எல்லைக்கட்டுப்பாட்டிலிருந்து தப்ப விரும்பினுர்கள். மேலும், சிறிது காலத்திற்குப் பிறகு பழைய நிலம் ஊர் பேரில்லாப் புதிய நிலம் ஆகிய இரண்டையும் ஒன்று கூட்டி விடலாம் என்று நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இப்படியாகக் குடியானவன் அவுரி பயிரிடுகிருனே இல்லையோ, கிராமம் நீலக்காரர்களுக்கு நிரந்தரமாக உரிமையானதோ அல்லது வெறும் குத்தகைக்கு எடுக்கப்பட்டதோ, எப்படியாயினும் சரி, எல்லாவகைக் கிராமங்களிலும் அவர்கள் வாரத்தை ஏற்றித் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொண்டார்

கள். அல்லது ரொக்கமாகப் பணம் தண்டல் செய்து கொண்டார் கள். அரசாங்கம் அவர்களுக்கு முற்றிலும் உதவி புரிந்து வந்தது. வாரத்தை அதிகரித்துப் பட்டா எழுதப்படும்போது, அவைகளைப் பதிவு செய்வதற்கு வசதி அளிக்கும் பொருட்டு அரசாங்கத்தார் தனிப்பட்ட ரிஜிஸ்திராரை நியமித்துக் கொடுத்தார்கள்.

இவையெல்லாம் முற்றிவந்தபோது 1914–18 ஜெர்மன் யுத்தம் ஆரம்பித்து விட்டது. வெளிநாட்டிலிருந்து சாயம் வருவது நின்று போய்விட்டது. அவுரி விவசாயத்தில் மீண்டும் லாபம் காணலாம் என்ற நம்பிக்கை பிறந்தது. நீலக்காரர்கள் தாம் அளித்திருந்த விடுதலையைப் பொருட்படுத்தாமல் மீண்டும் மூன்று கட்டா வீதம் அவுரி விதைக்கும்படி குடியானவர்களை நெருக்கினர்கள். அநேக இடங்களில் இதில் வெற்றியும் கண்டார் கள். இந்தச் சமயத்தில் அரசாங்கத்தார் அந்த ஜில்லாவை மறுபடியும் அளந்து மதிப்பிடத் (சர்வே செய்ய) தொடங்கினர் கள். இவ்வேலை முடிவடைந்து வரும்போதுதான் காந்திஜீ சம்பரான் வந்துசேர்ந்தார். சர்வேயில் கூடுதலாக வரிபோடப் பட்ட பட்டாக்களைப் பற்றிக் குடியானவர்கள் முறையிட்டார்கள். அவை பலவந்தமாக எழுதி வாங்கப்பட்டன என்று வாக்குமூலம் கொடுத்தார்கள். சர்வே செட்டில்மெண்டு அதிகாரி இப்பட்டாக் கள் பலவந்தமாக எழுதி வாங்கப்படவில்லை என்றும், சட்டத் திற்கு முற்றிலும் உட்பட்டேதான் வரி உயர்த்தப்பட்டிருக்கிறது என்றும் தீர்ப்பு அளித்தார். இதனுல் குடியானவர்களிடையில் மிக்கக் கலவரம் நிலவியது. ஒருபுறம் ஜெர்மன் சண்டை நடந்து கொண்டிருந்தது. சாதாரணமாகவே குடியானவர்களுக்குச் செவி சாய்ப்பார் யாரும் இல்லை. இப்போது நீலக்காரர்களும் யுத்தத்தில் ஈடுபட்டிருந்த நிலையில் இவர்களுடைய குறையைக் கேட்பது மேலும் அரிதாகி விட்டது. ஆகையால் குடியானவர் கள் மனமுடைந்து நின்றுர்கள். அவர்களுக்கு வழி எதுவும் எங்கும் தென்படவில்லை. அப்பொழுது அவர்கள் காந்திஜீயிடம் வந்து சேர்ந்தார்கள். இந்தச் சூழ்நிலையில்தான் காந்திஜீ அங்கே வந்து சேர்ந்தார்.

சம்பரானில் குடியானவர்களுக்குச் செய்யப்பட்டு வந்த அக்கிரமங்களைப் பற்றி ராஜ்குமார் சுக்லா காந்திஜீயிடம் எடுத் துரைத்தபோது இவையெல்லாம் உண்மையாக இருக்கக் கூடு மென்று காந்திஜீக்கு நம்பிக்கை உண்டாகவில்லை. ஆகையால் தாமே விசாரணை செய்வதற்காகச் சம்பரானுக்கு வந்தார். அவர் சம்பரானுக்கு வந்து சேருவதற்கு முன்னமே மக்களிடை

யில் ஒரு வியப்பான எழுச்சி பிறந்து விட்டது. கோர்ட்டிற்குச் சென்று முறையிடுவதற்குக் கூடத் துணிச்சல் இல்லாத வகையில் அங்குள்ள குடியானவர்கள் அவ்வளவு ஒடுக்கப்பட்டுக் கிடந்தனர். அப்படி யாராவது மிகவும் துணிந்து செய்தால், நீலக்காரரின் பங்களாவிலிருந்து காவலாள் வந்து அவனைக் கோர்ட்டிலிருந்து பிடித்து இழுத்துச் சென்று நையப் புடைப்பான். காந்திஜீ சம்பரானுக்குச் செல்லும் வழியில் முஜபர்பூரை அடைந்தபோது ஏராளமான மக்கள் முஜபர்பூர் வரையில் வந்து அவரை எதிர்கொண்டார்கள். தம்முடைய துன்பத்தை அவரிடம் எடுத்துக் கூறினார்கள். நீலக்காரர்களின் சங்கத்தின் காரிய தரிசியும் திர்ஹுட் சப்-டிவிஷனின் கமிஷனரும் அங்கே வந்து காந்திஜீயைச் சம்பரானுக்குப் போகவேண்டாமென்று தடை செய்தார்கள். அரசாங்கத்தாரே குடியானவர்களின் குறைகளைப் பற்றிச் சிந்தித்து வருகிறார்கள் என்றும், சர்வே செட்டில்மெண்டின் அறிக்கைக்காகக் காத்திருக்கிறார்கள் என்றும் கூறினார்கள். மேலும் யுத்த காலத்தில் காந்திஜீ அங்கே சென்று அமளி விளைவிப்பது நன்றாயிருக்காது என்றும், ஏதாவது கலகம் உண்டாகும் என்றும் வற்புறுத்திக் கூறினார்கள். நம் சொந்த நாட்டாரும் கூட "இப்போது யுத்தத்தின் நெருக்கடியான சமயம், இப்போது கலகம் மூட்டிவிடுதல் ஒரு விதத்திலும் நன்றாயிருக்காது" என்று கூறினார்கள். இதுவரையில் தாம் கேட்டதிலிருந்து காந்திஜீக்குச் சம்பரானுக்குப் போகவேண்டுமென்றிருந்த விருப்பம் மேலும் வலுவுற்றது. சம்பரானுக்குப் போகத்தான் வேண்டுமென்று அவர் முடிவு செய்தார்.

காந்திஜீ சம்பரானுக்கு வந்து சேர்ந்ததுமே குடியானவர்களின் உள்ளத்திலிருந்த அச்சம் எங்கே போயிற்று என்பது தெரியாமல் ஓடி விட்டது. கோர்ட்டிற்குக்கூடப் போக அஞ்சியவர்கள் இப்போது பெருந்திரளாக காந்திஜீயிடம் வந்து தம் குறைகளை எடுத்துரைக்கலானார்கள். தம்மைக் காப்பாற்றுபவர் வந்து விட்டார் என்றும், இனித் தம்முடைய துன்பம் ஒழிந்து விட்டது என்றும் ஓர் அழிவிலா நம்பிக்கை அவர்களுடைய கள்ளங்கபடமற்ற நெஞ்சத்தில் எப்படிப் பதிந்து விட்டதென்பது தெரியவில்லை.

காந்திஜீயின் பேரில் வழக்குத் தொடுக்கப்பட்டு அவர் கோர்ட்டிற்குச் சென்ற தினத்தன்று ஆயிரக்கணக்கான குடியானவர்கள் அங்கே வந்து கூடினார்கள். கூட்டத்தின் நெருக்கடி அவ்வளவு அதிகமாக இருந்ததால் கோர்ட்டின் கதவுகூட உடைந்து

போய்விட்டது. கோர்ட்டில் காந்திஜீ தம் வாக்குமூலத்தைக் கொடுத்தார். அத்துடன் அன்று வழக்குத் தீர்ந்து விட்டது. மூன்று நான்கு நாட்களுக்குப்பின் காந்திஜீ விட்டுவிடப்பட்டார். அவர் தம் விசாரணையை நடத்தலாம் என்றும் அனுமதி அளிக்கப் பட்டது. இப்போது குடியானவர்கள் ஆயிரக்கணக்காக அவரிடம் வந்தார்கள். எல்லாரும் தத்தம் வாக்குமூலங்களை எழுதி வைத்தார்கள். நாங்கள் வாக்குமூலம் எழுதுவதில் ஈடுபட்டோம். காந்திஜீ எங்களைப் பார்த்து "நீங்கள் வக்கீல்கள், ஆகையால் நன்ருகக் குறுக்கு விசாரணை செய்து அலசி விசாரித்துத் தெரிந்து கொண்டபின் எழுதுங்கள். நீங்கள் எழுதுவது உண்மையாக இருக்கவேண்டும்" என்று கட்டளையிட்டார். "எங்காவது ஏதேனும் கூட்டம் கூட்டிப் பிரசங்கம் செய்யாதீர்கள்" என்றும் எங்கள் எல்லாருக்கும் காந்திஜீ ஆணையிட்டிருந்தார். எங்களில் ஒருவர் கூட அந்நாட்களில் சம்பரானில் ஒரு கூட்டத்தில் கூடப் பிரசங்கம் செய்யவில்லை; காந்திஜீயும் செய்யவில்லை.

அந்தக் காலத்தில் நாட்டில் ஹோம்-ரூல் இயக்கம் மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. காந்திஜீ எங்களைப் பார்த்து "நீங்கள் ஹோம் ரூலைவிட மிகப் பெரிய வேலையைச் செய்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அந்த இயக்கத்தில் சேராவிட்டால் யாதொரு குற்றமும் இல்லை" என்று கூறிவந்தார்.

எங்கள் விசாரணையால் சம்பரானின் உள்ளூர் அதிகாரிகளுக்குக் கிலி பிடித்துவிட்டது. அவர்களுள் அநேகம் பேர்களின் மனத்தில் சம்பரானிலிருந்து ஆங்கிலேய ஆட்சி பெயர்க்கப்படுகிறது என்ற எண்ணம் பதிந்து விட்டது. ஏனெனில் காந்திஜீதாம் எல்லாரையும் விடப் பெரிய அதிகாரி என்றும், அவர் முன்னிலையில் ஜில்லாக் கலெக்டர் பேரிலும் மாஜிஸ்டிரேட்டுப் பேரிலும் கூட முறையிடலாமென்றும் மக்கள் நினைத்தார்கள். ஆகையால் இந்த அதிகாரிகள், "நீலக்காரரின் செல்வாக்கோ போகவே போய்விட்டது. இப்போது அதிகாரிகளாகிய நம்முடைய செல்வாக்கும் போய்க் கொண்டிருக்கிறது" என்று நினைத்தார்கள். இதனுல் அவர்கள் கலவரமடைந்து மாகாண அரசாங்கத்தாருக்கு நிலைமையை அறிவித்தார்கள். அதன்மேல் மாகாண அரசாங்கத்தார் தம் அங்கத்தினர் ஒருவரைச் சென்று காணும்படி காந்திஜீக்குக் கடிதம் எழுதினுர்கள். காந்திஜீ பட்னுவுக்குச் சென்று அவரைச் சந்தித்தார் அதுவரையில் எத்தனை முறையீடுகள் வந்திருந்தனவோ அவை எல்லாவற்றையும் கொண்டு ஒரு தெளி

வான வாக்குமூலத்தை எழுதி அவரிடம் கொடுத்தார். அந்த அரசாங்க அங்கத்தினர் அதைத் தம் அரசாங்கத்தாரிடம் சமர்ப்பித்தார். அதன்மேல் ஆலோசனை செய்யப்பட்டு வந்தது. நாங்கள் எங்கள் விசாரணையைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தோம்.

எங்களைப் பல தொகுதிகளாக வகுத்துக் கொண்டு வாக்குமூலங்கள் எழுதிவந்தோம். போலீஸ்காரன் எங்கள் பக்கத்தில் நின்று கொண்டிருப்பான். அவன் குடியானவர்கள் பெயர் முதலிய விவரங்களைக் குறித்துக் கொள்வான். அதேபோல நீலக்காரர்களின் ஆட்களும் குடியானவர்களின் பெயர் முதலியனவற்றை விசாரித்துத் தம் முதலாளிகளிடம் எல்லா விஷயங்களைப் பற்றியும் அறிக்கை சமர்ப்பிப்பார்கள்.

காந்திஜீயின் பேரில் வழக்குத் தொடுக்கப்பட்டுத் தீர்ப்புக் கூறுவதற்காக அதைத் தள்ளிப் போட்ட அதே சமயத்தில் தீனபந்து ஆண்டுரூஸும் வந்து சேர்ந்தார். அவர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஓர் எக்காவில்[1] வந்தார். அவருக்கு எக்காவில் ஏறி உட்காரும் முறை தெரியாது. ஆகையால் அவருடைய பூட்ஸ் சக்கரத்தில் பட்டு உராய்ந்து போய்விட்டது. அவரைப் போலக் " காமா சோமா " என்று உடை அணிந்து கொண்டு, எக்காவில் சவாரி செய்து கொண்டு, இந்தியர்களுடன் தாராளமாகப் பழகி உறவாடிக் கொண்டு வாழும் ஆங்கிலேயரை நாங்கள் எங்கள் வாழ்நாளில் என்றுமே கண்டதில்லை. அவர் மிகவும் பிரபலமான மனிதர் என்பதையும், வைசிராயிடம்கூட அவர் செல்வார் என்பதையும், அவர் உலகம் முழுவதையும் சுற்றி வருகிறார் என்பதையும் கேள்விப் பட்டோம். அவருடன் அறிமுகமான மாத்திரத்தில் என் மனத்தில் பதிந்த அவருடைய எளிய தன்மையும், வாய்மையும் நாளுக்கு நாள் மேன்மேலும் ஆழ்ந்து பதிந்து வந்தன. எனக்கு அவருடன் நட்பும் ஏற்பட்டுவிட்டது. அது அவர் இறக்கும் வரையில் நிலைபெற்றிருந்தது.

அடுத்தநாள் ஆண்டுரூஸ், தாம் திரும்பிச் செல்வதற்கு முன், டிஸ்ட்டிரிக்ட் மாஜிஸ்டிரேட்டைப் பார்க்கச் சென்றார். அங்கே அவரிடம் மாஜிஸ்டிரேட் " வழக்கை மீட்டுக் கொள்ளும்படி அரசாங்கத்திலிருந்து உத்தரவு வந்துவிட்டது. நான் சிறிது நேரத்திற்குள் முறைப்படி அறிவிப்பை அனுப்பிவைப்பேன் " என்று

1. எக்கா பீகாரிலும் உத்தரப்பிரதேசத்திலும் உள்ள ஒருவகைக் குதிரைவண்டி. அது இரண்டு சக்கரங்கள் கொண்டு, ஒரு சிறிய சதுரமான பட்டரை மேல் நாற்புறமும் கதிகால் நட்டு மேலே குடை போன்ற கூடு அமைக்கப் பெற்றிருக்கும்.

கூறினர். ஆண்டுரூஸ் பயணப்படுவதற்கு முன் இச்செய்தியை எங்களுக்குத் தெரிவித்தார். எங்களுடைய ஆர்வம் மேலும் பெருகியது.

நீலக்காரர்கள் குடியானவர்களை எத்தனையோ வகையில் இம்சை செய்து வந்தார்கள். மகாத்மாஜீ எல்லா விவரங்களையும் அரசாரங்கத்திற்கு எழுதி அனுப்பினர். மற்றொரு புறத்தில் மாஜிஸ்டிரேட்டும் நீண்டதோர் அறிக்கையை அனுப்பினர். அதில் அராஜகம் பரவி வருகிறது என்றும், பிரிட்டிஷ் அரசு ஒழிந்து விட்டது போலத் தோன்றுகிறது என்றும், அவ்வண்ண மாகக் காரியங்கள் நிகழ்ந்து வருகின்றன என்றும் அவர் எழுதி யிருந்தார்.

அரசாங்கத்தார் இந்த அறிக்கையின் மேல் நடவடிக்கை எடுத்தார்கள். பீகாரின் கவர்னர் காந்திஜீயை ராஞ்சிக்கு அழைத்தார். காந்திஜீ ராஞ்சிக்குச் செல்வதற்கு முன்னமே நாங்கள், அவர் இப்போது சிறை கொள்ளப்படுவார் என்றும். இனி நாமும் சிறைக்கு வெளியே இருக்க இயலாமல் போகலாம் என்றும் முடிவு கட்டிவிட்டோம். மகாத்மாஜீ எங்களை இரண்டு தொகுதிகளாகப் பிரித்து, பேதியாவிலும், மோதிஹாரியிலும் இருத்திச் சென்றார். தாம் கைது செய்யப்பட்ட பின் எம்முறை யில் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றியும் அவர் முற்றி லும் நெறி வகுத்துக் கொடுத்து விட்டார். தத்தம் இடங்களில் இருந்து கொண்டு நாங்கள் ராஞ்சியிலிருந்து செய்தியை எதிர்ப் பார்த்து நின்றோம். பேதியா அலுவலகம் என் பொறுப்பில் விடப் பட்டது. நெடுங்காலம் காத்திருந்த பின் கவர்னருடன் இன்னும் பேச்சு நடந்து கொண்டிருக்கிறது என்று ராஞ்சியிலிருந்து தந்தி வந்தது. இரண்டு மூன்று நாட்கள் வரையில் பேச்சு நடந்து கொண்டிருந்தது. முடிவில் கவர்னர் ஒரு கமிஷனை நியமித்தார். காந்திஜீயையும் அதில் உறுப்பினராக ஆக்கினர். குடியானவர் களின் குறைகளை விசாரணை செய்யும் வேலை அதனிடம் ஒப் படைக்கப்பட்டது. அரசாங்க அதிகாரிகள், நீலக்காரர்கள், குடி யானவர்கள் ஆகியவர்களிடமிருந்து கமிஷன் வாக்குமூலங்களை வாங்கியது. மேலும் மற்றப்படி சமர்ப்பிக்கப்பட்ட காகிதங்களை யும் பத்திரங்களையும் படித்துப் பார்த்தது. கமிஷனின் உறுப் பினர்கள் பல பங்களாக்களுக்குச் சென்று அங்குள்ள பத்திரங் களையும் பார்த்தார்கள். குடியானவர்களையும் கண்டு பேசி னார்கள்.

கமிஷன் அமைக்கப்பட்டபின், குடியானவர்களால் சமர்ப்பிக்

கப்பட்டிருந்த பத்திரங்கள் காகிதங்கள் முதலியவற்றைக் காந்திஜீ யின் கட்டளையின் பேரில் நன்கு பரிசோதித்துப் பார்த்து, இதர சான்றுகளையும் திரட்டிச் சேர்த்து, கமிஷனுக்காக ஒரு வாக்கு மூலத்தை நாங்கள் தயாரித்தோம். கமிஷனில் அரசாங்க அதி காரிகள் இருந்தார்கள். நீலக்காரரின் ஆணையாளர்கள் இருந் தார்கள், ஜமீன்தார்களின் பிரதிநிதிகள் இருந்தார்கள், குடியான வர்களின் சார்பில் காந்திஜீ ஒருவரே இருந்தார். அறிக்கை எழுதும் காலம் வந்தது. அப்போது ஒரு பெரிய இடைஞ்சல் எதிர்ப்பட்டது. காந்திஜீக்கும் கமிஷன் அமைச்சரான சர் பிராங்க் ஸ்லாயிக்கும் அனைவருடைய ஒப்பும் கொண்டு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டுமென்ற பேரவா இருந்தது. அனை வரும் ஒருமனப்பட்ட அறிக்கையாக அமைந்தால் ஏதாவது செய்ய முடியுமென்றும், இன்றேல் எதுவும் செய்வது கடினமா யிருக்கும் என்றும் கவர்னர் கூறினர்.

குடியானவர்களின் குறைகளைப் பற்றிய விவரங்களை மேலே கூறியுள்ளேன். முடிவில், காந்திஜீக்கும் நீலக்காரர்களுக்கும் இடையில் நிறையப் பேச்சு வார்த்தை நடந்தபின், உயர்த்திக் கூட்டப்பட்ட வாரத் தொகையிலிருந்து நான்கில் ஒரு பங்குக்குச் சிறிது குறைவான ஒரு சிறு பகுதியைத் தள்ளி விடுவது என்றும், எஞ்சிய முக்காற் பங்கு அப்படியே இருப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது. ரொக்கமாகத் தண்டல் செய்யப்பட்ட பணத் திலிருந்தும் நூற்றுக்கு இருபத்தைந்து ரூபாய் திருப்பிக் கொடுக் கப்பட வேண்டுமென்றும், எஞ்சியதைக் குடியானவர்கள் துறந்து விடவேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. இவை இரண்டும், மூன்று கட்டாமுறையும்தான் முக்கிய குறைகள். மற்றக் குறை கள் அதிகாரிகள் சரியாக வேலையாற்றுவதைப் பொறுத்தும் அவர் கள் நியாயம் வழங்குவதைப் பொறுத்தும் இருந்தன. மேலே கூறப்பட்ட சிபார்சுக்கள் எல்லாம் அறிக்கையில் ஒரு மனதுடன் சேர்க்கப்பட்டன. மற்றக் குறைகளைப் பற்றி அறிக்கையில் சிறப்பாக எதுவும் எழுதப்படவில்லை. குறைகளை வெறுமே குறிப்பிட்டு அவற்றை நீக்குவதற்கான வழிகள் மட்டும் காட்டப் பட்டன. அதிகப்படுத்தப்பட்ட வாரத்தைக் குறைப்பது, ரொக் கமாக விதிக்கப்பட்ட தண்டனைத் தொகையை நூற்றுக்கு இருபத் தைந்து வீதம் திருப்பிக் கொடுப்பது ஆகிய இவை நீங்கலாக, மூன்று கட்டா முறைச் சட்டத்தையும் அமுலில் இருந்து நிறுத்தி வைப்பதற்கும் சிபார்சு செய்யப்பட்டது.

மகாத்மாஜீ சம்பரானுக்கு வருவதற்கு முன் ஓர் இடத்தில்

பதினொரு குடியானவர்கள் வழக்குகளைத் தொடுத்திருந்தார்கள். நீலக்காரர்கள் தங்கள் சார்பில் பெரிய பாரிஸ்டர் ஒருவரை நியமித்திருந்தார்கள். வழக்குகள் மாதக்கணக்காக விசாரணை செய்யப்பட்டு வந்தன. இறுதியில் ஐந்தில் குடியானவர்கள் வென்றார்கள்; ஆறில் நீலக்காரர்கள் வெற்றி பெற்றார்கள். அப்பீலில் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்புக்கள் மாற்றவும் பட்டன. லக்ஷம் என்று கூறுவிட்டாலும் ஆயிரக்கணக்கான பட்டாக்களைப் பற்றி இப்படியாக வழக்குகளை நடத்த வேண்டிருக்கும். இது முடியாத காரியம். ஆகையால் இந்தக் கஷ்டங்களை மனத்தில் கொண்டு, ஒத்துப்போய் ஏதாவது முடிவு செய்வதுதான் நல்லது என்று கருதப்பட்டது. அப்படியே எல்லாரும் ஒரு மனப்பட்டு அறிக்கையை எழுதினார்கள். அரசாங்கத்தாரும் அறிக்கையின் சிபார்சுக்களை ஏற்றுக்கொண்டார்கள். பேதியா அரசு (கோர்ட்டு ஆவ் வார்டுஸ்) நீலக்காரர்களிடமிருந்து பணத்தைத் தண்டி, மேலே குறிப்பிட்ட முடிவுப்படி தண்டனையாக விதித்து வாங்கப்பட்டிருந்த பணத்தைக் குடியானவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டது.

## 23. சம்பரான் வெற்றியின் பயன்

சம்பரான் காண்டத்தில் தான் நாங்கள் காந்திஜீ பணி ஆற்றும் முறையை முதன் முதலாகக் கண்டோம். பொது வாழ்க்கையைப் பற்றி அரிய பாடம் ஒன்றைக் கற்பதற்கும் எங்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. ஹோம்-ரூல் இயக்கத்தில் பங்கு எடுத்துக் கொள்ளாதது சில சமயங்களில் எங்களுள் சிலருக்கு மிக வருத்தமாயிருந்தது. ஆயினும் நாங்கள் மிக்க கருத்துடனும் தன்னடக்கத்துடனும் காந்திஜீயின் ஆணையைப் பேணி வந்தோம். அதாவது, "எந்த வேலையில் ஈடுபட்டிருக்கிறாயோ அதில் ஊன்றி நில்" என்பதுதான். மேலும், காந்திஜீ நீலக்காரர்களுக்கு அரும்பெரும் கேடு விளைவித்தும்கூட அவர் எப்படி அவர்களுடைய நண்பராக அமைந்து விளங்கினார் என்பதையும் நாங்கள் கண்டோம். அவர்கள் அவரைத் தங்கள் பங்களாக்களுக்கும் கூட உபசரித்து அழைத்துச் சென்றார்கள். ஆயினும் அவரை மிகவும் கடுமையாக வெறுத்தவர் சிலரும் அவர்களுள் இருக்கத்தான் செய்தார்கள். ஆனால் முடிவில் காந்திஜீயுடன் அவர்களுக்கு இருந்த உறவு கசப்பாகவில்லை என்று கூறுவது

மிகையாகாது. கமிஷனுடைய வேலை முடிந்தபின், காந்திஜீ எங்கெங்கும் பள்ளிக்கூடங்களைத் திறக்க எண்ணங் கொண்டார். இதற்காக நீலக்காரர்களின் உதவியையும் நாடினர். நீலக்காரர்கள் எல்லாருமே ஒருவர் மட்டும் நீங்கலாக எவ்விதமான முட்டுக்கட்டையையும் போடவில்லை.

கமிஷனில் இருகட்சியாரும் ஒப்பிச் செய்த முடிவானது குடியானவர்களின் கோரிக்கையைவிட மிகக் குறைவாகத்தான் இருந்தது. ஆயினும் இக்கிளர்ச்சியின் பயனாகச் சம்பரானில் நீலக்காரரிடம் இருந்து வந்த திகில் போய்விட்டது. இனி அக்கிரமம் செய்ய அவர்களுக்கு ஆற்றல் இல்லாமல் போய் விட்டது. குடியானவர்களுக்குத் துணிச்சலும் துடிப்பும் வந்து விட்டன. இனி அவர்கள் பேச்சு மூச்சில்லாமல் அக்கிரமங்களைச் சகிக்கத் தயாராக இல்லை. அக்கிரமம் இன்றிச் சம்பரானின் தொழிலில் லாபம் எடுக்க முடியாது. அந்த அடாத்து இப்போது நின்று விட்டது. இதை நீலக்காரர்கள் விரைவில் உணர்ந்து கொண்டார்கள். மூன்று நான்கு ஆண்டுகளுக்குள் அவர்கள் அனைவரும் தத்தம் நிலத்தையும் வீட்டையும் விற்றுவிட்டுக் கிடைத்ததை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். அவர்களுடைய நிலங்கள் குடியானவர்களுடைய கைக்கு வந்துவிட்டன. இப்போது அவர்கள்தாம் அங்கே வாழ்ந்து வந்தார்கள். நீலக்காரர்களின் அழகிய பங்களாக்கள் இருந்த இடங்களில் இன்று குடியானவர்களுடைய கால்நடைகள் கட்டப்பட்டு வருகின்றன. அந்த எழுபது எழுபத்தைந்து மாளிகைகளில் இன்றும் ஓரிரண்டு இருக்கின்றன. ஆனால் அங்கே இப்பொழுது அக்கிரமம் நடக்க முடியாது. எப்படிப் பல்லைப் பிடுங்கப்பட்ட பாம்பானது இப்பவும் கூடச் சீறலாமென்றாலும் எவரையும் கடிக்க முடியாதோ, அதே போல அவர்கள் தங்கள் வாழ்நாட்களைக் கழித்து வருகிறார்கள்.

சம்பரானில் எங்கள் வாழ்க்கையிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அங்கே நாங்கள் சாதி குலம் என்ற வேறுபாடுகளை விட்டு விட்டோம். அது வரையில் நான் சாதி வேறுபாட்டை மிகவும் பார்த்து, அதன்படி நடந்தும் வந்தேன். பிராமணன் தவிர மற்றச் சாதிக்காரன் தொட்ட சோறு குழம்பு முதலியவற்றை- அவற்றை அப்பக்கத்தில் கச்சி சமையல் என்பார்கள்-நான் என்றும் உண்டதில்லை. இங்கே எப்படித் தனிச் சமையற்கூடம் அமைத்துச்சமையல் செய்ய முடியும்? "ஒரே வேலையில் ஈடுபட்டவர்கள் எல்லாரும் ஒரு சாதி என்றே கொள்ளவேண்டும்" என்று காந்திஜீ கூறினர். அன்றிலிருந்து எங்களுள் எத்தனையோ சாதி

யார் இருந்தாலும் நாங்கள் எல்லாரும் எவர் கையாலும் சமைத்த உணவை உண்ண ஆரம்பித்தோம். வாழ்க்கையில் எளிமையும் அதிகமாக வந்து சேர்ந்தது. எங்களுடன் முதலில் வேலைக்காரர் கள் இருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவராக நீக்கப்பட்டார்கள். பாத்திரங்களைத் துலக்குவதற்கு மட்டும் ஒரே வேலைக்காரனை நிறுத் திக் கொண்டோம். நாங்களே கேணியிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொண்டோம். குளிப்பது, துணிகளைத் துவைப்பது, அவரவர் உண்ட எச்சில் கலன்களை எடுப்பது, அடுக்களையில் காய்கறி நறுக்குவது ஆகிய எல்லா வேலைகளையும் நாங்களே செய்துவந்தோம். எங்கேனும் செல்ல வேண்டுமானால் ரயிலில் மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்தல், முடிந்த வரையில் நடந்தே போதல் இவை எல்லாம் அங்கே காந்திஜீயிடம் கற்றோம். சுக வாழ்க்கையை விட்டுவிட வேண்டியதாயிற்று. சம்பரானில் இருந்தவரையில் இவ்விதமாகவே வாழ்ந்து வந்தோம்.

இப்பணி முடிந்தபின் காந்திஜீ சம்பரானின் மூன்று பிரிவு களிலும் மூன்று பள்ளிக்கூடங்களைத் திறந்து வைத்தார். நான் அப் பள்ளிக்கூடங்கள் எவற்றிலும் அமர முடியவில்லை. பட்னு விற்குத் திரும்பி வந்து மீண்டும் என் வக்கீல் தொழிலில் ஈடுபட்டு விட்டேன். ஆனால் ஆண்டில் ஒன்று அல்லது இரண்டு முறை அப்பள்ளிக்கூடங்களைப் பார்வையிடத் தவருது சென்று வந்தேன்.

சம்பரானுக்கு இதரப் பிரதேசங்களிலிருந்து வந்திருந்த தன்னலமற்ற உண்மைத் தொண்டர்களோடு பழக்கம் உண்டா யிற்று. அப்போது வந்தவர்களில் சிலர் இன்று வரையில் நாட்டின் தொண்டில் ஆர்வம் குன்றாமல் ஈடுபட்டிருக்கிறார்கள். அக்காலத் துக் காட்சிகளும் அநுபவங்களும் எல்லாமே அரியனவாக அமைந்தன. இன்றும்கூட அவற்றிலிருந்து நாங்கள் எத்தனையோ கற்கலாம்.

சம்பரானில் அடைந்த வெற்றியின் சாயல் பீகார் முழுவதும் பரவியது. பீகார் மிகவும் பிற்போக்கான மாகாணமாக இருந்தது. அங்கே பொதுவாழ்வின் ஓடை சன்னமாக ஓடிக் கொண்டிருந் தது. கல்வியே கிடையாது. எல்லா விஷயங்களிலும் பீகார் மக்கள் மற்ற மாகாண மக்களைக் காட்டிலும் மிகவும் பிற்போக் காளர்களாகக் கருதப்பட்டு வந்தார்கள். ஆங்கில ஆட்சியின் கீழ், முதலில் இருந்தே பீகார் வங்காளத்துடன் சேர்ந்து இருந்து வந்தது. இப்படியாக வருஷக்கணக்காக வங்காளத்தின் ஒரு பகுதியாக இருந்து வந்தது. பீகாரின் தனிப் பெயரைக்கூட

மக்கள் மறந்துபோகும் நிலை எய்திவிட்டது. வங்காளம் மிகச் சிறந்த மாகாணம்தான். ஆனால் அதன் சிறப்பின் செல்வாக்கு பீகாருக்கு எட்டவில்லை. ஆங்கில மொழிக் கல்வியிலும் கூடப் பீகார் பிற்பட்டிருந்ததால், பீகார் மக்கள் அரசாங்க அலுவலகங்களில் இடம் பெற இயலவில்லை. பெரிய பதவிகளைப் பற்றிச் சொல்வானேன்.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் சில பீகாரிகளின் உள்ளத்தில் பீகாரின் வருந்தத்தக்க நிலையைப் பற்றி வேதனை பிறந்தது. இதன் பயனாகப் பீகாரை வங்காளத்திலிருந்து பிரிக்க வேண்டுமென்ற கிளர்ச்சி எழுந்தது. இக் கிளர்ச்சிக்குக் காலஞ்சென்ற பாபூ மகேஷ் நாராயணனும் டாக்டர் சச்சிதானந்த சின்ஹாவும்தாம் முக்கிய தலைவர்கள். டாக்டர் சின்ஹாவின் முயற்சியால்தான் பீகார் ஒரு தனி மாகாணமாகக் காங்கிரஸால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. 1911இல் தில்லி தர்பாருக்காக ஐந்தாம் ஜார்ஜ் சக்ரவர்த்தி இந்தியாவுக்கு வந்தபோதுதான் பீகாரை ஒரு தனி மாகாணமாக அமைப்பதைப் பற்றி அறிக்கை சாற்றப் பட்டது. இந்த அறிக்கை வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சியின் விளைவாகப் பிறந்தது. கிழக்கு வங்காளமும் மேற்கு வங்காளமும் மீண்டும் ஒன்றாக இணைக்கப்பட்டன. பீகாரையும் ஒரிசாவையும் சேர்த்து ஒரு தனி மாகாணம் நிறுவப்பட்டது. தனி மாகாணம் என்ற பேச்சுக் கிளம்பியதுமே பீகாரில் ஒரு புத்துயிர் நிலவத் தொடங்கியது. அதன் அறிகுறிகள் எங்கும் காணப்பட்டு வந்தன. பீகாரி மாணவர் மகாநாட்டைப் பற்றி மேலே கூறியுள்ளேன். பீகார் மாகாண அரசியல் மகாநாடும் ஆண்டுதோறும் நடக்க ஆரம்பித்தது. பீகாரின் கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் மாணவர்களின் எண்ணிக்கை பெருகி வந்தது. உயர்ப் படிப்பில் ஆசையுள்ள மாணவர்கள் மேலும் மேலும் அதிகப் பேராகக் கல்கத்தாவிற்குப் போக ஆரம்பித்தார்கள். புது மாகாணம் அமைந்தபின் பீகார் எல்லாத் துறைகளிலும் முன்னேறத்தொடங்கியது. இவ்வளவு நடந்தும் கூட 1917 வரையில் தேசத் தொண்டின் வேலை ஒழுங்காக அமைக்கப்பட்ட முறையில் இன்னும் நடக்கவில்லை. அக்காலத்துக் காங்கிரஸ் குழுவை இக் காலத்துக் குழுவுடன் ஒப்பிட்டுப் பாக்கும்போது அது ஒரு விளையாட்டுக் கூத்தாகத் தோன்றுகிறது. அக் காலத்தில் மாகாணக் காங்கிரஸ் குழுவுக்கு நான் அமைச்சனாக இருந்தேன். பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் தாம் (முக்கியமாக, அகிலபாரத காங்கிரஸ் குழுவுக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்

பட்டவர்கள்தாம்) ஏதாவது கட்டணம் கொடுத்தார்கள். அதைக் கொண்டு மாகாணக் காங்கிரஸ் குழுவின் வேலை நடந்து வந்தது. அகில பாரதக் குழுவுக்கு ஆண்டுக் கட்டணமும் அத் தொகை யிலிருந்துதான் கொடுக்கப்பட்டு வந்தது. இந்த ஆண்டுக் கட்ட ணம் எப்போதுமே நிலுவையாக இருக்கும். அக்காலத்துக் காங்கிரஸ் அமைச்சர் ஸ்ரீ சுப்பாராவ் எப்போதாவது பட்னுவிற்கு வருவார். அவர் வரும் சமயத்தில் முக்கிய மனிதர்கள் சிலர் சேர்ந்து தமக்குள் ஏதாவது சேகரித்துக் கொடுப்பார்கள் என்பது நினைவிருக்கிறது. நவாப் சரப்ராஜ் ஹஸேன் கான் நெடுநாள் வரையில் மாகாணக் குழுவுக்கு அமைச்சராக இருந்தார். நானும் அவருடன் அமைச்சனுக இருந்து வந்தேன். அலுவலகத்தின் செலவை நாங்கள் இருவருமே கையிலிருந்து பெரும்பாலும் போட்டு நடத்தி வந்தோம். அலுவலகத்தின் செலவு ஏதோ பெருந்தொகை என்று நினைத்துவிடக் கூடாது. அஞ்சலுக்கும் தந்திக்கும்தான் செலவாகும். இதை நாங்கள் எளிதாக செலவு செய்ய முடிந்தது.

மகாத்மா காந்தி சம்பரானுக்கு வந்த பொழுது பீகாரில் பொது வாழ்வு இவ்வண்ணமாகத்தான் இருந்தது. அக்காலத்தில் தம் வாழ் நாட்பொழுது முழுவதையும் அர்ப்பணம் செய்து தேசத் தொண்டு ஆற்றி வந்தவர் ஒருவர்கூட இல்லை. காங்கிர ஸின் உறுப்பினராக இருந்தவர்களும் தத்தம் தொழிலை நடத்திக் கொண்டேதான் தேசத் தொண்டும் செய்து வந்தார்கள். மற்ற மாகாணங்களின் நிலைமையும் பெரும்பாலும் இதே போலத்தான் இருந்திருக்கும். ஆனால் மற்ற மாகாணங்களில் தம் வாழ்நாள் முழுவதையும் தேசத் தொண்டில் கழித்து வந்த ஊழியர்கள் சிலர் இருந்தார்கள். மகாத்மா காந்தியுடன் சம்பரானுக்கு வந்தவர்கள் எல்லாருமே பெரும்பாலும் வக்கீல் தொழிலைச் சேர்ந்தவர்கள்தாம். எங்களில் ஒருவராவது தம் தொழிலை விட்டு விடுவதாகத் திட்ட மிட்டுக் கொண்டு அவருடன் பணி செய்ய முன் வரவில்லை. சில நாட்களுக்குள் இந்த வேலை முடிந்துவிடும் என்ற எண்ணத்துடன் தான் அவருடன் சென்றோம். ஆனால் அங்கே போய்ச் சேர்ந்த பின் வேலை வளர்ந்து கொண்டே போவதைக் கண்டோம். அதை முடிக்காமல் அங்கிருந்து வெளியேறுவதும் கடினமாக இருந்தது. ஆகையால் பத்துப் பதினைந்து நாட்களுக்குத்தான் என்று திட்ட மிட்டுச் சென்றவர்கள் பத்து மாதங்கள் வரையில் சம்பரானில் தங்கிவிட்டோம். வேலையை முடித்துவிட்டு நாங்கள் அவரவர் களுடைய இடத்திற்குத் திரும்பிச் சென்றபோது எங்களோடு

புதிய கருத்துக்கள், புதிய ஆர்வம், புதிய வேலைத் திட்டம் ஆகியவை எல்லாம் கொண்டு சென்றோம். மாகாணம் முழுவதிலுமே ஒரு புத்துயிர் பிறந்து விட்டது. அதனுடைய பயன் சில நாட்களுக்குள்ளாகவே புலப்பட்டது. எங்கள் கண்கள் நன்றாகத் திறக்கப்பட்டு விட்டன. நம்முள் சில பேராவது தம் வாழ்நாள் முழுவதையும் தேசத் தொண்டில் கழிப்போம் என்று முன் வாராத வரையில் பீகாரின் பொது வாழ்க்கை இப்படித் தான் மந்தமாக இருக்கும் என்பதை இப்போது உணர்ந்தோம்.

ஒரு நாள் காந்திஜீயுடன் ஒரு கிராமத்திலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தேன். வழியில் பேசிக்கொண்டு வந்தோம். "நீங்கள் நாடு முழுவதும் சுற்றி வந்துகொண்டிருக்கிறீர்களே, தேசத் தொண்டு என்ற கண்ணுடன் பார்த்தால் எந்த இடத்திற்கு உயர்ந்த பதவி அளிப்பீர்கள்?" என்று நான் கேட்டேன். அவர் அநேகமாக எல்லா மாகாணங்களைப் பற்றியும் எடுத்துரைத்தார். முடிவில், "தேசத் தொண்டிற்குப் புனாதான் தீர்த்த ஸ்தலம்" என்று கூறினார். "அங்கே ஒரே ஓர் ஊருக்குள் எத்தனையோ தியாகிகள் இருக்கிறார்கள். அத்தனை பேர் வேறு எந்த இடத்திலும் இல்லை" என்றார். "அங்குள்ள சங்கங்கள், தியாகமே கண்ணாக, நாட்டிற்கு ஒரு லக்ஷியத்தை காட்டுகின்றன. புதிய சங்கங்களும் மென்மேலும் நிறுவப்பட்டு வருகின்றன" என்றார்.

பர்கூஸன் கல்லூரியின் பெயரை நான் முன்னமே கேட்டிருக்கிறேன். மகாத்மாஜீயிடமிருந்து விஷயங்களைக் கேட்டபின் புனாவிற்கு ஒரு முறை சென்று வரவேண்டுமென்ற ஆவல் மேலும் பெருகியது. தியாகிகள் வெறும் பிழைப்புக்கு வேண்டியதை மட்டும் பெற்றுக்கொண்டு தேசத் தொண்டில் ஈடுபட்டிருக்கும்படி வசதி அளிக்கக்கூடிய ஒரு நிலையத்தை இந்த வேலை முடிந்தபின் நிறுவ வேண்டுமென்று சம்பரானில் இருந்தபோதே எண்ணத் தொடங்கினோம். பர்கூஸன் கல்லூரியின் அமைப்பு முறையில் ஒரு கல்லூரியை அமைக்க வேண்டுமென்றும் திட்டமிடப்பட்டது. எங்கள் அனைவருக்கும் தலைவரும் ஊக்கம் அளிப்பவருமாக இருந்தவர் பாபூ பிரஜ்கிஷோர் தாம். இவ்விதமாக ஒரு நிலையம் அமைக்கப்பட்டவுடன் நாங்களும் வெறும் பிழைப்புக்கு வேண்டியதை மட்டும் ஏற்றுக்கொண்டு அதில் சேருவோம் என்று அவரவர் பெயரை எழுதிக் கொடுக்கும் அளவுக்கு அவர் இந்த விஷயத்தைத் தூக்கி விட்டுவிட்டார். கல்லூரிக்காகப் பணம் திரட்டுவதைப் பற்றியும் பேசப்பட்டது. சிலரிடமிருந்து வாக்கும் பெறப்பட்டது.

மகாத்மாஜீயுடன் கலந்து பேசியதில், அவருக்கு நிலைய விஷயம் பிடித்திருந்தது, ஆனால், அதற்குக் கல்லூரி உருக் கொடுப்பது அவ்வளவு பிடிக்கவில்லை. நாங்கள் இதைப் பற்றிச் சிந்தித்து வந்தோம். 1918இல் பம்பாயில் காங்கிரஸின் விசேஷப் பேரவை நடந்தபோது நானும் அதற்குப் போயிருந்தேன். அங்கிருந்து புனாவிற்குச் சென்றேன். அங்கே உள்ள நிலை யங்கள் எல்லாவற்றையும் நன்றாகப் பார்த்தேன். அவற்றைப் பற்றி நிறைய விவரங்களும் சேகரித்து வந்தேன்.

## 24. கல்கத்தாக் காங்கிரஸிலிருந்து தில்லிக் காங்கிரஸ் முடிய

1918இல் நாங்கள் சம்பரானில் பணி ஆற்றி வந்தபோது நாட்டில் ஹோம்-ரூல் இயக்கம் மும்முரமாக நடந்துகொண் டிருந்தது. நாங்கள் எந்த இயக்கத்திலும் ஈடுபடுவதை மகாத்மாஜீ தடுத்திருந்தார் என்றும், சம்பரான் வேலைதான் ஹோம்-ரூலுக்காக நாங்கள் செய்யக்கூடிய மிகச் சிறந்த வேலை என்று கூறியிருந்தார் என்றும் நான் மேலே கூறியிருக்கிறேன். இதனிடையில் ஸ்ரீமதி அன்னிபெசண்டு கண்மறைவாக அடைக் கப்பட்டு விட்டார். இதனால் ஹோம்-ரூல் இயக்கம் மேலும் வலி வுற்றது. நாங்கள் இச் செய்திகளை எல்லாம் தினத் தாள்களில் படித்து வந்தோம். ஆனால் எங்கள் மனம் சம்பரானில் தான் இருந்தது. வேறு எந்த விஷயத்திலும் எங்கள் மனத்தைத் திரிய விடவில்லை. சம்பரானைத் தவிர பீகாரின் மற்ற ஜில்லாக் களில் ஹோம்-ரூல் இயக்கம் நடந்துவந்தது. கல்வி கேள்வியுள்ள வர்கள் கிராமங்களில் சென்று கூட்டம் கூட்டி அரசியலைப் பற்றிப் பொதுமக்களுக்கு எடுத்துரைத்தது பீகாரில் இதுதான் முதல் முறை என்று நினைக்கிறேன். இதன் பயன் நன்றாக அமைந்தது.

இதே ஆண்டில் பீகாரில் சாஹாபாத் ஜில்லாவில் ஒரு பெரும் கேடு விளைந்தது. பக்ரீதின்போது பசுவைப் பலி கொடுத்ததின் காரணமாக ஹிந்துக்களுக்கும் முசல்மானியருக்கும் சண்டை மூண்டுவிட்டது. காரியம் மிகவும் பெரிதாகிவிட்டது. ஜில்லா வின் பெரும்பாகத்திலும் அக்கம் பக்கத்துக் கயாவிலும் பலாமு ஜில்லாவிலும் கூட மிகப் பெரிய கலகங்கள் விளைந்தன. சில

நாட்கள் வரையில் ஆங்கில ஆட்சியே அற்றுப் போய்விட்டது போலத் தோன்றிற்று. சில ஹிந்துக்கள் அடிபட்டார்கள், ஆனால் முசல்மானியர்களுக்குத்தாம் அதிகக் கொடுமை விளைவிக்கப் பட்டது. பலர் கொல்லப்பட்டார்கள். அநேகம் பேரின் வீடுகள் சூறையாடப்பட்டன. கடைசியில் இராணுவம் வந்தபின் ஆயிரக் கணக்கான ஹிந்துக்கள் கைது செய்யப்பட்டனர். அவர்கள் மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டது. அது நெடுநாள் வரையில் நடந்துகொண்டிருந்தது. ஆயிரக்கணக்கானவர்களுக்கு கடுங் காவல் விதிக்கப்பட்டது. இக் கலகங்களினால் முசல்மானியர்கள் முதலில் நாசமடைந்தார்கள், பின்னர் ஹிந்துக்கள் நாசமானார் கள். அக்காலத்தின் தீமைகளின் நினைவு இன்று வரையில் இரு மதத்தார் மனத்திலும் இருந்துவருகிறது. இவ்விரு கட்சியார் களுக்குள் ஒற்றுமை செய்துவைக்கவோ, கலகத்தைத் தடுக்கவோ அக்காலத்தின் பொதுவாழ்க்கை அவ்வளவு செல்வாக்கு உடைய தாக இல்லை. நடவடிக்கைகள் தொடங்கப்பட்டபோது சில வக்கீல்கள் குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு ஏதோ சிறிது உதவி புரிந்தார்கள். இதற்கு மேல் வேறு ஒன்றும் நடக்கவில்லை. இவ் விபத்துடன் எனக்கு நேரடியாக எவ்விதச் சம்பந்தமும் இல்லை ஆயினும் அங்கே நடந்த விஷயங்கள் என் மனத்தில் ஆழ்ந்து பதியத்தான் பதிந்தன.

கல்கத்தாக் காங்கிரஸுக்குப் பீகாரிலிருந்து, முக்கியமாகச் சம்பாரானிலிருந்து, பிரதிநிதிகள் தொகுதி பெரிதாகச் சென்றது. நானும் ஒரு பெரிய தொகுதியுடன் அங்கேபோய்ச் சேர்ந்தேன். மகாத்மாஜீ தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சேட் ஜம்நா லால்ஜீ தாம் செய்துவந்தார். சம்பாரானின் தொகுதியும் அங்கேயே போய் ஒட்டிக்கொண்டது. அங்கேதான் சேட்ஜீயை முதன் முதல் கண்டேன் என்று நினைக்கிறேன். என் நினைவுக்கு எட்டியவரையில் மகாத்மாஜீ காங்கிரஸில் யாதொரு பங்கும் விசேஷமாக எடுத்துக்கொள்ளவில்லை.

நாங்கள் சம்பாரானில் இருந்தபோது, அக்காலத்தில் இந்தியா செக்ரடரியாக இருந்துவந்த மிஸ்டர் மாண்டேகுவின் அறிக்கை வெளிவந்தது. அதன் மூலமாக அவர், இந்தியாவில் மெல்ல மெல்ல ஜனநாயகம் நிறுவப்படும் என்று பிரிட்டிஷ் அரசாங் கத்தின் சார்பாக உறுதி அளித்தார். அதன் பின், அவர் இந்தியா வுக்கு வந்தார். சில நாட்களுக்குப் பிறகு இந்திய அரசியல் சீர் திருத்தத்தைப் பற்றிய மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை வெளியானதும் நாடெங்கும் அதைப் பற்றி ஆலோசனை நடக்கத்

தொடங்கியது. 'அரசியல் வாதிகள் தனிப்படவும் கட்சிகள் மூல மாகவும் தத்தம் கருத்துக்களைப் பிரசுரிக்கலானார்கள். பீகாரிலும் இதைப் பற்றிப் பேச்சு நடக்கத் தொடங்கியது. நாங்கள் சம்பரான் வேலையிலிருந்து விடுதலை பெற்றுவிட்டதால் இதில் கவனம் செலுத்துவதற்கு ஓய்வு கிடைத்தது. நான் முதலி லிருந்தே இயல்பாகவே மிதவாதியாக இருந்துவந்தேன். கடுமை யான எண்ணங்கள் என் உள்ளத்தில் எளிதில் எழுவதில்லை. இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வதில் நான் மித வாதக் கட்சியைத்தான் ஆதரித்தேன். பீகாரில் இவ்விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக மாகாண மகாநாடு ஒன்று கூடியது. அதில் நானும் பங்கெடுத்துக் கொண்டேன். என்றுமே கடுமையான அபிப்பிராயங்களுக்கு விரோதமாகவே நான் இருந்துவந்தேன். அரசாங்கத்தின் மேல் வலுச்செலுத்தி காரியம் எதுவும் சாதிக்கும் அளவுக்கு நாம் இன்னும் ஆற்றல் எய்த வில்லை என்று நினைத்தேன். மேலும் நாட்டின் ஆட்சியின் சுமை முழுதும் நம்மேல் வந்துவிட்டால் நாம் அதை ஏற்று இனிது தாங்கி நிற்க முடியுமா என்பதிலும் எனக்கு முழு நம்பிக்கை யில்லை. ஆகையால் நான் அந்த அறிக்கையைப் பொருத்தமான தென்றே கருதினேன். அதை அடிப்படையாகக் கொண்டு எதெது கைகூடுமோ அதை ஏற்க நான் தயாராயிருந்தேன். ஆகையால் நம்முடைய வெறுப்போ புறக்கணிப்போ புலப்படும் படி இதைப்பற்றிய விமர்சனங்கள் அமைவது எனக்குப் பிடிக்க வில்லை. மாகாண மகாநாட்டில் அபிப்பிராய பேதம் இருந்தது. என் நினைவுக்கு எட்டியவரையில், கடைசியில், இதே கருத்துத் தான் ஏற்றுக்கொள்ளப்பட்டது. சில இடங்களில் சில திருத்தங் களும் எடுத்துரைக்கப்பட்டன.

இந்த அறிக்கையைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகக் காங்கிரஸின் விசேஷக் கூட்டம் ஒன்று பம்பாயில் நடந்தது. அதற்கு நானும் சென்றேன். என்னுடைய இயல்பையும் பழக் கத்தையும் பின்பற்றி நான் அங்கே நடந்த விவாதங்களில் யாதொரு பங்கும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் விஷய ஆலோசனைக் குழுவிலும் காங்கிரஸிலும் நடந்த விவாதங்களை மிகவும் கவனமாகக் கேட்டுவந்தேன். பாட்னாவின் புகழ்வாய்ந்த பாரிஸ்டர் சையத் ஹசன் இமாம்தாம் தலைமைவகித்தார். அவ ருடைய சொற்பொழிவு மிகவும் கடுமையாக இருந்தது. காங் கிரஸின் நடவடிக்கைகளை அவர் மிகத் திறமையுடன் நடத்தினார். பம்பாயில் அவருக்கு வரவேற்பும் மிகச் சிறப்பாக நடந்தது.

விஷய ஆலோசனைக் குழுவில் இருகட்சிக்காரர்களுக்கும் சண்டை மூளும் போலத் தோன்றிய பல சந்தர்ப்பங்களைக் கவனித்தேன். ஒருபுறத்திலிருந்து லோகமான்ய திலகர் தீவிரவாதக் கருத்துக் களை ஆதரித்தார். மற்றொரு புறத்திலிருந்து பல தலைவர்கள் எதிர்த்து வாதம் செய்தார்கள். இடையிடையே அவைத்தலைவர் இரண்டொரு சொற்களால் அல்லது ஏதோ சைகைகளால் இப் பெரியோர்களின் சண்டையை தணித்து வந்தார்.

1918இல் மற்றொரு மாபெரும் நிகழ்ச்சி நடந்தது. மகாத் மாஜீ சம்பரானில் இருந்த அதே சமயத்தில் குஜராத்தின் கேடா ஜில்லாவில் குடியானவர்கள் இடையில் நிலவரியைப் பற்றி ஒரு கிளர்ச்சி எழும்பியது. மகாத்மாஜீ சம்பரானுக்குப் போவதற்கு முன்னமே சாபர்மதியில் குடிசைகளைக் கட்டி சத்தியாகிரக ஆச்ர மம் ஒன்றை ஒருவாறுக அமைத்திருந்தார். சம்பரானிலிருந்து ஏழெட்டு நாட்களுக்குள் திரும்பி வந்து அதை ஒழுங்காகத் திறந்து வைக்கலாம் என்று எண்ணங் கொண்டிருந்தார். ஆனால் சம்பரானில் நிறுத்தப்பட்டு விட்டபின், ஆஸ்ரமத்தில் இருப்பவர் களே அங்கே வேலையைத் தொடங்கிவிடட்டும் என்று செய்தி அனுப்பிவிட்டார். ஆஸ்ரமத்தைப் பார்க்க வேண்டுமென்று எனக்கும் பேராவல் உண்டாயிற்று.

1918 ஏப்பிரலில் அகில பாரதீய ஹிந்தி சாகித்திய சம்மேள னப் பேரவை இந்தோரில் நடந்தது. மகாத்மா காந்திஜீ அதற்குத் தலைவராக அமைந்தார். பீகாரிலிருந்து சில பிரதிநிதிகள் சென் றோம். சம்பரானுக்குப் பிறகு காந்திஜீமேல் எங்களுக்குத் தனிப் பட்ட உரிமை உண்டாகிவிட்டதென்று நாங்கள் நினைத்துக்கொண் டோம். இம்மனோபாவத்தினுல் இந்தோரில் தலைவர் கூடவே தங்கினோம். அந்தச் சம்மேளனில் மிகவும் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், தென்னாட்டில் ஹிந்தியைப் பரவச்செய் வதற்கான வேலையைத் தொடங்க வேண்டுமென்று செய்த முடிவு தான். மகாத்மாஜீக்கு இது ஒன்றும் புதிய விஷயமன்று. சம் பரானிலேயே இவர் இந்த வேலையை ஆரம்பித்துவிட்டார். சுவாமி சத்யதேவ்ஜீ அவரைப் பார்ப்பதற்காக ஒருமுறை வந்தார். சிறிது காலம் சாபர்மதி ஆஸ்ரமத்தில் தங்கியிருந்துவிட்டுப் பிறகு தென்னாட்டில் ஹித்தியைப் பரவச் செய்யும் வேலையை மேற்கொள் ளும்படி காந்திஜீ அவருக்கு யோசனை கூறினார். இந்தோர் சம் மேளனுக்குச் சிறிது முன்னமே இவ்வேலை தொடங்கப்பட்டு விட்டது. சுவாமி சத்யதேவுடன் காந்திஜீ தம் கடைக்குட்டி மகன் தேவதாஸ் காந்தியை இவ்வேலைக்காக அனுப்பி வைத்தார்.

இந்தோர் சம்மேளனில் தொடங்கப்பட்ட இவ்வேலை இன்று தென்னாடு முழுமையும் படர்ந்துவிட்டது. அங்கே லக்ஷக்கணக்கான பெண்களும் ஆண்களும் ஹிந்தி கற்றுக்கொண்டு விட்டார்கள்.

சம்மேளனிலிருந்து காந்திஜீயுடன் நேரே சாபர்மதிக்குப் போய்விட்டேன். அப்போது ஆச்ரமத்திற்குக் கட்டடங்கள் இல்லை. மூங்கில் தட்டிக் குடிசைகள்தாம் இருந்தன. அவற்றில் தாம் ஆச்ரமத்தில் இருப்பவர்கள் வசித்து வந்தார்கள். ஆச்ரமத்தில் அதிககாலம் தங்குவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. மகாத்மாஜீ உடனடியாகக் கேடாவின் கிராமங்களுக்குச் சென்றுவிட்டார். அங்கே வரித்தடை வேலை தொடங்கிவிட்டது. சர்தார் வல்லபாயீ, ஸ்ரீ சங்கர்லால் பாங்கர், ஸ்ரீமதி அனுசூயா பாயீ சாராபாய், இன்னும் பல தொண்டர்கள் காந்திஜீயின் தலைமையின்கீழ் அங்கே பிரசார வேலை செய்து கொண்டிருந்தார்கள். அங்குள்ள கிராமங்களில் இரண்டு மூன்று நாட்கள் காந்திஜீயுடன் சுற்றிவரும் நற்பேறு எனக்கு வாய்த்தது. சம்பரானுக்குக் காந்திஜீயுடன் வந்திருந்த குஜராத்திக்காரர்களுடனும் அவரால் அனுப்பப்பட்டவர்களுடனும் அங்கே அறிமுகமானபோது முளை கண்ட நட்பு இப்போது நெருங்கியதாக வளர ஆரம்பித்தது. மகாத்மாஜீ நடந்தே பிரயாணம் செய்து வந்தார். நானும் அப்படியே செய்யவேண்டியதாயிற்று. அந்தக் காலத்தில் அவர் செருப்பு அணிவதில்லை. ஏப்பிரல் முடிவில் வெப்பம் கடுமையாக இருந்தது. ஒருநாள் இப்படி நடந்து செல்லும்போது உச்சி வேளை ஆகிவிட்டது. அப்போது நாங்கள் மணல்பாதை வழியாகப் போக வேண்டியிருந்தது. மணல் சூடேறிவிட்டது. கால் கொதித்தது. ஆனால் காந்திஜீ அதைப் பொருட்படுத்தவில்லை. போக வேண்டிய இடத்திற்குப் போயே சேர்ந்தோம். கேடா சத்தியாகிரகம் வெற்றியடைந்தது. கேடா, சம்பரான் ஆகிய இரண்டு இடங்களின் வேலைகளும் பெரும்பாலும் ஒரே ஆண்டிற்குள் முடிந்துவிட்டன.

நான் மீண்டும் என் வக்கீல் தொழிலில் ஈடுபட்டுவிட்டேன். அவ்வப்போது மகாநாடுகளிலும் காங்கிரஸிலும் கலந்துகொள்வது தம் கடமை என்று அக்காலத்து வக்கீல்கள் எண்ணினார்கள். நானும் அவர்களில் ஒருவன். சம்பரானுக்குப் பிறகு என் எண்ணங்களில் நிறைய மாறுதல்கள் வந்துவிட்டன. இப்படிப்பட்ட வேலைகளை விடுமுறை நாட்களில் மட்டும் ஏதோ வெறும் உல்லாசப் பொழுது போக்குக்காகக் கொள்ளாமல் அதிக நேரம் இவற்றிற்கு அளிக்கவேண்டும் என்பதை உணர ஆரம்பித்தேன்.

ஆனால், இது வரையில் இதற்கு வழி எதுவும் வகுக்கப்படவில்லை. ஆகையால் பழைய முறையிலேயே காரியம் நடந்து வந்தது. இந்தோரில் ஹிந்தி சாகித்திய சம்மேளன், பம்பாயில் காங்கிரஸின் விசேஷப் பேரவை, பிறகு தில்லியில் அதன் வழக்கமான டிசம்பர் பேரவை ஆகியவற்றில் கலந்து கொண்டேன். இவ்வளவுதான் என் கடப்பாடு என்று நினைத்தேன்.

காந்திஜீ சம்பரானுக்கு வந்து திரும்பியபின் பீகாரின் பெயர் எங்கெங்கும் கேட்கப்பட்டு வந்தது. ஆயினும் இன்னும் அதற்குத் தனிப் பதவி கிடைக்கவில்லை. இப்படித் தனிப் பதவி இல்லாத காரணத்தால் கல்கத்தாக் காங்கிரஸில் நாங்கள் பெரும்பாலும் காந்திஜீயின் முகாமிலேயேலே தங்க வேண்டியதாயிற்று.

தில்லிக் காங்கிரஸில் ஒரு மிக்க வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது. நாங்கள் அங்குப் போய்ச் சேர்ந்தோம். ஸ்டேஷனில் தொண்டர்களைக் கண்டோம். ஆனால், அவர்களில் எவரும் பீகாரின் பிரதிநிதிகள் தங்குவதற்கு இடம் எதுவென்று சொல்ல முடியவில்லை. "நீங்கள் பட்டௌடி ஹவுசுக்குப் போங்கள்" என்று அவர்களுடைய தலைவர் கூறினர். நாங்கள் அங்குப் போய்ச் சேர்ந்தோம். அப்போது காலை ஐந்து மணி இருக்கும். இன்னும் இருட்டாகவே இருந்தது. குளிர் அதிகமாக இருந்தது. ஒரு சிறு அறையை அடைந்து, நாங்கள் பதினைந்து இருபது பேரும் அதில் உட்கார்ந்திருந்தோம். பொழுது விடிந்து விசாரித்ததும், அங்கும் எவரும் எங்களுக்காக இடம் காட்ட முடியவில்லை. சரி, இப்போது எல்லாரும் இங்கேயே இருந்துவிட வேண்டும் என்று நாங்கள் முடிவு செய்தோம். முதல் மாடியில் ஒரு நல்ல அறை இருந்தது. அதையும் பிடித்துக் கொண்டோம். சிறிது நேரம் கழித்து வரவேற்புக் குழுவின் துரை ஒருவர் வந்தார். எங்களை வீட்டை ஒழிக்கும்படி அவர் உத்தரவு இட்டார். நாங்கள் எங்கேதான் போய்த் தங்குவது என்று கேட்டதற்கு அவர் "இந்த வீடு வங்காளப் பிரதிநிதிகளுக்கு" என்றும் "மேலே யிருக்கும் அறை ஸ்ரீ பி. சக்ரவர்த்திக்கும் ஸ்ரீ சி. ஆர். தாஸுக்கும்" என்றும் ஆகையால் "நீங்கள் வேறு எங்காவது சென்று தங்கலாம்" என்றும் கூறி, அதுவே போதுமான விடை என்று கருதினர். எவ்வளவோ சொல்லியும் அவர் எங்களுக்கு வேறு இடத்தை அமர்த்திக் கொடுக்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக்கொள்ளவோ வேறு யாரிடமாவது ஒப்படைக்கவோ வேண்டும் என்று உணரவில்லை. வேறு இடம் கிடைக்காத வரையில் அங்கிருந்து நகரக் கூடாது என்று நாங்களும் உறுதி செய்துவிட்டோம். சிறிது

நேரத்திற்குப் பிறகும் அவ்விடத்தை விட்டுப் போகும்படி எங்களுக்கு மீண்டும் உத்தரவு கிடைத்தது. மாட்டோம் என்று கண்டிப்பாகக் கூறிவிட்டோம். அக்கனவான் கோபம் மூண்டு எங்களிடம் வந்து நாங்கள் அவருடைய சொல்லைக் கேட்காவிட்டால் எங்களுக்கு வரவேற்புக் குழுவின் சமையற்கூடத்தில் உணவுக்கு ஏற்பாடு செய்ய முடியாது என்று எச்சரிக்கை செய்தார். இந்த மிரட்டல் எங்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. வரவேற்புக் குழுவில் ஒரு நாளுக்கு ஏறக்குறைய இரண்டு ரூபாய் கொடுக்க வேண்டும். ஆகையால் நாங்கள் உடனே சில பாத்திரங்களை வாங்கி வந்து செங்கல்லால் அடுப்பு அமைத்துக் கிச்சடி (வெண் பொங்கல்) சமைத்துவிட்டோம். அதற்குச் செலவு நான்கைந்து அணுவுக்கு மேல் ஆகவில்லை. அவ்வளவுதான், நாங்கள் அங்கேயே ஊன்றிக் கொண்டோம். மிகவும் கெடுபிடி செய்யப்பட்டது. ஆனால் தம் தனி அடுப்பு வைத்தபின் யார்தாம் நகருவார்கள்? கடைசியில் அவர்கள் அயர்ந்துபோய் எங்களை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்.

கல்கத்தாவில் நான் வக்கீலாக இருந்துவந்த காலத்திலிருந்தே ஸ்ரீ சி. ஆர். தாஸுக்கு என்னைத் தெரியும். சில வழக்குகளில் நாங்கள் இருவரும் சேர்ந்து வேலை செய்யும் வாய்ப்பும் கிடைத்திருந்தது. அவரைக் காங்கிரஸ் பந்தலில் சந்தித்தேன். சிரித்துக் கொண்டே அவர் என்னைப் பார்த்து "எனக்காக வைத்திருந்த அறையை நீங்கள் பலாத்காரமாய்ப் பற்றிக் கொண்டீர்களாமே?" என்று கேட்டார். எனக்கு மிகவும் வெட்கமாயிருந்தது. நடந்ததை எல்லாம் நான் கூறினேன். "நீங்கள் விரும்பினால் நாங்கள் இப்போதே அறையை ஒழித்துவிட்டு விடுகிறோம்" என்று கூறினேன். "நீ செய்தது சரிதான். உனக்கு எதுவும் இடமில்லாதபோது வேறு என்னதான் செய்திருக்கக் கூடும்?" என்று அவர் உரைத்தார். தம்மைப் பொருத்தவரையில் அவர் "என்னைப் பற்றிக் கவலைப்படாதே, நான் மிகவும் சுகமாக ஹோட்டலுக்குப் போய்த் தங்கிவிட்டேன்" என்றார்.

இப்படியாக 1918 முடிந்தது. பிறகு நாங்கள் பட்னாவிற்குத் திரும்பி வந்து வக்கீல் வேலை ஆற்றலானோம்.

# 25. அருமை நண்பரின் மரணம்

ராய் பகதூர் ஹரிஹர் பிரசாதுக்கு நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் நாட்களிலிருந்தே என்னைத் தெரியும். நான் வெளிநாட்டிற்குச் செல்ல எண்ணிக் கொண்டிருந்தபோது அவர் சிறிது உதவியும் புரிந்திருந்தார். நான் வக்கீல் தொழில் தொடங்கியதும் அவர் என்னைத் தம் வக்கீலாக அமர்த்திக் கொண்டார். ஹைகோர்ட்டில் நடந்து கொண்டிருந்த அவருடைய வழக்குகளுக்கெல்லாம் நான்தான் வக்கீல். அவருக்குப் பர்மாவில் பெரிய சொத்து ஒன்று இருந்தது. அச்சொத்தின் மேல் டும்ராலின் மகாராஜா ஒரு வழக்கைத் தொடுத்தார். அவருக்குப் பீகாரில் இருந்த சொத்துக்களையும் சேர்த்துத் தொடுத்துவிட்டார். இரு பக்கத்திலும் பெரிய பிரசித்தமான வக்கீல்கள் அமர்த்தப்பட்டார்கள். என்னையும் வேலை பார்க்கும்படி ஹரிபாபூ கூறினர். அக்காலத்தில் அவர் பிரயாகில் வசித்து வந்தார். 1918 துர்கா பூஜை விடுமுறையில் பத்திரங்களைப் படிப்பதற்காக என்னை அங்கே அழைத்தார். அப்படியே விடுமுறையில் பத்திரங்களைப் பிரயாகில் படித்துக் கொண்டிருந்தேன். என் நண்பர் பாபூ வைத்தியநாத் நாராயண் சிங்கும் அவ்விடுமுறையில் பிரயாகில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு தம் குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார். நாங்கள் இருவரும் காலையிலும் மாலையிலும் உலாவப் போகும்போது அடிக்கடி சந்திப்போம்.

ஒருநாள் உச்சிவேளையிலேயே அவர் என் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார். பல விஷயங்களைப்பற்றி என்னிடம் பேசிக் கொண்டிருந்தார். ஏறக்குறையச் சாயங்காலம் வரையில் வழக்கின் வேலை ஒன்றும் செய்யமுடியவில்லை. அவர் திரும்பிப் போகும்போது அடுத்தநாள் வருவதாகக் கூறிப்போனர். அடுத்த நாள் முந்தின நாளைவிட முன்னதாகவே வந்துவிட்டார். பிறகு சம்பந்தா சம்பந்தமில்லாத பேச்சாக நிறையப் பேசிக்கொண்டிருந்தார். அவருக்கு உடம்பு சரியாயில்லை என்ற ஐயம் எழுந்தது. முன் ஒரு நண்பருக்குப் பைத்தியம் பிடித்ததைப் பார்த்திருக்கிறேன். அதே போன்ற குறிகளே இவரிடமும் காணப்பட்டன. அவர் திரும்பிப் போகும்போது நானும் அவருடன் புறப்பட்டேன். அவர் வீடு வரையில் சென்றேன். அங்கே விசாரித்ததில் பல நாட்களாக இரவில் அரிதாகத்தான்

தூங்குகிறார் என்பதும் இராப்பகலாக ஏதாவது பேசிக்கொண்டே இருக்கிறார் என்பதும் தெயரிவந்தன. என்னுடைய ஐயம் மேலும் பெருகிற்று. மூன்றாம் நாள் அவர் முற்றிலும் பைத்திய மாகிவிட்டார் என்பதைக் கண்டேன். நான் அவர்கூடவே இருக்கலானேன். அவருடைய சகோதரர் தந்தி கொடுத்து அழைக்கப்பட்டார். நாளுக்கு நாள் அவருடைய நிலைமை கெட்டு வந்தது.

ஒரு நாள் அவர் தம்முடைய பெட்டியைத் திறந்து தம் வக்கீல் அங்கியை வெளியே எடுத்து அதைத் துண்டு துண்டாக கிழித்து எறிந்துவிட்டார். பல்கலைக் கழகத்துப் பரீக்ஷையில் அவருக்குத் தங்கப் பதக்கம் ஒன்று கிடைத்திருந்தது. அதையும் அவர் அதேபோல எடுத்து விட்டெறிந்துவிட்டார். தம் சிறிய பெண்ணை-அவள் தான் அவருக்குக் கடைசிக் குழந்தை-அடித்துக் கொல்லக் கிளம்பிவிட்டார்.

நாங்கள் மிகவும் கலவரமடைந்தோம். அங்கே என்ன வைத்தியம் செய்ய முடியுமோ அத்தனையும் செய்யப்பட்டது. ஆனாலும் அவரைப் பட்னாவிற்கு அழைத்துச் செல்வதுதான் நலமென்று கருதினோம். மூன்று நான்கு நாட்களில் ஏதோ சிறிது நலமாயிருப்பதாகத் தென்பட்டார். நான் அவருடன் பட்னாவுக்குப் போவதென்றும், அதற்கு அடுத்த நாள் அவரு டைய தம்பி ஜகநாத்ஜீ குடும்பத்தை அழைத்துக் கொண்டு பட்னாவிற்கு வருவதென்றும் முடிவு செய்யப்பட்டது. ஹைகோர்ட் டின் விடுமுறையும் முடிந்துவிட்டது. நாங்கள் இருவரும் எப் படியும் பட்னாவுக்குச் சென்று ஆகவேண்டும். விடுமுறை முழு வதையும் நான் பிரயாகிலேயே கழித்துவிட்டதால் என் குடும்பத் தாரைப் பார்க்கவே இல்லை. ஏனெனில் என் குடும்பத்தார் சப்ரா விலாவது எங்கள் ஜீராதேயி கிராமத்திலாவதுதான் இருந்து வந் தார்கள். என்னுடன் பட்னாவில் வசிக்கவில்லை. விடுமுறையின் இறுதியில் மூன்று நான்கு நாட்களுக்கு ஊருக்குச் சென்று அவர் களைப் பார்த்து வரலாமென்று நினைத்திருந்தேன். ஆனால் வைத்தியநாத் பாபூவுக்கு உடம்பு சரியாக இல்லாததால் நான் அந்த எண்ணத்தைத் துறந்துவிட வேண்டி வந்தது.

நாங்கள் இருவரும் பிரயாகிலிருந்து பட்னாவுக்குப் புறப்பட்ட போது வைத்திநாத் பாபூ முற்றிலும் உடல் நலம் உற்றவராகக் காணப்பட்டார். உடை முதலியவற்றை ஒழுங்காக அணிந்து கொண்டு நல்ல அறிவுடன் பேசிக்கொண்டு என்னுடன் ரயிலில் ஏறினார். வழியில் என்னைப் பார்த்து, "ஊருக்குப் போக

வேண்டுமென்று இருந்தீர்களே, அக்கருத்தை ஏன் விட்டுவிட்டீர்கள் ?'' என்று கேட்டார். மேலும், தமக்கு உடம்பு முற்றிலும் குணமாகிவிட்டது என்றும், கவலைப் படுவதற்கு எதுவும் இல்லை என்றும் கூறினர். முன் நடந்ததைப்பற்றி நினைத்து வருத்தமும் வெட்கமும் படுவது போலக் காணப்பட்டார். நான் ஊருக்குப் போகலாமென்றும் தாம் பாட்ன போய்ச் சேர்ந்துவிடுவதாகவும், இதற்குத் தடை எதுவும் இல்லை என்றும் கூறினர்.

அவருடைய பேச்சைக் கேட்டு நான் பெருமகிழ்ச்சியடைந்தேன். அவருக்கு உடல் முற்றிலும் நலமாகிவிட்டதென்ற நம்பிக்கை உண்டாகிவிட்டது. பைத்தியக்காரர்களின் பித்தந் தெளிந்த இடைப் பொழுதின் இரகசியம் எனக்கு அதுவரையில் தெரியாது. காசி ஸ்டேஷனில் அவரைப் பட்ன வண்டியில் ஏற்றிவிட்டு நான் சப்ரா வண்டியில் ஏறிச் சப்ராவிற்குச் சென்றுவிட்டேன். அடுத்த நாள் காலை அவர் பட்ன போய்ச் சேர்ந்த போது அவருடைய நிலைமை முன்னிருந்தது போலவே முழுப் பைத்தியமாகிவிட்டது. ஸ்டேஷனிலிருந்த ரயில்வே வேலைக்காரர்கள் அவரைத் தெரிந்து கொண்டார்கள். இப்படிப்பட்ட நிலையில் அவரைக் கண்டதும் அவருடைய நண்பர்கள் சிலருக்குத் தகவல் அனுப்பினர்கள். அவர்கள் வந்து அவரை எப்படியோ ஒருவிதமாக வீட்டிற்கு அழைத்துச் சென்றூர்கள். அடுத்தநாள் நான் பட்னவுக்குத் திரும்பி வந்ததும் அவரை மிகவும் கேடுற்ற நிலையில் கண்டேன். நான் பெரிய தவறு செய்துவிட்டேன் என்று நினைத்து மிகவும் வருந்தினேன். என்னைக் கண்டவுடன் அவர் விழுந்து விழுந்து சிரித்தார். ''நீங்கள் உங்களை மிகக் கெட்டிக்காரர் என்று நினைத்துக் கொண்டு என்னைக் காவலில் வைப்பதற்காக ஜகந்நாத்ஜீயுடன் கூடிச் சூழ்ச்சி செய்து என்னுடன் வந்தீர்களே, எப்படி உங்களை ஏமாற்றி வித்தை காட்டி முட்டாளாக்கிவிட்டேன் பார்த்தீர்களா ?'' என்றூர். இதைச் சொல்லிவிட்டு மறுபடியும் அதே அர்த்தமில்லாத பிதற்றலை ஆரம்பித்துவிட்டார்.

பட்னவிலும் அவரை விடாமல் கவனித்து வந்தோம். ஆனல் அவர் ஒருபொழுதும் முற்றிலும் நலமடையவில்லை. சில சமயங்களில் நலமாகி விடுவார் ; கோர்ட்டுக்குக் கூடப்போய் வருவார். நானும் அவரும் சேர்ந்து வெளியிட்டுவந்த ''பட்ன-லா-வீக்லி '' யை வெளியிடுவதிலும் ஈடுபடுவார். ஆயினும் நோய் பற்றிக் கொண்டேதான் நின்றது. சில நாட்களுக்குப் பிறகு அவர் ஒரு நாள் திடீரென்று இறந்து போனர். அவருடைய சாவினல்

உண்டான அதிர்ச்சி என் உள்ளத்தில் கடுமையாகப் பட்டது. ஆனால் அவர் இருந்த நிலையில், உயிருடன் இருப்பதைவிட சாதலே எவ்வளவோ நன்று என்று இருந்தது. அவருக்கு இச்சாவு ஒரு விதத்தில் விடுதலையே ஆயிற்று. அவருக்கு என் மேல் எவ்வளவு பிரியம் இருந்தது! எனக்கு எத்தனை உதவி புரிந்திருக்கிறார்! அவை நினைவுக்கு வரும்போது இன்றுகூட துக்கம் வருகிறது. மேலும் அவருக்கோ அவருடைய குடும்பத்திற்கோ நான் ஒன்றும் செய்ய முடியாமல் போயிற்றே என்று இப்போதுகூட மனம் துன்புறுத்துகின்றது.

## 26. முதல் மகாயுத்தத்திற்குப் பின்

1918 நவம்பரில் ஐரோப்பிய மகாயுத்தம் முடிந்தது. 1917இல் இருந்தே இந்தியாவில் அரசியல் எழுச்சியின் அலைகள் கிளம்ப ஆரம்பித்துவிட்டன. பத்திரிகைகளுக்குச் செய்திகள் மிகக் குறைவாகவே கொடுக்கப்பட்டுவந்தாலும், மேலும் எந்தக் கூட்டத்திலும் சொற்பொழிவு ஆற்றக்கூடாதென்று எங்களுக்குத்தடை போடப்பட்டிருந்தாலுங்கூட, சம்பரானுக்குக் காந்திஜீ எழுந்தருளியது, அவர் குடியானவர்களுக்குத் தொண்டு புரிந்தது ஆகியவற்றின் சாயல் நாலா பக்கத்திலும் நன்கு படிந்து வந்தது. ஸ்ரீமதி அன்னி பெஸண்டு ஹோம் ரூல் லீகை அமைத்து, 1917இல் நாடெங்கும் அமளியைக் கிளப்பிவிட்டுவிட்டார். பெரும்பாலும் எல்லா மாகாணங்களிலுமே அதன் கிளைகள் அமைக்கப்பட்டன. இதன்மேல் அவ்வியக்கம் மேலும் வேகம் கொண்டது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தம்முடைய இருதலைக் கொள்கையை 1917இலும் கையாண்டு வந்தார்கள். ஒரு பக்கத்தில் அவர்கள் இத்தகைய இயக்கத்தின் முன் அணித் தலைவர்களை கண்காணுமல் அடைத்தார்கள். மற்றொரு பக்கத்தில் புதிதாக நியமிக்கப்பட்ட இந்தியா செக்ரடரியான ஸ்ரீ மாண்டேகு பார்லிமெண்டின் முன் ஓர் அறிக்கை செய்தார். அதில் இந்தியாவுக்கு மெல்ல மெல்ல ஆட்சி உரிமை அளிக்கப்படுமென்று வாக்களிக்கப்பட்டது. ஆனால் அது எப்போது என்பதையும் எவ்வளவு அதிகாரம் இந்தியர்கள் கையில் வரும் என்பதையும் பார்லிமெண்டு தான் முடிவு செய்ய முடியும். இதன் பிறகு ஸ்ரீ மாண்டேகு இந்தியாவிற்கு வந்தார். இங்கேயிருந்த வைசிராய் லார்டு செம்ஸ்

போர்டுடன் சேர்ந்து இந்தியத் தலைவர்களைச் சந்தித்தார். இருவருமாகச் சேர்ந்து ஓர் அறிக்கையைத் தயாரித்தார்கள். அதை அடிப்படையாகக் கொண்டு பார்லிமெண்டு 1920இல் ஒரு சட்டத்தை நிறைவேற்றியது. ஸ்ரீமதி அன்னி பெஸண்டும் சில நாட்களுக்குப் பின் சிறையிலிருந்து விட்டு விடப்பட்டார். அவர் 1917இல் கல்கத்தாவில் நடக்க இருந்த காங்கிரஸின் பேரவைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். எங்கும் பேரார்வம் பொங்கியது. நாங்களும் காந்திஜீயோடு கூடவே காங்கிரசுக்குச் சென்றோம். சேட் ஜம்நாலால்ஜீயுடன் அங்கே தான் முதன் முதல் பழக்கமாயிற்று. அவர்தாம் காந்திஜீ தங்குவதற்கு இடம் முதலான ஏற்பாடுகளைச் செய்தார். காந்திஜீயுடன் வேலை புரிந்துவந்த பீகாரிகள் அனைவரும் அதே வீட்டில் சேட்ஜீயின் விருந்தினராக அமைந்தோம். இன்னும் பல பீகாரிகளும் எங்கள் கூடவே வந்து அங்கே தங்கினார்கள். அவர்கள் விருந்தினர்களுக்கு விருந்தினராக அமைந்தனர். ஜம்நாலால்ஜீயின் விருந்தோம்பலை ஏற்பதற்கு அவ்விடத்தில் தான் முதன் முதல் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

ஜெர்மன் போரின் போது அரசாங்கத்திற்கு இந்தியா உதவி புரிந்தது. அதை அரசாங்க ஊழியர்கள் அனைவரும் பிரமாதமாக பறைசாற்றி வந்தார்கள். ஆனால் மக்களும் கவுன்ஸிலின் உறுப்பினர்களும் தாமாக முன் வந்து அளித்த உதவியைத் தவிரப் பலவந்தம் செய்தும் அதிக உதவி சேகரிக்கப்பட்டது. இது காரணமாக நாட்டில் மிக்க மனக்குமுறல் பரவியது. பஞ்சாபில் அக்காலத்தில் சர் மைக்கேல் ஓ டையர் என்பவர் லெப்டினண்டு கவர்னராக இருந்து வந்தார். அவர் ஒரு தன் முனைப்பான சிவிலியன் (ஐ. சி. எஸ். காரர்). அவர் படைக்கு ஆள் சேர்ப்பதிலும் பணம் திரட்டுவதிலும் மிகவும் கடுமை செலுத்தி வந்தார். இது பஞ்சாபில் மிகவும் கொடுமை விளைவித்தது. அங்குள்ளவர்கள் ஹிந்து, முசல்மான், சீக்கியர் அனைவருமே மிகவும் துன்புற்றிருந்தார்கள். பஞ்சாபில் மட்டும் அன்றி இன்னும் மற்ற இடங்களிலும் நிறைய அருவருப்பு இருந்து வந்ததென்று அரசாங்கத்தாருக்குத் தெரியும். சண்டை தொடங்கியதுமே, வெளி நாடுகளில் இருந்த இந்தியர்கள் சிலர் இந்தச் சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு இந்தியாவில் கலகம் விளைவிக்க வேண்டுமென்ற முயற்சியில் தலைப்பட்டிருந்தார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் ஏதோ செய்யவும் செய்தார்கள். தங்கள் கலீபாவான துருக்கி பாதுஷா சண்டை

யில் ஜெர்மெனியின் பக்கத்தில் சேர்ந்துவிட்டதைப்பற்றி முசல்மானியர்களிடையில் மிகவும் மனக்குழப்பம் ஏற்பட்டிருந்தது. துருக்கியின் படையை எதிர்ப்பதற்காக ஏராளமான முசல்மானியரைக் கொண்ட இந்திய படை அனுப்பப்பட்டிருந்தது. இவ்விஷயத்தைப் பற்றியும் முசல்மானியர்களுக்கிடையில் கொந்தளிப்பு உண்டாகியிருந்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இவ்விதமான காரணங்களுக்கெல்லாம் வயப்பட்டுத் தம் இருதலைக் கொள்கையை நடத்திவந்தார்கள். முசல்மானியரைத் திருப்தி செய்வதற்காக எத்தனையோ வாக்குகள் அளித்தார்கள். அவற்றுள், அவர்களுடைய புண்யஸ்தலங்களைப் பாதுகாத்தல், துருக்கியின் வலிமைக்கும் நாட்டிற்கும் அதிகச் சேதம் விளைவிக்காமலிருத்தல் என்பனவும் அடங்கியிருந்தன. மற்றொரு பக்கத்தில், சண்டையின் முடிவுக்குப்பின் ஆறுமாத காலம் மட்டுமே தொடர்ந்து நிலைத்திருக்கக்கூடிய "இந்தியா பாதுகாப்புச் சட்ட"மானது மேலும் தேவையாயிருக்கும் என்று அரசாங்கத்தார் எண்ணி வந்தார்கள். ஏனெனில் அது இல்லாவிட்டால், அவர்கள் கண்காணுக் காவலில் வைத்திருந்த எத்தனையோ பெயர்களை விடுதலை செய்யவேண்டிவரும். நாட்டில் நிலவியிருக்கும் வெறுப்பானது கோரமான வடிவம் பூண்டு எழுந்தால் அதைக் கட்டுப்படுத்துவதற்கு ஏதாவது வேறொரு வழி செய்தாக வேண்டும். கோர்ட்டில் வழக்குத் தொடுத்தால் அங்கே சாட்சி திரட்டிக் கொண்டுபோய் நிற்கும் நெருக்கடியிலிருந்து தப்புவதற்கு அவ்வழி உதவியாக அமையவேண்டும் என்றெல்லாம் எண்ணி வந்தார்கள். இத்தகைய வழியைத் தேடித்தருவதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டது. அதற்கு லண்டன் ஹைகோர்ட்டில் நீதிபதியாக இருந்த ஸிட்னி ரௌலட் என்பவர் தலைவராக அமைந்தார். இந்தக் குழு ஓர் அறிக்கையைத் தயாரித்தது. அதில் இந்திய சதியாலோசனைகளின் வரலாற்றை எடுத்துக்கூறி, சதியாலோசனைக்காரரின் தொல்லையைத் தடுக்கும் பொருட்டும், இந்தியாவைக் கலகங்களிலிருந்து பாதுகாக்கும் பொருட்டும் சட்டத்திற்கு உட்பட்ட முழு அதிகாரம் அரசாங்கத்தார் கையில் இருக்கும்படி செய்வதான சட்டம் ஒன்று தேவை என்று எடுத்தோதப் பட்டது. இதன் பொருள் என்னவென்றால், சண்டையின் நெருக்கடியான நிலைமையைச் சமாளிப்பதற்காக "இந்திய பாதுகாப்புச் சட்டத்"தின் மூலமாக அளிக்கப்பட்டிருந்த அத்தனை அதிகாரங்களும் அப்படியே இருக்கவேண்டும் என்பதுதான். இவ்வண்ணமாக ஒருபுறத்தில் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்

திருத்தத் திட்டம் 1917ஆம் ஆண்டு நடுவிலும், மற்ருெரு புறத்தில் ரௌலட் அறிக்கை 1918 முடிவிலும் வெளிவந்தன.

## 27. ரௌலட்டு மசோதா எதிர்ப்புக் கிளர்ச்சி

ரௌலட்டு அறிக்கை வெளியானதுமே நாடு முழுவதும் மனக்குறை உண்டாயிற்று. அது முன்னமே கனிந்து கொண்டிருந்த மனக்குறையின் மேல் வார்த்த நெய் போலாகி அதைக் கொழுந்து விட்டெரியச் செய்தது. சம்பரானிலிருந்து திரும்பி வந்தபின் நான் என் வக்கீல் வேலையில் ஈடுபட்டு விட்டேன். ஏழெட்டு மாதங்கள் அங்கே இல்லாமற் போன போதிலுங்கூட அதில் ஒன்றும் குறைவுபடவில்லை. 1918இலும் 1919இலும் ஹைகோர்ட்டில் மிகவும் மும்முரமாக வேலை செய்து வந்தேன். வழக்குகளும் பணமும் நிறையக் கிடைத்து வந்தது. காந்திஜீ சம்பரானில் ஒருமுறை எங்களைப் பார்த்து, "நீங்கள் சம்பரானில் உண்மையுடன் பணி ஆற்றுவீர்களானுல், உங்களுக்கு ஒருவிதமான மூலதனத்தைத் தேடிக் கொள்ளுவீர்கள். அதை வைத்துக் கொண்டு நீங்கள் பின்னுல் நிறைய ஊதியம் எடுக்க முடியும்" என்று கூறியிருந்தார். அங்கே நேர்மையுடன் வாய்மையைக் கடைப்பிடித்தே வேலை நடந்து வந்தது. இன்றுகூட என் கடந்த இருபத்தைந்து ஆண்டு வாழ்க்கையைப் பற்றி எண்ணிப் பார்க்கும்போது, அங்கே தேடிக் கொண்ட மூலதனம் நாளுக்கு நாள் பெருகி வந்திருக்கிறது என்பது எனக்கு நன்கு புலப்படுகிறது. என் வாழ்க்கையில், கடமைக்கு உட்பட்டு எவரையேனும் மிகவும் கடுமையாக எதிர்க்க நேர்ந்தாலும்கூட, அவரும் என் வார்த்தையில் நம்பிக்கை வைக்கிருர் என்ருல் அது அங்கே காந்திஜீ வாய்மையைப் பற்றிக் கற்றுக் கொடுத்த பாடத்தின் பலன்களில் ஒன்றுதான் என்பதை நான் உணர்ந்து பெருமகிழ்ச்சியடைகிறேன். இவ்விதமாக வாய்மையினுல் பொதுவாழ்வில் கிடைத்த ஊதியத்தை அன்றி வக்கீல் வேலையிலும் அதனுல் எப்பொழுதும் லாபமே உண்டாகி வந்தது. நான் வக்கீல் தொழில் புரிந்து கொண்டிருந்த காலத்தில் நீதிபதிகளும் என்மேல் நம்பிக்கை வைத்திருந்தார்கள் என்பதைப் பற்றி நான் பெருமை கொள்கிறேன். ஆங்கில நீதிபதி ஒருவர் இருந்தார். அவருக்கு எதிர்க்கட்சி வக்கீல் சிறிது "சோடை" என்று சில சமயங்களில்

தோன்றினால் அவர் என்னைப் பார்த்து, "நீயே உனக்கு எல்லா வற்றிலும் மிகவும் ஊறுபாடான ஆதாரங்களை எடுத்துக் காட்டி விடு" என்று விளையாட்டாக கூறுவதுண்டு. நான் இதற்கும் தயாராக இருந்து வந்தேன். அப்படிப்பட்ட ஆதாரத்தை எடுத்துக் காட்டி அதை வெட்டிப் பேசுவதற்காக எப்பிரமாணத்தை எடுத்துக்கூற வேண்டுமோ அதையும் சமர்ப்பித்து விடுவேன். பலவீனமான தர்க்கத்தை நான் என்றுமே செய்வதில்லை. வாதாடுவதற்கு இடமில்லாத வழக்குகளை எடுத்துக் கொள்வதே இல்லை. "இந்த வழக்கால் ஆவது எதுவுமே இல்லை; ஆகையால் இதைத் தொடுத்துப் பணத்தை வீணாக்காதே" என்று கட்சிக்காரருக்குத் தெள்ளத் தெளியக் கூறிவிடுவேன். சிற்சில கட்சிக்காரர்கள் வேறு யாரிடமாவது சென்று அப்பீலைப் போட்டுப் பணத்தைச் செலவழித்துத் தோற்றுப் போவார்கள். அப்பீல் செய்ய வேண்டாமென்று என்னால் தடுக்கப்பட்டு, பணத்தையும் காகிதக் கட்டையும் திருப்பிக் கொடுக்கப்பட்ட பின்னர் வேறொருவர் மூலமாக அப்பீல் செய்து தோற்றுப் போனவர்களையும் பார்த்திருக்கிறேன். மேலும் இது போன்ற ஒரு வழக்கையும் கண்டேன். நான் கட்டைத் திருப்பிக் கொடுத்து விட்டேன். ஆனால் வேறொரு வக்கீல் அதை ஏற்றுப் பதிவு செய்தார். ஹைகோர்ட்டிலும் வென்று விட்டார்! இப்படி ஆவது வியப்பன்று. ஏனெனில் வழக்கில் இறங்குவது ஒரு விதத்தில் சூதாட்டம் போன்றதுதான். நான் அவ்வழக்கின் நுட்பமான அம்சங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாமலிருந்திருக்கலாம், அல்லது நீதிபதி ஏமாந்து போய்த் தவறான தீர்ப்பை அளித்திருக்கலாம். இதை இப்படியே விடுவோம்.

நான் வக்கீல் வேலையை மிகவும் மும்முரமாக நடத்தி வந்தேன் ஆயினும் காந்திஜீயின் தொடர்பு விடுபடுவதாக இல்லை. ரௌலட்டு அறிக்கை வெளியான பின் நாட்டில் பெரும் அமளி தலை எடுத்து நின்றது. அதன் தலைமையைக் காந்திஜீ தாமே ஏற்றுக் கொண்டார். பீகாரிலிருந்து திரும்பிச் சென்றதும், காந்திஜீ, கேடாவில் நிலவரி ஏற்றப்பட்டதால் பாதிக்கப்பட்ட குடியானவர்களுக்குத் தலைவராக நின்று கூடுதல் வரியைப் போக்கடித்தார். இதற்காக அங்கே சத்தியாகிரகம் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டி வந்தன. முடிவில் விவகாரம் தீர்ந்து விட்டது. காந்திஜீ கேடாவில் சுற்றி வந்தபோது (1918இல்) நானும் அவருடன் அக் குஜராத்து ஜில்லாவில் இரண்டு மூன்று நாட்கள் சுற்றி வந்தேன். அப்போது ஏப்பிரல் மாதம், நல்ல கோடைகாலம்; வெயில் கடுமை

யாக எரித்துக்கொண்டிருந்தது. அந்தக் கோடையிலும் காந்திஜீ கிராமங்களில் சுற்றி வந்து கொண்டிருந்தார். அக்காலத்தில் அவர் செருப்பு அணிவதில்லை. ஆகையால் மணல் சூடேறியபின் அதன்மேல் வெறுங்காலுடன் நடந்ததினால் அவருக்கு அதிக கஷ்டம் உண்டாயிற்று. ஒருநாள் இப்படி ஒரு காட்சியைக் காண நேர்ந்தது. வெயிலால் தாக்கப்பட்டு அவருடைய பாதம் வெந்து போய்விட்டது. மணல் நெடுந்தொலைவு பரவி யிருந்தது. நான் செருப்புப் போட்டிருந்தேன், ஆகையால் எனக்கு ஒரு துன்பமும் இல்லை. ஆனால் காந்திஜீக்கு அதிகத் துன்பமாயிருந்தது. ஓர் இடத்தில் துணியை விரித்து அதன்மேல் அவரை நிற்கச் செய்து அவரைச் சிறிது இளைப்பாறச் செய்ய விரும்பினேன். அவர் அப்படிச் செய்ய விடவில்லை. அதே யாத்திரையின் போது நான் சர்தார் வல்லபபாயின் கிராமத்திற்குப் போகும் நற்பேறு எனக்குக் கிடைத்தது. கரம்சத் என்பது அதன் பெயர். அப் போது அவருடைய மூதாதையோரின் வீட்டைப் பார்த்தேன். அச்சத்தியாகிரகத்தின் தலைவர் சர்தார் வல்லபபாயி என்றே கூற லாம். அச்சத்தியாகிரகத்தின் மூலமாக அவருக்குக் காந்திஜீயுடன் உண்டான உறவு இன்று வரையில் சிதையாமல் நின்றுவருகிறது. மேலும் நாளுக்கு நாள் இவர்கள் இருவருடைய ஆற்றலும் கூடி நாட்டிற்கு சிறந்த பயன் அளித்து வருகிறது.

கேடா சத்தியாகிரகத்திற்குப்பின், காந்திஜீ, அரசாங்கத் திற்கு உதவி புரிவதற்காகக் கேடா ஜில்லாவின் மக்களைப் படை யில் சேரும்படி புத்திமதி அளித்து வந்தார். அக்காலம் வரையில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேரில் அவருக்கு நம்பிக்கை இருந்து வந்தது. எந்த அரசாங்கமும் சாதாரணமாகத் தவறு செய்யும் என்பதையும், சில சமயங்களில் அக்கிரமும் செய்யும் என்பதை யும் அவர் ஒப்புக் கொண்டார். ஆனால் எல்லா விஷயங்களையும் எண்ணிப் பார்த்தபின் பிரிட்டிஷ் நெறி நியாயத்துடன் கூடியது என்றும் அவர்களிடமிருந்து நியாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கை கொண்டிருக்க வேண்டுமென்றும் முடிவுக்கு வந்திருந்தார். அத னால்தான் அரசாங்கத்திற்கு உதவி புரியும் பொருட்டு மக்களைப் படையில் சேரும்படி புத்திமதி கூறிவந்தார். தம்முடைய வழக்கப் படி அவர் இந்த வேலையிலும் மிகவும் மும்முரமாக ஈடுபட்டுக் கேடாவைச் சுற்றி வந்ததால் அவருடைய உடல்நலம் மிகவும் பாதிக்கப்பட்டது. மிகவும் கடுமையாக நோய்வாய்ப்பட்டு விட் டார். அவருடைய கொள்கையைப் பின்பற்றி, படைக்கு ஆள் திரட்டுவதில் துணை புரிவதற்காகப் பீகாரில் அமைக்கப்பட்ட

போர்டில் நானும் ஓர் அங்கத்தினன் ஆனேன். இப்போது பீகார் கவர்னருக்கு ஆலோசனையாளராக இருக்கும் ஸ்ரீ ரஸ்ஸெல் அக் காலத்தில் அப்போர்டுக்கு அமைச்சராக இருந்தார். காந்திஜீ உயிரைக் குலைத்துக் கொண்டு உழைத்தும்கூட ஆள் சேர்ப்பதில் பெரும் பயன் காணப்படவில்லை. பீகாரிலும் சிறப்பாக எதுவும் செய்ய முடியவில்லை.

மாண்டேகு–செம்ஸ்போர்டு அறிக்கையைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக ஸ்ரீ சையத் ஹஸன் இமாமின் தலைமையின் கீழ் பம்பாயில் நடந்த காங்கிரஸின் விசேஷப் பேரவைக்குக் காந்திஜீ போக இயலாத அளவுக்கு அவருடைய நோய் வலுத்து விட்டது. ஆனால் நான் அதற்குப் போயிருந்தேன். அங்கிருந்து திரும்பி வரும்போது அகமதாபாத்திலும் சபர்மதியிலும் காந்திஜீயுடன் பல நாட்கள் தங்கியிருந்தேன். நான் அவருடைய கருத்தை அறிந்த வரையில், அவர் காங்கிரஸுக்கு வந்திருந்தால் மிதவாதக் கட்சிக்காரர்களுடன் தான் சேர்ந்திருப்பார் என்று கூறமுடியும். காங்கிரஸ் வேலை என்னவோ முடிந்து விட்டது, ஆனால் இரு கட்சியாருக்கும் இடையில் இருந்த கருத்து வேறுபாடு மிகவும் கண்கூடாகிவிட்டது. சிலர் காங்கிரஸை விட்டு விலகுவதற்கும் லிபரல் கட்சிக்காகத் தனிச்சங்கம் ஒன்றை அமைப்பதற்கும் அடிகோலி விட்டார்கள். பம்பாயில் செய்யப் பட்ட முடிவுகளையே காங்கிரஸ் மூன்று மாதங்களுக்குப்பின் தன் வருடாந்தரப் பேரவையில் உறுதிப்படுத்தியது.

பம்பாயிலிருந்து நான் அகமதாபாத்திற்கு வந்தபோது காந்திஜீ அகமதாபாத் பட்டணத்தில் மிர்ஜாபூர் மஹல்லாவில் சேட் அம்பாலால் சாராபாயினுடைய மாபெரும் மாளிகையில் தங்கியிருப்பதைக் கண்டேன். அந்த நாட்களில் சேட்ஜீ தமது புதிய வீடு ஒன்றில் குடியிருந்து வந்தார். இந்த வீடு வெறுமனே இருந்தது. காந்திஜீயின் உடம்பு மிகவும் கேடுற்றிருந்தது. வைத்தியர்கள் பார்த்து வந்தார்கள். ஆயினும் அவர் மருந்து ஒன்றும் உட்கொள்ளவில்லை. மலச்சிக்கல் இருந்தது. காய்ச்சலும் கடுமையாக இருந்தது. சபர்மதியில் ஆச்ரமம் நிறுவப்பட்டாயிற்று. ஆனால் இன்னும் வீடுகள் கட்டப்படவில்லை. ஆயினும் அங்கு இருப்பவர்களின் எண்ணிக்கை பெருகிக்கொண்டு வந்தது. ஒரு நாள் காந்திஜீக்குக் காய்ச்சல் மிகவும் ஏறிவிட்டது. ஆனால் அவர் அதைப் பொருட்படுத்தாமல், “இனி இங்கு இருக்கக் கூடாது, உடனே சபர்மதி ஆச்ரமத்திற்குப் போய்விடுவோம்” என்றார். தோழர்கள் எவ்வளவோ தடுத்தும் அவர் எவர் சொல்லையும் கேட்க

வில்லை. அந்த நிலைமையிலேயே ஆச்ரமத்திற்கு சென்று விட்டார். இது நிகழ்ந்தபோது நான் அகமதாபாத்தின் சிறப்பு வாய்ந்த இடங்களைப் பார்க்கச் சென்றிருந்தேன். திரும்பி வந்ததும், எல்லோரும் ஆச்ரமத்திற்குப் போய்விட்டார்கள் என்பதைக் கேள்விப் பட்டேன். நானும் அன்று சாயங்காலமே அங்கே சென்று விட்டேன்.

அடுத்த நாள் காலை காந்திஜீயின் பக்கத்தில் உட்கார்ந்திருந்தபோது, என்னால் என்றுமே மறக்க முடியாத காட்சி ஒன்றைப் பார்க்கவும் சொற்களைக் கேட்கவும் வாய்த்தது. காந்திஜீக்குக் காய்ச்சல் சிறிது குறைந்திருந்தது. ஆனால், அவர் மிகவும் பலவீனமாக இருந்தார். ஒரு சிறிய அறையில் ஒரு கயிற்றுக் கட்டிலின் மேல் படுத்திருந்தார். தரைமேல் கிடந்த பாயின்மேல் நான் உட்கார்ந்திருந்தேன். அவர் சகன்லால் காந்தியை அழைத்து வரச்சொல்லி அவருடன் பேசலானார். மிகவும் உணர்ச்சி ததும்பப் பேசலானார். அதன் வேகம் தம் மனத்தில் பதியாமல் அங்கு எவரும் இருந்திருக்க முடியாது. எனக்கு குஜராத்தி மொழி சிறிதளவுதான் புரியும். ஆயினும் அவருடைய பேச்சின் உட்கிடக்கையை நான் புரிந்துகொண்டேன். அவர் இவ்விதமாகக் கூறினார். "நேற்றுக் காய்ச்சல் மிகக் கடுமையாக இருந்து கொண்டிருந்தபோது இங்கே வந்துவிட வேண்டுமென்று பிடிவாதமாகக் கூறிறேன். இங்கு வந்து சேர்ந்தபின்தான் காய்ச்சலில் வேகம் குறையுமென்று உணர்ந்தேன். இந்தக் காய்ச்சல் உடலைத்தான் பற்றியிருந்தது. ஆனால் அங்கே, அப்பெரிய மாளிகையில் படுத்துக் கிடக்கக் கிடக்க என் நெஞ்சத்தில் ஒரு பெருந்தீயும் எரிந்து கொண்டிருந்தது. 'ஹே! காந்தி! இத்தனை பெரிய மாளிகையில் உனக்கு என்ன வேலை? நீ இங்கே ஏன் தங்கியிருக்கிறாய்? உன் இடம் ஏழைகளின் குடிசைகளில் அன்றோ இருக்கிறது! ஆச்ரமத்தில் அன்றோ இருக்கிறது! இங்கிருந்து விரைவில் சென்றுவிடு! இப்படிச் செய்யாத வரையில் உனக்கு அமைதி கிட்டாது' என்றெல்லாம் என் சிந்தனை ஓடியது. இக்காரணத்தால்தான் நான் அவ்வளவு பிடிவாதம் செய்தேன். உங்களில் சிலருக்கு இது தப்பாகக் கூடப்பட்டிருக்கும். அங்கிருந்து இங்கு வந்தபின்னும் நான் இரவில் தூங்கவில்லை. இடைவிடாது சிந்தித்துக்கொண்டிருந்தேன். 'என் வாழ்க்கை இப்படியாகவே எதுவும் பயனின்றியே கழிந்து போகுமா?' என்று என்னையே கேட்டுக்கொண்டிருந்தேன். தென் ஆப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்ததி

லிருந்து ஒன்றின்மேல் ஒன்ருக வேலையைக் கையில் எடுத்தேன். எதையும் முற்றிலும் முடிக்கவில்லை. ஒவ்வொன்றையும் அரை குறையாகவே விட்டு வந்தேன். மில் தொழிலாளிகளின் ஹர்த் தால் நடந்தது. அவர்களுடைய கோரிக்கைகள் ஏற்கப்பட்டன என்ற வகையில் அது என்னவோ முற்றிலும் பயனுற்றது. ஆனால் தொழிலாளிகளின் இடையில் இன்னும் அகற்ற வேண்டிய குறைகள் எத்தனையோ இருக்கின்றன. அவர்களுக்குப் பணி ஆற்றி அக்குறைகளை நீக்க முயற்சி செய்ய வேண்டுமென்பது என் ஆசை. ஆனால் அதைச் செய்ய முடியவில்லை; சம்பரானுக் குச் சென்று விட்டேன். சம்பரானிலும் நீலக்காரர்களின் தொல்லையைப் பற்றிய வரையில் அது என்னவோ ஒருவாருக முடிவடைந்தது. ஆனால் அங்கே குடியானவர்களிடையில் எவ்வளவோ வேலை செய்ய வேண்டியிருக்கிறது. அதனால்தான் அங்கே சில பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன. இப்படிப்பட்ட வேலைகளுக்குத் துணையாக நின்று வரலாமென்றும், அந்த ஜில்லாக்களில் இவ்விதமான வேலைகளை தொடங்கி வைத்து அவற்றை மிகவும் மும்முரமாக நடத்திவரலாமென்றும் எனக்கு ஆசை இருந்தது. இவ்வேலைக்காக உண்மையான பற்றுள்ள தியாகிகளும் கிடைத்தார்கள்; இன்னும் பலர் கிடைத்திருப்பார் கள். ஆனால் அதையும் அரைகுறையாகவே விட்டு விட்டு நான் கேடா சத்தியாக்கிரகத்தில் ஈடுபட வேண்டி வந்தது. பிறகு கேடாவில் குடியானவர்களின் வேலை முடிந்ததுமே படைக்கு ஆள் திரட்டும் வேலையில் புகுந்துவிட்டேன். கேடாவிலும் மக்களிடையே பணி ஆற்றுவதற்குத் தேவையிருந்தது. ஆனால் அதையும் முற்றிலும் செய்யவில்லை. இதற்குள் நான் நோய்வாய்ப்பட்டு விட்டேன். இந்நோயிலிருந்து தப்பி எழுந் திருப்பேனே என்னவோ தெரியாது. அப்படியே முடியுமென்ரு லும் எப்போது என்று நிச்சயமில்லை. என்னுடன் தென்னுப் பிரிக்காவிலிருந்தே வேலை செய்து வரும் நீங்களும் என்னுடைய இந்நிலையால் எவ்வேலையிலும் நிலைநின்று அதைச் செய்து முடிக்க இயலவில்லை. உங்களுடைய உடல் நலமும் கெட்டு விட்டது. இந்த ஆச்ரமத்தை நான் பெரும் நம்பிக்கையும் உயர்ந்த நோக்கமும் கொண்டு நிறுவினேன். ஆனால் இதற்கும் இதுவரையில் எனக்குப் பொழுதில்லை. சம்பரானில் இருந்த படியே இதன் திறப்பு விழாவுக்கு ஆசிமொழி அனுப்பி வைக்க வேண்டி வந்தது; அப்போது நான் வரமுடியவில்லை. அன்றி லிருந்து இன்று வரையில் நான் ஏதாவது ஒரு வேலையில் சிக்கிக்

கொண்டு வெளி ஊர்களிலேயே இருந்துவிட்டேன். இப்போதோ என் நிலைமை இப்படி இருக்கிறது. கடவுளின் திருவுள்ளம் என்னவென்பது தெரியாது.''

இப்படியாகப் பேசிக்கொண்டே அவர் பொலபொலவென்று கண்ணீர் விட்டு அழ ஆரம்பித்தார். சிறிது நாழிகை வரையில் இப்படி அழுதுகொண்டிருந்தார். நாங்கள் இருவர்தாம் அங்கே இருந்தோம். அவரை அமர்த்த வேண்டுமென்றால் எப்படிச் செய்வது? அவருடைய உள்ளத்திலிருந்த தீயானது கொந்தளிக்கும் நீராவியாக மாறிக் கண்ணீர் வடிவமாக வெளிப்படுகின்றதென்பதை உணர்ந்தோம். சிறிது நாழிகைக்குப் பிறகு அவர் தாமாகவே அடங்கிவிட்டார். ''இத்தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது; இரவு முழுவதும் நான் தூங்கவில்லை; சிறிது கண்ணீர் பெருக்கெடுத்தபின்தான் அது சற்று அடங்கியிருக்கிறது'' என்று அவர் கூறினர். இதன்பின் அவர் சிறிது பொழுது மௌனமாக இருந்தார். நானும் பேசாமல் உட்கார்ந்திருந்தேன். இறைவனே என்மேல் திருவுளங்கொண்டு பேரருள் புரிந்தார் என்று நான் எண்ணினேன். அதனால்தான் இப்பேர்ப்பட்ட மகானின் தொடர்பு எனக்குக் கிட்டியது என்று நான் நினைத்துக் கொண்டு அங்கு வீற்றிருந்தேன். பிறகு அவரிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு இரண்டொரு நாட்களுக்குப்பின் என் தொழிலுக்குத் திரும்பி வந்துவிட்டேன்.

சிற்சில சமயங்களில் எமனைக்கூட எட்டிப் பார்க்கும் அளவுக்குக் கடுகையாகிவிட்ட இந்த நோயிலிருந்து விடுபட்டு எழுந்த பிறகு அவர் ரௌலட்டு சட்டத்தை எதிர்க்கப் போராடும் இயக்கத்திற்குத் தலைமை பூண்டார். ரௌலட்டு குழுவின் அறிக்கை வெளியானபின், சில நாட்களுக்குள்ளாகவே அரசாங்கத்தார் அதன் சிபார்சின்படி இரண்டு மசோதாக்களைத் தில்லி இம்பீரியல் கவுன்ஸிலின் முன் கொண்டு வந்தார்கள். அவற்றின் மூலமாக அரசாங்கத்திற்கு மிகவும் பரந்ததும் கொடூரமுமான அதிகாரம் கிட்டும். எவரை வேண்டுமானாலும், கோர்ட்டின் முன் கொண்டு போகாமலே கண்காணுச் சிறையில் வைத்து வரலாம். யுத்த காலத்தில் சுயராஜ்யத்தைப் பற்றிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பெயரில் அளிக்கப்பட்ட வாக்குகளை நிறைவேற்றுவதற்காக எதுவும் ஏற்பாடுகள் செய்து வருவதாகத் தென்படவில்லை என்பதையும், அதற்கு மாருக இக்கடுஞ்சட்டம் தம் தலைமேல் சுமத்தப்படுகிறது என்பதையும் பொதுமக்கள் கண்டார்கள். நாடெங்கும் கொந்தளிப்பு பிறந்துவிட்டது. எங்குப் பார்த்

தாலும் எதிர்ப்புக் கூட்டங்கள் நடைபெற ஆரம்பித்தன. கவுன்ஸிலில் அரசாங்கத்து அங்கத்தினர் அல்லாதவர்கள் அனைவரும் இந்த மசோதாக்களைக் கடுமையாக எதிர்த்தார்கள். ஆனால் அவர்கள் கூறியதை யார் கேட்டார்கள்? இறுதியில் ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டுவிட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திய அங்கத்தினர்கள் எல்லாரும் அதை எதிர்த்தார்கள். ஆனால் அரசாங்க ஊழியர்கள், அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அங்கத்தினர்கள் ஆகியவர்கள் உடன்பாட்டைக் கொண்டு அது பெருமனமொப்புடன் நிறைவேற்றப்பட்டு விட்டது. இச்சட்டம் நிறைவேற்றப்பட்டால் நாங்கள் இதை ஏற்கமாட்டோம் என்றும், சத்தியாக்கிரகம் செய்வோம் என்றும் காந்திஜீ முதலிலேயே அறிவித்திருந்தார்.

நாடெங்கும் மூலைக்கு மூலை அக்காலத்தில் நடந்து வந்த எதிர்ப்புக் கூட்டங்கள் ஒரு புது விழிப்பையும் புத்துணர்ச்சியையும் தோற்றுவித்தன. இத்தனை பல்வேறு வகுப்பினர், பல்வேறு சாதியினர், பல மதத்தினர் ஒருங்கு கூடி இவ்வளவு பெருந்தொகையாகக் கூடியதுபோல இதற்குமுன் என்றுமே கண்டதில்லை என்றே கூறலாம். ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டதுமே காந்திஜீ தாம் வாக்களித்தபடியே சத்தியாக்கிரகத்தின் பேச்சைக் கிளப்பினர். நாட்டில் எழும்பிய புயலின் முனையைக் கண்டு அரசாங்கத்தார் மற்றொரு மசோதாவை மேற்செல்லவிடவில்லை. அதை மீட்டுக் கொள்ளவும் இல்லை. இப்படியாக அது தொங்கிக் கொண்டிருந்தது. நிறைவேற்றப்படவுமில்லை; தள்ளப்படவுமில்லை. ஒழுங்கு முறைப்படி, சில நாட்களுக்குப் பிறகு தானே விழுந்துவிட்டது போலும்! ஆனால் நிறைவேற்றப்பட்ட மசோதா சாமான்யப்பட்டது அன்று. அதைக்கொண்டு அரசாங்கத்தாரின் காரியம் நடைபெற்றுவிடும். அச்சட்டம் நிறைவேற்றப்பட்டாலும் கூட, அப்போது தலையெடுத்து நிலவிய அமளியின் பயனாக அது நடைமுறைக்குக் கொண்டுவரப்படவில்லை. சில ஆண்டுகளுக்குப் பின் அதுவும் தள்ளுபடி ஆகிவிட்டது.

# 28. ஏப்பிரல் ஆரும் தேதியும் ராணுவச் சட்டமும்

காந்திஜீ அதே காலத்தில் "யங் இந்தியா"வின் ஆசிரியர் வேலையைத் தாமே எடுத்துக்கொண்டார். ஒவ்வொரு வாரமும் அவருடைய கட்டுரை அதில் வந்து கொண்டிருந்தது. அது நாடெங்கும் ஒரு கிலுகிலுப்பை உண்டாக்கி வந்தது. அவர் அஹிம்சாமயமான சத்தியாகிரகத்தின் சங்கொலியை எழுப்பினர். நாடு எங்கும் மக்கள் உண்ணுவிரதம் இருப்பதற்கு ஒரு நாளையும் குறிப்பிட்டார். அன்று அனைவரும் கோவில்களுக்கோ மசூதிகளுக்கோ சென்று வழிபட வேண்டுமென்றும், ஊர்வலம் நடத்தி மாலையில் கூட்டம் கூட்டி அனைவரும் "கருப்புச் சட்டத்தை" எதிர்க்க வேண்டுமென்றும் திட்டம் வகுத்துக் கொடுத்தார். எதிர்ப்புக் கூட்டங்கள் முன்னிருந்தே நடந்து வந்தன. ஆனால் இந்நாளுக்கு ஒரு தனிப்பெரும் சிறப்பு அமைந்தது. இதற்கு முன்னே நடத்தி வந்திருந்த கிளர்ச்சியால் நிலம் பண்படுத்தப்பட்டிருந்தது. அன்று ஹர்த்தால் மிகவும் மும்முரமாக நடந்தது. இதற்கு முன் இப்படிப்பட்ட ஹர்த்தாலை என்றுமே கண்டதில்லை. நகரங்களில் கடைகள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்தன. வண்டிகளின் போக்கு வரவும் நின்றுவிட்டன. கிராமங்களில் அன்று மாட்டு வண்டி கட்டுதல், ஏர் பூட்டுதல் முதற்கொண்டு எல்லாம் நின்றுவிட்டன. இந்த ஆணை எப்படிக் கிராமங்கள் முழுவதும் எட்டியது என்பதைக்கூற முடியாது. அப்போது காங்கிரஸ் நிலையம் அவ்வளவு பரவியில்லை; மேலும் அந்த ஆணையை நெடுந்தொலைவிலுள்ள கிராமங்கள் எல்லாவற்றிற்கும் எட்டச் செய்வதற்கு அதற்கு அத்தனை ஆற்றலும் இல்லை. அப்படியிருந்தும்கூட இந்த அற்புதக் காரியம் நிகழ்ந்தது.

பட்ணுவின் எதிர்ப்புக் கூட்டங்களை அமைப்பது முதலிய வேலைகளில் மூழ்கிப் பணியாற்றி வந்தேன். காந்திஜீயின் கடிதங்களும் அவ்வப்போது வந்து கொண்டிருந்தன. ஆனால் முக்கிய விஷயங்கள் எல்லாம் "யங் இந்தியா" மூலமாகத்தான் கிடைத்தன. ஸ்ரீ மஜஹர்-உல்-ஹக் சாஹபும், ஸ்ரீ சையத் ஹஸன் இமாமும் மிக்க சிரத்தை எடுத்து வந்தார்கள். மஜஹர்-உல்-ஹக் சாஹப் அக்காலத்தில் தில்லி கவுன்ஸிலுக்குப் போயிருந்தார்; ஆனால் ஹஸன் இமாம் சாஹபு கூட்டங்களுக்குத் தவருது வந்து கொண்

டிருந்தார். அன்றைய ஹர்த்தாலைப் பற்றி முன்னதாகவே எல்லாக் கடைக்காரர்களுக்கும் சொல்லப்பட்டிருந்தது. எல்லாரும் ஒத்துக் கொண்டார்கள். ஆனால் ஒரு பெரிய கடைக்காரர் மட்டும் ஒப்பவில்லை. இச் செய்தி ஹஸன் இமாம் சாஹபுக்கு எட்டியது. அவர் என்னுடன் அக் கடைக்காரரின் கடைக்குச் சென்றார். அங்குப் போய்ச் சேர்ந்ததும், அவர் தம் தொப்பியைக் கழற்றி அக் கிழட்டுக் கடைக்காரரின் பாதத்தில் வைத்தார். அக் கடைக்காரர் திகைத்துப் போய்விட்டார். "நீங்கள் ஏன் இப்படிச் செய்தீர்கள்? தங்களுடைய ஆணையே எனக்குப் போதுமே!" என்று பதறினர். இதனால் நகரம் முழுவதிலும் ஒரு கடைகூடத் திறக்கப்படவில்லை. அது ஹிந்துவின் கடை ஆயினும் சரி, முசல்மானியரின் கடை ஆயினும் சரி, பொன் வெள்ளிக் கடை ஆயினும் சரி, கறிகாய்க் கடை ஆயினும் சரி எல்லாம் அடைபட்டுக் கிடந்தன. அன்று புறப்பட்ட ஊர்வலமும் அற்புதமாக இருந்தது. குல்ஜார் நந்தவனத்திலிருந்து பொதுக்கூட்டம் நடைபெறவிருந்த ஊர் மதில் சுவர் வரையில் ஊர்வலம் நெடுந்தூரம் கிடந்தது. எல்லோருக்கும் முன்னால் ஹஸன் இமாம் சாஹபு வெறுங்காலுடன் நடந்தார். அவரை அடுத்து நாங்கள் இருந்தோம். கோட்டையின் சிறிய திடலில் நடப்பதாக இருந்த கூட்டத்தை அங்கே நடத்த முடியவில்லை. அங்கே இடம் போதவில்லை. கங்கைக் கரையில் மணல் வெளியில் கூட்டத்தை நடத்தவேண்டி வந்தது. இவ்வளவு பெரிய திரள் எங்காவது போலீசுடன் கை கலந்து விடுமோ என்று நாங்கள் எல்லாரும் அஞ்சினோம். ஆனால் அப்படி ஒன்றும் ஆகவில்லை. பெரும் அமைதியுடனும் உற்சாகத்துடனும் அன்றைய வேலை முடிந்தது.

சத்தியாகிரகிகளிடமிருந்து வாக்குறுதிப் பத்திரத்தில் அவர்களின் கையொப்பத்தை வாங்க வேண்டுமென்று காந்திஜீ சில நாட்களுக்கு முன்னமே எழுதியிருந்தார். அதில், அவர்கள், தாம் அஹிம்சையைப் பேணி நிற்போம் என்றும், மேலும் இவ்வேலைக்காகத் தனிப்பட அமைக்கப்பட்ட குழுவானது அரசாங்கத்தின் எச்சட்டங்களை எதிர்ந்து முறியடிக்க வேண்டுமென்று ஆணையிடுமோ, அச்சட்டங்களுக்குப் பணிய மாட்டோம் என்றும், அதனால் விளையும் தண்டனையைப் பெருமகிழ்ச்சியுடன் துய்க்கவும் தயாராயிருப்போம் என்றும் எழுதிக் கையொப்பமிட வேண்டுமென்று காந்திஜீ கூறியிருந்தார். ஆனால் அக் குழு அப்படிப்பட்ட சட்டங்களை இன்னும் குறிப்பிடவில்லை. இந்த வாக்குறுதிப் பத்திரத்தை மிதவாதக் கட்சிக்காரர்களும் செய்தித்

தாள்களும் கண்டனம் செய்தனர். ஆனால் காந்திஜீ அசைய வில்லை. பீகாரில் அவ்வாக்குறுதிப் பத்திரம் என்னிடம்தான் வந்தது. அதில் ஹசன் இமாம் சாஹப் கையெழுத்திட்டார். நானும் இன்னும் சிலரும்கூட ஒப்பமிட்டோம்.

ஏப்பிரல் 6ஆம் தேதி ஹர்த்தாலும் கூட்டங்களும் நாடெங்கும் மிகவும் வெற்றிகரமாகவும் சிறப்பாகவும் நடந்தேறின. தில்லியில் நடந்த கூட்டம் மிகவும் வியக்கத்தக்கதாக இருந்தது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையானது இருதரத்தாரும் தோளுக்குத் தோள் நின்று அரசாங்கத்தின் துப்பாக்கிக் குண்டுகளை ஏற்கும் அளவுக்கு வளர்ந்துவிட்டது. ஊர்வலத்தின் தலைவர், சுவாமி சிரத்தானந்த்ஜீ, வேண்டுமானல் அரசாங்கத்தார் தம்மைச் சுடட்டும் என்று கூறித் தம் மார்பைத் திறந்து காட்டி நடந்தார். முசல்மானியர்களின் உள்ளத்தில் இச் செயல் ஆழ்ந்து பதிந்தது. அவர்கள் சுவாமி சிரத்தானந்தரைத் தூக்கிச் சென்று ஜுமா மசூதியில் சொற் பொழிவு ஆற்ற வைத்தார்கள். அங்கே நிகழ்ந்த சிறிய கலகத்தை அமைதிப் படுத்துவதற்காகக் காந்திஜீ தில்லிக்குப் புறப்பட்டு வந்தார். ஆனல் வழியிலேயே, தில்லிக்கு அருகில் உள்ள பல்வல் ஸ்டேஷனில், அரசாங்கத்தாரின் உத்திரவுப்படி ரயிலில் இருந்து இறக்கப்பட்டு மறைவான ஓர் இடத்திற்கு அனுப்பப்பட்டு விட்டார். அவருடன் இருந்த ஸ்ரீ மகாதேவ் தேசாய் பம் பாய்க்குத் தனியாகத் திரும்பச் சென்றுவிட்டார். வழியிலேயே அவர் எனக்கு ஒரு தந்தி கொடுத்து, காந்திஜீ கைது செய்யப்பட்டு மறைவான இடத்திற்கு அனுப்பப்பட்டு விட்டார் என்றும், நான் உடனே புறப்பட்டுப் பம்பாய்க்கு வந்து தம்மைச் சந்திக்க வேண்டுமென்றும் அறிவித்தார். தந்தி கிடைத்ததும் நான் பம்பாய்க்குப் புறப்பட்டு விட்டேன். வழியில் கிடைத்த செய்தித் தாள்களிலிருந்து அநேக இடங்களில் இச் செய்தி எட்டியதுமே கலகங்கள் மூண்டு விட்டன என்பது தெரிய வந்தது. அவைகளில் பஞ்சாபின் பல நகரங்களும், அகமதாபாத் தும் பம்பாயும் உட்பட்டிருந்தன. இரண்டு நாட்களுக்குப் பின் நான் பம்பாயை அடைந்தபோது அங்கே அதற்குள் அமைதி நிலவிவிட்டது. காந்திஜீ பல்வலில் இருந்து பம்பாய்க்கு அழைத் துச் செல்லப்பட்டு அங்கேயே விடுதலை செய்யப்பட்டு விட்டார். காந்திஜீ பம்பாய்க்கு வந்து விட்டதால் கலகம் மீண்டும் மூள முடியவில்லை; விரைவிலேயே அமைதியுற்றது. ஆனல் அகமதாபாத்திலிருந்து கெட்ட செய்தி கிடைத்தது. காந்திஜீ அங்கே செல்வதற்காகப் புறப்பட்டார். மகாதேவ் தேசாயும்

பம்பாயை அடைந்து அவருடன் சேர்ந்து கொண்டார். நான் போய்ச் சேர்ந்தபோது, அவர்கள் இருவரும் அகமதாபாத்துக்குச் சென்று விட்டார்கள் என்று கேள்விப்பட்டேன். நானும் அன்று மாலை வண்டியிலேயே அகமதாபாத்துக்குப் புறப்பட்டுவிட்டேன், அடுத்த நாள் காலை ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்ததும் வெள்ளைக்காரச் சிப்பாய்கள் காவல் புரிந்து வந்ததைக் கண்டேன். மேலும் இராணுவச் சட்டம் அமுலில் இருக்கிறது என்பதையும் கண்டேன். எப்படியோ சபர்மதி ஆச்ரமத்திற்கு ஒரு டாங்காலில் போய்ச் சேர்ந்தேன். அங்கும் காந்திஜீ வந்ததுமே மக்களிடையில் அமைதி நிலவி விட்டது. கலகம் கலாட்டா எல்லாம் குறைந்து விட்டன. நான் வந்து சில மணி நேரத்திற்குள்ளாகவோ வருவதற்குச் சற்று முன்போ ராணுவச் சட்டமும் விலக்கப்பட்டு விட்டது. அங்கே அமைதியை நிலை நாட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டு காந்திஜீ அன்றே அடுத்த நாள் இரவு வண்டியிலோ பம்பாய்க்குப் புறப் பட்டு விட்டார். நானும் கூடச் சென்றேன்.

இதனிடையில் பஞ்சாபில் கலகங்கள் மூண்டு விட்டதைப் பற்றிச் செய்திகள் வந்து கொண்டிருந்தன. அவற்றைக் கேட்டுக் காந்திஜீ மிகவும் கலக்கமடைந்தார். ஜாலியன்வாலா பாக்கின் படுகொலையும் இதற்குள் நிகழ்ந்துவிட்டது. அதைப்பற்றி ஏதோ சிறிது தகவல்தான் கிடைத்தது. சில மாதங்கள் வரையில் முழு வரலாறு சரியாகக் கிடைக்கவில்லை. பஞ்சாபின் நிலைமை மிகவும் பயங்கரமாகப் போய்விட்டது என்பதுமட்டும் நிச்சயமாகத் தெரிந்தது. இப்படிப்பட்ட நிலையில் சத்தியாகிரகத்தை நடத்துவது ஒவ்வாது என்று காந்திஜீ எண்ணினர். அன்றிரவே, அகமதா பாத்துக்கும் பம்பாய்க்கும் நடுவழியில் ரயில் வண்டியில் இருந்த படியே அவர் தம் அறிக்கையை எழுதினர். அதில், அவர், மக்க ளிடையே அஹிம்சை இல்லாத காரணத்தால் சத்தியாகிரகத்தை நிறுத்தி வைக்க வேண்டுமென்ற எண்ணத்தை வெளியிட்டார். நாங்கள் அதை ரயிலேயே படித்து விட்டோம். பம்பாய்க்குப் போனதும் அது பத்திரிகைகளில் வெளியிடுவதற்காக வழங்கப் பட்டது.

பம்பாயில் சிறிது காலம் தங்கியிருந்தேன். அப்போது அங்கே நடந்து கொண்டிருந்த அகில பாரதீய ஹிந்தி-சாகித்திய சம்மேளனில் கலந்து கொண்டேன். அதன்பின் பட்னுவுக்கு வந்து விட்டேன். சத்தியாகிரகம் நிறுத்தப்பட்டுப் போனபின் மீண்டும் வக்கீல் வேலையில் அமர்ந்து விட்டேன்.

# 29. பஞ்சாப் படுகொலை, கிலாபத்து ஒத்துழையாமை

சத்தியாகிரகம் என்னவோ நிறுத்தப்பட்டு விட்டது. ஆனால் நாட்டில் மனக்குறை பெருகிக் கொண்டு வந்தது. பஞ்சாபில் ராணுவச் சட்டத்தின் பேரில் அக்கிரமும் கொடுங்கோன்மையும் நடந்து வந்தன. பொதுமக்கள் மானமழிக்கப்பட்டார்கள். ஆயிரக் கணக்கானவர்களுக்கு மிகமிகக் கடுமையான தண்டனைகள் கிடைத்தன. இவை எல்லாவற்றையும் பற்றி சிறிது சிறிதுதான் வெளியே வந்தது. முழு விவரமும் எவருக்கும் கிடைக்கவில்லை. ஹிந்து முசல்மான் சீக்கியர் ஆகியவர்கள் இடையில் ஒற்றுமை மிகுதியாக இருந்தது. அதனால், அவர்கள் எல்லா விஷயங் களிலும் முற்றிலும் ஒன்று சேர்ந்திருந்தார்கள்; ஒன்று நின்று துப்பாக்கிக் குண்டுகளை ஏற்றார்கள். தடியடியைத் தாங்கினார்கள், தண்ணீர் பருகினார்கள், நிலத்தில் படிந்து ஊர்ந்தார்கள், ஆகாய விமான குண்டுகளுக்கு இரையானார்கள். இக்கொலைக் காண்டத் தின் முழுக் கதையை இங்குக் கொடுக்க முடியாது. அதைக் காங்கிரஸால் அமைக்கப்பட்ட குழுவின் அறிக்கையில்தான் படித்துக் கொள்ள வேண்டும். வீரப் பஞ்சாபிகளுக்குச் செய்யப்பட்ட அக்கிரமங்களைப் பற்றித் தகவல் பஞ்சாபுக்கு வெளியே வரமுடியவில்லை, அங்கிருந்து எவரும் வரவும் முடிய வில்லை. அங்கே தந்தியோ தபாலோ போகவும் முடியவில்லை. ராணுவச் சட்டம் விலக்கப்பட்ட பின்புதான் எல்லா விவரங்களும் தெரியவந்தன. நாட்டில் பயங்கரமான கோபத் தீ மூண்டது.

அந்த ஆண்டின் காங்கிரஸ் பேரவையை ஜாலியான்வாலா பாக் படுகொலை நிகழ்ந்த அம்ருத்சாரில் நடத்துவதாக முடிவு செய்யப்பட்டிருந்தது. பஞ்சாப் முழுவதும் ராணுவச் சட்டத் தால் மிகவும் அல்லற்பட்டுப் போயிருந்தது. அங்குள்ள மக்க ளால் காங்கிரஸுக்கு ஏற்பாடுகள் செய்ய இயலாது என்ற அச்சம் உண்டாயிற்று. எப்படியாயினும் சரி, காங்கிரஸின் பேரவை அம்ருத்சாரிலேயே தான் நடக்கவேண்டுமென்று முடிவாயிற்று. அப்படியே நிகழ்ந்தது. பண்டித் மோதிலால் நேரு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நான் இக்காங்கிரஸுக்குப் போக வில்லை. காங்கிரஸ் டிசம்பரின் கடைசி வாரத்தில் நடந்தது. ஜனவரி இரண்டாம் தேதியிலிருந்து பாபூ ஹரிஜீயின் வழக்கு

ஆரம்பிப்பதாக இருந்தது. அவர் என்னை நிறுத்திவிட்டார். பண்டித்ஜீயும் அந்த வழக்கில் பணி ஆற்ற வேண்டியவராக இருந்தார்; ஆனல் அவர் சிறிது பிற்பட்டுப் பல நாட்களுக்குப் பின் வந்து சேர்ந்துகொண்டார். அது வரையில் ஸ்ரீ நிருபேந்திர நாத் சர்க்கார் தாம் (சர் என். என். சர்க்கார்) இன்னும் சில வக்கீல்கள் பாரிஸ்டர்களுடன் சேர்ந்து வேலையைத் தொடங்கி வைத்தார். 1920 ஜனவரியிலிருந்து அக்டோபர் வரையில் நான் அந்த வழக்குக்காக ஆராவிலேயே தங்கியிருந்தேன். எப்போ தாவது ஓரிரண்டு நாட்கள் ஓய்வு கிடைத்தால் பட்னவுக்கு வந்து போவேன். முக்கியமாக என் மூத்தமகன் மிருத்யுஞ்சயனைப் பார்ப்பதற்காக வருவேன். அப்போது அவனுக்குக் காலா ஆஜார் நோய் கண்டிருந்தது. அதற்குப் பட்னவில் மருத்துவம் நடந்து வந்தது. எப்போதாவது எவராவது கட்சிக்காரரின் வேலையின் பொருட்டும் வருவேன். ஆனல் அப்பத்து மாத காலமும் பெரும்பாலும் பர்மா வழக்கிலேயேதான் கழிந்தது.

பஞ்சாபில் ராணுவச் சட்டம் எடுபட்டபின் அரசாங்கத்தார் ஒரு குழுவை அமைத்துப் பஞ்சாபில் நிகழ்ந்தேறிய சம்பவங் களைப் பற்றி விசாரணை செய்யும் வேலையை அதன் பொறுப்பில் விட்டார்கள். சீமையில் நீதிபதியாயிருந்த லார்டு ஹண்டர் அதற்குத் தலைவராக அமைக்கப்பட்டார். பஞ்சாபில் நடந்த கொடும் பழிகளைப் பற்றிக் காங்கிரஸ் சார்பில் அக்குழுவின் முன் சாட்சியம் சாற்ற முடிவு செய்யப்பட்டிருந்தது. சில நாட்கள் வரையில் இப்பணியும் நடந்துவந்தது. ஆனல் பிறகு ஏதோ கருத்து மாறுபாடு உண்டானதின் மேல் காங்கிரஸ் தானே ஒரு குழுவை அமைத்து அரசாங்கத்தின் சார்பாக ஹண்டர் குழு செய்துவந்த அதே வேலையை அக்குழுவிடம் ஒப்படைத்தது. ஹண்டர் குழுவின் முன் விஷயங்கள் எல்லாம் வெளிவரத் தொடங்கிப் பத்திரிக்கைகள் எல்லாவற்றிலும் அச்சாகத் தொடங் கியதும் தான், பஞ்சாபில் எவ்வளவு அட்டூழியம் நடந்தது என்பது முதன் முதல் தெரியவந்தது. பஞ்சாபில் நடந்த அடா வடியைப் பற்றிச் செய்தி எவ்வளவுக்கு எவ்வளவு வெளியே பரவி யதோ அவ்வளவுக்கு அவ்வளவு நாட்டில், சினமும் பெருகியது. காங்கிரஸ் குழுவின் விசாரணையும் அதேபோல் நடந்துவந்தது. இதற்காகக் காந்திஜீ, தேசபந்து தாஸ், ஸ்ரீ ஜயகர், ஸ்ரீ அப்பாஸ் தையப்ஜீ முதலியவர்கள் பஞ்சாப்...கிராமங்களிலும் ஜில்லாக் களிலும் நெடுகச் சுற்றி வந்தார்கள். இரண்டு குழுக்களின் அறிக்கைகளும் 1920ல் வெளியாயின.

ஒருபுறத்தில் துருக்கியிடம் ஆங்கிலேயர் காட்டிய நடத்தையால் முசல்மானியரிடையில் மிக்க ஆரவாரம் கிளம்பியிருந்தது. அம்ருத்சார் காங்கிரஸின் போதுதான் யுத்தத்தின் பொருட்டுக் கண்காணுச் சிறையில் வைக்கப்பட்டிருந்த மௌலாணு ஷௌகத் அலி, மௌலாணு முகமத் அலி, மௌலாணு அபுல் கலாம் ஆஜாத் முதலிய முஸ்லிம் தலைவர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். இவர்கள் கிலாபத்துச் சம்பந்தமாக ஓர் அமைப்பை நிறுவுவதற்கும், கிளர்ச்சி செய்வதற்கும் நாடெங்கும் கிலாபத்துக் குழுக்களை அமைத்தார்கள். அரசாங்கத்திற்கு விரோதமாக ஏதாவது செய்யவேண்டும் என்று விரும்பும் அளவுக்கு முசல்மானியர் அத்தனை கடுஞ்சினம் கொண்டிருந்தார்கள். ஆனுல் என்ன செய்வது, எவ்வகையில் செய்வது என்று அவர்களால் முடிவு கட்ட முடியவில்லை. வேருெரு புறத்தில் பஞ்சாப் படுகொலையால் மற்றவர்கள் இடையிலும் கொந்தளிப்பு நிலவியது. ரௌலட்டுச் சட்டத்தையும் மக்கள் மறந்துவிடவில்லை. இவை எல்லாம் ஒன்ருகக் கூடி நாட்டில் ஒரு கோர நிலையை உண்டாக்கிவிட்டன. கிலாபத்துக் குழுக்களும் காங்கிரஸ் குழுக்களும் ஒன்றுக்கொன்று நெருங்கிவந்து கொண்டிருந்தன. அநேக ஹிந்துக்கள் கிலாபத்துக் குழுக்களில் அங்கத்தினர் ஆயினர்; அவற்றிற்குப் பணமும் கொடுத்து உதவினர். முசல்மானியர் பெருந்தொகையாகக் காங்கிரஸில் சேர ஆரம்பித்தார்கள். ஹண்டர் குழு, காங்கிரஸ் குழு ஆகிய இரு குழுக்களின் அறிக்கைகள் வெளியானதும் அவற்றை ஆராய்வதற்காக அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை ஒன்று பனுரசில் நடந்தது. நானும் ஓர் அங்கத்தினன் என்ற முறையில் அதற்குச் சென்றிருந்தேன்.

அலி சகோதரர்களுடன் காந்திஜீக்கு நெருங்கிய நட்பு உண்டாகிவிட்டது. கிலாபத்துக் குழுவுக்கு அவர் போய் வந்து கொண்டிருந்தார். பனுரஸ் கூட்டத்திற்குச் சற்று முன்புதான் அவர் கிலாபத்துக் குழுவின் இருக்கை ஒன்றில் அஹிம்சையைத் தழுவிய ஒத்துழையாமைத் திட்டத்தை முதன் முதலாக 1920 ஏப்பிரலில் சாற்றினுர். கிலாபத்துக் குழு அதை ஏற்றுக்கொண்டது. மேலும் அதை நடைமுறையில் கொண்டுவருவது என்றும் முடிவு செய்தது. அதைப் பின்பற்றி, மௌல்வீக்களும் மதத்தின் சார்பாக அதை மிகவும் ஆதரித்து ஒரு பத்வாவை (ஆணையை) வெளியிட்டார்கள். அரசாங்கத்தாருடன் எவ்விதத்திலேனும் ஒத்துழைத்தல் மதத்திற்குப் புறம்பானதென்று அதன் மூலமாகக்

கண்டிக்கப்பட்டது. பனாரசில் காங்கிரஸ் குழுவானது, எல்லா விஷயங்களையும் முற்றிலும் ஆராய்ந்து, இந்த நிலையில் நாடு என்ன செய்ய வேண்டுமென்பதை வரையறுப்பதற்காகக் காங்கிரஸின் விசேஷப் பேரவை ஒன்று கூட்டப்பட வேண்டுமென்று முடிவு செய்தது. அப்பேரவையைக் கல்கத்தாவில் நடத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டது. நெடுங்காலத்திற்குப் பின் வெளி நாட்டிலிருந்து சமீபத்தில் தம் நாடு திரும்பிய லாலா லஜபதி ராய்ஜீ அதற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நாடெங்கும் ஒத்துழையாமையைப் பற்றிப் பேச்சு எழுந்தது. காந்தீஜீ இது சம்பந்தமாக நாட்டில் சுற்றி வந்தார், எழுதியும் வந்தார். இந்த ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தபோது, 1920 ஆகஸ்டு முதல் தேதியன்று லோகமான்ய திலகர் உயிர் நீத்தார்.

மௌலானா ஷௌகத் அலி 1920 ஏப்பிரலில் பட்னாவுக்கு வந்தார். அச்சமயம் ஒரு பெரிய கூட்டம் நடந்தது. நான் அப்போது பட்னாவில் இருந்ததால், நானும் அக் கூட்டத்திற்குப் போயிருந்தேன். காந்திஜீயின் கருத்தும் அவர் செயல் முறைத் திட்டமும் எனக்கு முன்னமே தெரியும். ஆராவில் பண்டித் மோதிலால் நேருவும் தேசபந்து தாஸும் இருவருமே டும்ராவ் ராஜாவுக்கும் ஹரிஜீக்கும் இடையில் எழுந்த "பர்மா வாலே" வழக்கில் ஆளுக்கு ஒரு பக்கத்தில் பணியாற்றி வந்தார்கள். நான் பண்டித்ஜீயுடன்தான் வேலை பார்த்துக்கொண்டிருந்தேன் ; அவருடன் அரசியல் நிலைமையைப்பற்றியும் பேச்சு வரும். அவர் சில சமயங்களில் தேசபந்துவுடனும் இதைப் பற்றிப் பேசுவார். ஆகையால் எல்லா விஷயமும் எனக்குத் தெரிந்திருந்தது. பட்னாவில் மௌலானா ஷௌகத் அலி ஒத்துழையாமையின் செயல்முறைத் திட்டத்தை எடுத்துரைத்தபோது, இதற்காக மக்கள் எவ்வளவு தயாராக இருக்கிறார்கள் என்று ஜனங்களைப் பார்த்துக் கேட்டார். பிறகு என்னையும் இதைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசும்படி கூறினார். நான் உடனே, ஒத்துழையாமையில் சேருவதாக எல்லாரையும் முந்திக்கொண்டு, அக் கூட்டத்திலேயே வாக்கு அளித்துவிட்டேன். காங்கிரஸ் இன்னும் ஒரு முடிவுக்கும் வரவில்லை. செயல்முறைத் திட்டத்தையும் முற்றிலும் வகுக்கவில்லை. ஆயினும் நாடு ஒத்துழையாமையை மேற்கொள்வதென்று முடிவு செய்து, அதன்படி ஒத்துழையாமை தொடங்கப்படுமானால் நான் பிற்படமாட்டேன் என்று கூறிவிட்டேன். ஒத்துழையாமையில் ஈடுபட்டால், வக்கீல் தொழிலை விடவேண்டுமென்பதும் கவுன்ஸிலுக்குச் செல்லக்கூடாதென்

பதும் அன்றைக்கு முன்னமே எனக்குத் தெளிவாகிவிட்டன. நானோ ஒரு வக்கீல். 1920 நவம்பரில் புதிய மான்டேகு-செம்ஸ் போர்டு அரசியல் அமைப்பின்படி நடப்பதாக இருந்த தேர்தலில் சம்பரானிலிருந்து மாகாணக் கவுன்ஸிலுக்கு அபேக்ஷகனாக நிற்கலாமென்று எனக்கு விருப்பம் இருந்தது. இந்த எண்ணத் தின் பேரில் இரண்டொரு முறை சில இடங்களிலும் சுற்றிவந் திருந்தேன். ஒத்துழையாமை தொடங்கியதும் இந்த இரண்டு விஷயங்களையும் விட்டு விடவேண்டிவரும். அவை இரண்டையும் விட்டுவிடுவேன் என்றும் அக்கூட்டத்திலேயே பறைசாற்றி விட்டேன். மௌலானா ஷௌகத் அலியுடன் எனக்கு இதற்கு முன்னால் பழக்கம் இல்லை. ஆனால் காந்தீஜி என்னைப் பற்றி அவரிடம் ஏதேனும் கூறியிருக்கலாம். கூட்டம் முடிந்ததும், நான் அங்கிருந்து ஏகிவிட்டேன். அங்கே அவரைச் சந்திக்க வில்லை. ஆனால் அவர் என்னைத் தேடிப் பார்த்தாராம். அவர் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தபோது நான் ரயிலடிக்குச் சென்றேன். அங்கே அவரை முதன் முதல் கண்டு பேசினேன். கூட்டத்தில் நடந்த விஷயமும், காந்திஜீ அவரிடம் கூறியிருந் ததும் அவருக்கு நினைவிருந்தன. அதனால் அவர் என்னுடன் பேரன்புடன் பேசிக்கொண்டிருந்தார். என் உற்சாகத்தையும் பெருக்கினார். நான் அன்று பட்னாவுக்குத் தற்செயலாகப் போயிருந்த காரணத்தால் செல்லமுடிந்த அக்கூட்டத்தில் இவ் வண்ணமாக நான் ஒத்துழையாமையில் சேருவதற்குப் பிள்ளை யார் சுழி எதிர்பாராமல் போடப்பட்டது.

காங்கிரஸின் விசேஷப் பேரவை செப்டம்பரில் நடப்பதாக இருந்தது. பீகார் மாகாண அரசியல் மகாநாடும் செப்டம்பரில் நடப்பதாக இருந்தது. ஒத்துழையாமையைப் பற்றிப் பேச்சு மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. மாகாண மகாநாட்டிற்கு எவரைத் தலைவராக அமைப்பது என்ற கேள்வி பீகாரில் எழுந்தது. மக்கள் என்னைத்தான் தேர்ந்தெடுத்தார்கள். நான் ஒத்துழையாமைக் கட்சியைச் சேர்ந்தவன். ஆனால் மாகாண ஜனங்கள் ஒத்துழையாமையை ஏற்பார்களா மாட்டார்களா என்பதும், அப்படியே ஏற்றுக்கொண்டாலும், காலம் வந்தபோது எத்தனைபேர் அதில் சேர்வார்கள் என்பதும் சொல்ல முடிய வில்லை. ஆகையால் இப்படிப்பட்ட நிலையில் என் கருத்தைத் தலைவர் உரையில் வெளிப்படையாகச் சொல்லுவது தகுதியா யிருக்குமா என்றும், மகாநாடு என் சொல்லை ஏற்காவிட்டால் ஒரு நெருக்கடியை விளைவித்து விடுவேனோ என்றும் ஐயப்பட்டு

ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹாவை யோசனை கேட்டேன். எனக்கு என் கருத்தை உரைக்க முழு உரிமை உண்டென்றும், அது போலவே அதை ஏற்கவோ தள்ளவோ மகாநாட்டிற்கும் உரிமை உண்டென்றும், ஆகையால் நான் தலைமையை ஏற்பதற்கு யாதொரு தடையும் இல்லை என்றும் அவர் கூறினர்.

நான் ஆராவில் வழக்கில் சிக்கிக் கொண்டிருந்தேன். அங்கே இருந்தபடியே என்னுடைய சொற்பொழிவை ஹிந்தியில் எழுத ஆரம்பித்தேன். மாகாண மகாநாடு போன்ற கூட்டங்களில் அக்காலத்தில் ஹிந்தியில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதில்லை. பெரும்பாலும் ஆங்கிலத்தில்தான் எல்லாக் காரியங்களும் நடை பெற்று வந்தன. ஒரு புறத்தில் வழக்கின் தொல்லை, மற்ருெரு புறத்தில் மகாநாட்டிற்குச் சொற்பொழிவு எழுதுவது, அப்போது இருந்த நிலைமையைப் பற்றிக் கவலை ஆகிய எல்லாம் ஒன்று கூடி எனக்குக் காய்ச்சலைக் கொண்டுவந்து விட்டன. மாகாண மகா நாட்டிற்குப் பாகல்பூருக்குப் போக முடியுமா என்ற பயம் பிடித்து விட்டது. நாள் நெருங்க நெருங்க நான் எவ்வளவோ நலமாகிவிட் டேன். அதனுல் எப்படியோ என் சொற்பொழிவின் எழுத்துப் பிரதியை எடுத்துக் கொண்டு சரியான வேளைக்குப் பாகல்பூருக் குப் போய்ச் சேர்ந்துவிட்டேன். அங்கே மகாநாட்டில் பங்கெடுத் துக் கொள்ளவும் முடிந்தது. மகாநாட்டின் முன்னிலையில் நின்ற கடுமையான கேள்வி தொண்டு ஆற்றுபவர் எவரையுமே அச்ச முறச் செய்துவிடும். ஒத்துழையாமை அவசியமாகிவிட்டது என்பது என்னுடைய உறுதியான தெளிவுபட்ட அபிப்பிராயமா யிருந்தது. ஆனுல் மாகாணத்தின் பழமையானவர்களும் அநு பவம் உள்ளவர்களுமான அரசியல் தலைவர்கள் அனைவரும் அதற்கு விரோதமாக இருந்தார்கள். ரௌலட்டு சட்ட எதிர்ப்பு இயக்கத்திலிருந்து கூட்டங்களுக்குப் பொது மக்கள் திரளாக வந்து கொண்டிருந்தார்கள் ஆயினும் ஒத்துழையாமைக்கு எவ் வளவு உதவி புரிவார்கள் என்று கூறுவது கடினமாக இருந்தது. மகாநாட்டிற்குப் பெரிய தலைவர்களில் பலர் வரவில்லை. . ஆகை யால், மகாநாடு என் பேச்சைக் கேட்டு ஒத்துழையாமைத் திட் டத்தை ஏற்றுக் கொண்டால் அதைச் செயல்முறையில் கொண்டு வரும் பொறுப்புப் பெரும்பாலும் எங்கள்மேல்தான் விழும். நாங் கள் அதை எவ்வளவு தூரம் சமாளிக்க முடியும்? இவ்வண்ணமாக எத்தனையோ கேள்விகள் என் உள்ளத்தைக் கலக்கிக் கொண் டிருந்தன. ஆயினும், புதிதாக விழிப்புப் பெற்று அரசியலில்

சேர்ந்துள்ள பொது மக்கள் பெரும்பாலும் என் சார்பில் இருந்தார்கள் என்பது எனக்குத் தெரியும்.

பாபூ பிரஜ்கிஷோர் பிரசாத், பாபூ தரணீதர் முதலியவர்கள் ஒத்துழையாமையை மிக்க வலிமையுடன் ஆதரித்து வந்தார்கள். இவர்கள் மட்டுமின்றி பல முசல்மானியர்களும் அதே பேரார்வத்துடன் இதில் வந்து சேர்ந்திருந்தார்கள். மஜஹர்-உல்-ஹக் சாஹப் மட்டுமன்றி, ஷா முகம்மது ஜுபைர், மௌல்வி முகம்மது ஷபீ, மௌலானு நூர்-உல்-ஹசன் முதலானேர்களும் துணை நின்ருர்கள். ஆயினும், முசல்மானியர்களில், எப்பொழுதும் பொது ஜனத் தொண்டில் ஈடுபட்டு உழைத்து வந்தவர்கள் ஆன ஹசன் இமாம் சாஹப், நவாப் சர்புராஜ் ஹசேன் கான் முதலியவர்கள் எதிர்க்கட்சியில் இருந்தார்கள். ஒரு புறத்தில் மிக்க அநுபவமும், நெடுநாள்தொட்டுப் புரிந்து வந்த பொதுஜனத் தொண்டும் இருந்தன. மற்ருெரு புறத்தில் பேரார்வமும், நாட்டின் சூழ்நிலையால் எழுந்த ஆற்றவொண்ணு உள்ளக் கொதிப்பும், தீயில் குதிக்க உந்தும் துடிப்பும் இருந்தன. நான் இறைவனைத் துதித்து இப் பணியை ஏற்றேன். எல்லாரும் அறிய ஒத்துழையாமையை ஆதரித்தேன்.

மகாநாடு என் சொல்லை ஏற்றுக் கொண்டது. மிகப் பெரும் மன மொப்புடன் ஒத்துழையாமை நெறியை ஆதரித்தது. பீகாரின் நிலைமையை மனத்திற் கொண்டு செயல் திட்டத்தை வகுப்பதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டது. இதற்குப் பாபூ பிரஜ் கிஷோர் தாம் தலைவரானர். கிலாபத்தை ஒட்டிய அந்நியாயங்களை அகற்றுதல், பஞ்சாப் படுகொலையை ஒட்டிய காங்கிரஸ் கோரிக்கைகளை நிறைவேற்றுதல் ஆகியவற்றிற்காக அன்றியும் சுயராஜ்யத்தை அடைவதற்காகவும் ஒத்துழையாமை புரியவேண்டும் என்ற தீவிரமான கருத்தை அவர் கொண்டிருந்தார். அது வரையில் கூடிய எத்தனையோ கூட்டங்களிலும், எழுதப்பட்ட கடிதங்களிலும் கட்டுரைகளிலும் ஒத்துழையாமைக்குக் கிலாபத்தும் பஞ்சாப் படுகொலையுமே காரணங்களாகக் காட்டப்பட்டு வந்தன. பாபூ பிரஜ்கிஷோர் அவற்றுடன் சுயராஜ்யத்தையும் இணைத்து, சுயராஜ்யம் கைகூடாத வரையில் ஒத்துழையாமைக்கு ஒருவிதமான நிரந்தரத்தை அளிக்க விரும்பினர். அப்படியே தான் ஆயிற்று. குஜராத்தில் அரசியல் மகாநாடு ஒன்று நடந்தது. அங்கேயும், பாகல்பூர் மகாநாட்டிற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பாகத்தான், ஒத்துழையாமை ஆதரிக்கப்பட்டது. என் நினைவுக்கு எட்டிய வரையில் பீகார், குஜராத்து

ஆகிய இரண்டு மாகாணங்கள்தாம் கல்கத்தாக் காங்கிரஸ் பேரவைக்கு முன்னமே தத்தம் மாகாண மகாநாட்டில் ஒத்துழையாமைக்கு ஆதரவு அளித்தன. பாகல்பூர் மகாநாடு நடந்துகொண்டிருந்தபோது, அம்மகாநாடு ஒத்துழையாமையை ஆதரிக்க வேண்டுமென்று காந்திஜீ தந்தி கொடுத்தார்.

கல்கத்தாக் காங்கிரஸுக்கு நான் போக முடியவில்லை. தேசபந்து தாஸும் பண்டித் மோதிலால்ஜீயும் தாம் சென்றுர்கள். அதே சமயத்தில் ஸ்ரீ என். என். சர்க்கார் எங்கள் கட்சியின் சார்பில் கோர்ட்டில் வாதாடிக் கொண்டிருந்ததால் அவருக்கு உதவியாக நான் ஆராவில் இருப்பது அவசியமாகிவிட்டது. காங்கிரஸ் மிக்க ஆரவாரத்துடன் நடந்தது. முடிவில் பண்டித்ஜீ ஒத்துழையாமையைப் போற்றி ஆதரித்தார். அது மாபெரும் மனமொப்புடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது. கிலாபத்து, பஞ்சாப் படுகொலை ஆகியவை அன்றிச் சுயராஜ்யமும் காரணமாகக் காட்டப்பட்டது.

அதே நாட்களில் பேதியாவில் பீகார் மாகாண ஹிந்தி-சாகித்திய சம்மேளனின் மகாநாடு நடந்தது. நான் அதற்கு போயிருந்தேன். அக்காலத்தில் முன்னுக்கு வந்து கொண்டிருந்த பிரபல்யமான ஹிந்தி உரைநடை எழுத்தாளரான சுருஜ்புராவின் (சூர்யபுரா) அரசர் ராதிகாரமன் பிரசாத் சிங்ஜீ அதற்குத் தலைவராக அமைந்தார். அவர் ஆற்றிய சொற்பொழிவு மிக இனிமையாகவும் அழகாகவும் இருந்தது. அதில் சொல்லும் பொருளும் வெகு அழகாக இணைந்து இழைக்கப்பட்டிருந்தன. அச்சொற்பொழிவு இன்றும் என் நெஞ்சில் அன்று பதிந்தபடியே நிற்கிறது. பேதியாவில்தான் என்னைக் குளிர் காய்ச்சல் (மலேரியா) பற்றிக்கொண்டது. சப்ராவுக்குத் திரும்பி வந்ததும் கடுமையாக நோய்வாய்ப்பட்டு விட்டேன்.

கல்கத்தாக் காங்கிரஸுக்குச் சில நாட்களுக்குப் பிறகு பம்பாயில் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை ஒன்று நடந்தது. ஒத்துழையாமைத் தீர்மானத்தைச் செயல் முறையில் கொண்டு வருவதைப் பற்றி அதில் ஆலோசனை நடந்தது. ஒத்துழையாமையைப்பற்றித் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட உடனே வக்கீல் தொழிலை விட்டுவிடும் கேள்வி என்முன் உண்மையில் எழுந்து நின்றது. நானும் பண்டித்ஜீயும் சேர்ந்து நடத்திவந்த வழக்கு ஏறக்குறைய முடிவடைந்து வந்து கொண்டிருந்தது. சில நாட்களுக்குப்பின் முடிவடைந்தே விட்டது. அதிலிருந்து அப்போது என்னவோ விடுதலை கிடைத்துவிட்டது. ஆனல்

அவ்வழக்கு அத்துடன் நிற்பதாகத் தோன்றவில்லை. எவர் தோற்ருலும் சரி, அதன் அப்பீல் ஹைகோர்ட்டு, பிரிவிகவுன்ஸில் வரையில் போகும் போலிருந்தது. இந்த வழக்கில் மட்டுமாவது, தேவை உண்டானபோது நான் வேலை புரிந்து வரவேண்டும் என்று பாபூ ஹரிஜீ விரும்பினர். அதற்காக நான் முன்னமே ஏராளமான நாட்கள் உழைத்திருந்தேன். அவரிடமிருந்து பணமும் பெற்றிருந்தேன். ஆகையால் அவருடைய வேண்டுகோளைத் தள்ள முடியவில்லை. ஆனால், அதைத் தவிர வேறு எப்புதிய வழக்கையும் எடுத்துக் கொள்வதில்லை என்று அப்போதே உறுதி செய்துவிட்டேன். ஆயினும், கையிலிருந்த பழைய வழக்குக்களைப் பற்றி, முக்கியமாக எவற்றிற்கு ஏதாவது பணம் வாங்கிவிட்டேனே, அவற்றைப் பற்றி இன்னும் ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை.

நான் அண்ணனை யோசனை எதுவும் கேட்கவில்லை. ஆனால், நான் இனி வக்கீல் வேலையை விட்டு விடுவேன் என்பதை அவர் அறிந்து கொண்டார். நான் சிறிது பணம் தேடிச் சேர்த்து, நலம் குன்றியிருந்த குடும்ப நிலையை உயர்த்துவேன் என்று நம்பிக்கை பூண்டிருந்தார். ஆயினும், அவர் என் தீர்மானத்தைப் பற்றி அப்போது ஒன்றுமே சொல்லவில்லை. இன்னும் பலரும் வக்கீல் தொழிலை விட்டுவிட்டார்கள். ஓர் ஆண்டிற்குப் பின் தத்தம் வேலைக்குத் திரும்பி வந்துவிடலாம் என்றுதான் மக்கள் பொதுவாக நினைத்தார்கள். இந்த எண்ணத்தினுல் மக்களுக்கு ஒருவிதமாக அதிகத் துணிச்சலும் பிறந்தது. எப்போது பாகல்பூர் மகாநாட்டிலும், அதற்குப் பின் கல்கத்தா காங்கிரஸிலும் ஒத்துழையாமைக்கு ஒரு காரணமாகச் சுயராஜ்யம் சேர்க்கப்பட்டு விட்டதோ அப்போதிலிருந்தே ஒத்துழையாமை நெடுநாள் ஓடும் என்பதை நான் புரிந்துகொண்டேன். ஏனெனில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சுயராஜ்யத்திற்கு விரைவில் இணங்குபவர்கள் அல்லர். கிலாபத்தை ஒட்டியும் பஞ்சாபை ஒட்டியும் உள்ள நமது கோரிக்கைகளை ஏற்கும்படி அரசாங்கத்தாரைக் கட்டாயப்படுத்த முடியுமானல், அதுவே சுயராஜ்யத்திற்கு அறிகுறி ஆகிவிடும் என்று மகாத்மாஜீ சொல்லி வந்தார். அதனுல்தான் அவர் ஆரம்பத்தில் சுயராஜ்யப் பேச்சைத் தீர்மானத்தில் சேர்க்கவில்லை. ஆகையால் ஒத்துழையாமையுடன் சுயராஜ்யத்தை சேர்த்ததால் அப்புரட்சியின் காலவரையோ அளவோ அதிகமானதாகக் காந்திஜீக்குத் தோன்றவில்லை.

பம்பாயிலிருந்து திரும்பி வந்தபின் பட்னுவில் ஒத்துழை

யாமை புரிந்து கொண்டிருந்த நண்பர்கள் சிலர் அடங்கிய கூட்டம் ஒன்று என் வீட்டிலேயே நடந்தது. அதில் வக்கீல் தொழிலை விடுவதைப் பற்றிப் பேச்சு எழுந்தது. கையிலிருக்கும் வழக்குகளைப் பற்றி இடைஞ்சல் வரக்கூடும் என்றும், ஏனெனில் கட்சிக்காரர்களுக்கு வாக்களித்துவிட்டதால் கட்டுப்பட்டுவிட்டோம் என்றும், முக்கியமாக, பணம் பெற்றுக் கொண்ட இடத்தில் வழக்கைக் கைவிட முடியாது என்றும் நான் கூறினேன். நான் வக்கீல் தொழிலைத் தொடர்ந்து நடத்துவதற்கு இது ஒரு சாக்கு என்று சில நண்பர்கள் கருதினார்கள். இதை நான் எனக்காக மட்டும் சொல்லவில்லை. ஆயினும் அவர்கள் வேறுவிதமாகக் கொண்டார்கள். மற்றவர்கள் பெயரைச் சொல்லிக் கொண்டு நான் இந்தச் சௌகரியத்தைப் பெற விரும்புகிறேன் என்று நினைத்தார்கள். ஆனால் உண்மையில், நான் ஆராவுக்குச் சென்று விட்டதால் ஹைகோர்ட்டில் நான் இருக்கவேயில்லை. ஆகையால் இத்தனை காலத்திற்குள் பழைய வழக்குக்களில் பல முடிந்துவிட்டன; புதியன கைக்கு வரவில்லை. இப்படியாக என் கையில் இருந்த வழக்குக்களின் எண்ணிக்கை மிகக் குறைந்துவிட்டது. அப்படியும் அவற்றின் எண்ணிக்கை அதிகமாகவே இருந்ததால் குறைவு பட்டும்கூட நிறையத்தான் என் கையில் வழக்குக்கள் இருந்தன. ஆயினும் நான் கூறியபடி உறுதியாக நின்றேன். உண்மையில் அந்த பர்மா வழக்கைத் தவிர வேறு எந்த வழக்கிற்காகவும் நான் ஹைகோர்ட்டிற்குச் செல்லவேண்டிய நிலைமை வரவில்லை. ஒன்று, கட்சிக்காரர்கள் தாமாகவே என்னை விட்டார்கள், அல்லது நான் பணம் பெற்றிருந்தால் அதைத் திருப்பிக் கொடுத்து விட்டு விடுதலை பெற்றுக்கொண்டேன்; அல்லது வேறு யாராவது ஒரு நண்பரை என் இடத்தில் வேலை பார்க்கும்படி கூறிவிட்டேன். அதற்குக் கட்சிக்காரர்களும் ஒத்துக்கொண்டார்கள்.

அரசாங்கத்தால் நடத்தப்பட்ட பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும், அரசாங்கத்தோடு இணைக்கப்பட்டவற்றையும் புறக்கணிக்க வேண்டுமென்பது ஒத்துழையாமையில் மற்றோர் அம்சம் ஆகும். இதனால் நமக்கு அதிக நன்மை உண்டாகாதென்று என் அனுபவம் காட்டியது. வங்காளப் பிரிவினையின் போது அரசாங்கப் பள்ளிக்கூடங்களுக்கு விரோதமாகக் கல்கத்தாவில் நடந்த இயக்கத்தைக் கவனித்திருந்தேன். அந்தத் தேசீயக் கல்வி நிலையத்திற்கு வெறும் அரசியல்வாதிகளின் உதவி மட்டுமின்றி, மற்ற மனிதர்களின் உதவியும் அனுபவமும் கிடைத்தன. ஹைகோர்ட்டில் நீதிபதியாக இருந்து உபகாரச்சம்பளம்

பெற்றவரும், பிறகு கல்கத்தா பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராய் இருந்து விலகியவருமான சர். குருதாஸ் பானர்ஜீ அதற்குப் பேரன்பராகவும் உதவியாளராகவும் இருந்தார். ஆகவே அரசாங்கம் அதை எதிர்க்கும் என்று அஞ்சுவதற்கு இடமில்லை. காங்கிரஸிலாவது அப்புரட்சியின் திட்டத்திலாவது அரசாங்கக் கல்வி நிலையங்களைப் புறக்கணிப்பதைப் பற்றிப் பேச்சே இல்லை. பல்கலைக் கழகத்தில் பெரும்புகழ் பெற்றுத் தேறிய இளைஞர்கள் அதில் மிக்க ஆர்வத்துடன் சேர்ந்திருந்தார்கள். அவர்களுள், எம். ஏ. பரீக்ஷையில் தங்கப் பதக்கமும், எல்லோருக்கும் தலைமை யான இடமும் பெற்றிருந்த பிரபலமான எழுத்தாளர் ஸ்ரீ விஜய் குமார் சர்க்கார் இருந்நார். இப்படியெல்லாம் இருந்தும்கூட அதில் அத்தனை உற்சாகம் காணப்படவில்லை. ஏனெனில், அதில் கல்வி பெற்ற மாணவர்களுக்கு வாழ்க்கையை நடத்துவதற்கான எவ்வித வழியும் கிடைப்பதில்லை. ஆகையால் நாம் இதை (பள்ளிக்கூடங்கள் கல்லூரிகள் ஆகியவற்றைப் புறக்கணித்தலை) வற்புறுத்துவோமானுல் மாணவர்களிடையிலும், முக்கியமாக அவர்களுடைய பெற்ருேர்களிடையிலும் அதிக உற்சாகம் கிளம்பாது என்று அஞ்சினேன். இந்நிலையில் இச்செயல் திட்டம் சிறப்பாக நடைபெற இயலாது. அந்த இருக்கையில் நான் இக்கருத்துக்களைத் தெரிவித்தேன். ஆனுல் சில தோழர் களுக்கு என்னுடைய பேச்சு பிடிக்கவில்லை. நான் மிகவும் பயங்கொள்ளி என்றும், இப்படித்தான் ஏதாவது வேண்டாத பயத்தைக் கிளப்பி விட்டு விடுகிறது எனக்கு வழக்கம் என்றும் அவர்கள் நினைத்தார்கள். நம் நாட்டில் கல்வி கற்பதன் நோக்கம் பொருள் தேடுவதுதான். படிக்கின்றவன் பிறகு ஏதாவது சம்பாதித்து ஆகவேண்டும். படித்தபிறகு அவன் தன் பரம்பரை வழியில் நிற்க முடியாதபடி அவனுடைய வாழ்க்கை அமைந்து விடுகிறது. தன்னுடைய வாழ்க்கை முறைக்காகவும் அதிகச் செலவு செய்யவேண்டி வருகிறது. அவனுக்கு நவீனக் கல்வி அளிப்பதற்காக அவன் வீட்டாரும் ஏராளமாகச் செலவு செய் கிருர்கள். அந்த முதலை அக்கல்வியைக் கொண்டு பெருக்கா விட்டாலும் குறைந்த பட்சம் இருந்த படியாவது வைத்துக் காப்பான் என்ற நம்பிக்கை கொள்கிருர்கள். அக்கல்வியும் அது முடிந்தபின் அரசாங்க வேலைக்கோ வக்கீல் தொழிலுக்கோ அன்றி வேறு எந்த வேலைக்கும் உதவாத வகையில்தான் அமைகிறது. முதலில் இவ்விதமாகக் கல்வி பெற்றவர்கள் எண்ணிக்கை குறைவாக இருந்தபோது, மக்கள் நிறையப்

பணம் சம்பாதித்தார்கள். ஆனால் ஆங்கிலக் கல்வியின் செல்வாக்குப் பரவப் பரவ, அதைக் கற்றவர்களின் எண்ணிக்கையும் பெருகிக் கொண்டே சென்றது. பணம் சம்பாதிப்பதற்கு வாய்ப்புக் குறைந்து கொண்டே வந்தது. ஏனெனில் இந்த வேலைகளுக்கும் தொழில்களுக்கும் செல்பவர்கள் களின் எண்ணிக்கை வளர ஆரம்பித்ததும் அவர்களுக்குள் எழுந்த போட்டியால் இடைஞ்சல்களும் பெருகின. ஆயினும் அரசாங்க ஆங்கிலக் கல்வியின்மேல் முன்போல அத்தனை நம்பிக்கை வைக்க முடியாவிட்டாலும் தேசீயக் கல்வியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அது இன்றும் மிகமிக உயர்ந்ததாகத்தான் இருந்தது. ஆகையால் ஒத்துழையாமையின் செயல் திட்டத்தைப் பின்பற்றிப் பையன்களைப் பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் விடும்படி முதலில் சொல்லுவோம் என்றும், அதன்மேல் அப்படி விடுபவர்களுடைய எண்ணிக்கை போதுமானபடி பெருகி வருகிறதாவென்று பார்ப்போம் என்றும், அப்போது நாம் வித்தியாலயங்கள் முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்வோம் என்றும் நான் எண்ணி வந்தேன். வித்தியாலயத்தைத் தொடங்கி வைத்தபின் அதைக் கைவிடாமல் நடத்தி வரவேண்டுமென்று நான் கருதினேன். அப்படிச் செய்ய முடியாவிட்டால் இதனுடைய பயன் நன்மையாக அமையாது என்றும் நினைத்தேன். ஆகையால் வித்தியாலயங்களை நிறுவ வேண்டும், பரீக்ஷைகளை நடத்த வேண்டுமென்று கூறிய கட்சியில் நான் முதலில் சேரவில்லை.

நான் மேலே கூறியுள்ளவற்றிற்கு இது பொருள் அன்று; அதாவது நவீனக் கல்வியின் குற்றங் குறைகளை நான் உணரவில்லை என்பது அன்று. நவீனக் கல்வி முற்றிலும் பயனற்றதென்று அறிவேன். பிற நாட்டின் மொழி மூலமாகக் கற்பிக்கப்படுவதால் இதில் காலமும் உழைப்பும் மிகவும் பாழாகின்றன. தம் சொந்த மொழியில் அளிக்கப்படும் கல்வியால் உண்டாகும் இயல்பான மனோ வளர்ச்சி இதனால் உண்டாவதில்லை. சொற்களின் அர்த்தத்தையே மனப்பாடம் செய்வதில் காலம் முழுதும் கழிபடும் இடத்தில் அவற்றைப் புரிந்து தெரிந்து கொள்வதற்கோ சிந்திப்பதற்கோ எப்படி நேரம் கிடைக்கப் போகிறது என்பது தெரிந்த விஷயம். ஆகையால் வேறு யாது காரணத்திற்கு அல்லாவிடினும் இந்த ஒரு குறைபாட்டிற்காகவே இக்கல்வி முற்றிலும் விரும்பத்தகாதது ஆகும். பிறநாட்டு மொழியைக் கற்பதிலோ அறிந்து கொள்வதிலோ குற்றம் இல்லை. தெரிந்திருப்பது

நன்று. இன்றைய உலகில் ஓர் ஐரோப்பிய மொழியையாவது பயில்வது இன்றியமையாததாகிவிட்டது. ஆயினும் ஒரு மொழியைக் கற்றுக் கொள்வது என்பது வேறு, அதைக்கொண்டு நம் வேலையை நிறைவேற்றிக் கொள்வது என்பது வேறு. பிற நாட்டு மொழியையே எல்லா வகைப் பாடங்களையும் கற்கக் கருவியாக அமைத்துக் கொள்வது முற்றிலும் வேறு. அப்படிக் கருவியாக அமைப்பதற்குத்தான் நாங்கள் எதிரிகள்; கற்பதற்கு அன்று. ஆங்கில அதிகாரிகளுடைய தேவைகளை நிறைவேற்றுவதற்காகவே இக்கல்விக்கு அடிப்படை கோலப்பட்டது என்பதையும் உணர்ந்தோம். ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்த உள்நாட்டு மக்கள் ஆங்கிலேயருக்குத் தேவையாயிருந்தனர். தம்முடைய தொழிலை நடத்துவதற்கு அவர்களுடைய உதவி இன்றியமையாததென்று ஆங்கிலேயர் கருதினர்கள். தோற்றத்திலும் நடையுடை பாவனையிலும் இந்தியர்களாக இருந்தாலும், எண்ணங்களிலும் மனப்பான்மைகளிலும் ஆங்கிலேயரைப் போல ஆகிவிட்ட இந்தியர்கள் அவர்களுக்குத் தேவையாயிருந்தனர். மேலும் தங்களுடைய காரியாலயங்களின் வேலையை நடத்துவதற்காக ஆங்கிலம் கற்றறிந்து தம்முடைய அலுவல்களை எல்லாம் முடித்துத் தரக்கூடிய மலிவான இந்திய ஊழியர்களை உற்பத்தி செய்ய விரும்பினர்கள். இவ்வண்ணமாக ஆங்கிலேயர்கள் இந்தியாவில் சுற்றி வருவதற்காகவும் இந்தியர்கள் மேல் ஆட்சி செலுத்துவதற்காகவும் இந்திய மொழியைப் பயில்வதற்கு அவசியம் இல்லாது போய்விடும். அதனால்தான் கல்வி முறையும் முக்கியமாக இத்தேவைக்கு ஏற்றாற்போல ஆட்களைத் தயார் செய்யும்படியே அமைக்கப்பட்டது. ஆம், அப்படிப் படைக்கப்பட்டவர்களில் சிலர் தம் மனப்போக்குப்படி சிந்திப்பதற்கு ஆற்றல் பெறலாம். அப்படிப்பட்டவர்கள் அரசாங்க வேலையை நம்பி யிருக்கமாட்டார்கள். இப்படி எவராவது முளைத்தால் முளைக்கட்டும். ஆனல், கல்வி முறையின் தலைமையான நோக்கம் மக்களை அலுவலகத்திற்கு தகுதியாக்குவதுதான். அதனுடைய பயனும் அப்படியே விளைந்தது. ஆகையால் நான் இக்கல்வியை எவ்விதத்திலும் போற்றுபவன் அல்லன். ஆனல் தேசியக் கல்வி படும்பாட்டைப் பார்த்திருந்தேன். ஆகையால் அதற்கு அஞ்சி, மெல்ல மெல்ல அடி எடுத்து வைக்க விரும்பினேன். எல்லாவற்றிலும் மேலாக எனக்கு ஒரு விஷயத்தைப் பற்றி கவலையாயிருந்தது. அதாவது, எந்தக் காரியத்தையும் ஆரம்பித்து விட்டு விரைவில் கைவிடுவதும்

அது எதுவும் பயன் அளிக்காமல் போவதும் மக்களின் ஆர்வத்தை அழிக்கும் என்பதுதான். ஆகையால் வேலை குறைவாகச் செய்தாலும் குற்றமில்லை; ஆனால் செய்வன திருந்தச் செய்ய வேண்டும்.

புனாவின் பர்கூஸன் கல்லூரியின் அமைப்பு முறையில் பீகாரில் ஒரு கல்லூரியை நிறுவ வேண்டுமென்று சம்பரானில் இருந்தபோதே எண்ணினோம் என்பதை முன்னமேயே கூறியிருக்கிறேன். இதற்கெனச் சிறிதளவு பணமும் சேர்த்திருந்தோம். ஆனால் அவ்வெண்ணம் விட்டுவிடப்பட்டது. ஏனெனில் அரசாங்கத்துடன் இணைக்கப்பட்ட கல்வி நிலையத்தை நிறுவுவதில் யாதொரு நன்மையும் இல்லை என்றும் அப்படி ஒரு கல்லூரி நிறுவ வேண்டுமானால் முற்றிலும் புதிய முறையில் கற்பிக்கும் தேசீய அமைப்பு ஒன்றைத் தொடங்கு என்றும் காந்திஜீ கூறினார். ஆகையால் உள்ளத்தில் ஒரு பக்கத்தில் தேசீயக் கல்வியை ஒட்டி எண்ணங்கள் சலசலவென்று ஓடிக் கொண்டிருந்தன. மற்றொரு புறத்தில் பாறைகள் போன்ற இடையூறுகளைக் கண்டு மனம் தயங்கியது. ஆகையால் நான் சிறிது அஞ்சிப்போய், நாடும், முக்கியமாக மாணவர் உலகும் ஒத்துழையாமைக் களத்தில் எவ்வண்ணம் வந்து சேருகிறார்கள் என்பதை முதலில் கவனிப்பது பொருத்தமாகும் என்று கருதினேன். ஒத்துழையாமையை வெற்றிகரமாக்குவதற்காக மாணவர்களுக்கு ஏதாவது கல்வி நிலையத்தை நாட்டாத வரையில் அவர்கள் அரசாங்கக் கல்வி நிலையங்களை விட்டுவிட்டு வரமாட்டார்கள் என்றும், ஆகையால் மாணவர்களை அரசாங்கக் கல்வி நிலையங்களிலிருந்து நீக்குவதற்கு (அதாவது ஒத்துழையாமை புரிய அழைப்பதற்கு) தேசீயக் கல்விக்கூடத்தை அமைப்பது இன்றியமையாதது என்றும் சில தோழர்கள் எண்ணினார்கள். இவ்விதமான ஆசையைக் காட்டி ஒத்துழையாமையை நடத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. மாணவர்களை நாட்டின் பேரைச் சொல்லியும், அரசாங்கக் கல்வியின் குறைகளை எடுத்துக் காட்டியும் வெளியேறச் செய்வதுதான் நன்றென நான் கருதினேன். இவ்விதமாக அவர்கள் எல்லாவற்றையும் அறிந்து புரிந்துகொண்டு ஒத்துழையாமை செய்தால் அவர்களுடைய ஒத்துழையாமை நிலை பெறமுடியும். அப்படியின்றி, அங்கும் (ஒத்துழையாமை இயக்கத்திலும்) தமக்கு வேலை அளிக்கக் கூடிய கல்வி கிடைக்கும் என்றும், ஆகையால் தாம் யாதொரு நஷ்டமும் படவேண்டியதில்லை என்றும் அவர்கள் நினைத்துக் கொண்டு ஒத்துழையாமையில் சேர்ந்தால், நிச்சய

மாக அவர்களுடைய ஒத்துழையாமை உறுதி பெருது. நம் முடைய கல்வி நிலையத்திற்கு வந்து சேர்ந்து, அதில் அரசாங்கக் கல்வி நிலையத்தில் இருந்த நன்மை இல்லை என்பதைக் கண்ட போது அவர்கள் நம்பிக்கையை இழந்து திரும்பிச் சென்று விடுவார்கள். இந்தப் பாதை முள் செறிந்தது, இதில் துன்பம் இருக்கிறது, அதைச் சகிப்பதற்காகவே நாம் செல்கின்ருேம்; ஒத்துழைப்பவர்கள் பெரும் நன்மைகளுக்காக அன்று என்பதை நன்கு உணர்ந்தவர்கள் தாம் வரவேண்டுமென்று நான் விரும்பினேன்.

இப்படியாக இவ்விவாதங்கள் நடந்து கொண்டும் நாங்கள் யோசனை செய்து கொண்டும் இருக்கும்போது மஜஹர்-உல்-ஹக் சாஹப் ஒரு தேசீய பள்ளிக்கூடத்தைத் திறந்தே விட்டார். சமீபத்தில்தான் எம். ஏ.யும் பாரிஸ்டர் பரீக்ஷையும் தேறிச் சீமையிலிருந்து திரும்பி வந்திருந்த லாட்பாபூ (ஸ்ரீ ராம் கிஷோர் லால் நந்தக்யுலியார்) தாம் அதற்குத் தலைமை ஆசிரியர். டிசம்பரின் துவக்கத்தில் காந்திஜீ, மௌலானு முகம்மத் அலீ யுடனும் மௌலானு ஆஜாதுடனும் சுற்றுப் பிரயாணத்திற்குக் கிளம்பினர். பீகாருக்கும் வந்தார். அவர் ஹிந்துப் பல்கலைக் கழகத்தின் பேரிலும் அலிகார் முஸ்லிம் பல்கலைக் கழகத்தின் பேரிலும் படையெடுத்தார். சிறிது வெற்றியும் கிட்டியது; ஆனுல் முற்றிலும் அன்று. அந்த வெற்றியின் சின்னமாக காசி வித்யா பீடமும் ஜாமியா மில்லியாவும் (தில்லி) உதித்தன. பேரார்வம் அலை பொங்கி எழுந்தது. பீகார் மாணவர்களும் அந்த அலைமேல் மிதந்தோடினர்.

## 30. பட்ணு பல்கலைக் கழகத்துடன் ஒத்துழையாமை

அரசாங்கக் கல்வியுடன் ஒத்துழையாமை என்ருல் எவ்வித மான அரசாங்கக் கல்வி நிலையத்துடனும் தொடர்பு வைத்துக் கொள்ளாமை என்பது பொருள். நான் பட்ணு பல்கலைக் கழகத் தின் செனேட்டிலும் சிண்டிகேட்டிலும் அங்கத்தினனுக இருந் தேன். பல்கலைக் கழக வேலையில் மிக்கப் பற்றுதலுடனும் உழைத்து வந்தேன். பல்கலைக் கழகம் ஒரு குழுவை அமைத்

தது. கல்கத்தா பல்கலைக் கழகத்தின் நிலைமையைப் பற்றி விசாரணை செய்வதற்காக அமைக்கப்பட்ட சாடிலர் குழுவின் அறிக்கையை ஆராய்ந்து பார்த்துப் பட்டு பல்கலைக் கழகத்திற் குத் தேவையான சீர்திருத்தங்களைச் சிபார்சு செய்யும் பொறுப்பு இக்குழுவின் கையில் ஒப்படைக்கப்பட்டது. நானும் அக்குழுவில் ஓர் உறுப்பினனாக இருந்தேன். அதற்காக நான் மிகவும் உழைத்து வந்தேன். மெட்ரிக்குலேஷன் பரீக்ஷைக்காவது தாய் மொழியைக் கல்வி கற்பிக்கும் கருவியாகப் பல்கலைக் கழகம் ஏற்க வேண்டுமென்று நான் பெரிதும் முயன்று வந்தேன். இதைப் பற்றிக் குழுவில் மிக்க விவாதம் நடந்தது. இந்த விஷயம் செனேட்டின் முன் வருவதாக இருந்தது. செனேட்டின் இருக்கை நவம்பர் மாதத்தில் நடைபெற இருந்தது. இத் தீர் மானத்தை நான் செனேட்டை ஏற்கச் செய்யக்கூடுமானால், இதுவும் தேசீயக் கல்விக்கு ஆற்றிய ஒரு தொண்டாகும் என்று கருதினேன். ஆகையால் ஒத்துழையாமையாளன் ஆக முடிவு செய்து விட்டேன் ஆயினும், செனேட்டின் இருக்கை முடியும் வரையில் செனேட்டிலிருந்தும் சிண்டிகேட்டிலிருந்தும் விலகு வதில்லை என்று என் மனத்திற்குள்ளே முடிவு செய்து விட்டேன். செனேட்டில் இதற்கு எதிரியாகப் பெரிய பெரிய ஆட்கள் இருந்தார்கள் என்பது எனக்குத் தெரியும். இளமையிலிருந்தே ஆங்கிலத்தைப் படிக்கத் தெரியாவிட்டால் அதில் முற்றிய ஞானம் உண்டாகாதென்றும், அதனால் நம் இளைஞர்கள் வாழ்க் கைப் போட்டியில் பின்தங்கிப் போவார்கள் என்றும் அஞ்சும் அளவுக்கு மக்கள் மனத்தில் ஆங்கிலத்தின்மேல் மோகம் இருந்து வந்தது. தாய்மொழி மூலம் கல்வி அளிக்கப்பட வேண்டுமென்று சாடிலர் குழுவும் வற்புறுத்தியிருந்தாலும்கூட நம் சொந்த நாட்டு மக்கள் அதற்கு விரோதமாக நின்றார்கள்.

செனேட்டின் முந்நிலையில் இத்தீர்மானத்தை ஆதரித்து நான் ஒரு மிக அழுத்தமான சொற்பொழிவை ஆற்றினேன். அதில் இதற்குச் சாதகமான விவாதம் மட்டும் அன்றி உணர்ச்சி வேகமும் நிறைய இருந்தது. எனக்குத் தெரிந்த வரையில் அது மக்கள் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. எங்கள் எதிரிகளுள் மிஸ்டர் சுல்தான் அகமது, மிஸ்டர் காஜா மகமது நூர், நீதிபதி ஜுவாலா பிரசாத், பேராசிரியர் யதுநாத் சர்க்கார் முதலானோர் இருந்தார்கள். சிலர் தம் பேச்சால் எதிர்த்தார்கள்; சிலர் மௌனமாக இருந்தனர், ஆனால் தம் வாக்கை எதிர்ப்பக்கத்தில் அளித்தார்கள்; எங்களுக்கு ஆதரவாக இரண்டு ஆங்கிலேயர்கள்

கிடைத்தார்கள். அவர்கள் பேராசிரியர்கள் ஹமில்டனும், டியூக்கும் தாம். நான் இவர்களிடம் யாதும் கூறவும் இல்லை; இதையொட்டிக் கருத்தைப் பரிமாறிக் கொள்ளவும் இல்லை. ஆயினும் இருவரும் என் தீர்மானம் பாடங்கற்பிப்பதற்கு உதவி யளிக்கும் என்ற தனி நோக்கத்தோடு அதை வலிவாக ஆதரித் தார்கள். தீர்மானம் பெரும்பாலோர் மனமொப்ப ஏற்றுக் கொள்ளப்பட்டது. மெட்ரிக் பரீக்ஷை வரையில் தாய்மொழி மூலமாகக் கல்வி அளிப்பதற்கு வேண்டிய மாறுதல்கள் பல்கலைக் கழகத்தின் விதிகளில் செய்யப்பட வேண்டும் என்று செனேட் சிபார்சு செய்தது. இத்தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டு நான் பெரு மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் செனேட்டின் இருக்கை முடிந்ததுமே செனேட்டிலிருந்தும் சிண்டிகேட்டிலிருந்தும் ராஜீ நாமா செய்துவிட்டேன்.

அக்காலத்தில் சர் ஹாவில்லண்டு லிமேஜரர் கவர்னரின் கவுன்ஸிலில் அங்கத்தினராக இருந்தார். அவர் செனேட் டிலும் உறுப்பினர். நான் ராஜீநாமா கொடுத்ததைக் கேட்டு அவர் மனக்குறை பட்டாராம். ஏனெனில் பல்கலைக் கழகத்தில் நான் நல்ல தொண்டு ஆற்றி வந்தேன் என்பது அவருக்குத் தெரியும். என்னைப் பல்கலைக் கழகத்துடன் ஒத்துழையாமை செய்யாதிருக்க வைக்கும் பொருட்டு அரசாங்கத்து ஆட்களில் பலர் அவருடைய அனுமதியைக் கொண்டு இத்தீர்மானத்தின் சார்பாகத் தம்முடைய வாக்கு அளித்து அதை நிறைவேற வைத் தார்களாம். இச்செய்தி நான் ராஜீநாமா செய்தபின் எனக்குத் தெரியவந்தது. ராஜீநாமாவை மீட்டுக் கொள்ளும்படி என்னை மிகவும் நெருக்கினார்கள். ஆனால் அப்படிச் செய்யவில்லை. ஒரு பக்கத்தில் தேசீயக் கல்வியைப் பற்றிப் பிரசாரம் செய்வது, அர சாங்கக் கல்வியின் குற்றங்களை எடுத்துரைப்பது, கல்வி நிலையங் களிலிருந்து வெளியேறும்படி மாணவர்களை ஊக்குவிப்பது, மற் றொரு பக்கத்தில் அரசாங்கக் கல்வியைச் சார்ந்த அதிமேலான அமைப்புடன் (பல்கலைக் கழகத்துடன்) சேர்ந்து நிற்பது ஆகிய இவ்விருவகை நடத்தைகளும் ஒன்றுக்கொன்று முரணானவை என்று நான் கருதினேன். ஆகையால் ராஜீநாமாவை மீட்டுக் கொள்ள ஒப்பவில்லை.

நான் பல்கலைக் கழகத்தில் தொடர்ந்து இருந்திருந்தால், இத்தனை பாடுபட்டுச் செனேட்டில் நிறைவேற்றி வைத்த தீர் மானத்தைச் செயல் முறையில் கொண்டு வருவதிலும் வெற்றி பெற்றிருக்கலாம். இன்று அப்படி எதுவும் நிச்சயமாகக் கூற

இயலாது. ஆயினும் செனேட்டால் முடிவு செய்யப்பட்ட பின்னும் அதன்படி வேலை நடத்தப்படவில்லை என்பது வருந்துதற்கு உரியதே. இதற்குப் பின் ஆங்கிலம் சுமார் இருபது ஆண்டுகள் வரையில் கல்வி கற்பிக்கும் கருவியாக இருந்தது வந்தது. சமீபத்தில்தான் மெட்ரிக் வரையில் ஆங்கில மொழிப் பாடமும் கணிதமும் நீங்கலாக மற்றப் பாடங்களைச் சொல்லிக் கொடுக்கவும் அவற்றில் பரீக்ஷை வைப்பதற்கும் தாய் மொழி கருவியாக ஆக்கப்பட்டது. இந்த இருபது ஆண்டுகளில் நாட்டின் நிலைமையில் எத்தனை மாறுதல்கள் வந்து விட்டன என்பது இருபது ஆண்டுகளுக்கு முன் பொது வாழ்வின் நலத்திற்காகப் பணிகளில் ஈடுபட்டு இன்றும் தொடர்ந்து ஈடுபட்டிருப்பவர்களுக்கு மட்டுமே தெரியும். பல்கலைக் கழகமும் கடைசியில் இந்த மிக்கத் தேவையான சீர்திருத்தத்தை அதிக காலம் தடுத்து நிறுத்தி வைக்க முடியவில்லை. இருபது ஆண்டுகளுக்குப்பின் இதை ஏற்கத்தான் வேண்டி வந்தது.

# 31. பீகார் வித்யாபீடமும் சதாகத் ஆச்ரமமும்.

கல்கத்தாவில் ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பின் தான் நான் கவுன்ஸிலுக்கு அபேக்ஷகளுக இருப்பதிலிருந்து விலகினேன். தேர்தல் நவம்பரில் நடப்பதாக இருந்தது. அதனல் எல்லாவற்றிற்கும் முன்னல் இந்த வேலைத் திட்டத்தை விரைந்து செய்வது அவசியமாயிற்று. பீகாரில் நாங்கள் நிறையத் துண்டு அறிக்கைகளை அச்சிட்டு வழங்கினேம். அவற்றின் மூலமாக, இத்தேர்தலுக்கு நிற்பவர்களுக்கு எவரும் வாக்கு அளிக்கக் கூடாதென்று பொதுமக்களை வேண்டிக் கொண்டோம். சிலர் இவ்வேலைக்காக ஊர்களில் சுற்றி வரவும் புறப்பட்டார்கள். ஆங்காங்கு கூட்டங்கள் கூட்டி மக்களுக்கு இதே விஷயம் எடுத்துரைக்கப்பட்டது. நானும் சிறிது சுற்றி வந்தேன். கார்த்திகைப் பௌர்ணமித் திருவிழா சமயத்தில் நான் தரௌலிக்கு (சாரன் ஜில்லா) சென்றேன் என்பது நினைவிருக்கிறது. அங்கே கூட்டம் நடந்தது; அதில் நான் பேசினேன். அபேக்ஷகர்களாக ஒருவர்கூட நிற்கக் கூடாதென்று நாங்கள் விரும்பினேம்.

அதற்கே முயன்றும் வந்தோம். ஆனால் இதில் நாங்கள் வெற்றி பெறவில்லை. எல்லா இடங்களிலுமே அபேக்ஷகர்கள் தேர்தலுக்கு நின்றார்கள். சிலர் எதிர்ப்பு இன்றியே தேர்ந்தெடுக்கவும் பட்டார்கள். ஆனால் வாக்கு அளிப்பதற்கு வாய்ப்பு அமைந்த இடங்களில் பொதுமக்கள் மிகக் குறைவாகத்தான் சென்று வாக்கு அளித்தார்கள் பீகாரில் நூற்றுக்கு இருபது அல்லது இருபத்தைந்து பேருக்குமேல் வாக்குரிமையாளர்கள் தம் வாக்கை அளிக்கவில்லை என்று நினைக்கிறேன்.

டிசம்பரில் மகாத்மாஜீ பீகார் சுற்றுப் பிரயாணத்திற்கு வருவதற்குச் சில நாட்களுக்கு முன் பீகாரில் ஒரு சம்பவம் நடந்தது. அதை இங்குக் குறிப்பிட வேண்டும். சம்பரானில் நீலச் சாயத்தை ஒட்டிய விசாரணை முடிந்தபின் காந்திஜீ எத்தனையோ இடங்களில் பள்ளிக்கூடங்களைத் திறந்து வைத்தார் என்பது மேலே கூறப்பட்டுள்ளது. அது மட்டுமின்றி, மாகாணத்தில் எத்தனையோ இடங்களில் வேறு ஏதாவது ஒரு விதத்திலும் அந்த எழுச்சியின் பயன் காணப்பட்டது. அவ்வெழுச்சிக்கு ஹோம் ரூல் இயக்கமும் நிறைய உதவியது. இதன் பயன்களில் ஒன்றாக, ஆங்காங்கு குடியானவர்கள் சங்கங்கள் நிறுவப்பட்டன. அவை ஜமீன்தார்களின் பேரில் குடியானவர்களுக்கு இருந்த குறைகளை வெளியிடலாயின. சம்பரானிலும் ஒரு குடியானவர் சங்கம் அமைக்கப் பெற்றது. அது குடியானவர்களுக்கு உதவி புரிவதையே தன் கடமையாகக் கொண்டது. மேலும், புதிய அரசியல் திட்டத்தின் மூலமாகப் பொது மக்களுக்கு ஓர் அளவுக்கு வாக்கு உரிமை கிடைக்கும் என்பதும், கவுன்ஸில் தேர்தலில் குடியானவர்கள் தொகுதியும் சேர்த்துக்கொள்ளப்படும் என்பதும் தெளிவாயின. குடியானவர்கள் சங்கங்களுக்கு இதனாலும் ஊக்கம் விளைந்தது. இதைக் கண்டு ஜமீன்தார்கள் சிறிது கலக்கமுற்றார்கள். புதிய அரசியல் திட்டத் தேர்தலில் வெற்றியுடன் பங்கெடுத்துக் கொள்வதற்காக தாமும் ஒரு சங்கத்தை நிறுவ வேண்டுமென்று அவர்கள் நினைத்தார்கள். நீலக்காரர்களுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு "நீலக்காரர்-ஜமீன்தார் கழகம்" என்று ஒரு கழகத்தை நிறுவினார்கள். இதனால் குடியானவர்களிடையிலும் படித்தவர்கள் இடையிலும் சிறிது மனக்கலக்கமும் ஆத்திரமும் பிறந்தன. அக்காலத்துத் தினத்தாள்களைப் பார்த்தால் இதை எதிர்த்துப் படித்த வகுப்பினரும் கூக்குரல் எழுப்பினார்கள் என்பது தெரியவரும். இதை எதிர்க்க வேண்டுமென்று பீகார் மாகாண அரசியல் மகாநாட்டிலும் வெளிப்படையாகக் கூறப்பட்டது. இக்கழகம்

முஜபர்பூரில், தோன்றியது. ஆனால் இதன் கிளைகள் மற்ற மற்ற இடங்களிலும் அமைக்கப்பட்டன. தர்பங்காவின் மகாராஜாதி ராஜ் தாம் இதற்குத் தலைவர்.

அந்நாட்களில் ஸ்ரீராமரக்ஷ பிரமச்சாரி சம்பரான் ஜில்லாவின் பேதியா சப்-டிவிஷனில் உள்ள மச்சர்காம் கிராமத்திற்குச் சென்று வேலையைத் தொடங்கியிருந்தார். அவர், கிராமக் கழகங்களுக்காக நிரந்தரமாகத் தொண்டு புரிய விரும்பினார். அங்குள்ளவர்களும் உற்சாகத்துடன் அவருக்குத் துணை புரிந்தார்கள். பலர் தொண்டர்களாகப் பணியாற்றவும் முன் வந்தார்கள். அங்கே அவர் புரிந்து வந்த வேலைகளையெல்லாம் என் மேல்பார்வையில் தான் நடத்தி வந்தார். ஒரு சமயம் நான் அங்குச் சென்றிருந்த போது, அங்குள்ள நிலையத்தைக் கண்ணுற்றுப் பெருமகிழ்ச்சியடைந்தேன். தம்முடைய சண்டைகளைத் தீர்த்துக் கொள்வதற்காகப் பஞ்சாயத்துக்களை அமைத்தல், குழந்தைகளின் படிப்பிற்காகப் பள்ளிக்கூடங்களை நிறுவுதல், ஊரைச் சுத்தம் செய்தல், குடியானவர்களின் குறைகளைப் போக்க முயற்சி செய்தல், ஆகிய இவையே முக்கிய திட்டங்களாக இருந்தன. அங்கு ஓர் ஆச்ரமமும் அமைக்கப்பட்டிருந்தது. அதற்கான செலவை மக்கள் பிடி அரிசி[1] சேர்த்துச் சரிகட்டி வந்தார்கள். நிலையத்தில் வேலை நன்றாக நடந்து வந்தது. மக்களிடையே ஆர்வமும் நிறைய இருந்தது. போலீசாருக்கும் நீலக்காரர்களுக்கும் இப்படிப்பட்ட நிலையங்கள் பிடிக்கவில்லை. ஏனெனில் அவர்களுடைய விஷமம் அங்கே செல்லவில்லை. அதே பிரதேசத்தில் அச் சமயத்தில் போலீசார் ஒரு பெரிய அக்கிரமத்தைச் செய்து விட்டார்கள்.

யாரோ ஒருவன் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரிடம் சென்று மற்றொருவன் மேல்முறையிட்டான். இச்சம்பவம் நடந்த இடத்திற்குப் பக்கத்துக் கிராமத்திலேயே சப்-இன்ஸ்பெக்டர் வேறு ஏதோ ஒரு வழக்கைப் பற்றி விசாரணை செய்து கொண்டிருந்தார். அவர் சில போலீஸ்காரர்களையும் கிராமத்துத் தலையாரியையும் அனுப்பி, எவன் பேரில் முறையிடப்பட்டதோ அவனையும் இன்னும் சிலரையும் பிடித்து வரும்படி கூறினார். அவர்கள் வரமாட்டோமென்று விட்டார்கள். மிகவும் கட்டாயப் படுத்தியும் வரவேயில்லை.

---

1 இப்பழக்கம் தென்னாட்டிலும் இருபத்தைந்து முப்பது ஆண்டுகளுக்கு முன் வழக்கில் இருந்தது. ஒவ்வொரு வேளையும் சமையலுக்கு அரிசி எடுக்கும்போது, ஒரு கைப்பிடி அரிசியை ஒரு பானையில் போட்டுச் சேகரித்து மாதக் கடைசியில் அதை ஏதாவது ஓர் அறநிலையத்திற்கு அளிப்பார்கள். அவர்கள் அதை விற்றுப் பணமாக்கிக் கொள்வார்கள்.

இன்ஸ்பெக்டருக்கு அதிகக் கோபம் வந்தது. அதன்மேல் நடந்ததின் முழு விவரங்களை இங்கே கொடுக்க வேண்டியதில்லை. ஜில்லாவின் தலை நகரிலிருந்து இராணுவப் போலீஸை இன்ஸ்பெக்டர் வரவழைத்து விட்டார். எத்தனையோ கிராமங்கள் பழைய முறைப்படி கொள்ளையிடப் பட்டன. மக்களுக்குப் பெருங் கொடுமைகள் விளைவிக்கப்பட்டன. பெண்மக்கள் கூடத் தப்பவில்லை. பிரமச்சாரி ராம்ரக்ஷின் தோழர்கள் சர்வஸ்ரீ துவஜா பிரசாத், ராம் விநோத் சின்ஹா, மனோரஞ்சன் பிரசாத் ஆகியவர் அங்கு விளைவிக்கப்பட்ட தீச்செயல்களின் செய்தியைத் தினத்தாள்களில் அச்சிட்டனர். ராம்ரக்ஷ கைது செய்யப்பட்டார். பீகார் மாகாணக் குழுவானது இதைப் பற்றி விசாரணை செய்வதற்காக ஒரு குழுவை ஸ்ரீமஜஹர்-உல்-ஹக்கின் தலைமையின் கீழ் அமைத்தது.

இக்கிளர்ச்சி மும்முரமாக நடந்து கொண்டிருந்தபோது காந்திஜீ பீகாருக்கு வந்து சேர்ந்தார். அவர் சம்பரானுக்குச் சென்ற போது இச்சம்பவம் நடந்த இடத்திற்கும் சென்றார். அவ்வூர்க்காரர்களையும் அவர் கண்டு பேசினார். இப்பிரயாணத்தின் போதுதான் காந்திஜீ அஹிம்சாவிற்கு ஓர் அரிய விளக்கத்தை அளித்தார். அதையே இன்று வரை மக்களுக்கு அடிக்கடி எல்லா இடங்களிலும் எடுத்துரைக்க வேண்டியிருக்கிறது. அவர் கூறியதாவது: "ஆண் பிள்ளைகள் பெண்டாட்டி பிள்ளைகளை விட்டுவிட்டு ஓடிப்போனதால் பெரும் கோழைத் தனத்தைக் காட்டினார்கள். தம் உயிரைக் கொடுத்து அவர்களைக் காப்பாற்றுவது அவர்களுடைய கடமை. அப்படி அவர்களுக்குக் கையைத் தூக்காமல் சாவதற்கு ஆற்றல் இல்லாவிட்டால், அவர்கள் தம்மால் எவ்விதம் முடியுமோ, அவ்விதமாக எதிர்த்து நின்றிருக்க வேண்டும். ஆனால் பயத்தால் ஓடிப்போவது பெரிய "ஹிம்சா" ஆகும். ஓடிப்போவதை விடக் கையில் கிடைத்ததை எடுத்துக் கொண்டு எதிர்த்து நிற்பது நன்று" என்பதேதான். அவர் கூறியதை அப்படியே இங்குச் சொல்லவில்லை. ஆனால் இதுதான் அதன் சுருக்கம். பிரம்மச்சாரி ராம்ரக்ஷ மீதும் மற்றவர்கள் மீதும் வழக்கு நடந்தது. பல மாதங்கள் வரையில் அவர்கள் இவ்வழக்கில் சிக்குண்டிருந்தார்கள். கடைசியில் எல்லாம் பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டது. எல்லாரும் விடுதலை செய்யப்பட்டார்கள்.

மகாத்மாஜீயின் யாத்திரையால் கிளர்ச்சி மிக்க வேகம் கொண்டது. கவுன்ஸில் தேர்தல் முடிந்து விட்டது. இப்போது பள்ளிக்கூடங்களையும், கல்லூரிகளையும் ஒழிப்பதன் மேல் கவனம்

செலுத்தப்பட்டது. ஒரு தேசீய மகாவித்யாலயம் (கல்லூரி) திறக்கலாமென்று நாங்களும் முடிவு செய்தோம். பட்னு-கயா சாலையில் குடிக்கூலிக்கு ஒரு வீடு எடுத்து அதில் கல்லூரி திறக்கப்பட்டது. நான் இருந்து கொண்டிருந்த வீட்டிற்குப் பக்கத்திலேயே இந்த வீடு இருந்தது. வக்கீல் தொழிலேயோ விட்டு விட்டேன். இனி எனக்காக வீடு வைத்திருப்பது தேவையில்லை என்றும், மாதம் 150 ரூபாய்ச் செலவை நிறுத்த வேண்டுமென்றும் நினைத்தேன். ஆகையால் என்னுடைய வீட்டை விட்டுக் கல்லூரியிலேயே தங்கி வந்தேன். சட்ட நூல்களை என் நண்பர் ஸ்ரீ சம்பூ சரண வர்மாவிடம் கொடுத்து விட்டேன். அப் புத்தகங்கள் அவர் வாழ் நாள் முழுதும் அவரிடமே இருந்தன. அவருடைய அகால மரணத்திற்குப் பிறகு மற்றும் ஒரு நண்பரிடம் சென்று சேர்ந்தன. அங்கே இன்று வரையில் அவருக்குப் பயன்பட்டு வருகின்றன.

பட்னுவின் பொறியியல் (எஞ்சினியரிங்) பள்ளிக்கூட மாணவர்களுக்கும் அதன் தலைமை ஆசிரியருக்கும் ஏதோ ஒரு விஷயத்தில் மனவேறுபாடு ஏற்பட்டு விட்டது. மாணவர்கள் ஹர்த்தால் செய்தார்கள். எல்லாருமாக ஒன்று கூடி ஊர்வலம் அமைத்து ஸ்ரீ மஜஹர்-உல்-ஹக்கிடம்வந்து சேர்ந்தார்கள். அந் நாட்களில் அவர் பிரேசர் ரோடில் சிக்கந்தர் மன்ஜிலில் வசித்து வந்தார். “ நாங்கள் பள்ளிக்கூடத்தை விட்டு வந்து விட்டோம். எங்களுக்கு இடம் கொடுங்கள் ” என்று அவரிடம் கூறினுர்கள். மஜஹர்-உல்-ஹக் சாஹப் மிக்க கனிவான நெஞ்சம் உடையவர்; அச்சமற்றவர். சிறந்த பற்றின்மை உடையவர். அப்போது அவர் மிகவும் இன்பமாக அப்பெரிய மாளிகையில் இருந்து வந்தார். தமக்காக வேறொரு மாளிகையையும் கட்டிக் கொண்டிருந்தார். அவை எல்லாவற்றையும் துறந்து விட்டு, அப்பையன்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு பட்னு-தானுப்பூர் சாலையில் உள்ள ஒரு தோட்டத்திற்குச் சென்று விட்டார். அவருக்குத் தெரிந்த ஒரு கனவானுடைய சிறு வீடு ஒன்று அங்கே இருந்தது. அதில் தங்கி வந்தார். அப்போது குளிர்காலம், குளிர் கடுமையாக இருந்தது. அந்த இடம் கங்கைக் கரையில் இருந்ததால் தட்பம் அதிகமாக இருந்தது. அடர்ந்த தோட்டத்தால் சூழப்பட்டிருந்ததால் அவ்விடத்து நிலம் சற்று ஈரமாகவும் இருந்தது. அப்படி இருந்தும்கூட மஜஹர்-உல்-ஹக் சாஹப் அங்கே சில நாட்கள் வரையில் அதே சிறிய பங்களாவில் இருந்து வந்தார். மெல்ல மெல்ல அவ்விடத்தில் பனை ஓலைத் தட்டிகளைக் கொண்டு

சில குடிசைகளும் அமைக்கப்பட்டன. பையன்களும் மிக்க உற்சாகத்துடன், துன்பத்தை பாராட்டாமல் அவருடன் ஆனந்த மாக இருந்து வந்தார்கள். அந்த இடத்திற்கு அவர் "சதாகத் ஆச்ரமம்" என்று பெயரிட்டார். இரவு ஒன்பது மணிக்கு மேல் வழிப்போக்கன் எவனும் அப்பக்கம் செல்வது அபாயகரமானது என்று நினைக்கப்பட்ட அந்த இடம் இப்போது இன்பகரமான தாகி விட்டது. சர்க்கா செய்வதற்கு ஒரு தொழிற் பட்டறையும் அங்கே திறக்கப்பட்டது. பையன்கள் எல்லாரும் சர்க்கா செய் வதில் ஈடுபட்டார்கள். மெல்ல மெல்ல ஹக் சாஹப் தம் செலவில் ஒரு வீட்டை அமைக்கத் தொடங்கினர். மேலும் சில பையன்களும் அங்குச் சென்று அவருடன் தங்கலானுர்கள். அவரும் அங்கேயே வ்சித்துக் கொண்டு பையன்களுக் குக் கல்வி கற்பித்து வந்தார். பையன்கள் உண்ட அதே எளிய உணவை அவரும் உண்டு வந்தார். பையன்கள் பெரும்பாலும் ஹந்துக்கள்தாம். தாம் தம் மனத்தில் எவ் விதமான ஹிந்து-முஸ்லிம் வேற்றுமையையும் பாவிப்பதாக எப் பையனும் நினைக்கூடாதென்று அவர் விரும்பினுர். ஆகையால் அவர் எல்லாரையும் இவ்விதமாகச் சமமாகப் பாராட்டி வந்தார். பையன்களும் அவரைத் தம் தந்தைபோலப் போற்றத் தக்கவர் என்று எண்ணி வந்தார்கள். அவ்விதமாகவே அவர்மேல் நம்பிக் கையும் கொண்டிருந்தார்கள்.

இதை ஒட்டி இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிடுதல் அவசிய மாகும். இதன் மூலம் அம்மகானுடைய உண்மைப் பண்பு புலப் படும். ஹக் சாஹபுடன் மிக்க ஏழைக் குடும்பத்து முசல்மானிய பையன் ஒருவன் தங்கிக் கொண்டிருந்தான். அவன் படிப்பில் மிகச் சூட்டிகையாக இருப்பதைக் கவனித்தார். மேலும் அவன் முசல்மானுயிருந்தும்கூட ஹிந்தியும் ஸம்ஸ்கிருதமும் படிக்கிருன் என்பதும் அவர் மனத்தைக் கவர்ந்தது. அவன் கல்லூரியில் முதல் அல்லது இரண்டாவது ஆண்டு வகுப்பில் படித்து வந்தான். பெயர் முகமது கலீல். ஹக் சாஹப் அவன் மேல் அதிக மதிப்பு வைத்திருந்தார். ஒத்துழையாமை தொடங்கியதும் அவனும் கல்லூரியை விட்டு விட்டான். ஹக் சாஹபுடனேயே அவருடைய வீட்டை விட்டுச் சதாகத் ஆச்ரமத்திற்கு வந்து அங்கே தங்கி வந்தான். ஒன்று ஒன்றரை ஆண்டுகளுக்குப்பின் ஹக் சாஹப் அவனை ஆச்ரமத்திலிருந்து விரட்டி விட்டார் என்பதைக் கேள்விப் பட்டேன். முகமது கலீலும் என்னிடம் வந்து, அவர் தன் மேல் கோபித்துக் கொண்டு விட்டார் என்று கூறித் தனக்காகப் பரிந்து

பேசி அவரைச் சமாதானப்படுத்தும்படி கேட்டுக் கொண்டான். ஹக் சாஹப் என்மேல் எப்போதுமே பிரியமாக இருந்து வந்தார். அதனுல் நான் முகம்மது கலீல் விஷயத்தைப் பற்றி அவரிடம் பேசினேன். அக் காலத்தில் முகம்மது கலீல் பீகார் முழுதிலும் மிக்க புகழ் வாய்ந்தவனுகி விட்டான். ஒத்துழையாமை தொடங்கியதுமே அவன் தேசீய கீதம் ஒன்றை இயற்றினுன். அக்காலத்தில் அது மிகவும் புகழ் பெற்றுப் பரவி வந்தது. மெய்யாகவே அது வெகு அழகானதும், மனத்தைக் கவருவதானதும், உள்ளத்தைத் தொடுவதுமான பாட்டாக இருந்தது. "பாரதத் தாயே! போற்றி! போற்றி!" என்ற பல்லவியைக் கொண்டிருந்தது. அக்காலத்தில் அது மிக்க ஆர்வத்துடன் பாடப்படாத கூட்டம் எதுவும் நடந்ததில்லை என்றே கூறலாம்.

"முகம்மது கலீலின் பேரில் ஏதாவது தவறு இருந்தால் மன்னித்து விடுங்கள்" என்று நான் ஹக் சாஹபிடம் சொல்லிய போது, அவர் பெரும் துயரத்துடன் என்னிடம் இப்படிக் கூறினுர். "நான் உன் சொல்லை என்றும் தட்டுவதில்லை. ஆனுல் இம்முறை எனக்கு வேறு வழியில்லை. கலீல் எவ்வளவு தீமை செய்தான் என்பது உனக்குத் தெரியாது. அதனுல்தான் நீ பரிந்து பேச வந்திருக்கிருய். என் வாழ்க்கையில் எதை நான் தலைசிறந்த நோக்கமாகக் கொண்டிருக்கிறேனே, எதற்காக இன்று வரையில் பாடுபட்டு வருகின்றேனே, எதற்காக இன்று பக்கிரி ஆகி நிற்கின்றேனே, அதை அல்லவா அவன் தாக்கி விட்டான். நான் இது வரையில் என் வாழ்க்கை முழுவதிலும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டு வந்திருக்கிறேன். அதே வேலையில் இன்றும் ஈடுபட்டிருக்கிறேன். அவன் ஆச்ரமத்தில் இருந்து கொண்டு ஹிந்து பையன்களிடம் இப்படி நடந்து கொண்டான். அதனுல் என்னை நம்பி, அன்பினுல் கட்டுண்டு என்னை வந்து அடைந்த அப்பையன்கள் இப்போது ஹிந்து—முஸ்லிம் வேற்றுமைக் கருத்துக்களைத் தெரிந்து கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். என் வாழ்க்கை முழுவதுமாக நான் படைத்து வந்த வேலையை அல்லவா கெடுக்க முயற்சி செய்தான். இப்பையன்களை முசல்மானியர் ஆக்குவதற்கு இவன் முயன்று வந்தான். நான் எதையும் மன்னிக்க முடியும்; ஆனுல் இப்படியாக நம்பிக்கை பூண்டுள்ள பையன்களிடம் இஸ்லாமின் பெயரால் நம்பிக்கைத் துரோகம் செய்வதைச் சகிக்க முடியாது. ஏமாற்றுவதற்காகவே ஹிந்தியையும் ஸம்ஸ்கிருதத்தையும் இவன் கற்ருன் என்பதை இப்பொழுது தெரிந்துகொண்டேன். ஒருநாள் இவன்

ஹிந்து முஸ்லிம் கலகத்தை விளைவித்து விடுவான். இவனை நான் ஆச்ரமத்தில் எக்காரணம் பற்றியும் இருக்க விடமாட்டேன்'' என்றார். சிறிது காலத்திற்குப்பின் கலீல்தாஸ் என்ற பெயருடன் புகழ்பெற்ற முகம்மது கலீல் இவன்தான். இவன் எத்தனையோ இடங்களில் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையை அழிக்கும் காரியங்களைச் செய்தான் என்பது பொது மக்களுக்குத் தெரியும். இதன் தீவினைப் பயனாக அடிதடி கலகங்கள் உண்டாயின. எத்தனையோ ஹிந்துக்களும் முசல்மானியரும் உயிர் இழந்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பின் அவனைப் பற்றி இப்படிப்பட்ட குற்றங்களைக் கேட்டபோது ஹக் சாஹபின் வருங்காலக் கூற்று நினைவிற்கு வந்தது. அவருடைய ஆவேசமும் ஆழ்ந்த பொருளும் செறிந்த சொற்கள் மீண்டும் ஒருமுறை காதில் ஒலிக்கின்றன.

தேசிய மகாவித்யாலயம் திறக்கப்பட்டு விட்டது. நான் அதற்குத் தலைமை ஆசிரியனாக அமர்த்தப்பட்டேன். அதன் ஆசிரியர்களாக, பீகார் நேஷனல் (பி.என்.) கல்லூரியில் பட்னாவில் ஆங்கிலமொழிப் பேராசிரியராக இருந்து வந்த ஸ்ரீ பத்ரிநாத் வர்மா, பட்னா கல்லூரியில் ஸம்ஸ்கிருதப் பேராசிரியராக இருந்த ஸ்ரீ ஜகந்நாத் பிரசாத் எம். ஏ., (காவ்ய தீர்த்), பாகல்பூர் டி. என். ஜூபிளி கல்லூரியில் தத்துவப் பேராசிரியராக இருந்த ஸ்ரீ பிரேம் சுந்தர் போஸ் ஆகியவர்கள் தத்தம் பதவியை ராஜீநாமா செய்துவிட்டு வந்து சேர்ந்தார்கள். இவர்கள் மட்டுமன்றி, ஸ்ரீ ஜகந்நாராயண்லால், ஸ்ரீ ராமசரித்திர சின்ஹா, ஸ்ரீ அப்துல் பாரீ முதலியவர்களும் வந்து சேர்ந்தார்கள். கல்லூரிகளைவிட்டு வந்த பையன்களுள் மேலும் படிக்க விரும்பியவர்களுக்குக் கல்வி கற்பிக்க ஆரம்பித்தோம். அது வரையில் அரசாங்கக் கல்லூரியில் கற்பிக்கப்பட்டு வந்த பாடங்களையே பெரும்பாலும் இங்கும் கற்பித்தோம். சம்பரான் சுற்றுப் பிரயாணத்தின்போது மகாவித்யாலயத்திற்காகத் திரட்டிய பணத்தை இதற்குச் செலவிடலானோம்.

பல்கலைக் கழகத்தின் பரீக்ஷைகளின் நாள் நெருங்கிக் கொண்டு வந்தது. அரசாங்கப் பரீக்ஷையில் சேர்ந்து கொள்ள விரும்பாத பையன்களுக்கு நாம் பரீக்ஷை வைக்கவேண்டுமென்று சில தோழர்கள், முக்கியமாக மௌல்வீ ஷபீ தாவூதீ, கருதினார்கள். ஆகையால் பரீக்ஷை நடத்துவதற்கு ஓர் அமைப்பும் அவசியமாகிவிட்டது. மகாத்மா காந்திஜீயும் பீகாரிலிருக்கும்போது, பீகாரிலும் ஒரு வித்யாபீடம் அமைக்கவேண்டும் என்று கூறியிருந்தார். எங்களிடம் பணம் இல்லை என்று நான் கூறியதும், அதைப்

பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும், வேலை சரியான முறையில் நடந்தால் பணத்திற்குக் குறைவிருக்காது என்றும் கூறினர். நாகபுரி காங்கிரஸுக்குப்பின் அவர் மீண்டும் பீகாருக்கு வந்தபோது, ஜரியாவில் ஐம்பது அல்லது அறுபது ஆயிரம் ரூபாயைத் திரட்டி விட்டதாகவும் அதை எடுத்துக்கொண்டு தாம் பட்னாவிற்கு வருவதாகவும், வித்யாபீடத்தை ஆரம்பிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யும்படியும் தந்தி கொடுத்தார். நாங்கள் மகாவித்யாலயத்தை நடத்திக் கொண்டிருந்த அதே வீட்டிலேயே அவர் வித்யாபீடத்தைத் தொடங்கி வைத்தார். ஸ்ரீ மஜஹர்-உல்-ஹக் சாஹப் அதற்கு வேந்தராக நியமிக்கப்பட்டார். முறைப்படி செனேட் முதலியனவும் அமைக்கப்பட்டன. பாடமுறை வகுப்பதற்கான வேலையில் நான் ஈடுபட்டேன். இவற்றை எல்லாம் பார்த்துவிட்டு அரசாங்கக் கல்லூரியில் படித்து வந்த பையன்களுக்கு அதிக உற்சாகம் உண்டாகியது. ஒரு நாள் ஐம்பது அறுபது பையன்கள் சேர்ந்து ஓர் ஊர்வலம் அமைத்து, பட்னா கல்லூரி, விஞ்ஞான கல்லூரி ஆகியவற்றை விட்டுவிட்டு நேரே பட்னா—கயா சாலையில் உள்ள எங்கள் மகாவித்யாலயத்திற்கு வந்து அதில் சேர்ந்துவிட்டார்கள். இவர்களில் பட்னா பல்கலைக் கழகத்தின் மிகச் சிறந்த மாணவர்கள் பலர் இருந்தார்கள். அவர்களில் சிலர் இங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிட்டார்கள். அவர்கள் இன்று மாகாணம் முழுவதிலும் பரவி முக்கிய மனிதர்களுள் சிலராக இருந்து வருகிறார்கள். வேறு சிலர் சில நாட்கள் வரையில் வேலை பார்த்தார்கள் ; பிறகு கிளர்ச்சி சிறிது படுத்துப்போனபின் அரசாங்கக் கல்லூரிக்குத் திரும்பிச் சென்றுவிட்டார்கள். அங்கிருந்து அவர்கள் பரீக்ஷைகளில் நன்றாகத் தேறி அரசாங்க வேலைகளுக்குச் சென்றுவிட்டார்கள். இன்று அவர்கள் பெரிய பதவிகள் வரையில் உயர்ந்து சென்று அரசாங்கப் பணி ஆற்றி வருகிறார்கள். இன்னும் சிலர் அதிவிரைவிலேயே திரும்பிச் சென்றுவிட்டனர் ; பிறகு தங்கள் பழைய முறையிலேயே நின்று வரலானார்கள்.

# 32. முழுக்க முழுக்க ஒத்துழையாமையில் ஈடுபாடு

ஒத்துழையாமையின் தலைமையான கூறுகள் நான்கு விலக்குக்கள் ஆகும்: (1) அரசாங்க வேலைகளையும் பட்டங்களையும் விடுதல். (2) அரசாங்கக் கல்வி நிலையங்களுடன் உள்ள தொடர்பை அறுத்தல்—அதாவது, தாமும் அவற்றில் கல்வி பெருமல் இருத்தல். தம் குழந்தை குட்டிகளையும் அங்கே கல்வி கற்க விடாதிருத்தல். (3) கவுன்சிலுக்குப் போகாதிருத்தல். அதைக் கொண்டு எவ்வித ஆதாயமும் பெருதிருத்தல். (4) அரசாங்க நீதி மன்றங்களோடு உள்ள தொடர்பை விடுதல். அங்கு வக்கீல் அல்லது முக்தார் தொழில் அல்லது வேறு எவ்விதத் தொழிலையும் நடத்தாதிருத்தல். எங்களில் ஒவ்வொருவரும் இந்நான்கு விலக்குக்களையும், அவரவர் அவற்ருேடு சம்பந்தப்பட்ட வரையில், முற்றிலும் நிறைவேற்றுவார்கள் என்ற நம்பிக்கை பூண்டிருந்தோம். எனக்கு யாதும் பட்டமோ பதவியோ கிடைக்கவில்லை. ஆனல் என் தமையனருக்குக் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவியதற்காகவும் அவற்றிற்காகப் பாடுபட்டு உழைத்ததற்காகவும் ராய் பகதூர் பட்டம் கிடைத்திருந்தது. அப்பட்டத்தைத் துறக்கும்படி நான் அவரிடம் என்றுமே கூறவில்லை. ஆயினும், அவரே, நாகபுரி காங்கிரஸுக்குப் பிறகு, அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டார். இதற்கு வாய்ப்புப் பின்வருமாறு கிட்டியது. ஒத்துழையாமைக் கிளர்ச்சி கடுமையாக எழத் தொடங்கியதும் பீகார்–ஒரிசா அரசாங்கத்துக் காரியதரிசி மிஸ்டர் ஹைலட் (இப்போது ஐக்கிய மாகாணத்தின் கவர்னர் பதவியில் இருந்து ஓய்வு எடுத்துள்ளவர்) ஒரு சுற்றுக் கடிதம் விடுத்தார். அதில் நகரபரிபாலன மன்றங்களும் ஜில்லா போர்டுகளும் ஒருவகையான அரசாங்கத் துறைகளே என்பதும், ஆகையால் அவற்றின் உறுப்பினர்களும் ஊழியர்களும் எவ்விதத்திலும் ஒத்துழையாமையில் பங்கு எடுத்துக்கொள்ளக் கூடாது என்பதும் கூறப்பட்டிருந்தன. இதனல் மக்களிடையில் மேலும் அதிக ஆத்திரம் பிறந்தது. என் தமையனர் அப்போது சப்ரா நகரபரிபாலன நிலையத்திற்குத் துணைத் தலைவராகவும் கௌரவ மாஜிஸ்திரேட்டாகவும் இருந்தார். இந்த உத்தரவு பிறந்ததும் அவர் தம் பட்டத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார். மாஜிஸ்திரேட்டு வேலையிலிருந்தும் விலகிக்கொண்டார்.

ஆனால் நகர பரிபாலன சபையின் துணைத் தலைவர் பதவியை விடவில்லை. தாம் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதால் அப் பதவியிலிருந்து தாம் விலகமாட்டாரென்றும், அவ்வேலை யைச் செய்து கொண்டுதான் இருப்பார் என்றும் கூறிவிட்டார்.

தமையனாரின் மகன் ஜனார்த்தனன் சமீபத்தில்தான் மெட்ரிக் கில் தேறி ஹிந்துப் பல்கலைக் கழகத்தில் பொறியியல் கல்லூரியில் சேர்ந்திருந்தான். என் இரு பையன்களில், சமீபத்தில் காலா ஆஜார் நோயிலிருந்து தப்பிய மிருத்யுஞ்சயன் மெட்ரிக்கில் படித் துக்கொண்டிருந்தான். ஆனால், வயது குறைவாயிருந்ததால் பல்கலைக் கழகத்தின் விதிகளின்படி பரீக்ஷை எழுத அனுமதிக்கப் படவில்லை. மற்றொருவன், தனஞ்ஜயன், பள்ளிக்கூடத்தில் ஏதோ ஒரு கீழ் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். மூன்று பையன்களையும் கல்லூரியிலிருந்தும் பள்ளிக்கூடத்திலிருந்தும் நிறுத்திவிட்டோம். சில நாட்களுக்குப் பின் ஜனார்த்தனன் கீர்த் தியானந்த எஃகுத் தொழிற்சாலையின் இரும்புப் பட்டறையில் வேலை கற்க அமர்ந்தான். அங்கே ஒன்று, ஒன்றரை ஆண்டு வேலை கற்றபின் அவன் சீமைக்குச் சென்றுவிட்டான். வெளி நாட்டில் இரும்பு வேலை கற்பதற்காக அவனுக்கு ஓர் உபகாரச் சம் பளமும் கிடைத்தது. அதைக் கொண்டு அவன் தன் காரியத்தை நடத்தி வந்தான்; வீட்டிலிருந்து தமையனார் ஏதோ சிறிதளவு தான் அவனுக்காகச் செலவு செய்யவேண்டியிருந்தது. மிருத் யுஞ்சயன் பீகார் வித்யாபீடத்தில் படிக்கத் தொடங்கினான். அங் கிருந்து பட்டம் பெற்றான். சப்ராவில் தேசீயப் பள்ளிக்கூடம் நடந்துகொண்டிருந்த வரையில் தன்னூ அதில் படித்துக்கொண் டிருந்தான். அதற்குப் பின் வீட்டிலேயே அளிக்கக்கூடிய கல்வி யைத்தான் பெற்று வந்தான். பல்கலைக் கழகத்தோடு இருந்த தொடர்பை எப்படி அறுத்துக்கொண்டேன் என்பதை மேலே கூறியுள்ளேன். வக்கீல் தொழிலையும் அறவே விட்டுவிட்டேன். இவ்வண்ணமாக இறைவனின் திருவருளால் நாங்கள் அவரவ ருடைய சொந்த வாழ்க்கையில் ஒத்துழையாமைத் திட்டத்தைக் கூடிய வரையில் நிறைவேற்றினோம்.

அதுவரையில் பீகாரில் காங்கிரஸ் அமைப்பு இல்லை என்றே சொல்லலாம். மாகாணக் காங்கிரஸ் குழு ஒன்று இருந்தது. நவாப் சரப்ராஜ் ஹுசேன்கான் தாம் அதன் அமைச்சராக இருந்தார். நானும் அவருக்கு உதவியாளனாக இருந்து வந்தேன். இவ்விதமாக ஜில்லாக்களிலும் ஆங்காங்கு ஏதாவது ஜில்லாக் குழுவுக்கு எவராவது அமைச்சராக இருந்து வந்தார். ஆனால்

முறைப்படி அங்கத்தினரைச் சேர்க்கும் வழக்கம் அக்காலத்தில் இல்லை. எவர் வேண்டுமானாலும் தம்மை அங்கத்தினராகக் கருதிக்கொள்ளலாம். பிரதிநிதிகளின் தேர்தலும் முறைப்படி நடப்பதில்லை. எவரொருவர் காங்கிரஸ் விழாச் சமயத்தில் வந்து சேருகிறாரோ அவர் பிரதிநிதியாக ஆக்கப்பட்டு விடுவார். ஜில்லா அல்லது மாகாணத்திற்கு அமைச்சர் என்று சொல்லிக்கொள்ளு கிறவர் அவருக்குச் சான்றுச் சீட்டு கொடுத்துவிடுவார். அவர் பத்து ரூபாயைக் கட்டணமாகச் செலுத்திவிட்டுப் பிரதிநிதி ஆகி விடுவார். இப்படிப்பட்ட பிரதிநிதிகள்தாம் காங்கிரஸின் ஆண்டு விழாவின்போது அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் அங்கத் தினரைத் தேர்ந்தெடுப்பார்கள். அத்தேர்தலில் அதிகப் போட்டி இருப்பதில்லை. மாகாணத்தின் முக்கிய மனிதர்கள் சிலர் தாம்—காங்கிரஸில் சிரத்தை எடுத்துவருபவர்கள்—தேர்ந்தெடுக்கப்படு வார்கள். அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் விதிமுறைப்படி பீகார் மாகாணம் அக்குழுவுக்கு 1500 ரூபாய் ஆண்டு வரி கொடுக்க வேண்டும். எவரெவர்கள் 100 ரூபாய் கொடுக்கிறார்களோ அவர்கள்தாம் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவிற்கு அங்கத்தின ராகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்பது ஒருவாறாக ஒத்துக் கொள்ளப்பட்டிருந்தது. இந்த நிபந்தனையைப் பலர் நிறைவேற்ற முடியாததால் அவர்கள் அபேக்ஷகர்களாக நிற்பதற்கு முன்வருவ தில்லை. இதிலிருந்து, தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் எல்லாருமே 100 ரூபாய் செலுத்தினார்கள் என்று நினைத்துக்கொள்ளக் கூடாது. அக்காலத்தில் ராஜமகேந்தரியைச் சேர்ந்த புகழ் வாய்ந்த காங்கிரஸ் ஊழியர் ஸ்ரீ சுப்பாராவ் பந்துலு அகில பார தீயக் காங்கிரஸ் குழுவுக்கு அமைச்சராக இருந்தார். அவர் இக் கட்டணத்தைத் தண்டல் செய்வதற்காக அடிக்கடி பட்னாவிற்கு வருவது எனக்கு நினைவிருக்கிறது. அப்படியிருந்தும்கூட இது ஒவ்வோர் ஆண்டும் செலுத்தப்படுவதில்லை. 1920இல் எத்த னையோ ஆயிரம் ரூபாய் பீகார் பேரில் நிலுவை இருந்தது.

நாகபுரி காங்கிரஸானது காங்கிரஸ் அமைப்பின் விதிமுறை களை மாற்றிவிட்டது. எல்லா இடங்களிலும் காங்கிரஸுக்கு அங்கத்தினரைச் சேர்ப்பதைக் கட்டாயமாக்கிவிட்டது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஜனத்தொகையில் லக்ஷத்திற்கு ஒரு பிரதிநிதி வீதம் தேர்ந்தெடுப்பதற்கு உரிமை அளித்தது. இவ்வண்ண மாகப் பிரதிநிதிகளின் எண்ணிக்கை வரையறுக்கப்பட்டுவிட்டது. மேலும், காங்கிரஸ் அங்கத்தினர்கள்தாம் பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுக்கலாம் என்பதையும் கட்டாயமாக்கிவிட்டது. அதுவும்

ஏதாவது ஒரு காங்கிரஸ் குழுவின் முறையான இருக்கையில் தான் செய்யப்படலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் பெயர் பட்டியல் காங்கிரஸ் பேரவை கூடுவதற்கு சில குறிப்பிட்ட நாட்களுக்கு முன்னமே அகில பாரதீயக் குழுவின் அலுவலகத் திற்கு வந்து சேரவேண்டும். அப்பட்டியலில் எவரெவருடைய பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றனவோ அவர்களைத் தவிர, யாதேனும் முக்கிய காரணம் இன்றி, வேறு எவரும் பிரதிநிதியாக முடியாது. தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி எவரேனும் ராஜீநாமா செய்துவிட்டால் அவருடைய இடத்திற்கு வேறு புதிய தேர்தல் நடந்தால்தான் பட்டியலில் உள்ள பெயர்களில் மாறுதல் செய்ய லாம். இதற்குச் சான்று மாகாண அமைச்சருக்கு அளிக்கப்பட வேண்டும்.

இக்கட்டுப்பாடுகளால் காங்கிரஸ் தேர்தலில் ஒரு புது கண் டிப்பு வந்துவிட்டது. இனிப் பழையமுறை செல்லாது. ஆகை யால் குழுக்களைப் புதிதாக மீண்டும் நிறுவிக்கொண்டு முறைப்படி தேர்தல் நடத்துதல் அவசியமாகிவிட்டது. இதற்காகக் கால வரை யையும் காங்கிரஸ் குறிப்பிட்டுவிட்டது. புது விதிமுறையை ஒட்டித் தன் விதிகளை அமைத்துக் கொள்ளுவதற்கு மாகாணக் குழுவிற்கு உரிமை அளிக்கப்பட்டது. ஆகையால் புது அமைப்பு ஏற்படாத வரையில் வேலைகளை எல்லாம் செய்து வர ஒரு சிறிய குழுவை அமைத்துக் கொள்ள வேண்டுமென்று கருதப்பட்டது. பழைய காங்கிரஸ் தலைவர்கள் பலர் இச்சமயத்தில் காங்கிரஸி லிருந்து விலகிவிட்டார்கள். சிலர், காங்கிரஸின் கொள்கை மாறி யதற்காகவும், வேறு சிலர், அதன் கொள்கை அவர்களுக்கு உகந்ததாயினும், ஒத்துழையாமைத் திட்டத்தின் பொருட்டும் காங்கிரஸுடன் முரண்பட்டார்கள். இது காரணம் பற்றியும் புது அமைப்பு அவசியமாயிற்று. இச்சிறிய குழுவுக்கு நான் அமைச்சன் ஆக்கப்பட்டேன். மௌலானா மஜஹர்-உல்-ஹக் தலைவரானார். அதற்கு "அமைப்புத் திருத்தக் குழு" என்று பெயரிடப்பட்டது. குழு தன் வேலையை மிக்க ஆர்வத்துடன் தொடங்கியது. நாங்கள் சென்ற இடங்களில் எல்லாம் காங்கிர ஸுக்கு அங்கத்தினரைச் சேர்ப்பதைப் பற்றிப் பேசினோம். ஒத்துழையாமைப் பிரசாரத்தையும் செய்து வந்தோம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

தத்தம் தொழிலை விட்டு வந்த வக்கீல்கள், முக்தார்கள், மாணவர்கள் எத்தனையோ பேர் மாகாணம் முழுதும் பரவி விட்டார்கள். அவர்கள் எல்லா இடங்களிலும் காங்கிரஸின்

ஆணையைக் கொண்டு சேர்த்தனர். பெரும்பாலும் எல்லா ஜில்லாக்களிலும் தேசீயப் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன. சில மெட்ரிக் வகுப்பு வரையிலும் அமைக்கப்பட்டன. அவை எல்லாம் பீகார் வித்யா பீடத்துடன் பிணிப்புக்கொண்டிருந்தன. மெட்ரிக் பள்ளிக்கூடங்களின் தொகை ஏறக்குறைய 50 இருக்கும்; ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் தொகை ஏறக்குறைய இரண்டு அல்லது இரண்டரை நூறு இருக்கும். பீகார் வித்யா பீடத்துடன் தொடர்பு கொண்ட எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் மொத்தம் இருபதிலிருந்து இருபத்தைந்தாயிரம் பையன்கள் வரை கல்வி பெற ஆரம்பித்தார்கள். தம் வேலைகளை விட்டு வந்த பலர் அப் பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களாக அமர்ந்தார்கள்.

அந்நாட்களில் மாகாணமெங்கும் கணக்கற்றப் பொதுக் கூட்டங்கள் நிகழ்த்தப்பட்டன. செயலாளர்கள் செல்லாத இடமும், அவர்கள் கூட்டம் கூட்டிக் காங்கிரஸ் திட்டத்தையும் ஆணையையும் மக்களுக்கு எடுத்துரைக்காத இடமும் எந்த ஜில்லா விலும் எப்பகுதியிலும் இருந்திருக்கா என்று நினைக்கிறேன். நானும் மாகாணம் முழுவதிலும் சுற்றி வந்தேன். 1921இல் தான் மாகாணம் முழுவதையும் கண்டறிந்தேன். எண்ணிறந்த செயலாளர்களுடன் பழக்கம் ஆயிற்று.

நான் வக்கீல் தொழிலை ஆற்றி வந்திருந்தாலும், மேலும் சிறுவயதிலிருந்து சபைகளில் பங்கெடுத்துக் கொண்டு வந்திருந் தாலும் கூட எனக்குப் பெரிய கூட்டங்களின் முன் அடிக்கடி பேசிப் பழக்கம் இல்லை. ஒத்துழையாமைப் பிரசாரத்திற்காகக் கணக்கற்ற கூட்டங்களில் இப்போது பேச வேண்டிவந்தது. அதனால், கூட்டங்களில் பேசும்போது இருந்து வந்த சிறிதளவு கூச்சமும் போய்விட்டது. இப்போது நான் தட்டுத் தடுமாறமல் பேசமுடியும். போஜ்புரி மொழி பேசப்படும் ஜில்லாக்களில் சென்றால் போஜ்புரியில்தான் பேசுவேன். மற்ற இடங்களில் தூய ஹிந்தியில் பேசுவேன். புரூலியாவில் நான் சில சமயங் களில் வங்காளியில் பேசியிருப்பதாக நினைவிருந்தாலும், அவ் வாண்டில் எப்போதாவது வங்காளியில் பேசினேனா என்பது நினைவில்லை. கூட்டங்களும் சின்னஞ்சிறியன அல்ல. பத்தா யிரம் மக்களைக் கொண்ட கூட்டங்களில் எல்லாருக்கும் என் குரல் எட்டும்படி எளிதில் பேசமுடியும். கூட்டம் அதற்கு மேலிருந் தால் சிரமப்பட வேண்டியிருக்கும். பதினையாயிரம் மக்கள் உள்ள கூட்டங்களில், மக்கள் அமைதியாயிருந்தால், என் குரல் கடைசிவரையில் எட்டும்படி பேசமுடியும். ஆனால் அதிகக்

களைப்பு உண்டாகும். வயிற்றில் வலி வந்துவிடும். அந்த ஆண்டில், இருபது இருபத்தைந்தாயிரம் பேர் கொண்ட கூட்டத்தில் கூடப் பேசியிருக்கிறேன் என்று நினைவிருக்கிறது. சப்ரா ஜில்லாவில் உள்ள ஹதுவாவில் ஒரு பேரவை நடந்தது. மகாத்மா காந்தி அங்கே வரப்போகிருர் என்று ஒரு செய்தி எப்படிப் பரவிவிட்டதென்பது தெரியவில்லை. இதனுல் அங்கே சுமார் ஐம்பதாயிரம் பேர் வந்து கூடிவிட்டார்கள். எத்தனையோ முயற்சி செய்தும் கூட்டத்தை அமைதி செய்ய முடியவில்லை. என் முழு வலிமையைக் கொண்டு ஒரு சிறிய சொற்பொழிவைச் செய்தும் கூடச் சிலரே அதைக் கேட்டுப் புரிந்துகொண்டிருக்க முடியும் என்று நினைக்கிறேன்.

நான் சொற்பொழிவு ஆற்றும்போது, சபையில் கூடியிருப்பவர்கள் மனத்தில் அது எப்படிப் படுகிறது என்பதைக் கவனித்து வருவேன். நன்ருகப் பதிகின்றது என்றும், மக்கள் கேட்க ஆவலாயிருக்கிருர்கள் என்றும், மேலும் அங்குள்ளவர்கள் நான் சொல்வதைக் கேட்டுப் புரிந்துகொள்ளக் கூடியவர்கள் என்றும் தோன்றிய இடத்தில் சொற்பொழிவும் நன்ருக அமைவது எனக்கே தெரியும். இப்படி இல்லாத இடங்களில் பேச்சும் அப்படி இப்படித்தான் இருக்கும். சொற்பொழிவுகளும் சிறியதாயிருப்பதில்லை. காங்கிரஸின் வரலாறு, கிலாபத்துக் கிளர்ச்சி, பஞ்சாபை ஒட்டிய அக்கிரமங்கள், சுயராஜ்யத்தின் தேவை ஆகியவற்றை அன்றியும் ஒத்துழையாமை திட்டத்தையும் எல்லாக் கூட்டங்களிலும் நான் மிக விரிவாக எடுத்துக் கூறுவேன். இதில் சுமார் ஒன்று அல்லது ஒன்றரை மணி நேரம் கழிந்துவிடும். பத்தாயிரம் பேர் வரையில் உள்ள கூட்டங்களில் வெகு விரிவாக ஒன்று ஒன்றரை மணி நேரமோ அதற்கு மேலுமோ எல்லாவற்றையும் எடுத்துக் கூறுவேன். இதற்கு மேல் மக்கள் குழுமியிருந்த இடங்களில் சிறிது சுருக்க வேண்டிவரும். இருபதாயிரம் பேர்களுக்கு மேற்கொண்ட சபைகளில் அரைமணி நேரத்திற்கு மேல் பேச முடியாது. இவ்வண்ணமாக நான் மாகாணம் முழுவதும் சுற்றி வந்துகொண்டிருந்தேன். மற்றத் தோழர்களும் இப்படியே செய்து வந்தார்கள்.

# 33. "தேஷ்", "செர்ச்லைட்" வெளியிடுதல்

ஒத்துழையாமைக் கிளர்ச்சியில் எல்லாத் தலைவர்களும் சேர்ந்திருக்கவில்லை. ஒத்துழையாமையில் கலந்து கொள்ளாத பழமையானவர்களும் வயது முதிர்ந்தவர்களுமான காங்கிரஸ் தலைவர்கள் கூடி "பீகார் மாகாண லீக்" என்ற பெயருடன் ஒரு சங்கத்தை நிறுவினார்கள். நாட்டின் மிதவாதக் கட்சிப் பத்திரிகைகளில் அதைப்பற்றி மிகவும் விவாதம் நடந்தது. ஆனால் அச்சங்கம் ஒன்றும் செய்ய முடியவில்லை. அதைப்பற்றிப் பின்னால் ஒன்றுமே கேள்விப்படவில்லை. எங்கள் மாகாணத்தில் ஒரு விசேஷம் என்னவென்றால் கருத்து மாறுபாடு இருந்தாலும் எங்களுக்குள் சண்டை மூளவில்லை. எப்பொழுதும் போலவே எங்கள் உறவு இருந்து வந்தது. ஆனால் இத்தனை பேர்கள் பிரிந்து போய்விட்டதாலும் மேலும் நாகபுரியில் காங்கிரஸின் விதி முறைகள் பெருவாரக மாற்றப்பட்டு விட்டதாலும் காங்கிரஸ் குழுக்களைப் புதிதாக அமைப்பது அவசியமாயிற்று. இந்த வேலை முடிவடைய எத்தனையோ மாதங்கள் பிடித்தன. ஜுன் கடைசியில் ஜில்லாக் குழுக்கள் உருவாகி மாகாணக் குழுவின் தேர்தலை நடத்த முடிந்தது. அதற்குப் பின் அகில பாரதீயக் குழுவின் உறுப்பினர் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். காங்கிரஸின் புது அமைப்பு விஷயத்தோடு கூடக்கூட வேறு சில கேள்விகளும் எழுந்தன. செய்தித்தாள்களைப் பொறுத்த வரையில் பீகார் சிறந்த மாகாணமன்று. மிகச் சிரமப்பட்டு நன்கொடைகளைக் கொண்டு "பீகார் டைம்ஸு"ம், "பீகாரி"யும் முதன் முதலாக வெளியிடப்பட்டன. ஆனால் பணக் கஷ்டத்தை முன்னிட்டு இரண்டும் நிறுத்தப்பட்டுவிட்டன. "பீகார் டைம்ஸை"ப் பிறப்பித்தவரும் அதன் தலைமையான ஊழியரும் பாபூ மகேஷ் நாராயண் தாம். அவர் இப்போது காலமாகி விட்டார். தம் வாழ்நாள் முழுவதும் அவர் அதை நடத்தி வந்தார். ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹாவுக்கும் பத்திரிகை தொழிலில் மிகுந்த பற்றுதல் உண்டு. அவர் தம் சொந்த "ஹிந்துஸ்தான் ரெவியூ" நீங்கலாக மற்றப் பத்திரிகைகளுக்குப் பொருளும் கட்டுரைகளும் குறைவில்லாமல் அளித்து உதவி வந்தார். "பீகாரி"க்குப் பனைவி சமஸ்தானத்திலிருந்து அதிக உதவி கிடைத்தது. ஒரு விதத்தில் அதுவே அப்பத்திரிகையை நிறுத்துவதற்கும் காரணமாயிற்று. மற்றொரு பத்திரிகை ஹதுவா மகாராஜாவின் ஆதரவில் "எக்ஸ்பிரஸ்"

என்ற பெயருடன் வெளிவந்து கொண்டிருந்தது. பணம் இழந்து கொண்டே நெடுநாள் உழன்று கொண்டிருந்த அதுவும் நிறுத்தப் பட்டு விட்டது. 1918-இல் பட்னுவின் தலைவர்கள் அனைவரும், முக்கியமாக ஸ்ரீ சச்சிதானந்தா சின்ஹாவும் ஸ்ரீ ஹசன் இமாமும், பீகாருக்கு என்று ஒரு பத்திரிகை தேவை என்பதை உணர்ந்து, ஒரு பத்திரிகையை வெளியிட வேண்டும் என்று முடிவு செய்தார்கள். ஸ்ரீ சின்ஹா கூறியதை ஏற்று அதற்குச் "செர்ச்லைட்" என்ற பெயர் வைக்கப்பட்டது. அது வாரத்தில் இருமுறை வெளிவந்து கொண்டிருந்தது. ஸ்ரீ சின்ஹா, ஸ்ரீ ஹசன் இமாம் முதலியவர்கள் அதன் டைரக்டர்களாக இருந்தார்கள். புதிய மனிதர்களுள் ஸ்ரீ பிரஜ்கிஷோர் பிரசாதும் நானும் இருந்தோம். ஒத்துழையாமைக் கிளர்ச்சி ஆரம்பமானவுடன் "செர்ச்லைட்"டின் முன் இக்கேள்வி வந்தது. அதாவது, அது ஒத்துழையாமையை ஆதரிப்பதா அன்ரு என்பதுதான். பணம் செலவிடுபவர்களுள் ஸ்ரீ ஹசன் இமாமும் ஸ்ரீ சின்ஹாவும்தாம் முக்கியமானவர்கள். அவர்கள் ஒத்துழையாமைக் கட்சியை சேர்ந்தவர்கள் அல்லர். மாகாணம் முழுவதிலும் ஒத்துழையாமையில் இவ்வளவு உற்சாகம் பொங்கி எழுந்து கொண்டிருக்கும்போது அதை எதிர்த்து நிற்பதன் பயன் என்னவாகியிருக்கும் என்ருல் "செர்ச்லைட்" எக்காலத்திற்குமே மக்களுடைய அபிமானத்தை இழந்து விடும் என்பதுதான். இது மட்டுமன்றி, டைரக்டர்களுக்குள் ஒத்துழையாமையில் சேர்ந்திருந்த நாங்களும் இருந்தோம். அதன் ஆசிரியரான ஸ்ரீ முரளிமனேகர் பிரசாதும் முற்றிலும் ஒத்துழையாமையைச் சேர்ந்தவர்தாம். இந்த நிலைமையில் எங்களுக்குள் இருந்த கருத்து வேறுபாட்டை முன்னிட்டு ஒரு வழி வகுத்துக் கொள்ளுவது அவசியமாயிற்று.

1920இல் இருந்து "சர்ச்லைட்"டின் அச்சகத்திலிருந்தே "தேஷ்" என்ற ஹிந்தி வாரப் பத்திரிகையும் வெளியிடப்பட்டு வந்தது. அதற்கு நான் பேருக்கு ஆசிரியனுக இருந்தேன். ஒத்துழையாமையானது ஆங்கிலம் படித்திருந்த சில வக்கீல்கள், பாரிஸ்டர்கள், மேலும் பெரிய பெரிய வணிகர்களின் ஆங்கில பழக்கமுறையில் அமைக்கப்பட்டிருந்த அறைகளிலிருந்து அரசியல் வாழ்க்கையை வெளியேற்றிக் கிராமங்களுக்கும், ஆலமரத்தடி நிழலுக்குக் கீழும், கிராமங்களின் களத்து மேட்டுக்கும் கொண்டு வந்து சேர்த்து விட்டது. அங்கே ஆங்கிலம் நுழைய முடியவில்லை. பொதுமக்கள் வரையில் வந்து சேரவேண்டுமானுல் தேசீய மொழியின் காலைத்தான் பிடிக்க வேண்டியிருந்தது. ஆகையால் "செர்ச்

லைட்டை” விடத் “தேஷ்” தான் மேலான பலன் அளிக்கும் என்று நாங்கள் கருதினோம். ஆகையால் ஸ்ரீ ஹஸன் இமாம், ஸ்ரீ சின்ஹா ஆகிய இருவர்களுடன் நாங்கள் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டோம். அதன்படி, “செர்ச்லைட்” தன் தலையங்கங்களில் ஒத்துழையாமையைக் கண்டனமோ ஆதரிப்போ செய்யாது என்பதும், ஆனால் மற்றவர்களுடைய கட்டுரைகளை, அவை சாதக மாகவோ பாதகமாகவோ இருப்பினும், எழுத்தாளர்களின் பெயர் களுடன் அச்சிடலாம் என்பதும் முடிவாயிற்று. மேலும் “தேஷ்” எங்களுடைய பத்திரிகை ஆகிவிடுமென்றும், அப்போதிலிருந்து அதன் நஷ்டம் லாபம் இரண்டும் எங்களைப் பொறுத்தது ஆகும் என்றும், அதன் கொள்கை எங்கள் விருப்பப்படி அமையும் என் றும், ஆயினும் அது “செர்ச்லைட்” அச்சுக்கூடத்திலிருந்தே அச் சிடப்பட்டு வெளிவரும் என்றும் ஒப்பந்தம் செய்யப்பட்டது.

இவ்விதமாக ஒரு ஹிந்தி வாரமலர் எங்கள் கைக்கு வந்து விட்டது. ஆங்கில “செர்ச்லைட்” துணையாக இல்லாவிட்டாலும் எதிரியாக இல்லை. நாங்களும் அதில் கட்டுரைகள் எழுதி வரு வோம் என்று எண்ணினோம். ஆனால் இந்த ஆசை நிறைவேற வில்லை. ஏனெனில், கிளர்ச்சியின் வேலை மிகவும் பெருகி விட்ட தால் எழுதுவதற்கு ஒழியவே இல்லை. “தேஷ்” ஒத்துழையாமை யின் பிரசார வேலைக்கு மிக்க உதவி புரிந்தது. சந்தாதாரின் எண்ணிக்கையும் அதிகமாகப் பெருகியது. விளம்பரங்களும் நிறையக் கிடைத்தன. நாங்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்ததால் “தேஷை” நடத்துவதன்மீது கவனம் செலுத்த முடியவில்லை. சந்தாதாரின் எண்ணிக்கைப் பெருகப் பெருக, நடைமுறையின் குற்றத்தால் நஷ்டமும் அதற்கு ஏற்பப் பெருகி வந்தது. நாங்கள் கணக்கைப் பார்வையிட்டபோது, விளம்பரங்களுக்குக் கட்டண விகிதம் குறைக்கப்பட்டு விட்டது என்பதையும் அவற்றை அச் சிடுவதற்கு எவ்வளவு செலவு பிடித்ததோ, அவ்வளவுக்குக்கூட விளம்பரங்களிலிருந்து பணம் கிடைக்கவில்லை என்பதையும் கண்டோம். ஆகையால், விற்பனையாகும் பிரதிகள் ஏற ஏற நஷ்டமும் ஏறிக் கொண்டே சென்றது. பலருடைய பொருள் களுக்கு நாங்கள் எங்கள் செலவிலேயே மாகாணம் முழுவதும் மும்முரமாக விளம்பரம் அளித்து வந்தோம் என்பதைக் கண் டோம். ஆனால் இது ஏராளமாக நஷ்டமானபின்தான் தெரிய வந்தது. இவ்விதமாக அப்போது “தேஷி”ன் மேல் ஏறிய சுமை அதன் கழுத்தில் ஒரு கனத்த கல்லை என்றென்றைக்கும் கட்டியது போல நெடுநாள் இருந்து வந்தது.

பொதுமக்கள் கிளர்ச்சி சிறிது காலத்திற்குப் பின் தளர்வடைந்து விட்டது. "தேஷி"ன் விற்பனையும் சிறிது குறைந்து விட்டது. இறுதியில் பொருள் நெருக்கடியால் அதை நிறுத்த வேண்டியதாயிற்று. கிளர்ச்சி மும்முரமாக நடந்து வந்தவரையில் அது நிறையத் தொண்டு புரிந்து வந்தது. மக்களாலும் மிகவும் போற்றப்பட்டு வந்தது.

"செர்ச்லைட்" அதற்காக அமைக்கப்பட்ட கொள்கைப்படி நடந்து கொண்டிருந்தது. சிறிது காலத்திற்குப் பின் ஸ்ரீ ஹசன் இமாமும் ஸ்ரீ சின்ஹாவும் அதிலிருந்து விலகிவிட்டார்கள். பிறகு அது எங்கள் அதிகாரத்தின் கீழ் முற்றிலும் வந்து விட்டது. அவர்கள் இருவரும் ஆரம்பத்தில் அதற்குத் தம் பணத்தாலும் உழைப்பாலும் அதிக உதவி புரிந்திருந்தாலும் கூட அதை மிகப் பெருந்தன்மையுடன் எங்கள் கைக்கு மாற்றி விட்டார்கள் என்பதைக் கூறியாக வேண்டும். அப்பொழுதிலிருந்து "செர்ச்லைட்" முழுக்க முழுக்கக் காங்கிரஸ் பத்திரிகையாகி விட்டது. அதன் ஆசிரியர் ஸ்ரீ முரளீமனோஹரின் மனப்போக்குக்கேற்ப அது இப்போது அமைந்தது. 1930–34இல் சத்தியாகிரகம் நடந்தபோது எந்தெந்தப் பத்திரிகைகள் தம் இச்சைப்படி உண்மை சம்பவங்களை அச்சிட முடியவில்லையோ, மேலும் சொந்தக் கருத்துக்களைத் தடையின்றி வெளியிட முடியவில்லையோ அவை அரசாங்கத்தின் உத்தரவை ஏற்க மறுத்துத் தாம் பிரசுரமாவதை நிறுத்திவிட வேண்டும் என்று காங்கிரஸின் ஆணை பிறந்தபோது, அதை முற்றிலும் கடைப்பிடித்து நின்ற மிகச் சில பத்திரிகைகளில் "செர்ச்லைட்"டும் ஒன்ருக இருந்தது. இப்படியெல்லாம் இருந்தும் கூட "செர்ச்லைட்" பொருள் நெருக்கடியிலிருந்து என்றுமே விடுதலை பெறவில்லை. கடைசியில் நாங்கள் அதன் உரிமையைப் பிர்லா பிரதர்ஸுக்கு மாற்றவேண்டி வந்தது. அதற்குப் பண உதவிக்கு அவர்கள் ஏற்பாடு செய்வார்கள் என்றும், ஆனல், அதன் ஆசிரியக் கொள்கை எங்கள் இஷ்டப்படியேதான் அமையும் என்றும் ஒரு நிபந்தனையின் பேரில் 1941 இறுதியில் இது இவ்விதமாகக் கை மாறியது. அப்போதிலிருந்து பிர்லா பிரதர்ஸ் ஏராளமாகச் செலவு செய்திருக்கிருர்கள். இவ்விதமாக அது பணக் கஷ்டத்திலிருந்து விடுபட்டு வரும்போது 1942 கிளர்ச்சியில் அதை மூடும்படி அரசாங்கத்தார் உத்தரவு பிறப்பித்து விட்டார்கள். அதன் ஆசிரியரும் எங்களுடன் கண்காணுக் காவலில் அடைக்கப்பட்டார். நான் இப்பகுதியை எழுதிக் கொண்டிருக்கும் இடத்தில் இதோ அவரும் என்னுடன் இருக்கிருர்.

# 34. கிளர்ச்சியின் மிடுக்கும் அரசாங்கத்தின் அடக்குமுறையும்

1920 டிசம்பரில் காங்கிரஸின் ஆண்டு விழா நாகபுரியில் நடந்தது என்று மேலே கூறப்பட்டுள்ளது. உடல் நலமின்மையால் நான் அப்பேரவைக்குச் செல்ல முடியவில்லை. வேறு எந்தப் பேரவைக்கும் இது வரையில் வராத அளவுக்கு அத்தனை பிரதிநிதிகள் இப்பேரவைக்கு வந்திருந்தார்கள் என்பதைக் கேள்விப்பட்டேன். இதற்கு ஒரு காரணம் இருந்தது. நாகபுரியில் ஒத்துழையாமைத் தீர்மானத்தைப் பற்றி மீண்டும் ஆலோசனை செய்யப்படும் என்று சிலர் நினைத்தார்கள். ஆகையால், இரு கட்சிக்காரரும் தத்தம் கட்சிக்குப் பலம் அளிப்பதற்காகப் பெருந்திரளாக அங்கே வந்து சேர்ந்தார்கள். ஆனால் இரு கட்சிகளுக்கு இடையில் சமாதானம் ஏற்பட்டு விட்டது. கடைசியில் ஒத்துழையாமைத் தீர்மானமானது சில திருத்தங்களுடன் நிலைபெற்று விட்டது. இத்தீர்மானத்தின்படி ஒத்துழையாமையைப் படிப்படியாகச் செய்யும்படி நாட்டிற்கு கட்டளையிடப்பட்டது. அரசாங்கப் பட்டங்களைத் துறத்தல், கவுன்சிலை விட்டு விலகுதல், காங்கிரஸின் தீர்மானத்திற்கு முரணாகக் கவுன்சிலுக்குச் சென்றவர்களிடமிருந்து யாதோர் உதவியும் ஏற்காமலிருத்தல், அரசாங்கத்துடன் பிணைக்கப்பட்ட கல்வி நிலையங்களிலிருந்து விலகுதல், கோர்ட்டுகளைப் புறக்கணித்தல் ஆகிய இவைதாம் முதலில் முக்கிய வேலைத் திட்டங்களாக அமைந்தன. பிறகு படிப்படியாக, அரசாங்க வேலைகளை விடுவதாகவும் வரி கொடாமைக்குக் கட்டளை கிடைத்த பின் நடத்துவதாகவும் முடிவு செய்யப்பட்டது. மேலும், அரசாங்கத் தொடர்பில்லாத தேசீயப் பள்ளிக்கூடங்களை அமைத்தல், சர்க்கா பிரசாரம் செய்தல், அயல் நாட்டுத் துணியைப் புறக்கணித்தல் ஆகியவையும் தேவை என்பதும் குறிப்பிடப்பட்டது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையும் அஹிம்சையும் வற்புறுத்தப்பட்டன.

முதலில் சற்று அப்படியும் இப்படியுமாக இருந்தவர்கள் எல்லாரும் நாகபுரியின் தீர்மானத்திற்குப் பிறகு திண்ணமாக ஒத்துழையாமையில் சேர்ந்துவிட்டார்கள். “மக்கள் மட்டும் காங்கிரஸின் தீர்மானத்தைச் செயல் முறையில் நிறைவேற்றி விட்டால் ஓர் ஆண்டிற்குள்ளாக சுயராஜ்யம் வந்துவிடும்” என்று வேறே மகாத்மாஜீ கூறிவிட்டார். ஓராண்டு என்ற

விஷயத்தை மக்கள் மனத்தில் பற்றிக் கொண்டார்கள். அதனுல் மேலே கூறியுள்ள நிபந்தனைகளை நிறைவேற்றுவதில் எல்லாரும் உணர்வும் உள்ளமும் பதிந்து ஈடுபட்டுவிட்டார்கள். மேலே கூறப்பட்டுள்ள கூட்டங்களில் செய்யப்பட்ட பிரசாரத்தின் முக்கிய நோக்கமும் இதுவே.

பீகார் மாகாணம் முழுவதிலும் எண்ணிறந்த செயலாளர்கள் வேலை புரியலானுர்கள் என்பதும், சுயராஜ்யத்தைப் பற்றியும் ஒத்துழையாமையைப் பற்றியும் செய்தி கிராமம் கிராமமாகச் சென்று பரவலாயிற்று என்பதும் மேலே கூறப்பட்டுள்ளது. சில நாட்களுக்குள்ளாகவே வியப்பான எழுச்சி ஒன்று புலப்பட்டது. அரசாங்கமும் வாளாயிருக்கவில்லை. இதன் விளைவாக மக்க ளிடையில் தமக்கு உள்ள செல்வாக்கு ஓரடியாக ஒழிந்து வருகிற தென்பதையும், மக்கள் அச்சம் அற்றவர்களாகி வருகிருர்கள் என்பதையும் அது கண்டது. காங்கிரஸ் பக்கத்தில் நாங்கள் ஒரு விஷயத்தில் எங்கள் முழு கவனத்தையும் செலுத்தி வந்தோம். அதாவது பொது மக்கள் ஆர்வத்தின் மேலீட்டால் ஏதாவது வரம்பு மீறிய காரியத்தைச் செய்து விடக்கூடாது என்பதுதான். ஆகையால் நாகபுரி காங்கிரஸுக்குப் பின் மாகாணக் குழு வெளி யிட்ட அறிக்கையில் அமைதியும் அஹிம்சையும் மிகவும் வற்புறுத் தப்பட்டன. எவர் மேலும் எவ்விதமான பலாத்காரமும் செலுத் தப்படக் கூடாதென்று தெள்ளத் தெளிவாகக் கூறப்பட்டது. நாம் பலாத்காரத்தை மேற்கொண்டால் அரசாங்கத்திடம் தோற்றுப் போவோம் என்பதையும், அதனிடம் பலாத்காரத் திற்குத் தேவையான சாதனங்கள் இருக்கின்றன என்பதை யும், நம்மிடம் இல்லை என்பதையும் நாங்கள் உணர்ந்தோம். செயலாளர்களுக்கும் இதையே விளங்க வைப்பதற்கு முயற்சி செய்து வந்தோம். அது மட்டும் அன்றி, ஒத்துழையாமையின் முக்கிய அம்சம் அஹிம்சை ஆதலால், அதன் மூலமாகத்தான் பொது மக்களை நம் பக்கத்தில் ஈர்க்க முடியும் என்றும், நாம் முரட்டுத்தனமாகப் பலாத்காரத்தைக் கையாண்டால் அதன் பயன் விபரீதமாகத்தான் முடியும் என்றும், நாம் ஒரு நாள் இதற்கு மனம் நோக வேண்டி வரும் என்றும் கருதி, எங்குச் சொற்பொழிவு செய்தாலும், இதுவே வற்புறுத்தி வரப்பட்டது. துண்டுப் பிரசுரங்களிலும் இதையே வற்புறுத்தி வந்தோம்: எங்கே எப்போது அமைதி குலைவு நிகழும், உடனே அதைச் சாக்காக வைத்துக்கொண்டு மக்களை ஒடுக்கலாம் என்று

அரசாங்கம் காத்துக் கொண்டிருந்தது. ஆனால் இப்படிப்பட்ட வாய்ப்பு அதற்குக் கிட்டவில்லை.

முஜபர்பூர் ஜில்லாவில் விலைவாசி ஏறிய காரணத்தால் அநேக இடங்களில் கடைகள் கொள்ளையடிக்கப்பட்டன. தர்பங்கா ஜில்லாவிலும் சம்பரான் ஜில்லாவிலும் கூட ஒரிரண்டு இடங்களில் அப்படி ஆகிவிட்டது. அரசாங்கத்தாருக்குத் தாம் தேடிக்கொண்டிருந்த சாக்குக் கிடைத்துவிட்டது. நாங்கள் மதுவிலக்குப் பிரசாரமும் செய்து வந்து கொண்டிருந்தோம். இதுவும் நன்றாகப் பயன் அளித்துக் கொண்டிருந்தது. கள்ளுக் கடைகளை மார்ச்சு மாதத்தில் குத்தகைக்கு விடுவது பழக்கம். விற்பனையோ குறைந்து கொண்டு வந்தது. ஆகையால் தம் வருமானத்தின் பெரியதோர் ஊற்றுக்கு அபாயம் வந்துவிட்ட தென்று அரசாங்கத்தாருக்கு அச்சம் வந்துவிட்டது. இந்த இரண்டு விஷயங்களையும் வைத்துக் கொண்டு அரசாங்கம் அடக்கு முறையைத் தொடங்கிவிட்டது. முஜபர்பூர் ஜில்லாவில் தான் அடக்குமுறை முதன் முதல் தொடங்கப்பட்டது. மற்ற ஜில்லாக்களுக்கும் விரைவில் பரவிவிட்டது. சம்பரானில் லௌரியா சம்பவத்திலிருந்தே சிறிதளவு அடக்குமுறை நடந்து வந்து கொண்டிருந்தது. அங்கே அது இப்போது மேலும் கடுமையுடன் நடக்கத் தொடங்கியது. செயலாளர்களின் பேரில், கிரிமினல் புரோசீஜர் சட்டத்தின் 107ஆவது பிரிவின்படி அவர்கள் நன்னடக்கைப் பத்திரம் எழுதிக் கொடுக்க வேண்டுமென்று வழக்குத் தொடுத்ததுதான் அடக்குமுறையின் ஆரம்பம். செயலா ளர்கள் கூட்டங்களில் சொற்பொழிவு செய்வதும், ஊர்வலங்களில் சேர்ந்து கொள்வதும் கிரிமினல் சட்டத்தின் 144ஆம் பிரிவின்படி தடை செய்யப்பட்டன. எத்தனை பேர்களின் மீது இப்படியாக வழக்குத் தொடுக்கப்பட்டதென்பதை இத்தனை காலத்திற்குப்பின் கூற இயலாது. ஆயினும் மக்கள் ஜாமீன் கொடுக்கவில்லை என் பதையும், எவரெவர் மேல் வழக்குத் தொடுக்கப்பட்டதோ அவர்கள் சிறைக்குத்தான் சென்றார்கள் என்பதையும் மட்டும் நிச்சயமாகக் கூறமுடியும். ஆம், அங்கே இங்கே சிலர் வழக்கை எதிர்த்தும் போராடினார்கள். சில இடங்களில் வழக்குகளைக் கடைசியில் தள்ளவேண்டி வந்தது. ஏனெனில் சாட்சி எதுவும் கிடைக்க வில்லை. உண்மையில் எங்கள் ஆட்கள் ஒத்துழையாமையின் செயல் திட்டத்தை எடுத்துரைக்கக் கூட்டங்கள் நடத்துவதைத் தவிர வேறு எந்த வேலையையும் செய்து வரவில்லை. கடைகள் கொள்ளையடிக்கப்பட்டபோது அதைத் தடுப்பதற்காக எங்கள்

ஆட்கள் மிக்க உதவிபுரிந்தார்கள். எங்கெங்கிருந்து செய்தி கிடைத்ததோ ஆங்காங்கு ஓடிச் சென்று மக்களுக்குப் புத்திமதி கூறி அவர்களை அமைதிப்படுத்தி வந்தார்கள். கொள்ளையடிப்பவர்களை எதிர்த்து நிற்பதற்கும் மக்களைத் தூண்டி வந்தார்கள். ஆனால் அரசாங்கம் இக் கிளர்ச்சியை எப்படியாவது அடக்க விரும்பியதால் அது கொள்ளைக்காரர்களைக் கைது செய்வதற்கு மாறாகச் செயலாளர்களைக் கைது செய்வது தான் அவசியம் என்றும் நியாயம் என்றும் கருதியது.

சில நாட்களுக்குள்ளாகவே நூற்றுக்கணக்கான செயலாளர்கள் இவ்விதமான வழக்குகளுக்கு இலக்காகி விட்டார்கள். மாகாண அரசாங்கத்தின் முதல் செக்ரடரி மிஸ்டர் ரேணி ஒரு சுற்று அறிக்கையை விடுத்தார். இக் கிளர்ச்சியை அடக்கும்படி அது ஜில்லா அதிகாரிகளைத் தூண்டியது. தலக்குடியாட்சி இலாகாவின் அமைச்சரான மிஸ்டர் ஹைலட்டும் ஒரு சுற்று அறிக்கையை வெளியிட்டார். அதில், முனிசிபால்டியும் டிஸ்டிரிக்ட்டு போர்டும் அரசாங்கத்தின் அங்கங்கள் என்றும், ஆகையால் அவற்றின் உறுப்பினர்களும் ஊழியர்களும் ஒத்துழையாமையில் சேரக்கூடாது என்றும் எடுத்துரைக்கப்பட்டது. "நரிக்கு நாட்டாண்மை கொடுத்தால் கிடைக்கு நான்கு ஆடுகள் கேட்கும்" என்றபடி ஜில்லா அதிகாரிகள் இதற்காகத்தான் காத்துக் கொண்டிருந்தார்கள். உடனே அவர்கள் 107, 144 பிரிவுகளின் கீழ் எச்சரிக்கைகளைச் சரமாரியாகப் பொழிந்து தள்ளினார்கள். நூற்றுக் கணக்கானவர்கள் கைது செய்யப் பட்டுச் சிறைக்கு அனுப்பப்பட்டார்கள்.

மஜஹர்-உல்-ஹக் சாஹபுடன் நான் ஆக்ரா போவதாக இருந்தேன். ஏதோ ஒரு காரணத்தால் அவர் போகமுடியவில்லை. நான் மட்டும் சென்றேன். ஆரா ஸ்டேஷனில் இறங்கியதுமே பகல் 9 மணியிலிருந்து மாலை 5 மணி வரையில் எந்த ஊர்வலத்திலாவது கூட்டத்திலாவது நான் சேர்ந்து கொள்ளக் கூடாது என்று எனக்கு 144ஆம் பிரிவின்கீழ் எச்சரிக்கை கிடைத்தது. இதனால் எனக்கு இடைஞ்சல் உண்டாயிற்று. எச்சரிக்கையும் வேடிக்கையாக இருந்தது. அந்நாட்களில் மெட்ரிக் பரீக்ஷை நடந்துகொண்டிருந்தது. ஆராவும் அதற்கு ஒரு தலம். ஊர்வலத்தாலும் கூட்டத்தாலும் பரீக்ஷை எழுதுபவர்களின் காரியத்திற்கு இடையூறு உண்டாகும் என்றும் அதனால் அவர்கள் சீற்றம் அடைவார்கள் என்றும் எச்சரிக்கையில் தடை உத்தரவுக்குக் காரணம் காட்டப்பட்டிருந்தது.

அகில பாரதீயக் குழுவின் கட்டளை பிறக்காத வரையில் சத்தியாக்கிரகம் செய்யக் கூடாதென்று நாகபுரி காங்கிரஸ் முடிவு செய்திருந்தது. இப்படிப்பட்ட நடவடிக்கைகள் அரசாங்கத்தார் எடுக்கத் தொடங்கினுல் அல்லது எடுப்பார்கள் என்று தெரிய வந்தால் அரசாங்கத்தாரின் உத்தரவுகளை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று மாகாணக் குழுவின் சார்பில் நாங்கள் கட்டளையை வெளியிட்டிருந்தோம். ஏனெனில் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பதற்குக் காங்கிரஸ் இன்னும் உத்தரவு அளிக்கவில்லை. ஆனல் தன்மானம் பாதிக்கப்படுமானல் அது வேறு பேச்சு.

இந்த எச்சரிக்கை எனக்குக் கிடைத்ததும் நான் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றே முடிவு செய்துவிட்டேன். அதனல் நான் ஸ்டேஷனிலிருந்து ஊருக்குள்ளே போகவில்லை. நான் அவ்வூருக்கு வந்து சேர்ந்தபோது மத்தியானத்திற்கு மேலாகிவிட்டது. ஸ்டேஷனிலிருந்து முனிசிபால்டிக்கு வெளியே சமீபத்தில் இருந்த ஒரு கிராமத்திற்கு நேரே சென்றுவிட்டேன். அங்கே மாலை முழுவதும் தங்கியிருந்தேன். அங்கே ஒரு கூட்டம் கூடிவிட்டது; கிராமத்தார் தவிர நகரத்திலிருந்தும் நிறையப்பேர் வந்து சேர்ந்தார்கள். பிறகு மாலை 5 மணிக்குப் பின் நகரத்திற்குள் சென்றேன். அங்கும் ஒரு பெரிய கூட்டம் நடந்தது. அதில் நான் என் செயல் திட்டத்தை நிறைவேற்றினேன். இந்த எச்சரிக்கையின் பயனுக ஒரு கூட்டத்திற்குப் பதிலாக இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. மக்களுக்கு உற்சாகம் மிகவும் பெருகியது. நான் பதூவாவுக்குச் செல்வதாக இருந்தேன். அங்கும் நாங்கள் போய்ச் சேருவதற்கு முன்னமே ஏதோ தடை உத்தரவு வழங்கப்பட்டுவிட்டது. நான் அங்கே சென்றது நினைவிருக்கிறது, ஆனல் தடை உத்தரவு என்ன ஆயிற்று என்பது நினைவில்லை.

அந்தச் சமயத்தில் மாகாண கவுன்ஸிலின் இருக்கை நடந்து கொண்டிருந்தது. கவுன்ஸிலுக்குச் சென்றிருந்தவர்கள் காங்கிரஸின் ஆணையை மீறிச் சென்றவர்களே ஆயினும் அரசாங்கத்தின் சுற்று அறிக்கைகளையும் என்மேல் தொடுக்கப்பட்ட எச்சரிக்கையையும் எடுத்துக் கொண்டு அங்கே விவாதத்தைக் கிளப்பினர்கள். அத்துடன் அச்சமயம் நடத்தப்பட்டு வந்த அடக்குமுறையைப் பற்றியும் கடுமையாகக் கண்டித்துப் பேசினர்கள். இவையெல்லாம் செய்தித்தாள்களில் அச்சானதும் மாகாணத்திற்கு வெளியே இருந்த பத்திரிகைகளும் பீகார் அரசாங்கத்தின் நடவடிக்கைகளை, முக்கியமாக அதன் சுற்று அறிக்கைகளையும்

அடக்கு முறையையும் மிகவும் கடுமையாகக் கண்டனம் செய்தன. விஷயம் பெரிதாகிவிட்டது. முஜபர்பூர் ஜில்லாவில் சீதாமறீ சப்டிவிஷனில் சப் டிவிஷனல் ஆபீசராக இருந்த மிஸ்டர் லீ என்பவர் இப்படிப்பட்ட நடவடிக்கைகளுக்கு மிகவும் பெயர் போனவர். அவர் சில நாட்களுக்குப் பின் அங்கிருந்து மாற்றப்பட்டுவிட்டார். நாடெங்கும் பரவியிருந்த இக்கிளர்ச்சி யின் காரணமாக அவர் மாற்றப்பட்டாரா அல்லது வேறு காரணத் தாலா என்பது தெரியாது. ஆனல் கிளர்ச்சிதான் காரணம் என்று மக்களிடையில் ஓர் எண்ணம் நிலவி வந்தது.

கள் மறியலைக் காரணமாகக் கொண்டு சில இடங்களில் அதிகாரிகள் விஷமம் செய்தார்கள். ஹஜாரிபாக் ஜில்லாவைச் சேர்ந்த சப்ராவில் வயல்களில்கூட கள் விற்கப்பட ஆரம்பித்தது. பொது மக்களிடையில் கள்ளைப் போற்றி அநேக அதிகாரிகள் பிரசாரம் செய்து வந்தார்கள். சில இடங்களில் செயலாளர் களின்மீதும் தொண்டர்களின் மீதும் மறியலில் சேர்ந்து கொண்ட தற்காக வழக்குகள் தொடுக்கப்பட்டன.

எங்கள் செயல் திட்டத்தில் பஞ்சாயத்துக்களை நிறுவுவது ஒரு முக்கியமான வேலையாக இருந்தது. அதன்படி பல இடங் களில் பஞ்சாயத்துக்கள் நிறுவப்பட்டன. எத்தனையோ வழக்கு கள் அவற்றல் தீர்த்து வைக்கப்பட்டன. மக்களைப் பஞ்சாயத் தின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ள வைப்பதற்காகச் சிலர் சாதி விலக்கையும் கையாண்டார்கள். நாங்கள் இதை மாகாணக் குழுவின் சார்பிலிருந்து தடுத்தோம் ஆயினும் அங்கே இங்கே அப்படி ஏதாவது நடந்துதான் வந்தது. ஓரிடத்தில் ஒரு பஞ்சாயத்து மிக்க செல்வாக்குப் பெற்று அரசாங்க நீதிமன்றம் போல வேலை செய்து வருவதைக் கண்டோம். அதன்முன் மக்கள் தம் வழக்குகளை முறைப்படி பதிவு செய்து, அவற்றைத் தீர்த்து வைப்பதற்காக கட்டணமும் செலுத்திவந்தார்கள். பெரும்பாலும் மக்கள் தீர்ப்புக்களை ஏற்றுக் கொண்டு வந்தார்கள். ஆயினும் சில இடங்களில் இடைஞ்சல் எதிர்ப்பட்டது. மடித்து நசிந்துபோன பழம் பழம் வழக்குகளைச் சிலர் பஞ்சாயத்தின் முன் கொண்டு வருவார்கள். அப்படிப்பட்ட வழக்குகளைப் பஞ்சாயத்து மிகப் பழையன என்று, கேட்காமல் தள்ளி விட்டால், இப்பஞ்சாயத்தும் அரசாங்க நீதிமன்றம் போலவே நியாயத்தைப் பார்க்காமல் காலவரைப் பேச்சைப் பேசுகிறது என்று குறை கூறப்படும். ஆனல் அது அவ்வழக்குகளைத்

தீர்க்க விரும்பினல் மக்களை அதன் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள வைக்க அதற்கு அதிகார வசதிகள் இல்லை.

பஞ்சாயத்தை ஒட்டி கிரிடீயில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அங்கே பஞ்சாயத்தின் தீர்ப்பை ஏற்க மறுத்ததாக ஒருவரைச் சாதியைவிட்டுத் தள்ளிவைத்து விட்டார்கள். ஊர்க்கேணியிலிருந்து அவரைத் தண்ணீர் எடுக்கவிடவில்லை. அவர் எடுக்க முயன்றபோது யாரோ ஒருவர் அவருடைய மண் குடத்தை உடைத்துவிட்டார். குடத்தை உடைத்தவரைப் போலீசார் கைது செய்து கொண்டு போனுர்கள். அவருடன் பலபேர் தாணுவரையில் தொடர்ந்து சென்று அதன் முன்னிலையிலும் சிறைச்சாலை முன்னிலையிலும் ஏதோ கலகம் செய்து விட்டார்கள். போலீசாரின்மேல் கல் எறிந்தார்கள் என்றும் போலீசாரைத் தாக்கிஞர்கள் என்றும் போலீசாரால் கூறப்பட்டது. அதனுல் இன்ஸ்பெக்டர் தம் கைத்துப்பாக்கியினுல் அவர்களை சுட்டார். அதனுல் பலர் காயப்பட்டார்கள். சிறைக்கும் தாணுவுக்கும் கூடச் சேதம் விளைந்தது. பிறகு சிலரின்மீது வழக்கு தொடுக்கப்பட்டது. இதைப்பற்றிச் செய்தி கிடைத்ததுமே டாக்டர் மகமூதும் நானும் அங்கே சென்று மக்களை அமைதிப்படுத்திஞேம். வழக்கில் ஊரின் பணக்காரர்கள் பலர் சிக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்கள். மற்றவர்களின்மேல் வழக்கு நடந்தது. முடிவில் என்ன ஆயிற்று என்பது எனக்கு நினைவில்லை.

## 35. ஒரு மகிழ்ச்சிகரமான சம்பவம்

சிறிது காலத்திற்குள்ளாகவே 1921 மார்ச்சில் விஜயவாடாவில் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை நடந்தது. அதில் லோகமான்ய திலகரின் ஞாபகார்த்தமாக ஒரு கோடி ரூபாய் சுயராஜ்ய வேலைக்காகத் "திலக் சுயராஜ்ய நிதி" என்ற பெயரில் ஜூன் 30 ஆம் தேதிக்குள் திரட்டப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. மேலும், இருபது லக்ஷம் சர்க்காக்களை நடைமுறையில் கொண்டு வரவேண்டும் என்றும், காங்கிரஸுக்கு ஒரு கோடி அங்கத்தினரைச் சேர்த்தாக வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. விஜயவாடாவிற்கு வருவதற்கு முன்னிருந்தே காந்திஜீ சுற்றுப் பிரயாணம் செய்து

கொண்டிருந்தார். நான் கல்கத்தாவிலிருந்து மகாத்மா காந்தி ஜீயுடன் ஒரிசாவுக்குச் சென்றேன். அக்காலத்தில் அங்கே பஞ்சம் நடமாடிக் கொண்டிருந்தது. இது மகாத்மாஜீக்கு முன்பே தெரியும். அவர் சிறிது உதவியும் புரிந்திருந்தார். பஞ்சத்தில் அடிப்பட்டவர்களுக்கு மகாத்மாஜீயின் வருகையைப் பற்றிச் செய்தி எட்டிவிட்டது. அநேகம் பேர் மிக மிகத் தொலை விலிருந்து வந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய எலும்புக் கூடுகளை மகாத்மாஜீ பார்த்து மிக்க துயர் உற்றார். ஒரிசா வில் தாம் கண்ட துப்புத் துணியற்று என்பெழுந்து இயங் கும் மக்களைப் பற்றி மிகவும் மனம் நொந்து உருக்கமான ஒரு கட்டுரையும் எழுதினார். அந்த ஏழைகளை நினைத்துக் கொண்டு அவர் துயரத்தால் பெருமூச்சிடுவதை நான் எத் தனையோ முறை கண்டிருக்கிறேன். பூரியில் அவர் தங்குவதற்கு ஒரு பெரிய மாளிகையில் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஒரு புறத்தில் ஸ்ரீ ஜகந்நாத்ஜீயின் மாமெரும் கோவில், பண்டாக்கள், பணக்காரர்கள் ஆகியவர்களின் இன்ப வாழ்க்கை, மகாத்மாஜீயை வரவேற்பதற்காக ஆர்ப்பாட்டம்; மற்றொரு புறத்தில் இந்தத் துப்புத் துணியில்லா "என்பெழுந்து இயங்கும் யாக்கைகள்".

ஒரிசாவில் நடந்த ஒரு கூட்டத்தில் மகாத்மாஜீ சிறப்பு வாய்ந்த சொற்பொழிவு ஒன்று ஆற்றினார். அது இன்றைக்கும் என் உள்ளத்தில் பதிந்து நிற்கின்றது. "நீங்கள் ஆங்கிலக் கல் வியை ஏன் எதிர்க்கிறீர்கள்? ஆங்கிலக் கல்வி தானே ராஜா ராம் மோகன் ராயையும், லோகமான்ய திலகரையும் உங்களையும் தோற்றுவித்தது?" என்று யாரோ ஒருவர் காந்திஜீயைக் கேட் டார். மகாத்மாஜீ இவ்வண்ணம் விடை கூறினார்: "நான் எவ் விதத்திலும் பிரமாதம் இல்லை; ஆனால் லோகமான்ய திலகருக்கு மட்டும் ஆங்கிலம் மூலமாகக் கல்வி கற்க வேண்டிய சிரமம் இல்லாமலிருந்திருந்தால் அவர் இன்றிருப்பதைவிட எவ் வளவோ மிகப் பெரியவராக இருந்திருப்பார். ராஜாராம் மோகன், லோகமான்ய திலகர், ஸ்ரீசங்கராசார்யார், குரு நானக், குரு கோவிந்த்சிங், கபீர்தாஸ் ஆகியவர்களைப் பார்க்க நான் எம்மாத்திரம்? இன்று சுற்றுப் பிரயாணத்திற்கும் பிரசாரத்திற்கும் எத்தனையோ துணைக் கருவிகள் இதோ இருக் கின்றன. அவர்களுடைய காலத்தில் ஒன்றுமே இல்லை. அப்படியும் அவர்களுடைய கருத்துக்கள் உலகத்தில் எத்தனை பெரிய புரட்சி யைச் செய்து விட்டன" என்று கூறினார். ஆங்கில ஆட்சியைப் பற்றி பேசும்போது அவர் "முகலாய ஆட்சியில் அக்பர் காலத்தில்

ராணு பிரதாபும், ஔரங்கஜீப் காலத்தில் சிவாஜியும் போன்ற வீரர்கள் தோன்ற நற்பேறு கிட்டியதே, இன்று அவர்கள் போன்றவர்கள் எங்கே?'' என்று கேட்டார். இவ்விதமாக ஒரு வன்மையான சொற்பொழிவில் அவர் ''மக்கள் தம் மோகத்தால் தான் நாட்டின் மேன்மைக்கு ஆங்கிலக் கல்வியைக் காரணமாகக் காட்டுகிறார்கள்'' என்று விளக்கினார். மேலும் ''ஆம், ஆங்கிலம் தெரிந்திருப்பது கெடுதல் அன்று. நம்மில் பலர் அதைத் தெரிந்து வைக்கவேண்டும், அதைக் கற்கவும் செய்வோம், ஆனால் இன்று போல அது கல்விக்கு மூலக் கருவியாகவும் துணையாகவும் இனி இருக்க முடியாது'' என்றார்.

ஒரிசாவிலிருந்து மகாத்மாஜீயுடன் நான் விஜயவாடா சென்றேன். வழியில் நிகழ்ந்த காட்சிகளை வர்ணிக்க முடியாது. எங்கள் மாகாணத்தில் கண்ட உற்சாகத்தைப் போலவே ஆந்திர தேசத்திலும் கண்டேன். அதே போல மக்களின் திரள், அதே போலப் பத்துத் திக்குகளிலும் எதிரொலிக்கும் முழக்கம், ஸ்டேஷன்களில் அதே ஜனக்கும்பல்! ஓடிக்கொண்டிருக்கும் ரயில் வண்டியின் இருபுறத்திலும் உள்ள ரயில் பாதைகளில் அதே போலச் சாரை சாரையாக ஜனவரிசை! அதேபோல மாபெரும் சபைகள்! விஜயநகருக்கு இரவு சுமார் மூன்று மணிக்குப் போய்ச்சேர்ந்தோம் என்று நினைக்கிறேன். மக்கள் ஊர் முழுவதையும் தீபாவளி மயமாகச் செய்து விட்டார்கள்.

பீகார் பிரதிநிதிகளாகிய நாங்கள் விஜயவாடவிலிருந்து திரும்பிவரும்போது செயல் திட்டத்தை நிறைவேற்றுவதைப் பற்றி ரயில் வண்டியிலேயே பேசிக்கொண்டு வந்தோம். இந்த வேலைகளை எப்படி நிறைவேற்றுவது என்பது பட்னாவிற்கு வந்து சேருவதற்குள் ஒருவிதமாக முடிவுசெய்யப்பட்டு விட்டது. பணம் திரட்டுவதிலும், சர்க்காவை நடைமுறைப் படுத்துவதிலும் நாங்கள் உடனே ஈடுபட்டோம். நான் இராப்பகலாக மகாணத்தில் அலைந்தோடிப் பணம் திரட்டுவதில் ஈடுபட்டிருந்தேன். ஜில்லாக்கள் எங்கும் செயலாளர்கள் இவ்வேலைகளில் உள்ளமும் கருத்தும் லயித்து இறங்கிவிட்டார்கள். பணம் சேரச் சேரப் பாங்கியில் கட்டப்பட்டு வந்தது. நாங்கள் பலவகையான பற்றுச் சீட்டுகளை அச்சடித்துக் கொண்டோம். அவற்றால் ஒரு நன்மை உண்டாயிற்று. ஒவ்வொரு ஆளுக்கும் சீட்டு எழுதிக்கொடுக்கும் வேலையில்லாமல் போயிற்று. குறைந்தது நாலணா வரையில் சீட்டு அச்சடித்திருந்தோம். பெரிய தொகைக்குத் தனியாகச் சீட்டு எழுதிக் கொடுத்து வந்தோம். இதற்கு முன்பு பொது

வாழ்க்கைப் பணிக்காகப் பீகாரில் பொது மக்களிடமிருந்து இவ்விதமாகப் பணம் என்றுமே கேட்டதில்லை. இந்த வேலையில் எவ்வளவு வெற்றி பெறுவோம் என்பதும் எங்களுக்குத் தெரியாது. ஆயினும் மக்களிடை உண்டான ஆர்வத்தைக் கண்டு நம்பிக்கை வளர்ந்து வந்தது. மிகப் பெரிய மனிதர்களிடமிருந்தும் பணக்காரர்களிடமிருந்தும் அதிகம் கிடைக்கவில்லை. ஆனால் ஒவ்வொரு ஜில்லாவிலும் நடுத்தர மக்கள் மிக்க ஆர்வத்துடன் கட்டணம் செலுத்தினார்கள். முடிவில் ஜுன் 30க்குள் ஏறக்குறைய ஏழெட்டு லக்ஷம் சேர்த்துவிட்டோம். ஜுன் முப்பதாம் தேதியன்று இச்செய்தி காந்திஜீக்குத் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. இவ்வேலையில் மற்ற ஜில்லாக்களும் பின் தங்காவிட்டாலும்கூட திர்ஹுட் டிவிஷனின் ஜில்லாக்கள் தாம் அதிக ஊக்கம் காட்டின.

பீகாரில் எத்தனையோ ஜில்லாக்களில் சுற்றிச் சுற்றி நிறையத் தேர்ச்சி பெற்றேன். சில இடங்களில் வேடிக்கையான சில சம்பவங்களும் நிகழ்ந்தன. உதாரணமாக ஒன்றை மட்டும் இங்குச் சொல்கிறேன். ராஞ்சி ஜில்லாவில் சுயராஜ்ய நிதிக்குப் பணம் திரட்டுவதற்காக ஜுன் மாதத்தில் சென்றேன். ஜில்லாவின் பல்வேறு இடங்களுக்கு நான் செல்வதற்காக அங்குள்ள செயலாளர்கள் எனக்காக ஒரு நிகழ்ச்சி நிரல் அமைத்திருந்தார்கள். அதன்படி, முதல்நாள் மோட்டாரில் சென்று 10 மணிக்குள் புண்டுவை அடைந்து அங்குள்ள வேலையை முடித்துக் கொண்டு ராஞ்சிக்கு மத்தியான உணவுக்கு வந்துவிட வேண்டும். மத்தியானத்திற்குப் பின் கூண்டுக்குப் போகவேண்டும். இரவுக்குள் மீண்டும் ராஞ்சிக்குத் திரும்பி வரவேண்டும். அடுத்தநாள் காலை லோகர் தங்காவுக்குச் செல்லவேண்டும். அங்கிருந்து மத்தியானத்திற்குள் திரும்பி வந்து பிற்பகலில் பட்னாவிற்குப் புறப்பட வேண்டும்.

நாங்கள் ராஞ்சியில் காலையிலேயே குளித்துவிட்டுத் தயாரானோம். டாக்ஸி வருவதற்குச் சிறிது நாழிகையாகிவிட்டது. டிரைவரும் கிளீனரும் உள்பட நாங்கள் ஏழு பேர் அதில் ஏறிக்கொண்டு புறப்பட்டோம். மத்தியானம் ராஞ்சிக்கு வந்துதான் உண்ணவேண்டுமென்று திட்டம்போட்டிருந்ததால் நாங்கள் ஒன்றுமே எடுத்துச் செல்லவில்லை. எங்கள் சாமான்கள் எல்லாம் மேலே போட்டிருந்த சட்டையும் அங்கவஸ்திரமும் தாம். அவ்வூரின் தலைவரான டாக்டர் பூர்ணமித்ரா மட்டும் தம்முடன் ஒரு சிறிய பையை எடுத்துக் கொண்டார். அதைப்பற்றி எங்க

ளுக்கு அப்போது தெரியாது. சிறிது தூரம் சென்று ஒரு காட்டை அடைந்ததும் மோட்டாரில் ஏதோ உடைந்து விட்டது. டிரைவர் அதைச் செப்பனிட ஆரம்பித்தான். "ஒன்றுமில்லை, ஐந்தாறு நிமிஷங்களில் சரிப்படுத்திவிடுவேன்" என்றான். ஆனால் பழுது பார்ப்பதற்கு அதிக நாழிகை பிடித்தது. நாங்கள் அவசரப்படுத்தப்படுத்த அவன் சமாதானம் சொல்லிக்கொண்டிருந்தான். கடைசியில் இரண்டு மூன்று மணி நேரத்திற்குப் பின் கொல்லனுடைய உதவி வேண்டியிருக்கும் போலிருக்கிறது என்று கூறினான். தேடிப் பார்த்ததில் ஒரு கிராமம் தென்பட்டது. அங்கே கொல்லன் வீட்டிற்குச் சென்று எதையோ தட்டிக் கொட்டிச் சரிப்படுத்தினான். காட்டில் உண்ணவோ குடிக்கவோ ஒன்றும் கண்ணில் படவில்லை. புளிய மரங்கள் தாம் நிறைய இருந்தன. அவற்றில் புளியம்பழம் கொத்துக் கொத்தாகத் தொங்கிக் கொண்டிருந்தது. நாங்கள் அவற்றை உடைத்து உடைத்து பல்லும் வாயும் கூசக் கூசத் தின்று கொண்டிருந்தோம். உச்சி வேலைக்குமேல் தாகம் பிடுங்க ஆரம்பித்தது. மீண்டும் கிராமத்தைத் தேடிப் பிடித்து வாளியும் செம்பும் இரவல் வாங்கிக் கொண்டு மிகத் தொலைவிலிருந்து தண்ணீர் கொண்டு வந்து தாகத்தைத் தணித்துக் கொண்டோம்.

மோட்டாரைப் பழுது பார்க்கும் வேலை நடந்துகொண்டிருந்த போது, வேறொரு மோட்டாரில் சில போலீஸ்காரர்கள் ஏறிச் செல்வதைக் கண்டோம். எங்களைப் பார்த்துவிட்டு அவர்கள் தங்கள் வண்டியை நிறுத்தினார்கள். நாங்கள் விரைவில் பூண்டுக்கு வந்து சேருவோம் என்பதையும், மோட்டார் கெட்டுப் போனதால் நாங்கள் வருவதற்குச் சிறிது நாழிகை ஆகும் என்பதையும் அங்குள்ளவர்களிடம் சொல்லும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டோம். எங்கள் நிலைமையை விசாரித்தறிவதற்காக உபசாரத்திற்கு மோட்டாரை நிறுத்திக் கேட்டார்கள். ஆயினும் செய்தியை அங்கே போய்ச் சொல்லவில்லை. அங்கே மிக மிகத் தொலைவிலிருந்து வந்து மக்கள் கூடியிருந்தார்கள் ; எங்களுக்காக மாலை மூன்று நான்கு மணிவரையில் காத்திருந்துவிட்டு அவரவர் ஊருக்குப் போய்விட்டார்கள்.

கடைசியில் மோட்டார் செப்பனிடப்பட்டு நாங்கள் மாலை ஐந்தாறு மணிக்குப் பூண்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். சுற்றுப் பக்கத்துக் கிராமங்களிலிருந்து வந்த ஜனங்கள் முன்பே திரும்பிப் போய்விட்டார்கள். ஆனால் பூண்டுவிலேயே இருந்த மக்களுக்கு நாங்கள் வந்துவிட்ட செய்தி வாய்வார்த்தையாகக்

கிடைத்துவிட்டது. உடனே கூட்டம் கூடியது. வழக்கம்போல அங்கும் சொற்பொழிவு நடந்தது. பணமும் திரண்டது. அங்கே ஏறக்குறைய எழுநூறு எண்ணூறு ரூபாய் சேகரமாயிற்று என் பது நினைவிருக்கிறது.

வேலையை முடித்துக்கொண்டு நாங்கள் உடனடியாகப் புறப்படத் தயாரானோம். ஆனால் நாள் முழுவதும் புளியங் காயைத் தின்றே கழித்திருந்தோமாதலால் அங்கிருந்தவர்கள் உணவு உண்டுவிட்டுப் போகும்படி பிடிவாதம் செய்தார்கள். நாங்களும் ஒத்துக் கொண்டோம். சமையல் ஆக்கி இறக்கி முடிய ஒன்பது பத்து மணி ஆகிவிட்டது. பிறகு உணவு உண்டு விட்டு இனி என்ன செய்யலாம் என்று ஆலோசனை செய்தோம். அன்றைக்கு கூண்டுக்குச் போகும் திட்டம் தவறிவிட்டது. அடுத்தநாள் லோகர் தங்கா திட்டம் எப்படியும் தவறக்கூடாது. மேலும் அதேநாள் பிற்பகல் ரயிலில் பட்னாவுக்குப் புறப்படுவதும் மிக்க அவசியம். இரவில் வழிச் செல்வது நன்றன்று என சிலர், முக்கியமாக மோட்டார் டிரைவர், வற்புறுத்தினார்கள். வழியில் காடுகள் இருக்கின்றன என்றும் பேரிடர் எதிர்ப்படும் என்றும், மோட்டாரும் எங்கே கெட்டுப்போகும் என்று சொல்ல முடியாது என்றும், பிறகு இரா வேளையில் மிகவும் ஆபத்தாக முடியும் என் றும் டிரைவர் கூறினான். அவன் சாக்குப்போக்குக் கூறுகிறான் என்று நான் நினைத்தேன். இத்தனை நாழிகை செலவழித்து மோட்டார் செப்பனிடப்பட்டது, மேலும் சரியாகவும் ஓடிக்கொண் டிருந்தது. இப்போது எப்படிக் கெட்டுப் போகும் என்று நினைத்தேன். முக்கியமாக அடுத்த நாள் செயல் திட்டத்தைப் பற்றி நான் கவலைப் பட்டேன். ஆகையால் "முடியாது, நிச்சய மாகப் புறப்படத்தான் வேண்டும்" என்று நான் கட்டாயப் படுத்தினேன்.

முடிவில் இரவு 11-12 மணிக்கு அதே ஓட்டை உடைசல் மோட்டாரில் நாங்கள் ஏழுபேரும் ஏறிக்கொண்டு புறப்பட்டோம். வழியில் சிறிது தொலைவு சென்றதும் ஒரு கணவாய் இருந்தது. அது சற்றுச் செங்குத்தான ஏற்றம். அந்த ஏற்றத்தில் ஏறும் போது மோட்டார் மறுபடியும் கெட்டுவிட்டது. மோட்டார் கெட்டுப் போன இடத்திலிருந்து இன்னும் இருநூறு இருநூற்றைம்பது கஜம் மேலே ஏறவேண்டும். அதற்குப் பிறகு இறக்கம்தான். இறங்கும்போது எஞ்சின் வேலை செய்யாவிட்டாலும்கூட மோட்டார் எளிதாக இறங்கிவிடும் என்று டிரைவர் கூறினான். நாங்களும் அப்படித்தான் நினைத்தோம். கணவாயை விட்டு

இறங்கியதும் ஒரு முசாபரி பங்களா இருந்தது. எப்படியாவது முசாபுரி பங்களா வரையில் போய்ச் சேர்ந்துவிட்டால் அங்கே இரவை வசதியாகக் கழிக்கலாம், மேலும் தூங்கவும் முடியும் என்று நினைத்தோம். எஞ்சியிருந்த ஏற்றத்தில் மோட்டாரைத் தள்ளிக் கொண்டுபோய்க் கடந்துவிடலாமென்று எங்களுடைய அறியாமையாலும் உற்சாகத்தாலும் தீர்மானித்தோம். அப்படியே மோட்டாரை மேலே தள்ளிச் செல்ல ஆரம்பித்தோம். 20-30 கஜம் வரையில் தள்ளிக் கொண்டு போய்விட்டோம். அங்கிருந்து ஏற்றம் மேலும் அதிகமாயிருந்தது. மோட்டாரை மேலே ஏற்றுவது கடினமாயிருந்தது. ஆயினும் நாங்கள் பலம் கொண்டு தள்ளினதால், சிறிது தூரம் மேலே ஏறிய பிறகு மோட்டார் இப்படியும் அப்படியும் திரும்பியது. பின்னால் தள்ளியது. எங்கள் முழு பலத்தைக் கொண்டு அதை நிறுத்தப் பார்த்தோம். என்னென்னவோ செய்து அதைப் பள்ளத்தில் விழாமல் ஒருவிதமாகத் தடுக்க முடிந்தது. அதற்குப் பிறகு மோட்டாரைத் தள்ளுவதற்குத் துணிச்சல் இல்லை.

இரவு 12-1 மணி இருக்கும். நடுக்காட்டில் நாங்கள் ஏழு ஆட்கள் மோட்டாரில் இடுக்கி நெருக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தோம். நாள் முழுதும் உண்டான அலுப்புக்குப்பின் தூங்குவதும் அவசியமாயிருந்தது. டிரைவர் வேறே அந்த ஆளில்லாக் காட்டைப் பற்றிப் பயங்கரமான கதைகளைச் சொல்லி எங்களை பயமுறுத்திக் கொண்டிருந்தான். அங்கே கொடிய விலங்குகள் இருக்கின்றன என்றும், கொள்ளைக்காரர் பயமும் உண்டு என்றும் அவன் கூறினான். "திருடனும் கொள்ளைக்காரனும் எங்களிடமிருந்து எதைக் பறிப்பான்? எங்களிடம் தான் ஒன்றும் இல்லையே" என்று நான் கூறினேன். காட்டு விலங்கு வந்தால் என்னவோ பயம்தான். நான் என்னவோ இப்படிச் சொல்லி விட்டேன். ஆனால் பூண்டுவில் கிடைத்த பணத்தை டாக்டர் தம் பையில் வைத்திருந்தார் என்பது எனக்குத் தெரியாது. இந்தப் பை அவர் கையில் இருந்தது. நான் அப்போது கூறியதைக் கேட்டும்கூட டாக்டர் ஒன்றும் சொல்லவில்லை. நானும் அடுத்த நாள் காலை வரையில் எங்களிடம் ஒன்றுமே இல்லை என்றே தவறாக நினைத்துக் கொண்டிருந்தேன்.

நாங்கள் இப்படி ஆலோசனை செய்துகொண்டிருந்தபோது காட்டின் உள்ளிருந்து கர்ஜனை கேட்டது. டிரைவர் மிகவும் பயந்து போனான். இப்பயங்கரமான ஒலி காட்டு விலங்கினுடையதுதான் என்று அவன் சொன்னான். சிறிது நேரத்திற்

குப்பின் சத்தம் நின்றுவிட்டது. நாங்கள் அமைதியுற்று மோட்டாரில் உட்கார்ந்து கொண்டிருந்தோம். இன்னும் சிறிது நாழிகைக்குப் பிறகு மனம் மேலும் அமைதியடைந்தது. அதன்மேல் மோட்டாரை அங்கேயே விட்டு விட்டு முசாபுரி பங்களாவுக்கு நடந்து சென்று அங்கே தூங்கலாம் என்றும், பிறகு காலையில் மோட்டாருக்கு ஏதாவது ஏற்பாடு செய்யலாம் என்றும் நினைத்தோம். ஆனால் டிரைவர் இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. "சரி, நாங்கள் போகிறோம், நீ மோட்டாருடன் இங்கேயே இரு" என்று நான் சொன்னதும் அவன் குய்யோ முறையோ என்று கதற ஆரம்பித்தான்.

கடைசியில், மூன்றுபேர் மோட்டாருடன் இருப்பது என்றும், மற்ற நான்குபேர் முசாபுரி பங்களாவுக்குப் போவது என்றும் முடிவாயிற்று. நிலாக்காலமாக இருந்ததால் எங்களுக்குச் சிறிது தைரியம் வந்தது. முசாபுரி பங்களாவுக்குப் போய்ச் சேருவதற்குள் நாங்கள் தாகத்தால் பீடிக்கப்பட்டு திண்டாடிப் போனோம். முசாபுரி பங்களாவில் யாரும் இல்லை. கதவு மூடி யிருந்தது. எப்படியாவது கதவைத் திறக்கவேண்டுமென்று முடிவு செய்து அப்படியே திறந்தும் விட்டோம். உள்ளே தட வித் தேடி ஒரு வாளியைக் கண்டுபிடித்தோம். இரண்டு கட்டில் களும் இரண்டு மேஜைகளும் அங்கே இருந்தன. அவற்றை வெளியே இழுத்துப் போட்டோம். ஆனால் வெறும் வாளியால் தாகம் அடங்குமா? கேணியும் கயிறும் வேண்டியிருந்தன. முசாபுரி பங்களாவுக்கு அக்கம் பக்கத்தில் காவல்காரனைத் தேடப் புறப்பட்டோம். சிறிது தூரத்தில் ஓர் ஆள் ஒரு குழந்தையைப் பக்கத்தில் போட்டுக்கொண்டு ஆழ்ந்து தூங்குவதைக்கண்டோம். அந்தக் கோரமான காட்டில் அந்த ஆள் ஒரு குழந்தையையும் வைத்துக் கொண்டு கவலையில்லாமல் தூங்குவதைக் கண்டு நாங்கள் வியப்புற்றோம். எவ்வளவோ சத்தம் போட்டபின் அவன் விழித்தான். தூங்கித் தூங்கி விழுந்து கொண்டு அவன் கயறு இல்லை என்றும் கிணறு காட்டிற்குள் சிறிது தொலைவு சென்றபின் தென்படுமென்றும் கூறினான்.

வேட்கையால் தவித்துக் கொண்டிருந்தோமாதலால் உடனே கிணற்றைத் தேடப் புறப்பட்டோம். அதுவும் கிடைத்தது. எங் களுடைய துண்டுகளைப் பிணைத்துக் கட்டிக் கயிருகச் செய்து கொண்டு வாளியில் தண்ணீரை இழுத்துக் குடித்துவிட்டுச் சிலர் கட்டில்களிலும் சிலர் மேஜைகள் மேலும் படுத்துத் தூங்கினோம். சிறிது நேரம்தான் தூங்க முடிந்தது. பிறகு எழுந்து காலைக்

கடனை முடித்துக் கொண்டோம். அங்கே வண்டி எதுவும் கிடைக்காது. ஆதலால் ராஞ்சி இருக்கும் திக்கை நோக்கி நடந்து சென்று வழியில் ஏதாவது கிராமம் தென்பட்டால் அங்கே உணவுக்கு ஏதாவது ஏற்பாடு செய்துகொள்ளலாம் என்று நினைத்தோம்.

எல்லோரும் நடக்க ஒத்துக் கொள்ளவில்லை. ஆகையால் நானும் இன்னும் ஓர் ஆள் மட்டும் புறப்பட்டோம். அங்கிருந்து மூன்று நான்கு கல் சென்றதும் ஒரு கிராமம் வந்தது. அங்கே சிறிதளவு கொண்டைக் கடலை கிடைத்தது. அப்போது சுமார் ஒன்பது மணி இருக்கும். கடலையைக் கொறித்துக் கொண்டே அங்கே சிறிது இளைப்பாறினோம். வெயில் ஏறி விட்டது. குளிர்ந்த காற்றும் அடித்துக் கொண்டிருந்தது. அதனால் உடனே தூக்கம் வந்து விட்டது. சுமார் ஒன்று ஒன்றரை மணி நேரத்திற்குப் பின் யாரோ வந்து எழுப்பினார்கள். ராஞ்சி நண்பர்கள் முதல்நாள் மத்தியானம் வரையில் எங்களை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிய வந்தது. நாங்கள் வராமல் போனதும் அவர்கள் வேறொரு டாக்ஸியை அமர்த்திக் கொண்டு எங்களைத் தேடுவதற்காகச் சிலரை அனுப்பினார்கள். இதில் ஒரு தவறு செய்தார்கள். அந்த டாக்ஸியிலும் முழுப் பாரமாக மூன்று நான்கு பேர் வந்தார்கள். இங்கே மோட்டார் ஆட்கள் நீங்கலாக நாங்கள் ஐந்துபேர் இருந்தோம். அவ்வளவு பேரையும் ஒரு வண்டி கொள்ளாது. ஆகையால் நாங்கள் பின்னால் விட்டு வந்த ஆட்களை முதலில் ஏற்றிக் கொண்டு ராஞ்சியில் விட்டு விட்டு மோட்டாரை திருப்பிக் கொண்டுவரும்படி கூறினோம். பிறகு நாங்கள் இருவரும் வருகிறோம் என்றோம். அவர்களும் இதற்கு ஒப்புக் கொண்டார்கள். நாங்கள் இருவரும் மேலும் ஒன்றரை இரண்டு மணி நேரம் இளைப்பாறினோம். பிறகு மோட்டார் திரும்பி வந்ததும் நாங்கள் அதில் ஏறிச் சென்று பகல் சுமார் ஒரு மணிக்கு ராஞ்சிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே உணவை முடித்துக் கொண்டு மத்தியான வண்டியிலேயே நேரே பட்னுவுக்குப் புறப்பட்டு விட்டேன்.

இது ஒன்றும் அவ்வளவு விநோதமான விஷயம் அன்று ஆயினும் அக்காலத்தில் பிரயாணம் செய்வதில் இவ்விதமான சம்பவங்கள் நிகழ்ந்து வந்தன என்பதை எடுத்துக் காட்டுவதற்காக இதை இங்கே கூறினேன்.

# 36. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையும் காதி பிரசாரமும்

ஜுலை 1921இல் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை பம்பாயில் நடந்தது. பீகாரிலிருந்து அதற்குச் சென்றவர்களுடன் நானும் போனேன். ஒரு கோடி ரூபாய் சேகரிக்கும் திட்டத்தை நாடு வெற்றிகரமாக விரைவில் நிறைவேற்றி விட்டதால் அவையில் மிக்க உற்சாகம் நிலவியது. சர்க்கா பிரசாரமும் நன்ருகச் செய்யப்பட்டிருந்தது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையும் ஒருவிதமாக முற்றிலும் கைகூடிவிட்டது போலக் காணப்பட்டது. இது பின்னுல் ஒரு நாள் முறிந்துவிடும் என்று எங்களால் அப்போது நினைக்க முடியவில்லை. இக் காரணங்களால் அச் சபையிலிருந்த சிலர் சத்யாக்கிரகத்தை உடனே ஆரம்பித்து விடவேண்டுமென்று மிகவும் வற்புறுத்தினுர்கள்.

அரசாங்கத்தார் சில நடவடிக்கைகளைச் செய்து வந்தார்கள். அவற்றின் மேல் பலர் ஆத்திரம் கொண்டிருந்தார்கள். நாங்கள் நாடெங்கும் ஒரு மாபெரும் கிளர்ச்சியை நடத்தி வந்தாலும். அது சட்ட வரம்பிற்கு உட்பட்டதாகத்தானிருந்து வந்தது. சொற்பொழிவுகளில் என்னவோ சுதந்திர வீரம் பொங்கி வழிந்தாலும் கூட சட்டத்தை மீறவில்லை. காங்கிரஸ்காரர்களின் வாழ்க்கை முறையிலும் நடத்தையிலும் ஒரு துணிவும் உற்சாகமும், எல்லாவற்றிற்கும் மேலாக அஞ்சாமையும் மிளிர்ந்து கொண்டிருந்தன. அரசாங்கம் ஆங்காங்கே செயலாளர்களைக் கைது செய்து வந்தது. இப்படியாக நாட்டில் நூற்றுக்கணக்கான பேர்கள் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார்கள். பீகாரில் செயலாளர்கள் கைது செய்யப்பட்டு வந்ததைப் பற்றியும் மற்றவிதமான அடக்கு முறைகளைப் பற்றியும் மேலே கூறியுள்ளேன். இக்காரணங்களாலும் சத்தியாக்கிரகத்தை உடனே ஆரம்பித்துவிட வேண்டும் என்று மக்கள் மிகவும் வற்புறுத்தினுர்கள்.

இச்சமயத்தில் பொறுமையாக இருக்கும்படி மகாத்மா காந்தி யோசனை கூறினுர். சர்க்காவைப் பரவச் செய்வதையும் அதன் மூலமாக வெளிநாட்டுத் துணியைப் புறக்கணித்தலையும் செப்டம்பர் 30 தேதிக்குள் செய்து முடிக்க வேண்டும் என்று நிச்சயிக்கப்பட்டது. காங்கிரஸ் எச்செயல் திட்டத்தை அமைத்துக் கொடுக்கிறதோ அதை முதலில் முடிக்கவேண்டும் என்றும்

அப்போதுதான் சத்தியாக்கிரகத்தில் வெற்றி கிடைக்கும் என்றும் அவர் கூறினர். ஆகையால் சக்தியாக்கிரகத்திற்கு ஆயத்தம் செய்வதுதான்சரி என்பது வற்புறுத்தப்பட்டது. அதை எப்போது ஆரம்பிப்பது என்ற கேள்வி தள்ளிப் போடப்பட்டது. ஆனல் இதற்குள் வேருெரு விஷயம் எதிர்ப்பட்டது. அது சத்தியாக்கிர கத்திற்கு விதையை நட்டு விட்டது.

குளிர் காலத்தில் பிரின்ஸ் ஆவ் வேல்ஸ் (இங்கிலாந்தின் இளவரசர்) இந்தியாவிற்கு வந்து சுற்றுப் பிரயாணம் செய்வார் என்று அரசாங்கத்தாரால் அறிக்கையிடப்பட்டது. பொது மக்களிடம் பிரிட்டிஷ் அரசாங்கத்தின்மேல் பகைமை அதிகமாகப் பெருகி வருவதையும், மக்களிடையில் உற்சாகமும் ஆர்வமும் நிறையப் பெருகி வருவதையும் தடை செய்வதற்கு இச் சுற்றுப் பிரயாணம் துணையாகும் என்று அவர்கள் நினைத்தார்கள் போலும். வைசிராய் லார்டு செம்ஸ்போர்டு இக் கிளர்ச்சியைப் பற்றிப் பேசியபோது "நான் இதைக் கண்டு கலக்கமுறுகிறேன்; நான் சுழலில் மாட்டிக் கொண்டேன்" என்று கூறினர். அவ ருடைய இடத்திற்கு இப்போது லார்டு ரீடிங் வைசிராயாக நியமிக்கப்பட்டு இங்கு வந்து விட்டார். அவர் இங்கிலாந்தில் மிக மிகத் திறமைசாலிகளான இராஜ தந்திரிகளில் ஒருவராகக் கருதப்பட்டார். அவர் சிறிது காலத்திற்கு முன்புதான் அமெரிக் காவில் ராஜதூதராக இருந்து, யுத்தத்தில் இங்கிலாந்தின் பக்கத்தில் அமெரிக்காவைக் கொண்டு வந்து சேர்ப்பதில் தன் திறமையைக் காட்டியிருந்தார். அதற்குப்பின் இங்கிலாந் தின் பிரதம நீதிபதியாக இருந்து வந்தார். இந்த இளவரசர் யாத்திரை ஏற்பாடு அவருடைய யோசனையாக இருக்கலாம். வங்காளப் பிரிவினைக்குப் பின் வங்காளத்தில் அரசாங் கத்தின் மீது உண்டான அதிருப்தியானது எவ்விதமான அடக்கு முறையாலும் கட்டுப்படாதபோது, ஐந்தாம் ஜார்ஜ் சக்ரவர்த்தி தம்முடைய பட்டாபிஷேகத்தை இந்தியாவில் நிகழ்த்த வந்ததும் இங்குள்ள பொது மக்களும் மற்றவர்களும் எல்லோருமே மிக உற்சாகத்துடன் அவரை எவ்விதமாக வரவேற்ருர்களோ, அதே போல இம்முறையும் இளவரசரின் வருகையால் இந்தியாவின் பொதுமக்களிடையே ராஜபக்தி பொங்கி எழும் என்றும், கிளர்ச்சி தானுகவே நலிந்து விடும் என்றும் இராஜ தந்திரிகள் நினைத்திருக்கலாம். இளவரசர் இந்தச் சமயத்தில் இந்தியாவிற்கு வருவதற்கு வேறு யாதொரு காரணமும் காணப்படவில்லை.

அகில பாரதீயக் காங்கிரஸ் இதை ஒட்டி ஒரு தீர்மானத்தை

நிறைவேற்றியது. இளவரசரை இங்கு அழைத்து வருவது என்ற முடிவை அரசாங்கத்தார் கைவிட வேண்டும் என்று அதன் மூலம் வற்புறுத்தப்பட்டது. மக்களிடைக் குலைந்து போன தம்முடைய செல்வாக்கை மீண்டும் நிலைநாட்டுவதற்காகச் சக்ர வர்த்தியின் மகனும் எதிர்காலச் சக்ரவர்த்தியும் ஆனவரை இவ் விதமாகப் பயன்படுத்துவது பொருத்தமான உபாயம் அன்று எனத் தெள்ளத் தெளிவாக அரசாங்கத்தாருக்கு அத் தீர்மானத் தால் எடுத்துரைக்கப்பட்டது. நாட்டின் இச் சொல்லை அரசாங் தார் ஏற்காவிட்டால், தமக்கு அவரைப் பொறுத்த வரையில் யாதொரு சண்டையில்லாவிட்டாலும்கூட, (சொல்லப் போனால், தம் உள்ளத்தில் அவரிடம் மதிப்பே இருந்தாலும்கூட) தாம் வேறு வழியின்றி இந்தச் சுற்றுப் பிரயாணத்தைப் புறக்கணிக்கவேண்டி வரும் என்று பாரதீயக் காங்கிரஸ் குழுவினர் அத்தீர்மானத்தில் எடுத்துரைத்தார்கள். மேலும், அரசாங்கத்தின் இச்சூழ்ச்சியால் நன்மை விளையாது என்றும் இத்தீர்மானத்தின் மூலம் அரசாங் கத்திற்கு எச்சரிக்கை செய்து, சத்தியாக்கிரகத்திற்குத் தயாராகும் படி நாட்டிற்கும் கட்டளையிடப்பட்டது.

பக்ரீத் நெருங்கி வந்து விட்டது. பீகாரிலும் ஐக்கிய மாகாணத்திலும் இக்காலம் மிகவும் நொய்மையானது என்று கருதப்படும். ஏனெனில், எங்காவது ஓர் இடத்தில் பசுப்பலியைக் காரணமாகக் கொண்டு ஹிந்து முஸ்லிம் கலகங்கள் நடந்து கொண்டே வரும். ஹிந்து–முஸ்லிம் ஒற்றுமை நிலவும் இக் காலத்திலும் கலகங்கள் விளைந்தால் அது மிகவும் இழிவாகத் தோன்றும் என்று கருதப்பட்டது. இச் சந்தர்ப்பத்தை ஹிந்து–முஸ்லிம் ஒற்றுமையை வளர்ப்பதற்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று எண்ணப்பட்டது. இதைப் பற்றி நிறைய பிரசாரமும் செய்யப்பட்டது. நாம் முசல்மானியருடன் சண்டை போட்டுப் பசுக்களை அவர்களிடமிருந்து காக்கமுடியாதென்பதும், அவர்களைக் கொன்று பசுவைப் பேணுதலால் நன்மை விளையாது என்பதும் மகாத்மாஜீயின் நெறியாக இருந்தன. ஆகையால் இந்த விஷயத்தை அவர்களிடமே விட்டு விடவேண்டும் என்பதும், அவர்கள் தம் ஹிந்து சகோதரர்களின் மனத்திற்கு வருத்தம் விளைவிக்கக் கூடாதென்ற சகோதர மனப்பான்மையைக் கடைப் பிடித்துத் தாமே பசுவதையை நிறுத்த வேண்டும் என்பதும், இது ஹிந்துக்களின் வற்புறுத்தலினாலும் பலவந்தத்தாலும் ஆகா தென்பதும், முசல்மானியருடைய அன்புடைமையாலும் பெருந்

தன்மையாலுமே இது நிகழ வேண்டும் என்பதும் அவருடைய கொள்கை.

இதையொட்டி மகாத்மாஜீ அலி சகோதரர்களுடன் கூடிச் சில இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்தார். இச் சுற்றுப் பிரயாணத்தின் போது அவர் பீகாருக்கும் வந்தார். பக்ரீதின் போது ஏதாவது கலவரம் நடக்கும் என்று அஞ்சப்பட்ட இடங்களாகிய சாஹாபாத், கயா, பட்ணு ஜில்லாக்களுக்கு மட்டும்தான் அவர் சென்ருர். மௌலாணு முகமது அலியும், மௌலாணு ஆஜாத் சுபானியும் அவருடன் சென்ருர்கள். மகாத்மாவின் வேலைத் திட்டம் மிகவும் திணரடியாக அமைந்திருந்தது. ஒரே நாளில் எத்தனையோ இடங்களில் கூட்டங்கள், நெடுந்தொலைவு மோட்டார் பிரயாணம்! ஒரு நாள் மாலையில் அவருக்கு உண்பதற்குக்கூட ஒழியவில்லை என்பது எனக்கு நினைவிருக்கிறது. அவர் பொழுது சாய்ந்தபின் உண்ணமாட்டார். அன்ருே சூரியன் மறைவதற்குமுன் அவருக்கு இதற்கு நேரம் கிடைக்கவேயில்லை. நானும் இந்தப் பிரயாணத்தின்போது அவருடன் சென்றிருந்தேன். எல்லா இடங்களிலும் மக்கள் தம்முள் ஒற்றுமையுடன் நட்புப் பூண்டிருக்க வேண்டியதைப் பற்றியே எடுத்துரைக்கப்பட்டது. கூடவே காதியைப் பற்றியும் சர்க்காவைப் பற்றியும் பிரசாரமும் செய்யப்பட்டது. பசுவைப் பலியிடுவதற்குத் தமக்கு உள்ள உரிமையை முசல்மானியத் தலைவர்கள் கைவிட விரும்பாவிட்டாலும், அவர்கள் பொது மக்களிடம் பேசும்போது “ஒருவன் தன் உரிமையை கைவிடாது நின்றபோதிலும், அதைக் கொண்டாடுவதா அன்ரு என்பதை அவன்தானே முடிவு செய்து கொள்ளலாம். ஆகையால் முசல்மானியர்கள் சகோதர பாவத்தையும் பரஸ்பர வாழ்க்கையின் நலத்தையும் மனத்திற் கொண்டு, இயன்ற வரையில் ஹிந்துக்களின் மனத்தைப் புண்படுத்தாதபடி நடந்து கொள்ளவேண்டும்” என்று பிரசாரம் செய்தது மிகவும் போற்றத்தக்கதும் மனத்திற்கு உவகை அளிப்பதுமான ஒரு விஷயம் என்று இங்குக் கூறியே ஆக வேண்டும்.

இதே சமயத்தில் ஹகீம் அஜ்மல் கானும் மற்றத் தலைவர்களும் ஒரு பெரிய அதிசயத்தைப் புரிந்து காட்டினுர்கள். இந்த ஆண்டில் பக்ரீத் மிக்க அமைதியுடன் மட்டும் கழியவில்லை; இதற்குமுன் என்றுமே காணப்படாத அளவிற்குப் பசுப் பலியும் மிகக் குறைவாகவே நிகழ்ந்தது என்பது கண்கூடாக விளங்கியது. இதில் ஹிந்துக்கள் முசல்மானியர் ஆகிய இரு வகுப்பினரும் ஒருவர் மற்றெருவருடைய மனேபாவத்தை மதித்து

நடந்து கொண்டார்கள். ஒருகை பார்ப்போம் என்று பலப் பரீக்ஷை எவ்விதத்திலும் செய்யப்படவில்லை. இரு வகுப்பினருமே ஒருவர் மற்றொருவருடைய சகோதர மனப்பான்மையிலும் பரஸ்பர நல்லுறவு நாட்டத்திலும் நம்பிக்கை வைத்தார்கள். இந்த நம்பிக்கை வீணாகவில்லை.

பீகாரில் சில பாகங்களில், முக்கியமாக வடபீகார் ஜில்லாக்களில், சர்க்கா சுற்றும் வழக்கம் மிகக் குன்றிப் போயிருந்தாலும் முற்றிலுமே ஒழிந்து போகவில்லை. இப்போது இக்கிளர்ச்சியால் அதற்குப் புத்துயிர் வந்தது. சர்க்காவைப் பற்றிப் பிரசாரம் செய்வதற்காகத் திலக் சுயராஜ்ய நிதியிலிருந்து பணமும் கிடைத்தது. எங்களுடைய மாகாணத்தில் வேலை தொடங்கி விட்டது. வேலையை என்னவோ தொடங்கி விட்டோம், ஆயினும் எங்களுக்கு அக்கலையைப் பற்றி அறிவு சிறிதுகூட இல்லை. உற்சாகம் இருந்தது, ஆனால் வாணிபம் நடத்துவதற்கு வேண்டிய அறிவு இல்லை. ஆகையால் அக்காலத்தில் நடந்த வேலையினால் காதி பிரசாரம் நடந்தாலும் பணமும் ஏராளமாகச் சேதமாயிற்று. இக்கிளர்ச்சியைத் தொடங்கும்போதே காந்திஜீ கூறிய சொல்லை இப்போது நினைக்கும்போது அவருடைய நெடிது நோக்கும் ஆற்றலுக்கும் செயல் திறத்திற்கும் மேலும் ஒரு சிறந்த உதாரணத்தைக் காண்கிறேன். நம்முடைய தேசீயப் பள்ளிக்கூடங்கள் சர்க்கா பள்ளிக்கூடங்களாக அமைய வேண்டுமென்றும், சர்க்காவைப் பற்றிய அறிவைப் பெறுவதிலும், அதை வளர்ப்பதிலும் தேசீயப் பள்ளிக்கூடங்கள் ஈடுபட வேண்டுமென்றும், சர்க்கா மூலமாகத்தான் நாம் ஆயிரக்கணக்கான இளைஞர்களுக்கு வேலை கொடுக்கவும் பொதுமக்களின் பொருள் நிலையைப் பெருக்க உதவி புரியவும் முடியுமென்றும் காந்திஜீ கூறியிருந்தார். சபர்மதியில் ஒரு தொழிற்சாலையை நிறுவி அதில் சர்க்காவைப் பற்றி ஆராய்ச்சி வேலையும் ஆரம்பித்திருந்தார். ஆனால் தேசீயக் கல்வி அதிகாரிகளால் இக்கருத்தை முற்றிலும் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் சர்க்கா சுற்றுதல் இன்றியமையாத பணியாக விதித்திருந்தார்கள் ஆயினும், அவர்கள் வித்யா பீடங்களையும் அவற்றின் ஆட்சியின்கீழ் இருந்த பள்ளிக்கூடங்களையும் சர்க்கா கூடங்களாக அமைக்கவில்லை.

சர்க்காக்கள் சுழலத் தொடங்கின. ஆனால் கலைஞானம் ஆசிரியர்களுக்கு இல்லையே! அவர்கள் எங்கிருந்து அதைப் பிள்ளைகளுக்கு அளிப்பார்கள்? இப்படியாகக் குருடர்கள் குருடர்களுக்கு வழிகாட்டி வந்தார்கள். ஆகையால் சர்க்கா சிறிது காலம்

வரையில் சரியான நடைமுறைக்கு வரமுடியவில்லை. இந்த முன் யோசனையில்லாததற்கு நான் இன்று எவரையும் குற்றம் கூற முடியாது. ஏனெனில் இப்படி ஆவது இயல்பே. அரசியல் புரட்சிக்கே எல்லைக்கல் எனக் கருதப்பட்டு வந்த எதிர்கால சுயராஜ்யத்தின் மேல் எல்லாருடைய கண்களும் நாட்டங்கொண்டிருந்தன. காங்கிரஸுக்குள்ளும் சிலர், முக்கியமாக மகாராஷ்டிரியர்கள், காதி, சர்க்கா ஆகியவற்றை எதிர்த்து வந்தார்கள். இந்தக் குறைபாடுகள் எல்லாம் இருந்தும்கூட காதி பிரசாரம் ஆரம்பமாகி விட்டது. அக்காலத்தில் உண்மைக் காதிக்கும் போலிக் காதிக்கும் உள்ள வேற்றுமையை மக்கள் அவ்வளவாக அறிந்திருக்கவில்லை. கைத்தறியில் நெசவு செய்யப்பட்ட எந்த முரட்டுத் துணியையும் காதி என்று கருதி வாங்கி வந்தார்கள். சத்தியாக்கிரகத்திற்குக் காதி பிரசாரம் மட்டற்ற தேவையானது என்றும், பிரசாரத்தின் பயன் கண்ணுக்குத் தெரியவேண்டுமென்றும், அதாவது, நாலா பக்கத்திலும் மக்கள் காதியை அணிவதைக் கண்டால் தான் அப்பிரசாரம் பயன்பட்டு விட்டது என்று கொள்ளப்படும் என்றும், இதற்காகப் புத்தகங்களில், கட்டுரைகளில், பத்திரிகைகளில் அச்சிடப்பட்ட புள்ளி விவரங்கள் ஆகியவற்றைத் தேடிச் செல்ல வேண்டியதில்லை என்றும், அல்லது வேறு எவரையாவது கேட்டு அத்தாட்சி பெற வேண்டியதில்லை என்றும் காந்திஜீ கூறி வந்தார்.

பீகாரில் செய்த இந்த யாத்திரையின்போது காந்திஜீ காதியை ஆதரிப்பதை மிகவும் வற்புறுத்தி வந்தார். தர்பங்கா ஜில்லாவில் மதுவனீ வட்டாரத்தில் நெசவு செய்யப்பட்டு வந்த "கோக்டீ" என்ற துணி மிகவும் மென்மையாயும், அழகாயும், மிருதுவாயும் இருக்கும். அதைக் கண்டு மக்கள் வியப்படைவார்கள். அதன் விற்பனை இதுகாறும் அற்றுப்போகவில்லை. இத்துணி நேப்பாளத்தின் ராஜகுலத்திலும் அங்குள்ள பெரிய மனிதர்களிடையிலும் நிறையச் செலவாகி வந்ததேதான் இதற்கு முக்கிய காரணம். அந்த ஊருக்காகவே இத்துணி நெய்யப்பட்டு வந்தது. முக்கியமாக நேப்பாளத்தின் எல்லைக்குப் பக்கத்தில் உள்ள ஊர்களில்தான் இத்துணி நிறைய நெசவு செய்யப்பட்டு வந்தது. இவ்விடங்களில் நெசவு செய்யப்பட்ட வேட்டிகள் சில காந்திஜீ முதலானோருக்குக் காண்பிக்கப்பட்டன. அவற்றைப் பார்த்துவிட்டு, மௌலானா முகம்மது அலீ மிகவும் 'மகிழ்ச்சியுற்றார் என்பது எனக்கு நினைவிருக்கிறது. மோமீன்களின் மிக முக்கிய ஊராகிய பீகார்-ஷரீப்

போன்ற இடத்திற்கும் காந்திஜீ சென்றார். அவ்வூராரும் உதவி புரிவதாக வாக்களித்தார்கள்.

பீகார் யாத்திரையை முடிப்பதற்கு முன் காந்திஜீ தம் தோழர்களோடு பட்னாவிற்கு வந்தார். அங்கே சதாகத் ஆச்ரமத்தில் தங்கியிருந்தார். அகில பாரதீயக் காங்கிரஸின் புதிதாக அமைக்கப்பட்ட செயற்குழுவின் இருக்கை அப்போது அங்கு நடந்தது. பம்பாயில் நடந்த அகில பாரதீயக் குழுவின் இருக்கையில் செயற்குழுவின் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நானும் ஓர் உறுப்பினனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அதனால் நானும் இந்த இருக்கையில் கலந்து கொண்டேன். இந்தக் கூட்டத்தில் வெளிநாட்டுத் துணியைப் புறக்கணிப்பதைக் குறைவற நிறைவேற்ற வேண்டும் என்பதும், இதற்காகச் சர்க்கா பிரசாரம் தேவை என்பதும் முக்கியமாக வற்புறுத்தப்பட்டன.

பீகாரிலிருந்து காந்திஜீ கல்கத்தா வழியாக ஆசாமிற்குச் சென்றுவிட்டார். நான் பீகாரில் காதி நிலையங்களை அமைப்பதற்காகவும் சர்க்காவைப் பிரசாரம் செய்வதற்காகவும் சுற்றி வந்து கொண்டிருந்தேன். இந்த வேலைக்காக மாகாணக்குழு சிலரைக் கொண்டு ஒரு சங்கத்தை அமைத்தது. மேலும் இந்த வேலைக்காக என்று ஒவ்வொரு ஜில்லாவிலும் சிலர் நியமிக்கப்பட்டார்கள். வேலை மிகவும் மும்முரமாக ஓடத்தொடங்கியது. அரசாங்கத்தாரும் வாளாவிருக்கவில்லை. வெளி நாட்டுத் துணிக்கடைகளின் முன் மறியல் செய்யப்படலாமென்று அவர்கள் அஞ்சினார்கள். வெளிநாட்டுத் துணி விற்பனையைக் கைவிடும்படியும், மேலும், தம்மிடம் கையிலுள்ள வெளிநாட்டுச் சரக்கை வெளிநாடுகளிலேயே விற்க முயற்சி செய்யும்படியும், இந்தியாவிலேயே நெய்யப்பட்ட துணியையே இங்கே விற்கும்படியும் காங்கிரஸானது வெளிநாட்டுத் துணி வியாபாரிகளை வேண்டிக் கொண்டது. பீகாரின் தலைமை காரியதரிசி (சீப் செக்ரடரி) மிஸ்டர் ஸிப்டன் இத்தீர்மானத்தைக் கண்டு அஞ்சி ஓர் அறிக்கையை வெளியிட்டார். விதேசித் துணியை ஒட்டிப் பிரசாரம் செய்யும்படியும், வெளிநாட்டுத் துணி இல்லாவிட்டால் அதிகக் கஷ்டம் உண்டாகும் என்பதையும் துணி விலை ஏறிவிடும் என்பதையும் பொதுமக்களுக்கு எடுத்துரைக்கும்படியும், காங்கிரஸ்காரர்கள் எங்காவது எதிர்த்தால் அவர்களைக் கைது செய்யும்படியும் ஜில்லா அதிகாரிகள் அதன் மூலமாகத் தூண்டப்பட்டார்கள். இதற்கு முன்னால் சத்தியாக்கிரகத்தை ஒட்டி இவ்விதமான அறிக்கை ஒன்றைத் தலைமை காரியதரிசி ரேனி என்பவர் வெளியிட்டிருந்தார். இவற்

ருல் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் காங்கிரஸும் அரசாங்கத்தாரும் மோதிக் கொள்வார்கள் என்பதும் தெளிவாயிற்று. ஆனால் நாங்கள் எங்கள் வேலையை விடாபிடியாகச் செய்து வந்தாலும் பொறுமையுடன் கூடியே அதைப் புரிந்து வந்தோம். வேலை மிகவும் மும்முரமாக முன்னேறியது.

காந்திஜீ ஆசாம் யாத்திரையை முடித்துக் கொண்டு கல்கத்தாவிற்குத் திரும்பி வந்தார். அங்கே செயலாற்றுக் குழுவின் இருக்கை கூடியது. அதில் கலந்து கொள்வதற்காக நானும் கல்கத்தாவிற்குச் சென்றேன்.

# 37. மோப்ளா கலகமும் ஹிந்து-முஸ்லிம் பூசலும்

காந்திஜீ கல்கத்தாவிலிருந்து சென்னைப் பக்கம் சென்று விட்டார். இந்தப் பிரயாணத்தின்போதுதான் ஏதோ ஓர் இடத்தில் தாம் இனி லங்கோடே மட்டும் அணியப் போவதாக அறிவித்தார். அவருடன் பிரயாணம் செய்து கொண்டிருந்த மௌலானா முகம்மது அலீ வால்டேர் ஸ்டேஷனில் கைது செய்யப்பட்டு விட்டார். மௌலானா ஷௌகத் அலீ, டாக்டர் கிச்லூ, மௌலானா ஹஸேன் அகமது, மௌலானா நிஸார் அகமது, பீர் குலாம் முஜத்தித், பாரதி கிருஷ்ண தீர்த்த சங்கராசார்யா ஆகிய தலைவர்களுடன் மௌலானா முகம்மது அலீயும் கராச்சியில் கிலாபத்துக் காங்கிரஸில் ஆற்றிய சொற்பொழிவுக்காகவும், மேலும், ஒரு பத்வாவை (முஸ்லிம் மதத் தலைவர்கள் இட்ட ஆணையை) பிரசாரம் செய்ததற்காகவும் குற்றம் சாட்டப்பட்டுக் கோர்ட்டிற்குக் கொண்டு போகப்பட்டார்கள். இந்த வழக்கும் நாட்டில் அதிகக் கலவரத்தை உண்டாக்கியது. மௌலானா முகம்மது அலியின் பிரதிவாத வாக்குமூலத்தாலும், மேலும் அந்த வழக்கில் குற்றஞ் சாட்டப்பட்டிருந்தவர்களின் முக்கியத்துவத்தாலும் இவ்வழக்கு மாபெரும் வழக்காகி விட்டது. முடிவில் ஸ்ரீ சங்கராச்சாரியார் தவிர மற்றவர்களுக்கெல்லாம் தண்டனை கிடைத்தது.

இதைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகச் செயலாற்றுக் குழுவின் இருக்கை ஒன்று பம்பாயில் நடந்தது. எந்தப் பத்வாவிற்காக இத்தலைவர்களுக்குத் தண்டனை கிடைத்ததோ

அதே பத்வாவை நாடெங்கும் பெரும் பெரும் கூட்டங்களில் முறைவைத்து முழங்க வேண்டும் என்று அக்குழு கட்டளை யிட்டது. பம்பாயில் கூடியிருந்த செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர்களும் மற்றத் தலைவர்களும் கையொப்பமிட்டு ஓர் அறிக்கையை வெளியிட்டனர். கராச்சியில் கூறியதாக எந்த விஷயத்தை ஒட்டி வழக்குத் தொடுக்கப்பட்டதோ அதையே அந்த அறிக்கையில் அப்படியே கொடுக்கப்பட்டிருந்தது. அந்த அறிக் கையில் நானும் கையெழுத்து இட்டேன். நாடெங்கும் எண் ணிறந்த கூட்டங்கள் நடந்தன. அவற்றில் எண்ணிறந்த மக்கள் மேலே குறிப்பிடப்பட்ட பத்வாவைப் பல்லவி வைத்தார் கள். அரசாங்கம் ஒன்றுமே செய்யவில்லை! அது மருண்டு வெருண்டு போயிற்று. முசல்மானியர் மட்டும் சொல்லிக் கொண்டிருந்த பத்வாவை இப்போது எத்தனை ஹிந்துக்கள் முழங்கினார்கள் என்று கூற முடியாதபடி ஆகி, சிலர் மட்டுமே செய்தால் சட்டத்திற்கு முரணாகும் விஷயமானது நாடு முழுவதும் ஒன்றுபட்டு நின்று செய்தால் சட்டத்தை மீறியது ஆகாது என் பதை இந்த இயக்கம் கண்கூடாகக் காட்டிவிட்டது.

இதே சமயத்தில் மாகாண அரசியல் மகாநாடு ஆராவில் மௌல்வீ முகம்மது ஷபீயின் தலைமையின்கீழ் மிக்க ஆரவாரத் துடன் நடந்தது. அதற்கு என்னால் ஒரு நாள்தான் போக முடிந்தது. ஏனெனில் செயலாற்றுக் குழுவில் கலந்து கொள் வதற்காக நான் பம்பாய்க்குச் செல்ல வேண்டியிருந்தது. ஆயினும் ஆராவில் மிக்க உற்சாகம் நிலவியது. அம்மகாநாட் டைத் தொடர்ந்து அவ்விடத்திலேயே மாகாணக் கிலாபத்து மகாநாடும் நடந்தது. அதில் பல ஹிந்துக்களும் கலந்து கொண்டார்கள். மேலும், கிலாபாத்துக்கும் சுமிர்னா நிதிக்கும் பணம் திரட்டுவதாக வாக்களித்து அப்படியே திரட்டியும் கொடுத்தார்கள்.

மகாத்மாஜீ இந்த யாத்திரை செய்து கொண்டிருந்தபோது, மலபாரில் மோப்ளாக்கள் அரசாங்கத்தை எதிர்த்துக் கலகம் செய்துவிட்டார்கள் என்ற செய்தி கிடைத்தது. முதலில் செய்தி சரிவர முற்றிலும் கிடைக்கவில்லை. பிறகு மெல்ல மெல்லச் செய்தி முழுவதும் கிடைக்க ஆரம்பித்தது. மௌலானா முகம்மது அலீ அங்கே செல்வதற்கு எண்ணியிருந்தார். ஆனால் அதற்குள் அவர் கைது செய்யப்பட்டு விட்டார். மகாத்மாஜீயும் அங்கே போக விரும்பினார். அவரும் தடை செய்யப்பட்டு விட்டார். அவர்கள் அங்கே போக முடிந்திருந்தால் ஒருவேளை இக்கிளர்ச்சி

உண்மையிலேயே எய்திய (அல்லது எய்தியதாகப் பிரசாரம் செய்யப்பட்டபடி) அத்தகைய கொடூர வடிவத்தைக் கொண்டிருந் திருக்காது. முதலில் மோப்ளாக்கள் அரசாங்க அதிகாரிகளையும், ரயிலையும் கச்சேரிகளையும் தாம் தாக்கினர்கள். ஆனல் சற்றுப் பிறகு அவர்கள் ஹிந்துக்களையும் தாக்க ஆரம்பித்து விட்டார்கள் என்ற செய்தி பரவத் தொடங்கியது. அவர்களைக் கொல்லவும், பலவந்தமாக முசல்மானியர் ஆக்கவும் ஆரம்பித்தார்கள். இச் செய்தியால் ஹிந்துக்களிடையில் மிக்க பரபரப்பு உண்டாயிற்று. இதனல் இருமதத்தாரிடையில் ஒரு வகையில் வெறுப்புக்கு விதை யும் ஊன்றப்பட்டுவிட்டது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஒருவித மாக நிலைத்துவிட்டது எனத் தோன்றிய நிலை இந்த ஒரு சம்பவத்தாலேயே ஆட்டம் காட்டத் தொடங்கிவிட்டது. சில ஹிந்துக்களின் பிரசாரத்தாலும், முக்கியமாக அரசாங்கத்தாரின் பிரசாரத்தாலும், இதன் விளைப்பயன் எங்கும் பரவலாயிற்று. ஆயினும் இதுவரையில் நிலைமை அதிகமாகக் கெட்டுப்போக வில்லை. சில மாதங்களுக்குப் பிறகு இப்பகைமை ஹிந்து-முஸ்லிம் கலகமாகக் கோலம்பூண்டு பல சம்பவங்கள் மட்டும் நிகழ்ந்திருக்காவிட்டால் 1921ல் பிறந்த ஒற்றுமையின் காட்சி இன்று வரையில் நம்முன் அன்று தோன்றியவாறே இருந் திருக்கும்.

கிலாபத்து சம்பந்தமாக தாம் முசல்மானியருக்குச் செய்த உதவி நியாயமானதே என்பது காந்திஜீயின் கருத்து. இதற்காக அவருக்கு இன்று வரையில் தினையளவாவது வருத்தம் இல்லை. அவர் செய்ததும் அவருடைய தூண்டுதலினல் ஹிந்துக்கள் செய்த அனைத்தும் பொருத்தமானவைதாம், நியாயமானவையும் தாம். ஒரு வீட்டில் இரண்டு சகோதரர்கள் இருந்தால், ஒருவ னுக்கு ஏதாவது ஆபத்து வந்தபோது அவனுக்கு உதவ வேண்டி யது மற்றொரு சகோதரனின் கடமையாகும். இப்படியான நிலைமையில் செய்த உதவிக்குக் கைம்மாருக ஆபத்துக்கு உட் பட்டவன் உதவி புரிந்தவனிடம் எவ்விதம் நடந்து கொள்வான் என்ருவது, உதவியை மறந்துவிடுவானு என்ருவது எண்ணக் கூடாது. மனிதனுக்குத் தன்னுடைய கடமையை ஆற்றுவதே போதுமானதாக இருக்க வேண்டும். அதனுடைய பலனின்மேல் ஆசை வைப்பது வீண் ஆகும். மேலும் இதுமட்டுமன்றி, உதவி புரிந்த ஹிந்துக்கள் நாட்டின் நலத்தைச் சிறிது கருத்தில் கொண்டே முசல்மானியருக்கு உதவி புரிந்தார்கள் என்று நினைக் கிறேன். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையானது நாட்டின் முன்னேற்

றத்திற்குத் தேவையானது என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். மேலும் இந்த உதவிக்குக் கைம்மாருக முசல்மானியரிடமிருந்து பசுபரிபாலனத்தை எதிர்பார்த்தார்கள்.

மற்ருெரு சாரார் வேறு விதமாகக் கூறிஞர்கள். மதத்துடன் சம்பந்தப்பட்ட இக்கிலாபத்துக் கிளர்ச்சிக்கு இவ்விதம் காந்திஜீ உதவி புரிந்ததானது மதப்பற்றுக்குத் துணையாகி விட்டது என்றும், இதன் காரணமாக முசல்மானியப் பொது மக்களிடையில் மதவெறி பெருகிவிட்டது என்றும், அது சமயம் வாய்த்தபோது (அதாவது கிளாபத்துக் கிளர்ச்சித் தளர்வுற்ற போது) மிக பயங்கரமானதாக வளர்ந்து நாடெங்கும் ஹிந்து-முஸ்லிம் கலாட்டாக்களைக் கிளப்பிவிட்டது என்றும் கூறிஞர்கள். இது மட்டும் அன்று. இதனல் முசல்மானியர்களிடையில் அதிக விழிப்பு வந்துவிட்டதால் அவர்கள் மத சம்பந்தமான விஷயங்களில் மட்டும் அன்றி அரசியலிலும் தம்முடைய வெறியைக் காட்ட ஆரம்பித்து விட்டார்கள் என்றும், மேலும் சில நாட்களுக்குப் பிறகு துருக்கியரே கலீபாவைத் தள்ளி விட்டபோது, இவ்விதமான கிளர்ச்சிக்கு வேரே அறுபட்டுப் போனதால், இவ்விழிப்பு முசல்மானியரை இந்திய அரசியல் உலகில் ஒரு பிடிவாதக்காரக் கட்சிக்காரர்கள் ஆக்க முழுக்க முழுக்க உதவியாயிற்று என்றும் கருதிஞர்கள். மேலும் இவ்வளவோடு நின்றிருந்தால் கெடுதல் ஒன்றும் இல்லை என்றும், ஆனல் இந்த வெறியானது மதத்தோடு சம்பந்தப்பட்டதாதலால், அவர்களுக்கு அரசியல் உலகில் தம் ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்ட வேண்டும் என்ற மனப்பான்மை பிறந்துவிட்டது என்றும் கூறிஞர்கள்.

எச் செயலும் பிரதிச்செயலை விளைவிக்காமல் போகாது. ஆகையால் ஹிந்துக்கள் இடையிலும் மதவெறி தோன்றலாயிற்று. ஒரு பக்கத்தில் முசல்மானியப் பொதுமக்களிடையில் மதப்பிரசாரம் தொடங்கியதும் மற்ருெரு பக்கத்தில் ஹிந்துக்கள் சுத்தியைப் பற்றியும் இனக்கட்டுப்பாட்டைப் பற்றியும் சங்கொலி முழங்கிஞர்கள். இவை எல்லாவற்றிஞலும் மனக்கசப்பு மெல்ல மெல்ல வளர்ந்துகொண்டே சென்றது. இன்று அது இரு வகுப்பினரிடையில் ஆழ்ந்து அகன்ற அகழி ஒன்றை உண்டாக்கி விட்டது. இப்போது அதை எப்படியாவது தூர்ப்பதோ கடப்பதோ மிகவும் கடினமாகி வருகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் எப்படி வாளா இருக்கமுடியும்? அவர்கள் அவ்வப்போது இவ்வெறியைத் தம் சூழ்ச்சியால் பயன்

படுத்திக் கொள்ளப் பின்வாங்கவில்லை. ஒரு சிறு தீப்பொறியை மிகச் சாமர்த்தியமாக இடையருது ஊதிக்கொண்டே வந்தார்கள். இப்போது அது ஒரு சுடராகிப் பெரும் தழல் உருக்கொண்டும் கூட அதில் மேன்மேலும் நெய் வார்த்து வருவதை அவர்கள் கைவிடவில்லை.

இவ்விடத்தில் நான் சில சொற்களில் நெடியதொரு கதையைக் கூறிவிட்டேன். இதிலிருந்து, இங்கே கூறியவையெல்லாம் 1921இலேயே நிகழ்ந்தனவென்று எண்ணிக்கொள்ளக் கூடாது. அவ்வாண்டில் ஏதோ ஒரு வகையாக ஒரு விதை நிலத்தில் விழுந்துவிட்டது. அது விழுந்ததை அநேகம் பேர் கவனித்தே இருக்கமாட்டார்கள். அப்படிக் கவனித்திருந்தாலும் கூட அதற்கு அவ்வளவு பெருமை கொடுத்திருக்கமாட்டார்கள். ஏனெனில் மோப்ளா கலகம் நிகழ்ந்தும்கூட இதுவரையில் நாடெங்கும் ஒற்றுமைக் காட்சியே காணப்பட்டது. மேலே கூறப்பட்டுள்ள பத்வாவை முறைவைக்கத் திரட்டப்பட்ட கூட்டங்களே இந்த ஒற்றுமைக்குச் சிறந்த சான்ருக அமைந்தன. இளவரசர் வந்தபோது நாட்டில் எங்கும் நடந்த புறக்கணிப்பும் இதன் வலிமையைக் காட்டியது.

இவ்விதமாக மக்கள் மனத்தில் ஓடிக்கொண்டிருந்த இருவிதக் கருத்துக்களைப்பற்றி இங்கு இவ்வளவு மட்டும் கூறினல் போதும். அதாவது, இவ்விரண்டு கருத்துக்களின் திருஷ்டி கோணங்களுக்குள் முரண்பாடு இருக்கிறது என்பதே ஆகும். முசல்மானியர் இந்தியாவுக்கு எவ்விதம் வந்து சேர்ந்தாலும் சரி, அவர்களுடைய எண்ணிக்கை எவ்வகையில் பெருகியிருந்தாலும் சரி, அவர்கள் இன்று ஹிந்துக்களைப் போலவே இந்தியாவின் குடிமக்கள்தாம். அவர்களுக்கு வேறு நாடு எதுவும் கிடையாது. மற்ற நாட்டு முசல்மானியரிடம் அவர்களுக்கு இரக்கம் அதிகமாயிருந்தாலும், மேலும், அவர்களுக்குத் தாமே தேர்ந்து முடிவு செய்யும் வாய்ப்புக் கிடைத்தால், அவர்கள் ஆபத்துக் காலத்தில் தம்மோடு நெருங்கி வாழும் முசல்மானியர் அல்லாதாரைக் கைவிட்டு விட்டு நெடுந் தொலைவில் வாழும் வேறு நாட்டு முசல்மானியரிடம் தான் இரக்கம் காட்டுவார்கள் என்று வாதத்திற்காக ஒத்துக்கொண்டாலும் கூட, அவர்கள் இந்நாட்டில்தான் பிறந்து, இருந்து, இறந்து சுகதுக்கங்களைத் துய்த்துத் தம் வாழ்க்கையின் அவாக்களை எல்லாம் நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்பதையும், அதே போலத் துன்பங்களையும் சகித்து வாழ வேண்டும் என்பதையும் மறக்க முடியாது. இறந்த பின்னும் கூட அவர்கள் இந்நாட்டில்

ஒரு சிறு பகுதியைக் கைப்பற்றிக் கொண்டே நிற்கிறுர்கள். ஹிந்துக்களோ இறந்தபின் எரிக்கப்பட்டு விடுகிறுர்கள். அவர் களுடைய ஐம்பூத உடலின் அடையாளமே இல்லாமல் சாம்பலாகி விடுகிறது, அதையும்கூட காற்று அடித்துச் சென்றுவிடுகிறது, அல்லது மழை கரைத்துக் கொண்டு போய்விடுகிறது. ஆனுல் முசல்மானியரோ மூன்று நான்கு முழம் நிலத்தைப் பற்றிக் கொண்டு என்றைக்குமே இங்கே பூமிக்குள் கிடக்கிறுர்கள். இச் சமாதி இடங்களைக் காரணமாகக் கொண்டு எத்தனை சண்டைகள் விளைந்திருக்கின்றன என்பதைத் தெரியாதவர் எவருமே இல்லை. ஆகையால் இவர்களை இத்தேசத்தார் அல்லர் என்று கூற முடியாது என்பதை ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும்.

முசல்மானியர் அயலார் அல்லர் ஆயின், மற்றவர்களுக்கு இந் நாட்டுடன் எவ்வளவு உறவு உண்டோ அவ்வளவு உறவு அவர்களுக் கும் உண்டு என்பதும், ஆகையால் இங்குள்ள எல்லாப் பொருள் களிலும் அவர்களுக்கும் ஒரு பங்கு கிடைக்கவேண்டும் என்பதும், இதிலிருந்து தெளிவாகின்றன. அரசியல் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வதிலும் அவர்களுக்கும் ஒரு பங்கு கிடைக்க வேண்டியது நியாயமாகிறது. அதை மறுத்தால், அப்படி மறுப் பதற்கு ஓர் அர்த்தம்தான் உண்டு; ஓர் அர்த்தம் தான் இருக்க முடியும். அதாவது அவர்களைப் பலவந்தப்படுத்தி அவர்க ளுடைய உரிமையைப் பற்றிக்கொள்ள விரும்புவது என்பது தான்.

முசல்மானியர்களைப் பற்றி மேலே கூறப்பட்டவை எல்லாம் மற்றக் கொள்கையினருக்கும் கூடப் பொருத்தமாகும். இத்தனை வித சாதியாரும், இத்தனைவித மதத்தாரும், இத்தனை மொழி களைப் பேசுவோரும், இத்தனைவிதக் கருத்து வேறுபாடுகளை உடையவரும் வசிக்கும் இந்நாட்டில் அவர்களுக்குள் ஒற்றுமை நிலையுற்றிராவிட்டால், பரஸ்பர நம்பிக்கையையும் அன்பையும் அடிப்படையாக கொண்டு அமைதி நிலைபெற இயலாது. ஒருவர் மற்றெருவரை மனம்போனபடி ஒடுக்க முடியும்; தம்முடைய ஆதிக்கத்தையும் நிலைநாட்டிவிட முடியும். ஆனுல் ஒடுக்கப்பட் டவர் மீண்டும் தலையெடுக்கும் முயற்சியில் ஈடுபட்டபடியே இருப் பார்கள். அதனுல் தாமும் அமைதியுடன் வாழமாட்டார்கள்; பிறரையும் வாழ விடமாட்டார்கள். இதோ இன்று இவ்வுலகம் முழுதும் பரவியிருக்கும் மகாயுத்தத்தில் மோதி நிற்கும் ராஜாங் கங்களுக்கிடையில் காணப்படும் அதே காட்சியே ஒரு சிறிய அள வில் இந்தியாவிலும் இடையருது தோன்றி நிற்கும். இப்படி

நிகழ்ந்தால் இது அறிவுடைமையையும் பின் வருவதை முன் அறியும் ஆற்றலையும் காட்டாது. இன்று இப்பயங்கரமான சம்ஹாரத்தைக் கண்கூடாகக் கண்டிருந்தும், இந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்ளாவிட்டால், மேலும், இந்நாட்டை அத்தகைய படுகொலையினின்று காப்பதற்கு வழி தேடாதிருந்தால், இது நமக்கு மிக்க வெட்கத்தையும் துக்கத்தையும் இழிவையும் விளைவிக்கும் நடத்தையாக அமையும். அதனால்தான் காந்திஜீ இக் கருத்தை மனத்தில் கொண்டு இந்தியாவைப் போன்ற நாட்டிற்கு மற்ற வழிகள் எல்லாவற்றையும்விட மிகத் தேவையான அஹிம்ஸாவை முதலில் இருந்தே வற்புறுத்தி வந்தார்.

## 38. அஹிம்சாவின் மெய்ப்பொருள்

அஹிம்சாவின் தத்துவம் மிகவும் ஆழமானது. அதை வாழ்க்கை நடையில் கடைப்பிடிப்பது என்பது மிகவும் கடினம். அதைச் சரியாக புரிந்து கொள்ளாததால்தான் சிலர் அதனுடைய ஆற்றலையும், கட்டுப்பாடுகளையும் ஏளனம் செய்கிறார்கள். அதன் மூலமாக மனிதன் கோழையாகி விடுகிறான் என்று அவர்கள் கூறுகிறார்கள். மேலும் இன்று வரையில் உலகத்தில் வேறு எந்த நாடும் அதைத் தன் அரசியல் வேலைத் திட்டத்தின் நெறியாக ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் அதன் மூலமாக ஒரு நாடு தன் சுதந்திரத்தைக் காக்க முடியாது என்றும் கூறுகிறார்கள். "சாதாரணப் பொது மக்களைப் பற்றிச் சொல்லுவானேன்? நல்லொழுக்கம் உள்ளவர்கள் கூடக் கோபத்தை அடக்க முடியவில்லையே, கோபம் தானே ஹிம்சையைப் பிறப்பிப்பது? அது மட்டுமா? அது ஹிம்சாவின் மற்றோர் உருவே அன்றோ? ஆகையால் இந்த நெறி என்றுமே வழக்கில் வரமுடியாது. இது அசாத்தியமானது" என்றெல்லாம் கூறுகிறார்கள்.

இந்த விஷயத்தைப் பற்றிச் சிந்தனை செய்யும்போது, ஹிம்சாவில்தான் கோழைத்தனம் இருக்கிறது. அஹிம்சாவில் அன்று என்பதை முதலில் ஒப்புக் கொள்வேண்டும். கோழைத்தனம் தோன்றிய இடத்தில் அஹிம்சா இருக்க முடியாது. நாம் நம்முடைய எதிராளிக்கு அஞ்சிக்கொண்டு அவ்வச்சமே காரணமாக அவனுக்குக் கேடு விளைவிக்க விரும்பாவிட்டால் அது எப்படி அஹிம்சா ஆகக் கூடும்? எதிராளிக்குத் தீங்கு செய்யக் கூடா

தென்னும் மனப்பான்மைக்கு அச்சமே காரணம்; தீங்கு விளை விப்பது கெடுதல் என்பதால் அன்று. இவ்விதமாக எவனொருவன் அச்சத்தால் பீடிக்கப்பட்டுத் தீங்கு செய்யாமல் இருக்கின்றானோ அம்மனிதனுக்கு வாய்ப்புக் கிடைத்தால், மேலும் எவ்விதமாகவோ துணையும் கிடைத்து அவனுடைய அச்சமும் நீங்கிவிட்டால், அவன் சிறிதுகூடத் தயங்காமல் தன் எதிராளியை உடனே தாக்கி விடுவான். மேலும், தன்னால் இயன்ற மட்டும் அவனுக் குக் கேட்டையும் விளைவித்து விடுவான். ஆதலால் இது எவ் விதத்திலும் அஹிம்சா ஆகாது. எவன் ஒருவன் தீமை புரிவது கெடுதல் என்றும், மற்றொருவனைத் துன்புறுத்தல் நியாயமன்று என்றும் உணர்கின்றானோ, மேலும் இப்படியான கொள்கையைக் கடைப்பிடித்துத் துன்பம் விளைவிப்பதினின்று பின்வாங்கு கிறானோ, அவனிடம்தான் அஹிம்சா இருக்கக்கூடும். அவனுடைய இம் மனப்பான்மையானது தீமை விளைவிப்பதற்கு அவனுக்கு உள்ள ஆற்றலைப் பொருத்தது அன்று. அவனுக்கு அப்படிப்பட்ட ஆற்றல் இல்லாமற் போனாலும்கூட அவன் இம்மனப்பான்மை யால் உந்தப்பட்டுத் தீமை செய்யவேண்டும் என்று மனத்தால் கூட நினைக்காவிட்டால் அந்நிலையிலும் அவன் மனப்போக்கு அஹிம்சா வடிவமானது என்று கொள்ளப்படும். அப்படி ஆற்றல் இருந்தும் அவனுக்குத் தீமை புரியும் மனப்பான்மை இல்லாவிட் டால் அப்போது அவன் அஹிம்சாவைச் சார்ந்தவன் என்பதைப் பற்றி எவரும் ஐயம் கொள்ள முடியாது. மனிதன் எப்பொழுது இவ்வண்ணமாக இவ்விதமான மனப்பான்மையால் உந்தப்பட்டுப் பிறன் ஒருவனுக்கு வருத்தம் கொடுக்க விரும்பவில்லையோ அப் போது இம்மனோநிலைமையுடன் கூடவே, அவனுக்கு எதிரி ஏதே னும் கொடுமையோ அக்கிரமமோ செய்தவிடத்தும் அதனைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றலும் அவனிடம் இருக்கவேண்டும். ஆனால், எதிராளியின் அநியாயத்தைத் தான் பொறுத்துக் கொள்ளாவிட்டால் அது மேலும் அதிகத் துன்பத்தை விளைவிக் கும் என்று அஞ்சிக் கொண்டு அதை ஒருவன் பொறுத்துச் செல் வானானால் அது அஹிம்சாவை அடிப்படையாகக் கொண்ட மனோ பாவம் ஆகாது. அது கோழைத்தனமேயாகும். அஹம்சா மனோ பாவமானது என்னவென்றால், நாம் அம்மனோபாவம் பூண்டவர் களானால், நாம் சரியானதென்றும் நியாயம் பொருந்தியதென்றும் எதை எண்ணுகிறோமோ அதை இடையறாது செய்தவாறே இருப்போம். அச்சமற்றவர்களாய் நம்முடைய கடமையையே கடைப்பிடித்து, அதனின்று வழுவாது நிற்போம். மேலும், அநி

யாயக்காரன் எத்தனை கொடுமைகள் செய்தாலும் நம் கடப்பாட்டி லிருந்து வழுவமாட்டோம். மேலும் அவன் மேல் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்தால் தூண்டப்பட்டு அவன்மேல் நம் வலிமையைச் செலுத்தவும் மாட்டோம். இவ்வண்ணமாக நமக்காக நாமே வகுத்துக்கொண்ட நெறியிலிருந்து வழுவாது நின்று வருவோம். மேலும் நாம் இந்நெறியைக் கடைப்பிடித்து நிற்பதைப் பயன்படுத்திக் கொண்டு அநியாயக்காரன் மேன் மேலும் செய்யும் கொடுமையை எல்லாம் பொறுத்துக் கொள்வது மன்றி அத்துடன் அவனுக்கு துன்பம் விளைவிக்காமல் இருந்து வருமிடத்தில் நம் நடத்தை அஹிம்சாவைப் பூண்ட மனிதனின் நடத்தையாக அமைகிறது. அஹிம்சா நிரம்பிய செயலில் கோழைத்தனம் இல்லை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. அதில் துன்பத்தைச் சகிப்பதற்கு அஞ்சுவது என்பதும் இருக் காது. நம் கட்சி நியாயத்தைச் சார்ந்தது என்ற முழு நம்பிக் கையும், அதை ஆதரிப்பதற்கு வேண்டிய திடமான மன உறுதி யும், எதிரிக்குத் துன்பம் விளைவிக்கக் கூடாதென்ற உறுதியான எண்ணமும் இருந்தால்தான் அஹிம்சா கைகூடும். இறுதியில் அஹிம்சாவைப் பூண்ட மனிதனுக்குத்தான் வெற்றி உண்டா கிறது. இத்தகைய பொறுமையை மனிதர்களுக்குள், முக்கிய மாகப் பொது மக்களுக்குள், பிறப்பிப்பது கடினம் என்று கூறினால் அதற்கு விடையாக இவ்வளவு கூறினால் போதும். அதாவது, யுத்தத்தில் பல்வகை ஆயுதங்களை ஏந்திப் போர் செய் கிறவர்கள் சாதாரண மக்கள் அல்லரோ? அவர்களை, அவர்கள் இயல்பாக இருந்தவாறே விட்டுவட்டால், அவர்கள் இன்று போரில் காட்டும் அத்தனை வீரத்தைக் காட்டமுடியாது. அதற்கு வரை யற்ற பயிற்சியும் விடாமுயற்சியும் வேண்டும். படைவீரனின் வீரம் பயிற்சியால்தான் உண்டாகிறது. ஆனால் இந்த வீரம் அச் சத்தை அடிப்படையாகக் கொண்டது. எதிரியைக் கொன்றே ஆக வேண்டும்; இன்றேல் அவன் நம்மைக் கொன்றுவிடுவான் என்ற அச்சம்தான் இந்த வீரத்திற்கு ஒரு மாபெரும் காரணம். இது மட்டுமன்றி, முறையாக அமைக்கப்பட்ட படைகள் எல்லா வற்றிலுமே அவற்றின் ஒழுக்கநெறிக் கட்டுப்பாடுகளிடம் படை யாட்களுக்கு அச்சம் உண்டு. மாரீசனைப் பற்றித் துளசிதாசர் கூறிச் சென்றது இங்கும் பொருந்தும். அதாவது, "இருதலையி லும் சாவே கண்டான்" என்பதே. அந்நிலையில் மனிதன் இயல் பாகவே எப்படியோ வீரத்தைக் காட்டுகிறான். இவ்வீரம் மிக்க

பயிற்சியால் வருகிறது. அஹிம்சா மயமான வீரத்திற்கும் இவ் விதமான பயிற்சி வேண்டும்.

அஹிம்சா மயமான பயிற்சி வேறு வகையில் அமைகிறது. படையில் நாள்தோறும் கவாத்து, கசரத்து, கொடூரம் நிறைந்த விலங்கு வேட்டை முதலியன நடத்தப்படுகின்றன. அஹிம்சா மயமான பயிற்சி இதிலிருந்து முற்றும் வேருனது. அதற்கு வேண்டிய கருவி, ஒரு சொல்லில் கூறப்போனுல், நல்லொழுக்கமே ஆகும். ஒழுக்கம் என்ற சொல், இங்கே ஹிந்துக்களுடைய மத நூல்களிலும் மற்றவர்களுடைய மத நூல்களிலும் எடுத்தோதப் பட்டுள்ள சகல நெறிகளேயும் குறிக்கும் ஒரு சொல்லாக உபயோ கப்படுத்தப்பட்டிருக்கிறது. அப்பொதுவான ஒழுக்க நெறிகள் மிகவும் கடுமையாகப் பயிலப்பட்டுக் கற்கப்படுகின்றன. அந் நெறிகள் எல்லாவற்றின் போக்கும் அஹிம்சா, சத்தியம் ஆகிய வற்றின் பக்கமே ஈர்த்துச் செல்லுகின்றது. கடவுளின் மேல் நம் பிக்கை இதற்கு மாபெரும் துணேயாய் இருக்கிறது என்று காந்திஜீ அடிக்கடி எழுதியிருக்கிருர். இந்த அஹிம்சா மயமான மனப் போக்கை எழுப்புவதிலும் அதனே வலுப்படுத்துவதிலும் காலத்தைச் செலுத்திஞல், மேலும் இளமையிலிருந்து பயின்று வந்தால், இதன்மேல் முழு கவனத்தையும் செலுத்தி வந்தால், இந்த மனப்போக்கின் வெளித்தோற்றமாகக் காணப்படும் அச்ச மின்மை முதலிய குணங்களே கண்டிப்பாகக் கைவரப் பெறலாம். மனிதர்களுக்குக் கைகூடாதென்று கூறுவது கட்டுக்கதை ஆகும்.

ஒரு காலத்தில் எல்லா நாடுகளிலும் அந்நாட்டின் மக்களில் சிலரேதாம் போர்த் தொழில் புரிந்து வந்தார்கள், அல்லது அதைத் தம் கடமையெனக் கருதி வந்தார்கள். மற்றச் சாதாரண ஜன சமூகம் படையினின்றும் போரினின்றும் விலகியே நின்று வந்தது. இந்தியாவில் போர் புரிதல் க்ஷத்திரியர்களின் கடமை யாகவே கருதப்பட்டு வந்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும் இந் தியாவில் சில குறிப்பிட்ட ஜாதி அல்லது பிரதேசங்களின் மக்க ளேயே போர்வீரமுள்ளவர்களாகக் கருதிஞர்கள். அவர்களிலிருந்து தான் படைக்கு ஆட்கள் திரட்டப்பட்டு வந்தார்கள். ஆனுல், இப் போது நடந்துவரும் நாசகாரியான மகாயுத்தமானது போருக்கு எல்லாரையும் தயார் செய்ய முடியும் என்பதை மெய்ப்பித்துவிட் டது. எந்த நாடானது இந்த உண்மையை எவ்வளவு விரைவில் புரிந்துகொண்டு தன் மக்களுக்குப் போர்ப் பயிற்சி அளிப்பதற்கு எவ்வளவு திறமாக ஏற்பாடு செய்ததோ அந்நாடானது அவ்வளவுக் கவ்வளவு விரைவிலும் அதிகமாகவும் தயாராகிவிட்டது. இந்தி

யாவிலும் இந்த மகாயுத்தத்தின்போது, அதற்கு முன்னர் இருந்த கட்டுப்பாடுகள் நீங்கிவிட்டன. முன்னுளில் போர்க்குலம் என்று கருதப்படாத சாதிகளில் இருந்தும் பிரதேசங்களிலிருந்தும் படைக்கு ஆட்கள் இந்த யுத்தத்தின்போது நிறையச் சேர்க்கப் பட்டார்கள். இக்காலத்துப் படை எப்படி எல்லாச் சாதிகளிலும் எல்லாப் பிரதேசங்களிலும் உள்ள மக்களைக் கொண்டு அமைக்கப் பட்டிருக்கிறதோ, மேலும் அது எப்படி வீரத்தோடு போர் புரி கிறதோ அதே போல அஹிம்சாப் படையும் பொது மக்களிடையி லிருந்து திரட்டப்பட முடியுமென்பதும், மேலும் இந்த அஹிம் சாப்படைக்கு ஆள் சேர்ப்பதற்கு நிலம் இன்னும் அதிகப் பரப் பாய் அமையும் என்பதும் தெளிவாகின்றன. ஆயுதம் ஏந்திய படைக்கு உடல் வலிமை இன்றியமையாதது. அதனுல், கிழவர் கள், வயதில் குறைவான சிறுவர்கள், மேலும் பெரும்பாலும் பெண்களும் அதற்குத் தகுதி யற்றவர்களாகக் கருதப்படுகிருர் கள். அஹிம்சா மயமான படையிலோ கிழவர்களும் சிறுவர் களும் பெண்களும், மேலும் குருடர்களும் முடவர்களும் நொண்டி களும்கூட சேரமுடியும். ஏனெனில், இதற்கு உடல் வலிமை அவ்வளவு தேவையில்லை. வைராக்கியமும் துணிச்சலும் தாம் தேவை.

அஹிம்சா மயமான செயலுக்கு ஒரு மிகச் சிறந்த பலன் என்னவென்ருல் அதில் எவன் ஈடுபடுகிருனே அவன் தன் மேலேயே இடுக்கணை வரவழைத்துக் கொள்கிருன். வேறு எவரும் இன்னலுக்கும் இடுக்கணுக்கும் பங்காளி ஆவதில்லை. ஏனெ னில், இவன் பிறருக்கு—பகைவனுக்கும் கூட—துன்பம் விளைவிப் பதற்கு உடன்படுவதில்லை. மேலும் அத்தகைய துன்பத்தைக் கொண்டு இவன் தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ள விரும்பு வதுமில்லை. எதிராளியையும் தன் வயப்படுத்திக் கொள்வதே இவனுடைய நோக்கம். அதுவும் வலிமையைச் செலுத்தி அன்று; தன் அன்பைச் செலுத்தியே தான். மேலும் எதிராளியிடமும் அதே மனப்பான்மையைப் பிறப்பித்து இதைச் சாதிக்கின்ருன். ஆகையால், அஹிம்சாமயமான செயலில் துன்பம் குறைவாகத் தான் விளைகிறது. வலிமை செலுத்தப்பட்ட இடத்தில் இரு கட்சியாருக்கும் துன்பம் விளைகிறது. இதில் ஒரு கட்சி மட்டுமே தன்மேல் துன்பத்தை வருவித்துக் கொள்கிறது. துன்பத்தின் அளவு இவ்விதமாகச் சரிபாதியாகி விடுகிறது. துன்பத்தின் அளவு முதலில் இருந்தே எவ்வளவோ குறைவாகத்தான் இருக்கும். ஏனெனில் எங்கே ஒருவன் தன் வலிமையைச்

செலுத்தித் துன்பம் விளைவிக்க வில்லையோ அங்கே மற்றவனுடைய கையும் சோர்வு அடைந்து விடுகிறது. அவனுடைய ஆயுதங்களும் மழுங்கிவிடுகின்றன. தோளுக்குத் தன் வலிமையைக் காட்டும், ஆற்றல் உள்ளத்திலுள்ள கோபத்தால் பெருகுகிறது. அக்கோபம், வலிமையைக் கையாண்டு பழிக்குப் பழி வாங்குவதால் எவ்வளவுக்கு எழுச்சி பெருகுகிறதோ அவ்வளவுக்கு அஹிம்சா மயமான செயலால் பழி வாங்குவதினால் பெருகுவதில்லை. ஆகையால் இரு கட்சியாரின் கஷ்ட நஷ்டங்களைக் கணக்கெடுத்துப் பார்த்தால் அஹிம்சா மயமான செயலால் துன்பத்தின் அளவு மிகவும் குறைந்தே விடுகிறது.

அஹிம்சா மயமான செயலுக்குச் சிறப்பாகத் தனிப்பட்ட ஆயுதங்கள் எவையும் தேவையில்லை. இக்கால யுத்தத்தில் நாள்தோறும் புதிய புதிய படைக்கலங்கள் கண்டுபிடிக்கப்படுகின்றன, உபயோகமும் செய்யப்பட்டு வருகின்றன. இக்காலத்தில் யுத்தத்திற்காகச் செலவாகி வரும் பணத்தின் தொகை மூளையைக் கிறுகிறுக்கச் செய்கிறது. அமெரிக்கா மட்டும் இந்த யுத்தத்தில் ஏறக்குறைய 55 கோடி ரூபாய் நாள்தோறும் செலவு செய்தது. இங்கிலாந்து ஏறக்குறைய 15–16 கோடி ரூபாய் செலவிட்டது. ஏழை இந்தியாவும் கூட நாள்தோறும் ஒரு கோடி ரூபாய் செலவு செய்தது. மற்ற நாடுகளைப் பற்றித் தெரியாது. ஆனால் ருஷியா, சைனா ஆகியவற்றின் செலவை இத்தொகைகளைக் கொண்டு மதிப்பிட்டுக் கொள்ளலாம். இந்த ராஜ்யங்களுக்கு எதிரிகளான ஜெர்மனியும் இட்டலியும் ஜப்பானும் நாள்தோறும் எத்தனை செலவு செய்தன என்பதையும் நாம் இதனின்று யூகித்துக் கொள்ளலாம். இந்தத் தொகைகளில் கையைவிட்டுச் செலவு செய்தது மட்டும்தான் காட்டப்பட்டிருக்கிறது. பகைவனின் நடவடிக்கைகளால் நாள்தோறும் உண்டான நஷ்டங்களின் கணக்கு இவற்றில் சேர்க்கப்படவில்லை என்று தோன்றுகிறது. இவ்வண்ணமாகவே ஆட்கள் சேதமும் கணக்கில்லாதபடி நிகழ்ந்தது. ஆனால் யுத்தத்தால் அதில் ஈடுபட்டிருந்த நாடுகளின் மக்களாலும், மேலும், அப்படி ஈடுபடாத நாடுகளின் மக்களாலும் கூட ஓர் அளவுக்குச் சகிக்க வேண்டி வந்த அல்லல்களையும் துன்பங்களையும் ஒரு தொகை வடிவில் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. இதற்கு மாறாக, அஹிம்சா மயமான செயலுக்குப் புறப் பண்டங்கள் எவையும் சிறப்பாகத் தேவையில்லை. மேலும், பொது மக்களின் வாழ்க்கையிலும் விசேஷக் குழப்பத்தை விளைவிக்கவும் தேவையில்லை. இவ்விதமாகத் துன்பம்,

பணச் செலவு, மானிட ரத்தச் சேதம், ஜன சமூகத்திற்கு அல்லல் ஆகிய எல்லாமே வலிமையைக் கையாளுவதால் விளையும் கணக்கிடமுடியாத அளவுக்கு மாருக அஹிம்சா மயமான செயலால் குறைவாகவோ — இல்லை என்றே கூறும் அளவுக்கோ — நிகழ்கின்றன. ஆகையால் எந்த ஏழை நாடும் இந்நெறியை எளிதாகக் கையாள முடியும். மேலும் மிக்க மிக்க ஆற்றலைப் படைத்த நாட்டையும் இதைச் கொண்டு எதிர்த்து நிற்க முடியும்.

இது நாடுகளுக்கிடையில் எழும் விஷயங்களில் கையாளப்படும் அஹிம்சாவின் மெய்ப்பொருள். எங்கொரு நாட்டில் வெவ்வேறு மதங்களைக் கடைப்பிடிப்பவரும், வெவ்வேறு மொழிகளைப் பேசுபவரும், வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டவரும் வாழ்கிருர்களோ அங்கே ஹிம்சா நெறியைக் கையாண்டால் அங்குள்ள மக்கள் ஒரு நாள் கூட அமைதியாக வாழ முடியாது. இந்தியர்கள் தம்முள் சகோதர மனப்பான்மையுடன் நடந்துகொள்ளாவிட்டால், பொறுமையுடனும் பரந்த மனப்பான்மையுடனும் நடந்து கொள்ளாவிட்டால், மேலும் தம் உரிமையே முக்கியமாகக் கருதி மற்ருேரைத் தம் கருத்துக்கு இசையும்படி செய்வதில் முனைந்து நின்ருல், அது மட்டுமன்றிப் பிறருக்குத் தாம் செய்ய வேண்டிய கடமையை முக்கியமற்றதாக ஒதுக்கிவிட்டால், அதை இடையருது பேணுவதற்கு முயற்சி செய்யாவிட்டால், இவற்றின் பயனுக நாளுக்கு நாள் படுகொலை பெருகுவதே அன்றி வேறு எதுவும் ஆகாது. ஒரு மனிதனுடைய ஹிம்சா மயமான மனப்போக்கு தனிப்பட்ட மற்ருெரு மனிதனை மட்டுமே பாதிப்பதோடு நின்ருல், அப்போது நாட்டில் அமைக்கப்பட்டுள்ள நாட்டாண்மையானது தன் போலீஸ், கோர்ட்டு முதலியவற்றின் மூலமாக அதைக் கட்டுப்பாடு செய்து அடக்கமுடியும். ஆனுல் அந்த மனப்போக்கு ஜனசமூகம் முழுவதும் பரவிவிட்டால், மேலும் வெவ்வேறு பகுதிகள் ஒன்ருேடு ஒன்று சண்டைபோட்டுக் கொள்ள ஆரம்பித்துவிட்டால் அப்போது போலீசும் கோர்ட்டும் உபயோகமற்றவையாகி விடுகின்றன. அப்போது இச்சண்டை உள்நாட்டுப் போராக மாறிவிடுகிறது. இதிலிருந்து தப்புவதற்கு அஹிம்சா மயமான செயல்களை நம்பியிருப்பது அன்றி வேறு வழி எதுவும் இந்தியா போன்ற நாட்டிற்குக் கிடையாது.

இதை ஒட்டி மற்ருெரு விஷயத்தையும் மனத்தில் கொள்ளுதல் நன்று. நாம் ஹிம்சா அஹிம்சாவைப் பற்றிப் பேசும்போது, ஹிம்சாவானது நம்முடைய உடம்போடு பிறந்திருக்கிறதே, அப்படியிருக்கும்போது, ஆத்திரம் பொங்கி யெழும் நிலையில் சாதாரண

மனிதன், முக்கியமாக சாதாரண ஜன சமூகம், அஹிம்சா மனப் பான்மை கொண்டு நிற்கும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும் என்று கூறுகிறேம். அப்படிக் கூறும்போது நாம் ஒன்றை மறந்துவிடுகிறேம். அதாவது, தனி மனிதன் அல்லது சமூகத் தின் அன்ருட வாழ்க்கையின் நடவடிக்கைகளைக் கவனிப்போ மாஞல் அவை அனைத்திலும் ஏதோ ஓரிரண்டில்தான் ஹிம்சா கையாளப்படுவதைக் காண்போம் என்பதை மறந்துவிடுகிறேம். 100க்கு 99 காரியங்கள் வலிமையைக் கையாளாமலும் ஹிம்சா மயமான செயல் எதுவும் இன்றியுமே நடைபெறுகின்றன. மேலும் அந்த நூற்றுக்கு ஓரிரண்டு சூழ்நிலைகளிலும் கூட நம்மை அடக்கிக் கொள்வதும் அஹிம்சா முறையையே எக்காலத்திலும் கையாளுவதும் நம்மால் இயலாமல் போகவிடக்கூடாது. அம் முயற்சி செய்யாவிட்டால், நம் வாழ்க்கை காட்டு மிருகங்களின் வாழ்க்கையைவிட இழிவானதாகப் போய்விடலாம்.

காந்திஜீ "நீலக்காரர்களுக்குக் கெடுதலை நான் விரும்ப வில்லை" என்றும், "ஆஞல் அவர்கள் மூலமாகக் குடியானவர் களுக்கு உண்டாகும் அக்கிரமங்களையும் துன்பங்களையும் நிறுத்தி விடுவேன்" என்றும், "அவர்கள் இருவரையும் நண்பர்கள் ஆக்கிவிடுவேன்" என்றும் கூறிஞர். அப்படியே நடந்தது. இதஞல் என்ன ஆயிற்று என்ருல், காரியம் எல்லாம் முடிந்தபின் அதே நீலக்காரர்கள் பள்ளிக்கூடம் ஒன்றைத் திறப்பதற்கும் இன்னும் மற்ற வகையில் குடியானவர்களை மேம்படுத்தும் வேலை களுக்கும் காந்திஜீக்கு உதவி புரிவதாக வாக்கு அளித்தார்கள். சில நாட்களுக்குள்ளாக மூன்று பள்ளிக்கூடங்கள் தொடங்கி விட்டன. ஒன்றுக்கு மட்டும் அன்றி வேறு இரண்டு பள்ளிக் கூடங்களுக்கும் நீலக்காரர்களோடு நெருங்கிய இனிமையான உறவு இருந்துவந்தது.

நம் நாடானது அஹிம்சா வழியைக் கைவிடாது உறுதியாய்ப் பற்றி நிற்குமாஞல், இதேபோல ஆங்கில அரசிடமும் மிகவும் பன் மடங்கு பெரிய அளவில் செய்து காட்ட முடியும். இன்று பலப் பிரயோகத்தின் எல்லையே எட்டிவிட்ட மகா யுத்தமானது ஒரு படிப்பினையை உலகுக்குக் கண்கூடாகக் காட்டிவிட்டது. அதா வது, மனிதகுலத்தின் பூண்டாவது உலகில் மீதம் இருக்க வேண்டுமாஞல், நாகரிகம் நிலைத்திருக்க வேண்டுமாஞல், இருபது முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை நாடுகள் நம் இளை ஞர்களைப் பலி கொடுக்காமலிருப்பதற்கும், தாய்மார்கள் கொல்லப் பட்டு அழிவதற்கே மக்களைப் பெருமலிருப்பதற்கும், பொருள்

குவியலை நெருப்பிலிட்டுக் கொளுத்துவதற்கும் கடலில் மூழ்கடிப் பதற்கும் என்றே உற்பத்தி செய்யாமலிருப்பதற்கும் ஏதாவது ஒரு வழி கண்டே பிடித்தாக வேண்டும் என்பதே. இப்படிப் பட்ட பிரளயம் போன்ற யுத்தத்தின் பின்னும் கூட நம் நாட்டில் காங்கிரஸ்காரர்களும், மேலும் அஹிம்சாவைக் கடைப்பிடித்தே இன்று வரையில் தொண்டு புரிந்துவந்தும், அரசியல் பணியில் வெற்றி கண்டும் உள்ளவர்களான செயலாளர்களும் கூட அஹிம் சாவின் மேல் குறைவாகவே நம்பிக்கை பூண்டு வருவதை நான் காண்கிறேன். ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையை பலவந்தத்தால் தான் நிலைநாட்ட முடியும் என்றும், சகோதர பாவத்தால் அன்று என்றும் கூடப் பலர் கூறிக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, பலப் பரீக்ஷை செய்துபார்த்து இரு வகுப்பினர்களில் ஒருவரை ஒடுக்கி வைக்க வேண்டியது அவசியம் என்பதுதான் அவர்க ளுடைய கருத்து. சில முசல்மானியர் வேறொருவிதமாக நினைக் கிறார்கள். அதாவது, தாம் இன்று இருப்பதைவிட எண்ணிக் கையில் எவ்வளவோ குறைவாக இருந்த காலத்திலும் கூடத் தாம் ஏறக்குறைய இந்தியா முழுவதையும் நூற்றுக்கணக்கான ஆண்டு களாக ஆட்சி புரிந்து வந்திருந்தால் இன்றும் அப்படிச் செய்ய முடியும் என்று எண்ணுகிறார்கள். அவர்களைப் போலவே நினைக்கும் ஹிந்துக்கள் சிலரும் இருக்கிறார்கள். அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்றால் "நம்முடைய எண்ணிக்கையோ இவ் வளவு அதிகமாக இருக்கிறது. மேலும், நாம் கல்வியிலும், செல் வத்திலும், வலிமையிலும் எவ்விதத்திலும் முசல்மானியரைவிடக் குறையவில்லை. சொல்லப்போனால் மேலாகவே இருக்கிறோம். மேலும், ஹிந்துக்களுக்குள் விழிப்பு இல்லாத காரணத்தால் மிகச் சில முசல்மானியர் அவர்களை அடக்கி ஆட்சி புரிந்த காலம் போய் விட்டது. இப்போது ஹிந்துக்கள் விழித்துக் கொண்டார்கள், மேலும், ஒன்றுபட்டுவிட்டார்கள். நாடோ ஹிந்துக்களுடையது. மற்றவர்களோ சிறுபான்மையான சாதியார்தாம். ஆகையால் இங்கு அதிகாரம் ஹிந்துக்களைத்தாம் சேரவேண்டும். ஆனால் முசல்மானியரிடத்தும் அதேபோல மற்றச் சிறுபான்மையரான சாதியாரிடத்தும் முற்றிலும் நியாயமாக நடந்துகொள்ள வேண்டும்" என்று நினைக்கிறார்கள்.

இரண்டு கட்சியாரும் தம் ஆற்றலையே நம்பியிருக்கிறார்கள். இந்தக் கடினமான சிக்கலைத் தீர்த்து வைக்கக்கூடிய ஒரே ஒரு கருவியான அஹிம்சாவை இவர்கள் முற்றிலும் மறந்து விடுகிறார் கள். வினையும் அதனால் விளையும் பிரதி வினையும் எல்லோரும்

அறிந்த இயற்கை நெறி வழக்கு. ஹிம்சை உருக்கொண்ட செயலின் எதிர்வினை ஹிம்சா உருவாக அமைகிறது ; அஹிம்சா உருக்கொண்ட வினையின் எதிர்வினை அஹிம்சா உருவாக அமைகிறது. ஆதலால் ஹிந்து—முஸ்லிம் சிக்கலைத் தீர்ப்பதில் நாம் முசல்மானியரின்மேல் ஹிம்சாமயமான எண்ணத்தைக் கொண்டு ஹிம்சாமயமான செயல்களில் தலைப்பட்டால், அச்சிக்கல் அவிழ்வதற்கு மாறாக மேலும் படு முடிச்சு ஆகிவிடும். ஆகையால் நம்முடைய செயல் உண்மையான அஹிம்சாமயமாக இருக்கவேண்டும். அச்செயலில் கோபமிருக்கக்கூடாது. வலிமையைக் காட்டுதல் என்பது கூடாது. அச்சம் கூடாது ; கோழைத்தனமும் கூடாது. வாய்மையின் பேரிலும் நியாயத்தின் பேரிலும் நம்பிக்கையும் அவற்றில் இருந்து நிலைபேறுமையும், உண்மையான அஹிம்சாமயமான செயலை புரிதலும் ஆகிய மூன்றும்தாம் தேவை. இவ்விதமான அஹிம்சாமயமான செயலின் பலன் விரைவிலும் எல்லா இடங்களிலும் காணக் கிடைக்காமலிருக்கலாம். ஆனால் நம்முடைய செயல் தன்னிம்பிக்கையையும் மெய்ம்மையும் வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டிருக்குமானால் (அச்சம், கோழைத்தனம் ஆகியவற்றை அல்ல) அப்போது வெற்றி கிட்டியே தீரும்.

## 39. சப்ராவில் பயங்கரமான வெள்ளம்

அந்த ஆண்டின் புரட்டாசி மாதத்தில் சப்ரா ஜில்லாவில் ஒரு நாள் பெருமழை பெய்தது. 24 மணி நேரத்திற்குள் ஏறக்குறைய 36 அங்குலம் மழை பெய்து விட்டது. இதனால் ஜில்லா முழுவதும் நீர் நிறைந்து பெருவெள்ளம் வந்துவிட்டது. என் தமையனார் பொதுமக்களுக்குத் தொண்டு புரிவதில் எப்போதுமே ஈடுபட்டிருந்து வந்தார். இந்தச் சமயத்திலும் அவர் மக்களுக்கு உதவி புரிவதற்காக மிகவும் பாடுபட்டு உழைத்தார்.

சப்ரா நகரில் இந்த வெள்ளத்தால் மக்கள் மிகவும் துன்பப்படவேண்டி வந்தது. அப்போது ஒரு விஷயம் புலப்பட்டது. அதை இங்கே குறிப்பிடுவது பொருத்தமற்றதாகாது. உள்ளூர் அரசாங்க ஊழியர்கள் மக்களிடையே இத் துன்பநிலையில் சிறிது கூடக் கவலையின்றியும் அலட்சியத்துடனும் வேலை புரிந்து வந்தார்கள். அதனால் மக்களிடையில் அதிக ஆத்திரம் உண்டாயிற்று. மக்கள் நீரில் மூழ்கி "ஐயோ! காப்பாற்றுங்கள்!

காப்பாற்றுங்கள் !'' என்று ஓலமிட்டுக் கொண்டிருந்தபோது சில அதிகாரிகள் படகுகளில் ஏறிக் கொண்டு சாவதானமாக விளையாடிக் கொண்டிருந்தார்கள் என்று செய்தித்தாள்களிலும்கூட அச்சிடப்பட்டது. நீரில் மூழ்கித் தத்தளிக்கும் மக்களை, பெண்களையும் குழந்தைகளையும்கூடக் காப்பதற்கு அவர்களில் பெரும்பாலோர் உதவி புரியவே இல்லை. இதற்கு மாருக, அங்கிருந்த ஆங்கில நீதிபதியும் வங்காளி உப நீதிபதியும்தாம் உதவி புரிந்தார்கள். ஆனுல் கலெக்டரும் போலீஸ் அதிகாரிகளும் அதேபோல டிப்டி மாஜிஸ்திரேட்டும் அவர்கள் இருந்த இடத்தைவிட்டு நகரவில்லை. இந்த விஷயத்தைப் பற்றிச் சப்ராவில் பொதுஜனக் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டு அதில் அவர்களை வெளிப்படையாகத் தூஷித்துப் பேசி, உதவி புரிந்தவர்களை, முக்கியமாகப் பாபூ மகேந்திர பிரசாதையும் காங்கிரஸ் செயலாளர்களையும் மிகவும் புகழ்ந்து பாராட்டி அவர்களுக்கு நன்றி செலுத்தப்பட்டது.

கிராமங்களின் நிலைமையும் இதே போலத் தானிருந்தது. ஓர் இடத்தில் ஒரு வேடிக்கையான விஷயமும் நடந்தது. சப்ராவின் கிழக்குப் புறத்தில் ஓடுகின்ற ரயில் பாதையை வெட்டிவிட வேண்டுமென்று மக்கள் கலெக்டரிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தார்கள். ஆனுல் அவர் அதைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. பிறகு பாதை தானே உடைந்து விட்டதோ, அல்லது, நான் பின்னர் கேள்விப்பட்டதுபோல, யாரோ அதைச் சிறிதளவு உடைத்து விட்டார்களோ என்னவோ, அதற்குப் பின் நீரின் வேகம் அதைமேலும் உடைத்து ஒரு பெரிய வாய்க்காலாக்கி விட்டது. இதையொட்டி இரண்டு நிகழ்ச்சிகள் இங்கே குறிப்பிடத்தக்கன. சீவானுக்கு மேற்கில் ஓரிடத்தில் நீர் நிறையத் தேங்கி விட்டது. கிராமத்தார் ரயில்பாதையை வெட்டிவிட விரும்பினுர்கள். ஆனுல் ஆயுதபாணி போலீசார் அதைக் காவல் காத்து வந்ததால் அவர்களுக்கு முதலில் துணிச்சல் வரவில்லை. துன்பத்தை பொறுத்தே சென்ருர்கள். ஆனுல், இனிமேல் சகிக்க முடியாத நிலைமை வந்தபோது, ஏதோ ஒரு கிராமத்து ஆட்கள் இரண்டு மூன்று பேர் மண்வெட்டிகளைத் தோளில் தாங்கிக் கொண்டு தண்ணீரில் நீந்தி ரயில் பாதைப்பக்கம் வந்தார்கள். போலீசார் அதைப் பார்த்து, அவர்களை அதட்டினுர்கள். அதற்கு அவர்கள் அஞ்சாமல் போலீசாரைப் பார்த்து இவ்வண்ணம் கூறினுர்கள். “தண்ணீரில் மூழ்கி நாங்கள் சாகிருேம், நீங்களோ பாதையை வெட்ட விடமாட்டோம் என்கிறீர்கள். இது வரையில் நாங்கள் சகித்துக் கொண்டிருந்தோம். இனிச் சகிக்க முடியாது.

இரண்டு வழியிலும் சாவேதான் காண்கிறோம்; ஒன்று மூழ்கிச் சாகணும், அல்லது குண்டு பட்டுச் சாகணும். நாங்கள் குண்டு பட்டே சாவது நல்லது என்று முடிவு செய்து விட்டோம். ஆகையால் நாங்கள் ரயில் பாதையை வெட்டத்தான் செய்வோம். நீங்கள் குண்டு எறியுங்கள்'' என்றார்கள்.

இவ்வாறாகக் கூறிவிட்டு அவர்கள் பாதையை வெட்டத் தொடங்கினார்கள். போலீசாருக்குச் சுடத் துணிவு வரவில்லை. பாதையை வெட்டியாகிவிட்டது; நீர் பாய்ந்தோடி விட்டது. எத்தனையோ கிராமங்கள் தப்பின. வெள்ளத்தால் ரயில் பாதை அடித்துக் கொண்டு போகப்பட்டது என்றும் அதை எவரும் வெட்டவில்லை என்றும் போலீசார் மேலதிகாரிகளுக்கு அறிவித்து விட்டதாகக் கேள்வி. அந்த இடத்தில் இப்போது ஒரு பெரிய பாலம் கட்டப்பட்டு விட்டது. அதிலிருந்து ரயில் பாதைக்கு வடக்கே உள்ள கிராமங்களில் நீர்த் தேங்கி விடுவதன் மூலமாக வெள்ளம் வருவதில்லை.

மற்றொரு சம்பவம் திரௌலி போலீஸ் வட்டாரத்தில் உள்ள ஒரு கிராமத்தைப் பற்றியது. அங்கே டிஸ்டிரிக்ட்டு போர்டின் சாலை உயரமாயிருந்தது. ஆகையால் சாலையும் ரயில் பாதையைப் போலவே நீரைத் தேக்கி விடும். கிராமத்தார் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் சென்று, ''சாலையை வெட்டி விடுங்கள். அப்படிச் செய்தால் பல கிராமங்கள் காப்பாற்றப்படும்'' என்று கூறினார்கள். அந்தக்காலத்தில் கிராமங்கள்தோறும் காங்கிரஸ் குழுக்கள் அமைக்கப் பட்டிருந்தன. போலீஸ் நிலையத்தின் அதிகார எல்லைக்குள் இருந்த கிராமங்களை எல்லாம் சேர்ந்து தானுக்குழு ஒன்றும் அமைக்கப் பட்டிருந்தது. தானுக் குழுவின் தலைமைச் செயலாளரை ''சுயராஜீ இன்ஸ்பெக்டர்'' என்று மக்கள் அழைத்து வந்தார்கள். இப் பெயரை மக்கள் எப்படிக் கொடுத்தார்கள் என்பது தெரியாது. அரசாங்க இன்ஸ்பெக்டர் தம்மிடம் வந்த கிராமத்தாரைப் பார்த்து, விளையாட்டாக ''என்னிடம் ஏன் வருகிறீர்கள்? 'சுயராஜீ' இன்ஸ்பெக்டரிடம் ஏன் போகவில்லை?'' என்றார். சப்ராவிலும்கூட உயர்ந்த பதவியிலிருந்த அதிகாரி ஒருவர் ''உதவிக்காக என்னிடம் ஏன் வருகிறீர்கள்? காந்திஜீயிடம் போங்கள்'' என்று கூறினாராம். சப்ராகாரர்கள் அப்படியே காந்திஜீயிடமிருந்து-அதாவது, காங்கிரஸ்காரர்களிடமிருந்து உதவி பெற்றார்களாம். திரௌலி தானுவின் நாட்டுப்புறத்து மக்களும் தானுக்குழுவின் அமைச்சரிடம் சென்று இன்ஸ்பெக்டருடன் நடந்த பேச்சைக் கூறினார்கள். அவர்

அதைக் கேட்டு, "நன்று, இன்ஸ்பெக்டர் அவ்விதம் கூறினரானல், மேலும், உங்களை என்னிடம் அனுப்பியது உண்மையானல், நான் சொல்லுகிறேன், கேளுங்கள். உங்களுக்கு எங்குத் தேவையோ அவ்விடத்தில் சாலையை வெட்டி விடுங்கள். அதனல் நீர் பாய்ந்தோடி விடும். ஆனல் ஒன்று மட்டும் நினைவிருக்கட்டும். தேவையின்றிச் சாலையைக் கெடுக்காதீர்கள்" என்று கூறினர். மக்களும் அப்படியே செய்தார்கள். சாலை வெட்டப்பட்டு நீர் பாய்ந்தோடி விட்டது.

இவ்விதமாக மக்களுக்கு உதவி புரியும் வேலையில் நானும் கலந்து கொண்டேன். ஆனல், நான் அங்கே போய்ச் சேர்ந்த போது, தண்ணீர் ஊரிலிருந்து வெளியேறி விட்டது. நெல் வியாபாரிகளின் களஞ்சியங்களில் இருந்த நெல் எல்லாம் தண்ணீரில் மூழ்கி மடிந்து விட்டது. அதன் நாற்றத்தால் அந்தப் பேட்டைக்குள் போவதே சங்கடமாகிவிட்டது. நான் பணம் திரட்டுவதிலும் மற்ற வகையில் உதவி புரியும் வேலைகளிலும் சிறிது பங்கெடுத்துக் கொண்டேன். இந்த மனப்போக்கு எனக்கு முதலில் இருந்தே உண்டு. 1914இன் வெள்ளத்தின் போது, நான் கல்கத்தாவில் இருந்துகொண்டே உதவி புரியும் வேலையை முறைப்படி அமைக்கத் தொடங்கிவிட்டேன். இந்த மனப்பான்மை காந்திஜீயின் உறவினல் மேலும் வலிமையுற்றது. எங்கள் பிரதேசத்தில் எப்போது வெள்ளம் வந்தாலும், மக்களுக்கு உதவி புரிவதற்காக ஏதாவது ஏற்பாட்டைச் செய்து வந்து கொண்டிருந்தேன். 1923இல் சாஹாபாதில் சோன் நதியில் பெரிய வெள்ளம் வந்தது. அப்போது நான் கொடி சத்தியாக்கிர வேலைக்காக நாகபுரிக்குச் சென்றிருந்தேன். செய்தி கிடைத்ததுமே அங்கிருந்து வந்து விட்டேன். இப்படியாக தர்பங்கா ஜில்லாவின் மதுவனீ சப்டிவிஷனில் பயங்கரமான வெள்ளம் வந்தபோது அங்கு உதவி புரிவதற்காகப் போக வேண்டிவந்தது. இந்த இடங்களில் எல்லாம் பெரிய இடையூறுகளை எதிர்க்க வேண்டியிருந்தது. ஆராவுக்கு மிகவும் சிரமப்பட்டுப் போய்ச் சேர முடிந்தது. ஏனெனில் கோயில்வர் ஸ்டேஷனுக்கும் ஆராவுக்கும் இடையில் மிகவும் உயரமாக அமைக்கப்பட்டிருந்த ரயில் பாதை முற்றிலும் உடைந்து போய்விட்டது. அதன் கரையில் ஒவ்வோர் இடங்களில் ஐம்பது அறுபது கஜம் அகலமுள்ள பல உடைப்புக்கள் உண்டாகி விட்டன. கீழே இரு புறத்திலும் இருந்த நடைபாதையோ தண்ணீரில் முற்றிலும் மூழ்கிக் கிடந்தது. ரயில் தண்டவாளத்துக்குக் கீழ் இருந்த கரை அடித்துக் கொண்டு போய்

விடப் பட்டதாயினும், மேலிருந்த இரும்புத் தண்டவாளமும் சிற்சில இடங்களில் இரும்புத் தண்டவாளம் பிணைக்கப்பட்டிருந்த கட்டைகளும் தொங்கிக் கொண்டிருந்தன. சில இடங்களில் குளங்கள் போல மடுக்கள் உண்டாகி அவற்றில் தண்ணீர் அதிக ஆழமாகத் தேங்கி நின்றது. இந்த அகழிகளைத் தாண்டிச் செல்வதற்கு ஒரு வழிதான் இருந்தது. அதாவது, அந்தத் தண்ட வாளங்களின் மேல் எப்படியாவது நடந்து அல்லது அவற்றைப் பற்றிக் கொண்டு தொங்கிக் கொண்டு தாண்டிச் செல்வதுதான். என்னுடன் பேராசிரியர் அப்துல் பாரீ இருந்தார். நாங்கள் இரு வரும் அத் தண்டவாளங்களின் மேல், சில இடங்களில் நாற்கால் பிராணி போல ஊர்ந்தும், சில இடங்களில் அவற்றைக் கைகளால் பற்றிக் கொண்டு குரங்குகளைப் போலத் தொங்கிக் கொண்டும் அவ்வகழிகளைத் தாண்டிச் சென்று ஆராவை அடைந்தோம். அங்கே போய்ச் சேர்ந்ததும், உதவி புரியும் வேலையை ஒழுங்காக அமைத்தோம். இப்படி வெள்ளம் வந்த காலங்களில் பணத்திற்குக் குறைவே இல்லை. கோரிக்கை செய்ய வேண்டியதுதான், உடனே மக்கள் பணம் அனுப்பி விடுவார்கள். காந்திஜீயின் உறவு இருந்ததால் குஜராத்தி சகோதரர்களின் அன்பு சிறப்பாகக் கிட்டியது. பம்பாயிலிருந்தும் குஜராத்திலிருந்தும் பணம் வந்து கொண்டே இருந்தது. சேத் ஜம்நாலால் பஜாஜும் இடையறாது கவனம் செலுத்தி வந்தார். படகுகளை அமர்த்திக் கொண்டு தான் பெரும்பாலும் எல்லா இடங்களுக்கும் மிகத் தொலைவு சென்று வரவேண்டியிருந்தது. வேறு எந்த ஊர்தியும் செல்ல முடியவில்லை. மதுவனீ வட்டாரத்தில் ஓர் இடத்தில் கமலா நதியைப் படகில் கடக்க வேண்டியிருந்தது. நீரோட்டம் அதிக வேகமாயிருந்தது. மிகக் கஷ்டப்பட்டு அக்கரை சேர முடிந்தது.

சப்ரா ஆயினும் சரி, சாஹாபாத் ஆயினும் சரி, தர்பங்கா ஆயினும் சரி, எல்லா இடங்களிலுமே ஒரே காட்சிதான் எப்பொழுதும் காணக்கிடைத்தது. கிராமங்களின் வீடுகளெல்லாம் பெரும் பாலும் மண்ணால் கட்டப்பட்டவைதாம். அவை எல்லாம் இடிந்து போய்க்கிடந்தன. கால்நடைகளெல்லாம் வெள்ளத்தால் அடி பட்டுச் செத்துக் கிடந்தன. மக்கள் பசியால் வாடிக்கிடந்தார் கள். கிராமத்து நாய்கள் பசியால் பீடிக்கப்பட்டு ஊளையிட்டுக் கொண்டிருந்தன. கால்நடையும் அப்படியேதான் பசியால் வாடித் தள்ளாடிக் கொண்டு நின்றன. வெள்ளம் இறங்கியபின் நோய், முக்கியமாக மலேரியா, உக்கிரதாண்டவம் புரிந்தது. சில நாட் களுக்குப் பிறகு வைகாசியில் நடவு காலத்தில் விதைப் பஞ்சமும்,

நாலா பக்கத்திலும் அதற்குக் கிராக்கியும் வந்துவிட்டன. சப்ரா வில் வெள்ளத்திற்குப் பின் மலேரியா கடுமையாக மக்களைப் பற்றி யிருந்தபோது சப்ராவின் வைத்தியர்கள் எல்லாரையும் ஒன்று கூட்டினேம். அவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து மலேரியாவைத் தடுப்பதற்கு மட்டும் அன்றி வயிற்றைச் சுத்தப்படுத்துவதற்கும், சாதாரண இருமலைக் கட்டுப்படுத்துவதற்கும் சில சரக்குக்களைச் சேர்த்து ஒரு மருந்து முறையைத் தயார் செய்தார்கள் என்பது நினைவிருக்கிறது. இந்த மருந்தைப் பேரளவில் தயார் செய்து புட்டிகளில் அடைத்தடைத்து ஜில்லா முழுவதும் வழங்கினேம். இதனுல் நல்ல பயன் உண்டாயிற்று. மருத்துவர்கள் இல்லாமலே நாங்கள் காங்கிரஸ் செயலாளர்கள் மூலமாக மருந்தை வழங்கிப் பல நோயாளிகளைக் குணப்படுத்தினேம். மருந்து நன்ருகப் பலித்தது என்பது தெளிவாயிற்று. பிறகு எங்காவது மலே ரியா பெருவாரியாகக் கண்டபோதெல்லாம் அதே மருந்து முறையை நெடுநாள் வரையில் பயன்படுத்தி வந்தோம்.

சாஹாபாதில் வெள்ளத்தின் கடுமை அதிகமாக இருந்த கங் கைப் படுகைப் பிரதேசத்தில் தைப்போகம் ஒன்றுதான் விளையும். அங்கே விதை மிகவும் தேவையாயிருந்தது. நான் வாரக்கணக் காகக் கிராமங்களில் அலைந்து திரிந்து விதைக்காகப் பணம் வழங்கி வந்தது நினைவிருக்கிறது. செயலாளர்கள் முன்கூட்டியே அங்கே அனுப்பப்பட்டு விதை தேவைப்பட்டவர்களின் பெயர்ப் பட்டியலைத் தயார் செய்து வைத்திருந்தார்கள். பிறகு நாங்கள் மூன்று நான்கு பேர் பணத்தை எடுத்துக்கொண்டு ஒருநாள் கிராமத்திற்குப் போய்ச் சேருவோம். அங்கே விதை வேண்டிய வர்கள் எல்லாரும் கூடியிருப்பார்கள். எல்லோருடைய முன்னிலை யில் அப்பட்டியலில் கண்டுள்ளவர்களுடைய தேவையைக் கேட் டறிந்து பணத்தைக் கொடுப்போம். ஆராவில் வெள்ளம் வந்த போது அது சப்ராவையும் பீடித்தது. ஏனெனில், கங்கையிலும் வெள்ளப் பெருக்காயிருந்ததால் சோன் நதியின் நீரைக் கங்கை கொள்ள முடியவில்லை. இதனுல் இரு நதிகளின் கூடலுக்கு அரு கில் எத்தனையோ கல் பரப்புக்கு இரு நதிகளின் வெள்ளமும் ஒன்று சேர்ந்துவிட்டது. அதனுல் கங்கைக் கரையிலும் பயங்கர மான நிலைமை வந்துவிட்டது. அங்கும் உதவிக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. நாங்கள் திரட்டிய பணத்தில் ஒரு பாகம் சப்ரா வுக்கும் செலவு செய்யப்பட்டது. ஆனுல் ஆராவில் நான் வேலை யில் ஈடுபட்டிருந்ததால் சப்ராவுக்கு நானே நேரில் சென்று பணி புரிய முடியவில்லை. அங்கிருந்த உள்ளூர் ஆட்கள்தாம் வேலை

யைச் சமாளித்தார்கள். அவர்களுள் என் தமையனர் முக்கிய மானவர் ஆவார்.

ரயில் கரைகளால் வெள்ளங்களின் கொடுமை அதிகப்பட்டது என்பது மேலே கூறப்பட்டது. என் மாகாணத்தில் சென்ற முப்பது ஆண்டுகளில் பெரியதும் சிறியதுமாக எத்தனை வெள் ளங்கள் வந்தனவோ அவை எல்லாவற்றையும் பற்றி எனக்கு நிறைய அனுபவம் உண்டு. ரயில்பாதையும் ஜில்லா போர்டு களின் மேடான சாலைகளும்தாம் வெள்ளத்திற்கு முக்கிய காரணம் என்பது என் உறுதியான துணிபு. இவைகளில் ஆங்காங்கு அகன்ற பாலங்கள் நிறையக் கட்டப்பட்டிருந்தால் இந்த நிலைமை வந்திராது. ரயில்பாதையின் ஒரு பக்கத்தில் ஏழெட்டு அடி ஆழம் தண்ணீர் இருப்பதையும் மற்ருெரு பக்கத்தில் ஓரிரண்டு அடித் தண்ணீர்கூட அரிதாயிருப்பதையும் நான் என் கண்ணுல் பார்த்திருக்கிறேன். தண்ணீருக்கு வாய்ப்புக் கிடைத்தால் அது தானே அதிகத் தொலைவு பரவிவிடும். அப்படி நிகழ்ந்தால் அதன் ஆழம் இயல்பாகவே குறைந்துவிடும். ஓட்டத்தின் ஈர்ப் பும் வலுக்குன்றிவிடும். ஆனல் அதே நீர் குறுகிய வாயிலாகச் செல்ல வேண்டியிருந்தாலும், மேலும் எதிர்ப்பட்ட கரையை உடைத்துக் கொண்டு வெளியேற முடியாவிட்டாலும் அவ்விடத்தி லேயே அது தேங்கிவிடுவது இயல்பு. அப்படியே எங்காவது வெளியேற முடிந்தாலும், அது மிகவும் வேகமாக வெளிப்படும். ஆகையால் இது முக்கியமான விஷயம். இதில் அரசாங்கத்தார் கவனம் செலுத்தவேண்டும். ஆனல் இங்கே ரயில்வே கம்பெனி யின் லாபத்தின்மேல் அதிக கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. பாலங்களைக் கட்டும்படி அவர்களை எவரும் கட்டாயப்படுத்துவ தில்லை. ரயில் பாதையை வெட்டுவது என்பது எட்டாத பேச்சு. எத்தனையோ முறை பொது மக்கள் வெள்ளத்தால் கொடுமையான துன்பத்தை அனுபவிக்க வேண்டியதாயிற்று. கிழக்கு இந்திய ரயில்வே மட்டும் சாஹாபாதின் பெரிய வெள்ளத்திற்குப் பின் கோயில்வர் ஸ்டேஷனுக்கும் ஆராவுக்கும் இடையில் அநேக பெரிய பாலங்களைக் கட்டியது. இதனல் அங்குள்ள மக்களின் அச்சம் பெரும் அளவுக்கு நீங்கியது. இப்போது சமீபத்தில் போடப்பட்ட அரசாங்கச் சாலைகளிலும், அதேபோலத் தண்ணீர் வெளியேறுவதற்கு எத்தனையோ பாலங்களும் மதகுகளும் கட்டப் பட்டிருக்கின்றன. ஆனல், பி. என். டபிள்யூ. ரயில்வே மட்டும் இந்த விஷயத்தில் மிகவும் கருமித்தனம் காட்டி வந்தது. அந்த ரயில்வேயிலும் இப்போது பல பாலங்கள் கட்டப்பட்டு விட்டன

வாயினும், பாலங்கள் தேவையான இடங்கள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன. அக்கம்பெனி கட்டிய பாலங்கள் பொது மக்களின் துன்பத்தை அகற்றும் நோக்கத்துடன் கட்டப்பட்டன அல்ல; தன் லாபத்தைக் கருதியேதான் கட்டப்பட்டன. பொது மக்களின் துன்பத்தைப்பற்றிய பேச்சாயிருந்த வரையில் எவரும் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. ஆனால் இயற்கையானது இவ்வண்ணமாகக் கரையை உடைத்தபோதெல்லாம் ரயில் போக்குவரவு மாதக்கணக்காக நின்றுவிட்டது. அதனால் தான் அவர்கள் வேறு வழியின்றிச் சில பாலங்களைக் கட்டினார்கள். இப்போது அக்கம்பெனி அரசாங்கத்தின் கையில் வந்துவிட்டதால் இனி இதன்மேல் அதிக கவனம் செலுத்தப்படும் என்று நம்பிக்கை கொள்ளலாம். இக்கம்பெனியின் முதலாளிகள் மிகவும் கடுமையானவர்கள் என்றும், என்ன சொல்லியும் கேட்கமாட்டார்கள் என்றும் அரசாங்கத்து அதிகாரிகள்கூடப் பேசிக் கொள்வதைக் கேட்டிருக்கிறேன். ஜில்லா போர்டு, பி. டபிள்யூ. டி. ஆகியவர்களும் இந்த விஷயத்தில் கவனம் செலுத்தவேண்டும்.

இச்சம்பவங்களை யெல்லாம் நான் ஒரே இடத்தில் கூறிச் சென்றிருந்தாலும் இவை எத்தனையோ ஆண்டுகள் நெடுக நிகழ்ந்தனவாகும்.

## 40. சத்தியாக்கிரகத்திற்கு ஆயத்தம்

நாட்டில் ஒருபுறத்தில் சத்தியாக்கிரகக் கிளர்ச்சி மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. மற்றொரு புறத்தில் அரசாங்கமும் அதைப் பின் தொடர்ந்தவர்களும் இளவரசரை வரவேற்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள். இந்நிலையில் போராட்டம் விளையாமலிருக்காது என்பது தோன்றிற்று.

பம்பாயில் அக்டோபர் ஆரம்பத்தில் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அதில், நவம்பரின் ஆரம்பத்தில் தில்லியில் அகில பாரதீயக் குழுவின் இருக்கையை நடத்தத் தீர்மானிக்கப்பட்டது. இந்த இருக்கை சத்தியாகிரகத்தைத் தொடங்குவதா என்ற கேள்வியைப் பற்றி ஆலோசனை செய்யவே கூடுவதாக இருந்தது. காங்கிரஸின் தலைவர் ஸ்ரீ விஜயராகவாச்சாரியாருக்கும் அதன் அமைச்சர் பண்டித் மோதிலால்ஜீக்கும் சிறிதளவு கருத்து வேறுபாடு உண்டாகிவிட்டது. தில்லியில் நடக்க

இருந்த இருக்கை நடக்காது என்று தலைவர் அறிக்கை சாற்றி விட்டார். அமைச்சரும் ஓர் அறிக்கை விடுத்தார். செயலாற்றுக் குழுவின் முடிவை மீறத் தலைவருக்கு அதிகாரம் இல்லை என்றும், மேலும் இந்த இருக்கை மிக முக்கியமான விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகக் கூட்டப்படுவதால் இதைத் தள்ளிப் போட முடியாது என்றும் அந்த அறிக்கையின் மூலம் அவர் அறிவித்தார். மகாத்மாஜீயும் பண்டித்ஜீயின் கருத்தே கொண்டிருந்தார். கடைசியில் தில்லியில் இருக்கை நடந்தது. ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் வரவில்லை. அவர் இன்மையால் லாலா லஜபதிராய் தலைவரின் இடத்தை வகித்தார். நான் சப்ராவில் நோயாய்ப் படுத்து விட்டதால் அக்கூட்டத்திற்குச் செல்ல இயலவில்லை.

பம்பாயில் கூடியிருந்தவர்கள் பத்வா சம்பந்தமாக ஓர் அறிக்கையை வெளியிட்டு விட்டுத் தனித்தனியாகச் சத்தியாகிரகம் செய்து வந்தார்கள். அந்தப் பத்வா பல இடங்களில் பெரிய பெரிய கூட்டங்களில் மேலே கூறிச் சென்றபடி முறை வைக்கப் பட்டது. செயலாற்றுக் குழு மேலும் ஒரு முடிவு செய்திருந்தது. அதாவது வெளிநாட்டுத் துணிப் புறக்கணிப்பும் காதி பிரசார வேலையும் எங்காவது அரசாங்கத்தாரால் தடை செய்யப்பட்டால், காங்கிரஸ் செயலாளர்கள், எவரெவர் தம் வாழ்க்கையில் சர்க்கா சுற்றுவதையும் காதி அணிவதையும் கடைப்பிடித்து ஒழுகுபவர்களாயிருக்கிறார்களோ, அவர்கள் தம் பிரதேசக் குழுவின் கட்டளையின் பேரில் அரசாங்கத்தின் தடையை மீறலாம் என்பதுதான். தில்லியில் கூடிய அகில பாரதீயக் குழுவானது மாகாணக் குழுக்கள் தத்தம் மாகாணங்களில் எங்கெங்குப் பொருத்தமானதென்றும் எவரெவருக்குப் பொருத்தமானதென்றும் உணர்கிறதோ அங்காங்கு சத்தியாக்கிரகத்திற்கு—வரி கொடாமையும் உட்பட—அனுமதி அளிக்கலாமென்று முடிவு செய்தது. தனிப்பட்ட ஆளுக்குச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. ஒத்துழையாமையின் நோக்கங்கள் அனைத்தையும் அவன் நிறைவேற்ற வேண்டும். அதாவது, அவன் கதர் அணியவேண்டும்; ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையை ஓம்பவேண்டும்; தீண்டாமை மனப்பான்மையைத் துறக்க வேண்டும் என்பன எல்லாம்தாம். இதேபோல ஏதாவதொரு வட்டாரம் அனுமதி பெறுவதற்கும் கட்டுப்பாடுகள் இருந்தன. அவையாவன: அந்த வட்டாரத்தில் வெளிநாட்டுத் துணியை முற்றிலும் புறக்கணித்தல்; அங்குள்ள பொது மக்கள் சுதேசித் துணியையும் காதியையும் மட்டும் அணிதல்; தீண்டாமையைக் கைவிடல், தேசீயக் கல்விப் பிரசாரம் செய்தல் முதலி

யன. இந்தக் கட்டுப்பாடுகளில் எவற்றையேனும் விட்டுவிடச் செயலாற்றுக் குழுவுக்கே உரிமை அளிக்கப்பட்டது. மேலும் எந்தச் சத்தியாக்கிரகியின் குடும்பத்தையும் காத்துப் பேணிவரும் கடமை காங்கிரஸினுடையது ஆகாது என்றும், அஹிம்சாவில் நம்பிக்கை எல்லோருக்கும் இன்றியமையாதது என்றும், மேலும் சத்தியாக்கிரகம் நடத்துவதானுல் கலகம் கலாட்டா எதுவும் வராத படி ஏற்பாடுகள் செய்யப்படாத வரையில் சத்தியாக்கிரகத்திற்கு அனுமதி அளிக்கக் கூடாதென்றும் அறிக்கை செய்யப்பட்டது. இவ்வண்ணமாக மாகாணக் குழுக்களுக்கு அதிகாரம் அளிக்கப் பட்டது. ஆனுல் சத்தியாக்கிரகத்தின் கட்டுப்பாடுகள் இவ்வளவு கடுமையாக இருந்ததால், எந்தத் தனிப்பட்ட ஆளாவது, வட்டார மாவது அவற்றை முற்றிலும் நிறைவேற்றுவது மிகக் கடினமாக அமைந்தது. மேலும், சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவது விரைவுபடுத்தப்படமாட்டாது என்பதும், எல்லா மாகாணங்களும் ஆயத்தமாகிவிட்டாலும்கூட அவை குஜராத்திற்காகக் காத்து நிற்க வேண்டும் என்பதும் தெரியவந்தன. அங்கே மிகச் சிறப் பாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன. சப்ரா ஜில்லாவில் உள் ளவர்கள் வசந்தபூர் தாணுவுக்கு அனுமதி கிடைக்கவேண்டு மென்று விரும்பினுர்கள். காதி பிரசாரம் மூலமாகவும் மற்ற வழி களாலும் மக்கள் அங்கே தயாராகி வருவது காணப்பட்டது. மாகாணக் காங்கிரஸ் குழு சிலரை—அவர்களுள் முக்கியமானவர் மௌல்வீ முகம்மது ஷாபீ சாஹப் ஆவர்—இதைப் பற்றி விசா ரணை செய்வதற்காக அங்கே அனுப்பியது. அவர்களும் அந்த வட்டாரம் தயாராயிருப்பதைக் கண்டார்கள்.

இவ்விதமாகக் காரியங்கள் நடந்து வந்துகொண்டிருந்த போது, நவம்பர் மாதத்து நடுவில் இளவரசர் பம்பாயில் வந்து சேர்ந்துவிட்டார். அரசாங்கத்தார் சார்பில் வரவேற்புக்கு ஏற் பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பொது மக்களின் பக்கத்தி லிருந்து புறக்கணிப்புக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஹிந்துக் கள் முசல்மானியர் இரு வகுப்பினரும் ஒரே மனமாக இருந் தார்கள். அவர்கள் இருவரும் சேர்ந்து புறக்கணிப்பு வேலையில் ஈடுபட்டார்கள். ஆனுல் சில பார்சிகள் மட்டும் வரவேற்பில் கலந்துகொண்டார்கள். புறக்கணிப்பு மிகவும் வெற்றிகரமாக நடந்தது. ஆயினும் சில பார்சிகள் வரவேற்பிலிருந்து திரும்பி வந்துகொண்டிருந்தபோது காங்கிரஸ்காரர்களுக்கும் அவர்களுக் கும் சண்டை மூண்டுவிட்டது. காங்கிரஸ்காரர்களுள் முசல் மானியர்கள்தாம் இதில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டார்கள்.

அதிலிருந்து பெரிய கலகம் விளைந்தது. இதனை ஆரம்பித்தவர்கள் ஹிந்துக்களும் முசல்மானியர்களும் தாம். ஆயினும், பிறகு பார்சிகளும் கிறிஸ்தவர்களும் இதில் கலந்துகொண்டார்கள். நல்ல காலமாகக் காந்திஜீ அந்நாட்களில் பம்பாயில்தான் இருந்தார். அவர் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, சேட் உமர் சுபானீ, சேட் சோடானீ, சங்கர்லால் பாங்கர் முதலானவர்களைக் கலகத்தைத் தணிக்கும்படி முதலில் அனுப்பினர். பிறகு தாமே அடிதடி நடந்துகொண்டிருந்த இடங்களுக்குச் சென்றார். கலகம் பலநாட்களுக்குப் பிறகு எப்படியோ அடங்கியது. இதற்காகக் காந்திஜீ உண்ணாவிரதமும் இருக்க வேண்டிவந்தது. இக்கலகத்தில் 50–60 பேர் கொல்லப்பட்டார்கள். 300 பேருக்கு மேல் புண்பட்டார்கள். இறந்தவர்களும் புண்பட்டவர்களும் முக்கால் மடங்குக்கு மேல் காங்கிரஸ்காரர்களே ஆவர். இக்கலகத்தின் தீவினை எல்லோர் மனத்திலும் ஆழ்ந்து பதிந்தது. உடனே செயலாற்று குழு பம்பாயில் கூடி, கண்ட இடங்களில் எல்லாம் சத்தியாக்கிரகம் செய்வது அபாயம் என்பதை வற்புறுத்தியது. ஏனெனில் மக்கள் அஹிம்சா போரின் முறைமையையும் கொள்கையையும் இன்னும் முற்றிலும் உணர்ந்து கொள்ளவில்லை. ஆகையால் அமைதியைக் காப்பதற்கும் ஜன நெருக்கடியைச் சமாளிப்பதற்கும் திறமுள்ள தொண்டர்கள் தேவை என்று செயலாற்றுக் குழு முடிவு செய்து, அவ்வண்ணமே மாகாணக் குழுக்களுக்கும் கட்டளையிட்டது. அக் குழுக்களைத் தொண்டர் படையை நிறுவும்படியும், மேலும், அவற்றில் மனோவாக்குக் காயம் மூன்றிலும் அஹிம்சாவைப் பேணுபவர்களாய் இருப்போம் என்றும், காங்கிரஸின் ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடிப்போம் என்றும் சபதம் செய்பவர்கள் மட்டுமே தொண்டர்களாகச் சேரலாம் என்றும் கட்டளையிட்டது. இப்படியாக ஒழுங்காக அமைக்கப்பட்ட தொண்டர் படை இருந்தால் பம்பாயில் நடந்த கேடுகள் போன்றவை நிகழா என்றும் கருதப்பட்டது. காந்திஜீயின் உண்ணாவிரதத்தின் பயனாகப் பம்பாய்க் கலகம் அமைதியுற்றது மட்டும் அன்றி, அங்குள்ளப் பல்வேறு சாதி மக்கள் இனி தாம் நட்போடு கூடி வாழ்வோமென்று உறுதியும் பூண்டார்கள். இவ்வண்ணமாக நாடு முழுவதுமே அமைதியை நாடிய மனப்பான்மை பரவியது.

ஸ்ரீமதி அன்னிபெசண்டு ஒத்துழையாமை இயக்கத்தை முதலிலிருந்தே மிகவும் கடுமையாக எதிர்த்து வந்தார். காந்திஜீயை இருட் படையின் பிரதிநிதி என்று கூட ஒரு முறை கூறிவிட்டார். பம்பாயின் கலகத்திற்குப் பின் அவர் மேலும் கடுமை

யாக எழுதினர். ஏதோ ஒரு கலகத்தைப் பற்றி எழுதும்போது, அரசாங்கமானது கல் மாரிக்குக் குண்டுகளால்தாம் விடை கொடுக்க முடியும் என்று எழுதினர். செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தபோது கூட அவர் அதே போலத்தான் ஒரு கட்டுரையை எழுதினர். அது வெளிவந்த செய்தித்தாளின் பிரதி ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு தேசபந்து தாஸ் அங்கு வந்தார் என்பது எனக்கு நினைவிருக்கிறது. அதை மகாத்மாஜீ யிடம் காட்டி "'யங் இந்தியா'வின் அடுத்த இதழில் கணீரென்று ஒலிக்கும் கடுமையான விடை ஒன்றைப் படிக்கும் வாய்ப்பு எங்க ளுக்குக் கிடைக்கும் என்று நம்புகிறோம்" என்று கூறினர். "அப்படிப்பட்ட நம்பிக்கையைக் கொள்ளாதீர்கள்" என்று மகாத்மாஜீ மறுமொழி யளித்தார். காந்திஜீ "நீ, நான்" என்ற வாதத்தில் படுபவர் அன்று என்பதைக் கண்டோம். இவ்வித மான கட்டுரைகளை அவர் படிப்பதும் இல்லை. அதனால்தான் அவருடைய கட்டுரைகளில் மனக்கடுப்புக் காணப்படுவதில்லை. கடுமையிலும் கடுமையான விஷயங்களை அவர் வன்மையாகக் கூறுமிடத்தும் கட்டுக்கு அடங்கிய சொற்களால்தாம் கூறுவார். இளமையிலிருந்தே நான் சண்டைகளிலிருந்து விலகி நிற்கும் இயல்பு கொண்டவன். காந்திஜீயுடன் பெற்ற தொடர்பின் அருளால் அதைத் திடப்படுத்திக் கொள்ள முடிந்தது. என் கட்டுரைகளிலும் சொற்பொழிவுகளிலும் என்னால் இயன்றவரையில் வெறுப்புக் காணப்படாதபடி முயன்று வருகிறேன்.

# 41. சிறை கொள்ளுதலும் சமாதான முயற்சியும்

பம்பாயில் இளவரசர் வந்திறங்கியபோது நிகழ்ந்த சம்பவங் களால் நாடெங்கும் கலவரம் உண்டாயிற்று. அரசாங்கத்தார் அடக்குமுறையைத்தான் கையாள வேண்டுமென்று முடிவு செய்துவிட்டார்கள். அதனல் எங்குப் பார்த்தாலும் மக்கள் கைது செய்யப்பட்டு வந்தார்கள். சில நாட்களுக்குள்ளாகவே, டிசம் பரில், பெரும்பாலும் எல்லா இடங்களிலும் ஓரடியாய் காங்கிரஸ் காரர்கள்—முக்கியமாகப் பெரிய பெரிய தலைவர்கள்—கைது செய் யப்பட்டார்கள். தொண்டர் படைகள் சட்டத்திற்கு முரணனவை

யென்று அரசாங்கத்தாரால் முடிவு செய்யப்பட்டு விட்டதுதான் இப்படிச் சிறை கொள்வதற்கு முக்கிய காரணமாக இருந்தது.

1908இல் அரசாங்கத்தார் இரண்டு சட்டங்களை வழங்கினர்கள். அப்போது பல இடங்களில், முக்கியமாக வங்காளத்தில், புரட்சிக்கட்சிக்காரர்கள் தம் தொழிலைச் செய்து வந்தார்கள். அவர்கள் வெடிகுண்டு செய்கிருர்கள் என்றும், அரசாங்க ஊழியர்களின் மீது வெடிகுண்டு வீசியும் தோட்டாக்களால் சுட்டும் அவர்களைக் கொல்கிருர்கள் என்றும் அரசாங்கத்தார் கூறி வந்தார்கள். அவர்களை அடக்குவதற்காகக் "கிரிமினல் லா அமெண்டுமெண்ட் ஆக்ட்" என்ற திருத்தச் சட்டம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. ராஜத்துரோகக் கூட்டங்களைக் கட்டுப்படுத்துவதற்காகவும் தடை செய்வதற்காகவும் "ராஜத் துரோகக் கூட்டங்கள் சட்டம்" என்ற வேருெரு சட்டமும் அமைக்கப்பட்டது. அரசாங்கத்தாரின் கூற்றுப்படி இரண்டு சட்டங்களுக்கும் ஹிம்சாமயமான கட்சியின் மனப் போக்குத்தான் காரணம். இச்சமயத்தில் காங்கிரஸோ முழுக்க முழுக்க அஹிம்சாமயமான அமைப்பாக இருந்தது. அதேபோல அதன் தொண்டர் படையும் அஹிம்சா மயமான படையாக இருந்தது. அப்படியிருந்தும் கூட அரசாங்கத்தார் அப்பழைய சட்டங்களை இதற்கு முன்பு அவை அமுலில் இல்லாத மாகாணங்களிலும் கூடப் பின்பற்றத் தொடங்கினர்கள். ஒவ்வொன்ருகப் பஞ்சாப், தில்லி, வங்காளம், பீகார், ஐக்கிய மாகாணம் முதலிய மாகாணங்களில், பல்வேறு பெயருடன் மாகாணம் தோறும் இருந்துவந்த தொண்டர் படைகளைச் சட்டத்திற்குப் புறம்பானவை என்று முடிவு செய்து விட்டார்கள். இவ்விதமாகக் கிலாபத்துத் தொண்டர் படையிலும் காங்கிரஸ் தொண்டர் படையிலும் சேருவது குற்றமாகிவிட்டது. கூட்டங்களைக் கூட்டுவதும் கடினமாகிவிட்டது.

இத்தீய சட்டங்களை ஏற்கமாட்டோம் என்று காங்கிரஸ் குழுக்கள் முடிவு செய்தன. அவை தொண்டர் படைகளை அமைப்பதில் மும்முரமாக முனைந்து நின்று வேலை செய்யத் தொடங்கின. அதனுல், எவரேனும் தொண்டர் படையில் சேர்ந்தாலும் சரி, அல்லது அதை அமைப்பதற்காக வேலை செய்தாலும் சரி, அவர்கள் உடனே கைது செய்யப்பட்டு வந்தார்கள். நாட்டின் முன் அரசாங்கத்தார் ஒரு புதிய கேள்வியைக் கிளப்பிவிட்டார்கள். காந்திஜீ இந்நிலைமையைப் பற்றிப் பின்வருமாறு கூறினர்: "இப்போது நம் முன் கிலாபத்தைப் பற்றியோ, பஞ்சாபைப் பற்றியோ, சுயராஜ்யத்தை அடைவதைப் பற்றியோ பேச்சு

இல்லை. இப்போது கேள்வி இதுதான்; அதாவது நம் நாட்டில் நமக்குச் சங்கங்கள் அமைப்பதற்கு, நாம் கூடிக் குலாவிப் பணி செய்வதற்கு உரிமை இருக்குமா இருக்காதா என்பதுதான். அரசாங்கத்தார் இந்த உரிமையைச் சட்டங்கள் மூலமாகப் பறித்துவிட்டார்கள். இப்போது காங்கிரஸ் இதற்காக முதலில் போராடுவது அவசியமாகிவிட்டது. நாம் எதற்காகச் சத்தியாக் கிரகம் செய்ய வேண்டுமென்றிருந்தோமோ அதற்காக இந்தப் போராட்டத்தை நாம் செய்யவில்லை. பேச்சு உரிமைக்கும் மகா நாடு கூட்டும் உரிமைக்கும் மட்டுமே போராடுகிறோம். இந்த உரிமையை நாம் காங்கிரஸ் குழுக்களுக்கும் கிலாபத்துக் குழுக் களுக்கும் மட்டும் வேண்டவில்லை; எல்லா நிலையங்களுக்கும், தனிப்பட்ட மனிதர் எல்லோருக்குமே வேண்டுகிறோம். ஆகை யால் இப்போர் எல்லார் பொருட்டும், எல்லார் சார்பிலும் செய்யப் படுகிறது'' என்று கூறினர். ஆனால் என்றுதான் அரசாங்கத் தார் மக்களின் குரலுக்குச் செவி சாய்ப்பவர்களாக இருந்தார்கள்? அவர்கள் மக்களை ஒறுத்து ஒடுக்கத் திட்டம் போட்டு விட்டார்கள்.

அலீ நண்பர்கள் முதலானோர் கராச்சி வழக்கை ஒட்டிக் கைது செய்யப்பட்டுத் தண்டிக்கப்பட்டு விட்டார்கள். சில நாட்களுக் குள்ளேயே தேசபந்து தாஸ், பண்டித் மோதிலால் நேரு, பண்டித் ஜவாகர்லால், லாலா லஜபதிராய், மௌலானா ஆஜாத், ஸ்ரீ ராஜ கோபாலாச்சாரியார் முதலான அகில இந்தியத் தலைவர்கள் அனைவரும் சிறை கொள்ளப்பட்டார்கள். ஆயிரக்கணக்கான மற்றக் காங்கிரஸ்காரர்களும் கைது செய்யப்பட்டார்கள். ஆயினும் இளவரசர் எங்கெங்குச் சென்றாரோ அங்கெல்லாம் புறக்கணிப்பு மேலும் அதிக கட்டுப்பாட்டுடன் நடந்துவந்தது. அவர் கல்கத்தா விற்குச் செல்லும் நாள் நெருங்கி வந்துகொண்டிருந்தது. லார்டு ரீடிங் மிகவும் கலக்கமுற்றிருந்தார். சர் தேஜ் பகாதுர் சப்ரூ அவருடைய ஆலோசனைச் சபையின் சட்ட உறுப்பினராக இருந் தார். கல்கத்தாவில் சரியானபடி வரவேற்பு நிகழுவதற்காக எப்படியாவது ஓர் ஒப்பந்தம் ஏற்பட வேண்டும் என்று முயற்சி செய்யப்பட்டு வந்தது. இம் முயற்சியில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டவர் பண்டித் மாளவீயஜீதாம். அவர் கல்கத்தாவிற்கு வந்து அங்குள்ள கவர்னர் லார்டு ரோனல்ட் ஷேயைச் சந்தித் தார். தேசபந்து தாஸையும் சந்தித்தார். சிறைக்குச் செல்லாமல் வெளியே இருந்த காங்கிரஸ், கிலாபத்துத் தலைவர்கள் சில ருடனும் கலந்து பேசினர். வைசிராய் லார்டு ரீடிங்கிடம் ஒரு தூது கோஷ்டியை அழைத்துச் செல்வதற்கும் பேச்சு நடந்தது.

தேசபந்துதாஸ் கல்கத்தாச் சிறையில் இருந்தார். அவருடன் பேச்சு வார்த்தைத் தொடங்கியது. காரியம் கைகூடலாமென்றும் புலப்பட்டது.

பீகாரிலும் சிறை கொள்ளப்படுவது தொடங்கியது. மாகாணக் குழுவின் இருக்கை சப்ராவில் நடந்து கொண்டிருந்தபோதே போலீசார் அங்குள்ள குழுவின் அலுவலகத்தைச் சோதனை போட்டார்கள். நாங்கள் ஒரு பொதுக்கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டிருந்தபோது, போலீசார் செய்துவந்த ஏற்பாடுகளில் இருந்து நாங்கள் அங்கேயே கைது செய்யப்படலாமென்பது தெரிய வந்தது. ஆனால் அப்படி ஆகவில்லை. அக்கூட்டத்தில் இருந்த ஒருவர் போலீஸ் சூப்பரின்டெண்டு நின்ற திசையில் கையைக் காட்டிக் காட்டித் துளசீ தாசரின் சுலோகம் ஒன்றை உரத்த குரலில் திரும்பத் திரும்பப் பல்லவி வைத்தார். அப்படியும் போலீசார் ஒன்றும் செய்யவில்லை. "இந்தப் பாவிகளான இராக்கதர்கள் எப்போது 'சாவார்கள் என்ற கவலை 'விசுவாமித்திரர் மனத்தில் குடிகொண்டது" என்பதுதான் அந்தச் சுலோகம். கூட்டம் முடிந்தபின் அனைவரும் தத்தம் இடங்களுக்குச் சென்று விட்டார்கள். காங்கிரஸ் குழுவின் அலுவலகங்கள் எங்கும் சோதனை போடப்பட்டன. மக்கள் கைது செய்யப்பட்டு வந்தார்கள். நானும் பட்னு வந்து சேர்ந்தேன். நாங்கள் எல்லோரும் எப்போது சிறை கொள்ளப்படுவோமென்று காத்துக் கொண்டிருந்தோம். அநேக ஜில்லாக்களில் முக்கியக் காங்கிரஸ்காரர்கள் பலர் கைது செய்யப்பட்டு விட்டார்கள். பட்னுவில் மௌல்வீ குர்ஷேத் ஹஸ்னைன், பாபூ ஜகத் நாராயண்லால், கிருஷ்ண பிரகாஷ்சேன் சிங் முதலானோர் கைது செய்யப்பட்டார்கள். மற்ற இடங்களிலும், மௌல்வீ மகம்மது ஷாபீ, பாபூ ஸ்ரீ கிருஷ்ண சிங், பாபூ விந்தியேஷ்வரீ பிரசாத் வர்மா, பாபூ ராம் நாராயண் சிங் முதலான பல காங்கிரஸ்காரர்கள் சிறைக்கு அனுப்பப்பட்டார்கள். நான் கைது செய்யப்படவில்லை. ஹக் சாஹபும் பிரஜ் கிஷோர் பாபூவும் நானும் பல தோழர்களுடன் கூடி ஓர் அறிக்கையை இயற்றி அச்சிட்டு வெளியிட்டோம். அதில் மக்களைத் தொண்டர் படையில் சேரும்படி ஊக்கி, அரசாங்கத்தாரின் நடவடிக்கையை இழித்துரைத்து, நாங்களும் தொண்டர் படையின் உறுப்பினர் என்பதையும் எடுத்துக் கூறினோம். அப்படிச் செய்தும் நாங்கள் கைது செய்யப்படவில்லை. இவ்வண்ணமாக எல்லா இடங்களிலும் தொண்டர்களின் பெயரைக் குறிப்பிட்டு அவரவர் தத்தம் கையெழுத்தைச் சாற்றிய நீண்ட பட்டியல்களை

ஜில்லா மாஜிஸ்திரேட்டிடமும் மற்ற அதிகாரிகளிடமும் மக்கள் அனுப்பினுர்கள். பட்னுவில் நான் இதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தபோது, அரசாங்கத்தாருடன் உடன்படிக்கைப் பேச்சு நடந்து வருகிறது என்பது தெரியவந்தது.

சிறை கொள்வது நின்றுவிட்டது. லார்டு சின்ஹா பீகார் கவர்னர் பதவியை ராஜீநாமா செய்துவிட்டார். அவருடைய இடத்தில் மிஸ்டர் லிமேஜரர் என்பவர் கவர்னர் ஆனுர். பீகார் கவுன்ஸிலின் சில முக்கிய உறுப்பினர்கள் – அவர்களுள் மிஸ்டர் ஹஸன் இமாம், ராய்பகதூர் துவாரகாநாத் முதலானேர் தலைமையாக இருந்தார்கள் – கவர்னரிடம் ஒரு தூது கோஷ்டியை அழைத்துச் சென்று, பீகாரில் அமைதி நிலவுற்றிருக்கிறதென்றும், இங்கே தொண்டர் படையைச் சட்டத்திற்குப் புறம்பானதாகச் செய்வதுதான் அதிகக் கலவரம் விளைவதற்கு இடம் கொடுக்கும் என்றும், ஆகையால் கைது செய்வது நிறுத்தப்பட வேண்டும் என்றும் எடுத்துரைத்தார்கள். இதற்குக் கவர்னர் விடை அளித்த பேச்சிலிருந்து அரசாங்கத்தின் நடவடிக்கைகள் எல்லாம் வேறு விதமான கருத்தை அடிப்படையாகக் கொண்டு நடந்தன என்பது தெரியவந்தது. இதை மறுத்து மறுமொழி வெளியிட்டோம். ஆனுல், அது வெளியாவதற்கு முன்பே சிறை கொள்வதை நிறுத்தும்படி அவர்கள் கட்டளை பிறப்பித்து விட்டார்கள். தொண்டர் படைக்கு விரோதமாக வழங்கப்பட்ட உத்தரவு மீட்கப்படாவிட்டாலும் கூடச் சிறை கொள்வதை நிறுத்தும்படி ஜில்லா மாஜிஸ்திரேட்டுகளுக்குக் கட்டளை இடப்பட்டது.

சர் தேஜ் பகதூர் சப்ரூ வைசிராயின் கவுன்ஸிலின் இருக்கையில் கலந்து கொள்வதற்காகக் கல்கத்தாவில் இருந்த லார்டு ரீடிங்கிடம் சென்று கொண்டிருந்தார். அவர் பட்னு வழியாகச் சென்ருர். அங்கே சிலர் அவரைக் கண்டு பேசியதிலிருந்து உடன்படிக்கை நிறைவேறிவிடும் என்ற செய்தி பரவியது. பீகாரில் சிறை கொள்வது நிறுத்தப்பட்டதனுல் இச்செய்தி மேலும் வலிவுற்றது. கல்கல்தாவில் அரசாங்கத்தார் தேசபந்து தாஸுடன் நடத்திய பேச்சிலிருந்து, அரசாங்கத்தாரால் கூறப்பட்ட நிபந்தனைகளுக்கு அவர் உடன்பட்டார் என்பது தெரிய வந்தது. மகாத்மாஜீயின் கருத்தும் கேட்கப்பட்டது. அவர் சில நிபந்தனைகளைச் சமர்ப்பித்தார். இவற்றைப் பற்றிய விவரங்கள் முற்றிலும் அப்போது வெளிப்படவில்லை. அரசாங்கத்தாரின் நிபந்தனைகளை ஏற்றுக் கொள்ளலாம் என்று தேசபந்துதாஸ் செய்த சிபாரிசை காந்திஜீ ஏற்றுக் கொள்ளவில்லை என்பது மட்டும்தான் தெரியவந்

தது. எல்லா விவரங்களையும் விரிவாகத் தெரிந்து கொள்வதற்கு ஸ்ரீ கிருஷ்ணதாஸின் "மகாத்மாஜீயுடன் ஏழு மாதம்" என்ற நூலைப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

அரசாங்கத்தின் நிபந்தனைகளில் சில கீழ்க் கண்டவாறு இருந்தன. காங்கிரஸ் இளவரசரைப் புறக்கணிப்பதைக் கைவிட வேண்டும். அரசாங்கம் ஒரு மகாநாட்டைக் கூட்டும்; அதில் எல்லா விஷயங்களும் ஆலோசனை செய்யப்படும். அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்படுவார்கள். ஆனால் கராச்சி பத்வா வில் சம்பந்தப்பட்ட கைதிகள் (அவர்களில் அலீ சகோதரர்களும் உட்பட்டிருந்தார்கள்) விடுதலை செய்யப் படமாட்டார்கள் என் பனவாம்.

மகாநாட்டின் தேதியும், அதில் நடத்தப் போகும் காரியங் களும் முடிவு செய்யப்பட வேண்டுமென்றும், மேலும் கராச்சி கைதிகளையும் கட்டாயமாக விடுதலை செய்யவேண்டுமென்றும் காந்திஜீ கேட்டார். ஓரிரண்டு நாட்கள் மேலும் கிடைத்திருந் தால் இந்த விஷயங்களையும் ஆலோசனை செய்து ஏதாவது முடிவுக்கு வந்திருக்கலாம். ஆனால் இளவரசர் கல்கத்தாவுக்கு வந்து சேரும் நாள் வந்துவிட்டது. அதற்குள் பேச்சு முடிவுக்கு வர இயலவில்லை. வரவேற்பு விஷயத்தில் தமக்கு எப்போது வெற்றி கிடைக்கவில்லையோ, அதற்குப் பின் உடன்படிக்கையைப் பற்றிப் பேசிப் பயனில்லை என்பதை அரசாங்கத்தார் கண்டு கொண்டார்கள். அதனால் அடக்கு முறையை மேலும் வன்மை யுடன் செலுத்த முடிவு செய்து விட்டார்கள். தூது கோஷ்டிக்கு மிகவும் கடூரமான விடை கொடுத்து அனுப்பிவிட்டார்கள். அத் துடன், சுற்றி வளைத்து ஏதோ வேறு பேச்சும் பேசினர்கள். அதிலிருந்து சிலர் மனத்தில், முக்கியமாகப் பண்டித் மாளவீயஜீ மனத்தில், இப்போது ஒன்றும் ஆகாவிட்டாலும், வட்டமேஜை மகாநாட்டை நடத்தும் முயற்சியைக் கைவிடாமலிருப்பது நன்று என்பதும், மேலும் வைசிராய் போட்ட நிபந்தனைகள் நிறை வேற்றக் கூடியதாகவே இருக்கின்றன என்பதும் பட்டன.

மகாத்மாஜீ செய்த முடிவால் தேசபந்துதாஸ் மிகவும் கலக்க முற்றார். அச்சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இவ்வளவு தூரம் பணிந்து வந்ததே பெரிய காரியம் என்றும், நாம் அதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்றும் அவர் எண்ணினர். காங் கிரஸ் இதை ஏற்றுக் கொண்டால் காங்கிரஸின் வலிமை பெருகும் என்றும், காங்கிரஸின் வேலை அதி மும்முரமாக நடக்கும் என்றும், அரசாங்கத்தார் அதை ஒடுக்க முடியாதென்றும் அவர் நினைத்

தார். மகாத்மாஜீயோ வேறு விதமாக எண்ணினர். எப்படி யாவது கல்கத்தா போன்ற நகரத்தில் இளவரசருக்கு சிறப்பான நல்வரவு கிடைத்து விட்டால், பம்பாய் போன்ற இடங்களில் நடந்த நிகழ்ச்சிகளின் பெருமை நிலைநிற்காது என்பதும் கல்கத்தா வர வேற்பைக் கொண்டு இந்தியாவின் ராஜபக்தியை எடுத்துக் காட்டி விளம்பரம் செய்யமுடியுமென்பதும் லார்டு ரீடிங்கினின் நோக்கம் என்று காந்திஜீ நினைத்தார். மேலும் அவர் எண்ணம் இவ்வாருக ஓடியது. 'மகாநாட்டின் கொள்கையும் தேதியும் இன்னும் நிச்ச யக்கப்படாமலிருக்கின்றன. எப்போது அது நடக்கும் என்பதும், அது என்ன செய்யும் என்பதும் தெரியவில்லை. அதன்மேல் நம்பிக்கை வைப்பதில் பயனில்லை. மேலும் நாம் ஏமாற்றப் பட்டோமென்று நாடு உணரும்போது காங்கிரஸின் வலிமை பெருகுவதற்கு மாருகக் குன்றும்' என்பது தான் காந்திஜீயின் கருத்தாக இருந்தது. இது மட்டும் அன்றி, 'அலீ நண்பர்களை நாம் எப்படிச் சிறையில் விட்டு விட்டு இருக்க முடியும்? எல்லாக் காரி யங்களிலும் நம் கூட நின்றவர்களை, பொதுமக்களிடையில் இவ் வளவு செல்வாக்கு உடையவர்களை, நம் தோழர்களைச் சிறையில் விட்டு வைப்பது அவர்களுக்குத் தீமை புரிந்ததாகும். ஆகையால் லார்டு ரீடிங்கின் நிபந்தனைகள் நம்மை ஏமாற்றுமே அன்றி, வேறு எதுவும் அவற்ருல் ஆகாது, என்று இவ்வாருக காந்திஜீ யின் எண்ணங்கள் ஓடின.

தேசபந்துதாஸ் மிகவும் கலக்கமுற்ருர் என்பதில் ஐயம் இல்லை. அவருடைய கெடு முடிந்து விடுதலை பெற்றதும் அவர் ஆற்றிய சொற்பொழிவு ஒன்றில், மகாத்மாஜீ மிகவும் பெரியதும், அவர் செய்யத் தகாததுமான தவறைச் செய்து விட்டார் என்று கூறினர். இந்த விஷயத்தை எதிர்காலத்தில் வரும் சரித்திர ஆசிரியர் எவராவதுதாம் நடுவு நிலைமையுடன் ஆராய முடியும். இங்கே நான் இவ்வளவுதான் கூறமுடியும். அதாவது, அன்றி லிருந்து இன்று வரையில் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருடன் செய்த உடன்படிக்கைகளிலிருந்து நாம் பெற்ற அனுபவங்கள் எல்லாமே மிகவும் கசப்பானவைகளே. சொல் முழக்கத்தால் உண்மைப் பொருள் மறைக்கப்பட்டுப் போகின்றது. உடன்படிக்கைகள் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. அதனல் அர்த்தத்தை அனர்த்தமாக்குவதற்கு நிறைய இடமுண்டாகிறது. 1932 மார்ச் சில் லார்டு இர்வினுடன் செய்த உடன்படிக்கையின் நிபந்தனை களை நிறைவேற்றுவதில் லார்டு வில்லிங்டனின் அரசாங்கத்தாரும், சிவில் செர்வீஸ்காரரும் (ஐ. சி. எஸ்.) விளைவித்த இடைஞ்சல்

களை அவ்விஷயங்களைப் பற்றி அவர்களோடு பேச்சு வார்த்தை நடத்தவோ கடிதப் போக்கு வரவு செய்யவோ வாய்ப்புக் கிடைத் தவர்கள் தாம் அறிய முடியும். எந்த நிபந்தனையையும் சுற்றி வளைத்து எழுதியோ தெள்ளத் தெளிவாக இன்றியோ விட்டு விடுவது கடைசியில் தீமையாக முடியும் என்பதை மகாத்மாஜீ தம் அனுபவத்திலிருந்து அறிந்திருந்தார். மேலும் அவருக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் நாணயத்திலும் நம்பிக்கையில்லை. அதனால் அவர் இப்படிப்பட்ட நிபந்தனைகளை ஏற்பது சரியன்று எனக் கருதினர். மேலும், காங்கிரஸ் முடிவு செய்த நெறியைக் கைவிடவும், இப்பேர்ப்பட்டத் தெளிவற்ற நிபந்தனைகளை நம்பித் தம் தோழர்களைச் சிறைச்சாலையிலேயே கிடக்க விடவும் அவர் ஒத்துக் கொள்ளவில்லை. எந்த நாட்டிற்காவது சுதந்திரம் மலி வாகக் கிடைத்து விட்டால் அதற்கு அத்தனை பெருமை இருப்ப தில்லை. முக்கியமாக இந்தியா இதைத் தகுந்த விலை கொடுத்தே பெற வேண்டும். ஏனெனில், நாம் எவ்வளவோ காலமாக அடிமை களாக இருந்து வந்ததால் சுதந்திரத்தின் நியாயமான விலையை மதிப்பிடும் திறமையைக் கூட இழந்துவிட்டோம்.

## 42. அகமதாபாத் காங்கிரஸும் சத்தியாக்கிரகமும்

இப்பேச்சுக்கள் நடந்து கொண்டிருந்தபோது காங்கிரஸின் ஆண்டுவிழா நாளும் வந்து விட்டது. தேசபந்துதாஸ் தலைவராக நியமனம் செய்யப்பட்டிருந்தார். அவரோ சிறையில் இருந்தார். காங்கிரஸின் பேரவை அகமதாபாத்தில் நடைபெறுவதாக இருந் தது. அங்கே சர்தார் வல்லப்பாயி வரவேற்புக் குழுவின் தலைவராக இருந்தார். அங்கே பிரமாதமாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன. பீகாரில் கைது செய்வது நிறுத்தப்பட்டதும், சிறைக்கு வெளியே இருந்தவர்கள் எல்லோரும் அகமதாபாத்துக்குப் புறப் பட்டுச் சென்றோம்.

அகமதாபாத்தின் காங்கிரஸ் பல வகைகளில் புதுமையான தாக அமைந்தது. அங்குத்தான் முதன் முதலாகக் காங்கிரஸ் பந்தலிலிருந்து நாற்காலிகள் அகற்றப்பட்டன. பிரதிநிதிகள் ஜமுக்காளங்களின் மேல் உட்காருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டி

ருந்தது. இதனால் முன்னிருந்த அதே அளவு இடத்தில் முன்னை விட ஏராளமான பிரதிநிதிகளும் சபையைப் பார்க்க வந்தவர்களும் உட்கார முடிந்தது. பிரதிநிதிகளின் தேர்தல் நாகபுரியில் மாற்றி அமைக்கப்பட்ட விதிகளின்படி இங்குத்தான் முதல் முறையாக நடத்தப்பட்டது. காங்கிரஸானது தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட சபை என்று நாங்கள் இப்போது சொல்லிக் கொள்ள முடிந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளில் பலர் சிறையில் கிடந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் தலைவராக நியமனம் செய்யப்பட்ட தேசபந்து சித்தரஞ்சன் தாஸ் ஆவர். ஆண்டு முழுதும் அதிக உழைப்புடனும் விடா முயற்சியுடனும் உற்சாகத்துடனும் நாட்டை எழுச்சி செய்து ஒன்று கூட்டி அமைத்ததற்குப் பாடுபட்ட பல தலைவர்கள் அரசாங்கம் பின்பற்றிய கொள்கையினால் இப்பேரவைக்கு வரமுடியாமல் ஏமாந்து போனார்கள். காங்கிரஸுக்கு வந்திருந்தவர்களிடையிலும் நாட்டிலும் உற்சாகமானது நதியின் கரைகளைக் கடந்த வெள்ளம் நாலா பக்கமும் பரவியது போலப் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. இத்தனை பேர் கைது செய்யப்பட்டும் கூட எங்குமே மனக்கலக்கம் உண்டாகவில்லை. அடக்குமுறையானது மக்களை ஒடுக்குவதற்கு மாறாக அவர்களை மிகவும் கிளப்பியே விட்டது. காந்திஜீயும் மிக்க நம்பிக்கையும் உற்சாகமும் கொண்டிருந்தார். எல்லாரும் சத்தியாக்கிரகக் கனவு கண்டு கொண்டிருந்தார்கள். காங்கிரஸ் சத்தியாகிரகத்தைத் தொடங்கும்படி கட்டளையிடுமென்றும், அதற்கு ஏற்பாடு செய்யுமென்றும் நம்பிக் கொண்டிருந்தார்கள். காங்கிரஸுடன் சிறப்பு வாய்ந்த கண்காட்சி ஒன்றும் நடந்தது. அதில் மீண்டும் உயிர் பெற்ற காதியின் பெருமைதான் பெரிதாயிருந்தது. பிரதிநிதிகள் தங்குவதற்காகக் காங்கிரஸ் பந்தலுக்கு அருகேயே "காதி நகரம்" என்ற பெயருடன் ஒரு சிறிய நகரம் அமைக்கப்பட்டிருந்தது. அதில் அவர்கள் எல்லாரும் தங்கியிருந்தார்கள். இவையெல்லாம் காங்கிரஸுக்கு புதுமையானவைகளே. பக்கத்திலேயே கிலாபத்து மகாநாடு முதலானவற்றிற்கும் பந்தல் முதலியன அமைக்கப்பட்டிருந்தன.

காங்கிரஸின் பேரவை ஒப்புவமையற்றதாயிருந்தது. பழைய வழக்கத்திற்கு மாறாக வரவேற்புத் தலைவரின் சொற்பொழிவு மிகவும் சுருக்கமாயிருந்தது. நாட்டிலுள்ள நிலைமையைப் பற்றியோ, காங்கிரஸின் வேலைத் திட்டத்தைப் பற்றியோ அதில் விசாரணை செய்யப்படவில்லை. வந்திருந்த பிரதிநிதிகளுக்கு நல்

வரவு மட்டும் கூறிவிட்டுக் குஜராத்தில் நடந்து வந்த பணியைப் பற்றிச் சிறிதளவு எடுத்துக் கூறியதோடு முடிந்து விட்டது. நியமனம் செய்யப்பட்ட தலைவர் வர இயலாததால் அவருடைய இடத்திற்கு ஹகீம் அஜ்மல்கான் தேர்ந்தெடுக்கப்பட்டார். வரவேற்புக் குழுத்தலைவர் பேரவைத் தலைவர் ஆகிய இருவரின் சொற்பொழிவுகளும் தேசீய மொழியான ஹிந்தியில் அல்லது உருதுவில் தான் நிகழ்த்தப்பட்டன.

சத்தியாக்கிரகம்தான் எல்லாவற்றையும்விட முக்கியமான கேள்வியாயிருந்தது. பேரவையில் ஒரே ஒரு தீர்மானம்தான் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அது நாட்டில் உள்ள நிலைமையைச் சிம்மநோக்கம் செய்து எடுத்துக் கூறிச் சத்தியாக்கிரகம் செய்தே ஆகவேண்டும் என்று கூறியது. இந்த வேலைக்காக காந்திஜீ வல்லரசாக நியமிக்கப்பட்டார். எப்படி மற்றத் தலைவர்கள் சிறை கொள்ளப்பட்டு போனார்களோ அதேபோலக் காந்திஜீயும் கைது செய்யப்பட்டு விடலாம் என்ற கவலை இருந்தது. அதனால், இத் தீர்மானத்தில் அவருக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தோடு, தமக்கு வாரிசுதாரை நியமிப்பதற்கும் உரிமை அளிக்கப்பட்டது. ஆனால் காங்கிரஸின் குறிக்கோளை மாற்றி அமைப்பதற்கு அவருக்கு அதிகாரம் இல்லை என்பதும் மேலும் அரசாங்கத்துடன் ஏதேனும் உடன்படிக்கை நடந்தால் அதற்குக் காங்கிரஸின் சம்மதத்தைப் பெறவேண்டும் என்பதும், தெள்ளத் தெளிவாகக் கூறப்பட்டது. தொண்டர் படையை அமைப்பதைப் பற்றி வற்புறுத்தப்பட்டிருந்தது. தொண்டர்கள் கையொப்பமிட வேண்டிய பத்திரங்களும் கடுமையாக்கப்பட்டன.

காங்கிரஸ் சுயராஜ்யத்தைத் தன் குறிக்கோளாகக் கொண்டிருப்பதை விட்டுச் சுதந்திரத்தைக் குறிக்கோளாகக் கொள்ள வேண்டுமென்று மௌலானா ஹஸரத் மோஹானீ ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தது இப்பேரவையில் நிகழ்ந்த முக்கியமான காரியங்களில் ஒன்றாகும். காந்திஜீ அதை எதிர்த்தார். அதனால் அத்தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அதன்பின், பெரும்பாலும் ஒவ்வொரு பேரவையிலும் அதைப் போன்ற தீர்மானம் ஒன்று வந்து கொண்டிருந்தது. ஆனால் காந்திஜீ அதை எதிர்த்து நின்ற வரையில் அது ஏற்கப்படவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின் அவருடைய எதிர்ப்பு நீங்கிய பிறகுதான் அது ஏற்கப்பட்டது. மற்றொரு நிகழ்ச்சி என்னவென்றால் வட்டமேஜை மகாநாட்டைப் பற்றி மாளவீயஜீ கொண்டு வந்த தீர்மானம் ஏற்கப்படாதது தான். பண்டித்ஜீ கல்கத்தாவிலிருந்து நேரே அகமதாபாத்துக்கு

வந்தார். அங்கே அவருடைய முயற்சி பயனற்று விட்டது. ஆனால் அவர் விடா நம்பிக்கை உடையவர். அவர் காங்கிரஸுக்கு ஒரு யோசனை கூறினார். அதாவது, அரசாங்கத்தார் வட்டமேஜை மகாநாடு நடத்தினால், காங்கிரஸ் அதில் கலந்து கொள்ளலாம் என்பதுதான். அதற்காக ஒரு தீர்மானத்தையும் கொண்டு வந்தார். இச்சமயத்தில் இவ்விதமாக நிகழ்வதற்கு வாய்ப்பு எதுவும் இருக்கவில்லை யென்பதை முன்னமே கூறியிருக்கிறேன். அதனால் காங்கிரஸ் இந்த யோசனையை ஏற்றுக் கொள்ளவில்லை. மாளவீயஜீயும் எவ்விதமான ஒப்பந்தத்திற்கும் விரோதமாக இருந்தார் என்பது பின்னால் தெரிய வந்தது.

காங்கிரஸ் முடிந்தவுடன் எல்லாரும் தத்தம் ஊருக்குப் போய் விட்டார்கள். மகாத்மா காந்திஜீ ஓர் இடத்தில் சத்தியாக்கிரகம் செய்வார் என்பதும் அவ்விடம் பார்டோலீயாயிருக்கும் என்பதும் அங்கேயே தெரிய வந்தன. மற்றவர்கள் தத்தம் ஊரில் மக்களிடையில் பிரசாரம் செய்யும்படியும் அவர்களை ஒன்று கூட்டி அமைக்கும்படியும் கட்டளை யிடப்பட்டார்கள். முக்கியமாக மற்ற எல்லாவற்றையும் விடக் காங்கிரஸின் வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதிலும் தொண்டர் படையை நிறுவுவதிலும் உயிரும் உள்ளமும் ஊன்றி உழைத்து வரும்படி பிரதிநிதிகள் கட்டளையிடப்பட்டார்கள்.

பண்டித் மாளவீயஜீயும் இன்னும் சில தலைவர்களுமாகக்கூடி ஒரு மகாநாடு கூட்டப்படவேண்டும் என்றும் அதில் காங்கிரஸுக்கும் அரசாங்கத்திற்கும் இடையில் உள்ள சண்டைகளைத் 'தீர்த்து வைக்க முயற்சி செய்ய வேண்டும் என்றும் தீர்மானித்தார்கள். அகமதாபாத் காங்கிரஸ் முடிந்த உடனேயே அவர்கள் இக் கருத்தை வெளியிட்டார்கள். நாட்டில் ஆங்காங்குத் தலைவராக இருந்தவர்கள் பம்பாய்க்கு அழைக்கப்பட்டார்கள். இவர்களுள் தலைமையான காங்கிரஸ்காரர்களும் கிலாபத்துக்காரர்களும் அடங்கியிருந்தார்கள். இக்கூட்டம் ஜனவரி நடுவில் பம்பாயில் நடந்தது. சர் சங்கர நாயர் இதற்குத் தலைமை வகித்தார். மற்றக் காங்கிரஸ்காரர்களைப் போல நானும் அங்கே சென்றிருந்தேன். காந்திஜீ தாம் எங்கள் சார்பில் பேசினார். எங்கள் எல்லோரின் சார்பாக என்னென்ன சொல்லவேண்டுமோ அவற்றை அவர் ஒருவரே கூறுவார் என்று நாங்கள் முடிவு செய்து விட்டோம். அரசாங்கத்தார் கூட்ட ஏற்பாடு செய்து வருவதாக விளம்பரம் செய்யப்பட்டு வந்த வட்டமேஜை மகாநாட்டின்மீது காங்கிரஸ்காரர்களாகிய எங்களுக்குச் சிறிதும் நம்பிக்கையில்லை யென்றும், அப்படி

அம்மகாநாடு நடந்தால், மேலும் அதற்குத் தாம் அழைக்கப்பட்டால், தாம் யாதொரு நிபந்தனைக்கும் உட்படாமல் அதில் கலந்து கொள்வார் என்றும், அதுவும் தம் தனிப்பட்ட பதவியில்தான் 'என்றும் காந்திஜீ தெள்ளத் தெளிவாக அங்கே கூறினர். மேலும் சில நிபந்தனைகளையும் கூறினர். "காங்கிரஸுக்கு அழைப்பு அனுப்பப்பட்டால், அம்மகாநாட்டின் வேலைத் திட்டமும் தேதியும் நிச்சயிக்கப்பட்டபின் தான் காங்கிரஸ் அம்மகாநாட்டில் கலந்து கொள்ள முடியும். மேலும், தொண்டர் படைகளைச் சட்டத்திற்குப் புறம்பானவை என்று விளம்பரம் செய்திருந்த அறிக்கையை உடனே மீட்டுக் கொள்ளவேண்டும். அதை மீறியதற்காகத் தண்டிக்கப்பட்டவர்கள் விடுதலை செய்யப்படவேண்டும். பத்வாவுடன் சம்பந்தப்பட்ட கைதிகளைக் கட்டாயமாக விடுதலை செய்ய வேண்டும். கிலாபத்து, பஞ்சாப், சுயராஜ்யக் கட்சி ஆகிய மகாநாடுகள் கோரியவெல்லாம் எல்லாருக்கும் தெரியும். அவற்றை எல்லாம் அம்மகாநாட்டின் முன் கொண்டு வந்து, அவற்றை அம்மகாநாட்டை ஏற்றுக் கொள்ளச் செய்வதற்கு காங்கிரஸ் முயற்சி செய்யும். எங்கள் பக்கத்தில் நாங்கள் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி வைப்போம்" என்பனதாம். இவ்வண்ணமாக காந்திஜீ எல்லா விஷயங்களையும் ஐயத்திற்கு இடமின்றிக் கூறினர்.

மகாநாட்டைக் கூட்டினவர்களின் பக்கத்திலிருந்து ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. ஆனல் காந்திஜீக்கு அது பிடிக்கவில்லை. ஆகையால் அதை நன்ருக ஆலோசனை செய்து அதன் குற்றங்குறைகளைக் களைந்து விட்டு மீண்டும் கொண்டு வருவதற்காக ஒரு கிளைக் குழு அமைக்கப்பட்டது. அன்று மகாநாட்டிற்கு வந்திருந்தவர்கள் எல்லோரும் சொற்பொழிவு ஆற்றினர்கள். அவற்றில் ஒன்று என் மனத்தில் மிகவும் பதிந்தது. அது சர் ஹர்முஸ்ஜீ வாடியாவின் சொற்பொழிவுதான். அவர் ஒரு முதுமை நிறைந்த பெரிய பார்ஸீ வர்த்தகர்; லிபரல் கட்சியைச் சேர்ந்தவர். அவர் அரசாங்கத்தாரின் போக்கை மிகவும் கடுமையான சொற்களால் கண்டித்துப் பேசினர். அவர் சத்தியாக்கிரகத்திற்கு விரோதி ஆயினும், அப்போது இருந்து வந்த நிலைமைக்கு அரசாங்கம் தான் பொறுப்பாளி என்று தெள்ளத் தெளிவாகக் கூறினர். அடுத்த நாள் கிளைக்குழுவின் இருக்கை நடந்தது. அதில் காந்திஜீயும் இருந்தார். எல்லோருடைய கருத்தையும் கேட்டறிந்து ஒருமனதுடன் ஒரு தீர்மானம் தயார் செய்யப்பட்டது. ஆனல் சர் சங்கர நாயருக்கு மட்டும் அதனல் அதிகக் கோபம் வந்தது. நடுப்பகலுக்குப் பின் அவர் மகாநாட்டிலிருந்து போய்

விட்டார். ஆனால், அவருடன் வேறு எவரும் போகவில்லை. அதன்பின் சர் விஸ்வேஸ்வரய்யா மகாநாட்டின் தலைவராக அமைந்தார். அவர் அத்தீர்மானத்தை ஏற்றுக் கொண்டார். தாம் முன் கூறியதையே காந்திஜீ மீண்டும் உரைத்தார். மேலும், சத்தியாக்கிரகத்தை ஜனவரி 31ம் தேதி வரையில் காங்கிரஸ் ஒத்திப் போடுவதற்குத் தாம் செயலாற்றுக் குழுவின் மூலமாக முயற்சி செய்வதாகவும் கூறினார்.

செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர்கள் பெரும்பாலும் அனைவருமே பம்பாய்க்கு வந்திருந்தார்கள். அதன் இருக்கையில் பின் வருமாறு முடிவு செய்யப்பட்டது. ஜனவரி 31 வரையிலும், மேலும், வட்ட மேஜை மகாநாட்டு விஷயத்தையும் மேலே கூறிய தீர்மானத்தின் மற்ற நிபந்தனைகளையும் அரசாங்கத்தார் ஏற்றுக் கொள்ளாமல் போனால், அவற்றைப் பற்றி ஏதாவது முடிவுக்கு வரும் வரையிலும், பொது ஜனச் சத்தியாக்கிரகம் நிறுத்தி வைக்கப்படும் என்றும், மேலும் தனிப்பட்ட ஆட்களால் செய்யுப்படும் சத்தியாக்கிரகமும், வேறு வழியில்லாத நிலைமையில் தற்பாதுகாப்புக்காக மட்டுமே நடத்தப்படும் என்றும், ஆனால், தொண்டர் படைகளை அமைக்கும் வேலை மட்டும் தொடர்ந்து நடத்தப்படும் என்றும் முடிவு செய்யப்பட்டது. மகாநாட்டின் தீர்மானம் வைசிராய்க்குத் தந்தி மூலம் அனுப்பப்பட்டது. மேலும், கல்கத்தாவின் தூதுகோஷ்டிக்கு அளித்த விடையில் லார்டு ரீடிங் போட்ட நிபந்தனைகள் எல்லாம் பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டன என்பதும், ஆதலால் இப்போது அரசாங்கத்தார் வட்ட மேஜை மகாநாட்டைக் கூட்டுவதற்கு ஒத்துக் கொள்ள வேண்டுமென்பதும் நீண்டதொரு தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. அங்கிருந்து "ஏற்க முடியாது" என்று விடை வந்துவிட்டது. இதைப் பற்றித் தந்தி மூலம் பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்த போது ஜனவரி 31ஆம் தேதியும் வந்து விட்டது. இப்போது காங்கிரஸ் ஏதாவது முடிவுக்கு வருவது இன்றியமையாததாகிவிட்டது.

காங்கிரஸிலிருந்து திரும்பி வந்தபின் நான் என் மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்யத் தொடங்கினேன். ஜனவரி 31ஆம் தேதி கெடு கடந்தபின் பார்டோலியில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் (அதில் காந்திஜீயும் ஹகீம் அஜ்மல்கானும் கூட இருந்தார்கள்) பார்டோலியில் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவது என்று முடிவு செய்யப்பட்டது. இதைப் பற்றி ஓர் அறிக்கையும் வெளியிடப்பட்டது. ஸ்ரீ விட்டல்பாயீ படேலும்

வல்லப பாயீயும் அங்கேயே முகாம் போட்டுவிட்டாகள். மகாத்மாஜீயும் முன்னமே வந்துவிட்டார். அங்கே நடந்த பொதுக் கூட்டம் ஒன்றில் காந்திஜீ சத்தியாக்கிரகத்தின் பொருளையும் அதனால் விளையக் கூடிய இடுக்கண்களையும் மக்களுக்கு எடுத்துக் கூறினர். அவர்கள் சத்தியத்திலும் அஹிம்சாவிலும் நிலை பெயராமல் நின்று நாடு முழுதும் சுதந்திரம் பெறுவதற்காக எரிந்து சாம்பலாகவும் உடன்படுவார்கள் என்ற உறுதி வாக்கையும் அவர்களிடமிருந்து பெற்ருர். பிறகு சூரத்தில் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. சத்தியாக்கிரகம் செய்வதற்கு அது அனுமதி கொடுத்துவிட்டது. அதற்குப் பின் காந்திஜீ வைசிராய்க்கு ஒரு கடிதம் எழுதினர். அதில் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவதாக செய்யப்பட்ட முடிவைத் தெரிவித்து சத்தியாக்கிரகத்தைத் தொடங்கப் போகும் நாளையும் குறிப்பிட்டு எழுதி அனுப்பினர்.

## 43. சௌரீ சௌரா

நான் பீகார் மாகாணத்தில் சுற்றி வரும்போது முஜபர்பூர் ஜில்லாவின் கிராமங்களில் சுற்றித் திரிந்து வந்து ஒரு நாள் புப்ரீ என்ற கிராமத்தில் ஒரு கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது ஒரு தந்தி வந்தது. அதில், செயலாற்றுக் குழுவின் இருக்கை பார்டோலியில் நடைபெறப் போகிறது என்றும் நான் உடனே அங்கு வந்து சேர வேண்டுமென்றும் கண்டிருந்தது. நான் உடனே புறப்பட்டு அன்று கிடைத்த முதல் வண்டியில் ஏறிப் பட்ஞ வழியாகப் பார்டோலிக்குச் சென்றேன்.

இதற்கிடையில் மிகவும் துக்கமான மாபெரும் சம்பவம் ஒன்று நிகழ்ந்துவிட்டது. கோரக்பூர் ஜில்லாவில் சௌரீ சௌரா என்ற கிராமத்தில் பொது மக்களுக்கும் போலீசாருக்கும் இடையில் அடிதடி உண்டாகிவிட்டது. பொதுமக்கள் வெறிகொண்டு போலீஸ் தாணவைக் கொளுத்திவிட்டார்கள். எத்தனையோ போலீஸ்காரர்களையும் கொன்றுவிட்டார்கள்.

மகாத்மாஜீயின் மனத்தில் இச் சம்பவம் மிகவும் ஆழ்ந்து பதிந்தது. நம் நாடானது அஹிம்சாவின் உட்கோளையும் பெருமையையும் இன்னமும் உணரவில்லை என்பதை அவர் கண்டார். ஆகையால் சத்தியாக்கிரகம் ஆரம்பமானல் இது

போன்ற சம்பவங்கள் அநேக இடங்களில் நடக்கலாம் என்பதையும், இதன் விளைவாக அரசாங்கத்தார் அடக்குமுறையை மிகவும் கடுமையாகக் கையாளலாம் என்பதையும், பொது மக்கள் அதைத் தாங்க முடியாதென்பதையும், ஆகையால் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கப் போவதைப் பற்றி வைசிராய்க்கு அறிக்கை அனுப்பப் பட்டிருந்தாலும்கூடச் சத்தியாக்கிரகத்தைத் தள்ளித்தான் போட வேண்டும் என்பதையும் உணர்ந்தார்.

நாட்டின் நாடியைப் பார்த்துத் தெரிந்துகொண்டு, மகாத்மாஜீ இந்த முடிவுக்கு வந்தார். இதைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகவே அவர் செயலாற்றுக் குழுவின் இருக்கையைக் கூட்டினர்.

நான் எவ்வளவோ விரைவாகப் பிரயாணம் செய்தும்கூடப் பார்டோலி ஸ்டேஷனில் போய் இறங்கியபோது, அதே வண்டியில் திரும்பிச் செல்ல வந்திருந்த பண்டித் மதன் மோகன் மாளவீயஜீயைச் சந்தித்தேன். செயலாற்றுக் குழுவின் இருக்கை முடிந்து விட்டதென்றும், சத்தியாக்கிரகத்தைத் தள்ளிப்போட முடிவு செய்யப்பட்டு விட்டதென்றும் அவர் தெரிவித்தார். இதைக் கேட்டதும் எனக்கு ஏதோ என் மனத்தைத் தாக்கியது போலாயிற்று. நான் காந்திஜீ தங்கியிருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். நான் நுழைந்ததுமே அவர் "முடிவைக் கேள்விப்பட்டாய் அல்லவா?" என்று கேட்டார். "ஆம்" என்றேன். அதன்மேல் அவர் "இந்த விஷயத்தைப்பற்றி உன்னுடைய கருத்து என்ன?" என்று கேட்டார். நான் உடனே விடையளிக்க முடியாது என்பதையும், என் மனத்தில் ஏதோ ஐயப்பாடு இருந்தது என்பதையும் அவர் உணர்ந்தார். உடனே அவர் எல்லா விஷயங்களையும் எடுத்து விளக்கினர். நான் கேட்டுக்கொண்டிருந்தேன்; ஆனல், அப்படியும் நான் ஒரு முடிவுக்கும் வராதபோது, அவர் "நான் கூறியவற்றைச் சிந்தித்துப் பார்" என்று கடைசியில் கூறினர்.

சாயுங்காலமாகிவிட்டது. இரவில் நான் எல்லா விஷயங்களையும் எல்லாக் கோணங்களையும் காந்திஜீ கூறிய சொற்களின் ஒளியைக் கொண்டு ஆராய்ந்து ஆலோசனை செய்தேன். அவர் செய்த முடிவு சரிதான் என்பது எனக்குத் திண்ணமாகப் புலப்பட்டது. அடுத்தநாள், காந்திஜீ "என்ன யோசனை செய்தாய்?" என்று மறுபடியும் கேட்டார். எல்லா விஷயங்களையும் புரிந்து கொண்டேன் என்றும், முடிவு சரியாகத்தான் அமைந்திருக்கிறது என்றும் விடை கொடுத்தேன். இதைக் கேட்டு அவர் மகிழ்ச்சியடைந்தார் என்பது தெரிந்தது.

அவர் இந்த முடிவை வெளியிட்ட உடனேயே நாடெங்கும் ஒரு வியப்பான மாறுதல் உண்டாயிற்று. சாதாரண செயலாளர் களைப் பற்றி என்ன சொல்வது? பெரிய பெரிய முதன்மையான தலைவர்கள்—பண்டித் மோதிலால் நேரு, லாலா லஜபதிராய் போலச் சிறையில் இருந்தவர்கள்—எல்லாருமே மிகவும் அதிருப்தி அடைந்தார்கள். திடீரென்று எதிர்ப்பொலி கிளம்பியது. ஹகீம் அஜ்மல்கானும் டாக்டர் அன்சாரியும் பார்டோலியில் நடந்த இருக்கைக்கு வரமுடியவில்லை. ஆயினும் சத்தியாக்கிரகத்தைத் தள்ளித்தான் போட வேண்டுமென்ற தம் கருத்தை அங்கே சேர்ப்பித்தார்கள். சாதாரண மக்கள் இடையில், எங்கோ ஓட்ட மாக ஓடிக்கொண்டிருந்தவன் தடுக்கி விழுந்தாற் போன்றதொரு கலக்கம் ஏற்பட்டிருந்தது.

இன்றும் கூடக் காங்கிரஸின் முக்கிய செயல் திட்டமாய் இருந்து வருகிற ஆக்கத்தொழில் திட்டத்திற்குக் காந்திஜீ வரையறுக்கப்பட்டதும் தெள்ளத் தெளிவானதுமான உருவை பார்டோலியில் தான் முதன் முதல் அளித்தார். அந்தத் தீர்மானம் மிகவும் பெருமை வாய்ந்தது. ஆதலால், அதை இங்கே அப்படியே எடுத்துக்கூறி ஆகவேண்டும். கீழே அதன் மொழிபெயர்ப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

"அஹிம்சாவானது சிவில் டிஸ்ஒபீடியன்ஸுக்கு, அதாவது நாகரிகக் கீழ்ப்படியாமைக்கு (யாமார்க்கும் குடியல்லோம் என்ற பண்பாட்டிற்கு) மிகவும் தேவையான செயல் முறையும் முக்கிய அம்சமுமாம் என்பதை நம் நாட்டின் மக்கள் இதுவரையில் நன்றாக உணரவில்லை என்பதற்குக் கோரக்பூரில் (சௌரீ சௌரா வில்) நடந்த பயங்கரமான சம்பவமே கண்கூடான அத்தாட்சியா யிருக்கிறது. மேலும் தொண்டர் படைக்குத் தெரிந்து தெளியாம லும், காங்கிரஸின் எச்சரிக்கைகளை மீறியும் ஆட்கள் சேர்க்கப் பட்டார்கள். அதனால்தான் மக்களிடையில் சத்தியாக்கிரகத்தின் மூலதத்துவத்தின் அறிவு இவ்வளவு குறைவாக இருக்கிறது. காங்கிரஸின் ஆட்சி முறையைச் செயலில் கொண்டு வருவதில் உள்ள குறைபாடுகளும் வன்மையின்மையுமே நம் நாடானது சுய ராஜ்யம் அடைவதற்கு நெடுநாள் பிடிக்கும் என்பதற்கு முக்கிய மான காரணம் என்பது இச் செயலாற்றுக் குழுவின் கருத்து. இதனால் காங்கிரஸின் உள் அமைப்பை மிகவும் திடமாக்கும் நோக்கத்துடன் இச்செயலாற்றுக் குழுவானது காங்கிரஸின் பல் வேறு அங்கங்களுக்குக் கூறும் ஆலோசனை என்னவென்றால்,

கீழே கொடுக்கப்பட்டுள்ள செயல் திட்டத்தை நிறைவேற்றுவதில் அவை முனைந்து நிற்க வேண்டும் என்பதே ஆகும்.

(1) "குறைந்தது ஒரு கோடி அங்கத்தினரைக் காங்கிரஸுக்குச் சேர்ப்பது: அமைதியும் (அஹிம்சாவும் நல்லொழுக்கமும்) வாய்மையும் காங்கிரஸின் நெறிக்கு அடிப்படையான தத்துவங்கள் அல்லது சூத்திரங்கள் ஆதலால், சுயராஜ்யத்தைப் பெறுவதற்கு வாய்மையும் அஹிம்சாவும் இன்றியமையாதனவென்று உணராதவர் எவரையும் சேர்த்துக்கொள்ளக் கூடாது. இதனால், எவரெவர் காங்கிரஸின் அங்கத்தினராகச் சேரும்படி கோரப்படுகிறார்களோ, அவர்கள் ஒவ்வொருவருக்கும் காங்கிரஸின் நெறியை மிக நன்றாகப் போதிக்க வேண்டும். ஆண்டு வரியைச் செலுத்தாதவர்கள் காங்கிரஸின் முறையான அங்கத்தினராக ஏற்றுக் கொள்ளப்படமாட்டார்கள் என்பதை அங்கத்தின்ரைச் சேர்க்கும் செயலாளர்கள் நினைவில் கொள்ள வேண்டும். ஆகையால், பழைய அங்கத்தினரும் புது ஆண்டில் தத்தம் பெயரை மீண்டும் பதிவு செய்துகொள்ள வேண்டும்.

(2) சர்க்காவில் மக்களுக்குப் பற்றுதலை உண்டாக்குவதும், கையால் நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கையால் நெசவு செய்யப்பட்ட காதியை உற்பத்தி செய்வதற்கு நிலையங்களை அமைப்பதும்: இப்பணியில் வெற்றி பெறுவதற்காகச் செயலாளர்கள் எல்லோரும், அதேபோலக் காங்கிரஸில் பதவி வகிப்பவர்களும், கதரால் நெய்யப்பட்ட ஆடையையே அணிய வேண்டும். மேலும், மற்றவர்களுக்கு ஆர்வம் ஊட்டுவதற்காகத் தாமும் சர்க்காவில் நூல் நூற்கக் கற்றுக் கொள்வது நன்றாகும்.

(3) நேஷனல் பள்ளிக்கூடங்களை அதாவது தேசீய வித்யாலயங்களை நிறுவுதல்: அரசாங்கப் பள்ளிக்கூடங்களை மறியல் செய்யக்கூடாது. தேசீயப் பள்ளிக்கூடங்களில் மாணாக்கர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கு அப்பள்ளிக்கூடங்களில் கல்வி நன்றாகக் கற்பிக்கப்படுவதையே நம்பி இருக்க வேண்டும்.

(4) தாழ்த்தப்பட்டு ஒடுங்கிக்கிடக்கும் சாதியாரின் வாழ்க்கையை மேம்படுத்துவதற்காகவும், அத்துடன் அவர்களுடைய சமூக நிலைமையையும் மனோநிலைமையையும் ஒழுக்க நிலையையும் சீர்த்திருத்துவதற்காகவும் அவர்களை ஒன்று கூட்டி அமைத்தல்: அவர்களுக்கு நல்லதனமாகச் சொல்லிப் புரியவைத்து, அவர்களுடைய பிள்ளைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பச் செய்தல், மேலும் மற்றவர்களுக்குக் கிடைக்கும்

அனுகூலங்களை அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்தல்; எங் கெங்குத் தீண்டப்படாத சாதியாரிலிருந்து மற்ற மக்கள் தனியாக வாழ்கின்றார்களோ, மேலும் எங்கெங்குத் தீண்டாமையின் மனப் பான்மை கடுமையாக இருக்கிறதோ, அங்கெல்லாம் தீண்டப் படாத சாதியாரின் பிள்ளைகளுக்காகக் காங்கிரஸின் செலவில் தனிப் பள்ளிக்கூடங்களை நடத்துதல்; மேலும் மக்களுக்கு நல்ல தனமாகக் கூறி விளங்க வைத்துத் தீண்டப்படாதவர்களும் பொதுக் கிணறுகளிலிருந்து நீர் எடுத்துக் கொள்வதற்கு ஏற்பாடு செய்தல் ஆகிய பணிகளை ஆற்றவேண்டும்.

(5) போதை ஊட்டும் பொருள்களை விலக்குவதற்காக குடிகாரர்கள் வசிக்கும் இடங்களில் வீடு வீடாகச் சென்று அவர்களுக்கு நல்லதனமாகக் கூறி விளங்க வைத்துக் குடியை நிறுத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்தல்: இந்த வேலைக்காக மறியல் செய்யக் கூடாது; அதற்கு மாறாக நல்லதன மாகப் பேசி விளங்கவைத்து அவர்களுக்குக் குடி மீதிருக்கும் பற்றுதலைப் போக்குவதைக் கொண்டே காரியத்தை நிறைவேற்ற வேண்டும்.

(6) மக்கள் தமக்குள் உள்ள சண்டைகளையும் வழக்குக ளையும் தமக்குள்ளேயே தீர்த்துக் கொள்ளும் நோக்கத் துடன் நகரங்களிலும் கிராமங்களிலும் பஞ்சாயத்துக்களை நிறுவுதல்: பஞ்சாயத்தின் தீர்ப்புக்களை மக்களை ஏற்றுக் கொள்ளச் செய்வதற்கு வேண்டிய ஆற்றல் பஞ்சாயத்தின் வாய்மை, நேர்மை, நியாயம், மேலும் அதன் செல்வாக்கு ஆகிய வற்றைக் கொண்டுதான் அமையவேண்டும். எவ்விதமான பலவந்தக் கட்டாயத்தின் நிழல்கூடக் காணப்படலாகாது. ஆகையால் எவராவது பஞ்சாயத்தின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளா விட்டால், சமூகத்திலிருந்தோ சாதியிலிருந்தோ விலக்கப்படக் கூடாது.

(7) பல்வேறு சாதியாரிடையில் நட்பை வளர்ப்பதும், மேலும் தமக்குள் இவ்விதமான நட்புத் தேவை என்பதில் அவர்களுடைய மனத்தைத் திருப்பும் நோக்கத்துடன் அவ் வித நட்புக்கு உகந்த சூழ்நிலையை வளர்ப்பதும் ஒத் துழையாமை இயக்கத்தின் குறிக்கோள்களில் ஒன்றாகும்: யாதொரு வேற்றுமையும் பாராட்டாமல், இடையூறு வந்தபோது, ஆபத்து விபத்துக்காலத்தில் ஒரேமனப்பான்மையுடன் தொண்டு புரிவதற்காகச் சமூகத் தொண்டு இலாக்காவை அமைக்க வேண்டும். ஒத்துழையாமையை மேற்கொண்டவன் தன் கொள்

கையை வைராக்கியமாகக் கடைப்பிடித்து நின்ருலும்கூட, மக்கள் நோய் நொடியுற்றபோது, அவர்கள் வெள்ளைக்காரராயினும் சரி, எல்லாருக்கும் சமமாகத் தொண்டு புரிவது தனக்கு பெருமை என்றும் நற்பேறு என்றும் கருதவேண்டும்.

(8) திலகர் சுயராஜ்ய நிதிக்குப் பணம் திரட்டுவதைக் கைவிடாது நடத்தி வருதல்: ஒவ்வொரு காங்கிரஸ்காரரையும் காங்கிரஸை ஆதரிப்பவரையும் தத்தம் 1921 ஆம் ஆண்டின் வருவாயிலிருந்து நூற்றில் ஒரு பங்கைத் திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கொடையாக அளிக்க வேண்டுமென்று கோரிக்கை செய்ய வேண்டும். ஒவ்வொரு மாகாணக் குழுவும் இப்படியாகத் தான் திரட்டிய பொருளில் நான்கில் ஒரு பங்கை மாதந்தோறும் அகில பாரதீய காங்கிரஸ் குழுவுக்குச் செலுத்த வேண்டும்.

(9) செயலாற்றுக் குழுவுக்கு அவசியம் என்று தோன்றினுல், அது இத்தீர்மானத்தை அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் முன் திருத்தங்கள் செய்யப்படுவதற்காகச் சமர்ப்பிக்கலாம்.

(10) செயலாற்றுக் குழுவின் அபிப்பிராயத்தில் இது போன்றதோர் ஏற்பாடு தேவையென்று புலப்பட்டால், அரசாங்க வேலையைத் துறந்துவிட்டு வந்தவர்களுக்கு ஏதேனும் அன்ருடப்படி அளக்கலாம். இந்த நோக்கத்தைக் கொண்டு இக்குழுவானது ஸ்ரீமான்கள் மியான் முகம்மது ஹாஜீ ஜான், முகம்மது சோட்டானீ, சேட் ஜம்நாலால் பாஜாஜ், பி. கே. படேல் ஆகியவர்களை, இது போன்ற ஒரு திட்டத்தைத் தயார் செய்து அடுத்த அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் விசேஷக் கூட்டத்தில் ஆலோசனைக்குக் கொண்டு வருவதற்காக நியமிக்கின்றது.

அகில பாரதீயக் குழுவின் இருக்கையை விரைவில் கூட்ட வேண்டுமென்று பார்டோலிலேயே முடிவு செய்யப்பட்டது. நாளையும் குறிப்பிட்டு, அக்கூட்டம் தில்லியில் நடக்கும் என்பதையும் அறிவிப்பு செய்யப்பட்டது. அந்த இருக்கையில்தான் பார்டோலியில் செய்த முடிவை ஆராய்வதாக இருந்தது.

காந்திஜீ ஐந்து நாட்கள் உண்ணு விரதம் மேற்கொண்டார். அங்குள்ள மக்களின் கூட்டம் ஒன்றில் அவர் தம்முடைய முடிவைத் தெரிவித்தார். நானும் அந்தக் கூட்டத்தில் இருந்தேன். மக்கள் இம்முடிவை ஏற்றுக் கொண்டார்கள் ஆயினும், அதிலும் நம்பிக்கையின்மை புலப்பட்டது.

தில்லியில் அகில பாரதீயக் குழுவின் இருக்கைக்கு முன்னதாக நிகழ்ந்த செயலாற்றுக் குழுவின் இருக்கையில் லாலாஜீ, பண்டிட் மோதிலால்ஜீ இன்னும் மற்றவர்களு

டைய காரசாரமான அபிப்பிராயங்கள் தெரிய வந்தன. அவை சத்தியாக்கிரகத்தை நிறுத்துவது என்ற முடிவு நாட்டிற்கு பெரிய தீங்கு விளைவிப்பதாக இருக்கிறது என்பதும், இதனுல் மக்களின் உற்சாகம் அழிவது மட்டுமன்றி, நாட்டின் மானத்திற்கே ஓர் ஊறு விளைவித்ததாகும் என்பதுமேயாம். சிறையில் இருந்துவந்த தலைவர்கள் சிலரிடமிருந்து இதே கருத்துக் கொண்ட கடிதங்களும் காந்திஜீயிடம் வந்து சேர்ந்தன. பெரும்பாலும் எல்லாத் தலைவர்களும், அவர்கள் மட்டும் வெளியில் இருந்திருந்தால், காந்திஜீயைப் பதவியிலிருந்து தள்ளிவிட்டுச் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கியிருப்பார்கள் என்று தோன்றிற்று. ஆனுல் காந்திஜீ இம்மிகூட அசைந்து கொடுக்கவில்லை. சிறையில் அடைப்பட்டிருப்பவர்களுக்குச் சூழ்நிலையைப்பற்றி முற்றிலும் அறிய வழியில்லையென்றும், ஆகையால் அவர்களுக்கு அபிப்பிராயம்கூற உரிமையில்லை என்றும், அப்படி அவர்கள் தம் அபிப்பிராயத்தைக் கூறினுலுங்கூட, அதற்கு மதிப்புக் குறைவுதான் என்றும் தெள்ளத் தெளிவாக அவர் கூறிவிட்டார். காந்திஜீ ஏதாவது முடிவுக்கு வந்துவிட்டால் எப்படி அசைந்து கொடாமல் இருப்பார் என்பதையும், அதுவும் கடுமையிலும் கடுமையான எதிர்ப்புக்கு முன்னும்கூட அசைந்து கொடாமல் இருப்பார் என்பதையும் நான் செயலாற்றுக் குழுவின் இருக்கையிலேயே கண்டு கொண்டேன்.

ஹகீம் அஜ்மல்கான் காங்கிரஸின் தலைவராக இருந்துவந்தார். அகில பாரதீயக் குழுவின் கூட்டம் தொடங்கியது. காந்திஜீயானவர் பார்டோலியில் செய்த முடிவை ஆதரித்துப் பேசி அதைக் குழுவின் சம்மதத்திற்காகச் சமர்ப்பித்தார். இதன்மேல் டாக்டர் முஞ்சே அதற்கு ஒரு திருத்தம் கொண்டு வருவது போல ஒரு தீர்மானத்தைச் சமர்ப்பித்தார். அதில், கிளைக்குழு ஒன்றை அமைக்க வேண்டுமென்றும், அது ஒத்துழையாமைச் செயல் திட்டத்தையும் அதை ஒட்டிய மற்ற வேலைகளையும் விசாரணை செய்து தக்க யோசனையை நாட்டிற்கு எடுத்துரைக்க வேண்டுமென்றும் கூறப்பட்டிருந்தது. இத்தீர்மானமும், இதை ஆதரித்து அவர் ஆற்றிய சொற்பொழிவும் காந்திஜீயின்மேல் நம்பிக்கையின்மையைப் புலப்படுத்தும் உருவைக் கொண்டிருந்தன. தணல் பொறி பறக்க விவாதம் நடந்தது. இந்தச் சமயத்தில் ஹக்கீம் சாஹபுக்கு உடம்பு திடீரென்று கெட்டுவிட்டது. அவரால் கூட்டத்தில் உட்கார்ந்திருக்க

முடியவில்லை. அவர் காந்திஜீயைத் தமது இடத்தில் அமர்த்தி விட்டுச் சென்று விட்டார். "வலி குறைந்தபின் நான் திரும்பி வந்துவிடுகிறேன், அதுவரையில் காந்திஜீ கூட்டத்தின் வேலையை நடத்துவார்" என்று கூறிவிட்டுப் போய்விட்டார். எவரொருவர்மேல் அவநம்பிக்கைத் தீர்மானம் கொண்டுவரப்பட்டு விவாதம் நடந்து கொண்டிருந்ததோ, அவரே தலைவர் பதவியில் வீற்றிருப்பது எங்களுக்குப் பொருத்தமாகப் படவில்லை. ஆனால் காந்திஜீ சிறிதுகூடத் தயங்காமல் வேலையைத் தொடங்கிவிட்டார். அவருடைய முகபாவத்தில் சிறிதுகூட நாணம் தோன்றவில்லை. சபையின் அங்கத்தினர்கள் அனைவரின் நம்பிக்கைக்கு உரியவராக இருத்தலும், மேலும் தம்முடைய நடத்தை எதனாலும் இவர் தம்மை ஆதரிப்பவர்கள் பால் மனம் சாய்பவர் என்ற எண்ணம் எதிராளியின் மனத்தில் எழாமல் நடந்து கொள்ளுவது மட்டும்தாம் தலைவருடைய வேலை என்று அவர் கருதினதாக நாங்கள் நினைத்தோம். காந்திஜீ அங்கே நடைமுறையையே விசித்திரமாக மாற்றிவிட்டார். எவராவது பேச எழுந்தால், "நீர் டாக்டர் முஞ்சேயை ஒட்டிப் பேசுவீரா அல்லது வெட்டிப் பேசுவீரா" என்று கேட்பார். அவர் "வெட்டி" என்று விடை அளித்தால் "நீர் சற்றுப்பொறும்" என்று கூறுவார். "ஒட்டி" என்று விடை கொடுத்தால் "நீர் கூறவேண்டியவற்றை யெல்லாம் கூறலாம்" என்பார். இவ்வண்ணமாக எத்தனையோ சொற்பொழிவுகள் டாக்டர் மூஞ்சே சார்பில் நிகழ்த்தப்பட்டன. ஆனால், காந்திஜீ தம் சார்பில் ஒரு பேச்சைக்கூடப் பேசப்படவில்லை. நாங்கள் சற்றுக் கலக்கமுற ஆரம்பித்தோம். காந்திஜீ ஏன் இவ்விதமாகத் தம் சார்பில் எதுவும் கூறப்படுவதற்கு வாய்ப்பு அளிக்கமாலிருக்கிறார் என்று சிந்திக்கலானோம். முடிவில், அவர் அத்தீர்மானத்தை அக்குழுவின் உடன்பாட்டை அறிவதற்காகச் சமர்ப்பித்தார். கைகள் தூக்கப்பட்டபோது, டாக்டர் மூஞ்சே சார்பில் எத்தனைபேர் பேசினார்களோ, ஏறக்குறைய அத்தனை கைகள் தாம் அவர் சார்பில் எழும்பின என்பது தெரியவந்தது. நம்பிக்கையின்மைத் தீர்மானம் மிகப்பெரும் பகுதியாரால் தள்ளப்பட்டுப் போயிற்று. அதன்பின் பார்டோலித் தீர்மானம் கீழ்க்கண்டபடி கொண்டு வரப்பட்டது.

1. "அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இந்த இருக்கையானது 1922ம் ஆண்டு ஜனவரி 11, 12ஆம் தேதிகளில் பார்டோலியில் நடந்த செயலாற்றுக் குழுவின் இருக்கையில் நிறைவேற்றப்

பட்ட ஆக்கவேலைத் தீர்மானத்தை, முற்றிலும் ஆராய்ந்த பின், ஏற்றுக் கொள்கிறது. மேலும், இம்முடிவையும் செய்கிறது. அதாவது, தனிப்பட்டோரின் நாகரிகக் கீழ்ப்படியாமையானது தற்காப்புக்காகவாயினும் சரி, தாக்கும் நோக்கத்தோடு அல்லது மேற்சென்று போராடும் நோக்கத்தோடாயினும் சரி, குறிப்பிட்ட இடங்களில், குறிப்பிட்ட சட்டங்கள் சம்பந்தமாக அவரவரின் மாகாணக் குழுவின் அனுமதியைப் பெற்று நடத்தப்படலாம்; ஆனால் நாகரிகப் படியாமையைத் தொடங்குமுன் நிறைவேற்றப்பட வேண்டுமென்று அகில பாரதீயக் குழுவினாலும் அதன் செயலாற்றுக் குழுவினாலும் விதிக்கப்பட்டுள்ள நிபந்தனைகள் அனைத்தையும் முற்றும் நிறைவேற்றியபின்தான் நாகரிகப்படியாமையைத் தனிப்பட்டோர் தொடங்கலாம் என்பது நினைவில் இருக்கவேண்டும்.

2. கள் கடைகளை மறியல் செய்து வருவது போலவே துணிக் கடைகளையும் மறியல் செய்ய வேண்டியது அவசியமாயிருக்கிறது என்று பல இடங்களிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. ஆகையால், இந்த அகில பாரதீயக் குழுவானது துணிக்கடைகளையும் நன்னடத்தையுடனும், பார்டோலி தீர்மானத்தில் காட்டப்பட்டுள்ள முறைப்படியும் அதில் கண்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டும் மறியல் செய்யலாம் என்று அனுமதி அளிக்கின்றது.

3. தான் இதற்கு முன்பு ஒத்துழையாமைக்கும் சமூக நாகரிகப்படியாமைக்கும் போட்டிருந்த செயல் திட்டத்தை செயலாற்றுக் குழுவானது கை விட்டு விட்டதென்பது செயலாற்றுக் குழுவின் தீர்மானத்தின் பொருள் அன்று, என்பதை அகில பாரதீயக் குழு தெளிவாக்க விரும்புகிறது. செயலாளர்கள் பார்டோலித் தீர்மானத்தில் முழுமனத்துடன் ஈடுபட்டு அதை வெற்றிபெற நிறைவேற்றுவதால்தான் சமூக நாகரிகக் கீழ்ப்படியாமைக்கு மிகத் தேவையானதும் உகந்ததுமான சூழ்நிலையை அமைக்க முடியும் என்பதுதான் அதன் பொருள். எப்போது அதிகாரிகளும் அரசியல் திட்டத்தை அமைப்போரும் பொது மக்களால் முடிவு செய்யப்பட்ட கருத்துக்களுக்கு மாறாகப் போரில் இறங்குகின்றார்களோ அந்த நிலைமையில் பொது மக்களுக்கு நாகரிகக் கீழ்ப்படியாமையை மேற்கொள்வதற்கு உரிமை உண்டு என்பதும். அதுவே கடமை ஆகும் என்பதும் இவ்வகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் தெள்ளிய முடிபு.

குறிப்பு: தனிப்பட்ட ஒருவரின் மூலமாகவோ குறிப்பிட்ட எண்ணிக்கை கொண்ட மக்கள் படை அல்லது திரளின் மூலமாகவோ சட்டத்

திற்கு விரோதமாக நடந்து கொள்ளுதல் அல்லது அரசாங்கத்தின் உத்தரவை மீறுதல் தனிப்பட்டோர் நாகரிகப்படியாமை என்று கூறப் படும். இதனால், அனுமதிச் சீட்டுப் பெற்றே உள்ளே புகக் கூடியதும், அனுமதியின்றிக் காணவிரும்புபவன் எவனும் செல்ல முடியாததுமான கூட்டத்தையோ சபையையோ, அரசாங்கம் நடத்த விடாமல் தடுத்து விட்டால், அதை நடத்தியே தீருவது தனிப்பட்டோரின் நாகரிகக் கீழ்ப்படியாமை என்று கூறப்படும். ஆனால் ஒரு சபையானது எல்லா மக்களுக்காகவும் அமைக்கப்பட்டால், அதாவது, எவர்வேண்டுமானாலும் தட்டுத் தடையின்றி சேர்ந்து கொள்ளக் கூடியதானால், அப்பேர்ப் பட்ட சபையை அரசாங்கத்தின் ஆணையை மீறி நடத்தினால், அது சமூக நாகரிகப்படியாமையாகும். ஒரு கூட்டமோ சபையோ ஏதோ ஒரு வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக கூட்டப்பட்டால், அது தற்காப்பு நாகரிகப்படியாமை என்று கூறப்படும். ஒரு சபையானது ஏதோ ஒரு வேலையைச் செய்வதகாகக் கூட்டப்படாமல், அரசாங்கத்தின் உத்திரவை மீறுவதற்காக என்றே நடத்தப் பட்டாலும், மேலும் சிறை வாசம் அல்லது வேறு விதமான அடக்குமுறையைத் தம்மேல் வருவித் துக் கொள்வதற்காக நடத்தப்பட்டாலும் அது வலுவில் மேற்சென்று போராடும் நாகரிகக் கீழ்ப்படியாமை என்று கூறப்படும்.

இக்குழு பார்டோலி தீர்மானத்தை அங்கீகாரம் செய்வ தோடு, சமூக நாகரிகப்படியாமை நீங்கலாக இப்போது ஒத்திப் போடப்பட்டிருக்கின்ற மற்ற வேலைத் திட்டங்கள் எல்லாவற்றை யும் நிறைவேற்றும்படி மக்களைப் பணிக்கின்றது ".

இத்தீர்மானத்தைச் சமர்ப்பிக்கும்போது காந்திஜீ ஆற்றிய சொற்பொழிவைக் கேட்டவர்கள் அதை என்றுமே மறக்க முடியாது. சத்தியாக்கிரகம் தள்ளிப் போடப்பட்டது.

இந்த இருக்கையைப் பற்றிய இரண்டு விஷயங்களை - அவை சிறியவே ஆயினும் கூட - இங்குக் கூறுவது பொருத்தமற்ற தாகாது. தில்லி இருக்கையின் நாளை முடிவு செய்யும்போது பஞ்சாங்கத்தை பார்க்கவில்லை. அப்படித் தற்செயலாக அமைக் கப்பட்ட அதே நாளில் மகா சிவராத்திரி நோன்பும் கூடியது. இருக்கையின் தேதியை மாற்றவேண்டுமென்று ஹிந்துக்களிட மிருந்து தந்திகள் வரத் தொடங்கின. ஆனால், காந்திஜீ ஒத்துக் கொள்ளவில்லை. சிவராத்திரி மிகப் பெரிய நோன்பாகக் கருதப் படுகிறது என்றும், அன்று அநேகம்பேர் உண்ணுவிரதம் இருந்து வழிபாடு முதலியன ஆற்றுவார்கள் என்றும் கூறி, " நாளை ஏன் மாற்றக் கூடாது" என்று அவரைக் கேட்டேன். அதற்கு அவர் " உண்ணுவிரதத்திற்கும் குழுவின் கூட்டத்திற்கு வருவதற்

கும் எதுவும் முரண்பாடு இருக்கமுடியாது. ஏனெனில், மக்கள் உண்ணுவிரதத்தை இருந்துகொண்டே சபைக்கு வரலாமே! மேலும், விரத நாளில் நல்ல வேலே எதுவும் செய்யக்கூடாதென் பது எந்தச் சாத்திரத்தில் எழுதியிருக்கிறது?'' என்று கூறினர். மேலும், ''தேசத் தொண்டு மிகவும் பெருமை வாய்ந்த வேலே. அதில் ஹிந்துக்கள் இப்பேர்ப்பட்ட தூய்மையான தினத்தில் அவர்களிடம் எதிர்பார்க்கப்படுகின்ற நல்லொழுக்க மனப்பான்மை யுடன் கலந்து கொள்வார்களானல், அதைவிடச் சிறந்தது வேறு உண்டோ?'' என்று அவர் கேட்டுவிட்டு, நாளே மாற்ற மறுத்து விட்டார்.

அசோஷியேட்டட் பிரெஸின் நிலேயத்தில் ஸ்ரீ கேசவ சந்திர ராய் (கே. சி. ராய்) என்ற கனவான் ஒருவர் இருந்தார். நான் கல்கத்தாவில் படித்து வரும்போதே அவரை நான் அறிவேன். அந்நாட்களில் அவர் ''டெய்லி நியூஸ்'' என்ற ஆங்கிலப் பத்திரிகை யின் ஆசிரியப் பகுதியில் வேலே பார்த்து வந்தார். அக்காலத்தில் அவர் மிகவும் புகழ்வாய்ந்த மனிதராக ஆகவில்லே. அதனுல் தான் என்னேப் போன்ற ஒரு மாணவனுக்குக்கூட அவருடன் நன் ருகப் பழக்கம் இருந்து வந்தது. அசோஷியேட்டட் பிரெஸ் நிறுவப்பட்டபின் செய்தித்தாள் உலகில் அவருக்குப் பெரிய பெயர் உண்டாகி விட்டது. மிக மிக உயர்ந்த பதவியிலிருப்பவர் களிடம் கூட அவரால் எளிதாகச் செல்ல முடியும். அரசாங்கத் துறைகளில் அவருக்குச் செல்வாக்கு மேலும் அதிகமாக இருந்து வந்தது. அவர் ஒரு நாள் என்னேத் தனியாக அழைத்து, ''இனி அரசாங்கம் உங்கள்மேல் தன் வலிமையைக் கடுமையாகச் செலுத் தும்; நீங்கள் இப்போது பலவீனப்பட்டு வீட்டீர்கள் என்பதை அரசாங்கம் தெரிந்து கொண்டது. உங்களுக்குள் சண்டை சச்சரவு வந்து விட்டன. ஒற்றுமையில்லே. அதனுல், காந்திஜி விரைவிலேயே கைது செய்யப்படுவார்'' என்று கூறினர். அவர் சொல்லியதிலிருந்து, இவ்வார்த்தைகளே அவர் தமக்குக் கிடைத்த செய்தி எதையோ அடிப்படையாகக் கொண்டு கூறியதாக எனக் குத் தோன்றவில்லே. உள்ள நிலேமையை பார்த்துத் தாமாக மதிப்பிட்டுக் கூறியதாக நான் நினேத்தேன். அது எப்படி ஆயினும் சரி, தில்லியின் இருக்கைக்குப் பின் நாங்கள் தத்தம் ஊருக்குப் போய்ச் சேர்ந்ததுமே, காந்திஜீ கைது செய்யப்பட்டுச் சாபர்மதி சிறைக்குக் கொண்டு போகப் பட்டார் என்ற செய்தி கிடைத்து விட்டது. நான் உடனே சாபர்மதிக்குப் புறப்பட்டேன்.

திரிதரு[1] நீதிபதிமுன் வழக்கு விசாரணைக்கு வரும் நாளன்று நான் அங்கே போய்ச் சேர்ந்து விட்டேன்.

அக்கோர்ட்டின் காட்சியை நான் மறக்கவே முடியாது. காந்திஜீயின் வாக்கு மூலம் போற்றற்குரியதொரு வாக்குமூல மாகும். நீதிபதியின் நடத்தையும் பேச்சும் அச்சிறப்பு மிகுந்த சமயத்திற்கு ஏற்றதாய் இருந்தன. ''யங் இந்தியா''வில் காந்திஜீ எழுதிய ஒரு கட்டுரையை ஒட்டி அவர்மீது குற்றம் சாற்றப்பட் டிருந்தது. அக்குற்றச் சாற்றைக் காந்திஜீ தம் வாக்கு மூலத்திலேயே ஒப்புக் கொண்டு விட்டார். மேலும், தாம் விடுதலை பெற்ருல், இதுவரையில் எழுதி வந்ததைப் போலவே சுடச்சுட எழுதி வருவேன் என்றும் கூறினுர். நீதிபதிக்கு இரண்டு வழி கள் தாமிருந்தன. அவற்றில் ஏதேனும் ஒன்றைப் பின்பற்று வதைத் தவிர அவருக்கு மூன்ரும் 'வழி எதுவும் இருக்க இடம் இல்லை. அவர் காந்திஜீயின் கருத்துக்களோடு ஒரு மனப் பட்டால், தம் வேலையைத் துறந்துவிட வேண்டும், அவருடன் ஒரு மனப்படாவிட்டால், தாம் எவ்வளவு கடுமையான தண்டனை யை விதிக்கக் கூடுமோ, அதை அளிக்க வேண்டும். ஏனெனில் காந்திஜீயானவர் தாம் செய்தவற்றை யெல்லாம் நன்கு அறிந்தே செய்தார். மேலும், வாய்ப்புக் கிடைத்தால் மீண்டும் அப்படியே செய்வார்.

நீதிபதியானவர் மிகவும் உருக்கமான சில வார்த்தைகளால் தம் தீர்ப்பைக் கூறி முடித்தார். காந்திஜீ குற்றத்தை ஒத்துக் கொண்டு விட்டதால் தம்முடைய வேலை ஒரு வகையில் எளிதாகி விட்டதென்றும், ஆனுல், மற்ருெரு வகையில், எஞ்சியிருந்த கடமை, அதாவது தண்டனை விதிப்பது, மிகவும் கடினமாகிவிட்ட தென்றும் நீதிபதி கூறினுர். காந்திஜீயை, அவருடைய நாட்டின் எண்ணிறந்த மக்கள் போற்றற்குரியவராக நினைக்கிருர்கள் என் றும், இவர் போன்ற ஒருவரின் வழக்கைக் கேட்கவோ பார்க்கவோ எந்த நீதிபதிக்கும் இதற்கு முன்னும் வாய்ப்புக் கிடைத்ததில்லை என்றும், இனியும் கிடைப்பது அரிது என்றும், நீதிபதிக்குச் சட் டத்தை மட்டுமே பின்பற்றிப் பணியாற்றுவதற்கு உரிமை உண் டென்றும், சட்டமானது ஒரு மனிதனுக்கும் மற்ருெரு மனிதனுக் கும் உள்ள தாரதம்மியத்தைப் பார்ப்பதில்லை என்றும், அதனுல் தாம் தண்டனை அளித்தே ஆக வேண்டுமென்றும் கூறினுர்.

1 திட்டப்படி வகுத்த முறைப்படி பல ஊர்களில் சுற்றி வந்து ஆங்காங்குக் கோர்ட்டு அமைத்து வழக்குகளை விசாரணை செய்யும் நீதிபதி. "திரிதரு ஞாயிறு" என்ற திருமுருகாற்றுப் படை பதத்தைக் காண்க.

காந்திஜீயின் பதவியானது லோகமான்யரின் பதவியைப் போன்றதே என்றும், ஆதலால் அவருக்கு இதே போன்ற சூழ்நிலையில் என்ன தண்டனை விதிக்கப்பட்டதோ, அதையே, அதாவது ஆறு ஆண்டுகள் சிறைவாசத்தையே, காந்திஜீக்கு விதிப்பது பொருத்தமற்றது ஆகாது என்றும் கூறி, அதே தண்டனையை வழங்கினர். நீதிபதியானவர் தம்மை லோகமான்ய திலகருக்கு நிகராக பாவித்ததற்காகக் காந்திஜீ அவருக்கு நன்றி கூறினர். நீதிபதி எழுந்து சென்றபின் நாங்கள் எல்லாரும் ஒவ்வொருவராகக் காந்திஜீயைச் சந்தித்து வணக்கம் செய்துவிட்டு விடைபெற்றுக் கொண்டோம். அக்காட்சி எல்லை கடந்த கண்ணராவியாயிருந்தது. நான் இளகிய மனமுடையவன். குழந்தைகள் அழுவதைக்கூட என்னல் பொறுக்க முடியாது. இரக்கமான சந்தர்ப்பத்தில் என் மனத்தை அடக்கிக் கொள்ள முடியாது. அதனல் அப்போதும் நான் தேம்பித்தேம்பி அழத் தொடங்கினேன். ஸ்ரீ கேஸ்கரும் அப்போது அங்கிருந்தார். நான் அழுவதைப் பார்த்து அவர் என்னை மிகவும் தேற்றி, லோகமான்ய திலகருக்குத் தண்டனை கிடைத்தபோது தமக்கும் இப்படித்தான் ஆயிற்று என்று கூறினர். சிறிது நேரத்திற்குப்பின் நான் அமைதியுற்றுக் காந்திஜீயிடம் விடை பெற்றுக் கொண்டேன்.

அதே வழக்கில் ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் குற்றம் சாட்டப்பட்டிருந்தார். அவர்தாம் "யங் இந்தியா"வை அச்சடித்து வெளியிட்டு வந்தார். அவருக்கு ஓர் ஆண்டு தண்டனை கிடைந்தது. காந்திஜீயின் கூடவே தண்டனை பெற்றுச் சிறைக்குச் சென்று தம் கெடு முடியும் வரையிலும் அவருடனேயே இருக்கும் நற்பேறு அவருக்குக் கிட்டியது.

# 44. ஆக்கவேலையின் தொடக்கம்

ஆக்க வேலையைத் தொடங்கிவிட வேண்டுமென்றும், அதன் மூலமாகத்தான் நாடு சத்தியாக்கிரகத்திற்குத் தயாராக முடியும் என்றும் காந்திஜீ சிறைக்குச் செல்லும்போது கட்டளையிட்டுச் சென்ருர். இந்த ஆக்கவேலைத் திட்டத்தில் காதிப் பிரசாரம் மூலமாக வெளிநாட்டுத் துணியைப் புறக்கணித்தல், தேசீயக் கல்வி, தீண்டப்படாதவரை முன்னேற்றுதல், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்குப் பாடுபடுதல் ஆகியவை முக்கியமானதாக இருந்தன.

நாடானது சத்தியாக்கிரகத்திற்குத் தயாராக இல்லாததைக் கண்டே அவர் பார்டோலியில் சத்தியாக்கிரகத்தைத் தள்ளிப் போட்டுவிட்டார். இதிலிருந்து அவர் சத்தியாக்கிரகத்திற்கு இப் போது அனுமதி அளிக்க விரும்பவில்லை என்பது தெளிவாயிற்று. அவர் சிறைக்குச் சென்ற பிறகு, தன் கடமை என்ன வென்பதை அறியாமல் நாடு கலக்கமுற்று நின்றது.

உற்சாகத்திற்கும் ஆர்வத்திற்கும் வயப்பட்ட மக்கள் சத்தியாக் கிரகத்தைத் தொடங்கிவிட வேண்டுமென்று விரும்பினர்கள். சிலர், காந்திஜீயானவர் சத்தியாக்கிரகத்தைத் தடை செய்ததால் நாட்டிற்குக் கேட்டை விளைவித்து விட்டார் என்றும், இப்போது அந்தக் கிளர்ச்சி முற்றிலும் ஓய்ந்துபோய்விட்டது என்றும்கூடக் கூறத் தயாராயிருந்தார்கள். மற்றும் சிலர், "இப்போது சத்தியாக் கிரகம் செய்வது இல்லை என்ருல், கவுன்ஸிலைப் புறக்கணித்தல் வீண் என்றும், அதற்குச் செல்லக்கூடாதென்று போடப்பட் டிருந்த தடையை அகற்றிவிட வேண்டுமென்றும் நினைத்தார்கள். வேறு சிலர், காந்திஜீ காட்டிச் சென்ற ஆக்கவேலையை வற் புறுத்தி அதற்காக மும்முரமாகப் பாடுபட விரும்பினர்கள்.

லார்டு ரீடிங்குடன் ஒப்பந்தம் நிறைவேருததால், டிசம்பர் மாதத்தில் விதை ஊன்றப்பட்டு, பார்டோலி தீர்மானத்தின்போது முளை கண்டுவிட்ட பிளவானது அதிவிரைவாகத் தளிர்த்து வளர்ந்துவிட்டது. பெரிய பெரிய தலைவர்களெல்லாம் சிறையில் இருந்தார்கள். பார்டோலி, தில்லி இவ்விடங்களில் நிறைவேற்றப் பட்ட தீர்மானங்களைப் பற்றி மேலே கூறியுள்ளேன். அவற்றி லிருந்து சமூக சத்தியாக்கிரகம் தள்ளிப் போடப்பட்டு விட்டதென் பது தெளிவாகும். அப்படியே மேற்சென்று போராடும் சத்தியாக் கிரகமும் தனிப்பட்டோர் சத்தியாக்கிரகமும் நிறுத்தப்பட்டிருந் தன. ஆனல் தற்காப்புக்காகச் சத்தியாக்கிரகம் செய்வதற்கு அனுமதி இருந்து வந்தது.

சிலர், முக்கியமாக மகாராஷ்டிரத்தில் சிலர், முதலிலிருந்தே ஒத்துழையாமையின் மீதும் சத்தியாக்கிரகம் ஆகியவற்றின் வேலைத் திட்டங்களின் மீதும் அதிருப்தி கொண்டிருந்தார்கள். நாட்டில் நிலவிய நிலைமையால் ஈர்க்கப்பட்டு, காங்கிரஸ் செய்த முடிவுகளைப் பின்பற்றியே அவர்கள் வேலைகளைச் செய்து வந்தா லும் கூட அவர்களுடைய உள்ளம் அந்த வேலைத் திட்டங்களில் பதியவில்லை. அதனல் வாய்ப்புக் கிட்டியபோதெல்லாம் அவர்கள் அவற்றின் அம்சம் ஏதாவது ஒன்றைப்பற்றி எதிர்ப்புக் குரல் எழுப்பி வந்தார்கள். 1921 ஜுலையில் அகில பாரதீயக் குழுவின்

பம்பாய் அவையில்தான் அவர்கள் இந்தப் பேச்சை முதலில் கிளப்பினர்கள். பிறகு அதே பேச்சை அகமதாபாத்துக் காங்கிரசிலும் பேசினர்கள். பார்டோலியில் செயலாற்றுக் குழுவானது சத்தியாக்கிரகத்தைத் தள்ளிப்போட முடிவு செய்தபோது, அவர்களுக்கு மற்றும் ஒரு நல்ல வாப்புக் கிடைத்துவிட்டது. தில்லியில் நடந்த அகில பாரதீயக் குழுவில் டாக்டர் மூஞ்சே அதே காரணத்தால்தான் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். அதைப்பற்றி மேலே கூறியுள்ளேன். வேலைத்திட்டங்கள் எல்லாவற்றையும் ஆராய்ந்து விசாரணை செய்வதற்காக ஒரு குழு அமைக்கப்பட வேண்டுமென்று அவர் விரும்பினர். அங்கு அத் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆனல் மகாராஷ்டிர மத்ய பிரதேசக் காங்கிரஸ் குழுவில் அவருடைய ஆசை நிறைவேறிற்று. அங்கே ஒரு கிளைக்குழு அமைக்கப்பட்டது. அது ஓர் அறிக்கையைத் தயார் செய்தது. அதில், பெரும்பாலும் எல்லா வேலைத் திட்டங்களுமே சின்னபின்னமாக்கப்பட்டு புதிய வேலைத் திட்டம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அங்குள்ள மாகாணக் குழு அதை அகில பாரதீயக் குழுவின் ஆராய்ச்சிக்காக அனுப்ப முடிவு செய்தது. ஆனல் அங்குள்ளவர்களுக்கு இது பிடிக்கவில்லை. நாகபுரியில் ஒரு பெரிய அவை கூட்டப்பட்டு அதில் மாகாணக் குழுவின்மேல் அவநம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது. அந்த அவையில் எட்டாயிரம் பேருக்கு மேல் கூடியிருந்தார்கள். ஸ்ரீ ஜம்நாலால் பஜாஜ்தாம் அதற்குத் தலைவர். டாக்டர் முஞ்சேயின் அபிப்பிராயத்தை ஆதரிப்பவர்களும் அதில் குழுமியிருந்தார்கள். அறிக்கையை ஆதரித்துக் கூறக்கூடியது அனைத்தையும் டாக்டர் முஞ்சேயே கூறினர். ஆனல், ஏழு மணி நேரம் விவாதம் நடந்தபின், அச்சபை அந்த அறிக்கையைக் கண்டனம் செய்து தள்ளிவிட்டது. சிலரே அதை ஆதரித்துக் கையைத் தூக்கினர்கள். மற்றவர்கள் எல்லாருமே அறிக்கைக்கு விரோதமாக இருந்தார்கள்.

இதற்கு நேர்மாருகப் பீகாரானது பார்டோலி, தில்லி முடிவுகளை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டது. அம்மாகாணக் குழுவானது ஆக்கவேலைத் திட்டத்தைப்பற்றி நீண்டதொரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இங்கும் அரசாங்கத்தின் அடக்குமுறை நடந்து கொண்டிருந்தாலும்கூடச் சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டு விட்டது. மேலும் ஆக்கவேலைத் திட்டத்தைக் காங்கிரஸ் குழுக்கள் மும்முரமாக நடத்த வேண்டுமென்று அவற்றிற்குக் கட்டளையிடப்பட்டது. குஜராத்தும் இவ்விதமாகத்தான் செய்தது.

பீகாரில் இதன் பயனாக வேறுபாடான கருத்துள்ளவர்கள் (அதாவது ஒத்துழையாமையையும் சத்தியாக்கிரகத்தையும் காரணமாகக் கொண்டு பிரிந்து போனவர்கள்) ஆக்கவேலைக்கு உதவி புரியத் தயாராக வந்துவிட்டார்கள். இவர்களில் தலைமையானவர் பாபூ கணேஷ்தத்த சின்ஹாவாகும். பட்னாவில் அப்படிப்பட்டவர்களின் பொதுக்கூட்டம் ஒன்று நடந்தது. அதில் நான் மற்ற ஒத்துழையாமைக்காரர்களை உடன் கொண்டு சென்று கலந்து கொண்டேன். அங்குக் கூடியிருந்தவர்கள், தாமும் ஆக்கவேலையில் ஊக்கம் கொள்வதாகவும் தம்மாலான உதவியைப் புரிவதாகவும் உறுதி பூண்டார்கள்.

நாங்கள் காதி வேலையை மும்முரமாகக் கையில் எடுத்துக் கொண்டோம். அத்துடன் தேசீயக் கல்வியைப்பற்றியும் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. அதில் தேசீயக் கல்வியின் விதிமுறை, பாட அமைப்பு முதலியன ஆலோசனை செய்யப்பட்டன. அப்போது நடந்து கொண்டிருந்த பள்ளிக்கூடங்கள் எல்லாவற்றிற்கும் பொருளுதவி முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்வதைப் பற்றியும் யோசனை செய்யப்பட்டது. இந்த நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக நாங்கள் எங்கும் சுற்றி வரலானோம்.

அரசாங்கத்தின் இருதலைக்கொள்கை தொடர்ந்து நடந்து வந்தது. ஒரு பக்கத்தில் சிறை கொள்வது நடந்துகொண்டிருந்தது. மற்றொரு பக்கத்தில் சிறைக்குள் இருந்தவர்களுடைய வழக்குகளை ஒட்டிய காகிதங்கள் ஹைகோர்ட்டின் நீதிபதிகளில் ஒருவராகிய சர் வசந்தகுமார் மல்லிக்கிடம் அரசாங்கத்தாரால் அனுப்பப்பட்டன. அக்காகிதங்களைப் பரிசோதித்துத் தண்டனை நியாயமும் பொருத்தமும் கூடியதா அன்று என்பதை ஆராய்ந்து தம் கருத்தை அளிக்கும்படி அவர் கேட்டுக்கொள்ளப்பட்டார். அவருடைய சிபாரிசின் பேரில் சிலர் விடுதலை செய்யப்பட்டார்கள். வேறு சிலருக்குத் தண்டனை குறைக்கப்பட்டது. ஆனால் பெரும்பாலோர் முன்போலவே சிறையில் கிடந்தார்கள்.

ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா 1921 இலேயே, ராய் கிருஷ்ண சஹாய் பகாதுர் இறந்தபின், பீகாரின் கவர்னருடைய கவுன்ஸிலின் அங்கத்தினராக நியமிக்கப்பட்டிருந்தார். சிறைச்சாலை இலாக்கா அவர் கையில்தான் இருந்தது. அவர் அரசியல் கைதிகளுக்காகச் சில விதிகளை வகுத்தார். அவற்றால் மக்களுக்குச் சிறிது திருப்தி உண்டாயிற்று. ஆனால், சிறைச்சாலை அதிகாரிகளுக்கு அவை பிடிக்கவில்லை. சில நாட்களுக்குப்பின் சர் ஹர்முஸ்ஜீ பநாத்வாலா என்பவர் சிறைச்சாலைகளுக்கு இன்ஸ்பெக்டர்

ஜெனரலாக நியமிக்கப்பட்டு வேறு ஏதோ ஒரு மாகாணத்தி லிருந்து வந்து சேர்ந்தார். அவர் மிகவும் கடுமையாக நடந்து கொள்பவர். புது ஒழுக்கமுறை வகுக்கப்பட்டிருந்தும்கூடப் பீகாரின் சிறைச்சாலைகளில் அரசியல் கைதிகள் கடுமையாகவே நடத்தப்பட்டு வந்தார்கள். அதைப் பற்றி அக்காலத்துப் பத்தி ரிகைகளில் அடிக்கடி செய்தி வருவதுண்டு. அவர்களைத் திருகை சுற்றச்செய்தல், செக்கு ஆட்டச் செய்தல் முதலியன சாதாரண விஷயங்கள். கட்டளைப்படி வேலை முற்றிலும் செய்யப்படா விட்டால் அதற்காகத் தண்டனையும் உண்டு. கால்விலங்கு, தண்டு விலங்கு, ஊர்த்வ கைவிலங்கு, செருப்பு மாலை ஆகிய கடுமையான தண்டனைகளைப் பலர் அனுபவிக்க வேண்டி வந்தது. சில இடங்களில் பிரம்படியும் கொடுக்கப்பட்டது. சிறைகளில் முசல்மானியர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. இதனால் அவர்களோடு ஏதோ ஒரு சாமான்ய விஷயத்திலிருந்து அடிதடி உண்டாகிவிட்டது. அதை நிறுத்தும்படி அதிகாரிகள் கட்டளை யிட்டார்கள். அவர்கள் அதைக் கேட்கவில்லை. இதற்காகப் பலருக்குத் தண்டனை கிடைத்தது.

மகாத்மாஜீ கைது செய்யப்பட்டபின் செயலாற்றுக்குழுவின் இருக்கை எங்காவது ஓர் இடத்தில் நடந்துகொண்டே வந்தது. இந்த இருக்கைகளில் ஆக்கவேலையின்மேல் தான் கவனம் செலுத்தப்பட்டு வந்தது. காதிவேலையை ஒழுங்கான முறையில் நடத்துவதற்காக ஒரு போர்டு அமைப்பது என்று ஒரு கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. இந்த வேலைக்காகத் திலகர் சுயராஜ்ய நிதியிலிருந்து பணம் அளிப்பதற்கும் அனுமதி கொடுக்கப் பட்டது. அகில பாரதீயக் குழுவின் அமைச்சராக இருந்த ஸ்ரீ விட்டல் பாயீ படேல் சொற்பொழிவுகளாலும் பத்திரிகைகளில் கட்டுரைகளாலும் பொது மக்களையும் காங்கிரஸ் செயலாளர் களையும் காங்கிரஸுக்கு மேலுக்கு மேல் அங்கத்தினர் சேர்ப்பதி லும் காதிப்பிரசாரம் செய்வதிலும் தீண்டப்படாதவரை முன் னேற்றுவதிலும் தேசீயக் கல்வி வேலையிலும் தம் ஆற்றலைச் செலுத்தும்படி இடையறாது ஊக்கி வந்தார். அப்படியிருந்தும், மடிமை நிலவிவந்தது. லக்நோவில் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை நடந்தது. ஸ்ரீ விட்டல்பாயீ படேல் அக் காலத்தின் சூழ்நிலையின்மேல் மிகவும் அதிருப்தி கொண்டிருந்தார். நான் லக்நோவுக்குப் போய்ச்சேர்ந்தேன். ஆயினும், அங்குற் றதும் காய்ச்சலால் பீடிக்கப்பட்டுவிட்டேன். அதனால் அங்கு நடந்த இருக்கையில் அதைச் சும்மா பார்க்க வந்தவன்போலத்

தான் உட்கார்ந்திருக்கவேண்டியிருந்தது. வாக்கு வாதத்தில் அதிகப்பங்கு எடுத்துக்கொள்ள முடியவில்லை. நல்லவேளையாகப் பண்டித் மோதிலால்ஜீ அந்தச் சமயத்தில் விடுதலையானார். அடுத்தநாள் அவர் அந்த இருக்கைக்கு வந்து சேர்ந்தார். பண்டித்ஜீ வந்து சேருவதற்குச் சற்று முன்புதான் ஸ்ரீ விட்டல் பாயும் மற்றும் சில தலைவர்களும் கூறிய யோசனைப்படி ஒரு குழுவை நியமிப்பது என்ற பேச்சு நடந்தது. நாட்டின் சூழ் நிலைமையைப் பற்றி ஆலோசனை செய்து எங்கெங்குச் சென்று விசாரணை செய்யவேண்டுமோ அங்கெல்லாம் சென்று விசாரணை செய்து நாடு சத்தியாக்கிரகத்திற்குத் தயாராக இருக்கிறதா இல்லையா என்பதைப் பற்றி ஓர் அறிக்கையைச் சமர்ப்பிக்கும் பொறுப்பை அக்குழுவிடம் ஒப்படைப்பது என்று முடிவு செய்யப் பட்டது. பண்டித்ஜீயும், தாம் வந்தபின் இதை ஏற்றுக்கொண் டார். அதன்மேல், அவ்விதமான குழுவை அமைக்கும்படி மகா நாட்டின் தலைவரும் வற்புறுத்தப்பட்டார். காந்திஜீ, யாதொரு குழுவின் விசாரணை இன்றியே, நாட்டின் நாடியைப்பார்த்து அவ்வப்போது இருக்கும் நிலைமையைப் புரிந்துகொண்டு வந் திருந்தார். அவர் இந்தியாவிற்குத் திரும்பிவந்துப் பொது வாழ்க்கை வேலையில் முனைந்து பங்கெடுத்துக்கொள்ளத் தொடங் கியதிலிருந்தே இத்திறமையைக் காட்டிவந்தார். அவர் சிறைக்குச் சென்றபின்தான் இவ்விதமான குழுவுக்குத் தேவை உண்டா யிற்று. ஆனால், இதனால் நல்ல பயன் கிட்டவில்லை. இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் எப்போதாவது ஏதாவது ஒரு விஷயத் தைத் தட்டிக் கழிக்க விரும்பினால், அப்போது அது எப்படி ஒரு விசாரணைக் குழுவை நியமித்துவிடுமோ அதேபோலத்தான் நாங்களும் செய்தோம். இதனால் சத்தியாக்கிரகம் ஒரு விதமாக ஒத்திப்போடப்பட்டது. ஆக்கவேலையில் காணப்படவேண்டு மென்று காந்திஜீ வற்புறுத்தி வந்த மிடுக்கும் ஒரு வகையில் இரண்டாம்தரமாக அமைந்துவிட்டது.

இதே இருக்கையில் மற்றொரு காரியமும் நடந்தது. அதனால், சில நாட்களுக்குப்பின் மிகவும் நல்ல பயன் விளைந்தது. நாட்டில் பெருகி வந்த காதி வேலையைக் கண்காணிப்பதற்காகச் செய லாற்றுக் குழுவானது அமைத்த போர்டை அகில பாரதீயக் காங்கிரஸ் குழு அங்கீகரித்தது. 1921இல் சுயராஜ்ய நிதி திரட்டப் பட்டதும், காதிவேலையின்மேல் அதிகக் கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று முடிவு செய்தபோது, அந்நிதியிலிருந்து காதிப் பிரசாரத்திற்காக எல்லா மாகாணங்களுக்கும் பணம் அளிக்கப்

பட்டது. ஆனால் இன்னும் எவருக்கும் காதியைப்பற்றி மிகுந்த அறிவும் இல்லை, அனுபவமும் இல்லை. அதனால் பணம் அதிகமாக விரயமாகும் என்பதும், வேலை சரியான முறையில் நடக்காது என்பதும் தெளிவாயின. ஆகையால் எல்லா மாகாணங்களிலும் வேலை ஒழுங்காக நடக்கிறதா என்பதைக் கண்காணிக்கும் பொறுப்பு இப்போர்டின் கையில் ஒப்படைக்கப்பட்டது. சேட் ஜம்நாலால் பஜாஜ் அதற்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். சேட்ஜீக்கு ஆக்கவேலையில் அதிகப் பற்றுதல் உண்டு. ஆகையால், அவர் காதிப் பிரசார வேலையையும் தீண்டப்படாதவரின் முன்னேற்ற வேலையையும் மிகவும் பாடுபட்டு ஊக்கத்துடன் செய்யத் தொடங்கினர்.

## 45. பீகாரில் காங்கிரஸுக்கு ஏற்பாடுகள்

அகமதாபாத் காங்கிரஸுக்கு வந்திருந்த பீகார் பிரதிநிதிகள் எல்லாரும்கூடி அடுத்த முறை காங்கிரஸின் பேரவையைப் பீகாரில் நடத்த வேண்டுமென்று அழைப்பு அளிக்க முடிவு செய்தார்கள். இதற்குமுன் காங்கிரஸ் பீகாரில் ஒரே ஒரு முறைதான் நடந்திருந்தது. அதுவும் 1911இல் காங்கிரஸ்காரர்களுக்குள் இருந்துவந்த கருத்து வேறுபாட்டால் காங்கிரஸ் மிகவும் நலிந்து போயிருந்த காலத்தில்தான். அப்போது அதற்கு வந்தவர்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவாகவே இருந்தது. அப்பேரவைக்கு ஏற்பாடு செய்தவர்களின் அனுபவம் இனிமையாக இல்லாததுமட்டுமன்றி, காங்கிரஸின் போது செய்யப்பட்ட செலவுக்குக் கொஞ்சம் பணம் கொடுக்கப்படாமல் நின்றுவிட்டதால் அந்த அனுபவம் கசப்பாகவே இருந்தது. வரவேற்புக் குழுவுக்குத் தலைவரான மஜஹர்-உல்-ஹக் சாஹப் மீதும், அதன் அமைச்சர் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா மீதும் இன்னும் மற்ற அங்கத்தினர்களின் மீதும் இதற்காகக் கோர்ட்டில் வழக்குத் தொடுக்கப்பட்டது. ஆனல், இப்போது பீகாரில், சம்பராணுக்கு மகாத்மாஜீயின் வரவிற்குப் பின், மேலும், முக்கியமாக 1921ஆம் ஆண்டின் கிளர்ச்சியின் காரணமாக மக்களிடையில் நிறைய விழிப்பு உண்டாகிவிட்டது. இம்முறை அப்படிப்பட்ட கசப்பான அனுபவங்கள் வாரா என்று நாங்கள் நம்பிக்கை கொண்டிருந்தோம். நாங்கள் துணிந்து அழைப்பை அளித்துவிட்டோம். ஆயினும்

பீகாரில் எந்த ஊரில் பேரவையை நடத்துவது என்பதை அங்கே முடிவு செய்ய இயலவில்லை. காங்கிரஸும் அடுத்த விழாவை எந்த மாகாணத்தில் நடத்துவது என்பதை அகமதாபாத்தில் முடிவு செய்யவில்லை. சில நாட்களுக்குப்பின் இம்முடிவைக் காங்கிரஸ் குழுவே செய்தது. பீகாரின் அழைப்பை ஏற்றுக் கொள்ளலாம் என்று அது முடிவு செய்தது.

பீகாரில் மாகாணக் குழுவின் இருக்கை கூடு முன், நானே சில இடங்களுக்குச் சென்று அங்குள்ள வசதிகளைப் பார்த்து வந்தேன். பிறகுதான் இருக்கை கூட்டப்பட்டது. காங்கிரஸ் விழாவைக் கயாவில் நடத்துவதென்று அதில் முடிவு செய்யப் பட்டது. அந்த ஜில்லாவில் பணம் திரட்டுவதற்காக நான் ஸ்ரீ கிருஷ்ண பிரசாத் சேன்சிங்குடன் கூடிச் சுற்றுப்பிரயாணம் செய்யலானேன். சிறிது வெற்றியும் கிட்டியது. ஜில்லா முழு வதும், நான் இதற்குமுன் செல்லாத இடங்களுக்கெல்லாம் சென்று சுற்றிவருவதற்கு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. அந்த ஜில்லாவில் மழை காலத்தில் பிரயாணம் செய்வது மிகக் கடினம். எங்குப் பார்த்தாலும் ஒரே களிமண் தான். சாலை இல்லாத இடங் களில் எவ்விதமான வண்டியும் போக முடியாது. ஆகையால் மழைக்கு முன்னமே, நான் எங்கெங்குக் கூட்டம் போட முடியுமோ அந்த இடங்களுக்கெல்லாம் சென்று வேலையை முடித்து வந்தேன்.

1911இல் காங்கிரஸ் வரவேற்புக் குழுவின் அமைச்சரின் மீது பட்னுவில் நடந்த வழக்கு எனக்கு நினைவிருந்தது. ஆகையால், இப்போதே வரவேற்புக் குழுத் தலைவரையும் மற்றப் பதவியாளர் களையும் முடிவாகத் தேர்ந்தெடுக்கக் கூடாதென்று நிச்சயம் செய்யப்பட்டது. வரவேற்புக் குழுவில் நிறையப் பேர்கள் உறுப் பினர்களாகச் சேர்ந்த பிறகு பதவியாளர்களைத் தேர்ந்தெடுப்பது நன்று என முடிவு செய்யப்பட்டது. அதுவரையில் வேலையை நடத்துவதற்கு நான்தான் தற்காலிக அமைச்சனுக நியமிக்கப் பட்டேன். நான் ஒரு பைசா கூடக் கடன் வாங்கிச் செலவு செய்யமாட்டேன் என்று தீர்மானித்துவிட்டேன். அப்படியே குழுவின் உறுப்பினர்களுக்கும் கூறிவிட்டேன். அதுமட்டு மன்றி, எந்த வேலையையும், அதற்கு வேண்டிய பணம் முழுவதும் என்னிடம் வராத வரையில், தொடங்கவும் மாட்டேன் என்றும் கூறிவிட்டேன். என் மீதும் குழுவின் மற்ற அங்கத்தினர்களின் மீதும் வந்து சேர்ந்த பணப் பொறுப்பிலிருந்து தப்புவதற்கு இந்த ஒரே வழிதான் இருந்தது. வரவேற்புக் குழுவுக்கு உறுப்

பினரைச் சேர்க்கும்படியும், கட்டணத்தைத் திரட்டும்படியும் எல்லா ஜில்லாக்களுக்கும் கடிதங்கள் எழுதப்பட்டன. ஆனால், செயலாளர்கள் சற்றுச் சோம்பேறித்தனமாக யிருந்ததாகத் தெரியவந்தது. பணம் திரட்டப்படுவதும் குறைவாகக் காணப் பட்டது. அகமதாபாத்துக்குப் பின் காங்கிரஸின் உருவே மாறி விட்டது. நாங்கள் ஒரு புதிய நகரத்தையே அமைக்க வேண்டி யிருந்தது. அது கயாவுக்குப் புறம்பில் இருக்கவேண்டும். அங்கு எல்லோரும் தங்குவதற்குக் குடிசைகள், விளக்கு, நீர் முதலான வசதிகள் வேண்டும். இவை மட்டுமன்றி, காங்கிரஸ் பந்தலையும் அமைக்கவேண்டும். இவற்றிற்கெல்லாம் நிலம் கிடைப்பது சற்றுக் கடினமாயிருந்தது. ஆனால், உள்ளூர் மனிதர் களின் உதவியால் கயா நகரத்திற்குத் தெற்கில் ஓரிரண்டு கல் தொலைவில் தேநுாயீ என்ற கிராமத்தில் பக்காசாலைக்குக் கிழக்கில் ஒரு மாந்தோப்பும் மேற்கில் தரிசு நிலமும் கிடைத்துவிட்டன. தரிசு நிலத்தில் பந்தலையும் தோப்பில் வசிப்பதற்குக் குடிசை களையும் அமைப்பதென்று முடிவு செய்தோம். சிறிது தொலைவில் ஒரு நந்தவனமும் கிடைத்தது. அதில் ஒரு சிறிய பங்களாவும் இருந்தது. அதில் கண்காட்சியை அமைக்க முடிவு செய்தோம். சிறிது காலம் அமைப்புக் கோலம் வரைவதிலும், எங்கெங்கும் சென்று பணம் திரட்டுவதிலும், மூங்கில் கழிகள் சேகரிப்பதிலும் கழிந்துவிட்டது. மழை காலத்திலோ வேலை நடக்க முடியாது. ஆகையால், மழைக்குப்பின் வேலையைத் தொடங்குவது என்று முடிவு செய்யப்பட்டது.

பேரவை டிசம்பரின் கடைசி வாரத்தில் நடப்பது வழக்கம். அதனால் மழை காலத்திற்குப் பின் மூன்று மாதங்கள் இருந்தன. பணத்தையும் சாமான்களையும் சேகரித்து வைத்திருந்தால் வேலையைச் செய்து முடிப்பது கடினமன்று. ஆனால் இன்னும் பணம் நிறையக் கிடைக்கவில்லை. நான் கடிதங்கள் மூலமாகவும், ஆட்களை அனுப்பியும் எல்லா ஜில்லாக்களையும் எச்சரிக்கை செய் தேன். ஆயினும், பணம் நிறைய வரவில்லை. அதனால் என் கவலை அதிகரித்தது. குத்தகைக்காரருக்குக் கொடுப்பதற்காக என்னிடம் பணம் முழுதும் சேராத வரையில் நான் எவருடனும் ஒப்பந்தம் செய்வதில்லை யென்று உறுதி பூண்டுவிட்டேன். விழாவின் நாள் நெருங்கி வர வர என் கவலை வளர்ந்தது. காலக் குறைவால், தேவைப்பட்ட குடிசைகள், பந்தல் முதலான வற்றைக் கட்டிக் கொடுக்கக் கூடிய குத்தகைக்காரர் எவரும் இனிக் கிடைக்கமாட்டார் என்ற நிலைமை வந்துவிட்டது.

உடனே வரவேற்புக் குழுவின் இருக்கை ஒன்று கூட்டப்பட்டது. அதில் எல்லா விஷயங்களைப் பற்றியும் ஆலோசனை செய்தோம். எந்த வேலைக்கும் வேண்டிய பணம் முழுவதும் பாங்கியில் கட்டப்படாத வரையில் நான் அமைச்சன் என்ற முறையில் எந்தக் குத்தகைப் பத்திரத்திலும் கையொப்பமிட மாட்டேன் என்ற உறுதிப் பாட்டிலிருந்து அசையவில்லை. எல்லா ஜில்லாக்களிலும் இருந்த செயலாளர்களின் சோம்பலைக் கண்டு நாங்கள் கலவரமடைந்திருந்தோம். இறுதியில் குழுவின் உறுப்பினர்கள் தத்தம் தனிப்பட்ட பொறுப்பின்மேல் பாங்கியிலிருந்து கடன் வாங்குவதென்றும் அப்பணத்தைப் பாங்கியில் வரவேற்புக் குழுவின் கணக்கில் கட்டிவிடுவதென்றும், அதற்குப்பின் நகரத்தை அமைத்தல் முதலிய வேலைகளைக் குத்தகைக்கு விடுவது என்றும் முடிவு செய்தோம்.

இவ்விதமாக ஐம்பதாயிரம் ரூபாய் கடன் வாங்குவது என்று முடிவு செய்யப்பட்டது. இந்த விஷயத்தை இரகசியமாக வைத்திருக்கவேண்டுமென்று சிலர் விரும்பினர்கள். ஏனெனில், இது வெளிப்பட்டால் மாகாணத்தின் பெருமைக்குக் கேடு விளையும் என்றும், அரசாங்கத்தின் ஊழியர்களும் மற்றவர்களும்கூட இதைக் கண்டு மகிழ்ச்சி அடைவார்கள் என்றும் அவர்கள் அஞ்சினர்கள். மாகாணத்துப் பொது மக்கள் மீது எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது என்று நான் கூறினேன். மேலும், இவ்விதமாகக் காங்கிரஸை அழைத்துவிட்டு இப்போது உதவி இன்றி நிற்கிறோம் என்பது மக்களுக்குத் தெரிய வந்ததும் அவர்கள் தேவையான பணத்தை நிச்சயமாகக் கொடுப்பார்கள் என்றும் கூறினேன். அத்துடன், செயலாளர்களும் நிலைமையின் கேட்டை உணர்வார்கள் என்றும், அதனல் பணம் திரட்டுவதில் மனம் செலுத்தி ஈடுபடுவார்கள் என்றும் கூறினேன்.

இத்தீர்மானத்தைச் செய்தித் தாள்களில் அச்சிடுவதற்காக அனுப்பிவிட்டோம். பிறகு, பணம் திரட்டுவதற்காக நான் சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்பட்டேன். இத்தீர்மானத்தைச் செய்தித் தாள்களில் படித்ததுமே மாகாணம் முழுவதிலும் செயலாளர்கள் உள்ளத்தில் தீப்பற்றியதுபோல ஆகிவிட்டது. எல்லாரும் மிகவும் மும்முரமாக வரவேற்புக் குழுவிற்கு அங்கத்தினரைச் சேர்க்கவும் பணம் திரட்டவும் முற்பட்டார்கள். நான் சென்ற இடங்களில் எல்லாம் பணம் நிறையக் கிடைத்தது. எல்லாரும் மாகாணத்தின் பெருமை குறைந்துபோகும் என்பதை உணரலானர்கள். நான் ஒரு வாரம் மட்டுமே சுற்றி வந்து

எத்தனையோ ஆயிரம் ரூபாய் சேகரித்துக் கொண்டு திரும்பி வந்தேன். பணம் கையிலிருந்தது. ஊரிலிருந்து ஒன்றரைக் கல் தொலைவிலிருந்ததும், காதிக் கண்காட்சி நடத்தலாமென்று முடிவு செய்திருந்ததுமான அச்சிறிய பங்களாவில் நாங்கள் தங்கியிருந்தோம். அங்கே இவ்வளவு பணத்தை கையில் வைத் திருப்பது சரியன்று என நினைத்தேன். நான் ரயிலிலிருந்து மாலை சுமார் நான்கு மணிக்கு இறங்கினேன். கயா ஸ்டேஷனில் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்தேன். அவர் எங்கள் தீர் மானத்தைப் பற்றிச் செய்தித்தாள்களில் படித்திருந்தார். கயா வில் காங்கிரஸ் நடக்கவே நடக்காது என்று அவர் கனவு கண்டு கொண்டிருந்தார். நான் ரயிலிலிருந்து இறங்கியதுமே, அவர் என்னைப் பார்த்து "என்ன, பாங்கியிலிருந்து கடன் வாங்கி விட்டீர்களா ?" என்று கேட்டார். எந்தப் பாங்கியும் தனிப் பட்டோர் பொறுப்பின்மீது இவ்வளவு பணம் கொடுக்காது என்று அவர் நினைத்திருந்தார் போலும். "இல்லை" என்று நான் விடை அளித்தேன். "அப்படியானால் காங்கிரஸ் எப்படி நடக்கும் ?" என்று அவர் கேட்டார். "கடன் வாங்குவதற்கு இப் போது அவசியம் இல்லை" என்று கூறினேன். இதைக் கேட்டதும் அவர் மிகவும் வியப்படைந்தார். இப்போது எங்கள் வேலைக் காக நிறையப் பணம் கிடைத்துவிட்டதென்பதையும், நான் ஒரு பெருந் தொகையைத் திரட்டிக் கையில் கொண்டு வந்திருக் கிறேன் என்பதையும்கூட அவரிடம் கூறினேன். என் வார்த்தையில் அவருக்கு முழு நம்பிக்கை வரவில்லை. நான் என் கையிலிருந்த பணச் சுமையை உடனே பாங்கியில் கொண்டு சேர்க்க விரும்பினேன். ஆகையால், உடனே ஒரு வண்டியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு நேரே பாங்கிக்குச் சென்றேன். அவர் வண்டியின் பின்னேயே சைக்கிளில் தொடர்ந்து வந்தார். நான் உண்மையாகவே ஒரு பெருந் பெருந்தொகையை எண்ணி பாங்கியில் கட்டுவதைக் கண்ட பின்தான் அவருக்கு என் வார்த்தையில் நம்பிக்கை வந்தது. அப்போதுதான் அவர் என்னைத் தொடர்வதைவிட்டுத் தம் வேலைக்குத் திரும்பிச் சென்றார். நான் சேகரித்து வந்ததைத் தவிர, நாள் தோறும் எல்லா ஜில்லாக்களிலிருந்தும் பணம் வரத் தொடங்கியது. நாங்கள் அங்கும் இங்கும் சுற்றி வந்தபடி இருந்தோம். கயாவில் நகர அமைப்பு வேலையும் மும்முரமாக நடக்கத் தொடங்கியது.

ஏழை பீகார் பணக்கார அகமதாபாத்தின் ஆடம்பரத்தைப்

பின்பற்றியோ, அத்துடன் போட்டிப் போட்டோ எப்படி நிற்க முடியும்? ஆனால் நாங்களும் நன்றாக ஏற்பாடுகள் செய்திருந்தோம் என்றும், செலவும் குஜராத்தைவிட மிகக் குறைவாகவே செய்தோம் என்றும் நான் நினைக்கிறேன்.

கண் காட்சியில் காதி உற்பத்தி செய்யும் முறையைப் படிப் படியாகக் காட்டவேண்டுமென்று முடிவு செய்தோம். காதியில் பருத்தி ஆடையை மட்டுமன்றி நூல் நூற்று அல்லது நார் திரித்து நெசவு செய்யப்படும் பொருள்களான பட்டு, கம்பளி, நார்மடி ஆகிய எல்லாவற்றையும் சேர்த்துக் கொண்டோம்.

இவை ஒவ்வொன்றிற்கும் ஆரம்பத்திலிருந்து துணி நெசவு செய்யப்பட்டு உபயோகப்படுத்துவதற்குத் தகுதியாகும் நிலை வரையில் உள்ள ஒவ்வொரு முறையையும் படிப்படியாகக் காட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. உதாரணமாகப் பஞ்சை எடுத்துக் கொள்வோம். பருத்திச் செடியிலிருந்து பஞ்சை எடுத்து விதை போக்குதல், பஞ்சடித்தல், நூல் நூற்றல், பாவு போடுதல், கஞ்சி போடுதல், நெசவு செய்தல், வெள்ளாவி வைத்தல், அச்சடித்தல் ஆகிய வரையில் எல்லா வேலை முறைகளும் காட்டப்பட்டிருந்தன. இதே போலக் கம்பளி, பட்டு, நார்மடி ஆகியவற்றிற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சர்க்கா சங்கம் இன்னும் நிறுவப்படவில்லை. அதன் வேலையைக் கதர் போர்டுதான் செய்து வந்தது. ஆனால் அதுவும் அமைக்கப் பட்டு இன்னும் ஓராண்டு கூட ஆகவில்லை. ஆகையால் காதி வேலைக்கு வேண்டிய அமைப்பு, அனுபவம், அறிவு ஆகியவை ஒன்றுமே இல்லை என்றே கூறலாம். மேலே கூறிய தொழில் துறைகளுக்கு வேண்டிய பொருள்களை எல்லாம் சேகரிப்பதும், அவ்வேலைகளைச் செய்து காட்டுவதற்காகத் தொழிலாளிகளை அமர்த்துவதும் எளிதான வேலை அன்று. ஆயினும் இவை எல்லாவற்றிற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. காதிக் கண் காட்சி மிகவும் சிறப்பாக அமைந்தது. கண் காட்சியைப் பார்க்க வந்தவர்களுக்கு விதிக்கப்பட்ட கட்டணச்சீட்டு மூலமாகக் கிடைத்த பணமே கண்காட்சியின் செலவுக்குப் பெரும்பாலும் போதியதாகிவிட்டது.

# 46. ஆசாமிலும் சந்தால் பர்கனுவிலும் அடக்குமுறை

காங்கிரஸின் ஆண்டு விழாவைப் பற்றியும் அங்கு நடந்தவற்றைப் பற்றியும் எதுவும் சொல்வதற்கு முன்பு 1922இன் காங்கிரசைப் பற்றிச் சில விஷயங்களைக் கூறவேண்டும்.

மகாத்மா காந்தி கைது செய்யப்பட்ட பின்னும் அரசாங்கத்தாரின் அடக்கு முறை சிற்சில மாகாணங்களில் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. பெரிய தலைவர்களுள், பண்டித் மதன் மோகன் மாளவீயஜீயும், ஸ்ரீ விட்டல் பாயீ படேலும் தவிரப் பெரும்பாலும் எல்லாரும் சிறையில் இருந்தார்கள். அடக்குமுறையால் மக்கள் கலக்கமுற்றிருந்தார்கள். காங்கிரசை உயிருடன் வைத்திருப்பது அவசியமாயிற்று. சிறைக்கு வெளியே இருந்த சிலருடையபொறுப்பு மேலும் அதிகமாயிற்று. அடக்குமுறையைப் பற்றி மிகவும் அச்சுறுத்தும் செய்திகள் ஆசாமிலிருந்து வந்து கொண்டிருந்தன. அங்கே கட்டாயமாகப் போகவேண்டுமென்று பண்டித் மாளவீயஜீ எண்ணினர். நானும் அவருடன் சென்றேன். அங்கே பெரும்பாலும் எல்லா ஜில்லாக்களிலுமே, நகரங்களில் மட்டுமன்றி, அநேக கிராமங்களிலுங்கூடக் காங்கிரஸ் குழுக்கள் தடை செய்யப்பட்டு வாளாவிருந்தன. ஆசாமில் வீடுகள் பெரும்பாலும் உலர்ந்த புல்லாலேயே அமைக்கப்பட்டிருக்கும். அரசாங்க அதிகாரிகள் எல்லா இடங்களிலுமே காங்கிரஸ் அலுவலகங்களைக் கொளுத்திவிட்டார்கள். திறமையான செயலாளர்கள் அனைவரும் சிறை கொள்ளப்பட்டார்கள். காங்கிரஸ் தொண்டர் படையின் உறுப்பினர்கள் எங்கெங்கு அகப்பட்டார்களோ, ஆங்காங்குக் கைது செய்யப்பட்டு வந்தார்கள். ஆசாமில் அபின் விற்பனையிலிருந்து அரசாங்கத்திற்கு நல்ல வருமானம் வந்து கொண்டிருந்தது. ஆசாம் அரசாங்கம் மிகவும் கொடூரமானதற்கு இதுவே முக்கிய காரணம். அம்மாகாண மக்களுக்கு அபின் உண்பது வழக்கம். அதன் கண்கூடான விளைவாக அவர்களுடைய உடல் வலிமையும் மனேவலிமையும் குன்றியிருப்பதைக் காணலாம். சிறு பிராயத்திலேயே அவர்கள் கிழவர்களைப் போலக் காட்சி அளிக்கிருர்கள். உடலும் மூளையும் பலவீனமாகப் போவதின் காரணமாக அவர்கள் உபயோகமற்றவர்களாகப் போய்விடுகிருர்கள். காந்திஜீ அபினை ஒழிப்பதற்குக்

கிளர்ச்சி செய்யும்படி அங்குள்ள செயலாளர்களுக்குக் கட்டளை யிட்டார். அக்கிளர்ச்சியால் அபின் விற்பனை மிகவும் குறைந்து விட்டது. இதனுல் அரசாங்க ஊழியர்கள் காங்கிரஸை அடக்க வேண்டுமென்று முயற்சி செய்தார்கள். மேலே கூறியுள்ளபடி மிகவும் கடுமையான அடக்குமுறையைக் கையாண்டு வந்தார்கள்.

அங்குப் போய்ச் சேர்ந்து, அங்குள்ள நிலைமையைக் கண் டறிந்ததும், நாங்கள் மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தோம். நானும் உயர்திரு மாளவீ யஜீயும் ஆசாமைப் பார்த்தது இதுதான் முதல் முறை. அது அளவற்ற பச்சையும் பசுமையும் பூவும் பழமும் செறிந்த நாடு. அங்கே மகாநதி பிரமபுத்திராவின் காட்சியும் மலைகளின் தோற்ற மும் அளவற்ற இன்பத்தை அளிப்பனவாக இருந்தன. அடர்ந்து ஓங்கி வளர்ந்த மரங்களும் சிறிய செடிகொடிப் புதர்களும் செறிந்த காடுகள் எங்கெங்கு அழகுடன் காணப்பட்டனவோ, அவ்விடங்களில் எல்லாம் அங்குள்ள காட்டு மிருகங்களால் (அவை களில் யானைகளும் புலிகளும் முக்கியமானவை) விவசாயம் செய் வதும் பிரயாணம் செய்வதும் அபாயகரமாயிருந்தன. பச்சைப் பசுமை கண்ணுக்கு அழகாகத் தானிருந்தது. ஆனுல் அவ்விடங் களில் எல்லாம் நிலம் நச நசவென்றிருந்ததால், அம்மாகாணத் தின் பெரும்பாகம் மலேரியாக் காய்ச்சலால் பீடிக்கப்பட்டிருந்தது.

கோஹாடீயில் உயர்திரு மாளவீயஜீ அதிக ஆர்வம் நிறைந் ததும் உற்சாகம் ஊட்டுவதுமான சொற்பொழிவு ஒன்றை ஆற்றி ஞர். அபின் மறியல் வேலையைக் கைவிடாது நடத்தி வரும்படி எல்லோரையும் வேண்டிக் கொண்டார். நானும் ஏதோ பேசி னேன். ஆனுல், மாளவீயஜீ சபையில் இருக்கும்போது வேறு எவரும் என்ன பேசமுடியும்? ஆசாமைச் சுற்றி வருவதற்கு நாங்கள் எவ்வளவு காலம் ஒதுக்க முடிந்ததோ, அக்காலத்திற்குள் நாங்கள் இருவரும் சேர்ந்து அதிக இடங்களுக்குப் போக முடியா தென்பதை உணர்ந்தோம். ஆகையால் நாங்கள் இரண்டு கட்சி களாகப் பிரிந்து கொண்டோம். சில தொண்டர்கள் உயர்திரு மாளவீயஜீயுடன் ரயில் அல்லது கப்பல் போகக்கூடிய இடங் களுக்குச் சென்ருர்கள். வேறு சிலரும் நானும் மாட்டு வண்டியில் செல்ல வேண்டிய இடங்களுக்குப் போவதென்று முடிவு செய் தோம். இம்முடிவு சரியானதாகவும் என் மனத்திற்கு உவந்த தாகவும் அமைந்தது. ஏனெனில் இந்த ஏற்பாட்டின் மூலமாக நான் கிராமங்களின் நிலைமையை நன்ருகப் பார்க்க முடி யும். அது மட்டுமன்றி, மாளவீயஜீயும் தம் முதிர்ந்த

வயதில்-அப்போது அவருக்கு வயது 60க்கு மேலிருக்கும்- மாட்டு வண்டியில் பிரயாணம் செய்வதிலிருந்து தப்புவார். எங்கெங்கு அடக்கு முறைத் திகிரி மிகக் கடுமையான வேகத்துடன் சுழன்று கொண்டிருந்ததோ, அவ்விடங்களே நாங்கள் செல்வதற்குத் தக்க இடங்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன. இப்பிரயாணத்தின்போது நான் எட்டாக் கையிலிருந்த இடம் ஒன்றிற்குப் செல்ல வேண்டியிருந்தது. சிறிது தூரம் அடர்த்தியான காட்டைக் கடந்து அங்குச் செல்ல வேண்டும். ஆசாமின் கிராமங்களில் பீகாரித் தொழிலாளிகள் வேலை செய்து கொண்டிருப்பது எனக்கு வியப்பாயிருந்தது. பீகாரில் வழக்கிலிருக்கும் அதே வகை வண்டிகளில் சாமானை ஏற்றிச் செல்லும் தொழிலை அவர்கள் புரிந்து கொண்டிருந்தார்கள். கோஹாட்டியில் பிரமபுத்திராவில் நான் குளிக்கச் சென்றபோது அங்கு இரண்டு படகுகள் கட்டப்பட்டிருந்தன. அவற்றின் மாலுமிகள் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டதும், அவர்கள் சப்ராவில் வழங்கும் மொழியில் பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதை உணர்ந்தேன். அவர்களை விசாரித்ததில் அவர்கள் சப்ரா ஜில்லாவில் ஏதோ ஒரு கிராமத்தில் வசிக்கும் படகோட்டிகள் என்பதும், அவர்கள் வழக்கமாக இங்கே படகைச் செலுத்தி வந்து போய்க் கொண்டிருக்கிருர்கள் என்பதும் தெரிய வந்தன. கப்பலில் மிட்டாய் கடை வைத்திருந்தவனும் சப்ரா ஜில்லாவில் வசிப்பவன் தான்.

நாங்கள் கோஹாடியிலிருந்து 14-15 கல் வரையில் லாரியில் சென்ருேம். அங்கிருந்து மாட்டு வண்டியில் சுமார் இருபது கல் மேலும் செல்ல வேண்டிருந்தது. காட்டின் வழியாகப் பாதை சென்றது. அந்த இடத்தின் பெயர் இப்போது நினைவில்லை. அந்த இடத்திற்கு நாங்கள் பகல் 12 மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். விரைவில் சென்ருல் காட்டு வழியைப் பெரும்பாலும் பகல் பொழுதிலேயே கடந்து விடலாம் என்று எண்ணினேம். அங்கே இரண்டு மாட்டு வண்டிகளை வாடகைக்கு அமர்த்திக் கொண்டோம். ஆனல் வண்டிக்காரர்கள் ஏதாவது சாக்குப் போக்கைச் சொல்லி இதோ அதோ என்று ஐந்து மணி வரையில் புறப்படவில்லை. பிறகு விசாரித்ததின் பேரில், கடுமையான வெய்யிலுக்குப் பயந்து மாட்டு வண்டிகள் பெரும்பாலும் இரவில் தான் போகும் என்பது தெரிய வந்தது. ஒரு வண்டியில் நானும் ஒரு தொண்டரும் உட்கார்ந்து கொண்டோம். மற்ருென்றில் இரண்டு மூன்று தொண்டர்கள் ஏறிக் கொண்டார்கள். எங்கள் கையில் உண்பதற்கு ஒன்றும் இல்லை. இரவு எட்டு மணிக்கு

ஏதோ ஓர் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். அது ஒரு வண்டிப் பேட்டைப் போலத் தோன்றியது. அநேக வண்டிகள் அங்கே கிடந்தன. தேடி அலைந்த பின் சிறிதளவு வறுத்த கொண்டைக் கடலைதான் கிடைத்தது. அதை நாங்கள் வாங்கிக் கொண்டோம். வண்டிகள் மீண்டும் புறப்பட்டன. கடலையை மென்று கொண்டே நான் வண்டியில் தூங்கி விட்டேன். சில மணி நேரத்திற்குப் பின் யாரோ கூச்சல் போடுவதைக் கேட்டதும் தூக்கம் கலைந்து விட்டது. என்னுடன் இருந்த தொண்டர் ஒரு மண்ணெண்ணெய்த் தகரத்தை வைத்துக் கொண்டு அதைப் பலமாக அடித்துக் கொண்டிருப்பதையும், மேலும் உரக்கப் பாடிக் கொண்டு கூச்சல் போட்டுக் கொண்டிருப்பதையும் கண்டேன். வண்டிக்காரனும் கூச்சலிட்டுக் கொண்டு மாடுகளை அதட்டி விரட்டிக் கொண்டிருந்தான். இரண்டு வண்டிகளிலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. பாதை மிகவும் குறுகிவிட்டது. இருபக்கங்களிலும் பெரிய பெரிய மரங்கள் நிறைந்த அடர்த்தியான காடுகள் இருந்தன. அந்த இடம் ஒரு கணவாய். அதன் இரு பக்கங்களிலும் மலைகளிருந்தன. இரவில் நான் வண்டிக்குள் இருந்ததால் அவை தெரியவில்லை. அவற்றை நான் திரும்பி வரும்போதுதான் பார்த்தேன். விசாரித்ததின் பேரில் அந்த இடத்தில் காட்டு விலங்குகள்—முக்கியமாகப் புலிகள்—அடிக்கடி வருவது வழக்கம் என்பது தெரிய வந்தது. அவற்றை விரட்டுவதற்காகவே தொண்டரும் வண்டிக்காரனும் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். அச் சத்தத்தைக் கேட்டு அவ்விலங்குகள் நெருங்கி வருவதில்லை என்று அவர்கள் கூறினுர்கள். பாதையில் நின்ருலும்கூட அவை அப்பால் போய்விடுமாம். ஆனுல், சில விலங்குகள் வண்டியில் கட்டியிருக்கும் மாடுகளைக் கூட இழுத்துச் செல்லத் துணிச்சல் கொள்ளுமாம். இதே இடத்தில் அதுபோல ஒரு முறை நடந்து விட்டதாம். இதற்கு பின் எனக்குத் தூக்கம் வரவில்லை.

நாங்கள் அந்தப் பயங்கரமான காட்டைக் கடந்து, விலங்குகளின் அச்சம் நீங்கியபின்தான் கூச்சலிடுவது ஓய்ந்தது. நாங்கள் போய்ச் சேர வேண்டிய இடத்திற்கு அதிகாலையிலேயே போய்ச் சேர்ந்து விட்டோம். அங்கிருந்த மக்கள் மிகவும் பயந்து போயிருந்தார்கள். காங்கிரஸின் சிறிய வீடும் கொளுத்தப்பட்டுப் போய்விட்டது. காங்கிரஸின் வேலையைச் செய்பவர்கள் எல்லாரும் கைது செய்யப்பட்டுப் விட்டார்கள். போலீஸ் தானுவோ அருகிலேயே இருந்தது. ஆகையால் இப்போது மக்கள் அஞ்சிக் கொண்டு காங்கிரஸ் வேலை எல்லாவற்றையும் விட்டு விட்டார்கள்.

நாங்கள் போய்ச் சேர்ந்ததும் அவர்களுக்குத் தைரியம் வந்துவிட்டது. எல்லாரும் வந்து கூடினூர்கள். மேலும் அங்கே ஒரு கூட்டம் நிகழ்த்தப்படும் என்று அக்கம்பக்கத்துக் கிராமங்களுக்கும் செய்தி அனுப்பப்பட்டது. இதற்கிடையில் நாங்கள் அக்கிராமத்து மக்களிடமிருந்து அடக்குமுறையின் நிலைமையை விசாரித்து அறிந்து கொண்டோம். மத்தியானத்திற்குள் மக்கள் வந்து கூடி விட்டார்கள். நூறு நூற்றைம்பது பேர் கொண்ட நல்ல சபை கூடிவிட்டது. மக்களுக்குத் தைரியம் பெருகிவிட்டதென்பதைக் கண்டோம். பிறகு காங்கிரஸ் வீட்டைக் கட்டுவதாகவும், அபினை ஒழிக்கும் வேலையைத் தொடர்ந்து நடத்துவதாகவும் மக்கள் வாக்களித்தார்கள். போலீசார் அங்கே நின்று கொண்டிருந்தார்களாயினும், மக்கள் கூட்டத்தில் ஒளிவு மறைவின்றி கலந்து கொண்டார்கள்.

அங்கிருந்து சுமார் மூன்று மணிக்கு நாங்கள் திரும்பிப் புறப்பட்டோம். முன்னுள் இரவு தகரத்தை அடிக்க வேண்டி வந்த அந்தக் கடத்தற்கரிய இடத்தை வெளிச்சம் இருக்கும் போதே கடந்துவிட வேண்டுமென்று திட்டமிட்டிருந்தோம். அப்படியே செய்தோம். அந்த இடத்தை நெருங்கி வந்து கொண்டிருக்கும்போதே சூரியன் மறைந்து விட்டது. ஆனுல் இன்னும் இருட்டாகவில்லை. நான் என் நண்பர்களுடன் நடந்து சென்று கொண்டிருந்தேன். இரண்டு வண்டிகளும் கூடவே வந்து கொண்டிருந்தன. இதனிடையில் மலைப் புறத்திலிருந்து புலிகளின் முழக்கம் காதில் பட்டது. அந்த ஒலி இரண்டு பக்கங்களில் இருந்தும் வருவது போலத் தோன்றியது. ஆனுல் ஒரு புறத்திலிருந்து மட்டுமே வந்திருக்கலாம். அந்த ஜனநடமாட்டமில்லாத காடுகள் செறிந்த மலையில் எதிரொலித்துப் பல புலிகளின் முழக்கம் போலத் தோன்றியிருக்கலாம். ஆனுல் புலி எங்கும் தென்படவில்லை. அவ்வொலி மிகச் சமீபத்திலிருந்து வரவில்லை. தொலைவிலிருந்து வந்து கொண்டிருந்தது போலத்தான் தோன்றியது. மிருகக் காட்சிச் சாலையில் அன்றி வேறெங்கும் புலியின் முழக்கத்தை நான் இதற்குமுன் கேட்டதில்லை.

இரவு முழுவதும் வண்டியில் சென்று, இன்னும் சிறிதளவு இருள் இருக்கும்போதே மோட்டார் லாரி புறப்படும் இடத்திற்கு வந்து சேர்ந்தோம். சுமார் பத்து மணிக்குக் கோஹாடிக்குத் திரும்பிப் போய்ச் சேர்ந்தோம். பிறகு, உயர்திரு மாளவீயஜீயுடன் சேர்ந்து வேறு சில இடங்களையும் சுற்றிப் பார்த்து வேலையை முடித்துக் கொண்டு ஆசாமை விட்டுப் புறப்பட்டோம்.

இவ்வளவு தளர்வுற்ற வயதிலும் மாளவீயஜீ மக்களை எழுச்சி செய்வதிலும், அவர்களுக்குத் தைரியம் ஊட்டுவதிலும் எவ்வளவு சித்தி பெற்ருர் என்பதைக் கண்டேன். அவர் சொல்லில் எப் போதுமே வன்மை உண்டு. அங்குள்ள நிலைமையைக் கண்டு அது மேலும் உக்கிரம் கொண்டது. வசதிகள் குறைவாயிருந்தும்கூட அவருடைய யாத்திரை குறைவு படாமல் நிறைவேறிற்று.

என்னுடைய சொந்த மாகாணத்தில் சந்தால் பர்கனுவி லிருந்து—முக்கியமாகப் பாகுரிலிருந்து-மிகவும் கெட்ட செய்தி கிடைத்தது. நான் அங்கும் சென்றேன். அங்கே மக்கள் மிகவும் அஞ்சி ஒடுங்கியிருந்ததால், எங்களைச் சந்திக்கக்கூட எவரும் வரவில்லை. நாங்கள் இரவு முழுவதையும் ரயிலடிப் பிளாட்பாரத் தில் தூங்கிக் கழித்தோம். காலையில் விழித்ததும், என் செருப் புக்களில் ஒன்றை நாய் தூக்கிக் கொண்டு போய்விட்டது என் பதை அறிந்தேன். அங்கேயே காலைக் கடனை முடித்துக்கொண்ட பிறகு ஊருக்குள்ளே போவதைப் பற்றி யோசித்தோம். சிறிது தூரம் சென்றதும், நான் வக்கீல் தொழில் செய்து கொண்டிருந்த காலத்தில் எனக்குப் பழக்கமான ஒரு கட்சிக்காரரைச் சந்தித் தோம். நான் ஸ்டேஷனில் இருக்கிறேன் என்பதையும் என்னை விசாரிப்பார் எவரும் இல்லை என்பதையும் கேள்விப்பட்டு அவர் என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துச் செல்ல வந்து கொண்டிருந் தார். அவருடைய வீட்டிற்கு நாங்கள் சென்ருேம். குளியல் முதலியவை முடித்துக் கொண்டு சிறைச்சாலைக்குச் சென்ருேம். அங்கே நாங்கள் வருவதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பு தான் ஐந்தாறு செயலாளர்கள் சிறை கொள்ளப்பட்டு அடைக்கப் பட்டிருந்தார்கள். அவர்களை சுமார் 12 மணிக்குத்தான் பார்க்க முடிந்தது. செருப்போ இல்லை. வெயில் கடுமையாக எரித்துக் கொண்டிருந்தது. சாலையின் பெரிய சரளைக்கற்கள் மிகவும் சூடேறி விட்டன. அங்கிருந்து வெறுங்காலால் நடந்து திரும்பி வந்த தால் பாதங்களில் கொப்பளங்கள் கிளம்பி விட்டன. எப்படியோ, தங்கியிருந்த இடத்திற்கு வந்து சேர்ந்து, கயிற்ருல் பின்னப்பட்ட அடிப்பாகத்தையுடைய செருப்பை வரவழைத்தேன். மாலையில் ஒரு சாலையின் ஓரத்திலேயே கூட்டம் நடந்தது. அதற்குச் சில பேர் வந்திருந்தார்கள். ஆயினும், பீதி அதிகமாயிருந்தது. அங்கும் நாங்கள் சென்றதன்பேரில் மக்களுக்குச் சிறிது தைரியம் பிறந்தது. கைது செய்யப்பட்ட செயலாளர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களுடைய குடும்பத்தாருக்கு ஆறுதல் கூறித் திரும்பி வந்தோம்.

நாங்கள் தூம்காவிற்கும் சென்ருேம். ஆனல் அங்கும் எங்களை உபசரிப்பதற்கு எவரும் கிடைக்கவில்லை. நாங்கள் ஒரு சத்திரத்திற்குச் சென்று அங்கே தங்கினேம். அங்கே பலர் வந்து எங்களைச் சந்தித்தார்கள். அவர்களுள் அவ்வூர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரும் ஒருவர். அவருக்குப் போஜ்புரி மொழி தான் வரும். நிமிஷத்திற்கு ஒருமுறை "ஐய் சிவ்" என்ருவது "பம், பம்" என்ருவது சொல்லிக் கொண்டே இருந்தார். அவர் மிகவும் நல்லதனமாகப் பேசிக்கொண்டிருந்தாராயினும், அங்கே எங்கள் வேலை முடிந்துவிட்டதால் இனி நாங்கள் அங்கே இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்ற கருத்துப் புலப்படப் பேசினர். மேலும் எங்களை அங்கிருந்து போய்விடும்படி உத்தரவு ஆகியிருக் கிறது என்றும் கடைசியில் கூறினர். அதைக் காட்டும்படி கேட்டபோது, அவரால் காட்ட முடியவில்லை. அதை எடுத்து வரச் சென்றவர் திரும்பிவரவே இல்லை. நாங்கள் அங்கே அவருக்காகக் காத்துக் கொண்டிருந்தோம். என்னுடைய வேலைத் திட்டப்படி அங்கே அதிக காலம் தங்குவதாக இல்லாத தால், இரவு வண்டியிலேயே திரும்பி வந்துவிட்டேன்.

அதே ஜில்லாவில் மற்ருேர் இடத்திற்குச் சில தலைவர்கள் சென்ருர்கள். அங்கிருந்தவர்களில் ஒருவர் அவர்களை மிகவும் சிறப்புடன் வரவேற்ருர். அவர்கள் தங்கியிருந்த இடத்தில் ஓர் ஆள் அவர்களுக்கு விசிறி வீசிக் கொண்டிருந்தான். மக்களிடை யில் அச்சம் மிகவும் குடிகொண்டிருந்தது. ஆயினும் அந்த ஆள் அஞ்சவில்லை. அத்தலைவர்கள் திரும்பிச் சென்றபின் அவர் களுக்கு விசிறி வீசிக்கொண்டிருந்த ஏழையை அவனுடைய நிலத்திலிருந்து வெளியேற்றி விட்டார்கள் என்ற செய்தி கிடைத் தது. அங்குள்ள நிலமெல்லாம் அரசாங்கத்தைச் சேர்ந்தது என்று கருதப்பட்டு வந்தது. ஒரு குடியானவனை அவனுடைய நிலத்திலிருந்து அப்புறப்படுத்துவதை அங்கே "வெளியேற்றல்" என்று கூறி வந்தார்கள். அந்த ஆளுக்கு நிலம் மீண்டும் கிடைக்க வேண்டுமென்று நாங்கள் எவ்வளவோ முயற்சி செய்தும் பலிக்கவில்லை.

சந்தால் பர்கனுவில் நடந்த அடாவடிகளைப் பற்றி நான் நீண்டதோர் அறிக்கையைத் தயாரித்தேன். அது அந்தக் காலத்துப் பத்திரிகைகளில், முக்கியமாகச் "செர்ச் லைட்"டில் அச்சிடப்பட்டது.

# 47. கவுன்ஸில் நுழைதலைப் பற்றி வாக்குவாதம்

சத்தியாக்கிரக விசாரணைக் குழுவைப் பற்றி மேலே கூறியுள்ளேன். அக்குழு ஒரு கேள்வி வரிசையைப் புனைந்து காங்கிரஸ் குழுக்களுக்கு எல்லாம் அனுப்பி வைத்தது. அவற்றை விடை அளிக்கும்படி கேட்டுக்கொண்டது. அதற்குப் பிறகு எல்லா மாகாணங்களுக்கும் சென்று அங்குள்ள செயலாளர்களைக் கண்டு பேசி அவர்களுடைய அபிப்பிராயங்களைத் திரட்டுவதாக முடிவு செய்தது. எனக்கு இது சரியாகத் தோன்றவில்லை. ஏனெனில் இது அரசாங்கக் குழுக்களின் வழக்கம். அவை பெரும்பாலும் அறிக்கை வெளியிடுவதைத் தவிர—அதுவும் நெடுங்காலம் கழிந்துதான்—வேறு எதுவும் செய்ய விரும்புவதில்லை. குழுவின் வேலை மேலே செல்லச் செல்ல அதில் இரண்டு அபிப்பிராயங்கள் நிலவியதாகத் தெரிய வந்தது. ஒரு கட்சி காந்திஜீ வகுத்த ஆக்க வேலையை வற்புறுத்தி, நாட்டைச் சத்தியாக்கிரகத்திற்காகத் தயார் செய்ய விரும்பியது. மற்றொரு கட்சி நாடானது சத்தியாக்கிரகத்திற்குத் தயாராக இல்லை என்பதைக் கண்டு, கவுன்ஸிலுக்குப் போக வேண்டுமென்றும், மேலும் 1920இல் கல்கத்தாவின் விசேஷக் கூட்டத்தில் கவுன்ஸிலைப் புறக்கணிப்பதைப் பற்றி நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை மாற்ற வேண்டும் என்றும் கருத்துக் கொண்டிருந்தது. காந்திஜீயின் வேலைத் திட்டத்தை அப்படியே மாற்றாமல் வைத்திருக்க வேண்டுமென்ற கட்சியில்தான் அதிகப் பேர்கள் இருந்ததாகத் தோன்றினாலும் கூடக் காங்கிரஸின் செயலாளர்களின் மத்தியிலும் நிறைய கருத்து மாறுபாடு காணப்பட்டது. சத்தியாக்கிரக விசாரணைக் குழு எல்லா மாகாணங்களின் விடைகளையும், செயலாளர்களின் அபிப்பிராயங்களையும் சேகரித்துவிட்டது. இது சம்பந்தமாக அக்குழுவின் உறுப்பினர்கள் பட்னாவுக்கும் வந்தார்கள். மற்றக் காங்கிரஸ்காரர்கள் மட்டுமன்றி நானும் கடைசியில் அபிப்பிராயம் அளிக்க வேண்டி வந்தது. நான் காந்திஜீயின் வேலைத் திட்டத்தையே முழுவதும் ஆதரிப்பவன் ஆதலால் அதையே என் வாக்கு மூலத்திலும் பலமாக ஆதரித்தேன்.

இறுதியில் குழுவின் அறிக்கை வெளிவந்தபோது, அதன் ஆறு உறுப்பினர்களில் மூவர் ஒரு பக்கத்திலும் மற்ற மூவர்

வேறு பக்கத்திலும் இருப்பதாகத் தெரியவந்தது! இதனுல் கவுன் ஸிலைப் பற்றி அக்குழு சிபார்சு எதுவும் செய்யவில்லை. உறுப் பினர்கள் அனைவரின் அபிப்பிராயங்களை எடுத்துரைத்துவிட்டு அக்குழு தன் வேலையை முடித்துவிட்டதாகத் திருப்தி கொண் டிருந்தது. அறிக்கை வெளிவருவதற்கு முன்னிருந்தே கடுமை யான கருத்து வேற்றுமை நிலவி வந்தது. அறிக்கைக்குப் பிறகோ அது மேலும் உக்கிரமாகிவிட்டது. செய்தித்தாள்களி லும் காங்கிரஸ் வட்டாரத்திலும் கவுன்ஸிலுக்குப் போவது போகா ததைப் பற்றி வாதம் நடக்கத் தொடங்கியது. கவுன்ஸிலில் நுழைவதை ஆதரித்தவர்கள் மாறுதல் வாதிகள் (புரோ சேஞ்சர்ஸ்) என்று அழைக்கப்பட்டார்கள். பழைய வேலைத் திட்டத்தில் மாறுதல் எதையும் வேண்டாதவர்கள்—அதாவது கவுன்ஸிலில் புகுதலுக்கு விரோதமாக இருந்தவர்கள்—மாருமை வாதிகள் (நோ சேஞ்சர்ஸ்) என்று அழைக்கப்பட்டார்கள்.

நாளடைவில், பெரிய பெரிய தலைவர்களும் தத்தம் கெடுவை முடித்துக் கொண்டு சிறையிலிருந்து விடுதலையாகி வெளியே வரலாயினர். அவர்கள் எல்லாருக்கும் முதலாகத் தேசபந்து தாஸின் கெடுதான் முடிந்தது. லாலாஜீக்கு விடுதலை ஆக இன்னும் நெடுநாள் இருந்தது. அவர் எப்போது வெளியே வருவார் என்று எதிர்பார்க்க முடியவில்லை. பண்டித் மோதிலால் ஜீயின் எண்ணம் முதலில் சரியாகத் தெரியவில்லை. அவரும் காந்திஜீயின் வேலைத்திட்டத்தையே ஏற்ருர் என்று தோன்றியது. ஆனுல், தேசபந்து தாஸ் விடுதலையானவுடன் பண்டித்ஜீயின் அபிப்பிராயமும் கவுன்ஸிலுக்குச் செல்வதின் சார்பாகத்தான் இருந்தது என்பது தெளிவாயிற்று. முன்னம் போட்டிருந்த வேலைத் திட்டத்தை ஆதரித்தவர்களுள் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரி யார், டாக்டர் அன்சாரி, ஸ்ரீ வல்லபபாயீ படேல், சேட் ஜம்நாலால் பஜாஜ் முதலியவர்கள் இருந்தார்கள். குழுவின் அறிக்கை வெளிவந்தபின், தேசபந்து தாஸ் தம் அபிப்பிராயத்தை வெளி யிட்டார். அது கவுன்ஸிலில் நுழைவதின் சார்பாக இருந்தது. அவர் அகமதாபாத் காங்கிரஸுக்கு தலைவராக நியமனம் செய்யப் பட்டிருந்தார். ஆனுல் அவர் சிறை கொள்ளப்பட்டுவிட்டதால் அவரால் அகமதாபாத்தில் தலைமை வகிக்க முடியவில்லை. ஆயினும் அவர் விடுதலையாகி வெளியே வந்ததும், ஒழுங்கு முறைப்படி அவரே அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவுக்கும் தலைவராகிவிட்டார். நாடானது அவரைக் கயா பேரவைக்குத் தலைவராக மீண்டும் தேர்ந்தெடுத்தது.

அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கை ஒன்று கல்கத்தாவில் நடந்தது. சத்தியாக்கிரக விசாரணைக் குழுவின் அறிக்கை அதனுல் ஆலோசனை செய்யப்படுவதற்காக அதன் முன் கொண்டுவரப்பட்டது. மூன்று நான்கு நாட்கள் வரையில் வாக்குவாதம் நடந்து வந்தது. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் தாம் மாருமை வாதிகளாகிய எங்களுக்கெல்லாம் தலைவராக இருந்தார். நானும் அங்கு நடந்த வாக்குவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டி வந்தது. கவுன்ஸில் நுழைவதைத் தவிர அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ள மற்ற விஷயங்களில் ஏதாவது விட்டுப் பிடித்துச் சில மாறுதல்களைச் செய்து எப்படியாவது ஓர் ஒப்பந்தத்தைச் செய்து முடிப்பது நன்றெனக் கருதி நாங்கள் அப்படியே முயற்சி செய்து வந்தோம். ஆனுல் நிறைய வாக்குவாதம் செய்யப்பட்டபின் இந்த விஷயம் கயா காங்கிரஸுக்கு ஒத்திப் போடப்பட்டது.

# 48. குருதோட்டமும் முல்தானும்

இதே ஆண்டில், ஆகஸ்டு செப்டம்பரில் இரண்டு பெரிய கேடுகள் விளைந்தன. அவற்றின் வாடை இந்தியாவின் அரசியல் உலகம் முழுவதிலும் பரந்து படிந்தது. முதல் சம்பவம் குருதோட்டத்தைப் பற்றியது. சிறிது காலத்திற்கு முன்னிருந்தே சீக்கியர்களிடையில் தம்முடைய குருதுவாராக்களைச் சீர்திருத்த வேண்டும் என்ற கிளர்ச்சி நடந்து வந்தது. அவர்களுடைய குருதுவாராக்கள் சமய சம்பந்தப்பட்ட நிலையங்கள் ஆகும். அவை ஏதாவதொரு சமய நிகழ்ச்சியுடன் தொடர்பு கொண்டிருக்கும். முக்கியமாக குருதுவாராக்கள் ஒவ்வொன்றும் எவராவது ஒரு குருவின் வாழ்க்கையின் நிகழ்ச்சிகளில் ஏதாவது ஒன்றுடன் தொடர்பு கொண்டிருக்கும். சீக்கியர் தம் மதத்திற்காக எவ்வளவோ கஷ்டங்களையும் கொடுமைகளையும் சகித்து வந்திருக்கிருர்கள் என்பதற்குச் சரித்திரம் சாட்சி அளிக்கிறது. ஆகையால் அவர்களுக்குத் தம் குருதுவாராக்களின் மேல் அதிகப் பெருமையும் பக்தியும் உண்டு. அக் குருதுவாராக்களுக்குப் பொது மக்களால் அளிக்கப்பட்ட சொத்துக்கள் நிறைய உண்டு. அம் மதத்தினரின் தொண்டிற்காகவே அவை அளிக்கப்பட்டன. குருதுவாராக்களை நடத்துவதற்காக நியமிக்கப்பட்ட தொண்டர்கள் அச்

சொத்துக்களைக் கண்காணித்து வந்தார்கள். எங்கும் வழக்கமாக நடப்பது போலவே குருதுவாராக்களும் மகந்துகள் வசம்தாம் இருந்தன. பெரும்பாலான மகந்துகள் கெட்ட நடத்தையுடைய வீணர்களாக இருந்தார்கள். இதனால் சீக்கியர்களுக்குள் அகாலி கட்சி என்ற பெயர் கொண்ட கட்சியைச் சேர்ந்தவர்கள் குருதுவாராக்களைச் சீர்திருத்தம் செய்வதற்காக மகந்துகளைக் கட்டுப் படுத்த வேண்டுமென்று வற்புறுத்தி வந்தார்கள்.

மெல்ல மெல்ல இக்கிளர்ச்சி வலிவுற்றது. குருத்துவாராக்களின் பரிபாலனத்தைத் தம் கைவசமாக்கிக் கொள்ளுவதற்காகச் "சிரோமணி குருதுவாரா நடாத்துக் குழு" என்று ஒரு குழுவை அகாலி கட்சிக்காரர்கள் அமைத்தார்கள். பல மகந்துகள் சிரோமணி குழுவின் பேச்சை ஏற்றுக் கொண்டு தம்முடைய காரியங்களை அதன் கையில் ஒப்படைத்து விட்டார்கள். அரசாங்கத்தாரும் குருதுவாராக்களின் நிர்வாகத்தைச் சட்டத்திற்கு உட்பட்டதாகச் செய்ய வேண்டுமென்றும் அதற்காக ஒரு சட்டத்தை அமைத்துக் குருதுவாராக்களின் நடவடிக்கைகளை அக்குழுக்களிடம் ஒப்படைக்க வேண்டுமென்றும் எண்ணி வந்தார்கள். ஆனால் இதுவரையில் ஒரு முடிவுக்கும்வரவில்லை. அரசாங்கம் தயங்கிக் கொண்டிருந்தது. இதனிடையில் சில மகந்துகள் அகாலிகளின் மேல் கோபம் மூண்டு அவர்களைத் துன்புறுத்தலானார்கள். ஒரு குருதுவாராவின் மகந்து பல அகாலிகளைச் சித்திரவதை செய்து கொன்று கொளுத்தி விட்டார். இச்சம்பவம் சிறிது முன்புதான் நான்கானா—சாஹப்—குருதுவாராவில் நடந்திருந்தது. அதனால் அகாலிகளிடையில் கோபமும் ஆத்திரமும் பொங்கி எழுந்தன. அவர்கள் காந்திஜீ காட்டிய அஹிம்சா கொள்கையைக் கடைப் பிடித்தார்கள். குருதுவாராக்களை அஹிம்சாமயமான முறையிலே கைப்பற்ற முடிவு செய்தார்கள். அஹிம்சா நெறி சீக்கியருக்குப் புதியது அன்று. முசல்மானியர் காலத்தில் அவர்கள் இக்கொள்கையைக் கடைபிடித்து எவ்வளவோ துன்பத்தைச் சகித்து வந்திருக்கிறார்கள்.

"குரு பாக்" என்ற பெயர் கொண்ட ஓர் இடம் அம்ருத்சாரிலிருந்து சிறிது தொலைவில் இருக்கிறது. அங்கே ஒரு மகந்தின் கைவசமிருந்த குருதுவாரா ஒன்று இருந்தது. அகாலிகள் அந்தக் குருதுவாராவைத் தம் கைவசப்படுத்திக் கொள்ள விரும்பினார்கள். முதலில் மகந்து அவர்களுடைய பேச்சை ஏற்றுக் கொண்டார். குருதுவாரா அகாலிகளின் கையிலிருப்பது என்றும், மடம் மகந்துவின் கையில் இருப்பது என்றும் தம்முள் முடிவு செய்து

கொண்டார்கள். அங்கே வேல மரங்கள் காடாக வளர்ந்திருந்த நிலம் ஒன்றும் இருந்தது. குருத்துவாரா சிரோமணி குழுவால் நடத்தப்பட்டு வந்தது. சிறிது காலத்திற்குப் பின் அவர்களுள் சண்டை வந்துவிட்டது. கிரந்து சாஹபுக்குத் தொண்டு புரிவதற்காக ஓர் ஊழியர் சிரோமணி குழுவால் அமர்த்தப்பட்டிருந்தார். குருதுவாராவிலும் சீக்கியர்களின் சத்சங்கத்திலும் வழக்கமாக அன்னதானம் நடைபெறும். அதுபோலவே இங்கும் அன்னதானம் நடந்து வந்தது. அதன் சமையலுக்கு வேண்டிய விறகுக்காக அவ்வூழியர் அந்த வேலங் காட்டிலிருந்து சில மரங்களை வெட்டிக் கொண்டு வந்தார். மகந்து அதைத் தடுக்கப் போலீசாரின் துணையை நாடினர். அகாலிகளை அங்கே போகக் கூடாதென்று அரசாங்கத்தார் தடை உத்தரவு போட்டார்கள். அதன் மேல் அகாலிகள் சத்தியாக்கிரகம் செய்வதென்று முடிவு செய்து அப்படியே செய்யத் தொடங்கினர்கள். அவர்கள் அந்தக் காட்டுக்கு விறகு வெட்டுவதற்காகச் செல்வார்கள். போலீசார் அவர்களைத் தடுப்பார்கள். அவர்கள் அங்குச் செல்வதை நிறுத்தாத போது அடித்து உதைத்து அங்கிருந்து அவர்களை அப்புறப் படுத்தி மட்டும் வந்தார்கள். அங்கே செல்லும் ஒவ்வொரு அகாலியும் நையப்புடைக்கப்பட்டார். சில நாட்களுக்குப் பிறகு, அங்குச் செல்லும் வழியில், காட்டிலிருந்து சிறிது தொலைவுக்கு முன்பாகவே, அரசாங்கத்தார் தடங்கல் ஒன்றை அமைத்து விட்டார்கள். இதனால் அகாலிகளுக்கு அதிக ஆத்திரம் உண்டாயிற்று. அவர்கள் அம்ருத்சாரின் குருதுவாராவுக்குச் சென்று அக்காட்டிற்கு அஹிம்சா முறையில் செல்வோம் என்று சபதம் பூண்டார்கள். வழி திறந்திருந்த வரையில், அவர்கள் குருதுவாராவுக்கு வந்து தங்கி, அங்கிருந்து காட்டிற்குச் சென்று வந்தார்கள். முன் கூறியபடி அடிக்கப்பட்டு அகற்றப்பட்டு வந்தார்கள். வழி அடைக்கப்பட்டுப் போனதும், அவர்களுடைய "ஜதா" (கோஷ்டி) சாலையிலேயே தடுக்கப்பட்டுப் புடைக்கப்பட்டு வந்தது. அடிபட்டு அவர்கள் தம் நினைவு கூட இழந்து விடுவார்கள். அவ்வளவு கொடுமையாக அடிக்கப்பட்டு வந்தார்கள். அந்த நிலையில் ஜனங்கள் அவர்களை அங்கிருந்து தூக்கிச் சென்று அருகில் அமைக்கப்பட்டிருந்த மருத்துவச் சாலைக்குக் கொண்டு போவார்கள். இவ்வண்ணமாக அங்குச் சத்தியாக்கிரகம் நடந்து வந்தது.

இச்சத்தியாகிரகத்தின் புகழ் நாடெங்கும் பரவியது. நெடுந் தொலைவிலிருந்து மக்கள் அங்கு நடந்து வந்த சந்தியாகிரகத்தைப் பார்க்க வரத் தொடங்கினர்கள். பண்டித் மாளவீயஜியும்

ஹகீம் சாஹபும் மற்றவர்களும் கூடச் சென்ருர்கள். நானும் சென்றேன். அம்ருத்சாரில் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அங்கிருந்து நாங்கள் தோட்டத்தைப் பார்க்கச் சென்ரேம். நாங்கள் கண்ட காட்சியை என்றுமே மறக்க முடியாது. சில நல்ல பலசாலிகளான சீக்கிய இளைஞர்கள் கைகோத்துக் கொண்டு முன்னேறினர்கள். அந்தப் பக்கத்திலிருந்து இரும்பு அல்லது பித்தளைப் பூண் போடப்பட்ட தடிகளை ஏந்திக்கொண்டு போலீஸ்காரர்கள் ஒரு வெள்ளைக்கார அதிகாரியுடன் எதிர் கொண்டு வந்தார்கள். அந்த இளைஞர்களை அவர்கள் நிறுத்தினர் கள். அவ்விளைஞர்கள் அங்கேயே உட்கார்ந்து கொண்டார்கள். அதன்மேல் அவர்களைப் போலீசார் தடிகளால் நன்ருக அடித்தார் கள். அவர்கள் எழுந்து நிற்க முயன்ருர்கள். ஆனல் மீண்டும் அடிக்கப்பட்டு வீழ்த்தப்பட்டார்கள். அவர்கள் நினைவு இழக்கும் வரையில் இவ்வண்ணமாக நடந்து கொண்டிருந்தது. அவர்கள் நினைவிழந்து விழுந்த பிறகு அவர்களைச் செஞ்சிலுவை வண்டி களில் போட்டுக் கொண்டு வேறு சில போலீசார் எடுத்துச் செல் வார்கள். சில சமயங்களில் அவர்களுடைய தலை மயிரைப் பற்றி இழுத்தும் செல்வார்கள். இதைப் பார்ப்பதற்கு மக்கள் கூடியிருப் பார்கள். ஆனல் ஒருவர் கூட கைதூக்க மாட்டார்கள். இவ் விதமாக அடிக்கப்பட்டவர்கள் அடியைத் தடுப்பதற்காகக்கூட கையைத் தூக்குவதில்லை. இந்த அஹிம்சா மயமான சத்தியாக் கிரகம் நாடு முழுவதுக்கும் மிகச் சிறந்த உதாரணமாக அமைந் தது. நாடெங்கும் குரு தோட்டத்தின் செய்திகள் மிக்க ஆவலுடன் படிக்கப்பட்டு வந்தன. எத்தனையோ பேர் நையப் புடைக்கப் பட்டார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் சிறை கொள்ளப்பட்டார் கள். இச் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்திருந்த அகாலிகளில் பலர் ஜெர்மன் போரின்போது பிரிட்டிஷாருடன் தோளுக்குத் தோள் நின்று மிக்க வீரத்துடன் போர் புரிந்திருந்தார்கள். "மகந்திற்குச் சட்டப்படி உரிமையான நிலத்தை நாங்கள் எப்படிப் பிடுங்க முடியும்?" என்றும், "மேலும் மகந்து தம் உரிமையைக் காப்ப தற்காக அரசாங்கத்தின் உதவியை நாடியிருக்கும்போது நாங்கள் எப்படி அந்நிலத்தைப் பிடுங்க முடியும்?" என்றும் அரசாங்கத் தார் கூறிவந்தார்கள். இவ்வண்ணமாகச் சட்டத்தின் தர்மசங்க டத்தால் எவ்வளவோ பேர் சிறைக்குச் சென்ருர்கள். அதே கார ணத்தால் எத்தனையோ பேர் மிகவும் ஈனத்தனமாக அடித்து உதைக்கப்பட்டு வந்தார்கள். போலீஸ் சூப்பெரிண்டெண்டு ஒரு வர், படையில் பல்வேறு ஆயுதங்களைப் பிரயோகிக்க அளிக்கப்

பட்டு வரும் பயிற்சியைப் போலவே போலீசாருக்குத் தடி வீசு வதற்கும் பயிற்சி அளித்து வந்தார். ஒரு ஹெட்கான்ஸ் டபிளோ சார்ஜெண்டோ ஆணையிட்டபடி போலீசார் சத்தியாக் கிரகிகளைத் தடியால் முதுகிலும் தலையிலும் அடிப்பார்கள். அல் லது இரண்டு தொடைகளுக்கும் இடையில் தடியைச் செலுத்தி விரையில் அடிப்பார்கள். இவ்விதமாக அதிகாரி ஆணையிட்ட முறைப்படி அடி கொடுக்கப்பட்டு வந்தது. சீக்கியரின் துணிச் சலும் துன்பத்தைத் தாங்கும் ஆற்றலும் அற்புதமாக இருந்தன.

நாங்கள் அங்கே சென்று நடந்தவற்றை யெல்லாம் எங்கள் கண்களாலேயே கண்டதிலிருந்து உண்மையான சத்தியாக் கிரகத்தை நடத்த முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்குப் பிறந்து விட்டது. அந்த ஆற்றலைத் திடசாலிகளான இளைஞர்கள் தம்மைக் காத்துக் கொள்ளக் கையைக் கூடத் தூக்காமல் காட்ட முடியுமானால் அதை வேறு எவ்வித ஆற்றலும் அடக்க முடியாது என்பதை உணர்ந்தோம்.

இந்தச் சண்டையைத் தீர்த்து வைக்க ஏதாவது வழி தேட வேண்டும் என்று அரசாங்கத்தார் முயன்று வந்தார்கள். ஒரு வழியும் கிடைத்தது. பஞ்சாபில் செல்வாக்கு வாய்ந்த சர் கங்கா ராம் என்பவர் அந்த நிலத்தை மகந்தினிடமிருந்து தம் பொறுப் பில் எடுத்துக் கொண்டு அதை அகாலிகளுக்குக் கொடுத்துவிட் டார். அதனால் அரசாங்கத்தாருக்கு அந்தப் போராட்டத்தை அடக்க வேண்டிய அவசியம் நீங்கிவிட்டது. சில நாட்களுக்குப் பின் ஒரு சட்டமும் அமைக்கப்பட்டது. அதன்படித்தான் குருது வாராக்கள் இப்போது நடத்தப்பட்டு வருகின்றன. ஆனால் இவை யெல்லாம் விரைவில் நடக்கவில்லை. காலம் பிடித்தது. எத் தனையோ பேர் நிறையத் துன்பத்தைச் சகிக்க வேண்டி வந்தது. சத்தியாக்கிரகத்தின் பயன்பாடும் அதற்குள்ள ஆற்றலும் கண் கூடாகி விட்டன. இதன் பெருமை சீக்கியரையே சேரும். அவர் கள் இதைத் தம் சத்திய விரதத்தாலும் ஆற்றலாலும் காட்டி விட் டார்கள்.

மற்றொரு சம்பவமும் பஞ்சாபில் தான் நடந்தது. நாங்கள் அம்ருத்சாரிலிருந்து நேரே முல்தானுக்குச் சென்றோம். அங்கே வேறொரு விதமான சம்பவம் நடந்து விட்டது. அது காரணமாக மாபெரும் ஹிந்து - முஸ்லிம் கலகம் விளைந்து விட்டது. யாரோ ஒரு ஹிந்து தாஜியாவின் மேல் கல் எறிந்தான் என்று முசல்மானி யர்கள் கூறினார்கள். தங்கள் பக்கத்திலிருந்து எவரும் எதுவும் செய்யவில்லையென்றும், முதலில் இருந்தே முசல்மானியர் ஹிந்துக்

களைக் கொள்ளையடிக்கத் தயார் செய்து வந்தார்கள் என்றும், தாஜியா வெறும் சாக்குப் போக்கு என்றும் ஹிந்துக்கள் கூறினர் கள். காரணம் எதுவாயினும் சரி, அங்கு நிகழ்ந்த கலகத்தில் மிக வும் மனவேதனையான சம்பவங்கள் நடந்தன. காங்கிரஸ் தலை வரின் வேலையைப் பார்த்து வந்த ஹகீம் அஜ்மல்கான், பண்டித் மதன்மோகன் மாளவீயஜீ, சேட் ஜம்நாலால்ஜீ, ஸ்ரீ பிரகாசம், நான் ஆகிய அனைவரும் செய்தி கிடைத்ததுமே அங்கே சென் றோம். அவ்வூராருக்குள் இருந்த இரு கட்சிகளும் ஒத்து ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. அதனால் நாங்கள் ரயிலை விட்டு இறங்கியதுமே எங்கே தங்குவது என்ற கேள்வி எழுந்தது. நாங்கள் இரண்டு பகுதிகளாகப் பிரிந்து கொண்டோம். சிலர் முசல்மானியருடைய விருந்தினராகி அங்குள்ள ஒரு நவாபின் வீட்டில் தங்கினார்கள். சிலர் ஹிந்துக்களின் விருந்தினராகி மற்றோர் இடத்தில் தங்கினார்கள். நான் ஹகீம் சாஹபுடன் சென்று நவாபின் வீட்டில் தங்கினேன்.

நாங்கள் கலகம் நடந்த இடத்திற்குச் சென்று அவ்விடத் தைப் பார்த்தோம். எத்தனையோ ஹிந்துக்களின் வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டுக் கொளுத்தப்பட்டுப் போயின. அவ்வீடு களில் இருந்த சாமான்கள் எல்லாம் கொள்ளை கொள்ளப்பட்டன அல்லது கொளுத்தப்பட்டுப் போயின. எத்தனையோ பேர்கள் கொல்லப்பட்டார்கள். எஞ்சியிருந்தவர்கள், முக்கியமாகப் பெண்மக்கள், அப்போது நிகழ்ந்ததைப் பற்றி மிகவும் பரிதாப கரமாக வர்ணித்தார்கள். அவர்கள் கூறியது எங்கள் நெஞ்சத் தில் ஆழ்ந்து பதிந்தது. ஓர் இடத்தில் ஹகீம் சாஹபு மிகவும் கலக்க முற்றார் என்பது தெளிவாகத் தெரிய வந்தது. ஓர் இடத்தில் கொள்ளையடிக்கக்கூடியனவெல்லாம் கொள்ளையடிக்கப்பட்டபின், சூறையாடுபவர்களுக்கு வேறு ஒன்றும் கிடைக்காததால், தான் வளர்த்து வந்த கிளியை நெருப்பில் இட்டு விட்டார்கள் என்று அந்த வீட்டுக்காரி கூறினாள். எங்குக் கண்டாலும் ஒரே சாம்பல் குவியலாயிருந்தது. அதில் அந்த இரும்புக்கூடும் கிடந்தது. கிளியோ தீய்ந்து சாம்பலாகி விட்டது. பல கோவில்களும் வழி பாட்டு மன்றங்களும் இதே கதியை அடைந்தன.

நாங்கள் அங்கிருந்த ஜில்லாக் கமிஷனர் மிஸ்டர் எமர்சனை யும் சந்தித்தோம். அவர்தாம் பிறகு, காந்தி-இர்வின் ஒப்பந்தம் நடந்தபோது, இந்திய அரசாங்கத்தின் ஹோம் செக்ரடரியாக இருந்தார். அதற்குப்பின் அவர் பஞ்சாபுக்குக் கவர்னர் ஆனார். அவருடைய பேச்சுவார்த்தையின் போக்கிலிருந்து அவருக்கும்

எங்களுக்கும் ஏதாவது நல்லுறவு உண்டாகும் என்பதாகத் தோன்றவில்லை. அவர் சட்டத்தையே வற்புறுத்திக் கொண்டு, கலகக்காரர்களைத் தண்டிப்பதைப் பற்றியே கடுமையாகப் பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் இது மட்டுமன்றி, மக்களிடையில் நட்பை வளர்ப்பதற்கும் முயற்சி செய்யப்பட வேண்டுமென்று விரும்பினோம். இதனால் நாங்கள் இரு பக்கத்திலும் முக்கியமான வர்களாக இருந்தவர்களை அழைத்து ஒரு சிறிய சபையைக் கூட்டினோம். அவர்களுடன் பேசியதிலிருந்து, மக்களிடையில் மனஸ்தாபம் நிறைய இருந்து வந்தாலும்கூட, இரு வகுப்பினரும் கூடி நேசமுடன் வாழத் தயாராக இருந்தார்கள் என்பதைக் கண்டோம். முசல்மானியர்களுக்குத் தம்முடைய ஆட்கள் கைது செய்யப்பட்டார்கள் என்பதும், இன்னும் கைது செய்யப்பட்டு வருகிறார்கள் என்பதும், வழக்குகள் எல்லாம் அவர்கள் மீதுதாம் தொடுக்கப்பட்டு வருகின்றன என்பதும், சூறையாடியதற்காக நஷ்டஈடு கொடுக்கவேண்டி வந்தாலும் வரலாமென்பதும் கவலைக்கு இடமளித்தன. இதற்குப்பின் ஒரு பெரிய கூட்டம் கூட்டப்பட்டது. அதில் ஹகீம் சாஹபும் பண்டித் மாளவீயஜீயும் பேசினார்கள். நட்பையும் நல்லுறவையும் வளர்ப்பதற்காக நாங்கள் அரசாங்கத்தோடு சம்பந்தப்படாத குழு ஒன்றை அமைத்து விட்டு அங்கிருந்து புறப்பட்டு வந்துவிட்டோம்.

அங்குக் கண்ட காட்சிகள் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. பண்டித் மாளவீயஜீயும் மிகவும் கலக்கமடைந்தார் என்பதைக் கண்டேன். அங்குள்ள ஹிந்துக்களைப் பார்த்து அவர் "நீங்களும் ஒன்றுபட்டு நிற்க வேண்டும். உங்கள் உயிர், பொருள், மானம் ஆகியவற்றைத் தாக்குபவர்களை நீங்கள் எதிர்த்து நிற்க வேண்டும்" என்று கூறினார். கலகம் செய்தவர்களுக்குத் தண்டனை விதிக்க வேண்டுமென்று அரசாங்கத்தாரையும் கேட்டுக் கொண்டார்.

அங்கு நிலவியிருந்த கொதிப்பானது நாங்கள் அங்கே சென்றதின் பயனாகத் தணிந்துவிட்டது என்பது தெரிய வந்தது. நாங்கள் வந்தபோது எங்களை எங்கே தங்க வைப்பது என்பதை ஒன்றுகூடி உட்கார்ந்து முடிவு செய்ய இயலாமல் இருந்தவர்கள் இப்போது நாங்கள் அமைத்த குழுவில் சேர்ந்து அங்கத்தினராக இருப்பதற்குத் தயாராயிருந்தார்கள். எல்லாருமே நட்பை வளர்ப்பதற்கு முயன்று வந்தார்கள். ஹகீம் சாஹபும் ஓர் அறிக்கையை வெளியிட்டார். அதில் அவர் முசல்மானியரின் நடத்தையைக் கண்டனம் செய்து ஹிந்துக்களுக்கு ஆறுதல் கூறினார்.

கயா காங்கிரஸ் சமயத்தில் அங்கே கிலாபத்து மகாநாடு நடக்கப்போவது போல ஹிந்துமகா சபாவையும் நடத்த வேண்டுமென்று சிலர் நினைத்தார்கள். அதற்கு ஏற்பாடு செய்தவர்கள் பண்டித் மாளவீயஜீயைத் தலைவராகும்படி வற்புறுத்தினார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து வேண்டிக் கொண்டால் பண்டித் மாளவீயஜீ ஒத்துக்கொள்வார் என்று கூறி என்னை மிகவும் கட்டாயப்படுத்தினார்கள். மேலும் நான் வரவேற்புக் குழுவுக்குத் தலைவனாக அமைய வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். ஹிந்து மகா சபாவானது ஒருவிதமாக நிறுவப்பட்டிருந்தாலும், இன்று அது அடைந்திருக்கும் சிறப்பை அக்காலத்தில் அது இன்னும் அடையவில்லை. அதன் கொள்கையும் காங்கிரஸுக்கு விரோதமாக இல்லை. கிலாபத்துக் குழுவுடனும் காங்கிரஸுடனும் ஒத்தே உழைத்து வந்தது. அதனால் ஹிந்து சபாவுக்குக் காங்கிரஸுடன் யாதொரு சண்டையும் இல்லை. அப்படி ஏதாவது உண்டாகலாம் என்று நினைப்பதற்குக்கூட இடமில்லை. வரவேற்புக் குழுவின் தலைவனாக இருக்க நான் ஒத்துக் கொண்டேன். உயர்திரு மாளவீயஜீ தலைவராக்கப்பட்டார். கயாவில் யாருக்கும் வருத்தம் விளைவிக்கும்படியான காரியம் எதுவும் நடக்கவில்லை. ஆனால் பண்டித் மாளவீயஜீ முல்தானில் நடந்த சம்பவங்களைப்பற்றித் தம் சொற்பொழிவில் எடுத்துரைத்தார். மேலும், ஹிந்துக்களைத் தம் தற்பாதுகாப்புக்காகத் தயாராயிருக்கும்படி கட்டளையும் இட்டார். அங்கே விசேஷமாக 'எதுவும் நடக்காவிட்டாலும்கூடப் பிற்காலத்தில் ஹிந்து மகாசபா தனிப்பட்டுப் பிரிந்து போவதற்கு அடிகோலப்பட்டாகிவிட்டது என்பதை மட்டும் இங்குக் கூறினால் போதும். இதில் நானும் சம்பந்தப்பட்டிருந்தேன். பிற்காலத்தில் ஹிந்து மகாசபாவுக்கும் காங்கிரஸுக்கும் கருத்து மாறுபாடு தெளிவானபோது. பண்டித் மாளவீயஜீ என்னைப் பார்த்து, "நீ சொன்னதின் பேரில்தான் நான் கயாவில் நடந்த பேரவைக்குத் தலைமை வகிக்க ஒத்துக் கொண்டேன். மேலும் அச்சபா நிலைபெறுவதற்கும் நான் அடிகோலினேன்" என்று குறை கூறினார். நான் இதை அப்போதும் மறுக்க முடியவில்லை; இன்றும் மறுக்க முடியவில்லை. அப்போது, என் நினைவுக்கு எட்டிய வரையில், முசல்மானியர்கள்கூட மகாசபா நிறுவப்படுவதில் யாதொரு தீங்கும் காணவில்லை. அப்படிக் கண்டிருந்தாலும் எங்களிடம் கூறவில்லை.

நான் மேலே கூறியுள்ளபடி, முல்தான் கலகத்திற்குப் பின்னிருந்து ஹிந்து முசல்மானியர்களுக்கிடையில் பகைமை

வளர்ந்துவிட்டது. ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் நடந்ததாகப் பல விடங்களிலிருந்து செய்தி வரத் தொடங்கியது. காங்கிரஸைச் சேர்ந்த ஹிந்துக்களும் முசல்மானியரும் நிலைமையைக் கட்டுப் படுத்த முயற்சி செய்து வந்தார்கள். ஆனாலும் ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டு கலகங்கள் நடந்து கொண்டேதானிருந் தன. இக்கலகங்களில், பெரும்பாலான இடங்களில் ஹிந்துக்கள் தாம் புடைக்கப்பட்டார்கள். இது காரணமாகத்தான் ஹிந்துக் களிடையில் ஒற்றுமைக் கட்டுப்பாடு பிறந்தது. சமயப் பற்றால் "சுத்தி" பிறந்தது. "சுத்தி" மட்டும் மதவெறியாக மாறா திருந்திருந்தால் அதனால் அதிகப் பகைமை மூண்டிருக்காது. ஆனால் 1923இலிருந்து மூன்று நான்கு ஆண்டுகளாகத்தொடர்ந்து ஹிந்துக்களிடையில் சுத்தியும் ஆசாரக் கட்டுப்பாடும், அதே போல முசல்மானியர்கள் இடையில் தம் மதத்திற்கு மக்களை மாற்றுதலும் மீட்டலும் ஒரே கூக்குரலாக இருந்து வந்ததின் பய னாக அநேக முசல்மானியரும் அநேக ஹிந்துக்களும் மெல்ல மெல்லக் காங்கிரஸிலிருந்து பிரிந்துபோகத் தலைப்பட்டார்கள்.

## 49. கயா காங்கிரஸ்

கயா காங்கிரஸின் பேரவைக்குச் சற்று முன்னதாக வரவேற் புக் குழுவில் நடந்த ஒரு சம்பவத்தை இங்குக் கூறவேண்டும். சில மாதங்களுக்கு முன்பு ஒரு கனவான் வரவேற்புக் குழுவுக்கு 5,000 ரூபாய் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். பணம் தேவைப்பட்ட சமயத்தில் அவரை நெருக்கியபோது, அவர் இதோ அதோ என்று சாக்குப்போக்குச் சொல்லி வந்தார். பிறகு வரவேற்புக் குழுவுக்குத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதென்று நிச்ச யித்து வரவேற்புக் குழுவின் இருக்கை நடந்தபோது, அவர், வர வேற்புக் குழுவின் உறுப்பினர்கள் ஆவதற்காக இருநூறு பேரிடம் மனுக்களில் கையெப்பம் பெற்று ஒவ்வொன்றிற்கும் ரூ. 25 வீதம் 5,000 ரூபாயை அன்று அனுப்பி வைத்தார். இவ்வண்ணமாகத் தாமே வரவேற்புக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட விரும்பினார். ஏனெனில் வேறு எவர் சார்பிலும் தேர்தலுக்கு முயற்சி செய்யப்படவில்லை. அக்குழுவின் உறுப்பினர்களுடைய எண்ணிக்கை அதிகமாக இருந்தாலும்கூடக் காங்கிரஸுக்குச் சில நாட்களுக்கு முன்புதான் உறுப்பினர்களாகச் சேர்ந்தவர்கள் எல்

லாரும் அந்த இருக்கைக்கு வரவில்லை. இந்தக் காரியம் எங்களுக்கு மிகவும் கெடுதலாகப்பட்டது. இது ஒரு வகையான சூழ்ச்சி என்பதையும், இந்தக் கனவான் மாகாணத்தில் உள்ளவர்கள் எல்லார் கண்ணிலும் மண்ணைத் தூவிவிட்டுக் காங்கிரஸுக்கு வரும் தலைவர்களை மாகாண முழுவதிற்கும் பிரதிநிதியாக நின்று வரவேற்கும் பெருமையை நாடுகிறார் என்பதையும் உணர்ந்தோம். அவர் காங்கிரஸுக்கு ஏதாவது அரிய தொண்டு ஆற்றியிருந்தால் எனக்கு இவ்வளவு கோபம் வந்திருக்காது. ஆனால் அவர் அப்படி ஒரு தொண்டும் புரியவில்லை. அவர் இந்த நோக்கத்தை எவருக்கும் தெரியாமல் இரகசியமாக வைத்திருந்தார். இதனால் அவர் மீது மேலும் அதிகக் கோபம் மூண்டது. நாங்கள் காரணங்களைக் காட்டி அவருடைய பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டோம். பணம் வேண்டியிருந்தாலும்கூட இத்தகைய சூழ்ச்சியைத் தடுப்பது நியாயம் என்று கருதினோம். ஸ்ரீ பிரஜ்கிஷோர் பிரசாதுக்குத்தாம் தலைவர் பதவியை அளிக்க வேண்டுமென்று அனைவரும் விரும்பினார்கள். வரவேற்புக் குழு ஒருமனமாக அவரையே தலைவராகத் தேர்ந்தெடுத்தது.

காங்கிரஸ் விழாவின் நாள் நெருங்கி வந்துவிட்டது. ஆனால் இது வரையில் போதுமான குடிசைகள் கட்டப்படவில்லை. பந்தலும் போட்டாகவில்லை. கயாவில் குளிர் அதிகமாயிருக்கும். அந்த ஆண்டில் மேலும் அதிகமாக இருந்தது. குடிசைகளைக் கட்டுவதற்காக மேலும் சில குத்தகைக்காரர்கள் புதிதாக அமர்த்தப்பட்டார்கள். ஆனால் பந்தல் வேலை முடியுமென்று தோன்றவில்லை. அந்தக் காலத்தில் காங்கிரஸ் ஒரு பெரிய பந்தலின்கீழ் தான் நடந்து வந்தது. இன்று போல வெட்ட வெளியில் அன்று. ஜனங்கள் உட்காருவதற்காகத் தரையைச் சரிவாக மேடிட வேண்டி யிருந்தது. மற்ற வேலைகள் எல்லாம் முடிந்துவிடும் என்ற நம்பிக்கை யிருந்தது. ஆனால் மண் அடிக்கும் வேலை மட்டும் முடிவுறுதுபோலத் தோன்றியது.

காங்கிரஸின் பேரவைக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு, ராஞ்சீ ஜில்லாவையும் அதற்கு அக்கம்பக்கத்தையும் சேர்ந்த ஆதிவாசி மக்கள் சுமார் முன்னூறு நானூறு பேர் சட்டி பானைகளையும் விறகையும் காவடியில் சுமந்துகொண்டு வந்து சேர்ந்தார்கள். சுமார் நூற்றைம்பது கல் தொலைவிலிருந்து பல நாட்கள் தொடர்ந்து நடந்து கயாவுக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் காங்கிரஸின் மீது பெரும் பற்றுக்கொண்டிருந்ததால், அதன் பெயரைச் சொல்லிக் கூறியவற்றை எல்லாம் செய்யத்

தயாராக இருந்தார்கள். சில சமயங்களில் முட்டாள்தனமான காரியங்களையும் செய்துவிடுவார்கள். ஆடுகளை அவற்றின் இறைச்சிக்காகவே வளர்த்துவருவதால், அவற்றை வளர்ப்பது நல்லது அன்று என்பது தான் அஹிம்சாவின் பொருள் என்று யாரோ ஒத்துழையாமைக் கிளர்ச்சி மும்முரமாக நடந்துகொண்டிருந்த போது அவர்களுக்குக் கூறிவிட்டார்கள். எவர் இப்படிக் கூறினுர்கள் என்பது தெரியாது. ஆனுல் இதனுல் என்ன ஆயிற்று என்ருல், அவர்கள் உடனே ஆயிரக்கணக்கான ஆடுகளை அப்படியே கொண்டுபோய்க் காட்டில் விட்டுவிட்டார்கள்! நான் ஒருமுறை அவர்களுடைய ஊர்ப்பக்கம் சென்ற சமயத்தில் அந்த ஆடுகளைக் கண்டபோதுதான் இந்த விஷயம் எனக்குத் தெரிய வந்தது. அதே மக்களின் ஒரு தொகுதியார் அதே போன்ற பற்றுதலுடன் கயாவிற்கு வந்தார்கள். அவர்கள் வரவேற்புக் குழுவிடம் ஒரு வேண்டுகோளைத் தெரிவித்துக் கொண்டார்கள். அதாவது, அவர்களுக்கு ஏதாவது ஒரு தோட்டத்தில் ஒரு காலி இடத்தைக் காட்டி விட்டால், அவர்கள் அங்கே சமையல் செய்து உண்டு தங்கியிருப்பதாகக் கூறினுர்கள். வேலை செய்வதில் அவர்கள் மிக்க உழைப்பாளிகள். யாரோ அவர்களிடம் சென்று, காங்கிரஸ் பந்தலில் மண் அடிக்கும் வேலை இன்னும் முடியாமல் இருக்கிறது என்பதையும், அதனுல் நாங்கள் மிகவும் கவலை கொண்டிருக்கிருேம் என்பதையும் கூறினுர்கள். உடனே அவர்கள் மண்வெட்டிகளையும் கூடைகளையும் கொடுக்கும்படி எங்களைக் கேட்டார்கள். அவ்வாறே அவையெல்லாம் கொடுக்கப்பட்டன. அவ்வளவுதான், உடனே அவர்கள் எல்லாரும் இந்த வேலையில் இறங்கிவிட்டார்கள். இராப் பகலாக வேலை செய்து இரண்டு நாட்களுக்குள்ளாகவே எல்லா வேலையையும் முடித்துத் தீர்த்து விட்டார்கள். நாங்கள் அவர்களுடைய ஆர்வத்தையும் உழைப்பையும் கண்டு வியப்புற்ருேம். வரவேற்புக் குழுவின் சார்பில் இருந்து அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு காந்தி குல்லாவும் வரவேற்புக் குழு உறுப்பினருக்கு அளிக்கப்படும் பட்டுப் பூவும் கொடுக்கப்பட்டன. அந்தப் பூவைக் குல்லாவில் செருகிக்கொண்டார்கள். இவற்றைக் கொண்டு அவர்கள் பெருமகிழ்ச்சியடைந்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பின் நான் அவர்களுடைய ஊர்ப்பக்கம் சென்றபோது, பூ செருகிய குல்லாக்களை அவர்கள் மிகப் பெருமையுடன் எனக்குக் காட்டினுர்கள். கயா காங்கிரஸுக்கு அவர்களும் வந்திருந்தார்கள் என்பதை இதன் மூலமாக எனக்கு நினைவூட்டினுர்கள். பேரவைக்குச் சில நாட்களுக்கு முன்

எனக்கு இழுப்பு (ஈளை நோய்,—ஆஸ்தமா) வந்துவிட்டது. முல்தானுக்குச் சென்றிருந்தபோதுதான் மூச்சுவிடுவது கஷ்டமா யிருப்பதை முதன் முதலாக உணர்ந்தேன். அதற்கு முன், குளிர்காலத்தில் இருமல் வந்துகொண்டிருக்கும். ஆனால் மூச்சு விடுவதற்கு என்றுமே கஷ்டப்பட்டதில்லை. இருமலால்தான் நான் நாகபுரி காங்கிரஸுக்குச் சென்று கலந்துகொள்ள முடிய வில்லை. முல்தானுக்குச் சென்றபோது நான் ஹகீம் அஜ்மல் கானோடுதான் தங்கி இருந்தேன். அவர் ஏதோ ஒரு மருந்து கொடுத்தார். அதனால் அப்போது நலமடைந்து விட்டேன். டிசம்பரில் குளிர் கடுமையானதும் கயாவில் மறுபடியும் இழுப்பு ஆரம்பித்துவிட்டது. ஆனால் அங்கிருந்த ஒரு ஹகீமின் மருந் தால் நான் விரைவில் நலமாகிவிட்டேன். தேசபந்து தாஸ் தலைமையை ஏற்றுக்கொண்டு அங்கு வந்தபோது அவரை வரவேற்க என்னால் ரயிலடிக்குப் போகமுடியவில்லை. பின்னர் அன்று நிகழ்ந்த ஊர்வலத்தையும் பார்க்க முடியவில்லை. ஆனால், என்னுடைய சோர்வுற்ற நிலையிலேயே விஷய ஆலோசனைக் குழுவுக்கு மட்டும் சென்றேன். அப்போது நடந்துகொண்டிருந்த வேலைகளையும் சிறிது மேற்பார்வையிட்டு வந்தேன். ஏற்பாடு களைச் செய்யும் பொறுப்பு ஸ்ரீ அனுக்கிரக நாராயண் மீது தான் பெரும்பாலும் விழுந்தது. உணவு இலாக்காவின் பொறுப்பை என் தமையனார் ஏற்றுக்கொண்டார். அதை அவர் மிகத் திறம் பட நிறைவேற்றினார். பந்தலைப் போடுதல், அதை அலங்க ரித்தல் முதலியவற்றைக் கோரக் பாபூ, மதுரா பாபூ, முஜபர்பூர் ஜமீன்தார் ஸ்ரீ வைத்யநாத் பிரசாத் சின்ஹா ஆகியவர்கள் பார்த்துக்கொண்டார்கள். தொண்டர் படைக்குத் தலைவராக ஸ்ரீ பத்ரீநாத் வர்மா அமைந்தார். கண்காட்சியின் பொறுப்பை ஸ்ரீ பனார்ஸீ பிரசாத் ஜுன் ஜுனூவாலா ஏற்றுக்கொண்டார்.

வரவேற்புக் குழுவின் ஏற்பாடுகள் நன்றாகவே அமைந்தன. ஆயினும் இன்னும் சிறிது அனுபவம் இருந்திருந்தால் அப்போது எவ்வளவு செலவு ஆயிற்றோ அவ்வளவு ஆகியிருக்காது என்று நினைக்கிறேன். பேரவை நடந்து கொண்டிருந்தபோது கடைசியில் பணம்போதாமல் போய்விடுமோ என்று அஞ்சினேன். அதனால் ஒவ்வொரு இலாகாவிலும் செலவைக் குறைக்கும்படி வற்புறுத்தி வந்தேன். கயா ஸ்டேஷனிலிருந்து பேரவைக்களம் சுமார் மூன்று கல்லோ அதைவிடச் சற்றுத் தொலைவிலோ இருந்தது. ஸ்டேஷனிலிருந்து ஜனங்களை அழைத்து வருவதற்காக நாங்கள் நிறைய லாரிகளை வாடகைக்கு அமர்த்தியிருந்தோம். எல்லாரிட

மிருந்தும் லாரிக்கு வாடகை வாங்கவேண்டும் என்று எண்ணி யிருந்தோம். இதற்காக ஒவ்வொரு லாரியிலும் ஓர் ஆளை டிக்கட்டுகளுடன் வைத்திருந்தோம். ஆனால் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியவில்லை. மிகக் குறைவாகத் தான் வாடகை வாங்க முடிந்தது. ஆனால் எல்லா லாரிகளுக்கும் நாங்கள் வாடகை கொடுத்தாக வேண்டி வந்தது. இதனால் பணம் குறைவு படும் என்ற அச்சம் மேலும் பெருகிற்று. ஆனால் கடைசியில் கணக்குப் பார்த்தபோது சிறிது மிஞ்சியதே தவிர குறைவுபட வில்லை.

கயாவின் காங்கிரஸ் பேரவை மிகவும் முக்கியமானதாக அமைந்தது. முதலில் இருந்தே, கவுன்ஸிலுக்குப் போவதைப் பற்றி நாட்டில் வாதம் நடந்துவந்தது. சத்தியாக்கிரகக் குழுவின் அறிக்கை ஒரு பெரும் கூக்குரலைக் கிளப்பிவிட்டிருந்தது. அந்த அறிக்கையைப் பற்றி ஆலோசனை செய்யும் வேலையைக் காங் கிரஸே செய்யட்டும் என்று அது தள்ளிப் போடப்பட்டிருந்தது. எப்போது சத்தியாக்கிரகம் நடத்த முடியவில்லையோ அப் போது கவுன்ஸிலுக்குச் செல்வதற்கு அனுமதி கொடுத்தே ஆகவேண்டும் என்று பண்டித் மோதிலால்ஜீ, ஹகீம் அஜ்மல் கான், தேசபந்து தாஸ் ஆகிய மூன்று பெரிய தலைவர்களும் உறுதியான அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். ஆயினும் காங் கிரஸ்காரர்களுள் பெரும்பாலோர் காந்திஜீ வகுத்த வேலைத் திட்டத்தில் மாறுதல் செய்யக் கூடாதென்ற கருத்தைக் கொண் டிருந்தார்கள் என்பது தெரியவந்தது. அதனால் இரு கட்சியாரும் தத்தம் கருத்துக் கொண்டவர்களையே பிரதிநிதிகளாகத் தேர்ந் தெடுத்துக் கயாவுக்கு அனுப்புவதற்காகத் தம்மால் இயன்ற வரையில் முயன்று வந்தார்கள். இக்காரணத்தால், ஸ்ரீ ஐயகர், ஸ்ரீ நடராஜன் போன்ற முக்கியமானவர்கள் கூடத் தத்தம் மாகாணத்திலிருந்து பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட இயலாமல் போய்விட்டது. இது தேர்தல்களில் நடக்காத விஷயம் அன்று. இங்கிலாந்தில் மிஸ்டர் பால்பூர் எத்தனையோ ஆண்டு களாகப் பிரதம மந்திரியாக இருந்து வந்தும் கூடத் தேர்தலில் சாதாரண உறுப்பினராகக் கூடத் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். அவருடைய கட்சி மிகவும் பலமாகத் தோல்வியடைந்து தன் தலைவரைக் கூடச் சில நாட்கள் வரையில் பார்லிமெண்டில் காணக்கிடைக்காத நிலைமையை எய்தி விட்டது. ஆனால் நம் இடையில் இதுவரையில் இதுபோல ஆக வில்லை. அதனால்தான் இவர்களைப் போன்ற மனிதர்கள் தோல்வி

யுற்றது சிலர் மனத்தைப் புன்படுத்தியது. அவர்களில் நானும் ஒருவன்.

ஸ்ரீ ஜயகர் கவுன்ஸிலுக்குப் போவதன் சார்பாகவும் அதற்கு நான் விரோதமாகவும் இருந்தாலும் இத்தகைய தலைமையான மனிதர் காங்கிரஸுக்கு வர இயலாமற் போவது சரி அன்று என நான் நினைத்தேன். காங்கிரஸ் எவ்விதமாக முடிவு செய்தாலும், இத்தகைய மனிதரின் அபிப்பிராயத்தை அவர் வாயிலாகக் கேட்டறிவது காங்கிரஸுக்கு நலமாகும். அந்தக் காலத்தில், காங்கிரஸின் அமைப்பு முறைப்படி, எவரும், அவர் காங்கிரஸின் அங்கத்தினராக இருந்தாரானால், எந்த மாகாணத்தில் இருந்தும், அதன் எப்பகுதியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்படலாம் என்று விதிமுறை இருந்தது. அதனால் நான் முயற்சி செய்து, ஸ்ரீ ஜயகரையும் ஸ்ரீ நடராஜனையும் பீகாரிலிருந்து பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்படச் செய்துவிட்டேன்.

இந்தச் சிறிய விஷயத்தை நான் இங்கே இவ்வளவு விரிவாக எதற்காகக் கூறினேன் என்றால், அந் நாட்களில் நடந்த வாக்கு வாதத்தில் ஆர்வத்தின் மேலீட்டால் சிலர் "மாறுமை வாதிகள் காந்திஜீயின் பெயரைச் சொல்லிக்கொண்டு நெறியில்லாத வகையில் பிரசாரம் செய்து காங்கிரஸுக்கு வாக்குச் சேர்த்தார்கள்" என்று கூறிவந்ததை மனத்தில் கொண்டுதான் கூறினேன். வேறு சிலர், தேசபந்து தாஸ் மாறுதல் வாதி ஆதலால், அவர் தலைவராக அமைந்த பின்னும் கூட அவருக்கு எவ்வண்ணம் மரியாதை செய்ய வேண்டுமோ அவ்வண்ணம் செய்யவில்லை என்றும், அவருக்கு ஆற்றிய வரவேற்பும் தொண்டும் குறைபாடு கொண்டிருந்தன என்றும், பீகார் மாகாணம் காந்தி பக்தி பூண்ட மாறுமை வாதிகளின் மாகாணமாதலால் தான் இப்படி நடந்தது என்றும் கூறி வந்தார்கள். இந்த விஷயங்கள் எல்லாம் உள்ளத்தைப் புண்படுத்துவனவாக இருந்தன. எங்களால் இயன்ற அளவுக்குத் தலைவரைப் பெருமையுடன் பாராட்டுவதற்கும் அவருக்குத் தொண்டு புரிவதற்கும் வேண்டிய ஏற்பாடுகளை நன்றாகவே செய்திருந்தோம். அவர் தங்குமிடத்தில் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் ஸ்ரீ தீப் நாராயண் சின்ஹாவின் பொறுப்பில் விடப்பட்டிருந்தன. அவர் சலியாமல் உழைத்து உற்சாகத்துடன் வேலை செய்தார். எனக்கு உடம்பு சரியாக இல்லாததால் என்னால் ஓடியாடி வேலை செய்ய முடியவில்லை என்பது உண்மை. ஆனால் மற்றவர்கள் அனைவரும் இராப் பகலாக உழைத்து வந்தார்கள். தலைவருக்கும் அவருடைய

பரிவாரத்திற்கும் குறைவின்றி உபசாரம் நடந்தது. எந்த வகையிலும் குற்றம் வர இடம் கொடுக்கவில்லை.

தேசபந்துவின் சொற்பொழிவு மிகவும் விரிவானதாகவும் சிறப்பு வாய்ந்ததாகவும் இருந்தது. கவுன்ஸில் புகுதலைப் பற்றி அதில் அழுத்தமாகக் கூறப்பட்டிருந்தது. தம்முடைய சொற்பொழிவில் தம்முடைய அபிப்பிராயம் கூறப்பட்டிருக்கிறதென்றும், அதனைப் பிரதிநிதிகள் கேட்டு அறிய வாய்ப்புப் பெற்று அதற்குப் பின்னரே அவரவர்கள் தம்முடைய அபிப்பிராயத்தைச் செயலாற்றுக் குழுவில் அளிக்க வேண்டும் என்றும் கூறி, அவர் தம்முடைய சொற்பொழிவு நிகழ்ந்த பின் தான் இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டும் என்று முடிவு செய்துவிட்டார். இதனால் இந்த விஷயத்தைப் பற்றி வாக்குவாதம் செய்வதற்குத் தலைவர் முதலில் அனுமதி அளிக்கவில்லை. பிறகு பல நாட்கள் வரையில் வாதம் நடந்துகொண்டிருந்தது. அதில் இரு கட்சியாரும் நிறையப் பங்கெடுத்துக் கொண்டார்கள். இரவில் அல்லது விடியற்காலையில் விஷய ஆலோசனைக் குழுவிலிருந்து ஓய்வு கிடைத்தபோது பிரதிநிதிகளின் தனித் தனிக் கூட்டங்கள் நடக்கும். அவற்றில் அவர்கள் தத்தம் அபிப்பிராயத்திற்குப் பக்க பலம் சேகரித்து வந்தார்கள். அங்கே வாக்குவாதம் மிகவும் காரசாரமாக நடக்கும்.

விஷய ஆலோசனைக் குழுவானது கவுன்ஸிலுக்குப் போவதென்ற விஷயத்தைப் பெருமனமொப்புடன் தள்ளி விட்டது. ஆகையால் அந்த விஷயம் ஒரு திருத்தம் போலத்தான் காங்கிரஸ் அம்பலத்தின் முன் வந்தது. காங்கிரஸிலும் அவ்விதமாகவே காரசாரமான வாக்குவாதம் பல நாட்கள் வரையில் நிகழ்ந்தது. காங்கிரஸ் விழாவுக்குத் திட்டமிட்டிருந்த காலத்துக்கு மேல் இரண்டு மூன்று நாட்கள் மேற்கொண்டும் வாதம் நடந்து கொண்டிருந்தது. நானும் அம்பலத்தில் கவுன்ஸில் புகுதலைப் பலமாக எதிர்த்தேன். எங்களுடைய தலைவராக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் இருந்தார். அவரும் அந்த நாட்களில் இழுப்பால் பீடிக்கப்பட்டிருந்தார். ஆயினும் அவர் விஷய ஆலோசனைக் குழுவிலும் காங்கிரஸிலும் வியக்கத்தக்க முறையில் பாடுபட்டுத் திறம்படத் தம் கட்சியை ஆதரித்தார். ஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயங்கார் ஒப்பந்தத்தைப் பற்றி ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். அது ஏற்கப்படவில்லை. முடிவில், மூல தீர்மானத்தைப் பற்றி வாக்கு எடுத்தபோது, கவுன்ஸில் புகுதலைப் பற்றிய தீர்மானம் மாபெரும் பகுதியாரால் தள்ளப்பட்டுப் போயிற்று. கவுன்ஸில் புகுதலின் சார்பாக

மூன்றில் ஒரு பங்காகவும் அதற்கு விரோதமாக மூன்றில் இரண்டு பங்காகவும் பிரதிநிதிகளின் அபிப்பிராயம் பிரிந்து நின்றது என்று கூறலாம்.

நாகரிகக் கீழ்ப்படியாமை விசாரணைக் குழுவாவது காங்கிரஸாவது ஒரே ஒரு விஷயத்தைப் பற்றித்தான் ஆலோசனை செய்தது என்ருவது அல்லது தீர்மானத்தை நிறைவேற்றியது என்ருவது நினைப்பது தவருகும். குழுவின் அறிக்கையானது ஒத்துழையாமையின் செயல் திட்டம் முழுவதையும்-சத்தியாகிரகமும் வரி கொடாமையும் உட்பட-ஆராய்ந்து, அதன் முன் வந்த எல்லா விஷயங்களைப் பற்றியும் தன் கருத்தை தெரிவித்திருந்தது. ஆனல் அந்த விஷயங்களைப் பற்றிக் கருத்து வேறுபாடு இல்லாததால் அவை மேல் எழாமல் அடியில் தங்கி விட்டன. கயா காங்கிரஸும் அந்த விஷயங்களைப் பற்றித் தீர்மானங்களை நிறைவேற்றியது. அரசாங்கப் பள்ளிக்கூடங்களையும் கோர்ட்டுகளையும் புறக்கணித்தலைக் காங்கிரஸ் உறுதிப்படுத்தியது. சுதேசிப் பிரசாரமும் வற்புறுத்தப்பட்டது. எல்லா விதமான ஆங்கிலப் பொருள்களையும் புறக்கணிக்க வேண்டுமென்றும், இவ்விதமாகப் புறக்கணிக்கப்பட வேண்டிய பொருள்களின் பட்டியலைத் தயார் செய்வதற்காகவும் புறக்கணிக்கும் வழிகளை வகுப்பதற்காகவும் ஒரு குழு அமைக்கப்பட வேண்டுமென்றும் நோக்கம் கொண்ட தீர்மானம் ஒன்றும் கொண்டு வரப்பட்டது. இத்தீர்மானம் விஷய ஆலோசனைக் குழுவில் நிறைவேறி விட்டது. இது ஆகாத காரியம் என்று தோன்றிற்று. மேலும் இதனல் ஹிம்சா மயமான மனப்போக்கு விளையும் என்ற அச்சமும் இருந்தது. இதனல் காங்கிரஸ் இதைப் பெருமனமொப்புடன் தள்ளிவிட்டது.

மற்ரெரு முக்கியமான தீர்மானமும் நிறைவேற்றப்பட்டது. அதாவது, பிரிட்டிஷ் அரசாங்கம் மனம் போன போக்காகச் செலவு செய்து இந்தியாவின் பெயரைச் சொல்லிக் கடனை வாங்கி வருவதாலும், இந்திய சட்டசபைகள் இந்திய மக்களின் உண்மையான பிரதிநிதிகளைக் கொண்டு அமைக்கப்படாததாலும், இத்தீர்மானம் நிறைவேற்றப்பட்ட தேதிக்குப் பிறகு இந்திய சட்டசபையின் சம்மதத்துடனே அல்லது தானகவோ பிரிட்டிஷ் அரசாங்கம் வாங்கும் கடன்களைத் தீர்க்கும் பொறுப்பைச் சுதந்திர இந்தியா ஏற்றுக் கொள்ள மாட்டாது என்பதுதான். இத்தீர்மானத்தில், இத்தீர்மானத்திற்கு முன் வாங்கிய கடன்களின் பொறுப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டது. இத்தீர்மானத்தைப் பற்றியும் கருத்து வேறுபாடு இருந்தது. ஆயினும், இவ்விஷயம் முற்றிலும் புதியதாக

இருந்தும்கூட, மேலும் இத்தீர்மானத்தைக் கொண்டு வருவதற்கு முன் இதைப் பற்றி நாட்டில் பேச்சு எதுவும் நடைபெறவில்லை ஆயினும் கூட இது பெருமனமொப்புடன் ஏற்றுக் கொள்ளப் பட்டது.

கயா காங்கிரஸானது சத்தியாக்கிரக விசாரணைக் குழுவின் அறிக்கையைப் பற்றி ஒரு தீர்மானத்தையும் ஏற்றுக் கொண்டது. அதாவது, சட்டப்படி தற்பாதுகாப்புக்காக மற்ற மக்களுக்கு உள்ள உரிமைகளை எல்லாம் தனிப்பட்ட சத்தியாக்கிரகியும் கையாளலாம் என்பதுதான். இதன் பொருள் என்னவென்றால், சட்டத்தால் அனுமதிக்கப்பட்ட ஹிம்சா மயமான தற்பாதுகாப்பு முறைகளை ஓர் அளவுக்குக் காங்கிரஸும் அங்கீகரிக்கிறது என்பதுதான். மேலும் சத்தியாக்கிரகத்திற்காக நாடு தயாராக வேண்டுமென்றும், அந்த வேலைக்காக இருபத்தைந்து லக்ஷம் ரூபாயையும் ஐம்பதாயிரம் தொண்டர்களையும் திரட்ட வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இவ்வண்ணமாகக் கயா காங்கிரஸில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. எனக்குத் தெரிந்த வரையில் வேறு எந்த ஆண்டிலும் காங்கிரஸ் விழா இத்தனை நாட்கள் நீடித்து நடந்ததில்லை. ஆனால், கவுன்ஸில் புகுதலைப் பற்றி இருந்து வந்த கருத்து வேற்றுமையின் முன்னிலையில் மற்ற விஷயங்கள் எல்லாம் இரண்டாம் பட்சமாகி விட்டன.

காங்கிரஸ் விழா நடந்த அதே சமயத்தில் கயாவில் கிலாபத்து மகாநாடும் ஜமீயத் உல்-உலேமா மகாநாடும் மிக ஆடம்பரத்துடனும் உற்சாகத்துடனும் நடந்தன. கிலாபத்துக் குழுவும் காங்கிரஸ் குழுவைப் போலவே ஒரு சத்தியாக்கிரக விசாரணைக் குழுவை அமைத்தது. அக்குழுவும் நாடெங்கும் சுற்றி வந்து ஓர் அறிக்கையை வெளியிட்டது. அங்கும், காங்கிரஸில் இருந்தது போலக் கவுன்ஸில் புகுதலைப் பற்றிக் கருத்து வேறுபாடு இருந்தது. அந்த இரண்டு நிலையங்களும் கூடக் கவுன்ஸிலைப் புறக்கணித்தன. ஆனால் அதற்குள் கலீபா, துருக்கி ஆகியவற்றின் நிலைமையில் அதிக மாறுதல் கண்டு விட்டது. துருக்கியர்கள் கிரீசை முறியடித்துப் பெரிய வெற்றி பெற்று விட்டார்கள். மேலும் அவர்கள் தமது சுல்தானை, அதாவது கலீபாவாக இருந்தவரைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கி விடுவது என்றும் முடிவு செய்து விட்டார்கள். இதைப் பற்றி இந்தியாவிலிருந்த முசல்மானியர்களிடையில் அதிக கலவரம் உண்டாயிற்று. ஆனால், எனக்குத் தெரிந்த வரையில், அவர்கள் துருக்கியர்களின் நட

வடிக்கையை ஆதரித்தார்கள் என்றே புலப்பட்டது. ஏனெனில், மற்றவர்கள் கையில் பொம்மலாட்டப் பொம்மை போலச் சிக்கிக் கொண்டு நாட்டிற்கும் இஸ்லாமிற்கும் தீமை விளைவித்த இத் தகைய சுல்தானைப் பதவியிலிருந்து தள்ளுவது நியாயமென்றே கருதினார்கள். மேலும் அவருடைய இடத்தில், இஸ்லாமின் புண்ய தலங்களையும் க்ஷேத்திரங்களையும் காப்பாற்றுவதற்கு ஆர்வமும் ஆற்றலும் உடைய ஒரு பலசாலியான சுல்தான் தேர்ந்தெடுக்கப் படுவார் என்று அவர்கள் நம்பிக்கை பூண்டிருந்தார்கள். துருக்கி யர்கள் தம் வலிமையை நிரூபித்து விட்டார்கள். ஆதலால் புதிய சுல்தான் தம் கடமையைச்சரிவரச் செலுத்துவார் என்ற நம்பிக்கை இருந்து வந்தது. ஆனால் அடுத்தாற் போலச் சில நாட்களுக்குப் பிறகு துருக்கியர்கள் சுல்தான் பதவியையே எடுத்து விட்டுத் துருக்கியில் குடியரசை நிறுவிவிட்டார்கள். துருக்கிக் குடியர சில் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவார். அதே வழக்கம்தான் இன் றும் இருந்து வருகிறது.

அரபியரின் சுதந்திரத்தைப் பற்றியும் இந்திய முசல்மானியர் கவலை கொண்டிருந்தார்கள். அரபியரும் துருக்கியரும் மதத்தில் முசல்மானியர்கள் தாம்; ஆயினும் இருவரும் ஒரு குலத்தார் அல்லர். துருக்கியர்கள் அரபியர்கள்மேல் ஆட்சி செலுத்தி வந் தார்கள். ஏனெனில் துருக்கியரும் முசல்மானியர் ஆதலால் மற்ற முசல்மானியர் எல்லோரும் அவர்களுடைய சுல்தானையே கலீபாவாக ஏற்று வந்தார்கள். ஜெர்மன் யுத்தத்தின்போது, துருக்கி ஜெர்மனியுடன் சேர்ந்து சண்டை போட்டபோது, ஆங்கி லேயர் அரபியரைத் துருக்கியருக்கு விரோதமாகக் கிளப்பி விட்டு அவர்களைத் துருக்கியரின் ஆட்சியிலிருந்து மீட்டு விட்டார்கள். ஆனால் அரபியர் முற்றிலும் சுதந்திரத்தைப் பெறவில்லை. அர பியர்கள் சுதந்திரத்தைப் பெறவேண்டும் என்றும், ஆனால், எல் லாரும் சேர்ந்தே கலீபாவைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் இந்திய முசல்மானியர்கள் விரும்பினார்கள். அப்படி ஆகமுடிய வில்லை. துருக்கியரே கலீபா பதவியை நீக்கிவிட்டார்கள். அர பியரின் நாட்டை மேற்பார்வை செய்வதின் பொறுப்பு இங்கி லாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகளுக்கு அளிக்கப்பட்டது. உல கத்திற்குக் காட்டுவதற்காக அரபியர்களுடைய அமீருக்கு ஏதோ சிறிதளவு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தாலும் கூட அரபியர் களுக்கு இது வரையில் முழு சுதந்திரம் கிடைக்கவில்லை.

இந்தக் காரணங்களால்தான் இந்தியாவிலும் கிலாபத்துக் கிளர்ச்சி சில நாட்களுக்குப் பிறகு படுத்துப் போய்விட்டது.

பிறகு கிலாபத்துக்குழு நெடு நாள் வரையில் தொடர்ந்து இருந்து வந்தாலும் அது பேருக்கு மட்டும்தான் இருந்தது. கயாவில் நடப்பதாக இருந்த பேரவை வரையில் மேலே கூறிய விஷயங்கள் எல்லாம் தெளிவடையவில்லை. அதனால் அங்குக் கிலாபத்து மகா நாடு மிகவும் உற்சாகத்துடன் நடந்தது. மேலும், அது காங்கிரஸுக்கும் துணை நின்றது. அது காங்கிரஸைவிட மிக்க ஆவேசமும் உயிர்த்துடிப்பும் கொண்டு விளங்கியது என்று கூறினால் மிகையாகாது. இதற்கு முக்கிய காரணம் அச்சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் துருக்கியரிடம் கொண்டிருந்த பாவனையும் நடத்தையும்தாம் ஆகும்.

## 50. சுயராஜ்யக் கட்சியின் பிறப்பு

முதலில் இருந்தே இரண்டு கட்சிகளுக்கு (மாறுதல் கட்சி, மாறுமைக் கட்சி) இடையில் நிறையப் போராட்டம் இருந்து வந்தது. காங்கிரஸ் விழா முடிந்ததுமே தேசபந்துதாஸ் அகில பாரதீயக் குழுவின் தலைவர் பதவியை ராஜீநாமா செய்துவிட்டார். கவுன்ஸில் புகுதலுக்குச் சார்பாக இருந்தவர்கள் எல்லாரும் கூடிச் சுயராஜ்யக் கட்சியை நிறுவுவதைப் பற்றி விளம்பரம் செய்தார்கள். அதன் முக்கியமான தலைவர்களுள் தேசபந்துதாஸ், பண்டித் மோதிலால் நேரு, ஹகீம் சாஹப், ஸ்ரீ விட்டல் பாயீ படேல், ஸ்ரீ கெஸ்கர் முதலானவர்கள் இருந்தார்கள். தேசபந்து தாஸ் அக்கட்சிக்குத் தலைவரும் பண்டித் மோதிலால் நேரு அதற்கு அமைச்சரும் ஆனார்கள். மாறுமைக் கட்சிக்காரர்கள் தேசபந்து தாஸைக் காங்கிரஸின் தலைவராக இருந்து வரும்படி மிகவும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார்கள். ஆனால் அவர் ஒத்துக்கொள்ளவில்லை. பெருமனப்பான்மை பலம் தம் சார்பாக இல்லாததால் தாம் தலைவராக இருக்க முடியவில்லையென்றும், சுயராஜ்யக் கட்சி மூலமாகக் காங்கிரஸில் பெரும்பான்மை பலத்தை அடையத் தாம் முயற்சி செய்வார் என்றும், அதனால் தாம் காங்கிரஸ் தலைவராக இருப்பது பொருத்தமாகாது என்றும், மேலும் தம் வேலைக்கு அது இடைஞ்சலாயிருக்கும் என்றும் விளக்கிக் கூறி மறுத்து விட்டார்.

அப்போது நியமிக்கப்பட்ட செயலாற்றுக் குழுவும் பெரும்பாலும் மாறுமைக் கட்சிக்காரர்களைத் தாம் கொண்டிருந்தது. நான்தான் அதற்குத் தலைமை அமைச்சனாகத் தேர்ந்தெடுக்கப்

பட்டேன். இச்சுமை எனக்குப் பெரிதுதான். ஆயினும் அதை ஏற்கத்தான் வேண்டியிருந்தது. ஏனெனில் நாங்கள் எல்லோரும் கூடித் தலைவரின் அபிப்பிராயத்தை ஏற்க மறுத்துவிட்டோம் ஆதலால், ஜனநாயகத்தின் தொல்வழக்குப்படி அவ்வேலையை நடத்தும் பொறுப்பை ஏற்பது எங்கள் கடமையாகி விட்டது. இது நிற்க, தேசபந்துதாஸின் ராஜீநாமா கயாவில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அதைப்பற்றி மீண்டும் ஆலோசனை செய்யும்படி அவரைக் கேட்டுக் கொள்ளவேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனால் தாம் மீண்டும் ஆலோசனை செய்யத் தயாராயில்லை யென்று அவர் அங்கேயே கூறிவிட்டார்.

புதுக் கவுன்ஸில்களுக்கு தேர்தல் 1923 நவம்பரில் நடைபெறுவதாக இருந்தது. அதனால் சுயராஜ்யக் கட்சியானது அதற்கு முன்னமே காங்கிரஸில் பெரும்பான்மை பலத்தைப் பெற்றுப் பிறகு காங்கிரஸ் கட்சியின் சார்பாகத் தேர்தலில் போராட வேண்டுமென்று முடிவு செய்தது. ஆனால் மாறுமைக் கட்சியில் இருந்த நாங்கள் வேறுவிதமாக விரும்பினோம். அதாவது, காங்கிரஸ் இந்த விஷயத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்துவிட்டதால் இனி ஆக்கவேலைத் திட்டத்தைத்தான் முழு ஆற்றலையும் கொண்டு கவனிக்க வேண்டும் என்பதுதான். ஆனால் அதன்படி ஆகும் என்று தோன்றவில்லை. ஏனெனில் கவுன்ஸில் புகுதலைப்பற்றி இன்னும் வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. சத்தியாக்கிரகத்தை ஆரம்பிப்பதற்காக ஆக்க வேலைத் திட்டத்தை மும்முரமாக நடத்த வேண்டும் என்றும், காங்கிரஸ் முடிவு செய்தபடி சத்தியாக்கிரகத்திற்காக இருபத்தைந்து லக்ஷம் ரூபாயும் ஐம்பதாயிரம் தொண்டர்களும் திரட்டப்படவேண்டும் என்றும் அகில பாரதீயக் குழுவின் இருக்கையில் நிச்சயிக்கப்பட்டது. ஆனால் இந்த வேலை எப்படி அமைதியாக நடக்கும்? காங்கிரஸின் பேரவைக்குப் பின் பல முக்கியமான காங்கிரஸ்காரர்கள் சிறையிலிருந்து வெளிவந்தார்கள். அவர்களுள் மௌலானா அபுல்கலாம் ஆஜாதும் ஒருவர். பீகாரின் தலைவர்களுள் மௌல்வீ முகம்மது ஷபீயும் பாபூ ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவும் இதே சமயத்தில் சிறையிலிருந்து வெளியே வந்தார்கள். மௌலானா ஆஜாத் சிறையிலிருந்து வெளிவந்ததுமே இரண்டு கட்சிகளிடையில் எப்படியாவது ஓர் உடன்படிக்கையைச் செய்து வைக்க வேண்டுமென்ற கவலையில் மூழ்கிவிட்டார். கயா காங்கிரஸுக்குப் பிறகு அவர் செயலாற்றுக் குழுவின் உறுப்பினராகத்

தேர்ந்தெடுக்கப்பட்டார். செயலாற்றுக் குழுவின் இருக்கையில் அவர் ஒப்பந்த விஷயத்தைக் கொண்டு வந்தார். செயலாற்றுக் குழு அதை ஏற்றுக் கொண்டது. சுயராஜ்யக் கட்சித் தலைவர் கள் எல்லாருடனும் அவர் எல்லா விஷயங்களையும் பேச முடிய வில்லை. ஆயினும் அவருக்குத் தெரிய வந்த வரையில், அக் கட்சிக்காரர்களுக்கு இப்பேச்சுப் பிடித்திருந்தது. அதனால் பிப்ரவரி கடைசி வாரத்தில் செயலாற்றுக் குழுவின் இருக்கையை யும் அகில பாரதீயக் குழுவின் இருக்கையையும் பிரயாகில் கூட்டி, இதைப்பற்றி ஆலோசனை செய்வது என்று முடிவு செய்யப் பட்டது. மௌலானா சாஹபானவர் இச்சமாதானத்தைச் செய்து வைக்க மிகவும் ஆவலாயிருந்ததால், தாம் பற்றுதலற்ற மனோ பாவத்துடன் இதற்கு உழைப்பதற்காக வேண்டிச் செயலாற்றுக் குழுவிலிருந்து விலகிக் கொண்டார்.

பிப்ரவரி கடைசியில் பிரயாகில் அகில பாரதீயக் குழுவின் இருக்கை கூடியது. தேசபந்து தாஸ் தலைவராக இருக்க ஒத்துக் கொண்டார். ஒப்பந்தத்தைப் பற்றிய தீர்மானம் அந்த அவை யில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதன்படி, (1) கவுன்ஸிலைப் பற்றிப் பிரசாரம் ஏப்பிரல் 30ஆம் தேதி வரையில் நிறுத்தப்பட வேண்டும். (2) இரு கட்சியாரும் தம்முடைய செயல் திட்டங் களின் மற்ற அம்சங்களை ஒட்டிச் செய்ய விரும்பும் வேலைகளைச் செய்யலாம்; ஆனால் ஒருவர் ஒருவருடைய வேலைக்கு இடைஞ் சல் செய்யக்கூடாது. (3) மாறுதல் வேண்டாதார் கயா காங்கிர ஸின் தீர்மானத்தின்படி சத்தியாக்கிரகத்துக்காக பணத்தையும் தொண்டர்களையும் திரட்டலாம். (4) மாறுதல் வேண்டுபவர்கள் ஆக்க வேலைகளுக்காகவும் மற்றும் இருகட்சியாரும் மனமொப்பும் வேறு வேலைகளுக்காகவும் பணம் சேர்ப்பதிலும் செயலாளர்களைச் சேர்ப்பதிலும் மாறுதல் வேண்டாதாருக்கு உதவி புரியவேண்டும். (5) ஏப்பிரல் 30ஆம் தேதிக்குப் பிறகு இருகட்சியாரும் எப்படிச் சௌகரியமோ அப்படித் தத்தம் வேலைத் திட்டப்படி வேலை செய்ய லாம். இவைதாம் அந்த ஒப்பந்தத்தில் கண்டிருந்த நிபந்தனைகள்.

இத்தீர்மானத்தை ஒட்டி நான் ஸ்ரீ ராஜகோலாச்சாரி யாருடன் பல்வேறு மாகாணங்களில் சுற்றி வந்தேன். இதற்கு முன் நான் என் மாகாணத்தில்தான் சுற்றி வந்திருக்கிறேன். மற்ற மாகாணங்களைப் பற்றி அதிகமாகத் தெரியாது. இச் சுற்றுப் பிரயாணத்தில் பல இடங்களுக்குச் செல்வதற்கும் அங் குள்ள செயலாளர்களை நன்றாகத் தெரிந்து கொள்வதற்கும் நல்ல வாய்ப்புக் கிடைத்தது. பணமும் திரட்டப்பட்டது. ஆக்க

வேலையைப் பற்றி மிகவும் வற்புறுத்தி வந்தோம். ராஜாஜி சொற்பொழிவுகளும் ஆற்றிவந்தார். ராஜகோபாலாச்சாரியாரைப் போலக் கெட்டிக்காரரும் மதி நுட்பம் உடையவரும் திறமையுள்ளவரும் கிடைப்பது அரிதே. அவர் நிறுத்தி நிறுத்தி இனிமையான சொற்களால் தம்முடைய கருத்துக்களை அருமையான முறையில் கேட்போரின் முன் சமர்ப்பித்து அவர்களை மயக்க வல்லவர். அவர் பேசியபின் என்னால் என்ன கூற முடியுமென்று எண்ணி, சும்மா இருப்பதே நல்லது என்று நினைத்தேன். அவருடைய சொற்பொழிவின் நற்பயனை என் பேச்சுக் கெடுத்துவிடும் என்று அஞ்சினேன். ஆனால் நானும் ஏதாவது சொல்ல வேண்டுமென்று மக்கள் விரும்பினார்கள். இதிலிருந்து தப்புவதற்காக ஒரு நல்ல தந்திரத்தைக் கடைப்பிடித்தேன். ராஜாஜி ஆங்கிலத்தில் பேசிவந்தார். ஏனெனில் அவருக்கு ஹிந்தியில் பேசத் தெரியாது. நான் அவருடைய பேச்சை மொழி பெயர்க்கும் வேலையை எடுத்துக் கொண்டேன். இப்படி நான் செய்திராவிட்டால் ஒவ்வொரு கூட்டத்திற்கும் மொழி பெயர்ப்பாளரைத் தேடிக் கொண்டிருக்க வேண்டி வந்திருக்கும். மேலும், அவர் சரியாக மொழி பெயர்ப்பாரோ என்னவோ தெரியாது. ராஜாஜியின் கருத்தின் போக்கு எனக்கு நன்றாகப் பழக்கமாகிவிட்டது. அவர் பேசும் பாணியையும் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தேன். அதனால் ஒரு கல்லால் இரண்டு பழங்களை அடிக்கலாம் என்று கண்டு கொண்டேன். அவர் பேச்சையும் மொழி பெயர்த்ததாகும், நானும் பேசுவதிலிருந்து தப்பியதாகும். அவர் ஒரு வாக்கியத்தை முடிப்பார். நான் அதை உடனே மொழிபெயர்த்துக் கூறுவேன். இப்படியாக என் வேலையும் எளிதாகிவிட்டது. மக்களும் அவர் கூறியவற்றையெல்லாம் அவ்வப்போதே புரிந்து கொண்டார்கள். ஹிந்தி மொழி பெயர்ப்பு அவசியப்பட்ட எல்லாக் கூட்டங்களிலும் நான் பெரும்பாலும் இவ்வண்ணமே செய்து வந்தேன். மொழி பெயர்ப்பது கடினமான வேலை. அதுவும் பேசுபவர் மடைதிறந்தாற் போலப் பேசிக் கொண்டு பொகும்போதே உடனடியாக மொழி பெயர்பது மிகவும் கடினம். ஆனால் நான் இதில் வல்லவனாகிவிட்டேன். நான் கல்கத்தா ஹைகோர்ட்டில் ஒரு மொழி பெயர்ப்பாளரைப் பார்த்திருக்கிறேன். அவர் சாட்சிகளின் குறுக்கு விசாரணையின் போது பாரிஸ்டரின் கேள்விகளையும் சாட்சிகளின் விடைகளையும் மிகத் திறமையாக மொழி பெயர்ப்பார். வெறும் சொல்லுக்குச்

சொல் மட்டும் அன்று. கேள்விகளைப் போடும் குரலின் நயத்தைக் கூடத் தம் மொழிபெயர்ப்பில் வடித்துவிடுவார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு நான் ஐரோப்பா கண்டத்திற்குச் சென்றபோது அங்கே போரை வெறுப்போர் (பாசிபிஸ்ட்) சர்வதேச மகாநாடு ஒன்றிற்குப் போயிருந்தேன். அதில் மிக மிகத் திறமைசாலியான மொழிபெயர்ப்பாளர் ஒருவரைக் கண்டேன். அவர் ஜெர்மானியர். அப்போது அவருக்கு 24–25 வயதுக்கு மேலிருக்காது. ஆயினும் அவருக்கு ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், எஸ்பராண்டோ ஆகிய மொழிகள் மிகவும் நன்றாகத் தெரியும். நான் அவரைச் சந்தித்தபோது அவர் ஏதோ ஒரு சம்ஸ்கிருத நூலை ஜெர்மனியில் மொழி பெயர்க்கும் வேலையில் ஈடுபட்டிருந்தாராம். நான் மொழிபெயர்த்த கதையைப் பிடித்துக் கொண்டு விஷயத்தைவிட்டு நெடுந்தூரம் திரிந்து விட்டேன்.

அந்தச் சுற்றுப் பிரயாணத்தால் ஆக்க வேலைத் திட்டத்தில் மக்களுக்குச் சிறிது ஊக்கம் வந்தது. ஆனால் வேலை அதிகமாக முன்னேற வில்லை. இரண்டு மூன்று மாதங்களில் இதில் மாறுதல் எதுவும் காணப்படவில்லை. பணம் சுமார் பதின்மூன்று லக்ஷம்தான் சேர்ந்தது. 25 லக்ஷம் முழுவதும் அன்று. இதனால் சுயராஜ்யக் கட்சிக்கு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. நாங்கள் தோல்வியை ஒப்புக் கொள்ளவேண்டும் என்று அவர்கள் கூறலானார்கள். எங்களைத் தம்முடைய வேலைத்திட்டத்தை மேற்கொள்ள வைக்க முயற்சி செய்யவும் முற்பட்டார்கள்.

# 51. சுயராஜ்யக் கட்சியுடன் உடன்படிக்கை செய்ய முயற்சி

நாங்கள் ஒரு பக்கத்தில் மேலே கூறப்பட்டுள்ள சுற்றுப் பிரயாணத்தில் ஈடுபட்டிருந்தோம். மற்றொரு பக்கத்தில் ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் அதிகரித்துக் கொண்டே வந்தன. முல்தானில் நடந்ததைப் பற்றி மேலே கூறியிருக்கிறேன். அங்கே இன்னும் மனக்கசப்பு இருந்து கொண்டே வந்தது. அதனால், மௌலானா சாஹப் சிறையிலிருந்து விடுதலையாகி வந்தவுடன் அவர் கலந்து கொண்ட அதே செயலாற்றுக் குழு இருக்

கையிலேயே பண்டித் மாளவீயஜீயுடன் மௌலானு சாஹபும் முல்தானுக்குப் போவதென்பதும், அங்குள்ள சச்சரவை தீர்த்து வைப்பதற்கு முயற்சி செய்வதென்பதும் முடிவு செய்யப்பட்டன. பொருள் நஷ்டமடைந்தவர்களுக்கு உதவி புரிவதற்காகக் காங்கிரஸிலிருந்து பத்தாயிரம் ரூபாயும் அளிக்கப்பட்டது. ஆனுல் சண்டை இப்போது முல்தானேடு நின்றுவிடவில்லே. அம்ருத்சாரிலும் நிலைமை மோசமாகிவிட்டது. எங்கள் சுற்றுப் பிரயாணத்தின் போது பஞ்சாபிலும் சில இடங்களுக்குச் சென்ருேம். தேசபந்துதாஸ், பண்டித் மோதிலால் நேரு, ஹகீம் அஜ்மல்கான் ஆகியவர்களும் இடையருது பாடுபட்டு வந்தார்கள். அவர்கள் டாக்டர் அன்சாரி முதலியவர்களுடன் கூடி ஹிந்து—முஸ்லிம் ஒப்பந்தம் ஒன்றைச் செய்வதற்கும், நாட்டில் கேடுற்று இருக்கும் நிலைமையைத் திருத்துவதற்கும் முயற்சி செய்து வந்தார்கள். ஆனுல், அவர்கள் இதில் வெற்றி பெறவில்லே.

பஞ்சாப் சுற்றுப் பிரயாணத்தின்போது, ராஜாஜியும் நானும் தேசபந்து தாஸை லாகூரில் சந்தித்தோம். அங்கே தேசபந்து தாஸானவர் காங்கிரஸுக்கும் சுயராஜ்யக் கட்சிக்கும் இடையில் ஒரு நிரந்தரமான ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்ற கருத்துடன் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். காங்கிரஸின் வேலையைப் பல பிரிவுகளாக வகுத்து, ஒவ்வொரு பிரிவையும் நடத்தும் பொறுப்பை-அதாவது, தேசீயக் கல்வி, காதி பிரசாரம், கவுன்ஸில் புகுதல், வெளிநாடுகளில் பிரசாரம், தொழிலாளர் கழகம், தீண்டப்படாதாரை முன்னேற்றுதல் ஆகியவற்றை—அந்தந்த வேலேயில் மிகவும் பற்றுதல் உள்ள ஒருவரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று அவர் கூறினர். இதற்காக ஐந்தாறு கோடி ரூபாயும் திரட்டவேண்டும் என்பதையும் கூறினர்.

நாங்கள் பஞ்சாபிலிருந்து புனுவுக்குச் சென்ருேம். அங்கே செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அதில் இந்தத் தீர்மானம் ஒத்துவராது என்பது புலப்பட்டது. அக்குழு இதை ஏற்றுக் கொள்ளவில்லே. அதே சமயத்தில் தேசபந்துதாஸ் முதலானவர்களிடமிருந்து ஒரு தந்தி வந்தது. பஞ்சாபின் நிலைமையைப்பற்றி ஆலோசனே செய்வதற்காகப் பிரயாகில் செலாற்றுக் குழுவின் இருக்கையை உடனே கூட்ட வேண்டும் என்று அதில் கூறியிருந்தது. ஆனுல், நாங்கள் ஏப்பிரல் முப்பது முடிய வேலேத்திட்டம் போட்டிருந்ததால், அந்த வேலேயை நிறுத்திவிட்டுச் செயலாற்றுக் குழுவின் இருக்கையை இவ்வளவு விரைவில் கூட்ட இயலாமற் போயிற்று. ஆகையால் ராஜாஜி மட்டும்

அனுப்பப்பட்டார். உசிதமானதைச் செய்யும்படியும், செயலாற்றுக் குழுவின் இருக்கை தேவைதான் என்று அவருக்குப் புலப்பட்டால் அதை நடத்தும்படியும் அவருக்குக் கூறி அனுப்பினோம். தேசபந்துதாஸ் முதலானோரைக் கண்டு அவர் பேசினார். ஆனால், முழுதும் பேசி முடிக்க இயலவில்லை. அதனால் எஞ்சிய சில விஷயங்களைப் பற்றிப் பேச்சு தில்லியில் ஹகீம் அஜ்மல் கானுடன் நடந்தது. இவ்விதமாகத் தம்முடன் நடந்த பேச்சை எல்லாவற்றையும் பற்றி ராஜாஜி குறிப்பு எழுதி ஹகீம் சாஹபிடம் கொடுத்து, அவரைத் தேசபந்துதாஸ், பண்டித் மோதிலால்ஜீ முதலானோரின் அபிப்பிராயத்தைக் கேட்டறியும்படி கூறிவிட்டு அக்குறிப்பின் பிரதி ஒன்றை எடுத்துக்கொண்டு செயலாற்றுக் குழுவின் மற்ற உறுப்பினர்களைச் சந்திப்பதற்காகப் பம்பாய்க்குச் சென்றார். இந்தத் தீர்மானத்தைப் பண்டித் மோதிலால்ஜீயும் ஏற்றுக் கொள்ளவில்லை. சர்தார் வல்லப்பாயீயும் சேட் ஜம்நாலால்ஜீயும்கூட ஏற்றுக் கொள்ளவில்லை. ஆயினும், மாறுமைக் கட்சிக்காரர்கள்தாம் இதை ஏற்றுக் கொள்ளாதது போல ஓர் அறிக்கை வெளி வந்தது. அப்படியே பிரசாரமும் செய்யப்பட்டு வந்தது. மாறுமைக் கட்சிக்காரர்களில் ஒருவராயிருந்த ஸ்ரீ சரோஜினி நாயுடுவுக்கும் இக்காரணத்தால்தான் மாறுமைக் கட்சிக்காரர்கள் மீது சிறிது மனஸ்தாபம் உண்டாயிற்று. அந்தக் காலத்துப் பத்திரிகைகளும் மிகவும் கடுமையான விமர்சனங்கள் எழுதின. பண்டித் மோதிலால் சுயராஜ்யக் கட்சியின் சார்பாகப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டார். ஒப்பந்தத்தைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக மே மாதக் கடைசியில் நடைபெறுவதாக இருந்த அகில பாரதீயக் குழுவின் இருக்கைக்குத் தாம் வரமாட்டார் என்று அறிக்கை செய்துவிட்டார். மேலும் தம்முடைய கட்சிக்காரர்களையும் போகக் கூடாதென்று தடுத்துவிட்டார்.

எங்களுக்குள் இருந்துவந்த இந்தச் சண்டையால் நாட்டிலே மக்கள் வருத்தமடைந்தார்கள். ஏதாவது ஒப்பந்தம் செய்வது நன்றென்று பல மாகாணக் குழுக்களும் கூறின. மாறுமைக் கட்சிக்காரர்களில் டாக்டர் அன்சாரியும் ஸ்ரீமதி நாயுடுவும் ஒப்பந்தத்தை ஆதரித்தார்கள். சமீபத்தில் விடுதலை செய்யப்பட்டவரான ஜவாஹர்லால் நேருவும் (கயா காங்கிரஸின்போது அவர் சிறையில் இருந்தார்). ஒப்பந்தத்தை விரும்பினார். அதனால் ஒப்பந்தத்திற்குச் சாதகமாக ஒரு சூழ்நிலை தயாராகிவிட்டது. பிறகு சுயராஜ்யக் கட்சிக்காரர்களும் பம்பாயில் நடக்கப்போகும்

அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் இருக்கையில் தாமும் கலந்து கொள்ள எண்ணங்கொண்டிருப்பதாக அறிக்கை செய்தார்கள். செயலாற்றுக் குழுவின் சார்பிலிருந்து ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் காங்கிரஸ் செய்யும் முடிவை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருந்தால் காங்கிரஸின் விசேஷப் பேரவை ஒன்று கூட்டப்படும் என்று அதில் கூறப்பட்டிருந்தது. அப்போது காங்கிரஸுக்குத் தலைமை வகித்து வந்த தேசபந்து தாஸானவர் சுயராஜ்யக் கட்சியானது காங்கிரஸின் விசேஷ பேரவையின் முடிவை ஏற்றுக்கொண்டு அதன்படி வேலை செய்யும் என்று தாம் வாக்குறுதி அளிக்க முடியாது என்று கூறிவிட்டார். அதன்மேல், செயலாற்றுக்குழு தன் தீர்மானத்தை மீட்டுக்கொண்டு விட்டது. அங்கு வந்திருந்த உறுப்பினர்கள் பல தீர்மானங்களைக் கொண்டு வந்தார்கள். அவர்களில் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் டண்டன் ஒருவர் ஆவர். அவருடைய தீர்மானத்தைப் பண்டித் ஜவாஹர்லால்ஜீ ஆதரித்தார். கவுன்ஸில் தேர்தலில் கலந்துகொள்ள விரும்புபவர்கள் பலர் நம் நாட்டில் இருப்பதால், நமக்குள் இருக்கும் சண்டையைத் தீர்க்க வேண்டும் என்ற நோக்கத்தை முன்னிட்டு கயா காங்கிரஸின் கட்டளையைப் பின்பற்றித் தேர்தலுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்யாமல் இருக்கவேண்டும் என்று அத்தீர்மானம் கூறியது. அதன்மேல் சிலர், இத்தீர்மானம் கயா காங்கிரஸின் முடிவுக்கு முரணாக இருப்பதால் இது ஒழுங்கீனமானது என்ற பேச்சைக் கிளப்பினார்கள். ஆனால் தேசபந்துதாஸ் அந்த ஆக்ஷேபணையை ஏற்றுக் கொள்ளவில்லை. தீர்மானம் முறையானதுதான் என்று தீர்ப்பளித்துவிட்டார். இத்தீர்மானம் சிறியதொரு பெரும்பான்மை பலத்துடன் நிறைவேற்றப்பட்டது. கயாவில் செயலாற்றுக் குழுவின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாங்கள் உடனே ராஜீநாமா செய்துவிட்டு எங்கள் பதவிகளில் இருந்து விலகிக்கொண்டோம். தேசபந்துவின் மனப்போக்குப்படி ஒரு புதிய செயலாற்றுக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. அதில் இருந்தவர்கள் பிடிவாதமான மாறுதல் வேண்டுவோருமல்லர் வேண்டாதாரும் அல்லர். அதாவது ஒப்பந்தத்தை வேண்டுபவர் என்பது பொருள். டாக்டர் அன்சாரி தலைவராக அமர்ந்தார். பண்டித் ஜவாஹர்லால் அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இத்தீர்மானத்தின்மேல் ராஜாஜிக்கு அதிக மனக்குறை உண்டாயிற்று. இப்படிச் செய்வதால் காங்கிரஸானது தற்கொலை புரிந்து கொள்கிறது என்று அவர் கூறினார். ''அது இரண்டில்

ஒன்றைச் செய்யவேண்டும். ஒன்று கவுன்ஸில் புகுவதுக்கு நேர் முகமாக அனுமதி அளித்து, தேர்தலில் போராட வேண்டும். இல்லையென்றால் தேர்தலை முற்றிலும் புறக்கணித்து, அதைப் பற்றி மக்களிடையில் குறையறப் பிரசாரம் செய்யவேண்டும். ஆனால் அகில பாரதீயக் குழுவோ இரண்டில் ஒன்றைச் செய்ய மாட்டேன் என்கிறது. ஒருபுறத்தில் சுயராஜ்யக் கட்சிக்குப் பிர சாரம் செய்ய உரிமையை அளிக்கிறது. தேர்ந்தெடுக்கப்படுவ தற்கும் வாய்ப்பை அளிக்கிறது; மேலும் காங்கிரஸின் கையில் எவ்விதமான அதிகாரத்தையும் வைத்துக் கொள்ளவுமில்லை. மற் றொரு பக்கத்தில் தேர்தலுக்கு விரோதமாக எதிராளிகளை வாயைத் திறக்கவிடவுமில்லை. அதனால் இத்தீர்மானம் ஏற்றுக்கொள்ளத்தக்க தன்று. முக்கியமாக, கயா காங்கிரஸானது தேர்தலுக்கு விரோத மாகப் பிரசாரம் செய்யும்படி ஆணையிட்டிருக்கும்போது இத்தீர் மானம் ஏற்கத் தக்கதன்று'' என்று அவர் கூறினார். செய்தித் தாள்கள் பெரும்பாலும் கவுன்ஸில் புகுதலின் சார்பாகவே இருந் தன என்பதில் ஐயமில்லை. காங்கிரஸிலும் பலருக்கு இந்தப் பேச்சினால் கோபம் வந்தது. அநேகம் பேருக்கு இந்த ஒப்பந்தம் சரியாகப்பட்டது. புதிய செயலாற்றுக் குழுவானது கயா காங் கிரஸில் நிறைவேற்றப்பட்டக் கவுன்ஸில் புறக்கணிப்புத் தீர்மானம் நிலைத்து நிற்கிறதென்றும், அதைப் பற்றிப் பிரசாரம் செய்வது தான் இப்புதிய தீர்மானத்தால் நிறுத்தப்பட்டிருக்கிறது என்றும் ஓர் அறிக்கையை விடுத்தது. இதே கருத்தை நாங்களும் பீகார் மாகாணக் குழுவின் சார்பில் வெளியிட்டோம். ஆனால் மற்ற மாகாணக் குழுக்கள் இதற்கு விரோதமாகத் தீர்மானங்களை நிறை வேற்றின. அவை இத்தீர்மானத்தை கயா காங்கிரஸ் செய்த முடிவுக்கு விரோதமானதென்று கருதி ஏற்றுக் கொள்ளவில்லை.

மேலே கூறிய பம்பாய் இருக்கைக்குப் பிறகு இதைப் பற்றி மேலும் அதிகமாக வாதம் நடந்து வந்தது. எந்த வாக்கு வாதத்தை ஒழிப்பதற்காகப் பம்பாய்த் தீர்மானம் நிறைவேற்றப் பட்டதோ, அந்த வாக்குவாதம் முன்போலவே தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. தேசபந்துதாஸ் பம்பாயிலிருந்து சென்னை மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போய்விட் டார். அங்கே பல இடங்களில் அவர் மிகவும் புண்படுத்துவதும் சண்டை மூட்டுவதுமான சொற்பொழிவுகளை ஆற்றினார். அவற் றின் ஒன்றில் லார்டு ரீடிங்குடன் செய்ய விரும்பிய உடன்படிக் கையைக் குறிப்பிட்டு, அச்சமயத்தில் சத்தியாக்கிரகத்தால் அர சாங்கம் பயந்து நடுங்கிவிட்டதாகவும் அது பணிந்து வந்து சமா

தானம் செய்துகொள்ள விரும்பியதாகவும், அதற்கான நிபந்தனை களை அரசாங்கத்தார் தம்மிடம் அனுப்பியதாகவும், அவற்றைத் தாம் ''ஹெட் குவார்ட்டர்ஸுக்கு'' அதாவது காந்திஜீயிடம், அனுப்பியதாகவும், விஷயத்தை காந்திஜீ முற்றிலும் குளறுபடி யடித்து விட்டதாகவும், அதனால்தான் நாம் இப்போது சர்க்காவை மட்டும் சுற்றிக்கொண்டிருக்கிறதாகவும் அவர் கூறினர். இதி லிருந்து பழைய கதைகளெல்லாம் மறுபடியும் கிளம்பின. அந்தக் காலத்தில் காந்திஜீ, பண்டித் மாளவீயஜீ, தேசபந்துதாஸ் ஆகி யோர் ஒருவருக்கொருவர் அனுப்பிய தந்திகளை யெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணதாஸ் பத்திரிகைகளில் அச்சிட்டு விட்டார். அதன்மேல், பண்டித் சியாம்சுந்தர் சக்ரவர்த்தி, பண்டித் மாளவீயஜீ, மௌலானு ஆஜாத் ஆகியோர் இந்த வாக்குவாதத்தில் கலந்து கொண்டு தத்தம் அறிக்கைகளைச் செய்தித்தாள்களில் வெளியிட் டார்கள்.

மறுபடியும் நாடெங்கும் கடுமையான வாக்குவாதம் தலை யெடுத்துப் பலமாக நடக்கத் தொடங்கியது. அதனுல் செயலாற் றுக் குழுவின் உறுப்பினர் சிலர் அகில பாரதீயக் குழுவின் இருக் கையை மறுபடியும் கூட்டும்படி தொந்தரவு செய்தார்கள். அப் படியே ஜூன் கடைசியில் நாகபுரியில் ஓர் இருக்கை கூடியது. கவுன்ஸில் புகுதல் போராட்டத்தைத் தீர்ப்பதற்காகக் காங்கிரஸின் பேரவை ஒன்றைக் கூட்ட வேண்டுமென்று அந்த இருக்கையில் முடிவு செய்யப்பட்டது. செயலாற்றுக் குழுவின் சார்பில் ஒரு தீர்மானமும் அங்கே நிறைவேற்றப்பட்டது. பம்பாயில் நடந்த அகில பாரதீயக் குழுவின் முடிவுக்கு விரோதமாக எந்தெந்த மாகாணக் குழுக்கள் பேச்சைக் கிளப்பினவோ, மேலும் எவை காங்கிரஸின் ஒழுக்க நெறியை மீறினவோ, அவற்றின்மேல் நட வடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று அத்தீர்மானம் கூறி யது. இப்படிப்பட்ட குழுக்களில் தமிழ் நாட்டுக் குழுவே தலைமை யானது. இத்தீர்மானம் முக்கியமாக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியா ரைக் குறியாகக் கொண்டிருந்தது. இதைப்பற்றி மிகவும் காரசார மான வாக்குவாதம் நடந்தது. அவர் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் தீர்மானத்திற்கு விரோதமாக வேலை செய்தார் என்று கூறப்பட்டது. நாங்களோ, அகில பாரதீயக் குழுவின் தீர்மானம் தான் காங்கிரஸ் செய்த முடிவுக்கு விரோதமானதென்று கருதி ேனும். இரவு ஆகியும் வாதம் தொடர்ந்து நடந்து கொண்டிருந் தது. நான் ராஜாஜியை ஆதரித்துச் சொற்பொழிவு ஆற்றி னேன். 1911இல் இருந்து நான் அகில பாரதீயக் குழுவின்

உறுப்பினருக இருந்து வந்தாலும்கூட மிகச் சில சந்தர்ப்பங்களில்தான் அதில் பேசியதுண்டு. சத்தியாக்கிரகக் குழுவின் அறிக்கையைப் பற்றி வாதம் செய்ததும் கயா காங்கிரஸின்போது பேசியதும் நீங்கலாக வேறு எங்காவது காங்கிரஸிலாவது அல்லது அகில பாரதீயக் குழுவிலாவது இதற்குமுன் எப்போதாவது பேசியிருந்ததாக எனக்கு நினைவில்லை. கயாவில் என் சொற்பொழிவை ஹிந்தியில் நிகழ்த்தினேன். நாகபுரியில் ஆங்கிலத்தில் பேசுவது நன்றெனப் புலப்பட்டது. ஏனெனில் அங்கே தென்இந்தியாவிலிருந்தும் மற்றும் ஹிந்தி பேசப்படாத மற்ற மாகாணங்களிலிருந்தும் வந்திருந்த பிரதிநிதிகளுக்கு விஷயங்களைத் தெளிவாக விளங்க வைக்க வேண்டியிருந்தது. ராஜாஜி அதிகமாகப் பேச விரும்பவில்லை. நான் அங்குத்தான் முதல் முதலில் ஆங்கிலத்தில் பேசினேன் என்று நினைக்கிறேன். என் சொற்பொழிவு மக்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. ராஜாஜியின் கட்சிக்கு விரோதமானவரும் சுயராஜ்யக் கட்சியைப் பலமாக ஆதரித்தவருமான ஸ்ரீ சத்தியமூர்த்தி என்னிடம் வந்து என் பேச்சை மெச்சிப் பாராட்டினர். "இவ்வளவு நன்ருக ஆங்கிலம் பேசுவீர்கள் என்பது எனக்குத் தெரியாது" என்று கூறினர். இச்சொற்பொழிவால் அத்தீர்மானம் ஏற்கப்படாமல் போய்விட்டது. இக்கண்டனத் தீர்மானம் நிறைவேறப் பெருததால் செயலாற்றுக் குழு ராஜீநாமா செய்துவிட்டது. புதுக்குழு அமைக்கப்பட்டது. நான் மீண்டும் செயலாற்றுக் குழுவில் வந்து சேர்ந்துவிட்டேன். ஸ்ரீ வேங்கடப்பய்யா தலைவராக அமைந்தார். ஸ்ரீ கோபால்கிருஷ்ணையா அமைச்சரானர். விசேஷப் பேரவையை எங்கே கூட்டுவது என்று முடிவு செய்யும் பொறுப்பு செயலாற்றுக் குழுவின் கையில் ஒப்படைக்கப்பட்டது. அது தில்லியில் நடக்கும் என்று அக்குழு சில நாட்களுக்குப் பிறகு முடிவு செய்தது. அகில பாரதீயக் குழுவானது மௌலான அபுல்கலாம் ஆஜாதை விசேஷப் பேரவைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுத்தது.

# 52. கொடி சத்தியாகிரகம், காந்தி சேவா சங்கம்

தில்லியில் நடந்த காங்கிரஸ் விசேஷப் பேரவையைப் பற்றி ஏதாவது கூறுமுன் நாகபுரி கொடி சத்தியாகிரகத்தைப் பற்றிக் கூறவேண்டும். தேசீய வாரத்தின் ஓர் அம்சமாக 1923ஆம் ஆண்டில் ஜூலை 13ஆம் தேதியன்று அங்கே தேசீயக் கொடியை எடுத்துக் கொண்டு ஓர் ஊர்வலம் புறப்பட்டது. மத்தியப் பிர தேசத்தின் அரசாங்கமானது அவ்வித ஊர்வலத்தை ஜபல்பூரி லும் நாகரிபுரியிலும் சிவில் லைனில் போகவிடாமல் தடுத்தது. அந்த உத்தரவை மீறியதற்காகப் பண்டித் சுந்தர்லால் முதலா னோர் ஜபல்பூரில் கைது செய்யப்பட்டார்கள். அதனால் மக்களுக்கு அதிக ஆத்திரம் வந்தது. சத்தியாக்கிரகம் செய்யவேண்டுமென்று எண்ணப்பட்டது.

பெரிய பெரிய தலைவர்கள் எல்லாரும் சத்தியாக்கிரகத்திற்கு விரோதமாக இருந்தார்கள். கவுன்ஸில் வேலைத் திட்டத்தை அவ மானப்படுத்துவதற்காகவே மாறுதல் வேண்டாதார் செய்யும் ஒரு கூத்து இதுவென்று அவர்கள் நினைத்தார்கள். எதுவாயினும் சரி, நாகபுரியில் மே மாதம் முதல் தேதி சத்தியாக்கிரகம் தொடங்கி விட்டது. சேட் ஜம்நாலால்ஜீ அதற்குத் தலைவராக அமைந்தார். சத்தியாக்கிரகம் இவ்விதமாக நடத்தப்பட்டது. அதாவது, சில சத்தியாக்கிரகிகள் தேசீயக் கொடியைப் பிடித்துக் கொண்டு ஊர்வலம் அமைந்து சிவில் லைன்ஸை நோக்கிப் போவார்கள். அரசாங்கத்தாரால் அவர்கள் ஓர் இடத்தில் தடைசெய்யப்படுவார் கள். அதை மீறியதும் அவர்கள் கைது செய்யப்படுவார்கள். இவ்வண்ணமாகப் பலர் கைது செய்யப்பட்டுச் சிறைச் சாலைக்குச் சென்றார்கள். சத்தியாக்கிரகத்தின் செய்தி நாடெங்கும் பரவியது. சத்தியாக்கிரகம் செய்வதற்காக எல்லா இடங்களில் இருந்தும் தொண்டர்கள் வந்து சேர்ந்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு சேட் ஜம்நாலால்ஜீயும் கைது செய்யப்பட்டுப் போனார். அதன் மேல் சர்தார் வல்லப்பாயீ நாகபுரிக்கு வந்து தலைமை பூண்டார். நான் பீகாரில் தொண்டர்களைத் திரட்டி நாகபுரிக்கு அனுப்பத் தொடங்கினேன். நானும் அவர்களுடன் பலமுறை சென்று வந் தேன். இந்தச் சத்தியாக்கிரகத்தால் நாடெங்கும் கலவரம் உண்டாகியது. சர்தார் வல்லபாயீயும் கைது செய்யப்படுவார்

என்று தோன்றியது. இதனால் நான் அங்கே செல்வது மேலும் அவசியமாயிற்று.

இவ்விதமாக நாடெங்குமிருந்து ஆயிரக்கணக்கான சத்தியாக்கிரகிகள் அங்கே சென்று கைது செய்யப்பட்டார்கள். நிலைமை மோசமாகி விட்டது. ஸ்ரீ விட்டல் பாயீ சுயராஜ்யக் கட்சிக்காரர் ஆயினும், அங்கே வந்து சர்தாருக்கு உதவி புரியலானார். இந்தச் சத்தியாக்கிரகத்தை வளர விடுவது நல்லது அன்று என அரசாங்கத்தாரும் நினைத்தார்கள். இதனால் ஸ்ரீ விட்டல் பாயீ யுடன் பேச்சு நடந்தது. பிறகு ஒரு நாள் கொடியை எடுத்துக் கொண்டு சிவில் லைன்கள் வழியாக ஊர்வலம் செல்ல அனுமதி அளிக்கப்பட்டது. அதற்குப்பின் சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டு விட்டது. அந்தச் சமயத்தில் நான் நாகபுரியில் இருந்தேன். கடைசி நாள் ஊர்வலம் சிறப்பாக இருந்தது. ஏராளமான பேர் கொடியை ஏந்திக் கொண்டு ஊர்வலத்தில் சேர்ந்து கொண்டார்கள். ஸ்ரீ விட்டல் பாயீ, சர்தார் ஆகிய இருவருடன் நானும் சென்றேன். ஊர்வலம் மிகவும் அமைதியாகச் சிவில் லைன்ஸுக்குச் சென்று திரும்பியது. சத்தியாக்கிரகம் முடிவடைந்து விட்டது. அதற்குப்பின் கைதிகளும் விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள். இந்தச் சத்தியாக்கிரகத்தின் சாயல் மற்ற இடங்களிலும் நன்ருகப் படிந்தது.

பீகாரிலிருந்து ஏராளமான சத்தியாக்கிரகிகள் சென்றிருந்தார்கள். அவர்களில் ஒருவரான ஹர்தேவ் சின்ஹா நாகபுரி சிறையில் இறந்து விட்டார். அன்று நான் அவ்வூரில் இருந்தேன். சிறைச்சாலையிலிருந்து பிணம் எங்களிடம் கொடுக்கப்பட்டது. நாங்கள் எல்லோரும் சேர்ந்து அதற்குச் செய்ய வேண்டிய தகன கிரியைகள் எல்லாவற்றையும் அங்கேயே செய்து முடித்தோம். சர்தாருடன் எனக்கு முன்னமே சிறிது பழக்கம் உண்டு. ஆனால் நாகபுரியில்தான் அவருடன் நெருங்கிய நட்பு உண்டாகியது. இது என் வாழ்க்கையின் இன்பமான நினைவுகளில் ஒன்ருக என்றைக்கும் இருக்கும். அவருடைய திறமை, மிடுக்கு, தலைமை வகிக்கும் ஆற்றல் ஆகியவற்றைக் கண்டு அங்கேயே அவரிடம் எனக்கு அளவற்ற மரியாதை உண்டாகிவிட்டது. அவர் பால் உண்டாகிய பக்தியாவது நாளுக்குநாள் பெருகி வந்தது. அங்கேயே அவருடைய அன்பையும் நம்பிக்கையையும் நான் பெற்றேன். அவற்றை அவர் என்னிடத்திலும் பீகார் மாகாணத்திலும் அன்றே போல என்றும் காட்டி வந்தார்.

மாறுதல் கட்சிக்காரர்களுக்கும் மாருமைக் கட்சிக்காரர்களுக்

கும் வாக்கு வாதம் இப்படி நடந்து கொண்டே இருந்தால் ஆக்க வேலை படுத்துப்போகும் என்று சேட் ஜம்நாலால்ஜீ அப்போதே நினைத்தார். இதனால் ஆக்க வேலையில் மட்டும் அதிக கவனம் செலுத்தக் கூடியதான ஒரு தனிக் கழகத்தை அமைக்கவேண்டும் என்றும் அதில் காந்திஜீயின் சித்தாந்தத்தை ஏற்பவர்கள்தாம் முக்கியமாக இருக்க வேண்டுமென்றும் அவர் கருதினார். இக் கழகத்துக்குக் காந்தி சேவா சங்கம் என்று பெயர் கொடுக்கப் பட்டது. ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார், சர்தார் வல்லபாயீ படேல், ஸ்ரீ கங்காதர் ராவ் தேஷ் பாண்டே, சேட் ஜம்நாலால் பஜாஜ் முதலியவர்கள் அதனுடைய நிர்வாகக் குழுவின் உறுப் பினர்களாக அமைந்தார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து கொண்டேன். அச்சங்கம் இந்த முறையில் அமைந்திருந்த வரையில் நான் ஓர் உறுப்பினனாக இருந்தேன். அச்சங்கம் அரசியல் சண்டைகளிலிருந்து ஒதுங்கி நிற்க வேண்டுமென்று நாங்கள் இடையறாது முயன்று வந்தோம். உண்மையில் அப்படித் தான் நடந்தது. அதனுடைய செயலாளர்கள் காதி பிரசாரம், ஹரிஜன சேவை, ஆகிய ஆக்க வேலைகளில் தாம் முக்கியமாக ஈடுபட்டிருந்தார்கள். அப்படியிருந்தும்கூடக் காந்திஜீ சித்தாந் தத்திற்கு விரோதமானவர்கள் இதை ஓர் அரசியல் கட்சி என்று அடிக்கடி குறை கூறி வந்தார்கள். மேலும், சுயராஜ்யக் கட்சி, முன்னேற்றக் கட்சி (பார்வேர்டு பிளாக்) ஆகியவற்றோடு இதனுடைய பெயரையும் சேர்த்துப் பேசி வந்தார்கள்.

எப்படியாயினும் சரி, காந்தி சேவா சங்கமானது ஆக்க வேலையில் மிக்க ஊக்கம் காட்டி வந்தது. இதை மேலும் அபி விருத்தி செய்வதற்கு அதனுடைய உறுப்பினர்கள் சிறப்பாக முயற்சி செய்து வந்தார்கள். அதனுடைய கிளைகள் பல மாகாணங் களில் அமைக்கப் பெற்றன. பீகாரிலும் ஒன்று அமைக்கப்பட்டது. பலருக்கு இதனால் பிழைப்புக்கும் ஏதோ கிடைத்து வந்தது. அவர்களுடைய எண்ணிக்கை குறைந்து கூடிக் கொண்டிருக்கும், ஆட்களும் மாறிக் கொண்டிருப்பார்கள். இச் சங்கத்திற்காகத் தலைமையான இடம் ஒன்று அமைக்கப்பட்டு வேலை நடக்கவில்லை. இதற்காக முயற்சி செய்து, பல ஆண்டுகளுக்குப்பின் சாரன் ஜில்லாவில் உள்ள மைரவா என்ற கிராமத்தில் ஓர் ஆச்ரமம் அமைக்கப்பட்டது. ஆனால் அதுவும் சரியாக நடக்கவில்லை. இதனால் இம் மாகாணத்தில் உருப்படியான வேலை ஒன்றையும் செய்து காட்டமுடியவில்லை. ஆயினும் அதன் உறுப்பினர்கள் சிலர் ஆக்க வேலையைச் செய்து வந்தார்கள். இன்னும் சிலரால் அரசியல் துறையை விட்டுப் பிரிந்து வரமுடியவில்லை.

# 53. தில்லி காங்கிரஸிலிருந்து காகிநாடா காங்கிரஸ் முடிய

தில்லியில் நடந்த விசேஷப் பேரவைக்கு முன் மௌலானா முகம்மது அலி சிறையிலிருந்து விடுதலையாகி வந்து சேர்ந்தார். அவரும் கவுன்ஸில் புகுதலுக்கு விரோதமாகத்தான் இருப்பார் என்று நாங்கள் எண்ணினேம். ராஜாஜி இந்த வாக்கு வாதத்தால் மிகவும் மனம் நொந்து போய்த் தில்லிப் பேரவைக்கு வரவேயில்லை.

நாங்கள் மௌலானா முகம்மது அலியையே எங்கள் தலைவராகக் கொண்டோம். அவருடைய கையில் எல்லா விஷயங்களையும் விட்டு விட்டோம். அவர் இரண்டு கட்சிகளுக்கு இடையில் ஓர் உடன்படிக்கை ஏற்படவேண்டும் என்று நிச்சயித்தார். இந்த முடிவு ஒரு நிபந்தனைக்கு உட்பட்டிருந்தது. அதாவது காங்கிரஸ் பக்கத்திலிருந்தும் காங்கிரஸின் பேரிலும் தேர்தலில் போராடக் கூடாது; ஆனல் காங்கிரஸ்காரரர் எவராவது தேர்தலுக்கு நிற்க விரும்பினல் அவரைத் தடுக்கக் கூடாது. இவ்வண்ணமாகச் சுயராஜ்யக் கட்சிக்குத் தன் ஆற்றலை நம்பிக் காங்கிரஸ்காரர்களைத் தேர்தலுக்கு நிறுத்திப் போராடுவதற்கு நல்ல வாய்ப்புக் கிடைத்து விட்டது. காங்கிரஸானது தேர்தல் சண்டையிலிருந்து விலகிக் கொண்டது.

நாங்கள் இந்தச் சண்டையைக் கண்டு கலக்கமுற்றேம். இதனல் ஆக்க வேலைக்குத் தீங்கு விளையும் என்பதை உணர்ந்தோம். ஏனெனில் கவுன்ஸில் புகுதல் கட்சியைச் சேர்ந்த சிலர், கவுன்ஸில் புகுதலை ஆதரித்ததோடு மட்டும் அன்றி, ஆக்க வேலையை, அதை வெளிப்படையாகவோ மறைவாகவோ எதிர்க்காவிட்டாலும்கூட, அலட்சியம் செய்து வந்தார்கள். இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகு ஆக்க வேலையை விருத்தி செய்ய முடியுமென்று நாங்கள் நம்பிக்கை கொண்டோம்.

மௌலானா முகம்மது அலீயும் இதையே வற்புறுத்தினர். ஆனல் அந்தச் சமயத்தில் வேறென்றையும் கூறினர். அதன் ரகசியம் எங்களுக்குப் பின்னல்தான் தெரியவந்தது. இந்த ஒப்பந்தத்தை ஆதரித்துத் தமக்குக் கம்பியில்லாத் தந்தி மூலமாகச் செய்தி கிடைத்திருக்கிறதென்று கூறினர். அவருக்கு ஏதோ ஒரு வழியாகக் காந்திஜீயின் அபிப்பிராயம் தெரிய வந்திருக்கிற

தென்று நாங்கள் அதற்கு பொருள் கொண்டோம். காந்திஜீ சிறையிலிருந்து கட்டளை எதுவும் இடமாட்டார் என்பது எங்க ளுக்குத் தெரியும். ஏனெனில் அவர் அப்படிச் செய்வதைத் தம் கொள்கைக்கு முரணுகக் கருதினுர். மேலும் கயா காங்கிரஸில் எழுந்த சச்சரவுக்குப்பின் சிறையிலிருந்து வெளிவந்தவரும் சிறை யில் காந்திஜீயுடனேயே இருந்தவருமான ஸ்ரீ சங்கர்லால் பாங்க ரும் காந்திஜீயின் கருத்தில் யாதொரு மாறுதலும் உண்டாகவில்லை என்று எங்களிடம் கூறியிருந்தார் என்பது எங்களுக்கு நினை விருந்தது. ஆயினும் யாராவது ஒரு கைதி சிறையிலிருந்து விடுதலையாகி வந்திருக்கலாமென்றும், அங்கே நிகழ்ந்த பேச்சு வார்த்தையிலிருந்து அவருக்குக் காந்திஜீயின் அபிப்பிராயம் தெரிய வந்திருக்கலாம் என்றும், அவர் அதை மௌலாணுவிடம் கூறியிருக்கலாம் என்றும் நாங்கள் நினைத்துக் கொண்டோம். அந்த நாட்களில் காங்கிரஸ்காரர்கள் தத்தம் தண்டனைக் கெடுவை முடித்துக் கொண்டு விடுதலையாகி வந்து கொண்டிருந்தார்கள். அதனுல் இது நடக்கக்கூடாத விஷயம் அன்று. காந்திஜீயைத் தேவதாஸ் காந்தி சந்தித்தார் என்பது பின்னுல் தெரியவந்தது. அவரிடம் காந்திஜீ, "மௌலாணு முகம்மது அலீ எதை உசிதம் என்று நினைக்கிருரோ அதைச் செய்யட்டும், என்மேல் அவருக்கு இருக்கும் அன்பினுலும் பக்தியாலும் அவர் ஈர்க்கப்படக்கூடாது, நாட்டிற்கு எது நன்மையென்று அவர் கருதுகிருரோ அதைத்தான் செய்யவேண்டும்" என்று கூறினுராம். இதைத்தான் மௌலாணு "கம்பியில்லாத் தந்தி" என்று கூறியிருக்கிருர். இச் செய்தி பலர் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. அப்படி வசீகரப்பட்டவர் களில் சர்தார் வல்லப்பாயீ, சேட் ஜம்நாலால் பஜாஜ், டாக்டர் அன்சாரி, நான் ஆகிய நால்வரும்தாம் முக்கியமானவர்கள். நாங்கள் எல்லோரும் கவுன்ஸிலுக்கு விரோதமாக இருந்தோம். ஆயினும், இதில் சூது எதையும் காணுததால் நாங்கள் ஒப்பந் தத்திற்குச் சம்மதித்து விட்டோம்.

ஹிந்து-முஸ்லிம் சண்டைகள் எங்கும் பரவிக் கொண்டிருந் தன. இதனுல் சுயராஜ்ய வேலைக்கு இடைஞ்சல் உண்டாகு மென்று அஞ்சினேம். எல்லாரும் கவலைக்கு ஆளானுர்கள். இதனுல் தில்லிக் காங்கிரஸ் இந்த விஷயத்தைப் பற்றி மிகவும் ஆலோசனை செய்தது. எல்லா இடங்களுக்கும் சென்று அங் காங்கு நடந்த சண்டைகளைப் பற்றி விசாரணை செய்வதற்காக ஒரு குழுவையும் அமைத்தது. ஹிந்து-முஸ்லிம் ஒப்பந்த மசோதா வைத் தயார் செய்வதற்காக மற்றெரு குழுவும் அமைக்கப்பட்டது.

மேலும் காங்கிரஸ் ஆதரவில் எல்லா மதத்தினரையும் உள்ளடக்கிய ஒரு பாதுகாப்புப் படை நிறுவப்பட வேண்டுமென்பதும், இரு வகுப்பினர்களுக்குள் சண்டை வராமல் தடுப்பதற்காகவும், அப்படிச் சண்டை மூண்டுவிட்டால் அதன் விளைப்பயனைக் கூடியவரையில் கட்டுக்குள் அடக்குவதற்காகவும் பஞ்சாயத்துக்கள் அமைக்கப்பட வேண்டுமென்பதும் நிச்சயிக்கப்பட்டன.

மற்றொரு விஷயம் நாடெங்கும் கலவரத்தை உண்டாக்கி வந்தது. இந்தியர்கள் குடியேறிய நாடுகளில், முக்கியமாக ஆப்பிரிக்காவில் உள்ள கென்யாவில் அவர்கள் இருந்து வந்த நிலைமை அதிகக் கவலைக்கு இடமளித்து வந்தது. இந்தியர்கள் தாம் அங்கே முதலில் சென்று அந்த நாட்டை மக்கள் வாழ்வதற்குத் தகுதியுள்ளதாகச் செய்தனர். அவர்கள் தாம் அங்கே வாணிபத்தை ஆரம்பித்தார்கள். அங்கு ரயில்பாதை போடுவதற்கும் அவர்கள்தாம் உழைத்தார்கள். இப்போது அங்கிருந்த வெள்ளைக்காரர்கள் இந்தியர்களைச் சுகாதாரமுள்ளதாயும் செழிப்பு உள்ளதாயும் கடல் மட்டத்திலிருந்து உயரத்தில் உள்ளதாயும் இருந்த இடங்களில் வசிக்க விடமாட்டோமென்றார்கள். ஆங்கில அரசாங்கமும் வெள்ளைக்காரர்களின் பேச்சை ஏற்றுக்கொண்டது. கென்யாவின் வெள்ளைக்காரர்களுக்குத் தென் ஆப்பிரிக்காவின் வெள்ளைக்காரர்களின் பரிவும் உதவியும் கிடைத்தன. இவ்வண்ணமாகப் பீஜீயிலும் இந்தியர்கள் மேல் பலவிதமான அட்டூழியங்கள் செலுத்தப்பட்டு வந்தன. இதனால் காங்கிரஸில் ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. இந்தியர்களுக்குச் செய்யப்பட்டு வந்த அக்கிரமங்களிலிருந்து, அவர்களுக்குப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இடம் இல்லை என்பது தெளிவாகிவிட்டது என்றும், ஆகையால் இனி இந்தியர்கள் அந்தச் சாம்ராஜ்யத்தை விட்டு வெளியேறுவதைப் பற்றி யோசனை செய்ய வேண்டுமென்றும் அத்தீர்மானம் கூறியது. அது கூறியது சரிதான். அக்காலத்திலிருந்து இன்று வரையில் நிகழ்ந்து வந்திருக்கும் நடவடிக்கைகளிலிருந்து இவ்விஷயம் மேலும் தெளிவாகிவிட்டது. ஆயினும் மௌலானா முகம்மது அலீ இத்தீர்மானத்தைப் பலமாக எதிர்த்ததால் காங்கிரஸ் அதை அப்போதைக்கு தள்ளிவிட்டது. அத்தீர்மானம் எனக்குப் பிடித்திருந்தது. ஆயினும் நாம் இவ்விதமாகப் பலவீனப்பட்டும் நம்முடைய கிளர்ச்சி தளர்வுற்றுமிருக்கும் இச்சமயம் இந்த மாபெரும் மாறுதலுக்கு ஏற்றது அன்று என நினைத்தேன். சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து போவது என்ற பேச்சு இல்லாத வேறொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தில்லியின் பேரவைக்குப் பிறகு நான் லாலா லஜபதிராயைப் பார்ப்பதற்காக அங்கிருந்தே சோலனுக்குப் போய்விட்டேன். அவர் சிறையிலிருந்து நோயுடன் வெளிவந்து, உடல் நலமடைவதற்காகச் சோலனில் தங்கியிருந்தார். அவருக்கும் ஒப்பந்தப் பேச்சுப் பிடித்திருந்தது. அதைக் கேட்டு அவர் பெருமகிழ்ச்சியடைந்தார். ஏனெனில் அவருடைய கருத்தும் சுயராஜ்யக் கட்சியைப் பின்பற்றியதாக இருந்தது. சோலனிலிருந்து திரும்பி வரும்போது நான் லக்நோவில் இறங்கினேன். அங்கே நுரையீரல் நோய்களில் மிக்க அனுபவமுள்ளவரான மருத்துவக் கல்லூரியின் தலைமைப் பேராசிரியர் ஸ்பிராசனிடம் என் உடல் நிலையைப் பரிசோதித்துக் கொண்டேன். அவரும் என்னுடைய நோய் இழுப்புத்தான் என்று முடிவு செய்தார். அதற்காக ஸ்வாமின் என்ற மருந்தை ஊசிபோட்டுக் கொள்ளும்படி கூறினர். பட்னுவுக்கு வந்து சேர்ந்ததும் அவர் கட்டளையிட்டபடி ஊசி போட்டுக்கொண்டேன். ஆனல் அது எதுவும் சிறப்பாகப் பயன் அளித்ததாகத் தென்படவில்லை.

தில்லிப் பேரவைக்குப் பிறகு சுயராஜ்யக் கட்சி தேர்தலில் பங்கெடுத்துக் கொண்டது. மத்திய பிரதேசத்தில் சுயராஜ்யக் கட்சிக்குப் பெரும்பாலான' இடங்களில் வெற்றி கிடைத்தது. அங்கே கவுன்ஸிலில் பெரும்பான்மை பலமும் கிடைத்துவிட்டது. வங்காளத்திலும் வெற்றி கிட்டியது. ஆனல் பெரும்பான்மை பலம் கிடைக்கவில்லை. வேறு எந்த மாகாணத்திலும் அதிக வெற்றி கிடைக்கவில்லை. ஆயினும் எல்லா இடங்களிலுமே சில சிறந்த ஆட்கள் கவுன்ஸிலுக்குச் செல்ல முடிந்தது. பீகாரிலும் சுயராஜ்யக் கட்சி அமைக்கப்பட்டது. அதனை ஆதரித்தவர்களில் முக்கியமானவர்களுள் மௌல்வீ முகம்மது ஷபீ, பேராசிரியர் அப்துல் பாரீ, ஸ்ரீ கிருஷ்ணவல்லப் சஹாய், பாபூ ஜலேஷ்வர் பிரசாத் ஆகியோர் இருந்தனர். அங்கே நாங்கள் யாரும் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. மறைவாகக் கூட உதவி புரியவில்லை. அப்படியிருந்தும் பத்துப் பன்னிரண்டு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்கள் கவுன்ஸிலில் திறம்பட வேலை புரிந்தனர். ஜலேஷ்வர் பாபூதாம் அக்கட்சிக்குத் தலைவர். ஐக்கிய மாகாணத்தில் பண்டித் கோவிந்த வல்லப பந்த் கட்சிக்குத் தலைவராயிருந்தார். வங்காளத்தில் தேசபந்து தாஸ் தாம் தலைவர். மத்திய பிரதேசத்தில் சுயராஜ்யக் கட்சிப் பெரும்பான்மை பலம் பெற்றதால் அது அங்கே மந்திரி சபையை அமைக்க விடவில்லை. சில நாட்கள் வரையில் இந்த நிலைமை

யிருந்து வந்தது. பிறகு சில முக்கிய மனிதர்கள் பிரிந்து போய் மந்திரி சபையில் சேர்ந்து கொண்டார்கள். வங்காளத்தில் தேசபந்து தாஸானவர் வேறு சிலருடன் சேர்ந்து கொண்டு மந்திரி சபையைச் சிறிது காலம் வரையில் முறியடித்து வந்தார்.

1923 இவ்விதமாக முடிவடைந்தது. டிசம்பரில் காங்கிரஸ் ஆண்டுப் பேரவை காகிநாடாவில் நடந்தது. பேரவையின் சமயம் பார்த்து நான் நோய்வாய்ப்பட்டுவிட்டேன். இதனால் காகிநாடா காங்கிரஸுக்குப் போக முடியவில்லை. தேசீய மொழிப் பிரசாரத்திற்காக அங்கே நடப்பதாக இருந்த மகாநாட்டிற்கு நான் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தேன். நீண்டதொரு சொற்பொழிவையும் தயார் செய்திருந்தேன். அது புத்தகமாக அச்சிடப்பட்டிருந்தது. நான் பயணம் வைத்திருந்த தினத்தன்று நோய்வாய்ப்பட்டு விட்டபின், அச்சிடப்பட்ட சொற்பொழிவுதான் அங்கே செல்ல முடிந்தது! என் இடத்தில் சேட் ஜம்நாலால் பஜாஜ் தலைவர் ஆனார். அவர் என்னுடைய சொற்பொழிவை அங்கே படித்துக் கேட்பித்தார் என்று கேள்விப்பட்டேன்.

காகிநாடா காங்கிரஸுக்கு மௌலானா முகம்மது அலீ தலைவரானார். அவருடைய சொற்பொழிவு மிகவும் பெரிதாகவும் சிறப்பு வாய்ந்ததாகவும் இருந்தது. இந்திய அரசியல் உலகில் முசல்மானியர்களுக்கு உரிய இடத்தை அவர் சரித்திர வாயிலாக ஆராய்ச்சி செய்து எடுத்துக் கூறினார். எதிர்காலத்தைப் பற்றியும் அவர் அநேக விஷயங்களைக் கூறினார். ஆனால் அங்கிருந்த எல்லாரும் அவற்றை ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்கள். எது எப்படி ஆயினும் சரி, காகிநாடா காங்கிரஸ் தில்லியின் விசேஷப் பேரவையின் முடிவையே ஆதரித்தது. சுயராஜ்யக் கட்சிக்குக் கவுன்ஸில் புகுவதற்கு அளிக்கப்பட்ட அனுமதியை அதுவும் ஏற்றுக்கொண்டது. இது மட்டுமின்றி ஹிந்து-முஸ்லிம் ஒப்பந்த மசோதாவையும் அதைப் பற்றிப் பொது மக்களும் குழுக்களும் கொண்டுள்ள கருத்தையும் அகில பாரதீயக் குழுவின் முன் சமர்ப்பிக்கும்படியும் கட்டளையிட்டது. காதி பிரசாரத்திற்காகக் காதி போர்டையும் அமைத்தது. காங்கிரஸில் அதிக உற்சாகம் நிலவியது. மறுபடியும் பொது மக்களுக்கு உயிர் வந்துவிட்டது போலத் தோன்றிற்று. காங்கிரஸ் சமயத்தில்தான் ஸ்ரீ கிருஷ்ண பிரசாத் சென் சின்ஹாவின் சோக மரணம் நிகழ்ந்தது. எங்கள் நடுவிலிருந்து ஒரு சிறந்த தியாகியும் திறமைசாலியுமான ஒருவர் போய்விட்டார்.

# 54. ஹைகோர்ட்டில் பர்மா வழக்கு

நான் பட்னுவில் தங்கிவிட்டேன். 1923 ஜனவரி 2ஆம் தேதியிலிருந்து பாபூ ஹரீஜீயின் வழக்கின் அப்பீல் ஹைகோர்ட்டில் ஆரம்பமாக இருந்தது. எனக்கு உடல் நலமில்லாமல் இருந்தும்கூட நான் அதற்காகத் தயார் செய்து கொண்டிருந்தேன். அதற்காக நான் வேலே செய்தாக வேண்டியிருந்தது. ஜனவரியின் ஆரம்பத்திலிருந்து மே மாதம் முடிய அதன் விசாரணை நடந்து கொண்டிருந்தது. அந்நாட்களில் என்னுடைய பொழுதெல்லாம் பெரும்பாலும் அதில்தான் கழிந்து வந்தது. எங்கள் கட்சியின் சார்பில் ஸ்ரீ ஹசன் இமாமும் மிஸ்டர் மானுக்கும் ஹைகோர்ட்டில் வாதம் செய்தார்கள். டும்ராவின் மகாராஜாவின் பக்கத்தில் சர் ஆஷுதோஷ் முக்கர்ஜீ வாதாடினர். அவர் ஹைகோர்ட்டு நீதிபதி பதவியிலிருந்து உபகாரச் சம்பளம் பெற்றுச் சமீபத்தில்தான் விலகியிருந்தார். நான் மிகவும் பாடு பட்டு உழைக்க வேண்டியிருந்தது. விடியற்காலேயிலேயே குளியல் முதலியவற்றை முடித்துக் கொண்டு ஸ்ரீ ஹசன் இமாம் சாஹபிடம் ஏழு மணிக்குப் போய்ச் சேர்ந்து விடுவேன். அவர் கோர்ட்டுக்குப் போவதற்கு ஆயத்தமாவதற்காக எழுந்திருக்கும் வரையில் நானும் அவருடன் வேலே செய்து கொண்டிருப்பேன். பிறகு கோர்ட்டில் நாள் முழுதும் வேலே செய்வேன். மாலேயில் மறுபடியும் அவருடன் வேலே! முக்கியமாகச் சனிக்கிழமைகளிலும் ஞாயிற்றுக்கிழமைகளிலும், மேலும் சில சமயங்களில் மற்ற நாட்களிலும்கூட நூல் நிலேயத்தில் நான் மட்டும் வேலே செய்து கொண்டிருப்பேன். சட்டப் பிரமாணங்களேத் தேடிப் பிடிக்கும் வேலே என்னிடம்தான் ஒப்படைக்கப்பட்டிருந்தது. இந்த வேலேயை நான்தான் ஆராவிலும் செய்தேன். ஒரு விஷயத்தைப் பற்றி ஆராவில் பிரமாணம் எதுவும் கிடைக்கவில்லே. அது மிகவும் முக்கியமான விஷயம். நான் இவ்வழக்கைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தபோது, இதுபோன்ற வழக்கு இதற்கு முன் ஏதாவது கண்டிப்பாக நடந்திருக்கும் என்றும் அதில் எங்களுக்குச் சாதகமான பிரமாணம் ஏதாவது நிச்சயமாகக் கிடைக்கும் என்றும் நான் நினைத்தேன். ஆனல் பட்னுவைப் போல ஆராவில் புத்தகங்கள் கிடைப்பதற்கு வசதியில்லே. இதனல் அங்கே அப்படிப்பட்ட பிரமாணம் கிடைக்கவில்லே.

பட்னுவில் ஸ்ரீ ஹசன் இமாமின் நூல்நிலையம் மிகவும் சிறந்ததாக இருந்தது. அதனுல் நான் அப்படிப்பட்ட பிரமாணத்தைத் தேடுவதில் அதிக நேரத்தைக் கழித்தேன். கடைசியில் வெற்றியும் பெற்றேன். நான் அதை ஸ்ரீ ஹசன் இமாமுக்குக் காட்டியதும் அவர் பெரு மகிழ்ச்சியடைந்து என்னை அழைத்துக்கொண்டு ஸ்ரீ மாநுக் வீட்டிற்குச் சென்று அவரிடமும் அப்பிரமாணத்தை உடனே காட்டினுர். அந்த விஷயத்தில் வெற்றி பெறுவோம் என்று அவர்கள் இருவருக்கும் நம்பிக்கை பிறந்தது. அப்படியே தான் நிகழ்ந்தது.

இந்த வழக்கின் விசாரணை நடந்து கொண்டிருந்தபோது சர் ஆஷுதோஷ் முகர்ஜீயின் அகால மரணம் பட்னுவில் நிகழ்ந்து விட்டது. அவர் தம்முடைய வாதத்தை முடித்துவிட்டிருந்தார். நீதிபதிகளுக்குச் சமர்ப்பிப்பதற்காக ஏதோ குறிப்பைத் தயார் செய்து கொண்டிருந்தபோது ஒரே நாள் நோயுற்றுத் திடீரென்று இறந்து போனுர். அவர் இறக்கும்போது நான் அவருடன் இருந்தேன். பட்னுவில் மாதக்கணக்காக அவரை நாள்தோறும் காணக் கிடைத்ததை ஒரு பெரிய பாக்கியமாகக் கருதினேன். கல்கத்தாவிலோ அவர் நீதிபதியாக இருந்தார். நானே ஒரு புதிய வக்கீல். ஆனுல் பட்னுவில் இருவரும் ஒரே வழக்கில் வேலை பார்த்து வந்தோம். வேறு வேறு பக்கத்தில் இருந்தாலும், காலையிலும் மாலையிலும், மேலும் கோர்ட்டு கலைந்த பின்னும் அநேகமாக ஒவ்வொரு நாளும் இரண்டொரு வார்த்தையாவது பேசிக் கொள்வோம். ஸ்ரீ ஹசன் இமாம் கல்கத்தா ஹைகோர்ட்டில் நீதிபதி ஆனபோது சர் ஆஷுதோஷ் அவ்வேலையில் அவருக்கு மூத்தவராக இருந்தார். அங்கேதான் இருவருக்கும் நட்பு உண்டாயிற்று என்று நினைக்கிறேன். தாம் வேலையில் அமர்ந்த சில நாட்களுக்குள்ளாகவே ஹசன் இமாம் கிரிமினல் பெஞ்சுக்கு வந்துவிட்டார். அங்கே ஒன்றன்பின் ஒன்ருக மூன்று வழக்குகளில் அவருக்கும் அக்கோர்ட்டின் மூத்த நீதிபதிக்கும் கருத்து வேறுபாடு உண்டாகிவிட்டது. மூன்று வழக்குகளையும் அவர் ஸ்ரீ ஆஷுதோஷிடம், மூன்ருவது நீதிபதி என்ற முறையில், அனுப்பினுர். மூன்று வழக்குகளிலும் சர் ஆஷுதோஷ் ஸ்ரீ ஹசன் இமாமின் தீர்ப்புக்களையே ஆதரித்தார். இதனுல் கல்கத்தா ஹைகோர்ட்டில் ஸ்ரீ ஹசன் இமாமுக்கு விரைவில் பெரிய பெயர் உண்டாகிவிட்டது. பட்னுவில் ஸ்ரீ ஹசன் இமாமானவர் அவரைத் தம் இல்லத்திற்கு வந்து தேநீர் அருந்தும்படி ஒருநாள் அழைத்தார். ஹைகோர்ட்டிலேயே அவரைச் சந்தித்து,

"குருஜீ! என் வீட்டில் தேநீர் அருந்துவீர்களா?" என்று கேட்டார். அதற்கு அவர் "நான் மிகவும் ஆசாரமான சநாதனி தான், மேலும் இதுவரையில் இதனுல்தான் கவர்ன்மென்ட் ஹவுசில் தேநீர் அருந்தியதில்லே. ஆனுல் ஹசன் இமாம் வீட்டி லும் தேநீர் அருந்தமாட்டேன் என்பது இதற்கு அர்த்தம் அன்று," என்று விடையளித்தார். தேநீர் விருந்துக்கு நாங்கள் எல்லாரும் அழைக்கப்பட்டிருந்தோம். அப்படியே நாங்களும் சென்ருேம்.

## 55. பேதியாவின் மீனு பஜார்

மகாத்மாஜீ யரவாதா சிறையில் இருந்தார். அங்கே கடுமை யான நோய்வாய்ப்பட்டு விட்டார். அபெண்டிசைடிஸ் (கட்டி) கடுமையாக வந்துவிட்டது. ஒருநாள் மருத்துவர்கள் அவரைப் பார்த்துவிட்டு, அக்கட்டியை உடனே கீருவிட்டால் அவருடைய உயிருக்கே ஆப்த்து வந்துவிடுமென்று நினைத்துக் கவலேக்கு ஆளானுர்கள். இந்த முடிவு இரவில் செய்யப்பட்டது. உடனே அங்கிருந்து புனுவிலுள்ள மருத்துவசாலேக்கு காந்திஜீ எடுத்துச் செல்லப்பட்டார். அங்கிருந்த மருத்துவர், கர்னல் மேடக் என்பவர், அதைக் கிழிக்க வேண்டி வந்தது. "உங்களுடைய மருத்துவர் யார்?" என்று அவர் மகாத்மாஜீயைக் கேட்டார். அவர் பம்பாயிலிருந்த டாக்டர் தயாளுவின் பெயரையும் டாக்டர் ஜீவராஜ் மேத்தாவின் பெயரையும் கூறினுர். ஆனுல் அவர்களே அழைப்பதற்கு வேண்டிய நேரம் அப்போது இல்லே. காந்திஜீ யானவர் ஆங்கிலேய வைத்தியரின் மீது தமக்கு முழு நம்பிக்கை யிருக்கிறதென்றும், அவர் எது சரி என்று நினேக்கிருரோ அதைக் கவலேப்படாமல் செய்யலாம் என்றும் தெள்ளத் தெளிவாகக் கூறி விட்டார். அதன்மேல் ஸ்ரீ ஸ்ரீநிவாச சாஸ்திரி மருத்துவசாலேக்கு அழைக்கப்பட்டார். சத்திரம் வைத்து முடியும் வரையில் அவர் அங்கேயே தங்கியிருந்தார். நடுநிசியில் சத்திரம் வைக்கப் பட்டது. இதில் ஆங்கிலேய மருத்துவர் பெரிய நிபுணர். சத்திரம் வைத்துக் கொண்டிருந்த சமயத்தில் ஓர் இடையூறு விளேந்தது. கத்தி வேலே நடந்து கொண்டிருந்த வேளே பார்த்து மின்சார விளக்கு அணேந்துவிட்டது. நல்ல வேளேயாய் அது

விரைவிலேயே மீண்டும் வந்துவிட்டது. சத்திர வேலைக்கு எதுவும் பெரிய இடைஞ்சல் உண்டாகவில்லை.

அன்று நான் பட்னா ஹைகோர்ட்டில் பர்மா வழக்குச் சம்பந்தமாக வேலை செய்து கொண்டிருந்தேன். நோயைப் பற்றியும் சத்திரம் வைத்ததைப் பற்றியும் தினத்தாள்களில் செய்தி அச்சிடப்பட்டது. அதைப் படித்ததும் நாடெங்கும் கவலை சூழ்ந்தது. நான் மூன்று நான்கு நாட்களுக்குச் செலவு பெற்றுக் கொண்டு உடனே புனாவுக்குச் சென்றேன். மகாத்மாஜீ அப்போது மருத்துவச் சாலையில்தான் இருந்தார். அவர் மிகவும் பலவீனமாக இருந்தார். நான் அங்குச் சென்று அவரை அந்த நிலையில் கண்டேன். இருக்கிற நிலைமையை அறிந்து கொண்டு பட்னாவிற்குத் திரும்பி வந்து விட்டேன். உயிருக்கு ஆபத்து இல்லை என்பது தெளிவாகி விட்டது. ஆனால் பலவீனம் அதிகமாக இருந்ததால் சில நாட்களுக்கு நன்றாக ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அரசாங்கத்தார் மகாத்மாஜீயை விடுதலை செய்துவிட்டார்கள் என்ற செய்தி நான் பட்னாவுக்குத் திரும்பி வந்ததுமே கிடைத்துவிட்டது. செய்தி கிடைத்ததுமே பட்னாவில் ஒரு கூட்டம் நிகழ்ந்தது. அதில் நானும் பேசினேன். புனா மருத்துவச் சாலையில் நான் காந்திஜீயுடன் பேசிய விஷயங்களை அச்சபையில் எடுத்துரைத்தேன். அவற்றின் சுருக்கம் இதுதான். நோய்வாய்ப்பட்டு விட்டதன் காரணமாக விடுதலையடைந்ததைப் பற்றிக் காந்திஜீ மகிழ்ச்சியடையமாட்டார். ஏனெனில் நாம் நம்முடைய ஆற்றலைக்கொண்டு அவரை விடுவிக்கவில்லை. அரசாங்கத்தாரின் கருணையால்தான் அவர் விடுதலையடைந்தார் என்பது நாட்டிற்கு ஒரு வெட்கமான விஷயம் என்று கூறினேன். விடுதலையானபின் காந்திஜீயும் தம்முடைய பேச்சில் இதையேதான் கூறினார்.

சில நாட்கள் வரையில் மருத்துவச் சாலையில் இருந்தபடியே நலமடைந்த பின் மகாத்மாஜீ அதை விட்டு வெளியே வந்தார். ஓய்வு பெறுவதற்காக அவர் பம்பாயின் கடற்கரையில் இருக்கும் ஜுஹுவுக்குச் சென்று சில நாட்கள் தங்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. இம்முடிவின்படியே அங்கே சென்று அவர் சில நாட்கள் தங்கியிருந்தார்.

இந்தச் சமயத்தில் சம்பரான் ஜில்லாவில் பேதியாவில் ஒரு சம்பவம் நடந்தது. அதை இங்கே கூறவேண்டியிருக்கிறது. பேதியா சமஸ்தானம் அதிக காலமாக கோர்ட்டு-ஆவ்-வார்டின் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வந்தது. அக்காலத்தில் மிஸ்டர்

ரத்தர்போர்டு அதற்குக் காரியஸ்தராக இருந்து வந்தார். அந்தக் காலத்தில் கோர்ட்டு-ஆவ்-வார்டின் கையில் வந்து விட்ட ஜமீன் தாரி எதற்காவது காரியஸ்தர் தேவைப்பட்டால் உடனே எவராவது நீலக்காரரையே நியமிப்பது அரசாங்கத்தின் கொள்கையாக இருந்து வந்தது. இக்கொள்கையின்படி மிஸ்டர் ரத்தர்போர்டு சில ஆண்டுகளுக்கு முன் நியமிக்கப்பட்டிருந்தார். அவருக்கு முன் அந்தப் பதவிக்கு நியமிக்கப்பட்ட காரியஸ்தரும் ஒரு நீலக் காரர்தாம். நிற்க, 1922இல் பேதியா நகரபரிபாலன சபையின் உறுப்பினர்களின் தேர்தல் நடந்தது. இவர்களுள் சில காங்கிரஸ் காரரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தலைவர், துணைத் தலைவர் பதவிகளுக்காக நின்ற அபேக்ஷகர்களுள் மிஸ்டர் ரத்தர்போர்டும் நின்றார். அவருடன் துணைத்தலைவர் பதவிக்கு அவ்வூர் சப்ரிஜிஸ் திரார் நிறுத்தப்பட்டார். காங்கிரஸ் பக்கத்திலிருந்து ஸ்ரீ பிபின் பிகாரி வர்மாவும் ஸ்ரீ பிரஜாபதி மிஸ்ராவும் நின்றார்கள். ராஜா வுக்கும், முக்கியமாக மிஸ்டர் ரத்தர்போர்டுக்கும், அவருக்கு எதிராக எவரும் நிற்பது மிகவும் தவறாகப்பட்டது. அவரைத் தோற்கடித்து விட்டுக் காங்கிரஸ்காரர்கள் தலைவராகவும் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பொறுக்க முடியவில்லை. மீண்டும் 1924இல் புதிய தேர்தல் நடந்தது. இந்த முறை காங்கிரஸ் உறுப்பினர்களுக்குப் பெரும்பான்மை பலம் கிடைத்து விட்டது. இதனால் சமஸ்தானத்திலிருந்து எவரும் தலைவர் பதவிக்கு நிற்கவில்லை. அதே ஸ்ரீ பிபின் பிகாரி வர்மாவும் பண்டித் பிராஜபதி மிஸ்ராவும்தாம் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சமஸ்தானத்தின் அபேக்ஷகர் எவரும் நிறுத்தப்படா விட்டாலும் கூடச் சமஸ்தானத்தின் ஆட்கள் மிஸ்டர் ரத்தர்போர்டின் தோல்வியை மறக்கவில்லை. அதனால் சமஸ்தானத்தார் ஏதாவது தீங்கு செய்தே தீருவார்கள் என்ற வதந்தி அடிக்கடி கிளம்பிக் கொண்டிருந்தது.

மகாத்மாஜீயின் நோயினால் நாடு முழுவதும் கலக்கமுற்றிருந் தது. காங்கிரஸின் தலைவர் என்ற முறையில் மௌலானா முகம்மது அலீ ஒரு கட்டளையிட்டார். அதாவது நாடெங்கும் கூட்டங் களைக் கூட்டி மகாத்மாஜீ உடல் நலமடைய வேண்டுமென்று கடவுளை வேண்டிக்கொள்ள வேண்டும் என்பதே அக்கட்டளை. பேதியாவிலும் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அங்கே சமஸ்தானத்திற்குச் சொந்தமான கடைத்தெரு ஒன்றிருந் தது. அதற்கு மீனா பஜார் என்று பெயர். அதில் அவ்வூர் வியாபாரிகள் வாடகைக்கு இடம் எடுத்துக் கொண்டு தத்தம்

கடைகளை வைத்திருந்தார்கள். அன்றைக்குப் பண்டித் பிரஜா பதி மிஸ்ராவும் மற்றொரு காங்கிரஸ்காரரான பாபூ ஜய நாராயண் என்பவரும் கடைக்காரர்களைப் பிரார்த்தனைக் கூட்டத்திற்கு வரும்படி அழைக்கச் சென்றூர்கள். சமஸ்தானத்தின் வேலையாள் ஒருவன் பாபூ ஜயநாராயணுக்கு இரண்டு அறை கொடுத்து இருவரையும் கடைத் தெருவிலிருந்து அப்புறப்படுத்தி விட்டான். கடைக்காரர்களிடையில் , பெருத்த பரபரப்பு உண்டாகியது. மிஸ்ராஜீ அவர்களைத் தடுத்திராவிட்டால் சண்டை மூண்டிருக்கும். அதற்குப்பின் கூட்டம் நடந்தது. கடைக்காரர்கள் பெரும் திரளாக வந்து அதில் கலந்து கொண்டார்கள். இது மட்டுமன்றி, தங்கள் கடைகளை மீனு பஜாரிலிருந்து பெயர்த்துச் சென்று நகரபரிபாலன சபையிலிருந்து நிலத்தைக் கேட்டு வாங்கி வேறு எங்காவது அவற்றை நிறுவுவதாகவும் முடிவு செய்தார்கள். அடுத்த நாளிலிருந்து கடைத்தெருவை ஒழிக்கத் தொடங்கி விட்டார்கள். அங்கிருந்து சற்றுத் தொலைவில் சென்று கடைகளை வைத்துவிட்டார்கள். மூன்று நான்கு நாட்களுக்குள் புதிய கடைத்தெரு ஒன்று உண்டாகிவிட்டது. மீனு பஜார் பெரும் பாலும் அற்றுப் போய்விட்டது. இதனுல் சமஸ்தானம் மேலும் நஷ்டமடைந்தது. காங்கிரஸ்காரர்களை அடிக்கப்போகிறூர்கள் என்ற செய்தி பரவத் தொடங்கியது. ஆனுல் காங்கிரஸ்காரர்கள் இப்பேர்ப்பட்ட செய்திகளைப் பொருட்படுத்தவில்லை.

ஒருநாள் மாலை பண்டித் பிரஜாபதி மிஸ்ரா ஒரு [1]டம்டம்மில் எங்கோ சென்று கொண்டிருந்தார். யாரோ ஒருவன் அவரைத் தலையில் தடியால் பலமாக அடித்து விட்டான். அவர் மூர்ச்சை யாகி விழுந்துவிட்டார். அந்த ஆள் சமஸ்தானத்தின் காரியஸ் தர் வீட்டுப் பக்கம் ஓடி விட்டான். சமஸ்தான ஊழியர்கள் அவனை மாஜிஸ்டிரேட்டிடம் அழைத்துச் சென்று அங்கே ஏதோ நடவடிக்கை செய்வித்து அவனை அங்கிருந்து விடு வித்துக் கொண்டு போய்விட்டார்கள் என்று கூறப்பட்டது. இதனுல் ஊர்மக்கள் அனைவரும் ஆத்திரம் அடைந்தார்கள். எனக்குத் தந்தி வந்தது. நான் உடனே அங்கே சென் றேன். எல்லா விஷயங்களையும் விசாரித்து அறிந்து கொண்டேன். மீனு பஜாரில் இந்தச் சண்டைக்கு முன் சில பெரிய கடைகள் அங்கேயே இருந்து வந்தன. அக் கடைக்காரர் களும் அக்கடைத் தெருவை விட்டு வந்து விட்டார்கள். வேறூர் இடத்தில் ஒரு புதிய அழகான கடைத் தெரு உண்டாகி விட்டது.

1 ஒருவிதக் குதிரை வண்டி.

இதனால் நகர பரிபாலன சபையின் வருமம்படியும் உயரும் என்ற நம்பிக்கை உண்டாகியது. ஆனால் சமஸ்தானத்திற்குச் சுமார் ஐம்பதாயிரம் ரூபாய்க்குமேல் ஆண்டுதோறும் நஷ்டமாகுமென்ற அச்சம் உண்டாகிவிட்டது. பண்டித் பிரஜாபதி மிஸ்ரா மிகவும் துணிச்சலாகவும் அமைதியாகவும் வேலை புரிந்து வந்தார். அவர் கட்டிலில் படுத்தபடியே மக்களை அமைதியாயிருக்கும்படி சொல்லி அனுப்பினார். அவரைத் தாக்கியவன் பேரிலும் எவ்வித நடவடிக்கையும் எடுப்பதில்லை என்று முடிவு செய்தார். இவையெல்லாம் சமஸ்தானத்தின் பெரிய அதிகாரிகளின் கண் ஜாடையினால் நடந்தன வென்பது தெரியவந்தது. காங்கிரஸினிடம் மக்களுக்கு இருந்த பக்தியும் தெரிய வந்தது. மீனா பஜாரின் கல் கட்டடங்களில் கடை வைத்திருந்த பெரிய வியாபாரிகள், சிறிய வியாபாரிகள் எல்லாருமே திறந்த வெளியிலாவது அல்லது கீற்றுக் கூரைக்குக் கீழாவது தங்கள் கடைகளைக் கொண்டு வந்து விட்டார்கள். புதிய கடைத்தெருவுக்கு மண் சட்டிபானைக் கடையிலிருந்து பொன் வெள்ளிக் கடைகள் வரையில் எல்லாம் வந்து விட்டன. இப்படிப்பட்ட கடைத் தெருவில் திருட்டும் கொள்ளையும் நடக்கலாம் என்று அஞ்சினார்கள். போலீசாரின் உதவி கிடைக்குமென்ற நம்பிக்கையில்லை. இதனால் கடைத் தெருவைக் காவல் புரிவதற்காகத் தொண்டர் படை ஒன்று நிறுவப்பட்டது. இப்படை இராப்பகலாகக் காவல் புரிந்து வந்தது. மக்களிடையில் நிறைய உற்சாகம் நிலவியது. இந்தச் சண்டை நெடுநாள் நடந்து கொண்டிருந்தது. நெடுங்காலத்திற்குப்பின் மீனா பஜாரில் மறுபடியும் கடைகள் வந்து விட்டாலும்கூடப் புதிய கடைத்தெரு நிலைத்து நின்று விட்டது.

இச்சம்பவத்தின் செய்தி கிடைத்ததும் நான் பேதியாவுக்குச் சென்றேன். அங்கே விசாரணை செய்து கொண்டு திரும்பியதும் நான் செய்தித் தாள்களில் ஓர் அறிக்கையை வெளியிட்டேன். அதில் எல்லா விஷயங்களையும் உடைத்துக் கூறினேன். சில நாட்களுக்குப் பிறகு பேதியாவில் பீகார் மாகாணக் காங்கிரஸ் குழுவின் இருக்கை நடந்தது. மாகாணக் குழுவின் தலைவரான மௌலானா மஜஹர்-உல்-ஹக்சாஹபும் மற்றத் தலைவர்களும் அங்கு எழுந்தருளினார்கள். பேதியாவின் நிலைமை திருந்தாவிட்டால், மேலும், அங்கே நிலவிவந்த வதந்தி கூறியதுபோல மற்றக் காங்கிரஸ்காரர்களும், முக்கியமாகப் பிபின் பாபூவையும் பண்டித் பிரஜாபதியையும் போலத் தடியடிக்கு இலக்கானார்களானால் மாகாணக் குழுவானது வேறு வழியின்றிப் பேதியா

வின் குடியானவர்களை வரி செலுத்தவேண்டாமென்று கூற வேண்டிவரும் என்றும், இதற்காக உயிரையும் கொடுக்க வேண்டி வரலாமென்றும், இதற்கு மக்கள் தயாராக இருக்கவேண்டும் என்றும் மாகாணக்குழு முடிவு செய்தது. பொது மக்கள் சபை ஒன்று கூட்டப்பட்டு அதில் இத்தீர்மானம் அறிக்கை செய்யப் பட்டது. பீகார் கவுன்ஸிலிலும் இதைப்பற்றிக் கேள்வி கேட்கப் பட்டது. அச் சந்தர்ப்பத்தில் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் மிகவும் காரமாக வாதம் செய்தார்கள். ஜலேஸ்வர் பாபூ அவர் களுக்குத் தலைவராக இருந்தார். அவர் பேதியாவுக்குத் தாமே வந்து இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை செய்தார். கலகம் செய்தவர்களே அவரிடம் வந்து உண்மையைக் கூறினார்கள். அதை வைத்துக் கொண்டு அவர் இந்த விஷயத்தைக் கவுன்ஸிலில் உடைத்துக் கூறினார்.

# 56. ஜுஹுவில் நடந்த பேச்சும் அதன் பின்னும்

மகாத்மாஜீ ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தாலும்கூட வேலை யும் செய்து கொண்டிருந்தார். அவர் சிறிது நேரம் பேச முடிந்ததுமே அவரைப் பார்க்க மக்கள் வரத் தொடங்கினார்கள். அவர் இல்லாத போது நடந்தவற்றையெல்லாம், முக்கியமாகக் கவுன்ஸில் புகுவதைப் பற்றி எழுந்த கிளர்ச்சியைப் பற்றி அவ ரிடம் கூறினார்கள். தேசபந்து தாஸும் பண்டித் மோதிலால் நேருவும்கூட அங்குச் சென்று சில நாட்கள் தங்கியிருந்தார்கள். காங்கிரஸ் கட்சிக்கும் சுயராஜ்யக் கட்சிக்கும் இடையில் ஏதாவது ஒப்பந்தம் உண்டாவதற்கு வழி கண்டுபிடிக்க வேண்டும் என் பதைப் பற்றி அங்கே பேச்சு நடந்தது. அதற்காக முயற்சியும் செய்யப்பட்டது. சுயராஜ்யக் கட்சியின் சார்பிலிருந்து சில காங்கிரஸ்காரர்கள் கவுன்ஸிலுக்குச் சென்றிருந்தார்கள். இதனால் இந்த விஷயத்திற்குக் கயா காங்கிரஸின் போதும் தில்லிக் காங்கி ரஸின் போதும் இருந்த அளவுக்கு முக்கியத்துவம் இப்போது இல்லை. கவுன்ஸில் புறக்கணிப்பை ஒட்டி நாங்கள் செய்த காரியங் கள் காந்திஜீக்குப் பிடித்திருந்தன என்பதை அறிந்து என்னைப் போன்றவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். காந்திஜீ மட்டும்

வெளியே இருந்திருந்தால் இந்த விஷயத்தில் இவ்வளவு பிடிவாதம் செய்திருக்க மாட்டார் என்றும், அவர் ஏதாவது ஓர் ஒப்பந்தத்தைச் செய்திருப்பார் என்றும் எங்களிடம் அடிக்கடி கூறப்பட்டு வந்ததுதான் இம்மகிழ்ச்சிக்கு காரணம். ஆனால் நாட்டின் முன் அவர் இந்த வேலைத் திட்டத்தைச் சமர்ப்பித்தபோது கவுன்ஸில் புகுதலுக்கு எவ்வளவு விரோதமாக இருந்தாரோ அதே அளவுக்கு இன்னும் விரோதமாக இருந்து வந்தார்.

ஜுஹுவில் பேச்சு வார்த்தை நடந்த பின் காந்திஜீ ஓர் அறிக்கை விடுத்தார். அதில், தாம் இப்போது கூட ஐந்து விலக்குகளை ஆதரித்து நின்றார் என்றும், கவுன்ஸிலுக்குப்போவது ஒத்துழையாமைக்கு விரோதமானது என்பது தம் கருத்து என்றும், ஆயினும் தேசபந்து தாஸையும் பண்டித் மோதிலால் நேருவையும் தம்மால் இக்கருத்துக்கு இணங்கவைக்க முடியவில்லை என்றும், மேலும் அவர்கள் கவுன்ஸிலில் புகுந்து விட்டதால் இனி இதைப்பற்றிப் பேசிப் பயனில்லை என்றும், ஆகையால் மாறுதல் வேண்டாதார் இந்த வாதத்தை விட்டு விட்டு ஆக்க வேலையைச் செய்வதில் ஈடுபடவேண்டும் என்றும் அந்த அறிக்கையின் மூலமாகக் கூறினார். மேலும், காங்கிரஸ் அமைப்பைப் பற்றித் தமக்கு மிகவும் வன்மையான கருத்துக்கள் இருப்பதாகவும் அவற்றைப் பின்னால் வெளியிடுவதாகவும் கூறினார். அந்தச் சமயத்தில் ஹிந்து-முஸ்லிம் சண்டைகள் நாடெங்கும் அதிகமாக நடந்து வந்தன. அதனால் இரு மதத்தாருக்கிடையில் அதிக மனஸ்தாபம் உண்டாகியிருந்தது. இதைப் பற்றியும் நீண்டதொரு கட்டுரையில் நன்றாக அலசி ஆராய்ந்து எழுதியிருந்தார். அதில் முசல்மானியர்கள் கலகப்பிரியர் என்றும் ஹிந்துக்கள் பயங் கொள்ளிகள் என்றும்கூட எழுதியிருந்தார். காங்கிரஸ் அமைப்பைப் பற்றி எழுதும் இடத்தில் தேர்தலுக்கு விடப்படும் காங்கிரஸ் பதவிகளுக்கு ஐந்து விலக்குகளையும் ஏற்பவர்களாகவும், மேலும், அவற்றைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து வருபவர்களாகவும் இருப்பவர்களையே தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும் காந்திஜீ அந்த அறிக்கையில் கூறினார். இதன் பொருள், அப்படிப்பட்டவர்கள் கோர்ட்டுகளைப் புறக்கணிக்கவேண்டும். அவற்றில் வழக்குகளைத் தொடுக்கக்கூடாது. மேலும் அவற்றில் வக்கீல் தொழிலையும் புரியக்கூடாது. தம்முடைய பிள்ளைகளை அரசாங்கத்துடன் தொடர்பு கொண்ட பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பக்கூடாது. அரசாங்கப் பட்டங்களை வகிக்கக் கூடாது. அயல்நாட்டுத் துணியைப் புறக்கணிக்கும் நோக்கத்துடன்

காதியையே அணியவேண்டும். மேலும் சர்க்கா சுற்றிவரவேண்டும் என்பதாகும்.

அதே சமயத்தில், கல்கத்தாவில் "டே" என்ற ஒரு ஆங்கிலேயரை ஸ்ரீ கோபிநாத் சாஹா என்ற ஒர் இளைஞன் நட மாட்டமுள்ள சாலையில் பட்டப் பகலில் தன் கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றுவிட்டான். அந்த ஆண்டில் சிராஜ்கஞ்சில் நடந்த வங்காள மாகாண அரசியல் மகாநாட்டில் இதைப்பற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதில், கோபிநாத்தின் செயல் தீயதென்று கூறப்பட்டிருந்தாலும் அவனுடைய தேசபக்தியும் பாராட்டப்பட்டிருந்தது. இத்தீர்மானம் மகாத்மாஜீக்குப் பிடிக்கவில்லை. ஏனெனில், இத்தன்மையான கொலைகள் காங்கிரஸின் சித்தாந்தத்திற்கு முரணானவை என்பதும், இவற்றால் நாட்டிற்குக் கேடு விளைகின்றதென்பதும் மேலும், சுயராஜ்யத்தை அடைவதற்கு இவை முட்டுக் கட்டைகளாக அமைகின்றன என்பதும் அவருடைய கருத்தாக இருந்தன. இந்தத் தீர்மானத்தை அவர் கடுமையாகக் கண்டித்து எழுதினார். காங்கிரஸின் அமைப்பைச் சீர்த்திருத்தும் நோக்கத்தோடு பல தீர்மானங்களைத் தாம் அகில பாரதீயக் குழுவுக்குச் சமர்ப்பிக்கப் போவதாகவும் தெரிவித்தார். மேலும் டேயின் கொலையைப் பற்றியும் ஒரு தீர்மானம் கொண்டுவருவதாக அவர் கூறினார். அத்தீர்மானங்களின் நகலைக்கூட அவர் அச்சிட்டு விட்டார். காங்கிரஸுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் அனைவரும் எல்லா விலக்குகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதும், அப்படி ஏற்பவர்கள் தாம் அதில் பதவி வகிக்கலாமென்பதும் அவருடைய நோக்கம். இதனால் என்ன ஆகுமென்றால், கவுன்ஸிலுக்குச் சென்றவர்களைக் காங்கிரஸின் பதவி எதற்கும் தேர்ந்தெடுக்கக் கூடாதென்றும், அப்படியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் தம் பதவிகளிலிருந்து விலகிக்கொள்ள வேண்டுமென்றும் முடியும். மேலும், அவர் கூறிய கட்டுப்பாடுகளுக்கு உடன்பட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் நாள்தோறும் குறைந்தது அரைமணி நேரமாவது சர்க்கா சுற்றி ஒவ்வொரு மாதமும் இரண்டாயிரம் கஜம் நூலைக் கதர் போர்டுக்கு கொடுப்பது இன்றியமையாததாகிவிடும். எவரெவர் நூல் நூற்கவில்லையோ அவர்களுடைய இடங்கள் காலியாக இருப்பதாகக் கொண்டு அவ்விடங்களுக்கு மற்றவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டிவரும். இதனால், இரு கட்சிக்காரர்களுக்கு இடையில் இருந்து வந்த சண்டை தீரலாமென்று முந்திய அறிக்கையின் வாயிலாக எழுந்த நம்

பிக்கையானது இப்போது முற்றிலும் மறைந்துவிட்டது. இத்தீர்மானங்களைப் பற்றியும் இக்கருத்துக்களைப் பற்றியும் நாடெங்கும் மிகவும் கடுமையான வாக்குவாதம் நடந்து வந்தது. காந்திஜீ வழக்கம்போலத் தமது கருத்துக்களை மிகவும் திண்ண மாக, ஆயினும் அடக்கமான சொற்களால் அமைத்து நாட்டின் முன் சமர்ப்பித்தார்.

ஜுன் மாதம் கடைசி வாரத்தில் அகமதாபாத்தில் அகில பாரதீயக் குழு கூடியது. விலக்குக்களைக் கடைப்பிடிக்காதவர்கள் பதவிகளை வகிக்கக் கூடாதென்று கூறிய தீர்மானங்கள் காங்கிரஸ் அமைப்புச் சட்டத்திற்கு முரணானவை என்று எதிர்க்கப்பட்டன. ஏனெனில், காங்கிரஸ் அமைப்புச் சட்டம் காங்கிரஸாலேயே நிறுவப்பட்டது. அதில் ஏதேனும் மாறுதல் செய்வதற்குக் காங்கிரஸுக்குத்தான் அதிகாரம் உண்டு; அகில பாரதீயக் குழுவுக்குக் கிடையாது. இத்தீர்மானங்களோ அந்த அமைப்புச் சட்டத்தை மாற்றும் நோக்கம் கொண்டனவாக இருந்தன. ஆகையால் அவை அமைப்புச் சட்டத்திற்கு முரணானவை என்று காரணம் காட்டி எதிர்க்கப்பட்டன. காந்திஜீயோ, காங்கிரஸின் பேரவை நடக்க இயலாதபோது காங்கிரஸின் அதிகாரங்கள் எல்லாவற்றையும் அகில பாரதீயக் காங்கிரஸ் குழு பெற்று விடுகிறதென்பது காங்கிரஸின் விதிகளில் ஒன்று என்றும், ஆகையால் இத்தீர்மானங்கள் மூலமாக விதிமுறையில் மாறுதல் செய்யப்பட்டால், அது விதிவரம்புக்குப் புறம்பானதாகாது என்றும், மேலும், இத்தீர்மானங்களின் நோக்கமானது விலக்குக் களைப் பற்றிக் காங்கிரஸ் செய்த முடிவைச் செயல் முறைக்குக் கொண்டு வருவதாக அமைந்திருப்பதால் இவை சட்டமுறைக்கு விரோதமானவை ஆகா என்றும் கூறினர். இத் தீர்மானங்கள் சட்டமுறைக்கு விரோதமா இல்லையா என்று அவரைக் கேட்ட போது, அவர் தம்முடைய அபிப்பிராயத்தை அளிக்காமல், அங்கத் தினரின் அபிப்பிராயத்தையே கேட்டார். அதன்மேல், இவை காங் கிரஸின் அமைப்புச் சட்டத்தைத் தழுவியவை என்றே பெரும் பான்மையோர் அபிப்பிராயம் கொண்டிருப்பதாகத் தெரிய வந்தது. ஆனல் இப்பெரும்பாலரின் தொகையாவது இத் தீர்மானங்களை எதிர்த்த சிறுபான்மையோரின் தொகையை விடச் சிறிதளவே அதிகமாயிருந்தது. இதன்பிறகு தேசபந்து தாஸ், பண்டித் மோதிலால் முதலானோர் தம் சீற்றத்தைக் காட்டுவதற்காகச் சபையைவிட்டு வெளியேறிவிட்டார்கள். அவர் கள் சென்ற பின்னும் மகாத்மாஜீ மற்றொரு தீர்மானத்தைக்

கொண்டு வந்தார். அது சிறியதொரு பெரும்பான்மை பலத்துடன் நிறைவேற்றப்பட்டது. இதற்குப்பின் மகாத்மாஜீ மற்றும் ஒரு தீர்மானத்தை உடனடியாகக் கொண்டு வந்தார். விலக்குக்களை ஏற்காதவர்களை அவர்களுடைய பதவிகளிலிருந்து அகற்றிவிடவேண்டுமென்று சற்றுமுன் ஏற்கப்பட்டத் தீர்மானத்தில் விதிக்கப்பட்டிருந்த தண்டனையை அதிலிருந்து நீக்கிவிடவேண்டுமென்று இப்புதிய தீர்மானத்தின் மூலமாக அவர் கூறினுர். இதற்கு காரணமும் காட்டினுர். அதாவது, முன் ஏற்கப்பட்ட தீர்மானத்தை வாக்குக்கு விட்டபோது, அப்போது அங்கிருந்தவர்களின் பெரும்பான்மை ஆதரவு அதற்குக் கிடைத்திருந்தாலும், அதற்கு வாக்களிக்க மறுத்து வெளியேறியவர்கள் தம் வாக்கை அளித்திருந்தால் அவர்களுடைய கட்சிக்கே பெரும்பான்மை பலம் கிட்டியிருக்கலாம். அப்படியும் அத்தீர்மானத்திற்கே பெரும்பான்மை பலம் கிடைத்திருக்குமென்று வைத்துக்கொண்டாலும் அத்தகைய பலம் மிகக் குறைவாக இருந்திருக்குமாதலால், அது உண்மையான பெரும்பான்மை பலம் ஆகாது. ஆதலால் முதலில் ஏற்றுக்கொள்ளப்பட்ட தீர்மானம் மாற்றப்படவேண்டுமென்று அவர் கூறினுர். அப்படியே செய்யப்பட்டது. இதனுல் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் திரும்பி வந்து அகில பாரதீயக் குழுவில் சேருவதற்கு வாய்ப்புக் கிடைத்தது.

அன்றிரவு மகாத்மாஜீக்கும் அவர்களுக்கும் பேச்சு நடந்தது. அதன் பயனுகக் காங்கிரஸின் சட்ட அமைப்பைப் பற்றிய தீர்மானங்கள் இரு கட்சியாரும் ஏற்கத் தகுந்த முறையில் திருத்தி அமைக்கப்பட்டன. அடுத்த நாள் அத்தீர்மானங்கள் எல்லாம் முந்தின இரவு செய்யப்பட்ட ஒப்பந்தத்தில் முடிவு செய்யப்பட்டது போலவே நிறைவேற்றப்பட்டன. டேயின் கொலையைப் பற்றியும் காந்திஜீ ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்தார். அதன் மேல், தேசபந்து தாஸானவர் சிராஜ்கஞ்ஜ் தீர்மானத்தையே காந்திஜீயின் தீர்மானத்திற்கு ஒரு திருத்தம் போலக் கொண்டு வந்தார். கடைசியில் மகாத்மாஜீயின் தீர்மானம்தான் ஏற்கப்பட்டது. இதற்குக் கிடைத்த பெரும்பான்மை பலமும் குறைவாகவே இருந்தது. ஆங்லேயரும் ஆங்கிலேயரின் பத்திரிகைகளும் இக்கொலையைப் பற்றிப் பெரும் கூக்குரல் எழுப்பியதே இப்பலக் குறைவுக்குக் காரணம். மேலும் இக்கொலை சம்பந்தமாகத் தேசபந்துதாஸும் மற்றவர்களும் விரைவில் சிறை கொள்ளப்படுவார்கள் என்றும் கூறப்பட்டு வந்தது. தேசபந்துதாஸ், தாம் இத்திருத்தத்தைக் கொண்டு வந்ததற்குக் காரணமும்

கூறினர். தாம் அப்படிச் செய்யாவிட்டால், தாம் சிறை செல்வ தற்கு அஞ்சிச் சிராஜ்கஞ்சு தீர்மானத்தைக் கைவிட்டு விட்ட தாகக் கொள்ளப்படும் என்று கூறினர். காங்கிரஸ் அமைப்பை ஒட்டிய தீர்மானங்களால் ஒரு பக்கத்தில் விலக்குக்கள் வலுவாக்கப் பட்டன; மற்றொரு பக்கத்தில் கவுன்ஸில் புகுதலுக்கு இடப் பட்டிருந்த தடை மேலும் தளர்த்தப்பட்டது.

கோர்ட்டுகளைக் காங்கிரஸ்காரர்கள் புறக்கணிப்பதைப் பயன் படுத்திக்கொண்டு சில போக்கிரிகள் அவர்களை மிகவும் துன் புறுத்துகிறார்கள் என்று சிலர் காந்திஜீயிடம் கூறினர்கள். ஏனெனில், காங்கிரஸ்காரர்கள் கோர்ட்டுகளில் பிராதுகளைக் கொடுக்கவோ தம்மேல் செய்யப்பட்ட பிராதுகள் சம்பந்தமாகத் தம் வாக்குமூலங்களைத் தவிர வேறுவகையில் விடை அளிக்கவோ முடியவில்லை. இதனல், அப்படிப்பட்ட காங்கிரஸ்காரர்களின் குறைகளை நீக்க ஏதாவது ஒருவழி தேடவேண்டுமென்று அவர்கள் கவலைப்பட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்குக் கோர்ட்டில் தம் பிரதிவாதத்தை நடத்த அனுமதி அளிப்பதற்குக் காந்திஜீ ஒத்துக்கொண்டார். முக்கியமாகச் செயற்குழுவின் உறுப்பின ரான கங்காதர் ராவ் பாண்டேயின் மேல் தொடுக்கப்பட்டிருந்த வழக்கை ஒட்டி இந்தக் கேள்வி எழுந்தது. இப்படிப்பட்டவர் களுக்கு அனுமதி கொடுப்பதைப் பற்றிக் காந்திஜீ ஒரு தீர்மானத் தைக் கொண்டுவந்தார். இதன்மேல், இத்தீர்மானம் காங்கிரஸின் விதிமுறைக்கு விரோதமானதன்றோ என்று டாக்டர் சோயித்ராம் கித்வானி ஒரு கேள்வி கேட்டார். மௌலாஞ முகம்மது அலீ காந்திஜீயின் அபிப்பிராயத்தைக் கேட்டார். விலக்குக்களைப் பற்றிய தீர்மானங்களுக்கு இது விரோதமானதுதான் என்று காந்திஜீ விடை அளித்தார். அதன்மேல் மௌலாஞ முகம்மது அலீ அதனை விதிமுறைக்கு முரணானதென்று கூறித் தள்ளி விட்டார். குழுவின் நடவடிக்கைகள் முடிவடைந்தன. அக் கூட்டத்தில் நடந்த காரியங்கள் மகாத்மாஜீயின் உள்ளத்தை ஆழப் புண்படுத்தின. அவர் எல்லோர் மனத்திலும் ஆழ்ந்து படியும்படி ஒரு உருக்கமான சொற்பொழிவை ஆற்றினர். பேசிக் கொண்டிருக்கும்போதே அவர் திடீரென்று நிறுத்திவிட்டார். கூட்டத்தில் திகைப்பு உண்டாயிற்று. காந்திஜீயின் கண்களி லிருந்து கண்ணீர் இடையருது பெருகியது. சிறிது நேரத்தில் அவர் தம் மனத்தை அமைதிப் படுத்திக்கொண்டு பேச்சை முடித் தார். சபை முழுவதும் பெருந்துயரும் ஏமாற்றமும் வந்து கவிந்தன. அங்கே கூடியிருந்த உறுப்பினர்கள் தம் பேச்சுக்

களால் காந்திஜீக்கு ஆறுதல் அளித்தார்கள். மேலும், அவருடைய அடிச்சுவட்டையே பின்பற்றித் தாம் தொடரத் தயாராக இருப்பதாகவும் உறுதி கூறினர்கள். எத்தனையோ பேர், எல்லாரும் காணக் காந்திஜீயுடனும் அவர் ஓய்ந்த பின்னும் கண்ணீர் விட்டு அழுதுகொண்டிருந்தார்கள். இவ்விதமான துயரமான மனோ நிலையில் அக்கூட்டம் முடிவடைந்தது.

அக்கூட்டத்தைப் பற்றிக் காந்திஜீ மிகவும் உருக்கமானதொரு கட்டுரையை எழுதினர். பெரும்பான்மை ஆதரவு பெற்றும்கூட மகாத்மாஜீ தம்முடைய தீர்மானத்தை மாற்றியனதப் பற்றி நாட்டின் பத்திரிகைகள் அனைத்தும் அவரை மிகவும் பாராட்டின. இவ்வளவு நடந்திருந்தும் கூடக் காங்கிரஸில் கருத்து வேறுபாடு நிரந்தரமாகவும் கடுமையாகவும் உண்டாகும் என்பது தெரியவந்தது. இது ஒன்றும் புதியதன்று. ஏனெனில், சௌரீ சௌராவில் நடந்த சம்பவத்திற்குப் பின் காந்திஜீ சத்தியாக்கிரகத்தை நிறுத்திப் போட்டதைத் தலைவர்கள் அனைவரும் சிறையில் இருந்தபடியே எதிர்த்ததிலிருந்தே இது புலப்பட்டுவிட்டது. டேயின் கொலையை ஒட்டிய தீர்மானத்தின் போதும் இது வெளிப்பட்டது. அரசாங்கத்தார் இப்படிப்பட்ட வாய்ப்பையே தேடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இந்தச் சச்சரவிலிருந்து லாபம் பெற விரும்பினர்கள். சில நாட்களுக்குப் பிறகு சுபாஷ் சந்திர போஸ் உட்பட அநேக தோழர்கள் வங்காளத்தில் கைது செய்யப்பட்டுக் கண்காணுச் சிறையில் வைக்கப்பட்டார்கள். இச்சண்டையைத் தீர்ப்பதற்காகக் காந்திஜீ முதலில் இருந்தே முயன்று வந்தார். இச்சந்தர்ப்பத்திற்குப் பிறகு இதை எந்த விதத்திலாவது தீர்த்தே ஆக வேண்டுமென்று அவர் விரும்பினர். தமக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடைத்திருந்த போதிலும் தாம் இந்த வெற்றியைத் தமது தோல்வியாகவே கருதுவதாக அவர் அகமதாபாத்திலேயே கூறினர். ஏனெனில், இரு கட்சிகளும் அளித்த வாக்குக்களின் தொகைகளின் ஏற்றத்தாழ்வு மிகக் குறைவாக இருந்ததால் அதை ஒரு வித்தியாசமாகக் கொள்ளமுடியாதென்று கருதி, தாம் தோல்வியுற்றதாகவே காத்திஜீ நினைத்தார். அப்போதிருந்தே அவர் ஒரு வழியைக் கண்டுபிடிப்பதில் ஈடுபட்டார். அவர் சுயராஜ்யக் கட்சியுடன் மட்டும் சமாதானத்தை நாடவில்லை. ஒத்துழையாமைக் கிளர்ச்சியை முன்னிட்டுக் காங்கிரஸை விட்டு விலகிச் சென்றவர்கள் எல்லாரும் மீண்டும் காங்கிரஸில் வந்து சேர வேண்டுமென்ற எண்ணத்துடன் மாறுபா

டான அபிப்பிராயங்கள் கொண்டுள்ள அனைவருடனும் சமாதானம் செய்துகொள்ள விரும்பினர்.

பார்லிமெண்டின் முன் சமர்ப்பிப்பதற்காகச் சுயராஜ்யத்தைப் பற்றி ஒரு மசோதாவைத் தயார் செய்வதில் டாக்டர் அன்னி பெசண்டு அம்மையார் அந்த நாட்களில் ஈடுபட்டிருந்தார். அதே சமயத்தில் தொழிலாளர் கட்சியானது இங்கிலாந்தில் பார்லிமெண்டில் பெரும்பான்மை பலம் பெற்று மந்திரிசபையை அமைத்தது. ஸ்ரீ ராம்சே மாக்டோனல்டு பிரதம மந்திரி ஆனர். இந்தியாவின் நண்பரெனக் கருதப்பட்டு வந்த கர்னல் வெஜ்வுட் பென் இந்தியா மந்திரி ஆவார் என்ற நம்பிக்கை இருந்துவந்தது. ஆனல் இந்தியாவில் இருந்த ஆங்கிலேயர்களும், முக்கியமாகச் சிவில் செர்விஸ்காரர்களும் எதிர்த்ததின் காரணத்தால் அவர் இந்தியா மந்திரியாக நியமிக்கப்படவில்லை. லார்டு ஒலீவியர் இந்தியா மந்திரி ஆனர். ஆயினும் தொழிலாளர் கட்சியின் மந்திரி சபை இந்தியாவிற்கு ஏதாவது அரசியல் உரிமை அளிக்கும் என்ற நம்பிக்கை இருந்துவந்தது. காந்திஜீயானவர் நாட்டில் உள்ள நிலைமையை-முக்கியமாக ஹிந்து-முஸ்லிம் கலகங்களை-மனத்தில் கொண்டு, மேலும் காங்கிரஸின் உள்ளும், வெளியே நாட்டிலும் நிலவி வந்த கருத்து வேறுபாட்டினல் வளர்ந்து வரும் மனஸ்தாபத்தைத் தீர்ப்பது இன்றியமையாதது என்பதையும் உணர்ந்து ஒரு யோசனையைக் கூறினர். எல்லாரும் காங்கிரஸில் வந்து சேருவதற்கு வாய்ப்புக் கிட்டும்படி செய்வதற்காகக் காங்கிரஸ், வேண்டுமானல், ஒத்துழையாமையை நிறுத்திப் போட்டு விடலாம் என்று கூறினர்.

காந்திஜீ கொண்டுவந்த தீர்மானம் கீழ்க்கண்டவாறு அமைந்திருந்தது :

(1) வெளிநாட்டுத் துணிவிலக்கு நீங்கலாக மற்ற விலக்குகளை எல்லாம் காங்கிரஸ் நிறுத்திவைக்க வேண்டும்.

(2) துணியைத் தவிர மற்றப் பிரிட்டிஷ் பொருளைப் புறக்கணிக்கக் கூடாது.

(3) கதர், சர்க்கா ஆகியவற்றின் பிரசாரம், ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை, ஹிந்துக்களிடையிலிருந்து தீண்டாமையை ஒழித்தல் ஆகிய வேலைகளை மட்டும் தான் காங்கிரஸ் செய்து வரவேண்டும்.

(4) இப்போது நடந்துவரும் தேசீய வித்யாலயங்களைத் தொடர்ந்து நடத்தி, தேவையானபடி புதியவற்றையும் காங்கிரஸ் திறந்து வரவேண்டும்.

(5) நான்கு அணு கொடுத்துக் காங்கிரஸ் அங்கத்தினர் ஆகும் முறையை ஒழித்துவிட்டு எவரெவர்கள் குறைந்தது அரை மணி நேரமாவது நாள்தோறும் சர்க்காவைச் சுற்றி மாதாமாதம் தாமே நூற்ற இரண்டாயிரம் கஜம் நூலைக் காங்கிரஸுக்கு அளிக்கிறார்களோ அவர்கள்தாம் அங்கத்தினர் ஆகலாம் என்று அமைக்கவேண்டும். மேலும் ஏழ்மையால் பஞ்சு வாங்க முடியாதவர்களுக்குக் காங்கிரஸ் பஞ்சை இலவசமாகக் கொடுக்க வேண்டும்.

இவைதாம் காந்திஜீ கொண்டுவந்த தீர்மானத்தின் முக்கியமான நிபந்தனைகள்.

இதன் கருத்து யாதெனில்: (1) காங்கிரஸோ மாறுமைவாதிகளோ சுயராஜ்யக் கட்சியை எதிர்க்கக் கூடாது, மேலும் அதை அமைப்பதற்கு அக்கட்சிக்காரர்களுக்கு முழு உரிமையும் வாய்ப்பும் அளிக்க வேண்டும். (2) மற்றக் கட்சிக்காரர்களைக் காங்கிரஸில் வந்து சேரும்படி அழைக்க வேண்டும். (3) கவுன்ஸில் புகுவதை எதிர்த்து வெளிப்படையாகவோ இரகசியமாகவோ கிளர்ச்சி செய்வதை மாறுமைவாதிகள் கைவிடவேண்டும். (4) விலக்குக்களில் நம்பிக்கையில்லாதவர்களுக்கு அவற்றைக் கைவிட உரிமை அளிக்கவேண்டும். அதாவது வக்கீல் எவராவது வக்கீல் தொழிலை நடத்த விரும்பினால் அவர் அப்படியே செய்யலாம். விலக்குக்களை ஏற்காதவர்களும் காங்கிரஸில் சேரலாம். காங்கிரஸில் பதவிகளும் வகிக்கலாம் என்பனவாம்.

மகாத்மாஜீயின் தீர்மானத்தைப் பற்றி எல்லோரும் ஆலோசனை செய்துவந்தார்கள். ஸ்ரீமதி அன்னிபெசண்டு அதை ஒரு விதமாக ஏற்றுக்கொண்டார். தாம் காங்கிரஸில் சேருவதற்கு வழி திறக்கப்பட்டுவிட்டதாக அவருக்குத் தோன்றியது.

# 57. காந்திஜீயின் உண்ணுவிரதமும் ஒற்றுமை மகாநாடும்

இவ்விதமாகக் காங்கிரஸுக்கும் சுயராஜ்யக்கட்சிக்கும் வாக்கு வாதம் ஒருபக்கம் நடந்துகொண்டிருந்தது. மற்ருெரு பக்கம் நாடெங்கும் ஹிந்து–முஸ்லிம் கலகங்கள் நடந்துகொண்டிருந்தன. பீகாரிலுள்ள பாகல்பூரிலும் கலகம் மூண்டுவிட்டது. அங்கே நான் மற்றத் தோழர்களுடன் செல்ல வேண்டியதாயிற்று. அங்கு எத்தனையோ நாட்கள் தங்கியிருந்து இரு வகுப்பினருக்கும் இடையில் நட்பை வளர்க்க முயன்று வரவேண்டியிருந்தது. மற்ற இடங்களிலும் கலகங்கள் நடந்தன. இவையெல்லாம் காந்தி ஜீயின் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. தில்லியிலும் மாபெரும் கலகம் ஒன்று விளைந்தது. அங்கே காந்திஜீயே சென்ருர். அங்குப் பல நாட்கள் தங்கியிருந்து பிறகு வேறு ஏதோ வேலைக் காகப் பம்பாய்ப் பக்கம் திரும்பிச் சென்றுவிட்டார். நிஜாமின் ராஜ்யத்தில் உள்ள குல்பர்காவிலும் பெரியதொரு கலகம் நடந்தது. அதே சமயத்தில் எல்லை மாகாணத்தில் கோஹாட் என்ற ஊரிலும் பெரிய கலகம் விளைந்துவிட்டது. அநேகம் பேர் கொல்லப்பட்டார்கள். ஏராளமான பொருள் கொள்ளையடிக்கப் பட்டது. எத்தனையோ வீடுகளும் கொளுத்தப்பட்டன. இந்த நிகழ்ச்சிகளைக் கண்டு காந்திஜீ பெரும் கவலையும் கலக்கமும் அடைந்தார். இவற்றையெல்லாம் கண்டு மனவேதனையுற்று அவர் ஹிந்து–முஸ்லிம் ஒற்றுமைக்காக இருபத்தோரு நாள் உண்ணுவிரதம் இருக்க நிச்சயித்தார். இந்த முடிவை அவர் தில்லியில் மௌலானு முகம்மது அலீயின் வீட்டில் தங்கியிருந்த போதுதான் செய்தார். அங்கேயே உண்ணுவிரதத்தைத் தொடங்கிவிட்டார்.

மகாத்மாஜீயின் உபவாசத்தின் செய்தி அச்சிடப்பட்டதுமே நாடெங்கும் பெரும் கவலை சூழ்ந்தது. சமீபத்தில்தான் அவர் ஒரு பெரிய அபாயமான நோயிலிருந்து விடுபட்டு எழுந்திருந் தார். எல்லாரும், முக்கியமாக, அவர் உடல் நிலையை நன்கு அறிந்திருந்த டாக்டர் அன்சாரி முதலானேர், மிகவும் கவலைக்கு ஆளானுர்கள். இந்த முடிவிலிருந்து காந்திஜீயைக் கலைக்க டாக்டர் அன்சாரி முயன்று பார்த்தார். தம்முடைய அன்பு, மருத்துவக்கலை இரண்டையும் பிரயோகித்துப் பார்த்தார். ஆனுல்

காந்திஜீ, தாம் செய்த முடிவிலிருந்து அசையவில்லை. கடைசியாக, இந்த உண்ணுவிரதத்தால் அவருக்குச் சாவு வந்துவிடும் என்ற நிலை வந்துவிட்டால் அப்போது விரதத்தை விட்டுவிடுவதாக ஒரு வாக்கு மட்டும் இத்தனை முயற்சிக்குப் பின் காந்திஜீயிடமிருந்து வாங்க முடிந்தது. விரதம் ஆரம்பித்தது. அச்செய்தி கிடைத்ததுமே நான் தில்லிக்குச் சென்றேன். சில நாட்களுக்குப் பிறகு காந்திஜீ மௌலானு முகம்மது அலீயின் வீட்டை விட்டு ஊருக்கு வெளியே இருந்த ராய் பகாதுர் சுல்தான் சிங்கின் பங்களாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டு, அங்கே தங்கி வந்தார். அவருக்குத் தொண்டு புரிவதற்காக ஸ்ரீ ஆண்டுரூஸும் வந்து சேர்ந்தார். டாக்டர் அன்சாரி இராப்பகலாக அவரைக் கவனித்து வந்தார்.

இவ்விரதம் மக்களிடையில் பயனை விளைவிக்காமல் எப்படி இருக்கக் கூடும்? மௌலானு முகம்மது அலீயின் தூண்டுதலின் பேரில் எல்லா வகுப்பினரையும் கூட்டித் தில்லியில் ஒரு மகாநாடு நடத்தப்பட்டது. இதில் ஹிந்துக்கள், முசல்மானியர், சீக்கியர் ஆகியவர்களின் தலைவர்கள் மட்டுமின்றிக் கிறிஸ்துவ மதத் தலைவர்களும் கலந்து கொண்டார்கள். கல்கத்தாவின் லார்டு பிஷப்பான டாக்டர் வெஸ்ட்காட்டும் வந்தார். பல நாட்கள் வரையில் வாதம் நடந்து கொண்டிருந்தது. எந்தெந்த விஷயங்களைக் கொண்டு கலகங்கள் செய்து வரப்பட்டனவோ அவற்றைப் பற்றியெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

முக்கியமான தீர்மானங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(1) நாடெங்கும் ஹிந்து-முஸ்லிம்களுக்கு இடையில் நடந்து வரும் கலகங்களைக் கண்டும், அவற்றால் பொருளுக்கும் உயிருக்கும் உண்டாகும் சேதத்தைக் கண்டும், மேலும் கோயில்கள் முதலானவைகளுக்குக் கேடு விளைவிக்கப்படுவதைக் கண்டும் இச்சபையானது தன் துக்கத்தை அறிவிக்கின்றது. இச்செயல்கள் காட்டுமிராண்டித்தனமானவை என்றும், சமயக் கோட்பாடுகளுக்கு முரணானவை என்றும் இச்சபை கருதுகிறது. பழி வாங்குவதையும் தண்டிப்பதையும் எவரும் தாமே மேற்கொள்வது சட்டத்திற்கு விரோதமானது மட்டும் அன்றி, அற நெறிக்கும் விரோதமானது என்பது இச்சபையின் அபிப்பிராயம். சண்டைகளை யெல்லாம் பஞ்சாயத்

தின் மூலமாகவே தீர்த்துக் கொள்ளவேண்டும். இவ்வண்ணமாக இயலாத இடங்களில் கோர்ட்டு களின் மூலமாகத் தீர்த்துக் கொள்ளவேண்டும்.

(2) மேலே கூறியுள்ள தீர்மானத்தைச் செயல் முறையில் கொண்டு வருவதற்காகவும், மக்களிடையில் நல் லுறவை வளர்ப்பதற்காகவும் ஒவ்வொருவருக்கும் தமக்கு உகந்த மதக் கொள்கைகளைக் கடைபிடிக்க வும், அவற்றை வெளிப்படையாகக் கூறவும் உரிமை இருக்கவேண்டும். அதே சமயத்தில் ஒவ்வொரு வரும் பிறருடைய மனப்பான்மையை நினைவிற் கொண்டு, அவர்களுடைய உரிமைகளைத் தாக்கா மல் தம் மதக் காரியங்களைச் செய்து வரவேண்டும். எவரும் வேருெரு மதத்தைச் சார்ந்தவரை இழி வாகப் பேசக் கூடாது; மேலும் அவர்களுடைய மதக் கொள்கைகளைக் கண்டனம் செய்யக் கூடாது. எல்லா மதங்களுடைய வழிபாட்டுத் தலங்களையும் புண்ணிய தலங்களாகக் கருதவேண்டும். அவற் றில் அட்டூழியம் செய்யக் கூடாது. எப்படிப்பட்ட நிலைமையிலும், எவ்வளவு சினத்தை மூட்டும்படி காரியங்கள் நடந்தாலும்கூட, வழிபாட்டுத் தலங் களைக் களங்கப்படுத்தக் கூடாது. பழிவாங்கும் எண்ணத்துடன் அவற்றைத் தாக்கக் கூடாது. இவ் விதமான செயல் நடக்காமல் தம் முழு ஆற்றலையும் கொண்டு அவற்றைக் காப்பது எல்லோருடைய கடமையாகும்.

(3) பசுபலி கொடுக்கும் உரிமையைப் பலவந்தமாகவோ ஏதாவது போர்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத் தாலோ, சட்டசபையின் மூலமாகச் சட்டங்களை அமைத்தோ, கோர்ட்டின் உத்தரவினுலோ முசல் மானியர்களிடமிருந்து அபகரிக்க முடியுமென்று ஹிந்துக்கள் நம்பிக்கை கொள்ளக் கூடாது. ஆனுல், முசல்மானியர் தாமே விரும்பி அதைக் கைவிடக் கூடும். இதனுல் இந்த விஷயத்தை அவர்களுடைய நல்லறிவுக்கே விட்டு விட்டு ஒருவருக்கொருவர் நல் லுறவு உண்டாவதற்கான நட்பை வளர்க்க வேண் டும். இப்படி கூறியதால், இதற்கு முன்னமே ஏதாவதோர் இடத்தில் கைப்பற்றி வரும் வழக்

கத்தையோ, இரு வகுப்பினர்களுக்கு இடையில் செய்யப்பட்டிருக்கும் ஒப்பந்தத்தையோ மாற்ற வேண்டுமென்பது இதன் பொருள் அன்று. மேலும், இப்போது, பசுபலி நடத்தாத இடங்களில் இனிப் பசுபலியை நடத்தலாமென்பதும் பொருள் அன்று. எங்கேனும், உண்மையாக என்ன நடந்து வந்தது என்பதைப் பற்றி ஐயம் உண்டானுல், அதைப் பற்றித் தேசீயப் பஞ்சாயத்து விசாரணை செய்யும். பலியிடுவது ஹிந்துக்களுக்கு மனம் நோகாமலிருக்கும் வகையில் செய்யப்பட வேண்டும்.

(4) இந்த மகாநாட்டில் கலந்து கொண்டிருக்கும் முசல்மானியர்கள் தம் மதத்தினரிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறுர்கள். அதாவது, இயன்ற வரையில், பசுபலி செய்யாமலிருக்க வேண்டுமென்பதுதான். மேலும், மசூதிகளுக்கு அருகில் ஹிந்துக்களின் வாத்தியங்கள் ஒலிப்பதைப் பலவந்தமாகவோ, ஏதேனும் போர்டின் தீர்மானத்தாலோ, சட்டசபை மூலமாகச் சட்டத்தை அமைத்தோ, கோர்ட்டின் உத்தரவாலோ நிறுத்த முடியுமென்ற நம்பிக்கை கொண்டிருக்கக் கூடாது. இது ஹிந்துக்களின் சம்மதத்தோடுதான் நிறுத்தப்பட முடியும். முசல்மானியரின் மனேபாவத்தை மதிக்கவேண்டுமென்பதை ஹிந்துக்களின் நல்லறிவுக்கே விட்டுவிடவேண்டும். ஆனுல் இத்தீர்மானத்திற்கு, இதற்கு முன்னுல் எங்காவது இருந்துவரும் பழக்கமாவது, அல்லது இரு வகுப்பினர்களுக்குள் செய்யப்பட்ட ஒப்பந்தமாவது அற்றுப் போயிற்று என்பது பொருள் அன்று. மேலும், இதுவரையில் ஏதாவதொரு மசூதிக்கு முன்னுல் வாத்தியம் ஒலிக்கபடாமலிருந்தால் இனிமேல் ஒலிக்கலாம் என்பதும் பொருள் அன்று. உண்மை எது என்பதைப் பற்றி ஏதேனும் ஐயம் எழுந்தால், அதைப் பற்றித் தேசீய பஞ்சாயத்து விசாரணை செய்யும். இம்மகாநாட்டின் ஹிந்து உறுப்பினர்கள் ஹிந்துக்களிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொள்ளுகிறுர்கள். அதாவது, அவர்கள் மசூதிகளில் தொழுகைக்காகக்

கூடியிருப்பவர்களுக்கு இடைஞ்சலாகும் வண்ணம் வாத்தியங்களை ஒலிக்கக் கூடாது என்பதுதான்.

(5) இவை போன்ற தீர்மானங்கள் ஹிந்துக்களின் கோவில்களில் மணி ஒலிப்பதைப் பற்றியும் அஜானைப் பற்றியும் (முசல்மானியரைத் தொழுவதற்காக் கூவி அழைத்தல்) நிறைவேற்றப்பட்டன.

(6) மாமிசம் விற்பதையும் அதற்காக மிருகங்களைக் கொல்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கும் இடங்களில் அவை கொல்லப்படும் முறையையும் (அதாவது ஜட்கா முறை அல்லது ஜிபஹ் முறை) தடை செய்து எதிர்க்கக் கூடாது.

(7) ஒவ்வொரு மனிதனுக்கும், தான் விரும்பிய மதத்தைத் தழுவி நிற்கவும், மேலும் தான் விரும்பியபடி அதிலிருந்து மாறவும் உரிமை உண்டு. மதம் மாறியதற்காக அவன் தண்டனைக்கு உரியவனாக கருதப் படக் கூடாது. அவனுக்கு ஒரு விதத்திலும் துன்பம் அளிக்கக் கூடாது.

(8) வாக்கு வாதம் செய்து விளங்க வைத்து எவரையும் மதம் மாறச் செய்வதற்கும், மேலும் தம் மதத்தை விட்டுச் சென்று விட்டவரை மீட்பதற்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் சமூகத்திற்கும் உரிமை உண்டு. ஆனால் பலவந்தப் படுத்தியோ ஏமாற்றியோ, தவறான முறையிலோ, உதாரணமாக, ஏதாவது பொருளை ஆசை காட்டியோ எவரையும் மதம் மாறச் செய்யக் கூடாது.

(9) மதம் மாறுவதைப் பற்றி மறைத்து ஒழித்துப் பேச்சு நடக்கக் கூடாது. ஒரு மதத்தார், அவர்களுக்குச் சொந்தமான இடங்களில் கோவில்களையோ வழிபடுதலங்களையோ அமைப்பதைத் தடுக்கவோ, இன்னல் செய்யவோ எவருக்கும் உரிமை இல்லை. ஆனால், அப்படிக் கட்டப்படும் புதிய வழிபடுதலங்கள் மற்ற மதத்தாரின் வழிபடு தலங்களிலிருந்து சற்றுத் தொலைவிலேயே கட்டப்பட வேண்டும்.

(10) பதினைந்து பெயரைக் கொண்ட ஒரு மத்திய பஞ்சாயத்து அமைக்கப்பட வேண்டும். மற்ற இடங்களில் ஆங்காங்குள்ள மதத்தினரின் பிரதிநிதிகளின் யோசனையைக் கேட்டு அந்தந்த இடங்களில் இவ்

விதமான சண்டைகளைத் தீர்த்து வைப்பதற்காகப் பஞ்சாயத்துக்களை அமைப்பதற்கு அந்த மத்திய பஞ்சாயத்துக்கு அதிகாரம் அளிக்கப்படவேண்டும். மேலும், இம்மத்திய பஞ்சாயத்திற்குத் தேவையான விதி முறையைத் தானே அமைத்துக் கொள்வதற்கு உரிமை உண்டு. இப்பஞ்சாயத்திற்கு மகாத்மா காந்தி தாம் தலைவர். ஹகீம் அஜ்மல்கான், ஸ்ரீ சி. கே. நரீமன் (பார்ஸீ), டாக்டர் எஸ். கே. தத்தா (கிறிஸ்துவர்), மாஸ்டர் சுந்தர் சிங் லாயல்பூரி (சீக்கியர்) ஆகியவர்கள் உறுப்பினர்கள் ஆவர். மற்ற உறுப்பினர்களை இவர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.

இவ்வண்ணமாக முயற்சி செய்ததின் பயனாக நாட்டின் சூழ்நிலை செம்மைப் பட்டு வருவதாகக் காணப்பட்டது. எல்லா மதத்தினரும் ஒருவர்க்கொருவர் நல்லுறவுடனும் சகோதர பாவத்துடனும் நடந்து கொள்ளத் தீர்மானித்து வருவதாகத் தெரியவந்தது. ஒற்றுமை மகாநாட்டால் நல்ல பயன் உண்டாயிற்று. அப்பயன் நீடித்து நிலைபெற வாய்த்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். ஆனால் அது நிலைபெற முடியவில்லை. அப்போது எதிர்பார்த்தது போலப் பின்னால் நடக்கவில்லை.

இந்த மகாநாட்டில் நானும் ஒரு நாள் கூடத் தவறாமல் கலந்து கொண்டேன். எல்லா விதத்திலும் அது வெற்றி பெற வேண்டுமென்று நான் விரும்பினேன். ஆயினும் நல்ல சூழ்நிலையும் நல்லெண்ணமும் இருந்தும் கூட என் மனத்தில் ஐயம் இருந்தே வந்தது. ஏனெனில், இவ்வளவு பேச்சு வார்த்தை நடந்து முடிவான பின்னும் இத்தகைய முயற்சியின் பயனை நிலையுறச் செய்வதற்கு வேண்டிய திண்ணமான ஒற்றுமை மனப்பான்மை இல்லை. ஒவ்வொரு கட்சிக்காரரும் தத்தம் உரிமைகளையும் மாமூலையும் வழமையையும் முக்கியமாகக் கருதினார்களே அன்றி எவரும் தம் கடமைகளை அதே அளவுக்கு முக்கியமாகக் கருதவில்லை. அவரவர் தத்தம் கடமைகளைத் தலையாகக் கொண்டு அவற்றை நிறைவேற்றுவதில் ஆற்றலைச் செலுத்தினால்தான் இவ்விதமான சண்டைகள் தீரும் என்பது என் கருத்து. தம் உரிமைகளை வற்புறுத்துவதினால் அவை தீரா. ஆயினும் அந்தச் சமயத்தில் நிகழ்ந்தனவெல்லாம் சரியாகவே தோன்றின. ஆகையால் என் மனத்தில் இருந்து வந்த இந்த ஐயம் மனத்திற்குள்ளாகவே அடங்கிக் கிடந்து விட்டது.

இவையெல்லாம் நிகழ்ந்து கொண்டிருந்தபோது காந்திஜீ

யின் உண்ணுவிரதமும் ஒருபுறம் நடந்து கொண்டிருந்தது. அவருடைய சிறுநீரை டாக்டர் அன்சாரி நாள்தோறும் இருமுறை பரிசோதித்து வந்தார். ஒரு நாள் ஓர் அற்புதமான காரியம் நடந்தது. இதை நான் டாக்டர் அன்சாரி சொல்லக் கேட்டிருக்கிறேன். சிறுநீரை ஒருநாள் சோதித்ததில் அதில் "அசிட்டோன்" அதிகமாக இருப்பதாகத் தெரிய வந்தது. இது நல்ல சின்னம் அன்று. அதன் அளவு மேலும் அதிகரிக்குமானுல் நோயாளி நினைவு இழந்து விடுவான். அப்படி ஆனபின் நோயாளியைக் காப்பாற்றுவது மிகவும் கடினமாகிவிடும். இதனுல் டாக்டர் அன்சாரி கவலையுற்ருர். அவர் மகாத்மாஜீயைப் பார்த்து, "இப்போது நீங்கள் அபாயமான நிலைமையைக் கிட்டிவிட்டீர்கள். ஆதலால் எனக்கு வாக்களித்தபடியே இருபத்தொரு நாள் முடிவதற்கு முன்னமே உங்களுடைய நோன்பைக் கைவிட வேண்டி வரலாம்" என்று கூறினுர்.

அசிட்டோனின் அளவு பெருகிவிட்டது. இனிக் காத்திருப்பது அபாயமாகும் என்று டாக்டர் அன்சாரி முடிவு செய்தார். இதை அவர் மகாத்மாஜீயிடம் கூறினுர். உபவாசத்தை உடனே விட்டு விடவேண்டுமென்று எச்சரிக்கையும் செய்தார். சில மணி நேரத்திற்குள் காந்திஜீ தம் நினைவு இழந்து விடக்கூடும் என்று அஞ்சினுர். இவற்றையெல்லாம் எடுத்துக் கூறி காந்திஜீக்கு உணவளிக்க வேண்டுமென்று பிடிவாதம் செய்தார். "நீங்கள் உங்கள் கலையைக் கொண்டு எல்லாவற்றையும் பரிசோதித்தும் பார்த்து வீட்டீர்கள்; அளவையும் கணக்கிட்டு விட்டீர்கள். ஆனுல் என்னை இன்றிரவு மட்டும் சும்மா விட்டு விடுங்கள்" என்று காந்திஜீ சொன்னுர். டாக்டர் இதற்கு உடன்படவில்லை. அதன் மேல் காந்திஜீ டாக்டர் அன்சாரியைப் பார்த்து "நீங்கள் எல்லாவற்றையும் கணக்குப் போட்டு விட்டீர்கள், ஆனுல் பிரார்த்தனையின் பலனைக் கணக்குப் போடவில்லையே! இன்று மட்டும் என்னைச் சும்மா விட்டுவிடுங்கள்" என்ருர். டாக்டர் சாஹப் ஒத்துக் கொண்டார். அடுத்தநாள் சிறுநீரைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு இனி அசிட்டோனின் அபாயம் இல்லை என்று கூறிவிட்டுக் காந்திஜீக்கு உணவளிக்க வேண்டுமென்று வற்புறுத்துவதை விட்டு விட்டார். அதற்குப் பிறகு அந்த உபவாசத்தின்போது அசிட்டோனின் தொந்தரவு உண்டாகவே இல்லை. டாக்டர் அன்சாரியின் கவலை குறைந்தது. இவ்விதமான விந்தைக்குக் காரணம் தம் மருத்துவ முறையில் புலப்பட

வில்லையென்றும், இது எப்படி நிகழ்ந்தது என்பது தமக்குப் புரியவில்லை என்றும் அவர் எங்களிடம் கூறினர்.

மகாத்மாஜீ உபவாசகாலம் முழுவதும் தம்முடைய பழக்கப் படி நாள்தோறும் சர்க்காவில் நூல் நூற்று வந்தார். அவரைச் சுற்றி நாலாபக்கமும் தலையணைகள் கொடுத்து அவரை உட்கார வைப்பார்கள். அப்படி உட்கார்ந்துகொண்டே அவர் சர்க்காவைச் சுற்றுவார். கடைசியாக உபவாசத்தை முடிக்கும் நேரம் வந்ததும், அவர் பிரார்த்தனை செய்துவிட்டுச் சர்க்கா சுற்றிவிட்டு அதற்குப் பிறகு பஜனைப் பாடல்கள் பாடப்பட்டபின் ஆரஞ்சுப் பழ ரசத்தை அருந்தி உபவாசத்தை முடித்தார். இச்சந்தர்ப்பத்தில் மௌலானு முகம்மது அலீயானவர் கசாப்புக் கடையிலிருந்து ஒரு பசுவை விலைக்கு வாங்கி வந்து மகாத்மாஜீக்கு அளித்து அவரைக் கண்டு கொண்டார். என்ன அன்பு! என்ன நற்சிந்தை!

## 58. பட்னு முனிசிபால்டியில்

பாபூ ஹரிஜீயின் வழக்குச் சம்பந்தமாக நான் பட்னுவில் வேலை செய்து கொண்டிருந்த அதே சமயத்தில் பட்னு முனிசிபால்டியின் அங்கத்தினர்களின் தேர்தல் நடந்தது. கவுன்சிலுக்குச் செல்வதைக் காங்கிரஸ் தடுத்திருந்தாலும் முனிசிபால்டிக்கும் டிஸ்டிரிக் போர்டுக்கும் போவதைத் தடுக்கவில்லை. இந்தக் கொள்கையைப் பின்பற்றியே சர்தார் வல்லப் பாயீ படேலும் அகமதாபாத் முனிசிபால்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு அதற்குத் தலைவரும் ஆனர். அது போலவே பண்டித் ஜவாஹர்லால் ஜீயும் அலாகாபாத் முனிசிபால்டியின் தலைவர் ஆனர். பட்னு முனிசிபால்டியின் தேர்தலில் காங்கிரஸ் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று கருதப்பட்டது. மௌல்வீ குர்ஷேத் ஹஸ்நைன், ஸ்ரீமான்கள் அநுக்கிரக நாராயண் சின்ஹா, ஜகத் நாராயண்லால், பத்ரீநாத் வர்மா, அப்துல் பாரீ போன்ற முக்கியக் காங்கிரஸ்காரர்களும் நானும் தேர்தலுக்கு நின்ருேம். மௌல்வீ குர்ஷேத் ஹஸ்நைன் தலைவராகவும் அநுக்கிரக பாபூ துணைத் தலைவராகவும் ஆக வேண்டுமென்பது எங்கள் நோக்கம். தேர்தலில் அதிகக் கஷ்டம் எதிர்ப்பட்டது. ஏனெனில் பட்னுவில் சிலர் நெடுங்காலமாக முனிசிபல் கமிஷனர்களாக இருந்து வந்தார்கள். அவர்களைத் தோற்கடிப்பது கடினமாயிருந்தது. அப்படியும் கூடக் காங்கிர

ஸைச் சேர்ந்தவர்கள் அநேகம் பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனால் பெரும்பான்மை பலம் கிடைக்கவில்லை. ஆயினும் காங்கிரஸ்காரர்கள்தாம் ஒன்றுபட்டு இருந்தார்கள். அவர்கள்தாம் வேலைத் திட்டத்தையும் போட்டிருந்தார்கள். மற்றவர்களெல்லாம் தனிப்பட்ட முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே. மௌல்வீ ஹஸ்நைனனவர் தேர்ந்தெடுக்கப்படுவதில் அதிகக் கஷ்டம் உண்டாயிற்று. ஏனெனில் அவருக்குப் போட்டியாக ஒரு ஹிந்து நின்றார். அவர் முஸ்லிம்—ஹிந்து என்ற பூசலைக் கிளப்பிவிட்டு விட்டார். தம்முடைய "ஓட்" பெட்டியின் மேல் பசுவின் படத்தையும் வரைந்து கொண்டார். ஒரு கன்றுக் குட்டியைத் தம்முடன் இழுத்துக் கொண்டு வீடுவீடாக சென்றார் என்றும் கன்றுக் குட்டிக்கு வாக்கு அளியுங்கள் என்று வாக்காளர்களை வேண்டிக் கொண்டார் என்றும் சொல்லிக் கொண்டார்கள். மௌல்வீ ஹஸ்நைன் சாஹபைப் போன்ற ஒரு தீவிரமான காங்கிரஸ்காரர் தேர்ந்தெடுக்கப்படாமல் போய்விட்டால் நமக்கும் பெரும் அவமானம் வந்து சேருமென்று எங்களுக்குக் கவலை பிடித்து விட்டது. நாங்கள் நிறையப் பாடுபட்டு மும்முரமாக வேலை செய்தோம். கடைசியில் அவர் நிறைய வாக்குப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்த வம்புகளை யெல்லாம் மௌல்வீ குர்ஷேத் ஹஸ்நைன் கண்டு அஞ்சித் தாம் தலைவர் பதவிக்கு அபேக்ஷகராக நிற்கக் கூடாதென்று முடிவு செய்துவிட்டார். நான்தான் அப்பதவிக்கு நிற்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார். இது எனக்குச் சிறிது கூடப் பிடிக்கவில்லை; மேலும் எனக்கு இதற்கு நேரமும் இல்லை. ஏனெனில் நான் அப்போது ஒரு பெரிய வழக்கின் வேலையைச் செய்து கொண்டிருந்தேன். ஆனால் நான் என்ன சொல்லியும் அவர் கேட்வில்லை. ஆகையால் தலைவர் ஆவதற்கு நான் சம்மதிக்க வேண்டி வந்தது. அநுக்கிரக பாபூவும் அதே வழக்கில் எதிர்க் கட்சியில் வேலை பார்த்து வந்தார். அவர் துணைத் தலைவர் ஆனார். இத்தேர்தலின் பயனாகக் காங்கிரஸை ஆதரிப்பவர்களாகக் கருதப்பட்டு வந்தவர்களும், எங்களுக்கு உதவி புரிவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டவர்களுமான சில தோழர்கள் எங்களுக்குப் பலத்த எதிரிகளாகிவிட்டார்கள். அவர்கள் எங்களுக்கு விரோதமாக ஒரு கட்சியையும் அமைத்துவிட்டார்கள். நாங்கள் எந்த விஷயத்தைக் கொண்டு வந்தாலும் அதை எதிர்ப்பதே அவர்களுடைய முக்கிய வேலையாகி விட்டது. இரண்டு மூன்று தோழர்கள் இதையே வேலையாகக் கொண்டிருந்தார்கள்.

முனிசிபால்டியின் கூட்டங்களில் நேரந்தான் அதிகமாகக் கழிந்தது ; வேலை அதிகமாக நடக்கவில்லை. கடந்த கூட்டத்தின் நடவடிக்கையின் அறிக்கையை ஏற்றுக் கொள்வதிலேயே சில நாட்களில் மூன்று நான்கு மணி நேரம் கழிந்து விடும்.

எப்படியோ நாங்கள் வேலையைத் தொடங்கினோம். கோர்ட்டு வழக்கிலிருந்து ஓய்வு கிடைத்தபின் நாங்கள் இருவரும் எங்கள் நேரம் முழுவதையும் இவ்வேலைக்கே அளித்து வந்தோம். எங்கள் இருவருக்கும் முனிசிபால்டி வேலை ஒன்றுமே தெரியாது. இது போன்ற வேலை செய்வதற்கு எங்களுக்கு இப்போதுதான் முதன் முறை வாய்ப்புக் கிடைத்தது. ஆயினும் நாங்கள் எல்லா விஷயங்களையும் விரைவிலேயே புரிந்துகொள்ள முயற்சி செய்து வேலை புரிந்து வந்தோம். அதே சமயத்தில் கயா ஜில்லா போர்டின் தேர்தலும் நடந்தது. அங்குள்ளவர்கள் அநுக்கிரக பாபூவை ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுத்ததுமன்றித் தலைவ ராகவும் தேர்ந்தெடுத்து விட்டார்கள். இரண்டு இடத்து வேலை யையும் அவரால் சமாளிப்பது கடினமாக இருந்தது. இதனால் சில நாட்களுக்குப் பின் அநுக்கிரகபாபூ பட்ணு முனிசிபால்டியின் துணைத் தலைவர் பதவியை விட்டு விட்டு கயா வேலையை மட்டும் பார்த்து வந்தார். பட்ணுவில் மிஸ்டர் சையத் முகம்மது என் ஞெருவர் துணைத் தலைவராக அமர்ந்தார். அவர் காங்கிரஸ் சீட்டின் ஆதரவில் தேர்ந்தெடுக்கப்படா விட்டாலும் கூட மிகவும் கெட்டிக்காரராகவும் நல்லவருமாக எங்களுக்குத் தோன்றினர். அவர் முனிசிபால்டி வேலையையும் நன்ருகப் புரிந்தார்.

முனிசிபால்டிக்கு அதிகத் தொல்லைகள் இருந்தன. வரும்படி குறைவாக இருந்தது; செலவு அதிகமாக இருந்தது. எந்த வேலையும் பணமில்லாமல் நடக்க முடியவில்லை. புதிய வரிகளைப் போடாமல் வருவாயைப் பெருக்க முடியவில்லை. அக்காலத்தில் சர் கணேஷ் தத்த சின்ஹா பீகார் அரசாங்கத்தின் அமைச்சராக இருந்து வந்தார். முனிசிபால்டியில் நல்ல நடைமுறைகளை அமைப்பதற்கு ஊக்கம் அளித்து வந்தார். நான் ராஞ்சிக்குச் சென்று முனிசிபால்டியின் விஷயங்களைப் பற்றி அவருடைய யோசனையைக் கேட்டு வந்தேன். ராஞ்சியில் அவருடன் தங்கி யிருந்த சமயத்தில் பாபூ ஹரிஜீயானவர் ஹைகோர்ட்டில் தம் வழக்கில் வெற்றி பெற்று விட்டார் என்று தந்தி வந்தது. இதை அறிந்து நான் பெரு மகிழ்ச்சியடைந்தேன். இவ்விதமாக நான் முனிசிபால்டி வேலையை மிக்க ஆர்வத்துடன் கவனித்து வந்தேன். பெரும்பாலும் நாள்தோறும் மூன்று நான்கு மணி

நேரம் முனிசிபால்டி அலுவலகத்தில் வேலை செய்வேன். இரண்டு மூன்று மணி நேரம் ஊரில் சுற்றி வந்து பல மஹல்லாக் களுக்குச் (வார்டுகள்) சென்று வேலையைக் கண்காணித்து வந்தேன்.

அந்த ஊர் நெடு நீளமாக இருந்ததால் மேற்பார்வை இடு வதற்கு மட்டுமின்றி மற்ற வேலைகளுக்கும் இடைஞ்சலாயிருந் தது என்பதை அவ்வூரைப் பார்த்திருப்பவர்களுக்குக் கூற வேண்டிய அவசியம் இல்லை. பட்னு புதிதாக அமைக்கப்பட்ட ஊர் அன்று. இங்கே உள்ளூர்த் தேவைக்கு வேண்டிய வியாபாரம் மட்டும்தான் நடந்து வந்தது. முன் காலத்தில் ஆறுகளின் வழி யாகத் தான் பொருள்கள் இறக்குமதி ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. அப்போது பட்னுவுக்கு அதிகப் பெருமை இருந்து வந்தது. ஏனெனில் அங்கே கங்கை ஓடுகிறது. கங்கை நதியும் கண்டக் நதியும் கூடும் இடம் அதுதான். மேலும் சோன் நதியும் பத்ர நதியும் சரயு நதியும் கூடும் இடமும் அங்கிருந்து இருபது இருபத்தைந்து கல்லுக்கு உள்ளேயே இருந்தது. ஆனல் ரயில் வந்தபின் அச்சிறப்பு போய்விட்டது. அதனல் அந்த ஊர் இப்போது வாணிபத்திற்கு ஒரு மத்ய தலமாக இல்லை. புதிய தொழிற்சாலைகளும் குறைவாக இருந்தன. அவை இன்று கூடச் சிறப்பாக வளரவில்லை. 1924இல் அவை இன்னும் குறை வாகவே இருந்தன. மாகாண அரசாங்கத்தின் தலைநகராக ஆனபின் அரசாங்க அலுவலகங்களில் வேலை செய்பவர்கள் சிலரும் ஹைகோர்ட்டுடன் தொடர்பு கொண்ட வக்கீல்களும் பாரிஸ்டர்களும் அங்கு வசிக்கலானர்கள். இதனல் அவர்கள் வசித்து வந்த மேற்குப் பகுதி சிறிது களையுடன் விளங்கியது. கிழக்குப் பகுதி பழங்கால வாசஸ்தலம். அது தன் சிறப்பைப் பெரும்பாலும் இழந்துவிட்டது. இதனல் முனிசிபால்டியின் வருவாய் அதிகமாக இல்லை.

நவநாகரிக வசதிகள் இல்லையென்றே கூறலாம். சாக்கடை கள் மூடப்படாதனவாதலால் கொசு நிறைய இருந்தது. மேலும் சாக்கடைகளைச் சுத்தமாக வைத்துக் கொள்ளவும் முடியவில்லை. ஏனெனில் தண்ணீர் வெளியேறுவதற்குச் சரியான வழியில்லை. முன் காலத்தில் அங்குக் கேணி போன்ற அமைப்பில் கக்கூஸுகள் இருந்து வந்தன. அவை ஒரு நாள்கூடச் சுத்தம் செய்யப்படுவ தில்லை. நெடுங்காலத்திற்குப்பின் அவை இடிந்து போகுமானல், அவற்றின் பக்கத்திலேயே வேறு கக்கூஸ் கிணறுகள் அமைக்கப் படும். இதனல் ஊரின் சுகாதார நிலை மிகவும் மோசமாக இருந்து

வந்தது. எங்களுடைய காலத்திற்கு முன்னமே இக்கிணறு கக்கூஸுகளை முனிசிபால்டியானது மூடிவிட்டது. ஆயினும் இவை சில இடங்களில் இன்னும் இருந்து வந்தன. அவற்றை நாங்கள் மூடினேம். பெரும்பாலும் இப்படிப்பட்டக் கக்கூஸ் கேணிகளுக்கு அருகிலேயே தண்ணீர்க் கேணியும் இருக்கும். அநேகமாக எல்லா இடங்களிலுமே தண்ணீர் உப்புக் கரிக்கும். எங்காவது தான் நல்ல தண்ணீர் கிடைக்கும். இதனுல் குடிநீருக்கு மக்கள் கங்கை நீரையே உபயோகித்து வந்தார்கள். மழை காலத்தில் கங்கை நீரும் குழம்பிவிடும். அப்போது மக்கள் அதிகமாகக் கஷ்டப்படுவார்கள். இதனுல் மக்களுக்கு நீர்க்குழாய் மிகவும் அவசியமாயிற்று. எங்கள் காலத்திற்கு முன்னிருந்தே நீர்க் குழாயைப் பற்றியும் மூடப்பட்ட சாக்கடைகளைப் பற்றியும் பேச்சு நடந்து வந்தது. செலவுத் திட்டம்கூடப் போட்டாயிற்று. ஆனுல் பணமில்லாததால் அந்த விஷயம் பேச்சுடன் நின்றுவிட்டது.

நாங்கள் இந்த விஷயங்களில் எல்லாம் கவனத்தைச் செலுத்திச் செலவு எவ்வளவு பிடிக்கும் என்றுகூடத் திட்டம் போட்டோம். இந்த வேலைகள் எல்லாவற்றிற்கும் வேண்டிய செலவு முழுமைக்கும் மாகாண அரசாங்கத்தின் உதவியை நாடியிருக்கலாம். ஏதாவதும் கிடைத்திருக்கும். ஆனுல் இவற்றைப் பின்னுல் நடத்துவதற்கும் செம்மையாக வைத்திருப்பதற்கும் முனிசிபால்டிதான் செலவு செய்யவேண்டும். இதற்காகப் புதிய வரி போடாமல் அதனிடம் பணம் கிடையாது. மக்களுக்கு நல்ல பால் கிடைப்பது கடினமாயிருந்தது. முனிசிபால்டியே பால்ப் பண்ணை வைத்து மலிவான விலையில் நல்ல பாலை மக்களுக்கு வழங்கலாம் என்று நாங்கள் எண்ணினேம். ஆனுல் இவையெல்லாம் பணத்தைப் பொறுத்திருந்தன. இதனுல் வருவாயைப் பெருக்கும் வழியைத் தேட ஆரம்பித்தோம். ஊருக்குள் வரும் பொருள்களுக்குச் சுங்கவரி போட்டதில் ஐக்கிய மாகாண முனிசிபால்டிகளுக்கு நிறைய வரும்படி கிடைத்து வந்து கொண்டிருந்தது. பட்னுவிலும் சுங்கவரி போடலாமென்று நாங்கள் நினைத்தோம். சுங்கம் மூலமாக எவ்வளவு வரும்படி கிடைக்கும் என்பதையும் மதிப்பிட்டோம். இவ்விதமான தீர்மானத்தை முனிசிபால்டியானது முதலில் ஏற்றுக்கொள்ள வேண்டும். அதற்குப்பின் மாகாண அரசாங்கத்தின் சம்மதத்தைப் பெற வேண்டும். முனிசிபால்டி ஒத்துக்கொண்டால்தான் காரியம் முன்னேறும்.

முனிசிபால்டியில் லஞ்சம் வாங்குபவர்கள் நிறைய இருந்தார்கள். முனிசிபால்டி செய்த செலவுக்குத் தகுந்த பயன் மக்களுக்

குக் கிடைப்பதில்லை. இதைத் தடுப்பதற்கு நாங்கள் முயற்சி செய்தோம். இதனால் முனிசிபால்டியின் ஊழியர்களுக்கு எங்கள் மேல் (வெளியே காட்டிக் கொள்ளாவிட்டாலும்கூட அவர்கள் மனத்துள்ளே) வெறுப்பு உண்டானதுதான் பயன் ஆயிற்று. சில முனிசிபல் கமிஷனர்களும் இந்த விஷயத்தில் ஊழியர்களுடன் சம்பந்தப்பட்டிருந்தார்கள். அவர்களுக்காகப் பரிந்து கொண்டு வந்தார்கள், எங்கள் முயற்சி அவர்களுக்குப் பிடிக்கவில்லை. எங்களுக்கு எதிரியாக அமைக்கப்பட்ட கட்சியில் அவர்கள் சேர்ந்து கொண்டு ஒவ்வொரு விஷயத்திலும் எங்களைக் கடுமை யாக எதிர்த்து வந்தார்கள். இப்படியிருந்தும்கூட நாங்கள் எல்லாவற்றையும் தீர ஆலோசித்துச் சுங்கவரி விஷயத்தை முனி சிபல் கவுன்ஸிலின் முன் கொண்டு வந்தோம். முனிசிபால்டியின் உறுப்பினர்கள் பெரும்பாலோர் அதை எதிர்த்தார்கள். தீர்மா னம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. " நீங்கள் அளிக்க விரும்பிய வசதிகள் இல்லாமல் இருந்தாலும் இருப்போம். ஆனால் எந்த விதமான புதிய வரியையும் போட ஒத்துக்கொள்ள மாட்டோம் " என்று கூறிவிட்டார்கள். ஊரைச் சுத்தம் செய்தல், தெருக்களைச் செப்பனிடுதல், கல்வி சம்பந்தமாகச் சீர்திருத்தம் செய்தல், எதுவுமே எங்களால் செய்ய முடியாது என்பதைக் கண்டோம்; எவ்வளவோ நேரத்தைச் செலவிட்டு மிகவும் பாடுபட்டு நாங்கள் எந்த விஷயத்தைச் சமர்ப்பித்தாலும் எதிர்க்கட்சி அதை எதிர்க்கும். இவ்விதமாக எவ்விதமான சிறந்த வேலையும் செய்வது கடினமாயிருந்தது. இதனால் பன்னிரண்டு பதின்மூன்று மாதங்கள் அங்கே இருந்து பார்த்தபின் ராஜீநாமா செய்து விட்டோம்.

எங்கள் காலத்தில் ஒன்று மட்டும் நடந்தது. மின்சார விளக்குப் போடப்பட்டது. முனிசிபால்டி இதற்காக வேறொன்றும் செய்யவேண்டி வரவில்லை. தெருக்களில், பழைய விளக்குகள் இருந்த இடத்தில் மின்சார விளக்கைப் போட வேண்டியதுதான். எப்படியோ மக்கள் இதற்கு ஒத்துக் கொண்டார்கள். எங்கள் காலத்திலேயே மின்சாரக் கம்பெனியுடன் பேச்சு நடத்தி முடிவு செய்யப்பட்டு விட்டது. நாங்கள் விலகிச் சில நாட்களுக்குள் மின்சார விளக்கு வந்துவிட்டது. நாங்கள் மற்றொரு காரியமும் செய்தோம். அது முனிசிபால்டியின் தோட்டிகளின் நிலைமையைச் சிறிதளவு உயர்த்தச் செய்த முயற்சியாகும். எங்களில் ஒருவர் அவர்களுடைய சேரிக்குச் சென்று அவர்களைச் சந்தித்து, அவர்கள் வீட்டையும் குழந்தைகளையும் சுத்தமாக வைத்துக் கொள்ளும்படி அவர்களுக்குக் கூறி வருவார். வாரந்தோறும்

ஒருநாள் கதை காலேக்ஷபம் நடத்தவும் ஏற்பாடு செய்வார். அப்போது பிரசாதமாக ஏதாவது மிட்டாயும் வழங்குவார்.

மற்ருெரு காரியம் எங்களால் செய்யப்பட்டது. தோட்டிகளுக்குப் பணம் நிறையக் கிடைத்து வந்தாலும் அவர்கள் அதைக் கெட்ட வழிகளில் செலவழித்து வருவதைக் கண்டேன். இதனுல் அவர்களுடைய நிலைமை மிகவும் இழிவாக இருந்து வந்தது. தோட்டிகளுக்கு மாதம் பத்துப் பன்னிரண்டு ரூபாய் சம்பளம் கிடைத்து வந்தது. பெண்களுக்கு ஆண்களைவிட இரண்டு ரூபாய் குறைவாகக் கிடைக்கும். சிறு பையன்களுக்கு மாதம் ஐந்து ரூபாய் சம்பளம் கிடைத்து வந்தது. இவ்விதமாக ஒரு குடும்பத்தில் கணவனும் மனைவியும் பத்துப் பன்னிரண்டு வயதுள்ள பிள்ளைகள் இருவரும் சேர்ந்து வேலை செய்தால், அக்குடும்பத்திற்கு ஒரு மாதத்திற்கு முப்பது ரூபாய் வருவாய் கிடைத்துவிடும். அரசாங்க அலுவலகம் எதிலும் இதுவேதான் ஒரு குமாஸ்தாவின் சம்பளம். குமாஸ்தா வெள்ளைசள்ளையான உடையும் பூட்ஸும் அணிந்துகொண்டு வேலைக்கு போகவேண்டுமென்பதையும், மேலும் அவருடைய மனைவியோ குழந்தையோ எதுவும் சம்பாதிக்க முடியாது என்பதையும், அவர் ஒருவருடைய சம்பளத்தைக் கொண்டே குடும்பத்தை நடத்த வேண்டுமென்பதையும் கவனிக்கும்போது தோட்டியின் குடும்பமானது அவரைவிட அதிகமாகச் சம்பாதித்தது என்பது தெளிவாகிறது. மேலும் தோட்டிகளுக்கு முனிசிபால்டியிலிருந்து கிடைக்கும் சம்பளத்தைத் தவிர அவர்கள் வேலை செய்யும் வீடுகளில் இருந்தும் ஏதாவது கிடைக்கும். மேலும் தேர் திருவிழாக் காலத்திலும் ஏதாவது வரும்படி கிடைக்கும். அப்படியும்கூட அவர்களுடைய நிலைமை ஏன் இவ்வளவு கேடாயிருக்க வேண்டும்? நாங்கள் இதற்குக் காரணத்தைக் கண்டு பிடித்தோம். ஒன்று கள் குடி, மற்ருென்று வட்டிக்குக் கடன் வாங்குதல். அவர்களுக்குச் சம்பளம் வழங்கப்படும் தினத்தன்று அவர்களுக்குக் கடன் கொடுத்திருந்த மகாஜன் அங்கே வந்துவிடுவான். கிடைத்த சம்பளத்தை மகாஜன் பற்றிக் கொண்டு போய்விடுவான். அதைத் தனக்கு வரவேண்டிய முதலுக்கும் வட்டிக்கும் வரவு வைத்துக் கொள்வான். அதனுல் தோட்டிகள் அன்றே மீண்டும் கடன் வாங்கினுல்தான் தம் வாழ்க்கையை நடத்த முடியும். கடனுக்கு வட்டியும் அதிகமாகக் கொடுக்க வேண்டியிருந்தது. இதனுல் அவர்கள் கடன் தொல்லையிலிருந்து என்றுமே விமோசனம் பெற

முடியாமலிருந்து வந்தார்கள். வட்டிக்கே ஏராளமாகப் பணம் போய்விடும்.

அவர்களை இந்தப் பணக் கஷ்டத்திலிருந்து விடுவிக்க விரும்பினேம். விசாரணை செய்ததின்பேரில், அவர்களுக்கு மாதம் ஒருமுறை சம்பளம் வழங்கப்படுகிறதென்பது தெரிய வந்தது. அவர்களோ மாதத்தில் பலமுறை கடன் வாங்கி வந்தார்கள். அவற்றையெல்லாம் மாதக் கடைசியில் வட்டியுடன் செலுத்த வேண்டும். கடன் வாங்குவதை அவர்கள் நிறுத்த வேண்டுமென்று நாங்கள் விரும்பினேம். ஆனல் இதற்கு அவர்கள் உடன்படவில்லை. சம்பளம் வழங்கப்படும் இடத்திற்கு மகாஜன்கள் வரக்கூடாதென்று தடை செய்ய முயன்ருேம். இதனல் தோட்டிகளுக்குக் கோபம் வந்து அவர்கள் வேலை நிறுத்தம் செய்ய முற்பட்டார்கள். அவர்கள் அது வரையில் பட்டுள்ள கடன் முழுவதையும் நாங்கள் ஒரேயடியாகச் செலுத்திவிடுவதாக வாக்களித்தோம். மேலும் மகாஜனிடமிருந்து கடன் வாங்காதிருந்தால் அவர்களுக்குப் பணம் நிறைய மிச்சமாகும் என்பதையும் எடுத்துரைத்தோம். ஆனல் அவர்கள் இதற்கு எளிதில் உடன்படத் தயாராயில்லை. மாதக் கடைசியில் சம்பளத்தை வழங்குவதற்குப் பதிலாகப் பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை வழங்குவதற்கு ஏற்பாடு செய்தோம். மேலும், தேவைப்பட்ட போது சம்பளத்திலிருந்து முன் பணம் கொடுக்கப்படும் என்பதையும், சம்பளம் வழங்கப்படும்போது அது பிடித்துக்கொள்ளப்படும் என்பதையும் அவர்களுக்குக் கூறினேம். மிகவும் பாடுபட்டு இவற்றையெல்லாம் அவர்களுக்கு விளங்க வைத்தபின் இந்த ஏற்பாட்டின் அனுகூலத்தை உணர்ந்து அவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். நாங்கள் முனிசிபால்டியைவிட்டு விலகியபின் இந்த ஏற்பாடு தொடர்ந்து நடைபெற்று வந்ததா இல்லையா என்பது தெரியாது. முனிசிபால்டியை விட்டு விலகியதும் ஹரிஜனங்களுக்கு எங்களால் முடிந்த சிறிதளவு தொண்டைச் செய்வதற்குக் கிடைத்த வாய்ப்பை இழந்துவிட்டோமே என்ற வருத்தம் நெடுநாள் வரையில் இருந்து வந்தது.

நாங்கள் பட்ன முனிசிபால்டியில் பணியாற்றி வந்த அதே சமயத்தில் மற்ற ஜில்லாக்களிலும் முனிசிபால்டிகளுக்கும் போர்டுகளுக்கும் காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். கயா ஜில்லா போர்டுக்கு அநுகிரக பாபூ தலைவரானர் என்பதை முன்னமே கூறியிருக்கிறேன். முங்கேர் ஜில்லா போர்டுக்கு ஷா முகம்மது ஜுபைர் தலைவராகவும் ஸ்ரீ கிருஷ்ணசின்ஹா துணைத்

தலைவராகவும், சப்ரா ஜில்லா போர்டுக்கு மஜஹர்-உல்-ஹக் சாஹபு தலைவராகவும், சம்பரானில் ஸ்ரீ பிபின் பிகாரி வர்மா முதலில் பேதியா முனிசிபால்டியின் தலைவராகவும், பிறகு அவரே சம்பரான் ஜில்லா போர்டு தலைவராகவும், முஜபர்பூரில் அதன் முனிசிபால்டிக்கு ஸ்ரீ விந்தியேஸ்வர பிரசாத் வர்மா தலைவராகவும் அதன் ஜில்லா போர்டுக்கு ஸ்ரீ ராமதயாளு சின்ஹா தலைவராகவும் முறை முறையே வந்தார்கள். பாகல்பூர் ஜில்லா போர்டுக்கு ஸ்ரீ கைலாஸ் பிகாரிலால் தலைவரானார். தர்பங்காவில் பாபூ ஹரி நந்தன் தாஸ் தலைவராகவும் மிஸ்டர் முகம்மது ஷபீ (பாரிஸ்டர்) துணைத் தலைவராகவும் அமைந்தார்கள். சோட்டா நாகபுரியில் உள்ள ஜில்லா போர்டுகளுக்கு அவ்விடத்தில் உள்ள டிப்டி கமிஷனர்தாம் தலைவர் ஆகலாம். ஆனால் அரசாங்க அதிகாரி அல்லாதவர் துணைத் தலைவராகலாம். இதனால் மான்பூமில் ஸ்ரீ ஜீமுதவாகன் சென் என்பவரும் ஹஜாரிபாக்கில் ஸ்ரீராம் நாராயண் சின்ஹா என்பவரும் துணைத்தலைவர் ஆனார்கள். இவ்வண்ணமாக எங்கள் மாகாணத்தில் பல இடங்களில் உள்ளூர் நிலையங்களின் அதிகாரம் காங்கிரஸ்காரர்களின் கைக்குள் வந்துவிட்டது. அவர்கள் அங்குப் பணியாற்றி வந்தார்கள். பட்னுவில் உண்டான இடைஞ்சல்களைப் போல மற்ற இடங்களில் உண்டாகவில்லை. சோட்டா நாகபுரியில் மட்டும் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும் இடையில் அடிக்கடி தகராறு நடந்துகொண்டிருந்தது. எங்களுடைய ஆட்கள் பெரும்பாலும் எல்லா இடங்களிலுமே நன்ருகப் பணியாற்றினார்கள். மக்களிடையிலும் அவர்களுக்கு நல்ல செல்வாக்கு உண்டாயிற்று. நான் மட்டும் இந்த வேலையால் திருப்தியடைவில்லை.

தேர்தலுக்கு முன்னிருந்தே, அபேக்ஷகர்களை நியமிப்பது சம்பந்தமாகப் பெரும்போட்டி எழுந்தது. அபேக்ஷகர்களாக நியமிக்கப்படாமல் போனதினால் சிலருக்கு வருத்தம் உண்டாயிற்று. இந்தப் போர்டுகளில் பதவி கிடைப்பதைத் தாம் நாட்டிற்குப் புரிந்த தொண்டிற்கு ஒரு வகையான கைம்மாறு என்பதாகச் சிலர் நினைத்தார்கள். தம்முடைய உரிமையைக் கொண்டாடியபோது, தாம் செய்திருந்த தொண்டுகளை எல்லாம் எடுத்துரைத்தார்கள். இந்தச் சிறிய பதவிக்கே அபேக்ஷகர்களாக நியமிக்கப்படுவதற்காக இவர்கள் இப்படித் தம் தொண்டுகளின் பட்டியலைத் தயார் செய்கிறார்களே, இன்னும் போகப்போக என்ன ஆகுமோ என்று நான் கவலைப்பட்டேன். இதைச் சிறிது காலம் கவனித்ததுமே நான் கல்கத்தாவின் "மாடர்ன் ரிவ்வியூ"வில்

ஒரு கட்டுரையை எழுதினேன். அதில் என் பெயரைக் கொடுக்கவில்லை. ஆயினும் அதில் என் மனத்தில் அப்போது எழுந்த எண்ணங்களை யெல்லாம் வெளியிட்டேன். அநேக இடங்களில் வேலை நன்ருக நடந்து வந்தாலும்கூடக் காங்கிரஸ்காரர்களுக்கிடையில் மனத்தாங்கல் உண்டாகிவிட்டது. இந்த விஷயத்தில் முங்கேர் ஜில்லா போர்டு மட்டும் களங்கமற்றிருந்தது. மற்ற இடங்களில் காணப்பட்டது போன்ற பொருமை அங்கே காணப்படவில்லை. இதன் பெருமை அங்கிருந்த செயலாளர்களையும் தலைவரையுமே சேரும். இப்போர்டுகளில் கலத்துகொள்ளக்கூடாது என்ற எண்ணம் எனக்கு வந்து விட்டாலும்கூட, மற்றத் தோழர்களுடைய கருத்து வேருக இருந்தது. இதனுல் என்னுடைய கருத்தை வெளிப்படுத்தாமல் மனத்திலேயே அடக்கிக்கொண்டேன். தேர்தல்களில் கலந்துகொள்வதற்குக் காங்கிரஸ்காரர்களுக்கு தடையின்றி அனுமதி கொடுத்துவந்தேன். என்னுல் ஆன உதவியும் புரிந்துவந்தேன்.

நாங்கள் முனிசிபால்டிகளிலும் போர்டுகளிலும் பனியாற்றி வந்த சமயத்தில் அரசாங்கத்தார் ஒரு மசோதாவைக் கொண்டு வந்தார்கள். இவ்விதமான போர்டுகளின் வரவு செலவு கணக்கைப் பரிசோதிப்பவரான அரசாங்கத் தணிக்கையாளருக்கு (ஆடிட்டருக்கு) போர்டோ அல்லது போர்டில் பதவிவகிக்கும் அதிகாரியோ செய்த செலவைச் சட்டத்திற்கு விரோதமானதென்று முடிவு செய்ய அதிகாரம் அளிப்பதே அந்த மசோதாவின் நோக்கம். மேலும் அவர் இஷ்டப்பட்டால், இவ்விதமாகச் சட்டத்திற்கு விரோதமானதென்று முடிவு கட்டப்பட்ட செலவின் தொகையை அந்த அதிகாரியிடமிருந்தாவது, அல்லது அந்தச் செலவை ஆமோதித்த உறுப்பினர்களிடமிருந்தாவது தண்டலும் செய்யலாம். 1922இல் முனிசிபால்டி, ஜில்லாபோர்டு ஆகியவற்றைச் சம்பந்தப்பட்ட சட்டத்தில் பல திருத்தங்களும் மாறுதல்களும் செய்யப்பட்டிருந்தன. அவற்றின் பயனுக, இத்தகைய போர்டுகள் இப்போது தம் தலைவர்களைத் தாமே தேர்ந்தெடுக்கலாம். இன்னும் மற்றவகைகளிலும் பொதுமக்களின் பிரதிநிதிகளுக்குச் சில புதிய உரிமைகள் கிடைத்திருந்தன. இப்படி அளிக்கப்பட்டிருந்த அதிகாரங்களை வேருெரு வகையில் குறைக்க வேண்டுமென்பதே இந்த மசோதாவின் நோக்கம். கணக்குத் தணிக்கையாளருக்குச் சட்ட சம்பந்தமான விஷயங்களில் தீர்ப்புக் கூற அதிகாரம் அளிக்கப்பட்டதே இதன் முக்கிய அம்சம். எங்களுக்கு மட்டும் அன்றி மற்றவர்களுக்கும் இது பிடிக்கவில்லை.

போர்டுகளின் சார்பிலிருந்தும் பொதுமக்கள் சார்பிலிருந்தும் அந்த மசோதா கடுமையாக எதிர்க்கப்பட்டது.

இந்த நிலைமையில், இந்த மசோதாவைப் பற்றியும், மேலும் போர்டுகள் சம்பந்தமான மற்ற விஷயங்களைப் பற்றியும் விசாரணை செய்வதற்காகப் போர்டுகளின் பிரதிநிதிகளைக் கூட்டி ஒரு மகாநாடு நடத்தவேண்டுமென்ற எண்ணம் எழுந்தது. இம் மகாநாடு பட்ஞவில் நடத்தப்பட்டது. சாரன் ஜில்லா போர்டின் தலைவராயிருந்த மௌலாஞ மஜஹர்-உல்-ஹக் சாஹபு இதற்குத் தலைமைவகிப்பதாக இருந்தது. முங்கேர் ஜில்லா போர்டின் தலைவரான ஷா முகம்மது ஜுபைர் மகாநாட்டைத் திறந்து வைத்தார். மஜஹர்-உல்-ஹக் சாஹபுக்குத் திடீரென்று உடல் நலமில்லாமல் போய்விட்டதால் நான்தான் தலைமைவகிக்க வேண்டி வந்தது. மாகாணமெங்கிருந்தும் முக்கிய முக்கிய போர்டுகள் முனிசிபால்டிகள் எல்லாவற்றிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். தணிக்கை (ஆடிட்) மசோதா ஏகமனத்துடன் கண்டனம் செய்யப்பட்டது. போர்டுகளைச் சம்பந்தப்பட்ட மற்ற விஷயங்களும் ஆராயப்பட்டன. போர்டுகளின் எஞ்சினீயர்கள் போர்டுகளின் ஊழியராக இருப்பதை விட்டு மாகாண அரசாங்கத்தின் ஊழியர்களாக இருக்கவேண்டும் என்ற விஷயம் அப்போது மிகப் பெரிய கேள்வியாக இருந்துவந்தது. இதுவும் எதிர்க்கப்பட்டது. கல்வி சம்பந்தமான விஷயங்களும் ஆலோசனை செய்யப்பட்டன. பாடப்புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பதற்காக அமைக்கப்பட்டிருந்த குழுவைப் பலப்படுத்தி, அதில் போர்டின் பிரதிநிதிகளுக்கு இடமளிக்க வேண்டுமென்று அம்மகாநாட்டில் வற்புறுத்தப்பட்டது. இவ்விதமான மகாநாட்டின் அவசியத்தையும் பயனையும் நன்ருகக் கண்டுகொண்டதால் மகாநாடு மீண்டும் விரைவிலேயே கூடவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. பிறகு ஒரு நிரந்தரமான குழுவை அமைத்து விட்டு இம்மகாநாடு கலைந்தது. இம்மகாநாடு அடிக்கடி நடந்து வந்ததென்பதையும் போர்டு சம்பந்தமான விஷயங்களை ஆராய்ந்து அபிப்பிராயங்களைத் திரட்டிப் பரிமாறி வந்தது என்பதையும் அறிவேன்.

இந்தப் போர்டுகளின் தேர்தலைக் காரணமாகக் கொண்டு மற்ருெரு தீவினையும் விளைந்தது. அதஞல் பெருங்கேடு விளைந்தது. 1922இல் இருந்தே ஹிந்து-முஸ்லிம் கலகங்கள் இங்கும் அங்குமாக ஆரம்பித்துவிட்டன. எங்காவதிருந்து கலகங்களைப் பற்றிச் செய்தி வந்துகொண்டேயிருக்கும். இதஞல் நாங்கள்

மிகவும் மனக்கலக்கமுற்றிருந்தோம். எங்கள் மாகாணத்தில் கலகத்தை விளைய விடாமலிருப்பதற்காக நாங்கள் இடையருது முயன்று வந்தோம். ஆயினும் இங்கும் பல இடங்களில் சண்டைகள் மூண்டுவிட்டன. இவை பெரிய கலகங்களாக மாறியது மட்டுமன்றி, எத்தனையோ இடங்களில் இவை நடந்ததால் இவற்றின் தீவினைப்பயனைத் தடுக்க முடியவில்லை. சுத்தி, மத மாற்று, ஒற்றுமை, கட்டுப்பாடு என்று செய்யப்பட்டு வந்த பிரசாரங்கள் ஹிந்து-முஸ்லிம் போராட்டத்தை அதிகப்படுத்தி விட்டன. இவ்விரு மதத்தாரிடையில் மனஸ்தாபம் வலுத்து விட்டது. கலகங்கள் நடக்காத இடங்களிலும்கூட இருமதத்தாரிடையில் பரஸ்பர நம்பிக்கை குலைந்துவிட்டது. துருக்கியர்கள் கலீபாவைத் தள்ளிவிட்ட பிறகு கிலாபத்துக் கிளர்ச்சி ஒருவகையாகப் படுத்துவிட்டது. அதனுல், கிலாபத்தின் காரணமாகக் காங்கிரஸில் சேர்ந்திருந்த முசல்மானியர்கள் பலர் மெல்ல மெல்ல விலகலானுர்கள். 1921–22இல் நடந்துகொண்டதுபோல அவர்கள் இப்போது எல்லா விஷயங்களிலும் ஒத்து வரவில்லை யென்பது தெளிவாகப் புலப்பட்டது. கலகங்களால் பொதுமக்களின் மனோபாவம் மாறுதல் உற்றது. பீகாரைப்போன்ற ஹிந்துக்கள் நிறைந்த மாகாணத்தில் முசல்மானியரைத் தேர்ந்தெடுப்பதில் இடைஞ்சல் உண்டாயிற்று.

பட்ன முனிசிபால்டியில் மௌல்வீ குர்ஷேத் ஹஸ்நைனைத் தேர்ந்தெடுப்பதில் பட்ட கஷ்டத்தை நான் முன்னமே கூறியிருக்கிறேன். அவ்விடத்தில் நாங்கள் மிகவும் பாடுபட்டு உழைத்தோம். மௌல்வீ சாஹபை ஒன்றும் செய்ய விடவில்லை. அவர் பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டார். இது போலவே சப்ராவில், மஜஹர்-உல்ஹக் சாஹபுக்கு அவருடைய தொண்டாலும் தியாகத்தாலும், மேலும் அவருக்கே என்று தனிப்படவும் நிறைய செல்வாக்கு இருந்துவந்தது. அப்படியிருந்தும் கூடச் சிலர் இடைஞ்சல் செய்ய முயன்ருர்கள். ஆனுல் என் தமையனுருக்கு அங்கே நிறையச் செல்வாக்கு இருந்ததால், அவர் அங்கு எதிர்ப்பட்ட இடைஞ்சல்களைக் களைந்துவிட்டார். ஹக் சாஹபு சிரமமில்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்டார். முங்கேரில் ஜுபைர் சாஹபுக்கு மக்களிடையில் நல்ல செல்வாக்கு உண்டு. அங்கே இடைஞ்சல் எதுவும் எதிர்ப்படவில்லை. முஜபர்பூரில் மௌல்வீ முகம்மது ஷபீ தொண்டிலும் தியாகத்திலும் எவருக்கும் பின்பட்டவர் அல்லர். ஆயினும் காங்கிரஸுக்குள் அவ்வளவு ஒற்றுமையில்லாததாலோ, மக்களிடையில் அவருக்கு அவ்வளவு

செல்வாக்கு இல்லாததாலோ நாங்கள் கஷ்டத்திற்கு ஆளானோம். இது மௌல்வீ சாஹபின் மனத்தைப் புண்படுத்தியது. ஆயினும் அவர் அந்தச் சமயத்தில் அதை வெளியே காட்டிக்கொள்ளாமல் பணி ஆற்றிவந்தார். ஆனால் பின்னால் அவர் காங்கிரஸை விட்டு விலகி முஸ்லிம் கழகத்தை நிலை நாட்டுவதில் தலைப்பட்டபோது இது வெளியாயிற்று. அவர் சிறிது காலத்திற்குப் பிறகுதான் பிரிந்து சென்றாராயினும் இதற்குப் பிள்ளையார் சுழி அவர் ஜில்லா போர்டில் தோல்வியுற்றபோதே போடப்பட்டாயிற்று.

இத் தேர்தல்களில், இயன்ற வரையில் முசல்மானியரைத் தேர்ந்தெடுப்பதற்கு முயற்சி செய்யப்பட்டுப் பலர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தாலும்கூட பீகார் முசல்மானியர் தம் இனத்திலிருந்து அதிகப் பேர் தேர்ந்தெடுக்கப்படவில்லையென்று கருதினார்கள். இதுபோன்ற விஷயங்களில் பரஸ்பர நம்பிக்கை மிகவும் முக்கியமானது. அது காரணமில்லாமலே சில சமயங்களில் குன்றிப் போவதுண்டு. இவ் வரலாற்றில் இப் பகுதியை நான் எழுதிக் கொண்டிருக்கும்போது அத்தேர்தலின் முடிவை ஒட்டிய புள்ளி விவரங்கள் என்முன் இல்லை. ஆயினும் முசல்மானியருக்கு எதுவும் அநியாயம் செய்யப்படவில்லை யென்பதை நான் அறிவேன். ஏதோ கூடக்குறையத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம். அல்லது எவராது முக்கிய மனிதர் தேர்ந்தெடுக்கப்படாமல் போயிருக்கலாம். ஆனால், மாகாணம் முழுவதையும் எடுத்துக் கொண்டு பார்த்தால், அந்தக் காலத்தில் காங்கிரஸ்காரர்கள் முசல்மானியரைத் தேர்ந்தெடுப்பதற்கு தம்மாலானவரையில் உழைத்தார்கள் என்பதும் அதில் வெற்றியும் பெற்றார்கள் என்பதும் தெளிவாகும். ஆயினும், முசல்மானியர்களில் பலருக்கு நம்பிக்கை குன்றி விட்டது. அதன் தீவினைப்பயன் பின்னால் சிறிது காலம் கழிந்து தெரியவந்தது.

# 59. வங்காளத்தில் அடக்குமுறை—பெல்காம் காங்கிரஸ்

காந்திஜீயின் உண்ணுவிரதம் முடிந்தபின் அவர் உடல் நலமடைவதற்குச் சிறிது காலம் பிடித்தது. அவர் கோஹாட்டுக்குப் போகவேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தார். ஆனால் அவரை அங்கே செல்ல அரசாங்கத்தார் அனுமதிக்கவில்லை.

இதே சமயத்தில் அரசாங்கத்தார் மற்றும் ஒரு பாணம் விடுத்தார்கள். வங்காளத்தில் புரட்சிக் கட்சிக்காரர்கள் மீண்டும் தலையெடுத்துச் சதியாலோசனைகள் செய்து வருகிறார்கள் என்றும், அவர்களால் பல இடங்களில் கொலைகள் செய்யப்பட்டு வருகின்றன என்றும் கூறி ஒரு புதிய அவசரச் சட்டத்தை (ஆர்டினன்ஸ்) வெளியிட்டார்கள். டேயின் கொலையையும் இன்னும் சில சம்பவங்களையும் எடுத்துக்கூறி, அந்த அவசரச் சட்டம் எவ்வளவு தேவையானது என்பதை எடுத்துக் காட்டினார்கள். அது வெளியிடப்பட்ட கையோடே சுபாஷ் சந்திரபோஸும் மற்றும் பல செயலாளர்களும் ஒரே நாளில் கைது செய்யப்பட்டார்கள். தேசபந்து தாஸும் கைது செய்யப்படுவார் என்ற வதந்தி சில நாட்களாக உலவிக் கொண்டிருந்தாலும்கூட அவர் கைது செய்யப்படவில்லை. இந்த அவசரச் சட்டத்தாலும், மேலும் இப்படியாக செயலாளர்கள் சிறை கொள்ளப்பட்டு வந்ததாலும் நாடெங்கும் கலவரம் சூழ்ந்தது. மக்களுக்கு ஆத்திரம் பொங்கி எழுந்தது. மிதவாதக் கட்சிக்காரர்களுக்கும் இதன்மேல் அதிக கோபம் வந்தது. இந்தச் சட்டமானது தம்மேல் செலுத்தப்படுவதற்காகவே வழங்கப்பட்டது என்பதாகச் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் நினைத்தார்கள். ஏனெனில் அவர்கள் தாம் வங்காளத்திலும் மத்திய பிரதேசத்திலும் மந்திரி சபைகளை வீழ்த்தி விட்டார்கள். புதிய அரசியல் திட்டப்படி வேலை நடக்க வொட்டாமலும் தடுத்து விட்டார்கள். மகாத்மாஜீயும் இந்தச் சட்டத்தை வெறுத்தார். உடனே அவர் தேசபந்து தாஸுடனும் பண்டித் மோதிலால்ஜீயுடனும் சமாதானம் செய்துகொண்டார். நாடெங்கும் கூட்டங்கள் நடைபெற்றன. பெரிய பெரிய தலைவர்கள் அனைவரும் அரசாங்கத்தின் நடவடிக்கையைக் கடுமையாகக் கண்டனம் செய்து செய்தித்தாள்களின் மூலமாக அறிக்கைகளை விடுத்தார்கள். பட்னாவில் ஒரு பெரிய கூட்டம் நடந்தது.

அதில் எல்லாவித அபிப்பிராயக்காரர்களும் கட்சிக்காரர்களும் கலந்து கொண்டார்கள். வங்காளத்தில் அடக்கு முறை நடந்து வருவதைப் பற்றி அக்கூட்டத்தில் பலமாகக் கண்டனம் செய்து சொற்பொழிவுகள் ஆற்றப்பட்டன. நானும் அக்கூட்டத்தில் காரசாரமான ஒரு சொற்பொழிவை ஆற்றினேன்.

காந்திஜீயானவர் தேசபந்துதாஸ் முதலானவர்களுடன் செய்து கொண்ட சமாதானத்தின் திட்டங்கள் கீழ்க்கண்டவாறு அமைந்தன. காங்கிரஸானது அயல்நாட்டுத் துணியைப் புறக்கணித்தல் நீங்கலாக ஒத்துழையாமையின் மற்ற அம்சங்களை எல்லாம் நிறுத்தி வைக்கும். மேலும், காங்கிரஸின் பல்வேறு தொகுதிகளிடம் பல்வேறு பணிகளைப் பிரித்துக் கொடுத்து, அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பணியைச் செய்து வரவேண்டும். ஆனால் சர்க்கா, காதி ஆகியவற்றைப் பிரசாரம் செய்தலும், மக்களிடையில், முக்கியமாக ஹிந்து – முசல்மானியர்களிடையில் நட்பையும் ஒற்றுமையும் வளர்த்தலும், ஹிந்துக்களிடையிலிருந்து தீண்டாமையை ஒழித்தலும் ஆகிய வேலைகளை எல்லாரும் கட்டாயமாகச் செய்ய வேண்டும். மாகாணச் சட்ட சபைகளிலும் மத்திய சட்டசபையிலும் சுயராஜ்யக் கட்சியானது காங்கிரஸின் அங்கம் ஒன்றாக இருந்துவந்து காங்கிரஸின் சார்பில் பணியாற்றவேண்டும். இதற்கு வேண்டிய விதி முறைகளை அக்கட்சியே அமைத்துக் கொள்ளலாம். மேலும் அப்பணிக்காக வேண்டிய பணத்தைச் சேர்க்கவும் செலவழிக்கவும் அதற்கு உரிமை உண்டு. நூல் நூற்பது எங்கும் பரவாத வரையில் உள்நாட்டுத் துணியின் தேவை பூர்த்தியாகாது என்பது தெரிய வந்தது. மேலும் சர்க்கா சுற்றுதல் என்ற கொள்கையானது காங்கிரஸ்காரர்களையும் இந்தியாவின் பொதுமக்களையும் பிணிக்கும் கைகண்ட உபாயம் என்பதும் கண்கூடாக விளங்கியது. இக்காரணத்தால், காங்கிரஸின் விதி முறைகளில் சர்க்கா, கதர் ஆகியவற்றின் பிரசாரத்தைப் பற்றிச் சில திருத்தங்கள் செய்யப்பட்டன. இனி, பதினெட்டு வயது நிறையாதவரும், மேலும் அரசியல் காரியங்களில் கலந்து கொள்ளும்போதும், காங்கிரஸின் பணியைப் புரிந்து கொண்டிருக்கும்போதும் கையால் நூற்றுக் கையால் நெய்யப்பட்ட கதர் ஆடையை அணியாதவரும், மேலும் தம் கையாலேயே நூற்கப்பட்ட இரண்டாயிரம் கஜம் நூலை மாதா மாதம் காங்கிரஸ் குழுவிடம் கொடுக்காதவரும் காங்கிரஸின் உறுப்பினர் ஆக முடியாது. ஆனால், நோய், அலுப்பு மேலும் இவை போன்ற வேறுகாரணம் குறுக்கிட்டபோது வேறு எவராவது நூற்ற

நூலை வாங்கி அதைக் காங்கிரஸ் குழுவுக்கு அளிக்கலாம். இந்த மாறுதல்களால் சுயராஜ்யக் கட்சிக்குக் காங்கிரஸின் பெயரைக் கொண்டு கவுன்ஸிலில் பணியாற்ற அதிகாரம் கிடைத்தது. ஆனால் காங்கிரஸின் உறுப்பினர் ஆவதற்காக நாலணாக் காசைச் செலுத்துவதற்கு மாறாக இப்போது நோய், அலுப்பு முதலிய காரணங்களால் தடைபட்ட சமயங்கள் நீங்கலாக மற்ற மாதங்களில் ஈராயிரம் கஜம் நூலைத் தம் கையாலேயே நூற்றுக் கொடுக்க வேண்டி வந்தது.

வங்காளத்தில் நடந்துவந்த அடக்கு முறையைப் பற்றியும், காந்திஜீ செய்துகொண்ட ஒப்பந்தத்தைப் பற்றியும் ஆலோசனை செய்வதற்காக மௌலானா முகம்மது அலீயானவர் அகில பாரதீயக் குழுவின் இருக்கை ஒன்றைப் பம்பாயில் கூட்டினார். வங்காளத்தின் நிலைமையைப் பற்றி எல்லாரும் கூடி ஆலோசனை செய்ய வேண்டுமென்ற கருத்துடன் அவர் மற்றக்கட்சிகள் அனைத்தையும் அக்கூட்டத்திற்கு வரும்படி அழைப்பு அனுப்பினார். எல்லாக் கட்சிகளும் மீண்டும் காங்கிரஸில் சேர ஊக்கமளிப்பதற்காக அவற்றிற்கு அழைப்பு அனுப்ப வேண்டுமென்று காந்திஜீ முன்னிருந்தே கூறிவந்தார். அரசாங்கத்தின் நடவடிக்கைகள் இம் முயற்சிக்கு நல்லுதவியாக அமைந்தன. பம்பாயில் ஒரு மாபெரும் மகாநாடு நடந்தது. அதற்கு எல்லாக் கட்சிக்காரர்களும் வந்திருந்தார்கள். அதற்குப் பம்பாயைச் சேர்ந்த சர் டின்ஷா பெடிட் தலைவராக அமைந்தார். இம்மகா நாட்டின் முதல் தீர்மானத்தில் அரசாங்கத்தின் அடக்குமுறைக் கொள்கையைக் கண்டனம் செய்து, சுயராஜ்யம் கோரப்பட்டது. மற்றொரு தீர்மானத்தின் மூலமாக ஒரு குழு நியமிக்கப்பட்டது. அரசியல் கட்சிகளையெல்லாம் எவ்வகையில் காங்கிரஸுக்குள் வந்து சேரவைக்கலாம் என்பதைப்பற்றி ஆலோசனை செய்து கூறும்படி அக்குழுவுக்குப் பணியிடப்பட்டது. மேலும் சுயராஜ்யத்திற்காக ஒரு அரசியல் திட்டமசோதாவையும் தயாரிக்கும்படி அது பணிக்கப்பட்டது. அத் திட்டத்தில், ஹிந்து – முஸ்லிம் பூசல்களையும் மற்றும் வேறு சிக்கல்களையும் அரசியல் துறையைப் பொறுத்தவரையில் தீர்க்கும் வழியை எடுத்துக் கூறும்படி அக்குழு கேட்டுக் கொள்ளப்பட்டது. மேலும் அதனுடைய அறிக்கையானது மார்ச்சு 31ஆம் தேதிக்குள் தயார் செய்யப்படவேண்டுமென்பதும். ஏப்பிரலில் இம்மகாநாடு மீண்டும் கூட்டப்படவேண்டுமென்பதும் முடிவு செய்யப்பட்டன. காங்கிரஸ் மட்டும் அன்றி (அதில் சுயராஜ்யக் கட்சியும் உள்ளடங்கியிருந்தது) நாட்டில் உள்ள மற்ற

அரசியல் கட்சிகள் எல்லாமும் முஸ்லிம் லீகும் இந்தச் சர்வகட்சி மகாநாட்டில் கலந்து கொண்டதுதான் இம்மகாநாட்டின் சிறப்பாகும். இந்த மகாநாட்டின் நடவடிக்கைகளால் நாடெங்கும் உற்சாகம் பரவியது. இனி எல்லாரும் ஒன்று சேர்ந்து ஒரே குறிக்கோளுக்காக அதாவது சுயராஜ்யத்தைப் பெறுவதற்காகப் பாடுபடுவார்கள் என்ற நம்பிக்கை பிறந்தது.

அதே சமயத்தில், அகில பாரதீயக் குழுவின் இருக்கையும் நடந்தது. அதில் காந்திஜீயும் சுயராஜ்யக்கட்சியும் செய்து கொண்ட ஒப்பந்தம் அங்கீகரிக்கப்பட்டது. மாறுமைவாதிகள் பலருக்கு இந்த ஒப்பந்தம் பிடிக்கவில்லை. முக்கியமாகச் சுயராஜ்யக் கட்சிக்காரர்களுக்கு, கவுன்ஸிலில் காங்கிரஸின் பிரதிநிதிகள் என்ற பதவியுடன் பேசுவதற்கு அளிக்கப்பட்ட உரிமையானது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. சுயராஜ்யக் கட்சிக்காரர்களுக்கு இப்படிப்பட்ட உரிமையை அளிப்பதானால், அவர்கள் காங்கிரஸின் கட்டுப்பாட்டிற்கு அடங்கி இருக்கவேண்டுமென்று மாறுமை வாதிகள் விரும்பினார்கள். அவர்களைக் கட்டுப்படுத்தி ஆளும் பொறுப்பைக் காந்திஜீ ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. நிறைய வாக்குவாதம் செய்யப்பட்டபின் ஒப்பந்தம் கடைசியில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இந்த இரண்டு மாநாடுகளும் காந்திஜீயின் போக்குக்குக் குறுக்கே நின்ற இடைஞ்சல்களைத் துடைத்துவிட்டன. அவருக்கு மன வருத்தம் விளைத்துக் கொண்டிருந்த சண்டை சச்சரவுகள் பெரும்பாலும் ஒழிந்துவிட்டன. எஞ்சியிருந்த சில்லரைக் குறைகளையும் தீர்ப்பதற்கு வழி பிறந்துவிட்டது. பெல்காமில் நடக்கப்போகும் காங்கிரஸ் பேரவைக்குக் காந்திஜீ தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். ஆனால் அவர் இது வரையில் ஒத்துக் கொள்ளவில்லை. இம்மகாநாடுகள் நடந்தேறியபின் அவர் ஒத்துக் கொண்டார். காங்கிரஸின் பேரவை நடக்கும் சமயத்தில் மற்றக் கட்சிக்காரர்களும் தத்தம் மகாநாட்டைப் பெல்காமில் நடத்துவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதனால் அதே சமயத்தில் எல்லாரும் மீண்டும் ஒருமுறை ஒன்றுகூடிப் பேச்சு வார்த்தை நடத்த வாய்ப்புக் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் பட்டது. ஆனால் அப்படி நடக்கவில்லை. ஸ்ரீமதி அன்னி பெசண்டு ஒருவர்தாம் காங்கிரஸுக்கு வருவதாக முடிவு செய்தார். அவர் தம்முடைய பரிவாரத்துடன் வந்து பெல்காம் காங்கிரஸில் கலந்து கொண்டார்.

திட்டம் போட்டபடி டிசம்பரின் கடைசிவாரத்தில் பெல்காமில்

காங்கிரஸ் நடந்தது. அவ்வூர்க்காரர்களுக்கு அங்கே காங்கிரஸ் நடந்ததால் உற்சாகம் பெருகியது. ஸ்ரீ கங்காதர் ராவ் தேஷ் பாண்டே என்பவர் கிழவராக இருந்தும்கூட ஓர் இளைஞனைப் போலக் குதிரைமேல் ஏறிக்கொண்டு எல்லா இடங்களையும் சுற்றி வந்து ஏற்பாடுகளை எல்லாம் மேற்பார்வை செய்து வந்தார். காங்கிரஸின் பேரவை நடக்கும்போது கண்காட்சி ஒன்றும் வழக்கம்போல நடந்தது. அதே சமயத்தில் பெல்காமில் சங்கீத மகாநாடும் நடந்தது. அதற்குக் கர்நாடக சங்கீதத்தில் தலை சிறந்த தேர்ச்சியுடையவர்களும் கலைரசிகர்களும் வந்திருந்தார்கள். மைசூர் தர்பார் இம்மகாநாட்டிற்குப் பேருதவி புரிந்தது. மைசூரின் தலைசிறந்த வித்துவான்கள் தர்பாரின் சார்பிலிருந்து இம்மகாநாட்டிற்கு அனுப்பப்பட்டார்கள். அவர்களுள் வீணையில் ஆசார்யசீலர் எனக் கருதப்பட்ட சேஷண்ணாஜீ தாம் மிக்க புகழ் வாய்ந்தவர். பெல்காமுக்கு வந்திருந்த காங்கிரஸ் பிரதிநிதிகளுக்கு ஒழிவு கிடைத்தபோது ஒருநாள் அவர் மிகவும் அழகாகக் கர்னாடக சங்கீதம் பாடி அவர்களை மகிழ்வித்தார். மற்றொரு நாள் காந்திஜீயின் குடிசைக்கு வந்து வீணையை அருமையாக வாசித்து அவரை மகிழ்வித்தார்.

## 60. போத்கயா கோவில்

இலங்கைத் தீவிலிருந்து புத்தமதத்தினரின் சார்பாக ஒரு தூது கோஷ்டியானது டாக்டர் காசியாஸ் பரேரா என்பவரைத் தலைவராகக் கொண்டு காங்கிரஸிடம் வந்தது. இது பெல்காம் காங்கிரஸில் நிகழ்ந்த ஒரு முக்கியமான சம்பவம். அவர்கள் போத்கயாவில் உள்ள புத்த கோவிலைப் புத்தர்கள் கையில் ஒப்படைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். கயா காங்கிரஸ் நடந்தபோதே பர்மாவிலிருந்து பிக்ஷு உத்தமாவின் தலைமையின் கீழ் சுமார் நூறு பிக்ஷுக்கள் கொண்ட பெரிய கோஷ்டி ஒன்று வந்தது. அக்காலத்தில் பர்மா இந்தியாவுடன் பிணைக்கப்பட்டிருந்தது. அங்கும் காங்கிரஸ் குழு ஒன்று இருந்தது. இவர்கள் அதன் பிரதிநிதிகளாக வந்தார்கள். இரண்டு காரியங்களை ஒரே சமயத்தில் முடித்துக் கொள்ள எண்ணினார்கள். காங்கிரஸைப் பார்த்ததாயுமிருக்கும், போத்கயாவில் உள்ள புத்த பிரானைத் தரிசித்ததாகவும் இருக்கும் என்று வந்தார்கள்.

காங்கிரஸும் போதிகயாவுக்குச் செல்லும் சாலையில் தான் நடந்து கொண்டிருந்தது. அச்சமயத்திலும், மேலும் காக்கிநாடா காங்கிரஸுக்குப் பிறகும் இதுபோன்ற பேச்சுக்கள் கிளம்பின. போதிகயாவை ஒட்டிய தீர்மானத்தைப் பற்றி விசாரணை செய்யும்படி எனக்குக் கட்டளை இடப்பட்டது. ஆனால் நான் இப்பணியை அப்போது செய்யமுடியவில்லை. இந்த விஷயத்தை பெல்காம் காங்கிரஸின் முன் கொண்டுவரவேண்டும் என்று இப்போது வந்த தூதுகோஷ்டியினர் விரும்பினார்கள். அவர்களுடன் காந்திஜீ கலந்துபேசியபின் இதைப்பற்றி விசாரணை செய்து ஓர் அறிக்கையைச் சமர்ப்பிக்கும் வேலையை என் கையில் ஒப்படைத்தார். மேலும். வேலைக்காக என் இஷ்டப்படி எவரை வேண்டுமானாலும் சேர்த்துக் கொள்ளலாம் என்றும் அனுமதி அளித்தார். இதனால் அவர்கள் திருப்தி அடைந்தார்கள். அன்னிய நாட்டுப் புத்தர்கள் கையில் கோவிலை ஒப்படைத்து விட்டால் அது அன்னியநாட்டுப் புரட்சிக்காரர்களுக்கு மத்திய தலமாகி விடலாம் என்றும், பிறகு இரண்டு நாடுகளுக்கு இடையே வம்பு மூண்டுவிடும் என்றும் லாலா லஜபதிராய்ஜீ மிகவும் அஞ்சினார்.

பெல்காம் காங்கிரஸிலிருந்து திரும்பிவந்ததும் நான் விசாரணை வேலையைத் தொடங்கினேன். ஒரு சிறிய குழுவும் அமைக்கப்பட்டது. அதில் ஸ்ரீ பிரஜ்கிஷோர் பிரசாத், டாக்டர் காசி பிரசாத் ஜாயஸ்வால், ஸ்ரீராமோதர்தாஸ் (இவர்தாம் பின்னாளில் பிக்ஷு ராஹுல் ஸம்ஸ்கிருதியாயன் ஆனார்) ஆகியவர்கள் உறுப்பினர்களாக அமைந்தார்கள். விசாரணை தொடங்கியதும் இலங்கையிலிருந்து சிங்களராகிய ஸ்ரீ குணி சிங் மீண்டும் வந்து சேர்ந்தார். அவர் சிறிது காலம் வரையில் பீகாரில் தங்கி இருந்து, புத்தர்களின் சார்பாக குழுவுக்கு உதவி புரிந்துவந்தார். நான் முதன் முதலில் ஹிந்துக்களின் அபிப்பிராயத்தை அறிய முயற்சி செய்தேன். இதற்காகப் பட்னாவில் இரண்டு கூட்டங்கள் கூட்டப்பட்டன. ஆனால் அவற்றிற்கு நிறையப் பேர் வரவில்லை. ஆகையால் அங்கே செய்யப்பட்ட முடிவுகளுக்குச் சிறப்பில்லாமல் போய்விட்டது. நல்ல வேளையாக, அதே சமயத்தில் முஜபர்பூரில் ஹிந்து மகாசபையின் மகாநாடு நடைபெறுவதாக இருந்தது. அதற்கு லாலா லஜபதிராய்ஜீ தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். நான் அங்குச் சென்றேன். போதிகயாவின் மகந்தின் சார்பிலிருந்தும் சிலர் அம்மகாநாட்டிற்கு வந்தார்கள். அக்கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதில்,

ஹிந்துக்களும் புத்தர்களும் கூடிய ஒரு குழுவின் கையில் கோவிலை நடத்தும் பொறுப்பை ஒப்படைக்க வேண்டுமென்ற யோசனை கூறப்பட்டிருந்தது. மேலும் இதைப்பற்றி முற்றிலும் ஆராய்ந்து, மகந்தையும் இதற்கு ஒப்புக்கொள்ள வைப்பதற்காக ஒரு குழு அமைக்கவேண்டுமென்பதும் முடிவு செய்யப்பட்டது. மேலே கூறப்பட்டுள்ள நான்கு கனவான்களே அக்குழுவின் உறுப்பின ராக அமைந்தனர். அவர்களோடு இன்னும் ஒரு கனவானும், போத்கயாவின் மகந்தும் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டனர். ஆனால் அக்குழுவின் வேலை தொடங்கியபோது இந்த இரண்டு பேரும் அதில் கலந்து கொள்ளவில்லை. இவ்வண்ணமாக ஹிந்து மகா சபையின் சார்பிலிருந்தும், காங்கிரஸின் சார்பி லிருந்தும் நாங்கள் நால்வரே அறிக்கையைத் தயார் செய்தோம். குழுவானது எல்லா விஷயங்களையும் தீர விசாரணை செய்து, நீண்டதொரு சிறந்த அறிக்கையைச் சமர்ப்பித்தது. போத்கயா கோவிலை நடத்தும் பொறுப்பை ஹிந்துக்களும் புத்தர்களும் கூடிய ஒரு குழுவின் கையில் ஒப்படைக்க வேண்டுமென்றும், அக்கோவில் பூஜை, அர்ச்சனை முதலியவை புத்த மத முறைப்படி நடக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும் என்றும், ஆயினும் ஹிந்துக்களுக்கு அங்குச் சென்று தரிசனம் செய்யவும் பூஜை செய்யவும் உரிமை இருக்கவேண்டுமென்றும் நாங்கள் சிபாரிசு செய்தோம்.

அக்கோவில் புத்தர்களுக்கு முக்கிய தலமாயினும், அதன் பரி பாலனம் போத்கயாவில் உள்ள சைவ மகந்துவின் கைக்குள்தான் இருக்கிறது. ஹிந்துக்களும் புத்ததேவரைத் தம் மதத்துப் பத்து முக்கிய அவதாரங்களில் ஒன்றாகக் கருதுகிறார்கள். ஆயி னும் அவருடைய வழிபாடு ஹிந்துக்களிடையில் வழக்கிலிருந்து ஒழிந்து விட்டது. சிற்சில இடங்களில் அவரைக் கண்டனமும் செய்கிறார்கள். ஆகையால் அங்கே வழிபாட்டிற்கு ஏதோ வசதி கள் இருந்தாலும்கூட அவை இப்படிப்பட்ட முக்கிய தலத்திற்கு உரியபடி சிறப்பாக இல்லை. ஆகையால் புத்தர்கள்தாம் வழிபாட் டிற்கு உகந்த ஏற்பாடுகளை அங்கே சரிவரச் செய்யமுடியும் என்று புத்தர்கள் கூறியது நியாயம் என்பதை நாங்கள் ஒத்துக்கொண் டோம். இதனால்தான் எங்கள் குழுவானது மேலே கூறியபடி சிபார்சு செய்தது. நாங்கள் மகந்தையும் நேரில் சந்தித்துக் கோவிலின் பரிபாலனத்தைக் குழுவின் பொறுப்பில் விடுவதற்கு அவரைச் சம்மதிக்க வைக்க முயற்சி செய்தோம். இந்தக் குழு வில் அவருக்கும் ஓர் இடம் அளிப்பதாகக் கூறினோம். மேலும்,

கோவிலில் இருந்து காணிக்கை மூலமாக அவருக்குக் கிடைத்து வந்த வருமானத்திற்கு நஷ்ட ஈடு செய்வதாகவும் கூறினேம். ஆனல் அவர் ஒன்றுக்குமே சம்மதிக்கவில்லை. கோவிலின் பரிபாலனம் தம் கையில் இருப்பதால்தான் தமக்குப் பெரும் செல்வாக்கு இருந்து வருகிறது என்பதையும் அது அன்னிய நாடுகளிலும் பரவியிருக்கிறது என்பதையும் அவர் அறிந்திருந்தார். அதைக் கைவிட அவருக்கு விருப்பமில்லை. எங்கள் பேச்சை ஏற்றுக் கொள்வதால் அவருடைய புகழ் பெருகுமே அன்றி, குன்ருது என்று நாங்கள் அவருக்கு எவ்வளவோ எடுத்துரைத்தும் கூட அவர் ஒத்துக் கொள்ளவில்லை. எங்கள் முயற்சி வீணயிற்று. நாங்கள் எங்கள் சிபார்சுகளைச் செய்து விட்டு, நல்ல காலம் வரும் வரையில் விஷயத்தை அப்படியே விட்டு விட்டோம்.

எங்களுடைய அறிக்கை அகில பாரதீயக் குழுவின் முன் சமர்ப்பிக்கப்பட்டது. அக்குழுவாலும் ஏற்கப்பட்டது. ஆயினும் இன்று வரையில் அந்தவேலை முடியவில்லை. பல ஆண்டுகளுக்குப் பின் காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கப்பட்டபோது, மீண்டும் ஒரு தூது கோஷ்டி வந்தனர். அவர்களும் அதே கோரிக்கையைச் செய்தார்கள். அந்தச் சமயத்தில் நான் நோய்வாய்ப்பட்டு என் கிராமமாகிய ஜீராதேயீயில் தங்கி இருந்து வந்தேன். இதனல் அவர்கள் ஜீராதேயீக்கு வந்தார்கள். தலைமை மந்திரியையும் சந்தித்தார்கள். மகந்து ஒரு விதத்திலும் ஒத்துவரவில்லை. இதனுல், சட்டத்தின் மூலமாகத்தான் ஏதாவது செய்ய முடியும் என்று நினைத்து, இந்த விஷயத்தைப் பற்றி ஒரு சட்டத்தைப் புனைவதற்கு ஏற்பாடு செய்யும்படி நான் தலைமை மந்திரிக்கு எழுதினேன். அவர் இதைப் பற்றி யோசித்து வந்தார். ஆனல் அவர் பல விவகாரங்களில் ஈடுபட்டிருந்ததால் இந்த விஷயம் இதற்கு மேல் முன்னேற முடியவில்லை. மந்திரிசபை ராஜீநாமா செய்த போதுகூட இந்த விஷயம் அந்நிலையிலேதான் தொங்கிக் கொண்டிருந்தது. இந்தக் கோயிலின் பரிபாலனத்தைப் புத்தர்களின் கையில் ஒப்படைப்பதுதான் நியாயம் என்று நான் இன்றும் கருதுகிறேன். ஆயினும், ஹிந்துக்கள் புத்த தேவரை ஓர் அவதாரமாகக் கருதுவதால், பரிபாலனக் குழுவில் ஹிந்துக்களும் இருக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். இந்தச் சந்தர்ப்பத்தில் மற்ருெரு விஷயத்தையும் இங்குக் கூறவேண்டும். இலங்கையில் கதிர்காமம் என்ற பெயர் கொண்ட ஒரு புகழ் வாய்ந்த கோவில் இருக்கிறது. அது ஹிந்துக்களின் கோவில் என்றும் அதைப் புத்தர்கள் கைப்பற்றிக்கொண்டு விட்டார்கள் என்றும் அங்குள்ள ஹிந்துக்கள்

கூறுகிறார்கள். இங்கே பேச்சு நடந்து கொண்டிருந்தபோது சிலோன் ஹிந்துக்களிடமிருந்து எனக்குக் கடிதங்களும் தந்தி களும் வந்து கொண்டிருந்தன. கதிர்காமத்தில் உள்ள கோவிலில் ஹிந்துக்களுக்கு உள்ள உரிமையைப் புத்தர்கள் ஏற்றுக் கொள் ளாத வரையில் போத்கயா கோவிலில் அவர்களுக்கு ஒருநாளும் உரிமை அளிக்கக் கூடாது என்று அவை வற்புறுத்தின. இந்த விஷயம் மேலும் தொடரப்பட்டிருந்தால், ஒருவேளை கதிர்காமத்துக் கோவிலைப் பற்றியும் ஏதாவது பேச்சு வந்திருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட வாய்ப்புக் கிடைக்கவில்லை. இந்த விஷயம் அப் படியே நின்றுவிட்டது.

1925இல் நடந்தவற்றை பற்றி எழுதிக் கொண்டே வரும் போது இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு 1939 வரையில் வந்து விட்டேன். ஏனென்றால் இதைப் பற்றி எங்காவது ஓரிடத் தில் கூறவேண்டியது நியாயம்.

## 61. பெல்காமுக்குப்பின் நடந்த சில சம்பவங்கள்

சுயராட்சியக் கட்சியுடன் செய்யப்பட்ட ஒப்பந்தமானது பெல்காம் காங்கிரஸில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அரசியல் விஷ யங்களைப் பொறுத்த வரையில் அவற்றைச் சுயராஜ்யக் கட்சியே தலைமை தாங்கித் திட்டமிட்டு நடத்துவதற்கும் அதற்குச் சௌகரியமான வகையில் செயலாற்றுக் குழுவை அமைத்துக் கொள்வதற்கும் காந்திஜீ ஒத்துக் கொண்டார். ஆனால் காதி பிர சார வேலையையும் ஆக்கவேலைகளையும் தம்மிடம் விட்டுவிட வேண்டுமென்றும், அவற்றிற்கு அக்கட்சி முழு உதவியும் அளிக்க வேண்டுமென்றும் காந்திஜீ கூறினார். இந்த ஏற்பாட்டிற்கு ஏற்ற வாறு காங்கிரஸ் அமைப்புச் சட்டத்தில் திருத்தங்களும் செய்யப் பட்டன. காங்கிரஸின் அங்கத்தினர் ஆவதற்காக ஒருவர் நாலணாக் கட்டணம் செலுத்துவதற்குப் பதிலாகத் தம் கையால் நூற்ற நூலைக் கொடுக்க வேண்டுமென்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

காந்திஜீ சிறையிலிருந்து வந்ததிலிருந்தே காதி பிரசாரத்தில் தம் முழு ஆற்றலையும் செலுத்தி வந்தார். நானும் என் மாகா ணத்தில் ஆக்க வேலையில், முக்கியமாகத் தேசீய கல்வி வேலையி

லும் காதி பிரசாரத்திலும், ஈடுபட்டிருந்தேன். 1924 டிசம்பரில் பட்னுவில் ஒரு கண்காட்சி நடத்தப்பட்டது. அதில், சர்க்காவும், அதனுல் நூற்ற நூலிலிருந்து தயாரிக்கப்பட்ட எல்லாவிதக் கதர் தினுசுகளும் காட்டப்பட்டன. இந்தக் கண்காட்சியை அரசியல் துறையோடு கலக்காமல் தனியாக அமைத்திருந்தேன். கையினுல் எவ்விதம் நூல் நூற்கலாமென்பதையும், எத்தகைய நூல் நூற்கலா மென்பதையும், மேலும் காதி பிரசாரத்தால் ஏழைகளுக்கு எவ் வளவு நன்மை உண்டாகும் என்பதையும் தாமே வந்து கண்டு அறியும்படி எல்லோரும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அரசாங் கத்தில் உயர்ந்த பதவிகள் வகிக்கும் அதிகாரிகளில் பலரும் வந் தார்கள். அவர்கள் காதியின் வளர்ச்சியைக் கண்டார்கள். அவர் களுள் பட்னு ஹைகோர்ட்டின் தலைமை நீதிபதியாகிய சர் டாசன் மில்லரைச் சிறப்பாகக் கூறலாம். மற்ற இந்திய நீதிபதிகளும் ஆங்கில நீதிபதிகளும், கவர்னரின் கவுன்ஸிலின் அங்கத்தினரான சர் ஹுயூ மேக்பர்சன் போன்றவர்களுமான பெரிய அதிகாரிகள் எத்தனையோ பேர் வந்தார்கள். அப்போது நடந்த சர்க்கா போட்டியில் மல்காசக்-காந்தி-குடீர் (சாரன் ஜில்லா) என்ற நிலை யத்தின் சிறுவர்கள் இருவர்தாம் முதல் பரிசு பெற்ருர்கள். அவர் கள் ஸ்ரீராம் விநோத் சின்ஹாவின் தம்பிகள். அவர்கள் மணிக்குச் சுமார் 600 கஜம் நூல் நூற்ருர்கள். இந்தச் சிறுவர்களில் ஒருவர் பிற்காலத்தில் ஐரோப்பாவில் படித்து டாக்டர் பட்டம் பெற்று, டாக்டர் சத்யநாராயண் சின்ஹா என்று விளங்கினர். அவர் ஹிந்தியில் பல புத்தகங்களை இயற்றியிருக்கிருர். மென்மையான நூல் நூற்பவர்கள் முன்னூறும் நம்பர் நூல் வரையில் நூற்றுக் காட்டினர்கள். நான் அங்கு வந்தவர்களின் முன்னிலையில் செய்த சொற்பொழிவில் காதி அது வரையில் அடைந்து வந்திருந்த வளர்ச்சியைப் பற்றி எடுத்துக் கூறினேன். எனக்குத் தெரிந்த வரையில் எல்லாரும் மிகவும் திருப்தியடைந்தார்கள் என்றே கூறு வேன். தலைமை நீதிபதியின் பத்னி லேடி மில்லர் தாம் பரிசுகளை வழங்கினர்.

பெல்காமில் நடந்த கண்காட்சியைத் திறந்து வைக்கும் பெருமை எனக்குக் கிட்டியது. எங்கள் மாகாணத்தில் காதி வேலை மிகவும் நன்ருக நடந்து வந்ததால்தான் இந்தப்பெருமை எனக்குக் கிட்டியது என்று நினைக்கிறேன். கண்காட்சியில் மற்றத் தொழில் களின் வேலைப்பாடு தினுசுகளும் வைக்கப்பட்டிருந்தாலும்கூட நான் என் பேச்சில் காதியைப் பற்றித்தான் முக்கியமாகக் கூறி னேன். பிரசாரம் செய்வதற்கு மட்டும் ஆட்களும் பணமும் குறை

வில்லாவிட்டால் அதிவிரைவிலேயே நாடெங்கும் ஏராளமாகக் காதியைத் தயார் செய்துவிடக் கூடுமென்பதை வற்புறுத்திக் கூறினேன்.

இதே ஆண்டில் மற்ருெரு சிறிய சம்பவமும் நடந்தது. அது எனக்கு புனித நினைவாகவே இன்றும் இருந்து வருகிறது. பட்ளு பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பின் போது சர் ஜகதீஸ் சந்திர போஸ் பட்டம் பெற்றவர்களுக்கு வாழ்த்துரை கூற வந்து சேர்ந்தார். அவரை நான் வித்யா பீடத்திற்கு வரும்படி அழைத்தேன். நான் கல்கத்தாவில் பிரசிடென்ஸி காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது டாக்டர் போஸ் எனக்குப் பாடம் கற்பித்து வந்தார். ஆளுல் அது நெடுநாளுக்கு முன் நடந்த விஷயம். மேலும் அவரிடம் கற்கும் வாய்ப்பு பி. எஸ். சி., எம். ஏ., போன்ற பெரிய வகுப்பில் படிக்கும்போது கிடைக்கவில்லை. எப். ஏ., யில் தான் அவரிடம் படிக்கும் நற்பேறு கிட்டியிருந்தது. ஆகையால் என்னைப் பற்றி அவருக்கு நினைவிருக்குமென்ருே, என்னைத் தனிப்பட்ட முறையில் அவர் அறிந்திருக்கக் கூடுமென்ருே நினைப்பதற்கு இடமில்லை. ஆயினும் அவர் என்னை மிகவும் நன்ருக நினைவில் கொண்டிருந்தது மட்டுமன்றி என்மேல் பிரியமும் கொண்டிருந்தார் என்பதை அறிந்தபோது எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அவர் மிக்க மகிழ்ச்சியுடன் வித்யா பீடத்திற்கு வந்தார். அங்கு மிக்க அழகானதும் ஊக்கம் அளிக்கக் கூடியதுமான உணர்ச்சி ததும்பும் சொற்பொழிவு ஒன்றையும் ஆற்றினுர். இதற்காக நான் அவருக்கு மிகவும் கடமைப்பட்டவளுகக் கருதுகிறேன். அதே அன்பையும் நம்பிக்கையையும் அவர் தாம் இறப்பதற்குச் சிறிது காலத்திற்கு முன் மறுபடியும் காட்டினுர். பீகாரில் மதுவிலக்குக்காக ஒரு பெரிய தொகையை அளித்து, அதன் வட்டியிலிருந்து கிடைக்கும் வருவாயை அப்பணிக்குச் செலவிடும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார். அவர் விஞ்ஞான பண்டிதர்களுள் எவ்விதம் சிரோன்மணியாக விளங்கினுரோ அதே போலச் சிறந்த தேசபக்தரும் தியாகியுமாக விளங்கினுர். நான் 1942இல் சிறைக்குப் போகும் வரையில் மதுவிலக்கு வேலை என் மேல்பார்வையில்தான் ஜரியாவில் நடந்து வந்தது. லேடி அபலா போஸும் தவருது பணம் அனுப்பிக் கொண்டிருந்தார். பிறகு நான் சிறைக்குச் சென்று விட்டதால் என் கையில் இருந்த பணத்தை லேடி போஸ் மூலமாகத் தர்ம கர்த்தாக்களிடம் திருப்பிக் கொடுத்து விட்டேன். பேராசிரியர் போஸின் விருப்பத்தை நிறைவேற்ற இயலாமற்போனதே என்ற

வருத்தம் மட்டும் இன்னும் இருந்து வருகிறது. ஆயினும் மீண்டும் எனக்கு வாய்ப்புக் கிடைக்கும்போது அவருடைய ஆசையை நிறைவேற்றுவேன் என்ற நம்பிக்கை இருந்து வருகிறது.

இங்கே மற்ருெரு சம்பவத்தைப் பற்றியும் குறிப்பிடுவது பொருத்தமற்றதாகாது என்று நினைக்கிறேன். காதி வேலை புரிந்து வந்தவர்களில் ஸ்ரீ பப்பன் சிங் என்ற பெயர் கொண்ட இளைஞர் ஒருவர் இருந்தார். அவர் சாரன் ஜில்லாவைச் சார்ந்த கோபால்கன்ஜ் சப்டிவிஷனில் உள்ள கைதவலியா கிராமத்தைச் சேர்ந்தவர். மிகவும் உணர்ச்சி வேகம் உடையவர். முக்தா பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்தார். ஆயினும் அவர் தம்முடைய செலவிலேயே காதி, சர்க்கா ஆகியவற்றின் பிரசாரத்தைத் தொடங்கிவிட்டார். இதற்காகத் தம்முடைய நிலம், மனைவியின் நகைகள் ஆகியவற்றையும்கூட விற்றுவிட்டார். இவ்வளவும் செய்த பிறகுதான் அவர் தம்முடைய நிலைமையைக் காதி போர்டுக்குத் தெரிவித்தார். போர்டிலிருந்து அவருக்கு உதவி அளிப்பதாக முடிவு செய்யப்பட்டது. இந்தச் சமயத்தில் அவர் நோய் வாய்ப்பட்டு விட்டார். பைத்தியத்தின் குறிகள் அவரிடம் காணப்பட்டன. தம்மைப் பாம்பு கடித்துவிடுமென்று அவர் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தார். எப்போது பார்த்தாலும் சர்க்கா, காதி முதலியவற்றைப் பற்றிப் பாடல்கள் பாடிக் கொண்டிருந்தார். சில சமயங்களில் கட்டுக்கு அடங்காமலும் போய்விடுவார். இதனல் அவரை ஒர் அறையில் அடைத்து வைத்திருந்தார்கள். இப்படி இருக்கும்போது ஓர் இரவு பாம்பு தம் அறைக்குள் வந்துவிட்டது என்றும், அது தம்முடன் போராடிக் கொண்டிருக்கிறதென்றும் கூக்குரல் போட்டார். முதலில், இதைப் பைத்தியத்தின் உளரல் என்பதாக ஜனங்கள் நினைத்துக்கொண்டார்கள். ஆனல் அவர்கள் உள்ளே சென்று பார்த்தபோது உண்மையாகவே ஒரு கட்டுவிரியனை அவர் கையில் பற்றிக்கொண்டிருப்பதை கண்டார்கள். அது அவரைப் பல இடங்களில் கடித்துவிட்டது. அவர் எப்படியோ பாம்பைக் கொன்றுவிட்டாராயினும் அவரும் சிறிது நேரத்திற்குள் அதனுடைய விஷத்தால் இறந்து போனர்.

ஸ்ரீ பப்பன் சிங்கின் மனைவி அவர் நோய்வாய்ப்பட்ட நாளிலிருந்தே உணவு உண்பதை விட்டுவிட்டாள். இருபத்துநான்காம் நாள் அவர் இறந்துபோனதும் அவள் குளித்துவிட்டு தானும் உடன்கட்டை ஏற விரும்புவதாகத் தெரிவித்தாள். ஆனல் ஜனங்

கள் அவளை அப்படிச் செய்ய விடவில்லை. அவருடைய பிணத்தைத் தகனத்திற்காக எடுத்துச் சென்றுவிட்டார்கள். அவள் எவ்வளவோ பிடிவாதம் செய்தாள், ஆயினும் ஜனங்கள் அவளைப் பலவந்தப்படுத்தி ஓர் அறையில் அடைத்து வைத்துவிட்டார்கள். அப்போது அவள் அடங்கிவிட்டாள். பிறகு பேசாமல் மௌனமாக இருந்து வந்தாள். தன்னுடைய அறையில் மிகவும் இருட்டாக இருந்த ஒரு மூலையில் கிடந்து இருந்தாள். அதே மூலையில் சிறிதளவு பஞ்சும் காதியும் வைக்கப்பட்டிருந்தன. மூன்று நான்கு நாட்களுக்குப் பின் ஓரிரவில் அவள் தன் அறையில் தூங்கச் சென்றாள். பப்பன் சிங்கின் சகோதரர் வெளியே படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். எவருக்கும் யாதொரு சந்தேகமும் வரவில்லை. ஆனால் அடுத்த நாள் காலையில் அவள் எழுந்திருக்கவில்லை. அப்பொழுதுதான் ஜனங்களுக்கு ஐயம் வந்தது. அவர்கள் அந்த அறையில் நுழைந்து பார்த்தபோது ராம் சுரத் (இதுதான் அவளுடைய பெயர்) ஒரு கையில் கீதையை ஏந்திக்கொண்டு மற்றொரு கையின்மீது அக்கையை ஊன்றிக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டார்கள். உடம்பைத் தொட்டுப் பார்த்ததில், காலின் பெரு விரலிலிருந்து கைவரையில் உடம்பு எரிந்து சாம்பலாகிப் போயிருப்பது தெரிய வந்தது. மற்றப் பாகங்களெல்லாம் அப்படியே முன்போலவே இருந்தன. முதுகுபுறம் தொங்கிக் கொண்டிருந்த நீண்ட தலைமயிர் சிறிதளவு எரிந்து போயிருந்தது. ஆனால் கண்களின் இமைகளில் தீயின் சின்னம் ஒன்றுமே காணப்படவில்லை. அவள் இருந்த இடத்திலிருந்து மூன்று நான்கு அடிகளுக்கு அப்பால் இரு புறத்திலும் கிடந்த காதியும் பஞ்சும் யாதும் சேதமின்றி காணப்பட்டன. அடுப்பு எரிப்பதற்காக வீட்டில் ஏதோ கொஞ்சம் விறகு இருந்தது. அது காணப்படவில்லை. ஆயினும் அது அவளுடைய உடலைச் சாம்பலாக எரிப்பதற்குப் போதிய அளவு அன்று. இவ்வண்ணமாக அப்பெண்மணி தன் கற்பை நிரூபித்துக் காட்டிவிட்டு உயிரைத் துறந்தாள். இச்சம்பவத்தின் செய்தி கிடைத்ததும் நான் அங்கே சென்றேன். அவருடைய குடும்பத்தாருக்கு ஆறுதல் கூறிவிட்டு அந்தப் புண்யவதி இருந்த இடத்தைப் பார்க்கக் கிடைத்ததே என்று என் அதிர்ஷ்டத்தைப் பாராட்டிக்கொண்டு திரும்பினேன்.

# 62. தேசபந்து தாஸின் மரணம்

பெல்காம் காங்கிரஸிலிருந்தே தேசபந்து தாஸின் உடல்நலம் கேடுற்றுவந்தது. அவர் பட்னுவிலேயே தம்முடைய சகோதரர் பிரபுல்லரஞ்சன் தாஸுடன் சிறிது காலம் தங்கி இருந்து வந்தார். அப்போது நான் அடிக்கடி சென்று அவரைப் பார்த்து வந்தேன். அப்போதுதான் அவர் சர்க்கா சுற்றக் கற்றுக்கொள்ளத் தொடங்கினுர். "நீயே எனக்குக் கற்றுக்கொடு, அல்லது வேறு யாரை யாவது எனக்குக் கற்பிக்க அமர்த்திக் கொடு" என்று என்னிடம் கூறினுர். ஒருநாள் இதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் போது அவர் என்னைப் பார்த்து "எனக்கு இவ்விதமான வேலை யில் கையும் ஓடவில்லை. புத்தியும் ஓடவில்லை. இதோ இந்தப் பெட்டியின் பூட்டைத் திறவென்று என்னிடம் அவ்வேலையை விட்டால் அதைக்கூட என்னுல் சரியாகச் செய்ய முடியாது" என்று கூறினுர். நானே அவருக்குப் பல நாட்கள் வரையில் நூல் நூற்கக் கற்றுக் கொடுத்து வந்தேன். நான் எங்காவது வெளியூருக்குப் போகவேண்டி வந்தால், வேருெரு நண்பர் சென்று அந்தப் பணியை ஆற்றி வருவார். பட்னுவில் அவருடன் அரசியல் விஷயங்களைப் பற்றியும் பேசுவதுண்டு. அக்காலத்தில் தான் லார்டு பெர்க்கென்ஹெட் இந்தியா மந்திரியாக நியமிக்கப் பட்டார். அவர் மிகவும் கடுமையான பழங்கிடைப் பற்றுள்ள வரும் (கன்சர்வேடிவ்) தீவிர சாம்ராஜ்யவாதியும் ஆயினும்கூட அவர் அதி நுட்ப புத்தியுடையவராதலாலும் மேலும் தாம் எடுத்த காரியத்தைக் கைவிடாது முடித்தே தீரும் உறுதிப்பாடு உடையவ ராதலாலும் அவர் இந்தியாவுக்கு ஏதேனும் செய்தே தீர விரும்பு வார் என்று தேசபந்து தாஸ் நினைத்தார். அதனுல் இரகசிய மாக ஏதோ பேச்சும் நடந்ததாகத் தெரிய வந்தது. இந்தச் சம யத்தில் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையில் சமரசம் விளையும்படியாக ஏதாவது நடந்தே தீருமென்று தேசபந்து தாஸ் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தார். பர்க்கென்ஹெட்டிடம் தாம் வைத்திருக்கும் நம்பிக்கை நிறைவேருவிட்டால், பிறகு நாட்டை முன்னேற்றுவதற்குக் காந்திஜீயின் சர்க்காவைத் தவிர வேறு வழி எதுவும் நமக்கிருக்காது என்றும்கூடக் கூறி வந்தார்.

1923 தேர்லில், மேலே கூறியபடி, சுயராஜ்யக் கட்சியானது பங்கெடுத்துக் கொண்டது. தில்லியில் நடந்த காங்கிரஸின்

விசேஷப் பேரவை இதற்கு அனுமதி அளித்துவிட்டது. ஆனால் கவுன்சிலில் நடத்த வேண்டிய செயல் திட்டத்தின் பொறுப்பைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால், காங்கிரஸின் உதவியினால் சுயராஜ்யக் கட்சிக்கு இத்தேர்தலில் எவ்வளவு பயன் கிடைத்திருந்திருக்குமோ, அவ்வளவுக்குப் பயன் கிட்டவில்லை. ஆயினும் வங்காளத்திலும் மத்தியப் பிரதேசத்திலும் அக்கட்சியிலிருந்து நிறையப் பேர் கவுன்சிலுக்குச் சென்றடைந்தார்கள். இதே போலத் தில்லியில் உள்ள மத்திய சட்டசபைக்கும் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் நிறையப் பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி கிடைக்காவிட்டாலும்கூடத் திறமைசாலிகள் பலர் கவுன்சிலில் புகுந்துவிட்டார்கள். அங்குற்ற நடவடிக்கைகளில் அவர்கள் புதியதொரு முறையையும் புதியதொரு குறிக்கோளையும் புகுத்திவிட்டார்கள். மத்ய பிரதேசத்தில் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் தாம் பெரும்பான்மை பலம் பெற்றிருந்தார்கள். அங்கே அவர்கள் வரவு செலவு திட்டத்தையும் (பட்ஜெட்டை) மந்திரிகளின் சம்பளத்தையும் ஏற்காமல் தள்ளிவிட்டார்கள். கவர்னர், வேறு வழியின்றி, மந்திரிகளைத் தள்ளிவிட்டு, எல்லா அதிகாரத்தையும் தாமே ஏற்க வேண்டி வந்தது. வங்காளத்தில் இக்கட்சிக்குப் பெரும்பான்மை பலம் இல்லாவிட்டாலும் கூடத் தேசபந்து தாஸின் தனிப்பட்ட செல்வாக்காலும் முயற்சியாலும் இதேபோல அங்கும் மந்திரி சபை முறியடிக்கப்பட்டுப் போயிற்று. வங்காள கவர்னரே அதிகாரங்கள் எல்லாவற்றையும் ஏற்கவேண்டி வந்தது. மத்திய சட்டசபையில் பண்டித் மோதிலால்ஜீயானவர் சுயராஜ்யக் கட்சியின் தலைவராக இருந்தார். அவர் மற்றக் கட்சிக்காரர்களையும் சேர்த்துக்கொண்டு அங்கும் பட்ஜெட்டுத் தள்ளுபடியாகும்படி செய்துவிட்டார். வைசிராய் தம்முடைய விசேஷ அதிகாரத்தைக் கொண்டு அதை ஏற்க வேண்டி வந்தது. இவ்விதமாக இரண்டு ஆண்டுகள் வரையில் தொடர்ந்து நடந்து வந்தது. வங்காளத்தில் தேசபந்து தாஸானவர் அடக்குமுறை மசோதாவையும் தள்ளுபடியாகுமாறு செய்துவிட்டார். இவையெல்லாம் நாட்டின் மக்கள் மனத்தில் நன்றாகப் பதிந்தன. அவ்வளவுகவ்வளவு அரசாங்க வர்க்கத்தாருக்குக் கோபம் வந்தது. மகாத்மாஜீ சுயராஜ்யக் கட்சியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டதற்குச் சுயராஜ்யக் கட்சியின் இந்த வெற்றியானது ஒரு முக்கிய காரணமாகும். ஆயினும்; இவ்விதமான நடவடிக்கைகள் நெடுநாள் நீடித்து நடக்க முடியாதென்பது தெளிவாயிருந்தது. மத்திய சட்டசபையில் மற்றக் கட்சிகளுடன் பேச்சுவார்த்தை நடத்தி

எல்லாருமாகக் கூடி அமைத்த புதுக் கட்சியானது மெல்ல மெல்ல வலிமையை இழந்து கலைந்துவிட்டது. சுயராஜ்யக் கட்சி மற்றக் கட்சிகளிலிருந்து பிரிந்துவிட்டது. மத்ய பிரதேசத்திலும் சுயராஜ்யக் கட்சிக்காரர்களுக்குள் மந்திரி சபை அமைப்பதைப் பற்றி அந்தரங்கமாகச் சச்சரவு நடந்து வந்தது. பீரார் வட்டா ரத்தைச் சேர்ந்த சில அங்கத்தினர்கள் தாம் இதை முக்கியமாக ஆதரித்தார்கள். இவையெல்லாவற்றையும் அனுபவமும் நெடிது நோக்கும் ஆற்றல் வாய்ந்தவருமான தேசபந்து தாஸானவர் பார்த்து, இந்தச் சமயத்தில் இங்கிலாந்துடன் கௌரவமான தொரு ஒப்பந்தம் நிறைவேற்றப்படுமானால் மிகவும் நல்லதாகு மென்று எண்ணினர்.

அரசாங்கத்தார் புதிய அவசரச் சட்டத்தின் கீழும் 1918இன் ரெகுலேஷன் கீழும் மக்களைச் சிறையில் அடைத்துப் புரட்சிக் காரர்களை எவ்விதத்திலும் தலையெடுக்கத் தாம் விடமாட்டோ மென்பதைத் தெளிவாகக் காட்டி வந்தார்கள். இந்தப் புதிய அவ சரச் சட்டமும் சிறை கொள்ளுதலும் மிஸ்டர் ராம்சே மாக்டோ னல்டைப் பிரதம மந்திரியாகக் கொண்ட தொழிலாளர் கட்சியின் அனுமதியின் பேரில்தான் நடந்து வந்தன. தொழிலாளர் கட்சி யானது தேர்தலில் தோற்றுப் போனபின் கன்செர்வேடிவ் கட்சி யின் மந்திரி சபை அமைந்தது. அதில் லார்டு பெர்க்கென்ஹெட் இந்தியா மந்திரியாக அமைந்தார். அவர் மீது தேசபந்துதாஸ் அதிக நம்பிக்கை வைத்திருந்தார். அவர் நம் நாட்டிற்கு ஏதா வது நலம் புரிவதற்குத் தடையாயிருந்த முட்டுக்கட்டைகளைத் தேசபந்துவானவர் தம்மால் இயன்ற அளவுக்கு அகற்றியும் விட் டார். வங்காளச் சுயராஜ்யக் கட்சியும் தேசபந்து தாஸும் இரகசியமாகப் புரட்சிக்காரர்களுக்குத் துணைபுரிந்து வருகிறார்கள் என்பதாக ஆங்கிலேயர்கள் ஐயம் கொண்டுள்ளார்கள் என்பது தேசபந்து தாஸுக்குத் தெரியும். கோபிநாத் சாஹா சம்பந்த மாக அவர் நிறைவேற்றிய சிராஜ்கன்ஜ் தீர்மானத்தால் இந்த ஐயம் ஆங்கிலேயர் மனத்தில் வலுத்துவிட்டது. இந்த ஐயம் அவர்கள் மனத்திலிருந்து அகற்றப்படாத வரையில் ஆங்கிலேயர் கள் எவ்விதமான உடன்படிக்கையையும் செய்ய மாட்டார்கள் என்று தேசபந்து நினைத்தார். ஆங்கிலேயர்களுடன் அவர் நடத்திய பேச்சு வார்த்தைகளிலிருந்து இது அவருக்குத் தெரிய வந்தது. இதனால் அந்த ஐயத்தைப் போக்குவது மிகவும் அவ சியமென்பதை உணர்ந்தார். உடனே அவர் ஓர் அறிக்கையை வெளியிட்டு, அதில் காங்கிரஸாவது சுயராஜ்யக் கட்சியாவது

கொலேபுரிதல் பொருத்தமான செய்கை என்ற கொள்கைகொண்ட கட்சி எதையும் ஆதரிக்கமாட்டா என்பதையும், மேலும் இவ்வித மான கொலேகளினுல் சுயராஜ்யத்தை எய்தும் வழியில் முட்டுக் கட்டை படுகிறது என்பது சுயராஜ்யக் கட்சியின் கருத்து என்ப தையும் தெள்ளத் தெளிவாக எடுத்துரைத்தார். தாம் இதற்கு முன் இக்கொள்கையை என்றும் ஆதரித்ததில்லே என்பதையும் இன்றும் ஆதரிப்பதில்லே என்பதையும் கூறி, அத்துடன் சுய ராஜ்யக் கட்சியின் (முட்டுக்கட்டை போடும்) கொள்கை எவ்விதத் தில் பொருத்தமானதென்பதையும் விளக்கினுர். மேலும் ஏதா வது ஓர் உடன்படிக்கையின் மூலமாக ஏதாவது முடிவு செய்யப் பட்டு அதிகாரமானது கைக்குக் கிட்டாத வரையில் அம்முறை யைப் பின்பற்றியே நிற்போமென்பதையும் கூறினுர். இந்த அறிக்கையின் முதல் பாகம் ஆங்கிலேருக்குப் பிடித்திருந்தது. லார்டு பெர்க்கென்ஹெட்டும் கூடத் தம் மகிழ்ச்சியைத் தெரிவித் தார். ஆயினும், இந்தியர்கள் சட்டசபைகளேச் சரிவர நடத்து வதற்கு உதவிபுரிய வேண்டுமென்பதையும், அவர்கள் அப்படிச் செய்தால்தான் அரசியல் துறையில் முன்னேற்றம் அடைய முடியு மென்பதையும் அவர் கூடவே கூறினுர். இப்படி நிகழ்ந்தும் கூடத் தேசபந்து தாஸ் சிறிதளவுகூட நம்பிக்கை இழக்கவில்லே. அச்சமயத்தில் பரீத்பூரில் வங்காள அரசியல் மகாநாடு நடை பெறுவதாக இருந்தது. தேசபந்துதாஸ் அதற்குத் தலேவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அந்நாட்களில் காந்திஜீ வங்காளத்தில் சுற்றி வந்துகொண் டிருந்தார். அம் மகாநாட்டிற்கு அவரும் வந்து சேர்ந்தார். தேசபந்து தாஸானவர் தாம் இயற்றிய சொற்பொழிவில் மேற் கூறிய எண்ணங்களேயும் நம்பிக்கைகளேயும் வெளியிட்டார். ஆனுல் அவருடைய ஆசை நிறைவேறவில்லே. அவருடைய உடல் நிலே நாளுக்கு நாள் கெட்டுவந்தது. அதனுல் அவர் தார்ஜீலிங்குக்குச் சென்ருர். மகாத்மாஜீயும் அங்குச் சென்ருர். அவர்கள் இருவரும் தார்ஜீலிங்கில் இருந்தபோது நானும் ஜல்பாய்குரி வரையில் சென்றேன். காந்திஜீயை வங்காளத்தி லிருந்து பீகாருக்கு அழைத்துச் செல்ல வேண்டுமென்பது என் நோக்கம். இதனுல்தான் நான் அதுவரையில் சென்றேன். ஆனுல், என் உடல் நிலேயின் காரணத்தால் நான் மலேமேல் செல்லவில்லே. ஸ்ரீ மதுராபிரசாத்ஜீயைத்தான் காந்திஜீயிடம் அனுப்பினேன். காந்திஜீயும் ஒத்துக்கொண்டார். ஆனுல் அதற்குள் தேசபந்து தாஸ் திடீரென்று இறந்துவிட்டார். அவ

ருடைய அகால மரணத்தால் நாடு முழுவதும் துக்கத்தில் மூழ்கியது. அவருடைய பிணம் கல்கத்தாவுக்குக் கொண்டுவரப் பட்டது. அங்கே இதற்கு முன் என்றுமே கண்டறியாத காட்சி யைக் கண்டேன். அந்த ஊர்வலத்தில் மக்கள் கூடியிருந்தது போல இதுவரையில் வேறு எந்த ஊர்வலத்திலும் கூடியிருந்த தைக் கண்டதில்லை. மகாத்மாஜீயும் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந் தார். தேசபந்துவின் நினைவிற்காகப் பணம் திரட்டுவதிலும் அத்துடன் அரசியல்துறைத் தலைவர்களைக் கொண்டு அங்குள்ள நிலைமையின் சிக்கலை அறுப்பதைப் பற்றி பேசுவதிலும் அவர் ஈடுபட்டுவிட்டார். இதனால் சில நாட்கள் வரையில் அவர் பீகா ருக்கு வர முடியவில்லை.

## 63. சமூகச் சீர்திருத்தம்

அதே காலத்தில் என் குடும்பத்தில் இரண்டு திருமணங்கள் நடந்தன. லக்நௌவைச் சேர்ந்த ஸ்ரீ வித்யா தத்தராமுடன் என் தமையனரின் இளைய மகள் ரமாவின் கல்யாணம் ஒன்று; மற்றென்று ஸ்ரீ பிரஜ்கிஷோர் பிரசாதின் இளைய மகள் வித்யாபதி யுடன் என் மூத்த மகன் மிருத்யுஞ்சயனின் கல்யாணம். லக்நோ மாப்பிள்ளையின் வருகை மிகவும் ஆடம்பரமாக நடந்தது. நிறையப் பேர் வரவில்லையாயினும், மிகவும் புகழ்வாய்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களாதலால் அவர்களுடைய மாப்பிள்ளை ஊர்வலம் மிகவும் பகட்டாக இருந்தது. நாங்கள் தாம் எல்லா ஏற்பாடு களையும் செய்யவேண்டியிருந்தது. என் தமையனர் சிறப்பாக ஏற்பாடுகள் செய்திருந்தார். இத்திருமணம் அமைவதற்குப் பாபூ ஹரிஜீ பேருதவி புரிந்தார். அவர்கள் அவருக்கு நெருங்கிய உறவினர். யாருக்கும் ஏதும் குறைபாடு உண்டாகக் கூடா தென்று நாங்கள் விரும்பினேம். இதனல் அவர்கள் தங்குவதற் காகக் கூடாரங்களுக்கும் அவர்களுடைய உணவுக்காக அரிய பண்டங்களுக்கும் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. எங்கள் மூன்று பிள்ளைகளின் கல்யாணங்கள் எதிலும் நாங்கள் சீர், சீதனம் எதுவும் வாங்கியதில்லை. ஆனல் மூன்று பெண் களின் கல்யாணங்களிலும் நிறையச் சீர், சீதனம் கொடுக்க வேண்டி வந்தது. சில இடங்களில் பலவந்தப்படுத்தப்பட்டு எங்கள் விருப்பத்திற்கு மேலாகவும் கொடுக்க வேண்டிவந்தது.

இந்த விஷயத்தில் எங்கள் அனுபவம் எப்போதுமே கசப்பாக இருந்துவந்தது. எங்கள் சமூகத்தில் தீய பழக்கங்கள் நிறைய இருந்துவந்தன. அவை ஒழிக்கப்படாதவரையில் பெண்ணைப் பெறுவதும் அவளுடைய கல்யாணத்திற்காக அல்லல்படுவதும் எங்களுக்கு என்றுமே துன்பத்தை விளைவிப்பனவாக இருந்து வரும். காயஸ்துக்களிடையில், முக்கியமாக ஸ்ரீவாஸ்தவாக்களிடையிலும் அம்பஷ்டுகளிடையிலும் சீர்திருத்தத்திற்கு நிறையத் தேவையிருக்கிறது.

அகில பாரதீயக் காயஸ்து மகாநாடும் காங்கிரஸ் உதித்த போதே தோன்றிவிட்டது. அதன் முதன்முதல் கூட்டத்திலேயே, பெண்ணின் தந்தையிடமிருந்து பலபெயர்வைத்துச் சீர், சீதனத் திற்காகப் பணம் வாங்கும் வழக்கம் மிகவும் தீயதென்பதும் அப் பழக்கத்தை நிறுத்த வேண்டுமென்பதும் வற்புறுத்தப்பட்டன வென்று நினைக்கிறேன். பெரும்பாலும் ஒவ்வொரு கூட்டத்திலும் இந்த நோக்கம் கொண்ட தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டு வந்தது. ஆனால் மகாநாட்டை நிறுவியவர்களும் அதை நடத்து பவர்களுமே இத்தீர்மானத்தை அலட்சியம் செய்துவந்தார்கள். தாம் மகாநாட்டின் மூலம் பெற்ற கௌரவத்தையே சீர், சீதனத்தை அதிகமாக வாங்குவதற்குத் துணையாக்கிக் கொண் டவர்களும் பலர் இருந்தார்கள். ஏனெனில் மகாநாட்டிற்குத் தலைவராகவோ அல்லது அதில் வேறு உயர்ந்த பதவியோ வகித்த காரணத்தால் அவர்களுக்குக் காயஸ்துக்களிடையில் பெரும் செல் வாக்கு உண்டாகிவிட்டது. இதனால் அவர்கள் அதிகப்பணம் தண்டல் செய்தார்கள். இதனால் காயஸ்து மகாநாடானது சாதி வகுப்பு மகாநாடுகளில் மிகப் பழமையானதாயிருந்தும்கூட அது தன் நோக்கங்களை நிறைவேற்றுவதில் பெரும் வெற்றியை அடையவில்லை.

வக்கீல் தொழில் நடத்துவதற்காகக் கல்கத்தாவிலிருந்து பட்னாவுக்கு நான் வந்ததும் சில நாட்களுக்குள்ளாகவே சில காயஸ்து நண்பர்கள் என்னிடம் வந்து ஒரு வாக்குறுதிப் பத்தி ரத்தில் கையொப்பம் வாங்கினார்கள். பெண்ணின் திருமணத்தின் போது, அவளுடைய தந்தையிடமிருந்தாவது அல்லது அவ ளுடைய உறவினர்களிடமிருந்தாவது வெளிப்படையாகவோ மறைவாகவோ எப்பெயர் வைத்தும் ரூபாய் 51க்கு மேற்கொண்டு பெற்றுக்கொள்ளக் கூடாதென்பதுதான் அதன் குறிக்கோள். என்கருத்தும் இவ்வழியே முன்னிருந்தே அமைந்திருந்தது. அதனால் நான் மகிழ்ச்சியுடன் வாக்குறுதிப் பத்திரத்தில்

கையொப்பமிட்டேன். என் தமையனும் இந்த விஷயத்தில் மிகவும் திண்ணமான கருத்துடையவராயிருந்தார். எவரெவர் தம் வீட்டுக் கல்யாணத்தில் நிறையச் சீர், சீதனம் வாங்குகிறார் களோ அல்லது சதுர் முதலானவற்றிற்காக நிறையப் பணம் செலவிடுகிறார்களோ அவர்கள் வீட்டுக் கல்யாணத்திற்குப் போகவே கூடாதென்பதுகூட அவருடைய கருத்து. ஆதலால் இந்தக் கட்டுப்பாட்டை ஏற்பதில் எங்களுக்கு யாதொரு கஷ்டமு மில்லை. என் தமையனாரின் பெண்கள் மூவரில் இருவருக்கு இதற்கு முன்னமே திருமணமாகிவிட்டது. அத்திருமணங்களில் நாங்கள் நிறையச் சீர், சீதனம் கொடுக்க வேண்டியிருந்தது. இப் போது ஒரு பெண்தான் கல்யாணத்திற்கு இருந்தாள். ஆனால் எங்களுக்கு மூன்று பையன்கள் இருந்தார்கள். அவர்களில் எவருக்கும் இதுவரையில் திருமணமாகவில்லை. ஆதலால் கொடுக்க வேண்டிய இடத்தில் கொடுத்தாகிவிட்டது. ஏதாவது வருமென்று எதிர்பார்த்த சந்தர்ப்பங்களில் நாங்கள் இப்படியாக வாக்குறுதி கொடுத்து வழியை அடைத்துவிட்டோம். ஆனால் இதைத் தெரிந்து தெளிந்தேதான் செய்தோம்.

இதற்குப்பின், அதே ஆண்டின் முடிவில் (1925 டிசம்பரில்) ஜௌன்பூரில் கூடிய காயஸ்து மகாநாட்டிற்கு நான் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அப்பதவியை ஏற்றால், அங்குச் சென்று வேறெதுவும் செய்யாவிட்டாலும், குறைந்தது இந்தக் கெட்ட வழக்கத்தையாவது நிறுத்துவதற்கு ஏதாவது செய்ய முடியுமென்ற நம்பிக்கையினால் நான் ஒத்துக்கொண்டேன். அம் மகாநாட்டில் இரண்டு தீர்மானங்கள்தாம் (அவை பழையனவேயா யினும்) முக்கியமானவை. ஒன்று சீர், சீதனத்தை ஒட்டியது. அதில் மேலே கூறப்பட்டுள்ள வாக்குறுதியை மேலும் கடுமை யாகத் திருத்தி அமைத்தோம். அத்தீர்மானத்தை அவமதித்து நடத்தப்படும் கல்யாணங்களுக்கு எவரும் ,போகக் கூடாதென்ற ஒரு நிபந்தனையை அதில் சேர்த்தோம். மற்றொன்றில், காயஸ்துக் களின் பல்வேறு கிளை சாதிகளின் வேற்றுமையைப் பார்க்காமல் பெண் கொடுப்பது, கொள்வது முதலான விஷயங்கள் வற்புறுத் தப்பட்டன. எனக்குத் தெரிந்த வரையில் சீர்சீதனம் கொடுக்கல் வாங்கல் பழக்கம் அதற்குப் பின்னும் இருந்தே வந்தது. ஆயினும் காயஸ்துக்களின் கிளைச் சாதிகளுக்குள் கலப்புத் திரு மணங்கள் நடைபெறத் தொடங்கிவிட்டன. இது மகிழ்ச்சியை அளித்தது. இப்போது சிறு வயதில் விதவையாகிவிட்ட பெண் களின் திருமணங்கள்கூட நடக்கின்றன. அச்சமயத்தில் இதைப்

பற்றி என் கருத்துத் தெளிவடையவில்லை. அதற்குப் பின்னுல் தான், நான் கைம்பெண் திருமணம் (முக்கியமாகச் சிறுவயதில் விதவையான பெண்களின் திருமணம்) மிகவும் இன்றியமை யாததென்பதை உணர்ந்தேன். இப்படிப்பட்ட கல்யாணங்கள் சிலவற்றிற்கு என் உடன்பாட்டை அளித்து மிக்க உற்சாகமும் ஊட்டி வந்திருக்கிறேன்.

# 64. காந்திஜீயின் சுற்றுப் பிரயாணமும் கவுன்ஸில் தேர்தலும்

காங்கிரஸ் விதிகளை மாற்றிக் காங்கிரஸில் உறுப்பினர் ஆவ தற்குப் பணம் கொடுப்பதற்கு மாருக இரண்டாயிரம் கெஜம் நூல் கொடுப்பதென்றும், மேலும் காங்கிரஸ் கூட்டங்களிலும் வேலை களிலும் ஈடுபட்டிருக்கும்போது காதி அணிவது இன்றியமையாத தென்றும் அமைத்து நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தத்தைப் பெல் காம் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டதென்று மேலே கூறியுள்ளேன். ஆனுல் சிலர் கடுமையாக அதை எதிர்த்தார்கள். காங்கிரஸுக்கு வெளியேயிருந்தாலும் அதில் வந்துசேருவார்களென்று எதிர்பார்க் கப்பட்டவர்களும் அதை எதிர்த்தார்கள். காங்கிரஸுக்குள்ளும் ஒரு சாரார் அதை முற்றிலும் எதிர்த்தார்கள். சுயராஜ்யக் கட்சி யானது அதை ஏற்றுக்கொண்டதாயினும் அக்கட்சியின் முக்கிய மான உறுப்பினர்கள் சிலர் அதை மனப்பூர்வமாக ஏற்கவில்லை. காங்கிரஸானது கையால் நூற்கப்பட்ட நூல், காதி ஆகியவற்றைப் பற்றிய நிபந்தனைகளைப் போட்டுத் தன்னுடைய எல்லையை மேலும் குறைத்துக்கொண்டு விட்டதென்றும், இனி அதன் உறுப் பினர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்துவிடுமென்றும் பெல்காமுக்குப் பின்னும்கூடக் கூறப்பட்டு வந்தது. எல்லாரும் கூடி முயற்சி செய்தால் சர்க்கா சுற்றுபவர்கள் ஏராளமாகிவிடு வார்களென்றும், மேலும், உறுப்பினர்களின் தொகை குறைந்து போனுலும்கூட எஞ்சியிருப்பவர்கள் மிகவும் உறுதிப்பாடு உள்ள வர்களாகவும் சிறப்பாக வேலை புரிபவர்களாகவும் இருப்பார் களென்றும், அவர்களின் மீது முழு நம்பிக்கை பூண்டிருக்கலா மென்றும் காந்திஜீ எதிர்பார்த்தார். ஆனுல் இந்த ஆசை நிறை வேறவில்லை. பெரு முயற்சி செய்த பின்னும்கூடக் காங்கிரஸின்

உறுப்பினர்களின் தொகை மிகவும் குறைந்துவிட்டது. காந்திஜீ இதைக் கண்டு மனம் கலங்கினர். சுயராஜ்யக்கட்சிக்காரர்கள் வேண்டுமென்று விரும்பினுல், தாம் அவர்களுக்கு இந்த நிபந்தனையிலிருந்து விடுதலை அளித்துக் காங்கிரஸில் அங்கத்தினராவதற்கு நூலைத்தான் கட்டணமாகக் கொடுக்க வேண்டுமென்று இப்போதிருக்கும் நிபந்தனையை மாற்றி, நூலாவது நாலணுவாவது கொடுக்கலாமென்று அமைத்து, அந்தத் திருத்தத்தை காங்கிரஸையும் ஏற்றுக்கொள்ளச் செய்வதாகக் காந்திஜீ முன்வந்தார். ஆனல் நூலைப்பற்றிய பேச்சை முற்றிலுமே நீக்கிவிடவோ, மேலும், சிலர் விரும்பியபடி, கதர் அணிய வேண்டுமென்ற நிபந்தனையை அறவே ஒழித்துவிடவோ அவர் ஒத்துக்கொள்ளத் தயாராயில்லை. அவர் பண்டித் மோதிலால்ஜீயுடன் இதைப்பற்றிப் பேசினர். அதன்மேல், விதிமுறைகளில் மீண்டும் சில திருத்தங்களைச் செய்வதென்று முடிவு செய்யப்பட்டது. மேலும், காதிக்காக இப்போது ஒதுக்கப்பட்டிருந்த பணத்தைக் காதி வேலைக்கே செலவிட வேண்டுமென்றும், காதி பிரசாரத்திற்காகத் தனியாக ஒரு சங்கத்தை நிறுவ வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. அச்சங்கம் காங்கிரஸின் ஓர் அங்கமாக இருப்பினும் அது தனிப்பட்டதாக இருப்பதென்றும், அதே போலச் சுயராஜ்யக் கட்சிக்கும் காங்கிரஸின் அரசியல் துறை வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு முழு உரிமையை அளித்து விடுவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

சில நாட்களுக்குப் பிறகு மகாத்மாஜீ வங்காளத்திலிருந்த வேலையை முடித்துக் கொண்டு பீகாரில் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தார். பீகாரின் சுற்றுப் பிரயாணம் சோட்டா நாகபுரியிலிருந்துதான் தொடங்கியது. பீகார் மாகாண அரசியல் மகா நாட்டின் ஆண்டு விழா அந்த ஆண்டில் புரலியாவில் ஷா முகம்மது ஜுபைரின் தலைமையில் நடைபெறுவதாக இருந்ததே இதற்கு முக்கிய காரணம். அங்கிருந்தவர்கள் மிக்க உற்சாகத்துடன் ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். மாகாண மகாநாட்டின் விழா இதுவரையில் சோட்டா நாகபுரியில் நடந்ததில்லை. இப்போதுதான் அங்கு முதன் முதலாக நடந்தது. மகாத்மாஜீயும் அங்கு எழுந்தருள வேண்டுமென்று அவர்கள் மிகவும் ஆசைப்பட்டார்கள். காந்திஜீயும் இதற்கு ஒத்துக் கொண்டார். அதனுல் அவருடைய யாத்திரை அங்கிருந்தே தொடங்கியதென்று கூறலாம். இதற்கு முன் ஒருமுறை மகாத்மாஜீ ஜம்சேத்பூருக்கு வந்திருக்கிருர். அங்கே உள்ள தொழிலாளர்களை

ஐக்கியப்படுத்துவதில் தேசபந்துதாஸ் அதிக ஊக்கம் காட்டி வந்தார். ஒரு தொழிலாளர் சங்கமும் நிறுவப்பட்டது. ஆனல் இதுவரையில் டாட்டா கம்பெனியார் அதை ஏற்றுக்கொள்ள வில்லை. இந்தச் சமயத்தில், தேசபந்து தாஸுக்குப் பிறகு ஸ்ரீ தீனபந்து ஆண்டுரூஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந் தார். கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ டி. ஆர். டாட்டா வும் அங்கு வந்து சேர்ந்தார். கம்பெனியின் சார்பிலிருந்து மகாத்மாஜீக்குச் சிறந்த வரவேற்பு அளிக்கப்பட்டது. நானும் மகாத்மாஜீயுடனிருந்தேன். அவர் அங்கே இரண்டு நாட்கள் தங்கியிருந்து தொழிற்சாலை முழுவதையும் நன்ருகப் பார்வை யிட்டார். டைரக்டர்களுடனும் பேச்சு வார்த்தை நடத்தினர். இதன் பலனுகை டாட்டா கம்பெனியார் தொழிலாளர் சங்கத்தை அங்கீகரித்துக் கொண்டார்கள். மேலும் தொழிலாளர்களின் சம்பளத்திலிருந்து அச்சங்கத்தின் கட்டணத்தைப் பிடித்துத் திரட்டிக் கொடுப்பதாகவும் வாக்களித்தார்கள். மற்றக் குறைகளை யும் நீக்கிவிட்டார்கள். எல்லாவிதத்திலும் இப்பிரயாணம் மிகவும் பயனுடையதாக அமைந்தது.

புரலியா மகாநாடு மிகவும் சிறப்பாக நடந்தது. மகாத்மாஜீ பம்பாய்ப் பக்கத்திலிருந்து வந்து சேர்ந்தார். அவரை நாங்கள் சீனீ ஸ்டேஷனில் ரயில் வண்டியிலிருந்து இறக்கிவிட்டு நேரத் தைச் சேமிப்பதற்காக அவரைப் புரிலியாக்கு ஒரு ஸ்பெஷல் டிரெயினில் அழைத்துச் சென்ருேம். மகாநாட்டுடன் ஒரு சிறந்த கண்காட்சி அமைக்கப்பட்டிருந்ததும், அதை மகாத்மாஜீ திறந்து வைத்ததும்தாம் அம்மகாநாட்டின் சிறப்பான நிகழ்ச்சிகளாகும். மகாநாட்டை முடித்துக் கொண்டு காந்திஜீ சோட்டா நாகபுரியைச் சுற்றிவரப் புறப்பட்டார். மாகாணம் முழுவதையும் அவர் சுற்றி வருவாரென்று நாங்கள் எதிர்பார்த்தோம். அவருக்காக வகுக்கப் பட்டிருந்த யாத்திரைத் திட்டம் மிகவும் கடுமையாக இருந்தது. ஆனல் முன்னமே மாதக்கணக்காகச் சுற்றி வந்து கொண்டிருந் ததால் கேடுற்றிருந்த அவருடைய உடல் நிலை இப்போது இதைத் தாங்க முடியவில்லை. யாத்திரையை நாங்கள் இரண்டு கூருகப் பிரித்துப் போட்டிருந்தோம். முதல் பகுதியில் சோட்ட நாகபுரி பிரயாணத்தையும் மற்றதில் பீகாரின் மற்றப் பாகங்களின் பிரயாணத்தையும் அமைத்திருந்தோம். சோட்டா நாகபுரியின் யாத்திரையை முடித்துக் கொண்டு பட்னுவில் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் கூட்டத்திற்காகச் சில நாட்கள் தங்கிப் பிறகு மற்ற ஜில்லாக்களுக்கு அவர் செல்வதாக இருந்தது. சோட்டா

நாகபுரியின் யாத்திரையினுலேயே மகாத்மாஜீ மிகவும் களைத்துப் போய்விட்டார். கடைசி நாள், ஹஜாரிபாக் ஜில்லாவில் வேலை யை முடித்துக் கொண்டு கோடர்மா ஸ்டேஷனில் ரயில் ஏறிக் கொண்டிருக்கும்போது அவர் மூர்ச்சையாகி விட்டார். நானும் அவருடனிருந்தேன். கும்பலைத் தடுப்பது கடினமாயிருந்தது. அவருடைய உடல்நிலை எவ்வளவு அதிகமாகக் கேடுற்றிருந்தது என்பதைப் பற்றி அதுவரையில் எங்களுக்குச் சரிவரத் தெரியாது. இப்போதுதான் விளங்கிற்று. எஞ்சிய வேலைத் திட்டத்தை நாங்கள் சிறிது காலத்திற்கு நிறுத்தி வைத்திருந்தோம். மகாத் மாஜீ இளைப்பாறுவதற்காக அவரைப் பட்னுவில் கங்கைக் கரையிலிருந்த ஒரு வீட்டில் சில நாட்கள் தங்க வைப்பதாக முடிவு செய்தோம். அதனுல் அவருக்கு மிக்க நலமுண்டாயிற்று. பீகாரின் மக்கள் எல்லா இடங்களிலிருந்தும் வந்து அவரைக் கண்டு சென்று கொண்டிருந்தார்கள்.

அதே சமயத்தில் அகில பாரதீயக் குழுவின் இருக்கையும் பட்னுவில் நடந்தது. அதில் காங்கிரஸ் விதிமுறைகளைத் திருத்தி மேற்கூறிய மாறுதல்களைச் செய்யவேண்டுமென்று முடிவு செய்யப் பட்டது. காங்கிரஸின் அரசியல் வேலைத் திட்டம் முழுவதையும், கவுன்ஸிலுக்குத் தேர்தல் உள்பட, சுயராஜ்யக் கட்சியே நடத்த லாமென்றும் அனுமதி அளிக்கப்பட்டது. காங்கிரஸின் சார்பில் அபேக்ஷகர்களை நிறுத்துவதையும் தேர்தலுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதையும் சுயராஜ்யக் கட்சியின் தலைவர் பண்டித் மோதிலால் நேருவின் கையில் விட்டு விடுவதற்கு அனுமதி அளிக் கப்பட்டது. காதி பிரசார வேலையில் போடப்பட்டிருந்த பணத் தைக் காங்கிரஸுடன் தொடர்பு கொண்டதும், ஆயினும் தற் பொறுப்பும் உரிமையும் கொண்டதுமான ஒரு நிலையத்தின் கையில் ஒப்படைப்பதென்றும் அங்கே முடிவு செய்யப்பட்டது. இவ்வண்ணமாக அகில பாரதீயச் சர்க்கா சங்கம் பிறந்தது. அதன் நடைமுறை விதிகளைக் காந்திஜீயே அமைத்துக் கொடுத் தார். அதற்குப் பல வாழ்நாள் காப்பாளர்களும் (டிரஸ்டி) செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களும் நியமிக்கப்பட்டார்கள். அவர்களுள் நானும் ஒருவன். அச்சங்கத்திற்கு மகாத்மாஜீ தலைவரானர். ஒவ்வொரு மாகாணத்தின் வேலையை மேற்பார்வை யிடுவதற்காகக் காரியஸ்தர்களும் நியமிக்கப்பட்டார்கள். அவர் களுக்கு உதவி புரிவதற்காக மாகாண அமைச்சர்களும் நியமிக் கப்பட்டார்கள். பீகாருக்கு நான் காரியஸ்தனுக நியமிக்கப் பட்டேன். ஐக்கிய மாகாணத்திற்குப் பண்டித் ஜவாஹர்லாலும்,

வங்காளத்திற்கு ஸ்ரீ சதிஸ் சந்திரதாஸ் குப்தாவும், தமிழ் நாட்டிற்கு ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரும் நியமிக்கப்பட்டார்கள். இவ்விதமாக இச்சங்கம் ஒரு வகையில் தற்பொறுப்பும் அதிகாரமும் கொண்டதாய்க் காதி பிரசார வேலையை ஆற்றத் தொடங்கியது. இது சென்ற பதினேழு பதினெட்டு ஆண்டுகளில் காதி பிரசாரத்திற்கும் அதன் மேம்பாட்டிற்கும் சிறந்த பணி ஆற்றி வந்திருக்கிறது. இத்தனை காலத்தில் அது கோடிக்கணக்கான ரூபாயை ஏழைகளுக்கு, முக்கியமாக வேறு எந்த வேலையும் செய்ய இயலாத ஏழைப் பெண்களுக்குக் கூலியாக வழங்கியிருக்கிறது.

காங்கிரஸானது தேர்தலில் போட்டியிடுமென்று நிச்சயமானதும் பண்டித்ஜீ என்னைப் பார்த்து "நீ தான் பீகாரின் பொறுப்பை ஏற்றுச் சமாளிக்க வேண்டும்" என்று கூறினார். அதைப் பற்றிக் கவலைப்படவேண்டாமென்று நான் அவருக்கு வாக்குக் கொடுத்தேன்.

அதற்குச் சில நாட்களுக்குப் பிறகு கவுன்ஸில் ஆவ் ஸ்டேட்டுக்குத் தேர்தல் நடந்தது. அதற்குப் பீகாரிலிருந்து முசல்மானியர் ஒருவரையும், முஸ்லீம் அல்லாதவர் மூவரைவும் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. முஸ்லீம் இடத்திற்காக ஷா முகம்மது ஜுபைரும், முஸ்லிம் அல்லாதவர்கள் இடங்களுக்கு ஸ்ரீமான்கள் ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா, அனுக்கிரகநாராயண் சின்ஹா, என் தமையனார், பாபூ மகேந்திர பிரசாத் ஆகியவர்களும் நிறுத்தப்பட்டார்கள். எதிரிகளுள் தர்பங்காவின் மகாராஜாதிராஜரும், டும்ராவின் மகாராஜா முதலானோரும் நின்றார்கள். தேர்தலில் மிகவும் பாடுபட்டு உழைக்க வேண்டியிருந்தது. ஏனெனில் வாக்காளர்கள் பணக்காரர்களான ஜமீன்தார்களும், லேவாதேவி செய்பவர்களும் வியாபாரிகளுமாக இருந்தார்கள். அவர்களுடைய எண்ணிக்கை அதிகமில்லையாயினும் அவர்கள் எல்லாரும் ஓர் இடத்திற்கு வந்து வாக்களிக்க வேண்டுமென்ற நிபந்தனையில்லை. அவர்கள் அரசாங்கத்தின் பெரிய அதிகாரி எவரிடமாவது சென்று அவர் முன்னிலையில் தம் பிரதிநிதி பத்திரத்தில் (பிராக்ஸி பத்திரம்) கையொப்பமிட்டு அதை அஞ்சலில் அனுப்பிவிடலாம். இதனால் அப்பத்திரங்களை அவர்களுக்கு வழங்குவதில் போட்டி வந்துவிட்டது. வாக்காளர்களிடம் அக்காகிதங்கள் போய்ச் சேர்ந்ததும் அவர்களிடமிருந்து அவற்றில் எவ்வளவு விரைவில் கையொப்பம் வாங்கி அவற்றைத் திருப்பிப் பெறக்கூடுமோ அவ்வளவுக்கு அதிகமாக வெற்றியை எதிர்பார்க்கலாம். ஒரிசாவும் பீகாருடன் அக்காலத்தில் இணைக்கப்

பட்டிருந்தது. அங்கும் வாக்குக்களைத் திரட்ட வேண்டியிருந்தது. எங்களுடைய முயற்சியால் ஷா ஜுபைர் சாஹபும், பாபூ அனுக்கிரக நாராயண் சின்ஹாவும் பாபூ மகேந்திரபிரசாதும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நான்காவது இடத்திற்குத் தர்பங்காவின் மகாராஜாதிராஜ் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஸ்ரீபாபு தோல்வியுற்றது எங்களுக்கு மிக்க வருத்தமாயிருந்தது. ஆனல் நாங்கள் அதைப் பற்றி ஒன்றும் செய்யமுடியவில்லை. இவையெல்லாம் 1925ஆம் ஆண்டு முடியுமுன்னே நடந்தேறியது.

## 65. சுயராஜ்யக் கட்சிக்குள் பிளவு: கான்பூர் காங்கிரஸ்

எல்லாக் கட்சிக்காரர்களும் காங்கிரஸில் வந்து சேருவதற்கு வாய்ப்பு அளிப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சியைப் பற்றி மேலே குறிப்பிடப் பட்டிருக்கிறது. மேலும், பெல்காம் காங்கிரஸுக்கு முன்னமே அகில பாரதீயக் குழுவானது வெளிநாட்டுத் துணிப்புறக்கணிப்பு நீங்கலாக மற்ற ஒத்துழையாமைத் திட்டங்களை யெல்லாம் நிறுத்தி விட்டதென்பதும் கூறப்பட்டது. அத்துடனேயே அது ஆக்கவேலையை வற்புறுத்தி வந்தது. காங்கிரஸின் சார்பில் அரசியல் துறைப்பணியை நடத்தும் பொறுப்பைச் சுயராஜ்யக் கட்சியிடம் விடப்பட்டாயிற்று. இதனல் மற்றக் கட்சிக்காரர்கள் காங்கிரஸில் வந்து சேர்ந்து கொள்வார்களென்று எதிர்பார்க்கப்பட்டது. பம்பாயில் நடந்த சர்வ கட்சி மகாநாட்டால் இந்த நம்பிக்கை மேலும் அதிகரித்தது. ஆனல் இந்த ஆசை நிறைவேறவில்லை. இது வருந்தத்தக்க விஷயமே. சர்வ கட்சி மகாநாடு அமைத்த கிளைக்குழு யாதொரு முடிவுக்கும் வரவில்லை. தன் தோல்வியை விளம்பரம் செய்து விட்டு அது வாளா யிருந்துவிட்டது. ஆயினும் அதற்குப் பின்னும்கூட எல்லாரும் ஒன்று கூடுவதைப் பற்றிப் பேச்சு ஏதாவதொரு வகையில் நடந்து கொண்டேயிருந்தது. மிதவாதக் கட்சிக்காரர்களுக்கும் ஜின்னு போன்றவர்களுக்கும் இரண்டு மூன்று விஷயங்களைப் பற்றிக் குறையிருந்தது. காங்கிரஸானது அந்தச் சமயத்தில் ஒத்துழையாமையை நிறுத்திப் போட்டு விட்டாலும்கூட அதனை முற்றிலும் என்றென்றைக்கும் கைவிடவில்லை யென்பது

ஒரு குறை. ஒத்துழையாமையும் சத்தியாக்கிரகத்தையும் காங்கிரஸ் கைவிடுவதென்பது ஆகாத பேச்சு. அதற்கு மாருக, அவற்றிற் காக ஆயத்தம் செய்யவேண்டுமென்று அது கூறி வந்தது. இந்த விஷயத்தில் மாறுதல் வேண்டாதாரும் சுயராஜ்யக் கட்சிக்காரர் களும் இருவருமே ஒரே மனமாயிருந்தார்கள். இவர்களுக்கிடை யில் கருத்து வேறுபாடு இதைப் பற்றி அன்று. நாட்டைத் தயார் செய்வதில் கவுன்ஸில்களின் மூலமாக உதவி கிடைக்குமா அல்லது இடைஞ்சல் உண்டாகுமா என்பதுதான் அவர்களுக்குள் ளிருந்த கருத்து வேறுபாடு. மாறுதல் வேண்டாதார் கவுன்ஸில் வேலைத் திட்டத்தைச் சத்தியாக்கிரகத்திற்கு இடைஞ்சலாகக் கருதினுர்கள். சுயராஜ்யக் கட்சிக்காரர்களோ கவுன்ஸில்களையும் நாட்டைத் தயார் செய்வதில் பயன்படுத்த விரும்பினுர்கள். காங்கிரஸாவனது காதி, சர்க்கா ஆகியவற்றின் பிரசாரத்தை முனைந்து செய்யாமலிருந்தும்கூடக் காதி அணிவதைக் (காங்கிர ஸின் வேலையில் ஈடுபட்டிருக்கும் வேளைகளில் மட்டுமாவது) கட்டாயமாக்கி விட்டதென்பது மற்ருெரு குறை. அது தன் உறுப் பினர்கள் நூல் நூற்பதைக் கட்டாயமாக்கிவிட்டது. காங்கிர ஸுக்கு வெளியேயிருந்தவர்களுக்குச் சர்க்காவிலும் நம்பிக்கை யில்லை. காதி அணிவதின் அவசியத்தையும் அவர்கள் உணர வில்லை. காங்கிரஸுக்கு உள்ளும் இக் கருத்துக் கொண்டவர்கள் சிலர் இருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் மகாராஷ் டிரத்தைச் சேர்ந்த சிலரே. ஆனுல் அவர்களுடைய எண்ணிக்கை குறைவே. காங்கிரஸானது கவுன்ஸிலின் வேலைப் பொறுப்பைச் சுயராஜ்யக் கட்சியின் கையில் ஒப்படைத்து விட்டதென்பது மூன்ருவது குறை. இதைக் கண்டு காங்கிரஸுக்கு வெளியிலிருந் தவர்கள் கலக்கமுற்ருர்கள். காங்கிரஸுக்கு வெளியிலிருந்தவர் பலர் கவுன்ஸில்களில் உறுப்பினராக இருப்பதைத் தமக்கு மிக்க பெருமையளிப்பதாகக் கருதினுர்கள். காங்கிரஸில் தாம் சேர்ந் தாலும்கூட இக்கவுன்ஸில்களில் தம் இடத்தை இழக்காமல் பாது காத்துக் கொள்ள முடியாதென்பதையும், மேலும் அங்கே தம் கொள்கைகள் எவ்விதத்திலும் செல்லாவென்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள். ஏனெனில் அங்கே சுயராஜ்யக் கட்சியின் கொள் கைதான் செல்லும். அந்த முட்டுக்கட்டை போடும் கொள்கை அவர்களுக்குப் பிடிக்கவில்லை. மந்திரி சபைகளில் எல்லோரும் பங்கெடுத்துக் கொண்டு அரசியல் அமைப்புச் சட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற கொள்கையை அவர்கள் ஆதரித்தார்கள். இதனுல் மற்றக் கட்சிக்காரர்கள் காங்கிரஸில்

வந்து சேருவார்களென்று சில சமயங்களில் தளிர்த்த கொஞ்ச நஞ்சம் நம்பிக்கையும் இந்த அடிப்படையான கருத்து வேறுபாடுகளினுல் வாடி வதங்கிவிட்டது. 1925 டிசம்பரில் பட்னுவில் நடந்த அகில பாரதீயக் குழுவானது சுயராஜ்யக் கட்சியின் கையிலேயே காங்கிரஸை ஒரு விதமாக ஒப்படைத்துவிட்டது. இதனுல் வெளியிலிருந்தவர்கள் காங்கிரஸில் சேருவது மேலும் கடினமாகிவிட்டது.

சுயராஜ்யக் கட்சிக்குள், முக்கியமாக சட்டசபையில், அதற்குப் பெரும்பான்மை பலம் கிடைத்திருந்த மத்திய பிரதேசத்தில், தேசபந்துதாஸின் கடைசி நாட்களிலிருந்தே மந்திரி சபை அமைப்பதைப்பற்றிக் குசு குசு வென்று பேச்சு நடக்கத் தொடங்கியதென்று மேலே கூறியுள்ளேன். அவருடைய சாவுக்குச் சில நாட்களுக்குப்பின் அங்கிருந்தவர்களில் சிலர் மந்திரி பதவியை ஏற்பதற்கு உடன்பாடாக இருந்தார்கள் என்பது வெளிப்படையாயிற்று. அங்கே இன்னும் மந்திரி சபையை அமைக்க முடியாவிட்டாலும்கூட, சுயராஜ்யக் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த ஒரு முக்கியமான மனிதர், ஸ்ரீ தாம்பே என்பவர், அப்பிரதேசத்தின் கவர்னரின் நிர்வாகக் குழுவின் அங்கத்தினர் பதவியை ஏற்றுக் கொண்டுவிட்டார். அப்படிச் செய்வதற்கு முன் அவர் தம்முடைய தோழர்களின் சம்மதத்தையாவது அல்லது கட்சியின் சம்மதத்தையாவது பெறவுமில்லை, ராஜிநாமாவும் செய்யவில்லை. இதனுல் கட்சியில் மிக்கக் கலவரம் உண்டாயிற்று. பண்டித் மோதிலால்ஜீக்குக் கடுமையான கோபம் வந்தது. மகாராஷ்டிரத்திலிருந்து ஸ்ரீ நிருசிம்ம சிந்தாமணி கேஸ்கர் என்பவர் ஸ்ரீ தாம்பேயை ஆதரித்தார். ஸ்ரீ ஜயகர் அவரை ஆதரிக்காவிட்டாலுங்கூட பதவி ஏற்பதைப் பொதுவாக ஆதரித்தார். மத்திய பிரதேசத்தில், ஸ்ரீ அபயங்கர் இதைக் கடுமையாக கண்டித்தார். டாக்டர் முஞ்சேக்கும் ஸ்ரீ அபயங்கருக்கும் கடுமையான அபிப்பிராய பேதம் வந்துவிட்டது. இவர்கள் எல்லாரும் சுயராஜ்யக் கட்சியின் முக்கிய மனிதர்கள். இந்த அக்கப்போர் மிகவும் வலுத்துவிட்டது. மகாராஷ்டிரத்தில் ஸ்ரீஜயகரும் பிரதியுபகாரத்தை நாடி ஒத்துழைக்கலாமென்பதைப் பிரசாரம் செய்யத் தொடங்கிவிட்டார். பண்டித் மோதிலால் நேரு தம் கட்சியின் முட்டுக்கட்டை போடும் கொள்கையில் நிலைபெயருது நின்று அதைப் பிரசாரம் செய்துவந்தார்.

இப்ப்டியாகக் கருத்து வேறுபாடு' நிலவிவந்த காலத்தில்

கான்பூரில் காங்கிரஸ் நடந்தது. ஸ்ரீமதி சரோஜினி நாயுடு தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஓராண்டுக்கு முன்பு தான் அவர் தென் ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்திருந்தார். அங்கே அவர் சிறந்த பணி புரிந்து பெரும் புகழ் பெற்றிருந்தார். காந்திஜீயின் பேச்சு ஏறியிருந்தால் அவர் பெல்காம் காங்கிரஸுக்கே தலைவராகி இருப்பார். ஆனால் மக்களின் கோரிக்கைக்கு இணங்கி காந்திஜீயே அப்பதவியை ஏற்றுக் கொண்டார். ஆயினும், பெல்காம் காங்கிரஸுக்கு முன்னிருந்தே, கான்பூர் காங்கிரஸ் நடக்கும்போது அந்த உயர்ந்த பதவிக்கு சரோஜினி தேவியாரையே தேர்ந்தெடுப்பதென்று மக்கள் மனத்தில் நிச்சயித்துவிட்டார்கள்.

சுயராஜ்யக் கட்சியிடமே கான்பூர் காங்கிரஸின் நடவடிக்கையை ஒப்படைத்ததே அக்காங்கிரஸுக்கு அமைந்த தனிச் சிறப்பாகும். இதனால் பண்டித் மோதிலால்ஜீயின் யோசனையின் பேரில் செயலாற்றுக் குழுவானது விஷயாலோசனைக் குழுவின் முன் சமர்ப்பிப்பதற்காக ஒரு தீர்மானத்தைத் தயார் செய்தது. தென் ஆப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு விரோதமாகப் புதிதாக அமைக்கப்பட்ட சட்டங்கள் அத்தீர்மானத்தின் மூலமாக எதிர்க்கப்பட்டன. மற்றொரு தீர்மானத்தின் மூலமாகப் பர்மாவில் இந்தியர்களுக்கு விரோதமாகச் செய்யப்பட்டு வந்த நடவடிக்கைகள் கண்டிக்கப்பட்டன. ஆனால், எல்லாவற்றையும் விட மிகப் பெருமை வாய்ந்த தீர்மானம் கவுன்ஸில்களைப்பற்றிக் கொண்டு வரப்பட்டதுதான். சுயராஜ்யம் வேண்டுமென்று நாட்டில் எழுந்த கோரிக்கையைப் பிரிட்டிஷ் அரசாங்கமானது ஏற்றுக் கொண்டு மத்திய சட்ட சபையில் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி, அதன்படி அரசியல் திட்டம் ஒன்றை அமைக்கவேண்டுமென்று அதில் கூறப்பட்டிருந்தது. இப்படிச் செய்வதற்கு விருப்பமின்மையை அவர்கள் அறிவித்தாலோ அல்லது பிப்ரவரி கடைசிக்குள் இதைப்பற்றி ஒன்றும் கூறுவிட்டாலோ, அல்லது அவர்கள் செய்ததாவது கூறியதாவது திருப்திகரமாக இல்லாவிட்டாலோ அப்போது அக்கவுன்ஸில்களிலிருக்கும் சுயராஜ்யக் கட்சி அங்கத்தினர்கள் வாக்குமூலம் ஒன்றை வெளியிட்டு விட்டு அங்கிருந்து வெளியேற வேண்டுமென்றும், மேலும், மீண்டும் காங்கிரஸ் ஆணையிடாதவரையில் திரும்பிச் செல்லக் கூடாதென்றும், அந்த இடைக்காலத்தில் ஆக்கவேலைத் திட்டத்தில் ஈடுபட்டிருக்க வேண்டுமென்றும் அந்தத் தீர்மானத்தில் கூறப்பட்டிருந்தது. இதை எதிர்த்தவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

1926 ஜனவரி முதல் மார்ச்சு முடிய நடக்கப்போகும் இருக்கை தான் மாகாண சட்டசபைகளுக்கும் மத்திய சட்டசபைக்கும் 1926இல் நடைபெறவிருக்கும் தேர்தலுக்கு முந்திய இறுதிக் கூட்டம் என்றும், ஆகையால் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் சட்ட சபையை விட்டு வெளியேறினால் மீண்டும் சென்று அதில் கலந்து கொள்ள முடியாதென்றும், ஆதலால் அப்படி வெளி யேறுவது சிறப்பான காரியமாகாதென்றும், என்றைக்குமே திரும்பிப் போவதில்லையென்று வெளியேறினால் அது வேறு பேச்சென்றும் அவர்கள் கூறினர்கள்.

எது எவ்வாறாயினும் சரி, காங்கிரஸ் இப்படித்தான் முடிவு செய்தது. கைம்மாறு கருதி ஒத்துழைக்க வேண்டுமென்றவர்கள் இதற்கு வேறு பொருள் கொண்டார்கள். அதாவது ஒத்துழை யாமையானது மீண்டும் காங்கிரஸ் வேலைத் திட்டத்தில் புக ஆரம்பித்து விட்டதென்றும், மேலும் இந்த நிலைமையில் தம் வேலைத்திட்டம் நடக்காதென்றும் அவர்கள் வியாக்யானம் செய் தார்கள். அதனால் ஸ்ரீ ஜயகரும், ஸ்ரீ கேஸ்கரும், டாக்டர் முஞ்சே யும் கவுன்ஸிலிலிருந்து ராஜீநாமா செய்துவிட்டுப் பிரிந்துபோய் விட்டார்கள். அவர்கள் பிரதியுபகாரத்தைக் கருதி ஒத்துழைப் பவர்களைச் சேர்த்துக் கொண்டு ஒரு புதிய கட்சியை அமைத் தார்கள். கவுன்ஸிலில் புகுவது என்று முடிவு செய்துவிட்டபின் அங்கே சென்று ஒரு அரசியல் அமைப்பைப் பின்பற்றிச் செய்யக் கூடிய வேலையைச் செய்யவேண்டுமென்றே நான் முதலில் இருந்தே கருத்துக் கொண்டிருந்தேன். முட்டுக்கட்டை கொள்கை என்றுமே எனக்குப் புரியவில்லை. இச்சமயத்திலும் நான் அதே கருத்துக் கொண்டிருந்தேன். சுயராஜ்யக் கட்சியார் கவுன்ஸிலில் புகுந்திருந்ததால், அவர்கள் அங்கே பணி ஆற்றத்தான் வேண்டும், முட்டுக்கட்டை மட்டும் போடுவதோடு நிற்கக் கூடா தென்றே நினைத்தேன். ஆயினும், அதில் புகுதல் பயனற்ற தென்பதையும் நான் கூடவே உணர்ந்தேன். ஏனெனில் 1920இன் அரசியல் அமைப்பின்கீழ் நமக்குக் கிட்டிய அதிகாரமானது சற் றேனும் திருப்தி அளிப்பதாக இல்லை. கவுன்ஸிலுக்குச் செல்வ தால் நாட்டில் புத்திமாருட்டம் விளைவிப்பதைத் தவிர வேறு எப் பலனும் உண்டாகாது. ஒத்துழையாமைக் கிளர்ச்சியானது மக்களின் எண்ணத்தின் ஓட்டத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத் தாரிடமிருந்தும் அவர்களுடைய நிலையங்களிடமிருந்தும் மடக்கித் திருப்பி தன்னால் நிறுவப்பட்ட ஸ்தாபனங்களின் பக்கம் ஈர்க்க விரும்பியது. இவ்விதமாக ஆக்க வேலையில் விழிப்பை உண்டாக்க

விரும்பியது. கவுன்ஸிலில் புகுதலாவது இந்த ஓட்டத்தை மீண்டும் அரசாங்க நிலையங்களின் பக்கம் திருப்ப விரும்பியது. இதனால் அங்குச் செல்வது நன்மையைப் பயக்காதென்றே எனக்குப் புலப்பட்டது. ஆனால் எவருக்காவது அங்குச் செல் வதே பிடித்தமாயிருந்தால், அவர் அங்குக் கிடைக்கக்கூடிய சிறிய லாபத்தை நாட்டிற்கே பயன்படுத்த வேண்டும். கவுன்ஸி லுக்குச் செல்ல எவருமே முன்வராவிட்டால் தான் கவுன்ஸிலுக்கு வெளியேயிருந்து கொண்டு ஒத்துழையாமையைச் செய்ய முடியு மென்று சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் நினைத்தார்கள். அவ்வித மாக நிகழ்வதற்கு வழியில்லை. மற்றொரு விதமான ஒத்துழை யாமையைச் சட்டசபைக்கு உள்ளிருந்து கொண்டே செய்யலாம். அதாவது, முட்டுக் கட்டைபோட்டு அரசியல் வண்டியைச் செல்ல விடாமல் தடுத்துவிடலாம். அப்படித்தான் சுயராஜ்யக் கட்சிக் காரர்கள் செய்தார்கள். வங்காளத்திலும் மத்திய பிரதேசத்தி லும் மந்திரி சபை நடக்கமுடியவில்லை. கவர்னரே மந்திரிகளின் அதிகாரத்தைத் தம் கையில் ஏற்க வேண்டிவந்தது. மத்திய சட்டசபையில் சுயராஜ்யக் கட்சிக்குப் பெரும்பான்மை பலம் இல்லாவிட்டாலுங்கூடச் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் மற்றக் கட்சிகளைச் சேர்த்துக்கொண்டு வரவு செலவுத் திட்டத்தை ஏற்கப் படாமல் செய்துவிட்டார்கள். வைசிராய் அதனைத் தமது விசேஷ அதிகாரத்தின் மூலம் ஏற்கவேண்டி வந்தது. இப்படியாக முட்டுக் கட்டைக் கொள்கையினால் என்னென்ன செய்யக் கூடுமோ அவற்றையெல்லாம் அவர்கள் செய்து காட்டினார் கள். நாட்டார் மனத்திலும் இது நன்றாகப் பதிந்தது.

இது நிற்க, நானோ கவுன்ஸில் புகுவதற்கு விரோதமாக இருந்தேன். இந்நிலையில், அங்கே என்ன முறை கையாளப்பட வேண்டுமென்பதை நிர்ணயம் செய்வதற்கு எனக்குத் தகுதி யில்லை. அங்கே எவர்கள் சென்றார்களோ அவர்களே இதை நிர்ணயிக்க வேண்டுமென்று நான் என் மனத்தில் முடிவு செய்து விட்டேன். அவர்களுடைய அபிப்பிராயப்படி காங்கிரஸ் எந்தக் கொள்கையை ஏற்றுக் கொள்கிறதோ அதையே நானும் ஏற்க வேண்டும். அக்கொள்கையை நிறைவேற்றுவதற்கு என்னால் இயன்ற உதவியை அளித்தாக வேண்டும் என்று நான் நினைத் தேன். காந்திஜீ இவ்வளவு தூரம் செய்யத் தயாராயில்லை போலக் காணப்பட்டது. ஏனெனில், சுயராஜ்யக் கட்சியின் கருத்துக்கிணங்க காங்கிரஸானது கவுன்ஸிலைப் புறக்கணிப் பதைக் கைவிட்டாலும்கூட அது எவரையும் கவுன்ஸில் தேர்தலில்

வாக்கு அளிக்கும்படியோ வேறுவிதமாக உதவி புரியும்படியோ கட்டாயப் படுத்தாதென்று அவர் கூறிவிட்டார். நான் இதை விடச் சிறிது மேற்சென்றேன். காங்கிரஸானது கவுன்ஸில் புகுதலை ஒட்டிய வேலையைத் தன் கையில் எடுத்துக் கொண்டு விட்டால், பிறகு என்னுடைய கருத்து எதுவாயிருப்பினும் நான் அந்த வேலை வெற்றிகரமாவதற்கு என்னுலான உதவியைச் செய்தே ஆகவேண்டுமென்று கருதினேன். இந்தக் கொள் கையை ஒட்டி நான் வேலையும் புரிந்தேன். தேர்தல் வேலையில் என் ஆற்றல் முழுவதையும் செலுத்தி நிறைய ஓடியாடி அலைந்து பாடுபட்டு வந்தேன்.

கான்பூரில் சுதேசிக் கண்காட்சி நடந்தது. அங்கு ஹிந்துஸ் தானி சேவா தல்லின் சிறந்த கிளை ஒன்றிருந்தது. காங்கிரஸ் பந்தலில் யாரோ தீவைக்கப் போகிருர்கள் என்ற செய்தி ஒரு நாள் பரவியது. சேவா தல் தொண்டர்கள் டாக்டர் ஹர்டிகரின் தலைமையில் காவல் அமைத்தார்கள். விழா வெற்றிகரமாக யாதொறு இன்னலின்றி முடிந்தது. அங்கே மற்ரெரு சம்பவ மும் நடந்தது. அஜ்மீரைக் காங்கிரஸானது ஒரு மாகாணமாக ஏற்றிருந்தது. காங்கிரஸின் அமைப்புத் திட்டத்தில் அதுவும் மற்ற மாகாணங்களைப் போலப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்ப தற்கு உரிமை பெற்றிருந்தது. அங்கே நடந்த காங்கிரஸ் பிரதி நிதிகள் தேர்தலைப் பற்றிச் சில குறைகள் கூறப்பட்டன. அத ஞல் அங்கே நடந்த தேர்தலைச் செயலாற்றுக் குழு ஒதுக்கித் தள்ளிவிட்டது. அதஞல் சிலர் ஏதோ கலவரம் செய்தார்கள். காங்கிரஸ் பேரவைக்குள் பலவந்தமாக நுழைய வந்தார்களா அல்லது வேறு யாரும் அங்குச் செல்லாமல் தடுக்க முயன்ருர் களா என்பது இப்போது நினைவில்லை. இந்த நொய்மையான நிலையிலும் சேவா தல் உதவிபுரிய வேண்டியிருந்தது.

# 66. காங்கிரஸில் ஒரு சுதந்திரக் கட்சி

காங்கிரஸ் முன்பு செய்திருந்த முடிவின்படி, மார்ச்சு மாதத்தில் அரசாங்கத்தாரிடமிருந்து திருப்திகரமான விடை எதுவும் கிடைக்காமல் போனதும், மாகாண சட்டசபைகளிலும் மத்திய சட்டசபையிலும் இருந்து சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் வெளியேற வேண்டுமென்று அகில பாரதீயக் குழுவானது கட்டளையிட்டது. அவர்கள் அப்படியே ஒரு குறிப்பிட்ட தேதியில் வெளியேறினுர்கள். சுயராஜ்யக் கட்சிக்குத் தலைவரான பண்டித் மோதிலால்ஜீ மத்திய சட்டசபையில் ஒரு சொற்பொழிவு ஆற்றி, அதில் இவ்விதமாக முடிவு செய்ததற்குக் காரணங்களை எடுத்துக் கூறி அம்முடிவை ஆதரித்துப் பேசினுர். அதே போல மற்ற மாகாண சட்டசபைகளிலும் அங்குள்ள தலைவர்கள் செய்தார்கள். எல்லாச் சட்டசபைகளில் இருந்தும் சுயராஜ்யக் கட்சி வெளியேறிவிட்டது. அப்படி வெளியேறினவர்கள் தம் பொழுதை ஆக்க வேலையிலும் காங்கிரஸின் கொள்கையைப் பற்றியும் அதன் வேலைத் திட்டத்தைப் பற்றியும் பிரசாரம் செய்வதிலும் கழிப்பார்கள் என்று நிச்சயிக்கப்பட்டது. சிலர் அப்படியே செய்தார்கள். ஆனுல், பலர், தம்முடைய மனம் போன வேலைகளிலேயே ஈடுபட்டிருந்தார்கள். இந்த ஆண்டின் இறுதியில் புதிய தேர்தல் நடைபெற இருந்தது. இதற்கிடையில் சில துக்கமான சம்பவங்கள் நடந்து விட்டன. அவற்றை இங்குக் குறிப்பிடுவது அவசியமாகும்.

ஹிந்து-முஸ்லிம் சண்டைகள் எத்தனையோ ஆண்டுகளாக நடந்து கொண்டிருந்தன. ஹிந்து சபாவும், ஆரிய சமாஜ்காரர்களும் சுத்தி, ஆசாரக் கட்டுப்பாடு ஆகியவற்றைப் பற்றிப் பிரசாரம் செய்து வந்தார்கள். முசல்மானியர்கள் மதமாற்றுவதைப் பற்றியும் இன ஒற்றுமையைப் பற்றியும் கிளர்ச்சி செய்து வந்தார்கள். இதனுல் இரு வகுப்பினர்களுக்கிடையில் மனக் கசப்பு வளர்ந்து பெருகிவிட்டது. கோஹாட்டின் கலகத்தைப் பற்றிக் கூறியிருக்கிறேன். மேலும், மகாத்மாஜீயை அங்குச் செல்ல விடாமல் அரசாங்கத்தார் தடுத்துவிட்டார்கள் என்பதையும் கூறியிருக்கிறேன். பிறகு மகாத்மாஜீயும் மௌலானு ஷௌகத் அலீயும் இதைப்பற்றி விசாரணை செய்வதற்காக ராவல்பிண்டிக்குச் சென்ருர்கள். அதற்கு மேலே செல்வதற்கு அனுமதி கிடையாது. இதனுல் அங்கேயே மக்களை வரவழைத்துக் கூடியவரையில் விசா

ரணை நடத்தப்பட்டது. சில விஷயங்களில் இருவருக்கும் கருத்து ஒற்றுமை உண்டாக முடியவில்லை. தனித்தனி அறிக்கைகள் அச்சிடப்பட்டு வெளிவந்தபோதுதான், எத்தனையோ ஆண்டுகளாக ஒரே கருத்துக் கொண்டு ஒத்துழைத்து வந்த இவ்விருவருக்கும் கூட இந்த விஷயத்தைப் பற்றி ஒற்றுமை உண்டாகவில்லையென்பது தெரியவந்தது. "இந்தக் கருத்து மாறுபாட்டிலிருந்து எங்கள் இருவருக்கிடையில் உள்ள உறவிலாவது நடத்தையிலாவது ஏதாவது மாறுதல் உண்டாகிவிட்டதாக மக்கள் நினைத்துக் கொள்ளக்கூடாது" என்று மகாத்மாஜீ தம் பண்பு முறைப்படி இதைப்பற்றி எழுதினர். "அதற்கு மாருக, இவர்கள், 'ஆமாம், சரி, சரி' என்று ஒத்து ஊதுபவர்கள் அல்லர் என்பதையும், எப்போதாவது இவர்களும் கருத்து மாறுபாடு கொள்ளக் கூடியவர்கள் என்பதையும் மக்கள் புரிந்துகொள்ள வேண்டும்" என்று அவர் கூறினர். இச் சான்ருேர் இருவர்களுடைய பரஸ்பர பாவனையில் மாறுபாடு உண்டாகாவிட்டாலும் கூட நாட்டில் இந்த விஷயத்தைப் பற்றி நல்ல அபிப்பிராயம் உண்டாகவில்லை. இச்சிக்கல் மிகவும் கடுமையாகிக் கொண்டு வந்தது. அரசியல் விஷயங்களில் கருத்து மாறுபாடு முன்னமே தொட்டு இருந்தது. மகாத்மாஜீ அரசியல் வேலைகள் எல்லாவற்றிலிருந்தும் ஒரு விதமாக விலகியே விட்டார். எப்படியோ அவர் கான்பூர் காங்கிரஸ் வரையில் வேலை செய்து வந்தார். அதற்குப் பின், வைத்தியர்கள் யோசனைப்படி, அவர் ஓராண்டு வரையில் சபர்மதியிலேயே தங்குவதென்பதாக முடிவு செய்துவிட்டார். அங்கிருந்து கொண்டு ஆச்ரமத்தையும் காதி வேலையையும் நன்ருக அமைப்பதில் ஈடுபட்டுவிட்டார். மகாத்மாஜீ மிகவும் மனம் நொந்து தனியாகப் போய்விட்டார் என்பதை உணர்ந்த சிலர் அவர் மீண்டும் தலைமையை ஏற்க வேண்டுமென்று வற்புறுத்தினர்கள். ஆனல் அது முடியவில்லை. சபர்மதியில் தொண்டு புரிவது தம் உடல்நலத்திற்கும் நாட்டிற்கும், இரண்டிற்குமே, நன்மையைப் பயக்குமென்று காந்திஜீ கருதினர். இதனல் அவர் தாம் செய்த முடிவிலிருந்து பெயரவில்லை.

ஹிந்து-முஸ்லிம் சண்டைகள் பெருகிக் கொண்டு வந்தன. கல்கத்தாவில் மாபெரும் கலகம் ஒன்று நடந்தது. அதில் எத்தனையோ ஹிந்துக்களும் முசல்மானியரும் கொல்லப்பட்டார்கள். வாரக் கணக்காகக் கலகம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. பக்ரீதின் போது மேலும் எத்தனையோ இடங்களில் கலகங்கள் விளைந்துவிட்டன. இதனல் கிலாபத்துக் குழுவின் முக்கியமான

மனிதர்கள்கூட மாறிவிட்டார்கள். அக்குழுவின் விசேஷக் கூட்டம் ஒன்றில் மிகவும் கடூரமான சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பட்டன. கிலாபத் குழுவானது இனிமேல் முசல்மானியரைச் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எல்லாவற்றிலும் மனம் செலுத்து மென்பதாகவும், முசல்மானியர்களுடைய உரிமைகளைக் காப் பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுமென்பதாகவும் அக்கூட் டத்தில் நிச்சயிக்கப்பட்டன. மற்றொரு பக்கத்தில் ஹிந்துக் களிடையிலும் பலர் கடூரமான சொற்பொழிவுகள் ஆற்றினார்கள். கட்டுரைகளும் எழுதினார்கள். எங்கள் மாகாணத்தைப் பற்றிய வரையில் மோதிலால்ஜீக்கும் மௌல்வீ முகம்மது ஷபீக்கும் கருத்து வேறுபாடு விளைந்துவிட்டதென்பது தெளிவாகிவிட்டது. மௌல்வீ முகம்மது ஷபீ சட்டசபையிலிருந்து ராஜீநாமா செய்து விட்டார். பிறகு தனிப்பட்ட முறையில் நின்று தேர்ந்தெடுக்கப் பட்டார். மேலும் தனியாகத் தம் இச்சைப்படி பிரசாரம் செய்ய வும் தொடங்கிவிட்டார். எங்கள் மாகாணத்தின் சூழ்நிலையும் கேடுற்று வந்து கொண்டிருந்தது. இதனால் மௌலானா மஜஹர்-உல்-ஹக் சாஹபு மிகவும் துக்கத்தில் ஆழ்ந்தார். அவர் பீகாரின் காங்கிரஸ் தலைவர்களையும் கிலாபத்துக் குழுவினரையும் வேறு சில தனிப்பட்ட மனிதர்களையும் அழைத்து ஒரு சிறிய மகாநாட்டைச் சப்ராவில் நடத்தினார். அங்கே, அதில் பல நாட்கள் தொடர்ந்து எல்லா விஷயங்களும் ஒளிவு மறைவில்லாமல் உடைத்துப் பேசப் பட்டன. இந்த விவகாரத்தை அப்படியே விட்டுவிடுவது நல்ல தன்றென்பதையும் நம்மால் இயன்றவரையில் இப்போது கெட் டிருந்த சூழ்நிலையை மேலும் சீர்குலையாமல் தடுக்க வேண்டுமென் பதையும் நாங்கள் உணர்ந்தோம். இதற்காக நாங்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து முயற்சி செய்ய உறுதி பூண்டோம். அந்த மகா நாட்டில் ஹக் சாஹபின் தேச பக்தியையும், உண்மையான தேசீய மனப்பான்மையையும் மீண்டும் ஒருமுறை நாங்கள் கண்டறிந் தோம். ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக எல்லாவற்றையும் துறக் கத் தயாராயிருந்த தலைவர் ஒருவர் நமக்குக் கிடைத்திருக்கிறார் என்பதை நாங்கள் உணர்ந்தோம். தம் வாழ்நாளின் பெரும் பகுதியை அவர் இந்த வேலையிலேயே கழித்து வந்திருந்தார். அவர் வாழ்நாள் முடியும்வரையில் இதே முயற்சியில் ஈடுபட்டிருந் தார். மகாநாட்டில் செய்த முடிவைக் கடைப்பிடித்து ஹக் சாஹபு, மௌல்வீ முகம்மது ஷபீ, பாபூ ஜகத் நாராயண்லால் முதலானோரும் நானும் மற்றும் பல தோழர்களும் மாகாணத்தில் சுற்றி வரப் புறப்பட்டோம்.

இதனல் மாகாணத்தில் நல்ல பயன் விளைந்தது, பீகாரில் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்குத் தடையாயிருந்த சிக்கல்களைக் களைவதற்காக மௌலானு ஹக்கின் தலைமையின்கீழ் மிகவும் சிறந்த முயற்சி செய்யப்பட்டு வருகிறதென்பதைப் பற்றி நாட்டில் எங்கும் பேசப்பட்டு வந்தது. பீகாரின் நிலைமை பேரளவு அமைதியுற்றது. இதனல் மற்றொரு பயனும் காணக் கிடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு மாகாண சட்டசபைகளுக்கும் மத்திய சட்டசபைக்கும் தேர்தல் நடந்தபோது முசல்மானியர்களும் காங்கிரஸ் சார்பில் நின்ருர்கள். தேர்ந்தெடுக்கவும் பட்டார்கள். மௌல்வீ முகம்மது ஷபீக்கும் பண்டித் மோதிலால்ஜீக்கும் இடையில் உண்டாகிய மனஸ்தாபமும் தீர்ந்துவிட்டது.

நவம்பர் மாதத்தில் தேர்தல் நடந்தது. மௌல்வீ முகம்மது ஷபீ சாஹபு எங்களுடன் கூடி இதில் பணியாற்றி வந்தார் என்பது ஒரு பக்கத்தில் ஒரு நல்ல காரியமாயிற்று. ஆனல் மற்றொரு பக்கத்தில் லாலா லஜபதிராய்க்கும் பண்டித் மோதிலால் ஜீக்கும் இடையில் மனஸ்தாபம் வந்துவிட்டது! இதனல் பண்டித் மதன்மோகன் மாளவீயஜீயும், லாலா லஜபதிராயும் கூடி ஒரு புதிய கட்சியை அமைத்துவிட்டார்கள். அக்கட்சியின் சார்பிலிருந்து நிறுத்தப்பட்ட அபேக்ஷகர்கள் காங்கிரஸின் அபேக்ஷகர்களை எதிர்த்துப் போட்டியிட்டார்கள். பீகாரில் பாபூ ஜகத்நாராயண்லால் காங்கிரஸின் தலைசிறந்த செயலாளர்களில் ஒருவர். ஹிந்துக்களை ஒன்று கூட்டி அமைக்க வேண்டுமென்பது அவருடைய கருத்து. அதனல் அவர் ஹிந்து மகா சபாவில் சிறப்பாகப் பங்கெடுத்துக் கொள்ளத் தொடங்கிவிட்டார். அக்காலத்தில், ஹிந்து மகா சபாவில் காங்கிரஸ்காரர்கள் சேருவதைக் காங்கிரஸ் இன்னும் தடை செய்யவில்லை. எங்களில் பலர் அதில் அங்கத்தினர்களாக இருந்தார்கள். முஜபர்பூரில் நடந்த ஹிந்து மகா சபாவின் ஆண்டு விழாவில் போத்கயாவை ஒட்டிய தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு நாங்கள் முழு உதவி புரிந்தோம் என்பது மேலே கூறப்பட்டுள்ளது. ஜகத்பாபூ காங்கிரஸுடன் இவ்வளவு நெருங்கிய உறவு வைத்துக்கொண்டு அதே சமயத்தில் ஹிந்து மகாசபாவின் வேலையில் இவ்வளவு நேரம் கழித்தது சிலருக்குப் பிடிக்காவிட்டாலும்கூட அவர் அப்படிச் செய்வதற்குக் காங்கிரஸின் அமைப்புச் சட்டத்தில் யாதொரு தடையும் இல்லாதிருந்தது. ஆனல் பண்டித் மாளவீயஜீயும் லாலாஜீயும் சேர்ந்து சுதந்திரக் காங்கிரஸ் கட்சி என்று ஒன்றை அமைத்துக் காங்கிரஸ் செய்திருந்த முடிவை மீறிக் காங்கிரஸ் அபேக்ஷகர்களை

எதிர்க்கத் தொடங்கியதும் நிலைமை மிகவும் மாறிவிட்டது. ஜகத் பாபூ காங்கிரஸின் சார்பில் அபேக்ஷகராக நிறுத்தப்பட்டார். ஆனால் அவர் அதை விட்டு விட்டு இந்த மிதவாதக் கட்சியின் சார்பில் நின்றார். அதனால் வேறு வழியில்லாமல் நாங்கள் அவரை எதிர்க்க வேண்டி வந்தது. காங்கிரஸின் மீது கோபங் கொண்டவர்களும், காங்கிரஸின் எதிரிகளும், காங்கிரஸால் அபேக்ஷகர்களாக நியமிக்கப்படாதவர்களும் வேறு சிலரும் இக் கட்சியில் போய்ச் சேர்ந்து கொண்டார்கள். இவர்களுள் சாரன் ஜில்லாவைச் சேர்ந்த பாபூ ஸ்ரீ நந்தன் பிரசாத் நாராயண் சின்ஹாவும் உட்பட்டிருந்தார். இதனால் பீகாரிலும் இத்தேர்தலில் மிக்கக் கொதிப்பு வந்து விட்டது. பண்டித் மோதிலால்ஜீயும் மற்றச் சுயராஜ்யக் கட்சித் தலைவர்களும் காங்கிரஸ் அபேக்ஷகர் களுக்கு உதவி புரிய வந்து சேர்ந்தார்கள். என்னால் ஆனதை யும் நான் செய்து கொண்டிருந்தேன்.

இந்த யாத்திரையில் நான் சோட்டா நாகபுரிக்கும் சென் றேன். ஒருநாள் புரலியாவிலிருந்து ராஞ்சிக்கு மோட்டாரில் சென்று கொண்டிருந்தேன். வண்டி மிகவும் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. ஏனெனில் அன்று ராஞ்சியில் அபேக்ஷகர் களுடைய விண்ணப்பங்களை ஆய்ந்து முடிவு செய்ய ஏற்பாடாகி யிருந்தது. குறித்த நேரத்தில் போய்ச் சேருவது அவசியமா யிருந்தது. வழியில் ஓர் எருமை மாட்டு வண்டி எதிர்ப்பட்டது. அதைத் தாண்டிச் செல்வதற்காக மோட்டாரை ஒதுக்கித் திருப்ப வேண்டியிருந்தது. அது கட்டுக்கு அடங்காமல் ஒரு மரத்தின் மீது மோதிவிட்டது. என் தலையிலும் மூக்கிலும் காயம் பட்டது. இன்னும் சில இடங்களிலும் சிறிது காயம் பட்டது. வண்டியின் சில பாகங்களும் உடைந்துவிட்டன. இச்சம்பவம் ராஞ்சிக்குச் சமீபத்தில்தான் நடந்தது. ஆதலால் நாங்கள் சிறிது நாழிகை கழித்து எப்படியோ ராஞ்சி போய்ச் சேர்ந்துவிட்டோம். எனக் குப் பலமாக அடிபட்டிருந்ததென்பது அப்போது தெரியவில்லை. வைத்தியர் ஏதோ கட்டுப் போட்டு அனுப்பிவிட்டார். நான் சுற்றுப் பிரயாணத்தை விடாமல் தொடர்ந்து செய்து வந்தேன். சோட்டா நாகபுரியில் வேலையை முடித்துக் கொண்டு வடபீகாருக் குச் சென்றேன். பேகூசராய், சம்ஸ்திப்பூர் முதலான இடங்களைப் பார்த்துக் கொண்டு முஜபர்பூர் ஜில்லாவுக்குப் போய்ச் சேர்ந் தேன். இந்த விபத்துக்கு ஒரு வாரத்திற்குப் பிறகு சீதாமறிக் குப் போய்ச் சேர்ந்த போதுதான் தலையில் வலி உண்டாயிற்று. அசதியாலோ குளிர் கண்டதாலோ வலிக்கிறதென்று நினைத்தேன்.

ஏதோ ஒரு மருந்து உட்கொண்டதும் நோய் வலுத்துவிட்டது. நல்ல வேளையாக அன்றே பட்னவுக்குத் திரும்பி வரவேண்டிய வேலையிருந்தது. அங்கே வந்து சேர்ந்ததுமே வலி அதிகரித்து விட்டது. பல நாட்கள் வரையில் மிகவும் துன்பப்பட்டேன். இந்த வலி எதனல் உண்டானதென்பதை மருத்துவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. இரண்டு மூன்று நாட்களுக்குள் முகம் முழுவதும் வீங்கிவிட்டது. அப்போதுதான் இது அந்த மோட்டார் விபத்தின்போது எனக்குப் பட்ட அடிகளால் உண்டாயிற்று என்பது தெரிய வந்தது. இந்த நோயின் காரணத்தால் நான் மேலும் போகவேண்டியிருந்த பல இடங்களுக்குச் செல்ல முடியவில்லை. தேர்தல் போட்டியில் மிகவும் இழிவான பிரசாரங்கள் செய்யப்பட்டு வந்தன. பண்டித் மோதிலால்ஜீயைத் தனிப்பட குறிப்பிட்டு அளவுக்கு மீறி அவதூறு செய்யப்பட்டு வந்தது. சிற்சில இடங்களில் மிகவும் இழிவான கோமாளிப் படங்களும் (கார்ட்டூன்கள்) வெளியிடப்பட்டன. இவற்றையெல்லாம் நாங்கள் மிகவும் கடுமையாகக் கண்டித்தோம். கடைசியில் எந்தெந்த இடங்களுக்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்ததோ அவ்விடங்களில் பெரும்பாலும் காங்கிரஸின் அபேக்ஷகர்கள் தாம் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சுதந்திரக் காங்கிரஸ் கட்சியிலிருந்து மிகச் சிலரே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்களுள் பாபூஜகத் நாராயண்லால், பாபூ ஸ்ரீநந்தன் பிரசாத் நாராயண் சின்ஹா சர்மாவும் உட்பட்டிருந்தார்கள். பீகாரின் பழைய கவுன்ஸிலில் சுயராஜ்யக் கட்சியின் தலைவராயிருந்து வந்தவரும் காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்டவருமான ஸ்ரீ ஜலேஷ்வர் பிரசாதைத் தோற்கடித்து இவர்கள் தேர்தலில் வெற்றி பெற்றுர்கள். மக்கள் மிகவும் கேட்டுக்கொண்டு வற்புறுத்தினதின்பேரில் மௌலான மஜஹர்-உல்-ஹக் சாஹபு தேர்தலுக்கு நின்ருர். அவரையும் எதிர்த்து ஒருவர் போட்டியிட்டார். இரண்டு அபேக்ஷகர்களுக்கும் சமமாக வாக்குக்கள் கிடைத்தன. இச்சிக்கலைத் தீர்ப்பதற்காகச் சீட்டுக் குலுக்கிப் போட்டபோது ஹக் சாஹபின் எதிரிக்குச் சீட்டு விழுந்தது. இவ்வண்ணமாக மாகாண கவுன்ஸிலின் தேர்தலில் காங்கிரஸ்காரர்கள்தாம் அதிகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாலும்கூட ஹக் சாஹபைப் போன்ற ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட முடியவில்லை. மேலும் சுயராஜ்யக் கட்சியின் தலைமையை வகித்து மிகவும் திறம்படப் பணியாற்றி வந்திருந்த காங்கிரஸ் அபேக்ஷகரும் தேர்ந்தெடுக்கப்பட முடியவில்லை. மேலும், தேர்தலில் காங்கிரஸுக்குத்தான் பெரும்பான்மை பலம் கிடைத்திருந்தாலும்கூட

அதற்கு விரோதமாக் மந்திரிசபை அமையக் கூடுமென்பது தெளிவாயிற்று. ஏனெனில், அரசியல் சட்ட அமைப்பின்படி, அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்கள் நிறையப்பேர் வந்து சேருவார்கள். இவ்விதமாக நியமிக்கப்பட்ட உறுப்பினர் களும் காங்கிரஸின் எதிரிகளும் கூடிக் காங்கிரஸ் அங்கத்தினரின் எண்ணிக்கையைவிட அதிகமாகி விடுவார்கள். மத்திய சட்ட சபையிலும் எங்களுக்குச் சிறந்த வெற்றி கிடைத்திருந்தது. அங்கே எங்கள் கைக்குள் வாராத ஓரிரண்டு இடங்களிலும்கூடக் காங்கிரஸிடம் பரிவு பூண்டவர்களே தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார் கள். பீகார் கவுன்ஸிலில், தனிப்பட்டோர் (இண்டிபெண்டண்டு கள்) என்ற முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் பலர் காங் கிரஸை ஆதரித்தார்கள். சுதந்திரக் காங்கிரஸ் கட்சியினரில் சிலர் காங்கிரஸுடனும் வேறு சிலர் மந்திரி சபைகளுடனும் சேர்ந்துகொண்டார்கள். இவ்விதமாக இத்தேர்தலில் எதுவும் தெளிவாகவில்லை. மந்திரி சபைக்கும் காங்கிரஸுக்கும் முன்பு இருந்துவந்த நல்லுறவு இப்போதில்லை. ஏனெனில் தேர்தலின் போது நாங்கள் மந்திரிகளுடனும், அவர்களால் நிறுத்தப்பட்ட அபேக்ஷகர்களுடனும் போட்டியிட வேண்டி வந்தது. அதே ஆட்கள் மீண்டும் மந்திரிகளாக வந்துவிட்டபோது, அவர்களை எதிர்ப்பது காங்கிரஸ் உறுப்பினர்களின் கடமையாகிவிட்டது. அதனால் அந்தப் பகைமை மேலும் வளர்ந்துவிட்டது. மந்திரி சர் கணேஷ் தத்த சின்ஹா காங்கிரஸ்காரர்களுக்கு அஞ்சிக் கொண்டு, பல இடங்களில் தேர்தலுக்கு நின்றார். அப்படியும்கூட எந்த இடத்திலும் தாம் வெற்றிபெற முடியாதென்பதைக் கண்டு அவர், காங்கிரஸ் அபேக்ஷகர் எவரும் நிறுத்தப்படாத ஒரு தொகுதியில் நின்ற அபேக்ஷகர் ஒருவருடன் கூடிப் பேசி அவரை விலகச் சொல்லிவிட்டுத் தாமே அங்கிருந்து தேர்ந்தெடுக்கப்பட் டார். இத்தேர்தலில் சிலர் சாதிமத பேதங்களைக் கிளப்பிப் பிர சாரம் செய்து இலாபமடைந்தார்கள். இவ்விதமான நடத்தைக் குக் காங்கிரஸ்காரர்கள் எல்லாருமே விலக்காயிருந்தார்களென்று கூற இயலாது.

ஆண்டு முடிவில் டிசம்பரில் கோஹாடியில் காங்கிரஸ் ஆண்டு விழா நடைபெறுவதாக இருந்தது. மௌலானா மஜஹர்-உல்-ஹக் அதற்குத் தலைமை வகிக்க மறுத்ததின்பேரில் ஸ்ரீ ஸ்ரீநிவாச அய் யங்கார் ஒரு மனமொப்புடன் எதிர்ப்பு இன்றித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஏனெனில் டாக்டர் அன்சாரியும் விலகிக் கொண்டார்.

என் தமையனாரும் நானும் குடும்ப சகிதமாகக் கான்பூர் காங்கிரஸுக்குச் சென்றிருந்தோம். அங்குத்தான் முதன் முதல் மீரா பஹனுடன் எனக்கு அறிமுகமாயிற்று. அவர் சில நாட்களுக்கு முன்பே இந்தியாவுக்கு வந்துவிட்டார். ஆனால் எனக்கு அறிமுகமாகவில்லை. அன்றிலிருந்தே அவருடைய பக்தி, சிரத்தை ஆகியவை என் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. அவர் ஓர் ஆங்கிலக் கப்பல் படைத் தலைவரின் மகள். அவருடைய தந்தை இந்தியாவில் கப்பல் படைத் தலைவராக இருந்திருந்தார். அப்போது அவரும் தம் தந்தையாருடன் பம்பாயில் இருந்தார். அப்படிப்பட்ட ஒரு பெண்மணி மகாத்மாஜீயின் ஆச்ரமத்திற்கு வருவதென்பதும், அங்குள்ளவர்களுடன் கூடிக் குலாவி வாழ்வதென்பதும் ஆங்கிலேயர்களுக்கு எப்படிப் பிடிக்கும்? இச்செய்தியைச் சில ஆங்கிலேயரின் பத்திரிகைகள் அச்சிட்டபோது, காந்திஜீ அவரை எப்படியோ வசியப்படுத்தி அங்கே இருத்திவிட்டாரென்று எழுதின. ஆனால், இது உண்மையன்று. மீரா பஹன் இதைக் கண்டனம் செய்தார். உண்மை என்னவென்றால், அவர் ஜெர்மன் யுத்தத்தின்போது அதன் கொலைபாதகத்தைச் சகிக்க முடியவில்லை என்பதே. இவ்விதமான பயங்கர வாழ்க்கையிலிருந்து தப்புவதற்கு ஏதாவது வழிகாட்டுவாரென்று என்று எண்ணி அவர் ரொமேன் ரோலந்திடம் சென்றார். ரொமேன் ரோலந்து காந்திஜீயின் நூல்களைப் படிக்கும்படி அவருக்குப் புத்திமதி அளித்தார். அவற்றால்தாம் அவருடைய வேட்கை தணியுமென்றார். காந்திஜீ எழுதிய புத்தகங்கள் எவை எவை கிடைத்தனவோ அவற்றையெல்லாம் மீராபஹன் படித்தார். அவற்றைப் படிக்கப் படிக்க அவருக்குக் காந்திஜீயிடம் பற்றுதல் வளர்ந்து வலிமை பெற்று வந்தது. கடைசியில் அவர் காந்திஜீயிடம் வர விரும்பினார். ஆனால் காந்திஜீ அவரைத் தடுத்தார். அதனால் அவர் சீமையிலேயே இருந்துகொண்டு தம்மால் இயன்றவரையில் ஆச்ரம வாழ்க்கையைக் கடைப்பிடித்து வந்தார். கடைசியில் அவர் மிகவும் பிடிவாதம் செய்ததின்பேரில் காந்திஜீ அனுமதி அளித்தார். அன்றிலிருந்து அவர் காந்திஜீயுடன் இடையறாது இருந்து வருகிறார். தமக்கு இருந்த சொத்தையெல்லாம் அவர் காந்திஜீக்கு அளித்துவிட்டார்.

கான்பூரிலிருந்து நான் காயஸ்து மகாநாட்டில் தலைமை வகிப்பதற்காக ஜௌன்பூக்குச் சென்றேன். இதைப்பற்றி மேலே கூறியுள்ளேன்.

# 67. பீகார் வித்தியாபீடமும் காதி பிரசார வேலையும்

அந் நாட்களில் என் பொழுது பெரும்பாலும் காதி வேலையைப் பார்வை யிடுவதிலும் பீகார் வித்யாபீடத்தின் செலவுக்காகப் பணம் திரட்டுவதிலும் கழிந்து வந்தது. வித்யாபீடத்தின் மீது பல நண்பர்களுக்குப் பற்றுதலில்லை யென்பதை நாங்கள் முதலில் இருந்தே தெரிந்து கொண்டிருந்தோம். சிலர் அதனை அலட்சியமாகவும் கருதினர்கள். 1921இல் இந்த மனேபாவம் கண்கூடாகத் தெரியவந்தது. எவர்கள் அதை மிகப்பாடுபட்டு நிறுவினர்களோ அவர்களே அதில் பற்றில்லாமல் போய்விட்டார்கள் என்பதும் அதற்கு விரோதிகளுமாகி விட்டார்கள் என்பது மிகவும் வியப்பாகவும் வருத்தமாயுமிருந்தது. வித்யாபீடமானது முதலில் ஒரு வாடகைக் கட்டடத்தில்தான் தொடங்கப்பட்டது. அக் கட்டடத்திற்கு மாதத்திற்கு சுமார் இருநூறு ரூபாய் கொடுக்கப்பட்டு வந்தது. செலவைக் கூடிய மட்டும் குறைக்க வேண்டுமென்று நாங்கள் விரும்பினேம். அதனல் வித்யாபீடத்தை மஜஹர்-உல்-ஹக் சாஹபு நிறுவியிருந்த சதாகத் ஆச்ரமத்திற்கு மாற்றுவதென்று முடிவு செய்தோம். அங்கே அவர் சிறிய வீடொன்றையும் கட்டியிருந்தார். ஹக் சாஹபு இதைக் கேட்டுப் பெரு மகிழ்ச்சியடைந்தார். வித்யாபீடத்தை அங்கேயே மாற்றினேம். மேலும் சில கட்டடங்களையும் அங்கே கட்டினேம். அவற்றில் எல்லா மாணவர்களும் மேலும் ஆசிரியர்களில் பெரும்பாலோரும் தங்கி வந்தார்கள். மெல்ல மெல்ல மாணவர்களின் எண்ணிக்கை குன்றத் தொடங்கியது. ஜில்லாக்களில் திறக்கப்பட்டிருந்த பள்ளிக்கூடங்களும் பல இடங்களில் மூடப்பட்டு வந்தன. மக்களின் உற்சாகம் குறைந்து கொண்டே வந்தது. பல பள்ளிக்கூடங்கள் பணமில்லாததாலும் மாணவர்கள் இல்லாததாலும் மூடப்பட்டு விட்டன. 1926 மார்ச்சில் 9 உயர்நிலைப் பள்ளிகளும் 16 நடுநிலைப்பள்ளிகளும் 30 தொடக்கப்பள்ளிகளும் நடந்து கொண்டிருந்தன. அவற்றில் முறையே 797, 1285, 1019 மாணவர்களும் 79, 70, 34 ஆசிரியர்களும் இருந்தார்கள். அவற்றிற்கு முறையே 1950 ரூபாயும் 1260 ரூபாயும் 426 ரூபாயுமாக மாதந்தோறும் செலவு செய்யப்பட்டு வந்தது. அதாவது,

மொத்தம் 55 பள்ளிக்கூடங்கள் இருந்தன. அவற்றில் 183 ஆசிரியர்கள் பணியாற்றி வந்தார்கள். 3636 ரூபாய் மாதந் தோறும் செலவழிக்கப்பட்டு வந்தது. அவற்றில் சில பள்ளிக் கூடங்கள் எல்லாக் கண்டங்களேயும் தப்பி இன்று வரையில் நடந்து வருகின்றன. வித்யாபீடம் அழியாமலிருப்பது அவசிய மென்று நாங்கள் கருதினேம். இதற்காகத் தேவைப்பட்ட போதெல்லாம் பணம் திரட்டப்பட்டு வந்தது.

மகாராஷ்டிரத்தில் எத்தனேயோ நிலேயங்கள் மக்கள் அளித்த ஆண்டு வரியைக் கொண்டு நடத்தப்பட்டு வருவதை நாங்கள் கவனித்தோம். ஆண்டுவரியும் அதிகமன்று. நிறையப்பேர் ஆண்டு தோறும் ஐந்தோ அதற்குக் குறைவோ கொடுப்பதாக வாக்களித்து அப்படியே கொடுத்து வந்தார்கள். அவர்களுக்கு நிலேயத்தின் ஆண்டறிக்கையை 'ஈடளித்துப் பெறும் அஞ்சல்' வழி (வி. பி. பி.) அனுப்பி ஆண்டு வரியை வசூலித்து வந்தார்கள். நாமும் அப்படிச் செய்யலாமென்று எண்ணினேம். ஓடியலேந்து ஐந்து ரூபாய் அங்கத்தினரைச் சேர்த்தோம். நல்ல பெரிய தொகை யைக் கொடுத்தவர்களே வாழ்நாள் உறுப்பினர்களாகவோ காப்பாளர்களாகவோ ஏற்றுக் கொண்டோம். எங்கள் மாகாணத் தின் மக்களுக்கு இவ்விதமான முறையில் ஆண்டு வரி கொடுத்துப் பழக்கமில்லே. பணம் கொடுப்பதாக வாக்களித்து அங்கத்தினராகச் சேர மனுவில் கையொப்பமிட்டவர்களும்கூட ஆண்டின் முடிவில் மிகவும் கஷ்டப்பட்டுத்தான் பணம் கொடுத்தார்கள். அதையும் ஓரிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு நிறுத்தி விட்டார்கள். வாக் களித்தவர்களிடம் வரியைத் தண்டுவதற்கு ஆண்டுதோறும் முக்கியமான தலேவர்கள் அவர்களிடம் போவதென்பது ஆகாத விஷயம். இதனுல் இந்த முறை எங்களுக்கு நல்ல பயனேயளிக்க வில்லே. ஓடியாடியலேந்து இங்குமங்குமிருந்து கிடைத்ததைத் திரட்டிக் கொண்டு வந்தே செலவு செய்து வரவேண்டியிருந்தது. ஆனுல் பட்னுவில் மட்டும் சில கனவான்கள் மாதந்தோறும் ஏதாவது கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள். அவர்களில் பலர் தவருமல் கொடுத்து வந்தார்கள். ஆரம்பத்திலேயே பகவான்தாஸ் என்ற கனவான் ஒருவர் ஏதோ கொஞ்சம் நிலத்தைக் கொடையாக அளிந்திருந்தார். அதிலிருந்து ஆண்டு தோறும் சிறிது வருவாய் வந்து கொண்டிருந்தது. சிறிது காலத்திற்குப் பின், முஜபர்பூரைச் சேர்ந்த ஸ்ரீ கஜாதர் பிரசாத் சாஹு என்பவர் தம் அறக்கட்டளேயிலிருந்து வித்யாபீடத்திற்குச் சிறிது உதவி அளித்தார். அப்பணமும் தவருமல் கிடைத்து

வந்தது. இவ்வண்ணம் வித்யா பீடத்திற்குப் பணமில்லாக் குறை என்றுமே இருந்து வந்தது.

வித்யாபீடத்தால் உண்டாகும் நன்மையின் மீதும், அங்கு அளிக்கப்படும் கல்வியின்மீதும் மக்களுக்கு நம்பிக்கையை உண்டாக்குவதற்காகச் சிறந்த வித்வான்களை வித்யாபீடத்திற்குக் கொண்டுவர முயற்சி செய்தோம். காசியிலிருந்து புகழ்வாய்ந்த வித்துவான் ஸ்ரீ ராம்தாஸ் கௌர்ஜீ வந்தார். அதே போல வங்காளத்திலிருந்து பல்கலைக் கழகத்தின் பரீக்ஷைகளில் பெரும் புகழுடன் தேறினவர்களான சில வித்துவான்கள் வரவழைக்கப் பட்டார்கள். சிறிது காலத்திற்குப்பின், இந்திய சரித்திர ஆராய்ச்சியில் புகழ்வாய்ந்த நிபுணர் ஸ்ரீ ஜயசந்திர வித்யாலங்காரும் வித்யாபீடத்தில் சரித்திர வரலாற்றுக்கு ஆசிரியராக வந்து சேர்ந்தார். அவருடன் எனக்கு அப்போதுதான் பழக்கமாயிற்று. பின்னர் அது வளர்ந்து நெருங்கிய நட்பாகியது. அதுவே பாரதீயச் சரித்திர பரிஷத் உதிப்பதற்கும் ஒரு முக்கிய காரணமாக அமைந்தது. இவ்வளவெல்லாம் செய்தும்கூட மாணுக்கர்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே போயிற்று. நாங்கள் வித்யா பீடத்தில் நடப்பில் இருந்துவந்த பாட அமைப்பையும் அவ்வப் போது மாற்றிக் கொண்டு வந்தோம். மாணவர்கள் வெறும் புத்தகக் கல்வியை மட்டும் பெறுவதோடு நிற்காமல் மிகவும் திறமையான தேசத் தொண்டர்களாகவும் ஆகவேண்டுமென்று முயற்சி செய்து வந்தோம். இவை யெல்லாம் செய்யப்பட்டும் கூடத்தேசியக் கல்வியானது குறுகிய எல்லைப் பரப்புக்குள்ளாகவே இருந்து வந்தது. ஆயினும் அது பயிலப்பட்டு வந்த எல்லைக் குள் எங்கள் மாணவர்களும் ஆசிரியர்களும் சிறந்த தொண்டர் களாக விளங்கினுர்கள். சத்தியாக்கிரகத்தின்போது அவர்கள் இடையருது பெரும்பணி ஆற்றினுர்கள்.

1926 மார்ச்சில் பட்டமளிப்பு விழாவின்போது வாழ்த்துரை கூறுவதற்காக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் அழைக்கப்பட்டார். அவ்வுரையில், அவர், இம்மாணவர்கள் நமது ஆர்வத்தின் நந்தா விளக்குகள் என்று கூறிப் புகழ்ந்தார். இது முற்றிலும் உண்மையே. பட்டமளிப்பு விழா மிகச் சிறப்பாக நடந்தேறியது. அவருடைய சொற்பொழிவும் மிகவும் அழகாகவும் வன்மையாகவும் அமைந்தது. அவ்விழாவுக்கு வந்திருந்தவர்கள் எல்லாரும் அதைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்தார்கள். வித்யா பீடத்தின் ஏழ்மையையும் அதன் மாணவர்களின் ஏழ்மை யையும் அரசாங்கப் பலகலைக் கழகத்துப் பட்டமளிப்பு விழாவின்

படாடோபத்துடன் ஒப்பிட்டுப் பார்த்து, எங்கள் சிறிய நிலையம் எவ்வளவு பயனுடையது என்பதை எல்லாரும் உணர்ந்தார்கள்.

வித்யா பீடத்தில் மட்டும் அன்றிக் காதி வேலையிலும் நான் அதிகப் பொழுதைக் கழித்து வந்தேன். காதி வேலை தொடங்கிய திலிருந்தே அதில் என் மனம் லயித்துவிட்டது. ஆயினும் நான் இந் நாட்களில் அதற்காக எவ்வளவு நேரம் கழிக்க முடிந்ததோ அதைப் போல இதற்கு முன்னும் இயலவில்லை, இதற்குப் பின்னும் இயலவில்லை. பீகாரில் காதி வேலை 1921இலேயே தொடங்கி விட்டது. இப்போது சுயராஜ்ய நிதியிலிருந்து இவ் வேலைக்காக பீகார் மாகாணக் குழுவுக்கு ஒரு சிறந்த தொகை யும் கிடைத்திருந்தது. இவ்வேலையை நடத்தும் பொறுப்பை மாகாணக் குழுவே முதலில் தாங்கி வந்தது. பல ஜில்லாக் களிலும் இவ்வேலையை நடத்துவதற்காகப் பலர் அதனால் நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஆனால் மாகாணக் குழுவுக்கும், இவ்விதமாக நியமிக்கப்பட்டவர்களுக்கும் இவ்வேலை செய்து பழக்கமில்லை.

காங்கிரஸ் செயலாளரான ஸ்ரீ ராமவிநோத் சின்ஹா என்பவர் தனிப்பட இவ்வேலையைத் தொடங்கினர். அவருக்கு ஆசாரியா கிருபாளானியின் உதவி கிடைத்தது. மதுவனீயில் ஒரு நூல் நிலையத்தை அமைத்து அங்கே சிறந்த காதியை உற்பத்தி செய்யத் தொடங்கினர்கள். இக்காதி மற்ற மாகாணங்களுக்கும் அனுப்பப்பட்டு வந்தது. காதி வேலையில் பீகாரின் பெயர் அவர் களால் உயர்த்தப்பட்டது. ஆசாரியா கிருபாளானியின் சிபார்சின் பேரில், என் அனுமதியைக் கொண்டு, காதி வேலையைப் பெருக்குவதற்காக அவர்களுக்கு காதி போர்டிலிருந்து ஒரு பெருந் தொகைக் கடனுகக் கிடைத்தது. இதற்கு மாருக மாகாணக்குழுவின் வேலை அவ்வளவு வெற்றிபெறவில்லை. ஏனெனில் வேலையோ பரந்து பரவி விட்டது. ஆனல் அதில் கலைஞானமோ வர்த்தகத் திறமோ செலுத்தப்படவில்லை. இதனுல் அதிக நஷ்டம் விளைந்தது. அகில பாரதீயச் சர்க்கா சங்கம் நிறுவப்பட்டு, நான் நிர்வாகியாகவும் ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண் அமைச்சராகவும் நியமிக்கப்பட்டபின் எல்லா வேலைகளும் புதிய முறையில் அமைக்கப்பட்டன. பல பண்டார்கள் மூடப் பட்டன. நஷ்டமில்லாமல் வேலை நடக்கக்கூடிய இடங்களில் மட்டும் அவை தொடர்ந்து நடத்தப்பட்டன. இதனுல் சில காங்கிரஸ் செயலாளர்களுக்கு மன வருத்தமும் உண்டாயிற்று. காதி வேலையில் ஈடுபட விரும்பி வந்தவர்களுக்குக் கட்டுப்பாடுகள்

அதிகமாயின. இது ஒன்றே காரியமாக மனமூன்றி வேலை புரியும் படி அவர்கள் வற்புறுத்தப்பட்டார்கள். இவை எல்லாவற்ருலும் வேலையின் தன்மை மிகவும் சீர்த்திருத்தமடைந்தது. காதியின் உற்பத்தியும் விற்பனையும் வளரத் தொடங்கின.

அந்நாட்களில் காதி உற்பத்தி செய்யப்பட்டு வந்த இடங்கள் எல்லாவற்றிற்கும் நான் ஆண்டில் ஒரு முறையாவது சென்று வந்தேன். ஆங்காங்கு ஓரிரண்டு நாட்கள் தங்கி வேலை எப்படி நடக்கிறதென்பதைக் கண்காணித்து வந்தேன். அந் நிலையங் களில் கை ராட்டினத்தில் நூற்கப்பட்ட நூலை விலைக்கு வாங்கு வதும், பஞ்சை விற்பதும்தாம் முக்கியமாகச் செய்யப்பட்டு வந் தன. நானே அங்கு பெட்டியடியில் உட்கார்ந்து என் கையாலேயே பஞ்சு, நூல் முதலானவற்றை நிறுத்து வியாபாரம் செய்வேன். துணி நெசவு சாலைக்கும் சென்று துணியின்மேல் விலை குறிப்பது முதலிய வேலைகளையும் நானே செய்வேன். இதனுல் என் அனுபவ மும் அறிவும் வளர்ந்தன. மேலும் இந்த விஷயங்களைப் பற்றி நமக்கு பயிற்சி எவ்வளவு குறைவு என்பதையும் இந்தப் பயிற்சி யின்மைதான் நஷ்டத்திற்கு முக்கிய காரணங்களில் ஒன்று என்பதையும் அறிந்தேன். நாங்கள் போடும் செலவுத் திட்டத் தைச் சர்க்கா சங்கத்தின் அலுவலகத்தில் இருந்தவர்களும் ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் நன்ருக ஆராய்ந்து தெளிவுற்றபின் தான் ஏற்றுக்கொள்வார்கள். அப்படியிருந்தும்கூடப் பலமுறை நஷ்டம் வந்து விட்டது.

காதி பிரசாரம் செய்வதற்கு அப்போது எங்கள் எல்லா ருக்கும் அதிக ஆசையிருந்தது. நாம் எவ்வளவுக்கு மலிவாகக் காதியை உற்பத்தி செய்து விற்கக்கூடுமோ அவ்வளவு நல்ல பயன் கிட்டுமென்பது அகில பாரதீயச் சர்க்கா சங்கத்தின் கொள் கையாக இருந்தது. அக்கொள்கையைக் கடைப்பிடித்து மிகமிக மலிவாக நூல் வாங்கி, மிகக்குறைவாக நெசவு கூலி கொடுத்துத் துணி நெய்து, கடைகளுக்காக மிகக்குறைவாகச் செலவு செய்து அத்துணியை விற்க முயன்றுவந்தோம். இந்த முறையால், செயலாளர்களின் எண்ணிக்கை குறைவு பட்டதாலும், அவர் களுடைய திறமைக் குறைவாலும் கடைகளில் விற்பனை சரியாக நடப்பதில்லை. சரக்கின் கணக்குச் சரியாக எழுதப்படுவதில்லை. உற்பத்தி நிலையங்களின் நிலைமை இதைவிடச் சற்று நன்ருக இருந்தாலும்கூட முற்றிலும் திருப்திகரமாக இல்லை. இதனுல் நான் செய்து வந்த கண்காணிப்பு மிகவும் அவசியமாயிருந்தது. ஆயினும் அந்நாட்களில் இருந்துவந்த சர்க்கா சங்கத்தின்

கிளைகள் எல்லாவற்றையும் விடப் பீகார் கிளையின் காதிதான் மிகவும் மலிவாக இருந்தது என்பதையும் நன்ருகவும் இருந்தது என்பதையும் கூறவேண்டும். மென்மையான காதிக்கு ஆந்திரா பெயர் பெற்றிருந்தது. பீகாரின் "கோக்டீ" எல்லா மாகாணங் களுக்கும் அனுப்பப்பட்டு வந்தது. அதனுல் பீகாரின் புகழ் மிகவும் பரவிற்று. சாயவேலையும் அச்சுவேலையும்கூட ஆரம்பிக் கப்பட்டன. அதனுல் நிறநிறமான காதி கிடைத்து வந்ததா யினும் எனக்குத் திருப்தி அளிக்கும் அளவுக்கு ஏற்பாடுகள் இன்னும் அமையவில்லை.

இந்த வேலை தொடங்கப்பட்டபோது, காதி இலாக்காவின் அலுவலகமும் பண்டாரும் பட்னுவில் தானிருந்தன. தர்பங்கா ஜில்லாவில்தான் காதி முக்கியமாக உற்பத்தி செய்யப்பட்டு வந்தாலும், தலைமை வர்த்தக நிலையம் பட்னுவில்தானிருந்தது. இதில் பல அசௌகரியங்கள் இருந்தன. ஆனுல் நாங்கள் எல்லாரும் பட்னுவில் வசித்துவந்ததால் தலைமை வர்த்தக நிலையத் தையும் அலுவலகத்தையும் அங்கிருந்து மாற்ற எங்களுக்கு மனம் வரவில்லை. லக்ஷ்மீபாபூ அமைச்சரான பிறகு, தொழிலைப் பெருக்க வேண்டுமென்று அவர் எண்ணியபோது, இந்த வேலை யைப் பட்னுவிலிருந்து முஜபர்பூருக்கு எடுத்துச் செல்லவேண்டு மென்று முடிவு செய்யப்பட்டது. இதைப் பட்னுவிலிருந்த தோழர்கள் கடுமையாக எதிர்த்தார்கள். ஆனுல் நான் இதன் நலத்தை உணர்ந்து கொண்டதால், இடத்தை மாற்றுவதற்கு ஒத்துக்கொண்டு விட்டேன். முஜபர்பூரில் கண்டகீ நதிக்கரையில் அக்காடா துறையில் சில குடிசைகள் அமைக்கப்பட்டன. அவற்றில் தொழிலாளிகள் வசித்துவந்தார்கள். அங்கேயே சாயம் ஏற்றுதல் முதலிய வேலைகளும் நடந்துவந்தன. சரக்குக் கிடங்கும் வர்த்தக நிலையமும் ஊருக்குள் சர்யாகன்ஜில் ஒரு வாடகை வீட்டில் அமைக்கப்பட்டன. அப்போதிலிருந்து தொழில் பெருகி வளர்ந்தது. சில நாட்களுக்குப் பிறகு இந்த ஏற்பாடும் சரியன்று என்பதை உணர்ந்தோம். ஏனெனில் காதி உற்பத்தியானது முக்கியமாகத் தர்பங்கா ஜில்லாவில்தான் நடந்துவந்தது. அங்கே துணி நெய்யப்பட்டு முஜபர்பூருக்குக் கொண்டுவரப்பட்டு முஜபர்பூரில் வெள்ளாவி வைத்தல், சாயம் ஏற்றுதல் முதலிய வேலைகள் செய்யப்பட்டு வந்தன. பிறகு அங் கிருந்து விற்பனைக்காகப் பண்டாருக்கு அனுப்பப்பட்டு வந்தது. இம்முறையால் அதிகச் செலவு பிடித்தது. இதனுல் தலைமைப் பண்டாரைத் தர்பங்கா ஜில்லாவில் உள்ள மதுவனீக்கே எடுத்துச்

செல்லவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. இதற்கு முன்னிருந்தே ராம்விநோத் பாபூவின் கடை அங்கிருந்தது. இதனால் சர்க்கா சங்கத்தின் வேலை அங்கே அதிகமாக நடத்தப்படாமல் பண்டேலிலேயே நடந்துவந்தது. இரண்டு நிலையங்களுக்குள் போட்டி வராமலிருப்பதற்காகவும் அவை தத்தம் இஷ்டப்படி தொழிலை நடத்துவதற்காகவும் வளர்ப்பதற்காகவும் இவ்விதம் அமைக்கப்பட்டிருந்தது. ஆனால் சிறிது காலத்திற்குள் ராம் விநோத்பாபூவுக்கும் அவருடைய கூட்டாளிகளுக்கும் (அவர்களுள் ஸ்ரீ துவஜபிரசாதும் ராம்தேவ் தாகூரும் தாம் முக்கியமானவர்கள்) மனஸ்தாபம் வந்துவிட்டது. ராம்விநோத் பாபூவின் வியாபாரமும் சர்க்கா சங்கத்தின் போட்டியால் குறைந்துவிட்டது. அதனால் இப்போது மதுவனீக்குச் செல்வதுதான் நன்றெனப் புலப்பட்டது. அது மிகப்பெரிய மூலஸ்தாபனமாக வளர முடியுமென்பது ஒரு காரணம். மற்ற உற்பத்திஸ்தானங்களுக்குச் செயலாளர்கள் போய் வருவதற்கு அது மிகவும் வசதியான இடமாகயிருந்ததென்பது மற்றொரு காரணம். ரயில், தந்தி தபால், பாங்கி ஆகியவற்றிற்கும் அங்கு நிறைய வசதிகள் இருந்தனவென்பது மூன்றாவது காரணம். இதனால் அலுவலகமும் மூல பண்டாரும் முஜபர் பூரிலிருந்து பெயர்க்கப்பட்டு மதுவனீக்குக் கொண்டு போகப்பட்டன. மெல்ல மெல்ல அங்கே சர்க்கா சங்கத்திற்குச் சொந்தக் கட்டடமும் அமைக்கப்பட்டது. இன்று அது பார்ப்பதற்கு மிகவும் நேர்த்தியான இடமாகிவிட்டது. இவற்றையெல்லாம் செய்து முடிக்க எத்தனை ஆண்டுகள் பிடித்தனவென்பது தெரியாது. ஆயினும் இவற்றை இங்கு ஓரிடத்திலேயே கூறிவிடுவது நன்றென நினைத்தேன்.

1926இல் நான் காதி சம்பந்தமாகச் செய்துவந்த முக்கியமான வேலைகளுள் ஊர் ஊராகச் சென்று கண்காட்சிகளை நடத்துவது ஒன்றாகும். காதியில் எல்லாருக்கும் பற்றுதலை உண்டாக்க வேண்டுமென்று நான் முயன்றுவந்தேன். இதே நோக்கத்துடன் தான் பட்னா கண்காட்சியும் மிகவும் வெற்றிகரமாக நடத்தப்பட்டது. இதைப்பற்றி நான் முன்னமே கூறியுள்ளேன். 1926இல் நடந்த கண்காட்சிகளிலும் காதியில் எல்லாருக்கும் பற்றுதலைப் பிறப்பிப்பதற்குச் சிறந்த முயற்சி செய்யப்பட்டது. பல இடங்களில் ஆங்கிலேயர்களும் மற்ற அயல் நாட்டாரும்கூட இதில் சிரத்தை எடுத்துக் கொண்டார்கள். பேதியாவில் நடந்த கண்காட்சியை அப்போது பேதியா ராஜ்யத்தின் நிர்வாகியாக யிருந்து வந்த மிஸ்டர் எச். சி. பிரயர், ஐ. சி. எஸ்., திறந்து

வைத்தார். மிஸ்டர் ரத்தர்போர்டு விட்டுச் சென்றபின் இவர் தாம் அங்கு நிர்வாகியாக அமைந்தார். மோதீஹாரீ கண்காட்சியை ரெவரண்டு ஜே. இஜட், ஹவுஸ் என்பவர் திறந்துவைத்தார். அவர் ஒரு புகழ்வாய்ந்த பாதிரி. அவருக்கு காந்திஜீயுடனும் என்னுடனும் முன்னிருந்தே பழக்கம் உண்டு. ஜம்ஷேத்பூரிலும் ஒரு சிறந்த கண்காட்சி நடத்தப்பட்டது. டாட்டா கம்பெனியின் எஞ்சினீயரும் நகர பரிபாலகருமான மிஸ்டர் டெம்பில் என்பவரை அக்கண்காட்சியைத் திறந்து வைக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டது. அவரும் ஒத்துக்கொண்டார். காதியின் உபயோகத்தைப் பற்றி அவர் அரிய சொற்பொழிவு ஒன்றை ஆற்றினுர். கம்பெனியில் ஜெனரல் மானேஜரும் அவருடைய மனைவியாரும் கண்காட்சியைக் காண வந்தார்கள். அவர்கள் இருவரும் அமெரிக்கர்கள். இருவரும் கொஞ்சம் காதியும் விலைக்கு வாங்கினுர்கள். இக்கண்காட்சிகளால் காதியைப் பற்றிப் பிரசாரமானதோடு மட்டுமன்றிக் காதியும் நிறைய விற்பனையாயிற்று. புதிதாகத் தயாரிக்கப்பட்ட சரக்குகளை விற்பதற்கும் இவை நன்ருக உதவியன. 1925இல் காந்திஜீ பீகாரின் ஜில்லாக்கள் சிலவற்றில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது அவர் காதிக்காகவும் தேசபந்துதாஸ் நினைவு நிதிக்காகவும் பணம் சேர்த்தார். பீகாரில் சுமார் ஐம்பதாயிரம் ரூபாய் திரட்டப்பட்டது. அத்தொகை காதி வேலைக்காக வைக்கப்பட்டிருந்த மூலதனத்தில் சேர்க்கப்பட்டது. இதனுல் தொழில் விரிவாக வளரத் தொடங்கியது.

ஆனுல் காந்திஜீயின் உடல் நிலை சரியாக இல்லாமலே இருந்துவந்தது. இரத்தக் கொதிப்பு மேலிட்டுவிட்டது. அதனுல் அவர் கோடைகாலத்தில் ஓய்வுக்காக மைசூரில் உள்ள நந்தி மலைக்குச் சென்ருர். நானும் அங்குச் சென்றேன். அவருடன் பல நாட்கள் தங்கியிருந்தேன். அந்த இடம் மிகவும் அழகாக இருந்தது. மலைமேல் ஏறுவது கடினமாயிருந்தது. ஆயினும் என் இழுப்பு நோய் அப்போது அவ்வளவு அதிகமாக இல்லை. பெரும்பாலும் கோடைகாலத்தில்தான் நான் உடல் நலமுடனிருப்பதுண்டு. இதனுல் நான் மலைமேல் நடந்தே சென்றேன். அப்படியே திரும்பிவரும்போதும் செய்தேன். அந்தப் பிரதேசத்திற்கு நான் இச்சமயத்தில்தான் முதன்முதலாகச் சென்றேன். அங்கிருந்து காந்திஜீயுடன் பங்களூருக்கு வந்து அங்கும் அவருடன் தங்கியிருந்தேன். அங்குப் பெரியதொரு கண்காட்சி நடந்தது. அதில் தமிழ்நாடும் ஆந்திராவும் தாம் முக்கிய பங்

கெடுத்துக்கொண்டன. அக்கண்காட்சி மிகவும் சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தது. அப்போதிலிருந்துதான் மைசூர் ராஜ்யத்தில் காதி பிரசாரம் முறைப்படி ஆரம்பித்தது. அக்கண்காட்சியில் காதி சம்பந்தப்பட்ட பல்வேறு தொழில்முறைகள் காட்டப்பட்டிருந்தது மட்டுமன்றிக் காதியைப் பற்றி சொற்பொழிவுகளும் ஆற்றப்பட்டன.

ஹிந்தி பிரசார வேலையும் தென்னாட்டில் நடந்துகொண்டிருந்தது. பங்களூரில் ஒரு விசேஷ மகாநாடு கூட்டப்பட்டுப் பரீக்ஷையில் தேறிய மாணவர்கள் சிலருக்குச் சான்றுச் சீட்டுக்கள் வழங்கப்பட்டன. ஹிந்தியின் மீது தென்னாட்டில் உள்ள பற்றுதலை நான் அப்போதுதான் முதல் முதலில் கண்டேன். கணவன் மனைவி, தாய் பெண், மாமியார் மருமகள், தந்தை மகன் எனச் சேர்ந்து சேர்ந்து ஹிந்தி கற்று வந்தவர்களைக் கண்டேன். அந்த யாத்திரை எனக்கு ஒரு பெரும் படிப்பினையை அளித்ததாகக் கருதுகிறேன்.

பங்களூரில் கண்காட்சி முடிந்தபிறகு நான் தென்னாட்டில் பல இடங்களில் சுற்றி வந்தேன். தமிழ் நாட்டின் முக்கிய பண்டாரைப் பார்த்தேன். அது திருப்பூரில் இருந்தது. வேறு சில பண்டார்களுக்கும் சென்று அவற்றையும் பார்த்தேன். ராஜாஜி தம்முடைய ஆச்ரமத்தைச் சேலம் ஜில்லாவில் அமைத்திருந்தார். அங்குக் காதி வேலை மிகவும் மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. அங்கும் சென்றேன். இந்த இடங்களிலெல்லாம் நடந்து வந்த வேலையின் முறையையும் அமைப்பு விதிகளையும் நன்றாகக் கவனித்து மனத்திற் கொண்டேன். புதியனவாகவும் கற்கத் தகுந்தனவாகவும் இருந்தவற்றை என் மாகாணத்தில் பழக்கத்தில் கொண்டுவர முயற்சி செய்தேன். அங்கிருந்த அமைப்பும் கணக்கு வைத்திருக்கும் முறையும் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. நான் அவற்றைக் கற்றுக்கொண்டேன். அக்காலத்திலும் கூட மற்ற எல்லா இடங்களையும் விடத் தமிழ்நாட்டில்தான் காதி அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டு வந்தது. "கோக்டீ" நீங்கலாக மற்ற எல்லாவற்றையும் விட மிகச் சிறந்த மென்மையான காதி ஆந்திர நாட்டில்தான் நெசவு செய்யப்பட்டு வந்தது. இதனால் தமிழ்நாட்டின் காதி நிலையங்களைப் பார்த்த பிறகு ஆந்திராவுக்கும் செல்ல வேண்டுமென்று எண்ணினேன். அங்கிருந்த சர்க்கா சங்கத்தின் அமைச்சர் ஸ்ரீ சீதாராம் சாஸ்திரியாரும் நான் அங்குச் செல்லவேண்டுமென்றும், காதியைப்

பற்றிச் சொற்பொழிவுகள் ஆற்றவேண்டுமென்றும் என்னை அழைத்திருந்தார்.

தமிழ் நாட்டிலிருந்து திரும்பி வரும்போது நான் ஆந்திரா வழியாக வந்தேன். அங்கே நான் சென்ற இடங்களிலெல்லாம் காதியைப் பற்றிப் பேசினேன். அங்கெல்லாம் ஆங்கிலத்தில்தான் பேசினேன். காதியைப் பற்றி நான் விஞ்ஞான முறையில் (அதாவது அதன் தத்துவம், பொருளாதார அடிப்படை, சுதந்திரத்தைப் பெறுவதற்கு அதன் இன்றியமையாமை, அஹிம்சாவுடன் அது கொண்டுள்ள தொடர்பு ஆகியவற்றை) எடுத்துரைத்தது கேட்டவர்கள் மனத்தில் பயன்படப் பதிந்ததென்பதைக் கண்டேன். முக்கியமாகக் காதியின் உபயோகத்தைப் பற்றியும் அதனால் அடையக்கூடிய வெற்றியைப் பற்றியும் அதிக ஐயங்கொண்டிருந்த மாணவர் தொகுதியின்மீது என் பேச்சு நன்றாகப் படிந்ததைக் கண்டேன். என்னுடைய யாத்திரையால் காதி பிரசாரத்துக்குப் பேருதவி கிடைத்ததென்று அங்குள்ளவர்கள் கூறினார்கள்.

நான் என் சொற்பொழிவுகளில் கூறியவற்றை யெல்லாம் எழுதி வைப்பது நல்லதென்று சில நண்பர்கள் நான் பட்னாவுக்குத் திரும்பி வந்ததும் கூறினார்கள். இதனால் நான் என்னுடைய சொற்பொழிவுகளின் சாராம்சத்தை எழுதி வைத்தேன். பிறகு அது "காதியின் பொருளாதாரத் தத்துவம்" என்ற பெயருடன் ஒரு புத்தகமாக வெளிவந்தது. இவ்விதமாக அந்த ஆண்டில் பெரும்பாகம் காதி வேலையிலேயே கழிந்தது.

கான்பூர் காங்கிரஸின்போது ஆசாமிலிருந்து சிலர் அக்காங்கிரஸுக்கு வந்திருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர் ஸ்ரீ நவீன சந்திர பார்தோலாயீ என்பவர் தாம். அவர் எனக்கு முன்னமே அறிமுகமான நண்பர் ஆவர். நாங்களிருவரும் கல்கத்தா ஹைகோர்ட்டில் வக்கீல் தொழில் ஆற்றிவந்த காலத்திலிருந்து அவருடன் நெருங்கிய நட்பு உண்டாகியிருந்தது. ஒத்துழையாமைக் கிளர்ச்சியில் அவர் ஆரம்பத்திலிருந்தே சேர்ந்துவிட்டார். கான்பூருக்கு வந்தபோது அவர் தம் மாகாணத்தின் முக்கிய மனிதர்களுள் ஒருவராக இருந்தார். காங்கிரஸை ஆசாமுக்கு அழைக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். இதைப்பற்றி அவர்கள் என் கருத்தைக் கேட்டார்கள். நான் வேண்டாம் என்றேன். ஏனெனில் காங்கிரஸுக்காகச் செய்யவேண்டிய ஏற்பாடுகள் பலவாகப் பெருகிவிட்டன என்பதைக் கயா காங்கிரஸின் அனுபவம் எனக்கு விளக்கி விட்டது. ஆசாமோ மிகச் சிறிய மாகாணம். முதலாவதாக நிறையப் பணம் திரட்டுவதே கஷ்டமாக இருக்கும்.

ஏனெனில் ஆசாம் சிறிய மாகாணம் மட்டுமன்று. அது ஓர் ஏழை மாகாணமுமாகும். மேலும், அரசாங்கத்தால் வகுக்கப்பட்ட ஆசாம் மாகாணத்தில் ஆசாமி மொழி பேசப்பட்டு வந்த பிரம புத்திர நதியின் பள்ளத்தாக்கை மட்டுமே காங்கிரஸ்காரர்கள் ஆசாமென்று ஏற்றுக் கொண்டிருந்தார்கள். வங்காளி பேசப்பட்டு வந்த பாகமாவது, அதாவது சுர்மா பள்ளத்தாக்கானது, வங்காளத்துடன் சேர்க்கப்பட்டிருந்தது. இவ்விதமாகக் காங்கிரஸின் காரியத்தைப் பொறுத்த வரையில் அம்மாகாணமாவது மேலும் சிறிதாகி விட்டது. செயலாளர்களின் எண்ணிக்கையும் குறைவாக இருந்தது. இப்படியெல்லாமிருந்துகூட, உற்சாக மேலீட்டால் அவர்கள் என் பேச்சை ஏற்றுக் கொள்ளாமல் காங்கிரஸை அழைத்து விட்டார்கள்.

காங்கிரஸ் கூடுவதற்கு முன்னமே அம்மாகாணத்தின் காதி வேலையை மீண்டும் முறையாக அமைக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். இதற்கு முன்பு ஏதோ வேலை நடந்து வந்து கொண்டிருந்தது. அதை மீண்டும் சரிவர அமைப்பதற்கு அவர்கள் என் உதவியை நாடினார்கள். நான் மறுக்க முடியவில்லை. அங்கு வருவதாக வாக்களித்து, அப்படியே சில நாட்களுக்குப் பின் போய்ச் சேர்ந்தேன். அம்மாகாணத்தில் காதி வேலை நன்றாக நடக்கக் கூடிய இடங்களுக்கெல்லாம் சென்று சுற்றி வந்தேன். இந்த யாத்திரை நல்ல பயனளித்தது. காதி வேலைக்கு ஆசாம் மிகவும் உகந்ததொரு மாகாணமாகும். அங்கு அவ்வேலைக்காக உள்ள வசதிகள் வேறு எந்த மாகாணத்திலுமே இல்லையென்றே கூறலாம். பட்டுப் பூச்சி வளர்த்தல், அவற்றிலிருந்து நூல் எடுத்தல், அதை நெசவு செய்யும் முறை ஆகியவை அங்கு நெடு நாளாகவே வழக்கில் இருந்து வருகின்றன. எங்கள் மாகாணத்தில் எவ்விதமாகத் தையல், பின்னல் வேலைகள் செய்யத் தெரியுமோ, அதே போல அங்குள்ள பெண்களுக்கு நெசவு செய்யத் தெரியும். நல்ல குடும்பத்துப் பெண்களுக்கு நன்றாக நெசவு செய்யத் தெரிந்திராவிட்டால் அவர்களுக்குத் திருமணம் செய்ய முடியாது. அதுவும் சாதாரணமான நெசவு அன்று. நிற நிறமான மலர் வடிவங்களை அவர்களால் நெசவு செய்ய முடியும். மிக அழகான மலர் வடிவங்கள் கொண்ட கரைகளையுடைய புடவைகளையும் நெசவு செய்யத் தெரிந்திருந்தார்கள். பெரும்பாலும் எல்லா வீடுகளிலும் தறிகள் ஓடிக் கொண்டிருந்தன. அத்தறிகள் பெரும்பாலும் மூங்கிலால் செய்யப்பட்டனவே. நெசவு மட்டுமின்றி அங்குள்ள பெண்களுக்கு நூல் நூற்கவும் தெரியும். தாம்

நெய்த துணியை அவர்களே கதர் பண்டார்களில் கொண்டு வந்து கொடுத்து அதற்கு ஈடாக நூல் வாங்கிச் செல்வதைக் கண்டு எனக்கு அதிக வியப்பும் மகிழ்ச்சியும் உண்டாயின. அம்மாகாணத்தில் சில பகுதிகளில் பஞ்சும் விளைந்து வந்தது. அது மிகவும் நேர்த்தியானது என்று சொல்ல முடியாது. ஆயினும் வேலைக்குத் தகுதியாயிருந்தது. இவ்வண்ணமாக அம்மாகாணத்தில் காதி பிரசாரத்திற்கு நல்ல சூழ்நிலையைக் கண்டேன். நான் வற்புறுத்தியதின் பேரில் அவ்வேலைக்காகச் சிறிதளவு பணமும் அளிக்கப்பட்டது. பிறகு வேலை அங்கே நன்ருக அமைக்கப்பட்டு நடந்து வந்தது.

## 68. கோஹாடி காங்கிரஸ்

கோஹாடியில் நடைபெறவிருந்த காங்கிரஸ் விழாவுக்காக அங்கிருந்தவர்கள் மிக்க உற்சாகத்துடன் பிரமபுத்திரா நதிக்கரையில் காங்கிரஸ் நகர் ஒன்றை அமைத்தார்கள். அந்த இடத்தின் காட்சியும் கூடாரங்களின் தோற்றமும் மிகவும் அழகாயிருந்தன. காதி வேலை மிகவும் வளர்ந்து முன்னேறியிருந்தது. அங்கு அமைக்கப்பட்ட கண்காட்சியும் மிக நன்ருக நடந்தது. கண்காட்சியை வெற்றிகரமாக நடத்துவதற்குச் சர்க்கா சங்கம்தான் மிகவும் பாடு பட்டது. இதற்கு ஏற்பாடுகள் செய்ததிலிருந்து சர்க்கா சங்கம் இவ்வேலையில் மிகத் தேர்ச்சியடைந்தது. அந்தக் கண்காட்சியில் சர்க்கா சங்கத்தின் பீகார் கிளையின் செயலாளர்கள் தாம் அதிக வேலை புரிந்தார்கள் என்பது எனக்கு நினைவிருக்கிறது. இந்த முறை, மதராஸைச் சேர்ந்த ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்கார் தாம் காங்கிரஸ் தலைவராக அமைந்தார். ஸ்ரீ தருண்ராம் பூகன் வரவேற்புத் தலைவராகவும் ஸ்ரீ நவீன சந்திர பார்தோலாயீ அமைச்சராகவும் அமைந்தார்கள். அவர்கள் இருவரும் உயிரைக் கொடுத்துப் பாடுபட்டு ஏற்பாடுகள் செய்து வந்தார்கள். காங்கிரஸ் விழாவுக்குச் சில நாட்களுக்கு முன்பு சரியான சமயம் பார்த்து ஒரு பாதகன், முசல்மான் ஒருவன், சுவாமி சிரத்தானந்தரைத் தில்லியில் அவருடைய வீட்டில் புகுந்து கொன்று விட்டான். இதனுல் நாடெங்கும் ஹிந்துக்களிடையில் ஆவேசம் பொங்கி எழுந்தது. அதன் விளைப்பயன் கோஹாடியில் கூடியிருந்தவர்கள் மீதும் படாமல் போகமுடியவில்லை. அக்கொலைகாரனின்மீது தொடுத்த வழக்கு

விசாரணைக்கு மௌலானு முகம்மது அலீ போன்ற தலைவர்கள் சென்ருர்கள் என்பது மற்றெல்லாவற்றையும்விட ஹிந்துக்களின் மனத்தை வருத்தியது. இதிலிருந்து மௌலானு சாஹபும் அவனிடம் பரிவு கொண்டிருக்கிருர் என்றும், இக்கொலை அவருக்கும் பிடித்திருக்கிறது போலும் என்றும் ஹிந்துக்களின் மனத்தில் ஓர் எண்ணம் படிந்து விட்டது. சுவாமிஜீ எத்தனையோ ஆண்டுகளாகச் சுத்தி, சமயக் கட்டுப்பாடு ஆகிய வேலைகளில் ஈடுபட்டுப் பணியாற்றி வந்திருந்தார். இதனுல் மத வைராக்கியமுள்ள முசல்மானியர் அவரை வெறுத்தார்கள். அவருடைய கொலைக்கு அதுவே காரணம். அக்காலத்தில் ஏதாவது ஒரு சமய விஷயத்தைக் காரணமாகக் கொண்டு இவ்விதமாக எத்தனையோ கொலைகள் செய்யப்பட்டன. கலகங்களும் கலாட்டாக்களும் எப்போதுமே நடந்து கொண்டிருந்தன. இதனுல் சூழ்நிலை முற்றிலும் கேடடைந்து விட்டது. 1921இல் காணப்பட்ட அழகான ஒற்றுமைக் காட்சியானது அடியோடு மறைந்து கொண்டே வந்தது.

விழாவில் முக்கியமாகக் குறிப்பிடக்கூடிய விஷயம் எதுவும் நடக்கவில்லை. அக்காலத்தில் காந்திஜீ காங்கிரஸுக்கு வந்து கொண்டிருந்தாராயினும் அவர் எதிலும் ஈடுபடாமல் பராமுகமாகவே இருந்து வந்தார். ஏனெனில் இந்த வேலையை அவர் சுயராஜ்யக் கட்சியின் கையில் ஒப்படைத்து விட்டார். கோஹாடியில் நடந்த ஒரு விஷயத்தை இங்குக் கூறுவது பொருத்தமானது. நாபா (பஞ்சாப்) மகாராஜா தமது பதவியிலிருந்து விலக்கப்பட்டார். அவர் மீது பரிவு கொண்டிருந்த சிலர் இதனுல் சீற்றம் அடைந்தார்கள். இவ்விஷயத்தைப் பற்றிக் காங்கிரஸானது அரசாங்கத்தைக் கண்டனம் செய்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டுமென்றும், மேலும், மற்ற வகைகளிலும் மகாராஜாவுக்கு உதவி புரிய வேண்டுமென்றும் அவர்கள் விரும்பினுர்கள். மகாத்மாஜீ இல்லாதபோது, இதைப் பற்றி விஷய ஆலோசனைக் குழுவில் ஒரு தீர்மானமும் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. ஆனுல் இந்த விஷயம் மகாத்மாஜீக்குப் பிடிக்கவில்லை. தேசிய மன்னர்களின் விஷயத்தில் தலையிடுதல் காங்கிரஸுக்கும் அம் மன்னர்களுக்கும்கூடத் தீமையையே விளைவிக்குமென்று அவர் கருதினுர். அதனுல் இவ்விஷயத்தை மீண்டும் ஆலோசனை செய்யும்படி ஆலோசனைக் குழுவைக் கேட்டுக் கொண்டார். அவர் இவ்விஷயத்தைப் பற்றித் தீர்மானம் எதையும் நிறைவேற்ற விடவில்லை. இதனுல் பம்பாயின் சார்பில் பிரதிநிதியாக வந்திருந்த ஸ்ரீ ஹார்னீமனுக்கு அதிக அதிருப்தி உண்டாயிற்று.

இந்த விஷயம் மீண்டும் ஆலோசனை செய்யப்படுவதை அவர் பலமாக எதிர்த்தார். அக்காலத்தில் தேசிய மன்னர்களைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அதனால் காந்திஜீயின் இக்கொள்கையை என்னால் சரியாகப் புரிந்துகொள்ள முடிய வில்லை. அதற்குப் பிறகு பல ஆண்டுகளுக்குப் பின், இக் கொள்கையைப் பற்றிக் காங்கிரஸ்காரர்களுக்குள் பெரும் கருத்து மாறுபாடு உண்டாகி விட்டது. பிறகு, பல ஆண்டுகள் வரையில் ஒவ்வோர் ஆண்டும் இதைப் பற்றி வாக்குவாதம் நடந்து வந்தது.

கோஹாட்டி காங்கிரஸின்போது நிறைய மழை பெய்தது. அதனால் அங்கு ஏற்பாடு செய்தவர்களுக்கும் வந்திருந்தவர்க ளுக்கும் அதிகத் துன்பம் உண்டாயிற்று. இவ்வித இடையூறு கள் வந்துங்கூட விழா வெற்றிகரமாக நடந்தேறியது. எல்லா வேலைகளும் திட்டமிட்டபடி முடிந்தன. ராம்கர் காங்கிரஸைப் போல ஏற்பாடுகள் எல்லாம் குலைந்து போகவில்லை. ஆனால் இதனால் செலவு அதிகமாகிவிட்டது. வருமானமோ குறைந்து விட்டது. ஏனெனில் காங்கிரஸ் விழாவையும் கண்காட்சியையும் பார்க்க வருபவர்களுக்கு விற்கப்படும் டிக்கட்டுகளிலிருந்துதான் நிறைய வருமானம் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் மழையால் அவர்கள் நிறைய வரவில்லை. வரவேற்புக்குழு பெரும் நஷ் டத்தை ஏற்க வேண்டி வந்தது. அகில பாரதீயக் குழுவிட மிருந்து அது உதவியை நாடவேண்டி வந்தது. உதவியும் அளிக்கப்பட்டது, ஆனால் அது போதவில்லை. ஸ்ரீ பூகனும் ஸ்ரீ பார்தோலாயீயும் தம் தனிப்பட்ட முறையில் நஷ்டத்தை ஈடு செய்யவேண்டி வந்தது. இதைப்பற்றி நெடுநாள் சச்சரவு நடந்து கொண்டிருந்தது. சமீபத்தில் தான் செயலாற்றுக் குழு வானது துண்டுபட்ட தொகையைக் கொடுத்து அந்த வம்பைத் தீர்த்து வைத்தது. நான் எதை அஞ்சிக் காங்கிரஸை அழைக்க வேண்டா மென்று என் நண்பர் ஸ்ரீ பார்தோலாயீயைத் தடுத்தேனோ அதுவே நடந்துவிட்டது. இயற்கையின் சண்ட மாருதமானது வருவாயைக் குறைத்துப் பொருளாதார நிலை மையை மேலும் திணர அடித்துவிட்டது.

அகமதாபாத் பேரவையிலிருந்தே காங்கிரஸின் குறிக் கோளானது வெறும் சுயராஜ்யமாக இருப்பதைவிட்டுப் பூர்ண சுதந்திரமாக அமைக்கப்படவேண்டுமென்று ஒரு தீர்மானம் ஆண்டுதோறும் காங்கிரஸ் சபையில் கொண்டுவரப்பட்டதென் பதையும் அது தள்ளப்பட்டு வந்ததென்பதையும் நான் மேலே கூறியுள்ளேன். கோஹாட்டி காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ அய்யங்கார்

அதை நெடுநாளாக ஆதரித்து வந்தார். இப்போது அது மீண்டும் வற்புறுத்தப்பட்டது. ஆயினும் கோஹாட்டியிலும் அது நிறைவேற முடியவில்லை.

காங்கிரஸ்காரர்கள் கவுன்ஸில்களுக்கு சென்றதிலிருந்து சிலர் அந்த வேலையிலேயே ஈடுபட்டிருந்தார்கள். மற்றும் சிலர் காதி பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தார்கள். மற்றும் சிலர் காங்கிரஸ் அமைப்பின் வேலையைச் செய்து வந்தார்கள். கவுன்ஸிலில் நடந்த வேலையைப் பற்றிச் செய்தித் தாள்களில் நிறையப் பிரசாரம் நடந்து வந்தது. அங்குச் சென்றவர்கள் தம் வேலையைத் திறம்படச் செய்தார்கள். மத்திய சட்டசபையில் பண்டித் மோதிலால்ஜீ தலைவரானார். அங்கு அவர் மற்றக் கட்சிக்காரர்களுடன் கலந்து கொண்டு அரசாங்கத்தின் வரவு செலவுத் திட்டத்தைப் பலமுறை ஏற்கப்படாமல் செய்துவிட்டார். ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்காரும் அங்கு ஓர் உறுப்பினராக இருந்தார். பல விஷயங்களைப்பற்றி அவருக்கும் பண்டித்ஜிக்கும் கருத்து வேறுபாடு வருவதுண்டு. ஆனால் இச்சமயத்தில் அப்படி ஒன்றும் இல்லை. ஸ்ரீ விட்டல்பாயீ மத்திய சட்டசபையின் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதுதான் அங்கு நிகழ்ந்தவற்றிலெல்லாம் மிகச்சிறந்த விஷயமாகும். அவர் தம்முடைய கல்வித் திறத்தையும் மதிநுட்பத்தையும் அங்கே மிகவும் சிறப்பாகக் காட்டினார். ஒவ்வொரு விஷயத்திலும் நடுவுநிலைமை பூண்டு நின்றாராயினும், அவர் அரசாங்கத்தை எத்தனையோ முறை பெரும் சங்கடத்திற்கு ஆளாக்கிவிட்டார்.

## 69. ஹிந்து முஸ்லிம் சிக்கல்கள்

கோஹாட்டி காங்கிரஸுக்குப் பிறகு ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்கார் இரண்டு விஷயங்களை வற்புறுத்தி வந்தார். ஹிந்து முஸ்லிம் சிக்கல் மிகவும் கடினமாகிக் கொண்டு வந்தது. கலகங்கள் நடந்து கொண்டேயிருந்தன. இரு வகுப்பினருக்கும் இடையில் (காங்கிரஸ்காரர்களுக்குள்ளுங்கூட) அவநம்பிக்கை வளர்ந்து கொண்டே வந்தது. இந்தச் சிக்கல் இரு முனைகளைக் கொண்டிருந்தது. ஒன்று மதத்துடன் சம்பந்தப்பட்டது, மற்றொன்று அரசியல் சம்பந்தப்பட்டது. பொதுமக்கள், அவர்கள் ஹிந்துக்களாயினும் சரி, முசல்மானியராயினும் சரி, மத சம்பந்தமான

முனையில்தான் ஈடுபட்டிருந்தார்கள். உள்நாட்டு, வெளிநாட்டு விஷயங்களை அறிந்தவர்களான படிப்பாளிகளும் செல்வந்தர்களும் அரசியல் முனையில் அதிகப் பற்றுதல் கொண்டிருந்தார்கள். ஒன்றின் சாயல் மற்றென்றின்மேல் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. படிப்பாளி வகுப்பினர் (அவர்கள்தாம் அரசியல்வாதி வகுப்பினர் என அழைக்கப்பட்டு வந்தார்கள்) பொது மக்களின் மதப்பற்றைத் தமக்குத் துணையாகப் பயன்படுத்தி வந்தார்கள். இரு பிரிவினருக்கும் வேறு வேறு குறைகளிருந்தன. அவற்றிற்காகப் போராட்டங்களும் வேறு வேறு வகையாக அமைந்தன.

ஹிந்துக்கள் பசுக்களைத் தெய்வமாகப் பாவித்து அதைப் போற்றி வந்தார்கள். பசுவதை என்ற சொல்லைக் கேட்டாலே அவர்களுடைய மனம் கொதிக்கும். இதைப் பீகாரிலும் ஐக்கிய மகாணத்திலும் சிறப்பாகக் காணலாம். இப்பசுவதையின் காரணமாக எத்தனை கலகங்கள் நடந்திருக்கின்றன என்று கூறமுடியாது. இது ஒன்றும் புதிய விஷயம் அன்று. முசல்மானியப் பாதுஷாக்கள்கூடப் பசுவதையால் ஹிந்துக்களின் மனம் எப்படி துன்புறுகின்றதென்பதை உணர்ந்திருந்தார்கள். அவர்களுள் பெருந்தன்மை வாய்ந்தவர்களாக இருந்தவர்கள் ஹிந்துக்களின் மனத்தைப் புண்படுத்தாமலிருப்பதற்காகப் பசுவதையைத் தடை செய்து நிறுத்தியே விட்டார்கள். பசுக்களை இவ்விதமாகக் கருதும் மனப்பான்மை ஹிந்துக்களிடையில் இன்று வரையில் இருந்து வருகிறது. படிப்பாளிகளான ஹிந்துக்களுங்கூட இம்மனப்பான்மைக்கு முற்றிலும் விலக்கல்லர். அவர்களுக்கும்கூடப் பசுவதை என்றால் ஆத்திரம் பொங்கிவருகிறது. முசல்மானியரோ பக்ரீத் பண்டிகையின்போது பலியிடுதல் தம்முடைய கடமையென்று கருதுகிறார்கள். இக்கடமையை ஏழைகள் பசுபலியினால்தான் ஆற்ற முடியும். ஏனெனில் அதில் செலவு குறைவாகப் பிடிக்கும். இதனால் எங்குப் பார்த்தாலும் பசுபலியின் காரணமாகச் சண்டைகள் மூண்டு கொண்டேயிருந்தன.

பீகார் அரசாங்கமானது அச்சண்டைகளைத் தடுப்பதற்காகப் பசுபலி எந்தெந்தக் கிராமங்களில் நெடுங்காலமாக நடத்தப்பட்டு வந்திருக்கிறதென்பதைப் பற்றிப் பட்டியல் ஒன்றைத் தயார் செய்து வைத்திருந்தது. அப்படிப்பட்ட கிராமங்களில் எதிலேனும் பசுபலியிடுதலில் ஹிந்துக்கள் தலையிட்டால் அவர்களை ஒடுக்கி அங்குப் பசுபலியை அரசாங்கத்தார் நடத்தி வைப்பார்கள். அதேபோல எங்காவது புதிதாகப் பசுபலியிட முசல்மானியர் விரும்பினால் அவர்களை அப்படிச் செய்யவிட மாட்டார்கள்.

இந்த முறையைப் பீகாரர் அரசாங்கமானது. நெடுநாளாகக் கடைப்பிடித்து வந்தது. பக்ரீதின்போது எங்காவது கலகம் நடந்துவிடுமோ என்ற அச்சம் எப்போதுமே யிருந்துவந்தது. அரசாங்கத்தாரும் மிகவும் விழிப்பாக இருந்துவருவார்கள்.

மசூதிகளுக்கு எதிரில் வாத்தியங்களை வாசித்துக் கொண்டு ஹிந்துக்களின் ஊர்வலங்கள் செல்வதை முசல்மானியர்கள் ஆக்ஷேபிக்கிறார்கள். வாத்தியங்கள் வாசிப்பதால் மசூதிகளில் தொழுதுகொண்டிருக்கிறவர்களின் தியானத்திற்கு இடையூறு உண்டாகிறதென்று கூறப்படுகிறது. இதனால் மசூதிகளுக்கு எதிரில் வாத்தியங்களை வாசிக்க அனுமதிக்க மாட்டோ மென்கிறார்கள். இதனாலும் ஹிந்துக்களின் விழாவின்போது சண்டைகள் அடிக்கடி மூண்டு விடுவதுண்டு.

நாள்தோறும் எத்தனை பசுக்கள் கசாப்புக்கடைகளில் கொல்லப்படுகிறன்றன என்பது தெரியாது. அவற்றின் இறைச்சியை உண்பதற்காகவோ அல்லது அவற்றின் தோல் முதலியவற்றை விற்றுப் பணம் சம்பாதிப்பதற்காகவோ அவை கொல்லப்படுகின்றன. முக்கியமாக, வெள்ளைக்காரப் படை தங்கியிருக்கும் இராணுவத்தலங்களிலும், வெள்ளைக்காரர்களின் ஜனத்தொகை அதிகமாயிருக்கும் கல்கத்தா போன்ற பட்டணங்களிலும், மிகவும் நல்ல நல்ல பசுக்கள் அடிக்கப்படுகின்றன. ஆனால் இதில் ஹிந்துக்கள் விசேஷமாகக் கவனம் செலுத்துவதில்லை. நாள்தோறும் பசுக்கள் கொல்லப்படுவதை அவர்கள் பொறுத்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் பக்ரீத் பண்டிகையின்போது மதக் கோட்பாட்டின்படி செய்யப்படும் பசுபலியைத்தான் அவர்களால் சகிக்கமுடியவில்லை. இதேபோலப் பெரிய பெரிய நகரங்களில் மாபெரும் மசூதிகளுக்கு நாலாபக்கத்திலும் டிராம், மோட்டார்கள் மற்றவகை வண்டிகள், இன்னும் மற்ற வகையில் ஓசை பெருக்குவனவற்றின் முழக்கம் இராப்பகலாக நிகழ்ந்துவருகிறது. முகரத்தின் போது முசல்மானியர்களே தம் ஊர்வலங்களில் பயங்கரமாக முழக்கம் செய்கிறார்கள். வாத்தியங்களை வாசிக்கிறார்கள். இவற்றால் முசல்மானியர் கலக்கமுறுவதில்லை. ஆனால் ஹிந்துக்களின் மதசம்பந்தமான ஊர்வலங்களில் வாத்தியம் முழங்கப் படுவதை அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. எப்படியும் இது ஒரு மிகவும் சிக்கலான விஷயம்தான். பொது மக்கள் இத்துடன்தான் அதிகமாகச் சம்பந்தப்படிருக்கிறார்கள்.

படிப்பாளிகளும் அரசியல்வாதிகளும் அரசாங்கப்பதவிகளின் மீதும், ஜில்லாபோர்டு, முனிசிபால்டி, சட்டசபை ஆகியவற்றில்

இடம் பெறுதல் முதலியவற்றின் மீதும் அதிக கவனம் செலுத்து கிறார்கள். அவற்றில் முசல்மானியர்களின் எண்ணிக்கை அவர் களுடைய விருப்பதற்கு ஏற்ப அமையாவிட்டால் முசல்மானியர் களுக்குக் கோபம் வந்துவிடும். முசல்மானியர்களின் எண் ணிக்கையானது குறிப்பிட்ட விகிதத்திற்கு மேலாகிவிட்டால் ஹிந்துக்களுக்குக் கோபம் வந்துவிடும். இது இந்தியர்களுக் குக் கிடைத்துள்ள, அல்லது கிடைக்கக்கூடிய, அல்ப சொல்ப அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்வதில் எழும் பூசலாகும். இந்த அதிகாரத்தைக் கைப்பற்ற விரும்புகிறவர்களுக்கு ஏதாவது இடைஞ்சல் எதிர்ப்பட்டால் அவர்களுக்கு ஆவேசம் வந்துவிடு கிறது.

இந்த விஷயத்தைப்பற்றி ஏதாவதோர் ஒப்பந்தம் செய்யப் படவேண்டுமென்று ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்காருக்கு அதிக ஆர்வம் இருந்துவந்தது. ஆனால் ஹிந்து முஸ்லிம் தகராறு வடநாட்டில் எவ்வளவு சிக்கலானதாக இருந்ததோ அதேபோலத் தென் னாட்டில் இல்லை. அங்கே, பிராமணர் பிராமணரல்லாதாருக்கும் தீண்டத்தக்கவர் தீண்டத்தகாதவருக்கும் இடையில்தான் அதிக மாகப் போராட்டம் இருந்துவந்தது. அங்கே முசல்மானியர் களின் எண்ணிக்கை குறைவு. பசுபலியைக் காரணமாகக் கொண்டு வடநாட்டில் எத்தனை கலகங்கள் நடந்து வந்தனவோ அத்தனை கலகங்கள் அங்கே நடப்பதில்லை. அங்கே வாத்தியங் களின் காரணமாகச் சில சண்டைகள் நடப்பதுண்டு. ஆனால் அவை கிறிஸ்தவர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் இடையில்தான் நடக்கும். இந்தச் சிக்கலான விஷயத்தில் உள்ள கஷ்டத்தை யும் ஹிந்துக்களின் மனநிலைமையையும் தென்னாட்டார் சரியாக மதிப்பிட முடியாது. ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்கார் சிறிது பரபரப் புக்காரர். அவர் எவ்வளவு விரைவாகப் பேசுவாரோ அதேபோல விரைவில் ஒரு விஷயத்தைப்பற்றி முடிவுக்கும் வந்துவிடுவார். ஏதாவது ஒரு விஷயத்தைப்பற்றி ஒருமுறை முடிவுக்கு வந்தபின் அதிலிருந்து எளிதில் மாறமாட்டார். அவர் மிகவும் மதிநுட்ப முடையவர். ஆனால் செயல் திறம்போதாது. இதனால் சட்ட நூல்களின் அறிவைப் பொறுத்தவரையில் அவர் எல்லாரையும் தோற்கடித்து விடுவார். ஆனால் செயல் திறமென்று வந்த இடத்தில் அவருடைய அறிவு கவைக்கு உதவுவதில்லை. அவர் காங்கிரஸ் தலைவராக இருந்தபோது ஹிந்து முசல்மானியர்க ளுக்கு இடையில் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து வைக்க வேண்டு மென்று பெருமுயற்சி செய்தார். ஆனால் அவர் கருத்தில்

கொண்ட ஒப்பந்தத்தை ஹிந்துப் பொதுமக்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. காங்கிரஸில் இருந்த ஹிந்துக்களுங்கூட ஏற்றுக் கொள்ளவில்லை. இதனால் அவருடைய நல் முயற்சி வீணாயிற்று.

## 70. சைமன் கமிஷன்—மதராஸ் காங்கிரஸ்

1920இல் புது அரசியல் அமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது. பத்து ஆண்டுகளுக்குப் பின் அச்சட்டம் எப்படிச் செயல் முறையில் நடந்து வருகிறதென்பதையும், மேலும் அக் காலத்தில் உள்ள அரசியல் நிலைமையையும் பார்லிமெண்டு மீண் டும் விசாரணை செய்யுமென்றும், இந்த விசாரணையைத் தக்க முறையில் நடத்துவதற்காக யாராவதொருவரை பார்லிமெண்டு நியமிக்குமென்றும் அச்சட்டத்திலேயே விதிக்கப்பட்டிருந்தது. இந்த அமைப்புச் சட்டம் அமுலுக்கு வந்ததிலிருந்து காங்கிரஸ் இதை எதிர்த்து வந்தது. 1920ஆம் ஆண்டு தேர்தலில் காங்கிரஸ் காரர்கள் கலந்து கொள்ளவில்லை. காங்கிரஸும் கிலாபத்துக் குழுவும் இட்ட கட்டளையை ஏற்று விஷயம் தெரிந்த எல்லா ஹிந் துக்களும் முசல்மானியர்களும் அத்தேர்தலைப் புறக்கணித்துவிட் டார்கள். எப்படியோ எவரோ தேர்ந்தெடுக்கப்பட்டு அச்சபை களின் இடங்களை நிறைத்து வந்தார்கள். ஆனால் அச்சட்டசபை களுக்குப் பொது மக்களின் உண்மையான பிரதிநிதிகள் வரவில்லை யென்பது உலகத்திற்குத் தெரியும். அரசாங்கத்தாரும் தம் மனத் தினுள்ளே இதை அறிந்திருந்தார்கள். ஏனெனில் காங்கிரஸ் காரர்களும் கிலாபத்துக்காரர்களும் அபேக்ஷகர்களாக நிற்காதது மட்டுமன்றி வாக்குக் கொடுப்பவர்களையும் தேர்தலில் வாக்களித் துப் பங்கெடுத்துக் கொள்ளக் கூடாதென்று தடுத்துவிட்டார்கள். இதனால் மிகச் சில வாக்காளர்களே வாக்களித்தார்கள். 1923 தேர்தலின்போது காங்கிரஸ்காரர்கள் எவரேனும் சட்ட சபைக ளுக்குச் செல்ல விரும்பினால் அவர்கள் செல்லலாம் என்று மட்டும் காங்கிரஸ் ஒத்துக்கொண்டது. ஆயினும் காங்கிரஸ் ஒரு கட்சி என்ற வகையில் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளாதென்று கூறி விட்டது. இதனால் அந்த முறை காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுக் கப்பட்டாலும்கூட, மேலும் முன்னைவிட அதிக வாக்காளர்கள் பங் கெடுத்துக் கொண்டாலும்கூட அத்தேர்தலையும் பொது மக்களின் உண்மையான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதில் வெற்றிபெற்ற

தாகக் கூறமுடியாது. பிறகு 1926ஆம் ஆண்டு தேர்தலில் காங்கிரஸ் முழுக்க முழுக்கப் பங்கெடுத்துக்கொண்டது. பொது மக்களும் மிக்க ஆர்வத்துடன் வாக்களித்தார்கள். இத்தேர்தலில் காங்கிரஸுக்கு எவ்வளவு வெற்றி கிடைக்கக் கூடுமோ அவ்வளவும் கிடைத்தது. ஆனால் காங்கிரஸுக்கும் பொது மக்களின் பிரதிநிதிகளுக்கும் பெரும்பான்மை பலம் கிட்டாத முறையில் அரசியல் திட்டம் அமைக்கப்பெற்றிருந்தது. இதனால் காங்கிரஸ்காரரர்கள் பெருந்தொகையாகத் தேர்த்தெடுக்கப்பட்டும்கூட அரசாங்கத்தின் அதிகாரிகளாகிய உறுப்பினர்களும், அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களும், முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் சிலருமாகக் கூடிக்கொண்டு காங்கிரஸுக்கு விரோதமாகப் பெரும்பான்மை பலத்தைப் பெற முடிந்தது. ஆயினும் இது எல்லா இடங்களிலும் முடியவில்லை. முக்கியமாக, மத்திய சட்டசபையில், தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் எல்லாரும் கூடிப் பண்டித் மோதிலால் நேருவின் தலைமையின்கீழ் அரசாங்கக் கட்சியை எப்போதுமே தோற்கடித்து வந்தார்கள். இவையெல்லாவற்றையும் கண்டு மக்களின் மனக்குறையை நீக்கவேண்டுமென்று அரசாங்கமும் நினைத்திருக்கலாம். இதனால் பத்தாண்டுகள் முடிவதற்குக் காத்துக் கொண்டிராமல் 1927ஆம் ஆண்டிலேயே அரசாங்கமானது ஒரு கமிஷனை நியமித்து, அக்கமிஷன் 1928இன் ஆரம்பத்தில் இந்தியாவிற்கு வந்து விசாரணையைத் தொடங்குமென்று அறிக்கை செய்தது. இக்கமிஷனுக்குச் சர் ஜான் சைமன் தலைவராக நியமிக்கப்பட்டார். மற்ற உறுப்பினர்கள் எல்லாரும் ஆங்கிலேயர்களே. ஓர் இந்தியர்கூட அதில் இல்லை. இந்த அறிக்கை வெளி வந்ததுமே நாடெங்கும் இதன்மீது மிக்க அதிருப்தி காணப்பட்டது. காங்கிரஸ்காரரர்களைச் சொல்லுவானேன், மிதவாதக் கட்சிக்காரரர்களும்கூட மிகவும் அதிருப்தி அடைந்தார்கள். ஹிந்துக்கள், முசல்மானியர்கள் எல்லாருமே இவ்விஷயத்தில் பெரும்பாலும் ஒருமனப்பட்டிருந்தார்கள். மீண்டும் ஒருமுறை எல்லாரும் கூடி இதை எதிர்ப்பார்கள் என்பது போலத் தோன்றிற்று.

இந்த விஷயத்தைப் பற்றிப் பட்னாவில் ஒரு மகாநாடு நடந்தது. சர் அலீ இமாம்தாம் அதற்குத் தலைவராக அமைந்தார். எல்லாக் கட்சிக்காரரர்களும் அதற்கு வந்திருந்தார்கள். எல்லாரும் இக்கமிஷனைப் புறக்கணிக்க வேண்டுமென்பதாக நிச்சயிக்கப்பட்டது. சர் அலீ இமாமே இப்புறக்கணிப்புக்குத் தலைவரானார்.

இக்கமிஷனில் இந்தியர் ஒருவருக்காவது இடமளிக்காததால் இந்தியர்கள் அவமதிக்கப்பட்டார்களென்றும், இதனால் இக்கமிஷ

னுடன் எவ்விதத்திலும் ஒத்துழைக்க மாட்டோமென்றும் எல்லாக் கட்சிக்காரர்களும் நாடெங்கும் கூறலானார்கள். பிரிட்டிஷ் அரசாங்கமானது இந்தியர் எவருக்கும் இக்கமிஷனில் இடமளிக்காவிட்டாலும், கமிஷனுக்கு ஆலோசகராகச் சிலர் அத்துடன் சேர்த்துக் கொள்ளப்படுவார்களென்றும், ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் இவ்விதமாக ஆலோசகர்கள் நியமிக்கப்படுவார்கள் என்றும் கூறியது. பிரிட்டிஷ் அரசாங்கம் என்ன செய்த போதிலும் அதற்கு உதவிபுரியத் தயாராயிருந்தவர்களுக்கு இந்தியாவில் குறைவில்லை. இச்சமயத்திலும் அப்படிப்பட்டவர்கள் அத்துடன் சேர்ந்து கொண்டார்கள். ஆயினும் எந்த அரசியல் கட்சியிலிருந்தும் எவரும் சேர்ந்து கொள்ளவில்லையென்பது திருப்தி அளிக்கும் விஷயமாக இருந்தது.

இக்கமிஷன் 1928இல் இந்தியாவுக்கு வருவதாக இருந்தது. அதன் முன் சமர்ப்பிப்பதற்காக அரசாங்கமானது விஷயங்களைத் தயார் செய்யத் தொடங்கியது. மற்றவர்கள் அதைப் புறக்கணிப்பதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். இதனிடையில் மதராஸில் நடைபெறுவதாக இருந்த காங்கிரஸ் விழாவின் நாள் வந்துவிட்டது. டாக்டர் அன்சாரி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். மகாத்மாஜீயும் காங்கிரஸுக்கு வந்தார். இப்பேரவை மிகப் பெருமை வாய்ந்தது. சைமன் கமிஷன் வருகின்ற விஷயம் நாட்டின் முன் இருந்தது. அதை எதிர்ப்பது மட்டும் போதாதென்று காங்கிரஸ் கூறியது. இதனால் காங்கிரஸானது எதிர்ப்பதோடு நிற்காமல், ஒரு குழுவையும் நியமிக்க வேண்டுமென்றும், அக்குழுவும் மற்றக் கட்சிகள் எல்லாமுமாகச் சேர்ந்து நாட்டிற்கு ஓர் அரசியல் அமைப்புத் திட்டத்தைத் தயார் செய்ய வேண்டுமென்றும் நிச்சயித்தது. இந்த அரசியல் அமைப்புத் திட்டம் சைமன் கமிஷனின் முன் சமர்ப்பிக்கப்படுவதற்காகத் தயார் செய்யப்படவில்லை. இதன் மூலமாக நம்முடைய கருத்துக்களை நாட்டின்முன் சமர்ப்பிக்க முடியுமென்று எண்ணப்பட்டது. மேலும் எல்லாக் கட்சிகளுமாகச் சேர்ந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தையும் இத்திட்டத்தை ஏற்றுக்கொள்ள வைக்க முடியுமென்ற எண்ணத்துடனும் தயாரிக்கப்பட்டது.

மதராஸ் காங்கிரஸிலும் பூர்ண சுதந்திரத்தைப் பற்றி ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டது. பண்டித் ஜவாஹர்லால் நேரு சிறிது காலமாக ஐரோப்பாவில் தங்கியிருந்து சமீபத்தில்தான் திரும்பி வந்திருந்தார். அவர் அத்தீர்மானத்தை மிகவும் ஆதரித்தார். அவர்தாம் இதனை மிகவும் வற்புறுத்தி விஷய ஆலோசனைக்

குழுவால் ஏற்றுக் கொள்ளப்படும்படி செய்தார். நான் இத்தீர்மானத்தை எதிர்த்தேன். செயல் முறையில் கொண்டு வருவதற்கு நாம் தயாராயில்லாத தீர்மானம் எதையும் நிறைவேற்றக் கூடாதென்பது என் கருத்து. இக்குறிக்கோளை நாம் கைவரப் பெறுவோம் என்ற நம்பிக்கை ஊட்ட வலிமையுடைய ஆயத்த நிலைமை அச்சமயத்தில் நாட்டில் காணப்படவில்லை. ஆனாலும் இத்தீர்மானமானது பெரு மனப்பான்மையுடன் நிறைவேற்றப்பட்டது. ஆயினும் இந்த விஷயம் இன்னும் ஒரு தீர்மானமாக மட்டுமே இருந்து வந்தது. இரண்டு ஆண்டுகளுக்குப் பின்புதான் லாகூர் காங்கிரஸில் இது காங்கிரஸின் அமைப்புச் சட்டத்தில் காங்கிரஸின் குறிக்கோளாக இடம் பெற்றது.

ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையைப் பற்றியும் ஒரு தீர்மானம் காங்கிரஸின் முன் கொண்டு வருவதற்காக விஷய ஆலோசனைக் குழுவால் ஏற்கப்பட்டது. அதில் மற்ற விஷயங்களோடு பசு பலியைப் பற்றியும் கூறப்பட்டிருந்தது. பசு பலியிடுவதற்கு முசல்மானியருக்கு முற்றிலும் உரிமை உண்டென்றும், அவர்கள் எங்கு வேண்டுமானாலும் கண் மறைவாகப் பசு பலியிடலாமென்றும் அதில் கூறப்பட்டிருந்தது. இதைத்தான் ஸ்ரீ ஸ்ரீநிவாச அய்யங்கார் முதலிலிருந்தே கூறி வந்தார். இப்போது இவ்விஷயம் காங்கிரஸின் தீர்மானமாக உருக்கொண்டு வந்தது. இது எவ்வளவு நியாயமாக இருந்தாலும் இதை ஹிந்துப் பொதுமக்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று நான் நினைத்தேன். முசல்மானியர்கள் இந்த உரிமையைக் கையாளத் தொடங்கினார்களானால், இதனால், பிரம்மாண்டமான கலகங்கள் விளையுமே அன்றி வேறு ஒன்றும் பலிக்காதென்றும், இது நாட்டிற்கு ஒரு விதத்திலும் நன்மை புரிவதாக அமையாதென்றும் நான் எண்ணினேன். ஸ்ரீ அய்யங்கார் இந்தப் பேச்சை எழுப்பியபோதே நான் இக்கருத்துக்கள் அடங்கிய கடிதம் ஒன்றைக் காந்திஜீக்கு எழுதியிருந்தேன். இதனால் மகாத்மாஜீ முதலிலிருந்தே இக்கேள்வியின் இரு கட்சியையும் நன்றாக அறிந்திருந்தார். விஷய ஆலோசனைக் குழு இதை ஒரு தீர்மானமாக ஏற்றுக்கொண்டதும் நான் காந்திஜீயிடம் சென்று நடந்ததைக் கூறினேன். விஷய ஆலோசனைக் குழுவின் அடுத்த கூட்டத்திற்கு அவரே வந்தார். அவர் கூறியதின்பேரில் இவ்விஷயம் மீண்டும் ஆலோசனை செய்யப்பட்டது. பிறகு அத்தீர்மானமானது எல்லாராலும் ஏற்கத்தக்க வகையில் திருத்தி அமைக்கப்பட்டது. ஆனால் இப்படிச் செய்தது சில முசல்மானிய நண்பர்களுக்குப் பிடிக்கவில்லை என்பது எனக்

குத் தெரியும். இரு வகுப்பினர்களுக்குமிடையில் முன்னமே இருந்துவந்த கருத்து மாறுபாடான பிளவானது மேலும் அகன்று விரிந்துவிட்டது.

## 71. இலங்கை யாத்திரை

இராமேஸ்வரம் சென்னைக்குச் சமீபத்திலிருப்பதால், சென்னைக் காங்கிரஸுக்குப் போகும்போது அங்கிருந்தே இராமேஸ்வரத்துக்குத் தீர்த்த யாத்திரை சென்று வரவேண்டுமென்று என் குடும்பத்துப் பெண்கள் விரும்பினார்கள். அப்படியே என்னுடன் என் தமையனாரின் மனைவியாரும் என் மனைவியும், மேலும் சில நண்பர்களின் குடும்பத்துப் பெண்களும் புறப்பட்டார்கள். செல்லும் வழியில் கோதாவரியில் முழுக்காடுவதற்காக ராஜமகேந்தரியில் இறங்கினோம். காங்கிரஸ் விழாவுக்குப் பிறகு ராமேஸ்வரம் முதலிய தலங்களுக்கு இன்னும் சிலருடன் சேர்ந்து சென்றோம். ராமேஸ்வரத்தைத் தரிசித்துக் கொண்டு நாங்கள் இலங்கைக்குச் சென்றுவிட்டோம். குடும்பத்தாரை ராமேஸ்வரத்திலேயே விட்டுச் சென்றோம். இலங்கைக்குச் செல்வதற்கு அப்போது ஒரு வசதி இருந்தது. அக்காலத்தில் ஸ்ரீ ராமோதார்தாஸ்ஜீ இலங்கையில் வானியாவின் மகாவித்யாலயம் ஒன்றில் புத்தமத நூல்களைக் கற்றுக் கொண்டிருந்தார். அவர், பல ஆண்டுகளாகச் சப்ராவில் காங்கிரஸ் வேலை புரிந்து வந்திருந்தார். பல முறை சிறைக்கும் சென்றிருந்தார். அதற்குப்பின் அவர் புத்தமத நூல்களைக் கற்பதற்காக இலங்கைக்குச் செல்ல நிச்சயித்தார். அங்கே அவருக்கு ஸமஸ்கிருத மொழியைக் கற்பிக்கவும் புத்தமத நூல்களைக் கற்கவும் நல்ல வாய்ப்புக் கிடைத்தது. சிறிது காலத்திற்குப் பிறகு அவர் புத்தமதத்தைத் தழுவிக்கொண்டு ஸ்ரீ ராஹுல் ஸாம்ஸ்கிருத்யாயன் என்ற பெயருடன் விளங்கினார். பிறகு பிக்ஷுவும் ஆகிவிட்டார். நாங்கள் சென்றபோது அவர் புத்தமத நூல்களைப் பயின்று கொண்டிருந்தார். இன்னும் முறைப்படி பிக்ஷுவாகவில்லை.

நாங்கள் அங்கே சென்றடைந்ததும், இலங்கையில் உள்ள முக்கிய இடங்களுக்கு எங்களை அழைத்துச் செல்வதற்காக அவர் ஏற்பாடுகள் செய்திருந்தார். நாங்கள் வாடகைக்கு ஒரு லாரியைப் பிடித்துக்கொண்டு அங்கே பல நாட்கள் சுற்றித்திரிந்து

வந்தோம். இப்போதுதான் நாங்கள் முதன்முதலாக இந்த அழகிய தீவைச் சுற்றிப்பார்க்க வந்திருந்தோம். அத்தீவின் பேரழகும் பசுமையும் எங்களை மயங்கவைத்து விட்டன. கண்டியின் அழகான கோவிலுக்குச் சென்று தரிசனம் செய்தோம். அங்கிருந்து நூரேலியா மலைக்குச் சென்று ஓரிரவை அங்கே கழித்தோம். அங்கிருந்து சீதாயேலியாவிற்குச் சென்றோம். இராவணன் சீதையைச் சிறை எடுத்து வந்து இங்குத்தான் அசோகவனத்தில் வைத்திருந்தானென்று சொல்லப்படுகிறது. அங்குச் செல்லும் வழியில் நாங்கள் ஒரு விசித்திரத்தைக் கண்டோம். சீதாயேலியா நூரேலியாவிலிருந்து சிறிது தொலைவில் இருக்கிறது. மலையின் உச்சியில் நூரேலியா இருக்கிறது. மலையின் அடிவாரத்தில் சீதாயேலியா இருக்கிறது. இதன் நாற்புறமும் மலைகளிருக்கின்றன. இயற்கையானது ஒரு கொப்பரையைச் சிருஷ்டித்தது போலத் தோன்றியது. அதன் சுவர்கள் மலைகளால் அமைக்கப்பட்டிருந்தன. அதன் அடியில் ஒரு சிறிய நீர்வீழ்ச்சியிருந்தது. அங்கே ஒரு சிறிய கோவிலுமிருந்தது. அங்குத்தான் ஸ்ரீ ஜானகிதேவி சிறை வைக்கப்பட்டிருந்தாராம். மலையிலிருந்து இறங்கும்போது மோட்டார் வண்டி நிறையச் சுற்றிச்சுற்றி வரவேண்டியிருந்தது. மலையிலிருந்து இறங்கி வரும் வழியில் சிறிது தூரம் வரையில் நாலாபக்கமும் அசோக மரக்காடாக இருந்தது. மலையை வெட்டி இடையில் போடப்பட்டிருந்த சாலையின் இருபுறத்திலும் மலைகள் சுவர்கள் போல நின்றன. அச்சுவர்களில் பலவிதமான கற்களும் மண்ணும் காணப்பட்டன. அவற்றில் இரண்டு மூன்றடி அகலமுள்ள ஒரு பாளமானது அசல் சாம்பலைப்போன்ற மண்ணால் அமைந்திருந்தது. அந்த மண்ணை நாங்கள் கெல்லி எடுத்துப் பார்த்தோம். மேலும் கீழும் கற்களும் அவற்றிற்கு இடையில் இது ஒன்றுமட்டும் சாம்பல் பாளமாக இருப்பதாகத் தெரியவந்தது. இதைக் கண்டதும் ராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிற அசோகவனமும், அனுமானால் இலங்கை எரிக்கப்பட்டதும் நினைவுக்கு வந்தன.

பண்டைக்காலத்து அழகிய சித்திரங்கள் வரையப்பட்ட ஓர் அழகிய குகையையும் மற்ற இடங்களையும் பார்த்துக்கொண்டு நாங்கள் அனுராதாபுரம் வந்து சேர்ந்தோம். அசோக மன்னரின் மகன் மகேந்திர வர்மன் என்பவர் கயாவிலிருந்து மகாபோதி மரக்கிளை ஒன்றைக் கொண்டுவந்து அவ்விடத்தில் நட்டார் என்று கூறப்பட்டு வருகிறது. நாங்கள் அங்கே இரவு சுமார் ஒன்பது மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். ஓர் அரசமரத்தின்

கீழ் மதசம்பந்தமான சபை ஒன்று நடந்து கொண்டிருந்தது. அதில் ஒரு பிக்ஷு ஏதோ உபதேசம் செய்து கொண்டிருந்தார். அக்காட்சி மிகவும் அழகாயிருந்தது. அது உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. எங்களால் அவருடைய உபதேசத்தைப் புரிந்து கொள்ள முடியாவிட்டாலும் அதைக் கேட்டுக் கொண்டிருந்த கூட்டத்திலிருந்து இடையிடையே எழுந்த "சாது", "சாது" என்ற ஒலியை மட்டும் எங்களால் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த அரசமரம் மமேந்திரவர்மன் நட்ட அதே மரமென்று அங்குள்ளவர்கள் கூறினர்கள். அது எப்படியாயினும் சரி, போத் கயாவில் இருக்கும் மகாபோதி மரமும் அப்பண்டைக் காலத்து மரமன்று. ஆனல் அதே இடத்தில் ஒரு காலத்தில் இருந்த பழைய மரத்தின் சந்ததியைச் சேர்ந்ததுதான். அதேபோல அனுராதா புரத்தின் மகாபோதி மரமும் மகேந்திரவர்மனல் நடப்பட்ட அதே மரமன்று. ஆயினும் அதன் சந்ததியில் வந்த ஒரு மரம் அதேயிடத்தில் இன்று வரையில் எவ்விதமாகவோ நிலேத்து நின்று வருகிறது. இதைவிட மேலும் அதிசயமானதும் வியப்பானதுமான விஷயம் ஒன்றை அங்கே கேள்விப்பட்டோம். அதாவது, அங்கு எரிந்து கொண்டிருந்த விளக்கானது மகேந்திரவர்மன் அங்கு வந்தபோது ஏற்றுவைத்த அதே விளக்கு என்பதே! அக்காலத்திலிருந்து இன்று வரையில் அது என்றுமே அணேயவேயில்லேயாம். புத்தர்கள் அதை 2200, 2300 ஆண்டுகளாக இடையருது எரித்து வருகிருர்களாம். இது உண்மையானல், உலகத்தில் இடையருது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் அணேயாமல் ஒளி வீசி வரும் சுடர் இதையன்றி வேறென்றை எங்குமே காண இயலாது.

இலங்கை யாத்திரையை முடித்துக்கொண்டு நாங்கள் இராமேஸ்வரத்துக்குத் திரும்பி வந்தோம். அங்கிருந்து எங்கள் குடும்பங்களே அழைத்துக்கொண்டு இதற்குமுன் செல்லாமல் விட்ட மற்றத் தலங்களேத் தரிசித்துக்கொண்டு சப்ராவுக்குத் திரும்பினேம்.

# 72. ஐரோப்பா யாத்திரை

பாபூ ஹரிஜீயின் வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப்பை எதிர்த்து டும்ராவ் மகாராஜா பிரிவி கவுன்ஸிலுக்கு அப்பீல் செய்துவிட்டார். அப்பீலின் விசாரணை நாள் நெருங்கிவிட்டது. லண்டனில் உள்ள பாரிஸ்டர்களுக்கு உதவி புரிவதற்காக நானும் லண்டனுக்குச் செல்ல வேண்டுமென்று பாபூ ஹரிஜீ விரும்பினர். ஒத்துழையாமையில் நான் ஈடுபட்டபோதே அவருடைய வழக்கை மட்டும் கைவிடாது அதற்காக வேலை புரிந்து வருவேன் என்று என்னிடம் வாக்குப் பெற்றிருந்தார். அந்த வாக்கை நிறைவேற்றுவதற்காகத்தான் ஹைகோர்ட்டின் விசாரணையின்போதும் நான் உதவி புரிந்தேன். இப்போது இங்கிலாந்திற்குப் போக வேண்டிய சமயம் வந்ததும் நான் மறுக்க முடியவில்லை. மேலும் இந்தச் சாக்கைக் கொண்டு வெளிநாட்டு யாத்திரையும் செய்து விடலாம் என்ற ஓர் ஆசையுமிருந்தது. இதனுல் நாங்கள் லண்டனுக்குப் போவதற்கு ஆயத்தமானேம்.

இங்கிலாந்தில் இரும்பு வேலை கற்பதற்காகச் சென்றிருந்த என் தமையனுரின் மகன் ஜனுர்தனன் சமீபத்தில்தான் அங்கிருந்து திரும்பி வந்திருந்தான்; ஜம்ஷெட்பூரில் உள்ள டாடா கம்பெனியில் அவனுக்கு வேலை கிடைத்திருந்தது. லண்டன் பழக்க வழக்கங்களைப் பற்றி அவனிடமும் மற்ற நண்பர்களிடமும் கேட்டறிந்து குளிருக்கு வேண்டிய கம்பளித் துணிமணிகளைத் தைத்துக் கொண்டேன். நான் எப்போதுமே காதிதான் அணிந்து வந்திருந்தேன். இங்கிலாந்திற்குச் சென்ருலும் இக் கட்டுப்பாட்டைக் கைவிடுவது சரியன்றெனக் கருதினேன். இதனுல் காஷ்மீரி கம்பளித் துணியையே காதி பண்டார் மூலமாக வரவழைத்து வேண்டிய உடைகளைத் தைத்துக் கொண்டேன். உடையின் வெட்டையும் தையலையும் நம் நாட்டுப் பாணியிலேயே அமைத்துக் கொண்டேன். ஆங்கில பாணி உடை அணிவதில்லையென்று நிச்சயம் செய்து கொண்டேன். இந்த முடிவு எனக்கு இரண்டு விதத்தில் பயன்பட்டது. தேவைக்குத் தக்க உடை மிகவும் குறைந்த செலவில் அடங்கிவிட்டது. உடை இந்திய பாணியிலிருந்தால் அதில் குற்றம் குறையிருந்தாலும் அயல்நாட்டார் அவற்றைக் கண்டு கொள்ள முடியாது. ஆங்கில உடையையும் ஆங்கிலேயருடைய பழக்க வழக்கங்களையும் மேற்

கொண்டால் அவர்களுடைய நாகரிகப்படியும் சம்பிரதாயப்படியும் உண்டு உடுத்து வாழ வேண்டிவரும். நம் ஊர்ப் பழக்கங்களையே பற்றி நின்றால் இவ்விதமான கஷ்டங்கள் கிட்ட வாரா. முக்கிய மாக என்னைப் போன்றவனுக்கு இத்தொல்லை அதிகமாயிருந்திருக் கும். ஏனெனில் நான் என் வாழ்க்கையில் துணிமணிகளின் மீதும் நாகரிகப் பாணியின் மீதும் என்றுமே கவனம் செலுத்தியது கிடையாது. நான், ஆடையை, உடலைக் குளிரிலிருந்து காத்துக் கொள்வதற்கும் மானத்தைக் காத்துக் கொள்வதற்கும் ஒரு கருவி யாக மட்டுமே கருதிவந்தேன். இக்கொள்கையையே இப்போதும் கடைப்பிடித்து வருகிறேன்.

எல்லா வகையிலும் எனக்குச் சௌகரியங்களை அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று பாபூ ஹரிஜீ விரும்பினார். லண்டனி லும் நான் இயன்ற வரையில் சௌகரியமாக இருந்துகொண்டு அவருடைய வேலையைப் பார்த்துவர வேண்டுமென்பது அவரு டையவிருப்பம். இதனால் என் வேலைக்காரனையும் என்னுடன் அழைத்து வரவேண்டுமென்றும் அவர் கேட்டுக்கொண்டார். இங்கிலாந்தைப் பற்றிச் சிறிது அனுபவம் உள்ள நண்பர்கள் எல்லாரும் இது அவசியமில்லை யென்று நினைத்தார்கள். ஆனால் அவர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நான் கோவர்த் தனனை என்னுடன் அழைத்துச் சென்றேன். மார்ச்சு முதலில், அவருடைய ஜோசியர் பார்த்துச் சொல்லிய நல்ல நாளில் நான் ஊரைவிட்டுப் புறப்பட்டுப் பம்பாய் வந்து சேர்ந்தேன். அங்கே காதி பண்டாரில் இன்னும் சில உடைகளை தைத்துக் கொண் டேன். அங்கிருந்து மகாத்மா காந்தியிடம் விடை பெற்றுக் கொள்வதற்காகச் சபர்மதிக்குச் சென்றேன். பம்பாயிலிருந்து பயணமாகும் தினத்தன்று என் தமையனாரும் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார். கைசர்ஹிந்த் கப்பலில் பம்பாயிலிருந்து புறப் பட்டேன்.

இதுதான் எனது முதல் வெளிநாட்டு யாத்திரை. உள்ளூரில் கூட வெளிநாட்டு முறையில் உண்டு உடுப்பவர்களோடு எனக்கு அதிகப் பழக்கமில்லை. நான் ஊரைவிட்டுப் புறப்படுவதற்கு முன் ஒருநாள் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா என்னை அழைத்து ஆங்கில முறைப்படி மேஜைமேல் எனக்கு உணவளித்தார். நான் கரண்டியையும் முள்ளையும் உபயோகிக்கும் முறையைக் கவனித்துக் கொண்டேன். கப்பலில் நான் இருந்த அறையில் தற்செயலாக ஒரு பார்சி கனவானும் இருந்தார். அவர் வெளி நாட்டில் சுற்றி வருவதற்காகப் போய்க்கொண்டிருந்தார். அவ

ருடன் பழக்கமாயிற்று எனக்குத் தெரிந்தவர்கள் வேறு எவரும் அக்கப்பலில் இல்லை. மேலும், தானாகவே சென்று எவருடனும் பழக்கப்படுத்திக் கொள்வதற்கு நான் எப்போதுமே அதிகக் கூச்சப்படுபவன். இதனால், இரண்டு மூன்று நாட்கள் வரையில் அக்கப்பலில் இருந்த இந்தியர் அல்லது அயல்நாட்டார் எவருடனும் பேச்சு வார்த்தை கூட உண்டாகவில்லை. ஆயினும், என்னுடைய இந்திய உடைமேல் எல்லோருடைய கண்ணும் சென்றது என்பதை மட்டும் கவனித்தேன். நான் கப்பலின் மேல் தட்டில் ஒரு நாற்காலியைப் போட்டு உட்கார்ந்து கொண்டு படித்து வந்தேன், அல்லது அங்கே உலாவி வந்தேன். கடல் மிகவும் அமைதியாயிருந்தது. ஆகையால் எனக்கு எவ்விதமான வயிற்றுப் புரட்டலும் தலைச்சுற்றலும் வரவில்லை.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஐ. எம். எஸ். (இந்தியன் மெடிகல் செர்விஸ்) இலாகாவிலிருந்து உபகாரச் சம்பளம் பெற்று விலகிய அதிகாரி, ஆங்கிலேயர் ஒருவர், என் அருகில் வந்தார். அவர் என்னிடம் பேச்சுக் கொடுத்தார். என்னுடைய கதர் உடையும் நான் எவருடனும் பேசாமல் தனியாக உட்கார்ந்திருந்ததும் அவருடைய கவனத்தையும் அவருடைய மனைவியாரின் கவனத்தையும் ஈர்த்தன. ஏதோ ஒரு கமிஷனின் அங்கத்தினராக அமைந்து அவர் மீண்டும் இந்தியாவுக்கு வந்தாராம். தம் வேலையை முடித்துக்கொண்டு அவர் திரும்பிச் சென்று கொண்டிருந்தார். இருவரும் மிகவும் இனிய சுபாவம் உள்ளவர்கள். காந்திஜீயைப் பற்றி அறிந்து கொள்ள அவர்கள் விரும்பினார்கள். கதரைப் பற்றியும் செய்தித்தாள்களில் ஏதோ சிறிதளவு படித்திருந்தார்கள். இந்தியாவிலிருந்தபோது காந்திஜீயைச் சந்திக்க வேண்டுமென்று அவர்களுக்கு ஆசை யிருந்தது. ஆனால் அதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. காந்திஜீயுடன் எனக்கு உள்ள தொடர்பை அவர்கள் என் பேச்சிலிருந்து அறிந்து கொண்டதும் அவர்களுடைய ஆர்வம் மேலும் பெருகியது. பிறகு அவர்கள் என்னுடன் அடிக்கடி பேசிக் கொண்டிருந்தார்கள். நான் இறைச்சி உண்பதில்லை என்பதைக் கேட்டு அவர்கள் அதிக வியப்படைந்தார்கள். அவர்களும் இறைச்சி உண்பதில்லை. இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் மரக்கறி உணவு கிடைக்கும் உண்டிச்சாலைகள் பல எங்கும் இருப்பதாக அவர்கள் எனக்குத் தெரிவித்தார்கள். அவ்விடங்களில் கறிகளும், பாலும், பாலிலிருந்து செய்யப்பட்ட பல்வகைத் தின்பண்டங்களும் நிறையக் கிடைக்குமாம். ஆனால் அங்குள்ளவர்கள் முட்டையையும்

மரக்கறியாகக் கொள்வார்களாம். சைவர்கள் நிறைய முட்டைகளை உண்பார்களாம். ஆனால் மிகவும் வைராக்கியமான சைவர்கள் பாலையும் பாலிலிருந்து செய்யப்பட்ட பொருள்களையும் கூட உண்ணமாட்டார்களாம். ஏனெனில் பாலையும் மிருகத்தின் இரத்தத்தின் வேறொரு தோற்றம் என்றே அவர்கள் கருதினார்கள். இதனால் நான் இங்கிலாந்தில் ஏதாவது உணவு விடுதிக்குச் சென்றால், முட்டையும் எனக்குத் தள்ளுபடி யென்பதை மறக்காமல் கூறிவிட வேண்டுமென்று அவர்கள் எச்சரித்தார்கள். அப்படிக் கூறினால்தான் முட்டையில்லாத உணவு எனக்கு அளிக்கப்படுமென்றும், இல்லாவிட்டால் எல்லாப் பண்டங்களிலும் ஏதாவதொரு வகையில் முட்டை கலந்தேயிருக்குமென்றும் கூறினார்கள். முட்டை கலக்கப்படாத பிஸ்கெட்டு முதலிய பண்டங்கள் எங்கும் கிடைக்கமாட்டா என்றும், மேலும் ஒரு கடைக்காரன் பிஸ்கெட்டோ மற்றப் பண்டமோ முட்டை கலக்காமல் செய்யப்பட்டிருப்பதாகக் கூறினால் அவனுடைய சொல்லை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும் கூறினார்கள். ஏனெனில் உண்மையைக் கூறுவதுதான் அவனுக்கு நலமென்று கூறினார்கள். முட்டையின் விலை அதிகமாம். இவையெல்லாம் எனக்குப் புதியனவாக இருந்தன. அத்தம்பதிகளைச் சந்தித்ததினால் நான் தெரிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்கள் எனக்குத் தெரியவந்தன. அன்றாட வாழ்க்கையில் பயன்படக் கூடிய உத்திகளை அவர்கள் எனக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டார்கள். இனி நான் வெளிநாட்டிலும் ஆசாரப்படி வாழலாம்.

வழியில் எனக்கு ஒரு விஷயம் தெரியவந்தது. கப்பல் சூயஸ் வாய்க்கால் வழியாக நுழைந்து வெளியேறுவதற்குள்ளாக, எவரேனும் பிரயாணி விரும்பினால், அவர் மோட்டார் வண்டியில் ஏறிச்சென்று கெய்ரோ நகரத்தையும், அதிலிருந்து சற்றுத் தொலைவிலிருக்கும் சிபிங்ஸ்களையும் பார்த்துத் திரும்புவதற்குத் தாமஸ் குக் கம்பெனியார் ஏற்பாடு செய்வார்கள் என்பதை அறிந்தேன். அவற்றைப் போய்ப் பார்த்து வருவது நன்றென நினைத்தேன். என்னைப் போலவே இன்னும் சில பிரயாணிகளும் அவ்விதமே அங்குச் சென்று வரத் தாமஸ் குக் கம்பெனியாருடன் ஏற்பாடு செய்து கொண்டார்கள். நாங்கள் அதிகாலையிலேயே, ஐந்து மணிக்குக் கப்பலைவிட்டு இறங்கி மோட்டாரில் கெய்ரோவுக்குச் சென்றோம். அங்குப் போய்ச் சேர்ந்ததும், காலைக் கடனை முடித்துக் கொள்வதற்கும், சிற்றுண்டி உண்பதற்காகவும் அங்குள்ள ஹோட்டல் ஒன்றுக்கு அழைத்துச் செல்லப்பட்டோம்.

அதற்குப் பின், கெய்ரோவின் கண்காட்சிச் சாலையைப் பார்க்கச் சென்றோம். அங்கே பிரமிடுகளில் இருந்து தோண்டி எடுக்கப் பட்ட அரிய பொருள்கள் வைக்கப்பட்டிருந்தன. அவை மிகவும் அழகாக இருந்தன. பண்டைக் காலத்து எகிப்தின் புகழ்வாய்ந்த அரசர்களின் பிணங்களைப் (மமீ) பிரமிடுகளிலிருந்து தோண்டி எடுத்து வந்து அங்கு வைத்திருந்தார்கள். இப்போது அவை கருத்துப் போயிருந்தாலும் அவற்றின் மனிதத் தோற்றமும் அங்கங்களும் அப்படியே கெட்டுப் போகாமலிருந்தன. அவற் றைப் புதைப்பதற்காக அவற்றின்மேல் சுற்றப்பட்டிருந்த மென்மையான துணிகளும் அன்றே போல் இன்றும் கெடாமல் இருந்தன. அத்துணி மிகவும் மென்மையாக இருந்தது. அது இந்தியாவிலிருந்து வந்து கொண்டிருந்ததென்று கேள்விப் பட்டேன். அரசர்களுடைய பிணங்களைப் புதைக்கும்போது அவற்றுடன் இன்பமளிக்கும் பொருள்களையும் புதைத்து வைத் தால் பரலோகத்திலும் அவற்றைக் கொண்டு அப்பிணங்கள் இன்பத்தைத் துய்க்கக் கூடுமென்று அந்நாட்டின் பண்டைய மக்கள் நம்பி வந்தார்கள். இந்நம்பிக்கையால் பிரமிடுகளில், பிணங்களுடன் தேவையான பொருள்களெல்லாம் புதைக்கப்பட்டு வந்தன. உடுக்க உடை, அணிய ஆபரணங்கள், உட்காருவதற்கு ஆசனங்கள் முதலானவையும், உண்பதற்கு உணவும், அழகு படுத்திக் கொள்வதற்கு வேண்டிய பொருள்களும், ஏறிச் செல் வதற்கு ரதங்களும் படகுகளும் புதைக்கப்பட்டு வந்தன. ஒவ் வொன்றும் அரிய வேலைப்பாடுடன் செய்யப்பட்டிருந்தது. அக் காலத்திலும் மக்கள் பொன்னின் உபயோகத்தை அறிந்திருந்தார் கள் என்பது தெரிய வந்தது.

இந்தியாவில் மொகஞ்ஜோதரோவில் இவ்விதமாகத் தோண்டி எடுத்தபோது கிடைத்த கோதுமையானது விதைக்கப்பட்டதும் முளை கண்டுவிட்டதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். கண் காட்சிச் சாலையில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த பொருள்களை யும், முக்கியமாகப் புகழ்வாய்ந்த அரசர்களின் பிணங்களையும் பார்த்ததும் மனிதனின் வாழ்க்கை நிலையாமை தெள்ளத் தெளி வாகப் புலனாயிற்று. நான் அங்கே சில படங்களை வாங்கினேன். கண்காட்சிச் சாலைக்குச் சென்று வந்தது மனத்திற்கு இனிமை யாக யிருந்தாலும் இமைப்பொழுதில் அழியும் வாழ்க்கையின் பெருமை வீண் என்பது என் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்தது. நான் அங்கிருந்து மனக் கலக்கத்துடன் வெளியேறினேன்.

அக்கண்காட்சிச் சாலையைப் பார்த்தபின் நகரத்தின் புகழ்

வாய்ந்த பண்டைய நாள் கட்டடங்களும் மாபெரும் அழகிய மசூதி ஒன்றும் மற்ற முக்கிய இடங்களும் எங்களுக்குக் காட்டப் பட்டன. எகிப்தில் முசல்மானியர் கிழக்கு நோக்கித் தொழுகிருர் கள். ஏனெனில் காபா அங்கிருந்து கிழக்கிலிருக்கிறது. இந்தி யர்களுக்கு இப்பழக்கம் சிறிது விசித்திரமாயிருக்கும். அங்கிருந்த மசூதியும் இதே காரணத்தால் இந்தியாவில் உள்ள மசூதிகளைப் போல் கிழக்கை நோக்கி அமைக்கப்படாமல் மேற்கை நோக்கி அமைக்கப்பட்டிருக்கின்றன. நாங்கள் பார்த்த அப்பெரிய மசூதியும் அவ்வண்ணமே அமைக்கப்பட்டிருந்தது. அங்கும் பேசப்படும் மொழி அரபி மொழியே. ஐரோப்பிய மொழிகளில் பிரெஞ்சு மொழிதான் அதிகமாக வழங்கி வந்தது. மக்கள் சுத்த மாகக் காணப்பட்டார்கள். போலீஸ்காரர்கள் துருக்கிய பெஜ் குல்லா அணிந்திருந்தார்கள். கெய்ரோ ஒரு பழைய நகரமா யினும் நாங்கள் பார்த்த பகுதி பெரும்பாலும் இக்காலத்து நகரம் போலத்தான் அமைந்திருந்தது.

மத்தியான உணவை முடித்துக் கொண்டு பிரமிடுகளைப் பார்ப்பதற்காகச் சிறிது தொலைவு வரையில் மோட்டாரில் சென்ருேம். ஓரிடத்தை அடைந்ததும் மோட்டாரை விட்டுவிட வேண்டி வந்தது. அங்கிருந்து ஒட்டகங்களின் மேலேறிக் கொண்டு பிரமிடுகள் வரையில் போகவேண்டியிருந்தது. எனக்கு ஒட்டகச் சவாரி முற்றிலும் புதியது. இந்தியாவில் நான் என்றுமே ஒட்டகத்தின்மேல் ஏறியதில்லை. ஆனல் அதன் மேலேறி உட்கார்ந்து விட்டால் பிறகு யாதொரு கஷ்டமுமில்லை என்பதைக் கண்டேன். பிரமிடுகளை அருகில் சென்று பார்த்தோம். நாற் கோணமாக அமைக்கப்பட்ட கட்டடங்களாக அவை காணப் பட்டன. நம் நாட்டில் செங்கல் காளவாய்கள் கட்டப்படும் அமைப்பில் அவை பெரும் பெரும் கற்பாளங்களால் கட்டப்பட் டிருந்தன. காளவாய்களைப் போலவே கீழே அகலம் அதிகமாக வும் மேலே போகப் போகக் குறுகலாகவும் அமைக்கப்பட்டிருந் தன. செங்கற்காளவாய்கள் சிறியனவாயிருக்கும். இவை மிகப் பெரியனவாகவும் அதிக உயரமாகவும் இருந்தன. அவற்றின் அகலத்திற்கும் உயரத்திற்கும் ஏற்ப அவற்றில் அமைக்கப்பட் டிருந்த கற்களும் காளவாயின் கற்களைவிட நீள அகலத்திலும் பருமனிலும் அதிகமாயிருந்தன. ஒவ்வொரு கல்லும் நாலைந்து முழம் நீளமிருக்குமென்று நினைக்கிறேன். அதற்கேற்ப அதன் அகலமும் பருமனும் இருந்தன. எத்தனை நாட்களில் இக்கற்கள் ஒவ்வொன்றும் செதுக்கப்பட்டு இவ்வளவு பெரிய கட்டடம்

அமைக்கப்பட்டிருக்குமோ தெரியாது. எத்தனை ஏழைகள் தம் வாழ்நாளில் எவ்வளவு காலத்தை இதை அமைப்பதில் கழித்திருப்பார்களோ! இவை ஒவ்வொன்றும், யாராவது ஓர் அரசனின் பெயர் அவன் இறந்தபின் மறந்து போகாமல் நிலைத்து நிற்பதற்காகவே அமைக்கப்பட்டன! பெயரோ இப்போது புத்தகங்களில் தான் மறைந்து கிடக்கிறது! மனிதனுக்கு எவ்விதத்திலும் பயனற்ற இக் கட்டடங்களோ தம் இடங்களில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னும் முன் இருந்தபடியே இருக்கின்றன. இவற்றில் பலவற்றை உள்ளே தோண்டியிருக்கிறார்கள். அவற்றிலிருந்து எடுக்கப்பட்ட பொருள்களின் திரள் கெய்ரோவின் கண்காட்சிச் சாலையில் இருக்கின்றது.

சிபிங்ஸ் ஓர் அதிசயமான பொருள். அது மனிதனுடைய முகமும் மிருகத்தின் உடலும் கொண்டுள்ளது. இத்தோற்றத்துடன் ஒரு பெரிய உருவம் அப்பாலைவனத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. பண்டைக் காலத்தில் இதைக் கேள்விகள் கேட்பார்கள் என்றும் அது இனி நடக்கப் போவதைத் தெரிவிக்குமென்றும் சொல்லுகிறார்கள். ஆனால் அது கூறுவதைத் தெளியத் தெரிந்து கொள்வது கடினமாம். இப்போது இப்படி நடப்பதில்லையாயினும், இந்த உருவமானது அங்கே நின்றபடி அப்பழங்காலத்தை நினைவூட்டி வருகிறது.

இவையெல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு சாயங்காலத்திற்குள் திரும்பி வந்து ரயிலேறினோம். இரவு சுமார் 11 மணிக்குப் போர்ட்டு சையதுக்குப் போய்ச் சேர்ந்தோம். அதற்குள் கப்பல் அங்கு வந்து சேர்ந்துவிட்டது. ரயிலிலேயே உணவை முடித்துக் கொண்டுவிட்டோமாதலால் நாங்கள் கப்பலில் தத்தம் அறைக்குச் சென்று தூங்கிவிட்டோம்.

மத்திய தரைக்கடலை அடைந்ததும் சிறிது குளிர் உறைக்க ஆரம்பித்தது. செங்கடல் மிகவும் வெப்பமாக இருந்தது. அரபிக் கடலைவிட அதிக வெப்பமாக இருந்தது. மத்தியதரைக் கடலில் காற்றும் பலமாக அடித்துக் கொண்டிருந்தது. அதனால் கப்பலும் சற்று ஆடியது. ஒரு நாள் மட்டும் எனக்குச் சிறிதளவு வயிற்றுப் புரட்டல் கண்டது, ஆனால் அதிகமில்லை. வழியில் பார்க்க வேண்டியவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டே சென்றேன். இட்டாலிக்கு அருகில் சிசிலித்தீவு ஓரமாகத்தான் கப்பல் சென்றது. அங்குள்ள பட்டினம் சற்றுத் தொலைவில் காணப்பட்டது. மலை மிகத் தெளிவாகத் தெரிந்தது. பல நாட்களுக்குப் பிறகு நாங்கள் மார்சேல்ஸுக்கு வந்து சேர்ந்தோம்.

வழியில் ஒன்றும் விசேஷமாக நிகழவில்லை. சில சமயங்களில் ஏதாவது தீவு தென்படும். உடனே எல்லாரும் அதைப் பார்த்துக் கொண்டே நிற்பார்கள். கடல் யாத்திரையில் நாற்புறமும் எங்குப் பார்த்தாலும் ஒரே தண்ணீர்தான் காணப்படும். இதனுல் மனம் சலிப்படைந்துவிடும். ஏதாவது மற்றெரு கப்பல் சென்று கொண்டிருப்பது கண்ணில் பட்டாலும் சரி, அல்லது நிலம் தென் பட்டாலும் சரி எல்லாப் பிரயாணிகளுமே அவற்றை என்றுமே கண்டதில்லை போலப் பார்த்துக்கொண்டே நிற்பார்கள்.

நாங்கள் மார்சேல்ஸில் காலையில் இறங்கினேம். அங்கே ஒரு ஹோட்டலுக்குச் சென்று அதில் தங்கினேம். அங்கும் குக் கம்பெனியாரின் உதவியால் பார்க்கத்தக்க இடங்களையெல்லாம் பார்த்தோம். அங்குத் தாமஸ் குக் கம்பெனியார் மிகவும் நன்ருக ஏற்பாடு செய்திருந்தார்கள். முக்கியமான இடங்களையெல்லாம் அவர்களுடைய துவிபாஷிக்கள் பிரயாணிகளுக்குக் காண்பிக் கிருர்கள். அவர்களுக்குச் சொந்தமாக மோட்டார் வண்டி யிருந்தது. குறிப்பிட்ட காலத்திற்குள் ஒருவர் எல்லாவற்றை யும் எளிதில் பார்த்து முடிப்பதற்குச் சௌகரியமாக ஏற்பாடு கள் மிகவும் நன்ருகச் செய்யப்பட்டிருந்தன. அதனுல் காலை யில் கப்பலிலிருந்து இறங்கியதுமே இரவில் புறப்படும் ரயில் வண்டியில் எனக்கு இடம் முன்கூட்டி அமர்த்திக் கொண்டேன். நாள் முழுவதும் சுற்றித் திரிந்து இரவு வண்டி யில் பாரிஸுக்குப் புறப்பட்டு விட்டேன். பாரிஸில் வண்டி மாறிக் கலேக்கு வந்து சேர்ந்தேன். அங்கு மீண்டும் கப்பலேறிப் பொழுது சாயும் முன்னமே டோவரில் இறங்கினேன். டோவரி லிருந்து ரயிலேறி இரவு சுமார் 9 மணிக்கு லண்டன் போய்ச் சேர்ந்தேன். அங்கே மார்ச்சு மாதத்தின் மூன்ருவது வாரத் தில் போய்ச் சேர்ந்தேனுயினும் அப்போதும் குளிர் அதிகமா யிருந்தது. அங்கே எனக்கு முன் போய்ச் சேர்ந்திருந்த நண்பர் கள் என்னை ரயிலடியில் சந்தித்தார்கள். எனக்காக முன்னமே வாடகைக்கு அமர்த்தியிருந்த வீட்டிற்கு அங்கிருந்து நேரே சென்றுவிட்டேன். அவ்வீடு கோல்டர்ஸ் கிரீனில் இருந்தது. சில நாட்கள் வரையில் நாங்கள் அங்குத்தான் தங்கியிருந்தோம்.

அங்கே எல்லா ஏற்பாடுகளும் முன்னமே செய்யப்பட்டிருந் தன. பாரிஸ்டர் ஸ்ரீ மகாவீர் பிரசாதும் ஸ்ரீ கும்வர் பகதூரும் முன்னிருந்தே அவ்விடத்தில் வசித்து வந்தார்கள். அதனுல் அவ் விடம் புழக்கமான வீடு போலவே இருந்தது. மேலும் கோவர் தனும் என்னுடன் வந்திருந்ததால் உணவும் இந்திய முறையில்

கிடைக்கத் தொடங்கியது. இங்கு நம் ஊரில், எப்படிச் சோறு, பருப்பு, ரொட்டி, கறி முதலியன உண்கிறேமோ, அதே போலவே, அங்கும் உண்டு வந்தோம். நான் பர்மா வழக்கை நடத்துவதற்காக அங்குச் சென்றிருந்தேன். நான் அங்குப் போய்ச் சேர்ந்த இரவில் அங்குள்ளவர்களுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுப் பிறகு தூங்கிவிட்டேன். அங்குப் போய்ச் சேர்ந்ததுமே காலையில் எழுந்ததும் பாரிஸ்ட்ரிடம் செல்லவேண்டுமென்பது தெரிய வந்தது. நாங்கள் அவருடன் கலந்து ஆலோசிப்பதற்காக அவர் முன்னமே வேளையைக் குறிப்பிட்டிருந்தார். இதனுல் லண்டனுக்கு வந்து சேர்ந்து பன்னிரண்டு மணி நேரத்திற்குள்ளாகவே வேலையில் ஈடுபட்டு விட்டேன். பிறகு வழக்குத் தீரும் வரையில் இராப் பகலாக அந்த வேலையிலேயே ஈடுபட்டிருந்தேன்.

# 73. லண்டன் வாழ்க்கை

என்னுடைய வழக்கப்படி அங்கேயும் அதிகாலையில் எழுந்து விடுவேன். அங்கே மக்கள் காலையில் அதிக நேரம் வரையில் தூங்கிக் கொண்டிருப்பார்கள். முன்னிரவில் தான் அதிக நேரம் விழித்துக் கொண்டிருந்து வேலைகளைச் செய்வார்கள். நான் அப்படிச் செய்வதில்லை. அங்கும் அப்படிச் செய்யவில்லை. எல்லோரும் தூங்கிக் கொண்டிருக்கும்போதே நான் விழித்தெழுந்து காலைக் கடனை முடித்துவிட்டுக் குளித்து உடை அணிந்து கொண்டு என் அறையில் உட்கார்ந்து வழக்கின் காகிதக் கட்டுகளைப் படித்துக் கொண்டிருப்பேன்.

எல்லாரும் காலையில் ஒன்பதரை மணிக்குத்தான் தயாராவார்கள். அதற்குள் நான் சுமார் இரண்டு மணி நேரம் வேலை செய்து முடித்திருப்பேன். அதற்குப் பின் காலைச் சிற்றுண்டி உண்டு விட்டுப் பத்து மணி சுமாருக்கு நூல் நிலையத்திற்குச் சென்று விடுவேன். அங்கே சட்டப் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பேன். எங்கள் அட்டோர்னியானவர் எனக்குத் தேவைப்பட்ட புத்தகங்களை அங்குப் பெற வசதி செய்து கொடுத்திருந்தார். அதனுல் ஆங்கிலச் சட்டங்களைப் பற்றிய பலவகையான புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைத்து வந்தன. பகல் ஒரு மணி வரையில் இவ்விதமாக வேலை புரிந்து கொண்டிருப்பேன். பிறகு அருகிலேயே இருந்த ஒரு சைவ உணவு விடுதிக்குச் சென்று

ஏதாவது பழம், பால், ரொட்டி முதலியன உண்பேன். பிறகு சாயங்காலம் வரையில் கோர்ட்டில் வேலைகளைப் பார்த்துக் கொண்டு சுமார் 6 மணிக்கு அங்கிருந்து திரும்பி வருவேன். போக்கு வரவெல்லாம் தரைக்குள்ளே ஓடிக்கொண்டிருந்த ரயிலில் தான் செய்து வந்தேன். வீட்டில் மாலை உணவை முடித்துக் கொண்டு சிறிது நேரம் உலாவி வருவேன். பிறகு திரும்பி வந்து சிறிதளவு வேலை செய்து விட்டுப் படுத்துக் கொள்வேன். எப்போதாவது ஒரு நாள் பாரிஸ்டருடன் ஆலோசனை நடக்கும். அவருடைய கருத்துக்கிசைய வேலையில் மாறுதல்கள் உண்டாகும். இவ்வண்ணமாக இரண்டு மாதங்கள் கழிந்தன. அதற்குள் பாபூ ஹரிஜீயும் வந்துவிட்டார். இதற்கிடையில் நான் ஹாய்த்திற்குச் சென்று அங்குச் சில நாட்கள் தங்கவேண்டி வந்தது.

எங்கள் பக்கத்தில் அமர்த்தப்பட்டிருந்த பெரிய பாரிஸ்டர்களுள் ஸ்ரீ லக்ஸ்மூர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சில நாட்களுக்குப் பின்னர் அங்கிருந்த ஹைகோர்ட்டின் நீதிபதியானார். பதினைந்து நாட்கள் அவருடன் ஹாய்த்தில் தங்கியிருந்தேன். வேலையின் மூலமாக அவருடன் நெருங்கிய தொடர்பு உண்டாகி விட்டது.

எங்களுடைய பாரிஸ்டர்கள் அனைவருக்கும் தலைவராக ஸ்ரீ உப்ஜான் என்பவர் இருந்தார். அவருக்கு 75க்கு மேல் வயதாகி விட்டது. இப்போதும் அவர் மிகவும் உழைத்து வந்தார்.

மிஸ்டர் உப்ஜான் எங்கள் வழக்கை தயார் செய்தபோது, நான் அதைக் கவனித்தேன். எங்கள் எல்லாருக்கும், விசேஷமாக ஹரிஜீக்கு, அவர் எங்கள் வழக்கின் சிக்கல்களையெல்லாம் நன்ருகப் புரிந்து கொண்டார் என்றும், எல்லாக் காகிதங்களையும் முழுக்க முழுக்கப் படித்துவிட்டார் என்றும் நம்பிக்கை உண்டாகிவிட்டது. இதனல் எங்களுக்கு அதிகத் திருப்தி உண்டாயிற்று. வழக்கறிஞர்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டுமென்பதற்கு மிகச் சிறந்த உதாரணம் ஒன்றைக் காணும் நற்பேறு எனக்குக் கிடைத்தது. நான் அவருடைய நடத்தையைக் கண்டு மயங்கிப் போனேன்.

மிஸ்டர் உப்ஜானுடன் எனக்கு வேடிக்கையான முறையில் பழக்கம் பெருகியது. என்னுடைய இந்திய உடையைப் பார்த்து விட்டு அவர் என்னைப் பாபூ ஹரிஜீ என்றே அல்லது வழக்கை நடத்துவதற்காக அவருடன் வந்திருந்த உறவினர்களில் ஒருவர் என்றே நினைத்துக் கொண்டார். நான் ஒரு வக்கீல் என்பது அவருக்குத்தெரியாது. ஒரு நாள் நாங்கள் அவருடைய யோசனையைக்

கேட்கப் போயிருந்தபோது, அவர் ஒரு கேள்வி கேட்டார். பின்னுல் உட்கார்ந்திருந்த நான் அதற்கு விடையளித்தேன். அவர் என் பக்கம் திரும்பிப் பார்த்தார். ஆனுல், அப்போது ஒன்றும் சொல்லவில்லே. பிறகு அவரிடம் போய் வந்து கொண்டிருந்த எங்கள் வக்கீல் ஒருவரைப் பரர்த்து, "உங்கள் கட்சிக்காரரர் மிகவும் கெட்டிக்காரராகக் காணப்படுகிருர். அவர் என்னுடைய கேள்விக்கு நன்ருக விடையளித்தார்" என்ருராம். அதன்மேல், என்னுடைய தோழர், நான் கட்சிக்காரர் அல்லன் என்பதையும், நானும் ஒரு வக்கீல் என்பதையும், நான் தொழிலே விட்டு விட்டேன் என்பதையும் கூறிஞர். அதைக் கேட்டு அவருடைய வியப்பு மேலும் அதிகமாயிற்று. அதற்குப் பின் அவர் என்னிடமிருந்து நிறைய வேலே வாங்கத் தொடங்கினர். அவருடைய முறைப்படி குறிப்புக்கள் எடுக்கும்படி கட்டளேயிடுவார். நான் ஒழுங்காக எழுதிக் கொடுத்து விடுவேன். வழக்கின் விசாரணே நாள் வந்தபோது, அவர் என்னேப் பார்த்து "கோர்ட்டிற்கு வருவதற்கு நீர் விரும்புகிறீரா?" என்று கேட்டார். "ஆம்" என்று நான் கூறியதும், அவர் "இது அவசியமில்லே; உம்முடைய பொழுது அதைவிட நன்ருகப் பயன்படும், எனக்கு நிறைய விஷயங்களேப் பற்றிக் குறிப்பு வேண்டும். நீர் வீட்டிலிருந்து கொண்டே அவற்றைத் தயார் செய்யும்" என்ருர். நான் குறிப்புக்களே எடுத்துக் கொடுத்து விட்டால் வீட்டிலிருக்க வேண்டியது அவசியமா என்று கேட்டேன். அதற்கு அவர், "இல்லே. ஆனுல், குறிப்புக்களேத் தயார் செய்வதற்கு அதிக நேரம் பிடிக்கும். அதனுல் உம்மால் கோர்ட்டிற்கு வர இயலாது. ஆனுல் நீர் காலந்தாழாமல் குறிப்புக்களே எடுத்துக் கொடுத்துவிட்டுக் கோர்ட்டுக்கும் வரமுடியுமானுல் எனக்கு யாதொரு தடையுமில்லே. ஆனுல் குறிப்புக்கள் எடுப்பது தாமதப்பட்டால் நான் பொறுக்கமாட்டேன்" என்ருர். அவர் மிகவும் பொல்லாதவர் என்பது எனக்கு நன்ருகத் தெரியும். எங்களுடைய பாரிஸ்டர்களுடனும் எதிர்க்கட்சி பாரிஸ்டர்களுடனும் நீதிபதிகளுடனும்கூட அவர் சண்டைக்குப் போய்விடுவார். இதனுல் எனக்கு அதிக அச்சமாயிருந்தது. ஆயினும் அவர் என் குறிப்புக்களேக் கண்டு மிகவும் திருப்தி அடைந்தார் என்பதைத் தெரிந்து கொண்டேன். கோர்ட்டு கூடுவதற்கு பத்து அல்லது ஐந்து நிமிஷங்களுக்கு முன் தம்மைச் சந்திக்கும்படி தம் வீட்டிலிருந்து டெலிபோன் செய்து விடுவார். எந்த விஷயங்களேப் பற்றி அவருக்குக் குறிப்புக்கள் தேவையோ அவற்றை தம் வீட்டிலேயே எழுதிக் கொண்டு

வந்து விடுவார். அவற்றை என்னிடம் கொடுத்துக் குறித்துக் கொள்ளச் சொல்வார். அவர் அதற்குமுன் கொடுத்திருந்த விஷயங்களை நான் பார்த்துக் கொண்டு வந்து அவற்றைப் பற்றி மேலும் ஏதாவது கேட்க வேண்டுமானுல் கேட்டுக் கொள்வேன். அவர் வருமுன்னமே காகிதம் பென்சிலுடன் தயாராக இல்லாவிட்டால் அவருக்குக் கோபம் வந்துவிடும். நேரத்தை ஒரு நிமிஷம் கூட வீணுக்காமல் அவர் தம் பொழுதை பயன்படுத்தி வந்தார்.

நான் மற்ருெரு விஷயத்தையும் கவனித்தேன். அது நம் நாட்டாரால், முக்கியமாக, பட்னு, கல்கத்தாவிலுள்ள வக்கீல்களால் பின்பற்றத் தக்கதாகும். நாம் கோர்ட்டுக்கு வந்ததிலிருந்து வீட்டிற்குத் திரும்பும் வரையில், நாம் வாதாடவேண்டிய வழக்கில் கழிந்த நேரம் போக எஞ்சிய பொழுதை வீணுகவே கழிக்கிருேம் என்பதை நான் வக்கீல் தொழில் புரிந்து வந்த காலத்தில் கண்டிருக்கிறேன். பார் அசோஷியேஷனில் அல்லது நூல் நிலையத்தில் உட்கார்ந்து கொண்டு நம்முடைய காகிதக் கட்டையோ புத்தகங்களையோ அரிதாகவே படிக்கிருேம். நம்முடைய வழக்குகளை வீட்டிலேயே தயார் செய்து கொண்டு வந்து விடுகிருேம். கோர்ட்டில் ஏதாவது வழக்கு விசாரணை தொடங்கியதும், அது முடியும் வரையில், அது எந்த வக்கீலின் வழக்கோ, அவருடைய பொழுது நல்ல வழியில் பயன்படுகிறது. ஆனுல் தம்முடைய வழக்குகள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படாத மற்ற வக்கீல்கள் வெறும் அரட்டை அடித்துத் தம்முடைய பொழுதை வீணுகக் கழிக்கிருர்கள். இங்கிலாந்திலோ பாரிஸ்டர்கள் தம் வேலை முழுவதையும் நூல் நிலையத்திலோ தம் அறையிலோ (சேம்பர்) தான் செய்து முடிக்கிருர்கள். நீதிபதிகள் வந்து அமருவதற்குச் சற்று முன்புதான் பாரிஸ்டர்கள் கோர்ட்டுக்குள் வருவார்கள். கோர்ட்டு கலைந்த பின்னும் கூட ஓரிரண்டு மணி நேரம் நீதிமன்றத்திலேயே இருப்பார்கள். இடையில் வழக்கின் விசாரணையிலிருந்து ஓய்வு கிடைத்த சமயங்களில் தம் வேலையைச் செய்வார்கள். சிலர் தம் வீட்டிற்கு வழக்கின் காகிதங்களை எடுத்துச் செல்வதே கிடையாது. சிலர் தம் வீட்டில் சட்டப் புத்தகங்கள்கூட வைத்திருப்பதில்லை. அவர்களுடைய கொள்கை என்னவென்ருல், வீடு நமது இல்லம். அங்கே குழந்தை குட்டிகளோடு உறவாடுதல், பேசிக்கொண்டிருத்தல், உண்டு உறங்கல், உல்லாசமாகப் பொழுது போக்குதல், அல்லது நம் மனத்திற்கிசைந்தபடி நாம் விரும்பிய புத்தகங்களை படித்தல், இவைதாம் செய்யவேண்டும் என்பது தான். இவ்

வண்ணமாகப் பகல் முழுவதும் நன்றாகப் பயன்படுகிறது. இரவும் காலைப் பொழுதும் நம்முடைய சொந்த நேரங்களாகின்றன. அவற்றை நம் இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ளலாம்.

அங்குள்ள வக்கீல்களிலும் பாரிஸ்டர்களிலும் பலர் சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் லண்டனை விட்டு வெளியே சென்று விடுகிறார்கள். மிஸ்டர் உப்ஜான் தவறாமல் ஒவ்வொரு வெள்ளிக் கிழமை சாயங்காலமும் கோர்ட்டிலிருந்து நேரே ஸ்டேஷனுக்குச் சென்று விடுவார். அங்கிருந்து ரயிலேறி, லண்டனுக்குச் சுமார் 70 கல் தொலைவிலிருந்த தம்முடைய கிராமத்து வீட்டிற்குச் சென்று அங்குத் தங்கியிருப்பார். ஞாயிற்றுக் கிழமை சாயங்காலம் தான் லண்டனுக்குத் திரும்பி வருவார். வாரத்தில் கடைசி இரண்டு நாட்களை நெருக்கடியில்லாத கிராமத்தின் நல்ல காற்றில் கழிப்பார். "வாரத்தில் இரண்டு நாட்களை நான் இவ்வண்ணமாக நல்ல காற்று வெளியில் கழிக்காமல் போனால் மற்ற நாட்களில் என்னால் வேலை செய்ய இயலாமல் போய்விடும்" என்று அவர் கூறுவார். "நான் இந்தப் பழக்கத்தைக் கடைப்பிடிக்காவிட்டால் இந்த வயதில் இத்தனை வேலை செய்ய முடியுமென்று நினைக்கிறீரா?" என்று கேட்பார்.

எங்களுடைய வழக்கு மிகவும் வலிமையானதென்றும், நாங்கள் கட்டாயமாக வெற்றிபெறுவோமென்றும், நாங்களும், முக்கியமாக, எங்களுடைய பெரிய பெரிய பாரிஸ்டர்களும் நினைத்து வந்தோம். நாங்கள் எதுவும் அதிகமாக விடைகொடுக்க வேண்டியிருக்காதென்று மிஸ்டர் உப்ஜான் கூறிவந்தார். இருபது இருபத்திரண்டு நாட்கள் வரையில் எதிர்க்கட்சியின் வாதம் நடந்துகொண்டிருந்தது. மேலும் ஒன்று, ஒன்றரை மாதம் வரையில் அவர்களுடைய வாதம் தொடர்ந்து நடக்கும்போலிருந்தது. இதற்கிடையில் கோர்ட்டு மூன்று மாதங்களுக்கு மூடப்பட்டுவிடும். இதனால் வழக்கின் விசாரணை மீண்டும் அக்டோபரில்தான் எடுத்துக்கொள்ளப்படும். டிசம்பர் வரையில் அது இழுத்துச் செல்லலாம். அப்போது குளிர் அதிகமாக இருக்கும். எங்களில் பலரால் அதைப் பொறுக்க முடியாது. முக்கியமாக என்னால் அதைத் தாங்கவே முடியாது. பாபூ ஹரிஜீ இதனால் மிகவும் கலக்க மடைந்தார். ஆகையால் ஒரு வாய்ப்புக் கிடைத்த போது, அவர், எவரையும் கேட்காமல் சமாதானம் பேசி முடித்து விட்டார். வக்கீல்களுக்கும் பாரிஸ்டர்களுக்கும் ராஜி செய்து கொள்வதென்பது பிடிக்காது என்பது அவருக்குத் தெரியும். ஏனெனில் அவர்கள் இவ்வழக்கில் தமக்குத்தான் வெற்றி என்ற திடமான

நம்பிக்கை கொண்டிருந்தார்கள். ஆயினும் செலவைக் குறைப்பதற்காகவும், குளிரின் இன்னல்களிலிருந்து தப்புவதற்காகவும் வேண்டி அவர் நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் ராஜி செய்து கொண்டார். எல்லாப் பேச்சும் முடிந்தபின், அவற்றை எழுதிக் கோர்ட்டாருக்குச் சமர்ப்பிக்கும்போதுதான் எங்களிடம் அவர் இதைப்பற்றிக் கூறினர். மற்றவர்கள் இப்போது ஒன்றும் செய்வதற்கில்லை. உடன்படிக்கைப்பத்திரம் சமர்ப்பிக்கப்பட்டாயிற்று. எங்களுக்கெல்லாம் இனி வேலையில்லை.

மிஸ்டர் உப்ஜான் வழக்கின் பேச்சைத் தவிர வேறொன்றும் பேசுவதில்லை. அவருடன் நான் நிறைய வேலை செய்து வந்ததால் என்னைப் பற்றி ஏதாவது தெரிந்துகொள்ள விரும்பி அவர் என்னைப் பற்றி ஸ்ரீ கும்வர்பகாதுரிடம் விசாரித்தார். நான் இப்போது வக்கீல் தொழிலைத் துறந்துவிட்டுக் காந்திஜீயுடன் பணியாற்றி வருகிறேன் என்பது அவருக்குத் தெரியவந்தது. இதைக்கேட்டு அவர் வியப்புற்ருர். ஒரு நாள் என்னையே கேட்டார். மேலும், காந்திஜீயும் தம்முடைய கட்சிக்காரர் என்று கூறினர். ஜாலியன்வாலாபாக் படுகொலையை ஒட்டி ஜெனரல் டையரின்மீது வழக்குத் தொடரலாமாவென்று அவருடைய அபிப்பிராயம் கேட்கப்பட்டதாம். அவர் தம் அபிப்பிராயத்தையும் அளித்தாராம். காந்திஜீ டையர்மீது வழக்குத் தொடருவதை எதிர்த்தார் என்றும் பண்டித் மோதிலாலும் தேசபந்துதாஸும் தாம் அவருடைய அபிப்பிராயத்தை நாடியிருக்கலாமென்றும் நான் கூறினேன். இதன்மேல் அவர், "காங்கிரஸின் சார்பில் காந்தியே என் அபிப்பிராயத்தைக் கேட்டார் என்றுதான் எனக்கு நினைவிருக்கிறது" என்ருர். அந்தப் படுகொலை விஷயம் இவ்வளவுக்கு எட்டிவிட்டதென்பதும், இங்கிலாந்தில் உள்ள பாரிஸ்டரின் அபிப்பிராயம் கேட்கப்பட்டதென்பதும் எனக்கு இதுவரையில் தெரியாது. என்னைப் பற்றி மிஸ்டர் உப்ஜான் இவ்வளவுதான் கூறினர். அதாவது "நீர் தொழிலை விடக்கூடாது. இந்த வழக்கு முடிந்தபிறகு இதைப்பற்றி உம்மிடம் ஒரு நாள் பேசவேண்டும்" என்ருர். ஆனல் வழக்குத் திடீரென்று முடிந்துவிட்டது. நானும் லண்டனை விட்டு விரைவில் புறப்படவேண்டியிருந்தது. இதனல் அவருடன் மறுபடி இதைப்பற்றிப் பேசவில்லை.

# 74. யுத்த எதிர்ப்பு மகாநாடு

லண்டனை விட்டு விரைவில் செல்வதற்கு ஒரு முக்கிய காரணமிருந்தது. வழக்கு முடிவடைந்த தேதிக்கு ஓரிரண்டு நாட்களுக்குப் பிறகு, ஆஸ்திரியாவில் வியன்னுவுக்குச் சற்றுத் தொலேவிலிருந்த கிராமம் ஒன்றில் அகில தேசயுத்த எதிர்ப்பு மகாநாடு ஒன்று நடைபெறுவதாக இருந்தது. இந்த விஷயத்தில் எனக்குச் சிறிது பற்றுதல் உண்டு. மிஸ்டர் பேனர் பிராக்வே அதற்குத் தலைமை வகிப்பதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பீகாரைச் சேர்ந்தவரும், இங்கிலாந்திலேயே அதிக காலமாக இருந்துவந்தவருமான ஸ்ரீ தாரிணீ பிரசாத் சின்ஹா அம்மகாநாட்டிற்குச் செல்வதாக இருந்தார். நானும் தம்முடன் சென்ருல் நன்ருயிருக்குமென்று அவர் கூறினுர். இந்த மகாநாட்டைப்பற்றி நான் முன்னமே கேள்விப்பட்டிருந்தேன். அதற்குச் செல்ல வேண்டுமென்று நான் முதலில் இருந்தே எண்ணியிருந்தேன். வழக்குத் தீர்ந்துவிட்டதால் இப்போது நல்ல வாய்ப்புக் கிடைத்தது. இதனுல் அங்கே செல்வதற்கு உடனே ஒத்துக்கொண்டேன். நாங்களும் ஒரு பஞ்சாபி நண்பருமாகச் சேர்ந்து புறப்பட்டோம். அடுத்த நாள் அங்குப் போய்ச் சேர்ந்தோம். வழியில் சிறப்பாகக் கூறக்கூடியது எதுவும் நிகழவில்லே. வழியில் பட்ட சின்னஞ்சிறிய ஐரோப்பிய நாடுகளேப் பற்றி மேலெழுந்தவாரியாகச் சிறிதளவு அறிந்து சென்ருேம். வண்டி நான்கைந்து மணி நேரம் ஓடிச்சென்று நின்றதும், இப்போது வேருெரு நாட்டின் எல்லேயை அடைந்து விட்டோமென்று புரிந்துகொள்வோம். அவ்விடத்தில் அந்நாட்டின் அதிகாரிகள் தீர்வை போடுவதற்காக எங்களுடைய சாமான்களேப் பரிசோதிக்க வருவார்கள். எங்களுடைய பாஸ்போர்ட்டையும் கவனித்துப் பார்ப்பார்கள். இவ்வண்ணமாக நாங்கள் ஆஸ்திரியாவுக்குச் சுமார் 24 மணி நேரத்திற்குள் போய்ச் சேர்ந்தோம். வழியில் மூன்று நான்கு முறை சாமான்களேக் காட்டவேண்டி வந்தது.

யுத்த எதிர்ப்பு மகாநாடு ஒரு கிராமத்தில் நடந்தது. அங்கே ஒரு சிறு குன்றின்மேல் கிறிஸ்துவ கோவில் ஒன்றிருந்தது. அதில் ஜெர்மனி, ஆஸ்திரியா, பிரான்ஸ், இங்கிலாந்து, பாலஸ்தீனம், செக்கோஸ்லோவாகியா, ஹாலந்து முதலிய நாடுகளின் பிரதிநிதிகள் கூடியிருந்தார்கள். பிரதிநிதிகளின் எண்ணிக்கை

அதிகமில்லை. ஆனால் அவர்கள் தத்தம் நாடுகளில் யுத்த எதிர்ப்புப் பிரசாரவேலையில் மிக்க ஆர்வத்துடன் ஈடுபட்டிருந்தார்கள். அவர்களில் பலர் இதற்காகத் தண்டனையையும் அனுபவித்திருந்தார்கள். சிறைக்கும் சென்று வந்திருந்தார்கள். நான் காந்திஜீயுடன் பணியாற்றி வருகிறேன் என்பது அவர்களுக்குத் தெரியவந்ததும், இயல்பாகவே அவர்களுடைய கவனம் என்பால் அதிகமாக ஈர்க்கப்பட்டது. காந்திஜீயின் பணியைப் பற்றியும் வேலைத் திறத்தைப் பற்றியும் அவர்கள் என்னை நிறைய விசாரித்தார்கள். மகாநாட்டிலும் பேசும்படி என்னைக் கேட்டுக் கொண்டார்கள். காந்திஜீயின் பணியைப் பற்றி நான் சிறிது எடுத்துரைத்தேன். அச்சமயத்தில் இந்தியாவில் பார்டோலி சத்தியாகிரகம் நடந்துகொண்டிருந்தது. அதைப்பற்றிச் சிற்சில விவரங்கள் அங்கே எங்களுக்குக் கிடைத்தன. நான் முக்கியமாகச் சம்பரான் சத்தியாக்கிரகத்தைப் பற்றியும் பார்டோலீ சத்தியாக்கிரகத்தைப் பற்றியும் தான் பேசினேன். அஹிம்சா கொள்கையானது எவ்விதமாகப் பொதுமக்களின் குறைகளைத் தீர்த்து வைக்கப் பயன்பட்டு வருகிறதென்பதையும் அது எவ்வளவுக்கு வெற்றிபெற்று வருகிறதென்பதையும் எடுத்துரைத்தேன். நாங்கள் அங்கு இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருந்தோம். எங்கள் பொழுது மிகவும் நன்றாகக் கழிந்தது.

மகாநாட்டின் நடவடிக்கைகள் ஜெர்மன், பிரெஞ்சு, ஆங்கிலம், எஸ்பராண்டோ ஆகிய நான்கு மொழிகளில் நிகழ்த்தப்பட்டன. ஒரு ஜெர்மன் இளைஞர் (அவரைப் பற்றி நான் முன்னமேயே விசாரித்து அறிந்திருந்தேன்) இந்நான்கு மொழிகளிலும் சிறந்த அறிஞராக இருந்தார். எந்த மொழியில் சொற்பொழிவு நடந்தாலும், அவர் அது முழுவதையும் உடனே விரைவில் சுருக்கெழுத்தில் எழுதிக் கொண்டு, தன் குறிப்புப் புத்தகத்தை எதிரில் வைத்துக் கொண்டு அச்சொற் பொழிவைச் சிறிதளவுகூட விட்டு விடாமல் முழுவதையும் மற்ற மூன்று மொழிகளிலும் மொழி பெயர்த்து விடுவார்.

மகாநாட்டில் யுத்த எதிர்ப்புத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. மகாநாட்டிற்குப் பிறகு, அம்மகாநாட்டின் பிரதிநிதிகள் மற்ற முக்கிய இடங்களுக்குச் சென்று அங்குச் சொற்பொழிவாற்றி யுத்த எதிர்ப்புப் பிரசாரத்தை நடத்த வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. அங்கிருந்து சற்றுத் தொலைவில் கிராண்ட்ஸ் என்ற பெயர் கொண்ட ஊர் ஒன்றிருக்கிறது. அங்கே டாக்டர் ஸ்டாண்டிநாத் என்பவர் தம் மனைவியுடன் வசித்து

வந்தார். அவர் அவ்வூரிலிருந்த மருத்துவக் கல்லூரியில் ஆசிரிய ராக இருந்தார். இது வரையில் அத்தம்பதிகள் இந்தியாவிற்கு வந்ததில்லையாயினும், மகாத்மாஜீயுடன் கடிதப் போக்கு வரவு வைத்திருந்தார்கள். நான் ஐரோப்பாவுக்கு வரும்போது காந்திஜீ அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதி என்னிடம் கொடுத்து, அங்குச் செல்வதாயிருந்தால் அவர்களைப் பார்க்கும்படி கூறினர். கிராண்ட்ஸுக்குப் போவதென்று பேச்சு எழுந்ததும், நான் வருவதை அவர்களுக்குத் தெரிவித்துக் காந்திஜீயின் கடிதத்தை யும் அனுப்பி வைத்தேன். இங்கிலாந்தைச் சேர்ந்த ஸ்ரீ ரன்ஹம் பிரவுன் என்பவர் மகாநாட்டின் அமைச்சர். அவருடன் வியன் னுவுக்கும் கிராண்ட்ஸுக்கும் செல்வதற்காகச் சில பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டார்கள். வியன்னுவில் ஒரு கூட்டம் நடந்தது. அதற்குப் புகழ்வாய்ந்த பாதிரி ஸ்ரீ உதா என்பவர் தலைமைவகித் தார். அந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் இடையிடையே கூச்சல் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் என்ன கூறினர்கள் என்ருவது என்ன வேண்டினர்கள் என்ருவது என்ருல் சொல்ல முடியாது. ஆயினும் அவர்கள் மாருன கருத் துக் கொண்டவர்கள் என்பது மட்டும் தெரிய வந்தது. அந்தக் கூட்டத்தில் இதைத் தவிர வேருெரு சம்பவமும் நடக்கவில்லை.

அடுத்த நாள் கிராண்ட்ஸுக்குச் சென்ருேம். அங்கு மாலை 5 மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். ஏழு மணிக்குச் சபை தொடங்கு வதாக இருந்தது. டாக்டர் ஸ்டாண்டிநாத் தம் மனைவியுடன் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். என்னைத் தம்முடன் தங்கும்படி அழைத்தார். நான் அவருடன் சென்று விட்டேன். மற்றத் தோழர்கள் வேறு எங்கோ தங்கினர்கள். எங்கென்பது எனக்குத் தெரியாது. ஆனல் இரண்டு மணி நேரத்திற்குப் பின்தான் அவர்களைச் சந்திப்போமே என்று இருந்து விட்டேன். டாக்டர் ஸ்டாண்டிநாத்தின் வீட்டிலிருந்து சிறிது தொலைவில்தான் கூட்டம் நடக்கும் மன்றமிருந்தது. அவருடைய வீட்டில் கைகால் கழுவிக் கொண்டு ஏதோ சிறிது உணவு உண்டுவிட்டு அவர்கள் இருவருடனும் கூட்டம் நடக்கும் இடத்திற்குக் குறிப்பிட்ட நேரத் திற்கு சற்று முன்னமே புறப்பட்டேன். அங்குப் போய்ச் சேர்ந்து கூட்டம் நடைபெறவிருந்த பெரிய அறைக்குள் சென்றேன். இது போன்ற கூட்டத்தை நான் இதற்குமுன் என்றுமே பார்த்ததில்லை. ஒரு பெரிய மன்றத்தில் சுமார் நானூறு ஐந்நூறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். சிறிய சிறிய மேஜை கள் அந்த அறையில் எங்கும் போடப்பட்டிருந்தன. ஒவ்வொரு

மேஜையின் நாற்புறத்திலும் ஐந்தாறு பேர்கள் உட்கார்ந்திருந்தார்கள். ஒவ்வொருவருக்கு எதிரிலும் சாராயம் நிறைந்த கண்ணுடி டம்ளர் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. பெரும்பாலும் எல்லாருமே சிகரெட்டோ சுருட்டோ பிடித்துக் கொண்டிருந்தார்கள். அறை முழுதும் புகையால் நிறைந்திருந்தது. அறைக்குள் நுழைவதற்காக ஒரு புறத்தில் வாயில் இருந்தது. அறையின் மற்றொரு கோடியில், சுவரின் அருகில், மரத்தால் செய்யப்பட்ட மேடை ஒன்று போடப்பட்டிருந்தது. அதன்மேல் ஐந்தாறு நாற்காலிகளும் ஒரு நீளமான மேஜையும் போடப்பட்டிருந்தன. அந்த மேடையின் ஒரு மூலைக்குப் பக்கத்தில் ஒரு சிறு வாயில் இருந்தது. அதன் கதவு அடைத்திருந்தது. நாங்கள் அறைக்குள் நுழைந்தோம். என் உடையைப் பார்த்ததுமே நானும் அன்று பேசப் போகிறவர்களில் ஒருவன் என்று சிலர் நினைத்துக் கொண்டார்கள் போலிருந்தது. அறையில் நுழைந்ததுமே ஓர் ஆள் என்னைப் பார்த்து, நான் ஜெர்மனியில் பேசுவேனு அல்லது வேறு மொழியிலா என்று கேட்டார். எனக்கு ஆங்கிலம்தான் தெரியுமென்றும், ஏதாவது பேச வேண்டிவந்தால் ஆங்கிலத்தில் தான் பேசுவேனென்றும், மேலும் சபையைக் கூட்டியவர்கள் மொழி பெயர்ப்பதற்காக ஏதாவது ஏற்பாடு செய்திருந்தால் என் பேச்சை எவராவது ஒருவர் மொழி பெயர்ப்பார் என்றும் விடையளித்தேன்.

நாங்கள் அறைக்குள் பாதி தூரம் வரையில் சென்றதுமே ஒரு பக்கத்திலிருந்து இரைச்சல் கிளம்பியது. எனக்கு ஒன்றும் புரியவில்லை. எதிரிகள் இரைச்சல் போடுகிறுர்களென் அத் தம்பதிகள் என்னிடம் கூறினுர்கள். நாங்கள் மூவரும் நேரே அந்த மேடைப்பக்கம் சென்று விட்டோம். பேராசிரியர் ஸ்டாண்டிநாத் அந்த மேடையின் மூலையிலுள்ள கதவுப்பக்கம் சென்றுர். அதை அவர் திறக்க விரும்பினுர். ஆனுல், அது அடைக்கப்பட்டிருந்தது. இதற்குள் பத்து பன்னிரண்டு பேர் சபையிலிருந்து குதித்தெழுந்து மேடைக்கருகில் வந்தார்கள். அவர்கள் தங்கள் முட்டிகளால் எங்களைத் தாக்கினுர்கள். அந்தத் தம்பதிகள் இருவரும் குறுக்கிட்டுச் சில அடிகளைத் தம்மேல் ஏற்றுக் கொண்டார்கள். இதற்குள்ளாக எங்களைத் தாக்கியவர்களில் சிலர் நாற்காலிகளை முறித்து உடைத்து அவற்றின் உடைந்த துண்டுகளை எடுத்துக் கொண்டு எங்களைத் தாக்கினுர்கள். பாவம், அந்தத் தம்பதிகளுக்குப் பலத்த காயங்கள் பட்டுவிட்டன. அவர்களுடைய தலையிலிருந்து இரத்தம் பெருகியது. எனக்கும்

காயம் பட்டுவிட்டது. என் தலையிலிருந்தும் இரத்தம் சொட்ட லாயிற்று. எதனால் இப்படிக் கலகம் மூண்டதென்பதும் எங்களை ஏன் தாக்கினார்கள் என்பதும் எங்களுக்குப் புரியவில்லை. அந்த இடத்திலிருந்து இறங்கிவிடவேண்டுமென்ற எண்ணம் என் மனத்தில் திடீரென்று உதித்தது. நாங்கள் மேடையிலிருந்து குதித்து கீழே இறங்கி விட்டோம். கீழே உட்கார்ந்திருந்தவர் களுடைய மனப்பான்மை எங்களுக்கு விளங்கவில்லை. நாங்கள் இவ்வண்ணமாகத் தாக்கப்பட்டபோது அவர்களில் யாரும் எழுந்திருக்கவுமில்லை, ஒன்றும் சொல்லவுமில்லை. நாங்கள் கீழே இறங்கிய பின்னும் எவரும் ஒன்றும் சொல்லவில்லை. அவர் களிடையில் புகுந்து நாங்கள் வாயில் பக்கம் சென்று விட்டோம். ஒரே ஒரு பெண்மணி மட்டும் எங்களுடன் வந்தார். வெளியே வந்ததும் அவர் பேராசிரியர் ஸ்டாண்டிநாத்துடன் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். நாங்கள் இரத்தத்தால் நனைந்தபடியே வீடு வந்து சேர்ந்தோம். அங்கே பேராசிரியர் என் காயத்தை முதலில் கழுவிக் கட்டுப் போட்டு விட்டார். அதற்குப்பின் தம் மனைவியின் காயத்தையும் தம் காயத்தையும் சுத்தம் செய்தார். அவர்களுக்கு ஆங்கிலம் குறைவாகத்தான் தெரியும். மிகவும் சிரமப்பட்டு அவர்களால் தங்கள் கருத்தை எனக்கு அறிவிக்க முடிந்தது.

எங்களைத் தாக்கியவர்கள் யுத்தத்தை ஆதரிக்கும் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதையும், அவர்கள் யுத்தத்திற்கு விரோதமான பிரசாரத்தைத் தடுக்க விரும்பினார்கள் என்பதையும் நான் புரிந்து கொண்டேன். என் தோழர்களைப்பற்றி ஒரு செய்தியும் கிடைக்க வில்லை. அவர்கள் சிறிய வாயிலுக்கு வெளியே எங்களுக்காகக் காத்துக் கொண்டு நின்றார்கள் என்பது பிறகு தெரிய வந்தது. அம்மன்றத்துக்குள் இவ்வண்ணமாக நடந்ததென்பது அவர் களுக்குப் பின்னால்தான் தெரிய வந்ததாம். கூட்டம் நடக்க முடியாததால் அவர்கள் திரும்பிச் சென்று விட்டார்கள். நான் அடுத்த நாள் காலையிலேயே அங்கிருந்து வியன்னாவுக்குப் புறப் பட்டு விட்டேன். என்னை வழியனுப்புவதற்காக டாக்டர் ஸடாண்டிநாத் தம் மனைவியாருடன் சிறிது தொலைவு என்னுடன் ரயிலில் வந்தார். எங்கள் மூவருக்கும் கட்டுப் போடப்பட்டிருந் தது. ரயில் பிரயாணிகள் எங்களை விசாரித்தார்கள். டாக்டர் ஸ்டாண்டிநாத் எல்லாவற்றையும் விவரமாகக் கூறியதும் அங் கிருந்த ஒரு பெண்மணி தன்னுடைய மூட்டையை அவிழ்த்து எனக்கு உண்பதற்காக ஏதோ எடுத்துக் கொடுத்தாள். ஆனால்

அது இறைச்சியால் செய்யப்பட்டிருந்ததால் நான் அதைப் பெற்றுக் கொள்ளமுடியவில்லை. டாக்டர் ஸ்டாண்டிநாத் அவளுக்கு நன்றி கூறி விளக்கினர். நம் நாட்டில் எங்குச் சென்றாலும் காணக் கிடைப்பது போலவே அந்தத் தொலைவான அயல் நாட்டிலும்கூட எளிய மக்கள் அயலூரானிடம் அதே நேசப் மனப்பான்மை பூண்டு விளங்கினர்கள் என்பதை நான் கண் டேன். அச்சபையில் நடந்த சம்பவம் பத்திரிகையில் அச்சிடப் பட்டது. அங்குள்ள பத்திரிகைகள் அச்சம்பவத்தைக் கண்டனம் செய்தன. இந்தியாவுக்கும் இச்செய்தி எட்டிவிட்டது. மகாத் மாஜீயும் இதைப்பற்றி எங்கிருந்தோ கேள்விப்பட்டார். நான் இதைப்பற்றி அப்போது யாருக்கும் எழுதவில்லை. ஆனல் டாக்டர் ஸ்டாண்டிநாத் மகாத்மாஜீக்கு எழுதிவிட்டார். அவர் "யங் இந்தியா"வில் உடனே எல்லா விஷயங்களையும் அச்சிட்டார்.

## 75. ரோமா ரோலாவைச் சந்தித்தலும் இளைஞர் மகாநாடும்

நான் அங்கிருந்து நேரே சுவித்ஜர்லாந்துக்குச் சென்றேன். ஸ்ரீ ரோமா ரோலாவைப் பார்க்கவேண்டுமென்று நான் மிகவும் விரும்பினேன். இதனல் அவர் வழக்கமாகத் தங்கியிருக்கும் இடத்திற்குச் சென்றேன். அங்கே அவருடைய சகோதரியைச் சந்தித்தேன். ஸ்ரீ ரோமா ரோலா கோடைக்காக கார்டரீகி மலைக்கு சென்றிருப்பதாகத் தெரிய வந்தது. நான் அங்குச் சென்றேன். அவ்விடத்திலிருந்து சிறிது தொலைவில் பனிக் கட்டியால் மூடப்பட்ட மலையைப் பார்க்கலாம். நான் அங்கே ஒரு ஹோட்டலில் தங்கினேன். ஸ்ரீ ரோமா ரோலா எல்லா ஏற்பாடுகளும் செய்திருந்தார். இரண்டு நாட்கள் அங்கே தங்கி யிருந்தேன். அவரைச் சந்தித்தேன். அவருடன் பேச்சும் நிகழ்ந்தது. ஆனல் அவருக்கு ஆங்கிலம் பேசவராது; எனக்குப் பிரெஞ்சு புரியாது. இது ஒரு பெரிய சங்கடமாக இருந்தது. ஹோட்டலில் ஆங்கிலம் பேசக்கூடிய ஒருவரை அவர் தேடிப் பிடித்தார். ஆனல் அவருக்கும் ஆங்கிலம் அரைகுறையாகத் தான் தெரியும். ஆதலால் ஸ்ரீ ரோமா ரோலாவைச் சந்தித்ததால் அடையக்கூடிய அளவுக்குப் பயன் கிட்டவில்லை. அவர் கிராண்ட்

ஸில் நடந்த சம்பவத்தைப்பற்றி பத்திரிகைகளில் படித்திருந்தார். கட்டுப் போடப்பட்டிருந்த என் தலையையும் கைகளையும் கவனித்தார். அங்கிருந்து புறப்பட்டு, நான் சுவித்ஜர்லாந்தின் மற்றச் சில இடங்களைப் பார்த்துக் கொண்டு லண்டனுக்கு புறப்பட்டேன். நான் பர்ன்வேல், நியூடாடேல், லோஸான், ஜினீவா முதலிய ஊர்களைப் பார்த்தேன். நியூடாடேலில், சிறியதாயினும், மிகவும் வியப்பூட்டக்கூடிய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அங்கு நான் கடைத் தெருவில் சுற்றிக் கொண்டிருந்தேன். ஒரு கடையில் கைநெசவு செய்யப்பட்ட துணி ஏதோ விற்கப்பட்டு வந்தது. ஒரு பெண் வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அவருக்கு ஆங்கிலம் தெரியும். நான் கைத்தறித் துணியைப் பற்றிக் கேட்டதிலிருந்தும், என் உடையிலிருந்தும் நான் ஓர் இந்தியன் என்பதை அவள் அறிந்து கொண்டாள். அவள் காந்திஜீயின் பெயரைக் கேள்விப்பட்டிருந்தது மட்டுமின்றி, அவரைப் பற்றிக் கிடைத்த நூல்களையெல்லாம் படித்திருந்தாள் என்பதைக் கேட்டு நான் பெரும் வியப்புற்றேன். முயுனிக்கில் கைத்தறித்துணி கிடைக்கும் கடையின் விலாசத்தை அவள் எனக்குக் கொடுத்தாள். தன்னுடைய கடையிலிருந்த பழைய காலத்துச் சர்க்கா ஒன்றையும் எனக்குக் காட்டினாள். அது நம்முடைய பழைய காலத்துப் "புத்திவாலே" (செங்குத்து) சர்க்காவைப் போல இருந்தது. அதை உயர்ந்த நாற்காலியிலோ ஸ்டூலின் மேலோ உட்கார்ந்து கொண்டுதான் இயக்க முடியும். காந்திஜீயைப் பற்றி ஸ்ரீ ரோமா ரோலா எழுதிய நூலானது எவ்வளவு பிரசாரம் செய்திருக்கிறதென்பது எனக்கு அங்கேதான் விளங்கியது.

சுவித்ஜர்லாந்தி நகரங்களைப் பார்த்துக் கொண்டு நான் பாரிஸ் வந்து சேர்ந்தேன். அங்கும் ஓரிரண்டு நாட்கள் தங்கி ஊரைப் பார்த்துக்கொண்டு லண்டன் வந்து சேர்ந்தேன். லண்டனில் மாலை ஆறேழு மணிக்கு என் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தேன். வீட்டில் சந்தடியே இல்லை. அங்கே விசாரித்ததில் நான் ஊரிலில்லாதபோது அங்கு ஒரு பயங்கர சம்பவம் நடந்துவிட்டதாகத் தெரியவந்தது. எங்கள் தோழர்களில் ஒருவரான ஸ்ரீ சத்யரஞ்சன் பிரசாத் ஒருநாள் எங்கிருந்தோ திரும்பி வந்துகொண்டிருந்தார். பஸ்ஸிலிருந்து இறங்கிச் சாலையைக் கடக்கும்போது எங்கள் வீட்டிற்கு எதிரிலேயே மோட்டாரில் அடிபட்டுத் தம் நினைவு இழந்துவிட்டாராம். அவருடைய நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. அவருக்கு மருத்துவம் செய்யப்பட்டு வந்த நர்ஸிங் ஹோமுக்கு எல்லாரும் சென்றிருப்பதாகத்

தெரியவந்தது. நானும் கைகால் கழுவிக்கொண்டு உடனே அங்கே சென்றேன். அடிபட்டதிலிருந்து அவருக்குத் தம் நினைவே வரவில்லையாம். நான் போனபோதும் அவர் நினைவற்றேயிருந்தார். அவருடைய நிலைமை மிகவும் கவலைக்கு இடங் கொடுத்தது. அன்றிரவே அவர் இறந்துவிட்டார்.

வழக்குமுடிந்த பின் லண்டனைச் சுற்றிப்பார்த்துவிட்டு இன்னும் சில இடங்களுக்கும் சென்று சுற்றி வந்த பிறகு இந்தியாவுக்குத் திரும்பலாமென்று எண்ணியிருந்தேன். ஆனால் இந்தத் துக்கமான சம்பவத்தால் எல்லாரும் மனமுடைந்து போனோம். உடனே அதி விரைவில் இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டுமென்று எல்லாருக்கும் எண்ணம் வந்துவிட்டது. இனி அங்குத் தங்கியிருந்து எதையும் பார்ப்பதற்கு மனமில்லை. அவர் இறந்த பின் கொரோனரின் விசாரணைக்காக அங்கே இரண்டு மூன்று நாட்கள் தங்கவேண்டிவந்தது. சாவானது ஒரு விபத்தால் நிகழ்ந்ததென்றும், அது யாருடைய குற்றமும் அன்று எனவும் அவர் தீர்ப்பளித்தார். பிறகு பிணத்தை எங்களிடம் கொடுத்துவிட்டார்கள். அதை நாங்கள் அங்குள்ள சுடலை உலைக்களத்தில் (கிரிமடோரியம்) தகனம் செய்துவிட்டோம். அன்றிரவே, எல்லோருமாகச் சேர்ந்து புறப்பட்டுவிட்டோம். லண்டனில் ஒன்றும் பார்க்கமுடியவில்லை. பிரிட்டிஷ் அரும்பொருள் கண்காட்சிச் சாலையைக்கூட வெளியிலிருந்துதான் பார்க்க முடிந்தது. உள்ளே சென்று பார்க்க முடியவில்லை.

ஆகஸ்டு மாதத்தின் கடைசி வாரத்தில் என்றைக்காவது ஒரு கிழமையன்று மார்சேல்ஸிலிருந்து புறப்படும் "முல்தான்" என்ற கப்பலில் ஏறிச் செல்வது என்ற நோக்கத்துடன் நாங்கள் லண்டனிலிருந்து புறப்பட்டோம். இடையில் பத்துப் பன்னிரண்டு நாட்கள் இருந்தன. இந்தப் பத்துப் பன்னிரண்டு நாட்களை ஐரோப்பாவின் நாடுகளைப் பார்ப்பதில் கழிக்கலாமென்று நினைத்தேன். இதே நாட்களில் ஹாலந்தில் அகில தேச இளைஞர் மகாநாடு ஒன்று நடைபெறுவதாக இருந்தது. நான் அங்கும் சென்றேன். அந்த மகாநாட்டில் வங்காளத்தைச் சேர்ந்த டாக்டர் சன்யாலைச் சந்தித்தேன். அதுவும் ஒருவிதமான யுத்த எதிர்ப்பு மகாநாடு போலத் தோன்றியது. அதற்கும் பல நாடுகளின் இளைஞர்கள் வந்திருந்தார்கள். அதற்கு அமெரிக்காவிலிருந்து நிறையப் பிரதிநிதிகள் வந்திருந்தது குறிப்பிடத்தக்க விஷயம். முன்னே கூறப்பட்ட சந்தாக்சவர்க்கின் யுத்த எதிர்ப்பு மகாநாட்டைவிட இதற்குஅதிகப் பிரதிநிதிகள் வந்

திருந்தார்கள். ஆனல் அங்கே எவ்வளவு ஆழ்ந்த ஈடுபாடும் பேரார்வமும் நிலவினவோ அவற்றை நான் இங்கே காணவில்லை. இந்த மகாநாடும் ஏதாவதொரு நகரத்தில் நடத்தப்படாமல் ஒரு கிராமத்திலேயே நடந்தது. நாங்கள் எல்லாரும் அங்கே வீடுகளில் தங்கியிராமல் கூடாரங்களிலேயே தங்கியிருந்தோம். குறிப் பிட்ட நேரத்தில் "சைரன்" ஊதப்படும். எல்லாரும் தத்தம் டம்ளரையும் தட்டையும் எடுத்துக்கொண்டு ஒரு பெரிய கூடா ரத்துக்குப் போய்ச் சேருவார்கள். அங்கு மரப்பலகைகளைச் சேர்த்து அமைக்கப்பட்ட மேஜைகளும் பெஞ்சுகளும் போடப் பட்டிருந்தன. அங்கே உணவோ சிற்றுண்டியோ கிடைக்கும். அதை உண்டுவிட்டு, மறுபடியும் "சைரன்" ஊதியதும் எல் லாரும் மகாநாட்டிற்குப் போய்ச் சேருவார்கள். அங்கே சொற் பொழிவுகள் நடக்கும். தொலைவிலிருந்த அந்த அயல்நாட்டு இளை ஞர்களுக்கு எல்லா நாடுகளையும் சம்பந்தப்பட்ட விஷயங்களில் அதிக சிரத்தை இருப்பதைக் கண்டேன். அகில தேச சங்கத் தைப் (லீக் ஆவ் நேஷன்ஸ்) போன்ற நிலையங்களைப்பற்றியும், அவற்றின் நடவடிக்கைகளைப்பற்றியும், அவற்றின் பயனுடை மையைப் பற்றியும் அங்கு மிக்க உற்சாகத்துடன் வாக்குவாதம் நிகழ்ந்தது. சில ஜெர்மானியர்களும் அந்த மகாநாட்டிற்கு வந் திருந்தார்கள். அந்த நாட்டில் ஜெர்மானியர்களுக்கு இடையில் கருத்து மாறுபாடு இருந்து வருவதை நான் ஊகித்தறிந்தேன். அந்நாட்டின் சிக்கலான விஷயங்களின்மீது சிந்தனை செலுத்திய மற்ற நாடுகளின் பிரதிநிதிகளுக்கு இடையிலும் கருத்து வேற் றுமை இருக்கக் கண்டேன். இந்த மகாநாட்டிலும் நான் பேசினேன்.

## 76. ஜெர்மெனியையும் இட்டாலியையும் சுற்றிப் பார்த்துத் திரும்பியது

அங்கிருந்து நான் பெர்லினுக்குச் சென்றேன். நான் ஒரு யாத்திரைத் திட்டத்தை அமைத்துக் கொண்டேன். அதில் ஜெர்மனியில் பெர்லின், லிப்ஜிக், முயுனிக் ஆகிய மூன்று நகரங் களுக்குப் போவதாகத் திட்டமிட்டிருந்தேன். இட்டலியில் வேனி ஸுக்கும் ரோமுக்கும்சென்று பிரான்ஸின் தென்பாகத்தில் உள்ள நீஸையும் பார்த்துக்கொண்டு மார்சேல்ஸுக்குப் போய்ச் சேர

லாமென்று எண்ணினேன். காலம் குறைவாக இருந்ததால் அதற்குமேல் வேறெங்கும் போகமுடியாது. மேலும் இந்த ஊர்களேயே முழுதும் சுற்றிப் பார்க்கவே நேரம் இராது. நான் பெரும்பாலும் இராவண்டிகளில்தான் பிரயாணம் செய்தேன். அங்குள்ள ரயிலில் கூடுதலாகக் கட்டணம் கொடுத்தால் தூங்குவதற்கும் இடம் கிடைத்துவிடும். இதனுல் நான் இரவு பத்துப் பதினெரு மணிக்குப் புறப்பட்டு நான் செல்லும் இடத்திற்குக் காலையில் போய்ச் சேரும் வண்டியாகப் பார்த்து அதில்தான் பிரயாணம் செய்வேன். தூங்குவதற்கும் சீட்டு வாங்கிக்கொண்டு வண்டியில் நன்ருகத் தூங்கிச் செல்வேன். காலையில் வண்டியிலேயே காலைக்கடனே முடித்துக் கொண்டு இறங்குவேன். ஸ்டேஷனில்,பிரயாணிகள் தம் பெட்டி படுக்கையைக் காவலில் வைத்துச் செல்வதற்காக அமைக்கப்பட்டிருந்த அறையைத் தேடி என் சமான்களே அங்கே வைத்துவிடுவேன். அநேகமாக ஒவ்வொரு ஸ்டேஷனிலும் தாமஸ் குக்கின் ஆள் கிடைத்து விடுவார். லிப்ஜிக் ஒன்றில்தான் அவர் கிடைக்கவில்லை.

பர்லின் ஸ்டேஷனில் இறங்கியதும், எனக்குத் தெரிந்த ஆள் எருவரும் கிடைக்கவில்லை. ஆனுல் நான் டாக்ஸிக்காரனிடம் சைகைகளால் ஆங்கில ஹோட்டலைத் தேடிப்பிடிக்கும்படி கூற முயன்று கொண்டிருந்தபோது தாமஸ் குக்கின் 'ஆள் கண்ணில் பட்டார். அவர் என்னை ஒரு ஹோட்டலுக்கு அழைத்துச் சென்ருர். தற்செயலாக பாபூ ஹரிஜீயும் அதே ஹோட்டலுக்கு வந்து சேர்ந்தார். அவரைச் சந்தித்தேன். இரண்டு மூன்று நாட்கள் அங்கே இருந்தேன். சுற்றித் திரிந்து பர்லினைப் பார்த்தேன். அங்கு ஸ்ரீ பி. சடோபாத்தியாயாவையும் சந்தித்தேன். ருஷியாவுடன் அவருக்குச் சிறிது தொடர்பு உண்டு. அங்கே போகவிரும்பினுல் தாம் பாஸ்போட்டுக்கு ஏற்பாடு செய்வதாகக் கூறினுர். ஆனுல் நேரமில்லாததால் அவருடைய உதவியைப் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லை. பர்லினில் சைவ உணவு கிடைக்கக் கூடியதோர் உணவு விடுதிக்குச் சென்று உண்டுவந்தேன். அவர் ஐரோப்பாவின் பெரிய பெரிய நகரங்களில் உள்ள சைவ உணவு விடுதிகளின் பெயர்கள் கொண்ட பட்டியல் ஒன்றை எனக்கு அளித்தார். அதில் அவற்றின் பெயரும் விலாசமும் அச்சிடப்பட்டிருந்தன. ஸ்டேஷனில் அந்தக் காகிதத்தைக் காண்பித்து, இவ்விதமான உணவு விடுதிக்கு வழி கேட்டறிந்து அங்கே சென்று உணவு உண்பேன். முட்டையினுல் சிறிது சங்கடம் உண்டாகும். ஆனுல் நான் ஓரிரண்டு

வார்த்தைகள் கற்று வைத்திருந்தேன். அவற்றைக் கொண்டு முட்டையும் எனக்குத் தள்ளுபடி என்பதைத் தெரிவித்து விடுவேன்.

லிப்ஜிக்கில் ஒரு பகல் மட்டும்தான் தங்கினேன். அங்கே தாமஸ் குக்கின் பிரதிநிதி கிடைக்கவில்லை. அதனால் அங்கே என் சாமர்த்தியத்தைக் கொண்டுதான் என் காரியத்தை முடிக்க வேண்டியிருந்தது. இங்கிலாந்துக்குப் போவதற்குமுன் பல மாதங்களாக நான் லூயீ குனேயின் தண்ணீர் மருத்துவ முறைப்படி இடுப்புக்குளியல் செய்து வந்தேன். அதனால் சிறிது நலமும் உண்டாயிற்று. அவருடைய நூலையும் ஆங்கிலத்தில் படித்திருந்தேன். இதனால், இப்போது அவரை நேரில் சென்று காணலாம் என்ற ஆவல் உண்டாயிற்று. ஸ்டேஷனில் இறங்கியதும் நேரே அவருடைய மருத்துவ சாலைக்குச் சென்றேன். அவர் இறந்துவிட்டதாகவும் அவருடைய சாவும் மிகவும் வியப்பான வகையில் நிகழ்ந்ததென்பதையும் அங்கே கேள்விப்பட்டேன். அவர் பழ வகைகள் உண்பதை மிகவும் ஆதரிப்பவர். அவருக்கு வயது அதிகமாகிவிட்டது. அப்படியிருந்தும் அவர் பழம் பறிப்பதற்காக ஏதோ ஒரு மரத்தின்மேல் ஏறினாராம். அதிலிருந்து விழுந்து விட்டாராம். அடி பலமாகப்பட்டு இறந்து விட்டாராம். அவருடைய மகன் அங்கிருந்தார். அவருக்கு ஆங்கிலம் தெரியாதென்றே கூறலாம். அவருடன் எப்படியோ பேச்சு நடந்தது. அவர் எனக்குக் குளியல் முறையையும் உணவு சம்பந்தமாக விதிவிலக்குகளையும் எழுதிக் கொடுத்தார். அங்கேயே ஒருமுறை குளிப்பாட்டிவிட்டும் காட்டினார். அந்த உணவு முறைச் சீட்டு ஜெர்மன் மொழியில் எழுதப்பட்டிருந்தது. அதனால் அது எனக்குப் பயன்படவில்லை. மேலும் அங்கேயே அது காணாமலும் போய்விட்டது.

உணவு வேளையில் அங்குள்ள உணவு விடுதி ஒன்றுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கே ஆங்கிலம் தெரிந்தவர் எவருமில்லை. நான் மிகவும் சிரமப்பட்டு அங்கிருந்த பணியாளுக்கு ஏதோ கூற முயன்று கொண்டிருந்தேன். நான் உட்கார்ந்திருந்த இடத்திற்குச் சற்று அப்பாலிருந்த மேஜையில் ஒரு பெண் உண்டுகொண்டிருந்தாள். அவள் என்னுடைய திண்டாட்டத்தைக் கவனித்து என் அருகில் வந்தாள். அவளுக்கு ஆங்கிலம் மிக நன்றாகத் தெரியும். அவள் ஜெர்மானியள். ஆயினும் அவளுடைய கணவன் ஓர் அமெரிக்கன். அவர் அப்போது அமெரிக்காவுக்குச் சென்றிருந்தார். அவள் எனக்கு

வேண்டிய உதவியைப் புரிந்தாள். அன்று அவள்தான் தாமஸ் குக்கின் பிரதிநிதி வேலையைப் புரிந்தாள். இப்படிப்பட்ட பரிவு அடிக்கடி காணப்படவில்லை.

என் யாத்திரைத் திட்டத்தின்படி முயுனிக்குச் சென்றேன். அவ்வூரில்தான் ஹிட்லரின் சொற்பொழிவுகள் பெரும்பாலும் நடத்தப்பட்டுவந்தன. அங்குள்ள புகழ் வாய்ந்த ·சேலர் ஹவுஸைப் பார்த்தேன். விஞ்ஞானப் பொருள்களைத் திரட்டிவைக்கப் பட்டிருந்த புகழ்வாய்ந்த அரும்பொருள் கண்காட்சிச் சாலையையும் பார்த்தேன். பிறகு கைத்தறித் துணி கிடைக்குமென்று எனக்கு நியூடாடேலில் கூறப்பட்ட கடையையும் அலைந்து தேடிக் கண்டுபிடித்தேன். ஆனால் அவ்விதமான துணி அங்குக் கிடைக்கவில்லை.

முயுனிக்கிலிருந்து வேனிஸுக்குச் சென்றேன். அது ஒரு அதிசயமான ஊர். கடல் வீட்டு வாசற்படியிலேயே இருக்கிறது. வீட்டிலிருந்து வெளியேறினால் படகில்தான் ஏறிச் செல்ல வேண்டும். படகைத் தவிர அங்கே வேறு எவ்விதமான ஊர்தியுமில்லை. நீரின் நடுவில் உள்ள பாறைகளின்மேல் வீடுகள் கட்டப் பட்டிருக்கின்றன. அங்குள்ள புகழ்வாய்ந்த கிறிஸ்தவக்கோவில் இருக்கும் இடத்தில் மட்டும் சிறிதளவு வெட்டவெளி யிருக்கிறது. மாலையில் அங்கே உலாவிக் கொண்டிருந்தேன். இரவு பத்துப் பதினொரு மணிக்கு ஹோட்டலுக்குச் சென்றேன். அங்குத் தங்க விரும்பினேன். ஆனால் அங்கே கொசு நிறைய இருந்தது. கொசுவலை போட்டுங்கூட அங்கே தங்குவது கஷ்டமாயிருந்தது. இதனால் ரயில் புறப்படுவதற்கு முன்னமே ஸ்டேஷனுக்குச் சென்று விட்டேன்.

ரோமில் இரண்டு நாட்கள் தங்கியிருந்தேன். பண்டைக் காலத்துப் பொருள்களையும் புதியனவற்றையும் தாமஸ் குக்கின் உதவியால் நன்ருகப் பார்த்தேன். இரண்டு நகரங்களிலும் படையாட்கள் நிறையப் பேர் இங்குமங்கும் நடமாடிக் கொண்டிருப்பதைக் கவனித்தேன். அங்குப் படைக்குப் பெரும் பெருமை அளிக்கப்படுகிறதென்பது எனக்குத் தோன்றிற்று. சாதாரணமாக யாத்திரிகர்கள் பார்க்கக்கூடிய இடங்களைத் தவிர வேறு ஒன்றையும் நான் என் யாத்திரையில் பார்க்கவுமில்லை; எவரையும் கண்டு கொள்ளவுமில்லை. இதற்கு நேரமுமில்லை, ஏற்பாடுமில்லை. முன்கூட்டி ஏதாவது ஏற்பாடு செய்திருந்தால், நான் சிலரைக் கண்டு வந்திருப்பேன். மேலும், எனக்கு நேரமிருந்திருதால், அங்குள்ள நிலைமையையும் அறிய முயற்சி செய்திருப்பேன். இப்

படிச் செய்ய முடியவில்லையே என்பது குறித்து வருத்தமாகத் தானிருந்தது. ஆனால் நான் இதற்கு ஒன்றும் செய்ய முடிய வில்லை.

கடைசியில் மார்சேல்ஸுக்குப் புறப்பட்டேன். வழியில் நீஸில் இறங்கினேன். அங்கே பாகல்பூர்க்காரர் ஸ்ரீ தீப் நாராயண் சின்ஹாவைச் சந்தித்தேன். சில மணி நேரம் அவருடன் கழித்தேன். நீஸுக்குப் பக்கத்திலேயே உள்ள கைசீநோவுக்குச் சென்று அதைப் பார்த்தேன். அங்கே மக்கள் சூதாடுகிறார்கள். இவற்றையெல்லாம் பார்க்க என் மனம் விழையவில்லை. உடனே மார்சேல்ஸுக்கு வந்துவிட்டேன். அடுத்த நாளே கப்பல் ஏற வேண்டும். பாபூ ஹரிஜீயைப் பார்த்தாகிவிட்டது. இரவு முழுதும் ஒரு ஹோட்டலில் தங்கியிருந்தேன். அடுத்த நாள் "முல்தான்" என்ற கப்பலில் ஏறிவிட்டேன். கப்பல் இந்தியாவுக்குப் புறப்பட்டது. இந்த முறை நாங்கள் எட்டுப் பத்துப் பேர் ஒன்றாக இருந்தோம். இதனால் கப்பலில் யாதொரு கஷ்டமும் உண்டாக வில்லை. என் உடல்நிலை சற்றுக் கெட்டுவிட்டது. ஓரிரண்டு நாள் கடற்காற்று அடித்ததுமே மீண்டும் இழுப்பு வந்துவிட்டது. ஆனால் அது விரைவில் நின்றுவிட்டது. செப்டம்பர் இரண்டாவது வாரத்தில் நாங்கள் பம்பாயில் இறங்கினோம். கப்பலில் ஒன்றும் விசேஷமாக நிகழவில்லை. டாக்கா பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் சர் பிலிப் ஹார்டோக் அதே கப்பலில் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தார். அவருடன் அறிமுகமாயிற்று. அடிக்கடி அவருடன் பேசிக் கொண்டிருந்தேன்.

## 77. சைமன் கமிஷனின் மறு வருகை

பம்பாயில் கப்பலிலிருந்து இறங்கியதும் நான் நேரே அகமதாபாத்துக்குச் சென்றுவிட்டேன். அங்கு ஓரிரண்டு நாள் தங்கியிருந்து பிறகு பட்னுவுக்குத் திரும்பினேன். நான் நாட்டில் இல்லாதபோது இரண்டு மிக முக்கியமான சம்பவங்கள் நடந்து விட்டன. ஒன்று, பர்டோலியில் நிலவரியை ஏற்றியதற்காகச் செய்யப்பட்ட சத்தியாக்கிரகம். மற்றொன்று, நாட்டின் நலத்தைக் கருதி எல்லாக் கட்சிக்காரர்களும் ஒன்றுசேர்ந்து ஓர் அரசியல் அமைப்புச் சட்டத்தைத் தயார் செய்வதற்காக 'நேரு குழுவை' அமைத்தது. பர்டோலீ சத்தியாக்கிரகம் சிறந்த வெற்றிபெற்றது.

அரசாங்கத்தார் அதைப் பல வகையில் அடக்க முயன்ருர்கள். மக்களும் மிக்க உற்சாகத்துடன் அடக்குமுறையைச் சகித்து நின்ருர்கள். இதைச் சகிப்பிஞல் பொது மக்கள் சிறந்த வெற்றியை அடைந்தார்கள். காந்திஜீயின் வாழ்த்தும் துணேயும் இருந்து வந்ததாயினும் இக்கிளர்ச்சியை நடத்தும் பொறுப்பு முழுவதும் உண்மையில் சர்தார் வல்லபாயீ படேலின் மீதுதான் விழுந்தது. அவர் அதை மிகத் திறமையுடனும், பொறுமையுடனும், அஞ்சாமையுடனும், உழைப்புடனும் நடத்திஞர். எல்லாக் கட்சிக்காரர்களும் அதை மாபெரும் தலேசிறந்த கிளர்ச்சியென உணர்ந்தார்கள். எல்லாரும் உதவி புரிந்தார்கள். குஜராத்திற்கு வெளியிலிருந்து எவரும் வரக்கூடாதென்று சர்தார் தடை போட்டுவிட்டார். இதஞல் மற்ற மாகாணங்களின் செயலாளர்கள் வெளியே நின்றபடிதான் உதவி புரிய முடிந்தது. அதுபோலவே புரிந்து வந்தார்கள். அங்கே எவரும் செல்லவில்லே. நாட்டிற்கே சத்தியாக்கிரகத்திற்கு ஒரு பூர்ண லக்ஷண உதாரணம் கிடைத்துவிட்டது. நல்ல கட்டுப்பாடும் தியாகமும் நிறைய இருந்தால் அஹிம்சா மயமான சத்தியாக்கிரகத்தின் மூலமாகக் கொடுங்கோல் அரசாங்கத்தையும் அடக்கி விடலாமென்பதை மக்கள் அறிந்து கொண்டார்கள். எதை 1921 இலிருந்தே மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்களோ அதை சர்தார் ஒரு தாலுக்காவில் கண்கூடாகச் செய்து காட்டிவிட்டார். இப்போது, இதற்குப் பின் நாடு முழுவதையுமே பர்டோலி போல எவ்விதம் செய்யலாமென்பதைப்பற்றி மக்கள் நினேத்து வந்தார்கள். இச்சத்தியாக்கிரகமானது நாட்டிற்கு உயிரூட்டிவிட்டது. பின்ஞல் 1930இல் நடந்த சத்தியாக்கிரகத்திற்கு நிலத்தையும் பண்படுத்திவிட்டது.

மதராஸ் காங்கிரஸிலேயே ஒரு குழு நியமிக்கப்பட்டிருந்தது. எல்லாக் கட்சிகளின் தலேவர்களுடனும் கலந்து ஒரு திட்டத்தை வகுக்கும் வேலே அதனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது.

சைமன் கமிஷனே எல்லாரும் புறக்கணித்தார்களாயினும், அது தன் வேலேயைச் செய்து கொண்டேயிருந்தது. நம் பக்கத்திலிருந்து ஏதாவதொரு திட்டத்தைத் தயார் செய்து உலகத்தின் முன் சமர்ப்பிக்காதவரையில் நம்மால் வெறும் குற்றம்தான் கண்டு பிடிக்க முடியுமே அன்றி ஏதாவது உருப்படியான வேலேயைச் செய்ய முடியாது என்று உலகத்தாரால் கருதப்படுமென்று எண்ணப்பட்டது. இதஞல் இக்குழுவுக்கு எல்லாக் கட்சிக்காரர்களின் உதவியும் கிடைத்தது. பண்டித் மோதிலால் நேரு அதை (வேண்டியபோது) கூட்டுபவராக நியமிக்கப்பட்டதால் (கன்வீனர்)

இக்குழுவுக்கு நேரு குழுவென்ற பெயர் வந்தது. இக்குழு ஓர் அரசியல் அமைப்புத் திட்டத்தைத் தயார் செய்தது. சில விஷயங்கள் நீங்கலாக, எல்லாக் கட்சிகளின் பிரதிநிதிகளும் அத்திட்டம் முழுவதையும் ஏற்றுக் கொண்டார்கள். இனி, இத்திட்டத்தைக் காங்கிரஸ் ஆண்டு விழாவின்போது ஓர் அகில கட்சி மகாநாட்டில் முறைப்படி நிறைவேற்ற வேண்டியிருந்தது. காங்கிரஸை அதை ஏற்றுக்கொள்ள வைக்கும் வேலையும் எஞ்சியிருந்தது. டிசம்பரில் காங்கிரஸ் பேரவை கல்கத்தாவில் நடைபெறுவதாக இருந்தது. பண்டித் மோதிலால் நேரு அதற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். நேரு குழுவின் அறிக்கையைப் பற்றி நாடெங்கும் பேச்சு நடந்து வந்தது. அறிஞர்கள் அனைவரும் அதைப் பற்றித் தத்தம் அபிப்பிராயங்களை வெளியிட்டு வந்தார்கள். இத்திட்டம் டொமினியன் பதவியையே குறிக்கோளாகக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தது. இதனால் பூர்ண சுதந்திரவாதிகளாக இருந்த காங்கிரஸ்காரர்களுக்கு இது திருப்தி அளிக்கவில்லை. இவர்களுள் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு, ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ், ஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயங்கார் மூவரும்தாம் தலைமையானவர்களாவர்.

நான் தாய் நாட்டிற்குத் திரும்பி வந்து சில நாட்களுக்குப் பின் குளிர்காலம் தொடங்கியதுமே சைமன் கமிஷன் மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி வந்தது. அது இது வரையில் செல்லாத இடங்களுக்கு இப்போது போகத் தொடங்கியது. பஞ்சாபில், புறக்கணிப்பிலும், அதற்கு விரோதமான முழக்கங்களிலும் லாலா லஜபதிராயும் சேர்ந்திருந்தார். முழக்கம் செய்தவர்களின் மேல் போலிசாரால் தடி வீசப்பட்டது. லாலாஜிக்குப் போலீசாரின் தடியடியால் அதிகமாகக் காயம்பட்டது. அவர் நோய் வாய்ப் பட்டுவிட்டார். பிறகு நலமடையவில்லை. அந்தத் தடியடியால் பட்ட பலத்த காயத்தினால்தான் அவருக்குச் சாவு சில நாட்களுக்குள் வந்துவிட்டதென்று மக்கள் ஐயப்பட்டார்கள். கமிஷன் ஐக்கிய மாகாணத்திற்குச் சென்றபோது அங்கும் முழக்கம் செய்தவர்களின்மேல் போலீசார் தடி வீசினார்கள். பண்டித் ஜவாஹர்லால் நேருவுக்கும் காயம்பட்டது. இவ்வண்ணமாக இக்கமிஷன் போலீசாரின் தடியின் துணையைக் கொண்டு நாடெங்கும் சுற்றி வந்துகொண்டிருந்தது. இப்போது பட்னாவுக்கும் வரும் நாள் நிச்சயமாகிவிட்டது.

நான் நாட்டில் இல்லாதபோது பீகாரிலும் இரண்டு தலை சிறந்த சம்பவங்கள் நடந்துவிட்டன. ஹைகோர்ட்டின் தலைமை

நீதிபதியான சர் குர்ட்னே டிரல் என்பவர் "செர்ச்லைட்" பத்திரிகையின் மீது கோர்ட்டை அவமதித்ததற்காக வழக்குத் தொடுத்தார். பட்னு ஹைகோர்ட்டின் தலைமை நீதிபதியாக இதுவரையில் இருந்துவந்த சர் ஹாசன் இமாம் அந்த ஆண்டில்தான் உபகாரச் சம்பளம் பெற்றுக்கொண்டு நீங்கியிருந்தார். அவர் மிகவும் சாந்தமான மனிதர். ஆனால் எவருக்கும் ஆட்படமாட்டார். தமக்கு எது நியாயமென்று தோன்றியதோ, அதையே பற்றி நிற்பார். வழக்குகளை நன்ருகப் புரிந்து கொள்வதற்கு அவருக்குச் சிறிது நேரம் பிடிக்குமானாலும் அவருடைய தீர்ப்புக்கள் மிகவும் நன்ருக இருக்கும். எல்லாரும் அவரிடம் திருப்தி கொண்டிருந்தார்கள். அவர் விலகியபின் இங்கிலாந்திலிருந்து புதிய தலைமை நீதிபதி வந்தார். அவர் எல்லாரோடும் நன்ருகப் பேசிப் பழகி வந்தாராயினும், பிடிவாத குணமுடையவர். இதனால் தீர்ப்பளிப்பதில் அடிக்கடி தவருன வழியில் சென்றுவிடுவார். அவர் அளித்த தீர்ப்பு ஒன்றைப் பற்றிச் "செர்ச்லைட்" மிகவும் கடுமையாக விமர்சனம் செய்தது. இதற்காகத்தான் அதன் மீது வழக்குத் தொடுக்கப்பட்டது. இவ்வழக்கு மிக்கச் சிறப்புப் பெற்றுவிட்டது. பிரயாகிலிருந்து ஸ்ரீ மோதிலால் நேருவும் சர்தேஜ் பகதூர் சப்ரூவும், கல்கத்தாவிலிருந்து ஸ்ரீ சரத் சந்திரபோஸும் இதை வாதாட வந்தார்கள். சில நாட்கள் வரையில் பட்னுவில் தேர்திருவிழா போல இருந்து வந்தது. மிக்க அழகான உணர்ச்சி வேகம் நிறைந்த வாதங்கள் நிகழ்த்தப்பட்டனவென்று கேள்விப்பட்டேன். கடைசியில் "செர்ச்லைட்"டுக்கு ஏதோ தண்டனை விதிக்கப்பட்டது. அதனால், படித்தவர்களிடையில், முக்கியமாக வக்கீல்களிடையில், நிறைய கலவரம் உண்டாயிற்று.

மற்ருெரு சம்பவம் கயா டிஸ்டிரிக்ட் போர்டைச் சம்பந்தப்பட்டது. அங்கு ஸ்ரீ அனுக்கிரக நாராயண் சின்ஹா போர்ட்டின் சபாபதியாக இருந்தார். 1921இல் இருந்தே மந்திரியாக இருந்து வந்தவரும், அப்பதவியிலிருந்து கொண்டு எல்லா முனிசிபால்டிகளையும் டிஸ்டிரிக்ட் போர்டுகளையும் மேற்பார்வை செய்து வந்தவருமான சர் கணேஷ் தத்தா சின்ஹாவை மாகாண சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் எதிர்த்தது என்பதை முன்னமே கூறியிருக்கிறேன். எதிர்ப்பின் வன்மையைக் கண்டு அவர் அஞ்சிப்போய் நான்கு இடங்களில் அபேக்ஷகராக நின்ருர். அந்த இடங்களில் எல்லாம் காங்கிரஸின் அபேக்ஷகர்கள் அவரை எதிர்த்தார்கள். காங்கிரஸின் நண்பர்போல நடித்துவந்த ஒரு கனவானை முன்னிட்டு கயாவில் காங்கிரஸின் அபேக்ஷகர் எவரும் நிறுத்தப்

படவில்லை. இதைப் பயன்படுத்திக் கொண்டு சர் கணேஷ் தத்து அந்தக் கனவானை விலகச் சொல்லிவிட்டுத் தாம் நின்று தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இத்தேர்தலை ஒட்டிய மற்றொரு சம்பவத்தையும் இங்குக் குறிப்பிட வேண்டும். பேகூசராய் தொகுதியிலிருந்து சர் கணேஷ் தத்து அபேக்ஷகராக நின்றிருந்தார். அங்குப் பூமிஹர் சாதியார் அதிகமாக இருந்தார்கள். சர் கணேஷ் தத்தும் அதே சாதியைச் சேர்ந்தவர். அவர் அதை நம்பி அவ்விடத்தில் தேர்தலுக்கு நின்றார். காங்கிரஸின் அபேக்ஷகரும் ஒரு பூமிஹர் பிராமணர்தாம். ஆயினும் பல காரணங்களால் சர் கணேஷ் தத்துக்கு அவருடைய சாதியாரிடையில் நல்ல செல்வாக்கு இருந்தது. தேர்தல் சம்பந்தமாக நான் அங்குச் சென்றேன். ஒரு பெரிய கூட்டம் நடந்தது. அதற்குச் சர் கணேஷ் தத்தை ஆதரித்தவர்களும் வந்திருந்தார்கள். கணேஷ் தத்திற்கு போட்டியாகக் காங்கிரஸ் ஏன் ஓர் அபேக்ஷகரை நிறுத்தியது என்று அவர்கள் என்னைக் கேட்டார்கள். சர் கணேஷ் தத்தின் குணாதிசயங்களைப்பற்றி எனக்குக் கூறினார்கள். அவற்றில் முக்கியமானது என்ன வென்றால், அவர் மந்திரியானதிலிருந்து தம் சம்பளத்தில் மிகச் சிறிய பாகத்தையே தம் செலவுக்காக எடுத்துக் கொண்டு வருகிறார் என்பது தான். பெரும் பகுதியைப் பிறர் நலத்திற்காகக் கொடையாக அளித்து வந்தார். இது உண்மைதான். அவர் எத்தனையோ லக்ஷம் ரூபாய் கொண்ட ஓர் அறநிலையத்தை (டிரஸ்டு) மிகச் சிறந்த வகையில் அமைத்திருந்தார். அதற்காக நாங்கள் அனைவரும் அவரைப் போற்றிப் பாராட்டி வந்தோம். இப்படி யெல்லாமிருந்தும்கூட அவர் காங்கிரஸின் வேலைத் திட்டத்தை ஒத்துக் கொள்ளாத ஒரு காரணத்தால் அவரை எதிர்க்க வேண்டிவந்தது. நான் அச்சபையில் கூறியது இதுதான். அதாவது, காங்கிரஸானது நாடு முழுவதுக்குமாக அமைந்த ஒரு நிலையம். சர் கணேஷ் தத்து அதன் கட்டுக்கு அடங்கிப் பணியாற்ற உடன்படுவாரானால் காங்கிரஸ் தன் அபேக்ஷகரை அகற்றிவிடும். ஆனால் இவ்வளவு பெரிய நிலையமானது ஒரு தனிப்பட்ட மனிதரைத் தம் மனம் போனபடி நடக்கவிட முடியாது என்று கூறினேன். மேலும் அவரை ஆதரிப்பவர்களைப் பார்த்து, நான் அங்கு இன்னும் ஒருநாள் தங்கியிருப்பேனென்றும், அதற்குள் அவர்கள் அவரை அழைத்து வரலாமென்றும் அல்லது என்னுடைய நிபந்தனையை ஏற்பதாக அவரிடமிருந்து கடிதமோ தந்தியோ கொண்டு வரலாமென்றும், அப்படிச் செய்தால் நான் காங்கிரஸ் அபேக்ஷ

கரை அகற்றிவிடுவதாகவும் கூறினேன். அச்சபையில் பெரும் பாலும் அவருடைய சாதியார்கள்தாம் கூடியிருந்தார்கள். அவர் களை அவர் முழுவதும் நம்பியிருந்தார். ஆனால், என் பேச்சு அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. நான் கூறியபடியே மேலும் ஒருநாள் அங்குத் தங்கியிருந்தேன். ஆனால் அவருடைய ஆள் திரும்பி வரவில்லை. அங்கிருந்த மக்கள் காங்கிரஸ் பக்கமாக முற்றிலும் திரும்பி விட்டார்களென்பதைக் கண்டேன். இதற்குப் பிறகு சர் கணேஷ் தத்து கயாவில் மேலே குறிப்பிடப்பட்ட கன வானை விலகிக்கொள்ளச் சொல்லிவிட்டு எப்படியோ தாம் போட்டி யின்றித் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டார்.

இந்த விஷயம் அத்துடன் முடிந்து விட்டது. ஆனால் அவ ருடைய மனத்திற்குள்ளே காங்கிரஸின் மேல் அதிக ஆத்திரம் இருந்து வந்தது. அவர் பொது வாழ்க்கைப் பணி ஆற்றி வந்தவரையில் இதை மறக்கவில்லை. அபேக்ஷகர் பதவியிலிருந்து விலகிக் கொண்டு, மந்திரியாவதற்கு தமக்கு வாய்ப்பு அளித்த அந்த நண்பரைக் கயா டிஸ்டிரிக்ட் போர்டின் தலைவராக்க சர் கணேஷ் தத்து விரும்பினார். இதனால், அவர் பல சூழ்ச்சிகளைச் செய்து, அங்குத் தலைவராயிருந்த ஸ்ரீ அனுக்கிரக நாராயண் சின்ஹாவை அகற்றி விட்டார். நான் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்து இச்செய்தியைக் கேட்டறிந்ததும், எனக்கு அதிக வருத்தம் உண்டாயிற்று. என்னுடைய காங்கிரஸ் நண்பர்கள் எல் லாருமே மிகவும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இந்தியர் களுக்கு அளிக்கப்பட்ட சிறிதளவு உரிமைகளை அவர்கள் எவ்வித மாக நேர்மையுடனும் வெற்றிகரமாகவும் பயன்படுத்தி வருகிறார் கள் என்ற கேள்வியானது அப்போது நம் நாட்டில் சுற்றி வந்து கொண்டிருந்த சைமன் கமிஷனின் முன் வருமென்ற ஐயம் எங்கள் மனத்தில் குடிகொண்டு விட்டது. பீகாரின் டிஸ்டிரிக்ட் போர்டுகள் எல்லாவற்றையும்விட மிக்க வருமானம் உள்ள இந்த டிஸ்டிரிக்ட போர்டைத் தகுதியற்றது என்று காட்டிக் கொடுப்ப தற்காக இவ்வண்ணமாகச் செய்யப்பட்ட முயற்சியானது, இதற் குக்கூட இந்தியர்கள் தகுதியற்றவர்கள் என்பதற்கு ஓர் உதாரண மாகச் சைமன் கமிஷனின் முன் காட்டுவதற்காகவே அரசாங்கத் கத்தாரால் செய்யப்பட்டதென்று நாங்கள் நினைத்தோம். இதனால் மாகாண முழுவதும் பெரிய கிளர்ச்சி உண்டாயிற்று. கயாவில் ஒரு சபை கூட்டப்பட்டது. நானும் அதற்குச் சென்றேன். அதில் நான் கடுமையான சொற்பொழிவாற்றினேன். அதைப் போலக் கடுமையான சொற்பொழிவு நான் அது வரையில் ஆற்றிய

தில்லை. ஜில்லா போர்டின் மீது சாற்றப்பட்ட குற்றங்களைப் பற்றிக் காங்கிரஸின் சார்பில் விசாரணை செய்தோம். எல்லாம் ஆதாரமற்றவை யெனக் கண்டோம். அதன்மேல், மாகாண மகா நாடு ஒன்றை நடத்த வேண்டுமென்ற எண்ணம் எழுந்தது. அதற்கு அனுக்கிரக பாபூ தலைவராக்கப்பட்டார். வரவேற்புத் தலைவராக ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹாஜீ அமைந்தார். சைமன் கமிஷன் பட்ணு வருவதற்கு ஓரிரண்டு நாட்களுக்கு முன்னதாக இம் மகாநாட்டிற்குத் தேதி வைக்கப்பட்டது. இதனால் மகாநாட்டிற்கு வருபவர்கள் கமிஷனை எதிர்த்து நடத்தப்படும் முழக்கத்திலும் கலந்து கொள்ள முடியுமென்று எண்ணப்பட்டது. மகாநாடு மிகவும் வெற்றிகரமாக நடந்தேறியது. அதற்கு அடுத்த நாள் காலையில் சைமன் கமிஷனின் ஸ்பெஷல் ரயில் வண்டி பட்ணுவுக்கு வந்து சேருவதாக இருந்தது.

இளவரசர் பட்ணுவில் வந்து இறங்கியபோது அவருக்காகத் தனியாக கட்டப்பட்ட அதே பிளாட்பாரத்திற்குக் கமிஷனின் வண்டி கொண்டு வரப்படுமென்று சொல்லிக் கொண்டார்கள். அப்பிளாட்பாரம் ஹார்டிஞ்சு பார்க்குக்குச் சரி நேராக இருக்கிறது. ஜனத்திரள் மேலே செல்லாமல் தடுப்பதற்காக ஹார்டிஞ்சு பார்க்குக்கு எதிரே வலிமையான மரக் கால்களை நட்டு அடைப்புப் போட்டுக் கொண்டிருந்தார்கள். பஞ்சாபிலும் ஐக்கிய மாகாணத்திலும் லாலா லஜபதிராய், பண்டித் ஜவாஹர்லால் போன்ற தலைவர்கள் மீது தடியடி பொழிந்ததைப் பற்றி அறிந்திருந்தோம். அதைக் கேட்டு எங்களுக்கு யாதொரு வியப்பும் உண்டாகவில்லை. எதிர்ப்பு முழக்கம் செய்யும்போது ஏதாவது படுகொலை நடக்கலா மென்பதை நன்கு உணர்ந்திருந்தோம். ஆயினும் மக்களிடையில் அதிக உற்சாகம் இருந்து வந்தது. இதை மாகாண மகாநாட்டிலேயே கண்டறிந்தோம்.

மகாநாடு முடிந்த அன்றே, மாலையில் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா என்னைத் தம் வீட்டிற்கு வரும்படி சொல்லியனுப்பினர். அங்கே போய்ச் சேர்ந்ததும், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் மிஸ்டர் சுவானும் அங்கே வந்திருப்பதைக் கண்டேன். அவர் என்னைப் பார்த்ததும், தாம் கேட்டுக் கொண்டதின் பேரில்தான் ஸ்ரீ சின்ஹா என்னை வரவழைத்தார் என்பதையும் என்னுடன் சைமன் கமிஷனைப் பற்றிப் பேச விரும்புவதாகவும் கூறினர். பஞ்சாபிலும் ஐக்கிய மாகாணத்திலும் நடந்த கேடுகளைப் போலப் பீகாரிலும் நிகழவிடத் தாம் விரும்பவில்லையென்றும், அப்படி நடந்தால் அவருக்கும் எங்களுக்கும்—இருவருக்குமே—கெட்டபெயர்

வருமென்றும் கூறினர். மேலும், போலீசாரும் முழக்கம் செய்பவர்களும் கை கலக்காதபடி ஏதாவதொரு வழி கிடைத்தால் நல்லதாகுமென்றும் கூறினர். இதற்கு நான், ''மக்களோ நிராயுத பாணிகள். அவர்கள் அஹிம்சா மயமாகவே இருப்பார்கள். ஏதாவது நேர்ந்தால் அது உங்கள் பக்கத்திலிருந்துதான் விளையும்'' என்றேன். ''நான் அப்படி நடக்கவிட மாட்டேன்'' என்று அவர் உறுதியளித்தார். ஆயினும் பெருங்கூட்டம் கூடிவிட்டால் எங்காவது ஏதாவதொரு கட்சியின் ஆள் எவனாவது தகாத சொல்லைக் கூறிவிடலாமென்றும், அல்லது நெறி தவறி நடந்து விடலாமென்றும், அதன் பயன் மக்களைப் பாதிக்குமென்றும், அதை யாரும் தடுக்க முடியாதென்றும் தாம் அஞ்சுவதாகக் கூறினர். இதனால் கூட்டம் கூடி விடுவதில்தான் அபாயமிருக்கிறதென்றார். அதைத் தடுக்க முடியாதென்று நான் தெள்ளத் தெளிவாகக் கூறி விட்டேன். அவர் வினவியதின் பேரில், பத்தாயிரம் மக்கள் வரலாமென்று கூறினேன். இந்த எண்ணிக்கையை நான் பயந்து பயந்து கொண்டேதான் கூறினேன். ஏனெனில், டிசம்பர் குளிரில் காலை 6 மணிக்கு வண்டி வந்து சேரும். அந்த நேரத்தில் ஊரார் பெருந்திரளாக வந்து கூடமாட்டார்களென்று அஞ்சினேன். கூட்டம் வந்தேதான் தீருமென்றால் இரு கட்சிக்காரர்களும் கைகலக்காமல் தனித்தனியாக இருப்பதற்கு வழியில்லையா என்று அவர் கடைசியில் கேட்டார். அவர் கூறியதை நான் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டு, சாலையின் ஒரு புறத்தில் வரவேற்பு அளிப்பவர்கள் இருக்கட்டுமென்றும், மற்றொரு புறத்தில் எதிர்ப்பவர்கள் இருக்கட்டுமென்றும் கூறினேன். இது அவருக்கு பிடித்திருந்தது. எனக்கும் பிடித்திருந்தது. ஏனெனில் இவ்விதம் செய்வதால் வரவேற்பு அளிக்க வருபவர்கள் எவ்வளவு குறைவென்பதும் எதிர்ப்பவர்கள் எவ்வளவு அதிகமென்பதும் தெளிவாகி விடும். அப்படியே முடிவு செய்யப்பட்டது. எங்களுடைய ஆட்கள் எவரும் அடைப்பின் எல்லைக்கு அப்பால் போகமாட்டார்களென்று உறுதியளித்தேன். நாங்கள் ஊரை ஒட்டி, வடக்குப் புறத்தில் இருப்போமென்றும் எதிர்க்கட்சிக்காரர்கள் சாலைக்குத் தெற்குப் புறத்தில் இருக்கட்டுமென்றும் கூறினேன்.

அடுத்த நாள் இரவு மூன்று மணிக்கே நாங்கள் விழித்தெழுந்தோம். ஊரெங்கும் பஜனை கோஷ்டிகள் புறப்பட ஆரம்பித்தன. கூட்டம் ஸ்டேஷன் பக்கம் வெள்ளம் போலப் பெருகிச் சென்றது. ஆறு மணி அடிப்பதற்குள் 25-30 ஆயிரம் பேர்கள் அடங்கிய கூட்டம் எங்கள் அடைப்பிற்குள் வந்துவிட்டது. எதிர்ப்பக்கத்

தில் சிலர் மோட்டார்களில் வந்து இறங்கினர்கள். சில லாரிகள் மக்களே ஊரிலிருந்து ஏற்றிக்கொண்டு வருவதற்காகச் சுற்றிக் கொண்டிருந்தன. ஆனல் மொத்தம் நூறு நூற்றைம்பது பேர் தான் அப்பக்கத்து அடைப்புக்குள் இருந்திருப்பார்கள். அவர் களில் பெரும்பாலோர் அரசாங்க அதிகாரிகளும் அவர்களுடைய சேவகர்களும்தாம். சிலர் அக்கட்சியின் லாரியில் ஏறிவந்து அந்த அடைப்புக்குள் செல்வதையும், பிறகு அது வரவேற்பு அளிக்க வந்தவர்களுடைய கட்சி என்பதும், எதிர்ப்பவர்களின் கட்சி சாலைக்கு எதிர்ப்பக்கத்தில் இருக்கிறதென்பதும் தெரிய வந்ததும் அவ்விடத்தை விட்டு இங்கு வந்து சேருவதையும் நான் கண்டேன். நான், மர அடைப்புக்கு இரண்டு முழம் பின்னல் நின்று கொண் டிருந்த எங்கள் ஆட்களுக்கு முன் உலாவிக் கொண்டிருந்தேன். அங்கே மிஸ்டர் சுவானேச் சந்தித்தேன். அவர் இந்த ஏற்பாட் டைப்பற்றித் தம் திருப்தியைக் கூறி என்னைப் பாராட்டினர். பதினயிரம்பேர்கள் வருவார்களென்று நான் அளித்த வாக்கு நிறை வேறிவிட்டதா இல்லையா என்று அவரைக் கேட்டேன். அதற்கு மேல் எவ்வளவோ அதிகமாயிருக்கிறதென்று அவர் கூறினர். இரண்டு கட்சிகளின் ஆட்கள் தனித் தனியே வெவ்வேறு இடங் களில் இருக்கட்டுமென்று அவர் கூறிய யோசனையை நான் ஏற்றுக் கொண்டதற்குக் காரணத்தை நான் கூறியபோது, அவர் அதைக் கேட்டு மிகவும் சிரித்தார். இவ்வண்ணமாக எதிர்ப்பு முழக்கமானது மிக சிறப்பாகவும் அமைதியாகவும் நடந்தேறியது. கருப்புக் கொடியைக் காட்டிக் கொண்டு "சைமன் கோ பாக்" என்று ஆரவாரம் செய்ததைத் தவிர வேறு எதுவும் நடக்கவில்லை.

இந்த எதிர்ப்பு முழக்கத்தில் மாகாண முழுவதிலிருந்தும் தொண்டர்கள் கூட்டம் கூட்டமாக வந்து கலந்து கொண்டார் கள். அவர்கள் தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்ற போது இந்த உற்சாகம் நிறைந்த முழக்கத்தின் செய்தி யைக் கொண்டு சென்ருர்கள். இதனல் மாகாணம் முழுவதும் உற்சாகம் பெருகியது. பிறகு சில நாட்கள் வரையில் தெருக் களில் எங்குப்பார்த்தாலும் வினத் தெரியாத சின்னஞ்சிறு பையன் கள்கூட "சைமன் கோ பாக்" என்று கூச்சலிட்டுக் கொண்டிருந் தார்கள். 1921இன் நாட்கள் திரும்பி வந்துவிடும் போலத் தோன்றி யது. இதனிடையில் கல்கத்தாவில் காங்கிரஸ் பேரவையும் அகிலக் கட்சி மகாநாடும் கூடும் நாள் நெருங்கி விட்டது. அகிலக் கட்சி மகாநாட்டிற்கு டாக்டர் அன்சாரியும் காங்கிரஸுக்குப் பண்டித் மோதிலால் நேருவும் தலைவராக அமைந்தார்கள்.

# 78. கல்கத்தா காங்கிரஸும் அகில கட்சி மகாநாடும்

நான் அகிலக் கட்சி மகாநாட்டில் கலந்து கொண்டேனுயினும் முதலிலிருந்து எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியாதாகை யால் நான் அங்கே எதுவும் விசேஷமாகச் செய்யவில்லை. ஒரு நாள் ஹிந்து முஸ்லிம் சிக்கலைப் பற்றி ஏதோ பேச்செழுந்தது நினைவிருக்கிறது. இது மகாநாட்டில் நடக்கவில்லை. சில முக் கியமான தலைவர்கள் மட்டும் கூடியிருந்தபோது இப்பேச்சு வந் தது. அங்கே மிஸ்டர் ஜின்னு இரண்டு விஷயங்களைப் பற்றி மிகவும் அழுத்தமாகப் பேசினுர் என்பது நினைவிருக்கிறது. மத்திய சட்டசபையில் முசல்மானியருக்கு மூன்றில் ஒரு பங்கு இடங்களை ஒதுக்கிவிட வேண்டுமென்றும், மத்திய அரசாங்கத் திற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஒதுக்கப்பட்டிருந்த அதி காரங்கள் எல்லாம் மாகாணங்களுக்கும் அளிக்கப்பட வேண்டு மென்றும் அவர் கூறினுர். இந்த இரண்டு விஷயங்களைப் பற்றி இரவில் நெடுநேரம் வரையில் வாக்குவாதம் நடந்து கொண் டிருந்ததென்பது எனக்கு நினைவிருக்கிறது. ஆனுல் மற்றவர் கள் இவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை. மிஸ்டர் ஜயகர் தாம் இவற்றை மற்றவர்களைவிட மிகக் கடுமையாக எதிர்த்தார் என்பது தெரியவந்தது. அவருடன் ஹிந்து மகா சப்பாக்காரர்களும் சேர்ந்து கொண்டார்கள். ஆனுல் பேசினதெல்லாம் ஸ்ரீ ஜயகர் ஒருவர்தாம். கடைசிவரையில் இந்த விஷயம் முடிவுக்கு வர வில்லை. ஏதாவதொரு விஷயத்தைப் பற்றி எல்லாரும் ஒரு மனப்படாவிட்டால் அதைப்பற்றி ஒவ்வொருவருடைய அபிப்பிரா யத்தையும் குறித்துக்கொள்ள வேண்டுமென்ற ஒரு முறையை இம்மகாநாடு வகுத்திருந்தது. மகாநாட்டின் பேரவையில் மௌலான முகம்மது அலீயும்கூட ஏதோ' ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். அதனை மகாநாடு பெரும்பான்மை பலத் துடன் தள்ளிவிட்டது. மகாநாடானது மேலே கூறியுள்ள முறைப்படி குறிப்புக்களை எடுத்துக்கொண்டு தன் வேலையை முடித்துவிட்டது. ஆனுல் முசல்மானியருடன் பேச்சு ஒத்துவர வில்லை. இதனுல், இந்த மகாநாடு முடிந்ததுமே முசல்மானி யரின் மகாநாடு ஒன்று நடத்தப்பட்டது. அதில் பல காங்கிரஸ்

முசல்மானியரும் போய்ச் சேர்ந்து கொண்டார்கள். அவர்களில் தலைமையானவர்கள் அலீ சகோதரர்கள், மௌல்வி முகம்மதுஷபீ முதலானோர் ஆவர். செல்வாக்கு வாய்ந்த முசல்மானியர் தொகுதி ஒன்று காங்கிரஸை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டது. இவ்வண்ணமாக, எந்தச் சிக்கலை அறுப்பதற்காக இந்த மகாநாடு கூட்டப்பட்டதோ அச்சிக்கல் மேலும் கடினமாகிவிட்டது. இதன் பயன் பின்னால் மேலும் தெரியவந்தது. இதற்குப் பிறகுதான் மிஸ்டர் ஜின்னாவானவர் தம் பதினான்கு புள்ளிகளைச் சமர்ப்பித்தார். இவற்றை ஏற்றுக் கொள்வதற்காக யாதோர் உடன்படிக்கையும் தேவையில்லை யென்று அவர் கூறினார்.

நேரு அறிக்கையில் கூறப்பட்டிருந்த "சுயராஜ்யம்" என்ற சொல்லின் பொருளைப் பற்றிக் காங்கிரஸில் நிறைய கருத்து மாறுபாடு இருந்து வந்தது. பண்டித் ஜவஹர்லால், சுபாஷ்பாபூ, ஸ்ரீ ஐயங்கார் முதலானோர் பூர்ண சுதந்திரத்தையே காங்கிரஸின் குறிக்கோளாக ஏற்றுக் கொள்ளப்படச் செய்ய விரும்பினார்கள் என்பது முன்னமே கூறப்பட்டிருக்கிறது. மற்றவர்கள் வெறும் "சுயராஜ்யம்" என்ற சொல்லைக் கொண்டே திருப்தியடைந்தார்கள். வேளைவந்தபோது நாம் டொமினியன் பதவியைக்கொண்டு திருப்தியடைவோமா அல்லது பூர்ண சுதந்திரத்தைத்தான் ஏற்றுக் கொள்வோமா என்பதை முடிவு செய்வதற்கு இச்சொல் முழுவாய்ப்பையும் அளிக்கிறதென்று அவர்கள் நினைத்தார்கள். நேரு அறிக்கையானது டொமினியன் பதவியையே குறிக்கோளாகக் கொண்டு தயாரிக்கப்பட்டிருந்தது. வேறு எதுவும் சாத்தியப்பட்டிருக்காது. ஏனெனில் மிதவாதக் கட்சிக்காரர்கள்தாம், முக்கியமாக சர்தேஜ் பகதூர் சப்ரூ முதலானோர் தாம் நேரு அறிக்கை முழுவதையும் தயார் செய்தார்கள். ஆதலால், இது ஒப்புக் கொள்ளப்படாதிருந்தால், இத்திட்டம் தயாராகி ஒரு சர்வ கட்சி மகாநாட்டின் முன் வரும் அளவுக்கு வந்திருக்காது. இதனால், இந்தத் தாய்ச்சுவர் போன்ற குறிக்கோளையே காங்கிரஸானது இப்போது தன் தீர்மானத்தின் மூலமாக மாற்றி விடுமானால், நேரு ரிபோர்ட்டானது, சர்வகட்சி மகாநாடு அதை ஏற்ற அளவுக்குக் கூட, எல்லாருக்கும் உகந்தது ஆகாமல் போய் விடும். காங்கிரஸின் விஷய ஆலோசனைக் குழுவில் இதைப் பற்றி நிறைய வாக்குவாதம் நிகழ்ந்தது. நேரு ரிபோர்ட்டை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது மகாத்மாஜீயின் கருத்து. ஆயினும் காந்திஜீ எப்போதுமே எதிராளிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டறியத் தயாராயிருந்தார். கடைசியில் அவர் பூர்ண

சுதந்திரத்தை ஆதரித்தவர்களுடன் (அவர்களில் முக்கியமானவர்களை நான் மேலே கூறியிருக்கிறேன்) ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டார். ஆதாவது, ஓராண்டு வரையில் காங்கிரஸின் குறிக்கோள் இப்போதிருப்பது போலவே இருக்கும். இந்த ஓராண்டிற்குள் பிரிட்டிஷ் அரசாங்கமானது நேரு அறிக்கையை ஏற்றுக் கொண்டு இந்தியர்களுக்கு டொமினியன் சுயராஜ்யத்தை அளித்துவிட்டால் நன்று. இல்லாவிட்டால், ஓராண்டிற்குப் பின், காங்கிரஸ் பூர்ண சுயராஜ்யத்தையே தன் குறிக்கோளாகக் கொள்ளும். மேலும் அதற்காகப் பாடுபட்டு வேலையும் புரியும். இதுதான் அந்த ஒப்பந்தம். அதாவது ஓராண்டிற்குள் கிடைத்துவிட்டால், நாம் டொமினியன் சுயராஜ்யத்தைக் கொண்டே திருப்தியடைவோம். இல்லாவிட்டால் டொமினியன் சுயராஜ்யம் என்ற பேச்சே ஒழிந்துவிடும். காங்கிரஸ் பூர்ண சுயராஜ்யத்தையே வழுவாது பற்றி நிற்கும். இவ்விதமாக நிச்சயமானதும், இனி இந்த வம்பு தீர்ந்துவிடுமென்று நாங்கள் நினைத்தோம். ஆனால், சுபாஷ்பாபூ இந்த உடன்படிக்கையை ஏற்கவில்லை யென்பது அடுத்தநாள் தெரியவந்தது. இதனால் மகாத்மாஜீக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று. ஏனெனில் சுபாஷ்பாபூ அதனை முந்தின இரவில் ஏற்றுக் கொண்டிருந்தார். அவருடைய தோழர்களுக்கும் அவரைப் பின் பற்றினவர்களுக்கும் இது பிடிக்காததால் அவர் பிறகு மாறிவிட்டாரென்பது தெரிய வந்தது. ஆனால் பண்டித் ஜவஹர்லாலுக்கும் ஸ்ரீ ஸ்ரீநிவாச ஐயங்காருக்கும் இந்த முடிவு பிடிக்காவிட்டாலும், அவர்கள் உடன்படிக்கையினின்று பிறழாது நின்றார்கள். மகாத்மாஜீ இந்த விஷயத்தைக் காங்கிரஸில் மிகவும் விரிவாக விளக்கிக் கூறினார். கடைசியில் மகாத்மாஜீ அந்த உடன்படிக்கையைப் பற்றிய தீர்மானத்தைச் சமர்ப்பித்தார். அது ஏற்றுக்கொள்ளப்பட்டது.

இக்காங்கிரஸின் விஷய ஆலோசனைக் குழுவில் மற்ற விஷயங்களைப் பற்றியும் கருத்து மாறுபாடு இருந்தது. காந்திஜீயின் போக்குச் சிலருக்குப் பிடிக்கவில்லை யென்பது புலப்பட்டது. அகில பாரதீயக் குழுவில் வழக்கமாக நிறையப் பேசுபவர்களான ஸ்ரீ நிகம்பர், ஸ்ரீ ஜோக்லேகர் போன்ற சில கம்யூனிஸ்டுகளுக்கு அதிகமாகப் பிடிக்கவில்லை யென்பது தெரியவந்தது. இந்தக் காங்கிரஸில் மற்றொரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது. கல்கத்தா தொழிலாளர்களின் மாபெரும் கோஷ்டி ஒன்று ஊர்வலம் அமைத்துக் காங்கிரஸ் நகருக்கு வந்து சேர்ந்தது. அவர்கள் காங்கிரஸ் பந்தலுக்குள் வரவிரும்பினார்கள். காங்கிரஸ் பந்தலில் நுழைந்து

அங்கே உட்காருவதென்றும், சபை நடக்கும்போது அங்கிருந்து நகருவதில்லை யென்றும், இவ்வண்ணமாக அங்கே நடக்கும் வேலையைக் கலைப்பதென்றும் அவர்கள் முதலிலிருந்தே திட்டம் போட்டிருந்தார்கள் என்று சிலர் எண்ணினார்கள். ஆனால் அவர்களுடைய கருத்து அப்படியில்லை போலிருந்தது. ஏனெனில், மகாத்மாஜீ சென்று அவர்களிடம் ஏதோ கூறியதும் அவர்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள். காங்கிரஸ் நகரில் செய்யப்பட்டிருந்த சில ஏற்பாடுகள் சம்பந்தமாகப் பீகார்க்காரர்களுக்கு இக் காங்கிரஸின் வரவேற்புக்குழுவோடு மனஸ்தாபம் வந்துவிட்டது. பீகார் பிரதிநிதிகள் அனைவரும் காங்கிரஸ் பேரவைக்கு வர மறுத்துவிட்டார்கள். இச்செய்தி சுபாஷ்பாபுவுக்கு எட்டியது. அவர் தாமே வந்து அவர்களுடைய குறைகளைத் தீர்ப்பதாக வாக்களித்தார். பிறகு அவர்கள் காங்கிரஸின் பேரவைக்கு வந்தார்கள்.

கல்கத்தா காங்கிரஸ் ஒரு விதத்தில் மிகவும் முக்கியமானது. இக் காங்கிரஸ்தான் பூர்ண சுயராஜ்ய குறிக்கோளை ஒருவிதத்தில் ஏற்றுக்கொண்டது. ஏனெனில் டொமினியன் சுயராஜ்யத்தைக் கொண்டு காங்கிரஸானது ஓராண்டிற்குமேல் திருப்தியடைந்திருக்காது என்று இக்காங்கிரஸ் பேரவைதான் முடிவு செய்தது. இத்தீர்மானம் என்னவோ ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆயினும் ஓராண்டிற்குப் பிறகு மறுபடியும் பார்த்துக்கொள்வோம் என்று எண்ணியவர்களும் பலர் காங்கிரஸில் இருந்திருப்பார்கள். ஆனால் காந்திஜீ, காங்கிரஸின் தீர்மானங்களுக்கு, முக்கியமாக அவற்றில் ஏதாவது வாக்கோ அல்லது பிரதிக்ஞையோ கூறப்பட்டிருந்தால், அதிகப் பெருமை அளிப்பார். இதனால், பிரிட்டிஷ் அரசாங்கமானது 1929 டிசம்பர் 31க்கு முன்னமே ஏதாவது செய்து முடிக்க வேண்டுமென்பதையும், இல்லாவிட்டால் அடுத்த பேரவையில் காங்கிரஸானது பூர்ண சுயராஜ்யத்தையே தன் குறிக்கோளாகக் கொள்ளத்தான் வேண்டுமென்பதையும் காந்திஜீ ஏற்றுக்கொண்டார்.

நான் இந்த விஷயத்தில் மனம் குழம்பியிருந்தேன். நான் பிரிட்டிஷ் அரசியல் அமைப்பை ஆதரிப்பவன். டொமினியன்களுக்குத் தம் காரியங்களைத் தம் இஷ்டப்படி நடத்துவதற்கு முழு உரிமை இருக்கிறதென்பதை அறிந்திருந்தேன். இதனால், நமக்கும் இச்சுதந்திரம் கிடைத்துவிட்டால், இதுவே நமக்குப் போதுமென்று கருதவேண்டுமென்று எண்ணினேன். பூர்ண சுதந்திரம் மிகவும் பெருமையானதுதான். ஆனால் கடைசியில்

உலகத்தின் மக்களும் நாடுகளும் ஒருவரோடொருவர் நல்லுறவு கொண்டு வாழ்வதற்காக அவர்களுக்குள் ஏதாவதொரு வகையான உடன்படிக்கையைச் செய்துகொண்டுதான் ஆகவேண்டும். அப்படியில்லாவிட்டால் சண்டைகள் மூண்டுகொண்டேதானிருக்கும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யமானது உலகத்தின் பல நாடுகளின் மக்களைத் தன்னுள் அடக்கிய ஓர் அமைப்பாகும். அதில் சேர்ந்திருந்தால் நமக்கு அதனுல் ஒரு கெடுதலுமில்லை. பல விஷயங்களுக்குச் சௌகரியம்தான். அது மட்டுமன்றி, பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் பலவந்தம் செய்து சுதந்திரத்தைப் பெறும் அளவுக்கு நாம் இன்னும் ஒற்றுமையாகவில்லை. இக்காரணங்களால் தான் மதராஸ் காங்கிரஸில் பூர்ண சுதந்திரத் தீர்மானத்தை எதிர்த்தேன். எனக்கும் எப்போதாவது மனம் நொந்து போவதுண்டு. அந்த எரிச்சலில் நானும் சில சமயங்களில் பூர்ண சுதந்திரத்தைப் பற்றிப் பேசுவதுண்டு. ஆனுல் இந்த மனத் தாங்கலானது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் குடியேற்ற நாடுகள் இந்தியர்களிடம் நடந்துகொண்ட முறையினுல் உண்டாகி வந்தது. முக்கியமாகத் தென் ஆப்பிரிக்கா இந்தியர்களிடம் நடந்துகொண்ட முறைதான் காரணம். அதைக்கண்டு, நம் நாட்டு மக்களை இவ்விதமாக இழிவாக நடத்தக்கூடிய பகுதிகளை உட்கொண்ட சாம்ராஜ்யத்தோடு உறவு கொண்டிருப்பதால் நமக்கு என்ன பயனென்று சில சமயங்களில் எண்ணும் அளவுக்கு நான் மனம் கலங்குவேன். அக்குடியேற்ற நாடுகளுக்கு உள்ள அதிகாரமும் பதவியும் நமக்குக் கிட்டாதவரையில்தான் இப்படி நடக்குமென்றும், அவ்விதப் பதவி நமக்கும் கிடைத்துவிட்டால் இப்படி நடக்காதென்றும் பிறகு எண்ணிக்கொள்வேன். இவ் வண்ணமாக என் மனத்திற்கு ஆறுதல் அளித்து வந்தேன்.

இவ்விதமான குழப்பம் என் மனத்தில் இருந்து வந்ததால், குடியேற்ற நாடுகளின் அரசியல் அமைப்பைப் பற்றியும், உரிமைகளைப் பற்றியும் நன்ருக அறிந்து கொள்வதற்காக நான் பேராசிரியர் கீத்தின் நூல்களைப் படித்து வந்தேன். 1926இல் கூடிய இம்பீரியல் கான்பெரன்ஸில் செய்யப்பட்ட முடிவுகளையும் நான் பார்த்தேன். எல்லா விஷயங்களையும் பற்றி நன்ருக யோசித்தபிறகு மேலே கூறிய மனக்குறை ஒருபக்கமிருந்தாலும், அந்தச் சமயம் வரையில் நான் டொமினியன் சுயராஜ்யமே போதுமென்றிருந்தேன். பூர்ண சுயராஜ்யத்தைத் தன் குறிக்கோளாகக் கொள்வதனுல் காங்கிரஸானது தன் பாதையில் உள்ள கஷ்டங்களைப் பெருக்கிக்கொள்வதாகவே நான் நினைத்தேன். பண்டித் ஜவஹர்

லால் கூறிவந்ததை நான் அப்போது சரியாக புரிந்துகொள்ள வில்லை. நம்முடைய பேச்சு வெளிநாட்டாருக்குப் புரியாதென்றும், பழக்கவழக்கங்களாலும், சமூக வாழ்க்கையாலும், மதத்தாலும் மற்றும் ஆயிரம் வகையில் தம்முடன் உறவு கொண்டுள்ள தம் குலத்தாருக்கும் நாட்டாருக்குமே ஆங்கிலேயர்கள் டொமினியன் சுயராஜ்யத்தை அளித்திருக்கிறார்களென்றும், நம்மோடு அவர்களுக்கு அவ்விதமான உறவு இல்லை ஆதலால் நமக்கும் டொமினியன் சுயராஜ்யம் வேண்டுமென்று நாம் கூறுவதை வெளிநாட்டாரால் புரிந்துகொள்ள முடியாதென்றும் அவர் கூறி வந்தார். இந்த நிலைமையில் அவர்களால் அதை நமக்கு அளிக்கவும் முடியாது, நாமும் அதைப்பெற்றுத் திருப்தி யடையவும் முடியாதென்று ஜவஹர்லால் கூறினார். திருவெய்திய கோகலேயின் சொற்கள் என் மனத்தில் ஆழ்ந்து பதிந்திருந்ததால், என்னால் அவற்றை எளிதில் தள்ளிவிட முடியவில்லை. 1920இல் அவர் என்னைச் செர்வண்ட்ஸ் ஆவ் இந்தியா சொஸையிடியில் சேரும்படி சொல்லியபோது அவர் என்னிடம் இதையும் கூறினார். அதாவது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் என்று நாம் நினைக்கும்போது நம் முன் எழும் சித்திரம் என்னவென்றால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் எத்தனைபேர் அடங்கியிருக்கிறார்களோ அவர்கள் அனைவருக்கும் ஒரே சமமான பதவி கிடைக்குமென்பதும் அவர்கள் அனைவரும் ஒன்றுகூடி அச்சாம்ராஜ்யத்தை நடத்துவார்கள் என்பதும்தான் என்று அவர் கூறினார். இதனால், அப்படிப்பட்ட காலம் வந்துவிட்டால், சாம்ராஜ்யம் என்று ஒன்று இல்லாமலே போய்விடுமென்றும், அப்படியே அது இருந்தாலும், இந்தியர்கள் தம்முடைய பெரும் எண்ணிக்கையினால் அதைத் தம்முடைய சாம்ராஜ்யமாக்கிக் கொள்வார்கள் என்றும் அவர் கூறினார். இங்கிலாந்தும் அதன் குடியேற்ற நாடுகளும் பெற்றுள்ள அதிகாரமும் பதவியும் நமக்கும் உண்மையிலேயே கிடைத்துவிட்டால் இதற்கு மேலாக நமக்கு வேறொன்றும் தேவைப்படாதென்று நான் நினைத்துவந்தேன். நிற்க, கல்கத்தா காங்கிரஸானது 1929க்குள் டொமினியன் சுயராஜ்யம் நமக்குக் கிடைக்க வேண்டுமென்று முடிவு செய்துவிட்டது.



# 79. ஒரு துக்க சம்பவம்

நாட்டில் ஒரு புதிய விழிப்பின் குறிகள் காணப்பட்டன. காந்திஜீ கல்கத்தாவிலிருந்து திரும்பி வந்து காங்கிரஸின் வேலையை மும்முரமாக நடத்தத் தொடங்கினர். 1929இல் மேலும் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. அவற்றின் பயனாக நாட்டில் விழிப்பு மேலும் பெருகியது. நம் நாடு ஏழையாயிருப்பதற்குக் காரணங்களில் முக்கியமானது துணி உற்பத்தி செய்வதை ஆங்கிலேயர் நம் நாட்டிலிருந்து ஒழித்துவிட்டதுதானென்று காந்திஜீ எண்ணி வந்தார். இதனால் சர்க்காக்களும் தறிகளும் நின்றுவிட்டன. கோடிக்கணக்கான ஏழைகள் தங்கள் பிழைப்பை இழந்துவிட்டார்கள். ஆதலால் அவர் சர்க்காவை மீண்டும் உயிர்ப்பிக்க விரும்பினர். காதியைப் பற்றிய வேலைகளெல்லாம் இக்காரணத்தால் துரிதப்படுத்தப்பட்டுவந்தன. இந்தியாவுக்குள் ஓர் இழை நூல்கூட வெளி நாட்டிலிருந்து வரக்கூடாதென்று அவர் விரும்பினர். ஏழைகள் தம் பிழைப்பை மீண்டும் பெறும் பொருட்டு அவர் துணி உற்பத்தியை மீண்டும் உயிர்ப்பிக்க விரும்பினர். இதற்காக, அவர், இந்தியாவுக்குள், இங்கிலாந்திலிருந்து மட்டுமன்றி வேறு எங்கிருந்தும் துணி வருவதையும் நிறுத்த வேண்டுமென்று விரும்பினர். மற்றவர்கள், அயல் நாட்டுத் துணி விலக்கென்றால், இங்கிலாந்தின் துணிவிலக்கு என்றே பெரும்பாலும் எண்ணிக்கொண்டிருந்தார்கள். இந்தத் தொழில் இந்தியாவில் கிராமந்தோறும் மீண்டும் நடந்து வர வேண்டுமென்ற கருத்தில் அவர்களுக்குப் பற்றுதலில்லை. ஆங்கிலேயருடைய துணி வராவிட்டால் போதுமென்றதோடு அவர்கள் திருப்தியடைந்தார்கள். நம்முடைய சண்டை ஆங்கிலேயரோடு மட்டும் ஆதலால் அவர்களுடைய நாட்டின் சாமான்களை மட்டும் தாம் நாம் புறக்கணிக்க வேண்டுமென்றும், இவ்விதமாக அவர்களை நெருக்கடி செய்து நம்முடைய கோரிக்கைகளை ஏற்றுக்கொள்ள வைக்கவேண்டுமென்றும் அவர்கள் எண்ணி வந்தார்கள். இவ்விதமான புறக்கணிப்பைக் காந்திஜீ ஹிம்சாமயமானதாகக் கருதினர். ஆதலால் இது கூடாதென்று எப்போதுமே தடுத்து வந்தார். கல்கத்தா காங்கிரஸுக்குப் பிறகு சுதேசியில் உற்சாகம் மீண்டும் ஒருமுறை கிளம்பியது. காந்திஜீ அதைப் பயன்

படுத்திக்கொண்டு அதற்கு வெறும் ஆங்கில சாமான் புறக்கணிப்பு உருவை மட்டும் கொடுக்காமல் எல்லா அயல் நாட்டின் துணியை யும் புறக்கணிக்கும் உருவைக் கொடுத்தார். அதோடு கூடக்கூட சர்க்கா பிரசாரமும் செய்யவேண்டியது அவசியமென்று கருதினர். சர்க்கா பிரசார வேலையைச் சர்க்கா சங்கம் செய்து வந்துகொண் டிருந்தது. அயல் நாட்டுத் துணிப் புறக்கணிப்புக்காக ஒரு குழு அமைக்கப்பட்டது. அக்குழு அதற்காக மும்முரமாக வேலை செய்யத் தொடங்கியது. 1929ஆம் ஆண்டு இவ்வேலையில் கழிந்தது. நாட்டில் எழுந்த விழிப்பு இதற்கு உதவியது. இதுவும் அந்த விழிப்பைத் தூண்டி வளர்ந்தது.

பல இடங்களில் காந்திஜீ அயல் நாட்டுத் துணியைத் கொளுத்தினர். இதனுல் பொதுமக்களிடையில் அதிக உற்சாகம் பெருகிற்று. காந்திஜீ கல்கத்தாவுக்கு வந்தார். அவர் பர்மா வுக்குச் சென்றுகொண்டிருந்தார். வழியில் அங்கே தங்கினர். அங்குள்ளவர்கள் ஒரு பொதுக்கூட்டத்தை நடத்தினர்கள். அதில் அயல் நாட்டுத் துணியைக் கொளுத்துவதற்கும் ஏற்பாடு செய் திருந்தார்கள். அப்படியே அயல் நாட்டுத் துணி கொளுத்தப் பட்டது. ஆனல் அதற்கு முன்னமே போலீசார் இவ்விதமான காரியத்தை ஊரில் எந்தப் பகுதியிலும் செய்யக்கூடாதென்று தடை உத்தரவு போட்டிருந்தார்கள். கூட்டம் நடந்து முடிந்து விட்டது. துணியையும் கொளுத்தியாகிவிட்டது! நாங்கள் எல்லாரும் அங்கிருந்தும் போய்விட்டோம். அப்போதுதான் போலீசார் வந்து நெருப்பை அணைத்தார்கள். அங்கிருந்தவர் களைக் கலைத்துத் துரத்தி அடித்தார்கள். அடுத்த நாள் மகாத்மா ஜீயின் மீது வழக்குத் தொடுக்கப்பட்டது. அது பிரசிடென்ஸி மாஜிஸ்டிரேட்டால் விசாரணை செய்யப்பட்டது. காந்திஜீ ஒன்றும் கூற விரும்பவில்லை. ஆயினும் வக்கீல்கள் நிறைய வாதாடி ஞர்கள். போலீசாரின் நடவடிக்கை சட்டத்திற்கு விரோதமான தென்றும், மேலும் இந்த வழக்கு எந்தப் பிரிவின் கீழ் தொடுக்கப் பட்டிருக்கிறதோ அது பொருத்தமன்றென்றும் வாதாடினர்கள். ஆனல் மிஸ்டர் ரௌக்ஸ்பரோ காந்திஜீக்கு விரோதமாகத் தீர்ப் பளித்தார். உத்தரவை மீறியதற்காகக் காந்திஜீக்கு ஒரு ரூபாய் அபராதம் போட்டார்! காந்திஜீ ரங்கூனுக்குப் போய்விட்டார். அவர் அங்கிருந்து திரும்பி வந்தபின்தான் இந்த அபராதம் கொடுக்கப்பட்டது.

இதே சமயத்தில், காந்திஜீ கல்கத்தாவிலிருந்த போதே, வேறொரு காரியமும் நடந்தது. அத்துடன் நானும் சம்பந்தப்

பட்டிருந்தேன். விஷயம் துக்கமானது. 1921இலிருந்தே காதி பிரசார வேலை தொடங்கப்பட்டுவிட்டது. எங்கள் மாகாணத்தில் ஸ்ரீ ராம்விநோத் சின்ஹா மிக்க உற்சாகத்துடனும் திறமையுடனும் இவ்வேலையை ஆரம்பித்தார். இவ்வேலையில் அவர் பெற்ற வெற்றியைக் கண்டும் அவருடைய திறமையைக் கண்டும் திலக் சுயராஜ்ய நிதியிலிருந்து அவருக்கு இருபத்தையாயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டது. அதைக் கொண்டு அவர் காதி வேலையை மிகவும் முன்னேறச் செய்தார். ஆனால் அவருடைய தோழர்களோடு அவருக்கு மனஸ்தாபம் வந்துவிட்டது. ராம்விநோத் பாபூவானவர் இந்த நிலையத்தை இப்போது தம்முடைய சொந்தச் சொத்தாக்கிக் கொண்டார் என்று அவர்கள் எண்ணினார்கள். திலக் சுயராஜ்ய நிதியிலிருந்து பணம் கொடுக்கும்படி சிபார்சு செய்தவரான ஆசார்யா கிருபளானியும் இதே முடிவுக்கு வந்தார். சர்க்கா சங்கம் ராம் விநோத்பாபூவிடமிருந்து பணத்தை திருப்பி வாங்க வேண்டுமென்று அவர் வற்புறுத்திவந்தார். பீகார் கிளைக்கு நிர்வாகியாக நான் இருந்ததால் இந்தப் பொறுப்பு என் தலைமேல் வந்து சேர்ந்தது. சர்க்கா சங்கத்தின் மாகாண அமைச்சரான ஸ்ரீ லக்ஷ்மீநாராயண் சர்க்கா சங்கம் செய்த முடிவுபடி பணத்திற்குக் கணக்குக் கேட்டார். கணக்கைப் பற்றி அவருக்கும் ராம்விநோத் பாபூவுக்கும் மனஸ்தாபம் வந்துவிட்டது. இந்த விஷயம் காந்திஜீ வரையில் எட்டியது. இந்த விஷயத்தை விசாரணை செய்து தமக்குச் சொல்லும்படி காந்திஜீ ஸ்ரீ சதீஷ் சந்திரதாஸ் குப்தாவுக்கு உத்தரவிட்டார்.

சதீஸ் பாபூ கல்கத்தாவிலேயே விசாரணையை நடத்தினார். லக்ஷ்மீபாபூ முதலானோர் அங்கேயே கணக்குப் புத்தகங்கள் முதலியவற்றை யெல்லாம் எடுத்துக்கொண்டு வந்து சேர்ந்தார்கள். நானும் இருந்தேன். நான் இவ்விசாரணையில் கலந்து கொள்ளவில்லை. ஆயினும், அவருடைய தீர்ப்பு எனக்கு வருத்தத்தை உண்டாக்கியது. நிலுவையிருந்த பணம் எவ்வளவாயினும் சரி, அது ராம் விநோத் சின்ஹாவிடமிருந்து பீகார் சர்க்கா சங்கத்திற்குத்தான் கிடைக்க வேண்டியிருந்தது. ஆனால் சதீஷ் பாபூ தம்முடைய அறிக்கையில் பீகார் கிளைக்குத் திறமை போதாதென்று குற்றம் சாட்டினார். ராம்விநோத் பாபூ சொல்லிய கணக்கையே அவர் ஏற்றுக்கொண்டார். அந்த அறிக்கையை நான் பார்த்ததும், எனக்கு அதிக வருத்தம் வந்தது. பீகார் கிளைக்கு விரோதமாகத் தீர்ப்பளித்தார் என்பதற்காக அன்று. அவர் தம்முடைய அதிகாரத்தைக் கடந்து புறஞ் சென்று பீகார்

கிளைக்குத் திறமையில்லையென்றும் வேலை நடத்தத் தெரியவில்லை யென்றும் முடிவு செய்தார் என்பதற்காகத்தான் எனக்கு வருத்தம் வந்தது. இத் தீர்ப்பு எனக்குத் திருப்தி அளிக்கவில்லையென்றும், மகாத்மாஜீயே கணக்கைப் பரிசோதித்து அறிய வேண்டு மென்றும் நான் மகாத்மாஜீயிடம் கூறினேன். ஏனெனில் ஒரு பக்கத்தில் ஒரு பொது நிலையம் இவ்விஷயத்தில் சம்பந்தப்பட் டிருந்தது. அதை நடத்தும் வேலையைப் பல தியாகிகளும் உண்மையான தொண்டர்களும் மிக்க உற்சாகத்துடனும் உழைப் புடனும் செய்து வந்தார்கள். மற்றொரு பக்கத்தில் வேலையில் திறமைசாலியானவரும் காதி பிரசாரத்திற்கு நிறையத் தொண்டு புரிந்திருந்தவருமான ஒரு செயலாளர் சம்பந்தப்பட்டிருந்தார். ஆனால், அவர் ஒரு பொது நிலையத்தின் பணத்தைக் கொண்டு நிறுவப்பட்ட ஒரு நிலையத்தைத் தம் சொந்த சொத்தாக பாவித் துக் கொண்டுவிட்டார். இதில் கூடத் தவறு ஒன்றுமில்லை. ஏனெனில் அவர் தாம் இதற்காகத் தம் பொழுதையும் உழைப் பையும் செலவிட்டு வேலை செய்திருந்தார். ஆனால் சர்க்கா சங்கத்திற்கு அதன் பணம் சரியாகத் திரும்பிக் கிடைத்துவிட வேண்டும்.

பர்மாவிலிருந்து காந்திஜீ திரும்பி வந்தபின், கல்கத்தாவில் அவர் முன் எல்லா விஷயங்களையும் கூறியபோது, அவர் எல்லா வற்றையும் தாமே பார்ப்பதாக வாக்களித்தார். இவ்விஷயம் நெடுநாள் வரையில் நடந்துகொண்டிருந்தது. கணக்கைப் பரிசீலனை செய்வதற்காக மகாத்மாஜீ ஸ்ரீ நாராயண்தாஸ் காந்தியை நியமித்தார். முடிவில், சர்க்கா சங்கம் சமர்ப்பித்த கணக்கையே ஸ்ரீ நாராயண்தாஸ் சரியென்று ஏற்றுக்கொண்டார். இதல் ஏதாவது தவறிருந்தால் தமக்கு விளக்கும்படி காந்திஜீ ஸ்ரீ ராம்விநோத் பாபூவிடம் கூறினர். ஆனால் விஷயம் இதற்கு மேல் வளரவில்லை.

இச்சம்பவத்தைப் பற்றிக் கூறும்போது ராம்விநோத் பாபூ வைப் பற்றியும் ஸ்ரீ சதீஷ் சந்திரதாஸ் குப்தாவைப் பற்றியும் சில விஷயங்களை எழுதவேண்டி வந்ததற்காக வருந்துகிறேன். அந்தச் சமயத்தில் இதைப்பற்றி நிகழ்ந்த பேச்சுக்களால் இதை விட அதிக வருத்தம் எனக்கு விளைந்தது. பொது வாழ்க்கையில் பல சமயங்களில் நமக்குப் பிடிக்காத விஷயங்களை நாம் செய்ய வேண்டி வருகிறது. அவை நமக்குப் பிடிக்காவிட்டாலும் கூடக் கடமையினல் உந்தப்பட்டு நாம் அவற்றை செய்யவேண்டி யிருக் கிறது. ஸ்ரீ ராம்விநோத் சின்ஹாவை, அவர் பாகல்பூர் காலேஜில்

படித்துக்கொண்டிருந்த காலத்தில், முதல் ஜெர்மன் யுத்தத்தின் போது அவர் கண்காணுச் சிறையில் வைக்கப்பட்ட சமயத்தி லிருந்து எனக்குத் தெரியும். அப்போது உண்டான தொடர்பு காந்திஜீ சம்பரானுக்கு வந்தபின் மிகவும் நெருங்கியதாகிவிட்டது. ஒத்துழையாமை இயக்கத்தில், முக்கியமாகக் காதி சம்பந்தமாக, அவருடன் எனக்குத் தொடர்பு அதிகரித்தது மட்டுமன்றி அவர் செயல் திறத்திலும் எனக்கு நம்பிக்கை வளர்ந்தது. இப்படிப்பட்ட ஒருவரைப்பற்றி எதுவும் சொல்ல வேண்டிவந்ததால் அது மிகவும் வருத்தமாகத்தானிருக்கிறது. சதீஷ் பாபூவிடம் என் உள்ளத்தி லிருக்கும் பற்றுதலேப்பற்றியும் அன்பைப்பற்றியும் நான் கூற விரும்பவில்லே. அவருடைய ஆற்றலேயும் தியாகத்தையும் அளவிடமுடியாது. அவருக்கும் என் மீது அன்பு இருந்து வருகிறது.

## 80. ஜம்ஷேட்பூர் தொழிலாளர்களின் ஹர்த்தால்

பீகாரில் ஜம்ஷேட்பூர் ஒரு மிகவும் முக்கியமான இடம். அங்கு, இந்தியாவில் மட்டுமன்றி, ஆசியா முழுவதிலும் உள்ள எல்லா இரும்புத் தொழிற்சாலேகளேயும்விட மிகப் பெரிய இரும்புத் தொழிற்சாலே இருக்கிறது. மேலும் உலகத்தில் உள்ள இரும்புத் தொழிற்சாலேகளில் அது இரண்டாவது இடமோ மூன்ருவது இடமோ வகித்துவருகிறது. அத்தகைய ஊரில் தொழிலாளர் களுடைய சுக துக்கம்தான் மிக முக்கியமான விஷயம். இந்த மாகாணத்தில் தொழிலாளர் சங்கத்திற்கு ஒரு தனிச் சிறப்புண்டு. ஏனெனில் நிலக்கரி சுரங்கங்களும் மற்றெல்லா மாகாணங்களேயும் விட இங்கு அதிகமாக இருக்கின்றன. கரும்பு ஆலேகளும் ஐக்கிய மாகாணம் நீங்கலாக இந்த மாகாணத்தில்தான் மற் றெல்லா மாகாணங்களேவிட அதிகமாக இருக்கின்றன. மற்றெல்லா மாகாணங்களேவிட இங்குத்தான் சர்க்கரை அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது.

1921இலிருந்து நான் எப்போதாவது ஜம்ஷேட்பூருக்குப் போய் வந்து கொண்டிருந்தேன். அங்கே காங்கிரஸின் பிரசார வேலேயைச் செய்து வந்தேன். அதேபோல ஜரீயாவுடனும் எனக்

குத் தொடர்பு உண்டு. தொழிலாளர் சங்கங்களை நான் என் பொறுப்பில் எடுத்துக் கொள்ளவில்லை. ஜம்ஷேட்பூரில் ஒரு சங்கம் அமைக்கப்பட்டிருந்தது. அதற்குத் தீனபந்து ஆண்டு ரூஸ் தலைவராக இருந்தார். காந்திஜீ அங்கே ஒரு சமயம் சென்றார். டாடா கம்பெனியின் டைரக்டரான திருவெய்திய ஆர். ஜி. டாடாவும் அச்சமயம் அங்கு வந்தார். நானும் காந்திஜீ யுடன் போயிருந்தேன். தொழிலாளர் சங்கத்தை ஸ்ரீ டாடா அங்கீகரித்துக் கொண்டார். அது ஏதோ சிறிதளவு பணியும் ஆற்றி வந்து கொண்டிருந்தது. ஸ்ரீ ஆண்டுரூஸ் எப்போதாவது தான் வந்து போய்க் கொண்டிருப்பார். அங்கேயே தங்கியில்லை. இதனால், அவருடைய ஆதரவால் பயன் கிட்டினாலும், அச்சங்கம் எவ்வளவு வலிமையடைய வேண்டுமோ அவ்வளவு வலிமையை அடையவில்லை.

தொழிலாளர்களின் குறைகளை முன்னிட்டு அங்கு 1928இல் ஹர்த்தால் நடந்தது. ஹர்த்தால் சில நாட்கள் வரையில் நடந்து கொண்டிருந்தது. ஸ்ரீ சுபாஷ் போஸ் கல்கத்தாவிலிருந்து வந்தார். அவர் தொழிலாளர் சங்கத்துக்குத் தலைவரானார். முடிவில் அவர் டாடா கம்பெனியுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்தார். ஆனால் இச்சமயத்தில் மற்றோர் ஆள் தொழிலாளர் சங்கத்தில் சிரத்தை எடுத்துக் கொள்ளத் தலைப்பட்டார். அவர் இந்த உடன்படிக்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. சில தொழிலா ளர்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு அவர் ஒரு தனிச் சங்கத்தை நிறுவிவிட்டார். அவருடைய பக்கத்திலிருந்து ஸ்ரீ சுபாஷ் சந்திரரைத் தாக்கி மிகவும் இழிவான முறையில் பிரசாரம் செய்யப்பட்டு வந்தது. ஆனால் ஹர்த்தால் முடிந்து விட்டது. தொழிலாளர்கள் ஒருமைப்பட்டில்லாதபோது டாடா கம்பெனியாருக்கு எதுவும் செய்ய வேண்டி வரவில்லை. இவை யெல்லாம் நான் இந்தியாவிலில்லாதபோது நடந்தன. அங்கே தொழிலாளர்களிடையில் இரண்டு கட்சிகள் உண்டாகிவிட்டன. அவர்களுடைய சங்கங்களும் இரண்டாகிவிட்டன. அவை இரண்டிற்கும் இடையில் சண்டை சச்சரவுகள் நிறைய இருந்து வந்தன.

இதே சமயத்தில் அங்கே டின்பிளேட் கம்பெனி என்ற பெயர் கொண்ட மற்றொரு கம்பெனியில் ஹர்த்தால் தொடங்கியது. அங்கிருந்த தொழிலாளரும் சுபாஷ் சந்திரபோஸின் உதவியை நாடினார்கள். ஆனால் கம்பெனியின் முதலாளிகள் பிடிவாதமாக இருந்தார்கள். அவர்கள் தொழிலாளர்களின் குறைகளைக்

கேட்கத் தயாராயில்லை. சுபாஷ்பாபூ எனக்குச் செய்தி அனுப்பி என்னையும் வரவழைத்தார். இந்த ஹர்த்தாலில் சிரத்தை எடுத்துக் கொள்ளும்படி கூறினர். பேராசிரியர் அப்துல் பாரீ அங்குச் சுபாஷ் பாபூவுக்கு உதவி புரிந்து கொண்டிருந்தார். இந்த ஹர்த்தால் என் மாகாணத்தில் நடந்ததாலும், மேலும் தொழிலாளர்களின் கோரிக்கைகள் நியாயமானவை என்று நான் உணர்ந்ததாலும் நானும் அதை ஆதரித்தேன். இதற்குப் பின் அதை நடத்தும் பொறுப்பு முழுவதும் பேராசிரியர் அப்துல் பாரீயின் மேலும் என் மேலும் வந்துவிட்டது. நான் பலமுறை அங்குச் சென்றேன். ஹர்த்தால் சுமார் ஒன்பது பத்து மாதங்கள் வரையில் நடந்து கொண்டிருந்தது. இந்தச் சண்டையைத் தொழில் விவாதச் சட்டப்படி (டிரேட்ஸ் டிஸ்புயூட் ஆக்ட்) பஞ்சாயத்து செய்ய வேண்டுமென்று நான் அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்தேன். ஆனால் அது இதனை ஏற்றுக்கொள்ளவில்லை. பிறகு நான் தலைமைச் செக்ரடரியையும் அரசாங்கத்து உறுப்பினரையும் (மெம்பர்) கண்டு பேசினேன். ஜம்ஷேட்பூர் தொழிலாளர்களின் தலைவர் ஸ்ரீ ஹோமி இந்த ஹர்த்தாலை ஆதரிக்கவில்லையாதலால், அரசாங்கம் இந்த ஹர்த்தாலைத் தவறானதாகவும் காரணமில்லாததாகவும் கருதுகிறதென்று அவர்கள் கூறினர்கள். இந்த ஸ்ரீ ஹோமி டாடா கம்பெனியில் சுபாஷ் பாபூவை எதிர்த்து வேறொரு நிலையத்தை நிறுவியவரே தாம். அரசாங்கம் யாதும் செய்ய விரும்பாததாலும், கம்பெனிக்கே உதவி செய்ய விரும்பியதாலும் இவருடைய அபிப்பிராயம் அப்போது அதற்கு நல்லதாகப் பட்டது. எது எப்படியாயினும் சரி, எவ்வளவோ முயற்சி செய்தும் கூடக் 'கம்பெனி அசைந்து கொடுக்கவில்லை. ஒன்பது பத்து மாதங்கள் நடந்து வந்தபின் ஹர்த்தால் முடிவடைந்து விட்டது. ஆயினும், வேலையை விட்டுவிட்ட தொழிலாளிகளில் எத்தனையோ பேர் தம் வேலைக்குத் திரும்பி வரவில்லை. அல்லது வரவிரும்பியவர்களைக் கம்பெனி திரும்பவும் எடுத்துக் கொள்ளவில்லை.

# 81. அரசாங்கத்தின் அறிக்கையின் பொருள்

1929இல் என் பொழுதின் பெரும்பாகம் அயல் நாட்டுத் துணிப் புறக்கணிப்பு வேலையிலேயே கழிந்தது. அந்த ஆக்க வேலையின் குழந்தைதான் காதி உற்பத்தி. காதி வேலையை மேற் பார்வை செய்வதற்காக நான் மதுவனீயில் சில நாட்கள் தங்கி யிருந்தேன். அவ்வூர்தான் சர்க்கா சங்கத்தின் தலைமை இடமாக வும் மாகாண அலுவலகமாகவும் ஆகிவிட்டது. வேலையை முன் னேறச் செய்வதற்காக நான் செயலாளர்களுடன்கூடி ஆலோசனை செய்தேன். என்னுடைய அண்ணன் மகன் ஜநார்த்தனனுக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதாக அங்குத்தான் எனக்குத் 'தந்தி வந்தது. யாருக்கும் உள்ளது போல என் தமையனுருக்கும் மகிழ்ச்சி உண்டாயிற்று. நாங்கள் எல்லோருமே மகிழ்ச்சி யடைந்தோம்.

குழந்தை மிகவும் அழகாகவும், சூட்டிகையாகவும் இருந்தான். நாங்கள் இரு சகோதரர்களும் அவன்மீது அதிகப் பிரியமாக இருந்து வந்தோம். ஏனெனில் அப்போது வீட்டில் அவன் ஒரு ஆண் குழந்தைதானிருந்தான். அவன் வளர வளர அவன் மீது அன்பும் பெருகி வந்தது. ஆனால் அவனுக்கு ஐந்து வயதுக்குச் சற்று மேலானபோது, என் தமையனுர் இறந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகு, அவனுக்குப் பட்னுவில் டைபாயிடு சுரம் வந்துவிட்டது. நான் பட்னுவில்தான் இருந்தேன். வைத்தியர் கள் தம்மால் இயன்ற வரையில் அவனைக் காப்பாற்ற முயற்சி செய்தார்கள். ஆனால் அது முற்றிலும் பயனற்றுப் போயிற்று. அவன் போய்விட்டான். இப்பொழுதும்கூட அவனுடைய நினைவு வந்துவிட்டால் என் மனம் கலங்குகிறது.

இச்சமயத்தில் லார்டு இர்வின் இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக இருந்தார். அவர் விடுமுறை எடுத்துக்கொண்டு சில நாட்களுக்காக இங்கிலாந்திற்குச் சென்றுர். அங்கே இந்தி யாவின் நிலைமையைப் பற்றி அவர் கூறினர். அப்போது அங்குத் தொழிலாளர் கட்சியின் மந்திரி சபை இருந்து வந்தது. ஸ்ரீ ராம்சே மாக்டோனல்டு பிரதான மந்திரியாகவும் ஸ்ரீ வெஜ்வுட் பென் இந்தியா மந்திரியாகவும் இருந்தார்கள். லார்டு இர்வின் அங் கிருந்து திரும்பி வந்து, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில் ஓர் அறிக்கையை விடுத்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில்

இதுவரையில் செய்யப்பட்டிருந்த அறிக்கைகள் எல்லாமே இந்தியாவுக்கு டொமினியன் சுயராஜ்யத்தை அளிப்பதாகவே வாக்களித்திருக்கின்றன என்றும், இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்ய ஒரு வட்டமேஜை மகாநாடு லண்டனில் நடத்தப்படும் என்றும் அவர் கூறினர் என்று நினைக்கிறேன். இங்கு நிலவி வந்த நிலைமையை முன்னிட்டு இந்த அறிக்கை செய்யப்பட்டது. சைமன் கமிஷனை இந்தியாவில் உள்ள கட்சிகள் அனைத்துமே புறக்கணித்துவிட்டன. அதை எதிர்த்துச் செய்யப்பட்ட முழக்கங்களில் மக்களின்மேல் தடியடியும் வீசப்பட்டது. அதில் நாட்டின் பெருமை வாய்ந்த மனிதர்கள் பலர் காயமடைந்தனர். நாடெங்கும் கொந்தளிப்பு உண்டாயிற்று. இதற்கு லாகூர் சதியாலோசனைக் குற்றவாளிகளின் உண்ணுவிரதமானது மேலும் உயிர் ஊட்டியது. அயல் நாட்டுத் துணிவிலக்குப் பிரசாரமானது மேலும் மும்முரமாக நடந்து வந்தது. கல்கத்தா காங்கிரஸானது 1929க்குள் டொமினியன் சுயராஜ்யம் கிடைக்காவிட்டால் பூர்ண சுதந்திரத்தைக் காங்கிரஸானது தன் குறிக்கோளாகக் கொள்ளும் என்று ஒரு தீர்மானத்தையும் ஏற்றுக் கொண்டுவிட்டது.

இந்த அறிக்கையானது இந்த அமளியைத் தணிக்க உதவுமென்று அரசாங்கம் நினைத்திருக்கலாம். அறிக்கையின் அர்த்தத்தைப் பற்றி பத்திரிகைகளில் வாக்குவாதம் நடந்து வந்தது. மிதவாதக் கட்சிக்காரர்கள் திருப்தியடைந்தது போலக் காணப்பட்டார்கள். ஆனால் இதை நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்தால், அரசாங்கத்தின் மற்ற அறிக்கைகளைப் போலவே இதுவும் பல அர்த்தங்கள் கொடுக்கிறது என்பதும், மேலும் அரசாங்கம் தன் சௌகரியத்தைப் போல எப்போது எவ்விதம் தேவையோ அவ்விதமாக அதற்கு அர்த்தம் அளிக்கக்கூடும் என்பதும் புலப்படும். காங்கிரஸ்காரர்கள் அதைக் கல்கத்தா காங்கிரஸின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதாகக் கருதவில்லை. பிறகு அதற்கு விளக்கம் செய்யப்பட்டபோது, காங்கிரஸின் சந்தேகம் முற்றிலும் சரியானதென்பதும் மற்றவர்கள் அதில் கண்டுள்ள சொற்கள் அளிக்காத பொருளைத் தத்தம் மனத்திற்கு இசைந்தபடி அதில் கண்டார்கள் என்பதும் தெரியவந்தன.

லாகூர் காங்கிரஸுக்கு முன் காந்திஜீயும், பண்டித் மோதிலால்ஜீயும் லார்டு இர்வினைச் சந்தித்தார்கள். வைசிராய் அந்த அறிக்கையின் அர்த்தத்தைச் சொல்லக் கேட்டதும் தாம் புரிந்துகொண்டதுதான் சரியென்றும் மற்றவர்கள் மனம் போனபடி அர்த்தம் செய்து கொண்டார்கள் என்பதும் அவர்களுக்குத்

தெரியவந்தன. டொமினியன் சுயராஜ்யம் இன்னும் தொலேவில் இருந்தது! அது வந்து விட்டதென்று நினைத்தவர்கள் ஸ்ரீ வெஜ்வுட்பென் ஆனவர் டொமினியன் சுயராஜ்யம் உண்மையிலேயே நடப்பில் இருந்து வருகிறதென்று செய்த அறிக்கையை வெறும் பேச்சுத் திறமையென்று கொள்ளாது ஒவ்வொரு சொல்லையும் உண்மையெனத் தவருக அர்த்தம் செய்து கொண்டார்கள்! பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் அறிக்கைகளை நுட்பமாகக் கவனிக்க வேண்டும் என்றும், அவற்றிற்கு நம் மனம் மோனபடி பொருள் கொள்ளக் கூடாதென்றும், இந்த அறிக்கையால் நமக்கு ஓர் எச்சரிக்கை கிடைத்தது. இந்த எச்சரிக்கைக்காக நாம் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு நன்றி செலுத்த வேண்டும்.

## 82. பர்மா யாத்திரை

பாபூ ஹரிஜீயின் வழக்கை முடித்துக் கொண்டு நாங்கள் இங்கிலாந்திலிருந்து திரும்பி வரும்போது பாபூ ஹரிஜீயானவர் என்னை ஒரு முறை பர்மாவுக்கு வரவேண்டுமென்றும், அங்கு ஜீயாபாடியில் அவர் செய்திருக்கும் பணிகளை யெல்லாம் 'பார்க்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். அங்கே அவருடைய புகழைக் காண வேண்டுமென்றும் பர்மாவையும் சுற்றிப் பார்த்து வரவேண்டுமென்றும் எனக்கும் ஆசையாயிருந்தது. இந்த கோரிக்கையை 1928இல் நிறைவேற்ற முடியவில்லை. 1929இல் பாபூ ஹரிஜீயே பர்மா சென்ருர். அங்குச் செல்வதற்கு இதுதான் நல்ல சமயமென்று நான் நினைத்தேன். இதற்கிடையில் வேருெரு விஷயமும் வந்துவிட்டது. ஸ்ரீ ஹரிஜீயின் திருவெய்திய தந்தையார் திவான் ஜயபிராகாஷ் லாலானவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தூண்டுதலின் பேரில் எவ்விதமாகப் பர்மாவில் நிலம் வாங்கிருரோ அதேபோல மிஸ்டர் மிலன் என்ற ஓர் ஆங்கிலேய நீலச் சாயக்காரரும் பர்மாவில் நிறைய நிலம் வாங்கிருர். அவர் ஷாஹாபாத் ஜில்லாவில் அவுரித் தொழில் நடத்திக் கொண்டிருந்தார். அவரும் பீகாரிலிருந்து, முக்கியமாக ஷாஹாபாத்திலிருந்து, குடியானவர்களை அழைத்துச் சென்று பாபூ ஹரிஜீயைப் போலவே தம்முடைய நிலத்தில் குடி வைத்தார். இன்னும் சிலரும் அங்கு நிலம் வாங்கிருர்கள். ஆனல் அவர்களால் அதைக் கவனிப்பதற்குச் சரியான ஏற்பாடு செய்ய முடியவில்லை. கடைசி

யில் அவர்கள் நிலத்தை விற்றுவிட்டார்கள். அல்லது அது பறி முதல் செய்யப்பட்டு போயிற்று. ஆனால் இந்த இரண்டு பெரிய ஜமீன்தார்களும் அங்கே பெரிய ஜமீன்தாரிகளை சுற்றி வளைத்து அமைத்து விட்டார்கள். இவர்கள் மிகவும் உழைத்துப் பாடுபட்டு இடையருது கவனம் செலுத்தி, நிறையப் பணமும் செலவழித்து யானைகளும், புலிகளும் வாழ்ந்து வந்த காடுகளை வெட்டிச் சாய்த்து நிலத்தைச் சீர்திருத்தி அங்குப் பீகாரிகளைக் குடி வைத் தார்கள். அங்கே நெல், கரும்பு இன்னும் மற்ற விளை பொருள் களும் உற்பத்தி செய்யப்பட்டு வந்தன. மிஸ்டர் மிலனின் குடி யானவர்களிடையில் சிறிது அமைதியின்மை நிலவி வந்தது. நான் அங்கே சென்று தமக்கு உதவி புரிய வேண்டுமென்று அக் குடியானவர்கள் எனக்குக் கடிதம் எழுதி அனுப்பினார்கள். நான் காந்திஜியுடன் பணியாற்றினேன் என்பதை அவர்கள் கேள்விப் பட்டார்களாம். இதனால் அவர்களுக்கு என் தொண்டின் மீது நம்பிக்கை உண்டாகியிருக்கலாம். இந்த மற்றொரு நல்வாய்ப்புக் கிடைத்ததுமே நான் அங்கே செல்ல முடிவு செய்து விட்டேன். ஸ்ரீ மதுரா பிரசாத்ஜீயுடன் நவம்பரில் அங்கே சென்றேன். மிஸ்டர் மிலனின் ஜமீன்தாரியின் பெயர் சௌத்னு; பாபூ ஹரிஜீயின் ஜமீன்தாரியின் பெயர் ஜியாபாடி. நான் அவ் விரண்டு இடங்களுக்கும் சென்றேன். ரங்கூனிலும் சில நாட்கள் தங்கினேன். எல்லாம் சேர்த்துப் பதினைந்து நாட்கள் அங்கிருந் திருப்பேன்.

கப்பல் பிரயாணம் சாதாரணமாக இருந்தது. கடல் அமைதி யாக இருந்தது. கப்பலில் நல்ல ஓய்வு கிடைத்தது. நாங்கள் மிகவும் ஆனந்தமாகப் போய்ச் சேர்ந்தோம். சிறிது தொலைவி லிருந்தே ரங்கூனின் புத்த கோவில்களின் தங்க கோபுரங்களும் கும்பங்களும் காணப்பட்டன. கிட்டச் செல்லச் செல்ல அவற்றின் பருமன் தெரியவந்தது. ரங்கூன் மக்கள் மிகவும் சிறப்பாக உபசாரம் செய்தார்கள். ஒரு பொதுக் கூட்டத்தில் எனக்குப் பாராட்டுப் பத்திரமும் வழங்கப்பட்டது. நான் அதற்கு அளித்த விடையில் பின்வருமாறு கூறினேன். 'இந்தியாவுக்கும் பர்மா வுக்கும் பழைய காலத்திலிருந்த சம்பந்தமானது இன்றைய சம்பந்தத்தினின்று வேறு விதமானது. இந்தியாவானது பண்டைக் காலத்தில் தன்னுடைய சாம்ராஜ்யத்தை மற்ற நாடு களில் நாட்டியது உண்மைதான். ஆனால் இக்காலத்துச் சாம்ராஜ் யங்களைப் போல ஹிம்சை, கத்தி கப்படா, படை ஆகியவற்றின் வலிமையை அடிப்படையாகக் கொண்டு அது நாட்டப்படவில்லை.

அது ஒரு மத சம்பந்தமான சாம்ராஜ்யம். மற்ற நாடுகளுடன் இந்தியா கொண்டிருந்த சம்பந்தமானது பட்டு நூலில் கோர்க்கப் பட்ட மணிகளைப் போலிருந்தது. அவை எப்படி ஒன்றோடு ஒன்று சேர்ந்து இருந்தாலும் ஒன்று மற்றொன்றின் மீது அதிகாரம் செலுத்துவதில்லையோ அதுபோல இந்தியா மற்ற நாடுகளுடன் கொண்டிருந்த சம்பந்தமும் இருந்தது. இன்று உலகத்தில் நிகழ்ந்துவரும் படுகொலைகளை நான் நினைக்கும்போது படையின் வலிமையைத் துணைக்கொண்டு அல்லாமல் மதத்தினாலும் பழக்க வழக்கத்தினாலும் உள்ள ஒற்றுமையைக் கொண்டு நிறுவப்பட்ட அந்த இந்திய சன்மார்க்க சாம்ராஜ்ய மானது எவ்வளவோ மடங்கு அதிக உறுதியாக நிலை பெற்றிருந்த தென்பதும், மனித குலத்திற்கு எவ்வளவோ நலம் பயப்பதாக அமைந்திருந்ததென்பதும் தெளிவாகின்றன. இந்தியாவிலிருந்து, முக்கியமாகத் தன் பிறப்பிடமாகிய பீகாரிலிருந்து புத்தமதம் ஓரடியாக மறைந்து விட்டதாயினும் அதை இன்று உலகத்தின் மாபெரும் பகுதி மக்கள் பின்பற்றி நிற்கிறார்கள். அவர்கள் அந்த மதத்தை நிறுவியவருடன் தொடர்பு கொண்ட இடங்களை புண்ணிய தலங்களாக பாவித்து வருகிறார்கள். புத்தபிரான் இந்தியாவில் பிறந்த இடம், சித்தியடைந்த இடம், அவர் மத உபதேசம் செய்த இடம் ஆகிய எல்லா இடங்களும் இன்று புத்த மதத்தினருக்குப் புண்ய தலங்களாக இருந்து வருகின்றன. அந்தத் தலங்களின் பொருட்டு உலகத்தில் உள்ள புத்த மதத் தினர்கள் எல்லாரும், நாம் சீர் குலைந்து இருக்கும் இக்காலத்திலும் கூட, நம்மை மரியாதையுடன் பாவித்து வருகிறார்கள். அரசியல் முறைப்படி அமைந்த எந்த சாம்ராஜ்யத்திற்கும் இந்த நற்பேறு கிடைக்கவில்லை; கிடைக்கவும் மாட்டாது.' இவ்வண்ணமாக நான் அச்சபையில் கூறினேன். பர்மாவுக்குச் சென்றதும் இந்த எண்ணங்கள் என் உள்ளத்தில் தாமாகவே எழுந்தன.

அங்கே சௌத்ஞவின் குடியானவர்களைக் கண்டு பேசினேன். அவர்களுடைய முதலாளி அங்கே இல்லை. அவர் இங்கிலாந்தில் இருந்தார். ஆனால் அவர்களுடைய காரியஸ்தரும் மகனும் அங்கிருந்தார்கள். குடியானவர்களின் குறைகளைப் பற்றி அவர்களுடன் பேசினேன். அவர்களுடைய பேச்சு வார்த்தை யிலிருந்து காரியம் கைகூடுமென்று தோன்றியது. ஆனால், கடைசியில் இங்கிலாந்திலிருந்து ஒரு தந்தி வந்து விட்டது. கைக்குக் கிட்டிய வெற்றி நழுவி விட்டது. ஆயினும் நான் அங் கிருந்த போதே எல்லாக் குறைகளும் அத்துபடியாகாவிட்டா

லும், அங்கிருந்தவர்களுடைய நிலைமை பெரிதளவுக்குத் திருந்தி விட்டதென்றே நம்புகிறேன்.

ஜியாபாடியிலும் குடியானவர்களுக்குச் சில குறைகள் இருந்தன. ஆயினும், ஹரிபாபூவின் திறமையாலும், அவர் அவர்களிடம் நடந்து கொண்ட முறையாலும் அவை அது வரையில் கடுமையான உருக்கொள்ளவில்லை. அவற்றைப் பற்றி நாங்கள் எதுவும் செய்ய வேண்டி வரவில்லை. அங்கே சில நாட்கள் தங்கியிருந்து அங்குள்ள நிலைமையைக் கவனித்தேன். அங்கிருந்தவர்களுடைய கிராமங்களுக்குச் சென்றபோது பீகாரை விட்டு வெளியூருக்கு வந்திருக்கிறோம் என்பதே தோன்றவில்லை. அதே போஜ்புரி மொழி, அதே உடை, அதே பழக்கவழக்கங்கள், அதே போன்ற வீடுகள், அதே மாதிரி வயல் வரப்புக்கள், எல்லாம் பீகாரில் இருப்பது போலவே காணப்பட்டன. பர்மா வழக்கு நடந்து கொண்டிருந்தபோது, நான் பத்திரங்கள் முதலிய காகிதங்களைப் படித்திருந்தேன். அவற்றைப் படித்ததிலிருந்தே பாபூ ஹரிஜீயின் உழைப்பிலும் வேலைத் திறத்திலும் எனக்கு முற்றிலும் நம்பிக்கை விழுந்து விட்டது. அந்தக் காலத்தில், அதாவது முப்பது ஆண்டுகளுக்கு முன், ஒரே காடாக இருந்த இடமானது இப்போது இவ்வண்ணமான செழிப்பான கிராமங்களாக மாறியிருப்பதைப் பார்த்தபின் அவர்மீது எனக்கு இருந்த மதிப்பு மேலும் அதிகமாகிவிட்டது. அந்தக் கிராமங்களில் இப்போது ஆயிரக்கணக்கான பீகாரிகள் வசித்து வருகிறார்கள். அவர்கள் அங்கே சாகுபடி செய்துகொண்டு இன்பமாக வாழ்கிறார்கள். ஹரிஜீ பாபூவுக்கும் ஆண்டுதோறும் லக்ஷக்கணக்கான ரூபாய் வருமானத்தைத் திரட்டிக் கொடுக்கிறார்கள். அவர் எங்கள் முன்னிலையில் குடியானவர்களின் சபை ஒன்றைக் கூட்டி அதில் தம்மிடம் விசுவாசமாக இருந்து வந்தவர்களுக்கு முண்டாசு கட்டிவிட்டு மரியாதை செய்தார். பீகார் வித்யா பீடத்திற்கும் அங்குச் சிறிதளவு பணம் கிடைத்தது. ரங்கூன் வணிகர்களும் பணம் அளித்தார்கள். அதையும் பெற்றுக் கொண்டு திரும்பி வந்தேன்.

ரங்கூனிலும் நிறைய பீகாரிகள் இருக்கிறார்கள். ஜீராதேயீயைச் சேர்ந்த எங்கள் பழைய வேலைக்காரன் ஒருவன் அங்கே என்னைக் கண்டுகொள்ள வந்தான். இது எனக்கு வியப்பை அளித்தது. அவன் ரங்கூனில் எங்கோ வேலை செய்து கொண்டிருந்தான். நான் வருவதைக் கேள்விப்பட்டு அவன் என்னைப் பார்க்க வந்தான். ரங்கூனில் குஜராத்தி, மார்வாடி வியாபாரி

களும் நிறைய இருக்கிறார்கள். ஆனால் கிராமங்களில் மதராஸி செட்டியார்கள் தாம் அதிகமாக இருக்கிறார்கள். அவர்கள் லேவா தேவி செய்து வருகிறார்கள். ஆந்திரர்களும் நிறைய இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் பீகாரிகளைப் போலவே ஏதாவது சேவகமோ கூலி வேலையோ தாம் செய்து வருகிறார்கள். அதே சமயத்தில் ஆந்திராவைச் சேர்ந்த ஸ்ரீ நாகேஸ்வர ராவ் பந்துலுவும் அங்கு வந்திருந்தார். பிறகு ரங்கூனிலிருந்து கப்பலேறி கல்கத்தாவுக்குப் புறப்பட்டு விட்டேன்.

## 83. லாகூர் காங்கிரஸும் மஜஹர்-உல்-ஹக் சாஹபின் மரணமும்

கப்பலிலேயே எனக்கு இழுப்புக் கடுமையாக ஆரம்பித்து விட்டது. கப்பலின் வைத்தியர் ஊசி போட வேண்டிய அவசியம் ஏற்படும் அளவுக்கு நிலைமை கெட்டுவிட்டது. கல்கத்தாவில் கப்பலிலிருந்து இறங்கி என் நண்பர் பாரிஸ்டர் ஸ்ரீ யோகேந்திர நாராயண் மஜும்தார் வீட்டிற்குப் போய்த் தங்கினேன். மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு முங்கேரில் பீகார் மாகாண அரசியல் மகாநாடு நடைபெறுவதாக இருந்தது. நான் அதற்குத் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தேன். கல்கத்தாவில் இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருந்து, ஓய்வு பெற்று, உடல் நலமாகியதும் முங்கேருக்குப் போகலாம் என்று எண்ணினேன். இது வரையில் நான் ஹகீம் அல்லது பண்டிதரின் மருந்தை விட்டால் அல்லோபாதிக் மருத்துவரிடம் தான் வைத்தியம் செய்து கொள்வதுண்டு. ஒரு முறை ஹோமியோபதி வைத்தியம் செய்து பார்க்கலாம் என்று என் நண்பர் நினைத்தார். எனக்கும் அது பிடித்திருந்தது. அவருக்கு நம்பிக்கை உள்ள ஒரு வயதான வைத்தியரை அவர் வரவழைத்தார். அவர் ஒரு வேளை மருந்தைக் கொடுத்துவிட்டு, இன்னும் இரண்டு மாதங்களுக்கு வேறு மருந்து எதுவும் உட்கொள்ளக் கூடாது என்று கூறினார். நான் அந்த ஒரு வேளை மருந்தை உட்கொண்டேன். இரண்டு மாதங்களுக்கு இனி மருந்திலிருந்து விடுதலை கிடைத்து விட்டது.

நான் அங்கேயே இருந்து கொண்டு மகாநாட்டிற்கான என் சொற்பொழிவை எழுதி விட்டேன். மூன்றாம் அல்லது நான்காம் நாள் இரவு ரயில் வண்டியில் முங்கேருக்குப் புறப்பட்டேன். வண்டி

யில் நிறையக் கூட்டமாக இருந்தது. இரவு முழுதும் உட்கார்ந்தே இருக்க வேண்டியிருந்தது. குளிர் காற்றும் என்மேல் பட்டிருக்கும். இதனால் முங்கேருக்குப் போய்ச் சேருவதற்குள் உடம்பு மிகவும் கெட்டு விட்டது. நான் மகாநாட்டிற்குச் செல்ல முடியவில்லை. என்னுடைய சொற்பொழிவை யாரோ ஒருவர் படித்து கேட்பித்தார். அப்போது டிசம்பர் ஆரம்பம். இன்னும் சில நாட்களுக்குக்கெல்லாம் லாகூரில் காங்கிரஸ் நடைபெறுவதாக இருந்தது. பண்டித் ஜவஹர்லால் நேரு தாம் அதற்குத் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். டொமினியன் சுயராஜ்யமா, பூர்ண சுயராஜ்யமா என்ற கேள்வி நாட்டில் வாதிக்கப்பட்டு வந்தது. என்னுடைய முங்கேர் சொற்பொழிவில் நான் டொமினியன் சுயராஜ்யத்தைத்தான் ஆதரித்தேன். நான் அங்கே மிகக் கடுமையாக நோய்வாய்ப்பட்டு விட்டதால் அம்மகாநாடு என்ன முடிவு செய்தது என்பதை நான் அறிந்து கொள்ள முடியவில்லை. நான் மாகாண காங்கிரஸ் குழுவுக்குத் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன் என்பது பின்னால் தெரிய வந்தது.

முங்கேரிலிருந்து எப்படியோ என் தமையனார் என்னைப் பட்னாவுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார். அங்கும் இருமலும், காய்ச்சலும் கடுமையாக வந்து விட்டது. அங்கிருந்த டாக்டர் பனர்ஜீ என்னை இடைவிடாமல் கவனித்து வந்தார். டாக்டர் பணி முக்கர்ஜீ என் நுரையீரலை எக்ஸ்ரே படம் எடுத்து ஆராய்ந்து பார்த்தார். அந்த ஆராய்ச்சியில் கண்டதைக் கொண்டு டாக்டர் பனர்ஜீக்கு மேலும் கவலை உண்டாகிவிட்டது. அவர்கள் என்னைக் கவனித்து வந்தார்களாயினும் நான் எவருடைய மருந்தையும் உட்கொள்ளவில்லை. கல்கத்தாவில் இருந்த ஹோமியோபதி வைத்தியருக்கு நாள்தோறும் டெலிபோன் செய்து வரப்பட்டது. அஞ்சுவதற்கு இடமில்லையென்றும் மருந்து தேவையில்லையென்றும் விடை கிடைத்து வந்தது. ஒரு நாள் பட்னா வைத்தியர்களுக்கு அதிகக் கவலை உண்டாகிவிட்டது. அடுத்த நாளைக்குள் நிலைமை திருந்தாவிட்டால் மிகவும் கவலைக்கு இடமாகிவிடுமென்றும், தொலைவில் உள்ள வைத்தியரை நம்பி எனக்கு யாதொரு வைத்தியமும் இல்லாமல் விட்டு வைக்கமாட்டோம் என்றும் அவர்கள் தெளிவாகக் கூறிவிட்டார்கள்.

கல்கத்தாவுக்குச் செய்தி அனுப்பப்பட்டது. வைத்தியர் பட்னாவுக்கு அழைக்கப்பட்டார். அவர் ஒரு மருந்தைக் கொடுக்கும்படி கூறினார். அது வெறும் தண்ணீர் என்பது பின்னால் தெரிய வந்தது. அவர் வந்து விட்டதால் இங்கு இருந்த வைத்தி

யர்கள் தாம் பொறுப்பிலிருந்து விடுதலை பெற்று விட்டதாக நினைத்துக் கொண்டார்கள். அவர் அங்கு இரண்டு நாட்கள் தங்கியிருந்தார். ஆனால் மருந்து ஒன்றும் கொடுக்கவில்லை. அந்த நாட்களுக்குள் நோயும் தானாகக் குறைய ஆரம்பித்தது. நாலைந்து நாட்களில் காய்ச்சலும் இருமலும் போய் விட்டன. மீண்டும் எக்ஸ்-ரேயால் சோதனை செய்யப்பட்டது. நுரையீரல் முற்றிலும் தெளிந்து விட்டது.

நான் ஜீராதேயீக்குச் சென்று விட்டேன். லாகூர் காங்கிரஸுக்குப் போகவேண்டிய நண்பர்கள் எல்லாரும் சென்று விட்டார்கள். நான் மட்டும் போக முடியவில்லை. ஸ்ரீ சதீஷ் சந்திர முக்கர்ஜீயுடன் ஒரு மாதம் வீட்டிலேயே இருந்தேன்.

இச்சமயத்தில் நான் அஹிம்சாவைப் பற்றி ஒரு சிறிய புத்தகத்தை எழுதி முடித்தேன். பிறகு 1930இல் சத்தியாக்கிரகம் தொடங்கிவிட்டது. நான் அதில் ஈடுபட்டு விட்டதால் பிறகு அப்புத்தகத்தின் மேல் கவனம் செல்லவில்லை. அது பிறகு என்ன ஆயிற்று என்பது தெரியாது.

லாகூர் காங்கிரஸ் பெரும் முழக்கத்துடன் நடந்தேறியது. அங்குச் செல்வதற்கு முன்னம் காந்திஜீயும் பண்டித் மோதிலால் நேருவும் தில்லியில் வைசிராயைச் சந்தித்தார்கள். அவருடைய அறிக்கையானது காங்கிரஸின் கோரிக்கையை நிறைவேற்றவில்லை யென்பது அங்கே தெளிவாகிவிட்டது. இதனால் லாகூரில் காங்கிரஸின் குறிக்கோள் மாற்றப்படும் என்பது ஒரு விதமாக நிச்சயமாகி விட்டது. அப்படியே மாற்றவும் பட்டது. இனிமேல் பூர்ண சுதந்திரம் குறிக்கோளாகி விட்டது.

அங்கே லாகூர் காங்கிரஸ் நடந்து கொண்டிருந்தது. இங்கே தம் கிராமத்தில் தங்கி வந்து கொண்டிருந்த மஜஹர்-உல்.ஹக் சாஹப் உயிர் நீத்துவிட்டார். பட்னாவிலிருந்து சென்று, ஹக் சாஹபானவர் சப்ரா ஜில்லாவில் ஔதருக்கு அருகில் உள்ள பரீத்பூரில் வசித்து வந்தார். அவருக்கு அங்கே ஏதோ ஒரு ஜமீன்தாரி இருந்தது. அவர் அங்கே ஒரு மாபெரும் மாந்தோப்பை வைத்தார். அந்த தோப்பில் ஒரு சிறிய பங்களா இருந்தது. அவர் அதில் வசித்து வந்தார். பக்கத்தில் இருந்த ஆற்றின் வெள்ளத்தில் தம்முடைய மூத்த மகன் மூழ்கி இறந்தபின், அவர் மிகவும் மனமுடைந்து போனார். அங்கேயே சில நாட்கள் நோயாய்க் கிடந்து பிறகு காலமாகி விட்டார். செய்தி கிடைத்ததுமே நான் அங்குச் சென்று அவருடைய பீகம் சாஹபாவுடன் துக்கம் கொண்டாடிவிட்டுத் திரும்பினேன்.

அவர் சாவால் எங்கள் எல்லாருக்கும் பெரும் துக்கம் உண்டாயிற்று. அவர் மறைந்ததால் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கும் உடன்படிக்கைக்கும் ஒரு பெரிய தூண் முறிந்து சாய்ந்து விட்டது. பட்னுவில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. அதில் அவர் பெயரில் ஏதாவது நினைவுச் சின்னம் ஒன்று நிறுவ வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. அவருடைய நினைவுக் குறியாக ஒரு தேசிய மன்றம் அமைக்க வேண்டும் என்று நான் நினைத்தேன்.

# 84. சுதந்திரதினமும் உப்புச் சத்தியாக்கிரகமும்

லாகூர் காங்கிரஸானது பூர்ண சுதந்திரத்தைப் பெறுவதையே காங்கிரஸின் குறிக்கோளாக அமைத்துவிட்டது. கூடவே இதற்காக சத்தியாக்கிரகம் செய்யும்படியும் ஆணையிட்டது. இது கடந்த இரண்டு ஆண்டுகளாகக் காணப்பட்டு வந்த புது எழுச்சியின் பயன். காங்கிரஸ் விழாவுக்குச் சில நாட்களுக்குப் பின் செயலாற்றுக் குழுவானது ஜனவரி மாதம் 26ஆம் தேதியை சுதந்திர தினமாகக் கொண்டாடும்படி நாட்டிற்கு ஆணையிட்டது. உணர்ச்சி ததும்பும் ஓர் அறிக்கையையும் வெளியிட்டது. அதில் நாட்டில் இருந்துவரும் நிலைமையும், சுதந்திரத்தை நாம் பெற்றே தீருவோம் என்ற சபதமும் கூறப்பட்டிருந்தன. நாடெங்கும் பெரிய பெரிய கூட்டங்களை அமைத்து, அங்கு வந்துள்ளவர்களைக் கொண்டு அதே அறிக்கையை முறை வைக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு மாகாணமும் அந்த அறிக்கையைத் தன் மொழியில் மொழி பெயர்த்துக் கொள்ளவேண்டுமென்றும், பொது மக்கள் அந்த அறிக்கையை நன்ருகப் புரிந்து கொண்டு முறை வைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் கட்டளையிடப்பட்டிருந்தது. மேலும் அச்சமயத்தில் வேறு சொற்பொழிவு எதுவும் நடத்தப்படக் கூடாதென்றும், அந்த அறிக்கை மட்டுமே முறை வைக்கப்பட வேண்டும் என்றும் கூறப்பட்டிருந்தது. இக்கூட்டங்கள் மாலையில் நடக்கவேண்டும் என்றும், காலையில் சாத்தியப்பட்ட இடங்களில் எல்லாம் தேசியக் கொடி வணக்கம் நடத்தப்பட

வேண்டும் என்றும், இதே நிகழ்ச்சித் திட்டம் நாடெங்கும் மேற்கொள்ளப்படவேண்டுமென்றும் கட்டளையிடப்பட்டிருந்தது.

இச்சமயம் நாட்டில் நிறைய விழிப்பு வந்து விட்டதாகத் தெரிந்தது. பெரும்பாலும் எல்லா நகரங்களிலும், மேலும் அநேக கிராமங்களிலும்கூட சுதந்திர தினத்தின் வேலைத் திட்டம் முற்றிலும் நிறைவேற்றப்பட்டது. இந்த மங்களக் குறிகளிலிருந்து நாடு பெரும் அடி எடுத்து வைத்து முன்னேறப் போவதாகத் தெரிய வந்தது. எல்லா இடங்களிலும் சத்தியாக்கிரகத்தைப் பற்றி பேச்சு நடந்து வந்தது. சமீபத்தில்தான் பார்டோலியில் சத்தியாக்கிரகம் வெற்றி பெற்றிருந்தது. அது மக்களின் உள்ளத்தில் பெரிய உற்சாகத்தை எழுப்பிவிட்டது. மறுபடியும் எங்கே, எப்போது சத்தியாக்கிகரம் ஆரம்பிக்கப்படும் என்று மக்கள் ஆவலுடன் எதிர்பார்த்து நின்ருர்கள். காந்திஜீயின் கட்டுரைகள் மக்களுக்குப் புத்துயிரை அளித்து வந்தன.

அந்நாட்களில் மகாத்மா காந்தி சபர்மதியின் சத்தியாக்கிரக ஆச்ரமத்தில் இருந்து வந்தார். அங்கே செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அதில் அவர் சத்தியாக்கிரகம் நடத்துவதைப் பற்றி பேசினர். நாடானது இதற்கு இப்போது தயாராயிருக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி நிறையப் பேச்சு வார்த்தை நடந்தது. இன்னும் சற்றுத் தயார் செய்துகொள்ள வேண்டுமென்று பலர் எண்ணினர்கள். ஆனல் மகாத்மாஜீயும், ஜவஹர் லால்ஜீயும் மிகவும் துடித்துக் கொண்டிருந்தார்கள். எந்தச் சட்டத்தை மீறுவது என்பதைப் பற்றியும் நிறைய வாதம் நடந்தது. உப்புச் சட்டத்தைத்தான் முதலில் எதிர்க்க வேண்டுமென்பது காந்திஜீயின் உறுதியான கருத்தாக இருந்தது. இதைப் பற்றி அவர் இவ்வண்ணமாகக் கூறி வந்தார். இந்த சட்டத்தினல்தான் உப்பின்மேல் வரி போடப்படுகிறது. இலவசமாகவோ அல்லது மிகக் குறைவான விலைக்கோ ஏழைகளுக்குக் கிடைக்க வேண்டிய உப்புக்கு இதனல் அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. எத்தனையோ ஏழைகளுக்கு அவர்களுடைய உடல் நலத்திற்கு எவ்வளவு உப்புத் தேவையோ அவ்வளவு உப்பு கிடைக்கவில்லை. உப்பானது நம்முடைய உணவுப் பொருள்களில் முக்கியமானதொரு பொருள். அது கடற்கரை ஓரத்தில் கடல் நீரைத் தேக்கி வைப்பதாலேயே இலவசமாக கிடைக்கும். மற்ற இடங்களில் அதை உப்பு மண்ணிலிருந்து உற்பத்தி செய்து கொள்ளலாம். உப்பு மலைகள் இருக்கும் இடங்களில் அதை மக்கள் வெட்டி எடுத்துக் கொள்ளலாம். ஆனல் அரசாங்

கத்தார் வரி வாங்குவதற்காகவே அதைச் சேகரம் செய்வதைத் தடை செய்கிறார்கள். நீரையும், காற்றையும் போலவே உப்பும் இலவசமாகக் கிடைக்கும்படி கடவுள் அமைத்திருக்கிறார். ஆனால் அரசாங்கத்தாரோ மக்களை அதைப் பெற்றுக்கொள்ள விடமாட்டோம் என்கிறார்கள் என்று காந்திஜீ கூறி வந்தார். இதனால் இதைவிடக் கெட்ட வரி மற்றொன்று இருக்கமுடியாது என்றும், இதை எதிர்த்து ஏன் சத்தியாக்கிரகம் செய்யவேண்டுமென்பதை ஏழைகளும் எளிதில் புரிந்து கொள்வார்கள் என்றும், உலகத்தாரும் இது நியாயம் என்று ஒப்புக் கொள்வார்கள் என்றும் காந்திஜீ எண்ணினார்.

காந்திஜீ எப்போதுமே ஏதாவது ஒரு சிறிய விஷயத்தை எடுத்துக்கொண்டு அதில் இருந்து ஒரு பெரிய காரியத்தை சாதிக்கப்பார்ப்பார். நாம் மிகவும் அநியாயமான இந்த வரியை இவ்விதமாக எதிர்த்து நிறுத்தி விடமுடியுமானால் மற்ற எல்லா வரிகளையும் நாம் கட்டுப்படுத்த முடியும் என்று அவர் நினைத்தார். இதே போலப் பஞ்சாப் படுகொலைக்கும் கிலாபத்துக்கும் நீதி வழங்க வேண்டுமென்று அவர் போராடி வந்தபோது அவற்றிற்கு நியாயத்தைப் பெறுவதற்கு நமக்கு ஆற்றல் வந்து விடுமானால், அதே ஆற்றல் மற்ற அநியாயங்களை ஒழிப்பதற்கும் நமக்கு ஆற்றலை அளித்துவிடும் என்று அவர் நினைத்தார்.

இந்த விஷயத்தை எங்களால் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. எங்கள்முன் எத்தனையோ இடுக்கண்கள் தோன்றின. அரசாங்கத்தை நெருக்கடி செய்யாமல் அதை எப்படி வலுக்கட்டாயப்படுத்த முடியும் என்பது எங்களுக்குள் பலருக்கு புரியவில்லை. உப்புச் சட்டத்தை நாம் எப்படி மீறுவது என்பதும் ஒரு பெரிய சங்கடமாக இருந்தது. கடற்கரைக்குப் பக்கத்தில் வாழ்பவர்கள், அரசாங்கத்தின் உத்தரவை மீறிக் கொண்டு அந்தக் கரையிலேயே உப்பைச் சேகரித்தோ உப்பு நீரைக் கொதிக்க வைத்து உப்பை உண்டாக்கியோ சட்டத்தை எதிர்க்கலாம். ஆனால் கடற்கரையில் வசிக்காத இந்தியப் பெருமக்கள் எப்படி இச் சட்டத்தை எதிர்க்க முடியும்? ஆம், பல இடங்களில், முக்கியமாக பீகாரிலும் ஐக்கிய மாகாணத்திலும், மண்ணிலிருந்து உப்பு செய்யப்பட்டு வருகிறது. நோநியா என்ற ஒரு சாதியார் அத் தொழில்தான் செய்து வருகிறார்கள். ஆனால் அயல் நாட்டு உப்பும் உள்நாட்டு உப்பும் எல்லா இடங்களுக்கும் கடற்கரையிலிருந்தோ, கேவ்டாவிலிருந்தோ வரத் தொடங்கியதிலிருந்து அவர்களுடைய பிழைப்புப் போய்விட்டது. அவ்விடங்களில்

அரசாங்கத்தின் உத்தரவை மீறி உப்பு செய்யப்படுமானல் சட்டத்தை மீறலாம். ஆனல் அவர்களோ ஏழைகள், படிப்பு இல்லாதவர்கள். இதைப்பற்றி அவர்களை நம்புவது தகாது. மேலும் அவர்களைத் தூண்டிவிட்டுச் சட்டத்தை மீறச் செய்வதும் நியாயமாகப் படவில்லை. இவையெல்லாம் காந்திஜீயிடம் கூறப்பட்டன. ஆனல் உப்புச் சட்டத்தைத்தான் மீறவேண்டுமென்றும், இதில் பொதுமக்கள் உற்சாகத்துடன் பங்கெடுத்துக் கொள்வார்கள் என்றும், இது ஒன்றுதான் நாடெங்கும் நடக்கக்கூடும் என்றும் கூறி அவர் தாம் செய்த முடிவிலிருந்து அசையவில்லை.

இந்த வேலைத் திட்டத்தின் வெற்றியைப் பற்றி எனக்கு நிறைய ஐயம் இருந்தது. பீகாரில் சௌகிதாரி வரி என்று ஒன்றிருக்கிறது என்றும், அதை எல்லாரும் கொடுக்க வேண்டியிருக்கிறதென்றும், அதன்மீது ஏழைகளுக்குப் பெரும் குறைபாடு இருந்து வருகிறதென்றும் நான் அவரிடம் கூறினேன். அதைத் தண்டுவதில் ஏழைகளின் மீது நிறையக் கொடுமை செலுத்தப்பட்டு வருகிறது. அந்த வரியின் நிலுவைக்காக அவர்களுடைய பாத்திரம், பண்டங்கள் பறிமுதல் செய்யப்பட்டு ஏலம் போடப்படுகின்றன. பீகாரில் இந்த வரி கொடுக்கப்படுவதை நிறுத்துவது எளிதாகும் என்று அவரிடம் கூறினேன். மக்கள் பெருமகிழ்ச்சியுடன் இதைக் கொடுப்பதை உடனே நிறுத்திவிடுவார்கள் என்றும், ஆதலால் பீகாருக்கு இந்த வரியை நிறுத்துவதற்கே ஆணையிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டேன். ஆனல் காந்திஜீ இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. "நீ இதை எடுத்துக் கொண்டு வேலையைத் தொடங்கினல் விரைவில் தோற்றுப் போவாய்; முதலில் உப்புச் சட்டத்தை மீறி வேலையை தொடங்கு; பிறகு மக்களுக்கு நிறைய உற்சாகம் வந்துவிடுமானல், வரியை நிறுத்துவதைப் பற்றி யோசனை செய்" என்றார். நான் அவர் கூறியதைக் கேட்டுக் கொண்டேன். ஆனல் அது என் மனத்தில் பதியவில்லை. இந்த நேரான வழியை விட்டு விட்டு உப்புச் சட்டத்தின் உளையில் ஏன் சிக்க வேண்டும் என்று நினைத்தேன். ஆயினும் இந்த விஷயங்களில் காந்திஜீக்கு உள்ள அனுபவத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. நாம் காண இயலாத நெடும் தொலைவுக்கு அவர் நோக்க வல்லார் என்பதில் எனக்கு நம்பிக்கை பிறந்துவிட்டது. இதனல் சிறிது காலமாகவே, ஒரு பழக்கத்தைக் கடைப்பிடித்து வந்தேன். அதாவது என் கருத்தை அவரிடம் சமர்ப்பித்து விடுவேன். அவர் ஏற்றுக்கொண்டால் சரி, அல்லா விட்டால் அவருடைய கருத்துப்படி வேலை செய்வதே நல்லது

என்ற பழக்கத்தை மேற்கொண்டிருந்தேன். கடைசியில் அவருடைய கருத்துத்தான் சரியாக அமைவதை என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். இச் சமயத்திலும், பீகாரில் உப்புச் சட்டத்தையே மீறுவது என்று முடிவு செய்துவிட்டேன்.

# 85. காந்திஜீயின் டாண்டீ யாத்திரை

செயலாற்றுக் குழுவின் கூட்டத்திற்குப் பிறகு காந்திஜீயானவர் ஆசிரமத்தைவிட்டு வெளியேறுவதற்கு ஒரு நாளை நிச்சயித்துவிட்டார். அன்று அவர் ஆசிரமத்திலிருந்து புறப்படுவார். ஏறக்குறைய ஒரு மாதம் நடந்து சென்று சூரத்து ஜில்லாவில் உள்ள டாண்டீ என்ற கிராமத்தின் கடற்கரைக்குப் போய்ச் சேருவார். அங்குத்தான் அவர் முதல் முதலாக உப்புச் சட்டத்தைத் தாமே மீறுவார். இந்த முடிவை ஏற்பதற்காக அகில பாரதியக் குழுவின் இருக்கை ஒன்று சபர்மதியில் நடந்தது. அங்கு இருக்கை நடந்தாலும், அதற்குள்ளாக காந்திஜீ டாண்டீ யாத்திரைக்குப் புறப்பட்டு விட்டார். இதனால் செயலாற்றுக் குழுவின் முடிவையே அகில பாரதீயக் குழு அங்கீகரித்தது.

சத்தியாக்கிரகத்தின் ஆரம்பமாக ஒரு விதத்தில் அமைந்த டாண்டீ யாத்திரைக்கு முன்பு காந்திஜீயானவர் தம்முடைய கொள்கைப்படி வைசிராய்க்கு ஒரு கடிதம் அனுப்பினார். அதில் அவர் எல்லா விஷயங்களையும் எடுத்துரைத்திருந்தார். சத்தியாக்கிரகம் தொடங்குவதைப் பற்றியும் எழுதியிருந்தார். இக்கடிதத்தை அவர் ஓர் ஆங்கிலேயர் கையில் கொடுத்து அனுப்பினார். அவருடைய பெயர் மிஸ்டர் ரேநால்ட்ஸ். அப்போது அவர் சபர்மதியில் இருந்துவந்தார். ஆனால் எதிர்பார்த்தபடியே திருப்திகரமான விடை கிடைக்கவில்லை. யாத்திரையை தொடங்கும்போது, காந்திஜீயானவர் தாம் ஆணையிடாத வரையில் சத்தியாக்கிரகம் எதுவும் செய்யப்படக் கூடாதென்றும், அரசாங்கத்தின் உத்தரவுகள் கெடுதலாகத் தோன்றினாலும்கூட அவற்றை ஏற்க வேண்டுமென்றும் எல்லா காங்கிரஸ் குழுக்களுக்கும் காங்கிரஸ்காரர்களுக்கும் கட்டளையிட்டுச் சென்றார்.

ஏப்ரல் 6ஆம் தேதிக்குள் அவர் டாண்டீக்குப் போய்சேர்ந்து விடுவார் என்றும், அதே நாள் காலை அவரே சத்தியாக்கிரகத்தை முதலில் ஆரம்பிப்பார் என்றும் திட்டமிடப்பட்டிருந்தது.

சத்தியாக்கிரக ஆசிரமத்திலிருந்து சுமார் எண்பது பேரை அவர் தம்முடன் யாத்திரைக்கு அழைத்துச் சென்றார். காலையில் சிறிது தூரம் நடந்து செல்வதென்றும், மத்தியானம் முன்னமே நிச்சயிக்கப்பட்ட ஓரிடத்தில் குளியல், உண்டி முதலானவற்றை முடித்துக்கொண்டு இளைப்பாறுவதென்றும், பிறகு மாலையில் மறுபடியும் அதேபோலச் செய்வதென்றும் நடைமுறை வகுக்கப்பட்டிருந்தது. இந்த யாத்திரை ஏறக்குறைய ஒரு மாதம் பிடித்தது. வழியில் பல கிராமங்களும் சில நகரங்களும் வந்தன. 150 கல் பயணம் இருந்தது. நாள்தோறும் எட்டு பத்து கல் நடக்க வேண்டும். காந்திஜீ சபர்மதியை விட்டுப் புறப்பட்ட நாளன்று இராப் பகலாக ஆசிரமத்தில் ஒரே கூட்டமாக இருந்தது. காலையில் ஆயிரக்கணக்கான பேர் 'ஜய ஜய' பேரொலி செய்துகொண்டு சூழ்ந்துவர காந்திஜீயானவர் தம் தோழர்களுடன் புறப்பட்டார். அத்தோழர்களிடம் அவரவருடைய பையில் தத்தமக்கு வேண்டிய சாமான்கள் இருந்தன. பெரும் உற்சாகம் காணப்பட்டது. அகமதாபாத்தும் அதன் சுற்றுப்பக்கம் முழுவதுமே பொங்கி எழுந்து வந்துவிட்டது போலக் காணப்பட்டது.

மேலும் காந்திஜீயானவர் தாம் சுயராஜ்யத்தைக் கைவரப் பெற்றால் அன்றி சபர்மதி ஆச்ரமத்திற்குத் திரும்பி வரமாட்டார் என்றும் அறிக்கை செய்துவிட்டார். இச்சொல் நாட்டின் மீது ஒரு மந்திரம் போட்டது போலாயிற்று. எல்லா இடங்களிலும் மக்கள் பரபரப்படைந்து ஏப்ரல் 6ஆம் தேதி எப்போது வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். தமக்கும் சத்தியாக்கிரகம் செய்வதற்கு நற்பேறு கிட்டவேண்டும் என்று மக்கள் வேண்டி நிற்கின்றார்கள். காங்கிரஸ்காரர்களும் சும்மா உட்கார்ந்துகொண்டிருக்கவில்லை. அவர்களும் மிகவும் மும்முரமாக நாலா பக்கத்திலும் பிரசார வேலையில் முனைந்து நின்றார்கள். காந்திஜீ தம் யாத்திரையில் மேலே மேலே செல்லச் செல்ல நாட்டில் உற்சாகமும் வளர்ந்துகொண்டே சென்றது. யாத்திரை தொடங்கப்படுவதற்கு முன்னமே சர்தார் வல்லப்பாயீ சிறை கொள்ளப்பட்டார். இதனால் அவர் இந்த யாத்திரையிலாவது இதற்குப் பின் தொடங்கப்படுவதாக இருந்த சத்தியாக்கிரகத்திலாவது கலந்து கொள்ளவில்லை.

இதற்கிடையில் அகில பாரதீயக் குழுவின் இருக்கை அகமதாபாத்தில் நடந்தது. அங்கிருந்து நாங்கள் பண்டித் மோதிலால், பண்டித் ஜவஹர்லால் முதலானோருடன் அம்பூசர் வரையில்

சென்றோம். அங்கே காந்திஜீயைச் சந்தித்தோம். நாங்களும் அவருடன் சிறிது தொலைவு வரையில் சென்றோம். பிறகு தத்தம் ஊருக்குத் திரும்பிச் சென்றுவிட்டோம். நான் பீகாருக்குத் திரும்பி வந்து, காந்திஜீயின் கட்டளை கிடைக்காதவரையில் எவரும் சத்தியாக்கிரகம் செய்யக்கூடாதென்று எல்லா இடங்களில் உள்ளவர்களுக்கும் கட்டளையிட்டேன். மாகாணமெங்கும் உற்சாகம் அலைபெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது.

## 86. பீகாரில் உப்புச் சத்தியாக்கிரகம்

நேருஜீயின் யாத்திரையின் கடைசி நாள் அது. அவர் பிரயாகுக்குத் திரும்பிப் போவதாக இருந்தார். என் நினைவுக்கு எட்டிய வரையில் சப்ரா ஜில்லாவைச் சேர்ந்த மகாராஜ்கஞ்சில் அன்று மாலையில் நடந்த கூட்டம்தான் கடைசிக் கூட்டம். அங்குத் தந்தி மூலமாகவோ செய்தித் தாளின் மூலமாகவோ எல்லோரும் தத்தம் இடங்களில் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கலா மென்றும் காந்திஜீயின் ஆணை இதுவே என்றும் செய்தி கிடைத்தது. இந்த அறிக்கை எங்கள் வேலைத் திட்டத்தைச் சிறிது குளறுபடி அடித்தது. யார், எங்கிருந்து சத்தியாக் கிரகத்தை ஆரம்பிப்பது என்பனவற்றை நாங்கள் இன்னும் முடிவு செய்யவில்லை. எல்லா இடங்களுக்கும் தந்திமேல் தந்தி அனுப்பப்பட்டன. பிபின் பாபூ மோதிஹாரியிலிருந்து நடந்து சென்று ஏழெட்டு நாள் பிரயாணத்திற்குப் பிறகு ஜோகாபட்டியைச் சமீபித்துச் சத்தியாக்கிரகத்தைத் தொடங்குவார் என்று சம்பாரனில் உள்ளவர்கள் முன்னமே திட்டம் போட்டிருந்தார்கள். அவர் ஏப்ரல் 6ஆம் தேதியே யாத்திரையைத் தொடங்கிவிட்டார். முஜபர்பூர் ஜில்லாவிலும் இப்படியே நடந்தது. மூன்று நான்கு நாட்களுக்குள் உப்புச் சட்டம் எல்லா இடங்களிலும் மீறப்படத் தொடங்கியது. பிபின் பாபூ உப்புத் தயாரித்த தினத்தன்று நான் அங்குப் போய்ச் சேர்ந்தேன். ஆனல், நான் போய்ச் சேருவதற்கு முன்னமே அவர் சிறை கொள்ளப்பட்டுப் போனர். மாஜிஸ்டிரேட்டு அங்கே ஒரு தோப்பிலேயே கோர்ட்டை அமைத்திருந்தார். அவர் வழக்கைச் சட்பட் என்று விசாரணை செய்து, அவருக்குத் தண்டனை அளித்துவிட்டார். சத்தியாக்கிரக யாத்திரை செய்து வருபவர்கள் தங்கியிருந்த இடங்களை நான் மோட்

டாரில் செல்லும்போது வழியில் பார்த்துக்கொண்டே சென்றேன். இதுவரையில் காணப்படாத அளவுக்கு உற்சாகம் முழங்கிக் கொண்டிருந்தது. உப்புச் சட்டம் எதிர்க்கப்பட்ட இடங்களில் இருந்த மக்களின் உற்சாகத்துக்கோ அளவேயில்லை.

1921இல் ஒத்துழையாமை செய்துவிட்டுப் பட்னு கல்லூரி யிலிருந்து வெளியேறி எங்களுடைய தேசீய மகா வித்தியால யத்திற்கு வந்து சேர்ந்த மாணவர்களில் ஒருவரே இந்த மாஜிஸ்டிரேட்டு. அவருடைய வீட்டு மனிதர்கள் கட்டாயப் படுத்தியதனுல்தான் அவர் வித்தியாலயத்தை விட்டுத் திரும்பிப் போய்விட்டார். படிப்பில் மிகவும் சூட்டிகையாக யிருந்தார். அவர் பரீக்ஷையில் தேறி டிப்டி மாஜிஸ்டிரேட்டு ஆனுர். பல ஆண்டுகளுக்குப் பிறகு இப்போதிருக்கும் பதவியை அடைந் திருந்தார். வழக்கை விசாரணை செய்து கொண்டிருந்தபோது அவர் ஒரு முறையாவது தலையைத் தூக்கிப் பார்க்கவில்லை. தலையைக் கீழே கவிழ்த்தபடியே அவருடைய உத்தரவையும் அளித்தார். அங்கிருந்து பிபின் பாபூவை மோட்டாரில் ஏற்றிக் கொண்டு மோதிஹாரி சிறைக்குக் கொண்டுவந்தார்கள்.

நானும் என் மோட்டாரில் மோதிஹாரி வரையில் சென்று அங்கிருந்து பட்னுவுக்கோ அல்லது வேறு இடத்திற்கோ பயணப் பட்டுவிட்டேன். டாண்டீயில் காந்திஜீ உப்பைத் திரட்டினுர். ஆனுல் அரசாங்கம் அவரைக் கைது செய்யவில்லை. நாடெங்கும் கணக்கற்ற இடங்களில் உப்பைத் தயார் செய்து வந்தார்கள். சிறை கொள்ளவும் பட்டார்கள். எல்லா இடங்களிலும் சுற்றி வந்து சத்தியாக்கிரகிகளை உற்சாகப் படுத்தி வருவதென்ற வேலைத் திட்டத்தை எனக்கு அமைத்துக் கொண்டேன். ஓரிரண்டு நாட்களுக்குள் எல்லா ஜில்லாக்களையும் ஒரு சுற்றுச் சுற்றிவருவேன். எங்கெங்கு உப்பு செய்யப்பட்டு வந்ததோ அல்லது செய்வதற்கு ஆயத்தம் செய்யப்பட்டு வந்ததோ அங் கெல்லாம் சென்று சத்தியாக்கிரகிகளைச் சந்தித்து வந்தேன். முடிந்த வரையில் பொதுஜனக் கூட்டங்களையும் நடத்தி வந்தேன்.

மூன்று நான்கு நாட்களுக்குள்ளாகவே, பட்னுவுக்கு நடு இரவில் வந்து சேரும் கப்பலில் வந்து சேர்ந்துவிட்டேன். பட்னுவில் அன்றுதான் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்ட தென் பதை எனக்குக் கங்கைக் கரையிலேயே மக்கள் கூறினுர்கள். அது இவ்வண்ணமாக நடத்தப்பட்டது. பாகர்கஞ்சு மஹல்லா விலிருந்து சில சத்தியாக்கிரகிகள் புறப்பட்டுக் கொடியைப் பிடித்

துக்கொண்டு, தாம் உப்பு செய்யப் போகும் இடத்திற்கு ஊர் வழியாகச் சென்றுர்கள். அவர்கள் சுல்தான்கஞ்சு தாஞவுக்கு எதிரில் வந்ததும் போலீசார் அவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டார் கள். கொடியைப் பிடித்துக்கொண்டு ஐந்தாறு பேராக ஊர்வலம் அமைத்துச் சாலை வழியாகச் சென்று கொண்டிருந்தார்கள் என்பதுதான் அவர்கள் இதுவரையில் செய்த குற்றம். அவர்கள் சிறை கொள்ளப்படவில்லை. போலீஸ்காரர்கள் வரிசையாக நின்று கொண்டு அவர்களை வழி மறித்துவிட்டார்கள். அவர்கள் நாள் முழுதும் அங்கேயே நின்றுர்கள், இரவிலும் அதே சாலை யில் படுத்துத் தூங்கிஞர்கள்.

நான் அந்த இடத்திற்கு நேரே சென்றேன். போலீஸ் காரர்கள் வழியை மறித்து நிற்பதையும் சத்தியாக்கிரகிகள் தெரு வின் நடுவில் ஆனந்தமாகத் தூங்கிக் கொண்டிருப்பதையும் கண்டேன். அவர்களுக்குத் தூங்குவதற்காக மஹல்லா ஜனங் கள் படுக்கைகளைக் கொண்டுவந்து கொடுத்திருந்தார்கள். வேளா வேளைக்கு உணவும் அளித்து வந்தார்கள். நான் அங்கே சென்றதும் அவர்கள் எழுந்திருந்தார்கள். என்னைப் பேரன்புடன் வரவேற்றுர்கள். இரவில் ஒன்றும் நடக் காது ஆதலால் நான் சதாகத் ஆச்ரமத்திற்குச் சென்று விட்டேன். அடுத்தநாள் அதிகாலையிலேயே நான் அந்த இடத்திற்கு மறுபடியும் சென்றேன். நான் மாகாணமெங்கும் சுற்றி வந்து கொண்டிருந்தேன். ஸ்ரீ பிரஜ்கிஷோர் பாபூதாம் ஆச்ரமத்தில் இருந்தபடியே தேவைப்பட்டபடி எல்லா இடங்க ளுக்கும் கட்டளை அனுப்பிக் கொண்டும், உதவி புரிந்து கொண்டும் இருந்து வந்தார். இம்முறை காங்கிரஸ் குழுவானது இதுவரையில் சட்டத்திற்குப் புறம்பாக்கப்படவில்லை. சதாகத் ஆச்ரமமும் கைப்பற்றப் படவில்லை. அதஞல் இந்த வேலை அங்கிருந்தே நடந்து வந்தது. உப்புத் தயாரித்தவர்கள் தாம் சிறை கொள்ளப்பட்டு வந்தார்கள். மற்றவர்களைக் கைது செய்ய வில்லை.

அடுத்த நாள் காலை அங்கே போலீசார் நிறையக் கூட்டமாக இருந்தார்கள். குதிரைப் போலீசாரும் வந்து விட்டார்கள். டிஸ்டிரிக்டு மாஜிஸ்டிரேட்டும், போலீஸ் சூப்பிரண்டெண்டும் தாஞவிற்குள் இருந்தார்கள் என்று கேள்விப்பட்டோம். இப் பக்கத்தில் ஜனக்கூட்டமும் அதிகரிக்க ஆரம்பித்தது. சத்தியாக் கிரகிகள் இப்போது சிறை கொள்ளப்படலாம், அல்லது அடித்து உதைத்து விட்டுவிடப் படலாமென்று நான் நினைத்தேன்.

டிஸ்டிரிக்டு மாஜிஸ்டிரேட்டு என்னைத் தாணுவுக்கு வரச் சொன்னார் என்று ஓர் ஆள் என்னிடம் வந்து கூறினார். நான் அங்குச் சென்றேன். அவர் என்னிடம் சத்தியாக்கிரகிகளை அங்கிருந்து அகலும்படிச் செய்யாவிட்டால் தாம் நடவடிக்கை எடுக்க வேண்டிவரும் என்றும் கூறினார். "நீங்கள் அவர்களைக் கைதுசெய்யலாம்" என்று நான் கூறினேன். அங்குக் கூடியுள்ள மக்களின் கூட்டத்தையும் தாம் அகற்றுவார் என்றும் அப்படிச் செய்வதில் கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டி வந்தாலும் வரும் என்றும் அவர் கூறினார். நான் தொண்டர்களை அகற்றமாட்டேன் என்று கூறிவிட்டேன். அதன்மேல் அவர் என்னைப் பார்த்து, இதன் பொறுப்பு என்னைச் சாரும் என்றும் தாம் உசிதமானபடி நடவடிக்கை எடுப்பார் என்றும் கூறினார். என் தோழர்களுடன் கலந்து ஆலோசனை செய்வதற்காக நான் மோட்டாரில் நேரே சதாகத் ஆச்ரமத்திற்குச் சென்றேன். நாம் ஒன்றும் செய்யமுடியாதென்பதும் மாஜிஸ்டிரேட்டு இஷ்டப்பட்டதை செய்யட்டும் என்பதும் எல்லாருடைய கருத்தாக இருந்தது. நான் உடனே டெலிபோன் மூலமாக சுல்தான்கஞ்சு தாணுவுக்கு இதே விடையை அளித்துவிட்டேன். பிறகு, அங்கு இப்போது ஏதாவது நடக்கும் என்று நினைத்துக் கொண்டு உடனே அங்குச் செல்ல மோட்டாரில் புறப்பட்டேன்.

வழியில், பாகர் கஞ்சில், மாஜிஸ்டிரேட்டு மோட்டாரில் திரும்பி வருவதைக் கண்டேன். அவரும் என்னைப் பார்த்தார். என்னைப் பார்த்து முறுவல் செய்தபடி அவர் மேலே சென்றுவிட்டார். அவர் அங்கே ஏதோ நடவடிக்கை செய்துவிட்டுத் திரும்பிச்செல்கிறார் என்பதைப் புரிந்து கொண்டேன். அவர் முதலில் சத்தியாக்கிரகிகளை அங்கு விட்டுச் செல்லும்படி உத்தரவு செய்தார் என்பதையும், அவர்கள் அங்குவிட்டுப் பெயராதபோது, சற்றுத் தொலைவில் நின்று கொண்டிருந்த குதிரைச் சேவகர்களைத் தம் குதிரைகளை அவர்கள் மேல் செலுத்தும்படிக் கட்டளையிட்டார் என்பதையும் அங்கே நான் போய்ச் சேர்ந்ததும், கேள்விப்பட்டேன். குதிரைகளைச் செலுத்தியதும் இளைஞர்கள் சாலையில் படுத்துக் கொண்டு வழியை மறித்தார்கள். குதிரைகள் அவ்விடம் வரையில் ஓடி வந்தன. ஆனால் அவர்கள் அருகில் வந்ததும் நின்றுவிட்டன. பிறகு போலீசார் அப்பையன்களைக் குண்டான் கட்டாகத் தூக்கி ஒரு மோட்டார் லாரியில் போட்டார்கள். இவ்விதமாகச் சிறை கொள்ளப்பட்டு அவர்கள் அங்கிருந்து அகற்றப்பட்டார்கள்.

சத்தியாக்கிரகிகள் ஐந்தைந்து பேராக ஊர்வலம் அமைந்து நாள் முழுவதும் அங்குச் சென்று கொண்டிருக்க வேண்டுமென்று நாங்கள் முடிவு செய்தோம். ஒரு கோஷ்டி சிறை கொள்ளப் பட்டதும் அடுத்த கோஷ்டி செல்லும். இவ்விதமாக இராப் பகலாக நடத்துவதென்று முடிவு செய்தோம். ஏப்ரல் மாதம் பாதிக்குமேல் கழிந்துவிட்டது. வெயில் அதிகமாக எரித்துக் கொண்டிருந்தது. ஓரிண்டு நாள் இப்படியாக நடந்துவந்தது. பிறகு நான் இம்முறையில் சிறிது மாறுதல் செய்தேன். சிறை கொள்ளப் படுவதற்காக இராப் பகலாகக் காத்துக் கொண்டிருக் காமல் இதற்காகக் குறிப்பிட்ட வேளைகள் நிச்சயிக்கப் பட்டன. இராப் பகல் முழுவதிலும் நான்கு ஐந்து கோஷ்டிகள்தாம் குறிப்பிடப்பட்ட நேரத்தில் செல்லும். அவை, ஆரம்பத்தில் கைது செய்யப்பட்டு வந்தன. ஆனால் பிறகு இதைப் பார்க்க வந்தவர்களின் கூட்டம் அதிகரிக்கத் தொடங்கியதும், குதிரைச் சேவகர்கள் குதிரைகளைச் செலுத்தி வந்து மக்களைத் தடியால் அடிக்கத் தொடங்கினார்கள். இந்த அடிதடி சந்தடியில் சத்தியாக்கிரகிகள் சில சமயங்களில் கைதும் செய்யப்பட்டார்கள்; சில சமயங்களில் கைது செய்யப்படவுமில்லை. ஆனால் பொது மக்கள் மேல் நிறைய அடி விழுந்தது. விசேஷமாகத் சத்தியாக் கிரகிகளின் கோஷ்டிகள் காலையிலும் மாலையிலும் அங்கே செல்லும்போது இப்படி நடந்து வந்தது. நானும் குறிப்பிட்ட நேரத்திற்கு அங்குச் சென்று பொது மக்கள் கூட்டத்துடன் நின்று கொண்டு எல்லாவற்றையும் பார்த்து வந்தேன். போலீஸ் காரர்களுக்கு என்னைத் தெரிந்திருக்கலாம். இதனால் என்மேல் ஒரு பொழுதும் அடிவிழவில்லை. ஆனால் பேராசிரியர் அப்துல் பாரீக்கு நிறைய அடிவிழுந்தது.

இந்த முறைக் கிரமம் பல நாட்கள் வரையில் நடந்து கொண் டிருந்தது. நாளுக்கு நாள் கூட்டம் அதிகரித்து வந்தது. போர்க்களம் சுல்தான்கஞ்சு தானவுக்கு மேற்குப் புறமாக நகர்ந்து நகர்ந்து பட்னு கல்லூரிக்கு எதிரில் வந்துவிட்டது. எங்கள் ஆட்களும் பொது மக்களும்கூட எப்பொழுதும் அமைதி யாகவே இருந்து வந்தார்கள். அடிதடி யெல்லாம் போலீசார் தாம் செய்தார்கள். ஒரு நாள் மிஸ்டர் சையத் ஹசன் இமாமின் மனைவியார் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தபோது போலீ சார் அடிதடி செய்வதைப் பார்த்து விட்டார். எத்தனையோ பேருக்குத் தலை பிளந்துவிட்டது. இக்காட்சி அவர் உள்ளத்தில் பாய்ந்தது. அவர் ஹசன் இமாம் சாஹபிடம் சென்று பெரும்

படுகொலை நடக்கும்போலிருக்கிறது என்று கூறினர். ஹசன் இமாம் சாஹப் இந்த விஷயத்தில் மனம் செலுத்தி வந்தார் என்பது அதுவரையில் எனக்குத் தெரியாது. இதை ஒட்டி நான் அவரைச் சந்திக்கவும் இல்லை, அவரிடம் இதைப்பற்றி எதுவும் பேசுவதற்கு வாய்ப்புக் கிடைக்கவுமில்லை. தம் மனைவியார் கூறியதைக் கேட்டுவிட்டு, அவர் உடனே என்னை டெலிபோனில் கூப்பிட்டுப் பேசினர். நான் எல்லாவற்றையும் விவரமாக அவருக்குக் கூறினேன். அவர் ஈர நெஞ்சம் உடையவர். எல்லா விவரங்களையும் கேட்டதும் அவருக்கும் கோபம் வந்துவிட்டது. அவர் பதை பதைத்துப் போனர். தாம் முற்றிலும் உதவி புரிவதாக வாக்களித்தார். அவருக்கு உற்சாகம் பெருகிற்று. அதைப் பற்றிப் பின்னல் கூறுவேன்.

இதனிடையில் ஈஸ்டர் விடுமுறை வந்துவிட்டது. நான் இந்தச் சத்தியாக்கிரகத்தை ஓர் அறப்போராகவே கருதி வந்தேன். இது ஓர் அறச் செயலானல், இதனுல் எவருக்கும் தம் மதத்தைக் கடைப்பிடிப்பதில் யாதொரு இடையூறும் உண்டாகக் கூடாதென்று நான் எண்ணினேன். நான் உடனே டிஸ்டிரிக்டு மாஜிஸ்டிரேட்டுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினேன். போலீஸ் ஊழியர்களுள் சில கிறிஸ்தவர்களும் இருப்பதால், அவர்கள் தம் மத ஆசாரப்படி சில கிரியைகள் செய்ய வேண்டியிருக்கும். ஆதலால் திங்கட்கிழமையன்று சத்தியாக்கிரக கோஷ்டி வராதென்றும் பிறகு செவ்வாய்க்கிழமையிலிருந்து முறைப்படி கோஷ்டிகள் சென்று வரும் என்றும் அக்கடிதத்தில் எழுதியிருந்தேன். வெள்ளிக்கிழமை மாலையில் செல்வதாக இருந்த கோஷ்டியையும் நிறுத்திவிட்டேன். ஏனெனில் குதிரைச் சேவர்களுள் முசல்மானியர்கள் நிறைய இருந்தார்கள். மெய்யாகவே இந்த எண்ணம் கொண்டே இக்கடிதத்தை நான் எழுதினேன். டிஸ்டிரிக்டு மாஜிஸ்டிரேட்டு கடிதத்தைப் படித்துவிட்டு நான் எழுதியதை உண்மையான அறச் சிந்தனையுடன்தான் எழுதினேனு என்று என்னை டெலிபோன் மூலமாகக் கேட்டார். நான் மெய்யாகவே அறச் சிந்தையுடன்தான் எழுதினேன் என்று விடை அளித்தேன். அதன்மேல் அவர், தம்மை வந்து பார்க்கும்படியாகவும், இந்தச் சண்டையை எப்படித் தீர்த்து வைக்கலாம் என்பதைப் பற்றித் தாம் யோசனை செய்வதாகவும் கூறினர்.

அடுத்த நாள்தான் திங்கட்கிழமை. நான் அவரிடம் சென்றேன். நெடு நேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தோம். இந்த வம்பு மிகச் சிறியதென்று நான் கூறினேன். ஐந்து ஆட்கள்

கொண்ட ஊர்வலம் தெரு வழியாகச் செல்ல விரும்புகிறது. இதில் எந்த சட்டத்தையும் எதிர்ப்பது என்ற பேச்சே இல்லை. அவர் ஊர்வலத்தைச் செல்லவிட்டு விட்டால், அதை தடுக்காவிட்டால், சண்டையெல்லாம் தீர்ந்துவிடும் என்றேன். இந்தக் கோஷ்டிகள் உப்பைத் தயார் செய்து சட்டத்தை மீறும்போது அவற்றைக் கைது செய்யலாம். அப்போது சட்டப்படி என்ன தண்டனை உண்டோ அதை விதிக்கலாம் என்றும் கூறினேன். ஊர்வலத்தை வேறொரு வழியாக நடத்திச் செல்லும்படி அவர் கூறினார். நான் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. இத்தோடு பேச்சு நின்றுவிட்டது. அடுத்தநாள் காலையில் சென்ற கோஷ்டி சிறை கொள்ளப்பட்டது. அது சிறை கொள்ளப்பட்ட பின் கூட்டம் தானாகவே கலைந்துவிட்டது. அடிதடிக்கு அவசியமே வரவில்லை. மேலும் போலீசாரின் எண்ணிக்கையும் குறைந்துவிட்டதாகக் காணப்பட்டது. குதிரைச் சேவகர்கள் வரவே இல்லை. போலீஸ் அசிஸ்டண்டு சூபரிண்டெண்டே கைது செய்தார். சத்தியாக்கிரகிகள் உடனே கச்சேரிக்குக் கொண்டு வரப்பட்டார்கள். இந்த வழக்கு நடந்து கொண்டிருந்தபோதே அடுத்த கோஷ்டி வந்துவிட்டது. அக்கோஷ்டி தெரு நெடுகச் சென்றது. அதை எவரும் தடுக்கவில்லை. இச்செய்தி கிடைத்தபோது நாங்கள் இன்னும் கச்சேரியில் தானிருந்தோம். அங்குக் கொண்டு வரப்பட்ட சத்தியாக்கிரகிகளுக்குக் கோர்ட்டு கலையும் வரையில் சிறைவாசத் தண்டனையிடப்பட்டது. உத்தரவை அளித்துவிட்டு நீதிபதி எழுந்துவிட்டார். சத்தியாக்கிரகிகள் எல்லாரோடும் கூடவே அவரும் வெளியே வந்தார். போலீசார் கோஷ்டிகளை நிறுத்தமாட்டார்கள் என்பது தெளிவாகிவிட்டது. மாலையிலும் சத்தியாக்கிரக கோஷ்டி சென்றது. ஆனால் யாரும் அதைத் தடுக்கவில்லை. இதற்குப் பிறகு கோஷ்டிகளை அனுப்புவதை நிறுத்திவிட்டோம். ஆனால் உப்பு தயாரிக்கும் வேலை மட்டும் நடந்து வந்தது. இதற்காக மக்கள் கைது செய்யப்பட்டு வந்தனர். பட்னா ஊருக்குள்ளும் கைது செய்வது நடந்து கொண்டிருந்தது.

# 87. உப்புச் சத்தியாக்கிரகத்திற்குப் பின்

அங்கே டாண்டீயில் காந்திஜீ சில நாட்களுக்குப் பிறகு சிறை கொள்ளப்பட்டார். அரசாங்கத்தின் உப்புக் கிடங்கு இருந்த தராஸ்நாவின் மீது சத்தியாக்கிரகிகள் படை எடுக்கத் தொடங்கினார்கள். அங்கே வெட்ட வெளியில்தான் உப்பு சேக ரிக்கப்பட்டுக் குவிந்து கிடந்தது. தொண்டர்கள் அதை கொள்ளையடிக்கச் செல்லவில்லை. அரசாங்கத்தின் ஆணையை மீறி அந்த இடத்திற்குச் செல்லமட்டும்தான் விரும்பினார்கள். இதற்காக அவர்கள் அங்கே தடிகளால் நையப் புடைக்கப்பட்டார் கள். முதலில் காந்திஜீயும் அவருக்குப்பின் ஸ்ரீ அப்பாஸ் தையப்ஜீயும் ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும் அத் தொண்டர்களுக் குத் தலைமை வகித்து வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவராகக் கைது செய்யப்பட்டார்கள். அங்கே தொண்டர்கள் இரக்கமின்றி அடிக்கப்படுவது, அவர்கள் தடியடியால் மூர்ச்சையாவது, அப்படி நினைவிழந்து இருக்கும்போதே அவர்கள் பரபரவென்று இழுத்துக்கொண்டுப் போகப்பட்டு புதர்களில் போடப்படுவது, அங்கிருந்து காங்கிரஸ்காரர்களால் கட்டிலில் போட்டு எடுத்துக் கொண்டு போகப்பட்டுக் காங்கிரஸ் மருத்துவ சாலையில் சேர்க்கப் படுவது ஆகிய மயிர் சிலிர்க்க வைக்கும் செய்திகள் பத்திரிகை களில் அச்சிடப்பட்டு வந்தன. இவற்றால் மக்களிடையில் உற் சாகம் பெருகியதே அன்றி குறையவில்லை. மிகவும் கடுமையாக அடிபட வேண்டிவரும் என்று தெரிந்திருந்தும் கூட அங்கே நாள்தோறும் நூற்றுக்கணக்கான பேர் சென்று கொண்டிருந் தார்கள். மழை காலம் ஆரம்பித்து அங்கே போவது வருவது இயலாமல் போகும் வரையில் இப்படித் தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தது.

பீகார் மாகாணத்தில் கடற்கரை இல்லை. ஆயினும் எல்லா இடங்களிலும் ஏதாவது உப்பு மண் கிடைத்து வந்தது. அதைச் சேகரித்துத் தண்ணீரில் கரைத்து வடிகட்டி அந்நீரைப் பானையில் காய்ச்சிச் சுண்டவைத்து அதைக் காயவைத்தால் உப்புப்போன்ற பண்டம் கிடைக்கும். நான் எவ்விடத்திலும் உப்பு தயார் செய்ய வில்லை. ஆனால் நான் சென்ற இடங்களில் தயார் செய்யப்பட்ட உப்பைச் சபைகளில் விற்பேன். அல்லது ஏலம் போடுவேன். அதனால் செலவுக்கும் ஏதோ கிடைத்து வந்தது. மேலும் சட்ட

மும் மீறப்பட்டது. ஏனெனில் வரி கொடுக்கப்படாத உப்பை விற்பதானது உப்பை தயாரிப்பது போலவே குற்றமாகும். ஆயினும் நான் எவ்வளவோ நாட்கள் வரையில் சிறை கொள்ளப்படவில்லை.

பண்டித் ஜவஹர்லால்ஜீ ஆரம்பத்திலேயே சிறை கொள்ளப்பட்டுப் போனார். அவருடைய இடத்தில் பண்டித் மோதிலால்ஜீ வேலை பார்க்கத் தொடங்கினார். அவரும் ஏறக்குறைய ஜூன் முடிவு வரையில் கைது செய்யப்படவில்லை. நானும் செயலாற்றுக் குழுவின் உறுப்பினனாகச் சேர்ந்து கொண்டேன். இதற்கிடையில் செயலாற்றுக் குழுவின் இருக்கை அவ்வப்போது பிரயாகில் நடந்து வந்தது. தேவைக்கு ஏற்றபடி அங்கிருந்து கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டு வந்தன. மேலும் மக்கள் எவ்வகை உதவி கேட்டார்களோ அதுவும் அளிக்கப்பட்டு வந்தது. நாடெங்கும் அரசாங்கத்தாரின் அடக்குமுறை கடுமையாக நடந்து கொண்டிருந்தது. அரசாங்கம் எல்லாரையும் கைது செய்யவில்லை. சட்டத்தை மீறுபவரில் சிலரை மட்டும் கைது செய்வதென்றும் மற்றவர்களை எல்லாம் அடித்து உதைத்து விட்டு விடுவது என்றும் அது ஒரு முறையை அமைத்துக் கொண்டது. இதனால், எங்கெங்கு மக்கள் கூடி உப்பு செய்தார்களோ அங்குப் போலீசார் வருவார்கள். பானையையும், அடுப்பையும் உடைத்தெறிந்துவிட்டு அங்கிருந்தவர்களில் ஓரிருவரைக் கைது செய்துகொண்டு மற்றவர்களைத் தடியால் புடைத்துவிட்டுப் போய்விடுவார்கள். இதனால் உப்புத் தயார் செய்வது நிற்பதில்லை. மீண்டும் புதுச் சட்டி வந்துவிடும், புது அடுப்புப் போடப்படும். உப்பு செய்பவர்களின் எண்ணிக்கை முன்னிருந்தது போலவே ஆகிவிடும். கிராமத்தார் இந்த வேலையை ஒளிவு மறைவாகச் செய்வதில்லை. ஏனெனில் பகிரங்கமாகவே செய்யும்படி கட்டளையிடப் பட்டிருந்தார்கள். நான் இராப் பகலாக இடையறுது சுற்றிவந்து கொண்டிருந்தேன். கிராமத்தில் ஏதாவது ஒரு முக்கியமான இடத்தில் வாழை மரங்களை நட்டு, கொடிகளாலும், தோரணங்களாலும் அந்த இடத்தை அலங்கரிப்பதை நான் எங்கும் கண்டேன். அந்த இடத்தில் அடுப்புப் போட்டு மண்ணைத் தண்ணீரில் கரைத்து வடிகட்டுவதற்காக ஒரு சிறிய அறைபோல அமைத்திருப்பார்கள். உப்பு எங்கே தயார் செய்யப்படுகிறதென்பது கிராமத்து மக்கள் எல்லாருக்கும் தெரியும். அங்குப் புதிதாக வருபவரோ போலீசாரோ உப்புத் தயார் செய்யப்படும் இடத்தைக் கஷ்டமில்லாமல் கண்டு பிடித்துவிடலாம்.

அரசாங்கத்தார் என்னைச் சிறிது காலம் வரையில் கைது செய்யவில்லை. சத்தியாக்கிரகம் தொடங்குவதற்கு முன் எனக்கு உப்புச் சத்தியாக்கிரகத்தில் வெற்றி காணுவதைப்பற்றி ஐயம் இருந்ததென்று நான் மேலே கூறியுள்ளேன். அப்படியிருந்தும் கூட நான் அதற்காக முற்றிலும் பாடுபட்டு வேலை செய்து வந்தேன். காந்திஜீயானவர் தம் யாத்திரையில் டாண்டியை நெருங்கிச் செல்லச் செல்ல நாட்டில் உற்சாகமும் பெருகிக் கொண்டே வந்தது. இவை யெல்லாவற்றையும் பார்த்து இதில் நாம் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை எனக்கு உறுதி பெற்று வந்து கொண்டிருந்தது. அப்போதிலிருந்து நான் மேலும் மும்முரமாக உழைத்து வந்தேன். பண்டித் மோதிலால்ஜீயின் நிலைமையும் இப்படித்தானிருந்தது. அவரும் பிரயாகில், தம்முடைய ஆனந்த பவனிலேயே, ஆராய்ச்சி சாலையில் (லாபோரட்டரி) ஆராய்ச்சி நடத்தப்படுவதுபோல வடிதாளின் மூலமாக உப்பு தயாரித்தார். அதை அவர் மிகப் பெருமையுடன் எங்களுக்குக் காட்டினார். நாங்களும் அதைக் கண்டு பெருமை யடைந்தோம். அவருடைய கட்டளையையும், சம்மதத்தையும் பெற்று நான், பீகாரின் நிலைமையை மனத்திற்கொண்டு, பீகாரில் ஜூன் வரையில் உப்பு செய்வது என்றும், அதாவது இந்த வேலையில் அதிகமாக முனைந்து நிற்பது என்றும், அதற்குப்பின் அயல்நாட்டுத் துணிப் புறக்கணிப்பை மும்முரமாக நடத்துவது என்றும், அத்துடன் மது விலக்கையும் நடத்துவதென்றும் வேலைத் திட்டத்தை அமைத்துக் கொண்டேன். மழை காலத்தில் உப்பு செய்ய முடியாது. இதனால் ஜூனுக்குப் பிறகு அயல்நாட்டுத் துணிப் புறக்கணிப்புக்காகவும் மதுவிலக்குக்காகவும் மறியல் முதலான வேலைகளை நடத்திக் கொண்டிருந்து, பிறகு மழை நின்றபின் சௌக்கீதாரீ வரி கொடாமையை நடத்துவதென்ற வேலைத் திட்டத்தைப் போட்டுக் கொண்டேன்.

ஆரம்பத்தில் என்னைக் கைது செய்வதாக அரசாங்கத்தாருக்கு எண்ணம் இருக்கவில்லை என்ற செய்தி கிடைத்தது. அரசாங்கத்தார் என்ன நினைத்திருக்கிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் என் வேலையைச் செய்து கொண்டேயிருந்தேன். பிறகு, ஜில்லா மாஜிஸ்டிரேட்டு விரும்பினால், அவர் என்னைக் கைது செய்யலாம் என்று மாகாண அரசாங்கத்திலிருந்து அவருக்கு அனுமதிக் கிடைத்துவிட்டதாகச் சில நாட்களுக்குப் பின் தெரிய வந்தது.

# 88. அயல்நாட்டுத் துணிப் புறக்கணிப்பும் மதுவிலக்கும்

உப்பு செய்வதைத் தவிர நகரங்களில் பெரும்பாலும் துணிப் புறக்கணிப்பும் மதுவிலக்கும்தாம் வேலை. பிரயாகில் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்து கொண்டிருந்தபோது நாட்டில் பல இடங்களில் அயல்நாட்டுத் துணிப் புறக்கணிப்பு வேலையும் மும்முரமாக நடந்து வருகிறதென்பது தெரிய வந்தது. இந்த வேலை பீகாரிலும் தொடங்கிவிட்டது. வியாபாரிகளிடையிலும் பொது மக்களிடையிலும் அதிக உற்சாகம் நிலவி வந்தது. இதனால் இவ் வேலை மிகவும் சுலபமாக முன்னேறி வந்தது. கிராமமும் கிராமமும் போட்டி போட்டுக்கொண்டு உப்பு செய்யும் வேலையை எப்படிச் செய்து வந்தனவோ, அதே போல பெரிய பெரிய நகரங்களின் கடைகளிலும், தரகுக்கு மொத்தமாக விற்பனை செய்யும் கிடங்குகளிலும் உள்ள அயல்நாட்டுத் துணியின் விற்பனையை நிறுத்துவதில் போட்டி வந்துவிட்டது. இவற்றையும், அதே போலக் கள் கடைகளையும் மறியல் செய்யும் வேலையை பெண்கள் கையில் விட்டுவிடவேண்டும் என்றும், அவர்கள் இதை நிறைவேற்றுவதின் பொறுப்பைத் தமதாகக் கொள்ள வேண்டுமென்றும் காந்திஜீ எழுதியிருந்தார். இதனால் பல இடங்களில் பெண்கள் தாம் கடைகளை மறியல் செய்து வந்தார்கள். யாரோ ஏதோ ஓரிடத்தில் ஒரு முறையைப் பின்பற்றியதும் அதுவே பெரும்பாலும் எல்லா இடங்களிலும் நடந்து வந்தது. அம்முறை இதுதான். எல்லாக் கடைக்காரர்களும் தத்தம் கடையில் உள்ள அயல்நாட்டுத் துணியை எல்லாம் கட்டி அதன்மேல் காங்கிரஸின் முத்திரையை வைத்து ஒதுக்கி வைத்துவிட்டுக் காங்கிரஸின் உத்தரவு கிடைக்காத வரையில் அந்தப் பொதியை அவிழ்ப்பதில்லை என்று வாக்குறுதி எழுதிக் கொடுத்து விடுவார்கள். வியாபாரிகள் பெரும்பாலும் தமக்குள்ளாகவே குழு அமைத்துக் கொள்வார்கள். அதில் காங்கிரஸின் பிரதிநிதி ஒருவரும் இருப்பார். காங்கிரஸ் அக்குழுவின் வேலையைக் கண்காணித்து வரும். அயல்நாட்டுத் துணியை எல்லாம் கட்டி வைக்கும் வேலையையும் விற்பனை செய்யாமல் பார்த்துக் கொள்ளும் வேலையையும் அக்குழுவின் பொறுப்பில் விட்டுவிடுவார்கள். எவனாவது ஒரு வியாபாரி தன் வாக்கை மீறினால், அக்குழு அவனுக்கு அபராதம் போடும். இவ்விதமாக

அவனே அடக்கி ஆள அதற்கு அதிகாரம் இருந்தது. இந்த முறைக்கு உடன்படாத வியாபாரியின் கடையின் முன் மறியல் செய்யப்படும். அதனால் அதன் வியாபாரம் நின்றுவிடும்.

பெரும்பாலும் பீகாரில் உள்ள நகரங்கள் எல்லாவற்றின் வியாபாரிகளும், கிராமத்துச் சின்னஞ் சிறிய வியாபாரிகளும் கூடத் தத்தம் அயல்நாட்டுத் துணி மூட்டைகளைக் காங்கிரஸின் முத்திரையைப் போட்டுத் தனியாக வைத்துவிட்டார்கள் என்பதை இன்று நினைத்தாலும்கூடப் பெருமகிழ்ச்சி உண்டாகிறது. மாகாணம் முழுவதிலும் மிகக் குறைவாகவே மறியல் செய்ய வேண்டி வந்தது. அது மிகவும் வெற்றிகரமாக நடத்தப்பட்டது. மறியல் ஆரம்பித்ததுமே வியாபாரிகள் மூட்டைகளைக் கட்டத் தொடங்கிவிடுவார்கள். மூன்று நான்கு நாட்களுக்குள் எல்லா வேலையும் முடிந்துவிடும். இந்தக் காட்சியை நான் அநேகமாக எல்லா இடங்களிலும் கண்டேன். ஜூன் மாதம் முடிவதற்குள் இந்த வேலை மாகாணம் எங்கும் முடிவடைந்துவிட்டது. வியாபாரிகள் ஒருவரை ஒருவர் பார்த்துப் போட்டி போட்டுக்கொண்டு இந்த வேலையை நடத்தினார்கள். ஓர் ஊர் வியாபாரிகள் மூட்டையைக் கட்ட ஆரம்பித்துவிட்டார்கள் என்று கேள்விப்பட்டதும் அடுத்த ஊர் வியாபாரிகள் உடனே தாமும் இதைப்பற்றி யோசனை செய்ய ஆரம்பித்து விடுவார்கள். அங்குள்ள காங்கிரஸ்காரர்களும் அவர்களை வற்புறுத்த ஆரம்பித்து விடுவார்கள். அவ்வளவுதான், அங்கேயும் உடனே வேலை ஆரம்பித்துவிடும். விரைவில் வேலை முடிந்துவிடும். கான்பூர், தில்லி, பஞ்சாப் முதலிய இடங்களில் உள்ள பெரிய பெரிய வியாபாரிகள் பண்டித் மோதிலால்ஜீயிடம் வந்து அவருடன் கலந்து பேசி, அந்தந்தத் தலங்களில் எவ்விதமாக வேலை செய்ய வேண்டுமென்பதைப் பற்றியும் இதற்கு இந்தியாவின் மில் துணி ஆலைக்காரர்களிடமிருந்து எவ்விதமான உதவியைக் கேட்கலாம் என்பதைப் பற்றியும் யோசனை செய்வார்கள். வாக்குறுதிப் பத்திரத்தின் நகல் தயார் செய்யப்பட்டு எல்லா இடங்களுக்கும் அனுப்பப்படும். பொது மக்களும் வியாபாரிகளும் தத்தம் வாக்குறுதிப் பத்திரத்தில் கையொப்பமிட்டுக் கொடுப்பார்கள்.

சில மாகாணங்களில் மதுவிலக்கின்மீது அதிகக் கவனம் செலுத்தப்பட்டு வந்தது. இதை வைத்துக்கொண்டு அரசாங்கம் அவ்விடங்களில் அடக்குமுறையைச் செலுத்தியது. மக்கள் சிறைக்கும் துப்பாக்கிக் குண்டுக்கும் இலக்காக வேண்டி வந்தது. இவ்விதமாக மயிர் சிலிர்க்கச் செய்யும் சம்பவம் ஒன்று எல்லை

மாகாணத்தில் நடந்தது. எத்தனையோ பட்டாணியர் குண்டுக்கு இரையானார்கள். நாடெங்கும் கலவரம் பரவியது. அசெம்பிளி யின் சபாநாயகராக இருந்து வந்த ஸ்ரீ விட்டல் பாயீ படேலான வர் தம் பதவியை ராஜீநாமா செய்துவிட்டார். அவர் எல்லை மாகாணத்தில் நடந்த படுகொலை விசாரணையில் ஈடுபட்டு விட்டார். அவருடைய அறிக்கையை அரசாங்கத்தார் பறிமுதல் செய்துவிட்டார்கள். அதனால் அது அதிகமாக எங்கும் தெரிய வரமுடியவில்லை. ஆயினும் சிறிதளவு மட்டுமே அச்சிடப்பட்ட செய்தி நாடெங்கும் மின்சாரம் போலப் பாய்ந்து சென்று மக்கள் உள்ளத்தில் பதிந்து வினை செய்து வந்தது. எல்லா இடங்களி லும் ஒன்றைவிட ஒன்று மேலும் உற்சாகம் அளிக்கும் நடவடிக்கை கள் நடந்து கொண்டு வந்தபோது எதை விடுவது எதைக் கூறுவது என்பது கடினமாயிருக்கிறது. நாடெங்கும் நடந்து வந்த சத்தியாக்கிரகத்தின் விரிவான வரலாறு இதுவரையில் எழுதப்படவில்லை என்பது எனக்கு மிகவும் வருத்தமாயிருக் கிறது. ஆயினும் சில விஷயங்களைப்பற்றி இங்குக் கூறுவது நன்று.

பீகார் பர்தாவுக்குப் பெயர்பெற்ற மாகாணம். நான் இங்கி லாந்தில் இருந்தபோது, இங்கே பர்தாவைப் போக்கடிப்பதற்காக விசேஷ முயற்சி செய்யப்பட்டது. தர்பங்கா ஜில்லாவைச் சேர்ந்த ஸ்ரீ ராம்நந்தன் மிஸ்ரா என்ற இளைஞர் தம் வீட்டாரின் கட்டளையை மீறிக்கொண்டு தம் மனைவியைப் பர்தாவை விட்டு விடச் செய்தார். அவர் அவளைச் சபர்மதி ஆச்ரமத்தில் சில நாட்கள் தங்கி வருவதற்காகவும் அழைத்துச் சென்றார். மகாத் மாஜீயானவர் ஸ்ரீ மகன்லால் காந்தியின் மகள் ராதாவை அந்தப் பெண்ணுக்குக் கல்வி கற்பிப்பதற்காகவும், பர்தா விலக்கு வேலை புரிவதற்காகவும் பீகாருக்கு அனுப்பினார். ஸ்ரீ மகன்லால்ஜீ அங்கு நடக்கும் வேலையையும் தம் மகளையும் பார்ப்பதற்காக வந்தார். வந்த இடத்தில் அவர் திடீரென்று நோய்வாய்ப்பட்டு விட்டார். பட்னாவிலேயே அவர் சாவும் நிகழ்ந்துவிட்டது. இது மக்கள் மனத்தை மிகவும் வாட்டியது. பர்தாவை ஒழிக்கும் வேலை மிகவும் மும்முரமாகத் தொடங்கிவிட்டது. இதனால் மகாநாடு ஒன்றும் நடந்தது. வழிகாட்டியான ஸ்ரீ பிரஜ்கிஷோர் பாபூவும் அதில் கலந்து கொண்டார்.

வேலை நடந்து கொண்டு வந்தது. கயா காங்கிரஸின்போது சிறிய அளவில் தொடங்கப்பட்ட வேலை இப்போது பெரிதாக வளர்ந்துவிட்டது.

1930இன் சத்தியாக்கிரகம் தொடங்கியதும் காந்திஜீயானவர் மதுவிலக்கும் அயல் நாட்டுத் துணிப்புறக்கணிப்பும் முக்கியமாகப் பெண்கள் செய்ய வேண்டிய வேலைகள் என்பதாகக் கூறியதிலிருந்து பெண்களுக்கு அதிக உற்சாகம் வந்துவிட்டது. நகரங்களில் எங்கெங்குக் கடைகளின் முன் மறியல் செய்யப்பட்டு வந்ததோ அதைப் பெண்கள்தாம் செய்தார்கள். கடைகளின் முன் ஒரு பெண் நிற்பதைக் கண்டதுமே வாங்க வருபவருக்கு அந்தப் பக்கம் பார்ப்பதற்குக் கூடத் துணிச்சல் வருவதில்லை. கடைக்காரர்களும் வெட்கிப்போய் அவர்களிடம் மரியாதையாக நடந்து கொண்டார்கள். பட்னுவில் இவ்விதமான காவல் இரண்டு மூன்று நாட்களுக்குத்தான் போடவேண்டி வந்தது. இதில் ஸ்ரீமதி விந்தியதாசிநீ தேவிதாம் மிகவும் சிறப்பாகத் தொண்டு புரிந்து வந்தார். தம் வீட்டைவிட்டு என்றுமே வெளியே வராத பெண்மணிகளும் இதில் சேர்ந்திருந்தார்கள். காலையில் 8-9 மணிக்குள்ளாக காங்கிரஸ் செயலாளர்கள் அவர்களை அவரவர் வீட்டிலிருந்து அழைத்துச் சென்று குறிப்பிட்ட கடைகளின்முன் அமர்த்தி விடுவார்கள். பிறகு அவர்களுடைய கெடு முடிந்தபின் அவர்களை அவரவர் வீட்டில் கொண்டுபோய் விட்டுவிடுவார்கள். ஒரு நாள் ஏதோ ஒரு வீட்டின் புது நாட்டுப் பெண் வந்துவிட்டாள். தொண்டர் அவளை வீட்டில் கொண்டுபோய்விட மறந்துவிட்டார். இரவாகிவிட்டது. அவளை அழைத்துச் செல்ல யாரும் வரவில்லை. இவ்விதமாகத் தொண்டு புரிந்து வந்த மற்ெருரு பெண்ணின் கணவன், தன் மனைவியை வீட்டிற்கு அழைத்துச் செல்ல வந்தபோது இந்தப்பெண் ஒரு கடையின் முன் நிற்பதைக் கண்டார். விசாரித்ததில், அவளை வீட்டிற்கு அழைத்துச் செல்ல யாரும் வரவில்லையென்பதும் அதனால் அவள் இன்னும் அங்கேயே நிற்கிறாள் என்பதும் தெரியவந்தன. அவர் அவளைத் தம் மோட்டாரில் ஏற்றிக்கொண்டார். பிறகு அவளை அவள் வீட்டில் கொண்டுபோய் விடுவதற்காக அவளுடைய வீட்டின் விலாசத்தைக் கேட்டபோது அவளுக்குத் தன் வீடு எங்கிருக்கிறதென்பது கூடத் தெரியவில்லை. ஏனெனில் அவள் தன் வீட்டை விட்டு வெளியே வந்ததே இல்லை. ஊரில் உள்ள வீடு எதைப் பார்த்தாலும் இதுதான் இதுதான் என்று கூறி வந்தாள். எங்களுக்குள் பெண்கள் தம் கணவனின் பெயரைச் சொல்லும் பழக்கமில்லை. அவளுடைய கணவனின் பெயரைக் கொண்டு அவள் வீட்டைக் கண்டு பிடிக்கலாம் என்றால், இப்பழக்கத்தால் அவள் தன் கணவனின் பெயரைச் சொல்லவில்லை. அவளுக்குத் தன்

பெயரை மட்டும் கைத்தீ எழுத்தில் எழுதத்தெரியும் போலிருந்தது. அதற்கு மேல் அவள் படித்தது இல்லை. அவளுடைய கணவனின் பெயரை எழுதச் சொல்லி அதிலிருந்து அவளுடைய வீட்டைக் கண்டு பிடிக்கலாம் என்றால் அந்த மோட்டார்க்காரருக்குக் கைத்தீ எழுத்து தெரியாது. சிறிது நேரமாக மோட்டார் இங்கும் அங்குமாகச் சுற்றி வந்தது. பிறகு அவளுடைய கணவனின் பெயரை அவளிடம் எழுதி வாங்கி யாரையோ கொண்டு அதைப் படிக்கச் சொல்லிக் கேட்டறிந்த பின் அவளுடைய வீட்டின் விலாசம் கிடைத்தது. இவ்விதமாக அவர் அவளை அவள் வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்தார். பெண்மணிகளுக்கு எவ்வளவு உற்சாகம் இருந்தது என்பதையும், படிப்பில்லாத பெண்களும் கூட இவ்வேலையில் எவ்விதமாக ஈடுபட்டிருந்தார்கள் என்பதையும் இவ்வரலாற்றைப் படிப்பவர்கள் தெரிந்து கொள்வதற்காகவே இச்சம்பவத்தைப் பற்றி இங்குக் கூறினேன்.

## 89. பீஹபூர் சத்தியாக்கிரகம்

நான் ஒருநாள் பிரயாகுக்குச் சென்றிருந்தேன். அங்குச் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அங்கிருந்து பட்னுவுக்குத் திரும்பி வந்ததுமே பாகல்பூர் ஜில்லாவைச் சேர்ந்த பீஹபூர் கிராமத்தில் ஒரு புதுமுறையான சத்தியாக்கிரகம் ஆரம்பித்து விட்டதென்பதைக் கேள்விப்பட்டேன். இதைப்பற்றிச் சிறிதளவு செய்தி பிரயாகிலேயே தெரிய வந்தது. பட்னுவில் மேலும் விவரங்கள் கிடைத்தன. அங்கே உடனே செல்ல முடிவு செய்தேன். பீஹபூர் கங்கைக்கு வடக்கில் பாகல்பூரிலிருந்து சிறிது தொலைவிலிருக்கிறது. பி. என். டபிள்யூ. ரயில்வேயின் சிறியதொரு சந்திப்பில் இருந்து பாகல்பூர் காட்டுக்கு (துறைக்கு) மீட்டர்கேஜ் வண்டி செல்கிறது. இந்த வட்டாரம் முழுவதும் மழை காலத்தில் தண்ணீரில் மூழ்கிவிடும். இவ்விதமாக அமைந்த தீவுகளில் காணப்படுவது போலவே இங்கிருந்தவர்களும் அதிகத் துணிச்சலும் முரட்டு சுபாவமும் கொண்டவர்களா யிருந்தார்கள். இங்குள்ள மக்களுக்கு காங்கிரஸில் அதிகப் பற்றுதல் உண்டு.

1929இலேயே என்னை அங்கு வரும்படி மிகவும் வற்புறுத்தி அழைத்தார்கள். அங்கிருந்தவர்கள் என்னை அக்கம்பக்கத்துக் கிராமங்களுக்கும் அழைத்துச் சென்றார்கள். மிக்க உற்சாகத்

துடனும் அன்புடனும் அங்குள்ளவர்கள் என்னை வரவேற்ருர்கள். அங்கிருந்து சிறிது தொலேவில் கௌரீபூர் கிராமம் இருந்தது. அங்கும் நான் சென்றேன். திரும்பி வரும்போது மழை மிகவும் கடுமையாகப் பெய்யத் தொடங்கியது. இடையில் ஓர் ஆற்றை யும் கடக்க வேண்டியிருந்தது. யானைமேல் வந்து கொண்டிருந் தேன். கடந்து கொண்டிருக்கும்போதே நாங்கள் நன்ருக நனைந்துவிட்டோம். பீஹபூரில் கூட்டம் நடைபெறவிருந்த இடத் திற்கு வந்ததும், அங்கே பெரும் கூட்டம் குழுமி யிருந்ததைக் கண்டோம். மழை நிறையப் பெய்து கொண்டிருந்தாலும் ஓராள் கூட அங்கு விட்டு நகரவில்லை. நானும் கொட்டிக் கொண்டிருந்த அந்த மழையிலேயே நின்று கொண்டு சொற்பொழிவு ஆற்ற வேண்டி வந்தது. இவ்வண்ணமாக நான் அங்குள்ள உற்சாகத் தின் மச்சத்தை முன்னமே கண்டறிந்திருந்தேன். அவ்வூரின் சரித்திரத்தைப் பற்றியும் நான் கேட்டிருந்தேன். அதிலிருந்து ஒரு விஷயத்தை இங்குக் கூறுவது பொருந்தும். அங்கு ஓர் ஆங்கிலேயருடைய ஜமீன்தாரி இருந்தது. ஒரு நிலத்திற்காகக் குடியானவர்களுக்கும் அவருக்கும் நெடுநாளாகச் சண்டை நடந்து வந்து கொண்டிருந்தது. கோர்ட்டில் வழக்குகள் நடந்து வந்தன. வெள்ளைக்கார துரை நிலத்தைக் காவல் காப்பதற்காக சில கூர்க்காக்களை அமர்த்தி, காவல் வேலையை அவர்கள் கையில் ஒப்படைத்திருந்தார். அவர்கள் இருபது இருபத்தைந்து பேர் இருந்தார்கள். மழை காலத்தில் ஓர் இரவில் அந்த வட்டாரத்து மக்கள் அந்த இருபது இருபத்தைந்து கூர்க்காக்களையும் கொன்று வெள்ளப் பெருக்கெடுத்திருந்த கங்கையில் எறிந்துவிட்டார்கள் என்று சொல்லிக் கொள்கிருர்கள். யார் கொன்ருர்கள் என்பதும், அப்பிணங்கள் என்ன ஆயின என்பதும் தெரியாது.

இப்படிப்பட்ட இடத்து மக்களுக்குச் சத்தியாக்கிரகத்தில் உற் சாகம் உண்டாவதில் யாதொரு வியப்பும் இல்லை. ஆனல் அவர் களால் அஹிம்சா மயமாக இருக்க முடியுமா என்பதைப் பற்றி ஐயம் இருந்தது. ஆச்சரியமாகவும் இருந்தது. ஒரு கஞ்சாக் கடை சம்பந்தமாக அங்கு ஒரு புதிய முறையில் சத்தியாக்கிரகம் தொடங்கியது. ரயில்வே பாதைக்குப் பக்கத்திலேயே மேற்குப் புறத்தில் ஒரு மனை இருந்தது. அதில் காங்கிரஸ் ஆச்ரமம் கட் டப்பட்டிருந்தது. அதில் ஒரு சிறு அறையில் காதி பண்டாரும் இருந்தது. அங்கு விலேக்கு வாங்கின நூலும், விற்பனைக்காக வந்த பஞ்சும் கதர் துணியும் வைக்கப்பட்டு வந்தன. மற்ற அறைகளில் காங்கிரஸின் செயலாளர்களும் தொண்டர்களும்

வசித்து வந்தார்கள். அந்தக் காலத்தில் அவ்வீடு ஒரு குடிசை போன்று இருந்தது. இப்போது அந்த இடத்தில் ஆச்ரமத்திற்காக ஒரு மச்சு வீடு கட்டப்பட்டுவிட்டது. அதை ரயில் பிரயாணிகள் ரயில் வண்டியில் இருந்தபடியே பார்க்கலாம்.

ஸ்டேஷனுக்குத் தெற்கில் ஐந்தாறு கடைகள் கொண்ட ஒரு சிறிய கடைத்தெரு இருக்கிறது. இவற்றில் ஒன்றில் கஞ்சா விற்கப்பட்டு வந்தது. காங்கிரஸ் தொண்டர்கள் கஞ்சாக் கடையை மறியல் செய்தார்கள். போலீசார் ஒரு நாள் காங்கிரஸ் செயலாளர்களை ஆச்ரமத்திலிருந்து அடித்து உதைத்து விரட்டிவிட்டார்கள். அக்கம்பக்கத்தில் இருந்தவர்களுக்குப் போலீசார் இவ்விதமாக ஆச்ரமத்தைக் கைப்பற்றிக் கொண்டார்கள் என்பது தெரிய வந்ததும் அவர்கள் ஆச்ரமத்தை மீட்பதற்காகக் கிளம்பினார்கள். இதற்காக நாலைந்து பேர் ஒரு கோஷ்டியாக அமைந்து கொடியை ஏந்திக்கொண்டு அங்கே முதலில் சென்றார்கள். போலீசார் ஆயுதபாணிகளாகத் தயாராயிருந்த இடத்தில் நாலைந்து ஆட்கள் வெறுங்கையாகச் சென்று ஆச்ரமத்தைக் கைப்பற்ற முடியாது என்பது யாரும் அறிந்ததே. இது வெறுமனே சத்தியாக்கிரகம் செய்வதாகக் காட்டுவதற்காகச் செய்யப்பட்ட ஒரு சைகை மாத்திரம்தான். போலீசாரும் இதை அப்படியே கொண்டார்கள். கோஷ்டி அமைத்துச் சென்றவர்களை கைது செய்து வந்தார்கள். இப்பணி நாள்தோறும் மாலை வேளையில் நடக்கும். சில சமயங்களில் போலீசார் கோஷ்டியைச் சிறை கொள்ளாமல், அடித்து உதைத்து மட்டும் விட்டுவிடுவார்கள். நாளுக்கு நாள் வேடிக்கை பார்க்க வந்தவர்களின் கூட்டம் பெருகிக்கொண்டு சென்றது. பட்னாவில் எனக்கு விவரமாகச் செய்தி கிடைத்ததும் நான் சில நண்பர்களுடன் பாகல்பூருக்குச் சென்றேன். அங்கிருந்து அடுத்த நாள் பீஹபூர் போய்ச் சேர்ந்தேன்.

அங்குப் பதினைந்து இருபது ஆயிரம்பேர் கொண்ட கூட்டத்தின் முன்னிலையில் சத்தியாக்கிரகக் கோஷ்டி புறப்பட்டுச் சென்று தெரு வழியாக போலீசார் இருந்த இடத்தை அடைந்தது. யாதும் துன்பப்படுத்தப் படாமல் கைது செய்யப்பட்டு விட்டது; அடிக்கப்படவில்லை. இன்றைய வேலை முடிந்து விட்டதென்றும் இனி எல்லாரும் சென்று விடுவார்கள் என்று நாங்கள் நினைத்தோம். ஆனால் கூட்டம் இங்கும் அங்குமாகக் கலைந்துபோய்க் கொண்டிருந்தபோது, ஆச்ரமத்திலிருந்து ஒரு போலீஸ் சூப்பரின்டெண்டு தடிகள் ஏந்திய சில போலீஸ்காரர்களுடன் வெளி வந்து தெருவில் நின்று கொண்டிருந்த பொது மக்களின்மேல்

தடி வீசும்படி உத்தரவு இட்டார். தெரு அங்குச் சற்று மேடாக இருந்தது. ஆச்ரமமும் கடைத் தெருவும் தாழ்வான இடத்தில் இருந்தன. போலீசார் ஈவிரக்கமின்றித் தடிகளை வீசிக்கொண்டு கூட்டத்தின் உட்புகுந்து ஸ்டேஷன் வரையில் சென்றார்கள். எத்தனை பேருக்குத் தடியடி பட்டதென்பது தெரியாது. ஆனால் யாரும் எதுவும் சொல்லவில்லை. அங்கிருந்து போலீசார் சூப்ப ரின்டெண்டைப் பின் தொடர்ந்து கடைத் தெரு நெடுகச் சென்று நாங்கள் நின்று கொண்டிருந்த இடம் வரையில் வந்துவிட்டார் கள். சிறிது தொலைவில் ஒரு கடையின் முகப்பின் கீழ் சூப்பரின் டெண்ட்டு நின்று கொண்டு நாலா புறமும் கண் ஓச்சினர். அங் கிருந்து கொண்டே "அயோக்கியப் பயல்களை உதையுங்கள்" என்று கூச்சலிட்டார். போலீசாரும் அப்படியே மக்களை ஈவிரக்க மின்றித் தடிகளால் அடித்துக்கொண்டு மேற் சென்றார்கள். என் மேலும் நாலைந்து அடிகள் விழுந்தன. ஒரு தொண்டர் குறுக்கே விழுந்து தன்மேல் சில தடிகளின் அடியைத் தாங்கிக்கொண்டார். இதனால், எனக்கு அடிபட்டாலும்கூட, எத்தனை விழுந்திருக் குமோ அத்தனை விழவில்லை. எனக்குச் சிறிது தள்ளி ஸ்ரீ பல் தேவ் சஹாயும், ஸ்ரீ முரளீமனோகர் பிரசாதும் நின்றுகொண்டிருந் தார்கள். அவர்களுக்கும் காயம்பட்டது. சிறிது தொலைவில் பேராசிரியர் அப்துல் பாரீயும் நின்றுகொண்டிருந்தார். அவருக்கு அதிகக் காயம்பட்டது. அவர் விழுந்துவிட்டார். அவர் உடல் முழுவதும் இரத்தக் கறையாகிவிட்டது.

இவ்விதமாக அடித்து உதைத்துக்கொண்டு போலீஸ் கோஷ்டி யானது சூப்பரிண்டெண்டைத் தொடர்ந்து தொடர்ந்து மீண்டும் ஆச்ரமத்திற்குச் சென்றுவிட்டது. கூட்டம் தடி வீசுவதற்கு முன்னமே கலைந்து கொண்டிருந்தது. மக்கள் இங்கும் அங்கு மாகச் சென்றுவிட்டார்கள். பாகல்பூரிலிருந்து வந்திருந்த நாங் கள் மட்டும் அங்கேயே நின்று கொண்டிருந்தோம். ஏனெனில் எங்கள் வண்டி இரவு ஏழெட்டு மணிக்குத்தான் அங்கிருந்து புறப் படும். கூட்டம் கலைந்து போலீசாரும் போய்விட்ட பிறகு அக் கடைத் தெருவிலிருந்த வைத்தியர் ஒருவர் வந்து எங்களுடைய புண்களைக் கழுவிக் கட்டுப்போட்டார். நாங்கள் அங்கேயே, கடைத் தெருவுக்கு எதிரில் இருந்த வெட்ட வெளியில், புல்தரை மேல் படுத்துக் கிடந்தோம். இதற்கிடையில் போலீஸ் சூப்பரிண் டெண்டு போலீஸ்காரர்களையும் இன்ஸ்பெக்டரையும் சேர்த்துக் கொண்டு மீண்டும் அங்கு வருவது கண்ணில் பட்டது. மறுபடி யும் எங்கள் மேல் தடி வீச வருகிறார்கள் என்று நினைத்தோம்.

ஆனால் அப்படி ஆகவில்லை. அவர்கள் சற்றுத் தொலைவிலேயே நின்றுவிட்டார்கள். இன்ஸ்பெக்டரானவர் எங்களுடன் வந்திருந்த பாகல்பூரின் புகழ்வாய்ந்த வக்கீலும் காங்கிரஸ் பக்தருமான ஸ்ரீ படல் பாபூவைக் கைது செய்தார். அவரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு அவர்கள் போய்விட்டார்கள். நாங்கள் இரவு வண்டியில் பாகல்பூர் வந்து சேர்ந்தோம். அங்குப் பெரும் கலவரம் உண்டாகிவிட்டது. நானும் அங்கே ஓரிரண்டு நாள் தங்கிவிட்டேன்.

பீகார் முழுவதிலுமே பாகல்பூர்தான் அயல் நாட்டுத் துணி மொத்த வியாபாரத்திற்கு முக்கியமான இடம். மற்ற மற்ற இடங்களில் வியாபாரிகள் அயல்நாட்டுத் துணியை மூட்டை கட்டி முத்திரை போட்டு வைத்துவிட்டார்கள். ஆனால், இதுவரையில் பாகல்பூரில் அப்படிச் செய்யப்படவில்லை. மேலே கூறிய சம்பவத்திற்குப் பிறகு அங்கும் பெண்கள் கடைகளை மறியல் செய்யத் தொடங்கினார்கள். வியாபாரிகள் என்னிடம் வந்து தாம் மூட்டை கட்டி முத்திரை போட்டுவிடத் தயாராக இருப்பதாகக் கூறினார்கள். அவர்கள் தமக்குள் ஒரு குழுவையும் அமைத்துக் கொண்டார்கள். இரண்டு மூன்று நாட்களுக்குள்ளாக அங்கும் அயல் நாட்டுத் துணி முழுவதையும் கடையிலிருந்து அப்புறப்படுத்தி மூட்டை கட்டி முத்திரை போட்டு வைத்துவிட்டார்கள். பீஹபூர் சம்பவத்தின் கைமேல் பலனாக பாகல்பூரில் இந்த வேலை யாதொரு கஷ்டமும் இன்றி நடந்தேறியது.

சட்டசபையின் உறுப்பினர்களான ஸ்ரீ ஆனந்த பிரசாதும், ஸ்ரீ கமலேஸ்வரி சஹாயும் எங்களுடன் பீஹபூர் சென்றிருந்தார்கள். கூட்டத்தின் நெருக்கடியில் அவர்களும் இடிபட்டார்கள். ஆனால் போலீசாருக்கு முன் எதிர்ப்படாததால் அவர்கள் தடியடியிலிருந்து தப்பித்துக் கொண்டார்கள். அவர்கள் போலீசாரின் திருவிளையாடல்கள் எல்லாவற்றையும் தம் கண்களாலேயே பார்த்தார்கள். அவர்களும் அங்கிருந்து மிகவும் பதறிக்கொண்டு திரும்பினார்கள். தடிகள் காரணமின்றியே உபயோகிக்கப்பட்டனவென்று அவர்களும் கருதினார்கள். ஏனெனில் தடிப்பிரயோகத்திற்கு முன்பே கூட்டம் கலைய ஆரம்பித்துவிட்டது. இன்னும் இரண்டு மூன்று நிமிடங்களுக்குள் மக்கள் அங்குமிங்குமாகப் போய்விட்டிருப்பார்கள். எங்கள் மேல் தடி வீசியதற்கோ காரணமேயில்லை. இதனால் அவர்கள் சட்டசபையிலிருந்து ராஜீநாமா செய்துவிட்டார்கள். இன்று சரியாக நினைவில்லை. ஆயினும் இன்னும் பலரும், இச்சம்பவத்தின் விவரங்களைக்

கேட்டதுமே ராஜீநாமா செய்துவிட்டார்கள் என்று நினைக்கிறேன்.

எல்லாவற்றையும்விட வேடிக்கையான விஷயம் வேறொன்று நடந்தது. போலீஸ்காரர்களுள் இரண்டு கட்சிகள் உண்டாகி விட்டன. சிலர் சூப்பிரண்டெண்டின் உத்தரவைச் சரியானதென்று ஏற்றுக் கொண்டு மிகவும் கடுமையாகத் தடிகளைச் சுழற்றி மக்களைப் புடைத்தார்கள். ஆனால், வேறு சிலர், தடிகளை உபயோகிப்பது சரியல்லவென்று நினைத்து மிகவும் தந்திரமாகத் தடிகளைச் சுழற்றிவந்தார்கள். எங்கள் மேல் தடியடி செய்தவர்கள் முதல் கட்சியைச் சேர்ந்தவர்கள். இரண்டாவது கட்சிக்காரர்கள் அல்லர். சூப்பிரண்டெண்டு முன்னே செல்லச் செல்ல இவர்கள் அவர் பின்னால் தொடர்ந்து நாலா புறமும் தடிகளை சுழற்றி அடித்துச் சென்றார்கள். தடியடிகளால் அப்துல் பாரீயானவர் அங்கேயே மூர்ச்சை போட்டு விழுந்துவிட்ட போதும்கூட ஒரு போலீஸ்காரன் அவரை மேலும் அடிக்கத் தடியைத் தூக்கினான். அப்படி நினைவிழந்து கிடந்த பாரீ சாஹபை அடிக்கப் போனபோது மற்றொரு போலீஸ்காரன் அவனுடைய தடியைத் தன் தடியால் தடுத்துவிட்டான். மூன்றாவது போலீஸ்காரன் ஒருவன் பாரீ சாஹபை அடிக்கப் போனவனையே தடியால் அடித்து வீழ்த்திவிட்டான். இரண்டு கட்சிகளும் இவ்வண்ணமாகத் தமக்குள் சண்டை சச்சரவு போட்டுக் கொண்டு மேற்சென்றுவிட்டார்கள். அப்துல் பாரீ அந்தப் பலத்த அடியிலிருந்து தப்பித்துக் கொண்டார். இந்த விஷயத்தை அப்துல் பாரீயே எங்களுக்குக் கூறினார்.

மற்றொரு வியப்பான சம்பவமும் நடந்தது. அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் சப்ரா ஜில்லாவைச் சேர்ந்தவர். அவர் என் பள்ளித் தோழர். நாங்கள் இருவரும் நான்கு ஆண்டுகள் ஒன்றாகத்தான் படித்தோம். புகுமுகப் பரீக்ஷையிலும் தேறினோம். அதற்குப்பின் நான் கல்கத்தாவுக்குச் சென்றுவிட்டேன். அவர் போலீஸ் வேலைக்குப் போய்விட்டார். அதற்குப்பின் நாங்கள் இருவரும் சந்திக்கவில்லை. ஆனால் அவர் போலீஸில் இருந்தார் என்பதை மட்டும் நான் அறிந்திருந்தேன். இப்போது அவர் சிறிது கிழடு தட்டினாற்போலக் காணப்பட்டார். அவருடைய தலைமயிர் பெரும்பாலும் நரைத்துவிட்டது. அன்று நாங்கள் புல் தரையில் படுத்திருந்தபோது, அவர்தாம் படல் பாபூவைக் கைது செய்வதற்காக சூப்பிரண்டெண்டுடன் மறுபடியும் வந்தார். என்னைப் பார்த்து அவர் மெல்ல வணக்கம்

செய்தார். நான் அவரைக் கண்டுபிடித்துக் கொள்ள முடிய வில்லை. ஆனால் அவர் என்னைத் தெரிந்து கொண்டார். பிறகு விசாரித்ததில் அவருடைய பெயர் தெரிய வந்தது. காதி பண்டாரைச் சேர்ந்த செயலாளர் ராம் விலாஸ் சர்மா என்பவரை நான் பீஹபூருக்கு அனுப்பி, அங்கேயுள்ள போலீஸ் அதிகாரி யிடம் அனுமதி கேட்டுக் கொண்டு இங்கும் அங்குமாக எறியப் பட்டுக் கிடந்த, காதி, நூல், சர்க்கா முதலானவற்றைத் திரட்டி அவற்றை பாகல்பூர் பண்டாரில் கொண்டுவந்து சேர்க்கும்படி கூறினேன். ராம்விலாஸ் ஒரு பண்பில்லாத தமாஷ் பேர்வழி. இன்ஸ்பெக்டர் என்னுடைய தோழர் என்பதை அவர் கேள்விப் பட்டிருந்தார். அங்கே சென்றதும் அதே கனவான் தாம் அந்த ஊருக்கு அதிகாரி என்பது தெரிய வந்தது. ராம்விலாஸ் சர்மா அவரைப் போய்ப் பார்த்தார். அவருடன் பேசிக் கொண்டிருந்த திலிருந்து இன்ஸ்பெக்டர் சாஹபானவர் அந்தநாள் நடந்த சம்பவத்தைப்பற்றி வெட்கப்படுவதாக தெரிய வந்தது. அதன் மேல் சர்மா ஆனவர் என்னைப்பற்றிப் பேசத் தொடங்கி நான் அவருடைய தோழன் என்பதாகவும், அன்று அவர் எனக்கு வணக்கம் செய்தபோது நான் அவரைக் கண்டு கொள்ளாதற்காக வருத்தப்படுவதாகவும் அவரிடம் கூறினார். சர்மா அவரிடம் இவற்றைப்பற்றி பேசப்பேச அவருடைய முகத்தின் நிறம் மாறிக் கொண்டே வந்தது. "அவ்விஷயங்களைப் பற்றியெல்லாம் பேசாதீர்கள்" என்று அவர் சர்மாவிடம் கூறினார். இதைச் சொல்லிவிட்டு அவர் முகத்தைத் திருப்பிக் கொண்டார். ராம் விலாஸானவர் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மேலும் விஷயத்தைக் கிளறிவிட்டார். பிறகு மறுபடியும் என்னைப் பற்றி பேசத் தொடங்கி, இத்தனை நாட்களுக்குப்பின் சந்தித்தபோது பழைய நண்பருடன் பேசக்கூடவில்லையே என்பது எனக்கு மிக வும் வருத்தமாயிருப்பதாகக் கூறலானார். இதன்மேல் அவர் ராம் விலாஸை மேலே பேசவிடாமல் தடுத்துவிட்டார். அவருடைய கண்களில் நீர் ததும்பிக் கொண்டிருப்பதை ராம் விலாஸ் கண்டார்.

இவ்விதமான சம்பவங்கள் பல இடங்களில் நடந்தன வென்பது எனக்குத் தெரியும். மற்றொரு போலீஸ் அதிகா ரிக்கும் இதே நிலைமை உண்டாயிற்று. அவர் வந்து என்னை இரவில் சந்தித்தார். கண்களில் நீர் சொரிய அவர் என்பாதத் தைப் பற்றிக்கொண்டார். அவர் அந்த ஜில்லாவிலேயே இருந்து வந்தும்கூட நான் தடியால் அடிக்கப்பட்டேனே என்றும் அவரால்

ஒன்றும் செய்ய முடியவில்லையே என்றும் வருந்திக் கூறினர். 1933 ஜனவரியில் இரண்டாவது 'சத்தியாக்கிரகத்தின் போது நான் பட்னு சிறையிலிருந்து ஹஜாரிபாக் சிறைக்குக் கொண்டு போகப்பட்டபோது, ஹஜாரிபாக்—ரோடு ஸ்டேஷனிலிருந்து ஹஜாரிபாக் வரையில் என்னைக் கொண்டு போய்ச் சேர்த்த போலீஸ் அதிகாரி அதே பழைய இன்ஸ்பெக்டர்தாம் என்பதையும் இங்கேயே கூறிவிடலாம். அப்போது இரவு வேளை. குளிருக்காக அணிந்திருந்த உடைக்குள் அவர் மறைந்திருந்தார், நானும் அப்படித்தான் இருந்தேன். லாரியின் முன் ஆசனத்தில் அவர் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தார். நாங்கள் பின்னுல் உட்கார்ந்திருந்தோம். அதிவிடியற் காலையிலேயே சிறை வாயிலை அடைந்துவிட்டோம். நான் லாரியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தபோதே அவர் எங்கேயோ நழுவி விட்டார். அவரைத் தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பில்லை. ஏனெனில் அவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. சிறை வாயிலில் அவரைப் பார்க்க முடியவில்லை. பிறகு சிறைச்சாலை அதிகாரி அவருடைய பெயரை என்னிடம் சொன்னுர். அவர் எப்படி வழி நெடுகத் தம்மைக் காட்டிக் கொள்ளாதபடி தப்பித்து வந்தார் என்பதையும் கூறினுர். சிறைச்சாலை அதிகாரியும் சப்ராவைச் சேர்ந்தவர் தாம். அவர் எங்களுடைய தோழர் ஒருவரின் சகோதரர். இதனுல் எனக்கு அவரைச் சிறு வயதிலிருந்தே தெரியும்.

பீஹபூரில் தடிப்பிரயோகத்திற்குப் பின்னும், முன்போலவே கோஷ்டிகள் நாள்தோறும் சென்று கொண்டிருந்தன. அவை சில சமயங்களில் சிறை கொள்ளப்படும். சில சமயங்களில் அடிக்கப்பட்டு விட்டு விடப்படும். காந்தீ-இர்வின் ஒப்பந்தம் ஆகாத வரையிலும், காங்கிரஸ் சத்தியாக்கிரகத்தை நிறுத்தாத வரையிலும், இந்தக் காரியம் தொடர்ந்து நடந்து வந்தது. கோஷ்டியார் மிகவும் இரக்கமின்றி அடிக்கப்பட்டு வந்தார்கள். ஒரு தொண்டர் மிகவும் கடுமையாகப் புடைக்கப்பட்டார். அதற்குப் பின் சைக்கிளுக்குக் காற்றடிக்கும் குழாயை அவருடைய காதில் பொருத்திக் காத்தடிக்கப்பட்டு அவருடைய காதின் ஜவ்வு கிழிந்துவிட்டது.

காந்தீ-இர்வின் ஒப்பந்தம் நிலவி வந்தபோது எவ்வளவோ முயற்சி செய்தும்கூட பீஹபூர் ஆச்ரமத்தைக் கைவிட அரசாங்கத்தார் நெடுநாள் வரையில் சம்மதிக்கவில்லை. ஆனுல் 1932இல் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டபோது அரசாங்கத்தார் அதை பறிமுதல் செய்யவில்லை. அது இருந்த நிலத்தின் சொந்தக்

காரர் அந்த நிலத்தை காங்கிரஸுக்கு எழுதிக் கொடுத்திருந்தார். எங்களுக்கு அதன்மேல் சட்ட பூர்வமான உரிமை உண்டு. ஆனால் அரசாங்க ஊழியர்கள் வேறொரு ஆளை நிறுத்தி வைத்து நிலத்தை எழுதி வாங்க முயற்சி செய்தார்கள். நாங்கள் பிராது செய்வதாக மிரட்டியபின் தான் அந்த ஆச்ரமம் எங்களுக்குத் திரும்பிக் கிடைத்தது. போலீசார் ஆச்ரமத்தைப் பறிமுதல் செய்தபோது, அப்படிப் பறிமுதல் செய்வதற்கு உத்தரவு போடப் படவில்லை. அப்புறமும்கூட முறைப்படி அது பறிமுதல் செய்யப்படவில்லை. அப்படியும் அவர்கள் அதைக் கைவிட விரும்பவில்லை. யாரிடமோ பிராது வாங்கி, அதன்மீது முற்றி லும் பொய் வழக்குத் தொடுத்து வந்தார்கள். அரசாங்க ஊழியர் கள் தம்முடைய கட்சியைச் சாதிப்பதற்காக எது வேண்டுமானா லும் செய்வார்கள் என்பது அங்கேயே எங்களுக்கு தெளிவாகி விட்டது! இந்த விஷயத்திற்காக நான் அக்காலத்தில் இருந்த பிரதம செக்ரடரி மிஸ்டர் ஹைலெட்டையும் பீகாரின் கவர்னரை யும் ஒப்பந்தம் நிலவி வந்த காலத்தில் பார்க்க வேண்டி வந்தது.

## 90. நான் முதல் முதலாகக் கைது செய்யப்பட்டது

என்னைக் கைது செய்வதற்கு அரசாங்கம் உத்தரவு இட்டு விட்டதென்பது நான் பட்னாவுக்குத் திரும்பி வந்ததும் தெரிய வந்தது. நான் முன்போலவே என் சுற்றுப் பிரயாணத்தைச் செய்து வந்தேன். பல இடங்களுக்குச் சென்று வந்தேன். ஆனால் அங்கு எங்கும் சிறை கொள்ளப்படவில்லை. நான் ஒரு ஜில்லாவை சுற்றி வந்துவிட்டு மற்றொரு ஜில்லாவிற்கு அதி விரை வில் சென்று வந்ததால் எந்த ஜில்லா மாஜிஸ்டிரேட்டும் என்னைக் கைது செய்து, தம்மீது ஒரு வம்பை வரவழைத்துக்கொள்ள விரும்பவில்லையென்பது பின்னால் தெரிய வந்தது. இவ்வண்ண மாக நான் தப்பித்து வந்து கொண்டிருந்தேன். இதற்கிடையில் ஸ்ரீ விட்டல் பாயீ படேல் பட்னாவிற்கு ஒரு நாள் வந்து சேர்ந்தார். அவர் சமீபத்தில்தான் மத்திய அசெம்பிளியின் சபாநாயகர் பதவியை துறந்திருந்தார். இதனால் மக்களுக்கு அவரிடம் பற்று தல் மேலும் அதிகமாகியது. பட்னாவில் ஒரு பொதுக்கூட்டம்

நடத்தப்பட்டது. மிஸ்டர் ஹசன் இமாம் அதற்கு வந்தார். அன்று காலையில் பண்டித் மோதிலால்ஜியானவர் சிறை கொள்ளப்பட்டார் என்ற செய்தி அங்குத்தான் கிடைத்தது. என்னைக் கைது செய்வது இனி தாமதிக்கப்படாது என்பதை அதிலிருந்து உணர்ந்தேன். நான் பட்னுவை விட்டுப் போகும்போது மிஸ்டர் ஹசன் இமாமைப் போய்ப் பார்த்தேன். அவர் மிக்க உற்சாகத்துடன் எனக்குத் தைரியம் கூறினர். "குழந்தாய்! நீ கைது செய்யப்படுவதால் வேலை நின்று போகாது" என்று கூறினர். அப்பொதுக் கூட்டத்திற்குப்பின் நான் விட்டல் பாயீ படேலை பீகாரிலிருந்து வழியனுப்பிவிட்டு, சப்ரா ஜில்லாவில் சுற்றிவரச் சென்று விட்டேன்.

அங்கு மூன்று நாட்களுக்கு வேலையிருந்தது. ஜில்லாவின் மேற்குக் கோடியிலிருந்து தொடங்கி கிழக்குக் கோடி வரை வேலையை முடித்துக் கொண்டு மூன்ரும் நாள் பட்னுவிற்குத் திரும்பி வரவேண்டும். முதல் இரவை ஜீராதேவியிலும் இரண்டாவது இரவைச் சப்ராவிலும் கழிப்பதாக இருந்தது. மூன்ரும் நாள் இரவு பட்னுவுக்கு வந்துசேருவதாக இருந்தது. இரண்டு நாட்கள் கழிந்துவிட்டன. இரண்டாம் நாள் மாலை வேலைத் திட்டத்தை முடிப்பதற்கு இரவில் நெடுநேரமாகி விட்டது. மாலையில் வந்து சேருவதற்கு மாருக இரவு 12 மணிக்குச் சப்ரா வந்து சேர்ந்தேன். பீகார் பாங்கியை அடைந்ததும் தமையனர் எங்கோ சென்றிருப்பதாகத் தெரிய வந்தது. அவர் சப்ராவில் இல்லையென்பதும், போலீஸ்காரர்கள் இரவு 10-11 மணி வரையில் எனக்காகப் பாங்கியில் காத்துக் கொண்டிருந்தார்கள் என்பதும் தெரியவந்தன. என்னைச் சிறை கொள்வதற்காகத் தேடிக் கொண்டிருக்கிருர்கள் என்பதை உணர்ந்தேன். நான் உணவு உண்டுவிட்டுத் தூங்கி விட்டேன். காலையில் குளியல் முதலியவற்றை முடித்துக் கொண்டு சுமார் $8\frac{1}{2}$ மணிக்கு மோட்டாரில் கட்காவுக்குப் புறப்பட்டு விட்டேன். இதனுல் அவர்கள் கட்காவுக்குச் சென்று எனக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு கோஷ்டி நான் கட்காவுக்கு எந்த வழியாக வருவேனே அச்சாலையிலேயே நின்று கொண்டிருந்தது. நான் சப்ரா ஊரைவிட்டு வெளியேறுவதற்குள்ளாகவே கட்காவின் திசையிலிருந்து மோட்டாரில் போலீசார் திரும்பி வந்து மௌநா மஹல்லாவிலேயே என்னை எதிர் கொண்டனர். அவர்கள் சைகை காட்டி என் வண்டியை நிறுத்தினர்கள். முந்தின நாளிலிருந்து என்னைத் தேடி அலைந்து கொண்டிருப்

பதாக என்னிடம் கூறினுர்கள். நான் அவர்களுடன் அவர் களுடைய வண்டியில் ஏறிக் கொண்டு வீட்டிற்கு சென்றேன். அரை மணி நேரத்திற்குள்ளாகவே தயார் செய்து கொண்டு அவர் கள் வண்டியில் மீண்டும் ஏறிச் சென்றேன். இந்த விஷயத்தைப் பற்றி ஊருக்குச் செய்தி கிடைப்பதற்குள் நான் நேரே சிறைக்குக் கொண்டு போகப்பட்டேன்.

அதுதான் எனக்கு முதல் சிறைவாச அனுபவம். சப்ரா சிறைச்சாலேக்குச் சில நண்பர்களேப் பார்ப்பதற்காகப் போயிருக் கிறேன். அதைத் தவிர அந்தச் சிறையைப் பற்றியாவது அல்லது வேறு எந்தச் சிறையைப் பற்றியாவது எனக்கு ஒன்றும் தெரி யாது. அச்சிறையில் அச்சமயத்தில் 300, 400 சத்தியாக்கிரகிக் கைதிகள் இருந்தார்கள். நான் வெளிவாயிலுக்குள் வந்து சேர்ந்து விட்டேன் என்பது அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. அவர்கள் 'ஜய ஜய' என்று முழக்கம் செய்து கொண்டு வாயிலுக்கு அருகே வந்து விட்டார்கள். சிறைக்காவலர் சற்றுக் கலக்க மடைந்தார். அவர் உட்கதவைத் திறக்கவில்லே. இதன்மேல் அவர்கள் இன்னும் அதிகமாகக் கூச்சல் போட ஆரம்பித்தார்கள். என்னே உள்ளே அழைத்துச் சென்ருல் அவர்கள் அமைதியுறுவார் கள் என்று நான் சிறைக் காவலரிடம் கூறினேன். ஆனுல் அவர், அவர்கள் கதவுக்கு அருகில் இருக்கும் வரையில் கதவைத் திறப்ப தற்கு உத்திரவு இல்லே என்றும், இதனுல் அவர்கள் போய்விட்ட பின்தான் என்னே உள்ளே அழைத்துச் செல்ல முடியும் என்றும் கூறினுர். நான் சத்தியாக்கிரகிகளிடம் ஏதும் சொல்வதற்கும் வழி யில்லே. ஏனெனில் சிறிய இடுக்கு வழியாக எவ்வளவு என்று பேச முடியும்? அவர்களுடைய ஆர்வமானது என்னே வரவேற்பதாகவே என்பதும், நான் உள்ளே நுழைந்ததும் அவர்கள் என்னேப் பார்த் ததுமே அமைதியுற்றுப் போவார்கள் என்பதும் எனக்குத் தெரியும். ஆனுல் சிறைக் காவலரால் இதைப் புரிந்து கொள்ள முடியவில்லே. சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் கதவை திறந்து என்னே உள்ளே அழைத்துச் சென்ருர். அவர்கள் என்னேடு கூடிக் குலாவியபின், நான் இருக்க வேண்டிய இடத்திற்கு என்னேக் கொண்டு போய்விட்டு விட்டு தத்தம் இடத்திற்குச் சென்று விட்டார்கள். இதற்குள் வெளியிலிருந்து ஜய ஜய ஒலி கேட்கத் தொடங்கியது. அச்சிறையில் ஒரு மாடி வீடு இருந்தது. அதிலும் சிலர் இருந்தார்கள். ஒரு பெரிய கூட்டம் ஜய ஜய முழக்கம் செய்து கொண்டு சிறை நோக்கி வருவதை அவர்கள் பார்த்தார்கள். அக்கூட்டம் தெருவில் நின்றது. சிறைக் காவலர்

அதைக் கண்டு மேலும் கலக்கமுற்ருர். அவர் சிறைச்சாலேயின் காவலாட்களே வாயிலில் நின்று துப்பாக்கியைச் சுடும்படி உத்திர விட்டார். ஒலியைக் கேட்டுக் கூட்டத்தின்மேல் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்படுகிறதோவென்று நினைத்தோம். ஆனுல் உண்மையில் அப்படி நடக்கவில்லை. சிறைச்சாலே ஊரின் நடுவில் இருக்கிறது. அதைச் சுற்றி நான்கு பக்கமும் தெருக்கள் இருக் கின்றன. மக்கள் சிறைச்சாலேயின் நாற்புறத்தையும் ஊர்வலம் சுற்றி வந்து, ஒலி முழக்கம் செய்ததோடு வேலையை முடித்து விட்டார்கள். ஆனுல் சிறைக் காவலர் தம்முடைய திகிலில் சரமாரி யாகத் துப்பாக்கிகளேச் சுட ஆரம்பித்து விட்டார். நல்ல வேளை யாய் வெறும் தோட்டாக்கள்தாம் சுடப்பட்டன. பிறகு இந்த விஷயம் ஜில்லா மாஜிஸ்டிரேட்டின் காதுக்கு எட்டியபோது இது மிகவும் தவறு என்று அவர் சிறைக் காவலரைக் கண்டித்தாராம். பொதுமக்கள் துப்பாக்கி சுடுவதைக் கண்டு, சினங் கொண்டு எதிர்த்திருந்தால் அவர் பொய்யாகக் சுட்டுக் கூட்டத்தை எப்படி அடக்கியிருக்க முடியும் என்றும், அதுவும் அவர் போலீசுக்கோ, மாஜிஸ்டிரேட்டுக்கோ சமாச்சாரம் அனுப்பாதபோது எப்படி முடியும் என்றும் கோபித்துக் கொண்டாராம்.

என்னுடைய முதல் சிறைவாச அனுபவம் வியப்பளிப்பதாக இருந்தது. ஏனெனில் மற்றவர்களுடைய அனுபவத்தோடு ஒப் பிட்டுப் பார்த்தபோது மற்றவர்களுக்கு அப்பேர்ப்பட்ட அனுபவம் கிட்டவில்லே யென்பது தெரியவந்தது. அதுவரையில் சப்ராவில் கைதிகளேப் பல வகுப்புகளாகப் பிரிக்கும் ஏற்பாடு இல்லே. என் னேப் பற்றி எதுவும் விஷேச உத்திரவும் இல்லே. இதனுல் நான் அங்கே என்ன உணவு கிடைத்ததோ அதையே இரும்பு வட்டியில் வாங்கி வந்து உண்டு வந்தேன். வீட்டிலிருந்து உணவு அனுப்பி ஞர்கள். ஆனுல் நான் அதை உண்ணவில்லே. இனி அனுப்ப வேண்டாமென்று கூறிவிட்டேன். நான் வழக்கு விசாரணேக் கைதியாக இருக்கும் வரையில் வீட்டு உணவை உண்ணலாமென் றும், ஆனுல் அதைச் சிறைச்சாலே வாயிலுக்குச் சென்றுதான் உண்ணலாம் என்றும் சிறைக் காவலர் கூறினுர். நான் முதலி லேயே வேண்டாமென்று விட்டேன். இந்த நிபந்தனேயைக் கேட்ட தும் மேலும் கண்டிப்பாக மறுத்துவிட்டேன். அடுத்த நாள் என் தமையனுர் சப்ராவுக்கு வந்து சேர்ந்தார். சிறைச்சாலேக்குள் ளேயே நடத்தப்பட்ட வழக்கு விசாரணேயின்போது வந்து என் னேச் சந்தித்தார். சிறைக்காவலர் சிறைச்சாலேயின் விதிமுறை யைக் கடைப்பிடிப்பதில் மிகவும் கண்டிப்பாக இருந்தார். ஆதலால்

என் வீட்டிலிருந்து ஏதோ மாம்பழம் வந்ததைக்கூட சிறைச்சாலை வாயிலில் சென்றுதான் உண்ணவேண்டுமென்று சொல்லி அனுப்பினர். நான் அப்படிச் செய்ய மறுத்துவிட்டேன். மாம்பழத்தையும் திருப்பி அனுப்பிவிடும்படி கூறிவிட்டேன். அதற்குள்ளாக மாம்பழத்தைக் கொண்டு வந்தவன் திரும்பிப் போய்விட்டான். பிறகு நான் இவ்விதக் கட்டுப்பாட்டிற்குக் காரணத்தைக் கேட்டபோது சிறைக் காவலரே வந்து சிறைச்சாலையில் ஒரு கைதி மற்றொரு கைதிக்கு தன் உணவை பகிர்ந்து கொடுக்கக்கூடாதென்றும், அதனுல்தான் வெளியிலிருந்து வரும் பொருளை உள்ளே கொண்டு வரவிடுவதில்லை யென்றும் கூறினர். இது அவர் தானுகக் கற்பனை செய்து கொண்ட ஒரு விதி முறை என்பதும், வேறு எந்தச் சிறைச்சாலையிலும் இப்படி நடப்பதில்லை யென்பதும் பிறகு தெரியவந்தது.

என் வழக்கு எந்த மாஜிஸ்டிரேட்டின் முன் கொண்டு வரப்பட்டதோ அவரை எனக்கு முன்னமே தெரியும். நான் வக்கீல் தொழில் செய்து கொண்டிருந்த காலத்தில் அவர் என்னுடைய கட்சிக்காரராக இருந்திருந்தார். அவருடைய சொந்த வழக்கு ஒன்றில் நான் தொழில் புரிந்திருந்தேன். 1933இல் நான் பட்னுவில் சிறை கொள்ளப்பட்டபோது தற்செயலாக அவரே அங்குச் சப் டிவிஷனல் ஆபீசராக இருந்தார். அந்த முறையும், அவர் தாம் எனக்குத் தண்டனை விதிக்க வேண்டி வந்தது. வழக்கில் ஏதாவது சொல்லவோ கேட்கவோ ஒன்றும் இல்லை. ஏதோ ஒரு பிரிவின்கீழ் அவர் எனக்கு ஆறு மாதம் சிறைவாசத் தண்டனை விதித்தார்.

என்னை அங்கேயே வைத்திருப்பார்களா அல்லது வேறு எங்காவது கொண்டு போவார்களா என்பது எனக்குத் தெரியவில்லை. ஆயினும் எங்கள் மாகாணத்தின் தலைமையான பேர்கள் எல்லாம் ஹஜாரிபாக் சிறையில்தான் வைக்கப்பட்டிருந்தார்கள் என்பது மட்டும் எனக்குத் தெரியும். நான் இங்கேயே இருப்பேனு அல்லது ஹஜாரிபாக் சிறைக்கு அனுப்பப்படுவேனு என்பதைப் பற்றிச் சிறைக் காவலரும்கூட எதுவும் கூறவில்லை. இவ்விதமாக நாலைந்து நாட்கள் கழிந்தன. ஒருநாள் சாயங்காலம் நான் உணவு உண்டுவிட்டு நான் இருந்த கட்டின் (வார்டின்) சிறிய முற்றத்தில் ஒரு குருத்தாவை மட்டும் அணிந்து கொண்டு ஒரு துண்டை வைத்துக்கொண்டு உலாவிக் கொண்டிருந்தேன். சிறைக்காவலர் அங்கு வந்து, டிப்டி சாஹப் வாசலில் வந்திருக்கிருர் என்றும், என்னைப் பார்க்க விரும்புகிருர் என்றும் என்னிடம்

கூறினர். அந் நாட்களில் அங்குள்ள போலீஸ் சூப்பரின்டெண்டு ஒய்வெடுத்துக் கொண்டு எங்கோ சென்றிருந்தார். ஒரு டிப்டி மாஜிஸ்டிரேட்டு அவருடைய இடத்தில் வேலை பார்த்து வந்தார். அவர்தாம் வந்திருப்பார் என்று நான் நினைத்தேன். நான் சென்றேன். கதவு திறக்கப்பட்டது. நான் உள்ளே நுழைந்ததுமே டிப்டி சாஹப் என்னைப் பார்க்காமல், முகத்தைத் திருப்பிக் கொண்டு வெளிக்கதவுப் பக்கம் நடந்தார். எனக்கு வியப்பாயிருந்தது. காவலாள் என்னை அழைத்துச் சென்று, உட்கதவை மூடிவிட்டு ஓடிப்போய் வெளிக்கதவைத் திறந்தான். அதைத் திறந்ததுமே வெளியேயிருந்து மற்றொரு கனவான் உள்ளே வந்தார். அவர்தாம் மிஸ்டர் கான், டிப்டி மாஜிஸ்டிரேட்டு. நான் உடனே புறப்பட வேண்டும் என்று அவர் என்னிடம் கூறினர். "உள்ளே என்னுடைய சாமான்கள் இருக்கின்றன, அவற்றை எடுத்து வருகிறேன்" என்றேன். "அவற்றைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். அவை எல்லாம் வந்து சேர்ந்துவிடும்" என்றார். அணிந்து கொண்டிருக்கிற ஆடையும், படுக்கையும் நீங்கலாக வேறு எதையும் சிறைக்குள் எடுத்துச் செல்ல விடுவதில்லை. இது சிறைச்சாலையின் விதிமுறை. இதனல் என்னுடைய துணிமணிகள் சில சிறைவாயிலிலேயே இருந்தன. நான் அவற்றில் இருந்து என் குல்லாவை எடுத்துப் போட்டுக் கொண்டு டிஸ்டிரிக்ட்டு மாஜிஸ்டிரேட்டின் மோட்டாரில் ஏறி உட்கார்ந்து கொண்டேன். அதில் நான்குபுறமும் திரை போடப்பட்டிருந்தது.

மாஜிஸ்டிரேட்டு டிரைவரை மேற்கு நோக்கிச் செல்லும்படி கூறினர். "எங்குப் போகிறோம்" என்று நான் கேட்டதற்கு "பிறகு கூறுகிறேன்" என்று சொல்லிவிட்டார். ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரே மோட்டார் வந்ததும், அங்கே திருப்பாமல் நேரே மேற்கே செலுத்தும்படி அவர் கூறினர். சிறிது நேரத்திற்குள் நாங்கள் ஊரைவிட்டு வெளியே வந்துவிட்டோம். அப்போதுதான் அவர் திரைகளை நீக்கிவிட்டார். தாம் இவ்விதமாகச் செய்யவேண்டி யிருக்கிறதே என்பது தமக்கு வருத்தமாயிருப்பதாகக் கூறி என்னிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, நான் ஹஜாரிபாக்குக்குச் செல்லவேண்டும் என்றும், ஆனல் வழக்கமான வழியாக அன்று எனவும் கூறினர். சப்ரா-பனரஸ் பாதையில் சரயூ நதிக்கரையில் உள்ள சிறியதொரு ஸ்டேஷனகிய மாஞ்சீயில் பனரஸ் வண்டியில் என்னை ஏற்றிவிடுவார் என்றும், அங்கிருந்து நான் பனரஸ் செல்லும் வழியாக முகல்சராய்க்கு அழைத்துச் செல்லப்படுவேன் என்றும், அங்கிருந்து கிராண்டு-

கார்டு லேன் வழியாக சோன் கிழக்குக் கரை ஸ்டேஷன் வரையில் அழைத்துச் செல்லப்பட்டு, அங்கிருந்து மோட்டாரில் ஹஜாரி பாக்குக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்படுவேன் என்றும் கூறினார். எனக்காக ரெயில்வே போலீஸின் அசிஸ்டண்டு சூப்பரின்டெண்டு தம் சலூனைக்கொண்டு வருகிறார் என்றும், ஆகையால் எனக்கு யாதொரு கஷ்டமும் இருக்காது என்றும் கூறினார்.

இது நிற்க, நாங்கள் விரைவிலேயே மாஞ்சீ ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்துவிட்டோம். டிப்டி சாஹபும் சிறிது நேரத்திற்குள் என்னுடைய சாமான்களுடன் வந்து சேர்ந்துவிட்டார். வண்டியும் வந்துவிட்டது. நான் சலூனில் ஏறிக்கொண்டேன். நான் யாரென்று எவருக்கும் சொல்ல வேண்டாமென்று மட்டும் போலீஸ் சூப்பரின்டெண்ட்டு கேட்டுக்கொண்டார். நான் "எதற்காக என்னை யார் என்று எவரிடமும் சொல்லிக் கொள்ளப் போகிறேன்? ஆனால் எவராவது என்னை யார் என்று புரிந்துகொண்டால் நான் அதற்கென்ன செய்வது?" என்றேன். இதைக் கேட்டு அவர் சிரித்தார். பிறகு நாங்கள் இருவரும் உல்லாசமாகப் பேசிக் கொண்டு சென்றோம். இருட்டிவிட்டது. எங்கள் பெட்டி வண்டித்தொடரின் கடைசிப் பெட்டியுடன் கோர்க்கப்பட்டிருந்தன. இதனால் அவ்வளவு கடைசி வரையில் பிரயாணிகள் எவரும் வருவதில்லை. சற்று இராப்பொழுது இருக்கும்போதே பனாசுக்கு வந்து சேர்ந்துவிட்டோம். அங்கிருந்து மோட்டாரில் ஏறிச் சென்று முகல்சராயை அடைந்தோம். அங்கு எனக்கு ஏதாவது உணவு அளிப்பதற்காக என்னை ரயில்வே சிற்றுண்டிச் சாலைக்குச் சூப்பரின்டெண்டு அழைத்துச் சென்றார். ஆனால் நான் அப்போது உண்ணத் தயாராயில்லை. அங்கே சிறிது நேரம் உட்கார்ந்திருந்தேன். இதற்குள் வண்டி வந்துவிட்டது. இதனிடையில் சிலர் என்னை யார் என்று தெரிந்துகொண்டார்கள் போலிருந்தது. நான் உண்பதற்காக அவர்கள் மாம்பழம் வாங்கி வந்து கொடுத்தார்கள். வண்டி புறப்பட்டபின் காலைக் கடனை முடித்துக் கொண்டு குளியல் முதலானவற்றையும் முடித்துக்கொண்டு சிற்றுண்டி உண்டேன். சோன் கிழக்குக் கரை ஸ்டேஷனில் கயா ஜில்லாவின் போலீஸ் சூப்பரின்டெண்டு வந்து சந்தித்தார். அவர் என்னை ஒரு மோட்டாரில் ஏற்றினார். ஒரு இன்ஸ்பெக்டருடன் என்னை ஹஜாரிபாக்குக்கு புறப்பாடு செய்து வைத்தார். அங்கு நான் பகல் ஒரு மணிக்குச் சற்று முன்னம் போய்ச் சேர்ந்தேன். என் நண்பர்களோடு நானும் அங்கே சிறை வைக்கப்பட்டேன். இப்படிச் சுற்றி வளைத்து நான் கொண்டு வரப்பட்டதைக் கேட்டு

அவர்கள் வியப்படைந்தார்கள். மிஸ்டர் கானேச் சப்ராவில் கேட்டபோதே அவர் இதற்குக் காரணத்தை விளக்கினர். சப்ரா, சோன்பூர், பட்ன, கயா முதலிய ஸ்டேஷன்களில் மக்கள் கூட்டம் கூடி என்னேப் பார்ப்பதற்கு இடங்கொடுக்க அரசாங்கத்தார் விரும்பவில்லே யாதலால், வேண்டுமென்றே இந்த வழியாக வந்ததாகக் கூறினர். கூட வந்த இன்ஸ்பெக்டருக்கும், வழியில் மோட்டாரை எங்குமே நிறுத்தக் கூடாதென்று உத்தரவு இடப் பட்டிருந்தது என்றும், அவுரங்கபாத்தில் ஊருக்குள் சாலே சென்ற இடத்தில் மோட்டாரை விரைவாக ஓட்டும்படியும் உத் திரவு இடப்பட்டிருந்ததென்றும் கூறினர். அவர் அப்படியே தான் செய்தார்.

நான் சப்ரா சிறையைவிட்டுச் சென்றபின், சிறைக்காவலர் என் சாமான்களே எடுத்து வருவதற்காக உள்ளே சென்றபோது தான் நான் அங்கிருந்து கொண்டு போகப்பட்டு விட்டேன் என்பது அங்கிருந்தவர்களுக்குத் தெரிய வந்தது. இதனல் அவர் களுக்கு அதிக ஆத்திரம் வந்தது. என்னே ஏதோ ஒரு கண் காணு இடத்திற்குக் கொண்டுபோய் விட்டார்கள் என்று மொட்டை மாடியில் நின்று கொண்டு கூச்சலிட ஆரம்பித்துவிட்டார்கள். வெளியே நின்ற யாரோ ஓர் ஆள் பீகார் பாங்கிக்கு ஓடோடிச் சென்று என் தலைமைனருக்கு இதைத் தெரிவித்தார். அவர் தம் முடைய மோட்டாரில் ஏறிக்கொண்டு விரைவில் சப்ரா ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தார். என்னே அங்கிருந்து எந்த வண்டியிலும் ஏற்றிச் செல்லவில்லே யென்பது அவருக்கு அங்கே தெரியவந்தது. மேலே உள்ள ஸ்டேஷன் ஏதாவது ஒன்றிலிருந்து என்னே ஏற்றிச் சென்றிருக்கலாமென்று அவர் நினேத்தார். சோன்பூர் பக்கம் அழைத்துச் செல்லாமல் என்னே பனரஸ் பக்கம் அழைத்துச் சென்ருர்கள் என்பது அவருக்குத் தெரியுமா? அவர் சோன்பூர் வரையில் மோட்டாரில் சென்ருர். அங்கும் நான் காணப்படாதபோது அவர் ஏமாந்துபோய்ச் சப்ராவுக்குத் திரும்பி வந்துவிட்டார். பின்னல், நான் ஹஜாரிபாக்குக்குப் போய்விட்டேன் என்பது தெரிய வந்ததும் அங்கு வந்த என்னேக் கண்டார்.

# 91. ஹஜாரிபாக் சிறையில்

ஹஜாரிபாக் சிறையின் காவலர் பாபூ நாராயண் பிரசாதை எனக்கு முன்னமே தெரியும். அவருடைய அண்ணன் என் பள்ளித்தோழர். அவருடன் எனக்கு நட்பு உண்டு. அவருடைய வீட்டிற்கு நான் அடிக்கடி சென்று வருவதுண்டு. பாபூ நாராயண் பிரசாத் மிக்கத் திறமையும் அறிவும் வாய்ந்த சிறைக் காவலர். ராம் தயாளு பாபூ, ஸ்ரீ பாபூ, விபின் பாபூ முதலானோர் இருந்த இடத்திலேயே எனக்கும் அவர் இடமளித்தார். சிறையில் எதையாவது படிப்பதிலும் நூல் நூற்பதிலும் என் பொழுதைக் கழித்து வந்தேன். பிறகு சூப்பரிண்டெண்டு மேஜர் ஐயங்காரிடம் கேட்டுக்கொண்டு துணியும் நவார் நாடாவும் நெசவு செய்யப்படும் தொழிற்சாலையில் நெசவு வேலை செய்யத் தொடங்கினேன். இந்த ஐந்தாறு மாதங்களில் சுமார் இருநூறு கஜம் நவாரும், 24–25 கஜம் துணியும் நெய்தேன். ஆனால் அத்துணி சர்க்காவில் நூற்ற நூலால் நெய்யப்படவில்லை. சிறையில் கொடுத்த நூலால்தான் நெசவு செய்யப்பட்டது. இதனால் அதை அங்கேயே விட்டுவிட்டேன். நாடாவை நான் சிறையை விட்டுச் செல்லும்போது விலைக்கு வாங்கிக் கொண்டேன். நான் ஜுலை மாதத்தின் முதல் வாரத்தில் சிறை கொள்ளப்பட்டேன். டிசம்பர் கடைசி வரையில் அங்குத் தங்கியிருந்து பிறகு விடுதலையானேன். நாட்கள் விரைவில் கழிந்துவிட்டன.

இதற்கிடையில் ஸ்ரீ தீப் நாராயண் சின்ஹாவும் அங்கு வந்து சேர்ந்தார். அவரும் எங்களோடு அதே அறையில் இருந்தார். தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த சுவாமி பவானீ தயாளும் அதே கட்டில் இருந்தார். மற்றக் கட்டுகளில் இருந்த நண்பர்களும் சிறைக்காவலரின் அனுமதியைப் பெற்றுக்கொண்டு எப்போதாவது எங்களை வந்து பார்ப்பார்கள். அல்லது நாங்கள் அவர்களுடைய கட்டுக்குச் சென்று அவர்களைச் சந்தித்து வருவோம். யாதொரு விஷயத்திலும் கஷ்டம் ஏற்படவில்லை. புத்தகங்கள் சம்பந்தமாக மட்டும் சில தடைகள் இருந்தன. போலீசாராவது அல்லது மாஜிஸ்டிரேட்டாவது பார்த்து அனுப்பாமல் எங்களுக்கு எந்தப் புத்தகமும் கிடைக்காது. அப்படிப் பார்த்து அனுப்புபவர் அதிகமாகப் படித்தவராகத் தெரியவில்லை. எந்தப் புத்தகத்தின் பெயரிலாவது "அரசியல்" என்ற சொல்லைக் கண்டுவிட்

டால் அவர் அதைக் கண்டிப்பாக அனுமதிக்கமாட்டார். உதாரணமாக அங்கு நடந்த ஒரு வேடிக்கையைக் கேளுங்கள்.

யாரோ ஒருவர் கல்லூரிகளில் கற்பிக்கப்பட்டு வந்த பொருளாதாரப் பாடப் புத்தகம் ஒன்று வேண்டுமென்று கேட்டார். "டெக்ஸ்ட் புக் ஆவ் பொலிடிகல் எக்கானமி" (அரசியல் பொருளாதாரப் பாடப் புத்தகம்) என்பது அதன் பெயர். அதன் பெயரில் "பொலிடிகல்" என்ற சொல் இருந்ததால் அவர் அதைக் கொடுக்க உடன்படவில்லை. ஆனல் "எ.பி.சி. ஆவ் கம்யூனிசம்" என்ற புத்தகத்தையும், "தியரி ஆவ் லீஷர் கிளாஸ்" (சுகவாச வாழ்க்கை இனத்தாரைப் பற்றிய கோட்பாடு) என்ற புத்தகத்தையும் அனுமதிக்கத் தயங்கவில்லை. முதல் புத்தகத்தை என்ன என்று நினைத்துக்கொண்டு அனுமதித்தாரோ தெரியவில்லை. மற்றொரு புத்தகத்தை, எங்களுக்கு நிறைய ஓய்வு இருந்ததால், அது எங்களுக்கு உல்லாசப் பொழுது போக்குக்காக உதவும் என்பதாகக் கருதி அவர் அனுமதித்தார் என்று நினைக்கிறேன்.

நான் சிறையில் இருந்தபோது எனக்கு ஒரு யோசனை தோன்றியது. காந்திஜீயின் கட்டுரைகள் பெரும்பாலும் வாரப் பத்திரிகைகளில் சிதறிக் கிடந்தன. அவற்றைச் சென்னையைச் சேர்ந்த ஸ்ரீ கணேசன் என்ற பதிப்பாளர் ஒன்று சேர்த்துப் புத்தக உருவில் வெளியிட்டிருந்தார். நான் அப்புத்தகத்திற்கு நீண்டதொரு முன்னுரை கூட எழுதியிருந்தேன். ஆயினும் காந்திஜீயின் கட்டுரைகளை விஷயம் விஷயமாகத் தனியாகத் தொகுத்து, ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு சிறிய முகவுரை எழுதி அதில் அக்கட்டுரைகளின் கருத்தைச் சுருக்கமாகக் கொடுத்து வெளியிட்டால், அத்தகைய நூலைப் படிப்போர் காந்திஜீயின் கருத்துக்களைச் சில சொற்களால் புரிந்துகொண்டு பிறகு அவற்றை விரிவாக அவருடைய சொந்த சொற்களில் ஒரே இடத்தில் ஒழுங்காகப் படிக்க உதவும் என்று நினைத்தேன். இதனல் நான் அக்கட்டுரைகளை அஹிம்சா, சுயராஜ்யம், சத்தியாக்கிரகம், கல்வி, சாதி என்று பல பாகங்களாகப் பிரித்துக்கொண்டேன். பிறகு ஒவ்வொரு பொருளைப் பற்றியும் ஒரு சிறிய முகவுரை எழுதி அதில் அக்கட்டுரைகளின் சாராம்சத்தைச் சுருக்கமாகக் கொடுத்தேன். கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். பிறகு சில நண்பர்களைக் கொண்டு அவற்றைப் பெயர்த்து எழுதச் சொல்லிப் பிரதிகளைத் தயார் செய்துகொண்டேன். என்னுடைய முகவுரைகளையும் எழுதி முடித்துவிட்டேன். இந்தச் சமயத்தில் நான் விடுதலையாகி விட்டேன்.

சிறையை விட்டு வெளியே வந்தபின் அவற்றை ஒரு முறை பார்வையிட்டு அச்சிடக் கொடுக்கப் பொழுது கிடைக்கவில்லை. காந்திஜீயைச் சந்தித்தபோது இவ்விதமாகச் செய்வது அவருக்குப் பிடிக்குமா என்று கேட்டேன். அவரும் அனுமதி அளித்தார். சில நாட்களுக்கு முன்னமே யாரோ ஒருவர் குஜராத்தி மொழியில் இவ்விதமாகச் செய்திருக்கிறுர் என்பதையும் கூறினர். மற்ற நண்பர்கள் சிலருக்கும் இது பிடித்திருந்தது. சிறப்பாக, புருலியாவைச் சேர்ந்த ஸ்ரீ நிவாரண் சந்திரதாஸ் குப்தா இதை மிகவும் பாராட்டினர். அவர் முகவுரைகளை எப்படிச் சில இடங்களில் செம்மைப்படுத்தலாமென்பதையும் எடுத்துக் காட்டினர். நான் அப்படியே செய்தேன். 1931இல் இப்புத்தகத்தை அச்சிட அனுப்ப முடியவில்லை. 1932இல் நான் மீண்டும் சிறை கொள்ளப்பட்டபோது சதாகத் ஆச்ரமும் பறிமுதல் செய்யப்பட்டுப் போயிற்று. அவ்வளவுதான், நான் எழுதி வைத்திருந்தது பிறகு எனக்குக் கிடைக்கவில்லை. அது எங்கே வைக்கப்பட்டிருந்த தென்பதோ, எப்படிக் காணுமல் போய்விட்டது என்பதோ தெரியாது.

சிறைக்குள் சர்க்கா சுற்றுவதும், கைத்தொழில் புரிவதும் மட்டும் அன்றி மத சம்பந்தமான நூல்களையும் ஓதி வந்தேன். சப்ராவைச் சேர்ந்த பண்டித் பரத் மிச்ராஜீயும் எங்கள் கூட இருந்தார். அவரிடம் ஸ்ரீ வால்மீகி ராமாயணமும், பண்டித் விஷ்ணு தத்த சுக்லாவிடம் 'துர்கா சப்த சதீ' சரித்திரமும் கேட்டேன். மேலும் இச்சமயத்தில்தான் நான் முக்கிய உபநிஷத்துக்களை முதலில் இருந்து கடைசி வரையில் முறையாகப் படித்தேன்.

பீகார் மாகாணத்தின் ஜில்லாக்கள் எல்லாவற்றிலும் இருந்த தலைமையான காங்கிரஸ்காரர்கள்தாம் ஹஜாரிபாக் சிறைக்கு அனுப்பப்பட்டிருந்தார்கள். நான் இடையருது மாகாணத்தில் சுற்றிவந்து கொண்டிருந்ததால் ஏராளமான காங்கிரஸ் செயலாளர்களை அறிவேன். ஆனல் சிறையில் ஒவ்வொருவருடனும் கூடி இத்தனை காலம் வாழ்வதற்கு வாய்ப்புக் கிடைத்தது போல அத்தனை நாட்கள் கூடி இருப்பதற்கு வெளியே வாய்ப்புக் கிடைக்கவில்லை. சிறையில்தான் சுவாமி பவாநீ தயாளுவுடன் நெடுநாள் வரையில் இருந்து ஒருவரை ஒருவர் நன்ருக அறிந்து பழகுவதற்கு வாய்ப்புக் கிடைத்தது. அவருடன் அங்கே இருந்து வந்ததின் நினைவு என்றுமே மறக்காத இன்ப நினைவாக இருந்துவரும். முஜபர்பூர் ஜில்லாவைச் சேர்ந்த தாகூர் நவாப் சின்ஹா ஒரு கர்நாடகமான, அல்லது ஆங்கிலக் கல்வி அறி

யாத கிழவர் என்று கூறுவது பொருத்தமாகும். காந்திஜீயின் ஒத்துழையாமைக் கிளர்ச்சியானது கிராமங்களில் இருந்த பல ருக்குப் புகழைத் தந்தது. பீகாரில் கிராம மக்களிடையில்தான் அக்கிளர்ச்சி அதிக வலிமை பெற்றிருந்தது. இதற்கு மாறுக, பக்கத்து மாகாணமாகிய ஐக்கிய மாகாணத்தில் இக்கிளர்ச்சி நகரங்களில்தாம் அதிக வலிமை பெற்றிருந்தது. சம்பரானில் காந்திஜீ செய்த பணியைக் கிராமத்தார் அறிந்திருந்தார்கள். இதனுல் பெரும்பாலும் கிராமங்களிலேயே வசித்து வந்த குடியா னவர்களிடையில் அவருக்கு நிறைய செல்வாக்கு உண்டாகிவிட் டது. இதனுல் ஈர்க்கப்பட்டு தாகூர் நவாப் சின்ஹா இந்தக் கிளர்ச்சியில் முதலிலேயே வந்து சேர்ந்துவிட்டார். அவர் மட் டும் தனியாக வரவில்லே. அவருடைய மகன், சகோதரரின் மகன், பேரன் எல்லாரையும் தம்முடன் கொண்டு வந்தார். சீதா மறி சப் டிவிஷனில் எது நடக்க வேண்டுமானுலும், எந்தப் பணி புரிய வேண்டுமானுலும், அதன் பொறுப்பு தாகூர் நவாப் சின்ஹா வின் மேல்தான் விழும். அவர் தாம் தலேமை வகித்து வந்தார். தற்கால முறைப்படி கல்வி கற்காவிட்டாலும் அவர் மிகக் கெட்டிக் காரர். எல்லா விஷயங்களேயும் எளிதில் புரிந்து கொள்வார். காங்கிரஸின் கட்டளேயை நிறைவேற்றுவதற்கும் நிறைவேற்றச் செய்வதற்கும் அவர் தம்மால் இயன்றவரையில் பாடுபட்டு வந் தார். அவரும் தம் மகனுடன் அதே சிறையில் எங்களுடன் இருந்தார். அவரையும் நன்ருக அறிந்து கொள்வதற்கு நல்ல வாய்ப்பு எனக்கு கிட்டியது. அவர் தம் வாழ்நாள் முடியும் வரை யில் தம்முடைய கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்து நின் ருர். 1942 ஆகஸ்டில் காந்திஜீயும் மற்றவர்களும் சிறை கொள் ளப்பட்ட பின் உண்டான கலவரங்களிலும் அவர் இக்கிளர்ச்சி யில் முதல் முதலில் ஈடுபட்டபோது கொண்டிருந்த அதே உற்சா கத்துடனும், அச்சமின்மையுடனும், உறுதியான பற்றுதலுடனும் கலந்து கொண்டார். சீதாமறீ, நேபாளத்திற்கு அருகில் இருக் கிறது. போலீசாரின் வலேயில் சிக்காமல் இருந்து கொண்டு வேலே செய்வதற்காக அவர் நேபாளத்தின் பள்ளத்தாக்குக்குச் சென்றுவிட்டார். அங்கிருந்து கொண்டு காங்கிரஸின் வேலே யைச் செய்து வந்தார். அங்கேயே நோய் வாய்ப்பட்டு இறந்து போனுர் என்று நாங்கள் அக்காலத்தில் சிறையில் இருந்தபோது கேள்விப்பட்டோம்.

சுவாமி சகஜானந்தரும் சிறையில் இருந்தார். பலர் அவரிடம் கீதை பாடம் கேட்டு வந்தார்கள். எனக்கும் கேட்க்

வேண்டுமென்ற விருப்பம் இருந்தது. ஆனால் நேரம் இல்லாத தால் இந்த ஆசை நிறைவேறவில்லை. மற்றவர்கள் எல்லாரையும் விட ஸ்ரீ நிவாரண் சந்திரதாஸ் குப்தாவுடன்தான் எனக்கு நெருங் கிய நட்பு உண்டாயிற்று. அவர் மிகவும் பயபக்தி உடையவர். அவர் காந்திஜீயின் ஒத்துழையாமைக் கிளர்ச்சியை வெறும் அரசியலுடன் சம்பந்தப்பட்ட ஒரு கிளர்ச்சியாக மட்டும் கருதாமல் அதனை ஆன்ம வளர்ச்சிக்கு ஒரு சாதனமாகக் கருதி னார். அவரிடம் நாங்கள் பதஞ்சலி யோக சூத்திரத்தைக் கற்றறிந் தோம். இதை அவர் கற்பித்த முறையிலிருந்து அவருடைய சிறந்த கல்வியும் ஆழ்ந்த ஆராய்ச்சித் திறனும் தெரிய வந்தன. அவர் எவ்விதமாகத் தம்முடைய வாழ்க்கையைச் சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள விதிகளின்படி நடத்த முயன்றுவந்தார் என்பதும் தெரியவந்தது. சிறிது காலத்திற்குப் பின் க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டு அவர் உயிர் நீத்தார். அவர் விட்டுச்சென்ற இடத்தை இதுவரையில் நிரப்ப முடியவில்லை.

சிறையில் சில விஷயங்களில் நாங்கள் மகிழ்ச்சியளிக்கும் வகையில் போட்டியும் போட்டு வந்தோம். சிலர் 'பந்தீ'[1] அல்லது 'கைதி' என்ற பெயருடன் ஒரு கையெழுத்து மாதப் பத்திரிகையை வெளியிட்டார்கள். வேறு சிலர் 'காராகர்' (சிறை) என்ற பெயர் கொண்ட மற்றொரு பத்திரிகையை வெளியிட் டார்கள். 'பந்தி'களும் 'கைதி'களும் வந்து வந்துகொண்டிருக் கிறார்கள், மாறி மாறிக் கொண்டிருக்கிறார்கள், 'காரா கரோ' இருந்தவண்ணமே இருந்துவருகிறது என்று அதில் சிலேடை யாக எழுதப்பட்டது. இப்பத்திரிகைகளில் தேசீயக் கிளர்ச்சி களைப்பற்றிக் கட்டுரைகள் எழுதப்பட்டு வந்தன. தனிச் சிறப்பு மலர் ஒன்றில் எல்லா ஜில்லாக்களில் இருந்தும் வந்துள்ள தலைமை யான செயலாளர்களைக் கொண்டு தத்தம் ஜில்லாக்களில் இக் கிளர்ச்சியானது எவ்விதமாக நடந்து வருகிறதென்பதைப்பற்றிக் கட்டுரைகள் எழுதி வாங்கி வெளியிடப்பட்டன. இவற்றிலிருந்து இக்கிளர்ச்சியின் வரலாற்றை எழுதுவதற்கு வேண்டிய விஷயங் கள் நிறையக் கிடைத்தன என்று நினைக்கிறேன். ஆனால் இந்தச் சிறப்பு விழா மலர் இப்போது எங்கிருக்கிறதென்பது நினைவில்லை. இப்பத்திரிகைகளை நடத்தியவர்களிலும் அவற்றில் எழுதி வந்தவர் களிலும் முக்கியமானவர்கள் சர்வஸ்ரீ சுவாமி பவாநீ தயாளு, கங்கயாவைச் சேர்ந்த பாபூ மதுரா பிரசாத் சின்ஹா, ராம

1. இதற்கும் 'கைதி' என்றே பொருள்.

விருக்ஷ் பேனீபுரி, மிகவும் உற்சாகம் உடைய இளைஞர் மகாமாயா பிரசாத் ஆகியோர் ஆவர். ஓரிரண்டு மலர்கள் சில படங்களையும் கொண்டிருந்தன. அவற்றை வரைந்த பெருமை கித்தௌரைச் சேர்ந்த குமார் காளிகா பிரசாதை சின்ஹாவைச் சேரும்.

இம்முறை சிறை சென்றதில் எங்களுக்கு சிறையைப்பற்றி அதிக அறிவோ அனுபவமோ உண்டாகவில்லை. ஏனெனில் அங்கு நாங்கள் இத்தனை பேர் இருந்ததால் மற்றவர்கள்மேல் கவனம் செல்லவில்லை. மேலும் மற்றச் சாதாரண கைதிகளைச் சந்திப்பதற்கு எங்களுக்கு வாய்ப்பும் கிடைக்கவில்லை. எங்களுக் குத் தொண்டு புரிவதற்காக அளிக்கப்பட்ட கைதிகளோடும், நான் நாடா நெய்வதற்காகத் தொழிற்சாலைக்குச் சென்று வந்தபோது அங்கே வேலை செய்துவந்த கைதிகளோடும்தான் பழக்கம் உண்டாயிற்று. ஆயினும் அவர்களுள் பலருடன் நன்ருகப் பழக்கமாகிவிட்டது. பல்வேறு காரணங்களால் அவர்கள் சிறைக்கு வந்திருந்தார்கள். அவர்களுடன் பேசிப் பழகி வந்ததிலிருந்து, அவர்கள் இவ்விதமான நெடிய தண்டனை பெறுவதற்கு என்ன செய்தார்கள் என்பதைப்பற்றி எளிதில் எதுவும் கண்டுபிடிக்க முடியவில்லை. இதைப்பற்றிப் பின்னுல் தெரியவந்தது. வேருெரு இடத்தில் இதைப்பற்றிக் கூறுவேன்.

ஆரம்பத்தில் எங்களுக்குச் செய்தித்தாள்கள், எவையும் கிடைக்கவில்லை. அது எல்லாருக்கும் பெரிய குறையாக இருந்தது. ஆனுல் சிறையானது, ஏற்பாடு மட்டும் செய்துவிட்டால், எது வேண்டுமானுலும் கிடைக்கக்கூடியதோர் இடமாகும். இவ் விதமான தனி ஏற்பாட்டிற்கு அங்குள்ளவர்கள் ஒரு பெயரைத் தேடிப்பிடித்தார்கள். அதைத் ‘திக்டம்’ என்று சொல்லுவார்கள். இத் ‘திக்டம்’ சூழ்ச்சி வழியாக எதாவது ஒரு செய்தித்தாளை வரவழைத்து விடுவார்கள். அதைப் படித்துவிட்டுப் பிறகு மற்றவர்களிடம் அனுப்பிவிடுவார்கள். சில நாட்களுக்குப் பிறகு ஒரு அன்பர் எல்லாருடைய சம்மதத்தையும் பெற்று எங்கிருந்தோ ஒரு செய்தித்தாளை நாள்தோறும் வரவழைத்து அதைப் படித்து மற்றவர்களுக்குச் செய்திகளைக் கூறிவந்தார். செய்திகளைக் கேட்கும் நேரம் எப்போது வரும் என்று எல்லாரும் மிக்க ஆவலுடன் காத்துக்கொண்டிருப்பார்கள். அவருடைய ஞாபக சக்தியும் அவர் செய்திகளைக் கூறும் முறையும் எல்லோருக்கும் மகிழ்ச்சியை அளித்துவந்தன. சில நாட்களுக்குப் பிறகு அரசாங்கத்தார் எங்களுக்குச் செய்தித்தாள் கொடுப்பதற்கு ஒத்துக்கொண்டார்கள். ஆனுல் அவர்களுடைய காரியங்கள் எல்லாம் நடப்பது

போலவே, உலகத்தாருக்குக் காட்டிக்கொள்வதற்காகவே இச் செய்தித்தாளும் அளிக்கப்பட்டது. எங்களுக்கு வாரத்தில் ஒரு முறைதான் செய்தித்தாள் கிடைத்தது. அதுவும் 'ஸ்டேட்ஸ் மன்'னின் வாரப் பதிப்புத்தான். அது அயல் நாட்டாருக்காக வெளியிடப்பட்டு வந்தது. அதில் கொடுக்கப்பட்டிருந்த கருத்துக்களைத் தெரிந்துகொள்வதற்கு எங்களுக்கு யாருக்குமே ஆவல் இல்லை. அதில் உள்ள செய்திகளில் அயல் நாட்டு வாசகர்களுக்குத்தான் அதிகப் பற்றுதல் இருக்கும். மேலும் அவை ஒரு வாரம் பிற்பட்ட செய்திகளேதாம். இந்தியாவில் இருப்பவர்களுக்கு, அதுவும் சத்தியாக்கிரகிகளுக்கு, அச்செய்தி யாதும் பயன் இல்லை. அரசியல் சட்ட அமைப்பாயினும் சரி, அல்லது வேறு எவ்விதமான சீர்திருத்தமாயினும் சரி, பிரிட்டிஷ் அரசாங்கம் அளிப்பதாக முன்வந்து செய்யும் அறிக்கை எதுவுமே பெரும்பாலும் இப்படித்தான் இருக்கும். வெறும் பேருக்காக ஏதோ ஒன்று அளிக்கப்படும், ஆனால் அதில் சத்து இருக்காது. கலப்பில்லாத வாய்மை இருக்காது. இவற்றைக் கொண்டுதான் சிறை வாழ்க்கையைக் கழிக்க வேண்டியிருந்தது.

# 92. வட்டமேஜை மகாநாடு—மோதிலால்ஜீயின் மரணம்

நான் ஹஜாரிபாக்குக்குப் போய்ச் சேர்ந்து சில நாட்களுக்குப்பின், லண்டனில் நடைபெறப் போவதாகச் சொல்லப்பட்ட வட்டமேஜை மகாநாட்டின் பேச்சு எழுந்தது. பண்டித் மோதிலால்ஜீயைச் சந்தித்துப் பேசியதைப்பற்றிய செய்தியை மிஸ்டர் ஸ்லோகோம்பு என்பவர்தாம் எல்லாருக்கும் முந்தி வெளியிட்டார். அதற்குப்பின் சர்தேஜ் பகாதுர் சப்ரூவும், ஸ்ரீ ஜயகரும் மத்தியஸ்தம் செய்யத் தொடங்கினர்கள். காந்திஜீயும் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களில் சிலரும் புனவில் இருந்தார்கள். நைநீ சிறையில் இருந்த பண்டித்மோதிலாலும், பண்டித் ஜவஹர்லாலும், டாக்டர் மகமூதும் அங்குக் கொண்டுவரப்பட்டார்கள். சர் சப்ரூ, மிஸ்டர் ஜயகர் ஆகிய இருவரும் அரசாங்கத்திற்கும் இவர்களுக்கும் இடையில் மத்தியஸ்தம் செய்து வைக்கப் பார்த்தார்கள். ஆனல் அது முடியவில்லை. பேச்சு முறிந்துவிட்டது.

என்னோடு ஹஜாரிபாக் சிறையில் இருந்த என் நண்பர்களிடம் ஒரு விஷயத்தைக் கவனித்தேன். சமாதானத்தைப் பற்றி ஏதாவது செய்தி பத்திரிகைகளில் வந்தால் அதை அவர்கள் அதிக ஆவலுடன் படிப்பதையும் பிறகு அதைப்பற்றி தமக்குள் மிகவும் வாதம் செய்வதையும் கவனித்தேன். அவர்களில் பலர் சமாதானத்திற்காக மிகவும் ஆவல் படுவதாகத் தெரியவந்தது. சுயராஜ்யத்தைப்பற்றித் திருப்திகரமான முடிவுக்கு வராத வரையில் ஒப்பந்தம் செய்யக்கூடாது என்று கண்டிப்பாக நின்றவர்கள் சிலரும் அங்கு இருந்தார்கள் என்பது உண்மை. ஆயினும், வட்டமேஜை மகாநாட்டில் ஏதாவது திருப்திகரமான பேச்சு நடக்கலாமென்றும், ஆகையால் இந்தச் சமயத்தில் அதிகமாகச் சண்டையைக் கிளப்பிவிடாமல் அங்குச் செல்வதற்கு ஒத்துக் கொள்ள வேண்டும் என்றும் மற்றவர்கள் நினைத்தார்கள். சமாதானம் நடக்க முடியாமல்போனது அப்படிப்பட்டவர்களுக்குப் பிடிக்கவில்லை.

டிசம்பரில் சிறையிலிருந்து விடுதலையானதும் நான் நேரே பம்பாய்க்குச் சென்றேன். அப்போது பம்பாய்தான் ஒரு விதத்தில் இக்கிளர்ச்சிக்குத் தலைமைத் தலமாக இருந்துவந்தது. அங்கு ஆஜாத் மைதானத்தில் கூட்டங்கள் நடந்து வந்தன. தடியடி செய்யப்பட்டு அவை கலைக்கப்பட்டு வந்தன. பலர் காயமடைந்தனர். அவர்கள் எல்லாருக்கும் தொண்டு புரிவதற்காகக் காங்கிரஸ் மருத்துவசாலையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அங்கிருந்த பஞ்சு மண்டி பல நாட்களாக மூடப்பட்டிருந்தது. மற்ற வகைகளிலும் அங்குள்ள மக்கள் கிளர்ச்சியில் நிறையப் பங்கு எடுத்துப் பணியாற்றி வந்தார்கள். அங்குச் சென்று நான் எல்லாரையும் சந்தித்தேன். சர்தார் வல்லப் பாயீயையும் சந்தித்தேன்.

பீகாரில் சௌகீதாரி வரி கொடாமை வேலைத் திட்டம் நடந்து கொண்டிருந்தது. அரசாங்கம் அதை மிகவும் கடுமையுடன் ஒறுத்து வந்தது. எவரிடமாவதிருந்து இரண்டு நான்கு அணுகூட வரி நிலுவை வரவேண்டியிருந்தாலும் அதற்காக நிறையச் சொத்து நாசம் செய்யப்பட்டு வந்தது. ஏதாவது ஒரு கிராமத்தார் வரி கொடுப்பதை நிறுத்திவிட்டால் அக்கிராமம் முழுவதும் சூரையாடப்படும். எங்களுடைய ஜமீன்தாரியில் இருந்த ஒரு கிராமத்தைப் பற்றி விவரங்களைத் திரட்டினேன். அங்குப் போலீசார் சென்று ஒரு ஆளைத் துப்பாக்கியால் சுட்டுக்கொன்று விட்டார்கள். மற்றவர்களை நையப்புடைத்தார்கள். மற்றொரு

கிராமத்திற்கு நானே சென்று பார்த்தேன். அங்கே போலீசார் ஒரு வீட்டிற்குள் புகுந்து நெற்களஞ்சியத்தை உடைத்தெறிந்து விட்டார்கள். பானை சட்டி எல்லாவற்றையும் சுக்குச் சுக்காய் உடைத்து விட்டார்கள். கட்டில்களில் வரிந்திருந்த கயிற்றையெல்லாம்கூட அறுத்தெறிந்துவிட்டார்கள். வீட்டின் மரக் கம்பங்களைக்கூட வெட்டிச் சாய்த்துவிட்டார்கள். போலீசார் ஒரு கிராமத்தைவிட்டுச் சென்றபின் கேணியிலிருந்து தண்ணீர் இறைத்துத் தாகத்தை தணித்துக் கொள்வதற்கு ஒரு குடம், ஒரு கயிறு இருக்க வேண்டுமே! அவைகூட இல்லாத நிலைமையில் போலீசார் அதைச் சூறையாடிவிட்டுச் செல்வார்கள். இவ்வண்ணமே பல கிராமங்களில் துப்பாக்கிப் பிரயோகமும் செய்யப்பட்டது. அடக்குமுறை மிகவும் கடுமையாக நடத்தப்பட்டு வந்தது. சிறை செல்வதற்கு மக்கள் அஞ்சவில்லையென்பதை அரசாங்கத்தார் பிறகு கண்டு கொண்டபோது அபராதம் போடத் தொடங்கி விட்டார்கள். அபராதமாகக் கொழுத்த தொகையை விதித்து வந்தார்கள். அதைத் தண்டல் செய்வதில் மக்களுக்குப் பல கொடுமைகள் செய்யப்பட்டு வந்தன. ஒன்றுக்குப் பத்தாக பொருள் நாசம் செய்யப்படும். யாரோ ஒருவர் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்ததின் பேரில், ஹிந்து பொதுக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் செய்த குற்றத்திற்காக அக்குடும்பத்தார் எல்லோரின் பொதுச் சொத்தை ஏலம் போடவோ பறிமுதல் செய்யவோ முடியாது என்று ஒரு தீர்ப்பு அளிக்கப்பட்டது. இதனால் இந்த அநியாயம் சிறிதளவு தடுக்கப்பட்டது. ஆயினும், அபராதத்தாலும், சௌகீதாரி வரி கொடுக்காததற்காக செய்யப்பட்டு வந்த சூறையாட்டத்தாலும் மக்களிடையில் அச்சம் பரவி வருவது காணப்பட்டது. ஆனால் இவ்வளவு நடந்தும்கூட கிளர்ச்சி நடந்து கொண்டேயிருந்தது. எந்த இடத்திலும் நின்று போகவில்லை.

ஏறக்குறைய அதே சமயத்தில் பண்டித் மோதிலால்ஜீ விடுதலை செய்யப்பட்டார். அவருடைய உடல்நிலை மிகவும் கெட்டுப் போய்விட்டது. நான் பிரயாகுக்குச் சென்று அவரைச் சந்தித்தேன். அவர் வைத்தியம் செய்து கொள்வதற்காகக் கல்கத்தாவுக்குச் சென்றார். சில நாட்கள் வரையில் அங்குத் தங்கியிருந்து பிறகு பிரயாகுக்குத் திரும்பி வந்தார். அவருக்கு உடல் நலமில்லாமலிருந்தும் கூட கிளர்ச்சியை நடத்திவரும் பொறுப்பைத் தாமே எடுத்துக் கொண்டார். அவர் இட்ட கட்டளைப்படி வேலை செய்து வந்தேன். இந்தச் சமயத்தில்

அரசாங்கத்தார் காங்கிரஸ் செயலாற்றுக் குழுவைச் சட்டத்திற்குப் புறம்பானதென்று விளம்பரம் செய்து விட்டார்கள். இதே போல மாகாணக் குழுக்களும் மற்றக் குழுக்களும் சட்டத்திற்கு விரோதமானவைகளாக விளம்பரம் செய்யப்பட்டுப் போயின. இதனால் செயலாற்றுக் குழுவானது ஒழுங்கு முறைப்படி கூடுவது சட்டத்திற்கு விரோதமாக இருந்தது. ஆயினும் நாங்கள் முறைப்படி கூடாமல், சாதாரணமாக ஒரு இடத்தில் சந்தித்துக் கூட்டம் நடத்த முடிந்தது. இங்கிலாந்தில் வட்டமேஜை மகா நாட்டின் வேலை அநேகமாக முடிந்துவிட்டது. ஒரு வேலையும் உருப்படியாக நடக்கவில்லை. பிரதான மந்திரி மாக்டோனல்டானவர் ஒரு சொற்பொழிவு ஆற்றி அதைத் தள்ளிப் போட்டுவிட்டார். அப்பேச்சில் நிறைய குளறுபடி விஷயங்கள் இருந்தன! காங்கிரஸை வட்ட மேஜை மகாநாட்டில் சேர வைப்பதற்கு மறுபடியும் ஒரு முயற்சி செய்ய வேண்டுமென்று அவர்கள் விரும்புவதாகத் தெரிய வந்தது. இச் சொற்பொழிவுக்குச் சற்று முன்பே பண்டித்ஜீயின் யோசனையின் பேரில் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்கள் எவரெவர் சிறைக்கு வெளியே இருந்தார்களோ அவர்கள் அனைவரும் பிரயாகுக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். எல்லோருக்கும் கடிதம் அனுப்பப்பட்டது. இதைப் பற்றிப் பத்திரிகைகளில் அறிக்கை செய்ய முடியவில்லை. அப்படிச் செய்யப்படவுமில்லை. போலீசார் லாகூரில் ஓர் உறுப்பினரைச் சோதனை போட்டார்கள். அவரிடம் இக்கடிதம் கண்டு பிடிக்கப்பட்டது. அச்செய்தி பத்திரிகைகளில் வெளிவந்துவிட்டது. அதை நாங்களும் பார்த்தோம். அதற்குள்ளாக மிஸ்டர் மாக்டோனல்டின் பேச்சும் பத்திரிகைகளில் வந்துவிட்டது. இந்த இருக்கை கூடினால் முன்னம் ஒரு முறை செயலாற்றுக்குழு கூடியபோது நடந்தது போல நாங்கள் எல்லாரும் ஒரேயடியாகக் சிறை கொள்ளப்பட்டுப் போவோமென்று கவலைப் பட்டோம். அதனால் பண்டித்ஜீயானவர், என்னை "ஸ்ரீ மாக்டோனால்டின் சொற்பொழிவைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகச் செயலாற்றுக் குழுவானது இன்ன தேதியன்று பிரயாகில் கூடும் என்று பத்திரிகைகளில் ,அச்சிட்டுவிடு" என்று கட்டளையிட்டார். அச்சமயத்தில் மாளவீயஜீயும் மிகவும் உடல் நலம் கெட்டுச் சிறையில் இருந்து வெளிவந்தார். அவருக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது.

செயலாற்றுக்குழுவின் உறுப்பினர்கள் எவரெவர் வர முடியுமோ அவர்கள் அனைவரும் வந்து சேர்ந்தார்கள். சட்டத்திற்கு விரோதமாக நடத்தப்படும் இருக்கையில் அனைவரும் சிறை

கொள்ளப்பட்டு போவார்கள் என்று நாங்கள் நினைத்தோம். ஆனால் பண்டித்ஜீயானவர் மட்டும், நாம் மிஸ்டர் மாக்டோனல்டின் பேச்சைப் பற்றி ஆலாசனை செய்யப் போவதாக அறிக்கை செய்திருப்பதால் சிறை கொள்ளப்படமாட்டோம் என்று கூறினர். அப்படித்தான் ஆயிற்று. அன்று மாலையிலிருந்து இரவில் நெடு நேரம் வரையில் பேச்சு நடந்து கொண்டிருந்தது. மிஸ்டர் மால்டோனல்டின் பேச்சு எங்களுக்கு புரியவில்லையென்றும், அதை நாங்கள் ஏற்கவில்லை என்றும் முடிவுக்கு வந்தோம். பண்டித்ஜீயானவர் தம்முடைய சீர்கெட்ட உடல்நிலையிலும்கூட இடையருது வேலை புரிந்து வந்தார். நாங்கள் என்ன சொல்லியும் கேட்கவில்லை. தீர்மானம் தயாராகி விட்டது. அதை உடனே பத்திரிகைகளுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்று பண்டித்ஜீ நினைத்தார். ஏனெனில் அப்படிச் செய்யாவிட்டால், ஏதோ சமாதானம் நடந்து வருகிறதென்று நினைத்துக் கொண்டு மக்களிடையில் சோர்வு வந்துவிடும் என்று அஞ்சினர். இத்தீர் மானத்தை இன்னும் ஒருமுறை சரியாகப் பார்த்துவிட்டுக் காலையில் பத்திரிகைகளுக்குக் கொடுத்துவிடலாம் என்று நான் கூறினேன். பண்டித்ஜீ இதற்கு ஒத்துக் கொண்டார். செயலாற்றுக்குழு கூடிய செய்தி லண்டனுக்கு எட்டிவிட்டது. அங்கிருந்து ஸ்ரீ ஸ்ரீநிவாச சாஸ்திரி, சர் தேஜ் பகதூர் சப்ரூ, ஸ்ரீ ஜயகர் ஆகியவர்களுடமிருந்து ஒரு தந்தி பண்டித்ஜீக்கு வந்தது. அதில், தாம் இந்தியாவிற்குத் திரும்பி வந்து கொண்டிருப்பதாகவும், தம்மைச் செயலாற்றுகுழு சந்தித்துக் கலந்து ஆலோசனை செய்யாத வரையில் யாதொரு இறுதியான முடிவுக்கும் வரக்கூடாதென்பதாகவும் கூறப்பட்டிருந்தன. அடுத்தநாள் காலை நான் பண்டித்ஜீயைப் பார்த்தபோது அவர் என்னிடம் தந்தியைக் காட்டி, "இப்போது அத்தீர்மானத்தைப் பத்திரிகைகளுக்குக் கொடுக்காதே, தந்தி கிடைப்பதற்கு முன்னமே செயலாற்றுக்குழு ஒரு முடிவுக்கு வந்து விட்டது என்பதையும், ஆனால் தந்தியைப் பெற்றதும் அம்முடிவை வெளியிடுவதை நிறுத்தி வைத்திருக்கிறது என்பதை மட்டும் பத்திரிகைகளுக்குக் கூறு" என்று சொன்னர். அந்நாட்கள் நான் பிரயாகில் பெரும்பாலும் ஆனந்த பவனிலேயே தங்கியிருந்து வந்தேன்.

இப்படியாகப் பேச்சு நடந்து வந்ததின் பயனாக அரசாங்கத்தார் செயலாற்றுக் குழுவில் அச்சமயத்தில் உறுப்பினராக இருந்தவர்களையும் அதற்கு முன்னல் உறுப்பினர்களாக இருந்தவர்கள் அனைவரையும் விடுதலை செய்து விட்டார்கள். சத்தியாக்கிரகம்

தொடங்கப் பட்டதிலிருந்து, செயலாற்றுக் குழுவின் உறுப்பினர் ஒவ்வொருவராக சிறை கொள்ளப்படப் பட அவர்களுடைய இடத்தில் மற்றவர்கள் தற்காலிக உறுப்பினர்களாக நியமிக்கப் பட்டு வந்திருந்தார்கள். அவர்கள் அனைவருமே விடுதலை செய்யப்பட்டார்கள். விடுதலையானதுமே காந்தீஜீ பிரயாகுக்கு வந்து சேர்ந்தார். மற்ற எல்லாரும் அழைக்கப்பட்டார்கள். அங்குப் பேச்சுத் தொடங்கியது. பண்டித்ஜீயின் உடல் நிலை நாளுக்குநாள் கெட்டுக் கொண்டு வந்தது. இக்காரணத்தால் ஜவஹர்லால்ஜீயை அவருடைய கெடு முடிவதற்கு முன்னமே விடுதலை செய்து விட்டார்கள். நோய்வாய்ப் பட்டிருந்தும்கூட பண்டித்ஜீ எவ்வளவு வேலை செய்து கொண்டிருந்தார் என்பதை நினைக்கும்போது, இப்படிக் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்த நிலையிலும் இந்த முதிர்ந்த வயதிலும் அவர் அவ்வளவு அதிகமாக உழைக்க வேண்டியில்லாதிருந்தால் அவருடைய நோய் வலுத்திருக்காது என்றும், நம் நாடானது அவருடைய அறிவைக் கொண்டும் வைராக்கியத்தைக் கொண்டும் இன்னும் சிறிது காலத்திற்கு லாபத்தைப் பெற வாய்ப்புக் கிடைத்திருக்கும் என்றும் எனக்குத் தோன்றுகிறது. அவருடைய வாழ்க்கையின் இறுதி நாட்களில் அவருடன் இருப்பதற்கு எனக்குக் கிடைத்த பாக்கியத்தை நான் ஒரு பெரும் நற்பேருகக் கருதுகிறேன். அச்சமயத்தில் அவருடைய பொறுமையையும், மாண்பையும், புலமையையும் தேசபக்தியையும் நன்ருக அறிந்து கொள்ள எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. நாட்டில் நடந்துவரும் கிளர்ச்சி, அதன் வளர்ச்சி, நாட்டின் எதிர்காலம் ஆகியவற்றை யன்றி வேறு எதைப் பற்றியும் அவர் ஒரு நொடிப்பொழுதுகூட நினைப்பதில்லை. தன்னுடைய உடல் நலத்தைச் சிறிதுகூட பொருட்படுத்தாமல் அவர் நாட்டின் முன்னேற்றத்தைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

கல்கத்தாவிலிருந்து கவிராஜ் ஸ்ரீ சியாமாதாஸ் வாசஸ்பதி வந்தார். அவர் பண்டித்ஜீயை வேலை எதுவும் செய்யக்கூடாதென்று கூறினர். ஆனுல் பண்டித்ஜீயா கேட்கிறவர்? கடைசியில் அவருடைய நிலைமை மோசமாகிவிட்டது. பண்டித் ஜவஹர்லாலும் வந்துவிட்டார். அவர் பண்டித்ஜீயை லக்நோவுக்கு அழைத்துச் சென்ருர். பண்டித்ஜீ எப்போதுமே இனிமையான குணமுடையவர். அந்தச் சமயத்தில்கூட அவர் விளையாட்டுப் பேச்சை விடவில்லை. அவர் முகம் சற்று ஊதியிருந்தது. அவர் புறப்படும் சமயத்தில் அவரை நான் வணங்கச் சென்றபோது,

அவர் சிரித்த முகத்துடன் அங்கிருந்தவர்களைப் பார்த்து "என்னுடைய முகத்தைப் பார்த்தீர்களா? நான் அழகு போட்டியில் போட்டியிடப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்று கூறினர். எல்லாரும் ஒன்றும் சொல்ல முடியாமல் முறுவல் பூண்டார்கள். ஆனல் அவர்களுடைய உள்ளத்தில் அவரை இனிப் பார்க்கமாட்டோம் என்ற ஐயம் குடிகொண்டு விட்டது. அப்படித்தான் நிகழ்ந்தது. லக்நோவுக்குப் போய்ச் சேர்ந்ததுமே அவர் உயிர் துறந்துவிட்டார். நான் அவரை லக்நோவுக்குப் பயணம் அனுப்பி விட்டு பட்ன வந்து சேர்ந்ததுமே இந்தத் துக்கச் செய்தி பின்னலேயே வந்துவிட்டது. நான் உடனே பிரயாகுக்குத் திரும்பினேன். ஆனல் நான் அங்குப் போய்ச் சேருவதற்கு முன்னமே அவருடைய பிணத்திற்குச் செய்யவேண்டிய தகனக்கிரியைகளெல்லாம் முடிந்துவிட்டன.

பண்டித்ஜீயின் சாவால் நாடெங்கும் மக்கள் ஓலமிட்டுக் கதறினர்கள். துயரத்தில் ஆழ்ந்தார்கள். நாடெங்கும் எத்தனை கூட்டங்கள் நடந்தன வென்பதைச் சொல்ல முடியாது. பிரயாகில் நடந்த கையறவுப் பொதுக்கூட்டத்தில் நானும் கலந்துகொண்டேன். ஏதோ இரண்டொரு வார்த்தைகளும் அங்குக் கூறினேன். ஆனல் நாட்டிற்கு உற்ற ஊறைச் சொல்லால் கூறுவதற்கில்லை. செயலாற்றுக் குழுவானது நாட்டின் நிலைமையைப் பற்றி ஆலோசனை செய்துவந்து கொண்டிருந்த சமயத்தில், மேலும் அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தை நடந்து கொண்டும், மேலும் நடக்கவும் இருந்த சமயத்தில் பண்டித்ஜீயின் நெடிது நோக்கும் ஆற்றலையும் ராஜதந்திர வல்லமையையும் நாடு இழந்துவிட்டது. இந்தச் சமயத்தில் அவர் இல்லாமற்போனது ஆற்றவொணக் கொடுமையாக மக்கள் மனத்தை வாட்டியது.

## 93. காந்திஜீ இர்வின் ஒப்பந்தம்

இங்கிலாந்தில் இருந்து திரும்பிவந்த வட்டமேஜை மகாநாட்டின் அங்கத்தினர்கள் செயலாற்றுக் குழுவைச் சந்தித்தார்கள். அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறினர்கள். இந்த விஷயங்கள் நீங்கலாக மகாத்மாஜீ மற்ருேர் விஷயத்தை மிகவும் வற்புறுத்தி வந்தார். சத்தியாக்கிரக இயக்கத்தை அடக்கியபோது அந்த இயக்கத்தின் செயலாளர்களுக்குச் செய்யப்பட்ட கொடுமைகளைப்பற்றி

ஒரு நடுவு நிலைமையான கோர்ட்டு விசாரணை செய்வதற்கு அரசாங்கம் ஒத்துக்கொள்ள வேண்டுமென்று அவர் அழுத்தமாகக் கூறிவந்தார். ஆனால் லார்டு இர்வின் இந்தப் பேச்சைக் கேட்கக் கூட விரும்பவில்லை. இனி விஷயம் வளராது என்பதும், இத்தோடு சண்டை தீர்ந்துவிடும் என்பதும் பிரயாகிலேயே தெரிய வந்தன. மகாத்மாஜீ தாம் கூறியதிலிருந்து அசையாமல் நின்றார். வைசிராயை அவர் பார்ப்பதைப்பற்றிப் பேச்சு நடந்தது. ஆனால் காந்திஜீ தாம் கூறியதிலிருந்து அசையாமல் நின்றவரையில் இது நிகழ்வதாகத் தெரியவில்லை. கடைசியில் ஒருநாள் மகாத்மாஜீயானவர் தாம் வைசிராயைச் சந்திக்க விரும்புவதாகவும் அதற்கு வேளையளிக்கும்படியும் அவருக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். இதன் மூலமாக அவரைச் சந்திப்பதற்கு வழி பிறந்தது. தில்லியில் இருவரும் சந்தித்தார்கள். செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர்களான நாங்களும் அங்கு அழைக்கப்பட்டோம். நானும் சென்று, மற்றவர்கள் அனைவரும் தங்கியிருந்த டாக்டர் அன்சாரி வீட்டிலேயே தங்கினேன். மகாத்மாஜீ லார்டு இர்வினை ஏறக்குறைய இருபது நாட்கள் வரையில் நாள்தோறும் சந்தித்து வந்தார். சில சமயங்களில் இரவில் நெடுநேரம் கழிந்த பின்தான் திரும்பி வருவார். அங்கேயே தங்கிவிட்ட நாட்களில் மீரா பஹன் அவருக்கு உணவு எடுத்துச் செல்வார். அங்கிருந்து திரும்பி வந்ததும் மகாத்மாஜீயானவர் எங்கள் எல்லோரையும் கூட்டி அங்கே நடந்த பேச்சு வார்த்தையின் சாராம்சத்தை எங்களுக்குக் கூறி எங்களுடைய கருத்தைக் கேட்டுக் கொள்ளுவார். இரவில் நெடுநேரம் கழித்துவந்த நாட்களில் நாங்கள் தூங்கிப் போய்விடுவோம். அப்படியும் நாங்கள் அப்போது எழுந்திருந்து அவரிடம் எல்லா விஷயங்களையும் கேட்டறிந்து கொள்வோம்.

குஜராத்தில் இந்த இயக்கம் நடந்தபோது குடியானவர்களுடைய நிலம் நிறையப் பறிமுதல் செய்யப்பட்டுப் போயிருந்தது. அந்நிலமெல்லாம் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டுமென்று சர்தார் வல்லப்பாயீ படேல் பிடிவாதமாக நின்றார். பம்பாய் அரசாங்கம் இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. கடைசியில் இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை செய்யப்படும் என்பதோடு இந்தப் பேச்சு ஒரு முடிவுக்கு வந்தது. உப்பைக் காரணமாகக் கொண்டுதான் சத்தியாக்கிரகம் தொடங்கப்பட்டது. இதனால் இந்த விஷயத்தில் ஏழைகளுக்கு நிறைய வசதிகள் கிடைக்க வேண்டுமென்று காந்திஜீ மிகவும் வற்புறுத்தி வந்தார்,

பண்டித் ஜவஹர்லால்ஜீக்கு இந்தப் பேச்சு வார்த்தை முற்றி லுமே பிடிக்கவில்லை. இவ்விதமான ஒப்பந்தத்தினுல் நாடானது பின் சென்றுவிடுமென்று அவர் அஞ்சினர். மற்றவர்கள், திருப்தி கரமான ஒப்பந்தம் நடந்தேறினுல் நல்லதுதான், கெடுதல் ஒன்று மில்லையென்று நினைத்தார்கள். மகாத்மாஜீ நாள்தோறும் காலை யில் உலாவச் சென்று கொண்டிருந்தார். நானும் கூடச் சென்று வந்தேன். ஒருநாள் அவரைப் பார்த்து நான், ''ஒப்பந்தம் நிறை வேறட்டும். ஆனுல் அதில் நாம் தோல்வியுற்றதாகப் புலப்படக் கூடாது. வென்றதாகவே தோன்ற வேண்டும். அப்படி ஏதா வது வழி செய்யுங்கள்'' என்று கூறினேன். மகாத்மாஜீ சிரித் துக்கொண்டே ''ஒப்பந்தத்திலிருந்து தோல்வியும் வெற்றியுமா தெரியப் போகிறது. வெற்றியானுல், ஒப்பந்தம் எப்படி அமைந் தாலும், வெற்றி வெற்றிதான். எல்லாரும் அப்படியேதான் உணர்வார்கள். தோல்வியுற்ருல், மேலுக்கு என்ன நாம் சொல்லிக் கொண்டாலும், தோல்வி தோல்விதான். மக்களும் அப் படியேதான் புரிந்து கொள்வார்கள்'' என்று கூறினுர். முடிவில் எழுத்தில் வடிக்கப்பட்ட ஒப்பந்தத்தின் நிபந்தனைகள் பல நாட் கள் வரையில் ஆராய்ந்து ஆலோசனை செய்யப்பட்டு வந்தன. காந்திஜீயானவர் அங்கே லார்டு இர்வினுடன் அந்த ஒப்பந்தத் தின் ஒவ்வொரு வார்த்தையையும் அலசி ஆராய வேண்டியிருந் தது; இங்கு நாங்கள் எல்லாரும் அதேபோல ஆராயவேண்டி யிருந்தது.

லார்டு இர்வின் மகாத்மாஜீ இருவருமே அதிகப் பொறுமை யுடனும் அமைதியுடனும் ஒப்பந்தத்தின் நகலைப் பலமுறை திருத்தி எழுதி அதற்கு இறுதியான உருக்கொடுத்து அமைத் திருந்தார்கள். எங்களோடு பேச்சு நடந்தபோது, அதன் வாக் கியங்களின் ஒன்றில் பொய்மையின் வாடையடிப்பதாகக் காந்தி ஜீக்குப் புலப்பட்டது. லார்டு இர்வினுடன் பேசியபோது அச் சொற்கள் அவ்விதப் பொருளை அளிக்கலாம் என்பது அவருக்குத் தோன்றவில்லை. எங்களுடன் பேச்சு நடந்தபோது எங்களில் ஒருவர் அந்த வாக்கியத்திற்கு இவ்விதமான புதிய அர்த்தத்தை அளித்து வாதாடினுர். இதைக் கேட்டதுமே காந்திஜீ செவியை நெறித்துக்கொண்டு கேட்கலானுர். உடனே அவர் அந்த வாக்கி யத்தை மீண்டும் ஆழ்ந்து படித்துப் பார்த்துவிட்டு இந்த அர்த்த மும் அமையலாம் என்று கூறினுர். ஆனுல் இது பொருளானுல் அந்த வாக்கியம் பொய்யாகுமென்று கூறினுர். இதற்கிடையில் லார்டு இர்வினுனவர் அந்த ஒப்பந்தத்தை இங்கிலாந்திலிருந்து

சம்மதத்தைப் பெறுவதற்காக அனுப்பிவிட்டார். காந்திஜீயானவர் லார்டு இர்வினிடம் இந்த விஷயத்தைக் கூறியபோது, அவர் சங்கடத்திற்கு ஆளானர். மகாத்மாஜீ அந்த ஒப்பந்தம் இருந்த உருவில் அதை ஒரு நாளும் ஏற்கமுடியாது. ஏனெனில் அதில் பொய்மையின் வாடை வீசியது. முடிவில் லார்டு இர்வின் அந்த வாக்கியத்தை மாற்றி அமைத்தார். அப்படித் திருத்தப்பட்டபின்தான் காந்திஜீ அதை ஏற்றுக்கொண்டார். காரியம் சித்திபெற்றது. ஒப்பந்தம் நிறைவேறியதைப்பற்றி எனக்கு மகிழ்ச்சிதான். பண்டித் ஜவஹர்லால்ஜீ நீங்கலாக எல்லா உறுப்பினர்களும் மகிழ்ச்சி யடைந்தார்கள். பண்டித்ஜீ மட்டும் மிகவும் வருத்தப்பட்டார். காந்திஜீ அவருக்கு எவ்வளவோ விளக்கிக் கூறினர். ஆனல் அவர் திருப்தி யடையவில்லை.

இன்னும் சத்தியாக்கிரகம் நிறுத்தப்படவில்லை. ஒப்பந்தத்தைப் பற்றிப் பேச்சு வார்த்தையும் நடந்து கொண்டிருந்தது, சத்தியாககிரகமும் நடந்து கொண்டிருந்தது. ஆனல் ஒப்பந்தத்தைப் பற்றிப் பேச்சு நடத்து கொண்டிருந்ததால் சத்தியாக்கிரகத்தின் வேகம் இயல்பாகவே குறைந்து விட்டது. ஆயினும் இதற்கிடையில் எத்தனையோ இடங்களில் பல கடுமையான சம்பவங்கள் நடந்து விட்டன. மகாத்மாஜீயானவர் வைசிராய்க்கு அவற்றைத் தெரிவித்தார். வைசிராய் அதைப் பற்றிச் சும்மா இருந்து விடுவதாக வாக்கும் அளித்து விட்டார். ஒப்பந்தம் கையொப்பமிடப்பட்டதுமே செயலாற்றுக் குழுவானது சத்தியாகிரகத்தை நிறுத்தும்படி எல்லா மாகாணக் குழுக்களுக்கும் கட்டளை இட்டு விட்டது. அரசாங்கமும் காங்கிரஸ் குழுக்களின் பேரில் போடப்பட்டிருந்த தடையை நீக்கிவிட்டது.

அதே நாட்களில் என்னுடைய இளைய மகன் தந்நூவின் கல்யாணப் பேச்சு நடந்துவந்தது. கல்யாணத்திற்கு நாளும் வைத்தாகி விட்டது. அதற்குள்ளாக லார்டு இர்வினுடன் ஒப்பந்தம் செய்தாகி முடிந்துவிடும் என்று நினைத்துக் கொண்டு என் தமையனர் நாளை வைத்தார். ஆனல் பேச்சு வளர்ந்துகொண்டு சென்றது. அந்த நாளைக்குள் எதுவும் முடிவுக்கு வரமுடியாது என்பதாகப் புலப்பட்டது. பேச்சு முடிந்து விட்டால் நான் வந்து விடுகிறேன் என்றும், அப்படி ஆகாவிட்டால் எனக்காகக் காத்துக் கொண்டிருக்காமல் குறிப்பிட்ட நாளில் திருமணத்தை முடித்து விடும்படியும் செய்தி அனுப்பி விட்டேன். ஆனல் கல்யாணத்திற்குச் சரியாக இரண்டு நாட்களுக்கு முன்னமே ஒப்பந்தம் கையெழுத்தாகிவிட்டது. அன்றிரவே நான் ஜீராதேயீக்குப் புறப்

பட்டு விட்டேன். பாராத் புறப்படுவதற்கு முன்பே ஜீராதேயீக்குப் போய்ச் சேர்ந்துவிட்டேன். ஒப்பந்தத்தின் நிபந்தனைகளில் சத்தியாக்கிரகிகளை விடுதலை செய்வதைப் பற்றியும் கூறியிருந்தது. இதனால், நான், ஹஜாரிபாக் சிறையில் இருந்த நண்பர்கள் சிலரையும் அழைத்திருந்தேன். ஆனால் யாரும் வந்து சேர முடியவில்லை. நான் மட்டும் எப்படியோ சென்று பாராத்துடன் சேர்ந்து கொண்டேன்.

லார்டு இர்வினுனவர் ஒப்பந்தத்தை நல்ல எண்ணத்துடன் தான் செய்தார் என்று நான் நினைக்கிறேன். என்னென்ன முடிவுகள் செய்யப்பட்டனவோ அவையெல்லாம் சரியாக நிறைவேற்றப் படவேண்டுமென்றே அவர் விரும்பினர். ஆனல் அந்த ஒப்பந்தம் சிவில் செர்விஸ்காரர்களுக்குப் (ஐ. ஸி. எஸ்.) பிடிக்கவில்லை. அவர்கள் முட்டுக்கட்டைப் போட்டதால்தான் அது கூடிவருவதற்குக் காலம் பிடித்தது. லார்டு இர்வின் இந்தியாவிலும், தொழிலாளர் கட்சி அரசாங்கத்தார் இங்கிலாந்திலுமாகச் சேர்ந்து மிகவும் பிடிவாதமாக நின்று அதைச் செய்தார்கள். ஒருவாறு முடிவுக்கு வந்துவிட்ட பிறகு எல்லாக் காரியங்களும் சரியாக நடக்குமென்றும், நாங்கள் அமைதியாக ஆக்கவேலையைச் செய்ய இயலுமென்றும் நம்பிக்கை கொண்டிருந்தோம். ஆனல் துர்ப்பாக்கிய வசமாக லார்டு இர்வினின் கெடு முடிந்து விட்டது. அவர் விரைவிலேயே, ஒன்று ஒன்றரை மாதத்திற்குள்ளாகவே, திரும்பிப் போய்விடுவதாக இருந்தது. அவருடைய இடத்தில் லார்டு வில்லிங்டன் வைசிராயாக வந்தார். அவர் பம்பாயிலும் சென்னையிலும் கவர்னராக இருந்திருந்தார். முன்னிருந்தே அவருக்கு இந்தியாவைப் பற்றி நன்ருகத் தெரியும். சிவில் செர்விஸின் போக்கைப் பற்றியும் நன்ருக அறிந்திருந்தார். அவர் வந்ததும் சிவில் செர்விஸுடன் சேர்ந்து கொண்டார். அவர் இந்தியாவிற்கு வந்ததுமே காற்று மாறிவிட்டது. ஏனெனில், ஒப்பந்தமோ செய்யப்பட்டாகிவிட்டது. அதை அவர் வெளிப்படையாக முறிக்க விரும்பவில்லை. ஆனல் அதனுடைய நிபந்தனைகளை நிறைவேற்றுவதில் ஒவ்வொரு வகையிலும் முட்டுக்கட்டை போடப்பட்டது.

இந்த ஒப்பந்தம் மிகவும் பெருமை வாய்ந்தது என்பதை நாங்கள் உணர்ந்தோம். பிரிட்டிஷ் அரசாங்கமானது இந்தியப் பொதுமக்களின் பிரதிநிதியான ஒரு அமைப்புடன் ஒப்பந்தம் செய்துகொள்ளத் தயாராக முன் வந்தது இதுதான் முதல் தடவை என்பது பெரிய விஷயம். இரண்டாவதாக உப்பு சம்பந்தமாக

ஏழைகளுக்கு நிறைய வசதிகள் கிடைத்துவிட்டன. மூன்ருவதாக, காங்கிரஸானது வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்று அங்கு அரசியல் அமைப்பை இயற்றுவதற்குத் தானும் கை கொடுத்து உதவமுடியும். ஆங்கிலேயருடைய பாதுகாப்புக்காக அரசியல் அமைப்பில் சேர்க்கப்படுவதாக இருந்த பாதுகாப்பு நிபந்தனைகள் இந்தியாவுக்கு நன்மை புரிவனவா அல்லவா என்ற கண்கொண்டு அவற்றை ஆராய வேண்டியிருந்தது. அவை பொது மக்களுக்கு நலம் புரிவனவாகயிருந்ததால்தான் ஏற்றுக் கொள்ளத்தக்கன வாகும். நான்காவதாக, இந்தியா முழுவதுக்கும் ஒரு மத்திய அரசாங்கம் இருக்கவேண்டுமென்பதைக் காங்கிரஸானது ஏற்றுக் கொண்டது. ஆயினும் மாகாணங்களுக்குத் தம்முடைய காரியங் களைத் தாமே நடத்துவதற்கு உரிமை அளிப்பதாக இருந்தது. மேலும் இந்த மத்திய அரசாங்க அமைப்பில் தேச மன்னரும் வந்து சேர்ந்துகொள்வதாக இருந்தது. இவ்வண்ணமாக எத் தனையோ விஷயங்களின் சித்திரங்கள் (அவை தெளிவாகத் தோன்ருவிட்டாலும்கூட) நம் முன் தோன்றின. இதனுல், நான் இந்த ஒப்பந்தத்தை ஆதரித்தேன். ஆனுல் இதுவும், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இதற்குமுன் செய்துள்ள பல அறிக்கைகளையும் வாக்குறுதிகளையும் போலவே முற்றிலும் நிறைவேற்றப்படவில்லை யென்பது வருத்தமாயிருந்தது.

## 94. கராச்சிக் காங்கிரஸ்

தில்லியில் ஒப்பந்தம் நடந்தபின் காங்கிரஸின் பேரவையை நடத்துவது உறுதியாகிவிட்டது. மார்ச்சுக்குள்ளாகப் பேரவை கராச்சியில் நடக்கும் என்பதாகத் தீர்மானிக்கப்பட்டது. காலம் மிகவும் குறைவாக இருந்தது. ஆயினும் கராச்சியில் இருந்த செயலாளர்கள் ஏற்பாடு செய்வதற்கு ஒத்துக்கொண்டார்கள். கடுமையான குளிரை முன்னிட்டு இனிக் காங்கிரஸின் பேரவையை டிசம்பரில் நடத்தாமல் பிப்ரவரி அல்லது மார்ச்சில்தான் நடத்த வேண்டுமென்று லாகூரில் முடிவு செய்யப்பட்டது. இதனுல் லாகூர் காங்கிரஸ் வரையில் வழக்கமாக டிசம்பரில் நடந்துவந்த பேரவையை இந்த ஆண்டில் மார்ச்சில் நடத்துவதாகத் திட்ட மிடப்பட்டிருந்தது. நல்ல வேளையாக ஒப்பந்தம் செய்து முடிக்

கப்பட்டு விட்டதால், குறுக்கே நின்ற இடையூறுகள் எல்லாமும் நீங்கிவிட்டன. சர்தார் வல்லப்பாயீ படேல் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

லாகூர் சதியாலோசனையைப் பற்றி மேலே கூறியுள்ளேன். அதன் விசாரணை பல நாட்களாக நடந்து வந்தது. அதைப் பற்றித் தீர்ப்பு இச்சமயத்தில் அளிக்கப்பட்டது. சர்தார் பகத் சிங்குக்கும் அவருடைய தோழர்கள் சிலருக்கும் தூக்குத்தண் டனை விதிக்கப்பட்டது. மற்றவர்களுக்கு நெடுநாள் சிறைவாசம் அல்லது தீவாந்திர சிட்சை கிடைத்தது. பட்டினிப் பழி கிடந்து யதீந்திரநாத் தாஸானவர் மரணமடைந்தது நாடெங்கும் கொந் தளிப்பை உண்டாக்கியிருந்தது. இப்போது இந்தச் சம்பவத் தால் மேலும் அதிகக் கொதிப்பு உண்டாயிற்று. முக்கியமாக, இளைஞர்கள்தாம் இந்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டிருந்தார்கள். இவ்வழக்குப் பல நாட்களாகத் தொடர்ந்து நடந்து வந்ததால் இதை ஒட்டிய செய்திகள் பல நாட்களாகப் பத்திரிகைகளில் அச்சிடப்பட்டு வந்தன. இதனால் ஏராளமான மக்கள் இதில் கவனம் செலுத்தி வந்தார்கள். சர்தார் பகத் சிங்கானவர் மிக்க வீரத்துடன் வழக்கில் பங்கெடுத்துக்கொண்டு வந்தார். இது நாட்டார் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. இதனால் தூக்குத் தண் டனையானது நாடெங்கும் கோபத்தை மூட்டியது. காந்திஜீயான வர் தூக்குத் தண்டனையை மாற்றி சிறைவாசமாவது தீவாந்திர சிட்சையாவது அளிக்க வேண்டுமென்று லார்டு இர்வினைக் கேட்டுக்கொண்டார். லார்டு இர்வின் திரும்பிச் செல்லும் கால மும் நெருங்கிவிட்டது. அவர் மகாத்மாஜீயின் வார்த்தையை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் ஒப்பந்தத்தையே தம்முடைய கூட்டாளி அதிகாரிகளின் கருத்துக்கு மாறாகச் செய்திருந்தார். இப்போது மேலும் ஒரு காரியத்தை அவர்களுடைய கருத்துக்கு மாறாகச் செய்ய முடியவில்லை. விஷயம் பல நாட்களாகத் தொங்கிக் கொண்டிருந்தது. தூக்கிலிருந்து சர்தார் பகத்சிங் ஒரு வேளை தப்பித்துக்கொள்வார் என்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டாகத் தொடங்கியது.

கடைசியில் லார்டு இர்வினனவர் காந்திஜீயிடம் தம்மால் முடியாததைப்பற்றிக் கூறிவிட்டார். ஆயினும், காந்திஜீ விரும் பினால், காங்கிரஸ் முடியும் வரையில் தூக்கிலிடுவதை நிறுத்தி வைப்பதாகக் கூறினர். தூக்கிலிட்டதால் கோபம் மூண்டு காங்கிர ஸானது ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளாமல் போய்விடலாம் என்றோ அல்லது காங்கிரஸ் நடக்கும்போது அதற்கு வருபவர்

களுக்குக் காந்திஜீயின்மீது கோபம் வரலாமென்றே அவர் ஒரு வேளை நினைத்திருக்கலாம். அவர் காந்திஜீயை இதிலிருந்து காக்க விரும்பினர். ஆனால் காந்திஜீ இதற்கு ஒத்துக்கொள்ள வில்லை. தூக்கிலிருந்து சர்தார் பகத்சிங்குக்கு விடுதலையளிக்க முடியவில்லையென்றால், செய்யவேண்டியதைக் காங்கிரஸுக்கு முன்பே செய்து விடுவதுதான் நன்று என்றும், அப்படிச் செய்யா விட்டால் நாட்டையும் காங்கிரஸையும் ஏமாற்றியதாகும் என்றும் காந்திஜீ கூறினர். அவர் கூறியபடியே செய்யப்பட்டது. காங்கிரஸ் நடப்பதற்கு முன்னமே பகத்சிங் தூக்கிலிடப் பட்டார். இச்செய்தி பத்திரிகைகளில் அச்சாயிற்று. அத் துடன், பிணம் அடையாளம் தெரியாமல் உருக்குலைக்கப் பட்டது என்ற செய்தியும் அச்சிடப்பட்டது. இதனல் மக்களுக்கு நிறையக் கோபம் வந்தது. இளைஞர்கள் காந்திஜீயின்மீது மேலும் அதிருப்தியடைந்தார்கள். காந்திஜீயானவர் தம்மால் இயன்றதைச் செய்தார் என்பதையும் அவரால் சர்தார் பகத் சிங்கைக் காப்பாற்ற முடியவில்லையென்றால் அது அவருடைய குற்றமில்லை யென்பதையும் அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. கராச்சிக்குச் செல்லும் வழியில் காந்திஜீயின் முன்னிலையில் எதிர்ப்பு முழக்கங்கள் செய்யப்பட்டன. எத் தனையோ பேர் தம்முடைய துயரத்தையும் சினத்தையும் காட்டு வதற்காகக் கருப்புத் துணியால் செய்யப்பட்ட மலர்களைக் காந்திஜீ யிடம் கொடுப்பதற்காகக் கொண்டு வந்தார்கள். அவர் அந்த மலர்களை ஏற்றுக் கொண்டார். அவர் கோபமாவது கலக்கமாவது சிறிதளவுகூடக் காட்டிக் கொள்ளவில்லை.

கராச்சிக் காங்கிரஸிலும் இவ்விதமான கலவரம் இடையருது நடந்து வந்தது. காந்திஜீயிடம் மக்கள் அவமரியாதை கொண்டி ருந்தார்கள் என்பது இதன் பொருள் அன்று. அவர் காலையிலும், மாலையிலும் வெட்டவெளியில் பிரார்த்தனை நடத்தும்போது அங்கு மக்கள் பெரும் திரளாக வந்து கூடிவந்தார்கள். அவரைத் தரி சனம் செய்வதற்காகவும் அப்படியே கூட்டம் குழுமியது. அதைப் போல இதுவரையில் வேறு எங்குமே கூடியதில்லை. மக்களின் உள்ளத்தில் பட்ட புண்ணைக் காட்டுவதற்கு இது ஒரு வழி கிடைத் தது. இதன் மூலமாக மக்கள் தம்முடைய துயரத்தைக் காட்டிக் கொள்ள முடிந்தது. இத் துயரத்திற்கு ஒரு தனிக் காரணமிருந் தது. சர்தார் பகத்சிங், அவருடைய தோழர்கள் ஆகியோரின் வீரத்திற்காக இரக்கம் இருக்கவே இருந்தது. இதைவிட மற்றோர் காரணமும் இருந்தது. சைமன் கமிஷனுக்கு விரோதமாகச்

செய்யப்பட்ட முழக்கத்தில் லாலா லஜபதிராயை எந்த ஆங்கிலேய அதிகாரி அடித்ததாகக் கூறப்பட்டு வந்தாரோ அவரையே சர்தார் பகத்சிங் கொன்ருர் என்பதாக அவர் மீது குற்றம் சாட்டப்பட்டிருந்ததுதான் மக்கள் அவர்மீது இரக்கம் கொண்டதற்கு ஒரு விசேஷ காரணம். எது எப்படியாயினும் சரி, கராச்சிக் காங்கிரஸ் மிகவும் முக்கியமானதொரு காங்கிரஸ் விழாவாக அமைந்தது.

கரங்கிரஸை பிப்ரவரி-மார்ச்சில் நடத்துவதாஞல், அது சாயங்கால வேளையில் நடக்கலாமென்றும், ஆதலால் பந்தலின்மீது கூரைக்குத் தேவையில்லையென்றும் லாகூரில் நிச்சயிக்கப்பட்டது. இதைப் போன்ற வெட்டவெளியில், வானத்தின்கீழ்க் காங்கிரஸ் நடந்தது இதுதான் முதல் தடவையாகும். சாயங்காலத்தில் தொடங்கி இரவில் நெடுநேரம் வரையில் கூட்டம் நடக்கும். இதஞல் பந்தல் போடும் செலவு மிச்சமாகி விட்டது. ஆஞல் அதற்கு மாருக விளக்குப்போடுவதற்கு நிறைய ஏற்பாடு செய்ய வேண்டி வந்தது. பார்ப்பதற்குக் காட்சி மிகவும் அழகாக இருந்தது. மேலும் இதுவரையில் இல்லாத புதுக் காட்சியாதலால், மனத்திற்கு மிகவும் இனிமையாக இருந்தது. உற்சாகத்திற்கு எல்லையே இல்லை. சத்தியாக்கிரகத்திற்குப் பின் இதுதான் முதல் விழா. சத்தியாக்கிரகத்தின் பலஞகத்தான் பிரிட்டிஷ் அரசாங்கமானது காங்கிரஸுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது என்பதை மக்கள் மறக்க முடியவில்லை. அந்தச் சத்தியாக்கிரகத்தில் கைது செய்யப்பட்டுப் பிறகு இந்த ஒப்பந்தத்தின் மூலமாகக் காங்கிரஸின் பேரவைக்கு முன்னர் விடுதலை செய்யப்பட்டு இப்பேரவைக்கு பலர் வந்திருந்தார்கள். ஆயினும் இன்னும் எத்தனையோ பேர் விடுதலை செய்யப்படவில்லை. அவர்களை விடுதலை செய்வதைப் பற்றி அரசாங்கத்துடன் கடிதப் போக்கு வரவு நடந்துகொண்டு இருந்தது. அல்லது ஏதோ காரணத்தால் அவர்கள் ஒப்பந்தத்தின் நிபந்தனைகளின்படி விடுதலை செய்யப்படுவதற்குத் தகுந்தவர்கள் அல்லர் என்று அரசாங்கம் கருதி வந்தது. அப்படியிருந்தும்கூட இந்த ஒப்பந்தத்தால் தலைமையான சத்தியாக்கிரகிகள் நிறையப் பேர் விடுதலை பெற்று இப்பேரவைக்கு வந்திருந்தார்கள். அங்கே நடத்த வாதத்திலும், பேச்சு வார்த்தையிலும் மேலே கூறிய விஷயங்களின் சாயல் மிளிர்ந்து கொண்டிருந்தது.

கராச்சியில் இரண்டு முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. ஒரு தீர்மானம் ஒப்பந்தத்தை ஒட்டியது. அதன் மூலமாக ஒப்பந்தம் அங்கீகரிக்கப்பட்டது. இதைப்பற்றி வாதம்

நிறைய நடந்தது. நிறைய நேரமும் இதில் கழிந்தது. மற்ெருரு தீர்மானம் மிகவும் முக்கியமானது. சுயராஜ்யம் பெற்றபின் இந்தியா செய்ய வேண்டிய வேலையின் திட்டம் அதில் கொடுக்கப் பட்டிருந்தது. இத்தீர்மானம்தான் இந்தியர்களின் அடிப்படையான உரிமைகளை முதன் முதலாகக் காங்கிரஸ் மேடையிலிருந்து ஒரு வகையில் உலகுக்குச் சாற்றியது என்று கூறலாம். இவற்றில் பொருளாதார சுதந்திரத்தைப் பற்றியும் கூறப்பட்டிருந்தது. நேரு அறிக்கையிலும் இவ்விதமான விஷயங்கள் கூறப்பட்டிருந்தன. ஆயினும் இத்தீர்மானமானது எவ்வளவு தெளிவாகவும் விரிவாகவும் இவற்றை, முக்கியமாகப் பொருளாதார விஷயங்களை, எடுத்துரைத்ததோ அவ்வளவுக்கு நேரு அறிக்கையில் கூறப்படவில்லை. இத்தீர்மானத்தைக் கொண்டு வந்ததின் பெருமை பண்டித் ஜவஹர்லால் நேருவையே சேரும். மகாத்மாஜியும் சர்தார் வல்லபபாயியும் அவருடைய கருத்திற்கு இசைந்தே இத்தீர்மானத்தை ஏற்றுக்கொண்டார்கள். இது ஓரடியாகப் புதிய விஷயமாயிருந்தது. இதைப்பற்றி நிறைய ஆராய்ச்சி நடக்கவில்லை. காங்கிரஸ் விழா முடிவடைந்து வரும் சமயத்தில்தான் இத்தீர்மானம் விஷய ஆலோசனைக் குழுவின் முன் அவசரமாகக் கொண்டு வரப்பட்டது. இவ்வளவு பெரிய முடிவுக்கு வருவதற்கு முன் பிரதிநிதிகள் இதைப்பற்றி யோசிக்கவும் விசாரணை செய்யவும் போதுமான காலம் அளிக்கப்படவில்லையென்று அங்கிருந்தவர்கள் குறை கூறினர்கள். இதனல் காங்கிரஸானது இத்தீர்மானத்தை ஏற்றுக்கொண்டதாயினும், அத்துடன் அது ஒரு நிபந்தனையையும் சேர்த்துவிட்டது. இத்தீர்மானத்தைப் பற்றி மாகாணக் குழுக்கள் எல்லாம் தம் அபிப்பிராயங்களை வெளியிட வேண்டுமென்றும், அவற்றை ஒரு கிளைக்குழு ஆராய்ந்து, அகில பாரதீயக் குழுவுக்குத் திருத்தத்தைச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும், அதன்மேல் அகில பாரதீயக்குழு இத்தீர்மானத்தைப் பொருத்தமான திருத்தங்களுடன் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் நிபந்தனையிடப்பட்டது.

அரசாங்கமானது அழைப்பு அளித்தால், காங்கிரஸ் பிரதிநிதியும் வட்டமேஜை மகாநாட்டில் கலந்துகொள்வார் என்றும் கராச்சிக் காங்கிரஸில் முடிவு செய்யப்பட்டது. ஆனல் எத்தனை பிரதிநிதிகள் செல்வார்கள் என்பதும், அரசாங்கத்தினிடம் என்ன கோரப்படும் என்பதும் அச்சமயத்தில் முடிவு செய்யப்படவில்லை. பூர்ண சுதந்திரத் தீர்மானம் முன்னமே நிறைவேற்றப்பட்டிருந்தது. அரசியல் சட்ட அமைப்பு எவ்விதமாக இருக்க வேண்டுமென்

பதும் ஒப்பந்தத்தின் மூலமாகவும் கராச்சித் தீர்மானத்தின் மூலமாகவும் சிறிதளவு தெளிவாகி விட்டது. மேலே என்ன செய்ய வேண்டுமென்பதைச் செயலாற்றுக் குழுவும் அகில பாரதீயக் குழுவும் கட்டளையிடும் என்று எண்ணமிட்டது. மேற்கொண்டு பேச்சு வார்த்தை நடந்ததின் பேரில், வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்ல வேண்டி வந்தால் காங்கிரஸானது தன் பிரதிநிதியாகத் தம்மை மட்டுமே அனுப்பட்டும் என்று மகாத்மாஜீ செயலாற்றுக் குழுவில் கூறினர். அங்கே பலர் சென்று கை தூக்கி ஆகப் போவது ஒன்றும் இல்லே. அவர்கள் நம் பேச்சை ஏற்றுக்கொள் பவர்களாக இருந்தால் ஓர் ஆளே போதும். ஏற்றுக் கொள்ளா தவர்களாக இருந்தால் பெரிய கூட்டமாகச் சென்றதினுல் அவர் களே ஏற்றுக்கொள்ள வைக்க முடியாது என்று காந்திஜீ கூறினர்.

## 95. மூவண்ணக் கொடி—தேசீய விருது

கராச்சியிலிருந்து திரும்பி வந்ததும், இன்னும் சிறையிலேயே இருந்து வந்த சத்தியாக்கிரகிகளே விடுவிப்பதற்காகக் கடிதப் போக்கு வரவு செய்வதிலேயே என் பொழுது அதிகமாகக் கழிந்தது. அதேபோல மற்றவர்களும் தத்தம் மாகாணங்களில் எழுத்து வேலே செய்ய வேண்டிவந்தது. ஒப்பந்தத்தின் நிபந்தனேகளில் நாங்கள் நிறைவேற்ற வேண்டியது சத்தியாக்கிரகத்தை நிறுத்துவது மட்டும்தான். நாங்கள் ஓர் அறிக்கையை வெளியிட்டு எங்களுக்குக் கீழ் இருந்த குழுக்களுக்கு கட்டளேயை அனுப்பி அந்த வேலேயை நிறைவேற்றி விட்டோம். ஆனுல் அரசாங்கமானது பல காரியங்களேச் செய்ய வேண்டியிருந்தது. லார்டு இர்வின் போய்விட்ட பிறகு அவற்றில் நிறையத் தாமதம் ஏற்பட்டது. மகாத்மாஜீயும் காங்கிரஸின் தலேவரான சர்தார் வல்லப்பாயீ படேலும் இந்தியா முழுவதையும் சம்பந்தப்பட்ட விஷயங்களேப் பற்றி இந்திய அரசாங்கத்துடன் கடிதப் போக்கு வரவு செய்து வந்தார்கள். மாகாணங்களேச் சம்பந்தப்பட்ட விஷயங்களேப் பற்றி மாகாணக் குழுக்களில் இருந்தவர்கள் மாகாண அரசாங்கத்துடன் கடிதப் போக்கு வரவும் நேரில் கண்டு பேச்சும் நடத்தி வந்தார்கள். இந்த விஷயங்களேப் பற்றி மகாத்மாஜீயும் அரசாங்க அதிகாரிகளேப்

பார்க்க வேண்டி யிருந்தது. நானும் என் மாகாணத்தின் தலைமை காரியதரிசி மிஸ்டர் ஹைலட்டையும் மாகாண கவர்னர் சர் ஸ்டீபன்சனையும் காணவேண்டி வந்தது. அநேக விஷயங் களில் வெற்றியும் கிடைத்தது. ஆயினும் இதனால் நிறையக் கால விரயமும் சச்சரவும் உண்டானதால் மனம் சலித்துப் போய் விட்டது. நாங்கள் எவற்றை மிகவும் தெளிவாக இருப்பதாகவும், முடிவு கட்டப்பட்டதாகவும் நினைத்தோமோ அவை அங்கே எப் படியோ குழப்பப்பட்டு நிச்சயமில்லாமல் செய்யப்பட்டு போகின் றன என்பதை உணர்ந்தோம். இன்று இதற்கு உதாரணம் நினைவுக்கு வரவில்லை, ஆயினும் அக்காலத்துப் பத்திரிகைகளைப் பார்த்தால் இது தெளிவாக நிரூபிக்கப்படும். மகிழ்ச்சியுறுவதற் குத் தக்கதாக ஒரு விஷயம்தான் இருந்தது. பட்னு (காம்ப்) சிறையிலிருந்தும் மற்றச் சிறைகளிலிருந்தும் கைதிகள் விடுதலை செய்யப்பட்டு சதாகத் ஆச்ரமத்திற்கு வந்து ஓரிரவு அல்லது சிறிது பொழுது தங்கியிருந்து ஏதாவது உணவு உண்டுவிட்டு, தலைவர்களுக்கு ஜய ஜய ஒலி முழக்கம் செய்துவிட்டு தத்தம் ஊர்களுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள். ரயில் செலவு முதலியன அரசாங்கத்திடமிருந்து கிடைத்துவிட்டாலும், மாகாணக் குழுவின் நிதியிலிருந்தும் நான் ஏதாவது பணம் கொடுக்க வேண்டியிருந்தது. சுயராஜ்யத்திற்காக ஆர்வம் கொண்ட தேச பக்த படையின் உற்சாகமானது என் உள்ளத் தின் வேதனையைச் சிறிதளவு அமைதிப் படுத்திக் கொண் டிருந்தது.

சில நாட்களுக்குப் பிறகு செயலாற்றுக் குழுவானது பம்பா யில் கூடியது. ஹிந்து-முஸ்லிம் சிக்கலைப் பற்றிக் காங்கிரஸின் மனோபாவனை என்னவென்பது அச்சமயத்தில் ஒரு முக்கிய கேள்வியாக இருந்தது. கல்கத்தாக் காங்கிரஸுக்குப் பின் னிருந்தே பல முசல்மானியர்கள் காங்கிரஸை விட்டு விலகிவிட் டார்கள். அவர்கள் முசல்மானியருக்காக ஒரு தனி அமைப்பை நிறுவித் தம் கோரிக்கைகளைச் சமர்ப்பித்து வந்தார்கள். ஜின் னுவின் பதினுன்கு கோரிக்கைகள் பிரசித்தி பெற்றுவிட்டன. அரசாங்கத்தாரால் நடத்தப்படப் போவதாக சொல்லப்பட்டு வந்த வட்ட மேஜை மகாநாட்டில் கலந்து கொள்வதற்கு முன் னமே நாங்கள் எங்கள் கருத்துக்களைத் தெளிவு படுத்திக்கொள்ள விரும்பினேம். இந்த விஷயத்தைப் பற்றி பம்பாயில் நடந்த செயலாற்றுக் குழுவின் கூட்டத்தில் ஆலோசனை செய்யப்பட்டது. நான் பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்ததுமே நோய்வாய்ப்பட்டு விட்

டேன். இதனுல், நான் படுத்திருந்த அறைக்குப் பக்கத்தில் இருந்த அறையிலேயே கூட்டம் நடந்து கொண்டிருந்தாலும் நான் அதில் கலந்துகொள்ள முடியவில்லே. தேசீய மனப்பான் மைக்கு முரணுக இல்லாததொரு ஒப்பந்தத்தை முசல்மானியர்க ளுடனும் மற்றக் குறுந்தொகை (மைனுரிடி) இனத்தாருடனும் காங்கிரஸானது செய்து கொள்ளலாம் என்று அங்கு முடிவு செய் யப்பட்டது. ஆயினும் மற்ற இனத்தாரெல்லாருமாகச் சேர்ந்து ஏதாவதொரு ஒப்பந்தத்தை செய்து கொண்டார்களானுல் அதைக் காங்கிரஸும் ஏற்றுக்கொள்ளும் என்றும் முடிவு செய்யப் பட்டது. ஒப்பந்தத்தின் அடிப்படையான முக்கிய கொள்கை களின் விவரமும் அக்கூட்டத்தில் சுருக்கமாகக் கொடுக்கப்பட் டது. செயலாற்றுக் குழுவில் இருந்த முசல்மானிய உறுப்பினர் கள் மிகவும் வற்புறுத்தியதினுல் தான் செயலாற்றுக் குழு இந்த முடிவுக்கு வந்ததாயினும், அவர்கள் அதை ஏற்றுக் கொள்ள வில்லே. மற்றவர்கள் இவ்விதமாகப் பல விஷயங்களேப் பற்றி நிறையக் கூறிவரும் போது, நாட்டின் மக்கள் காங்கிரஸின் கருத்து என்னவென்று அறிந்துகொள்ளும் பொருட்டும், மேலும் காங்கிரஸின் பிரதிநிதிகள் வாய்ப்புக் கிடைத்த இடங்களில் அக் கருத்தைக் காங்கிரஸின் பெயரில் அதிகாரத்துடன் எடுத்துக் கூறும் பொருட்டும் காங்கிரஸும் தன்னுடைய கருத்தைத் தெளிவுபடக் கூற வேண்டுமென்று அவர்கள் விரும்பிஞர்கள்.

பிறகு அகில பாரதீயக் குழுவின் கூட்டம் ஒன்று நடந்தது. அது மிகவும் தலேசிறந்த கூட்டம். அதில் அடிப்படையான உரிமைகளேக் கூறிய கராச்சித் தீர்மானத்தைப் பற்றி ஆலோ சனே செய்யப்பட்டது. கிளேக் குழுவானது தன் வேலேயை முடித்துவிட்டது. எல்லா மாகாணக் குழுக்களின் சம்மதத்தை யும் பெற்றுத் தன் அறிக்கையைத் தயார் செய்தது. தீர்மானத் தில் எதுவும் சிறப்பான திருத்தங்கள் செய்யப்படவில்லே. சில சாதாரண விஷயங்களேக் கூட்டிக் குறைத்து அடிப்படையான உரிமைகள் அக்கூட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

அக்காலத்தில் மற்ருெரு சண்டையும் நடந்து கொண்டிருந் தது. தேசீய மூவண்ணக் கொடியானது இதுவரையில் முறை யாக அங்கீகரிக்கப்படவில்லே. ஆயினும் 1921இல் இருந்தே இது வழக்கில் இருந்து வந்தது. இது கீழே சிவப்பும், அதற்கு மேல் பச்சையும் அதற்கு மேல் வெள்ளேயுமாக மூன்று நிறத் துணி யால் செய்யப்பட்டிருந்தது. கொடியின் நடுவில் சர்க்காவின் படம் வரையப்பட்டிருந்தது. காந்திஜீயும் மற்றவர்களும் இம்

மூன்று நிறங்களுக்குப் பொருள் கொடுத்திருந்தார்கள். அதனை எல்லாரும் ஏற்றுக் கொண்டிருந்தார்கள். சிவப்பு நிறமானது ஹிந்துக்களைக் குறிப்பிட்டு நின்றது. அவர்களுடைய எண்ணிக்கை மற்றவர்களை யெல்லாம் விட அதிகமாக இருத்தலால் அவர்கள் எல்லாருக்கும் அடிப்படையாக இருப்பதைக் காட்டச் சிவப்பு நிறம் மற்ற இரண்டிற்கும் கீழே இருந்தது. அதற்கு அடுத்தபடியான பெரிய எண்ணிக்கை முசல்மானியர்களுடையதாதலால், சிவப்புக்கு மேலே அவர்களைக் குறிப்பிடப் பச்சை நிறம் நின்றது. வெள்ளை நிறம் மற்றவர்கள் எல்லாரையும் குறிப்பிட்டு நின்றது. அவர்களுடைய எண்ணிக்கை ஹிந்துக்களின் எண்ணிக்கையையும் முசல்மானியர்களின் எண்ணிக்கையையும் விடக் குறைவானதாதலால் அந்நிறம் எல்லாவற்றிற்கும் மேலே வைக்கப்பட்டது. நாங்கள் அஹிம்சாமயமான முறைகளின் மூலமாக சுயராஜ்யத்தை அடைய விரும்பியதால் கொடியயின் மத்தியில் அக்கருத்தை விளக்கச் சர்க்கா வரையப் பட்டிருந்தது. சீக்கியர்களுக்கு இக்கொடி திருப்தி அளிக்கவில்லை. அவர்கள் உயிர் உணர்ச்சி நிறைந்த குறுந்தொகை சாதியார் ஆவர். ஹிந்து மகாசபாவானது அவர்களை ஹிந்துக்கள் என்றே கருதினாலும், மேலும் சரித்திர வரலாறுபடியும் அவர்கள் ஹிந்துக்களின் ஒரு கிளை சாதியாரேயாயினும் அவர்கள் தனியாகக் கருதப்பட விரும்பினார்கள். இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக ஒரு கிளைக் குழு அமைக்கப்பட்டது. அக்குழு தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. கொடியின் அமைப்பில் அக்குழு சில மாறுதல்களைச் செய்தது. அந்த அறிக்கையை அகில பாரதீயக் குழு ஏற்றுக்கொண்டது. கொடி மூவண்ணமாகவே இருந்தது, ஆனால் அதன் நிறங்களிலும், அவை இருந்த வரிசையிலும் மாறுதல் உண்டாகிவிட்டது. சிவப்பு நிறத்தை எடுத்துவிட்டு, அதன் இடத்தில் செம்பொற் சோதி நிறம் (பீதாம்பர நிறம்) அமைக்கப்பட்டது. எல்லாவற்றிற்கும் அடியில் பச்சை நிறமும், அதற்கு மேல் வெள்ளை நிறமும், அவை இரண்டிற்கும் மேல் பீதாம்பர நிறமுமாக மாறிவிட்டது. நடுவில் வெள்ளைத் துணியில் சர்க்காவின் சித்திரம் இடம்பெற்றது. நிறங்களுக்கு மத இனங்களைச் சுட்டி ,அளிக்கப்பட்டிருந்த பொருள் ஒழிக்கப்பட்டதுதான் இம்மாறுதல்களினால் 'உண்டான முக்கியமான விஷயம். இப்போது எந்த நிறமும் எந்தச் சாதியையும் சுட்டி நிற்கவில்லை. இதன் பின் சீக்கியரும் கொடியை ஏற்றுக் கொண்டார்கள். அவர்களுடைய நிறமும் பீதாம்பரம். அந்

நிறம் கொடியை அழகுபடுத்துவதற்காகவே தேரப்பட்டாலும், அது அவர்களுக்குத் திருப்தியை அளிப்பதாக அமைந்தது. புது தேசீயக் கொடி பார்ப்பதற்கும் மிக அழகாக இருந்தது. மிக அழகிய கொடி ஒன்று கிடைத்தது மட்டுமின்றி, நிறங்கள் சாதிகளைக் குறிப்பிடுவதால் எழுந்த வம்புச் சண்டையும் தீர்ந்து விட்டது. காங்கிரஸ் தன் தீர்மானத்தின் மூலமாக நாட்டின் முன் தேசீயக் கொடியை நாட்டிவிட்டது.

இந்த ஆண்டில் நான் பீகாரின் ஜில்லாக்கள் பலவற்றில் சுற்றிவரச் சென்றேன். மக்களை ஆக்க வேலையில் ஈடுபடுத்துவதற்காகவே இச்சுற்றுப் பிரயாணத்தைச் செய்தேன். அதனால் சிறிது வெற்றியும் கிட்டியது. இச்சுற்றுப் பிரயாணத்தில் கிட்டிய ஒரு அனுபவத்தைப் பற்றி இங்கு எழுதுவது நல்லது என்று தோன்றுகிறது. 1921இல் நான் சந்தால் பர்கனுவுக்குச் சென்ற போது, அங்கு நடந்து வந்த அடக்கு முறையின் கடுமையால் எனக்குத் தங்குவதற்கு இடம் கிடைப்பது கூட மிகவும் கஷ்டமாயிருந்தது. அங்கே பாகுர் என்ற ஊரில் நடந்ததைப் பற்றி முன்னமே கூறியிருக்கிறேன். இம்முறை நான் ஜில்லாக்களின் உள்ளே நெடுந்தொலைவில் உள்ள கிராமங்களுக்கெல்லாம் சென்றேன். எங்கும் சிறப்பாக வரவேற்பு அளிக்கப்பட்டது. பாகுரில் இரவு 9 மணிக்கு ரயிலை விட்டு இறங்கினேன். தீபாவளி கொண்டாடுவது போல மக்கள் ஸ்டேஷனை ஒளிமயமாக்கி விட்டார்கள். நாலாபக்கமும் ஒளி வீசிக் கொண்டிருந்தது. மிக்க ஆரவாரத்துடன் ஊர்வலம் அமைத்து என்னை ஸ்டேஷனிலிருந்து ஊர் வரையில் அழைத்துச் சென்றார்கள். அங்கு ஒரு பெரிய ஜமீன்தாரின் இல்லத்தில் என்னைத் தங்க வைத்தார்கள். அவருடைய மோட்டாரில் தான் நான் அந்த ஜில்லா முழுவதும் சுற்றி வந்தேன். இந்த வரவேற்பு 1921இல் நடந்ததற்கு ஒரு பிராயச்சித்தம் என்று அவர் கூறினார்.

# 96. வட்ட மேஜை மகாநாட்டில் காந்திஜீ.

வட்ட மேஜை மகாநாட்டின் நாள் நெருங்கி வந்துவிட்டது. ஆயினும் ஒப்பந்தத்தில் கூறப்பட்டிருந்த விஷயங்கள் அனைத்தும், இன்னும் முற்றிலும் நிறைவேற்றப்படவில்லை. முக்கியமாக, ஒரு விஷயத்தைப் பற்றிச் சர்தார் படேல் மிகவும் வற்புறுத்தி வந்தார். குஜராத்தின் கிராமங்களில் ஏலம் போடப்பட்டுப்போன நிலத்தைப்பற்றி விசாரணை இன்னும் தொடங்கப்படவில்லை. அரசாங்கத்தாரின் சார்பிலிருந்து இதற்குப் பெரிய முட்டுக்கட்டைகள் போடப்பட்டு வந்தன. மகாத்மாஜீ கடிதப் போக்குவரவு செய்து செய்து சலித்துப்போய்விட்டார். மகாத்மாஜீயானவர் எப்படியாவது இங்கிலாந்திற்கு வரத்தான் வேண்டுமென்று இங்கிலாந்திலிருந்து வற்புறுத்தப்பட்டது. ஒப்பந்தத்தை ஒட்டி மகாத்மாஜீ சிம்லாவுக்கும் செல்லவேண்டி வந்தது. இம்முறையும் காங்கிரஸ் வட்ட மேஜை மகாநாட்டிற்கு செல்ல இயலாது போலத் தெரியவந்தது. முடிவில் அரசாங்கத்தார் எல்லா விஷயங்களுக்கும் ஒத்துக்கொண்டார்கள். மிகவும் தாமதமாகிவிட்டது. மகாத்மாஜீ அந்த வாரத்துக் கப்பலில் புறப்படாவிட்டால் இங்கிலாந்திற்குப் போய்ச் சேருவதற்கு மிகவும் தாமதமாகிவிடும். இதனால் மகாத்மாஜீ சிம்லாவிலிருந்தே பம்பாய்க்கு நேரே சென்று கப்பலைப் பிடிக்கவேண்டி வந்தது. கப்பல்கூட அவருக்காகச் சிறிது நேரம் காத்துக்கொண்டிருக்க வேண்டி வந்தது. விசேஷ ஏற்பாடுகளின் மூலமாக எவ்வளவோ சிரமப்பட்டுக் காந்திஜீ சிம்லாவிலிருந்து பம்பாய்க்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டார்.

குஜராத்தில் விசாரணை தொடங்கிறது. சர்தார் என்னையும் அங்கு வரும்படி அழைத்தார், நானும் சென்றேன். பார்டோலியில் விசாரணை நடந்துகொண்டிருந்தது. பொது மக்களின் சார்பில் ஸ்ரீ பூலாபாயீ தேசாய் வழக்காடினர். அரசாங்கத்தின் சார்பில் அந்த ஜில்லாவின் அரசாங்க வக்கீல் இருந்தார். நானும் விசாரணை நடந்து வந்த கோர்ட்டுக்கு எப்போதாவது போவதுண்டு. பல வாரங்கள் வரையில் விசாரணை நடந்துகொண்டிருந்தது. கடைசியாக அரசாங்கத்தின் தஸ்தாவேஜைச் சமர்ப்பிக்கும் பேச்சு வந்தது. ஆனால் அதைக் காட்ட மறுத்துவிட்டார்கள். அதற்கு விசாரணை அதிகாரியும் ஒத்துக்கொண்டார்.

பூலா பாயீயானவர் இது நியாயமன்று எனக் கருதினர். அதனுல், அவர் விசாரணையில் பங்கெடுத்துக்கொள்ள மறுத்துவிட்டார். இதற்குப் பின் ஒருதலையாக அரசாங்கத்தின் சார்பில் அறிக்கை வெளியாகிவிட்டது. சர்தாருக்கு என்னுலியன்ற உதவியைப் புரியலாமென்று நினைத்து நான் அங்குச் சென்றேன். ஆனுல் அவருக்கு என் உதவி தேவைப்படவில்லை. வேலை செய்வதற்கு உள்ளூரிலேயே நிறையப் பேர்கள் இருந்தார்கள். காங்கிரஸின் தலைவர் என்ற முறையில் அவரிடம் வந்த கடிதங்களைப் பற்றியும் அல்லது ஏதாவது கேள்வி கேட்கப்பட்டால் அதைப்பற்றியும் ஏதாவது பேச்சு வார்த்தை நடக்கும். இதில் மட்டும்தான் நான் கலந்துகொண்டேன். நான் அங்குச் சுமார் இரண்டு வாரங்கள் தங்கியிருந்து பிறகு திரும்பி வந்துவிட்டேன். அங்கிருந்து கொண்டே நான் பீகாரின் பத்திரிகைகளில் சில கட்டுரைகள் எழுதி வந்தேன். அவற்றில் காந்திஜீயின் சம்பரான் யாத்திரை யைப்பற்றியும் சில விஷயங்கள் வெளிவந்தன.

மகாத்மாஜீ இங்கிலாந்திற்குப் போய்ச் சேர்ந்தார். அவர் அங்குச் சேர்ந்ததும் சேராததுமாக அங்குள்ள மந்திரி சபை மாறிவிட்டது. வெஜ்வுட் பென்னின் இடத்தில் சாமுவேல் ஹோர் இந்தியா மந்திரியாக வந்துவிட்டார். ஆனுல் மிஸ்டர் மாக்டோனல்டு மட்டும் தம்முடைய கட்சியாகிய தொழிலாளர் கட்சியிலிருந்து பிரிந்துபோய் பிரதான மந்திரியாக இருந்துவந்தார். பெயருக்கு இது சர்வ கட்சி மந்திரிசபையாயினும், உண்மையில் அது கட்டுப் பெட்டிக் (கன்சர்வெடிவ்) கட்சியின் மந்திரி சபை தான். இதனுல் ஏதோ கொஞ்சம் நஞ்சம் தாராள சிந்தையிருக்கும் என்று கொண்டிருந்த நம்பிக்கைக்கும் வழியில்லாமல் போய்விட்டது. காந்திஜீ காங்கிரஸின் கோரிக்கைகளைச் சமர்ப்பித்தார். அவருக்கு நிறைய உபசாரமும் மரியாதையும் நடந்தன. ஆனுல் இந்தியாவிற்குத் திருப்திகரமான அரசியல் அமைப்பு எதையும் நிறுவ இயலவில்லை. பண்டித் மாளவீயஜீயும், ஸ்ரீமதி சரோஜினி நாயுடுவும் அழைப்புப் பெற்று அங்கு வந்திருந்தார்கள். காங்கிரஸின் சார்பாக மகாத்மாஜீ ஒருவரே இருந்தார். அதன் சார்பாக அவர்தாம் அங்குப் பேசினர். வழக்கமாக நடக்கிறபடி, மற்றவர்கள் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டவர்களாக இருந்தார்கள். என்றுமே ஒத்துப்போகக் கூடாதவர்களாகப் பார்த்துப் பொறுக்கிப் பொறுக்கி ஒரு கூட்டம் சேர்க்கப்பட்டிருந்தது. காங்கிரஸ்வாதியாகிய ஒரு முசல்மானியராவது கட்டாயமாக அழைக்கப்பட வேண்டுமென்று மகாத்மாஜீ எவ்வளவோ

முயற்சி செய்தார். ஆனால் அரசாங்கத்தார் இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. ஒருவேளை மற்ற முசல்மானிய உறுப்பினர்கள் எதிர்த்தார்கள் போலும். நமக்குள் உள்ள சண்டைகளைத் தீர்த் துக்கொள்வதற்கும் முயற்சி செய்யப்பட்டது. ஆனால் இதுவும் இயலவில்லை. இயன்றும் இருந்திருக்காது.

ஒற்றுமை உண்டாகவில்லை. அதற்கு மாறாக ஆங்கிலேய ருக்கும், முசல்மானியர்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் இடையில் ஒரு வகையான ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. நமக்குள் ஒரு முடிவுக்கும் வர இயலாதுபோனதும் மிஸ்டர் மாக்டோனல்டு ஆனவர் மத சம்பந்தமான தகராறைப் பற்றி தாமே ஒரு தீர்ப்பை அளித்தார். அதன் மூலமாக முசல்மானியர்களின் கோரிக்கை கள் எல்லாமே நிறைவேற்றப்பட்டு போயின. அதைப்பற்றி ஹிந்துக்களுக்கும் சீக்கியருக்கும் பெரும் கோபம் வந்தது. அதில் ஹரிஜனங்களுக்கும் தனித் தேர்தலுக்கு ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. மகாத்மாஜீ இதைப் பலமாக எதிர்த்தார். ஹரிஜனங் களிக்காகத் தனித் தேர்தல் தொகுதி ஏற்படுத்தப்பட்டு, அவர்கள் சாதி ஹிந்துக்களைத் தேர்ந்தெடுப்பதிலும் அல்லது சாதி ஹிந்துக் கள் அவர்களை தேர்ந்தெடுப்பதிலும் பங்கு எடுத்துக்கொள்ள உரிமை கிடைக்காமல் போய்விட்டால் இவ்விதமான தனிப்பட்டத் தேர்தல் தொகுதிகள் அமைக்கும் திட்டத்தைத் தாம் வன்மையாக எதிர்ப்பார் என்றும், இதற்காகத் தம் உயிரையும் கொடுக்கத் தயாராக இருப்பதாகவும் காந்திஜீ சொல்லிவிட்டார். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஏதாவது செய்வதாக எண்ணம் கொண்டிருக்க வில்லை. இதனால் அவர்கள் நம்முடைய சண்டையை ஒரு சாக்கா கப் பிடித்துக்கொண்டார்கள். இங்கிருந்து சென்றவர்கள் இதைப் புரிந்து கொண்டார்கள். அவர்கள் தம்முள் கூடிப் பேசிக்கொண்டு ஆகாகானைத் தம் தலைவராக அமைத்துக்கொண்டு ஐக்கிய அரசி யல் அமைப்பு (பெடரல் காண்ஸ்டிடுயூஷன்) ஒன்றைத் தயார் செய்து சமர்ப்பித்தார்கள். ஆனால் அவர்கள் பேச்சுக்கும் எவரும் செவி சாய்க்கவில்லை. அதன்மேல் அவர்கள் ஆங்கிலேயர்கள் எவ்விதம் விரும்பினார்களோ அவ்விதமே அரசியல் அமைப்புத் திட்டம் ஒன்றைத் தயார் செய்வதாகத் தமக்குள் பேசி முடிவு செய்தார்கள்.

இங்கு, இந்தியாவிலும் நிலைமை நாளுக்கு நாள் கெட்டுக் கொண்டு வந்தது. காந்தி—இர்வின் ஒப்பந்தத்தை எப்படி யாவது ஒழித்துவிட்டுக் காங்கிரஸின் மீது பழி வாங்குவதற்கு ஏதாவது சாக்குப் போக்கை அரசாங்கம் தேடிக்கொண்டிருந்த

தென்பதை நாங்கள் தெரிந்துகொண்டோம். லார்டு வில்லிங்டனின் கருத்தும் இதுவாகத்தானிருந்தது. இதனுல் தகுந்த சந்தர்ப்பத்திற்காக அவர் காத்துக்கொண்டிருந்தார். சுமார் இரண்டு ஆண்டுகளாக எல்லா சாமான்களுடைய விலேயும் குறைந்து வந்துகொண்டிருந்தது. முக்கியமாக தானியங்களின் விலே விழுந்துகொண்டு வந்தது. இக்காரணத்தால் குடியானவர்களுக்குப் பணம் கிடைப்பது மிகவும் கடினமாயிருந்துவந்தது. அவர்கள் வரியைக் கட்ட முடியவில்லே. ஏனெனில் அவர்கள் வரியையும் கட்டித் தம்முடைய மற்றத் தேவைகளேயும் சரிகட்டும் அளவுக்கு விளேச்சல் விளேயவில்லே. முக்கியமாக ஐக்கிய மாகாணத்தின் நிலேமை மிகவும் நெருக்கடியாகயிருந்தது. 1930இல் சத்தியாக்கிரகம் நடந்த சமயத்திலிருந்தே குடியானவர்களுடைய நிலேமை மிகவும் கேடுற்று வந்துகொண்டிருந்தது: தாம் இக்கஷ்டத்திலிருந்து நிவாரணம் பெறுவதற்கு காங்கிரஸ் உதவி புரியுமென்று அங்கிருந்த குடியானவர்களில் பலர் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். பல இடங்களில், முக்கியமாக அலாகாபாத்து ஜில்லாவில், வரி கொடாமை இயக்கமும் நடந்து வந்தது. காந்தி-இர்வின் ஒப்பந்தத்திற்குப் பின் வரி கொடாமையை நிறுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஏனெனில் நாங்கள் எல்லா விதமான சத்தியாக்கிரகத்தையும் நிறுத்தக் க்டமைப்பட்டிருந்தோம். ஆனுல் அங்கிருந்த நிலேமை அரசியல் சம்பந்தப்பட்டது அன்று. குடியானவர்களுடைய பொருளாதார நிலேமை மிகவும் மோசமாயிருந்ததால் அவர்கள் வரியை கொடுக்க விரும்பினுலும்கூட அவர்களால் அதைக் கொடுக்க முடியாது. காங்கிரஸானது சத்தியாக்கிரகத்தை நிறுத்திவிட்டது; ஆனுல் அவர்களுடைய பணமில்லாக் குறையைப் போக்கடித்து அவர்களே வரி செலுத்தவைப்பதற்கு காங்கிரஸுக்காவது வேறு யாருக்காவது சக்தி இல்லே. அவர்கள் வரி கொடுக்க மாட்டோம் என்று கூறுவார்களானுல் காங்கிரஸானது ஒப்பந்தத்தை முற்றிலும் நிறைவேற்றவில்லே என்று கொள்ளப்படும். இதனுல், அங்கு அரசியல் நிலேமையையும் பொருளாதார நிலேமையையும் பிரித்துச் சத்தியாக்கிரகத்தின் ஓர் அம்சமாகிய வரி கொடாமை இயக்கத்தை நடத்தாமல், குடியானவர்களுடைய நிலேமைக்கு ஏற்றவாறு அவர்களுக்குச் சலுகை கிடைப்பதற்கு முயற்சி செய்வது அவசியமாகி விட்டது. அப்படியேதான் செய்யப்பட்டது. ஆயினும் அரசாங்கத்தார் என்ருவது இதை ஒப்புக்கொண்டிருக்கிருர்களா? இப்போதும் அவர்கள் இதை ஒப்புக்கொள்ளவில்லே.

ஜமீன்தார்களும் தமக்கு வரவேண்டிய பணத்தைத் தண்டல் செய்யாமல் விடுபவர்களாக இல்லை. அரசாங்கத்தார் வரியை சிறிது தள்ளிக் கொடுத்தார்கள். ஆனால் அது மிகக் குறைவாக இருந்ததால், அதனால் யாதும் அனுகூலம் உண்டாகவில்லை. அது மட்டுமின்றி, குடியானவர்கள் வரியில் ஏதாவது சிறு பங்கைக் கொடுக்க முயற்சி செய்ததினாலும், அப்படியே கொடுத்ததினாலும் அவர்களுக்கு நன்மை உண்டாகவில்லை. ஏனெனில், எஞ்சி நின்ற தொகைக்காக அவர்களுடைய வயல்கள் கைப்பற்றப் பட்டன. அதனால் அவர்கள் தம் நிலத்தை இழந்துவிட்டார்கள். பழைய பாக்கி அப்படியே இருந்தது. இன்னும் ஏதாவது தள்ளிக் கொடுக்கச் செய்து அவர்களுடைய வரியைக் குறைப்பதற்கு உதவி புரிய வேண்டுமென்று பெருமுயற்சி செய்யப்பட்டது. ஆனால் முதலாவதாக அரசாங்கத்தார் அப்படி எதுவும் செய்ய ஒத்துக் கொள்வதில்லை. அப்படி ஒத்துக் கொண்டாலும், அவர்கள் தள்ளுவது மிகக் குறைவாக இருப்பதால் குடியானவர்களுக்கு அதனால் யாதொரு சௌகரியமும் உண்டாவதில்லை. பண்டித் ஜவஹர்லாலும், ஸ்ரீ புருஷோத்தம தாஸ் டாண்டனும் மற்றும் அந்தக் காலத்தில் மாகாண விஷயங்களைக் கவனித்து வந்த அதிகாரியான சபா தலைவர் திருவெய்திய ஸ்ரீ தஸத்துக் அகமது ஷேர்வானீ ஆகியவர்களும் ஏதாவது செய்தாக வெண்டுமென்று எவ்வளவோ முயற்சி செய்தார்கள். ஆனால் அவர்கள் வெற்றி பெறவில்லை.

வெற்றி எப்படிப் பெறமுடியும்? அரசாங்கம்தான் வேறு ஏதோ யோசனை செய்து கொண்டிருந்ததே! அப்படியே அது ஏதாவது செய்ய விரும்பினாலும்கூட அதைக் காங்கிரஸின் வேண்டுகோளின்பேரில் செய்யக் கூடாது! ஏனெனில் அப்படிச் செய்தால் காங்கிரஸின் செல்வாக்கு குடியானவர்களிடையில் பெருகி விடும். இதனால் அங்கிருந்த மாகாணக் குழுவானது எல்லாவகையிலும் தோல்வியுற்றுக் கடைசியில் தன் ஆற்றாமையை எடுத்துரைத்து, வரி கொடுக்க மறுக்கும்படி குடியானவர்களுக்கு யோசனை கூறுவதென்று முடிவு செய்தது. இது ஒரு வகையில் வரி கொடாமை இயக்கம் என்றே கருதப்பட்டது. அகில பாரதீயச் செயலாற்றுக் குழுவின் அனுமதியின்றி இதைச் செய்ய முடியாது. இதனால் அதனுடைய அனுமதி கோரப்பட்டது.

வங்காளத்தில் பயங்கரமான நிலைமை உண்டாகி விட்டது. அங்கிருந்த மாகாண அரசாங்கமானது எப்போதுமே சதியாலோசனைக்காரர்களின் கிலி கொண்டிருந்தது. இதனால் ஏராள

மான இளைஞர்களைச் சிறைகளில் அடைத்து வைத்து வந்தது. காந்தீ இர்வின் ஒப்பந்தத்தில் சத்தியாக்கிரகிகளை விடுதலை செய்வதைப் பற்றித்தான் சொல்லப் பட்டிருந்தது. அவர்களை விடுதலை செய்வதே மிகவும் கஷ்டமாயிருந்தது. அரசாங்கத்தார் வித விதமான சாக்குப் போக்குக்களைக் கூறி வந்தார்கள். சதியாலோசனைக் கட்சிக்காரர்களைப் பற்றிச் சொல்வானேன்? இதைப் பற்றி அங்குள்ளவர்கள் மிகவும் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தார்கள். சதியாலோசனைக்காரர்களைக் கண் காணாச் சிறை வைத்திருந்த ஹிஜ்லீ பாளையச் (காம்ப்) சிறையில் ஒரு சம்பவமும் நடந்துவிட்டது. அப்போது சிறைக்குள் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. அதனால் சில கைதிகள் காயமடைந்தார்கள்; ஓரிருவர் இறந்தும்பட்டார்கள். இதனால் கொந்தளிப்பு மேலும் பரவியது. சட்காம் என்ற கிராமத்தில் யாரோ ஒரு போலீஸ்காரனை ஒரு சதியாலோசனைக்காரன் கொன்றுவிட்டான். இதில் ஹிந்து முஸ்லிம் என்ற கேள்வி யாதும் சம்பந்தப்படவில்லை. ஏனெனில் சதியாலோசனைக்காரர்கள் எத்தனையோ ஹிந்து போலீஸ் அதிகாரிகளைக் கொன்றிருக்கிறார்கள். அவர்கள் அரசாங்க அதிகாரிகளைச் சாதி என்னவென்று பார்த்துக் கொல்வதில்லை. எவர்களைத் தேசத் துரோகிகள் என்று நினைத்தார்களோ அவர்களைச் சாதிமத வேற்றுமை பார்க்காமல் கொன்று வந்தார்கள். ஆயினும் அவ்விடத்தில் அக்கொலைக்கு ஹிந்து முஸ்லிம் சண்டை உருக் கொடுத்து அங்கிருந்த ஹிந்துக்களுக்கு நிறையக் கொடுமைகள் செய்யப்பட்டன. ஆங்கிலேயரும், சட்டைக்காரர்களும் (ஆங்கிலோஇந்தியர்)தாம் இவ்விதம் செய்தார்கள்.

இந்த விஷயங்களையெல்லாம் காரணமாகக் கொண்டு வங்காளத்தில் பெருங் கொந்தளிப்பு உண்டாகியிருந்தது. அரசாங்கத்தாரும் புதிய அவசரச் சட்டத்தைத் வெளியிடத் தயங்கிக் கொண்டிருந்தார்கள். முர்ஷிதாபாத் ஜில்லாவில் உள்ள பிரம்மபுரத்தில் வங்காள அரசியல் மகாநாடு, புகழ்வாய்ந்த காங்கிரஸ்காரரும் வயது முதிர்ந்த வருமான ஸ்ரீ ஹர்தயாள் நாகைத் தலைவராகக் கொண்டு நடந்தது. சர்தார் படேல் ஸ்ரீ அணேயையும் என்னையும் காங்கிரஸ் சார்பில் அங்கு அனுப்பினார். நாங்கள் இருவரும் மகாநாட்டில் பங்கெடுத்துக் கொண்டோம். நான் வங்காள மொழியில் ஒரு சொற்பொழிவும் ஆற்றினேன். இதேபோல எல்லை மாகாணத்தின் நிலைமையும் சரியாக இல்லை. அங்கும் அடக்குமுறை நடந்துகொண்டிருந்தது. இவ்விதமாக வட்ட மேஜை மகாநாட்டின் வேலை முடிவை நெருங்கி

வர வர இங்குள்ள நிலைமையும் மேன்மேலும் சிக்கலாகிக் கொண்டிருந்தது., சச்சரவுகள் மறுபடியும் தலையெடுக்கும் என்பதையும், மீண்டும் போராட்டம் செய்யவேண்டி வரும் என்பதையும் உணர்ந்தோம்.

செயலாற்றுக் குழுவானது ஐக்கிய மாகாணத்தின் விண்ணப்பத்தின் மேல் ஆலோசனை செய்யத் தொடங்கியதும் நாங்கள் எங்களுடைய பெரும் பொறுப்பை உணர்ந்தோம். காந்திஜீ இன்னும் திரும்பி வரவில்லை. அவர் இல்லாதபோது வரி கொடாமையை நாங்கள் ஆரம்பிப்பது எவ்வளவு நியாயம் என்பதைப் பற்றியும், அப்படி நியாயமானாலும் அதை எவ்வளவு தூரம் நடத்திச் செல்ல முடியுமென்பதைப் பற்றியும் ஒவ்வொரு கோணத்திலிருந்தும் நாங்கள் பல நாட்கள் ஆலோசனை செய்து வந்தோம். வரி கொடாமையினால் கட்டாயமாக விளையக்கூடிய அடக்கு முறையைப் பொதுமக்களால் சகிக்க முடியுமா முடியாதா என்பதைப் பற்றி மனத்தில் ஐயம் இருந்து வந்தது. பீகாரில் சௌகிதாரி வரியானது ஒரு சாமான்யமான வரி. எவருக்குமே ஆண்டுக்கு பன்னிரண்டு ரூபாய்க்கு மேற்படாது. ஏழைகள் ஆண்டிற்கு ஆறு அல்லது பன்னிரண்டு அணுவுக்கு மேல் கொடுக்க வேண்டி வராது. சாதாரண குடியானவர்கள் மேல் ஒன்று அல்லது ஒன்றரை ரூபாயோ அல்லது சற்று அதிகமாகவோ தான் அவரவருடைய நிலைமைக்கு தக்கபடி விழும். அப்படிப் பட்ட சாதாரண வரியைக் கொடாது நிறுத்தியதற்காக எவ்வளவு அட்டூழியங்கள் செய்யப்பட்டன என்பதை நான் கிராமம் கிராமமாகச் சென்று என் கண்ணாலேயே பார்த்திருந்தேன். ஓராண்டு கழிவுதற்குள்ளாகவே மறுபடியும் அதை எல்லாம் பார்க்க வேண்டிய நிலை எதிர்நின்றது. வரி செலுத்துவதை நிறுத்தவேண்டுமென்ற பேச்சு மிகவும் வலுத்து வருவதைக் கண்டு நான் அஞ்சினேன். வரி கொடுப்பதை நிறுத்திவிட்டால் ஜமீன்தார்கள் அரசாங்கத்திற்குக் கப்பம் கட்டமுடியாது. இதனால் அரசாங்கத்தின் வரும்படியின் ஒரு பெரிய கூறு கிடைக்கும் வழி அடைபட்டுப் போகும். அதனால் அரசாங்கத்தின் வேலை நடப்பதற்கு இடையூறு உண்டாகும். ஆகையால் வரி கொடுப்பதை நிறுத்தினால் அரசாங்கத்தார் மிகக் கடுமையாக நடவடிக்கைகள் எடுப்பார்கள். இக் காரணங்களையெல்லாம் மனத்திற் கொண்டு மக்கள் அடக்குமுறையைச் சகிக்க எவ்வளவு தயாராயிருக்கிறார்கள் என்று நான் திருப்பித் திருப்பிக் கேட்டேன். இதற்கு யாராலும் உறுதியான விடை அளிக்க முடியவில்லை. ஆயினும், அங்குள்ள பொதுமக்கள்

நெடுந்தொலைவு வரையில் இன்னல்களைச் சகிக்கத் தயாராயிருக்கிறார்கள் என்று ஐக்கிய மாகாணத்தில் உள்ள நண்பர்கள் சமாதானம் கூறி என்னைத் தேற்றினார்கள்.

அங்குள்ள மாகாணக் குழுவும் முக்கியமான மனிதர்களும், அங்கு நிலவி வந்த நிலைமையில் இதை விட்டு வேறு வழியில்லை என்றும், மேலும் இதனால் விளையும் அடக்கு முறையை மக்கள் சகிக்கத் தயாராகயிருக்கிறார்கள் என்றும் கூறும்போது அகில பாரதீயக் குழுவின் உறுப்பினர்களாகிய நாம் அனுமதி அளிப்பதற்கு எப்படித் தயங்கலாமென்று சர்தார் படேல் நினைத்தார். முடிவில் எவ்வளவோ அலசி ஆராய்ந்து ஆலோசனை செய்தபின் பல நிபந்தனைகளைப் போட்டு அனுமதி அளிக்கப்பட்டது. அதுவும் வரி கொடாமையை உடனே தொடங்குவதற்கு அன்று; தயார் செய்வதற்காகத்தான். அரசாங்கம் இதற்காகத்தான் காத்துக்கொண்டிருந்தது. அது உடனே தன் நடவடிக்கைகளைத் தொடங்கிவிட்டது. தானியங்களின் விலை மிகவும் விழுந்து விட்டதால் வரி கொடுக்க முடியவில்லையென்பதுதான் உண்மை. இதை அங்கிருந்த கவர்னர் ஹைலீ துரை சில நாட்களுக்குப் பின் வெளிப்படையாக ஒப்புக் கொண்டார். இத் தீய வரிச் சட்டம் அடியோடு மாற்றப்படாத வரையில் பொது ஜன சமூகம் இப்படித்தான் நிலைகுலைந்து நிற்கும் என்றுகூட அவர் கூறினார். ஆயினும் அச்சமயத்தில் காங்கிரஸை ஒடுக்குவதுதான் ஏற்றதாயிருந்தது. அதனால் வேறு நடவடிக்கைகள் தொடங்கப்பட்டு விட்டன.

## 97. அரசாங்கத்தின் பயங்கரமான அடக்குமுறை ஆட்சி

வட்டமேஜை மகாநாடு முடிந்ததுமே, காந்திஜியானவர் நம்பிக்கை இழந்து இந்தியாவிற்குப் பயணமானார். அவர் பம்பாய்க்கு வந்து சேரும் நாளன்றே செயலாற்றுக் குழுவின் இருக்கையைக் கூட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. எல்லாரும் தத்தம் மாகாணங்களிலிருந்து பம்பாய்க்குப் புறப்பட்டார்கள். வங்காளத்தில் அடக்கு முறை இன்னும் நடந்து கொண்டேயிருந்தது. இதனிடையில் எல்லா மாகாணத்திலும் கான் அப்துல்

கப்பார் கானும் டாக்டர் கான் சாஹபும் மற்றத் தலைவர்களும் ஒரேயடியாகச் சிறை கொள்ளப்பட்டார்கள். அவர்கள் தம் மாகாணத்திற்கு வெளியே பல்வேறு இடங்களில் கண் காணுச் சிறையில் வைக்கப்பட்டார்கள். ஐக்கிய மாகாணத்திலும் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் டண்டனும் ஷேர்வானீ சாஹபும் கைது செய்யப்பட்டனர். நாங்கள் பிரயாணம் செய்துகொண்டிருந்த அதே ரயில் வண்டியில்தான் பண்டித் ஜவஹர்லால்ஜீயும் பம்பாய்க்குச் சென்றுகொண்டிருந்தார். பிரயாகிலிருந்து சிறிது தொலைவு சென்றபின் அந்த வண்டி ஒரு சிறிய ஸ்டேஷனில் நின்றது. அங்குப் போலீசார் முன்னமேயே மோட்டாரில் வந்து சேர்ந்திருந்தார்கள். பண்டித்ஜீ அங்கே கைது செய்யப்பட்டார். நாங்கள் நேரே பம்பாய்க்குச் சென்றுவிட்டோம்.

பம்பாயில் மகாத்மாஜீயை வரவேற்பதற்காகச் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அவர் வரும்வழி நெடுக இருந்த வீடுகளில் எல்லாம் மக்கள் நிறைந்து இருந்தார்கள். தெருக்களில் எல்லாம் ஒரே கூட்டம். இதுபோன்ற கூட்டம் இதற்கு முன் வேறு எந்தச் சமயத்திலும் வேறு எவரையும் பார்ப்பதற்காகக் கூடியதேயில்லை. காந்திஜீக்காக ஏற்பாடு செய்திருந்த இடத்திற்கு அவர் வந்து சேர்ந்ததுமே எல்லாச் செய்திகளும் அவருக்குக் கூறப்பட்டன. அரசாங்கத்தார் இப்போது பகிரங்கமாக அடக்கு முறையைச் செலுத்தப் போகிருர்கள் என்பதை அவரும் புரிந்து கொண்டார். செயலாற்றுக் குழுவின் இருக்கை முறைப்படி நடந்தது. தற்கால நிலைமையைப்பற்றி நீண்டதொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தின் முக்கியமான பகுதிகளை காந்திஜீ வைசிராய்க்குத் தந்திமூலம் தெரிவித்து அவரைக் காண்பதற்கு அனுமதி வேண்டினர். இவையெல்லாம் முடிந்தபின் நாங்கள் தத்தம் ஊர்களுக்குப் புறப்பட்டும் சென்றுவிட்டோம்.

நான் புறப்படும்போது காந்திஜீயிடம் கடைசியாக விடைபெற்றுக் கொள்ளச் சென்ற சமயத்தில் அவருடன் மிஸ்டர் பெந்தல் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டேன். இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரின் சார்பில் பிரதிநிதியாக அவரும் வட்ட மேஜை மகாநாட்டிற்குச் சென்றிருந்தார். அங்கு அவர் ஆங்கிலேயரையும் முசல்மானியரையும் இறுகப் பிணிப்பதற்காக எத்தனையோ காரியங்கள் செய்தார். இனி ஒன்றும் நடக்காதென்பதையும், விரைவிலேயே அடக்குமுறை நடக்கத் தொடங்கி விடுமென்பதையும், பிறகு காங்கிரஸ் வேறு வழியின்றி சத்தியாக்

கிரகம் செய்ய வேண்டிவரும் என்பதையும் நாங்கள் புரிந்து கொண்டோம். சத்தியாக்கிரகத்தைத் தொடங்க வேண்டுமென்று எங்களில் எவருக்குமே விருப்பமில்லை. இதற்குத் தயாராகவு மில்லை. உள்ள உடன்பாடுமில்லை. எங்களுடைய போற்றற் குரிய தலைவர்களை அரசாங்கம் கைது செய்து விட்டது உண்மை தான். ஆனால் அவர்களைப்பற்றி முதலில் வைசிராயுடன் கட்டாயமாகப் பேச்சு வார்த்தை நடத்த வேண்டியிருந்தது. மேலும் அப்படியே ஏதாவது நிர்ப்பந்தமான நிலைமை உண்டானால் ஏதாவது செய்ய வேண்டியதும் அவசியம்தான். ஆனால் காந்திஜீ இந்தியாவிற்குத் திரும்பி வருவதற்கு முன்பே அரசாங்கத்தார் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்துவிட்டார்கள். அவர்கள் சார்பிலிருந்து ஆக்கிரமிப்பும் தொடங்கப்பட்டுவிட்டது. அவர் கள் செய்துவந்த ஏற்பாடுகளைப்பற்றிச் செய்திகள் எங்களுக்கு இங்கும் அங்குமிருந்து முன்னமே கிடைத்திருந்தன. எவ்வித மான அவசரச் சட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படும் என்பதும்கூட டாக்டர் அன்சாரிக்குத் தெரிய வந்திருந்தது. அவர் இச் செய்திகளை எங்களுக்குத் தெரிவித்தார். இப்போது விஷயம் மேலும் தெளிவாகிவிட்டது.

இனி பீகாரிலும் அடக்குமுறை நடக்குமாதலால் நம்முடைய ஆட்களை அதற்குமுன் ஒருமுறை காண்பது நன்று என நான் பம்பாயிலிருந்து புறப்பட்டதுமே நினைத்தேன். இட்டார்ஸி சந்திப்பிலிருந்தே நான் பல தந்திகளை அனுப்பினேன். அவற் றின் மூலமாக மாகாண நிர்வாகக் குழுவின் இருக்கையைப் பட்னா வில் நடத்துவதைப்பற்றிய செய்தி மட்டுமின்றி அதன் உறுப் பினர்களுக்கு அழைப்பும் அனுப்பப்பட்டிருந்தது. அடுத்த நாள் காலை நான் பட்னா போய்ச் சேர்ந்ததும் அங்குத் தந்திகள் வந்து சேரவேயில்லையென்பது தெரிய வந்தது! தந்திகளை அரசாங்கத் தார் தடை செய்து விட்டார்கள்! அப்படியுங்கூட சிலர் பட்னா வுக்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். அங்கு நிர்வாகக் குழுவின் இருக்கையை நாங்கள் நடத்தினோம். அன்றிரவே மகாத்மாஜீ கைது செய்யப்பட்டார். அவருடன் சர்தார் படேலும் இன்னும் பல முக்கியமான காங்கிரஸ் தலைவர்களும் கைது செய்யப்பட்டார் கள். இவற்றையெல்லாம் நாங்கள் பத்திரிகைகளிலிருந்து தெரிந்து கொண்டோம். நாங்களும் விரைவில் சிறை கொள்ளப் படுவோம் என்பதை உணர்ந்தோம். இதனால்தான் நான் பட்னா வுக்குப் போய்ச் சேர்ந்ததுமே நிர்வாகக் குழுவின் வேலையை முடித்துக் கொண்டேன். எல்லாருக்கும் கட்டளைகளைத் தயார்

செய்து அவற்றை அச்சிட ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு நாங்கள் தயாரானதுமே போலீசார் வருகிறுர்கள் என்ற எச்சரிக்கை கிடைத்தது. அவர்கள் இன்னும் சதாகத் ஆச்ரமத்திற்கு வந்து சேரவில்லை. ஆனுல் அவ்வழி வந்து கொண்டிருந்தார்கள். நாங்கள் சிறை கொள்ளப்படுவதற்காகக் காத்துக் கொண்டிருந்தோம். ஸ்ரீ ராம் தயாளு பாபூவும் பேராசிரியர் அப்துல் பாரீயும் இன்னும் சில உறுப்பினர்களும் வேலை முடிந்ததுமே சென்றுவிட்டார்கள். திர்ஹூத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் மத்தியானக் கப்பலில் தீகா காட் (துறை) வரையில் வந்தார்கள், ஆனுல் சிறைக்குச் செல்லாமல் வெளியே இருந்து வேலை புரியும் நோக்கத்துடன் அவர்கள் அங்கேயே நின்றுவிட்டார்கள். நிர்வாகக் குழுவின் கூட்டத்திற்கு வரவில்லை.

போலீஸ் சூப்பரிண்டென்டு பல ஆயுதபாணி சேவகர்களுடன் திடீரென்று வந்து சேர்ந்தார். அவர்கள் ஆச்ரமத்தைச் சூழ்ந்து கொண்டார்கள். அங்கு நாங்கள் மூன்று நான்கு பேர் உட்கார்ந்திருந்தோம். அவர் எங்களைப் பார்த்து, "நீங்கள் நிர்வாகக் குழுவின் கூட்டம் நடத்திக் கொண்டிருக்கிறீர்களா?" என்று கேட்டார். அந்த வேலை முடிந்துவிட்டதென்பதையும், பல உறுப்பினர்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள் என்பதையும் நாங்கள் தெள்ளத் தெளியக் கூறினேம். காங்கிரஸ் குழுக்களும் அதன் கிளைகள் அனைத்தும் சட்டத்திற்கு விரோதமானவை என்று விளம்பரம் செய்யப்பட்டிருந்த அரசாங்க உத்தரவை அவர் எங்களிடம் காட்டினுர். போலீசார் முதலில் டெலிபோனைக் கைப் பற்றிக் கொண்டார்கள். பிறகு தேசீயக் கொடி பறந்து கொண்டிருந்த இடத்தில் தம்முடைய, அதாவது, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொடியை நாட்டினுர்கள். பிறகு அங்குச் சோதனை போடத் தொடங்கினுர்கள். சோதனை போட்டதில் ஒன்றும் கிடைக்கவில்லையாயினும், அதில் பல மணி நேரம் கழிந்தது. நாங்கள் எல்லாரும் சிறை கொள்ளப்பட்டோம். ஆனுல் இன்னும் அங்கேயே இருந்தோம். பகல் சுமார் ஒரு மணியிலிருந்து இரவு எட்டு மணி வரையில் நாங்கள் எல்லோரும் அங்கேயே இருந்தோம். ஆச்ரமம், வித்யாபீடம் ஆகியவற்றின் கட்டடங்கள் எல்லாம் பறிமுதல் செய்யப்பட்டன! வித்யா பீடத்தின் மாணுக்கர்கள் ஆசிரியர்கள் அனைவரையும் அங்குவிட்டுச் சென்றுவிடும்படி உத்தரவிடப்பட்டது. சர்வஸ்ரீ பிரஜ்கிஷோர் பிரசாத், மதுரா பிரசாத், கிருஷ்ண வல்லப் சஹாய், ஜகத் நாரா

யண் பி. எஸ். சி., ஆகியவர்களும் நானும் கைது செய்யப்பட்டோம். ஸ்ரீ பிரஜாபதி மிஸ்ராவும் கைது செய்யப்பட்டார். இரவு சுமார் ஒன்பது மணிக்கு பங்கீபூர் சிறைக்கு நாங்கள் கொண்டு போகப் பட்டோம். போலீசாரின் லாரியில் எங்கள் சாமான்களைப் போட்டுக்கொண்டு ஏறிச் சென்றோம். போலீஸ் சூப்பரிண்டெண்டும் எங்களுடன் சிறைக்கு வந்தார். எங்களுடைய படுக்கை பெட்டிகளை நாங்களே இறக்கிச் சுமந்து செல்ல வேண்டியிருந்தது. சூப்பரிண்டெண்டு அவ்விதமாகவே கட்டளையிட்டார்.

அன்றிரவே வெறுமனே கிடந்த ஓர் அசுத்தமான அறையில் நாங்கள் அடைக்கப்பட்டுக் கிடந்தோம். விரித்துக் கொள்வதற்காக சில கம்பளிகள் கொடுக்கப்பட்டன. கடைத் தெருவிலிருந்து பூரி வாங்கி வந்து உணவு அளிக்கப்பட்டது. அங்கு மூத்திர வாடை சொல்ல முடியவில்லை. அதனால் இரவு முழுதும் தூங்கவே முடியவில்லை. கடைத் தெரு பூரியும் விரும்பி உண்ணத்தக்கதாக இல்லை. அடுத்த நாள் காலை சிறையின் சூப்பரின்டெண்டான சிவில் சர்ஜன் வந்தார். நாங்கள் விரும்பினால், எங்கள் உணவை வெளியிலிருந்து தருவித்துக் கொள்ளலாமென்று அவர் கூறினார். அங்குக் கிடைப்பதையேதான் உண்போம் என்று கூறிவிட்டோம். மற்றக் கைதிகளுக்குக் கிடைத்துவந்த அதே இரும்பு வட்டிலும் அதே உணவும்தாம் கிடைத்தன. நாங்கள் அதைத்தான் உண்டோம். எங்களை உயர்ந்த வகுப்புக் கைதிகளாக நடத்தும்படி இரண்டு நாட்களுக்குப் பிறகு அரசாங்க உத்தரவு வந்தது. அதன்மேல் வேறு தனிப்பட்ட உணவு கிடைக்கத் தொடங்கியது. அடுத்த நாளிலிருந்து நாங்கள் வேறொரு கட்டுக்கு (வார்டுக்கு) அழைத்துச் செல்லப்பட்டு அங்கு இருந்து வந்தோம். சிறையிலேயே எங்கள்மீது வழக்குத் தொடுக்கப்பட்டு நடத்தப்பட்டது. பிரஜ்கிஷோர் பாபுவுக்கு நான்கு மாதங்களும் மற்றவர்களுக்கு ஆறு மாதங்களும் தண்டனைகள் கிடைத்தன. சில நாட்களுக்குப் பிறகு நாங்கள் அனைவரும் ஹஜாரிபாக் சிறைக்கு அனுப்பப்பட்டோம். அங்குத்தான் எங்கள் கெடுவைக் கழித்தோம்.

நாங்கள் கைது செய்யப்பட்டுவிட்டதால் வெளியே நடந்து வந்த கிளர்ச்சியில் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் வெளியே யிருந்தவர்கள் நிறைய வேலை செய்தார்கள். தாம் இரண்டு வாரத்திற்குள் இந்தக் கிளர்ச்சியை ஒழித்துக்கட்டி விடுவதாக லார்டு வில்லிங்டன் வீராப்பு பேசினாராயினும், அது சுமார் இரண்டு ஆண்டுகள் வரையில் நடந்துகொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் மக்கள் ஆர்வம் நிறைந்திருந்தார்கள். புதிது

புதிதாகத் தலைவர்கள் எங்கிருந்து தோன்றினர்கள் என்பது தெரியாது. அவர்கள் தத்தம் போக்குப்படி வேலைத் திட்டங்களை அமைத்துக் கொண்டார்கள். சட்ட மறுப்பு வேலையை மிகவும் மும்முரமாக நடத்தி வந்தார்கள். சட்டத்தை மீறுவதற்குத் தேடிச் செல்ல வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. அரசாங்கத்தார் கூட்டம் போடுவதையும், ஊர்வலம் நடத்துவதையும் எல்லா இடங்களிலும் தடை செய்திருந்தார்கள். இந்த உத்தரவை எதிர்த்துக் கூட்டங்கள் நடத்தப்பட்டு வந்தன. ஊர்வலங்கள் சென்று வந்தன. கூட்டங்களின் மீதும் ஊர்வலங்களின் மீதும் தடியடிப் பிரயோகம் செய்யப்படும். சிற்சில இடங்களில் குண்டுகளும் எறியப்பட்டன. ஆயினும் அவை நிற்காமல் நடந்து கொண்டு வந்தன. காங்கிரஸ் குழுக்களின் வீடுகள், ஆச்ரமங்கள் அனைத்தையும் அரசாங்கத்தார் பறிமுதல் செய்துவிட்டார்கள். முந்திய சத்தியாக்கிரகத்தின்போது பீஹபூரில் ஆச்ரமத்தை மீட்க எப்படி இடையருது போராடப்பட்டு வந்ததோ அதே முறையில் இந்த ஆச்ரமங்களையும் மீட்க மக்கள்போரரடி வந்தார்கள். சதாகத் ஆச்ரமத்திலும் இவ்வண்ணம் நாள்தோறும் நடந்து வந்தது. நாள்தோறும் மக்கள் கைது செய்யப்பட்டு வந்தார்கள். அங்கிருந்த கொடியைப் பற்றித்தான் நிறையப் போராட்டம் நடந்து வந்தது. யூனியன் ஜாக் ஏற்றப்பட்டிருந்த கொடி மரத்தை மக்கள் சாய்த்துவிட்டே மறு காரியம் பார்த்தார்கள்.

இம்முறை அரசாங்கம் தன் ஆக்கிரமிப்பை ஜனவரி 4ஆம் தேதி தொடங்கியது. சில நாட்களுக்குப் பிறகு வரும் சுதந்திர தினமாகிய ஜனவரி 26ஆம் தேதியைக் கொண்டாட மக்கள் முடிவு செய்தார்கள். அன்று பல இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப்பட்டது. மோதிஹாரியில் ஜில்லாக் குழுவின் கட்டடத்திற்கு எதிரில் இருந்த வெட்ட வெளியில் ஒரு பெரும் கூட்டம் நடந்தது. அதற்குக் கிராமங்களிலிருந்தும் நிறைய மக்கள் வந்திருந்தார்கள். அங்குக் குண்டு எறியப்பட்டது. எத்தனையோ பேர் மாண்டார்கள். ஆனுல் மக்கள் அங்கு விட்டு நகரவில்லை. இன்றுகூட அந்த இடத்தில் உயிர்த் தியாகிகளின் நினைவாக ஒரு மண்டபம் கட்டப்பட்டு நிற்பதைக் காணலாம். கடைசியில், துப்பாக்கிப் பிரயோகத்தை நிறுத்திவிட்டுப் போலீசார் திரும்பிச் சென்ற பிறகுகூட மக்கள் அங்கேயே நின்றுகொண்டிருந்தார்கள். இரவிலும் அங்கேயே தங்கியிருந்து அதே இடத்திலேயே உணவு உண்டார்கள். அடுத்த நாள்தான் கிராமத்து மக்கள் அங்கிருந்து கலைந்து சென்ருர்கள். முங்கேர் ஜில்லாவில் உள்ள தாராபூரிலும்

பேகஸ்பூரிலும்கூட நிறையப் பேர் துப்பாக்கிக் குண்டுக்கு இரை யானுர்கள். ஒரு மாணவன் துப்பாக்கி குண்டைத் தன் மார்பில் ஏற்று இறக்கும் தருவாயில் "நான் சுயராஜ்யத்திற்காக உயிர்விடு கிறேன். லோகமான்ய திலகரின் அருகில் சென்று சமாசாரத் தைத் தெரிவிப்பேன்" என்று கூறிக்கொண்டே இறந்தான். இத் தகைய வீரத்தை பீகாரின் மக்கள் எத்தனையோ இடங்களில் காட் டினுர்கள். மீண்டும் 1930ஐப் போலவே மாகாணம் முழுவதும் சிறைச்சாலைகள் எல்லாம் நிறைந்துவிட்டன. பட்ன பாளையச் சிறையும்கூட நிறைந்துவிட்டது. 1930ஐவிட இம்முறை சிறைச் சாலைகளில் கண்டிப்பு அதிகமாகிவிட்டது. உயர்ந்த வகுப்பு மிகச் சிலருக்கே அளிக்கப்பட்டது. பீகாரில் அப்படிப்பட்டவர்கள் சென்ற முறையே குறைவுதான். இப்போது அவர்களுடைய எண்ணிக்கை மேலும் குறைந்துவிட்டது. அரசாங்கத்தார் எவ் வளவு விரைவாகக் கிளர்ச்சியை ஒழிக்க விரும்பினுர்களோ அவ் வளவு விரைவாக அதை அடக்க முடியவில்லை. அது நடந்து கொண்டே தானிருந்தது. நாங்கள் ஹஜாரிபாகில் முன்போலவே காலத்தைக் கழித்து வந்தோம். இந்த முறை கைத்தொழில் சாலைக்குப் போவதற்கு எங்களுக்கு உத்தரவு கிடைக்காததுதான் புதிதாக நடந்த விஷயம். அங்கு நாங்கள் சாதாரண கைதிகளைச் சந்திப்போம் என்றும், அவர்களைக் கெடுத்து விடுவோம் அல்லது தூண்டிவிட்டு விடுவோம் என்றும் நினைக்கப்பட்டதுதான் இதற் குக் காரணம். இதனுல் நாங்கள் முன்போல எதுவும் வேலை புரிய முடியவில்லை. ஆனுல் நூலை நிறைய நூற்று வந்தோம். மத நூல்களையும் நிறையக் கற்ருேம். குரான்-ஷரீப், புத்த மத நூல் கள், பைபிள் முதலியவற்றைப் படித்தோம். இந்த முறை சிறை சென்றபோது ஓர் அற்புதமான சம்பவம் நிகழ்ந்தது. ஸ்ரீ மகா மாயா பிரசாத் என்று ஓர் ஆரோக்கியமான இளைஞர் இருந்தார். அவருக்கு நோய் நொடி ஒன்றுமில்லை. அவர் நிறையக் கசரத் முதலியவற்றைப் பழகி வந்தார். எங்களுடைய உணவுக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் அவர்தாம் கவனித்து வந்தார். ஏப்பிரல் மாதத்தில், கடுமையான வெயில் காலத்தில் அவர் மரத் தடியின்கீழ் அமைக்கப்பட்டிருந்த அடுக்களையிலிருந்து திரும்பி வந்தார். உடல்நிலை சற்று சோர்வுற்றிருந்தது. ஏதோ சாதாரணமான விஷயம் என்று எல்லாரும் நினைத்தார்கள். அடுத்த நாளிலிருந்து அவருக்கு மெல்ல மெல்லப் பேச்சு அடங்கி விட்டது. ஒரு பகலுக்குள் அவரால் "அ, ஆ, இ, ஈ" என்று கூடச் சொல்ல முடியாமல் போய்விட்டது. ஏதாவது சொல்ல

வேண்டுமானுல் அதை எழுதிக் காட்டுவார். பேசுவதைக் கேட்டுப் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனுல் பேச முடியவில்லை. அங்கிருந்த மருத்துவரும் சிவில் சர்ஜனும் அவரைக் கவனித்து வந்தார்கள். ஆனுல் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவருடைய கெடு முடிவடையும் காலம் நெருங்கிவிட்டதால் அவரை விடுதலை செய்துவிட்டார்கள். கல்கத்தாவில் மருத்துவம் செய்து கொள்வதற்காக அவர் அங்குச் சென்றுர். அங்கிருந்த டாக்டர்களும், பண்டிதர்களும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தார்கள். ஆனுல் அவருக்குப் பேச்சுத் திரும்பி வரவில்லை. குரல் வளையில் யாதொரு குற்றமுமில்லை என்று எல்லாரும் கூறினுர்கள். ஆயினும் அவருக்கு குரல் ஒலிக்கவில்லை. இரண்டு ஆண்டுகள் வரையில் இந்நிலைமையே இருந்து வந்தது. பிறகு 1934இல் டாக்டர் அன்சாரி ஐரோப்பாவுக்குச் சென்றபோது அந்த இளைஞரும் அவருடன் சென்றுர். அங்கு வீயனுவில் (ஆஸ்திரியா) ஒரு நிபுணர் வைத்தியம் செய்ததின்பேரில் ஓரிரண்டு வாரங்களுக்குள் அவருக்குப் பேச்சுத் திரும்பி வந்துவிட்டது. சில நாட்களுக்குள் முற்றிலும் உடல்நலம் உற்றுத் தம் நாட்டிற்குத் திரும்பி வந்து சேர்ந்தார். அதற்குப்பின் அவருடைய குரல் முதலில் இருந்ததுபோலவே நன்ருகிவிட்டது.

நாலுவிதமான வகைகளில் சட்டமறுப்பு நடந்து கொண்டிருந்தது. இதை ஒட்டிக் காங்கிரஸின் பேரவை சம்பந்தமாக ஒரு வேடிக்கை நடந்தது. அரசாங்கத்தார் கைது செய்யும் வேலையை ஜனவரி 4ஆம் தேதி தொடங்கினுர்கள் என்பதை மேலே கூறியுள்ளேன். காங்கிரஸின் ஆண்டு விழா மார்ச்சில் நடைபெறுவதாக இருந்தது. ஒரிசாக்காரர்கள் காங்கிரஸை அழைத்திருந்தார்கள். அவர்கள் அதற்காக வேண்டிய ஏற்பாடுகளும் செய்து கொண்டிருந்தார்கள். திடீரென்று ஆக்கிரமிப்புத் தொடங்கப்பட்டதும் அங்கிருந்தவர்களும் சிறை கொள்ளப்பட்டு விட்டார்கள். பீகாரும் ஒரிசாவும் அப்போது ஒரே மாகாணமாக இருந்தன. இதனுல், உயர்ந்த வகுப்பு அளிக்கப்பெற்ற ஒரிசாவின் தலைமையான காங்கிரஸ்காரர்களும் ஹஜாரிபாகில்தான் இருந்தார்கள். நாங்கள் எல்லோரும் சேர்ந்துதான் இருந்தோம். ஒரிசாவில் பேரவை நடப்பது என்பது இப்போது இயலாதாயினும், மார்ச்சில் பேரவையை எங்காவது ஓரிடத்தில் நடத்தியே தீரவேண்டுமென்று சிறைக்கு வெளியே இருந்தவர்கள் நினைத்தார்கள். பேரவையை நடத்தவிடப் போவதில்லையென்று அரசாங்கம் கண்ணில் எண்ணெய் போட்டுக் கொண்டு விழிப்

பாக இருந்தது. பேரவையை தில்லியில் நடத்துவதாக மக்கள் முடிவு செய்தார்கள். அதற்காக நாளையும் குறிப்பிட்டு அறிக்கையும் செய்து விட்டார்கள். பண்டித் மதன்மோகன் மாளவீயஜீ தலைமை வகிப்பார் என்றும் அறிக்கை செய்யப்பட்டிருந்தது. வெவ்வேறு மாகாணங்களிலிருந்து எத்தனையோ பேர் எப்படியோ குறிப்பிட்ட நாளுக்கு முன்னமே தில்லிக்கு வந்து சேர்ந்து பல இடங்களில் தங்கியிருந்தார்கள். குறிப்பிட்ட நாளன்று, பகல் பத்து மணிக்கு சாந்தனீ சௌக்கில் மணிக்கூண்டுக்கு எதிரில் பேரவை நடக்குமென்பதும் அறிக்கை செய்யப்பட்டிருந்தது. மாளவீயஜீ தில்லிக்குப் புறப்பட்டார். ஆனால் தில்லிக்கு நேரே ரயிலில் வரவில்லை. வழியில் எங்கோ ரயிலை விட்டிறங்கி மோட்டாரில் ஏறிக் கொண்டார். காஜியாபாத்துக்கும் தில்லிக்கும் இடையில் அவர் சிறை கொள்ளப்பட்டுப் போனார். இதைப் பற்றியும் தகவல் மக்களுக்குக் கிடைத்து விட்டது. பிறகு பேரவை சாந்தினீ சௌக்கில் நடப்பதற்கு மாறாகப் புது தில்லியில் எங்கோ நடக்கும் எனப் பேரவை கூடவிருந்த தினத்தன்று இரகசியமாகச் செய்தி பரவியது. இச் செய்தி பரவப்பட்டு வந்த வகையைக் கண்டு போலீசாருக்கும் இதில் நம்பிக்கை வந்து விட்டது. இதனால் அந்த நாளன்று போலீசாரின் ஏற்பாடுகள் சாந்தினி சௌக்கில் செய்யப்படவில்லை. வேறு எந்த இடத்திலோ அவர்கள் தயாராக இருந்தார்கள். வெளியூர்களிலிருந்து வந்து மணிக்கூண்டிற்குப் பக்கத்திலேயே பற்பல இடங்களில் தங்கியிருந்தபிரதிநிதிகள் குறிப்பிட்ட நேரத்திற்கு நாலா பக்கத்திலிருந்தும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் மணிக்கூண்டிற்கு எதிரில் சாலையின் நடுவில் கூடினார்கள். காங்கிரஸின் சட்ட முறைப்படி நியமிக்கப்பட்டிருந்த தலைவர் வராததினால் அகமதாபாத்தைச் சேர்ந்த ஒரு துணி ஆலை முதலாளி சேட் ரண் சோட்தாஸ் என்பவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் சிறிய சொற்பொழிவு ஒன்றை ஆற்றினார். காலத்திற்கு ஏற்ற தீர்மானம் ஒன்றும் முறைப்படி சமர்ப்பிக்கப்பட்டது. அதை அனைவரும் ஏற்றுக் கொண்டார்கள். இப்படி நடந்து கொண்டிருந்தபோது போலீசாருக்குச் செய்தி எட்டிவிட்டது. அவர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே கூடியிருந்தவர்களைத் தடியால் அடித்துக் கலைத்தார்கள். இதற்கு முன்பாகவே எல்லா காரியங்களும் நடந்தேறிவிட்டன. இதைப் பற்றி செய்திகள் பத்திரிகைகளில் வந்தன. மக்களுக்கு இது பெரிய வேடிக்கையாக இருந்தது. தற்செயலாக சேட் ரண் சோட்தாஸ் கைது செய்யப்படவில்லை.

உண்மையாகவே அப்பெயர் கொண்ட சேட் ஒருவர் தலைவரானரா அல்லது 'சும்மா அவருடைய பெயர் அறிக்கை செய்யப்பட்டதா வென்பது தெரியாது. ஆயினும் அந்தப் பேரவையானது காங்கிரஸின் முறையான பேரவைகளில் ஒன்ருகச் சேர்த்துக் கொள்ளப் படவில்லையென்பது மட்டும் உண்மை. மற்றப் பேரவைகளின் தலைவர்களைப் போல இப்பேரவையின் தலைவருக்கு அகில பாரதீயக் குழுவில் வாழ்நாள் உறுப்பினர் பதவியும் கிடைக்க வில்லை.

இம்முறையும் நாடானது காங்கிரஸை முழுவதும் ஆதரித்துத் துணை நின்றது. தண்டனைகளுள் எல்லாச் சொத்தையும் பணத்தையும் தண்டனையாகப் பறிமுதல் செய்வதுதான் மிகவும் வன்மையானதென்பதை அரசாங்கம் சென்ற முறை கண்டு கொண்டது. இதனுல் இந்த முறை பெரிய பெரிய ரொக்க அபராதங்கள் விதிக்கப்பட்டன. காங்கிரஸினுடைய சொத்துக்கள் அனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டன. காங்கிரஸுக்கு சொந்தமான கட்டடங்கள் எங்குமே இல்லை. காங்கிரஸின் பேரில் பாங்கிகளில் போடப்பட்டிருந்த பணம் எல்லாம் பறிமுதல் செய்யப்பட்டது. ஆனுல் காங்கிரஸிடமிருந்து அரசாங்கத்தாருக்கு அதிகமாக ஒன்றும் கிடைக்கவில்லை. காங்கிரஸிடம் நிறையப் பணமிருக்கிறதென்றும், பணத்தின் பலத்தைக் கொண்டுதான் காங்கிரஸ் தன் வேலையை நடத்தி வருகிறதென்றும் அரசாங்கமும் மற்றவர்களும் கூடத் தவருக எண்ணி வருகிருர்கள். 1921இல் காங்கிரஸ் ஒரு பெரிய தொகையை திரட்டியது. அது தேசீயக் கல்வியிலும் காதி வேலையிலும் பெரும்பாலும் செலவாகிவிட்டது. இவை நீங்கலாகக் காங்கிரஸ் நிலையத்திற்காகவும் செலவு செய்யப்பட்டது. அதற்குப் பின் ஒவ்வொரு மாகாணக் குழுவும் தத்தம் தேவைப்படி செலவுக்காகப் பணம் சேகரித்துக் கொண்டு வந்தன. அப்படிப்பட்ட தொகை யாதும் பெரிதன்று. காங்கிரஸுக்கு முன் ஏதாவதொரு பெரிய வேலை வந்துவிட்டால், அப்போது அதற்காக வேண்டிய பணத்தை அந்தந்தச் சமயங்களில் அது சேகரித்துக் கொண்டுவிடும். ஆனுல் காங்கிரஸிடமாவது அல்லது யாதொரு குழுவிடமாவது நிறையப் பணம் இருப்பது கிடையாது. ஏதோ ஒவ்வொரு இடங்களில் காங்கிரஸுக்கு என்று சிறிய கட்டடங்கள் உண்டாகிவிட்டன. அவைகள்கூட உள்ளூர்க்காரர்களால் தேவைப் பட்டபோது திரட்டிய பணத்தைக் கொண்டு கட்டபட்டவைதாம். ஆயினும் அவ்விதமாகத் தேவைப்பட்டபோது பொதுமக்களிட மிருந்து பணம் கிடைத்துவந்ததென்பது உண்மை. காங்கிரஸின்

அமைப்பு நன்ருக இருந்த இடங்களில், செயலாளர்களிடம் பொது மக்களுக்கு அபிமானமும் நம்பிக்கையும் உள்ள இடங்களில், மக்களிடம் பணமிருக்கும் இடங்களில், நிறையப் பணம் கிடைக்கும். ஆனல் இவற்றில் ஏதாவதொன்றில் குற்றம் குறை உள்ள இடங்களில் பணமும் குறைவாக கிடைக்கும்.

பொதுஜன நிலையம் எதுவும் தன் செலவுக்காகப் பொருளை திரட்டி வைத்துக் கொள்ளக்கூடாதென்பது காந்திஜீயின் கொள்கை. அதையே அவர் பின்பற்றி வருகிருர். அவ்வப்போது தேவைக்கு ஏற்ப பணத்தைச் சேகரித்தே வேலையை நடத்த வேண்டுமென்பதும், இப்படிச் செய்து வந்தால் அது கண்டிப்பார் இல்லாமல் போய்விடாது என்பதும் அவருடைய கருத்து. ஏனெனில் அது வேலையைச் சரியாகச் செய்யாவிட்டால் மக்களிடையில் அதற்கு இருந்துவந்த செல்வாக்கை இழந்துவிடும். பிறகு அதற்குப் பணம் கிடைக்காது. இவ்வண்ணமாக அந்நிலையமானது பொதுமக்களையே நம்பி வாழவேண்டும். தன்னுடைய கடமையைச் சரிவர நிறைவேற்றினல்தான் அது உயிருடன் வாழ முடியும். இக்கொள்கை எழுத்துக்கு எழுத்து உண்மை என்பதை நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். எங்களுடைய மாகாணம் ஓர் ஏழை மாகாணம். பெரிய பெரிய ஜமீன்தார்களோடு காங்கிரஸுக்குத் தொடர்பு இல்லை என்றே கூறலாம். ஆயினும் தேவை ஏற்பட்டபோது மத்திய வர்க்க மக்கள் தேவைக்கு ஏற்றபடி எங்களுக்குப் பொருள் உதவி வந்தார்கள். இவ்வண்ணமாகப் பொருள் திரட்டுவதில் எங்கள் ஆற்றலும் பொழுதும் நிறைய வீணயிற்று என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இக்கவலை எங்களுக்கு இல்லாமலிருந்திருந்தால் நாங்கள் மேலும் அதிகமாகப் பணி ஆற்றியிருக்கலாம். பணி ஆற்றுவதற்காக நல்ல அறிவாளிகளும் காங்கிரஸில் பற்றுள்ளவர்களும் நிறையப் பேர் இருந்தார்கள். ஆயினும் எங்களிடம் பணமில்லாக் குறையால் அவர்கள் ஆச்ரமத்தில் தங்கி இருந்து வருவதற்கு ஆன செலவுக்காகக்கூட எங்களால் பணம் கொடுக்க முடியவில்லை. அவர்களுடைய மனைவி மக்களுக்கு கொடுப்பதைப் பற்றிப் பேசுவானேன்! இதனல் சில சமயங்களில், பலர், வேறு வழியில்லாமல், காங்கிரஸ் வேலையை மிக்க வருத்தத்துடன் விட்டு விட்டுத் தம் வயிற்றுப் பிழைப்பை நாடிப் போய்விட்டார்கள். இப்படியெல்லாம் நடந்தாலும்கூட, பணம் இல்லாததால் எங்கள் வேலை என்றுமே தடைபடவில்லை யென்றே நினைக்கின்றேன். ஒரு வகையில் எங்கள் ஏழைமையே எங்களுக்குத் துணையாகவும் இருந்தது. ஏழை மாகாணத்தின்

மாகாணக் குழுவானது ஏழையாக இருந்தால்தான் அம்மாகாணத்தின் பொதுமக்களின் பிரதிநிதியாக நின்று பணியாற்ற இயலும். இதனால் நாங்கள் எங்கள் மாகாணத்தின் உண்மையான பிரதிநிதிகளாக இருந்து வந்தோம் என்று கருதுகிறேன்.

நிற்க. எங்கள் மாகாணத்தின் காங்கிரஸிடமிருந்து நிறையச் சொத்து அகப்படவில்லை. ஆயினும் எங்கள் வீடுகள் எல்லாம் பறிமுதல் செய்யப்பட்டன. பின்னால் அவை எங்களிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டபோது, அவற்றின் பலவற்றின் நிலைமை மிகவும் சீர்குலைந்து போய்விட்டது.

காங்கிரஸுக்காவது அதன் செயலாளர்களுக்காவது பணம் கொடுத்தோ அல்லது மற்ற வகையிலோ உதவி செய்வதை அரசாங்கமானது இந்தமுறை குற்றமாக்கிவிட்டது. வழக்கமாக யுத்த காலத்திலும் மேலும் யுத்தத்தில் ஈடுபட்ட நாடுகளிலுமே புனையப்படும் அவசரச் சட்டங்களைப்போல இப்போது இங்கும் பல புனையப்பட்டன. இதனால் சிறைக்கு வெளியேயிருந்து வந்த எங்கள் செயலாளர்களுக்குப் பல இடங்களில் குடியிருக்க வாடகை வீடு கிடைப்பதில்லை. போக்குவரத்துக்கு வண்டிகளும் எளிதில் கிடைப்பதில்லை. எங்கும் அச்சத்தை விளைவிக்க முயற்சி செய்யப்பட்டு வந்தது. ஆயினும் எங்கள் வேலை நின்றுபோகவில்லை. ஏனெனில் பொதுமக்கள் தட்டுப்படாமல் உதவிபுரிந்து வந்தார்கள். மேலும், சிலர் அகில பாரதீயக் குழுவின் அலுவலக வேலையைத் தம் கையில் எடுத்துக்கொண்டு அவ்வப்போது நாட்டிற்குக் கட்டளைகளை அனுப்பி வந்தார்கள். அப்படியே எல்லா இடங்களின் செய்திகளையும் சேகரித்து வந்தார்கள்.

சட்டத்திற்கு விரோதமானதாக அரசாங்கத்தால் பறை சாற்றப்பட்டக் காங்கிரஸானது தனக்கு வீடென்று ஒன்றோ, அலுவலகமோ, பணமோ, உறுப்பினரோ, பதவியாளர்களோ எதுவுமே இல்லாததாயினும்கூட, எப்படித் தண்ணீரானது சதுப்பு நிலத்தில் ஏதாவதொரு மறைவான இடத்திலிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருக்குமோ அதேபோலக் காங்கிரஸின் வேலைத்திட்டமும் ஏதாவதொரு இரகசியமான இடத்திலிருந்து வெளி வந்துகொண்டே இருந்தது. அதை நிறைவேற்றுவதற்கு ஆட்களும் அந்தந்த இடங்களில் அந்தந்தச் சமயங்களில் கிடைத்துக்கொண்டே வந்தார்கள். காங்கிரஸ் இரண்டு வாரங்களுக்குள் ஒழிந்துபோய்விடுமென்று லார்டு வில்லிங்டன் பேசிய கர்வ வீராப்பு பேச்சு நிறைவேறவில்லை. ஹஜாரிபாக் சிறைக்குள்ளும் மிகவும் கண்டிப்பாக இருந்து வந்தார்கள். கான்

அப்துல் கபார்கானும் அவருடைய சகோதரர் கான் சாஹபும் அதே சிறையில் இருந்தாலும் கூட நாங்கள் அவர்களை ஒரு முறைகூடச் சந்திக்க முடியவில்லை.

## 98. ஹரிஜனங்களுக்காக காந்திஜீயின் உண்ணுவிரதம்

ஆறு மாதத் தண்டனையை முடித்துக்கொண்டு நான் ஹஜாரி பாக்கிலிருந்து விடுதலையானபின் ஹஜாரிபாக் ஊரில் சில மணி நேரம் தங்கவேண்டி வந்தது. அந்த நேரத்திற்குள் எனக்குக் கடுமையான குளிர் காய்ச்சல் வந்துவிட்டது. அதனுல் அங்குச் சிறிதுகாலம் தங்கிவிட வேண்டி வந்தது. பிறகு சிறிது நலமடைந்து பட்னுவுக்கு வந்த பின்னும் நோய் இருந்து வந்தது. பலவீனத்திற்கு அளவே இல்லை. சற்று நலமடைந்ததும், வெளியில் உள்ள நிலைமையைப்பற்றிக் கேட்டறிந்து கொண்டேன். அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் செயலாளர்களைச் சந்தித்தேன். மாகாணத்தில் சிறைக்கு வெளியே இருந்தவர்களையும் கண்டேன். என்னுல் இயன்ற உதவியையும் புரிந்தேன். ஆனுல் வேலையை நடத்தும் பொறுப்பை நான் எடுத்துக் கொள்ளவில்லை. அதை நடத்திக் கொண்டிருந்தவர்களிடமே விட்டுவிட்டேன். அகில பாரதீயக் குழு வேலையில்தான் அதிகக் கவனம் செலுத்தி அதிக நேரம் செலவழித்து வந்தேன். காசிக்குச் சென்று பண்டித் மாளவீயாஜீயைச் சந்தித்து அங்கே பல நாட்கள் தங்கியிருந்தேன். பிறகு பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் கூடச் சென்றேன். எல்லா இடங்களிலும் செயலாளர்களைச் சந்தித்துவந்தேன். பணம் திரட்டுவதற்கும் என்னுல் இயன்றவரையில் உதவி புரிந்து வந்தேன். இன்னும் உடல்நிலை முழுதும் நலமடையாவிட்டாலும் வேலை செய்ய முடியாத அளவுக்கு நோயாகவும் இல்லை.

நான் (சிறைக்கு) வெளியே இருக்கக்கூடாது என்பதை உணர்ந்தேன். மீண்டும் சிறைக்குச் செல்லவேண்டுமென்று நினைத்துக்கொண்டிருந்தேன். இதற்குள்ளாக ஒரு நாள் மகாத்மாஜீயின் உண்ணுவிரதத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் வந்த செய்தியைப் படித்தேன். பம்பாயில் காந்திஜீயைச் சந்தித்துவிட்டுப்

பிரிந்ததிலிருந்து அவரைப்பற்றி ஒரு தகவலும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. ஆயினும் சில நாட்களாக அரசாங்கத்துக்கும் அவருக்கும் கடிதப் போக்குவரவு நடந்துகொண்டிருந்தது. தீண்டப்படாதாருக்காக அமைக்கப்பட்டத் தனித் தேர்தல் தொகுதிகளை அவர் வட்ட மேஜை மகாநாட்டில் தம் உயிரையே பணயம் வைத்து எதிர்த்தார் என்று நான் முன்னமே கூறியிருக்கிறேன். மிஸ்டர் மாக்டோனல்டானவர் தனித் தொகுதி அமைப்பதைப்பற்றித் தம் தீர்ப்பில் வாக்களித்துவிட்டார். காந்திஜீயானவர் தாம் முன் ஆற்றிய சொற்பொழிவை நினைவூட்டி அரசாங்கத்தார் இந்த முடிவை மாற்ருவிட்டால் தாம் உண்ணுவிரதம் ஆரம்பித்து விடுவதாகக் கூறினர். அரசாங்கத்தார் அதற்கு ஒப்புக்கொள்ளாததும் அவர் உண்ணுவிரதத்தைத் தொடங்கிவிட்டார். உடனே அரசாங்கத்தார் கடிதப் போக்குவரவு அனைத்தையும் வெளியிட்டுவிட்டார்கள். அவை வெளியானதும் நாடெங்கும் பெருங் கலவரம் உண்டாகிவிட்டது.

மகாத்மாஜீ யரவாதா சிறையில் இருந்தார். அங்குத்தான் உண்ணுவிரதத்தைத் தொடங்கினர். செய்தி கிடைத்ததுமே நான் பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தேன். உயர்திரு மாளவீயாஜீயும் வந்து சேர்ந்தார். நல்ல காலமாக ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் வெளியே இருந்தார். அவரும் வந்துவிட்டார். வெளியிலிருந்த மற்றவர்களும் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார்கள். மகாத்மாஜீயின் உண்ணுவிரதத்தை நிறுத்துவதற்கு முயற்சி செய்யப்பட்டது. ஆனல் காந்திஜீ தாம் செய்த முடிவிலிருந்து என்ருவது அசைந்திருக்கிருரா? மிஸ்டர் மாக்டோனல்டின் தீர்ப்பில் ஒரு நிபந்தனையும் கூறப்பட்டிருந்தது. அதாவது, அத்தீர்ப்புடன் சம்பந்தப்பட்ட சாதியார் தமக்குள் ஒத்துப்போய் அத்தீர்ப்புக்கு மாருக வேருெரு முடிவுக்கு வரும் வரையில்தான் அத்தீர்ப்பானது அமுலில் இருக்கும் என்று கூறப்பட்டிருந்தது. இதனல் மக்களுடைய கவனம் இதின் மேல் சென்றது. தீண்டப்படாத குலத்தாரைச் சமாதானப்படுத்தி அவர்களைத் தனிப்பட்ட வாக்காளர் தொகுதியைக் கைவிடச் செய்ய முயற்சி செய்யப்பட்டது. டாக்டர் அம்பேத்கர் பம்பாயில் இருந்தார். அரசாங்கமானது அவரைத் தாம் தீண்டப்படாதாரின் தலைவராக்கி, வட்டமேஜை மகாநாட்டிற்கு அனுப்பியது. அவருடன் பேச்சு நடக்கத் தொடங்கியது. இதில் ஓரிரண்டு நாட்கள் கழிந்தன. ஆனல் காந்திஜீயின் அபிப்பிராயத்தைக் கேட்டறியாத வரையில் யாதொரு முடிவுக்கும் வர முடியவில்லை. இதற்கிடையில் தீண்டப்படாத குலப் பொதுமக்க

ளிடையிலும் மனக்கலக்கம் உண்டாகிவிட்டது. ஏனெனில் தீண்டாமையை ஒழிப்பதற்கு காந்திஜீதாம் பாடுபட்டார். இக்காரணத்தால் அவருடைய சாவு விளையுமானல் அது தமக்கு அழிக்கவொண்ணுததொரு மாசாகும் என்பதை அவர்கள் உணரலானுர்கள்.

தனிப்பட்ட தொகுதியை எக்காரணத்தால் காந்திஜீ எதிர்த்தாரோ அக்காரணத்தைக்கூடச் சிலர் பிடிவாதமாகக் கருதினுர்கள். தீண்டப்படாதார்களும் ஹிந்துக்கள்தாம் என்றும், ஏதோ ஒரு காரணத்தால் அவர்களை மற்ற ஹிந்து சாதியார் தீண்டத்தகாதாராகக் கருதும் பழக்கம் சமூகத்தில் வந்துவிட்டதென்றும் காந்திஜீ கூறிவந்தார். தீண்டாமையை அவர் ஹிந்துக்களுக்கும் ஹிந்து சமூகத்திற்கும் ஒரு களங்கமாகக் கருதிவந்தார். அதனுல் அதைத் துடைக்க விரும்பினுர். எவனுவது ஒரு தீண்டப்படாதவன் முசல்மானியனுகவோ கிறிஸ்துவனுகவோ ஆகிவிட்டால், இவ்விதமாக அவன் ஹிந்து சமூகத்திலிருந்தும் ஹிந்து மதத்திலிருந்தும் பிரிந்து போய்விட்டால், அதாவது அவற்ரேடு முற்றிலும் தொடர்பற்றுப் போய்விட்டால், அப்போது, அம்மதங்களிலும் சிறிதளவு தீண்டப்படாமை இருந்து வந்தாலும்கூட, ஹிந்துக்களைப் பொருத்தவரையில் அவன் தீண்டத்தகாதவன் அல்லனுகிவிடுகிருன். இதனுல் இந்தக் கேள்வியானது ஹிந்துக்களாக இருந்துவரும் தீண்டப்படாதவர்களைத் தாம் சம்பந்தப்பட்டது. அரசியல் தேர்தலுக்கும் ஒரு தனித்தொகுதி உண்டாகிவிடுமானுல் அது ஒரு புதிய தீண்டாமையாகிவிடுமென்றும், மேலும் தீண்டாமையை அகற்ற முயற்சி செய்யப்பட்டுவரும் இடங்களிலும், அதனுடைய மற்றத் தோற்றங்கள் மறைந்துவரும் இடங்களிலும், அதற்கு ஒரு புதிய காரணமும் புதிய உருவும் உண்டாகிவிடுமென்றும் காந்திஜீ உணர்ந்தார். தீண்டப்படாதவர்களின் படிப்பாளிகளான தலைவர்களோ, எல்லா உரிமைகளும் தேர்தலின் பலத்தையே அடிப்படையாகக்கொண்டு அமையும் என்ருல், அப்பொழுது தங்களுக்கும் தம்முடைய சமூக பலத்தால் லாபம் கிடைக்க வேண்டுமென்பதையும், அப்படிப்பட்ட லாபம் தமக்கென்று தனியான தேர்தல் தொகுதி அமைந்தால்தான் கிட்டும் என்பதையும் உணர்ந்தார்கள். இதனுல்தான் வட்ட மேஜை மகாநாட்டில் டாக்டர் அம்பேத்கர் இதற்காக மிகவும் போராடினுர்.

பம்பாய்க்கும் புனுவுக்குமாக சிலபேர் அலைந்துவந்தார்கள். ஆனுல் அது மிகவும் அசௌகரியமாயிருந்தது. இதனுல் இந்த

வேலையில் ஈடுபட்டிருந்தவர்கள் எல்லாரும் புனுவுக்குச் சென்று விட்டார்கள். டாக்டர் அம்பேத்கரும் அவருடைய தோழர்கள் சிலரும்கூட புனுவுக்குச் சென்ருர்கள். அங்கு இரண்டு மூன்று நாட்கள் வரையில் பேச்சுவார்த்தை நடந்தது. மகாத்மாஜீயையும் சிறையில் சந்திப்பதற்கு அனுமதி கிடைத்துவிட்டது. அங்குப் புற வாயிலுக்கு அருகிலேயே இருந்த ஒரு சிறிய வீட்டில் காந்தி ஜீயைச் சந்தித்து வந்தோம். அங்கு ஒரு மாமரத்தடியில் அவருடைய கட்டில் போடப்பட்டிருக்கும். ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார், பண்டித் மாளவீயஜீ, ஸ்ரீ டக்கர் பப்பா, சேட் கன்ஷ்யாம் தாஸ் பிர்லா, சர் புருஷோத்தமதாஸ் டாகுர்தாஸ் ஆகியவர்கள் நிறைய உழைத்தார்கள். டாக்டர் அம்பேத்கர், டாக்டர் சோலங்கீ முதலானேர் தம் கட்சியின் சார்பில் பேச்சுவார்த்தையில் தொடர்ந்து கலந்துகொண்டு வந்தார்கள். நாள் ஆக ஆக நான் மிகவும் கலக்கமடைந்தேன். ஏனெனில் பேச்சு வார்த்தையினுல் காந்திஜீக்கு அதிகக் களைப்பு உண்டாயிற்று. இவ்வளவு களைப்புடன் அவர் அதிக காலம் உண்ணுவிரதத்தைத் தாங்கமுடியாதென்று அஞ்சினேன். பேச்சு நடந்தபோதெல்லாம் நானும் இருந்தேன். ஆனுல் என்னுடைய வழக்கப்படி குறைவாகவே பேசி வந்தேன். ஒரு நாள் சாயங்காலம் காந்திஜீயானவர் டாக்டர் அம்பேத்கருடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார். அவரை மிகவும் வற்புறுத்தி மன்ருடினுர். பிறகு விஷயம் ஒரு முடிவுக்கு வந்தது. இவைதாம் அதன் முக்கிய நிபந்தனைகள். தனிப்பட்ட வாக்காளர் தொகுதி இருக்காது. அதற்குப் பதிலாக தீண்டப்படாதாருக்கென்று குறிப்பிட்ட எண்ணிக்கை கொண்ட இடங்கள் ஒதுக்கி வைக்கப்படும். தேர்தலின்போது ஒவ்வொரு இடத்திற்கும் நான்கு அபேக்ஷகர்களை நிறுத்துவதற்குத் தீண்டப்படாதார் குலத்து வாக்காளர்களுக்கு உரிமை உண்டு. நான்கு பேருக்குமேல் அபேக்ஷகர்கள் இருந்தால் தீண்டப்படாதாரின் வாக்கைக் கொண்டே நான்கு பேரே தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இந்த நான்கு பேர்கள்தாம் அபேக்ஷகர்களாக நிற்கலாம். நான்கு பேருக்கும் வாக்கு அளிக்கப்படும். சாதி ஹிந்துக்களும் தீண்டப்படாதாரும் சேர்ந்து வாக்களிப்பார்கள். எவருக்கு மற்ற எல்லாரையும் விட அதிகமாக வாக்குக் கிடைக்கிறதோ அவரே தேர்ந்தெடுக்கப்படுவார். இந்த ஏற்பாடு பத்து ஆண்டுகள் வரையில் நிலைபெற்று நிற்கும். அதற்குப் பின் மீண்டும் ஆலோசனை செய்யப்படும். மிஸ்டர் மாக்டோனுல்டின் தீர்ப்பின்படி தீண்டப்படாதாருக்கு எத்தனை இடங்கள் கிடைத்தனவோ அதைவிட

அதிகமான எண்ணிக்கை அளிக்கப்பட்டது. அவர்களுடைய ஜனத்தொகைக்கு ஏற்ப அது அதிகரிக்கப்பட்டது. இந்த விஷயம் முடிவு செய்யப்பட்டதும் பிரதம மந்திரி மாக்டோனல்டுக்கு தந்தி அனுப்பப்பட்டது. அவர் இந்த முடிவை ஏற்றுக்கொண்டு 'தம் முடைய தீர்ப்பை இது சம்பந்தப்பட்ட வரையில் மாற்றிவிட்டார்.

இவ்வளவு நடந்தபின் காந்திஜீயின் உண்ணுவிரதத்திற்கு யாதொரு காரணமும் எஞ்சி நிற்கவில்லை. அவர் அதை நிறுத்தி விட்டார். இந்த ஒப்பந்தத்தினால் எங்களுக்கு அதிக மகிழ்ச்சி உண்டாயிற்று. ராஜாஜீயும் டாக்டர் அம்பேத்கரும் தம்முடைய பேனுக்களை மாற்றிக்கொண்டார். இது ராஜாஜீ விரும்பியதின் பேரில் நடந்தது. ஏனெனில் அவருக்கு அவ்வளவு ஆனந்தம் உண்டாகியது. சீமையிலிருந்து விடை வருவதற்கு அதிக காலம் பிடிக்கவில்லை. இருபத்துநான்கு மணி நேரத்திற்குள் அங் கிருந்து சம்மதம் கிடைத்துவிட்டது. ஆயினும் இந்த இருபத்து நான்கு மணி நேரம்கூட எங்களுக்கு அதிகமாகத் தோன்றியது. அன்று காலையிலிருந்தே நாங்கள் எல்லாரும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். அப்படியும் இப்படியுமாக மத்தியானமும் கழிந்துவிட்டது. விடை வந்துவிட்ட தென்பதும் விரைவில் சிறைக்கு வந்து சேருமென்பதும் தெரிய வந்தன. அன்றே லோக கவி ரவீந்திரநாதும் புனுவுக்கு வந்து சேர்ந்தார். அவர் காந்திஜீயைப் பார்ப்பதற்காகப் பயணப்பட்டு வந்தார். அது வரையில் அவருக்கு ஒப்பந்தத்தைப் பற்றித் தெரியாது. புனு வந்து சேர்ந்ததும்தான் அதைப் பற்றித் தெரிய வந்தது. ஒப்பந் தத்தை ஏற்றுக்கொண்ட செய்தி சிறையில் கிடைத்து, காந்திஜீ தம் உண்ணுவிரதத்தைக் கைவிடப் போகும் சமயத்திற்கு அவரும் அங்கு வந்து சேர்ந்தார். அது மிகவும் மங்கலமான வேளை. பிரார்த்தனை செய்யப்பட்டது. குருதேவ் ஓர் அழகிய பாட்டுப் பாடி ஆசீர்வாதம் செய்தார். அதற்குப் பிறகு காந்திஜீயானவர் ஆரஞ்சுப் பழரசம் அருந்தித் தம் உபவாசத்தை முடித்தார். நாடெங்கும் மகிழ்ச்சி பொங்கியது. தீண்டப்படாதாரின் முன் னேற்றம் மிகவும் மும்முரமாக அலை பெருக்கெடுத்து முன் னேறியது.

# 99. தீண்டப்படாதாரை முன்னேறச் செய்வதற்கு முயற்சி

ஏதோ அரசியல் தகராறைப் பற்றி ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டதைக் கொண்டு காந்திஜீ திருப்தியடைபவரல்லர். தீண்டாமையை ஓரடியாகக் கொளுத்தி எரித்து விடுவதற்காக அவர் உள்ளத்தில் ஒரு தீ கொளுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. தேர்தலில் ஓரிடமோ அல்லது தீண்டப்படாதாருக்கு என்று ஒதுக்கப்பட்ட சில இடங்களோ கிடைத்துவிட்டதால் அத்தீ எப்படி அணைய முடியும்? அவர்களிடம் தீண்டாமை மனோபாவம் காட்டப்பட்டுவரும் வரையில் இப்படிப்பட்டத் தகராறுகள் கிளம்பிக் கொண்டே யிருக்கும். சாதி-ஹிந்துக்கள் அவர்களை மனிதப் பிறவியில் ஒரு படி தாழ்ந்தவர்களாகவே பாவித்து வருவார்கள். இதனால் காந்திஜீயானவர் இதைப் பூண்டோடே ஒழித்துவிடுவதற்கு வழி கண்டுபிடிக்க வேண்டுமென்று விரும்பினார். அங்கிருந்து பம்பாய் வந்து அங்கே ஒரு சிறப்பான கூட்டம் நடத்தப்பட்டது. அதில் ஹிந்துக்கள் தீண்டாமையை ஒழிப்பதற்காக முழுவதும் பாடுபடுவோமென்று உறுதி பூண்டார்கள். இந்த வேலையை நடத்துவதற்காகவும், மேலும் மற்ற வகைகளில் தீண்டப்படாதாருக்குத் தொண்டு புரிவதற்காகவும் ஒரு கழகம் நிறுவப்பட்டது. காந்திஜீயானவர், இதற்குள் 'தீண்டப்படாதார்' என்ற பதத்திற்கு பதிலாக 'ஹரிஜன்' என்ற பதத்தை உபயோகிக்கத் தொடங்கிவிட்டார். இதனால் அக்கழகத்திற்கு 'ஹரிஜன் சேவா சங்கம்' என்று பெயரிடப்பட்டது. அதற்கு சேட் கன்ஷியாம் தாஸ் பிர்லா தலைவராகவும், ஸ்ரீ அம்ருத் லால் டக்கர் என்பவர் அமைச்சராகவும் ஆனார்கள். அவரை மக்கள் அன்பால் 'டக்கர் பப்பா' என்று அழைப்பார்கள். அக்கழகம் இன்று வரையில் தொண்டு புரிந்து வருகிறது. நாடெங்கும் அதன் கிளைகள் நிறுவப்பட்டிருக்கின்றன. டக்கர் பப்பாவின் காலில் சக்கரம் இருக்கிறது போலும். அவர் தம்முடைய முதிர்ந்த வயதிலும் நாடெங்கும் சுற்றி வந்து ஹரிஜனங்கள் எல்லாருக்கும் வசதிகளை அமைப்பதும் கல்விக்கு ஏற்பாடு செய்வதுமான பல வகைத் தொண்டுகளை புரிந்து வருகிறார்.

ஹரிஜனங்கள் நுழையக் கூடாதென்று தடை போடப்பட்டுள்ள கோவில்களில் அவர்களும் நுழைவதற்கு ஏற்பாடு

செய்து மற்ற ஹிந்துக்களைப் போல அவர்களுக்கும் அவற்றைத் திறந்துவிடுவதே தீண்டாமையை ஒழிப்பதற்கு எல்லாரும் புரிந்து கொள்ளக் கூடியதும், தம் கண்களால் பார்க்கக் கூடியதுமான வழியென்று அச்சமயத்தில் ஓர் எண்ணம் உண்டாகியது. இதே போலப் பொதுக் கிணறுகளிலும் அவர்கள் தண்ணீர் எடுப்பதற்கு உரிமை இருக்க வேண்டும். மற்ற ஹிந்துக்கள் நுழையக்கூடிய இடங்கள், உட்காரக்கூடிய இடங்கள் எல்லாவற்றிற்கும் அவர்களுக்கும் போக, உட்கார உரிமையும் வசதிகளும் கிடைக்க வேண்டும். காந்திஜீயின் உண்ணுவிரதத்தின்போதே பல இடங்களில் ஹிந்துக்கள் தம் கோவில்களை அவர்களுக்கும் திறந்துவிட ஆரம்பித்து விட்டார்கள். அவர்களுடைய மற்ற உரிமைகளும் ஒப்புக்கொள்ளப்பட்டன. ஆனல் அப்படிப்பட்ட இடங்களின் எண்ணிக்கை இவ்வளவு பெரிய நாட்டிற்கு இதுவரையில் குறைவாகவே இருந்தது. ஆயினும் இப்படிப் பிறந்த உற்சாகத்தின் பயனுக, பம்பாயில் நடந்த கூட்டத்திற்குப் பிறகு பல இடங்களில் இந்த விஷயத்தைப் பற்றி மகாநாடுகள் கூடத்தொடங்கின. அவற்றில் கோவில்களைத் திறந்துவிட வேண்டுமென்பது போன்ற தீர்மானங்கள் தீண்டாமையை 'ஒழிக்கும் நோக்கத்துடன் நிறைவேற்றப்பட்டன. இவ்விதமான மகாநாடு ஒன்று சில நாட்களுக்குள்ளாகவே பீகாரிலுள்ள சப்ராவிலும் நடந்தது. அதற்குக் காசியைச் சேர்ந்த பெரும்புகழ் வாய்ந்த வித்துவான் டாக்டர் பகவான் தாஸ் தலைவராக அமைந்து விளங்கினர். எங்கும் மிக்க உற்சாகம் காணப்பட்டது. ஹரிஜனங்களிடம் மக்களுக்கு அதிக அன்பும், செயல் முறையில் நல்லுறவும் காணப்பட்டன.

பம்பாயிலேயே ராஜாஜியானவர் தம்முடன் நானும் மதராஸுக்குச் செல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். தீண்டாமையில் பிடிவாதமான பற்றுதலையும் அதன் பயங்கரமான தோற்றத்தையும் மற்றெல்லா இடங்களைவிட அங்குத்தான் அதிகமாகக் காணலாம். மலபாரிலோ சாதி ஹிந்துக்கள் நடமாடும் தெருக்களில்கூடச் சில சாதியார் போகக்கூடாத அளவுக்கு தீண்டாமை நிலவி வந்தது. மேலும் அச்சாதியார் செல்லக்கூடிய தெருக்களில்கூட, சாதி ஹிந்து எவராவது அறியாமல் அவர்களுக்கு அருகில் வந்து விடாமலிருப்பதற்காக அவர்கள் குரல் கொடுத்துக்கொண்டே போக வேண்டும். கிணறுகளிலிருந்தோ குளங்களிலிருந்தோ தண்ணீர் எடுப்பது என்ற பேச்சே பேச முடியாது. இது மட்டுமின்றி தென்னுட்டில் பெரிய பெரிய கோவில்கள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றிற்கு இந்தியாவின்

ஒவ்வொரு மூலையிலிருந்தும் யாத்திரிகள் சென்று வருகிறார்கள். இக்கோவில்களின் காரியங்கள் பஞ்சாயத்துக்களின் மூலமாக நடத்தப்பட்டு வருகின்றன. பஞ்சாயத்தானது சில இடங்களில் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றது. மற்றும் சில இடங்களில் அரசாங்கத்தாரால் நியமிக்கப்படுகிறது. அவர்களிடையில் பிரசாரம் செய்யப்பட்டு அவர்கள் கோவில் களைத் திறந்துவிட்டு விட்டால் அது ஒரு பெரிய காரிய மாகும். ராஜாஜியுடன் அங்குச் சென்றேன். மதுரைக் கோவிலையும், ஸ்ரீரங்கம் கோவிலையும் திறந்து விடுவதற்கு அதிக முயற்சி செய்யப்பட்டது. அங்கிருந்த குருக்கள் களுடனும், பரிபாலனம் செய்து வந்தவர்களுடனும் நிறையப் பேச்சு நடந்தது. அவர்கள் சிறிது பரிவும் காட்டினார்கள். நாங்கள் இந்த இரண்டு இடங்களிலும் பல நாட்கள் வரையில் தங்கி முயற்சி செய்து வந்தோம். பொதுஜனக் கூட்டங்களும் நடத்தப்பட்டன. பண்டிதர்களுடனும் நிறையப் பேச்சு நடந்து கொண்டிருந்தது. ஆயினும் இப்பெரிய கோவில்களைத் திறந்து விடச் செய்ய எங்களால் இயலவில்லை. அவைபோல் அவ்வளவு அகில பாரதீயப் பெருமையில்லாத வேறு சில கோவில்கள் திறந்து விடப்பட்டன. இதிலிருந்து, வேலை கடினமானதாயினும் முடி யாததன்று என்பது தெரிய வந்தது. நாங்கள் எவரை மிகவும் பிடிவாதமானவர்கள் என்று நினைத்தோமோ அவர்கள்கூடப் பேச்சு வார்த்தை நடத்தத் தயாராயிருந்தார்கள். அங்கிருந்து நம்பிக்கை இழந்து வரவில்லை. நிறைய நம்பிக்கையோடவே திரும்பினோம்.

எங்களுடைய முயற்சிக்குப் பலன் உடனே கிடைக்கவில்லை. ஆயினும், பல ஆண்டுகளுக்குப்பின், தீண்டாமை மிகவும் கடுமை யாக இருந்து வந்த மலபாரில் திருவாங்கூர் மகாராஜாவானவர் மற்ற எல்லாக் கோவில்களையும்விட மிக்கப் புகழ் வாய்ந்த பத்ம நாதசுவாமி கோவிலைத் திறந்துவிட்டார். மேலும் அவரு டைய ராஜ்யம் முழுவதிலும் ராஜ்யத்திற்குச் சொந்தமான கோவில்கள் எல்லாம் திறந்து விடப்பட்டன. மதராஸிலும் ராஜ் யத்திற்குச் சொந்தமான கோவில்கள் எல்லாம் திறந்துவிடப் பட்டன. மதராஸில் ராஜாஜி தலைமை மந்திரியாக இருந்த போது ஒரு சட்டத்தை அமைத்து மதுரைக் கோவிலையும் திறந்து விட்டுவிட்டார். சட்டம் அமைத்துக் கோவில்களைத் திறந்துவிட வேண்டுமென்ற பேச்சும் அதே சமயத்தில் கிளம்பி யது. சட்டம் என்ன உருக்கொண்டிருக்க வேண்டுமென்பதைப்

பற்றியும் அதில் என்னென்ன நிபந்தனைகள் விதிக்கப்படவேண்டு மென்பதைப் பற்றியும் நிபுணர்கள் ஆராயத் தொடங்கினர்கள். இதன் பயன் பின்னுல் காணக்கிடைத்தது. இது சம்பந்தமாக மிகவும் வேடிக்கையான விஷயம் ஒன்றை அங்குக் கண்டேன். பிராமணர் அல்லாத சாதி ஹிந்துக்களைவிட அங்குள்ள பிராம ணர்களே இந்த முன்னேற்றத்திற்குத் தயாராக இருந்தார்கள் என்பதாகப் புலப்பட்டது. தென்னுட்டிலிருந்து திரும்பி வரும் போது ஆந்திரப் பிரதேசத்தில் பல இடங்களில் தங்கித் தங்கி வந் தேன். அங்கும் இப்படிப்பட்ட முன்னேற்றத்தில் உற்சாகம் காணப்பட்டது. அங்கும் பல கோவில்களைத் திறக்கும் வேலையில் கலந்துகொண்டேன்.

வட இந்தியாவிலும் இவ்விதமான உற்சாகம் வந்துவிட்டது. எத்தனையோ இடங்களில் சபைகள் கூடின, கோவில்கள் திறக்கப் பட்டன. மேலும் மற்ற வகைகளிலும் தீண்டாமை ஒழிந்து வரு வதற்குச் சான்றுகள் செயல் முறையில் காணக் கிடைத்து வந்தன. சிறையில் இருந்துகொண்டே காந்திஜீ இந்த விஷயத் தில் கவனம் செலுத்தி வந்தார். தீண்டப்படாதோர் முன்னேற் றத்தைப் பற்றி அவர் செய்தித்தாள்களில் அறிக்கைகளை வெளி யிடலாமென்று அரசாங்கம் அனுமதி அளித்துவிட்டது. இந்த உரிமையை அவர் மிகவும் ஆர்வத்துடன் பயன்படுத்தி வந்தார். அவருடைய கட்டுரைகள் நிறைய வெளி வரலாயின. இவ்வித மாகப் பத்திரிகைகளில் அறிக்கைகளை வெளியிடுவது போதாது என்பதையும், இதற்காகத் தாமே ஒரு பத்திரிகையை வெளியிட வேண்டுமென்பதையும் சில நாட்களுக்குப் பிறகு அவர் உணர்ந் தார். அவருடைய 'யங் இந்தியா' முன்னமே நிறுத்தப்பட்டு விட்டது. இதனுல் ஹரிஜனங்களின் தொண்டிற்காக ஆங்கிலத் தில் 'ஹரிஜன்' என்ற பெயருடனும், இந்திய மொழிகளில் 'ஹரி ஜன பந்து', 'ஹரிஜன் சேவக்' என்ற பெயர்களுடனும் வாரப் பத்திரிகைகள் பிறந்தன. அவை பல ஆண்டுகள் வரையில் நடந்து கொண்டிருந்தன. இதற்கிடையில் இன்னும் எத்தனையோ விஷயங்கள் நிகழ்ந்து விட்டன. அவற்றைப் பற்றி முதலில் குறிப்பிடவேண்டும்.

ஒரு பக்கத்தில் இவ்விதமாக ஹரிஜனத் தொண்டிற்காகவும் தீண்டாமையை ஒழிப்பதற்காகவும் என்றுமே காணப்படாத உற் சாகம் பிறந்தது. மற்றொரு பக்கத்தில் எதிர்பார்க்காத திசைகளி லிருந்து எதிர்ப்பின் குறிகளும் காணக்கிடைத்தன. எல்லாவற்றை யும் விட மிகவும் வியப்பான விஷயம் என்னவென்றுல் இந்த முயற்

சிகளெல்லாம் சில ஹரிஜனங்களுக்குப் பிடிக்கவில்லை என்பது தான். இவையெல்லாம் ஏமாற்றும் வித்தை என்றும், இவை, அரசியல் துறையில் விழிப்பு அடைவதற்கு இடையூறுகும் என்றும் அவர்கள் கூறினர்கள். அரசியல் சுதந்திரமும் பொருளாதார சுதந்திரமும் கிடைத்துவிட்டால் தீண்டாமை தானே அகன்று விடும் என்றும், அப்படிச் சுதந்திரம் கிடைக்காத வரையில் சாதி ஹிந்துக்களால் செய்யப்படும் இவ்விதமான முயற்சியானது தம்மை மீண்டும் தவருன தூக்கத்தில் ஆழ்த்திவிடுமென்றும், அதனுல், தாம் வாழ்க்கைப் போராட்டத்தில் மற்றவர்களைவிடப் பின்னடைந்து விடுவார்கள் என்றும் கூறினர்கள். அவர்கள் 'ஹரிஜன்' என்ற பெயரைக்கூட எதிர்த்தார்கள். இந்த விஷயத்தை அவர்கள், மதத்தைச் சம்பந்தப் பட்டதாகவோ, சமூகத்தைச் சம்பந்தப்பட்டதாகவோ கருதவில்லை. இதை அவர்கள், அரசியல் துறையில் நின்றும் பொருளாதாரத் துறையில் நின்றும் பார்த்தார்கள். ஹரிஜன் சேவக் சங்கமும் காந்திஜீயும் செய்து வந்த முயற்சிகள் ஹரிஜனங்கள் அரசியல் துறையிலும் பொருளாதார நிலையிலும் முன்னேறுவதற்கு இடையூறு விளைவிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் செய்யப்படவேயில்லை. புனுவின் ஒப்பந்தத்தினுல் அவர்களுக்கு மாகாணச் சட்டசபைகளிலும் மத்திய சட்டசபைகளிலும் மிஸ்டர் மாக்டோனுல்டு அளித்ததைவிட எவ்வளவோ அதிக இடங்கள் கிடைத்துவிட்டன. வேலை மும்முரமாக நடக்கத் தொடங்கியதும், பலருக்கு இருந்த ஐயம் ஓரளவுக்கு நீங்கிவிட்டது. ஆயினும் அது அதிக ஆழமாக வேரூன்றி இருந்ததால் மீண்டும் தலையெடுத்துவிட்டது. அவர்களுள், படிப்பாளிகளாகவும், உள்நாடு வெளிநாடு விஷயங்களைப் புரிந்துகொள்ளக் கூடியவர்களாகவும் இருந்தவர்கள், இனி அமைக்கப்படப்போகும் அரசியல் சட்டத்தில் நிறையப் பேர்களுக்கு உரிமை கிடைக்கும் என்பதையும், இதனுல் தம்முடைய எண்ணிக்கையின்மேல் கவனம் செலுத்தி அதனுல் கிடைக்கக்கூடிய லாபம் முழுவதையும் அடைய வேண்டுமென்பதையும் கண்டறிந்தார்கள். அவர்களைக் குறை சொல்ல முடியாது. ஆயினும் இதனுல் தீண்டாமையை ஒழிப்பதற்காகச் செய்யப்பட்டுவரும் முயற்சியை ஏமாற்றும் வித்தை என்று நினைப்பது தவறு. அவர்களுடைய மனேபாவத்தைக் கண்டு சில சாதி ஹிந்துக்கள் அதிருப்தி அடைந்து, இந்த எதிர்ப்பானது சிலரால் தனிப்பட்ட முறையில் அரசியல் துறையில் லாபம் பெறும் எண்ணத்துடன் செய்யப்பட்டதாக நினைத்தார்கள். எது எப்படியாயினும் சரி, எதிர்ப்பானது செயல்முறை வரையில்

எட்டவில்லை. எண்ணத்திலும் அறிக்கைகள் மூலமாகவும் மட்டும் தான் சிற்சில இடங்களில் தோன்றி வந்தது.

காங்கிரஸ்காரர்கள் சிலரிடமிருந்தும், மற்றொரு வகை இடையூறு விளைந்தது. காந்திஜீ உண்ணாவிரதத்தை ஆரம்பித்தபோது சத்தியாக்கிரகம் நடந்துகொண்டிருந்ததென்பதும், அரசாங்கம் அடக்குமுறையைக் கையாண்டு வந்ததென்பதும் தெரிந்த விஷயம். இந்தச் சமயத்தில் காந்திஜீ இச்சண்டையைக் கிளப்பி விட்டு மக்களின் கவனத்தைச் சத்தியாக்கிரகத்திலிருந்து ஈர்த்து, சமூகத் தகராறு ஒன்றில் நாட்டிவிட்டார் என்றும், இச்சமயமானது பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு போராட வேண்டிய சமயமென்றும், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஹிந்து சமூகத்தில் இருந்து வரும் தீமையைப் போக்கடிப்பதற்கு உகந்ததன்று என்றும் அவர்கள் கூறினார்கள். இப்படிச் செய்ததால், சத்தியாக்கிரகமானது பலவீனப்பட்டுவிட்டதென்றும் காங்கிரஸின் செயலாளர்கள் சிலர் தீண்டப்படாதாரை முன்னேற்றும் வேலையில் ஈடுபட்டுவிட்டார்கள் என்றும், வேறு சிலர் புதிதாக முறைப்படி அமைக்கப்பட்ட ஹரிஜன் சேவக் சங்கத்தில் பதவிகள் வகிப்பவர்களாகித் தம் பொழுது முழுவதையும் அதில் கழிக்கத் தொடங்கிவிட்டார்கள் என்றும் அவர்கள் நினைத்தார்கள். மக்களின் கவனம் இத்திசையில் ஈர்க்கப்பட்டுவிட்டதென்பதும், மேலும் சில செயலாளர்கள் ஹரிஜனத் தொண்டில் ஈடுபட்டுவிட்டார்கள் என்பதும் உண்மையாயினும், சத்தியாக்கிரக வேலையை விட்டுவிட்டு வந்தவர்களுள் சிலர்தாம் சத்தியாக்கிரக வேலை செய்வதற்குத் தயாராயிருந்தார்கள் என்பதையும், பலர் ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டு அந்த வேலையிலிருந்து விலக விரும்பினார்கள் என்பதையும், அவர்கள் இந்த வேலைக்கு இப்போது வந்துவிட்டாலும், அவர்கள் இதனால்தான் சத்தியாக்கிரக வேலையை விட்டுவிட்டார்கள் என்று கூற இயலாது என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும். மேலும் ஹரிஜன் சேவக் சங்கத்தில் வேலை புரிந்தவர்களுள் காங்கிரஸிலும் சத்தியாக்கிரகத்திலும் வேலை புரிந்தவர்கள் மட்டும் இல்லை. அவற்றுள் வேலை புரியாதவர்களும் நிறையப்பேர் இருந்தார்கள். அச்சங்கத்தின் தலைவரான சேட் கன்ஷியாம்தாஸ் பிர்லாவும் அதன் அமைச்சரான டக்கர் பப்பாவும் இதற்குச் சிறந்த உதாரணமாவார்கள்.

எது எப்படியாயினும் சரி, காங்கிரஸில் இவ்விதமான அதிருப்தி உண்டாகிவிட்டது. இவ்விதமான கருத்தைக் கொண்டவர்கள் ஒன்றை மறந்துவிட்டார்கள். அதாவது

நம்முடைய சமூகத்திலும், மேலும் நம்பிடம் தனிப்பட்ட முறையிலும் குடிகொண்டிருந்த நம்முடைய பலவீனங்களே நம் நாட்டில் அயலார் ஆட்சி புரிவதற்குத் தலைமையானதும் அடிப்படையானதுமான காரணம் என்பது அவர்களுக்குத் தோன்றவில்லை. காந்திஜீயானவர் முதலிலிருந்தே அந்தப் பலவீனங்களைப் போக்கடிப்பதற்காகவே ஆக்க வேலையை அவ்வளவு வற்புறுத்தி வந்தார். நாம் எவ்வளவுக்கெவ்வளவு முன்னேறுகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு அந்தப் பலவீனங்களை நாம் உணர்கின்றோம். அவற்றினால்தான் நம்முடைய (முன்னேற்ற) வண்டியானது அடிக்கு அடி நின்றுவிடுகிறது என்பதையும் அறிகிறோம். இந்தப் பலவீனத்தை நம்மால் போக்கடிக்க முடியுமானால், நம்மால் கோடிக்கணக்கான சகோதர சகோதரிகளை அதற்கு இரையாவதிலிருந்து தப்புவிக்க முடியுமானால், அதுவே மாபெரும் தொண்டாகும். இதன் மூலமாகவே சுயராஜ்யமும், (அது உண்மையானதாகவும் எல்லாருக்கும் ஒரே விதமானதாகவும் அமைவதாயிருந்தால்) அருகில் வந்துவிடும். எனக்கு எப்போதுமே ஆக்கவேலைத் திட்டத்தில்தான் நம்பிக்கை இருந்து வந்தது. என்னால் இயன்றவரையில் அதைச் செய்யவும் முயன்று வருகிறேன். ஆனால் காங்கிரஸ்காரர்கள் எல்லாரைப் பற்றியும் இவ்விதமாகச் சொல்லமுடியாது. இது இரண்டு வகையான கருத்துக்களுக்கிடையில் உண்டான ஒரு போராட்டமாகும். இதில் எக்கருத்துச் சரியென்று யாரால் சொல்லமுடியும்! நாங்கள் எங்கள் கருத்துத்தான் சரியென்று உறுதியாக நம்புகிறோம் என்பதை மட்டும்தான் கூறமுடியும். அப்படி நம்பாததனால்தான் நம்முடைய இடையூறுகளை ஒழிப்பதற்கு எவ்வளவு பிடிவாதமாக முயற்சி செய்யப்பட வேண்டுமோ அவ்வளவு முயற்சி செய்யப்படவில்லை யென்று நினைக்கிறோம். இதனால்தான் அவை ஒழியாமல் இருந்து வருகின்றன. இந்த எதிர்ப்பு மட்டுமின்றி பிடிவாதமான சநாதனிகளின் எதிர்ப்பு என்றுமே ஒரு பக்கம் இருந்து வந்தது. சில நாட்களுக்குப் பிறகு காந்திஜீ சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்பட்டதும் அவர்களுடைய எதிர்ப்பு முழக்கம் ஆரம்பித்து விட்டது. எத்தனையோ இடங்களில் அவர் தாக்கப்பட்டார். புனாவில்தான் இந்தக் கிளர்ச்சியானது மிகவும் உக்கிரமான உருக்கொண்டது. அங்குக் காந்திஜீ பொதுக்கூட்டம் ஒன்றிற்குப் போய்க்கொண்டிருந்தபோது, அவர் மீது வெடிகுண்டு வீசப்பட்டது. காந்திஜீயிடம் பக்தியும் பற்றுதலும் நிறைந்த மாகாணமாகிய பீகாரிலும்கூட காந்திஜீயின் மோட்டாரின்மேல் தடியடிகள் விழுந்தன. இச்சம்பவம் வைத்திய

நாத்தாம் என்ற தேவ்கரில் நடந்தது. மோட்டாருக்கு ஹூட் (கூடு) இருந்ததால் பாபூ தப்பினர். அடிகள் எல்லாம் அதன் மேல்தான் விழுந்தன. அது சுக்குத்தூளாகி விட்டது. இன்று, இத்தனை நாட்களுக்குப் பிறகு, நான் இவ்விஷயங்களைப் பற்றி நினைக்கும்போதும், அப்போது காந்திஜீ செய்தது சரிதா னென்றே எனக்குத் தோன்றுகிறது. இத்தீய பழக்கத்தை அகற்றுவதில் நாங்கள் முற்றிலும் வெற்றி பெற்றோமென்று கூற முடியாவிட்டாலும்கூட, நிறைய வெற்றி கிடைத்தது என்பதில் ஐயமில்லை. உண்மையில் இன்றும் எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது. ஆயினும், இது எத்தனை ஆயிரம் ஆண்டு களாக இருந்துவந்த பழக்கம் என்பதையும், இது நம்முடைய இரத்தத்தில் ஊறி உடலோடு உடலாக ஒட்டியிருக்கிறதென்பதை யும், மேலும் நம்முடைய மதத்தோடு பிரிக்கவொண்ணாத வகை யில் கலந்து ஒன்றாகிவிட்டதென்பதையும் நினைக்கும்போது இதில் இப்போது அடைந்த முன்னேற்றமானது குறைவன்று என்பது விளங்குகிறது. இன்னும் சில அடிகள் விழுந்தால், இந்த பழைய சுவர் இடிந்து விழுந்துவிடும். இதற்காகப் பாடுபடுபவர்கள் உறுதியான நம்பிக்கையுடன் வேலை புரிந்து வரவேண்டியது அவ சியம்.

## 100. பிரயாகில் ஒற்றுமை மகாநாடு

புதிதாக நிறுவப்பட்ட ஹரிஜன் சேவக் சங்கத்தின் கூட்டம் தில்லியில் நடந்தது. நான் அதன் நிர்வாகக் குழுவின் உறுப் பினன் இல்லாவிட்டாலும்கூட நானும் அழைக்கப்பட்டேன். நான் தில்லிக்குச் சென்றேன். என் கெட்ட வேளை, எனக்குக் காய்ச்சல் வந்துவிட்டது. இழுப்பும் ஆரம்பித்துவிட்டது. நான் அங்குப் பல நாட்கள் வரையில் தங்க வேண்டி வந்து விட்டது. சற்று நலமடைந்து வந்துகொண்டிருந்த சமயத்தில் யூனிடி கான்பிரன்ஸ் (ஒற்றுமை மகாநாடு) நடைபெறப் போகிற தென்ற செய்தி கிடைத்தது. அதில் கலந்துகொள்ளும்படி நானும் அழைக்கப்பட்டேன். தில்லியிலிருந்து நேரே பிரயாகுக் குச் சென்றுவிட்டேன்.

இம்மகாநாட்டிற்குத் தலைசிறந்த ஹிந்து, முஸ்லிம், சீக்கிய, கிறிஸ்துவத் தலைவர்கள் அனைவரும் வந்திருந்தார்கள். காங்

கிரஸ்காரர்கள் பெரும்பாலும் சிறையில் இருந்தார்களாயினும், வெளியே இருந்தவர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். மௌலானா சௌகத் அலீயும், மௌலானா ஜபர் அலீயும் ஆரம்பத்திலேயே வந்துவிட்டார்கள். சில நாட்களுக்குப் பிறகு மௌலானா சௌகத் அலீ வேறு யாதோ வேலையாகச் சென்றுவிட்டார். ஆனால் மற்றவர்கள் தொடர்ந்து பங்கெடுத்து வந்தார்கள். மிஸ்டர் மாக்டோனால்டின் தீர்ப்பு முன்னமே வெளியாகிவிட்டது. அதில் முசல்மானியர்கள் கேட்டவையெல்லாம் பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன. ஒரு விஷயம் மட்டும் எஞ்சி யிருந்தது. அதாவது மத்திய சட்ட சபையில் முசல்மானியர் களுக்கு மூன்றில் ஒரு பங்கு இடங்கள் கிடைக்க வேண்டுமென் பதும், சிந்து ஒரு தனி மாகாணமாக்க வேண்டுமென்பதும் எஞ்சி நின்றன. இவற்றைப் பற்றி இன்னும் முடிவு செய்யப்படவில்லை. மகாநாட்டின் வேலை மிகவும் பெருகிவிட்டது. மூன்று வாரங் களாக நாள்தோறும் காலையிலிருந்து மத்தியானம் வரையிலும் பிறகு மாலையிலிருந்து இரவு 8–9 மணி வரையிலும் கூட்டம் நடந்து வந்தது. முசல்மானியர்கள் தமக்கு என்னென்ன வேண்டுமென்று கூறினார்களோ அல்லது அவர்களுக்கு மாக்டோ னால்டின் தீர்ப்பின்படி எவையெவை கிடைத்தனவோ அவற்றை யெல்லாம் சீக்கியர்களும் கேட்டார்கள். முசல்மானியருக்கு வைசிராயின் கவுன்ஸிலில் கட்டாயம் இடம் கிடைக்க வேண்டு மென்றால் சீக்கியரும் தமக்கும் கட்டாயமாக வேண்டுமென்றார்கள். முசல்மானியர்களுக்காகத் தனிப்பட்ட வாக்குத் தொகுதி வேண்டு மென்றால் சீக்கியருக்கும் அது கட்டாயமாக வேண்டும்! இவ்வித மாக எல்லா விஷயங்களைப் பற்றியும் மிகவும் கடுமையாக வாக்கு வாதம் நடந்து வந்தது. சீக்கியரும் முசல்மானியரும் ஒருவர் ஒருவருடைய பேச்சின் நுணுக்கங்களையும் புதிர்களையும் தேடிப் பிடிப்பதில் போட்டி போட்டு வந்தார்கள். ஆயினும் அவர் களுடைய மனத்தில் காரமோ கடுப்போ உண்டாகவில்லை. இத்தனை நாட்களாக நடந்த காரசாரமான வாக்குவாதத்தில் இரண்டு மூன்று சமயங்களில்தான் யாரோ ஆத்திரத்தில் ஏதாவது கடுமையாக கூறிவிட்டார்கள் என்றாவது அல்லது அங்கிருந்து எழுந்திருந்து போய்விடத் தயாராகிவிட்டார்கள் என்றாவது ஒரு நிலைமை வந்தது. மாளவீயஜியின் பொறுமைக்கு எல்லையே கிடையாது. மற்றவர்கள் வாதம் செய்து களைத்துப் போய் விடுவார்கள். ஏதாவது ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்றோ அல்லது ஒரு மனப்படாத விஷயங்களை விட்டுவிட்டு மற்ற

விஷயங்களைப் பற்றி ஆலோசனை செய்வோம் என்றே கூறுவார்கள். ஆனால் மாளவீயஜியோ விடமாட்டார். கடைசியில் நிறைய விஷயங்களைப் பற்றி ஒருமனப்பான்மையும் உண்டாகி விட்டது. ஆயினும் மத்திய சட்டசபையில் முசல்மானியர்களுக்காக மூன்றில் ஒரு பங்கு இடங்கள் ஒதுக்கி வைக்க வேண்டுமென்பதைப்பற்றி ஒருமனப்பான்மை உண்டாக முடியவில்லை. எல்லாவற்றிலும் முப்பது இடங்கள் கொடுக்கலாமென்று ஹிந்துக்கள் கூறி வந்தார்கள். பல நாட்கள் பேச்சு வார்த்தை நடந்த பின் எல்லாவற்றிலும் 31 அல்லது 32 இடங்கள் வரையில் அளிப்பதற்குச் சம்மதித்தார்கள். ஆனால் இன்னும் நூற்றுக்கு $33\frac{1}{3}$ வீதம் வரையில் வரவில்லை. ஆனால் இதற்கும் சம்மதித்துவிடுவார்கள் போலத் தோன்றிற்று.

கடைசியில், இவ்விதமாக முடிவுக்கு வராமல் நின்ற இரண்டு மூன்று விஷயங்களைப்பற்றி எல்லாரும் ஒரு வாரத்திற்குப் பிறகு கல்கத்தாவில் மறுபடியும் கூடி ஆலோசித்து முடிவு செய்யலாமென்று நினைத்தோம். ஹிந்துக்களும் முசல்மானியரும் மற்றவர்களும் கூடித் தமக்குள் வேறு ஏதாவதொரு உடன்படிக்கையைச் செய்து கொண்டால் மாக்டோனல்டின் தீர்ப்பு அற்றுப் போய்விடுமென்று அத்தீர்ப்பில் கூறப்பட்டிருந்தது. இந்த நிபந்தனையைப் பின்பற்றியே புனுவில் உடன்படிக்கை செய்யப்பட்டவுடன் மாக்டோனல்டானவர் தீண்டப்படாதாருக்காகத் தாம் அளித்த தனிப்பட்ட வாக்குத் தொகுதியைத் தம் தீர்ப்பிலிருந்து எடுத்துவிட்டார். அதேபோல எல்லாரும் ஒரு மனப்பட்டுத் தமக்குள் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டால் மாக்டோனல்டின் தீர்ப்பால் பிறந்த மனக்கசப்பு ஒழிந்துவிடுமென்ற நம்பிக்கையைக் கொண்டே இம்மகாநாடு நடத்தப்பட்டது. ஆயினும் நம்மவர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் செப்பிடு வித்தையை இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அநேக விஷயங்களைப் பற்றி நாம் ஒத்துப் போய்விட்டோமென்பதும், இப்போது மத்திய சட்டசபையில் எத்தனை இடங்கள் அளிப்பது என்ற விஷயம் மட்டும் எஞ்சி நின்றதென்பதும், மேலும் அதுவும் கூட கல்கத்தாவில் முடிவு செய்யப்பட்டுவிடுமென்பதும் தெரிய வந்ததும், அந்தச் சமயம் பார்த்து அரசாங்கமானது இங்கிலாந்திலிருந்து ஓர் அறிக்கையை வெளியிட்டுவிட்டது. நாங்கள் கல்கத்தாவுக்கு ரயிலில் சென்று கொண்டிருந்த போது வழியிலேயே இந்த அறிக்கையைப் பார்த்து விட்டோம். இதன் மூலமாக மத்திய சட்ட சபையில் முசல்மானியருக்கு மூன்றில் ஒரு பங்கு

இடம் வேண்டுமென்ற கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது. எதைப் பற்றி நாங்கள் இதுவரையில் இவ்வளவு வாக்குவாதம் செய்து வந்தோமோ, மேலும் எதைப்பற்றி மீண்டும் ஒரு முறை ஆலோசனை செய்வதற்காகக் கல்கத்தா வுக்குப் போய்க் கொண்டிருந்தோமோ, அதை, அரசாங்கமானது இந்தச்சமயம் பார்த்து அளித்துவிட்டது. இனி இம்மகாநாட்டிற்கு வேலை இல்லை என்பதை உணர்ந்தோம். பிரிட்டிஷ் அரசாங்க மானது மாக்டோனல்டின் தீர்ப்பை எவ்விதத்திலும் மாற்றவிரும்ப வில்லை. நமக்குள் சண்டை நிலைத்திருந்தால்தான் அது உயிருடன் இருந்துவரும். நம்முடைய ஒப்பந்தத்தினால் அது அற்றுப் போகுமானால், மேலும் அதனுடைய இடத்தில் நமக்குள் செய்து கொண்ட உடன்படிக்கை நிலைபெற்று, அதை எல்லாரும் சட்ட பூர்வமாக ஏற்றுக் கொள்ள வேண்டி வந்துவிட்டால், பிறகு பிரிட் டிஷ் அரசாங்கத்திற்கு, நம்மைக் காடை கௌதாரிகளைப் போலச் சண்டை போடவிட்டு வேடிக்கைப் பார்க்க வாய்ப்புக் கிடைக்காது. பூனைகள் சண்டை போட்டுக் கொள்ளும்போது இருவருடைய பங்கையும் குரங்கு தின்று கொண்டிருக்கவும் வாய்ப்புக் கிட்டாது. இதனால் இந்தச் சமயமே அந்தத் தீர்ப்பில் காணப்பட்ட ஒரு குறையை நீக்குவதற்குத் தகுந்தது என்று எண்ணப்பட்டது. அதனால் இந்த அறிக்கை உடனே வெளியிடப்பட்டது. மகாநாட் டிற்கு இனி வேலையில்லாததால் அதுவும் முடிவடைந்து விட்டது! நாங்கள் கல்கத்தாவில் கூடினோமாயினும், அப்படிக் கூடியதில் யாதொரு அர்த்தமும் இல்லை.

இம் மகாநாட்டைப் பற்றி நாடெங்கும் மக்கள் மிகவும் நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள். இனி இச்சண்டை ஒழிந்து விடுமென்று இவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இதைப் பற்றிக் கேள்விப்பட்டு ஆழ்வார் மகாராஜா பிரயாகுக்கு வந்து சேர்ந்தார். மகாநாட்டின் கடைசி நாளன்று நடைபெறவிருந்த பொதுக் கூட்டத்தில் அவரும் பேச வேண்டுமென்று பண்டித் மாளவீயஜியும் அவரும் விரும்பினார்கள். அக்கூட்டம் நடந்தது. எல்லா விஷயங்களைப் பற்றியும் முடிவுக்கு வந்தாகி விட்ட தென்றும், எஞ்சி நின்ற ஓரிரண்டு விஷயங்களைப் பற்றியும் விரைவில் முடிவு செய்யப்படுமென்றும் அக்கூட்டத்தில் தெரி விக்கப்பட்டது. மகாராஜாவின் சொற்பொழிவும் நன்றாக அமைந்தது. பிறகு அவர்மீது எடுத்துக்கொள்ளப்பட்ட நட வடிக்கையிலிருந்து, அவருக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் மீது எவ்வளவு குறை இருந்ததோ அதைவிட அவர்களுக்கு அவர் மீது

குறை இருந்தது என்பது தெரிய வந்தது. சில நாட்களுக்குள்ளாகவே அவரைச் சிம்மாசனத்திலிருந்து இறக்கிவிட்டார்கள். சில நாட்களுக்குப் பிறகு அவர் இங்கிலாந்தில் தற்கொலை செய்து கொண்டுவிட்டார். நாம் இம்மகாநாட்டின் மூலமாக ஒற்றுமையை நிலைநாட்டுவோமென்று இக்கூட்டம் நடைபெறும் வரையில் நினைத்துக் கொண்டிருந்தோம். இந்த மகாநாட்டில் எனக்கு ஒரு விஷயத்தைப் பற்றித்தான் நம்பிக்கை இருந்தது. ஆனால் நிறைய விஷயங்களில் ஒருமனப்பாடு உண்டாகிவிட்டதென்பதைக் கண்டேன். நான் வாதத்தில் மிகக் குறைவாகவே கலந்து கொண்டேனாயினும், சில சமயங்களில் அங்கு நடந்த வாதத்தினால் எனக்கும் வெறுப்பு வந்துவிடும். சிறிய விஷயங்களைப் பற்றிக்கூட நாங்கள் ஒத்துப்போக முடியவில்லையென்பதைச் சில சமயங்களில் உணர்ந்தேன். 32க்கும், $33\frac{1}{3}$க்கும் மிகச் சிறிய வித்தியாசம்தான், ஆயினும் இந்தச் சிக்கலைக்கூட எங்களால் தீர்க்க முடியவில்லை! இதற்காக ஒரு மகாநாட்டைக் கூட்ட வேண்டியிருந்தது. இதனால் என்ன ஆயிற்று என்றால் பிரிட்டிஷ் அரசாங்கமானது ஆப்பை அடித்துவிட்டது. பிறகு அதை அசைப்பது முடியாத காரியமாகிவிட்டது.

## 101. மறுபடியும் சிறை

ஒற்றுமை மகாநாட்டிற்காகத்தான் கல்கத்தாவுக்குச் சென்றேன். ஆயினும் அங்குச் சிறிது காலம் தங்க வேண்டி வந்தது. அங்குச் சத்தியாக்கிரகக் கிளர்ச்சிக்காகச் சில வேலைகளையும் முடித்துக் கொண்டேன். அச்சமயம் பணம் தேவைப்பட்டது. இத்தேவையைப் பூர்த்தி செய்வதற்கும் நான் உதவி புரிந்தேன். இயக்கத்தில் மக்களுக்கு நிறைய ஆர்வம் இருந்தது, ஆனால் மக்களுக்கு அச்சமும் வந்துவிட்டது. இதனால் சில பணக்காரர்கள் பகிரங்கமாக உதவிபுரியத் தயாராயில்லை. ஆனால், இரகசியமாகப் பணம் கொடுக்க நிறையப்பேர் தயாராயிருந்தார்கள். இதற்கு ஒரு நல்ல உதாரணத்தை இங்கே கொடுப்பது பொருத்தமாகும். நான் பனாரஸில் தங்கியிருந்தபோது, ஒரு நாள் எங்கேயோ போய்க்கொண்டிருந்த சமயத்தில் ஒரு பழைய நண்பரைத் தெருவில் சந்தித்தேன். அவர் காந்தி

ஜீயிடம் அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பார். அவரைக் கண்டு நான் சிறிது வியப்படைந்தேன். நான் பாபூ சிவ பிரசாத் குப்தா வீட்டில் தங்கியிருக்கிறேன் என்பதை மட்டும் அவர் அங்கே கேட்டறிந்து கொண்டு போய்விட்டார். வேறு ஒன்றும் பேசவில்லை. பிறகு அத்தேவை வந்து என்னைச் சந்தித்தார். "உங்கள் இயக்கத்திற்குப் பணம் தேவையென் பதையும் அத்தேவை மதராஸிலும் பீகாரிலும் அதிகமாக இருக்கிறது என்பதையும் கேள்விப்பட்டேன்" என்றார். அதற்கு நான் "ஆம், பணம் தேவைதான்" என்றேன். அவர் கையோடு பணத்தைக் கொண்டு வந்திருந்தார். இன்று எனக்குச் சரியாக நினைவில்லை, ஆயினும் அகில பாரதீய வேலைக்காக அவர் என் னிடம் ஒன்பது பத்து ஆயிரம் ரூபாய்க்கு நோட்டுகளைக் கொடுத்துவிட்டுப் போனார் என்று நினைக்கிறேன். இதற்கு நன்றி கூறிவிட்டு, அவர் விரும்பியபடியே பணத்தை அங்கங்கு அனுப்பிவிட்டேன். இதேபோலக் கல்கத்தாவிலும் மக்களின் உதவி கிடைத்தது. பிறகு கல்கத்தாவிலிருந்து பட்னாவுக்குத் திரும்பி வந்துவிட்டேன்.

நான் சிறையிலிருந்து வந்து ஏறக்குறைய ஆறு மாதங்க ளாகிவிட்டன. நாட்கள் போனது தெரியவேயில்லை. இந்த ஆறு மாதங்களுக்குள் நான் இரு முறை நோயாய்ப் படுத்துவிட்டேன். காந்திஜீயின் உண்ணாவிரதத்தின்போதும் புனா ஒப்பந்தத்தின் போதும் அங்குச் சென்று வந்தேன். ஹரிஜனத்தொண்டு சம் பந்தமாகப் பிரயாணங்களும் செய்தேன். மேலும், பிரயாகில் நடந்த நெடிய ஒற்றுமை மகாநாட்டில் வேலைபுரிய வேண்டியிருந் தது. கல்கத்தாவுக்கும் அதற்காகப் போக வேண்டியிருந்தது. இவையெல்லாம் செய்து வந்திருந்தும்கூட நான் வெளியே இருக்கக் கூடாதென்பதை அடிக்கடி உணர்ந்து வந்தேன். நான்தான் காங்கிரஸின் தலைவன் அல்லது வல்லரசு என்று கருதப் பட்டு வந்தேன். அச்சமயத்தில் வழக்கில் இருந்த முறைப்படி நான் என் இடத்திற்கு வாரிசை நியமிக்க வேண்டியிருந்தது. பிரயாகில் ஒற்றுமை மகாநாடு முடிவடைந்தபோதே, கல்கத்தாவி லிருந்து திரும்பி வந்ததும் சிறைக்குச் செல்ல வேண்டுமென்று முடிவு கட்டிவிட்டேன். அங்கே ராஜாஜியும், ஸ்ரீ அணேயும் வந்திருந்தார்கள். அவர்களுடன் கலந்துபேசி ராஜாஜியை என் வாரிசாக நியமிக்க விரும்பினேன். ஆனால், இன்னும் சிறிது காலம் ஹரிஜனத்தொண்டு சம்பந்தமான வேலையைச் செய்ய விரும்புவதாக அவர் கூறினார். பிறகு, எங்களுக்குள்

கலந்து பேசி ஸ்ரீ அணேயை நியமித்தேன். நான் சிறை கொள்ளப்பட்டதும் அவர்தாம் வல்லரசு ஆனுர்.

கல்கத்தாவிலிருந்து திரும்பி வந்து பட்னுவில் என்றைக்குச் சிறைக்குச் செல்லலாமென்று பார்த்துக் கொண்டிருந்தேன். கிறிஸ்துமஸ் விடுமுறையும் வந்துவிட்டது. எப்படியாவது ஜனவரி (1933) நான்காம் தேதியன்று சிறை கொள்ளப்படவேண்டுமென்று முடிவு செய்தேன். ஜனவரி நான்காம் தேதியில்தான் 1932இல் அரசாங்கமானது காந்திஜீயைக் கைது செய்து அடக்குமுறையை ஆரம்பம் செய்தது. அதன் ஞாபகார்த்தமாக இந்த ஆண்டிலும் எல்லா இடங்களிலும் காங்கிரஸின் சார்பில் ஓர் அறிக்கையைப் படிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதனிடையில், வெளியில் இருந்த ஸ்ரீ கிருபாளானி என்னேப் பார்க்க வந்தார். அவர் ஏதோ பணத்திற்கு ஏற்பாடு செய்வதற்காக வந்தார். கல்கத்தாவில் நடந்ததை யெல்லாம் நான் அவருக்குத் தெரிவித்தேன். பிறகு, எவரோ ஒரு நண்பர் பெயருக்கு (அவருடைய பெயர் இப்போது நினைவில்லே) ஒரு கடிதத்தையும் எழுதி அவரிடம் கொடுத்தேன். அக்கடிதத்தை எடுத்துக்கொண்டு சென்றுகொண்டிருந்தபோது பட்னு ஸ்டேஷனிலேயே கைது செய்யப்பட்டதும், அவர் அதைத் துண்டு துண்டாகக் கிழித்து எறிந்துவிட்டார். ஆயினும் போலீசார் அத்துண்டுகளே எல்லாம் பொறுக்கி எடுத்து ஒட்டி முன்னிருந்தபடி செய்துவிட்டார்கள். அதைப்பற்றி அவர்மேல் வழக்குத் தொடுக்கப்பட்டது. அது பங்கீபூர் சிறைக்குள்ளேயே நடத்தப்பட்டது. நானும் விசாரணையைப் பார்க்கச் சென்றிருந்தேன். வழக்கு முடிந்ததும் நான் வெளியே வந்து வண்டியில் ஏறிக்கொண்டிருக்கும்போது, ஒரு போலீஸ் அதிகாரி வந்து நானும் அங்கேயே இருக்க வேண்டுமென்று கூறினுர். நான் உடனே திரும்பி உள்ளே சென்றேன். கிருபாளானிஜீயும், பாபூ மதுரா பிரசாதும் முன்னமே அங்கு வந்துவிட்டார்கள்—மதுராபாபூ ஜனவரி 4ஆம் தேதி அறிக்கையைப் படிப்பதற்காக! நானும் அவர்களுடைய தோழனுகிவிட்டேன். ஓரிரண்டு நாட்களுக்குப் பிறகு என் மீதும் வழக்குத் தொடுக்கப்பட்டது. மதுராபாபூவுக்கு 18 மாதங்களும், கிருபாளானிஜீக்கு ஆறுமாதங்களும் எனக்குப் பதினேந்து மாதங்களும் தண்டனேயிடப் பட்டன. மதுராபாபூவுக்கு பதினெட்டு மாதங்கள் விதிக்கப்பட்டபோது எனக்கு மட்டும் ஏன் பதினேந்து மாதங்கள் விதிக்கப்பட்டன வென்று எனக்கு வியப்பு உண்டாயிற்று. நான் வேடிக்கையாக மாஜிஸ்திரேட்டைக் கூடக்

கேட்டேன். அவரை எனக்கு முன்னமே தெரியும். சப்ராவில் எனக்குத் தண்டனை விதித்தவர் அவர்தாம். மேலும் நான் வக்கீல் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது என்னுடைய பழைய கட்சிக்காரராகவும் இருந்திருந்தார். நிற்க, சில நாட்களுக்குப் பிறகு நாங்கள் ஹஜாரிபாக்குக்கு அனுப்பப்பட்டுவிட்டோம்.

ஹஜாரி பாக்கில் மீண்டும் முன்போலப் படிப்பதும் சர்க்கா சுற்றுவதுமாகப் பொழுது கழிந்தது. கான்சாஹப் சகோதரர்கள் இருவரும் இன்னும் அங்குத்தானிருந்தார்கள். காந்திஜிக்கு ஹரிஜனத்தொண்டு சம்பந்தமாகக் கட்டுரைகள் எழுதுவதற்கு அளிக்கப்பட்டிருந்த வசதிகள் நிறுத்தப்பட்டுப் போயின என்பதும், அதனுல் அவர் உண்ணு விரதத்தை தொடங்கிவிட்டார் என்பதும் சில நாட்களுக்குப் பிறகு பத்திரிகைகள் மூலமாகத் தெரியவந்தன. கடைசியில் அரசாங்கமானது அந்த வசதியை மீண்டும் அளிக்கத்தான் வேண்டி வந்தது. அவரை விடுதலையும் செய்துவிட வேண்டியதாயிற்று. வெளியே வந்து அவர் நாட்டின் நிலைமையைக் கண்டறிந்தார். ஹரிஜனங்களுக்கு செய்யப்பட்டுவந்த பாபங்களுக்காக சாதி ஹிந்துக்களின் சார்பில் பிராயச்சித்தம் செய்வதற்காகவும், மேலும், ஹிந்துக் களுக்கு அவர்களுடைய கடமையை நினைவூட்டுவதற்காகவும் அவர் இருபத்தோர் நாள் உண்ணுவிரதமிருந்தார். அதைக் கண்டு நாங்கள் மிகவும் கலக்கமுற்றோம். சிறையில் நாங்கள் நாள்தோறும் பிரார்த்தனை நடத்தி வந்தோம். சாதாரண மாகவே, நாங்கள் மாலை வேளையில் எங்களுடைய அறை மூடப்படு முன் பொதுப் பிரார்த்தனை செய்து வந்து கொண்டிருந் தோம். ஆனுல் இந்த உண்ணுவிரதம் நடந்து கொண்டிருந்த நாட்களில் மேலும் அதிகமாகப் பிரார்த்தனை நடத்தி வந்தோம். சிலர் கீதை பாராயணம் செய்தார்கள், வேறு சிலர் ராமாயணம் படித்தார்கள், மற்றும் சிலர் பழங்களை மட்டும் உணவாக உண்டு விரதம் இருந்து வந்தார்கள். தம்முடைய மனத்திற்கு உகந்த படியும் தம் ஆற்றலுக்கு ஏற்றவாறும் பலர் ஆத்ம சுத்திக்காக ஏதாவது செய்துவந்தார்கள். இந்த 21 நாள் விரதம் யாதொரு கேடுமின்றி முடிந்த தினத்தன்று நாங்கள் எல்லாரும் கூடி விசேஷ பிரார்த்தனை நடத்தி இறைவனுக்கு நன்றி செலுத்தி ேனும்.

இந்த உண்ணுவிரதத்தின் களைப்புத் தீர்ந்து உடல் நல மடைந்ததும், காந்திஜீ சிறைக்கு வெளியே இருந்த காங்கிரஸ் காரர்களின் கூட்டம் ஒன்றை நடத்தினுர். அதில் நாட்டின்

நிலைமையைப் பற்றி நிறைய விசாரணை செய்யப்பட்டது. அந்தச் சமயத்தில் பண்டித் ஜவஹர்லால்ஜீயும் வெளியில் வந்துவிட்டார். சத்தியாக்கிரகத்தைத் தனிப்பட்டோர் மட்டும் நடத்துவதாக மாற்றி அமைக்கப்பட்டதென்பது எங்களுக்குத் தெரிய வந்தது. எல்லா மாகாணங்களிலும் மீண்டும் விழிப்பு உண்டாயிற்று. சிலர் தனிப்பட்டோர் என்ற முறையில் மீண்டும் சிறைக்குச் சென்றுர்கள். இதில் பீகார் அதிக உற்சாகம் காட்டியது. அங்கு அறுநூறு எழுநூறு பேருக்கு மேல் கைது செய்யப்பட்டார்கள்.

அரசாங்கமானது மிகவும் கடுமையாக அடக்குமுறையைச் செலுத்தி காங்கிரஸுக்கு வீடில்லாமலும், பணமில்லாமலும், மேலும் வெளிப்படையாகத் தொண்டு புரிபவர்கள் இல்லாமலும் செய்துவிட்டபின், சிலர் காங்கிரஸ் அமைப்பைக் கலையாமல் காப்பதற்காக இரகசியமாக வேலை செய்யத் தொடங்கிவிட்டார்கள். அவர்கள் வேலையை நடத்தி வந்ததுமன்றி காங்கிரஸ் அமைப்பை அழியாமல் காத்து வந்தார்கள். அநேகமாக எல்லா மாகாணங்களிலும் மாகாணக் குழுக்கள் தொடர்ந்து வேலை செய்து வந்தன. அதேபோல ஜில்லாக்களிலும் ஜில்லாக் குழுக்களின் பிரதிநிதிகள் வேலையை விடாமல் செய்து வந்தார்கள். இச்சங்கிலித் தொடர் அறுபடவில்லை. அகில பாரதீயக் குழுவின் கட்டளைகளும், அதன் கருத்துக்களும் எல்லா மாகாணங்களுக்கும் கிடைத்து வந்தன. மேலும் அவற்றின்படி ஏதோ வேலையும் நடந்து வந்தது. ஆனுல் செயலாளர்களையும் சத்தியாக்கிரகிகளையும் அளித்து வந்த நிலமாகிய பொதுமக்களிடையில் உற்சாகம் குறையத்தொடங்கி விட்டது. இரகசியமாக வேலை செய்தது நாளடைவில் நன்மை பயக்கவில்லை. சத்தியாக்கிரகப் போரானது இந்த விஷயத்தில் மற்றப் போர்களிலிருந்து மாறுபட்டதாகும். இதில் தலைவர்கள் தாம் எல்லாருக்கும் முன் போர்க்களத்தில் இறங்கவேண்டும். மற்றவர்களுக்குமுன் அவர்கள் தாம் தீயில் குதிக்க வேண்டும். இக்காலத்தில் ஆயுதங்களைக்கொண்டு போடப்படும் சண்டைகளில் சேனுதிபதியானவர் முன் செல்வதில்லை. பெரும்பாலும் அவர் யுத்த களத்திற்குகூடப் போவதில்லை. அவர் பின்னுல் இருந்துகொண்டேதான் சேனையை நடத்துவார். சேனையும் சேனுதிபதியானவர் பின்னுல் இருந்துகொண்டு நடத்துவாரென்றுதான் எதிர்பார்க்கிறது. இதனுல் அவர் பின்னுல் இருப்பது சேனையின் மனத்தில் கெடுதலாகப் படுவதில்லை. ஆனுல் சத்தியாக்கிரகத்திலோ, அப்படையானது தன் தலைவர்தாம் எல்லாருக்கும் முன் சென்று படுவார் என்ற நம்பிக்கை கொண்டிருக்கிறது. இதனுல் இவர் பின்னணியில்

தங்கிவிட்டால் சேனைக்கு இயல்பாகவே அதிருப்தியும் பலவீனமும் உண்டாகி விடுகின்றன. இவ்விதமாகத்தான் 1933இலும் நடந்தது.

நான் வெளியில் இருந்தபோது 1932இல் இம்மாகாணத்தில் ஒரு காரியம் நடந்தது. வட்டமேஜையின் நடவடிக்கை களிலிருந்து அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஏதாவது சீர்திருத் தம் உண்டாகும் என்பதும், அச்சீர்திருத்தமானது காங்கிரஸுக் குத் திருப்தியளித்தாலும் அளிக்காவிட்டாலும், புதிய தேர்தல் கட்டாயம் நடக்கும் என்பதும், அதில் பொது மக்கள் பங்கெடுத் துக்கொள்ள வேண்டுமென்பதும் தெளிவாயின. பீகாரில் மட்டு மன்றி நாடெங்குமே குடியானவர்களின் எண்ணிக்கைதான் பெரிது. இது 1923, 1926 தேர்தல்களிலேயே நன்ருகத் தெரிந்து விட்டது. 1930, 1932-33 சத்தியாக்கிரகங்களுக்குப் பிறகு இத னுடைய முக்கியத்துவம் வளர்ந்ததே அன்றிக் குறையவில்லை. இதைத் தெரிந்துகொண்டு, பீகாரின் கவர்னரானவர் பீகாரின் குடி யானவர்களைச் சேர்த்து ஒரு கழகத்தை அமைக்கும்படி பீகாரின் ஜமீன்தார்களைத் தூண்டிவிட்டார். குடியானவர்களின் சண்டை யெல்லாம் ஜமீன்தார்களுடன்தாம் என்பது எல்லாருக்கும் தெரி யும். இதனுல் ஜமீன்தார்கள் ஒரு புதிய கட்சியை அமைத்தார் கள். அதில் குடியானவர்களையும் சேர்த்துக் கொள்வதற்கு முயற்சி செய்யப்பட்டது. இக்கட்சிக்கு 'யுனைட்டெட் பார்ட்டி' என்ற பெயர் கொடுக்கப்பட்டது. காங்கிரஸ்காரர்கள் அரசாங்கத்தோடு போராடிக் கொண்டிருக்கும் சமயத்தில், வரி சம்பந்தமான சட் டத்தில் சில மாறுதல்களைச் செய்து அவற்ருல் குடியானவர்களுக் குச் சிறிது சௌகரியம் உண்டாகும்படி அமைத்து, அவர்களையும் தம்மோடு சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஜமீன்தார்கள் விரும்பினுர்கள். பிறகு புதிய தேர்தல் வந்து, அதில் காங்கிரஸ் பங்கெடுத்துக் கொள்ளும்போது, யுனைடெட் பார்ட்டியானது மிக வும் வலிமையுற்று நிற்குமென்றும், அதற்குக் குடியானவர்கள் மிகவும் துணை நிற்பார்கள் என்றும், காங்கிரஸானது அதோடு போட்டியிட முடியாது என்றும் நினைத்தார்கள்.

காங்கிரஸின் அபிப்பிராயத்தில் இக்கட்சியின் கொள்கைகள் போதாததாகப் பட்டாலும் அக்கொள்கைகளில் கெடுதல் ஒன்று மில்லை. இக்கட்சியும் டொமினியன் பதவியைத் தன் குறிக் கோளாக ஏற்றுக் கொண்டது. லிபரல் பெடரேஷனில் எவ்வித மான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு வந்தனவோ அதே போன்ற தீர்மானங்களை இதுவும் நிறைவேற்றியது. பீகாரில்

காங்கிரஸைத் தவிர வேறு கட்சி கிடையாது. ஒரு பக்கத்தில் அரசாங்கமும் அதை ஆதரித்தவர்களின் கட்சியும், மற்றொருபுறம் காங்கிரஸ்—அதாவது அரசாங்கத்துடன் போராடும் கட்சி இவை இரண்டும் தாம் இருந்தன. இவை இரண்டிற்கும் இடையில் லிபரல்களைப் போல நடுத்தரமான கருத்துகொண்ட கட்சி—எதுவும் பீகாரில் இல்லை. இக்கட்சிக்காரர்களை நான் சந்தித்தேன். பேச்சு வார்த்தையும் நடந்தது. காங்கிரஸுக்குப் போட்டியாக ஒரு கட்சியை நிறுவுவதற்காகவே இவர்கள் முயற்சி செய்து வருகிறார்கள் என்பதை உணர்ந்தேன். மேலும் இது கவர்னருடைய தூண்டுதலினால் நடக்கிறது என்பதையும் தெரிந்துகொண்டேன். அப்படியிருந்தும்கூட, இக்கட்சியால் காங்கிரஸை எதிர்த்துப் போட்டிபோட முடியுமென்ற ஐயம் என் மனத்தில் ஒரு கணத்திற்குக்கூட வரவில்லை. காங்கிரஸின் செல்வாக்கானது அதன் தொண்டையும் தியாகத்தையும் கொண்டிருந்தது. இந்தக் கட்சியில் இப்பேச்சுக்கு இடமில்லை. தேர்தலில் இடம் பெறுவதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு அமைக்கப்படும் கட்சிக்குள் சண்டை வராமல் இருக்கமுடியாது என்பதையும் நான் உணர்ந்தேன். ஏனெனில் கட்சிக்குள் அபேக்ஷகர்களின் எண்ணிக்கையானது தேர்தலில் எத்தனை இடங்கள் உண்டோ அவற்றைவிட எத்தனையோ மடங்கு அதிகமாயிருக்கும். அது மட்டுமன்றி, அவர்களுக்குள் போட்டியும் இருந்துவரும். இதனால், இக்கட்சியானது காங்கிரஸுடன் போட்டிபோட முடியுமென்பதைப் பற்றி எனக்குப் பயமில்லை. மேலும், இவ்விதமான நடுத்தரமான கட்சி ஒன்று உண்டானதால் யாதொரு கெடுதலுமில்லை யென்றும் நினைத்தேன். ஏனெனில் அரசாங்கத்துடன் போராடுவதில் காங்கிரஸ் முனைந்து நிற்கும்போது, ஆக்கவேலையைச் செய்பவர்கள் எவருமில்லாமல் போகிறார்கள். ஆதலால், அச்சமயத்தில் இக்கட்சியினால் நாட்டிற்கு ஏதாவது தொண்டும் கிடைக்கலாம். மேலும் இக்கட்சியானது குடியானவர்களுக்கு ஏதாவது வசதிகளைச் செய்து கொடுக்குமானால், இக்கட்சியினால் அவர்களுக்கு நன்மை உண்டாகும் என்பதையும் நினைத்துப் பார்த்தேன். பிறகு காங்கிரஸுக்கும் இக்கட்சிக்கும் போட்டி வந்தால் குடியானவர்கள் காங்கிரஸைத்தான் ஆதரிப்பார்கள் என்றும், சுயராஜ்யத்தை மறக்க மாட்டார்கள் என்றும் நான் நினைத்தேன். இதனால் நான் இக்கட்சி நிறுவப்படுவதைப் பற்றி கவலைப்படவில்லை. இது சம்பந்தமாக ஒரு அறிக்கையையும் வெளியிட்டேன்.

இந்த அறிக்கையைப் பற்றி ஹஜாரிபாக்கில் இருந்த நண்பர்

களுக்குச் செய்தி கிடைத்துவிட்டது. சிலர் இதைப் பற்றிக் குறை பட்டுக் கொண்டார்கள். நான் அங்குப் போய்ச் சேர்ந்ததும் இதைப்பற்றி என்னைக் கேட்டார்கள். நான் என் கருத்தைக் கூறினேன். ஆனால் அவர்கள் திருப்தியடையவில்லை. இக் கட்சிக்காரர்கள் சார்பிலிருந்து வரியைப் பற்றிய சட்டத்தில் சில திருத்தங்கள் செய்வதைப் பற்றி பேச்சு எழுந்தபோது, நாங்கள் இன்னும் சிறையில்தான் இருந்தோம். எனக்கு இவை எல்லாம் தெரிந்திருந்தும்கூட நான் கவலைப்படாமல் இருந்தேன். ஆனால் சில நண்பர்கள் இவற்றைக்கண்டு கலக்க முற்றார்கள். இப்படிச் செய்வதால் அக்கட்சிக்குக் குடியானவர்களிடையில் செல்வாக்கு உண்டாகிவிடுமென்று அவர்கள் அஞ்சினார்கள். இதைக் கட்டாய மாக எதிர்க்க வேண்டுமென்று அவர்கள் நினைத்தார்கள், காங் கிரஸோ சிறைக்குள்ளிருந்தது. மேலும் சட்டத்திற்கு விரோத மான நிலையமாகிவிட்டது. இதனால் கிசான் சபாதான் இந்தக் கட்சியை எதிர்க்க முடியும். பழைய சபா இன்னும் இருந்து வந்தது. ஆனால் காங்கிரஸ் மும்முரமாக வேலை செய்து வந்த தால் அது சிறந்த வேலை எதையும் செய்யாமலிருந்து வந்தது. அதற்குப் புத்துயிர் ஊட்டச் சிலர் முயற்சி செய்து வந்தார்கள். அவர்களுக்கு ஊக்கமளிக்கும் வகையில் சிறையிலிருந்து கட்டளை அனுப்பப்பட்டது. கிசான் சபாவை நிறுவி வரிசட்டச் சீர்திருத் தத் தீர்மானத்தை எதிர்க்க வேண்டுமென்று சுவாமி சகஜானந்தஜீ மிகவும் வேண்டிக்கொள்ளப்பட்டார். இது தேவையில்லையென்று நான் நினைத்தேன். காரணத்தை மேலே காட்டியுள்ளேன். ஆயி னும் நான் இதை எதிர்க்க முடியவில்லை. நான் சும்மா இருந்து விட்டேன். கிசான் சபா போன்ற வேறொரு நிலையம் அவசியம் என்று பிரஜ்கிஷோர் பாபூவும் நினைக்கவில்லை. ஆதலால் அவர் வெளியிலிருந்தும் இதை எதிர்க்கவில்லை. நான் சிறைக்கு உள்ளி ருந்தும் எதிர்க்கவில்லை. இவ்வண்ணமாக நாங்கள் இல்லாத சமயத் தில் கிசான்சபாவானது மிகவும் பலமாக அமைக்கப்பட்டு விட்டது. வரி சட்டச் சீர்திருத்தத் தீர்மானம் மிகவும் கடுமையாக எதிர்க்கப் பட்டு வந்தது. பழைய காலத்துக் கிசான் சபாவின் முக்கியச் செயலாளர்கள் சிலர் கிசான் சபாவை எதிர்த்துச் சீர்திருத்தத் தைப் பலமாக ஆதரித்துவரத் தொடங்கினார்கள். இந்த விஷயம் ஒன்று ஒன்றரை ஆண்டு வரையில் நடந்து கொண்டிருந்தது. நாங்கள் சிறையிலிருந்து வெளியே வரும் வரையில் இது தீர வில்லை.

# 102. நான் கடுமையாக நோயுற்றது

நான் 1933 ஜுலையில், முதல் வாரத்தில் நோய்வாய்ப் பட்டு விட்டேன். முதலில் சிறிது இருமல் வந்தது. திடீரென்று குளிர் பட்டதால் அது உண்டாகியிருக்கலாம். முதலில் இது சாதாரண இருமல் என்று நினைத்தேன். ஆனால் இது குறைவதற்கு மாருக நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தது. இழுப்பும் கடுமையாகப் பற்றிக் கொண்டது. ஒரு முறை இது மிகவும் கடுமையாகி, இரண்டு மூன்று நாட்கள் வரையில் நான் மிகவும் கஷ்டப்பட்டேன். அதற்குப் பிறகு ஊசி போடப்பட்டது. இழுப்புச் சிறிது மட்டாயிற்று. அதன்பின் சிறிது உணவு உண்பதற்காக எழுந்து உட்கார்ந்தேன். ரொட்டித் துண்டையும் பாலையும் கரண்டியில் எடுத்து வாய்க்கு அருகில் கொண்டு போனதுமே மறுபடியும் இழுப்புக் கடுமையாகத் தொடங்கி விட்டது. உயிரே போய்விடும்போல மூச்சுத் திணற ஆரம்பித்து விட்டது. நான் நினைவு இழந்து விட்டேன். சிறைச்சாலை டாக்டர் வந்து எதையோ முகர்ந்து பார்க்க கொடுத்தார். பிறகு நினைவு வந்தது. அதற்குப் பிறகு சீதபேதி கடுமையாகக் கண்டு விட்டது. ஒரு நாளைக்கு இருபத்திநான்கு இருபத்தைந்து முறை வெளிக்குப் போகத் தொடங்கியது. மிகவும் பலவீனமாகி விட்டேன். உடம்பு மிகவும் இளைத்துப் போய்விட்டது. பட்னு வைத்தியசாலைக்கு என்னை வைத்தியத்திற்கு அனுப்ப வேண்டு மென்று சிறை சூப்பரிண்டெண்டு அரசாங்கத்திற்கு எழுதினர். முதலில் அதைப்பற்றிக் கவலை எடுத்துக் கொள்ளப்படவில்லை. என் தமையனுருக்குச் செய்தி கிடைத்தது. அவர் மிகவும் கலக்க முற்று அங்கு வந்து சேர்ந்தார். என்னுடைய நிலைமையைக் கண்டு கவலைக்கு ஆளானர். அவர் ராஞ்சிக்குச் சென்று சில நண்பர்களைச் சந்தித்தார். கடைசியில் என்னைப் பட்னுவுக்கு அனுப்புப்படி அரசாங்கத்தின் உத்தரவு கிடைத்தது. இது டிசம்பரின் முதல் வாரத்தில் நடந்தது, அதாவது நோய் தொடங்கி இரண்டு மாதங்களுக்குப் பிறகு! என்னை பட்னு சிறைக்கு அனுப்புவதென்றும், பட்னு மருத்துவ சாலையில் என் நோயைப் பற்றி ஆராய்வதென்றும் உத்தரவு போடப்பட்டிருந் தது. என்னிடம் உத்தரவைக் காட்டியதும், மருத்துவ சாலைக்குச் செல்வதில்லையென்ருல், அதாவது பட்னு சிறையில்தான் இருக்க

வேண்டுமென்ருல், இங்கேயே இருப்பது நன்றெனக் கூறினேன். இது உத்தரவு எழுதும் வக்கணேயென்றும், நான் மருத்துவ சாலேக்கு அனுப்பப்படுகிறேன் என்பதுதான் இதன் பொருள் என்றும் எனக்கு விளக்கப்பட்டது.

அடுத்த நாள் காலே என்னே எப்படியோ பட்னுவுக்கு எடுத் துச் சென்ருர்கள். தமையனுரும்கூட இருந்தார். அங்கே என்னே முதலில் சிறைக்குக் கொண்டுபோய்ப் பிறகு உடனே மருத்துவ சாலேக்குக் கொண்டு போனுர்கள். வைத்தியம் ஆரம் பிக்கப்பட்டது. பல நாட்கள் வரையில் என் நிலேமை மோசமா யிருந்தது. பிறகு மெல்ல மெல்ல திருந்த ஆரம்பித்தது. அரசாங்கத்தார் என்னே உடனே பாங்கீபூர் சிறைக்கு அனுப்பும் படி உத்தரவு இட்டிருக்கிருர்களென்று ஒரு நாள் திடீரென்று செய்தி கிடைத்தது. என்னிடம் பலர் வந்து போய்க்கொண்டிருக் கிருர்கள் என்றும், நான் கட்டிலில் கிடந்தவாறே இயக்கத்தை நடத்தி வருகிறேனென்றும் யாராவது அரசாங்கத்திடம் கோள் சொல்லியிருக்கலாம். அது முற்றிலும் பொய். என்னிடம் மக்கள் வந்து கொண்டிருந்தது உண்மைதான். நான் நோயுற்றி ருந்ததால் அவர்கள் இயல்பாக வந்தார்கள். ஆனுல் நான் எவருடனும் இயக்கத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லே.

எது எப்படியாயினும் சரி, மருத்துவ சாலேயிலிருந்து நான் உடனே பாங்கீபூர் சிறைக்குக் கொண்டு போகப்பட்டேன். அங்கும் அதே வைத்தியம் நடந்தது. எனக்கு உடம்பு முன்னமே சிறிது நலமாகியிருந்தது. இச்சிறையில் மேலும் நலமடைந்து வந்தது. குளிர் காலம் வந்து கொண்டிருந்தது. அப்போதுதான் எனக்குச் சாதாரணமாக உடல் நலம் கெட்டுவிடும். ஒரு நாள் திடீரென்று மறுபடியும் இழுப்பு மிகவும் கடுமையாக ஆரம்பித்து விட்டது. இரண்டு நாட்களில் நிலேமை மிகவும் மோசமாகி விட்டது. சிவில் சர்ஜன் மிகவும் பாடுபட்டுக் கவனித்து வந்தார். ஆனுல், அதனுல் ஒன்றும் பயனில்லே. முடிவில் சிறையிலிருந்து மருத்துவசாலேக்கு அனுப்புவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

நான் மருத்துவசாலேயில் மிகவும் மோசமான நிலேயில் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டேன். இந்த முறை, நோயும் மிகவும் கடுமையாக இருந்தது. என் குடும்பத்தின் பெண்கள் இருவர் மட்டும்தாம் என்னுடன் இருக்கலாமென்று உத்தரவு இடப்பட்டிருந்தது. வேலே செய்வதற்கு ஓரிரண்டு வேலேக்காரர் களும் அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். வேறு யாரும் என்னேப் பார்க்க வரமுடியாது. வாரத்தில் ஒரு முறை குடும்பத்தாரைப்

பார்க்கலாம். அதுவும் போலீசாரும் சிறை அதிகாரிகளும் கூட இருக்கும்போதுதான் பார்க்கலாம். தனியாகப் பார்க்க முடியாது. இதனால் எனக்கு யாதொரு கஷ்டமும் உண்டாகவில்லை. ஏனெனில் நான் முன்னமே எவருடனும் இயக்கத்தைப் பற்றிப் பேசுவதில்லை. இப்போதோ நான் கடுமையாக நோயுற்றுக் கிடந்தேன். படுக்கையிலிருந்து எழுந்து நாற்காலியில் உட்காரக் கூட முடியவில்லை. முன் வந்ததைவிட இந்த முறை நோயானது மிகவும் கடுமையாக இருந்தது. மருத்துவர் எவ்வளவோ பாடு பட்டும்கூட அது சிறிதுகூடக் குறையவில்லை. சில சமயங்களில் ஊசிக்குமேல் ஊசி போடவேண்டி வந்துவிடுவதுண்டு. அதன் மேல் மூச்சுத் திணறல் நாலைந்து மணி நேரத்திற்குச் சற்றுக் குறையும். பிறகு முன்போலவே ஆகிவிடும்; மறுபடியும் ஊசி போடப்படும். நவம்பர் டிசம்பர் முழுவதும் மிகவும் மோசமா யிருந்தது. எனக்கு எவ்வளவோ நோய் வந்திருக்கிறது, ஆனால் இவ்வளவு கடுமையாக வந்ததேயில்லை. என் நிலைமை மிகவும் மோசமாயிருப்பதாகவும், நோய் கட்டுக்கு அடங்கவில்லை யென்றும், இராப்பொழுதில் அதிகமாகத் திண்டாடிப் போவதாக வும், அதனால் மருத்துவக் கல்லூரி மாணவர் இருவர் மாறி மாறி விழித்துக் கொண்டிருந்து என்னைக் கவனித்துக்கொள்ள வேண்டி யிருக்கிறதென்றும் மருத்துவசாலையின் டாக்டர்கள் அரசாங்கத் துக்கு டிசம்பரில் எழுதி அனுப்பினர்கள். அரசாங்க வேலை விரைவில் நடப்பதில்லை. கடைசியில், என்னை மெடிகல் போர்டு பரிசோதிக்க வேண்டுமென்று உத்தரவு வந்தது. டிசம்பர் கடைசி யிலிருந்து ஒவ்வொரு ஆண்டும் நோயின் கடுமை குறைந்து விடுமென்பதை நான் கண்டிருக்கிறேன். இந்த ஆண்டும் அதே போல ஆயிற்று. மெடிகல் போர்டு 1934 ஜனவரியின் முதல் வாரத் தில் என்னைப் பரிசோதிக்க வந்தபோது நோய் குறைந்துவிட்டது. என்னுடைய நிலைமையையும் நாள்தோறும் எழுதப்பட்டிருந்த ரிபோர்ட்டுகளையும் மெடிகல் போர்டு பார்த்துவிட்டு என்னை விடுதலை செய்துவிடும்படி சிபாரிசு செய்தது. இதை எனக்குச் சொல்லவில்லை. ஓராண்டிற்குமேல் சிறையில் கழிந்துவிட்டது. என் தண்டனை பதினைந்து மாதம்தான். ஒன்று ஒன்றரை மாதக் கெடுதான் எஞ்சியிருந்தது. அரசாங்கமானது 1934 ஜனவரி 15ஆம் தேதியன்று போர்டின் ரிப்போர்ட்டைப் பற்றி ஆலோசனை செய்து என்னை விடுதலை செய்வதாக முடிவு செய்தது.

# 103. பீகாரின் பிரளய பூகம்பம்

மருத்துவ சாலையில் படுக்கையில் படுத்தபடியே நான் இவ் வண்ணம் எண்ணி வந்தேன். நோய் மிகவும் கடுமையாக இருந்த போது, இதோ போச்சு அதோ போச்சு என்றிருந்த நிலைமையில் அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை. இப்போதோ சிறிது நலமடைந்துவிட்டேன். இனிமேல் உடல் நலம் நாளுக்குநாள் விருத்தியடையுமென்பதாகத் தெரிகிறது. என்னுடைய கெடுவும் பெரும்பாலும் முடிந்துவிட்டது. இந்தச் சமயத்தில் இந்தத்தயவை என்மேல் ஏன் வீணுகச் சுமத்துகிருர்கள். நோய் மிகவும் கடுமை யருந்தபோது குடும்பத்தார் எவரையும், என் தமையனுரைக்கூட, வாரத்தில் ஒரு முறைதான், அதுவும் போலீசார் முன்னிலையில் தான்பார்க்கவிட்டார்கள். ஒரு சமயம் என்னைக் கவனித்துவந்த என்அண்ணியார் போய்விட்டு அவருடைய இடத்தில் என் தமய ஞரின்மருமகள் என்னை மூன்று நான்கு நாட்களுக்குப் பார்த்துக் கொள்வதற்காக வந்தாள். அவளுக்கு நான்கு வயது கொண்ட குழந்தை ஒன்றிருந்தது. அது அவளைவிட்டு பிரிந்திருக்காது. அதையும் அவள் தன்னுடன் அழைத்து வந்திருந்தாள். இரண்டு பேர்தான் என்னுடன் இருப்பதற்கு உத்தரவு என்றும், ஆதலால் மூன்ருவது பேர்வழியாக இந்தக் குழந்தை இருக்கக்கூடாதென் றும் ஆட்சேபித்தார்கள். இவ்வளவு கண்டிப்பாக இருந்தார்கள். அக்குழந்தை போய்விடவேண்டி வந்தது. ஆதலால் இப்போது எதற்காக இந்தத் தயவைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்று எண்ணினேன்.

இவ்விதமாக மனத்தை அலட்டிக்கொண்டு கட்டிலில் புரண்டு புரண்டு படுத்துக் கிடந்தபோது, கட்டில் ஆடுவது போலத் தோன்றியது. பிறகு அறையின் கதவும் ஜன்னலும் ஆடத் தொடங்கின. நோயினுல் நான் பலவீனமடைந்திருந்ததாலும், மேலும் இத்தனை நாழிகையாக யோசனை செய்து கொண்டிருந்த தாலும், என் தலை சுற்றுகிறதென்பதாகத் தவருக நினைத்துக் கொண்டேன். இப்படி நான் நினைத்துக் கொண்டிருக்கும்போது, என் அண்ணியார் பூமி ஆடுகிறதென்று அடுத்த அறையிலிருந்து கூச்சலிட்டார். நான் உடனே புரிந்துகொண்டேன். எல்லோரும் ஓடிப் போங்கள் என்று அவர் கூறினர். நான் உடனே கட்டி லிலிருந்து இறங்கி வெளியே சென்றேன். எதிரிலிருந்த வெட்ட

வெளிக்குச் சென்று அங்கு நின்றேன். பூமி ஆடிக் கொண்டிருந்த கடுமையால் நிற்பதுகூடக் கஷ்டமாயிருந்தது. கூடவே கட கட வென்று ஒரு பயங்கரமான ஒலியும் உண்டாயிற்று. நூற்றுக் கணக்கான ரயில் வண்டிகள் சேர்ந்து ஓடுவதுபோலச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அக்கம்பக்கத்துக் கட்டடங்களில் இருந்த நோயாளிகளுள் நடந்து வரமுடிந்த சிலர் எனக்கு அருகில் வந்து நின்று கொண்டார்கள். வெட்டவெளியில் நிறையப் பசு மாடுகள் ஓடிக்கொண்டிருந்தன. அவை வாலை தூக்கிக்கொண்டு இங்குமங்குமாக ஓடிக் கொண்டிருந்தன. ஒரு தடவை நாங்கள் எல்லாருமாகக் கூடி நின்றுகொண்டிருந்த இடத்திற்கு அவை ஓடி வந்த விதத்தைப் பார்த்தால் அவை எங்களைத் தாக்க வருவது போல இருந்தது. ஆனால் அப்படி எதுவும் செய்யாமல், எங்க ளிடம் ஓடிவந்து நின்று கொண்டன. அந்த இடத்தில் அபாய மில்லையென்று நினைத்தனவோ அல்லது எங்களைத் தம்மிடம் இரக்கம் கொண்டவர்களாக எண்ணி, எங்கள் பக்கத்தில் நிற்பது நல்லதென நினைத்தனவோ தெரியவில்லை. இதற்குள்ளாக, சிறிது தொலைவில் இருந்த நர்சுகள் வசிக்கும் மாடி வீடு தடாம் என்று விழுந்துவிட்டது. ஆனால், பூகம்பம் கட கடவென்று ஒலித்துக் கொண்டிருந்த சத்தத்தில் வீடு விழுந்த சத்தம் கேட்கவில்லை. தூசி எழுந்ததைக் கண்டுதான் வீடு விழுந்துவிட்டது என்பதைத் தெரிந்துகொண்டோம். மருத்துவசாலையின் சில பாகங்களும் ஆங்காங்கு விழுந்துவிட்டன. ஆனால் நல்ல வேளையாக யாரும் சாகவில்லை. எவருக்கும் காயம்கூடப் படவில்லை. சிறிது நேரத் திற்குப் பின் அமைதி நிலவியது.

சுமார் $4\frac{1}{2}$ நிமிஷம் வரையில் பூமி ஆடிக்கொண்டிருந்த தென்பதாக நான் மதிப்பிட்டேன். பின்னால் மாகாணத்தின் பல்வேறு இடங்களிலிருந்து செய்தி வந்ததிலிருந்து $4\frac{1}{2}$ நிமிஷத் திலிருந்து 7 நிமிஷம் வரையில் பூகம்பம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்ததைக் கண்டதாகத் தெரிய வந்தது. எல்லாரும், எல்லா இடங்களிலிருந்தும், அஞ்சிக் கலக்கமுற்று வெளியே வரத் தொடங்கினார்கள். கட்டடத்திற்குள் நுழைவதற்கு யாருக்கும் தைரியம் வரவில்லை. நான் மருத்துவசாலைக்கு வந்தபின் என் அறையைவிட்டு வெளியே வந்ததுதான் இதுதான் முதல் தடவை. பிறரோடு பேசியதும் இதுதான் முதல் தடவை. பேச்சும் வேறு எதைப் பற்றிப் பேசமுடியும்! எல்லாம் பூகம்பத்தைப் பற்றித் தான் பேசிக் கொண்டிருந்தோம். நான் எப்படியிருக்கிறேன் என்பதைப் பார்ப்பதற்கு நண்பர்கள் ஓடி வந்தார்கள். ஊருக்குள்

நிறைய வீடுகள் விழுந்துவிட்டனவென்பதாக மெல்ல மெல்ல செய்தி வரத்தொடங்கியது. காயம்பட்டவர்கள் சிலரும் மருத்துவ சாலைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். அந்த வெட்ட வெளி யிலேயே நாங்கள் சாயங்காலம் வரையில் படுத்துக்கிடந்தோம். ஜனவரி மாதத்துக் குளிர் காற்றும் பலமாக அடித்துக் கொண் டிருந்தது. குளிர் கடுமையாக இருந்தது. இராத்திரிக்கு நான் என்ன செய்வதென்ற கேள்வி எழுந்தது. கட்டடத்திற்குள் சென்று பார்த்ததில் சுவர்கள் பல இடங்களில் வெடித்திருந்தாலும் எந்தப் பாகமும் விழுந்துவிடவில்லை யென்பது தெரிய வந்தது. இராத்திரிக்கு வெளியே இருந்தேனானால், என்னுடைய நோய் கட்டாயமாக அதிகமாகிவிடும். பிறகு பிழைக்க முடியாதென்று நினைத்தேன். ஆகையால் கட்டடத்திற்கு உள்ளே சென்று இரவைக் கழிப்பதென்றும், பிறகு இரவில் பூகம்பம் வந்தால் மறுபடியும் வெளியே வரலாமென்றும் நினைத்தேன். மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு நான் கட்டடத்திற்குள் சென்று விட்டேன். என்னைப் பார்த்து வேறு சில நோயாளிகளும் உள்ளே சென்றார்கள். ஆனால் எல்லாரும் போகவில்லை. பக்கத்தில் குழந்தைகள் வார்டு இருந்தது. அதில் ஒரு பாகம் விழுந்து விட்டது. சுவர்களும் பலவீனப் பட்டுப் போயின. இதனால் மருத்துவ சாலைக்காரர்கள் குழந்தைகளின் கட்டில்களையெல்லாம் வெட்ட வெளியில் கொண்டுவந்து போட்டு விட்டார்கள். அக் குழந்தைகள் இரவு முழுவதையும் அந்தக் குளிரில் கழித்தார்கள். இரவு ஒரு மணிக்கும் பூகம்பம் மறுபடியும் ஒரு முறை வந்தது. இதுவும் கடுமையாக இருந்தது. கட்டில் பலமாக ஆடியதில் நான் விழித்துக் கொண்டுவிட்டேன். மறுபடியும் எல்லாரும் வெளியே வந்தோம். ஆனால் பகலில் வந்த பூகம்பத்தைப் போல இது அவ்வளவு நாழிகை இருக்கவில்லை. எப்படியோ இரவை ஒரு விதமாகக் கழித்தோம். வெளியே என்ன நடந்ததென்பதைப் பற்றி அன்று செய்தி கிடைக்கவில்லை. ஊரைப்பற்றிச் சிறிது சமாச்சாரம் கிடைத்தது. இதிலிருந்து ஊருக்குள் நிறையச் சேதமாகியிருப்பதாகத் தெரிய வந்தது.

அடுத்த நாள் காலை 10 மணிக்கு டாக்டர் என்னைப் பார்க்க வந்தார். நான் அவருடன் பேசிக்கொண்டே தாழ்வாரத் திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கும்போது, மறுபடியும் ஓர் ஆட்டம் வந்தது. நாங்கள் இருவரும் வெளியே தப்பி வந்தோம். தெளிவாக செய்தி கிடைக்காவிட்டாலும்கூட முங்கேரின் நிலைமை மிகவும் மோசமாயிருக்கிறதென்பது அவரிடமிருந்துதான் தெரிய

வந்தது. அவர் முங்கேரைச் சேர்ந்தவர்; ஆகையால் அவர் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். எத்தனை டாக்டர்கள் கிடைக்கக்கூடுமோ அத்தனை பெயரும் தயாராக இருக்க வேண்டுமென்றும், எங்குச் செல்ல வேண்டுமென்று உத்திரவிடப்படுமோ உடனே அங்குச் செல்ல வேண்டுமென்றும், மேலும் காயம்பட்டவர்களுக்கு மருத்துவ சாலையில் இடமும் மற்ற ஏற்பாடுகளும் தயாராயிருக்க வேண்டுமென்றும் அரசாங்கத்தார் கட்டளையிட்டிருப்பதாக அவர் கூறினர். இந்த பூகம்பமானது எவ்வளவு தொலைவு வரையில் தன் கைவரிசையைக் காட்டியிருக்கிறதென்பது இப்போது சிறிது தெரிய வந்தது. மேலும் அரசாங்க அலுவலகத்தின் (செக்ரடேரியட்டின்) ஒரு பாகம் விழுந்துவிட்டதென்பதாகவும் வேலையெல்லாம் அலங்கோலமாகிவிட்டதென்பதாகவும், இந்த குழப்பத்தால் என்னுடைய விடுதலைக்கு உத்தரவு வர முடியவில்லையென்பதாகவும் பிறகு நான் கேள்விப்பட்டேன். இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் விடுதலை செய்யப்பட்டேன். அன்று மாலை நான்கு மணி சுமாருக்கு சிவில் சர்ஜன் என்னிடம் வந்து, நான் விடுதலை செய்யப்பட்டு விட்டதாகவும், இனி என் இஷ்டப்படி நடக்கலாம் என்றும் கூறினர். போலீஸ் காவலையும் எடுத்துவிட்டார்கள். பூகம்பத்தினுல்தான் அரசாங்கம் என்னை விடுதலை செய்தது என்று சிலர் நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். நான் நோய்வாய்ப் பட்டிருந்ததால் என்னை விடுதலை செய்ய வேண்டுமென்று பூகம்பம் வருவதற்குச் சில மணி நேரங்களுக்கு முன்னமே முடிவாகிவிட்டது. இதை எனக்குக்கூட தெரிவித்துவிட்டார்கள். பூகம்பத்தினுல் எல்லாக் காரியங்களும் ஒரே குழப்பமாகி விட்டதால் நான் விடுதலையாவதற்கு இரண்டு நாட்கள் தாமதமாயிற்று. இரண்டு நாட்களுக்குப் பிறகு வட பீகாரின் கவலைக்கிடமான நிலைமையின் செய்தி சிறிதளவு தெரிய வந்ததும் அரசாங்கத்தார் அப்பகுதி வாசிகளான சத்தியாக்கிரகிகளை விடுதலை செய்துவிட்டார்கள். நானும் விடுதலையாகிவிட்டேன் என்பது அவர்களுக்கும் தெரிந்துவிட்டது. பூகம்பத்தால் துன்புற்றவர்களுக்கு உதவி புரிவதற்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று நான் நினைத்துக் கொண்டிருந்தபோது, அவர்களும் என்னிடம் வந்து சேர்ந்தார்கள். அவர்களை நான் திர்ஹூத் ஜில்லாவுக்கு அனுப்பினேன். சிறிதளவு பணம் கடன் வாங்கி அவர்களுக்குக் கம்பளிகளை வாங்கிக் கொடுத்தேன். அவர்களிடம் போர்த்திக் கொள்வதற்கு ஒன்றும் இல்லை. அவர்கள் எல்லாரும் வெயில் காலத்தில் கைது செய்யப்பட்டவர்கள். ஆதலால்

அவர்கள் விடுதலையாகிச் செல்லும்போது, அவர்கள் வெயில் காலத்தில் அணிந்துகொண்டிருந்த வேஷ்டியும் குருத்தாவும்தாம் திரும்பக் கிடைத்தன. கையில் சிறிது பணம் செலவுக்குக் கொடுத்து, எப்படியாவது சம்பரான், முஜபர்பூர், தர்பங்கா, சாரன் முதலிய இடங்களுக்குச் சென்று தகவல் கொண்டு வரும்படி கூறி அவர்களை அனுப்பி வைத்தேன். ரயில் தந்தி எல்லாம் நின்று விட்டன. அவர்கள் எவ்விதமாகச் செல்வார்கள் என்பதுகூடத் தெரியாது. அவர்கள் தைரியமாகப் படகுகளில் சென்றும், நடந்து சென்றும், சமாசாரம் விசாரித்து வரத் தொடங்கி விட்டார்கள்.

பூகம்பத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு உதவி புரிவதற்கு வேண்டிய பணத்திற்காக ஒரு கோரிக்கையை வெளியிட எண்ணினேன். பல நாட்கள் கழிந்தன. இன்னும் சரியான செய்திகள் கிடைக்கவில்லை. ஆயினும் அதுவரையில் கிடைத்த அரைகுறைச் செய்திகள் மிகவும் பயங்கரமாயிருந்தன. டாக்டர்கள் என்னை மருத்துவ சாலையிலேயே இன்னும் வைத்திருந்தார்கள். நான் மிகவும் பலவீனமாகவே இருந்தேன். ஆயினும் இந்தச் சமயத்தில் உற்சாகமும் ஆற்றலும் எங்கிருந்து வந்ததென்பது தெரியாது. நான் பிடிவாதம் செய்து மருத்துவ சாலையில் இருந்தபடியே வேலை புரியத் தொடங்கிவிட்டேன். ஹஜாரிபாக்கிலிருந்து மதுரா பாபூவும் சத்திய நாராண் பாபூவும் விடுதலையடைந்து மருத்துவ சாலையில் இருந்த என்னிடம் வந்து விட்டார்கள். வேறு சில நண்பர்கள் மருத்துவ சாலையிலேயே கிடைத்தார்கள். நாங்கள் எல்லாரும் சேர்ந்து யோசனை செய்து, ஒரு கோரிக்கையை வெளியிடுவதென்றும், கஷ்ட நிவாரணக்குழு என்ற பெயருடன் ஒரு குழுவை அமைப்பதென்றும் முடிவு செய்தோம். இந்தக் குழுவானது காங்கிரஸ்காரர்களை மட்டும் உட்கொண்டில்லாமல் எல்லாக் கட்சிக்காரர்களையும் கொண்டதாக இருக்கவேண்டுமென்று நாங்கள் நிச்சயித்தோம். ஏதாவது விபத்து வந்த காலத்தில் நாங்கள் இவ்விதமாகவே எப்போதும் வேலைபுரிந்து வந்திருந்தோம். இதனால் இந்த முறையும் அப்படியே செய்யவேண்டும். ஆனால் இது எவ்வளவு பெரிய வேலையாக வளருமென்பது இன்னும் தெரியவில்லை. இதுவரையில் சேதத்தைப் பற்றி முழு விவரம் கிடைக்கவில்லை. கவர்னரும் ஒரு பொதுக்கூட்டத்தை நடத்த யோசித்தார். அக் காலத்தில் ஒரு மந்திரியாக இருந்து வந்த மிஸ்டர் ஸையத் அப்துல் அஜீஜ் மருத்துவ சாலைக்கு வந்து என்னைச் சந்தித்தார். தனியாக

ஒரு கோரிக்கை வெளியிடாமல் அரசாங்கத்தோடு சேர்ந்து வேலை புரிவதுதான் நன்றென அவர் கூறினர். ஷபீ தாவூத் சாஹபும் வந்து என்னைச் சந்தித்தார். அவருடைய அபிப்பிராயமும் இது வாகவே இருந்தது. கோரிக்கையால் வரும் பணத்தைத் தவிர அரசாங்கமும் பணம் செலவிடுமென்றும், சத்தியாக்கிரகப் போரால் காங்கிரஸ் அமைப்புச் சின்ன பின்னமாகிவிட்டதாலும் மேலும் தொண்டு புரிபவர்களில் பலர் இன்னும் சிறையிலிருப்ப தாலும், எங்களுடைய கோரிக்கையால் நிறையப் பணம் கிடைக்கு மென்று எதிர்பார்க்க முடியாதென்றும் அவர் கூறினர். இந்த விஷயத்தில் அரசாங்கமானது எது செய்தாலும் அதனால் எங்க ளுக்கு யாதொரு ஆட்சேபனையும் உண்டாகாது என்றும், அர சாங்கத்திற்குப் பணம் கொடுக்க விரும்பாமல் அரசாங்கத்தோடு தொடர்பில்லாத கழகம் ஒன்று தனிப்பட வேலை செய்யவேண்டு வென்று நினைப்பவர்களும் இருப்பார்கள் என்றும், மேலும் விபத்து வந்த சமயங்களில் நாங்கள் இப்படித்தான் வேலை செய்து வந்திருக்கிறோமென்றும், இப்படிச் செய்வதால் பொது மக்களுக்கும் எங்களிடம் நம்பிக்கை யிருக்கும் என்றும், அரசாங் கத்துடன் நாங்கள் போட்டி போடமாட்டோம் என்றும், மக்கள் எங்களுக்கு அளிப்பதை நாங்கள் மிகவும் நல்ல வழியில் செலவு செய்துவிட்டுப் பேசாமல் இருந்துவிடுவோம் என்றும், மேலும் அரசாங்கத்தார் எங்களைக் கொண்டு ஏதாவது வேலையைச் செய்ய விரும்பினல் அதைச் செய்வதற்கும் தயங்கமாட்டோம் என்றும் நான் அவர்கள் இருவரிடமும் கூறி அனுப்பிவிட்டேன். இவ்வண்ணமாகக் கூறிவிட்டு நான் என் நண்பர்கள் சிலரிடம் நடந்ததைக் கூறியதும் அவர்களும் என்னுடைய கருத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

ஒரு நாள் ஒரு சிறிய சபை கூட்டப்பட்டு "பீகார் சென்ட்ரல் ரிலீப் கமிட்டி" என்ற பெயர் கொண்ட கழகம் ஒன்று அமைக்கப் பட்டது. நான் அதன் தலைவனுக்கப்பட்டேன். அதன் பெயரில் நான் ஒரு விண்ணப்பத்தை வெளியிட்டேன். அதற்குப் பிறகு அரசாங்கத்தாரும் தம் பொதுக் கூட்டத்தை நடத்தினர்கள். அதில் நானும் கலந்து கொண்டேன். அவர்களும் அப்பீல் விடுத்தார்கள். நான் செய்த விண்ணப்பத்தின் பயனாக நாலா பக்கத்திலிருந்து பணமும் சாமான்களும் வந்து குவியத் தொடங் கின. பூகம்பத்தால் உண்டான நாசத்தைப் பற்றி விவரங்கள் பத்திரிகைகளில் வெளிவரத் தொடங்கின. அவற்றைப் படிக்கப் படிக்க நம் நாட்டிலும் வெளிநாட்டிலும் பீகாரின்மீது மிக்க அனு

தாபம் பிறந்துவிட்டது. பண்டித ஜவஹர்லால் பட்ளு வந்து சேர்ந்தார். மற்ற எல்லா இடங்களையும்விட மிக்க சேதமடைந்திருந்த திர்ஹுத்துக்கும் முங்கேருக்கும் அவர் சென்று நிலைமையைத் தம் கண்ணுலேயே பார்த்தார். முங்கேரில் விழுந்து கிடந்த வீடுகளின் மண்ணையும் கல்லையும் தாமே தோண்டிப் பிணங்களை எடுப்பதற்கு உதவியும் புரிந்தார். இவ்விதமாக அவர் தாமே செய்து காண்பித்து மற்றவர்களுக்கு வழிகாட்டினர். வங்காளத்திலிருந்து "சங்கட் திராண் சமிதி"யின் சார்பில் ஸ்ரீ சதீஷ்சந்திரர் பணமும் தளவாடங்களும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். நான் காந்திஜீக்கும் தந்தி மூலமாக நிலையையைத் தெரிவித்தேன். அந்நாட்களில் அவர், நெடுந்தொலைவில், சென்னை மாகாணத்தில் எங்கோ ஹரிஜனத் தொண்டிற்காகச் சுற்றிக் கொண்டிருந்தார். தந்தி கிடைத்ததுமே அவர் ஓர் அப்பீலை வெளியிட்டார். தாமும் பணம் திரட்டத் தொடங்கிவிட்டார். ரிலீப் கமிட்டியின் சார்பில் ஜில்லாக்களிலும் தலைமைச் செயலாளர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்களின் கீழ் ஏராளமாகத் தொண்டர்கள் வேலை செய்யத் தொடங்கினுர்கள். இந்தியாவின் மாகாணங்கள் எல்லாவற்றிலிருந்தும் பணம் வரத்தொடங்கியது. மேலும், துணி, அரிசி, மற்ற உணவுப் பொருள்கள், பாத்திரங்கள், கம்பளி, மருந்து முதலியனவும் வந்து சேர்ந்தன. இவை எல்லாமுமே வேண்டி இருந்தன. பட்ளுவிலிருந்து நாங்கள் தேவைப்பட்டபடி எல்லாச் சாமான்களையும் பூகம்பத்தால் பீடிக்கப்பட்ட ஜில்லாக்களுக்கு அனுப்பி வந்தோம். இரண்டு மூன்று நாட்களுக்குள்ளாக வேலை மிகவும் அதிகரித்துவிட்டது. எங்களுடைய தோழர்கள் பலர் இன்னும் சிறையிலிருந்தார்கள். அரசாங்கமானது திர்ஹுத், பாகல்பூர், பட்ளு ஆகிய கமிஷனர்களின் எல்லைக்குள் வசிப்பவர்களையெல்லாம் நாளடைவில் விடுதலை செய்து விட்டது. அவர்களும் வந்து வேலையில் சேர்ந்து கொண்டார்கள். பண்டித் ஜவஹர்லால்ஜீயானவர் பட்ளுவில் ஒருநாள் தங்கியிருந்து, தலைமை அலுவலகத்தின் அமைப்பைப் பற்றியும் ஆலோசனைகூறி உதவி புரிந்தார். அவர் இந்த மாகாணத்திற்கு இரண்டு முறை வந்து உயிரும் உள்ளமும் லயித்து வேலையில் ஈடுபட்டுத் துணை புரிந்தார். ஆனல் இதற்குப் பின் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டுவிட்டார் என்பது துக்கத்திற்கு உரிய விஷயம். இதனுல் அவரைத் தலைவராகக் கொண்டு நிறையப் பயனடைய எங்களுக்குக் கொடுத்து வைக்கவில்லை. சர்தார் வல்லப்பாயீ படேலும்

சிறையில் இருந்தார். குஜராத்தில் கொடிய வெள்ளம் வந்த போது அவர் மக்களுக்கு உதவி புரிவதற்கு ஏற்பாடுகள் செய்வதில் நிறைய அனுபவம் பெற்றிருந்தார். அதன் பயனும் எங்களுக்குக் கிடைக்கவில்லே. ஆயினும் மகாத்மாஜீயும், சேட் ஜம்நாலால் பஜாஜும், சர்தாரோடு வேலே புரிந்தவரான ஸ்ரீ லக்ஷ்மீதாஸ் புருஷோத்தம் முதலானோரும் வந்து சேர்ந்தார்கள். ஐக்கிய மாகாணத்திலிருந்து ஆசார்யா நரேந்திர தேவும் ஸ்ரீ ஸ்ரீ பிரகாஸமும் வந்தார்கள். வெளியிலிருந்து வந்த சகோதர சகோதரிகளின் பெயர்கள் எல்லாவற்றையும் இங்கே எழுதி முடியாது. எவருடைய பெயராவது விட்டுப்போனல் நாங்கள் வெட்கித் தலேகுனிய வேண்டி வரும். ஆயினும் சிலருடைய பெயர்களேக் குறிப்பிடாமல் விட்டால் அது மிகவும் நன்றி கெட்டதாகும். அவர்களில் ஸ்ரீ ஜே. சீ. குமரப்பா ஒருவராவர். அவர் முன்னுளில் கணக்குத் தணிக்கை வேலே புரிந்து கொண்டிருந்தார். இங்கிலாந்தில் இதற்காகப் படித்துப் பட்டம் பெற்றுத் திரும்பி வந்து பெரிய பெரிய கம்பெனிகளின் கணக்கைத் தணிக்கை செய்து கொண்டிருந்தார். ஆனல் அவர் அந்த வேலேயைப் பிறகு விட்டுவிட்டு குஜராத் வித்யா பீடத்தில் வேலே புரிந்து வந்தார். காங்கிரஸானது ஒரு குழுவை அமைத்து அதனிடத்தில் இந்தியாவின்மேல் சுமத்தப்பட்டுள்ள கடன்களேப் பற்றி ஆராயும் பொறுப்பை விட்டபோது இவரும் அக்குழுவின் உறுப்பினர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டார். எங்களுடைய கணக்கு வழக்கை பார்த்துக் கொள்வதற்காக காந்திஜீ அவரை அனுப்பி வைத்தார். அவர் மட்டும் வந்தில்லாவிட்டால், அவர் எங்களுடைய வரவு செலவுக் கணக்கை வைத்துக் கொள்வதற்கு ஒரு சிறந்த முறையை அமைத்துக் கொடுத்திராவிட்டால் நாங்கள் மிகவும் கஷ்டப்பட்டுப் போயிருப்போம் என்று கூறுவது மிகையாகாது. எங்களிடம் ஏறக்குறைய 2000 பேருக்கு மேல் வேலே செய்து கொண்டிருந்தார்கள். வேலேயும் பல்வேறு வகைப் பட்டிருந்தது. இத்தனேக்கும் தனித்தனியாகக் கணக்கு வைத்தாக வேண்டும். மேலும் இந்த வேலே நெடுந்தொலேவு வரையில் பரந்து கிடந்ததால் இதைச் சமாளிப்பது மிகவும் கடினமாயிருந்தது. ஆயினும் அவர் அமைத்துக் கொடுத்த முறையால் கணக்கு வேலே முழுவதும் சரியாக நடந்தேறியது.

ஆரம்பத்திலேயே நான் பீகார் பாங்கியில் கணக்கு வைத்து வருவதற்காக குழுவின் பொக்கிஷதாராக நியமிக்கப்பட்டிருந்தேன். பணம் குழுவினிடமும் நேரே பாங்கியினிடமும் வரும்.

ஒரு நாளைக்கு 200–300 மணியார்டர்கள் வரும். நூற்றுக்கணக்கான பார்சல்களும் நாள்தோறும் வரும். அவற்றில் எல்லாவிதப் பண்டங்களும் இருக்கும். எல்லாவற்றிற்கும் தனித் தனி கணக்கு வைத்து வந்தோம். பிறகு அவற்றை அந்தந்த இடங்களுக்கு அனுப்பி, அங்குச் செலவாகும் பணத்திற்கும் பண்டங்களுக்கும் அந்தந்த இடத்தின் அலுவலகத்தின் மேற்பார்வையில் கணக்கு வைக்கப்பட்டு வந்தது. சில நாட்களுக்குப்பின் நாங்கள் 400 பக்கங்கள் கொண்ட அறிக்கை ஒன்றை அச்சிட்டு அதில் பணமும் பண்டங்களும் கொடுத்தவர்களின் பெயர்களை வெளியிட்டோம். பொதுஜன சேவையின் பணம் காசு விஷயத்தில் மிகவும் நேர்மையாக இருப்பது இன்றியமையாததாகும். வேலை செய்பவர்கள் பொதுமக்கள் கொடுத்த பணத்தை சரியாகவும் தகுந்த வழியிலும் செலவு செய்தாலும்கூட, கணக்கைச் சரியாக வைத்திராவிட்டால் கெட்ட பெயர் வந்துவிடும். பெரும்பாலும் கெட்ட பெயர் காரணமில்லாமல் உண்டாகும். ஏனெனில் செலவு சரியாகவே செய்யப்பட்டு வந்தாலும் கணக்கு வைத்துக் கொள்ளத் தெரியாததாலோ அல்லது வேலை செய்பவர்களின் சோம்பேறித் தனத்தாலோ கணக்குச் சரியாக வைக்கப்படாததால் கெட்ட பெயர் உண்டாகிறது. நாங்கள் எதிர்பார்த்ததற்கு மேலாக மக்களிடையில் உற்சாகம் உண்டாகி பணம் வந்து பொழியத் தொடங்கியதும் மக்கள் எங்களிடம் கொண்டிருந்த நம்பிக்கை பொய்யாகி விடுமோ என்ற கவலை எனக்கு வந்துவிட்டது. ஆனால் கடவுளுடைய கிருபையாலும், முக்கியமாகக் குமாரப்பாவின் திறத்தாலும் அவருக்குக் கீழ் வேலை பார்த்து வந்த நூற்றுக்கணக்கான தொண்டர்களுடைய திறத்தாலும் ஊக்கத்தாலும் வேலையைச் சிறந்த முறையில் நிறைவேற்ற முடிந்தது. மக்கள் கொடுத்த பணமும் சாமான்களும் மிகவும் நன்ருகப் பயன்படுத்தப்பட்டனவென்று நாங்கள் சொல்லிக் கொள்ள முடியும். எப்படி நன்ருகப் பயன்படுத்தப்பட வேண்டுமோ அப்படியே உண்மையாகப் பயன்படுத்தப்பட்டன.

# 104. பீகார் "சென்ட்ரல் ரிலீப் கமிட்டி"யின் தொண்டுகள்

நான் சிறையிலிருந்து விடுதலையான பிறகு, மருத்துவ சாலை யிலேயே 10 நாட்கள் வரையில் தங்கியிருந்தேன். ஆனால் அதை விட்டு வெளியே போய் வந்து கொண்டுமிருந்தேன். நாளுக்கு நாள் வலிமை அதிகமாயிற்று. வேலை நெருக்கடி அதிகமாயிருந்த தால் 'காலையில் நான்கு மணிக்கே எழுந்து விடுவேன். கட்டிலி லேயே இருந்தபடி எழுத்து வேலையைத் தொடங்கிவிடுவேன். கடிதங்கள் ஏராளமாக வந்து கொண்டிருந்தன. அவற்றிற்கு விடை அளித்தல், அவற்றில் வந்திருந்த செய்திகளின் முக்கிய மான பகுதிகளைப் புதிய அப்பீல்களில் சேர்த்து மக்களுக்கு இங்குள்ள கொடியநிலைமையை அறிக்கை செய்தல், எங்களுடைய நிலையங்களிலிருந்து வந்திருந்த கடிதங்களுக்கு விடையளித்தல் ஆகிய இவையெல்லாம் சாமான்யமான வேலைகள் அல்ல. மிஸ்டர் அஜீஜ் என்பவர் தம்முடைய சிறிய வீடொன்றை அலுவலகத்திற் காகக் கொடுத்திருந்தார். ஆனால் விரைவிலேயே வேலை மிகவும் பெருகிவிட்டதால் அந்த இடம் போதவில்லை. அதன்மேல் நாங்கள் வேறொரு பெரிய வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொண்டோம். அலுவலக வேலையைப் பல பிரிவுகளாக வகுத்து ஒவ்வொன்றையும் ஒவ்வொரு முக்கிய செயலாளர் கையில் ஒப்படைத்தோம். ஆரம்பத்தில் ஸ்ரீ ஜயப்பிரகாஷ்ஜீ தாம் அலுவ லகத்தைக் கவனித்து வந்தார். பிறகு அனுக்கிரக பாபூ வந்துவிட்டார். வேலை நிறையப் பெருகிவிட்டாலும், அவர் அதைச் சமாளித்து வந்தார். நாங்கள் அமைத்த குழுவில், எங்களுக்கு உதவிபுரிந்த எல்லாக் கட்சிகளையும் மாகாணங்களை யும் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொண்டோம்.

சில நாட்களுக்குப் பிறகு காந்திஜீ வந்தார். அவர் வரு வதற்கு முன்னமே நான் எல்லாவற்றையும்விட அதிகமாகச் சேத மடைந்த இடங்களுக்குச் சென்று பார்த்து வரலாமென்று நினைத் தேன். பூகம்பம் நடந்து ஒரு மாதத்திற்குப் பிறகு இது நடந்தது. அதுவரையில் நான் அலுவலகத்திலிருந்தபடியே வேலை புரிந்து வந்தேன். இதற்கு என் பலவீனம் ஒரு காரணம், வேலை நெருக்கடி மற்றொரு காரணம். இப்பொழுது துணைக்கு ஆட்கள் வந்துவிட்டார்கள். வேலையையும் பகிர்ந்து கொடுத்தாகி

விட்டது. அவர்களும் அதைச் சமாளித்து வந்தார்கள். ஆதலால் நான் வெளிக் கிளம்பினேன். நான் எங்கெங்குச் சென்றேனே ஆங்காங்கு உள்ள நிலைமையைக் கண்டறிந்து அறிக்கை அனுப்பி வந்தேன். அவை பின்னால் புத்தக ரூபமாக வெளியிடப்பட்டன. எங்களுடைய தொண்டர்களுக்கும், கொடையாளிகளுக்கும், எங்களிடம் பரிவு காட்டியவர்களுக்கும் அவ்வப்போது நடப்பதைப்பற்றித் தகவல் கொடுப்பதற்காக நாங்கள் ஒரு 'புல்லடினை' (செய்தி திரட்டை) வெளியிடத் தொடங்கினோம். அது சில நாட்கள் வரையில் முறைப்படி வெளிவந்து கொண்டிருந்தது. பிறகு தேவையில்லையென்று நினைத்து நிறுத்தப்பட்டுவிட்டது.

எங்கள் குழுவுக்குப் பணமும் சாமான்களும் அனுப்பியவர்களும் அல்லது தாமே வந்து அதில் தொண்டு புரிந்தவர்களும் நீங்கலாகப் பல்வேறு கழகங்களும் தனியாக வேலை புரிந்து வந்தன. இவை எல்லாம் எங்கள் குழுவுடன் ஒத்துழைத்து வந்தன. எங்களுடைய வேலைக்குள் போட்டி வராமலிருக்கும்படியும், ஒரே வேலையை இரண்டு கழகங்கள் செய்யாமலிருக்கும்படியும் பார்த்து வந்தோம். இதனால் பொதுப்பணம்—இது எங்கள் குழுவிடம் வந்ததாயினும் சரி, வேறு கழகத்திடம் வந்ததாயினும் சரி—மிகவும் நன்றாகப் பயன்பட்டு வந்தது. அப்படிப்பட்டக் கழகங்கள் நிறைய இருந்தன. அவற்றின் முழு விவரங்களை நாங்கள் வெளியிட்ட அறிக்கையில் காணலாம். அவை எல்லாவற்றிற்கும் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, இங்குச் சில முக்கியமானவற்றின் பெயரை மட்டும் கொடுக்கின்றேன். அவற்றில் மார்வாடீ ரிலீப் சொசையிடி, மேமன் ரிலீப் சொசையிடி, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆகிய மூன்றும் முக்கியமானவையாகும். பாபா குருதத்த சிங்ஜீயின் கோஷ்டியாரும் சிறந்த தொண்டு புரிந்தார்கள். செஞ்சிலுவைச் சங்கமும் இந்திய மெடிகல் அசோசியேஷனும்கூட உதவி புரிந்தன. ஸ்ரீ சதீஷ் சந்திரதாஸ் குப்தாவின் மூலமாக வங்காள 'சங்கட் திராண் சமிதி' மருந்து, வாகனங்கள் (வண்டிகளும் படகுகளும்) முதலியன கொடுத்துப் பேருதவி புரிந்தது.

ஒரு புறத்தில் அரசாங்கத்தாரின் அப்பீலும் மற்றொரு புறத்தில் பீகார் சென்ட்ரல் ரிலீப் கமிட்டியின் அப்பீலுமாக இரண்டு இருந்தன. சில நாட்கள் வரையில் பொது மக்களுக்கும் கொடையாளிகளுக்கும் நிறைய உற்சாகமிருந்ததால் இரண்டு நிதிகளும் ஏறக்குறைய சமமாகப் பெருகி வந்தன. நாங்களும் தினந்

தோறும் வருவாயின் விவரங்களை வெளியிட்டு வந்தோம். அரசாங்கமும் அப்படியே செய்து வந்தது. காந்திஜி வந்து சேர்ந்ததும், மேலும் ஜம்நாலால் பஜாஜ் தம்முடைய தோழர்களுடன் பீகாரில் அமர்ந்துவிட்டதும் என் தலைமேலிருந்த சுமை குறைந்து விட்டது. மக்களுக்குத் தேவைப்பட்ட உதவியைக் கொண்டு போய்ச் சேர்ப்பது மிகவும் கடினமாயிருந்தது. முதலாவதாக ரயில் பாதை உடைந்து விட்டது. சாமான்கள் ரயிலில் செல்ல முடியவில்லை. சாலைகளின் பாலங்களும் உடைந்து விட்டன. இதனால் மாட்டு வண்டிகளிலும் மோட்டார் லாரிகளிலும்கூடச் சாமான்களை ஏற்றிச் செல்வதும் எளிதாக இல்லை. நாங்கள் ரிலீப் கமிட்டிக்காக எத்தனையோ மோட்டார் லாரிகள் விலைக்கு வாங்க வேண்டி வந்தது. மெல்ல மெல்லச் சாலைகள் சிறிது செப்பனிடப்பட்டன. ஆனால் பாலங்கள் இல்லை. ஆயினும் பெரிய ஆறுகள் இல்லாத இடங்களில் பாலங்களின் பக்கத்தில் வேறு பாதைகள் உண்டாகிவிட்டன. நதிகளில் படகுகளையும் உபயோகித்து வந்தோம். ரிலீப் கமிட்டியின் குடிசைகள் எல்லா இடங்களிலும் அமைக்கப் பெற்றன. செயலாளர்களைத் திரட்டுவதில் ஸ்ரீ கிருபாளானியும், ஸ்ரீ ஹார்டீகரும், ஸ்ரீமதி சோபியா சோம்ஜீயும் பெரும் தொண்டாற்றினார்கள். வேலை புரிபவர்களைக் கண்காணிப்பதும் எளிதான வேலையாக இல்லை. செயலாளர்களுக்கு நாங்கள் நூற்றுக்கணக்கான சைக்கிள்கள் அளிக்க வேண்டி வந்தது. அவர்கள் இருப்பதற்காக குடிசைகளைக் கட்ட வேண்டி வந்தது. அவர்களுக்கு உணவுக்கும் ஏற்பாடு செய்ய வேண்டியிருந்தது. ஆயினும் எங்கள் செயலாளர்களுக்கு உணவுக்காக நாங்கள் ஒரு நாளுக்கு இரண்டணுவுக்கு மேல் கொடுக்கவில்லையென்பதைக் கேட்டால் ஆச்சரியமாக இருக்கும். அவர்கள் அதைக் கொண்டு என்ன கிடைக்குமோ அதை உண்டு வேலை புரிந்து வந்தார்கள். அதுவே அவர்களுக்குப் போதியதாயிருந்தது. மிகவும் சேதமடைந்த ஜில்லாக்களுக்கு மகாத்மாஜீயும் சென்றார். அப்படி அவர் செல்வது இரண்டு வகையில் அவசியமாயிருந்தது. அவர் சேதத்தைத் தாமே பார்வையிட்டு, எத்தனையோ வகையில் உண்டாகிய கஷ்டங்களில் எதை நாங்கள் நீக்க முயற்சி செய்ய வேண்டுமென்று நிச்சயிக்கத் துணைபுரிய வேண்டுமென்பது ஒரு நோக்கம். மேலும், அவர் செல்வதினால் மக்களுக்குத் தைரியம் பெருகுமென்பதும் அவர்களுக்கு ஆறுதல் உண்டாகுமென்பதும் மற்றொரு நோக்கம். இதனால் மகாத்மாஜீ எல்லா இடங்களுக்கும்

வரவேண்டுமென்று எல்லாரும் வற்புறுத்தினர்கள். ஆனல் இது முடியாத காரியம். ஆயினும் அவர் பல இடங்களுக்குச் சென்றார். பூகம்பம் விளைவித்துவிட்ட கொடிய கட்சிகளை, இதற்கு முன் கண்டிராத காட்சிகளை, நெஞ்சத்தைப் பிளக்கும் காட்சிகளை அவர் பார்த்தார்.

எங்கள்முன் இரண்டு வகையான கேள்விகள் எழுந்தன. பூகம்பத்தினால் மக்களின் வீடுகள் விழுந்துவிட்டன. வீடுகளில் இருந்த பொருள்கள் எல்லாம் நாசமாகிவிட்டன. உணவுக்கு அரிசி இல்லை, உடுக்கத் துணி இல்லை. அரிசி கிடைத்தாலும் அதைச் சமைக்கப் பாத்திரம் இல்லை. இருக்க வீடில்லை. கிணறுகள் பாழாகிவிட்டன. குளங்கள் மணலால் நிறைந்து போயின. இதனால் குடிக்கத் தண்ணீர் கிடையாது. இந்தக் குறைகள் எல்லாம் உடனே நிறைவேற்ற வேண்டியது அவசியமாயிருந்தது. இதனால் மகாத்மாஜீ வருவதற்கு முன்னமே எங்களால் இயன்ற வரையில் உணவு, உடை, பாத்திரம் முதலியவற்றை மக்களுக்கு வழங்கினோம். அதற்கும் முன்னம், எங்களால் இயன்ற வரையில், விழுந்து கிடந்த வீடுகளில் புதைந்து கிடந்தவர்களை வெளியே எடுப்பதற்காக வீடுகளின் கல் மண் முதலிய கூளத்தை அப்புறப்படுத்த முயற்சி செய்தோம். இந்த வேலையில் 'ரிலீப் கமிட்டி' அதிகமாக உதவி புரிய முடியவில்லை. ஏனெனில் ரிலீப் கமிட்டி அமைக்கப்பெற்று, அதனுடைய செயலாளர்கள் அந்த இடங்களுக்குப் போய்ச் சேருவதற்குள் கூளத்திற்கடியில் புதைந்து கிடந்தவர்கள் எடுபட்டு விட்டார்கள். அல்லது இறந்து விட்டார்கள். ஆனல் பூகம்பத்தில் தப்பியவர்களுக்கு அப்போதைக்கு வேண்டிய உதவியை அளிப்பதில் ரிலீப் கமிட்டி முற்றிலும் துணை புரிந்தது. மகாத்மாஜீ வந்த சமயத்தில் இந்த வேலையும், முற்றிலும் தீராவிட்டாலும் பெரும்பாலும் முடிந்து விட்டது. நிலைவரமாகச் செய்யவேண்டிய வேலைகள்தாம் எஞ்சி நின்றன. இவற்றுள் இரண்டு மூன்று விதமான வேலைகள் முக்கியமானவை. அவற்றில் எதை நாங்கள் செய்வதென்பதை நிச்சயிக்க வேண்டி யிருந்தது.

லக்ஷக்கணக்கான வீடுகள் விழுந்துவிட்டன. அவற்றைத் திரும்பிக் கட்டுவதற்கு உதவியளிப்பது என்பது மாபெரும் வேலை. இதே போல லக்ஷக்கணக்கான கிணறுகள் மண்ணடித்துப் போயின. கிணறுகளில் தண்ணீர் இல்லாத பல கிராமங்களில் எங்குக் கிணறு இருந்தது என்று கூட அறிய முடியாதபடி அவை மண்ணடித்துப் போய்விட்டன. பல இடங்களில் கிணறு

இருந்ததா என்றுகூடச் சந்தேகம் உண்டாகிவிடும். பல இடங்களில் சிறிய ஆறுகள்கூட முற்றிலும் மணல் மேடாகிவிட்டன. தண்ணீரில்லாக் கஷ்டம்தான் மிகக் கொடியதாக யிருந்தது. அந்தக் கஷ்டம் ஏதோ ஒரு கிராமத்திலோ அல்லது ஒரு வட்டாரத்திலோ மட்டும் என்றில்லை. கங்கைக்கு வடக்கில் எல்லா ஜில்லாக்களிலுமே நூற்றுக்கணக்கான கல்நீளமும் 40–50 கல் அகலமும் உள்ள பிரதேசம் முழுவதிலுமே, நிலைமை ஏறக்குறைய ஒரே மாதிரியாக யிருந்தது. தண்ணீருக்கு எப்படி ஏற்பாடு செய்வதென்பது மிகவும் பெரிய பாடாக இருந்தது. எங்களுக்கு மிகவும் கவலை கொடுத்து வந்த மூன்றுவது விஷயம் என்னவென்றால் வயல்களில் மணல் நிறைந்துவிட்டதுதான். வயல்கள் வெடித்து ஊற்றுக்கள் பீரிட்டுக் கொண்டு கிளம்பின. அவை தண்ணீரோடு மணலையும் கொண்டு வந்து சேர்த்தன. வயல்களெல்லாம் மணலால் நிறைந்துவிட்டன. நீர் வற்றியபின் எல்லா இடமும் மணல் மயமான பாலைவனமாகி விட்டதென்பது தெரிய வந்தது. இந்த மணலை அப்படியே விட்டுவிட்டால் அங்குப் பிறகு எதுவுமே விளையாதென்ற அச்சம் உண்டாகியது. இதனால் இந்த மணலை எப்படியாவது எடுத்துப்போட்டு நிலத்தைச் சுத்தம் செய்ய முடியுமா இல்லையா என்று யோசிக்க வேண்டியிருந்தது. சிற்சில இடங்களில் மணல் ஐந்தாறு அடி ஆழம் இருப்பதை நாங்களே பார்த்தோம். ஓரிடத்தில் சிறிய நிலமொன்றிலிருந்த மணலை எடுக்க முயன்று பார்த்ததில் அதற்குப் பிடித்த அதிகச் செலவிலிருந்து இது ஆகாத காரியமென்பது தெளிவாயிற்று.

கரும்பைப்பற்றி மற்றொரு கஷ்டம் அச்சமயத்தில் எழுந்தது. வட பீகாரில் சர்க்கரை ஆலைகள் நிறைய இருக்கின்றன. அங்குள்ள மக்கள் கரும்பைப் பயிர்செய்து அதை அந்த ஆலைகளுக்கு விற்று ஜீவனம் செய்து வருகிறார்கள். பூகம்பமானது அநேகமாக எல்லா ஆலைகளையுமே பாழாக்கிவிட்டது. அவை நின்றுவிட்டன. கோடிக் கணக்கான கரும்புகள் வயல்களிலே நின்றன. அவையும் பாழாகத் தொடங்கின. பழைய நாட்டுப்புறத்து ஆலைகளை மறுபடியும் பயன்படுத்தலாமென்று நினைத்தோம். அவற்றைக் கொண்டு வெல்லம் காய்ச்சினால் குடியானவர்களுக்கு ஏதாவது சிறிதாவது மிஞ்சுமென்று நினைத்தோம். அரசாங்கத்திற்கும் இந்த யோசனை பிடித்திருந்தது. இரண்டு பக்கத்திலிருந்தும் குடியானவர்களுக்கு நாட்டு ஆலைகள் வழங்கப்பட்டன. ஆனால் அவ்வித ஆலைகள் கிடைப்பது அரிதாயிருந்தது. எங்களுக்குத் தேவையான அவ்வளவு பெரிய எண்ணிக்கை தயாராக இல்லை.

அவற்றை வாங்குபவர்கள் இல்லாததால் அவை செய்யப்படுவதே நின்றுவிட்டது. அப்படியும்கூட நாங்களும் அரசாங்கமும் எத்தனையோ ஆயிரம் ஆலைகளை வழங்கினோம். இவ்வண்ணமாக சிறிதளவு கரும்பு பயன்படுத்தப்பட்டது. நல்ல வேளையாக சில நாட்களுக்குள் பல யந்திர ஆலைகள் பழுது பார்க்கப்பட்டு மறுபடியும் தம் வேலையைத் தொடங்கிவிட்டன. ஆகையால் எவ்வளவு நஷ்டம் ஆயிருந்திருக்குமோ அவ்வளவு ஆகவில்லை.

இவையன்றி இன்னும் பல சில்லரை விஷயங்களும் இருந்தன. அவற்றை யெல்லாம் விசாரித்து அப்போதைக்கு வேண்டிய உதவியைச் செய்துவிட்டு மேலே என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி முடிவு செய்ய வேண்டியிருந்தது. ஆதலால் கமிட்டியின் கூட்டம் ஒன்று பட்னுவில் நடத்தப்பட்டது. அதற்கு எல்லா மாகாணங்களிலிருந்தும் அதன் உறுப்பினர்களாயிருந்த முக்கிய மனிதர்கள் வந்தார்கள். அரசாங்கம் செய்து வரும் தொண்டில் தாமும் எல்லா வகையிலும் ஒத்துழைக்கத் தயாராயிருப்பதாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். தன்னுடைய வேலைக்காக இக்கமிட்டி ஒரு நிர்வாகக் குழுவை அமைத்தது. அதற்கு வேண்டிய விதிகளும் அமைக்கப்பட்டன. இவ்வளவு பெரிய கமிட்டி அடிக்கடி கூடுவது கஷ்டமாயிருந்தது. இதனால் நிர்வாகக் குழுவின் மேல்தான் எல்லாப் பொறுப்பும் விழுந்தது. அது அடிக்கடி கூடி எல்லா விஷயங்களைப் பற்றியும் முடிவு செய்து வந்தது. மணலை அகற்றும் வேலை நம்மால் இயலாது என்றும் இதில் நாம் தலையிடக்கூடாது என்றும் மகாத்மாஜீ நினைத்தார். நாங்களும் அப்படியே நினைத்தோம். வீடுகளைக் கட்டுவதற்கு நாம் உதவி செய்யலாமென்றும், ஆயினும் அதைவிடத் தண்ணீருக்கு ஏற்பாடு செய்வதுதான் மிகவும் அவசியமானதும் உபயோகமானதுமான வேலை என்றும் நினைத்தோம். இதில் தனிப்பட்டோரும் உதவி செய்வதற்கு வாய்ப்பு உண்டு. இதனால் யாருக்கும் பக்ஷபாதம் செய்வதற்கு அதிக இடமிருக்காது என்றும், எங்களுடைய வேலையும் நன்றாக அமையும் என்றும் நினைத்தோம். இதனால், மக்களுக்கும், மாடு கன்றுக்கும் தண்ணீர் வசதியை அளிப்பதற்காக நாங்கள் முதலில் கிணறுகளையும், குளங்களையும் கட்ட முடிவு செய்தோம்.

ஆனால் இந்த வேலையும் மிகப் பெரியதாயிருந்தது. எங்களுடைய பணம் எல்லாவற்றையும் இதில் செலவு செய்தாலும் கூட இதில் ஒரு சிறு பங்கைத்தான் நாங்கள் முடிக்க முடியும். அப்படியும் இதைத்தான் முதலில் கவனிக்க வேண்டியிருந்தது.

மேலும் குழாய்க் கிணறு (டியூப் வெல்) வைப்பதா அல்லது முறையான கிணறுகளை வெட்டுவதா என்ற கேள்வி எழுந்தது. குழாய்க் கிணறுகளை விரைவில் தயார் செய்துவிடலாம். மேலும் இந்த வேலையை குத்தகைக்காரர்களைக் கொண்டு எளிதில் முடித்துவிடலாம். நாங்கள் சில குழாய்க் கிணறுகளை அமைத்துப் பார்த்தோம். ஆனால் இவற்றால் காரியமாகாதென்பதைக் கண்டோம். ஒரு குழாயிலிருந்து ஓர் ஆள் ஒரு குடம் நீரை நிரப்புவதற்குள் சாதாரண கிணற்றிலிருந்து நாலைந்து பேர் நாலைந்து குடங்களை நிரப்பிவிடலாம். மேலும் இவற்றைப் பழுது பார்ப்பதும் பெரும்பாடாகும். இவை கெட்டுப் போனால் கிராமத்து மக்கள் இவற்றை எப்படிச் செப்பனிட முடியும் என்ற கேள்வி எழுந்தது. இதற்காக நாங்கள் நிறையச் சாமான்களை வைத்திருக்க வேண்டிவரும். மேலும் சிறிது காலத்திற்குப்பின் அவை பயனில்லாமல் போய்விடும். மேலும், சில இடங்களில் குழாய்க் கிணறு போடுவதும் கிணறு வெட்டுவதும் ஒரே செலவு பிடித்தது என்பதையும் கண்டோம். இதனால் நாங்கள் சாதாரண கிணறுகளையே வெட்டுவதென்று முடிவு செய்தோம். எல்லா இடங்களிலும் செயலாளர்கள் கிராமத்து மக்களின் உதவியைக் கொண்டு கிணறுகளை வெட்டத் தொடங்கினார்கள். மழை காலத்திற்கு முன் எவ்வளவு கேணிகள் கட்ட முடியுமோ அவ்வளவையும் கட்டி முடித்துவிட விரும்பினோம். இது மட்டுமன்றி பழைய கிணறுகளையும் செப்பனிட வேண்டி யிருந்தது. அவற்றிலிருந்து மணலை எடுத்துச் சுத்தம் செய்துவிட்டால் அதுவே போதுமாகிவிடும். இந்த வேலைகளுக்கெல்லாம் கிராமத்து மக்களே உழைத்து, உதவி அளிக்க முடியும். அதே போலப் பழைய குளங்களைச் சுத்தம் செய்தால் கால்நடைக்குத் தண்ணீர் ஏற்பாடு செய்துவிடலாம். நாங்கள் பல இடங்களில் புதிய கிணறுகளை வெட்டினோம். இன்னும் பல இடங்களில் பழைய கேணிகளைச் செப்பனிட்டோம். பல குளங்களையும் வெட்டினோம். . அழிந்து போன குளங்களையும் செப்பனிட்டோம். இந்த வேலைகள் எல்லாம் ஏப்பிரலிலிருந்து ஜுலைக்குள்ளாக முடிந்துவிட்டன. அதற்குப்பின் வேறொரு சங்கடம் வந்துவிட்டது. அதில் நாங்கள் ஈடுபட்டுவிட்டோம்.

தண்ணீருக்கு ஏற்பாடு செய்வதென்று நாங்கள் முடிவு செய்தது மிகவும் சரியானது. ஏனெனில் அதனால் ஒரு நிலைவரமான வேலையைச் செய்ய முடிந்தது. ஒரு கிணறு அல்லது குளத்தினால் நிறையப் பேருக்கு நன்மை புரிய முடிந்தது. காந்திஜீயின் நெடிது நோக்கும் ஆற்றலினால் இவ்வளவு நிலைவரமான

வேலை நடக்க முடிந்தது. இல்லாவிட்டால் எங்கள் பணமெல்லாம் வீடுகளைச் செப்பனிடுவதிலோ மணலை எடுப்பதிலோ போடப்பட்டிருக்கும். அப்படிச் செய்தும் இவ்வளவு பயன் கிடைத்திருக்காது. மேலும் பக்ஷபாதக் குற்றச்சாட்டிலிருந்தும்—அது தவறோ சரியோ—எங்கள் கழகம் தப்பியிருக்க முடியாது.

# 105. பூகம்பத்திற்குப் பின் எழுந்த கஷ்டங்கள்

இந்த வேலையில் நாங்கள் ஈடுபட்டிருக்கும்போது மற்றொரு கேள்வி எழுந்தது. எல்லா இடங்களிலும் ஆறுகளும், வாய்க்கால்களும் மண்ணடித்துப்போயின. அதனால் கங்கை, சரயூ, கண்டக் போன்ற நதிகளிலும் மண் நிறைந்து மேடிட்டிருக்குமென்ற ஐயம் உண்டாகியது. நிலத்தின் சமநிலை மேடும் பள்ளமுமாகிவிட்டது. இக்காரணங்களால், மழை காலத்தின் வெள்ளத்தினால் புது விபத்துக்கள் வரக்கூடுமென்ற அச்சம் உண்டாயிற்று. நாங்கள் இதற்காக ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தது. அரசாங்கமும் ஏற்பாடுகள் செய்தது. எங்கெங்கு வெள்ளம் வருமென்று அஞ்சப்பட்டதோ அந்த இடங்களில் எத்தனையோ படகுகளைச் செய்தும் விலைக்கு வாங்கியும் தயாராக வைத்திருக்கவேண்டியிருந்தது.

கூலி வேலை செய்து பிழைத்துவந்த ஏழைகளுக்குப் பூகம்பத்திற்குப் பின் வேலைக்கு குறைவில்லை. ஏதாவதொரு வேலை அவர்களுக்குக் கிடைத்துக்கொண்டே வந்தது. ஆனால் மழைகாலத்தில் அவர்களுக்கு வேலை கிடைக்காதே என்ற அச்சம் இருந்து வந்தது. விபத்து வந்தபோது ஏழைகளுக்கு மூன்று நான்கு நாட்களுக்கு உணவு அளிப்பது நியாயம். ஆனால் வேலை ஒன்றுமில்லாமல் அவர்களுக்குத் தொடர்ந்து சும்மா சோறு போட்டால் அவர்கள் உபயோகமற்றவர்களாகவும் சோம்பேறிகளாகவும் ஆகிவிடுவார்கள். ஆகையால் கூடுமானவரையில் வேலை வாங்கிக் கொள்ளாமல் சோறு போடக்கூடாதென்று ஆரம்பத்திலிருந்தே நாங்கள் ஒரு விதியை அமைத்துக்கொண்டோம். பொது மக்களுக்கு நிறைய கூலியாட்கள் வேண்டியிருந்தது. வேலை செய்யக் கூடியவர்கள் எல்லாரும் தங்களுடைய இடிந்துபோன வீடுகளைச் சுத்தம் செய்து செப்பனிட்டுக் கொண்டிருந்தார்கள். பலர் புதிய

வீடுகளையும் கட்டத் தொடங்கிவிட்டார்கள். வயல் வேலையும் இருந்தது. ரிலீப் கமிட்டி பழுது பார்த்து வந்த கிணறு, குளம் வேலைகளிலும், புதிதாகக் கட்டப்பட்டு வந்த கிணறு, குளம் முதலிய வேலைகளிலும் நிறையக் கூலியாட்கள் வேலை செய்து வந்தார்கள். பல இடங்களில் நாங்கள் கெட்டுப்போன பழைய சாலைகளைச் செப்பனிட்டு வந்தோம். புதிய சாலைகளையும் போட்டு வந்தோம். இவ்விதமாக மாகாண முழுவதிலும் ஆயிரக் கணக்கான கல் தொலைவு உள்ள சாலைகளைப் பழுது பார்த்தோ புதிதாகப் போட்டோ முடித்தோம். நீர் வாய்க்கால்கள் எல்லாம் அடைபட்டுப் போயின. அவற்றை மழை காலத்திற்கு முன் சுத்தம் செய்யாவிட்டால் தண்ணீர் போவதற்கு வழியிருக்காது. மழை காலத்தில் கிராமங்களின் நிலைமை மிகவும் பரிதாபகரமாகி விடும். இதனால் இப்படிப்பட்ட வாய்க்கால்களையும் நாங்கள் சுத்தம் செய்வித்தோம்.

முஜர்பர்பூர் ஜில்லாவில், சீதாமறிக்குப் போகும் வழியில் முர்துவா என்ற புகழ் வாய்ந்த அணைக்கட்டு ஒன்றிருக்கிறது. பூகம்பத்திற்கு முன்னிருந்தே அங்கே நிலைமை மிகவும் மோசமாயிருந்தது. பாக்மதி ஆற்றின் தண்ணீர் எப்போதுமே அங்குத் தேங்கி நிற்கும். நிறைய நெல் விளைந்து வந்த செழிப்பான நிலம் முழுவதும் தண்ணீரில் மூழ்கிவிட்டது. அந்த இடத்தில் இப்போது ஒன்றும் பயிரிட முடியவில்லை. அத் தண்ணீரும் மிகவும் கெட்டிருந்தது. அதனால் அங்கிருந்த பெரிய பெரிய மரங்களெல்லாம் பட்டுப்போயின. பெரிய பெரிய தோப்புக்கள் எல்லாம் காய்ந்து தீய்ந்து கிடப்பதைப் பார்த்தால் வியப்பாயிருக்கும். இதைப் போன்ற காட்சியை நான் கோசிநதிக் கரையிலுள்ள சில கிராமங்களிலும் பார்த்திருக்கிறேன். அங்கும் இப்படித்தான் பெரிய பெரிய மரங்கள் இலை, சருகு ஒன்றுமில்லாமல் தீய்ந்து இருப்பதைப் பார்த்திருக்கிறேன். காந்திஜீ தம் சுற்றுப் பிரயாணத்தின்போது அங்குச் சென்று அங்குள்ள நிலைமையைக் கண்டு மிகவும் விசனமடைந்தார். இதற்கு ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டுமென்று அங்கிருந்த செயலாளர்கள் வற்புறுத்தி வந்தார்கள். அங்கு விசாரித்ததின்பேரில், அங்கு ஒரு வாய்க்கால் முன்காலத்தில் இருந்ததாகவும் அதன் வழியாகத் தண்ணீர் வெளியேறிக்கொண்டிருந்ததாகவும் தெரிய வந்தது. பாக்மதி ஆறானது தன்னுடைய பழைய துறையைவிட்டு விலகிச் சென்று விட்டதால் இந்த வாய்க்கால் அடைபட்டுப் போய்விட்டது. அதனால் தண்ணீர் எங்கும் போக வழியில்லாமல் அங்கேயே

தேங்கி நின்றுவிட்டது. அந்த வாய்க்காலை எப்படியாவது மறுபடியும் திறந்துவிட்டால் நூற்றுக்கணக்கான சதுரக் கல் பரப்பு நிலம் மறுபடியும் பச்சைப் பசேலென்று ஆகிவிடும்.

அரசாங்கம் அதற்கு ஏற்பாடு செய்யத் தயாராயில்லா விட்டால் கமிட்டி மூலமாக இந்த வேலையைச் செய்து முடிப்பதென்று நாங்கள் தீர்மானம் செய்தோம். சுமார் 50 ஆயிரம் ரூபாய் செலவு பிடிக்குமென்று மதிப்பிட்டோம். அரசாங்கமானது வாய்க்காலை வெட்ட ஒத்துக்கொண்டது. இவ்விதமான வாய்க்கால்களை நாங்கள் பல இடங்களில் வெட்டிச் சுத்தம் செய்வித்து மிகவும் கேடுற்றிருந்த நிலத்தை மீண்டும் செழிப்பாக்கினோம். வேறு வேலை செய்ய இயலாத ஏழைப் பெண்களுக்கு சர்க்கா மூலமாக வேலை கொடுத்து வந்தோம். இவ்விதமாகக் கமிட்டியானது காதி, நூல் முதலிய வேலைகளையும் பல இடங்களில் பழக்கத்தில் கொண்டுவந்தது. பிறகு கமிட்டியின் வேலை முடிவுற்றபோது காதி வேலையெல்லாம் பீகார் சர்க்கா சங்கத்தின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது. வீடுகள் நிறையக் கட்ட வேண்டியிருந்தது. வீடுகள் கட்டுவதற்காகச் சாமான்கள் நிறைய வேண்டியிருந்தன. செங்கல், ஓடு, கயிறு, மூங்கில், மரம், இரும்புச் சாமான்கள் முதலியன நிறைய வேண்டியிருந்தன. நாங்கள் பல இடங்களில் கமிட்டியின் சார்பில் கடைகளைத் திறந்து வைத்தோம். அங்கு அடக்க விலைக்குச் சாமான்கள் விற்கப்பட்டு வந்தன. இது மட்டுமன்றி, செங்கல், மரம், சிமெண்டு முதலியவற்றை விற்கும் வியாபாரிகளுடன் பேசி அச்சாமான்களை அடக்க விலைக்கோ குறைந்த லாபம் வைத்தோ விற்பதற்கும் ஏற்பாடு செய்தோம். எங்களிடமிருந்து சீட்டுப் பெற்றுச் சென்றவர்களுக்கு அப்படி விதிக்கப்பட்ட விலைக்குச் சாமான்கள் கிடைத்து வந்தன. அந்த வியாபாரிகளுக்குக் கமிட்டியானது ஏதோ தரகும் (கமிஷன்) கொடுத்து வந்தது. இவ்வண்ணமாகக் கமிட்டி நேராகச் செய்த உதவி மட்டுமன்றி, இச்சாமான்களின் விலையைக் கட்டுப்படுத்தும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டதால் மக்களுக்குச் சாமான்கள் நியாயமான விலைக்குக் கிடைக்கச் செய்யப்பட்டது.

மழை காலத்தில் எங்கள் மாகாணத்தில் நிறைய இடங்களில் அரிசி கிடைக்காது என்ற அச்சமும் நிறைய இருந்துவந்தது. அரிசியின் விலை சிறிது ஏறிக்கொண்டு வந்ததென்பது தெரிய வந்தது. நாங்கள் பர்மாவிலிருந்து நிறைய அரிசி வாங்கி வந்து எங்கெங்கு அரிசி கிடைக்காதென்று அஞ்சினோமோ அந்த இடங்

களில் எல்லாம் ரிலீப் கமிட்டிக் கடைகளைத் திறந்துவைத்தோம். அதனால் அரிசியின் விலை ஏறவில்லை. மக்களுக்கு அரிசி நியாய மான விலையில் கிடைத்துவந்தது. கமிட்டியின் பணமும், அரிசி விற்றனபின் திரும்பி வந்துவிட்டது. மலேரியாவும் வாந்தி பேதியும் வந்துவிடுமென்று வேறே பயமாயிருந்தது. சிற்சில இடங்களில் வந்தும் விட்டது. இதற்காகக் கமிட்டியின் மருத்துவ இலாகாவானது பல இடங்களில் தன் கிளைகளை அமைத்தது. இதனால் மக்களுக்கு நிறைய நன்மையுண்டாயிற்று. வெள்ளத்தில் மக்களுக்கு உதவி செய்வது மிகவும் கஷ்டமாயிருந்தது. கமிட்டி யும் அரசாங்கமும் கூறிய யோசனையின்படி எங்கெங்கு வெள்ளம் வருமென்று அஞ்சப்பட்டதோ அங்கெல்லாம் படகுகள் தயாராக வைக்கப்பட்டன. வெள்ளத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கு உதவி யைக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கு அப்படகுகள் மிகவும் உதவின.

இதைத் தவிர நாங்கள் பலருக்குத் தம் வீடுகளைச் செப்ப னிடுவதற்கும் புதிதாகக் கட்டுவதற்கும் பணம் கொடுத்து உதவி னோம். பூகம்பத்திற்குமுன் எவரெவர்கள் நல்ல பணக்காரர்களாக இருந்தார்களோ அல்லது எவரெவருக்கு நல்ல வீடுகள் இருந் தனவோ, அல்லது எவரெவர் பெரிய வீடுகளைக் கட்ட விரும்பினர் களோ, அவர்களுக்குக் கமிட்டியால் உதவி புரிய இயலாதென்று நாங்கள் முடிவு செய்துவிட்டோம். ஏனெனில் கமிட்டியிடம் அவ் வளவு பணமில்லை. கமிட்டியானது ஏழைகளுக்கும் மத்திய வகுப் பினர்களுக்கும் மட்டும்தான் உதவி புரிய முடியும். இதனால் எவரொருவருக்கும் ரூ. 250-க்கு மேல் பணம் கொடுப்பதில்லை யென்றும், இதைத்தவிர ரிலீப் கமிட்டி விதித்த விலையில் செங்கல், மூங்கில், மரம், சிமெண்டு முதலிய சாமான்களைக் கொடுக்கலாம் என்றும் கமிட்டி முடிவு செய்தது. அரசாங்கம் நிறையப் பணம் கொடுத்து வந்தது. மேலே குறிப்பிட்ட வகுப்பினருக்கு உதவி புரிவதை நாங்கள் அரசாங்கத்தின் கையிலேயே விட்டுவிட்டோம். மேலே கூறியதிலிருந்து கமிட்டியானது எத்தனை வகையில் மக்களுக்கு உதவி புரியவேண்டி வந்ததென்பதையும் எத்தனை விதமான வேலைகளை மேற்கொள்ள வேண்டி வந்ததென்பதையும் இச்சரித்திரத்தைப் படிப்பவர்கள் ஊகித்துக்கொள்ளலாம். கமிட் டியின் அறிக்கை அவ்வப்போது வெளியிடப்பட்டு வந்தது. அது மக்களுக்கு, முக்கியமாக நன்கொடை அளித்தவர்களுக்கு, தவறாது வழங்கப்பட்டு வந்தது.

ஒரு மிகச் சிறந்த அனுபவத்தைப் பற்றி இங்குக் குறிப்பிட

வேண்டும். காந்திஜீயானவர் பூகம்பத்தால் பீடிக்கப்பட்ட இடங்களில் சுற்றி வந்து கொண்டிருந்தபோது, அவருடன் ஆங்கிலேயர்கள் இருவர் பல இடங்களுக்குச் சென்றூர்கள். ஒருவர் குமாரி முரியல் லெஸ்டர் என்பவர். அவருடன்தாம் மகாத்மாஜீ வட்ட மேஜை மகாநாட்டிற்குச் சென்றபோது பெரும்பாலும் தங்கியிருந்தார். மற்றொருவர், இங்கிலாந்தில் பொதுஜனத் தொண்டாற்றி வந்தவரும் இந்தியாவின் மீது பரிவு கொண்டவருமான குமாரி அகதா ஹாரிசன் என்பவர். இன்னும் பல அயல்நாட்டாரும் பூகம்பத்தால் விளைந்த நாசத்தை வந்து பார்த்தார்கள். அனைவரும் தத்தம் நண்பர்களுக்குக் கடிதம் எழுதினூர்கள். தீனபந்து ஆண்டுரூஸ் எங்கு விபத்து நேரிட்டாலும் அங்கே வழக்கமாகப் போய்ச் சேருவார். அவர் புத்தகம் எழுதி இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அச்சிட்டு வெளியிட்டார். இப்படியெல்லாம் நடந்ததால் அங்குள்ளவர்களுக்கும் பீகாரின் மீது அனுதாபம் பிறந்தது. அரசாங்கத்தின் கோரிக்கையும் அங்குப் போய்ச் சேர்ந்தது. அதை கேட்டு மக்கள் பண உதவி புரிந்தார்கள்.

யுத்தத்தை எதிர்ப்பவர்களை அங்கத்தினராகக் கொண்ட சங்கம் ஒன்று ஐரோப்பாவில் இருக்கிறது. படையில் காணப்படும் ஒழுங்குக் கட்டுப்பாட்டாலும், அதில், உயிர் உள்பட தம் உடமை எல்லாவற்றையும் கொடுப்பதற்கு மக்களுக்கு வாய்ப்புக் கிடைப்பதாலும் நிறைய இளைஞர்கள் அதில் போய்ச் சேருகிறூர்கள் என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். இந்த உற்சாகமும் தியாக சக்தியும் மானிட சம்ஹாரத்தில் செலுத்தப்படாமல் மானிடத் தொண்டில் செலுத்தப்பட்டால் மாபெரும் தொண்டாக அமையும். இதனுல் அச்சங்கத்தின் அங்கத்தினர்கள் தம்மைப் படை போலவே அணி வகுத்துக்கொண்டு விபத்து நேர்ந்த இடங்களுக்குச் சென்று மக்களுக்குத் தொண்டு புரிந்து வந்தார்கள். இதில் அவர்கள் சாதி, நாடு என்ற வேற்றுமை பார்ப்பதில்லை. ஐரோப்பாவில், முதல் மகாயுத்தத்திற்கு பிறகு, யுத்தத்தினுல் நிறைய நாசமடைந்திருந்த இடங்களுக்கு அவர்கள் சென்று தொண்டு ஆற்றினூர்கள். இவ்விதமாகத் துன்பத்துக்காளான மக்களுக்குப் பல இடங்களில் தொண்டு புரிந்து வந்திருக்கிறூர்கள். சுவித்ஜர்லாண்டைச் சேர்ந்த பியர் சேரேஸோல் என்பவர் அவர்களுடைய தலைவர். அவர் ஓர் எஞ்சினியர். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய குடும்பத்தார் தம் நாட்டின் அரசாங்கத்தில், முக்கியமாக அதன் படையில், பெரும் பதவியை வகித்து வந்திருக்கிறூர்கள். யுத்தத்தை வெறுக்கும் தம் கொள்கையை முன்

னிட்டு அவர் அவற்றை எல்லாம் துறந்துவிட்டார். மேலும் படைப் பயிற்சிக்கு உடன்படாததால் அவர் தண்டனையையும் அனுபவிக்க வேண்டி வந்தது. அவர்சில தோழர்களை அழைத்துக் கொண்டு பீகாரில் தொண்டு செய்ய வந்து சேர்ந்தார்.

பல இடங்களில் பூகம்பத்தால் உண்டான நாசமானது மிக அதிகமாக இருந்ததால் அங்கிருந்த மக்களை அவ்விடங்களைவிட்டு வேறிடங்களுக்கு மாற்றுவதுதான் சரி என்பதாக எங்களுக்குப் புலப்பட்டது. தம்மிடங்களை விட்டுவிட்டுச் சிறிது தொலைவில் சென்று வசிப்பதற்கு மக்களை ஒத்துக்கொள்ள வைக்க எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தோம். அவர்களுக்காக ஜமீன்தார்களுடன் பேச்சு வார்த்தை நடத்தி வேறொரு இடத்தில் நிலத்திற்கு ஏற்பாடு செய்வதற்காகவும் முயற்சி செய்தோம். ஆனால் எவரும் தம்முடைய வீட்டைவிட்டு வேறொரு இடத்திற்குச் செல்லத் தயாராயில்லை. இதனால் பேரளவில் இடம் பெயர்த்தலோ மாற்றலோ முடியாத காரியமென்பதை உணர்ந்து அம்முயற்சியைக் கைவிட்டுவிட்டோம். ஆயினும் முஜபர்பூர் ஜில்லாவில் வெள்ளத்தினால் மிகவும் துன்பத்திற்கு உள்ளானவர்கள் சிலர் தம் கிராமத்தை விட்டுவிட்டு வேறொரு இடத்தில் குடியேற ஒத்துக்கொண்டார்கள். இவர்களுக்கு வீடு கட்டிக் கொள்ளல் முதலியவற்றிற்கு உதவி செய்யலாமென்று நாங்கள் நினைத்தோம். இந்த வேலையில் அரசாங்கமும் ரிலீப் கமிட்டியும் இருவரும் சேர்ந்து செலவு செய்ய அரசாங்கம் ஒத்துக்கொண்டது. வேலையின் பொறுப்பு உள்ளூர் கமிட்டி ஒன்றின் கையில் ஒப்படைக்கப்பட்டது. டாக்டர் சேரேஸோல் இந்த வேலையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். நாங்கள், எங்கள் ரிலீப் கமிட்டியின் சார்பில் அவரையே அந்த உள்ளூர்க் கமிட்டிக்கு அங்கத்தினராக நியமித்து அவருக்கு உதவி புரிவதற்காக எங்கள் செயலாளர் ஸ்ரீ பணீந்திர மோகன் தத்தாவை அனுப்பி வைத்தோம்.

அங்குப் பல புதிய கிராமங்கள் அமைக்கப்பட்டன. இந்த வேலையில் ஓராண்டுக்கு மேல் கழிந்துவிட்டது. டாக்டர் சேரேஸோல் அங்கேயே இருந்து வந்தார். இடையில் ஒருமுறை ஐரோப்பாவுக்குப் போனார். ஆனால் சில நாட்களுக்குள் திரும்பி வந்து வேலையில் மறுபடியும் சேர்ந்துகொண்டார். அவருடன், ஐரோப்பாவின் நாடுகளில் பலவற்றிருந்து, ஐந்தாறு தோழர்கள் வந்திருந்தார்கள். அவர் தம் உடலாலும் உழைத்துத் தொண்டு புரிந்து வந்தார். அவருக்கு ஏறக்குறைய 60க்கு மேல் வயதிருக்கும். ஆள் நல்ல உயரமும் பருமனும் உடையவர். அந்த ஊரின்

வெப்பத்தினுல் அவர் மிகவும் கஷ்டப்பட்டார். ஆயினும் அவர் அந்த கிராமத்திலேயே இருந்து வந்தார். அங்கு அவருக்கு உணவுக்கும் கஷ்டமாயிருந்தது. சௌகரியமும் குறைவாகவிருந்தது. அவருக்கு பழக்கமான சாமான்கள் கிடையாது. அப்படியும் அவர் இராப்பகலாக ஓடியாடி வேலை புரிந்து வந்தார். அவர் உழைப்பதைப் பார்த்து மற்றவர்களுக்கும் உற்சாகம் உண்டாகி வந்தது. அங்கு அமைக்கப்பட்ட கிராமங்களில் முக்கியமான கிராமத்திற்கு சாந்திபூர் என்று பெயர் வைக்கப்பட்டது. இந்த அழகிய வளமிக்க கிராமத்தில் இன்றுகூட மக்கள் வாழ்ந்து வருகிருர்கள். அது ஒரு கிராமம் எப்படி இருக்க வேண்டுமென்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

பூகம்பத்தினுலும் வெள்ளத்தினுலும் பல இடங்களில் மலேரியா கடுமையாக பற்றிக்கொண்டது. ரிலீப் கமிட்டியானது மக்களை மலேரியாவிலிருந்து காப்பதற்காகப் பல இடங்களில் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டி வந்தது. முஜபர்பூர் ஜில்லாவில் ராம்புர் ஹரி, மனுசமாரா மாவட்டங்கள், தர்பங்கா ஜில்லாவில் பண்டௌல், மதுவனீ மாவட்டங்கள், பாகல்பூர் ஜில்லாவில் சுபௌல் மாவட்டம் ஆகியவைதாம் அவற்றுள் முக்கியமானவை. செயலாளர்களின் உற்சாகத்தாலும் தொண்டாலும்தான் இவ்வளவு பெரிய வேலையைச் செய்ய முடிந்தது. அவர்களுக்கு எவ்வளவு நன்றி கூறினுலும் போதாது. பணம் கொடுத்து ஆட்களை அமர்த்த வேண்டியிருந்திருந்தால் ரிலீப் கமிட்டியானது நிறையப் பணத்தைச் செயலாளர்களுக்காக மட்டுமே செலவழிக்க வேண்டி வந்திருக்கும். திக்கற்றவர்களுச்கு உதவி அளிப்பதிலேயே எங்களுடைய பணத்தை பெரும்பாலும் செலவிட வேண்டுமென்பதிலும், மேலும் உதவியைக் கொண்டு சேர்ப்பதில் மிகக் குறைவாகவே செலவிட வேண்டுமென்பதிலும், நாங்கள் ஆரம்பத்திலிருந்தே கவனம் செலுத்தி வந்தோம். தொண்டர்களுக்கு மிகவும் எளிய உணவே அளித்து வந்தோமென்பதையும் அதற்கு ஒரு நாளைக்கு இரண்டணுவுக்கு மேல் பிடிக்கவில்லை யென்பதையும் மேலே கூறியுள்ளேன். எங்கள் வேலை சுமார் ஒன்றரை ஆண்டு வரையில் நடந்து வந்தது. இதனுல் அலுவலகத்திற்காகச் சிலரை நியமிக்க வேண்டியிருந்தது. அவர்களுக்கு ஜீவனத்திற்காக ஏதாவது கொடுக்க வேண்டியிருந்தது. ஆயினும் அதையும்கூட நாங்கள் மிகவும் சிக்கனமாகத்தான் கொடுத்தோம். இது நீங்கலாக அலுவலகத்திற்காக வீடு, தட்டு முட்டு முதலியவற்றிற்கும் செலவு செய்ய வேண்டியிருந்தது. சாமான்களை ஏற்றிச்

செல்வதற்காகவும், மேலும் செயலாளர்களும் மேற்பார்வையாளர் களும் நேரத்தை வீணாக்காமல் அவர்கள் செல்ல வேண்டிய இடங் களுக்குப் போய்ச் சேருவதற்காகவும் நாங்கள் லாரிகளையும் மற்ற வித வாகனங்களையும் வாங்க வேண்டியிருந்தது. இச்செலவு களெல்லாம் ஸ்தாபனத்தின் பேரேட்டில் பதிவு செய்யப்பட்டன. ஸ்தாபனத்தின் செலவானது உதவிக்காகச் செய்யப்பட்ட செல வைப் பார்க்கிலும் மிகக் குறைவான வீதமாக இருக்க வேண்டு மென்பதில் நாங்கள் சதா கவனம் செலுத்தி வந்தோம். எங்கள் அறிக்கைகளிலும் இதைப் பற்றிக் குறிப்பிட்டு வந்தோம். ஆரம் பத்தில் மக்களுக்கு உணவும் உடையும் அளிக்க வேண்டி யிருந்த போது, அவற்றை தலைமையிடத்திலிருந்து தேவைப்பட்ட இடங் களுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்கு நிறையச் செலவு பிடித் தது. இது இயல்புதான். ஆனால் கிணறுகள், குளங்கள், சாலை கள், பாலங்கள், வாய்க்கால்கள் ஆகிய வேலைகளை எடுத்துக் கொண்டதும், ஸ்தாபனச் செலவு குறைந்துவிட்டது. பிறகு வீடு களுக்காகப் பணம் வழங்கியபோது இச்செலவு மேலும் குறைந்து விட்டது.

இங்கு ஒரு சிறிய சம்பவத்தைப்பற்றிக் கூறியாக வேண்டும். அரசாங்கமானது மிஸ்டர் பிரேட் என்ற சிவில் செர்வீஸ் அதிகாரி ஒருவரை ரிலீப் கமிஷனராக நியமித்திருந்தது. மக்களுக்கு உதவி புரியும் வேலை முழுதும் அவருடைய பொறுப்பிலிருந்தது. அவர் ரிலீப் சம்பந்தமாக ஒரு அறிக்கையை எழுதினார். அதில் அவர் பீகார் சென்ட்ரல் 'ரிலீப் கமிட்டியைப் பற்றியும் குறிப்பிட் டிருந்தார். அக்கமிட்டியின் செலவின் விவரங்களையும் அதில் சுருக்கமாகக் கொடுத்திருந்தார். ரிலீப் கமிட்டியின் ஸ்தாபனச் செலவு அதிகமாயிருந்ததாக அவர் அங்குத் தவருக எழுதி யிருக் கிருர். பிறகு, அவர் ஓய்வு எடுத்துக் கொண்டு இங்கிலாந்திற்குச் சென்றுவிட்டார். நாங்கள் இதை அரசாங்கத்தாருக்குச் சுட்டிக் காட்டினேம். ஆனால் அவர்கள் அதை ஏன் கவனிப்பார்கள்?

ஆபத்து சகாய வேலை முடிந்த பிறகு எஞ்சிய பணத்தைப் பீகாரில் திடீரென்று வரும் விபத்துக்களுக்கு பயன்படுத்துவதற் காக ஓர் அற நிலையத்திடம் ஒப்படைத்து விட்டோம். சர்தார் வல்லப்பாயீ படேலும், சேட் ஜம்நாலால் பஜாஜும் நானும்தாம் அற நிலையக் காவலர்கள்.

# 106. சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டது

ஆபத்து சகாய கமிட்டியின் வேலையாக மகாத்மாஜீ நாசமடைந்த இடங்களில் சுற்றி வந்து கொண்டிருந்தபோது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதன் சாயல் நம் நாட்டின் அரசியல் துறையில் நிறையப் படிந்தது. 1933இன் நடுவிலேலே சத்தியாக்கிரக இயக்கத்தில் சோம்பல் வந்து விட்டது. தனிப்பட்டோர் சத்தியாக்கிரகத்தில் மட்டும் சற்று ஊக்கம் காணப்பட்டு வந்தது. ஆனுல் அதுவும் மெல்ல மெல்லக் குறைந்து வந்தது. பூகம்பம் வந்தபோது காந்திஜீ தென்னிந்தியாவில் ஹரிஜன வேலை சம்பந்தமாகச் சுற்றி வந்து கொண்டிருந்தார். அங்கிருந்துதான் பீகாருக்கு வந்தார். இதற்குள்ளாக அரசியல் அமைப்பில் புதிய சீர்திருத்தங்களைச் செய்யும் விஷயமானது இங்கிலாந்தில் சற்று முன்னேறிவிட்டது. இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டிற்குப் பிறகு மேலும் சில காரியங்கள் நடந்தன. ஒரு 'வெள்ளைத் தாளும்' (வொயிட் பேப்பர்) வெளிவந்தது. அதில் அரசியல் அமைப்பைப் புனைவதற்கு அடிப்படையான மூல கொள்கைகள் கொடுக்கப்பட்டிருந்தன. வெள்ளைத்தாளைப் பின்பற்றிச் சட்டம் ஒன்று விரைவில் அமைக்கப்படுமென்றும், புதிய அரசியல் திட்டம் விரைவில் அமுலுக்கு வருமென்றும் மக்கள் உணர்ந்தார்கள். அப்புதிய திட்டம் எவ்வளவு கெடுதலாயிருந்தாலும், மேலும் அதன்படி நாம் வேலை செய்ய ஒத்துக்கொள்ளாவிட்டாலும் கூடக் காங்கிரஸானது தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளத்தான் வேண்டுமென்று சிலர் எண்ணினுர்கள். இந்த விஷயத்தைப் பற்றி நாலா பக்கமும் வாதம் நடக்கத் தொடங்கியது. காங்கிரஸ்காரர்கள் இடையிலும் இதைப்பற்றிப் பேச்சு நடந்து வந்தது. டாக்டர் அன்சாரி, டாக்டர் விதான் சந்திர ராய், ஸ்ரீ பூலாபாயீ தேசாய் ஆகியவர்கள் இதைப் பற்றிக் காங்கிரஸ்காரர்களிடையில் பேச்சு நடத்தி வந்தார்கள். நான் ஆபத்து சகாய வேலையில் ஈடுபட்டிருந்ததால் இந்தப் பக்கத்தில் கவனம் செலுத்த எனக்குப் பொழுதில்லை. மகாத்மாஜீயும் இதைப்பற்றி ஏதாவது யோசித்துக் கொண்டிருந்திருக்கலாம்.

வட பீகாரின் பிரயாணத்தின்போது ஒரு நாள் பாகல்பூர் ஜில்லாவைச் சேர்ந்த சஹரசா என்ற கிராமத்தில் தங்கினோம். அடுத்த நாள் திங்கட்கிழமை; காந்திஜீயின் மௌனதினம்.

மகாத்மாஜீ மௌனமாக ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். நான் சாதாரணமாகவே அவருடைய நேரத்தை வீணுக்குவதில்லை. அன்ருே அவர் எழுதிக் கொண்டிருந்தார். இதனுல் நாள் முழு வதும் நான் அவருடன் ஒன்றும் பேச முடியவில்லை. சாயங்காலம் சுமார் 4-5 மணிக்கு அவர் ஒரு காகிதத்தைக் கொடுத்து, அதைப் படித்து என் சம்மதத்தை அளிக்கும்படி எழுதிக் காட்டினுர். நான் அதைப் படித்தேன். அதில் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி விடுவதைப் பற்றி எழுதியிருந்தது. தேர்தலைப் பற்றியும் குறிப் பிடப்பட்டிருந்தது. சிறையிலிருந்து விடுதலையாகி வந்த தம் முடைய நம்பிக்கையான நண்பர்கள் சிலர் கூறியதிலிருந்து அவர் இந்த முடிவுக்கு வரவேண்டியிருந்ததென்று அதில் கண்டிருந்தார். நாட்டில் பரவியிருந்த ஊக்கமின்மை மட்டும் அன்றி, என் மாகா ணத்தில் பூகம்பத்திற்குப் பின் வேறு விதமான சூழ்நிலை வந்து விட்டது. அங்குச் சத்தியாக்கிர்கம் நின்றுவிட்டது. சொல்லப் போனுல் எங்களுடைய தோழர்கள் பெரும்பாலும் எல்லாருமே சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள். அவர்கள் ஆபத்து சகாய வேலையில் முற்றிலும் ஒத்துழைக்காவிட்டாலும், யாரும் அதை எதிர்க்கவில்லை. அப்படி முழு ஒத்துழைப்பில் ஏதாவது குறையிருந்தால் அது எங்கள் குற்றமன்று. அரசாங் கம் முழு ஒத்துழைப்பை விரும்பவில்லை. நாங்கள் செய்த வேலை களை யெல்லாம் சந்தேகக் கண்ணேடு பார்த்து வந்தது. இதனுல், சத்தியாக்கிரகத்தை முறைப்படி நிறுத்துவதைப் பற்றி எனக்கு ஒரு கவலையும் இல்லை. மேலும் அது மனத்தைப் புண்படுத்தக் கூடிய விஷயமுமில்லை. இதனுல், அந்த அறிக்கையைக் கவன மாகப் படித்தபின் அது எனக்கு சம்மதம் என்று தெரிவித்தேன். உடனே அதற்கு பிரதிகள் எடுக்கப்பட்டன. அவற்றைச் செய்தித் தாள்களுக்கு அனுப்பவேண்டுமென்று மகாத்மாஜீ எண்ணினுர். ஆனுல் அவர் தங்கியிருந்த இடத்திலிருந்து தந்தி அனுப்ப முடி யாது. அதனுல் நான் யாராவது ஒருவர் கையில் அதைக் கொடுத் துப் பட்னுவுக்கு அனுப்புவதற்கு ஏற்பாடு செய்வதற்குள் பட்னுவி லிருந்து ஒருவர் வந்து சேர்ந்தார்.

பட்னுவில் டாக்டர் அன்சாரியிடமிருந்து தந்தி வந்தது. அங்கிருந்தவர்கள் அதை ஓர் ஆளிடம் கொடுத்து அனுப்பி யிருந்தார்கள். சஹரசாவில் தந்தி கிடைக்காது என்பது பட்னுவி லிருந்தவர்களுக்கு தெரியும். அந்தத் தந்தியில் டாக்டர் அன்சாரி பட்னுவுக்கு வருவதாகக் கூறியிருந்தது. அவர் இதே விஷயங் களைப் பற்றி மகாத்மாஜீயுடன் பேசுவதற்காக வந்து கொண்

டிருந்தார். அவருடன் டாக்டர் விதான் சந்திர ராயும் ஸ்ரீ பூலாபாயீ தேசாயும் வருவார்கள் என்றும் கூறியிருந்தது. இந்தத் தந்தி கிடைத்ததும் மகாத்மாஜீ தம்முடைய அறிக்கையைப் பத்திரிகை களுக்கு அனுப்பாமல் நிறுத்திவிட்டுப் பட்னுவுக்குச் செல்ல நிச்ச யித்தார். டாக்டர் அன்சாரி வந்து சேரும் சமயத்திற்கு நாங் களும் பட்னுவுக்குப் போய்ச் சேர்ந்துவிட்டோம். டாக்டர் அன் சாரி முதலானேருக்கும் காந்திஜீக்கும் பேச்சு வார்த்தை நடந் தது. அதற்குப் பிறகு அந்த அறிக்கை பத்திரிகைகளுக்கு அனுப் பப்பட்டது. இந்த அறிக்கை செய்த முடிவை அறிந்து பல காங் கிரஸ்காரரர்கள் திருப்தி அடைந்தார்கள். ஆனால் அந்த முடிவுக்கு காட்டப்பட்ட காரணம் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. இதனால் முக்கிய காங்கிரஸ்காரரர்களெல்லாம் கூடி இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வது அவசியமாயிற்று. மகாத்மாஜீயின் பீகார் யாத்திரை இன்னும் முடியவில்லை. அவர் சோட்டா நாக புரிக்கு இன்னும் செல்ல வேண்டியிருந்தது. அங்குப் பூகம்பத் தால் சேதம் உண்டாகவில்லையாயினும் காந்திஜீ ஹரிஜன வேலை சம்பந்தமாக அங்கு யாத்திரை செய்ய விரும்பினர். அவர் அங்குச் சென்று விட்டார். காந்திஜீ செய்த முடிவைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக முக்கிய காங்கிரஸ்காரரர்கள் ராஞ்சிக்கு அழைக்கப்பட்டார்கள். இது முறையான கூட்டமன்று. அவர் களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதற்காகவே அவர் கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். நானும் அங்குச் சென்றேன். மாகாணம் முழுவதிலுமிருந்து பலர் வந்து சேர்ந்தார்கள். இரண்டு மூன்று நாட்கள் வரையில் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தது. பிறகு பட்னுவில் அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவை முறைப்படி கூட்டுவதென்று முடிவு செய்யப்பட்டது. இதற்கிடையில் மகாத்மாஜீ மற்ற இடங்களுக்கும் சென்று வந்து விடமுடியும். 1934 மே மாதத்தில் பட்னுவில் இருக்கை நடந்தது.

காங்கிரஸ் குழுக்களெல்லாம் இன்னும் சட்டத்திற்கு விரோத மாயிருந்தும்கூட இக்கூட்டம் கூட்டப்பட்டதென்பதுதான் இதன் விசேஷம். அக்குழுக்களில் எது கூடினுலும் அது சட்டத்திற்கு விரோதமாகும். ஆயினும் அரசாங்கத்தாரும் நிலைமையைத் தெரிந்து கொண்டார்கள். ஆகையால் அவர்கள் பக்கத்திலிருந்து யாதொரு தடையும் செய்யப்படவில்லை. ஸ்ரீமதி ராதிகாசிங் மன் றத்தில் கூட்டம் நடந்தது. சாயங்காலத்தில் அம்மன்றத்தின் வெட்ட வெளியில் நடந்தது. அக்கூட்டத்தில் இரண்டு கட்சிகள் இருந்தன. செயலாற்றுக் குழுவினுல் கொண்டு வரப்பட்ட

தீர்மானத்தில் சத்தியாக்கிரகத்தை நிறுத்தும்படி கட்டளேயிடப் பட்டிருந்தது. காந்திஜீக்கு மட்டும்தான் சத்தியாக்கிரகம் செய் வதற்கு உரிமையளிக்கப்பட்டிருந்தது. கவுன்ஸில் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்வதைப் பற்றியும் கூறப்பட்டிருந்தது. காந்திஜீயின் அறிக்கையையும் அத்தீர்மானம் ஆதரித் தது. சிலர் அத்தீர்மானத்தை ஏற்றுக் கொண்டார்கள். சிலர் அதை மிகக் கடுமையாக எதிர்த்தார்கள். காந்திஜீ செய்த முடி வையும் எதிர்த்தார்கள். மகாத்மாஜீயின் அறிக்கையில் காட்டப் பட்டிருந்த காரணத்தையும் எதிர்த்தார்கள். வேறு சிலருக்குச் சத்தியாக்கிரகத்தை நிறுத்துவதில் தடையில்லே. ஆனல் கவுன் சில் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்வதை ஆட்சேபித்தார்கள். காரசாரமாக வாதம் நடந்த பிறகு தீர்மானம் ஏற்றுக் கொள்ளப் பட்டது. காங்கிரஸ் சோஷியலிஸ்ட் கட்சியை நிறுவினவர்கள் தாம் எதிர்ப்பில் அதிகப் பங்கெடுத்துக் கொண்டார்கள். இதே சமயத் தில் சோஷியலிஸ்டுகள் பட்னுவில் தம்முடைய மகாநாடு ஒன்றைத் தனியாக நடத்தினர்கள். அவர்கள் தம்முடைய கட்சியைக் காங் கிரஸில் இருந்து கொண்டே அமைத்தார்கள். ஆசார்யா நரேந் திர தேவும், ஸ்ரீ ஜயபிரகாஷ் நாராயணும்தாம் முறையே அதன் முக்கிய செயலாளரும் தலேவருமாக இருந்தார்கள். அகில பார தீயக் காங்கிரஸ் குழுவில் ஆசார்யா நரேந்திர தேவ்தாம் எதிர்த் தவர்களில் முக்கியமானவர்.

எது எப்படியாயினும், அகில பாரதீயக் காங்கிரஸ் குழு வானது சத்தியாக்கிரகத்தை நிறுத்திவிட்டது. இதற்குப் பின் அரசாங்கத்திற்கு வழி எளிதாகிவிட்டது. காங்கிரஸ் குழுவின் மீது போடப்பட்டிருந்த தடை உத்தரவை அரசாங்கமானது சில நாட்களுக்குப் பிறகு மீட்டுவிட்டது. அதன்மேல் செயலாற்றுக் குழுவின் இருக்கை சில நாட்களுக்குள் நடந்தது. காங்கிரஸை அதிவிரைவில் மறுபடியும் அமைக்கும்படியும், குழுக்களே எல் லாம் முறைப்படி வேலே செய்யும்படியும் செயலாற்றுக் குழு உத்தரவிட்டது. இம்முறை இரு கட்சிகளும் தத்தம் மனத்தில் இருக்கும் அபிப்பிராயங்களேத் தயங்காமல் வெளியிட்டு விட்டன. இதனல் இந்த முறை எவராலும் கட்டாயப்படுத்தப் பட்டார்கள் என்ற குறையில்லே. காந்தி-இர்வின் ஒப்பந்தத்திற்குப்பின் அதன் நிபந்தனேகளே நிறைவேற்றுவதில் அதிகக் கஷ்டம் உண்டாயிற்று. இப்போது அந்தத் தகராறுகள் ஒன்றுமில்லே. சில நாட்களுக்குப் பின் அரசாங்கமானது காங்கிரஸ் ஆச்ரமங்கள் பவன்கள் ஆகிய எல்லாவற்றையும் ஒவ்வொன்ருகத் திருப்பிக்

கொடுத்துவிட்டது. அரசாங்கத்தின் கையில் இருந்தபோது அவை சீர் குலைந்துவிட்டன. அவை எந்த நிலைமையில் இருந்தனவோ அதே நிலைமையில் அவற்றை நாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. பிறகு பழுது பார்த்தல் முதலிய வேலைகளை நாங்களே செய்து கொள்ள வேண்டி யிருந்தது. இதனுல் இம்முறை கடிதப் போக்கு வரவு செய்து மண்டையை உடைத்துக் கொள்ள வேண்டி வரவில்லை. வர்தாவில் செயலாற்றுக் குழுவின் கூட்டம் நடந்தது. ஆனுல் அச்சமயத்தில் எங்கள் குடும்பத்தில் ஒரு விபத்து நடந்து விட்டது. அதனுல் நான் அக்கூட்டத்திற்குச் செல்ல முடியவில்லை. இந்த நாட்களில் சேட் ஜம்நாலால் பஜாஜ் தற்காலிகமாகத் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். அவர் தாம் காங்கிரஸ் வேலையை நடத்தி வந்து கொண்டிருந்தார். காங்கிரஸின் விசேஷப் பேரவை ஒன்றை நடத்த வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. இப்பேரவை அக்டோபரில் பம்பாயில் நடந்தது. சத்தியாக்கிரகிகள் எல்லாரும் இன்னும் விடுதலையாகவில்லை. சர்தார் வல்லப் பாயீ, பண்டித் ஜவஹர்லால் முதலானேர் இன்னும் சிறையில் இருந்தார்கள். சர்தார் பம்பாய்க் காங்கிரஸுக்கு முன்னமே வெளியே வந்துவிட்டார். ஆனுல் ஜவஹர்லால்ஜீ பம்பாய்க் காங்கிரஸுக்கு பின் நெடுநாள் வரையில் சிறையிலேயே இருந்தார்.

## 107. தமையனரின் சாவும் கடன் துன்பமும்

ஆபத்துசகாய வேலையில் என் தமயனுரும் மிகவும் பாடுபட்டு உழைத்தார். சப்ராவில்தான் அவர் அதிக வேலை செய்ய வேண்டியிருந்தது. மாகாண வேலையிலும் அவர் சிறந்த பங்கு எடுத்துக் கொண்டார். அவர் ஆசாமில் வாங்கியிருந்த நிலத்தைப் பார்ப்பதற்காக எப்போதாவது போய் வந்துகொண்டிருந்தார். இதுவரையில் அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்ய முடியவில்லை. மே மாதத்தில் ஒருமுறை அவர் அங்குச் சென்ருர். அங்கிருந்து திரும்பி வந்ததுமே காய்ச்சல் வந்துவிட்டது. அந்த இடம் மலேரியாவால் மிகவும் பீடிக்கப்பட்ட இடம். அங்கேயே அவருக்கு மலேரியா பிடித்துக் கொண்டது. ஊருக்கு வந்தபின் அது வெளிப்படையாகிவிட்டது. நான் சப்ராவுக்கு ஒரு நாள்

சென்றபோது அவர் நலமாகத்தானிருந்தார். பாங்கியின் வேலை யையும் செய்யத் தொடங்கிவிட்டார் என்பதைக் கண்டேன். ஆயினும் அவர் அப்போது மிகவும் பலவீனமாயிருந்தார். நான் ஆட்சேபித்தேன். "இப்போது வேலை செய்ய வேண்டாம், இன்னும் சற்று ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். உடல் வலிமை வந்த பிறகு வேலை செய்யலாம்" என்று கூறிவிட்டு நான் பட்ணு வுக்கு வந்துவிட்டேன். நான் பட்ணுவுக்குத் திரும்பி வந்தபின் மூன்று நான்கு நாட்களுக்குள் ஒரு நாள் பிற்பகலில் ஒரு தந்தி வந்தது. அதில் அவருக்கு உடம்பு சரியில்லையென்றும், டாக்டர் ரகுநாத்சரணை உடனே அனுப்பும்படியும் அல்லது கையோடு அழைத்து வரும்படியும் கூறியிருந்தது. தந்தி யைப் படித்ததும் எனக்குக் கவலை அதிகமாகிவிட்டது. அந்தத் தந்தி சப்ராவின் சிவில் சர்ஜன் டாக்டர் ராஜேஸ்வர் பிரசாதின் யோசனையின் பேரில் கொடுக்கப்பட்டிருந்தது.

டாக்டர் சரணைச் சந்தித்து இருவரும் சப்ராவிற்குப் போவ தென்று முடிவு செய்து கொண்டிருந்ததற்குள்ளாக, கங்கையின் அக்கரைக்குச் செல்லும் கப்பல் போய்விட்டது. பிறகு இரவு வரையில் காத்திருப்பது சரியன்று என நாங்கள் நினைத்தோம். ஆதலால் மோட்டாரில் டாக்டர் சரணுடன் நான் புறப்பட்டு விட்டேன். படகில் மோட்டாரை ஏற்றிக் கங்கையைக் கடந்து அக்கரை அடைந்து மேற்சென்றோம். பூகம்பத்தால் சாலைக ளெல்லாம் முன்னமே மிகவும் கெட்டுப் போயிருந்தன. ரயில் நின்றுவிட்டதால், நிறைய மாட்டு வண்டிகளும் லாரிகளும் அச்சாலைகளில் போய் அவை மேலும் சீர்கெட்டுவிட்டன. இரவு சுமார் 10 மணிக்கு நாங்கள் சப்ராவுக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்குள்ள டாக்டர்கள் எல்லாரும் கவனத்துடனும் பேரன்புடனும் என் தமையனுருக்கு மருத்துவம் செய்து கொண்டிருந்தார்கள். டாக்டர் ராஜேஸ்வர் பிரசாத் இராப்பகலாக அங்கே தங்கிவந்தார். நிலைமை கட்டுக்கு மீறிவிட்டதைக் கண்டதும்தான் அவர் தந்தி கொடுத்தார். காய்ச்சல் மட்டுமன்றி இப்போது மூத்திரக் குண் டிக்காய் ஒன்றும் கெட்டுப்போய்விட்டது. இதனுல் சிறு நீரையும் இரத்தத்தையும் பரிசோதனை செய்வது அவசியமாயிற்று. என் தமையனுருக்கு முன்னிருந்தே சர்க்கரைக் கோளாறு சிறிதளவு இருந்தது. அதற்கு மருத்துவமும் செய்யப்பட்டது. அதனுல் சிறிது அடங்கியிருந்தது. இப்போது அவர் பலவீனப்பட்டிருந்த நிலைமையில் அதுவும் மிகவும் கடுமையாகி விட்டதாகத் தோன்றியது.

அன்றிரவு சிறுநீர் முதலியவற்றை எடுத்து ஒருவரிடம் கொடுத்துப் பட்னாவுக்கு அனுப்பினோம். டாக்டர்கள் மிகவும் பாடுபட்டார்கள். ஆனால் நாளுக்கு நாள் நோய் வலுத்துக் கொண்டே சென்றது. பட்னாவிலிருந்து வைத்திய ராஜ் பண்டித் பிரஜ் பிகாரி சௌபேஜியும் வரவழைக்கப்பட்டார். அவரும் ஏதோ வைத்தியம் செய்தார், ஆனால் யாதும் பயன்படவில்லை. கடைசியாக ஒரு குண்டிக்காயை எடுத்துவிடுவது நன்றென டாக்டர்கள் நினைத்தார்கள். டாக்டர் ராஜேஸ்வர் பிரசாத் திற மையான சர்ஜனாயிருந்தும்கூட இதன் பொறுப்பை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. டாக்டர் பானர்ஜீயை அழைத்து வரப் பார்த்தோம். ஆனால், மருத்துவக் கல்லூரி மூடியிருந்ததால், அவர் பட்னாவில் இல்லை. டாக்டர் படுக் பிரசாத் வர்மாவைக் கூப்பிட்டோம். ஆனால், அவருடைய பொறுப்பில் வேறொரு நோயாளியிருந்ததால், அவரை உடனே விட்டு விட்டு எங்கும் வெளியூருக்குச் செல்ல அவரால் இயலவில்லை. லக்நோவின் புகழ் வாய்ந்த சர்ஜன், டாக்டர் பாடியாவை வரும்படி தந்தி அனுப்பப் பட்டது. ஆனால் எவரும் வரமுடியவில்லை. கல்கத்தாவுக்குத் தந்தி அனுப்பியதின் பேரில், அங்கிருந்த நண்பர்கள் புகழ் வாய்ந்த சர்ஜன் டாக்டர் பஞ்சானன் சட்டர்ஜீயை அனுப்பி னார்கள். பட்னாவின் கர்னல் அலெக்சாண்டரையும் அழைத்தோம். எல்லாரும் பார்த்துவிட்டு, இவ்வளவு பலவீனமாயிருக்கும்போது கத்தி வைப்பது சரியென்று எனக்·கூறிவிட்டார்கள். தோல்வியை ஒப்புக் கொண்டு சத்திரம் வைக்கும் பேச்சை விட்டுவிட்டோம். இதற்குப் பிறகு இரண்டு நாட்களுக்குள்ளாக அவர் பரகதி அடைந்து விட்டார்.

நாங்கள் தந்தி கொடுத்து ஜனார்த்தனனையும் அவன் மனைவி யையும் வரவழைத்தோம். லக்நோவிலிருந்து என்னுடைய மாப்பிள்ளையும் மகளும் வந்து சேர்ந்தார்கள். சிகார்பூரிலிருந்து புபுநீ அவர் இறந்த பிறகு வந்து சேர்ந்தாள். பாயீ மதுரா பிரசாத்ஜீ பட்னாவிலிருந்து அவள்கூடவே வந்து சேர்ந்தார். உயர்திரு பிரஜ்கிஷோர் பாபூவும் வந்து சேர்ந்தார். இவ்வித மாக எல்லா நெருங்கிய நண்பர்களும், குழந்தை குட்டிகளும் சூழ்ந்து நிற்க அவர் உயிர் துறந்தார். நாங்கள் எல்லாரும் ராமநாமத்தைச் ஜெபித்துக் கொண்டு கீதையைச் சொல்லிக் கொண்டு நின்றோம். எனக்கு மலைபோன்ற ஆபத்து வந்து சேர்ந்துவிட்டது. நான் வீட்டோடு என்றுமே தொடர்பு கொண்டிருந்ததில்லை. எல்லாம் அவரே செய்து வந்தார்.

நான் வக்கீல் வேலை செய்து பணம் சம்பாதித்துக் கொண்டிருந்த போதும்கூட அவர்தாம் என் விஷயங்களையெல்லாம் கவனித்து வந்தார். பிறகு நான் ஒத்துழையாமையில் சேர்ந்து, ஊதாரி யாகப் போனபோதும் அவர்தாம் என்னைக் கவனித்துக்கொண்டு வந்தார். என் மனைவியும், பிள்ளைகளும் அவருடன்தாம் எப் போதும் இருந்து வந்தார்கள். நான் அங்குச் செல்லும்போது அவர்களைப் பார்த்து வருவேன். அவர், குடும்பத்தின் பெண் களை ஒருவர் ஒருவரை விட்டு பிரிய அனுமதிக்கவில்லை. குழந் தைகள் எல்லாரையும் யாதொரு வேற்றுமையின்றிப் பாராட்டி வந்தார். பிள்ளைகளும் அவரைத் தாம் தந்தையென்று நினைத்து நடந்துவந்தார்கள். இந்த விபத்து திடீரென்று நேர்ந்துவிட்டது. அதுவும் நான் வேறொரு வேலையில் ஈடுபட்டிருந்த சமயத்தில் வந்துவிட்டது.

அந்தக் காலத்தில் சப்ரா நகரத்திலிருந்து சிறிது தொலைவில் ஓடிக்கொண்டிருந்த சரயூ நதிக்குத் தகனக் கிரியைக்காக நாங்கள் சென்றோம். அடுத்த நாட்காலை குடும்பத்தார் அனைவருடன் நாங்கள் மோட்டாரில் ஜீராதேயீக்குச் சென்றுவிட்டோம். அங் கேயே வீட்டில் சிரார்த்தம் முதலானவை செய்யப்பட்டன. மாகா ணம் முழுவதிலும் என் தமையனாரின் புகழ் பரவியிருந்தது. அவர் பொதுஜனத் தொண்டில் அதிகப் பொழுது செலவழித்து வந்திருந்தார். இதுமட்டுமன்றி, அவர் சப்ராவிலும் மற்ற இடங் களிலும்கூட மக்களுக்குத் தொண்டாற்றி வந்திருந்தார். யாராவ தொருவர் வீட்டில் யக்ஞம் நடந்தால், அதற்கு ஏற்பாடு செய் வதற்கு அவர்தாம் உதவி புரிவார். ஏதாவது சபையோ, மகா நாடோ எங்கேனும் நடந்தால் அவர் அதற்கு ஏற்பாடு செய்வதில் சேர்ந்துகொள்வார். தனிப்பட்ட முறையிலும் அவர் மக்களோடு மிகவும் நன்றாக நடந்துகொள்வார். யாருக்காவது ஏதாவது தேவைப்பட்டால், அதை நிறைவேற்றுவதற்குத் தயங்கமாட்டார். இதனால், அவர் இறந்த செய்தி அச்சிடப்பட்டதும் மாகாண மெங்குமிருந்தும் நிறைய நண்பர்களிடமிருந்து அனுதாபத் தந்தி களும் கடிதங்களும் வரத் தொடங்கின. இவற்றால் எனக்கு மிகவும் ஆறுதல் உண்டாயிற்று. மகாத்மாஜீயின் ஆறுதலளிக்கும் சொற் களால் பயனடையாமலிருக்க முடியாது. அவை எனக்கு நிறைய ஆறுதலளித்தன.

இவையெல்லாமிருந்தும்கூட எனக்கு இச்சமயம் மிகவும் துக்கமும் கஷ்டமுமான காலமாயிருந்தது. குடும்பக் காரியங் களோடு நான் யாதொரு தொடர்பும் வைத்து வரவில்லையென்

பதைக் கூறியிருக்கிறேன். எல்லாவற்றையும் தமையனார் தாம் கவனித்துவந்தார். நான் பணம் சம்பாதித்தபோதும்கூட எனக்கு வேண்டிய வசதிகளையும் தேவைப்பட்டவைகளையும் அவர்தாம் கவனித்து வந்தார். பட்னாவுக்கு வரும்போது எனக்குத் துணி மணிகள் சரியாக இருக்கின்றனவா, வேட்டிகள் புதியனவா அல்லது கிழிந்து போய்விட்டனவா, எனக்கு எத்தனை குர்த்தாக் கள் இருக்கின்றன, காலைச் சிற்றுண்டிக்கு என்ன உண்கின்றேன் என்பனவற்றையெல்லாம் வேலைக்காரனிடம் கேட்பார். பிறகு தேவைக்கு ஏற்றவாறு வேலைக்காரனுக்கும், என்னுடைய குமாஸ்தா சராபத் ஹுஸைனுக்கும்—அவரை நாங்கள் எல்லாரும் முன்ஷீ என்று கூப்பிடுவோம்—கட்டளையிட்டுச் செல்வார். நானும், என் செலவுக்குப் போக மிஞ்சியதை என் தமையனா ரிடமே ஒப்படைத்துவிடுவேன். குடும்பத்தில் இருந்த சிறிதளவு ஜமீன்தாரியிலிருந்து மாதம் ரூ. 400 இலிருந்து 500 வரையில் வருவாய் வந்துகொண்டிருந்தது. என் தந்தையார் ஜமீன்தாரி வேலையின் அருகே போவதில்லை. அதனால் அது சரியாக நடக்க வில்லை. ஆகையால் நிறைய வருவாய் வந்தும்கூடச் சில சமயங் களில் பண நெருக்கடி உண்டாகிவிடும். என் தமையனார் பிரயா கில் பி. ஏ. யில் படித்துக்கொண்டிருந்த சமயத்தில் பல்கலைக் கழகப் பரீட்சைக்குக் கட்டணம் செலுத்துவதற்காக அவர் பணம் கேட்டனுப்பியபோது என் தந்தை பட்ட கஷ்டத்தைப்பற்றிக் கூறியிருக்கிறேன். அவர் கேட்டது யாதும் பெரிய தொகை யன்று. இதற்கு ஏற்பாடு செய்வது திவானுடைய பொறுப்பு. ஆனால் திவான் விரைவில் பணம் கொடுக்க இயலாமற் போகவே என் தந்தை கடன் வாங்கிக் கொடுத்தனுப்ப வேண்டிவந்தது. பணக்கஷ்டம் எப்போதுமே இருந்துவந்தது. அதற்கு இது ஒரு சிறிய உதாரணம்.

நான் சப்ராவில் படித்துக்கொண்டிருந்தபோது எனக்கு ரொக்கப் பணத்திற்கு அதிகத் தேவை ஏற்படவில்லை. இரண்டு பலசரக்குக் கடைக்காரர்களிடம் சரியான ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. நான் சீட்டெழுதி அனுப்பிவிடுவேன். அவர்கள் வேண்டியவற்றை உடனே அனுப்பிவிடுவார்கள். பிறகு அச் சீட்டுக்களையெல்லாம் எடுத்துக்கொண்டு அவர்கள் ஜீராதேயிக்குச் சென்று அங்கே பணம் பெற்றுக்கொள்வார்கள். பள்ளிக்கூடச் சம்பளத்திற்கும் புத்தகங்கள் அல்லது துணிமணி வாங்கு வதற்கும் தாம் பணம் வேண்டியிருக்கும். ஜமீன்தாரியின் வழக்கு விசாரணை கோர்ட்டில் நடக்கும்போது அதற்காக வீட்டிலிருந்து

வருபவர்களிடமிருந்து பணம் வாங்கிக்கொள்வேன். இந்த வேலேக்காக கின்னு ராய் என்று ஒருவர் நியமிக்கப்பட்டிருந் தார். அவர் அடிக்கடி சப்ராவுக்கு வந்து போய்க்கொண்டிருப் பார். இதனுல் எனக்குப் பணத்திற்காக யாதொரு கஷ்டமும் என்றுமே உண்டானதில்லே. ஆனுல் என் தமையனுருக்கு இப்படி நடக்கவில்லே. அவர் பட்னுவில் படித்தபோதும் பிறகு பிரயாகில் படித்தபோதும் அவருடைய செலவுக்காக மாதா மாதம் பணம் வேண்டியிருந்தது. இதற்காக அவர் அதிகத் துன்பப்பட வேண்டியிருந்தது. இதை அவர் மறக்கவில்லே. இதனுல், என் தந்தையார் காலமானபின், ஜமீன்தாரியைக் கவனிப்பதைத் தாமே எடுத்துக்கொண்டதும், என் செலவுக்குப் பணம் அனுப்பு வதற்குச் சிறந்த ஏற்பாடு செய்துவிட்டார். உண்மையைச் சொல்லப்போனுல், என் தந்தையின் வாழ்நாளிலேயே, என் தமையனுர் பி. ஏ. பரீக்ஷையில் தேறிவிட்டுப் பிரயாகிலிருந்து வந்தபின் ஜமீன்தாரியின் காரியங்களேத் தாமே கவனிக்கத் தொடங்கிவிட்டார். அப்போதிலிருந்தே அவர் என் செலவுக்கு வேண்டிய பணத்திற்குச் சரியான ஏற்பாடு செய்துவிட்டார். என் தந்தையார் இறக்கும்போது சிறிது கடன் இருந்தது. அவர் இறந்தபின் அண்ணன் மகள் கல்யாணம் ஒன்று நடந்தது. அதனுல் மேலும் சிறிது கடன் உண்டாகிவிட்டது. இப்படியாக எத்தனேயோ ஆயிரம் ரூபாய் கடன் இருந்தது. ஆனுல் இவ்வளவு பெரிய ஜமீன்தாரிக்கு இது செலுத்த முடியாததொரு பெரிய கடன் அன்று. ஜமீன்தாரியிலிருந்து மட்டுமன்றி வேறு வகையி லும் வருவாய்க்கு வழியிருந்தால் இது ஒன்றும் பெரிய கடன் அன்று. என் தமையனுர் பீகார் பாங்கியின் சப்ரா கிளேயின் மானேஜராக இருந்தார். ஆனுல் அங்குச் செலவுக்குப் போக மீதம் விழும்படி அவருக்கு அத்தனே சம்பளம் கிடைக்கவில்லே. நான் ஏதோ சம்பாதித்து வந்தேன், ஆனுல் செலவும் அதிகமா யிருந்தது. இதனுல் அந்தக் கடனே அடைக்க முடியவில்லே. இன்னும் ஒரு பெண்ணின் கல்யாணமும் சேர்ந்துகொண்டது. அதிலும் நிறையச் செலவாயிற்று. பெரியம்மா இறந்துபோனுள். அவருடைய சிரார்த்தத்திற்குச் செலவு பிடித்தது. ஆனுல் இதனுல் கடன் வளரவில்லே. இதற்கு மாருக வரும்படி சற்றுப் பெருகியது. ஏனெனில் பெரியம்மாளுக்குத் தீர்த்த யாத்திரை செய்வதற்காக ஆண்டுதோறும் கொடுத்துவந்த ரூ. 1200 இப்போது மிச்ச மாயிற்று. அப்படியும்கூட எங்கள் மேலிருந்த சுமை குறைய வில்லே. ஆயினும் எல்லாரும் மிகவும் சௌகரியமாக வாழ்ந்து

வந்தார்கள். வெளித்தோற்றத்திற்கு வாழ்க்கை சிறப்பாகவே இருந்துவந்தது. பேரும் புகழும் மேலும் பரவியது. தமையனுர் மிகவும் தயாள சிந்தை உள்ளவர். நிறையச் செலவு செய்து வந்தார். ஆனுல் ஆடம்பரத்திற்காகவும், பகட்டிற்காகவும் அன்று. ஆயினும் வேறு எத்தனேயோ செலவுகள் இருந்தன. இதனுல் இப்போது மேற்பார்வை நன்ருக இருந்தும்கூட முன்னிருந்த கடனேத் தீர்க்க முடியவில்லே. நான் நிறையச் சம்பாதிப்பேன் என்றும் அதனுல் கடன் எளிதில் அடைபட்டுவிடுமென்றும் தமையனுர் நம்பியிருந்தார். நான் வக்கீல் வேலேயை விட்டுவிட முடிவு செய்ததும் அவர் ஆசையில் மண் விழுந்துவிட்டது. ஆயினும் அவர் ஒரு வார்த்தைகூட என்னிடம் என்றுமே, கூறியதில்லே.

பொதுஜனத் தொண்டில் எனக்கு இருந்த ஆர்வம் அவருடைய தூண்டுதலின் பேரில்தான் உண்டாகியது என்பதை அவர் உணர்ந்தார். அவரால் இயன்ற வரையில் அவர் எப்போதுமே எனக்கு இதில் உதவி புரிந்துவந்தார். ஒருநாளும் அவர் குறைகூறியதே கிடையாது. இந்த மாதிரியான வேலேகளிலிருந்து என்னேத் தடுக்க வேண்டுமென்ற எண்ணத்தை தம் மனத்தில் எழவிடவில்லே. இதனுல், தாம் கொண்டிருந்த லௌகீக ஆசைகளிலெல்லாம் மண் விழுந்துவிட்டதைக் கண்டும்கூட அவர் சந்தோஷமாகவே இருந்துவந்தார். என்னேயும் எப்போதுமே சந்தோஷமாகவே இருத்தி வர முயன்று வந்தார். பாங்கியின் வேலேயிலிருந்து நிறைய சம்பாத்தியம் வரமுடியாதென்று எண்ணினுர். அதிகச் சம்பளமுள்ள வேறு வேலேக்கு ஆசைப்பட்டிருந்தால் அது அவருக்குக் கிடைத்திருக்கும். ஏனெனில் மிகவும் ஊக்கமுடைய மானேஜர் என்று அவருக்குப் பெரும் புகழ் இருந்தது. ஆயினும் தாம் நிறுவ உதவிய பாங்கியை எக்காரணத்தாலும் விட்டுவிட அவருக்கு மனமில்லே. இது மட்டுமன்றி, அந்தப் பாங்கியில் பல சௌகரியங்களும் இருந்தன. அவர் ஒரு ஊழியர்போலப் பணிபுரியவில்லே. அவர் முதலாளிபோலவே வேலே பார்த்து வந்தார். அவர் உழைத்தது போல வேறு எந்த ஊழியனும் (மானேஜர்) எந்த பாங்கியிலும் வேலே புரிந்திருக்க மாட்டான். அப்படியும் அவர் அநேகமாக ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் ஜீராதேயீக்குச் சென்று குடும்பக் காரியங்களேப் பார்த்துவந்தார். பொதுஜனத் தொண்டிலும் அவர் நிறையப் பொழுதைக் கழித்தார். பாங்கியின் அதிகாரிகள் இதற்கு என்றுமே தடை செய்ததில்லே. இக்காரணங்களால் அவர் பாங்

கியைவிட்டுப் பிரிவது பொறுத்தமன்று எனக் கருதினர். ஆயினும் வேறு ஏதாவது வழியில் சம்பாத்தியத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்று விரும்பினர். இதனல் அவர் அரிசி மில் ஒன்றைத் தொடங்கினர்.

நான் காங்கிரஸ் வேலையில் முழுகியிருந்ததால், மில் விஷயம் மிகவும் விரிவாக வளர்ந்த பிறகுதான் அதைப்பற்றி எனக்குத் தெரிய வந்தது. என் தமையனரின் கையில் பாங்கியின் வேலை, கூட்டுறவு சங்கங்களின் வேலை, இன்னும் மற்ற மற்ற வேலைகள் நிறைய இருந்ததால், இந்த மில் வேலையைத் தாமே கவனிப்பதற்கு அவருக்கு நேரமில்லை. அவர் மற்றவர்களை நம்பியிருந்தார். மற்றவர்கள் அனுபவக் குறைவாலோ, சோம்பேறித் தனத்தாலோ அல்லது வேறு காரணத்தாலோ அதைச் சரியாக நடத்த முடியவில்லை. மில்லுக்குப் பணம் தட்டுப்பட்டது. நெல் பிடிக்கும் காலம் கழிந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில் வாங்காவிட்டால் லாபம் கிடைக்காது. ஆயினும் யாரிடமிருந்தாவது அப்போது பணம் வாங்கிப் போட்டு சமாளித்துவிட்டால் அரிசியை விற்றபின் பணத்தை எடுத்துவிடலாமென்றும், அதை மகாஜனுக்குச் செலுத்திவிடலாமென்றும் ஒரு நம்பிக்கையிருந்தது. விலைவாசி இருந்துவந்த நிலைமையிலிருந்து, போட்ட பணத்துக்கு வட்டி கொடுத்த பின்னும் நல்ல லாபம் கிடைக்குமென்பது தெரிய வந்தது. அவர் அப்படித்தான் நினைத்தார். அதனல் "சேட் ஜம்நாலால்ஜீயிடமிருந்து ஒரு 'சீசனுக்குக்' கொஞ்சம் பணம் வாங்கிக் கொடு" என்று என்னிடம் கூறினர். சேட்ஜீ இதற்கு ஒத்துக் கொண்டார். பணம் வந்துவிட்டது. மில் மிகவும் மும்முரமாக நடந்து வந்தது. அரிசி அரைப்பதற்கு முன்னமே விற்றுப்போய்விடும். கடைக்குமுன் எப்போது பார்த்தாலும் வாங்க வந்தவர்கள் ஒரே கூட்டமாக மொய்த்துக் கொண்டிருந்தார்கள். நிறைய லாபம் கிடைக்குமென்று எல்லாரும் நினைத்தார்கள். மில்லை நடத்தி வந்த கனவான் விலை விதிப்பதில் தவறு செய்துவிட்டார். அடக்க விலைக்குக் குறைவாகவே அரிசி விற்கப்பட்டு வந்தது. இந்த நிலையில் வாங்குபவர்கள் வந்து குவிந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. எவ்வளவுக்கு அரிசி நிறைய விற்றதோ, நஷ்டமும் அவ்வளவுக்குப் பெருகிக்கொண்டே சென்றது. சேட்ஜீயின் பணம் வந்தபின் நானும் இந்த விஷயத்தில் சிறிது கவனம் செலுத்த ஆரம்பித்தேன். ஒரு நாள் நான் மில்லுக்குச் சென்றேன். அங்குத் தங்கிக் கணக்கைப் பார்த்தேன். அடக்கவிலைக்குக் குறைவாக அரிசி விற்கப்படுகிறது என்பது

தெரிய வந்தது. மானேஜர் நான் கூறியதை ஒப்புக் கொள்ள வில்லை. கடைசியில் தமையனாரும் தம்முடைய நேரத்தை இதில் செலவிட வேண்டியிருந்தது. அவரும் கணக்குப் போட்டுப் பார்த்ததில் ஏராளமாக நஷ்டமாகி விட்டதென்பதைத் தெரிந்து கொண்டார். இதனால் சேட்ஜீயின் பணத்தைக் குறிப்பிட்ட காலத்தில் திருப்பிக் கொடுக்கமுடியவில்லை. மெல்ல மெல்லச் சிறிதளவு செலுத்தப்பட்டது. ஆயினும் பெரும்பகுதி நின்று விட்டது.

இந்த நிலைமை தெரியவந்ததும் எங்கள் இருவருக்கும் மிகவும் வெட்கமாயிருந்தது. ஆயினும் நான் ஒன்றும் செய்ய முடியவில்லை. அடிக்கடி நினைவு படுத்தப்பட்டு வந்தாலும் பணம் செலுத்த முடியவில்லை. சேட்ஜீயின் மார்வாரி நண்பர் ஒருவர், பைஜ்நாத் கேடியா என்பவர், பீகாரில் சிறிது நிலம் வாங்கிப் பயிர் செய்ய விரும்பினார். சேட்ஜீயும், கேடியாஜீயும் ஒரு முறை ஜீராதேயீக்கு வந்தார்கள். எங்கள் ஜமீன்தாரியில் 70–80 பீகா நிலத்தை நாங்களே சாகுபடி செய்து வந்தோம். அதில் நெல், கோதுமை, கரும்பு முதலிய எல்லாவிதமான விளைச்சலும் விளையக்கூடும். என் வீட்டிலிருந்து சுமார் ஒரு கல்லுக்குள் ளாகவே அந்த நிலமிருந்தது. சேட்ஜீயின் கடனும் மற்றக் கடன்களும் சேர்ந்து சுமார் 60–65 ஆயிரம் இருந்தன. அந்த நிலத்தையும் வீட்டையும் அவருக்கு விற்று விட்டால் அவர் எல்லாக் கடன்களையும் தாமே தீர்த்து விடுவதாக ஒப்புக் கொண் டார். வீடு நல்ல மச்சுக் கட்டடம். மிகவும் அழகானது. தாத்தா காலத்தில் கட்டப்பட்டது. ஆயினும் என் தமையனார் அதில் எத்தனையோ ஆயிரம் போட்டு அதைப் பெரிதாக்கி ஒரு பாகத்தை ஒட்டி மேலே மாடியும் எழுப்பியிருந்தார். அந்தச் சமயத்தில் நாங்கள் வீட்டையும் எங்கள் சாகுபடியிலிருந்த நிலத் தையும் விற்றுக் கடனிலிருந்து விடுதலை பெற்றிருந்தால், எல்லா விதத்திலும் நலமாயிருந்திருக்கும். அதற்குப் பின்னும்கூட, குறைந்தது 500 ரூபாய் மாத வருமானம் ஜமீன்தாரியிலிருந்து சுத்தமாக மிஞ்சி யிருந்திருக்கும். ஆம், வீடு வேறொன்று கட்டிக் கொள்ளவேண்டி வந்திருக்கும். ஆயினும் அந்தச் சமயத்தில் குடும்பத்தின் பெரும்பாலோர் சப்ராவில் வசித்து வந்தார்கள். எங்களுடைய ஜமன்தாரியில் எங்காவது ஒரு சிறிய வீட்டைக் கட்டிக்கொள்வது கடினமாயிருந்திராது. எனக்கு இந்த யோசனை பிடித்திருந்தது. கடனை அடைப்பதற்கு இதைவிடச் சிறந்த வழி இச்சமயத்தில் வேறொன்றுமிருக்காது என்பதை நான் வற்புறுத்தி

னேன். ஆகையால் இதையே முடித்துவிட வேண்டுமென்றேன்.

சேட்டுகளுடன் பேச்சு வார்த்தை நடந்தது. அவர்கள் முன்னமே இதற்குத் தயாராயிருந்தார்கள். இந்தச் சுமையை ஒழிக்கவேண்டுமென்றும் அப்படிச் செய்யாவிட்டால் இது பின்னுல் நம் கழுத்தை நெருக்கிவிடுமென்றும் சேட் ஜம்நாலால்ஜீயும் வற்புறுத்தினுர். தாத்தா அப்பா கட்டியதும் நாங்கள் அனைவரும் பிறந்த இடமுமான பழைய வீட்டை விற்பதற்கு என் தமையனுர் மிகவும் தயங்கினுர். ஆயினும் வேறு வழியில்லாமல் ஒருவிதமாக ஒத்துக்கொண்டார். பிறகு குடும்பத்துப் பெண்களும் பாபூ மதுரா பிரசாத் உட்பட சில நண்பர்களும் கூறியதைக் கேட்டுக் கொண்டு அவர் வீட்டையும் நிலத்தையும் விற்பதற்கு ஒத்துக் கொள்ள மாட்டேன் என்று விட்டார். விஷயம் அத்துடன் முடிந்து விட்டது. மூதாதையாரின் வீடும், சாகுபடி செய்துவந்த நிலமும் விற்கப்படவில்லை. ஆயினும் சில நாட்களுக்குள்ளாக மற்றெரு கடன்காரர் மிகவும் நெருக்கடி செய்ததின் பேரில், ஜமீன்தாரியின் பெரும்பாகத்தை விற்க வேண்டிவந்தது.

அரிசி மில்லின் நஷ்டத்தில் மூழ்கிக் கிடந்திருந்தும் அவர் வேறு ஏதாவது வியாபாரம் செய்ய ஆசைப்பட்டார்! சப்ராவில் மின்சாரம் உற்பத்தி செய்வதற்கு ஒரு தொழிற்சாலையை அமைக்க அவர் ஏற்பாடு செய்தார். 1930இல் நான் சிறையில் இருந்த போது இப்படிச் செய்வதாக நிச்சயிக்கப்பட்டது. பணம் அவர் கையில் கிடையாது. சப்ரா எலெக்டிரிக் சப்ளை கம்பெனி ஒன்று நிறுவப்பட்டது. ஆயினும் அரசாங்கமானது அவருக்குத்தாம் லைசென்ஸ் அளித்தது. கம்பெனிக்கு அளிக்கவில்லை. இதனுல் மின்சார தொழிற்சாலையை அவரே அமைத்தார். பணம் கடன் வாங்கி அது நிறுவப்பட்டது. கம்பெனி பாங்கியிலிருந்து சிறிதளவு பணம் வாங்கிக் கொடுத்தது. சிறிது, பங்குகள் (ஷெயர்) விற்றும், சிறிது, அவர் பொறுப்பில் கடன் வாங்கியும், அதில் போடப்பட்டது. முன்னமே இருந்ததும் இப்போது வாங்கிய இந்தக் கடன்கள் எல்லாமுமாகச் சேர்ந்து பெரும் தொகையாகி விட்டது. அவர் இறப்பதற்கு ஓரிரண்டாண்டிற்கு முன்னமே ஆண்டிற்குச் சுமார் ரூபாய் 2200 வருவாய் உள்ள ஜமீன்தாரியை விற்க வேண்டி வந்துவிட்டது. அப்படியும் இதுவரையில் எல்லாக் கடன்களும் அடைபடவில்லை. சேட் ஜம்நாலால்ஜீக்குக் கொடுக்க வேண்டிய கடன் அப்படியே நின்றது. மற்றும் பல இடங்களிலும் பணம் இன்னும் கொடுக்க வேண்டியிருந்தது. சேட்ஜீ கடனைத்

தவிர மற்றவர்களுடைய கடன்களைப் பற்றி எனக்குத் தெரியாது. ஜமீன்தாரி விற்கப்பட்டதும், இப்போது கடன் சுமை மிகவும் குறைந்துபோயிருக்கும் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் இது எப்படி சாத்தியமாகும்? அப்போது நடந்து வந்த செலவினாலும், மேலும் இப்படிப்பட்ட வியாபாரங்களாலும் கடன் பெருகிக்கொண்டே சென்றது. மின்சாரப் பங்கு விற்றுப் போகுமானால், மேலும் அந்த வியாபாரத்தில் போட்ட பணம் திரும்பி வந்துவிட்டால் நம்முடைய கடன் சுமை குறைந்துவிடுமென்று அவர் அடிக்கடி சொல்லி வந்தார். ஆனால் அவர் எப்போதும் நல்லதையே எதிர்பார்ப்பவராதலால் அப்படிக் கூறி வந்தார். பங்குகளை விற்க முயற்சி செய்யப்பட்டது. ஆனால் மின்சாரத் தொழிற்சாலையில் கம்பெனிக்கு உரிமையில்லாததால் பங்குகளை விற்பது கடினமாயிருந்தது. இவ்வண்ணமாக எங்கள் மேல் கடன் சுமை ஏறிக்கொண்டே சென்றது. வட்டியும் வளர்ந்து கொண்டே சென்றது. கடனை அடைப்பதற்கு வழி ஒன்றும் தென்படவில்லை. எங்கள் பிள்ளைகளில், என் தமையனாரின் மகன் இங்கிலாந்தில் எஃகு செய்யும் வேலை கற்றுக் கொண்டு திரும்பி வந்தான். அவனுக்கு டாடா கம்பெனியில் வேலை கிடைத்து விட்டது. அங்கு அவனுக்கு ஏறக்குறைய 300 – 350 ரூபாய் கிடைத்து வந்தது. அங்கு அவன் குடும்பத்துடன் இருந்ததால் செலவும் அதிகமாயிருந்தது. ஆகையால் அதிகம் மிச்சம் பிடிக்க முடியவில்லை. என் தமையனார் எப்படி என்னிடமிருந்து எதுவும் என்றும் கேட்பதில்லையோ, மேலும் எப்படி என்னைப் பண விஷயங்களைப் பற்றிய கவலைக்கு உட்படுத்த விரும்பவில்லையோ, அதேபோல அவனிடமிருந்தும் எதுவும் வேண்டுமென்று கேட்பதுமில்லை, எதுவும் சொல்லுவதுமில்லை. அவர் இறந்தபின்தான் நாங்கள் எவ்வளவு ஆழமான மடுவில் காலைவிட்டு விட்டோம் என்பது அவனுக்குத் தெரிய வந்தது. பொது மக்களுக்கு அவரிடம் இருந்த பெரும் நம்பிக்கையால் யாதும் சீட்டு நோட்டு ஒன்றுமின்றியே அவருக்கு ஆயிரம் ஆயிரமாகக் கடன் கொடுத்திருந்தார்கள். அவர் உயிருடன் இருந்திருந்தால் இன்னும் எத்தனை ஆயிரம் அவருக்கு மக்களிடமிருந்து கிடைத்திருக்குமென்பது சொல்ல முடியாது.

அவர் இறந்தபின் இவை எல்லாவற்றையும் கவனிக்க வேண்டிய அவசியம் வந்தபோது, அவர் யாருக்கு எவ்வளவு கொடுக்க வேண்டு மென்பதும் யாரிடமிருந்து எவ்வளவு வரவேண்டு மென்பதும் எனக்கு முதலில் தெரியாது. நான் சப்ராவில் தங்கிவிட்

டேன். அவருக்கு மிகவும் நம்பிக்கையுள்ள பாங்கி ஊழியர் ஒருவர் இருந்தார். அந்த ஊழியருக்கு அவருடைய கொடுக்கல் வாங்கல் விவரம் முழுவதும் தெரியும். அவர் எனக்குச் சிலவற்றைப் பற்றிக் கூறினர். பிறகு கடன்காரர்கள் ஒவ்வொருவராக என்னிடம் வந்து தமக்கு வரவேண்டியதைக் கூறினர்கள். எவ்வளவு கொடுக்க வேண்டுமென்ற விவரம் முழுவதும் எனக்குத் தெரிய வந்ததும் நான் மிகவும் கலக்கமுற்றேன். ஏனெனில், சொத்து எல்லாவற்றையும் விற்று முதலாக்கினுலும் கூட எல்லாருடைய கடனையும் அடைக்க முடியாது போலிருந்தது. ஆம், நல்ல விலை வந்தால் ஒரு வேளை எப்படியாவது எல்லாவற்றையும் விற்றுக் கடனைச் செலுத்தி விடலாம். ஆனுல் யார் இப்போது ஜமீன்தாரிக்கு நல்ல விலை கொடுப்பார்கள்? அதுவும் அவசரப் பட்டு விற்க வேண்டுமானுல் எப்படிக் கிடைக்கும்? இவ்வளவு கடனின் சுமையைத் தாங்க என்னுல் முடியாது. எப்படியாவது கடன்காரர்கள் ஜமீன்தாரியை எடுத்துக்கொண்டு என்னை விடுதலை செய்துவிட்டால் எனக்கு மிகவும் அருள் புரிந்ததாகு மென்று நினைத்தேன். ஆனுல் எல்லாக் கடன்காரர்களும் ஜமீன் தாரியை பெற்றுக்கொள்ள விரும்பவில்லை. ஓராண்டிற்குள் ஏதாவது ஏற்பாடு செய்து பணத்தைச் செலுத்த முயற்சி செய்வேனென்றும், ஜமீன்தாரியை எடுத்துக்கொள்ள விரும்பினவர்களுக்கு இப்போதே அதை எழுதிக் கொடுக்கத் தயார் என்றும் நான் அவர்கள் எல்லாரிடமும் கூறினேன். என் தமையனரின் மீது மக்களுக்கு நிறைய நம்பிக்கையும் அன்பும் இருந்ததாலும், மேலும், என் மீதும் நம்பிக்கையிருந்ததாலும், அவர்கள் சிறிது கூடத் தயங்காமல் நான் கூறியதை ஏற்றுக் கொண்டார்கள். இப்போது மற்ற எல்லா வேலைகளையும் விட்டுவிட்டு ஜமீன் தாரியை விற்பதற்கு ஏற்பாடு செய்வதில் ஈடுபட வேண்டுமென்றும், இந்தச் சுமையை ஒழித்து விட்டுத்தான் பொதுஜனத் தொண்டுக்குத் திரும்ப வேண்டுமென்றும் தீர்மானித்தேன்.

# 108. கடன் விடுதலையும், பம்பாய்க் காங்கிரஸும்

பம்பாயில் நடைபெறவிருந்த காங்கிரஸின் நாள் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அதன் தலைவனாக என் பெயர் சொல்லப்பட்டு வந்தது. கராச்சிக் காங்கிரஸுக்குப் பிறகு ஒரிசாவில் நடைபெறவிருந்த காங்கிரஸின் தலைமைக்கும் என் பெயர் வந்தது. நான் ஒரு விதமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தேன். ஆனால் சத்தியாக்கிரகம் கிளம்பிவிட்டதால் அந்தக் காங்கிரஸ் நடக்கவில்லை. பிறகு முறைப்படி காங்கிரஸ் கூடுவதாக பேச்சு வந்ததும் மக்களுக்கு இயல்பாகவே என் பெயர் நினைவிற்கு வந்தது. இதுமட்டுமன்றி, பூகம்பத்தால் விளைந்த துன்பத்தைத் துடைத்தவன் என்று நாடெங்கும் மக்களுக்கு என்மீது நிறைய அன்பும் நம்பிக்கையும் பெருகியிருந்தது. நான் தலைவனாக வேண்டுமென்று காந்திஜீயும் விரும்பினார்.

தமையனார் இறந்ததினால் நான் மனமுடைந்திருந்தேன். அதற்குப் பின் கடன் சுமையைப் பற்றித் தெரிய வந்ததும் பயந்து போய்விட்டேன். இந்த நிலைமையில் நான் காங்கிரஸ் தலைமையின் பொறுப்பை ஏற்றுக்கொள்வது தகுதியன்று எனவும், என்னால் முடியாதெனவும் எண்ணினேன். பூகம்பத்தை ஒட்டி நான் செய்த தொண்டால் நாடானது மகிழ்ச்சியுற்று என்னிடம் தனக்குள்ள நம்பிக்கையையும் பரிவையும் காட்ட விரும்புகிறதென்றும், ஆகையால், நான் இந்தப் பொறுப்பை ஏற்றே ஆகவேண்டுமென்றும், கடன் சம்பந்தமாக சேட் ஜம்நாலால்ஜீயிடம் சொல்லப் பட்டிருக்கிறதென்றும் அதை அவர் கவனித்துக் கொள்வார் என்றும் மகாதேவ் தேசாய் காந்தீஜீயின் சார்பில் எனக்குக் கடிதம் எழுதினார். ஜம்நாலால்ஜீயின் கடன்தான் பெரியதாயிருந்ததால், அவர் ஏதாவது வழியை யோசித்து, வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார் என்று அங்கே நினைக்கப்பட்டதாகத் தோன்றியது.

சேட்ஜீ என் குடும்பத்தாரைச் சந்திப்பதற்காக ஒரு முறை ஜீராதேயீக்கு வந்தார். என் குடும்பத்தாரிடமும் அவருக்கு அதிக அன்பு உண்டாகிவிட்டது. என்னுடைய அண்ணியாரும் என் மனைவியும், இரண்டு மருமகள்மாரும் நெடுநாள் வரையில்

சபர்மதி ஆச்ரமத்தில் இருந்திருந்தார்கள். அங்கேயே அவர்கள் எல்லாருடனும் அவருக்கு அறிமுகமாகி விட்டது. இதனால் என் தமையனார் இறந்தபோது அவர் துக்கம் விசாரிப்பதற்காக ஜீரா தேயீக்கு வந்தார். குடும்பத்தின் நிலைமையைப் பற்றியும் கடனைப் பற்றியும் கேட்டறிந்தார். ஜமீன்தாரி முழுவதும் நல்ல விலைக்கு விற்கப்படுமானால் கடன் எல்லாவற்றையும் செலுத்தி விடலாமென்று அவர் நினைத்தார். ஆனால் ஜமீன்தாரியின் மீதிருந்த பற்றை ஒருமிக்கக் கைவிட வேண்டிவரும் என்றும் நினைத்தார். எனக்குச் சம்மதம்தான். இதனால்தான் மகாத்மாஜீ அவரிடம் இந்த விஷயத்தை ஒப்படைத்துவிட்டு, என்னைக் கடனைப் பற்றிய கவலையை அவரிடம் விட்டு விட்டு காங்கிரஸ் வேலையை ஏற்றுக்கொள்ளும்படி கூறினார். இங்கிருந்த கடன் காரர்களும் எனக்கு ஓராண்டு கெடு கொடுத்து விட்டார்கள். நான் காங்கிரஸின் தலைவனென்ற மிகவும் கடினமான பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். சேட்ஜீயானவர் தம் முனீமை (காரியஸ்தரை) அனுப்பிக் கடன்காரர்கள் எல்லாரிடமிருந்தும் கணக்கைக் கேட்டு வாங்கி மொத்தம் எவ்வளவு கொடுக்க வேண்டுமென்பதைத் தெரிந்து கொள்ளும்படியும், மேலும் அவர்களுடன் பேசி அவர்களில் யார் யார் ஜமீன்தாரியை வாங்கிக் கொள்ளத் தயாராயிருக்கிறார்கள் என்பதையும் அறிந்து வரும்படி சொல்லி அனுப்பினார்.

ஆனால் என்னுடைய துன்பம் இத்தோடு நிற்கவில்லை. என் தமையனாரின் மகன் ஜனார்த்தனனுக்கு ஆறு வயதுள்ள துடியான பிள்ளை ஒருவன் இருந்தான். அவன் மீது நாங்கள் எல்லாரும் கொள்ளை ஆசை வைத்திருந்தோம். அவன் டைபாயிடால் இறந்துவிட்டான். நான் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆயினும் காங்கிரஸ் தலைமையை ஏற்றுக்கொண்டு விட்டேன். இது ஒரு விதத்தில் நல்லதாயிற்று. அதில் மனம் ஈடு பட்டுவிட்டது. அதற்குப் பின் குடும்பத்தைப் பற்றிக் கவலைப் படுவதற்குப் பொழுதேயில்லை. காங்கிரஸில் தலைமை வகித்ததைப் பற்றிக் கூறுவதற்கு முன் குடும்ப விஷயத்தைக் கூறி முடித்துவிடுவது நன்று. அந்த அத்தியாயம் காங்கிரஸின் தலைவன் பதவியிலிருந்து நீங்கிய பின்னும் சிறிது காலம் நீடித்து நடந்து கொண்டிருந்ததாயினும் அதை இங்கேயே கூறி முடித்து விடுவது நன்று. கடன் கணக்கு வழக்கு எல்லாவற்றையும் பார்த்து முடித்து சேட்ஜீக்குத் தெரிவிக்கப்பட்டதும் கடன்காரர்களில் எவரெவர் சம்மதப்பட்டார்களோ அவர்களுக்கு ஜமீன்தாரி

யைக் கொடுத்து விடுவதற்கு முயற்சி செய்யப்பட்டது. சில கடன்காரர்கள் இதற்கு ஒத்துக்கொண்டார்கள். அவர்கள் கையில் ஜமீன்தாரி ஒப்படைக்கப்பட்டது. ஒருவர் நீங்கலாக மற்றக் கடன்காரர்கள் எல்லாருமே மிகவும் நல்ல முறையில் நடந்து கொண்டார்கள். ஒரு கனவான் மட்டும் கசக்கிப் பிழிந்து வட்டியை வாங்கினுர். கடனைத் தீர்க்கும்போது மற்றக் கடன் காரர்கள் செய்தது போலல்லாமல் இவர் ஒரு பைசாகூட விட்டுக் கொடுக்கவில்லை. மற்றவர்கள் எல்லாரும் தமையனுர் இறந்த தேதியிலிருந்து ஏழெட்டு மாதங்களுக்குப் பிறகு கடன் அடைத்த நாள்வரையில் கூடிய வட்டியை வாங்கிக் கொள்ளவில்லை. சிலர் இன்னும் அதிகமாகவே விட்டுக் கொடுத்தார்கள். ஜமீன்தாரியின் பெரும்பகுதியை விற்றபின்னும் ஜமீன்தாரியை ஏற்றுக்கொள்ளாத சில கடன்காரர்களுக்கும் சேட்ஜீக்கும் சேரவேண்டிய பணம் கொடுக்கப்படாமல் நின்றது. நான் எஞ்சியிருந்த ஜமீன்தாரி முழுவதையும் சேட்ஜீக்கு எழுதிக் கொடுத்துவிட்டேன். அவர் மற்றக் கடன்காரர்களுக்குப் பணம் கொடுத்து அவர்கள் கடனைத் தீர்த்துவிட்டார். அப்பணம் முழுவதையும் அந்தச் சமயத்தில் அவர் தம் கையிலிருந்து கொடுக்க முடியவில்லை. அதனுல் அவர் சேட் கன்ஷ்யாம்தாஸ் பிர்லாவிடமிருந்து சிறிது பணம் வாங்கி மிச்சத்தைத் தாம் போட்டுக் கொடுத்து விட்டார். இவ்வண்ண மாகத்தான் கடன் முற்றிலும் அடைக்கப்பட்டது. அதன்பின் எங்கள் ஜமீன்தாரியில் ஒரு மண் தூசிகூட எங்கள் வசமில்லா மற் போய்விட்டது. சேட்ஜீக்குப் பீகாரில் ஜமீன்தாரி வாங்க வேண்டிய அவசியமில்லை. அந்தச் சமயத்தில் அவர் அதை எதற்காகத் தம் பேரில் எழுதி வாங்கிக்கொண்டார் என் ருல் அதை மெல்ல மெல்ல விற்றுத் தனக்கு வரவேண்டிய பணத்தை வசூல் செய்வதற்காகவேதான். கன்ஷ்யாம்தாஸ்ஜீக் கும் இதே கருத்துத்தான் இருந்தது.

ஜமீன்தாரியை விற்றுச் சேட்ஜீக்குப் பணத்தைச் செலுத்து வதாக இருந்தாலும், அது செலுத்தப்படாத வரையில் வட்டி கொடுத்து வரவேண்டியிருந்தது. இப்போது ஜமீன்தாரியிலிருந்து ஒரு பைசாகூட எங்கள் குடும்பச் செலவுக்கு எடுத்துக் கொள்ள முடியவில்லை. நாங்களே விவசாயம் செய்து வந்த நிலமும் ஒத்தி வைக்கப்பட்டிருந்தது. ஆயினும் எல்லாவற்றையும் நாங்கள் தான் பயிரிட்டு அறுவடை செய்து வரவேண்டியிருந்தது. மேலும் அவர்களுக்கு ஆண்டுதோறும் வட்டி செலுத்தி வரவேண்டியிருந் தது. ஜமீன்தாரியை அவர்கள் என் இளைய மகன் தந்நுவின்

பெயரில் குத்தகை எழுதிக் கொடுத்திருந்தார்கள். இவ்வண்ண மாகச் சட்டப்படி அடமானக்காரர் சேட்ஜீயாயினும் ஜமீன்தாரி யும் எங்கள் சொந்த நிலமும் எங்கள் வசம்தான் இருந்தன. அவ ருக்கு ஆண்டுதோறும் வட்டி மட்டும் கொடுத்துவிட வேண்டும். முடிந்த வரையில் அசலும் செலுத்தி வரவேண்டும். பிள்ளைகள் ஏதோ சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். இதனால் சாப்பாட் டிற்கு ஜமீன்தாரியை நம்பியிருக்க வேண்டிய அவசியமில்லாமற் போயிற்று. கடன்காரர்கள் எடுத்துக்கொண்டது போக எஞ்சிய ஜமீன்தாரியை விற்க நான் முயற்சிசெய்து வந்தபோது ஜமீன் தாரியின் விலை இறங்கிக்கொண்டே வந்தது. காங்கிரஸ் மந்திரி சபையார் மேல்வாரத்தைக் குறைத்து ஜமீன்தாரியின் வருவாயைக் குறைத்து விட்டார்கள். இப்போது ஜமீன்தாரிக்கு முன்னிருந்த விலையுமில்லை, பெருமையுமில்லை. இதனால் ஜமீன்தாரி இன்னும் விற்கப்படவில்லை. ஆயினும் அதை விற்பதை மட்டும் நம்பி யிருக்கவில்லை. நான் வக்கீல் தொழில் செய்து கொண்டிருந்த போது சம்பரானில் சிறிது நிலம் வாங்கியிருந்தேன். அதன் பக்கத்திலேயே சர்க்கரை ஆலை ஒன்று கட்டப்பட்டு விட்டதால் கரும்பிலிருந்து சிறிது பணம் வந்து கொண்டிருந்தது. ஜீரா தேயீக்குப் பக்கத்திலிருந்த எங்கள் சொந்த நிலத்திலும் கரும்பு விளையத்தொடங்கியது. சிறிது ஜநார்த்தனனின் சம்பாத்தியத்தி லிருந்தும், சிறிது கரும்புக் குத்தகையிலிருந்து மிஞ்சியதிலிருந் தும், சிறிது குடும்பத்தின் பழங்காலத்து விலையுயர்ந்த பொருள் களை விற்றும் இவ்வண்ணமாகப் பணம் திரட்டி வட்டியையும் முதலையும் செலுத்தத் தொடங்கினேன். அதாவது வந்த வரு வாயும் மிஞ்சிய தொகையும் எல்லாம் இதற்கே பயன்பட்டு வந் தன. இவ்விதமாக இதுவரையில் அந்தக் கடனுக்கு ஒரு நல்ல தொகை செல்லுபடியாகி விட்டது. ஆயினும் இன்னும் ஒரு சிறிய தொகை கொடுக்கவேண்டியிருக்கிறது. வட்டி தவறாமல் கொடுக்கப்பட்டு வருகிறது. இப்போது இருக்கும் நிலைமையில் ஜமீன்தாரியை விற்காமலே முதலையும் சிறிது காலத்திற்குள் கொடுத்துத் தீர்த்து விடலாம் என்று நம்புகிறேன். இவ்வளவு பெரிய கடனின் சுமை என்மேல் வந்து சேர்ந்த நாட்கள் எனக்கு மிகவும் இருள் மயமான நாட்களாக இருந்தன. சேட் ஜம்நா லால்ஜீயின் சாமர்த்தியமும் தயாள குணமும்தான் எனக்கு ஒரு வழி காட்டின. கன்ஷ்யாம் தாஸ்ஜீயின் உதவியைப் பெற்று அவர் என் தலையில் இருந்த சுமையை இறக்கிவிட்டார். நிலத்தை காப்பாற்ற முடியவில்லை. ஆயினும் மானத்தைக் காக்க முடிந்

தது. நாணயத்தைக் காக்க முடிந்தது. எங்கள் மீது நம்பிக்கை வைத்திருந்த கடன்காரர்களும் காக்கப்பட்டார்கள். அத்துடன் நாட்டின் மிகச் சிறந்த வேலையை ஏற்பதற்கும் ஆற்றல் கிடைத் தது.

தமையனார் போய் விட்டார். ஜம்நாலால்ஜீயானவர் அவர் இடத்தை எடுத்துக் கொண்டார். நான் முன்போலவே கவலை யற்று வாளா இருந்து வந்தேன். அவருக்குச் சொல்லால் நன்றி கூற இயலாது. அத்துடன் என் தமையனாரின் மகன் ஜனார்தனனும் என் மக்கள் மிருத்யுஞ்சயன், தனஞ்ஜயன் இரு வரும் நான் கடனால் துன்பப்பட்ட இந்தக் கஷ்ட காலத்தில் சிறிதுகூட மனங் கலங்கவில்லை என்பதற்காக அவர்களை நான் நெஞ்சார வாழ்த்துகிறேன். குடும்பதிலிருந்த எல்லாவற்றையும் அவர்கள் மகிழ்ச்சியுடனும் சிரித்த முகத்துடனும் கொடுத்துவிட் டார்கள். இந்தச் சுமையைத் தாங்குவதும், கடனை அடைப்ப தற்காக எழுதிக் கொடுக்க வேண்டிய பத்திரங்களில் கையெழுத் துப் போடுவதும் அவர்களுக்கு ஒரு விதத்தில் முக்கிய வேலை களாக அமைந்தன. ஆயினும் அவர்கள் ஒரு நாளும் குறை கூறவுமில்லை, முகத்தைச் சுளித்துக் கொள்ளவுமில்லை. இப்போது அவர்கள் தாமே சம்பாதித்து அதைக்கொண்டு வாழ்ந்து வருகிறார் கள். இப்போது எஞ்சி நிற்கும் கடன் சுமையையும் ஒழிப்பதைப் பற்றிக் கவனம் செலுத்தி வருகிறார்கள். இந்த மனோதிடத்திற்கும் பொறுமைக்கும் நான் அவர்களைப் பாராட்டுகிறேன். கடவுள் அவர்களுக்கு அருள் புரிவான். நல்ல காலம் திரும்பி வருகிற தென்பதற்கு இப்போதே அறிகுறிகள் காணப்படுகின்றன.

பம்பாய்க் காங்கிரஸின் நாள் நெருங்கிவிட்டது. 1931 மார்ச்சுக்குப் பிறகு இப்போதுதான் முறைப்படி பேரவை நடக்கப் போகிறது. இதற்கிடையில் சத்தியாக்கிரகம் இரண்டாவது முறை நடந்துவிட்டது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அரசியல் சீர்திருத் தத்தைப் பற்றித் தம் கொள்கைகளை வெள்ளை அறிக்கை (வொயிட் பேப்பர்) மூலமாக வெளியிட்டு விட்டார்கள். அதன்படி சீமையில் புதிய அரசியல் அமைப்புச் சட்டம் புனையப்பட்டு வந்து கொண் டிருந்தது. காங்கிரஸ் இப்போது சட்டத்திற்குப் புறம்பான சபை யன்று. இந்த விஷயங்களைப் பற்றி அது தன் அபிப்பிராயத்தைக் கொடுக்கப் போகிறது. அத்துடன் 1934 நவம்பரிலேயே, அதாவது காங்கிரஸ் கூடுவதற்குச் சில வாரங்களுக்குள்ளாகவே மத்திய சட்டசபை உறுப்பினர்களின் தேர்தல் நடைபெறுவதாக இருந்தது. இதைப் பற்றியும் காங்கிரஸ் தன் இறுதியான

முடிவைக் கூறவேண்டியிருந்தது. எதிர்கால அரசியல் அமைப்பை ஒட்டிய கொள்கைகளை வரையறுக்க வேண்டியிருந்தது. இதனால் இப்பேரவை அதிகப் பெருமை வாய்ந்ததாயிருந்தது. நான் தொல் வழக்குப்படி என் சொற்பொழிவை எழுதினேன். ஆனால் அதை இன்னும் முடிக்கவில்லை. சற்று முன்னமே வர்தாவுக்குச் சென்று விடலாமென்றும் அங்கே தனிமையாக இருந்து அதை எழுதி முடிக்கலாமென்றும் நினைத்தேன். அங்குக் காந்திஜீயுடன் கலந்து பேசுவதற்கு வாய்ப்புக் கிடைக்கும். ஆயினும் நான் இதுவரையில் எழுதியிருந்த சொற்பொழிவில் புதிதாக வரப் போகும் அரசியல் அமைப்பைப் பற்றி நிறைய ஆராய்ந்து கூறப் பட்டிருந்தது. அதில் எங்காவது அறியாமையாலோ, கவனக் குறைவாலோ நான் ஏதாவது தவறு செய்து விட்டேனோ என்பதை அறிவதற்காக அதை டாக்டர் சச்சிதானந்த சின்ஹாவிடம் காட்டி னேன். அவர் அதைப் பார்த்து விட்டு விஷயம் சரியாக ஆராயப் பட்டிருக்கிறதென்றும், யாதொரு தவறும் இல்லையென்றும் எனக்கு உறுதியளித்தார். நான் பட்னுவிலிருந்து ஜம்ஷேத்பூருக்குச் சென்றேன். அங்கிருந்து வர்தாவுக்குச் செல்வதாக இருந்தேன். ஆனால் அங்கே எனக்குக் காய்ச்சலும் இழுப்பும் வந்துவிட்டன. அங்கேயே தங்கிவிட வேண்டி வந்தது. நலமுற்றபின் வர்தாவுக் குச் சென்றேன். அங்கு அவ்வூரின் நல்ல நீர் காற்றின் உதவி யால் நான் விரைவில் நலமுற்று விட்டேன். என்னுடைய சொற் பொழிவையும் அங்கேயே எழுதி முடித்தேன்.

## 109. பம்பாய்க் காங்கிரஸ்

காங்கிரஸ் பேரவைக்கு ஏற்பாடு செய்ய பம்பாய்க்காரர்களுக்கு மிகவும் குறைவாகக்காலம் கிடைத்தது. ஆயினும் அவர்கள் மிகவும் நன்றாகவும், திறமையாகவும், சிறப்பாகவும் ஏற்பாடுகள் செய்து விட்டார்கள். ஆபத்து சகாயக் கமிட்டிக்குப் பணம் சேர்க்கும் போது மக்களுக்கு எவ்வளவு உற்சாகம் உண்டானதோ அதே போல இந்தப் பேரவையின்போதும் மக்களுக்கு நிறைய உற்சாகம் உண்டாகியது. காங்கிரஸ் இறந்து போகவில்லையென்று காட்டவேண்டுமென்பதை மக்கள் உணர்ந்தார்கள். அவர்கள் ஒரு காங்கிரஸ் நகரை நிறுவினார்கள். அங்கேயே, கடற்கரையின் திறந்த வெளியில் பேரவைக்காக வானத்தின் கீழ் ஒரு மாபெரும்

பந்தலை அமைத்தார்கள். அதில் சுமார் ஒரு லக்ஷம் பேர் உட்காரலாம். காதிக் கண்காட்சிக்கும் அதே போல நேர்த்தியாகச் சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். தலைவர் வரவேற்புக்கும் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. கல்யாண் ஸ்டேஷனிலேயே நாகபுரி மெயிலில் இருந்து நான் இறக்கப்பட்டு விட்டேன். அங்குக் கை கால் கழுவிக்கொண்டு சிற்றுண்டியை முடித்துக் கொண்டு தயாரானேன். கல்யாணிலேயே பல கழகங்கள் சார்பில் எனக்கு வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பட்டன. அங்கிருந்து நான் என் குடும்பத்தாருடனும் சில நண்பர்களுடனும் ஸ்பெஷல் டிரெயினில் பம்பாய்க்குச் சென்றேன். கல்யாண் ஸ்டேஷனிலேயே ஸ்ரீ தீப்நாராயண் சின்ஹாவும் இறங்கி என்னுடன் சேர்ந்து கொண்டார். அவருக்கு என் மீது நெடுநாள் தொட்டே அதிக அன்பு உண்டு. நான் தலைவன் ஆனதைக் கண்டு அவருக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. முக்கியமாக இதனால் தான் அவர் அங்கேயே இறங்கி என்னுடன் சேர்ந்துகொண்டார்.

மிக்க ஆர்ப்பாட்டத்துடன் பம்பாய்க்குப் போய்ச் சேர்ந்தேன். வழியில் வண்டி நின்ற இடங்களிலெல்லாம் வரவேற்புக்காக மக்கள் வந்து கூடினர். மலர் மாலைகளால் நான் இருந்த பெட்டி நிறைந்து விட்டது. வித விதமான சாமான்களைக் கொண்டு வந்து கொடுத்து மக்கள் என்னைக் கண்டு கொண்டார்கள். பம்பாய் ஸ்டேஷனில் கூட்டத்தின் நெருக்கடியால் நான் ரயிலிலிருந்து இறங்கி வெளியே நின்ற வண்டி வரையில் செல்வது மிகவும் கடினமாயிருந்தது. நான்கு குதிரை வண்டியில் என்னை உட்கார வைத்து ஊர்வலம் அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்திருந்தார்கள். நான் பலவீனமாயிருந்தேன். ஆயினும் மக்களுடைய விருப்பத்திற்கும், வரவேற்புக் குழு செய்திருந்த முடிவுக்கும் ஏற்பாட்டிற்கும் விரோதமாக ஒன்றும் செய்யமுடியவில்லை. இதனால் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, ஸ்ரீ நாரீமன், என் மனைவி ஆகியவர்களுடன் வண்டியில் ஏறிக்கொண்டு ஊர்வலம் சென்றேன். அன்று வரையில் பலருக்கு எனக்கு ஒரு மனைவியிருப்பதாகத் தெரியாது. ஏனெனில் அவள் என்னுடன் சபை முதலியவற்றிற்கு சென்றது கிடையாது. அன்றும்கூட ஸ்ரீமதி நாயுடு தம்முடன் அவளை அழைத்துச் சென்றிருவிட்டால் அவள் மற்றவர்களோடு நாங்கள் தங்க வேண்டிய இடத்திற்கு நேரே சென்றிருந்திருப்பாள்.

ஊர்வலம் மிகவும் நீளமாயிருந்தது. ஊரின் அலங்கரிப்பும் சிறப்பாயிருந்தது. மக்களுடைய திரளும் அப்படியேயிருந்தது.

எல்லாக் கடைகளும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. வழி நெடுகப் பல இடங்களில் அழகான வளைவுகள் அமைக்கப்பட்டிருந்தன. கடைத்தெருவில் அந்தந்த இடத்தில் சிறப்பாக விற்கப்படும் பொருள்களினாலேயே வளைவுகள் அமைக்கப்பட்டிருந்தன. குழாய் விற்கப்படும் கடைகள் இருந்த இடத்தில் குழாய்களி னாலேயே வளைவு கட்டப்பட்டிருந்தது. பஞ்சுக் கடைத் தெருவில் பஞ்சுப் பொதிகளினால் வளைவு அமைக்கப்பட்டிருந்தது. மிகவும் விலாசமாக இருந்த அந்த வளைவு லக்ஷ ரூபாய் மதிப்புக்கு மேற் கொண்ட பொதிகளைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்ததாகக் கேள்விப்பட்டேன். வழிநெடுக எண்ணிறந்த இடங்களில் மக்கள் எனக்கு மலர் மாலைகள் அணிவித்து ஆரத்தி எடுத்து வரவேற்றார்கள். எத்தனை சாமான்கள் அன்பளிப்பாக வழங்கப் பட்டனவென்பதைச் சொல்லமுடியாது. வண்டி நிறைந்து விட்டது. இதற்கு முன் இதுபோன்ற வரவேற்பு யாருக்கும் பம்பாயில் அளிக்கப்படவில்லை யென்று மக்கள் இந்த வரவேற் பைப் பற்றிச் சொல்லிக் கொண்டார்கள். 1918இல் ஹசன் இமாம் சாஹபு விசேஷக் காங்கிரஸுக்குத் தலைவரானபோது அவருக்கும் சிறந்த வரவேற்பு நடந்தது. ஆயினும் இப்போது செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகள் அதைவிட எத்தனையோ மடங்கு அதிகமாயிருந்தன. ஏனெனில் 1918யைவிட இப்போது மக்க ளுக்கு அதிக விழிப்பு உண்டாகிவிட்டது. ஊர்வலம் சுமார் மூன்று மணி நேரத்திற்குமேல் பிடித்துவிட்டது. கடைசியில் காங்கிரஸ் பவன் வழியாக சென்று காங்கிர்ஸ் நகரில் நாங்கள் தங்குவதற்காக அமைக்கப்பட்டிருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தோம். நான் மிகவும் களைத்துப் போய்விட்டேன். ஆயினும் நோய் வாய்ப்படவில்லை.

அடுத்த நாளிலிருந்து அகில பாரதீயக் குழுவின் இருக்கை யும் விஷய ஆலோசனைக் குழுவின் இருக்கையும் நடைபெற இருந்தன. மகாத்மாஜீயும் மற்றத் தலைவர்களும் வந்து விட்டார் கள். விஷய ஆலோசனைக் குழுவில் மிகவும் காரசாரமாக வாதம் நடந்து கொண்டிருந்தது. பல விஷயங்கள் வாதத்திற்கு உரியன வாயிருந்ததால் அப்படி நடந்தது இயல்புதான். காங்கிரஸ் பேரவைக்குச் சற்று முன்பு காந்திஜீ ஓர் அறிக்கையை விடுத்தார். அதில் தாம் காங்கிரஸை விட்டுப் பிரிந்துபோவதாகவும், மேலும் தம்மால் ஆற்றக்கூடிய தொண்டையும் உதவியையும் காங்கிர ஸுக்கு வெளியில் இருந்தவாறே புரிந்து வரப் போவதாகவும் கூறியிருந்தார். காங்கிரஸ் இன்னும் அதிகமாக வலிமையுறு

வதற்கும் மக்களுடைய பிரதிநிதியாக விளங்குவதற்கும் அதனுடைய அமைப்புச் சட்டத்தில் மாறுதல்கள் செய்ய வேண்டியிருக்கிறதென்பதையும் அதில் கூறியிருந்தார். மகாத்மாஜீ கொண்ட இந்தக் கருத்தினுல் நாட்டில் கலக்கமுண்டாயிற்று. தாம் வெளியே இருந்தாலும் தம்மால் காங்கிரஸுக்கு முழு உதவி அளிக்கமுடியுமென்றும், மேலும் தாம் இப்படி விலகுவதால் காங்கிரஸ் பலவீனப்படுவதற்கு மாருக வலிமை பெறுமென்றும் காந்திஜீ உறுதியளித்தாராயினும் மக்கள் இதனுல் திருப்தியடைய வில்லை. மகாத்மாஜீ செய்த இந்த முடிவை நான் என் சொற்பொழிவில் ஆதரித்துப் பேசினேன். ஆயினும் அகில பாரதீயக் குழுவினருக்கு இதன்மீது அதிக மனக்குறை உண்டாயிற்று. காங்கிரஸைப் பலவீனப்படுத்த வேண்டுமென்ருே அல்லது எவ்விதத்திலாவது அதற்குத் தீங்கு விளைவிக்க வேண்டுமென்ருே காந்திஜீ இந்த முடிவுக்கு வரவில்லையென்றும் நான் நினைத்தேன். எப்போது வேண்டுமானுலும் நாம் அவரிடம் சென்று அவருடைய ஆலோசனையை பெறலாமென்றும், மேலும், முக்கியமான விஷயங்கள் எல்லாவற்றிலும் அவர் நமக்கு வழிகாட்டியாக இருந்து வருவாரென்றும் எண்ணினேன். ஆனுல் அவர் விலகுவதால் ஒரு விஷயம் மட்டும் கட்டாயமாக எதிர்ப்படும். அதாவது இனிமேல் செய்யப்படும் முடிவுகளின் பொறுப்பை காங்கிரஸில் இருப்பவர்கள்தாம் தீர யோசித்து உணர்ந்து ஏற்க வேண்டிவரும். மகாத்மாஜீ காங்கிரஸில் வந்ததிலிருந்து அவருடைய ஆளுமைக்கு எதிரில் மற்றவர்கள் கதிரோன் முன் ஏற்றிய விளக்குப் போன்று மங்கிக் காணப்பட்டார்கள். ஆயினும் மற்றவர்கள் சாமான்யமானவர்கள் அல்லர். நம்முடைய தலைவர்களுக்கு நிறையத் திறமையும், நெடிது நோக்கும் ஆற்றலும், தியாக மனப்பான்மையும் உண்டு. எந்தக் கேள்வியையும் ஒவ்வொரு கோணத்திலிருந்தும் நன்கு ஆராய வல்லவர்கள். நாட்டின் நலத்திற்கேற்ற முடிவுக்கு வர வல்லவர்கள். ஆயினும் காந்திஜீயின் தலைமையின்கீழ் நம்முள் சிலர் அவர்மீது அபார நம்பிக்கை வைத்து வருகிருேம்; அவர் என்ன சொன்னுலும் அதை ஏற்றுக் கொள்ளுகிருேம். நாம் நம்முடைய புத்தியையும், எண்ணும் ஆற்றலையும் பயன்படுத்த வேண்டுமென்று நினைப்பதில்லை. ஆயினும் காந்திஜீயின் தலைமையின் கீழ் காங்கிரஸ் செய்த முடிவுகளை அது தெரித்து தெளியாமல் செய்யவில்லை என்பதை நான் அறிவேன். காந்திஜீயானவர், தாம் விலகிக் கொண்டால், தீர ஆலோசனை செய்து முடிவுக்கு வரும் பொறுப்பு முழுவதையும் மற்றவர்கள் மேல் ஏற்றிவிடலா

மென்று நினைத்தார். மேலும், இப்போது நடப்பதெல்லாம், அவர் என்ன சொன்னரோ அதன்படிதான் நடக்கிறதென்று பார்க்கிறவர்கள் எல்லாம் கூறுகிறர்கள். இந்த எண்ணத்தை ஒழிக்க வேண்டுமென்று அவர் நினைத்தார்.

நான் இவை எல்லாவற்றையும் ஒத்துக்கொண்டுதான் அவர் செய்த முடிவை ஆதரித்தேன். ஆனல் மற்றவர்கள் இந்த விஷயத்தை இந்தக் கருத்தைக் கொண்டு எண்ணிப் பார்க்க வில்லை. மகாத்மாஜீ விலகுகிறர் என்ருல் அவர் காங்கிரஸிலிருந்து முற்றிலுமே பிரிந்துபோய் விடுவார் என்பதும், ஆகையால் அவருடைய ஆலோசனை இனி கிடைக்காதென்பதும்தாம் பொருள் என்று எண்ணி சிலர் மனக் கலக்கமுற்ருர்கள். அவர் காங்கிரஸிலிருந்து விலகிவிட்டால், இப்போது அதனிடம் மக்க ளுக்கு எவ்வளவு நம்பிக்கை இருந்து வருகிறதோ அவ்வளவு நம்பிக்கை இனி இருக்காது என்றும், இதனல் காங்கிரஸ் நொடித்துவிடுமென்றும் சிலர் நினைத்தார்கள். காங்கிரஸுக்குள் வெவ்வேறு அபிப்பிராயக்காரர்கள் வந்து விட்டதனல் காந்திஜீக் குக் கோபம் வந்து அவர் காங்கிரஸைவிட்டு விலகுகிறர் என்றும், அவரை எப்படியாவது தடுக்க வேண்டுமென்றும் சிலர் நினைத் தார்கள். இக்காரணங்களால், இந்த விஷயத்தைப் பற்றி விஷய ஆலோசனைக் குழுவில் நிறைய வாதம் நடந்தது. காந்திஜீ தம் முடைய எண்ணத்தைத் துறந்துவிட வேண்டுமென்றும், முன் போலவே அவர் தலைமை பூண்டு இருக்க வேண்டுமென்றும் வேண்டிக் கொள்ளப்பட்டார். ஆனல் அவர் தாம் செய்த முடிவி லிருந்து அசையவில்லை. தாம் விட்டுச் செல்வதால் காங்கிரஸுக்கு யாதொரு கேடும் வராதென்று அழுத்தமாகக் கூறினர். அதோடு, கேட்டபோது ஆலோசனை அளிப்பதாகவும் அவர் உறுதியளித் தார். மேலும் காங்கிரஸின் அமைப்புச் சட்டத்தில் சீர்திருத்தம் செய்ய வேண்டியதைப் பற்றியும் அவர் கூறினர். கடைசியில், தாம் செய்த முடிவிலிருந்து ஒரு விதத்திலும் அவர் அசைய மாட்டாரென்பது தெளிவானதும் வேறு விஷயங்களுக்குச் சென்றேம்.

காங்கிரஸ் அமைப்புச் சட்டச் சீர்திருத்தத்தைப் பற்றியும் நிறைய வாதம் நடந்தது. இதற்காக ஒரு கிளைக் குழு அமைக்கப் பட்டது. அது திருத்த மசோதாவைத் தயார் செய்தது. அதைத் தயார் செய்வதில் காந்திஜீயும், புதிதாக நிறுவப்பட்ட சோஷியலிஸ்ட் கட்சியும்தாம் அதிகப் பங்கெடுத்துக் கொண்டார் கள். புதிதாக வரப்போகும் அரசியல் அமைப்பைப் பற்றியும்

நிறைய வாதம் எழுந்தது. வட்டமேஜை மகாநாட்டின்போது பிரதான மந்திரி மாக்டோனல்டு இனத் தொகுதியைப் பற்றி ஒரு தீர்ப்பு அளித்தார் என்பதையும் அதில் ஒரு அம்சத்தை எதிர்த்துக் காந்திஜீ உண்ணுவிரதம் இருக்க வேண்டி வந்தது என்பதையும், பிறகு ஹரிஜனங்களோடு செய்யப்பட்ட ஓர் ஒப்பந்தத்தால் அது மாற்றப்பட்டது என்பதையும் மேலே கூறியிருக்கிறேன். அந்தத் தீர்ப்பில், தேசீய மனேபாவமுள்ள எவராலும் ஏற்றுக்கொள்ள முடியாத வேறு சில விஷயங்களும் இருந்தன. ஆனல் அந்தத் தீர்ப்பில் ஒரு நிபந்தனை இடப் பட்டிருந்தது. அதாவது அந்தத் தீர்ப்பினல் பாதிக்கப்பட்டவர் கள் எல்லாரும் கூடி தமக்குள் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு, அதன் மூலமாக அந்தத் தீர்ப்பை மாற்ற விரும்பினல், அது மாற்றப்படுமென்று கூறப்பட்டிருந்தது. இந்த நிபந்தனையின் படிதான் ஹரிஜனங்களைச் சம்பந்தப்பட்ட பகுதியானது, அவர் களுடன் ஒப்பந்தம் செய்து மாற்றப்பட்டது. காங்கிரஸின் செயலாற்றுக் குழுவானது அத்தீர்ப்பை மிகவும் அநியாயமான தாக கருதினலும்கூட, அதை ஏற்பதுமில்லை, எதிர்ப்பதுமில்லை என்று முடிவு செய்தது.

செயலாற்றுக் குழுவானது தான் செய்த இந்த முடிவால் அந்தத் தீர்ப்பை ஆதரித்தது என்பதோ அல்லது அதை நியாயமானதாகக் கருதிய தென்பதோ பொருள் அன்று. அது அதை மிகவும் கடுமையான சொற்களால் கண்டித்தது. ஆகை யால் அது அதை எவ்விதத்திலும் ஆதரித்தது என்று கூறுவ தற்கு இடமில்லை. ஆயினும் அத்தீர்ப்பை எதிர்க்கவும் விரும்ப வில்லை. ஏனெனில், எதிர்ப்பதால் மற்றவர்களோடு வெளிப் படையாக சண்டை போடுவதாகப் பொருள் கொள்ளப்படும். மேலும் எதிர்க்க வேண்டிய அவசியமுமில்லை. ஏனெனில் செயலாற்றுக் குழுவானது அரசியல் அமைப்பு முழுவதையுமே ஏற்காமல் நிராகரித்து விட்டது. இதனல் அத்திட்டத்தின் இப்பாகமும் மற்றவற்ருேடு நிராகரிக்கப்பட்டுப் போயிற்று. தனிப்பட இதைமட்டும் நிராகரித்தால் நாம் மற்றப் பாகங்களை மறைமுகமாக ஏற்றுக் கொள்கிருேமென்பதாகவும், அதனல் தான் ஓர் அம்சத்தை மட்டும் நிராகரிக்கிருேமென்பதாகவும் பொருள் கொள்ளப்படும். மேலும் அந்த அம்சத்தை மாற்று வதற்கு அதிகாரம் நம் கையில் இருந்தது. ஆனல் மற்ற அம் சங்களை மாற்ற அச்சட்டத்தின் மூலமாக நமக்கு உரிமை கிடைக்கவில்லை. இந்த எண்ணங்களால் தூண்டப்பட்டு, செய

லாற்றுக் குழுவானது தன் முடிவை வெளியிட்டது. செயலாற்றுக் குழுவானது அரசியல் அமைப்பு முழுவதையும் நிராகரிக்கிற தென்பதும், அரசியல் அமைப்பு முழுவதுடன் இந்த அம்சமும் நிராகரிக்கப்பட்டதென்பதும்தான் அம்முடிவின் சுருக்கமான கருத்து. மேலும், அந்த அரசியல் அமைப்பைச் செயலாற்றுக் குழுவானது, தேசீய நலக் கண்கொண்டு பார்க்கும்போது, அதை நாட்டிற்குக் கேட்டை விளைவிப்பதாக உணர்ந்தாலும், மேலே கூறியுள்ள காரணங்களால் அதை ஏற்கவுமில்லை, எதிர்க்க வுமில்லை. இந்த விஷயத்தைப் பற்றி பண்டித் மதன்மோகன் மாளவீயஜீ, ஸ்ரீ அணே ஆகிய இருவருடன் நிறையப் பேச்சு நடந்தது. ஆனால் அவர்களும் காந்திஜீயைத் தம் கருத்துக் கிணங்க வைக்க முடியவில்லை, அவரும் அவர்களைத் தம் கருத் துக்கிணங்க வைக்க முடியவில்லை! காங்கிரஸின் விஷய ஆலோ சனைக் குழுவிலும் இதைப்பற்றி நிறைய வாதம் நடந்தது. ஆயி னும் செயலாற்றுக் குழுவின் யோசனையோடுதான் காங்கிரஸ் மனமொப்பியதென்பது தெளிவாயிற்று. பல நாட்களாகத் தொடர்ந்து காரசாரமாக வாதம் நடந்தபின், தீர்மானம் தயா ராயிற்று. காங்கிரஸின் பேரவை கூடும் சமயமும் வந்துவிட்டது.

நான் மிகவும் பலவீனமாயிருந்தாலும், அந்தச் சமயத்தில் எங்கிருந்து பலம் வந்துவிட்டதென்பதும், எப்படி வேலை முழு வதையும் சரியாக நிறைவேற்றி வந்தேன் என்பதும் தெரிய வில்லை. சோஷலிஸ்டுக் கட்சிக்காரரர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து வாதத்தில் பங்கெடுத்து வந்தார்கள். அவர்களில் சிறந்தபடிப்பாளிகளும் பேச்சாளர்களும் இருந்தார்கள். அவர்கள் எல்லா விஷயங்களைப் பற்றியும் தம்முடைய சொந்த அபிப்பிரா யங்களைக் கொண்டிருந்தார்கள். அடிக்கடி என் முன் ஒழுங்கு முறையைப் பற்றி கேள்விகள் எழுந்தன. நான் எந்தச் சட்ட சபையிலும் உறுப்பினனாக இருந்ததில்லை. காங்கிரஸின் விதி முறையில் இப்படிப்பட்ட விஷயங்களைப்பற்றி விதிகள் கொடுக்கப் படவில்லை. அங்கு இப்படிப்பட்ட கேள்விகள் எழுந்த சமயங் களில், ஆங்கிலப் பார்லிமெண்டு, மற்ற சபை சங்கங்கள் ஆகிய வற்றின் விதிமுறையை அனுசரித்தே அவை தீர்மானிக்கப்பட்டு வந்தன. நம் நாட்டின் சட்ட சபைகளின் விதிமுறைகளும் அவற்றையே ஆதாரமாகக் கொண்டு புனையப்பட்டிருக்கின்றன. நாட்டிலுள்ள மற்ற சபை சங்கங்களின் விதிமுறைகளுக்கும் அவைதாம் ஆதாரம். அந்த விதிமுறைகளும் எனக்கு நன்றாகத் தெரியாது. இந்த நிலைமையில் என்முன் எழுந்த பல கேள்வி

களுக்கு நான் உடனுக்கு உடன் தீர்ப்பு அளிக்கவேண்டி வந்தது. என் அறிவிற்குச் சரியென்று தோன்றிய தீர்ப்பை அளித்து வந்தேன். நான் அளித்த தீர்ப்புக்கள் விதி முறைகளை ஒட்டியே இருந்தன என்பதைப் பின்னுல் கேள்விப்பட்டு மகிழ்ச்சி யடைந்தேன்.

காங்கிரஸ் பேரவையில் என் சொற்பொழிவு முழுவதையும் படிக்கவில்லை. காந்திஜீ கூறியதை மனத்திற்கொண்டு காங்கிரஸ் விழாவைக் குறிப்பிட்டிருந்த காலத்திற்குள் முடித்துவிட வேண்டுமென்று எண்ணினேன். சபையின் முன் பலத்த விவாதத்திற்கு இடமான பல விஷயங்கள் வர இருந்தன. மற்ற வகையில் பொழுதைச் சேமிக்காவிட்டால் அந்த விஷயங்களை ஆராய்ந்து முடிவு செய்ய இயலாது என்பது தெளிவாயிற்று. மேலும் தலைவரின் அச்சிடப்பட்ட சொற்பொழிவானது சபையில் படிக்கப்பட்டால் அது மக்களுக்குப் பிடிப்பவில்லை என்பதையும், அவர்கள் அதில் கவனம் செலுத்துவதில்லையென்பதையும் என் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். ஏனெனில் அதனுடைய பிரதி ஒவ்வொருவர் கையிலுமிருக்கும். அதை அவர்கள் தங்கள் சௌகரியப்படி படித்துக் கொள்வார்கள். பெல்காம் காங்கிரஸில் காந்திஜீ தம்முடைய சொற்பொழிவை முதலிலேயே எல்லாருக்கும் கொடுத்துவிட்டார். அதைப் படித்துவிட்டுப் பேரவைக்கு வரும்படி பிரதிநிதிகளைக் கேட்டுக் கொண்டார். நானும் அதே கருத்துடன், என் சொற்பொழிவைப் படிப்பதில் காங்கிரஸின் பொழுதை வீணுக்கவில்லை. சில பாகங்கள் மட்டுமே படிக்கப் பட்டன. அதற்குப்பின் முக்கியத் தீர்மானத்தின்மீது வாதம் தொடங்கியது. அது இந்திய அரசியல் அமைப்பைப்பற்றிய தீர்மானம். செயலாற்றுக் குழுவானது அதைப்பற்றிச் செய்த முடிவு அத்தீர்மானத்தில் ஆதரிக்கப்பட்டிருந்தது. பண்டித் மாளவீயஜீயானவர் அதற்குத் திருத்தம் ஒன்றைக் கொண்டு வந்து மிகவும் முழக்கமான சொற்பொழிவு ஒன்றை ஆற்றினுர். அடுத்த நாள் அதன் மீது மிகவும் காரசாரமாக வாதம் நடந்தது.

கடைசியில் அத்தீர்மானத்தைப்பற்றி சபையோரின் அபிப்பிராயத்தைக் கேட்கும் சமயம் வந்தபோது, பண்டித் மாளவீயஜீ அதைப்பற்றி மேலும் ஏதோ கூறவிரும்பினுர். விதிமுறைப்படி அவருக்கு ஏதும் கூறுவதற்கு உரிமையில்லை. ஆயினும் அவர் தம் விருப்பத்தைத் தெரிவித்தார். எனக்குப் பெரிய சங்கடமாகி விட்டது. அவருடைய தனிப்பட்ட பெருமையைக் கருதி நான் விதிமுறையை மீறினுல் பிறகு மற்றவர்களுக்கும் அப்படியே

சலுகை காட்ட வேண்டிவரும். ஆதலால் அவருக்கு அனுமதி கொடுப்பதில்லையென்று முடிவு செய்துவிட்டேன். மிகவும் பணிவாக நான் அவருக்கு விதியைச் சுட்டிக்காட்டி, எனக்கு வேறு வழியில்லை என்பதைத் தெரிவித்துக் கொண்டேன். அவர் சொல்ல வேண்டியதை நானே காங்கிரஸுக்கு எடுத்துரைப்பதாகவும் அவருக்கு வாக்களித்தேன். இந்த விஷயம் முழுவதையும் நான் காங்கிரஸிலும் கூறிவிட்டேன். காங்கிரஸில் மிகவும் உரத்த ஒலி பெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன. அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் மகாத்மாஜீ தம்முடைய குடிசையிலிருந்தபடியே கேட்டுக்கொண்டிருந்தார். அவர் இந்த விஷயத்தையும் கேட்டார். அடுத்த நாள் என்னைப் பார்த்துச் சிரித்தவாறே "நீ மாளவீயஜீயைக் கூட பேசவிடாமல் தடுத்துவிட்டாயே!" என்று கூறினர். போற்றற்குரிய இவ்வளவு பெரிய மனிதரின் பேச்சை நான் ஏற்க முடியவில்லையே என்பது மிகவும் வருத்தமாயிருந்தது. ஆனால் அங்கே ராஜேந்திரன் என்ற முறையில் இருக்கவில்லை. காங்கிரஸின் தலைவன் என்ற பதவியில் வீற்றிருந்தேன். இரண்டிற்கும் நிறைய வேற்றுமை உண்டு. வாக்கு எடுத்ததில் செயலாற்றுக் குழுவுக்குப் பெரும்பான்மை ஆதரவு கிட்டியது. ஆயினும் அத்தீர்மானத்திற்கு விரோதமாக இருந்த சிலர் ஆத்திரத்தில் எழுந்து வெளியே சென்று விட்டார்கள். நாலைந்து பேர்கள் என் பக்கம் செருப்பைத் தூக்கிக் காட்டியதைக் கூட நான் விளக்கு வெளிச்சத்தில் தெளிவாகக் கண்டேன்.

காங்கிரஸின் மற்றத் தீர்மானங்களின்மீது அதிக வாதம் நடக்கவில்லை. காங்கிரஸின் விதிமுறை சீர்த்திருத்தத் தீர்மானமானது ஒரு விதமாக எல்லாருடைய சம்மதத்துடன், அதிகமாக வாதம் செய்யப்படாமல், ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டது. ஏனெனில் அதன்மீது வெளியே நிறைய வாதம் முன்னமே நடந்துவிட்டது. இத்தீர்மானம் மிகவும் முக்கியமானது. இதுவரையில் காங்கிரஸின் பிரதிநிதிகளின் எண்ணிக்கையானது மாகாணத்தின் ஜனத்தொகை வீதம் விதிக்கப்பட்டு வந்தது. இதனால் ஏதாவதொரு மாகாணத்தில் காங்கிரஸின் வேலை நடந்தாலும் நடக்காவிட்டாலும், அங்குள்ள காங்கிரஸ் குழுக்கள் வேலை செய்தாலும் செய்யாவிட்டாலும், அம்மாகாணத்தின் ஜனத்தொகைக்கு ஏற்ப பிரதிநிதிகளின் எண்ணிக்கையும், அகில பாரதீயக் குழுவில் அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கையும் நிரந்தரமாக இருந்து வந்தன. மற்றொரு மாகாணம், அதிகமாகத்

தொண்டாற்றியும்கூட, தனக்கு விதிக்கப்பட்ட எண்ணிக்கைக்கு மேற்கொண்டு உறுப்பினர்களை அனுப்பமுடியாது. பம்பாயில் புனையப்பட்ட அமைப்புச் சட்டத்தில் பிரதிநிதிகளின் எண்ணிக்கையானது காங்கிரஸ் அங்கத்தினர்களின் எண்ணிக்கையின் விகிதமாக வரையறுக்கப்பட்டது. ஒவ்வொரு பிரதிநிதிக்கும் குறைந்தது இவ்வளவு அங்கத்தினர்கள் கட்டாயமாக இருக்க வேண்டுமென்று ஒரு நிபந்தனை இடப்பட்டது. அத்தனை அங்கத்தினர்கள் இல்லாத இடங்களுக்குப் பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பதற்கு உரிமை இல்லாமற் போயிற்று. பம்பாயில் 500 அங்கத்தினர்களுக்கு ஒரு பிரதிநிதி வீதம் தேர்ந்தெடுப்பதற்கு உரிமையளிக்கப்பட்டது. இத்தொகை பிறகு மாற்றப்பட்டது. அதோடு, ஒவ்வொரு மாகாணத்தின் பிரதிநிதி உரிமையானது அம் மாகாணத்தின் ஜனத்தொகைக்கு ஏற்றவாறும் இருக்கவேண்டுமென்று ஓர் எண்ணம் இருந்தது. இதனுல் ஒரு மாகாணம் முழுவதிலும் அதன் ஜனத்தொகைப்படி எத்தனை பிரதிநிதிகள் அம் மாகாணத்திற்கு உண்டோ அத்தனை ஐந்நூறு காங்கிரஸ் உறுப்பினர்கள் இல்லாவிட்டால் பிரதிநிதிகளின் தொகை குறைந்துவிடும். ஒவ்வொரு பிரதிநிதிக்கும் ஐந்நூறுக்கு மேல் உறுப்பினர்கள் இருந்தால், ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுப்பதற்கு 500 உறுப்பினர்களுக்கு மேற்கொண்ட தேர்தல் தொகுதி அமைக்கப்படும். இவ்வண்ணமாக உறுப்பினர்களைச் சேர்ப்பது வற்புறுத்தப்பட்டது. அத்தோடு ஜனத்தொகையையும் நினைவில் கொள்ளப்பட்டது.* சிறுபான்மை கட்சிக்காரர்களுக்கு எப்படிப் பிரதிநிதி

---

* குறிப்பு: உதாரணமாக, ஒரு மாகாணத்தின் ஜனத்தொகை 3,00,000 என்று வைத்துக்கொள்வோம். ஜனத்தொகையின் ஒவ்வொரு 10,000க்கும் ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கலாமென்றுல் அம்மாகாணம் 30 பிரதிநிதிகளைக் காங்கிரஸ் விழாவுக்கு அனுப்பலாம்.

ஆனுல் பம்பாயில் புதிதாக மற்றொரு நிபந்தனை விதிக்கப்பட்டது. அம்மாகாணத்தில் காங்கிரஸ் அங்கத்தினராக எத்தனை பேர் சேர்க்கப்பட்டிருக்கிறுர்கள் என்பதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. 500 பேரைச் சேர்த்திருந்தால் ஒரு பிரதிநிதியை அனுப்பலாம். மேலே கூறிய 30 பிரதிநிதிகளை அனுப்புவதற்கு ஜனத்தொகை 3,00,000 ஆக இருப்பது மட்டுமன்றி காங்கிரஸ் அங்கத்தினராக 15,000 பேரைச் சேர்த்திருக்க வேண்டும். 10,000 பேர் இருந்தால், 20 பிரதிநிதிகள் மட்டும்தான் தேர்ந்தெடுக்கலாம். ஆனுல் அங்கத்தினரின் எண்ணிக்கை 15,000க்கு மேற்சென்று விடுமானுல், உதாரணமாக 21,000 ஆகிவிட்டால், 42 பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்க முடியாது. அப்போது ஒவ்வொரு பிரதிநிதிக்கும் 500 அங்கத்தினர்கள் இருக்க வேண்டுமென்பதை மாற்றி, ஒவ்வொரு பிரதிநிதிக்கும் 700 அங்கத்தினர்கள் தேவை என்று விதிக்கப்படும். அதாவது 30 பிரதிநிதிகளுக்கு மேல் என்றும் தேர்ந்தெடுக்க முடியாது. (தமிழாக்கியவரின் குறிப்பு)

உரிமை அளிப்பது என்ற மற்றொரு முக்கியமான கேள்வி எழுந்தது. நேரான முறையில் வாக்கு எடுத்தால் அவர்களில் ஒருவர் கூட தேர்ந்தெடுக்கப்பட மாட்டார்கள். ஆனால் அவர்களுக்குப் பெரும்பான்மை பலமுள்ள எல்லா இடங்களையும் ஒன்று கூட்டினால் அவர்களில் சிலர் தேர்ந்தெடுக்கப் படலாம். எண்ணிக்கையில் குறைவாக இருந்த சோஷியலிஸ்ட் கட்சிக்காரரர்கள் "பரிமாரிக் கொள்ளக்கூடிய தனி வாக்கின் மூலமாகச் சராசரிப் பிரதிநிதித்துவம்" (Proportional representation by single transfer vote) வேண்டுமென்று வற்புறுத்தி வந்தார்கள். காங்கிரஸ் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு இம்முறை ஒவ்வாது. ஆயினும், அகில பாரதீயக் குழுவின் உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பதற்கு இந்த முறை அங்கீகரிக்கப்பட்டது. அமைப்புச் சட்டத்தில் செய்யப்பட்ட மாறுதல்களை நடைமுறையில் கொண்டு வரும்போது பல குறைபாடுகள் தெரிய வந்தன. பம்பாய்க்குப் பிறகு அதை எத்தனையோ முறை மாற்ற வேண்டியிருந்தது. ஆயினும் விதிமுறைக்கு அங்குப் புனையப்பட்ட அடிப்படையானது இன்று வரையில் நின்று வருகிறது. சராசரி பிரதிநிதித்துவத்தைப் பற்றி மிகவும் கருத்து மாறுபாடு இருந்தது உண்மை. ஆயினும் மிகச் சிலர் கையில் தேர்தல் உரிமை இருப்பதனால் மிகவும் கேடு விளைகின்றதென்பதை இப்போது பலர் தெரிந்து கொள்கிறார்கள். காங்கிரஸின் விதி முறைப்படி எட்டுப் பிரதிநிதிகளுக்கு ஓர் ஆள் அகில பாரதீயக் குழுவின் உறுப்பினராகலாம். அதாவது எட்டுப் பேர் கூடிக்கொண்டு ஒரு ஆளைத் தேர்ந்தெடுக்கலாம். கட்டாயமாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்று ஆவல் கொண்ட ஒருவருக்கு எட்டுப் பேரை ஒன்று கூட்டிச் சேர்ப்பது கடினமன்று என்பதை நாங்கள் தேர்தலில் கண்டிருக்கிறோம். எவரொருவர் இவ்விதமாகத் தேர்ந்தெக்கடுப்படுவதற்குப் பாடுபடவில்லையோ அல்லது அவருடைய நண்பர்கள் அவரைத் தேர்ந்தெடுக்கப் பாடுபடவில்லையோ அவர் மிகத் திறம்பட பணியாற்ற வல்லவராயினும் தேர்ந்தெடுக்கப் படுவதில்லை. இதனால் சிறிய சிறிய கட்சிகள் பெருகுகின்றன. நல்ல நல்ல ஆட்கள் தேர்ந்தெடுக்கப்படாமற் போகிறார்கள். கட்சியைச் சேர்க்கக் கூடியவர்கள் தாம் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள். இவ்வளவு கால அனுபவத்திற்குப் பின் இப்போது பலர் இது தம்முடைய வேலைக்குச் சரிப்படாதென்பதை அறிந்து கொண்டார்கள். ஆயினும் இன்று வரையில் இதுவே விதிமுறையாக இருந்து வருகிறது. பம்பாய்ப் பேரவையின்போது இந்த முறையை எதிர்த்தால் அதற்கு

ஒரு பொருள்தான் இருக்க முடியுமென்று எண்ணப்பட்டது. அதாவது சோஷியலிஸ்டுகளை பாரதீயக் குழுவில் நுழையவிடாமல் செய்வதுதான் அப்படிப்பட்ட எதிர்ப்பின் நோக்கம் என்று நினைக்கப்படும். எது எப்படியாயினும் சரி, அங்கே இதே முறைபாடு அங்கீகரிக்கப்பட்டது.

காங்கிரஸ் விழா குறிப்பிட்ட காலத்திற்குள் மூன்றும் நாள் இரவு சுமார் பன்னிரண்டு மணிக்கு முடிவடைந்தது. நான் என் வேலையை முடித்துவிட்டேன். எல்லோரும் மிக்க உற்சாகத்துடன் தத்தம் ஊர்களுக்குத் திரும்பிச் சென்றுர்கள். திரும்பிச் சென்றதுமே அவர்கள் மத்திய சட்டசபைத் தேர்தலுக்குப் போராட வேண்டும். காங்கிரஸின் உற்சாகத்திலிருந்து இத்தேர்தல்களில் காங்கிரஸ் வெற்றி பெறுமென்பது தெளிவாகிவிட்டது.

காங்கிரஸ் வேலையை முடித்துக்கொண்டு நான் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றதும், இரவு இரண்டு மணியிலிருந்து இழுப்புத் தொடங்கிவிட்டது. அடுத்த நாள் எதுவும் விசேஷமான வேலையில்லை. செயலாற்றுக் குழுவை மட்டும்தான் அமைக்க வேண்டியிருந்தது. இந்தப் பொறுப்பு என்னுடையது. நான் அங்கேயே இதைப்பற்றிச் சிறிதளவு நிச்சயம் செய்துவிட்டேன். எஞ்சியதைப் பிறகு முடிவு செய்தேன். பெயர்கள் பத்திரிகைகளில் வெளியிடப்பட்டன. யாரை அமைச்சராகத் தேர்ந்தெடுப்பதென்பது பெரிய கேள்வியாக இருந்தது. தம் பொழுது முழுவதையும் அந்த வேலையிலேயே கழிக்க கூடியவரும், மேலும் எல்லா விஷயங்களிலும் என் கருத்தோடு ஒத்துப்போகக் கூடியவருமான ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று விரும்பினேன். இதைப்பற்றி நான் யோசனை செய்தபின் ஆசார்யா கிருபாளானியை நியமித்தேன்.

வங்காளத்திலிருந்து ஒருவரையாவது செயலாற்றுக் குழுவில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். ஆயினும் நான் எவரையும் எடுத்துக்கொள்ள முடியாதபடி ஒரு நிலைமை உண்டாயிற்று. இதனுல் அங்குள்ள நண்பர்களுக்கு என் மீது அதிக கோபம் வந்தது. நான் நிறைய வசவும் கேட்க வேண்டி வந்தது. வங்காளத்தோடு எனக்குப் பழைய தொடர்பும் நெருங்கிய உறவும் உண்டு. நான் வங்காளத்தின் பெருமையை நன்ருக அறிவேன். வங்காளிகளில் எனக்கு மிக நெருங்கிய நண்பர்கள் பலர் இருக்கின்றுர்கள். ஆயினும் அங்கிருந்த ஒரு சூழ்நிலையால் என் ஆசை நிறைவேறவில்லை. இதனுல் எனக்கு அதிக வருத்தம் உண்டாயிற்று. அங்கு இரண்டு கட்சிகள் இருந்தன. அவற்றில்

ஏதாவதொன்றைச் செயலாற்றுக் குழுவில் சேர்த்துக் கொண்டால் மற்றென்றிற்குப் பொல்லாதவன் ஆகவேண்டும். இரண்டிற்கும் இடமில்லை. அப்படி யிருந்தாலும்கூட, அங்குள்ள சண்டை செயலாற்றுக் குழுவில் வந்து புகுந்துவிடுமென்ற அச்சம் வேறு இருந்தது. இதனால் நான் கெட்ட பெயரை ஏற்றுக்கொண்டு செயலாற்றுக் குழுவை இச்சண்டையிலிருந்து காப்பாற்றினேன்.

காந்திஜீயை எப்போது நாம் காங்கிரஸின் அன்றாட வேலையிலிருந்து விடுவித்து விட்டோமோ, மேலும் முக்கியமான கேள்விகள் எழுந்தபோது மட்டும் அவருடைய யோசனையைக் கேட்பது பொருத்தமென்பதாக முடிவு செய்துவிட்டோமோ, இனி அவருக்கு அதிக கஷ்டம் கொடுக்கக் கூடாதென்றும், அவரைச் செயலாற்றுக் குழு, அகில பாரதீயக் குழு ஆகியவற்றின் கூட்டங்கள் ஒவ்வொன்றிற்கும் வரும்படி கஷ்டப்படுத்தக் கூடாதென்றும் பம்பாயிலேயே நிச்சயித்துவிட்டேன். ஏதாவது முக்கியமான விஷயம் வந்தால், அப்போது அவரைச் சந்தித்து அதைப்பற்றிப் பேசிக் கொள்ளலாம் என்று முடிவு செய்தேன். நான் தலைமை வகித்த காலம் முழுவதும் இதே கொள்கையைக் கடைப்பிடித்து வந்தேன். காந்திஜீயைக் குழுக்களின் கூட்டங்களுக்கு வரும்படி தொந்தரவு செய்யவில்லை. நான் வர்தாவுக்கு அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தேன். அங்கேயே அவரிடம் யோசனை கேட்டு வந்தேன்.

## 110. மத்திய சட்டசபைக்குத் தேர்தல் போட்டி

பம்பாயிலிருந்து பட்னுவுக்குச் சென்றேன். மத்திய சட்டசபைக்குத் தன் அபேக்ஷகர்களை நிறுத்துவதும், அவர்களை தேர்ந்தெடுக்கப்படச் செய்வதும் காங்கிரஸ் செய்ய வேண்டிய முதல் வேலையாயிற்று. 1930–34 சத்தியாக்கிரகத்தைக் காரணமாகக் கொண்டு காங்கிரஸை மிகவும் ஒடுக்கிவிட்டதால் அது இனிமேல் தலையெடுக்க முடியாதென்று அரசாங்கம் நினைத்துக் கொண்டிருந்தது. 1932இன் ஆரம்பத்தில் வட்டமேஜை மகாநாட்டிலிருந்து திரும்பி வந்தபின் காந்திஜீயும் செயலாற்றுக் குழுவும் வேறு வழியில்லாமல் மீண்டும் சத்தியாக்கிரகத்தைத் தொடங்க வேண்டி

வந்தபோது அக்கிளர்ச்சி மூன்று நான்கு வாரங்களுக்குள் அடக்கப்பட்டுவிடுமென்று லார்டு வில்லிங்டன் கூறினார். அவர் அதற்காகத் தம்மால் இயன்ற முயற்சியும் செய்தார். ஆனால் மூன்று நான்கு வாரங்களுக்குப் பதிலாக இரண்டாண்டுகள் வரையில் அந்த இயக்கம் நடந்து கொண்டிருந்தது. மேலும், ஆரம்பத்தில், அது மிக மும்முரமாக நடந்தது. ஆயினும் காங்கிரஸுக்கு மக்களிடம் இருந்த செல்வாக்கை அறிவதற்கு ஏற்ற ஒரு சந்தர்ப்பம் இன்னும் வரவில்லை. பூகம்பத்தின்போது செய்த உதவியிலிருந்தும், பம்பாயில் நடந்த பேரவையிலிருந்தும், அது ஏதோ சிறிதளவு தெரிய வந்தது. ஆயினும் இன்னும் எல்லாருக்கும் முக்கியமாக அரசாங்கத்தாருக்கு காங்கிரஸானது நாடெங்கும் செல்வாக்கு உடைய ஒரு ஸ்தாபனம் என்ற நம்பிக்கையில்லை. காங்கிரஸ் எவ்வளவுக்கு மக்களின் பிரதிநிதியாக இருந்து வருகிறதென்ற விஷயம் இத் தேர்தலில் ஒரு வகையில் சோதிக்கப்படும். இக்காரணத்தால் இத் தேர்தலை நாங்கள் மிகவும் முக்கியமானதாகக் கருதினோம்.

சென்னை மாகாணத்தில் 1920இலிருந்தே ஜஸ்டிஸ் கட்சியின் மந்திரி சபை நடந்து வந்தது. அக்கட்சித் தன்னுடைய வலிமையைப் பெருக்குவதற்காகவும் தன்னைச் சிறந்த கட்டுப்பாட்டோடு அமைத்துக் கொள்வதற்காகவும் வேண்டிய காரியங்கள் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் செய்து வந்தது. அதில் மிகவும் தகுதியுள்ள மனிதர்களுக்கும் குறைவில்லை. இதனால் அக்கட்சியானது பொது மக்களில் பிராமணரல்லாதாராக இருந்த அனைவர் சார்பிலும் பேசியதென்பதற்கும் ஐயமில்லை. அது பிராமணர்—பிராமணரல்லாதார் என்ற பெரும் சண்டையைக் கிளப்பிவிட்டு விட்டது. மேலும் அது செய்த பலத்தப் பிரசாரத்தால் அங்குக் காங்கிரஸ் என்பதற்குப் பிராமணன் என்பது அர்த்தம் என்று எண்ணப்பட்டு வந்ததென்பது தெரிய வந்தது. இதனால் அக்கட்சியானது காங்கிரஸைத்தான் தன் பரம விரோதியான ஸ்தாபனமாகக் கருதியது. அரசாங்கத்திற்கும் அக்கட்சியின் மீது முழு நம்பிக்கை யிருந்தது. ஏனெனில் அம்மாகாணத்திலுள்ள ஜமீன்தார்களும், பணக்காரர்களும், மேலும் பொது மக்களில் மாபெரும் பகுதியாரும் அக்கட்சியில் சேர்ந்திருந்த சாதிகளைச் சேர்ந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் பிராமணரல்லாதாரே.

தேர்தல் இந்தியா முழுவதும் நடைபெறுவதாக இருந்தது. எல்லா மாகாணங்களுக்கும் தேர்தலுக்காக ஒரே நாள் வைக்கப்

படவில்லை. இதனால் ஓரிடத்தில் உண்டான தேர்தலின் பலன் மற்றொரு இடத்தின் தேர்தலை கட்டாயம் பாதிக்கும் என்று எண்ணப்பட்டது. ஒரே மாகாணத்தில் வெவ்வேறு ஜில்லாக்களின் தேர்தல்களை வெவ்வேறு நாட்களில் அமைத்து, ஓரிடத்தின் பலன் மற்றோரிடத்தின் தேர்தலை பாதிக்கும்படிச் செய்வது கூடாத காரியம். ஆயினும் நாடு முழுவதையும் எடுத்துக் கொண்டால் இப்படிச் செய்வது சாத்தியமாகும். அப்படித்தான் அதிகாரிகள் ஏற்பாடு செய்திருந்தார்கள். மதராஸின் மீது அதிக நம்பிக்கை வைத்திருந்ததால் அவர்கள் எல்லாவற்றிற்கும் முன்னதாக மதராஸ் மாகாணத்தில் தேர்தலை நடத்தினார்கள். அதன்பிறகு மற்ற மாகாணங்களில் நடத்தினார்கள். தேர்தலில் காங்கிரஸானது எல்லா இடங்களிலும் தன்னுடைய அபேக்ஷகர்களை நிறுத்தியது. எதிரிகளும் அவ்வண்ணமே நின்றார்கள். அரசாங்கத்திற்கு மிகவும் வேண்டியவர்கள் அல்லது ஏதாவது ஓர் எதிர்க்கட்சியின் சார்பில் நின்றவர்கள்தாம் காங்கிரஸுக்கு எதிரிகளாக நின்றார்கள். ஆயினும் ஜஸ்டிஸ் கட்சியைத் தவிர காங்கிரஸுக்கு எதிரியாக அபேக்ஷகர்களை நிறுத்துவதற்கு ஆற்றல் உடைய கட்சி வேறொன்றுமிருக்கவில்லை. நான் பம்பாயிலிருந்து நோயுடனே திரும்பி வந்தேன். பிறகு வழக்கம்போல டிசம்பர் வரையில் நோயாகக் கிடந்தேன். இதற்கிடையில் தேர்தல்களெல்லாம் முடிந்துவிட்டன. நான் அதில் சிறப்பாக யாதொரு பங்கும் எடுத்துக்கொள்ள முடியவில்லை. ஆயினும் மற்றவர்கள், முக்கியமாக சர்தார் வல்லபபாயீ, மிகவும் தலைதெறிக்க ஓடியாடி பாடுபட்டார்கள். அவர் பீகாரிலும் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தார். இன்னும் பல மாகாணங்களுக்கும் சென்றார். நான் பீகாரில் மட்டிலும் இரண்டு மூன்றிடங்களுக்குப் போக முடிந்தது. அதிகமாக ஒன்றும் என்னால் செய்ய முடியவில்லை. மதராஸின் தேர்தலின் பலன் மற்றவற்றிற்கும் எல்லாம் முன்னம் தெரிய வந்தது. ஏனெனில் அங்குத்தான் எல்லா மாகாணங்களுக்கும் முன்னதாகத் தேர்தல் நடந்தது. அப்பலன் அரசாங்க வட்டாரத்தை ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. அங்கு, எல்லாத் தொகுதிகளிலும், காங்கிரஸ்காரர்களே தேர்ந்தெடுக்கப்பட்டது மட்டுமன்றி, காங்கிரஸ்காரர்கள் எல்லாருமே அபரிமிதப் பெரும்பான்மை வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களுக்கு யாதொரு ஐயமில்லாததும், நாங்கள் அங்கு வெற்றி பெறுவது கஷ்டமெனக் கருதப்பட்டனவுமான இடங்களில் கூடக் காங்கிரஸுக்கு நிறைய வெற்றி கிட்டியது. உதாரணமாக,

இரண்டு இடங்களைப் பற்றி அப்படிக் கூறலாம். ஸ்ரீ சத்தியமூர்த்தி தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் அவற்றில் ஒன்று. அவருக்குப் போட்டியாக மிகவும் மதிப்பிற்குரியவரும், ஜஸ்டிஸ் கட்சியின் முக்கிய மனிதருமான ஸ்ரீ ராமசுவாமி முதலியார் நின்றார். மற்றொரு இடம் சென்னையின் வியாபாரிகளின் பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்த தொகுதி. அங்கிருந்து காங்கிரஸுக்குப் போட்டியாக ஸ்ரீ சண்முகம் செட்டியார் நின்றார். காங்கிரஸ் பக்கத்திலிருந்து ஸ்ரீ வெங்கடாசலம் செட்டியார் நின்றார். ஸ்ரீ சண்முகம் செட்டியாரானவர், முன்பு பண்டித் மோதிலால்ஜீயுடன் காங்கிரஸின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டு, மத்திய சட்டசபையில் உறுப்பினராக இருந்து வந்திருந்தார். காங்கிரஸ் அங்கத்தினர்களும் மக்களும் அவருடைய திறமையை ஒப்புக் கொண்டார்கள். அவர் திறம்படவும் வேலை செய்தார். ஆயினும் சத்தியாக்கிரகத்தின் போது அவர் காங்கிரஸிலிருந்து பிரிந்து போய் விட்டார். இப்பொழுது இத்தேர்தலில் அவர் காங்கிரஸை எதிர்த்தார். அவர் செட்டியார் சாதியைச் சேர்ந்தவர். செட்டியார்கள் தாம் சென்னை மாகாணத்தில் வியாபாரத் தொழிலைப் பெரும்பாலும் நடத்தி வந்தார்கள். அவர் பிராமணரல்லாதவர். ஜஸ்டிஸ் கட்சியானது அவரைத் தன் சார்பில் அபேக்ஷகராக நிறுத்தியது. வேறென்ன வேண்டும்! வெற்றிக்கு தேவையான சகல அனுகூலங்களும் அவருக்கு இருந்தன. அது மட்டுமன்றி லார்டு வில்லிங்டனுக்கு அவர் மீது மிகவும் மதிப்பு உண்டு என்று சொல்லிக் கொண்டார்கள். ஆயினும் அவரும் படுதோல்வியுற்றார்.

மதராஸின் பலன் பத்திரிகைகளில் வெளி வந்ததுமே, முக்கியமாகக் காங்கிரஸுக்குக் கிடைத்த வாக்குக்களின் எண்ணிக்கை தெரிய வந்ததும், நாட்டில் உற்சாகம் பெருகியது. எல்லா மாகாணங்களிலும் காங்கிரஸுக்குப் பெரும் வெற்றி கிடைத்தது. பீகாரிலும் அப்படியே ஆயிற்று. அங்குக் குறிப்பிடத்தக்க பெரிய காரியம் ஒன்று நடந்தது. ஒரு பெரிய சேட்டுடன் போட்டி வந்துவிட்டது. அவர்தாம் சேட் ராமகிருஷ்ண டால்மியா. அவருக்குக் காங்கிரஸிடம் அனுதாபம் இருந்து வந்தது. முன்னாளில் அவர் அவ்வப்போது பணம் கொடுத்தும் உதவியிருக்கிறார். இத்தேர்தலுக்கு நிற்க அவர் நிச்சயித்தார். காங்கிரஸின் அபேக்ஷகரான ஸ்ரீ அனுக்கிரக நாராயண் சின்ஹாவைத் தேர்தலுக்கு நிற்காமல் விலக்கிவிட வேண்டுமென்று அவர் என்னிடம் கேட்டுக் கொண்டார். இது ஆகாத காரியம். ஏனெ

னில் இயன்ற வரையில் எல்லா இடங்களிலும் தன் அபேக்ஷகர் களை நிறுத்த வேண்டுமென்பது காங்கிரஸின் கொள்கை. ஸ்ரீ டால்மியா காங்கிரஸின் கட்டுப்பாடுகுள்ளும் வர விரும்ப வில்லை. ஆயினும் அவரிடம் எங்கள் எல்லாருக்கும் தனிப்பட்ட முறையில் நல்ல மரியாதை உண்டு. அவர் நிறையச் செலவழித் தார். ஆயினும் அவரும் பலமாகத் தோல்வியுற்றார். ஒரு பக் கத்தில் இவ்விதமான பெரும் வெற்றி உண்டாயிற்று என்பதைப் பற்றி எல்லாருக்கும் பெருமகிழ்ச்சி உண்டாயிற்று. மற்றொரு பக்கத்தில், இத்தேர்தலில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தால், மிக்க துக்க மும் விளைந்தது. பம்பாய்க் காங்கிரஸுக்கு முன்னிருந்தே, பிர தான மந்திரி மாக்டோனல்டு அளித்த இனவாரித் தீர்ப்பினால் காங்கிரஸ்காரர்களிடையில் கருத்து வேற்றுமை உண்டாகிவிட்ட தென்பதையும், பம்பாய்க் காங்கிரஸில் பண்டித் மாளவியஜீயான வர் புது அரசியல் அமைப்பைப் பற்றிக் காங்கிரஸ் தன் அபிப் பிராயத்தை வெளியிட்ட தீர்மானத்தை எதிர்த்தாரென்பதையும், அவர் கொண்டுவந்த திருத்தத் தீர்மானம் பெரிய பெரும் பான்மை வாக்கால் தள்ளப் பட்டுவிட்ட தென்பதையும் முன் னமே கூறியிருக்கிறேன். அவரோடு ஒத்த கருத்துக் கொண்ட வர்கள், தம் சார்பில் அபேக்ஷகர்களை நிறுத்தினார்கள். பீகாரி லும் ஜகத் நாராயண்லால் அவ்விதமாக நின்றார். வங்காளத்தில், அநேகமாக எல்லா இடங்களுக்கும் அபேக்ஷகர்கள் நிறுத்தப்பட் டார்கள். மற்ற மாகாணங்களிலும் சிலர் அப்படி நின்றார்கள். இவர்கள் சாதாரணமாக எல்லா விஷயங்களிலும் காங்கிரஸுடன் ஒத்த கருத்துக் கொண்டவர்கள்தாம். ஆயினும் இந்த ஒரு விஷயத்தில் அவர்கள் காங்கிரஸிலிருந்து மாறுபட்டிருந்தார்கள். காங்கிரஸானது ஸ்ரீ அணேக்குப் போட்டியாக அபேக்ஷகர் எவ ரையும் நிறுத்தவில்லை. அவர் எதிர்ப்பின்றி தேர்ந்தெடுக்கப்பட் டார். ஆனால் மற்ற இடங்களில் இரண்டுவிதக் காங்கிரஸ்காரர் களுக்கும் போட்டி வந்துவிட்டது. பீகாரில் காங்கிரஸைத் தவிர வேறு யாரும் வெற்றி பெறவிட்டாலும், வங்காளத்தில், அநேக மாக எல்லா இடங்களிலும் காங்கிரஸ் மண்ணைக் கௌவ வேண்டி வந்தது. எதிர்க் கட்சிக்காரர்கள்தாம் வெற்றி பெற்றார்கள். ஸ்ரீ மாக்டோனல்டின் தீர்ப்பானது மற்றெல்லாருக்கும் விட வங்கா ளத்துச் சாதி ஹிந்துக்களுக்கு அதிகத் தீங்கை விளைத்ததுதான் இதற்கு முக்கிய காரணம். அங்கு முசல்மானியருடைய எண் ணிக்கை ஏறக்குறைய 55–56 சதவிகிதமும் ஹிந்துக்களின் எண் ணிக்கை 44 சத விகிதமுமாக இருக்கின்றது. சிறுபான்மையரா

யிருந்த காரணத்தால் ஹிந்துக்களுக்குச் சில சலுகைகள் கிடைத்திருக்க வேண்டும். ஆனல் அத்தீர்ப்பின்படி பத்து சதவிகித இடங்கள் ஐரோப்பியருக்குக் கிடைத்துவிட்டன. எஞ்சிய 90 சத விகிதத்தைப் பங்கு போட்டதில் 51 சதவிகிதம் முசல்மானியருக்கும், 39 சத விகிதம் ஹிந்துக்களுக்கும் கிடைத்தன. அதாவது தம்முடைய எண்ணிக்கையின் சராசரியைவிடக் குறைவாக அவர்களுக்குச் சட்ட சபையில் இடங்கள் கிடைத்தன. இதற்குப் பிறகு, மகாத்மாஜீயின் உபவாசத்திற்குப் பின் புனுவில் தீண்டப் படாதாருடன் ஒப்பந்தம் நடந்ததும் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களின் எண்ணிக்கையும் மிகவும் பெருகி விட்டது. அவை ஹிந்துக்களுடைய இடங்களிலிருந்து தாம் கொடுக்கப்பட வேண்டும். இதனுல் வங்காளத்திலுள்ள சாதி ஹிந்துக்கள் மிகவும் அதிருப்தி யடைந்திருந்தார்கள். இந்தத் தீர்ப்பைக் கடுமையாக எதிர்க்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினுர்கள். இதில் காங்கிரஸ்காரர்களும் அல்லாதாரும், எல்லா ஹிந்துக்களுமே சேர்ந்து கொண்டார்கள். இதனுல் அங்கு நடந்த தேர்தலில் காங்கிரஸ் தோல்வியுற்றது. இப்புதிய கட்சி வெற்றியுற்றது. ஆயினும் அங்கு இத்தேர்தலில் இந்த ஒரு விஷயம் தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் காங்கிரஸுக்குத் துணை புரிபவர்களாகிய காங்கிரஸ்காரர்களே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். நவம்பர் கடைசிக்குள் நாடெங்கும் தேர்தல் நடந்தேறி விட்டது. காங்கிரஸுக்கு மாபெரும் வெற்றி உண்டாயிற்று. காங்கிரஸானது தான் நடந்துகொள்ள வேண்டிய முறையையும் வரையறுத்துக் கொண்டது. அதன்படிதான் மத்திய சட்டசபையில் அது வேலை செய்வதாக இருந்தது.

## 111. நாட்டைச் சுற்றி வந்தது—ஜின்னுவுடன் பேச்சு

தேர்தலில் காங்கிரஸுக்கு வெற்றி கிடைத்திருந்தும், மேலும் காங்கிரஸானது உயிருடனிருக்கிறதென்று மற்ற வகையிலும் தெரிய வந்தும், அதனை இறுகப் பிணித்து வலிமையானதாகச் செய்வது அவசியம் என்பதை உணர்ந்தோம். ஏனெனில் நான்கு ஆண்டுப் போராட்டத்தில், காங்கிரஸ் குழுக்கள் சட்டத்திற்குப்

புறம்பாக்கப்பட்டிருந்தபோது, காங்கிரஸ் அமைப்பு சின்னுபின்ன மாகிவிட்டது. அதற்கு மீண்டும் உயிரூட்டி நன்ருக அமைப்பது அவசியமாயிருந்தது. இதனுல் எல்லா இடங்களுக்கும் நான் ஒரு முறை சென்று வருவது அவசியமெனத் தோன்றியது. காங்கிரஸ் தலைவன் என்ற முறையில் நான் சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டுமென்று மாகாணக் குழுக்களும் வற்புறுத்தி வந்தன.

தில்லியில் சட்டசபை ஜனவரியில் தொடங்குவதாக இருந்தது. அங்கே செயலாற்றுக் குழுவின் இருக்கையும் கூட்டப் பட்டது. அங்கு மகாத்மாஜீயும் எதிர்பாராமல் வந்து சேர்ந்தார். காங்கிரஸ் தலைவரின் சுற்றுப் பிரயாணம் அங்கிருந்தே ஆரம்பிக்க வேண்டுமென்று அங்கிருந்தவர்களும் விரும்பினுர்கள். இதனுல் நான் அங்குப் போய்ச் சேர்ந்தபோது அங்குள்ளவர்கள் என்னை மிக்க ஆடம்பரத்துடன் வரவேற்ருர்கள். பம்பாயின் வரவேற்பைப் போலவே சிறப்பாக வரவேற்புக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். தில்லியிலும் அதேபோல ஒரு பெரிய ஊர்வலம் அமைத்து வரவேற்பு அளிக்கப்பட்டது. நகரத்தின் மக்கள் மிக்க உற்சாகத்துடன் விளங்கினுர்கள்.

ஆனுல் இந்தப் பிரயாணத்தைத் தொடங்குவதற்குமுன் ஒரு சிக்கலைத் தீர்க்க வேண்டியிருந்தது. ஸ்ரீ மாக்டோனுல்டானவர் இனவாரித் தீர்ப்பை அளித்து, முசல்மானியரை மிகவும் மகிழ்வித்துவிட்டார். ஆனுல் ஹிந்துக்கள் அதன்மீது மிகவும் ஆத்திரம் கொண்டிருந்தார்கள். ஏதாவது ஓர் உடன்படிக்கை ஏற்பட்டால் மிகவும் நல்லதாகுமென்பதை அறிவாளிகள் எல்லாரும் அறிந்திருந்தார்கள். இப்படி ஏதாவது செய்து முடிக்க வேண்டுமென்று டாக்டர் அன்சாரி மிகவும் ஆவல் கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ ஜின்னுவுடன் கடிதப் போக்குவரவைத் தொடங்கினுர். தில்லியில் நடந்த செயலாற்றுக் குழுவின் முன்னும் இந்த விஷயத்தைக் கொண்டு வந்தார். ஏதாவது வழி இருக்குமானுல் கட்டாயம் அதைத் தேடிப்பிடிக்க வேண்டுமென்று செயலாற்றுக் குழுவும் கூறியது. இதற்கிடையில் ஸ்ரீ ஜின்னுவும் தில்லிக்கு வந்து சேர்ந்துவிட்டார். ஒருநாள், டாக்டர் அன்சாரியின் வீட்டில் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களை அவர் சந்தித்தார். ஏதோ பேச்சு வார்த்தையும் நடந்தது. ஆனுல் இந்த விஷயம் இத்தனை பேர் கூடி முறையாகப் பேசி முடிக்கும் விஷயமாக இல்லை. மேலும் விரைவில் முடிவுக்கு வரக் கூடியதாகவும் இல்லை. கடைசியில், தாமும் காங்கிரஸின் தலைவரும்

மட்டும் கூடிப் பேச வேண்டுமென்று ஸ்ரீ ஜின்னு கருதினர். அப் பேச்சினுல் ஏதாவது ஒரு முடிவுக்கு வந்தால், பிறகு அதற்கு அவரவர் தத்தம் ஸ்தாபனத்தின் சம்மதத்தைப் பெறவேண்டு மென்ருர். டாக்டர் அன்சாரி வீட்டில் முதலில் நடந்த பேச்சி லிருந்தும் அதன் போக்கிலிருந்தும் எனக்கு யாதொரு சிறந்த நம்பிக்கையும் உண்டாகவில்லே. ஆயினும், இந்த விஷயமானது நம்மால் கெட்டுப் போயிற்று என்று குறை சொல்லுவதற்கு இடம் கொடுக்ககக்கூடாது. ஆதலால் நான் இப்பேச்சில் நெஞ்சாரக் கலந்துகொண்டேன். ஆயினும் இவ்வண்ணமான வேலேயைச் செய்வதற்கு நான் எவ்வளவு தகுதியுள்ளவன் என்பதைப்பற்றி எனக்கு ஐயமிருந்தது. ஆயினும், டாக்டர் அன்சாரி, சர்தார் வல்லபபாயீ படேல் ஆகிய இருவரின் முழு உதவியும் எனக்கு கிடைத்தது. மகாத்மாஜீயின் ஆசீர்வாதமும் இருந்தது. ஆகையால் பிழை எதுவும் வராதென்று நினேத்தேன். பேச்சு வார்த்தை நெடுநாள் நடந்தது. நான் பல வாரங்கள் தில்லியில் தங்க வேண்டி வந்தது. ஸ்ரீ ஜின்னுவும் நானும் கள்ளங் கபடின்றிப் பேசி வந்தோம். எனக்குத் தெரிந்த வரையில் எங்கள் இருவருக்கும் ஒருவருக்கொருவர்பால் இருந்த மரியாதை யும் நன்ருகவே இருந்தது. அன்ருடம் பேச்சு வார்த்தைக்குப் பின் அன்று நடந்த பேச்சை அன்றே விரிவாக எழுதி வந்தேன். அச்சமயம் எழுதப்பட்டக் குறிப்புக்கள் இன்றுகூட எங்காவது இருக்கும். கடைசியில் பேச்சை நிறுத்த வேண்டி வந்தது. உடன்படிக்கை நடக்க முடியவில்லே. இதற்காக நான் மிகவும் வருத்தப் பட்டேன். ஏனெனில் நாங்கள் எந்த நிபந்தனேகளேக் கொண்டு உடன்படிக்கை செய்ய விரும்பினுேமோ, அவை நாட் டிற்கு நன்மை பயக்குமென்று நான் கருதினேன். இதைவிட அதிக வருத்தம் என்னவென்ருல் எக்காரணத்தால் உடன்படிக்கை செய்ய முடியாமல் போய்விட்டதோ அது ஒன்றும் முக்கியமான விஷயமன்று என்பதுதான். அதை ஏற்றுக்கொள்ள மறுத்ததோ அல்லது அதைப்பற்றி அடம் பிடித்ததோ இரண்டுமே வீண் என்பது என் அபிப்பிராயம்.

நான் பேச்சு வார்த்தையைத் தொடங்குவதற்கு முன்னமே, காங்கிரஸின் சார்பில் மட்டும்தான் பேசுகிறேன் என்பதைத் தெளிவாக்கிவிட்டேன். மற்ற எந்தக் கட்சியின் சார்பாகப் பேசு வதற்கு எனக்கு அதிகாரமும் இல்லே. மேலும் மற்றவர்கள் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளவும் முடியாது. இங்குச் செய்யப்படும் முடிவுக்கு காங்கிரஸைச் சம்மதிக்க வைப்பது என்

கடமையாகும். அதேபோல் ஸ்ரீ ஜின்னுவும் முஸ்லிம் லீகைச் சம்மதிக்க வைப்பார் என்று நம்புகிறோம் என்று கூறித் தெளிவு படுத்திவிட்டேன். அவரும் இதற்கு ஒப்புக்கொண்டார். சமீபத்தில்தான் நாங்கள் காங்கிரஸில் இனவாரித் தீர்ப்புச் சம்பந்தமாக எங்களுடைய தனிப் போக்கான மனோபாவத்தைத் தெரிவித்தோமென்பதையும் அதனால் பண்டித் மாளவீயஜீ போன்ற போற்றற்குரிய தலைசிறந்த தலைவர்களைக் கூட எதிர்க்க வேண்டி வந்ததென்பதையும் அவர் அறிந்திருந்தார். மேலும் ஒரு மாகாணம் நீங்கலாகப் பெரும்பாலும் மற்றெல்லா மாகாணங்களிலும் தேர்தலில் வெற்றி பெற்றோம் என்பதும் அவருக்குத் தெரியும். இதனால் அவர் நான் கூறியதற்கு ஒத்துக் கொண்டார். மேலும் அவர், முசல்மானியர்களுக்காகத் தனி வாக்குத் தொகுதி இருக்கத்தான் வேண்டுமென்பதிலிருந்து அசைந்து கொடுக்காமல் நிற்பாரானால் பேச்சுக்கு யாதும் இடமில்லையென்பதையும் நான் தெளிவாகக் கூறிவிட்டேன். ஏனெனில் நாங்கள் தனி வாக்குத் தொகுதியை தேசீய நலத்திற்குப் பெருங் கேடு விளைவிப்பதாகக் கருதினதால், அது ஒழியாமல் நிலை பெறுவதானால் உடன்படிக்கை செய்து யாதொரு பயனுமில்லை. ஆகையால் அவர் தனி வாக்குத் தொகுதியைக் கைவிடத் தயாராயிருப்பார் என்ற அடிப்படையின் மீதுதான் பேச்சு வார்த்தை தொடங்கப்படும். அதன்மேல் அவர் பக்கத்திலிருந்து ஒரு கேள்வி எழுந்தது. தனி வாக்குத் தொகுதி முசல்மானியருக்குக் கிடைத்துவிட்டது என்றும், மேலும் அவர்கள் அதைச் சிறிது காலமாகப் பயன்படுத்தியும் வருகிறார்கள் என்றும், ஆகையால் அதற்கு ஈடாக அவர்களுக்கு எதுவும் நிச்சயமாகக் கிடைக்காத வரையில் அவர்களைச் சமாதானப்படுத்தவோ தனி வாக்குத் தொகுதியைக் கைவிட இணங்க வைக்கவோ இயலாது என்றும் சொல்லப்பட்டது.

அவர்களுக்கு எத்தனை இடங்கள் இனவாரித் தீர்மானத்தின் மூலம் கிடைத்தனவோ அத்தனை இடங்களை மட்டும் அவர்களுக்கென்று ஒதுக்கி வைப்பதற்கு நான் ஒத்துக் கொண்டேன். நாங்கள் இருவரும் இந்த இரண்டு விஷயங்களுக்கும் ஒத்துக் கொண்டே மேலே பேச்சை நடத்தினோம். தேர்தல் தொதிகுகளில் எங்கெங்கு முசல்மானிய வாக்காளரின் எண்ணிக்கை அவர்களுடைய ஜனத் தொகையின் விகிதத்திற்குக் குறைவாக இருக்கிறதோ, அவ்விடங்களில் வாக்குரிமைக்காக விதிக்கப்பட்டுள்ள தகைமைப் பாடுகளைக் குறைத்து முசல்மானிய வாக்காளர்களின் எண்ணிக்கையை அவர்களுடைய ஜனத்தொகை வீதத்திற்கு

ஒப்ப சரிகட்ட வேண்டுமென்று அவர் கோரினர். முசல்மானி யர் ஏழைகள் என்றும், பல இடங்களில் அவர்களுள் படித்தவர்கள் மிகக் குறைவாயிருக்கிறுர்கள் என்றும், இதனுல் எங்கு வரி செலுத்துவதானது வாக்குரிமையாளர்களின் தகைமைக்கு ஓர் அறிகுறியாகுமோ அந்த இடங்களில் எல்லாம் நிறைய முசல் மானியர்கள் கழியப்பட்டுப் போவார்கள் என்றும், அதனுல் அவர் களுடைய வாக்காளர்களின் எண்ணிக்கையானது அவர்களுடைய ஜனத்தொகை வீதத்திற்குக் குறைவாகிவிடுமென்றும், ஆகையால் இப்படிச் செய்வது மிகவும் அவசியமென்றும் அவர் கூறினர். பஞ்சாபைப் பற்றிக் கிடைக்கக் கூடிய புள்ளி விவரங்களையெல் லாம் நான் கவனமாய்ப் படித்தேன். நான் கண்ட வரையில், அவற்றின்படி முசல்மானிய வாக்காளர்களின் எண்ணிக்கை யானது பல இடங்களில் ஜனத்தொகை வீதத்தைவிடக் குறைவு என்பது தெரிய வந்தது. ஆனுல் அதிக வித்தியாசமில்லை. நூற்றுக்கு இரண்டு வீதமோ அதற்கு உட்பட்டோதான் வித்தி யாசப்பட்டது. ஹிந்துக்கள், முசல்மானியர், இரு வகுப்பினருக் கும் சேர்த்து ஒரே தேர்தல் தொகுதியை அமைக்கப் போவதால் இந்தக் கோரிக்கையானது நியாயமென்று எனக்குத் தோன்றியது. ஆகையால் நான் இதற்கு ஒத்துக்கொண்டேன். மேலும் காங்கிர ஸானது 21 வயது நிறைந்தவர்கள் எல்லாருக்கும் தேர்தலில் வாக்களிக்க உரிமை கொடுக்கப்பட வேண்டுமென்று முடிவு செய்துவிட்டதால் இதற்கு ஒத்துக் கொள்வதற்கு யாதொரு தடையுமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனுல் சீக்கியர் களிடமும் ஹிந்துக்களிடமும் நான் இதைப்பற்றிப் பேசியபோது சீக்கியர்கள் இதை மிகவும் கடுமையாக எதிர்த்தார்கள். பஞ்சா பின் ஹிந்துக்களுடன் பேச்சு வார்த்தை நடந்தபின், அவர்களில் முக்கியமானவர்கள் பலர் இதற்கு ஒத்துக் கொண்டார்கள். ஆனுல் வங்காளத்தின் ஹிந்துக்கள் இதற்கு எவ்விதத்திலும் சம்மதிக்கத் தயாராயில்லை. வங்காளத்திலிருந்து மத்திய சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுடன் தான் முதலில் இதைப்பற்றிப் பேசினேன். அவர்கள் எல்லாவற்றையும் கேட் டறிந்துகொண்டு உடன்படிக்கைக்கு ஒத்துக் கொண்டார்கள். ஆயினும் அவர்கள் வங்காளத்திலுள்ள மற்றவர்களின் அபிப்பிரா யத்தையும் கேட்பது அவசியமென்பதாக நினைத்தார்கள்.

பண்டித் மாளவியஜீயுடன் பேச்சு நடந்ததும், அவர் சீக்கியர் களையும், வங்காளத்து ஹிந்துக்களையும் சுட்டிக்காட்டி அவர்கள் ஒத்துக்கொள்ளாத வரையில் தாம் ஒன்றும் செய்ய முடியாதென்று

கூறிவிட்டார். வங்காளத்தைப்பற்றிய புள்ளி விவரங்களுக்காக நிறையத் தேடிப் பார்த்தேன். ஆனால் அரசாங்கத்தின் அறிக்கை அல்லது நூல் எதிலும், இதைப்பற்றி உண்மையான நிலைமை விவரம் கிடைக்கவில்லை. ஆகையால் நான் பஞ்சாபின் ஹிந்துக் களிடம் புள்ளி விவரங்களைக் காட்டி அவர்களுடன் வாதம் செய்ய முடிந்ததுபோல வங்காளத்து ஹிந்துக்களுடன் செய்ய முடிய வில்லை. அதன்மேல், இந்தக் கோரிக்கையைப்பற்றி பிடிவாதம் செய்ய வேண்டாமென்று ஜின்னாவுடன் வாது செய்தேன். ஏனெ னில் உண்மையாக இதில் ஒன்றுமே இல்லை. முசல்மானியர் பெரும்பான்மையாக இருக்குமிடங்களில் நூற்றுக்கு ஒன்றிரண்டு குறைவுபட்டதால் தேர்தலின் பலனில் யாதொரு சிறந்த கேடோ வித்தியாசமோ வந்துவிடாது. ஆயினும் அவர் இதற்கு ஒப்ப மாட்டேனென்று விட்டார். காங்கிரஸின் சார்பாகவும் அவர் கோரியதற்கு ஒத்துக்கொள்ளத் தயாராயிருந்தேன். ஆனால் அவர் பண்டித் மாளவீயஜீயின் சம்மதமும் அவசியம் என்று வற்புறுத்தினார். ஏனெனில் ஒப்பந்தம் செய்தபின் மாளவீய ஜீயின் தலைமையின் கீழ் இனவாரித் தீர்ப்பு எதிர்ப்பு இயக்கம் நடந்துகொண்டேயிருந்தால் இந்த ஒப்பந்தத்தால் முசல்மானி யருக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது என்று அவர் கூறினார்.

இவ்வண்ணம் பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருந்த அதே சமயத்தில் தில்லியில் இனவாரித் தீர்ப்பு எதிர்ப்பு மகாநாடு ஒன்று நடந்தது. அதற்கு வங்காளத்திலிருந்து சிலர் வந்திருந்தார்கள். அவர்கள் மேலே கூறியதை முற்றிலும் எதிர்த்தார்கள். நான் பண்டித் மாளவீயஜீயை எந்த விதத்திலும் சமாதானப்படுத்த முடியவில்லை. கடைசியில் அவர், முசல்மானியருக்கு எத்தனை இடங்கள் கிடைத்தனவோ, முக்கியமாக வங்காளத்திலும் மத்திய சட்ட சபையிலும் எத்தனை கிடைத்தனவோ அவற்றையும் குறைக்க வேண்டுமென்றும், அவை குறைக்கப்படாதவரையில் தாம் சம்மதிக்க முடியாதென்றும் கண்டிப்பாகக் கூறலானார். இந்தப் பக்கத்தில் ஸ்ரீ ஜின்னாவானவர் பண்டித் மாளவீயஜீ கையெழுத்துப் போடாத வரையில் தாம் உடன்படிக்கைக்கு ஒப்ப மாட்டேனென்று பிடிவாதம் செய்தார். மற்றொரு பக்கத்தில், முசல்மானிய தலைவர்கள் எல்லாருடைய சார்பிலும் தாமே சம் மதத்தை அளிக்க முடியுமென்று அவர் கூறினார். இவ்விதமாக, இப்பேச்சு வார்த்தையை நான் காங்கிரஸின் சார்பில் தொடங் கினாலும், மேலும் இது காங்கிரஸ்-முஸ்லிம் லீக் ஆகிய இரண்டின்

தலைவர்களுக்குள்ளேயே நடந்தாலும் கூடக் கடைசியில் ஸ்ரீ ஜின்னுவானவர் காங்கிரஸோடு மட்டும் ஒப்பந்தம் செய்துகொள்ள சம்மதிக்காததாலும், ஹிந்து சபாவின் சம்மதமும் வேண்டுமென்று நினைத்ததாலும் இச்பேச்சு முறிந்துவிட்டது.

முஸ்லீம் லீகை மட்டுமே முசல்மானியரின் பிரதிநிதிக் கழகமாகக் காங்கிரஸ் ஒத்துக்கொள்ள வேண்டுமென்றும், நான் ஹிந்துக்களின் சார்பில் ஒப்பந்தம் செய்யச் சம்மதிக்க வேண்டுமென்றும் அவர் விரும்பினர். காங்கிரஸ் ஹிந்துக்களின் ஸ்தாபனமாக மட்டும் அன்றுமில்லை, இன்றுமில்லை. அது என்றுமே எல்லாரையும் உட்கொண்ட தேசீய ஸ்தாபனமாக இருந்துவருகிறது. அதில் எல்லா சாதியாருக்கும் எல்லா இனத்தாருக்கும் இடமிருந்து வருகிறது. இருந்தும் வரும். அதனுடைய கொள்கையும் அனைவருக்கும் பொதுவான தேசீய கொள்கையாகவே இருந்துவருகிறது. அப்படியே இருந்தும் வரும். அன்று உடன்படிக்கை ஏற்படவில்லை. இது வருந்தத்தக்க விஷயம். ஏனெனில் அதற்குப் பிறகு நிலைமையானது வரவரக் கெட்டுக்கொண்டே போய்விட்டது. இன்று அரசியல் உலகில் விஷக்காற்று அடிக்கிறது.

அப்பேச்சு வார்த்தை நடந்துகொண்டிருந்த வரையில் நான் தில்லியிலேயே இருந்தேன். ஆயினும் இடையில் ஓரிரண்டு நாட்களுக்கு அக்கம் பக்கத்திலிருந்த இடங்களுக்கும் சென்று வந்தேன். அந்நாட்களில் நான் அலகாபாத்துக்கும் ஆக்ராவுக்கும் சென்று வந்தேன். மார்ச்சிலிருந்து முறையாகத் தொடர்ந்து பிரயாணம் செய்ய நிச்சயித்தேன். முதன் முதலில் பஞ்சாபுக்குப் போவதாக முடிவு செய்தேன். மார்ச்சில் அங்குச் சென்றேன். ஜாலந்தரில் இறங்கினேன். அங்கிருந்து சற்றுத் தொலைவில், காதிக்கு முக்கிய தலம் ஒன்று ஆதம்பூரில் இருக்கிறது. அங்குச் சென்று அங்கே நடந்துவரும் வேலையைப் பார்வையிட்டேன். ஜாலந்தரிலிருந்து லாகூருக்குச் சென்றேன். அங்கு மழையில் நனைந்ததாலும் குளிரினுலும் அடுத்த நாட் காலையிலேயே இருமலும் இழுப்பும் வந்துவிட்டன. என் வேலைத்திட்டம் முழுவதையும் மாற்ற வேண்டியதாயிற்று. நலமுற்றபின் நான் பீகாருக்குத் திரும்பி வந்தேன். ஏப்பிரலிலிருந்து மறுபடியும் யாத்திரைத் திட்டம் வகுத்துக்கொண்டேன். அதன்படி ஜூன் கடைசி வரையில் யாதொரு இடையூறுமின்றி முற்றிலும் நிறைவேற்றி வந்தேன். ஏப்ரலில் ஜபல்பூரில் அகில பாரதீயக் குழுவின் இருக்கை ஒன்று நடத்தப்பட்டது. அது மிகவும் வெற்றிகரமாக

நடந்தேறியது. அங்கிருந்து என் சுற்றுப்பிரயாணத்தைச் செய்யக் கிளம்பினேன். என் யாத்திரை பீரார் பிரதேசத்தி லிருந்து தொடங்கியது. அங்கு மாகாண அரசியல் மகாநாடு நடந்தது. அதற்குப் பண்டித் கோவிந்த வல்லப் பந்த் தாம் தலைவர். மகாநாட்டை முடித்துக்கொண்டு பீராரின் ஜில்லாக்கள் எல்லாவற்றிற்கும் சென்றேன்.

எல்லா இடங்களிலும் கூட்டங்கள் நடந்தன. வரவேற்புக்கள் நடந்தன, ஊர்வலம் சென்றது. மக்களிடையில் நிறைய உற்சாகம் காணப்பட்டது. இதற்கு முன் என் மாகாணத்திற்கு வெளியே இவ்வண்ணமாக யாத்திரை செய்ததில்லை. இப்போது இந்த அனுபவம் எனக்கு முதல் முதலாகக் கிடைத்தது. இது எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தது. ஏனெனில் வெவ்வேறு மாகாணங் களைப் பார்க்க கிடைத்தது மட்டுமின்றி காங்கிரஸ் ஸ்தாபனங்களை வலுவாக்கவும் பொது மக்களோடு தொடர்பு கொள்ளவும் வாய்ப்புக் கிடைத்தது.

பீரார் யாத்திரையை முடித்துக்கொண்டு நான் கர்நாடகத் திற்கு நேரே சென்றுவிட்டேன். அங்குள்ள ஜில்லாக்கள் எல்லா வற்றிலும் சுற்றிவந்தேன். அதற்குப் பின் மகாராஷ்டிரத்தில் எங்கும் சென்றேன். பரார், கர்நாடக், மகாராஷ்டிரா இந்த மூன்று மாகாணங்களில் சுற்றி வருவதிலேயே ஏப்ரல் பாதியும், மேயும் அநேகமாக ஜூன் முழுவதும் கழிந்துவிட்டன.

இந்தப் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது குவெட்டா பூகம்பத்தைப்பற்றி ஏதோ ஓரிடத்தில் இருந்த சமயத்தில் கேள்விப்பட்டேன். ஆரம்பத்தில், பல நாட்கள் வரையில், முழு விவரம் கிடைக்கவில்லை. பிறகு பத்திரிகைகளில் விவரங்கள் வரத்தொடங்கியதும், பீகாரில் இருந்ததுபோலவே அங்கும் நிலைமை இருக்குமென்பது தெரியவந்தது. நான் உடனே ஓர் ஆபத்து சகாய குழுவை நிறுவி, நானே அதற்கு தலைவனாக அமைந்தேன். பணம் வந்து குவியத் தொடங்கியது. பீகாருக்கும் குவெட்டாவுக்கும் இரண்டு விஷயங்களில் அதிக வேற்றுமை யிருந்தது. குவெட்டாவின் பூகம்பமானது குவெட்டா நகரத் தையும் அதன் சுற்றுப்புறத்தையும் பீகார் பூகம்பத்தைப் போலவே நாசம் செய்தது. ஆனால் அது நாசம் செய்த இடத்தின் பரப்பு பீகாரைப்போல அவ்வளவு பரந்து கிடக்கவில்லை. குவெட்டா ஒரு ராணுவ ஸ்தலம். இதனால் அங்குப் பட்டாளம் இருந்தது. மக்களுக்கு உதவி புரிவதற்கு அது பயன்படுத்தப்

பட்டது. ஆனால் இதே காரணத்தால், அரசாங்கத்தோடு சம்பந்தப்படாத கழகங்கள் அங்குப் பணியாற்ற முடியவில்லை.

சிந்தையும், பஞ்சாபையும் சேர்ந்தவர்கள் குவெட்டாவில் நிறைய இருந்தார்கள். அங்குத் தப்பியவர்களில் பலர் சிந்துக்கும் பஞ்சாபுக்கும் திரும்பிச் சென்றுவிட்டார்கள். அவர்களிடமிருந்து தான் விதவிதமானச் செய்திகள் கிடைத்தன. இவ்விதமான திக்கற்றவர்களுக்கு வெளியூரார் உதவி புரிந்தார்கள். அவர்களுக்கு உதவி மிகவும் தேவையாயுமிருந்தது. ஏனெனில் அவர்களுடைய சொத்துக்கள் எல்லாவற்வையும் அவர்கள் குவெட்டாவில் இழந்து விட்டார்கள். பலருக்கு அவர்கள் குடும்பத்தில் தொழில் செய்து சம்பாதித்து வந்தவர்களும் உறவினர்களும் இறந்துவிட்டார்கள். அவர்கள் தங்கி வசிக்கக்கூடிய இடங்களுக்கு அவர்களைக் கொண்டு சேர்ப்பது அவசியமாயிற்று. ஆனால் அப்படிப்பட்ட இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாலும் அவர்களுக்கு இடம் கிடைக்குமென்ற நம்பிக்கையில்லை. இதனால் அவர்களை எங்காவது அழைத்துச் சென்று அங்கு அவர்கள் சில நாட்கள் தங்கியிருக்க இடத்திற்கும் சாப்பாட்டிற்கும் ஏற்பாடு செய்துவிட்டுப் பிறகு அவர்களை ஏதாவது தொழிலில் அமர்த்திவிடுவது அவசியமாயிருந்தது. நான் குவெட்டாவுக்குச் செல்ல வேண்டுமென்றும், பீகாரின் பூகம்பத்தில் வேலை செய்ததால் கிடைத்த அனுபவத்தை அங்குள்ளவர்களுக்கு பயன்படச் செய்து உதவி புரியவேண்டுமென்றும் ஆசைப்பட்டேன். ஆனால் அரசாங்கமானது எனக்கு அனுமதி கொடுக்கவில்லை. இந்த விஷயத்தைப் பற்றிப் பத்திரிகைகளும் அரசாங்கத்தைக் கண்டித்தன. ஆனால் அது அசைந்து கொடுக்கவில்லை.

இதனால் நான் வெளியிலிருந்தே தொண்டு புரிய வேண்டியிருந்தது. நான் குவெட்டாவுக்குச் செல்லவில்லை. ஆயினும் குவெட்டாவிலிருந்து மக்கள் தப்பி ஓடிச் சேர்ந்த கராச்சி, ஜாகோபாபாத், சிகார்பூர் முதலிய சிந்து நகரங்களுக்கும் டேரா காஜீக்கான், முல்த்தான், லாகூர் முதலிய பஞ்சாப் நகரங்களுக்கும் சென்றேன். அவர்களுக்கு உதவி புரிவதற்காக அந்த இடங்களில் எல்லாம் குழுக்களை அமைத்தேன். அக்குழுக்கள் அவர்களுக்குத் தம்மால் இயன்ற உதவியைப் புரிந்தன. குவெட்டா ஆபத்து சகாயக் குழுவின் விண்ணப்பத்தின் பேரில் எத்தனையோ லக்ஷம் ரூபாயும் வந்து சேர்ந்தது. அது அவர்களுக்கு வழங்கப்பட்டது. இங்குச் செய்த உதவி பீகாரில் செய்த உதவியிலிருந்து முற்றிலும் மாருக இருந்தது. குவெட்டா பூகம்பத்தில், உதவி

மிகவும் தேவையாக இருந்த இடத்திற்கு நாங்கள் போகவே முடியவில்லே. இதனுல் குவெட்டாவுக்கே சென்று நாங்கள் எதுவும் செய்ய முடியாமலிருந்தோம். மேலே கூறிய இடங்களில்தான் அங்கு வந்து ஒண்டினவர்களுக்காகச் சாப்பாட்டிற்கும் மருந்து முதலியவற்றிற்கும் சிறிதளவு பணம் செலவழிக்கப்பட்டது. அவர்கள் ஒவ்வொருவரும் மீண்டும் தம் வாழ்க்கையைத் தொடங்குவதற்கு வேண்டிய வழிகளே அமைத்துக் கொடுப்பதில்தான் அதிகப் பணம் செலவிடப்பட்டது. இந்த வேலேயின் பொறுப்பைச் சிந்துவில் ஸ்ரீ ஜயராம்தாஸும், பஞ்சாபில் டாக்டர் கோபிநாத் பார்கவாவும் ஏற்றுக்கொண்டார்கள். அவர்களுக்கு உள்ளூர்க்காரர்கள் துணை நின்று இந்த வேலேயை மிக்க ஆர்வத்துடன் புரிந்தார்கள்.

# 112. காங்கிரஸின் சரித்திரம்–சுதேச ராஜ்யங்களின் சிக்கல்கள்

காங்கிரஸானது 1885ஆம் ஆண்டு டிசம்பரில் பிறந்தது. அதன் முதல் பேரவை பம்பாயில் நடத்தப்பட்டது. 1935 டிசம்பரில் அதற்கு ஐம்பது ஆண்டுகள் நிறைவுறும். இதனுல் காங்கிரஸின் பொன்விழாவை (அரை நூற்ருண்டு முடிவதை) மிகச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டது. இதற்காக நிகழ்ச்சி நிரலும் அமைக்கப்பட்டது. அதைப் பற்றிப் பின்னர் கூறுவேன். ஆனுல் இங்கு ஒரு விஷயத்தை மட்டும் கூறவேண்டும். காங்கிரஸுக்கு சுமார் 50 ஆண்டுகள் ஆகிவிட்டாலும், காங்கிரஸின் வரலாறு யாதொன்றும் முறையாக ஆரம்பத்திலிருந்து இன்று முடிய எழுதப்படவில்லே. டாக்டர் பட்டாபி சீதாராமய்யா ஒரு வரலாற்றை எழுதியிருந்தார். ஆனுல் அது இன்னும் அச்சாகவில்லே. இந்த ஜயந்தியின்போது ஒரு வரலாற்றை வெளியிட வேண்டுமென்ற எண்ணம் எழுந்தது. அவர் எழுதி வந்த வரலாற்றை முடிக்கும்படியும், அதைக் காங்கிரஸின் சார்பில் அச்சிட்டு இச்சமயத்தில் வெளியிடும்படியும் நான் டாக்டர் சீதாராமய்யாவை வேண்டிக்கொண்டேன். அவர் அப்படியே முடித்துக் கொடுத்தார். மழை காலத்தில் நானும் அவரும் வர்தா

வில் இருந்துகொண்டு அதைப் பிழையறப் படித்துப் பார்த்தோம். இந்த வேலை பல நாட்கள் பிடித்தது. அப்படியும் எஞ்சியிருந்ததை நான் அலாகாபாத்தில் சுயராஜ் பவனில் தங்கி இருந்து திருத்தி முடித்தேன்.

அந்த வரலாறு ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. அதை நம் நாட்டு மொழிகளிலும் அதே சமயத்தில் பதிப்பிட வேண்டுமென்பதாக நாங்கள் முடிவு செய்தோம். இதனுல் ஹிந்தி, மராட்டி, கன்னடம், தெலுங்கு, தமிழ், உருது ஆகிய மொழிகளிலும் அதை மொழிபெயர்த்து அச்சிட ஏற்பாடு செய்தோம். ஆங்கிலப் பதிப்பை வெளியிடும் செலவை அகில பாரதீயக் குழு ஏற்றுக் கொண்டது. ஏனெனில் நாங்கள் இதில் போடும் பணம் புத்தகங்கள் விற்றபின் திரும்பக் கிடைத்துவிடும். மற்றத் தேசீய மொழிகளில் மொழி பெயர்க்கும் வேலையையும் அவற்றை அச்சிடும் பொறுப்பையும் எந்தெந்த மாகாண மொழிகளில் அது மொழி பெயர்க்கப்பட்டதோ அவ்விடத்துப் பதிப்பாளர்களோ, மாகாணக் குழுக்களோ ஏற்றுக் கொண்டன. காங்கிரஸின் ஜயந்தி கொண்டாடப்பட்ட தினத்தன்று, ஆங்கிலம், ஹிந்தி, மராட்டி, கன்னடம், தெலுங்கு, தமிழ், உருது ஆகிய மொழிப் பதிப்புக்கள் அச்சிடப்பட்டு விற்பனைக்குத் தயாராகிவிட்டன வென்பது எனக்கு நினைவிருக்கிறது. ஹிந்தியிலும், மராட்டியிலும் சில நாட்களுக்குள்ளாகவே இரண்டாவது பதிப்பு அச்சிட வேண்டியிருந்தது. ஆங்கிலத்திலும் எத்தனையோ ஆயிரம் பிரதிகள் முற்றிலும் விற்றுப் போயின. மறுபடியும் அதை அச்சிட வேண்டி வந்தது. அவற்றில் சில பிரதிகள் கையில் தங்கிவிட்டன. இந்தப் புத்தகத்தைப் படித்துத் திருத்துவதில் நான் நிறைய காலம் கழிக்க வேண்டி வந்தது. இதற்கொரு முன்னுரையும் எழுதவேண்டி வந்தது.

இந்த ஜயந்தியின்போது காங்கிரஸைப் பற்றி வேறு சில புத்தகங்களும் பெரியதும் சிறியதுமாக அச்சிடப்பட்டன.

மழை காலத்திற்குப் பிறகு தென்னுட்டு யாத்திரையைச் செய்ய வேண்டுமென்று நான் முன்னமே எண்ணியிருந்தேன். இதனுல் மதராஸ் ராஜதானியின் மாகாணங்களாகிய தமிழ் நாடு, கேரளம், ஆந்திரா ஆகிய மூன்றிற்கும் யாத்திரைத் திட்டம் தயார் செய்யப்பட்டது. தசராவுக்குப் பிறகு இந்த யாத்திரையைத் தொடங்கலாமென்று நினைத்தேன். யாத்திரைக்குப் புறப்படுவதற்கு முன் மதராஸில் அகில பாரதீயக் குழுவின் இருக்கையை நடத்த முடிவு செய்தேன். இது ஒரு விசேஷ காரணத்தால் அவசியமாயிருந்தது.

தேசீய மன்னர், குறுநில மன்னர் ஆகியவர்களின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவதில்லை என்பது ஆரம்பத்திலிருந்தே காங்கிரஸின் கொள்கையாக இருந்து வந்தது. ஆரம்பத்தில் இந்தக் கொள்கைக்குக் காரணம் எதுவாயிருந்தாலும், இப்போது அதைப்பற்றி நிறையக் கருத்து வேறுபாடு எழத் தொடங்கியது. தேசீய மன்னர் நாடுகளில் ஜனநாயகமில்லை. ராஜாக்கள் வைத்ததுதான் சட்டமாயிருந்தது. எங்காவது நல்ல திவான் எவராவது கிடைத்துவிட்டால் அங்கு அரசாட்சி நன்ருக நடந்தது. குடி மக்களுக்கு நன்மையும் உண்டாயிற்று. ஆனல் எங்குமே நாட்டின் அரசாட்சியில் குடி மக்களுக்கு யாதொரு அதிகாரமும் கிடையாது. இந்த அறுநூறு ராஜ்யங்களில் சில பீகாக்கள் பரப்பும் சிறிய ஜனத்தொகையும் கொண்ட சிறிய ராஜ்யங்களிலிருந்து ஆயிரக்கணக்கான சதுர மைல் பரப்பும், கோடிக் கணக்கான ஜனத்தொகையும் கொண்ட மாபெரும் ராஜ்யங்கள் வரையில் இருந்தன. ஆயினும் ஒரு ராஜ்யத்தில்கூட பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இஷ்டத்திற்கு விரோதமாக எந்த முக்கிய காரியமும் நடக்க முடியாது.

ஆயினும் பிரிட்டிஷ் இந்தியாவில் ,ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அரசியல் கூட்டங்கள் நடந்து வந்து கொண்டிருக்கின்றன. இங்கு மக்களிடையில் விழிப்பு உண்டாகிவிட்டது. பிரிட்டிஷ் அரசியல் அமைப்பின் ஜனநாயக முறையினுலும், வேறு வழியில்லாததினுலும் பிரிட்டிஷ் அரசாங்கமானது, பிரிட்டிஷ் இந்தியாவிலும் ஜனநாயக முறையை அமைப்பதாக அறிக்கையிட வேண்டி வந்தது. அவ்வப்போது புனையப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டங்களும் இந்தியாவை அவ்வழியில் மேற்கொண்டு சென்றன. நாம் போக வேண்டிய தொலைவுக்கு அவை நம்மைக் கொண்டு சேர்க்கவில்லை யென்பது வேறு விஷயம். ஆயினும் இங்குள்ள அரசியல் அமைப்பானது நம்மை அப்பக்கம் ஈர்த்துச் சென்றதென்பதை மறுக்க முடியாது. பிரிட்டிஷ் இந்தியாவும், தேசீய ராஜ்யங்களும் ஒன்ருேடொன்று நெருங்கிய உறவு கொண்டிருந்தன. சாதாரண விஷயங்களில் அவை இரண்டிற்கும் யாதொரு வேற்றுமையையும் காணமுடியாது. வேற்றுமை அரசியல் முறையில்தானிருந்தது. ஆயினும் இரண்டின் மக்களிடையில் யாதொரு வேற்றுமையும் கிடையாது. ஆனல் அரசாட்சி முறைகள் நிறைய மாறுபட்டிருந்தன. இதனல் பிரிட்டிஷ் இந்தியாவில் விழிப்பு உண்டானதும் அதன் சாயல் தேசீய மன்னர் ராஜ்யங்களின் குடி மக்களின் மீதும் படாமலிருக்க முடியவில்லை.

அவர்களுக்கும் தம் ராஜ்யத்தில் உரிமை பெறுவதற்கு விருப்பமும் ஆவலும் பிறந்தன. அங்கு நடந்து வந்த அட்டூழியங்களினுல் இவ்வித உரிமையின் தேவை மேலும் தெளிவாகத் தெரிய வந்தது. அங்கும் மக்கள் சில அரசியல் கழகங்களை ஆரம்பித்தார்கள். மேலும் அவர்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் நடந்து வந்த அரசியல் கிளர்ச்சிகளிலும் கலந்து கொள்ளலானுர்கள். இவ்விதமாக இங்கு உலவிவந்த கருத்துக்களைத் தம்முடைய ராஜ்யங்களுக்குள் தம்முடன் கொண்டு சென்று அங்கு அவற்றை பரவத் தொடங்கினுர்கள். இதனுல் தேசீய மன்னரின் ராஜ்யங்களின் உள்நாட்டுச் சண்டைகளில் தலையிடுவதில்லை என்று காங்கிரஸ் கொண்டிருந்த பழைய கொள்கையானது மக்களுக்கு அதிருப்தியை உண்டாக்கியது.

1920 டிசம்பரில் நாகபுரி காங்கிரஸின்போது காங்கிரஸானது தன்னுடைய அமைப்புச் சட்டத்தை அடியோடு மாற்றிப் புதிதாக நிறுவி மொழிவாரியாகக் காங்கிரஸ் மாகாணங்களை அமைத்த போது, அது தேசீய ராஜ்யங்களின் மக்களுக்கு அவர்களுக்குப் பக்கத்திலுள்ள பிரிட்டிஷ் இந்தியாவின் காங்கிரஸ் மாகாணக் குழுக்களில் சேர்ந்து கொள்வதற்கு உரிமையை அளித்துவிட்டது.

தேசீய ராஜ்யங்களுக்குள் காங்கிரஸ் குழுக்களை நிறுவக் காங்கிரஸ் விரும்பவில்லை. ஏனெனில் அப்படிச் செய்து அங்குள்ள அரசாங்கத்தோடு ஏதாவதொரு விஷயத்தில் அபிப்பிராய பேதம் வந்து விட்டாலோ அல்லது அக்குழுக்களை நிறுவுவது அந்த ராஜாங்கத்திற்குப் பிடிக்காவிட்டாலோ அத்துடன் சண்டை மூண்டுவிடலாம். காங்கிரஸுக்கு இது பிடிக்கவில்லை. தேசீய மன்னரின் குடி மக்களிடையில் விழிப்பு உண்டானதும், காங்கிரஸ் தன்னுடைய கொள்கையை மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும், பிரிட்டிஷ் இந்தியாவில் காங்கிரஸானது எவ்விதமாக ஜனநாயகத்திற்காகப் பாடுபட்டு வந்ததோ அதே போல அது தேசீய மன்னர் குடி மக்களுக்காகவும் பாடுபட வேண்டுமென்றும் அக்குடி மக்கள் கோரிக்கை செய்தார்கள். அவர்களுடைய கோரிக்கை நியாயமானதாயிருந்தது. ஏனெனில் இரண்டு பகுதிகளின் மக்களிடையில் யாதொரு வேற்றுமையும் இல்லை. காங்கிரஸ் அவர்கள் இடையில் வேற்றுமை பாராட்டுவது நன்ருகவுமில்லை. மேலும் காங்கிரஸும் அவ்விருவருக்கிடையில் வேற்றுமை பாராட்ட விரும்பவுமில்லை. ஆயினும் அது இச்சண்டையை ஏற்றுக்கொண்டு தன் கஷ்டங்களைப் பெருக்கிக் கொள்ள விரும்பவில்லை. மேலும், நாம் பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஏதாவது ஒரு வழிக்குக் கொண்டுவந்து

இங்கே ஜனநாயகத்தை நிறுவ முடியுமானல் சுதேச ராஜ்யங்களி லும் அது எளிதில் கைகூடிவிடுமென்று காங்கிரஸ் நினைத்தது. ஏனெனில் அவை பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆற்றலைத்தான் அண்டி வாழ்கின்றன. இப்படி யெல்லாம் இருந்தும்கூட சுதேச ராஜ்ய மக்களிடையில் பல ஆண்டுகளாகக் கலவரம் நிலவி வந்தது. இதற்குப் பல காரணங்கள் இருந்தன.'

பிரிட்டிஷ் அரசாங்கமானது சுதேச ராஜ்யங்களின் பிரதிநிதி களையும் வட்ட மேஜை மகாநாட்டிற்கு அழைத்தது. அங்கு இந்தியாவிற்காக அரசியல் அமைப்புச் சட்டத்தைத் தயார் செய்ய முயற்சி செய்யப்பட்டது. அந்த அமைப்புக்குள், பிரிட்டிஷ் இந்தியா, சுதேச இந்தியா இரண்டுமே உள்ளடங்கியிருந்தன. திருப்திகரமான அரசியல் அமைப்பு தயாரிக்கப்பட்டு அதில் தம் உரிமைகள் காக்கப்படுமானல் தாமும் அந்த அரசியல் அமைப்புக் குள் தம் ராஜ்யங்களைக் கொண்டு வருவோமென்று வட்ட மேஜை மகாநாட்டிற்கு வந்திருந்த ராஜாக்கள் ஒத்துக்கொண்டால்தான் இரண்டிற்கும் ஒரே அரசியல் அமைப்பைத் தயார் செய்யத் தொடங்க முடியும். 1935இன் அமைப்பின்கீழ் நிறுவப்படவிருந்த மத்திய சட்டசபையில் மூன்றில் இரண்டு பங்கு பிரதிநிதி இடங் கள் பிரிட்டிஷ் இந்தியாவுக்காகவும், மூன்றில் ஒரு பங்கு சுதேச ராஜ்யங்களுக்காகவும் ஒதுக்கப்படுவதாக இருந்தது. ஆனல் இதில் ஒரு பெரும் வித்தியாசம் இருக்கும். பிரிட்டிஷ் இந்தியா வின் பிரதிநிதிகள் அங்குள்ள மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார் கள். ராஜ்யங்களின் பிரதிநிதிகளோ அங்குள்ள அரசர்களால் நியமிக்கப்படுவார்கள்; இந்த விஷயங்கள் அங்குள்ள குடி மக்க ளுக்கு மிக்க வருத்தத்தை விளைவித்தன. எங்கள் எல்லாருக்கும் கூட இவை மிகவும் கெடுதலாகப்பட்டன. ஏனெனில் இவ்வித மாக பிரிட்டிஷ் அரசாங்கமானது பேருக்காக மத்திய சட்டசபைக் குப் பிரதிநிதித் தன்மையைக் கொடுக்கிறுற்போலக் கொடுத்து உண்மையில் அதன் மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்களை நியமிப்பதில் அரசர்கள் மூலமாக தன் கைவரிசையைக் காட்ட முடியும். காங்கிரஸானது எப்படி பிரிட்டிஷ் இந்தியாவில் மக்களை ஒன்று கூட்டி அமைக்கும் வேலையைச் செய்து வருகிறதோ அதேபோல சுதேச ராஜ்யங்களிலும் அது செய்ய வேண்டுமென்று காங்கிரஸை அந்த ராஜ்யங்களின் குடிமக்கள் வற்புறுத்தி வந்த தற்கு இது ஒரு முக்கிய காரணமாகும்.

சுதேச ராஜ்யங்களில், சிற்சில இடங்களின் அரசர்கள் தற் கால சூழ்நிலையினல் நெருக்கப்பட்டுச் சில சீர்திருத்தங்களைச்

செய்தார்கள். சிற்சில இடங்களில் பேருக்காக சட்டசபைகளையும் நிறுவினார்கள். அவற்றிற்கு மிகக் குறைவாகவே உரிமைகள் அளிக்கப்பட்டன.

1930–1934 சத்தியாக்கிரக கிளர்ச்சியில் சுதேச ராஜ்யங்களின் குடிமக்கள் பல இடங்களில் நிறையப் பங்கெடுத்துக் கொண்டார்கள். குஜராத்தியரும், மார்வாடிகளும் வியாபாரத்தில் மிகவும் முன்னேறியிருந்தார்கள். அவர்கள் பம்பாய், கல்கத்தா முதலிய பெரிய பெரிய நகரங்களுக்கு வியாபாரத்திற்காகச் செல்கிறார்கள். அங்குப் பெருக்கெடுத்த கிளர்ச்சியில் அவர்கள் பட்டுக்கொள்ளாமல் ஒதுங்கி நிற்க முடியவில்லை. பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களில் குஜராத்திகளும், மார்வாடிகளும் அங்கு நடந்த சத்தியாக்கிரகத்தில் சேர்ந்தபோது, எந்த உரிமைகளுக்காக அவர்கள் பிரிட்டிஷ் இந்தியாவில் காங்கிரஸில் சேர்ந்து போராடி வந்தார்களோ, அதே உரிமைகளைத் தம்முடைய ராஜ்யங்களிலும் பெறுவதற்காக அவர்கள் இந்தக் கிளர்ச்சியை அங்கும் கொண்டு போக இயல்பாகவே விரும்பினார்கள். இவ்வண்ணமாக, காங்கிரஸின் கொள்கையை மாற்றி அமைக்க வேண்டுமென்று ஒரு சிறந்த பெரும் கட்சி காங்கிரஸுக்குள் உண்டாகிவிட்டது. காங்கிரஸில் இருந்த பிரிட்டிஷ் இந்தியாக்காரர்கள் நிறையப் பேர் பிரிட்டிஷ் இந்தியாவுக்கும், சுதேச இந்தியாவுக்கும் யாதொரு வித்தியாசமிருக்கக் கூடாதென்று விரும்பினார்கள். இதனால் பம்பாய்க் காங்கிரஸின்போதே காங்கிரஸின் கொள்கை மாற்ற வேண்டுமென்ற ஒலி எழுந்துவிட்டது.

மகாத்மா காந்தியே ஒரு சுதேச இராச்சியத்தில் பிறந்தவர் தாம். நாம் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்துகொண்டு சுதேச ராஜ்யங்களின் வேலையைச் செய்யத் தொடங்குவோமானால் அங்கு வேலை சரியாக நடக்காதென்றும், அங்குள்ள குடிமக்கள் தம் ஆற்றலையே நம்பி நின்று வலிமையுற வாய்ப்புக்கிட்டாதென்றும் அவர் எண்ணினார். இதனால் அவருக்குச் சுதேச ராஜ்யக் குடிமக்களிடம் அதிக அனுதாபமிருந்தும்கூட காங்கிரஸானது பிரிட்டிஷ் இந்தியாவில் எப்படி பணியாற்றி வந்ததோ அதே போல சுதேச ராஜ்யங்களிலும் தன் வேலையை நடத்த வேண்டுமென்று அவர் விரும்பவில்லை. ஆனால் அங்குள்ள குடிமக்கள் இவ்விதமான கிளர்ச்சியைத் தாமே கட்டாயமாகச் செய்யலாம். காங்கிரஸின் அனுதாபம் அவர்களிடம் இருக்க வேண்டும், இருக்கவும் செய்யும். மேலும் அந்த அனுதாபமானது தேவைப்பட்ட படியும், சௌகரியப்பட்டபடியும் செயல் முறையிலும் காட்டப்

படலாம். அப்படியே நடக்கும். ஆனால் அங்குள்ள கிளர்ச்சி யின் பொறுப்பையும் கழகங்களின் பொறுப்பையும் காங்கிரஸ் இப்போது ஏற்றுக் கொள்ள முடியாது.

மகாத்மாஜீயானவர் ஓர் அறிக்கையில் மேலே கூறியுள்ள அபிப்பிராயத்தை வெளியிட்டார். காங்கிரஸ் சுதேச ராஜ்ய விஷயங்களில் தலையிட வேண்டுமென்று விரும்பியவர்களுக்கு இது திருப்தியளிக்கவில்லை. நானும் காங்கிரஸின் தலைவன் என்ற முறையில் ஓர் அறிக்கையை வெளியிட்டேன். ஆனால் அதுவும் அவர்களுக்குத் திருப்தியாக இல்லை. கடைசியில் செயலாற்றுக் குழுவும் ஓர் அறிக்கையை வெளியிட்டது. இதனால் செயலாற்றுக்குழு செய்த முடிவைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டுமென்பதும் மதராஸில் அகில பாரதீயக் குழுவின் இருக் கையைக் கூட்டுவதற்கு ஒரு காரணமாக இருந்தது. அகில பாரதீயக் குழுவானது செயலாற்றுக் குழுவின் முடிவையே ஏற்றுக் கொண்டது. ஆயினும் இச்சண்டை காங்கிரஸுக்குள் நடந்துகொண்டே இருந்தது.

இப்படியெல்லாம் நடந்ததால் மிகவும் விரும்பத்தக்க பலன் ஒன்று விளைந்தது. அதுவே காந்திஜீயின் கொள்கையின் நோக்கமுமாயிருந்தது. சுதேச ராஜ்யக் குடிமக்கள் அந்தந்த ராஜ்யங்களில் தம் சொந்த கழகங்களை அமைத்துவிட்டார்கள். பல ராஜ்யங்களில் பிரஜா மண்டல் என்ற பெயரில் அல்லது வேறு பெயரில் கழகங்கள் நிறுவப்பட்டன. அகில பாரதீய சுதேச ராஜ்ய பிரஜா மண்டலும் அமைக்கப்பட்டது. இவ்வண்ணமாக, அங்குள் ளவர்கள் தம்முடைய கிளர்ச்சியைத் தாமே நடத்தத் தலைப்பட்டார் கள். காங்கிரஸும் தேவைப்பட்ட இடங்களில் கட்டயமாக உதவி புரிந்துவரும். இந்த நிலைமையை எட்டுவதற்கு பல ஆண்டுகள் பிடித்தன. 1935இல் மிகவும் பலத்தவாதம் இன்னும் நடந்துகொண் டிருந்தது. இதனால் காங்கிரஸின் கொள்கையை வரையறுத்து அறிக்கையிட வேண்டியது அவசியமாயிருந்தது. அரசியல் கிளர்ச்சியைப்பற்றி மட்டும்தான் இந்தக் கருத்து மாறுபாடு இருந்து வந்தது. ஆனால் அங்கு ஜனநாயக அரசாட்சி முறை அமைக்க வேண்டுமென்ற விஷயத்தைப்பற்றிய வரையில் காங் கிரஸும், எப்படி பிரிட்டிஷ் இந்தியாவுக்கு அதையே தன் முழு நோக்கமாகக் கருதியதோ, அது போலவே, அங்கும் அதையே தன் நோக்கமாக முற்றிலும் கருதியது. இதைப்பற்றி அறிக்கை யும் செய்திருந்தது. ஆக்க வேலையைப்பற்றியும் யாதொரு கருத்து வேறுபாடுமில்லை. பல ராஜ்யங்களில் தீண்டப்படா

தாரை முன்னேற்றும் வேலையும், காதி உற்பத்தியும் அதற்காகப் பிரசாரமும் பல ஆண்டுகளாக நிறையச் செய்யப்பட்டு வந்தன. இதிலும் யாதொரு கருத்து வேறுபாடில்லை.

## 113. தென்னிந்தியச் சுற்றுப் பிரயாணம்

நான் வர்தாவிலிருந்து மதராஸுக்குப் புறப்பட்டேன். அங்கு அகில பாரதீயக் குழுவின் இருக்கை முடிந்தபின் தென்னிந்தியா வின் பிரயாணம் தொடங்கப்பட்டது. அந்த யாத்திரையில் மொழியினால் கஷ்டம் உண்டாயிற்று. மத்ய பிரதேசத்திலும், மகாராஷ்டிரத்திலும் நான் ஹிந்தியிலேயே சொற்பொழிவு ஆற்றி வந்தேன். மதராஸிலிருந்து நான் ஆங்கிலத்தில் பேச வேண்டி வந்தது. நான் சொல்வதையெல்லாம் உள்ளூர்க்காரரர் ஒருவர் வாக்கியம் வாக்கியமாக மொழி பெயர்த்து வந்தார்.

தென்னிந்தியாவில் ஹந்தி பிரசார வேலை, மகாத்மாஜீயின் தூண்டுதலினால், 1918இலிருந்தே நடந்து வந்தது. தமிழ் நாட்டில் ஆயிரக்கணக்கான பெண்களும், ஆண்களும், ஹிந்தி பேசவும், புரிந்துகொள்ளவும் கூடியவர்களாகி விட்டார்கள். நான் சென்ற பெரிய நகரங்களிலெல்லாம் ஹிந்தி பிரசாரம் செய்பவர்கள் என்னை வந்து கண்டு கொள்வார்கள். அவர்களில் சிலர் அங்கேயே வசிப் பவர்கள். அவர்கள் ஹிந்தியைக் கற்று கொண்டவர்கள். வேறு சிலர் வட இந்தியர்கள். பீகார், ஐக்கிய மாகாணம் முதலிய இடங்களிலிருந்து வந்து இப்பணியை ஆற்றி வந்தார்கள். அங்குள்ளவர்களுக்கு ஹிந்திமீதிருந்த பிரியத்தையும் உற்சாகத் தையும் சொல்லி முடியாது. ஹிந்தி பிரசார வேலை எழுதப் படிக்க தெரிந்தவர்களிடையில்தான் அதிகமாகச் செய்யப்பட்டு வந்தது. பெண்களுக்கும் ஆண்களைப் போலவே இதில் அதிக ஆர்வமிருந்தது. ஹிந்தி பாடசாலைகளில் முதியவர்கள், சிறுவர் கள், பெண்கள், ஆண்கள் எல்லாரும் ஒன்றாகக் கற்று வந்தார்கள். நான் இதற்குமுன் ஒரு முறை தென்னாட்டிற்குச் சென்றபோது, ஒரே கூட்டத்தில் தந்தைக்கும், மகனுக்கும், தாய்க்கும், பெண் ணுக்கும் ஹிந்திப் பரீக்ஷையில் தேறியதற்காக சான்றுச் சீட்டு ஒரே சமயத்தில் வழங்கப்பட்டதைப் பார்த்திருக்கிறேன். இன்றும் இப்படியே நடந்து வருகிறது. லக்ஷக்கணக்கான பேர் ஹிந்தியில் தேர்ச்சி பெற்றுவிட்டார்கள். அப்படியிருந்தும் அங்கு ஹிந்தி

யில் சொற்பொழிவு ஆற்றுவது இன்னும் ஒவ்வாது. ஏனெனில் ஆயிரக்கணக்கான பேரைக் கொண்ட கூட்டத்தில் ஹிந்தியைப் புரிந்து கொள்ளக்கூடியவர்கள் சிலரேயிருந்தனர். ஆங்கிலம் தெரிந்தவர்களுடைய எண்ணிக்கையானது ஹிந்தி தெரிந்தவர்களுடைய எண்ணிக்கையைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக இருந்தது. ஆயினும் நான் ஆங்கிலத்தில் பேசினாலும் சரி, ஹிந்தியில் பேசினாலும் சரி கூட்டத்திற்கு வந்திருந்தவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்கு ஹிந்தியும் தெரியாது, ஆங்கிலமும் தெரியாது. ஆகையால் அவர்களுக்காக என் பேச்சை எப்படியும் மொழி பெயர்த்தே ஆகவேண்டியிருந்தது.

ஹிந்தியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்க ஆள் கிடைப்பது கஷ்டமாயிருந்தது. இதனால் நான் தமிழ் நாட்டிலும், கேரளத்திலும் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே பேச வேண்டி வந்தது.

மதராஸில் 'ஹிந்து' என்ற ஆங்கில தினத்தாள் நெடு நாளாக மிக்க புகழுடன் இருந்து வருகிறது. நான் எங்கெங்குச் சென்றாலும் அதன் நிருபர் அங்கே இருப்பார். நான் ஆங்கிலத்தில் ஆற்றிய சொற்பொழிவு முழுவதையும் ஒன்றுகூட விடாமல் அவர் தம் பத்திரிகைக்கு எழுதி அனுப்பிவிடுவார். இவ்வண்ணமாகத் தமிழ் நாட்டிலும் கேரளத்திலும் என் சொற்பொழிவுகள் எவ்விதமாக முழுக்கவும் நன்றாகவும் வெளியிடப்பட்டனவோ அது போல வேறு எங்கும் செய்யப்படவில்லை.

நான் சென்ற இடங்களின் பெயரையெல்லாம் கொடுப்பது கடினமாகும். மாகாண முழுவதிலும் நான் செல்லாத தாலுகாவோ நகரமோ இல்லையென்றும், மேலும் ஒரு தாலுகாவிலிருந்து மற்றொன்றிற்குப் போகும் வழியில் நான் சிறிது நேரத்திற்காவது தங்காத முக்கிய இடமும் இருக்காதென்றும் நான் கூறுவேனானால் அது மிகையாகாது.

இந்தியாவில் ஹிந்து-முசல்மானியருக்கிடையிலும், பீகாரில் வங்காளி-பீகாரிகளுக்கிடையிலும் உள்ள சண்டையைப்போல மதராஸில் பிராமணர்-பிராமணரல்லாதாருக்கிடையில் சண்டை இருந்து வந்தது என்பதை மேலே கூறியுள்ளேன். ஜஸ்டிஸ் கட்சியானது பிராமணரல்லாதாரின் கட்சி. நான் அங்குச் செல்வதற்கு ஓராண்டிற்கு முன்புதான் அது மத்திய சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸிடம் தோற்றுவிட்டது. ஆயினும் அதனால் விளைந்த பயன் இப்போதும் சற்று இருந்து வந்தது. இதனால் சில இடங்களில் அவர்கள் காங்கிரஸைப் பிராமணர்களுடைய ஸ்தாபனமென்று நினைத்தார்கள் என்பதைக் காட்டும்படியான கேள்விகள்

கேட்கப்பட்டன. காங்கிரஸானது எல்லாருக்கும் பொதுவான ஸ்தாபனமென்றும், இன்றுகூட அதன் செயலாற்றுக் குழுவில் நிறையப் பிராமணரல்லாதார் இருக்கிறுர்களென்றும் நான் பல இடங்களில் தெள்ளத் தெளிவாகக் கூறினேன். உதாரணமாக, மகாத்மா காந்திஜீ, சர்தார் வல்லபாயீ படேல், ஆசார்யா கிருபா ளானி முதலியவர்களின் பெயரை எடுத்துரைத்தேன். என் பெயரையும் சேர்த்துக் கொண்டேன். காரணம் எதுவாயினும் சரி, இவ்விதமான பிரசாரமானது காங்கிரஸைப் போன்றதொரு ஸ்தாபனத்தின்மீது மக்களிடையில் ஐயத்தைப் பிறப்பிக்கும்படி யான கேட்டை விளைவித்து விட்டதென்பதைக் கண்டேன்.

அதைவிட விநோதமான விஷயம் சில இடங்களில் காணக் கிடைத்தது. மதராஸ் மாகாணத்தில் பிராமணரல்லாதார் கட்சி ஒன்று நிறுவப்பட்டு இருந்தது. அது தன்னைச் சுயமரியாதைகட்சி என்று சொல்லிக் கொண்டது. எனக்கு வரவேற்பு நடந்தபோது, சில இடங்களில் அக்கட்சிக்காரர்கள் கருப்புக்கொடியைத் தாங்கிக் கொண்டு ‘திரும்பிப் ‘போ’ என்று கூச்சலிட்டுக் கொண்டிருந் தார்கள். ஆனுல் அக்கட்சி மிகவும் சிறியதாயிருந்ததால் இது ஒரு வெறும் வேடிக்கை போலாகிவிட்டது. ஏதோ ஒரு கூட்டத் தில் சில பேர் ‘திரும்பிப் போ’வென்று கூவிக்கொண்டு குழப்பம் செய்து கொண்டிருந்தது நினைவிருக்கிறது. நான் சிரித்துக் கொண்டே கூட்டத்தைப் பார்த்து எத்தனை பேர் நான் போகக் கூடாதென்று விரும்புகிறுர்கள் என்று கேட்டேன். மக்கள் தம் கையைத் தூக்கித் தம் அபிப்பிராயத்தை விளக்கியதில் திரும்பிப் போகச் சொன்னவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருந் தது தெளிவாகிவிட்டது. நான் அதன் மேல் என் பேச்சை இவ் வண்ணமாகத் தொடங்கினேன். “இதோ இத்தனை நிறையப் பேர் நான் போகக் கூடாதென்று விரும்புகிறுர்கள். இவ்வளவு குறைந்த பேர் போக வேண்டுமென்கிறுர்கள். இந்த நிலைமை யில் நான் என்ன செய்வது?” என்று கேட்டேன். நான் கேள்வி யைக் கேட்டதுமே கூட்டம் முழுவதிலும் சிரிப்பு எழுந்தது. எல் லாரும் இப்படி சிரிப்பதைப் பார்த்து, போகச் சொன்னவர்களும் தங்கள் சிரிப்பை அடக்கிக்கொள்ள முடியவில்லை. அவர்களும் கூடச் சேர்ந்து சிரிக்கலானுர்கள். அதற்குப் பின் கூட்டம் அமைதியுடன் நடந்தது.

தமிழ்நாடு, கேரளம், ஆந்திரா ஆகிய மூன்று இடங்களிலும் எனக்கு மிகவும் சிறப்பாகவே வரவேற்பு அளிக்கப்பட்டது. பிரசார வேலையும் நிறைய நடந்தது. ஆந்திராவிற்கு நான் கடைசியில்

சென்றேன். அங்கு நான் செய்த பிரயாணம் முழுவதிலும் ஹிந்தி பிரசார சபையைச் சேர்ந்த ஸ்ரீ சத்திய நார்ாயண் என்பவர் என்னுடன் கூடவே வந்தார். அவர் ஆந்திர தேசத்தைச் சேர்ந்தவர். ஆனால் அவருக்கு ஹிந்தியில் மிகவும் நல்ல பயிற்சியுண்டு. அவர் ஏதாவது சொற்பொழிவு ஆற்றுவாரானால், அவர் ஹிந்தி மொழிக்காரரர் அல்லர் என்று ஹிந்தி மொழிக்காரரர் எவருக்கும் ஐயம் வராது. அவ்வளவு திறம்பட ஹிந்தியைப் பயின்றிருந்தார். இதனால் ஆந்திராவில் நான் செய்த சொற்பொழிவுகளை மொழிபெயர்ப்பது எளிதாகிவிட்டது. தமிழ் நாட்டைக் காட்டிலும் ஆந்திராவில் ஹிந்தி பிரசாரம் அதிகமாக நடந்திருந்தது. பல இடங்களில் மக்கள் என் பேச்சை ஹிந்தியிலேயே கேட்க விரும்பினார்கள் என்பதைக் கண்டேன். இதனால் ஆந்திராவில் சில இடங்களில் தவிர மற்ற எல்லா இடங்களிலும் நான் ஹிந்தியிலேயே சொற்பொழிவாற்றி வந்தேன். சத்திய நாராயண் போன்ற மொழிபெயர்ப்பாளர்கள் கூடவே இருந்தார்கள். எனக்குத் தெரிந்த வரையில் என்னுடைய கருத்துக்களை அவர் மிக அழகாகத் தெலுங்கில் மொழிபெயர்த்துக் கூறி வந்தார் என்று நினைக்கிறேன்.

ஹிந்தி பிரசார சபா எவ்வளவு சிறந்த பணியைச் செய்திருந்தது என்பதும், மேலும் இப்பணியானது நாட்டை இணைப்பதற்கு எவ்வளவு உதவிற்று என்பதும், இனியும் உதவும் என்பதும் எனக்கு இந்த யாத்திரையின் மூலமாகத் தெரிய வந்தது. மற்றொரு விஷயமும் தெரிய வந்தது. நான் சென்ற இடங்களிலெல்லாம், நான் சந்தித்த சில முசல்மானியர்களில் பலருக்கு ஏதோ அரை குறையாகவே ஹிந்தி புரிந்தது என்பது தெரிய வந்தது. அவர்களுடைய மொழி அந்தந்த இடத்து மொழியாகவே இருந்திருக்கலாம். ஆயினும் எப்படியோ எனக்குப் புரியும்படியான ஹிந்தி ஏதாவது சிறிது தெரிந்து வைத்திருந்தார்கள். அது தூய ஹிந்தியும் அன்று. பாரசீகம் கலந்த தூய உருதுவும் அன்று. ஹிந்தி மொழிபேசுவோர் எவரும் புரிந்து கொள்ளக் கூடியதான ஒரு எளிய மொழியாக இருந்தது. அதை அங்குள்ளவர்கள் 'முசல்மானி' என்று கூறி வந்தார்கள். இதிலிருந்து இம்மொழியை முசல்மானியர் வட இந்தியாவிலிருந்து அப்பக்கங்களுக்கு கொண்டு வந்தார்கள் என்பது தெரிய வந்தது.

தமிழ்நாடு யாத்திரையில் நான் சென்ற இரண்டு இடங்களைக் குறிப்பிடுவது அவசியமென்று நினைக்கிறேன். நான் திருவண்ணாமலைக்குப் போய்ச் சேர்ந்தபோது, அங்குத்தான் ரமண மகரிஷி இருக்கிறார் என்பது எனக்குத் தெரிய வந்தது. யாத்திரையின்

பட்டியல் மிகவும் நெருக்கடியாக அமைக்கப்பட்டிருந்ததால் நான் அங்குத் தங்க முடியவில்லை. எனக்குக் கிடைத்தச் சில நிமிஷங்களுக்குள் அவரைச் சும்மா பார்க்க மட்டுமே முடிந்தது. முடியுமானால் மறுபடி ஒருமுறை வந்து அவரை நன்ருக தரிசிக்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் என்னை அங்குப் போய் வரும்படி கூறினர். அவர் அங்கே அடிக்கடி போய் வந்து கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தில் மகரிஷியிடம் நல்ல பற்றுதல் உண்டாகிவிட்டது. இதனுல் பல ஆண்டுகளுக்குப் பிறகு சேட் ஜம்நாலால்ஜீயுடன் நான் அங்குச் சென்றேன். பல நாட்கள் அங்குத் தங்கி மகரிஷியைத் தரிசனம் செய்து வந்தேன். நான் குறிப்பிட விரும்பும் மற்ருேரிடம் சிதம்பரமாகும். அங்கு ராஜா சர் அண்ணுமலை செட்டியாரின் நன்கொடையினுல் நிறுவப்பட்ட அண்ணுமலைப் பல்கலைக் கழகமிருக்கிறது. அக்காலத்தில் ஸ்ரீ ஸ்ரீநிவாச சாஸ்திரியார் அதன் துணை வேந்தராக இருந்து வந்தார். நான் இரண்டு நாட்கள் அவருடைய விருந்தினராக அங்கு இருந்தேன். ஸ்ரீ ஸ்ரீநிவாச சாஸ்திரியாரோடு எனக்கு முன்னமே பழக்கமுண்டு. ஆனுல் அவருடன் ஓரிரண்டு நாள் தங்கியது இதுதான் முதல் முறையாகும். அவரிடம் எனக்கிருந்த மரியாதை இதனுல் மேலும் அதிகமாயிற்று.

கேரள பிரதேசத்தில் நான் கொச்சிக்குச் சென்றேன். அங்கு டாடாபுரத்தில் இருந்த பெரியதோர் எண்ணெய் ஆலையைப் பார்த்தேன். ஆனுல் திருவாங்கூர் ராஜ்யத்தில் நான் ஓரிரண்டு இடங்களைத்தான் பார்க்க முடிந்தது. இவற்றில் கன்யாகுமரி ஒன்று. அங்குச் சென்று சிறிது நேரம் கழித்தேன். வங்காள குடாக் கடலும் அரபிக் கடலும் கலக்கும் இடமாகிய இந்தியாவின் தென் கோடியில் உள்ள முனையானது இந்தியாவுக்கும் உலகுக்குமே மிகப் பெருமை வாய்ந்த இடமாகும். இந்தியாவின் படத்தில் பாரதமாதாவை ஒரு பெண்ணுக ஓவியம் வரைந்து காட்டியிருக்கிருர்கள். அப்படத்தில் தாயின் திருவடி அந்த இடத்தில்தான் அமைந்திருக்கிறது. சுவாமி விவேகானந்தர் இந்த இடத்திற்கு வந்தபோது கடல் இடையருது அலம்பிக் கொண்டிருக்கும் தாயின் திருவடிகளாகிய அங்குள்ள கற்பாறைகளைக் கண்டதும் அவர் தம்மையறியாமலே நெடுங்கிடையாக தண்டனிட்டு தாயின் திருவடிகளில் வீழ்ந்தார் என்று கேள்விப்பட்டேன். என் மன நிலைமையும் அந்த இடத்தில் அதைப் போலத்தான் அமைந்தது. கன்யாகுமரிக்கு எதிரில், தெற்கில் தென்துருவம் வரை வேறு

யாதொரு தீவோ நிலமோ சிறிதளவுகூட இல்லையென்பதை நான் பிறகு நினைத்துப் பார்த்தபோது இயற்கையானது இவ்விடத்தி லேயே உலகத்தை முடித்து நிறுத்திவிட்டதென்ற எண்ணத்தால் இந்த மனோபாவமானது மேலும் உறுதியாயிற்று. பூமியானது வட துருவத்திலிருந்து சைபீரியா, சைனு, திபேத்து, இமாலய மலை ஆகியவை வழியாக இந்தியாவைக் கடந்து கன்யாகுமரி வரையில் சென்று பரந்து கிடக்கிறது. அங்கு அது முடிவடைந்து விடுகிறது. அதற்குத் தெற்கே எங்குப் பார்த்தாலும் தென் துருவம் வரையில் ஒரே தண்ணீர்தான். அந்த இடம் நமக்கு அழகு நிறைந்ததும், மகிழ்ச்சியூட்டுவதுமான ஒரு புண்ய தலமாகும். அதைக் கண்ட இந்தியன் எவனும் இந்தியாவின் ஒற்றுமையையும் இணை பிரியாத் தன்மையையும் மறுக்க முடியாது.

கன்யாகுமரியிலிருந்து வடக்கே ஸ்ரீ ஜகந்நாத் புரி வரையில் நான் மோட்டாரிலேயே பிரயாணம் செய்தேன். இந்தியாவின் கிழக்குப் பகுதியில் கடற்கரையோரமாகவே இந்த யாத்திரை நிகழ்ந்தது. அதேபோல மேற்குக் கோடியில் கன்னடத்திலும், மகாராஷ்டிரத்திலும் செய்த பிரயாணத்தின்போது பங்களூரி லிருந்து குஜராத் வரையில் மோட்டாரில் போயிருக்கிறேன். இடையிலிருந்த நகரங்களையும் மேலும் அங்குள்ள மற்ற முக்கிய மான இடங்களையும் இப் பிரயாணத்தில் காண வாய்ப்புக் கிடைத்தது. அப்போது நான் செல்ல முடியாத இடங்களுக்கு பிற்பாடு சென்றேன். இவ்வண்ணமாக ஹைதராபாத் ராஜ்யத்தில் இருந்த இடங்களைத் தவிர விந்திய மலைச்சாரலுக்குத் தெற்கே உள்ள இந்தியாவின் பகுதி முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்து முடித்தேன்.

மூன்று மாதங்களில் என் பிரயாணத்தை முடித்துக்கொண்டு டிசம்பர் 20–21 தேதிக்குள் வர்தாவுக்கு வந்து சேர்ந்து அங் கிருந்து பம்பாய்க்குச் செல்வதாக என் யாத்திரைத் திட்டம் போடப்பட்டிருந்தது. பம்பாயில் காங்கிரஸ் ஜயந்தியைக் கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன. ஆந்தி ராவில் மற்ற இடங்களையெல்லாம் பார்த்துக் கொண்டு கடைசி யாக விசாகப்பட்டினத்திற்கு வந்து சேர்ந்தேன். அங்கிருந்து ரயில் ஏறி ராய்ப்பூருக்கு வந்து, பிறகு வர்தாவில் ஓரிரண்டு நாட்கள் தங்கியிருந்து விட்டுப் பம்பாய்க்குச் சென்றுவிட்டேன்.

# 114. காங்கிரஸின் பொன்விழா

காங்கிரஸ் ஜயந்தியின்போது நாடெங்கும் விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. காங்கிரஸின் முதல் பேரவை 1885 டிசம்பரில் நடந்த அதேயிடத்தில் பம்பாயில் முக்கிய விழாவை நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பம்பாய் மாகாணக் குழுவானது இந்த விழாவுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருந்தது. நான் பம்பாய்க்குப் போய் சேர்ந்ததும் சர் தின்ஷா வாச்சா மிகவும் நோயாகக் கிடந்தார் என்பது தெரிய வந்தது. அக்காலத்தில் காங்கிரஸின் முதல் பேரவையில் பங்கெடுத்துக்கொண்டவர்களில் அவர் ஒருவர்தாம் உயிருடன் இருந்தார் என்று நினைக்கிறேன். பண்டித் மதன் மோகன் மாளவீயஜீ ஓரிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னிருந்து காங்கிரஸுக்கு வரத் தொடங்கினர். சர் தின்ஷா வாச்சா மற்றெல்லாரையும்விடப் பழமையான காங்கிரஸ்காரர் மட்டும் அன்று. அப்போது உயிருடனிருந்த காங்கிரஸ் தலைவர்களுள் அவர்தாம் எல்லாரையும்விட வயதானவர். இதனால் அவரை தரிசித்து அவருடைய ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொண்டு விழாவைத் தொடங்க வேண்டியது என் கடமையென்பதாகக் கருதினேன். சென்ற பல ஆண்டுகளாக அவருக்குக் காங்கிரஸோடு ஆழ்ந்த கருத்து வேறுபாடு உண்டாகிவிட்டது. அவர் காங்கிரஸைவிட்டு நெடுந்தொலைவு எட்டிப் போய்விட்டார். ஆயினும் காங்கிரஸின் வரலாற்றை அறிந்த இந்தியன் எவனும் அவருடைய தொண்டை மறக்க முடியாது. அவருக்கு அநேகமாகத் தன் நினைவு இல்லாத நிலையில்தான் அவரைக் காண முடிந்தது. ஆயினும் இது கிடைத்ததே என்னுடைய அதிர்ஷ்டம்தான்.

ஜயந்தி விழா மிகச் சிறப்பாக பம்பாயில் நடந்தது. இந்தியாவின் நகரங்கள் எல்லாவற்றிலுமே அவ்விழா மிக்க முழக்கத்துடன் கொண்டாடப்பட்டது. இதுபோன்ற விழாவை இதற்கு முன் நாடெங்கும் மக்கள் என்றுமே இவ்வளவு உற்சாகத்துடன் கொண்டாடியிருக்கமாட்டார்களென்பதாக நினைக்கிறேன். அதே ஆண்டில் பிரிட்டிஷ் மன்னர் ஐந்தாம் ஜார்ஜின் ஆட்சியின் 25ஆம் ஆண்டும் முடிவடைந்தது. அதற்காக வெள்ளி விழா கொண்டாடப்பட்டது. தேசீய மகா சபாவின் ஜயந்தியைப் போட்டியாக மிகவும் ஆடம்பரமாகக் கொண்டாட வேண்டுமென்ற எண்ணம்

மக்கள் மனத்தில் இருந்திருக்கலாம். இந்த எண்ணத்தை அவர்கள் அந்த விழாவைக் கொண்டாடிய விதத்தில் காட்டினுர்கள்.

நான் செய்த இந்த யாத்திரையில் என் பேச்சின் கருத்தும் பொருளும் ஒன்றேதான். அதாவது காங்கிரஸின் அமைப்பை வலுப்படுத்த வேண்டுமென்பதுதான். எனக்குத் தெரிய வந்த வரையில் இந்த யாத்திரை அதற்கு நன்ருகப் பயன்பட்டது. ஏனெனில் 1930–34இன் சத்தியாக்கிரகத்தின்போது அரசாங்கமானது காங்கிரஸை நன்ருக ஒறுத்து ஒடுக்கிவிட்டதாக நினைத்துக் கொண்டிருந்தது. அதனுல், பொது மக்கள், இந்த வாய்ப்புக் கிடைத்த போது, தாம் இன்றும் காங்கிரஸிடம் அதே அன்பும் மரியாதையும் கொண்டிருப்பதை அரசாங்கத்திற்குக் காட்ட விரும்பினுர்கள். நான் தலைமை வகித்து வந்த காலத்தை இவ்வண்ணமாக ஓடியாடிக் கழித்தேன். எனக்கு முன் வேறு எந்தத் தலைவரும் இவ்வளவு நெடுந்தொலைவு பிரயாணம் செய்யவில்லையென்று நினைக்கிறேன். எனக்குப்பின், மீண்டும் ஒரு முறை தலைவரான பண்டித் ஜவஹர்லால்ஜீ இந்த வழக்கத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தார். தம்முடைய வலிமையான உடல் ஆற்றலைக் கொண்டு அவர் மற்றெல்லாரையும்விடக் கடுமையான யாத்திரை செய்தார். காங்கிரஸின் பேரவை இனிப் பிப்ரவரி அல்லது மார்ச்சில் நடக்க வேண்டுமென்று 1929 டிசம்பரில் லாகூர் காங்கிரஸில் நிச்சயிக்கப்பட்டது. இந்த முடிவின்படி கராச்சிப் பேரவை 1930 டிசம்பரில் நடக்காமல் 1931 மார்ச்சில்தான் நடந்தது. 1932–33ல் சத்தியாக்கிரகத்தினுல், முறையான பேரவை நடக்கவில்லை. ஆயினும் போலீசாரின் உத்தரவை மீறி, தில்லியிலும் லக்நோவிலும், குறிப்பிட்ட காலத்தில், தடியடிப் பிரயோகத்திற்கு நடுவில் பேரவை நடந்தது. 1934இல் முறைப்படி பேரவை நடந்தது. ஆனுல் மார்ச்சில் அன்று. ஏனெனில் அப்போது காங்கிரஸ் சட்டத்திற்குப் புறம்பாக ஒதுக்கப்பட்டிருந்தது. அப்பேரவை அக்டோபரில் பம்பாயில் நடந்தது. இப்போது 1935இல் மார்ச்சில் பேரவை நடந்தால், கடந்த பேரவையாகி ஐந்து மாதத்திற்குப்பின் இது நடக்கும். இதனுல் 1935க்குப் பின்தான், அதாவது 1936 பிப்ரவரியில்தான் பேரவையை நடந்த வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. பண்டித் ஜவஹர்லால்ஜீ பம்பாய்ப் பேரவையின்போது சிறையிலிருந்தார். பிறகு சிறையிலிருந்து வெளிவந்ததும் ஸ்ரீமதி கமலா நேருவின் நோய் காரணமாக அவர் அந்த அம்மையாருடன்

ஐரோப்பாவுக்குச் சென்றுவிட்டார். அங்கு அந்த அம்மையார் உயிர் நீத்தார். பண்டித் ஜவஹர்லால்ஜீதாம் காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். இதனால் அவர் இங்கு விட்டுச் சென்றபின் நாட்டில் உற்ற நிலைமையை அவர் மேல் நாட்டிலிருந்து திரும்பி வந்து தெரிந்துகொண்ட பிறகுதான் பேரவை நடக்க முடியும். இதனால் அடுத்தப் பேரவை 1936 ஏப்ரலில் லக்நோவில் நடந்தது. 1935இன் இறுதி வரையில் நான் யாத்திரையிலும் ஜயந்தியிலும் ஈடுபட்டிருந்தேன். அதற்குப் பின் குளிரினால் உடல்நிலை சற்று நன்றாயில்லாமல் போய்விட்டது. ஓய்வெடுத்துக்கொள்வது அவசியமாயிற்று. இதனால் நான் நீண்ட பிரயாணம் அதிகமாகச் செய்ய முடியவில்லை.

பண்டித் ஜவஹர்லால்ஜீ ஐரோப்பாவிலிருந்து கமலாஜீயின் நீற்றை எடுத்துக்கொண்டு ஆகாய விமானத்தில் வந்து இறங்கிய தினத்தன்று அவரை வரவேற்பதற்காக நான் பிரயாகுக்குச் சென்றிருந்தேன். அது மிகவும் துக்கமான நாள். ஏனெனில் கமலாஜீயைப் போலத் திறமையாகக் காரியம் செய்ய வல்லவரும் தேசபக்தி கொண்டவருமான பெண்மணி கிடைப்பது அரிது. அதோடு, அவர் அயல் நாட்டில் இறந்ததும், ஜவஹர்லால்ஜீ அவருடைய சாம்பலை எடுத்துக்கொண்டு வந்ததும், எல்லாம் சேர்ந்து துக்கத்தைப் பெருக்குவனவாக அமைந்தன. மிக்க ஆடம்பரத்துடன் அவருடைய அஸ்தி திரிவேணி சங்கமத்தில் கரைக்கப்பட்டது. இதற்குப்பின்தான் லக்நோ காங்கிரஸுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

## 115. லக்நோ காங்கிரஸ்

லக்நோவின் பேரவைக்கு முன் செயலாற்றுக் குழுவின் இருக்கை ஒன்று தில்லியில் நடந்தது. அதற்குக் காந்திஜீயும் வந்திருந்தார். ஜவஹர்லால்ஜீ நெடுங்காலத்திற்குப் பின் திரும்பி வந்திருந்தார். வெளிநாட்டுக்குச் செல்லும் முன்னும் அவர் நெடுநாள் சிறையிலிருந்தார். இதனால் தலைவராகப் போகிறவர் காங்கிரஸின் பேரவைக்குச் சற்று முன்னமே செயலாற்றுக் குழுவைச் சந்திக்க வேண்டுமென்றும், பேரவையில் ஆலோசிக்க வேண்டிய விஷயங்களைப் பற்றிக் கருத்தைப் பரிமாரிக்கொள்ள வேண்டுமென்றும் விரும்பினர். இது அவசியமு

மாயிருந்தது. ஜவஹர்லால்ஜீயின் எண்ணங்கள் முதலி லிருந்தே பொதுவுடைமைக் கட்சிக்காரர்கள் சார்பில் இருந்தது. ஐரோப்பா யாத்திரைக்குப் பிறகு அவருடைய எண்ணங்கள் மேலும் வலுவடைந்துவிட்டன. எங்களுக்கெல்லாம் அந்த விஷ யத்தைப்பற்றி அதிகமும் தெரியாது, அவற்றை நாங்கள் ஏற்றுக் கொள்ளவுமில்லை. நம் நாட்டில் காங்கிரஸுக்குள் சோஷியலிஸ்டு கட்சி பிறந்துவிட்டது. பண்டித்ஜீ அந்தக் கட்சியில் அவர் சேராவிட்டாலும் அநேக விஷயங்களில் அவர்களோடு கருத்து ஒருமித்த காரணத்தால் அவருடைய அபிப்பிராயம் அக்கட்சி யுடன் ஒத்திருந்தது. தில்லியின் இருக்கையில் பல விஷயங்களில் அவருக்கும் எனக்கும் கருத்து மாறுபாடு இருப்பதைக் கண்டேன். இக்கருத்து வேறுபாடு வேலைத் திட்டத்தைப்பற்றி அதிகமாக இல்லை. நாங்கள் எந்த ஒரு விஷயத்தையும் நோக்கும் முறையில் தான் அதிக வேறுபாடு இருந்தது. ஏதாவதொரு வேலைத் திட்டத்தைப்பற்றி நாங்கள் ஒரே அபிப்பிராயம் கொண்டிருந் தாலும் அந்த முடிவுக்கு நாங்கள் இரு வேறு வழியாக வந்து சேருவோம். ஒரே விஷயத்தைப்பற்றி கூற விரும்பினால், அதை இரு வேறு விதமான பேச்சால் கூறுவோம். ஒரே வழியில் செல்ல விரும்பினாலும் இரு வேறுவித வாகனத்தில் ஏறிச் செல்வோம். ஒரே தீர்மானத்தை வெளியிட விரும்பினால் அதற்குத் தனித்தனி பீடிகை கூறுவோம். இவ்வளவு முன்னுரை இங்குக் கூறவேண்டியது அவசியமாயிருக்கிறது. ஏனெனில் பின்னால் இந்த வேறுபாடு தெளிவாகிவிட்டது. லக்நோ காங்கிர ஸில் முற்றிலும் அம்பலமாகிவிட்டது.

லக்நோ காங்கிரஸுக்குப் பல நாட்களுக்கு முன் பிரயாகில் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அங்குச் சில தீர்மானங்கள் தயார் செய்யப்பட்டன ; சில லக்நோவில் தயார் செய்யலாமென்று விட்டுவிடப்பட்டன.

நான் மேலே கூறியபடி லக்நோ காங்கிரஸில் அபிப்பிராய பேதம் நிலவியது. எந்த விஷயத்தைப் பற்றி அபிப்பிராய பேதமிருந்த தென்பதை யாராவது கேட்டால் அதைச் சரியாக எடுத்துரைப்பது கஷ்டம். ஆயினும் மேலே கூறியபடி, கருத்து வேறுபாடு எந்த விஷயத்தையும் நோக்கும் முறையில்தான் பெரும்பாலும் இருந்து வந்தது. பம்பாய்க் காங்கிரஸ் நடந்த சமயத்தில் அரசியல் அமைப்புச் சீர்த்திருத்தத்தை ஒட்டி இன்னும் சட்டம் முற்றிலும் பூர்ணமாகவில்லையாயினும் பிரிட் டிஷ் அரசாங்கத்தின் தீர்மானம் தெரிய வந்துவிட்டதென்பது

மேலே கூறப்பட்டுள்ளது. பம்பாய்க் காங்கிரஸானது அதை ஏற்றுக் கொள்ளவில்லை. நான் தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தபோது இதைப்பற்றிக் கேள்விகள் கேட்கப்பட்டன. முக்கியமாக, காங்கிரஸானது புது அரசியல் அமைப்புப்படி மந்திரி பதவியை ஏற்றுக்கொள்ளுமா இல்லையா என்று கேட்கப்பட்டது. காங்கிரஸுக்குள் ஒரு புதுக் கட்சி பிறந்து விட்டது. அது மந்திரிப் பதவியைக் காங்கிரஸ் ஏற்கத் தான் வேண்டுமென்று கூறி வந்தது. மற்றொரு கட்சி அதை எதிர்த்தது. எதிரிகளில் சோஷியலிஸ்டு கட்சிக்காரர்கள்தாம் அதிகமாகச் சத்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள். காங்கிரஸானது புது அரசியல் அமைப்பை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் தான் ஏற்றுக் கொள்ளவில்லையென்பதை எவ்விதமாகச் செய்து காட்டும் ,என்பதைப்பற்றி இன்னும் முடிவு செய்யவில்லை. காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளவில்லையென்று சொல்லிவிட்டதனால் சட்டம் தள்ளுபடியாகிவிடாது. இதனால், அதன்படி நடக்கும் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளுமா இல்லையா? 1920இல் அது தேர்தலைப் புறக்கணித்ததுபோலப் புறக்கணிக்குமா? தேர்தலில் பங்கெடுத்துக் கொண்டால் அதற்குப் பின் அது என்ன செய்யும்? காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலம் கிடைத்தால், அந்நிலையில் தானும் மந்திரி சபையை அமைக்காமலும் பிறரையும் அமைக்க விடாமலும் செய்யுமா? அல்லது ஏதாவது வேறு விதமாக முட்டுக்கட்டை போடும் கொள்கை மூலமாக அந்த அமைப்புச் சட்டத்தைப் பயனற்றதாகப் போகும்படி செய்துவிடுமா? இவ்விதமான கேள்விகள் கேட்கப்பட்டன. காங்கிரஸுடைய கொள்கை வெற்றி பெறுவதும் பெறாததும் அதனுடைய அங்கத்தினர்கள் பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்படுவதைப் பொறுத்திருக்கிறது. இதனால் தேர்தலுக்கு முன் அது எதையும் நிச்சயமாக முடிவுக் கட்டவும் இயலாது, அப்படிச் செய்வதும் பொருந்தாது. ஆகையால் யாராவது என்னைக் கேள்வி கேட்டபோதெல்லாம், காங்கிரஸானது அரசியல் அமைப்பை ஒத்துக் கொள்ளவில்லையென்றும், ஆயினும் அப்படி ஒத்துக் கொள்ளாமையானது செயல் முறையில் எவ்விதமாக நடத்திக் காட்டப்படுமென்பதை இன்னும் முடிவு செய்யவில்லையென்றும், சமயம் வந்தபோது அது முடிவு செய்யப்படுமென்றும் கூற வேண்டி வந்தது. இந்த விடைக்கு மக்கள் பல பலவிதமாகப் பொருள் கொண்டார்கள். ஆனால் காங்கிரஸானது இதுவரையில் இதற்குமேல் யாதொரு முடிவும் செய்யவில்லை யென்பதுதான் உண்மை. நான் தலைவன்

என்ற முறையில் ஏதாவது கூறுவேனானால், எங்களுக்குள் இதைப் பற்றி இருந்த அபிப்பிராயப்பேதம் இப்போதிருந்தே நன்றாக முற்றிவிடும். பிறகு இராப் பகலாக இதைப்பற்றியே வாதம் நடந்து கொண்டிருக்கும்.

மற்றொரு கேள்வி இருந்து வந்தது. அதைப்பற்றி அடிப் படையான கருத்து வேறுபாடு இல்லாவிட்டாலும் அது அடிக்கடி எதிர்ப்பட்டது. ஐரோப்பாவில் போருக்கு ஏற்ற சூழ்நிலை உண்டாகி விட்டது. இட்டாலியானது அபிசீனியாவின்மீது படையெடுத்து அதைக் கைப்பற்ற முயற்சி செய்யத் தொடங்கி விட்டது. இங்கிலாந்தானது மேலுக்காக இட்டாலியின் செய்கை தனக்குப் பிடிக்கவில்லையென்பதாகக் காட்டி வந்தது. அதாவது இங்கிலாந்தில் சிலர் கண்டனம் செய்தார்கள். ஆனால் உண்மை யில் அது இட்டாலியுடன் இந்த விஷயத்திற்காகச் சண்டைக்குப் போகவிரும்ப வில்லை. சர்வதேச சங்கமானது (லீக் ஆப் நேஷன்ஸ்) அபிசீனியாவிடம் அனுதாபப்பட்டது. ஆனால் அதை விட அதிகமாக ஒன்றும் செய்ய அதனால் முடியவில்லை. இங்கிலாந் தானது இட்டாலியைச் சில நாட்களுக்குப் பொருளாதார நெருக் கடி செய்து பார்த்தது. அதையும் அரை குறை மனத்துடன் தான் செய்தது. இந்தியாவானது எந்தச் சண்டையிலும் ஆங்கி லேயருக்கு உதவி புரியாதென்று ஒரு தீர்மானத்தை நாம் நிறை வேற்ற வேண்டுமென்று நம் சோஷயலிஸ்டுகள் விரும்பினார்கள். அத்தோடு, அபிசீனியாவிடம் அனுதாபமும் காட்ட விரும்பி னார்கள். கொடுமைக்கு ஆளாக்கப்பட்ட நாடுகளுக்கு அனுதாபப் படுவதைச் சம்பந்தப்பட்டவரையில் யாதொரு கருத்து வேறுபாடு மில்லை. ஆனால் வேறு வகையில் இவ்விதமான இராஜ்யங்களின் பரஸ்பர விஷயங்களைப் பற்றித் தன் அபிப்பிராயத்தைக் காங் கிரஸ் கொடுப்பதற்கு இது சமயமன்று என்பதாக எனக்குத் தோன்றியது. நான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் போரில் உதவி புரியவேண்டுமென்று கட்சி பேசினேன் என்பது இதற்குப் பொருள் அன்று. இதனால் இப்படிப்பட்ட விஷயத்தைப் பற்றி நான் ஏதாவதொரு தீர்மானத்தை புனைய வேண்டி வந்தால் அனு தாபத்தை மட்டுமே காட்டும் தீர்மானத்தைத் தான் புனைவேன். ஆயினும் மற்றக் கட்சிக்காரர்கள் அனுதாபத்தோடு போரை எதிர்க்கும் கருத்தையும் விளம்பரம் செய்ய விரும்பினார்கள்.

எது எப்படியாயினும் சரி, பண்டித் ஜவஹர்லால்ஜீயின் கருத்து என்னுடைய கருத்தோடு ஒத்து அமையவில்லை. தேசங் களுடைய பரஸ்பர விஷயங்களைப் பற்றி எங்களைவிட அவருக்கு

எவ்வளவோ அதிகமாகத் தெரியுமென்பதை நான் ஒத்துக் கொள்ளுகிறேன். மந்திரி சபையைப் பற்றியும் அவருடைய கருத்து நன்ருகத் தெரியவந்தது. காங்கிரஸ் மந்திரிசபையில் பங்கெடுத்துக் கொள்ளக்கூடா தென்பதாக அவர் எண்ணினர். நாங்கள் இன்னும் அதைப்பற்றி ஒரு உறுதியான முடிவுக்கு வரவில்லை. எங்களுடைய அங்கத்தினரின் எண்ணிக்கையும் அவர்களுடைய பலமும் சரியாகத் தெரியாத வரையில் நாங்கள் இந்தக் கேள்வியைக் கிளப்பிவிட விரும்பவில்லை. ஜவஹர்லால் ஜீயானவர் தம்முடைய கருத்துக்களை வெளியிட்டுவிட்டார். அப்படி வெளியிடும்போது, அவை தம் சொந்தக் கருத்துக்களே என்றும், காங்கிரஸ் இன்னும் எதுவும் நிச்சயிக்கவில்லை என்றும் கூறினுலும்கூட அவர் தம் கருத்துக்களை வெளியிட்டுவிட்டார்.

லக்நோவில் எந்த விஷயங்களைப்பற்றி கருத்து வேறுபாடு உண்டாயிற்று என்று கூறுவது கடினமாகும். ஆயினும் பல விஷயங்களில் உண்டாயிற்றென்பதிலும், குழுவில் பல விஷயங்களில் பெரும்பான்மை பலம் எங்கள் பக்கத்தில் தான் சார்ந்ததென்பதிலும் ஐயமில்லை. ஆனல், மேலே கூறியபடி அவை, நாங்கள் இருவரும் அவற்றின் காரணத்தால் பிரிந்து போகும்படி அவசியம் ஏற்படக்கூடிய அடிப்படையான முக்கிய விஷயங்கள் அல்ல. கயா காங்கிரஸில் சுயராஜ்யக் கட்சியும் மாறுதல் வேண்டாதாரும் பிரிந்து போகும்படி நேர்ந்ததுபோல இங்கு அவசியம் ஏற்படவில்லை. முக்கியமாக, வேலைத்திட்டத் தைப் பற்றி யாதொரு அடிப்படையான கருத்து வேறு பாடும் இருக்கவில்லை. ஜவஹர்லால்ஜீயின் வேலைத் திறத்தையும் தியாகத்தையும், உழைப்பையும், ஆழ்ந்த சிந்தனு சக்தியையும் நாங்கள் எல்லாரும் நன்கு அறிவோம். அவரிடமிருந்து பிரிந்து போவதென்பதை நாங்கள் ஒரு நாளும் விரும்பவில்லை. மாகாணங்களில் வேலை செய்பவர்களிடையிலும் செல்வாக்கு உடையவர் களிடையிலும் எங்களுக்கு அதிக பலம் உண்டு என்பதை அவரும் தெரிந்திருந்தார். இதனல் அவரும் எங்களைத் துண் டிக்கவோ, எங்களைவிட்டுப் பிரியவோ விரும்பவில்லை. ஏனெனில் இரு சார்பாரும் ஒருவருக்கொருவர்பால் நல்ல மதிப்பு வைத் திருந்தார்கள். மேலும் அவர்கள் பிரிந்து போவது நாட்டிற்கு நன்மைப் பயக்காது என்பதையும் உணர்ந்தார்கள்.

காங்கிரஸுக்குப் பிறகு செயலாற்றுக் குழுவை நியமிக்க வேண்டிய சமயம் வந்தபோது ஜவஹர்லால்ஜீ சற்றுச் சிரமப்பட வேண்டி வந்தது. புதிய கருத்துக்காரர்களை அவர் அதில் நிய

மிக்க விரும்பினர். எங்களுக்கு அதைப்பற்றித் தடையில்லை. ஆயினும், நாங்கள் செயலாற்றுக் குழுவில் இருப்பதனுல் எங்கள் பேச்சும் அங்கு ஏறும்படியான வகையில் அது அமைக்கப்பட வேண்டுமென்று கட்டாயமாக விரும்பினேம். ஜவஹர்லால்ஜீ யானவர் சோஷலிஸ கட்சியிலிருந்து எவரை வேண்டுமானுலும் செயலாற்றுக் குழுவில் எடுத்துக் கொள்ளலாமென்று காந்திஜீ அவரிடம் கூறிவிட்டார். அவர்களுடைய பெயரையும்கூடக் குறிப்பிட்டார் என்பதாக நினைக்கிறேன். நாங்களும் இதை ஒப்புக் கொண்டோம். இருவிதமான கருத்துக்கள் ஓடிக்கொண் டிருந்த செயலாற்றுக் குழு அமைக்கப்பட்டது. ஆனுல் வேலைத் திட்டத்தில் இன்னும் கருத்து மாறுபாடு யாதும் வரவில்லை. சோஷயலிஸ்டுகளோடு இருந்துவந்த கருத்து மாறுபாட்டினுல் வேலைக்கு இடையூறு வரவில்லை. ஆயினும் அவர்கள் செய்து வந்த பிரசாரத்தின் போக்கு எங்களுக்குப் பிடிக்கவில்லை. காந்திஜீயானவர் 1920இலிருந்தே பல விஷயங்களில் வழக்கில் கொண்டுவந்திருந்த கொள்கைகளை அவர்கள் வெளிப்படை யாகவோ மறைமுகமாகவோ தாக்கினுர்கள். எந்த வேலைத் திட்டத் தையும் எந்தக் கொள்கைகளையும் காந்திஜீயானவர் ஆரம்பித்து வைத்தாரோ, எவற்றைக் கொண்டு காங்கிரஸானது தன் வேலை யைச் செய்ய விரும்பியதோ, எவற்றைப் பின்பற்றி அது நாட்டை இவ்வளவு முன்னேறச் செய்திருந்ததோ அக்கொள்கைகளையும், வேலைத் திட்டத்தையும் அடியோடே அவர்கள் நாசமாக்க விரும்பி ஞர்களென்பதாகத் தோன்றியது. இந்த விஷயத்தைப்பற்றி எனக்குத் தெரிந்த வரையில், ஜவஹர்லால்ஜீக்கும் அவர்கள் செய்தது மனமொப்பவில்லை. ஏனெனில் பல விஷயங்களில் காந்திஜீயோடு அவருக்கு அபிப்பிராயப்பேதமிருந்தாலும்கூட அவருடைய தலைமையின் பெருமை அவருக்குத் தெரியும். அதை அவர் ஒப்புக்கொண்டார். கருத்து மாறுபாடு இருந்தாலும் நாங் கள் ஜவஹர்லால்ஜீயுடன்கூடி வேலை செய்ய முடிந்ததற்கும் மற்ற வர்களோடு முடியாததற்கும் இதுதான் காரணம். எப்படியோ காங்கிரஸின் விழா முடிவடைந்தது. எல்லாரும் அவரவர்களு டைய ஊருக்குப் பயணமானுர்கள்.

# 116. தேசீய மொழி

நான் லக்நோவிலிருந்து நாகபுரிக்குப் போகவேண்டியிருந்தது. அங்கு அகில பாரதீய ஹிந்தி சாகித்திய சம்மேளன் நடைபெறுவதாக இருந்தது. அதற்கு நான் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தேன். அது காங்கிரஸுக்கு அடுத்த மூன்று நாட்களுக்குள் நடைபெறுவதாக இருந்தது. இதனால் மகாத்மாஜீ சென்ற ரயிலிலேயே நானும் சென்றேன். அவருடனேயே வர்தா சென்று அங்கிருந்து சம்மேளன் நடைபெறும் நாளன்று நாகபுரிக்குச் சென்றேன்.

வர்தாவில் இருந்து கொண்டு என் சொற்பொழிவை எழுதினேன். ஹிந்தியின் சொற்களஞ்சியத்தில் பிறநாட்டு மொழிகளின் சொற்களை ஏற்றுக் கொள்வதா இல்லையா யென்பதைப் பற்றிச் சில நாட்களாக வாதம் நடந்தது வந்தது. உண்மையைச் சொல்லப்போனால் இந்த கேள்விக்கு இந்த உரு கொடுக்கக் கூடாது. ஏனெனில் ஹிந்தி எழுத்தாளர் எவருமே, (அவர் பிற நாட்டு மொழியை எவ்வளவு வெறுத்தாலும் சரி) பிற நாட்டு மொழிச் சொற்கள் எல்லாவற்றையும் புறக்கணிக்க விரும்பவில்லை. மேலும் தம்முடைய எழுத்திலும் பேச்சிலும் புறக்கணிப்பதுமில்லை. ஹிந்திக்கும் உருதுவுக்கும்தான் இந்தச் சண்டை. ஹிந்தியில், அது இப்போது அடைந்திருக்கும் உருவில், சமஸ்கிருதச் சொற்கள் அதிகமாக இருக்கின்றன. உருதுவில் அது இன்று வளர்ந்து வருவதைக் கவனித்தால், அரபி பாரசீகச் சொற்கள் நிறைந்திருக்கின்றன. இரு மொழிகளிலும் சாதாரண எளிய நடையில் எழுதுகிற சிறந்த எழுத்தாளர்களிருக்கிறார்கள். ஆயினும் சமஸ்கிருதச் சொற்கள் அல்லது அரபி பாரசீகச் சொற்களைக் கண்டு கலங்குகிற எழுத்தாளர்களும் இரு மொழிகளிலுமிருக்கிறார்கள். அவர்களில் ஒரு சாரார் இவற்றால் ஹிந்தியின் உருவே குலைந்து உருதுவாகிவிடுமென்று அஞ்சுகிறார்கள். மற்றொரு சாரார் உருது மாறி ஹிந்தியாகிவிடுமென்று அஞ்சுகிறார்கள். ஹிந்தியை ஹிந்துக்களின் மொழியென்றும், உருதுவை முசல்மானியரின் மொழியென்றும் கருதுகிறவர்களும் சிலர் இருக்கிறார்கள். பல முசல்மானிய கவிகளும் எழுத்தாளர்களும் ஹிந்திக்குத் தொண்டு புரிந்திருந்தாலும் அதேபோல பல ஹிந்துக்கள் உருதுக்குத் தொண்டாற்றியிருந்தாலும்கூட இச்சண்டையில் இனவாரி மனப்பான்மை வந்துவிட்டது.

காங்கிரஸானது தன் அமைப்புச் சட்டத்தில் மொழியைக் குறிப்பிட்ட இடங்களில் 'ஹிந்தி' என்ற சொல்லையோ, 'உருது' என்ற சொல்லையோ உபயோகப்படுத்தவில்லை. அதற்கு மாருக அது 'ஹிந்துஸ்தானி' என்ற சொல்லையே கையாண்டு வந்திருக் கிறது. காந்திஜீ தென்னிந்தியாவில் தேசீய மொழிப் பிரசாரத்தை 1920இல் தொடங்கியபோது, அதை ஹிந்தி சாகித் திய-சம்மேளனின் ஆதரவின் கீழ்தான் தொடங்கி வைத்தார். அதே சமயத்தில் அவர் இந்தோரில் சாகித்திய சம்மேளனுக்குத் தலைவரானுர். காங்கிரஸ் அமைப்புச் சட்டத்தில் 'ஹிந்துஸ் தானி' என்ற சொல்லை மகாத்மாஜீயும், ஸ்ரீ புருஷோத்தம தாஸ் டண்டனும்தாம் பிரயோகித்தார்கள். அவர்களுடைய சொல்லையே காங்கிரஸ் ஏற்றுக்கொண்டது. தென்னிந்தியாவில் இன்றுகூடத் தேசீய மொழிப் பிரசார வேலையை புரிந்துவரும் சங்கத்தின் பெயர் தக்ஷிண ஹிந்தி பிரசார சபா என்பதுதான். இதனுல் காந்திஜீ இந்த வேலையைத் தம் கையில் எடுத்துக்கொண்ட நாளி லிருந்தே ஹிந்தியையும், உருதுவையும் இரு வெவ்வேறு மொழிகளாகக் கருதவில்லையென்பது தெளிவாகிறது. இரண்டின் சொற்களஞ்சியங்களுக்குள் வேற்றுமையிருந்தாலும், மேலும் அந்த வேற்றுமையானது நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே போனுலும், இரண்டிற்கும் இலக்கணம் அநேகமாக ஒன்றேதான். மேலும் இந்த இலக்கணமானது வேறு எந்த மொழியின் இலக் கணத்தோடும் முழுக்க முழுக்க ஒத்திருக்கவில்லை. மொழிகளுக் குள் வேறுபாடானது அவற்றின் வாக்கிய அமைப்பினுலும், இலக் கண விதிகளினுலும் எவ்வளவுக்கு உண்டாகிறதோ அவ்வளவுக்கு அவற்றின் சொல் களஞ்சியத்தால் உண்டாவதில்லையென்று மொழி வல்லுனர்கள் கூறுகிறுர்கள். இதனுல் ஹிந்தி, உருது என்பன ஒரே மொழியின் பெயர்களென்றும் அல்லது ஒரே மொழியின் நடைகள் என்றும், இருவேறு மொழிகள் அல்ல என்றும் கூறுவது பொருத்தமற்றதாகாது. மொழியியல் விதிகளுக்கு முரணுகாது. ஹிந்துஸ்தானியானது ஹிந்தியுமாகும், உருதுவுமாகும். ஏனெ னில் அது கடினமான சொற்களைப் பெரும்பாலும் வழங்குவ தில்லை. ஹிந்திக்காரரும் உருதுக்காரரும் இருவரும் அதைத் தம் மொழியாக ஏற்றுக் கொள்ளும்படியான உருவைக் கொண்டிருக் கிறது.

ஒரு மொழியின் சொற்களஞ்சியமானது எவ்வளவுக்குப் பெருகி நிறைவுறுகிறதோ அவ்வளவுக்கு அம்மொழி அதிக மேன்மையடையும் என்ற கருத்தை ஆதரிப்பவன் நான். ஒரே

பொருள் கொண்ட பல சொற்கள் இருக்குமானல் கால அளவில் அவற்றின் அர்த்தத்தில் சிறிது சிறிது பேதங்கள் உண்டாகி அவற்றிற்கு தனித் தனி நுண்ணிய பொருள்கள் உண்டாகிவிடும். எண்ணங்களின் நுட்பங்களை வெளியிடும் ஆற்றல் இப்படிப்பட்ட மொழிக்கு வளரும். உயிர் ததும்பும் ஒரு மொழிக்கு மற்ருெரு மொழியிலிருந்து சொற்களை ஏற்றுக் கொள்ளும் ஆற்றலும் அவற்றைத் தனதாக்கிக் கொள்ளும் ஆற்றலும் இருக்குமாயின், அம் மொழியானது மற்ருெரு மொழியின் கலப்பால் நற்பயனே அடையும். அதனுடைய சொற்களஞ்சியம் வளர்ந்து கொண்டே செல்லும். அம்மொழியானது வெளிக்காற்றுப் படுவதாலும், பிற சொற்கள் வந்து சேருவதாலும் தான் நலிந்து போகுமென்றும், அற்றுப் போகுமென்றும் அஞ்சிக்கொண்டு நத்தையைப் போலக் கிளிஞ்சலுக்குள் புகுந்துகொண்டு தன்னை அடைத்துக் கொள்வதில்லை. அம்மொழி தைரியத்துடன் போட்டிபோட்டு மற்ற மொழிகளின் பொருள் செறிந்த நல்ல சொற்களை தன்னுள் சேர்த்துக் கொள்ளும். ஆனல் அப்படிச் செய்யும்போது அது தன் விதிகளையும், தன் உருவையும் மாற்றிக் கொள்ளாது. ஆனலும் தன்னுடைய ஆடை அணிகளை மாற்றிக் கொள்ளும் ; புதுமையை மேற்கொள்ளும்.

என் சொற்பொழிவில் நான் இவற்றையே கூறினேன். ஹிந்தி சாகித்திய பக்தர்களின் சிந்தனைக்கு இக்கேள்வியையே விட்டேன். ஹிந்தியானது பிறமொழிச் சொற்களை, அவை பாரசீகமாகட்டும், அரபியாகட்டும், ஆங்கிலமாகட்டும் ஏற்பதற்குத் தயங்கக்கூடாதென்பது என் கட்சி. ஆனல் ஹிந்தியில் ஏறும் சொற்கள் ஹிந்தியாக மாறவேண்டும். அதாவது ஹிந்தியில் வந்தபின் தம்முடன் அரபி, பாரசீகம் அல்லது ஆங்கிலம் ஆகியவற்றின் இலக்கணத்தைக் கொண்டு வந்து ஹிந்தியில் நுழைக்கக் கூடாது. அவை ஹிந்தி இலக்கணத்தின் ஆட்சிக்கு உட்பட்டே வாழவேண்டும். இன்றும் இதுவேதான் என் கருத்து. அன்றிலிருந்து இன்று வரையில் இந்த விஷயத்தைப் பற்றி நிறைய வாதம் நடந்து வருகிறது. ஆயினும் என் கருத்து வலிவடைந்தே வந்திருக்கிறது. மேலும் இந்த மூன்று மொழிகளின் சொற்களை மட்டும் எடுத்துக் கொள்வது போதாது. ஹிந்தியானது தேசிய மொழியாக வளர வளர, பல கிராம வழக்குச் சொற்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டிவரும். மாகாண மொழிகளின் களஞ்சியங்களிலிருந்தும் பல சொற்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டிவரும்.

இதையொட்டி மற்ருெரு முக்கியமான கேள்வியும் இருக்

கிறது. அதைப்பற்றித் தீர யோசிக்க வேண்டும். தற்காலத்து ஹிந்தியும் உருதுவும் ஒன்றேதானு? ஒன்று ஆக முடியுமா? இலக்கணம் பெரும்பாலும் ஒன்றேயாயினும் சொற்களில் வேற்றுமை வளர்ந்து கொண்டே போகிறது. இன்று, வெறும் ஹிந்தி மட்டுமே அல்லது உருது மட்டுமே தெரிந்தவர்கள் கூடிய சபையில் அங்குக் கேட்க வந்தவர்கள் புரிந்துகொள்ள இயலாத வண்ணம் ஒரு விதமான மொழியில் பேச முடியும். அதாவது உருது மட்டும் தெரிந்தவர்களுக்கு விளங்காத சம்ஸ்கிருதம் கலந்த ஹிந்தி அல்லது ஹிந்தி மட்டும் தெரிந்தவர்களுக்கு விளங்காத அரபி, பாரசீகம் கலந்த உருதுவில் பேசலாம். ஆயினும் ஹிந்தி தெரிந்தவர்களும் உருது தெரிந்தவர்களும் இரு தரத்தாரும் புரிந்து கொள்ளும்படியான மொழியிலும் பேசலாம். இது அதிகக் கஷ்டமன்று. இந்த மொழியைத்தான் நான் 'ஹிந்துஸ்தானி' என்று கூறுகிறேன். மாபெரும் கூட்டங்களுக்கும், சாதாரண செய்தித்தாள்களுக்கும், நாவல்களையும், சிறு கதைகளை எழுதுவதற்கும், மனத்தைக் கவரும் பாட்டுக்களுக்கும் இவ்வித மான எளிய மொழி அமையக்கூடும் என்பதில் ஐயமில்லை. ஆனால் மிகச் சிறந்த விஞ்ஞான நூலை எழுத வேண்டுமானால் அதற்குப் பல விஞ்ஞான பதங்களும், பரிபாஷைச் சொற்களும் வேண்டி யிருக்கும். அப்படிப்பட்டச் சொற்கள் எப்போதும் எளிதாகவும் தானுகை விளங்கக் கூடியனவாகவும் இருக்க முடியாது. எந்த மொழியிலுமே இவை கடினமாகத்தானிருக்கும். ஆங்கிலம் மிகச் சிறந்த ஒரு மொழி. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட ஒரு விஞ்ஞான நூலை ஆங்கிலத்தில் சிறந்த அறிவு படைத்தவனிடம் கொடுத் தாலும்கூட அவன் அதைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில் அதில், வரிசை வரிசையாக நிறையப் பரி பாஷைச் சொற்கள் தென்படும். அவை வெறும் ஆங்கில இலக்கியங்களை மட்டும் கற்றவனுக்குச் சாதாரணமாக புரியமாட்டா. விஞ்ஞானக் கலையில் பயிற்சி உடையவனுக்குத்தான் அவை விளங்கும். இப் பொழுது நிறைய விஞ்ஞான விஷயங்கள் வரும் கதைகளும் நாவல்களும் சாதாரணமாக எழுதப்படுகின்றன. அவற்றில் விஞ்ஞான பதங்கள் நிறைய வருகின்றன. ஆனால் நான் இவ் விதமான தனிப்பட்ட வகை நூல்களைப் பற்றிப் பேசவில்லை. பொதுவாக ஏதோ சாதாரண ஆங்கிலம் தெரிந்தவனிடம் விஞ் ஞான நூலோ, மருத்துவ நூலோ ஒன்றைக் கொடுத்தால் அவ னால் அதைப் பெரும்பாலும் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது. அதனுடைய இலக்கண அமைப்பு அவனுக்கு எளிதாயிருந்தாலும்

அதில் வரும் சொற்கள் பலவற்றை அவன் இதற்கு முன் கண்டிருக்கவே மாட்டான்.

இவ்வண்ணமாக ஹிந்தியிலும், உருதுவிலும் விஞ்ஞான நூல்களும் சமய நூல்களும் எழுதப்படுமானல் அவற்றின் மொழி வெவ்வேறு வகையாயிருக்கும். பரிபாஷை சொற்களை ஏதாவதொரு சீர்சிறந்த மொழியிலிருந்து எடுத்துக்கொள்ளலாம். அல்லது ஏதாவதொரு சீர்சிறந்த மொழியின்—அது சமஸ்கிருதமாகட்டும் அல்லது அரபி ஆகட்டும்—உதவியைக்கொண்டு புனைந்து கொள்ளலாம். ஆங்கிலத்திலும் இவ்விதமான சொற்கள் ஏராளமாக லத்தீன் மொழியிலிருந்துதான் புனையப்படுகின்றன. இங்கே நம் நாட்டில், நாம் இந்த விஞ்ஞானச் சொற்களுக்கும், பரிபாஷை சொற்களுக்கும், சமஸ்கிருதத்தினிடமும் அரபி பாஷையிடமும் தாம் போகவேண்டுமென்பதை ஒப்புக்கொள்கிறேன். ஐரோப்பிய மொழிகளிலிருந்தும் பல சொற்களை அப்படியே எடுத்துக்கொள்ள வேண்டிவரலாம். ஆனால் இப்படிப்பட்டச் சொற்கள் பெரும்பாலும் சம்ஸ்கிருதச் சொற்களாக இருந்தால் அவை நிறையப் புழங்கப்படும். ஏனெனில் இங்குள்ள மாகாண மொழிகளெல்லாம் சம்ஸ்கிருதத்துடன் ஆழ்ந்த தொடர்பு வைத்து வருகின்றன. தென்னிந்திய மொழிகளிலும் கூட சம்ஸ்கிருதம் நிறைய நுழைந்து கலந்திருக்கிறது. அவையும் புதுச் சொற்களைப் புனைய வேண்டுமானல், தாமே அவற்றை புனைய இயலாவிட்டால், அத்தகைய சொற்களை சம்ஸ்கிருதத்திலிருந்துதான் எடுத்துக்கொள்ளப் பிரியப்படும். உதாரணமாக நாம் 'ஜ்யோதிஷ்' என்ற சொல்லை எடுத்துக்கொள்ள வேண்டி வந்தால் அச்சொல் 'இல்மன்ஜுமெ' என்ற சொல்லை விட அதிகமாக எளிதில் ஹிந்தி மொழிப் பிரதேசங்களில் புரிந்து கொள்ளப்படும். வங்காளம், குஜராத்து, மகாராஷ்டிரம், தமிழ், தெலுங்கு, கேரளம், பஞ்சாப் முதலிய இடங்களிலும் அச்சொல்லை மக்கள் புரிந்து கொள்வார்கள். அதே கலையைச் சேர்ந்த சொற்களாகிய 'நக்ஷத்திரம்', 'கிரகம்' என்பனவற்றையும் இந்தியா முழுவதிலும் மக்கள் எளிதில் புரிந்து கொள்வார்கள். இதனல் இந்தப் பரிபாஷை சொற்களுக்காக நம் தேசீய மொழியானது (அதை நாம் எப்பெயர் கொண்டு அழைத்தாலும் சரி) சம்ஸ்கிருதத்தையே அண்ட வேண்டுமென்று நான் நினைக்கிறேன். பிற நாட்டு மொழிகளிலிருந்து சில சொற்கள் வந்து புகுந்து நிறைய வழங்கப்பட்டு வரலாம். அவற்றை அப்படியே விட்டு விடுவதுதான் நன்று.

அவசியமுமாகும். ஆனால் புதிய சொற்களைப் புனைய வேண்டிய இடத்தில் சம்ஸ்கிருதத்தின் உதவியை ஏற்பதே நன்று. அதுவே சௌகரியமுமாகும். இது கூடாதென்று உருதுக்காரர்கள் அடம் செய்தால், அவர்கள் தம் விருப்பப்படி சொற்களை அமைத்துக் கொள்ளலாம். ஆனால் அச்சொற்கள் நாடு முழுவதுக்குமாக அமையா என்பது நினைவிருக்க வேண்டும். உருதுக்கு மட்டுமே அவை பயன்படும். இதனால் சாதாரண பேச்சு, செய்தித்தாள் கள் ஆகியவற்றின் மொழியைப் பற்றிய வரையில் நாம் ஹிந்தி உருது இரண்டும் ஏற்றுக்கொள்ளக் கூடியதொரு மொழியையே வழக்கில் கொண்டு வரக்கூடும். பரிபாஷைச் சொற்கள் தேவைப் பட்ட இடங்களில் இரண்டும் வெவ்வேறு சொற்களைக் கையாள லாம். ஆனால் இதுகூடத் தேவையில்லை, கட்டாயமுமில்லை. மேலே நான் கூறியபடி, அத்தகைய சொற்கள், சம்ஸ்கிருதத்தின் உதவியைக் கொண்டு புனையப்பட்டால் தான் அவை எல்லாராலும் ஏற்றுக் கொள்ளத்தக்க சொற்களாகவும் நாடு முழுவதுக்கும் உகந்த சொற்களாகவும் ஆகக்கூடும்.

தேசீய மொழியானது நித்திய வேலைகளுடன்தாம் முக்கிய மாகச் சம்பந்தப்பட்டிருக்கிறது. இதனால், எனக்குத் தெரிந்த வரையில், ஹிந்தியும், உருதும் இரண்டுமே தத்தம் மொழியெனக் கருதக் கூடியதாக அது இருக்கவேண்டும். விஞ்ஞான நூல் களுக்கும் தத்துவ நூல்களுக்கும், மேலும், சிறந்த உயர்தர இலக் கியங்களுக்கும் மொழியானது ஹிந்தியிலும் உருதுவிலும் வேறு வேறாக இருக்கும். நாம் இந்த வேறுபாட்டை ஒப்புக் கொள்வோ மானால் ஹிந்தி உருது சண்டையின் பெரும்பகுதி அற்றுப்போய் விடும். இந்தியா அனைத்திலும் பயன்படக்கூடிய ஒரு தேசீய மொழி நமக்கு வேண்டும். அது ஆங்கிலமாக யிருக்க முடியாது. அது ஹிந்தியாகத்தானிருக்க முடியும். அதை நாம் ஹிந்தி என்று கூறினாலும் சரி அல்லது உருது என்று கூறினாலும் சரி, அதனால் குற்றமில்லை. இன்று வழங்கிவரும் மாகாண மொழி களின் இடங்களை அது பற்றிக் கொள்ளாது. அவை தத்தம் இடங்களில் முன்னிருந்தவாறே நிலையுற்று மாகாண வேலைக்கும் மாகாண இலக்கியத்திற்கும் பயன்பட்டு வரும். நாட்டின் எல்லா இடங்களிலும் பயன்படுவதற்காகவே நமக்குத் தேசீய மொழி தேவை. நாம் அதைப் பெரும்பாலும் வழக்கில் இல்லாத பாரசீக அரபி சொற்களால் நிறைத்துக் கடினமாக்கி விடுவோமானால் அது வங்காளம், ஆசாம், ஒரிசா, ஆந்திரா, தமிழ்நாடு, கேரளம், கன்னடம், மகாராஷ்டிரம், குஜராத்து முதலிய இடங்களில் நுழை

வது மிகவும் கஷ்டமாகும். ஆதலால் அவ்விடங்களுக்கு அதை எளிதாக்குவதற்காக இயன்ற வரையில் அந்த மாகாண மொழிகளில் வழங்கிவரும் சொற்களைச் சேர்த்துக்கொள்வது நன்று. அதோடு பஞ்சாபிலும் எல்லைப் பிரதேசத்திலும், மேலும் ஐக்கிய மாகாணத்தின் மேற்குப் பாகத்தில் சில இடங்களிலும் அப்பிரதேச மொழிகளில் உருது சற்று அதிகமென்பதை மறக்கக் கூடாது. முக்கியமாக படித்த முசல்மானியர்களிடையில் அங்குப் பாரசீக அரபிச் சொற்கள் கஷ்டமில்லாமல் நிறையப் பேசப் பட்டு வருகின்றன. எளிதில் புரிந்து கொள்ளப்படுகின்றன. தேசீய மொழியானது அப்படிப்பட்டவர்களையும் தன் ஆட்சிக்குப் புறம்பாக்க முடியாது. இதனால் தேசீய மொழியானது தாராள மான கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டும். எவரையும் எதையும் ஒதுக்கிப் புறக்கணிக்கும் கொள்கையைக் கைவிட வேண்டும்.

நான் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தபோது இரு விதமான ஹிந்தியில் பேசவேண்டி வந்ததென்பதைக் கண்டேன். எல்லை மாகாணத்திற்கும், பஞ்சாபுக்கும் சென்றபோது, முசல்மானியர் நிறைய இருந்த கூட்டங்களில் பாரசீகம் கலந்த ஹிந்தியில்தான் பேசி என் கருத்துக்களை வெளியிட்டுப் புரிய வைக்க முடிந்தது. வங்காளம், மகாராஷ்டிரம் முதலிய இடங்களிலும், ஹிந்தி சிறிதளவே புரிந்து கொள்ளப்படும் இடங்களாகிய தென்னிந்தியாவிலும் சம்ஸ்கிருதம் நிறைந்த ஹிந்தியைப் பேசியே என் வேலையைச் செய்ய முடிந்தது. நான் அரபி பாரசீக மொழிகளில் வித்துவானுமல்லன், சம்ஸ்கிருதத்தில் பண்டிதனுமல்லன். அரபி முற்றிலுமே தெரியாது. பாரசீகம் சிறிதளவு தெரியும். சம்ஸ்கிருதம் கூட சுமாராகத்தான் தெரியும். ஆயினும் மேலே கூறியபடி இருவிதமான பேச்சிலும் சாதாரணமாகப் பேசமுடியும். இருவிதமான சபையோரும் என் பேச்சை எளிதில் புரிந்து கொண்டார்கள். இந்த மொழிகள் எனக்குத் தெரியாததே இதற்கு ஒரு முக்கிய காரணமென்பதாக நினைக்கிறேன். இதனால், என்னைப் போன்றவர்களுக்கு (இப்படிப் பட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாயிருக்கிறது, இருந்தும் வரும்) இவ்விதமான தேசிய மொழியை உபயோகிப்பது எளிதாகும். வித்துவான்களுக்கும் பண்டிதர்களுக்கும் இதில் நிறையக் கஷ்டம் இருக்கிறது. இருந்தும் வரும். ஏனெனில் எங்காவது ஏதாவது ஒரு சொல்லுக்குத் தட்டுப்பட்டால், அவர்கள் உடனே சம்ஸ்கிருதம் அல்லது அரபியை நாடி ஓடுகிறார்கள். என்னைப்

போன்றவர்கள் அவ்வளவு தூரம் போக முடிவதில்லை. இதனால் என்னைப் போன்றவர்களுக்கு அதிகப்பழக்கமுள்ள நம்முடைய சிறிய பொருட் களஞ்சியத்திலிருந்தே வேண்டியதைத் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கிறது.

நான் இங்குத் தேசீய மொழியைப் பற்றி என்னுடைய கருத்துக்களை விரிவாகக் கூறிவிட்டேன். ஏனெனில் சம்மேளனுடன் இவற்றிற்குத் தொடர்புண்டு. இவ்விதமான கருத்துக்களையே என் சொற்பொழிவிலும் அமைத்துக் கூறினேன். இம் சம்மேளன் தேசீய மொழி பிரசாரமும் செய்து வந்தது. இதனால் அது இரண்டு விஷயங்களை நினைவிற்கொண்டிருக்க வேண்டியிருந்தது. ஒரு புறத்தில் ஹிந்தியில் சிறந்த உயர்தரமான நூல்களை ஆக்குவதிலும் மற்றொரு புறத்தில் மொழியைப் பரவச் செய்வதிலும் கவனம் செலுத்த வேண்டியிருந்தது. இந்த இரண்டு நோக்கங்களுக்கிடையில் வேறுபாடோ விரோதமோ வரக்கூடாது. ஆனால் சில இடங்களில் இது வராமலிருக்க முடியாது. சம்மேளனில் இந்த விஷயத்தைப் பற்றிச் சிறிது கருத்து வேறுபாடு பின்னால் வந்துவிட்டது. நாகபுரியிலே இக்கருத்து வேறுபாடு தெரியவந்தது. ஆனால் அங்கு நடந்த வேலைத் திட்டத்தில் யாதும் வித்தியாசம் உண்டாகவில்லை. சம்மேளனனது ஒரு தேசீய மொழி சமிதியை அமைத்தது. அதற்கு நான் தலைவனாக்கப்பட்டேன். சம்மேளனில் ஒரு பிரசார சமிதியும் இருந்து வந்தது. பிரசார சமிதியானது ஹிந்தி மொழிப் பிரதேசங்களில் சாகித்திய (இலக்கிய)ப் பிரசார வேலை செய்து வரவேண்டுமென்றும், தேசீய மொழிப் பிரசார சமிதியானது ஹிந்தி தாய் மொழியாக இல்லாத பிரதேசங்களில் தேசீய மொழிப் பிரசாரம் செய்து வரவேண்டுமென்றும் நாகபுரி சம்மேளனுக்குத் தோன்றியது. தென்னிந்தியாவில் அதாவது ஆந்திரா, தமிழ்நாடு, கேரளம், கர்னடகம் ஆகிய இடங்களில் தட்சிண பாரத ஹிந்தி பிரசார சமிதி மிகச் சிறந்த வேலை செய்து வந்து கொண்டிருந்தது. அதன் மூலமாகப் பிரசார வேலை மிகவும் மும்முரமாக நடத்தப்பட்டு வந்தது. ஆனால் மற்ற ஹிந்தியல்லாத மாகாணங்களில் பிரசாரத்திற்கு ஏற்பாடு செய்யப்படவில்லை. ஆகையால் குஜராத்து, மகாராஷ்டிரம், வங்காளம், ஆசாம், ஒரிசா ஆகிய மாகாணங்களில் பிரசாரம் செய்யும் பொறுப்பு இந்தத் தேசீய மொழிப் பிரசார சமிதியிடம் ஒப்படைக்கப்பட்டது. நான் இதற்குத் தலைவனாக ஆக்கப்பட்டேனாயினும் இதற்கு விதிகளை அமைக்கும் வேலையை காந்திஜீயே ஏற்றுக்கொண்டார். பொருள் திரட்

டும் வேலையை சேத் ஜம்னுலால் பஜாஜ் எடுத்துக்கொண்டார். இதில் புருஷோத்தமதாஸ் டண்டன், பண்டித் தயாசங்கர் துபே, டாக்டர் பாபூராம் சக்ஸேனு போன்ற சம்மேளளின் தலைவர்கள் அங்கத்தினர்களாக்கப்பட்டார்கள். ஹிந்தியல்லாத பிரதேசங்களின் பிரதிநிதிகளாக அப்பிரதேசத்தின் ஹிந்தி அன்பர்கள் சிலர் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். இந்தச் சமிதியானது மூன்று ஆண்டுகளுக்குத்தான் நிறுவப்பட்டது. 1936லிருந்து 1942 வரையில் ஆருண்டுகளில் இச்சமிதியானது ஹிந்தியல்லாத மாகாணங்களில், முக்கியமாக குஜராத்து, மகாராஷ்டிரம், மத்திய பிரதேசத்தின் மராட்டி ஜில்லாக்கள், ஒரிசா, ஆசாம் ஆகிய இடங்களில் நிறைய வேலை புரிந்தது. மாணவர்களுக்காகப் புத்தகங்கள் இயற்றப்பட்டன. பரீக்ஷைகள் நடத்தப்பட்டன. ஆயிரக்கணக்கான மாணவர்கள் பரீக்ஷை எழுதினுர்கள், அவற்றில் தேறினுர்கள். சேட் பத்மபத் சிங்கானியா ஐந்து ஆண்டுகள் வரையில் ஆண்டொன்றிற்கு 15,000 ரூபாய் (மொத்தம் 75,000) நன்கொடை யளித்துப் பொருள் கஷ்டத்தைப் பெரும்பாலும் போக்கடித்து விட்டார். ஸ்ரீ காகா காலேல்கர், ஸ்ரீ சத்ய நாராயண், ஸ்ரீ ஸ்ரீமன் நாராயண், தாதா தர்மாதிகாரி ஆகியவர்கள் மிக்க உழைப்பும் உற்சாகத்துடனும், காந்திஜீயின் அருட்கரத்தின் கீழ் நின்று அதனை ஒரு பரந்த புகழ் வாய்ந்த உயர்ந்த நோக்கமுடைய வெற்றிகரமான ஸ்தாபனமாக்கி விட்டார்கள்.

நாகபுரியில் மற்ருெரு மகாநாடும் நடந்தது. ஹிந்தி—உருதுக்கிடையில் பகைமை வளர்ந்து வருவதைக் காந்திஜீ பார்த்தார். இந்த இரண்டுக்கும் ஒற்றுமையை உண்டாக்கி வைக்க முயற்சி செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினுர். இதற்காக இரண்டு மொழிகளின் வித்துவான்கள் வந்து கூடும்படியானதும், யாதொரு போட்டி பொருமையில்லாமல் மொழியின் முன்னேற்றத்தையே நோக்கமாகக் கொண்டு பணியாற்றுவதுமானதொரு கழகம் வேண்டியிருந்தது. அவர் இதில் குஜராத்தின் இலக்கியக்காரர்களில் மிகவும் உயர்ந்த பதவி வகித்துவந்த ஸ்ரீ கன்யாலால் முன்ஷீயை ஈடுபடச் செய்ய விரும்பினுர். முன்ஷீ, பிரேம்சந்த், மௌல்வீ அப்துல் ஹக் சாஹிப் ஆகியவரின் உதவியையும் பெற விரும்பினுர். இக்கழகத்தின் (ராஷ்டிர பாஷா பரிஷத்) பேரவை நாகபுரியில் நடைபெற்றது. மேலே கூறப்பட்டுள்ள கனவான்களும் மற்றவர்களும் அழைக்கப்பட்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்திலேயே மௌல்வீ அப்துல் சாஹபுடன் கருத்து மாறுபாடு

எழுந்துவிட்டது. அவர் மகாநாட்டிற்குப் பிறகு காந்திஜீயை மிகவும் இழிவான முறையில் தாக்கிச் சில கட்டுரைகள் எழுதினர். இதனால் அந்தப் பரிஷத் முசல்மானியருக்கு உதவி புரிய முடியாமல் போய்விட்டது. ஆயினும் முன்ஷீ பிரேம்சந்த், ஸ்ரீ கன்யாலால் முன்ஷீ இருவரும் 'ஹன்ஸ்' என்ற காசியின் ஹிந்தி மாதப் பத்திரிகையைப் பரிஷிதின் சார்பில் சிறிது காலம் வரையில் நடத்தி வந்தார்கள். முன்ஷீ பிரேம்சந்த் சிறிது காலத்திற்குப் பிறகு 'பரமபதமடைந்துவிட்டது மிகவும் வருந்தத்தக்க விஷயம். பரிஷத் நெடுநாள் நிலைத்து நிற்க முடியவில்லை.

## 117. மாகாண சட்டசபைகளுக்குத் தேர்தல்

1936ஆம் ஆண்டானது புதிய அரசியல் அமைப்புப்படி 1937இல் நடைபெறவிருந்த மாகாண சட்டசபை தேர்தலுக்கு ஏற்பாடு செய்வதில் கழிந்தது. காங்கிரஸானது தன் சார்பில் அபேக்ஷகர்களை நிறுத்த வேண்டுமென்றும் தேர்தலில் போராட வேண்டுமென்றும் லக்நோவில் நிச்சயம் செய்துவிட்டது. இப்புதிய அமைப்பின்படி கோடிக்கணக்கான ஆண்களும் பெண்களும் தேர்தலில் பங்கெடுத்துக்கொள்ள இப்போதுதான் முதன் முதலாக வாய்ப்புக் கிடைத்தது. அந்தக் கோடிக்கணக்கான வாக்காளர்களைக் காங்கிரஸின் அபேக்ஷகர்கள் எல்லாருக்கும் தம் வோட்டை அளிக்கும்படி கட்டுப்பாடு செய்வது எளிதான காரியமன்று. காங்கிரஸானது 1934–36இல் மீண்டும் ஒழுங்காக அமைக்கப்பட்டது. 1934இல் அது மத்திய சட்டசபைத் தேர்தலில் கலந்துகொண்டு போராடியது. அதில் அதற்கு மாபெரும் வெற்றியும் கிடைத்தது. ஆனால் அத்தேர்தலைவிட இத்தேர்தல் எவ்வளவோ பரந்ததாயிருந்தது. அதில் சுமார் 100 உறுப்பினர்களைத்தாம் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. இதிலோ சுமார் 2000 இடங்களுக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதில் செலவும் அதிகமாகப் பிடிக்கும். அபேக்ஷகர்களை நியமிப்பதும் சுலபமான வேலை அன்று.

வாக்காளர்களின் முன் சமர்ப்பிப்பதற்காக ஓர் அறிக்கையை முதலில் தயார் செய்ய வேண்டியிருந்தது. அந்த அறிக்கையில் கண்டுள்ளவற்றை நிறைவேற்றுவோமென்று கூறி அவர்களுடைய வாக்கைக் கோர வேண்டும். காங்கிரஸின் தீர்மானங்களின்

மசோதாக்களையும் இவ்விதமான அறிக்கையின் மசோதாக்களை யும் காந்திஜீதாம் முன்பெல்லாம் தயார் செய்து வந்தார். இப்போது பண்டித் ஜவஹர்லால்ஜீ தலைவரானதிலிருந்து அந்த வேலையை அவர்தாம் பெரும்பாலும் செய்ய வேண்டியிருந்தது. அவர் உள்ளத்தை உலுக்கும் மொழியில் ஓர் அழகிய அறிக்கையைத் தயார் செய்தார். அகில பாரதீயக் குழு அதை அங்கீகரித்துக்கொண்டது.

எங்களுக்கு ஒரு கஷ்டமிருந்தது. காங்கிரஸானது தன் உறுப்பினர்களை மந்திரி சபை அமைக்க விடுமா விடாதா என்பது இன்னும் நிச்சயம் செய்யப்படவில்லை. மாகாணங்களில் மந்திரி சபையை அமைக்க வேண்டுமென்றும், சட்ட அமைப்பு மூலமாகக் கிடைத்த அதிகாரத்தை உபயோகிக்க வேண்டுமென்றும் சிலர் விரும்பினுர்கள். வேறு சிலர் காங்கிரஸானது முட்டுக்கட்டை போடும் வேலையே செய்துவர வேண்டுமென்றும், மந்திரி சபையை அமைக்கக்கூடாதென்றும், மற்றவர்களை அமைக்க விடவும் கூடாதென்றும், அப்படியே அது அமைக்கப்பட்டாலும் அதற்கு முட்டுக்கட்டை போட்டு வரவேண்டுமென்றும் விரும்பினுர்கள். காங்கிரஸானது சட்ட அமைப்பை ஏற்றுக் கொள்ளவில்லைதான். ஆயினும் தேர்தலில் பங்கெடுத்துக்கொள்வதற்கு அனுமதி கொடுத்துவிட்டது. தேர்ந்தெடுக்கப்பட்டபின் அதன் உறுப்பினர்கள் என்ன செய்வார்கள் என்பதைக் கூறவில்லை என்பது உண்மை. இதனுல் இந்த அறிக்கையில் நாம் மந்திரிசபை அமைப்போமென்ருவது, அதிலிருந்து கொண்டு இன்னின்ன வேலையைச் செய்வோமென்ருவது தெளிவாகக் கூற இயலவில்லை. அங்கு நாமும் ஒன்றும் செய்ய மாட்டோம், பிறரையும் ஒன்றும் செய்யவிட மாட்டோமென்று கூறுவதும் கடினமாயிருந்தது. கராச்சிக் காங்கிரஸில் நம்முடைய அடிப்படையான உரிமைகளைப் பற்றியும் பொருளாதார உரிமைகளைப்பற்றியும் கூறிய தீர்மானத்தில் என்னென்ன அங்கீகரிக்கப்பட்டிருந்தனவோ அவையே இந்த அறிக்கையில் மிகச் சாமர்த்தியமாக எடுத்துரைக்கப்பட்டிருந்தன. அப்படிச் செய்ததினுல் நாம் மந்திரி பதவியை ஏற்போமா மாட்டோமா என்ற விஷயத்தைப் பற்றி எதையும் கூருமலே சட்டசபையில் செய்ய வேண்டிய வேலைத் திட்டத்தை மட்டும் அது காட்டிச் சென்றது. இந்த அறிக்கை நாடு முழுவதிற்குமாக அமைக்கப்பட்டது. இதன்படியே காங்கிரஸ் உறுப்பினர்கள், அவர்கள் எந்த மாகாணத்திலிருந்தாலும், வேலை செய்வார்கள். இது மட்டுமன்றி, மாகாணக் குழுக்கள் தத்தம் சூழ்நிலைக்கு ஏற்ற

வாறு ஆங்காங்கு ஏதாவது அறிக்கை விட விரும்பினல் அவை அப்படிச் செய்யலாம்.

இந்த அறிக்கையில் குடியானவர்களின் நிலைமையை மேன் படுத்துவதைப்பற்றி நிறையக் கூறப்பட்டிருந்தது. அவர்களுக் காகத் தீர்வைச் சட்டத்தைத் திருத்தம் செய்து, அவர்கள் உழுது பயிரிட்டு வந்த நிலத்தின் மேல் அவர்களுக்கு நிரந்தர உரிமை அளிப்பதைப் பற்றிக் கூறியிருந்தது. தீர்வையைக் குறைப் தைப் பற்றியும் அழுத்தமாகக் கூறப்பட்டிருந்தது. தொழிலாளி களின் நிலைமையை மேன்படுத்துவதைப்பற்றியும் வாக்களிக்கப் பட்டிருந்தது. அவர்களுடைய வேலையை நிரந்தரமாக்கி, அவர்கள் வாழ்க்கைக்கு நல்ல ஏற்பாடுகள் செய்து கொடுத்து, அவர்க ளுடைய ஊதியத்தைப் பெருக்குவதைப்பற்றியும் வாக்களிக்கப்பட் டிருந்தது. மேலும் தொழிலாளர் சங்கங்களை நிறுவுவதற்கு உரிமையை வாங்கிக் கொடுப்பதைப்பற்றியும், மற்ற வகையில் அவர்களுடைய நிலைமையை சீர்திருத்துவதைப் பற்றியும் கூறப் பட்டிருந்தது. மதுவிலக்கு செய்வதைப்பற்றியும் கூறப்பட் டிருந்தது. அதாவது, மக்களிடையில் செல்வாக்குடைய ஒரு மந்திரிசபை செய்யக்கூடிய விஷயங்கள் எல்லாம் அதில் கூறப்பட் டிருந்தன. நாங்கள் மந்திரி பதவியை ஏற்றுக்கொண்டால் இவற்றையெல்லாம் செய்வோமென்பதில் ஐயமில்லை. ஆனல் அப்படி ஏற்றுக்கொள்ளாமல் வேறு எந்த மந்திரிசபை அமைந்தா லும் அதன் மூலமாக இவற்றை நாம் நிறைவேற்றக்கூடும்; நிறை வேற்றுவோமென்றே நாங்கள் நினைத்தோம்.

இத்தனை அபேக்ஷகர்களைப் பொறுக்கி எடுப்பது மற்ருெரு கடினமான வேலையாக இருந்தது. இந்த வேலையை அகில பார தீயக் குழுவின் செயலாற்றுக்குழு செய்ய முடியாதென்பது திண் ணம். இரண்டு அபேக்ஷகர்களுள் எவருக்குக் காங்கிரஸ் சீட்டைக் கொடுப்பது என்பதைப் பற்றி அது யோசிக்க முற்பட் டால் அந்த விஷயத்தைப்பற்றி முடிவுக்கு வருவதற்குப் போது மான விவரங்கள் அதனிடமிருக்காது. இதற்கு மாகாணக் குழுக் களையோ அவற்றின் நிர்வாகக் குழுக்களையோ நம்பியிருப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆனலும் சில இடங்களில் உள்ளூர் குழுக்களில் கட்சிகள் இருக்கின்றனவென்பது தெரிந்த விஷயம். இக்கட்சிச் சண்டைகளினல் எவராவதொரு அபேக்ஷகருக்கு அநி யாயம் செய்யப்படலாம். அல்லது பொது மக்களுக்கு உத்தரவாத மில்லாத உதவாக்கரை அபேக்ஷகர் எவராவது நிறுத்தப்படலாம். அகில பாரதீயக் குழுவின் கையிலேயே தீர்ப்பளிக்கும் வேலை

இருப்பது நன்றெனப் பல மாகாணக் குழுக்கள் விரும்பின. இதனுல் கடைசி முடிவை அகில பாரதீயக் குழுவே செய்யுமென்று நிச்சயிக்கப்பட்டது. ஆனுல் இந்த வேலேக்காக தன் உறுப்பினர்கள் அனைவரையும் ஒருங்கே கூட்டுவது கடினமென்று செயலாற்றுக் குழு கருதியது. இதனுல் மூன்று உறுப்பினர்களேக் கொண்ட ஒரு பார்லிமெண்டரி கமிட்டியை அமைத்து அதன் கையில் இந்த வேலேயை ஒப்படைத்தது. இந்தப் பார்லிமெண்டரி கமிட்டிக்கு சர்தார் வல்லப்பாயீ படேல் தலேவராக நியமிக்கப்பட்டார். மௌலானு அப்துல் கலாம் ஆஜாதும் நானும் உறுப்பினர்களாக அமைந்தோம். தேர்தல் சமீபத்தில் வந்தபோது, இந்த மூன்று உறுப்பினர்கள் ஒருங்கு கூடி யாதொரு விஷயத்தையும் முடிவு செய்வது இயலாதென்பது அனுபவத்தில் தெரிய வந்தது. ஏனெனில், இதற்கு வேண்டிய அவகாசமில்லே. மேலும் ஒருவர் மற்ருருவரிடமிருந்து தொலேவில் இருந்து வந்தார்கள். இந்த வேலே செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்கள் எல்லாருடைய கையிலும் விடப்பட்டிருந்தால் அவர்கள் மாதக் கணக்காக ஒரேயிடத்தில் தங்கி இருக்க வேண்டி வந்திருக்கும். ஆரம்பத்தில் இந்தக் கமிட்டியின் வேலேக்காக நான் சிறிது காலம் பம்பாயில் தங்கியிருக்க வேண்டியிருந்தது. ஆனுல் அவ்வூர்க் காற்று எனக்கு ஒத்துக்கொள்ளாததால் என்னுல் மழை காலத்தில் அங்குத் தங்கியிருக்க முடியவில்லே. நாங்கள் மூவரும் தத்தமிடங்களில் இருந்தவாறே இந்த வேலேயைச் செய்து வந்தோம்.

உறுப்பினர்களே மாகாணச் செயலாற்றுக் குழு நியமித்தது. ஆனுல், தான் அங்கீகரித்தவர்களின் பெயர்களேயெல்லாம் அது பார்லிமெண்டரி கமிட்டிக்கு அனுப்பி வந்தது. மாகாணம் செய்த முடிவின் மீது யாருக்காவது கோபம் வந்தால், அவர் பார்லிமெண்டரி கமிட்டியிடம் முறையிடுவார். இந்த விஷயத்தையொட்டிய காகிதங்கள் அனைத்தும் அதனிடம் அனுப்பப்படும். அப்பீலோ கோபமோ வராத நியமனமெல்லாம் மாகாணக் குழு முடிவு செய்தபடியே விட்டு விடப்படும். ஆனுல் முறையீடு செய்யப்பட்ட நியமனத்தைப் பற்றி பார்லிமெண்டரி கமிட்டி விசாரணே செய்யும். தேவைப்பட்டால், அதனுடைய உறுப்பினர்கள் அந்த இடத்திற்கே சென்று அங்குள்ளவர்களேச் சந்தித்து அவர்களிடம் அந்த அப்பீலேப் பற்றி விசாரித்த பின் தீர்ப்பளிப்பார். இது எளிதான வேலேயன்று. மிகக் குறைந்த முடிவுகளேப் பற்றித்தான் பார்லிமெண்டரி கமிட்டியிடம் அப்பீல்கள் வந்தனவென்பது மகிழ்ச்சிக்குரியதொரு விஷயமாகும்.

அப்படி வந்த அப்பீல்களில் பல கடிதப்போக்கு வரவு மூலமே எல்லாரையும் சமாதானப்படுத்தி தீர்க்கப்பட்டு விட்டன. சில அப்பீல்களின்மீது தாம் யாராவது ஒருவருக்கு விரோதமாகவோ அல்லது கட்சிக்கு விரோதமாகவோ தீர்ப்பளிக்க வேண்டி வந்தது.

இத்தேர்தல் சம்பந்தமாக இரண்டு கேள்விகள் முக்கியமாயிருந்தன. தேர்தலுக்கு நியமிக்கப்பட்ட அபேக்ஷகர்கள் காங்கிரஸின் வேலை திட்டத்தின்படி, உண்மையாகவும் நாணயமாகவும் வேலைசெய்வார்களா இல்லையா என்பது ஒரு விஷயம். அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்களென்று முழு நம்பிக்கை உண்டா இல்லையா என்பது மற்றொரு விஷயம். மூன்ருவது கேள்வி ஒன்றிருந்தது. அது மேலே கூறப்பட்ட இரண்டைப் போல அவ்வளவு முக்கியமானது அல்லாவிட்டாலும் அதுவும் முக்கியமாயிருந்தது. அதாவது அபேக்ஷகர்களின் தேர்தலுக்குத் தேவைப்படும் செலவை அவர்களே செய்ய முடியுமா முடியாதா என்பதுதான். அப்படி முடியாவிட்டால் அதற்காகப் பார்லிமெண்டரி கமிட்டி என்ன உதவி புரியவேண்டும்? முதற் கேள்விக்கு, அபேக்ஷகர்களின் பழைய தொண்டைக் கொண்டும் காங்கிரஸோடு அவருக்கு இருந்த உறவைக் கொண்டும், அவருடைய நடத்தையைப் பற்றி விசாரித்தறிந்தும்தான் முடிவு கட்ட முடியும். மற்றொரு கேள்விக்கு முடிவு, அவருக்கு மக்களிடையில் எவ்வளவு செல்வாக்கு இருக்கிறதென்பதைப் பொறுத்தது. இச்செல்வாக்குக்குப் பல காரணங்களிருக்கலாம். ஒருவர், காங்கிரஸின் மூலம் செய்த தொண்டினுல் செல்வாக்குடையவராயிருக்கலாம். மற்ருெருவர் ஏதாவதொரு குறிப்பிட்ட இடத்தில் வேறு விதமான தொண்டுகளின் மூலமாகச் செல்வாக்குடையவராயிருக்கலாம். சில இடங்களில் ஏதாவதொரு சாதி அல்லது சமூக மக்கள் நிறைய இருப்பார்கள். அவ்விடங்களில், தொண்டைத் தவிர அந்தச் சாதி அல்லது சமூகத்தைச் சேர்ந்தவராயிருப்பது செல்வாக்குக்கு (அதாவது வாக்குப் பெறும் ஆற்றலுக்கு) காரணமாயிருக்கலாம். ஏதாவதொரு இடத்தில் அதிகமாக (காங்கிரஸ்) வேலை செய்யப்படாமலிருக்கலாம்; காங்கிரஸுக்கு செல்வாக்கு இல்லாமலுமிருக்கலாம், அப்படிப்பட்ட இடத்தில் நம் அபேக்ஷகர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார் என்ற நம்பிக்கை வேறு காரணங்களால் தாம் உண்டாகலாம். இந்த விஷயங்களையெல்லாம் மாகாணக் குழுக்கள் தாம் முடிவு கட்டமுடியும். இதனுல் அவை சொல்வதைத்தான் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

காங்கிரஸின் தொண்டர்கள் இருவர் ஒரே இடத்திற்கு

அபேக்ஷகர்களாகி அவர்களில் எவரும் விலகிக் கொள்ளத் தயாராயில்லாமல் போனுல்தான் அதிகக் கஷ்டம் எதிர்ப்படும். அவர்கள் என்ன தொண்டு செய்திருக்கிருர்கள் என்பதைச் சீர் தூக்கி அவர்களுக்குள் வித்தியாசத்தைக் கண்டுபிடிப்பது இயலாத காரியமாகாவிட்டாலும் கண்டிப்பாகக் கடினமாயிருக்கும். பொது மக்களுக்கு இருவர்பாலும் அன்பும் பற்றுதலும் இருக்கலாம். இந்த நிலைமையில் நான் அவர்களுள் எவராவது ஒருவரை அதிருப்தி செய்துதான் தீர்ப்பளிக்க வேண்டிவரும். பண விஷயமும் எளி தன்று. 2000 இடங்களுக்குத் தேர்தல் செலவு அதிகம் பிடிக்கும். சிறுகச் சிறுக செலவு செய்தாலுங்கூட எல்லாம் சேர்ந்து அதிக மாகிவிடும். போட்டியினுலும் செலவு மேலும் அதிகமாகலாம். போட்டியிடுபவர் பணக்காரராயிருந்து, அதிகமாகச் செலவு செய்ய முனைந்துவிட்டால் எங்களுடைய செலவையும் அதிகரிக்க வேண்டி வரும். ஏனெனில் எதிராளி செய்யும் பிரசாரத்திற்கு விடை அளித்தாகவேண்டும்.

இத்தனை கஷ்டங்களையும் பார்லிமெண்டரி கமிட்டியானது சர்தார் வல்லபாயீயின் தலைமையின் கீழ் சமாளிக்க முடிந்த தென்பதைப் பற்றி நான் மகிழ்ச்சியுறுகிறேன். அகில பாரதீயத் தேர்தலை மட்டுமின்றி நான் என் மாகாணத்துத் தேர்தலையும் கவனிக்க வேண்டி யிருந்தது. நான் காங்கிரஸின் தலைவனுனதி லிருந்து என் மாகாணத்து வேலை எதையும் செய்ய முடியவில்லை. சுமாறு ஐந்தாறு ஆண்டுகளாக எனக்கும் என் மாகாணத்திற்கும் தொடர்பு குறைந்துவிட்டது. இந்த ஆண்டில் நான் மாகாணக் குழுவுக்கும் தலைவனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டேனென்பது நினை விருக்கிறது. இதனுல் மாகாணத்து அபேக்ஷகர்களைப் பொறுக்கி யெடுப்பதில் நான் நிறைய நேரம் செலவிட வேண்டி வந்தது.

மற்ற மாகாணங்களில் அதிகமாகக் காணப்படாத விஷயம் ஒன்று எங்கள் மாகாணத்தில் எதிர்ப்பட்டது. எங்கள் ஜில்லாக் கமிட்டிகள் அபேக்ஷகர்களை பொறுக்கும் விஷயத்தை மாகாணக் குழுவிடமே விட்டுவிட விரும்பின. ஏனெனில் தாமே இந்த விஷயத்தை முடிவு கட்டினுல் தம்முள் மனஸ்தாபம் பெருகிவிடு மென்றும், இதனுல் தேர்தல் மிகவும் கஷ்டமாகிவிடுமென்றும் அவை நினைத்தன. ஆயினும் மாகாணக் குழுவுக்கும் இந்த விஷயத்தில் முடிவு கூறுவது எளிதாக இல்லை. ஏனெனில் அதற்கு அந்தந்த இடத்து உள்ளூர் நிலைமை சரியாகத் தெரி யாது. ஆயினும் இந்த வேலையை மாகாணக் குழுவின் பொறுப் பில் விட்டது நல்லதாயிற்றென்றே நினைக்கிறேன். அதனுடைய

தீர்ப்புக்கள் பெரும்பாலும் எல்லாருடைய சம்மதத்தைக் கொண்டே செய்யப்பட்டன. சிலவற்றில் கருத்து வேறுபாடு உண்டாயிற்று. சில சமயங்களில் அது கடுமையாகவும் மாறி விட்டது. ஆயினும் கடைசியில் எல்லா விஷயங்களையும் எல்லாருடைய சம்மதத்துடன் தீர்க்க முடிந்தது. பல தீர்ப்புக்கள் சம்பந்தமாக என்னை மிகவும் கஷ்டத்துடன் சமாதானப் படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது. என் தனிப்பட்ட சொந்த அபிப்பிராயத்தை அடக்கிக் கொண்டு, குழுவின் தீர்ப்பையே ஏற்றுக் கொண்டேன். என் நினைவுக்கு எட்டிய வரையில், என்னால் எவராவது ஒருவரைப்பற்றி வாக்கெடுக்க வேண்டி வந்ததென்பதற்கு இடம் கொடுக்க வில்லை. ஆயினும் அவசியப்பட்டபோது என் அபிப்பிராயத்தைத் தெரிவித்து வந்தேன். ஆனால் யாருக்கும் மனக்கசப்பு வராமல் மிகவும் மரியாதையாகக் கூறுவேன். எப்படியோ எங்கள் மாகாணத்தில் அபேக்ஷகர்களை நியமிக்கும் வேலை ஒரு விதமாக முடிந்தது.

காங்கிரஸ் வேலையைப் புரிந்துவரும் தொண்டர்களையே கூடிய வரையில் பொறுக்க வேண்டுமென்று எங்கள் மாகாணத்தில் வற்புறுத்தி வந்தோம். அப்படிப்பட்டவர்கள் மீது அதிகமாக நம்பிக்கை வைக்கலாம். ஏனெனில் அவர்கள், தாம் நம்பத் தகுந்தவர்கள் என்பதை முன்னமே காட்டிவிட்டார்கள். அவர்கள் காங்கிரஸ் எப்படிக் கட்டளையிடுமோ அப்படியே நடப்பார்கள் என்றும் எதிர்பார்க்கலாம். ஆயினும் சில இடங்களில் அங்குள்ள நிலைமையினால், காங்கிரஸிடம் அனுதாபம் உள்ளவர்களாயும் அதற்கு ஏதோ தொண்டு புரிந்தவர்களாயும் இருப்பினும் அதனுடைய செயலாளர்களில் உட்படாதவர்களாகிய சிலரை, உள்ளூர்க் கஷ்டங்களை முன்னிட்டும், சில இடங்களில் பணக் கஷ்டத்தை முன்னிட்டும், நியமிக்க வேண்டி யிருந்தது.

எங்கள் மாகாணத்தில் ஒரு தனிப்பட்ட நிலைமை உண்டாயிற்று. இங்குக் கிசான் சபா பணியாற்றி வந்தது. அது 1933–34இல் சுவாமி சகஜானந்த் சரஸ்வதியின் தலைமையின்கீழ் கிளம்பித் தோன்றியது. அந்த மூன்று நான்கு ஆண்டுகளில் அது பல இடங்களில், முக்கியமாக கயா, பட்னா ஜில்லாக்களில் மக்களிடையில் மிகவும் மும்முரமாகப் பணியாற்ற முடிந்தது. காங்கிரஸுக்கும் கிசான் சபாவுக்கும் யாதொரு போட்டியுமிருக்க வில்லை. மிகவும் செல்வாக்குள்ள அதே செயலாளர்கள் பலர் இரண்டிலும் வேலை புரிந்து வந்தார்கள். தேவைப்பட்ட இடங்களில் காங்கிரஸ் அதற்கு உதவி புரிந்து வந்தது. தேர்தலுக்கு

அபேக்ஷகர்களை நியமிக்கும் பேச்சு வந்தபோது, மாகாணக் கமிட்டியில் உறுப்பினராயிருந்த சுவாமி சகஜானந்து, கிசான் சபாவுடன் விசேஷமாகத் தொடர்பு கொண்டிருந்த சிலரை நியமிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். மற்ற உறுப்பினர்களுக்கும் அவர்களைப்பற்றி யாதொரு ஆட்சேபணையுமில்லை. ஆயினும் சில சில இடங்களில் கிசான் சபாவின் செயலாளர்களுக்கும் காங்கிரஸ்காரர்களுக்குமே போட்டி வந்துவிட்டது. அப்படியும் மாகாணக் குழுவானது இதை எப்படியோ சமாளித்து விட்டது. கடைசியில் நாங்கள் செய்த முடிவுகள் எல்லாருக்குமே திருப்தியளித்தன. எல்லாரும் அவற்றை ஏற்றுக் கொண்டார்கள்.

மற்றொரு விஷயத்தைப் பற்றியும் இங்குக் குறிப்பிட வேண்டும். அபேக்ஷகர்களை நியமிப்பதில், அவர்களில் எவர் எந்தச் சாதியைச் சேர்ந்தவர் என்பதின்மீதும் கவனம் செலுத்த வேண்டியிருந்தது. இது காங்கிரஸுக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடிய விஷயமன்று. ஆயினும் சூழ்நிலையினால் நாங்கள் இதிலிருந்து விலகி நிற்க முடியவில்லை. இந்த மாகாணத்தில் ஆட்களை நியமிப்பதில் நாங்கள் சாதியை முற்றிலும் மறக்க முடியவில்லையென்பதும், இன்ன இடத்தில் இன்ன சாதி அபேக்ஷகர் தேர்ந்தெடுக்கப்படுவது எளிதாகும் என்பதையும், இன்னாரை நாம் நியமிக்காவிட்டால் இன்ன சாதியாருக்குக் கோபம் விளைவதோடு, தேர்தலுக்கும் கெடுதல் விளையுமென்பதையும் நினைக்க வேண்டியிருந்தது. இது மிகவும் துக்கமும் வெட்கமும் பட வேண்டிய விஷயமாகும். நாங்கள் நியமித்த அபேக்ஷகர்களுள் எல்லா சாதிகளின் அபேக்ஷகர்களையும் பொறுக்கியிருக்கிறோமா என்றும் அப்படிப் பொறுக்கியிருந்தால், அந்தந்தச் சாதியாருக்குத் திருப்தியளிக்கும்படி அத்தனை பேரை நியமித்திருக்கிறோமா என்றும், யோசிக்க வேண்டி யிருந்தது. இந்த விஷயங்கள் ஒரு தேசீய ஸ்தாபனத்திற்குப் பெருமையளிப்பனவல்ல. ஆனால் நாங்கள் தேர்தலில் வெற்றிபெற வேண்டியிருந்தது. எல்லாச் சாதிகளிலுமே காங்கிரஸ் வேலை செய்பவர்கள் நிறைய இருந்ததால், காங்கிரஸின் கொள்கையைக் கைவிடாமல் அதன்படியே அவர்களை நியமிக்க முடிந்தது என்பது மகிழ்ச்சிக்குரியதொரு விஷயமாகும். ஆகையால் எவரையும் நியமித்ததில் எங்களுக்கு அதிக வருத்தம் உண்டாகவில்லை. ஏனெனில் யாரை நாங்கள் நியமித்தோமோ அவர்கள் பெரும்பாலும் மற்ற வகைகளிலும் தகுதியுடையவர்க

ளாகவே இருந்தார்கள். ஆயினும் காங்கிரஸின் கொள்கைப்படி இவ்விதமான காரணங்களை நுழையவிடுவது சரியில்லைதான்.

புனாவில் ஹரிஜனங்களோடு செய்யப்பட்ட உடன்படிக்கையில், ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களுக்காக முதலில் ஒரு தேர்தல் நடத்தப்படுமென்றும் அதில் ஹரிஜனங்கள் மட்டும்தான் பங்கெடுத்துக் கொள்வார்களென்றும் தீர்மானிக்கப்பட்டிருந்தது. இத்தேர்தலுக்கு நான்கு பேர் அல்லது அதற்குக் குறைவாக அபேக்ஷகர்கள் இருந்தால் வாக்கெடுப்பதற்கு அவசியமில்லை. எல்லாரும் நியமிக்கப்பட்டதாகக் கொள்ளப்படுவார்கள். ஆனால் நான்கு பேருக்குமேல் அபேக்ஷகர்கள் நின்றால், ஹரிஜனங்கள் மட்டுமே வாக்களித்து நான்கு பேரைத் தேர்ந்தெடுப்பார்கள். பிறகு இரண்டாவது தேர்தலில் ஹரிஜனங்களும் மற்றவர்கள் எல்லாருமாகச் சேர்ந்து வாக்களிப்பார்கள். யாருக்கு அதிகமாக வாக்குக் கிடைக்கிறதோ அவரே தேர்ந்தெடுக்கப்படுவார். இதனால் சாதி ஹிந்துக்களுக்கு கடைசித் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ள வாய்ப்புக் கிடைத்தது. ஆனால் அவர் யாரை வேண்டுமானாலும் தேர்ந்தெடுக்க முடியாது. ஹரிஜனங்களால் முதல் தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு பேரில் ஒருவருக்குத்தான் வாக்களிக்க முடியும். இந்த உடன்படிக்கையின் மூலம் ஹரிஜனங்களுக்கு இரண்டு முறை வாக்களிக்க உரிமை கிடைத்தது. ஹரிஜன அபேக்ஷகர்கள் ஒரு முறை ஹரிஜன வாக்காளர்களிடையிலும் மற்றொரு முறை ஹரிஜனங்கள், சாதி ஹிந்துக்கள் ஆகிய இரண்டு வகுப்பினர்களின் வாக்காளர்களிடையிலும் பிரசாரம் செய்ய வேண்டி வந்தது. இது எளிதன்று. ஏனெனில் இதில் அதிகமாகச் செலவு கண்டது. இந்த மாகாணத்தில் ஹரிஜனங்களுக்குப் பதினாறு இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. அந்த எல்லா இடங்களிலும் காங்கிரஸ்கார அபேக்ஷகர்களையே நிறுத்த வேண்டுமென்று முயற்சி செய்தோம். இதனால் ஹரிஜனங்களில் முக்கியமானவர்களும் செல்வாக்குடையவர்களுமானவர்களின் யோசனையைக் கேட்டுக் கொண்டுதான் நாங்கள் ஹரிஜன அபேக்ஷகர்களை நிறுத்தினோம். இதனால் காங்கிரஸுக்கு அதன் விதிமுறைப்படி வேலை செய்ய உடன்பட்ட ஹரிஜனங்கள் கிடைத்துவிட்டார்கள். ஹரிஜனங்களுடைய விருப்பப்படியே பொறுக்கப்பட்டிருந்ததால் ஹரிஜனங்களுக்கும் அவர்களைப் பிடித்திருந்தன. இதில் செலவும் மிகக் குறைவாகவே ஏற்பட்டது. ஏனெனில் அநேக இடங்களில் முதல் தேர்தலில் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே ஒரு அபேக்ஷகர்தாம் நின்றார். ஒரே

ஒரு அபேக்ஷகராயிருந்ததால் அவருக்காக வாக்கு எடுக்க வேண்டிய பேச்சே எழவில்லை. ஆயினும் சில இடங்களில் தேர்தலில் போராடவும் வேண்டி வந்தது. ஆனால் கடைசியில் 16இல் 15 இடங்கள் காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்குத்தாம் கிடைத்தன. மற்ற மாகாணங்களில் இந்தக் காரியம் இவ்வளவு சிறப்பாக நடைபெற முடியவில்லை. இதனால் ஹரிஜனங்களுக்குள் ஒன்றுக்கு மேற்பட்ட கட்சிகள் உண்டாகிவிட்டன. சில காங்கிரஸுடன் சேர்ந்து கொண்டன, சில அதை எதிர்த்தன. இந்த எதிர்ப்பினால் ஹரிஜனங்களுக்குக் காங்கிரஸின் மீது அவநம்பிக்கையும் உண்டாயிற்று. நாங்கள் இந்தக் கஷ்டங்கள் எல்லாவற்றிலிருந்தும் தப்பித்துக் கொண்டோம். இதற்கு மற்றொரு காரணமுமிருக்கலாம். இங்கு ஹரிஜனங்களிடையில் படித்தவர்கள் மிகக் குறைவாகயிருந்தார்கள். இதனால் தாம் முன்னேற வேண்டுமென்ற ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்காக தனியாகக் கட்சி அமைக்க வேண்டுமென்று எண்ணியவர்கள் அதிகமாக இல்லை.

ஆட்களை நியமித்தபின் நாடெங்கும் பிரசாரம் செய்வதற்குச் சரியான ஏற்பாடுகள் செய்ய வேண்டியிருந்தது. இதற்காகப் பணம் திரட்டும் வேலையும் பார்லிமெண்டரி கமிட்டியின் பொறுப்பாக இருந்தது. இந்த வேலையைச் சர்தார் வல்லப்பாயீதாம் முக்கியமாய்ச் செய்தார். தேவைக்கு ஏற்றபடி மாகாணக் குழுக்களுக்கு உதவியளிக்கப்பட்டது. மாகாணக் குழுக்களும் இயன்ற வரையில் தத்தம் தனிப்பட்ட ஏற்பாடுகளையும் செய்து கொண்டன.

காங்கிரஸின் அறிக்கையும் காங்கிரஸ் சம்பந்தமான மற்ற வரலாறுகளையும் அச்சிட்டு வழங்க வேண்டியிருந்தது. இது தேர்தலுக்காக மட்டுமன்று. மக்களின் அறிவை வளர்ப்பதற்காகவும், அவர்களுக்கு இந்த விஷயங்களில் பயிற்சி அளிப்பதற்காகவும் செய்ய வேண்டியிருந்தது. வெறும் கூட்டங்கள் கூட்டி அவற்றின் மூலமாக மட்டும் பிரசாரம் செய்வது போதாதென்று தோன்றியது. வாக்கிற்காக ஒவ்வொரு வாக்காளரிடமும் சில இடங்களில் செல்ல வேண்டியிருந்தது. முக்கியமாக, பலத்த போட்டியிருந்த இடங்களில் இப்படிச் செய்ய வேண்டிருந்தது. இக்காலத்துத் தேர்தலில் மோட்டார் வண்டியின்றி ஒன்றும் நடக்க முடியாது. ஏனெனில் விரைவாகச் செல்லும் வாகனமில்லாமல் எல்லா இடங்களுக்கும் சென்று வர முடியாது. பீகாரில் அதிகமாகச் செலவு ஆகவில்லையென்பதாக நான் நினைக்கிறேன். எங்கள் வேலையை நாங்கள் செட்டாகவே செய்து முடித்தோம்.

அப்படியும்கூட நாங்கள் எவ்வளவு குறைவாகச் செலவு செய்தா லும் காந்திஜீயின் குறிக்கோளின்படி அதுகூட அதிகமென்றே ஒத்துக்கொள்ள வேண்டும்.

காங்கிரஸானது தன் அறிக்கையை அச்சிட்டு வழங்குவதும் தன் அபேக்ஷகர்களின் பெயரை வெளியிடுவதும் தவிர வேறு ஒன்றும் செய்யவேண்டிய அவசியமிருக்கக் கூடாதென்று காந்திஜீ கருதினர். அதாவது, மக்களுக்குக் காங்கிரஸில் அவ்வளவு நம்பிக்கையிருக்க வேண்டுமென்றும் (இந்த நம்பிக்கையைக் காங் கிரஸ் தன்னுடைய தன்னலமற்ற தொண்டின் மூலமாகத்தான் தேடிக்கொள்ள முடியும்), அதனுடைய அபேக்ஷகர்கள் அவ்வளவு செல்வாக்குள்ள உண்மையான தொண்டர்களாக இருக்க வேண்டு மென்றும் அவர் கருதினர். மேலும், மக்கள் யாதொரு தூண்டு தலில்லாமல் தாமே சரியான சமயத்தில் சென்று தம் வாக்கைக் காங்கிரஸின் அபேக்ஷகர்களுக்கு அளித்துவரும் அளவுக்கு அவர் களுக்கு உற்சாகமிருக்க வேண்டுமென்று அவர் கூறி வந்தார். இதற்கு அர்த்தம் என்னவென்ருல் மக்களிடையில் இருந்து கொண்டு அவர்களுக்குத் தொண்டு புரிவதுதான் மிகவும் அவசியம். தேர்தல் சமயத்தில் பிரசாரம் செய்வது அவ்வளவு அவசியமன்று என்பதுதான். மக்களுக்கு ஆற்றிய தொண்டு தான் பிரசாரத்திற்கு மற்றெல்லாவற்றையும்விட வலிமையான கருவியாக இருக்க வேண்டும்.

அவர் சொல்லுவது சரிதான். ஆனல் நாங்கள் இவ்வளவு தொண்டு புரியவில்லையே; நாங்கள் எவ்வளவு தொண்டு புரிந் திருந்தோமோ அதற்குத் தக்கச் செல்வாக்கைப் பெற முடிந்தது. அந்த அளவுக்குத் தேர்தலில் கஷ்டங்களும் குறைவாகவே எதிர்ப் பட்டன. சென்ற இருபது ஆண்டுகளாகச் செய்து வந்த தொண்டு வீண் போகவில்லை. ஆனல் அது, மேலும் பரந்ததும், நிரந்தரமானதுமாக வளர வேண்டும். தன்னலம் சிறிதேனும் இதில் புகுந்துவிட்டால் எங்களுடைய கஷ்டங்கள் மேலும் பெருகிக் கொண்டே செல்லும்.

பல காங்கிரஸ் செயலாளர்கள் தாம் செய்திருந்த தொண்டு களுக்கு விலைபோட்டு மதிப்பிடுவதை இத் தேர்தலில் என் அனுபவத்தில் கண்டேன் என்பதை ஒத்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. இதை எழுதுவதற்கே எனக்கு வெட்கமா யிருக்கிறது. அத்தொண்டுகளுக்குக் கைம்மாருக, அசெம்பிளி அல்லது கவுன்ஸிலில் உறுப்பினர் பதவியையோ, ஜில்லா போர்டு அல்லது முனிசிபாலிடியில் அங்கத்தினர் பதவியையோ அல்லது,

வேறு ஒன்றும் கிடைக்காவிட்டால், காங்கிரஸ் கமிட்டிகளிலாவது ஏதாவது கௌரவமும் அதிகாரமும் உள்ள பதவியையோ அல்லது வேறு எதையாவது நாடித் திரிந்தார்கள்! இப்பதவிகளையடைந்த ஒரு மனிதன் தொண்டு புரிய முடியுமென்பதைப் பற்றி ஐயமில்லை. சில சமயங்களில் தொண்டு செய்யும் ஆற்றலும் பெருகக்கூடும். இந்த நோக்கத்தோடு அல்லது எண்ணத்தோடு அப்பதவிகளுக்கு ஆசைப்பட்டால் அது நியாயமாகும். ஆனால் இந்த ஆசையில் தொண்டாற்றும் மனோபாவம் தலையோங்கியிருக்கிறதா அல்லது தற்பெருமை தலைப்பட்டிருக்கிறதா வென்பதை யார் சொல்ல முடியும்? இதை ஒரு மனிதனின் உள்ளம்கூட சரியாகச் சொல்ல முடியாது. ஏனெனில் இதுபோன்ற விஷயங்களில் அது அடிக்கடி தன்னைத் தானே ஏமாற்றிவிடும். இவ்விதமான மனிதனானவன், தான் தற்பெருமைக்கு ஆசைப்படவில்லையென்றும், தொண்டே புரிய ஆவலாயிருப்பதாகவும் தன் மனத்தையே சமாதானப் படுத்தி விடுகிறான்.

காங்கிரஸின் தலைவன் ஆக ஆவல் படுகிறவனைத் தலைவனாக்கக் கூடாதென்று காந்திஜீ ஒரு சந்தர்ப்பத்தில் கூறினார். எவனொருவன் அதன் கௌரவத்திற்காக ஆசைப்படாமல் தொண்டு செய்வதற்காக அதை ஏற்றுக் கொள்ளுகிறானோ, அவன் இதற்கு ஆசைப்படுவது கிடையாது. அப்படி ஒரு சமயம் வந்தால் அப்போது அவன் அதைத் தன் தலையினால் ஏற்றுக்கொள்வான். மக்கள் பொறுக்கி எடுத்து ஆட்களை நியமிக்கும் மற்ற எல்லாப் பதவிகளுக்கும் இதுவேதான் பொருந்தும். ஆனால் இன்றோ தற்கால வழக்கில் ஒருவன் தன் பெருமையைத் தானே பறைசாற்றிக் கொள்ளவேண்டியிருக்கிறது. தான் முன்னேற வேண்டுமென்ற ஆசையானது இயற்கையாக அமைந்து விடுகிறது. இப்பதவிகளை நமது வாழ்க்கையில் நாம் முன்னேறுவதற்குத் துணைக் கருவிகளாகக் கருதுகிறோம். இது நம்முடைய பண்புக்கும் நாகரிகத்திற்கும் ஒவ்வாததாகும். ஆயினும் தற்கால மேல்நாட்டுக் கருத்துக்களுடன் இது ஒத்திருக்கிறது. இதிலிருந்து இன்று தப்புவது கடினமாகிவிட்டது. தேர்தலுக்காக யாரும் தானே முன்வந்து நிற்கக் கூடாதென்ற குறிக்கோளை நாம் ஏற்கத் தயங்குகிறோம். நம்மைத் தேர்ந்தெடுக்க யாருக்கு உரிமையுண்டோ அவர்களிடமே தகுதியான ஒருவரைத் தேடிப் பிடிக்கும் பொறுப்பை விட்டுவிட வேண்டும். அவர்களுடைய பார்வை நம்மேல் பட்டு அவர்கள் நம்மைத் தேர்ந்தெடுத்தால் நாம் அவர்களுடைய ஆணையை ஏற்று நம்

ஆற்றல் முழுவதையும் கொண்டு அந்தப் பதவியிலிருந்து கொண்டு செய்யக்கூடிய தொண்டை ஆற்ற வேண்டும். இவ்வித மான நிலைமை வராத வரையில் உலகத்தில் உண்மையான ஜன நாயகம் அமைய முடியாது. இதற்காகத் தியாக மனோபாவம் வலுக்க வேண்டும். இன்பம் துய்க்க வேண்டுமென்ற எண்ணம் நலிய வேண்டும். தொண்டே நமது குறிக்கோள் ஆகவேண்டும்; கௌரவம் அல்லது வேறு விதமான தன்னலமன்று.

இப்படியாக ஒரு பக்கத்தில் பார்லிமெண்டரி கமிட்டியானது தேர்தலுக்கு ஏற்பாடுகள் செய்வதில் ஈடுபட்டிருந்தது. மற்றொரு பக்கத்தில் பண்டித் ஜவஹர்லால்ஜீ நாடெங்கும் பற்பல இடங் களில் சுற்றி வந்து மக்களுக்கு உற்சாகமூட்டி வந்தார். இச் சமயத்தில் அவர் எவ்விதம் உழைத்து உற்சாகத்துடன் சுற்றுப் பிராயணம் செய்து மக்களுக்கு விழிப்பூட்டினாரோ அதுபோல பலத்த பிரசாரம் வேறு எவரும் தாம் தலைவராயிருந்த காலத்தில் செய்திருக்க மாட்டாரென்று நினைக்கிறேன். இத் தேர்தலில், கோடிக்கணக்கான வாக்காளர்களின் வாக்கைப் பெற வேண்டிய நிலைமையில், ஒவ்வொரு வாக்காளரையும் போய்ச் சந்திக்க முடியு மென்று எதிர்பார்ப்பது வீண் என்பதாக அவர் கூறினார். அவர் கூறியது சரிதான். அப்படியே போய்ச் சந்திக்க முடிந்தாலும் நாம் அவர்களைச் சந்தித்ததின் பலன் நமக்குச் சரியான சமயத் தில் கிடைக்குமென்று நம்பிக்கை கொள்ள முடியாது. ஆதலால் சூழ்நிலையையே மாற்றுவதுதான் எல்லாவற்றையும்விட அத்தியா வசியம். அதைவிட்டு யாராவது வெளியேறப் பார்த்தாலும் முடியாதபடி செய்ய வேண்டும். இவ்விதமான சூழ்நிலையை உண்டாக்குவதற்கே அவர் அயராமல் உழைத்து வந்தார். நல்ல பலனும் கிட்டியது.

## 118. காங்கிரஸின் முதல் கிராம விழா

லக்நோ காங்கிரஸ் விழா ஏப்ரலில் நடந்தது. காங்கிரஸின் ஆண்டு விழாவை டிசம்பரில் நடத்தாமல் பிப்ரவரி—மார்ச்சில் நடத்த வேண்டுமென்று கராச்சியில் பின்பற்றிய முறையை மாற்ற வேண்டுமென்று லக்நோ காங்கிரஸில் முடிவு செய்யப்பட்டது. இதனால் அதற்குப்பின் காங்கிரஸின் ஆண்டு விழா 1936ஆம் ஆண்டு டிசம்பரில்தான் நடைபெறுவதாகவிருந்தது. இது

கடந்த விழாவிலிருந்து எட்டு மாதங்களுக்குள்ளாக வந்தது. நாடானது ஜவஹர்லால்ஜீயை மூன்ருவது முறைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தது. இவ்விழா பைஜ்பூரில் நடந்தது. அவ்வூர் பம்பாய் மாகாணத்தின் (காங்கிரஸின் பிரிவுப்படி மகாராஷ்டிர பிரதேசத்தின்) மேற்குப் பாகத்தில் காந்தேஷ் ஜில்லாவிலிருக்கிறது. அது ஒரு கிராமம்; ஒரு சிறிய கஸ்பா என்றும் கூறலாம். காங்கிரஸின் விழா கிராமங்களில் நடந்தால் பொது மக்களுக்கு அது சிறப்பாகப் பயன்படுமென்று காந்திஜீ தம் கருத்தைத் தெரிவித்தார். முதலாவதாக, கிராமத்து மக்கள் அதற்கு ஏற்பாடு செய்வதில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டிவரும். இவ்விதமாக அவர்களுக்கு அதனுடைய நடவடிக்கைகளிலெல்லாம் ஒரு சுவை ஏற்படும். அடுத்ததாக விருந்தினர்களை வரவேற்பதற்கும் அவர்களுக்கு உபசாரம் செய்வதற்கும், மேலும் அவர்கள் இருக்கக் கொள்ளவும் செய்யப்படும் ஏற்பாடுகளால் கிராமத்தாருக்கு பணலாபமும் உண்டாகும். மேலும், விழாவுக்குச் செய்யப்படும் ஏற்பாடுகளும் கிராமத்துச் சாமான்களையே பயன்படுத்தக் கூடியனவாக இருக்க வேண்டுமென்று காந்திஜீ 'விரும்பினர். இவ்விதமாக அவ்விழா கிராமக் கைத்தொழிலுக்கு ஊக்கமளிப்பதாக அமையும். இந்தக் காங்கிரஸுக்குச் செய்யப்படும் ஏற்பாடுகளை இயன்ற வரையில் கிராமக் கைத்தொழில் மூலமாகச் செய்யப்பட்ட பொருள்களைக் கொண்டே செய்ய வேண்டுமென்று அவர் மகாராஷ்டிரர்களை வேண்டிக் கொண்டார். வேலை கடினமானதுதான். ஆயினும் வரவேற்புக்குழுவானது கூடியவரையில் அப்படியே செய்ய முயற்சி செய்தது.

வங்காளத்தின் விஸ்வபாரதியின் புகழ்வாய்ந்த கலைஞர் ஸ்ரீ நந்தலால் வசு அங்கு வந்து காங்கிரஸ் நகரம், பந்தல் கண்காட்சி சாலை முதலியவற்றை அலங்கரிப்பதற்கு மிக அழகாக ஏற்பாடு செய்தார். இந்த அலங்காரத்திற்குக் கிராமத்தில் கிடைக்கக்கூடிய மூங்கிலும் மரமுமே பயன்படுத்தப்பட்டனவென்பது போற்றற்குரிய விஷயமாகும். அங்கு நிறுவப்பட்ட நகர வாயிலும் மற்ற அலங்காரங்களும் தம் எளிமையினுலேயே ஓர் எழிலைப் பெற்று விளங்கின. இந்த எளிய சாதாரண சாமான்களைக் கொண்டே கலைஞன் எவ்வளவு விசித்திரமான வேலைப்பாடு செய்திருக்கிறுன் என்பதை மக்கள் பார்த்து வியப்புற்ருர்கள். இயற்கையின் அழகு இவ்விதப் பொருள்களையே கொண்டல்லவா புனையப்படுகிறது! நாம் இயற்கையைக் காட்டிலும் அழகான பொருள் எதையும் புனைய முடியுமா? ஆனுல் இன்று

நம்முடைய கண் கெட்டுப் போயிருக்கிறது. இயற்கையின் அழகை நம்மால் சரியாக உணர முடியவில்லை. நாம் கலையை இயற்கையினின்று வேறுபட்டதொரு பொருள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். அது போகட்டும்; பைஜ்பூரின் எளிமையின் அழகே அதன் பெருமையாக அமைந்தது.

தண்ணீருக்காக அங்குள்ளவர்கள் மாபெரும் கிணறு ஒன்றை வெட்டினார்கள். அது காங்கிரஸுக்குப் பிறகும் அங்குள்ள பொது மக்களுக்குப் பயன்பட்டு வரும். கிராமத்தில் கிடைக்கும் வைக்கோல், மூங்கில், பாய் முதலியவற்றைக் கொண்டே பிரதிநிதிகள் தங்குவதற்குக் குடிசைகளைக் கட்டினார்கள். இவ்விதமாக பைஜ்பூர் விழாவானது முதல் கிராம விழாவாக அமைந்தது. அதில் கிராமக் கைத்தொழிலுக்கே ஏற்றம் கொடுக்கப்பட்டது. இதில் காதிக்கு முக்கிய இடமளிக்கப்பட்டிருந்தது. எல்லா இடங்களிலுமே காதியின் செல்வாக்கே பெரியதாயிருந்தது.

ஆனால் விழாவானது குளிர் கடுமையாகயிருந்த டிசம்பர் மாதத்தில் நடந்ததால் வெளியூர்களிலிருந்து (காங்கிரஸ் வேடிக்கை பார்க்க) வந்திருந்த ஆயிரக்கணக்கான பேர்கள் அதிகத் துன்பப்பட்டார்கள். ஏனெனில் அச்சிறிய ஊரில் இவ்விதமாக வந்தவர்களுக்கு இருப்பதற்கு வீடாவது, சத்திரமாவது, குடிசைகூடக் கிடைக்கவில்லை. அவர்கள் ஆயிரக்கணக்காக திறந்த வெளியிலும் வயல்களிலும் இரவில் படுத்துக் கிடந்தார்கள். காந்திஜிக்கு இது மிகவும் வருத்தமளித்தது. அவர் அந்த முறையை (அதாவது டிசம்பரில் விழா வைப்பதை) மறுபடியும் மாற்றிவிட்டார். அப்போதிலிருந்து காங்கிரஸ் மீண்டும் மார்ச்சில் (இளவேனில் காலத்தில்) நடந்து வருகிறது.

பைஜ்பூர் விழா தேர்தலுக்குச் சில நாட்களுக்கு முன்புதான் நடந்தது. இதனால் அங்குத் தேர்தல் சம்பந்தமாகவும் நிறைய உற்சாகம் நிலவியது. பல இடங்களில் பல செயலாளர்கள் தத்தம் ஊரில் தேர்தலுக்கு ஏற்பாடு செய்வதில் ஈடுபட்டிருந்ததால் காங்கிரஸுக்கு வர இயலவில்லை. இங்கும் புதிய அரசியல் சட்டத்தைப் புறக்கணிப்பதைப்பற்றியும், ஆயினும் தேர்தலில் கலந்து கொள்வதைப்பற்றியும் பேச்சு நடந்தது. தேர்தலுக்குப் பிறகு மந்திரி சபையில் கலந்துகொள்வதைப்பற்றிக் காங்கிரஸின் கொள்கை என்னவாகயிருக்கும் என்பதை அகில பாரதீயக் குழு முடிவு கட்டட்டுமென்று அந்த விஷயம் அதனிடம் விட்டுவிடப்பட்டது. ஜவஹர்லால்ஜீயின் கருத்து அதற்கு விரோதமாக இருந்தது. அது எல்லாருக்கும் தெரியும். ஆயினும் காங்கிர

ஸானது மந்திரி சபையை அமைப்பதின் சார்பாக இருக்கிறதென்பதும், அப்படி ஏதாவது ஒரு தீர்மானம் கொண்டு வரப்பட்டால் அது அதை ஏற்றுக்கொள்ளுமென்பதும் அங்குத் தெரியவந்தது. ஆனால் அந்த முடிவுக்கு வருவதற்கு இன்னும் சமயம் வரவில்லை. ஏனெனில் அந்த அதிகாரத்தை அகில பாரதீயக் குழுவுக்கு கொடுத்தாகிவிட்டது.

இந்த விழாவுக்குச் சில நாட்களுக்கு முன்புதான் ஸ்ரீ எம். என். ராய், (மானவேந்திர நாத் ராய்) வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்தபின் தண்டிக்கப்பட்டு அக்கெடுவை முடித்துக் கொண்டு சிறையிலிருந்து வெளியே வந்திருந்தார். அவர் இந்த விழாவில்தான் காங்கிரஸுக்கு முதல் முதலாக வந்தார். அவர் இவ்வளவு புகழ் பெற்றவர் ஆவதற்குமுன், அதாவது வெளி நாட்டிற்குச் செல்வதற்குமுன், காங்கிரஸுக்கு வந்திருக்கலாம். ஆனால் அதற்குப்பின் அவர் இப்போதுதான் முதன் முதலாகக் காங்கிரஸுக்கு வந்திருந்தார். நானும் அவரை அங்குத்தான் முதன் முதலாகச் சந்தித்தேன். அவருடைய கருத்துக்கள் இன்னும் நாட்டிற்குத் தெரியா. அவற்றை அறியக் காங்கிரஸிலும் இயல்பாக ஆவல் இருந்து வந்தது. அவர் ஐக்கிய மாகாணத்தின் சார்பில் பிரதிநிதியாகவும் அகில பாரதீயக் குழுவுக்கு உறுப்பினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். இவ்விதமாக அவருக்கில் காங்கிரஸில் நன்ருகப் பங்கெடுத்துக் கொள்ள நல்ல வாய்ப்பு கிடைத்துவிட்டது.

# 119. தேர்தல் சுற்றுப்பிரயாணமும், பயனும்

காங்கிரஸுக்குப் பின் எல்லாரும் தத்தம் மாகாணத்தின் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளச் சென்றுவிட்டார்கள். பீகாரின் சில பாகங்களில் சுற்றுப்பிரயாணம் செய்வதற்காக பண்டித் ஜவஹர்லால்ஜீயிடமிருந்து அங்கே வாக்குப் பெற்றுக் கொண்டோம். அப்படியே சில நாட்களுக்குப் பிறகு அவர் பீகாரில் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்தார். நானும் சுற்றுப் பிரயாணம் செய்வதற்குத் தகுதியாகிவிட்டேன். எனக்கும் வேலைத்திட்டம் அமைத்துக் கொண்டேன். எல்லா இடங்களுக்கும் ஜவஹர்லால்ஜீயால் செல்ல இயலது. ஆகையால் அவர் போக இயலாத இடங்களுக்கு நான் போவதென்று ஏற்பாடு

செய்து கொண்டோம். இவ்விதமாக நாங்கள் இருவருமாக மாகாணம் முழுவதையும் சுற்றி வந்துவிட்டோம். பண்டித் கோவிந்த வல்லப் பந்த் போன்ற மற்றத் தலைவர்களும் வந்தார்கள். எங்கெங்குப் பலவீனம் காணப்பட்டதோ அங்கு அவர்கள் சென்றார்கள். பொது மக்களிடையில் அதிசயமான உற்சாகம் பிறந்தது. சுற்றுப் பிரயாணத்திற்குப்பின் வெற்றியைப் பற்றி எங்கள் மனத்தில் எள்ளளவுகூட ஐயமில்லை. தேர்தலின் பயன் வெளியானபோது நாங்கள் எதிர்பார்த்ததைவிட அதிகமாக வெற்றி கிட்டினதென்பதைக் கண்டோம். ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட 16 இடங்களில் 15இல் காங்கிரஸ் அபேக்ஷகர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பெண்களுக்காக ஒதுக்கப்பட்ட மூன்று இடங்களும் போட்டியின்றியே காங்கிரஸுக்குக் கிடைத்தன. தொழிலாளருக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் ஒன்று நீங்கலாக மற்றவையெல்லாம் காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கு கிடைத்தன. ஆதிவாசிகள் இடங்களிலும், சிலவற்றைத் தவிர மற்ற எல்லாவற்றிலும், காங்கிரஸ்காரர்களே வெற்றி பெற்றார்கள். ஜமீன்தார்களுக்காக இருந்த இடங்கள் காங்கிரஸுக்குக் கிடைக்கவில்லையென்பது உண்மை. ஆனால் ஓரிடத்தில் தவிர மற்ற இடங்களுக்குக் காங்கிரஸானது அபேக்ஷகர்களை நிறுத்தவில்லை. அந்த ஓரிடத்திலும் காங்கிரஸ் தோல்வியுற்றது. இது எங்களுக்கு முன்னமே தெரியும். ஆகையால் ஏமாற்றமடைவதற்கு யாதொரு காரணமுமில்லை.

பீகார் அசெம்பிளியில் முசல்மானியருக்காக 39 அல்லது 40 இடங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன. தேர்தலுக்கு நெடுநாள் முன்னிருந்தே காங்கிரஸ் முசல்மானியருக்கும் மற்ற தேசாபிமானமுள்ள முசல்மானியருக்கும் பேச்சுவார்த்தை நடந்துகொண்டிருந்தது. இயன்ற வரையில் காங்கிரஸின் சார்பிலிருந்தே எல்லா இடங்களிலும் அபேக்ஷகர்களை நிறுத்த வேண்டுமென்று சிலர் கருதினார்கள். வேறு சிலர், ஜயமீத்-உலேமா போன்ற தேசாபிமான முஸ்லிம் சங்கங்களுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு காங்கிரஸுக்கும் மற்றக் கட்சிகளுக்கும் யாதொரு போட்டியும் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்று கருதினார்கள். ஆனால் காங்கிரஸ் முசல்மானியர்களே ஒருமனப்பட்டிருக்கவில்லை. இதனால் காங்கிரஸ் குழு சங்கடப் பட்டுக்கொண்டிருந்தது. அப்படியும் காங்கிரஸானது சில இடங்களுக்கு அபேக்ஷகர்களை நிறுத்தியது. அவற்றில் சில இடங்களில் தேசீய முசல்மானியர்கள் அபேக்ஷகர்களைப் போட்டியாக நிறுத்தவில்லை. சில இடங்களில் போட்டி

எழுந்தது. ஆனால் தேசீய முசல்மானியர்கள் தவிர வேறு முசல் மானியர்களின் கட்சிகளும் இருந்தன. அவையும் தேர்தலில் பங் கெடுத்துக் கொண்டன. முஸ்லிம் லீக் மும்முரமாக இல்லை. என் நினைவுக்கு எட்டிய வரையில் முஸ்லீம் லீக்கின் சார்பிலிருந்து யாதொரு அபேக்ஷகரும் நிறுத்தப்படவில்லையென்றே நினைக் கிறேன். ஜயமீத்-உலேமாவின் உதவியால் ஒரு கட்சி நிறுவப் பட்டது. ஜயமீத்—உலேமாவின் போற்றற்குரிய தலைவரும் இமாரத்-ஷராயத்தின் துணை அமீருமான மௌலானா அபுல் மஹா சின் முகம்மது சஜ்ஜாத் என்பவர்தாம் அதற்கு உற்ற துணையாக யிருந்தார். இதே கட்சியில் மிஸ்டர் முகம்மத் யூனுஸும் சேர்ந்து கொண்டார். இக்கட்சிதான் முசல்மானியர்களின் கட்சிகளில் மிகவும் பலமான கட்சியென்பது தெரிய வந்தது. இக்கட்சிக்கும் காங்கிரஸுக்கும் பேச்சு வார்த்தை நடந்தது. அதன் பயனாகக் காங்கிரஸானது சில இடங்களில் மட்டும்தான் அபேக்ஷகர்களை நிறுத்தியது. எல்லா விதத்திலும் காங்கிரஸ்காரர்கள் என்றே கருதப்படக் கூடியவர்களும், காங்கிரஸின் வேலைத்திட்டப்படி சிறை சென்று வந்தவர்களுமான முசல்மானியர்கள்கூட அந்தக் கட்சியின் சார்பில் தேர்தலுக்கு நின்றார்கள். அக்கட்சிக்கு நிறைய வெற்றி கிடைத்தது. அசெம்பிளியில் முசல்மானியர்கள் பெரும் பாலும் இக்கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருந்தார்கள். பின் னால் முஸ்லீம் லீக்கின் வலிமை பெருகியபோது அந்நிலைமை மாறி விட்டது. ஆனால் எக்கட்சியின் முசல்மானிய உறுப்பினர்கள் அதிகமாக இருந்தார்கள் என்பது அசெம்பிளி கூடியபின்தான் தெரியும். பல்கலைக் கழக இடத்தை ஸ்ரீ சச்சிதானந்தா சின்ஹா வானவர் காங்கிரஸ் அபேக்ஷகரைத் தோற்கடித்துவிட்டுப் பற்றிக் கொண்டார்.

பீகார் தேர்தல் முதன் முதல் முடிவடைந்தது. இதனால் இங் கிருந்த செயலாளர்களில் பலர் ஐக்கிய மாகாணத்திற்குச் சென்று விட்டார்கள். இங்குற்ற வெற்றியின் செய்தி அங்கு முன்னமே எட்டிவிட்டது. இவர்களும் அங்குச் சென்று பணியாற்றினார்கள். நானும் சில நாட்களுக்குப் பிறகு அங்குச் சென்றேன். மத்திய பிரதேசத்திற்கும் சில நாட்களுக்காகச் சென்றேன். ஐக்கிய மாகா ணத்தில், அவுதில் பல ஜில்லாக்களுக்குச் சென்றேன். பிறகு தாம்பூர் ஜில்லாவுக்குச் சென்றேன். அங்குப் பலத்த போட்டி நடந்தது. தாம்பூரிலிருந்து சிறிது தொலைவிலுள்ள தராயீக்கும் சென்றேன். அங்குச் சென்றது நல்லதாயிற்று. ஏனெனில்

அங்குக் காங்கிரஸ் மிகச் சில வாக்கைக் கொண்டே வெற்றி பெற்றது.

ஐக்கிய மாகாணத்திற்குப் பிறகு மகாராஷ்டிரதிற்கும் கர்நாடகத்திற்கும் சென்று விட்டேன். மகாராஷ்டிரத்தில் பல நாட்கள் சுற்றி வந்தேன். ஆனால் மற்ற இடங்களில் கிட்டியதுபோல அவ்வளவுக்கு வெற்றி அங்குக் கிடைக்கவில்லை. நாங்கள் மிகவும் நம்பிக்கை கொண்டிருந்த ரத்னகிரியில்தான் எல்லா இடங்களையும் விடப் பெரும் தோல்வியுற்றோம். மகாராஷ்டிரத்திலிருந்து கர்நாடகத்துக்குச் சென்றேன். பல ஜில்லாக்களில் சுற்றிவந்தேன். அங்கு நல்ல வெற்றி கிடைத்தது. அங்குள்ளவர்கள் மிகவும் நம்பிக்கை கொண்டிருந்த ஓரிடத்தில் தோற்று விட்டார்கள். அங்கு நின்ற அபேக்ஷகர் காங்கிரஸின் சிறந்த செயலாளரான ஸ்ரீ அனுமந்த ராவ் கௌஸல்ஜீயாக இருந்தும்கூட தோல்வி நேர்ந்தது. ஆனால் தேர்தலில் இவ்விதமான விஷயங்கள் சாதாரணமாக நடப்பது இயல்புதான்.

இதற்குள்ளாக மற்ற இடங்களிலும் தேர்தல் வேலை அநேகமாக முடிந்துவிட்டது. நான் ஆந்திராவில் ஒரு ஜில்லாவுக்கு மட்டும் (பெல்லாரி) தான் போக முடிந்தது. அங்கே என் யாத்திரையை முடித்துக்கொண்டு வர்தாவுக்குத் திரும்பி வந்தேன். இவ்விதமாக நான் மகாராஷ்டிர, கர்நாடக பிரதேசங்களின் பல இடங்களில் இரண்டாம் முறை யாத்திரை செய்தேன். முன்னமே பழக்கமுள்ள பல இடங்களை மறுபடியும் பார்க்க வாய்ப்புக் கிடைத்தது. இவ்வண்ணமாக நாடெங்கும் தேர்தல் போட்டி முடிவடைந்தது. காங்கிரஸானது பம்பாய், மதராஸ், மத்ய பிரதேஷ், ஐக்கிய மாகாணம், பீகார், ஒரிசா, ஆசாம் ஆகிய இடங்களில் மாபெரும் வெற்றியுற்றது. பஞ்சாப், வங்காளம், சிந்து ஆகிய இடங்களிலும் காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். ஆனால் மற்றக் கட்சிகளைவிட அதிகமாகும் அளவுக்கு அவர்களுடைய எண்ணிக்கை இல்லை. எல்லை மாகாணத்தில் காங்கிரஸ்தான் மற்ற எல்லாக் கட்சிகளைவிடப் பெரிய கட்சியாக இருந்தது. ஆயினும் அச்சமயத்தில் காங்கிரஸுக்கு பெரும்பான்மை பலம் ஒரேயடியாக முற்றிலும் கிட்டவில்லை.

காங்கிரஸ் மந்திரி பதவியை ஏற்குமா இல்லையாயென்பதை முடிவு கட்டவேண்டிய நிலை தேர்தலுக்குப் பிறகு வந்தது. இத்தனை மாகாணங்களில் பெரும்பான்மை பலம் பெற்றுவிட்டு அது மந்திரி பதவியை ஏற்று வேலை புரியுமா அல்லது பதவியின்றியே வேலை செய்யுமா என்ற விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்

வதற்காக அகில பாரதீயக் குழு தில்லியில் கூடியது. காங்கிரஸ் கார (சட்ட சபை) உறுப்பினர்கள் அனைவரையும் அச்சமயத்தில் அங்கு அழைத்து ஒரு விழாவிற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென் றும் அதில் அவர்கள் காங்கிரஸிடம் தாம் பக்தி விசுவாசத்துடன் இருப்போமென்று ஆணையிட்டு கூறவேண்டுமென்றும் காங்கிரஸ் தலைவர் நினைத்தார். இம்மகாநாடு மிக்க உற்சாகத்துடன் நடந்தது. இதற்கு வந்திருந்த உறுப்பினர்கள் அனைவருமாகக் கூடித் தாம் காங்கிரஸின் ஆணைப்படி நின்று நாட்டின் முன்னேற்றத் திற்கு உழைப்போமென்று உறுதி பூண்டார்கள். அங்கே அகில பாரதீயக் குழுவின் கூட்டமும் நடந்தது. மாகாண கவர்னரான வர் அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூலமாகத் தமக்கு அளிக் கப்பட்டுள்ள விஷேச அதிகாரத்தை உபயோகப்படுத்த மாட்டே னென்றும், எல்லா விஷயங்களிலும் மந்திரிகளின் ஆலோசனைப் படியே நடப்பேனென்றும் வாக்களித்தால்தான் காங்கிரஸானது மந்திரி சபையை அம்மாகாணத்தில் அமைக்குமென்று நிச்சயிக் கப்பட்டது. இவ்விதமாக வாக்குப் பெறுமல் காங்கிரஸானது மந்திரி பதவியை ஏற்கக்கூடாதென்று காந்திஜீயும் வற்புறுத்தி வந்தார். ஏனெனில் அமைப்புச் சட்டத்தில் கவர்னருக்கு நிறைய அதிகாரங்கள் அளிக்கப்பட்டிருந்தன. அவர் அவற்றை உப யோகிப்பாராஞல் காங்கிரஸ் மந்திரி சபையால் யாதொரு பெரிய சிறப்பான வேலையும் செய்ய முடியாது. இதனுல், காங்கிரஸானது மந்திரி சபையை அமைக்க மறுக்கக் கூடாதானுலும், கவர்னர் மேலே கூறப்பட்டுள்ள வாக்கையளித்தால்தான், ஒத்துக்கொள்ள வேண்டும்.

அமைப்புச் சட்டம் புனையப்பட்டபோது இதுபோல ஒதுக்கப் பட்ட அதிகாரங்களைப் பற்றி நிறைய விமரிசனம் செய்யப்பட்டது. அந்த அமைப்புச் சட்டம் ஏற்றுக் கொள்ளப்படாததற்கு எழுந்த காரணங்களுள் இவ்விதமான அதிகாரம் ஒரு முக்கிய காரணமாயிருந்தது. அந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் அரசாங்க மானது இந்தியாவின் இக்கருத்தின்மீது கவனம் செலுத்தாமல் தன்னிஷ்டப்படி சட்டத்தை புனைந்துவிட்டது. இப்போது காந்திஜீயின் நுண்ணறிவானது மாகாண கவர்னர்களுக்கு இருந்த இந்த அதிகாரங்களை உபயோகமற்றனவாக அடிக்க விரும்பியது. ஏனெனில் சட்டப் புத்தகத்தில் அந்த அதிகாரங் கள் எழுதியபடியிருந்தாலும் கவர்னர்கள் அவற்றைப் பயன் படுத்தாவிட்டால் அமைப்புச் சட்டத்தின் மீதிருந்த ஒரு மாபெரும் குறை நீங்கிவிடும். எங்களுக்குள் மந்திரி பதவியை ஏற்பதைப்

பலமாக ஆதரித்து வந்தவர்களுக்கு இந்த ஆட்சேபனையின் மீது கோபம் வந்தது. ஏனெனில் பிரிட்டிஷ் அரசாங்கமானது இந்த மறைமுகமான வழியாக அமைப்புச் சட்டத்தின் பிரிவுகளைக் களையாது என்பதையும், மேலும் காங்கிரஸானது இந்த நிபந்தனையின் மீது பிடிவாதமாக இருந்தால் மந்திரி சபைகள் அமைக்கப்படாவென்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள். ஆனால் மந்திரி சபை அமைப்பதை எதிர்த்தவர்களோ மகிழ்ச்சியடைந்தார்கள். ஏனெனில், பிரிட்டிஷ் அரசாங்கம் இந்த நிபந்தனையை ஏற்றுக்கொள்ளாதென்பதையும், ஆதலால் மந்திரி சபை அமைக்கப்படாதென்பதையும் அவர்களும் உணர்ந்தார்கள். காந்திஜீ இந்த விஷயத்தைப் பற்றிப் பிடிவாதமாக இருந்தார். மந்திரி பதவியை ஏற்றுக்கொள்ளாதது பெரிய தவருகும், ஆனால் இந்த நிபந்தனையின்றி மந்திரி பதவியை ஏற்பது அதைவிடப் பெரிய தவருகுமென்பது தம் அபிப்பிராயமென்று அவர் தெளிவுபடக் கூறிவிட்டார். கடைசியில் காந்திஜீயின் பேச்சுத்தான் அங்கீகரிக்கப்பட்டது. கவர்னரானவர் மந்திரி சபையை அமைப்பதற்குத் தலைவரை அழைத்தால் அவர் இந்த நிபந்தனையைச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும், கவர்னரானவர் தம்முடைய விசேஷ அதிகாரங்களை உபயோகிக்க மாட்டேனென்று வெளிப்படையாக வாக்களிப்பாரானல் மந்திரி சபையை அமைக்கத் தயாரென்றும் அல்லாவிட்டால் இல்லையென்றும் கூற வேண்டுமென்றும் காங்கிரஸ்காரர்களுக்குக் கட்டளையிடப்பட்டது.

1937ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து புதிய அமைப்புச் சட்டத்தின்படி மந்திரி சபை அமைக்கப்பட வேண்டும். அன்றிலிருந்தே எல்லா மாகாணங்களிலும் அரசாட்சி முறையும் புதிய அமைப்புச் சட்டப்படி தொடங்கப்பட வேண்டும். காங்கிரஸ் இப்படி முடிவு செய்த பிறகு கவர்னர்களும் அவர்களுக்குக் கட்டளை அளிப்பவரான வைசிராயும் தாம் என்ன செய்ய வேண்டுமென்பதை யோசிக்க வேண்டி வந்தது. அமைப்புச் சட்டப்படி, எந்தக் கட்சியானது மற்றெல்லாவற்றையும்விட அசெம்பிளியில் பெரிதாக இருந்ததோ அதன் தலைவரை மந்திரி சபையை அமைக்கும்படி அவர்கள் கூற வேண்டும். அசெம்பிளியிலிருந்த அக் கட்சியின் உறுப்பினர்களும் தம் தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். இதனுல், எல்லா மாகாணங்களிலும் அசெம்பிளி உறுப்பினர்கள் தத்தம் மாகாணங்களில் ஒரு முறை கூடித் தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டியது

அவசியமாயிற்று. பீகாரில் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்காகப் பார்ட்டியும் மாகாணக் குழுவும் ஒரே நாளில் கூடின.

நான் நன்ருக யோசனை செய்து, ஸ்ரீ கிருஷ்ண சின்ஹாவையே பார்ட்டியின் தலைவராக்க வேண்டுமென்ற அபிப்பிராயம் கொண்டேன். அனுக்கிரக நாராயண் சின்ஹாவின் பேரைச் சிலர் கூறி வந்தார்கள். ஆனால் அவரே என்னிடம் வந்து, தாம் இந்தப் பதவியை நாடவில்லை யென்றும், தம்மைப்பற்றி மற்றவர்களிடம் கூறி வருபவர்கள் தம்மைக் கேட்காமலே அப்படிச் செய்து வருகிருர்கள் என்றும் கூறினர். அவர் இப்படிச் செய்தது நான் என் முடிவுக்கு வருவதற்கு உதவியது. மற்ருெருவர் டாக்டர் சையது மகமூது. அவர் பெயரையும் சிலர் கூறி வந்தார்கள். அவர் பல ஆண்டுகளாக அகில பாரதியக் குழு, செயலாற்றுக் குழு ஆகிய இரண்டிலும் உறுப்பினராக இருந்து வந்திருக்கிருர். கிலாபத் கமிட்டி நாட்களில் அவர் அதற்குப் பிரதான அமைச்சராகவும் இருந்திருக்கிருர். அகில பாரதீயக் குழுவின் அமைச்சராகவுமிருந்திருக்கிருர். தலைசிறந்த தேசாபிமானி. அவருடைய தியாகம் எவரையும்விடக் குறைவன்று. அப்படியும் அவருக்குப் பீகார் மாகாணத்தில், காங்கிரஸ் செயலாளர்களிடையில், மேலே கூறிய இரண்டு கனவான்களோடு ஒப்பிட்டால், குறைவாகவே செல்வாக்கிருந்தது. மாகாணத்திற்கு வெளியே அதிகமாக வேலை செய்து வந்திருந்ததால் மற்ற இருவரைப்போல அவரை இங்கு நன்ருகத் தெரியாது. அந்த இருவர்களிலும்கூட பாபு கிருஷ்ண சின்ஹா தம் சொல்வன்மையின் மூலமாக அதிகச் செல்வாக்கு பெற்றிருந்தார். தியாகத்திலும், அஞ்சாமையிலும்கூட அவர் இணையற்றவர். அனுக்கிரக பாபூவின் கழகங்களை ஒழுங்காக நிறுவும் ஆற்றலும், அலுவலகங்களை நடத்தும் திறமையும் எல்லாருக்கும் நன்ருகத் தெரியும். இக்காரணங்களால் என் எண்ணம் ஸ்ரீ கிருஷ்ண பாபூவின் பக்கத்தில் சார்ந்தது. நான் எல்லா ஜில்லாக்களிலுமுள்ள செயலாளர்களுடன் இதைப்பற்றிப் பேசிய போது அவர்களுடைய கருத்தும் என் கருத்துடன் ஒத்திருந்தது. ஸ்ரீ ராம் தயாளு சின்ஹாவும் மாகாணத்தில் ஒரு புகழ்வாய்ந்த மனிதராவர். அவரைப்பற்றியும் சிலருக்கு எண்ணமிருந்திருக்கலாம். ஆனால் சிலர் அவருக்கு அதிக விரோதமாக இருந்தார்கள் என்பதில் ஐயமில்லை. அவர்களில் அவருடைய ஜில்லா ஆட்கள் சிலரிருந்தார்கள். நான் ஒரு கனவான் சார்பில் பிரசாரம் செய்து ஜில்லாக்காரர்களைச் சம்மதிக்க வைத்துவிட்டேன் என்று சிலருக்கு என்மேல் கோபம். அப்படிக் கூறியும் வந்தார்கள்.

உண்மை அதுவன்று. அப்படியேயிருந்தாலும் கூட எனக்கு அதனால் வருத்தமுமில்லை, வெட்கமுமில்லை. ஏனெனில் எனக்குத் தெரிந்தவரையில் ஜில்லாக்காரர்கள் ஸ்ரீ கிருஷ்ண பாபூ, அனுக்கிரக பாபூ ஆகிய இருவர்களில் ஒருவரைத் தாம் தலைவராக்க விரும்பினார்கள். ஆனால் அனுக்கிரக பாபூ இந்தப் போட்டியில் பட்டுக்கொள்ள விரும்பவில்லை. இதனால், நான் ஏதாவது செய்திருந்தாலும் கூட, அதன்மூலமாக நான் இரண்டு பெயர்களை அப்பதவிக்காக உசாவ இடங் கொடுக்கவில்லை யென்பதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. கடைசியில் ஒரு பெயர் மட்டும்தான் வந்தது. அது ஸ்ரீ கிருஷ்ண பாபூவின் பெயர். அதை மக்கள் ஒரு மனத்துடன் ஏற்றுக்கொண்டார்கள்.

பீகாரில் இந்த முதல் தகராறு நல்லதனமாகத் தீர்க்கப் பட்டது. ஆனால் மற்ற மாகாணங்களில் இப்படி நடக்கவில்லை. பல இடங்களில், உதாரணமாக மத்திய பிரதேசத்திலும், ஒரிசாவிலும் காங்கிரஸ்காரர்களுக்குள் நிறைய மனஸ்தாபம் வந்து விட்டது. பின்னால் அவர்களுக்குள் பல கட்சிகள் கிளம்பியபோது, இதனுடைய தீவினை தெரியவந்தது. ஐக்கிய மாகாணத்தில் யாதொரு கருத்து வேறுபாடும் எழவில்லையென்று நினைக்கிறேன். பம்பாயில் தலைவராக்கப்பட்டவரின் நடத்தையைப் பற்றியோ தகுதியைப் பற்றியோ யாருக்கும் யாதொரு சந்தேகமுமில்லை. ஆனால் அவர் அங்குப் புகழ் வாய்ந்தவர்களில் ஒருவர் அல்லர். அவர்தாம் பாலாசாஹப் கேர். அவர் எப்போதும் பின்னணியிலேயே இருப்பார். அவர் திடச் சித்தமுடையவரும் வேலையில் மிகத் திறமையுடையவருமாயினும் அவரை வெளியிலுள்ளவர்களுக்குத் தெரியாது. ஐக்கிய மாகாணத்தில் பண்டித் கோவிந்த வல்லப் பந்தை எல்லாருக்கும் தெரியும். அவரையே எல்லாரும் தலைவராக்க விரும்பினார்கள். மத்திய சட்டசபையில் அவர் செய்த பணியிலிருந்து அவரைத் தவிர வேறு எவரும் அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்படக் கூடுமென்ற எண்ணம் அம்மாகாணத்திலாவது மற்ற மாகாணங்களிலாவது எழவே முடியாது. இதே போலத்தான் மதராஸ் மாகாணத்தின் மந்திரி ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியாரைப்பற்றியும் அபிப்பிராயமிருந்தது.

காங்கிரஸுக்கு பெரும்பான்மை பலமோ அல்லது மற்றெல்லாரையும்விடக் காங்கிரஸ்காரர்களே சட்டசபையில் அதிகமாகவோ இருந்த மாகாணங்களின் கவர்னர்கள் தத்தம் மாகாணத்தின் காங்கிரஸ் பார்ட்டியின் தலைவரை அழைத்து அமைப்புச் சட்டத்தின்படி மந்திரி சபையை அமைப்பதற்குத் தமக்கு உதவி

புரியும்படி கேட்டுக்கொண்டார்கள். அத் தலைவர்கள் அகில பாரதீயக் குழுவிலிருந்து தமக்கு கிடைத்திருந்த கட்டளையின் படியே அதே நிபந்தனையைச் சமர்ப்பித்தார்கள். தமக்கு ஒதுக் கப்பட்டுள்ள விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்த மாட்டே னென்று கூற எந்த கவர்னரும் ஒத்துக்கொள்ளவில்லை. அமைப் புச் சட்டத்தை மாற்றுவதற்குத் தமக்கு அதிகாரமில்லையென்றும், அதைத் தம்மால் இவ்விதமாக மறைமுகமாக மாற்ற இயலா தென்றும் அவர்கள் கூறினார்கள். என் நினைவுக்கு எட்டிய வரையில் மதராஸ் கவர்னர்தாம் முதன் முதலாக ராஜாஜியை அழைத்தார். அங்கு நடந்த பாடமே மற்றெல்லா விடங்களிலும் ஒப்பிக்கப்பட்டது. தாம் கேட்டுக்கொண்டதைக் கவர்னர் மறுத் ததின் பேரில் ராஜாஜீ மந்திரி சபையை அமைக்க மறுத்துவிட்டா ரென்ற செய்தி பத்திரிகைகளில் அச்சிடப்பட்டது. அதே போலத் தான் எல்லா இடங்களிலும் நடந்தது.

தாம் பல ஆண்டுகளாகப் பாடுபட்டுப் புனைந்ததும் இவ்வளவு பிரசாரம் செய்யப்பட்டதுமான அரசியல் அமைப்பை இவ்வித மாகப் பிறப்பதற்குள் இறக்கவிட பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு மனமில்லை. காங்கிரஸ்காரர்களால் மந்திரி பதவிப் பேராசையை அடக்க முடியாதென்று அதிகாரிகள் நினைத்தார்கள் போலும். இதனால் ஏப்ரல் முதல் தேதிக்கு அல்லாவிட்டால் சில நாட் களுக்குப் பிறகாவது அவர்களுக்குள் சண்டையை மூட்டிவிட்டு அவர்களுடைய பெரும்பான்மை பலத்தைச் சீர்குலைத்துவிட முடியுமென்று நினைத்தார்கள். இதனால் எப்படியாவது, எவரைக் கொண்டாவது, சில நாட்களுக்காவது, அசெம்பிளியின் பெரும் பான்மை பலத்தை அசட்டை செய்தாவது, மந்திரி சபையை அமைத்து யாரையாவது பிரதான மந்திரியாக்கி அவருடன் சிலரைச் சேர்த்துக் கூட்டி ஏப்ரல் முதல் தேதிக்கு மந்திரி சபை யினரின் பெயர்களை விளம்பரம் செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார்கள். இவ்விதமாகவே எல்லா மாகாணங்களிலும் முயற்சி செய்யப்பட்டது. ஆனால் எந்த மாகாணத்திலும் இந்த வலையில் பட்டு மந்திரி பதவியை ஏற்பதற்கு ஒரு காங்கிரஸ்காரர் கூட கிடைக்கவில்லையென்பது காங்கிரஸுக்கு அதிகப் பெருமையான தொரு விஷயமாகும். இதனால் காங்கிரஸுக்கு வெளியிலிருந் தவர்களிலிருந்தே சிலரை நியமிப்பது அவசியமாயிற்று. இவ்வித மாகக் கவர்னரால் செய்ய முடியும். ஏனெனில் அரசியல் அமைப் பின்படி, அரசாட்சி வேலையானது, கவர்னரின் அனுமதியின் பேரிலும், மேலும் வரவு செலவுத் திட்டத்தை அவர்

அங்கீகரிப்பதைக் கொண்டும், ஆறு மாத காலம்வரையில் அசெம் பிளியைக் கூட்டாமலே நடக்க முடியும். இந்த ஐந்தாறு மாதங் களில், நிலைமை மாறிக் காங்கிரஸ்காரர்களின் வேகமும் அடங்கி விடலாமென்ற நம்பிக்கையுடன் அரசாங்கத்தார் மந்திரி சபை களை எல்லா இடங்களிலும் அமைத்துவிட்டார்கள்.

பீகார் மாகாணத்தின் கவர்னர் இந்த வேலையை மிஸ்டர் முகம்மது யூனுஸின் கையில் ஒப்படைத்தார். இந்தக் கனவான் முசல்மானியர்களின் சுயேச்சைக் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அக்கட்சிக்கு மௌலானா அப்துல் முஹாஸின் முகம்மது சஜ்ஜாதுதாம் பேராதரவு அளித்துவந்தார். மௌலானா சஜ்ஜாத் ஜமீயத் உலாமாவின் தலைவர். காங்கிரஸிடம் முற்றிலும் அனுதாபம் கொண்டவரென்று கருதப்பட்டு வந்தவர். தேர்தலிலும், அவருடன் யாதொரு உடன்படிக்கை யில்லாவிட்டா லும்கூட, அவருடன் யாதொரு சண்டையுமில்லை. காங்கிரஸின் கொள்கையோடு மௌலானா சஜ்ஜாதானவர் பெரும்பாலும் ஒரு மனப்பட்டிருந்தார் என்று எண்ணியதால் எத்தனையோ முசல் மானியர்கள் அவருடைய கட்சியில் சேர்ந்தால் தேர்ந்தெடுக்கப் படலாமென்பதாக எண்ணிச் சேர்ந்திருந்தார்கள். ஆனால் இந்தச் சமயத்தில் அவர் தவறு செய்துவிட்டார். தம் கட்சி மந்திரி சபையை அமைக்க வேண்டுமென்று அவர் தம் கட்சி யுடன் பேசி முடிவு செய்தார். அங்கு என்ன பேச்சு நடந்தது என்பது தெரியாது. விதவிதமான செய்திகள் அச்சமயத்தில் காற்றில் உலாவின. காங்கிரஸ் கருத்துக்கொண்ட முசல்மானி யர்கள் எதிர்த்தார்கள் என்றும் ஆனால் அவர்களுடைய எண் ணிக்கை மற்றவர்களைவிடக் குறைவாக இருந்ததென்றும் சிலர் சொல்லிக் கொண்டார்கள். கட்சிக்குத் தன் இறுதியான தீர்ப்பை அளிப்பதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லையென்று வேறு சிலர் சொல்லிக்கொண்டார்கள். ஏனெனில், ஓரிடத்தில் கட்சியானது மந்திரி சபையை அமைப்பதா இல்லையா என்ற விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்து கொண்டிருந்த அதே சமயத்தில் மிஸ்டர் யூனுஸானவர் கவர்னரிடம் சென்று தாம் மந்திரி சபையை அமைப்பதற்குத் தயாராயிருப்பதாக வாக்களித்துவிட்டதாகவும், மேலும், கவர்னர் கேட்டதின் பேரில் அவர் மந்திரிகளின் பெயர் களையும் கொடுத்துவிட்டதாகவும், அவற்றை கவர்னர் ஏற்றுக் கொண்டதாகவும், அதற்கு மேல்தான் அவர் தமக்காகக் காத்துக் கொண்டிருந்த கட்சியின் கூட்டத்திற்கு வந்து மந்திரிசபை நியமிக்கப்பட்டு விட்டதென்ற செய்தியைத் தெரிவித்ததாகவும்

கூறிக் கொண்டார்கள். கட்சியானது இதற்குப் பிறகு யாதும் சொல்ல முடியவில்லை. மேலும் இனிமேல் இந்த விஷயத்தைப் பற்றி யாதும் கூறிப் பயனில்லை என்று நினைத்தது போதும். உண்மை யாதென்று தெரியாது.

இது சம்பந்தமாகப் பீகாரில் ஒரு பெரிய விஷயம் நடந்து விட்டது. மிஸ்டர் யூனுஸானவர் காங்கிரஸின் இதர உறுப்பினர்களைக் கலைக்க முடியாவிட்டாலும் ஹரிஜன உறுப்பினர்களை வற்புறுத்தி வந்தாரென்றும், அவர் ஸ்ரீ ஜகஜீவன் ராமுக்கு மந்திரி சபையில் ஓரிடம் கொடுக்க ஒப்புக் கொண்டாரென்றும் செய்தி கிடைத்தது. ஸ்ரீ ஜகஜீவன் ராமை கவர்னரிடமோ அல்லது அவருடன் தனித்துப் பேசுவதற்காக வேறெங்கோ அழைத்துச் சென்றார் என்றும் செய்தி எழுந்தது. ஒரு காங்கிரஸ்காரரை யாவது கலைப்பதில் அவர் வெற்றியடைந்து விடுவாரோ வென்ற கவலைக்கு எல்லாரும் ஆளானார்கள். ஆயினும் எனக்கு மட்டும் இதைப் பற்றி யாதொரு கவலையும் உண்டாகவில்லை. ஏனெனில் மிஸ்டர் யூனுஸ் முயற்சி செய்தாரென்பது உண்மையாயினும் ஸ்ரீ ஜகஜீவன் ராம் இவ்விதமான வலையில் சிக்க மாட்டாரென்று எனக்கு முன்னமே செய்தி கிடைத்துவிட்டது. கடைசியில் அப்படித்தானாயிற்று. மந்திரி சபை அமைக்கப்பட்டது. ஆனால் ஸ்ரீ ஜகஜீவன்ராம் அதில் சேர மாட்டேனென்று தெளிவாகக் கூறி விட்டார். வேறு எந்தக் காங்கிரஸ்காரரும் சேரவில்லை. இவ்வித மாக இந்த முதல் பலத்த முயற்சி வீணாயிற்று. மந்திரி சபையை அமைப்பதைப் பற்றி எங்களுக்குள் யாருக்கும் கவலையில்லை. ஏனெனில் ஆறு மாதத்திற்குள், ஒன்று மந்திரி சபை முறிந்து விடும் அல்லது அமைப்புச் சட்டம் அற்றுபடியாகிவிடும் அல்லது மாற்றப்பட்டு விடுமென்பது எங்களுக்குத் தெரியும். இவ்வளவு பெரும்பான்மையாகக் காங்கிரஸ்காரர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்ததால் வேறு எந்தத் தனிக் கட்சியோ மற்ற எல்லாக் கட்சிகளும் சேர்ந்தோ அசெம்பிளியில் காங்கிரஸுடன் போட்டி போட முடியாதென்பதுதான் நாங்கள் கவலைப்படாததற்குக் காரணம். அசெம்பிளி கவுன்ஸில் இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து சபை நடத்தினாலும் கூடக் காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலம் இருந்தே தீரும். மந்திரி சபை அமைக்கப்பட்ட தினத்தன்று சிலர் மிஸ்டர் யூனுஸுக்கு விரோதமாக முழக்கம் செய்தார்கள். அவர்களுள் முக்கியமானவர் ஸ்ரீ ஜயப்பிரகாஷ் நாராயண் ஆவர். அவர் கைது செய்யப்பட்டார். அவர் மீது வழக்குத் தொடுக்கப்பட்டு அவருக்கு ஏதோ தண்டனையும் கிடைத்தது. ஆனால்

பிறகு அவருடைய கெடு முடிவதற்கு முன்னமே அவரை மிஸ்டர் யூனுஸ் விடுவித்து விட்டார்.

இதேபோல மற்ற மாகாணங்களிலும் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டன. இதனுல் புதிய அமைப்புச் சட்டத்தின்படி அரசாங்கம் நடைபெறத் தொடங்கி விட்டதென்று காட்டிக் கொள் வதற்காகவாவது முடிந்தது. ஆனுல் இது ஓர் அல்ப ஆயுள் கூத்தென்பது கவர்னர்களுக்குத் தெரியும். மந்திரிகளும் அறிந் திருந்தார்கள். காங்கிரஸ்காரர்களைக் கலைத்துப் பெரும்பான்மை பலத்தைப் பெற முடியாவிட்டால் காங்கிரஸோடு சமாதானம் செய்து கொள்வதற்கு ஏதாவதொரு வழி கண்டு பிடிக்க வேண்டு மென்று முயற்சி செய்து வந்தார்கள். காங்கிரஸானது இதில் எந்த வகையிலும் சிக்கிக் கொள்ளவில்லை யென்பதைப் பற்றியும், மேலும் அதன் முட்டுக்கட்டைக் கொள்கை பயன்பட இப்போது வாய்ப்புக் கிட்டியது என்பதைப் பற்றியும் மந்திரி சபை அமைப் பதை எதிர்த்து வந்த காங்கிரஸ்காரர்கள் மகிழ்ச்சி யடைந்தார் கள். மந்திரி சபை அமைப்பதை ஆதரித்தவர்கள், இன்றில்லா விட்டால் சில நாட்களுக்குப் பிறகாவது காங்கிரஸ் மந்திரிகளா வோமென்றும் அப்படி ஆகும்போது கவர்னருடைய விசேஷ அதிகாரங்களை ஒழிக்கச் செய்தே ஆவோமென்றும் எண்ணி வந்தார்கள். இதனுல், இந்தச் சமயத்தில், இதைப் பற்றிக் காங் கிரஸ் கவலையற்றிருந்தது. மந்திரி சபைகள் தம்மை மக்க ளிடையே செல்வாக்குடையதாகச் செய்து கொள்வதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தது. கவர்னர்களும் வைசிராயும் இந்த முட்டுக்கட்டையை அகற்றுவதில் ஈடுபட்டிருந்தார்கள். அரசாங் கத்தின் சார்பிலிருந்து அவ்வப்போது அறிக்கைகள் வெளிவந்து கொண்டிருந்தன. அவற்றில் கூறப்பட்டவை போதாதென்று காங்கிரஸானது கூறிவிட்டு வாளாவிருந்தது. மூன்று மாதங் களுக்குப் பிறகு வைசிராய் ஓர் அறிக்கையை விடுத்தார். அதன் மீது செயலாற்றுக் குழு ஆலோசனை செய்து, சிறிதளவு மேலும் விளக்கம் கூற வேண்டுமென்று கேட்டது. மேலும் அப்படிப் பட்ட விளக்கமானது காங்கிரஸ் கட்சியின் தலைவர்களுக்கு திருப்திகரமாயிருந்தால் அவர்கள் மந்திரி பதவியை ஏற்றுக் கொள்ளலாமென்றும் கட்டளையிடப்பட்டது. உண்மையில் அரசி யல் அமைப்பின் சில பிரிவுகளை ஒழித்து விட்டதாக பிரிட்டிஷ் அரசாங்கத்தால் தெள்ளத் தெளிவாகக் கூற இயலாது. ஏனெ னில் அப்படிக் கூறுவதற்கு அதற்கு அதிகாரமில்லை. ஆயினும் கவர்னருக்கு அதிகாரமிருந்தாலும் அவர் அதை உபயோகப்

படுத்த மாட்டாரென்று சுற்றி வளைத்துக் கூறியது. ஆனால் இது தெளிவாகக் கூறப்படாததால் விளக்கம் தேவையாயிருந்தது. காங்கிரஸ் குழு இவ்விதமாக முடிவு செய்த பின், மந்திரி சபையை அமைக்கும்படி காங்கிரஸ்காரர்கள் விரைவிலேயே அழைக்கப்படுவார்கள் என்பது தெரிய வந்தது.

இதே சமயத்தில் பீகார் மாகாண கான்பெரன்ஸை சாரன் ஜில்லாவிலுள்ள மஸ்ரக் என்ற கிராமத்தில் கூட்டுவதாக நிச்சயிக்கப்பட்டது. பேராசிரியர் அப்துல் பாரீ அதற்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். அங்கு நாங்கள் எல்லாரும் சென்று மகாநாட்டின் வேலையை முடித்துக்கொண்டு சப்ராவுக்கு வந்து சேர்ந்தோம். கவர்னர் ஸ்ரீ பாபூவைக் கூப்பிட்டனுப்பினர் என்பது அங்குத் தெரிய வந்தது. மந்திரி சபையைப் பற்றிச் சில விஷயங்களை எல்லாருமாகக் கலந்து பேசுவதற்கு அங்கு வாய்ப்புக் கிடைத்தது. அரசாங்கம் அளிக்கும் விளக்கமானது திருப்திகரமாகயிருந்தால், செயலாற்றுக் குழு கட்டளை யிட்டிருந்தபடி நாங்கள் மந்திரி சபையை அமைக்கத் தயாராயிருக்கிறோமென்று மட்டும்தான் எங்களால் இதுவரையில் முடிவு செய்ய முடிந்தது. மந்திரி சபையை அமைக்கும்படி கவர்னர் கூறினால் ஸ்ரீ கிருஷ்ண பாபூ அவரிடம் சிறிது காலவரை கேட்டுப் பெற்றுக்கொண்டு திரும்பி வந்து விடுவார். பிறகு நாங்கள் ஒன்றுகூடி எவரெவரை மந்திரி சபையில் எடுத்துக் கொள்வதென்பதை ஆலோசனை செய்து முடிவு செய்யலாமென்றிருந்தோம். சப்ராவில் இதைப் பற்றிச் சிறிது பீடிகைப் பேச்சும் நடந்தது. இப்பேச்சில் கருத்தும் பரிமாறிக் கொள்ளப்பட்டது. அதை அடிப்படையாகக் கொண்டு அங்கிருந்த நாங்கள் சிலர் கூடி ஸ்ரீ கிருஷ்ண பாபூ வருவதற்கு முன் இதைப்பற்றி ஆலோசனை செய்ய முடிந்தது.

மந்திரிகளைப் பொறுக்குவதென்பது மிகவும் கடினமான சிக்கலாயிருந்தது. எத்தனை மந்திரிகள் தேவையென்பது முதற் கேள்வி. இதற்குமுன் நான்கு ஆட்கள் தானே அரசாங்க வேலை முழுவதையும் சமாளித்து எல்லா இலாகாக்களையும் மேற்பார்வையிட்டு வந்தார்கள் என்று நான் நினைத்தேன். அவர்களில் இருவர் கவர்னரின் எக்ஸிகுயூடிவ் கவுன்ஸிலின் அங்கத்தினர்கள். மற்ற இருவர் காரியதரிசிகள். ஆகையால் இந்த அரசியல் அமைப்புக்கு முன் நான்கு ஆட்களே வேலையைச் சமாளித்து வந்திருந்ததால் இப்போதும் நான்கு மந்திரிகளே எல்லா வேலையையும் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று நான் நினைத்

தேன். அதற்கு மேற்கொண்டு மந்திரிகளை நியமித்தால் அதிக மாகச் செலவு பிடிக்கும். தமக்குப் பதவி கிடைப்பதற்குப் பேரா சைப் பட்டுக்கொண்டு இவர்கள் வந்திருக்கிறார்கள் என்றும், எத்தனை முடியுமோ அத்தனை இடங்களை உண்டாக்கிக் கொண்டு அவற்றை தமக்குள் பங்கு போட்டுக் கொள்கிறார்களென்றும் தோன்றும். ஆயினும் மந்திரி சபை முறையாக அமைக்கப்பட்ட இடங்களிலெல்லாம் நிறைய மந்திரிகள் நியமிக்கப்பட்டார்கள். இதைப்பற்றி நான் குறையும் கூறினேன். காங்கிரஸ் மந்திரி களுக்கு அகில பாரதீயக் குழுவானது, வீடும் வாகனமும் நீங்க லாகச் சம்பளம் மாதம் ரூ. 500தான் என்று வரையறுத்து விட்டா லும் கூட, மேலும் இவ்விதமாகச் செலவும் குறைக்கப்பட்டாலும் கூட மந்திரிகளின் எண்ணிக்கை அதிகமாக இருக்கக் கூடா தென்ற உறுதியான எண்ணம் கொண்டிருந்தேன். முக்கியமாக, பீகாரில் நான்கு பேருக்கு மேல் இருக்கக் கூடாதென்று எண்ணி னேன். என் கருத்துத் தவறென்று நான் பிறகு கண்டேனென் பதை இங்குக் கூறுவது நியாயமென்று நினைக்கிறேன். ஏனெ னில் நம்முடைய மந்திரிகளெல்லாம் இவ்விதமான வேலையைப் புதிதாகக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. இதற்கு முன் இதைப்பற்றி அவர்களுக்கு யாதொரு அனுபவமும் கிடையாது. இதைத் தவிர, நம் மந்திரிகள் பழைய வழியிலேயே வேலை செய்வ தாக இல்லை. கண்ணை மூடிக்கொண்டு பழைய கோட்டின் மேலேயே நடக்கப் போவதாகயில்லை. அவர்கள் பல புதிய வேலைத் திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். இதனால் அந்த வேலைத் திட்டங்களுக்காகப் பல விஷயங்களைப் பற்றி விசாரித்து அறியவேண்டும். அவற்றைப் பற்றி ஒரு முடிவுக்கு வருவதில் அதிக நேரம் செலவிட வேண்டும். ஆதலால், சிறிது அனுபவத் திற்குப் பிறகு, நான்குக்கு மேலாகவே மந்திரிகள் இருப்பது நன் றென நினைத்தேன். ஆயினும் அந்நாட்களில் நான் நான்குக்கு மேலாக மந்திரிகளை வைப்பது பீகாருக்கு பொருத்தமன்றெனவே உறுதியாக எண்ணி வந்தேன்.

இதைத் தவிர, இவ்விதமான முடிவுக்கு (அதாவது நான்கு பேரே போதும் என்ற முடிவுக்கு) வருவதற்கு மற்றொரு காரணமு மிருந்தது. எங்கள் மாகாணத்தில் யாருக்கும் யாதொரு ஆட்சே பனையும் இருக்க முடியாத சில தலைமையான மனிதர்கள் இருக் கிறார்களென்று நினைத்துக் கொண்டிருந்தோம். ஆனால் அவர் களைத் தாண்டி மேலே சென்றபோது, எங்களுக்குத் தோன்றின வர்களில் யாரை எடுத்துக் கொள்வது, யாரை விடுவது என்று

முடிவு செய்வதில் நிறையச் சங்கடம் வந்தது. இதனாலும், மேலே சொல்லப்பட்ட முக்கிய மனிதர்களோடு எங்கள் தேர்தலை நிறுத்திக் கொண்டால் குற்றமில்லை என்ற எண்ணம் வந்தது.

ஓரிரண்டு மற்ற விஷயங்களைப் பற்றியும் இங்குக் குறிப்பிட வேண்டும். ஹரிஜனங்களிலிருந்து ஒருவரை மந்திரியாக்குவது அவசியமென்பதை எல்லாரும் ஒத்துக்கொண்டார்கள். மற்றக் காரணங்களை விட்டு விட்டாலும் கூட, அவர்கள், மிஸ்டர் யூனுஸின் பேச்சை ஏற்காமல் மாபெரும் ஆசையை உதறித் தள்ளி விட்ட ஒரு காரணத்தாலேயே மந்திரி பதவி பெறுவதற்கு உரியவர்களென்பதை நிரூபித்து விட்டார்கள். இதனால் யாதொரு வாதமுமின்றியே இந்த எண்ணம் எல்லாருடைய மனத்திலும் தானே உதித்துவிட்டது.

ஹஜாரிபாக்கைச் சேர்ந்த ஸ்ரீராம் நாராயண் சின்ஹாவானவர் சோட்டா நாகபுரியிலிருந்து யாராவது ஒரு மந்திரி நியமிக்கப்பட வேண்டுமென்று விரும்பினார். பீகார் மாகாணத்தின் அப்பகுதியானது பிற்பட்டிருப்பதாகக் கருதப்படுவதாகவும்,காங்கிரஸ்கூட அதன் பக்கம் சரியாகக் கவனம் செலுத்துவதில்லையென்பதாகவும் அவர் வழக்காடினார். நான்கூட அந்தப் பகுதியின் மீது கவனம் செலுத்துவதில்லையென்று அவர் நட்பு முறையில் என்மீது குறை கூறி வந்தார். நான் அங்குச் சென்று சில நாட்கள் தங்குவதில்லை என்பதைத் தம் குறைக்கு ஆதாரமாக எடுத்துரைத்து வந்தார். சென்ற இருபது ஆண்டுகளில் நான் சோட்டா நாகபுரியில் தங்கியிருந்த அளவுக்கு வேறு எந்த இடத்திலும் இருந்ததில்லை யென்று நானும் வேடிக்கையாக கூறுவேன். ஏனெனில் என் சிறை வாழ்க்கையை நான் எப்பொழுதும் ஹஜாரிபாக்கில்தான் கழிக்க வேண்டி வந்தது. வேடிக்கைக்கு இது சரியான விடையாகலாம். ஆனால் அவருக்கு இதனால் திருப்தி உண்டாகவில்லை. இதனால் சோட்டா நாகபுரியிலிருந்து ஒரு மந்திரி கட்டாயமாக நியமிக்கப்பட வேண்டுமென்று அவர் வற்புறுத்தி வந்தார். அவரே அங்குப் பணியாற்றுபவர்களில் சிறந்தவராகயிருந்தார். அந்தச் சமயத்தில் அவர் மத்திய சட்டசபையின் உறுப்பினராகயிருந்தார். மாகாண தேர்தலின்போது அவர் மாகாண அசெம்பிளிக்கு நிற்கவில்லை. இதனால் அவர் மந்திரியாக்கப்பட்டால் எங்காவது ஓரிடத்தைக் காலி செய்து அவரை அந்த இடத்திலிருந்து சில நாட்களுக்குள்ளாக மாகாண அசெம்பிளியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கவேண்டி வரும். தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ்காரர்கள் இதை மிகவும் தப்பாக எடுத்துக் கொள்

வார்கள். ஏனெனில் தம்முள்ளவரும் இந்தப்பதவிக்கு தகுதியில்லை யென்று கருதப்பட்டதாக நினைப்பார்கள். அப்படி நினைத்தால் அது சரியேயாகும். இக்காரணங்களால் அவரை மந்திரி சபையில் சேர்த்துக்கொள்ள இயலாமற் போய்விட்டது. இதனால் அவருக்கு அதிக வருத்த முண்டாயிற்று. அவர் எனக்குப் பல கடிதங்கள் எழுதினர். நான் அவற்றிற்கெல்லாம் விடையும் அளித்தேன். ஆனால் அவரைச் சமாதானப்படுத்த முடியவில்லை. பொது வாழ்க் கையில் இப்படி எப்போதாவது செய்யவேண்டி வரும். எவருக்கா வது ஏதாவது மனக்கசப்பு விளைவிக்க நேர்ந்தால் மிகவும் வருத்தப் படும் சுபாவமுள்ள என்னைப் போன்ற ஆளுக்கு இப்படிப்பட்ட வேண்டா வெறுப்பான வேலையானது மிகவும் கஷ்டத்தை உண் டாக்கிவிடுகிறது. ஆனால் கடமை என்ற கண் கொண்டு பார்த் தால் இது சம்பந்தமாக நான் செய்த முடிவு சரியென்றே இன்றும் நினைக்கிறேன்.

கடைசியாக நாங்கள் மற்றொரு சிக்கலையும் தீர்க்க வேண்டி யிருந்தது. ஹரிஜனங்களில் இரண்டு தலைமையான காங்கிரஸ் காரர்களிருந்தார்கள். ஒருவர் ஸ்ரீ ஜக்லால் சௌதுரி. அவர் 1920இல் கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் இறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்தார். சில மாதங்களுக்குள் எம். பி. பரீ க்ஷையில் தேறி டாக்டர் ஆகியிருப்பார். ஆனால் காங்கிரஸ் அழைத்ததும் பரீக்ஷையைவிட்டு விட்டு, அப்போதிலிருந்து வைராக்கியமாக காங்கிரஸ் பணியில், முக்கியமாக ஆக்க வேலை யில், ஈடுபட்டிருந்து வந்தார். சத்தியாக்கிரகத்திலும் பங்கெடுத் துக்கொண்டு சிறை யாத்திரையும் சென்று வந்திருந்தார். மற் றொருவர் ஸ்ரீ ஜக்ஜீவன்ராம். அவர் மிகவும் உற்சாகமும் நல்ல திறமும் படைத்த செயலாளர். சிறிது காலமாகத்தான் காங்கிரஸ் பணியாற்றி வந்தாலும்கூட நிறையச் செல்வாக்கு உடையவர். மிஸ்டர் யூனுஸ் அளித்த மந்திரி பதவியை உதறித் தள்ளியவர். எல்லா விஷயங்களையும் நன்றாக யோசனை செய்து ஸ்ரீ ஜக்லால் சௌதுரியையே மந்திரியாகவும் ஸ்ரீ ஜகஜீவன்ராமை பார்லிமெண் டரி செக்ரடரியாகவும் நியமிக்க முடிவு செய்தோம்.

# 120. காங்கிரஸ் மந்திரி சபைகளை அமைத்தல்

இவ்வண்ணமாக ஸ்ரீ கிருஷ்ண சின்ஹா முதல் மந்திரியாக இருக்கட்டுமென்று நாங்கள் முடிவு செய்தோம். அவருடன் டாக்டர் சையத் முகமூத், ஸ்ரீ அனுகிரக நாராயண் சின்ஹா, ஸ்ரீ ஜக்லால் சௌதுரி ஆகிய மூவர் மந்திரிகளாகவும் எட்டுப் பேர் பார்லிமெண்டரி செக்ரடரிகளாகவும் இருப்பதென்று முடிவு செய்தோம். ஸ்ரீ ராம் தயாளு சின்ஹா சபாநாயகராக (ஸ்பீக்கராக) நியமிக்கப்பட்டார். துணைச் சபாநாயகர் பதவிக்கு பேராசிரியர் அப்துல் பாரீயை நியமித்தோம். ஸ்ரீ கிருஷ்ண வல்லப் சஹாய், ஸ்ரீ சார்ங்கதர சின்ஹா, ஸ்ரீ ஜீமூதவாகன் சென், ஸ்ரீ விநோதானந்த ஜா, ஸ்ரீ சிவநந்தன் மண்டல், ஸ்ரீ ஜகஜீவன்ராம், ஸ்ரீ தீதுல் ஹக் ஆகியவர்கள் பார்லிமெண்டரி செக்ரடரிகளாக நியமிக்கப்பட்டார்கள். இந்தப் பதவிகளுக்கு இதைவிட நல்ல ஆட்களைப் பொறுக்கியிருக்கலாமென்று சிலர் எண்ணினுர்களாயினும் நாங்கள் செய்த நியமனங்கள் சரியாகச் செய்யப்பட்டனவென்று நான் அச்சமயத்தில் நினைத்தேன். பிறகும்கூட கருத்தை மாற்ற வேண்டிய அவசியம் வரவில்லை. எனக்குத் தெரிந்த வரையில் எல்லா மந்திரிகளும் இந்த விஷயத்தில் என்னோடு மனமொத்திருந்தார்கள்.

முன்னமே சொல்ல வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தேனுயினும் இது வரையில் இரண்டு விஷயங்களைப் பற்றிக் கூற மறந்துவிட்டேன். ஒன்று மாகாண லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலுக்குத் தேர்தலைப் பற்றிய விஷயம். மற்றொன்று அசெம்பிளிக்குச் சபாநாயகரின்—அதாவது ஸ்பீக்கரின்—தேர்தலைப் பற்றிய விஷயம். கவுன்ஸிலுக்கு வாக்காளர்கள் பெரும்பாலும் பணக்காரர்களே ஆவர். அதாவது ஜமீன்தாரிகளுக்காக நிறைய நில வரியோ அல்லது நிறைய வருமான வரியோ கொடுப்பவர்களின் எண்ணிக்கைதான் அதிகம். இதனுல், எங்களுக்கு எவ்விதமாக ஜமீன்தாரி தொகுதிகளுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு நடந்த தேர்தலில் வெற்றி பெறுவோமென்ற நம்பிக்கைக்கு இடமில்லாமலிருந்ததோ அதே போல, இந்த இடங்களின் தேர்தலிலும் வெற்றிக்கு நம்பிக்கை குறைவாகவே இருந்தது. ஆனுல் இதில் இருவிதமான உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் படுகிறுர்கள். சிலர் வாக்காளர் மூலமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறுர்கள். வேறு சிலர் அசெம்பிளி

உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிருர்கள். அசெம்பிளி உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுபவர்களுள் காங்கிரஸ்காரர்கள் நிறையப் பேரைத் தெர்ந்தெடுக்க முடியும். ஆனுல் வாக்காளர்களுக்குள் அவர்களுக்கு அவ்வளவு ஆதரவளிப்பவர்கள் கிடையாது. ஆகையால் எல்லா இடங்களுக்கும் அபேக்ஷகர்களை நிறுத்துவதில்லையென்று முதலிருந்தே நாங்கள் முடிவு செய்திருந்தோம். ஆயினும், எங்களுக்குக் கிடைக்கக் கூடிய இடங்களில் ஆட்களை நிறுத்திளேம். வெற்றியும் பெற்ருேம். ஆயினும் எங்களுடைய பலத்தை அசெம்பிளியில் நடந்த தேர்தல் மூலமாகத்தான் காட்ட முடிந்தது.

ஸ்பீக்கரைத் தேர்ந்தெடுப்பதற்காக அசெம்பிளி ஒரு நாள் கூடியது. இந்தக் கூட்டத்திற்கு கவர்னரானவர் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹாவைத் தலைவராக நியமித்தார். நானும் அன்றைக்கு அசெம்பிளிக்குச் சென்றேன். அதற்கு முன் நான் பீகார் அசெம்பிளிக்குப் போனதேயில்லை. அதற்கு பின்னும் மறுபடி போவதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. நிற்க, ஸ்ரீ ராமதயாளு சின்ஹா தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தேர்தலுக்குப்பின் ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹானவர் நகைச்சுவை மிகுந்த சொற்பொழிவு ஒன்றை ஆற்றினர். அதில் ராம் தயாளுவுக்கு நல்வரவு கூறினர். இவ்வண்ணமாக மந்திரி சபை அமைக்கப்பெற்றது.

மந்திரி சபை அமைக்கும் வேலையாக நான் ஒரிசாவுக்கும் போக வேண்டி வந்தது. அங்குக் கட்சியின் தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் அவர்களுக்குள் மனஸ்தாபம் வந்துவிட்டது. இந்த விஷயம் பார்லிமெண்டரி கமிட்டி வரையில் வந்து சேர்ந்தது. பண்டித் நீலகண்டதாஸ் ஒரிசாவின் முக்கிய மனிதர்களில் ஒருவர். 1921இலிருந்தே அவர் காங்கிரஸில் நிறையப் பணியாற்றி வந்திருக்கிருர். அவர் திருவெய்திய பண்டித் கோபபந்து தாஸடன் பணியாற்றியவர்களில் ஒருவர். 1930–34 சத்தியாக்கிரகக் கிளர்ச்சியில் எங்களோடுதான் ஹஜாரிபாக் சிறையில் இருந்தார். அந்நாட்களில்கூட புதிய அரசியல் அமைப்பில் காங்கிரஸானது மந்திரி பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று அவர் எண்ணி வந்தாரென்பது எங்களுக்குத் தெரியும். 1934இல் மத்திய சட்டசபைக்குத் தேர்தல் நடந்தபோது அவர் ஒரிசாவிலிருந்து காங்கிரஸ் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1937இல் புதிய அரசியல் அமைப்பின்படி பீகாரிலிருந்து ஒரிசா பிரிக்கப்பட்டுப் போனதும் அதன் அசெம்பிளிக்காக உறுப்பினர்களின் தேர்தல் நடந்தபோது மாகாண அசெம்பிளிக்காக அவர்

எந்த இடத்திலும் நிற்கவில்லை. ஆனால் காங்கிரஸுக்கு பெரும் பான்மை பலம் கிடைத்ததும், மேலும் காங்கிரஸானது மந்திரி பதவியை எப்போதாவது ஏற்றுக்கொண்டால் அசெம்பிளியின் தலைவரே தலைமை மந்திரியாவாரென்பது தெரிய வந்ததும், தாம் தலைவராகத் தேர்ந்தெடுக்க விருப்பப்படுவதாக அவர் அசெம்பிளி யின் உறுப்பினர்களிடம் கூறினார். மாகாணத் தேர்தலுக்காக அவர் மிகவும் பாடுபட்டு உழைத்திருந்தார். அத்தேர்தலில் கிடைத்த வெற்றிக்கு அவர் ஒரு காரணமாயிருந்தார். அசெம் பிளியின் அங்கத்தினர் அல்லாத ஒருவரை அசெம்பிளி கட்சி யின் தலைவராக எப்படித் தேர்ந்தெடுப்பதென்ற கேள்வி அவ் விடத்து உறுப்பினர்களின் முன் எழுந்தது. அசெம்பிளி கட்சி யின் தலைவர் அசெம்பிளிக்கு வந்தாக வேண்டும். அங்கிருந்து கொண்டுதான் அவர் தம் கடமையை முற்றிலும் நிறைவேற்ற முடியும். இது மட்டுமன்றி, கவர்னர் எவரையாவது அழைப்ப தானால் அவர் அசெம்பிளியின் அங்கத்தினர் எவரையாவதுதாம் அழைக்க விரும்புவார். வெளி ஆள் எவரையாவது அழைத்தால் அவர் சங்கடத்துக்கு ஆளாவார். மேலும் வெளி ஆளும் ஆறு மாதத்திற்குள் எங்கிருந்தாவது உறுப்பினராகத் தேர்ந்தெடுக்க பட வேண்டுமென்ற நிபந்தனைக்கு உட்பட்டுத்தான் மந்திரியாக முடியும் என்ற நிபந்தனை வேறு இருந்தது. ஆனால் பண்டித் நீல கண்ட தாஸ் சாதாரண மந்திரி ஆக விரும்பவில்லை. அவர் தலைமை மந்திரியாகத்தான் ஆக முடியும். ஏனெனில் அந்தப் பதவிதான் அவருக்கு ஏற்றது. அசெம்பிளியின் அங்கத்தினர் களிலிருந்துதான் எவராவது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படலா மென்று பார்லிமெண்டரி கமிட்டி அபிப்பிராயப்பட்டது. இதனால் ஸ்ரீ விஸ்வநாத்தாஸ்தாம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் பிரம்மபூர் (பெர்ஹாம்பூர்) ஜில்லாவைச் சேர்ந்தவர். அவ ருடைய ஜில்லா மதராஸ் மாகாணத்தில் ஒரு பாகமாக இருந்த போது அவர் மதராஸ் அசெம்பிளியின் உறுப்பினராக இருந்து வந்திருந்தார்.

அவர்களுக்குள் இருந்த போட்டியால் பெரும் மனஸ்தாபம் உண்டாகிவிடுமென்று அஞ்சியதால் நான் அங்கே போக வேண்டி வந்தது. அப்படியே சென்றேன். முசல்மானியர்களிலிருந்து யாரை மந்திரியாக்குவது என்ற கேள்விதான் மற்றெல்லாவற்றை யும்விட நொய்மையான கேள்வியாயிருந்தது. அவ்விடத்து அசெம்பிளியில் முசல்மானியருடைய எண்ணிக்கை மிகக் குறை வாகவிருந்தது. அல்ப ஆயுள் மந்திரிசபை அமைக்கப்பட்ட

போது அதில் ஒரு முசல்மானிய கனவான் மந்திரியாக இருந்தார். காங்கிரஸ் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுள் மந்திரி வேலை புரியக் கூடியவராக ஒருவரும் கண்ணில் படவில்லை. அப்படி வேலை புரியத் தகுதியுள்ளவராக இருந்தவர் காங்கிரஸ் சீட்டில் தேர்ந்தெடுக்கப்படவில்லை. மேலும் இப்போதுகூடக் காங்கிரஸில் சேரத் தயாராயில்லை. நான் இரண்டு மூன்று நாட்கள் வரையில் கட்டாக்கில் தங்கியிருந்தேன். மேலே கூறப்பட்டுள்ள முசல் மானியர்களில் ஒருவரை மந்திரியாக்க வேண்டுமென்று முயற்சி செய்யப்பட்டது. ஆனால் இது பயனளிக்கவில்லை. கடைசியில் யாதொரு முசல்மானியருமில்லாமலே அப்போது மந்திரிசபை அமைக்கப்பட்டது. இந்த விஷயத்தைப்பற்றி மௌலானா ஆஜாதைக் கேட்டுக் கொண்டு பிறகு இறுதி முடிவு கட்டலா மென்று விட்டுவிட்டேன்.

ஐக்கிய மாகாணத்திலும் முசல்மானிய மந்திரி சம்பந்தமாகக் கஷ்டம் வந்தது. ஏனெனில் அங்கும் காங்கிரஸ் சீட்டில் ஓரிரண்டு முசல்மானியர்கள்தாம் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். மற்ற வர்கள் சுயேச்சையாக நின்று தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். மௌலானா ஆஜாத் அங்குள்ள நிலைமையைப் பற்றிப் பேச்சு வார்த்தை நடத்தினர். சில முசல்மானியர்கள், காங்கிரஸிடம் அனுதாபம் கொண்டவர்களாயினும், காங்கிரஸ் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அல்லர். மௌலானா ஆஜாத்துடன் ஏதாவது ஒப்பந்தம் செய்து கொள்ளத் தயாராயிருந்தார்கள். இந்த ஒப்பந்தம் ஏற்பட்டிருந்தால் லீகுடன் கிளம்பிய சண்டை ஒரு வேளை வந்தேயிருந்திருக்காது. ஆனல் அந்தச் சமயத்தில் மாகாணத்தின் முக்கிய காங்கிரஸ்காரர்கள் இதற்கு ஒப்பவில்லை. மௌலானாவுக்கும் அங்கு மேலும் தங்குவதற்குச் சௌகரியப்பட வில்லை. அவர் பம்பாய்க்குப் போக வேண்டியிருந்தது. இதனல் அவ்விடத்து மந்திரி சபையில், ஒரு காங்கிரஸ் முசல்மான் ஸ்ரீ ரபி அகமத் கித்வாயும், காங்கிரஸ் சீட்டில் தேர்ந்தெடுக்கப்படாத மற்றொரு முசல்மான் ஹாபிஜ் அகமது இப்ராகிமும் மந்திரி களாக்கப் பட்டார்கள். ஹாபிஜ் அகமது அசெம்பிளியிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டு மீண்டும் காங்கிாஸ் சீட்டில் தேர்ந் தெடுக்கப்பட்டார் என்பதை இங்குக் கூறுவது நன்று. பம்பாயில் எதிர்ப்பட்ட கஷ்டங்கள் மௌலானவால் தீர்க்கப்பட்டு, மிஸ்டர் நூரீ மந்திரி ஆனர். இதுபோலவே மத்திய பிரதேசத்திலும் மிஸ்டர் ஷெரீப் மந்திரி ஆனர்.

முசல்மானிய மந்திரிகளைப் பற்றி இவ்வளவு ஏன் எழுத

வேண்டியதாயிற்றென்றால் பின்னால் முஸ்லிம் லீகானது இந்த விஷயத்தைப் பிடித்துக் கொண்டு கூக்குரல் போட்டுக் கொண்டிருந்தது. அதுவரையில் காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் தேர்தலிலும் அரசியல் அமைப்பின்படி நிறுவப்பட்ட மந்திரி சபைகளிலும் இங்கிலாந்தின் மந்திரி சபையின் நடைமுறையையே பார்த்திருந்தார்கள். அவ்விடத்து நடைமுறைப்படியே இங்குள்ள மந்திரி சபையை அமைக்கவும் அதன் நடவடிக்கைகளை நடத்தவும் விரும்பினார்கள். இக்காரணத்தால்தான் முறையாக அமைக்கப்பட்ட கட்சிகள் எல்லாம் தத்தம் அபேக்ஷகர்களை நிறுத்தின. தேர்தல் சமயத்தில் பீகார் இண்டிபெண்டண்டு பார்டி போலச் சில புதிய கட்சிகளும் உண்டாயின. தேர்தலுக்குப் பிறகு ஒரு கட்சியின், அதாவது காங்கிரஸ் பார்டியின் பெரும்பான்மை பல மாகாணங்களில் வலுத்தபோது, தன் கட்சிக்கு வெளியிலிருந்து எவரையும் மந்திரியாக எடுத்துக்கொள்வது என்ற பேச்சு இவ்விதமான அரசியல் அமைப்பின் சம்பிரதாயத்திற்கு முரணாகப் புலப்பட்டது. மேலும் காங்கிரஸ் கட்சியிலும் முசல்மானியர்கள் இருந்தார்கள். அவர்களை விட்டுவிட்டு வெளியே போவது அவர்களுக்கு அநியாயம் செய்ததாகும். தேர்தல் வரையில் முஸ்லிம் லீகுக்கு அதிக பலம் இருக்கவில்லை. மிகச் சில இடங்களுக்கே முஸ்லிம் லீக் அபேக்ஷகர்களை நிறுத்தியது. அதனுடைய அபேக்ஷகர்கள் நின்ற இடங்களிலும் அதற்கு அதிகமாக வெற்றி கிடைக்கவில்லை. இதனால் முஸ்லிம் லீகுக்காக ஒரு மந்திரியை நியமிப்பதென்பது காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலமிருந்த எல்லா இடங்களிலிலுமே முறையற்றதாகும். காங்கிரஸானது ஓர் அறிக்கை விடுத்து அதன்படி தேர்தலில் போட்டி போட்டு வெற்றி பெற்றது. அந்த அறிக்கையின்படியே பணியாற்றுவது அதன் கடமையாகும். அதனுடைய உறுப்பினர் அனைவரும் அது ஆணையிட்டபடி வேலை செய்வோமென்றும், மேலும் அது கட்டளையிட்டபோது ராஜீநாமா செய்து விடுவோமென்றும் சத்தியம் செய்து கொடுத்திருந்தார்கள்.

காங்கிரஸிடம் பதவியைத் துறத்தல் என்ற ஓர் அஸ்திரம் இருந்தது. தன் கடமையை ஆற்றுவதில் கருத்து வேறுபாடு உண்டானால் அந்த ஆயுதத்தைக் கொண்டு அது கவர்னரை அடக்க முடியும். அது காங்கிரஸ்காரர் அல்லாத எவரையாவது மேலே கூறப்பட்டுள்ள நிபந்தனைகளுக்குச் சம்மதிக்க வைக்காமல் மந்திரியாக நியமித்துவிடுமானால் பிறகு கவர்னருக்குத் தன்னுடைய வலிமையை நினைவு மூட்ட அதன் கையில் வேறு

யாதொறு ஆயுதமுமில்லாமல் போய்விடும். முறையான மந்திரி சபையில் எல்லாருக்கும் சமமான பொறுப்பு உண்டென்று கொள்ளப்படும். அதாவது அவர்களுள் எந்த மந்திரி யேனும் ஒரு காரியத்தைச் செய்தால் அதனுடைய பொறுப்பு அவருடைய தோழர்கள் எல்லாரையும் பாதிக்கும். இவ்வண்ணமாக எல்லாரும் ஒருவருக்கொருவர் துணை நிற்பார்கள். மேலும் ஒவ்வொருடைய நடவடிக்கைகளை மற்றவர்களும் கண்காணிப்புச் செய்து வருவார்கள். கருத்து வேறுபாடு வந்துவிட்டால், பெரும் பான்மையினின்று வேறு அபிப்பிராயம் கொண்டவர் நீங்கிவிட வேண்டும். இரண்டு கழகங்களின் கட்டளைகளை ஏற்கக் கட்டுப் பட்டவரோ, அல்லது வாக்களித்தவரோ ஏதாவதொரு மந்திரி சபையில் மந்திரியாக இருந்தால், அந்த இரண்டு கழகங்களும் கூடி ஒத்து வேலை புரிவதாக ஒப்பந்தம் செய்து கொள்ளாத இடத்தில், இரண்டு கழகங்களும் ஒன்றுக்கு ஒன்று முரணுக கட்டளைகளை இட நேரலாம். அந்நிலையில் மந்திரிகள் தத்தம் கழகத்தின் கட்டளைப்படி நடந்தால் மந்திரி சபையின் நடவடிக்கை களிலேயே போட்டி வந்துவிடும். இதனுல் எல்லா மந்திரிகளும் ஏதாவதொரு கழகத்தின் ஆணைக்குக் கட்டுப்பட்டிருப்பது மிகவும் அவசியம். அல்லது இவ்விதமான போட்டி நடவடிக்கைகள் எழாமலிருக்கும்படியும், அப்படியே எழுந்தாலும் விரைவில் மனக் கசப்பிற்கு இடமில்லாமல் தீரும்படியும் தமக்குள் ஏதாவது உடன் படிக்கையாவது செய்தாக வேண்டும். இவ்விதமான முறையான மந்திரி சபை வேலை செய்யும் சட்டசபை ஏதாவதொன்றில், எந்தக் கட்சிக்கும் பெரும்பான்மை பலமில்லாமற் போய் ஒன்றிற்கு மேற்கொண்ட (பல) கட்சிகளிலிருந்து பொறுக்கிய ஆட்களைக் கொண்டு மந்திரி சபை அமைக்கப்பட்டால், அந்நிலையில் முன் கூட்டியே அக்கட்சிகளுக்குள் பேச்சு வார்த்தை நடத்தப்பட்டு ஒருவழி வகுத்துக் கொள்ளப்படுவது வழக்கம். பிறகு எப் போதாவது கருத்து வேறுபாடு உண்டானுல், எக் கட்சியின் மந்திரியுடன் கருத்து வேறுபாடு எழுந்ததோ அக்கட்சியானது தன் மந்திரியை விலகச் சொல்லிவிட்டுப் பிறகு மற்ற மந்திரி களுக்கு உதவியை அளிக்காமல் நிறுத்திக் கொள்ளும். ஆனுல் இங்குக்காங்கிரஸுக்கு நிறையப் பெரும்பான்மை பலமிருந்ததால், மற்றக் கட்சிகளோடு கூட்டுறவுத் தேவைப்படவில்லை. மற்ற எல்லாக் கட்சிகளும் ஒன்ருகக் கூடிக்கொண்டாலும்கூட காங்கிரஸ் ஒன்றியாகத் தன் சார்பில் அவர்களைவிட அதிகமாக ஆட்களை நிறுத்தி எல்லாரையும் வோட்டில் தோற்கடிக்க முடியும். இங்கு

வேறு கட்சியோடு ஒப்பந்தம் செய்வதென்ற கேள்வியே எழவில்லை. அப்படியும்கூட முசல்மானியர்களைப் பற்றிய விஷயத்தில் மற்றக் கட்சிகளின் முசல்மானியர்களோடு ஒப்பந்தம் செய்து கொள்ள முயற்சி செய்தோம். ஆனால் அது இயலவில்லை.

காங்கிரஸானது நியாயமான முறைக்கு மாறாக யாதொரு தவறும் புரியவில்லை என்று நாங்கள் அப்போது நினைத்தோம். இன்றும் அதுவே என் அபிப்பிராயம். காங்கிரஸானது இங்கிலாந்தின் அரசியல் அமைப்பைப் பின்பற்றியிருக்கக் கூடாதென்பது வேறு பேச்சு. ஜனநாயகத்தின் சம்பிரதாயக் கொள்கையையும் நடைமுறையையும் விட்டுவிட்டு தனக்காகத் தனியான கொள்கையும் நடைமுறையும் அமைத்துக் கொண்டிருக்க வேண்டுமென்பது வேறு விஷயம். யாரும் அந்தச் சமயத்தில் இதுபோலப் பேசவில்லை. இந்தியாவில் ஜனநாயகம் நடக்காது என்றும் நடக்கக் கூடாதென்றும் கூறும் அறிவாளியோ அல்லது கழகமோ முஸ்லீம் லீகைத் தவிர வேறு எவரும் இன்றுகூட இருப்பதாகத் எனக்குத் தெரியவில்லை. ஜனநாயகம் வேண்டாமென்றால் நாடானது தனக்குப் பொருத்தமென்று நினைக்கும் வேறு அரசியல் திட்டத்தை அமைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் இப்போது நடப்பில் இருக்கும் ஜனநாயக நெறியில் நாம் நடந்து கொண்டிருக்கும் வரையில் ஜனநாயகத்தின் கொள்கைகளிலிருந்தும் நடைமுறைகளிலிருந்தும் நம்மைப் பிரித்துக்கொள்ள முடியாது. நம் நாடானது ஜனநாயத்தைத் தவிர வேறு வித அரசியல் திட்டத்தை என்றுமே ஏற்காதென்று நான் நினைக்கிறேன். ஹிந்துக்கள் முசல்மானியர் மற்றவர்கள் அனைவருமே நான் சொல்வதை ஒத்துக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஜனநாயகத்தைக் கைவிடுவதின் அர்த்தம் என்னவென்றால் யாராவது ஒருவனின் கையிலோ அல்லது சிறு குழுவின் கையிலோ இந்தியாவின் க்ஷேமத்தை ஒப்படைப்பது என்பதாகும். இந்தியாவின் அரசாட்சியின் கடிவாளக் கயிற்றை அவர்கள் கையில் கொடுப்பது என்பது அர்த்தம். மக்களுடைய கையில் அதிகாரத்தைக் கொடுக்காமல் யாரோ ஒரு ஆளிடமோ அல்லது சிறு குழுவில் கையிலோ அதைக் கொடுத்துவிடவேண்டுமென்று முசல்மானியர்கள் விரும்பினார்களென்று நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். இந்தியாவிற்கு ஜனநாயகம் ஒவ்வாதென்றும் அது இந்தியாவில் செல்லாதென்றும் வேறு யார் சார்பிலும் வேறு எந்தக் கழகமும் இதுவரையில் கூறவில்லை.

1937இன் ஜுலையில் எல்லை மாகாணத்தில் தவிர மற்ற மாகா

ணங்களில் எல்லாம் அல்ப ஆயுள் மந்திரி சபைகள் ராஜிநாமா கொடுத்துவிட்டன. காங்கிரஸ் மந்திரி சபைகளும் அமைக்கப் பட்டுவிட்டன. அதற்குச் சற்றுப் பிறகு அங்கிருந்த மந்திரி சபையும் ராஜீநாமா கொடுக்க வேண்டி வந்தது. அந்த மாகா ணத்தில் காங்கிரஸ்காரர்கள்தாம் தேர்தலில் அதிகமாகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்கள். 'ஆனால் மற்ற மாகாணங்களில் இருந்த தைப் போலல்லாமல், அங்குக் காங்கிரஸ் தனியாக மற்றெல்லாக் கட்சிகளையும் தன் வோட்டால் தோற்கடிப்பதற்கு வேண்டிய அளவுக்கு அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கையில்லை. ஆதலால் அங்கிருந்த மந்திரி சபையானது மற்றவர்களையும் சேர்த்துக் கொண்டே சிறிது காலம் நடந்து வந்தது. ஆனால் அது நெடுநாள் நிற்கமுடியவில்லை. அசெம்பிளியின் இருக்கை முடிந்தபின் அது ராஜீநாமா கொடுத்துவிடவேண்டி வந்தது. மற்ற மாகாணங்களில், அசெம்பிளி கூடுவதற்கு முன்னமே, அங்கிருந்த அல்ப ஆயுள் மந்திரி சபைகள் ராஜீநாமா கொடுத்து விட்டன. மௌலானா அபுல் கலாம் ஆஜாதுடன் நானும் எல்லை மாகாணத்திற்குச் சென்று அங்கு மந்திரி சபையை அமைப்ப தற்கு உதவி புரிய வேண்டி யிருந்தது. இதில் நான் அதிகக் கஷ்டப்படவேண்டி வரவில்லை. அங்குச் செய்ய வேண்டிய தையெல்லாம் மௌலானா ஆஜாதே செய்தார். மேலும் டாக்டர் கான் சாஹபும், கான் அப்துல் கபார்கானும் இருந்தபோது நாங்கள் எதுவும் அதிகமாகச் செய்வதற்கு அவசியமே ஏற்பட வில்லை. நான் இந்தச் சந்தர்ப்பத்தை அங்குச் செல்வதற்கு ஒரு சாக்குக் கிடைத்ததாகவே கருதினேன்.

## 121. எல்லை மாகாணத்தில் யாத்திரை

எல்லை மாகாணத்திற்கு நான் இப்பொழுதுதான் முதன் முத லாகச் சென்றேன். அந்நாட்களில் கவர்னர் தங்கி வந்த அபட்டா பாதுக்கு நாங்கள் முதலில் நேரே சென்றோம். அங்கு மந்திரி சபை அமைப்பதைப் பற்றிப் பேச்சு நடந்து கொண்டிருந்தது. அது ஒரு மலைப் பிரதேசம். கோடை காலத்தில் அங்கு அசெம் பிளியின் கூட்டங்கள் நடைபெறும். நாங்கள் அங்குப் போய் சேர்ந்ததும் எங்களை 'அழைத்துச் செல்ல ஊர்வலத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மௌலானா சாஹபு ஊர்வலத்தில் கலந்து

கொள்ளவில்லையாதலால், நான் ஊர்வலம் போக வேண்டிவந்தது. ஆனல் வழியிலேயே மழை கடுமையாகப் பொழிய ஆரம்பித்து விட்டது. நாங்கள் முற்றிலும் நனைந்து போனேம். ஊர்வலமும் அலங்கோலமாகக் கலைந்துவிட்டது. மந்திரி சபை அமைக்கும் வேலையை முடித்துக் கொண்டு நாங்கள் வேறு சில இடங்களுக்குச் சென்றுவிட்டோம். மான்ஸேஹ்ரா என்ற ஓர் இடம் மலை மேலிருக்கிறது. அங்குள்ள முசாபரி பங்களாவிலிருந்து நாலா பக்கமும் மிகவும் அழகான காட்சியைக் காணலாம். நாங்கள் அங்குச் சிறிது நேரம் தங்கிப் பெஷாவருக்கு வந்து சேர்ந்தோம். பிறகு சர்ஸத்தாவைப் பார்த்துக் கொண்டு கான் சாஹபின் கிராமமான உத்மஞ்ஜயீக்குச் சென்றேம். அங்கிருந்து புறப்பட்டு சுயேச்ச இலாகாவைப் பார்த்துக் கொண்டு பெஷாவருக்குத் திரும்பினேம். அடுத்த நாள் மற்ரெரு திசையில் ஒரு சுற்றுச் சுற்றி வந்தோம். பிறகு கைபர் கணவாயைக் கடந்து ஆப்கானிஸ்தான் எல்லேவரையில் சென்றேம். அங்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் காவல் வீரனும் ஆப்கானிய அரசாங்கத்தின் காவல் வீரனும் தத்தம் எல்லைக்குள் நின்று காவல் புரிந்து கொண்டிருக்கிறர்கள். கைபர் கணவாய் மிகவும் விசித்திரமான அழகு நிறைந்த கணவாயாகும். மலையானது புல் பூண்டு கொடி ஒன்று மில்லாமல் மொட்டையாயிருக்கிறது. கோடை காலத்தில் தீப்பற்றி எரிவது போல இருக்கும். ஆயினும் மலைகளுக்கு இடையில் செல்லும் வழியானது மிகவும் அழகாகவும் கவர்ச்சியாகவும் இருந்தது.

பல கல் நீளமான கணவாயின் பாதுகாப்புக்காக படை எங்கும் காவல் புரிந்து வருகிறது. கணவாய் தொடங்கும் இடமாகிய ஜம்ஷத்தில் ஒரு கோட்டையும் கணவாயின் நடுவில் ஒரு கோட்டையும் இருக்கின்றன. சாலையின் பக்கத்திலேயே ரயில் பாதையும் போகிறது. அதை அமைப்பதற்கு எவ்வளவோ அறிவும், திறமையும், பணமும் செலவழிந்திருக்கும். கணவாய் முழுவதிலும், சாலை நீங்கலாக பிரிட்டிஷாருக்கு யாதொரு உரிமையும் இல்லை. வெறும் சாலையும் அதன் இருபுறத்திலும் ஓரிரண்டு அடி அகலமுள்ள நிலமும்தாம் பிரிட்டிஷாரைச் சேர்ந்தவை என்பதையும் பக்கத்தில் வாழ்வோர் எல்லாரும் சுயேச்சையான குடிமக்கள் என்பதையும், அவர்கள் தம்மிடங்களில் சுதந்திரமாக வாழ்கிறர்களென்பதையும் கேள்விப்பட்டேன். அந்தச் சுயேச்சையான வட்டாரத்தில் பிரிட்டிஷாரின் சட்டம் செல்லாது. இதனல் சாலையிலிருந்து சில அடிகளுக்கு அப்பால் ஏதேனும் சம்பவம் நடந்து

தைக் கொண்டு இதற்குள் அந்த பூமி மிகவும் செழிப்பானதாகச் செய்யப்பட்டிருக்கும். எல்லை இன மக்கள் மற்ற மாகாண மக்க ளோடு எல்லா விஷயங்களிலும் ஒப்பிடத் தக்கவர்களாக மாறி இருப்பார்கள். ஆனால் அவர்கள் சுயேச்சையாயிருக்கும் வரை யில் அவ்விதம் செய்ய பிரிட்டிஷ் அரசாங்கத்தால் முடியாது போலும். ஆயினும் ஒழுங்கு நெறிக்கு அடங்கிய சுதந்திர மக்களாக இருப்பார்களானால், நல்ல பக்கத்து ஊராராக அமை வார்கள். அவர்கள் சுதந்திரமாகவே இருந்தாலும் கூட, இப்போது அவர்களை அடிக்கடி பீரங்கிக் குண்டுகளுக்கும் வான விமானத்திலிருந்து துப்பாக்கிக் குண்டுகளுக்கும் இலக்காக்கி அடக்கிவைக்கச் செலவு செய்யப்படும் பணத்தை அவர்களுக்குக் கல்வி அளிப்பதற்கும் மற்றும் பல நல்ல ஏற்பாடுகளுக்கும் பயன் படுத்தலாம். அத்தகைய செலவு அவர்களுக்கும் இந்தியாவுக்கும், இருவருக்குமே நிறைய நற்பயனை அளிப்பதாக அமையும்.

எல்லை மாகாணத்திலிருந்து திரும்பி வரும்போது, நானும் என்னோடு அங்கே சென்றிருந்த பாபூ மதுரா பிரசாதும், இரு வருமே வழியில் இருந்த தக்ஷசிலாவில் தோண்டப்பட்டுள்ள பாழ டைந்த கட்டடங்களைப் பார்க்கச் சென்றோம். அங்குத் தோண்டி எடுக்கப்பட்டுள்ள பொருள்களை அங்குள்ள அரும்பெரும் கண் காட்சி சாலையில் பார்த்தோம். பாழடைந்த கட்டடங்களை நன் ருக எங்கும் சுற்றி வந்து பார்த்தோம். அவற்றைப் பார்த்ததி லிருந்து, அங்கே முன் காலத்தில் ஒரு சிறந்த மாபெரும் நகர மிருந்திருந்ததென்பது தெரிய வந்தது. அதில் அகலமான சாலைகள் இருந்தன. சாலைகளின் இரு புறங்களிலும் வீடுகள் கட்டப்பட்டிருந்தன. வீடுகளில் சுகமாக வசிப்பதற்கும் இளைப் பாறுவதற்கும் சிறந்த ஏற்பாடுகள் இருந்தன. இவை எல்லா வற்றையும் கண்டு இது ஒரு மிகவும் சிறந்த இடத்தின் பாழடைந்த கட்டடங்கள் என்பது தெரிய வந்தது. நம்மை இன்றும்கூட தலை நிமிர்ந்து நின்று பெருமை கொள்வதற்குக் காரணமாயிருக்கும் பண்டைக்கால இந்தியாவின் நினைவுச் சின்னங்களாக இவை விளங்குகின்றன. இங்கு உலகப் பிரசித்தி பெற்ற வித்தியாபீடம் ஒன்று பண்டைக் காலத்தில் நிறுவப்பட்டிருந்தது. அங்கு இந்தியாவிற்கு வெளியிலிருந்தும் மாணவர்கள் அக்காலத்தில் வந்து கொண்டிருந்தார்கள். அவ்விடத்து மாணவர்கள் இந் தியாவில் எல்லா இடங்களுக்கும் சென்று தம் புகழைப் பரப்பி யிருந்தார்கள். எல்லைப் பிரதேசத்தில் எங்குமே புத்தருடைய காலத்து நினைவுச் சின்னங்கள் காணக்கிடைக்கின்றனவென்பதை

யும் கேள்விப்பட்டேன். நாங்கள் அங்குச் சில நாட்கள் தங்க முடிந்திருந்தால் இவ்விதமான சின்னங்களையும் பார்த்திருக்க லாம். ஆனால் அதற்கு நேரமில்லை. மேலும்கோஹாட்டுக்கும் டேரா இஸ்மைல்கான் வட்டாரங்களுக்கும் போவதற்கும் எங்களுக்குப் பொழுதில்லை. இதனால் நாங்கள் ஹஜாரா, பேஷாவர் ஆகிய இரண்டு இடங்களின் சில பாகங்களை மட்டுமே பார்த்துவிட்டு வருத்தத்துடன் திரும்பி வந்துவிட்டோம்.

தானூரின் பாளையத்தைத் தவிர வேறு எங்கும் படையின் கலன்களையோ படைகள் தங்குமிடத்தையோ பார்க்க வாய்ப்புக் கிடைக்காத எங்களைப் போன்ற பீகாரிகளுக்கு எல்லை மாகாண மானது ஒரு பெரிய படைப் பாசறையாகத் தோன்றியது. எங்குச் சென்றாலும், எப்பக்கம் திரும்பினாலும், படையின் கூடாரங்கள் நிறைந்திருக்கின்றன. படைகளுக்காக அமைக்கப்பட்ட சாலை களும் படைப் பாசறைகளும் எத்திசையிலும் எதிர்ப்படுகின்றன. இந்த நிலைமை பஞ்சாபிலிருந்தே தொடங்கி விடுகிறது. மேற்கே செல்லச் செல்ல படைகளின் காட்சி பெருகிக் கொண்டே போகிறது. எல்லை மாகாணமோ முழுக்க முழுக்கப் படைப் பாசறையேதான்.

கைபர் கணவாயைப் பார்த்துவிட்டு ஒரு விஷயம் மனத்தில் எழாமல் இருக்க முடியாது. அதாவது இந்தக் கணவாயை மிகவும் எளிதாகக் காவல் புரியக்கூடும் என்பதுதான். முக்கியமாக ஆகாயக் கப்பல் இல்லாத காலத்தில் இது மிகவும் எளிதாயிருந் தது. இறைவன் நம் நாட்டிற்கு வடக்கில் இமயமலையை எழுப்பி நிறுத்தி கிழக்கு மேற்கு எல்லைகளில் மலை அடுக்குகளால் சுவரை நிறுத்தி, ஓர் அரிய எல்லைக்கட்டை அமைத்திருக்கிறான். அதைத் தாண்டி வெளியிலிருந்து எந்த மனிதனும் இந்தியாவின் மேல் படையெடுக்க இயலாது. இவ்வண்ணமாக இயற்கையானது ஒரு புறத்தில் இந்நாட்டிற்கு நிலப்படையெடுப்பிலிருந்து காப்பு அமைத்துவிட்டது. மற்றொரு புறத்தில் கடலானது இந்நாட்டிற்கு ஒரு கடத்தற்கரிய அகழிபோல உதவுகிறது. அப்படியிருந்தும் கூட இந்நாட்டு மக்களாகிய நாம், இந்தத் தானாக அமைந்த கண வாயைக்கூட, நம்முடைய சச்சரவுகளின் காரணத்தால், பாது காக்க இயலாத கையாலாகாதவர்களாக இருக்கிறோம். ஆங்கிலேயர் களுக்கு முன்னர், இன்று வரையில் இந்தியாவின்மீது செய்யப் பட்ட படையெடுப்புக்கள் எல்லாம் இக்கணவாய் வழியாகவே நிகழ்ந்தன. ஆங்கிலேயர்களும் கூட எங்கு ருசியர்கள் இந்தியா வின் மேல் படையெடுத்து வந்துவிடுவார்களோ என்று அஞ்சிக்

கொண்டு தானிருக்கிறார்கள். இதனால் அங்குச் சைனியம் எப்போதும் தயாராயிருக்கிறது. ருசியர்களின் அச்சம் குறைந்ததும் ஜெர்மானியர்களின் அச்சம் வந்துவிட்டது. முசல்மானிய நாடுகளிடமும் அவர்கள் அஞ்சுகிறார்கள் என்று தோன்றுகிறது. இப்போது வான விமானங்கள் நிறைய வந்துவிட்டபின் அக்கணவாய்க்கு அவ்வளவு பெருமை இல்லை. ஆயினும், கடவுளானவர் பாதுகாப்புக்காக எல்லாச் சாதனங்களையும் அமைத்துக் கொடுத்தாலும்கூட அவற்றை மனிதன் தன் ஆற்றாமையினால் நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் அவனைக் காப்பாற்ற இயலாது என்பதைப் பற்றி வருத்தப்படாமலிருக்க முடியாது. தமக்குத் தாமே உதவி புரிந்து கொள்ளாதவர்களுக்கு இறைவனும் உதவி புரிய முடியாதென்பதற்கும், எவர் இறைவன் அளித்த சாதனங்களை பயன்படுத்தத் தகுதியற்றவர்களாயிருக்கிறார்களோ அவர்கள் வீழ்வது நிச்சயம் என்பதற்கும் கைபர் கணவாயும் இந்தியாவின் சரித்திரமும் சான்றாகும். கன்யாகுமரிக்குப் போய்ச் சேர்ந்ததும் இந்தியாவின் பெருமையின் காட்சி எப்படிக் கண்முன் பிரகாசித்ததோ அதுபோலவே கைபர் கணவாயைப் பார்த்ததும் இந்தியர்களின் கையாலாகாமையின் சித்திரம் கண் எதிரில் நடனமாடியது.

## 122. அமைப்புச் சட்டச் சம்பந்தமாக மந்திரி சபைகளின் சில தொல்லைகள்

மந்திரி சபைகளின் வேலை தொடங்கப்பட்டு நடந்து கொண்டிருந்தது. விரைவிலேயே பீகாரில் ஒரு கேள்வி எதிர்ப்பட்டது. அதைத் தீர்ப்பது சற்றுக் கடினமாயிருந்தது. அதனால் எங்களுக்குக் கஷ்டங்கள் பின்னால் வந்தன. மிஸ்டர் யூனுஸ் மந்திரியானபோது அவர் சர் சுல்தான் அகமதை பீகாருக்கு அட்வகேட் ஜெனரலாக நியமித்தார். சர் சுல்தான் பல ஆண்டுகளாக அரசாங்க வக்கீலாக இருந்து வந்தார். புதிய அரசியல் அமைப்பில் அரசாங்க வக்கீலின் இடத்தில் அட்வகேட் ஜெனரலை நியமிக்க வேண்டியிருந்தது. அவர் அச்சமயத்தில் இந்திய அரசாங்கத்தில் வைசிரியாயின் நிர்வாகக் குழுவின் உறுப்பினராகச் சிறிது காலத்திற்கு நியமிக்கப்பட்டிருந்தார். வைசிராயின் கவுன்சிலில் அவர் காங்கிரஸுடன் ஒப்பந்தம் செய்து

கொள்வதைப் பற்றி வற்புறுத்தினர் என்றும் கேள்வி. வைசிராயின் அறிக்கை வெளியான பின்னும் காங்கிரஸ் மந்திரி சபை அமைக்கப்பட்ட போதும், அவர் வைசிராய் கவுன்சிலின் உறுப்பினராகவே இருந்தார். புதிதாக அட்வகேட் ஜெனரலை நியமிப்பதா அல்லது மிஸ்டர் யூனுஸ் நியமித்தவரையே மீண்டும் நியமிப்பதா என்ற கேள்வி பீகார் மந்திரி சபையின்முன் எழுந்தது.

அட்வகேட் ஜெனரலானவர் அரசாங்கத்திற்கும் மந்திரி சபைக்கும் பிரதான சட்ட ஆலோசகராவர். புது அரசியல் அமைப்பில், அசெம்பிளியிலும் கவுன்சிலிலும் அவற்றின் அங்கத்தினராக ஆகாமலே எந்த விஷயத்தைப் பற்றியும் பேசுவதற்கு அவருக்கு உரிமை உண்டு. ஏதாவது சட்ட சம்பந்தமான வாதம் எழுந்தால் அரசாங்கத்தின் சார்பில் அதிகாரத்தோடு பேசுவதற்குத் தகுதியான ஓர் ஆள் வேண்டுமென்பதற்காக இந்த உரிமை அளிக்கப்பட்டிருந்தது. இங்கிலாந்தில் எல்லாவற்றையும் விடப் பெரிய சட்ட அதிகாரி, நீதிபதிகளுக்கும் மேலானவர் என்று கருதப்பட்ட அதிகாரி, லார்டு சான்சலர் ஆவர். அவர் தாம் பிரபுக்கள் சபையின் சபாபதி. அச்சபையின் முன் சட்ட நடவடிக்கை சம்பந்தமாக முறையீடு (அப்பீல்) வந்தால் அப்போதும் அவர்தாம் தலைமை வகிப்பார். இதனால் அவர் எப்போதுமே ஒரு புகழ் வாய்ந்த சட்ட நிபுணராக இருப்பார். நீதிபதிகளுக்குத் தலைவரைப் பற்றி இந்த முறை அங்கு அனுசரிக்கப்பட்டு வந்தது. சட்ட விஷயங்களைப் பற்றி ஆலோசனை கூறுபவர்களுக்கெல்லாம் தலைவரான அட்டோர்னி ஜெனரலும் மந்திரி சபையில் ஓர் உறுப்பினராக இருப்பார். அவர் காமன்ஸ் சபையில் (லோக் சபாவில்) ஓர் உறுப்பினராக இருப்பார். இந்த இரண்டு இடங்களுக்கும் மந்திரி சபை அமைக்கப்படும்போதே ஆட்கள் நியமிக்கப்படுவார்கள். அதாவது பிரதம மந்திரி ஆகிறவர் தம்முடைய மற்ற மந்திரிகளின் பெயர்களோடு கூடவே இவர்களுடைய பெயர்களையும் கொடுத்துவிடுவார். அவர்களையே அரசர் நியமிப்பார்.

இங்கிலாந்தில் அட்டோர்னி ஜெனரலுக்கு உள்ள பதவி இங்கு அட்வகேட் ஜெனரலுக்கு இருக்க வேண்டுமென்றும், அவருடைய நியமனமும் நீங்குதலும் மந்திரி சபையோடவே நடக்க வேண்டுமென்றும் நாங்கள் நினைத்தோம். கவர்னருடன் அபிப்பிராய பேதம் உண்டான காரணத்தால், அல்லது அசெம்பிளி மந்திரி சபையின் மீது அவநம்பிக்கையை வெளியிட்ட காரணத்தால் மந்திரி சபை ராஜிநாமா கொடுத்தால் அவரும் நீங்கவேண்டும். புதிதாக அமைக்கப்படும் மந்திரி சபைக்கு அந்த இடத்திற்

குப் புதியதோர் ஆளை நியமிக்க (இங்கிலாந்தில் இருப்பது போல) உரிமையிருக்க வேண்டும். இதற்கு நிறைய காரணங்கள் இருக்கின்றன. தனக்கு நம்பிக்கையுள்ளவரும், தன்னுடைய வேலைத் திட்டத்தை முற்றிலும் அறிந்தவரும், மேலும் அதை ஒத்துக் கொள்பவரும் ஆன சட்ட ஆலோசகரை நியமிக்க மந்திரி சபைக்கு உரிமையிருக்க வேண்டும். அவர் அப்படிப்பட்டவராயிருந்தால் தான் மந்திரி சபையின் வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதில் அவர் சட்ட முறையைப் பற்றி எல்லா வகையிலும் முற்றிலும் உதவி புரிய முடியும். பீகாரின் மந்திரி சபை முன் மற்றெல்லாவற்றையும்விட மிகப் பெரிய கேள்வியாக நில வரிச் சட்டத்தைத் திருத்தும் விஷயம் நின்றது. இந்த விஷயத்தில் கருத்து மாறுபாட்டிற்கு நிறைய இடமிருந்தது. மந்திரி சபையின் கருத்தோடு ஒத்த கருத்து கொண்ட தீவிர காங்கிரஸ்காரரே அட்வகேட் ஜெனரல் ஆக வேண்டுமென்று மந்திரி சபை எண்ணம் கொண்டிருந்தது. சர் சுல்தான் ஆனவர் மந்திரி சபையுடன் 'ஆம் ஆம்' என்று ஒத்துப் போகக்கூடிய ஆள் அல்லர். ஏதாவதொரு விஷயத்தைப்பற்றி மந்திரி சபைக்கும் அவருக்கும் அபிப்பிராய பேதம் வந்துவிட்டால் மந்திரி சபைக்கு அவருடைய கருத்துக்களின் உதவியும் அவருடைய திறமையின் பயனும் கிட்டா. இதே காரணத்தால்தான் இங்கிலாந்திலும் அட்டோர்னி ஜெனரலானவர் மந்திரி சபைக் கட்சியின் ஆளாகவே இருந்து வருகிறார். இதை மனத்திற்கொண்டு, மந்திரி சபையானது என் யோசனையைக் கேட்டுக் கொண்டு தன் சொந்த அட்வகேட் ஜெனரலை நியமிப்பதென்று நிச்சயம் செய்தது. சட்ட ஆலோசகரை தேர்வதற்கும் அவரை நியமிப்பதற்கும் தனக்கு உரிமை உண்டென்ற முறையை வழக்கில் கொண்டு வர விரும்பியது. இந்த முறை வழக்கில் வந்து விட்டால், இது காங்கிரஸுக்கு மட்டும் பயன்படாது, எந்தக் கட்சிக்காரரும் தம் மந்திரி சபையை அமைக்கும்போது இந்தச் சம்பிரதாயத்தைப் பயன்படுத்திக் கொண்டு தம் சட்ட ஆலோசகரை நியமிக்கலாம்.

இந்தக் கேள்வி பம்பாய் மாகாணத்திலும் எழுந்தது. அங்கு ஓர் ஆங்கிலேயர் அட்வகேட் ஜெனரலாக இருந்தார். காங்கிரஸ் நியமிக்க விரும்பிய கனவான் அச்சமயத்தில் ஏதோ வெளிநாட்டிற்குச் சென்றிருந்தார். பீகாரில் இவ்விஷயத்தைக் கவர்னரிடம் கூறியதும், மந்திரி சபைக்கு அட்வகேட் ஜெனரலை நியமிக்க உரிமை உண்டென்பதை அவர் ஒத்துக்கொள்ள விரும்பவில்லை. அவர் இந்த விஷயத்தைப் பற்றி சர் சுல்தானுக்கு எழுதினார் என்று

தோன்றுகிறது. சர் சுல்தான் சிம்லாவிலிருந்து ராஜிநாமாவை எழுதி அனுப்பிவிட்டார். மத்திய அரசாங்கத்தில் வேலை பார்த்து வந்த அவருக்கு அவ்வேலையின் கெடுவும் ஏதோ காரணத்தால் தற்செயலாக அப்போது நீடிக்கப்பட்டு விட்டது. இதனால் வெளித் தோற்றத்துக்கு வம்பு தீர்ந்து விட்டது. காங்கிரஸ் மந்திரி சபையானது ஸ்ரீ பல்தேவ் சஹாயை அட்வகேட் ஜெனரலாக நியமித்து விட்டது. ஆனால், பிறகு முசல்மானியர் இந்த விஷயத்திற்கு ஹிந்து-முசல்மான் சண்டை உருக்கொடுத்து விட்டார்கள். சர் சுல்தான் முசல்மானியர் என்ற காரணத்திற்காக விலக்கப்பட்டார் என்று சிலர் கூறத் தொடங்கினார்கள். இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்து வந்தபோது, நான் மந்திரி சபையுடன் இடையறாது இருந்து வந்தேன். இதனால், இந்த நியமனத்தின் போது ஹிந்து முஸ்லிம் என்ற கேள்வி எவருடைய மனத்திலும் ஒரு நிமிஷத்திற்குக்கூட எழவில்லையென்று நான் கூற முடியும். விஷயம் இதுதான். அரசியல் கண் கொண்டு, முக்கியமாக நில வரிச் சட்டத்தைச் சீர்திருத்துவதை மனத்திற்கொண்டு, எதனால் அதிக உதவி கிடைக்கும் என்பதும், சட்ட ஆலோசகரை நியமிப்பதில் இங்கிலாந்தின் வழி முறையைப் பின்பற்றுவதா இல்லையா என்பதும்தாம் கேள்வி. அந்த வழக்கு முறையை அனுசரித்து, கவர்னரானவர் சட்டப்படி பேருக்கு மட்டும் கவர்னராக இருக்கும்படியும், எல்லா அதிகாரமும் மந்திரி சபையின் கையில் வந்துவிடும்படியும் சட்ட அமைப்பில் திருத்தத்தைச் செய்ய வேண்டுமென்று எல்லாரும் எண்ணினார்கள். சட்ட அமைப்பில் இப்போது திருத்தம் செய்ய முடியாத நிலையில், காங்கிரஸானது கவர்னரிடமிருந்து அவர் தம்முடைய விசேஷ அதிகாரங்களைக் கையாளமாட்டார் என்ற வாக்கைப் பெற்றுக்கொண்டு அந்தக் குறையை ஒரு விதமாக ஒழிக்க வேண்டியிருந்தது. இங்குள்ள சட்ட அமைப்பானது இங்கிலாந்தின் சட்ட அமைப்பைப் போலக் கிட்டத்தட்ட அமைவதற்கு உசிதமாக இந்த விஷயம் ஒன்று இருந்தது. இந்த நோக்கத்துடன்தான் மந்திரி சபையானது இதைப்பற்றி அழுத்தமாக வற்புறுத்தியது.

பம்பாயில் ஆங்கில அட்வகேட் ஜெனரல் ராஜிநாமா கொடுத்துவிட்டார். பிறகு இதைப்பற்றி யாதொரு குறையும் கேள்விப்படவில்லை. ஆனால் பீகாரில் இந்த விஷயத்தின் சட்ட சம்பந்தமான உரு கீழே மறைந்துவிட்டது; இதற்கு மத சம்பந்தமான பெருமை உண்டாகிவிட்டது! இது மிகவும் வருந்தத்தக்கது. ஆனால் மந்திரி சபையானது இப்படி நடந்து கொண்ட

தில் மத சம்பந்தமான எண்ணங்களைக் கிட்ட வர விடவேயில்லை யென்றே இன்றுகூட நாங்கள் நினைக்கிறோம். நிலவரிச் சட்டத்தின் திருத்தம் கொண்டு வரப்பட்டபோது இது தெளிவாகி விட்டது. ஆனால் மத சம்பந்தமான பேச்சு வந்துவிட்ட இடத்தில் நம் கண்கள் மற்றெல்லா விஷயங்களைப் பார்ப்பதற்குத் திறமையற்றனவாகி விடுகின்றன.

## 123. குடியானவர்–ஜமீன்தார் ஒப்பந்தம்

மந்திரி சபைகள் அமைக்கப்பட்டபின் இயன்ற வரையில் அவற்றிற்கு, முக்கியமாக பீகாரில், தேவைப்பட்டபடி உதவி புரியும் பொறுப்பு என்னுடையதாயிற்று. முதலில் என் முன் இரண்டு கேள்விகள் எழுந்தன. கான்பூரில் மில் தொழிலாளிகளின் நிலைமையைப் பற்றி விசாரணை செய்து அதைச் சீர் திருத்துவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்ய வேண்டுமென்று ஐக்கிய மாகாணத்தின் முதல் மந்திரியாகிய பண்டித் கோவிந்த வல்லப் பந்த் விரும்பினார். இதற்காக ஒரு குழுவை அமைக்க விரும்பினார். என்னை அதற்குத் தலைவனாக்கவும் விரும்பினார். மிகவும் அவசியமான வேலைதான்; ஆனால் அதைச் செய்வதற்கு எனக்கு யாதொரு சிறந்த தகுதியுமில்லை. ஏனெனில் நான் இது வரையில் தொழிலாளர்கள் இடையில் யாதொரு பணியும் புரிந்தது மில்லை, அவர்களைச் சம்பந்தப்பட்ட விஷயங்களைப்பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்ததுமில்லை. இதுவே ஒரு விதத்தில் எனது சிறந்த தகுதி என்று பந்த்ஜீ நினைத்தார். ஏனெனில் இதனால் எல்லா விஷயங்களையும் நான் தீர விசாரித்துக் கொண்டு எனக்கு எது உசிதமென்று தோன்றுகிறதோ அதைக் கூற இயலுமென்றும், பழைய கர்ம பலன்களின் பிணிப்பில் வசப்பட்டில்லாத காரணத்தால் நான் தற்கால நிலைமையை ஆராய்ந்து அறிந்ததை அடிப்படையாகக் கொண்டு மட்டுமே ஒரு முடிவுக்கு வர இயலும் என்றும் அவர் நினைத்தார். அது மட்டுமின்றி, தொழிலாளர்கள், மில் முதலாளிகள் இருவருக்குமே என்மீது நம்பிக்கை உண்டாகு மென்பதையும், என்னை நியமிப்பதால் இருவரும் மகிழ்ச்சியடைவார்கள் என்பதையும் அவர் உணர்ந்தார். நான் முதலில் மறுத்து வந்தேன். பிறகு கடைசியில், இந்தப் பதவியை நான் ஏற்கத்தான் வேண்டி வந்தது. எல்லை மாகாணத்தில் மந்திரி

சபையை அமைப்பதற்காகப் போய்க் கொண்டிருந்தபோது லக்நோவில் சிறிது நேரம் தங்கினேன். இக்குழுவின் வேலை நான் எல்லை மாகாணத்திலிருந்து திரும்பி வந்த பிறகுதான் முறையாக ஆரம்பிக்கப்பட்டாலும், லக்நோவில் தங்கியபோதே இக்குழுவின் வேலை ஒரு விதமாகத் தொடங்கப்பட்டு விட்டதென்று கூறலாம்.

மற்றொரு வேலையையும் நான் விரைவில் தொடங்க வேண்டி வந்தது. என் மாகாணத்தின் குடியானவர்களோடும் ஜமீன்தார்களோடும் பேச்சு வார்த்தை நடத்தி, சாத்தியப்பட்டால் அவர்கள் இருவரையும் நிலவரிச் சட்டத் திருத்தத்திற்கு ஒத்துவரச் செய்வது தான் இந்த மற்றொரு வேலை. மந்திரி சபை அமைக்கப்பட்ட பின், சில நாட்களுக்குள்ளாகவே இவ்வேலையும் ஆரம்பிக்கப் பட்டது. நாங்கள் 1930–34 சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டிருந்த போது பீகார் கவர்னரின் தூண்டுதலின் பேரில் இங்கு 'யுனைட்டெட் பார்ட்டி' என்ற பெயர் கொண்ட கட்சி ஒன்று பிறந்தது. அச்சமயத்தில் புதிய அரசியல் திட்டத்தைப்பற்றி இங்கிலாந்தில் பேச்சுக்கள் நடந்து கொண்டிருந்தன. புது அரசியல் திட்டத்தில் மக்களுடைய பிரதிநிதிகளுக்கு ஏதாவது உரிமைகள் கட்டாயமாகக் கிடைக்குமென்பதாக எண்ணப்பட்டது. இதனால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டதாயும் ஆயினும் காங்கிரஸைப் போல முற்றிலும் கட்டுக்கு அடங்காதது அல்லாததுமான ஒரு கட்சி அமைக்கப்படுமானால் அது அரசாங்கத்திற்கும் சௌகரியமானதாக அமையும். இந்த எண்ணத்தினால்தான் அப்போதிருந்த கவர்னரும் இக்கட்சி பிறப்பதற்குக் கைகொடுத்து உதவினர். இதே நோக்கத்துடன், அப்போதிருந்த கவுன்ஸிலில் ஜமீன்தார்களின் சார்பிலிருந்து ஒருமசோதாவும் கொண்டு வரப்பட்டது. அதன் மூலமாக நிலவரிச் சட்டத்திற்குச் சில திருத்தங்கள் சமர்ப்பிக்கப் பட்டன. இத்திருத்தங்கள் குடியானவர்களைப் பொறுத்த வரையில் சரியாகவே இருந்தன. இயல்பாகவே வாக்காளர்களுள் பெரும் தொகையாக இருக்கப்பட்ட குடியானவர்கள் இவ்விதமாக யுனைட்டெட் பார்ட்டியுடன் சேர்ந்து கொள்வார்கள் என்றும், அதனால் அக்கட்சி தேர்தலில் வெற்றிபெற இயலுமென்றும் நம்பப்பட்டது. குடியானவர்கள் கைக்குள் அதிகாரம் போய்க் கொண்டிருப்பதால் அவர்களை மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்வதே தமக்கு நன்மையைப் பயக்குமென்று சில நெடிது நோக்கவல்ல ஜமீன்தார்கள் நினைத்தார்கள். குடியானவர்களுடைய கோரிக்கைகள் நியாயமானவை என்றும், ஆதலால் சட்டத்தைத் திருத்து

வது அவசியமென்றும் கருதின ஜமீன்தார்களும் சிலர் கட்டாய மாக இருந்திருப்பார்கள். எது எப்படியாயினும் சரி, முதலில் இருந்தே குடியானவர்களிடையில் தொண்டாற்றி வந்தவர்களும், குடியானவர்களுக்கு வழிகாட்டிகளென்றும் தலைவர்களென்றும் கருதப்பட்டவர்களும்கூட இக்கட்சியில் சேர்ந்து கொண்டார்கள்.

சுவாமி சகஜானந்து கிஸான் சபாவுக்கு விழிப்பூட்டி இந்த மசோதாவை எதிர்த்தார். அந்த எதிர்ப்புக்காகக் குடியானவர் களும் ஒற்றுமையாக அமைக்கப்பட்டார்கள். அக்காலத்தில் காங்கிரஸானது சட்டத்திற்குப் புறம்பானதாக இருந்தது. அத னுடைய பெயரைக் கொண்டு யாதொரு வேலையும் நடக்க முடியாது. அந்த வேலையைச் செய்யக்கூடிய செயலாளர்களும் பெரும் எண்ணிக்கையாகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்தார் கள். இந்த எதிர்ப்பின் பயனாகத் திருத்தங்களில் திருத்தங்கள் செய்யப்பட்டன. முடிவில், நாங்கள் 1938இல் சிறையிலிருந்து வெளியே வந்தபோது எங்கள் எல்லாருடைய யோசனைப்படி திருத்தம் செய்யப்பட வேண்டுமென்று எங்களுடன் பேச்சு நடந்தது. எங்களுடைய ஆட்கள் நெடுங்காலமாகக் கவுன்ஸிலில் இல்லை. காரியம் நெடுந்தூரம் முன்னேறிவிட்டதால் காங்கிரஸின் சார்பில் நாங்கள் யாதும் செய்ய முடியவில்லை. இதுவரையில் செய்யப்பட்ட திருத்தங்களால் என்ன லாபம் கிடைக்கக் கூடுமோ அவை குடியானவர்களுக்குக் கிட்டின. ஆனால் தகராறு தீர வில்லை. தேர்தல் சமயத்திற்குள் கட்சியும் கலைந்துவிட்டது. குடியானவர்களை ஜமீன்தார்களுடன் கூட்டுவதற்குச் செய்த முயற்சி பயனற்றுப் போயிற்று என்பது தேர்தலில் இருந்தும் தெரிய வந்தது. காங்கிரஸானது தன் தேர்தல் அறிக்கையில் குடியானவர்களின் முன்னேற்றத்தைப்பற்றி மிகவும் அழுத்த மாகக் கூறியிருந்தது. இந்த விஷயத்தில் மந்திரி சபையானது விரைவில் ஏதாவது செய்தே தீருமென்பது ஜமீன்தார்களுக்கும் தெரியும். ஆகையால், இருவருமாகக் கூடிப் பேசி ஏதாவது முடிவு செய்துவிடுவது தமக்கு நன்மையென்று ஜமீன்தார்களும் நினைத்தார்கள். ஏனெனில் இப்படிச் செய்வதால், அவர்கள் தம் உரிமையைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு நின்றதால் காங்கிர ஸானது பலவந்தமாகச் சட்டத்தை அமைத்து குடியானவர் களுக்கு நலத்தைப் புரிந்தது என்ற கெட்ட பெயரிலிருந்து தப்ப இயலும். மந்திரி சபை அமைக்கப்பட்ட உடனேயே அவர்களில் முக்கியமானவர்கள் சிலர் மந்திரி சபையைச் சந்தித்தார்கள். நிலவரிச் சட்டத்தையும் குடியானவர்களின் நிலைமையையும்

திருத்துவதைப் பற்றி அரசாங்கம் செய்ய விரும்புவது எதையும் ஜமீன்தார்களுடன் கலந்து பேசிச் செய்யவேண்டுமென்ற ஒரு வேண்டுகோளை செய்தார்கள். தம்மால் இயன்ற வரையில் உதவி புரியவும் அவர்கள் தயாராயிருந்தார்கள். நிலவரிச் சட்டத் திருத்தத்தைப்பற்றிப் பேச்சு வார்த்தை மூலமாக ஏதாவதொரு முடிவுக்கு வர இயலுமானல் அது நல்லதென்பதாக மந்திரி சபையும் கருதியது. நானும் அப்படியே எண்ணினேன். ஏனெனில் அப்படித் தயாரிக்கப்பட்ட சட்டத்தை அசெம்பிளியிலும் கவுன்ஸிலிலும் எளிதில் நிறைவேற்ற முடியும். அதன் மூலமாக அரசாங்கமானது அதிவிரைவில் குடியானவர்களுக்கு நன்மையைப் பயக்க முடியும். மேலும் குடியானவர்களுக்கும் ஜமீன்தார்களுக்கும் இடையில் இருந்து வந்த பகைமையும் குறையும். ஜமீன்தார்களால் சட்டத்தை எதிர்த்து அதை நிறைவேற முடியாமல் செய்ய முடியாது. ஏனெனில் காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலம் நிறைய இருந்தது. ஆனல் சட்டபூர்வ முறையில், ஒவ்வொரு அடிக்கும் ஒரு வாக்குவாதம் செய்து சிறிது காலம் வரையில் அவர்களால் அதைத் தடை செய்ய முடியும்.

புதிய அரசியல் திட்டத்தை ஏற்றுக்கொள்ளவதில்லையென்பதாக, அதாவது அதைப் பயனற்றதாக ஆக்க வேண்டுமென்பதாகக் காங்கிரஸ் முடிவு செய்திருந்தது. சிறிது அனுபவத்திற்குப் பிறகு, விரைவிலேயே மந்திரி பதவியைவிட முடிவு செய்ய வேண்டி வரலாம். ஆகையால் தன்னல் செய்யக்கூடியதை இயன்ற அளவுக்கு விரைவாகச் செய்வதால் மக்களுக்குத் தொண்டும், நன்மையும் உண்டாகுமானல் நல்லதுதான். இது மட்டுமின்றி ஜமீன்தார்களோ பணக்காரர்கள். தமக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொள்வதற்கு அவர்களுக்கு ஆற்றல் உண்டு. ஆனல் குடியானவர்கள் ஏழைகள். மேலும் அவர்கள் அவ்வளவு கட்டுப்பாடாக ஒன்றுபட்டு அமையவில்லை. சட்டத்தை நிறுவிய பின்னும் அதைப் பயனற்றதாகச் செய்வதற்கு வக்கீல்கள் ஆயிரம் வழிகளைக் கண்டுபிடிக்க முடியும். திருத்தமானது, சண்டை போட்டுச் செய்யப்படுமாயின், அரசாங்கம் எத்தனை முயற்சி செய்தாலும்கூட அதைக்கொண்டு லாபத்தைப் பெறக் குடியானவர்கள் பெருங் கஷ்டங்களை எதிர்ப்பட வேண்டிவரலாம். இந்தக் கருத்துக்களையெல்லாம் முன்னிட்டு மந்திரி சபையானது, சமாதானமாக ஏதாவது முடிவுக்கு வர இயலுமானல் நல்லதென்பதாக நினைத்தது. நானும் அதற்குச் சம்மதித்தேன். சமா

தானத்திற்கு முயற்சி செய்வதினுல் ஏதாவதொரு திருப்திகரமான பயனுண்டாகாவிட்டால், பிறகு சமயோசிதப்படி செய்து கொள்ள லாம். சமாதானத்திற்கு முயற்சி செய்வதால், முக்கியமாக ஜமீன் தார்களும் அதை விரும்புவதால், நன்மையே உண்டாகும். இதனுல் சமயம் பார்த்து நான் அவர்களுடன் பேச்சு வார்த் தையை ஆரம்பிக்க வேண்டுவென்று எண்ணப்பட்டது. மௌலானு ஆஜாதும் பார்லிமெண்டரி கமிட்டியில் ஓர் உறுப்பின ராக இருந்தார். ஜமீன்தார்கள் அவரையும் சந்தித்தார்கள். அவருக்கும் இந்த விஷயம் பிடித்திருந்தது. இவ்விதமாக மௌலானு ஆஜாதும், நானும் இருவருமாகச் சேர்ந்து ஜமீன்தார் களின் பிரதிநிதிகளுடன் பட்னுவில் பேச்சு வார்த்தையைத் தொடங்கினேம்.

கிஸான் சபா அல்லது அதன் முக்கிய செயலாளர்களுடன் இந்த விஷயத்தில் எங்களுக்கு எவ்விதமான உறவு இருக்கு மென்ற ஒரு கேள்வியும் எழுந்தது. காங்கிரஸிடம் குடியானவர் களுக்கு முழு நம்பிக்கை உண்டென்பதும் அவர்களுக்கு எது நன்மையென்பதை விசாரித்தறிந்து, அவர்களுடைய நலத்திற் காக இயன்றதை எங்களால் செய்ய முடியுமென்பதும் எங்களுக் குத் தெரியும்.

ஜமீன்தார்களேயும் குடியானவர்களேயும், அவர்கள் விஷயத் தில் நாங்கள் தலேயிடாமல் விட்டுவிட்டு, அவர்களே தமக்குள் ஒப் பந்தத்தைச் செய்து கொண்டால் அது மிகவும் நல்லதாகும். ஆனுல் நாங்கள் கண்டு அறிந்ததிலிருந்து அவ்விரு கட்சியாரும் எந்த விஷயத்திலும் ஒத்துப் போவார்கள் என்ற நம்பிக்கை உண் டாகவில்லே. இதனுல் நாங்கள் அவர்களிடையில் தலேயிடவேண் டியே வரும். இந்த வேலேக்குக் காங்கிரஸ் தகுதியுள்ள தென் பதையும் நாங்கள் உணர்ந்தோம். எந்த விஷயமும் ஓர் ஒப்பந் தத்தின் மூலமாக தீர்க்கப்பட்டால் அதில் எக்கட்சியின் வாதமும், முழுவதுமே ஏற்றுக் கொள்ளப்படாதென்பது எங்களுக்குத் தெரி யும். இரு கட்சியாருமே ஏதாவது விட்டுக் கொடுத்து இறங்கி வரத்தான் வேண்டும். இதனுல் இப்பொறுப்பை அவர்கள் இருவ ரிடம் விடாமல் காங்கிரஸே இவ்வேலேயைச் செய்து முடித்தால் பாதகமில்லே.. இதனுல் என்ன ஆகுமென்றுல், குடியானவர்கள் தமக்குக் கிடைக்கும் சலுகைகளே கௌரவமாகப் பெற்றுக்கொள் ளவும், மேலும், இன்னும் அதிகமாக என்ன கிடைக்க வேண்டு மென்பதாக அவர்கள் நினேக்கிருர்களோ அதைக் கைவிடாமல் கோரிக் கொண்டிருக்கவும் உரிமை உண்டாகும். ஏனெனில்

அவை யாதொரு ஒப்பந்தத்தின் நிபந்தனைகளால் அற்றுப் போக மாட்டா. இந்த விஷயம் ஜமீன்தார்களிடமும் கூறப்பட்டது. நாங்கள் கிஸான் சபாவின் தலைவர்களுடன் இவ்விஷயங்களைப் பற்றி எப்போதும் கலந்து பேசி அவர்களுடைய அபிப்பிரா யத்தைக் கேட்டு வந்தாலும் கிஸான் சபையின் சார்பில் நின்று இப்பேச்சு வார்த்தைகளை நாங்கள் நடத்தவில்லை யென்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள்.

மற்றொரு விஷயத்தையும் தீர்த்து முடிவு கட்ட வேண்டியிருந் தது. இந்த ஒப்பந்தம் நிலவரிச் சட்டத்தைப்பற்றி மட்டும் செய் யப்படுமா அல்லது மற்ற விஷயங்களையும் உள்ளடக்கி யிருக்குமா என்பதுதான் அந்த விஷயம். அரசாங்கத்தின் வருமானத்தைப் பெருக்க வேண்டியது அவசியமாயிருந்தது. அதற்காக மந்திரி சபை ஒரு புதிய வரியைப் போட விரும்பியது. அவ்வரியை ஜமீன்தார்கள்தாம் முக்கியமாகக் கொடுக்க வேண்டி வரும். முடியு மானால் அந்த விஷயத்தையும் இந்த ஒப்பந்தத்தின் மூலமாகத் தீர்த்து முடிவு கட்ட வேண்டுமென்று நாங்கள் எண்ணினோம். பேச்சு வார்த்தை பல நாட்கள் தொடர்ந்து நடந்தது. சதாகத் ஆச்ரமத்தில்தான் இக்கூட்டங்கள் நடந்தன. எனக்கு உடல் சிறிது நலமில்லை. இதனால், அப்பேச்சுக்களுக்காக வந்து போகும் சிரமத்தை எனக்குக் கொடுக்க விரும்பாததால் கூட்டங் கள் ஆச்ரமத்திலேயே நடத்தப்பட்டன. எல்லா விஷயங்களைப் பற்றியும் நாங்கள் ஜமீன்தார்களின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொள்வோம்; மந்திரி சபையுடன் பேசி அதனுடைய அபிப்பிரா யத்தையும் நன்ருகத் தெரிந்து கொள்வோம். இவ்விதமாக எல் லாத் திக்கிலிருந்தும் இவ்விஷயத்தைப் பற்றி முற்றிலும் விசா ரித்தபின் ஏதாவது முடிவுக்கு வருவோம். அதை நாங்களும் ஜமீன்தார்களும் இருவரும் ஏற்றுக் கொள்வோம்.

மூன்று நான்கு கேள்விகள் முக்கியமானவையாக இருந்தன. நிலவரியில் குறைக்கப்பட வேண்டியதை எவ்விதத்தில், எந்த அளவுக்குச் செய்தால் யாருக்கும் அநியாயம் செய்யாமல் எல்லா ருக்கும் நன்மையை பயக்க முடியும் என்பது ஒரு கேள்வி. குத்து மதிப்பாக ரூபாய்க்கு இத்தனை 'அணு என்று வரியைக் குறைத் தால் இது சாத்தியமாகும். ஆனால் மாகாணமெங்கும் ஒரே நிலைமை இருக்கவில்லை. எங்கள் மாகாணத்தில் பீகாவுக்கு நான்கு அணுவிலிருந்து இருபது இருபத்தைந்து ரூபாய் வரை யில் சாகுபடி நிலத்தின்மீது வரி போடப்பட்டு வந்தது. சில இடங்களில் சமீபத்தில்தான் நிலவரி அதிகரிக்கப்பட்டது. சில

இடங்களில் அப்படிச் செய்யப்படவில்லை. சில இடங்களில் மிகவும் அதிகமாகக் கூடுதல் செய்யப்பட்டது. மற்றும் சில இடங்களில் மிகக் குறைவாகச் செய்யப்பட்டது. சில இடங்களில் அதிகரிக்கப்படவே இல்லை. சில இடங்களில் பொருளாகக் கொடுக்கப்படும் வரியைப் பணமாக மாற்றப்பட்டது. சில இடங்களில் அப்படிச் செய்யப்படவில்லை. எல்லா இடங்களிலும் ஒரே விதமாகக் குறைக்கப்படுமானல் சில குடியானவர்களுக்கு நிறைய லாபம் கிடைத்துவிடும். சிலருக்குப் பேருக்கு மட்டும்தான் சலுகை கிடைக்கும். சில ஜமீன்தார்களுக்கு அநியாயம் செய்யப்படும். சிலர் மிக்க மகிழ்ச்சியுடன் தப்பித்துக் கொள்வார்கள். முக்கியமாக, மிகவும் கடுமையான வரியினல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறவர்களுக்கு மிகக் குறைவாகச் சலுகை கிட்டும். எந்தக் குடியானவர்களின் மீது அதிக சுமை இருக்கிறதோ அவர்கள் முன்னிருந்தபடியே சுமையைத் தாங்கி நிற்பார்கள் என்றும், எவர்மேல் சுமை குறைவாக இருக்கிறதோ அது மேலும் குறைந்து போகுமென்றும் கூறினல் மிகையாகாது. எவருக்குச் சலுகை மிகவும் தேவையோ அவர்களுக்கு இல்லையென்றே கூறுமளவுக்குக் குறைவாகக் கிடைக்கும். எவர்மீது வரியானது முன்னமே குறைவாகப் போடப்பட்டிருந்ததோ அவர்களுக்கு இன்னும் அதிக சலுகை கிடைத்துவிடும். இதனல் வரியைச் சராசரியாகக் குறைக்கும் பேச்சை ஜமீன்தார்களும் நாங்களும் ஒத்துக்கொள்ளவில்லை. எங்கு வரி அதிகமாகிவிட்டதோ, அது வரியைக் கூட்டியதால் அதிகமாயிற்ருே அல்லது பொருள் ரூபமாக வரி கொடுப்பதைப் பணமாக மாற்றியதினல் அதிகமாயிற்ருே, எதுவாயினும் சரி, அந்த இடங்களில் நிறையச் சலுகை கிட்டுமாறும், எங்கு வரி குறைவாக இருக்கிறதோ அங்குச் சலுகை குறைவாகக் கிடைக்குமாறும் அல்லது கிடைக்காமலே அமையுமாறும் ஒரு வழி கண்டுபிடிக்கப்பட்டது. நாங்கள் குத்து மதிப்பாகக் கணக்குப் போட்டுப் பார்த்ததில் மாகாணமெங்குமாகச் சேர்ந்து வரியில் ரூபாய்க்கு நான்கு அணு குறையுமென்று நினைத்தோம். சிற்சில இடங்களில் ரூபாய்க்கு எட்டணு வரையில் கூடக் குறையும். வேறு சில இடங்களில் ஒன்றுமே குறையாது. ஒரு ஜமீன்தாரானவர் எவ்வளவுக்குக் கடுமையாக வேலை வாங்கினரோ, எவ்வளவுக்கு வரியை அதிகமாக உயர்த்தினரோ அந்த அளவுக்கு அவருடைய வருமானம் இப்போது குறைந்துவிடும். மிகவும் குறைவாக உயர்த்தினவருக்கு வருமான நஷ்டம் குறைவாகும். முடிவில் அரசாங்க அதிகாரிகள் வரியைக் குறைக்க நடவடிக்கை எடுத்து வரி குறைக்

கப்பட்டபோது நாங்கள் குத்து மதிப்பாய்ப் போட்டத் திட்டம், அதாவது மாகாணத்தில் வரி நாலில் ஒரு பங்கு குறைந்துவிடு மென்று எண்ணியது, பெரும்பாலும் சரியாகவே இருந்தது.

குடியானவர்களுக்கு அவர்கள் சாகுபடி செய்து வந்த நிலத்தைப் பிறருக்கு மாற்றும் உரிமையையளிப்பது மற்ருெரு கேள்வி. பீகாரிலும் அமுலில் இருந்து வந்த வங்காள நிலவரிச் சட்டத்தின் படி இந்த உரிமையானது அவர்களுக்கு இயல்பாகக் கிடையாது. இதனுல் யாதொரு குடியானவனும் தன் சாகுபடி நிலத்தை விற்க முடியாது. ஆனுல் வக்கீல்களின் புத்தி கூர்மையும் நீதிபதிகளின் தீர்ப்புக்களும் சட்டத்தைக் குளறுபடி அடித்து வைத்திருந்தது. எந்த நிலைமையில் எவ்விதமாக சாகுபடி நிலத்தைப் பிறருக்கு மாற்ற இயலுமென்பதைச் சட்ட நிபுணன் அல்லாத ஒருவன் புரிந்து கொள்ள முடியாது. ஓரடியாக விற்கலாமா, அல்லது கடனுக்கு வட்டியைச் சுமத்தி நிலத்தைப் பறிமுதல் செய்து அல்லது நிலத்திற்கு முன் பணம் கொடுத்து அடகு பிடித்து கைமாற்றிக் கொள்வதா என்பன விளங்கா. அப்படி மாற்ற முடியுமாளுல் எந்த அளவுக்கு மாற்றுவது? நிலம் முழுவதையுமா அல்லது அதில் ஒரு பாகத்தையா! ஓரளவு என்ருல் அது எவ்வளவு? இவ்விதமாகப் பல கடினமாக கேள்விகள் எழுந்தன. அவ்வப்போது ஹைகோர்ட்டின் தீர்ப்புக்களும் அளிக்கப்பட்டிருந்தன. இரண்டு நீதிபதிகள் கூடித் தீர்ப்பளித்தால் அதை மூன்று அல்லது ஐந்து நீதிபதிகள் மீண்டும் விசாரணை செய்வார்கள். சில சமயங்களில் அத்தீர்ப்பு மாற்றப்பட்டுப் போகும். சில சமயங்களில் அதில் மேலும் புதிய நுணுக்கங்கள் சேர்க்கப்படும். வங்காளத்திலிருந்து பீகார் தனியாகப் பிரிந்தபின் இங்குள்ள ஹைகோர்ட்டானது தன் சொந்த அபிப்பிராயப்படி நடந்து கொண்டது. அது கல்கத்தாவின் அபிப்பிராயத்தோடு எப்போதும் ஒத்துப் போவதில்லை. இதனுல் இந்த விஷயத்தைப் பற்றிச் சட்டத்தை எல்லாரும், முக்கியமாக குடியானவர்கள், எளிதில் புரிந்து கொள்ளும்படி தெளிவாக்குவது அவசியமாயிற்று. இதற்கு இரு வழிகள் இருந்தன. நிலத்தைப் பிறருக்கு மாற்றுவதற்கு உரிமையே இல்லாமல் செய்து, அந்த உரிமையைச் சட்ட பூர்வமாக ஒழித்துவிடுவது ஒரு வழி. அல்லது முழுக்க முழுக்க உரிமையைப் பெற யாதொரு தடையும் இல்லாமல் செய்துவிடுவது மற்ருெரு வழி. நிலத்தை விற்பதற்கு யாதொரு தர்க்கத்திற்கும் இடமில்லாத சம்பூர்ண உரிமையைக் கிசான் சபாக்காரர்கள் கேட்டார்கள். ஜமீன்தார்கள் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. நிலம்

தம்முடையதென்றும், சாகுபடி செய்ய மட்டுமே அது குடியான வர்களுக்கு அளிக்கப்பட்ட தென்றும், ஆதலால் குடியானவர்கள் அதை விற்க முடியாதென்றும், அவர்கள் வழக்காடினுர்கள். ஆதலால் விற்பதற்கு ஜமீன்தார் அனுமதி அளித்தால்தான் குடி யானவர்கள் விற்கலாமென்று கூறினுர்கள். இந்த விஷயத்தில் கிஸான் சபாவானது மிகவும் அழுத்தமாக இருந்தது.

யாதொரு தட்டுத் தடையின்றி நிலத்தை விற்பதற்குக் குடி யானவர்களுக்கு உரிமை யளிக்கப்படுமாளுல், சின்னஞ் சிறிய குடியானவர்கள் கையிலிருந்து நிலமானது மாறி மற்றவர்கள் கைக்குள் சென்று விடுமென்பது அப்போது என் அபிப்பிராய மாக இருந்தது. இன்றும் நான் அதே அபிப்பிராயத்தைக் கொண்டுள்ளேன். இதனுல் அவர்களேக் காக்கும் நோக்கத்துடன் அவர்களுக்கு இந்த உரிமையானது முற்றிலும் அளிக்கப்படக் கூடாதென்று நான் நினைத்தேன். இன்றும் இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை செய்யப்படுமானுல், இவ்விதமாக நிறைய நிலமானது சிறிது காலத்திற்குள்ளாக ஏழைகளின் கையிலிருந்து மாறி, பணக்காரர்கள் கைக்குள் போய்விடுமென்பதும், நிலமில் லாத கூலியாட்களின் எண்ணிக்கையானது மிகவும் பெருகிவிடு மென்பதும் தெளிவாகுமென்று நினைக்கிறேன். இது என்னுடைய சொந்த அபிப்பிராயம்.

ஆனுல் வாயுள்ள குடியானவர்கள் அனைவரும் இதை எதிர்த் தார்கள் என்பது எனக்குத் தெரியும். ஜமீன்தார்களும் திருத்தச் சட்டத்தில் நிலத்தைக் கைமாற்றும் உரிமையை ஒரு விதமாக முழுக்க முழுக்க ஒத்துக்கொண்டு விட்டார்கள். நிலத்தை விற்ப தானுல் அவர்களுக்கு ஏதாவது கிடைக்க வேண்டுமென்ற ஒரு நிபந்தனை மட்டும் போடப்பட்டிருந்தது. நிலத்தை விற்கும் உரி மையைச் சட்டப்படி ஒத்துக்கொள்வ தென்றும் ஆனுல் ஜமீன் தார்களுக்குக் கிடைத்து வரும் 'சலாமீ'யை (கப்பம்) மேலும் குறைப்பதென்றும் அவர்களுடன் பேசி முடிவு செய்தோம்.

வரி செலுத்தாமல் நிலுவைப் பட்டுவிட்டால் அதற்காகக் குடியானவனை அந்த நிலத்திலிருந்து அப்புறப்படுத்த ஜமீன் தார்களுக்கு பீகாரில் உரிமை யில்லாதிருந்தது. இது மூன்ருவது கேள்வி. அவர்கள் கோர்ட்டில் அவன் மீது வரிக்காகப் பிராது செய்து 'டிகிரி' பெற முடியும். அந்த 'டிகிரி'யைச் செலுத்தி அவனுடைய நிலம் முழுவதையும் ஏலம் போட முடியும். ஏதோ சிறிது வரி நிலுவைப் பட்டுவிட்டாலும் நிலம் முழுவதும் ஏலம் போட்டு விடப்படுகிறதென்பதும், அதனுல் தமக்கு நிறைய

நஷ்டம் விளைகிறதென்பதும் குடியானவர்களின் குறை. பக்கத்து மாகாணமாகிய ஐக்கிய மாகாணத்தில் வரி நிலுவைக்காக குடியானவன் நிலத்திலிருந்து அப்புறப்படுத்த படுகிறனென்பதும் இங்கோ அதைவிடக் குறைவாகவே கடுமை காட்டப்படுகிறதென்பதும் ஜமீன்தார்களின் கட்சி. குடியானவர்கள் மீது இவ்வளவாவது நெருக்கடி செய்யாவிட்டால் அவர்கள் வரி கொடுப்பதில் நிறைய இழுப்பாட்டம் செய்வார்கள் என்றும், மேலும் வரியைத் தண்டல் செய்வதில் ஜமீன்தார்களுக்கு இன்னும் அதிகத் துன்பம் உண்டாகுமென்றும் அவர்கள் கூறினர்கள். முடிவில் எவ்வளவு வரி நிலுவையுள்ளதோ அவ்வளவு விலை பெறுமான நிலத்தை மட்டும் ஏலம் போடுவதென்றும், முழு நிலத்தையும் ஏலம் போடக்கூடாது என்றும் அன்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் எவனொரு குடியானவன் வழக்கமாக வரி கொடுக்காமல் நிலுவை வைத்து வருகிறனே அவனைக் கோர்ட்டானது தீராக் கடன்காரன் என்று முடிவு கட்டிவிட்டால் அவனுடைய நிலம் முழுவதையும் ஏலம் போட்டு விடலாம்.

நான்காவது விஷயம் வரிக்காகத் தானியம் செலுத்துவது சம்பந்தப்பட்டது. பீகாரில், பட்னு, கயாவின் ஒரு பகுதி, முங்கேர் ஆகிய ஜில்லாக்களில், நிலத்தில் விளைந்த தானியத்தில் ஒரு பகுதியை வரிப்பணத்திற்காக கொடுக்கும் பழக்கம் பெரும்பாலும் இருந்து வந்தது. அநேகமாக பாதி விளைச்சல் ஜமீன்தாருக்கும் மற்றொரு பாதி குடியானவனுக்குமாக பங்கிடப்பட்டு வந்தது. பங்கிடுவதற்கு இரண்டு முறைகள் இருந்தன. நிலத்தில் விளைந்ததை ஜமீன்தாரின் முன்னிலையிலே போரடித்துக் களஞ்சியத்தில் சேர்ப்பது ஒரு முறை. பிறகு தானியத்தை நிறுத்து, இரண்டு பங்குகள் போட்டு, ஒரு பங்கைக் குடியானவன் எடுத்துக் கொள்வான், மற்றொரு பங்கு ஜமீன்தாரைச் சேரும். இதை பாவ்லீ—படாயி (விளைச்சலைப் பங்கிடுதல்) என்பார்கள். வேறு ஒரு முறையும் இருந்தது. நிலத்தில் தானியம் முதிர்ந்து அறுவடைக்குத் தயாராக இருக்கும்போது ஜமீன்தாரின் குமாஸ்தாவோ அல்லது ஜமீன்தாரோ வந்து வயலின் ஒரு பங்கின் விளைச்சலை அறுவடை செய்து எவ்வளவு தானியம் கண்டிருக்கிறதென்பதைத் தெரிந்து கொண்டு அதே கணக்குப்படி நில முழுதின் விளைச்சல் மதிப்பிடப்படும். அதில் பாதி ஜமீன்தாருக்கு என்று கொள்ளப்படும். அதை அவர் காலா காலத்தில் வந்து தண்டல் செய்து கொள்வார். இதைத் 'தானபந்தீ' என்பார்கள். ஜமீன்தாரின் ஆள் வராத வரையில், தாம் அறுவடை செய்ய முடியவில்லை யென்றும், ஜமீன்

தார் அவர்களைத் துன்புறுத்த விரும்பியபோது 'தானுபந்தீ' செய்வதற்கு வருவதே யில்லை யென்றும் அல்லது ஏதாவதொரு காரணத்தை முன்னிட்டு தாமதப்படுத்துகிருர் என்றும், அதனுல் தாம் தம் களஞ்சியத்தில் நெல்லை வைத்திருந்தும் சாப்பாட்டிற்கு இல்லாமல் கஷ்டப்பட வேண்டியிருக்கிற தென்றும், மேலும் ஜமீன்தார் இல்லாமல் அறுவடை செய்து தானியத்தைத் தம் வீட்டிற்கு எடுத்துச் சென்றுவிட்டால் ஜமீன்தார் தம்மை நெருக்கடி செய்து மனம் போனபடி தண்டல் செய்து விடுகிருர் என்றும், முரடர்களான ஜமீன்தார்கள் இன்னும் பல வகையில் பொய் வழக்குத் தொடுத்து வருகிருர்களென்றும் குடியானவர்கள் குறை கூறி வந்தார்கள். 'தானுபந்தீ'யைப் பற்றியும் குடியானவர்கள் குறை கூறினுர்கள். தம்முடைய நிலத்தின் விளைவை மனம் போனபடி மதிப்பிட்டுத் தானுபந்தி செய்யப்படுகிற தென்றும், மேலும் பேருக்காக விளைச்சலில் பாதி ஜமீன்தார்களுக்கு கொடுப்பதென்று கூறப்பட்டாலும், உண்மையில் தாம் அவர்களுக்கு அதற்கு மேல் மிக அதிகமாகக் கொடுக்க வேண்டி வருகிறதென்றும் கூறினுர்கள். முன் காலத்தில் சட்டத்தில் ஒரு பிரிவு இருந்தது. அதன்படி, குடியானவர்கள் பண்டமாக வரி கொடுப்பதைப் பின்பற்ற விரும்பாவிட்டால் கோர்ட்டின் மூலமாகப் பண்டத்தை பணமாக மாற்றிக்கொள்ள அவர்களுக்கும், ஜமீன்தார்களுக்கும் கூட உரிமையிருந்தது. கோர்ட்டானது எல்லா விஷயங்களையும் விசாரணை செய்து தான் உசிதமெனக் கருதியதை ரொக்க வரியாக விதிக்க முடியும். இவ்விசாரணையில், கடந்த பல ஆண்டுகளில் தண்டல் செய்யப்பட்டதின் சராசரி விகிதமானது ஒரு முக்கிய அம்சமாக எடுத்துக் கொள்ளப்படும்.

1914–18இன் ஐரோப்பிய மகாயுத்தத்திற்குப் பின் விலையெல்லாம் ஏறிவிட்டது. குடியானவர்களுக்கு விளைவில் பாதியைக் கொடுப்பது கொடுமையாகப் புலப்பட்டது. பலர் கோர்ட்டின் மூலமாக ரொக்க வரியாக மரற்றிக் கொண்டார்கள். ஆனுல் விலையேற்றத்தால் தானியத்தின் விலையும் அதிகமாகி விட்டதால் தண்டலின் மதிப்புத் திட்டமும் அதிகமாகி விட்டது. 1929–30க்குப் பிறகு விலை இறங்கியதும் அந்த ரொக்க வரியை விளைச்சலில் இருந்து செலுத்தவே முடியவில்லை. வரியைக் குறைக்க வேண்டுமென்ற காரணங்களில் இது ஒரு முக்கிய காரணம். குடியானவர்கள் விண்ணப்பம் செய்தால் பண்டமாக வரி கொடுப்பதைக் கட்டாயமாக ரொக்க வரியாக மாற்ற வேண்டுமென்றும், முதலாளியின் பங்கு எட்டணுவிலிருந்து குறைக்கப்பட வேண்டுமென்றும்

இந்தத் திருத்தத்தால் இப்போது நிச்சயிக்கப்பட்டது. சிறி தளவு குறைக்கவும் பட்டது.

மேலே கூறப்பட்டவைதாம் நிலவரிச் சட்டத்தின் முக்கிய திருத்தங்கள். இதைத் தவிர அரசாங்கமானது விவசாய வருமான வரி என்ற புது வரி ஒன்றை விதிக்க விரும்பியது. அதைப்பற்றி யும் ஜமீன்தார்களோடு ஒப்பந்தம் செய்யப்பட்டது. எவரெவர் மீது விதிப்பதென்பதும், எவரெவரின் மீது விதிக்கப்படா தென்பதும் பேசி முடிவு செய்யப்பட்டன. இவற்றை யெல்லாம் நான் மேல் வாரியாக இங்குக் கூறியிருக்கிறேன். ஆனால் இவற்றில் எல்லாம் நிறைய நுணுக்கமான விஷயங்கள் இருந்தன. அவற்றைத் தீர்க்க நிறையக் காலம் பிடித்தது. என்னுடனும் மௌலானா ஆஜாதுடனும் பேசி இந்த விஷயங்கள் ஒரு முடிவுக்கு வந்தபின் சட்டத்தைத் தயாரிப்பதிலும் அதன் சொற்களைத் திருத்தியமைப் பதிலும் நிறையக் காலம் கழிந்தது. நிறையப் பேச்சு வார்த்தை யும் நடத்தவேண்டி யிருந்தது. சட்டத்தைத் தயார் செய்யும் போது தலைமை மந்திரியானவர் இரு கட்சியாருடனும் பேசி முடிவு கட்டினார். இந்த ஒப்பந்தத்தினால் இச்சட்டமானது இரு கட்சியாரின் சம்மதத்துடன் சில மாதங்களுக்குள்ளாகவே நிறை வேற்றப்பட்டு விட்டது. அரசாங்கமானது 1938இலேயே புதுச் சட்டப்படி குடியானவர்களுக்கு வரியைக் குறைத்து பட்டாக் களைத் திருத்துவதற்காக பல அதிகாரிகளை நியமித்து விட்டது. அவர்கள் இந்த வேலைக்காக வென்றே புதிதாக நியமிக்கப்பட் டார்கள்.

1939 நவம்பரில் காங்கிரஸ் மந்திரி சபை ராஜீநாமா செய்த போது, வரியைக் குறைத்துப் பட்டாக்களைத் திருத்தும் வேலையும் அநேகமாக முடிந்துவிட்டது. புதிய வரியும் ஜமீன்தார்களின் மீது போடப்பட்டாயிற்று. இதைப்போல வேறு எந்த மாகாணத் திலும் செய்யப்படவில்லை. ஐக்கிய மாகாணத்தில் உடன் படிக்கை உண்டாகவில்லை. அங்குச் சட்டத்தை அமைப்பதில் ஒவ்வொரு அடிக்கும் ஜமீன்தார்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டி வந்தது. ராஜீநாமாவுக்குச் சிறிது காலத்திற்கு முன் அங்குச் சட்டம் நிறைவேற்றப்பட்டாலும், அதற்கு கவர்னரின் சம்மதம் ராஜீநாமாவுக்குப் பிறகுதான் கிடைத்தது. அதை அனுசரித்து எவ்வளவு தூரம், எப்பொழுது, நடவடிக்கை எடுக் கப்பட்ட தென்பதை நான் அறியேன். ஒரிசாவில் சட்டத்தை நிறைவேற்றவே முடியவில்லை. மதராஸில் மந்திரி சபையானது ஒரு குழுவை நியமித்தது. அது மிகவும் பாடுபட்டு உழைத்து

ஒரு அறிக்கையைத் தயார் செய்தது. ஆனால் அதன் மீது வேலை தொடங்குவதற்கு முன்னமே மந்திரி சபை ராஜீநாமா செய்து விட்டது. அந்த அறிக்கை அப்படியே கிடந்து போய்விட்டது. வங்காளத்தில் காங்கிரஸ் மந்திரி சபை இல்லாவிட்டாலும், அங்கும் ஒரு குழு அமைக்கப்பட்டது. அதுவும் ஒரு அறிக்கையைச் சமர்ப்பித்தது. ஆனால் அதன் மீது இதுவரையில் யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப் படவில்லை. பீகாரில் இந்த ஒப்பந்தத்தின் மூலமாகக் குடியானவர்களுக்கு அதிவிரைவில் சலுகை அளிக்க முடிந்தது. எல்லா விஷயங்களும் ஒப்பந்தத்தால் முடிவு கட்டப்பட்டு விட்டதால், இரு கட்சிகாரர்களும் மந்திரி சபையைத் தாக்கி வந்தார்களாயினும் (ஜமீன்தார்களும் குறை கூறி வந்தார்கள், கிசான் சபாக்காரர்களும் குறை கூறி வந்தார்கள்) இரு கட்சிகளுக்கு இடையில் பகைமை வளரவில்லை. கிசான் சபாக்காரர்கள் மட்டும் புத்திசாலித்தனமாக வேலை செய்து மந்திரி சபையின் நடவடிக்கைகளைப் பயன்படுத்திக் கொண்டு தம்முடைய மற்ற மற்றக் குறைகளையும் ஒழிப்பதற்கு முயற்சி செய்திருப்பார்களானால் மந்திரி சபை இன்னும் நிறைய வேலையைச் செய்திருக்கலாமென்று நான் நம்புகிறேன். ஆனால் அவர்கள் அப்படி நடந்து கொள்ளவில்லை. அவர்கள் ஜமீன்தார்களை விட அதிகமாகவே மந்திரி சபையைத் தாக்கிக் கொண்டிருந்தார்கள். அதனுடைய கஷ்டங்களைப் பெருக்குவதற்கு அவர்கள் நிறைய உதவினார்கள்.

ஒரு விஷயத்தைப் பற்றித் தகுந்தபடி முடிவு செய்ய முடியவில்லை. அதனால் மந்திரி சபையானது நிறையக் கஷ்டத்தை அனுபவிக்க வேண்டி யிருந்தது. கிசான் சபாவுக்கும் அதைக் குறை கூறுவதற்கும் தூற்றுவதற்கும் நிறைய வாய்ப்பு கிடைத்தது. வரி நிலுவைக்காக ஏலம் போடப்பட்டு ஜமீன்தார்களால் வாங்கப்பட்ட நிலமானது குடியானவன் எவனிடமாவது சாகுபடிக்கு விடப்படுமானால், அப்படிச் சாகுபடிக்கு விட்டதை தொடர்ந்து அந்தக் குடியானவனுக்கு அதை பிறர் கைக்கு மாற்றும் உரிமையும் உண்டாகிவிடும். பல இடங்களில் இவ்விதமாக ஏலத்தில் வாங்கப்பட்ட நிலங்கள் ஜமீன்தார்களின் கையில் நிறையக் கிடந்தன. இவர்களைச் சட்ட பாஷையில் 'பகாஸ்த் மாலிக்' (விவசாயம் செய்யாத முதலாளி) என்பார்கள். நிலத்தைக் கை மாற்றும் உரிமையைக் குடியானவர்களுக்கு அளிக்க ஜமீன்தார்கள் விரும்பவில்லை. ஏனெனில் ஒரு முறை அந்த உரிமை உண்டாகி விட்டால் குடியானவனுக்கு நிலத்தின் மேல் முழு உரிமையும்

உண்டாகிவிடும். அந்த உரிமை அவன் இறந்தபின் அவனுடைய வாரிசுக்கு கிடைத்துவிடும். முதலாளி வரியை மட்டும் தான் தண்டல் செய்ய முடியும். குடியானவனை நிலத்தை விட்டு அகற்ற முடியாது. மேலும் இப்போது போலத் தண்டலுக்காக நிலம் முழுவதையும் ஏலம் போடவும் முடியாது. இதனுல், ஜமீன்தாரானவர் தம்மால் முடியுமானுல் அந்நிலத்தைத் தாமே சாகுபடி செய்வார், அல்லது ஏதாவதொரு வகையில் முறைப்படி சாகுபடிக்கு விட்டுக் குடியானவனுக்கு நிலத்தை விற்கும் உரிமை சேராமல் செய்ய விரும்புவார். தாம் நிலத்தை விற்கும் உரிமையை வற்புறுத்தினுல் ஜமீன்தார்கள் நிலத்தைக் குத்தகைக்குக் கொடுக்காமல் அவர்கள் வசமே வைத்துக்கொண்டார்கள் என்பதைக் குடியானவர்கள் கண்டார்கள்.

இதனுல் பல குடியானவர்கள் இந்த விஷயத்தை மனத்தில் கொண்டு ஓராண்டிற்கு மட்டுமே நிலேத்தைச் சாகுபடி செய்ய எடுத்துக்கொள்வார்கள். ஆண்டின் முடிவில், ஜமீன்தார் விரும்பினுல் நிலத்தை மீண்டும் எடுத்துக்கொள்வார் அல்லது நிலத்தை விற்கும் உரிமையைக் கொண்டாடுவதில்லேயென்ற நிபந்தனைக்கு உட்படுத்தி குடியானவர்கள் கையிலேயே விட்டுவிடுவார். இவ்வண்ணமாக, இதுபோன்ற நிலம் நிறைய இருந்தது. அதை விற்கும் உரிமையானது சட்ட முறைப்படி குடியானவனுக்கு உண்டாகியிருக்கலாம். ஆனுல் அதை நிரூபிப்பதற்குக் குடியானவர்களிடம் வழியாவது பிரமாணமாவது கிடையாது. பெரிய ஜமீன்தாரிகளில், ஏலத்தில் வாங்கப்பட்ட நிலமானது பெரும்பாலும் மீண்டும் சாகுபடிக்கு விடப்பட்டுவிடும். ஏனெனில் அவர்களால் எல்லா நிலத்தையும் தாமே சாகுபடி செய்ய இயலாது. ஆனுல் சின்னஞ் சிறிய ஜமீன்தார்கள் இதை எளிதில் செய்ய முடியும். சில பெரிய ஜமீன்தார்கள்கூட இச்சமயத்தில் மோட்டார் ஏர்கள் மூலமாக பேரளவில் விவசாயம் செய்வதைப் பற்றி யோசித்து வந்தார்கள். இதனுல் அவர்கள் (பகாஸ்து) நிலத்தைக் குடியானவர்கள் வசம் செல்ல விட விரும்பவில்லே. இந்தச் சண்டையை அச்சமயத்தில் தீர்க்க வழி கிடைக்கவில்லே. பல இடங்களில் குடியானவர்கள் இது போன்ற 'பகாஸ்து' நிலத்திற்குச் சென்று சத்தியாக்கிரகத்தின் மூலமாக அதைக் கைப்பற்ற முயன்ருர்கள். அரசாங்கம் இதைத் தடுக்க வேண்டி வந்தது. காங்கிரஸ் மந்திரி சபை இருந்தவரையில் இந்தச் சண்டை நீடித்து நின்று வந்தது. இது காரணமாக அது நிறையக் குற்றச்சாட்டுகளேயும் வசவையும் கேட்க வேண்டி வந்தது. ஆனுல் காங்கிரஸ்

மந்திரிசபை ராஜீநாமா செய்தபின் இச்சண்டை தானாகவே அற்றுப்போய் விட்டது போலத் தெரியவந்தது. ஏனெனில் இதற்குப் பின் சத்தியாக்கிரகத்தைப் பற்றிப் பேச்சு எங்கும் கேட்கப்படவில்லை. இந்த ஒப்பந்தத்தை வைத்துக்கொண்டு கிசான் சபாவைச் சேர்ந்த சிலர் மந்திரி சபையின் மீதும், என் மீதும் எங்குப் பார்த்தாலும் குறை கூறி வந்தார்கள். ஆனால் இந்த ஒப்பந்தத்தின் மூலமாக நாங்கள் குடியானவர்களுக்கு எத்தனை சலுகைகளை அளித்தோமோ அவ்வளவுக்கு வேறு எந்த மாகாணத்திலும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை யென்பதை நான் அறிவேன்.

கிசான் சபா ஒப்பந்தத்தில் கலந்து கொள்ளவில்லை. அதனால் என்ன லாபம் உண்டோ அதைப் பெற்றுக்கொண்டு எஞ்சியதற்கு தன் கோரிக்கையை விடாமல் செய்து வரவும், அதற்காக மந்திரி சபையையும் ஜமீன்தார்களையும் தூண்டுதல் போட்டுக் கொண் டிருப்பதற்கும், மேலும் பயனற்ற சண்டையால் தனது ஆற்றலை வீணாக்காமல் அதை ஆக்க வேலை முறையில் குடியானவர்களின் நிலைமையைச் சீர்திருத்துவதற்காகப் பயன்படுத்துவதற்கும் கிசான் சபாவுக்கு முழு உரிமை இருந்தது. ஆனால் துர்ப்பாக்கிய வசமாக அதனுடைய ஆற்றலின் பெரும் பங்கு மந்திரி சபையை எதிர்ப்பதிலேயே செலவழிக்கப்பட்டது. சத்தியாக்கிரகம் தீவிர மாகத் தொடங்கப்பட்ட இடங்களில் மந்திரி சபையானது நிறையக் கஷ்டங்களை ஏற்க வேண்டி வந்தது. கெட்ட பெயரையும் வாங்கிக் கொள்ள வேண்டி வந்தது.

## 124. கான்பூர் தொழிலாளர் குழு

இந்த ஒப்பந்தத்தை முடித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் நான் நோய்வாய்ப்பட்டு விட்டேன். 1937–38இன் குளிர்காலத்தில் சில நாட்களுக்கு என் கிராமத்திற்குச் சென்றுவிட்டேன். சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு, முன்னமே பேசி நிச்சயிக்கப்பட்ட கான்பூர் தொழிலாளர் குழு வேலையில் ஈடுபட வேண்டும். செய லாற்றுக் குழுவின் இருக்கையில் கலந்து கொள்வதற்காக நான் வர்தாவுக்குச் சென்றேன். அங்கிருந்து கான்பூருக்கு வருவதாக இருந்தேன். வழியில் ஏதோ உண்டதில் கெடுதல் உண்டாகி விட்டது. பிறகு, உணவில் ஏதோ விஷம் கலந்துவிட்டதென்ற

ஐயம் உண்டாயிற்று. லக்நோ வழியாகக் கான்பூர் வந்து சேர்ந்த போது உடம்பு மிகவும் கெட்டுவிட்டது. ஆயினும் குழுவின் வேலையைச் செய்துவந்தேன். விசாரணை வேலையை முடித்து விட்டேன். இக்குழுவில் என்னைப் போன்ற நடுவு நிலைமை வகித்தவர்கள் மட்டுமன்றி மில் முதலாளிகளின் பிரதிநிதிகளும், தொழிலாளிகளின் பிரதிநிதிகளும் உறுப்பினர்களாக இருந்தார் கள். இரு தரத்தாரின் பிரதிநிதிகளையும் சேர்த்துப் பிடித்து குழுவின் வேலையை முடிப்பது கடினமாகுமென்பது விரைவிலேயே தெரியவந்தது. மில் முதலாளிகள், தொழிலாளர்கள் இருவரின் கட்சியையும் நன்ருக அறிந்து புரிந்துகொண்டு தம் அபிப்பிரா யத்தை அளிக்கக்கூடியவர்கள் உறுப்பினர்களாக அமைந்தால் (அதாவது அவர்கள் கூறியபடி அபிப்பிராயம் அளிக்கக் கட்டுப் பட்ட நேரடியான பிரதிநிதிகள் அல்லாதார்) இவ்வளவு கஷ்ட மாகாது. அவர்கள் மீதும் அவ்வளவு நிர்பந்தமுமிருந்திருக்காது. ஆனால் விசாரணை முழுவதும் ஒரே இடத்தை, அதுவும் அந்த இடத்தில் உள்ள ஒரே வகையான தொழிற்சாலையைச் சம்பந்தப் பட்டிருந்தது. இதனுல், அந்த இடத்து மில் முதலாளிகள், தொழி லாளர் ஆகியவர்களின் பிரதிநிதிகளுக்குத் தம்மை நியமித்தவர் களின் கருத்துக்களுக்கு இசைய பிரதிநிதிகளாக அங்கு வேலை புரியும் கடப்பாடு வந்துவிடுகிறது. இந்த எண்ணங்களை மனத்திற் கொண்டு அரசாங்கமானது ஸ்ரீ சிவராவை ஒரு உறுப்பினராக நியமித்தது. அவருக்கு மதராஸ் மாகாணத்தின் தொழிலாளர் சங்கங்களில் நிறைய அனுபவம் உண்டு. பேராசிரியர் ருத்ரா முதலில் இருந்தே உறுப்பினராக இருந்தார். மில் முதலாளி களின் பிரதிநிதிகளும் தொழிலாளர்களின் பிரதிநிதிகளும் விசா ரணைக் குழுவின் முன் வரும் காகிதங்கள், சாட்சிகள் ஆகிய வற்றின் சம்பந்தமாகக் கேள்விகளைக் கேட்கவும் விசாரணை செய்யவும் கூடுமாணுலும், அப்படியே அவர்கள் செய்தார்களாயி னும், இறுதி அறிக்கையின் பொறுப்பு எங்கள் மூவர் மீதும்தான் விழுந்தது. நான் நோய்வாய்ப்பட்டு விட்டேனுயினும், வாக்கு மூலங்களை வாங்குவது முதலிய வேலைகளை முடித்துவிட்டேன். ஆயினும் மில்களைச் சுற்றி வந்து எல்லா விஷயங்களையும் நேரே பார்க்க இயலவில்லை. ஏனெனில் பலவீனப்பட்டு விட்டேன். இதனுல் வேலையை முடித்துக்கொண்டு நான் பட்னுவுக்கு வந்து விட்டேன். சிறிது ஓய்வு எடுத்துக்கொண்டு, மற்ற உறுப்பினர் களைச் சந்தித்து அறிக்கையைத் தயார் செய்யலாமென்று நினைத்தேன்.

பட்னுவில் மாகாணக் குழுவின் இருக்கை நடந்தது. அதில் வரி சம்பந்தமான ஒப்பந்தத்தைப்பற்றி ஆலோசனை செய்வதாக இருந்தது. அங்கு நிறைய வாதம் நடந்தது. மாகாணக் குழுவானது அதை மாபெரும்பான்மை பலத்துடன் அங்கீகரித்தது. ஆனால் கான்பூரில் கண்ட பலவீனம் இன்னும் என்னைத் தொந்தரவு செய்துகொண்டிருந்தது. நான் வேலை செய்துகொண்டிருக்கும்போதே இரண்டு முறை நினைவிழந்து விழுந்துவிட்டேன். ஆனால் இந்த நிலைமையை யாருக்கும் தெரிய விடவில்லை. அன்றே வேலையை முடித்துக்கொண்டு ஓய்வு பெறுவதற்காக ஜீராதேயீக்குப் போய்விட வேண்டுமென்று நினைத்தேன். அதே நோக்கத்துடன் புறப்பட்டேன். அனுக்கிரக பாபூ ஏதோ வேலையாக கயாவுக்குச் சென்றார். தாவூத் நகருக்குப் பக்கத்தில் இரவு வேளையில் அவருடைய மோட்டார் வண்டி சாலையினின்று திரிந்து சென்று ஒரு மரத்தின் மீது மோதிவிட்டது. அவர் கடுமையாகக் காயமடைந்தார். அவருடன் இருந்த பண்டித் பாரஸ்நாத் திரிபாடீ அங்கேயே இறந்துவிட்டார். மோட்டார் ஓட்டுபவனுக்கும் காயம்பட்டது, ஆனால் அதிகமாக அன்று. அனுக்கிரக பாபூ எப்படியோ பட்னுவுக்குக் கொண்டுவரப்பட்டு மருத்துவ சாலையில் சேர்க்கப்பட்டார். ஜீராதேயிக்குப் போகும்போது அவரை மருத்துவசாலையில் பார்த்துவிட்டு அங்கிருந்தே கப்பலில் போய்விடலாமென்று நினைத்தேன். அப்படியே செய்தேன். ஆனால் கப்பலுக்குப் போய்ச் சேர்வதற்குள் மிகவும் களைத்துப் போய்விட்டதால் அங்குப் போய் உடனே படுத்துக்கொண்டேன். மிகவும் கஷ்டப்பட்டு எப்படியோ சோன்பூர் செல்லும் ரயில் வண்டியில் ஏறிக்கொண்டேன். ஆனால் தற்செயலாக என் தமையனாரின் மகன் ஜனார்த்தனன் ஜெம்ஷெட்பூரிலிருந்து விடுமுறையில் அதே வண்டியில் ஊருக்கு வந்துகொண்டிருந்தான். அவன் எனக்கு இடம் பிடித்துக் கொடுத்தான்.

நாங்கள் இருவரும் பண்டாபோகர் ஸ்டேஷனுக்கு இரவு ஒன்பது மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கு ரயிலில் இருந்து இறங்கும்போதே கான்பூரில் நடந்தது போலவே கடுமையாக வாந்தி ஆரம்பித்துவிட்டது. நான் எப்படியோ பல்லக்கில் ஜீராதேயிக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்குச் சில நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டால் சரியாகப் போய்விடுமென்று நினைத்தேன். ஆனால் அன்றிரவே நிலைமை மோசமாகிவிட்டது. ஜநார்த்தனனும், மிருத்யுஞ்சயனும் அன்று அங்கிருந்தார்கள். நிலைமை கெடுவதைக்கண்டு பட்னுவுக்குச் செய்தி அனுப்பினார்கள். சீவான்

டாக்டர் காலையில் வந்து சேர்ந்தார். சிறிது நேரத்திற்குப் பின் சப்ராவிலிருந்து டாக்டர் சூர் வந்துவிட்டார். உணவில்தான் ஏதோ விஷமிருந்தது என்பதாக எல்லாரும் ஐயப்பட்டார்கள். அவர்கள் அதற்கு வைத்தியம் செய்யத் தொடங்கினார்கள். இரவில் பட்னாவிலிருந்து டாக்டர் பனர்ஜீயும், டாக்டர் சரணும் வந்து சேர்ந்தார்கள். இரண்டு மூன்று நாட்களில் நிலைமை நல முற்றது. ஆனால் இப்போது இழுப்பு நோய் பலமாக ஆரம்பித்து விட்டது. டாக்டர் கோஷாலும் பட்னாவிலிருந்து வந்துவிட்டார். ஒரு வாரம் வரையில் அங்கேயே வைத்தியம் செய்யப்பட்டது. பட்னாவுக்கு எடுத்துச் செல்லப்படுவதற்கு நான் தகுதியாகி விட்டேனென்பதை டாக்டர்கள் கண்டதுமே, அவர்கள் என்னைப் பட்னாவுக்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு நான் மருத்துவ சாலையில் சேர்க்கப்பட்டேன். குடும்பத்தாரும் கூட இருந்தார்கள். நோய் சில நாட்கள் வரையில் கடுமையாக இருந்தது. பிறகு மெல்ல மெல்லக் குறைந்தது. சில நாட்களுக்குப் பின் அனுக்கிரக பாபூ இருந்த அதே குடிலுக்கு நானும் எடுத்துச் செல்லப் பட்டேன். நாங்கள் இருவரும் ஒரே இடத்தில் இருந்தாலும், அவர் கீழே இருந்த அறையிலும் நான் மாடியில் ஓர் அறையிலும் இருந்ததால், பல நாட்கள் வரையில் நாங்கள் சந்திக்க முடியவில்லை. அவர் கட்டிலில் திரும்பிப் படுக்கக்கூட முடியாம லிருந்தார். என்னால் படிக்கட்டில் இறங்கி வர முடியாது. அங்கே நான் சுமார் இரண்டு மாதங்கள் வரையில் இருந்தேன். மெல்ல மெல்ல உடம்பில் சிறிது பலமும் வரத் தொடங்கியது. சில நாட்களுக்குப் பிறகு நான் கீழே இறங்கிச் சென்று அனுக்கிரக பாபூவுக்கு அருகில் உட்கார்ந்திருக்கத் தொடங்கினேன். அவர் கட்டிலில் படுத்தபடியே அரசாங்கக் காகிதங்களைப் பார்வையிட்டு உத்திரவு இடுவார். ஆரம்பத்தில் ஓரடியாகச் செயலற்றுக் கிடந்த சில நாட்கள் போக, அதாவது யாதொரும் வேலையும் செய்ய முடியாமலிருந்த நாட்கள் நீங்கலாக, அவர் எப்போதுமே வேலை புரிந்து வந்தார்.

# 125. ஹரிபுரா காங்கிரஸ் : மந்திரி சபைகளின் ராஜீநாமா

நாங்களிருவரும் அந்த மருத்துவ சாலேயின் கட்டடத்தில் இருந்து வந்த சமயத்தில் ஹரிபுரா காங்கிரஸ் விழா நிகழ்ந்தது. நாங்கள் இருவரும் அதற்குப் போகமுடியவில்லே. காங்கிரஸானது 1937 ஜுலையில் மந்திரி சபைகளே அமைத்தது. ஹரிபுரா விழா 1938 பிப்ரவரியில் நடந்தது. அந்த ஏழெட்டு மாதங்களில் மந்திரி சபைகள் தம் வேலேகளேயெல்லாம் மும்முரமாகத் தொடங்கிவிட்டன. ஆனுல் இதுவரையில் யாதொரு வேலேயையும் முடிக்க இயலவில்லே. இந்தச் சமயத்தில் ஓர் இடைஞ்சல் உண்டாயிற்று. அரசியல் கைதிகளே விடுதலே செய்வதாக காங்கிரஸின் தேர்தல் அறிக்கையில் ஒரு வாக்களிக்கப் பட்டிருந்தது. இதற்காக மந்திரி சபைகள் முயற்சி செய்து கொண்டிருந்தன. ஆனுல் முழுக்க வெற்றி உண்டாகவில்லே. இதற்கிடையில் அந்தமான் தீவிலிருந்த அரசியல் கைதிகள் உண்ணுவிரதத்தை ஆரம்பித்து விட்டார்கள். அவர்களே அத்தீவிலிருந்து அகற்றி இந்தியாவில் அவரவர்களுடைய மாகாணத்திற்கு அனுப்பி வைப்பதற்கு இந்திய அரசாங்கத்தை ஒத்துக் கொள்ள வைக்க நிறையக் கஷ்டப்பட வேண்டியிருந்தது. இங்கு வந்துவிட்டதும், அவரவர்கள் பெரும்பாலும் மாகாண அரசாங்கத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்களாகிவிட்டார்கள். இப்போது, அவர்களே விடுதலே செய்யும் கேள்வி எழுந்தது. மந்திரி சபைகள் அவர்களே விடுதலே செய்ய விரும்பின. ஆனுல் கவர்னர்கள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லே. மௌலான அபுல்கலாம் ஆஜாத் பட்ணுவிற்கு வந்து, நோயாய்க் கிடந்த என்னே மருத்துவ சாலேயில் சந்தித்தார். நான் அவரிடம் அதிகமாகப் பேச முடியவில்லே. அவர் அங்கிருந்து சென்று சர்தார் வல்லபாயீயையும் மகாத்மாஜீயையும் சந்தித்தார். கவர்னர்கள் அரசியல் கைதிகளே விடுவிப்பதற்குச் சம்மதிக்கா விட்டால் மந்திரிகள் ராஜீநாமா செய்து விடுவதென்பதாக எல்லாருமாகச் சேர்ந்து முடிவு செய்தார்கள். ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும் மந்திரி சபைகள் இந்த விஷயத்தை மிகவும் அழுத்தமாக வற்புறுத்தின, ஆனுல் கவர்னர்கள் சம்மதிக்கவில்லே. முடிவில் ஹரிபுரா காங்கிரஸுக்குச் செல்வதற்குமுன் மந்திரி சபைகள் இரண்டு இடங்களி

லும் ராஜீநாமா கொடுத்துவிட்டன. அதைக் கவர்னர் உடனே ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் இந்த விஷயத்தைப் பற்றி யோசித்து வரும் வரையிலும், மேலும் வேறு மந்திரிகளைத் தேடிப் பிடிக்கும் வரையிலும் அவர்கள் வேலையைத் தொடர்ந்து நடத்தி வரவேண்டுமென்று கூறி இந்த விஷயத்தைத் தட்டிக் கழித்துவிட்டார். பீகாரின் மற்ற மந்திரிகள் எல்லாரும் ஹரிபுராவுக்குச் சென்று விட்டார்கள். அனுக்கிரக பாபூ மட்டும்தான் கட்டிலில் படுத்தபடி வேலை புரிந்து கொண்டிருந்தார். நானும் அவருக்கு அங்கே துணைபுரிந்து வந்தேன்.

இந்த ராஜீநாமா என்ன செய்கிறதென்பதைப் பார்க்க வேண்டியிருந்தது. வைசிராயும் கவர்னர்களும் தமது விசேஷ அதிகாரத்தை உபயோகிக்க மாட்டோமென்று வாக்களிக்காவிட்டாலும், அவர்கள் அந்த அதிகாரத்தைப் பயன்படுத்த விரும்பியது இதுதான் முதல் தடவையாகும். ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும் காங்கிரஸ் மந்திரி சபைகள் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை. பதவியைத் துறந்துவிட்டன. காங்கிரஸ் மந்திரி சபைகள் தம் வாக்கிலிருந்து பிரளமாட்டார்கள் என்பதும், தாம் கூறியதைச் செய்ய முடியாவிட்டால் தம் பதவியைத் துறந்து விடுவார்களே அன்றி தம் வாக்கைக் கைவிடமாட்டார்கள் என்பதும் நாடு முழுவதுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கும் தெளிவாகி விட்டன. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் மந்திரி சபைக்கும் இருவருக்குமே இதுதான் முதல் சோதனை. பிரிட்டிஷ் அரசாங்கமானது மந்திரி சபையின் பேச்சை ஏற்றுக் கொண்டது. அரசியல் கைதிகளை விடுவிக்கும் பொறுப்பை அதனிடம் விட்டு விட்டது. ஹரிபுராவில் ராஜீநாமாவின் செய்தி எட்டியதுமே சூழ்நிலை ஓரடியாக மாறிவிட்டது. மந்திரி பதவியை எதிர்த்தவர்களுக்கும் மந்திரி பதவியை ஏற்ற பிறகு மந்திரிகள் தம் இடத்தில் ஒட்டிக் கொண்டு இருந்துவிடுவார்கள் என்றும் தம் வாக்கை மறந்துவிடுவார்கள் என்றும் கூறிவந்தவர்களுக்கும் கண் திறந்துவிட்டது. அவர்கள் உண்மையாகவே அப்படி நினைத்திருந்தார்களானால் இப்போது அவர்கள் தம்முடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டி வந்தது. நான் காங்கிரஸுக்குப் போக முடியவில்லை. ஆனால் நான் கேள்விப்பட்டதிலிருந்து மந்திரி பதவியை ஏற்றுக்கொள்வதைப் பற்றி கொஞ்ச நஞ்சம் இருந்த எதிர்ப்பும் இப்போது மறைந்துவிட்டதாகத் தெரிய வந்தது.

ஹரிபுரா காங்கிரஸ் விழாவும் சிறப்பாக இருந்தது. ஸ்ரீ

சுபாஷ் சந்திர போஸ் தலைவராயிருந்தார். அங்குச் செய்யப் பட்டிருந்த ஏற்பாடுகள் இதற்குமுன் எந்த விழாவிலும் செய்யப் படாத அளவிலும் செலவிலும் செய்யப்பட்டிருந்தன. நாங்கள் மருத்துவ சாலையில் இருந்துவந்தபோதே ஹரிபுராவிலிருந்து மக்கள் திரும்பி வந்துவிட்டார்கள். ராஜீநாமாவும் மீட்டுக் கொள்ளப்பட்டுவிட்டது. மந்திரி சபை மீண்டும் வேலை செய்யத் தொடங்கிவிட்டது. இது வரையில் எடுத்துக் கொள்ளப்பட்ட வேலைத் திட்டமானது ஏழெட்டு மாதங்களில் பூர்த்தியாகாமலிருந் ததால் மந்திரி சபை மீண்டும் வேலைக்கு வந்துவிட்டது நல்ல தாயிற்று. இப்போது அதிக உற்சாகத்துடன் வேலை நடக்கத் தொடங்கியது. ஏனெனில் எப்போது, எவ்விஷயத்தை எடுத் துக்கொண்டு, மீண்டும் ராஜீநாமா செய்ய வேண்டிவரும் என்று யாரும் சொல்ல முடியாது. இதனால் இயன்றதை உடனே செய்து முடிப்பதே நன்று.

# 126. பீகாரின் தொழிலாளர் குழு

பீகாரின் தொழிலாளர்களின் நிலைமையை விசாரணை செய்து அதை மேம்படுத்துவதற்காக ஒரு குழு அமைக்கப்பட வேண்டு மென்பதாக மந்திரி சபை நிச்சயித்தது. கான்பூர் வேலை ஒரு விதமாக முடிந்துவிட்டது. இதனால் இப்போது என்னால் இந்த வேலையைக் கையில் எடுத்துக் கொள்ள முடிந்தது. குழு நிய மிக்கப்பட்டது. நான் அதற்குத் தலைவனாக நியமிக்கப்பட்டேன். என் உடம்பு சரியாக இல்லாதிருந்த காரணத்தால், கான்பூர் வேலையை எனக்குத் திருப்தியளிக்கத் தக்க முறையில் செய்ய முடியவில்லை. அந்த அறிக்கையின் மீது அரசாங்கம் நடவடிக்கை எடுக்க விரும்பியபோது மில் முதலாளிகள் அதை எதிர்த்தார்கள். தொழிலாளிகள் ஹர்த்தால் செய்தார்கள். இதனால் நெடுநாள் வரையில் போராட்டம் நடந்து வந்தது. எங்களுடைய சிபாரிசு களில் எத்தனை ஏற்றுக்கொள்ளப்பட்டன என்பது எனக்குத் தெரி யாது. எனக்கு மட்டும் உடம்பு சரியாயிருந்திருந்ததால், மேலும் இன்னும் சிறிது காலம் மேற்கொண்டு அந்த வேலைக்கு அளிக்க முடிந்திருந்தால், மேலும் அறிக்கையைச் சமர்ப்பிப்பதற்கு முன் கான்பூருக்குச் சென்று இரு கட்சிகாரர்களுடனும் அதை உடைத் துப் பேசியிருந்திருப்பேனானால் அந்த அறிக்கையானது ஒரு

வேலை இவ்வளவு கடுமையாக எதிர்க்கப்பட்டிருக்காது. இதை நினைக்கும்போது எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. சிபாரிசு களிலும் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கலாம். குறைந்த பக்ஷம், அதில் செய்யப்பட்ட சிபாரிகளின்மீது மில் முதலாளிகளுக்கு இவ்வளவு அறுவருப்பு உண்டாகியிருக்காது.

எது எப்படியாயினும் சரி, இப்போது அதை நினைத்துப் பயனில்லை. ஆயினும் பீகாரிலும் நான் மறுபடியும் அதே போன்ற வேலையைச் செய்யவேண்டி வந்தது. அங்குவிட இங்கு இச்சிக்கல் மிகவும் கடினமயாயிருந்தது. ஏனெனில் அங்கே ஒரே ஓர் ஊரில் ஒரே ஒரு வகையான தொழிற்சாலைகளின் தொழி லாளிகளின் நிலைமையை விசாரிக்க வேண்டிவந்தது. ஆனல் இங்கோ, எல்லாவிதத் தொழிற்சாலைகளிலும் பணியாற்றி வந்த எல்லாவிதத் தொழிலாளர்களின் நிலைமையையும் விசாரணை செய்யும் வேலை இங்குள்ள குழுவின் பொறுப்பில் ஒப்படைக்கப் பட்டது. எனக்குத் தெரிந்த வரையில், இந்தியாவில் எத்தனை வகைத் தொழிற்சாலைகள் இருக்கின்றனவோ, பெரும்பாலும் அத்தனை வகைகளும் பீகாரில் இருக்கின்றன. இந்த விஷயத் தில், பீகாரானது மற்றெல்லா மாகாணங்களைவிடப் பல பொருள் களில் முன்னேற்றமடைந்திருக்கிறது. இங்குச் சுரங்கங்களின் வேலை நிறைய விருத்தியடைந்திருக்கிறது. இங்கு நிலக்கரி சுரங்கங்கள் எத்தனை இருக்கின்றனவோ அத்தனை வேறெந்த மாகாணத்திலுமில்லை. அல்லது பீகாரில் எத்தனை இருக்கின் றனவோ அத்தனை இந்தியாவின் மற்ற மாகாணங்களை எல்லாம் சேர்த்தாலும்கூட இல்லை என்று கூறுவது பொருத்தமாகும். இரும்பு செம்பு சுரங்கங்களிலும்கூட இதே நிலைமைதான். காக்காப் பொன் சுரங்கங்களும் இங்கிருப்பதுபோல மற்றெந்த மாகாணத்திலும் அத்தனை இல்லை. மற்றெல்லா மாகாணங்களை கூட்டி சேர்த்தாலுமில்லை. உலகத்தில் வேறு எந்த நாட்டிலும்கூட பீகாரில் இருப்பதுபோல அத்தனை இல்லை என்றே கூறலாம். இன்னும் எத்தனையோ பொருள்களும் பீகாரின் சுரங்கங்களி லிருந்து கூடக் குறைய எடுக்கப்படுகின்றன.

கரும்பும் இங்கு நிறையப் பயிரிடப்படுகிறது. கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் சர்க்கரை ஆலைகளும் நிறைய அமைக் பட்டாயின. ஐக்கிய மாகாணம் நீங்கலாக வேறெந்த மாகாணத் திலும் பீகாரில் இருப்பது போல இத்தனை தொழிற்சாலைகள் இல்லை. ஜம்ஷெட்பூரில் உள்ள டாட்டா கம்பெனியின் இரும்புத் தொழிற்சாலையானது இந்தியாவில் மட்டுமின்றி ஆசியாவுக்கே

மாபெரும் தொழிற்சாலையாகக் கருதப்படுகிறது. உலகத்தில் உள்ள பெரிய பெரிய தொழிற்சாலைகளில் இது ஒன்ருகும். அங்கு இன்னும் பலவிதமான தொழிற்சாலைகள் இருக்கின்றன. டின் தகடுகள் செய்வதற்கும், தந்தி, டெலிபோன், மின்சாரம் ஆகிய வற்றிற்குக் கம்பி செய்யவும், விவசாயத்திற்கு வேண்டிய மண் வெட்டி, கடப்பாரை போன்ற கருவிகளைச் செய்யவும் பற்பல தொழிற்சாலைகள் இருக்கின்றன. அவற்றில் பல ஜம்ஷெட் பூருக்கு அக்கம்பக்கத்திலேயே கட்டப்பட்டிருக்கின்றன. இவை மட்டுமன்றி, இன்றும் பல இரும்பு தொழிற்சாலைகள் வேறிடங் களிலுமிருக்கின்றன. சோட்டா நாகபுரியின் காடுகளில் அரக்குச் சிறப்பாகப் பயிரிடப்படுகிறது. பீகாரில் எவ்வளவு அரக்கு விளைகிறதோ அவ்வளவு வேறெங்கும் விளையவில்லை. அரக்குப் பிசினிலிருந்து அரக்கைச் செய்வதற்காகத் தொழிற்சாலைகள் இயல்பாக சோட்டா நாகபுரியிலும், சந்தால் பர்கனுவிலும் இருக்கின்றன. அங்குள்ள காடுகளிலும் அரக்குப் பிசின் நிறையக் கிடைக்கிறது. ஒவ்வொரு இடங்களில், சணல் செய் வதற்கும் பஞ்சிலிருந்து துணி நெய்வதற்கும் சில தொழிற்சாலை களும் இருக்கின்றன. ஆனுல் மற்ற மாகாணங்களைக் காட்டிலும் இவை இங்குக் குறைவே.

இவ்வண்ணமாக பிகார் குழுவானது எல்லாவிதத் தொழி லாளிகளின் நிலைமையைப் பற்றி விசாரணை செய்ய வேண்டி யிருந்தது. ஜம்ஷெட்பூர் தொழிற்சாலைகளின் தொழிலாளிகள் நவீன முறையில் நிறுவப்பட்ட பெரிய நகரத்தில் வசிக்கிருர்கள். அள்குள்ள தொழிற்சாலை இராப்பகலாக, இருபத்து நான்கு மணி நேரமும் ஓடிக் கொண்டிருந்தது. ஆண்டில் ஒரு நாள்கூட மூடப்படுவதில்லை. கிராமத்தில் தத்தம் வீட்டிலேயே வசித்துக் கொண்டு, ஆண்டில் நான்கைந்து மாதங்கள் மட்டும் சர்க்கரை ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் இருந்தார்கள். வேறு சில தொழிலாளர்கள் மற்ற இடங்களைப் போலவே வெவ் வேறு தொழிற்சாலைகளின் தேவைக்கு ஏற்றபடி ஏதாவது வேலை செய்து வந்தார்கள். சுரங்கங்களில் வேலை செய்பவர்களின் நிலைமை மற்றவர்களின் நிலைமையிலிருந்து மாருக இருந்தது. ஏனெனில் அங்குள்ள வேலை வேறு வகையானது. சுரங்கங்களில் வேலை செய்பவர்கள் எல்லாரும் ஒரே விதமான வேலையைச் செய்வதில்லை. அவர்களுடைய வாழ்க்கையும் ஒரே வகையாக இருப்பதில்லை. ஜரியாவில் நிலக்கரிச் சுரங்கங்கள் குழுமியிருக் கின்றன. சில கல் பரப்புக்குள்ளாகவே அநேக சுரங்கங்கள் இருக்

கின்றன. இதனுல் அங்குத் தொழிலாளிகளின் குடும்பங்கள் எல்லாம் ஒன்ருகக் கூடி வாழ்கின்றன. காக்காப் பொன் சுரங்கங்கள் ஒன்றிலிருந்து மற்ருென்று தனியாக, காடுகளிலும் மலைமேலும் தொலைவு தொலைவிலிருக்கும். இதனுல் அவற்றின் தொழிலாளிகள் வசிப்பதற்கு ஏதேனும் ஒரே இடத்தில் ஏற்பாடு கிடையாது. ஜரியாவில் எல்லாச் சுரங்கத் தொழிலாளிகளுக்கும் ஒரே ஒரு நீர் குழாய் நிலையத்திலிருந்து தண்ணீர் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. காக்காப் பொன் சுரங்கக்காரர்களுக்கு அப்படி அன்று. அப்படி ஏற்பாடு செய்யவும் இயலாது. இவ்விதமாகப் பலவகையான வேலைகளுக்காகப் பலவகையான தொழிலாளர்களிருக்கிருர்கள். அவர்கள் வசிப்பதற்கு உள்ள ஏற்பாடுகளிலும், கூலியிலும்கூட இயல்பாகவே நிறைய வேற்றுமை உண்டு. பீகார் குழுவானது இவற்றையெல்லாம் விசாரணை செய்து சிபாரிசு செய்ய வேண்டியிருந்தது. வேலையின் பரப்பையும் கடினத்தையும் கண்டு நான் அஞ்சினேன். ஆனுல் அதிலிருந்து விடுதலை பெற முடியவில்லை. நெடுங்காலம் பிடித்தாலும் பிடிக்கட்டும். ஆனுல் இதை நன்ருக முழுக்க முழுக்க செய்து முடிக்க வேண்டுமென்று தீர்மானித்தேன். அப்படியே தான் செய்தேன்.

இதைத் தவிர வேறு கேள்விகளும் இருந்தன. அவற்றைப் பற்றியும் நான் ஏதாவது செய்ய வேண்டி வந்தது. மந்திரி சபை அமைக்கப் பட்டதுமே கரும்பு சம்பந்தமாக ஒரு கேள்வி அதன் முன் வந்துவிட்டது. அதற்கு விரைவிலேயே ஏதாவது செய்ய வேண்டியிருந்தது. பீகாரில் சர்க்கரை ஆலைகள் பல நிறுவப்பட்ட காரணத்தால் அங்கிருந்த குடியானவர்கள் கரும்பை நிறையப் பயிரிடுகிருர்கள். அதைச் சர்க்கரை ஆலைகளுக்கு விற்கிருர்கள். ஆலைகள் நிறுவப்படுவதற்கு முன் விவசாயிகள் தாமே ஆலையில் ஆட்டி வெல்லம் தயாரிக்கக்கூடிய அளவுக்குத்தான் பயிரிட்டு வந்தார்கள். கரும்பை ஆட்டும் வேலை நடக்கும் காலத்தில் எருதுகளுக்கு வேறு வேலை அதிகமாக இருக்காது. விவசாய வேலையின் தொடர்பு முறை அப்படி அமைந்திருக்கிறது. ஏனெனில் கரும்பு ஆட்டும் வேலை ஐப்பசி மாதத்திற்குப் பிறகு ஆரம்பமாகும். அதற்குள்ளாக 'ரபீ' நடவு (இது தை மாதத்தில் அறுவடையாகும்) முடிந்திருக்கும். இதனுல் குடியானவர்கள் தம் எருதுகளைக் கொண்டு அச்சொற்ப காலத்திற்குள் ஆட்டக்கூடிய திட்டத்திற்குத்தான் கரும்பை நடுவார்கள். இவ்வண்ணமாக கரும்பின் விளைச்சல் மற்றப் பயிர்களைக் காட்டிலும் இயல்

பாகவே குறைவாக இருக்கும். சர்க்கரைத் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டதிலிருந்து குடியானவர்களுக்கு கரும்பை ஆட்டும் தொல்லையிலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது. அதை அவர்கள் தொழிற்சாலை வரையிலோ, அதற்குச் சமீபத்திலுள்ள ஸ்டேஷன் வரையிலோ கொண்டு சேர்க்கும் வேலையை மட்டும் தான் செய்து வந்தார்கள். கரும்பை ஆட்டும் வேலையைத் தொழிற்சாலை செய்து வந்தது. கரும்பிலிருந்து ரொக்கப் பணமும் கிடைத்து வந்தது. இதனல் கரும்புச் சாகுபடி அதிகமாகப் பெருகிவிட்டது. ஏதாவதொரு காரணத்தால் தொழிற்சாலை கரும்பை வாங்கிக் கொள்ளாவிட்டால் குடியானவர்கள் முற்றிலும் நொடித்துப் போய்விடுவார்கள். அவுர்களுடைய ஆண்டு சம்பாத்தியம் முழுவதும் தொலைந்து போய்விடும். பூகம்பத்திற்குப் பின் பல தொழிற்சாலைகள் வேலைக்குதவாமல் போய்விட்டபோது இப்படிப்பட்ட நிலைமை 1934இல் வந்தது. வயலில் போட்டிருந்த பயிரைக் காப்பாற்றும் பொருட்டு அரசாங்கமும் ஆபத்து சகாயக் குழுவும் நாட்டுப்புற ஆலைகளை மீண்டும் பயன்படுத்த விவசாயிகளைத் தூண்ட வேண்டி வந்தது. லக்ஷக்கணக்காகப் பணத்தைச் செலவழித்து நாட்டுப்புற ஆலைகள் வழங்கப் பட்டன. ஆயினும் அந்த ஆலைகளைக் கொண்டு வேலை முழுவதையும் செய்து தீர்த்திருக்க முடியாது. ஆனல் சில நாட்களுக்குப் பிறகு தொழிற்சாலைகளை செப்பனிட முடிந்தது. அவை மீண்டும் ஓடத் தொடங்கிவிட்டன. குடியானவர்களின் பயிரின் ஒரு பங்கைக் காப்பாற்ற முடிந்தது. குடியானவர்களின் கரும்பின் விலையைத் தொழிற்சாலைக்காரர்கள் விதித்து வந்தார்கள். அவர்கள் விரும்பினல் விலையைத் தம் இஷ்டப்படி குறைக்கும் அளவுக்குக் குடியானவர்கள் தொழிற்சாலைக்காரர்கள் கையில் சிக்கிக் கொண்டார்களென்பதை அரசாங்கம் கவனித்தது. இதனல் காங்கிரஸ் மந்திரி சபை அமைக்கப்படுவதற்கு நெடுங்காலம் முன்னிருந்தே கரும்பின் விலையை விதிக்கும் உரிமையை அரசாங்கமானது சட்ட மூலமாகத் தன் கையில் எடுத்துக் கொண்டது. மணங்குக்கு இத்தனை அணுவுக்குக் குறைவாக எவரும் கரும்பை வாங்கக் கூடாதென்று அது கூறிவிடும். ஆனல் யாராவது அதிகமாகக் கொடுக்க விரும்பினல் கொடுக்கலாம். இவ்வண்ணமாகக் குடியானவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட தொகை கண்டிப்பாகக் கிடைத்து விடும். தொழிற்சாலைகளுக்கிடையில் போட்டி வந்து விட்டால் அதைவிட அதிகமாகவும் கிடைக்கும்.

1936இல் ஏதோ காரணத்தால் கரும்பின் விளைச்சல்

குறைந்து விட்டது. தொழிற்சாலைகளுக்கிடையில் நிறையப் போட்டி உண்டாயிற்று. இதனால் குடியானவர்களுக்கு அதிக விலை கிடைத்தது. அவர்கள் அடுத்த ஆண்டில் கரும்பை அதிகமாகப் பயிரிட்டு விட்டார்கள். 1937இல் நிறையக் கரும்பு பயிரிடப் பட்டது. அத்தனையும் தொழிற்சாலைக்காரர்கள் வாங்க இயலாது போலத் தோன்றியது. அவ்வளவு விளைந்து விட்டது. சர்க்கரையின் விலையும் மிகவும் விழுந்துவிட்டதால் அரசாங்கத்தார் கரும்புக்கு விதித்திருந்த விலை மிகக் குறைவாக இருந்தது. தொழிற்சாலைக்காரர்கள் அந்த விலைக்குக்கூட கரும்பை வாங்கத் தயாராயில்லை. குடியானவர்கள் இதனால் அதிகமாக நொடித்துப் போனார்கள். அதே சமயத்தில் அல்ப ஆயுள் மந்திரி சபை அமைக்கப்பட்டது. அதுவும் ஏதோ முயன்று பார்த்தது. ஆனால், அது, கரும்பு வேலை அநேகமாக முடிவடைந்து வந்து கொண்டிருந்தபோதுதான், ஏப்ரலில் பதவிக்கு வந்தது. அதற்கு முன்னிருந்தே நாங்கள் தொழிற்சாலைக்காரர்களைக் கண்டு எப்படியாவது அவர்கள் கரும்பை வாங்கித்தான் ஆக வேண்டுமென்று பேச்சு வார்த்தை நடத்தத் தொடங்கி விட்டோம். சிலர் சம்மதிக்கவும் செய்தார்கள். தம்முடைய வட்டாரத்திலிருந்த கரும்பை அவர்கள் வாங்கிக் கொண்டார்கள். சாதாரணமாக ஏப்ரல் நடுவுக்குப் பிறகு கரும்பிலிருந்து சர்க்கரை குறைந்த அளவே கிடைக்குமாயினும் அவர்கள் வாங்கிய கரும்பு தீராத வரையில் தொழிற்சாலைகள் ஓடிக்கொண்டிருந்தன. ஜூலையில் காங்கிரஸ் மந்திரிசபை அமைக்கப்பட்டதும், 1937 மார்ச்சு, ஏப்ரலில் குடியானவர்கள் படவேண்டி வந்த அனுபவத்தையும் அதற்காகத் தாம் செய்ய வேண்டி வந்த நடவடிக்கைகளையும் மனத்திற் கொண்டு, குடியானவர்கள் மீண்டும் அது போன்ற அனுபவத்தை எதிர்ப்படாமல் எப்படித் தடுப்பதென்பதைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டியிருந்தது. இந்த விஷயத்தைப்பற்றி நானும் பீகார் மந்திரியான டாக்டர் மகமூதும் பேசி ஒரு மகாநாட்டை நடத்தினோம். எல்லா மாகாணங்களையும்விட ஐக்கிய மாகாணத்திலும் பீகாரிலும்தான் கரும்பு அதிகமாக விளைவிக்கப்படுகிறதென்பது தெரிய வந்தது. இதனால் இந்த விஷயத்திற்காகச் செய்யப்படும் முடிவு யாதொன்றையும் இரண்டு மாகாணங்களும் சேர்ந்து செய்தால் நலமாகும். இரண்டு பேருக்கும் சிக்கல் ஒன்றே. இரண்டிலும் காங்கிரஸ் மந்திரி சபைகள் இருந்தன. இதனால் இரண்டு மாகாண மந்திரி சபைகளும் கூடி, தம்முடைய வேலைத் திட்டத்தைச் சரியாக வகுத்துக்கொண்டன. நானும்

அம்மகாநாட்டில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டி வந்தது. இந்தியாவில் எவ்வளவு சர்க்கரை செய்யப்படுகிறதோ அதில் முக்கால் பங்குக்கு மேல் இந்த இரண்டு மாகாணங்களில்தாம் உற்பத்தி செய்யப்படுகிறதால் இவ்விரண்டும் கூடி எத்தகைய கட்டுப்பாடு செய்ய விரும்புவார்களோ அத்தகைய கட்டுப்பாட்டை அவர்களால் செய்ய முடியுமென்பதாக மக்கள் நினைத்தார்கள்.

இரண்டு மாகாணங்களும் சட்டத்தைப் புனைந்தன. அதன்படி அரசாங்கமானது கரும்புக்கு மட்டுமின்றி சர்க்கரைக்கும் விலையை விதிக்கும் அதிகாரத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டது. சில தொழிற்சாலைக்காரர்கள் இதை எதிர்த்தார்கள். ஆனால் கடைசியில் எல்லாரும் ஒத்துக் கொண்டார்கள். தொழிற்சாலைக்காரர்களுக்குச் சங்கம் ஒன்றிருந்தது. அதுதான் எல்லாத் தொழிற்சாலைகளையும் மேற்பார்வை பார்த்து வந்தது. அச்சங்கத்தில் சேராத தொழிற்சாலைக்கு அரசாங்கமானது கரும்பை ஆட்டுவதற்கு உரிமைப்பத்திரம் (லைசென்ஸ்) அளிக்காது. இவ்வண்ணமாக அச்சங்கத்தில் சேர விரும்பாதவர்கள்கூட வேறு வழியில்லாமல் அதில் சேர வேண்டியிருந்தது. குடியானவர்களுக்கு இந்த ஆண்டில் விலை சரியாகக் கிடைத்தது. ஆயினும் என் மனத்தில் சிறிதளவு ஐயம் உண்டாகிவிட்டது. தொழிற்சாலைகளிடம் மிகவும் கடுமையாக நடந்து கொண்டால் அவை இந்த இரண்டு மாகாணங்களுக்கு வெளியே, அவர்கள் காரியத்தில் தலையிடுதலும் தடைபோடுவதுமில்லாத இடங்களில் உள்ள தொழிற்சாலைகளுடன் எதிர்த்து நிற்க முடியாமல் போய்விடுமோ என்று நினைத்தேன். இதனால், எல்லா மாகாணங்களுடனும் கலந்து பேசி ஏதாவது செய்தால் நலமென்று நான் கூறினேன். இந்திய அரசாங்கம் எதுவும் செய்யத் தயாராயில்லை. இதனால் மாகாணங்களுடன் தான் பேச்சு வார்த்தை நடக்க முடியும். மற்ற மாகாணங்களின் மந்திரி சபைகள் (காங்கிரஸ் மந்திரி சபைகளும் கூட) இவ்விரண்டு மாகாணங்களுடன் சேர்ந்துகொண்டு தம் மாகாணங்களில் இருக்கும் தொழிற்சாலைகளைக் கட்டுப்பாடு செய்ய ஒப்பவில்லை. இதன் பயனாக, அம்மாகாணங்களிலுள்ள தொழிற்சாலைகளுக்கு, முக்கியமாக சுதேச மன்னர் நாடுகளிலிருந்த தொழிற்சாலைகளுக்கு, அதிக வசதிகள் கிடைத்துவிட்டன. அங்குப் புது தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. பழையன லாபமடைந்தன. பீகாரின் ஓரிரண்டு தொழிற்சாலைகள் விற்கப்பட்டு மாகாணத்திற்கு வெளியே எடுத்துச் செல்லப்பட்டன. ஆயினும் காங்கிரஸ் மந்திரி சபை செய்த நடவடிக்கை

களால் குடியானவர்களுக்கு அச்சமயம் நிறைய லாபம் கிடைத்த தென்பதில் ஐயமில்லை. காங்கிரஸ் மந்திரி சபை இருந்த வரையில் லாபம் கிடைத்துக்கொண்டே இருந்தது.

## 127. பீகாரில் கல்வி நடவடிக்கை—வெள்ள மகாநாடு

கல்வி விஷயமானது எல்லையற்ற பெருமை வாய்ந்தது. டாக்டர் மகமூதின் கீழ் இந்த இலாகா இருந்தது. என்னைப் பட்ன சர்வகலாசாலையின் செனேட்டின் உறுப்பினராக்க அவர் விரும்பினர். நான் செனேட்டின் உறுப்பினன் பதவியை 1921இல் ராஜீநாமா செய்துவிட்டேன். இப்போது நான் அதை மீண்டும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று பிடிவாதம் செய்தார். ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா துணை வேந்தராக இருந்தார். அவரும் கேட்டுக் கொண்டார். இதனால் நான் உறுப்பினன் பதவியை ஏற்றுக்கொண்டேன். செனேட்டின் இருக்கையில் நான் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தேன். அரசாங்கமானது கல்வித் திட்டத்தைச் சீர்திருத்தும் விஷயத்தைப்பற்றி விசாரணை செய்ய வேண்டுமென்பதும், அதற்காக அது ஒரு குழுவை நியமிக்க வேண்டுமென்பதும், அக்குழுவானது ஆரம்பக் கல்வியிலிருந்து உச்சி வரையில் திட்டத்தை அமைக்க வேண்டுமென்பதும் அத்தீர்மானத்தின் நோக்கம். இத்தீர்மானத்தைச் சமர்ப்பிக்கும் சமயம் வந்தபோது நான் நோயுற்றிருந்தேன். மிகவும் கஷ்டப்பட்டு செனேட்டின் இருக்கைக்குப் போய்ச் சேர முடிந்தது. ஆயினும் என் பேச்சை எழுதி வைத்திருந்தேன். ஒரு நண்பர் அதை வாசித்தார். அதில், நடைமுறையில் இருந்து வந்த கல்வி முறையைப்பற்றிக் கடுமையாக விமர்சனம் செய்யப்பட்டிருந்தது. சில உறுப்பினர்கள், முக்கியமாக ஆசிரியர்கள் அதைக் குற்றம் கூறினர்கள். ஆயினும் தீர்மானம் எல்லாருடைய சம்பந்தத்துடன் அங்கீகரிக்கப்பட்டது. சில நாட்களுக்குப் பிறகு அத்தீர்மானம் அரசாங்கத்தினிடம் அனுப்பப்பட்டபோது, மந்திரி சபையானது அதை ஏற்றுக்கொண்டு ஒரு குழுவை நியமித்தது. நானும் அதில் ஓர் உறுப்பினன் ஆக்கப்பட்டேன். பம்பாய்க்காரரான ஸ்ரீ கே. டி. ஷா தலைவராக நியமிக்கப்பட்டார்.

என் தீர்மானம் சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்னமே காந்திஜீ ஒரு திட்டத்தைச் சமர்ப்பித்துக் கல்வியைப்பற்றிய கேள்வியை நாடு முழுவதிலும் பொது மக்களின் முன் கொண்டு வந்து விட்டார். அவர் பல கட்டுரைகளையும் 'ஹரிஜனில்' எழுதினார். அவருடைய திட்டத்தில், இன்று வெறும் எழுத்து மூலமாகக் குழந்தைகளுக்கு அளிக்கப்பட்டு வரும் கல்வியை, வெறும் எழுத்து மூலமாக அளிக்காமல் ஏதாவது கைத்திற வேலையின் மூலமாக அளிக்கப்பட வேண்டுமென்பதே அதன் முக்கிய கருத்தாக அமைந்திருந்தது. இப்படிச் செய்யப்படுமானால், பிள்ளைகள், தாம் கை வேலை செய்து சம்பாதிப்பதைக் கொண்டே ஆரம்பக் கல்வியின் செலவைச் சரிகட்டி விடுவார்கள் என்று அவர் கூறி வந்தார். இவ்விதமாக அவர் ஓரம்பில் இரு வேட்டையாடத் திட்டம் அமைத்துவிட்டார். அக்கல்வி இக்காலத்துக் கல்வியை விடச் சிறப்பாக இருக்கும். மேலும் அதற்காக அரசாங்கம் செலவும் செய்ய வேண்டி வராது. இதற்குமுன் குழந்தைகளுக்கு இலவசக் கட்டாயக் கல்விக்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்ற கேள்வி எழுந்த போதெல்லாம் அதைச் செய்வதற்குத் தன்னிடம் அவ்வளவு பணமில்லையென்ற ஆட்சேபணை அரசாங்கத்தின் பக்கத்திலிருந்து கொண்டு வரப்படும். திருவெய்திய கோகலேயின் காலத்திலிருந்தே இந்த விஷயம் பொதுமக்களின் சார்பிலிருந்து வற்புறுத்தப்பட்டு வந்தது. அரசாங்கமானது பணமில்லையென்ற சாக்கைச் சொல்லி அதை எதிர்த்துக் கொண்டிருந்தது. சிற்சில இடங்களில் இலவசப் படிப்பும் வேறு சில இடங்களில் இலவசக் கட்டாயப் படிப்பும் அளிக்கப்பட்டு வந்தன. ஆனால் அவை மிகவும் சில இடங்களிலும் மிகச் சிறிய அளவிலும் மட்டுமே பிரிட்டிஷ் இந்தியாவில் நிகழ்ந்ததால் அதைக் கொண்டு இந்த முறை இந்தியா முழுவதிலும் எப்போதாவது நிறைவேற்றப்படுமென்ற நம்பிக்கை கொள்வதற்கு இடமில்லாதிருந்தது.

பீகாரில் சப்ரா ஜில்லாவில் ஏதோ ஒரு படி வரையில் இலவசப் படிப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதில் சிறப்பாக ஊக்கம் எடுத்துக் கொண்டவர்கள் இரண்டு பேர். அவர்கள் என் தமையனாராகிய பாபூ மகேந்திர பிரசாதும் சப்ரா ஜில்லாவின் பள்ளிக்கூடங்களுக்கு அக்காலத்தில் ஜில்லா இன்ஸ்பெக்டராக இருந்த பாபூ ராதிகா பிரசாதும் ஆவர். ஆனால் அரசாங்கம் இதற்கு ஆட்சேபணை செய்யாவிட்டாலும் இதற்கு என்றுமே உற்சாகம் அளிக்கவில்லை. எப்படியோ அது நடந்து கொண்டிருந்தது. காந்திஜீ தம் திட்டத்தினால் கிளர்ச்சியை

உண்டாக்கிவிட்டார். அவர், கல்வியின் பற்றுதல் கொண்டவர்களும் அதன் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்களுமான சிலரைத் திரட்டி, வர்தாவில் ஒரு மகாநாட்டை நடத்தினர். அதில் அவருடைய திட்டத்தின்மீது ஆலோசனை நடந்தது. அம் மகாநாடு ஒரு கிளைக் குழுவை அமைத்தது. ஜாமியா மில்லியாவின் (தில்லி) தலைவரான டாக்டர் ஜாகிர் ஹுஸேன் அதற்குத் தலைவரானர். கிளைக் குழு ஒரு திட்டத்தைத் தயார் செய்தது. அது வர்தா திட்டம் என்ற பெயருடன் புகழ் பெற்றது. காந்திஜீயின் திட்டத்தின் பல அம்சங்களையே அக்குழுவானது ஆதரித்து, ஆரம்பக் கல்வி கை வேலைப்பாட்டின் மூலமாக அளிக்கப்பட வேண்டுமென்று சிபாரிசு செய்தது. கிளைக் குழுவானது செலவைப்பற்றி காந்திஜீ கொண்டிருந்த கருத்தின் அளவுக்குப் போகத் தயாராயில்லை. ஆனல், செலவின் ஒரு பங்கு மாணவர்களின் கை வேலைப்பாட்டிலிருந்து எடுபட முடியுமானல் அப்படியே எடுத்துக் கொள்ளலாமென்பதையும் அக்குழு ஆட்சேபிக்கவில்லை.

இவ்வண்ணமாக, அங்குக் கூடிய கல்வி நிபுணர்கள் காந்திஜீயின் கருத்துக்களை ஐரோப்பா அமெரிக்கா ஆகிய நாடுகளின் கல்வி நிபுணர்களின் கருத்துக்களைக் கொண்டு வலிமைப்படுத்தினர்கள். அவர்களுடைய கருத்துக்களையும் புத்தகங்களையும் படிக்காமலே காந்திஜீ என்ன கூறினரோ அவையே தற்காலக் கல்வி நிபுணர்களின் கருத்துக்கள் என்பதும் தெரிய வந்தது. இதனல் என்னுடைய தீர்மானத்தைச் சமர்ப்பித்தபோது வர்தா திட்டத்தையும் பல்கலைக் கழகம் அமைத்த குழு விசாரணை செய்யும் என்ற எண்ணம் என் மனத்தில் இருந்தது. இக்குழுவின் அபிப்பிராயமும் அத்துடன் ஒத்துப் போகுமானல் காந்திஜீ செய்ய விரும்பியதைப் பீகாரில் அரசாங்கமானது எளிதில் செய்ய இயலும். நான் இக்குழுவின் உறுப்பினன் ஆவதற்கு ஒத்துக் கொண்டேன். இதன் வேலையும் தொடங்கிவிட்டது. ஆயினும் இக்குழுவின் வேலையின் சுமை அதன் தலைவரான ஸ்ரீ கே. டி. ஷாவின்மீதுதான் அதிகமாக விழுந்தது.

பீகார் அரசாங்கத்தின் கல்வி இலாகா வேறு ஒரு குழுவையும் நியமித்தது. அதிலும் நான் உறுப்பினன் ஆக்கப்பட்டேன். ஹிந்தி-ஹிந்துஸ்தானி சம்பந்தமாக ஹிந்தி சாகித்திய சம்மேளனின் நாகபுரி பேரவையில் நான் என் கருத்தை வெளியிட்டேன். பீகாரில், ஹிந்தி தெரிந்தவர்களும் உருது தெரிந்தவர்களும் இருவருமே எளிதில் புரிந்து கொள்ளும்படியான மொழியை இங்குள்ள

பாடப் புத்தகங்களில் எவ்வளவு தூரம் வழங்கக்கூடும் என்ற கேள்வியும் அதற்காக அகராதியைத் தயார் செய்வதற்கு முயற்சி செய்ய வேண்டுமா என்ற கேள்வியும் எழுந்தன. டாக்டர் முக மூத் என்னையே இக்குழுவின் தலைவனுக்கினுர். ஆனுல் நான் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில் எனக்கு வேறு வேலை நிறைய இருந்தது. இதனுல் நான் இதற்கு நிறையப் பொழுது அளிக்க முடியாதென்றும், இப்படிப்பட்ட கடினமான வேலைக்கு நான் தகுதியில்லை என்றும் நினைத்தேன். இதனுல் இதற்கு மௌலானு அபுல் கலாம் ஆஜாத் சாஹப் தலைவராக்கப்பட்டார். இதன் வேலையும் தொடங்கப் பட்டது. இவ்விதமாக என் மாகா ணத்தில் என் பொறுப்பில் நிறைய வேலை வந்துவிட்டது. செய லாற்றுக் குழுவின் மூலமாக நியமிக்கப்பட்ட பார்லிமெண்டரி கமிட்டியில் நான் முன்னிருந்தே உறுப்பினனுக இருந்தேன். 1936இலிருந்து 1937 வரையில் இந்த வேலைகளிலேயே நிறையப் பொழுதைக் கழித்து வந்தேன். ஏனெனில் விசாரணை செய்யப் படவேண்டிய விஷயங்கள் மிகவும் செறிவானதாக இருந்தன. அவற்றைத் தீர்த்து முடிவு கட்ட எளிதில் ஆகாது. நாங்கள் ஏதா வது சிபாரிசுகள் செய்தால் அவற்றிற்கு நிறையப் பெருமை அளிக் கப்படும். இதனுல் நான் மந்திரி சபையில் இல்லாவிட்டாலும் என்னுடைய ஆற்றலுக்கும் 'அறிவுக்கும் ஏற்றவாறு என்னுல் இயன்ற உதவியை அளிப்பது நான் கட்டாயமாகச் செய்ய வேண் டிய கடமையாகிவிட்டது.

இன்னும் ஒரு விஷயம் இருந்தது. அதைப்பற்றி நிறைய விசாரணை செய்யப்பட்டிருந்தது. ஆனுல் இது வரையில் ஒரு வழியும் பிறக்கவில்லை. அதுதான், பீகாரின் சில பாகங்களில் வெள்ளத்தால் விளையும் கொடுமை. சப்ராவுக்கும் பட்னு வுக்கும் இடையில் சரயூ, கங்கை, சோன், கண்டக் என்ற பெயர் கொண்ட நான்கு பெரிய பெரிய ஆறுகளின் கூடுமிடமிருக்கிறது. அந்த ஆறுகள் உற்பத்தியாகும் இடங்களிலோ அல்லது அவை ஓடும் வழியிலோ எப்போதாவது தொடர்ச்சியாக நிறைய மழை பெய்துவிட்டால் அவை எல்லாவற்றிலும் ஒரே சமயத்தில் வெள் ளம் வந்து விடுவதனுல் அவற்றிற்கு அக்கம்பக்கத்திலுள்ள இடங் களின் நிலைமை கேடுற்றுப் போய்விடும். நெடுநாள் தொட்டே இப்படி நடந்து கொண்டிருக்கிறது. ஆயினும் 1934இன் பூகம் பத்திற்குப் பிறகு வெள்ளத்தின் கொடுமை அதிகமாகிவிட்டது. பூகம்பத்தினுல் ஆறுகளின் ஆழம் குறைந்து விட்டதென்று சிலர் நினைக்கிருர்கள். அதனுல் முன்போல அவ்வளவு நீரைக் கொள்வ

தற்கு அவற்றிற்கு ஆற்றல் இல்லை. இதனால் நீரானது நெடுந் தொலைவு வரையில் வெளியே பரவிவிடுகிறது. மேலும் அது பரவும் இடத்தில் எல்லாம் நீரின் ஆழமும் அதிகமாக இருக்கும். ஆறுகள் நிறைய இருப்பதால் அடிக்கடி வெள்ளம் வரப்பட்ட இந்த இலாகா மட்டுமன்றி பீகாரில் (முக்கியமாக வட பீகாரில்) வெள்ளம் நிறைய வரும் மற்றப் பகுதிகளும் இருக்கின்றன. வெள்ளத்திற்குக் காரணங்களில் ரயில்கரைகள் ஒரு முக்கிய பலத்த காரணமென்று மக்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். அவை தண்ணீரைத் தடுத்து விடுகின்றன. தண்ணீரை எளிதில் பாய்ந்து வெளியே செல்ல விடுவதில்லை. இக்கரை களுக்கு நிறையப் பாலங்களும் மற்றப்படி தண்ணீர் வெளியேற வழிகளும் இல்லை. சிற்சில இடங்களில் இக்கரைகளால் நிறைய நாசம் விளைந்து வருவதுண்டு. என்ன சொன்னாலும் ரயில்வே காரர்கள் கேட்பதில்லை. ரயில்வே கரைகள் மட்டுமன்றி தண்ணீ ரைத் தடுப்பதற்காகவே முக்கியமாகக் கட்டப்பட்ட மற்றக் கரை களும் இருக்கின்றன. அவற்றின் பயனைப் பற்றி அபிப்பிராய பேதத்திற்கு இடமுண்டு. வெள்ள சம்பந்தமான கேள்வியானது பீகாருக்கு மிகவும் முக்கியமானது. நான் இதைப்பற்றிச் சில கட்டுரைகள் எழுதினேன். மந்திரி சபை அமைக்கப்பட்டதும் இந்த விஷயத்தைப் பற்றியும் விசாரிப்பது மிகவும் அவசியமென் பதை அது உணர்ந்தது. இஞ்சினீயர்களையும் பொது மக்களின் பிரதிநிதிகளையும் அழைத்து ஒரு மகாநாட்டைக் கூட்டியது. இவ் விஷயம் நிறைய அலசி ஆராயப்பட்டது. ஆனால் யாதொரு திருப்தியான பயனும் உண்டாகவில்லை. ஏனெனில் வெள்ளத் திற்குக் காரணத்தைப் பற்றியாவது அல்லது அதைத் தடுப்ப தற்கு வழியைப் பற்றியாவது எல்லாரும் ஒத்துப் போக வில்லை. என் நோயினால் நான் மகாநாட்டில் கலந்து கொள்ள முடியவில்லை. ஆயினும் என் கருத்துக்கள் அங்குச் சமர்ப்பிக்கப்பட்டன. பீகாரின் இந்தப் பெரிய பெரிய விஷயங் களில்தாம் நான் விசேஷமாகச் சம்பந்தப்பட்டிருந்தேன். இவை நீங்கலாக இன்னும் பல சிறிய விஷயங்களும் இருந்து வந்தன. அவற்றைப் பற்றியும் என் அபிப்பிராயம் கேட்கப்பட்டு வந்தது. மற்ற இடங்களிலிருந்த மந்திரி சபைகளுடன் பீகாரோடு இருந் ததுபோல அவ்வளவு அதிக உறவு இருக்கவில்லை.

# 128. காந்தி சேவா சங்கம்

மார்ச்சு மாதக் கடைசி வரையில் நான் மருத்துவ சாலையில் இருந்தேன். உடம்பு சற்று சரியாகி, வலிமையும் வந்தவுடன் நான் அங்கிருந்து வெளியே வந்தேன். காந்தி சேவா சங்கத்தின் ஆண்டு விழா அவ்வாண்டில் ஒரிசாவில், புரிக்கு அருகில் உள்ள டேலாங்கு கிராமத்தில் நடைபெறுவதாக இருந்தது. நான் நேராக அதற்குச் சென்று விட்டேன். மகாத்மாஜீயும் அங்கு வருவதாக இருந்தது. நாங்கள் அங்குப் பல நாட்கள் இருந்தோம். காந்தி சேவா சங்கத்தின் மகாநாடு நான்கைந்து முறை நடந்திருக்கிறது. காந்திஜீயின் முன்னிலையில் பல நாட்கள் வரையில் தங்கியிருப்பதற்கு நற்பேறு கிடைத்ததென்பதுதான் இந்த மகாநாட்டின் தனிச் சிறப்பாகும். எங்களிடையில் கொள்கையைப் பற்றி நிறைய வாதம் நிகழும். அங்கெழுந்த விஷயங்களைப் பற்றி காந்திஜீயின் அபிப்பிராயம் உடனடியாகக் கிடைத்து வந்தது. உறுப்பினர்கள் எங்கெங்கு எந்தெந்த வேலையில் ஈடுபட்டிருந்தார்களோ அவ்விடங்களுக்கு உற்சாகத்துடன் சென்று மீண்டும் தம் வேலையில் ஈடுபட்டார்கள்.

சங்கத்தின் உறுப்பினர்கள் பெரும்பாலும் ஆக்க வேலையிலேயே ஈடுபட்டிருந்தார்கள். சிலர் சர்க்கா சங்கத்தின் மூலமாக அல்லது தனிப்பட, காதி, சர்க்கா பிரசார பணியில் ஈடுபட்டிருந்தார்கள். இன்னும் சிலர் ஹரிஜனத் தொண்டில் தம் பொழுதைக் கழித்து வந்தார்கள். சிலர் கிராமக் கைத்தொழில்களை மீண்டும் உயிர்ப்பிப்பதையும் அவற்றை ஒழுங்காக அமைப்பதையும் தம் முக்கிய கடமையாகக் கருதி அதில் ஈடுபட்டிருந்தார்கள். வேறு சிலர் வர்தா திட்டத்தைப் பிரசாரம் செய்வதற்காக அமைக்கப்பட்டிருந்த தாலீமீ சங்கத்தில் கல்வி பிரசார வேலையைப் புரிந்து வந்தார்கள். சிலர் பசுத் தொண்டில் ஈடுபட்டிருந்தார்கள். அதில் இறந்த பசுக்களின் தோலை உரித்தல், அதைப் பதனிடல், அதிலிருந்து செருப்பு, பெட்டி முதலியன செய்தல் ஆகிய வேலைகளும் உட்பட்டிருந்தன. முக்கியமாக, காந்திஜீ ஏவிய துறைகளில் எல்லாம் சங்கத்தின் உறுப்பினர்கள் மனம் செலுத்தி ஈடுபட்டு வந்தார்கள். காங்கிரஸ் அமைப்பின் வேலையைச் செய்து வந்தவர்களும் சிலர் இருந்தார்கள். அவர்கள் ஆங்காங்கு காங்கிரஸ் குழுக்களில் தொண்டாற்றி வந்தார்கள். ஆனால் அப்படிப்பட்ட

உறுப்பினர்களின் எண்ணிக்கை மிகக் குறைவுதான். அங்கும் கூட அவர்களுக்குப் பெரும்பாலும் ஆக்க வேலையைப் புரிந்து கொண்டிருப்பதற்குத்தான் அதிக விருப்பமிருந்தது. கவுன்ஸிலின் தேர்தல் நடக்கத் தொடங்கி, அதில் சில உறுப்பினர்கள் அபேக்ஷகர்களாக ஆனதும், அந்த விஷயத்தைப் பற்றிச் சங்கத்தின் மகாநாட்டில் நிறைய வாதம் நடந்தது. சங்கத்தின் ஆட்கள் இந்த வேலையில் பட்டுக்கொள்ளக் கூடாதென்று சிலர் நினைத்தார்கள். ஆயினும், சங்கம் சிலருக்கு அனுமதி அளித்தது. என் நினைவுக்கு எட்டிய வரையில், இந்த விஷயத்தைப் பற்றி இரண்டு மகாநாடுகளில் வாதம் செய்யப்பட்டது. இப்போது அதன் உறுப்பினர்களாகிய ஸ்ரீ ஜக்லால் சௌதுரி மந்திரியாகவும் ஸ்ரீ ஸ்ரீகிருஷ்ண வல்லப சஹாய் பார்லிமெண்டரி செக்ரடரியாகவும் ஆகிவிட்டார்கள். சங்கத்தின் உறுப்பினன் பதவியானது, அதன் கடமையைக் கருத்தில் கொண்டு பார்த்தால், ஒரு மனிதனை (அவன் உண்மையாகவே அதைப் பயன்படுத்துவானுனால்) உயர்வு படுத்த இயலும். காந்திஜீயின் சத்தியாக்கிரகக் கொள்கையை அவன் தன்னுல் இயன்ற வரையில் தன் வாழ்க்கையில் அனுசரிப்பான் என்றும், அதைப் பிரசாரம் செய்வதற்கு முயற்சி செய்வானென்றும் நம்பிக்கை கொள்ளப்படுகிறது.

ஏதாவதொரு அரசியல் கட்சியை அமைப்பது இச்சங்கத்தின் நோக்கமாக என்றுமே இல்லை. அப்படி என்றும் செய்யப்படவுமில்லை. இச்சங்கத்தின் சார்பிலிருந்து யாரும் எந்தத் தேர்தலிலும்—அது காங்கிரஸ் தேர்தலாகட்டும், அல்லது முனிசிபாலிடி அல்லது ஜில்லா போர்டு அல்லது கவுன்ஸிலுக்காகட்டும், எத்தேர்தலிலுமே—பங்கெடுத்துக்கொள்ளவில்லை. பெரும்பாலும் அவர்கள் எல்லாக் கழகங்களிலும் இருந்து விலகியே நின்ருர்கள். அவர்கள் எந்தத் தேர்தலோடுமே சம்பந்தப்பட்டுக் கொள்ளவில்லை. அப்படியே ஏதாவதொரு தேர்தலில் சேர்ந்தாலும், அவர்கள் தம் தனிப்பட்ட முறையில், தம்முடைய தொண்டின் பலத்தைக் கொண்டு சேர்ந்தார்களே அன்றிச் சங்கத்தின் உறுப்பினர் என்பதைக் கொண்டு லாபமடைந்ததில்லை. சங்கத்தில் சேட் ஜம்நாலால் பஜாஜ், சர்தார் வல்லப்பாயீ படேல் நான் ஆகியவர்களைப் போன்று காங்கிரஸ் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களாக இருந்து கொண்டு தத்தம் இடத்தில் காங்கிரஸ் வேலையில் சிறப்பாக பங்கெடுத்து வந்தவர்களுமிருந்தார்கள். காந்திஜீ, தாமே ஒரு உறுப்பினராக இல்லையாயினும், வழிகாட்டியாக இருந்து வந்தார். ஆயினும் காங்கிரஸுக்குள் சுயராஜ்யக் கட்சியும் காங்கிரஸ் சோஷியலிஸ்டு

கட்சியும் அமைக்கப்பட்டதுபோல இதுவும் ஒரு கழகம் என்று கூறுவது முற்றிலும் ஆதாரமற்றதாகும். தொண்டர்களைத் தயார் செய்வதும் அவர்கள் மூலமாக ஆக்க வேலைக்குத் தன்னால் இயன்ற உதவியை அளிப்பதுமே இச்சங்கத்தின் நோக்கமாகும். ஆனால், அதுவும் ஒரு கட்சிதான் என்ற ஆட்சேபணையைச் சிலர் கொண்டு வந்தார்கள். ராம்கர் காங்கிரஸுக்குச் சற்று முன் வங்காளத்தில் நடந்த இச்சங்கத்தின் ஆண்டு விழாவில் இச்சங்கத்தைக் கலைத்து விடுவதாக நிச்சயம் செய்யப்பட்டது.

# 129. கிராமச் சீர்திருத்தத் திட்டம், நாசிக்கில் வாசம்

ஒரிசாவின் அசெம்பிளியிலுள்ள காங்கிரஸ் கட்சிக்குள் அபிப்பிராய பேதம் இருந்து வருகிறதென்பதும், மந்திரி சபையின் மீது சில குறைகள் கூறப்பட்டு வந்தன என்பதும் நாங்கள் ஒரிசாவிலிருக்கும்போதே எங்களுக்குத் தெரிய வந்தது. பார்லிமெண்டரி கமிட்டியின் அங்கத்தினராகிய சர்தார் வல்லப் பாயீயும் நானும் அங்கிருந்தோம். இரு கட்சிகளோடும் பேசுப் பேசி அச் சண்டையைத் தீர்த்து வைப்பது நன்றென நினைத் தோம். ஒரு பக்கத்தில் மந்திரி சபையும் மற்றொரு பக்கத்தில் பண்டித் நீலகண்ட தாஸ், பண்டித் கோதாவரீஷ் மிஸ்ரா முதலானோரும் இருந்தார்கள். ஸ்ரீ கோப பந்து சௌதுரி எக்கட்சியிலுமில்லை. நாங்கள் எல்லா விஷயங்களையும் கேட்டுக் கொண்டு எங்கள் அபிப்பிராயத்தை அளித்தோம். காங்கிரஸ் குழுவிலிருந்து விலகிக்கொண்டு, காந்தீ சேவா சங்கத்தின் சார்பில் கட்டக்கில் ஆச்ரமம் அமைத்துக்கொண்டு ஆக்க வேலையில் ஈடுபட்டிருந்த ஸ்ரீ கோபபந்து தாஸைக் காங்கிரஸ் வேலையைச் சமாளிக்கும்படி, இரு கட்சிக்காரர்களின் யோசனையின் பேரில், கேட்டுக்கொள்ளப்பட்டது. சண்டை அமைதியுற்று விடுமென்பதாக நாங்கள் நினைத்தோம், ஆனால் அப்படி ஆகவில்லை. பின்னால், இதனால் விளைந்த கேடு தெரிய வந்தது. அதைப்பற்றிப் பின்னால் பொருத்தமான இடத்தில் கூறப்படும்.

அங்கு ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதைக் கூறுவது பொருத்தமாகும். மகாநாட்டிற்கு வந்தவர்களில் சிலர் ஸ்ரீ ஜகந்

நாதீஸ்வரரைத் தரிசிப்பதற்காகப் பூரிக்குச் சென்றார்கள். அவர்களுடன் என் குடும்பத்துப் பெண்களும் சென்றார்கள். மகாத்மாஜீக்கு அதிக வருத்தம் உண்டாயிற்று. ஆனால் அது அவர்களைப்பற்றி அன்று; மற்றவர்கள் சம்பந்தமாக அவ்வருத்தம் விளைந்தது. ஸ்ரீ ஜகந்நாத்ஜீயின் கோவில் இது வரையில் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப்படவில்லை. அதாவது, மற்றச் சாதி ஹிந்துக்கள் அங்குச் சென்று தரிசனம், பூஜை செய்வது போல ஹரிஜனங்கள் செய்ய முடியாது. ஹரிஜனங்கள் நுழைய அனுமதிக்கப்படாத கோவில்களுக்குக் காந்திஜீ செல்வதில்லை. அவர்களுக்குப் பூஜை செய்வதற்கும் தரிசனம் செய்வதற்கும் உரிமை இல்லாவிட்டால் தமக்கும் இருக்கக் கூடாதென்பது அவர் கருத்து. காந்திஜீயைப் பின்பற்றுபவர்கள் என்று தம்மைக் கருதினவர்களுக்குக்கூட அவருடைய இவ்வளவு கடுமையான கொள்கை மனஸ்தாபத்தை உண்டாக்கியது. ஆயினும் அதிலிருந்து காந்திஜீ ஹரிஜனங்களின்மீது கொண்டிருந்த அன்பு பரிவு ஆகியவற்றின் ஆழம் தெரிய வந்தது.

மருத்துவ சாலையிலிருந்து வெளியே வந்ததும் நான் மேலும் சிறிதளவு ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதாக டாக்டர்கள் கருதினார்கள். இதனால் கோடை காலம் ஆரம்பித்ததும், சில நாட்களுக்கு உடல் நலத்துக்கு உவந்ததான ஏதாவதொரு இடத்திற்குச் சென்று தங்க முடிவு செய்தேன். இதனால், நாசிக்குக்குச் செல்ல நிச்சயித்தேன். அங்குச் சேட் பிர்லாவுக்கு ஒரு வீடிருந்தது. நல்ல காற்றுக்காகச் சென்று தங்கும் இடமாக அதை அவர் அடிக்கடி உபயோகித்து வந்தார். அங்குச் சென்று தங்க தீர்மானித்தேன். சேட் ராமேஷ்வர் தாஸ் பிர்லா பம்பாயிலிருந்து எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டார். நாசிக்குக்குப் போக எண்ணியதற்கு வேறொரு காரணமும் இருந்தது. மே மாதத்தில் அகில பாரதீயக் குழுவின் இருக்கை பம்பாயில் நடைபெற இருந்தது. நாசிக்கிலிருந்து பம்பாய் சமீபம் என்பதாகவும், அங்கிருந்து எளிதாகக் கூட்டத்திற்குச் சென்று கலந்து கொள்ளலாமென்பதாகவும் நினைத்தேன்.

நாசிக்குக்குச் செல்வதற்குமுன் செய்து முடிக்க வேண்டிய வேலை ஒன்றிருந்தது. கிராமத்தின் முன்னேற்றத்திற்காக அரசாங்கம் ஏதாவது வேலை செய்ய வேண்டுமென்று பீகார் மந்திரி சபை எண்ணியது. இதற்காக அது ஓர் இலாகாவை அமைக்க விரும்பியது. அந்த இலாக்கா பின்பற்றி வேலை செய்வதற்காக ஒரு திட்டத்தை அமைக்க வேண்டியிருந்தது. மந்திரி சபைக்குப்

பிடித்தமான நோக்கத்திற்கு இசைய இந்த வேலையைச் செய்யத் தகுந்தவராக ஓர் ஆளும் வேண்டியிருந்தது. இதுவரையில் அரசாங்கத்தின் சார்பில் கிராம முன்னேற்ற வேலை எதுவும் செய்யப்படவில்லை. இதுதான் முதல் திட்டம். கிராமத்தில் வாழ்பவர்களின் நிலைமையை எல்லா வகையிலும் முன்னேற்று வதே இதன் கருத்து. இதுவரையில் அரசாங்க வேலை பார்த்து வந்தவர்கள் ஒரு விதத்தில் பொதுமக்களின் எஜமானராகவும் அவர்கள் மேல் ஆட்சி செலுத்துபவர்களாகவுமே இருந்து வந்தார் கள். சிலர் தொண்டர்களாக அமர்ந்து வேலை புரிவது அவசியமா யிருந்தது. இந்த வேலையைத்தான் இந்த இலாகாவின் பொறுப் பில் ஒப்படைக்க நிச்சயிக்கப்பட்டது. நான் ஒரு திட்டத்தைத் தயார் செய்தேன். அரசாங்கமானது இந்த இலாகாவை பண்டித் பிரஜாபதி மிஸ்ராவின் மேற்பார்வையில் விட்டது. மற்றச் செயலாளர்களும் நியமிக்கப்பட்டார்கள். அவர்களுள் காங்கிரஸின் செயலாளர்கள் பலர் நியமிக்கப்பட்டார்கள். காங்கிரஸ்காரர் களுக்கு வேலை கொடுக்கவேண்டுமென்பது இதற்குக் காரண மன்று. அந்த வேலை அப்படிப்பட்ட வேலை. அதற்குச் சிறிதளவு அனுபவம் யாருக்காவது இருந்தால், அது காங்கிரஸ் செயலாளர் களுக்குத்தான் இருந்தது, வேறு யாருக்கும் இல்லை. ஏனெனில், வேறு எவரும் பீகார் மாகாணத்தில் இவ்விதமான வேலை எதையும் செய்ததில்லை. ஆயினும் அவர்களுடன் வேறு ஆட்களும் நியமிக்கப்பட்டார்கள். எல்லாருக்கும் சில நாட்களுக்குப் பயிற்சி அளித்து, அவர்களைத் தயார் செய்துவிட முடியுமென்று எண்ணப்பட்டது. நான் அமைத்து வந்த திட்டத்தை இன்னும் முடிக்கவில்லை. ஆகையால் பண்டித் பிரஜாபதி மிஸ்ரா நாசிக்குக்கு வந்து என்னைக் கண்டார். அங்கிருந்து கொண்டு அவர் அதை முடித்தார். இந்த இலாகா வேலை புரிந்து வந்த காலம் வரையில் அத்திட்டப்படியேதான் வேலை நடந்தது. இதனால் பொது மக்களுக்கு நலமுண்டாயிற்று என்று நினைக் கிறேன். ஆனால் மந்திரி சபை ராஜிநாமா கொடுத்துவிட்ட பிறகு, இதன் போக்கு மெல்ல மெல்ல மாறிவிட்டது. முடிவில் அரசாங்கமானது அத்திட்டத்தைக் கைவிட்டுவிட்டது.

நாசிக் பிரயாணத்தின்போது ஸ்ரீ சக்ரதரசரண் என்னுடன் போக முடியவில்லை. அவருடைய இடத்தை ஸ்ரீ அம்பிகா காந்த சின்ஹா எடுத்துக்கொண்டார். மற்றொரு தோழரும் கிடைத்தார். அவரைப்பற்றிச் சிறிது கூறுவது அவசியமெனத் தோன்றுகிறது. அவர்தாம் தேவராத்ஜீ பிரம்மச்சாரி என்ற பெயர் கொண்ட ஒரு

கனவான். அவர் கர்நாடாக பிரதேசத்தில் கடற்கரை 'ஓரத்தில் உள்ள கோகர்ணம் என்ற பெயர் கொண்ட தலத்தைச் சேர்ந்த பிராமணன். முஜபர்பூரில் நடந்த சுஹிருத-சங்கத்தின் ஆண்டு விழாவுக்குப் போனேன். அங்குத்தான் அவரை முதல் முதலாகச் சந்தித்தேன். அங்கு அவர் ஒரு புகழ் மாலை ஒன்றை இயற்றிப் படித்துக் காட்டினார். அமர் சம்ஸ்கிருதத்தில் சிறந்த வித்துவான். ஆனால் அங்கு அவருடன் நிறையப் பேசிப் பழக முடியவில்லை. பிறகு ஒரு நாள் நான் சதாகத் ஆச்ரமத்தில் உட் கார்ந்திருந்தேன். என் தமக்கையாரும் என்னுடன் இருந்தார். அன்று ஏதோ ஒரு புண்ணிய திதி. அதனால் நிறையப் பேர் கங்கை முழுக்குக்காக வந்தார்கள். அக்கனவானும் அவர்களுள் இருப்பதை கவனித்தேன். என் தமக்கையாரின் கவனமும் அவர்பால் சென்றது. அவர் அக்கனவானுக்கு மரியாதையும் உபசாரமும் செய்தார். அவருடன் பேசிப் பழகியபோது, அவருடைய கல்வித் திறத்தைப் பற்றிச் சிறிதளவு தெரிய வந்தது. எங்களுடன் சில நாட்கள் தங்கியிருக்கும்படி நான் அவரைக் கேட்டுக் கொண்டேன். அவர் அதற்கு ஒப்புக் கொண்டார். அவர் எங்கெங்கோ சுற்றித் திரிந்து, பீகாருக்கு வந்து சேர்ந்திருந்தார். நான் ஜீராதேயீக்குச் சென்றபோது அவரும் அங்கு வந்தார். சில நாட்கள் வரையில் எங்களுடன் தங்கியிருந்தார். அவரை நாசிக்குக்கும் வரும்படி அழைத்தேன். அவர் வைதிக பிராமணன். வேதம் முழுவதும் அவருக்கு அநேகமாக மனப்பாடம். உபநிஷத்துக்களை அவர் புத்தகத் தைப் பார்க்காமலே ஒப்பிப்பார். கர்நாட்டக்கில் இன்றுகூட பிராமணர்கள் வேதத்தையும் உபநிஷத்துக்களையும் மனப்பாடம் செய்யும் பழக்கம் இருந்து வருகிறதென்பது அவர் மூலமாகத் தெரிய வந்தது. அவர்கள் தம்முடைய வேலையைச் செய்து கொண்டிருக்கும்போதும், வயலை உழும்போதும்கூட இவற் றைப் பாடம் செய்து வருவார்களாம். அச்சமயத்தில் அவர் ஒரு சித்திரக் கோலம் வரைந்து கொண்டிருந்தார். அதில் வேதத்தில் கூறியுள்ளபடி சிருஷ்டி முறையை ஒரு சந்திர வடிவத்தில் காண் பிக்க விரும்பினார். அதில் அவர் பொருத்தமான வேத மந்திரங் களையும் மற்ற மந்திரங்களையும் எழுதி வந்தார். அதனால் அதை பார்ப்பவன் அவற்றைப் படித்தும் மேலும் அப்படத்தைப் பார்த் தும், அதை நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். இந்த வேலை யில் தாம் பல ஆண்டுகளாக ஈடுபட்டிருப்பதாகவும் அது இன்னும் முடியவில்லையென்றும் அவர் கூறினார். அவர் இவ்

வேலையைத் தம் சுற்று யாத்திரையிலேயே செய்து வந்தார். அவருடைய அற்புதமான ஞாபக சக்திக்கும் கல்வித் திறத்திற்கும் இது ஒரு கண்கூடான சாட்சியாயிருந்தது. ஏனெனில் அவரிடம் ஒரு புத்தகம்கூட இருக்கவில்லை. எல்லாவற்றையும் அவர் தம் நினைவிலிருந்தே தயார் செய்தார். நாசிக்கில் நாங்கள் நிறைய உலாவிச் சுற்றி வந்தோம். அவர் மாலை வேளையில் உபநிஷத்தை விளக்கிக் கூறுவார். அவர் ஒரு யோகி. நான் ஏதாவது யோக பயிற்சியை முறையோடு செய்து வந்தால் என்னுடைய ஈள நோய் போய்விடுமென்று அவர் கருதினர். நான் குடலைக் கழுவும் சாதனத்தை அவருடைய மேற்பார்வையில் பயிற்சி செய்யத் தொடங்கினேன். ஆனால் நாசிக்கில் பதினைந்து பதினாறு நாட்கள் தாம் இருக்க முடிந்தது. அதற்குப்பின் பம்பாய்க்குப் போக வேண்டி வந்தது. அங்குக் கடுமையாக நோய்வாய்ப்பட்டு விட்டேன்.

தேவராத்ஜீயின் தொடர்பு மிகவும் நன்மையைப் பயந்தது. அவர் இதற்குமுன் சிறிது காலம் ஸ்ரீ ரமண மகர்ஷியுடன் திருவண்ணாமலையிலும் இருந்திருந்தார் என்பது அங்குத் தெரிய வந்தது. ஸ்ரீ மகர்ஷியின் வாழ்க்கை வரலாற்றில் இவருடைய கல்வித் திறத்தைப்பற்றியும் ஆனந்தத் தாண்டவத்தைப் பற்றியும் கூறப்பட்டிருக்கிறது. இவர் மகர்ஷியுடனிருந்த தலைசிறந்த வித்துவான் கணபதி சாஸ்திரியின் சிஷ்யர். இத் தொடர்பினால் இவர் அந்த ஆச்ரமத்திற்குச் சென்று சில ஆண்டுகளுக்கு முன் தங்கியிருந்தார். இவர் கோகர்ணத்தில் ஒரு பாடசாலையையும் கோசாலையையும் நடத்தி வந்தார். வட இந்தியாவிற்குச் சுற்றுப் பிரயாணத்திற்காக வந்திருந்தார். இவர் பேசுவதைக் கேட்டால் அதிலிருந்து இவர் தென்னிந்தியாவில் வசிப்பவர் என்று கூற இயலாது. இவருடன் நாங்கள் நாசிக்கிலிருந்து திரயம்பக்குக்குத் தரிசனத்திற்காகச் சென்றோம். இத்தலம் கோதாவரியின் தோற்றுவாய் எனக் கருதப்படுகிறது. அக்கம்பக்கத்து மலைகளில் பழைய குகைகள் இருக்கின்றன. நான் அங்குச் சென்று அவற்றைப் பார்த்தேன். அப் பண்டைக் காலத்தின் கலையைப் பற்றியும் அக்காலத்தில் அங்குத் தவம் புரிந்தவர்களைப்பற்றியும் இவரிடமிருந்துதான் சிறிதளவு தெரிய வந்தது.

நாசிக்கில் வேறு பல பொருள்களையும் காண முடிந்தது. அங்குத்தான் பண நோட்டுக்களும், எல்லாவித கோர்ட்டு ஸ்டாம்புகளும், தபால் தலைகளும் அச்சிடப்படும் அரசாங்கத் தொழிற்சாலை இருக்கிறது. அத் தொழிற்சாலை மிகப் பெரியது.

நாங்கள் போஸ்டு கார்டுகள் அச்சடிப்பதையும், உறைகள் அச்சடித்துச் செய்யப்படுவதையும் பார்த்தோம். தபால் தலைகளும் அச்சடிக்கப்படுகின்றன. நோட்டுக்களையும் அச்சிடு கிருர்கள். நோட்டை அச்சிடுவதற்கு முன் அதன் தோற்றப்படம் வரையப்பட வேண்டும். அப்படம் வரையப்படும் இடத்தையும் பார்த்தோம். இந்த வேலைக்காக சித்திரக்காரர்கள் நியமிக்கப் பட்டிருக்கிருர்கள். அவர்கள் இந்த வேலையையே எப்பொழுதும் செய்து வருகிருர்கள். அந்தத் தோற்றப்படம் அங்கீகரிக்கப்பட்ட பின் அதை ஆதாரமாக வைத்துக்கொண்டுதான் நோட்டு அச்ச டிப்பதற்குச் சாமான்கள் தயார் செய்யப்படுகின்றன.

மற்ருெரு பொருளையும் அங்குக் கண்டோம். அது சிறிய விஷயமாயினும், அதுவும் மற்றப் பொருள்களைப் போலவே பெருமை உடைத்து. தீக்குச்சியின்மீது தீர்வை போடப் படுகிறது. அதைத் தண்டல் செய்யும் முறை இதுதான். அதாவது, ஒவ்வொரு தீப்பெட்டியின்மீதும் நாடா போன்ற ஒரு மெல்லிய காகிதம் ஒட்டப்படுவதுதான். அதைக் கிழிக்காத வரையில் பெட்டியிலிருந்து தீக்குச்சியை எடுக்க முடியாது. அக் காகிதத் துண்டு ஒட்டப்படாமல் ஒரு பெட்டிகூடத் தீப்பெட்டித் தொழிற்சாலையிலிருந்து வெளியே போகக்கூடாது. தொழிற் சாலைக்காரர்கள் பணத்தைக் கட்டி அக்காகித நாடாவை அரசாங் கத்திடமிருந்து விலைக்குப் பெறலாம். நீண்ட நாடா போன்ற அக்காகிதம் மேலே கூறப்பட்ட தொழிற்சாலையில் அச்சிடப் படுகிறது. ஒரு வேடிக்கை என்னவென்ருல் அங்கு வேலை செய்பவர்கள் எத்தனை லக்ஷம், கோடிக்கணக்கான நோட்டுக்களை அச்சடித்து, நாள்தோறும் ஆங்காங்கு அனுப்பினுலும், பாவம், அவர்களுக்கும் மற்றத் தொழிற்சாலைகளில் கிடைப்பதைப் போலவேதான் கூலி கிடைக்கின்றது என்பதுதான். அவர்களில் பெரும்பாலோர் மிகவும் ஏழ்மையான வாழ்க்கை நடத்தி வருகிருர் கள். நாள்தோறும் லக்ஷக்கணக்கான நோட்டுக்களைச் செய்பவர் களுக்கு நாளுக்கு ஒரு ரூபாய்தான் கூலி கிடைக்கலாம். என்ன வேடிக்கை பார்த்தீர்களா! எப்படி இருக்கிறது இக்கால உலகம்.

# 130. மத்திய மாகாண மந்திரி சபையின் சண்டை

நாசிக்கிலிருந்து நான் பம்பாய்க்குச் சென்றேன். அங்குச் செயலாற்றுக் குழு, அகில பாரதீயக் குழு ஆகிய இரண்டின் கூட்டங்களும் நடைபெற இருந்தன. ஹரிபுரா காங்கிஸுக்குப் பிறகு அகில பாரதீயக் குழுவின் இந்த இருக்கையில்தான் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் முதன் முதலாகத் தலைமை வகிப்பதாக இருந்தார். எட்டு மாதங்களாக காங்கிரஸ் மந்திரி சபைகள் வேலை செய்து வந்து கொண்டிருந்தன. சிலர் அவற்றைப்பற்றி மிகவும் கடுமையாகக் குறை கூறிக் கொண்டிருந்தார்கள். சில இடங்களில் காங்கிரஸ்காரர்களே அவற்றிற்கு விரோதமாகக் கட்சி கட்டி நின்றார்கள். அதனால் அவற்றின் வேலைக்கும் நிறைய கஷ்டங்கள் விளைந்து கொண்டிருந்தன. ஹரிபுரா காங்கிரஸின் சமயத்தில் அவை மாகாணங்களில் ராஜிநாமா கொடுத்துவிட்ட காரணத்தால் சூழ்நிலையில் நிறைய மாறுதல் உண்டானதாயினும், இந்த விஷயத்தைப் பற்றி பம்பாயில் ஒரு வேளை விசாரணை நடக்கலாம் என்பதாகத் தோன்றியது. ஆயினும், மந்திரி சபைகளின்மீது அதிருப்தி கொண்டிருந்தவர்கள் தம் விஷமத்தைக் கைவிடவில்லை. நான் அங்குச் சென்றதும் நோய்வாய்ப்பட்டுவிட்டேன். பேரவையில் கலந்துகொள்ள முடியவில்லை. அங்கு ஒரு சிறப்பான வேலை நடந்தது. நாடு முழுவதுக்குமாகத் திட்டமிடும் குழு (பிளானிங் கமிட்டி) ஒன்றை நிறுவ வேண்டுமென்பதாகவும், அது எல்லா மாகாணங்களின் அபிப்பிராயத்தையும் உதவியையும் கொண்டு ஒரு வேலைத் திட்டத்தை அமைக்க வேண்டுமென்பதாகவும், அதன்படி எல்லா மாகாணங்களின் மந்திரி சபைகளும் வேலை புரிய வேண்டுமென்பதாகவும் நிச்சயிக்கப்பட்டது. பண்டித் ஜவஹர்லால் நேரு அதற்குத் தலைவராகவும், பேராசிரியர் கே. டி. ஷா அதன் அமைச்சராகவும் நியமிக்கப்பட்டார்கள். எல்லா மாகாணங்களின் காங்கிரஸ் மந்திரி சபைகளும் இக்குழுவுக்கு முழு உதவியையும் அளிக்கத் தொடங்கின. மற்ற மாகாணக்காரர்களும் உதவி புரிய ஒத்துக் கொண்டார்கள். இக்குழுவானது பல கிளைக்குழுக்களாகப் பிரிந்துகொண்டு வேலை செய்து வந்தது. இதன் அறிக்கையும் அநேகமாகத் தயாராகி விட்டது. ஆனால் முற்றிலும் தயாராவதற்குமுன் அரசாங்கத்

தோடு சண்டை கிளம்பிவிட்டது. அந்த அறிக்கையானது அங்கீகரிக்கப்பட்டு நாட்டின் முன் வருவதற்கு இயலவில்லை.

பம்பாயில் எனக்கு 'பிராங்கோ நியூமோனியா' (நுரை ஈரலில் சளிக்கட்டு) வந்துவிட்டது. காய்ச்சலும் மிகவும் அதிகரித்துவிட்டது. இருமலும் மிகவும் கடுமையாகிவிட்டது. நான் அங்குப் பிர்லா ஹவுஸில் தங்கியிருந்தேன். அவர்கள் என்னை கவனிப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார்கள். ஒரு சிறு சம்பவம் குறிப்பிடத்தக்கதாகும். அக்காலத்தில் ஹிட்லரால் விரட்டியடிக்கப்பட்ட பல யூதர்கள் தம் நாட்டை விட்டுவிட்டு இங்குமங்குமாகச் சென்றுவிட்டார்கள். அவர்களுள் சில டாக்டர்கள் பம்பாய்க்கு வந்து தம் தொழிலை நடத்திக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் பிர்லா ஹவுஸுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார். அவர் எனக்கு வைத்தியம் செய்யத் தொடங்கினார். இரண்டு மூன்று நாட்கள் வரையில் அவருடைய வைத்தியம் நடந்தது. ஆனால் இன்னும் குணம் காணப்படவில்லை. பம்பாயைச் சேர்ந்த சில டாக்டர்கள்—ஸ்ரீ புருஷோத்தம் படேலும் அவர்களுள் ஒருவர் – தம்மைக் கூப்பிடாமல் ஒரு ஜெர்மன் டாக்டரின் வைத்தியம் நடக்கிறதைக் கேட்டுக் கோபமடைந்தார்கள் என்பதைக் கேள்விப் பட்டேன். இச் செய்தி கிடைத்ததும் அவர்களும் அழைக்கப்பட்டார்கள். பிறகு அக்காலத்தில் பம்பாயின் மந்திரிகளில் ஒருவராக இருந்து வந்த டாக்டர் கில்டரும் வந்தார். அவர்களுடைய வைத்தியம் நடக்கத் தொடங்கியது. பிறகு எனக்குக் குணமானதும் நான் வர்தாவுக்குப் போய்விடுவது நன்றென காந்திஜீ நினைத்தார். நானும் அப்படியே நினைத்தேன். பம்பாயின் காற்றில் ஈரமிருக்கிறது, அதை என்னால் தாங்க முடியவில்லை. இதனால் நான் வர்தாவுக்குப் போய்விட்டேன். உடம்பு நலமடைந்த பின்னும் அங்கேயே தங்கியிருந்தேன்.

மத்திய பிரதேசத்தின் மந்திரி சபையின் மந்திரிகளுக்கு இடையில் நிறைய அபிப்பிராய பேதம் விளைந்து வருகிறதென்பது பம்பாயிலேயே தெரிய வந்தது. ஒருவர் மற்றொருவர் மீது குறை கூறி வந்தார்கள். அதே சமயத்தில்தான் பார்லிமெண்டரி கமிட்டியானது இந்த விஷயத்தைப் பற்றி விசாரணை செய்வதாக நிச்சயித்தது. அக்காலத்தில் அரசாங்கம் பஞ்சமரீயில் இருந்து வந்தது. இதனால் சர்தார் வல்லபபாயீயும் மௌலானா சாஹபும் அங்குச் சென்றார்கள். எனக்கு உடம்பு சரியாக இல்லாததால் நான் அங்குப் போக முடியவில்லை. இச் சண்டை தலைமை

மந்திரி ஸ்ரீ டாக்டர் கரேக்கும் பண்டித் துவார்கா பிரசாத் மிஸ்ராவுக்கும் இடையில்தான் நடந்துவந்தது. மந்திரி சபையை அமைப்பதற்கு முன்பு, ஹிந்துஸ்தானி[1] மொழி பேசப்படும் மத்திய பிரதேசத்தில் இரண்டு கட்சிகள் இருந்தன. ஒன்று பண்டித் துவார்கா பிரசாத் மிஸ்ராவின் கட்சி என்றும் மற்றொன்று பண்டித் ரவி சங்கர் சுக்லாவின் கட்சியென்றும் கருதப்பட்டு வந்தன. 1937இல் அசெம்பிளிக்குத் தேர்தல் நடந்த அதே சமயத்தில் பண்டித் துவார்கா பிரசாதுக்கு விரோதமாக ஒரு வழக்கு தொடுக்கப்படப் போவதாக ஒரு செய்தி கிளம்பியது. உடனே அவர் தம் மீது வழக்குத் தொடுக்கப்படப் போவதாகக் கேள்விப்படுவதால், அதிலிருந்து விடுபட்டுத் தம்முடைய பெயருக்கு வந்த களங்கத்தைத் துடைத்துக் கொள்ளாதவரையில் தாம் காங்கிரஸின் பதவிகள் எல்லாவற்றிலிருந்தும் விலகி நிற்கத் தயார் என்பதாக செயலாற்றுக் குழுவுக்குச் செய்தி அனுப்பிவிட்டார். அங்கு, ஹிந்துஸ்தானிப் பகுதியின் உறுப்பினர்களின் முழு துணை கிடைக்காத வரையில் எவரும் காங்கிரஸ் கட்சிக்குத் தலைவராக முடியாது. பண்டித் துவார்கா பிரசாத் டாக்டர் கரேக்கு உதவி புரிந்தார். அவருடைய உதவியினால்தான் அவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். மந்திரி சபை அமைக்கப்படும் சமயம் வந்தபோது அவரைத்தான் கவர்னர் மந்திரி சபையை அமைக்கும்படி கட்டளையிட்டார். பண்டித் துவார்கா பிரசாதின்மீது தொடுக்கப்படுவதாக இருந்த வழக்கை ஆதாரமற்றதாகக் கருதி, அங்குள்ள அதிகாரிகள் அதைத் தள்ளி விட்டார்கள். அதற்குப் பின், பண்டித் துவார்கா பிரசாத்ஜீயும் மந்திரி சபையில் சேர்ந்துவிட்டார். இவ்விதமாக, அவருக்கும் டாக்டர் கரேக்கும் நெருங்கிய நட்பு இருப்பதாக எண்ணப்பட்டது. உண்மையிலேயே அப்படித்தானிருந்தது. பண்டித் ரவி சங்கர் சுக்லாவும் மந்திரியானார். காங்கிரஸ் வேலைகளில் அவர் பண்டித் துவார்கா பிரசாத்துடன் போட்டியிடுபவர் என்பதாகக் கருதப் பட்டார். மந்திரி சபையின் வேலைகளில் சுக்லாஜீயின் கருத்தும் மிஸ்ராஜீயின் அபிப்பிராயமும் பல விஷயங்களில் ஒன்றாக இருந்தன. இருவருக்கும் டாக்டர் கரேயுடன் கருத்து வேறுபாடு உண்டாயிற்று. இதோடு நின்றிருந்தால் யாதொரு குற்றமுமில்லை, ஏனெனில் நட்பு தனி விஷயம், தேசத் தொண்டின் சம்பந்தமாக

1. மத்திய பிரதேசத்தின் ஒரு பகுதியில் ஹிந்துஸ்தானி மொழியும் மற்றொன்றில் மராட்டியும் பேசப்படுகின்றன.

அபிப்பிராய பேதம் வேறொரு விஷயம். டாக்டர் கரே மிஸ்ராஜீயின் மீது குறை கூறினர், மிஸ்ராஜீ டாக்டரின்மீது குறை கூறினர்.

இக்குறைகளைத் தீர்ப்பதற்காக சர்தார் பஞ்சமரீக்குச் சென்றார். அங்குச் சில விஷயங்கள் தீர்க்கப்பட்டன. சண்டை தீர்ந்துவிடுமென்றும், இருவரும் இப்போது வேலையைச் சரிவர நடத்தி வருவார்கள் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அப்படி நடக்கவில்லை. டாக்டர் கரேயால் தம்முடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள இயலவில்லை. மிஸ்ராஜீயுடன் தாம் சமாளிக்க முடியாது என்று அவர் முடிவு செய்துவிட்டார். மிஸ்ராஜீயுடன் வேலை புரிந்து வந்ததினல் சுக்லாஜீக்கு அவருடன் அதிகமாக நெருங்கிய பழக்கம் உண்டாகிவிட்டது. டாக்டர் கரே அவர்கள் இருவரையும் எப்படியாவது மந்திரி சபையிலிருந்து தள்ளிவிடுவார் என்பதாகத் தெரியவந்தது. ஆனால் இச்சண்டையைத் தீர்க்கச் செய்யப்பட்ட முயற்சி வீணாயிற்று. அவர்களுக்கிடையில் பகைமை வளர்ந்துகொண்டே சென்றது. நான் உடல் நலமடைந்து வர்தாவிலேயே ஓய்வெடுத்துக்கொண்டிருக்கும் போதே சண்டை மிகவும் உக்கிரமான உருக் கொண்டுவிட்டதென்பதாகச் செய்தி கிடைத்தது. அதற்கு இரண்டே நாட்களுக்குப் பிறகு பார்லிமெண்டரி கமிட்டியும் செயலாற்றுக் குழுவும் கூடுவதாக இருந்தன. டாக்டர் கரே அதற்கு முன்னமே மந்திரி சபையைக் கலைத்துவிட்டுத் தமக்கு உவந்த மந்திரிசபையை அமைக்க விரும்பினர். அதற்காக அவர் கவர்னரின் உதவியை நாடினர். எனக்குச் செய்தி கிடைத்ததும் அவ்விதமாக யாதும் செய்ய வேண்டாமென்றும் இரண்டு நாட்களுக்குள் நடைபெறவிருந்த பார்லிமெண்டரி கமிட்டிக்காகவும் செயலாற்றுக் குழுவுக்காகவும் காத்திருக்கும்படியும் அவருக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினேன். அக்கடிதம் அவரிடம் இரவில் அனுப்பப்பட்டது. அன்றிரவே அவர் மந்திரி சபையின் ராஜிநாமாவைக் கொடுத்து, கவர்னரின் அங்கீகாரத்தையும் பெற்றுவிட்டார். புதிய மந்திரி சபையையும் அமைத்துவிட்டார். என் கடிதம் எப்படியோ அவருக்கு அன்றிரவே கிடைக்காமல் போயிற்று. அடுத்த நாள் காலை புதிய மந்திரி சபை அமைக்கப்பட்டாயிற்று. இதில் முந்திய சபையின் இவ்விரு மந்திரிகளுமில்லை. புதிதாக சிலர் எடுத்துக் கொள்ளப்பட்டார்கள். நாங்கள் நாகபுரிக்குச் சமீபத்தில் இருந்தும்கூட மந்திரிசபை புதிதாக அமைக்கப்பட்டான பிறகுதான் எங்களுக்குச் செய்தி கிட்டியது. எல்லாக் காரியங்களும் அத்தனை விரைவாக இரவோடு இரவாக நடந்துவிட்டன. அடுத்த நாள்

பார்லிமெண்டரி கமிட்டியின் இருக்கை நடந்தபோது, இப்படிச் செய்ததை எல்லாரும் மிகவும் தவறாகக் கருதினார்கள். இரண்டு கட்சிக்காரர்களும் அழைக்கப்பட்டார்கள். புதிதாக நியமிக்கப் பட்ட மந்திரிகளும் அழைக்கப்பட்டார்கள். ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸும் வந்துவிட்டார். அவர் பார்லிமெண்டரி கமிட்டியின் அங்கத்தினராக இல்லாவிட்டாலும், காங்கிரஸின் தலைவராக இருந்தார். அவருடைய முன்னிலையில் இரு கட்சிக்காரர்களும் கூறியதைக் கேட்டோம். இவ்விதமாகப் புதிய மந்திரி சபையை அமைந்தது, முக்கியமாகப் பார்லிமெண்டரி கமிட்டியின் இருக் கையும் செயலாற்றுக் குழுவின் கூட்டமும் விரைவில் நடைபெற இருக்கும்போது அமைந்தது, முறையன்று என்பதாகக் கமிட்டி கருதியது. புதிய மந்திரி சபையின் மந்திரிகள் ராஜிநாமா செய் யும்படி கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். இவ்விதமாக பேச்சிலேயே இரவு பெரும்பாலும் கழிந்துவிட்டது. ஆயினும், அப்போதே டாக்டர் கரேயானவர் தாமும் தம்முடைய புதிய மந்திரிகளும் ராஜிநாமா செய்வதாக கவர்னருக்குத் தொலை பேசி மூலமாகத் தெரிவித்துவிட்டார். அடுத்த நாள் அவர் ராஜிநாமாவை எழுதி அனுப்பிவிட்டார். அப்படியே மற்றவர்களும் செய்தார்கள். இப் போது புதிய மந்திரி சபையை அமைக்க நிச்சயிக்கப்பட்டது. அதில் பண்டித் ரவி சங்கர் சுக்லா தலைமை மந்திரியானார். பண்டித் துவாரகா பிரசாதும் ஒரு மந்திரியானார். டாக்டர் கரே அதில் சேரவில்லை. அப்பிரதேசத்து அசெம்பிளியின் காங்கிரஸ் கட்சிக் கூட்டம் வர்தாவில் நடைபெற்றது. அதற்குச் சுபாஷ் பாபூவும் நாங்களும் சென்றோம். அக்கட்சி சுக்லாஜீயையே தன் தலைவராக தேர்ந்தெடுத்தது. இதனால் அவரே தலைமை மந்திரி ஆக்கப்பட்டார்.

இந்த நடவடிக்கைகளால் அங்கு அதிகக் கலவரம் உண்டாகி விட்டது. டாக்டர் கரேக்கு மிக்க கோபம் வந்துவிட்டது. அவர் பார்லிமெண்டரி கமிட்டி மீதும் மகாத்மாஜீ மீதும் மிகவும் கடுமை யாக குறை கூறினார். நடவடிக்கை முழுவதையும் அவர் கடுமை யான சொற்களால் நிந்தித்தார். அவர் மகாராஷ்டிர பிராமணர். சுக்லாஜீயும் மிஸ்ராஜீயும் ஹிந்தி மொழி பேசும் பிராமண குலத் தைச் சேர்ந்த வட இந்தி கான்யகுப்ஜயர்கள். அங்கும் இன்னும் மற்ற இடங்களிலும் மகாராஷ்டிரர், மகாராஷ்டிரர் அல்லாதார் என்ற சண்டை கிளம்பிவிட்டது. காங்கிரஸுக்கு உள்ளேயே பெரிய பிளவு உண்டாகிவிடும் போலச் சில நாட்கள் வரையில் தோன்றிற்று. சில நாட்களுக்குள்ளாக டாக்டர் கரேயின் மீது

ஒழுக்க நெறியை மீறிய குற்றத்திற்காக நடவடிக்கை எடுக்கும்படி வந்துவிட்டது. அவருடைய நடவடிக்கைகள் அப்படி மாறிவிட்டன. அவரைக் காங்கிரஸிலிருந்து விலக்க வேண்டி வந்தது. இந்தச் சண்டை நடந்துகொண்டிருந்தபோது ஒரு புத்தகம் வெளிவந்தது. அதில் டாக்டர் கரேயின் நடவடிக்கைகள் ஆதரிக்கப்பட்டிருந்தன. செயலாற்றுக்குழு செய்த நடவடிக்கைகள் கண்டனம் செய்யப்பட்டிருந்தன. இந்த விஷயங்கள் எல்லாம் அகில பாரதீயக் குழுவின் முன் வருவதாக இருந்தன. சுபாஷ் பாபூ பல நாட்கள் வரையில் வர்தாவிலும் அதற்குப்பின் நாகபுரியிலும் தங்கியிருந்தார். அவர் ஒரு பெரிய அறிக்கையைத் தயார் செய்து அதில் எல்லா விஷயங்களையும் வெளியிட்டார். இந்த அறிக்கை ஒரு புத்தகமாக அச்சிடப்பட்டது. அகில பாரதீயக் குழுவின் கூட்டம் நடந்த சமயத்தில் அது வழங்கப்பட்டது. இந்தச் சண்டை முழுதும் விசாரிக்கப்பட்டது. டாக்டர் கரேயைக் காங்கிரஸிலிருந்து தள்ள நிச்சயிக்கப்பட்டது. டாக்டர் கரேயை 1934இல் இருந்தே, அதாவது மத்திய அசெம்பிளித் தேர்தலில் டாக்டர் முஞ்சே போட்டி போட்ட சமயத்திலிருந்தே, எனக்கு நன்ருகத் தெரியும். ஸ்ரீ அபயங்கர் இறைவனின் நிழலை அடைந்த பிறகு மராட்டி மொழி பேசும் மத்திய பிரதேசப் பகுதிக்குஇவர்தாம் தலைவராகக் கருதப்பட்டு வந்தார். எங்களுடன் எல்லாம் அவர் மிகவும் நன்ருகவே நடந்துகொண்டு வந்தார். மாகாண அசெம்பிளியின் தேர்தலின்போது அவருடைய யோசனையைக் கேட்டுக் கொண்டுதான் பார்லிமெண்டரி கமிட்டி எல்லாக் காரியங்களையும் செய்தது. மந்திரிசபை அமைப்பிலும் அவர்தாம் முக்கியமானவராக எப்போதும் கொள்ளப்பட்டு வந்தார். இவ்வண்ணமாகப் பார்லிமெண்டரி கமிட்டியாருக்கு அவர்மீது அதிக நம்பிக்கையிருந்தது. அவரிடம் மிகவும் நன்ருகவும் நடந்துகொண்டார்கள். காங்கிரஸின் தலைவன் என்ற முறையில் நான் அவருடைய மாகாணத்திற்குச் சென்றபோது அவருடன்தான் தங்கினேன். அம் மாகாணத்தைச் சுற்றி வரும்போது அவரும் என்னுடன் வந்தார். எல்லாவகையிலும் அவர் எல்லாராலும் மதிக்கப்பட்டு வந்தார். ஆயினும் இந்தச் சண்டையில் அவர் ஏன் இவ்விதமான எண்ணங்கள் கொண்டார் என்பது தெரியவில்லை. அவருக்கும் மிஸ் ராஜீக்கும் உண்டான சண்டையில் அவர் பார்லிமெண்டரி கமிட்டியையும் இழுத்து மாட்டி விட்டுவிட்டார். மகாத்மா காந்தியையும் அவர் தீண்டாமல் விடவில்லை. அச்சம்பவம் முழுவதும் மிகவும் வருந்தத் தக்கதாக அமைந்தது. ஏனெனில் அவரைப் போன்ற

தகுதி வாய்ந்த ஒரு மனிதர் காங்கிரஸுக்கு விரோதியாகி விட்டார். அதற்குப் பின் அவர் காங்கிரஸை, வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம், மிகவும் இழிவுபடுத்த முயற்சி செய்துவந்தார். அவர் விடுத்த அறிக்கைகளைப் போலவும் காங்கிரஸைப்பற்றி அவர் பேசியதைப் போலவும் காங்கிரஸின் பரம விரோதிகூடச் செய்திருக்கமாட்டான். அவ்வளவு கடுமையாக அவர் எழுதிப் பேசி வந்தார். காங்கிரஸின் பெருமையையும் அதனுடைய ஒழுங்கு நெறியையும் காப்பதைத் தவிர வேறு ஒரு எண்ணமும் எங்களுக்கு இருக்கவில்லை. உண்மையைக் கேட்கப் போனால், எவ்வளவுக்கு டாக்டர் கரேயை எனக்குத் தெரியுமோ, எவ்வள வுக்கு அவர் மீது எனக்கு மரியாதை இருந்ததோ அவ்வளவுக்கு மிஸ்ராஜீயிடம் எனக்குக் கிடையாது. ஏனெனில் மிஸ்ராஜீயுடன் வேலை செய்வதற்கு எனக்கு அவ்வளவு வாய்ப்புக் கிடைக்கவில்லை. டாக்டர் கரேயும், மிஸ்ராஜீயிடம் மிக்க மரியாதையுடையவராக இருந்தார். அவர் மீது அதிக நம்பிக்கை வைத்திருந்தார். ஆயினும் சில விஷயங்களில் கருத்து வேறுபாடு உண்டான காரணத்தால் இருவரும் ஒரே மந்திரி சபையில் சேர்ந்து இருக்க முடியாது என்ற அளவுக்கு அவர்மீது டாக்டர் கரேக்குக் கோபம் வந்து விட்டது.

## 131. ஆசாம், ஒரிசா மந்திரி சபைகள்

டாக்டர் கரேயைத் தள்ளுவதைப்பற்றிய தீர்மானம் நிறை வேற்றப்பட்ட அகில பாரதீயக் குழுவின் கூட்டத்தில் மந்திரி சபைகளைப்பற்றியும் வாதம் நடந்தது. காங்கிரஸுக்கு உள்ளும் கூட சிலர் மந்திரி சபைகளின் மீது அதிருப்தியடைந்திருந் தார்கள் என்பதும், எப்படியாவது அவற்றின்மீது குற்றம் சுமத் தவே விரும்பினர்கள் என்பதும் தெரிய வந்தன. அந்த வாதத் தின்போது நிறையப் பேச்சு நடந்ததாயினும், மேலும், தம்மை இடது கட்சிக்காரர்களென்று சொல்லிக்கொண்டவர்கள் இதைப் பற்றி மிகவும் வற்புறுத்தினர்களாயினும், அகில பாரதீயக் குழு வானது மந்திரி சபைகளைக் கண்டனம் செய்யவில்லை. சும்மா விட்டுவிட்டது.

ஒரு பக்கத்தில், மந்திரி சபை அமைக்கப்பட்ட இடங்களில், அவை இவ்வண்ணமாகத் தாக்கப்பட்டு வந்தன, மற்றொரு பக்

கத்தில், காங்கிரஸ் மந்திரி சபை இல்லாத இடங்களில் காங்கிரஸ் மந்திரி சபையை அமைக்க முயற்சி செய்யப்பட்டு வந்தது. ஹிந்துக்களும் முசல்மானியர்களும் மட்டுமன்றி அரசியல் சட்ட அமைப்பின்படி ஆங்கிலேயர் ஆதி வாசிகள் ஆகியவர்களின் எண்ணிக்கையும் அசெம்பிளியில் நிறைய இருந்த மாகாணங்களில் ஆசாமும் ஒன்ருகும். தேர்தலில் முசல்மானியருக்கு ஒதுக்கப்படாத இடங்களில் காங்கிரஸானது நிறைய வெற்றி பெற்றிருந்தது. ஏனெனில் காங்கிரஸ்காரர்கள்தாம் எல்லாரையும்விட அதிகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அசெம்பிளி முழுவதிலும் அதனுடைய கட்சிதான் எல்லாவற்றையும்விடப் பெரியது. ஆயினும் அசெம்பிளியில் அதற்குத் தனிப்பட்ட பெரும்பான்மை பலம் இருக்கவில்லை. மற்றக் காங்கிரஸ் மாகாணங்களில் அல்ப ஆயுள் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டபோது ஆசாமிலும் ஒன்று அமைக்கப்பட்டது. ஆனல் மற்ற இடங்களில் நின்று இது வேறுவிதமாக இருந்தது. காங்கிரஸுக்குத் தனியாகப் பெரும்பான்மை பலமில்லை. இதனல் மற்றவர்கள் எல்லாருமாகக் கூடிக் கொண்டால், காங்கிரஸ்காரர்கள் சிறுபான்மையராகி விடுவார்கள். ஆகையால் சில மாதங்களுக்குப் பிறகு, மற்ற இடங்களில் மந்திரி சபைகள் அமைக்கப்பட்டபோது அங்கும் அமைக்க முடியவில்லை. சிறிது காலம் வரையில், அங்குக் காங்கிரஸ் அல்லாத மந்திரிசபைஒன்று மற்றவர்கள் எல்லாரையும் சேர்த்துக் கொண்டு தன் பெரும்பான்மை பலத்தைக் காத்துவர முடிந்தது. ஆனல், இப் பெரும்பான்மை பலம் நிலையுற்றதன்று. 1938இன் பிற்பகுதியில் அந்த மந்திரி சபைக்குப் பெரும்பான்மை பலமில்லாமற் போயிற்று. அங்கும் மற்றக் கட்சிக்காரர்களுடன் கூடிக்கொண்டு காங்கிரசானது தன் பெரும்பான்மையை அமைப்பதற்கு வாய்ப்புக் கிடைத்துவிட்டது. இவ்வண்ணமாக மற்றச் சிலருடன் கூடி அது தன் மந்திரி சபையையும் அமைக்க முடியும். இப்படிப்பட்ட நிலைமை வந்ததும், அங்குள்ளவர்கள் பார்லிமெண்டரி கமிட்டி காங்கிரஸ் தலைவர் ஆகியவர்களின் கட்டளை என்னவென்பதை அறிய விரும்பினர்கள். சுபாஷ் சந்திர பாபூவும், பார்லிமெண்டரி கமிட்டி உறுப்பினரான மௌலான ஆஜாதும் அங்குச் சென்றர்கள். பார்லிமெண்டரி கமிட்டியின் சார்பில் அம்மாகாணத்தை மேற்பார்வையிடும் பொறுப்பு மௌலான ஆஜாதின் கையில்தான் ஒப்படைக்கப்பட்டிருந்தது. மந்திரி சபையை அமைக்க வேண்டுமென்ற கட்சியை ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் பலமாக ஆதரித்தார். ஆனல் மௌலான சாஹபுக்கு அது பிடிக்கவில்லை. என்னுடைய

அபிப்பிராயமும் சர்தார் வல்லப்பாயீயின் அபிப்பிராயமும் தொலை பேசி மூலமாகக் கேட்கப்பட்டன. நாங்கள் இருவரும் வெவ்வேறு இடங்களில் இருந்தோம். இதனால் நாங்கள் கலந்து பேசி ஒரு அபிப்பிராயத்தை அளிக்க இயலவில்லை. அவரவர் இருந்த இடத்திலிருந்தே தத்தம் அபிப்பிராயத்தை அளித்தோம். சர்தார் சுபாஷ் பாபூவின் பேச்சை ஏற்றுக் கொண்டார். நான் மௌலானு சாஹபின் சார்பில் அபிப்பிராயத்தை அளித்தேன். காங்கிரஸானது மந்திரி பதவிகளைச் சில கொள்கைகளை அடிப் படையாகக் கொண்டு ஏற்று வந்து கொண்டிருந்தது. வெறும் பதவிக்காக அப்பதவியை அது ஏற்க விரும்பவில்லை. எங்கு அதற்குச் சொந்தப் பெரும்பான்மை பலமில்லையோ அங்கு அது வேறு கருத்துக் கொண்டவர்களின் மீது நம்பிக்கை வைக்க வேண்டியிருக்கும். காங்கிரஸுக்குச் சொந்த பெரும்பான்மை பலமுள்ள மற்ற மாகாணங்களில் நடப்பது போல அங்கு சுயேச் சையுடனும், அஞ்சாமையுடனும் அது வேலை செய்ய முடியா தென்பதை நாங்கள் உணர்ந்தோம். இப்பெரும்பான்மை பலத் தினுல்தான் ஒரிசாவில் சர் ஜான் டேனே கவர்னர் ஆகவிடாமல் காங்கிரஸ் தடுத்துவிட்டது. அப்படிப்பட்டச் சந்தர்ப்பம் ஆசாமில் வந்தால், காங்கிரஸானது மற்றவர்களின் பலத்தைக் கொண்டு இவ்வண்ணமான பலவந்தக் காரியத்தைச் செய்ய முடியுமா ? இதில் எங்களுக்கு ஐயமிருந்தது. இதனால், அங்குப் பதவி கிடைக்கலாம். மந்திரி சபையின் வேலையும் சாதாரண மாக நடந்து வரலாம், ஆனால் ஏதாவதொரு சிக்கலான சந்தர்ப் பம் வந்தால் அப்போது நாம் காங்கிரஸின் கொள்கையை நிறை வேற்ற முடியாதென்பதாக நான் நினைத்தேன். ஆனால் சுபாஷ் பாபூ வேறுவிதமாக நினைத்தார். பதவியை ஏற்றுக் கொண்டு விட்டால், காங்கிரஸின் வலிமை பெருகுமென்பதாகவும், இச்சம யத்தில் காங்கிரஸிலிருந்து பிரிந்து நிற்பவர்கள், அப்போது காங்கிரஸுடன் சேர்ந்து கொள்வார்களென்பதாகவும், இதனால் பதவி ஏற்றுக் கொள்வதுதான் சரியென்பதாகவும் அவர் நினைத் தார். சர்தார் தலைவரின் பேச்சை ஏற்றுக் கொண்டார். அகில பாரதீயக் குழுவின் இருக்கை நடைபெறுவதற்கு மூன்று நான்கு நாட்கள் இருக்கும்போதுதான் அங்கு மந்திரிசபை அமைக்கப் பட்டது. ஆசாமிலிருந்து திரும்பி வரும்பொழுது, வழியில் சுபாஷ் பாபூவின் உடல் நிலைமை சிறிது கேடுற்று விட்டது. அவர் அக்கூட்டத்திற்குக் காலந்தாழ்ந்து வந்து சேர்தார்.

ஒரிசாவைப்பற்றி மேலே குறிப்பிடப்பட்டது. அங்கு மிஸ்டர்

டேன் என்பவர் சிவில் சர்வீஸில் உயர்ந்த பதவிவகித்து வந்தார். அங்குள்ள கவர்னர் விடுமுறை எடுத்துக் கொண்டு செல்வதாக இருந்தார். அவருடைய இடத்திற்கு மிஸ்டர் டேன் சில மாதங்க ளுக்காக நியமிக்கப்பட்டார். தன்னுடைய அதிகாரத்திற்கு உட் பட்டு வேலை பார்த்து வருபவரும், கவர்னர் பதவியின் காலம் முடிந்தபின் மீண்டும் தன் அதிகாரத்திற்கு உட்பட்டு வேலை செய்யத் திரும்பி வரக்கூடியவருமான ஒருவரைக் கவர்னராக நிய மிக்கக் கூடாதென்று மந்திரி சபை கூறியது. "இன்று எங்கள் அதிகாரத்திற்கு உட்பட்டிருக்கிறவர் நாளைக்கு எங்களுக்கு மேலே வந்துவிட்டால் நாங்கள் அவருடைய அதிகாரத்திற்கு உட்பட வேண்டி வரும். அது சரியன்று. வேலை புரிவதில் கஷ்டங்கள் வரக்கூடும், மேலும் சிவில் சர்க்கீஸ்காரர்களின் மீது மந்திரிசபை யின் ஒழுங்குக் கட்டுப்பாடு சரிவரச் செல்லாது", என்று கார ணங் கூறினார்கள். மிஸ்டர் டேன் கவர்னராக நியமிக்கப்பட்டால் மந்திரிகள் தம் பதவிகளில் இருக்க முடியாதென்றும், மந்திரி சபை ராஜீநாமா கொடுத்துவிடுமென்றும் மந்திரி சபையானது மிரட்டியது. சில நாட்களுக்கு முன் மிஸ்டர் டேனுடன் ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றிக் கருத்து வேறுபாடு எழுந்த தாயினும் அவருடன் யாதொரு சண்டையில்லை. அவர்கள் இந்த விஷயத் தைக்கொள்கைக்காகவே எதிர்த்தார்கள். இதனால் என்ன ஆயிற்று என்றால் கவர்னர் ஓய்வு எடுத்துக் கொள்ளவில்லை. ஆகையால் பதிலுக்கு வேலை பார்ப்பதற்காக வேறொருவரைக் கவர்னராக நியமிக்க வேண்டிய அவசியம் அப்போது அங்கு எழவில்லை. மற்ற மாகாணங்களில், எங்கெங்கு கவர்னர் ஓய்வு எடுத்துக் கொண்டு சென்றபோது அவருடைய இடத்தில் வேறொருவரைக் கவர்னராக நியமிக்க வேண்டிய சந்தர்ப்பம் வந்ததோ, அப்பதவி அம்மாகாணத்தின் சிவிலியனுக்கு கிடைக்கவில்லை. மற்றொரு மாகாணத்திலிருந்து எவராவது கொண்டுவரப்பட்டார். நிற்க, கொள்கையென்ற வரையில் இது சரிதான். ஆயினும் எவராவது சிவிலியன் கவர்னர் ஆனால் அது நான்கு மாதங்களுக்குத் தான் என்பதை நினைக்க வேண்டும். அவ்வளவு நாட்களுக்குத்தான் கவர்னர்கள் சாதாரணமாக ஓய்வு எடுத்துக் கொள்கிறார்கள். இதற்காக வேறொரு மாகாணத்திலிருந்து ஒரு சிவிலியனைக் கொண்டு வந்து கவர்னராக்குவது மாகாணத்திற்கு எவ்வளவு தூரம் நன்மையைப் பயக்கும்? நான்கு மாதங்களில் அவரால் மாகாணத்தின் நிலைமையைக்கூட அறிந்து கொள்ள இயலாது; இதனால் அவர் சும்மா ஓர் இடத்தை அடைத்துக் கொண்டு

மட்டும் உட்கார்ந்திருப்பார். வேறு யாதும் செய்ய முடியாது. அம்மாகாணத்தைச் சேர்ந்தவரும், அரசாங்கத்தோடு சம்பந்தப் படாதவரும், மேலும் அம்மாகாணத்தின் விஷயங்களைத் தெரிந்த வரும், மற்றவகைகளிலும் தகுதியுள்ளவருமான ஒருவரைக் கவர்னராக நியமிப்பதே எல்லாவற்றையும் விட நல்ல முறை யாகும்.

## 132. திரிபுரா காங்கிரஸுக்கு முன்னும் பின்னும்

அகில பாரதீயக் கமிட்டியின் இருக்கை முடிந்துவிட்டது, ஆயினும் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்கள் இன்னும் அங் கேயே இருந்தார்கள். அச்சமயத்தில் ஐரோப்பாவில் ஹிட்லர் செக்கோஸ்லோவாக்கியாவின் மீது படையெடுக்க விரும்பினு ரென்பதாகவும், இங்கிலாந்தின் பிரதம மந்திரி மிஸ்டர் சேம்பர் லேன் ஹிட்லரைச் சந்திப்பதற்காகச் சென்றிருக்கிருர் என்பதாக வும் செய்தி கிடைத்தது. அப்போது கிடைத்த செய்திகளி லிருந்து, இங்கிலாந்துக்கும் ஜெர்மனிக்கும் யுத்தம் மூண்டு விடுமோ என்ற அச்சம் எழுந்தது. இதனுல் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்கள் அங்கேயே தங்கிவிட்டார்கள். சண்டை மூண்டுவிட்டால் காங்கிரஸ் என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி யோசனை செய்யலானுர்கள். ஹிட்லர் செக்கோஸ்லோ வாக்கியாவின்மீது படையெடுப்பது சரியல்லவென்பதைப்பற்றி ஐயம் இல்லை. ஜெர்மானியர்கள் சிலர் செக்கோஸ்லோவாக்கியா வில் இருப்பதாகவும் அவர்களுடன் அங்குள்ள அரசாங்கம் சரி யாக நடந்து கொள்ளவில்லை யென்பதாகவும், அவர்கள் ஜெர்மனி யுடன் சேர விரும்புகிருர்களென்பதாகவும் ஹிட்லர் சாக்குக் கூறினுராயினும், இட்டாலியானது அபிசீனியாவின்மீது படை யெடுத்தது எவ்வளவு சரியன்ருே அதேபோல இதுவும் சரி யன்றுதான். செக்கோஸ்லோவாக்கியாவில் மூன்று வகையான மக்கள் இருக்கிருர்கள். ஜெர்மானியர் சிலர், சில செக்குக்கள், சில ஸ்லோவாக்குகள். இந்நாடானது முதல் ஐரோப்பிய மகா யுத்தத்திற்குமுன் ஆஸ்திரியா சாம்ராஜ்யத்தின் ஆட்சியின் கீழி ருந்தது. அப்போருக்குப் பின் இது சுதந்திரமடைந்தது. அச்

சாம்ராஜ்யம் துண்டு துண்டாகப் போடப்பட்டுப் போனபோது இந்த ஒரு துண்டு ஒரு சுதந்திர நாடாக நிறுவப் பெற்றது. அபி சீனியா யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயத்தில், அதாவது இட்டாலி அதன்மீது படையெடுத்து அதைக் கைப்பற்ற முயற்சி செய்து கொண்டிருந்தபோது, காங்கிரஸானது அபிசீனியா விடம் தன் அனுதாபத்தைக் காட்டியது. ஆனால் பிரிட்டிஷ் அர சாங்கமும் தான் அதனிடம் அனுதாபம் காட்டியது; சாம்ராஜ் யத்தின் சண்டையில் காங்கிரஸ் பிரிட்டனுக்கு உதவி செய்வ தில்லையென்று முடிவு செய்தது. அச்சமயத்தில், பிரிட்டிஷ் சாம்ராஜ்யமானது அபிசீனியா போன்ற எளிய நாட்டின் உதவிக் காக இட்டாலியின்மீது சண்டைக்குச் சென்றிருந்தால் காங்கிர ஸுக்குத் திண்டாட்டமாகி இருந்திருக்கும். ஏனெனில் அபிசீ னியாவுக்கு உதவி புரிவது காங்கிரஸுக்கு விருப்பம்தான். ஆயி னும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு உதவி செய்வது அன்று. அதே கேள்வி இச்சமயத்திலும் எழுந்தது. அதோடு, காங்கிரஸ் என்ன உதவி அளிக்க முடியுமென்பதைப் பற்றியும் யோசிக்க வேண்டி யிருந்தது. காங்கிரஸ் அஹிம்சா கொள்கையை ஏற்றுக்கொண் டிருந்ததென்பது ஒரு விஷயம். அக்கொள்கையை ஏற்றிருப்ப தால் அது ஆயுதம் கொண்டு புரியப்படும் யுத்தத்தில் உதவி செய்யக்கூடுமா இல்லையா என்ற கடினமாக கேள்வி எழுகின்றது. காங்கிரஸ் மந்திரி சபைகள் பல மாகாணங்களில் வேலை புரிந்து வருகின்றன என்பதையும் அவற்றின் வேலைகள் எல்லாம் அஹிம்சா கொள்கையின்படி நடக்கவில்லை யென்பதையும், கூடவே கண்டோம். பல இடங்களில் கலகங்கள் நடந்தபோது, காங்கிரஸ் மந்திரி சபையின் ஆட்சியிலும் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டியிருந்தது. போலீஸும் சிறைச்சாலைகளும் தத் தம் வேலைகளைப் புரிந்து வந்தன. மத்திய ஆட்சியில் காங்கிர ஸுக்கு அதிகாரமில்லைதான். ஆனால் அங்கும், "நாங்கள் அஹிம் சாவைக் கடைப்பிடிப்பவர்கள், ஆயுதபாணி படை எங்களுக்குத் தேவையில்லை" என்று காரணம் காட்டிப் படைகள் வைத்திருப் பதைக் காங்கிரஸ் என்றுமே எதிர்த்ததில்லை. இது மட்டுமன்றி உண்மையாகவே சண்டை மூண்டுவிட்டால், அது நம்முடைய கட்டுக்கு உட்படாத விஷயமாகும். காங்கிரஸானது வேறு வழி யில்லாமல் அதற்கு உதவி புரியவேண்டி வரும், அல்லது எதிர்க்க வேண்டிவரும். இந்தக் கேள்விகளெல்லாம் திடீரென்று ஒரடியாக எங்கள் முன் வந்துவிட்டன. மகாத்மாஜீயும் அங்கிருந்தார். ஆனால் நேருஜீ ஐரோப்பாவுக்குச் சென்றிருந்தார். இதனால்

மகாத்மாஜீயின் அபிப்பிராயம் கிடைக்க முடியும். ஆனால் ஜவ ஹர்லால்ஜீயின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள முடிய வில்லை. இக்கேள்விகள் எல்லாக் கோணங்களிலிருந்தும் ஆலோ சனை செய்யப்பட்டன. முக்கியமாக காங்கிரஸ் மந்திரி சபை களுக்கு என்ன கட்டளையிடுவது என்ற கேள்வி எங்கள் முன் நின்றது. அதே சமயத்தில் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர் களுக்கு இடையில் இந்த விஷயத்தைப்பற்றி அபிப்பிராய பேதம் இருப்பதாகத் தெரிய வந்தது. ஆயினும் பெரு முயற்சிக்குப் பின்னும் தலைவரின் அபிப்பிராயம் என்னவென்பதையும், அவர் என்ன கட்டளையிடுவார் என்பதையும் எங்களால் அறிய முடிய வில்லை. நாங்கள் இங்கு இவ்வண்ணமாக ஆலோசனை செய்து கொண்டிருந்தபோது அங்கு இங்கிலாந்தும் பிரான்சும் எப் படியோ ஜெர்மனியுடன் ஏதோ பேசி முடித்துவிட்டனவென்றும், இப்போது சண்டை மூளாதென்றும் செய்தி வந்துவிட்டது.

இந்த ஆண்டும் அநேகமாக முடிவுக்கு வந்துவிட்டது. இந்த ஆண்டில் காங்கிரஸ்காரர்கள் மந்திரி சபை வேலையில்தான் முக் கியமாக ஈடுபட்டிருந்தார்கள். அங்கு இங்குக் காங்கிரஸ் குழுக் களிலும் சண்டைகள் உண்டாயின. காங்கிரஸ் தேர்தல் மிகவும் ஆவேசமாகப் போராடப்பட்டது. இந்த இரண்டு மூன்று ஆண்டு களில் காங்கிரஸில் நிறையப் பேர் உறுப்பினர்களாகச் சேர்ந்து விட்டார்கள். ஏனெனில் செயலாளர்கள் இதற்காக அதிக மும்முர மாக வேலை செய்தார்கள். முதலில், சிறிது காலம் வரையில், காங்கிரஸ் சட்டத்திற்குப் புறம்பாக ஆகிவிட்டது. இதனால் அது மீண்டும் பணியாற்றத் தொடங்கியதும் மக்களுக்கு ஆர்வம் பெரு கியது. அதற்குப் பிறகு, புதிய அரசியல் திட்டத்தின்படி அசெம் பிளிக்குத் தேர்தல் நடைபெறுவதாக இருந்தது. காங்கிரஸின் சார்பில் நிறுத்தப்படுவதற்காக மக்கள் அதிக உற்சாகம் காட்டி னார்கள். சிலர் இவ்வண்ணமாகவும் நினைத்தார்கள். அதாவது தம்முடைய கருத்து கொண்டவர்கள் காங்கிரஸுக்குள் நிறைய வந்து சேர்ந்துவிட்டால், தம்முடைய கருத்து கொண்டவர்களை (அபேக்ஷகர்களாக) நியமிக்க முடியுமென்று எண்ணினார்கள்: இதனாலும் இன்னும் வேறு பல காரணங்களாலும் காங்கிரஸின் உறுப்பினர்களின் எண்ணிக்கை மேலும் அதிகமாகப் பெருகியது. இப்போது காங்கிரஸ் பிரதிநிதிகள் அகில பாராதீயக் குழுவையும் தலைவரையும் தேர்ந்தெடுக்கும் காலமும் நெருங்கிவிட்டது. இம்முறை மௌலானா அபுல்கலாம் ஆஜாதையே தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று சிலர் நினைத்தார்கள். சிலர்

சுபாஷ் பாபூவையே மீண்டும் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று விரும்பினூர்கள். சுபாஷ் பாபூக்கும் தாம் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்ற விருப்பமிருந்ததாகவும் கேள்விப்பட்டது. ஆனல் இந்த விஷயம் செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களின் முன் வரவில்லை. ஹரிபுரா காங்கிரஸுக்கு முன்பு, எல்லாருடைய அபிப்பிராயத்தின்படி, முக்கியமாக மகாத்மாஜீயின் இசைவுடனும் வாழ்த்துடனும், சுபாஷ்பாபூ எல்லாருடைய சம்மதத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தம்முடைய விருப்பத்தை மகாத்மாஜீயிடம் கூறியிருந்தால், மேலும் எல்லோருமாகக் கூடி ஆலோசித்திருந்தால், ஏதாவதொரு வழி கண்டுபிடிக்கப்பட்டிருக்கும். விஷயம் மேற்சென்றிருக்காது. ஆனல் அவரோ, அவரை ஆதரித்தவர்களோ அப்படிச் செய்யவில்லை. பிறகு இதைக் காரணமாகக் கொண்டு மிகவும் இழிவான வகையில் சண்டை மூண்டுவிட்டது.

1939ஆம் ஆண்டு மார்ச்சில் காங்கிரஸின் ஆண்டு விழா மத்திய பிரதேசத்தில் ஜபர்பூருக்கு அருகிலுள்ள திரிபுராவில் நடைபெறுவதாக இருந்தது. ஜனவரியில் செயலாற்றுக் குழுவின் இருக்கை ஒன்று பார்டோலீயில் நடந்தது. மகாத்மாஜீ பல ஆண்டுகளாக, ஒவ்வொரு ஆண்டின் குளிர் காலத்திலும் ஒரு மாதத்தைப் பார்டோலீயில் கழித்து வந்தார். அந்நாட்களில் அவர் அங்கு இருந்தார். இதனுல் கூட்டமும் அங்கேயே நடத்தப்பட்டது. என் நினைவுக்கு எட்டிய வரையில் அங்கு யாதும் சிறப்பான கேள்வி எழவில்லை. அங்கிருந்து புறப்படும் சமயத்தில் எங்களுக்குள் ஏதோ பேச்சு நடந்தது. அதிலிருந்து இம்முறை மௌலானு சாஹபைத்தாம் தலைவராகத் தேர்ந்தெடுப்பார்கள் என்பதாக நான் நினைத்துக் கொண்டேன். மௌலானுவுக்கும் மகாத்மாஜீக்கும் பேச்சு நடந்தது. அவரும் தம்மைத் தேர்ந்தெடுக்கலாமென்று ஒத்துக்கொண்டார். ஆனல் அவர் பின்னல் தம்முடைய கருத்தை மாற்றிக் கொண்டதாகவும், தமக்கு விருப்பமின்மையை மகாத்மாஜீயிடம் வெளியிட்டாரென்பதாகவும் கேள்விப்பட்டோம். நான் பட்னுவுக்குப் போய்ச் சேர்ந்தேன். டாக்டர் பட்டாபிராமய்யாவைத் தலைவர் பதவிக்கு ஆதரிப்பதற்காக ஓர் அறிக்கையில் என்னுடைய கையொப்பம் வேண்டுமென்பதாகச் சர்தார் வல்லப்பாயீயிடமிருந்து தந்தி வந்தது. நான் ஒத்துக்கொண்டேன். டாக்டர் பட்டாபி தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பது அப்போதுதான் எனக்குத் தெரிய வந்தது. இம்முடிவைச் சர்தாரானவர் மகாத்மாஜீயின் சம்மதத்துடன் செய்தார்.

மௌலானா தலைவராக விரும்பவில்லையென்பதும் டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யாவுக்கும் ஸ்ரீ சுபாஷ் போஸுக்கும் போட்டி வந்து விட்டதென்பதும் இப்போது வெளிப்படையாகிவிட்டது.

சாதாரணமாக ஒவ்வோர் ஆண்டும் தலைவர் தேர்தலுக்காக மூன்று நான்கு பெயர்கள் கிளம்பும். அவர்களிலிருந்து ஒருவர் தேரப்படுவார். ஆயினும் பல ஆண்டுகளாக, இருவருக்குப் போட்டி என்று வந்ததில்லை. பெரும்பாலும் எல்லா மாகாணக் காரர்களும், அவர்களுக்கு வேறு யாரும் எதுவும் கூருமலே, இம் முறை இன்னாரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பதாக ஒத்துக் கொள்வார்கள். அவரே தேர்ந்தெடுக்கப்படுவார். எஞ்சி நின்ற பேரைப்பற்றி விசேஷமாக யாதொரு முயற்சியும் செய்யப்படுவ தில்லை. அவர்களுக்கு இங்கும் அங்கும் ஏதாவது ஒரு வாக்கு விழுந்தாலும்கூட, வேறொருவருடன் போட்டி போட்டு ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பதாக அர்த்தம் கொடுப்பதில்லை. இம்முறை தேர்தல் வேறு உருக்கொண்டுவிட்டது. இருவருக்குப் போட்டி வந்துவிட்டதாகத் தெரிய வந்தது. இது மட்டுமன்று. ஒரு பக்கத்தில் காந்திஜீயின் கருத்தோடு ஒத்த கருத்துக்கொண் டவர்களும் மற்றொரு பக்கத்தில் காந்திஜீயின் வேலைத் திட்டத்தில் நம்பிக்கையில்லாதவர்களும் இருப்பது போலவும் தெரிய வந்தது. பம்பாய்க் காங்கிரஸிலிருந்து காந்திஜீ காங்கிரஸினின்று தனி யாகப் போய்விட்டாராயினும் இது வரையில் அவருடைய கருத் தோட்டத்தின்படியே காங்கிரஸ் தன் வேலையைப் புரிந்து வந்தது. எல்லா விஷயங்களைப் பற்றியும் அவருடைய அபிப்பிராயப்படியே தான் வேலை நடந்து கொண்டு வந்தது. ஏதாவது கருத்து வேறு பாடு வந்துவிட்டால் அவர்தாம் அச்சிக்கல்களைத் தீர்த்து வைப் பார். கடைசியில் அவர்தாம் எல்லாச் சண்டைகளையும் தீர்த்து வைப்பார். இம்முறை வேறு ஏதோ புதிதாக நடக்கப் போவதாக வும், அதனால் தம்முடைய வேலைத் திட்டத்தைத் தாமே புனைபவ ரும், தாம் வகுத்த வழியில் காங்கிரஸை நடத்திச் செல்ல விரும்புவருமான ஒருவர் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பதாகவும் தெரிய வந்தது. இவ்விதமாக இருந்ததென்பது உண்மைதான். ஆனால் தேர்தல் சமயத்தில் இது தெளிவுபடவில்லை. காந்திஜீ தம் சார்பிலிருந்து யாதொரு அறிக்கையையும் வெளியிடவில்லை. மௌலானா நின்றிருந்தாரானால் அவர் நிறையப் பெரும்பான்மை பலத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பார் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் சாதாரண காங்கிரஸ்காரர்கள் அவரே வேண்டுமென்று விரும்பினார்கள். மேலும் அவர்கள் காந்திஜீயின் வேலைத் திட்

டத்திலிருந்து புறஞ்சொல்லவும் விரும்பவில்லை. இத்தேர்தலில் டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யானவர் ஒருவகை கருத்தோட்டம், ஒருவகை வேலைத் திட்டம் ஆகியவற்றின் சின்னமாக அபேக்ஷராக நிற்கின்றார் என்பது அவர்களுக்குத் தெரியாது. நிற்க, தேர்தல் நடந்தேறியது. பயன் - ஒரு பெரிய பெரும்பான்மை பலத்துடன் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பல ஆண்டுகளாகச் செயலாற்றுக் குழுவின் இருக்கை வழக்கமாகக் காங்கிரஸுக்குச் சில நாட்களுக்கு முன் நடைபெற்று வந்தது. அதில், காங்கிரஸ் நடக்கும்போது நடைபெறும் விஷய ஆலோசனைக் குழுக்காகத் தீர்மானங்களின் மசோதாக்கள் தயார் செய்யப்படும். இம்முறை அப்படியே நடைபெற வேண்டும். செயலாற்றுக் குழுவில் இருந்தவர்களில் பெரும்பாலோர் சுபாஷ் பாபூவின் கருத்துடன் (அது தெரிய வந்த அளவுக்கு) ஒரு மனப்பான்மை இல்லாதவர்களாக இருந்தார்கள். சுபாஷ் பாபூ தம்முடைய கருத்துக் கிசைந்தவர்களுடன் கலந்து பேசித் தீர்மானங்களைத் தயார் செய்வது நன்றென நாங்கள் நினைத்தோம். ஏனெனில் அவர்தாம் காங்கிரஸின் சுமையை ஏற்க வேண்டும். அவருக்கும், காந்திஜீயின் கருத்தோட்டத்தில் நம்பிக்கை கொண்டிருந்த எங்களுக்கும் இதுதான் நன்றாகும். செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களாக இருந்து கொண்டு அத்தீர்மானங்களைத் தயாரிப்பதிலும் உதவி அளித்தபின் நாங்கள் காங்கிரஸின் அம்பலச் சபையில் அத்தீர்மானங்களை எதிர்ப்போமானால் அது தகாத காரியமாகும். நாங்கள் செயலாற்றுக் குழுவில் இருப்பதனால் சுபாஷ் பாபூவுக்கும் இடைஞ்சலாயிருக்கும். அவர் தம்முடைய இஷ்டப்படி அத்தீர்மானங்களை அமைக்க முடியாது. ஏனெனில் செயலாற்றுக் குழுவில் எங்களுக்குப் பெரும்பான்மை பலம் இருந்தது. இதனால் நாங்கள் செயலாற்றுக் குழுவிலிருந்து ராஜிநாமா செய்து விட்டோம். இவ்வண்ணமாக அவருக்குத் தம் இஷ்டப்படி செயலாற்றுக் குழுவை அமைத்துக் கொள்ளவும், அதன் உதவியைக் கொண்டு தீர்மானங்களைத் தயார் செய்யவும் முழு வாய்ப்பை அளித்து விட்டோம். இப்படிச் செய்ததால் அத்தீர்மானங்களைப் பார்த்த பின்னும் அவற்றை நாங்கள் ஒத்துக்கொள்ள முடியாவிட்டால் காங்கிரஸில் அவற்றை எதிர்ப்பதற்கு எங்களுக்குச் சுதந்திரம் இருக்கும். எவர் பக்கத்தில் பெரும்பான்மை பலமிருக்கிறதோ அவர்தாம் அதை நடத்தும் பொறுப்பை ஏற்க வேண்டுமென்பதும், மேலும்,

அப்பெரும்பான்மையின் விருப்பத்தின்படி வேலைத் திட்டத்தை அமைக்க வேண்டுமென்பதுமே ஜனநாயகத்தின் சாதாரண முறையுமாகும்.

நாங்கள் வர்தாவுக்கு சென்றோம். செயலாற்றுக் குழு அங்கு நடைபெற இருந்தது. சரியான சமயத்தில் நாங்கள் சென்றோம், ஏனென்றால் எல்லா விஷயங்களையும் நேருக்கு நேர் பேசி முடித்து விடலாம். பிறகு எங்கள் நடவடிக்கையைப் பற்றி யாதொரு தப் பெண்ணமும் இருக்காது. ஆனால் எங்கள் கெட்ட காலத்தால் சுபாஷ்பாபூ நோய் வாய்ப்பட்டு விட்டார். அங்கு வரவே யில்லை. செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களின் ராஜிநாமாவைப் பற்றி ஒன்றும் நடக்கவில்லை. நாங்கள் விரும்பியிருந்தால், அவர் இல்லாதபோது எங்கள் கருத்துக்கிசையத் தீர்மானங்களைத் தயார் செய்திருக்கலாம், அவற்றை விஷய ஆலோசனைக் குழுவுக்கு முன் கொண்டு வருவதற்கும் முயற்சி செய்திருக்கலாம். ஆனால் நாங்கள் அப்படிச் செய்வதைப் பொருத்தமற்றதாகக் கருதினோம். ஏனெனில் சுபாஷ் பாபூவுடன் பிரதிநிதிகளில் பெரும்பான்மையோர் ஒருமனப் பட்டிருக்கிறார்கள் என்பதுதான் தலைவரின் தேர்தலில் அர்த்தம் என்பதையும், ஆகையால் அவர் உசிதமென்று கருதியபடி வேலை செய்வதற்கு அவருக்கு முழு வாய்ப்பை அளிப்பதுதான் நியாயம் என்பதையும் நாங்கள் உணர்ந்தோம். இதனால் செயலாற்றுக் குழுவின் கூட்டத்தைத் தள்ளிப்போட வேண்டி வந்தது. நாங்கள் திரிபுராவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். இத்தேர்தலைப் பற்றியும் அதற்குப் பின் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றியும் காங்கிரஸ்காரர்கள் இடையில் பேச்சும் வாக்கு வாதமும் நடந்து கொண்டிருந்தன.

இதே சமயத்தில் காதியாவாரில் வேறொரு நிலைமை முளையெடுத்துக் கிளம்பிக் கொண்டிருந்தது. அங்குச் சில சிற்றரசர்களின் குடிகளுக்கும் அரசர்களுக்கும் இடையில் மனஸ்தாபம் உண்டாகிவிட்டது. சர்தார் வல்லப்பாயீ இதில் மனம் செலுத்தி வந்தார். அங்குள்ளவர்கள் அவருடைய யோசனைப்படிதான் வேலை செய்து வந்தார்கள். தானே நேரடியாக சுதேச ராஜ்யங்களின் சண்டைகளில் தலையிடுவதில்லை யென்பது இதுவரையில் காங்கிரஸின் கொள்கையாக இருந்து வந்தது. ஆயினும் சுதேச ராஜ்யங்களின் பொது மக்களின் ஜனநாயக அவாவுக்கு அது அனுதாபம் காட்டிவந்தது. மேலும் காங்கிரஸ்காரர்கள் தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு உதவியும் புரிந்து வந்தார்கள். இந்தக் கொள்கையின்படிதான் டாக்டர் பட்டாபி சீத்தாராமய்யா

தேசிய ராஜ்ய பிரஜா மண்டலுக்குத் தலைவரானர். பண்டித் ஜவஹர்லால்ஜீயும் அவ்விதமாக அமைந்தார். எல்லா விஷயங்களைப் பற்றியும் மகாத்மாஜீயிடம் கூறிக் கேட்டுக் கொள்வார்கள். அவருடைய சம்மதத்துடனும் அவருடைய கட்டளைப்படியுமே அவற்றை நடத்தி வந்தார்கள். குஜராத்து, காதியாவார் ஆகிய சமஸ்தானங்களில் சர்தார் வல்லீப்பாயீ மிக்க ஈடுபாட்டுடனும் ஊக்கத்துடனும் வேலை புரிந்து வந்தார். தேவைப்பட்ட இடத்திற்குச் சென்றும் வந்தார். சேத் ஜம்நாலால்ஜீ முக்கியமாக ராஜபுத்தானுவின் சமஸ்தானங்களைச் சம்பந்தப்பட்ட வேலைகளைப் புரிந்து வந்தார். பிரஜா மண்டலை நிறுவுதற்கும் உதவி புரிந்து வந்தார்.

இச்சமயத்தில் காதியாவாரைச் சேர்ந்த சமஸ்தானமான ராஜ்கோட்டின் அரசருக்கும் குடிகளுக்கும் இடையில் எழுந்த மனஸ்தாபத்தில் சர்தார் வல்லப்பாயீ தலையிட்டார். அவர் மத்தியஸ்தம் செய்ததின் பேரில் சில முடிவுகள் செய்யப்பட்டன. அவற்றை அரசரும் ஏற்றுக்கொண்டார். இந்த ஒப்பந்தத்திற்கு மகாத்மாஜீ உடன்பட்டிருந்தார். பிறகு அரசரும் ராஜாங்க அதிகாரிகளும் ஒப்பந்தத்தின் நிபந்தனைகளை நிறைவேற்றுவதாகக் கொடுத்த வாக்கிலிருந்து புரண்டார்கள். மகாத்மாஜீக்கு இது மிகவும் தவருகப்பட்டது. அவர் சத்தியத்திற்கும் வாக்குக்கும் அதிகப் பெருமை கொடுப்பார். எவராவது தாம் செய்த சத்தியத்தை மீறியதைக் கண்டால் அவருக்கு எல்லையற்றத் துன்பம் உண்டாகும். முக்கியமாகப் பொதுஜன விவகாரங்களில் செய்யப்பட்ட ஆணைக்கு இன்னும் அதிகப் பெருமை உண்டு. ஒரு முறை பேசி முடிவு செய்யப்பட்ட பின் அப்பேச்சை சிற்றரசர் நிறைவேற்ற வேண்டுமென்று அவர் விரும்பினர். இதற்காக அவர் முழு முயற்சியும் செய்தார். தாமே ராஜ்கோட்டுக்குச் சென்றார். தம் முயற்சி பலிக்காமற் போனதும் அவர் உண்ணுவிரதத்தை ஆரம்பித்து விட்டார். உண்ணுவிரதம் அவருக்குப் புதிய விஷயமன்று. அவர் தென் ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பி வந்து இந்தியாவில் வேலையைத் தொடங்கிக் கொண்டிருந்த சமயத்தில் அகமதாபாத்தின் தொழிலாளர்கள் ஹர்த்தால் செய்தார்கள். தம்முடைய கோரிக்கைகள் நிறைவேற்றப்படாத வரையில் தாம் வேலை செய்ய மாட்டோமென்று தொழிலாளர்கள் அந்த ஹர்த்தாலில் உறுதி பூண்டார்கள். அப்படி உறுதி பூணும்போது தொழிலாளர்கள் அதன் பெருமையைச் சரியாக உணர்ந்திருக்காமலிருக்கலாம். இந்தியாவுக்கும் காந்திஜீ முற்றிலும் புதியவர்.

அச்சமயத்தில் எவரும் அந்த ஆணையைப் பொருட்படுத்த வில்லை. தொழிலாளர்களுக்குத் துன்பம் வரத் தொடங்கியதும் அவர்கள் வேலைக்குத் திரும்பிவர ஆரம்பித்தார்கள். காந்திஜீக்கு இதைப் பொறுக்க முடியவில்லை. அவர் உண்ணுவிரதத்தை ஆரம்பித்து விட்டார். இதனுல் ஒரு புறத்தில் தொழிலாளர்கள் தடுக்கப்பட்டு விட்டார்கள். மற்றொரு புறத்தில் மில் முதலாளி களும் மசிந்து வந்தார்கள். இதனுல் திருப்தியான ஒப்பந்தம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. அதே கொள்கையைக் கடைப் பிடித்து அவர் ராஜ்கோட் சமஸ்தானத்தை அதன் வாக்கை நிறை வேற்றச் செய்வதற்காக உண்ணுவிரதத்தை ஆரம்பித்து விட் டார். திரிபுராவில் காங்கிரஸ் நடந்து கொண்டிருந்த அதே சம யத்தில் தான் அந்த உண்ணுவிரதம் நிகழ்ந்தது. இக்காரணத் தால்தான் காந்திஜீ திரிபுராவுக்கு வர இயலவில்லை. அங்கு நிகழ்ந்தனவெல்லாம் அவர் இல்லாத சமயத்தில்தான் நடைபெற் றன. காந்திஜீயின் உண்ணுவிரதத்தின் பயனுக வைசிராய் லார்டு லின்லித்கோ அச்சண்டையில் தலையிட்டார். ஒரு வித மாக அச்சண்டை அப்போது தீர்ந்துவிட்டது. காந்திஜீயும் உணவு உண்டார். இந்த உண்ணுவிரதத்தின் மூலமாக அவர் கடப்பாட்டைப் பற்றி ஓர் ஆழ்ந்த பொருள் செறிந்த கொள் கையை விளக்கினுர். அதைப் பற்றி அவர் 'ஹரிஜன்' வாரப் பத்திரிகையில் தான் அதிகமாகக் குறிப்பிட்டார். இந்த உண்ணு விரதம் அஹிம்சா மயமானதன்று என்பதாக அவர் நினைத்தார். அவர் அதைப்பற்றி மீண்டும் சிந்தனை செய்தபின் தம் தவறை உணர்ந்தார். அதையும் அவர் வெளியிட்டார். இவ்விதமான கடப்பாடு கேள்விகளைப் பற்றி அதி நுட்பமாக ஆராய்வதற்கும், மேலும் எங்காவது ஏதாவது விஷயத்தில் தம் நடவடிக்கையானது சத்தியத்தினின்று மயிரளவேயாயினும் வழுவிவிட்டதாக உள் ளத்தில் உணர்ந்த மாத்திரத்தில் அதை உடனே கைவிடுவ தற்கும் அவர் சிறிதுகூடத் தயங்குவதில்லை. இப்படி அவர் செய்து வருகிறுர், அவரால் செய்ய முடியும். மற்ற அரசியல் வாதி எவரும் இவ்விஷயங்களை அந்த உயர்ந்த கடப்பாடு நோக் கத்துடன் பார்ப்பதுமில்லை, மேலும் சின்னஞ் சிறிய குறைபாடு களுக்காக தம் நடவடிக்கையை மாற்றிக் கொள்வதுமில்லை.

திரிபுரா காங்கிரஸ் விழா ஓர் விசித்திரமானதும் துக்கமானது மான நிலைமையில் நடந்தது. தேர்தலுக்குப் பின் செய்தித் தாள் களில் நிகழ்ந்த வாக்கு வாதங்களினுல் எங்களுக்குள் நிறைய மனக்கசப்பு வந்துவிட்டது. சுபாஷ்பாபூ பெரும்பான்மை

பலத்தால் தேர்ந்தெடுக்கப்பட்டதினுல் எங்களுக்கு அதிகக் கோபம் வந்துவிட்டதென்பதாகவும், அவரை அவமானப்படுத்த விரும்புகிருேமென்பதாகவும், இதனுல்தான் நாங்கள் செயலாற்றுக் குழுவிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டோமென்பதாகவும், அவருடைய வழியில் ஒவ்வொரு விஷயத்திலும் முட்டுக்கட்டைப் போட்டுக்கொண்டு வருகிருேம் என்பதாகவும் சுபாஷ்பாபூவை ஆதரித்தவர்கள் எங்கள் மீது குற்றஞ்சாட்டி வந்தார்கள். பெரும்பான்மைபலம் உண்மையாகவே அவர் சார்பிலிருந்தால், காங்கிரஸை நடத்தும் பொறுப்பு முழுவதையும் அவர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதாகவும் அவருடன் முற்றிலும் ஒத்துப் போகிறவர்களைக் கொண்டே செயலாற்றுக் குழுவை அமைத்துத் தம்முடைய வேலைத் திட்டத்தை அவர் நிச்சயிக்க வேண்டுமென்பதாகவும் நாங்கள் நினைத்தோம். அவரோடு பல விஷயங்களில் எங்களுக்கு ஒருமனப்பான்மை கிடையாது. அவருடன் சேர்ந்து வேலை புரிவது எங்களுக்கு மிகவும் கடினமாகும். கொள்கையைப் பற்றியும் வேலைத் திட்டத்தைப் பற்றியும் அவருக்கு எங்களுடன் கருத்து மாறுபாடு இல்லை என்ருல் அவர் தேர்தலில் போட்டி போட்டிருக்கக் கூடாது. அவருடன் பெரும்பான்மை பலம் இல்லையென்ருல், மேலும் அவர் மக்களின் முட்டாள்தனத்தாலோ அல்லது வேறு காரணத்தாலோ தேர்ந்தெடுக்தெடுக்கப்பட்டிருந்தால் அத்தேர்தல் தவருகும். எது எப்படியாயினும் சரி, விஷயம் தெளிவுபட வேண்டுமென்று நாங்கள் விரும்பினேம். அவரும் அவருடைய கருத்து கொண்டவர்களும் வேலைத்திட்டத்தை அமைப்பது என்பதும் அதன் (வெற்றிக்குப்) பொறுப்பு எங்கள் தலைமேல் இருப்பதென்பதும் எங்களுக்குப் பிடிக்கவில்லை. அதை நாங்கள் ஒத்துக்கொள்ளவில்லை யென்று கூட எங்களால் கூற இயலாது. இக்காரணங்களால்தாம் நாங்கள் காங்கிரஸுக்கு முன்னமே ராஜிநாமா செய்துவிட்டோம். ஆயினும் மேலே கூறியுள்ளபடி, அந்த ராஜிநாமா ஏற்றுக்கொள்ளப்படவில்லை. திரிபுரா காங்கிரஸின்போது பழைய செயலாற்றுக்குழுதான் இருந்தது.

திரிபுராவில், விழாவுக்கு முன்னும், விழாவின் போதும் எங்களுக்குள் நிறைய நெரிசல் வந்துவிட்டது. செயலாளர்கள் இடையில் கடுமையான கருத்து மாறுபாடு நிலவியது. துர்பாக்கிய வசமாக சுபாஷ் பாபூவும் நோயாயிருந்தார். திரிபுராவுக்கு அவர் மிகவும் மனமுடைந்த நிலையில் வந்து சேர்ந்தார். தலைவராக நியமிக்கப்பட்டவர் புதிய செயலாற்றுக் குழுவை அமைத்துக்

கொள்ள வேண்டுமென்றும், நாங்கள் முழுச் சுதந்திரத்தோடு காங்கிரஸில் நடந்துகொள்ள இயல்வதற்காக எங்களை விட்டுவிட வேண்டுமென்று நாங்கள் அங்கும் நிறைய முயற்சி செய்தோம். ஆனால் அப்படி ஆகவில்லை. அவர் அளிக்க விரும்பிய வேலைத் திட்டத்தைப் பற்றி முதலாவதாக எங்களுக்கு முற்றிலும் தெரியாது. தெரிய வந்த அளவுக்கு அதை நாங்கள் ஒப்புக் கொள்ளவில்லை. இந்த நிலைமையில் செயலாற்றுக் குழுவானது தன் தீர்மானங்களைத் தயார் செய்ய வேண்டியிருந்தது. அதில் நாங்கள் நிலைமை முழுவதையும் எல்லாத் திசைகளிலும் கவனித்துப் பார்த்து, தலைவரானவர் இஷ்டப்பட்டால் தம்முடைய விருப்பப்படி செயலாற்றுக் குழுவை அமைத்துக்கொண்டு தம் வேலைத் திட்டத்தைக் காங்கிரஸைக் கொண்டு அங்கீகரிக்கச் செய்யட்டும் என்றும் அல்லது அவர் அப்படிச் செய்யத் தயாராயில்லாவிட்டால் வேலைத் திட்டத்தையும் செயலாற்றுக் குழுவையும் காந்திஜீயின் யோசனைப்படி அமைக்கட்டும் என்றும் கூறினோம். அவை இரண்டில் எது ஒன்றையும் அவர் செய்ய விரும்பவில்லை. ஏனெனில் பெரும்பான்மை பலத்தால் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அவருடைய வேலைத் திட்டத்தை காங்கிரஸ் அம்பல சபை ஏற்காதென்பது அவருக்குத் தெரியும். அந்த நிலைமையில் அவர் மீண்டும் காந்திஜீயின் வேலைத் திட்டத்தையே ஏற்று அதன்படியே நடக்க வேண்டி வரும், அல்லது ராஜீநாமா செய்ய வேண்டி வரும். அவர் காந்திஜீயின் கருத்து கொண்டவர்களின் வேலைத் திட்டத்தை ஏற்கவும் விரும்பவில்லை, அவர்களை விடவும் விரும்பவில்லை. அவர்கள் தம்முடைய வேலைத் திட்டத்தின் பொறுப்பை ஏற்கவேண்டுமென்றும் அவர்களே அதை நடத்த வேண்டுமென்றும் அவர் விரும்பினார். எங்களுள் சிலர் அவ்வப்போது அவரிடம் சென்று இந்த விஷயங்களைப் பற்றி அவருடைய கருத்து என்ன என்பதைக் கேட்டு வந்தார்கள். ஆயினும் யாதொரு வழியும் பிறக்கவில்லை. கடைசியில் நாங்கள் எங்களுடைய தீர்மானங்களை விஷய ஆலோசனைக் குழுவில் சமர்ப்பிப்பதென்பதாகவும், தலைவர் எது சரியென்று நினைக்கிறாரோ அதைச் செய்யட்டும் என்பதாகவும் முடிவு செய்தோம்.

விஷய ஆலோசனைக் குழுவின் கூட்டத்திற்குச் சுபாஷ் பாபூ அவருடைய உடல் நலமற்ற நிலைமையிலேயே எப்படியோ வந்து சேர்ந்தார். அவர் மேடையின் மீது படுத்திருந்தார். படுத்திருந்தபடியே சிறியதொரு சொற்பொழிவும் ஆற்றினார். அதில் தம்முடைய கருத்தையும் தம் நோக்கத்தையும் கூறினார். எங்

களுடைய தீர்மானமும் சமர்ப்பிக்கப்பட்டது. அது பெரும் பான்மை பலத்துடன் அங்கீகரிக்கப்பட்டது. அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் உறுப்பினர்களைக் கொண்டே அமைந்த விஷய ஆலோசனைக் குழுவில் அவருக்குப் பெரும்பான்மை பல மில்லையென்பது தெளிவாகி விட்டது. அடுத்த விழாவில் புதிய உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படும் வரையில் தலைவ ரானவர் அந்த ஆட்களோடுதாம் அகில பாரதீயக் குழுவில் வேலை செய்ய வேண்டும். ஆயினும் காங்கிரஸின் அம்பல சபை யில் பிரதிநிதிகளின் போக்கு எப்படியிருக்குமென்பது இன்னும் தெரியாது. அங்கும் எங்களுக்குத்தான் அதிமிக்கப் பெரும் பான்மை இருக்குமென்று நாங்கள் அறிந்திருந்தாலும் சபை நடைபெருத வரையில் நாங்கள் எதுவுமே நிச்சயமாகக் கூற இய லாது.

அம்பல சபை நிகழ்ந்தது. சுபாஷ் பாபூ அவைக்கு வர வில்லை. இதனுல் அவருடைய இடத்தில் மௌலானு அபுல் கலாம் ஆஜாத் அமர்ந்தார். நியமிக்கப்பட்டிருந்த தலைவருக்காக நெடு நேரம் காத்திருந்தும் அவர் வராத பிறகுதான் இது நிகழ்ந்தது. அவருக்கு உடல் நலமில்லாததை எல்லாரும் முன்னமே அறிந் திருந்தார்கள். அங்கும் எல்லாம் விரிவாகக் கூறப்பட்டது. சபை தொடங்கியது. தலைவரின் சொற்பொழிவு படிக்கப்பட்டது. எகிப்திலிருந்து சில பிரதிநிதிகள் காங்கிரஸைப் பார்க்க வந்திருந் தார்கள். அவர்களுக்கு நல்வரவு கூறப்பட்டது. அவர்கள் எகிப் தின் சார்பில் காங்கிரஸுக்கும் இந்தியாவின் விடுதலைக் கிளர்ச்சிக் கும் தங்கள் பரிவைக் காட்டினுர்கள். அதற்குப் பின் முறைப்படி வேலைத்திட்டத்தைத் தொடங்கப்போகும்போது சிலர் எழுந்து, தலைவர் இல்லாதபோது தீர்மானங்களைச் சமர்ப்பிக்கக்கூடா தென் பதாகக் கூறினுர்கள். நாடெங்குமிருந்து மக்கள் வந்து கூடி யிருந்தார்கள். இவ்வளவு பெரிய சபையைத் தள்ளிப் போடுவது நியாயமாகத் தோன்றவில்லை. தீர்மானங்கள் அன்று சமர்ப்பிக் கப்படுமென்றும், ஆனுல் வாதங்களும் அவரவர் கருத்தை அளிப் பதும் அடுத்த நாள் நடக்குமென்றும், அதற்குள் தலைவர் வந்து விடுவாரென்று எதிர்பார்க்கப்படுகிறதென்றும் தலைவர் மௌலானு கூறினுர். அவர் இப்படிக் கூறியது சிலருக்குப் பிடிக்கவில்லை. சிலர் கூச்சல் போட ஆரம்பித்தார்கள். கூச்சல் போட்டவர்களின் எண்ணிக்கை அதிகமன்று. ஆயினும் ஒரு பெரிய சபையையும் கூட மிகச் சிலர் குழப்பமடையச் செய்துவிடக் கூடும். அச்சமயம் பண்டித் ஜவஹர்லால்ஜீ மேடையின்மீது எழுந்து நின்ருர்.

அவர் மக்களை அமைதிப்படுத்தத் தன்னாலான வரையில் முயன்றார். ஆயினும் கூச்சல் போடுபவர்கள் அமைதியுறுவதற்கு மாறாகத் தம்மிடத்தை விட்டு முன்னேறி மேடைக்கு அருகில் வந்து, மேலும் அதிகமாகக் கூச்சலிடத் தொடங்கினார்கள். ஜவஹர்லால்ஜீ தம் இடத்தைவிட்டு அசையவில்லை. அவர் அங்குக் கூடியிருந்த பொதுமக்களையும் பிரதிநிதிகளையும் தத்தம் இடங்களில் உட்கார்ந்திருக்கும்படி ஒலிபெருக்கியின் மூலமாகத் திரும்பத் திரும்ப இடையறாது மன்றாடிக் கேட்டுக்கொண்டு நின்றார். இதனால் நின்றுகொண்டு இரைந்துகொண்டிருந்தவர்கள் நின்றுகொண்டேயிருந்தார்களாயினும் அவர்களோடு வேறு ஒருவரும் சேர்ந்து கொள்ளவில்லை. அச்சபையில் அவர்கள் அதி மிகச் சிலரே என்பது அப்போது புலப்பட்டது. அவர்கள் மேடைக்கு அருகில் வந்து, சிறிது நேரம் வரையில் கூச்சல் போட்டுக்கொண்டிருந்தார்களாயினும் ஜவஹர்லால்ஜீ தம்மிடத்தைவிட்டு நகரவில்லை. கடைசியில் அவர்கள் அசந்து போய் அடங்கிவிட்டார்கள். அதற்குப் பிறகு சபையின் நடவடிக்கை சரிவர நடந்தது. இரண்டு தீர்மானங்களும் சமர்ப்பிக்கப்பட்டன. வாதமும் வாக்கெடுத்தலும் அடுத்த நாளுக்காகத் தள்ளிப் போடப்பட்டன.

இம்முழக்கத்தால் அங்கு வந்திருந்த பொது மக்களுக்கும் பிரதிநிதிகளுக்கும் கோபம் வந்ததென்பதைக் கண்டோம். இம்முழக்கத்தின் மூலமாகப் பொது மக்களையும் பிரதிநிதிகளையும் தம் பக்கத்தில் ஈர்க்கலாமென்று எண்ணினவர்களின் முயற்சியானது பலிக்காமல் போனது மட்டுமன்றி அவர்களுக்கு கேடு விளைவிப்பதாகவும் அமைந்தது. ஏனெனில் அவர்களைப் பின் தொடர்ந்த சிலரும்கூட அவர்களுடைய இந்நடத்தையால் மனம் நொந்து மற்றொரு பக்கம் போய்விட்டார்கள். அடுத்த நாள் இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக சபை திறந்த பந்தலில் நடத்தப்பட்டது. அங்கு இடையூறின்றி வாக்கு எடுப்பதை முன்னிட்டும், யாதும் குறைபாடு வராமல் தடுப்பதற்காகவும், பிரதிநிதிகள் மட்டுமே உள்ளே வர அனுமதிக்கப்பட்டார்கள். அங்குத் தீவிர வாதம் நடந்தபின் வாக்கெடுக்கப்பட்டது. அதி மிக்கப் பெரும்பான்மையுடன் எங்களுடைய தீர்மானங்கள் அங்கீகரிக்கப்பட்டன. அம்பல சபையில் யாதொரு கருத்து மாறுபாடுமில்லாத மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டபின் விழா முடிவுற்றது.

விழா முடிவடைந்து விட்டதாயினும் மனக்கசப்பு மேலும் அதிகமாகி விட்டது. எந்த விஷயத்தையும் முடிவு செய்ய இயல

வில்லை. காங்கிரஸ் சபையில் தலைவர் விரும்பாத தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இது மட்டுமன்று, அச்சபை தலைவரின் தீர்மானத்தையே நிராகரித்துவிட்டது! தலைவர் இப்போது என்ன செய்வார் என்பது கேள்வி. அத்தீர்மானத்தை அவர் ஒப்புக் கொண்டால், அவர் காந்திஜீக்கு நம்பிக்கையுள்ளதும், அவருடன் ஒத்துப் போகக்கூடியதுமான புதிய செயலாற்றுக் குழுவை நியமிக்க வேண்டும். திரிபுராவில் நோய்வாய்ப்பட்டிருந்த காரணத்தால் சுபாஷ் பாபூ, சாதாரணமாகத் தலைவர் செய்வதுபோல, அங்கேயே செயலாற்றுக் குழுவை நியமிக்கவில்லை. அவரும் நாங்களும் தத்தம் இடங்களுக்குத் திரும்பிச் சென்றுவிட்டோம்.

திரிபுராவில் செய்யப்பட்ட முடிவுப்படி சுபாஷ் பாபூ வேலை புரிய விரும்பவில்லை. அவருடன் சில நாட்கள் தங்கியிருந்து இந்த விஷயத்தை அவருடன் கலந்துபேசி யாதாவதொரு முடிவு செய்யலாமென்றால் அவருடைய உடல்நிலை அதற்குத் தகுதியாயில்லை. மகாத்மாஜீயுடன் அவர் கடிதப் போக்கு வரவு நடத்திக் கொண்டிருந்தார் போலிருந்தது. ஆயினும் யாதொரு விஷயமும் முடிவுக்கு வரவில்லை. அவர் அகில பாரதீயக் குழுவின் இருக்கையை நடத்த விரும்பினார். அது கல்கத்தாவில் நிகழ்வதாக இருந்தது. அதற்குமுன் நான் ஒரு முறை (ஜரியாவைச் சேர்ந்த) ஜாமாதுவா கோலியரீக்குச் சென்று அவரைச் சந்தித்தேன். அவர் நோயுற்று, அங்குத் தம் சகோதரருடன் தங்கி உடல் நலம் தேறி வந்து கொண்டிருந்தார். ஆனால் என்னுடன் வாய்விட்டுப் பேசவில்லை. அகில பாரதீயக் குழு கல்கத்தாவில் நடந்தது. மகாத்மாஜீ குழுவின் இருக்கையில் கலந்து கொள்ளா விட்டாலும், அவரும் கல்கத்தாவுக்கு வந்தார். மகாத்மாஜீ சோத்பூர் காதி பிரதிஷ்டானில் தங்கியிருந்தார். நாங்கள் ஊருக்குள் தங்கியிருந்தோம். சுபாஷ் பாபூவுக்கும் மகாத்மாஜீக்கும் இடையில் பலமுறை பேச்சு நடந்தது. நாங்களும் அதில் அடிக்கடி கலந்து கொண்டோம். ஆனால் யாதும் பயன்படவில்லை. சுபாஷ் பாபூ தலைவராக இருக்க முடியாதென்பது தெளிவாகி விட்டது. யாரைத் தலைவராக்குவது என்ற கேள்வி எழுந்தது. சர்தார் வல்லப்பாயீயை சுபாஷ் பாபூவுக்கும் மற்றவர்களுக்கும் கூட பிடிக்கவில்லை. ஏனெனில் அவர் கண்டிப்பாக பேசுகிறவர். ஜவஹர்லால்ஜீ இந்த விஷயங்களினால் சற்று மனம் நொந்திருந்தார். அவருக்கும் வேறு யாதொரு வழியும் தோன்றா விட்டாலும் தலைவர் பதவியை ஏற்றுக் கொள்ளப் பிடிக்கவில்லை.

மௌலானு அபுல் கலாம் ஆஜாத் எங்கள் கருத்தோடு முற்றிலும் ஒருமனப்பட்டிருந்தார். ஆனல் எங்கள் கெட்ட காலத்தால், அவர் கயா ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் விழுந்து காலில் காயம் பட்டுவிட்டதால் படுக்கையாகக் கிடந்தார். அவர் மேல் இச் சுமையை ஏற்றுவது பொருத்தமற்றதாகத் தோன்றிற்று. இந்த உடல் கேடுற்ற நிலைமையில் அவரும் இதை ஏற்றுக் கொண் டிருக்கமாட்டார்.

சுபாஷ் பாபூ ராஜிநாமா செய்தபின்பு என்னைத்தான் தலைவ ஞக்க வேண்டுமென்ற எண்ணம் மக்களுக்கு வந்தது. எனக்கு இது முற்றிலும் பிடிக்கவில்லை. இவ்விதமான சண்டைகளி லிருந்து நான் எப்போதுமே தப்ப விரும்புகிறவன் என்பது ஒன்று. மேலும், காங்கிரஸ் மீண்டும் கூடிப் புதிய தலைவர் தேர்ந் தெடுக்கப்படாத வரையில் கலவரம் இருந்துகொண்டே வருமென் றும், இச்சண்டையை என்னுல் சமாளிக்க முடியாதென்றும் நினைத்தேன். ஏனெனில் எனக்குச் சண்டை போடவல்ல சுபாவம் கிடையாது. இரண்டாவதாக, திரிபுராவுக்குப்பின் காங்கிரஸானது பீகாருக்கே அழைக்கப்பட்டிருந்தது. நான் அதற்காக ஏற்பாடு செய்ய வேண்டும். அதில் நான் நிறையப் பொழுதை கழிக்க வேண்டி வரும். அகில இந்தியா வேலையில் சிக்கிக்கொண்டு விட்டால் என் மாகாண வேலை கெட்டுப்போகும். இந்த எண்ணங் களை முன்னிட்டு நான் தலைவஞக நியமிக்கப்பட விரும்பவில்லை. ஆனல் மகாத்மாஜீ வேறு வழியொன்றும் காணுமல் நானே இந்தச் சுமையைத் தாங்க வேண்டுமென்று என்னைப் பணித்தபோது என்னுல் மறுக்க இயலவில்லை.

அகில பாரதீயக் குழுவின் முதல் நாள் கூட்டம் ஒரு விதமாக முடிந்தது. அதில் யாதொரு சிறப்பான காரியமும் நடைபெற வில்லை. எல்லாரும் பந்தலிலிருந்து தத்தம் இடத்திற்குப் புறப் பட்டுக் கொண்டிருந்தபோது திரிபுரா காங்கிரஸின் தீர்மானத் தைச் சமர்ப்பித்தவரான பண்டித் கோவிந்த வல்லப பந்த்திடமும் ஸ்ரீ பூலாபாயீ தேசாயீயிடமும் சிலர் மிகவும் சீர்கேடாக நடந்து கொண்டார்கள் என்பதையும், ஸ்ரீ கிருபாளானியையும் மக்கள் சூழ்ந்து கொண்டார்கள் என்பதையும் அவரிடமும் தவருக நடந்துகொள்வார்கள் போலிருக்கிறதென்பதையும் கேள்விப் பட்டோம். இந்த விஷயங்களைப்பற்றி எனக்கு அப்பொழுதே செய்தி கிடைக்கவில்லை. ஆயினும் ஊரில் இச்செய்தி பரவி விட்டது. வட இந்தியாக்காரர்கள் அதிகக் கோபம்மூண்டு கிளம்பி விட்டார்கள். ஜவஹர்லால்ஜீக்கு இது தெரிந்துவிட்டது. அவர்

அவர்களுக்குச் சமாதானம் கூறித் தடுத்துவிட்டார். இல்லா விட்டால் அடுத்த நாள் சபை கூடுவதற்கு முன்னமே அடிதடி ஆகியிருக்கும். அடுத்த நாள் சுபாஷ் பாபூ சபைக்கு வரவில்லை. அவர் தம் ராஜிநாமாவை அனுப்பிவிட்டார். குழுவானது அதை ஏற்றுக்கொண்டு என்னைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்துவிட்டது. நான் எழுந்து நின்று மேலே நடக்க வேண்டியதைத் தொடங்கப் போகும்போது சிலர் மிகவும் முழக்கம் செய்துகொண்டு இரைச்சல் போட ஆரம்பித்தார்கள். திரிபுராவில் நிகழ்ந்த காட்சியே மீண் டும் ஒரு சிறிய அளவில் நடக்கத் தொடங்கியது. நான் என் இடத்திலேயே நின்றுகொண்டிருந்தேன். இரைச்சலும் கூச்சலும் நிற்காத வரையில் நானும் நின்றுகொண்டேயிருந்தேன். இரைச்சல் அடங்கிய பிறகு சிறிது வேலையை நடத்திவிட்டு சபை யைக் கலைத்துவிட்டேன். நான் அங்கிருந்து புறப்படும்போது என்னைக் காப்பதற்காகச் சில தொண்டர்கள் என்னை நாலா புறமும் சூழ்ந்துகொண்டார்கள். அவர்களில் ஒரிருவர் என்னைக் காக்கும் சாக்கை வைத்துக்கொண்டு என் பண்டியைப் (வாஸ் கோட்) பிடித்துக்கொண்டு என்னை இழுத்து அலக்கழிக்கப் பார்த் தார்கள். அதற்குள் மற்றவர்கள் என்னை விடுவித்துவிட்டார்கள். எனக்கு யாதும் அடிபடவில்லை. ஆனால் பண்டியின் பொத்தான் கள் தெறித்துவிட்டன. என்னை வண்டியில் ஏற்றி என் இடத் திற்குக் கொண்டு போய்விட்டார்கள். பகைமை மேலும் அதிக மாகிவிடுமென்று எண்ணி நான் இதைப்பற்றி யாருக்கும் சொல்ல வில்லை. அன்றிரவு வண்டியில் நான் புறப்பட்டபோது, டாக்டர் விதான் ராய் வீட்டிற்குச் சிலர் சென்று இரைச்சல் போட்டார்கள் என்பதும், சில சாமான்களை உடைத்தெறிந்தார்கள் என்பதும் ஸ்டேஷனில் எனக்குத் தெரியவந்தன. புதிதாக அமைக்கப்பட்ட செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களுள் டாக்டர் விதான் ராயும், டாக்டர் பிரபுல்ல சந்திர கோஷும் இருந்தார்கள். எல்லா வகை யிலும் உதவி புரிய வாக்களித்தாராயினும் பண்டித் ஜவஹர்லால் நேரு அச்சமயத்தில் உறுப்பினர் ஆக ஒத்துக்கொள்ளவில்லை.

# 133. ஒரு மிகவும் அருவருப்பான காரியம்

கல்கத்தா கூட்டத்தில் யாதும் சிறப்பான வேலை நடக்க வில்லை. இதனால் அகில பாரதீயக் குழுவை மறுபடியும் கூட்ட வேண்டியதாயிற்று. சில நாட்களுக்குள்ளாகவே ஒரு கூட்டம் பம்பாயில் நிகழ்த்தப்பட்டது. திரிபுராவில் நான் மேலே கூறி யுள்ளபடி, முக்கிய தீர்மானத்தில் பண்டித் கோவிந்த வல்லப் பந்துதாம் தலைமையான பங்கெடுத்துக் கொண்டார். பந்த்ஜீ ஐக்கிய மாகாணத்தின் தலைமை மந்திரியாக இருந்தார். காங் கிரஸ் மந்திரி சபைகள் சுபாஷ் பாபூவுக்கு விரோதமாக இருந்தன வென்றும், அவர்கள் திரிபுராவில் தம் செல்வாக்கையும் தம் பதவி யையும் முறையற்ற வகையில் பயன்படுத்தித் தீர்மானத்தை நிறைவேறச் செய்தார்கள் என்றும் எங்களுடைய எதிரிகள் அங்கும், அதற்குப் பிறகும் நிறையப் பிரசாரம் செய்தார்கள். வேறு சில காரணங்களால் சிலர் மந்திரி சபையின் மீது அதிருப்தி கொண்டிருந்தார்கள். இவ்வண்ணமாக மந்திரி சபைகளைக் குறை கூறுவதும், அவற்றின் வேலைகளுக்கு இடைஞ்சல்கள் விளை விப்பதுமான ஒரு கட்சி பிறந்துவிட்டது. காங்கிரஸ் உறுப்பினர் களின் பெரும்பான்மையிருந்த பிரதேசங்களில் எல்லாம் மந்திரி சபைகள் காங்கிரஸின் ஆணையின்படியே வேலைபுரிந்து வந்தன. பார்லிமெண்டரி கமிட்டி அவற்றின் வேலைகளில் தலையிடுவதில்லை. ஆயினும் தேர்தலுக்கு முன் காங்கிரஸின் சார்பில் வெளியிடப் பட்ட அறிக்கையும் அளித்த வாக்குக்களும் முற்றிலும் நிறை வேற்றப்பட வேண்டுமென்பதின் மீது கண்காணிப்பு செலுத்தி வந்தது. மந்திரி சபைகளும் தம்மால் இயன்ற வரையில் இவ்வித மான முயற்சியிலேயே ஈடுபட்டிருந்தன. தம்முடைய அதிகாரத் திற்கு உட்பட்ட அளவுக்கு, அச்சமயத்தில் நிலவிய நிலைமையில், ஆகக்கூடியதையெல்லாம் அவை செய்து வந்தனவென்றே நான் நினைக்கிறேன். ஆயினும் காங்கிரஸுக்குள் இருந்தவர்களே அவற்றை எதிர்க்கத் தொடங்கினர்கள். அந்த எதிர்ப்பு செயல் முறையில் வெளிப்படத் தொடங்கியது. காங்கிரஸின் எதிரிகளின் எதிர்ப்பை எங்களால் புரிந்துகொள்ள முடிந்தது. காங்கிரஸ்காரர் களின் மாறுன கருத்துக்களும் புரிந்தன. இயன்றவரையில் அவர் களுடன் இணக்கமாக நடந்துகொள்ளவும் மந்திரிசபைகள் முயற்சி செய்து வந்தன. ஆயினும் இப்போது வேறுவிதமான ஒரு

நிலைமை உண்டாகிவிட்டது. சுபாஷ் பாபூவைப் பின்பற்றியவர்களும் மந்திரி சபைகளின் எதிரிகளும் சேர்ந்துகொண்டு வேலை செய்யும்படியான நிலைமை ஒன்று உண்டாகிவிட்டது. காங்கிரஸுக்குள், திரிபுராவுக்கு முன்னும் அதற்குப் பின்னும், உண்டான சண்டையை மந்திரி சபைகளை எதிர்க்கப் பயன்படுத்தி மந்திரி சபைகளை வெறுக்கப்படும்படி செய்து அவற்றை அவமானப் படுத்த வேண்டுமென்று மக்களின் மனம் திரிந்துவிட்டதாகத் தோன்றியது. மத்திய பிரதேசத்தின் மந்திரி சபைகளின் எதிரிகளான டாக்டர் கரேயும் அவருடைய தோழர்களும் இதில் சேர்ந்து கொண்டார்கள். மந்திரி சபைகளை முறியடிப்பது சுபாஷ் பாபூவின் எதிரிகளின் பெருமையைக் குலைத்ததாகுமென்பதாகச் சிலர் நினைத்ததாகத் தோன்றியது. எங்களுக்கு விரோதமாக எதுவும் சொல்லுவதோ செய்வதோ கடினம், ஆனால் மந்திரி சபைகளுக்கு விரோதமாக ஏதாவது சொல்லுவதும் செய்வதும் எளிது. ஏனெனில் அவர்கள் இராப்பகலாக ஏதாவது செய்ய வேண்டியிருக்கிறது. எதையாவது எடுத்துக்கொண்டு அதில் குற்றம் கண்டுபிடிப்பது கடினமன்று. மந்திரி சபைகளின் மீது யாராவது காங்கிரஸ்காரருக்குக் குறையிருந்தால் அவர் காங்கிரஸ் குழுக்ளின் முன் முறையிடட்டும் என்று நாங்கள் கூறினோம். பார்லிமெண்டரி கமிட்டி, செயலாற்றுக் குழு, தேவைப்பட்டால் அகில பாரதீயக் குழுவும் அக்குறைகளைப் பற்றி விசாரணை செய்து அவற்றைப் போக்குவதற்குத் தயாராயிருக்கின்றன. ஆனால் அக்குறைகளை எடுத்துக்கொண்டு தம் அபிப்பிராயத்தை மட்டும் வெளியிடுவதோடு நிற்காமல் மந்திரி சபைகளையே பெருமை குலைய வைக்கும்படி நடந்துகொள்வது எந்தக் காங்கிரஸ்காரனுக்கும் ஒவ்வாது. இவ்விதமான முழக்கம் நாட்டில் வளர்ந்துகொண்டே சென்றது. அதனால் மந்திரி சபைகளின் பெருமைக்கும், கூடவே காங்கிரஸின் பெருமைக்கும் கேடு உண்டாயிற்று.

பம்பாயின் கூட்டத்தில் ஒரு தீர்மானம் கொண்டுவரப் பட்டது. அதில் இவ்விதமாகச் செயல் முறையில் எதிர்ப்பது கண்டனம் செய்யப்பட்டது. மேலும் அப்படிச் செய்யலாகாதென்று காங்கிரஸ்கரரர்களுக்குக் கட்டளையிடப்பட்டது. சுபாஷ் பாபூவும் அவரைப் பின்பற்றுபவர்களும் இத்தீர்மானத்தைப் மதிப்பார்கள் என்பதாகவும் இந்த விதமான பேச்சும் நடத்தையும் இனி நடக்கா என்பதாகவும் நாங்கள் நினைத்தோம். ஆனால் அப்படி நடக்கவில்லை. அதி விரைவிலேயே ஒழுங்கு நெறி மீறிய

தற்காக சுபாஷ் பாபூவின் மீது நடவடிக்கை எடுக்க வேண்டிய நிலைமை வரும் விதமாகப் பேச்சுக்கள் நடந்தன.

இந்தத் துக்கமான கதையைக் கூறுவதற்குமுன் ஓர் இன்ப மான சம்பவத்தைப்பற்றிக் குறிப்பிடவேண்டும். பல ஆண்டு களாகக் காந்தி சேவா சங்கத்தின் ஆண்டு விழா நடைபெற்று வந்தது. அதில் எல்லா மாகாணங்களிலிருந்தும் எல்லா அங்கத் தினர்களும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கூடிப் பல நாட்கள் வரை யில் தலைசிறந்த கொள்கைகளைப் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும் விவாதம் நடத்துவார்கள். இதில் காந்திஜீயும் கலந்து கொள்வார். கூட்டம் நடைபெறும் இடத்தில் உறுப்பினர்கள் ஏதாவது பொது ஜனத்தொண்டும் ஆற்றுவார்கள். காதி, நூல் நூற்றல் ஆகியவற்றின் கண்காட்சியும் நடைபெறும். இம்முறை சேவா சங்கத்தின் விழா பேதியாவிற்கு (சம்பரான் ஜில்லா) அருகில் உள்ள பிருந்தாவனத்தில் நடைபெற இருந்தது. அங்குச் சிறிது காலமாகப் பண்டித் பிரஜாபதி மிஸ்ரா ஓர் ஆச்ரமத்தை நடத்திக் கொண்டிருந்தார். அதே வட்டாரத்தில், பீகார் அரசாங் கத்தின் சார்பில் வர்தா திட்டத்தைப் பின்பற்றிய ஆரம்பப் பாட சாலைகளும் திறக்கப்பட்டிருந்தன. அங்குள்ள செயலாளர்கள் அதிக உற்சாகத்துடன் விழாவுக்கு ஏற்பாடு செய்தார்கள். மகாத்மாஜீக்கு ஒரு பண முடிப்பு அளிப்பதற்கும் திட்டம் போடப் பட்டிருந்தது. கல்கத்தாவில் அகில பாரதீயக் கூட்டம் முடிந்ததும் மகாத்மாஜீயும் நாங்கள் எல்லாரும் நேரே அங்கு வந்து சேருவதற்கு வசதியாக இந்த விழாவின் நாள் வைக்கப்பட்டிருந் தது. அகில பாரதீயக் குழுவின் கூட்டத்தை முடித்துக் கொண்டு மகாத்மாஜீயுடனேயே நானும் கல்கத்தாவிலிருந்து பேதியாவுக் குப் புறப்பட்டேன். காந்தி சேவா சங்கத்தின் அங்கத்தினரல்லாத பல உறுப்பினர்களும் விழாவில் கலந்து கொள்வதற்காக வந்தார் கள். அந்தச் சந்தர்ப்பத்தில் சங்கத்தின் விழா மட்டுமன்றி வர்தா கல்வித் திட்டத்தைச் செயல் முறையில் நடத்துவதில் ஈடுபட்டிருந்த தாலீமீ சங்கத்தின் கூட்டமும் அங்கு நடத்தப் பட்டது. அதற்குப் பம்பாய் மாகாணத்தின் தலைமை மந்திரியும், கல்வி மந்திரியுமான ஸ்ரீ கேர் தலைமை வகிப்பதாக இருந்தது. அவரும் எங்களுடன் கல்கத்தாவிலிருந்து அங்கு வந்தார். விழா மிகவும் சிறப்பாக நடந்தது. மக்களும் அதிக உற்சாகம் காட்டி னார்கள். சம்பரான் பொதுமக்கள் காந்திஜீயை மிக்க அன்புடனும் பக்தியுடனும் பாவித்தார்கள் என்பது ஒன்று, இது போன்ற பெரிய சபை வேறொன்றும் அங்கு இதுவரையில் நடத்தப்பட்டது

மில்லை, இவ்வளவு பேர் வெளியிலிருந்து அங்கு என்றும் வந்ததுமில்லையென்பது மற்ருென்று. எல்லாக் காரியங்களும் மிகவும் நன்ருக முடிவடைந்தன. காந்திஜீக்கு பண முடிப்பும் அளிக்கப்பட்டது. அதை அவர் ஏற்றுச் சிறிதளவை ஹரிஜன சேவா சங்கத்திற்கும், சிறிதளவை மற்ற வேலைகளுக்கும் பங்கிட்டு வழங்கிவிட்டார். ஹரிஜனத் தொண்டிற்கான பணம் ஹரிஜன சேவா சங்கத்திடம் கொடுக்கப்பட்டது. உள்ளூர் வேலைக்கான பணம் அங்குள்ளவர்களிடமே கொடுக்கப்பட்டது. பீகாரில் தொழிலாளர் கழகத்தை அமைப்பதற்காக ஒரு தொகை தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டது.

எந்தக் காங்கிரஸ்காரரும் காங்கிரஸின் பெருமைக்கும் மந்திரி சபைகளின் பெருமைக்கும் கேடு விளைவிப்பதான நடவடிக்கை களில் பங்கெடுத்துக் கொள்ளக் கூடாதென்று முடிவு செய்யப் பட்ட அகில பாரதீயக் குழுவின் இருக்கைக்குச் சில நாட்களுக் குள்ளாக ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸானவர் காங்கிரஸ் குழுவின் முடிவை எதிர்த்து நாட்டில் பலத்த முழக்கம் செய்ய வேண்டு மென்று ஓர் அறிக்கையை வெளியிட்டார். குழுவின் முடிவு அதிமிக்கப் பெரும்பான்மையாரால் அங்கீகரிக்கப்பட்டதென்பதை மேலே கூறியுள்ளேன். இப்போது அந்த முடிவை பகிரங்கமாக அவமதிப்பதில் முழக்கம் செய்பவர்கள் இறங்கிவிட்டார்கள். அறிக்கையைச் செய்தித் தாள்களில் படித்ததும் நான், தலைவன் என்ற முறையில், அந்த முடிவை இவ்விதமாக அவமதிப்பது தகுதியன்று எனவும் அப்படிச் செய்வதைக் கைவிட வேண்டு மெனவும் சுபாஷ் பாபூவுக்குத் தந்தி கொடுத்தேன். ஆனுல் அவர் அப்படி செய்ய மறுத்துவிட்டார். தாம் நிச்சயித்தபடியே அவர் இவ்விதமான முழக்கத்தைச் செய்தார். அதில் காங்கிரஸ் செயலாளர்களும் பலவிடங்களில் கலந்து கொண்டார்கள். இவ் விதமான அவமதிப்பைக் காங்கிரஸ் எவ்வளவு தூரம் பொறுத்துக் கொண்டிருப்பதென்ற தள்ளமுடியாத சிக்கலான கேள்வி எங்கள் முன் வந்துவிட்டது. காங்கிரஸுக்குள் எழும் கருத்து மாறுபாடு களைத் தீர்ப்பதற்காக ஒரே வழிதான் உண்டு. அதாவது அதந் விஷயத்தைப் பற்றி எல்லாருடைய அபிப்பிராயத்தையும் கேட் டறிதலே யாகும். ஆயினும் அதன் முடிவானது பெரும் பான்மை மூலமாக மாற்றப்படாத வரையில், காங்கிரஸின் முடி வுக்கு மாருகக் கருத்துக் கொண்டிருந்தாலும், கருத்து மாறு பாட்டை வெளியிட்டு வந்தாலும், காங்கிரஸ்காரர்கள் எவ்வித மான எதிர்ப்பு நடவடிக்கையையும் செய்யக்கூடாது. முக்கிய

மாக காங்கிரஸின் பெருமையைத் தாக்குவதான நடவடிக்கைகளைச் செய்யக்கூடாது. இம்முழக்கத்தில் பங்கெடுத்துக் கொள்பவர்கள் அவ்விதமாகத்தான் செய்தார்கள். ஒழுங்கு நடவடிக்கை எடுப்பது எங்களுக்குத் தவிர்க்கவொண்ணததாகி விட்டது.

செயலாற்றுக் குழுவின் கூட்டம் நடந்தது. சுபாஷ்பாபூ அவருடைய நடத்தைக்குக் காரணம் கூறும்படி கேட்கப்பட்டார். அவர் அளித்த மறு மொழியில் தம்முடைய நடத்தைக்கு அழுத்தமாகக் காரணம் கூறி, அதை ஆதரித்துப் பேசினர். செயலாற்றுக்குழுவானது தீர யோசனை செய்தபின், சுபாஷ்பாபூவின் நடத்தையானது ஒழுங்கு மீறியதற்காக அவர் மீது நடவடிக்கை எடுக்கவேண்டிய தன்மைத்தாக இருக்கிறதென்று முடிவு செய்தது. தனக்கு வேறு வழியில்லை யென்றும் முடிவு செய்தது. இது எளிதான முடிவன்று. ஏனெனில் சுபாஷ்பாபூ காங்கிரஸின் முக்கிய மனிதர்களில் ஒருவர். அவர் காங்கிரஸுக்கு இருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டுத் தலைவர் பதவி வகித்து வந்திருக்கிருர். கருத்து மாறுபாட்டினல் அவர் இம்முறை அப்பதவியிலிருந்து விலகிவிட்டார். ஆயினும் அவருடைய தேசத் தொண்டையும் அஞ்சாமையையும் தியாகத்தையும் எல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். அப்படிப்பட்ட ஒருவரின் மீது ஒழுங்கு மீறியதற்காக நடவடிக்கை எப்படி எடுக்க முடியும்? எல்லாருக்கும் வேதனையாயிருந்தது. அவருடன் சேர்ந்து யாதொரு வேலையும் செய்வதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைக்காவிட்டாலும், மேலும் அவருக்கும் எனக்கும் என்றுமே நெருங்கிய தொடர்பு உண்டாகாவிட்டாலும், என்ன காரணத்தாலோ அவர்பால் என் உள்ளத்தில் அன்பு இருந்து வந்தது. அவருடைய சகோதரர் ஸ்ரீ சரத்சந்திர போஸை நான் படித்துக்கொண்டிருந்த சமயத்திலிருந்தே எனக்குத் தெரியும். அவருடன் சிறிது நெருங்கிய தொடர்புமிருந்தது. அவரிடம் எனக்கு மரியாதையும் அன்பும் உண்டு. ஆயினும், காங்கிரஸ் அமைப்பு முழுவதையும் இவ்விதமாகத் தாக்கப்பட விடுவது சரியாகுமா என்பது கேள்வி. எங்களுடைய தனிப்பட்ட மனேபாவத்தால் பொது மக்கள் அனைவரையும் நாடு முழுவதையும் உட்கொண்ட நிலையத்தின் பெருமையைத் தாக்குபவர் மீது ஒழுங்கு நெறி நடவடிக்கை எடுக்காமல் விடுவதா? இதுபோன்ற சந்தர்ப்பங்களில், இயல்பாக நிகழ்வதைப் போலவே இப்போதும் கழகத்தினுடைய கடமையை நிறைவேற்ற வேண்டுமென்ற மனப்பான்மையானது தனிப்பட்ட மனப்பான்மையை அடக்கிக் கொள்ளும்படி எங்களைக் கட்டுப்படுத்தியது.

நாங்கள் அனைவரும் மிக்க வருத்தத்துடன், ஆயினும் கடமைப் பாட்டின் தூண்டுதலினால் கட்டுண்டு, சுபாஷ் பாபூவைக் காங்கிரஸ் குழுவிலிருந்து ஒரு தவணைக்குத் தள்ளி வைத்து விட்டோம். அந்த முழக்கத்தில் அவருடன் சேர்ந்திருந்தவர்களின் மீதும் நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியமாயிருந்தது. ஆயினும் செயலாற்றுக் குழு தானே அதைச் செய்யாமல், மாகாணக் குழுக்கள் விசாரணை செய்து, தக்கபடி நடவடிக்கைகள் எடுக்கட்டும் என்று அவற்றின் கையில் விட்டுவிட்டது.

சுபாஷ் பாபூ திரிபுரா காங்கிரஸ் சமயத்திலிருந்தே புதிய கட்சி ஒன்றை அமைத்து வந்தார். அதற்கு 'பார்வார்ட் பிளாக்' என்ற பெயர் கொடுத்தார். இப்போது அது வெகு மும்முரமாக அமைக்கப்பட்டது. இதற்குப்பின் அக்கட்சிக்கும் காங்கிரஸுக்கும் இடையில் பகிரங்கமாக எதிர்ப்பு நடக்கத் தொடங்கிவிட்டது. மாகாணக் குழுக்களும் ஆங்காங்குச் சிலரின் மீது ஒழுங்கு நடவடிக்கைகள் எடுத்தன. எங்களிடையில் சண்டை மேலும் வலுத்துவிட்டது. அக்கட்சியின் சார்பில் எல்லா இடங்களிலும் காங்கிரஸ் எதிர்க்கப்பட்டது.

## 134. ஒரிசா, மத்திய பிரதேச மந்திரி சபைகள்

இந்த முறை நான் தலைவனானது எனக்கு மிகவும் வருத்தமாயிருந்தது. ஏனெனில் எல்லா இடங்களிலும் சண்டைகளே நடந்துவரும் ஒரு சூழ்நிலை உண்டாகிவிட்டது. வேறு வேலை செய்வது கடினமாகிவிட்டது. இன்னும் இரண்டு சண்டைகள் எழுந்தன, அவற்றைப் பற்றிக் கூறுவது நன்றாகும். ஒன்று ஒரிசாவில் நடந்தது, மற்றொன்று மத்திய பிரதேசத்தில். சிலர் ஆங்காங்கு மந்திரி சபைகளுக்கு விரோதமாக நிறையப் பேசிக் கொண்டு வந்தார்கள். இவ்வண்ணமாகச் சிலர் ஒரிசாவில் இருந்தார்கள். அவர்கள் அங்குள்ள மந்திரி சபையின் மீது குறை கூறத் தொடங்கி விட்டார்கள். காந்தி சேவா சங்கம் நடந்த போது எங்களிடம் சில குறைபாடுகள் கூறப்பட்டன. அவற்றை நாங்கள் சிறிதளவு விசாரணை செய்து சச்சரவைத் தீர்த்துவைக்க முயன்றோம். ஆயினும் உள்ளுக்குள்ளவே தனல் கனிந்து

கொண்டிருந்தது. பார்லிமெண்டரி கமிட்டியின் முன் விஷயம் வந்தது. அதன் தலைவரான சர்தார் படேலானவர் குறை கூறு கிறவர்கள் தம் குறைகளை முறையாக எழுதிக் கொடுத்தால்தான் விசாரணை செய்வேன் என்று கூறினர். ஆனால், குறைபாடு உண்மையாகப் புலப்பட்டால் மந்திரிகளின் மீதும், பொய்யென்று நிரூபிக்கப்பட்டால் குறை கூறினவர்களின் மீதும் நடவடிக்கை எடுக்கப்படுமென்பதை இரு கட்சிக்காரரும் உணர வேண்டுமென் ருர். திரிபுரா காங்கிரஸுக்குச் சிறிது முன்பாக, காங்கிரஸின் தலைவர் என்ற முறையில், சுபாஷ் பாபூவிடமும் குறைகள் கூறப் பட்டன. இக்காரணங்களால் இப்போது விசாரணை செய்வது அவசியமாகி விட்டது. சுபாஷ் பாபூவானவர் விசாரணை வேலையை என்னிடம் ஒப்படைத்தார். நானும் விசாரணையைத் தொடங்கினேன், ஆனல் அதை முடிக்க இயலவில்லை. நான் பல முறை ஒரிசாவுக்குப் போகவேண்டி வந்தது. பல நாட்கள் வரை யில் இரு கட்சிக்காரர்களின் கூற்றைக் கேட்க வேண்டி வந்தது. சாட்சிகளை விசாரிக்க வேண்டி யிருந்தது. நிறையக் காகிதங் களைப் படிக்கவேண்டி வந்தது. என்னுடைய அறிக்கை தயா ரான சமயத்தில் சுபாஷ் பாபூ தலைவர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். நான் தலைவனுகி விட்டேன். என்னுடைய நீண்ட அறிக்கை கோர்ட்டின் தீர்ப்பு போல எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்லிமெண்டரி கமிட்டியும் செயலாற்றுக் குழுவும் அங்கீ கரித்தன. முக்கிய குறைகள் தவறென நிரூபிக்கப்பட்டன. குறை கூறினவர்களின் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டன. ஆயினும் சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் மன்னிப்புக் கேட் டுக் கொண்டதின் பேரில் ஒழுங்கு மீறியதற்காக விதிக்கப்பட்ட தண்டனை அற்றுபடி செய்யப்பட்டது.

குறை கூறினவர்களுக்குப் பின்னுல் நின்று துணை புரிந்து வந்தவர்கள் அதற்குப் பிறகு காங்கிரஸுக்கு விரோதமாக வெளிப்படையாக வேலை செய்தார்கள். அதனுல் தான் இந்த விஷயத்தைப் பற்றி இங்கு இவ்வளவு விரிவாக எழுத வேண்டி யிருக்கிறது. பண்டித் நீலகண்ட தாஸும் பண்டித் கோதாவரீஷ் மிஸ்ராவும் அவர்களில் முக்கியமானவர்கள். அவர்கள் முதல் மந்திரியான ஸ்ரீ விஸ்வநாத் தாஸை முதலில் இருந்தே எதிர்த்து வந்தார்கள். இந்த இரு கனவான்களும் 1920–21இல் இருந்தே காங்கிரஸின் பணியை ஆற்றிக் கொண்டிருந்தார்கள். ஒரிசா மாகாணத்தில் இருவருக்கும் செல்வாக்கு இருந்தது. 1937இல் மாகாண அசெம்பிளிக்குத் தேர்தல் நடந்தபோது பண்டித்

நீலகண்டதாஸ் மத்திய அசெம்பிளியின் அங்கத்தினராக இருந்தார். அவர் மாகாண அசெம்பிளிக்கு அபேக்ஷகராக மனுக் கொடுக்கவில்லை. ஆயினும் தேர்தலில் முற்றிலும் ஈடுபட்டு வேலை புரிந்தார். காங்கிரஸின் பிரசார வேலையும் செய்தார். பண்டித் கோதாவரீஷ் மிஸ்ரா மாகாண அசெம்பிளிக்கு நின்றார். தேர்ந்தெடுக்கவும் பட்டார். தேர்தல் நடந்தேறிய பிறகு மந்திரி சபையை அமைக்கும் சமயம் வந்தபோது அங்குள்ள அசெம்பிளியின் அங்கத்தினர்கள், அந்த அசெம்பிளியின் அங்கத்தினரல்லாதவரான பண்டித் நீலகண்ட தாஸைத் தலைவராகத் தேர்ந்தெடுக்காமல் ஸ்ரீ விசுவநாத தாஸையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். அதனால், மந்திரி சபை அமைந்ததும் இயல்பாக அவரே முதல் மந்திரியானார். பண்டித் நீலகண்ட தாஸுக்கு அதனால் அதிகக் கோபம் வந்துவிட்டது. எங்கள் முன் கொண்டு வரப் பட்ட குறைகள் எல்லாம் ஸ்ரீ நீலகண்ட தாஸின் நடத்தையையும் அவருடைய நாணயத்தையும் தாம் தாக்கின. இதனால், குற்றங்கள் நிரூபிக்கப்படாவிட்டால் வாதியின்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் படுமென்று விசாரணை செய்வதற்குமுன் எச்சரிக்கை செய்ய வேண்டியிருந்தது. குற்றம் சாட்டியவர் பண்டித் நீலகண்ட தாஸுடன் வேலை புரிந்து வந்த ஒரு கனவான். அவர் பின்னால் நீலகண்ட தாஸிடமிருந்து பிரிந்து போய்விட்டார் என்று தோன்றுகிறது, அச்சமயத்தில் அவர்களுடைய காரியம் பலிக்கவில்லை, ஏனெனில் குற்றங்கள் தவறென்றும் ஆதாரமற்றவையென்றும் நிரூபிக்கப்பட்டுவிட்டன. காங்கிரஸிலிருந்து சுபாஷ் பாபூ பிரிந்துபோனதும் பண்டித் நீலகண்ட தாஸ் அவருடன் சேர்ந்து கொண்டார். மத்திய அசெம்பிளியிலும் அவருடய நடவடிக்கை காங்கிரஸ்காரரான அங்கத்தினரால் செய்யப்படத் தகாதவைகளாக அமைந்தன. அவர் காங்கிரஸின் ஆணைப் பத்திரத்தில் கையொப்பமிட்டு அசெம்பிளியின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அதில் காங்கிரஸின் ஒழுங்கு முறையைத் தாம் ஒப்புக் கொள்வதாக ஆணையிட்டிருந்தார். ஆயினும் சில நாட்களுக்குப்பின் அவர் அப்படிச் செய்ய மறுத்துவிட்டார். காங்கிரஸ் பார்ட்டியிலிருந்து பிரிந்து போய் விட்டார். ஐரோப்பிய மகாயுத்தம் ஆரம்பித்தபின் காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜிநாமா கொடுத்த போது, ஒரிசாவின் மந்திரி சபையும் மற்ற இடங்களில் நடந்தது போலவே கலைந்துவிட்டது. பண்டித் நீலகண்டதாஸும் பண்டித் கோதாவரீஷ் மிஸ்ராவும் எப்படியாவது அங்கு மந்திரி சபையை அமைக்கவேண்டுமென்று

யோசனை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் காங்கிரஸ் உறுப்பினர்களின் பெரும்பான்மையோர் அவர்களோடு சேராமல் போனதும், பார்லாகிமிடியின் மகாராஜாவைத் தலைவராகக் கொண்ட ஜமீன்தார் கட்சியுடன் சேர்ந்து கொண்டு மந்திரி சபையை நிறுவினார்கள். அதில் ஸ்ரீ கோதாவரீஷ் மிஸ்ரா மந்திரி ஆனார், மகாராஜா முதல் மந்திரியானார்! சில காங்கிரஸ்காரர்களையும் அவர் கலைத்துவிட்டாராயினும் பெரும்பாலோரைச் சிறையில் அடைத்து வைத்து அவர் எப்படியோ தமக்குப் பெரும்பான்மை பலத்தை உண்டாக்கிக் கொண்டார்.

மத்திய பிரதேசத்தைப் பற்றியும் இதே போன்ற குறைபாடுகள் கூறப்பட்டன. அவற்றைச் சுருக்கமாக முன்பே கூறியிருக்கிறேன். டாக்டர் கரேயின் தோழர்களில் சிலர் பழைய இழிவான குறைகளையும் புதியன சிலவற்றையும் சேர்த்துக் கொண்டு பார்லிமெண்டரி கமிட்டியின் முன்னும் செயலாற்றுக் குழு முன்னும் மந்திரி சபைக்கு விரோதமாகவும் முக்கியமாக மிஸ்ராஜீக்கு விரோதமாகவும் குறை கூறினார்கள். அக்குறைகளை விசாரிக்கும் பொறுப்பு முதலில் ஸ்ரீ பூலாபாயீ தேசாயீயிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆனால் அவருடன் வாதிகளுக்குக் கருத்து மாறுபாடு வந்துவிட்டது. கடைசியில் நான் தலைவன் என்ற முறையில் இச்சண்டையையும் கவனிக்க வேண்டியிருந்தது. நான் இதிலும் இரு கட்சியாரின் பேச்சையும் கேட்டு, நிறையக் காகிதங்களைப் படித்துத் தீர்ப்பளித்தேன். அது செயலாற்றுக் குழுவின் முன் சமர்ப்பிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டது. தீர்ப்பளித்த பின்னும் சிலர் நிறைய எழுதியும் பேசியும் வந்தார்கள். ஆயினும் ஒரு முறை தீர்ப்பு அளிக்கப்பட்டு பத்திரிகைகளில் அச்சிடப்பட்டபின் சண்டை அடங்கிவிட்டது.

என்னுடைய பொழுது பெரும்பாலும் இவ்விதமான வேலைகளில்தாம் கழிந்தது. அவற்றைக் கண்டு மனம் கலங்கியது. ஆக்க வேலையை முறையாகச் செய்வதற்கு வாய்ப்புக் கிடைக்கவில்லை. இம்முறை தலைவனானதின் பயனாக நான் என் மாகாணத்துடன் கொண்டிருந்த நெருங்கிய உறவு குறைந்துவிட்டது. நேரமில்லாததால் நான் என் மாகாணத்தின் வேலையிலும் மற்ற விஷயங்களிலும் ஊக்கம் எடுத்துக் கொள்ள முடியவுமில்லை, மாகாணத்தில் சுற்றிவர முடியவுமில்லை. 1934–35–36இல் தலைவனாக இருந்தபோது மற்ற மாகாணங்களெல்லாவற்றிலும் சுற்றி வருவதிலேயே பொழுது முழுவதையும் கழித்தேன். பீகாருக்குச் சிறிதுகூட பொழுது அளிக்க இயலவில்லை. இம்முறையும் அப்

படியே ஆயிற்று; ஆனால் இம்முறை எங்குமே சுற்றிவர வாய்ப்புக் கிடைக்கவில்லை. ஆனால் இம்முறை பீகாரில் காங்கிரஸ் விழா நடைபெறுவதாக இருந்தது. அதனால் பணம் திரட்டுவதற்காக சிற்சில இடங்களுக்குப் போகவேண்டித்தான் இருந்தது. அகில இந்தியா வேலையிலிருந்து ஒய்வு கிடைத்த போதெல்லாம் இங்கு ஓடி வந்துவிடுவேன். அல்லது இரண்டிற்கும் மத்தியில் இங்கும் அங்குமாக ஓடிக்கொண்டிருந்தேன் என்று சொல்லுங்களேன்.

## 135. ராம்கர் காங்கிரஸுக்காக இடம் தேர்தல்

திரிபுராவிலிருந்து திரும்பியதுமே பீகாரில் காங்கிரஸ் விழாவை எங்கு நடத்துவது என்பதைப்பற்றி நாங்கள் யோசிக்க வேண்டியதாயிற்று. பல ஆண்டுகளாக விழா யாதாவதொரு கிராமத்தில் நடைபெற்று வந்தது. நாங்களும் ஏதாவது ஒரு கிராமத்திலேயே நடத்த வேண்டுமென்று நினைத்தோம். விழாவைச் சோன்பூரில் நடத்தலாமென்று எனக்கு முதலில் எண்ணமிருந்தது. அவ்வூர் மூன்று ஜில்லாக்களின் எல்லைகள் கூடுமிடத்திலிருக்கிறது. அங்கு ஆண்டுதோறும் இந்தியா முழுவதிலும் பெரும்புகழ் வாய்ந்த மாபெரும் சந்தை கூடுகிறது. அதற்கு நாடெங்குமிருந்து லக்ஷக்கணக்கான ஆட்கள் வருகிறார்கள். லக்ஷக்கணக்கான கால் நடைகளும், யானை குதிரைகளும் மற்ற விலங்குகளும் விற்பனைக்காகக் கொண்டு வரப்படுகின்றன. இதனால் அங்கு நிறையத் தோப்புக்கள் இருக்கின்றன. லக்ஷக்கணக்கான பேர்களுக்குத் தண்ணீருக்கு ஏற்பாடு செய்வது எளிதன்று. இதனால், பல கிணறுகள் கட்டப்பட்டிருக்கின்றன. சந்தையின்போது குழாயிலும் நீர் வரும். இவற்றை ஜில்லா போர்டு அமைத்திருக்கிறது. சந்தை கார்த்திகை (தமிழ்நாட்டு ஐப்பசி) மாதத்து பௌர்ணமியின்போது நடக்கும். காங்கிரஸ் விழா அதற்குச் சுமார் மூன்று மாதங்களுக்குப் பிறகு நடக்கும். இதனால், சந்தையில் மூங்கில், வைக்கோல், பாய் முதலியவற்றை மிகவும் மலிவாக வாங்க முடியும். பிரதிநிதிகள் தங்கும் இடத்தைச் சந்தைக்குப் பிறகுகூட அமைக்கத் தொடங்கி எளிதில் முடித்துவிடலாம். இந்தச் சௌகரியங்கள் மட்டுமன்றி அவ்வூர்

கண்டக் நதிக்கரையில் இருப்பதனுல் மரம், உலர்ந்த புல் (கூரைக்காக) முதலியவற்றை ஆற்றின் வழியாக எளிதில் கொண்டு வந்து விடலாம். கங்கைக்கு வடக்கே உள்ள ஜில்லாக்கள் காங்கிரஸ் வேலேக்கு உயர்நிலையான ஜில்லாக்களென கருதப்படுகின்றன. இதற்கு முன்பு காங்கிரஸ் விழா இருமுறை பீகாரில் நடந்திருக்கிறது, ஆனுல் இருமுறையும் கங்கைக்குத் தெற்கில் தான் — பட்னுவிலும், கயாவிலும் - நடைபெற்றது. வடக்கு பீகாரில் காங்கிரஸ் விழாவை ஒருமுறை நடத்த வேண்டுமென்று வட பீகார்க்காரர்கள் மிகவும் விரும்பினுர்கள். இந்த எண்ணங்களினுல் அங்கே விழா நடைபெற வேண்டுமென்பதாக நான் நினைத்தேன். ஆயினும் எல்லாருடைய அபிப்பிராயத்தையும் கேட்க வேண்டியிருந்தது. நாங்கள் தங்கியிருக்க அமைக்கும் நகரை எந்த இடத்தில் அமைத்தால் சுகாதாரக் கருத்திலிருந்து அதிக நலமாயிருக்குமென்பதை முக்கியமாக கவனிக்க வேண்டியிருந்தது. இதனுல் திரிபுராவிலிருந்து திரும்பி வந்ததும் விழாவுக்குத் தகுந்த இடங்களென்று கருதப்பட்டவற்றை நாலேந்து பேர் சேர்ந்து பார்க்கச் சென்ருேம். பீகார் காங்கிரஸின் நகரைக் கட்டுவதற்கு உதவிபுரிய வரவேண்டுமென்று அனுபவமுள்ள இஞ்சினீயரான ஸ்ரீராம்தாஸ் குளாரி என்பவரைத்திரிபுராவிலேயே அழைத்திருந்தேன். அவரும் அதற்கு மகிழ்ச்சியுடன் ஒத்துக் கொண்டார். கிராமாந்திரத்தில் காங்கிரஸ் விழாவை நடத்த வேண்டுமென்ற எண்ணம் முதன் முதலாக மகாத்மாஜீக்கு உண்டானபோது, பைஜ்பூரில் காங்கிரஸ் நகரைக் கட்டும் வேலேக்கு உதவி புரிய குலாரீஜீதாம் வந்தார். திரிபுராவிலும் அவர்தாம் காங்கிரஸ் நகர் அமைக்கும் வேலேயைப் புரிந்தார். அவருடைய அனுபவத்தைப் பயன்படுத்திக் கொள்வதற்காகவே நான் அவரை வரும்படி அழைத்தேன். அவர் சரியான சமயத்தில் வந்து சேர்ந்தார். இடத் தேர்தலிலும் கலந்து கொண்டார். அவரும், நாங்கள் தகுதியுள்ளவையென்று எண்ணிய இடங்களுக்கெல்லாம் எங்களுடன் சென்ருர்.

பட்னு ஜில்லாவிலுள்ள ராஜகிருகத்தையும் இந்த வேலேக்காகச் சென்று பார்த்தோம். அது ஒரு மிகவும் பழமையானதும் சரித்திர சம்பந்தப்பட்டதுமான இடம். அது ஜராசந்தனின் தலேநகரமாகவும் புத்தபிரான் வசித்த இடமாகவும் அமையும் நற்பேற்றைப் பெற்றிருந்தது. புத்த ஜயின காலத்திலேயே அது பெரும் புகழ் பெற்றுவிட்டது. நாலந்தாவின் தலேசிறந்த வித்யா பீடமும் அங்கிருந்து சிறிது தொலேவில் தானிருக்கிறது. அங்கு

ஒரு காலத்தில் ஆயிரக்கணக்கான மாணவர்களும் பிக்ஷுக்களும் கல்வி கற்று வந்தார்கள். அங்கிருந்து கல்வியிற் சிறந்த பிக்ஷுக்களும் துறவிகளுமான அறவுரையாளர்களும் புத்தமதத்தைப் பரப்புவதற்காகத் திபெத், சைனு முதலிய நாடுகளுக்குச் சென்ருர்கள். அவ்விடத்தில் உள்ள பாழடைந்த புத்த கோவில்களையும் இடிந்துபோன இடங்களையும் தோண்டினலிருந்துகிடைத்த கட்டடங்களும் விதவிதமான தட்டுமுட்டுச் சாமான்களும் இன்றும்கூட மக்களை வியப்புறச் செய்கின்றன. சரித்திர வரலாற்றுக் கண்கொண்டு பார்த்தால் அது மிகவும் தகுதியான இடமாயிருந்தது. இயற்கை வளத்திலும் மிகவும் அழகானதும் உடல் நலமளிப்பதாகவுமிருந்தது. ஆயினும் இக்கால சௌகரியங்கள் இல்லை. அங்குப் போய்ச் சேருவதே கடினம். தண்ணீரும் இல்லை; இக்காரணங்களால் அதைவிட்டுவிட வேண்டி வந்தது. பிறகு பட்னுவுக்கு அருகிலுள்ள புல்வாரீ-ஷரிபில் விழாவை நடத்தலாமென்ற ஓர் எண்ணமும் உண்டாயிற்று. ஆனல் அந்த இடம் பட்னுவுக்கு மிகச் சமீபத்திலிருந்தது. அதனுல் நகரத்திலேயே விழா நடந்ததாகக் கொள்ளப்படும். ஆயினும் நகர வசதிகள் அங்குக் கிடைக்கா.

சோட்டா நாகபுரிக்காரர்கள், முக்கியமாகக் காங்கிரஸ் வீரரான பாபூ ராம்நாராயண் சின்ஹாவானவர், சோட்டா நாகபுரியிலேயே ஏதாவதோர் இடத்தைத் தேரவேண்டுமென்று மிகவும் வற்புறுத்தினர்கள். நாங்கள் சோட்டா நாகபுரியை அசட்டை செய்து வந்தோமென்று அவர்கள் எப்பொழுதுமே குறை கூறி வந்தார்கள். சோட்டா நாகபுரியையும் நினைவில் வைத்துக் கொண்டோம். ஹஜாரிபாக் ஜில்லாவைச் சேர்ந்த ராம்கர்தான் எங்களுக்குப் பிடித்தது. இதைத் தேரியதின் பெருமை ஸ்ரீ ராமதாஸ் குளாரீயையே சேரும். ஏனெனில் அவர் இந்த இடத்தை உடல் நலத்திற்கு மிக்க உவந்ததாகக் கருதினர். அந்த அழகிய கவர்ச்சியான காடுகளுக்கிடையில், ஆற்றங்கரை யோரத்தில், விழாவின் தோற்றம் தனிச் சிறப்புக் கொண்டு அமையுமென்பதாக நான் நினைத்தேன்.

இடம் தேரப்பட்டு விட்டதாயினும் விழா நடைபெற வேண்டிய இடம் காடாக இருந்தது; அதைக் கழிக்கவேண்டும். மேலும் எல்லாச் சாமான்களையும் அங்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டும். ஆரம்பத்திலேயே நான் ஸ்ரீ அம்பிகா காந்த சின்ஹாவை அங்கு அனுப்பிவிட்டேன். அவர் அங்குத் தங்கியிருந்து ஈடுபாடுடன் உழைத்து வேலை புரிந்து வரலானர். நானும் சில

நாட்கள் வரையில் ராஞ்சியில் தங்கியிருந்தேன். அங்கிருந்து ராம்கர் சுமார் 30–32 கல் தொலைவிலிருக்கிறது. அமைப்புக் கோலம் முதலியவற்றை குலாரீஜீ தயாரிக்கலானார். காட்டை வெட்டத் தொடங்கினார்கள். வேலை மும்முரமாக நடந்து வந்தது. நான் பணம் திரட்டுவதற்காக மற்றத் தோழர்களுடன் சேர்ந்து கொண்டு அலைந்து கொண்டிருந்தேன். அவர்களில் பாபூ மதுரா பிரசாதுதாம் முக்கியமாக என்னுடன் எல்லா இடங்களுக்கும் சென்றார். ஜெர்மனியானது போலந்தின்மீது படையெடுத்து விட்டதென்றும் இங்கிலாந்துடனும் பிரான்ஸுடனும்கூட ஜெர் மனிக்குச் சண்டை மூண்டுவிட்டதென்றும் நான் ராம்கரில் இருந்தபோது செய்தி கிடைத்தது; அச்சமயத்தில் ஜெர்மனி யானது, சண்டைக்கு சில நாட்களுக்குமுன், ருஷியாவுடன் உடன்படிக்கை செய்துகொண்டு விட்டது.

## 136. காங்கிரஸும் இரண்டாவது மகாயுத்தமும்

இந்த விஷயத்தைப் பற்றி ஆலோசனை செய்தபின் 1938 செப்டம்பரில் யாதொரு முடிவுக்கும் வராமலே செயலாற்றுக் குழு வானது விஷயத்தை அப்படியே விட்டது. ஏனெனில் சண்டை ஆரம்பிக்கவில்லை. சேம்பர்லினானவர் செக்கோஸ்லோவாக்கி யாவை ஹிட்லருக்கு இரையாகவிட்டுவிட்டு உடன்படிக்கை செய்து கொண்டுவிட்டார். இனிக் காங்கிரஸ் யாதொரு முடிவும் செய்ய வேண்டியதில்லை; இச்சமயத்தில் ஜவஹர்லால்ஜீ சைனாவுக்குச் சென்றிருந்தார். காந்திஜீ வைசிராயைக் கண்டு பேசினார். செய லாற்றுக் குழுவின் இருக்கை வர்தாவில் நடத்தப்பட்டது. நான் நோயாக இருந்தேன், ஆயினும் எப்படியோ வர்தாவுக்குப் போய் சேர்ந்தேன். எப்படியாயினும் என்னைக் கட்டாயமாக அங்கு அழைத்து வரும்படி மகாத்மாஜீ, ஸ்ரீ மகாதேவ் தேசாயீயை அனுப்பியிருந்தார். செயலாற்றுக் குழுவின் இருக்கை பல நாட் கள் வரையில் நடந்தது. இதற்கிடையில் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு வும் சைனாவிலிருந்து திரும்பி வந்துவிட்டார். விஷயம் மிகவும் செறிவானது. ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ் காங்கிரஸைவிட்டுப் பிரிந்து போய்விட்டாலும் இச்சந்தர்ப்பத்தில் அவரையும்

அழைக்க வேண்டுமென்றும் அவருடைய அபிப்பிராயத்தையும் கேட்க வேண்டுமென்றும் எண்ணப்பட்டது. செயலாற்றுக் குழுவில் இல்லாத மற்றத் தலைமையான காங்கிரஸ்காரர்களும் அழைக்கப்பட்டார்கள்.

காந்திஜீயானவர் வைசிராயைச் சந்தித்தபின் ஓர் அறிக்கையை வெளியிட்டார். அதில் அவர் இங்கிலாந்திடம் தாம் கொண்டுள்ள அனுதாபத்தைத் தெரிவித்தார். மேலும் நாம் யாதொரு நிபந்தனையும் இன்றி இங்கிலாந்துக்கு உதவி புரிய வேண்டுமென்றும் கூறினுர். இதைப் பற்றிச் சிலருக்குத் தப்பெண்ணம் உண்டாயிற்று. பிறகு காங்கிரஸ் குழுவானது, பிரிட்டிஷ் அரசாங்கம், யுத்த விஷயங்களைப் பற்றியும், யுத்தத்திற்குப் பின் சமாதானத்தைப் பற்றியும் தன் கருத்துக்களையும் நோக்கங்களையும் தெளிவாக விளக்கினுல்தான் இந்தியாமனமுவந்து உதவி புரிய இயலுமென்ற கோரிக்கையைச் சமர்ப்பித்தபோது, காந்திஜீயானவர் தாம் வெளியிட்ட அறிக்கையிலிருந்து பிரண்டுவிட்டார் என்று கூறுவதற்கு ஆங்கிலேயர்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. இவ்வண்ணமாக யாதொரு நிபந்தனையுமின்றி இந்தச் சாம்ராஜ்ய வாதப்போரில் உதவிபுரிய அவர் ஒப்புக்கொண்டது காங்கிரஸ்காரர்களில் பலருக்குப் பிடிக்கவில்லை. இரு கட்சியாரும் விஷயத்தை முற்றிலும் புரிந்து கொள்ளவில்லை. இந்தியாவானது பணமும் ஆளும் கொடுத்து உதவுமென்பதாக காந்திஜீ என்றும் நினைக்கவில்லை. இந்த யுத்தத்தில் இந்தியாவைப் போன்ற அடிமைப்பட்ட நாடு ஒன்றின் அனுதாபமானது ஆங்கிலேயர்களுக்கு மிகவும் உயர்ந்ததாகுமென்பதாகவும் அது உலகமனைத்தின் அனுதாபத்தையும் இங்கிலாந்தின் பக்கம் கொண்டு வருமென்பதாகவும் அவர் நினைத்தார். அவர் இந்த அனுதாபத்தைத்தான் மனத்தில் கொண்டிருந்தார். ஆயினும் அச்சமயத்தில் இவ்விதமான அறிக்கையினுல் மக்களிடையில் குழப்பம் உண்டாயிற்று என்பதில் ஐயமில்லை.

இந்த யுத்தத்தின் சம்பந்தமாக, தான் என்ன மனப்பான்மை கொள்வதென்ற கேள்வி செயலாற்றுக் குழுவின்முன் நின்றது. காங்கிரஸ் போரில் உதவி புரியுமா, புரியாதா? புரியுமானுல் யாதொரு நிபந்தனையுமின்றியா அல்லது ஏதாவது நிபந்தனை நிறைவேற்றப்பட்ட பின்னு! உதவி என்ன உருக்கொள்ளும்? காங்கிரஸானது அஹிம்சாவையே தன் குறிக்கோளின் சாதனமாக ஏற்றுக் கொண்டிருக்கிறதே? இந்நிலைமையில் ஓர் அஹிம்சாமயமான கழகம் யுத்தத்தில் எப்படி, எவ்விதமான, உதவி அளிக்க

இயலும்? இப்படிப் பற்பல கேள்விகள் எழுந்தன. குழுவானது பல நாட்களாக ஆலோசனை செய்தபின் ஒரு முடிவுக்கு வந்தது. அதில் தான் நாஜீய வாதத்திற்கும் பாஸிஸ்டு வாதத்திற்கும் எதிரி என்பதை விளக்கியதோடு சாம்ராஜ்ய வாதத்திற்கும்கூட விரோதி என்பதையும் நினைவூட்டி, இந்திய மக்கள் இந்த யுத்தத்திற்கு மனப்பூர்வமாக உதவியளிப்பவர்கள் ஆவதற்காக பிரிட்டிஷ் அரசாங்கமானது இந்த யுத்தத்தில் தன் நோக்கம் யாதென்பதைத் தெள்ளத் தெளிவாகக் கூற வேண்டுமென்று குழுவானது கூறியது.

இத்தீர்மானத்தின் வாசகம் மிகவும் அழகாக இருந்தது. கருத்தும் அதிமிக்க தூயதாகவும் போற்றத்தக்கதுமாக இருந்தது. இதன் பெருமை அம்மசோதாவைத் தயாரித்த பண்டித் ஜவஹர்லாலையே சிறப்பாகச் சேரும். காங்கிரஸானது தன்னுடைய அஹிம்சா கொள்கையைக் காரணமாகக் கொண்டு இந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உதவி புரிய மறுக்க இயலாது என்பதும், வாய்ப்புக் கிட்டினால் அது ஆயுதம் ஏந்தி உதவி புரியவும் தயங்காதென்பதும் இந்தக் கூட்டத்தில் தெளிவாகிவிட்டது. இதற்குப் பின் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் காங்கிரஸின் ஆங்கிலேய எதிரிகள், முக்கியமாக இந்திய அமைச்சரான மிஸ்டர் எமெரீயும், லார்டு லின்லித்கோ உட்பட இந்திய அரசாங்கத்தின் பெரிய அதிகாரிகளும், காந்திஜீயின் அஹிம்சாவினால்தான் காங்கிரஸ் உதவி யளிக்கவில்லையென்று கூறத் தயங்கவில்லையாதலால் தான் இங்கு இதைக் கூறுவது அவசியமாகிறது. அக்கூட்டத்தில் இந்த விஷயம் இவ்வளவு தெளிவுபடவில்லை யென்பது உண்மைதான். ஆயினும் பிரிட்டிஷ் அரசாங்கமானது திருப்தியான முறையில் தன் நோக்கங்களைத் தெளிவாக்கினால் காங்கிரஸ் உதவியளிக்க வேண்டி வருமென்பதும், அவ்வுதவியின் உருவம் ஹிம்சா மயமன்றி வேறாக இராதென்பதும் அத்தீர்மானத்திலிருந்து தெளிவாயின. அச்சமயத்தில் நாடெங்கும், முக்கியமாகக் காங்கிரஸ்காரர் பலரிடையில், பிரிட்டனிடம் அனுதாபமிருந்தது. மேலும் பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வாதிகள் (அச்சமயத்தில் இங்கிலாந்தின் தலைமையான அரசியல் அறிஞர்களும் செய்தித்தாள்களும் தொண்டையைக் கிழித்துக்கொண்டு கத்திக்கொண்டிருந்ததுபோல்) இப்போரை ஜனநாயகத்திற்காகவே புரிவதாகச் சிறிதேனும் அறிகுறி காட்டியிருப்பார்களானால் இந்திய மக்கள் எல்லாருமே அதற்கு மனப்பூர்வமாக துணை புரிந்திருப்பார்கள். ஆனால் உலகத்தின் அனுதாபத்தைப் பெறுவதற்காக

வேண்டி இப்போர் ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்காகப் பேருக்குப் போடப்பட்டு வந்ததாயினும் உண்மையில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் காப்பதற்காகவும் அதை மேலும் வலுவாக்குவதற்காகவும் இப்போர் புரியப்பட்டு வந்தது. இது பின்னுல் தெளிவாகிவிட்டது.

இத்தீர்மானத்திற்குப்பின், தலைவன் என்ற முறையில் லார்டு லின்லித்கோவைச் சந்திப்பதற்கு எனக்கு இரு முறை வாய்ப்புக் கிடைத்தது. ஒரு முறை பண்டித் ஜவஹர்லால்ஜீயுடன் சேர்ந்தும் மற்ரெரு முறை மகாத்மா காந்திஜீ, மிஸ்டர் ஜின்னு ஆகிய இருவருடன் சேர்ந்தும் சென்று வைசிராயைக் கண்டேன். அச்சமயத்தில் லார்டு லின்லித்கோ இந்தியாவின் கட்சிகள் எல்லாவற்றுடனும், மேலும் எல்லாவித கருத்துக் கொண்டவர்களுடனும் கூடி சண்டையில் இந்தியா உதவி புரிவதைப்பற்றிப் பேச்சு நடத்தி வந்தார். இந்தியாவின் மக்கள் மனமுவந்து உதவி செய்ய வேண்டுமென்றும், எவ்விதமான சண்டையையும், குழப்பத்தையும், சச்சரவையும் உண்டாகவிடக்கூடாதென்றும் அவர் விரும்பினுர். சண்டை ஆரம்பித்ததுமே யாரையும் கேட்காமலும் எவருடனும் கலந்து யோசனை செய்யாமலும் அவர், இந்தியாவும் யுத்தத்தில் சேர்ந்திருக்கிறதென்பதாக பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில், பறைசாற்றி விட்டார். இந்தியாவில் சட்டசபை இருந்து வந்தது. எல்லா மாகாணங்களிலும் 1935இன் அரசியல் திட்டத்தின்படி மந்திரி சபைகள் வேலை புரிந்து வந்தன. அவற்றில், எட்டு மாகாணங்களில் மே மாதம் 11ஆம் தேதியிலிருந்து காங்கிரஸ் மந்திரி சபைகள் நிறுவப்பட்டிருந்தன. யாரையும் கேட்கவுமில்லை. எவருடைய அபிப்பிராயத்தையும் பெறவுமில்லை. இந்தியாவின் யாதொரு கழகத்திற்கும் அல்லது எந்த ஆளுக்கும் இச்சண்டையுடன் யாதொரு சம்பந்தமும் இல்லாததுபோல இருந்தது; விசாரிக்காமலே இந்தியாவும் போரிடுபவர்களுடன் சேர்க்கப்பட்டு விட்டது. காங்கிரஸ் குழுவுக்கு நிறையக் கோபம் வந்தது. இந்தியாவின் மற்றக் கட்சிக்காரர்களுக்கும் இது பிடிக்கவில்லை. இந்த நிலைமையில், அவருடைய நோக்கம் தெளிவாகத் தெரியப்படாத வரையில், யாராலும் எதுவும் செய்யவும் இயலாது. செய்வது பொருத்தமுமாகாது. இதனுல் லார்டு லின்லித்கோ பின்னுல் மக்களிடம் யோசனை கேட்கத் தொடங்கினுர். நாட்டின் அரசியல் கழகங்களைத் திருப்தி செய்வதற்காக அவர் ஒரு திட்டத்தையும் சமர்ப்பித்தார். அதன்படி, வைசிராயின் நிர்வாகச் சபையின் (எக்சிகுயூடிவ் கவுன்ஸில்) அங்கத்தினரின் எண்ணிக்கை

அதிகரிக்கப்படும். ஆயினும் அதன் புதிய அல்லது பழைய அங்கத்தினர்களின் அதிகாரத்தில் யாதொரு மாறுதலும் உண்டாகாது. வைசிராயின் கருத்துப்படி அங்கத்தினர்கள் தத்தம் இலாகாவுக்கு மட்டும் தலைவர்களாக இருப்பார்கள். அவர்களுக்கு யாதொரு சுதந்திரமான உரிமையும் கிடையாது. கவுன்ஸிலின் கூட்டம், எல்லா அங்கத்தினர்களும் ஒருவர் மற்றொருவருடைய இலாகாவின் நடவடிக்கைகளைப் பற்றி அறிந்து கொள்வதற்காக மட்டுமே நடைபெறும். அங்குச் சில விஷயங்களைப்பற்றி அவர்கள் ஆலோசனை மட்டுமே செய்யலாம், ஆயினும் எல்லாத் தலைசிறந்த கேள்விகளைப்பற்றி முடிவு செய்யும் பொறுப்பு இறுதியில் வைசிராயின் கையில் தானிருக்கும். அவருக்குத்தான் அதிகாரம் உண்டு. போர் நடைபெற்று வரும் காலத்தில் யாதொரு (அரசியல் அமைப்புச்) சட்ட மாறுதல் நடக்குமென்று அவருக்குத் தோன்றவில்லை. இதனால், நடக்கக்கூடியதெல்லாம் 1935ஆம் ஆண்டின் அரசியல் அமைப்புக்கு உட்பட்டே நடைபெறக் கூடும். இப்படியான ஒரு திட்டத்தை வைசிராய் சமர்ப்பித்தார்.

காங்கிரஸ் இரண்டு கோரிக்கைகள் செய்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் போரின் நோக்கத்தைத் தெளிவுபடுத்துவதோடு கூடவே, இந்தியாவின் சுதந்திரத்தைப்பற்றி வருங்காலத் திட்டத்தின் குறிக்கோளுக்குத் தெளிவான முறையில் சுதந்திர உருக் கொடுத்துவிட வேண்டுமென்று காங்கிரஸ் கேட்டது. மேலும், அதோடு, தற்காலத்துக்கு இந்தியாவின் பிரதிநிதிகளுக்கு, அவர்கள் உண்மையாகவே இந்தியாவின் விருப்பப்படி இங்குக் காரியங்களைச் செய்ய இயலுவதற்கும் சண்டையிலும் உண்மையான உதவி புரிய இயலுவதற்கும் அனுகூலமான ஆட்சி உரிமைகள் கிடைக்க வேண்டுமென்றும் காங்கிரஸ் கேட்டது. எதிர்காலத்தைப் பற்றிய அதிகாரத்தின் முக்கியத்தைச் சற்றுக் குறைத்துக் கொண்டாலும் தற்கால அதிகாரம் கிடைக்காத வரையில் போரில் பொது மக்கள் மனம் ஈடுபடாது. அவர்கள் முழு மனத்தோடு உதவி புரிய இயலாது. காங்கிரஸானது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வாதத்தையும் உலகுக்கு யாதொரு நன்மையைப் பயக்கும் பொருளாக ஒத்துக்கொள்ளவில்லை. சாம்ராஜ்ய வாதத்திற்கு மாறாக அது உண்மையான ஜனநாயகத்தையே ஆதரித்து வந்திருக்கிறது. இப்பவும் ஆதரிக்கிறது. பிரிட்டிஷ் சாம்ராஜ்யமானது மாறி, இன்று சாம்ராஜ்ய வாதத்தின் காலில் கீழ் நசுக்குண்டு கிடக்கும் தேசங்களிலும் குடியேற்ற நாடுகளிலும் அது உண்மையான ஜனநாயக உருவை ஏற்க வேண்டுமென்று காங்கிரஸ் விரும்

பியது. சண்டை தொடங்கியபோது, ஜனநாயகத்தைப் பற்றி நிறையப் பேச்சு அளக்கப்பட்டது. அந்தப் பிரசாரத்தைக் காங்கிரஸ் ஒரு கேள்வியைப் போட்டு குட்டு வெளிப்பட்ச் செய்துவிட்டது. கேள்வி இவ்வளவுதான்—'இந்த ஜனநாயகம் இந்தியாவுக்கும் உண்டா? அல்லது ஆங்கிலேயருக்கும் ஐரோப்பியர்களுக்கும் மட்டுந்தானா? ஆசியா, ஆப்பிரிக்கா மக்களுக்கும் உண்டென்றால் ஒளிவு மறைவில்லாமல் தெளிவான சொற்களால் கூறட்டும். மேலும், இப்போதே, இயன்ற அளவுக்கு அதிகாரத்தை ஒப்படைத்து, செயல் முறையில் எல்லாருக்கும் தைரிய மூட்டட்டும்' என்றது.

1939 நவம்பரிலிருந்து 1942 வரையில் இக்கேள்விக்குத் திருப்தியான விடை காங்கிரஸுக்கும் இந்தியாவுக்கும் கிடைக்கவில்லை. சொல் முழக்கத்தால் உண்மையான நோக்கத்தை மறைத்து வைக்க முதலில் முயற்சி செய்யப்பட்டது. பிரிட்டிஷ் ராஜ்யத்தைச் சிதையாமல் காப்பதே அந்நோக்கம். காலம் போகப் போக இது தெளிவாகிவிட்டது. அச்சமயத்தில் லார்டு லின்லித்கோ எவ்வளவோ முயன்று பார்த்தார்; ஆனால் எந்த அரசியல் கட்சியும் அவருடைய திட்டத்தால் திருப்தியடையவில்லை. முஸ்லிம் லீகைச் சந்தோஷப்படுத்துவதற்காக அவர் 1935இன் அரசியல் அமைப்பின்மீது, யுத்தத்திற்குப்பின், அடியிலிருந்து ஆலோசனை செய்யப்படு மென்பதாகச் சில நாட்களுக்குப் பிறகு ஓர் அறிக்கை விடுத்தார் என்பது உண்மை. அந்த அரசியல் திட்டத்தை காங்கிரஸும்தான் பலமாக எதிர்த்தது. மிதவாதக் கட்சிக்காரர் நீங்கலாக வேறு எந்த அரசியல் கட்சியும் அதன்படி வேலை புரிய இணங்கவில்லையென்று நினைக்கிறேன். இதனால் சண்டைக்குப் பின் அதை ஒருவிதமாக வேரோடு திருத்தி மாற்றி அமைக்க வாக்களித்ததினால் அவர் முஸ்லிம் லீகை மற்றுமன்றி, மற்றவர்களையும்கூடத் திருப்தி செய்ய எண்ணி முயற்சி செய்திருக்கலாம். ஆனால் அப்படித் தெரிய வரவில்லை. ஏனெனில் அச்சமயத்திலும், பின்னும் அவர் எடுத்த நடவடிக்கைகளிலிருந்தும் ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர இயலுகிறது. காங்கிரஸுக்குப் போட்டியாக மற்றொரு கட்சியை நிறுத்தி இந்த இரண்டு கட்சிகளும் ஒன்றுகூடித் தம்முடைய கோரிக்கையைச் சமர்ப்பிக்காத வரையில் தாம் எதுவும் செய்ய வழியில்லை யென்று இங்கு இந்தியாவில் கூறவும், மற்றொரு பக்கத்தில், 'ஆங்கிலேயர்கள் அதிகாரத்தை அளிக்கத் தயார். ஆனால் இந்தியாவின் மக்கள் தமக்குள் ஒத்துப்போகக் கூடத் தகுதியற்றவர்களாயிருப்பதனால் இந்தியாவில் பிரிட்டிஷ்

அரசாங்கத்தின் ஆட்சியைச் சிதையாமல் காப்பது அவசியமும் இன்றியமையாததும் ஆகிறது' என்று உலகத்துக்குக் காட்டவும் அவர் விரும்பினர். இதில் லார்டு லின்லித்கோ தம் கெடுவுக்குள் வெகுதூரம் வெற்றியடைந்தார். அச்சமயத்தில் அவரைக் கண்டு பேசியதில், யாதொரு திருப்தியான விடையும் எங்களுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து கிடைக்கவில்லை. அவர்கள் அரசாங்கத்தின் சார்பில் விடுத்த அறிக்கை எங்களுக்கு திருப்தியில்லையென்று நாங்கள் தெள்ளத் தெளிவாகக் கூறிவிட வேண்டி வந்தது.

வைசிராயைச் சந்தித்தபின், காங்கிரஸ்காரர்கள் மந்திரி சபைகளில் இருக்க இயலாதென்றும் அரசாட்சியின் பொறுப்பை மாகாணங்களிலும் அவர்கள் தாங்கி நிற்க முடியாதென்றும் நாங்கள் நிச்சயம் செய்ய வேண்டியதாயிற்று. செயலாற்றுக் குழுவும் அகில பாரதீயக் குழுவும் யோசனை செய்து ஆலோசித்த பிறகுதான் இம்முடிவுக்கு வந்தன. இந்தக் கொள்கை பிடித்தமில்லாதவர்கள் சிலர் காங்கிரஸ்காரர்களிலும் இருந்தார்கள். நம் கைக்கு வந்த சிறிதளவு அதிகாரத்தைக் கைவிடுவது சரியன்றென அவர்கள் எண்ணினர்கள். நம் கையில் இந்த அதிகாரத்தை வைத்துக்கொண்டு நாட்டிற்குத் தொண்டாற்ற இயலுமென்றும், சண்டையினல் நமக்கு வரக்கூடிய நஷ்டத்திலிருந்து தப்புவதற்கும் அதிலிருந்து கிடைக்கக்கூடிய லாபத்தைப் பெறுவதற்கும், அதிகாரத்தை வைத்துக்கொண்டு தான் நாம் நம் கடமையை அதிக வெற்றிகரமாக ஆற்ற முடியுமென்றும் அவர்கள் நினைத்தார்கள். ஆயினும் அப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாயிருந்தது. பெரும்பாலர் வேறுவிதமாக நினைத்தார்கள். சண்டை வளர வளர, மத்திய அரசாங்கமானது மாகாண அதிகாரங்களைத் தன் கையில் எடுத்துக் கொள்ளுமென்றும், மந்திரி சபைகள் தம் மாகாணத்தில் எந்த வேலையைச் செய்வதற்கும் அதிகாரத்தை வைத்துக்கொள்ள முடியாதென்றும், ஆயினும் ஏதாவது கேடுற்ருல் அதற்குப் பொறுப்பு அவற்றின் தலையில் விழுமென்றும் அவர்கள் நினைத்தார்கள். மத்திய அரசாங்கத்தில் இந்தியர்களுக்கு யாதும் அதிகாரம் கிடைக்கும் போலத் தெரியவில்லையாதலால் அங்கிருந்து கொண்டு வைசிராயுடன் பணியாற்றும் இந்திய அங்கத்தினர் எவரும் யுத்த மந்திரிக்கும் வைசிராய்க்கும் 'ஆமாம்' போடுவதைத் தவிர வேறு யாதொன்றும் செய்ய வாய்ப்புக் கிடைக்காது. அவர் இஷ்டப்பட்டால்கூட மாகாண மந்திரி சபைகளுக்கு அவர் யாதொரு

சிறந்த உதவியையும் புரிய இயலாது. சண்டைக்குப் பொது மக்களின் முழு உதவி எதிர்பார்க்கப்படும்; ஆனால் பொதுமக்கள் மகிழ்ச்சியோடு உதவியளிக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்களின் முன், எதிர்காலத்தைப்பற்றி யாதொரு சிறப்பான நம்பிக்கையும் இல்லை. நிகழ் காலத்தில் அவர்களுடைய பிரதிநிதிகளுக்கு யாதொரு அதிகாரமும் இல்லை. இதனால் பொது மக்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆணைக்கு ஏற்ப உதவி அளிக்க இயலாதபோது, மந்திரி சபைகள் பொது மக்களைச் சிறிது பலவந்தமும் செய்ய வேண்டி வரும். ஆயினும் உண்மையான பொதுஜனத் தொண்டாற்றும் நோன்பை ஓம்பும் கழகம் எதுவும் அந்நிலைமையில் அப்படிச் செய்யாது; இதனால் காங்கிரஸ் மந்திரி சபைகளும் அப்படிச் செய்வதற்கு ஆற்றலற்றனவாகிவிடும். பிரிட்டிஷ் அரசாங்கமோ சண்டையைப் போட்டே தீரவேண்டும். அதற்கு உதவி—மகிழ்ச்சியுடன் அளிக்கப்பட்டாலும் சரி, அல்லது பலவந்தக் கட்டாயத்தால் அளிக்கப்பட்டாலும் சரி,—கிடைத்தே ஆக வேண்டும். அது மந்திரி சபைகளிடமிருந்து இந்த உதவியை எதிர்பார்க்கும். அதனுடைய நம்பிக்கை நிறைவேருவிட்டால் இயல்பாகவே அதற்குக் கோபம் வரும். ஆகையால் நாம் இந்தப் பசையற்றப் பொறுப்பை நம் மேல் சுமத்திக் கொள்ளாமல் இருப்பதே நன்று. அல்லாவிட்டால் நாம் பொது மக்கள், பிரிட்டிஷ் அரசாங்கம் ஆகிய இருவரிடமும் செருப்படி படவேண்டி வரும். அப்படிப் படாவிட்டாலும் குறைந்தது இருவரிடமும் வசவை வாங்கிக் கட்டிக்கொள்ள வேண்டி வரும். முக்கியமாக, இன்று இருக்கும் நிலைமை சண்டையின் காரணமாக மேலும் கடினமாகப் போகும். அந்நிலைமையைக் காங்கிரஸ்காரர்களாகிய நாம் சமாளிப்பதற்கு நமக்கு வேண்டிய ஆற்றல் இல்லாமல் செய்யப்பட்டு வரும் இத்தகைய நிலைமையில் நாம் இப்பொறுப்பை ஏற்று கொள்ளாதிருப்பதே நன்று. பிரிட்டிஷ் அரசாங்கமானது உண்மையாகவே இந்தியாவிடம் நியாயமாக நடந்துகொள்ள வேண்டுமென்றும், அதைச் சுதந்திரமாக்கிவிட வேண்டுமென்றும் விரும்புவதாக யாருக்கேனும் எண்ணமிருந்தால், அதற்கு ருசு அதன் நடவடிக்கைகளிலிருந்து கிடைத்துவிடும். அது அப்படி விரும்பாவிட்டால் காங்கிரஸானது விலகிக்கொள்வதே சரி.

காங்கிரஸின் கேள்விகளுக்குத் திருப்தியான விடை கிடைக்காவிட்டால் காங்கிரஸானது மந்திரி சபைகளை ராஜிநாமா செய்துவிட்டு விலகி விடும்படி யோசனை அளிக்க வேண்டி வருமென்று

செயலாற்றுக் குழுவும் அகில பாரதீயக் குழுவும் முடிவு செய்து விட்டன. வர்தாவில் அகில பாரதீயக் குழு கூடியது. இவ் விஷயத்தைப் பற்றிச் செயலாற்றுக் குழுவே முடிவு செய்யட்டு மென்றும், அவசியம் ஏற்பட்டபோது மந்திரி சபைகளை ராஜிநாமா செய்யும்படி கட்டளையிடட்டுமென்றும் அதற்கு அகில பாரதீயக் குழு அதிகாரத்தை அளித்துவிட்டது. வைசிராயுடன் நடந்த பேச்சு வார்த்தைகளாலும், அரசாங்கத்தின் அறிக்கையினாலும் திருப்தி உண்டாகாமற் போனவுடனே மந்திரி சபைகளைத் தத்தம் சட்ட சபையில் நாட்டின் கோரிக்கைகளை ஆதரிக்கும்படியும், அதற்குப் பிறகு ராஜிநாமா கொடுத்துவிடும்படியும் செயலாற்றுக் குழு யோசனையளித்தது. அவை அப்படியே செய்தன. 1939ஆம் ஆண்டு நவம்பரில் எல்லா மாகாணங்களின் காங்கிரஸ் மந்திரி சபைகளும் கலைந்துவிட்டன. காங்கிரஸுக்குப் பெரும்பான்மை பலம் அவ்வளவு அதிகமாயிருந்ததால் வேறு மந்திரி சபைகள் அமைய முடியவில்லை. ஏனெனில், அமைக்கப்பட்டதுமே அவற் றின் மீது நம்பிக்கையின்மை தீர்மானம் கொண்டு வரப்பட்டு விடும். கவர்னர்களும் வைசிராயுங்கூட எப்பொழுதும் 'கரா முரா' வென்று கூச்சலிட்டுக் கொண்டிருக்கும் மந்திரி சபைகளைவிட, யாதொரு மந்திரி சபையுமே இல்லாதது தமக்கு நன்று என நினைத்திருக்கலாம். அப்போது தம் மனம் போனபடி செய்வதற்கு அவர்களுக்கு வாய்ப்புக் கிடைக்கும். இதனால் அவர்கள் அம் மாகாணங்களிலெல்லாம் அரசியல் அமைப்பின் 93ஆம் பிரிவுப்படி ஆட்சியைத் தம் கையிலேயே எடுத்துக் கொண்டார்கள். இப் பொழுது சாதாரண வேலையை நடத்துவதற்கு மட்டுமன்றி, புதிய சட்டங்களைப் புனைவதற்கும் பழையனவற்றை மாற்றுவதற்கும் அல்லது அற்றுபடி செய்வதற்கும்கூட முழு அதிகாரம் கவர்னர் களின் கையில் வந்துவிட்டது. சண்டை தொடங்கியதுமே பிரிட் டிஷ் அரசாங்கமானது 1935ஆம் ஆண்டு அரசியல் அமைப்பை ஒரே நாளில் திருத்தி அமைத்து விட்டது. அதனால், வைசிராய் இஷ்டப்பட்டபோது மாகாண அரசாங்கங்களின் அதிகாரங்களைத் தம் கை வசமாக்கிக் கொள்ளலாம், அல்லது அந்த அரசாங்கங் களைக் கொண்டு தம் கட்டளைகளை நிறைவேற்றலாம். இது யுத் தத்தின் நெருக்கடியான நிலைமையின் பேரைச் சொல்லி செய்யப் பட்டது; ஆயினும் அர்த்தம் தெளிவாயிருந்தது. மந்திரி சபை கள் ராஜிநாமா செய்துவிட்டபின் அவருக்கு வழி மேலும் சுத்த மாகிவிட்டது.

மந்திரி சபைகள் ராஜிநாமா செய்யாமலும் தம் இடங்களி

லிருந்து அசையாமலும் இருந்திருக்குமாளுல் யுத்தத்தின் பேரைச் சொல்லி மாகாணங்களில் நிகழ்ந்த விஷமங்களும், அக்கிரமச் செயல்களும் நடைபெற்றிருக்காவென்று சிலர் இன்றுகூட மிகவும் அழுத்தமாகக் கூறுகிருர்கள். இவ்விதமாகப் பேசுகிறவர்கள் அரசியல் அமைப்பில் செய்யப்பட்ட இத்திருத்தத்தை மறந்து விடுகிருர்கள்; மேலும், மந்திரி சபைகள் நிலைபெற்று நின்ற இடங்களிலும் கூட மத்திய அரசாங்கத்தின் விஷமங்கள் நடந்தன என்பதையும் மறந்து விடுகிருர்கள். வங்காளத்தின் மந்திரி சபை இதற்கு கண்கூடான சான்ருகும். அங்கு மந்திரி சபையை அமைப்பதிலும் முறிப்பதிலும் கவர்னர் முழுக்கப் பங்கெடுத்துக் கொண்டார். அங்குள்ள மக்கள் லக்ஷக் கணக்கில் ஒவ்வொரு பருக்கைக்காக ஏங்கிச் செத்தார்கள். மந்திரி சபையால் அங்குப் பயங்கரமான பஞ்சத்தை விளைவித்த காரணங்களை ஒழிக்கவும் இயலவில்லை. பஞ்சம் வந்துவிட்டபின் மத்திய அரசாங்கமானது இதில் தலையிடாத வரையில் பொது மக்களுக்கு உதவி புரியவும் இல்லை. பேருக்காக அதிகாரங்கள் எல்லாம் இருந்தும்கூட ஸ்ரீ பஜலுல் ஹக்கின் மந்திரி சபையாவது, சர் நாஜிமுத்தீனின் மந்திரி சபையாவது வங்காளத்தை இந்த விபத்திலிருந்து தப்புவிக்க முடியவில்லை. இதே சந்தர்ப்பத்தில், பஞ்சாப், சிந்து ஆகிய மாகாணங்களின் மந்திரி சபைகளின் கையாலாசாத் தன்மையும் ருசுப்பட்டு விட்டது. அவர்களை மத்திய அரசாங்கம் கட்டாயப்படுத்தி விலையேற்றத்தைப் பற்றியும் தானியத்தை ஏற்றுமதி செய்வதைப் பற்றியும் நடவடிக்கை எடுக்க வைத்தது. மாகாண அரசாங்கத்தின் அதிகாரங்களைப் பற்றி நாம் சிந்தனை செய்யும்போது அந்த அரசாங்கம் சரியாக வேலை புரிந்து வந்ததா இல்லையாயென்பது கேள்வியன்று. சரியாகச் செய்வதற்கு உரிமை உண்டென்ருல் தவறு செய்வதற்கும் உண்டு. தவறு செய்தபோது தான் அதிகாரம் இருக்கிறதா இல்லையா என்பது சரியாகத் தெரிய வரும். எந்த விஷயங்கள் சம்பந்தமாக மத்திய அரசாங்கம் அவற்றை நெருக்கியதோ, அவ்விஷயங்களில் அவை நியாயமாகவே கட்டாயப்படுத்தப்பட்டிருக்கலாம், அவை தவருன வேலைகளையே செய்து வந்திருக்கலாம். ஆயினும் இதிலிருந்து, மாகாண அரசாங்கத்தின் அதிகாரம் வரைக்கு உட்பட்டதென்றும், அவசரச் சட்டங்களின் (ஆர்டினன்ஸ்களின்) காலத்தில், மத்திய அரசாங்கமானது அவற்றைத் தான் விரும்பியபடி செய்யவைக்க முடியுமென்பதும், வெளிப்படாமல் போகாது. இம்மந்திரி சபைகள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு உதவி புரிய வேண்டுமென்று எப்

பொழுதும் பறைசாற்றி வந்தனவென்பதும், உதவியும் புரிந்து வந்தன வென்பதும் நினைவிலிருக்கட்டும். அப்படியிருந்தும் மத்திய அரசாங்கமானது அவற்றை நெருக்கடி செய்யத் தயங்கவில்லை. காங்கிரஸ் மந்திரி சபைகள் தம் இடங்களில் இருந்து வந்திருக்குமானால் (அப்படி இருக்கவில்லை) காங்கிரஸுக்கும் தமக்கும் சிறிதேனும் பிடிக்காத பல காரியங்களைச் செய்யும்படி அவையும் கட்டாயப்படுத்தப்பட்டிருக்கும் என்பதில் சிறிதேனும் ஐயத்திற்கு இடமில்லை. அவை வேறு வழியின்றிச் சில நாட்களுக்குள்ளாகவே ராஜிநாமா செய்ய வேண்டி வந்திருக்கும். அல்லா விட்டால் தம்முடைய கருத்துக்களுக்கும் கொள்கைக்கும் விரோதமாக கவர்னர் கூறுவதற்கு "ஆம், ஆம்" போட்டுக்கொண்டு அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டி வந்திருக்கும்.

மந்திரி சபைகளில் இருந்து கொண்டு நாட்டிற்கு நலத்தைப் புரிவதற்கு முற்றிலும் ஆற்றலற்றவர்களாக இருந்தோம் என்ற எண்ணம் இன்று மேலும் உறுதியாகிவிட்டது; நாம் நம் நாட்டிற்குக் கேட்டை விளைவிப்பதற்குத்தான் ஒரு கருவியாகவே அமைந்திருப்போம்.

இந்த எண்ணங்கள் கொண்டிருந்தும்கூட, அந்நாட்களில், இங்கிலாந்து தோல்வியுறுவதென்பது எனக்கு பிடித்ததென்று கூறமுடியாது. எக்காரணங்களாலும் ஜெர்மனியின் வெற்றி எனக்கு மனமொப்பவில்லை. அது செக்கோஸ்லோவாக்கியாவுக்குக் கொடுமை புரிந்தது. அந்நாடு தன்னைவிட பலவீனமான நாடென்பதால்தான் அதற்குக் கொடுமை புரிந்தது. அந்நாட்டிற்கு ஜெர்மனி கொடுமை புரிந்தபோது மற்றவர்களும் அதைக் கொண்டு லாபமடைய வேண்டுமென்ற பேராசையை அடக்க முடியவில்லை. அவர்களில், ஹங்கேரியும் போலந்தும் முக்கியமானவை. இதனால் ஜெர்மனியானது எதிரிடையாக போலந்தின் மீது திரும்பி அதனிடமும் அக்கிரமமாக நடந்து கொள்ளத் தொடங்கியபோதும் அது சரியாகத்தான் செய்தது என்பது போன்ற எண்ணம் என் மனத்தில் எழுந்தது. போலந்தின் 'தன் வினைத் தன்னைச் சுட்டது'! பிறகு ஜெர்மானியனது ஹாலந்து, பெல்ஜியம், டென்மார்க்கு, நார்வே ஆகிய நாடுகளின் மீதும் படையெடுத்துவிட்டபோது, ஜெர்மனி எந்தப் பலவீனமான நாட்டையும் சுதந்திரமாக இருக்க விடாதென்பது என் மனத்தில் ஆழமாகப் பதிந்தது. ஆங்கிலேயர்களின் மீது இருந்து வந்த சிறிதளவு கோபமும் குறைந்து விட்டது. மேலும் பிரிட்டிஷார் ஜெர்மனியைத் தோற்கடித்து இந்தக்

கொடுங்கோன்மையை அடக்குவதற்காக நாமும் உதவிபுரிய வேண்டுமென்ற மனப்பான்மையும் எனக்கு வரத்தொடங்கியது. நான் ஓர் அறிக்கையில் இந்த மன எழுச்சியை வெளியிடும் அளவுக்கு அது மிகவும் வலுத்துவிட்டது. இன்னும் பல காங்கிரஸ்காரர்களின் எண்ணமும் அவ்வண்ணமே இருந்ததென்பதாக நான் நினைக்கிறேன். நாங்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் குற்றங் குறைகளையும் இந்தியர்களிடம் அவர்கள் அநியாயமாக நடந்து கொண்டதையும் நினைவிற் கொண்டும்கூட ஜெர்மனியின் தீய செயல்களால் மனமிடிந்து போனதினால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் நடத்தையை அநேகமாக மறந்தேவிட்டோம். இதனால் - இன்று பல ஆங்கிலேயர்களும் அவர்களை முகஸ்துதி செய்பவர்களும் கூறி வருவதுபோல—காங்கிரஸ்காரர்கள் இங்கிலாந்தின் பலவீனத்தை அறிந்து கொண்டு, தம் பழைய பகைக்குப் பழி வாங்கவும், அதனுடைய ஆபத்தைக் கொண்டு லாபமடையவும் விரும்பினார்கள் என்று கூறுவது முற்றிலும் பொய். இங்கிலாந்தின்மீது எங்களுக்கு குறைகள் இருந்தாலும்கூட சண்டையின் ஆரம்ப காலத்திலிருந்து 1940 ஜுலை வரையில்—அதாவது பம்பாயில் அகில பாரதீயக் குழுவின் கூட்டத்தில், பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுக்கு எதிர்காலத்தில் சுதந்திரத்தை அளிப்பதாக அறிக்கை செய்து மேலும் ஆட்சியில் உடனே அதிகாரம் அளிக்குமானால் இந்தியா மனமொன்றி சண்டையில் உதவி புரியமென்று கூறிய தேதி வரையில்-பெரும்பாலும் எல்லாக் காங்கிரஸ்காரர்களுடைய உள்ளத்திலுமே பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மீது வெறுப்பில்லை. அக்காலம் வரையில் எல்லாக் காங்கிரஸ்காரர்களும் பிரிட்டனுக்கு உதவி புரிவதைத் தம் கடமையாகவே கருதினார்கள். அக்கடமையை ஆற்றுவதற்காக அதிகாரத்தைக் கேட்டார்கள் என்பது உண்மை. அதில்லாமல் பொது மக்களை உற்சாகப்படுத்துவது கை கூடாத காரியம்.

மேலே கூறிய பம்பாய்க் கூட்டத்திற்குப் பிறகு, எதன் காரணமாக காந்திஜீ காங்கிரஸை விட்டுப் பிரிந்து தனியாகப் போக வேண்டி வந்ததோ, எதில், அவரைப் பிரிந்து போகவிட்டு விட்டு செயலாற்றுக் குழுவும் அது போலவே அகில பாரதீயக் குழுவும் சண்டையில் செயல் முறையில் உதவி புரிய உறுதி பூண்டனவோ, அக்கூட்டத்திற்குப் பிறகு, பிரிட்டிஷ் அரசாங்கமானது அத் தீர்மானத்தை அதி விரைவில் உதைத்துத் தள்ளிவிட்ட போது தான் பலர் மனத்தில் கோபம் பொங்கியது. அக்கோபம் ஸ்ரீ ஏமரி, சர்ச்சில் ஆகிய இருவரின் பேச்சினால் நாளுக்கு நாள் பெருகி

வந்தது. அந்தச் சமயத்தில் இங்கிலாந்தானது எவ்வளவு மலிவாக பேரம் பேசி முடித்திருக்கக் கூடுமோ அது போல இனிமேல் அதற்கு வாய்ப்புக் கிடைக்காதென்பதில் ஐயமில்லை. தன்னுடைய முரட்டு பலத்தைக் கொண்டு அது இந்தியாவை இன்னும் சிறிது காலம் வரையில் அமுக்கி அடக்கி வைக்க இயலுமென்பது வேறு பேச்சு. அச்சமயத்தில் உடன்படிக்கை உண்டாகியிருந்தால் ஜப்பானும்கூட இச்சண்டையில் குதிப்பதற்கு முன் யோசனை செய்ய வேண்டியிருந்திருக்கும். இந்தியாவானது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எல்லா வகையிலும் உடல் பொருள் ஆவியைக் கொடுத்துத் துணை நிற்கிறதென்ற நம்பிக்கை ஜப்பானுக்கு உண்டாகியிருந்தால், கிழக்கு ஆசியா முழுவதோடும் அது உண்மையில் போரிட்டது போலச் செய்வதற்கு அதற்குத் துணிச்சல் வந்திருக்காது. அது அப்படித் துணிந்திருந்தாலும் அதற்கு உண்மையாகக் கிடைத்த அளவுக்கு வெற்றி கிடைத்திருக்கும் என்று யாரால் கூறமுடியும்? இந்தியாவின் விடுதலையோடுகூடக் கூட பர்மாவின் சுதந்திரத் தகராறும் தீர்ந்து போயிருக்கும். பர்மா தகராறு முடிவடைந்திருந்தால், மலாயா, சிங்கப்பூருக்கு இந்த நிலைமை வந்திருக்காது. இதனால், அச்சமயத்தில் பிரிட்டனது எவ்வளவு நெடிது நோக்கமின்மையுடன் நடந்து கொண்டதோ அது போல அதன் சரித்திர வரலாற்றில் ஒரு சமயம் நீங்கலாக, என்றுமே அப்படிச் செய்ததில்லையென்று நான் நினைக்கிறேன். அந்த ஒரு சமயம் எதுவென்றால், பதினெட்டாம் நூற்றாண்டில், அமெரிக்காவின் குடியேற்ற மக்களின் கோரிக்கையை அது உதைத்துத் தள்ளிய சந்தர்ப்பம்தான். அது உலகத்திற்கு நல்லதாகவே முடிந்தாலும், பிரிட்டனுக்கு அது நல்லதாக அமையவில்லை. இதுவும் அமெரிக்காவில் நடந்ததைவிட இங்கிலாந்திற்கு கெடுதலாகவும் உலகத்திற்கு அதைவிட லாபகரமாகவும் ஆகலாம். பிரசாரத்திற்காகக் காங்கிரஸின் மீது என்ன குற்றம் ஏற்றப்பட்டாலும், காங்கிரஸானது இந்தியா கௌரவமும் நற்பயனும் கூடிய உரிமையுடன் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் ஜனநாயக நாடுகளுக்கும் உதவியளிப்பதற்குத் தகுதியுள்ளதாக ஆக்கப்பட வேண்டுமென்றே இடையறாது முயற்சி செய்து வந்ததென்று கூறவே வாய்மை தூண்டும். ஆனால் ஒவ்வொரு முறையும் அதற்கு இல்லையென்ற விடையே கிடைத்து வந்தது மட்டுமன்றி அது எப்பொழுதுமே அவமதிக்கவும் பட்டுவந்தது. முடிவில் கோபாவேசம் கொண்டு அது 1942ஆம் ஆண்டின் ஆகஸ்டு தீர்மானத்தைச் செய்ய வேண்டி வந்தது. அதைப் பற்றிப் பின்னால் கூறப்படும்.

சண்டை தொடங்கியபின் காங்கிரஸ் விழா நடைபெறுமா நடைபெருதா வென்பதும், அப்படி நடந்தால் எப்பொழுது நடைபெறுமென்பதும் சிறிது காலம் வரையில் நிச்சயமில்லாதது போல இருந்தது. காங்கிரஸின் வழக்கம் மறுபடியும் மாற்றப்பட்டு டிசம்பரிலேயே காங்கிரஸின் ஆண்டு விழா நடைபெற வேண்டுமென்பதாக முடிவு செய்யப்பட்டிருந்தது. இப்போது டிசம்பரில் விழா நடைபெருதென்பது தெளிவாகி விட்டது. ஆயினும் காங்கிரஸ் கூட்டத்தை நடத்தியே ஆகவேண்டு மென்பது சில நாட்களுக்குள்ளாகவே தெளிவாகிவிட்டது. இதனால், மார்ச்சில் ஆண்டு விழாவை நடத்த வேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டது. ராம்கரில் மீண்டும் ஏற்பாடுகள் மும்முரமாக செய்யப்படத் தொடங்கின. நான் அங்கு அதிகப்பொழுது கழிக்க இயலவில்லை. ஏனெனில் அகில பாரதீயக் குழுவின் வேலையின் சுமையும் என் மீது இருந்தது. ஆயினும், இப்போது அங்கு ஸ்ரீ அம்பிகா காந்த் மட்டும் ஒன்றியாக இருக்கவில்லை. மந்திரி சபைகள் ராஜிநாமா செய்துவிட்ட பின், மற்றவர்களுக்கும் அங்குச் செல்வதற்கு ஓய்வு கிடைத்துவிட்டது. முக்கியமாக அனுக்கிரக பாபூ, ஸ்ரீ கிருஷ்ண வல்லப் சஹாய், ஸ்ரீ ராம் நாராயண் சின்ஹா ஆகியவர்களின் தொண்டும் கிடைத்துவிட்டது. இதனால் எனக்கு பேரளவுக்குக் கவலை நீங்கிவிட்டது.

## 137. ராம்கர் காங்கிரஸின் மாரி விழா

ராம்கரில் மரத்துக்கும் மூங்கிலுக்கும் குறைவில்லை. தொழிலாளிகளும் நிறையக் கிடைத்தார்கள். இதனால் காட்டைக் கழித்துக் குடிசைகளை அமைக்கும் வேலை மும்முரமாகத் தொடங்கிவிட்டது. ஆனால் ஸ்ரீ ராம்தாஸ் குலாரீயின் உடல் நலம் கெட்டுவிட்டது. இனி அவர் அங்குத் தங்கியிருப்பது கடினமாகிவிட்டது. நல்ல வேளையாகச் சரியாக அதே சமயத்தில், வெளிநாட்டில் பொறியியலில் (இஞ்சிநீயரிங்கில்) உயர்ந்த பரீக்ஷை தேறிவிட்டு ஸ்ரீ ராம்ஜீ பிரசாத் வர்மா திரும்பி வந்துவிட்டார். அவர் இளமையிலிருந்தே காங்கிரஸில் சேர்ந்திருந்தார். 1930இல் சிறைக்குச் சென்றுர். அங்குப் பிரம்படியும் பட்டார். படிப்பில் சூட்டிகையானவர். அதனால், அவர் முன்பு படித்துக்கொண்டிருந்த பொறியியல் கல்லூரியின் முதல்வர் அவரை மீண்டும் சேர்த்துக்

கொண்டார். அங்கிருந்து இறுதிப் பரீக்ஷையில் சிறப்பாகத் தேறி பொறியியல் கலைஞனுனர். சில நாட்கள் இங்கும் அங்கும் வேலை புரிந்து சிறிது பணம் சம்பாதித்துக்கொண்டு மேற்படிப் புக்காக இங்கிலாந்துக்குப் போக வேண்டுமென்ற எண்ணம் அவ ருக்கு உண்டாயிற்று. அங்குச் சென்று மிகவும் சிறப்புடன் பெரும் பெரும் பரீக்ஷைகளில் தேறினர். அவர் அங்கிருந்து புறப்படும் சமயத்தில் சண்டை ஆரம்பமாகிவிட்டது. ஆயினும் எப்படியோ அவர் இந்தியாவுக்கு வந்து சேர்ந்துவிட்டார். வந்த துமே ராம்கரின் தலைமை பொறியியலாளர் வேலையை ஏற்றுக் கொண்டார். வசிப்பதற்குக் குடிசைகள், அம்பல சபைக்காகப் பந்தல், விஷய ஆலோசனை குழுவுக்காகவும் தனிப் பந்தல் ஆகிய வற்றை அமைப்பது மட்டுமன்றி கண்காட்சிக்காகவும் குடிசை களை அமைக்க வேண்டும். தண்ணீருக்கு ஏற்பாடு செய்யவேண் டும். விளக்குகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒவ்வொன் றின் பொறுப்பும் எவராவது ஒருவரிடமும் ஒப்படைக்கப்பட்டது. ஆயினும் கட்டட வேலை முழுவதும் பொறியியல் இலாகாவிடம் தானிருந்தது. குறிப்பிட்ட காலத்திற்குள் வேலை நன்ருக முடிக் கப்பட்டு விட்டது.

நாங்கள் காங்கிரஸுக்காக தேர்ந்தெடுத்த இடத்தில் ஒறிரண்டு சிறிய கிணறுகள் இருந்தன. ஆயினும் காங்கிரஸுக் காக வருபவர்களில் நூற்றுக்கொரு பங்குக்குக்கூட வேண்டிய தண்ணீர் முழுவதையும் அளிக்கத் தகுதியற்றனவாக அவை இருந் தன. அந்த இடம் தாமோதர் ஆற்றங்கரையில் இருந்தது. வெள்ளம் வந்தால் அந்நதி பயங்கரமான உருக்கொண்டு பீகாரி லிருந்து சென்று வங்காளத்தில், முக்கியமாக பர்த்வான் ஜில்லா வில், பெரும் விபத்துக்கும் துன்பத்திற்கும் காரணமாகும். அந்த தாமோதர் அந்நாட்களில் பெரும்பாலும் வரண்டு கிடந் தது. ராம்கரில் குளிர் காலத்திலும், வெயில் காலத்திலும் அது ஒரு மெல்லிய ஓடை மூலமாகவே 'நான் இருக்கிறேன்' என் பதைக் காட்டிக்கொண்டு நிற்கும். அதை ஓர் ஆள் தன் வேஷ்டி நனையாமல் எளிதில் கடந்து செல்ல முடியும். ஆயினும் மேல் ஓட்டம் கொடி போலவும் ஆழமில்லாததாகவும் இருந்தாலும், மணலுக்குக் கீழே தண்ணீர் நிறைய இருந்தது. தண்ணீரை எடுப்பதற்கும், தேக்கி வைப்பதற்கும் ஏற்பாடு செய்ய இயலுமா னுல், அந்த ஊற்று இடையருது நீர் சுரக்கும். இதனுல் ஆற்றி லிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்ள ஏற்பாடு செய்வதாக நிச்ச யிக்கப்பட்டது. கிணறுகளிலிருந்தும் ஏற்பாடு செய்திருக்கலாம்.

ஆனல் கற்பாறை நிலமாக இருந்ததால் அங்கே எங்குக் கிணறை வெட்டுவதென்பதையும் அப்படி வெட்டினுலும் அதிலிருந்து நிறையத் தண்ணீர் கிடைக்குமா வென்பதையும் நிச்சயிப்பது கடினமாயிருந்தது. ஆற்றில் கிணறு வெட்டுவது எளிது. மிக வும் கிட்டவே தண்ணீர் கிடைத்துவிடும். இதனுல் ஆற்றிலேயே கிணற்றை வெட்டிக் குழாய் போடப்பட்டது. தண்ணீரைச் சுத் தம் செய்வதற்காகப் பெரிய தொட்டிகள் கெட்டிக் கட்டடமாகக் கட்டப்பட்டன. அவற்றில், ஒரே சமயத்தில், ஒரு லக்ஷம் ஆட் களுக்கு இரண்டு மூன்று நாட்களுக்கு வேண்டிய தண்ணீரைச் சேகரித்து வைத்துக் கொள்ளலாம். நகரமெங்கும் குழாய்கள் போட்டுத் தண்ணீரைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த ஏற்பாட்டைச் செய்வதற்குக் கயா முனிசிபால்டி, பாகல்பூர் முனிசிபால்டி ஆகிய இரண்டின் நீர்க் குழாய் அமைப்பதில் நிபுணர்களான பொறியியலாளர்கள் மிகவும் பாடுபட்டு உழைத்தார்கள். தண்ணீருக்கு ஏற்பாடாகி விட்டது. அதில் ஒரு குறைபாடுதானிருந்தது. கிணறு ஆற்றின் நடுவில் இருந்தது. ஆற்றில் திடீரென்று வெள்ளம் வந்து விட்டால் கிண றும் குழாயும் இரண்டுமே பயனற்றவாகி விடக்கூடும். ஆனல் மார்ச்சு மாதத்தில் தாமோதரில் வெள்ளம் வந்து விடும்படியாக மழை பெய்யுமென்று யாருக்குத் தெரியும்?

தண்ணீர்த் தேவையைக் கருதியும், மேலும் அழகை அதி கரிப்பதற்காகவும் நாங்கள் மற்ருெரு ஏற்பாட்டையும் செய்தோம். ஹரஹரீ என்ற சிறிய ஆறு ஒன்று காங்கிரஸ் நகர் நிறுவப்பட் டிருந்த இடத்திற்குப் பக்கமாகச் சென்று தாமோதரில் கலக் கிறது. அந்த ஆற்றை நாங்கள் கெட்டிக் கட்டட அணைபோட்டு அடைத்து விட்டோம். அதனுல் நன்ருக நீந்துவதற்குத் தகுதி யான ஆழமான நீர்த்தேக்கம் ஒரு பக்கத்தில் உண்டாகிவிட்டது. மற்ருெரு பக்கத்தில் அணைக்கட்டுக்கு மேல் வழிந்து விழுந்த நீர், சிறியதொரு நீர்வீழ்ச்சி போல அழகுடன் விளங்கியதோடு, குளிப்பவர்களுக்கு ஒரு புதுமையாகவும் அமைந்து விட்டது.

கிராமத்தில் நடைபெறும் காங்கிரஸில், கூடுமான வரையில் கிராமத்தின் பொருள்களையே உபயோகிக்க வேண்டுமென்ற நோக்கம் இருந்ததுதான். ஆயினும் அப்படிச் செய்ய முடிய வில்லை. இக்கட்டுப்பாடு முதன் முதலாக நீர் குழாய் அமைப்ப தினுல் மீறப்பட்டது. இப்பொழுது விளக்குப் போடவேண்டும். இதற்காக, ஒன்று மின்சாரத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும் அல்லது மண்ணெண்ணெய் விளக்குகளைப் போடவேண்டும்.

இரண்டிலும் ஒன்றுவது நாட்டுப்புறத்துப் பொருள் அன்று. எண்ணெய்த் தீவட்டிகள், சூலங்கள், பந்தங்கள் ஆகியவற்றைக் கொண்டு காரியத்தை நடத்துவது கடினம் எனப் புலப்பட்டது. ஏதாவது இவ்விதமான ஏற்பாட்டையே செய்ய வேண்டுமென நாங்கள் கூடிய வரையில் முயற்சி செய்தோம், ஆனால் இயல வில்லை. மின்சாரத்தின் காலிலேயே விழவேண்டி வந்தது. இதற்கு எதிர்பாராமலும் தற்செயலாகவும் ஒரு வசதியும் கிடைத்து விட்டது. கயா பஞ்சாலையின் முதலாளிகள் அதே சமயத்தில் புதிய மின்சார இயந்திரமும் டைனமோவும் தருவித் திருந்தார்கள். அவர்கள் அந்தச் சாமான்கள் எல்லாவற்றையும் மூடியது மூடியபடியே, ரயில் வண்டியில் வந்தபடியே, கயாவில் பெட்டிகளைத் திறக்காமல், தம்முடைய பொறியியலாளர்களோடு நேரே ராம்கர்க்கு அனுப்பிவிட்டார்கள். வேலை எளிதாகி விட்டது. மின்சாரம் போட்டாயிற்று.

கண்காட்சியின் வேலை மிகவும் கடினம். ஏனெனில் அதற்கு நிறையச் சாமான்களைச் சேகரிக்க வேண்டும். சர்க்கா சங்கத் தின் அமைச்சர் ஸ்ரீ லக்ஷ்மீநாராயண் அதன் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அவர் அகில பாரதீயச் சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவற்றின் உதவியைக் கொண்டு சிறப் பாக ஏற்பாடு செய்துவிட்டார். தம் கோட்பாட்டைக் கடைப் பிடித்து, அவர் கண்காட்சியின் எல்லைக்குள் மின்சாரத்தை வர விடவில்லை. ஏனெனில் அக்கண்காட்சியானது கிராமக் கைத் தொழிலை மட்டுமே நம்பியிருந்தது.

காங்கிரஸுக்கு வரும் பிரதிநிதிகளுக்காக பீகாரின் சரித் திரத்தை ஹிந்தியில் தயார் செய்ய வேண்டுமென சில நண்பர்கள் எண்ணினார்கள். எனக்கும் இது பிடித்திருந்தது. திரிபுரா விலும் ஒரு விதமான சரித்திரம் தயார் செய்யப்பட்டது. பீகா ரின் சரித்திரம் மிகவும் பெருமை வாய்ந்தது. அந்த வேலை ஸ்ரீ ஜயசந்திர வித்தியாலங்காரின் பொறுப்பில் விடப்பட்டது. அதை அச்சிடும் பொறுப்பை லகேரியா சராயைச் சேர்ந்த ஸ்ரீ ராமலோசன் சரண் பீகாரி ஏற்றுக்கொண்டார். சரித்திர வரலாறு அச்சிடப்பட்டுத் தயாராகி விட்டது.

பீகாரில் முன்னுக்கு வரக்கூடிய ஓவியர்கள் சிலர் பயிற்சி பெற்று வந்தார்கள். பீகாரின் வரலாற்றின் பெருமை வாய்ந்த சம்பவங்கள் சிலவற்றை ஓவியங்கள் மூலமாக வரைந்து காட்ட வேண்டுமென்று சிலர் விரும்பினார்கள். நானும் அப்படியே அபிப்பிராயப்பட்டேன். இந்த வேலைக்கு வயது முதிர்ந்த

கைத்தேர்ச்சி பெற்ற கலைஞர், பாபூ ஈச்வரீ பிரசாத் வர்மா தலைமை தாங்கும் நற்பேறு எங்களுக்குக் கிட்டியது. அவர் கல்கத்தா கலைப் பள்ளியின் (ஆர்ட்ஸ் ஸ்கூல்) துணை முதல்வராக இருந்தவர். இப்போது அவர் உபகாரச் சம்பளம் பெற்றுத் தம் பிறப்பிடமாகிய பட்னாவில் வசித்து வந்தார். அவரால் சில அழகிய முதல் ஓவியங்கள் (சொந்த கற்பனைப் படங்கள்)[1] தீட்டப் பட்டுக் காட்சியில் வைக்கப்பட்டன. அவற்றின் பிரதிகள் புத்தக வடிவமாக வெளியிடப்பட்டன. அதில் அடங்கிய படக் காட்சிக ளுக்கு வரலாறு சம்பந்தமான விவரங்களும் கொடுக்கப்பட்டன. இப்புத்தகம் மக்களுக்குப் பிடித்திருந்தது. அதன் துணையைக் கொண்டு மக்கள் படங்களை மிக்க ஆர்வத்துடன் கண்டு மகிழ்ந் தார்கள்.

காங்கிரஸின் ஏற்பாடுகள் எப்போதும் நடைபெறுவது போலவே, பேரளவில் செய்யப்பட்டிருந்தன. மௌலானா அபுல் கலாம் ஆஜாத் பெரும்பாலும் ஒருமனமாகத் தேர்ந்தெடுக் கப்பட்டார். ஸ்ரீ மான வேந்திர ராயும் (எம். என். ராய்) அபே க்ஷகராக இருந்ததினால் 'பெரும்பாலும்' என்று கூறினேன். ஆயினும் அவருக்குச் சில வாக்குகளே கிடைத்தன. பெரும் பான்மை மௌலானா சார்பில்தானிருந்தது.

காங்கிரஸ் விழாவுக்குச் சிறிது முன்னமே பட்னாவில் செய லாற்றுக் குழுவின் இருக்கை வழக்கம்போல நடத்தப்பட்டது. இக்கூட்டத்திற்குப் பிறகுதான் நான் ராம்கர்க்குப் புறப்பட்டேன். என்னை மக்கள் வரவேற்புக் குழுவுக்கு தலைவனாகத் தேர்ந்தெடுத் திருந்தார்கள். வழியில் நாலந்தாவில் இறங்கினேன். அங்குத் தோண்டி எடுக்கப்பட்டிருந்த கட்டடங்களையும் அரும்பொருள் காட்சி சாலையில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த பொருள்களையும் பார்ப்பதற்கு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. அவற்றைக் கண்டு எனக்கு வியப்பு உண்டானது மட்டுமன்றி, பீகாரின் முன் காலச் சிறப்பினிடமிருந்த மரியாதையும் பெருகிற்று. நாலந்தா விலிருந்து சிறிது தொலைவு மேற்சென்று, சிறிது இளைப்பாறுவதற் காகவும் மேலும் வரவேற்பு சொற்பொழிவை எழுதுவதற்காகவும் ரஜோலி முசாபரி பங்களாவில் இரண்டு நாட்கள் தங்கியிருந் தேன். அந்த இடம் என்னுடைய இயல்புக்கு ஏற்றதாக வாய்த் தது. அண்மையிலிருந்த காடும் மலையும் அந்த இடத்தின் அழகை மேம்படுத்தின. எங்களுடைய நண்பரும், பழமையான

---

1. முதல் நூல் என்பதுபோல 'முதல் ஓவியம்' எனக் கூறலாம்.

காங்கிரஸ்காரரான ஸ்ரீ கௌரீ சங்கர சரண் சின்ஹாவின் வீடு அக்கிராமத்தில்தானிருக்கிறது. இதனால் யாதொரு அச்சமும், கவலையுமில்லாமல் அங்கே தன்னந் தனியாக இருந்து கொண்டு சொற்பொழிவை எழுத வசதியாயிருந்தது. என் சொற்பொழிவில், பீகாரின் சரித்திரத்தையே சிறிதளவு அரிமா நோக்குச் செய்தேன். தற்காலக் கேள்விகளையும் சிக்கல்களையும் தீர்க்கவோ அல்லது அவற்றைப் பற்றி என் அபிப்பிராயத்தை வெளியிடவோ நான் வேண்டுமென்றே முயற்சி செய்யவில்லை.

ராம்கர்க்குப் போய்ச் சேர்ந்ததும், ஏற்பாடுகளில் விட்டுப் போனவற்றை முடிப்பதிலேயே இராப்பகலாக ஈடுபட்டிருந்தேன். மகாத்மாஜீ முன்கூட்டியே வந்துவிட்டார். அவர் கண்காட்சியைத் திறந்து வைக்க வேண்டியிருந்தது. இதனால் அவர் சற்று முன்னமே வந்துவிட்டார். அவர் வருவதற்கு ஒரு நாள் முன்பு பெரு மழை பெய்தது. புயல் காற்றும் அடித்தது. கண்காட்சி வேலைக்குச் சிறிது இடைஞ்சல் உண்டாயிற்று. ஆயினும் காரியத்தைச் சமாளித்துவிட்டோம். மகாத்மாஜீ குறிப்பிட்ட நேரத்தில் திறப்பு விழாவை நடத்தினர். இனி, அந்த மழைக்குப் பின் வானம் தெளிவாக இருக்குமென்றும், பெய்ய வேண்டிய மழை பெய்துவிட்டது என்றும் நம்பிக்கை கொண்டிருந்தோம். ஆனால் நடக்கப்போவது வேறாக இருந்தது.

ஹர் ஹரி, தாமோதர் ஆறுகளின் கரையில் தலைவர்களுக்காகக் குடிசைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்றில் மகாத்மாஜீயையும் மற்றொன்றில் தலைவரையும், மற்ற வெவ்வேறு குடிசைகளில் மற்ற மற்றவர்களையும் தங்க வைப்பதாகத் திட்டம் போட்டிருந்தோம். குடிசைகளின் அமைப்பு நன்றாகவும் அழகாகவும் இருந்தன. மூங்கில் பாயால் சுவர், நாணலால் கூரை, சால் மரத்தால் தூண்கள். அவை குடியிருப்பதற்காயினும் சரி, கண்காட்சிக்காயினும்சரி அல்லது குழு கூடுவதற்காயினும் சரி, எல்லாக் குடிசைகளும் இவ்வண்ணமாகவே அமைக்கப்பட்டிருந்தன. இரு வரிசைகளுக்கு இடையில் நல்ல அகலமான தெரு போடப்பட்டிருந்தது. இடையிடையே தேவைப்பட்டபடி சந்துகளும் விடப்பட்டிருந்தன. அந்த இடம் பட்னா—ராஞ்சி சாலையின் மீதிருந்தது. அச்சாலையில் தாமோதர் நதியின் மீது ஒரு பெரிய பாலம் கட்டப்பட்டிருக்கிறது. பாலத்திலிருந்தும் சாலையிலிருந்தும் நகரத்தின் தோற்றம் மிகவும் அழகாக இருந்தது. சாலையில் எப்பொழுதும் நடமாட்டமிருந்து வந்தது. இச்சமயத்தில் அது மேலும் அதிகமாகிவிட்டது.

அங்கு இரண்டு ரயில்வே நிலையங்கள் இருக்கின்றன. ராம்கர் என்ற பெயர் கொண்ட பி. என். டபிள்யூ. ஸ்டேஷன் ஒன்று நகருக்குத் தெற்கே அரை கல் தொலைவில் இருந்தது. மற்றொரு ஸ்டேஷன் இ. ஐ. ஆரின் ராஞ்சீரோடு. அது அங்கிருந்து சுமார் நான்கு கல் தொலைவில் வடக்கே இருந்தது. இரண்டு ரயில்வேக்களின் அதிகாரிகளும் பெருங்கூட்டத்தை எதிர்பார்த்து அதன் வசதிக்காக நிறைய ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். மகாத்மாஜீ ராம்கர் ஸ்டேஷனில் இறங்கினார். தலைவர் ராஞ்சீ ரோடு ஸ்டேஷனில் இறங்கினார். பெரிய ஊர்வலத்துடன் தலைவர் காங்கிரஸ் நகருக்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டார். திரு வெய்திய மஜஹர் உல் ஹக் சாஹபின் பெயர் நகரத்துக்கு வைக்கப்பட்டது. திருவெய்திய தீப் நாராயண் சின்ஹாவின் நினைவாக ஒரு தனிச் சிறந்த வாயிலுக்குப் பெயர் வைக்கப் பட்டது.

அகில பாரதீயக் குழுவின் கூட்டமும் விஷய ஆலோசனைக் குழுவின் கூட்டமும் இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னதாகவே தொடங்கிவிட்டன. அவை தம் வேலையை காங்கிரஸின் பேரவையின் தேதிக்குள்ளாகவே பெரும்பாலும் முடித்து விட்டன. ஜனத்திரள் அங்குக் கூடிவிட்டது. பந்தல் மிகவும் அழகாக அமைக்கப்பட்டிருந்தது. அதை இயற்கையே அழகு படுத்தியது. இடத்தைத் தேர்ந்தெடுத்துத் தரையைச் சமமாக்கி, தலைவர்களுக்கு மேடையைப் போட்டு, விளக்குகளை அமைத்து, நாற்புறமும் அடைப்புப் போடுவதுதாம் எங்கள் வேலை. பந்தலுக்கு அருகிலேயே அடர்த்தியான காடு இருபுறமும் இருந்தது. காடு மலை மேலிருந்தது. இதனால் காங்கிரஸ் பந்தலிலிருந்து கண்ணுக்கு எட்டிய வரையில் அழகாக எழும்பி நிற்கும் இரண்டு காடுகளும் மலைகளும் காணப்பட்டன. மற்றொரு பக்கத்தில் காங்கிரஸ் பிரதிநிதிகள் வசிக்கும் இடம் முதலியன தொலைவு வரையில் பரவிக்கிடந்தன. இரவில் அவை விளக்கு வெளிச்சத்தால் பிரகாசித்தன. தலைவரின் மேடை மற்றெல்லா இடங்களை விடத் தாழ்வான இடத்தில் இருந்தது. பிரதிநிதிகளும் காங்கிரஸைப் பார்க்க வந்தவர்களும் உட்காரும் இடம் இயற்கையாகவே கொலுப்படிக்கட்டு (காலரி) போல அமைந்திருந்தது. பார்க்க வந்தவர் ஒருவர் எவ்வளவு தொலைவிலிருந்தாலும் அவர் மேடையின்மீது வீற்றிருக்கும் தலைவரையும் மற்றத் தலைவர்களையும் நன்றாகப் பார்க்க முடியும்.

காங்கிரஸ் விழாவின் நாள் வந்தது. பார்க்க வந்தவர்களுக்

காக விதிக்கப்பட்ட சீட்டு கிடு கிடுவென்று விற்றுக் கொண்டிருந்தது. ஒரு மணிக்கு ஆறு ஏழாயிரம் வீதம் அல்லது அதைவிட அதிமாக வரும்படி வந்து கொண்டிருந்தது. சபை மாலை 5 அல்லது 6 மணியிலிருந்து நடைபெற இருந்தது. நான் தலை வரை அழைத்துவரப் போய்விட்டேன். பந்தலின் வெளிச் சுற்றெல்லைக்குள் நிழலுக்காகச் சிறிது தொலைவில் ஒரு கொட்டகை போடப்பட்டிருந்தது. அங்கிருந்து முக்கியத் தலைவர்களை சபாபதியுடன் ஊர்வலம் அழைத்து வர ஏற்பாடாயிருந்தது. சிலர் அங்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். சிலர் வந்து கொண்டிருந்தார்கள். இதற்குள் திடீரென்று வானத்தின் ஒரு மூலையிலிருந்து மேகம் கிளம்பி வந்து மழை பொழியத் தொடங்கி விட்டது. சபாபதி அந்தக் கொட்டகை வரையில் வந்து விட்டார்; ஆயினும் ஊர்வலம் இன்னும் புறப்படவில்லை. மழை தொடர்ந்து பெய்தது. சில நிமிஷங்களுக்குள் சரமாரியாகப் பலத்த மழை பொழிய ஆரம்பித்துவிட்டது. அதனால் அத்தாழ்வான இடம் தண்ணீரால் நிறைந்துவிட்டது. பார்க்கவந்தவர்கள், பிரதிநிதிகள் எல்லாரும், இனி மழை நின்றுவிடும், சபை நடக்கும் என்ற நம்பிக்கையில் தத்தம் இடத்தில் நனைந்து கொண்டே உட்கார்ந்திருந்தார்கள். ஆனால் அப்படி ஆகவில்லை. மழையின் கடுமை வலுத்துக் கொண்டே சென்றது. கடைசியில் மேடைக்கு அருகிலிருந்த தாழ்வான நிலத்தில் எவரும் நிற்பது கூட கடினமாகிவிட்டது. அவ்விடத்தில் தண்ணீர் அவ்வளவு நிறைந்துவிட்டது. ஒலிபெருக்கிக்குத் தேவையான ஏற்பாடுகளெல்லாம் அந்த இடத்தில்தான் செய்யப்பட்டிருந்தன. அது முற்றிலும் பயனற்றுவிட்டது. கடைசியில் அந்த மழையிலேயே தலைவர் மேடைக்குச் சென்றார். நானும் கூடச் சென்றேன். நான் ஓரிரண்டு வார்த்தைகளில் நல்வரவு கூறி முடித்தேன். சொற்பொழிவைப் படிப்பதற்கு வாய்ப்பு மில்லை, அதை யாரும் கேட்கவும் முடியாது. தலைவரும் ஓரிரண்டு வார்த்தைகள் கூறிவிட்டு, அன்றையக் கூட்டத்தை முடித்துவிட்டார். மாதக் கணக்காக இராப்பகலாக உழைத்து இந்த நல்ல நாளுக்காக ஏற்பாடுகளைச் செய்தவர்கள் மிக்க ஏமாற்றமடைந்தார்கள். ஆனால் என்ன செய்வது. பிரதிநிதிகள் தங்கும் இடத்தின் நிலைமை என்னவென்று இப்போது பார்க்க வேண்டியிருந்தது. குடிசைகள் இந்தச் சரமாரி மழையையும் தாங்கிக் கொண்டன வென்பது திருப்தியளித்தது. இரவு முழுவதும் மழை பெய்து கொண்டிருந்தாலும் பிரதிநிதிகள் அவற்றிற்குள்ளேயே தூங்க

முடிந்தது. அவர்களுக்குக் கஷ்டம்தான், ஆயினும் எல்லாரும் எங்களுடன் அனுதாபப் பட்டார்கள். யாரும் இதனுலாவது அல்லது எங்களுடைய ஏற்பாடுகளின் குற்றங் குறைகளினுலாவது கோபித்துக் கொள்ளவில்லை.

அடுத்த நாள் மழை பெய்யவில்லை. ஆயினும் சிறிது தூறிக் கொண்டிருந்தது. கொடியேற்றத்திற்காக திறந்த வெளியில் சிமெண்டினுல் கெட்டியான தூண் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதன் உச்சியில் அசோகத் தூணிலிருப்பதுபோலச் சிங்கங் களின் உருவம் அமைக்கப்பட்டிருந்தது. அதே தூணின் நாலா பக்கத்திலும் மக்கள் கூடிவிட்டார்கள். காங்கிரஸின் சபை அங் கேயே நடத்தப்பட்டது. பந்தலில் தண்ணீர் நிறைந்துவிட்ட தால் அங்கு உட்காரவோ நிற்கவோ இயலவில்லை. இந்தத் திறந்த வெளியில் தூணைச் சுற்றியிருந்த மேடையின்மீது தலைவரும் மகாத்மாஜீயும் இன்னும் மற்ற முக்கிய தலைவர்களும் உட்கார்ந் திருந்தார்கள். மற்றவர்களெல்லாம் நாற்புறமும் தரைமேல் உட் கார்ந்து கொண்டார்கள். விஷய ஆலோசனைக் குழு கொண்டு வந்த தீர்மானம் முறைப்படி சமர்ப்பிக்கப்பட்டது. முழுக்க வாதம் செய்யப்பட்டபின் அது அங்கீகரிக்கப்பட்டது. முறை யான விழாவில் நடப்பனவெல்லாம் இங்கும் நடைபெற்றன. ஆனுல் சிறிய அளவில் நடத்தப்பட்டன. ஏனெனில் மறுபடியும் மழை பொழியத் தொடங்கிவிடுமோ வென்ற அச்சம் இருந்து வந்தது. மகாத்மாஜீயும் பேசினுர். முடிவில் நான் எல்லாரிடமும், அவர்களுக்கு நேர்ந்த அசௌகரியங்களுக்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, எல்லாரையும் தத்தம் ஊர்களுக்குத் திரும்பிச் சென்று விடும்படி கேட்டுக்கொண்டேன். ஏனெனில் ஆற்றில் தண்ணீர் வந்துவிட்டதால் எங்களுடைய நீர்க்குழாய் ஏற்பாடு பாழடைந்துவிட்டது. மக்கள் இப்போது ஆற்றின் கலங்கல் நீரைத்தான் நம்பியிருக்க வேண்டும். எங்களுடைய நீர்த்தேக் கத்தில் 24 மணித் தேவைக்கு மேலாக நீர் இல்லை; மக்கள் என் வார்த்தையை ஏற்றுக் கொண்டார்கள். விழா முடிவடைந்ததுமே மக்கள் இங்கும் அங்கும் பிரயாணப்படத் தொடங்கினுர்கள். அதேநாள் இரவு வண்டியில் சபாபதியும் மற்ற முக்கிய தலைவர் களும் ஆங்காங்குச் சென்று விட்டார்கள்.

ராம்கர் காங்கிரஸ் செய்த தீர்மானம் மிகவும் பெருமை வாய்ந் தது. சண்டையின் ஆரம்பத்தில் செயலாற்றுக் குழுவும் அகில பாரதீயக் குழுவும் எந்தக் கொள்கையைக் காங்கிரஸின் சார்பில் மேற்கொண்டனவோ அதையே காங்கிரஸும் ஆதரித்தது.

கூடவே, எதிர்கால சுயராஜ்யத்திற்காக நாம் ஏதாவது செய்ய வேண்டுமென்பதையும் அதற்காக இப்போதிருந்தே ஆக்கவேலைத் திட்டத்தை மும்முரமாக நடத்தி மக்களைத் தயார் செய்ய வேண்டு மென்பதையும் தெள்ளத் தெளிவாக்கிவிட்டது.

ராம்கர் காங்கிரஸ் நடந்த சமயத்தில் ராம்கரிலேயே மற்றொரு சபையும் கூடியது. அதன் பெயர் 'உடன்படிக்கைக்கு விரோத மகாநாடு' (Anti-Compromise Conference). அதில் ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ்தாம் முக்கியமானவர். இந்த மாகாணத்தில் அதற்கு ஏற்பாடு செய்தவர்களில் ஸ்ரீ சுவாமி சஹஜானந்த சரஸ் வதியும் ஸ்ரீ தனராஜ் சர்மாவும் முக்கியமானவர்கள். சுபாஷ் பாபூவுடன் கருத்து மாறுபாடு உண்டாகிவிட்டதும் அவர் மற்றொரு புதிய கட்சியை நிறுவினர். அதைப் பற்றி முன்னமே குறிப்பிட்டாயிற்று. அவர்கள், காங்கிரஸின் செயலாற்றுக் குழு வானது பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் உடன்படிக்கை செய்து கொள்ள முனைந்து நிற்கிறதென்றும், அது நாட்டிற்குக் கேடு விளைவித்துக்கூட உடன்படிக்கை செய்துகொண்டு விடுமென்றும் கூறி அதற்கு விரோதமாகப் பிரசாரம் செய்து வந்தார்கள். இக் கட்சியில் பல வகையான பேர்கள் சேர்ந்திருந்தார்கள். அவர் களுள் சுபாஷ் பாபூவின் எண்ணங்களோடும் கொள்கையோடும் யாதொரு சம்பந்தமும் இல்லாதவர்களும் இருந்தார்கள். ஆயி னும் அவர்கள் செயலாற்றுக் குழுவின்மீது கோபம் கொண்டிருந் ததால் இந்த நல்ல சந்தர்ப்பத்தைக் கண்டு அதை எதிர்ப்பதில் ஈடுபட்டு விட்டார்கள். காங்கிரஸானது உடன்படிக்கைக்கு அஞ் சவுமில்லை. அதற்காக நாட்டுக்குத் தீமையைப் புரிய விரும்பவு மில்லை. அதன்மீது ஏதாவது பற்றுதல் இருந்தால், அது நாட் டின் நன்மையைக் கருதியேதான் இருந்தது. அந்த மகாநாடும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதற்கும் காங்கிரஸ் விழாவுக்கும் இதுதான் வேற்றுமை. அதாவது காங்கிரஸுக்கு முன் அது நடைபெற்றதால் மழை ஆரம்பமாவதற்கு முன்னமே அது முடிந்துவிட்டது என்பதுதான்.

# 138. பீகாரின் மூன்று சிறப்பு வாய்ந்த கமிட்டிகள்

ராம்கரில் செய்த முடிவுபடி நாங்கள் ஆக்க வேலையை வலிமைப்படுத்த வேண்டியது அவசியமாயிற்று. இதனால் அங்கு வேலை முடிந்ததுமே எங்கள் மாகாணத்தில் இதற்கு ஏற்பாடுசெய்ய வேண்டுமென நினைத்தோம். மகாத்மாஜீ இட்ட கட்டளைப்படி எங்களுடைய தொண்டர்கள் எல்லாரும் சர்க்கா சுற்றுவது முதலியன கற்றுக்கொள்ள வேண்டும். கூட்டுறவு வாழ்க்கை நடத்தவும் பாடம் கற்கவேண்டும். இதனால், ஒரு (கல்விப்) பயிற்சி விடுதியை அமைத்து அதில் மாகாண மெங்குமிருந்து முக்கியமானவர்கள் வந்து குறைந்தது ஒரு வாரமாவது தங்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நிச்சயித்தோம். சர்க்கா சுற்றுவது முதலியன நன்றாகத் தெரியாதவர்களுக்கு அங்கு அவற்றில் பயிற்சி கிடைக்கவேண்டும். மேலும், எல்லோரும் நாள்தோறும் நன்றாகச் சிந்தனை செய்து ஆராய்ந்து தத்தம் கருத்தை தெளிவாக்கி உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். அதோடு பொது விடுதி வாழ்க்கையிலிருந்து ஒற்றுமைக்கும் சமத்துவத்துக்கும் கிடைக்கும்படியான படிப்பினையையும் பெறவேண்டும். இந் நோக்கங்களுடன் இவ்விடுதியை அமைக்க முடிவு செய்தோம். இதற்காக நாங்கள் சோன்பூரில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தோம். அங்கு விடுதியைத் தொடங்குவதற்கு நாளையும் நிச்சயித்து விட்டோம். அங்குள்ளவர்களுக்கு இதனால் திருப்தி உண்டாயிற்று. ஏனெனில் காங்கிரஸுக்கு முன்னிருந்தே அங்கேயே காங்கிரஸ் விழா நடைபெறுமென்று எதிர்பார்த்தார்கள். ஆனால் அது நடக்கவில்லை. ஆயினும் இந்த விடுதி அங்கே அமைக்கப் பட்டதால் அவர்களுக்குச் சிறிது திருப்தி உண்டாயிற்று.

முடியுமோ முடியாதோ, எப்படியாவது ஏதாவது செய்தே ஆகவேண்டுமென்பதை நான் உணர்ந்தேன். இதனால் என் கையிலிருந்த வேலைகளை விரைவில் முடித்துவிட்டு விடுதலை பெறுவது அவசியமென்பதை உணர்ந்தேன். காங்கிரஸ் மந்திரி சபையானது மூன்று பெரிய வேலைகளில் என்னைப் பூட்டிவிட்டது. பீகார்-தொழிலாளர் விசாரணைக் குழுவை நியமித்து அதன் பொறுப்பில் பீகாரின் தொழிலாளர்களின் நிலைமையைப் பற்றி விசாரணை செய்யும் வேலையும் அது சம்பந்தமாக சிபாரிசுகளைச்

செய்யும் வேலையும் ஒப்படைக்கப்பட்டிருந்தன. கல்வி மந்திரி டாக்டர் மகமூது மிகவும் வற்புறுத்தினதின் பேரில் பட்ன பல்கலைக் கழகத்தின் செனேட்டில் மீண்டும் அங்கத்தினன் ஆக வேண்டி வந்தது. 1930ஆம் ஆண்டு நவம்பரிலிருந்தே அதை விட்டுப் பிரிந்துவிட்டேன். இதைப்பற்றி முன்னமே கூறியிருக்கிறேன். செனேட்டில் கல்வி சீர்திருத்தச் சம்பந்தமான தீர்மானத்தை சமர்ப்பிக்கும்போது நடைமுறையில் இருந்து வந்த கல்வி முறையை நான் கடுமையாகக் கண்டனம் செய்து, இம்மாகாணத்தில், முக்கியமாகக் கல்வியில், நாம் எல்லா விதத்திலும் பிற்பட்டிருக்கிறோம் என்பதை எடுத்துரைத்தேன். சில வக்கீல்கள், குமாஸ்தா வேலை புரிபவர்கள், டாக்டர்கள் நீங்கலாக வேறு எவ்விதமானவர்களையும் நாம் தயார் செய்யவில்லை. ஏதாவதொரு விஷயத்தைப்பற்றி ஏதாவது புதிய ஆராய்ச்சியைச் செய்து நம்முடைய புத்தி கூர்மையைக் காட்டவில்லை. விவசாயத்தை முதன்மையாகக் கொண்ட மாகாணமாயிருந்தும்கூட இங்குத் தாவரக் கலைப் படிப்புக்கும் விவசாயத்தை ஒட்டிய கல்விக்கும் யாதொரு முக்கியமாவது, ஏற்பாடாவது கிடையாது. சுரங்கத்திலிருந்து எடுக்கப்படும் பொருள்களில் (உலோகங்களுக்கு) இந்தியாவில் மற்றெல்லா மாகாணங்களைவிடச் செல்வந்த மாகாணமாயிருந்தும்கூட இம்மாகாண மக்களுக்கு அவற்றைப் பற்றிய படிப்புக்கு யாதும் சிறப்பான வசதிகள் கிடைப்பதுமில்லை. அப்பொருள்களைக் கொண்டு லாபமடைவதற்கு யாதொரு தூண்டுதல் அளிக்கப்படுவதுமில்லை. நிற்க, தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அரசாங்கமானது ஒரு குழுவையும் அமைத்தது. அதன் விவரங்களை முன்னமே கூறியிருக்கிறேன். மூன்ருவதாக ஹிந்துஸ்தானி குழுவுக்கும் நான் தலைவனுக இருந்தேன். ஆனல் என் கையில் நிறைய வேலையிருந்ததால் அதிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டேன். மௌலான அபுல்கலாம் ஆஜாத் அதற்குத் தலைவராக நியமிக்கப்பட்டார். இதைப்பற்றியும் முன்னமே கூறியாகிவிட்டது. இம்மூன்று குழுக்களின் வேலையையும் கட்டாயமாக முடிக்க வேண்டியிருந்தது. கல்விக் குழுவில் முக்கியமானவர் பம்பாயைச் சேர்ந்த பொருளாதார நிபுணரும் கல்வியிற் சிறந்தவருமான ஸ்ரீ கே. டீ. ஷா ஆவர். அவர் மிக்க உழைப்பும் ஆழ்ந்த சிந்தனையும் உடைய பெரியார். அவர்தாம் அக்குழுவின் வேலையைச் சமாளித்தார். நானும் நிறைய உழைக்க வேண்டி வந்தாலும் அவருடைய கூட்டுறவாலும் மற்ற அங்கத்தினர்களுடைய கூட்டுறவாலும் உழைப்பு பகிர்ந்து கொள்ளப்பட்டுப்

போனதால் நான் அதை அவ்வளவு அதிகமாக உணரவில்லை. கல்விக் குழுவின் அறிக்கை மூன்று பாகங்களாகத் தயாரிக்கப் பட்டது. முதல் பாகத்தில், தொடக்கக் கல்வியைப்பற்றிச் சிபாரிசுகள் செய்யப்பட்டன. எங்களுடைய முக்கிய சிபாரிசுகள் வர்தா கல்வித் திட்டத்துடன் ஒத்திருந்தன. வர்தா திட்டத்தின் அடிப் படையின்மீதே அது அமைக்கப்பட்டதென்று கூறினால் மிகை யாகாது. அப்படி ஆவது இயல்பே. ஏனெனில் வர்தா திட்டம் காந்திஜீயின் மூளையின் சிருஷ்டியாக இருந்தாலும் தற் காலத்து முற்போக்கான கல்வி சாத்திரம் அதை ஆதரிக்கின்ற தென்பதில் யாதொரு ஐயமில்லை. கல்வி நிபுணர்களில் டாக்டர் ஜாகிர் ஹுசேனும் பேராசிரியர் சையதைனும், ஸ்ரீ கே. டீ. ஷாவும் அதன் முக்கிய கொள்கையை ஆமோதித்தார்கள். ஐரோப்பா, அமெரிக்கா, ஆசியா நாடுகளின் கல்வி நிபுணர்களும் அக்கொள் கையை ஆதரிப்பவர்களாக இருக்கும்போது, எங்கள் கல்விக் குழு வின் மற்ற அங்கத்தினர்கள் அதை ஒப்புக்கொள்ள மாட்டார் களென்பதற்கு யாதொரு காரணமுமில்லை. காந்திஜீயின் இத் திட்டம் எல்லாராலும் ஆதரிக்கப்படுகிறதென்பதை அறிந்து எனக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாயிற்று. ஒரு விஷயத்தில் மட் டும் எனக்கு அபிப்பிராய பேதமிருந்தது. இந்தியாவைப் போன்ற ஏழை நாட்டில், மாணவர்களில் கைத்திறத்தையும் கலை யையும் கொண்டு பள்ளிக்கூடங்களில் நாம் உற்பத்திச் செய்யக் கூடிய பொருளானது, அதன் விற்பனையால் வரும் வருவாயி லிருந்தே பள்ளிக்கூடத்தின் செலவை, முற்றிலும் இல்லாவிட்டா லும், பெரும்பகுதி அளவுக்கு எடுத்துவிடக் கூடுமான அளவுக்குப் போதுமானதாக இருக்கும் என்பதில்கூட நான் காந்திஜீயுடன் ஒத்துப்போனேன். மற்ற அங்கத்தினர்கள் இவ்வளவு ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. நாம் வருவாயின்மீது கண்ணுயிருப் போமானால் கலைகளிலிருந்து நம் கவனம் ஈர்க்கப்பட்டு வருவா யின்மீது நாட்டப்பட்டு விடுமென்றும், கல்வியினால் பையன் களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய லாபத்தை அளிக்க இயலாதென்றும் சிலர் நினைத்தார்கள். எது எப்படியாயினும் சரி, வருவாயை அலட்சியம் செய்ய இயலாதாயினும் அது நம்முடைய குறிக்கோள் அன்று எனவும் கைத்தொழில் கற்பது பயிற்சிக்கு மட்டுமே அன்றி வருவாய்க்காக அன்று எனவும் முடிவு செய்து இதைப்பற்றிய கருத்து மாறுபாட்டையும் அகற்றிவிட்டோம். இரண்டாவது பாகம் பள்ளிக்கூடப் படிப்புடனும் மூன்றாவது பல்கலைக் கழகத்தின் உயர்தரக் கல்வியுடனும் சம்பந்தப்பட்டிருந்

தன. மூன்று பாகங்களையும் தயார் செய்வதற்காக தனித்தனி கிளைக் குழுக்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றில் தொடக்கக் கல்வியுடனும் பல்கலைக்கழகக் கல்வியுடனும் தொடர்பு கொண்டிருந்த கிளைக் குழுக்களில் நான் அங்கத்தினனாக இருந்தேன். கிளைக் குழுக்களின் அறிக்கைகள் முழுக் குழுவின் முன் சமர்ப்பிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டபின் அரசாங்கத்திடம் அனுப்பப்பட்டன.

ஸ்ரீ ஷாவுடன் எனக்கு இதற்குமுன் அதிகப் பழக்கமில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவரை அதிகமாக அறிந்து கொள்ளும் நற்பேறு உண்டாயிற்று. அவருடைய கல்வி, கேள்வி, பாடுபட்டு உழைக்கும் தன்மை, நட்பு ஆகியவற்றினால் என் மனம் மகிழ்ச்சியடைந்தது. இவ்வண்ணமாக, டாக்டர் ஜாகிர் ஹுசைனையும், போராசிரியர் சையதையும் இந்த விஷயத்தின் மூலமாக நிறையச் சந்திக்க முடிந்தது. டாக்டர் ஜாகிர் ஹுசைனைச்சந்திப்பதற்கு வேறு வாய்ப்புக்களும் கிடைத்து வந்தன. அவர்கள் இருவரிடமும் அன்பும் மரியாதையும் உண்டாகி விட்டது. டாக்டர் சச்சிதானந்த சின்ஹாவைப் பற்றி எதுவும் கூறுவது கடினம். அவர் என் மாணக்க வாழ்க்கையின் காலத்திலிருந்தே என்னுடைய ரக்ஷகர் போல இருந்து வந்தார். அவர் என் மீது எட்பொழுதும் தம் தம்பிபோல பிரியம் வைத்து வந்தார். தம் நட்பையும் அளித்தார். அரசியல் விஷயங்களில் ஆயிரம் கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் அவருடைய நட்பு மயமான அன்பில் யாதொரு வேற்றுமையும்'வர நான் இடங்கொடுக்கவில்லை. இக்குழுவில்கூடி வேலை புரிந்ததினால் எங்கள் இருவருக்கும் இடையில் இதைவிட அதிகமாக என்ன ஆக முடியும்? இது போலவேதான் ஸ்ரீ பத்ரீநாத் வர்மாவுடனும் உறவு இருந்தது. டாக்டர் சின்ஹா தமையனார் போல இருந்தாரானால் ஸ்ரீ வர்மா ஒரு தம்பிபோல இருந்தார். அவருடன் அரசியல் விஷயங்களிலும் யாதொரு கருத்து வேறுபாடு உண்டாகவில்லை. அவருடனும் இந்த வேலையினால்தான் நெருங்கிய பழக்கம் உண்டாயிற்று என்ற பேச்சு கிடையாது. டாக்டர் அமர்நாத் ஜாவுடன் இக்குழுவில் குறைவாகத்தான் வேலையிருந்தது. குழுவின் அமைச்சர் ஸ்ரீ பவநாத் முக்கர்ஜீ எனக்கு நெடுங்காலமாக பழக்கமுள்ள கனவான். நான் முஜபர்பூரின் பூமிஹார் பிராமண கல்லூரியில் சிறிது காலம் உபாத்தியாயனாக இருந்தபோது அவர் மாணவனாக இருந்தார். நானும்கூட அவருக்கு ஏதோ பாடம் கற்பித்தேன். இப்பவும் அவர் என்னிடம் அதே மனப்பான்மையுடன் நடந்து

கொண்டு வருகிருர். அது குழுவின் வேலேயின்போது நன்ருக விளங்கியது. இந்தக் குழுவின் வேலே முடிந்துவிட்டது.

தொழிலாளர் குழுவின் வேலே இன்னும் முடியவில்லே. அதன் சம்பந்தமாக குழுவின் உறுப்பினர்கள் பெரிய பெரிய தொழிற்சாலேகளுக்கும் நிறைய தொழிலாளர்கள் வேலே செய்து கொண்டு இருந்த இடங்கள் எல்லாவற்றிற்குமே போக வேண்டியிருந்தது. இந்த மாகாணத்தில் எத்தனே நானுவிதமான, எத்தனே பரிமாணமான வேலேகளேத் தொழிலாளர்கள் செய்கிருர்கள் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால், இத்தனே வேலேகள் வேறு எந்த மாகாணத்திலும் செய்யப்படவில்லே என்பது புலப்படும். விவசாயத் தொழிலாளர்களின் விஷயம் வேறு. அவர்களுடைய விஷயங்களே இக்குழுவின் வேலேகளில் சேர்த்துக் கொள்ளவில்லே. இக்குழுவுக்குத் தொழிற்சாலேகளின் தொழிலாளர்களின் நிலேமையை மட்டும் விசாரணே செய்வதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருந்தது. ஆயினும் தொழிற்சாலேகளும் பல வகைப்பட்டனவாக இருக்கின்றன. வட பீகாரில் கரும்பிலிருந்து சர்க்கரை செய்யும் தொழிற்சாலேகள் அதிகமாக இருக்கின்றன. மற்ற விதமான தொழிற்சாலேகள் முக்கியமாக ஏதாவதொரு பட்டணத்திலோ அதற்கு அக்கம்பக்கத்திலோ இருக்கின்றன. அல்லது, தொழிலாளர்கள் பெருந்தொகையாக இருக்கும் காரணத்தால் தாமே நகரங்களே அமைத்துக் கொள்கிருர்கள். அவை தொழிற்சாலேகளுடன் கூடக் கூட வளர்ந்து மேன்மையடைகின்றன. ஏனெனில் பிறர் செய்ததைப் பார்த்தும், வசதிகள் கிடைப்பதைக் கண்டும், ஓரிடத்தில் ஒரு பெரிய தொழிற்சாலே திறக்கப்பட்டதுமே பற்பல தொழிற்சாலேகள் அதே இடத்தில் திறக்கப்படுகின்றன. ஆனுல் கரும்பு தொழிற்சாலேகள், இதற்கு நேர்மாருக தனித்தனி கிராமங்களில் இருக்கின்றன. ஏனெனில் அவை கரும்பைக் கொண்டு தொழில் புரிய வேண்டும். அதை ஒரு குறிப்பிட்ட சிறிய பகுதிக்குள் விளேவிக்க இயலாது. நெடுந் தொலேவிலிருந்தும் கொண்டுவர இயலாது. இதனுல் தொழிற்சாலேகள் மூலப் பொருள் இருக்குமிடத்திற்கே செல்ல வேண்டும்; அதாவது, மூலப் பொருள் விளேயக் கூடிய இடத்தில் தொழிற்சாலேகளே நிறுவ வேண்டிவந்தது. ஏனெனில் அதைப் பல நாள் வைத்திருக்க முடியாது, மேலும் நெடுந் தொலேவிலிருந்தும் அதைக் கொண்டு வர முடியாது. தொழிற்சாலேகளும் ஆண்டு முழுவதும் ஓடா. சுமார் 4–5 மாதங்கள் தாம் ஓடும். கிராமங்களில் தொழிற்சாலேகள் உண்டான காரணத்

தால் தொழிலாளர்களில் பெரும்பாலோர் தம் கிராமங்களிலிருந்து வந்து வேலை செய்கிறார்கள். வேலை முடிந்தவுடன் தம் வீட்டிற்குப் போய்விடுகிறார்கள். இது ஒருவிதத் தொழிற்சாலை. இன்னொரு வகையை நிலக்கரி சுரங்கங்களில் பார்க்கலாம். அங்கு வேலை ஆண்டு முழுதும் நடக்கிறது. அநேக தொழிலாளர்கள் சிறிது தொலைவிலிருந்து வந்து சுரங்கங்களுக்கு அருகிலேயே குடிசைகளில் வசிக்கிறார்கள். அக் குடிசைகளை அவர்களுக்காக சுரங்கங்களின் முதலாளிகள் அமைத்துக் கொடுக்கிறார்கள். அங்கும் வேலை சிறிது பரந்து கிடக்கிறது. ஆனால் இதன் பரப்பை கரும்பின் விளைச்சலின் பரப்போடு ஒப்பிட்டால் இது ஒரு பரப்பில்லையென்றே சொல்ல வேண்டும். மூன்றாவது விதத்தை ஜம்ஷேத்பூரின் பெரிய தொழிற்சாலையில் காணலாம். அதில் அநேகமாக எல்லா மாகாணங்களின் ஆட்களும் வேலை செய்கிறார்கள். அவர்கள் அங்கேயே வசிக்கிறார்கள். அங்கு அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களைக் கம்பெனி செய்து கொடுத்திருக்கிறது. எங்கள் மாகாணத்தின் மற்றப் பாகங்களில் இன்னும் பல தொழிற்சாலைகள் இருக்கின்றன. அவை இரும்பு, அரக்கு, துணி, பட்டு நெசவு, அரிசி எண்ணெய் முதலியன போன்ற விதவிதமான சாமான்களைச் செய்கின்றன. மைக்கா சுரங்கங்களும் தொழிற்சாலைகளும் நிறைய இருக்கின்றன. மற்ற உலோகங்களின் சுரங்கங்களும் உள. இவ்விதமான தொழிற்சாலைகள் எல்லாவற்றின் தொழிலாளிகளின் நிலைமையை அறிவதற்காகவும் விசாரணை செய்வதற்காகவும் குழுவின் அங்கத்தினர்கள் எல்லா வகைச் சுரங்கங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் சென்று அவற்றைப் பார்த்தார்கள். தொழிலாளர்களின் கூற்றையும் கேட்டார்கள். அவர்களுடைய வாக்குமூலங்களையும் சாட்சியங்களையும் பெறுவதிலும் கலந்து கொண்டேன். அறிக்கையைப் பற்றியும் பேசிப் பல விஷயங்களைப்பற்றி முடிவு செய்துவிட்டோம். இந்த வேலையை முடித்துவிட்டு அறிக்கை எழுதும் பொறுப்பு குழுவின் அமைச்சர், பேராசிரியர் ராஜேந்திர கிஷோர் சரணிடம் விடப்பட்டது. அவரும் அதைத் தயார் செய்துவிட்டார். ஆனால் குழுவானது கூடி அதைப்பற்றி இன்னும் ஆலோசனை செய்யவில்லை. ராம்கர் காங்கிரஸ் முடிந்த உடனே இந்த வேலையைச் செய்து முடிக்க நிச்சயம் செய்தேன். இதனால் குழுவின் கூட்டத்தைக் காங்கிரஸ் விழாவுக்கு இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு நடத்துவதாக நிச்சயிக்கப்பட்டிருந்

தது. ராம்கரிலிருந்து நான் பட்னுவுக்கு வந்த உடனே இக் குழுவின் வேலையில் ஈடுபட்டுவிட்டேன்.

குழுவின் கூட்டங்கள் சுமார் 14–15 நாட்கள் வரையில் நடந்தன. காலை $7\frac{1}{2}$ மணியிலிருந்து 1 மணி வரையிலும் பிறகு மாலை $2\frac{1}{2}$ மணியிலிருந்து 7–8 மணி வரையிலும் நாள்தோறும் நாங்கள் கூடினோம். இதைத் தவிர இரவிலும் அல்லது காலை யிலும் மாலையிலும் கிடைத்த சிறிதளவு நேரத்திலும் தனியாக இருந்து அந்த அறிக்கையுடன் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் படித்து வருவோம். இப்படி மண்டையை உடைத்துக்கொண்டு பாடுபட்ட பிறகு அறிக்கை அங்கீகரிக்கப்பட்டது. அறிக்கையின் பெரிய சிபாரிசுகளெல்லாம் ஒருமனத்துடன் செய்யப்பட்டன என்பதைப்பற்றி நான் பெருமகிழ்ச்சி யடைந்தேன். சில சிறிய விஷயங்களைப்பற்றி அபிப்பிராய பேதமிருந்தாலும் அறிக்கையில் ஒரு சுவரம்தான் பேசியது. இக்குழுவில் முதலாளிகளின் பிரதி நிதிகளும் தொழிலாளர் சங்கங்களின் பிரதிநிதிகளும் இருந் தும்கூட இப்படி அமைந்ததென்பதை நினைக்கும்போது இதன் பெருமை மேலும் அதிகமாகிறது. நடுவுநிலைமை பூண்டவர்கள் (நொது மலர்) என்று கருதப்பட்டவர்கள் சிலரும் இக்குழுவில் இருந்தார்கள். ஒரு பக்கத்தில் தொழிலாளர்களும் மற்ருெரு பக்கத்தில் தொழிற்சாலை முதலாளிகளும் நாங்கள் செய்யும் சிபாரிசுகளைத் தகுதியற்றன என்ருவது அல்லது கைகூடாதன என்ருவது கருதி ஓரடியாகத் தள்ளிவிடக்கூடாத அத்தகைய சிபாரிசுகளையே செய்ய வேண்டுமென்பதில் இந்த மூன்று வகை யான அங்கத்தினர்களும் கொண்டிருந்த ஒருமனப்பான்மையை இது காட்டுகிறது. இதற்கு எல்லாரும் உதவி புரிந்தார்கள். எல்லாருடைய நல்விருப்பம் நல்லெண்ணம் இரண்டின் பலனுக இந்த மனவொற்றுமை உண்டாயிற்று. யுத்தம் காரணமாக நிலைமையில் நிறைய மாறுதல் உண்டாகலாம் என்பது எங்களுக் குத் தெரியும். இதுவரையில் (1940 ஏப்பிரல் வரையில்) இந்தியா வில் பொருளாதார நிலைமையில் அவ்வளவு மாறுதல் காணப்படா விட்டாலும் அது நிகழக்கூடுமென்பதற்கு அறிகுறிகள் கண்களில் படாமலில்லை. இதனுல் எங்களுடைய சிபாரிசுகள் முற்றிலும் பயன்படுத்தப்பட்டாலே போதும்; அதுவே நாங்கள் எங்கள் கடமையை முற்றிலும் நிறைவேற்றியதாகும் என்பதை உணர்ந் தோம். நாங்கள் தயார் செய்த (அனுபந்தங்கள் போன்ற) துணைக் கருவிகளும் நாங்கள் சேகரித்த விவரங்களும் இந்த விஷயத்தைப் பற்றிப் பின்னுல் ஆலோசனை செய்பவர்களுக்குக் கட்டாயமாகப்

பயன்படும். காங்கிரஸுக்கு மீண்டும் அதிகாரம் கிடைக்கு மானல், அது கண்டிப்பாக ஏதாவது செய்தே தீரும். ஆனல் எங்களுடைய நம்பிக்கை நிறைவேறவில்லை. எனக்குத் தெரிந்த வரையில், குழுவின் சிபாரிசுகள் அரசாங்க அலுவலகத்திலேயே விழுந்து கிடந்தன. அவற்றின் மீது யாதொரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. தொழிலாளர் இலாகா ஒன்றை அமைக்க வேண்டுமென்று சிபாரிசு செய்திருந்தோம். இதைப் பற்றி ஏதோ செய்து வரப்படுகிறதென்று கேள்விப்பட்டேன். ஆயினும் அது கூட அரை மனதாகவும் பேருக்காகவும் தாம் என்பதாகக் கேள்வி. தொழிலாளர்களுக்கு வேண்டிய வசதிகளைப்பற்றிச் செய்யப்பட்ட சிபாரிசுகள் ஒன்ருவது செயல் முறையில் கொண்டு வரப்படவில்லை. அரசாங்கம் இந்த விஷயத்தை முக்கியமானதாகக் கருதவில்லை போலிருந்தது. இக்குழுவின் அங்கத்தினராகிய ஸ்ரீ ஹேமனுடன் எனக்கு இதற்குமுன் பழக்கமில்லை. அவர் ரயில்வே போர்டில் வேலை புரிந்து ஓய்வு பெற்று, டாடா கம்பெனியின் கணக்கு இலாகாவுக்குத் தலைமை பரிசோதகர் வேலையை ஏற்றுக் கொண்டிருந்தார். இவ்விதமாக அவர் அத்தொழிற்சாலையில் முக்கிய மனிதர்களில் ஒருவர். அவர் வியக்கத்தக்க உழைப்பாளி என்பதையும் முன்னேற்றமான கருத்துக்கள் உடையவர் என்பதையும் அக்குழுவில் கண்டேன். அவரும் முதலாளிகளின் பிரதிநிதியாக இருந்த ஸ்ரீ எம். பி. காந்தீயும் உதவிபுரியாமலிருந்திருந்தால், ஒருமனப்பான்மை உண்டாகியிருக்காது. அதே போலத் தொழிலாளர்களின் சார்பில் பேராசிரியர் அப்துல் பாரீயும் எங்கள் பேச்சை ஏற்றுக் கொள்ளாதிருப்பாராஞல், அப்பொழுதும் ஒருமனப்பான்மை உண்டாகியிருக்காது. இதஞல் இவர்களுக்குச் சிறப்பாக நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். மற்றவர்களில், ஸ்ரீ ராதாகமல் முக்கர்ஜீயும் ஸ்ரீ ராஜேந்திர கிஷோரும் தம் கல்வி கேள்வியால், குழுவின் அறிக்கையைத் தயாரிப்பதில் நிறைய உதவி புரிந்தார்கள். இவர்கள் மட்டுமன்றி ஸ்ரீ பாக்லேயின் பம்பாய்த் தொழிலாளர் சங்கத்து அனுபவத்தையும் ஸ்ரீ ஜகத் நாராயண்லால், ஸ்ரீ ஹரேந்திர பகாதுர் சந்திரர் ஆகியவர்களின் பீகாரைச் சம்பந்தப்பட்ட அறிவையும் குழுவானது பயன்படுத்திக் கொண்டு தன் அறிக்கையைத் தயார் செய்தது.

இந்த வேலை சம்பந்தமாக ஒரு துக்கமான சம்பவம் நடந்து விட்டது. குழுவின் அறிக்கை தயார் ஆன சில நாட்களுக்குப் பின்னரே பேராசிரியர் ராஜேந்திர கிஷோர் இறந்து போனர்.

அவருக்கு வயிற்று நோய் நெடு நாளாகவே இருந்து வந்தது. அவர் மிக்கக் கஷ்டத்தைப் பொறுத்து வந்தாரென்பது எங்களுக்குத் தெரியும். குழுவின் வேலையில் அவர் நிறைய உழைக்க வேண்டியிருந்தது. அவ்வேலையை அவர் மிக்கத் திறமையுடனும் ஊக்கத்துடனும் புரிந்தார். நோய் அதிகரித்துவிட்டதால் அவர் மருத்துவம் செய்து கொள்வதற்காக பம்பாய்க்குச் சென்றார். அங்கு வயிற்றைக் கீறினார்கள் என்பதாகவும் அதற்குப் பிறகு அவர் இறந்துபோனார் என்பதாகவும் கேள்விப்பட்டோம். குழுவின் கடுமையான வேலைதான் முன்னுக்கு வரக்கூடிய திறமையும் ஆர்வமும் உள்ள ஒரு வித்துவானை நம்மிடமிருந்து இவ்வளவு விரைவில் பிரித்துவிட்டது போலும் என்ற எண்ணம் என் மனத்தில் இருந்துகொண்டு வேதனைப்படுத்துகிறது.

மூன்றாவது குழு ஹிந்துஸ்தானி குழு. அதன் வேலை நீண்ட வேலை. ஏனெனில் அது ஒரு பரிபாஷைச் சொற்களஞ்சியத்தையும், ஹிந்தி, உருது இரு மொழிகளும் ஏற்றுக் கொள்ளக்கூடிய சொற் களஞ்சியம் ஒன்றையும் தயார் செய்வதில் ஈடுபட்டிருந்தது. இது மட்டுமன்றி பள்ளிக்கூடங்களின் மேல் வகுப்புகளுக்குப் பாடப் புத்தகங்களை தயார் செய்வதற்கு ஏற்பாடு செய்யும் வேலையையும், ஹிந்துஸ்தானி இலக்கணத்தை இயற்றும் வேலையையும் அது தன் கையில் எடுத்துக் கொண்டிருந்தது. இவையெல்லாம் தனித் தனி கிளைக் குழுக்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. அவ்வேலை 1943இல் தான் முடிவடைந்தது. நான் சிறையில் இருந்ததால் 1942 ஆகஸ்டிலிருந்தே குழுவின் வேலையில் கலந்து கொள்ள இயலாமற் போய்விட்டது. அந்த கிளைக் குழுக்களை அமைக்கும் வேலை சம்பந்தமாக ஆரம்பத்தில் செய்ய வேண்டி வந்த வேலையைத் தவிர நான் யாதொரு சிறப்பான வேலையிலும் பங்கெடுத்துக்கொள்ள முடியவில்லை. சிறப்பான வேலைகள் இருந்தன; இரண்டு களஞ்சியங்களையும் இலக்கணத்தையும் தயார் செய்யும் வேலைகள் இருந்தன. இவற்றில் ஒன்றைக்கூட கவனிக்க முடியவில்லை. இந்த ஹிந்துஸ்தானிக் குழு சம்பந்தமாக எங்கள் மாகாணத்திலும், அதற்கு வெளியிலும்கூட பலவிதமான பேச்சுக்கள் பேசப்பட்டன, பல காரியங்கள் செய்யப்பட்டன. ஹிந்திக்காரர்கள் இதை ஹிந்திக்கு விரோதம் என்று நினைத்தார்கள். பிறகு உருதுக்காரர்கள் அவர்களைப் பின்பற்றினார்கள். நான் ஹிந்திக்கு விரோதி என்றாவது அதற்கு தீமை விளைவிக்க விரும்புகிறவன் என்றாவது ஒத்துக்கொள்ளத் தயாராயில்லை. இதேபோல உருதுக்காரர்களும் டாக்டர் அப்துல் ஹக்கை உருதுக்கு விரோதி

என்று எவ்விதத்திலும் கூறஇயலாது. ஏனெனில் அவர் உருதுவை ஆதரிப்பவர் மட்டுமன்று. அதற்கு நிறையத் தொண்டும் புரிந்திருக்கிறார். ஒரு விதத்தில் உருது-ஹிந்தி இயக்கங்கள் எல்லாவற்றிற்குமே அவர்தாம் முக்கியமானவர் என்று கூறலாம். அப்படியிருந்தும்கூட இரு கட்சிக்காரர்களும் குழுவை எதிர்த்தார்கள். அதைப் பற்றிக் கூடக் குறை இல்லை. ஆனால் சம்பந்தமில்லாததும் ஆதாரமற்றதுமான பேச்சுக்கள் நிறையப் பேசப்பட்டு வந்தன என்பதைப் பற்றியும், அந்த ஆதாரமில்லாப் பேச்சுக்களால் பொது மக்களிடையில் புத்தி மாறாட்டம் விளைவிக்கப்பட்டதென்பதைப் பற்றியும் தாம் குறைபட்டுக் கொள்ளுகிறேன். எது எப்படியாயினும் சரி, அக்குழுவின் வேலையும் முடிவடைந்துவிட்டது. பிறகு இயற்றப்பட்ட சொற்களஞ்சியங்களைப் பற்றியும் இலக்கணத்தைப் பற்றியும் உலக அபிப்பிராயம் என்ன என்பதை அறியேன். என் அபிப்பிராயம் என்னவென்று கேட்டாலும் என்னால் கூற இயலாது. ஏனெனில், அவற்றைப் பார்ப்பதற்கு இதுவரையில் வாய்ப்புக் கிடைக்கவில்லை.

தொழிலாளர் குழுவின் வேலையை முடித்துவிட்டு நான் நேரே வர்தாவுக்குச் சென்றுவிட்டேன். அங்குச் செயலாற்றுக் குழுவின் கூட்டம் நடைபெற இருந்தது. சோன்பூரில் பயிற்சி விடுதியைத் திறப்பதாகத் திட்டமிட்டு விட்டதாகவும் அதற்கு நாளையும் நிச்சயித்து விட்டதாகவும் முன்பே கூறியுள்ளேன். விடுதியைத் திறக்கப்போகும் நாளன்றே நான் வர்தாவிலிருந்து திரும்பி வந்து நேரே சோன்பூருக்குச் சென்றுவிட்டேன். அங்கு ஒரு வாரம் தங்கியிருந்தேன். நூல் நூற்பதைத் தவிர அங்கு ஒன்று கூடியிருந்தவர்களோடு நாள்தோறும் அநேக விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும். இவ்வண்ணமாக அந்நாட்களிலும் ஓய்வில்லாமல் உழைக்க வேண்டியிருந்தது. சுமார் 150-200 முக்கிய செயலாளர்கள் அங்குக் கூடியிருந்தார்கள். எப்போதாவது சாயங்காலத்தில் பொதுஜனக் கூட்டங்களும் நடைபெறும். அவற்றிற்கு அக்கம்பக்கத்திலுள்ள கிராமத்து மக்களும் வருவார்கள். முக்கியமாக, ஆக்க வேலைத் திட்டம்தான் மிகவும் வற்புறுத்தப்பட்டு வந்தது. ஏனெனில் அதையே நாங்கள், மக்களைச் சுதந்திரத்திற்குத் தயாராக்குவதற்குக் கருவியாகக் கருதுகிறோம். அதன் மூலமாக மக்களுக்கு ராஜத் துரோகத்தைக் கற்பிக்கிறோம் என்பதற்காக அதைக் கருவியாகக் கருதவில்லை. சத்தியாக்கிரகத்திற்கு இன்றியமையாததும் பொது மக்களோடு நல்லுறவை உண்டாக்குவதும், எவ்விதமான ஜன சமூகத்துடனும் கூடித் தொண்டு

புரிவதற்கு அத்யாவசியமானதுமான பண்பு அதன் மூலமாக உண்டாகிறது என்பதற்காகவே அதைக் கருவி என்று கருதினேம்.

பயிற்சி விடுதியின் வேலையை முடித்துக்கொண்டு நான் பட்னுவுக்குத் திரும்பி வந்தேன். அங்கு மற்றொரு வேலையில் ஈடுபட்டுவிட்டேன். அதை முடிப்பதை என் கடமையாக நினைத்தேன். அது ஒரு பஞ்சாயத்து வேலை. அதைச் செய்து முடிப்பதாக நான் ஒத்துக் கொண்டிருந்தேன். பொது வாழ்க்கைக் கண்கொண்டு பார்த்தால் மற்ற எந்த பஞ்சாயத்துக்கும் இருக்கக் கூடிய அதே பெருமை இதற்கும் உண்டு. ஆயினும் என் உடல் நலக் குறைவால், இதற்கு எவ்வளவு உழைக்க வேண்டுமோ அவ்வளவு உழைக்க முடியாமல் போயிற்று. சிறிது நலமுற்றபின், இளைப்பாறுவதற்காக ஜீராதேயீக்குச் சென்று'விட்டேன். அங்குச் சுமார் ஒரு மாதம் வரையில் வாளாவிருந்தேன். அதற்குப் பிறகு தான் வேலைக்குத் தகுதியானேன்.

## 139. முஸ்லிம் லீகைப் பற்றி

காங்கிரஸ் மந்திரி சபைகளின் காலத்திலேயே முஸ்லீம் லீக் அவற்றைக் கடுமையாக எதிர்க்க ஆரம்பித்துவிட்டது. மந்திரி சபைகள் முசல்மானியருக்கு நியாயம் செய்வதில்லையென்பதாகவும் அவர்களைக் கொடுமையாக நடத்துகின்றனவென்பதாகவும் பேச்சைக் கிளப்பிவிட்டது. பீர்பூரின் அரசரைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவை அது நியமித்தது. அக்குழு ஓர் அறிக்கையைத் தயார் செய்தது. அதில் காங்கிரஸால் செய்யப்பட்ட சின்னஞ்சிறிய அக்கிரமங்களின் பட்டியல் கொடுக்கப்பட்டிருந்தது. பீகாரில் மிஸ்டர் ஷரீப் என்ற பாரிஸ்டர் இவ்விதமான அறிக்கையை இரண்டு பாகங்களாக இருமுறை வெளியிட்டார். இந்த அறிக்கைகளில், தவருனதும் ஆதாரமற்றதும் சம்பந்தமில்லாததுமான பல விஷயங்கள் எழுதப்பட்டிருந்தன. மந்திரி சபை ஒரு கண்டனத்தை அச்சிட்டு வெளியிட்டது. அசெம்பிளியில் பேச்சு வந்தபோது அதற்கு முழுக்க முழுக்க விடையும் அளித்தது. ஆயினும் மந்திரி சபை எதைச் செய்தாலும் எதைக் கூறினுலும் அவை முசல்மானியர்களிடையில் பிரசாரமாவதில்லை. ஆனல் லீக் விரும்புவதும் செய்வதும் அவர்களிடையில் பலமாகப்

பிரசாரம் செய்யப்பட்டு வந்தன; லீக் ஹிட்லரின் கொள்கையை கடைப்பிடித்துத் தன் எதிரிக்கு விரோதமாக பொய்க் குற்றங்களைச் சாற்றி வருகிறது. அவற்றில் ஏதேனும் உண்மையிருந்தால் அதைப் பல மடங்காகப் பெருக்கித் திரும்பத் திரும்பப் பல்லவி வைத்துப் பிரசாரம் செய்கிறது. இப்பிரசாரம் மிகப் பலமாக நடத்தப்படுவதால் பொது மக்கள் மனத்தில் அது பதியாமல் போக இயலாது. இவ்வண்ணமாகக் காங்கிரஸின் மீதும் ஹிந்துக்களின் மீதும் முசல்மானியர்களிடையில் பகைமை வளர்க்கப்பட்டு வந்தது. இவர்களுக்கிடையில் ஒரு பெரிய அகழி உண்டாகி விட்டது. தேர்தல் நடந்த சமயத்திலும், அத்தேர்தலின் பயனாக காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைக்கப்பட்ட சமயத்திலும் லீகுக்குப் பலம் குறைவாக இருந்தது. பீகாரில் லீகின் சார்பிலிருந்து அபேக்ஷகர் எவரும் நிற்கவில்லை. இவ்விதமாகவே பல மாகாணங்களில் லீகுக்கு உயிரே இல்லை. அப்படி இருந்த இடத்தில், அது மிகவும் பலவீனமான ஒரு கழகமாக இருந்தது. இதனால் காங்கிரஸ் மந்திரி சபைகளை அமைக்க வேண்டி வந்த போது, அது லீகின் ஆட்களை மந்திரி சபையில் சேர்த்துக் கொள்ள முடியவில்லை. மற்ற முசல்மானியர்களிலிருந்தே தேர்தலில் வெற்றி பெற்றவர்களுக்கு மந்திரி சபையில் சேரும்படி அழைப்பு அளித்தது.

ஐக்கிய மாகாணத்தில் லீகின் அங்கத்தினரை மந்திரிசபையில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று முயற்சி செய்யப்பட்டது. அப்படிச் சேர்த்துக் கொண்டிருந்தால் லீக் இவ்வளவு வலிமையடைந்திருக்காதென்பதாக இன்று யோசித்துப் பார்த்தால் தோன்றுகிறது. ஆயினும் காங்கிரஸுக்குள்ளேயே சிலருக்கு இது பிடிக்கவில்லை. இதனால் லீகுடன் ஒப்பந்தம் செய்ய முடியவில்லை. லீகுக்கு இதனால் அதிகக் கோபம் உண்டாயிற்று. காங்கிரஸுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்வதைத் தன் முக்கிய கடமையாகக் கொண்டது. பீர்பூர் அறிக்கையிலும் ஷரீபின் அறிக்கையிலும் அச்சிடப்பட்ட குற்றச்சாட்டுக்கள் யாதொரு பாரபக்ஷமில்லாத நீதிமன்றத்தாலாவது அல்லது தனிப்பட்டவராலாவது விசாரணை செய்யப்படவேயில்லை. இவற்றை பெடரல் கோர்ட்டின் தலைமை நீதிபதி சர் மௌரிஸ் குவாயரைக் கொண்டோ அல்லது அவரைப் போன்ற பக்ஷபாதமில்லாத வேறு எவரைக் கொண்டோ விசாரணை நடத்தச் செய்யலாம் என்றும் அவரிடம் மிஸ்டர் ஜின்னா தம் குறைகளை அனுப்பி வைக்கலாம் என்றும் நான், காங்கிரஸ் தலைவன் என்ற முறையில், மிஸ்டர்

ஜின்னாவுக்கு கடிதம் எழுதினேன். அவர் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. இந்த விவகாரம் வைசிராயிடம் சமர்ப்பிக்கப் பட்டிருப்பதாகவும் அவர் எது உசிதமென்று கருதுகிறாரோ அதைச் செய்வார் என்றும் விடையளித்தார்.

வைசிராய்க்குக் காங்கிரஸைப் பிடிக்கவில்லை. அவரோ முஸ் லீம் லீகுக்கு உதவி புரிந்து அதைக் காங்கிரஸுக்குப் போட்டியாக நிறுத்துவதற்கும் தயாராகயிருந்தார். அவர் இந்தக் குற்றச் சாட்டுக்களை விசாரிப்பதைப் பற்றி யாதொன்றும் கூறவில்லை. மிஸ்டர் ஜின்னாவும் இதை வற்புறுத்தவில்லை. விஷயம் இருந்த படி இருந்துவிட்டது. ஆயினும் பத்திரிகைகளிலும், துண்டுத் தாள்களிலும், சொற்பொழிவுகளிலும் அந்த ருசுப்படுத்தப்படாத குற்றச்சாட்டுக்கள் தொடர்ந்து பிரசாரம் செய்யப்பட்டு வந்தன. லார்டு லின்லித்கோ முஸ்லிம் லீகின் பேச்சை ஏற்றுக் கொண்டு, சண்டைக்குப் பிறகு 1935ஆம் ஆண்டின் அரசியல் திட்டத்தை அடியோடு விசாரணை செய்வதற்கும், அதில், இந்தியா முழுவதை யும் உட்கொண்ட ஓர் (ஐக்கிய) சங்கம் அமைக்கப்படுமென சொல் லப்பட்டிருந்த விஷயத்தை விட்டுவிடுவதற்கும் ஒத்துக்கொண் டார். முஸ்லிம் லீக் அதே சங்கத்தைத் தான் எதிர்த்து வந்தது. அது விரும்பிய உறுதியை பிரிட்டிஷ் அரசாங்கம் இப்போது அளித்து விட்டது. இந்த விஷயங்களால் உற்சாகமடைந்து மிஸ்டர் ஜின்னாவானவர் காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜீநாமா கொடுத்ததும் அச்சம்பவத்தை முஸ்லிம் லீகின் சார்பில் கொண்டாடும்படி கட்டளையிட்டார். மந்திரி சபை களின் ராஜிநாமா முசல்மானியர்களின் விமோசனமாகக் கருதப்பட்டது. படிப்பாளிகளான முசல்மானியர்கள் மனத்தில் கூட இப்பிரசாரம் மிகவும் ஆழ்ந்து பதிந்தது. பீகார் மந்திரி சபை ராஜிநாமா கொடுத்தவுடன் மௌல்வீ குர்ஷேத் ஹுஸ்நைன் போன்ற படிப்பாளி என்னைப் பாராட்டித் தந்தி கொடுத்தார் என்றால் வேறு சொல்வானேன் ?

இந்தியாவைக் கூறு போடும் பேச்சை லீக் இன்னும் அங்கீ கரிக்கவில்லை. ஆனால் பல முசல்மானியர்கள் இந்த விஷயத்தைப் பல வகையில் பிரஸ்தாபித்து வந்தார்கள். 1939 நவம்பர்- டிசம்பரில் நான் வர்தாவுக்குச் சென்றபோது இந்த விஷயத் தைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தேன். அதுவரையில் பாகிஸ் தானைப் பற்றி எனக்கு யாதும் விசேஷமாகத் தெரியாது. அங்கு இதைப் பற்றிய இலக்கியங்களை வரவழைத்துப் படித்தேன். பிறகு நீண்டதொரு குறிப்பை எழுதி, ராம்கர் காங்கிரஸ் நடந்த

சமயத்தில் 'ஹிந்துஸ்தான் டைம்ஸில்' ஒரு சிறப்புக் கட்டுரையாக வெளியிட்டேன். பிறகு அது புத்தகமாகவும் வெளி வந்தது. பலர் அதைப் படித்து, பாகிஸ்தானைப் பற்றி அறிந்து கொண்டார்கள். முஸ்லிம் லீகும் சும்மாயிருக்கவில்லை. ராம்கர் காங்கிரஸுக்குச் சில நாட்களுக்குப் பிறகு, 1930 மார்ச்சிலேயே லீகின் ஆண்டு விழா லாகூரில் நடைபெற்றது. அங்கு லீகானது பாகிஸ்தானை ஆதரித்து ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அதற்குப்பின் பாகிஸ்தான்தான் முஸ்லிம் லீகின் தலைசிறந்த நோக்கமாகிவிட்டது. ஓராண்டிற்குப்பின் மதராஸ் ஆண்டு விழாவில் அது பாகிஸ்தானை நிலைநாட்டுவதை முஸ்லிம் லீகின் நோக்கமாக ஏற்றுக்கொண்டது. அந்த நோக்கத்தைத் தன் விதிமுறையில் தன் குறிக்கோளாகச் சேர்த்துவிட்டது.

## 140. தனிப்பட்டார் சத்தியாக்கிரகம்—காரணமும் விளைவும்

ஐரோப்பிய யுத்தத்தின் போக்கு இங்கிலாந்திற்கு மிகவும் பயங்கரமாகிக் கொண்டு வந்தது. ஜெர்மனியானது அதிவிரைவாக ஐரோப்பாவின் நாடுகளை ஒன்றுக்குப்பின் ஒன்ருக கைப்பற்றி வந்தது. போலந்து, பெல்ஜியம், ஹாலந்து, டென்மார்க்கு, நார்வே ஆகிய நாடுகள் 1940க்கு முன்னமே அதன் கைவசமாகி விட்டன. இப்போது பிரான்சின் முறை. பிரான்சாலும் நெடு நாள் எதிர்த்து நிற்க இயலவில்லை. கடைசியில் அதுவும் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு சரண்புக வேண்டி வந்தது. டன்கர்க்கில் ஆங்கிலப் படை பெரும் நஷ்டத்தை அடைந்து, எப்படியோ இங்கிலாந்துக்கு ஓடிப்போய்விட்டது. இங்கிலாந்தில் அதனுல் மக்களுக்குப் பெரும் கோபம் வந்தது. சேம்பர்லேன் மந்திரி சபை வீழ்ந்துவிட்டது. அதன் இடத்தில் சர்வ கட்சி மந்திரி சபை ஒன்று அமைந்தது. அதில் வின்ஸ்டன் சர்ச்சில் முதல் மந்திரியாகவும் ஏமரீ இந்தியா மந்திரியாகவும் ஆனுர்கள். இங்கிலாந்து பெரும் வீரத்துடன் ஜெர்மனியின் ஆகாயப் படையெடுப்பை எதிர்த்து நின்று போராடியது. இட்டாலியானது, இங்கிலாந்து இனித் தோற்றுப் போய்விடும், பிரான்சோ சரணுகதியடைந்துவிட்டது என்று கருதி இச்சமயத்தில் யுத்தத்தில்

சேர்ந்துகொள்வது நன்றெனை நினைத்தது. இங்கிலாந்திற்கு இது மிகவும் நெருக்கடியான காலம். அமெரிக்கா இன்னும் யுத்தத்தில் சேரவில்லை. ருஷியாவின் மீது ஜெர்மனி இன்னும் படையெடுக்க வில்லை.

எங்களுடைய செயலாற்றுக் குழுவில் இந்த மிக நெருக்கடி யான நிலைமையைப்பற்றி ஆலோசனை நடந்துவந்தது. இந்தி யாவின் சச்சரவை தீர்த்துவைத்தால் காங்கிரஸானது தன்னால் இயன்ற அளவுக்கு எல்லா வகையிலும் உதவி புரியுமென்பதாகத் தெள்ளத் தெளிவாகக் கூறவேண்டு மென்ற கருத்து நிலவியது. செயலாற்றுக் குழுவில் இதைப்பற்றி நிறைய விவாதம் நடந்தது. மகாத்மாஜீயானவர் யுத்தத்தில் செயல்முறையில் உதவி செய்யத் தயாராயில்லை. அப்படி செய்வது காங்கிரஸின் அஹிம்சா கொள் கைக்கு விரோதமாகும் என அவர் கருதினார். அவர் இங்கிலாந் துக்கு உதவி செய்ய வேண்டுமென்று பேசிய பேச்சு வெறும் சித்தாந்த சம்பந்தமான உதவியைப் பற்றிய பேச்சுத்தான். மற்றவர்கள் வேறு விதமாக எண்ணினார்கள். நாம் சுதந்திரம் வேண்டுமென்று கோரிக்கை செய்தால், அதன் கூடவே நாம் உதவியும் புரிய வேண்டுமென்றும், ஆங்கிலேயர்களிடமிருந்து சுயராஜ்யத்தைப் பெறுவதற்குச் செய்யப்படும் முயற்சியில் மட்டுமே காங்கிரஸானது அகிம்சாமயமான உபாயங்களைப் பயன்படுத்துமென்பதுதான் அதன் குறிக்கோள் என்றும், வேறு எந்த வெளிநாடு படையெடுத்த போதாவது அல்லது இந்தியா சுதந்திரத்தைப் பெற்றபின்னாவது, அஹிம்சாமயமாக இருப்ப தைப்பற்றி அதில் யாதும் கூறப்படவில்லையென்றும், மேலும் நாம் நம்முடைய நடவடிக்கைகளால் நாட்டின் கையை எவ்விதத் திலும் கட்டிப் போடக்கூடாதென்றும், அப்படிச் செய்வதற்கு நமக்கு அதிகாரமில்லை யென்றும் அவர்கள் நினைத்தார்கள். ஆயினும் ஒரு விஷயத்தைப் பற்றி எல்லாரும் ஒருமனமாயிருந் தார்கள். அதாவது சுயராஜ்யத்தை அடைவதற்காக செய்யப் படும் வேலையிலும், தமக்குள் எழும் சண்டைகளிலும் அஹிம்சா வைக் கைவிடக்கூடாதென்பதுதான்.

இவ்விதமாகச் சிலர் அஹிம்சா கொள்கையை ஒரு வரம்புக்கு உட்படுத்தி பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உதவி புரியத் தயாரா யிருந்தார்கள். ஆனால் காந்திஜீயும் மற்றவர்கள் சிலரும் அஹிம் சாவைச் சிதையாது காத்தல் இந்தியாவுக்கும் உலகத்திற்குமே அவசியம் என்பதாகக் கருதினார்கள். நான் யுத்தத்தின் நிலைமை யைக் கண்டு கலக்கமுற்றாலும், மேலும் சிற்சில சமயங்களில் நாம்

ஏதாவது செய்ய முடியுமா இல்லையா என்ற ஐயம் எனக்கு வந்தாலும் என் சொந்த அபிப்பிராயமும் இக்கட்சியின் சார்பி லிருந்தது. கான்பகதுர் அப்துல் கபார்கான் அஹிம்சா கொள் கையை மிகத் திடமாகக் கடைபிடித்து நின்றுர். இந்தியாவின் விடுதலையைப்பற்றி அறிக்கை செய்யப்பட்டு, இந்தியத் தலைவர் கள் கையில் அதிகாரம் வரும்படியாகத் தற்கால அரசாங்கத்திற்கு உருக் கொடுக்கப்பட்டால் காங்கிரஸ் செயல் முறையில் சண்டை யில் உதவி புரியுமென்பதாகச் செயலாற்றுக் குழுவானது தில்லிக் கூட்டத்தில் முடிவு செய்தவுடன், கான் சாஹபும் நானும் இன்னும் சில நண்பர்களும் செயலாற்றுக் குழுவிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டோம். ஆனல் பிரிட்டிஷ் அரசாங்கமானது நம் கோரிக்கையை ஏற்றுக்கொள்ளாத வரையில் செயல் முறையில் உதவி செய்வது அல்லது அஹிம்சாவைக் கைவிடுவது என்ற கேள்வி எழவில்லையாதலால் நாங்கள் ராஜிநாமாவை இப்போது மீட்டுக்கொள்ள வேண்டுமென்றும், பிரிட்டிஷ் அரசாங்கம் நம் கோரிக்கையை ஏற்றுக் கொள்ளும்போது நாங்கள் ராஜிநாமா செய்யலாமென்றும் தலைவர் மௌலான அபுல் கலாம் ஆஜாத் சமாதானம் கூறியதின் பேரில் நானும் சில தோழர்களும் எங்கள் ராஜிநாமாவை மீட்டுக்கொண்டோம். ஆனல் கான் சாஹபு மட்டும் இதனல் திருப்தியடையவில்லை. மகாத்மாஜீயானவர், இனித் தமக்கும் காங்கிரஸுக்கும் சம்பந்தமிருக்காதென்பதாகத் தீர்மானித்துவிட்டார். இதனல் செயலாற்றுக் குழுவிலும் வெளி யில் மக்கள் மனத்திலும் பெரும் கலக்கம் உண்டாயிற்று.

செயலாற்றுக்குழு மறுபடியும் வர்தாவில் கூடியது. அதற்குப் பிறகு, இவ்விஷயத்தைப்பற்றி ஆலோசனை செய்வதற்காக அகில பாரதீயக் குழு புனவில் கூட்டப்பட்டது. கருத்து வேறுபாடு நீங்க வில்லை. புனக் கூட்டத்தில், அது செயலாற்றுக் குழுவின் தீர்மானத்தை பெரும்பான்மை பலத்துடன் அங்கீகரித்து விட்டது. அக்கூட்டத்தில் நாங்களும் இருந்தோம். காந்திஜீ புனவுக்கு வரவில்லை. நான் என் நண்பர்களின் சார்பில் எங்க ளுடைய கருத்தைத் தெரிவித்துவிட்டேன். செயலாற்றுக் குழு வின் தீர்மானத்தை எதிர்க்கமாட்டோமென்றும், நடுவு நிலைமை யாக இருந்து விடுவோமென்றும்கூடக் கூறிவிட்டேன். இவ்வித மாக, பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குக் காங்கிரஸ் உதவி புரியு மென்ற தீர்மானம் முறைப்படி அதற்கு அனுப்பப்பட்டது. அதைப்பற்றி அது ஆலோசனை செய்யுமென்றும் எங்களோடு மேலும் பேச்சுவார்த்தை நடத்துமென்றும் எதிர்பார்க்கப்பட்டது.

ஆனல் அப்படி நடக்கவில்லை. தீர்மானம் நிறைவேற்றப்பட்ட சில நாட்களுக்குள்ளாகவே அது அத்தீர்மானத்தை ஏற்கவில்லை யென்ற அறிக்கையை வெளியிட்டுவிட்டது. லார்டு லின்லித் கோவானவர், பிரிட்டிஷ் அரசாங்கத்தால் சண்டை சமயத்தில் சட்டத்தை மாற்ற இயலாதென்றும், ஆயினும் அதற்குட்பட்டு வைசிராயின் நிர்வாக சபைக்கு இந்தியர்களிலிருந்து, விசேஷ மாக முக்கிய அரசியல் கட்சிகளின் தலைசிறந்த ஆட்களிலிருந்து, சிலரைத் தேர்ந்து எடுத்து புதிய அங்கத்தினரைத் தாம் நியமிப்பாரென்றும் அதேபோல் கவுன்ஸிலிலும் பெரும் பகுதி அங்கத்தினர்கள் இந்தியர்களாக இருப்பார்கள் என்றும், ஆனல் அவர்களுக்கு இப்போது கவுன்ஸிலர்களுக்கு இருக்கப்பட்ட உரிமைகள் தாமிருக்குமென்றும், மேலும் இது மட்டுமன்றி, யுத்த சம்பந்தமான விஷயங்களைப்பற்றி யோசனை அளிப்பதற்காக மற்றொரு கமிட்டியைத் தாம் அமைப்பார் என்றும், அதிலும் தலை சிறந்த இந்தியர்களுக்கு இடம் அளிப்பார் என்றும் கூறி ஓர் அறிக்கையை விடுத்தார். இந்த அறிக்கையிலிருந்து அவர் இந்தியர்களுக்கு யாதொரு அதிகாரமும் அளிக்க விரும்பவில்லை யென்பதும் எல்லா அதிகாரங்களையும் தம் கையிலே வைத்துக் கொள்ள விரும்பினர் என்பதும் தெளிவாகிவிட்டன. காங்கிரஸின் கோரிக்கையை ஏற்பதைப் பற்றி ஒரு பேச்சுமில்லை. செய லாற்றுக் குழுவும் அகில பாரதீயக் குழுவும் போட்ட திட்டம் இவ்விதமாகப் பேச்சளவிலேயே முறிந்துவிட்டது.

ஹிம்சா அஹிம்சா சம்பந்தமாக வாக்குவாதம் நிறைய வளர்ந்துவிட்டது. இதனல் புனவில் அகில பாரதீயக் குழு இதைப் பற்றியும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. சுயராஜ் யத்தைப் பெறுவதற்காக பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் நாம் செய்துவரும் முயற்சியைப் பொறுத்தவரையிலும், மேலும் இந்தி யாவுக்குள் நமக்குள் எழும் சச்சரவுகளைப் பொறுத்த வரையிலும், காங்கிரஸானது அஹிம்சா மயமான முறையை அடிப்படையாகக் கொண்ட கொள்கையையும் குறிக்கோளையும் உறுதியாகப்பற்றி நிற்கிறதென்பதாகவும், அதில் எவ்விதமான மாறுதலாவது திருத்தமாவது செய்யப்பட்டதாக நினைத்துக் கொள்ளக்கூடா தென்பதாகவும் அத்தீர்மானத்தில் தெள்ளத் தெளிவாக கூறப் பட்டது. இத்தீர்மானம் எல்லாருடைய சம்மதத்தோடு நிறை வேற்றப்பட்டாலும், யுத்த சம்பந்தமாக நிறைவேற்றப்பட்டத் தீர் மானத்தினல் அஹிம்சா கொள்கையின் கண்டிப்பில் உண்டான தளர்ச்சி நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு சென்றதென்பதாக

நான் ஐயுறுகின்றேன். காங்கிரஸுக்குள் பலருக்கு இது நினைவிருக்கும். இப்படி ஆவது இயல்பே. அஹிம்சா கொள்கையானது (கண்டறியாத) புதுமையான கொள்கை. இத்தனை பெரிய அளவில், அதுவும் ஒரு பேராற்றல் படைத்த ஆதிக்கத்தின் கையிலிருந்து சுயராஜ்யத்தைப் பெறுவதில், அதை உபயோகிப்பதென்பது இன்னும் விசித்திரம். பலர் அதை ஒரு நல்லொழுக்கமாக மட்டுமே கொண்டு அதன்படி உண்மையாக நடந்துவருகிறார்கள். சிலர் மட்டும்தாம் அதை ஒரு மதக் கோட்பாடாகக் கருதுகிறார்கள். இதனால் மக்களை அதிலிருந்து வழுவாமல் இருக்கச் செய்வது எளிதான காரியமன்று. ஏனெனில் காங்கிரஸுக்குள் இதைப்பற்றிச் செயல் முறையில் இதுவரையில் கருத்து வேறுபாடு வரவில்லை. அதனால் பொது மக்களிடையில் இதைப் பற்றி எவ்விதமான புத்தி தடுமாறுதலும் உண்டாகவில்லை. இப்போது செயலாற்றுக் குழுவிலும் அகில பாரதீயக் குழுவிலும் கருத்து மாறுபாடு வந்துவிட்டபோது, மேலும் அது எல்லாருக்கும் தெளிவாகப் புலப்பட்டுவிட்டபோது, பொதுமக்களிடையில், முக்கியமாக சாதாரண காங்கிரஸ் செயலாளர்களிடையில், புத்தி தடுமாற்றம் உண்டானதில் ஆச்சரியமில்லை. எப்படி ஒரு நீர் நிலையைக் கரைபோட்டுத் தேக்கி வைத்தபின் அந்தக் கரையில் ஒரு சிறிய துளை உண்டாகிவிட்டால் அந்த நீரே அச்சிறிய துளையைப் பெரிதாக்கிச் சிறிது நேரத்திற்குள் அந்தக் கரையை உடைத்துக்கொண்டு ஒரு வெள்ளம்போலாகிவிடுகிறதோ அதே போன்ற நிலைமை இவ்விதமான சச்சரவுகளிலும் உண்டாகிவிடுகிறது. இப்போதும் அப்படித்தான் ஆயிற்று.

நான் புனாவில் நோயாகப் படுத்துவிட்டேன். நியூமோனியா போல வந்துவிட்டது. எப்படியோ வர்தா வந்து சேர்ந்தேன். அப்போது மழை காலம். அது எப்பொழுதுமே எனக்குக் கெடுதல் செய்யும். அங்குச் சில நாட்களில் குணமானதும், நான் உலர்ந்த காற்றுள்ள ராஜபூத்தானாவிற்குச் சென்று சில நாட்கள் தங்கி இளைப்பாரவேண்டுமென்பதாக சேட் ஜம்நாலால்ஜீ நினைத்தார். அங்கே என்னைத் தாமே அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார். உயர்திரு பாபூவும் அது நன்றெனக் கருதினார். சேட்ஜீயுடன் நான் ஜெயபூருக்குச் சென்றேன். தற்செயலாக அங்கும் அச்சமயத்தில் மழை பெய்து கொண்டிருந்தது. பிரயாணத்தின் அலுப்பாலும் மழையாலும் உடல் நலம் சிறிது கெட்டுவிட்டது. இதனால் ஜெயபூரில் சில நாட்கள் வரையில் தங்கியிருக்க வேண்டியதாயிற்று. முதலில் டாக்டர்களின் மருத்

துவமும் பிறகு வைத்தியர் ஸ்ரீ நந்தகிஷோர் சர்மாவின் மருத்துவமும் நடந்தன. ஜயபூரைவிட ஸீகர் போன்ற மணல் பூமியில் தங்குவதால் அதிக நலமுண்டாகுமென்பதாக எல்லாரும் நினைத்தார்கள். இதனால் சேட்ஜீயுடன் நான் ஸீகருக்குச் சென்றுவிட்டேன். அங்குச் சுமார் ஒரு மாதமிருந்தேன். ஸீகரில்தான் இந்த நினைவுகளை எழுதத் தொடங்கினேன். அதே சந்தர்ப்பத்தில்தான் சேட் ஜம்நாலால் பஜாஜின் பிறப்பிடமாகிய காசிகேவாஸ் என்ற பெயர் கொண்ட கிராமத்திற்குச் சென்று அதைக் காணும் நற்பேறும் கிட்டியது. அதற்கு அருகாமையில் லோஹாகர்ஜி என்ற இடம் ஒன்று இருக்கிறது. அதை மக்கள் புண்ணிய தலமாகக் கருதுகிறார்கள். அந்த இடம் மலைகளுக்கு இடையில் மிக்க அழகாக அமைந்திருக்கிறது. ஜம்நாலால்ஜீ என்னை அங்கு ஒரு நாள் அழைத்துச் சென்றார். எனக்கு உடல் நன்றாகத் தேறிவிட்டது. எல்லாவிதத்திலும் நன்றாகிவிட்டதென்பதாகத் தோன்றியது. அங்கு நான் தங்கியிருந்தபோதே பம்பாயில் அகில பாரதீயக் குழுவின் இருக்கை மீண்டும் கூடியது. அதில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அறிக்கையைப்பற்றி ஆலோசனை செய்யப்பட்டது. மேலும், காங்கிரஸ் அதை அங்கீகரிக்க முடியாதென்பதாக முடிவுசெய்யப்பட்டது. இனி, காங்கிரஸ் தன் செயல்முறையால் உலகத்திற்குத் தன் கொள்கையைத் தெளிவாகக் காட்டவேண்டுமென்பதாகவும் முடிவு செய்யப்பட்டது. தனிப்பட்டோர் சத்தியாக்கிரகத்தை நடத்தவும் தீர்மானிக்கப்பட்டது.

சத்தியாக்கிரகத்தை நடத்தும் பொறுப்பு காந்திஜீயின் கையில் ஒப்படைக்கப்பட்டது. அந்தச் சத்தியாக்கிரகம் தனிப்பட்டோரால் செய்யப்படுவதாயினும், தம்முடைய அனுமதியைப் பெறாமல் தனிப்பட்டார் எவரும் சத்தியாக்கிரகம் செய்யக்கூடாதென்பதாகவும், அப்படிப்பட்ட அனுமதியை எவரெவர் ஆக்க வேலைத்திட்டத்தின் கூறுகளில் ஏதாவதொன்றை ஏற்றுப் பணி புரிந்திருந்தார்களோ அவர்களுக்கு மட்டும்தான் அளிப்பார் என்பதாகவும் அவர் தீர்மானித்தார். மேலும், பிரதிநிதியாக இருந்து வருபவருக்கே, அதாவது வெறும் தனிப்பட்டவராக இல்லாமல் பலருக்குப் பிரதிநிதியாக இருப்பவர்களுக்கே, உதாரணமாக அசெம்பிளி அல்லது கவுன்சிலின் அங்கத்தினர்கள், ஜில்லாபோர்டு முனிசிபால்டி ஆகியவற்றின் அங்கத்தினர்கள், காங்கிரஸ் கமிட்டிகளில் பதவி வகிப்பவர்கள், தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் ஆகியவர்களுக்கே அப்படிப்பட்ட அனு

மதி அளிக்கப்படும் என்பதாகவும் முடிவு செய்யப்பட்டது. இதனால், தாமே நூல் நூற்பவர்கள், தீண்டாமை மனப்பான்மையி னின்று விலகியவர்கள், எங்காவதிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள் ஆகியவர்களுக்கே அனுமதி கிடைத்தது. ஆரம்பத்தில் அசெம்பிளி கவுன்ஸில் ஆகியவற்றின் அங்கத்தினர்களுக்கும், காங்கிரஸ் குழுவில் பதவி வகித்தவர்களுக்கு மட்டுமே அனுமதி கிடைத்தது. மாகாணக் குழுக்கள் அப்படிப்பட்டவர்களின் பெயர்ப்பட்டியலைத் தயார் செய்து காந்திஜீயின் அனுமதிக்காக அவரிடம் அனுப்பி வந்தன. அவர் அங்கீகரித்த பின்னர்தான் பட்டியலில் குறிப்பிட்டவர்கள் சத்தியாக்கிரகத்தைச் செய்தார்கள்.

தம்மால் யுத்தத்தில் எவ்விதத்திலும் உதவி புரிய இயலாது என்பதாக சத்தியாக்கிரகிகள் அறிக்கை செய்வதே சத்தியாக்கிர கத்தின் உருவாக அமைந்தது. இதற்காக மக்கள் ‘ஒரு பாயீயும் கிடையாது, ஒரு பையும் கிடையாது’ என்ற முழக்கொலியை புனைந்து கொண்டார்கள். நாங்கள் எங்களிலிருந்து ஒரு ஆளைக் கூட சண்டைக்கு அனுப்பமாட்டோம், சண்டைக்காக ஒரு பைசா கூட கொடுத்துப் பொருளுதவி செய்ய மாட்டோம் என்பதுதான் அதன் பொருள். சத்தியாக்கிரகத்தில் யாதொரு முழக்கமும் செய்யக்கூடா தென்பதாக மக்களுக்குக் கண்டிப்பான எச்சரிக்கை செய்யப்பட்டது. ஏனெனில் நாம் எதைப் பொருத்தமென்பதாகக் கருதுகிறோமோ அதை நாம் நாட்டில் பிரசாரம் செய்யலாம் என்ற உரிமையைச் சத்தியாக்கிரகத்தின் மூலமாகப் பெறவிரும்புகிறோம். அந்த உரிமைக்கு எவ்விதமான தடையும் இருக்கக்கூடாது. சண்டையின் நெருக்கடியான நிலைமையிலும்கூட, நாம் விரும் பினால், அதற்கு விரோதமாகப் பிரசாரம் செய்ய உரிமை இருக்க வேண்டும்.

இந்தச் சத்தியாக்கிரகத்தைச் சிலர் எதிர்த்தார்கள். வேறு சிலர் கேலி செய்தார்கள். காரமற்ற சத்தியாக்கிரகத்தால் யாதொரு பயனையும் அடைய முடியாதென்றும், இதனால் பிரிட் டிஷ் அரசாங்கத்தார் மசியமாட்டார்கள் என்றும், அவர்களுடைய வேலைக்கு இதன் மூலமாக யாதொரு இடையூறும் விளைவிக்க முடியாதென்றும் தீவிர கருத்து கொண்ட இடது கட்சிக்காரர்கள் கூறினர்கள். பிரசார உரிமை, அபிப்பிராய உரிமை என்பன வெல்லாம் வெறும் ஏமாற்றுகிற வித்தையென்பதாகவும், நாங்கள் யுத்தத்தை எதிர்க்க விரும்புகிறதாகவும், ஆனால் அதை வெளிப் படையாகக் கூறத் தைரியமில்லை யென்பதாகவும், அதனால்தான் இந்தக் கபட நாடகத்தைப் போடுகிறோமென்பதாகவும் வேறு

சிலர் கூறினார்கள். நாம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு யுத்தத்தில் உதவி புரியவில்லை யென்பதை உலகுக்குக் காட்ட வேண்டுமென் பதுதான் விஷயம். இதை யாதொருவிதமான கூச்சல் குழப்ப மின்றிக் காட்ட விரும்பினோம். சமூக சத்தியாக்கிரகம் செய்தால் அதைக் கூக்குரல் குழப்பமின்றி நடத்துவது கடினம். பிரதிநி யாக இருந்துவருபவருக்கு அனுமதி அளித்ததினால், அவர் ஒரு வெறும் தனிப்பட்டோர் அன்று, அவருக்குப்பின் அவரைத் தேர்ந்தெடுத்தவர்கள், அதாவது கணக்கற்ற ஆண்களும் பெண் களும் நிற்கின்றார்கள், இச்சத்தியாக்கிரகமானது அவர்கள் அனைவர் சார்பிலும் நடத்தப்படுகிறது, அவர் பேருக்கு மட்டும் தான் தனிப்பட்டார், உண்மையில் எல்லாருமே சத்தியாக்கிரகம் செய்கிறார்கள் என்பதைக் காட்டி வந்தோம். இக்காரணங்களால் முழக்கம் செய்வது கடுமையாகத் தடை செய்யப்பட்டது. அதோடு பிரதிநிதிகளைப் பொறுக்குவதும் மிகவும் கண்டிப்புடன் நடத்தப்பட்டது. சத்தியாக்கிரகத்தில் கட்டாயமாகச் சேருவார் களென்று எதிர்பார்க்கப்பட்டவர்கள் யாதேனும் காரணத்தால் சேர்ந்து கொள்ள இயலாமற் போனால், மனுக்கொடுத்து விடுதலை பெற்றுக் கொள்வார்கள்.

பீகாரில், என் உடல் நிலைமையில், நான் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்தால், என் நோயைக் கவனிக்கும் பொறுப்பை அரசாங்கத் தின் மீது சுமத்தியதாகும். இதனால் காந்திஜீ என்னைச் சேரா மல் தடுத்துவிட்டார். முதல் நாள் ஸ்ரீ ஸ்ரீபாபூவும், ஸ்ரீ அனுக் கிரக பாபூவும் பட்னாவில், இரண்டு வெவ்வேறு இடங்களில் ஒருவருக்குப் பின் மற்றொருவர் சிறிது நேரத்திற்குப் பின்னால் சத்தியாக்கிரகம் செய்வதென்பதாக நிச்சயிக்கப்பட்டு, அதன்படி சத்தியாக்கிரகம் செய்வதற்காக ஸ்ரீபாபூ பாங்கிபூர் வெட்ட வெளியை அடைந்தபோது, அங்கு நிறையப்பேர் கூடிவிட்டார்கள். அவர்களுள் மாணவர்கள் தாம் அதிகமாக இருந்தார்கள். அங்கு ஏதோ கலவரம் நடந்தது. அது, ஸ்ரீ பாபூவைக் கைது செய்து கொண்டு போகப்பட்ட சிறைச்சாலை வாயில்வரை தொடர்ந்து நடந்து வந்தது. இத் துவக்கம் காந்திஜீ அளித்த புத்திமதிக்கு முரணாக நடந்ததென்பதையும், இதை இப்படியே விட்டுவிட்டால் பிறகு இதைச் சமாளிப்பது கடினமாகிவிடுமென்பதையும், நம் மவர்களே ஒழுக்க நெறியைச் சின்னாபின்னமாக்கிவிடுவார்களென் பதையும் உணர்ந்தேன். இதை மனத்திற்கொண்டு, மக்கள் சத்தியாக்கிரகத்தின் உட்கோளை முற்றிலும் புரிந்து கொள்ளாத வரையிலும், மேலும் காந்திஜீயின் கட்டளைப்படி எழுத்துக்கு

எழுத்து எல்லா விஷயங்களையும் செய்யத் தயாராக இல்லாத வரையிலும் நான் அனுக்கிரக பாபூவின் சத்தியாக்கிரகத்தையும் மேலும் மாகாண முழுவதின் சத்தியாக்கிரகத்தையும் நிறுத்தி விட்டேன். இச்செய்தி மாகாணமெங்கும் பரவியது. இவ்வித மான காரியங்களைச் செய்வதற்கு இடங்கொடுக்கப்படாதென் பதை மக்கள் புரிந்து கொண்டார்கள். அடுத்த நாளே மக்கள் என்னிடம் வந்து இனி இப்படிப்பட்டத் தவறு நடக்கவிட மாட்டோமென்பதாகவும், மாகாண முழுவதும் சத்தியாக்கிரகம் நிறுத்தப்பட்டுப் போனல் மாகாணத்திற்குக் கெட்ட பெயர் வருமென்பதாகவும் தெரிவித்துக் கொண்டார்கள். சூழ்நிலை மாறி விட்டதை நான் கண்டு, இரண்டு நாட்களுக்குப் பிறகு மீண்டும் அனுமதி அளித்துவிட்டேன். இதன் பலனாக மாகாணமெங்கும் காந்திஜீ விரும்பியவாறே முற்றிலும் அமைதியுடன் சத்தியாக் கிரகம் நடந்து வந்தது.

முதல் மந்திரியுடன் (ஸ்ரீ பாபூ) தொடங்கி, அசெம்பிளி கவுன்ஸில் ஆகியவற்றின் அங்கத்தினர் பெரும்பாலோர், ஜில்லா போர்டுகள் முனிசிபால்டிகளின் அங்கத்தினர்கள் அநேகர், காங் கிரஸ் குழுக்களின் பதவியாளர்கள் பலர் என எத்தனையோ ஆயிரம் பேர் சத்தியாக்கிரகம் செய்து சிறைக்குச் சென்றுர்கள். அநேகமாக எல்லாருக்கும் ஓராண்டு தண்டனை அளிக்கும் கொள்கையை அரசாங்கம் பின்பற்றி வந்தது. இவர்களில் அநேகமாக எல்லாருக்கும் மூன்று மாத தண்டனை மன்னிக்கப் பட்டு விட்டது. இதைச் சிறைச்சாலை பாஷையில் 'மார்க்கு' என்பார்கள். அநேகமாக எல்லாரும் தண்டனை விதிக்கப்பட்டதி லிருந்து ஒன்பது மாதங்களுக்குப் பின் விட்டுவிடப் பட்டார்கள். நான் மட்டும் வெளியில் இருந்துவிட்டேன். என் பொழுதைப் பெரும்பாலும் காந்திஜீயுடன், வர்தாவில் தங்கியே கழிக்க வேண்டி வந்தது. காங்கிரஸின் தலைவர் சிறைக்குச் சென்றுவிட்ட பின், அமைச்சர் கிருபாளானீஜீ வெளியே இருக்க வைக்கப்பட்டு விட்டாராயினும், காங்கிரஸ் அமைப்பின் சுமை முழுவதும் ஒரு விதத்தில் காந்திஜீயின் மீதே வந்து சேர்ந்ததென்பது இதற்கு ஒரு காரணம். அந்த வேலைக்குத் துணையாயிருப்பதற்காக காந்தீஜீயானவர் அமைச்சர் ஆசார்யா கிருபாளானீஜீயையும் என்னையும் (சிறைக்கு) வெளியே இருக்கும்படி கேட்டுக் கொண் டார். நாங்கள் அப்படியே செய்தோம்.

காங்கிரஸ்காரர்கள் மந்திரி பதவியை விட்டு விட்டார்கள். அதன் மேல், எங்கெங்கு முதலில் காங்கிரஸ் மந்திரி சபைகள்

இருந்தனவோ அங்கெல்லாம் 93ஆம் பிரிவின்படி கவர்னர் ஆட்சி புரிந்து வந்தார். காங்கிரஸ்காரர்கள் மீண்டும் திரும்பி வருவார்கள் என்று அவர் சில நாட்கள் வரையில் வழியைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஆனல் அதற்கு யாதும் நம்பிக்கை தென்படாததும், அசெம்பிளி முதலியவற்றின் அங்கத்தினர்களுக்குக் கிடைத்து வந்த சம்பளத்தை அவர் நிறுத்தி விட்டார். அசெம்பிளியின் சபாநாயகருடன் பீயூன் முதலியவர்களும் நீக்கப்படாவிட்டாலும், மேலும் அவர்கள் ஏதோ வேலை புரிந்து வந்த போதிலும், அவர்களுடைய சம்பளமும் நிறுத்தப்பட்டுப் போயிற்று. காங்கிரஸானது ஜில்லா போர்டுகளிலிருந்தும் முனிசிபால்டிகளிலிருந்தும் காங்கிரஸ்காரர்களை விலகும்படி கட்டளை இடவில்லை. பல இடங்களில் காங்கிரஸ்காரர்கள் இவற்றிற்குத் தலைவர்களாகவும் உப தலைவர்களாகவும் இருந்தார்கள். இவற்றின் பணியை எல்லாக் காங்கிரஸ்காரர்களும் கூடிப் புரிந்து வந்தார்கள். சத்தியாக்கிரகத்தின் காரணமாக நல்ல அங்கத்தினர்கள் விலகியதும் அதை முறையற்ற வழியில் பயன்படுத்திக்கொண்டு சிலர் அவ்விடங்களைப் பற்றிக் கொண்டதையும் கண்டோம். நாங்களும் ஒரு தவறு செய்து விட்டோம். எங்களுடைய சேர்மன் முதலானேர் சத்தியாக்கிரகத்துக்கு சென்று விட்டதால் காலியான இடங்களை எங்களுடைய ஒழுக்க நெறியை ஏற்றுக் கொள்வார்களென்று எதிர்பார்க்கப் பட்டவர்களைக் கொண்டு நிரப்பலாமென்று அனுமதி அளித்துவிட்டோம். சிற்சில இடங்களில் புதிய தேர்தல்களும் நடந்தன. அந்த இடங்களுக்கு வெளிப்படையாக இல்லாவிட்டாலும் மறைமுகமாக காங்கிரஸ்காரர்களே வந்துவிட்டார்கள். இதனல் என்ன ஆயிற்றென்ருல் இந்த போர்டுகளின் மீது எவ்விதமாகத் தேவையோ அவ்விதமாகக் காங்கிரஸின் ஒழுங்குக் கட்டுப்பாட்டைச் செலுத்த முடியவில்லை. பலவிதமான குற்றச் சாட்டுக்களும் காதுக்கு எட்டின. காங்கிரஸுக்கு உள்ளே இருந்த கட்சிப் பிரிவினைகளும் இப்போது வெளிப்படையாகக் கிளம்பிவிட்டன. இவ்விதமாக, காங்கிரஸுக்குக் கெட்ட பெயர் வரத் தொடங்கியது.

என்னுடைய மாகாணத்தின் பொறுப்பு அனைத்தும் என் மீதே இருந்தது. நான் பெரும்பாலும் வர்தாவிலேயே இருந்ததால் அதிகமாக ஒன்றும் செய்ய இயலவில்லை. இதனல் காலத்தைக் கடத்தும் நோக்கத்துடன் ஒரு சிறிய குழுவை அமைத்தேன். அதனிடம் இந்தப் போர்டுகளை மேற்பார்வை செய்யும் வேலையை ஒப்படைத்தேன். பெரும் முயற்சி செய்தும் கூட

நிலைமை திருந்தவில்லை யென்பதாக ஐயப்படுகிறேன். பீகாரில் இந்தப் போர்டுகள் எல்லாவற்றிலிருந்தும் காங்கிரஸ்காரர்கள் விலகி விடுவதே நலமாகுமென முடிவு செய்தேன். ஆயினும் இந்த முடிவுக்கு வந்த சில நாட்களுக்குப் பிறகு மாகாணத்தின் முக்கிய மனிதர்கள் விடுதலையாகும் காலம் வந்துவிட்டது. இத ஞல் அவர்களுடைய அபிப்பிராயத்தையும் கேட்டறிவது நியாய மென நினைத்து இம்முடிவை அவர்கள் விடுதலை யடையும் வரை யில் தள்ளிப் போட்டு வைத்தேன். அவர்கள் விடுதலை பெற்ற பின் அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு எல்லா காங்கிரஸ்காரர்களையும் ஜில்லா போர்டுகளிலிருந்தும் முனிசிபால்டிகளிலிருந்தும் விலகும்படி கட்டளை யிட்டேன். அதற்குப் பிறகுதான் நான், உடல் நிலைமை கேடுற்ற காரணத் தால் வர்தாவுக்குப் போனேன். பெரும்பாலோர் கட்டளையை நிறைவேற்றினுர்களென்பதாகவும் ஆயினும் சிலர் அதை ஏற்கவே யில்லை யென்பதாகவும் அங்கே செய்தி கிடைத்தது. அப்படிப் பட்டவர்களின் எண்ணிக்கை பெரிதன்று. ஜில்லாக் குழுக்களும் மாகாணக் குழுவும் அப்படிப்பட்டவர்கள் மீது ஒழுங்கு நெறி நட வடிக்கை எடுத்தன. பலர் காங்கிரஸிலிருந்து தள்ளப்பட்டார் கள். இவை அனைத்தும் 1941 நவம்பர்–டிசம்பரில் நடந்த விஷ யங்களாகும். 1940 நவம்பரிலிருந்து 1941இன் நடுவு வரையில் வேறு விஷயங்களும் நிகழ்ந்தன. அவற்றைப் பற்றியும் கூறு வது பொருத்தமாகும்.

## 141. மைசூர் யாத்திரை

அந்த நாட்களில் பெரும்பாலும் என் பொழுதை வர்தாவி லேயே கழித்து வந்தேன். நான் அங்கிருந்தபோது மைசூர் காங்கிரஸைச் சேர்ந்தவரான ஸ்ரீ தாசப்பா வர்தாவுக்கு வந்தார். தங்களுடைய ஆண்டு விழாவை நடத்த விரும்புவதாகவும் அதற்கு நான் வரவேண்டு மென்பதாகவும் அவர் மகாத்மாஜீ யிடம் கூறினுர். அவ்விழாவைத் திறந்து வைக்கும் வேலை என் பொறுப்பில் விடப்பட்டது. மகாத்மாஜீ, அவர் கோரிக்கையை ஏற்றுக் கொண்டார். அங்குச் செல்லும்படி எனக்கு உத்தரவு கிடைத்தது. அம்மகாநாடு ஹரிஹர் என்ற ஓரிடத்தில் துங்க

பத்ரா நதிக் கரையில் நடந்தது. அதன் காட்சி மிகவும் அழகா யிருந்தது. மக்களிடையில் நிறைய உற்சாகம் நிலவியது. மகா நாடு, கண்காட்சி முதலிய வேலைகளை மட்டுமன்றி மைசூரிலுள்ள சில அழகியனவும் பழைய சரித்திரத் தொடர்பால் பெருமை வாய்ந்தனவுமான இடங்களையும் எனக்கு ஸ்ரீ தாசப்பா காட்ட விரும்பினர். நானும் அவற்றைப் பார்க்க விரும்பினேன். அங் குச் செல்வதற்கு முன்னமே இதைப்பற்றி ஸ்ரீ தாசப்பாவிடம் பேசி முடித்து விட்டேன். அவர் அதற்கு வேண்டிய வேலைத் திட்டத்தை அமைத்து விட்டார். பங்களூருக்கும், மைசூருக்கும் மட்டுமின்றி, ஜைன கால, ஹிந்து கால கட்டட அமைப்புக் கலைக்கு நல்ல நல்ல மாதிரிகளாக விளங்கும் பழைய கோவில்களை யும் பார்க்கச் சென்றேன். சிரவண பெலகோலாவின் காட்சியும், ஹலேபீடின் காட்சியும் மிகவும் அற்புதமானவை. உலகத்தையே வியப்படையச் செய்யும் இந்த இடங்களை ஒருவன் பார்க்காவிட் டால் மனிதனுடைய கைத்திறத்தின் தலைசிறந்த மாதிரிகளைப் பார்க்காமல் விட்டதாகும். பாஹுபலீயின் 57 அடி உயரமுள்ள மாபெரும் சிலை ஒரு மலையின் உச்சியில் மலையையே வெட்டிச் செதுக்கி அமைக்கப் பட்டிருக்கிறது. அது நெடுந் தொலைவி லிருந்தே, சுமார் 20–25 கல் தொலைவிலிருந்தே, கண்ணில் படும். இவ்வளவு பெரிய சிலையைத் தனியாக எங்கோ செய்துகொண்டு வந்து அங்கு உச்சியில் வைக்கவில்லை. அந்த மலையின் உயர்ந்த சிகரத்தையே செதுக்கி அது உண்டாக்கப் பட்டிருக்கிறது. இதுவே அதன் பெருமை. அதன் நாலாபுறத்திலும் மலை யைத் தகர்த்து சமமாக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் தொலைவி லிருந்து பார்த்தாலும் சரி, அல்லது சமீபத்தில் பார்த்தாலும் சரி, சிலையின் அங்கங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று ஒரே சீரான அளவில் இருப்பது புலப்படும். எங்கும் எவ்வித குற்றங் குறையையும் காண முடியாது. ஒவ்வொரு அங்க மும், கால் விரல்கள் முதற்கொண்டு காது, மூக்கு வரையில் தத்தம் இடத்தில் பொருத்தமான அளவில் அமைக்கப்பட்டிருப் பதைக் காணலாம். இது ஜைனர்களுக்கு ஒரு மாபெரும் புண் ணிய தலம். இந்தியா முழுவதிலிருந்து ஜைனர்கள் தரிசனத் திற்காக இங்கு வருகிறார்கள்.

ஹலேபீடில் நுணுக்கமான வேலைப்பாட்டிற்கே எல்லையாக அமைந்திருக்கும் கட்டட மாதிரிகளைக் கண்டேன். அங்குள்ள கோயில்களில் புராணக் கதைகள் சிலை வேலைப்பாட்டால் விளக் கப்பட்டிருக்கின்றன. அந்த உருவங்கள் அதிமிக அழகாகவும்

பார்ப்பதற்கு மனத்திற்கு இனிமையாகவும் இருக்கின்றன. பதினைந்து இருபது அடி உயரத்தில் ஒரு சிலை அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஏதோ பழமோ, பூவோ காட்டப்பட்டிருந்தது. அதன் மீது ஒரு தேனீ உட்கார்ந்திருந்தது. கீழேயிருந்து பார்த்தால் உண்மையாகவே தேனீ உட்கார்ந்திருப்பது போலவே தோன்றியது. அதற்குக் கால்களும் சிறகுகளும் கூட இருந்தன. ஆனால் உண்மையில் பழமோ, பூவோ செதுக்கப்பட்டிருந்த அதே கல்லில் அவ்விதமாகவே தேனீயும் செதுக்கப்பட்டிருந்தது. தனியாகச் செய்யப்பட்டு அங்கு வைக்கப்படவில்லை. கல்லால் செய்யப்பட்ட சங்கிலிகள் அங்குள்ள கோயில்களில் பல இடங்களில் காணப்படுகின்றன. ஏதாவதொரு உலோகத்தில் சங்கிலி செய்வதே கடினம். ஏனெனில் அதன் ஒவ்வொரு வளையத்தையும் தனித் தனியாகச் செய்துகொண்டு ஒன்றை ஒன்றில் கோர்த்துப் பிறகு வாயை நெருக்கிச் சேர்த்தோ அல்லது சூடேற்றியோ இடைவெளி யில்லாமல் செய்ய வேண்டும். ஆனால் கல் சங்கிலியில் அப்படிச் செய்ய இயலாது. அதன் வளையங்களைத் தனித் தனியாகத் தயார் செய்ய இயலாது. ஒரே கல்லில் இருந்து நீண்ட துண்டை வெட்டி எடுத்துக் கொண்டு ஒன்றோடு ஒன்று கோர்க்கப்பட்ட வளையங்களைச் செய்ய வேண்டும். வேலை மிகவும் கடினமானது. ஏனெனில் எங்காவது சிற்றுளியோ அல்லது வெட்டிரும்போ பலமாகப்பட்டு வளையம் உடைந்துவிட்டால் சங்கிலி முழுவதுமே சிதறிப் போய் வீணாகிவிடும். மற்றக் கோவில்களிலும் நான் சங்கிலிகளைப் பார்த்தேன். ஆனால் அவை அளவில் பெரியன. ஹலேபீடில் சிறிது உயரத்தில் இருந்த சிலை ஒன்றைப் பார்த்தேன். அது ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. எல்லா அணிகலன்களும் அச்சிலை செதுக்கப்பட்டிருந்த அதே கற்துண்டிலேயே செதுக்கப்பட்டிருந்தன. அச்சிலை ஒரு சிறிய புல்லாக்கோ பேசரியோ அணிந்திருந்தது. அதுவும் கல்லால் செய்யப்பட்டிருந்தது. மிகச் சிறியதாய், மூக்கில் ஒரு துவாரத்திலிருந்து ஆடிக்கொண்டிருந்தது. மூக்கில் அணிவித்திருந்த வாளியும் மிகவும் நுண்ணியதாக இருந்தது. மூக்கில் நாலாபக்கமும் சுழற்றக் கூடியதாக அமைந்திருந்தது. மூக்குத் துளைகளின் அகலம் அரை அங்குலத்திற்கு மேலிருக்காது. அதிலிருந்து மூக்கில் குத்தப்பட்டிருந்த துவாரத்தின் அகலத்தை அனுமானித்துக் கொள்ளலாம். பேரளவுக்கும் நுணுக்கத்துக்கும் இரண்டிற்கும் அழகிலும் அழகான மாதிரிகளின் விவரங்களைப் படித்துவிட்டு அங்குச் சிறிதளவுக்குள்

ளேயே எத்தனே கலே வகைகளேயும் கலேவல்லாரின் சிருஷ்டியின் மாதிரிகளேயும் காணலாம் என்பதை உணர்ந்து கொள்ளலாம். இவ்விதமாகக் கற்களில் பெரிதும் நுட்பமுமாகச் செய்யப்பட்ட வேலேயின் மாதிரிகளே அஜந்தாவிலும் எல்லோராவிலும் காண லாம். அஜந்தாவில் சித்திரக் கலேயின் அற்புத வளர்ச்சியைக் காணலாம். எல்லோராவில் கல்லேக் குடைந்து செய்யப்பட்ட கோவில்களே அமைக்கும் கலேத்திறத்தின் மாதிரிகளும் அழகாக வும் நுண்ணியதாகவும் சிலேகளே அமைக்கும் கலேயின் அதி வியப்பான மாதிரிகளும் காணக் கிடைக்கும்.

மூன்ருவது அற்புதக் காட்சி இயற்கையின் எழிலாகும். அதுதான் கிரிஸப்பாவின் நீர்வீழ்ச்சி. பிரிட்டிஷ், மைசூர் அர சாங்கங்களின் எல்லேகள் சேரும் இடத்தில் அது இருக்கிறது. ஏறக்குறைய ஓராயிரம் அடி உயரத்திலிருந்து நீர் விழுகிறது. அதன் ஒரு புறத்தை பிரிட்டிஷ் ராஜ்யத்தின் ஒரு கோடியிலிருந் தும், மற்ருெரு புறத்தை மைசூர் ராஜ்யத்தின் ஒரு கோடியிலிருந் தும் பார்க்கலாம். ஆயினும் மைசூர் ராஜ்யத்திலிருந்து பார்த் தால் காட்சி மிகவும் அழகாகவும் இனிமையாகவும் இருக்கும். அங்குத் தங்குவதற்கும், தங்கியிருந்து காட்சியைக் கண்டு களிப் பதற்கும் மைசூர் ராஜ்யத்தார் நல்ல இடம் அமைத்திருக்கிருர்கள். நான் அங்குச் சிறிது நேரம் அமர்ந்து இயற்கையின் எழிலேப் பார்த்துக் கொண்டிருந்தேன். அந்நாட்களில் அங்கிருந்து மின் சாரத்தை உற்பத்தி செய்வதற்காகத் தொழிற்சாலேயையும் நெடுந் தொலேவுக்கு மின்சாரத்தைக் கொண்டு போய்ச் சேர்ப்ப தற்காக வேண்டிய ஏற்பாடுகளேயும் அமைத்துக் கொண்டிருந் தார்கள். அங்கிருந்து பல கல் தொலேவு வரையில் நிறையத் தொழிலாளிகள் வேலே செய்து கொண்டிருப்பதைப் பார்த்தேன். இந்த இயற்கையின் எழிலே மனிதனின் பலாத்காரம் ஏதாவது கெடுத்ததோ என்பதும், அதன் அழகு இன்றும் அப்படியே இருக்கிறதா இல்லேயா என்பதும் தெரியாது.

## 142. பிகார்-ஷரீப் கலகம்

பட்ணுவுக்குத் திரும்பி வந்து சில நாட்கள் இருந்துவிட்டு மீண்டும் வர்தாவுக்குச் சென்றுவிட்டேன். நான் பட்ணுவிலிருந்து என்று புறப்பட இருந்தேஞே அதே நாள் இரவில், பீகார்-ஷரீபில் ஹிந்துக்களுக்கும் முசல்மானியர்களுக்கும் இடையில் சச்சரவு மூண்டு விட்டதாகக் கேள்விப்பட்டேன். ஆயினும் இது ஒரு பெரிய விஷயமென்ருவது இதனுல் பயங்கரமான கொலேகள் விளேயுமென்ருவது அப்போது புலப்படவில்லே. வர்தாவுக்குப் போய்ச் சேர்ந்து ஒரு நாளேக்குப்பின் செய்தித் தாள்கள் மூலமாக வும் பிறகு கிடைத்த தந்தி மூலமாகவும் பீகாரில் பயங்கரமான கலகம் விளேந்து விட்டதாகத் தெரிய வந்தது. இந்த நிலேமை யில், நான் உடனே பீகாருக்குச் செல்ல வேண்டு மென்பதாக காந்திஜீ கருதினுர். நானும் அவ்விதமே எண்ணினேன். நான் அடுத்த வண்டியிலேயே புறப்பட்டுவிட்டேன். பட்ணுவுக்கு வந்து சேர்ந்ததும், ஷா முகம்மது உஜைர் முனீமீயும் மதுரா பாபூவும் பல நாட்களாக பீகார் ஷரீபிலேயே இருக்கிருர்கள் என்பதும் அங்குள்ள நிலேமை மிகவும் மோசமாகிவிட்டதென்பதும், எத் தனேயோ ஹிந்துக்களும் முசல்மானியர்களும் கொல்லப்பட்டு விட்டார்கள் என்பதும், மேலும் கலகமானது முதலில் தொடங்கிய பீகார் ஷரீப் நகரத்தோடு நிற்காமல் கிராமங்களிலும் பரவிக்கொண் டிருக்கிறதென்பதும் தெரிய வந்தன. 1919இல் இதேபோல ஷாகா பாதைச் சேர்ந்த பீரோ என்ற கிராமம் ஒன்றில் கலகம் ஆரம் பித்து அந்த ஜில்லா மட்டுமன்றி அக்கம்பக்கத்திலுள்ள ஜில்லாக் களின் சில பகுதிகளிலும் பரவி விட்டதென்பது எனக்கு நினே விருந்தது. இதனுல் நான் மேலும் அஞ்சினேன். வெளியூருக்குச் சென்றிருந்த பேராசிரியர் அப்துல் பாரீயும் தற்செயலாக அன்றே பட்ணுவுக்குத் திரும்பி வந்தார். நாங்கள் மோட்டார்களேயும் லாரி களேயும் அமர்த்திக் கொண்டு அவற்றில் பீகார் வித்யா பீடத்தின் ஆசிரியர்களேயும் மாணவர்களேயும், மேலும் மற்றச் செயலாளர் களேயும் ஏற்றிக் கொண்டு அன்றே பீகார் ஷரீபை நோக்கிப் புறப் பட்டோம். அங்குப் போய்ச் சேர்ந்து ஷா உஜைர் முனீமீயையும், மதுரா பாபூவையும் கண்டதும் நிலேமை முழுவதும் தெரிய வந்தது. நிறைய கொலேகள் நடந்து விட்டன. ஆயினும் இப் போது நிலேமை சிறிது திருந்திவிட்டது. அரசாங்கத்தாரும்

நிறையப் போலீஸ் ஏற்பாடுகள் செய்து விட்டார்கள். ஜில்லா மாஜிஸ்டிரேட்டும், மதுரா பாபூவும் தம் உயிரைப் பணயம் வைத்துக் கலகம் எங்கெங்கு நிகழ்ந்ததோ அங்கெல்லாம் சென்று கலகத்தைத் தடுத்து நிறுத்தி வந்தார்கள். சில இடங்களில் கலகம் நடந்து முடிந்தபின் போய்ச் சேருவார்கள். அங்குப் பிணங்களைத் தாமே எடுத்துச் சுமந்து எங்கு அனுப்ப வேண்டுமோ அங்கு அனுப்பி வைப்பார்கள்.

நாங்கள் போய்ச் சேர்ந்ததுமே தீய செய்திகள் வந்து கொண்டிருந்த நாலா பக்கத்துக் கிராமங்களுக்கும் விரைந்து சென்றோம். மக்களுக்குத் தைரியம் ஊட்டுவதிலும், தவறான வதந்திகள் பரவுவதை நிறுத்துவதிலும், அமைதியை நிலைநாட்டுவதிலும் எல்லாரும் ஈடுபட்டோம். மூன்று நான்கு நாட்களுக்குள் நிலைமை மிகவும் திருந்திவிட்டது. அங்கேயே மாகாண முஸ்லிம் லீகின் தலைவரான கான் பகாதூர் முகம்மது சையது இஸ்மாயிலுடன் பேச்சு நடந்தது. நாங்கள் இருவருமாக பட்னுவுக்கு ஒருநாள் வந்தோம். அங்கு ஒரு பொதுக் கூட்டத்தில் நாங்கள் இருவரும் பேசினோம். நான் மீண்டும் பீகார் ஷரீபுக்குச் சென்றுவிட்டேன். சில நாட்கள் வரையில் அங்குத் தங்கி எங்கெங்குக் கொள்ளையும் கொலையும் நிகழ்ந்தனவோ ஆங்காங்குச் சென்று மக்களைச் சந்தித்து அவர்களை அமைதிப் படுத்தினேன். நான் கண்ட காட்சி மிகவும் பயங்கரமாகவும் திடுக்கிடச் செய்வதாகவும் இருந்தது. ஹிந்து முசல்மானியர்கள் இப்படிப்பட்ட சண்டையில் இறங்கி விட்டால் அறத்தையும் மனிதத் தன்மையும் மறந்து விடுகிறார்கள். அவர்களுக்கு ஒருவர் ஒருவரின் ரத்தத்தைக் குடிக்க வேட்கை உண்டாகி விடுகிறது. இந்தக் கலகத்தில் ஹிந்துக்கள் முசல்மானியர்கள் இருவருமே கொல்லப்பட்டார்கள். ஆயினும் முசல்மானியர்களின் எண்ணிக்கைதான் அதிகம். இந்தக் கலகம் நிறுத்தப் படாதிருந்திருக்குமானால் நிலைமை மேலும் பயங்கரமாகப் போயிருக்கும். அமைதி நிலைநாட்டப்பட்டபின் நான் வர்தாவுக்குத் திரும்பிவிட்டேன்.

அங்கு நான் மற்றொரு வேலையை ஏற்றிருந்தேன். அல்லது அந்த வேலை என்மீது சுமத்தப்பட்டதென்று கூறுவது பொருத்தமாகும். சிந்தியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி இந்தியர்களின் கப்பல் கம்பெனி. அதன் கப்பல்கள் பெரும்பாலும் பர்மாவுக்கும் இந்தியாவுக்குமாகவும், இந்தியாவின் கடற்கரையிலுள்ள துறைமுகங்களுக்குமே சாமான்களை ஏற்றிச் சென்று ஓடிக் கொண்டிருக்கின்றன. கப்பல் கட்டுவதற்கு ஒரு தொழிற்சாலையை அமைக்க

வேண்டுமென்பதாக அந்தக் கம்பெனி விரும்பியது. ஆந்திரா மாகாணத்திலுள்ள விசாகப்பட்டினத்தை அத் தொழிற்சாலைக்குத் தகுதியான இடமாக அக்கம்பெனி தேர்ந்தெடுத்தது. சேட் பால சந்திர ஹீராசந்தும், சேட் சாந்திகுமார் நரோத்தம் முரார்ஜீயும்தாம் அக்கம்பெனியின் டைரக்டர்களுள் தலைமையானவர்கள். நான் அத்தொழிற்சாலைக்கு அஸ்திவாரக்கல் நட வேண்டுமென்பதாக அவர்களுக்கு எண்ணம் எழுந்தது. அக்காலத்தில் நான் காந்திஜீயின் ஆணையின்றி யாதொரு காரியத்தையும் செய்வதில்லை. இதனால் அவர்கள் காந்திஜீயிடம் இதைக் கூறினார்கள். செல்லும்படி எனக்கு உத்தரவு கிடைத்தது. இந்தச் சந்தர்ப்பத்தினால் இந்திய கப்பல் வியாபாரத்தைப் பற்றி ஆழ்ந்து படிப்பதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. அந்த விழாவில் நான் ஆற்றிய சொற்பொழிவில் நம் சரித்திர வரலாற்றையும் நாம் இப்போதிருக்கும் நிலைமையையும் அரிமா நோக்கிட்டு விரிவாக எடுத்துரைத்தேன். கம்பெனியார் இந்த விழாவை மிகவும் சிறப்பாகக் கொண்டாடினார்கள். அதன் டைரக்டர்கள் அனைவரும் அங்கு வந்திருந்தார்கள். இந்தியா முழுவதிலிருந்தும் பல முக்கியமான மனிதர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். அரசாங்கத்தின் கப்பல் படை அதிகாரியும் வந்திருந்தார். மிக்க முழக்கத்துடன் இந்த விழா முடிவடைந்தது. அவர்கள் பொதுப் பணிக்காக எனக்கு ஏதோ பணமும் அளித்தார்கள். அதை நான் அவர்களுடைய விருப்பத்திற்கு இணங்க, அப்பணியில் ஈடுபட்டிருந்த கழகங்களுக்கு அளித்து விட்டேன்.

## 143. டாக்கா ஜில்லாக் கலக விசாரணை

விசாகப் பட்டினத்திற்கு அருகிலிருக்கும் வால்டேரிலிருந்து மதுரா பாபூவுடன் புறப்பட்டு டாக்காவுக்குப் போவதற்காகக் கல்கத்தா வந்து சேர்ந்தேன். வழியில் கட்டக்கில் சிறிது நேரம் தங்கினேன். டாக்காவிலும் பயங்கரமான ஹிந்து முஸ்லிம் கலகம் நிகழ்ந்து விட்டதே டாக்கா செல்வதற்குக் காரணம். நகரத்தில் ஆரம்பமாகிப் பல கிராமங்களுக்கும் பரவி விட்டது. கிராமம் கிராமமாகக் கொள்ளையடிக்கப்பட்டுக் கொளுத்தப்பட்டுப் போயின. டாக்காவில் கொலையும் நிறைய நடந்துவிட்டது. நான் போய்ச் சேர்ந்த அன்று நிலைமை அமைதியாக இருந்தது. அங்

குச் செல்வதற்கு முன் கல்கத்தாவில் அப்போது தலைமை மந்திரியாக இருந்த ஸ்ரீ பஜ்லுல் ஹக்கையும், சர் நாஜிமுத்தீனையும் கண்டு விட்டுச் சென்றேன். ஸ்ரீ பஜ்லுல் ஹக்கை நான் கல்கத்தா ஹைகோட்டில் வக்கீல் தொழில் புரிந்து கொண்டிருந்த சமயத்திலிருந்தே எனக்குத் தெரியும். சர் நாஜிமுத்தீனை வங்காளத்தின் சிறைகளில் உண்ணுவிரதம் செய்து கொண்டிருந்த அரசியல் கைதிகள் சம்பந்தமாக பேச்சு வார்த்தை நடத்துவதற்காகச் சந்தித்திருந்தேன்.

டாக்காவில் உள்ள முக்கிய மனிதர்களைச் சந்தித்தேன். ஹிந்துக்களுக்கு அதிகக் கொடுமை செய்யப்பட்டிருந்தது. அதனுல் அவர்கள் இயல்பாகவே கோபம் கொண்டிருந்தார்கள். முசல்மானியர்கள் என்னைச் சந்திப்பதற்காக அங்குள்ள நவாப் சாஹபின் மாளிகையில் தேநீர் விருந்து ஒன்று அளித்தார்கள். அங்கு எல்லாரோடும் பேச்சு நடந்தது. டாக்காவின் ஜில்லாக் குழுவின் தலைவரான பழமை காங்கிரஸ்காரர் ஸ்ரீ ஸ்ரீ சந்திர சட்டர்ஜீயின் வீட்டில் இறங்கியிருந்தேன். கொள்ளையடிக்கப்பட்டுக் கொளுத்தப்பட்டுப் போன கிராமங்களுக்குச் சென்று அவற்றைப் பார்த்தேன். அவை டாக்காவிலிருந்து சிறிது தொலைவில் தானிருந்தன. அவற்றின் தோற்றம் பயங்கரமாக இருந்தது. வங்காளத்தில் வீடுகள் பெரும்பாலும் மச்சுக் கட்டடங்கள் அல்ல. வைக்கோலாலோ தகரத்தாலோதான் கூரைகள் போட்டிருக்கும். சுவர்கள் மரக்கம்பங்களை நட்டு மூங்கில் தட்டிகளால் அடைத்து அமைக்கப்பட்டிருக்கும். நிலத்தின் ஈரம் சோராமல் இருப்பதற்காக வீட்டின் தளம் சில இடங்களில் சிமெண்டால் போடப்பட்டிருக்கும். எரிந்துபோன மரக் கம்பங்களின் துண்டுகள் அல்லது சிமெண்டு தரையைவிட வேறு எந்த அடையாளமும் காணக் கிடைக்காத கிராமங்களையும் நான் கண்டேன். பீகார்-ஷரீபைவிட நிலைமை மோசமாயிருந்தது. ஆயினும் டாக்கா ஜில்லாவை அத்துடன் எவ்விதத்திலும் ஒப்பிட முடியாது. பீகாரில் ஹிந்துக்களின் ஜனத்தொகை அதிகம். அங்கு முசல்மானியர்கள்தாம் அதிகமாகக் கொல்லப்பட்டார்கள். அல்லது கொள்ளையடிக்கப்பட்டார்கள். டாக்காவில் முசல்மானியர்களின் ஜனத்தொகை அதிகம். அங்கு ஹிந்துக்கள்தாம் அதிகமாகக் கொல்லப்பட்டார்கள் அல்லது கொள்ளையடிக்கப்பட்டார்கள். ஆனுல் டாக்காவில் எவ்விதமாகக் கொள்ளையும் கொளுத்துதலும் நடந்தனவோ அத்துடன் பீகாரில் நடந்ததை எவ்விதமும் ஒப்பிட முடியாது.

இரண்டு மூன்று நாட்கள் அக்கிராமங்களில் சுற்றித் திரிந்து

பார்த்தபின் டாக்காவுக்குத் திரும்பி வந்தேன். கிராமங்களைச் சுற்றித் திரிந்து வரும்போது இரண்டு கிராமங்களில் எங்கள் கிராமமாகிய ஜீராதேயீயைச் சேர்ந்த ஆட்கள் இருவரைச் சந்தித்தேன். அவர்கள் அங்கு வேலையைத் தேடிக் கொண்டு வந்திருந்தார்கள். பல பீகாரிகளைப் போலவே இவர்களும் இங்கு ஏதாவது சம்பாதித்துக் கொண்டு பீகாருக்குப் போய் வந்து கொண்டிருந்தார்கள். ஆசாமுக்குச் சென்றபோது அங்குச் சாரன் ஜில்லாவைச் சேர்ந்த ஆட்களை எப்படிக் கண்டேனே அதைப் போலவே வங்காளத்தின் கிராமங்களிலும் எங்கள் மாகாணத்தின் மக்கள் பரவி விட்டார்கள் என்பதைக் கண்டு வியப்புற்றேன். பீகாரில் படித்தவர்களிடம் காணப்படாத துணிச்சலும் விடா முயற்சியும் பீகாரின் ஏழை மக்களுக்கு இருக்கின்றன. படிப்பாளிகள் மாகாணத்துக்கு வெளியே குறைவாகவே காணக் கிடைப்பார்கள், ஆனால் படிப்பில்லாத தொழிலாளிகளை ஒரு புறம் பம்பாயில் கூட்டமாகச் சந்தித்தேன். மற்றொரு புறத்தில் பர்மா, வங்காளம், ஆசாம் ஆகிய இடங்களிலும் பரவியிருப்பதைக் கண்டேன். ஆங்கிலக் கல்வியானது எங்கள் மாகாணத்து ஆட்களை பயங்கொள்ளிகளாகவும், கையாலாகாதவர்களாகவும் அடித்து விட்டதோ!

இது சம்பந்தமாக மற்றொரு விஷயம் நினைவிற்கு வருகிறது. இந்த ஏழைப் பாமரர்கள் தொலைவிலுள்ள பர்மா, வங்காளம், ஆசாம் முதலிய இடங்களுக்குச் சென்று கூலி வேலை செய்கிறார்கள். நிலத்தை உழுது பயிரிடுகிறார்கள், பயிர் முதிர்ந்தபின் அறுவடை செய்து கொடுக்கிறார்கள், பல்லக்குத் தூக்குகிறார்கள். மண் வெட்டும் வேலையில் இவர்களுடைய கொடிதான் பறக்கிறதென்று கூறலாம். கிராமங்களில் குளங்கள் வெட்டுதல், கிணறு கட்டுதல், வீடு கட்டுதல் முதலிய தேவையான வேலைகள் எத்தனை உளவோ அவை அனைத்தையும் செய்கிறார்கள். பணக்காரர்கள் வீடுகளில் வேலை செய்கிறார்கள். சேவகம், காவல் புரிதல் இரண்டு வேலைகளும் பெரும்பாலும் இவர்கள் கையில்தாமிருக்கின்றன. இவ்வண்ணமாக வங்காளம், ஆசாம் முதலியவற்றிலிருந்து பீகார் கிராமங்களுக்கு நிறைய பணம் வருகிறது, முக்கியமாக சாரன் ஜில்லாவுக்கு வருகிறது. ஜீராதேயீ கிராமத்தின் தபால் ஆபிஸில், சம்பாதிக்கிறவர்கள் வெளியே சென்றிருக்கும்போது, அநேகமாக ஒவ்வொரு வாரமும் நாலைந்தாயிரம் ரூபாய்க்கு மணியார்டர்கள் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும். இவ்விதமாகப் பீகார் கிரா

ழங்களில் வெளியிருந்து சுமார் 5 கோடி ரூபாய் ஆண்டு தோறும் வருவதாகக் கணக்கிட்டுக் கூறுகிறார்கள். பீகாரிகள் இவ்வளவு பணத்தை வங்காளத்திலிருந்து கொண்டு வரும்போது, வங்காளிகள் பீகாருக்கு வந்து பெரும் செல்வத்தைத் திரட்டிக் கொண்டு போய் விடுகிறார்கள் என்பதாக பீகார்காரர்கள் குறை கூறுகிறார்களே என்று சில வங்காளித் தோழர்கள் கூறுகிறார்கள். பீகாரிகள், முக்கியமாக, வங்காளிகளோடு அரசாங்க அலுவலகங்களிலும் கோர்ட்டுகளிலும் போட்டி போட வேண்டிய படிப்பாளிகளான பீகாரிகள், இதைப்பற்றிக் குறை கூறுகிறார்கள் என்பது உண்மை தான். அரசாங்க அலுவலங்களில் வேலை செய்யும் குமாஸ்தா, ராஜ சமஸ்தானங்களில் வேலை செய்யும் பாபூ, கல்லூரிகள், பள்ளிக் கூடங்கள் ஆகியவற்றின் ஆசிரியர்கள், வக்கீல், டாக்டர் முதலானோர் இவ்விதமாகப் பீகாரிலிருந்து எவ்வளவு எடுத்துச் செல்கிறார்கள் என்பது தெரியாது. ஏனெனில் இவர்களுடைய பணம் ஏழைகளுடையதைப் போல சின்னஞ் சிறிய மணியார்டர்கள் மூலம் செல்வதில்லை. கணக்குப் போட்டுப் பார்த்தால், பீகார் லாபமடைந்ததாகத் தெரிய வருமா அல்லது வங்காளமா என்று கூறுவது கடினம். ஆனால் ஒன்று மட்டும் தெளிவாயிருக்கிறது. பீகார் மக்கள் வங்காளத்துக்குச் சென்று அங்குள்ளவர்கள் தம் வாழ்க்கையை நடத்துவதற்கு இன்றியமையாத மிகத் தேவையான வேலைகளைப் புரிகிறார்கள். அவை தேவையென்பதை வங்காளி நண்பர்கள் உணர்கிறார்கள். ஆனால் பீகாரிலோ வங்காளிகள் வேறு விதமான வேலைகளைச் செய்கிறார்கள். அந்த வேலைகளுக்கு வங்காளிகள் வராவிட்டால் பீகாரிகளுக்கு ஒன்றும் நஷ்டமாகி விடாதென்பதாகவும், மேலும் தாமே அந்த வேலைகள் எல்லாவற்றையும் சமாளிக்கக் கூடுமென்பதாகவும் படிப்பாளிகளான பீகாரிகள் கூறுகிறார்கள். அது மட்டுமன்றி, நூற்றுக் கணக்கான பீகாரிகள் உள்ளங் காலிலிருந்து உச்சந் தலை வரையில் வியர்வை கொட்டக் கொட்டப் பாடுபட்டு, மலேரியாவுக்கு இரையாகி எத்தனை சம்பாதிக்கிறார்களோ அத்தனையை, ஒரு வங்காளி அதிகாரப் பதவி நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு சிரமமின்றி சம்பாதித்து விடுகிறார். எது எப்படியாயினும் சரி, இவ்விதமான மனஸ்தாபம் நெடுங்காலமாக இருந்து வருகிறது. உத்தியோகம் செய்து ஜீவனம் செய்பவர்களிடையில் வங்காளிகளுக்கும் பீகாரிகளுக்கும் நிறைய போட்டி இருந்து வருகிறது. ஏழைகளின் விஷயம் யாருக்கும் நினைவு வருவதில்லை.

இந்தச் சண்டையினால் காங்கிரஸ் மந்திரி சபையின் காலத்

தில் பீகாரில் அதிகக் கிளர்ச்சி உண்டாயிற்று. வங்காளமும் பீகாரும் ஒன்ருக இருந்த சமயத்திலிருந்து வங்காளிகள் அநேக இலாக்காக்களின் அலுவலகங்களையும் அரசாங்கப் பதவிகளையும் கைப்பற்றிக் கொண்டார்கள் என்பதாகவும், மேலும் தனி மாகாண மாக அமைந்து சுமார் முப்பது ஆண்டுகளாகியும் அவர்களுடைய ஆதிக்கம்தான் நடந்து வருகிறதென்பதாகவும் பீகாரிகள் ஒரு பக்கத்தில் குறை கூறிவந்தார்கள். மற்ருெரு பக்கத்தில் வங் காளிகள் வேறு விதமாகக் குறைகூறி வந்தார்கள். பல வங்காளி களுக்கு மொழி வங்காளியாக இருந்தாலும் அவர்கள் பீகாரில் வசிப்பவர்களே எனவும் அல்லது பீகாரிலேயே குடியேறினவர்கள் எனவும், ஆதலால் அவர்களுக்கு அரசாங்க வேலைகள் கொடுப் பதில் வங்காளி—பீகாரி என்ற வேற்றுமை பாராட்டுவது நியாய மன்றெனவும் கூறினுர்கள். இவ்விதமான வேற்றுமை புரியப் பட்டு வருகிறதென்பதாக அவர்கள் குறை கூறினுர்கள். இந்தக் முறையீடு காங்கிரஸ் வரையில் எட்டியது. ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் காங்கிரஸ் தலைவராக இருந்த சமயத்தில் செயலாற்றுக் குழுவானது இதைப்பற்றி விசாரணை செய்து அறிக்கையைச் சமர்ப்பிக்கும் வேலையின் பொறுப்பை என்மீது சுமத்தியது. நான் எல்லா விஷயங்களையும் தீர விசாரித்து நீண்ட அறிக்கை ஒன்றை அளித்தேன். அதில் இச்சச்சரவின் வரலாறு மற்றும் அன்றி எல்லாருக்கும் நியாயமாக எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதைப்பற்றி யோசனையும் அளிக்கப்பட்டிருந்தது. செயலாற்றுக் குழுவானது என் அறிக்கையை நியாயமானதாகக் கருதி ஏற்றுக் கொண்டு காங்கிரஸ் மந்திரி சபையை அதன்படி வேலை புரியும்படி கட்டளையிட்டது. என் சிபாரிசுகளை இரு கட்சியாரும் ஏற்றுக்கொண்டதாக நான் ஊகிக்கின்றேன். எந்தக் கட்சியின் கோரிக்கைகளும் அனைத்துமே ஏற்றுக் கொள்ளப் படாவிட்டாலும் நான் அந்த அறிக்கையில் கூறியுள்ளவை ஒரு விதத்தில் சரியெனவே மக்கள் புரிந்துகொண்டார்கள்.

நான் கிராமங்களிலிருந்து திரும்பி டாக்காவுக்கு வந்தபோது டாக்காவில் நடந்த கலகத்தைப்பற்றி விசாரணை செய்ய வங்காள அரசாங்கம் நிச்சயம் செய்துவிட்டதாகவும், அரசாங்கத்தின் சார்பில் எனது பழைய ஆப்த நண்பரும் வங்காளத்தின் ஸ்டாண் டிங் கவுன்செலருமான (நிரந்தர சட்ட ஆலோசகர்) ஸ்ரீ யோகேந்திர நாராயண் மஜூம்தாரை விசாரணையை நடத்துவதற்காக அனுப்பியிருப்பதாகவும் கேள்விப்பட்டேன். நெடுநாளாக அவ ரைப் பார்க்கவில்லை. இச்சமயத்தை நல்ல சந்தர்ப்பமாகக் கருதி

நான் அவரைக் காணச் சென்றேன். அவர் ஆற்றில் ஒரு சிறிய கப்பலிலேயே தங்கியிருந்தார். அவருடன் பேசிக் கொண்டிருக்கும்போதே டாக்கா நகரத்தில் மீண்டும் கொலேயும் கொள்ளேயும் ஆரம்பித்துவிட்டனவென்பதாகவும் ஓரிருவர் கத்தியால் குத்தப்பட்டுவிட்டதாகவும் செய்தி கிடைத்தது. நான் அடுத்த நாளே அங்குவிட்டுப் புறப்பட வேண்டியிருந்தது. இரவிலும் இக்கலகம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. நகரத்தில் நிறையக் கொந்தளிப்பு இருந்து வருவதாகவும் எத்தனேயோ பேர் கத்திக்கு இரையானதாகவும் காலேயில் தெரிய வந்தது. முசல்மானியர்கள் ஏதாவதொரு மகல்லாவில் ஓரிரண்டு ஹிந்துக்களேக் கத்தியால் குத்திவிட்டார்கள் என்பதாக ஹிந்துக்களுக்குத் தெரிந்துவிட்டால் மூன்று நான்கு மணி நேரத்திற்குள்ளாகவே எங்காவது ஏதாவதொரு மகல்லாவில் அத்தனே முசல்மானியர்கள் கத்தியால் குத்தப்பட்டு விடுவார்கள். இது போன்ற போட்டியை ஹிந்து-முசல்மானியர்கள் நடத்தி வந்தார்கள். இவ்விதமான போட்டியைக் காரணமாகக் கொண்டு கத்தியால் குத்துகிறவர்கள், தாம் கொல்பவன் என்ன குற்றம் செய்தான் என்பதைப்பற்றி யோசிப்பதில்லே. கொலே செய்தவன் தப்பித்துக் கொள்வான், உண்மையாகவே தன் வேலேயைப் பார்த்துக்கொண்டு செல்லும் நிரபராதி—ஹிந்துவாயினும் சரி முசல்மாளுகிலும் சரி—காரணமின்றிக் கொல்லப்படுவான். பிற்பகல் நான் பிரயாணமாகும் வரையில் எட்டுப் பத்துப் பேர் கொல்லப்பட்டுவிட்டார்கள். இந்த நிலேமையில் விசாரணே வேலே நடப்பது சாத்தியமன்ருதலால் அது நிறுத்தப்பட்டது. நான் திரும்பிய கப்பலிலேயே யோகேந்திர பாபூவும் கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்தார்.

கல்கத்தாவிலிருந்து நான் பட்னுவுக்கு நேரே திரும்பி வந்து விட்டேன். பட்னுவுக்கு 1942இன் ஜூன் மாதக் கடைசியில் வந்து சேர்ந்தேன். வழியிலேயே ஆரம்பித்துவிட்ட இருமலும், இழுப்பும் அங்கு அதிகமாகிவிட்டன. சுமார் இரண்டு மாதங்கள் வரையில் நான் அங்கேயே படுத்துக் கிடந்தேன். கடைசியில், தனியார் சத்தியாக்கிரகத்தில் கைது செய்யப்பட்டவர்கள் விடுதலேயாகத் தொடங்கினுர்கள். முக்கியமாக அனுக்கிரக பாபூ முதலிய தலேவர்கள் விடுதலேயாகிவிட்டார்கள். அவர்களேச் சந்தித்துவிட்டு ஜில்லா போர்டுகள் முனிசிபால்டிகள் ஆகியவற்றின் காங்கிரஸ் அங்கத்தினர்களே அவற்றை விட்டு வெளியேறும்படியாகக் கட்டளேயிட்டுவிட்டு நான் உடல் நலம் பெறுவதற்காக வர்தாவுக்குச் சென்றுவிட்டேன்.

# 144. கிரிப்ஸ் திட்டம்

நான் டாக்காவிலிருந்தபோதே ஜெர்மனியானது ருஷ்யாவின் மீது போர்முரசு முழங்கக் கிளம்பிவிட்டது. ஜெர்மானியப் படைகள் அதிவிரைவாக ருஷ்யாவுக்குள் புகுந்து மேற்செல்லலாயின. சில நாட்களுக்குள்ளாகவே ருஷ்யாவின் பெரும் பகுதியை ஜெர்மனி கைப்பற்றிவிட்டது. இப்போர் பேரெல்லைப் பரப்பில் புரியப்பட்டு வந்தது. ருஷ்யாவின் வடக்கு எல்லையிலிருந்து தெற்கெல்லை வரையில் ஜெர்மன் படைகளும் ருஷ்யப் படைகளும் கைகலந்து நின்றன. ஜெர்மனியானது மேற்கில் ஸ்பெயின், போர்ச்சுகல், வடக்கில் சுவீடன், தெற்கில் இட்டலி ஆகியவை நீங்கலாக பெரும்பாலும் ஐரோப்பிய நாடுகள் எல்லாவற்றையுமே கைப்பற்றிவிட்டது. ஸ்பெயினில் பிராங்கோ ஆட்சி புரிந்து வந்தார். அவர் அங்கே வல்லரசு ஆவதற்கு ஜெர்மனியானது நிறைய உதவி புரிந்தது. இதனால் அவர் ஜெர்மனிக்கு மிகவும் கடமைப்பட்டிருந்தார். சுவீடன் நிறைய நெருக்கடிக்கு உள்ளாயிற்று. இட்டாலியும் ஜெர்மனியுடன் சண்டையில் சேர்ந்து கொண்டது. வெல்லப்பட்ட நாடுகளின் மக்களில் சிலர் மறைந்து ஒளிந்து திடீரெனத் தாக்கும் ('கொரில்லா') போரை ஜெர்மனியுடன் புரிந்து வந்தார்கள். ஆயினும் பெரும்பாலான இடங்களில் ஜெர்மன் ஆட்சிதான் நடந்து வந்தது அல்லது ஜெர்மனியானது தன் சார்பில் ஆட்சிபுரிய சம்மதித்தவர்கள் கையில் ஆட்சியைக் கொடுத்து வைத்தது.

அமெரிக்காவுக்கு இங்கிலாந்தின் மீது அனுதாபம் இருந்தது. கப்பல், ஆயுதம் முதலியன மூலமாக அது ஆங்கிலேயர்களுக்கு உதவி புரிந்து வந்தது. ஆனால் வெளிப்படையாக இன்னும் சண்டையில் இறங்கவில்லை. கிழக்கே, ஜப்பானும் சைனாவில் மாபெரும் பாகத்தை தன் கைவசமாக்கிக் கொண்டுவிட்டது. மேலும், நாளுக்கு நாள் மேற்சென்று கொண்டிருந்தது. அமெரிக்காவானது சைனாவுக்கு உதவி புரிய விரும்பியது. ஆனால் அதன் உதவியைக் கொண்டு சேர்ப்பிக்க ஒரே ஒரு வழிதானிருந்தது. அது அபாயமற்றதன்று. அதுதான் பர்மா மூலமாக உள்ள வழி. ஆங்கிலேயர் ஜப்பானை அதிருப்தி செய்ய விரும்பவில்லை. இதனால் அவர்கள் பர்மா வழியை அடைத்துவிட்டார்கள். சீனர்கள் சோர்வடைந்து கொண்டிருந்தார்கள். சமயம்

பார்த்து அமெரிக்காவின்மீது பழிவாங்கவேண்டுமென்று ஜப்பான் காத்துக் கொண்டிருந்தது. 1941இன் குளிர்காலத் தொடக்கத்தில் அது இந்த வாய்ப்பைத் தேடிப்பிடித்து அமெரிக்காவின் பேர்ல் ஹார்பாரின்மீது படையெடுத்து அமெரிக்காவின் கடற்படைக்கு பெரும் நாசத்தை விளைவித்தது. அது இங்கிலாந்தினுடனும் ஹாலந்துடனும்கூடப் போரைத் தொடங்கிவிட்டது. அத்துடன் ஜெர்மனியுடனும் இட்டாலியுடனும் நட்பு பூண்டு கொண்டது. 1941 நவம்பரில் தொடங்கிச் சில நாட்களுக்குள்ளாகவே அது தென் கிழக்கு ஆசியாவின் மாபெரும் பாகத்தின்மீது தன் கொடியை நாட்டிவிட்டது. ஜாவா, சுமத்திரா, போர்னியோ போன்ற டச்சுக் குடியேற்றத் தீவுகள் எல்லாம் அதன் கைவசமாகிவிட்டன. ஆங்கிலேயர்களிடமிருந்து சிங்கப்பூரை அது விரைவில் வென்றுவிட்டது. மலாயா மீது ஆக்கிரமித்து, பர்மாவின் பக்கம் முன்னேறி, விரைவிலேயே மோல்மீன், ரங்கூன், மாண்டலே முதலிய பர்மீய நகரங்களைக் கைப்பற்றிக் கொண்டு அநேகமாக பர்மா முழுவதையுமே விழுங்கிவிட்டது. சண்டை மூண்ட ஓரிரண்டு நாட்களுக்குள்ளாகவே அது பிரிட்டிஷ் கப்பல் படையைச் சிங்கப்பூருக்கு அருகில் ஒரு போரில் படுதோல்வியுறச் செய்தது. பிரின்ஸ் ஆவ் வேல்ஸ் என்ற பெயர்கொண்ட மாபெரும் கப்பலின் ஆங்கில அட்மிரல் (கடற்படை தலைவன்) பிலிப் என்பவர் ஜப்பானிய கடற்படையைத் தாம் தேடி வருவதாகச் செருக்குடன் பெருமுழக்கம் செய்துகொண்டு புறப்பட்டார். அக்கப்பலை ஜப்பான் மூழ்கடித்து விட்டது.

வட ஆப்பிரிக்காவில் இட்டாலியர்களுக்குச் சில குடியேற்ற நாடுகள் இருந்தன. அங்கு ஆங்கிலேயருடன் போர் மூண்டு விட்டது. ஜெர்மானியர் அங்கும் வந்து சேர்ந்துவிட்டார்கள். அவர்கள் சில மாதங்களுக்குள்ளாகவே வட ஆப்பிரிக்காவை எகிப்தின் எல்லை வரையில் தம் முட்டிக்குள் அடக்கிவிட்டார்கள். எந்த நாடும் ஜெர்மன் ஜப்பானிய படை வெள்ளத்தை இனித் தடுக்க முடியாது என்பது போலத் தோன்றியது. குளிரின் காரணத்தால் ருஷியாவில் ஜெர்மன் படை சிறிது தடைப்பட்டு நிற்க வேண்டி வந்தது. ஆயினும் அது பின் வாங்கவில்லை. எவ்வளவு தூரம் சென்றதோ அங்கேயே நிலைத்து நின்றது. அமெரிக்கா சண்டையில் சேர்ந்து கொண்டதால் பிரிட்டனுக்கு உயிர் திரும்பி வந்ததுபோல ஒரு நிலைமை 1942இன் முதல் மாதங்களில் காணப்பட்டாலும் ஜெர்மன் ஜப்பானிய படைகளை இன்னும் எவரும்

எதிர்த்து நிற்க முடியவில்லை. அமெரிக்கா யுத்த தளவாடங்களையும் கடற்படையையும் நிலப்படையையும் பேரளவில் தயார் செய்யத் தொடங்கியது. நேயர்கள் (அலைஸ்) சார்பில் போர் புரிய விரும்பிய நாடுகள் எல்லாவற்றிற்கும் அது ஆயுதங்கள் அளித்து உதவி புரியத் தொடங்கியது. அதனுடைய முழு ஆற்றலையும் திரட்டிச் சண்டைக்கு முழு உதவியை அளிப்பதற்குச் சிறிது காலம் ஆயிற்று. 1942இன் முதல் மாதங்கள் வரையில் அது உதவி அளிக்க முடியவில்லை.

ஜெர்மனியானது எந்த நாடு அதற்குத் துணை புரிய விரும்பவில்லையோ அதன் மீது ஆக்கிரமித்து அதைப்பற்றிக் கொண்டு விடுகிறதென்பதாக ஜெர்மனியின் மீது குறை கூறப்பட்டு வந்தது. ஆயினும் அக்குற்றத்திற்கு ஆங்கிலேயரும் நேசநாட்டினரும் (அலைஸ்) விலக்கல்லர். ஜெர்மன் ஜப்பானியப் படைகள் இந்தியாவில் எப்போதாவது கூடிவிடலாமென்று இங்கிலாந்து அஞ்சியது. அதைத் தடுப்பதற்காக ஆங்கிலேயர் ஒரு புறத்தில் பர்மாவின் எல்லையில் ஒரு போர்முனையையும் மற்றொரு புறத்தில் எகிப்தின் பக்கத்தில் வேறொரு போர் முனையையும் அமைக்க விரும்பினார்கள். மற்றும் ஒரு போர் முனையை அரபியாவிலும் ஈரானிலும் அமைக்க விரும்பினார்கள். இதனால் இவர்கள் அரபியாவையும் ஈரானையும் தம் கைவசமாக்கிக் கொண்டார்கள். 1914–18 யுத்தத்திற்குப் பிறகு ஈரானைப் பலசாலியாக்க முயற்சி செய்து வந்தவரும், அங்குள்ள மக்களை முன்னேறச் செய்வதில் சிறிது வெற்றி கண்டவருமான ஈரானின் பாதுஷாவாகிய ரஜா ஷா பகல்வீயை இவர்கள் சிம்மாசனத்தில் இருந்து இறக்கி நாடு கடத்திவிட்டார்கள். பிறகு கேட்க வேண்டுமா? ருஷிய, ஆங்கிலேய அமெரிக்கப் படைகளுக்கு அங்கு மாபெரும் பாசறை ஒன்று அமைக்கப்பட்டாயிற்று. ஆபத்துக் காலத்தில் தீயவரும் நண்பர்களாகி விடுகிறார்கள். மிஸ்டர் சர்ச்சில் தம் வாழ்நாள் முழுவதும் பகைத்து வந்தவர்களும், அவரால் எவ்வளவு என்று கூற இயலாத அளவுக்குத் திட்டப்பட்டு வந்தவர்களுமான ருஷ்யர்களோடு நட்பு செய்துகொண்டார். முற்காலப் பேச்சையெல்லாம் இருவரும் மறந்துவிட்டது போலத் தோன்றிற்று.

இந்த நிலைமையில் இங்கிலாந்தானது இந்தியாவுடன் ஏதாவதொரு உடன்படிக்கையைச் செய்துகொள்ள வேண்டுமென்பதாக நினைத்தது. ஜெர்மனியும், ருஷ்யாவும் நேசமாக இருந்த சமயத்தில், இங்கிலாந்தின் ராஜ தூதராக நியமிக்கப்பட்டு, ருஷ்யாவுக்கு அனுப்பப்பட்டவரும் ருஷ்யாவை ஜெர்மனிக்கு

விரோதமாகக் கிளப்பிவிடுவதில் நிறைய உதவி புரிந்தவருமான ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் யுத்தம் மூண்டபின் இங்கிலாந்துக்குத் திரும்பி வந்துவிட்டார். அதன்மேல் அவர் அங்குள்ள யுத்த ஆலோசனை சபையின் முக்கிய அங்கத்தினராக நியமிக்கப் பட்டார். தம்முடைய முன்னேற்றக் கொள்கைகளால் அவர் லேபர் பார்ட்டியிலிருந்து கூட (தொழிலாளர் கட்சி) ஒதுக்கப்பட்டு விட்டார். ஆயினும் இந்த நெருக்கடியான சமயத்தில், அவருடைய திறத்தின் காரணத்தாலும், முக்கியமாக, ருஷ்யாவில் பெற்ற புகழின் காரணத்தாலும் அவருக்கு மக்களிடையில் நிறையச் செல் வாக்கு உண்டாகிவிட்டது. இந்தியாவுடன் ஏதாவது உடன் படிக்கை செய்துகொள்ள வேண்டும் என்று அவர் பிரிட்டிஷ் மந்திரி சபையை மனம் திருந்த வைத்தார். தொழிலாளர் கட்சிக் காரர்களும், லிபரல் (தாராள சிந்தை) கட்சிக்காரர்களும்கூட சேர்ந்திருந்த மந்திரி சபையானது ஒரு திட்டத்தைத் தயார் செய்தது. அதை எடுத்துக்கொண்டு சர் கிரிப்ஸ் இந்தியாவுக்கு வந்தார். இத்திட்டம் முதலில் வெளியிடப்படவில்லை. பாரத மணித் திருநாட்டிற்கு ஒரு எல்லையற்ற பெருமை வாய்ந்த திட்ட மென்பதாக மிக்க ஆர்ப்பாட்டத்துடன் அது கூறப்பட்டது. பாரத நாட்டை இது ஏற்றுக்கொள்ள வைப்பதற்காக அவர் தாம்பூ லத்தை எடுத்துக்கொண்டு 1942 மார்ச்சில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். வந்ததுமே காங்கிரஸ் தலைவர் மௌலானா ஆஜாதை யும் காந்திஜீயையும் மற்றத் தலைவர்களையும் சந்திக்கத் தொடங்கி விட்டார். சில நாட்களுக்குப் பிறகு அத் திட்டம் வெளியிடப் பட்டது. செயலாற்றுக் குழுவின் இருக்கை தில்லியில் நடந்தது. நாங்கள் எல்லாரும் அங்கே இதைப்பற்றிச் சுமார் இரண்டு மூன்று வாரங்கள் வரையில் ஆலோசனை செய்து வந்தோம். முதலில் சிறிது காலம் வரையில் காந்திஜீயும் தில்லியில் இருந் தார். ஆனல் கஸ்தூர்பா காந்திக்கு உடல் நலமில்லாததால் அவர் சேவாகிராமுக்குச் சென்றுவிட்டார். மௌலானா ஆஜாதும் பண்டித் ஜவஹர்லால் நேருவும் காங்கிரஸின் சார்பில் பேச்சு வார்த்தை நடத்தி வந்தார்கள். செயலாற்றுக் குழுவின் அங்கத் தினர் அனைவரும் தில்லியில் தங்கியிருந்தார்கள். அவ்வப்போது நடந்த பேச்சு வார்த்தைகளைப்பற்றி ஆலோசனை செய்வதற்காகச் செயலாற்றுக் குழுவின் கூட்டங்கள் அடிக்கடி நடைபெற்று வந்தன.

கிரிப்ஸ் திட்டத்தை இரண்டு முக்கிய பாகங்களாகப் பிரிக்க லாம். அதன் முதல் பாகத்தில் இந்தியாவுக்காக வருங்கால

அரசியல் அமைப்பைப் புனையும் முறை கூறப்பட்டிருந்தது. மற்றொன்றில் தற்கால இந்திய அரசாங்கத்தின் வேலையை நடத்து வதற்காக வைசிராயின் தற்காலத்திய கவுன்ஸிலில் என்ன மாறு தல்கள் செய்யப்படுமென்பதைப் பற்றிக் கூறப்பட்டிருந்தது. இத்திட்டத்தில் எதிர் காலத்தைப்பற்றித் தெள்ளத் தெளிவாக கூறப்பட்டிருந்தது. அதாவது யுத்தத்திற்குப் பிறகு இந்தியா வுக்கு மற்றக் குடியேற்ற நாடுகளுக்கு உள்ள பதவியேகிடைக்கும். இந்தியா சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்து தனியாகப் போக விரும் பினால் அதற்கு அந்த உரிமை இருக்கும். அரசியல் சட்டத்தைப் புனைவதற்காகச் சபை ஒன்று அமைக்கப்படும். அச்சபையை மாகாண சட்டசபைகள் தேர்ந்தெடுக்கும். ஒவ்வொரு மாகாணத் திற்கும், அது இஷ்டப்பட்டால், இந்திய ஐக்கியத்திலிருந்து (யூனியன்) தன்னைப் பிரித்துக்கொள்ள உரிமை இருக்கும். மேலும், எந்த மாகாணமேனும் அப்படிச் செய்தால், எஞ்சிய இந்தியாவோடு அல்லது இந்திய யூனியனோடு பிரிட்டிஷ் அரசாங் கத்திற்கு என்ன தொடர்பு இருக்குமோ அதே தொடர்பு அந்த மாகாணத்துடனும் இருந்துவரும். இவ்வண்ணமாக இத்திட்ட மானது முஸ்லிம் லீகின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டுவிட்டது. பாகிஸ்தானை நிலைநாட்டுவதை மாகாணங்களிடம் விட்டுவிட்டது. தற்காலத்தைப்பற்றிய திட்டத்தில் வைசிராயின் கவுன்ஸிலுக்கு என்ன அதிகாரங்கள் கொடுக்கப்படும் என்பது கூறப்படவில்லை. அதற்குப் படை சம்பந்தமானதும், யுத்த சம்பந்தமானதுமான அதிகாரங்கள் அளிக்கப்பட மாட்டா என்பது மட்டும்தான் சொல் லப்பட்டிருந்தது. அதிலிருந்து, கவுன்ஸிலுக்கு மற்ற இலாக்காக் களில் அதிகாரம் கிடைக்குமென்பதாக மக்கள் பொதுவாக அர்த்தம் செய்து கொண்டார்கள். இதைப்பற்றிக் கேட்டதின் பேரில் கிரிப்ஸ் அவர்கள் அப்படித்தான் ஏதோ கூறவும் செய்தார்.

காந்திஜிக்கு இத்திட்டம் திருப்தி அளிக்கவில்லை. அவர் கிரிப்ஸை சந்தித்தபோது அப்படியே கூறிவிட்டார். செய லாற்றுக் குழுவின் கருத்திலும் இத்திட்டம் ஏற்கத்தக்கதாகத் தோன்றவில்லை. ஆயினும் அது இத்திட்டத்தைப்பற்றி நெடுங் காலம் ஆலோசனை செய்தது. எதிர்காலத்தைப் பொருத்த வரை யில், பாகிஸ்தான் பேச்சைத் திட்டமானது ஒரு விதமாக ஒப்புக் கொண்டிருந்ததை செயலாற்றுக் குழு ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை. ஆயினும், ஏதாவதொரு மாகாணத்தின் மக்கள் தனி யாகப் போக விரும்புகிறார்கள் என்பது ருசுப்படுத்தப்பட்டு விட்டால் அம்மாகாணத்தைப் பலவந்தமாக நம்முடன் இருக்கச்

செய்வது 'தன் வழியைத் தானே வகுத்துக் கொள்ளல்' (செல்ப் டிடெர்மினேஷன்) என்ற கொள்கைக்கு முரணாகும் என்பதை அது உணர்ந்தது. அவ்வண்ணமே தன் தீர்மானத்திலும் கூறியது. அதனுடைய முக்கிய கவனம் தற்கால வேலைக்காக நியமிக்கப்படப் போவதாகக் கூறப்பட்ட கவுன்ஸிலில் மீது இருந்தது. ஏனெனில், சண்டை நடந்து கொண்டிருக்கும்போது வேலையின் சுமை முழுவதும் அதன்மேல் விழுமென்பதாகவும், இந்தியர்களுக்கு அதிகாரம் கிடைக்காவிட்டால் அச்சுமையை—இந்தியாவின் நலத்தை மனத்திற் கொண்டு பார்க்குங்கால்—இந்தியர்கள் ஏற்பது பொருத்தமற்றது மட்டுமன்றி கை கூடாதது அல்லது குறைந்த பக்ஷம் கட்டாயமாக மிகவும் கடினமானது என்பதாகவும் செயலாற்றுக் குழு நினைத்தது. இதனால், யுத்தத்தைச் சம்பந்தப்பட்ட அதிகாரம் ஏதுவேனும் கவுன்ஸிலுக்கு இருக்குமா, இருக்காதா, அல்லது எல்லாம் வைசிராயின் கையிலும் சேனாதிபதியின் கையிலும் தாமிருக்குமா என்பதை முற்றிலும் தெளிவாக்கிக் கொள்ளச் செயலாற்றுக் குழு விரும்பியது. பேச்சுவார்த்தை நடந்தபின், அவர்கள் சிறிதளவு எளிய அதிகாரங்களைக் கவுன்ஸிலின் இந்திய அங்கத்தினர் கையில் கொடுக்க ஒப்புக்கொண்டார்கள். ஆயினும் அந்த அதிகாரங்கள் எவை என்றும், எவ்வளவு என்றும் கேட்டபோது, அவை வெறும் பேருக்கு மாத்திரம்தான் இருக்கும் என்பதும் உண்மையில் யாதொரு அதிகாரமும் கைமாறாதென்பதும் தெரிய வந்தன.

இந்த விஷயம் தெளிவாகக் குழுவுக்குத் தெரிந்து போனபின், திட்டத்தை ஏற்பதில்லையென்பதாக அது முடிவு செய்தது. ஆயினும், படையும் யுத்தமும் நீங்கலாக மற்ற விஷயங்களில் கவுன்ஸிலுக்கு அதிகாரம் இருக்குமென்பதாகவும், வைசிராய் அதன் கருத்துப்படிதான் வேலை புரிவார் என்பதாகவும் அது இன்னும் நினைத்துக் கொண்டிருந்தது. போர்க் காலத்தில் மற்ற இலாக்காக்களில் சிறந்த வேலை இருக்காது என்பதும், மேலும், யுத்தமானது, அரசாங்கம் தன் ஆற்றல் முழுவதையும் செலுத்தி நடத்த வேண்டிய ஒரு விஷயம் என்பதும், மற்ற இலாக்காக்களும் அதே வேலையில் ஈடுபட வேண்டிவருமென்பதும், இவ்வண்ணமாக அவையும் படை, போர் இலாகாவிற்குக் கீழ்ப்பட்டுப் போய்விடுமென்பதும், ஆதலால் அவற்றில் அதிகாரங்களைப் பெறுவதில் யாதொரு பெருமையும் இருக்காது என்பதும் வெளிப்படையாயிருந்தன. குழு இந்த முடிவுக்கு வருவதற்கு முன்னமே, இப்பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோதே, சர்

கிரிப்ஸானவர் இந்த முடிவுக்கு வருவதை நிறுத்தி வைக்கும்படியும், தாம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு இந்த விஷயத்தைப்பற்றி எழுதிக் கேட்பதாகவும் குழுவிடம் கூறினர். இந்த எழுத்துப் போக்கு வரவினல் படை சம்பந்தமாக சாமான்ய அதிகாரங்கள் அளிக்கும் பேச்சு எழுந்தது. அதைப் பற்றியும் ஆலோசனை செய்து, குழுவானது உண்மையான அதிகாரம் எதுவும் கிடைக்காது என்றும், திட்டத்தை நிராகரிப்பதைத் தவிர அதற்கு வேறு வழியில்லை என்றும் முடிவுக்கு வந்தது. இதே முடிவை அது செய்தும் விட்டது. சரியாக அதே சமயத்தில் பிரஸிடெண்ட்டு ரூஸ்வெல்டின் விசேஷ தூதர் கர்னல் ஜான்சன் தில்லிக்கு வந்து சேர்ந்தார். பண்டித் ஜவஹர்லால் நேரு அவரைச் சந்தித்தார். "சிறிது காலம் எனக்குக் கொடுங்கள், ஏதாவது செய்ய முடியுமா இல்லையா என்று நானும் முயற்சி செய்து பார்க்கிறேன்" என்று அவர் கூறினர். அவருடைய முயற்சியினல், சர் கிரிப்ஸானவர் எழுத்துப் போக்கு வரவு செய்து, படைசம்பந்தமாக என்ன கூறினரோ அதைக் கூறும் விதத்தில் மாறுதல் ஏற்பட்டது. படை சம்பந்தமாக சில விஷயங்கள் நீங்கலாக எல்லா விஷயங்களும் சேனதிபதியின் கீழ்த்தானிருக்குமென்பதாக காபினெட்டின் தீர்மானம் கூறியிருந்தது. இப்போது, கீழே கொடுக்கப்பட்டுள்ள விஷயங்கள் சேனதிபதியின் கீழிருக்குமென்பதாகவும் எஞ்சிய விஷயங்கள் எல்லாம் கவுன்ஸிலின் அங்கத்தினர்கள் கீழிருக்கு மென்பதாகவும் தீர்மானம் வந்தது.

பார்ப்பதற்கு விஷயம் நல்லதாகப் பட்டது. ஆனல் "கீழே கொடுக்கப்பட்ட" விஷயங்களில் என்னென்ன விஷயங்கள் அடங்கியிருக்கும் என்பது கேள்வி. கேட்டதின் பேரில் சில இலாகாக்களின் பெயர்கள் கொடுக்கப்பட்டன. அப்படிக் கூறப்பட்ட இலாகாக்கள் நீங்கலாக, அங்கத்தினர்களின் அதிகாரத்துக்குக் கீழ்வரும் விஷயங்கள் என்னவென்று கர்னல் ஜான்சனுக்குக்கூடத் தெரியாது. முடிவில், அடிக்கடி கேட்டபின், காபினெட்டின் தீர்மானத்தில் முதலில் கூறப்பட்ட அதே விஷயங்கள் தாமென்பதும், அவற்றைவிட யாதும் அதிகமில்லையென்பதும் தெரியவந்தன. இதிலிருந்து இது வெறும் சொல் முழக்கம்தான் என்பதும், உண்மையில் யாதொரு வேற்றுமையுமில்லையென்பதும் தெளிவாயின. இது எங்களுக்குக் கெடுதலாகப் பட்டது. படை சம்பந்தமாகவும் யுத்த சம்பந்தமாகவும், அதிகாரம் கிடைக்காவிட்டால் போகட்டும், ஆயினும் மற்ற இலாகாக்

களின் மீது அதிகாரம் கிடைத்தால் அதைக் கொண்டு திருப்தி யடையலாமென்று நாங்கள் இதன்மேல் நினைத்தோம். ஆனால் அதுவும் எவ்வளவு தூரம் உண்மையிலேயே கிடைக்கும் என் பதை அறிந்து கொள்ள வேண்டியிருந்தது. இதைப் பற்றிக் கேட்டதின் பேரில் சர் கிரிப்ஸானவர் இதைப் பற்றி வைசிரா யிடமே பேச வேண்டுமென்றார். ஏனெனில் இந்த விஷயம் அவருடைய கவுன்ஸிலைச் சம்பந்தப்பட்டிருந்ததால், சட்டம் மாற்றப்படாத வரையில் நடப்பில் இருக்கும் அமைப்புச் சட்டத் தின்படி அவருக்கு என்ன அதிகாரம் உண்டோ அதைப்பற்றி அவர்தாம் சொல்ல முடியும். கவுன்ஸிலின் அங்கத்தினர் பதவியை வைசிராய் ஒரு பதவியாக மதிக்கவில்லையென்பது எங்களுக்கு முழுக்க முழுக்கத் தெரியும். கவுன்ஸிலின் அங்கத் தினர்களுக்கு யாதொரு அதிகாரமும் இல்லை என்பதும், கடைசி யில் அதிகாரம் முழுவதும் வைசிராய்க்குத்தான் என்பதும் அவருக்குத் தெரியும். அவர் அப்படியே கூறியும் வந்தார்.

அந்த இலாகாக்களிலும் அதிகாரம் கிடைக்காதென்பதும், மேலும் காபினெட்டைப் போலவே கவுன்ஸிலுக்கும் அதிகார மிருக்குமென்பதாகவும் அதைப் போலவே பணிபுரியு மென்ப தாகவும் சர் கிரிப்ஸ் பேசிய பேச்சுக்கள் வெறும் வாய்ப்பந்தல் என்பதும், அவற்றில் சிறிதுகூட உண்மையில்லை யென்பதும் வெளிப்படையானதும் செயலாற்றுக் குழு அதை நிராகரிப்பதைத் தவிர வேறொன்றும் செய்ய முடியவில்லை. அப்படியே தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அனுப்பப்பட்டது. சர் கிரிப்ஸும், தாம் திரும்பிச் செல்வதாகவும், காபினெட்டின் சார்பில் இந்தியாவின் முன் சர்ப்பிக்கப்பட்ட விஷயங்களை மீட்டுக் கொண்டு திரும்பிச் செல்வதாகவும், அன்றே அறிக்கை செய்துவிட்டார். முஸ்லிம் லீக் காங்கிரஸின் முடிவுக்காகக் காத்துக் கொண்டிருந்தது. நாங் கள் முடிவு கட்டியதுமே அதுவும் திட்டத்தை நிராகரித்துவிட்டது. ஆனால், அதில் பாகிஸ்தான் அளிக்கப்படவில்லை யென்பதாகவும் அப்படி ஒரு வேளை நடக்கலாம் என்று மட்டும் தான் காட்டப்பட் டிருக்கிறது என்பதாகவும், அது போதாது என்பதாகவும் கார ணங்கள் காட்டியது.

இவ்வண்ணமாக காங்கிரஸும் லீகும் இரண்டுமே திட்டத்தை நிராகரித்துவிட்டன. பாகிஸ்தான் உண்டாகலாம் என்று கோடி காட்டுவது கூடச் சரியன்றெனக் காங்கிரஸ் நினைத்தது. ஆயி னும் ஏதாவதொரு மாகாணம் உண்மையாகவே தனியாக நிற்க விருப்பம் கொண்டிருப்பதாக முழு ருசுக் கிடைத்தால், அதைப்

பலவந்தமாக நம்முடன் இருக்கச் செய்வது 'தானே தன் வழியை வகுத்துக் கொள்ளல்' என்ற கொள்கைக்கு முரணுகுமாதலால் அப்படிக் கோடி காட்டப்பட்டிருந்தும்கூடச் செயலாற்றுக் குழுவானது அக்காரணத்தால் திட்டத்தை நிராகரிக்கவில்லை. யுத்தத்தில் துணை புரியும் பொறுப்புக் கவுன்ஸிலின் மீது முழுக்க முழுக்க வந்து சேருமாயினும் அதற்குத் தற்காலத்தில் யாதொரு அதிகாரமும் கிடைக்கவில்லை யென்பதே செயலாற்றுக் குழு திட்டத்தை நிராகரித்ததற்குக் காரணம். பொறுப்பு வந்து சேருமென்ருல், அதற்கு இவ்வளவுதான் அர்த்தம். அதாவது சண்டைக்காக நன்கொடையையும் வரியையும் தண்டல் செய்தல், படைக்கு ஆட்களைச் சேர்த்தல், மற்றவர்களைச் சேர்க்கச்செய்தல் என்பனதாம். இவை நீங்கலாக வேறு யாதொரு உரிமையும் கிடைக்கவில்லை.

செயலாற்றுக் குழுக்குள் ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் கிரிப்ஸின் திட்டத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற கருத்துக் கொண்டிருந்தார். இத்திட்டத்தின் மூலமாக வைசிராயின் கவுன்ஸிலின் அங்கத்தினர்களுக்குப் படை, யுத்தம் நீங்கலாக மற்ற எல்லா இலாகாக்களிலும் முழு அதிகாரம் கிடைக்கிறது என்பதாக அவர்தாம் மிகவும் அழுத்தமாகக் கூறிவந்தார். ஆனல் கடைசியில், இந்த விஷயங்களிலுங்கூட யாதும் மாறு பாடு ஏற்படாதென்பதும், மேலும் வைசிராயானவர் தாம் மனஞ்சென்றபடி நடக்கத் தமக்குள்ள அதிகாரத்தை யாதொரு வகையிலும் குறைத்துக்கொள்ள விரும்பவில்லை என்பதும் தெளிவானபின் அவருடைய வாயும் அடைபட்டு விட்டது. செயலாற்றுக் குழுவின் முடிவைப்பற்றி காங்கிரஸின் உள் ளும் சிலருக்கு நிறைய தப்பு அபிப்பிராயம் இருந்தது. இது பின்னல் தெரிய வந்தது. ஆனல் எங்கள் உள்ளத்தில் என் றுமே யாதொரு ஐயமுமில்லை. சர் கிரிப்ஸும் ஆதாரமில்லாத பேச்சுக்களைப் பேசினர். அவர் தம் அறிக்கை ஒன்றில், ஹிந்து—முஸ்லிம் சச்சரவுதான் திட்டம் நிராகரிக்கப்பட்ட தற்குக் காரணம் என்றும், காங்கிரஸும் லீகும் ஒருமித்த கருத்துக் கொள்ள இயலவில்லையென்றும், அதனல் தான் இருவரும் திட்டத்தை நிராகரித்துவிட்டார்கள் என்றும் கூறினர். இந்த நிராகரிப்பின் பழியைக் காங்கிரஸின்மீது சுமத்துவதே அவருடைய அறிக்கையின் நோக்கம். உண்மை என்னவென்ருல் செயலாற்றுக் குழுவின் முன் இந்த விஷயத்தில் ஹிந்து—முஸ்லிம் சண்டை அல்லது கருத்து வேறுபாட்டின் பேச்சே—மக்கள்

பேசிக்கொண்ட வகையில்—வரவில்லை. பாகிஸ்தானைச் சம்பந்தப் பட்ட அறிக்கையைப்பற்றி செயலாற்றுக் குழுவுக்கு கருத்து வேறுபாடு இருந்தது உண்மை, ஆனால் அக்காரணத்தால் அது திட்டத்தை நிராகரிக்கவியில்லை. அது நிராகரித்ததற்குக் காரணம் முன்னம் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டதுபோல, ஒன்றே ஒன்றுதான். அதாவது, அதன் மூலமாக இந்திய கவுன்ஸிலர் களின் கையில் யாதொரு அதிகாரமும் வரவில்லை என்பதுதான். அதனால் இந்த யுத்த காலத்தில் பொறுப்பை ஏற்றுக் கொண்டு அது நாட்டிற்கு யாதொரு நலத்தையும் புரியமுடியாது. மேலும் சண்டைக்கு உதவும் பொறுப்பு அதன்மீது வந்து சேருகிறது. சில .எதிரிகளின் அறிக்கைகள் கூறுவது போல, கவுன்ஸிலில் ஹிந்துக்களின் எண்ணிக்கை எத்தனை முசல்மானியர்களின் எண்ணிக்கை எத்தனை என்பதைப் பற்றிக் கருத்து மாறுபாடு உண்டாயிற்று என்று கூறுவதும் தவறு. கவுன்ஸிலில் எத்தனை அங்கத்தினர்கள் இருப்பார்கள், அவர்களுள் எத்தனை ஹிந்துக் கள் எத்தனை முசல்மானியர்கள் இருப்பார்கள், எத்தனை காங்கிரஸ்காரர்கள் இருப்பார்கள், எத்தனை லீக்காரர்கள் இருப் பார்கள் என்ற கேள்விகள் ஒருபொழுதும் எங்கள்முன் வரவில்லை. இதற்கு வாய்ப்பும் இல்லை. ஏனெனில் கவுன்ஸிலுக்குப் போக வேண்டுமென்று நாங்கள் முடிவு செய்த பின்னல்லவா இந்தக் கேள்வி எழும்? கவுன்ஸிலுக்குள் நுழைவதற்கே மறுத்துவிட்ட போது அதில் நாங்கள் எத்தனை பேர் இருப்போம் என்ற கேள்வி எப்படி எழ முடியும்? அது என்றுமே எழ வில்லை. ஆயினும் எங்களுக்கு விரோதமாக இவ்விதமான பிரசாரம் நிறையச் செய்யப்பட்டு வந்தது.

## 145. கிரிப்ஸ் திட்டத்தை நிராகரித்த பின்

கிரிப்ஸ் திட்டத்தைச் செயலாற்றுக் குழு நிராகரித்து விட் டது. அதைப்பற்றி ஆலோசனை செய்வதற்காக அகில பாரதீயக் குழுவின் கூட்டம் நடைபெறுவது இப்போது அவசியமாகி விட் டது. அது அலாகாபாத்தில் சில நாட்களுக்குள்ளாகவே நடை பெற்றது. விஷயம் நிராகரிப்போடு நிற்காது என்பதும் இப் போது தெளிவாகத் தோன்றலாயிற்று. காங்கிரஸ் தன் கொள் கையை விளக்குவதற்கு இன்னும் ஏதாவது செய்யவேண்டும்.

ஜப்பான் விரைவாக மேலேறி வந்து கொண்டிருந்தது. ஆங்கிலப் படை அதை எதிர்த்து நிற்க முடியவில்லை. இந்தியாவில் அதை எதிர்த்து நிற்பதற்கான ஏற்பாடுகள் இன்னும் முற்றிலும் செய்யப்படவில்லை. அதி விரைவாக ஆங்கிலப் படைகளும் அமெரிக்கப் படைகளும் இங்குக் கொண்டு வரப்பட்டு வந்தன. ஆயுதங்களும் யுத்த தளவாடங்களும் கூட வந்து கொண்டிருந்தன, ஆயினும் எதிர்த்து நின்ருல் வெற்றி உண்டாகும் என்பதாக இன்னும் தோன்றவில்லை. ஜப்பான் வந்து விட்டால், இந்தியா அதன் முன் தலை குனிந்து அதை வரவேற்குமா அல்லது அதை எதிர்த்து நிற்குமா என்பதுதான் இப்போது நாட்டின் முன் நின்ற கேள்வி. இந்தியாவின் பாதுகாப்பின் பொறுப்பை ஏற்று நின்ற ஆங்கில அரசாங்கமானது கையாலாகாததாகக் காணப்பட்டது. இப்படிக் கையாலாகாமலிருந்தும் கூட நம்முடன் ஏதாவது ஒப்பந்தத்தைச் செய்துகொண்டு நம் நாட்டைக் காப்பதற்கு நாம் கை கொடுப்பதற்கு வாய்ப்பு அளிக்க விரும்பவில்லை. அஹிம்சா மயமான முறையில் எதிர்ப்போம் என்ற காந்திஜீயின் கொள்கையைச் செயலாற்று குழுவானது ஒரு வகையில் கைவிட்டு விட்டது. அது ஆயுதம் தாங்கி ஆங்கிலேயர்களின் படையோடு தோளுக்குத் தோள் நின்று ஜப்பானை எதிர்க்கத் தயாராயிருப்பதாகப் பறைசாற்றிவிட்டது. அப்படியே செய்யவும் விரும்பியது. ஆனுல், அது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குச் சமானமான முழு அதிகாரத்துடன் வேலை செய்ய முடிந்தால்தான் அப்படிச் செய்ய முடியும். பிரிட்டனுக்கு இது பிடிக்கவில்லை. இந்தியா தன்னுல் செய்யக்கூடிய உதவியைச் செய்யட்டும் என்று அது விரும்பியது, ஆனுல் அதை அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க விரும்பவில்லை. பிரிட்டன் யாதொரு புதிய நாட்டையும் கைப்பற்ற விரும்பவில்லையாயினும் தன் வசமிருப்பதைக் கைவிடவும் விரும்பவில்லை யென்று மிஸ்டர் சர்ச்சில் திரும்பத் திரும்பக் கூறி வந்தார். இந்தியா அதனுடையதென்பதும், அதை இந்த ஆபத்துக் காலத்திலும் கூட கைவிட விரும்பவில்லை யென்பதும் தெளிவாயிருந்தது. தன் கஷ்ட காலத்தில் பிரான்ஸைப் பார்த்து, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையும் எத்தனையோ போர்களைப் புரிந்தும், இரத்தத்தைச் சிந்தியும், பிரான்ஸிடமிருந்து பிரிட்டன் வென்ற நிலை நாட்டப்பட்ட அதே பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையும்—பிரான்ஸ் சாம்ராஜ்யத்தையும், இரண்டையும் ஒன்ருக இணைத்துவிடலாமென்று கூறியது. ஆனுல் இந்தியர்கள் தனக்கு எதிரில் சமமாக உட்காருவதைப்

பொறுக்க முடியவில்லை! அவர்களுக்குத் தம் நாட்டில் முழு அதிகாரத்துடன் ஜப்பானியரை எதிர்த்துப் போராட வாய்ப்பு அளிக்க அது தயாராயில்லை!

இந்த நிலைமையில் நாம் நம்மை எவ்விதமாகப் பாதுகாத்துக் கொள்வது என்ற கேள்வி எங்கள் முன் நின்றது. மக்களிடையில் ஆர்வமில்லாவிட்டால் ஜப்பானியர் நம் நாட்டை எளிதில் பிடித்து விடுவார்கள். இங்கிலாந்து எப்படியாவது நம் நாட்டை விட்டுப் போய் ஜப்பானியர் வந்து அந்த இடத்தில் உட்கார்ந்து விட்டால் அவர்களை நாம் பின்னால் கவனித்துக் கொள்ளலாம் என்று நினைத்தவர்களும் சிலர் இருந்திருக்கலாம். ஜப்பானியர்களின் உதவியைக் கொண்டு ஆங்கிலேயர்களை விரட்டுவதில் யாதும் தீங்கிருப்பதாகச் சிலர் உணராமலுமிருந்திருக்கலாம். ஆயினும் ஜப்பானுக்கு உதவியை அளித்து அல்லது நடுவு நிலைமையாக (நியூட்ரல்) நின்று பிரிட்டிஷ் அரசாங்கத்தை இந்நாட்டிலிருந்து வெளியேற்ற விரும்பியவர்கள் செயலாற்றுக் குழுக்குள்ளாவது அல்லது காங்கிரஸ்காரர்களுக்கிடையிலாவது எவரும் இல்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஜப்பானைவிட நல்லது என்பதாக அவர்கள் நினைத்தார்கள் என்பது இதற்கு காரணமென்று. ஆனால் நாங்கள் ஜப்பானை பிரிட்டிஷ் அரசாங்கத்தைவிட எந்த விதத்திலும் மேலாக நினைக்கவில்லை. அது சைனாவுடன் நடந்து கொண்ட விதத்திற்கும், அது சைனாவைப் பலவந்தப் படுத்தி அதன் மாபெரும் பாகம் ஒன்றைக் கைப்பற்றிக் கொண்டதுக்கும் ஒரு அர்த்தம் தானிருக்க முடியும். அதாவது, அதுவும் பிரிட்டனைப் போலவே தன் சாம்ராஜ்யத்தைப் பெருக்கவும் நிலை பெறச் செய்யவும் விரும்பியது என்பதுதான். ஒரு சாம்ராஜ்யத்தை விட்டுத் தப்பி மற்றொரு சாம்ராஜ்யத்தின் பிடிக்குள் அகப்படுவதில் யாதும் புத்திசாலித்தனமில்லை. அது வாணலியிலிருந்து துள்ளி நெருப்பில் வீழ்வதை ஒக்கும். ஆயினும், காங்கிரஸ் தன் கொள்கையைத் துறந்தும் கூட பிரிட்டிஷ் அரசாங்கமானது அதற்கு ஆயுதமேந்தி அதிகாரத்தோடு போர் புரிய வாய்ப்பு அளிக்க விரும்பவில்லை. இனி, எதிரியை எங்கள் நெறிப்படி எதிர்ப்பதைத் தவிர வேறு வழி எங்களுக்கு இல்லை. அந்த எதிர்ப்புக்கு மக்களை ஆயத்தம் செய்வதற்காக அவர்களிடையில் எதிரியை எதிர்க்கக் உற்சாகத்தைப் பிறப்பிப்பதைத் தவிர வேறு உபாயமில்லை. இங்கு நிலை நாட்டப்பட்டிருந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை எதிர்க்கக் கையாலாகாத அல்லது எதிர்க்க விரும்பாத ஒரு நாடு புதிதாக வந்த ஜப்பானியரை எதிர்க்கத்

தயாராக்கப்பட முடியுமா? இப்படிப்பட்ட நிலைமையில், ஜப்பானியரை எதிர்த்து நிற்பதற்காக இந்தியர்களுடைய உள்ளத்தில் சுதந்திரத்தீயை கொழுந்துவிட்டு எரியச் செய்வதைத் தவிர வேறு யாதொரு உபாயமும் இருக்க இயலாது.

ஆனால் இதன் விளைவு பிரிட்டிஷார் ஜப்பான் இருவருக்கும் விரோதமாக அமையும். அப்படி ஆயினும் இதன் குற்றம் எங்கள் தலைமேல் விழாது. பிரிட்டிஷாரின் தலைமேல்தான். அவர்கள் நமக்குச் சுதந்திரத்தை அளிக்க—நாம் தற்காலத்துக்குப் போதும் என்று ஒத்துக்கொண்ட ஓரளவுக்கு உட்பட்ட சுதந்திரத்தைக்கூட—அளிக்க மறுத்து விட்டார்கள். பிறகு பிரிட்டிஷாருக்கும் ஜப்பானியருக்கும் எங்கள் பார்வையில் என்ன வேற்றுமை மிஞ்சியது? ஒருவன் நமது சுதந்திரத்தை அபகரித்து விட்டான். இந்த ஆபத்துக் காலத்தில் ஜப்பானை எதிர்ப்பதற்காகக் கூட அதை நமக்குக் கொடுக்க அவனுக்குச் சம்மதமில்லை; மற்றொருவன் நமது சுதந்திரத்தை அபகரித்துத் தன் சாம்ராஜ்யத்தை நிலை நாட்ட விரும்புகிறான்! எங்கள் கண்ணில் இருவரும் ஒன்றுதான். "எங்கள் சண்டையில் உதவி புரி, சண்டைக்குப் பின் குடியேற்ற நாடுகளைப் போன்ற சுதந்திரம் உனக்குக் கிடைக்கும்" என்று வெறும் பேச்சுக்காக ஆங்கிலேயர் கூறினார்கள். ஜப்பானியனும் கூறினான்,—"எங்களுக்கு உதவி புரி, நாங்கள் உன்னை விடுதலை செய்து விடுகிறோம்" என்று! யாருடைய பேச்சை நம்புவது? இதனால், இருவர்களில், எவருடைய பேச்சின் மீதும் நம்பிக்கை வைக்க இயலாது. நம்முடைய சுதந்திரத்தை அடைவதற்கு நாமே தயாராக வேண்டும், ஆங்கிலேயர் இதைக் கெடுதலாக எடுத்துக் கொண்டாலும் கொள்ளட்டும் என்று நாங்கள் முடிவு செய்து விட்டோம்.

காந்திஜீ இந்தக் கருத்துக்களைக் கண்டு உள்ளம் வெதும்பி மிகவும் கடுமையாகக் கட்டுரைகள் எழுதத் தொடங்கி விட்டார். அலாகாபாத்தில் நடைபெற விருந்த அகில பாரதீயக் காங்கிரஸ் குழுவின் கூட்டத்திற்காக ஒரு தீர்மானத்தின் நகலைத் தயார் செய்து, ஸ்ரீ மீரா பஹனின் கையில் கொடுத்து அங்கு அனுப்பினார். செயலாற்றுக் குழுவில் அதன் மீது நிறைய வாக்குவாதம் நடந்தது. அங்கு இரண்டு அபிப்பிராயங்கள் நிலவுவதாகத் தோன்றியது—ஒன்று, காந்திஜீயின் மசோதாவின் சார்பில் இருந்தது. மற்றொன்று, அவ்வளவு தூரம் போக விரும்பவில்லை, அந்த நகலை ஏற்றுக் கொள்ளவில்லை. அதில் திருத்தங்களைச் செய்வதற்காக நிறைய முயற்சி செய்யப்பட்டது. ஆனால் பலிக்க

வில்லை. கடைசியில், ஒற்றுமையைக் காப்பதற்காக நாங்கள் எங்கள் ஆட்சேபணையை விட்டு விட்டோம். மற்றவர்கள் என்ன பொருத்தமென்பதாகக் கருதினுர்களோ அதையே ஒப்புக்கொண் டோம். செயலாற்றுக் குழுவில் இப்படிப் பேச்சு நடந்தது. நாட்டின் மனப்போக்கு காந்திஜீயை ஆதரித்தது. அதே மசோதா அகில பாரதீயக் குழுவின் முன் சமர்ப்பிக்கப்பட்டிருக்கு மாஞல் அது ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கலாம், ஆனுல் எங்க ளிடையில் இருந்த கருத்து மாறுபாட்டையும் நன்ருக வெளிப் படுத்தியிருக்கும். நாம் ஏதாவது செய்வதாக யிருந்தால், இவ்வண்ணமாக நம்முடைய சச்சரவைப் பறை சாற்றிக்கொண்டு எதுவும் செய்ய இயலாது. இதனுல் இந்தக் கருத்து மாறு பாட்டை அடக்கி வைப்பதே நன்றெனத் தோன்றியது. காந்தி ஜீயின் தீர்மானம் எந்த உருவத்திலும் சமர்ப்பிக்கப்படவில்லை. ஆயினும் அங்கு நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் காந்திஜீயின் மனேபாவங்கள் நிறையப் புகுந்திருந்தன. காந்திஜீ அதைப் பார்த்தபோது, அவருக்கு அது முழுமையும் பிடிக்காவிட்டாலும் கூடத் தாம் பணி புரிவதற்கு அதில் நிறைய வாய்ப்பு இருந்த தென்பதாகவும், ஆகையால் தாம் அதை ஒரு வகையாக ஏற்றுக் கொள்வதாகவும் கூறினுர்.

## 146. யுத்தகாலத்தில் நாட்டின் நிலைமை

பிரயாகிலிருந்து நான் நேரே வர்தாவுக்குச் சென்று விட்டேன். இனிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு கை கலக்காம லிருக்க முடியாது போல எனக்குத் தோன்றியது. காந்திஜீ கடுமையான கட்டுரைகள் எழுதிக் கொண்டிருந்தார். நாட்டில் அதிக அமைதியின்மை நிலவியது. எங்கள் உள்ளத்திலும் தீ எரிந்து கொண்டிருந்தது. ஒரு முறை மாகாணம் முழுவதையும் சுற்றி வருவது நன்றென நினைத்தேன். காந்திஜீயின் சொல்லை மக்களுக்கு எடுத்துரைக்க வேண்டியது அவசியமாயிருந்தது. வரப்போகும் நெருக்கடியான காலத்திற்கு மக்களைத் தயார் செய்ய வேண்டியிருந்தது. இது ஒரு காரணம். மற்ருென்று, ஜப்பான் மேலேறி வந்து கொண்டிருந்ததால் மக்களிடையில் பரவியிருந்த திகிலைத் தடுக்க வேண்டியிருந்தது. ஜப்பான் இந்திய பூமியில்

எங்காவது வந்து சேர்ந்துவிட்டால் நம்முடைய கடமை என்ன வென்பதை மக்களுக்குக் காட்ட வேண்டியிருந்தது.

இந்நாட்களில் அரசாங்கத்தாரால் நிறையக் கொடுமை செய்யப்பட்டு வந்தது. கடற்கரையிலுள்ள கிராமங்களில், அதாவது ஜப்பானிய படை வந்து இறங்கக் கூடுமென்ற அச்சம் இருந்த இடங்களில், சைனியங்களுக்காகச் செய்யப்பட்டு வந்து ஏற்பாடுகள் அன்றி, ஜப்பானிய படை வந்து சேர்ந்துவிட்டால் அதற்கு யாதொரு பண்டமும் கிடைக்கக் கூடாதென்ற கொள்கை யும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. இதனுல் படகுகள் பறிமுதல் செய்யப்பட்டு வந்தன. சிற்சில இடங்களில் அவை நாசம் செய்யப்பட்டும் வந்தன. முக்கியமாக வங்காளத்தில், எல்லா வேலைகளும் படகுகள் மூலமாகவே நடந்து வந்த இடத்தில், இதன் பயன் மிக்கக் கேடாக விளைந்தது. மக்களின் போக்கு வரத்து, சாமான்களை ஏற்றிக்கொண்டு ஓரிடத்திலிருந்து மற்றெரு இடத்திற்குச் செல்லுதல், சின்னஞ்சிறிய சந்தைகளில் வாங்கல் விற்றல் வரையில் ஒரு வகையில் நின்று போய்விட்டன. எதிரியின் கையில் அவை அகப்படக் கூடாதென்ற நோக்கத் துடன் கிராமங்களில் இருந்த அரிசியையும் நெல்லையும்கூட அரசாங்கம் பறிமுதல் செய்து வந்தது. பீகாரில் சோட்டா நாக புரியிலிருந்து சோன் நதி வரையில் ஒரு பெரிய போர் முனைக்கு ஏற்பாடு செய்யப்பட்டு வந்தது. இதற்காகப் பல இடங்களில் ஆகாய விமான பாளையங்களும் ஆகாய விமானங்கள் இறங்கு வதற்காகத் திடல்களும் கட்டப்பட்டு வந்தன. ஆயிரக் கணக்கான பீகா நிலங்களை அரசாங்கம் ஆங்காங்குத் தன் வசமாக்கி வந்தது. அவற்றில் குடியிருந்த மக்களும் அவற்றைச் சாகுபடி செய்து வந்த குடியானவர்களும் துன்பத்துக்கு ஆளா னுர்கள். அவர்கள் விட்டுச் செல்ல வந்த நிலத்திற்காகவும் வீடு களுக்காகவும் அவர்களுக்கு நஷ்ட ஈடு கிடைக்குமென்பதாகக் கூறப்பட்டது. ஆனுல் இன்னும் எங்கும் யாருக்கும் எதுவும் கிடைக்கவில்லை. வேலைகள் எல்லாம் மும்முரமாக நடத்தப்பட்டு வந்தன. வட பீகாரிலும் சோட்டா நாகபுரியிலும் மாபெரும் ஆங்கிலப்படை வந்து சேர்ந்து கொண்டிருந்தது. எத்தனை லக்ஷம் பேர் வந்துவிட்டார்கள், இன்னும் எத்தனை பேர் வருவார் கள் என்பது தெரியாது. ஆசாமின் எல்லைக்குச் சண்டை வந்து விட்ட காரணத்தால் அங்குச் சைனியங்களின் பணியிலேயே ரயில் வண்டிகள் நிறைய ஈடுபட்டுவிட்டன. அதனுல் சாதாரண மக்கள் எங்காவது ரயிலில் போவது வருவது கடினமாகிவிட்டது.

முக்கியமாக வடபீகாரில் திர்ஹூத் வழியாக அவுதுக்குச் செல்லும் பி. என். டபிள்யூ ரயில்வேயில் அதிகக் கஷ்டமா யிருந்தது. அதில் சைன்னிய வண்டிகள் நிறைய ஓடிக் கொண் டிருந்தன. அவற்றில் பல காயம் பட்டவர்களைப் போர் முனையி லிருந்து சுமந்து சுமந்து சென்று வட இந்தியாவில் ஏதோ ஓரிடத்திற்குக் கொண்டு போய்க் கொண்டிருந்தன. பலபேர் கிழக்கிலிருந்து பீகார், ஐக்கிய மாகாணம் இன்னும் அதற்கு மேற்கேயும் பயந்தோடிக் கொண்டிருந்தார்கள். இவையெல்லா வற்றையும் கண்டு மக்களிடையில் மேலும் திகில் பரவிக் கொண்டிருந்தது. ஓடிவரும் ஜனங்கள் தங்குவதற்காக ஆங் காங்குப் பல இடங்களில் விடுதிகள் கட்டப்பட்டு வந்தன. புதிய சாலைகள் போடப்பட்டு வந்தன. ஒவ்வொரு இடத்திலும் அவர்களுக்காக உணவு, நீர் முதலியவற்றைச் சேகரித்து வைப் பதற்கு முயற்சி செய்யப்பட்டு வந்தது. இதில் நெடிது நோக்கும் தன்மை இருந்தது என்பதில் ஐயமில்லை. ஆயினும் இந்த ஏற்பாடுகள் 'எல்லாம் போர் புரியாது ஓடுவதற்காகவே செய்யப் படுகின்றன என்பதாக மக்கள் நினைத்துக் கொண்டார்கள்! இக் காலத்துப் போர்முனை எவ்வளவு பரப்புள்ள பேரளவில் 'நடக்கின் றன என்பது மக்களுக்கு என்ன தெரியும்?

இதன் பயனாக நாடு முழுவதிலும் பெரும் கலக்கமுண்டாகி விட்டது. நான் மாகாண முழுவதையும் சுற்றி வரவேண்டுமென் பதாக முடிவு செய்திருந்தேன். இத்தீர்மானம் வர்தாவில் மேலும் உறுதி பெற்றுவிட்டது. நான் முன்பு மாகாணத்தின் சிறிய சிறிய இடங்களுக்குக்கூடச் சென்று, புயல் போன்ற சுற்றுப் பிர யாணத்தில் ஒரு நாளையில் ஏழேழு எட்டெட்டுக் கூட்டங்களில் சொற்பொழிவு ஆற்றியதுபோல இப்போது செய்வதற்கு உடல் நிலைமை முன் இருந்ததுபோல இல்லை. இதனால் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒன்று அல்லது இரண்டு முக்கிய இடங்களுக்கு மட்டும் போவதாக நிச்சயம் செய்து கொண்டேன். அங்குப் பொதுக் கூட்டங்கள் மட்டுமன்றி காங்கிரஸ் செயலாளர்களின் விசேஷக் கூட்டங்களும் நடத்தப்படும். உணவு, உடை, இடம் ஆகியவற்றிற்கும் கஷ்டம் அதிகரித்துக் கொண்டு வந்தது. இதைப் பற்றியும் வர்த்தகர்களுடனும் சாதாரண மக்களுடனும் கூடி யோசனை செய்து விவரங்களைத் திரட்ட வேண்டியது அவசி யமாயிருந்தது. இதனால் அப்படிப்பட்டவர்களைத் தனியாகச் சந்திக்க வேண்டுமென்று எண்ணப்பட்டது. இவ்விதமாகவே வேலைத் திட்டத்தைப் போட்டுக்கொண்டு ஏப்பிரல் மாதக் கடைசி

வாரத்தில் மாகாணத்தைச் சுற்றிவரத் தொடங்கி ஜூன் மாதக் கடைசி வாரத்தில் முடித்துவிட்டேன்.

காந்திஜீயானவர் செயலாற்றுக் குழுவுக்காக ஏதோ தீர்மானத்தை அனுப்பினுர் என்பது வெளியாகிவிட்டது. அதைத் தேடிப் பிடித்துவிட வேண்டுமென்று போலீஸ் வழி பார்த்துக் கொண்டிருந்தது. ஆனுல் அச்சமயத்தில் அது அதற்குக் கிடைக்கவில்லை போலிருக்கிறது. சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் 'சுயராஜ்ய பவன்' திடீரென்று சோதனை போடப்பட்டது. அங்கிருந்து போலீசார் மசோதாவின் நகலை மட்டும் எடுத்துச் செல்லவில்லை. அலுவலகத்தின் வேலைக்காக வைக்கப்பட்டிருந்த செயலாற்றுக் குழுவில் நிகழ்ந்த வாதத்தின் சுருக்கக் குறிப்பையும் எடுத்துச் சென்றுவிட்டார்கள். இந்த மசோதாவையும், குறிப்பையும் அரசாங்கம், செக்ரடரி ரிச்சர்டு டாட்டன்ஹம் என்பவர் ஆகஸ்டு புரட்சி இயக்கத்தைப் பற்றி எழுதிய புத்தகத்தில், மிகவும் பயன்படுத்தியது. போலீசுக்கு மசோதா இருப்பது தெரிய வருவதற்கு நான் ஓரளவுக்குக் காரணம் என்று எனக்குச் சிறிது ஐயம் உண்டாகிறது. காந்திஜீயின் மசோதாவில் சில திருத்தங்களைச் செய்ய முயற்சி செய்யப்பட்டதென்பதை நான் மேலே கூறியுள்ளேன். நான் திருத்தம் செய்த பிரதி அலுவலகத்தில் இருந்துவிட்டது. நான் பிரயாகிலிருந்து வர்தாவுக்கு நேரே சென்றுவிட்டேன். புறப்படும் போது இப்பிரதியை என்னுடன் எடுத்துச் செல்ல மறந்துவிட்டேன். ஸ்டேஷனிலோ அல்லது வழியிலோ நினைவு வந்தது. அதை உடனே வர்தாவுக்கு அனுப்பும்படி அலுவலகத்து ஆட்களிடம் சொன்னேனே அல்லது எழுதிக் கொடுத்தேனே நினைவில்லை. ஏனெனில் காந்திஜீ ஒருவேளை அதைப் பார்க்க விரும்பலாமென்று நினைத்தேன். அப்பிரதி அன்றே அலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்டது. அதைப் போலீஸ் வழியில் தடுத்து நிறுத்தியிராதிருந்தால் நான் வர்தாவுக்குப் போய்ச் சேர்ந்ததும் அடுத்த நாளே அது வந்து சேர்ந்திருக்கும். ஆனுல் அது எனக்குக் கிடைக்கவில்லை. அலுவலகத்தார் அதை அனுப்பவில்லையென்பதாக நினைத்துக் கொண்டேன். பிறகு அலுவலகம் சோதனை போடப்பட்டபோது நான் அதைப்பற்றி விசாரித்தேன். அவர்கள் அதை அன்றே அஞ்சல் மூலமாக என்னிடம் வர்தாவுக்கு அனுப்பிவிட்டதாகத் தெரிய வந்தது. இந்தப் பிரதியைப் பார்த்துவிட்டுத்தான் சோதனை போட்டால் ஏதாவது விஷயம் கிடைக்குமென்பதாகப் போலீசார் நிச்சயித்திருக்கலாம்.

எது எப்படியாயினும் சரி, வர்தாவிலிருந்து பீகாருக்குத் திரும்பி வந்து சுற்றுப் பிரயாணத்தைத் தொடங்கிவிட்டேன். பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு சண்டை நமக்கு வந்தே தீருமென்பதைப்பற்றி என் மனத்தில் யாதொரு ஐயமும் இருக்கவில்லை. இதையே நான் தெள்ளத் தெளிவாகவும் வெளிப்படையாகவும் என் சொற்பொழிவுகள் எல்லாவற்றிலும் கூறினேன். இது வரையில் எங்களிடம் யாதொரு வேலைத் திட்டமுமில்லை. இதனால் நான் யாதொரு வேலைத் திட்டத்தையும் எடுத்துரைக்க இயலவில்லை, எடுத்துரைக்கவுமில்லை. ஆயினும் சத்தியாக்கிரகம் நாகரிகக் கீழ்ப்படியாமை உருவே பூணுமென்பதை மட்டும் கூறினேன். அது முற்றிலும் அஹிம்சா மயமாக இருக்கும். அந்நாட்களில், ஜப்பானனது இந்தியாவை விடுதலை செய்ய முயற்சி செய்து கொண்டிருக்கிறதென்றும், அது எல்லா வகையிலும் இந்தியாவுக்கு உதவி புரியுமென்றும் ஜப்பானியரின் ரேடியோ மூலமாக மிகவும் முழக்கமாகப் பிரசாரம் செய்யப்பட்டு வந்தது. இந்த விஷயத்தைப் பற்றியும் நான் என் சொற்பொழிவுகள் எல்லாவற்றிலும், ஜப்பானின் பேச்சில் நம்பிக்கை வைக்கக் கூடாதென்றும், முக்கியமாக, அது தன் அக்கம்பக்கத்து நாடாகிய சைனவைக் கழுத்தின் மேல் கால் வைத்து அமுக்கி வைத்திருக்கிறதென்பதையும், அதன் நடத்தை மேன்மேலும் உக்கிரமாகி வருகிறதென்பதையும் கண்டபின் நம்பக் கூடாதென்றும் கூறி வந்தேன். நாம் பிரிட்டிஷார் ஜப்பான் ஆகிய இருவருடைய கூர் உகிரிலிருந்து இந்தியாவை விடுதலை செய்ய வேண்டுமென்றும், ஒன்றிலிருந்து தப்பி மற்றென்றின் கைக்குள் சிக்குவதை நாம் ஒருவிதத்திலும் விரும்ப முடியாது என்றும், இதனால் நம்முடைய போர் இருவருடனும் நடக்குமென்றும், அது அஹிம்சா மயமாக இருக்குமென்றும் கூறி வந்தேன். என் பேச்சுக்களும் அழுத்தமாகவும் உக்கிரமாகவும் இருந்து வந்தன. முதலில் என் பேச்சுக்கள் மிகவும் காரசாரமின்றி, சில்லென்று இருந்தனவென்பதாகவும் ஆனல் இம்முறையோ நான் நெருப்பை கக்குவதாகவும் நானும் உணர்ந்தேன், பிறரும் கூறினர்கள்.

இம்முறை என் சொற்பொழிவுகளில் அந்த விளக்கெண்ணெய்த் தனம் எள்ளளவும் காணக் கிடைக்கவில்லை. அதற்கு மாருக, அவற்றில் உற்சாக மூட்டும் தன்மையும் ஆவேசம் பிறப்பிக்கும் விஷயங்களும் நிறைய இருந்தன. கூடவே, நான் ஆக்க வேலையும் புரிந்து வந்தேன். வர்த்தகர்களோடும் பொது மக்களோடும் உணவு, துணிக் கஷ்டத்திலிருந்து தப்புவதைப்பற்றியும்

தப்புவிப்பதைப் பற்றியும் பேச்சுக்கள் நடத்தி வந்தேன். அரசாங்கமானது பொது மக்களின் ஒத்துழைப்பை ஏற்றிருக்குமானால் இக்கஷ்டமானது, அது கொண்ட (இன்றும் கொண்டிருக்கிற) பயங்கரமான உருவை அடைந்திருக்காதென்பதாக நான் நம்புகிறேன். பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விரோதமாக மக்களைக் கிளப்பிவிடுவது எங்கள் நோக்கமாக இல்லை. அதன் வழியில் முட்டுக்கட்டை போடுவதோ எப்படியாவது அதற்குத் துன்பத்தை விளைவிப்பதோ எங்கள் நோக்கம் அன்று. ஜப்பானியரை எதிர்த்து நிற்க மக்களைத் தயார் செய்வதுதான் எங்கள் நோக்கம். மேலும் பிரிட்டிஷ் அரசாங்கம் நமக்கு இதைச் செய்ய வாய்ப்பு அளிக்காததால் சமயம் பார்த்து அத்துடன் போராடி வாய்ப்பைப் பெற விரும்பினோம். இதனால் நாங்கள் பொது மக்களை வரை கடந்த வகையில் தயார் செய்ய விரும்பவில்லை. எங்களுடைய கொள்கையைச் செயல் முறையில் காட்டுவதற்கும் நிரூபிப்பதற்கும் எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது.

அந்நாட்களில் ஆங்காங்கு ஆகாய விமானப் பாளையங்களையும் சைன்னியத்திற்காகப் பாசறைகளையும் கட்டுவதற்காக பொது மக்களின் நிலம் கைக்கொள்ளப்பட்டு வந்தது. நான் கயாவுக்குப் போய்ச் சேர்ந்ததும், நகரத்திலிருந்து சிறிது தொலைவில், முன்னமே பாளையம் ஒன்றிருந்த இடத்தில், மேலும் நிறைய நிலம் கைக்கொள்ளப்படுவதாகவும், ஆயிரக்கணக்கான பேர் நிலமில்லாமல் போய்விட்டதாகவும், அவர்களுக்கு நஷ்டஈடு யாதும் கிடைக்கவில்லையென்பதாகவும், இக்காரணங்களால் அவர்கள் சீற்றங்கொண்டிருப்பதாகவும் கேள்விப்பட்டேன். அவர்களுடைய நிலைமை உண்மையிலேயே பரிதாபமாக இருந்தது. பல கிராமங்கள் இடித்துத் தள்ளப்பட்டுப் போயின. இன்னும் பல அழிக்கப்பட இருந்தன. நிலங்களை உழுது பயிரிடுவது நின்றுவிட்டது. பாளையத்தைக் கட்டுவதற்காக நிலம் செப்பனிடப்பட்டு வந்தது. ஆயிரக்கணக்கான கூலியாட்கள் அங்கு வேலை செய்து வந்தார்கள். நிறைய லாரிகள் சாமான்களைச் சுமந்து கொண்டு வந்து கொண்டிருந்தன. வீடும் நிலமும் பறிமுதல் செய்யப்பட்டவர்கள் இங்கும் அங்குமாக அல்லல்பட்டு அலைந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குச் செவி சாய்ப்பார் யாருமில்லை. நான் வந்து சேர்ந்ததுமே மக்கள் என்னிடம் தம் துன்பக் கதையைச் சொல்லி வருந்தினார்கள். அரசாங்கத்திற்கோ யுத்தத்தின் வேலைக்கோ முட்டுக்கட்டை போடுவது எங்கள் நோக்கமாயிருந்திருந்தால் இதைவிட நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருக்காது. ஆனால் நான்,

யுத்த வேலைக்காக அரசாங்கம் இப்படிச் செய்தாலன்றிப் பாது காப்புக்கு ஏற்பாடு செய்ய இயலாதென்பதை மக்களுக்கு விளக்கிக் கூறினேன். இதனால், அவர்கள் நஷ்டஈட்டைப் பெற்றுக்கொண்டு தமக்காக வேறு ஏற்பாட்டைப்பற்றி நினைக்க வேண்டுமென்றும், மேலும் நான் நஷ்டஈடு அளிக்கப்படுவதற்கு முயற்சி செய்வே னென்றும் கூறினேன். நான் என்னமோ சொல்லிவிட்டேனா யினும் அரசாங்கம் என் பேச்சை கேட்குமாவென்பது எனக்குத் தெரியாது.

நான் பட்னாவுக்குத் திரும்பி வந்ததுமே அரசாங்க ஆலோச கருக்குக் கடிதம் எழுதினேன். அதில் எல்லா விஷயங்களையும் தெள்ளத் தெளிவாக எடுத்துக்கூறி, நஷ்டஈடு எவ்விதமாக அமைய வேண்டுமென்பதையும் எடுத்துரைத்தேன். மேலும் நஷ்டஈட்டை வழங்குவதில் குழப்பம், சச்சரவு விளையலாமாதலால் அதை வழங்கும்போது காங்கிரஸின் ஆளைக் கூப்பிட்டு அவர் முன்னிலையில் வழங்க வேண்டுமென்பதை எழுதினேன். நிலங் களில் கட்டடம் கட்டுவதாக இருந்தது. அல்லது ஆகாயவிமானம் இறங்குவதற்காக உறுதியான பாதை போடுவதாக இருந்தது. அந்நிலங்கள் திருப்பிக் கொடுக்கப்படும்போது அவை குடியான வரின் வேலைக்கு உதவா. ஆயினும் பெரும்பகுதி நிலம் மட்ட மாக்கப்பட்டு சும்மா விட்டு வைக்கப்படும். அதில் புல்தான் வளர்க்கப்படும். வேறு யாதொரு மாறுதலும் அடையாது. சண்டை வேலை முடிந்ததும் நிலம் யாருக்குச் சொந்தமோ அவ ரிடம் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டுமென்றும், கூடியவரையில் அது குடியானவரின் வேலைக்கு உகந்ததாகத் திருத்தப்பட்டுத் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டுமென்றும், இதற்கிடையில், அந்த நிலத்தில் குடியானவன் என்ன விளைவித்திருப்பானோ அதற்கு ஈட்டையும் அவனுக்கு அளிக்க வேண்டுமென்றும், மேலும், திருப்பிக் கொடுப்பதாக இல்லாத நிலத்திற்கும், இடிக்கப் பட்ட வீடு முதலியவற்றிற்கும் விலையை ரொக்கமாக அளிக்க வேண்டுமென்றும், பணம் வழங்கும்போதும், விளைச்சலுக்காக ஈடைத் தீர்மானிக்கும்போதும், அதை வழங்கும்போதும் காங்கிர ஸின் செயலாளர்களின் உதவியை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்றும் எழுதினேன்.

என் கடிதம் கிடைத்ததுமே கமிஷனர் அதன்படி நடவடிக்கை எடுத்தார். என்னுடைய சிபாரிசுகளை அவர் ஏற்றுக்கொண்டு எனக்கு நன்றி செலுத்திக் கடிதம் எழுதினார். அங்குள்ள நிலை

மையை நான் மிகவும் நல்ல முறையில் சமாளித்ததாக அவர் அக் கடிதத்தில் எழுதியிருந்தார்.

நான் மான்பூம் ஜில்லாவுக்குச் சென்றபோதும் அங்கும் நிலைமை அதேபோல இருந்தது. அங்கிருந்த கலெக்டரும் பட்ன டிவிஷனின் கமிஷனர் செய்ததுபோலவே செய்தார். இந்த விஷயங்களைப் பற்றி ஏன் இவ்வளவு விவரமாக எழுத வேண்டியிருக்கிறதென்றால், புரட்சிக் கிளர்ச்சி தொடங்கியதும் அரசாங்கமானது, நாங்கள் ஜப்பானுக்கு உதவி புரியவும், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு எல்லா வகையிலும் துன்பம் விளைவிக்கவும் விரும்பியதாக எங்கள்மீது பொய்க் குற்றம் சாட்டியது. பிறகு ஜப்பானுக்கு உதவி செய்தோமென்ற குற்றச்சாட்டு ஆதாரமில்லாததாகப் போனதால் அரசாங்கம் அதை மீட்டுக் கொண்டது. ஆயினும் எங்கள் முஸ்லிம் லீக் தோழர்கள் இன்னும் அதைப் பிடித்துக் கொண்டு, அவ்வண்ணம் கூறித் திரிவதைக் கைவிடவில்லை.

நான் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது வர்தாவில் செயலாற்றுக் குழுவின் கூட்டம் நடைபெறுமென்ற அறிக்கை கிடைத்தது. என் வேலைத் திட்டத்தை முடித்துக் கொண்டு நேரே வர்தாவுக்குச் செல்வதற்கு அனுகூலமாக அதை அமைத்துக் கொண்டேன். ஜூன் மாதக் கடைசியில் அங்கு அப்படியே சென்றேன். அங்கு, முதலில் சர்க்கா சங்கத்தின் கூட்டம் நடைபெற இருந்தது. அதற்குப்பின் செயலாற்றுக் குழுவின் கூட்டம். பல நாட்கள் அங்குத் தங்கிவிட வேண்டி வந்தது. காதி உற்பத்தியை நிறையப் பெருக்க வழி யோசிக்கப்பட்டது. ஏனெனில் துணி ஆலைகளிலிருந்து பாமர மக்களுக்குக் கிடைத்து வந்த துணியானது, சண்டையின் காரணத்தால் இப்போது பெருவாரியாக கிடைக்கவில்லை யென்பதாக காணப்பட்டது. படைகளின் தேவைக்காகவே அவை துணி நெய்யவேண்டி வந்ததென்பதே இதற்குக் காரணம். இதனால் விளைந்த துணிக் கஷ்டத்தை சர்க்கா, கைத்தறி மூலமாகத்தான் போக்க முடியும். இதனால், பல நாட்கள் ஆலோசனை செய்தபின் சர்க்கா சங்கமானது மாபெரும் அளவில் வேலையை பெருக்க முடிவு செய்தது. செயலாற்றுக் குழுவின் கூட்டம் பல நாட்கள் வரையில் நடந்து கொண்டிருந்தது. முடிவில் அஹிம்சாமயமான நாகரிகக் கீழ்ப் படியாமையை நாம் செய்தே ஆக வேண்டுமென்ற முடிவுக்கு வந்தோம். இதற்கு ஆணையிடுவதற்காக ஆகஸ்டு முதலில் பம்பாயில் அகில பாரதீயக் குழுவின் கூட்டத்தை நடத்த வேண்டுமென்பதாக முடிவு செய்தோம்.

# 147. 1942இன் புரட்சிக்கு முன்

செயலாற்றுக் குழுவில் நிறைய வாதம் நடந்தது. அங்குக் கருத்து மாறுபாடு சற்றுத் தெளிவாகிவிட்டது. டாக்டர் சையத் மகமூதானவர் சத்தியாக்கிரகத்துக்கு விரோதமாக இருந்தார் என்பதை இந்த இடத்தில் கூறுவது பொருத்தமற்றதாகாது. ஜூலை மாதம் ஏறக்குறைய பாதிக்கு மேல் கழிந்துவிட்டது. மழை கடுமையாகப் பெய்யத் தொடங்கிவிட்டது. வழக்கம்போல எனக்கு இழுப்பும் அதோடு தொடங்கிவிட்டது. ஆயினும் நான் எல்லா கூட்டங்களிலும் கலந்து கொண்டு வந்தேன். இவ்வளவு பேச்சு நடந்தும் செயலாற்றுக் குழுவானது சத்தியாக்கிரகத்திற்காக யாதொரு செயல் திட்டத்தையும் நிச்சயம் செய்யவில்லை. இது என் மனத்தை வருத்தியது. செயல் திட்டத்திற்கு யாதாவது விவரங்கள் கொடுக்கும்படி நான் காந்திஜீயையும் வேண்டிக் கொண்டேன். ஆனால் அவர் தம்முடைய மூளை இப்படிப்பட்ட வேலையைச் செய்வதில்லை என்றும், சத்தியாக்கிரகம் செய்தே தீர வேண்டுமென்று நிச்சயம் செய்யப்பட்டால் அப்போதுதான் வேலைத் திட்டத்தைப் பற்றிச் சிந்திக்க இயலுமென்றும், இப்போது அகில பாரதீயக் குழுவானது ஏதாவது ஒரு முடிவுக்கு வர வேண்டுமென்றும்; செயலாற்றுக் குழு ஒருமனதாயில்லாமலும், இனிமேல் அரசாங்கம் என்ன செய்யுமென்று தெரியாமலும் இருக்கும் நிச்சயமில்லாத நிலைமையில் செயல் திட்டம் யாதொன்றையும் தாம் இப்போது தீர்மானிக்க முடியாதென்றும் தெள்ளத் தெளிவாக கூறிவிட்டார். ஆயினும் இம்முறை சத்தியாக்கிரகம் மிகவும் உக்கிரமாயிருக்குமென்பது நிச்சயமென்றும்; சிறைக்குப் போவது மட்டும் போதாதென்றும், அதைவிட அதிகத் தியாகம் அவசியமாகுமென்றும், தேவை ஏற்பட்டால் தனதானியம், வீடு வாசல் எல்லாவற்றையும் ஆகுதி செய்யவேண்டியும் வருமென்றும் கூறினர். சர்க்கா சங்கத்தில் போடப்பட்டிருந்த இருபத்தைந்து–முப்பது லக்ஷமோ அல்லது அதைவிட அதிகமோ எது உள்ளதோ அதன் மீதும் கை வைக்கப்படலாமென்றும், நாம் காதி வேலையைப் பெருக்க நிச்சயித்திருந்தாலும், சர்க்கா சங்கம் முழுமையும் அதனுடைய ஆளும் பொருளும் இரண்டுமே, ஓமத்தீயில் விழுந்துவிடக் கூடுமென்றும், ஆயினும் இப்போது சத்தியாக்கிரகத்தின் சித்திரம் தம் கண்முன் வரவில்லையென்றும், அதன்மீது

தாம் இப்போது தம் மூளையைச் செலுத்தக்கூட விரும்பவில்லை என்றும் கூறினர். ஏனெனில் சத்தியாக்கிரகம் இன்றியமையாத தென்றும், அதைச் செய்தே தீர வேண்டுமென்றும் முடிவு செய்யப் படாத வரையில், வேலைத் திட்டத்தைப் புனைவதில் தம் மூளை செல்லாது என்று கூறிவிட்டார். இது எங்களுக்கு ஒரு பெரிய குறையாகப் பட்டது. ஆயினும் வேலைத் திட்டத்தை காந்திஜீ தாம் அமைக்க வேண்டுமாதலால் நாங்கள் வேறு வழியின்றி அவருடைய வார்த்தையை ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

வர்தாவிலிருந்து புறப்படுவதற்கு முன்பு காந்திஜீயிடம் செலவு பெற்றுக்கொள்வதற்காக சேவாகிராமுக்குச் சென்றேன். அங்கு இன்னும் பல பேர் இருந்தார்கள். அவர்களுள் ஒருவர் செயல் திட்டத்தின் பேச்சைக் கிளப்பிவிட்டார். தந்தி டெலிபோன் வெட்டுவது அல்லது ரயில் தண்டவாளத்தைப் பெயர்ப்பது அஹிம்சாவுக்குள் அடங்குமா இல்லையா என்ற கேள்வியைக் கேட்டார். கேள்வி சரியான சமயத்தில் கேட்கப்பட்டது. ஏனெனில் சத்தியாக்கிரகப் பேச்சு எழுந்தபோதெல்லாம் சிலருடைய எண்ணம் இப்பக்கம் சென்றதென்பதையும், அவர்கள் இக்கேள்வியை எழுப்பினுர்கள் என்பதையும் நான் அறிந்திருந்தேன். கேள்வி கேட்கப்பட்டதுமே, இக்கேள்வி திரும்பத் திரும்ப எழுகின்றதென்றும், 1930இன் கிளர்ச்சியிலும், மகாத்மாஜீயும் இன்னும் பலரும் சிறைக்குச் சென்றுவிட்டபோது, பண்டித் மோதிலால்ஜீ தற்காலத்துக்குத் தலைவராக இருந்த காலத்தில், நான் செயலாற்றுக் குழுவின் அங்கத்தினன் என்ற முறையில் கயாவுக்குச் சென்ற சமயத்தில் மக்கள் இக்கேள்வியைக் கிளப்பினுர்கள் என்றும், இங்கும் அங்கும் தந்தியையும் டெலிபோன் கம்பியையும் துண்டித்தும் விட்டார்கள் என்றும், ஆயினும் இவையெல்லாம் மிகச் சில இடங்களில்தாம் நடந்தன என்றும், அச்சமயத்தில் இது தடுக்கப்பட்டு விட்டதென்றும், இதனுல் நாம் இப்போது சத்தியாக்கிரகத்தைப்பற்றி யோசித்து வரும்போது இப்படிப் பட்ட எண்ணம் மக்கள் மனத்தில் எழுகின்றதென்பதில் ஆச்சரியமில்லை என்றும் கூறி, வேலைத் திட்டத்தை அமைக்கும்போது காந்திஜீ இதைப்பற்றித் தெள்ளத் தெளிவாக ஏதேனும் ஆணையிட வேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். இதற்குக் காந்திஜீ, இரும்பு அல்லது மரத்தை வெட்டுவதிலோ முறிப்பதிலோ ஹிம்சா-அஹிம்சா பேச்சு எழவில்லையென்றும், நாம் நாள் தோறும் சாதாரணமாக இரும்பையும் மரத்தையும் வெட்டி முறித்து வருகிறுேமென்றும், ஆனுல் ரயில் தண்டவாளத்தைப்

பிடுங்குவது அல்லது தந்தியை வெட்டுவது வேறு விஷயம் என்றும், அது ஹிம்சாமயமாவதும் அஹிம்சாமயமாவதும் எந்த நோக்கத்துடன் அந்த வேலே செய்யப்படுகிறதென்பதையும், எவ் விதமாகச் செய்யப்படுகிறதென்பதையும், அதனுல் என்ன விளேகிறதென்பதையும் பொறுத்திருக்கிறதென்றும் கூறினர். அதனுல் கொலே விளேந்தால் அல்லது குற்றமற்றவர்களுக்கு ஆபத்து வந்தால் அது ஹிம்சாமயமாகுமென்றும், ஆயினும் அது அஹிம்சாமயமாக இருக்கும் சூழ் நிலேயையும் நாம் கற்பனே செய்துகொள்ள முடியுமென்றும் கூறினர். அது அஹிம்சாமய மாதல் அதன் காரணமாக எவருடைய உயிருக்கும் ஆபத்து வரா தையும், மேலும் அப்படிப்பட்ட வேலேயைச் செய்பவர் அத் துடன் சம்பந்தப்படாத பிறர் அதன் வினேயை அனுபவிக்கும்படி வராமல் அதற்கு உத்தரவாதத்தைத் தெள்ளத் தெளிவாக நேர்மை யுடன் தாமே ஏற்றுக்கொள்வதையும் பொறுத்திருக்கிறதென்பது அவர் கூறியதின் கருத்து எனப் புரிந்துகொண்டோம். இப் பேச்சுக்கள் நடந்ததாயினும், அச்சமயத்தில் யாதும் வேலேத் திட்டம் நிச்சயிக்கப்படவில்லே; நிச்சயிக்கப்படுவதாகவும் பேச் சில்லே. நாங்கள் ரயில் தந்தி முதலியவற்றை வெட்ட வேலேத் திட்டம் போட்டுவிட்டதாக அரசாங்கமானது எங்கள் மீது குற்றம் சாட்டியபோது, காந்தியானவர், தம் விடையில், அரசாங்கமானது ஏதோ பேச்சுவார்த்தையை அல்லது கொள்கையைப் பற்றிய விவாதத்தைச் செயல் திட்டமாக எடுத்துக் கொள்ளும் தவறைச் செய்தது என்று கூறினர். காந்திஜீ கூறியது முற்றிலும் உண்மை. நாங்கள் அச்சமயம் இந்த வேலேத்திட்டத்தையாவது அல்லது வேறு எந்த வேலேத்திட்டத்தையாவது போடவில்லே.

வர்தாவிலிருந்து பட்ணுவுக்குப் புறப்பட்டேன். இரண்டு மூன்று இடங்களுக்கு வருவதாக முன்னமே வாக்குக் கொடுத் திருந்தேன். அவற்றில் கோந்தியா ஒன்று; இதனுல் கோந்தி யாவில் இறங்கி அங்குக் கூட்டம் முதலியவற்றை நடத்திக் கொண்டு இரவு வண்டியில் மீண்டும் புறப்பட்டேன். அடுத்த நாள் இரவு பனரஸை அடைந்தேன். அங்கு இந்திய சரித்திர சபையின் (பாரதீய இதிஹாஸ் பரிஷத்) நிர்வாகக் குழுவின் கூட் டத்தை நடத்த வேண்டியிருந்தது. சில நாட்களுக்குள்ளாக சத்தியாக்கிரக இயக்கம் உக்கிரமான உருக்கொண்டு விடுமென்பது இப்போது ஒருவிதமாக நிச்சயமாகிவிட்டது. இதனுல் பரிஷத் சம்பந்தமான சில வேலேகளே செய்து முடிப்பது அவசியமா யிருந்தது. இவற்றில், சிறிதளவு பணத்தைத் திரட்டிக்கொள்வது

ஒரு முதன்மையான வேலையாக இருந்தது. மேலும் இது வரையில் அநேகமாகத் தயாராகிவிட்டப் பகுதிகளை அச்சிடுவது முதலானதைப்பற்றி ஸ்ரீ ஜயசந்திர வித்யாலங்காருடன் பேசி முடிக்க வேண்டியிருந்தது. சிறிதளவு பணம் கோந்தியாவில் கிடைத்தது. அதைச் சேகரித்துக்கொண்டு, மற்ற வேலைகளுக்கு ஏற்பாடு செய்துவிட்டுக் காசியிலிருந்து புறப்பட்டுப் பட்னுவில் தங்காமல் நேரே முங்கேர் மாவட்டத்தில் உள்ள தாராபூருக்குச் சென்றுவிட்டேன். அங்குக் குடியானவர் (கிஸான்) மகாநாடு நடைபெறுவதாக இருந்தது. அதை மக்கள் எனக்காகத் தள்ளிப் போட்டிருந்தார்கள். ஸ்ரீ கிருபாளானிஜீயும் அதைத் திறந்து வைப்பதற்காக வந்தார். ஸ்ரீ கிருஷ்ண வல்லப் சஹாய் தலைமை தாங்குவதாக இருந்தார். மற்ற முக்கியமானவர்கள் ஸ்ரீ பாபூ, அனுக்கிரக பாபூ முதலானோர் ஆவர். நான் தாராபூருக்கு எப்ப டியோ போய்ச் சேர்ந்துவிட்டேன். ஆயினும் எனக்கு இழுப்பு வந்துகொண்டிருந்தது. மகாநாட்டின் வேலை தொடங்கியது. நான் பேச வேண்டிய முறை வந்தது. நான் ஏதோ கூறத் தொடங்கியதுமே திடீரென்று மேகம் திரண்டு கவிழ்ந்து வந்து கடுமையாக மழை பொழியத் தொடங்கிவிட்டது. ராம்கர் காங்கிரஸைப் போலவே மகாநாட்டின் வேலை தடைபட்டுவிட்டது. நாங்கள் நனைந்துகொண்டே நாங்கள் தங்கியிருந்த வழிபோக்கர் இல்லத்திற்கு (டாக் பங்களா) எப்படியோ வந்து சேர்ந்தோம். இரவை அங்கேயே கழித்துவிட்டு அடுத்த நாள் காலையிலேயே பட்னுவுக்குப் புறப்பட்டுவிட்டேன். பட்னுவுக்கு வந்து சேருவதற்குள்ளாகவே இழுப்புக் கடுமையாகப் பற்றிக்கொண்டது, காய்ச்சலும் வந்துவிட்டது. அன்றிலிருந்து 12–15 நாட்களுக்குப் பிறகுதான் பம்பாயில் அகில பாரதீயக் குழுவின் கூட்டம் நடைபெற இருந்தது. அதற்குள்ளாக நலமடைந்துவிட வேண்டுமென்ற கவலை என்னைப் பிடித்துக்கொண்டது.

பம்பாய்க்குச் செல்வதற்கு முன் மாகாணக் குழுவின் இருக்கை ஒன்றை நடத்துவது பொருத்தமாகத் தோன்றியது. பம்பாயில் ஆலோசனை செய்யப்படுவதாக இருந்த வர்தா தீர்மானத்தைப்பற்றி மாகாண மக்கள் கொண்டிருந்த அபிப்பிராயத்தை அக்கூட்டத்தில் அறிந்துகொள்ளலாம். மாகாணக் குழுவின் விழா சதாகத் ஆச்ரமத்தில் ஜுலை 31ஆம் தேதி நடந்தது. என் உடல் நிலை மிகவும் கேடாக இருந்தது. மிகவும் பலவீனமாக இருந்தது. நான் குழுவின் முன் ஓர் அழுத்தமான சொற்பொழிவை ஆற்றினேன். நான் மாகாணத்தில் சுற்றி வந்து

செய்த சொற்பொழிவுகளின் பொருட் சுருக்கமே அது. மற்ருெரு விஷயமும் அதில் அடங்கியிருந்தது. வர்தாவில் நடந்த பேச்சுக் களையும் மக்களுக்கு அச்சொற்பொழிவில் உரைத்தேன். பம்பா யில் என்ன முடிவு செய்யப்படுமோ அது எல்லையற்ற பெருமை வாய்ந்ததாக அமையும் என்பதை எல்லாரும் புரிந்துகொண்டார் கள். இந்தக் கூட்டத்திற்குப் பிறகு, ஓரிரண்டு நாட்களுக்குள் ளாகவே, அகில பாரதீயக் குழுவின் உறுப்பினர்களும், அவ்விழா வைப் பார்ப்பதற்காகப் பல காங்கிரஸ்காரர்களும், பம்பாய் விழாவில் கலந்துகொள்வதற்காகப் புறப்பட்டுவிட்டார்கள். நான் அங்குச் செல்ல இயலவில்லை. அவ்வளவு நோயாக இருந்தேன். பட்ணுவிலேயே படுத்துக் கிடந்தேன்.

அரசாங்கம் மிகவும் மும்முரமாக ஏற்பாடுகள் செய்து வருவ தாகவும், பம்பாயில் எல்லாரும் சிறை கொள்ளப்படுவார்கள் என்ப தாகவும் செய்தித் தாள்களில் செய்தி தீவிரமாக அச்சிடப்பட்டு வந்தது. பீகாரிலும் தயாராக இருப்பதாகவும், மூடப்பட்டிருந்த பாளையச் சிறை சுத்தம் செய்யப்பட்டுத் தயாராக்கப்பட்டு வருகிற தாகவும், இங்கும் அங்குமிருந்து செய்தி வந்துகொண்டிருந்தது. பம்பாயில் ஆகஸ்டு 5ஆம் தேதியிலிருந்து (1942ஆம் ஆண்டு) செயலாற்றுக் குழுவின் இருக்கை தொடங்கியது. ஆகஸ்டு 7ஆம் தேதியிலிருந்து அகில பாரதீயக் குழுவின் கூட்டம் நடைபெறுவ தாக இருந்தது. நான் ரேடியோ மூலமாகவும் செய்தித் தாள் மூலமாகவும் செய்திகளைக் கேட்டும் படித்தும் வந்தேன். ஆகஸ்டு 8ஆம் தேதி இரவு அகில பாரதீயக் குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் செயலாற்றுக் குழுவினுல் அது அங்கீகரிக்கப்பட்ட துமே, அது செய்தித் தாள்களில் வந்துவிட்டது. பம்பாயிலேயே எல்லாரையும் சிறைகொண்டு, இயக்கம் தொடங்கப்படுவதற்கு முன்னமே அது அடக்கப்பட்டுவிடு மென்ற செய்தி மிகவும் விரு விருப்பாக நிலவியது. அப்படி நடந்தால் பொது மக்களின் முன் யாதொரு வேலைத் திட்டமும் இல்லாமல் போய்விடுமே என்று நினைத்தேன். இதனுல் குறைந்த பட்சம் எங்கள் மாகாணத்திற் காகவாவது, ஒரு செயல் திட்டத்தை அமைக்க வேண்டுமென்ப தாக எண்ணினேன். உட்கார்ந்து எழுதுவதற்கு உடலில் வலிமை யில்லை. இதனுல் அங்கிருந்த நண்பர்களிடம் எல்லா விஷயங் களையும் கூறி மசோதா ஒன்றைத் தயார் செய்யும்படி கேட்டுக் கொண்டேன். அவர்களில் முக்கியமானவர்கள் மாகாணக் குழுவின் அமைச்சர் ஸ்ரீ தீப்நாராயண் சின்ஹாவும், ஸ்ரீ மதுரா பிரசாதும் ஆவர். அனுக்கிரக பாபூவும் பம்பாய்க்குச் செல்ல

வில்லை. பட்னுவில்தானிருந்தார். மசோதா தயாரானதும் அதை அனுக்கிரக பாபூவிடம் கொடுத்துச் சிறிது இங்கும் அங்கும் மாறுதல்கள் செய்து சரிப்படுத்திக் கொண்டேன். அதை அச்சிடவும் ஏற்பாடு செய்தாகிவிட்டது. உண்மையிலேயே பம்பாய்க்குச் சென்றிருப்பவர் எல்லாரும் சிறை கொள்ளப்பட்டு விட்டால் எஞ்சி நிற்பவர்கள் அச்செயல் திட்டத்தின்படி வேலை புரிவார்கள் என்பதாக நிச்சயிக்கப்பட்டது. தலைவர்கள் சிறை கொள்ளப்பட்டுப் போய் யாதொரு செயல் திட்டத்தையும் அளிக்க இயலாமற் போனல் அந்நிலைமையில் காங்கிரஸ்காரர் ஒவ்வொருவரும் தம்மையே தலைவராக பாவித்துக்கொண்டு அஹிம்சா கொள்கைக்கு உள்ளடங்கிச் சத்தியாக்கிரக உருவில் என்ன செய்ய இயலுமோ அதைச் செய்ய வேண்டுமென்றும், இப்போரை இறுதிப் போராக உணர்ந்து முற்றிலும் துணிந்து ஒன்றும் மிச்சம் விடாமல் நம்மால் ஆனவற்றை எல்லாம் செய்து பார்த்துவிட வேண்டுமென்றும், ஆயினும் அஹிம்சாவைக் கைவிடக் கூடாதென்றும் காந்திஜீ அடிக்கடி கூறியிருந்தார். அதில் சத்தியாக்கிரகத்திற்காகச் செயல் திட்டமும் காட்டப்பட்டிருந்தது. அது முந்திய சத்தியாக்கிரகங்களிலிருந்து கொள்கைகளில் வேறன்று. ஆயினும் மிகவும் உக்கிரமாக இருந்தது.

இதற்கிடையில், ஆகஸ்டு 8ஆம் தேதிக்குப் பிறகு காங்கிரஸ்காரர்கள் கைது செய்யப்பட மாட்டார்கள் என்றும், அரசாங்கமானது காங்கிரஸ் மேற்கொண்டு என்ன செய்யும் என்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கு மென்றும் ஒரு செய்தி தில்லியிலிருந்து அச்சிடப்பட்டது. காங்கிரஸின் சார்பிலிருந்தும், ஏதாவது அடி எடுத்து வைப்பதற்குமுன் காந்திஜீ வைசிராயுடன் மீண்டும் ஒருமுறை பேச்சு வார்த்தை நடத்துவார் என்றும், அங்கு யாதும் முடியாவிட்டால் தான் ஏதாவது அடி எடுத்து வைக்கும்படி அவர் கூறுவார் என்றும் சொல்லப்பட்டு வந்ததாக அச்செய்தி கூறியது. இச்செய்தியை நாங்கள் எல்லாரும் நம்பிக் கொண்டோம். இப்போது விரைவில் எதுவும் நடக்காது என்று நினைத்துக் கொண்டோம். பம்பாய்க்குச் சென்றவர்கள் திரும்பி வரும் வரையில் காத்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும், அவர்கள் அங்கு நிச்சயிக்கப்பட்ட வேலைத் திட்டத்தைத் தம்முடன் கொண்டு வரலாமென்றும், அப்படி நிகழ்ந்தால், எங்களால் தயார் செய்யப்பட்ட வேலைத் திட்டத்தை உபயோகிப்பது தவருகாவிட்டாலும் அனுவசியமாகும் என்றும் எண்ணி ஆகஸ்டு 11ஆம் தேதிக்குமுன், அதாவது பம்பாயிலிருந்து திரும்பி வருவார்க

ளென்று எதிர்பார்க்கப்பட்ட தேதிக்குமுன், நாங்கள் யாதும் செய்ய வேண்டியதில்லையென்று நிச்சயம் செய்து விட்டோம். இந்த முடிவின்படி அனுக்கிரக பாபூ ராய்பரேலிக்குப் போய் விட்டார். அங்கு அவருடைய சகோதரர் நோய் வாய்ப்பட்டிருந் தார். தீப் 'நாராயண் பாபூ முஜபர்பூர் ஜில்லாவில் முன்னமே நிச்சயிக்கப்பட்டிருந்த ஏதோ' ஒரு வேலையை முடிக்கப் போய் விட்டார். நானும் மதுரா பாபூவும் ஸ்ரீ சக்ரதரசரணுடன் ஆச்ரமத் தில் இருந்து வந்தோம்.

## 148. 1942இன் சூறுவளி நாட்கள்

1942 ஆகஸ்டு 8ஆம் தேதி இரவு சுமார் பத்து மணிக்குப் பிறகு அகில பாரதீயக் குழுவானது தீர்மானத்தை அங்கீகரித்து விட்டது. காந்திஜீ நீண்டதொரு சொற்பொழிவு ஆற்றினர் என்று கேள்விப்பட்டேன். அதில் அவர் "செய் அல்லது சா" என்ற மந்திரத்தை மக்களுக்கு அளித்தார். கூடவே அவர் வைசிராயைச் சந்திப்பதைப் பற்றியும், மேலும் ஒரு முறை உடன்படிக்கைக்காக முயற்சி செய்வதைப்பற்றியும் கூறினர். மற்றத் தலைவர்களின் பேச்சும் நடந்தன, அவற்றில் சர்தார் வல்லப்பாயீயின் பேச்சை மக்கள் மிகவும் பாராட்டினர்கள். 1942 ஆகஸ்டு 9ஆம் தேதி காலையில் நான் 'செர்ச்லைட்'டில் பம்பாயின் நடவடிக்கைகளைப் படித்துக் கொண்டிருந்தேன். மதுராபாபூ ஊருக்குள் சென்றுவிட்டார். இதற்குள் டிஸ்ட்டிரிக்ட்டு மாஜிஸ் டிரேட்டு மிஸ்டர் ஆர்ச்சர் வந்து சேர்ந்தார். நான் கட்டிலில் படுத்திருந்தேன். அவர் என்னைப் பார்த்து, என் உடல் நலத் தைப்பற்றி விசாரித்துவிட்டு, என்னுடைய செயல் திட்டம் என்னவென்று கேட்டார். இவர் வருவதற்குக் காரணம் என்ன வென்பதை நான் புரிந்து கொண்டேன். ஏனெனில் ரேடியோ மூலமாக, காந்திஜீயும் செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர் களும் கைது செய்யப்பட்ட செய்தி சுருக்கமாக வந்துவிட்டது. என்னுடைய நோயுற்ற நிலைமையைப் பார்த்துவிட்டு, இந்த நிலைமையில் என்ன செய்வதென்று அவர் அரசாங்கத்தைக் கேட்டார். "சிவில் சர்ஜனிடம் காட்டி அங்கிருந்து தொலைவில் அழைத்துச் செல்லப்படுவதற்குத் தகுதியா இல்லையா என்று

கேள்" என்ற உத்தரவு வந்தது. சிவில் சர்ஜனை மிஸ்டர் ஆர்ச்சர் சென்று அழைத்து வந்தார்.

இதற்குள்ளாக என் வீட்டிற்கும் செய்தி எட்டிவிட்டது. அங்கிருந்து என் தமக்கை, மிருத்யுஞ்சனின் தாய் முதலானோர் வந்துவிட்டார்கள். நான் பிரயாணம் செய்வதற்குத் தகுதியில்லை யென்பதாக சிவில் சர்ஜன் அபிப்பிராயப்பட்டார். இதனால் என்னைப் பகல் 11–12 மணி சுமாருக்கு பாங்கீபூர் சிறைக்கு அழைத்துச் சென்றூர்கள். மழை நிறையப் பெய்து கொண் டிருந்தது. செய்தி ஊரில் பரவிவிட்டது. சதாகத் ஆச்ரமத்தி லிருந்து நான் புறப்படுவதற்கு முன்னமே சிலர், முக்கியமாக மாணவர்கள், ஆச்ரமத்திற்கு வந்துவிட்டார்கள். மிஸ்டர் ஆர்ச்சர் நடந்துகொண்ட முறை மிகவும் நன்ருக இருந்தது. அவர் என்னை ஒரு விதத்திலும் துரிதப்படுத்தவுமில்லை, மரியாதை யின்றியோ முறை தவறியோ என்னிடம் நடந்து கொள்ளவு மில்லை. சிறையில் எனக்காக எல்லா ஏற்பாடுகளையும் சரியாகச் செய்துவிட்டு மதுராபாபூவும் சக்கரதரும் திரும்பிச் சென்றதுமே ஸ்ரீ பூலன் பிரசாத் வர்மாவும் கைது செய்யப்பட்டு அங்கு வந்து சேர்ந்தார். இவ்வண்ணமாக 1–1½ மணிக்குள்ளாகவே, நான் தனியாக இருக்க மாட்டேன் என்பதும், குறைந்தது ஒரு தோழ ராவது இரவில் என்னைக் கவனித்துக் கொள்வதற்கு என்னுடன் கட்டாயமாக இருப்பார் என்பதும் நிச்சயமாகத் தெரிந்துவிட்டது. மதுராபாபூவும் மிஸ்டர் ஆர்ச்சரைக் கேட்டுகொண்டு பொழுது சாயும் முன்னமே வந்துவிட்டார். அடுத்த நாள் இன்னும் பலர் வரத் தொடங்கினர்கள். பம்பாயிலிருந்து திரும்பிவந்ததும், ஸ்ரீ பாபூ, சத்யநாராயண் பாபூ மகாமாயாபாபூ முதலானோரும் வந்துவிட்டார்கள். அனுக்கிரக பாபூவும் வந்துவிட்டார். பட்னவில் மிகவும் பலத்த முழக்கம் நடந்துகொண்டிருந்தது. பெரிய பெரிய ஊர்வலங்கள் புறப்பட்டன. அரசாங்க அலுவல கங்கள் மூடப்பட்டுவிட்டன. ஒரு மாபெரும் ஊர்வலம் கவர்னரின் மாளிகை வரையில் கோஷம் செய்து கொண்டு போய்ச் சேர்ந்தது. அதற்குள் இருட்டிவிட்டது. இதனால் அன்று மேற்கொண்டு எதுவும் நடக்கவில்லை. ஆயினும் அடுத்த நாள் செக்ரடேரி யேட்டின் மீது கொடியை ஏற்றுவதற்காக ஊர்வலம் செல்லும் என்ற செய்தி பிரபலமாயிருந்தது.

சிறையில் செய்தி கிடைப்பதற்கு ஒரு வழிதானிருந்தது. அதாவது, சிறை கொள்ளப்பட்டுப் புதிய ஆட்கள் வருவதுதான். செய்தித்தாள்கள் இன்னும் நிறுத்தப்படவில்லை. ஆயினும்

அவற்றிலிருந்து செய்தி மிகக் குறைவாகவே கிடைத்தது. செக்ர டேரியேட்டுக்கு ஊர்வலம் சென்றது. துப்பாக்கிகள் பிரயோகிக்கப் பட்டன. 8–9 இளைஞர்கள் உயிர்த் தியாகிகளானார்கள். பலர் காய மடைந்தார்கள். அவர்களை மக்கள் மருத்துவ சாலைக்கு எடுத்துச் சென்றார்கள். அந்த ஊர்வலத்தில் 40–50 வாலிபர்கள் சிறை கொள்ளப்பட்டு அன்றிரவே பாங்கீபூர் சிறைக்குக்கொண்டு வரப்பட்டார்கள். அவர்களிடமிருந்து குண்டு எறியப்பட்ட கதை தெரிய வந்தது. இரவு முழுதும் ஊரில் ஊர்வலங்கள் சென்று கொண்டிருந்தன. சிறைக்குள்ளும் ஊர்வலங்களின் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. அன்றே தந்தியையும், டெலிபோனை யும் அறுக்கும் வேலை தொடங்கிவிட்டது. பட்னாவில் டெலிபோன் நின்றுவிட்டதென்பதாகக் கேள்விப்பட்டோம். சிறையின் அலு வலகத்திலும் தொலை பேசியில் செய்தி வருவது போவது நின்று விட்டது. செக்ரடேரியேட்டு ஊர்வலத்தில் கைது செய்யப்பட்டுக் கொண்டு வரப்பட்ட இளைஞர்களை எப்படியோ இரவு முழுதும் வைத்திருந்து அடுத்த நாள் அவர்களைப் பாளையச் சிறைக்கு அனுப்புவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டு வந்தன. முன்னமே எங்கள் சிறை திண்டியாக நிறைந்திருந்ததாக சொல்லிக் கொண் டார்கள். சாதாரண கைதிகளின் எண்ணிக்கை மாகாணமெங்கும் நிறையப் பெருகிவிட்டது. ஏனெனில் பல ஆண்டுகளாகவே தீவட்டிக் கொள்ளையானது யுத்த காலத்தில் பெருகிவிட்டது. திருட்டு முதலானதும் பெருகிக் கொண்டிருந்தது. கைதிகளில் பலர் இன்னும் விசாரணைக் கைதிகளாகவே இருந்தார்கள். அவர்களுடைய வழக்குகள் இன்னும் விசாரணைக்கு வரவில்லை. இதனால் அரசியல் கைதிகளின் எண்ணிக்கை பெருகத் தொடங்கி யதும் அவர்களுக்கு இடம் போதாமல் போய்விட்டது. மேல் வகுப்பில் வைக்கப்படுவதாக இருந்தவர்கள் பாங்கீபூர் சிறையி லேயே வைக்கப்பட்டார்கள். மற்றவர்களைப் பாளையச் சிறைக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த இளைஞர்கள் பாளை யச் சிறைக்கு அனுப்பப்படாத வரையில், பொது மக்கள் சிறை வாயிலுக்கு முன்னும் தெருவிலும் கும்பல் போட்டு நின்று கொண்டிருந்தார்கள். பாங்கீபூர் சிறையில் ஒரு மாடி வீடு தெருவை ஒட்டியிருந்தது. அதன்மீதிருந்து வாலிபர்கள் தெரு வில் கூடியிருந்த கூட்டத்துடன் ஏதோ பேச்சும் பேசினார்கள். மூன்று மணி சுமாருக்கு அவர்களை அழைத்துச் செல்ல லாரிகள் கொண்டு வரப்பட்டன. அவற்றில் அவர்கள் ஏற்றப்பட்டார்கள். முதல் லாரி புறப்பட்டதுமே பொது மக்கள் லாரி மீது பாய்ந்து

வாலிபர்களை விடுதலை செய்து விட்டார்கள். லாரிக்குத் தீ வைத்து விட்டார்கள். மற்ற லாரிகள் பிறகு புறப்படவில்லை. அவற்றில் ஏற்றப்பட்டிருந்த வாலிபர்களை இறக்கி மீண்டும் சிறைக்குள் கொண்டு வந்து விட்டார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு பட்டாளம் வந்துவிட்டது. அது மக்கள் கூட்டத்தைக் கலைத்து ஓட்டித் தெருவைக் காலி செய்தது. முன்னும் பின்னும் பட்டாள வண்டிகள் போக அவற்றிற்கு இடையில் கைதிகளின் லாரிகள் பாளையச் சிறைக்குக் கொண்டு போய்ச் சேர்க்கப் பட்டன.

"ஏ" வகுப்பில் வைக்கப்பட்டவர்களின் எண்ணிக்கையும் பெருகிவிட்டது. அவர்களுக்குச் சிறையின் மருத்துவ சாலையைத் தவிர வேறு இடமில்லை. அவர்களையும் ஹஜாரிபாக்குக்குக் கொண்டு போவதாக பேச்சு நடந்தது, ஆனால் ரயில் வண்டிகளின் போக்கு வரவு நின்று விட்டதனால் அவர்கள் அங்கு அனுப்புவது, நாளை நிச்சயிக்க முடியாமல், தடைப்பட்டுவிட்டது. சுமார் ஒரு மாதம் வரையில் அவர்கள் அதே சிறிய மருத்துவ சாலையிலேயே இருந்தார்கள். சிலர் வேறு இடங்களிலும் வைக்கப்பட்டார்கள். பாங்கீபூர் சிறை பட்னு ரயில் சந்திப்பு நிலையத்துக்கு அருகில் இருக்கிறது. அங்கிருந்து கொண்டு ரயில் வண்டிகள் போவது வருவதைப் பார்க்கலாம். ரயில் கூவுவது நன்ருக கேட்கும். ஒரே ஓர் இஞ்சினின் ஒலிதான் கேட்கப்பட்டு வந்தது. அது ஸ்டேஷனிலேயே பெட்டிகளை இங்கு மங்குமாகப் பெயர்த்து இழுத்துச் சென்று கொண்டிருந்திருக்கலாம். அதனுடைய ஒலியை நாங்கள் நன்ருகக் கண்டு கொண்டோம். இதனுல் வண்டிகள் போகத் தொடங்கிவிட்டன என்பதாக நாங்கள் ஏமாறிப் போகவில்லை. சுமார் ஒரு மாதத்திற்குப் பிறகு எல்லாரும் ஹஜாரிபாக் சிறைக்குச் சென்று விட்டார்கள். நான் அங்குச் செல்வதற்குத் தகுதியாக இல்லை. அவ்விடத்து நீரும் காற்றும் கூட எனக்கு ஒத்துக் கொள்வதில்லை. இதனுல் என்னைப் பட்னுவிலேயே வைத்திருந்தார்கள்.

சிறைக்குச் சென்ற மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு, என்னைச் செயலாற்றுக் குழுவின் மற்ற அங்கத்தினர்கள் இருந்த இடத்திற்கோ வேறு எந்த இடத்திற்கோ அழைத்துச் செல்லப் போகிருர்களென்ற செய்தி கிளம்பியது. ரயில் ஓடுவது நின்று விட்டதால் என்னைக் கொண்டு போவதற்கு ஒரு வழிதானிருந்தது. அதுதான் ஆகாயக் கப்பல். டாக்டர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டதில் ஆகாயக் கப்பல் பிரயாணத்தைத் தாங்கக்

கூடியதாக என் நிலைமையில்லை யென்று கூறிவிட்டார்கள். இதனால், இந்த யோசனையும் தள்ளப்பட்டுப் போயிற்று. ஏறக் குறைய பத்து மாதங்களுக்குப் பிறகு, 1943இல் ஒரு நாள் மேஜர் மர்டக்—அவர்தாம் நான் சிறை கொள்ளப்பட்டபோது என்னைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு ஹஜாரிபாக்குக்கு அழைத்துச் செல்ல வேண்டாமென்று அபிப்பிராயம் அளித்தார்–திடீரென்று சிறைக்கு வந்தார். அவர் "உம்மைப் பரிசோதித்துப் பார்த்து உம் உடல் நலத்தைப் பற்றி உடனே தெரிவிக்கும்படி எனக்கு அரசாங் கத்திலிருந்து உத்தரவு வந்திருக்கிறது" என்று என்னிடம் கூறி னார். கோடையில், சிறப்பாக ஜூன் மாதத்தின் ஆரம்பத்தில், நான் மிகவும் ஆரோக்கியமாக இருப்பதுண்டு. அதேபோல இப் போதும் நான் மிக்க நலமாக இருந்தேன். இதனால் என் உடல் நலத்தைப் பற்றி யாதொரு செய்தியும் அனுப்பப்படாத சமயத் தில் இவ்வண்ணம் டாக்டர் வந்தது ஆச்சரியமாகத்தானிருந்தது. என்னை வேறு எந்த இடத்திற்கோ அனுப்ப விரும்புகிறார்கள் என்பதை ஊகித்துக் கொண்டேன். நான் டாக்டரைக் கேட்ட போது, அவர் தமக்கு முறையாக யாதொரு செய்தியும் கிடைக்க வில்லை யென்பதாகவும், தாம் நிச்சயமாகச் சொல்ல முடியாதென் பதாகவும், ஆயினும் அப்படித்தான் ஏதாவதிருக்கும் போலிருக் கிறதென்று தாம் சாதாரணமாகக் கூறமுடியு மென்பதாகவும் விடையளித்தார். மேலும் சிறிது கேட்டதின் பேரில் நான் ஹஜாரிபாக்குக்கு அனுப்பப்பட மாட்டேன் என்பதையும், தெற்கே புனா அல்லது வேறு ஏதோ ஓர் இடத்திற்குப் போக வேண்டியிருக்கும் என்பதையும் கூடக் கூறினார். பிறகு நான் சிறையை விட்டு வெளியே வந்தபோது, என்னை அகமத் நகர் கோட்டைக்குக் கூட அனுப்புவதாகப் பேச்சிருந்ததாகவும், அங்கு எனக்காக அறையும் ஒழிக்கப்பட்டு வைத்திருந்ததாகவும் செய்தி கிடைத்தது. ஆனால் ஏனோ தெரியவில்லை, பிறகு ஒன் றும் நடக்கவில்லை. சில நாட்களுக்குப் பிறகு, டிஸ்டிரிக்ட்டு மாஜிஸ்டிரேட்டு என்னைப் பார்க்க வந்தபோது, அவரைக் கேட்ட தில், அப்பேச்சுக்கு மேலே ஏன் ஒன்றும் நடக்கவில்லை யென்பது தெரியவில்லை என்று கூறினார்.

செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர்கள் எங்குச் சிறை வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது உலகத்துக்குத் தெரியா தென்று அரசாங்கம் நினைத்துக் கொண்டிருந்தது. அவர்கள் அகமத் நகர் கோட்டையில் இருக்கிறார்கள் என்பது வெளியிலிருந் தவர்களுக்கு எப்பொழுது தெரிய வந்ததென்பது தெரியாது,

ஆனால் நாங்கள் சிறை கொள்ளப்பட்ட பின் மிகச் சில நாட்களுக்குள்ளாகவே பாங்கீபூர் சிறையில் இது எங்களுக்குத் தெரிந்துவிட்டது. நாங்கள் சிறை கொள்ளப்பட்ட பின் உள்ளூர் பத்திரிகைகள் சில நாட்கள் வரையில் வெளி வந்து கொண்டிருந்தன. ஆயினும் அதி விரைவில் அவை எல்லாம் நிறுத்தப்பட்டுப் போயின. பீகார் அரசாங்கமானது 'பட்னு டெய்லி நியூஸ்' என்ற பெயரில் ஓர் ஆங்கில தினசரியை வெளியிடத் தொடங்கியது. அதிலிருந்து ஏதாவது செய்திகள் கிடைத்து வந்தன. முக்கியமாக அரசாங்கமானது எந்த மாவட்டத்தில் எவ்வளவு பொது அபராதம் விதித்தது அல்லது தண்டனை வரி விதித்ததென்பது தெரிய வந்தது. மிகச் சில மாதங்களுக்குள்ளாகவே ஏறக்குறைய 26 லக்ஷம் அபராதம் விதிக்கப்பட்ட தென்பதைக் கண்டோம்!

## 149. 1942இன் சிறைவாசத்தைப் பற்றிச் சில விஷயங்கள்

பாங்கீபூர் சிறை வாழ்க்கை எனக்கு யாதொரு வகையிலும் கஷ்டமாக இல்லை. வீட்டு மனிதர்களை அடிக்கடி சந்தித்து வந்தேன். சின்னஞ் சிறிய குழந்தைகள் கூட அவர்களுடன் வருவார்கள். நான் எங்கிருக்கிறேன் என்பதும், ஏன் ஒரே இடத்தில் அடைப்பட்டிருக்கிறேன் என்பதும் அவர்களுக்குத் தெரியாது, ஆனால் சந்திப்பு நாளன்று அவர்கள் என்னிடம் வருவதற்கு மிகவும் ஆவலாக இருந்தார்களென்று கேள்விப்பட்டேன். மூன்று நான்கு முறை வந்ததற்குள்ளாகவே அவர்கள் வழியைத் தெரிந்து கொண்டார்கள், என் அறையையும் கூடத் தெரிந்து கொண்டார்கள். அவர்களில் வயதில் மூத்தவளாயிருந்த பெண்ணுக்கு வழியும் அறையும் தெரியும். என்னிடம் வந்ததும் அச்சிறுவர்கள், 'தாத்தா, ஏதாவது தின்பதற்குக் கொடு' என்று கட்டளை யிடுவார்கள்! நான் அவர்களுக்காக ஏதாவது வைத்திருப்பேன். அரை மணி நேரம் தங்கி இருந்து இங்கும் அங்கும் ஓடிக் குதித்து விளையாடிவிட்டு, ஏதாவது உண்டுவிட்டுப் போய் விடுவார்கள். போகும்போது, ஆசை வந்து விட்டால், சிறையின் வட்டாரத்தில் வளர்க்கப்பற்றிருந்த அழகிய பூக்களைப் பறித்துக்கொண்டு போவார்கள். சிறையின்

அதிகாரிகள் அவர்களுடைய விஷமத்தால் கோபமடைவதில்லை, அதற்கு மாறாக குழந்தைகளின் குறும்பைப் பார்த்து மகிழ்ந்து சிரிப்பார்கள். போகும்போது, எப்போதாவது அருண் என்னுடைய கையைப் பிடித்துக்கொண்டு ' நீயும் வா, தாத்தா ' என்பான். இளங் குழந்தைப் பருவம்தான் என்ன அழகு ! ஒரு கட்டுக் கவலை கிடையாது !

சிறையில் ஒரு சமயத்தை மிகவும் கவலையாகக் கழித்தேன். அதுதான் மகாத்மாஜீ உண்ணுவிரதம் இருந்த சமயம். இதன் செய்தி தினசரிகளிலிருந்து கிடைத்து விட்டது. அவ்விடத்துச் செய்தியை எனக்குத் தந்தி மூலம் தெரிவித்துக் கொண்டிருக்கும்படி நான் அரசாங்கத்துக்கு எழுதினேன். தந்தி அனுப்பும்படி சில நண்பர்களுக்கும் சொல்லி இருந்தேன். தந்திகள் வரத் தொடங்கின. ஆனால் அவை ரகசிய போலீசாரால் பார்த்து அனுப்பப்படாத வரையில் எனக்கு கிடைக்க மாட்டா. இதனால் தாமதமாகும். சிறையின் அலுவலகத்துக்கு சுமார் 24 மணி நேரத்திற்குப் பிறகுதான் கிடைக்கும். மேலும் அரசாங்கத்தின் காலாகால அறிக்கையில் (புல்லெடின்) எவ்வளவு செய்தி அச்சிடப் பட்டதோ அதைத்தான் என் நண்பர்கள் அனுப்ப முடியும். அது 'பட்னு டெயிலி நியூஸி'ல் காலையிலேயே எங்களுக்குக் கிடைத்துவிடும். இதனால் தந்தி மேலும் பயனற்றுப் போயிற்று. சில நாட்களுக்குப் பிறகு தந்தியை வரவழைப்பது நிறுத்தப்பட்டு விட்டது. ஒரு நாள், மகாத்மாஜீயின் நிலைமை மிகவும் மோசமாயிருப்பதாகச் செய்தி வந்துவிட்டது. அவர் இப்போது இல்லையென்று கூட ஊரில் செய்தி எழுந்துவிட்டது! இச்செய்தி சிறையில் இருந்த எங்களுக்கு எட்டவில்லை. 'பட்னு டெயிலி நியூஸ்' வந்ததும்தான் அவர் இன்னும் உயிருடனிருக்கிறார் என்பதும், இப்போது நிலைமை திருந்தத் தொடங்கி விட்டதென்பதும் தெரிய வந்தன. நாங்கள் கவலைப் பட்டுக்கொண்டு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தோம். இறைவனின் திருவருளால் ஆபத்தான கண்டத்திலிருந்து பிழைத்து விட்டார். அவர் இப்போது நெருக்கடியான எல்லையைத் தாண்டி விட்டார் என்பதாகத் தெரிய வந்தது. கடைசியில், அவர் தன் நோன்பை இனிது முடித்து விட்டார் என்ற நற்செய்தியையும் கேள்விப்பட்டோம். பிரிட்டிஷ் அரசாங்கம் லார்டு லின்லித்கோ ஆகிய இருவரின் ராஜதந்திரமும் கொடுமையும் நன்ருக விளங்கி விட்டன.

சிறைவாசம் ஒரு விதமாக யாதொரு சிறப்பான நிகழ்ச்சியுமின்றி கழிந்து கொண்டிருந்தது. வெளியே, பொது மக்கள்,

அரசாங்க அதிகாரிகள், போலீஸ், பட்டாளம், மாஜிஸ்டிரேட்டுகள் மூலமாக என்ன நடந்தனவோ அவற்றைப் பற்றிச் சிறிது சிறிது செய்தி கிடைத்து வந்தது. அது பயங்கரமாகவும் மயிரைச் சிலிர்க்க வைப்பதாகவு மிருந்தது. ஆனால் நாங்கள் கையறுந்து கிடந்தோம். செய்தியைக் கேட்டுக் கொண்டிருப்பதைத் தவிர வேறு ஒன்றும் எங்களால் இயலாது. புதிதாகப் புனையப்பட்ட ஆர்டினன்ஸுக்கள் மூலமாக நிறையக் கொடுமைகள் நடந்து கொண்டிருந்தன. அக்கொடுமைகள் அரசியல் சண்டைகளில் மட்டும் அன்றி, சாதாரண வழக்குகள் சம்பந்தமாகவும் செய்யப்பட்டன. இங்கு இரண்டு உதாரணங்களைக் கொடுக்கிறேன்.

நாங்கள் சிறைக்குச் சென்றபின் சில நாட்களுக்குள்ளாகவே பட்னு ஜில்லாவின் கிராமம் ஒன்றில் ஏதோ ஒரு நிலத்திற்காகவோ வேறு எதற்காகவோ இரண்டு கட்சிக்களுக்குள் அடிதடி உண்டாகியது. ஓர் ஆள் கொல்லப்பட்டான். அந்நாட்களில் எந்த வழக்கிலும் தண்டனை வாங்கிக் கொடுப்பதற்கு அதை அரசியல் வழக்கு என்பதாக முடிவு கட்டி விடுவது மற்றெல்லாவற்றையும் விட போலீசாருக்கு எளிதான வழியாக இருந்தது. இதற்கும் அவர்கள் அரசியல் உடை அணிவித்து விட்டார்கள். கொலை செய்யப்பட்டவன் பட்டாளத்தில் சேர்ந்தானென்றும், எதிர்க் கட்சியார் காங்கிரஸ்காரர்கள் ஆதலால் அவர்கள் அவனைப் பட்டாளத்தில் சேரக் கூடாதென்றும், அவன் அவர்கள் பேச்சைக் கேட்காததும் அவனைக் கொன்று விட்டார்கள் என்றும் இக்கொலைக்குக் காரணம் காட்டப்பட்டது. வழக்கு நேரே ஸ்பெஷல் நீதிபதியின் முன் விசாரணைக்கு வந்தது. கொலையுண்டவன் பட்டாளத்தில் சேரவேயில்லை யென்பதாகவும், இதனால் அவனுடைய கொலைக்கு இது காரணமாயிருக்க முடியாதென்பதாகவும், காரணம் எதுவாயினும் கொலை நடந்தது உண்மையென்பதாகவும் ஆகையால் எட்டுப் பேருக்குத் தூக்குத் தண்டனை அளிக்கப்பட வேண்டுமென்பதாகவும் தீர்ப்பாயிற்று. அவசரச் சட்டத்தின் படியும் தூக்குத் தண்டனை ஹை கோர்ட்டின் நீதிபதி ஒருவரால் அங்கீகரிக்கப்பட வேண்டும். இதற்காக வென்றே ஒரு நீதிபதி நியமிக்கப்பட்டிருந்தார். அவர் ஏழு ஆட்களை விட்டு விட்டார், ஆனால் ஒருவனுடைய தூக்குத் தண்டனையை உறுதிப்படுத்தினர். அவன் சார்பில் பிரிவி கவுன்ஸிலிலும் முறையிடப்பட்டது. ஆனால் அவனுடைய அப்பீல் நிராகரிக்கப்பட்டு விட்டது. சிறையில் நாங்கள் இருந்த வரையில் ஒரு வேலையை நாங்கள் யாராவது ஒருவர் செய்ய

வேண்டியிருந்தது. அதை நாங்கள் மகிழ்ச்சியுடன் செய்து வந்தோம். சிறையிலிருந்தவர்களில் எவனுவது ஒரு சாதாரண கைதி அப்பீல் செய்ய நினைத்தால் அவன் எப்படியாவது எங்களிடம் வந்து சேர்ந்து தன் அப்பீலின் நகலை எங்களைக் கொண்டு எழுதிப் பெற்றுக் கொள்வான். தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவன்பால் இரக்கம் காட்டும்படி எழுதப்படும் மனுவை நான் எழுத வேண்டிவரும். தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவன் இரக்கத்துக்கு இறைஞ்சும் மனுவை மேலே அனுப்புவதில் சிறை அதிகாரிகள் சாதாரணமாக பரிவு காட்டி வந்தார்கள் என்பதைக் கண்டேன். இரண்டு வழக்குகளில் அவர்களே என்னை விண்ணப்பத்தின் நகலை எழுதிக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார்கள் என்பது நினைவிருக்கிறது. இது முதல் தூக்குத் தண்டனையின் விவரம். அதைப் போலீசார் அரசியல் வழக்காக முடிச்சுப் போட்டு விட்டார்கள். அரசியல் சம்பந்தப்பட்டது ஆன காரணத்தால்தான் தூக்குத் தண்டனையிடப்பட்டது. நான் விண்ணப்பம் எழுதிக் கொடுத்தேன். கவர்னர் தூக்கை ஆயுள் தண்டனையாக மாற்றி விட்டார். அவன் உயிர் தப்பியது. போலீசார் அரசியல் உருக்கொடுத்துத் தண்டனை வாங்கிக் கொடுத்ததினுல் நல்ல பலன் கிட்டியது. 1946இல் காங்கிரஸ் மந்திரி சபை அமைந்தபோது மற்ற அரசியல் கைதிகளுடன் அந்த ஆளும் விடுதலையாகிவிட்டான்! விடுதலையானதுமே அவன் என்னைச் சதாகத் ஆச்ரமத்திற்கு வந்து கண்டு கொண்டான். ஒரு பெண்ணுக்கும் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. அவளுடைய மனுவைச் சிறைக் காவலரே என்னிடம் வந்து எழுதி வாங்கிச் சென்றுர். அவளுடைய தண்டனையும் தூக்காக நிற்காமல் தீவாந்திர சிட்சையாக மாறியது.

மற்ருெரு வழக்கு ஒரு பகற் கொள்ளையைச் சம்பந்தப்பட்டது. வழக்கு இதுதான்: பிரதிவாதி அரசியலுடன் சம்பந்தப்பட்டவன் என்று முடிவு கட்டப்படவில்லை. ஆயினும் அந்நாட்களில் சாதாரண வழக்குகளின் விசாரணைகள் கூட அவசரச் சட்டங்களைப் பின் பற்றியே நடத்தப்பட்டு வந்தன. மாஜிஸ்டிரேட்டின் அதிகாரங்கள் அதிகரிக்கப்பட்டிருந்தன. அவர் நெடிய நெடிய தண்டனைகளை அளிக்கக் கூடும். அறுபது வயதுக்குக் குறையாத ஓர் ஆள் இருந்தான். அவனுடைய கையில் ஏதோ ஊனமிருந்தது. அதனுல் அவன் தன் விரல்களை முழுக்க விரிக்க முடியாது. காலும் முடமானதால் அவன் கஷ்டப்பட்டுத்தான் நடக்க முடியும். ஓடுவதென்ற பேச்சு முடியவே முடியாது. சிறையிலும் நோயாகக்

கிடந்தான். நான் இருந்த மருத்துவசாலையிலேயே அவனும் இருந்தான். அவனுடைய கதை இதுதான். எப்பொழுதும் நிறைய நடமாட்டமுள்ள பட்னா-ராஞ்சீ சாலையில் ஒருவன் மாட்டு வண்டியில் போய்க் கொண்டிருந்தான். சில கொள்ளைக்காரர்கள் வண்டியை மறித்து நிறுத்தி அரிசியைக் கொள்ளையடித்துவிட்டார்கள். அவர்கள் மூட்டைகளை முதுகில் சுமந்துகொண்டு வயல் வழியாக ஓடி விட்டார்கள். வண்டிக்காரன் கூச்சல் போட்டதும் அக்கம்பக்கத்தார் சிலர் வந்து விட்டார்கள். எல்லாரும் கொள்ளைக்காரர்களைப் பின் தொடர்ந்தார்கள். சுமார் ஒன்று ஒன்றரைக் கல் சென்றதும் கொள்ளைக்காரர்கள் மூட்டைகளை வயலில் எறிந்து விட்டு ஒளிந்து கொள்ளப் பார்த்தார்கள், ஆனால் மக்கள் அவர்களைப் பிடித்து விட்டார்கள். அக்கொள்ளைக்காரர்களுள் மேலே சொல்லப்பட்ட அஷ்ட வக்கரமும் இருந்தான்! அவன் மிகவும் நோயாக இருந்ததால் மாஜிஸ்டிரேட்டானவர் சிறைச்சாலையின் மருத்துவ சாலைக்கே வந்து அவனிடம் வாக்குமூலத்தைக் கேட்டு அவனுக்கு ஏழாண்டு தண்டனை விதித்தார். நான் மருத்துவ சாலைக் கட்டிலிருந்து வெளியேறியதுமே அவன் வந்து என் காலைப் பிடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தான். அவனை அப்பீல் செய்யும்படி சொன்னேன். அவன் சிறைக் காவலரிடம் சொல்லித் தீர்ப்பின் பிரதியை வரவழைத்தான். நான் அப்பீலுக்கு மனு எழுதிக் கொடுத்தேன். அவன் ஹைகோட்டில் விடுதலை செய்யப்பட்டான். நீதிபதியானவர் சம்பவம் முழுவதுமே நிகழ்ந்திருக்க முடியாதென்று நினைத்தார். மேலும் இந்த ஏழையைக் கைது செய்ததற்குக் காரணம் கொள்ளையடித்தது அன்று எனவும், வேறு ஏதாகவோ இருக்கும் எனவும் கருதினர். இந்த வழக்கைக் கண்டு, நியாயத்துக்கு உண்மையாகவே கண்ணில்லை யென்பதில் எனக்கு முற்றிலும் நம்பிக்கை உண்டாகிவிட்டது. குறைந்த பட்சம் அவசரச் சட்டங்களின் கீழ் வேலை செய்யும் மாஜிஸ்ரேட்டுகள் அதைக் குருடாக்கி விட்டார்கள்! அப்படியில்லாவிட்டால் அஷ்டவக்ரத்தைப் பார்த்த பின்னும் கண்ணுள்ளவர் எவரும், அவன் வண்டியிலிருந்து அரிசியைக் கொள்ளையடித்து மூட்டையை முதுகின் மீது சுமந்துகொண்டு 1-1½ கல் வரையில் நெல் வயல் வழியாக ஓடிக்கொண்டிருக்க, அவனைத் துரத்தி வந்தவர்களால் பிடிக்கப்பட்டான் என்பதை நம்ப முடியாது. எவன் தன் விரல்களை விரிக்க முடியாதோ, எவன் தன் கையை நேரே நீட்ட முடியாதோ, எவனுடைய கால் முடமாயிருந்ததோ, எவன் கஷ்டப்பட்டுத்தான் நடக்க முடியுமோ, எவனுக்கு 60 வயதோ, அவன்

இரண்டு மணங்கு அரிசி மூட்டையை முதுகின் மீது சுமந்து கொண்டு ஒன்று ஒன்றரை கல் ஓட முடியுமென்று குருடன்தான் நம்பமுடியும்! ஆனல் மாஜிஸ்ரேட்டு நம்பிக்கொண்டு அவனுக்கு ஏழாண்டு தண்டனை கொடுத்து விட்டார்!

அரசியல் வழக்குகளைப் பற்றிச் சொல்வானேன்! பட்ன மாவட்டத்தின் ஒரு பாகம் மழை காலத்தில் தண்ணீரால் நிறைந்து விடும். அதை 'டால்' என்று கூறுவார்கள். மழை காலத்தில், கண்ணுக்கு எட்டிய வரையில், தண்ணீரைத்தான் காண முடியும். இந்த டாலில் இருக்கும் கிராமங்கள் மழை காலத்தில் உலகத்தி லிருந்து துண்டித்துப் போய்விடும். அங்கிருந்து வெளியேறு வதற்குப் படகைத் தவிர வேறு வழி கிடையாது. சாதாரணமாக, மற்றப் பருவங்களில் கூட தபாற்காரன் வாரத்திற்கு ஒரு முறை தான் தபால் கொண்டு வருவான். மழை காலத்திலோ, பல மாதங் களில் ஒரு முறை தபாற்காரன் வந்தால் அதுவே பெரிய காரியம். அப்படிப்பட்ட ஒரு கிராமத்தின் மக்களுக்கு ஒரு சிறிய ஜமீன் தாருடன் பல ஆண்டுகளாக சச்சரவு இருந்து வந்தது. இந்த இயக்கத்தை நல்ல வாய்ப்பாக எண்ணிக்கொண்டு அவர் அங் குள்ள முக்கிய குடியானவர்களின் மீது போலீசாரைக் கொண்டு அரசியல் வழக்குத் தொடுத்து விட்டார். அவர்கள் கைது செய் யப்பட்டு சிறைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். அவர்களுடைய வழக்கு செஷன்ஸ் கோர்ட்டுக்கு அனுப்பப்பட்போது அவர்கள் பாங்கிபூர் சிறையில்தான் வைக்கப்பட்டிருந்தார்கள். செஷன் சில் நிறைய வழக்குகள் இருந்ததால் இந்த வழக்கின் விசாரணை 1944ஆம் ஆண்டில் ஜூன்-ஜூலை மாதத்திற்கு முன் நடக்க முடியவில்லை. அவர்கள் ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் வரை யில் விசாரணைக் கைதிகளாகவே சிறையில் கிடந்தார்கள். அவர் கள் மீது மிகவும் கடுமையான குற்றம் சாட்டப்பட்டிருந்தது. அக் கிராமத்தார், பம்பாயின் அகஸ்டு 8ஆம் தேதியின் தீர்மானத்திற் குப்பின், காங்கிரஸின் ஆணையின்படி தம் கிராமத்திலிருந்தும் சுற் றுப்புற கிராமங்களிலிருந்தும் பிரிட்டிஷ் ஆட்சியைத் தள்ளிவிட்டு தம் ஆட்சியை நாட்டி விட்டார்களாம். ஓர் ஆள் ராஜாவாகிவிட் டான், மற்றொருவன் மந்திரி, மூன்ருவது ஆள் சேனுதிபதி, இப் படியாக மற்றவர்களும் இந்த ராஜ்யத்திற்கு உதவிபுரிந்து வந்தார் களாம். ராஜ்யத்தை நடத்துவதற்காக மக்களின் மீது வரி போடப் பட்டதாம். எத்தனை கடுமையிலும் கடுமையான சட்டப் பிரிவு கள் உண்டோ அவை அனைத்தின் கீழும் அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டது. அவர்களுக்குத் தூக்கும், சொத்து சுதந்திரத்

தைப் பறிமுதல் செய்வதும் தண்டனையாக அளிக்கப்படலாம். ராஜா, மந்திரி, சேனாதிபதி ஆகியோர் மற்றத் தோழர்களுடன் பாங்கிபூர் சிறைக்குக் கொண்டு வரப்பட்டார்கள். சேனாதிபதி சென்ற இரண்டு ஆண்டுகளாக அவருடைய பொழுதைப் பெரும் பாலும் மருத்துவ சாலையிலேயே கழித்து வந்தார், அவர் அவ்வளவு நோயாக இருந்தார்! வழக்கு செஷன்ஸ் நீதிபதியின் முன் விசாரணைக்கு வந்தது. பம்பாயின் செய்தி கிடைத்ததும் இவர்கள் தம்முடைய ஆட்சியை நாட்டி விட்டார்கள் என்பதும், அக்கிராமத்திலும் அக்கம் பக்கத்துக் கிராமங்களிலும்கூட வரியைத் தண்டல் செய்யத் தொடங்கி விட்டார்களென்பதும், வரி கொடாதவர்களின் வீட்டையும் சொத்தையும் சூறையாடினார்களென்பதும் போலீசாரின் வாக்குமூலம். வழக்கு முற்றிலும் பொய் என்பதும், தமக்குக் காங்கிரஸுடன் யாதொரு தொடர்பும் இல்லையென்பதும், பம்பாயின் முடிவைப்பற்றித் தமக்கு ஒன்றும் தெரியாதென்பதும், கிராமத்தின் அந்தச் சிறிய சாமான்ய ஜமீன்தார் தம்முடைய பகையைத்தீர்த்துக் கொள்ளவே தம்மைப் பொய் வழக்கில் மாட்டி விட்டார்என்பதும் அவர்களுடைய விடை. மழை காலத்தில் ஒரு வகையில் துண்டித்துப் போகும் ஒரு கிராமத்தில் பம்பாயின் முடிவும், கிளர்ச்சியின் செய்தியும் போய்ச்சேர்ந்திருக்க முடியாது ஆதலாலும், அங்குச் சுதந்திர ராஜ்யம் நிறுவப்பட்டதாகச் சொல்லப்படும் நாள் வரையில் பட்னா நகரத்தில் கூடக் கிளர்ச்சி மும்முரமாகப் பற்றிக் கொள்ளவில்லையாதலாலும், வழக்கு முற்றிலும் பொய் என்றும், ஆதாரமற்ற தென்றும், அந்த ஜமீன்தார் தாம் இதை ஜோடித்திருக்கிறார் என்றும் செஷன்ஸ் நீதிபதி தீர்ப்பளித்தார். முடிவில், எல்லாருமே விடுவிக்கப்பட்டு விட்டார்கள். ஆயினும் இரண்டு ஆண்டுகள் வரையில் விசாரணைக் கைதிகளாக இருந்து, வழக்குக்காக நிறையச் செலவழித்த பின்புதான் விடுதலை கிடைத்தது!

இன்னும் ஒரு உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். 18–20 வயதுள்ள ஒரு பையன் இருந்தான். அரசியலுடன் அவனுக்கு யாதொரு சம்பந்தமும் கிடையாது. பார்ப்பதற்கு நன்றாயிருப்பான். போலீசாருக்கு அவன் மேல் ஏதோ கோபம். அவன் சின்னஞ் சிறிய சாமான்ய திருட்டுக்கள் செய்பவனாக அல்லது முடிச்சு அவிழ்ப்பவனாக இருக்கலாம். ஆகஸ்டு 9ஆம் தேதி கிளர்ச்சி ஆரம்பிப்பதற்குச் சற்று முன்பே அவன், ரயில் சீட்டு இல்லாமல் ரயிலில் சென்றதற்காகக் கைது செய்யப்பட்டு விட்டான். அதற்கிடையில் கிளர்ச்சி ஆரம்பித்துவிட்டது. அவனைச்

சிறிது காலம் சிறையில் அடைத்து வைப்பதற்காகத் தானுவைக் கொள்ளையடித்தல், ரயில் பாதையை உடைத்தல், தந்தி அறுத்தல் முதலிய குற்ற வழக்கில் அவனைப் பிரதிவாதியாக ஆக்குவது சரியான வழியென போலீசார் நினைத்தார்கள். இப்படிச் செய்தால் பிக்பாக்கெட் அடிக்காமலிருக்கும்படி அவனைக் கண்காணிக்கும் பொறுப்பு சில ஆண்டுகளுக்குத் தம்மை விட்டு அகலுமென்பதாக போலீசார் எண்ணியிருக்கலாம். ரயில் சீட்டு வழக்கில் அவனுக்கு ஒரு வாரம் சிறை தண்டனை கிடைத்தது. அது விரைவில் முடிந்து விட்டது. ஆனால் அவன் மீது இன்னும் பல வழக்குகள் இருந்தன. அவன் அரசியல் விசாரணைக் கைதிகளுடன் சிறையில் வைக்கப்பட்டான். ஒரு வழக்கின் சம்பவம் நிகழ்ந்ததாகக் கூறப்பட்ட சமயத்தில், தான் சிறையில் இருந்ததாக அவன் வாக்கு மூலம் கொடுத்தான். மாஜிஸ்டிரேட்டு அவன் வார்த்தையை ஏற்றுக் கொண்டு அவனை விடுவித்துவிட்டார். ஆனால் அவன்மீது இவ்விதமாக கிளர்ச்சியுடன் தொடர்பு கொண்ட வழக்குகள் மற்றவைகளும் இருந்தன. ஆகையால் அவன் விடுவிக்கப்படவில்லை. இன்னும் இரண்டு மூன்று வழக்குகள் நடந்தன, அவற்றிலும் அவன் விடுதலை செய்யப்பட்டான். ஆயினும் அவனை விடவில்லை. இவ்வண்ணமாகப் பல மாதங்கள் கழிந்தன. இன்னும் ஒரு வழக்கு நடந்தது. அதுவும் கிளர்ச்சியோடு சம்பந்தப்பட்டதுதான். அதிலும், குற்றம் சாட்டப்பட்ட சம்பவத்திற்கு நெடுநாள் முன்னிருந்தே தான் சிறையிலிருப்பதாக அவன் கூறினான். சிறையின் ரிஜிஸ்தரை மாஜிஸ்டிரேட்டு வரவழைத்துப் பார்த்திருப்பாராயின் இது நிரூபிக்கப்பட்டிருக்கும். ஆனாலும் அவர் அவனுக்குப் பல ஆண்டுகள் சிறை வாசத் தண்டனையை விதித்து விட்டார்! அப்பீலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. ஆயினும் அவன் சார்பில் ஒரு மனு தயார் செய்யப்பட்டது. அதில் எல்லா விஷயங்களும் விரிவாக எழுதப்பட்டன. அவன் சிறை கொள்ளப்பட்ட தேதி, சம்பவத்தின் தேதி, அவன் விடுதலை செய்யப்பட்ட மற்ற வழக்குகளின் விவரங்கள், எல்லாம் விரிவாக எழுதப்பட்டன. மேலும், சிறையின் ரிஜிஸ்தரை வரவழைத்து, சம்பவம் நடந்த தேதியில் அவன் சிறையில் இருந்தானா இல்லையா என்பதைப் பார்க்க வேண்டுமென்பதும் அதில் எழுதப்பட்டது. ஜில்லா மாஜிஸ்டிரேட்டு சிறையைப் பார்க்க வந்தபோது அவன் தன் மனுவை அவரிடம் கொடுத்தான். ஜில்லா மாஜிஸ்டிரேட்டுக்கு இது வியப்பாயிருந்தது. ஆயினும் அவர் மனுவைத் தம்முடன் எடுத்துச் சென்றார். அவர் காகிதங்களை வரவழைத்துப் பார்த்த

தாகவும், அதிலிருந்து அந்த ஆள் தவருகத் தண்டனையிடப் பட்டுச் சிறையில் கிடக்கிருன் என்பது தெரிய வந்ததாகவும் கேள்விப்பட்டோம். அவர் அரசாங்கத்திற்கு எழுதி அவனை விடு விக்க உத்தரவு பெற்ருர்.

இவ்விதமான அக்கிரமங்கள் எத்தனை நடந்தன என்பதைக் கூற இயலாது. அவற்றிற்கு இலக்கான அரசியல் ஆட்கள் ஒரு புறமிருக்க, மற்றவர்களுடைய எண்ணிக்கையும் குறைவன்று. அரசியல் ஆட்களின் தண்டனையைப் பற்றி என்ன சொல்வது, எவ்வளவு சொல்வது? 24-25 ஆண்டுகள் தண்டனை கிடைத்தவர் களையும் பார்த்திருக்கிறேன். 50 ஆண்டுகளுக்கு மேலாகத் தண் டனை பெற்றவர்களும் இருந்தார்கள். 10 ஆண்டு சிறைவாசம் அல்லது ஆயுள் தண்டனை பெற்றவர்களின் எண்ணிக்கையும் குறைவன்று. ஓராண்டு இரண்டாண்டு அல்லது நான்கு ஆண் டைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்! இவர்களுக்கெல்லாம் தண்டனை எந்த அவசரச் சட்டத்தின்படி விதிக்கப்பட்டதோ அந்த அவசரச் சட்டத்தைக் கல்கத்தா ஹைகோர்ட்டானது சட்டத்துக்கு முரணுனதாகத் தீர்ப்பு செய்ததும் லார்டு லின் லித்கோ புது அவசரச் சட்டத்தைப் புனைய வேண்டி வந்தபோது இவ்வழக்குகளில் குற்றஞ் சாட்டப்பட்டிருந்தவர்களுக்கு அப்பீல் செய்ய வாய்ப்புக் கிடைத்தது. அவர்கள் அப்படிச் செய்தபோது ஹைகோர்ட்டு பலரை விடுதலை செய்துவிட்டது. பலருக்குத் தண்டனைகள் குறைக்கப்பட்டன. இன்னும் பலர், இது வரையில் அவர்கள் அனுபவித்த தண்டனையே போதுமென்று, விடுதலை செய்யப்பட்டார்கள். ஆரம்பத்திலேயே-கிளர்ச்சியானது மும்முர மாக இருந்தபோதே -(வழக்குகள் அப்போதுதான் தொடுக்கப் படத் தொடங்கின) இந்த அக்கிரமங்களுக்கு மாதிரிகள் தென்பட்டு விட்டன. அவற்றில் ஒன்றை மேலே கூறியுள்ளேன். ஜில்லா நீதிபதி எட்டு பேருக்குத் தூக்குத் தண்டனை விதித்தாரே, அந்த வழக்குதான்.

இதற்கு முந்தின கிளர்ச்சியில் காங்கிரஸ்காரர்கள் கோர்ட்டு களில் வழக்கை வாதித்துத் தம்மைக் காப்பாற்றிக் கொள்ள முடி யாமலிருந்தார்கள். அப்போதும் அக்கிரமங்கள் நடந்தன, ஆயி னும் தண்டனைகளுக்கு ஓர் அளவு இருந்தது. இவ்வளவு நீண்ட நீண்ட தண்டனைகள் கொடுக்கப்படுவதில்லை. அபராதங்கள், சிற்சில இடங்களில் பெரும் தொகையாகப் போடப்பட்டன. ஆயி னும் பெரும்பாலும் மக்கள் இதைப் பொருட்படுத்தவில்லை. வழக்கு களில் பிரதிவாதம் செய்ய வேண்டாமென்று காந்திஜீ கூறியதை

மக்கள் ஏற்றுக் கொண்டார்கள். இம்முறை வழக்குகளின் போக்கு வேறு விதமாக இருந்தது. இதில் நீண்ட நீண்ட தண்டனைகள்—தூக்கும்கூட—கிடைத்தன, கிடைக்க இருந்தன. இதனால் பிரதி வாதம் செய்யலாமா கூடாதா என்ற கேள்வி எழுந்தது. பாங்கீபூர் சிறையிலேயே தூக்குத் தண்டனை கிடைத்தவர்கள் இருந்தார் கள். 1930-31, 1932-34 ஆகிய இரண்டு சத்தியாக்கிரக இயக்கங் களிலும் கூட அபராதத்தைத் தண்டல் செய்வதில் நிறையக் கொடுமைகள் செய்யப்பட்டன. சிறிய தொகைக்காக வீட்டின் சாமான் சொத்து எல்லாமும் சட்ட முறைப்படி பறிமுதல் செய்யப்பட்டது மட்டுமன்றி முறையின்றி கொள்ளையும் அடிக்கப் பட்டன. யாரோ ஒருவர் எவரையும் கேட்காமல் விஷயத்தை ஹைகோர்ட்டு வரையில் கொண்டு போய் விட்டார். பாகம் பிரிக் கப்படாத ஹிந்து குடும்பத்தின் சொத்தை ஓர் ஆளுடைய அப ராதத்திற்காகப் பறிமுதல் செய்யக் கூடாதென்று அங்கு உத்தர வாயிற்று. இதனால் அபராதத்தைத் தண்டல் செய்யும்போது உண்டான அக்கிரமங்கள் மிகவும் குறைந்து விட்டன. ஏனெனில் இவ்விதமாகத் தீர்ப்பாகி விட்டதென்பது எல்லா இடங்களிலும் எல்லாருக்கும் தெரிந்துவிட்டது. இம்முறை, இவ்விதமான கடுமையான வழக்குகளில் பிரதிவாதம் செய்யலாமா கூடாதா என்று என்னை மக்கள் கேட்டபோது, கட்டாயம் பிரதிவாதம் செய்ய வேண்டுமென்று நான் அபிப்பிராயம் அளித்து விட்டேன். சிலருக்கு இது பிடிக்கவில்லை. சிலருக்கு நான் இப்படி அபிப்பிரா யம் கொடுத்திருப்பதாகவே தெரியாது. இதனால் சிலர் பிரதிவாதம் செய்யாமலேயே கிடைத்த தண்டனையை மகிழ்ச்சியுடன் சகித்துக் கொண்டார்கள். இவர்களுள் ஸ்ரீ ஜக்லால் செளதுரீஜீயும் ஒருவர். அவருக்குப் பத்தாண்டு தண்டனை கிடைத்தது. அதுவும் அவ ருடைய இளங்காளை போன்ற மகன் ஒருவன் துப்பாக்கிக் குண் டுக்கு அப்போதுதான் இரையாகியிருந்தபோது இத்தண்டனை கிடைத்தது. அவருடைய மகனின் பிணத்தைத் தேடிக்கொண்டு அவர் தானுவுக்குச் சென்றிருந்த இடத்தில் அவர் கைது செய்யப் பட்டார்.

புது அவசரச் சட்டத்தின்கீழ் அப்பீல் செய்வதற்கு வாய்ப்புக் கிடைத்தபோது, அதன்படியும் அப்பீல் செய்யும்படி நான் அபிப் பிராயம் அளித்தேன். இந்த யோசனையை நான் இரண்டு கார ணங்களால் அளித்தேன். பிரதிவாதம் செய்வதால் மாஜிஸ்டிரேட் டின் கொடுமை குறையலாமென்பது ஒரு காரணம். மற்றொன்று, இந்தக் கிளர்ச்சியில் காங்கிரஸோடு என்றுமே யாதும்

தொடர்பு கொண்டில்லாதவர் பலர் கைது செய்யப்பட்டிருந்தார்கள் என்பது ஆகும். அவர்கள் எப்பொழுதுமே பிரதிவாதம் செய்யும் பழக்கம் உள்ளவர்கள். காங்கிரஸ்காரர்கள் இடையிலும் பிரதிவாதத்தை நடத்த விரும்பினவர்கள் இருந்தார்கள். தண்டனைகளும் கடுமையாக இருக்கும் போலிருந்தது. ஆதலால், இவர்களைத் தடுத்தால் அதிருப்தி உண்டாகும் என்றும், தடுத்தும் பலர் வாதம் செய்வார்கள் என்றும் நினைத்தேன். இந்த நிலைமையில் பிரதிவாதம் செய்ய விடுவதே நன்றெனத் தோன்றிற்று. அவர்களுடைய தண்டனைகள் நெடியனவாயிருந்தாலும், அவர்களும் என்னைப் போலக் கெடுவில்லாமல் சிறையிடப்பட்டவர்களும், எல்லாருமே ஒரே சமயத்தில்தான் விடுதலையாவோமென்பதை நான் அறிவேன். அதே நம்பிக்கையை என்னைக் காண வருபவர்களிடம் கூறி வந்தேன். நாங்கள் சற்று முன்னம் விடுவிக்கப்படலாம், ஆனால் அவர்கள் விடுதலையாகாத வரையில் நாங்கள் வெளியில் இருக்க முடியாது. இவ்வளவு பேரை நெடிய தண்டனைகளை அனுபவிக்க விட்டு விட்டு நாங்கள் மட்டும் எப்படி வெளியே இருக்க முடியும்? மகாத்மா காந்திஜீ வெளியே வந்ததும், அவரும் பிரதிவாதம் செய்யும்படியே கட்டளையிட்டார் என்பது எனக்குத் திருப்தியை அளித்தது. தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவர்களைப் பற்றித்தான் கவலையாயிருந்தது. கைதிகளாயிருக்கப்பட்டவர்கள் ஏதோ முன்னே பின்னே சிறையை விட்டு வெளியே வந்து கொள்ளலாம், ஆனால் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டவர்களோ என்றென்றைக்குமே மறைந்து போவார்கள். பட்னுவில் பல பேருக்குத் தூக்குத் தண்டனை கிடைத்தது, ஆனால் எல்லாருமே ஏதாவதொரு வகையில் தப்பிக் கொண்டார்கள். சிறிது காலம் அப்பீல் முதலானவற்றில் கழிந்தது. பிறகு நாங்கள் விடுதலையடைந்ததும், மேலும் மகாத்மா காந்தியானவர் தூக்குத் தண்டனை வழக்குகளைப் பற்றி லார்டு வேவலுடன் பேச்சு வார்த்தை நடத்தத் தொடங்கியதும், மற்றவர்களோடு பட்னுகாரர்களின் தூக்குத் தண்டனையும் ஆயுள் தண்டனையாக மாற்றப்பட்டு விட்டது. காங்கிரஸ் மந்திரி சபை வந்ததும் அவர்கள் விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள். ஆனால் முஜபர்பூர், பாகல்பூர், முங்கேர் முதலிய இடங்களில் பலர் தூக்கிலிடப்பட்டு விட்டார்கள். அவர்கள் திடீரென்று தூக்கிலிடப்படாதிருந்திருந்தால் அவர்களும் விடுவிக்கப்பட்டிருப்பார்கள். அவர்களோடு ஒரே வழக்கில் தண்டனை பெற்றவர்கள் பிறகு விடுதலையாகிவிட்டாலும் அவர்கள் மட்டும் போய்விட்டார்கள். அப்போது தூக்குத் தண்டனை

கிடைத்திருந்தவர்களை இன்று வெளியே காணும்போது ஒரு விதத்தில் மகிழ்ச்சி உண்டாகிறது. மற்ெருரு புறத்தில் மற்றவர்களை இவ்வண்ணமாகக் காப்பாற்ற முடியவில்லையே என்ற வருத்தமும் உண்டாகிறது.

## 150. 1942இன் எழுச்சியின் திரிபு

இம்முறை நான் 1942ஆம் ஆண்டு ஆகஸ்டு 9ஆம் தேதி சிறைக்குக் கொண்டு போகப்பட்டேன். அங்கிருந்து 1945ஆம் ஆண்டு ஜுன் 15ஆம் தேதி வெளிவந்தேன். ஆரம்பத்தில் மதுராபாபூவும் ஸ்ரீசக்ரதரசரனும் என்னுடன் இருந்தார்கள். மற்றவர்கள் வந்து போய்க் கொண்டிருந்தார்கள், ஆனுல் எனக்காக அன்று. 1943 அக்டோபரில் ஸ்ரீ சக்ரதரசரண் ஹஜாரிபாக்குக்கு அனுப்பப்பட்டார். 1944 மார்ச்சில் மதுராபாபூவுக்கு விடுதலையாகிவிட்டது. அதற்குப் பிறகு 1944 டிசம்பர் 3ஆம் தேதிவரையில் என்னுடன் வால்மீகிதாம் இருந்தார். புது அவசரச் சட்டத்தின்படி அரசாங்கத்தின் சார்பில் ஒரு குழுவானது ஆறுமாதங்களுக்கு ஒரு முறை வந்து கண்காணுச் சிறையில் வைத்திருக்கப்பட்டவர்களைப் பார்க்கும். எவர்களுக்கு அது சிபாரிசு செய்யுமோ அவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள். இக்குழு முதல் முதலாக 1944 மார்ச்சில் வந்தது. மதுராபாபூ அதனுடைய சிபாரிசினுல்தான் திடீரென்று விடுதலை செய்யப்பட்டார். நானும் விடுதலையடைய விரும்புகிறேனுவென்று குழுவின் உறுப்பினர்கள் என்னைக் கேட்டார்கள். தனியாக அன்று, எல்லோரோடும் கூடியேதான் என்று நான் விடை அளித்தேன். இதன்மேல், விடுதலை செய்யப்பட்டு விட்டால் வியப்படைவேனு என்று அவர்கள் கேட்டார்கள். அதற்கென்ன சந்தேகம், மிகவும் வியப்படைவேன் என்றேன். உடைப்பதற்கும் தகர்ப்பதற்கும் வேலைத் திட்டத்தை காங்கிரஸ் கொடுக்கவில்லையென்ருல் இது எப்படி மக்களுக்குத் தெரிய வந்ததென்றும், மேலும் நாடெங்கும் ஒரு முனையிலிருந்து மற்ெருரு முனை வரையில் இந்த விஷயம் எப்படி அவ்வளவு விரைவில் பரவி விட்டதென்றும் என்னைக் கேட்டார்கள். இதற்கு நான் இவ்வண்ணம் விடை அளித்தேன். ஆகஸ்டு 8ஆம் தேதியின் தீர்மானத்தோடு கூடக் கூடவே அரசாங்கத்தின் அறிக்கை ஒன்று ஆகஸ்டு 9ஆம் தேதி (1942) காலை

செய்தித் தாள்களில் வெளி வந்தது. அதில், அரசாங்கமானது காந்திஜீயையும் செயலாற்றுக் குழுவினரையும் கைது செய்த தற்குக் காரணத்தைக் காட்டி, அரசாங்கம் செய்த காரியம் பொருத்தமான தென்பதை மக்களுக்கு விளங்க வைக்க முயற்சி செய்தது. அதிலேயே இந்த விஷயமும், அதாவது, காங்கிர ஸானது இம்முறை ரயில், தந்தி முதலானவற்றைத் தகர்க்கவும் அறுக்கவும் கூடச் செயல் திட்டம் போட்டிருக்கிறது என்பது தெள்ளத் தெளிவாக எழுதப்பட்டிருந்தது. அன்றே அடுத்த நாளோ மிஸ்டர் ஏமரீ ரேடியோவில் பேசிய பேச்சிலும் இந்த விஷயம் கூறப்பட்டது. அப் பேச்சையும் செய்தித்தாள் கள் அச்சிட்டன. காங்கிரஸின் சார்பில் யாதொரு வேலைத் திட்டமும் வெளியிடப்படவில்லை. ஆயினும் இதுவேதான் வேலைத் திட்டமாக இருக்கும் என்று மக்கள் நினைத்துக் கொண்டார்கள். அரசாங்கத்தின் பேச்சை நம்பிக் கொண்டு மக்கள் வேலையைத் தொடங்கிவிட்டார்கள் என்று கூறினேன்.

இந்த வேலைத் திட்டம் இவ்வளவு அதிகமாகவும் இவ்வளவு விரைவாகவும் பரவியதற்கு இதுவே காரணம் என்று நான் இன் றுங் கூட நம்புகிறேன். மக்களின் உள்ளத்தில் முதலிலிருந்தே— 1930இல் இருந்தே–இவ்விதமான எண்ணங்கள் எழுந்து வந்தன. இம்முறை இதற்கு ஆதரவு கிடைத்துவிட்டது. பொது மக்கள் அதை உண்மை என்று நினைத்துக் கொண்டார்கள். இதற்கு இரண்டு பலத்த சான்றுகள் எனக்குச் சிறையில் அச்சமயத்தில் கிடைத்தன. அவற்றிலிருந்து இவ்வேலை இனி மும்முரமாக நடக்கு மென்று நான் அறிந்து கொண்டேன். நான் கைது செய்யப்பட்ட தற்கு சில நாட்களுக்குப் பிறகே பூலன் பாபூ சிறைக்கு வந்து சேர்ந்தார். நான் கைது செய்யப்பட்ட செய்தி ஊரில் பரவியதும் சிலர் வந்து, அவரிடம் செயல் திட்டம் என்ன வென்று கேட்டதாக அவர் கூறினர். அவர் என்னைப் பார்த்திருப்பாரென் றும், நான் ஏதாவது கூறியிருப்பேன் என்றும் மக்கள் நினைத்தார் கள். ஆனால் அவரை நான் பலநாட்களாகப் பார்க்கவில்லை, இதனால் அவர் ஒன்றும் சொல்ல முடியவில்லை. ஆயினும் அன்றே சில மணிகளுக்கு முன்பு அரசாங்கத்தின் அறிக்கை பத்திரிகைகளில் அச்சாகி விட்டது. மக்களுடைய கவனம் அதன்மீது சென்று விட்டது. இரண்டு நாட்களுக்குப் பிறகு, செக்ரடேரியேட்டின் முன் துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பின் சில இளைஞர்கள் கைது செய்யப்பட்டு சிறைக்குக் கொண்டுவரப்பட்டபோது அவர்கள் அனைவரும் தந்தி டெலிபோனையும் ரயிலையும் சாலைகளையும்

தகர்த்தல், அறுத்தல், மேலும் எப்படியாவது போக்குவரத்தை நிறுத்தல் ஆகிய வேலையில் கலந்து கொள்ளப்பட்டதாக கருதப் பட்டார்கள் என்பதைக் கண்டேன். கைது செய்யப்பட்டிருந்த மாணவர்கள் சிலரை ஏற்றி எங்கோ அனுப்பிக் கொண்டிருந்த போது, பொது மக்கள் சிறைச்சாலையின் புற வாயிலுக்கு அரு கிலே அவர்களை விடுவித்துவிட்டு லாரியைக் கொளுத்திவிட்டார் கள். பிறகு மற்ற மாணவர்கள் லாரிகளிலிருந்து இறக்கப்பட்டு சிறிது நேரத்திற்காக மீண்டும் சிறைக்குள்ளேயே கொண்டுவரப் பட்டார்கள். நான் நோயாக இருந்தேனுயினும் இது சரியல்ல வென்று அம்மாணவர்களுக்கு விளக்க முயற்சி செய்தேன். டெலிபோன் கம்பி முதலியவற்றை அறுப்பதும் ரயிலை நிறுத்து வதும் சரியாக இருக்கும்போது லாரியை பயனற்றதாகச் செய்வது அவற்றுள் அடங்கியிருக்கிறதென்பதாகவும், ஆகையால் இதுவும் சரியாகத்தானிருக்கவேண்டுமென்பதாவும் அவர்கள் விடையளித் தார்கள். என்னிடம் இருந்த மரியாதையால் அவர்கள் மேலே அதிகமாகப் பேசாவிட்டாலும் நான் எவ்வளவோ சொல்லியுங் கூட என் பேச்சு அவர்களுக்கு சரியாகத் தோன்றவில்லை. அவர்கள் சிறையில் சில நாட்கள் வரையில் அடைபட்டிருந்ததால் இந்த வேலைத் திட்டத்தை அவர்கள் நடத்தியிருக்கமாட்டார்கள். ஆயினும் இந்த அறுத்தலும், உடைத்தலும்கூடச் செயல் திட்டத் தில் அடங்கியிருக்கிறதென்ற நம்பிக்கை மக்களுக்கு உண்டாகி விட்டதென்பது தெளிவாகிவிட்டது.

இக்காரணத்தால்தான், இவ்வளவு விரைவாக, மொகல்சராயி லிருந்து ஆசன்சோல் வரையில் இ. ஐ. ஆர். ரயில்வேயின் முக்கிய ரயில் பாதையில் வண்டிகளின் போக்கு வரவு நெடுநாள் வரையில் நின்றுவிட்டது. இவ்வண்ணமாக பட்னு—கயா கிளைப் பாதையும் உபயோகமில்லாமல் செய்யப்பட்டுப் போயிற்று. கிராண்டு-கார்டு பாதையில் மட்டும்தான் அதிகச் சேதம் உண் டாகவில்லை. இதனுல் அதில் வண்டிகளின் போக்குவரவு நின்று போகவில்லை. கங்கைக்கு வடக்கு பாகத்தில் பி. என். டபிள்யூ ரயில்வே, இங்குப் பனுரசிலிருந்து கடிகார் வரையிலுமாக, அங்குக் கோரக்பூர் நகரத்திலிருந்து (சிட்டி) அப்பாதை சப்ராவில் இந்த பனுரஸ் பாதையுடன் சேரும் வரையிலுமாக மிகவும் தகர்த்து உடைத்தெறியப் பட்டுவிட்டது. பெரும்பாலும் எல்லா இடங் களிலுமே, மாதக்கணக்காக வண்டிகள் செல்ல இயலாத அளவுக்கு ரயில் நிலையங்கள் தகர்க்கப்பட்டுப் போயின. ரயில் பாதையும் அப்படியே நாசம் செய்யப்பட்டது. இக்காரணங்களால்,

பீகாருக்கு வெளியிலிருந்தவர்கள் பீகார் முழுவதிலும் ஐக்கிய மாகாணத்தின் கிழக்கு ஜில்லாக்களிலும் தாம் இவ்வியக்கத்தின் கோலம் எல்லா இடங்களையும்விட அதிக உக்கிரமாகவும் கடுமையாகவும் இருந்ததென்பதாகவும், அதனுல்தான் இங்கு அரசாங்கத்தின் கொடூரம் மற்ற எல்லா இடங்களையும்விட அதிகமாக இருந்த தென்பதாகவும் எண்ணுகிருர்கள். எத்தனை பேர் போலீசின் குண்டுக்கும் பட்டாளத்தின் துப்பாக்கிக்கும் இரையானுர்களென்பது தெரியாது! எத்தனை பெயரின் வீடுகள் கொளுத்தப் பட்டனவோ, எத்தனை பெயருக்கு வேறுவிதமான சொல்லொணுத துன்பங்களைச் சகிக்க வேண்டி வந்ததோ! சிறை சென்றவர்களின் எண்ணிக்கை எங்களுக்குச்சரியாகத் தெரியவே தெரியாது. பீகாரில் அரசியல் கைதிகளுக்காகப் பல சாதாரண கைதிகள் தம் இடங்களை ஒழித்துவிட வேண்டியிருந்ததென்பதும், இவ்விதமாக அவர்கள் கெடுவுக்கு முன்பே விடுதலை செய்யப்பட்டார்கள் என்பதும் மட்டும்தாம் எங்களுக்குத் தெரியும். மிகவும் கடுமையான குற்றம் சாட்டப்பட்டிருந்தவர் பலர்.விசாரணைச் சிறையிலிருந்தே விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள். பாகல்பூர் ஜில்லாவின் பாங்கா சப்டிவிஷனல் 30, 40 கொள்ளைக்காரர்கள் வெளியே சென்று தீவட்டிக் கொள்ளை செய்யும் பொருட்டும், அதனுல் பொது மக்களுக்கு காங்கிரஸின் மீது கோபத்தை மூட்டும் பொருட்டும் விடுதலை செய்யப்பட்டதாக மக்கள் பேசிக்கொள்கிருர்கள். அவர்களில் சிலர் வெளியே சென்றதும் இக்கிளர்ச்சியில் பங்கெடுத்துக் கொண்டார்கள் என்பதாகக் கேள்விப்பட்டேன். அப்படிப்பட்டவர்களில் ஒருவனுக்குத் தூக்குத் தண்டனை கிடைத்தது, மற்றவர்கள் பலருக்கு கடுமையான தண்டனைகள் கிடைத்தன. நான் சிறையிலிருந்து வெளியே வந்தபின் கவர்னரைச் சந்தித்தபோது இதை அவரிடம் கூறினேன். அவர் இதைப்பற்றி விசாரணையும் செய்வித்தார். பல கொள்ளைக்காரர்கள் இவ்விதமாக பாங்காவில் விடுவிக்கப்பட்டார்கள் என்று தெரிய வந்தது. ஆரம்பத்தில், இயக்கம் மிக மிக மும்முரமாக நடந்துவந்த சமயத்தில் கொள்ளையடித்தலும் களவும் ஒரேயடியாக நின்றுவிட்டன என்பதாகக் கேள்விப்பட்டேன்.

கிளர்ச்சி செய்தவர்கள் சில அஞ்சல் நிலையங்களையோ அல்லது பத்திரங்கள் பதிவு செய்யும் அலுவலகங்கள் போன்றவற்றையோ தாக்கினுர்கள். சில இடங்களில் அவற்றைக் கொளுத்தியும் விட்டார்கள். ஆயினும், ஆரம்பத்தில், கிளர்ச்சி மும்முரமாக நடந்து கொண்டிருந்தபோது, எங்காவது பணம்

கிடைத்தால் அவர்கள் அதிலிருந்து ஒரு ரூபாய்கூட எடுக்க வில்லையென்பதும் கேள்விப்பட்டது. வெள்ளி ரூபாய் அக்காலத் தில் கண்ணால் பார்ப்பதற்குக்கூடக் கிடைப்பதில்லை. இதனால் அநேகமாக பணத்தாள்கள்தாம் கிடைத்தன. மக்கள் அந்த நோட்டுக்களை எரித்துவிட்டார்கள். தனிப்பட்ட முறையில் பய னடையவோ அல்லது கிளர்ச்சிக்காக அவற்றைச் செலவிடவோ யாருக்கும் எண்ணம் வரவில்லை. ஆயினும் சில நாட்களுக்குப் பிறகு இது மாறிவிட்டது. சிலர், இவ்வண்ணமாகக் கிடைத்த பொருளைக் கிளர்ச்சிக்காகச் சேர்க்கத் தொடங்கினார்கள். கிளர்ச் சியின், பேரைச் சொல்லிக்கொண்டு தீவட்டிக் கொள்ளையும் அடிக்கப்பட்டது. இந்தக் கொள்ளையால் கிடைத்த பணம் யாரிடம் சென்றதென்றாவது யார் அதை எவ்விதத்தில் பயன்படுத் தினார்கள் என்றாவது தெரியவில்லை. ஆனால் இவையெல்லாம் மிகவும் பிற்காலத்தில் நடந்தன. அதாவது கிளர்ச்சி ஒருவிதமாக அடங்கிப்போன பின். கிளர்ச்சி மும்முரமாக இருந்த நாட் களிலோ, அரசாங்க ஊழியர்கள்தாம் சூறையாடுவதற்கும் வழிப் பறி செய்யவும் மக்களை அழைத்தார்கள். அஞ்சல் நிலையத்தார் அஞ்சல் நிலையம் சூறையாடப்படுவதே நன்றெனக் கருதினார்கள். அங்கு இருந்த பணத்தை மக்கள் கொள்ளையடித்துவிட்டார்கள் என்று கூறுவதற்கு அவர்களுக்கு ஒரு சாக்குக் கிடைத்து விட்டது. அங்கு உண்மையாகவே கொள்ளையடிக்கப்பட்டதோ இல்லையோ, ஆயினும் அப்பணம் அரசாங்கத்துக்குக் கிடைக்க வில்லை. அநேக இடங்களில் ஆரம்பத்தில், தானாக்காரர்களும் பொது மக்களோடு சேர்ந்து கொண்டார்கள். மக்கள் வந்து சேர்ந்ததுமே அவர்கள் தானா மீது கொடியைப் பறக்கவிட அனு மதித்துவிடுவார்கள். மக்களுடன் சேர்ந்துகொண்டு 'கோவிந்தா' (ஸ்லோகன்கள்—முழக்கொலி) போடுவார்கள். அப்படிப்பட்ட தானா அதிகாரிகளுடன் மக்களும் நன்றாக நடந்துகொள்வார்கள். சில சில இடங்களில் தானா அதிகாரியை படகு அல்லது வேறு வாகனத்தில் ஏற்றி ஜில்லாவின் தலைநகருக்குக் கொண்டு போய் விட்டுவிட்டு மக்கள் தானாவைக் கைப்பற்றிக் கொண்டார்கள் என்பதாகக் கேள்விப்பட்டேன். தானா அதிகாரி கொடுமையாக நடந்துகொண்ட இடத்தில் அவரிடம் மக்களும் கொடுமையாக நடந்துகொண்டார்கள். சில இடங்களில் அவர்கள் கொல்லவும் பட்டார்கள். ஆனால் அப்படிப்பட்ட இடங்கள் சிலவே. சில தானா அதிகாரிகள் மிகவும் கொடியவர்களாக இருந்தார்கள். பட்டாளம் வந்துவிட்டதும் போலீசாரின் போக்கு மாறிவிட்டது.

அவர்கள் நிறைய அக்கிரமம் செய்தார்கள். அதை விவரமாகக் கூறுவது கடினம். இந்த அக்கிரமங்களில் சப் இன்ஸ்பெக்டர் களும் அவருக்கு மேலான அதிகாரிகளும்தாம் நிறையப் பங் கெடுத்துக் கொண்டார்கள். கான்ஸ்டபிள்கள் குறைவாகவே சம்பந்தப்பட்டிருந்தார்கள்.

இவையெல்லாவற்றையும் அறிந்தபின், பொதுமக்கள் ரயில், தந்தி முதலானவற்றை நிறைய உடைத்தார்கள் என்பதையும் அரசாங்கக் கட்டடங்களை நாசம் செய்தார்கள் என்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆயினும் கிளர்ச்சி எவ்வளவு விரிவாகப் பரவியிருந்ததென்பதோடு பொது மக்கள் செய்த கொடுமையை ஒப்பிட்டுப் பார்த்தால் அவர்கள் அப்பரப்புக்கு ஈடான விகிதம் கொடுமை செய்யவில்லையென்பது புலப்படும். உயிரை மாய்ப்பதும் அல்லது அடிதடி செய்வதும்கூட மிகக் குறைவாகவே நிகழ்ந்தன. எவனையாவது அடிப்பதோ உதைப் பதோ அல்லது உயிரை மாய்ப்பதோ அஹிம்சாவின் கொள் கைக்கு விரோதம் என்றும், ஆனால் ரயில், தந்தி, கட்டடம் முதலிய உயிரில்லாப் பொருள்களை உடைப்பதும் தகர்ப்பதும் அல்லது கொளுத்துவதும் அஹிம்சாவுக்குள் அடங்கியிருக்கின்றன என்றும் ஓர் எண்ணம் பொது மக்களுக்கு வந்துவிட்டது போலத் தோன்றுகிறது. அரசாங்கத்தின் ஆட்கள் சிலர் கொல்லப்பட் டாலும் அவர்களின் எண்ணிக்கை குறைவே. நெடுந்தொலைவு வரையிலும் நெடுங்காலம் வரையிலும் கிளர்ச்சி பரந்து கிடந்த தென்பதை நாம் கவனிக்கும் போது, பொது மக்கள் மட்டும் விரும்பியிருந்தால் எவ்வளவோ பேரை எளிதில் கொன்றிருக்கலா மென்பது நினைவுக்கு வருகிறது. இதிலிருந்து, பொதுமக்கள் வேண்டுமென்றேதான் எத்தனையோ பேரை விட்டு விட்டார்கள் என்பது தெளிவாகிறது. அவர்கள் அப்படிச் செய்யாதிருந் திருந்தால் இன்னும் எத்தனை தானை அதிகாரிகள் தீர்ந்து போயிருப்பார்கள் என்பது தெரியாது! அப்படியும், இம்மிகச் சிலருக்குப் பழியாக அரசாங்கமானது எத்தனை பேரைக் குண் டுக்கு இரையாக்கியது என்பது தெரியாது! இரு பக்கத்திலும் செத்தவர்களின் எண்ணிக்கை சரியாகக் கிடைக்குமானால் ஒன் றுக்கு 75 விகிதம் இல்லாவிட்டாலும் 50-60 வீதம் கட்டாயமாக இருக்கும். ஆனால் இது ஊகிப்பதுதான். இனித் தெரியவும் தெரியாதுபோலிருக்கிறது. அப்படியும், கிளர்ச்சி முற்றிலும் அஹிம்சா மயமாக இருக்க முடியவில்லை யென்பதையும், பொது

மக்கள் இக்கட்டுப்பாட்டை மீறிவிட்டார்கள் என்பதையும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

கிளர்ச்சியின் மும்முரம் சுமார் ஒரு மாதத்திலிருந்து இரண்டு மாதங்கள் வரையில் இருந்தது. அதற்குப்பின் அதன் சாயல் ஏதோ இருந்தாலும்கூட மக்கள் மேற்சென்று தாக்குதலை விட்டு விட்டு தம்மைப் பாதுகாத்துக் கொள்வதில் ஈடுபட்டுவிட்டார்கள்! அரசாங்கத்தின் அடக்குமுறை ஆழிக்கு இரையாகிவிட்டார்கள். சில பேர் படுத்துப் போன கிளர்ச்சியை மீண்டும் எழுப்ப பெரும் முயற்சி செய்தார்கள், ஆனால் அம்முயற்சிக்கு யாதும் சிறப்பான பயன் காணப்படவில்லை. கிளர்ச்சி பிறகு எழுந்திருக்கவுமில்லை, நடமாடவுமில்லை. ஏதோ இங்கு ஒன்று அங்கு ஒன்றாகச் சில சம்பவங்கள் நடந்தன, ஆனால் அவை அரசாங்கத்தையும் பாதிக்கவில்லை, பொது மக்களும் அவற்றில் யாதொரு சிரத்தையும் காட்டவில்லை. ஆயினும் அவை காரணமாக அடக்குமுறை தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது. பொது மக்கள் அதை நிறையச் சகித்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது. சிலர் சிறைக்குச் செல்லாமல் வெளியில் இருந்துகொண்டே பணியாற்றி வந்தார்கள்! சிலர் சிறையிலிருந்து வெளியேறியதும் மேலே கூறியது போன்ற முயற்சியில் ஈடுபட்டிருந்தார்கள். ஆயினும் சிறிது காலத்திற்குப் பின்னரே இம்முயற்சியைச் செய்தவர்களுக்கு இனி மக்களிடையில் ஆர்வத்தை பிறப்பிக்க இயலாதென்பதும், கிளர்ச்சியை மீண்டும் தொடர்ந்து நடத்த இயலாதென்பதும் தெளிவாகிவிட்டன. இவ்விதமான முயற்சியில் ஈடுபட்டிருந்தவர்கள் ஒளிவு மறைவாகவே வேலை செய்து வந்தார்கள். இந்தக் கிளர்ச்சியில் இவ்விதமானவர்கள் பலர் இருந்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு அவர்களுக்குத் தம்மைப் பாதுகாத்துக் கொள்வதைத் தவிர வேறு வேலை செய்வதற்கும் பொழுது கிடைக்கவில்லை, வழியுமில்லை. ஓடி ஒளிந்திருத்தலே அவர்களுடைய எல்லா ஆற்றலையும் எல்லாப் பொழுதையும் கொள்ளும் ஒரு வேலையாகிவிட்டது. அப்படியும்கூட பலர் மிகவும் துணிச்சலான வேலைகளைச் செய்தார்கள். சிலசில இடங்களில் பலத்தக் கழகங்களையும் நிறுவிவிட்டார்கள். அவற்றை அரசாங்கம் எவ்வளவோ முயற்சி செய்தும் கூடக் கலைக்க முடியவில்லை, துப்புக் கூடக் கிடைக்கவில்லை. காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைந்ததும் அவர்கள் வெளியே வந்தார்கள், அல்லது அரசாங்கத்தின் ஊழியர்களால் அவர்கள் எங்கிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள இயன்றது. இச்செயல் திறத்திற்காகவும், துணிச்சலுக்காகவும்

அவர்கள் பாராட்டுக்கு உரியவர் ஆவர். ஆனல் என்னுடைய நம்பிக்கை என்னவென்ருல், அவர்கள் ஒளிந்து மறைந்து காரியத்தைச் செய்யாதிருந்திருப்பார்களானுல், அவர்களில் சிலர் கட்டாயமாகக் கொல்லப்பட்டிருப்பார்கள், தூக்கு மேடையில் ஏறியிருப்பார்கள், அல்லது வேறுவிதமான அடக்கு முறைக்கு இலக்காகி இருப்பார்கள் என்பது உண்மை. ஆயினும், குற்றமற்ற பொது மக்களின் மீது எவ்வளவு கொடுமை செலுத்தப்பட்டதோ அவ்வளவு செலுத்தப்பட்டிருக்காது என்று நம்புகிறேன். கிளர்ச்சியும் எவ்வளவோ அதிகமாக முன்னேறியிருக்கும் ; விரைவில் அடக்கப்பட்டுமிருக்காது. பொது மக்கள் தம்முடைய தலைவர்கள் என்று ஏற்றுக்கொள்ளக் கூடியவர்கள் எப்பொழுதும் கிடைத்து வந்திருப்பார்கள் ; அவர்கள் சொன்னமாத்திரத்தில் பொது மக்கள் பெரு மகிழ்ச்சியுடன் தம் உயிரைக் கொடுத்திருப்பார்கள், பொருளைக் கொள்ளையடித்திருப்பார்கள். ஒளிந்து மறைந்து இரகசியமாக வேலை செய்ததினுல் வேலை மிகவும் பரந்த அளவில் நடக்க முடியவில்லை. சிலருடைய நடவடிக்கைகளின் வினைப்பயனை, குற்றமற்ற வேறு பலர் அனுபவிக்க வேண்டி வந்தது. இதனுல், ரயில், தந்தி ஆகியவற்றைச் சேதம் செய்தவர்கள் வெளிப்படையாகத் தம் வேலையைச் செய்து, தாம் செய்ததை ஒப்புக்கொண்டிருந்தால், மற்றவர்களுக்கும் துணிச்சல் எவ்வளவோ அதிகமாக வளர்ந்திருக்கு மென்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஓர் ஆளுக்குப் பதிலாக நூற்றுக் கணக்கான பேர் அதே வேலைக்குத் தயாராகியிருக்கலாம், தண்டனையும் தாம் செய்ததை ஒப்புக்கொண்டவர்களுக்கே கிடைத்திருக்கும், குற்றமற்ற பலர் தண்டனைக்குத் தப்பியிருப்பார்கள். எது எப்படியாயினும் சரி, இது அஹிம்சா கொள்கையின் பேச்சு. அதன்மீது நம்பிக்கையில்லாதவர்களுக்கு அதன் கட்டுப்பாடு எப்படிப் பிடிக்கும் ? பொது மக்களுக்கு வந்த துணிச்சல் எல்லாம் வெளிப்படையாக ராஜதுரோகம் செய்யப்பட்டதிலிருந்தேதான் வந்தது. இக்கொள்கை தொடர்ந்து நடைபெற்றிருந்தால் மேலும் துணிச்சல் பெருகியிருக்கும்.

# 151. வங்காளத்தின் பஞ்சம்—இந்தியாவின் பிரிக்கவொண்ணுமை

சிறையில் இருந்து கொண்டிருக்கும் போதே வங்காளப் பஞ் சத்தின் நிலைமையைப்பற்றி நாங்கள் கேள்விப்பட்டோம். 1943இன் கோடை காலத்தில் அரிசியும் மற்ற உணவுப் பொருள் களும் விலை ஏறிவிட்டன. மக்கள் அரிசியின் விலையைக் கொடுத்து வாங்குவது கடினமாகி வந்தது. நான் சிறு வயதில் பட்னுவிலும், சப்ராவிலும் படித்துக் கொண்டிருந்தபோது ஒரு முறை பஞ்சம் வந்தது. அரசாங்கமானது மக்களுக்கு ஆங்காங்கு வேலை கொடுத்து உதவி புரிவதற்காக பெரிய பெரிய குளங்களை வெட்டு வித்தது என்பது நினைவிருக்கிறது. என் கிராமத்திலிருந்து சிறிது தொலைவில் ஒரு பெரிய குளம் வெட்டப்பட்டது. ஆங் காங்கு ஏழைகளுக்குச் சோறும் வழங்கப்பட்டது. அது வரையில் ரூபாய்க்கு 15 சேர் (10 வீசை) கிடைத்து வந்த நல்ல அரிசி யானது குறைந்து போய் 9–10 சேர் ஆகிவிட்டது. அதற்குப் பிறகு இன்னும் சிறிது விலையேறி ரூபாய்க்கு 5–6 சேராகக் விற்கத் தொடங்கியது. 1943இல் ரூபாய்க்கு ஒன்றேகால் அல்லது ஒன்றரைச் சேர் என்பது சாதாரணமாக அரிசியின் விலையாகி விட்டது. சிறையில் செய்தித்தாள்கள் மூலமாகச் சிறிதளவு செய்தி கிடைக்கத் தொடங்கியது. நாளடைவில் வங்காளத்தின் நிலைமை மேலும் கெட்டு வந்தது. அங்குச் சிலர் பசியால் இறந் தார்கள் என்ற செய்தி வரத் தொடங்கியது. கல்கத்தாவின் தெருக்களில் மக்களின் பிணங்கள் கிடக்கின்றனவென்பது சில நாட்களுக்குள்ளாகவே தெரிய வந்தது. சில நாட்களுக்குப் பிறகு பத்திரிகைகளில் இறந்தவர்களின் படங்கள் அச்சிடப்படத் தொடங்கின. இந்த வகையில் 'ஸ்டேட்ஸ்மன்' தான் மற்றப் பத் திரிகைகளுக்கு முன் வேலை புரியத் தொடங்கியது. மற்ற இந்திய பத்திரிகைகளிலும் நிறையப் படங்கள் அச்சிடப்பட்டன. பொது மக்களின் சார்பில் மக்களுக்கு உதவியைக் கொண்டு சேர்ப்பிக்க முயற்சி செய்யப்பட்டது. நான் முதலில் செய்தித் தாள்களில் இச்செய்திகளைப் படித்து வந்தேன், படங்களைப் பார்த்து வந்தேன். ஆனுல் சில நாட்களுக்குப் பிறகு நிலைமை மிகவும் அச்சுறுத்துவதாக மாறிவிட்டது. அதனுல் படங்களைப்

பார்ப்பதும் செய்திகளைப் படிப்பதும் என்னுல் சகிக்க முடியாதன வாகிவிட்டன. நான் செய்தித்தாள்களைப் படிப்பதை நிறுத்திவிட் டேன். சிறையில் உட்கார்ந்து கொண்டு யார்தான் என்ன செய்ய முடியும்? பட்னுவில் ஸ்ரீ பிரபுல்ல ரஞ்சன் (பி. ஆர்.) தாஸானவர் துன்பத்தால் பற்றப்பட்டவர்களின் உதவிக்காகப் பணம் திரட்ட முயற்சி செய்தார். அவர் ஒரு கோரிக்கையை விடுத்தார். இந்த வேலைக்கு என்னுல் வேறு ஒன்றும் செய்ய முடியாவிட்டாலும் என் னுடைய கடிதங்களின் மூலமாக மக்களுக்கு ஏதாவது தொண் டாற்றினுலும் சிறிது திருப்தி உண்டாகுமென்று நினைத்தேன். ஸ்ரீ தாஸுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதில் அவருடைய கோரிக்கையை ஆதரித்தேன். அறுவடை சமயத்தில் அரிசியைக் கொடையாக அளிக்கும்படி மக்களிடம் கோரிக்கை செய்து ஏதோ சிறிதளவு அரிசி திரட்டவும் வழி காட்டினேன். என்னுடைய கடிதம் ஸ்ரீ தாஸுக்கு அனுப்பப்படவில்லை யென்பதாகவும், அது தடை செய்யப்பட்டு விட்ட தென்பதாகவும் அரசாங்கத்திட மிருந்து உத்தரவு கிடைத்தது. இதைப்பற்றித் தகவல் இன்று வரையில் கூட வெளியே யாருக்கும் தெரியாதென்று நினைக் கிறேன்.

எத்தனை லக்ஷம் பேர் இறந்தார்கள் என்று சொல்ல முடியாத அளவுக்கு வங்காளத்தின் நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. ஏறக்குறைய 50 லக்ஷம் பேர் பஞ்சம் என்ற எமனுக்கு இறை யானுர்கள் என்று பொது மக்களின் தலைவர்கள் நினைக்கிருர்கள். அரசாங்கத்தின் மதிப்பு 15–20 லக்ஷம் இருக்கலாம். அந்தக் கண்ணராவியான சம்பவங்களை வர்ணிக்க இயலாது. எது காரண மாயினும் சரி, ஆரம்பத்தில் அரசாங்கம் ஒன்றும் செய்ய முடிய வில்லை. அப்போது சர் நாஜிமுத்தீன் முதல் மந்திரி, ஸ்ரீ சுஹ்ரா வர்தீ உணவு மந்திரி. சர் ஹர்பர்ட்டு கவர்னராகவும், லார்டு லின்லித்கோ வைசிராயாகவும் இருந்தார்கள். இவ்வளவு நெருக் கடியான நிலைமையிலும் அங்குள்ள பொது மக்கள் எப்படி எல்லா வற்றையும் பேசாமல் பொறுத்துக் கொண்டிருந்தார்கள் என்பது வியப்பாயிருக்கிறது. அது போகட்டும், மந்திரி சபை எப்படி வேலை புரிய முடிந்தது? அசெம்பிளியின் அங்கத்தினர்கள் அவர் களை எப்படி இருக்கவிட்டார்கள்? ஆனுல் யுத்த காலமாயிருந் தது. அவசரச் சட்டங்களின் ஆட்சி நடந்து வந்தது. முஸ்லிம் லீகின் கையில் அதிகாரம் இருந்தது. யாரும் ஒன்றும் செய்ய முடியவில்லை. லார்டு லின்லித்கோ காங்கிரஸ்காரர்களை அடக்குவதில்தான் மிகவும் மும்முரமாகப் பாடுபட்டு வந்தார்.

ஆனால் வங்காளத்தில் இப்பஞ்சத்தில் இறந்தவர்களைப்போல அத்தனைபேர் மகாயுத்தத்தில் உலகத்திலுள்ள எல்லா நாடுகளையும் சேர்த்தாலும்கூட இறந்திருக்க மாட்டார்களாயினும், அவரால் ஒரு நாளைக்குக்கூட வங்காளத்துக்கு வர முடியவில்லை; அவர் போனபின், லார்டு வேவல் கவர்னர் ஜெனரலாக வந்ததுமே வங்காளத்துக்கு வந்தார். மக்களுக்கு உதவியைக் கொண்டு போய்ச் சேர்க்கும் வேலையைச் செய்யும்படி அவர் அங்கிருந்த பட்டாளத்திற்கு உத்தரவிட்டார். சர் ஹர்பர்ட்டு நோய்வாய்ப்பட்டுவிட்டார். அவருடைய இடத்திற்கு பீகாரின் கவர்னர் அனுப்பப்பட்டார். அவரும் நிலைமையைச் சமாளிப்பதற்கு உதவி புரிந்தார். எப்படியோ, பல மாதங்களுக்குப்பின், நிலைமை சிறிது மாறியது. மக்கள் தெருக்களில் இறப்பது நின்றுவிட்டது.

பொது மக்களைக் காப்பாற்றும் பணியை ஒப்படைக்கப்பட்டவர்கள் பலர், இந்த விபத்தினால் நிறையப் பணம் சம்பாதித்தார்கள் என்பதாகவும், நிறையச் சொத்து சம்பத்துக்காரர்களாகிவிட்டார்களென்பதாகவும் மக்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். அரசாங்கமானது, யுத்தத்தைக் காரணமாகக் கொண்டு மக்களிடமிருந்து நெல் அரிசி எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டது. அவர்களுடைய சின்னஞ்சிறிய படகுகளைக்கூட எடுத்துக்கொண்டது. ஜப்பானிய படையெடுப்பை முன்னிட்டு எதிரிக்கு யாதும் கிடைக்காமலிருப்பதற்காகக் கடற்கரையிலுள்ள இடங்களை யாதொரு துணைப்பொருளும் அற்றதாக்கும் கொள்கை, அதாவது பாலை நிலமாக்கும் கொள்கையானது இப்பஞ்சத்திற்குச் சாமான்ய காரணம் அன்று. அச்சமயத்தில் லார்டு வேவல்தாம் சேனாதிபதி. அக்கொள்கைக்கு அவர்தாம் பொறுப்பாளி. இதனால் வைசிராயாக நியமிக்கப்பட்டதுமே அவர் அக்காரணத்தால் விளைந்த இந்த நிலைமையைச் சமாளிப்பதற்கு பட்டாளம் உதவி புரிதல் அவசியம் என்பதை உணர்ந்தார். அதனால் நிலைமையும் சற்றுத் திருந்தியது.

பீகாரிலும் அரிசியின் விலை சாதாரணமாகவே ஏறியிருந்தது. ஒரு (ரயில்) மணங்கு அரிசி ரூபாய் முப்பதுக்கு விற்று வந்தது. ஆயினும் பீகாரில் வங்காளத்தை போன்ற நிலைமை வரவில்லை. ஒரு விஷயம் இப்பஞ்சத்திலிருந்து தெளிவாகிவிட்டது. அதாவது, இந்த விபத்தில் இந்தியாவின் மக்கள் அனைவரும் வங்காளத்தின் உதவிக்காக, பீகார் பூகம்பத்திற்குப் பின் எப்படி ஓடி வந்தார்களோ அதேபோல, விரைந்து முன் வந்தார்கள் என்பது தான். இச்சமயம், யுத்தத்தின் காரணத்தால், மக்களிடம் உத

விக்கு வேண்டிய கருவிகள் இல்லை என்பது ஒன்றுதான் வேற்றுமை. பணமிருந்தும் மக்களுக்கு அரசாங்கத்தின் உதவியின்றி அரிசி கிடைக்க முடியவில்லை. எங்காவது தொலைவில் அரிசி கிடைத்தாலும் அரசாங்கத்தின் உத்தரவும் உதவியுமின்றி அதை வங்காளத்துக்குக் கொண்டு வந்து சேர்க்க முடியாது. ஏனெனில் ரயில், கப்பல் முதலிய போக்கு வரத்துக்கள் எல்லாம் அரசாங்கத்தால் கட்டுப்பாடு செய்யப்பட்டிருந்தன. இதனால் உதவி புரிய விருப்பம் இருந்தாலும்கூட எவ்வளவு உதவி தேவைப்பட்டதோ அவ்வளவை மக்கள் கொண்டு வந்து கொடுக்க முடியவில்லை. இது மட்டுமன்றி இந்த விபத்து நெடுந்தொலைவு பரந்து கிடந்தது. நெடுநாள் வரையில் நீடித்து நின்றது. பூகம்பமோ, சில நிமிஷக் காரியம். அதற்குப்பின் விளைப்பயனைத் துடைக்க மட்டும் வேண்டியிருந்தது. இங்கோ, விபத்தே மாதக்கணக்காக தன் வேலையைச் செய்து கொண்டிருந்தது. அதற்கு மேல் யுத்த காலத்துக் கட்டுப்பாடுகள் தம் சாமர்த்தியத்தைக் காட்டிக் கொண்டிருந்தன. பாரத வர்ஷம் ஒன்றே. அதன் மக்கள் அனைவரும் ஒன்றே. இதற்கு ஒரு மறுக்கொணாத சான்று இந்த விபத்திலிருந்து கிடைத்தது. ஆயினும் இந்தியாவைக் கூறு போட விரும்புகிறவர்களின் மனத்திலும் இதன் படிப்பினை படிந்திருக்குமா?

## 152. சிறையில் நூல் எழுதும் வேலை

இம்முறை சிறையில் ஏதோ சிறிது எழுத்து வேலையும் செய்தேன். நான் 1930இலும் எழுத முயற்சி செய்தேனாயினும் அதை முடிக்க இயலவில்லை. பிறகு எழுதியதும் காணமற் போயிற்று. முன்னிருந்தே நான் பாகிஸ்தான் சம்பந்தமாகக் கவனம் செலுத்திச் சிறிது படித்து வந்தேன். சிறைக்குச் சென்றதும் இந்த விஷயத்தைச் சிறப்பாகப் படிக்க வேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. பாகிஸ்தானை ஆதரித்து எழுதப்பட்டிருந்த சில புத்தகங்களை வரவழைத்தேன். அவற்றைப் படித்த பின் இந்தக் கோரிக்கையானது என்ன ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு செய்யப்படுகிறதென்பதைப் பார்க்க வேண்டுமென்றும், அவை எவ்வளவு தூரம் பொருத்தமானவை என்பதை ஆராய வேண்டுமென்றும் எண்ணம் எழுந்தது. இதற்குப் பிறகு,

முஸ்லிம் லீகானது எதைப் 'பாகிஸ்தான்' என்று கூறுகிறதென் பதையும் பார்க்க வேண்டியது அவசியம் என்ற எண்ணம் வந்தது. அதனுடைய கோரிக்கையை ஏற்றுக்கொள்ள வேண்டு மானுல், அது என்ன கொடுக்க வேண்டும்? முஸ்லிம் லீகுக்கு என்ன கிடைக்கும்? பாகிஸ்தானுல் தன் ஆற்றலைக் கொண்டே நிலைபெற்று நிற்க இயலுமா? முடிவில், இந்த விஷயத்தைப் பற்றிச் சிறிது எழுதுவதற்கு இடமிருக்கிறது என்பதாக நினைத் தேன். நாங்கள் எப்பொழுது சிறையிலிருந்து வெளியே செல்ல இயலும் என்பதும், நான் எழுதுவது எப்போதாவது அச்சிடப் படுமா இல்லையா என்பதும் தெரியா ஆயினும் என் கருத்துக் களைத் தெள்ளத் தெளிவாகப் பிறருக்கு விளங்கும் வகையில் எழுத்தில் வடிப்பது நன்றெனத் தோன்றியது. ஏதாவது எழுத வேண்டுமென்பதாக முடிவு செய்தேன். இதை ஒட்டிய விஷயங் கள் நாட்டின் முன் சமர்ப்பிக்கப்படுமானுல், எப்படி எனக்கு, இதைப்பற்றிச் சிறப்பாகப் படித்தபின், இது நடக்குமா என்ப தைப்பற்றி ஐயம் உண்டாயிற்ரே அதேபோல மற்றவர்களும் இதைக் கைகூடாததெனப் புரிந்து கொள்வார்கள் என்பதாக புலப் பட்டது இதனுல், எக்காரணங்களால் இது கைகூடாததென எனக் குத் தோன்றியதோ அவ்விஷயங்களையே எழுத்தில் வடிக்கலா மென முடிவு செய்தேன். பாகிஸ்தானைக் கைக்கூடாதென நிலை நாட்டும் பகுதி எழுதப்பட்டபின் அதற்கு அடிப்படையாகக் கூறப்பட்டு வந்த விஷயங்களைப் பற்றியும் எழுதுவது நன்றென உணர்ந்தேன். அவையாவன, இந்தியாவில் ஹிந்து-முசல்மான் வெவ்வேறு குடிமக்கள், இதனுல் அதைப் பிரித்து இரண்டு சுதந் திர நாடுகளாகவும் குடிமக்களாகவும் நிறுவவேண்டும் என்பன தாம். இவ்வண்ணமாக எழுதிக் கொண்டு போகப் போக புத்த கத்தின் அளவும் வளர்ந்து கொண்டே சென்றது. வேலை அதி விரைவாக நடக்கவில்லை. அதிகமாக உழைப்பதற்குத் தகுந்தாற் போல உடல் நலமில்லை என்பது ஒரு காரணம். நோய்வாய்ப் பட்டுவிட்டால் மாதக்கணக்காக எதுவும் படிக்கவும் இயலாது, எழுதவும் இயலாது. நலமாயிருக்கும்போது படிப்பேன், எழுது வேன். மேலும் துரிதப்படுத்துவதற்கும் அவசியம் தோன்ற வில்லை. ஏனெனில் சிறையில் இருந்து வரும்போது ஏதாவதொரு புத்தகத்தை வெளியிட அனுமதி கிடைக்கும் என்ற நம்பிக்கை இல்லை. இப்போது விடுதலை யாவதற்கும் யாதொரு வழியும் தென்படவில்லை. இதனுல் மெல்ல மெல்லச் சிறுகச் சிறுக எழுதி வந்தேன்.

இதற்கிடையில் யாரோ ஒரு தோழர் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டு வெளியேறினர். பாகிஸ்தானைப் பற்றி நான் ஒரு புத்தகத்தை எழுதி வருவதாக அவர் யாரோ ஒரு செய்தித்தாள் நிருபரிடம் கூறிவிட்டார். இச்செய்தி பத்திரிகையில் வெளியிடப்பட்டு விட்டது. அரசாங்க அதிகாரிகள் எப்போதாவது சிறைக்கு வருவார்கள். அப்படிக் கமிஷனர் ஒரு முறை வந்தார். என்னுடைய புத்தகம் எவ்வளவு தூரம் எழுதப்பட்டிருக்கிறதென்று அவர் கேட்டார். கிட்டத்தட்ட முடிந்துவிட்டதென்று கூறினேன். அவர் அதைப் பார்க்க விரும்பினர். கையால் எழுதப்பட்ட நோட்டுப் புத்தகங்களை அவர் கையில் கொடுத்து விட்டேன். முதலாவதாக, நான் சிறிய எழுத்துக்களாக எழுதும் பழக்கமுள்ளவன். மற்றென்று, காகிதக் குறைவால், இரண்டு பக்கங்களிலும் எழுதியிருந்தேன். புத்தகம் சிறுகச் சிறுக எழுதப்பட்டதால், ஏதாவது புது விஷயம் என் முன் வந்தபோது, அல்லது ஏதாவது புதிய புத்தகத்திலிருந்து தெரிய வந்தபோது அதை அந்தந்த இடத்தில் சேர்த்துவிடுவேன். இவ்வண்ணமாக, எங்காவது விடப்பட்டிருந்த சிறிது இடமும் முற்றிலும் நிறைக்கப்பட்டுப் போயிற்று. மேலும், சிற்சில இடங்களில் படிப்பதற்கு சௌகரியமாயிருக்கும் பொருட்டு வேறு நிற மையையும் உபயோகிக்க வேண்டி யிருந்தது. இதனல் வேறு எவரும் புத்தகத்தைப் படிப்பது மிகவும் கடினமாயிருந்தது. புத்தகத்தை அச்சிட நோக்கமா என்று கமிஷனர் வினவினர். அரசாங்கம் அனுமதி அளிக்குமானல் புத்தகம் அச்சிடப்படும் என்று விடை அளித்தேன். இதன்மேல், "புத்தகத்தைப் பார்க்காமல் அரசாங்கம் அனுமதி அளிக்காது. கையால் எழுதப்பட்ட பிரதி இருக்கும் நிலைமையில் அதை அரசாங்கம் பார்ப்பதும் கடினம், அரசாங்கம் அச்செழுத்தில் பொறித்த (டைப் செய்த) பிரதியைத் தான் பார்க்க முடியும்" என்று கூறினர். இதற்கு, நான் "அச்செழுத்தில் பொறிப்பதற்கு வேண்டிய கருவி என்னிடம் இல்லை, ஆனல் அரசாங்கம் இதற்கு வசதி செய்து கொடுக்குமானல் அச்செழுத்தில் பொறிக்க இயலும்" என்றேன்.

இப்பேச்சுக்குப் பிறகு, அச்செழுத்தில் பொறிப்பதற்கு எனக்கு வசதிகளை அளிக்கும்படி அரசாங்கத்திற்கு எழுதினேன். நான் எழுதியதும் அரசாங்கமானது அச்செழுத்துப் பொறிக்கத் தெரிந்தவரும் காங்கிரஸ் செயலாளரும், ஜம்ஷேத்பூர் தொழிலாளர் சங்கத்தின் அமைச்சருமான ஸ்ரீ மைக்கேல் ஜான் என்பவரை ஹஜாரிபாக் சிறையிலிருந்து பாங்கீபூர் சிறைக்கு அனுப்பியது.

அவர் மிகவும் உழைத்துப் புத்தகத்தை நான் எழுதியிருந்த வரையில் பொறித்துவிட்டார். தற்செயலாக இந்த வேலை 1945ஆம் ஆண்டு ஜுன்மாதம் 14ஆம்தேதி மாலை முடிவடைந்தது. அடுத்த நாள், ஜுன் 15ஆம் தேதியே காலையில் நான் விடுதலை செய்யப்படுவேன் என்ற செய்தி அன்றே இரவில் எங்களுக்குத் தெரிய வந்துவிட்டது. புத்தகத்தின் கையெழுத்துப் பிரதியும் அச்செழுத்துப் பிரதியும் இப்போது என்ன ஆகும் என்ற கேள்வி எழுந்தது. இரண்டையும் என்னுடன் வெளியே எடுத்து செல்ல முடியுமா அல்லது அரசாங்கமானது அதைப் பார்த்த பின்தான் வெளியேற்ற அனுமதி அளிக்குமா? சூப்பிரண்டெண்டு, அரசாங்கத்தில் உத்தரவு இன்றித் தம் பொறுப்பாக அவற்றை வெளியே எடுத்துச் செல்ல அனுமதி அளிக்க விரும்பவில்லை. ஆயினும் அரசாங்கத்தைக் கேட்டதும், அவற்றை எடுத்துச் செல்ல அது உத்தரவு இட்டுவிட்டது. இவ்வண்ணமாக நான் வெளியே வந்தபோது, தயாரான புத்தகத்துடன் வெளியேறினேன். சிறையிலிருந்து வெளியே வந்தபின், 1945 ஆகஸ்டில் உடல் நிலைமை திருந்துவதற்காகப் பிலானிக்குச் (ராஜ பூத்தான) சென்றிருந்தபோது அங்கே அதில் சில விஷயங்களைச் சேர்த்தேன். பிலானியிலிருந்து பம்பாய்க்குச் சென்று கொண்டிருக்கும்போது, ரயிலில் அதன் பெரும்பாகத்தை மறுபடியும் பார்த்து, மதுராபாபூவின் உதவியைக் கொண்டு அதை அச்சகத்துக்கு அனுப்பத் தயார் செய்ய முடிந்தது. பம்பாய் போய்ச் சேருவதற்குள் புத்தகம் அச்சகத்திற்காக பெரும்பாலும் தயாராகிவிட்டது. அங்கேயே அதற்குப் பெயரும் சூட்டப்பட்டது—"இந்தியா டிவ்வைடட்" (கூறிடப்பட்ட இந்தியா) என்பது பெயர். அச்சிடுவதற்காக புத்தகத்தை அச்சகத்தில் கொடுத்தாகிவிட்டது. 1946 ஜனவரியின் ஆரம்பத்திலேயே புத்தகம் அச்சாகி வெளிவந்தது. ஒரு மாதத்திற்குள்ளாக முதல் பதிப்பின் பிரதிகளெல்லாம் விற்றுவிட்டன. மூன்று நான்கு மாதங்களில் இரண்டாம் முறை அச்சாகி அதுவும் விற்றுப் போய்விட்டது.

சிறையில் நான் வேறொன்றையும் எழுதினேன். 1940இல் உடல் நலம் பெறுவதற்காக நான் சீகருக்குச் (ஜயபூர் ராஜ்யம்) சென்றபோது, ஒரு நாள் என் நினைவுகளை எழுத எண்ணினேன். அப்படியே எழுதவும் தொடங்கிவிட்டேன். இந்த விஷயம் எவருக்கும் தெரியாது. இராப்பகலாக என்னுடன் இருந்து வந்த மதுராபாபூவுக்குக்கூட நான் ஏதோ எழுதிக்கொண்டிருக்கிறேன் என்பது சில நாட்கள் வரையில் தெரியாது. காலை 4–4½ மணிக்கு

விழித்துக்கொள்வது என் பழக்கம். அப்போதே எழுந்திருந்து நாள்தோறும் ஏதாவது சிறிதளவு எழுதி விடுவேன். மற்றவர்கள் விழிப்பதற்கு முன் முடித்து விடுவேன். அங்குச் சிறிதளவு தான் எழுத முடிந்தது. அங்கிருந்து திரும்பி வந்தபின் பொழுதே கிடைக்கவில்லை. இரண்டாண்டுகளுக்குப் பிறகு சிறையில் உடல் நிலை சற்றுத் திருந்தியதும், அதை முடிக்கும்படி என்னுடன் இருந்தவர்கள் என்னை வற்புறுத்தினுர்கள். நான் எதுவரையில் எழுதினேன் என்பதுகூட எனக்கு நினைவில்லை. கையெழுத்துப் பிரதியை வீட்டிலிருந்து சிறைக்கு வரவழைப்பது நன்றன்றெனத் தோன்றியது. ஏனெனில் சி. ஐ. டி. படித்துப் பார்க்காமல் எதுவும் எனக்குக் கிடைக்க முடியாது. மேலும் அதைப் படித்துப் பார்த்த பின்னும் அரசாங்கத்தார் அதை உள்ளே வர அனுமதிப்பார்களா மாட்டார்களா என்பது தெரியவில்லை. இதனுல், சீகரில் எவ்வளவு தூரம் வரையில் எழுதினேன் என்பதைக் குருட்டு மதிப்பாகக் கொண்டே அங்கிருந்து மேற்பட்ட விஷயங்களை எழுதத் தொடங்கினேன். மெல்ல மெல்ல அதுவும் நிறைய எழுதப்பட்டு விட்டது. முடிந்துகூடப் போயிருக்கும், ஆனுல் பின்னுல் 'இந்தியா டிவ்வைடெடி'லேயே நிறையப் பொழுதைக் கழிக்கத் தொடங்கி விட்டேன். ஆகையால் நினைவுகளை ஒரு புறம் வைத்துவிட்டேன்.

இந்த நினைவுக் குறிப்புக்கு என்ன அவசியம் அல்லது உபயோகம் என்ற எண்ணமும் இடை இடையே மனத்தில் எழுந்தது. நான் செய்தது, பெற்றது அனைத்தும் மற்றவர்களின் நிழலின் கீழ் நின்றேதான். முதலில் என் தமையனுரின் நிழலின் கீழ், பிறகு மகாத்மாஜீயின் நிழல். என் வரலாற்றைப் பிறர் அறிய வேண்டியது அவசியம் என்பதற்கோ அல்லது அதிலிருந்து மற்றவர்கள் ஏதாவது கற்றுக்கொள்ள முடியும் என்பதற்கோ என் வாழ்க்கை அத்தகைய தன்று. நான் பொது வாழ்க்கைப் பணிகளிலும், முக்கியமாகக் காங்கிரஸைச் சம்பந்தப்பட்ட வேலைகளிலுமே ஈடுபட்டிருக்கிறேன். அவற்றைப் பற்றி என் நினைவுகளை எழுதுவேனுனல் மக்களுக்குச் சில விஷயங்கள் தெரியவரலாம். ஆயினும், சரித்திரக் கண்கொண்டு பார்த்தால், இந்நினைவுகளுக்கு யாதொரு மதிப்பும் கிடையாது. ஏனெனில் நான் என்னுடைய இவ்வளவு நீண்ட பொது வாழ்க்கையில் அதிகமாக எழுதவில்லை. அப்படி எழுதியிருந்தாலும்கூட அவற்றின் நகலை பாதுகாத்து வைத்துக் கொள்ளவில்லை. மற்றவர்கள் பொது வாழ்க்கைச் சம்பவங்களைப் பற்றிய செய்தித்தாள்

துணுக்குகளைச் சேகரித்தார்கள், நான் அதுகூடச் செய்யவில்லை. சிலர் மிகவும் பெருமை வாய்ந்த கடிதத் தொடர்பு மற்றவர்களுடன் கொண்டிருந்தார்கள். நான் என் இயல்பான தன்மையினுல் அப்படி எதுவும் செய்யவில்லை. மேலும் ஏதாவது செய்திருந்தாலும்கூட அதற்குப் பிரதிகளும் என்னிடம் இல்லை. சிலர் நாட் குறிப்புகள் எழுதுகிருர்கள். அவற்றில் எல்லாச் சம்பவங்களும் அன்ருடம் குறிப்பிடப்படுகின்றன. நான் நாட் குறிப்புகள் எழுதப் பழக்கிக் கொள்ளவில்லை. இதனுல் என் நினைவு ஆற்றலைத் தவிர நினைவு மலர் எழுதுவதற்கு வேறு கருவி என்னிடமில்லை. சரித்திரக் கண்கொண்டு பார்த்தல், வெறும் நினைவு ஆற்றலை நம்பியிருக்கும் நினைவு மலருக்கு யாதொரு சிறந்த சான்றுத் தன்மை இருக்கமுடியாது. இக்காரணங்களால் என் நினைவுகளை எழுதுவது வெறும் தற்பெருமைதானென்றும் இதனுல் மற்றவர்களுக்கு யாதொரு பயனும் உண்டாகாது என்றும் சிற்சில சமயங்களில் எண்ணம் எழும். அப்படி யிருந்தும்கூட, வேலையை ஒரு முறை தொடங்கிவிட்டதும் அதை முடிப்பதே நன்றெனத் தோன்றிற்று. வெளியிடுவதும் வெளியிடாததும் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.

இவ்விதமாக ராம்கர் காங்கிரஸின் காலம் வரையில் என் நினைவுகளைச் சிறையிலேயே எழுதிவிட்டேன். ஒரு வகையில் இந்த நினைவு மலர், ஒரு நல்ல நினைவு மலர்தான். ஏனெனில், இதில், எழுதும்போது நினைவுக்கு வந்த விஷயங்களே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இதனுல், பல பெருமை வாய்ந்த விஷயங்களும் நிகழ்ச்சிகளும் சொல்லாமல் விடப்பட்டிருக்கலாம். சிற்சில இடங்களில் ஊர்பேர் முதலியவற்றைக் கூறுவதிலும் தவறு ஏற்பட்டிருக்கலாம். சில விஷயங்கள் தவருக மனத்தில் பதிந்திருக்கலாம். அவையே இதில் வந்திருக்கலாம். ஆனுல் நான் ஒன்று மட்டும் உறுதியாகக் கூறமுடியும். அறிந்து தெரிந்து எந்தத் தவருன விஷயமும் எழுதப்படவில்லை. இந்நினைவு மலரைக் கட்டாயமாகப் பதிப்பிட வேண்டுமென்பது நண்பர்களின் கோரிக்கை. அவர்கள் இதை மற்றவர்களுக்கும் காட்டிஞர்கள். இதுபோன்ற விஷயங்களை ஆய்வு செய்ய வல்லாரும் இதைப் பதிப்பிட வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். இதனுல் எஞ்சிய பகுதியைச் சிறையிலிருந்து வெளியே வந்த பின் 1946இன் ஜுலை-ஆகஸ்டு மாதங்களில் பிலானியில் உட்கார்ந்துகொண்டு எழுதி வருகிறேன்.

# 153. என் விடுதலையும் சில துக்க சாவுகளும்

சிறையில் இருந்தபோதே ஒரு பயங்கரமானதும் துக்க மானதுமான விபத்து வந்தது. இது பீகாருக்குத்தான் வந்தது. மலேரியா 1944இல் மிகவும் கடுமையாக உக்ர தாண்டவமாடியது. பலர் மாளத் தொடங்கினர். பத்திரிகைகளில் இதன் செய்தி வரத் தொடங்கியது. தற்செயலாக ஸ்ரீ பாபூ, அனுக்கிரக பாபூ இன்னும் மற்றக் காங்கிரஸ்காரர்கள் அதற்குள்ளாகவே விடுதலை யாகி விட்டார்கள். அவர்கள் பொது மக்களுக்கு உதவி புரியும் வேலையைத் தொடங்கினார்கள். டாக்டர் டி. என். பனர்ஜீயின் தலைமையின் கீழ் டாக்டர்கள் தம் குழு ஒன்றை அமைத்துக் கொண்டு தொண்டாற்றத் தொடங்கினார்கள். பூகம்பத்தின் போது மிச்சம் விழுந்த சிறு தொகையை, இவ்விதமான விபத் துக்களின்போது பொது மக்களின் தொண்டிற்காக ஒரு அற நிலையம் அமைத்து அதனிடம் கொடுத்து வைக்கப்பட்டது. எப்போதாவது எங்காவது வெள்ளம் முதலியன வந்தால் உதவிக் காகச் சிறிது பணம் அதிலிருந்து செலவு செய்யப்படும். இச் செலவு அதிகமன்று. அறநிலையத்திடமிருந்த பணத்தின் வட்டி யிலிருந்துதான் இப்பணி செய்யப்பட்டு வந்தது. பணத்தின் பெரும்பாகம் சர்க்கா சங்கத்திற்குக் கடனாகக் கொடுக்கப்பட்டிருந் தது. அதனிடமிருந்து அவ்வப்போது வட்டிப்பணம் வந்து விடும். அது பாங்கியில் இருக்கும். அவ்வப்போது அது செலவு செய்யப்படும். 1942 ஆகஸ்டில் சர்க்கா சங்கத்தின் வேலையை அரசாங்கமானது பீகாரில் ஒரு விதமாக நிறுத்திவிட் டது. பாங்கியின் என் பேரேடு புத்தகங்கள் அனைத்தும் பறி முதல் செய்யப்பட்டுப் போயின. அவற்றுள் ஒரு புத்தகம் உதவி நிதியினுடையது. மலேரியாவின் செய்தியைப் படித்ததும், பறி முதல் செய்யப்பட்ட பணத்தை மக்களின் உதவிக்காகச் செலவு செய்வதற்கு அனுமதி அளிக்கப்பட வேண்டுமென்று அரசாங்கத் துக்கு எழுதினேன். முதலாவதாக டாக்டர்களின் குழுக்களுக்கு அளிப்பதற்காக ஒரு தொகையைக் கேட்டேன். அரசாங்கம் இதைக் கொடுக்க ஒத்துக்கொண்டது. பணம் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. பின்னால் அனுக்கிரக பாபூவானவர் உதவிச் சங்கத்தை நிறுவியதும் அவருக்குப் பணம் அளிக்கப்படுவதற்கு

அரசாங்கம் அனுமதி அளித்தது. முடிவில் சர்க்கா சங்கத்தி லிருந்து அறநிலையத்திற்கு வரவேண்டிய பணம் அனைத்தையும் அரசாங்கமானது உதவிப் பணிக்காக சர்க்கா சங்கத்திடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட பணத்திலிருந்து கொடுத்துவிட்டது. ஆயினும் அவ்வளவும் செலவாகவில்லை. பணத்தின் பெரும் பாகம் இன்னும் இருக்கிறது. வங்காளத்தின் பஞ்சம் வந்த போது போலன்றி இம்முறை அரசாங்கமானது சிறைக்குள் ளிருந்துகொண்டு ஏதோ சிறிது உதவி புரிய வேண்டுமென்ற என் விருப்பத்தைக் கெடுக்கவில்லை யென்பதைப் பற்றி நான் மகிழ்ச்சி யடைந்தேன். 1945 ஜுன் 15ஆம் தேதி நான் விடுதலை செய்யப்பட்டேன்.

இம்முறை சிறை கொள்ளப்பட்டபோதே சிறை யாத்திரை நெடியதாக இருக்குமென்று புரிந்து கொண்டோம். கிளர்ச்சி வளர வளர, மேலும் நெடிய நெடிய தண்டனைகள் மக்களுக்கு கொடுக்கப்படத் தொடங்கியதும், இந்த எண்ணமானது இன் னும் வலுவுற்றுவிட்டது. ஒவ்வொரு முறை சிறை யாத்திரை யிலும் சிலர் சிறையிலேயே இறந்து விடுகிறார்கள். இம்முறையும் அப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை நிறைய இருந்தது. ராஞ்சி மாவட்டத்தைச் சேர்ந்த டாணு பகத் என்ற இடத்தின் ஆள்களில் பலர் சிறையில் இறந்தார்கள் என்பதை அறிந்து எனக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று. ஆயினும் சிறைக்குள் இறப்பவர்களைப் பார்க்கிலும் வெளியே குண்டுகளால் கொல்லப் பட்டவர்களின் எண்ணிக்கை எவ்வளவோ அதிகமாயிருந்தது. இவ்விதமாக நாட்டின் நலத்திற்காகத் தம் உயிரைக் காணிக்கை யாகக் கொடுத்தவர்களில் மிகச் சிலரைத்தாம் எனக்குத் தெரியும். இதற்கு முக்கிய காரணம், முக்கிய காங்கிரஸ் செயலாளர்கள் கைது செய்யப்பட்டு சிறைகளில் வைக்கப்பட்டு விட்டார்கள் என்பதே. வெளியிலிருந்தவர்கள் அதிகப் புகழ் பெற்றவர்கள் அல்லர். அதுமட்டுமன்றி இந்தப் புரட்சி வெள்ளத்தில் பல புதிய ஆட்கள் சேர்ந்துவிட்டார்கள். அவர்கள் இதற்குமுன் என்றுமே காங்கிரஸ் வேலை செய்ததில்லை. ஆயினும் இதைச் சுயராஜ்யத்திற்காக காந்திஜீ செய்யும் கடைசிப் போரென உணர்ந்து வந்து சேர்ந்து கொண்டார்கள். என் மாகாணத்தைப் பற்றி இதைக் கூறினேன். என் மகாணத்திற்கு வெளியே, பல முக்கிய மனிதர்களின் சாவு நிகழ்ந்தது. அவர்களின் இடத்தை என்றுமே நிரப்ப இயலாது. அவர்களுள், எல்லாருக்கும் முன், கைது செய்யப்பட்டதற்குச் சிறிது நாட்களுக்குள்ளாகவே, இறந்த

வர் ஸ்ரீ மகாதேவ் பாயீ தேசாய் ஆவார். அவர் காந்திஜீ யோடவே கைது செய்யப்பட்டு புனுவிலுள்ள ஆககான் அரண் மனையில் வைக்கப்பட்டிருந்தார். அங்குத் திடீரென்று ஒரு நாள் மார்பு அடைத்து இறந்து போனர். இது போற்றற்குரிய மகாத்மாஜீயின் உள்ளத்தில்தான் மாபெரும் அதிர்ச்சியை விளே வித்தது. ஏனெனில் அவர் காந்திஜீக்குத் தொண்டு செய்ய வந் ததிலிருந்து தம்முடைய வாழ்க்கையை காந்திஜீயின் படிப்பினே யின்படியும் கொள்கையின்படியும் அமைக்க இடையருது முயற்சி செய்து வந்தார். இதில் நிறைய வெற்றியும் பெற்ருர். அதோடு அவருடைய எழுத்து நடையும் மிகவும் அற்புதமாக இருக்கும். அதையும் அவர் காந்திஜீயின் நடையுடன் ஒக்க அமைத்துக் கொண்டார். இரண்டு மூன்று பேர் சேர்ந்துகூட அவருக்கு ஈடாக உழைக்க முடியாது, அவ்வளவு நிறைய உழைக்கக்கூடிய வர். எல்லாவித வேலேகளேயும் செய்வார். துணி தோய்த்தல், மலச்சட்டி கழுவுதல், மிகவும் நொய்மையினும் நொய்மையான விஷயங்களே ஏற்றுத் தூது செல்லுதல், அழகில் சிறந்த கட்டுரை களே எழுதுதல், எல்லாம் அவருக்கு ஒன்றுதான். எல்லாவற்றை யும் ஒரேவிதமாக, எளிதிலும், விரைவாகவும், பெரு மகிழ்ச்சியுடன் செய்து முடிப்பார். இயல்பாகவே அவர் மிகவும் கபடமின்மை யும் ஈர நெஞ்சமும் உடையவர். இதனுல் அவருக்கு எவரோடும் யாதொரு சண்டையும் வந்ததே கிடையாது. அவரை, அவ ருடைய மனேவியார் ஸ்ரீமதி துர்க்காபஹனுடன் சம்பரானில் திறந்திருந்த ஒரு பாடசாலேயில் வேலே புரிவதற்காக காந்திஜீ அனுப்பியபோதுதான் எனக்கு அவருடன் முதன் முதலாகப் பழக்கம் உண்டாயிற்று. அப்போது உண்டாகிய அன்பும் நட்பும் என்றும் இருந்து வந்தன. அவருடைய இவ்விதமான திடீர் மரணத்தால் எனக்கும் நிறைய வேதனே உண்டாயிற்று.

மற்ருெரு சாவு ஸ்ரீமதி கஸ்தூர் பா காந்திஜீயின் மரணம். அது 1944ஆம் ஆண்டில் பிப்ரவரியில் நிகழ்ந்தது. அவரும் ஆகாகான் அரண்மனேயில் மகாத்மாஜீயுடன் இருந்தார். நெடு நாளாக நோயுற்றிருந்தார். கடைசியில் போய்விட்டார். காந்தி ஜீயின் வாழ்க்கைத் துணேவியாக இருக்கும் நற்பேறு அவருக்குத் தம் வாழ்வின் இறுதிநாள் வரையில் இருந்து வந்தது. காந்திஜீ யின் மடியில்தான் அவர் மீளா வழிச் சென்ருர். அப்படிப்பட்ட சௌபாக்கியவதி வேறு யார் இருக்க முடியும்? அவரை எல்லாரும் 'பா' என்று அழைப்பார்கள். அவர் உண்மையிலேயே எல்லோருக்கும் தாயாக இருந்தார். அவர் முதன் முதல் 1917இல்

சம்பாரானுக்கு வந்தார். அப்பொழுதுதான் எங்களுக்கு அவருடன் பழக்கம் உண்டாயிற்று. அவர் அங்கு வருவதற்கு முன் எங்களுக்குச் சமையல் செய்வதற்காக ஒரு பிராமணன் அமர்த்தப்பட்டிருந்தான். ஸ்ரீமதி கஸ்தூர் பா வந்ததுமே காந்திஜீ இனி அந்தப் பிராமணன் தேவையில்லையென்றும், அவரே எல்லாருக்கும் சமையல் செய்வார் என்றும் கட்டளையிட்டுவிட்டார். நாங்களும் நிறையப் பேர் இருந்தோம். 24–25 பேர் இருக்கலாம். எல்லாருக்கும் சமையல் செய்யும் வேலையை அவர்மேல் சுமத்துவது சரியல்ல வென்று எங்களுக்குத் தோன்றியது. மேலும் ஒல்லியாகவும் பலவீனமாகவும் காணப்பட்ட அவரால் இந்த வேலையைச் செய்யவும் முடியாதென்பதாகவும் எங்களுக்குத் தோன்றியது. ஆனால் காந்திஜீ எங்கள் ஆட்சேபணையை எப்போதாவது கேட்டிருக்கிறாரா என்ன? "கவலைப்படாதே அவள் எல்லா வேலையையும் செய்ய முடியும், அவளுக்கு இப்படிப் பட்ட வேலை செய்து பழக்கம் உண்டு" என்று அவர் கூறினார். மற்றவர்கள் அவருக்குச் சற்றுக் கூடமாட நின்று உதவி புரிவார்கள், முக்கியமாக வாணலியை அல்லது தவலையை இறக்குவது முதலானவற்றிற்கு உதவி புரிவார்கள். ஆயினும் அவர் பேரன்புடன் எல்லாருக்கும் சமையல் செய்து வந்தார். அப்போது அவர் எப்படிப் பிரியத்தோடு எங்களுக்கு முதன் முதல் உணவு படைத்தாரோ அதே பிரியத்தோடு அவர் அங்கு இருந்த வரையிலும், மேலும் அவர் எங்களைக் கண்ட போதெல்லாம் உணவு பரிமாறி வந்தார். சபர்மதியின் சத்தியாக்கிரக ஆச்சிரமத்திலாகட்டும், மகன்பாடி அல்லது சேவாகிராமத்தின் ஆச்ரமத்திலாகட்டும், அல்லது எங்காவது பிரயாணம் செய்யும்போதுகூட, பாபூவிடம் போய்விட்டால், முக்கியமாக அவருடன் இருப்பதற்கு நற்பேறு கிடைத்துவிட்டால், மாதாஜீயின் அன்பும் எப்பொழுதும் கிடைத்தே வந்தது. அவருடைய கடைசி நாட்களின் துக்கமான கதையைக் காந்திஜீ அரசாங்கத்துக்கு எழுதிய கடிதங்களைப் படித்தறிந்து கொள்ளலாம். அக்கடிதகங்கள் ஸ்ரீபன்வாலா பாரிக்கும் டாக்டர் சுசீலா நையாரும் சேர்ந்து எழுதிய 'எங்கள் பா' என்ற புத்தகத்தில் அச்சிடப் பட்டிருக்கின்றன. அவர் ஹிந்து பெண் குலத்திற்கு ஒரு லட்சிய பிம்பம், இந்திய கலாசாரத்தின் விளக்கு, அன்பின் உரு. அவர் உண்மையிலேயே 'தாய்' தாம், தாயாகவே என்றும் இருந்தார். ஒரு முறை காந்திஜீ 'பா'வை 'பா' வென்று அழைப்பதில் தமக்குக்கூட பெருமகிழ்ச்சி உண்டாகிறது என்று

என்னிடம் கூறினர். கணவனுக்கும் மனைவிக்கும் சாதாரணமாக உள்ள உறவை அவர்கள் இருவரும் மனமுவந்து துறந்துவிட்டார்கள். அவர் உண்மையிலேயே அவருக்கும் தாயாகவே இருந்து வந்தார்.

எங்களுக்குச் சிறையிலேயே, மௌலானா அபுல்கலாம் ஆஜாதின் மனைவி மறைந்த செய்தி கிடைத்தது. கடைசி காலத்தில் மௌலானாவானவர் அவரைப் பார்க்க அனுமதிக்கப் படவில்லை என்பதைக் கேட்டு மேலும் துக்கம் உண்டாயிற்று. அந்த அம்மாள் பர்தாவில் இருந்தார். ஆகையால் அவரை நாங்கள் சந்தித்ததில்லை. ஆயினும் மௌலானாவின் துயரத்தை நான் மதிப்பிடக்கூடும். ஸ்ரீ ரஞ்சித் பண்டித்துடனே (ஆர். எஸ். பண்டித்) மிகவும் நெருங்கிய தொடர்பு உண்டு. அவருடைய சாவும் ஒரு மிகவும் துக்கமான சம்பவமாயிற்று. சிறைகளில் அரசாங்கம் பின்பற்றி வந்த முறையைப் புரிந்து கொள்வதே கடினமாயிருந்தது. மிகவும் நெருங்கிய தொடர்புடையவர்களுடன் மட்டும்தான் கடிதப் போக்குவரவு செய்யலாமென்பது சட்டம். ஆனால் சில சமயங்களில் என்னுடன் யாதொரு சம்பந்தமுமே இல்லாதவர்களுடைய கடிதமும் வந்து விடுவதுண்டு. ஆனால் மௌலானாவிடமும் சகோதரி விஜயலக்ஷ்மீயிடமும் என்னுடைய அனுதாபத் தந்தி போக முடியவில்லை.

என் மாகாணத்து நண்பர்களுக்குள் எல்லாவற்றையும்விட மிகவும் துக்கமான சாவு, ராம் தயாளு சின்ஹாவுடையதுதான். படித்துக் கொண்டிருக்கும் சமயத்திலிருந்தே அவருடன் பழக்கமாயிற்று. பிறகு நெருங்கிய நட்பாக மாறிவிட்டது. அவருடைய உடல் நிலை பல ஆண்டுகளாகக் கெட்டுப் போயிருந்தது. இதே காரணத்தால் அவர் கிளர்ச்சியில் பங்கெடுத்துக் கொள்ளத் தகுதியாயில்லை. அரசாங்கமும் இதை உணர்ந்தே அவரைக் கைது செய்யவில்லை. என்னுடைய விடுதலைக்குச் சில மாதங்களுக்கு முன்னமே அவருடைய சாவு நிகழ்ந்துவிட்டது. 35–36 ஆண்டுகளாக இருந்துவந்த நட்பின் இகலோக நூல் அறுந்துவிட்டது. எங்கள் மாகாணத்திற்கு அவர் ஒரு பெரும் செல்வமாக இருந்தார். அவருடைய இடமும் வெறுமனே இருக்கும். காங்கிரஸுக்கு வெளியே எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்தவர்களுள், இரண்டு கனவான்கள் இருந்தார்கள். அவர்களையும் பிறகு சந்திக்கவில்லை. ஒருவர் வைத்தியநாத் விரஜ் பிகாரி சௌபே. ஆயுர்வேதத்தில் ஆழங்காண முடியாத கல்விமான். அவர் என்மீது என்றுமே அன்பு வைத்து வந்தார்.

நான் கைது செய்யப்பட்ட சமயத்தில் அவர்தாம் எனக்கு மருத்துவம் செய்து கொண்டிருந்தார். என்னைக் கைது செய்த நேரத்திற்கு அவர் சதாகத் ஆச்ரமத்திற்கு வந்துவிட்டார். நான் கைது செய்யப்பட்டதைக் கண்டு அவர் எவ்வளவு துக்கமும் கவலை யும் பட்டார் என்பதை மறக்கவே முடியாது. அவர் மருந்து முதலிய வற்றைக்கூட எடுத்துச் செல்ல அளித்தார். மேலும் அவருடைய வெகுளித்தனத்தால் 'நீங்கள் தவருக எடுத்துக் கொள்ளாவிட் டால், நான் கவர்னரிடம் சென்று உங்களுக்காகப் பரிந்து பேசு கிறேன்' என்று கூறினர். கவர்னர்தாம் என்னைக் கைது செய் யும்படி உத்திரவு இட்டார் என்பதும், கவர்னருக்குக்கூட அதை நிறுத்திவைக்க அதிகாரமில்லை என்பதும் அவருக்குத் தெரியாது. மற்ருெருவர் சர் கணேஷ் தத்த சின்ஹா. நான் கல்கத்தாவில் படித்துக் கொண்டிருந்தபோது, அவருடன் முதன் முதல் பழக்க மாயிற்று. அவர் அங்கு வக்கீல் தொழில் புரிந்து கொண்டிருந் தார். அச்சமயத்திலிருந்தே அவர் என்னிடம் காட்டத் தொடங்கிய அன்பானது அதேபோல கடைசி வரையில் இருந்து வந்தது. பிறகு அரசியல் விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு அவருடன் நிறையக் கருத்து மாறுபாடு உண்டாகியது. நான் அவருடைய நடவடிக்கைகளை எவ்வளவோ மிகவும் கடுமை யாகக் கண்டித்தேன். ஆயினும் அன்பில் யாதொரு வேற்றுமை யும் வரவில்லை. கடைசியில் அவர் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந் தார். நான் வெளியில் இருந்த வரையில், பட்னுவில் தங்க வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம், அவரைக் கட்டாயம் பார்த்து வருவேன். அவர் நெடுங்காலம் மந்திரியாக இருந்தார். அதில் அவருடைய நடவடிக்கைகளைக் குற்றங்குறை கூறுபவர்கள் பலர் இருந்தார்கள், அவர்களில் நானும் ஒருவன். அவர் மந்திரியாக இருந்தபோது ஆகட்டும், மேலும் தம் கடைசி நாட்களில் எல்லா வேலைகளை விட்டு நீங்கிவிட்ட போதாகட்டும், என்னைப் போலப் பொது வாழ்க்கைத் தொண்டில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு உடல் நலம் சரியாக இருக்க வேண்டுமென்று எப்பொழுதும் கவலைப் பட்டுக் கொண்டிருந்தார் என்பதை நான் கண்டேன். இதனுல், நாங்கள் சிறைக்குச் செல்வது அவருக்குப் பிடிக்கவில்லை. இதனுல் எவராவது நோயாயிருப்பதாக அவருக்குச் சிறை யிலிருந்து செய்தி கிடைத்தால் அவர் மேலும் கவலைப்படுவார். தம்முடைய மந்திரி சபை காலத்தில் அவர் தம் சம்பளத்தின் பெரும்பாகத்தைப் பொது வாழ்க்கைப் பணியில் செலவு செய்ய முதலில் இருந்தே தீர்மானித்துவிட்டார். இவ்வண்ணமாகப் பல

லக்ஷக்கணக்கான ரூபாயை அவர் ஓர் அறநிலையத்தில் போட்டு விட்டார். இது எங்களுக்கு வேறு எவரும் பின்பற்றுததோர் உதாரணமாக அமைந்தது. காங்கிரஸ் மந்திரிகளுக்குச் சம்பளம் 500 ஆக ஆக்கப்பட்டுவிட்டது. அதில் எதுவும் மிஞ்சுவதற்கு வாய்ப்புக் குறைவுதான். அப்படியும் கூட, அச்சம்பளத்துக்குப் பைசா பைசா கணக்கு வைத்து மிச்சம் பிடித்துப் பொது வாழ்க்கைப் பணிக்குச் செலவழித்தவர்கள் சிலர் இருக்கிறுர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் பிறகு பார்க்கக் கொடுத்து வைக்காத மூன்றுவது தோழர் ஸ்ரீ நரஸிஹ நாராயண் சின்ஹா ஆவர். அவருடனும் நான் படிக்கும் காலத்திலிருந்தே பழக்கம் உண்டு. அவருடன் பொது வாழ்க்கை விஷயங்களைப் பற்றி அதிகக் கருத்து மாறுபாடு இருந்தும் அன்பு எப்பொழுதும் இருந்துவந்தது. என் குடும்பத்தில் என் தமையனுரின் மூத்த மகள் கிரிஜாவும் நான் சிறையில் இருக்கும்போதே இறந்துவிட்டாள். அவளுக்கும் உடம்பு நெடுநாளாகக் கெட்டிருந்தது. எனக்கு விவரம் தெரிந்த பிறகு, அவள்தான் எல்லாருக்கும் முதலாகப் பிறந்தாள். எல்லாருக்கும் முன்னதாக அவளுக்குத்தான் நான் சிறு பிராயத்தில் உணவு ஊட்டினேன். அவள் என்னிடம் மிக்க அன்பு வைத்திருந்தாள். சிறைக்கு வந்து என்னைச் சந்தித்தாள். ஆனுல் அதுதான் கடைசி சந்திப்பு என்று யாருக்குத் தெரியும்? அவள் நல்ல பாக்கியவதி. கணவனும் மக்களும் தன் முன் நிற்க, அவர்களைப் பார்த்தவாறே போய்விட்டாள். தன் வீட்டில் அவள் இல்லாளாக இருந்துகொண்டு எவ்விதமாக எல்லாரையும் மகிழ்வித்தாள் என்பது எல்லாருக்கும் என்றும் நினைவிலிருக்கும்.

## 154. தற்காலிக அரசாங்கம் அமைப்பதற்கு முன்

சிறையில் பொழுதைப் போக்குவது பலருக்கு மிகவும் கடினமாக இருந்து வந்தது. இதனுல் ஏதாவது மனத்திற்கு உல்லாசமான பொருள் கிடைத்துவிட்டால் அதன்மீது எல்லாரும் பிரியமாயிருப்பார்கள். ஹஜாரிபாக் சிறையில் ஒரு பூனைக்குட்டி வளர்க்கப்பட்டு வந்தது. அது எல்லாரோடும் மிகவும் நன்ருகப் பழகி

விட்டது. அது கூச்சமில்லாமல் கட்டிலின்மீது ஏறிப் படுத்துத் தூங்கும். எங்குச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தாலும் உணவு நேரத்தில் வந்து மடிமேல் உட்கார்ந்து கொண்டு கொடுப்பதை உண்ணும். எழுதிக் கொண்டு அல்லது படித்துக் கொண்டிருக்கும்போது கையிலிருந்து பேனு பென்சிலை பிடுங்கவும் அஞ்சாது. அதன் வாழ் நாளில் அது சிறைக்கு வெளியே என்றுமே சென்றது கிடையாது. எப்பொழுதும் வயதில் பெரியவர்களோடேயே அது பழகி வந்திருக்கிறது. அது குழந்தைகளை என்றுமே பார்த்த தில்லை. ஹஜாரிபாக் சிறையில் எங்கள் தோழர்களில் ஒருவர் நோய்வாய்ப்பட்டுவிட்டார். அவருடைய குழந்தைகள் அவரைப் பார்க்க வந்தார்கள். அச்சிறு குழந்தைகளைப் பார்த்ததுமே அது மிகவும் அச்சமுற்று அப்போது யார் மடியில் உட்கார்ந் திருந்ததோ அங்கிருந்து குதித்து ஓடி எங்காவது தொலைவில் சென்று ஒளிந்து கொள்ளும். அக் குழந்தைகள் போய்விட்ட பிறகும்கூட நாழி கழித்துத்தான் திரும்பி வரும்.

இம்முறை பாங்கிபூர் சிறையில் சாதாரண கைதிகள் மைனு வின் குஞ்சு ஒன்றை வளர்த்து வந்தார்கள். அது ஆட்களின் கை மீது, தோள் மீது அல்லது தலைமேல் அஞ்சாது உட்கார்ந்து கொள்ளும். கைதி வேலை செய்து கொண்டிருப்பான், அது அப்படியே நகராமல் அங்கேயே இருக்கும். அது எங்களோடும் பழகி விட்டது. அது என் அறைக்கும் வரத் தொடங்கியது. சில நாட்களுக்குப் பிறகு அது பெரும்பாலும் அங்கேயே இருக்கத் தொடங்கியது. சர்க்காவைச் சுற்றும்போது எதிரே உட்கார்ந்து கொண்டு, நான் நூற்றுக் கொண்டிருக்கும் நூலை அலகினுல் கொத்தி அறுத்துவிடும். இரவில் கொசு வலை மீது உட்கார்ந்து கொள்ளும். அங்கேயே இரவு முழுதும் இருக்கும். காலையில் கிளம்பி வெளியே செல்லும்; பிறகு சுற்றித் திரிந்துவிட்டுத் திரும்பி வந்துவிடும். ஒரு நாள் எங்கோ பறந்து சென்றது. பிறகு திரும்பி வரவில்லை. எங்காவது பறந்து சென்று விட்டதா அல்லது ஏதாவது ஒரு பறவையோ அல்லது வேறு பிராணியோ அதைக் கொன்று விட்டதா என்பது தெரியவில்லை. அங்கிருந்தவர்கள் வேருெரு மைனுவை வளர்க்க முயன்ருர்கள். ஆனுல் நாங்கள் அதற்கு ஊக்கம் அளிக்கவில்லை. இவ் விதமாக எழுதுவேன் அல்லது படிப்பேன், நூல் நூற்பேன், நோயுற்றிருப்பேன், ஜனங்களைப் பற்றியும் கிளர்ச்சியைப் பற்றி யும் செய்தி கேட்பேன், புராணங்களைப் படிப்பேன். அவற்றுள் வால்மீகி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், மகாபாரதம்,

ஸ்ரீமத் பாகவதம், சைதன்ய சரிதம் முதலிய நூல்கள் முக்கிய மானவை. பொழுது போனதே தெரியவில்லை. ஏறக்குறைய மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ஜூன் 25ஆம் தேதி நாங்கள் விடுதலையானோம்.

நாங்கள் விடுதலையாவதற்குச் சில நாட்களுக்கு முன் னிருந்தே இனிச் செயலாற்றுக் குழுவின் அங்கத்தினர்கள் விடுதலை செய்யப்பட்டு விடுவார்கள் என்ற பேச்சு காதில் பட்டுக் கொண்டிருந்தது. அகமத்நகர் கோட்டையில் இருந்தவர்களில் சிலர் வேறு இடங்களுக்கு அனுப்பப்பட்டு விட்டார்கள். இவை யெல்லாம் விடுதலை செய்வதற்கு ஏற்பாடுகள் என்பதாகத் தோன்றின. 14–6–45 மாலை லார்டு வேவல் ஏதோ ஒரு புதிய திட்டத்தைச் சமர்ப்பிப்பார் என்றும், அத்திட்டம் அன்றிரவு ரேடியோ மூலமாக நாட்டிற்குத் தெரிவிக்கப்படும் என்றும் அறிக்கை செய்யப்பட்டது. அப்படியே நடந்தது. திட்டத்தோடு கூடவே, செயலாற்றுக் குழுவின் உறுப்பினர்களை விடுதலை செய்ய உத்தரவு இடப்பட்டாகிவிட்டதென்றும், அவர்கள் ஜூன் 15ஆம் தேதி காலையில் விடுதலை செய்யப்படுவார்கள் என்றும் அவர் ரேடியோவில் கூறினர். ரேடியோவின் பேச்சைக் கேட்டுச் சிலர், நாங்கள் அன்றிரவே விட்டு விடப்படுவோம் என்ற நம்பிக்கையில் சிறை வாயிலுக்கு வந்தார்கள். விடுதலை செய்ய உத்தரவு ஆக வில்லை என்று அதிகாரிகள் கூறியும்கூட அவர்கள் சிறிது நேரம் வரையில் அங்கேயே நின்றுர்கள். ஜூன் 15ஆம் தேதி ஒரு பெரும் கூட்டம் கூடிவிட்டது. சிறையில் இத்தனை காலம் இருந்த பின் அங்கிருந்து வெளியேறும்போது மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் எழத் தொடங்கின. நாங்கள் சிறைக்குச் சென்ற நாளிலிருந்து, சாதாரண கைதிகளுக்கு எங்களிடம், என்ன காரணத்தினுலோ தெரியாது, பிரியம் உண்டாகிவிட்டது. எங்க ளிடம் அவர்களுக்கு நிறைய நம்பிக்கை உண்டாகிவிட்டது. அவர்கள் எங்களைச் சிறை அதிகாரிகளையும் விடப் பெரியவர் களாக நினைத்தார்கள். ஏதாவது கஷ்டம் வந்தால், ஆயிரம் காவல் இருந்தாலும்கூட, எப்படியாவது எங்களிடம் வந்து விடுவார்கள். எங்களுக்கு யாதொரு அதிகாரமும் இல்லையென்று எவ்வளவு முறை விளங்க வைத்தாலும் அவர்கள் ஒத்துக்கொள்ளத் தயாராயில்லை. நாங்கள் அச்சிறையில் இருந்த வரையில், அவர் களிடம் அதிகாரிகளின் நடத்தையும் நன்ருக இருந்ததென்றும் கூட நான் கூறுவேன். சாதாரணமாகச் சிறைகளில், கைதிகளிடம் அதிகாரிகளின் நடத்தை கொடுமையாக இருந்துவரும், சீர்திருத்

துவதாக இருக்காது. அன்பானது அன்று. தண்டனை அளிக்கும் நடத்தைதான். ஆயினும் பல அதிகாரிகளின் போக்கு மிகவும் மாறிவிட்டதென்பதாக அங்கிருந்த பழைய கைதிகள் கூறினார்கள். தற்செயலாக அச்சிறையின் அதிகாரிகளும் பெரும்பாலும் நல்லவர்களாகவே இருந்தார்கள். இவர்கள் மாகாணமெங்கும் தம்முடைய தீயச் செயல்களால் கெட்ட பெயர் பெற்றவர்களைச் சேர்ந்தவர்கள் அல்லர். இவ்விதமாக, சாதாரண கைதிகளோடு எங்களுக்கு யாதும் தொடர்பு உண்டாவதற்கு அவசியமில்லாவிட்டாலும்கூட ஒரு வியப்பான உறவு உண்டாகிவிட்டது. நாங்கள் விடுதலையாகும் செய்தியால் அவர்கள் உள்ளத்தில் மகிழ்ச்சி உண்டானதா அல்லது வருத்தமா என்பது தெரியாது. பலருக்குத் தாமும் சில நாட்களுக்குள்ளாகவே விடுதலையாகிவிடுவோம் என்ற நம்பிக்கை கட்டாயமாக உண்டாகியது என்பதை மட்டும் கூற இயலும். நாங்கள் இவ்விதமான நம்பிக்கையை அவர்களுக்கு எவ்விதத்திலும் அளிக்கவில்லை. ஆயினும், அவர்களில் பலர் நாங்கள் விடுதலையானபிறகு ஏமாந்து போயிருப்பார்கள்.

சிறையிலிருந்து வெளியில் வந்ததுமே, நாங்கள் பம்பாய்க்குப் போக வேண்டியிருந்தது. ஏனெனில் அங்குச் செயலாற்றுக் குழுவின் இருக்கை நடந்தது. அதில் வேவலின் திட்டத்தைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டியிருந்தது. பம்பாயில் சிறிதுதான் பேச்சு நடந்தது. அதற்குள் காந்திஜீக்கும் தலைவர் மௌலானா ஆஜாதுக்கும் சிம்லாவிலிருந்து அழைப்பு வந்துவிட்டது. அவர்கள் அங்குச் செல்ல வேண்டியிருந்தது. நான் பட்னாவுக்குத் திரும்பி வந்தேன். ஆனால் அங்கு மூன்று நான்கு நாட்கள்கூடத் தங்க இயலவில்லை, ஏனெனில் சிம்லாவிலிருந்து எனக்கும் அழைப்பு வந்துவிட்டது. அங்கே செயலாற்றுக் குழுவின் இருக்கை நடைபெற இருந்தது. சிம்லாவில் சுமார் இரண்டு வாரங்கள் தங்கவேண்டி வந்தது. எங்கள் பக்கத்திலிருந்து சில சமயம் மௌலானா, சில சமயம் பண்டித் ஜவஹர்லால் மற்றும் சில சமயம் மகாத்மாஜீ ஆகியோர் லார்டு வேவலுடன் பேச்சு நடத்துவார்கள். முஸ்லிம் லீகின் சார்பில் மிஸ்டர் ஜின்னாவும் அவருடைய தோழர்களும் வைசிராயுடன் பேசி வந்தார்கள். ஆயினும் அங்கு ஒரு மகாநாட்டின் வேலைதான் முக்கிய வேலை. அதற்குக் காங்கிரஸ், முஸ்லிம் லீக் ஆகியவற்றின் தலைவர்கள் மட்டுமன்றி, மாகாணங்களின் பிரதான மந்திரிகளும் அழைக்கப்பட்டிருந்தார்கள். காங்கிரஸ் மந்திரிசபைகள் இருந்த

இடங்களில் நிகழ்ந்ததுபோல மந்திரி சபைகள் முறிந்துவிட்ட இடங்களில் இருந்து, அவை முறியும்போது பிரதான மந்திரி களாக இருந்தவர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள்.

திட்டத்தைப்பற்றியும்மற்றப் பேச்சுக்களைப் பற்றியும் ஆலோசனை செய்யப்பட்டது. வைசிராயின் நிர்வாக சபைக்கு ஒருவித மான தேசிய அரசாங்க உருக்கொடுக்கப்படுமென்பதாகத் தெரிய வந்தது. காங்கிரஸின் சார்பில் நாங்கள் திட்டத்தை ஒரு வகை யாக அங்கீகரித்துவிட்டோம். காங்கிரஸ் பக்கத்திலிருந்து பெயர் கொடுக்கும் நிலைமை வந்தது. மகாநாட்டில் பதினொரு மாகாணங் களில் ஏழின் பிரதான மந்திரிகள் காங்கிரஸ்காரர்கள். எஞ்சிய நான்கில், மூன்றின் சார்பில் லீகைச் சேர்ந்த பிரதான மந்திரிகள் இருந்தார்கள். அவற்றில் ஒன்று ஆசாம். ஆசாமில் காங்கிரஸ் விலகிக் கொண்டபின் மந்திரி சபையில் மாறுதல் உண்டாயிற்று. அங்கு அச்சமயத்தில் லீக் மந்திரி சபை இல்லாவிட்டாலும் பிரதான மந்திரி சர் சதா உல்லா லீக்காரராக இருந்தார். நான் காவது மாகாணம் பஞ்சாப். அதன் பிரதான மந்திரி சர் கிஜிர் ஹயாத் கான் லீகுடன் சண்டை போட்டுக்கொண்டு பிரிந்துபோய் விட்டார். வைசிராயின் கவுன்ஸிலில் ஹிந்துக்களின் எண் ணிக்கையும் முசல்மானியரின் எண்ணிக்கையும் சமமாக இருக்கும் என்பது திட்டத்தின் ஒரு நிபந்தனையாக இருந்தது. இவர்கள் மட்டுமன்றி மற்றவர்களும் சிலர் இருப்பார்கள். அவர்களுள் ஹரிஜனங்களின் பிரதிநிதியும் இருப்பார். திட்டமானது ஹரி ஜனங்களின் பிரதிநிதியை ஹிந்து பிரதிநிதிகளிலிருந்து வேறான வராக ஒருவகையில் கருதிக்கொண்டது. முஸ்லிம் பிரதிநிதி களுக்கு ஹிந்துப் பிரதிநிதிகளுடன் அளிக்கப்பட்டிருந்த பிரதிநிதி உரிமை ஒப்புமையானது ஹரிஜனமல்லாத, அதாவது சாதி ஹிந்துக்களுடன் தரம் அளிக்கப்பட்டிருந்தது.

இன்னும் போர் நடந்துகொண்டிருந்தது. நாட்டின் நிலைமை நன்றாக இல்லை. இத்திட்டத்தை ஏற்றால் ஒரு வேளை இந்நிலைமை யைச் சீர்திருத்துவதில் வெற்றி பெறக்கூடுமென்பதாக நாங்கள் நினைத்தோம். கவுன்ஸிலானது, வைசிராய், பிரதம சேனாதிபதி ஆகிய இருவர் நீங்கலாக, 15 பேர்களைக் கொண்டிருக்கட்டு மென்றும், அவர்களுள் 5 சாதி ஹிந்து, 5 முசல்மானியர், 2 ஹரி ஜன பிரதிநிதிகளும், மூன்று கிறிஸ்தவர் பார்சி முதலான மற்றச் சாதியாரின் பிரதிநிதிகளும் இருக்கட்டும் என்று கூறினோம். நாங்கள் 15 ஆட்களின் பெயரையும் கொடுத்தோம். அவற்றில் மற்றவர்களின் பெயர்களோடு ஐந்து முசல்மானியரின் பெயரும்

இருந்தன. அவற்றுள், மூன்று லீக் காரர்கள் நீங்கலாக ஒரு காங்கிரஸ் முசல்மானின் பெயரும், லீகைச் சேராத மற்றொரு முசல்மானின் பெயரும் இருந்தன. மேலும் லீகானது தன் சார்பிலிருந்து வேறு பெயர்களைக் கொடுக்க விரும்பினால் கொடுக்கலாமென்றும் அதில் எங்களுக்குத் தடையில்லையென்றும் சொல்லி விட்டோம். மிஸ்டர் ஜின்னாவானவர், முசல்மானியர்களின் பிரதி நிதிகள் அனைவரின் பெயரையும் கொடுக்க லீகுக்குத்தான் உரிமை யிருக்க வேண்டுமென்றும், வேறு எந்த முசல்மானியருக்கும் அந்த உரிமை இருப்பது அதற்குப் பிடிக்காதென்றும் வழக்காடினார். லார்டு வேவல் இந்த இடுக்கணை எதிர்ப்பட வேண்டி யிருந்தது. அவர் காங்கிரஸ் முசல்மானை விட்டுவிட முடியும், ஆனால் சர் கிஜிர் ஹயாத்தும் அவருக்கு முன்பு அக்கட்சியின் தலைவராயிருந்த சர் சிகந்தர் ஹயாத்தும் யுத்தத்தில் நிறைய உதவி புரிந்திருந்தார்கள். இதனால் அவர்களைக் கைவிட்டால் பஞ்சாபின் முசல்மானியர்களை அரசாங்கத்துக்கு விரோதமாக ஆக்கிக் கொள்ளுவதாகும். வைசிராய் எவர்களை வைத்துக் கொள்ள விரும்பினார் என்பது எங்களுக்குத் தெரிய வரவில்லை. ஆயினும், மற்றவர்கள் சம்பந்தமாக மாறுதல் உண்டானாலும், காங்கிரஸின் சார்பிலும் லீகின் சார்பிலும் அக்கழகங்கள் பெயர் கொடுத்த ஆட்களே எடுத்துக் கொள்ளப்படுவார்கள் என்று நினைத்தோம். அவர் முசல்மானியர்களில் நான்கு பெயர்கள் லீக் கொடுத்தவற்றிலிருந்தும் ஒரு முசல்மானைப் பஞ்சாபின் யூனியனிஸ்ட் கட்சியிலிருந்தும் எடுத்துக்கொள்ள விரும்பினார் என்று ஊகிக்கப்பட்டது. ஆனால் மிஸ்டர் ஜின்னா இதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. மகாநாடு முறிந்துவிட்டது.

மகாநாடு முறிந்த பிறகு மிஸ்டர் ஜின்னா ஓர் அறிக்கையை விடுத்தார். அதில், அவர் லீகின் வழக்கைக் கூறினார். லீகானது திட்டத்தை நிராகரிக்க வேண்டி வந்ததற்குக் காரணங்களையும் காட்டினார். லீக் ஒன்றேதான் முசல்மானியர்களின் பிரதிநிதி யான கழகம் என்பதும், அதற்கே முசல்மானிய அங்கத்தினரை நியமிப்பதற்கு முழு உரிமை இருக்க வேண்டும் என்பதும்தாம் முக்கிய காரணம். லார்டு வேவல் இந்தப் பேச்சை ஏற்றுக் கொள்ளாததால் திட்டம் அங்கீகரிக்கப்பட இயலவில்லை என்று கூறினார். மற்றொரு முக்கியமான விஷயம் ஒன்றையும் அவர் கூறினார். அதாவது, அத்தீர்மானத்தின்படி, அரசாங்கத்தோடு தொடர்பில்லாத பதினைந்து ஆட்களைக் கொண்ட கவுன்ஸிலில் ஐந்து முசல்மான்களே இருக்கப் போகிறார்கள். அவர்களுக்கு

விரோதமாகக் காங்கிரஸ் ஹிந்துக்கள் இருப்பார்கள், மேலும், மற்றக் குறுந்தொகை (மைனாரிடி) இனத்தாரின் பிரதிநிதிகளாக ஆகிறவர்கள் எப்பொழுதும் ஹிந்துக்களோடு சேர்ந்து கொள் வார்கள். (ஏனெனில் மற்றச் சாதியாரின் எண்ணங்களும் மனப் போக்கும் காங்கிரஸைப் பின்பற்றியே இருந்தன). இவ்வண்ண மாகக் கவுன்ஸிலில் முசல்மானியர்கள் மூன்றில் ஒன்ருகிய குறுந் தொகையினராகிவிடுவார்கள்; இதற்கு லீக் ஒத்துக்கொள்ள இயலாது என்பதுதான். இதில் ஆழ்ந்து கவனிக்க வேண்டிய விஷயங்கள் இரண்டு இருந்தன. இன்று வரையில் மிஸ்டர் ஜின்ஞ எல்லாக் குறுந்தொகை இனத்தாரையும் காக்கும் பொறுப்பைத் தாமே தம்முடையதாக எடுத்துக்கொண்டு, காங்கிர ஸானது சாதி ஹிந்துக்களுக்கு மட்டும் பிரதிநிதியாக இருந்து வருகிறதென்றும் மற்ற எல்லாருடைய பாதுகாப்பையும் லீக்தான் செய்து வருகிறதென்றும் கூறிவந்தார். இப்படிச் சொல்வதற்கு யாதொரு காரணமுமில்லை. ஏனெனில் மற்றக் குறுந்தொகை இனத்தார் தம்முடைய கழகங்களில் லீகையும், இந்தியாவைக் கூறு போடுவதையும், அதேபோல, பாகிஸ்தான் பேச்சையும் தெளி வாக அடிக்கடி எதிர்த்தார்கள், மேலும் காங்கிரஸிடம் தமக்குள்ள பரிவைக் காட்டினர்கள். ஆயினும் அவர் இப்படிப்பட்ட பேச்சுக் களைப் பேசி வந்தார். இந்த குறுந்தொகையார் கணக்கில் அவர் ஹரிஜனங்களையும் சேர்த்துக்கொண்டார். தம்மை அவர்க ளுடைய துணையாளராகக் காட்டிவந்தார். இப்பொழுது, கவுன் ஸிலில் சாதி ஹிந்துக்களின் எண்ணிக்கை மூன்றில் ஒரு பங்கு மட்டும்தான் என்றும், முசல்மானியர்களுக்கு மூன்றில் ஒரு பங்கு போக எஞ்சிய மூன்றில் ஒரு பங்கில் ஹரிஜன்களையும் மற்றக் குறுந்தொகை இனத்தாரையும் நியமிப்பதாக பேச்சு நடந்ததும் அவருடைய குட்டு வெளிப்பட்டுவிட்டது! முசல்மானியர்கள் தவிர மற்ற எல்லாரும் ஒருங்கே காங்கிரஸோடும் ஹிந்துக்க ளோடும் சேர்ந்து இருக்கிறர்கள் என்றும், இருப்பார்கள் என்றும், தாம் முசல்மானியர்கள் மீது மட்டுமே நம்பிக்கை வைக்கக்கூடு மென்றும், முசல்மானியர்களிலும், லீக், அதாவது, தாம் நியமித்த முசல்மானியர்களை மட்டுமே நம்பியிருக்கக் கூடுமென்றும் அவர் தெளிவாகக் கூறிவிட்டார். மற்றும் ஒரு விஷயம் தெளிவாகி விட்டது. கவுன்ஸிலில், ஹிந்துக்களுக்கும் முசல்மானியருக்கும் ஒத்த உரிமை இருப்பதற்கு அவர் ஒத்துக் கொள்ளவில்லை. ஒரு பக்கத்தில் பெரும்பாலாரான சாதி ஹிந்துக்கள், ஹரிஜனங்கள், இன்னும் மற்றக் குறுந்தொகை இனத்தார் எல்லாம் இருக்க

வேண்டுமென்றும், முசல்மானியர்களின் ஈடு அந்த எல்லா சாதியாரோடும் அமைய வேண்டுமென்றும் விரும்பினர் ; இதோடு, முசல்மான்கள் என்றால் எல்லா முசல்மானியர்கள் எனப் பொருள் அன்று என்பதும், லீகில் சேர்ந்திருந்த முசல்மானியர்கள் மட்டும் தான் என்பதும் தெளிவாக இருந்தன.

அச்சமயத்தில் லீகைச் சேர்ந்த முசல்மானியர்களின் நிலைமை என்னவாக இருந்ததென்றால், பெரிய பெரிய மாகாணங்களில், அவர்களுடைய ஜனத்தொகை நிறைய இருந்த இடங்களில், அதாவது பஞ்சாபிலும் வங்காளத்திலும் அவர்களுடைய மந்திரி சபைகள் முறிந்துவிட்டன. பஞ்சாபில், சர் கிஜிர் ஹயாத்தானவர் லீகிலிருந்து பிரிந்து சென்று, மிஸ்டர் ஜின்னாவை ஆத்திரப்படவிட்டுவிட்டு தனி மந்திரி சபையை அமைத்துவிட்டார். அதுவும், முன்னாள் பிரதான மந்திரியாகிய சர் சிகந்தர் ஹயாத் கானின் மகன் சர்தார் ஷௌகத் ஹயாத்கான் லீகில் சேர்ந்து கொண்டிருந்தும் கூடத் தம் கட்சியின் மந்திரி சபையை அமைத்துவிட்டார். வங்காளத்தின் மந்திரி சபை தோல்வியுற்று முறிந்துவிட்டது. அச்சமயத்தில் எதிர்க்கட்சிக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்குமானால், அங்கும் லீக் அல்லாத மந்திரி சபை அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் கவர்னர், அக்காலத்துக் கொள்கையின்படி, லீகை அதிருப்தி செய்ய விரும்பவில்லை. லீகின் மந்திரி சபை நடக்க இயலாதபோது மற்றவர்கள் அடிக்கடி கேட்டுக் கொண்டும்கூட கவர்னர் வேறொரு மந்திரி சபையை அமைப்பதற்கு வாய்ப்பு அளிக்காமல், பிரிவு 93இன் படி அதிகாரத்தைத் தம் கையிலேயே எடுத்துக்கொண்டார். எல்லை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை விலகியபின், சில நாட்களுக்குப் பிறகு லீக் மந்திரி சபை அமைந்துவிட்டது. ஆனால் அது தன் நடவடிக்கைகளால் அவ்வளவு கெட்ட பெயர் வாங்கிவிட்டதால், நாங்கள் விடுதலையாவதற்குச் சில நாட்களுக்கு முன்பே காங்கிரஸ் அங்கத்தினர்கள் அசெம்பிளியில் பங்கெடுத்துக் கொண்டு அதை முறியடித்துவிட்டார்கள். அப்பொழுதிலிருந்து அங்குக் காங்கிரஸ் மந்திரி சபை நிறுவப்பட்டு விட்டது. சிந்து மாகாணத்தில் மட்டும் லீக் மந்திரி சபை பணியாற்றி வந்தது. ஆயினும் அங்குக்கூட தேசிய முசல்மானியர்களின் தலைவரான அல்லாபக்ஷை மந்திரி பதவியிலிருந்து விலக்குவதில் கவர்னர் மிகவும் கைகொடுத்ததுமன்றி அதற்காக அவர் நிறைய முறையற்ற காரியங்களையும் செய்ய வேண்டி வந்தது. பிறகு அல்லாபக்ஷ் கொல்லவும் பட்டார்.

இது முசல்மானியரின் ஜனத்தொகை நிறைய இருந்த மாகா

ணங்களின் நிலைமை. மிஸ்டர் ஜின்னா, என்னமோ, ஆசாமையும் பாகிஸ்தானில் சேர்க்கிறார். ஆனால் அங்கு முசல்மானியர்களின் ஜனத்தொகை மூன்றில் ஒன்றுக்கு மேலில்லை. காங்கிரஸ் மந்திரி சபை விலகியபின், சில நாட்களுக்குப் பிறகு அங்கும் லீகைச் சேர்ந்த சர்தார் சர் சாதுல்லா மந்திரி சபையை அமைத்தார். ஆனால் அதுவும் அவ்வளவு கெட்ட பெயர் பெற்றுவிட்டதால், தன் கடைசிக்கால மூச்சை கணக்கிட்டுக் கொண்டிருந்தது. இப்படிப் பட்ட நிலைமையில், லீக் ஒன்றேதான் முசல்மானியர்களின் பிரதி நிதியான சபையென்றும், அதனால் நியமிக்கப்பட்ட ஆட்களைத் தாம் கவுன்ஸிலில் எடுத்துக் கொள்ளலாம் என்றும், மேலும், அது தனியாக சாதி ஹிந்துக்கள், ஹரிஜனங்கள், இன்னும் மற்றெல்லா குறுந்தொகை இனத்தார் ஆகியவர்களின் பிரதிநிதிகளைத் தன் எண்ணிக்கையைக் கொண்டு எதிர்க்கும் வண்ணம் அதற்கு அவ் வளவு எண்ணிக்கை கவுன்ஸிலில் இருக்க வேண்டுமென்றும், முஸ் லிம் லீகாலும், மிஸ்டர் ஜின்னாவாலும் மட்டும்தாம் வழக்காட முடி யும். இந்த வழக்குக்காக சிம்லா மகாநாட்டைப் பயனற்றுப் போனதாகக் கூறிக் கலைத்துவிடுவது பிரிட்டிஷ் அரசாங்கத்தா ரால்தாம் முடியும். இன்னும் சண்டை நடந்துக் கொண்டிருந்தது என்பதையும், இங்கிலாந்தில் பிரதான மந்திரி பதவியில் மிஸ்டர் சர்ச்சிலும் இந்திய அமைச்சர் பதவியில் மிஸ்டர் எமெரியும் வீற் றிருந்தார்கள் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

சிம்லா மகாநாட்டை ஒட்டி இன்னும் ஓரிரண்டு விஷயங்களை யும் கூறுவது அவசியமெனத் தோன்றுகிறது. காங்கிரஸின் செயலாற்றுக் குழுவானது தன் பக்கத்திலிருந்து கவுன்ஸிலுக்குப் பெயர்களைக் கொடுத்து விட்டதென்பதை மேலே கூறியுள்ளேன். இவற்றில் ஸ்ரீ பூலாபாயீ தேசாயீயின் பெயர் இருக்கவில்லை. அவர் அப்போது மத்திய அசெம்பிளி காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருந்தார். அவர் அந்தப் பதவியில் வேலையும் நன்றாக புரிந்தார். பார்தோலீ சத்தியாக்கிரகத்தின்போது அவர் காங்கிரஸில் வெளிப் படையாகச் சேர்ந்ததிலிருந்து வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் சிறைக்குப் போகத் தயங்கவில்லை. பணம் காசு கொடுத்தும் எப் பொழுதும் உதவி புரிந்து வந்தார். தம்முடைய திறமையின் பொருட்டும் தியாகத்தின் பொருட்டும் அவர் எப்பொழுதும் செய லாற்றுக் குழுவின் அங்கத்தினராக இருந்து வந்தார். காங்கிர ஸின் சார்பில் அவரைக் கவுன்ஸிலில் எடுத்துக்கொள்ளாதது அவ ருக்கு மிகவும் வருத்தத்தைக் கொடுப்பதாக அமைந்தது. பெயர்

கள் வெளியிடப்படாவிட்டாலும் அவருடைய பெயர் கொடுக்கப் படவில்லையென்பது பலருக்குத் தெரிந்துவிட்டது. மற்றவர்களுக்கும், முக்கியமாக மத்திய அசெம்பிளியின் அங்கத்தினர்களுக்கு, இது மிகவும் வருத்தத்தை அளித்தது. அவருடைய பெயரைக் கொடுக்காததற்குக் காரணத்தை இங்கு எழுதுவது அவசியமில்லை, ஒழுங்குமாகாது. இம்முடிவு எனக்குத் திருப்தி அளிக்கவில்லை, வருத்தப்பட்டேன். ஆனால் வேறு வழி எதுவும் தென்படவில்லை. ஸ்ரீ பூலாபாயீக்கு என்னிடம் அதிக அன்புண்டு. என்மீது நம்பிக்கையும் பூண்டிருந்தார். அதைப் பல நண்பர்களிடமும் கூறினர். சில நாட்களுக்குப் பிறகு, அவர் இறப்பதற்குக் காரணமான நோயால் பீடிக்கப்பட்டிருந்தபோது அவரைப் பம்பாயில் சந்தித்தேன். அவர் தம்முடைய வருத்தத்தை வேதனை நிறைந்த சொற்களால் கூறினர். இதற்குச் சில நாட்களுக்குப் பிறகே சுதந்திர இந்திய படையின் மேஜர் ஜெனரல் ஷாநவாஜின் மீதும் அவருடைய தோழர்களின் மீதும் தில்லியில் செங்கோட்டையில் ராஜத்துரோக வழக்கு நடந்தபோது, ஸ்ரீ பூலாபாயீயை அவர்கள் சார்பில் வழக்காடும்படி கேட்டுக் கொள்ளப் பட்டதும், அவருடைய உடல் நலம் அச்சமயத்தில் நன்ருக இல்லாதபோதிலும், அவர் அந்தக் கடினமான வேலையை மகிழ்ச்சியுடன் எடுத்துக்கொண்டார். இந்த வழக்கில் கடுமையாக உழைத்தது அவருடைய சாவுக்கு ஒரு விதத்தில் காரணமாயிருந்தது. ஏனெனில் அந்த வழக்கின் வேலையை எப்படியோ முடித்துவிட்டு அவர் நோய்வாய்ப்பட்டு விட்டார். பிறகு கட்டிலில் இருந்து எழுந்திருக்கவில்லை. அவருடைய நுண்ணிய திறமையும் அற்புத ஆற்றலும் அவ்வழக்கில் தெரியவந்தன. அவருடைய வாதம் உலகத்தின் பெரிய பெரிய வழக்குகளில் பெரிய பெரிய வக்கீல் வாதங்களுக்கு ஈடாக இருந்து வரும். கட்டிலில் படுத்துக்கிடந்த ஸ்ரீ பூலாபாயீக்கு ஒரு மகிழ்ச்சியிருந்தது,—அவருடைய கட்சிக்காரர்கள் எல்லாரும் விடுதலையாகிவிட்டார்கள். அவர் இறந்ததால் இந்தியாவின் நவரத்தினமணி ஒன்றுபோய் விட்டது. அவருடைய இடத்தை வகிப்பவர் வேறு எவரும் கண்ணில் படவில்லை. அவருடைய இறுதி நாட்கள் எனக்கு எப்பொழுதும் நினைவிலிருக்கும். முக்கியமாக, அந்தக் கருணை நிறைந்த மனேபாவத்துடன் செய்யப்பட்ட இத்தனை தொண்டுகளுக்குப் பிறகும் செயலாற்றுக் குழுவானது அவரைக் கவுன்ஸிலுக்குத் தகுதியுள்ளவராகக் கருதவில்லையென்பது நினைவிருக்கும்; அவருடைய மனத்தில் பதவிக்குப் பேராசை கிடையாது. அவர் காங்கிரஸில் வந்தில்லாவிட்

டால், அப்பதவி அவருக்குச் சிரமமின்றி எவ்வளவோ முன்னமே கிடைத்திருக்கும். அவரைத் தகுதியற்றவர் என்பதாக நாங்கள் கருதினேம் என்பதுதான் அவருக்கு வருத்தம்!

இங்கு நான் கூற விரும்பும் மற்றெரு விஷயம் என்னேச் சம்பந்தப்பட்டது. பெயர்களேத் தேரும் பேச்சு செயலாற்றுக் குழுவின் முன் வந்தபோது, அப்பெயர்களில் என் பெயரும் இருந்தது. நான் இதற்கு சிறிதுகூடத் தயாராயில்லே. என் உடம்பு சரியாயில்லே என்பது ஒன்று. அதிகமாக என்ஞல் உழைக்க முடியாது. இரண்டாவதாக, இவ்விதமான வேலேகளில் எனக்குச் சிறிதுகூட அனுபவம் இல்லே. இவ்விதமான கடினமான காலத்தில் இப்பொறுப்பை ஏற்பது சரியாகத் தோன்றவில்லே. மூன்ருவதாக, வெளியே இருந்து கொண்டு, அது வரையில் நான் வேலே புரிந்து வந்ததுபோலவே வேலே புரிந்து வருதல் என்னுடைய சுபாவத்திற்கு நல்லதென்பதாக உணர்ந்தேன். நான்காவதாக உள்ளத்தில் ஏதோ தர்ம சங்கடமாகவும் இருந்து வந்தது. என்னுடைய கஷ்டங்களே உயர்திரு மகாத்மாஜீயிடம் அவரைத் தனியாகப் பார்த்துக் கூறினேன். நான் பதவியை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமென்று அவர் கூறினர். அதற்குப்பின் நான் சொல்லுவதற்கு ஒன்றும் இல்லே. ஆயினும் மனம் முற்றிலும் அமைதி அடையவில்லே. இதனுல் சிம்லாவில் பேச்சு வார்த்தை முறிந்துபோனதும் என் தலேயிலிருந்து ஏதோ ஒரு சுமை இறங்கிவிட்டாற்போலத் தோன்றியது. நாட்டின் நலத்தை மனத்தில் கொண்டு பார்த்தால், அது முறிந்தது நன்ருகப் படாவிட்டலும், என் தனிப்பட்ட கருத்துக்கு அது நல்லதாகவே தோன்றிற்று.

## 155. துன்புற்ற அரசியல் கைதிகளுக்காகப் பணம் சேர்த்தல்

சிம்லாவிலிருந்து தில்லிக்கு வந்தேன். அங்கு நோய்வாய்ப் பட்டு விட்டேன். பம்பாய்க்குச் சென்றதில் உடம்பு சற்றுக் கெட்டுவிட்டது. இதனுல் பம்பாயிலிருந்து விரைவில் பட்னுவுக்கு வந்துவிட்டேன். ஆனுல் பட்னுவிலும் தங்க முடியவில்லே. அங்கிருந்து சிம்லா செல்ல வேண்டி வந்தது. சிம்லாவில் எப்படியோ

வேலையை முடித்தேன். சிம்லாவுக்கு வந்திருந்த டாக்டர் விதான் சந்திர ராயானவர் ஏதாவதொரு உலர்க்காற்றுள்ள இடத்திற்குச் செல்வது நன்றென யோசனை கூறினர். தில்லியிலிருந்து பிலானிக்குச் சென்று அங்குச் சில நாட்கள் இளைப்பாறலாமென்ற கருத்துடன் தில்லியில் தங்கிவிட்டேன். ஆனால் தில்லியில் மிகவும் நோயுற்றுப் போனதால் சுமார் இரண்டு வாரங்கள் அங்குத் தங்க வேண்டியதாயிற்று. 'அங்கிருந்து ஆகஸ்டு முதல் தேதியோ இரண்டாம் தேதியோ பிலானிக்குச் சென்றேன். அங்கு ஒரு மாதத்திற்கு மேல் தங்கியிருந்தேன். பிலானியில் பிர்லா நண்பர்கள் நான் தங்குவதற்காக நல்ல ஏற்பாடு செய்திருந்தார்கள். அங்கு என் தமக்கையாருடனும் மிருத்யுஞ்சயனின் தாயாருடனும் மிகவும் சௌகரியமாக இருந்தேன். என் சௌகரியத்திற்காக வேண்டிய ஏற்பாடுகளை பிர்லா நண்பர்களின் காரியஸ்தர் ஸ்ரீ ஹரிச்சந்திரர் மிகவும் சிறப்பாகச் செய்தார். பிர்லா கல்லூரியின் முதல்வர் ஸ்ரீ சுக்தேவ் பாண்டேஜீ, மற்ற ஆசிரியர்கள் ஆசிரியைகள் ஆகியவர்களின் தோழமை மிகவும் நன்ருக அமைந்தது.

பிலானியிலிருந்து செயலாற்றுக் குழு, அகில பாரதீயக் குழு ஆகியவற்றின் கூட்டங்களுக்காக பம்பாய்க்குப் போக வேண்டி வந்தது. கூட்டம் புனுவில் நடந்தது. கூட்டத்திற்குப் பிறகு பட்னுவுக்குத் திரும்பி வந்தேன். பம்பாயில் 'இந்தியா டிவ்வைடெட்' என்ற புத்தகத்தை அச்சிட்டு வெளியிடுவதற்கு ஏற்பாடுகளைச் செய்து விட்டேன். மத்திய சட்டசபை, மாகாணச் சட்டசபைகள் ஆகியவற்றிற்குத் தேர்தல் விரைவிலேயே நடக்கும் என்பதைச் சிம்லாவிலேயே நாங்கள் அறிந்து கொண்டோம். அத்தேர்தல்களுக்கு முன்னமே புத்தகம் வெளியாகி விட்டால் நல்லதென்பதை உணர்ந்தேன். மத்திய சட்ட சபைத் தேர்தலுக்கு முன் ஆகாவிட்டாலும் மாகாணத் தேர்தலுக்கு முன் அது வெளியாகி விட்டது.

நான் சிறையிலிருந்தபோது, 1942இன் கிளர்ச்சி காரணமாக பற்பல விதத்தில் துன்பத்திற்கு ஆளான அரசியல் கைதிகளைப் பற்றி எனக்கு கவலை உண்டாயிற்று. முக்கியமாக, தூக்கோ அல்லது சிறைவாசத் தண்டனையோ கிடைக்கக் கூடியனவாகிய வழக்குகள் எவர் மீது நடத்தப்பட்டு வந்தனவோ அவர்களைப் பற்றிக் கவலை உண்டாயிற்று. வழக்கை வாதாடுவதற்குச் செலவு பிடித்தது. வெளியில் இருந்தவர்கள் தம்மாலியன்ற அளவுக்கு இதற்கு ஏற்பாடு செய்தார்கள். இன்னும் பலர் விஷயத்தில், அவர்கள் கைது செய்யப்பட்டபின், அவர்களுடைய குடும்பங்கள்

நிறையத் துன்பத்தைச் சகித்து வர வேண்டியிருந்தது. வேறு சிலருக்கு விடுதலையானதுமே மருத்துவம் செய்ய வேண்டியிருந் தது. அவர்கள் அப்படிப்பட்ட உடல் நிலையுடன் விடுதலையானுர் கள். நான் வெளியே வந்தபின் மேலும் பல விவரங்கள் தெரிய வந்ததும், அவர்களுடைய உதவிக்காகப் பணம் சேர்க்க வேண்டு மென்று தீர்மானித்து விட்டேன். ஆனுல், பம்பாய், சிம்லா பேச்சுக்களாலும், அதன்பின் நோயுற்றுவிட்ட காரணத்தாலும், பம்பாயிலிருந்து திரும்பி வரும் வரையில் எதுவும் சிறப்பாகச் செய்ய இயலவில்லை. பம்பாயில் இதைப் பற்றிச் சில நண்பர் களுடன் பேசினேன். ஆனுல் அங்கு இதற்கு உற்சாகமளிக்கும் நிலைமை இல்லை. அங்குள்ளவர்கள் இதற்கு முன்பு நிறையப் பணம் கொடுத்து நாட்டுக்கு உதவி புரிந்திருந்தார்கள். ஆனுல் குறிப் பிட்ட மாகாணத்திற்குத் தனியாகப் பணம் திரட்டுவது கடினமா யிருந்தது. நாடு முழுவதுக்குமாக ஏதாவது செய்யப்பட்டால் முடியும்தான். ஆனுல் ஒரே ஒரு மாகாணத்தின் விஷயத்தை எடுத்துக் கொண்டு அவர்களிடம் எப்படி ஏதாவது கேட்கமுடியும்? மற்றவர்களுடைய கவனம் இதுவரையில் இப்பக்கம் செல்லவில்லை. இதனுல், என் மாகாணத்தில் முதலில் ஏதாவது செய்யப்படு மானுல் பிறகு பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய இடங்களில் முயற்சி செய்யலாமென்று நினைத்துக் கொண்டேன்.

பிலானியிலேயே பணம் திரட்டும் வேலையைத் தொடங்கிவிட் டேன். சொல்லப் போனுல், வேலை தானுகவே திடீரென்று தொடங்கி விட்டதென்று கூறுவது மெத்தப் பொருத்தமாகும். அங்குள்ள கல்லூரியின் முதல்வர் ஸ்ரீ சுக்தேவ் பாண்டேஜீயுடனும் மற்றவர்களோடும் பேச்சோடு பேச்சாக இந்த விஷயமும் வந்து விட்டது. நான் எதுவும் கேட்கவில்லை. ஆயினும், ஆகஸ்டு 1942 9ஆம் தேதி (1945) கல்லூரியில் ஒரு கூட்டம் நடந்தது. அதில் ஆகஸ்டு 9ஆம் தேதியைப்பற்றி ஏதாவது கூறும்படி நான் அழைக் கப்பட்டேன். அந்த இடத்திலேயே கல்லூரியின் ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகியோரின் சார்பில் ஓராயிரம் ரூபாய் முடிப்பு ஒன்று அரசியலால் துன்புற்றவர்களின் உதவிக்காக எனக்கு அளிக்கப்பட்டது. பிலானியிலிருந்து பிரயாணமாவதற்கு முன் நான் ஷேகாவாடீயில் சில இடங்களுக்குச் சென்றேன். அங்கிருந் தவர்கள் என்னை வரும்படி மிகவும் வற்புறுத்தினுர்கள். சிடாவா, சூரஜ்கட், பதஹ்கட் முதலிய பல இடங்களுக்குச் சென்றேன். எல்லா இடங்களிலும் பணப்பைகள் பரிசாக அளிக்கப்பட்டன. இவ்வண்ணமாக, அங்குவிட்டு வருவதற்கு முன் 15-16 ஆயிரம்

ரூபாய் நிதியில் சேர்ந்து விட்டது. பட்னுவுக்குத் திரும்பி வந்ததும் மாகாண முழுவதும் சுற்றிவரச் செயல் திட்டத்தைப் போட்டேன். ஆனல் மழை காலமானதாலும் என் உடல் நலமின்மையின் காரணத்தாலும் பத்து நாட்களுக்கு ஜீராதேயீக்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொள்ளலாமென்றும், பிறகு தசராவில் சுற்றுப் பிரயாணத்துக்குப் போகலாமென்றும் நிச்சயித்தேன். ஜீராதேயீக்குச் சென்று கொண்டிருக்கும்போது நிகழ்ந்த ஒரு அனுபவத்திலிருந்து பணம் திரட்டுவதைப் பற்றி என் மனத்தில் இருந்து வந்த சிறிது ஐயமும் அகன்று விட்டது.

ஜீராதேயீக்குப் போய்ச் சேருவதற்குள், வழியிலேயே மக்கள் எனக்கு ஒரு நல்ல தொகையைப் பரிசாக வழங்கி விட்டார்கள்.

ஓய்வு எடுத்துக் கொள்வதற்காகவே ஜீராதேயீக்குச் சென்றேன். ஆயினும் அதிகமாக ஓய்ந்திருக்க முடியவில்லை. என்னைக் கண்டு கொள்ள நிறையப் பேர் வருவார்கள். தங்களுக்குச் செய்யப்பட்ட துன்பங்களைப் பற்றிக் கூறுவார்கள். அங்கு இருக்கும்போது, சில அக்கம்பக்கத்துக்காரர்களின் வீடுகளையும் பார்த்தேன். அவை 1942இல் அரசாங்கத்து ஊழியர்களால் கொளுத்தப்பட்டுப் போயின. மேலும் துப்பாக்கிக் குண்டுக்கு இரையானவர்களின் குடும்பத்தாரையும் சந்தித்தேன். இவர்களுள் எங்கள் குடும்பத்தின் பழைய உறவினரும் நரேந்திரபுரத்தைச் சேர்ந்தவருமான பாபூ கிருஷ்ண குமார் சின்ஹாஜீ ஒருவர். அவருடைய சகோதரர் மகனின் சாவு பட்னு செக்ரேடேரியட்டின் முன் துப்பாக்கிப் பிரயோகத்தால் நிகழ்ந்தது. எவ்வளவு இரக்கமின்றி வீடுகள் கொளுத்தப்பட்டன என்பதைக் கண்டு மிக்கத் துயரமுண்டாயிற்று. இதிலிருந்து, மூன்று ஆண்டுகளுக்கு முன் இந்தச் சம்பவங்கள் நடந்தபோது மக்களின் நிலைமை என்னவாக இருந்திருக்கும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். ஜீராதேயீயின் ஆள் ஒருவனும் குண்டால் கொல்லப்பட்டான். அவனுடைய குடும்பத்தாரின் உதவிக்காக சிறிதளவு பணம் கொடுத்தேன். ஜீராதேயீயில் இருந்து கொண்டே பணம் திரட்டும் வேலையும் நடந்து கொண்டிருந்தது. என்னைக் கண்டு கொள்ள வந்தவர்களில் பலர் நிதிக்காக ஏதாவது கொடுத்துச் செல்வார்கள். மக்களின் கஷ்டங்களைப் பற்றியும் விரிவாகக் கூறுவார்கள்.

மற்றொரு காரியமும் ஜீராதேயீயில் நடந்தது. ஜபல்பூரைச் சேர்ந்த ஸ்ரீ துவாரகா பிரசாத் மிச்ராஜீயானவர் 1940-42இல் தனிப்பட்டோர் சத்தியாக்கிரகத்தின்போது, சிறையில் 'கிருஷ்ணுயன்' என்ற நூலை எழுதத் தொடங்கினர். ஒரு சமயம் நான் வர்தாவி

லிருந்து பட்னுவுக்குத் திரும்பி வரும்போது, சில மணி நேரம் அவருடன் தங்க வாய்ப்புக் கிடைத்தது. அப்போது, நான் வற்புறுத்தியதின் பேரில் அவர் அதிலிருந்து சில பாகங்களைப் படித்துக் காட்டினர். எனக்கு அது மிகவும் பிடித்திருந்தது. அதை அவர் 1942-45ன் சிறை யாத்திரையின்போது முடித்தார். நான் சிறையிலிருந்து வெளியே வந்ததும், பம்பாயில் அகில பாரதீயக் குழுவின் போது என்னைக் கண்டு, என்னுடன் சில நாட்கள் தங்கி அதைப் படித்துக் காட்ட விரும்புவதாகக் கூறினர். நான் அவரை ஜீராதேயீக்கு அழைத்தேன். அவருடைய சகோதரரும் அவரும் அங்கு வந்தார்கள். நூலின் சில பாகங்களை அவர் படித்துக் காட்டினர். என்னை ஒரு சிறிய முகவுரையும் எழுதும்படி வற்புறுத்தினர். நான் அதை அங்கேயே எழுதிக் கொடுத்தேன். புத்தகம் ஸ்ரீ துளசீதாஸின் ராமாயண நடையில் ஈரடி வெண்பாக்களிலும் நாலடி வெண்பாக்களிலும், எழுதப்பட்டிருந்தது. ராமாயணத்தில் எப்படி ஸ்ரீ ராமச்சந்திரரின் சரித்திரம் சித்தரிக்கப்பட்டிருக்கிறதோ அதே போல இதில் ஸ்ரீ கிருஷ்ணனின் வாழ்க்கையும் சரித்திரமும் சித்தரிக்கப்பட்டிருக்கிறது. புத்தகம் மிகவும் உள்ளத்தைக் கவரும் வகையில் எழுதப்பட்டிருக்கிறது. அதைக் கேட்டு எனக்கு பெரு மகிழ்ச்சி உண்டாயிற்று. மிச்ராஜீயின் நல்லுறவு மிகவும் நன்ருக இருந்தது.

ஜீராதேயீயிலிருந்து நான் நேரே சுற்றுப் பிரயாணத்திற்குச் சென்று விட்டேன். சுமார் 6-7 வாரங்கள் வரையில் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தேன். மக்களிடையில் நிறைய உற்சாகம் இருந்தது. 1942இன் அடக்குமுறை யாதும் பயன்பட்டதாகக் காணக் கிடைக்கவில்லை. எப்படி ரப்பர் பந்தானது எவ்வளவுக்கு அடிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கு வேகமாக மேலே எழும்புமோ அதே போல அடக்கு முறையினுல் மக்களின் ஆவேசம் அதிகமாகி விட்டதாகத் தோன்றியது. கூட்டங்களில் பணமாரி பொழிந்தது. பணமுடிப்புக்காக மக்கள் முன்னமே திரட்டி வைத்திருந்ததைத் தவிர கூட்டங்களிலும் நல்ல தொகை சேர்ந்துவிடும். சொற்பொழிவுகளால் மக்களின் உற்சாகத்தைப் பெருக்குவது மட்டுமன்றி வரப்போகும் தேர்தலின் சம்பந்தமாகவும் நான் சிறிது கூறுவேன். பிறகு பணத்திற்காக கோரிக்கை செய்வேன். அவர்களுக்காக விதிக்கப்பட்டிருந்த பங்குக்குக் குறைவாக எந்த ஜில்லாவும் கொடுக்கவில்லை. நாங்கள், எங்கள் மாகாணத்தில் மூன்று லக்ஷம் ரூபாய் சேர்க்கலாமென்றும், பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களாகிய பெரிய பெரிய இடங்களிலிருந்து இரண்டு

லக்ஷம் சேர்க்கலாமென்றும் நினைத்திருந்தோம். ஆனால் மாகாணத்திற்கு உள்ளிருந்தே ஐந்து லக்ஷம் ரூபாய்க்கு மேல் வந்து விட்டது. வெளியே கேட்பதற்கு அவசியமில்லாமல் போய் விட்டது. இன்னும் சுற்றுப் பிரயாணம் முடியவில்லை. இரண்டு மூன்று ஜில்லாக்கள் இன்னும் இருக்கும்போது நான் காடிஹாருக்குப் போய் சேர்ந்ததும் மிகவும் நோயுற்று விட்டேன். சற்று நலமடைந்ததும் அங்கிருந்து பட்னுவுக்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டேன். பட்னுவுக்கு வந்தும்கூட நான் பல நாட்கள் வரையில் நோயாக இருந்தேன். செயலாற்றுக் குழுவின் கல்கத்தா கூட்டத்தில் கூடக் கலந்து கொள்ள முடியவில்லை. எஞ்சி நின்ற ஜில்லாக்களின் சுற்றுப் பிரயாணத்தைப் பல மாதங்களுக்குப் பிறகு எப்படியோ செய்ய முடிந்தது, ஆனால் இந்த யாத்திரை முன் நிகழ்ந்ததைப் போல இருக்கவில்லை. அச்சமயத்தில் இருந்த உற்சாகமும் ஆவேசமும் அற்புதமாக இருந்தன.

## 156. அசெம்பிளியின் தேர்தல்—சில கட்சிகளின் பாரதம்[1]

மத்திய அசெம்பிளிக்கு முதல் தேர்தல் நடந்தது. இது ஜனவரிக்குள்ளாக முடிந்துவிட்டது. மத்திய அசெம்பிளிக்காக பீகாரில் எத்தனை முசல்மானியர் அல்லாதார் நிறுத்தப்பட்டார்களோ அவர்கள் எல்லாரும் சுலபமாக வெற்றி பெற்றுவிட்டார்கள். பெரும்பாலோர் போட்டியின்றியே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஓர் இடத்தில் போட்டி வந்தது, ஆனால் அங்கும் எதிரியின் பிணைப்பணம் பறிமுதலாகிவிட்டது. ஆனால் முஸ்லிம் இடங்களுக்காக காங்கிரஸின் சார்பில் நிறுத்தப்பட்ட அபேக்ஷகர்கள் தோற்றுப் போய்விட்டார்கள் ; எல்லா இடங்களும் முஸ்லிம் லீகுக்கே கிடைத்துவிட்டன. இந்த நிலைமை பீகாரில் மட்டும் ஆகவில்லை, அநேகமாக எல்லா இடங்களிலும் இப்படி ஆயிற்று. முஸ்லிம் அல்லாதார் இடங்களுக்குக் காங்கிரஸ்காரர்களும் முஸ்லிம் இடங்களுக்கு லீக்காரர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

---

[1] மூலத்தில் 'கார்நாமா' என்று கொடுத்திருக்கிறது. யுத்தத்தின் வர்ணனை என்பது பொருள். தமிழில் அப்பொருளில் 'பாரதம்' என்பது மக்கள் சொல் வழக்கில் உளது. 'பரணி' என்றும் கூறலாம். "சிட்டுக் குருவியின் மேல் பாரதம் தொடுத்தாற் போல" என்பது வழக்கு.

இப்போது மாகாணத் தேர்தலுக்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இதிலும் முஸ்லிம் லீகுடன் போட்டி நடந்தது. காங்கிரஸ் மூன்று முஸ்லிம் கழகங்களுடன் சேர்ந்து கொண்டு லீகைப் பீகாரில் எதிர்த்துக் கொண்டிருந்தது. இவை மூன்று கழகங்கள், ஜமீயத் உலேமா, ஜமீயத் மோமின், இண்டிபெண்டண்டு பார்ட்டி ஆகியவை. இவற்றில் இண்டிபெண்டண்டு பார்ட்டிக்கு யாதும் சிறப்பான பதவி கிடையாது. மோமின்களின் கழகம் எங்கும் பரவியிருந்தது. அபேக்ஷகர்களை நியமிப்பதில் அதிகக் காலம் பிடித்தது. ஏனெனில் பல கழகங்களைச் சமாதானப்படுத்த வேண்டியிருந்தது. சில இடங்களுக்குக் காங்கிரஸ்காரர்களும் சிலவற்றிற்கு ஜமீயத் உலேமாக் காரர்களும் மற்றும் சிலவற்றிற்கு மோமின் அக்ஷேகர்களுமாக நிறுத்துவதென்பதாக முடிவு செய்யப்பட்டது. எல்லாவற்றிலும் அதிகமான இடங்கள் மோமின்களுக்குக் கொடுக்கப்பட்டன. பெரும் ஆரவாரத்துடன் போட்டி நடந்தது. லீக் எல்லாவிதமான பொல்லாத அக்கிரமங்களையும் செய்தது. செலவும் நிறையச் செய்யப்பட்டது. முடிவில் 40 இடங்களில் 34ஐ லீக் பிடித்துக் கொண்டது, 5 மோமின்களுக்குக் கிடைத்தன, ஒன்று காங்கிரஸுக்கு, ஜமீயத் உலேமாவின் அபேக்ஷகர் ஒருவர் கூட வெற்றி பெறவில்லை. அவர் எந்த இடத்திற்கு நின்ருரோ அந்த வட்டாரத்தின் வோட்டர்களெல்லாரும் ஜமீயத் உலோமாவின் அபேக்ஷகரின் சிஷ்யர்கள்; அங்கும் கூட ஜமீயத் உலோமாவின் அபேக்ஷகர் தோற்றுவிட்டார். பேராசிரியர் அப்துல் பாரீ தோற்றதுதான் காங்கிரஸுக்கே மற்றெல்லாவற்றையும்விடப் பெரிய அதிர்ச்சி. காங்கிரஸின் அபேக்ஷகர்களில் டாக்டர் சையத் மகமூது வெற்றி பெற்ருர்.

முஸ்லிம் அல்லாதார் இடங்களில் வேறெங்கும் சிறப்பான எதிர்ப்பு நடக்கவில்லை. சோட்டா நாகபுரியில் மட்டும், ராஞ்சி, சிங்பூம் ஜில்லாக்களில் பலத்த எதிர்ப்பு உண்டாயிற்று. ஜமீன்தார் இடங்களில் நாங்கள் யாரையும் நிறுத்தவே இல்லை. சோட்டா நாகபுரியின் ஆதிவாசிகளின் இடையில் சிறிது காலமாக தொண்டு புரிந்து வந்த 'ஆதிவாசி மகா சபாவின்' முக்கிய வேலைத் திட்டம், சோட்டா நாகபுரி பீகாரிலிருந்து தனியான மாகாணமாக்கப்பட வேண்டுமென்பதுதான். இதன் தலைவர் ஸ்ரீ ஜயபால்சிங் தாமே ராஞ்சீ ஜில்லாவில் கண்டி இலாக்காவிலிருந்து நின்ருர். மற்ற மற்ற இடங்களிலும், சிங்பூம், ராஞ்சீ, சந்தால், பர்காஞ முதலியவற்றில் இச்சபாவின் சார்பிலிருந்து

அபேக்ஷகர்கள் நிறுத்தப்பட்டார்கள். அரசியல் அமைப்பின் கீழ் சில இடங்கள் ஆதிவாசிகளுக்காக ஒதுக்கப் பட்டிருக்கின் றன. மற்ற முஸ்லிம் அல்லாதார் இடங்களிலும் அவர்களுக்கு நிற்க உரிமை உண்டு. அவர்கள் ஒதுக்கப்பட்ட இடங்களுக்கும் மற்றும் சில சாதாரண இடங்களுக்கும் அபேக்ஷகர்களை நிறுத்தி னர்கள். காங்கிரஸின் சார்பிலிருந்து எல்லா சாதாரண இடங் களுக்கும், மேலும் ஆதி வாசிகளுக்காக ஒதுக்கப்பட்ட இடங்க ளுக்கும் அபேக்ஷகர்கள் நிறுத்தப்பட்டார்கள். இந்த இடங்க ளில்தாம் கடுமையான எதிர்ப்பு உண்டாயிற்று. ஆதிவாசிகள் மட்டுமன்றி சிற்சில இடங்களில் முக்கியமாக முங்கேர், ஷாகாபாத் ஆகியவற்றின் சில இடங்களிலும் தொழிலாளர்களுக் காக ஒதுக்கப்பட்ட இடங்களிலும் கூட ரேடிகல் இண்டிபெண் டண்டு கட்சியின் (ஸ்ரீ எம். என். ராயின் கட்சி) சார்பிலும் கம்யூனிஸ்டு கட்சியின் சார்பிலும் அபேக்ஷகர்கள் நிறுத்தப் பட்டார்கள்.

1942இன் புரட்சி கிளர்ச்சியின்போது ஸ்ரீ எம். என். ராயும் அவருடைய கட்சியும் காங்கிரஸை மிகவும் நிந்தித்தனர். இந்நாட்டில் மட்டும் அவர்கள் அக்கிளர்ச்சியை எதிர்க்கவில்லை, வெளிநாடுகளிலும்கூட, முக்கியமாக ஜெர்மனியில், அதை எதிர்த் தார்கள். அவர்களுடைய ஆட்கள் அங்குச் சென்று காங்கிர ஸின்மீது மிகவும் பொய்யானதும் தவறானதுமான குறைகளைக் கூறினர்கள். காங்கிரஸை அமுக்குவதற்கும் அதன் அமைப் பைத் தூள் தூளாகத் தகர்ப்பதற்கும் அரசாங்கத்திற்கு யோசனைகள் கூறினர்கள். அரசாங்கத்திற்கு அவர்களுடைய யோசனைகள் தேவையில்லை. தானே அது எல்லாவற்றையும் செய்து கொண்டிருந்தது. ஆயினும் அவர்களுடைய பிரசாரத் தால் அதற்குத் தன் அடக்குமுறை ஆழியைச் செலுத்துவதற்குப் பக்க பலம் கிடைத்தது. சிறையில் நாங்கள் இருந்து வந்த போது அசெம்பிளியில் ஒரு கேள்விக்கு அளித்த விடையில் அக் கட்சிக்கு அரசாங்கமானது மாதா மாதம் பதின்மூன்று ஆயிரம் ரூபாய் கொடுத்து உதவி செய்து வருகிறதென்பாக அரசாங்கத் கத்தின் சார்பில் கூறப்பட்டது. அக்கட்சியின் ஆட்களுக்கு இடையில் இந்த விஷயத்தைப் பற்றிச் சண்டை உண்டாகிவிட் டது. அவர்களில் ஒரு கட்சி இச் செய்தியைப் பயன் படுத்திக் கொண்டு மற்றொரு கட்சியைப் பொது மக்களின் முன் தாழ்த்த விரும்பியது. நாங்கள் வெளியில் இருந்த போதும் இதுமாதிரி யான செய்திகளைக் கேள்விப்பட்டு வந்தோம். அக்கட்சிக்காரர்

கள் நிறையச் செலவு செய்வதும் கவனிக்கப்பட்டது. ஆயினும் நிச்சயமாக யாதும் சொல்ல முடியவில்லை. 1942இன் கிளர்ச்சியின் போது அவர்களுக்குள் ஏதோ கருத்து மாறுபாடு வந்துவிட்டது. சிலருக்குக் சத்தியாக்கிரகக் கிளர்ச்சியில் சேருவது பிடித்திருந் தது. ஆனால் ஸ்ரீ எம். என். ராயும், மற்றவர்களும் அதைப் பலமாக எதிர்க்க விரும்பினார்கள். சிறையிலேயே இது எங்களுக்கு தெரிய வந்துவிட்டது. அக்கட்சி அரசாங்கத்தின் பணத்தைக்கொண்டு வேலை செய்து வருகிறதென்பதும் தெரிந்துவிட்டது. அசெம் பிளியில் அரசாங்கமே குட்டை உடைத்துவிட்டது. அதே கட்சி தன்னை இந்தியாவின் உண்மையான பிரதிநிதியாகக் காட்டிக் கொண்டிருந்தது. காங்கிரஸை இந்நாட்டிலும் வெளிநாட்டிலும் திட்டி வந்தது.

கம்யூனிஸ்டுக்காரர்களின் நிலைமையும் வேடிக்கையாயிருந் தது. சண்டை தொடங்குவதற்குச் சில நாட்களுக்கு முன் ருஷியாவும் ஜெர்மனியும் சமாதானமாகப் போய்விட்டன. சண்டை ஆரம்பித்ததும் ஜெர்மானியானது ஒரு திசையிலிருந்து போலந்தின் மீது படையெடுத்தது, மற்றொரு திசையில் ருஷியா அதன் பகுதி ஒன்றைக் கைப்பற்றிக் கொண்டது. இவ்விதமாக இரண்டும் ஒருவருக்கொருவர் வேண்டியவர்களாகப் போய்விட் டார்கள். பெரும்பாலும் ருஷியாவியின் சமிக்ஞைப்படியே வேலை புரிந்து வந்த இந்திய கம்யூனிஸ்டுகள் ஆரம்பத்தில் இங்கி லாந்துக்கு விரோதமாக பேசியும் எழுதியும் வந்தார்கள். அதனால் அவர்களுடைய கழகம் சட்டத்திற்குப் புறம்பானதாக ஆக்கப்பட்டுவிட்டது. அதன் முக்கிய மனிதர்கள் ஒளிந்து மறைந்து வேலை செய்து வந்தார்கள். ருஷியாவுக்கும் ஜெர்மனிக் கும் சண்டை மூளாத வரையில் இந்தியாவின் கம்யூனிஸ்டுகள் ஜெர்மனியை ஆதரிப்பவர்களாகவும் பிரிட்டிஷாரின் விரோதிக ளாகவும் இருந்து வந்தார்கள். ருஷியாவுக்கும் ஜெர்மனிக்கும் சண்டை மூண்டுவிட்டதிலிருந்து அவர்கள் தம்முடைய போக்கை முற்றிலும் மாற்றிக் கொண்டார்கள். பிரிட்டனும் ருஷியாவும் ஒன்றுகூடி ஜெர்மனியுடன் போர் புரியத் தொடங்கியதுமே அவர்கள், இப்போர் மக்களின் போர் என்றும், பிரிட்டனுக்கு உதவி புரிவது எல்லாருடைய கடமையென்றும் கூறத்தொடங்கி விட்டார்கள். இவ்வண்ணமாக காங்கிரஸின் கிளர்ச்சியை எதிர்ப் பது அவர்களுக்கு அவசியமாகிவிட்டது. அப்படியே அவர்கள் எதிர்த்தார்கள். இக்காரணத்தால் காங்கிரஸ்காரர்களுக்குள், முக்கியமாக காங்கிரஸுக்குள்ளிருந்த சோஷிலியஸ்டு கட்சிக்கார்க

ளுக்குள், இந்த இரண்டு கட்சிகளுக்கும் விரோதமாக கடுமை யான மனப்பான்மை உண்டாகிவிட்டது. சிறைக்குள் இதைப் பற்றி ஏதோ சிறிதளவு தெரிய வந்தது. ஆனால் வெளியே வந்த பின் விஷயங்களின் முழு விவரமும் தெரிய வந்ததும் இந்த மனப் பான்மை மேலும் கடுமையாகிவிட்டது.

இக்கட்சிகளின் சார்பில் காங்கிரஸுக்குப் போட்டியாக அபேக்ஷகர்கள் நிறுத்தப்பட்டார்கள். வெற்றியைப்பற்றி அவர் களுக்கு கவலையில்லை, ஆனால் சண்டைக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தால் போதும். கம்யூனிஸ்டுகளுடன் கைகலப்பும் உண்டா யிற்று. காங்கிரஸ்காரர்களால் அவர்களுடைய அடிகளை அஹிம்சாமயமான முறையில் சகித்துக் கொள்ள முடியவில்லை யென்பது எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கிறது. அவர்களு டைய தலைவர் ஒருவரை மிகவும் அடித்துப் போட்டு விட்டார்கள். சூழ்நிலை மிகவும் சீர் குலைந்துவிட்டது. எங்களுடைய கோட் பாடும் மிகவும் சிதைவுற்றது. முடிவில் இரண்டு கட்சிக்காரரும் நன்றாகத் தோற்றார்கள். பீகாரில் எந்த இடத்திலிருந்தும் அவர் களுடைய அபேக்ஷகர்கள் தேர்ந்தெடுக்கப்படவில்லை. பல இடங்களில் அவர்களுடைய பிணைப் பணமும் பறிமுதல் செய்யப் பட்டது.

ஆதிவாசிகளின் எதிர்ப்பும் ஹிம்சா இன்றி நடக்கவில்லை. நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, ராஞ்சி ஜில்லாவில் ஆதிவாசி சபாக்காரர்களால் பலமாக அடிக்கப்பட்டவர்கள் பலர் என் முன் கொண்டுவரப்பட்டார்கள். காயம்பட்டவர்கள் சிலர் நெடுங்காலம் வரையில் மருத்துவ சாலையில் இருக்கவேண்டி வந்தது. கண்டி இலாகாவில் அவர்களுடைய அட்டூழியங்கள் மிக அதிகமாக நடந்தன. இவ்விஷயங்களைப் பற்றி நான் அரசாங்கத்திற்குத் தெரிவித்தேன், ஆனால் அரசாங்கம் இவ் விஷயங்களில் கவனம் செலுத்தவில்லை. அங்குள்ள அதிகாரி களின் போக்கு அப்படியிருந்தது. ஓரிடத்தில் ஐந்து ஆதி வாசிகள் கொல்லப்பட்டு விட்டார்கள். இத்தேர்தல் இயக்கத்தில் முஸ்லிம் லீகுக்கும் ஆதிவாசி சபாவுக்கும் நெருங்கிய உறவு உண் டாகி விட்டது. இரண்டும் சேர்ந்து வேலை புரிந்து கொண்டிருந் தன. ஆதிவாசி சபாக்காரர்களும், 'பாகிஸ்தான் ஜிந்தாபாத்' கோஷம் போட்டுக் கொண்டிருந்தார்கள். முஸ்லிம் லீகின் தலைவர்கள், பின்னால், இந்த ஐந்து சாவுக்களின் எண்ணிக் கையை 200–250 ஆக்கி, எல்லாவற்றிற்கும் காங்கிரஸைக் குற்ற

வாளியாக்கினுர்கள். காங்கிரஸ்காரர்கள் இதை அடிக்கடி மறுத்து வந்தார்கள்.

தேர்தலில் ஸ்ரீ ஜயபால் சிங் தோற்றுப் போய்விட்டார். ஆனுல் அவருடைய கட்சியின் ஆட்கள் மூவர்—இரண்டு பேர் சிங்பூம் ஜில்லாவிலிருந்தும் ஒருவர் ராஞ்சி ஜில்லாவிலிருந்தும்—தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஒதுக்கப்பட்ட இடங்களிலிருந்து அவருடைய கட்சிக்கு இரண்டு கிடைத்தன, ஒன்று ராஞ்சியிலும், மற்ருென்று சிங்பூமிலும். சாதாரண இடங்களில் இருந்து ஓரிடம் சிங்பூமில் கிடைத்தது. அவர்கள் போட்டியிட்ட வட்டாரங்களில் ஐந்து ஒதுக்கப்பட்ட இடங்கள் காங்கிரஸ் கைக்கு வந்தன. கிறிஸ்தவர்களுக்காக ஒதுக்கப்பட்ட இடத்தில், அவர்களுடைய கட்சிக்காரரோ அல்லது அவர்களுக்கு உதவிபுரிபவரோ, ஒரு சிறந்த கிறிஸ்தவர் வென்ருர்.

தேர்தல் முடிந்ததும் மந்திரி சபைகளை அமைக்க வேண்டியிருந்தது. காங்கிரஸானது மந்திரி சபைகளை அமைப்பதில் கலந்து கொள்ளுமென்பதாகக் காங்கிரஸின் சார்பில் முறையாகக் கூறப்படாவிட்டாலும், இப்பொழுதோ சண்டை முடிந்துவிட்டது; சண்டையின் காரணத்தால்தான் காங்கிரஸானது மந்திரி சபையைத் துறந்தது. இப்பொழுது அக்காரணம் இருக்கவில்லை. நாட்டின் நிலைமையும், ஒருவிதமாக இருந்தது. அதனுல் எல்லாரும் காங்கிரஸ் மீண்டும் மந்திரி பதவியை ஏற்க வேண்டுமென்று விரும்பினுர்கள். அப்படியே நடந்தது. எல்லை மாகாணம், ஐக்கிய மாகாணம், பீகார், மத்திய மாகாணம், ஆசாம், ஒரிசா, மதராஸ், வங்காளம் ஆகிய இடங்களில் காங்கிரஸின் பெரும்பான்மை இருந்தது. அவற்றில் மந்திரி சபைகளை அமைப்பதில் யாதொரு ஐயமுமில்லை. பஞ்சாபில் யாதொரு கட்சிக்கும் பெரும்பான்மை இல்லை, ஆயினும் லீக்காரர்கள் அதிகமாக அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். அங்குக் காங்கிரஸ், சீக்கியர், யூனியனிஸ்டு கட்சி மூவருமாகச் சேர்ந்து லீகைவிட அதிகமாக இருந்தார்கள். இதனுல் அங்கு இம்மூன்றும் ஒன்று சேர்ந்த கட்சி ஒன்று அமைக்கப்பட்டது. அவர்களுடைய மந்திரி சபைதான் அமைக்கப்பட்டது. லீகுடையது அன்று. சிந்தில் லீகுக்கும் மற்றக் கட்சிகளுக்கும் அநேகமாக சமமான போட்டி இருந்தது. லீகுடன் மூன்று ஆங்கிலேய அங்கத்தினர்கள் சேர்ந்து கொண்டும்கூட மற்றவர்களுக்கு ஒன்ருே இரண்டோ அதிக வாக்கு (வோட்டு) இருந்ததாகச் சொல்லப்பட்டு வந்தது. ஆயினும் சிந்தின் கவர்னர் லீகுக்குத்

தான் மந்திரி சபை அமைக்க அழைப்பு அனுப்பினர். அங்கு லீக் மந்திரி சபை அமைந்தது. வங்காளம் ஒன்றில் மட்டும்தான் ஐரோப்பியர்களுடன் சேர்ந்துகொண்டு லீகுக்குப் பெரும்பான்மை இருந்தது. அங்கும் லீக் மந்திரி சபை அமைந்தது. மற்ற எல்லா மாகாணங்களிலும் காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைந்தன. பீகாரில் ஆரம்பத்தில் பழைய நான்கு மந்திரிகளும் நியமிக்கப்பட்டார்கள். ஸ்ரீ ஜக்லால் சௌதுரீ 10 ஆண்டு தண்டனை பெற்றுச் சிறையில் இருந்தார். இதனால் அவர் தேர்தலுக்கு நிற்க இயலவில்லை. ஸ்ரீ பாபு, டாக்டர் மகமூத் ஆகியவர்கள் நியமிக்கப்பட்டதுமே, அவரைச் சிறையிலிருந்து மீட்டு வந்து நான்காவது இடத்திற்கு அவரை நியமித்துவிட்டார்கள். சில நாட்களுக்குப் பிறகு மேலும் ஐந்து மந்திரிகள் நியமிக்கப்பட்டார்கள்.

## 157. பசு பரிபாலன சம்பந்தமான வேலை

மகாத்மா காந்திஜீ நெடு நாளாகப் பசுவைப் பேணுதலைப் பற்றித் தம்முடைய கருத்துக்களை வெளியிட்டு வந்து கொண்டிருந்தார். சபர்மதி ஆச்ரமத்திலும் சேவா கிராமிலும் பசுத் தொழுவங்கள் நடத்தப்பட்டு வந்தன. சேட் ஜம்நாலால் பஜாஜின் மேற்பார்வையில் வர்தாவுக்கு அருகில் நால்வாடியில் ஸ்ரீ ராதாகிருஷ்ண பஜாஜ் பல ஆண்டுகளாக பசுத் தொழுவம் நடத்திக் கொண்டிருந்தார். பார்நேர்கர்ஜீ காந்திஜீயின் கருத்துக்களுக்கு இசைய பசுபாலனத்தை நன்ருகக் கற்றும் செய்தும் நிறையப் பயிற்சி பெற்ருர். சேட் ஜம்நாலால்ஜீ தாம் இறப்பதற்குச் சிறிது காலத்திற்கு முன் பசு பரிபாலனத்தைத் தமது முக்கியத் தொழிலாகக் கொண்டுவிட்டார். அவர், வர்தாவில், நால்வாடியின் பசுத் தொழுவத்தை இதற்கு மூலதளமாக அமைத்து ஒரு கழகத்தையும் நிறுவிவிட்டார். இதை நிறுவிய சமயத்தில் அங்கு ஒரு சம்மேளன் (மகாநாடு) நடந்தது. இக்கலையில் நிபுணர்கள் தொலைவு தொலைவிலிருந்து அழைக்கப்பட்டு அங்கு வந்திருந்தார்கள். நானும் அங்கிருந்தேன். நான் எல்லாத் தொழில் முறைகளையும் சிறிது சிறிது கற்று வந்தேன். ஆனல் பசு பாலனத்தின்மீது சிறப்பாகக் கவனம் செலுத்தவில்லை. இதன் பெருமையையும் பயனையும்கூட ஒரு வகையாகப் புரிந்து கொண்டேன். ஆனல் பயிற்சி பெறவில்லை. ஸ்ரீ பாலுஞ்கர்

மூலமாக நால்வாடீயில் நடத்தப்பட்டு வந்த தோல் பதனிடும் தொழிற்சாலையைப் பற்றியும் எனக்குத் தெரியும். அங்கு எப்போ தாவது போகும்போது அதைப்பார்த்து வருவதும் உண்டு. பசுத் தொழுவத்துடன் தோல் நிலேயத்திற்கு உள்ள தொடர்பையும் அறிந்திருந்தேன். இதைப்பற்றி எப்போதாவது ஏதோ எழுதி யும் இருக்கிறேன். கோசாலேகளே, சிறப்பாக தர்பங்கா கோசாலேயை, இம்முறையில் இயக்க முயற்சியும் செய்தேன். இவ்வளவு நடந்தும்கூட நான் பசுபாலன சங்கத்தில் அங்கத் தினன் ஆகவில்லே. எந்தக் கழகத்துடனும் யாதும் சிறப்பான தொடர்பும் கொள்ளவில்லே.

1946இன் ஆரம்பத்தில் ஸ்ரீ ஜானகிதேவி பஜாஜிடமிருந்தும், ஸ்ரீ ராதாகிருஷ்ண பஜாஜிடமிருந்தும், இம்முறை நான் கோசேவா சம்மேளனுக்குத் தலேவனுக வேண்டும் என்று கடிதம் வந்தது. நான் இப்பதவியை ஏற்க வேண்டுமென்பதாக உயர்திரு பாபூஜீயும் விரும்புகிருர் என்றும் அதில் எழுதியிருந்தது. சாதாரணமாக ஜானகி தேவிஜீ சொன்னுலே போதும், இதற்கு மேல் உயர்திரு பாபூஜீயின் ஆணே வேறு! நான் ஏற்றுக் கொண்டேன். குறிப்பிட்ட காலத்தில் வர்தாவுக்குப் போய்ச் சேர்ந்தேன். அங்கு இப்பதவியைச் சமாளிப்பதற்காக, இந்த விஷயத்தின்மீது சிறிது சிறப்பாகக் கவனம் செலுத்த வேண்டி யிருந்தது. மகாநாட்டிற்குச் சிறந்த நிபுணர்கள் வந்தார்கள். அங்கேயே எல்லா விஷயங்களேயும் நன்ருகப் பார்த்துக் கேட்டு, மேலும் பீகாரிலிருந்து வந்திருந்த தர்பங்கா கோசாலாவின் பிரதிநிதிகளுடனும் பேசி, இவ்விதமான வேலேயை பீகாரிலும் செய்ய வேண்டுமென்றும், அதற்காக ஒரு மகாநாடு நடத்த வேண்டுமென்றும் நிச்சயித்தேன். இந்த முடிவின்படியே பட்னு வில் ஒரு பசு (சேவா) மகாநாடு நடந்தது. அதற்குப் பீகாரின் கோசாலேகள் எல்லாவற்றிலிருந்தும் பிரதிநிதிகளும் மற்றவர் களும் வந்தார்கள். நான்தான் தலேவனுக்கப் பட்டேன். பாகல் பூரின் ராய்பகதூர் வம்சீதர் டாண்டானியா வரவேற்புக் குழு அமைச்சராக இருந்தார்.

நான் இந்த விஷயத்தைச் சிறப்பாகக் கற்றறிந்து நீண்ட தொரு சொற்பொழிவை எழுதினேன். நிபுணர்களும் மற்றவர் களும் அதை மிகவும் பாராட்டினுர்கள். மாகாணமெங்கும் உள்ள பசுத் தொழுவங்களுக்கும், கிழ மாட்டுக் தொழுவங்களுக்கும் ஒரு மூல சங்கம் அமைக்கப்பட வேண்டுமென்பதாகவும், அத்துடன் எல்லா கோசாலேகளும் தொடர்பு கொள்ள வேண்டுமென்பதாக

வும், சங்கத்திற்கு நிலையான அலுவலகமொன்றும் இருக்கவேண்டு மென்பதாகவும் சம்மேளன் முடிவு செய்தது. மேலும் அதைப் பதிவு செய்ய வேண்டுமென்பதாகவும், சங்கத்தின் அலுவலகத்தின் மேற்பார்வையில் மாதிரிக்காக ஒரு சிறந்த கோசாலையைத் திறக்க வேண்டுமென்பதாகவும் முடிவு செய்தது. இந்த முடிவுகளைப் பின்பற்றி அலுவலகம் திறக்கப்பட்டது. சதாகத் ஆச்ரமத்தில் ஒரு சிறிய பசுத் தொழுவமும் உண்டாகி விட்டது.

நான் பசுபாலனத்தைச் சமய நோக்கத்துடன் பரப்ப விரும்ப வில்லை. இந்தியாவின் பொருளாதார நிலையை மனத்திற் கொண்டு இதன் தேவையையும் பயன்பாட்டையும் உணர் கின்றேன். இந்த வழியினால்தான், ஹிந்துக்களும் சீக்கியர் களுக்கும் இடையில் காணப்படுகின்ற மத சம்பந்தமான மனோபாவம் இல்லாதவர்களுடைய உதவியையும் இதற்குப் பெறக் கூடும். பண லாபம், பயன்பாடு என்ற எண்ணம்தான் ஏதாவது வேலை செய்ய முடியும். வெற்றியும் பெற இயலும் என்று நான் நினைக்கிறேன். வெறும் மத மனோபாவனையானது முசல்மானியர் களிடையில் பகைமையும் ஹிந்துக்களிடையில் பகட்டையும் வேஷத்தையும் பிறப்பிக்கிறது. அதனால் உண்மையான பசு பாதுகாப்பு பின்னணியில் நின்று விடுகின்றது. வெளிப் பகட்டுத்தான் பெருகுகின்றது. இதனால், என் சொற்பொழி விலும் பொருளாதார நோக்கத்திலிருந்தே இதைப்பற்றி ஆராய்ந் தேன். விவசாயத்தில் சிறந்த நாடுகளில் பசு வகைகளும் பசுக் குலத்திற்கும் எவ்வளவு பெருமை உள்ளதென்பதையும், எப்படி நாம் நம்முடைய மூட நம்பிக்கைகளினாலும் அறியாமையாலும் அதற்குத் தொண்டு செய்வதற்கு மாறாக அதற்குத் தீமையை விளைவிக்கிறோம் என்பதையும், மற்றவர்களின் ஆதரவைப் பெறுவதற்கு மாறாக அவர்களுடைய பகைமையையும் எதிர்ப்பை யும் விலைக்கு வாங்குகிறோம் என்பதையும் எடுத்துரைத்தேன். சரியான முறையில், விஞ்ஞான வழியில், இவ் விஷயத்தின் பயிற்சியும் பிரசாரமும் செய்யப்படுமானால் நாம் யாதும் ஐயமின்றி எல்லாருடைய பரிவையும் உதவியையும் பெறுவோம் என்பது என் உறுதியான நம்பிக்கை.

உதாரணமாக ஒரு சாதாரண விஷயத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஆண்டு முழுவதிலும் பக்ரீத் ஒரு நாளோ இரண்டு நாளோ நடக்கிறது. அன்றைக்கு மட்டும் முசல்மானி யர் அங்கும் இங்கும் பசுக்களை பலி கொடுக்கிறார்கள். இதற்காகப் பல இடங்களில் நிறைய குத்தும் கொலையும் நடந்து வருகிறது.

ஆயினும் கசாப்புக் கடைகளில் நாள்தோறும் ஆயிரக்கணக்கான பசுக்கள் கொல்லப்படுகின்றன என்பதின்மீது ஹிந்துக்களின் பார்வை செல்வதில்லை. முக்கியமாக, பட்டாளப் பாளயங்களுக்காக நல்ல நல்ல பசுக்கள் கொல்லப்படுகின்றன. மகாயுத்தத்தில் வெளிநாட்டுப் படைகளுக்காக இந்தியாவின் மிருகங்கள் எத்தனை கொல்லப்பட்டன என்பது தெரியாது. மதப்பற்றால் உந்தப்பட்டு பலி கொடுப்பவர்களின்மீது இவ்வளவு கொடுமை! வயிற்றிற்காகவோ, நாக்கு ருசிக்காகவோ அல்லது ஏதாவது பணம் சம்பாதிப்பதற்காகவோ கொல்கிறவர்கள் அல்லது கொல்லச் செய்விக்கிறவர்களை யாரும் கேட்பதுகூட இல்லை! கிழடு, நொண்டி, நோயுற்ற பசுக்களைக் காப்பதற்காக கோசாலைகளில் கோடிக்கணக்கான ரூபாய் செலவழிக்கப்படுகிறது. ஆனால் பசுவை எந்த ஹிந்துவோ, ஹிந்து அல்லாதவனோ விற்பதற்கோ அல்லது கொல்லுவதற்கோ அவசியம் ஏற்படாத வகையில் அதை எவ்விதமாக லாபத்தை அளிக்கும் மிருகமாகச் செய்யலாம் என்பதின்மீது எவருடைய கவனமும் செல்வதில்லை. இன்றோ, பசுவின் பாலிலிருந்தும் அதன் ஆண் கன்றிலிருந்தும் கிடைக்கக் கூடியதைவிட அதிகமாக அதைக் கொல்வதற்காக விற்பதிலிருந்து கிடைக்கக் கூடும். கொல்வதற்காக் அதை வாங்குகிறவன் அதன் இறைச்சி, தோல், எலும்பு, கொழுப்பு ஆகியவற்றிருந்து அதை, வளர்த்து, அதன்பால் கன்று முதலானவற்றிலிருந்து சம்பாதிக்கக் கூடியதைவிட, அதிகமாக லாபம் எடுக்க முடியும். இக்காரணங்களால் பசு பாலனத்தில் பற்றுதல் உள்ள ஹிந்துக்களும்கூட கொல்வதற்காகப் பசுவை விற்றுவிடுகிறார்கள். கொல்லுகின்ற ஹிந்துவும் அதை வாங்கிக் கொள்ளுகிறான். பசுவானது, நல்ல முறைப்படி பேணி வளர்க்கப்படுமானால், அதன் பால் அதிகரிக்கப்படுமானால், அதன் சாணி மூத்திரம் முதலியன சரியாகப் பயன்படுத்தப் படுமானால், மேலும் அது இறந்தபின், அதன் தோல், இறைச்சி, கொழுப்பு, குளம்பு முதலியன சரியாகப் பயன்படுத்தப்படுமானால் பசு வளர்ப்பது நஷ்டமான பிழைப்பாயிருப்பதற்கு மாறாக லாபம் அளிப்பதாக ஆகிவிடுமென்பதாக நான் துணிவு கொள்கிறேன்.

இந்தக் கருத்துக்களையும் குறிக்கோள்களையும் முன் வைத்துக் கொண்டு வேலை செய்யவேண்டும். நிறையப் பால் மட்டும் கொடுக்கக்கூடிய பசுக்களின் ஆண் கன்றுகள் ஏரில் கட்டி உழுவதற்கும் வண்டி இழுப்பதற்கும் தகுதியற்றனவாக இருப்பின், அத்தகைய பசுக்கள், எருதுகளில் இருந்து அவற்றின் இறை



சியைத் தவிர, வேறு யாது வேலையும் வாங்கப்படாத நாடுகளில் தாம் பயன்படக்கூடும். ஆண் கன்றுகள்—இந்தியாவில் வெள்ளாடுகள் வளர்க்கப்படுவதுபோல—இறைச்சிக்காக மட்டும் வளர்க்கப்பட்டு வரும் நாடுகளைக் கூறுகிறேன். ஆனால் இந்தியாவில்—எங்கு மக்கள் பசுவின் இறைச்சி உண்பதில்லையோ, எங்கு எருதுகளிடம் மற்றப் பல தேவையான வேலைகள் வாங்கப்படுகின்றனவோ, எங்கு எருதுகள் இன்றி குடியானவர்களின் எந்த வேலையும் நடக்க இயலாதோ—இங்கே நிறையப் பாலும் நல்ல ஆண் கன்றுகளும் கொடுக்கக்கூடிய பசுக்கள் வேண்டும். சந்ததியின் மீது மனம் செலுத்தினால்தான் இது கைகூட முடியும். நம் நாட்டில் இந்த விஷயத்தின் மீது நிறைய கவனம் செலுத்தி வந்தார்கள். அவர்கள் தேவைக்குத் தக்கபடி கால் நடையைப் பிறப்பித்துக் கொண்டார்கள். இன்றும்கூட ஒரு சந்ததியின் மிருகம் அதிக சுமையை இழுக்கக் கூடியதையும் மிக்க உழைப்புடன் வேலை செய்யக்கூடியதையும் காணலாம். ஆனால் அவற்றால் அதி விரைவாக ஓட இயலாது. வேறுவகை மிருகங்கள் மிகவும் வேகமாக ஓடக்கூடும், ஆனால் அவ்வளவு சுமை இழுக்க முடியாது, மேலும் முதல் கூறப்பட்ட இனம்போல அவ்வளவு அதிகமாக உழைக்கவும் இயலாது. சில பசுக்கள் நிறையப் பால் கொடுக்கும், ஆனால் அவற்றின் ஆண் கன்றுகள் அவ்வளவு நன்றாக இருக்கமாட்டா. சிலவற்றின் கன்றுகள் நன்றாக இருக்கும், ஆனால் அவை நிறையப் பால் கொடுக்கமாட்டா. இந்தியாவின் குடியானவன் பாலுக்கு ஒரு பசுவும் கன்றுக்கென்று ஒரு பசுவும் வைத்துக்கொள்ள முடியாது. அவன் ஒரே பசுவைக் கொண்டு இரண்டு காரியங்களையும் பெறவேண்டும். இதனால், நாம் இந்த இரண்டு நோக்கங்களையும் நிறைவேற்ற உதவக்கூடிய சந்ததிக்கே ஊக்கம் அளிக்க வேண்டும். அதிகப் பாலையும் வேலைக்குத் தகுதியான நல்ல கன்றுகளையும் ஈனும் பசுக்களை வைத்திருக்கும் கோசாலைகள் அமைக்கப்பட வேண்டும். பசு பாலனத்திற்குச் சரியான ஏற்பாடுகள் செய்யப்படுமானால் பசு லாபமளிப்பதாக ஆகிவிடும். அதனுடைய கொலை தானாகவே நின்றுவிடும். கூடவே, கிழடாகவும் பலவீனமாகவும் ஆகிவிடும் பசுக்களின் பாராமரிப்பும், நல்ல பசுக்களில் இருந்து கிடைக்கும் லாபத்தைக் கொண்டும், மேலும் கிழடு மாடுகளின் சொந்த இறைச்சி தோல் முதலானவற்றை, அவை இறந்தபின், விற்று வந்த பணத்தைக் கொண்டும் நடைபெறக்கூடும். இப்படிப்பட்ட நிலைமையில்தான் கோ—சேவை, பசு—பராமரிப்பு ஆகியவற்

றில் லாபமும், பசுவதையில் நஷ்டமும் உண்டாகும். அப்பொழுதுதான் எல்லாரும்—ஹிந்துக்கள் ஆயினும் முசல்மானியர் ஆயினும் சரி—மதப்பற்றுல் தூண்டப்பட்டோ அல்லது தன்னல ஆசையால் உந்தப்பட்டோ—பசு பரிபாலனத்தைத் தமக்கு நலம் பயக்கும் வேலையாகக் கருதத் தொடங்குவார்கள். அப்பொழுது தான் கோசேவையும் உண்மையான பசு பராமரிப்பும் உண்டாகக்கூடும்.

## 158. இந்திய சரித்திர சபை

1942இல் சிறைக்குச் செல்லுமுன், வர்தாவிலிருந்து திரும்பியபோது, சரித்திர சபாவின் கூட்டத்திற்காக நான் காசியில் இறங்கிவிட்டேன். அப்போது சரித்திர வரலாற்றை எழுதும் வேலை பல கனவான்களின் கைகளில் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அக்பரைப் பற்றி ஒரு காண்டம் கிட்டத்தட்ட தயாராகி விட்டதாகச் சொல்லிக் கொண்டார்கள். 1942இல் அக்பர் பிறந்து நானூறு ஆண்டுகள் முடிவடைந்தன. அக்பர் பிறந்த நாளில் இப்பகுதியை வெளியிடப்பட வேண்டுமென்ற எண்ணம் இருந்தது. இது சிறைக்குப் போகும் சமயத்திற்குள் நிகழ்வதற்கு நிறைய இடையூறுகள் வந்துவிட்டன. அச்சடிப்பதற்கும் காகிதத்திற்கும் கஷ்டம் ஒருபுற மிருக்க வெடிகுண்டு மாரியினுல் கல்கத்தா மதராஸ் ஆகிய இடங்களிலிருந்து நூல் நிலையங்களும் அரும்பொருள் காட்சி சாலைகளின் சாமான்களும் பாதுகாப்பான இடங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டன. இக் காரணத்தால் தேவையான நூல்கள் இல்லாமற் போனதால் புத்தகத்தை எழுதுவது கஷ்டமாகிவிட்டது. அப்படியிருந்தும்கூட, புத்தகம் வெளியீடாகி விடுமென்ற நம்பிக்கை கொண்டிருந்தேன், ஆனுல் இயலவில்லை. நான் கைது செய்யப்பட்டதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஜயசந்திர வித்யாலங்காரும் கைது செய்யப்பட்டு கண்காணுச் சிறையில் வைக்கப்பட்டு விட்டார். அதனுல் எல்லா வேலையும் நின்றுவிட்டது. நான் வெளியே வருவதற்குச் சில நாட்களுக்கு முன்னிருந்தே சர் ஜதுநாத் சர்க்காரும் ஸ்ரீ மதுரா பிரசாதும் சரித்திர வெளியீடு வேலை மீண்டும் செய்யப்பட வேண்டுமென்று விரும்பினுர்கள். வித்துவான்களும் ஏதோ எழுதி வைத்திருந்தார்கள், வெளியிட வேண்டிய வேலை மட்டும்

தான் இருந்தது. இரண்டு காண்டங்கள் தயாராக இருந்தன. பம்பாயின் பாரதீய வித்தியா மந்திரின் நிர்வாகியாகிய ஸ்ரீ கன்னையாலால்ஜீ முன்ஷியோடு, வித்தியா மந்திர் இந்த வெளியீடு வேலையை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதாக ஏதோ பேச்சும் நடந்தது, ஆனால் கடைசியில் யாதும் முடிவு செய்ய இயலவில்லை. இதனால், தயாராகிவிட்ட காண்டங்களை, அதாவது டாக்டர் ரமேஷ்சந்திர மஜூம்தாரும் டாக்டர் அல்டேகரும் எழுதிய 'வாகாடக்' யுகத்தை ஒட்டிய ஆறாவது காண்டத்தையும் ஸ்ரீ நீலகண்ட சாஸ்திரி எழுதிய குப்த-காலம் என்ற நான்காவது காண்டத்தையும் வெளியிடலாமென்று ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆறாவது காண்டத்தை அச்சுக்கூடத்திற்கு அனுப்பியாகிவிட்டது. சிறையிலிருந்து வெளிவந்ததுமே, இந்த வேலையை நீடிக்க விடக்கூடா தென்பதாக நான் நினைத்தேன். சிம்லாவிலிருந்து திரும்பி வந்ததுமே, நான் கல்கத்தாவுக்குச் சென்றேன். அங்குச் சர் யதுநாத் சர்க்காரையும், டாக்டர் மஜூம்தாரையும் சந்தித்தேன். எல்லா விஷயங்களும் முடிவு கட்டப்பட்டன. இந்த வேலைக்காக நான் மீண்டும் ஒரு முறை சில மணி நேரத்திற்காக கல்கத்தாவில் தங்கினேன். ஆறாவது காண்டம் வெளியீடு செய்யப்பட்டு விட்டது, நான்காவது இன்னும் அச்சில் இருக்கிறது.

சில நாட்களுக்குப் பிறகு ஸ்ரீ ஜயசந்திர வித்தியாலங்கார் சிறையிலிருந்து விடுதலையானார். இனி வேலை விரைவாக நடக்குமென்று நினைத்தேன். ஆனால் ஏதோ சில காரணங்களால் சர் யதுநாத் சர்க்காருக்குக் கோபம் வந்துவிட்டது. அவர் ராஜிநாமா கொடுத்துவிட்டார். எவ்வளவோ சொல்லியும்கூட அவர் அதை மீட்டுக் கொள்ளவில்லை. இந்த வேலையில் நான் ஸ்ரீ ஜயசந்திரரின் தூண்டுதலினாலும், என் திருவெய்திய நண்பர் ஸ்ரீ காசிபிரசாத் ஜாயஸ்வாலின் நினைவின் மீது எனக்கு இருந்த ஒரு பற்றுதலாலும் நுழைந்தேன். சரித்திரத்தில் பற்றுதல் இருந்தும்கூட, வேறு வேலைகளின் சுமை நிறைய இருந்ததால், இக்காரணங்கள் இல்லாதிருந்திருந்தால், நானாக, தன் முனைப்பால், இச்சுமையை ஒருவேளை ஏற்றிருக்கமாட்டேன்.

# 159. 1946இன் அறிக்கையும் அரசாங்கத் திட்டமும்

1946இல் மார்ச்சில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பி லிருந்து ஒரு அறிக்கை செய்யப்பட்டது. அதில் இந்தியாவுடன் இருந்துவரும் சச்சரவுகளைத் தீர்த்து வைப்பதற்காக இந்தியா அமைச்சர் லார்டு பெதிக் லாரன்ஸும், சர் ஸ்டாபர்டு கிரிப்ஸும், மிஸ்டர் ஏ. வி. அலெக்சாண்டரும் இந்தியாவுக்கு வருவார்கள் என்றும், அங்குள்ள தலைவர்களோடும் வைசிராயுடனும் பேச்சு வார்த்தைகள் நடத்துவார்கள் என்றும் கூறப்பட்டிருந்தது. இந்த விஷயத்தை அறிக்கை செய்யும்போது பிரதான மந்திரி மிஸ்டர் கிலெமெண்டு அட்லீயானவர், குறுந்தொகை இனத் தாரின் உரிமைகளைக் காப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமானாலும், எந்த குறுந்தொகை இனத்தாரின் கட்சி மூலமாகவும் இந்தியா வின் அரசியல் முன்னேற்றத்திற்குத் தடை போட விடப்படாத தென்றும், இந்தியா சுதந்திரமாக வேண்டுமென்பதற்கு இங்கி லாந்து தயார் என்றும், மேலும் இந்தியா தன்னுடன் இருக்க வேண்டுமென்று இங்கிலாந்து விரும்புகிறதென்றும், ஆனால் அது சேர்ந்து இருக்குமா அல்லது தனியாகப் பிரிந்துவிடுமா என்பதை முடிவு செய்வதற்கு உரிமை இந்தியாவுக்கே இருக்குமென்றும் கூறினார். இவ்விதமாக இத்திட்டம் பல வகைகளில் திருப்தி அளிக்கக் கூடியதாகத் தோன்றிற்று. மிகச் சில நாட்களுக்குப் பிறகு, மந்திரி சபையின் மூன்று அங்கத்தினர்களும் இந்தியா வுக்கு வந்து சேர்ந்தார்கள். வைசிராயோடும், அரசாங்கத்தின் மற்ற உயர்ந்த அதிகாரிகளோடும் பேச்சுக்கள் நடத்திய பின் அவர்கள் வெவ்வேறு கட்சிகளின் முக்கிய மனிதர்களுடன் பேச் சைத் தொடங்கினார்கள். காங்கிரஸின் தலைவர் மௌலானா ஆஜா துடனும் மகாத்மா காந்திஜீயுடனும்கூட அவர்கள் பேசினார்கள். இவ்வண்ணமாக எல்லாக் கட்சிக்காரர்களோடும் பேச்சு நடத்துவ தில் பல நாட்கள் கழிந்துவிட்டன. அப்புறம் காங்கிரஸ் பிரசிடெண் டையும் லீகின் பிரசிடெண்டையும், அவரவர்களுடைய பிரதிநிதி கள் நால்வரை நியமிக்கும்படியும் அப்பிரதிநிதிகளுடன் தாம் உட் கார்ந்து சிம்லாவில் பேச்சுக்கள் நடத்த விரும்புவதாகவும் அத் தலைவர்களுக்கு எழுதினார்கள். இரு கட்சிகளின் எட்டு ஆட் களும், வைசிராயைச் சேர்த்து அவர்கள் நால்வரும் சிம்லாவில்

கூடினர்கள். பல நாட்கள் வரையில் பேச்சுக்கள் நடந்துகொண்டிருந்தன, ஆனால் யாதும் பயன் உண்டாகவில்லை. இதன்மேல், கூடிப் பேசுவதை நிறுத்திவிட்டு, தில்லியில் தம் திட்டத்தை நாட்டின் முன் சமர்ப்பிப்பதாக அறிக்கை செய்தார்கள். எல்லாரும் தில்லிக்குத் திரும்பி வந்துவிட்டார்கள். தில்லிக்குத் திரும்பி வந்து அவர்கள் அரசாங்கத்தின் பக்கத்திலிருந்து மே மாதம் 16ஆம் தேதியின் அறிக்கையை விடுத்தார்கள். அதில் தம் திட்டத்தை நாட்டின் முன் சமர்ப்பித்தார்கள்.

திட்டம் மூன்று முக்கிய பாகங்களைக் கொண்டிருந்தது. முதல் பாகத்தில் கோர்வையான காரணங்களுடன் முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கோரிக்கையானது கைகூடாதென்பதாகக் காட்டினர்கள். அது நடக்க முடியாதென்று கூறினர்கள். இதனால், இந்தியாவின் மாகாணங்களை எல்லாம் கொண்ட ஒரு சங்கம் அமைக்கப்படுமென்றும், தேசிய மன்னர்களும் அதில் சேரக்கூடியதாக அது அமையும் என்றும் கூறப்பட்டிருந்தது. இந்தியாவின் அரசியல் அமைப்பு கீழ்கண்டவாறு இருக்குமென்று கூறப்பட்டது. இந்த மத்திய சங்கத்தின் அதிகாரத்தின் கீழ் மூன்று இலாக்காக்கள் இருக்கும். அவை படை, பாதுகாப்பு ; அயல் நாட்டுகளுடன் சம்பந்தப்பட்ட விஷயங்கள் ; ரயில், தந்தி முதலியன. இந்த மூன்று இலாக்காக்களுக்குத் தேவைப்பட்டப் பணத்தைத் தண்டல் செய்வதற்கு அதற்கு அதிகாரம் உண்டு. மற்ற விஷயங்களில் எல்லாம் மாகாணங்களுக்குச் சுதந்திரம் இருக்கும். எங்கும் குறிப்பிடப்படாமல் இருக்கும் விஷயங்களும் விடுபட்டுப் போனவைகள் எல்லாமும் மாகாணங்களின் அதிகாரத்தின் கீழ் இருக்கும். மற்றொரு பாகத்தில், அரசியல் அமைப்பை புனையும் வேலை எச்சபையிடம் ஒப்படைக்கப்படுமோ அச்சபையின் திட்டம் கொடுக்கப்பட்டிருந்தது. மூன்றாவதில், தற்கால அரசாங்கத்தை அமைப்பதைப் பற்றிக் கூறியிருந்தது.

இந்தியா விரும்பினால் அது தன்னைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து பிரித்துக் கொள்ள முடியும் என்பது அறிக்கையில் தெளிவாகச் சொல்லப்பட்டிருந்தது. அரசியல் அமைப்பைப் புனையும் சபாவின் உரு கீழ்க்கண்டவாறு இருக்கும். ஏல்லா மாகாணங்களின் அசெம்பிளிகளும் தத்தம் மாகாணத்தின் ஜனத்தொகையின் பத்து லக்ஷம் ஒவ்வொன்றுக்கு ஒரு ஆள் வீதம் தேர்ந்தெடுக்கும். இவர்கள் தாம் அரசியல் அமைப்பு புனையும் சபையின் அங்கத்தினர் ஆவர். அத்தேர்தலில் அசெம்பிளியின் முசல்மானிய அங்கத்தினர்கள் (பஞ்சாபில், சீக்கிய அங்கத்தினர்

கள்) தம் பிரதிநிதியைத் தனியாக வாக்களித்து தேர்ந்தெடுப்பார்கள். மற்ற எல்லாரும் ஒன்று கூடியே வாக்களித்து பிரதிநிதிகளைத் தேர்வார்கள். தில்லி—அஜ்மீர்—மேர்வாடாவுக்கு அங்கிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு இச்சமயத்தில் மத்திய அசெம்பிளிக்கு அனுப்பப்பட்டிருப்பவர்களே பிரதிநிதிகளாகக் கொள்ளப்படுவார்கள். கூர்குக்கும், பலுச்சிஸ்தானுக்கும் பிரதிநிதிகள் தனியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இவர்கள் கூடி தேச மன்னர்களின் பிரதிநிதிகளோடு பேசி அவர்களுக்கு எப்படி, எவர் பிரதிநிதிகளாக அமைவார்கள் என்பதை நிச்சயம் செய்வார்கள். அவர்களுடைய எண்ணிக்கையும் பத்து லக்ஷ ஜனத்தொகைக்கு ஒரு பிரதிநிதி வீதம் அமையும். இவ்வண்ணமாக பிரிட்டிஷ் இந்தியாவுக்கு மொத்தம் 292 பிரதிநிதிகள் இருப்பார்கள். அவர்களில் 210 முஸ்லிம் அல்லாதார், 78 முஸ்லிம்கள், 4 சீக்கியர்கள் இருப்பார்கள். மாகாணங்கள் மூன்று பிரிவுகளாக வகுக்கப்படும். முதல் பிரிவில் மதராஸ், பம்பாய், ஐக்கிய மாகாணம், பீகார், மத்திய மாகாணம், ஒரிசா ஆகியவை அடங்கும். இரண்டாவது பிரிவில் பஞ்சாப், வடமேற்கு எல்லை மாகாணம், சிந்து, பலுசிஸ்தானும் மூன்ருவது பிரிவில் வங்காளமும் ஆசாமுமாக அமையும். பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியல் அமைப்புப் புனையும் சபையின் முதல் கூட்டத்தில் எல்லா அங்கத்தினர்களும் கலந்து கொள்வார்கள். அக்கூட்டத்தில் தலைவர் முதலான பதவியாளர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். நிகழ்ச்சி முறையும் நிச்சயம் செய்யப்படும். அதற்குப்பின் மூன்று பிரிவுகளின் அங்கத்தினர்களும் தனித்தனியே கூடுவார்கள். அவை ஒவ்வொன்வொன்றும் தன் பிரிவில் சேர்ந்திருக்கும் மாகாணங்களுக்காக அரசியல் அமைப்பைப் புனையும். அப்பொழுது, அது, அப்பிரிவுக்கு என்று ஒரு பொது (கூட்டு) அரசியல் அமைப்பு அவசியமா இல்லையா என்பதையும் அப்படி அவசியமானல், அதில் என்ன விஷயங்கள் அடங்கியிருக்கும், அதற்கு என்ன உரு இருக்கும் என்பதையும் நிச்சயம் செய்யும். முடிவில் அரசியல் அமைப்புப் புனையும் (மூல) சபையின் கூட்டம் மீண்டும் நடைபெறும். அதில் தேச மன்னரின் பிரதிநிதிகளும் கலந்து கொள்வார்கள். அப்போது அகில பாரதீய ஐக்கியத்தின் அரசியல் அமைப்புத் தயார் செய்யப்படும். அரசியல் அமைப்பு தயார் ஆன பின், அதன்படி மாகாணங்களின் அசெம்பிளிகளுக்குத் தேர்தல் நடந்தேறியதும், எந்த மாகாணமாவது விரும்பினல், அது தன் அசெம்பிளியின் வோட்டின் மூலமாக, தான் அச்சமயத்தில் சேர்ந்திருக்கும் பிரி

வில் சேர்ந்திராமல் தனியே போவதற்கு அதற்கு உரிமை இருக்கும். குறுந்தொகை சாதியாரின் உரிமைகளைக் காப்பதற்காக ஒரு தனி சபை அமைக்கப்படும். அதில் அச்சாதியார்களின் பிரதிநிதிகள் இருப்பார்கள். அது கூறும் பாதுகாப்பு உபாயங்கள், முறைகள், அதனுடைய முடிவுகள் ஆகியவற்றின் மீது அரசியல் அமைப்பு புனையும் சபை ஆலோசனை செய்து அரசியல் அமைப்பில் தேவைப்பட்ட கட்டுப்பாடுகளை அமைக்கும். தற்காலத்திற்காக வைசிராயானவர், முற்றிலும் புதிதாக தம்முடைய கவுன்ஸிலை நியமிப்பார். அதில், கூடுமானவரையில், இந்தியாவின் வெவ்வேறு கட்சிகளின் பிரதிநிதிகளை நியமிப்பார். 1935இன் அரசியல் அமைப்பு இன்று மாற்றப்படாதாயினும், மேலும், அதன்படி வைசிராயின் கையில் கடைசி அதிகாரம் இருக்குமாயினும், எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்குக் கவுன்ஸிலின் அபிப்பிராயப்படியே வேலை நடத்தப்படும். மேலும், அதில் அவர் கூடுமான வரையில் தலையிடமாட்டார்.

இத்திட்டத்தில் எக்கட்சியின் கோரிக்கைகளும் முற்றிலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லையாயினும் முற்றிலுமே தள்ளப்படவுமில்லை. எல்லாக் கட்சிகளுக்கும் ஏதாவது ஒன்று அளித்து மகிழ்விக்க முயற்சி செய்யப்பட்டிருந்தது. லீகின் பாகிஸ்தான் கோரிக்கை ஏற்கப்படவில்லைதான், ஆனால் அதோடவே மாகாணங்களை இவ்வண்ணமாக மூன்று பிரிவுகளாகப் பிரித்து, எந்த மாகாணங்களை லீகானது பாகிஸ்தானில் சேர்க்க விரும்பியதோ அவை இரண்டு பிரிவுகளிலும்எஞ்சிய மாகாணங்கள் எல்லாம் ஒரு பிரிவிலும் வைக்கப்பட்டு விட்டன. பாகிஸ்தானை ஏற்றுக் கொள்ளாததினால் லீகு அதிருப்தியும் மற்றவர்கள் திருப்தியும் பட்டார்கள், ஆனால் மாகாணங்கள் இவ்விதமாகப் பிரிக்கப்பட்டது லீகுக்குப் பிடித்திருந்தது. இப்பிரிவினையில் அது பாகிஸ்தானின் வித்தைக் கண்டு மகிழ்ந்தது. மற்றவர்களுக்கு இப்பிரிவினை பிடிக்கவில்லை. அவர்கள், இதில் ஒரு சண்டையின் சல்லி வேரைக் கண்டார்கள். அச்சண்டையானது பின்னால் மெல்ல மெல்ல இடத்தைப் பற்றிக் கொண்டு, முடிவில் பாகிஸ்தானாக உருக்கொண்டு விடலாம் என்று அஞ்சினார்கள். பஞ்சாப் வங்காளம் இரண்டிலும் ஹிந்துக்கள் ஜனத்தொகை அதிகமாக இருந்த பகுதிகளும், மேலும், முசல்மானியர்களின் ஜனத்தொகை மூன்றில் ஒரு பங்குக்கு அதிகமாக இல்லாதிருந்த ஆசாம் மாகாணமும் இவற்றில் சேர்க்கப்பட்டிருந்தன என்ற விஷயத்தால் இந்த எதிர்ப்பு மேலும் கடுமையாகி விட்டது.

இத்திட்டத்தைப் பற்றி ஆலோசனை செய்யச் செயலாற்றுக் குழுவின் இருக்கை பல நாட்கள் நடந்து கொண்டிருந்தது. இடையிடையில் காபினெட்-மிஷனையும் வைசிராயையும் காங்கிரஸ் பிரஸிடெண்டும், சிற்சில சமயங்களில் மற்ற அங்கத்தினர்களும் பார்த்து வந்தார்கள். செயலாற்றுக் குழுவானது, அத்திட்டத்தின் மிக முக்கியமான குறைகளாக அது எண்ணியவற்றின் மீது அவர்களுடைய கவனத்தை ஈர்த்தது. அத்திட்டத்தின் உட்கருத்தைக் கவனித்தால், மாகாணங்கள் எப்பிரிவில் சேர்க்கப்பட்டிருக்கின்றனவோ, அப்பிரிவில் அவை சேரக் கட்டுப்பட்டன அல்ல என்ற அபிப்பிராயத்தைச் செயலாற்றுக் குழு வெளியிட்டது. அரசியல் அமைப்பு புனையப்பட்டபின் ஒவ்வொரு மாகாணமும் தன் அசெம்பிளியின் விருப்பத்தின்மேல் அப்பிரிவிலிருந்து பிரிந்து போய்விட அதற்கு உரிமையுண்டென்பது வெளிப்படையாக இருந்தது. ஆனால், அது மட்டுமன்றி, அரசியல் அமைப்பைப் புனைவதற்காகத் தனிக் கூட்டத்தில் கலந்து கொள்ளாமலிருப்பதற்கும் ஒவ்வொரு மாகாணத்திற்கும் உரிமை உண்டென்று செயலாற்றுக் குழு கட்சி பேசிற்று. எல்லை மாகாணம், ஆசாம் இரண்டுமே இவ்விதமாகப் பலவந்தமாகப் பிரிவில் சேர்க்கப்படுவதற்கு விரோதமாக இருந்தன. இதனால், தொடக்கத்திலிருந்தே, அவை தனியாக இருப்பதற்கு அவற்றிற்கு உரிமை கிடைக்க வேண்டும். திட்டம் முழுவதையும் படித்துப் பார்த்தால் இப்பொருள் வெளிப்படுகிறதென்பதாக செயலாற்றுக் குழு கூறியது.

ஆரம்பத்திலிருந்தே பிரிவுகளில் சேராமலிருக்கலாமென்பது அதன் கருத்து அன்று எனவும், ஆனால் அரசியல் அமைப்பு புனையப்பட்டபின் மாகாணங்களுக்குப் பிரிந்து போவதற்கு கட்டாயம் உரிமை உண்டு எனவும் மிஷன் தன் அபிப்பிராயத்தை அளித்தது.

செயலாற்றுக்குழு தன் அபிப்பிராயத்தைக் கை விடாது உறுதியாக நின்றது. தன் அபிப்பிராயப்படியே திட்டத்தைப் பயன்படுத்தத் தீர்மானித்தது. முஸ்லிம் லீகும் திட்டத்தைக் கடுமையாக ஆராய்ந்தது. பாகிஸ்தானை ஏற்றுக் கொள்ளாதது நியாயமன்று எனவும், ஆயினும் மாகாணப் பிரிவுகளில்தான் பாகிஸ்தானின் முளையைத் தான் காண்பதாகவும், தன் குறிக்கோளை நிறைவேற்றுவதற்காகத்வே திட்டத்தை ஏற்றுக்கொள்வதாகவும் கூறியது.

இதற்குப் பிறகு, சில நாட்கள் வரையில், இப்போதைக்காக

அரசாங்கம் அமைப்பதைப்பற்றிப் பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருந்தது. 12 பேர்கள் கொண்ட அரசாங்கத்தை அமைக்கலாமென்றும், அவர்களில் ஐவர் முசல்மானியர்களாகவும், ஐவர் ஹிந்துக்களாகவும் இருவர் மற்றவர்களாகவும் இருக்கலாமென்றும் வைசிராய் ஆரம்பத்தில் நினைத்தார். காங்கிரஸுக்கு இப்பேச்சு ஒருவிதத்திலும் பிடிக்கவில்லை. ஜனத்தொகையில் ஹிந்துக்களின் எண்ணிக்கை முசல்மானியர்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்தாலும் இந்த அமைப்பில் ஹிந்துக்களின் எண்ணிக்கையும் முசல்மானியர்களின் எண்ணிக்கையும் சமமாக இருந்தது என்பது ஒரு காரணம். இரண்டாவதாக சிம்லா மகாநாட்டின் போது, 1945 ஜூலையில், லார்டு வேவலின் திட்டத்தில், ஐந்து முசல்மானியர்களும் ஹரிஜனங்களின் பிரதிநிதியும் நீங்கலாக ஹிந்துக்களுக்கு ஐந்து இடங்கள் அளிக்கப்பட்டிருந்தன. மற்றக் குறுந்தொகை இனத்தாரின் எண்ணிக்கையும் இரண்டிற்கு அதிகமாக இருந்தது. இப்புது அமைப்பில் ஹிந்து முஸ்லிம் ஒப்புமை என்ற கேள்வி மட்டுமில்லை, இது லார்டு வேவலின் தீர்மானத்தை விட எவ்வளவோ அதிகக் கெடுதலாக இருந்தது. வேவல் தீர்மானத்தைக் காங்கிரஸானது அப்போது சண்டைக் காலமாக இருந்த காரணத்தால், எப்படியோ ஏற்றுக்கொண்டது. இப்போது சண்டைக் காலம் இல்லை. இப்போது காங்கிரஸுக்கு அந்த நெருக்கடி இல்லை. ஆகையால் காங்கிரஸ் இப்போது இதை எப்படி ஏற்றுக்கொள்ள இயலும்? 15 அங்கத்தினர்களைக் கொண்ட அரசாங்கத்தை அமைத்தால்தான் குறுந்தொகை இனத்தாருக்காகத் தேவைப்பட்ட அளவுக்குப் பிரதிநிதிகளை எடுத்துக் கொள்ள முடியுமென்பதாகவும், மேலும் எல்லாரையும் திருப்தி செய்ய முடியுமென்பதாகவும் காங்கிரஸ் எண்ணியது.

வைசிராயானவர் 12க்குப் பதிலாக 13 பேர் கொண்ட அரசாங்கத்தை அமைப்பதாகக் கூறினார். அதில் 5 முசல்மானியர், ஒரு ஹரிஜன், 5 மற்ற ஹிந்துக்களும் மற்றக் குறுந்தொகை இனத்தாரின் பிரதிநிதிகள் இருவரும் இருப்பார்கள். காங்கிரஸ் இதையும் ஏற்றுக்கொள்ள வில்லை. காங்கிரஸ், லீக், இருவருடைய அபிப்பிராயத்தைக் கேட்டு அரசாங்கம் அமைப்பதற்குச் செய்யப்பட்ட முயற்சி பலிக்கவில்லை என்றும், இனி தாமே ஒரு தீர்மானத்தைச் சமர்ப்பிப்பார்கள் என்றும் மிஷினும் வைசிராயும் அறிக்கை விடுத்தார்கள். 15-6-46ஆம் தேதி அவர்களுடைய தீர்மானம் விளம்பரம் செய்யப்பட்டது. அதில், அவர்கள் 14 ஆட்களின் பெயர்களைக் கொடுத்தார்கள். அரசாங்கத்தில் சேரும்படி

வைசிராய் அவர்களுக்கு அழைப்பு அனுப்பினர். இவற்றில் ஐந்து லீக் முசல்மானியர், ஐந்து காங்கிரஸ்காரர்களான ஹரிஜன் அல்லாத ஹிந்துக்கள், ஒரு காங்கிரஸ் ஹரிஜன், ஒரு சீக்கியர், ஒரு கிறிஸ்துவர், ஒரு பார்ஸி ஆகியவர்களின் பெயர்கள் கண் டிருந்தன. எப்போதாவது வைசிராயிடம் போய் வந்து கொண் டிருந்த பண்டித் ஜவஹர்லால்ஜீயிடம், வைசிராயானவர் பேச் சுக்கு நடுவில் பெயர்களைக் கேட்டார். அவர் அப்படியே சில பெயர்களைக் கூறினர். மிஷனின் அறிக்கையில், ஒன்று தவிர மற்றக் காங்கிரஸ்காரர்களின் பெயரும் ஹரிஜனின் பெயரும் பண்டித்ஜீ கொடுத்தவைகளே. கிறிஸ்தவரின் பெயரையும் சீக்கி யரின் பெயரையும்கூட அவர் கொடுத்திருந்தார். முசல்மானியர் களிலும் பண்டித்ஜீ கொடுத்த பெயர்களில் நான்கு இருந்தன. ஆனல் ஒரு லீகைச் சேராத முசல்மானின் பெயருக்குப் பதிலாக லீக் முசல்மானின் பெயரையும், ஒரு காங்கிரஸ் ஹிந்துக்குப் பதிலாக மற்ரெரு காங்கிரஸ் ஹிந்துவின் பெயரையும், புதிதாக ஒரு பார்ஸியின் பெயரையும் வைசிராய் வெளியிட்டார்.

இத்தீர்மானத்தை ஏற்கலாமா, வேண்டாமா என்ற விஷயத் தைப் பற்றி நாங்கள் யோசித்துக் கொண்டிருந்தோம். இதற் கிடையில் மிஸ்டர் ஜின்னவுக்கும் வைசிராய்க்கும் பேச்சு நடந்தது.

அவருடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு, வைசிராயானவர் அவர் சொல்லியதில் பல விஷயங்களை ஏற்றுக்கொண்டார். இவை பத்திரிகைகளில் எப்படியோ ஒரு வகையாக வெளியாகிவிட்டன. அதைக் கண்டு நாங்கள் திடுக்கிட்டோம். நாங்கள் கேட்டதின் பேரில், வைசிராய் தம் கடிதங்களிலிருந்து, தாம் ஜின்னவின் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டு எழுதிய பாகங்களை மட்டும் பிரதி எடுத்து அனுப்பி வைத்தார். இதில் முக்கியமான விஷயங் கள் இவைதாம். அவையாவன, அரசாங்கத்தின் எண்ணிக்கை 14க்கு மேலிருக்காது ; குறுந்தொகை இனத்தாரின் இடம் காலி யாஞல் லீகின் அபிப்பிராயத்தைக் கேட்டுக்கொண்டுதான் அந்த இடத்திற்கு ஆள் நியமிக்கப்படும் ; லீகின் பெரும்பான்மை அபிப் பிராய பலம் கொண்டில்லாத காரியம் எதையும் அரசாங்கம் செய்யாது. இவ்விதமாக அரசாங்கத்தை அமைப்பதில் மட்டும் அன்று, அதன் அன்ருட நடவடிக்கைகளிலும்கூட லீகின் அனுமதி யில்லாமல் ஒன்றும் செய்ய இயலாது. நாங்கள் கொடுத்த லீக் அல்லாத முசல்மானின் பெயரை வைசிராய் விட்டுவிட்டபின், மேலும் ஐந்து லீக் முசல்மான்களின் எண்ணில் யாதும் குறைவு

படாதென்பது தெளிவாகிவிட்டபின், செயலாற்றுக் குழுவானது தன் ஹிந்து இடங்களில் ஒன்றுக்கு எவராவது ஒரு தேசீய முசல் மானின் பெயரைக் கொடுக்க வேண்டுமென்பதாக நினைக்கத் தொடங்கியது. நாங்கள் இப்படி நினைத்துக் கொண்டிருக்கும் போது, முசல்மானின் பெயரைக் காங்கிரஸ் கொடுக்க வேண்டா மென்றும், ஏனெனில் அதை எற்க இயலாதென்றும் கூறி வைசி ராயின் கடிதம் கிடைத்தது. செயலாற்றுக் குழு இந்த நிலைமையை ஒருபொழுதும் ஒத்துக்கொள்ள இயலாது. ஏனெனில் அப் பெயரை ஏற்காததின் பொருள், காங்கிரஸ் வெறும் ஹிந்துக்களின் கூட்டம் என்பதும் முஸ்லிம் லீக்தான் முஸல்மான்களுக்குப் பிரதி நிதியாக இருக்கும் உரிமையைப் பெற்றிருக்கிறது என்பதும் ஆகும்.

எல்லா விஷயங்களைப்பற்றியும் யோசித்துச் செயலாற்றுக் குழுவானது தற்போதுக்காக அரசாங்கத்தை அமைப்பதற்காக வகுக்கப்பட்ட,16-6-46 திட்டத்தை ஏற்காமல் தள்ளிவிட்டது. அர சியல் அமைப்பைப் புனையும் சபையின் திட்டத்தைப்பற்றி என்ன செய்வது என்பது இப்போது அதன் முன் நின்ற கேள்வி. அதனுடைய குற்றங்குறைகளையும் நாங்கள் கொண்ட பொருளை யும் எடுத்துரைத்துவிட்டோம். நாங்கள் கொண்ட பொருளின் படியே நாங்கள் அதைப் பயன்படுத்துவோம் என்பதையும் கூறி விட்டோம். இவ்விதமாக, எங்கள் அபிப்பிராயப்படி அதை உபயோகிப்போம் என்று கூறி நாங்கள் அதை ஒரு வகையாக ஏற்றுக்கொண்டு விட்டோமாயினும், தெளிவான சொற்களால், வெட்டு ஒன்று துண்டு இரண்டாகத் தீர்த்துக் கட்டித் தெள்ளத் தெளிவாக எதுவும் கூறவில்லை. இதனுல் அதைப்பற்றி மீண்டும் ஒருமுறை ஆலோசனை செய்வது அவசியமாயிற்று. குழுவில் அதை ஏற்க விரும்பாத ஓரிரண்டு ஆட்கள் நீங்கலாக, மற்ற எல்லா அங்கத்தினர்களும் அதை ஏற்க வேண்டும் என்ற கட்சியில் இருந்தார்கள்; முக்கியமாக, மகாத்மா காந்தி அதை ஏற்பதை வலிமையாக ஆதரித்து வந்தார். இதே சமயத்தில் ஆசாமி லிருந்து ஒரு தந்தி வந்தது. அதில், வங்காளத்தில் அரசியல் அமைப்பு புனையும் சபையைத் தேர்ந்தெடுப்பதற்காக வகுக்கப் பட்ட முறையைப் பின்பற்றி ஆசாமில் ஒவ்வொரு அபேக்ஷகரும், தாம் அத்திட்டத்தில், பற்பல விஷயங்களோடு மாகாணங்களை மூன்று பிரிவுகளாகக் கூறு போடும் விஷயத்தையும் கூறியிருக்கும் நிபந்தனைக்கும் உடன்பட்டு அச்சபையின் அங்கத்தினர் ஆக ஒத்துக்கொள்ளுகிருர் என்று சத்தியம் செய்ய வேண்டுமாம்

என்ற செய்தி கண்டிருந்தது. இத்தந்தியைக் கொடுத்தவர், அபேக்ஷகர் ஒவ்வொருவரும் முதலில் இருந்தே பிரிவுகளை ஒத்துக் கொள்ள உறுதி அளிக்க வேண்டும் என்ற பொருள் கொண்டார். ஆசாமும், நாங்கள் எல்லாரும்கூட பிரிவுகளில் சேருவதற்கு விரோதமாக இருந்தோம். இதனால் சிறிது ஐயம் உண்டாகத் தொடங்கியது, ஆயினும் இன்னும் கருத்து உறுதிப்படவில்லை. ஏனெனில், இந்திய அரசாங்கத்தால் மாகாணங்களுக்கு மாதிரிக்காக அனுப்பப்பட்ட விதிமுறையின் பிரதியை அரசாங்கம் எங்களுக்கும் அனுப்பியிருந்ததாயினும், அந்த விதி முறையை நாங்கள் இன்னும் முற்றிலும் பார்க்கவில்லை.

அந்த நாளின் வேலையை முடிக்கும் வேளை வந்துவிட்டது. இதனால் அடுத்த நாள் யோசிக்கலாமென்று இவ்விஷயம் தள்ளிப் போடப்பட்டது. இதற்கிடையில் நாங்கள் விதிமுறைகளை நன்ருகப் பார்த்துக் கொண்டுவிடலாம் என்று எண்ணப்பட்டது. மேலே கூறப்பட்டத் தந்தியால் மகாத்மாஜீயின் உள்ளத்தில் ஐயம் வந்துவிட்டது. பிரார்த்தனையின் போது அவர் இந்த விஷயத்தைத் தம் பேச்சிலும் சொல்லிவிட்டார். இதன் பயன் என்ன ஆகுமென்ருல் காங்கிரஸ் அத்திட்டத்தையும் ஏற்காமல் தள்ளிவிடும் என்பதுதான். அடுத்த நாள் நாங்கள் கூடினோம். எங்களுடைய அபிப்பிராயத்தில், தந்தி அனுப்பியவர் விதி முறைக்குக் கொடுத்த அர்த்தம் வரவில்லை. இதற்கிடையில் மகாத்மாஜீயானவர் காபினெட் மிஷன்காரர்களைப் போய் பார்த்தார். அந்தச் சத்தியத்திற்கு இது பொருள் அன்று என அவர்களும் கூறினார்கள். ஆயினும் எப்படியோ இந்த அர்த்தம் தோன்றினால், மேலும் மகாத்மாஜீக்கு அவ்விதி முறைகளின் சொற்களால் ஏதாவது தர்ம சங்கடம் உண்டாகுமானால், அதனுடைய சொற்களையும் தாம் மாற்றி மேலும் தெளிவாக்கி விடுவதாகவும் கூறினார்கள். ஏனெனில் இது என்றுமே அவர்களுடைய நோக்கம் அன்று.

விதி முறை மாற்றவும் பட்டது. நாங்கள் இதனால் அத்திட்டத்தை ஏற்றுக் கொண்டோம். செயலாற்றுக் குழு மே 16ஆம் தேதியின் (1946) நீள்காலத் திட்டத்தை ஏற்றுக் கொண்டது என்ற நிலைமை இப்போது நிலவியது. அதை ஏற்றுக் கொள்வதில் அதன் குற்றங் குறைகளை அறிந்தே செய்திருந்தாலும், மேலும் அத்திட்டத்திற்குத் தான் கொடுத்த பொருள்களைக் கைவிடாவிட்டாலும், இடைக்கால அரசாங்கத்தை ஒட்டிய ஜூன் 16ஆம் தேதி (1946) திட்டத்தை மட்டும் செயலாற்றுக்குழு

ஏற்காமல் தள்ளிவிட்டது. ஒரு கடிதத்தை எழுதி, தீர்மானத்தின் பிரதி ஒன்றையும் அத்துடன் வைத்து மிஷனுக்கும் வைசிராய்க்கும் அனுப்பி, அவர்களுக்கும் இம்முடிவு தெரிவிக்கப்பட்டது. மற்றொரு புறத்தில் லீகானது நீள்காலத் திட்டத்தை முன்னமே ஏற்றுக்கொண்டு விட்டது. இடைக்காலத் திட்டத்தைப்பற்றிக் காங்கிரஸின் முடிவுக்காகக் காத்துக் கொண்டிருந்தது. காங்கிரஸின் முடிவு வைசிராய்க்கு அனுப்பப்பட்ட அதே நாள் மிஸ்டர் ஜின்னு வைசிராயைக் கண்டார். வைசிராய் எங்கள் கடிதத்தை அவரிடம் காட்டிவிட்டார். ஜூன் 16ஆம் தேதித் திட்டத்தை எந்த கட்சியாவது ஏற்காமல் தள்ளிவிடுமானுல் அப்படியும்கூட, வைசிராயானவர் இடைக்கால அரசாங்கத்தை அமைப்பதற்குச் செய்து வரும் முயற்சியைத் தொடர்ந்து செய்து வருவார் என்றும், மே 16ஆம் தேதித் திட்டத்தை ஏற்றுக்கொண்ட கட்சிகளின் பிரதிநிதிகளைக் கொண்டு இடைக்கால அரசாங்கத்தை அமைப்பார் என்றும் அத்திட்டத்தில் கூறப்பட்டிருந்தது. இப்போது நிலைமை என்னவென்ருல், காங்கிரஸ், லீக் இரண்டுமே மே மாதம் 16ஆம் தேதித் திட்டத்தை ஏற்றுக் கொண்டுவிட்டன. இதனுல், ஜூன் 16ஆம் தேதித் திட்டத்தின் எட்டாம் பிரிவுபடி இவ்விரு கட்சிகளின் பிரதிநிதிகளைக் கொண்டேதான் வைசிராய் இடைக்கால அரசாங்கத்தை அமைக்க முடியும். அவர் அப்படித் தான் செய்ய விரும்பினுர். இந்த விஷயத்தை, மிஸ்டர் ஜின்னு தம்மைக் கண்டபோது, அவரிடம் சொல்லிவிட்டார்.

காங்கிரஸானது ஜூன் 16ஆம் தேதித் திட்டத்தை ஏற்றுக் கொள்ளாது தள்ளிவிடுமானுல் இடைக்கால அரசாங்கத்தில் லீகுக்கே முதன்மை இருக்குமென்பதாகவும், காங்கிரஸ்காரர்கள் அதில் சேராது வெளியே நின்றுவிடுமானுல் லீகின் கைக் குள்ளாகவே அதிகாரம் வந்துவிடுமென்பதாகவும் லீக்காரர்கள் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தார்கள். மிஸ்டர் ஜின்னு வைசிராயைச் சந்திக்கும் சமயம் வரையில், ஜூன் 16ஆம் தேதி திட்டத்தை லீகும் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில் அது காங்கிரஸின் முடிவுக்காகக் காத்துக் கொண்டிருந்தது. வைசி ராய் இப்படிக் கூறியது அவர்களுக்குக் கஷ்டமாயிருந்தது. அப்படியும் அவர்கள் அன்றிரவே ஜூன் 16ஆம் தேதித் திட்டத் தையும் லீக் ஏற்கிறதென்பதாக நிச்சயம் செய்து விட்டார்கள். அடுத்த நாள் மிஷனும் வைசிராயும் சேர்ந்து, காங்கிரஸானது ஜூன் 16ஆம் தேதித் திட்டத்தை ஏற்காமல் தள்ளிவிட்டதனுல் அத்திட்டத்தின் எட்டாம் நிபந்தனையின்படி, இப்போது காங்

கிரஸ், லீக் ஆகிய இரண்டின் பிரதிநிதிகளையும் கொண்டு வைசிராய் இடைக்கால அரசாங்கத்தை அமைப்பார் என்பதாகவும் ஆயினும் மிஷன் விரைவில் இங்கிலாந்துக்குத் திரும்பிச் செல்ல வேண்டுமாதலால், அந்த அரசாங்கத்தை அமைப்பதற்குச் சிறிது காலம் பிடிக்கக்கூடுமென்பதாகவும், அதுவரையில் அரசாங்கத்து அதிகாரிகளைக் கொண்டே 'ஒப்புக்கு வேலை நடத்திச் செல்லும்' (கெயர் டேக்கர்) அரசாங்கம் ஒன்று அமைத்துக் கொள்ளப்படுமென்பதாகவும் அறிக்கை செய்து விட்டார்கள். இந்த முடிவின்படி மிஷன்கார்கள் திரும்பிச் சென்றுவிட்டார்கள். 'ஒப்புக்கு வேலை நடத்திச் செல்லும்' அரசாங்கம் அமைக்கப் பட்டுவிட்டது.

வைசிராயும் மிஷனும் செய்த இந்த முடிவின் மீது லீகுக்கு அதிக கோபம். அதனுடைய முக்கியமான மனிதர்கள் கடு கடுப்பான அறிக்கையை விடுத்தார்கள். லீக் கவுன்ஸிலின் இருக்கை ஒன்று கூட்டப்பட்டது. அவர்கள் இவ்வண்ணமாக கூறினார்கள். "காங்கிரஸ் மே 16ஆம் தேதி திட்டத்தை ஏற்கவில்லை, அதை அது இவ்வளவு என்றில்லாமல் கடுமையாகக் குறை கூறியது, மேலும் அதனுடைய அர்த்தத்தை அது அனர்த்தமாக்கிய விதம் அதை ஒப்புக் கொள்ளாததற்குச் சமானமே. மேலும், அத் திட்டத்தின் மூல விஷயமாகிய மாகாணப் பிரிவினையை ஏற்க வில்லை என்பதாகத் தன் நோக்கத்தையும் காட்டிவிட்டது. அதை முறிக்கும் நோக்கத்துடன்தான் அது அரசியல் அமைப்பு புனையும் சபைக்குச் செல்ல விரும்புகிறது" என்றார்கள். இதற்கிடையில் அகில பாரதீயக்குழுவின் கூட்டம் பம்பாயில் நடந்தது. அதில் புதிய தேர்தலில் நியமிக்கப்பட்ட தலைவர் பண்டித் ஜவஹர் லால் நேரு தலைமை வகித்தார். அங்குக் காங்கிரஸ் சோஷியலிஸ்டு கட்சி எதிர்த்த பின்னும்கூட, குழுவானது செயலாற்றுக் குழுவின் முடிவையே ஆதரித்தது. இதற்குப் பிறகு எல்லா மாகாணங்களின் அசெம்பிளிகளும் அரசியல் அமைப்பு புனையும் சபையின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்தன. இத்தேர்தலில் காங்கிரஸானது, காங்கிரஸுக்கு வெளியிலிருந்த முக்கிய மனிதர்களையும் தேர்ந்தெடுக்கும் கொள்கையைக் கடைப்பிடித்தது. காங்கிரஸ்காரர்களும், வேறு சிலரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பெரும்பாலும் எல்லா மாகாணங்களிலுமே, லீகின் அங்கத்தினர்கள்தாம் அசெம்பிளியில் முசல்மானியர் அங்கத்தினர்களாக இருந்தார்கள். அதனால், பெரும்பாலும் லீகின் அங்கத்தினர்கள் தாம் அரசியல் அமைப்பைப் புனையும் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்

பட்டார்கள். ஏனெனில் முசல்மானியர்கள் மட்டும்தான் முசல் மானியரைத் தேர்ந்தெடுக்கலாம். எல்லை மாகாணத்திலிருந்து மூன்று முசல்மானியரைத் தேர்ந்தெடுக்கலாம். அவர்களுள் மௌலானு அபுல்கலாம் ஆஜாதும் கான் அப்துல் கபார்கானும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஐக்கிய மாகாணத்தில் ஸ்ரீ ரபி அகமது கித்வாயும், தில்லியிலிருந்து ஸ்ரீ ஆசப் அலீயும், வங்காளத்தில் ஸ்ரீ பஜ்லுல் ஹக்கும் ஆக இவர்கள்தாம் லீகுக்கு வெளியில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட முடிந்தார்கள். பீகாரில் எந்த (காங்கிரஸ்) முசல்மானும் தேர்ந்தெடுக்கப்பட முடியவில்லை. டாக்டர் அம்பேத்கர் வங்காளத்தில் இருந்து தேர்ந்தெடுக்கப் பட்டார். முக்கிய காங்கிரஸ்காரர்களும், மற்றப் புகழ் வாய்ந்த அரசியல் அமைப்பு நிபுணர்களும், பழைய தேச பக்தர்களும் இச்சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இவ்விதமாக அரசி யல் அமைப்பு புனையும் சபையின் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக் கப்பட்டார்கள். மிஸ்டர் ஜின்னு பஞ்சாபிலிருந்து தேர்ந்தெடுக் கப்பட்டார்.

தேர்தல் நடந்தபிறகு லீக் கவுன்ஸிலின் கூட்டம் நடந்தது. லீகானது மே 16, ஜுன் 16 திட்டங்கள் இரண்டையுமே ஏற்க வில்லையென்பதாகவும், அவை முன்பு ஏற்கப்பட்டிருந்த பழைய தீர்மானங்களைத் தான் மீட்டுக் கொள்வதாகவும் முடிவு செய்தது. மேலும், பாகிஸ்தானை நிறுவுவதற்காக 'நேரான நடிவடிக்கை களை'க் கையாளப் போவதாகவும் நிச்சயம் செய்தது. அது வரை யில், இப்போதைக்கு, பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்திருந்த பட்டங்களைத் திருப்பிக் கொடுத்துவிடும்படி தன் அங்கத்தினர் களுக்குக் கட்டளையிட்டது. அக்கூட்டத்தில் மிகவும் காரசார மான சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. அவை காங்கிரஸ், பிரிட் டிஷ் அரசாங்கம் இரண்டிற்கும் விரோதமாகச் செய்யப்பட்டன. அவர்கள் இருவருடனும் சண்டை போடுவார்கள் போலத் தோன்றியது. இதற்குப் பிறகுதான் காங்கிரஸ் செயலாற்றுக் குழுவின் கூட்டம் வர்தாவில் நடந்தது. அது மீண்டும் ஒரு முறை தெளிவான சொற்களால் மே 16இன்[1] திட்டத்தை ஏற்றுக் கொண்டது.

இப்பொழுது வைசிராயின் முன் இந்த நிலைமை வந்து நின்றது. அதாவது ஒரு பக்கத்தில் காங்கிரஸ் மே 16இன்

---

1. மூலத்தில் 'ஜுன்' என்று இருக்கிறது. 'மே' என்று இருக்கவேண்டும் போலிருக்கிறது.

திட்டத்தை ஏற்றுக் கொண்டது, அதே சமயத்தில் ஜுன் 16இன் திட்டத்தைத் தள்ளிவிட்டது. லீகானது தன் கவுன்ஸிலின் கூட்டத்தில் இரண்டு திட்டங்களையுமே ஏற்காமல் அடியோடு தள்ளிவிட்டது. இதனால் ஜுன் 16 திட்டத்தின் 8ஆம் பிரிவுபடி லீகை விட்டு விட்டு இடைக்கால அரசாங்கத்தை அமைப்பது இப்போது அவசியமாகிவிட்டது. வைசிராய் பண்டித் ஜவஹர் லால் நேருவை இடைக்கால அரசாங்கத்தை முன்னிட்டு அவருடைய தீர்மானத்தைச் சமர்ப்பிக்கும்படி எழுதிக்கேட்டார். பண்டித்ஜீ, மிஸ்டர் ஜின்னாவை இடைக்கால அரசாங்கத்தில் சேரும்படி அழைத்தார், ஆனால் அவர் மறுத்துவிட்டார். அப்போது பண்டித்ஜீக்கு, லீகை விட்டு விட்டு இடைக்கால அரசாங்கத்திற்காகப் பெயர்களை யோசிப்பதைத் தவிர வேறு வழியில்லை. வைசிராயைக் கண்டபின் அவர் பெயர்களைப் பற்றி யோசனை செய்ய ஆரம்பித்தார். இவ்வேலைக்கு உதவி பெறு வதற்காக அவர் செயலாற்றுக் குழுவின் பார்லிமெண்டரி கிளைக் குழுவின் கூட்டத்தை தில்லியில் நடத்தினர். அக்குழு மூன்று அங்கத்தினர்களைக் கொண்டது, சர்தார் வல்லப்பாயீ படேல், மௌலானா அபுல்கலாம் ஆஜாத், நான்.

## 160. கல்கத்தா படுகொலை

நாங்கள் இவ்வேலையில் ஈடுபட்டிருக்கும்போது கல்கத்தாவில் பயங்கரமான இனவாரிக் கலகம் நடந்துவிட்டதென்பதாக அங்கிருந்து செய்தி வந்தது. லீகானது தன் புதிய கொள்கை யைப் பிரசாரம் செய்வதற்காக ஆகஸ்டு 16ஆம் தேதி நாள் வைத்திருந்தது. அன்று எல்லா இடங்களிலும் ஹர்த்தாலைச் செய்யும்படியும் சபைகளை நடத்தும்படியும் கட்டளையிட்டிருந்தது. இம்முடிவின்படி கல்கத்தாவிலும் ஹர்த்தால் முதலியன நடை பெறுவதாக இருந்தன. வங்காளத்திலும் சிந்திலும் லீக் மந்திரி சபைகள் வேலை புரிந்து வந்தன. இந்த இரண்டு மாகாணங்களி லும் மந்திரி சபைகள் அந்நாளைப் பொது விடுமுறையாக விட்டு விட்டன. காங்கிரஸ் சுமார் 27–28 ஆண்டுகளாக ஹர்த்தாலைக் கொண்டாடுவதற்கு நாள் வைத்து வந்திருக்கிறது, பல ஹர்த் தால்களில் முற்றிலும் வெற்றியும் பெற்றிருக்கிறது. ஆனால், அது அரசாங்கத்துக்கு விரோதமாக இருந்தபோதும், அல்லது

அரசாங்கத்தின் மூக்கணைக் கயிறு அதன் கையில் இருந்த போதும்; அது என்றுமே அரசாங்கத்தின் அதிகாரத்தை இவ் வேலைக்குப் பயன்படுத்தியதில்லை. லீகானது இந்த முதல் சமயத்திலேயே அந்த அதிகாரத்தை கெட்ட வகையில் பயன் படுத்தியது. இதை எல்லாரும் எதிர்த்தார்கள். விடுமுறை விடப்பட்டதினால் பலர் வேலைக்குச் செல்லாமல் சும்மா இருப்பார் கள் என்றும், ஊர்வலம், கூட்டங்கள், ஹர்த்தால் முதலானவற்றில் இத்தனை சோம்பேறிகள் கண்டிப்பாக இடையூறு விளைவிக்கக் கூடும் என்றும் முக்கியமாகக் கூறப்பட்டது. ஆனால் தலைமை மந்திரி மிஸ்டர் சுஹராவர்தீ இதைக் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. அமைதியைக் காப்பதற்காகவே விடுமுறை விடப் பட்டதாக அவர் தலைகீழ்ப் பாடம் படித்தார். அன்று காலை யிலிருந்தே கடைகளை மூடுவதில் பலவந்தம் தொடங்கிவிட்டது. அதோடு கூடவே சூறையாடுதலும் கொலைகளும் பின் தொடர்ந்து விட்டன.

16ஆம் தேதியிலும், 17ஆம் தேதி மாலை வரையிலும் கலகங் களை அடக்க அரசாங்கம் யாதும் சிறப்பாக நடவடிக்கைகள் செய்யவில்லை. இதற்குள் ஆயிரக்கணக்கான பேர் கொல்லப் பட்டுப் போயினர். ஆயிரக்கணக்கான வீடுகள் கொள்ளை அடிக்கப்பட்டுப் போயின. கொளுத்தப்பட்டு விட்டன. இதைத் தடுப்பதற்கு முயற்சி செய்யப்பட்டது, ஆனால் தீமை பெரிதாக வளர்ந்துவிட்ட பிறகு! நான்கு நாட்கள் வரையில் நிறையக் கொலைகளும் அட்டூழியங்களும் நடந்து கொண்டிருந்தன.

6–7 ஆயிரம் பேர் கொலையுண்டனர் என்பதாகச் சொல்லப் படுகிறது. தெருக்களில் இரண்டு மூன்று நாட்கள் வரையில் பிணங்கள் கிடந்தன. 3000க்கு மேற்கொண்ட பிணங்கள் இங்குமங்குமிருந்து எடுக்கப்பட்டன. பல பிணங்கள் தரைக்கு கீழ் உள்ள சாக்கடைகளில் போடப்பட்டிருந்தன. அவற்றின் நாற்றத்தால் தெருவில் நடமாடுவது கடினமாகிவிட்டது. இவ் விதமாகவே, கொளுத்தப்பட்ட வீடுகளுக்குள்ளும் ஹுக்லி ஆற்றிலும் எத்தனை பிணங்கள் எறியப்பட்டு விட்டன என்பது தெரியாது. ஹவுரா பாலத்தின் மீதிருந்து பலர் தூக்கி எறியப் பட்டும், மோதி இடித்துத் தள்ளப்பட்டும் கங்கையில் மூழ்கடிக்கப் பட்டார்கள் என்று கேள்வி. குழந்தைகள், கிழவர்கள், அப்பாவி பெண்கள், எவர் மீதும் பாதகர்கள் இரக்கம் காட்டவில்லை. எல்லாரும் அவர்களுடைய கொடிய செயலுக்கு இரையானார்கள். இதுமாதிரியான படுகொலை கல்கத்தாவில் இதற்குமுன் என்றுமே

நடந்ததில்லை. நாதிர்ஷாவின் தில்லி படுகொலை நீங்கலாக இந்தியாவின் சரித்திரத்தில் வேறு எங்குமே இதுபோல நடக்க வில்லை. லீகின் முக்கிய தலைவர்களில் ஒருவரான சர் பிரோஷ் கான் நூனவர், சங்கேஜ் கானும் ஹலாகூ கானும்கூட செய்யாத அளவுக்குத் தாம் ஒரு நிலைமையை உண்டாக்கி விடுவார் என்று ஒரு சமயம் கூறினர். லீகின் 'நேர் நடவடிக்கை'க்கு ஒரு மாதிரி மக்களுக்கு காணக் கிடைத்துவிட்டது. அன்று, மற்ற இடங்களிலும்கூட இங்கும் அங்குமாக, ஏதாவது கலகம் கண்ணில் பட்டது. ஆனல் எங்கும் யாதும் சிறப்பாகக் கூறுவதற்கு இல்லை. அச் சின்னஞ்சிறிய சம்பவங்களைக் கல்கத்தாவின் முன்னிலையில் ஒரு கணக்கில் சேர்க்க இயலாது. டாகா, பனரஸ், அலாகாபாத்து, ராணீகஞ்சு, தில்லி, இன்னும் பல இடங்களிலும் ஏதாவது நடந்தது. ஆனல் அங்கிருந்த அரசாங்க அதிகாரிகள் நிலைமையைச் சமாளித்துக் கொண்டார்கள். மிஸ்டர் சுஹராவர்தீயும் இவ்வேலையில் ஈடுபட்டார். எல்லாரையும் அமைதியாயிருக்கும்படி வேண்டிக்கொண்டார். கல்கத்தாவின் கொலைகளைப் பற்றி, எப்பொழுதும் லீகை ஆதரித்து வந்த 'ஸ்டேஸ்ட்மன்' போன்ற ஆங்கிலேய பத்திரிகையானது லீக் மந்திரி சபையானது அமைதியை நிலையுறச் செய்வதற்குத் தன்னைத் தகுதியற்றதாக நிரூபித்துக் கொண்டது என்றும் அது விலக வேண்டுமென்றும் அடிக்கடி எழுதியது. இவ்விதமாகவே இங்கிலாந்தின் பத்திரிகைகள் பலவும் எழுதின. அவற்றில் 'டைம்ஸூம்' ஒன்று. தேசீயப் பத்திரிகைகளைப் பற்றிக் கூற வேண்டுமா ? ஆனல் இவ்வளவுக்கும் லீக்காரர்களின் செவியில் ஒன்றுமே ஏறவில்லை. 1932–39இல் காங்கிரஸ் மந்திரி சபைகளுக்கு விரோதமாக யாதொரு காரணமுமின்றி அவ்வளவு குய்யோ முறை செய்த இதே ஆட்கள் இந்த என்றுமில்லாத கொலை பாதகத்தைப் பற்றியும் கோரமான அக்கிரமங்களைப் பற்றியும் (எதைச் செய்வதில் அவர்களுடைய கை இருந்ததாகத் தெளிவாகத் தெரியாவிட்டாலும் குறைந்த பக்ஷம் அவற்றைப் பார்த்துக்கொண்டு கண்ணை மூடிக் கொண்டிருந்தார்களோ அதே ஆட்கள்) மௌனமாயிருந்தார்கள். ஜின்னுவானவர், கலகம் செய்தவர்களுக்குத் தண்டனை கட்டாயமாகக் கிடைக்க வேண்டுமென்பதாகவும், தமக்கு முழு விவரமும் கிடைக்காததால் இதில் குற்றம் யாருடையதென்பதைத் தாம் கூற முடியாதென்பதாகவும், லீக்காரர்கள் லீகின் ஆணைக்கு விரோதமாக நடந்து கொண்டிருக்க மாட்டார்கள் என்று தமக்கு முழு நம்பிக்கை

உண்டென்பதாகவும் கூறுவதோடு நிறுத்திக் கொண்டார். அப்படி யாராவது நடந்து கொண்டிருந்தால் மாகாண லீக் அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளும் என்றும் கூறினர். அவருடைய முக்கிய பத்திரிகையாகிய 'டான்' நடந்ததில் சிறிதளவைத்தான் வெளியிட்டது. மேலும், காலந்தாழ்ந்து செய்திகளை அச்சிட்டது மட்டுமின்றி, பல நாட்கள் வரையில் இந்த விஷயத்தைப் பற்றி ஒன்றுமே எழுதவில்லை. இத்தீய சம்பவத்தால் நாடு முழுவதிலும் கலவரம் பரவியது. இதனல் இன்னும் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. ஆரம்பத்தில் ஹிந்துக்கள் தாம் கொல்லப்பட்டார்கள் என்பதாகவும், ஆனல், பிறகு ஒரு விதமான உதவியும் அவர்களுக்கு அரசாங்கத்திடமிருந்து கிடைக்காததும், அவர்கள் தம்மைத் தாமே காத்துக் கொண்டார்கள் என்பதாகவும், அதற்குப்பிறகு எத்தனை பேர் இறந்தார்களோ அவர்களில் முசல்மானியர்களே அதிகமாக இறந்திருப்பார்கள் என்பதாகவும் கேள்விப்பட்டது. எது எப்படியாயினும் சரி, ஹிந்துக்கள் அதிகமாக இறந்தார்களோ, அல்லது முசல்மானியர்களோ, இறந்தவர்களில், பெரும்பாலோர் குற்றமற்றவர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்கள் கலகத்தில் சேர்ந்து கொள்ளவில்லையாயினும் அதற்கு இரையானர்கள்! பொருள் கோடிக் கணக்காக நஷ்டமாயிற்று. பெரும்பகுதி ஹிந்துக்களின் பொருள் தான் சேதமாயிற்று அல்லது கொள்ளையடிக்கப்பட்டது.

## 161. இடைக்கால அரசாங்கத்திற்கு முன்

இங்கு ஒரு பக்கத்தில் இடைக்கால தேசீய அரசாங்கத்தைப் பற்றி பேச்சு நடந்து கொண்டிருந்தது. மற்ெருரு பக்கத்தில் இவ்விதமான கொலை, கொள்ளை நடந்து கொண்டிருந்தது. இக் காரணத்தால் இந்த வேலைக்குத் தடை வரக்கூடாதென்பதாக வைசிராயும் பண்டித் ஜவஹர்லாலும் நிச்சயம் செய்து விட்டார்கள். எங்களைக் கலந்து யோசனைக் கேட்டுக் கொண்டு, பண்டித்ஜீ வைசிராய்க்கு தேசிய அரசாங்கத்திற்காக பெயர்களைக் கொடுத்துவிட்டார். இப்பெயர்களில் என் பெயரும் இருந்தது. இன்றிலிருந்து ஒரு வாரத்திற்குப் பிறகு அதாவது செப்டம்பர் ஆரம்பத்திருந்து இப்படி நியமிக்கப்பட்டவர்கள் அரசாங்கத்தின்

வேலையைத் தாங்கி நடத்த ஆரம்பித்துவிடுவார்கள். இன்று வரையில் மட்டும் இக் கதையை எழுதி முடிக்க விரும்புகிறேன்.

இப்படித்தான் சிம்லாவிலும் என் பெயர் முன்பு கொடுக்கப் பட்டது. மேலே நான் கூறியபடி, நான் மிகவும் தயங்கி னேன். முடிவில் உயர்திரு பாபூ (மகாத்மாஜீ) சொல்லியதின் பேரில் நான் அதை ஏற்றுக் கொண்டேன். என்னை ஒரு தர்ம சங்கடம் மிகவும் துன்புறுத்திக் கொண்டிருந்தது. அச் சமயத்தில் சண்டை நடந்து கொண்டிருந்தது. அரசாங்கத்தின் பொறுப்பை ஏற்பதின் பொருள் அச்சண்டையிலும் உதவி புரிவது என்பதாகும். சிம்லா மகாநாடு முறிவுற்ற பிறகு, சில நாட்களுக்குப் பின் இச்சண்டை முடிந்துவிட்டது. இதனால் காபினேட் மிஷனோடும் வைசிராயோடும் பேச்சு வார்த்தை தொடங்கியபோது, அந்தக் கடமைப்பாட்டு இடைஞ்சல் பழைய உருக்கொண்டில்லை. மேலும், பண்டித் ஜவஹர்லாஜீ என் பெயரை முன்னும் சொல்லியிருந்தார். இவ்விதமாக ஜூன் 16இன் திட்டத்தில் என் பெயரும் இருந்தது. ஆனால் அத் திட்டத்தை ஏற்காமல் தள்ளியபின், அப் பேச்சுத் தொங்கலில் விழுந்துவிட்டது. இதற்கிடையில், மீண்டும் இப்பேச்சு நடந்த போது, இடைக்கால அரசாங்கத்தில் பண்டித்ஜீ சேர்ந்து கொண்ட பிறகு நான்தான் மேரட் காங்கிரஸ் தலைமைக்காக விட்டு வைக்கப் படுவேன் என்பதாக எண்ணப்பட்டு வந்தது. அரசியல் அமைப்பு புனையும் சபையின் சபாபதியாக நான்தான் நியமிக்கப் படுவேன் என்பதாகவும், எனக்கு இடைக்கால அரசாங்கத்தில் இடமளிக்கப்படாதென்பதாகவும்கூட சிலர் நினைத்தார்கள். இந்த விஷயத்தைப் பற்றி நான் எவரிடமும் எதுவும் கூறுவதற்கு இல்லை. எது நிச்சயிக்கப்பட்டாலும் அது எனக்குச் சம்மதம். ஆனால் என் சொந்த விருப்பத்தைக் கேட்டால், இடைக்கால அரசாங்கத்தில் அங்கத்தினன் ஆவதைவிட மற்ற இரண்டும் தான் எனக்குப் பிடிக்கின்றன. ஆனால் இந்த விஷயம் எனக்குப் பிடிப்பதைப் பொறுத்து இல்லை. மற்றவர்கள் எல்லாரும் எல்லா விஷயங்களையும் தீர ஆலோசித்து எனக்கு இப்பதவியை அளிப் பதுதான் சரி எனக் கருதினார்கள். என் பெயர் கொடுக்கப் பட்டாயிற்று. இந்த முடிவெல்லாம் தில்லியில் என் முன்னிலையிலே தான் செய்யப்பட்டன. ஓய்வு எடுத்துக் கொள்வதற்காக நான் பிலானிக்குப் போய்விட்டேன். அங்கிருந்து ஒரு நாளைக்காக ஜயபூருக்குச் சென்றேன். ஜயபூரில்தான் என்னை தில்லிக்கு வரச்சொல்லி தந்தி கிடைத்தது. அங்கிருந்து தில்லிக்குச்

சென்று விட்டேன். எங்களுக்குள் பெயர்கள் நிச்சயிக்கப்பட்டபின் நான் பிலானிக்குப் போய்விட்டேன். ஆகஸ்டு கடைசி வரையில் அங்குத் தங்கியிருக்க முடியுமென்பதாக நினைத்தேன். ஏனெனில் இதற்கு முன் இடைக்கால அரசாங்கத்தில் வேலையை ஏற்றுக் கொள்வதற்கு ஒழியாது. ஆயினும் இங்கு வந்தவுடன், ஆகஸ்டு (1946) 27ஆம் நாளே செயலாற்றுக் குழுவின் கூட்டம் நடைபெறு மென்பதாகவும், அதற்கு உயர்திரு மகாத்மாஜீயும் வருகிருர் என்பதாகவும், இதனுல் ஆகஸ்டு 27க்குள் திரும்பிப் போக வேண்டுமென்பதாகவும் தெரிய வந்தது.

சென்ற இருபத்தாறு ஆண்டுகளாக நான் இராப்பகலாகக் காங்கிரஸ் வேலையில் ஈடுபட்டிருக்கிறேன். நோய் வாய்ப்பட்டால் தான் வீட்டிற்குப் போவேன். அங்குள்ள வேலைக்கு, தமையனுர் இறந்தபின், சில நாட்கள் வரையில் சிறிது பொழுது அளிக்க வேண்டியிருந்தது. மற்றப்படி குடும்ப வேலையிலிருந்து முற்றிலும் ஒதுங்கியே இருந்தேன். நான் வாழ்வதற்காக எங்கும் ஏதாவது ஒரு இடத்திற்கு ஏற்பாடு செய்யவில்லை. ஆச்ரமத்தில் இருப்பேன். அல்லது எங்காவது சென்றுல் நண்பர்களோடு தங்குவேன். பட்னுவில் மிருத்யுஞ்சனின் வீட்டில் மூன்று நான்கு நாட்கள்தாம் இருந்திருப்பேன். இவ்விதமாக ஒரேவிதமான வாழ்க்கையை நடத்தி வந்துவிட்டேன். எந்த அலுவலகத்திலும் என்றும் உட்கார்ந்து வேலை செய்தது கிடையாது. சிறிது காலம் பட்னு முனிசிபாலிடியின் சேர்மேன் என்ற முறையில் அலுவலக வேலை செய்தேன். ஆனுல் அந்த அனுபவம் மிகவும் குறைவாகவும், சில நாட்களுக்கு மட்டுமே இருந்ததால் அது ஒரு கணக்கில் சேராது. காங்கிரஸின் அலுவலகத்தின் வேலையைச் சமாளிக்க வேண்டியிருந்தது. ஆயினும் அங்கும் அலுவலகத்து வேலையை விட மக்களுடன் தொடர்பு கொள்ளும் வேலையைத்தான் அதிக மாகச் செய்தேன். அவ்வேலை முற்றிலும் வேறு வகையானது என்பது வெளிப்படை. இப்பொழுது ஒரு புதுவகையான வாழ்க்கையில் நுழைய வேண்டும்.

இதற்குப் பிறகு, எதிரில் நிற்கும் கடினமாக சிக்கல்களை எவ்விதமாகத் தீர்ப்பது? எனக்கு எந்த இலாகா கொடுப்பார்கள் என்பது தெரியவில்லை.

புது ஆட்களோடு பழகவேண்டி வரும். அவர்களில் பலர் அல்லது அவர்களின் தோழர்கள் எங்களை அல்லது எங்கள் தோழர்களைச் சிறையில் அடைத்து விதவிதமான கொடுமைகளைச் செய்தவர்களாக இருப்பார்கள். ஆயினும் என் மனத்தில் யார்

பாலும் யாதொரு வேற்றுமை எண்ணமும் கிடையாது. எல்லா ரையும் ஒன்ருக பாவித்து என்ஞல் வேலையைச் செய்ய முடியும் என்று நினைக்கிறேன். ஆனல் அரசாங்கத்துக்கு வெளியிலும் கஷ்டங்களை எதிர்ப்பட வேண்டும். லீக் என்னென்ன செய்யும் என்பது தெரியாது. பொது மக்களின் போக்கு எப்படியிருக்கு மென்பது தெரியாது. நான் உண்மையோடும் ஓரவஞ்சனையில்லா மலும் எல்லாருக்கும் தொண்டு புரிவேனுனல் பலன் நன்ருகவே அமையும். என் நோக்கம் அதுவே. மேற்கொண்டு இறைவனின் கையிலிருக்கிறது.

பிலானீ
24 ஆகஸ்டு 1946

முற்றிற்று.

# பிற்சேர்க்கை

இந்நினைவுகளை எப்பொழுது எழுதத் தொடங்கினேன், எப்படி எழுதப்பட்டது என்பதை இப்புத்தகத்தின் 152ஆம் அதி காரத்தில் குறிப்பிட்டிருக்கிறேன். இடைக்கால அரசாங்கம் அமைக்கப்படும் வரையில் உள்ள செய்திகள்தாம் இதில் எழுதப் பட்டிருக்கின்றன என்பதையும் இப்புத்தகத்தின் கடைசியில் கூறி யுள்ளேன். இன்றைக்குச் சுமார் நான்கு மாதங்களுக்கு முன் இப்புத்தகத்தை எழுதி முடித்தேன். இதற்கிடையில் பல விஷ யங்கள் நிகழ்ந்துவிட்டன. அவை முக்கியமானவை. அவற்றை இப்பிற்சேர்க்கையாகக் கொடுப்பது நன்றெனத் தோன்றுகிறது.

1946 செப்டம்பர் 2ஆம் நாள் இடைக்கால அரசாங்கம் அமைக்கப்பட்டது. இதில் 12 மந்திரிகள் இருந்தார்கள். அவர் களின் பெயர்—சர்வஸ்ரீ ஜவஹர்லால் நேரு, சர்தார் வல்லப்பாயீ படேல், சரத் சந்திரபோஸ், ராஜகோபாலாசாரியார், ஆஸப் அலீ, டாக்டர் மத்தாய், ஜகஜீவன்ராம், சர் சபாத் அகமதுகான், சர்தார் பல்தேவ் சிங், பாபா, அலீஜஹீர், நான். சர்தார் வல்லப் பாயீ படேலும், ஸ்ரீ ஜகஜீவன் ராமும் நானும் அப்போது பிர்லா பவனில் தங்கியிருந்தோம். அங்கிருந்தவர்கள் எங்களை மங்கல வாழ்த்துடன் புறப்பாடு செய்து வைத்தார்கள். அங்கிருந்து

நாங்கள் உயர்திரு காந்திஜீயிடம் சென்று, மற்றத் தோழர்களுடன் காந்திஜீயின் வாழ்த்தைப் பெற்றுக்கொண்டு எங்கள் வேலையை ஒப்புக் கொள்வதற்காக வைசிராயிடம் சென்றோம்.

என் பொறுப்பில் உணவு, விவசாய இலாகாக்கள் கொடுக்கப்பட்டன. உணவுக் கஷ்டம் நாடெங்கும் மிகவும் கடுமையாக இருந்தது. முக்கியமாகத் தென்னாட்டில், மக்கள் அரிசியை மட்டுமே உணவாகக் கொள்ளும் பகுதிகளில், மிகக் கடுமையாக இருந்தது. 1945இல் மழை மிகக் குறைவு. நெல் விளைச்சல், பல இடங்களில், முக்கியமாகத் தென்னாட்டில், தீய்ந்துவிட்டது. குளிர் காலத்திலும் மழை பெய்யவில்லை. இதனால் தை அறுவடையும் குறைவாகிவிட்டது. முதலில் இருந்தே, சண்டைக் காலத்திலேயே அரிசிக் குறை அதிகமாகிவிட்டது. ஏனெனில் பர்மாவிலிருந்து அரிசி வருவது நின்றுவிட்டது. இந்தியாவின் சில பாகங்களில் அங்குள்ளவர்களின் உணவுக்கு வேண்டிய அளவுக்கு அரிசி விளைவதில்லை. இக்குறையை பர்மா அரிசியைக் கொண்டு சரிகட்டி வரப்பட்டது. அது வருவது நின்றுவிட்டதும் பெரும் கஷ்டம் வந்துவிட்டது. வங்காளப் பஞ்சத்தின் காரணங்களில் இதுவும் ஒன்று. 1946இன் ஆரம்பத்திலிருந்தே இந்த ஆண்டில் அரிசிக் குறைவு அதிகமாக இருக்குமென்பதாகவும், எங்காவது பஞ்சம் வந்துவிடக் கூடாதே என்பதாகவும் அச்சம் இருந்து வந்தது. இதனால் இந்திய அரசாங்கமானது வெளிநாடுகளிலிருந்து அரிசியை வரவழைப்பதற்காக ஏற்பாடு செய்ய எண்ணியது. இந்நாட்களில் உலகமெங்கும் அரிசிக் கஷ்டம் இருந்து வருகிறதால் சர்வதேச சங்கம் ஒன்று அமைக்கப்பட்டது. அது எங்கு நிறைய அரிசி கிடைக்கக் கூடுமென்பதை எல்லா நாடுகளிலும் விசாரித்தறிந்து அதை அரிசிக் குறைபாடு உள்ள நாடுகளுக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறது. அதனிடம் இந்தியா தனக்கு அரிசி வேண்டுமென்பதாகக் கோரிக்கை செய்தது.

வெளிநாடுகளில், முக்கியமாக அமெரிக்காவில், இங்குள்ள நிலைமை தெரிய வந்தது. அவ்விடத்து முன்னாள் ராஷ்டிரபதி ஹுவெர் எல்லா நாடுகளிலும் அரிசிக் கஷ்ட நிலைமையின் தன்மையைப் பார்த்துக் கொண்டே இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். இங்கிருந்த கேடான நிலைமை அவர் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. உடனே உதவி புரியும்படி அவர் கூறினர். இதற்குப் பிறகுதான் அமெரிக்காவிலிருந்து சிலர் அரசாங்கம் மூலமாக இன்றி, தனியார் என்ற முறையில் நிலைமையைக் காண வந்தார்கள். விவசாயம், உணவு பொருள் சம்பந்தமான நிலையங்களின்

நிபுணரான டாக்டர் சுல்ட்ஜ் இவர்களின் தலைமையானவர். அவரும் இங்குள்ள கேடான நிலைமையைக் கண்டு மனமுருகினுர். இதன் பயனாக, பல்நாடு கூட்டுக் கழகம் இந்தியாவுக்கு அரிசி அளித்தது. ஆயினும் கேட்ட அளவுக்கு அன்று, அதைவிட மிகக் குறைவாகத்தான். இதைவிட அதிகமாகக் கொடுப்பதற்கு அதற்கு வழியில்லையென்பதுதான் இதற்குக் காரணம். ஏனெனில் அது மற்ற நாடுகளையும் கவனிக்க வேண்டியிருந்தது. நான் இவ்வேலையை ஏற்றுக்கொண்ட நாட்களில், நிலைமை மிகவும் நொய்மையாக இருந்தது. என்றைக்காகவது ஒருநாள் அரிசி யில்லாமல் மக்கள் இறக்கத் தொடங்குவார்கள் என்ற அச்சம் புலப்பட்டது. நம் நாட்டிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் கிடைக்கக் கூடியதைப் பற்பல பகுதிகளுக்கு, தேவைக்கு ஏற்ற வாறு, பங்கிடப்பட்டு வந்தது. நான் வேலைக்கு வந்ததுமே, உயர் திரு காந்திஜீ முதலில் கூறியதே சரியென்பதைக் கண்டேன். வெளிநாடுகளின் மீது நாம் அதிக நம்பிக்கை கொள்ள முடியா தென்று அவர் கூறினுர். ஏனெனில் அங்கிருந்து அரிசி வருவ தற்கு ஆயிரம் இடையூறுகள் ஏற்படலாம். நம் நாட்டையும், நம் மக்களையும் நம்புவதே நமக்குச் சரியென்பதாக அவர் கூறியிருந் தார். நான் நிலைமையை விரைவில் புரிந்துகொண்டு, ஒரு வேண்டுகோளை வெளியிட்டேன். நிறைய அரிசி உற்பத்தி செய் யும்படியும், எவ்வளவுக் குறைவாக முடியுமோ அவ்வளவுக்கு குறைவாக அரிசியைச் செலவு செய்யும்படியும், எவ்வளவு மிச்சம் பிடித்து மற்றவர்களுக்குக் கொடுக்க முடியுமோ அவ்வளவைக் கொடுக்கும்படியும் மக்களைக் கேட்டுக் கொண்டேன்.

வெளிநாடுகளிலிருந்து வரக்கூடியதை வற்புறுத்தி வாங்கி உள்நாட்டில் கிடைக்கக் கூடியதையும் கொண்டு அரிசியைச் செல விடுவதில் எவ்வளவு செட்டுப் பிடிக்க முடியுமோ அவ்வளவும் செய்யப்பட்டது. இராப்பகலாக கவலை சூழ்ந்து நின்றது. இப்படி நான் மட்டும் அன்றி என் இலாகாவின் ஊழியர்கள் அனைவருமே என்னைவிட அதிகமாகக் கவலை கொண்டிருந்தார்கள். ஏனெனில், இதுவரையில், பஞ்சத்தால் சாவு நிகழ்வதைத் தடுக்கும் பொறுப்பு அவர்கள் மீதுதான் இருந்தது. நான் இப்பொழுதுதான் வந் தேன். என்னுடைய இலாகாக்களில் எனக்கும் மற்ற ஊழியர் களுக்கும் இடையில் யாதொரு கருத்து மாறுபாடும் உண்டாக வில்லை என்பதைப்பற்றியும் எல்லாரும் ஒன்றுகூடித் தம் முழு ஆற்றலுடன் நாட்டைத் துன்பத்தினின்று விடுவிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தோம் என்பதைப்பற்றியும் எனக்கு பெருமகிழ்ச்சி

உண்டாயிற்று. பொது மக்களும் துன்பத்தோடு மிக்க தைரியத்துடனும் பொறுமையுடனும் போராடினுர்கள்.

இந்தியாவைப் போன்று விவசாய வாழ்க்கையைத் தலைமையாகக் கொண்ட நாடு தன் உணவுப் பொருளைத் தானே உற்பத்தி செய்து கொள்ள வேண்டுமென்றதில் இருந்த நம்பிக்கை சில நாள் அனுபவத்தினுலேயே எனக்கு மேலும் உறுதியாகிவிட்டது. இதற்காக வெளிநாடுகளை நம்பியிருப்பது சரியன்று. இது யாதும் எளிதான இன்னல் அன்று. நம்முடைய ஜனத்தொகை பெருகிக் கொண்டே போகிறது. விவசாயத்திற்குத் தகுதியான நிலம் இனி அதிகமாக மிச்சமில்லை. நிறைய முன்னமே விவசாயத்திற்குக் கொண்டுவரப்பட்டு விட்டது. முன்காலத்தில்கூட 5–6 கோடி மணங்கு அரிசி ஆண்டு தோறும் வெளியிலிருந்து வரவழைக்க வேண்டியிருந்தது. இப்பொழுது ஜனத்தொகை பெருகிவிட்டதால் அரிசியின் தேவை அதிகமாகிவிட்டது. மேலும் அதிகரித்துக் கொண்டே செல்லும். இக்குறையை நிறைவேற்றுவது விவசாய இலாக்காவின் வேலை. மேலும், நம் மக்களுக்குக் கிடைக்கும் உணவானது அவர்களுடைய உடல் நலம் மேன்மையடையும் தன்மைத்தாக இல்லையென்பது தெரிந்த விஷயம். அதில் பல வகையான குறைபாடுகள் இருக்கின்றன. அவற்றை நிறைவேற்ற வேண்டும். எனக்கு இந்த விஷயங்களில் நிறைய ஈடுபாடு உண்டு. இதை எப்படிச் செய்யலாம் என்ற முயற்சியில் இராப்பகலாக ஈடுபட விரும்புகிறேன். அரசாங்கம் ஏதாவது வழியைத்தான் காட்டமுடியும். புத்திமதிகூற முடியும். சிறிதளவு உதவியும் புரிய முடியும். ஆனுல் வேலை பொது மக்களுடையதே. நம் பொது மக்கள் சிறப்பாக விவசாயத் தொழிலைத்தான் செய்கிருர்கள். அவர்களைக் கொண்டுதான் இந்தப் பொறுப்பை நிறைவேற்ற வேண்டும்.

முஸ்லிம் லீக் எப்படியாவது இடைக்கால அரசாங்கத்திலும் அரசியல் அமைப்பு புனையும் சபையிலும் சேர வேண்டுமென்று லார்டு வேவல் இடையருது முயற்சி செய்து வந்தார். நாங்கள் நியமிக்கப்பட்டதற்குச் சில நாட்களுக்குப் பிறகு அவர் மிஸ்டர் ஜின்னுவுடன் கடிதப் போக்கு வரவைத் தொடங்கினுர். பிறகு பண்டித் ஜவஹர்லால் நேரு அவருடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டிய ஒரு சமயமும் வந்தது. போபாலின் நவாப் இடையில் நின்று காங்கிரஸுக்கும் மிஸ்டர் ஜின்னுவுக்கும் ஏதாவதோர் ஒப்பந்தம் உண்டாக வேண்டும் என்று முயற்சி செய்தார். ஆனுல் இம்முயற்சி பலிக்கவில்லை. கடைசியில் மிஸ்டர் ஜின்னு

வைசிராயின் சம்மதத்தைக் கொண்டு, காங்கிரஸின் சம்ம தத்தைக் கேட்காமலே, தம்முடைய ஆட்களை இடைக்கால அரசாங்கத்தில் சேர அனுப்புவதாக முடிவு செய்தார். நாங்கள் மூன்று இடங்களை ஒழித்துவிட்டோம். முஸ்லிம் லீகின் அங்கத் தினர் ஐந்து பேர் நியமிக்கப்பட்டார்கள். இந்நியமனத்தைப் பற்றிச் சிறிதளவு எழுதுவது பொருத்தமற்றதாகாது. 1946 ஜூன் 16இன் அறிக்கையை ஒட்டி காபிநெட் மிஷனும் வைசிரா யும் பேசியபோது, மே 16இன் அறிக்கையை ஏற்றுக் கொண்ட வர்களே இடைக்கால அரசாங்கத்தில் சேர முடியுமென்றும், அந்தச் சமயத்தில் லீக், காங்கிரஸ் இரண்டுமே அதை ஏற்றுக் கொண்டு விட்டதால், இரண்டின் அங்கத்தினர்களைக் கொண்டு தான் அந்த இடைக்கால அரசாங்கம் அமைக்கப்படக்கூடும் என்றும் கூறினார்கள். அச்சமயத்தில் காங்கிரஸ் அதில் சேரத் தயாராக இல்லை. இதனால் அச்சமயத்தில் இடைக்கால அரசாங் கம் அமைக்கப்படவில்லை. இதனால் கோபம் மூண்டு லீகின் கவுன் ஸிலானது, தான் மே 16, ஜூன் 16 இரண்டின் அறிக்கைகளையும் ஏற்றிருந்த தீர்மானத்தை மீட்டுக் கொள்வதாக முடிவு செய்தது.

அக்டோபரில் லார்டு வேவல் லீகின் அங்கத்தினர்களை நிய மிக்க விரும்பியதும் லீகானது மே 16இன் அறிக்கையை ஏற்றுக் கொண்டதா இல்லையா என்ற கேள்வி எழுந்தது. அதை ஏற்றுக் கொள்வதின் பொருள், அது அரசியல் அமைப்பு புனையும் சபை யில் கலந்துகொண்டு அதன் நடவடிக்கைகளை நிறைவேற்றும் என்பதாகும். நாங்கள் கேட்டதின் பேரில் லார்டு வேவலானவர் இடைக்கால அரசாங்கத்தில் சேருவதின் பொருள் மே 16இன் அறிக்கையை லீக் ஏற்றுக் கொள்கிறது என்பதுதான் என்று தாம் லீகுக்கு எடுத்துரைத்து விட்டதாக எங்களுக்குச் சமா தானம் கூறினார்.

இடைக்கால அரசாங்கத்தில் சேருவதற்கு முன் நாங்கள் எல்லாரும் ஒரு காபிநெட்டைப் போல ஒருமித்து வேலை புரிவோம் என்பதாகத் தீர்மானித்திருந்தோம் என்பது மற்றொரு விஷயம். இதன் பொருள், எங்கள் எல்லாருக்கும் பொதுப்பட்ட பொறுப்பு இருக்கிறது என்பதாகும். அதாவது ஒவ்வொரு மந்திரியின் நடவடிக்கைக்கும் முழு காபினெட் பொறுப்பாளி ஆகும். ஒருவர் நீங்கவேண்டி வந்தால் அல்லது நீக்கப்பட்டால், காபிநெட் முழு வதுமே விலகிவிடும். இவ்விதமாக, ஒவ்வொரு மந்திரியும் தம் சித்தப்படியும் தம் விருப்பப்படியும் வேலை புரியாமல் எல்லாரு மாகக் கூடி வேலை புரிவார்கள். அவர்களைப் பிரித்து ஒருவருக்கு

ஒருவரை விரோதமாகக் கிளப்பிவிட முடியாது. இம்முறைப்படி நாங்கள் வேலையையும் தொடங்கிவிட்டோம். அரசாங்கத்தின் கொள்கையில் இது ஒரு மாபெரும் மாறுபாட்டை நிலைநாட்டும் என்று நாங்கள் நினைத்தோம். ஏனெனில், இம்முறையால் வைசிராய்க்கு அரசாங்கத்தின் நடவடிக்கைகளில் தலையிடுவதற்கு மிகக் குறைவாகவே வாய்ப்பிருக்கும். எவர் ஒருவரிடம் தலையிட்டாலும், அது எல்லாரிடமும் தலையிட்டதாக ஆகிவிடும்; மந்திரி சபை முழுவதும் கலைந்துவிடக் கூடும் என்பதுதான் பொருள்.

முற்காலத்து நிர்வாக சபையின் அங்கத்தினர்கள் தனித் தனியே நியமிக்கப்படுவார்கள்; ஒருவர் ஒருவருக்குத் தொடர்பு வைசிராயின் மூலமாகத்தானிருக்கும். ஒருவர் விலகிவிடுவது மற்றொருவரைப் பாதிக்காது. நாங்கள் நியமிக்கப்பட்ட பின், அலுவலகத்துக் காகிதங்களில் மந்திரி சபையையும் அதன் அங்கத்தினர்களையும் எக்ஸிகுயூடிவ் கவுன்ஸிலர், அல்லது கவுன்ஸிலின் அங்கத்தினர் என்று கூறாமல் காபினெட், காபினெட் மெம்பர் என்ற பெயர்களே வழங்கப்பட்டு வந்தன. எல்லாக் காகிதங்களிலும், கவுன்ஸில் என்ற பெயர் இருந்த இடங்களில், அதை அடித்துவிட்டு, காபினெட் என்று திருத்தப்பட்டுவிட்டது. எங்களுடைய சொந்த நடவடிக்கைகளும் இதற்கு ஏற்ப நடைபெறத் தொடங்கின. எங்கள் மந்திரி குழு நாள்தோறும் மாலை 5 மணிக்குத் தானாகவே கூடி முக்கியமான விஷயங்களைப் பற்றி, அவை எந்த இலாகாவைச் சம்பந்தப்பட்டனவாயினும் சரி, பேசி, எல்லாருடைய சம்மதத்தையும் கேட்டு முடிவு செய்து வந்தோம். லீக்காரர்கள் வரப்போகிறார்கள் என்ற பேச்சு வந்ததும், இதே முறை இருந்துவரும் என்பதாக நம்பிக்கை கொண்டோம். ஆனால் அப்படி நடக்கவில்லை.

லீக் வந்ததுமே, இவ்விரண்டு விஷயங்களுக்கும் ஒப்ப மறுத்துவிட்டது. மே 16இன் அறிக்கையை நிராகரித்ததை அழித்து மாற்றுவதாக யாதும் வாக்களிக்கப்படவில்லை யென்றும், இடைக்கால அரசாங்கத்தின் அங்கத்தினர் காபினெட் போல வேலை புரிவார்கள் என்பதற்கு தான் ஒத்துக்கொள்ளவில்லை யென்றும் அதன் சார்பில் கூறப்பட்டது. முன்னாளில் எக்ஸிக்யூடிவ் கவுன்ஸில் எப்படி வேலை செய்து வந்ததோ அதேபோல இப்பொழுதும் வேலை செய்வோம் என்பதுதான் எங்களுக்குத் தெரியும் என்றார்கள். நாள்தோறும் மாலையில் நடக்கும் எங்களுடைய சொந்தகாபினெட் கூட்டத்திற்கு வரும்படி ஜவஹர்லால்ஜீ அழைத்தற்குவர மறுத்து விட்டார்கள். வைசிராயும் எழுந்தருளியிருக்க,

காபினெட்டின் கூட்டம் முறையாக எவ்வெப்போது நடக்குமோ அப்போதுதான் அவர்களும் நாங்களும் கூட முடியுமென்றும், அங்குக் கொண்டு வரப்படும் விஷயங்களைப் பற்றிக் கூற வேண்டியதையும் கேட்கவேண்டியதையும் அங்கேயே செய்வார்கள் என்றும் கூறப்பட்டது.

ஒருபுறம் இடைக்கால அரசாங்கத்தின் வேலை இவ்வண்ணமாக நடந்து கொண்டிருந்தது. மற்றொரு புறத்தில் கல்கத்தாவின் படுகொலைக்குப் பிறகு நாடு முழுவதிலும் பெரும் கலவரம் நிலவிக்கொண்டிருந்தது. பம்பாய், மதராஸ், டாகா முதலிய பல இடங்களில் மக்கள் கத்தியால் குத்திக் கொல்லப்பட்டு வந்தார்கள். பல குற்றமற்ற ஒரு பாபமும் அறியாத மக்கள், ஹிந்து அல்லது முசல்மானாக இருந்த ஒரு காரணத்தால் தம் வழியே போய்க் கொண்டிருக்கும்போதே கொல்லப்பட்டார்கள். பீகாரின் மக்கள் கல்கத்தாவில் நிறைய இருந்து வருகிறார்கள். அவர்களில் பலர் கல்கத்தாவின் படுகொலையில் கொல்லப்பட்டனர். வேறு பல வகைகளிலும் துன்புறுத்தப்பட்டனர். ஓடித் தப்பித் திரும்பி வந்தவர்கள் தம்முடைய சோகக் கதைகளையும் மற்றவர்களுடைய துக்கக் கதைகளையும் கூறினார்கள். இவை பீகார் மக்களின் மனத்தில் ஆழ்ந்து பதிந்தன. முஜபர்பூர் ஜில்லாவின் பேனிவாத் கிராமத்தில் உள்ள ஒரு முசல்மான் யாரோ ஒரு ஹிந்து பெண்ணைப் பலவந்தமாகக் கல்கத்தாவிலிருந்து கொண்டு வந்திருக்கிறான் என்பதாக ஒரு செய்தி அக்கிராமத்திலிருந்து பரவியது. ஹிந்துக்களின் பெருந்திரள் ஒன்று அக்கிராமத்திற்குச் சென்று பல முசல்மானியர்களைக் கொன்று போட்டுவிட்டது. எத்தனையோ பேரின் வீடுகளையும் கொளுத்திவிட்டது. இச்சம்பவத்தின் செய்தி கிடைத்ததும் அரசாங்கம் அங்குள்ளவர்களின் மீது கடுமையான நடவடிக்கை எடுத்துப் பலரைக் கைது செய்து, சமூக அபராதத்தையும் விதித்தது. இச்சம்பவத்தின் செய்தி பரவியதின் பேரில் முசல்மானியர்களிடையில் அமைதியின்மை பரவியது. சில நாட்களுக்குப் பிறகு முசல்மானியர்களின் ஜனத்தொகை அதிகமாயிருந்த நோவாகலி, திரிபுரா ஜில்லாக்களில் முசல்மானியர்கள் ஹிந்துக்களைத் தாக்கத் தொடங்கிவிட்டார்கள் என்பதாக மிகவும் பலத்த செய்தி கிடைத்தது. பலர் கொல்லப்பட்டார்கள், கிராமம் கிராமமாக, ஹிந்துக்கள் இருந்த இடங்கள் எல்லாம் கொளுத்தப்பட்டன. ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் பலவந்தமாக முசல்மானியர் ஆக்கப்பட்டனர். பல பெண்கள் பலவந்தமாகக் கல்யாணம் செய்து கொள்ளப்பட்டார்

கள். பலர் ஏமாற்றி கொண்டு போகப்பட்டார்கள். இச்சம்பவங்கள் இந்த இரண்டு ஜில்லாக்களில் பல இடங்களில் பரவிவிட்டன. முதலில் இது எவ்வளவு தூரம் பரவியிருக்கிறதென்பது சரியாகத் தெரியவில்லை. ஆயிரக்கணக்கான ஹிந்துக்கள் தம் வீட்டு வாசலை விட்டுவிட்டு அல்லது எல்லாம் நாசம் செய்யப்பட்டபின் அல்லது கொள்ளையடிக்கவோ எரிக்கவோ பட்டபின் தப்பி ஓடி நகரங்களிலும் மற்ற இடங்களிலும் அடைக்கலம் புக வந்தார்கள். அந்த இலாகாக்களில் யாதொரு ஹிந்துவும் செல்வது கடினமாக இருந்தது. ஏனெனில் இலாக்கா முழுவதும் பெரும் சுடுகாடாக்கப்பட்டுப் போயிற்று. அங்குள்ள அரசாங்கம் கலகங்களை நிறுத்துவதற்கு யாதொரு முயற்சியும் செய்யவில்லை யென்பதாகவும், கல்கத்தாவில் கலகம் செய்தவர்கள் எப்படித் தம் மனம்போனபடி செய்ய விட்டுவிடப் பட்டார்களோ அதேபோல அங்கேயும் செய்யப்பட்ட . தென்பதாகவும் அதன் மீது குறை கூறப்பட்டது. இந்த நிலைமை பல நாட்கள் வரையில் இருந்து வந்தது. கல்கத்தாவில் நடந்ததற்கும் அங்கு நடந்ததற்கும் ஒரு பெரிய வேற்றுமை இருந்தது. கல்கத்தாவில் ஹிந்துக்களின் ஜனத்தொகை அதிகம், ஆனால் நோவாகாலியிலும் திரிபுராவிலும் முசல்மானியர்களுடையது அதிகம். இதனால், கல்கத்தாவில், ஆரம்பத்தில் ஹிந்துக்கள் நிறைய அடிபட்டாலும் பிறகு அவர்கள் தம்மைப் பலமாக பாதுகாத்துக் கொண்டார்கள். நோவாகாலியிலும் திரிபுராவிலும் அப்படிச் செய்ய முடியவில்லை. ஏனெனில் ஹிந்துக்கள் மிகக் குறைவாகவும் பலவீனமாகவும் இருந்தார்கள். இச்சம்பவங்களின் செய்தி நாடெங்கும் பரவிவிட்டது. நாலாபக்கத்திலும் ஹிந்துக்களிடையே பெருங் கோபம் பிறந்தது.

இச்சம்பவங்களின் விளைவாக ஹிந்துக்களிடையில் பழிக்குப் பழி வாங்கும் மனப்பான்மை பொங்கி எழுந்தது. மற்றொரு பக்கத்தில் முஸ்லிம் லீகின் தலைவர்களும் பத்திரிகைகளும் தினந்தோறும் விஷத்தை உமிழ்ந்துகொண்டு இருந்தனர். ஹிந்துக்களைச் சண்டைக்கு அறைகூவி அழைத்துக் கொண்டிருந்தனர். ஜவஹர்லால்ஜீ வடமேற்கு எல்லை மாகாணத்தில், அரசாங்கத்தின் மந்திரி என்ற முறையில், சுற்றிவரத் தொடங்கினர். அங்குள்ள அரசாங்கத்தின் அரசியல் இலாகாவின் ஊழியர்கள் நேரே வைசிராயின் கீழ் வேலை செய்து வந்தார்கள். சில இடங்களில் தவருன பிரசாரத்தால் மக்கள் கிளப்பிவிடப்பட்டு பண்டித்ஜீயிடமும் பாதுஷா கானிடமும் மரியாதையின்றி நடந்து கொண்டது

மட்டுமின்றி மற்றவகைகளிலும் வரம்பு கடந்து நடந்துகொண்டார்கள். ஓரிடத்தில் அவர்கள் இருவரும் எப்படியோ உயிர் தப்பினார்கள். அங்கு அவ்வளவு கடுமையாகத் தாக்கப்பட்டார்கள். பாதுஷாவின் கை எலும்பு முறியும் அளவுக்கு அவர்மீது அத்தனை அடிகள் விழுந்தன. அதைப் பல மாதங்கள் வரையில் கட்டுப் போட்டு வைக்க வேண்டியிருந்தது. இவ்விதமான சம்பவங்கள் நடந்தும் கூட, பண்டித்ஜீயின் யாத்திரை நிறையப் பயன்பட்டது. அங்குள்ளவர்கள் அவரை நன்றாக வரவேற்றார்கள். அதிக அன்பும் ஊக்கமும் காட்டினார்கள். இந்த விஷயத்தின் சாயலும் நாட்டில் ஹிந்துக்களின்மீது நிறையப் படிந்தது. முஸ்லிம்லீக் பிரிட்டிஷாருடன் சேர்ந்து கொண்டு ஹிந்துக்களை ஒடுக்க விரும்புகிறதென்பதாகவும், ஒடுக்கி வருகிறதென்பதாகவும் அவர்களுக்குத் தோன்றியது.

பீகாரில் பெரும் கலகம் ஆரம்பித்துவிட்டது. பல இடங்களில் சிறிய சிறிய சம்பவங்களை வைத்துக் கொண்டு ஹிந்துக்கள் பெருங் கூட்டமாகச் சென்று முசல்மானியர்களின் கிராமங்களைத் தாக்கத் தொடங்கினார்கள். பட்னா ஜில்லாவில் பல தானாக்களில் (எல்லைக்குள்) எத்தனையோ முசல்மானியர்கள் கொல்லப்பட்டு விட்டார்கள். எத்தனையோ பேரின் வீடுகள் கொளுத்தப்பட்டு போயின, எத்தனையோ பேரிடம் மிகவும் கொடூரமாக நடந்து கொள்ளப்பட்டது. இத் தீ முங்கேர், கயா ஆகிய ஜில்லாக்களின் பல தானாக்கள் வரை போய் எட்டியது. சப்ராவில்தான் அது தொடங்கியது. முதலில் நகரத்திலும் பிறகு சில கிராமங்களிலும் பல முசல்மானியர்கள் கொல்லப்பட்டார்கள். தில்லியில் இத்தீய சம்பவங்களின் செய்தி கிடைத்தது. கல்கத்தாவின் நிலைமையைக் காணச் சென்றிருந்த பண்டித் ஜவஹர்லாலும் சர்தார் வல்லப்பாயீயும் அங்கிருந்து திரும்பி வரும்பொழுது பட்னாவில் தங்கினார்கள். அவர்களுடன் மிஸ்டர் லியாகத் அலீயும் சர்தார் நிஷ்தரும் சென்றிருந்தார்கள். அவர்களும் பட்னாவில் தங்கி விட்டார்கள். சர்தார் வல்லப்பாயீயும் மிஸ்டர் லியாகத் அலீயும் தில்லியில் வேலையிருந்ததால் விரைவில் திரும்பிச் சென்று விட்டார்கள். ஆனால் பண்டித் ஜவஹர்லாலும் சர்தார் நிஷ்தரும் பீகாரில் தங்கிவிட்டார்கள். நானும் ஆகாய விமானத்தில் அங்கு வந்து சேர்ந்தேன். பீகார் மந்திரி சபையின் ஆட்கள் மிகவும் கடுமையாக ஓடி அலைந்து போலீசைக் கொண்டு எவ்வளவுக்குக் கலகத்தை அடக்கக்கூடுமோ அதைச் செய்ய முயற்சி செய்து வந்தார்கள். பட்டாளத்தின் உதவியும் கோரப்பட்டது.

அது சிறிது காலத்திற்குப்பின் வந்து சேர்ந்தது. பண்டித் ஜவஹர்லாலும் நானும் ஓடியலைந்து சுற்றிவரத் தொடங்கினேம். காந்திஜீக்குச் செய்தி கிடைத்ததும், பீகாரில் கலகங்கள் நிறுத் தப்படாவிட்டால் தாம் இறக்குமளவும் உண்ணுவிரதம் செய்வார் என்பதாக அறிக்கை விடுத்தார். அச்சமயத்தில் காந்திஜீ நோவா கலியில் ஹிந்துக்களுக்கும் முசல்மானியர்களுக்குமிடையில் நல் லுறவை மீண்டும் நிறுவதற்காகச் சென்றிருந்தார். அங்கிருந்து அவர் இந்த அறிக்கையைச் செய்தார். இதன் பயனுக பீகாரில் கலகம் பொக்கென்று நின்றுவிட்டது. ஆயினும் எவ்வளவு நடந்துவிட்டதோ அது மிகையாகவும் பயங்கரமாகவும் இருந் தது. எத்தனே பேர் இறந்தார்கள் என்பதைப் பற்றிச் சரியாக விவரம் கிடைக்கவில்லே. ஆயினும் அவர்களுடைய எண்ணிக்கை ஆயிரக்கணக்காக இருக்குமென்பதில் ஐயமில்லே. முஸ்லிம் லீக் காரர்கள் எண்ணிக்கையை நிறையப் பெருக்கிக் கூறினுர்கள். மிஸ்டர் ஜின்னுவானவரோ 30,000க்குப் புள்ளி விவரம் அறிக்கை செய்தார். இது என்னவோ முற்றிலும் தவறு. ஆயினும் அதில் பத்தில் ஒரு பங்கை எடுத்துக் கொள்வதில் தவறில்லே யென்பதாக ஊகிக்கிறேன். எண்ணிக்கை எதுவாக யிருந்தாலும் அதிக அட்டுழியமும் கொடூரமும் செய்யப்பட்டன வென்பதில் ஐயமில்லே. அதற்காக எல்லாருக்கும் வெட்கம் உண்டாக வேண்டியதுதான். நமக்குள் நட்பை வளர்க்கச் செய்யப்பட்டு வந்த முயற்சியின்மீது பேரிடி விழுந்தது.

இதே போன்ற பயங்கரமான சம்பவம் மேரட் ஜில்லாவின் கட்முக்தேஷ்மர் விழா சமயத்தில் நடந்துவிட்டது. அங்கும் பல முசல்மானியர்கள் கொல்லப்பட்டார்கள். பிறகு முசல்மானியர் கள் ஹிந்துக்களின்மீது அதற்காகப் பழி வாங்கினுர்கள். எல்லே மாகாணத்திலும், ஹஜாரா ஜில்லாவில் மலேயினத்தாரின் கூட்டம் ஹிந்துக்களேத் தாக்கியது.

இம்முறை மேரட்டில்தான் காங்கிரஸ் நடைபெறுவதாக இருந்தது. கட்முக்தேஷ்வரின் தீய சம்பவம் நிகழ்ந்ததும், அங்குக் காங்கிரஸ் நடக்க முடியாது என்ற ஐயம் உண்டாகத் தொடங்கியது. ஆயினும் நிலேமை சமாளிக்கப்பட்டது. காங் கிரஸின் விழா அங்கேயே நடைபெற்றது. ஆனுல் மிகச் சிறப் பாகக் கொண்டாட எண்ணியிருந்தபடி நடக்கவில்லே. காங்கிர ஸோடு நிகழும் கண்காட்சியும் மற்றப் பற்பல கூட்டங்கள் முதலியனவும் நடக்கவில்லே. காங்கிரஸைப் பார்க்க வருபவர் களும் வர அனுமதிக்கப் படவில்லே. பிரதிநிதிகள் மட்டுமே

வரவிடப்பட்டார்கள். அப்படியும் விழா நடந்தே தீர்ந்தது. பார்ப்பவர்கள் ஏதோ சிலர் வந்தும் விட்டார்கள். ஆசார்யா கிருபாளானியின் தலைமையில் காங்கிரஸ் வெற்றிகரமாக முடிவடைந்தது. இரண்டு தீர்மானங்கள் முக்கியமானவை. ஒன்றில் இந்தியாவில் குடியரசு நிலை நாட்டுவதைப் பற்றிக் கூறப்பட்டது. மற்றொன்றில் அரசியல் அமைப்பு புனையும் சபைக்கு அரசியல் அமைப்பைப் பற்றிக் கட்டளைகள் இடப்பட்டன.

நாங்கள் தில்லியிலிருந்து மேரட்டுக்குச் சென்றோம். அங்கிருந்து திரும்பியதுமே, இங்கிலாந்தின் மந்திரி சபையானது பண்டித் ஜவஹர்லாலையும், சர்தார் வல்லப் பாயீயையும், சீக்கியரின் தலைவரான சர்தார் பல்தேவ் சிங்கையும், லீகின் தலைவர் மிஸ்டர் ஜின்னா, மிஸ்டர் லியாகத் அலீ ஆகியவர்களையும் அழைத்திருக்கிறது என்ற செய்தி கிடைத்தது. நாங்கள் எதற்காகக் கூப்பிடப்பட்டிருக்கிறோம் என்பது எங்களுக்குப் புரியவில்லை. ஏனெனில் நாங்கள் தான் மே 16ன் அறிக்கையை ஏற்று வேலை புரியத் தொடங்கிவிட்டோமே! லீக் மட்டும்தான் அதனுடைய நிராகரிப்புத் தீர்மானத்தை மாற்றவில்லை. இப்போது அரசியல் அமைப்பு புனையும் சபை கூடுவதற்கு நாள் அருகில் வந்துவிட்டது. ஏனெனில் அது டிசம்பர் 9இலிருந்து நடைபெறுவதாக இருந்தது. மேற்கூறிய விஷயம் நவம்பர் 27 ஆம் தேதி எதிர்ப்பட்டது. எங்களுக்குத் தெரிந்த வரையில் நாங்கள் அங்குச் செல்வதற்கு யாதொரு அவசியமில்லை யென்பதாக நாங்கள் முதலில் கூறினோம். ஏனெனில், மே 16ஆம் தேதி அறிக்கையின் அர்த்தத்தைப் பற்றிச் சீமை மந்திரி சபையோடு எங்களுக்கு இருந்த கருத்து மாறுபாடு அதற்கு நன்றாகத் தெரியும். அங்குச் செல்வதால் அதில் யாதொரு மாறுதலும் உண்டாகப்போவதில்லை. ஆயினும் அவர்கள் அழைத்தால் போகத்தான் வேண்டும். "கட்டாயம் வந்து சேருங்கள், அரசியல் அமைப்பு சபாவின் நடவடிக்கைகள் தொடங்குவதற்கு முன்னமே, டிசம்பர் 9ஆம் தேதிக்குள்ளாகத் திரும்பிச் சென்றுவிடலாம்" என்று பிரதான மந்திரி அட்லீயிடமிருந்து தந்தி வந்தது. லீக் அங்குச் செல்வதாக முதலில் முடிவு செய்தது. ஆனால் காங்கிரஸுக்கு ஏதோ சமாதானம் கூறப்பட்டதென்பதாக மிஸ்டர் ஜின்னாவுக்குத் தெரிய வந்ததும் அவர் செல்ல மறுத்துவிட்டார். அச்சமயத்தில் அவர் கராச்சியில் இருந்தார். வைசிராய் அங்குப் போய்ச் சேர்ந்தார். அவர்கள் இருவருக்குள் ஏதோ பேச்சு நடந்தது. அவரும் போவதற்குத் தயாராகிவிட்டார். இவ்வண்ணமாக,

பண்டித் ஜவஹர்லால், சர்தார் பலதேவ் சிங், மிஸ்டர் ஜின்னு, மிஸ்டர் லியாகத் அலீ ஆகியோர் வைசிராயுடன் ஆகாயக் கப்பலில் இங்கிலாந்துக்குச் சென்ருர்கள்.

மே 16இன் அறிக்கையில் யாதொரு மாறுதலாவது கூடுதலாவது செய்யப்பட மாட்டாதென்பதாக காபினெட் மிஷனும் வைசிராயும் அடிக்கடி உறுதி அளித்து வந்தார்கள். ஆயினும் இம்முறை அவர்கள் அதில் மாறுதலும் கூடுதலும் செய்தார்கள். அந்த அறிக்கையின் பொருளேத்தான் தெளிவுபடுத்தப்பட்டது, அதைவிடச் சிறிதுகூட அதிகமாகச் செய்யவில்லை யென்பதாகக் கூறப்பட்டாலும், அதில் சில புதிய விஷயங்கள் கூறப்பட்டன என்பதிலும், மேலும் முன் கூறப்பட்டவற்ருேடு சில விஷயங்கள் சேர்க்கப்பட்டன என்பதிலும் ஐயமில்லை. லண்டனில் நடந்த பேச்சு வார்த்தைகளின் பலன்தான் 1946 டிசம்பரின் 6ஆம் தேதி அறிக்கை. அதை ஒட்டித்தான் மேலே கூறப்பட்ட மாறுதல்கள் கூடுதல்களின் விஷயங்கள் கூறப்பட்டன. இதைப்பற்றி ஆலோசனை செய்து தன் அபிப்பிராயத்தை வெளியிடுவதற்காக அகில பாரதீயக் குழுவின் சிறப்புக் கூட்டம் ஒன்று அழைக்கப்பட்டது.

டிசம்பர் 9க்கு அரசியல் அமைப்பு புனையும் சபையின் கூட்டம் கூடுவதாக நிச்சயம் செய்யப்பட்டிருந்தது. அதன் அங்கத்தினர்களுக்கு அழைப்புக்களும் அனுப்பப்பட்டிருந்தன. அப்படியே அக்கூட்டம் நடத்தப்பட்டது. அக்கூட்டத்திற்காக மத்திய சபைக் கட்டடத்தின் சுற்றுப் பிரகாரத்தில் நூல் நிலையம் இருந்த பாகம் சிறப்பாக அலங்கரிக்கப்பட்டுத் தயார் செய்யப்புட்டிருந்தது. முக்கியமாக, இத்தகைய கட்டடங்களுக்கு உள்ள இயல்புபடி அங்கத்தினர்களின் பேச்சின் எதிரொலி எழாவண்ணம் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இதற்காக விஞ்ஞானமுறைப்படி பலவிதமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அங்கத்தினர்களைத் தில்லியின் குளிரிலிருந்து காப்பதற்காக அந்த இடத்தைக் கதகதப்பாக வைத்திருக்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. அங்கு டிசம்பர் 9ஆம் தேதியிலிருந்து அரசியல் அமைப்பு சபையின் வேலை தொடங்கியது.

நிரந்திர சபாபதியின் தேர்தல் நடைபெருத வரையில் சபையின் நடவடிக்கைகளை யார் நடத்துவது என்ற கேள்வி இப்பொழுது எழுந்தது. அங்கத்தினர்களில் எவர் எல்லாரையும்விட வயதில் மூத்தவரோ அவர் தற்காலிக சபாபதி ஆவதென்பதாக நிச்சயிக்கப்பட்டது. எங்கள் பீகாரின் டாக்டர் சச்சிதானந்த சின்ஹாதாம் எல்லோரையும் விட முதியவராகத் தேறப்பட்டார்.

அவருடைய வயதுக்கும் சர் ஹரிசிங் கௌர், ஸ்ரீ பிரகாசம் ஆகியோரின் வயதுக்கும் சிறிதுதான் வித்தியாசம் இருந்தது. ஆயினும் அவர்தாம் எல்லாரையும்விடப் பெரியவராக இருந்தார். இதனுல் அவர்தாம் சபாபதியின் ஆசனத்தில் அமர்ந்தார். பிறகு மூன்று நான்கு நாட்கள் வரையில், அதாவது நிரந்தர சபாபதி தேர்ந்தெடுக்கப்படாத வரையில், மிகவும் சிறப்பாக வேலையை நடத்தினர்.

இப்பொழுது நிரந்தரத் தலைவராக எவரை நியமிப்பது என்ற கேள்வி எழுந்தது. இடைக்கால அரசாங்கத்தில் நாங்கள் நியமிக்கப்படுவதற்குச் சில நாட்களுக்கு முன், என்னை இவ்வேலைக்காக ஒதுக்கி வைக்க வேண்டுமென்பதாகவும் இடைக்கால அரசாங்கத்திற்கு என்னை அனுப்ப வேண்டாமென்பதாகவும் எண்ணப்பட்டதென்று நான் மேலே கூறியுள்ளேன். ஆனுல் கடைசியில் இந்த எண்ணம் மாற்றப்பட்டுப் போயிற்று; நான் அங்கு நியமிக்கப்பட்டு விட்டேன். இங்கிலாந்துக்குச் செல்வதற்கு முன் பண்டித் ஜவஹர்லால்ஜீயுடன் நாங்கள் இதைப்பற்றிப் பேசினேம். காங்கிரஸுக்கு வெளியிலிருந்து யாராவதொரு தகுதியான ஆளையே தேர்வது நன்றென எண்ணப்பட்டது. சர் கோபாலசாமி ஐயங்காரின் பெயரும் எங்கள் முன் வந்தது. அவர் தகுதியும் அனுபவமும் உள்ளவராக இருந்தார். மேலும் இந்த விஷயத்தில் அவர் நிறைய ஊக்கம் காட்டி வந்தார். அவர் காங்கிரஸைச் சேர்ந்தவராக இல்லாவிட்டாலும் அவர் இச்சபைக்கு தேர்ந்தெடுக்கப்படுவதற்குக் காங்கிரஸ்கார அங்கத்தினர்கள் உதவி புரிந்தார்கள். சபையின் இருக்கைக்காக அங்கத்தினர்கள் வந்தபோது எனக்கே இப்பதவி அளிக்கப்பட வேண்டுமென்பதாக எண்ணம் கொண்டார்கள். அவர்கள் தமக்குள் நிகழ்த்திய பேச்சிலிருந்து பல பேருக்கும் இதே விருப்பம் இருப்பதாகத் தெரிய வந்தது. இது எனக்கு முதலில் தெரியாது, ஆயினும் மக்கள் ஒவ்வொருவராக என்னிடம் வந்து நான் இப்பதவியை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதாக வற்புறுத்தத் தொடங்கினர்கள். என்னுடைய கஷ்டம் என்னவென்றுல், என் பொறுப்பில் முன்னமே இரண்டு இலாகாக்கள் இருந்தன, அவையே எனக்கு அதிகமாக இருந்தன. அதற்குமேல் இந்த வேலையையும் எடுத்துக் கொள்வது பெரும் சுமையாகிவிடும். இக்கருத்தினுல் நான் முதலில் மறுத்து விட்டேன். செயலாற்றுக் குழுவின் முன் இந்த விஷயம் வந்தது. இப்பதவியை நான் ஏற்க வேண்டுமானுல் இடைக்கால அரசாங்கத்தின் மந்திரி பதவியிலிருந்து என்னை விடுவித்துவிட

வேண்டுமென்ற நிபந்தனையைக் கொண்டு வந்தேன். இதற்கு யாரும் ஒப்பவில்லை. முடிவில் வேறு வழியில்லாமல், மேலும் அஞ்சி அஞ்சிக் கொண்டே நான் இச்சுமையையும் ஏற்றுக் கொள்ள ஒத்துக்கொண்டேன். என் பெயர் சமர்ப்பிக்கப்பட்டது. எல்லாரும் மனமொப்ப நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.

டிசம்பர் 6இன் அறிக்கையைப் பற்றி ஆலோசனை செய்வதற்காக அகில பாரதீயக் குழுவின் கூட்டம் அழைக்கப்பட்டதென்பதாக மேலே கூறப்பட்டது. அது 1947 ஜனவரி 5–6ஆம் தேதிகளில் நடந்தது. அது, மே 16இன் அறிக்கைக்கு டிசம்பர் 6இன் அறிக்கையில் அளிக்கப்பட்ட அர்த்தத்தின்படி வேலை செய்யலாம் என்று முடிவு செய்தது. ஆயினும் எந்த மாகாணத்திடமாவது, பிரிவினிடாமாவது நாங்கள் பலவந்தமாக நடந்து கொள்ள மாட்டோம், மேலும் அப்படி நடப்பதாகத் தெரிய வந்தால் நாங்கள் அதை எதிர்ப்பதற்கு எது பொருத்தம் என்று நினைக்கிறோமோ அதைச் செய்வோம்.

ஒரு பக்கத்தில் அரசியல் அமைப்பு சபை நடைபெறத் தொடங்கியது. மற்றொரு பக்கத்தில் நான் காசி ஹிந்து—பல்கலைக் கழகத்தில் பட்டமளிப்பு விழா சொற்பொழிவை ஆற்றுவதாக முன்னமே வாக்குக் கொடுத்திருந்தேன். அதற்காக டிசம்பர் 15ஆம் தேதி அங்குச் செல்ல வேண்டி வந்தது. ஆகாய விமானத்தில் பண்டித் ஜவஹர்லால்ஜீயுடன் அங்குச் சென்றேன். அவருக்கு டாக்டர் பட்டமளிக்கப்பட்டது. நான் பட்டம் வழங்கு விழா சொற்பொழிவை ஆற்றினேன்.

இம்முறை பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழாவின் கொண்டாட்டம் பெரும் தனிச் சிறப்பும் பெருமையும் கொண்டிருந்தது. பல்கலைக் கழகத்தின் சிற்பியும், அதைப் படைத்தவரும் பரிபாலித்துவந்தவருமான உயர்திரு மாளவீயஜீ பரகதியடைத்துவிட்டார். ஒரு மகான், கர்ம யோகி, உலகத்தை விட்டுச் சென்றுவிட்டார். பல்கலைக் கழகம் நெடுங்காலம் வரையில் அவருடைய நினைவை ஊட்டுவதாக விளங்கும். ஆயினும் சுயராஜ்யத்தை அடையும் முயற்சியிலும் அவருடைய பங்கு அதே அளவு பெரியதாக விளங்கும். அவர் மூன்று முறை காங்கிரஸின் தலைவரானார். கருத்து மாறுபாடு இருந்தும்கூட அவர் காங்கிரஸை என்றும் விட்டுச் செல்லவில்லை. காங்கிரஸ் கஷ்டத்துக்கு உட்பட்ட போதெல்லாம் அவர் அளவற்ற உற்சாகத்துடன் அதற்கு உதவி புரிந்தார்.

ஹிந்து மகாசபைக்கோ மாளவீயஜீ ஒரு விதத்தில் அதை

பிறப்பித்தவரும் அதன் உயிரும் ஆவார். சமய வளர்ச்சிக்காக ஹிந்துக்களுக்கு அவர் செய்த தொண்டைச் சொல்லி முடியாது. தேசத் தொண்டர்கள் எல்லாரிடமும் அன்பும் கண்ணோட்டமும் அவருக்கு இயற்கையாக அமைந்தன. அவர் நீங்கிய பின் நாடே ஒரு விதமாக வெறிச்செனப் போய்விட்டது. அவருடைய கடைசி நாட்கள் சில துன்பங்களால் துக்கம் நிறைந்தனவாகி விட்டன. அவருடைய மூத்த மகன் பண்டித் ரமாகாந்த மாளவீய வின் மரணத்தால் அவர் பெரும் அதிர்ச்சி அடைந்தது இயல்பே. ஆயினும் தன் இறுதி நாட்கள் வரையில் அவர் நாட்டை மறக்க வில்லை. தற்கால நிலைமையைக் கண்டு ஒருபுறம் கவலையும் மற்றொரு புறம் மகிழ்ச்சியும் அடைந்தார். அவர் வாழ்க்கை யிலிருந்து நாம் நிறையக் கற்க வேண்டியிருக்கிறது. அது நமக்கு வழி காட்டியாக தொண்டாற்றி வரும்.

இவ்விதமான ஒரு பெரும் நஷ்டம் பாபூ பிரஜ்கிஷோர் பிர சாதின் மரணத்தால் பீகாரில் உண்டாயிற்று. உடல் நலக் கேட் டால் பல ஆண்டுகளாக அவர் பொது வாழக்கைப் பணிகளில் பங் கெடுத்துக் கொள்ள இயலாதவராகப் போய்விட்டார். நாடும் எங் கள் மாகாணமும் அவருடைய தொண்டை இழந்துவிட்டன. ஆயினும், அவர் முன் செய்திருந்த தொண்டுகளை நினைத்துப் பார்த்தால் நம் நாட்டார் எவரும், முக்கியமாக எந்த பீகாரியும் இந்த நஷ்டத்தால் துக்கமடையாமல் இருக்க முடியாது. எனக்கோ இது ஒரு பேரிடி. அந்தக் கூர்மையான அறிவு, அசையா உறுதி, நுண்ணிய நெடிது நோக்கும் ஆற்றல், அந்த மாபெரும் தியாக சக்தி, பற்றின்மை, புகழைக் கண்டு ஒதுங்கும் ஒப்பற்ற இயல்பு, அந்த அச்சமின்மையை எங்கே காணக் கிடைக்கும்? நாங்கள் பீகார்காரர்கள் பொது வாழ்க்கைத் தொண்டை வெறும் உல்லாசப் பொழுது போக்குக்கு ஒரு கருவியாகக் கருதி அதற்குச் சிறிது காலம் அளிப்பதே போதுமென்பதாக நினைத்த காலத்தில் அவர் எங்கள் முன் பரிபூரண தொண்டைக் காட்டி, எங்களில் பலரை அந்நோன்பைப் பூண வைத்தார். எங்களிடையில் தளர்ச்சி வந்த போது அவர் தம்முடைய அசையா உறுதியால் எங்களைத் தூண்டி வந்தார். நோன்பில் சோர்வு வராமல் காத்து வந்தார். குடியா னவர்களுக்குத் தொண்டுபுரியும் வேலையை நீலச்சாயக்காரருக்கு செல்வாக்கு இருந்தவந்த காலத்திலேயே, அதாவது, அவர்களுக்கு விரோதமாகக் குரல் எழுப்பது அபாயமாக இருந்து வந்த காலத்திலேயே அவர் தொடங்கினர். நான் புகுமுக பரீக்ஷை தேறிய சமயத்திலிருந்தே அவருக்கு என்பால் அன்பு உண்டாகி

விட்டது. என் வாழ்க்கையின் ஒவ்வொரு கடினமான சமயத்திலும் அவர் இடையருது உதவி புரிந்து வந்தார். அந்த உறவு அவருடைய மகளை மிருத்யுஞ்சயனுக்குத் திருமணம் செய்ததால் வேருரர் உருபூண்டுவிட்டது. ஆயினும் பொது வாழ்க்கை வாழ்வில் இதன் சாயல் யாதும் படவில்லை. என் தமையனர் இறந்த பின், அவர் ஒரு வகையில் என் குடும்பத்துக் காரியங்களிலும் உதவி செய்யத் தொடங்கினர். தாம் உடல் நலம் கெட்டு நடமாட்டம் இல்லாமற் போய்விடாதிருந்திருந்தால் அவர் உதவி அளித்துக்கொண்டே யிருந்திருப்பார். இதனல், அவர் இறந்த செய்தி கேட்டதும் நான் தில்லியில் மிகவும் துக்கப்பட்டேன். ஆயினும் மகாத்மாஜீ அவருடைய பிள்ளைகளுக்கு ஆறுதல் கூற அனுப்பிய தந்தி எனக்கும் உதவியாக அமைந்தது. அதில் காந்திஜீ பின்வருமாறு எழுதியிருந்தார். "அவருடைய உடலுக்கு உற்ற கேட்டின் நிலைமையில் அவர் இறந்தது மகிழ்ச்சியையே அளிக்கவேண்டும். துக்கத்தை அன்று. அவருடைய ஆன்மாவோ அழிவற்றது, அதற்காகக் கவலைப்படுவது வீண்", என்று எழுதியிருந்தார். அவர் சொன்னது சரிதான். அவரைக் கண்டு உண்டான துன்பம் இனி உண்டாகாது. இறைவன் அவருடைய பிள்ளைகளுக்கு அருள் புரிவானுக.

அவருடைய சிராத்தத்திற்கு மிருத்யுஞ்ஜயனின் மனைவி வித்யாபதி, அவளுடைய சகோதரனும், தாயாரும் இருந்த இடமும் அவர் இறந்த இடமுமாகிய தர்பங்காவுக்குச் சென்ருள். மிருத்யுஞ்ஜயனும் சென்ருன். அனல் சிராத்தத்திற்குப் பிறகு அவளை அங்கு விட்டுவிட்டு அவன் பட்னுவுக்கு வந்துவிட்டான். மிகச் சில நாட்களுக்குப் பிறகே, அவளுக்கு என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. திடீரென்று ஓரிரண்டு நாள் நோயால் போய்விட்டாள். மிருத்யுஞ்ஜயனுக்கு நோயின் செய்தி கிடைத்ததுமே, அவன் பட்னுவிலிருந்து தர்பங்காவுக்குப் புறப்பட்டான். ஆனல் அவள் இறந்த செய்தி அவனுக்கு வழியிலேயே கிடைத்துவிட்டது. நான், பீகாரில் ஹிந்து-முஸ்லிம் கலகம் நடந்துவிட்ட செய்தி கிடைத்துப் பட்னுவுக்குப் போகப் புறப்பட்டுக் கொண்டிருந்த போது இச் செய்தி எனக்குக் கிடைத்தது. நான் அங்குச் சென்றேன். குழந்தைகளின் அலறலையும் பெண்கள் அடித்துக் கொண்டு அழுவதையும் கேட்டேன். மிருத்யுஞ்ஜயன் அன்றுதான் தர்பங்காவுக்குப் போயிருந்தான். இரண்டு நாட்களுக்குப் பிறகு, அங்குத் தகனக் கிரியைகளை முடித்துக்கொண்டு மிருத்யஞ்ஜயன் திரும்பிவந்தான். நான் பட்னு ஜில்லாவின் கிராமங்

களில் ஹிந்து-முஸ்லிம் கலகத்தை அடக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தேன். இத்தனை பேர் கொல்லப்பட்ட இடத்தில், மேலும் இத்தனை வீடுகளில் துயரமும், அழுகைக் குரலும் இருந்துவந்த இடத்தில் என் சொந்த துயரம் ஒருவிதமாக வெட்கப்பட்டுக் கொண்டு அடங்கிவிட்டது போலாகிவிட்டது. மிகவும் ஓடியலைந்ததால் நான் பட்னுவில் நோயுற்றுவிட்டேன். அதனல் சில நாட்கள் வரையில் அங்கே தங்கி இருக்க வேண்டி வந்துவிட்டது. இதற்கிடையிலேயே சிரார்த்த வேலையும் நடந்து முடிந்துவிட்டது.

ஓரிரண்டு மாதங்களுக்குள்ளாக மற்றும் ஒரு துயரம். ராஞ்சியில் பல நாட்களாகக் கஷ்டத்தை அனுபவித்துவிட்டு குழந்தை பிரகாஷ் போய்விட்டான். நோய் மிகவும் வலுத்தவுடன் எனக்குத் தில்லியில் டெலிபோன் மூலம் செய்தி அனுப்பப்பட்டது. நான் அங்குச் செல்வதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதற்குள்ளாக அவன் போய்விட்டான் என்ற செய்தி வந்தது. அவனுடைய அண்ணன் மோகன் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் போய்விட்டான். அந்தப் புண் இன்னும் இருந்துவந்தது. நினைவு வந்தபோதெல்லாம் கண்ணீர் வந்துவிடுகிறது. இப்போது இந்த இரண்டாவது அடியை இரக்கமற்ற யமன் அடித்துவிட்டான். ஆயினும் நம்மால் என்ன செய்ய முடியும்? ஜநார்த்தனன், சந்திரமுகி இருவரின் நிலைமையைப் பற்றியும் அண்ணியாரின் நிலைமையைப்பற்றியும் என்ன சொல்லட்டும். அக் குழந்தைகள் இறக்கத்தான் வேண்டுமென்றல் அவர்கள் ஏன் வருகிருர்கள்? இறைவனின் லீலை புரியமாட்டேனென்கிறது. ஒரு பக்கத்தில் துன்பத்தின் மேல் துன்பம், மற்றெரு புறத்தில் ஒன்றுக்கு மேல் ஒன்ருக வேலையின் சுமை வளர்ந்துகொண்டே போதல். துயரத்தில் ஆழ்ந்திருக்கும் குடும்பத்துடன் சிறிது காலம் தங்கிக் கழிப்பதற்கு இம்மி அளவுகூடப் பொழுது கிடைப்பதில்லை. ஆயினும் இதுவும்கூட இறைவனின் செயல் என்பதை அறிவேன். அவனுக்கு எது திருவுளமோ அதைச் செய்யட்டும், செய்விக்கட்டும்.

தில்லியின் வாழ்க்கை பல விஷயங்களில் புதிய வாழ்க்கையே. அலுவலக வேலை புரிவதற்கு முதன் முதலாக வாய்ப்புக் கிடைத்தது. மக்களுக்கு என் வேலையின் மீது திருப்தி உண்டாயிற்று என்று கேள்விப்பட்டேன். நாடானது அது சிக்குண்டிருந்த உணவுக் கஷ்டத்திலிருந்து இன்னும் விடுதலையடையவில்லை. ஆயினும் நிலைமை சிறிது திருந்தியது. தெற்கே அரிசிக் குறைவால் இருந்த அச்சம் இப்போது குறைந்துவிட்டது. ஆனல்

  

வடக்கே கோதுமையின் குறைவினுல் அந்த அச்சம் அதிகரித்துக் கொண்டே போகிறது. என்னைப் பாராட்டும்படியாகவோ புகழும் படியாகவோ நான் ஏதாவது சிறப்பாகச் செய்ததாக எனக்குத் தெரியவில்லை. ஆயினும் மக்கள் திருப்திபடுகிருர்கள். மேலும், நான் நிலைமையைச் சமாளித்து விட்டதாகப் பலர் ஒப்புக்கொள் கிருர்கள். ஊழியர்களும் பொதுமக்களும் துணைபுரியாவிட்டால் யாருமே எதுவும் செய்ய இயலாது. நான்தான் என்ன செய் திருக்கக்கூடும்? இவ்விடத்து வாழ்க்கை எனக்கு முற்றிலும் புதிய அனுபவமாக இருக்கிறது. வீடு மிகவும் பெரியது, ஆயினும் அதில் இடம் மிகக் குறைவு. ஏனெனில் அறைகள் பெரிய பெரியன, ஆனுல் எண்ணிக்கையில் குறைவு. வீட்டைச் சுற்றி இடம் பெரிதாக இருந்தது. மலர்களால் நிறைந்து அழகாக இருந்தது. காய்கறிகள் போட்டோம். நாங்கள் சொந்தமாகப் பயிரிட்ட காய்கறிகளை உபயோகித்து வருகிருேம். ஆனுல் நிறையச் செலவு பிடிக்கிறது. இங்கு வந்ததிலிருந்து நண்பர் களைக்கூட கண்டுகளிப்பதற்கு நேரம் கிடைக்கவில்லை, அவ்வளவு வேலை நெருக்கடியாக இருக்கிறது. எங்காவது போவது வருவது முன்பே மிகவும் அரிதாகத்தான் செய்ய முடியும். இப்பொழுதோ அக்கஷ்டம் மேலும் அதிகரித்துவிட்டது. ஆயினும் கடவுளின் அருளால் உடல் நலத்துடன் வேலை புரிந்து வருகிறேன். இது வரையில் வேலையை நிறுத்தும்படியாக யாதும் ஒரு நிலைமை உண்டாகவில்லை. உடல் நலம் துணை நின்ருல், இதுவரையில் இருந்ததுபோலிருந்தால், இறைவனுக்குத் திருவுளச் சம்மத மானுல், அரசியல் அமைப்பு சபையின் தலைவன் வேலையையும் எப்படியாவது நடத்திக்கொண்டு போய்விடுவேன்.

தில்லி
1947 ஜனவரி, 8.



